Bible. O.T. Tamil

THE

# OLD TESTAMENT,

## IN TAMIL.

---

மனிதர்கள் இரட்சிக்கப்படுவதற்காகச்

சருவலோக தயாபரரான கர்த்தர் அருளிச்செய்த

சத்தியவேதமென்கிற

# பழைய ஏற்பாடு.

இஃது

மூலவாக்கியம் பெபுரிசியசையரால்

எபிரேயுபாஷையிலிருந்து

தமிழிலே திருப்பப்பட்டது.

கி. பி. ௲௮௱௬௰-ஜூலை

சென்னபட்டணத்தில் அமெரிக்கன் மிசியோன் அச்சுக்கூடத்தில் பதிப்பிக்கப்பட்டது.

NEW YORK PUBLIC LIBRARY

MADRAS:

THE MADRAS AUXILIARY BIBLE SOCIETY,

Printed at the American Mission Press.

1860.

Digitized by Google

# மோசே எழுதின

## முதலாம் ஆகமம்.

### ௧. அதிகாரம்.

ஆதியிலே பராபரன் *வானத்தையும் பூமியையும் சிருஷ்டித்தார். *சங். ௩௩. ௬: ௱௨. ௨௫. கொலோ. ௧. ௰௬. எபிரே. ௰௧. ௩.

௨ பூமியோவெனில் ரூபமற்றதும் வெறுமையுமாயிருந்தது; ஆழத்தின்மேல் இருளுமாயிருந்தது. *ஆனால் பராபரனுடைய ஆவி தண்ணீர்களின்மேலே அசைவாடிக்கொண்டிருந்தது. *சங். ௩௩. ௬.

௩ ¶ *பராபரன் வெளிச்சம் உண்டாகக்கடவதென்றார், அப்போது வெளிச்சம் உண்டாயிற்று. *௨ கொரி. ௪. ௬.

௪ பராபரன் வெளிச்சத்தை நல்லதென்று கண்டார்; வெளிச்சத்தையும், இருளையும், பராபரன் வெவ்வேறாகப் பிரித்தார்.

௫ பராபரன் வெளிச்சத்துக்குப் பகலென்று பேரிட்டார்; இருளுக்கோ இராவென்று பேரிட்டார்; இப்படியே சாயங்காலமானதினாலும் விடியுங்காலமானதினாலும் முதலாம்நாளுண்டாயிற்று.

௬ ¶ பிற்பாடு பராபரன் தண்ணீர்களுக்கு நடுவாக *ஆகாசவிரிவுண்டாகக்கடவதென்றும், அது தண்ணீர்களுக்குக் தண்ணீர்களுக்கும் பிரிவுண்டாக்கக்கடவதென்றுஞ்சொன்னார். *சங். ௱௩௬. ௫.

௭ அப்படியே பராபரன் ஆகாசவிரிவையுண்டுபண்ணி, ஆகாசவிரிவுக்குக்கீழாயிருக்கிற தண்ணீர்களுக்கும்; *ஆகாசவிரிவுக்கு மேலாயிருக்கிற தண்ணீர்களுக்கும், பிரிவுண்டாக்கினார்; அது அப்படியே ஆயிற்று. *சங். ௱௪௮. ௪.

௮ ஆகாசவிரிவுக்குப் பராபரன் வானமென்று பேரிட்டார்; இப்படியே சாயங்காலமானதினாலும் விடியுங்காலமானதினாலும் இரண்டாம்நாள் உண்டாயிற்று.

௯ ¶ பிற்பாடு பராபரன் வானத்தின்கீழிருக்கிற தண்ணீர்கள் *ஒரு இடத்திலே சேரவும் வெட்டாந்தரை காணப்படவுங்கடவதென்றார்; அது அப்படியே ஆயிற்று. *யோபு. ௩௮. ௮, ௰. ௰௧. சங். ௩௩. ௭: ௱௪. ௭-௯.

௰ பராபரன் வெட்டாந்தரைக்குப் பூமியென்றும், சேர்ந்த தண்ணீர்களுக்குச் சமுத்திரங்களென்றும் பேரிட்டார்; பராபரன் அது நல்லதென்று கண்டார்.

௰௧ அப்போது பராபரன், பூமியானது புல்லையும், விதையைப் பிறப்பிக்கிற பூண்டுகளையும், பூமியின்மேலே தங்களில் தங்கள் விதையையுடைய கனிகளைத் தங்கள் தங்கள் சாதியின்படியே கொடுக்கும் கனிவிருட்சங்களையும், முளைப்பிக்கக்கடவதென்றார்; அது அப்படியே ஆயிற்று.

௰௨ பூமி தங்கள் தங்கள் சாதியின்படியே புல்லையும், விதையைப் பிறப்பிக்கிற பூண்டுகளையும், தங்கள் தங்கள் சாதியின்படியே தங்களில் தங்கள் விதையையுடைய கனிகளைக்கொடுக்கும் விருட்சங்களையும் முளைப்பித்தது; பராபரன் அது நல்லதென்று கண்டார்.

௰௩ அப்போது சாயங்காலமும் விடியுங்காலமுமானதினால் மூன்றாம்நாள் உண்டாயிற்று.

௰௪ ¶ பிற்பாடு பராபரன், பகலுக்கும் இராவுக்கும் வித்தியாசம் பண்ணத்தக்க

*வெளிச்சங்கள் வானமென்ற ஆகாசவிரிவிலே உண்டாகக்கடவதென்றும், அவைகள் அடையாளங்களாகவும் குறித்தகாலங்கள் நாள்கள் வருஷங்களை அறிகிறதற்காகவுமிருந்து, *சங். ௱௩௬. எ—௯.

௰௫ பூமியின்மேலே பிரகாசிக்கும்படிக்கு, வானமென்ற ஆகாசவிரிவிலே வெளிச்சங்களாயிருக்கக்கடவதென்றும் சொன்னார்; அது அப்படியே ஆயிற்று.

௰௬ பராபரன் பகலை ஆளப் பெரிதாயிருக்கிற வெளிச்சமும், இரவை ஆளச் சிறிதாயிருக்கிற வெளிச்சமுமாகிய இரண்டு பெரிய வெளிச்சங்களையும், நட்சத்திரங்களையும் உண்டாக்கினார்.

௰௭ அவைகளைப் பராபரன் பூமியின் மேற் பிரகாசிக்கவும்,

௰௮ பகலையும் இரவையும் ஆளவும், வெளிச்சத்துக்கும் இருளுக்கும் வித்தியாசமுண்டாக்கவும், வானமென்ற ஆகாசவிரிவிலே வைத்தார்; பராபரன் அது நல்லதென்று கண்டார்.

௰௯ அப்போது சாயங்காலமும் விடியுங்காலமுமானதினால் நாலாம்நாளுண்டாயிற்று.

௨௰ ¶ பிற்பாடு பராபரன் தண்ணீர்கள், நீந்தும் உயிர்ப்பிராணிகளையும், பூமியின் மேல் ஆகாசவிரிவிலே பறக்கும் பறவைகளையும் திரளாய்ச் செனிப்பிக்கக்கடவதென்றார்.

௨௧ அப்படியே பராபரன் பெரிய திமிங்கலங்களையும், தண்ணீர்கள் சாதி சாதியாகத் திரளாய்ச் செனிப்பித்த சகலவித நீச்சுப்பிராணிகளையும், சாதி சாதியாயிருக்கிற செட்டைகளுள்ள சகலவித பட்சிகளையும் சிருஷ்டித்தார்; பராபரன் அது நல்லதென்று கண்டார்.

௨௨ பராபரன் அவைகளை ஆசீர்வதித்து, *நீங்கள் பலுகிப் பெருகிக் கடல்களிலுள்ள தண்ணீர்களை நிரப்புங்களென்றும், பறவைகள் பூமியிற் பெருகக்கடவதென்றும் சொன்னார். *௮. ௰௭.

௨௩ அப்போது சாயங்காலமும் விடியுங்காலமுமானதினால் ஐந்தாம்நாள் உண்டாயிற்று.

௨௪ ¶ பிற்பாடு பராபரன் பூமியானது சாதி சாதியான சீவசெந்துக்களாயிருக்கிற மிருகங்களையும், ஊர்வனவற்றையும், பூமியின் காட்டுமிருகங்களையும், சாதி சாதியாக எழும்பப்பண்ணக் கடவதென்றார்; அது அப்படியே ஆயிற்று.

௨௫ பராபரன் சாதி சாதியான பூமியின் காட்டுமிருகங்களையும், சாதி சாதியான மிருகங்களையும், சாதி சாதியான சகல பூமியின் ஊர்வனவற்றையும் உண்டாக்கினார்; பராபரன் அது நல்லதென்று கண்டார்.

௨௬ ¶ பிற்பாடு பராபரன் *நம்முடைய சாயலாக, நம்முடைய ரூபத்தின்படியே மனுஷரை உண்டாக்குவோமாக; அவர்கள் சமுத்திரங்களின் மச்சங்களையும், ஆகாசத்துப் பறவைகளையும், மிருகசீவன்களையும், பூமியனைத்தையும், பூமியின்மேல் ஊருகிற சகல ஊர்வனவற்றையும், ஆளக்கடவர்களென்றார். *௫. க: ௯. ௬. க கொரி. ௰௧. எ. எபே. ௪. ௨௩, ௨௪. கொலோ. ௩. ௰.

௨௭ *அப்படியே பராபரன் மனுஷனைத் தம்முடைய சாயலாகச் சிருஷ்டித்தார்; அவனைப் பராபரனுடைய சாயலாகச் சிருஷ்டித்தார்; ஆணும் பெண்ணுமாக அவர்களைச் சிருஷ்டித்தார். *மத்தே. ௰௯. ௪.

௨௮ அப்போது பராபரன் அவர்களை ஆசீர்வதித்து, *நீங்கள் பலுகிப் பெருகி, பூமியை நிரம்பப்பண்ணி, அதைக் கீழ்ப்படுத்தி, சமுத்திரத்தின் மச்சங்களையும், ஆகாசத்துப் பறவைகளையும், பூமியின்மேல் நடமாடுகிற சகல மிருகசீவன்களையும் ஆண்டுகொள்ளுங்களென்று பராபரன் அவர்களுக்குச் சொன்னார். *௮. ௰௭: ௯. க.

௨௯ ¶ பின்னையும் பராபரன் சொன்னதாவது: *இதோ பூமியின்மீதெங்குமிருக்கிற விதைதரும் சகலவித பூண்டுகளை

யும், விதைதரும் கனிமரங்களாகிய சகலவித விருட்சங்களையும், உங்களுக்குக் கொடுத்தோம்; அவைகள் உங்களுக்கு ஆகாரமாயிருக்கக்கடவது. *௯. ௩.

௩௰ ஜீவபிராணனுள்ள பூமியினுடைய சகல மிருகங்களுக்கும், ஆகாசத்தினுடைய சகல பறவைகளுக்கும், பூமியின்மேல் ஊர்வன எல்லாவற்றுக்கும், சகல பச்சைப்பூண்டு பயிர்களையும், ஆகாரமாகக் கொடுத்தோமென்றார்; அது அப்படியே ஆயிற்று.

௩௰க அப்போது பராபரன் தாமுண்டாக்கின எல்லாவற்றையும் பார்த்தார்; இதோ *மெத்தவும் நன்றாயிருந்தது; அப்படியே சாயங்காலமும் விடியுங்காலமுமான தினால் ஆறாம்நாள் உண்டாயிற்று. *௫ மோ. ௩௨. ௪.

## உ. அதிகாரம்.

இந்தப்பிரகாரமாக வானமும் பூமியும் அவைகளுடைய எல்லாச்சேனையும் உண்டாக்கப்பட்டுத்தீர்ந்தன.

உ *பராபரன் உண்டாக்கின தம்முடைய கிரியையை ஏழாம்நாளிலே நிறைவேற்றினபிற்பாடு, அவர் தாமுண்டாக்கின தம்முடைய கிரியையையெல்லாம் முடித்தபின், ஏழாம்நாளிலே ஓய்ந்திருந்தார். *உ மோ. உ௰. ௰க: ௩௰க. ௰௭. ௫ மோசே ௫. ௰௪. எபிரே. ௪. ௪.

௩ பராபரன் ஏழாம்நாளை ஆசீர்வதித்து, அதைப் பரிசுத்தமாக்கினார்; அதேதெனில், பராபரன் உண்டுபண்ணிச் சிருஷ்டித்த தம்முடைய கிரியையையெல்லாம் முடித்தபின் அதிலே ஓய்ந்திருந்தார்.

௪ ¶ பராபரனாகிய கர்த்தர் பூமியையும், வானத்தையும், உண்டாக்குகிற நாளிலே வானமும், பூமியும் சிருஷ்டிக்கப்பட்ட பூர்வோத்தரங்கள் இவைகள்தான்.

௫ நிலத்தினுடைய சகலவித செடிகள் பூமியின்மேல் இன்னமிருந்ததில்லை; நிலத்தினுடைய சகலவித பூண்டுகள் இன்னம் முளைத்ததுமில்லை; ஏனென்றால், பராபரனாகிய கர்த்தர் பூமியின்மேல் இன்னம் வருஷிக்கப்பண்ணினதில்லை; நிலத்தைக் கையாள மனுஷனுமில்லை.

௬ அப்போது மூடுபனி பூமியிலிருந்தெழும்பி, பூமியையெல்லாம் நனைத்தது.

௭ பராபரனாகிய கர்த்தர் மனுஷனைப் *பூமியின் மண்ணினாலே உருவாக்கிச் ஜீவனின் சுவாசத்தை அவன் நாசியிலே ஊதினார்; அப்போது மனுஷன் †ஜீவாத்துமாவானான். *க கொரி. ௰௫. ௪௭. †க கொரி. ௰௫. ௪௫.

௮ ¶ பராபரனாகிய கர்த்தர் ஏதேனிலே கிழக்கே ஒரு தோட்டத்தை நாட்டி, தாம் உருவாக்கின மனுஷனை அதிலே வைத்தார்.

௯ பார்வைக்கு விருப்பமும் புசிப்புக்கு நலமுமான சகலவித விருட்சங்களையும், தோட்டத்தின் நடுவிலே *ஜீவனின் விருட்சத்தையும், நன்மை தீமை அறியத்தக்க விருட்சத்தையும், பராபரனாகிய கர்த்தர் பூமியிலிருந்து முளைக்கப்பண்ணினார். *அறி. உ. ௭.

௰ *ஏதேனிலேயிருந்து ஒரு நதி தோட்டத்துக்குப் பாயப் புறப்பட்டு, அங்கேயிருந்து பிரிந்து நாலுதலையான ஆறுகளாயிற்று.

௰க முதலாவதற்குப்பேர் பீசோன்: இது பொன்னுண்டாயிருக்கும் ஆவிலா தேசத்தையெல்லாம் சுற்றி ஓடுகிறது.

௰உ அந்தத் தேசத்தின் பொன் நல்லது; அவ்விடத்திலே பெதோலாகும் கோமேதகக்கல்லும் உண்டு.

௰௩ இரண்டாம் ஆற்றுக்குப் பேர் கீகோன்: இது எத்தியோப்பிய தேசத்தையெல்லாம் சுற்றி ஓடுகிறது.

௰௪ மூன்றும் ஆற்றினுடைய பேர் *இதெக்கேல்: இது அசூரியாவுக்குக் கிழக்காய் ஓடுகிறது. நாலாம் ஆறேவென்றால் ஐபிராத்து. *தானி. ௰. ௪.

௰௫ ¶ பராபரனாகிய கர்த்தர் மனுஷனை அழைத்துக்கொண்டு, அவனை ஏதேன்

Digitized by Google

தோட்டத்திலே அதைக் கையாளவும் காக்கவும் வைத்தார்.

௰௬ பராபரனாகிய கர்த்தர் மனுஷனுக்குக் கற்பித்துச் சொன்னதாவது: நீ தோட்டத்தினுடைய சகல விருட்சத்தின் கனியிலும் புசிக்கவே புசிக்கலாம்.

௰௭ ஆனால் நன்மை தீமை அறியத்தக்க விருட்சத்தின் கனியிலே புசியாயாக; ஏனெனில், அதிலே நீ புசிக்கிறநாளிலே *சாவவே சாவாயென்றார். *உரோ. ௬. ௰௨.

௰௮ ¶ பின்னையும் பராபரனாகிய கர்த்தர் மனுஷன் ஒண்டியாயிருக்கிறது நல்லதல்ல; அவனுக்குமுன்பாக இருக்க ஒரு துணையை அவனுக்கு உண்டாக்குவோமென்றார்.

௰௯ ஏனெனில், பராபரனாகிய கர்த்தர் மண்ணினாலே வெளியின் சகலவித மிருகங்களையும், ஆகாசத்தினுடைய சகல பறவைகளையும் உருவாக்கியிருந்து, மனுஷனண்டைக்கு அவைகளுக்கெப்படிப் பேரிடுவானென்று பார்ப்பதற்கும், அந்தந்தச் சீவபிராணிக்கு மனுஷன் எந்தெந்தப் பேரிடுவானோ அதுவே அதற்குப் பேராயிருப்பதற்கும் கூட்டிவந்தார்.

௨௰ அப்படியே மனுஷன் சகலவித மிருகத்துக்கும், ஆகாசத்துப் பறவைக்கும், வெளியின் சகல சீவனுக்கும் பேரிட்டான்; ஆனால் தனக்குமுன்பாக இருக்கும் துணையை மனுஷன் கண்டதில்லை.

௨௰௧ ¶ அப்போது பராபரனாகிய கர்த்தர் மனுஷன்மேல் அயர்ந்த நித்திரையை விழப்பண்ணினார்; அவன் நித்திரைபோனான்; அப்போது அவர் அவன் விலாவெலும்புகளிலொன்றை எடுத்து, அந்த இடத்தைச் சதையினால் அடைத்தார்.

௨௰௨ *தாம் மனுஷனில் எடுத்த விலாவெலும்பைப் பராபரனாகிய கர்த்தர் ஸ்திரியாக உண்டாக்கி, அவளை மனுஷனண்டைக்குக் கொண்டுவந்தார்: *௧ கொரி. ௰௧. ௮, ௯. ௧ திமோ. ௨. ௰௩.

௨௰௩ அப்போது மனுஷன்: இவள் இப்போது *என் எலும்பில் எலும்பும், என் மாமிசத்தில் மாமிசமுமானாள்; இவள் மனுஷனில் எடுக்கப்பட்டபடியினாலே, இவள் மனுஷியென்று பேரிடப்படுவாளென்றான். *எபே. ௫. ௩௰, ௩௧.

௨௰௪ *இதினிமித்தமாகப் புருஷன் தன் தகப்பனையும் தன் தாயையும் விட்டுத் தன் பெண்சாதியுடனே இசைந்திருப்பான்; †இருவரும் ஒரே மாமிசமாக இருப்பார்களென்றார். *மத்தே. ௰௯. ௫. மாற். ௰. ௭. †எபே. ௫. ௨௮, ௩௧.

௨௰௫ ஆதாம் அவன் பெண்சாதி இருவரும் *நிருவாணமாயிருந்தும் வெட்கப்படாதிருந்தார்கள். *௩. ௭.

## ௩. அதிகாரம்.

சர்ப்பமோவெனில், பராபரனாகிய கர்த்தர் உண்டாக்கின வெளியினுடைய சகல சீவன்களைப்பார்க்கிலும் தந்திரமுள்ளதாயிருந்து, ஸ்திரியுடனே: நீங்கள் தோட்டத்தினுடைய எல்லா விருட்சங்களின் கனியிலும் புசிக்கவேண்டாமென்று பராபரன் சொன்னாரோவென்றது.

௨ அப்போது ஸ்திரி சர்ப்பத்துடனே சொன்னதாவது: தோட்டத்தினுடைய விருட்சங்களின் கனியிற் புசிக்கிறோம்.

௩ ஆனால் தோட்டத்தின் நடுவிலேயிருக்கிற விருட்சத்தின் கனியைக்குறித்துப் பராபரன், நீங்கள் சாவாதபடிக்கு அதிலே புசிக்கவும் அதைத் தொடவும் வேண்டாமென்றாரென்று சொன்னாள்.

௪ *அப்போது சர்ப்பம் ஸ்திரியுடனே: நீங்கள் சாவவே சாவதில்லை. *யோவா. ௮. ௪௪. ௨ கொரி. ௰௧. ௩.

௫ ஏனெனில், நீங்கள் அதிலே புசிக்கும் நாளிலே உங்கள் கண்கள் திறக்கப்படுமென்றும், நீங்கள் நன்மையும் தீமையும் அறிந்து, பராபரனைப்போல இருப்பீர்களென்றும், பராபரன் அறிவாரென்றது.

௬ ¶ *அப்போது ஸ்திரியானவள், அந்த விருட்சம் போசனத்துக்கு நல்லதென்றும், அது கண்களுக்கு விருப்பமும் புத்தியைத்

Digitized by Google

தருகிறதற்கான இச்சிக்கப்படத்தக்க விருட்சமுமாயிருக்கிறதென்றும் பார்த்து, அதின் கனியிலே அறுத்துப் புசித்து, தன் புருஷனுக்குங்கூடக் கொடுத்தாள்; அவனும் புசித்தான்.* ௧ தீமோ. ௨. ௰௪.

௭ அப்போது அவர்கள் இருவருடைய கண்களும் திறக்கப்பட்டன; அவர்கள் தாங்கள் நிருவாணிகளென்று கண்டறிந்து, அத்தியிலைகளைத் தைத்துத் தங்களுக்குக் கச்சைகளை உண்டுபண்ணினார்கள். *௨. ௨௫.

௮ பகல் குளிர்ச்சியான வேளையிலோவென்றால், தோட்டத்தில் உலாவிக்கொண்டிருக்கிற பராபரனாகிய கர்த்தருடைய சத்தத்தைக் கேட்டார்கள்; அப்போது ஆதாமும், அவன் பெண்சாதியும், பராபரனாகிய கர்த்தரின் சந்நிதியை விலக, தோட்டத்து விருட்சங்களின் நடுவில் ஒளித்துக் கொண்டார்கள்.

௯ ¶ ஆனால் பராபரனாகிய கர்த்தர் ஆதாமைக் கூப்பிட்டு, அவனை நீ எங்கேயென்றார்.

௰ அதற்கவன்: நான் தேவரீருடைய சத்தத்தைத் தோட்டத்திலே கேட்டு, நான் நிருவாணியானபடியினாலே பயந்து, ஒளித்துக்கொண்டேனென்றான்.

௰௧ அப்போது அவர் நீ நிருவாணியென்று உனக்கறிவித்தவனார்? *புசிக்கவேண்டாமென்று நாம் உனக்குக் கற்பித்த விருட்சத்தின் கனியைப் புசித்தாயோவென்றார்.* ௨. ௰௬, ௰௭.

௰௨ அதற்கு ஆதாம்: என்னுடனேயிருக்கத் தேவரீர் கட்டளையிட்ட ஸ்திரியானவள் விருட்சத்தின் கனியை எனக்குக் கொடுத்தாள், நான் புசித்தேனென்றான்.

௰௩ அப்போது பராபரனாகிய கர்த்தர் ஸ்திரியைநோக்கி, நீ இதைச்செய்ததென்னவென்றார்; ஸ்திரியானவள்: சர்ப்பம் என்னை மோசம்போக்கினதினாலே புசித்தேனென்றாள்.

௰௪ ¶ அப்போது பராபரனாகிய கர்த்தர் சர்ப்பத்துடனே சொன்னதாவது: நீ இதைச் செய்தபடியினாலே எல்லா மிருகங்களிலும், வெளியினுடைய எல்லாச் சீவன்களிலும், நீ சபிக்கப்பட்டது; நீ உன் வயிற்றினாலே நகர்ந்து, உயிரோடிருக்கிறநாளெல்லாம் மண்ணைத் தின்பாய்.

௰௫ ¶ உனக்கும் ஸ்திரிக்கும், உன்னுடைய வித்துக்கும், அவளுடைய வித்துக்கும், பகையை உண்டாக்குவோம்; *இவர் உன் தலையை நசுக்குவார்; நீ அவர் குதிகாலை நசுக்குவாயென்றார். *௧ யோவா. ௩. ௮.

௰௬ ¶ * ஸ்திரியோடே அவர் சொன்னதாவது: நீ கர்ப்பவதியாயிருக்கும் வருத்தத்தை மிகவும் பெருகப்பண்ணுவோம்; வேதனையோடே பிள்ளைகளைப் பெறுவாயென்றும், உன்னுடைய இச்சை உன் புருஷனுக்குக் கீழாயிருப்பதாக, அவன் உன்னை ஆளக்கடவானென்றும் சொன்னார். *௧ கொரி. ௰௧: ௩: ௰௪. ௩௪. எபே. ௫. ௨௨, ௨௩.

௰௭ பிற்பாடு ஆதாமோடே அவர் சொன்னதாவது: நீ உன் பெண்சாதியின் சத்தத்துக்குச் செவிகொடுத்து, புசியாயாகவென்று நாம் உனக்குக் கற்பித்த விருட்சத்தின் கனியைப் புசித்தபடியினாலே, பூமி உன் நிமித்தம் சபிக்கப்பட்டிருக்கும்; நீ உயிரோடிருக்கிற நாளெல்லாம் வருத்தத்தோடே அதின் பலனைப் புசிப்பாய்.

௰௮ அது உனக்கு முள்ளும் குருக்கும் முளைப்பிக்கும், வெளியின் பயிர்வகைகளைப் புசிப்பாய்.

௰௯ நீ பூமிக்குள் திரும்புமட்டும் *உன் முகத்தின் வேர்வையால் அப்பம் புசிக்கக்கடவாய்; அதேனெனில், அதில் எடுக்கப்பட்டாய்; ஏனென்றால், †நீ மண்ணாயிருக்கிறாய்; மண்ணுக்குத் திரும்புவாயென்றார். *௨ தெச. ௩. ௰. †௰௪. ௨௭.

௨௰ ஆதாம் தன் பெண்சாதிக்கு, ஏவாளென்று பேரிட்டான்; ஏனெனில், அவள் சீவனுள்ளோருக்கெல்லாம் தாயானவள்.

௨௧ ¶ பராபரனாகிய கர்த்தர் ஆதாமுக்

Digitized by Google

கும் அவன் பெண்சாதிக்கும் தோல் அங்கிகளையுண்டாக்கி,அவர்களுக்குத்தரிப்பித்தார்.

௨௨ ¶ பிற்பாடு பராபரனாகிய கர்த்தர் இதோ மனுஷன், நன்மை தீமை அறியத் தக்கவனாய் நம்மிலொருத்தரைப்போலிருந்தான்; இப்போதும், அவன் தன் கையை நீட்டி, சீவவிருட்சத்தின் கனியையும் அறுத்துப் புசித்து, என்றைக்கும் உயிரோடிராதபடிக்குக் கட்டளைபண்ணவேணுமென்று சொல்லி,

௨௩ பராபரனாகிய கர்த்தர் அவனை, அவன் எடுக்கப்பட்ட பூமியைப் பயிரிடும்படிக்கு, ஏதேன்தோட்டத்திலிருந்து அனுப்பிவிட்டார்.

௨௪ அவர் மனுஷனைத் துரத்திவிட்டு, ஏதேனென்ற தோட்டத்துக்குக் கிழக்கே கேருபீன்களையும்,அசைவாடுகிற சுடர் ஒளியுள்ள பட்டயத்தையும், சீவவிருட்சத்துக்குப் போகிறவழியைக் காப்பதற்காக வைத்தார்.

## ௪. அதிகாரம்.

பிற்பாடு ஆதாம் தன் பெண்சாதியாகிய ஏவாளை அறிந்தான்; அவள் கர்ப்பந்தரித்து, காயீனைப்பெற்றுக் கர்த்தராகிய புருஷன் எனக்கிருக்கிறாரென்றாள்.

௨ அப்புறம் அவள் சகோதரனாகிய ஆபேலைப் பெற்றாள்; ஆபேல் ஆட்டுமேய்ப்பனானான்; காயீனோவெனில், நிலத்திற் பயிரிடுகிறவனானான்.

௩ சிலநாள் சென்றபிற்பாடு சம்பவித்ததேதென்றால், காயீன் நிலத்தின் கனியிலே கர்த்தருக்குக் காணிக்கையைக் கொண்டுவந்தான்.

௪ ஆபேலோவென்றால், அவனும் தன் மந்தையின் தலையீற்றுகளிலும், அவைகளின் கொழுப்பிலும் சிலவற்றைக் கொண்டுவந்தான்; ஆனால் *கர்த்தர் ஆபேலையும், அவன் காணிக்கையையும் நோக்கிப்பார்த்தார். *எபிரே. ௰௧. ௪.

௫ காயீனையும் அவன் காணிக்கையையும் நோக்கிப் பாராதேபோனார்; அப்போது காயீனுக்கு மிகவும் எரிச்சலுண்டாய், அவனுடைய முகநாடி வேறுபட்டது.

௬ அப்போது கர்த்தர் காயீனோடே சொன்னதாவது: உனக்கேன் எரிச்சலுண்டாயிற்று? உன் முகநாடி ஏன் வேறுபட்டது?

௭ நீ நன்மைசெய்தால்,மேன்மையில்லையோ? நீ நன்மைசெய்யாயேயாகில், பாவம் வாசற்படியிலே படுத்துக்கொண்டிருக்கின்றது; அதின்இச்சை உன்பேரில் வைக்கப்பட்டது; *நீயோவெனில், அதை ஆண்டுகொள்ளுவாயாகவென்றார். *உரோ. ௬. ௰௨.

௮ ¶ அப்போது காயீன் தன் சகோதரனாகிய ஆபேலோடே பேசினான்; அவர்கள் வெளியிலேயிருக்கிறபோதோவெனில் சம்பவித்ததேதென்றால், காயீன் தன் சகோதரனாகிய ஆபேலுக்கு விரோதமாயெழும்பி, *அவனைக் கொன்றுபோட்டான். *மத். ௨௩. ௩௫. ௧ யோவா. ௩. ௰௨. யூதா. ௰௧.

௯ கர்த்தர் காயீனுடனே: உன் சகோதரனாகிய ஆபேல் எங்கேயென்றார்; அதற்கவன், நான் அறியேன்; நான் என் சகோதரனுக்குக் காவலாளியோவென்றான்.

௰ அப்போது அவர் சொன்னதாவது: என்னசெய்தாய்? உன் சகோதரனுடைய இரத்தத்தின் சத்தம் *பூமியிலிருந்து நம்மைநோக்கிக் கூப்பிட்டுக்கொண்டிருக்கின்றது. *எபி. ௰௨. ௨௪.

௰௧ இப்போது உன் சகோதரனுடைய இரத்தத்தை உன் கையிலே வாங்கிக்கொள்ளத் தன் வாயைத்திறந்த இந்தப் பூமியிலே, நீ இராதபடிக்குச் சபிக்கப்பட்டிருப்பாய்.

௰௨ நீ நிலத்தைப் பயிரிடும்போது அது இனித் தன் சாரத்தை உனக்குக் கொடாது; நீ பூமியில் நிலையற்றவனும் அலைநவனுமாயிருப்பாயென்றார்.

௰௩ அப்போது காயீன் கர்த்தரோடே சொன்னதாவது: என் அக்கிரமம் மன்னிக்கப்படக்கூடாதபடிக்குப் பெரிதாயிருக்கின்றது.

Digitized by Google

௰௪ இதோ இன்று என்னை இந்தத் தேசத்திலிருந்து துரத்திவிடுகிறீர்; நான் தேவரீருடைய சமுகத்தை விலகி மறைந்து, *பூமியில் நிலையற்றவனும், அலைகிறவனுமாயிருப்பேன்; இப்படி என்னைக் கண்டுபிடிக்கிறவனெல்லாம் என்னைக் கொன்றுபோடுவானென்றான். *யோபு. ௰௫. ௨௰, ௨௧.

௰௫ அப்போது கர்த்தர் அவனுடனே: ஆகையால், காயீனைக் கொல்லுகிற எவன் மேலும் ஏழுபழி சுமருமென்றுசொல்லி, காயீனைக் கண்டுபிடிக்கிறவனெல்லாம் அவனைக் கொன்றுபோடாதபடிக்குக் கர்த்தர் அவனுக்கொரு அடையாளம்போட்டார்.

௰௬ அப்படியே காயீன் கர்த்தருடைய சமுகத்தைவிட்டுப் புறப்பட்டு, ஏதேனுக்குக் கிழக்கான நோதென்ற தேசத்தில் குடியிருந்தான்.

௰௭ காயீன் தன் பெண்சாதியை அறிந்தான்; அவள் கர்ப்பந்தரித்து, ஆனோக்கைப் பெற்றாள்; காயீன் ஒரு பட்டணத்தைக்கட்டி, அந்தப் பட்டணத்துக்குத் தன் குமாரன் ஆனோக்குடைய பேரைத் தரித்தான்.

௰௮ ஆனோக்குக்கு இராத் பிறந்தான்; இராத், மேகூயவேலைப் பெற்றான்; மேகூயவேல், மேத்தூஷவேலைப் பெற்றான்; மேத்தூஷவேல், லாமேக்கைப் பெற்றான்.

௰௯ ¶ லாமேக் இரண்டு பெண்சாதிகளை விவாகம் பண்ணினான்; முதலாம் பெண்சாதியின்பேர் ஆதாள்; இரண்டாம் பெண்சாதியின்பேர் சில்லாள்.

௨௰ ஆதாள் யாபாலைப் பெற்றாள்; அவன் கூடாரங்களில் வாசம்பண்ணி, மந்தை வைக்கிறவர்களுக்குத் தகப்பனானான்.

௨௧ அவன் சகோதரனுடையபேர் யூபால்; அவன் சகல சுரமண்டலக்காரருக்கும் கின்னரக்காரருக்கும் தகப்பனானான்.

௨௨ சில்லாளும் கர்ப்பந்தரித்துத் தூபால் காயீனைப் பெற்றாள்; அவன் சகல கன்னாருக்கும் கொல்லருக்கும் முதலாளி; தூபால் காயீனுடைய சகோதரி நாமாள்.

௨௩ லாமேக் தன் பெண்சாதிகளாகிய ஆதாளோடும் சில்லாளோடும் சொன்னதாவது: லாமேக்கின் பெண்சாதிகளே, என் சத்தத்தைக் கேட்டு என் சொல்லுக்குக் கவனமாயிருங்கள்; ஒரு மனுஷனை எனக்குக் காயமுண்டாகவும், ஒரு வாலிபனை எனக்குத் தழும்புண்டாகவும் கொன்றுபோட்டேன்.

௨௪ காயீனுக்காக ஏழு பழியும், லாமேக்குக்காக எழுபத்தேழு பழியும் சுமருமென்றான்.

௨௫ ¶ ஆதாம் பின்னையும் தன் பெண்சாதியை அறிந்தான், அவள் ஒரு குமாரனைப் பெற்று, காயீன் கொன்றுபோட்ட ஆபேலுக்குப் பதிலாகப் பராபரன் எனக்கு வேறொரு வித்தைக் கொடுத்தாரென்று சொல்லி, அவனுக்குச் *சேத் என்று பேரிட்டாள். *௫. ௩.

௨௬ சேத்துக்கும் *ஒரு குமாரன் பிறந்தான்; அவனுக்கு ஏனோஸ் என்று பேரிட்டான்; அப்போது கர்த்தருடைய நாமத்தைத் தொழுதுகொள்ளத்துவக்கமாயிற்று. *௫. ௬.

## ௫. அதிகாரம்.

ஆதாமுடைய *சந்ததிகளின் அட்டவணையாவது: பராபரன் மனுஷனைச் சிருஷ்டிக்கிறநாளிலே †அவனைப் பராபரனுடைய சாயலாக உண்டாக்கினார். *௧ நாளா. ௧. ௧. †௧. ௨௭.

௨ அவர்களை ஆணும் பெண்ணுமாகச் சிருஷ்டித்து, அவர்களை ஆசீர்வதித்து, அவர்கள் சிருஷ்டிக்கப்பட்ட நாளிலே அவர்களுக்கு மனுஷரென்று பேரிட்டார்.

௩ ஆதாம் நூற்றுமுப்பதுவருஷம் உயிரோடிருந்தபோது, தன் சாயலாகத் தன்னுடைய ரூபத்தின்படியே ஒரு குமாரனைப் பெற்று, *அவனுக்குச் சேத்தென்று பேரிட்டான். *௪. ௨௫.

௪ ஆதாம் சேத்தைப் பெற்றபிற்பாடு,

Digitized by Google

எண்ணூறு வருஷம் உயிரோடிருந்து குமாரரையும் குமாரத்திகளையும் பெற்றான்.

௫ ஆகையால், ஆதாம் உயிரோடிருந்த நாளெல்லாம் தொளாயிரத்து முப்பதுவருஷமாயிருந்தது; பிற்பாடு மரித்தான்.

௬ ¶ சேத் நூற்றைந்து வயதாயிருந்து, ஏனோசைப் பெற்றான்.

௭ சேத் ஏனோசைப் பெற்றபிற்பாடு, எண்ணூற்றேழு வருஷம் உயிரோடிருந்து, குமாரரையும் குமாரத்திகளையும் பெற்றான்.

௮ ஆகையால், சேத்துடைய நாளெல்லாம் தொளாயிரத்துப் பன்னிரண்டு வருஷமாயிருந்தது; பிற்பாடு மரித்தான்.

௯ ¶ ஏனோஸ் தொண்ணூறு வயதாயிருந்து, கேனானைப் பெற்றான்.

௰ ஏனோஸ் கேனானைப் பெற்றபிற்பாடு, எண்ணூற்றுப் பதினைந்து வருஷம் உயிரோடிருந்து, குமாரரையும் குமாரத்திகளையும் பெற்றான்.

௰௧ ஆகையால், ஏனோசுடைய நாளெல்லாம் தொளாயிரத்தைந்து வருஷமாயிருந்தது; பிற்பாடு மரித்தான்.

௰௨ கேனான் எழுபது வயதாயிருந்து, மக்லாலெயேலைப் பெற்றான்.

௰௩ கேனான் மக்லாலெயேலைப் பெற்றபிற்பாடு, எண்ணூற்று நாற்பதுவருஷம் உயிரோடிருந்து, குமாரரையும் குமாரத்திகளையும் பெற்றான்.

௰௪ ஆகையால், கேனானுடைய நாளெல்லாம் தொளாயிரத்துப் பத்துவருஷமாயிருந்தது; பிற்பாடு மரித்தான்.

௰௫ ¶ மக்லாலெயேல் அறுபத்தைந்து வயதாயிருந்து, யாரேத்தைப் பெற்றான்.

௰௬ மக்லாலெயேல் யாரேத்தைப் பெற்றபிற்பாடு, எண்ணூற்றுமுப்பது வருஷம் உயிரோடிருந்து, குமாரரையும் குமாரத்திகளையும் பெற்றான்.

௰௭ ஆகையால், மக்லாலெயேலுடைய நாளெல்லாம் எண்ணூற்றுத் தொண்ணூற்றைந்து வருஷமாயிருந்தது; பிற்பாடு மரித்தான்.

௰௮ யாரேத் நூற்றறுபத்திரண்டு வயதாயிருந்து, ஏனோக்கைப் பெற்றான்.

௰௯ யாரேத் ஏனோக்கைப் பெற்றபிற்பாடு, எண்ணூறு வருஷம் உயிரோடிருந்து, குமாரரையும் குமாரத்திகளையும் பெற்றான்.

௨௰ ஆகையால், யாரேத்துடைய நாளெல்லாம் தொளாயிரத்தறுபத்திரண்டு வருஷமாயிருந்தது; பிற்பாடு மரித்தான்.

௨௧ ¶ ஏனோக் அறுபத்தைந்து வயதாயிருந்து, மெத்தூசலாவைப் பெற்றான்.

௨௨ ஏனோக் மெத்தூசலாவைப் பெற்றபிற்பாடு, முந்நூறு வருஷம் பராபரனோடே சஞ்சரித்துக்கொண்டிருந்து, குமாரரையும் குமாரத்திகளையும் பெற்றான்.

௨௩ ஏனோக்குடைய நாளெல்லாம் முந்நூற்றறுபத்தைந்து வருஷமாயிருந்தது.

௨௪ *ஏனோக் பராபரனோடே சஞ்சரித்துக்கொண்டிருக்கையில், இராதேபோனான்; ஏனெனில், பராபரன் அவனை †எடுத்துக்கொண்டார். * எபி. ௰௧. ௫. யூதா. ௰௪. ௰௫. † ௨ இரா. ௨. ௰௧.

௨௫ ¶ மெத்தூசலா நூற்றெண்பத்தேழு வயதாயிருந்து, லாமேக்கைப் பெற்றான்.

௨௬ மெத்தூசலா லாமேக்கைப் பெற்றபிற்பாடு, எழுநூற்றெண்பத்திரண்டுவருஷம் உயிரோடிருந்து, குமாரரையும் குமாரத்திகளையும் பெற்றான்.

௨௭ ஆகையால், மெத்தூசலாவுடைய நாளெல்லாம் தொளாயிரத்தறுபத்தொன்பதுவருஷமாயிருந்தது; பிற்பாடுமரித்தான்.

௨௮ ¶ லாமேக் நூற்றெண்பத்திரண்டு வயதாயிருந்து, ஒரு குமாரனைப்பெற்று,

௨௯ கர்த்தர் சபித்த பூமியிலே உண்டான நம்முடைய வேலையிலும் நம்முடைய கைகளின் வருத்தத்திலும் இவன் நம்மைத் தேற்றுவானென்று சொல்லி, அவனுக்கு நோவாவென்று பேரிட்டான்.

௩௰ லாமேக் நோவாவைப் பெற்றபிற்பாடு, ஐந்நூற்றுத் தொண்ணூற்றைந்துவருஷம் உயிரோடிருந்து, குமாரரையும் குமாரத்திகளையும் பெற்றான்.



Digitized by Google

௩௧ ஆகையால் லாமேகுடைய நாளெல்லாம் எழுநூற்றெழுபத்தேழு வருஷமாயிருந்தது; பிற்பாடு மரித்தான்.

௩௨ நோவா ஐந்நூறு வயதானபோது, நோவா *சேமையும், காமையும், யாப்பேத்தையும் பெற்றான். *௬. ௰.

## ௬. அதிகாரம்.

மனுஷர் பூமியின்மேல் பெருகத்துவக்கி அவர்களுக்குக் குமாரத்திகள் பிறந்தபோது, சம்பவித்ததேதென்றால்,

௨ பராபரனுடைய குமாரர் மனுஷருடைய குமாரத்திகளை அவர்கள் சவுந்தரியமுள்ளவர்களென்று பார்த்துத் தாங்கள் தெரிந்துகொண்ட அனைவரிலும் பெண்களைக் கொண்டார்கள்.

௩ அப்போது கர்த்தர் *நம்முடைய ஆவி என்றென்றைக்கும் மனுஷரோடே போராடுவதில்லை; ஏனெனில், அவர்கள் தானும் மாமிசம்; அவர்கள் இருக்கப்போகிற நாள்கள் நூற்றிருபதுவருஷமென்றார். *ஏசா. ௬௩. ௰. அப். ௭. ௫௧.

௪ அந்நாள்களில் இராட்சதர் பூமியிலேயிருந்தார்கள்; பிற்பாடு பராபரனுடைய குமாரர் மனுஷருடைய குமாரத்திகளோடே கூடுகிறதினால் இவர்கள் அவர்களுக்குப் பிள்ளைகளைப் பெற்றபோது இவர்களும் பூர்வத்தில் பேர்போன மனுஷராகிய பலவான்களானார்கள்.

௫ ஆனால், மனுஷனுடைய அக்கிரமம் பூமியிலே பெரியதென்றும்,* அவன் இருதயத்தினுடைய நினைவுகளின் தோற்றமெல்லாம் நித்தம் பொல்லாததே என்றும், †கர்த்தர் கண்டபோது, *௮. ௨௧. மத். ௰௫. ௰௯. † சங். ௰௪. ௨.

௬ தாம் பூமியிலே மனுஷனை உண்டாக்கினதற்குக் கர்த்தர் மனஸ்தாபப்பட்டார்; அது அவர் இருதயத்துக்கு நோவாயிருந்தது.

௭ அப்போது கர்த்தர் சொன்னதாவது: நாம் சிருஷ்டித்த மனுஷனைப் பூமியின்மேல்வைக்காமல், மனுஷன்முதற்கொண்டு மிருகங்கள்பரியந்தமும், ஊர்வனபரியந்தமும், ஆகாசத்துப்பறவைகள் பரியந்தமும் உண்டாயிருக்கிறவைகளை நிக்கிரகம் பண்ணுவோம்; ஏனெனில், நாம் அவர்களை உண்டாக்கினது நமக்கு மனஸ்தாபமாயிருக்கிறதென்றார்.

௮ ¶ ஆனால், *நோவாவுக்குக் கர்த்தருடைய கண்களில் கிருபைகிடைத்தது. *எபி. ௰௧. ௭.

௯ நோவாவின் சந்ததியாவது: நோவா தன் காலத்தில் இருக்கிறவர்களுக்குள்ளே நீதியும் உத்தமுமான மனுஷனாயிருந்தான்; *நோவா பராபரனோடே சஞ்சரித்துவந்தான். *௫. ௨௨.

௰ *நோவா சேம், காம், யாப்பேத்தென்ற மூன்று குமாரனைப்பெற்றான். *௫. ௩௨.

௰௧ பூமியோவெனில், பராபரனுக்கு முன்பாகக் கெடுக்கப்பட்டிருந்தது; கொடுமையினாலே பூமி நிறைந்தது.

௰௨ பராபரன் பூமியைப் பார்த்தார்; இதோ கெடுக்கப்பட்டதாயிருந்தது; ஏனெனில், மாமிசமெல்லாம் பூமியின்மேல் தன் வழியைக் கெடுத்தது.

௰௩ அப்போது பராபரன் நோவாவுக்குச் சொன்னதாவது: எல்லா மாமிசத்தின் முடிவும் நமக்கு முன்பாகவந்தது; ஏனெனில், அவர்களால் பூமி கொடுமையினாலே நிறைந்தது; இதோ நாம் அவர்களைப் பூமியோடுங்கூட அழித்துப்போடுவோம்.

௰௪ ¶ நீ கொப்பேர் மரங்களால் உனக்கொரு பேழையை உண்டாக்கு; அந்தப் பேழையிலே அறைகளையுண்டாக்கி, அதன் உள்ளும்புறம்புமாகக் கீல் பூசுவாயாக.

௰௫ நீ அதைப் பண்ணவேண்டிய பிரகாரமாவது: பேழையின் நீளம் முந்நூறு முழமும் அதின் அகலம் ஐம்பது முழமும் அதின் உயரம் முப்பதுமுழமுமாயிருப்பதாக.

௰௬ நீ பேழைக்கு வெளிச்சம்வரும் திறப்பைப்பண்ணி, மேல்தட்டுக்கு ஒரு முழத்தாழ்த்தியிலே அதைச் செய்து முடித்

Digitized by Google

து, பேழையின் கதவை அதின் பக்கத்தில் வைத்துக் கீழ் அறைகளையும், இரண்டாந் தட்டின் அறைகளையும், மூன்றாந்தட்டின் அறைகளையும் பண்ணுவாயாக.

௰௭ ஏனென்றால் இதோ, வானத்தின்கீழே ஜீவசுவாசமுள்ள எல்லா மாம்சத்தையும் அழிக்க, நாம் பூமியின்மேல் சலப்பிரளயத்தை வரப்பண்ணுவோம்; பூமியிலுள்ளவையெல்லாம் மாண்டுபோம்.

௰௮ ஆனால் உன்னோடே நம்முடைய உடம்படிக்கையை நிலைநிறுத்துவோம்; நீயும் உன்னோடேகூட உன் குமாரரும் உன் பெண்சாதியும் உன் குமாரரின் பெண்சாதிகளும் பேழைக்குள் பிரவேசிக்கக்கடவீர்கள்.

௰௯ உன்னோடேகூட உயிரோடே காப்பதற்கு நீ எல்லாவித மாம்சமான சகல ஜீவன்களிலும் *வகை ஒன்றுக்கு ஆணும் பெண்ணுமாயிருக்கிற ஒவ்வொரு சோடு பேழைக்குள் சேர்த்துக்கொள்வாயாக. *௭. ௯.

௨௰ சாதி சாதியான பறவைகளிலும் சாதி சாதியான மிருகங்களிலும் சாதி சாதியான பூமியின் எல்லா ஊர்வனவற்றிலும், வகை ஒன்றுக்கு ஒவ்வொருசோடு உயிரோடே காக்கப்படுவதற்கு உன்னண்டைக்கு வரக்கடவது.

௨௧ ஆகையால், நீ தின்கிற சகலவித பண்டங்களையும் எடுத்துக்கொண்டு, உனக்கும் அவைகளுக்கும் ஆகாரமாயிருப்பதற்காக உன்னண்டையிலே சேர்த்துக்கொள்ளக்கடவாயென்றார்.

௨௨ *நோவா அப்படிச்செய்தான்; பராபரன் தனக்குக் கற்பித்தபடியெல்லாம் அவன்செய்தான். *௭. ௫. எபி. ௰௧. ௭.

## ௭. அதிகாரம்.

பிற்பாடு கர்த்தர் நோவாவோடே சொன்னதாவது: *நீயும் உன் வீட்டார் அனைவரும் பேழைக்குள் பிரவேசியுங்கள்; ஏனெனில், இந்தச் சந்ததியில் உன்னை நமக்கு முன்பாகநீதிமானாகக்கண்டோம். *உபேது. ௨. ௫.

௨ பூமியின்மீதெங்கும் வித்தை உயிரோடே காக்கும்படிக்கு நீ சுத்தமான சகல மிருகங்களிலும் ஆணும் பெண்ணுமாயிருக்கிற எவ்வேழு சோடும், சுத்தமல்லாத மிருகங்களிலோவென்றால், ஆணும் பெண்ணுமாயிருக்கிற ஒவ்வொருசோடும்,

௩ ஆகாசத்துப் பறவைகளிலும் சேவலும் பேடுமாயிருக்கிற எவ்வேழுசோடும் உன்னண்டையிற் சேர்த்துக்கொள்ளக்கடவாய்.

௪ ஏனெனில், இன்னம் ஏழுநாள் சென்றபிற்பாடு நாம் பூமியின்மேல் இரவுபகல் நாற்பதுநாளாக மழையை வருஷிக்கப்பண்ணி, நாம் உண்டாக்கின ஜீவசெந்து அனைத்தையும் பூமியின்மேலிராதபடிக்கு நிக்கிரகம் பண்ணுவோமென்றார்.

௫ கர்த்தர் தனக்குக் கற்பித்தபடியெல்லாம் நோவா செய்தான்.

௬ பூமியின்மேல் சலப்பிரளயத்தின் தண்ணீர்கள் உண்டாகிறபோது நோவா அறுநூறுவயதாயிருந்தான்.

௭ நோவாவும் அவனோடேகூட அவன் குமாரரும் அவன் பெண்சாதியும் அவன் குமாரரின் பெண்சாதிகளும் சலப்பிரளயத்தின் தண்ணீர்களுக்குத் தப்பப் *பேழைக்குள் பிரவேசித்தார்கள். *மத். ௨௪. ௩௮, ௩௯. லூக். ௰௭. ௨௬, ௨௭.

௮ பராபரன் நோவாவுக்குக் கற்பித்தபடியே சுத்தமான மிருகங்களிலும் சுத்தமில்லாத மிருகங்களிலும் பூமியின்மேல் ஊர்வனவெல்லாவற்றிலும்,

௯ *ஆணும் பெண்ணும் சோடுசோடாய் நோவாவண்டையிலே பேழைக்குட்பட்டன. *௬. ௰௯.

௰ ஏழுநாள் சென்றபிற்பாடு சம்பவித்ததேதென்றால், பூமியின்மேல் சலப்பிரளயத்தின் தண்ணீர்களுண்டாயின.

Digitized by Google

௰௧ நோவா அறுநூறாம்வயதாகிறவருஷத்தில் இரண்டாம்மாதம் பதினேழாந்தேதியா

ய அந்நாளிலே, மகா ஆழத்தின் ஊற்றுகளெல்லாம் பிளந்தன; வானத்தின் மதகுகளும் திறவுண்டன.

௧௨ இரவும் பகலும் நாற்பதுநாளாகப் பூமியின்மேல் பெருமழை உண்டாயிருந்தது.

௧௩ அந்த நாளில்தானே நோவாவும், நோவாவின் குமாரராகிய சேமும், காமும், யாப்பேத்தும், அவர்களோடேகூட நோவாவின் பெண்சாதியும், அவன் குமாரரின் மூன்று பெண்சாதிகளும் பேழைக்குட் பிரவேசித்தார்கள்.

௧௪ இவர்கள்தவிரச் சாதி சாதியான சகலவித சீவன்களும், சாதி சாதியான சகலவித மிருகங்களும், பூமியின்மேல்ஊருகிற சாதி சாதியான சகலவித ஊர்வனவும், சாதி சாதியான சகலவித பறவைகளும், எப்படிப்பட்ட சிறகுமுள்ள சகலவித பட்சிகளும் உட்பட்டன.

௧௫ இப்படியே சீவசுவாசமுள்ள எல்லா மாமிசத்திலேயும் சோடு சோடானவைகள் நோவாவண்டையிலே பேழைக்குள் போயின.

௧௬ உட்போனவைகள், பராபரன் அவனுக்குக் கற்பித்தபடியே சகலவித மாமிசத்தில் ஆணும்பெண்ணுமாய் உட்போயின; அப்போது, கர்த்தர் அவனுக்குப்பின்னாகக் கதவடைத்தார்.

௧௭ சலப்பிரளயம் நாற்பதுநாள் பூமியின்மேலுண்டாகிறபோது தண்ணீர்கள் பெருகி, பேழையைக் கிளம்பப்பண்ணி, அது பூமியைவிட்டு உயரவந்தது.

௧௮ தண்ணீர்கள் மகா வெள்ளமாகிப் பூமியின்மேல் மிகவும் பெருகிற்று; ஆனால், பேழை தண்ணீர்களின்மேல் மிதந்துகொண்டிருந்தது.

௧௯ தண்ணீர்கள் பூமியின்மேல் மிகவும் மிகுந்த வெள்ளமானதினாலே, வானத்தின்கீழ் எங்குமுள்ள உயர்ந்த பருவதங்களெல்லாம் மூடப்பட்டன.

௨௰ மூடப்பட்ட பருவதங்களுக்கு மேலாய்ப் பதினைந்துமுழ உயரத்திற்குத் தண்ணீர்கள் பெருகிப்போயிற்று.

௨௧ அப்போது பூமியின்மேல் அசைவாடுகிற எல்லா மாமிசமுமாகிய பறவைகளும், சாதுமிருகங்களும், துஷ்டமிருகங்களும், பூமியின்மேல் ஊருகிற சகல ஊர்வனவும், *எல்லா மனுஷசீவனும் மாண்டது. *லூக். ௧௭. ௨௭.

௨௨ வெட்டாந்தரையில் உண்டானவையெல்லாவற்றிலும், நாசியில் சீவசுவாசமான ஆவியையுடையவையெல்லாம் செத்துப்போயின.

௨௩ பூமியின்மேல் மனுஷனைத்துவக்கி மிருகங்கள்பரியந்தமும், ஊர்வனபரியந்தமும், ஆகாசத்துப் பறவைகள்பரியந்தமும், இருந்த உயிருள்ள வஸ்து யாவும் நிக்கிரகமாயின; அவைகள் பூமியில் இராதபடிக்கு நிக்கிரகமாயின; நோவாவும், அவனுடனே பேழையிலிருந்தவைகளுமாத்திரமே உயிரோடே வைக்கப்பட்ட மீதியாயின.

௨௪ தண்ணீர்கள் பூமியின்மேல் நூற்றைம்பதுநாள் மிகவும் பெருத்திருந்தது.

## ௮. அதிகாரம்.

பராபரனோவென்றால், நோவாவையும், அவனோடேகூடப் பேழையிலிருந்த எல்லாச் சீவன்களையும், எல்லா மிருகங்களையும் நினைத்தார்; ஆகையால், பராபரன் பூமியின்மேல் காற்றை அடிக்கப் பண்ணினார்; அப்போது தண்ணீர்கள் அமர்ந்தது.

௨ ஆழத்தின் ஊற்றுகளும், வானத்தின் மதகுகளும் அடைபட்டு, வானத்திலிருந்துண்டான மழை நிறுத்தப்பட்டுப்போயிற்று.

௩ அப்போது தண்ணீர்கள் போகப்போகப் பூமியைவிட்டுத் திரும்பிற்று; *நூற்றைம்பதுநாளுக்குப்பிற்பாடு, தண்ணீர்கள் குறைந்தது. *௭. ௨௪.

௪ ¶ ஏழாமாதம் பதினேழாந்தேதியிலே, பேழை *ஆராத்தென்ற மலைகளின்மேல் தங்கிற்று. *எசா. ௩௭. ௩௮.

Digitized by Google

ரு பத்தாமாதமட்டும் தண்ணீர்கள் குறைந்துவருகையில், பத்தாமாதமுதல்தேதியிலே, பருவதங்களின் சிகரங்கள் காணப்பட்டது.

௬ நாற்பதுநாள் சென்றபிற்பாடு சம்பவித்ததேதென்றால், நோவா தான்பேழையிலுண்டாக்கியிருந்த பலகணியைத் திறந்து,

எ ¶ ஒரு காகத்தை வெளியே விட்டான்; அது புறப்பட்டுப் பூமியின்மேலிருந்த தண்ணீர்கள் சுவறிப்போகுமட்டும் போகிறதும் வருகிறதுமாயிருந்தது.

அ பிற்பாடு பூமியின்மேல் தண்ணீர்கள் கொஞ்சமாயிற்றோவென்று பார்க்கிறதற்கு, ஒரு புறாவைத் தன்னிடத்திலிருந்து வெளியிலே விட்டான்.

௯ அந்தப் புறாவோவெனில், பூமியின்மீதெங்கும் தண்ணீர்கள் இன்னமிருந்தபடியினாலே, தன்னுள்ளங்காலுக்கு இளைப்பாறும் இடத்தைக்காணாமல், திரும்ப அவனண்டையில் பேழைக்கு வந்தது; அப்போது அவன் தன் கையை நீட்டி, அதைப் பிடித்து, அதைத் தன்னிடமாகப் பேழைக்குட் சேர்த்துக்கொண்டான்.

௰ இன்னம் வேறே ஏழுநாட்பொறுத்து மறுபடியும் புறாவைப் பேழையிலிருந்து வெளியிலே விட்டான்.

௰௧ அந்தப் புறாச் சாயங்காலத்திலே அவனண்டைக்கு வந்துசேர்ந்தது; இதோ அது கொத்திக்கொண்டுவந்த ஒரு ஒலீவமரத்தின் இலை அதின் வாயிலேயிருந்தது; அதினாலே, நோவா பூமியின்மேல் தண்ணீர்கள் கொஞ்சமாயிற்றென்றறிந்தான்.

௰௨ அவன் இன்னம் வேறே ஏழுநாட் பொறுத்துப் புறாவை வெளியிலே விட்டான்; அது மறுபடியும் அவனண்டைக்குத் திரும்பிவந்ததில்லை.

௰௩ ¶ அவன் அறுநூற்றொருவயதாயிருந்தவருஷம் முதல்மாதம் முதல்தேதியிலே சம்பவித்ததேதென்றால், பூமியின்மேலேயிருந்த தண்ணீர்கள் வற்றிப்போனபடியினாலே நோவா பேழையின்மேல் தட்டைவாங்கிப் போட்டுப்பார்த்தான்; இதோ பூமியின்மேல் தண்ணீரில்லாதிருந்தது.

௰௪ பிறகு இரண்டாமாதம் இருபத்தேழாந்தேதியிலே பூமி காய்ந்திருந்தது.

௰௫ ¶ அப்போது பராபரன் நோவாவோடே சொன்னதாவது:

௰௬ நீயும், உன்னோடேகூட உன் பெண்சாதியும், உன் குமாரரும், உன் குமாரரின் பெண்சாதிகளும், பேழையிலிருந்து புறப்பட்டுவாருங்கள்.

௰௭ பறவைகளும், மிருகங்களும், பூமியின்மேல் ஊருகிற சகல ஊர்வனவுமாகிய எல்லாவித மாமிசத்திலும், உன்னண்டையிலேயிருக்கிற சீவனையெல்லாம் உன்னோடேகூட வெளியிலே வரவிடு, *அவைகள் பூமியிலே திரளாய் வர்த்தித்து, பூமியின்மேல் பலுகிப் பெருகக்கடவதென்றார். *க. உஉ.

௰௮ அப்போது நோவாவும், அவனோடேகூட அவனுடைய குமாரரும், அவன் பெண்சாதியும், அவன் குமாருடைய பெண்சாதிகளும் புறப்பட்டுவந்தார்கள்.

௰௯ சகல மிருகங்களும், சகல ஊர்வனவும், சகல பறவைகளுமாகிய பூமியின்மேல் நடமாடுகிற யாவும், சாதி சாதியாகப் பேழையிலிருந்து புறப்பட்டுவந்தன.

௨௰ ¶ அப்போது நோவா கர்த்தருக்குப் பலிபீடங்கட்டி, சுத்தமான சகல மிருகங்களிலும், சுத்தமான சகல பறவைகளிலும், சிலவற்றை எடுத்துப் பீடத்தின்மேலே தகனபலிகளாகப் பலியிட்டான்.

௨௧ ஆற்றுகிற வாசனையைக் கர்த்தர் மோந்தார்; அப்போது கர்த்தர் தம்முடைய இருதயத்திலே சொன்னதாவது: நாம் இனிப் பூமியை மனுஷன் நிமித்தமாகத் திரும்பச் சபியோம்; ஏனெனில, *மனுஷனுடைய இருதயத்தின் தோற்றுதல் அவன் சிறுவயது துவக்கிப் பொல்லாததாயிருக்கின்றது; இனித் திரும்ப நாம்செய்ததுபோல, எல்லாச் சீவாத்துமாவையும் சங்கரியோம். *௬. ரு. மத். ௰ரு. ௰௯.



Digitized by Google

உஉ பூமியிலிருக்கும் சகல நாள்மட்டும் விதைப்பும் அறுப்பும், குளிரும் அனலும், கோடைகாலமும் மாரிகாலமும், பகலும் இராவும் ஒய்ந்துபோகாதிருக்குமென்றார்.

## கூ. அதிகாரம்.

பிற்பாடு பராபரன் நோவாவையும் அவன் குமாரரையும் ஆசீர்வதித்து, அவர்களோடே சொன்னதாவது: *நீங்கள் பலுகிப் பெருகிப் பூமியை நிரப்புங்கள். *க. உ௮: அ. ௰எ.

உ பூமியினுடைய சகல மிருகங்களின் மேலும், ஆகாசத்தினுடைய சகல பறவைகளின்மேலும், உங்கள் பயமும், உங்கள் அதிர்வும் உண்டாயிருப்பதாக; பூமியில் நடமாடுகிற யாவும், சமுத்திரத்தின் மச்சங்கள் யாவும், உங்கள் கையிலே கொடுக்கப்பட்டது.

ங நடமாடுகிற சீவசெந்து யாவும், உங்களுக்கு ஆகாரமாயிருப்பதாக; *பச்சைப் பூண்டுகளைப்போல, அதையெல்லாம் உங்களுக்குக் கொடுத்தோம். *க. உகூ.

௪ ஆனால் மாமிசத்தை அதின் உயிராகிற *அதின் இரத்தத்தோடே புசியாதிருப்பீர்களாக. *ங மோ. ௰எ. ௰உ-௰௪: ௰கூ. உகூ. ௫ மோ. ௰உ. உங, உ௪.

௫ உங்கள் உயிராயிருக்கிற உங்கள் இரத்தத்துக்கும் பழியைவாங்குவோம்; சகல மிருகத்தின்கையிலும் அதை வாங்குவோம்; மனுஷன்கையிலும், அவனவன் சகோதரன்கையிலும், மனுஷனுடைய உயிருக்குப் பழியைவாங்குவோம்.

௬ *எவன் மனுஷனுடைய இரத்தத்தைச் சிந்துகிறானோ, அவனிரத்தம் மனுஷனால் சிந்தப்படக்கடவது; ஏனெனில், பராபரனுடைய சாயலாக அவர் மனுஷனை உண்டாக்கினார். *உ மோ. உக. ௰உ. மத். உ௬. ௫௨.

எ *நீங்கள் பலுகிப் பெருகிப் பூமியிலே திரளாய் வர்த்தித்து, அதிலே பெருகிப் போங்களென்றார். *க, வசனம்.

அ ¶ பின்னையும் பராபரன் நோவாவோடும், அவன் குமாரரோடுங்கூடச் சொன்னதாவது:

௯ இதோ நாம் உங்களோடும், உங்களுக்குப் பின்னாகவரும் உங்களுடைய வித்தோடும்,

௰ உங்களண்டையிலிருக்கிற சகல சீவசெந்துக்களாகிய பறவைகளோடும், மிருகங்களோடும், உங்களண்டையிலிருக்கிற பூமியினுடைய எல்லாச் சீவன்களோடும், நம்முடைய உடம்படிக்கையை ஏற்படுத்துகிறோம்; பேழையிலிருந்து புறப்பட்டதெல்லாம் முதற்கொண்டு பூமியிலிருக்கப்போகிற எல்லாச் சீவன்களோடுங்கூடத்தானே.

௰க *இனி மாமிசமெல்லாம் சலப்பிரளயத்தின் தண்ணீர்களால் சங்கரிக்கப்படாதென்றும், பூமியை அழிக்க இனிச் சலப்பிரளயம் வராதென்றும், உங்களோடே நம்முடைய உடம்படிக்கையை ஏற்படுத்துகிறோமென்றார். *அ. உக, உஉ. ஏசா. ரு௪. கூ.

௰உ பின்னையும் பராபரன் சொன்னதாவது: நாம் நமக்கும், உங்களுக்கும், உங்களண்டையிலிருக்கிற எல்லாச் சீவசெந்துக்களுக்கும், என்றுமுள்ள தலைமுறைகளுக்கென்று பண்ணுகிற உடம்படிக்கையின் அடையாளமாவது:

௰ங நம்முடைய வில்லை மேகத்திலே வைத்தோம்; அது நமக்கும் பூமிக்குமுண்டான உடம்படிக்கைக்கு, அடையாளமாயிருக்கும்.

௰௪ ஆகையால் சம்பவிப்பதேதெனில், நாம் பூமியின்மேல் மேகமந்தாரத்தை வரப்பண்ணும்போது மேகத்திலே அந்த வில் காணப்படும்.

௰௫ அப்பொழுது, சலப்பிரளயத்தின் தண்ணீர்கள் இனி எல்லா மாமிசத்தையும் அழிக்க வராதபடிக்கு, நமக்கும் உங்களுக்கும் எல்லாவித மாமிசமாகிய சகல சீவசெந்துக்களுக்குமுண்டான நம்முடைய உடம்படிக்கையை நினைப்போம்.

Digitized by Google

௰௬ அந்த வில் மேகத்திலிருக்கும்போது பராபரனுக்கும், பூமியின்மேலுள்ள எல்லா வித மாமிசமாகிய சகல சீவனுக்கும் உண்டான நித்திய உடம்படிக்கையை நாம் நினைக்கும்படிக்கு, அதை நோக்கிப்பார்ப்போம்.

௰௭ இது நமக்கும், பூமியின்மேலுள்ள சகல மாமிசத்துக்கும், நாம் ஏற்படுத்தின உடம்படிக்கையின் அடையாளமென்று பராபரன் நோவாவோடே சொன்னார்.

௰௮ ¶ பேழையிலிருந்து புறப்பட்ட நோவாவின் குமாரர் சேம், காம், யாப்பேத்தென்றவர்களே; காமோவென்றால், கானானுடைய தகப்பன்.

௰௯ இந்த மூன்றுபேர் நோவாவினுடைய குமாரர்; இவர்களாலே பூமியெங்கும் சனம் பரம்பிற்று.

௨௰ ¶ நோவா பயிரிடும் குடியாயிருக்கத்துவக்கி, திராட்சத்தோட்டத்தை நாட்டினான்.

௨௧ அவன் திராட்சப்பழ இரசத்திலே குடித்து, வெறித்திருந்து, தன் கூடாரத்துக்குள்ளே வஸ்திரம்விலகிப் படுத்திருந்தான்.

௨௨ அப்போது கானானின் தகப்பனாகிய காம், தன் தகப்பனுடைய நிருவாணத்தைக் கண்டு, வெளியிலேயிருந்த தன் இரண்டு சகோதரருக்கு அறிவித்தான்.

௨௩ அப்போது சேமும் யாப்பேத்தும் ஒரு வஸ்திரத்தையெடுத்து, தங்கள் இருவரின் தோள்மேலும் போட்டுக்கொண்டு, பின்னிட்டுவந்து, தங்கள் தகப்பனுடைய நிருவாணத்தை மூடினார்கள்; அவர்கள் முகங்கள் பின்புறமாயிருந்தபடியினாலே, அவர்கள் தங்கள் தகப்பனுடைய நிருவாணத்தைக் கண்டதில்லை.

௨௪ நோவா தன் திராட்சப்பழ இரசத்தின் வெறிதெளிந்து விழித்தபோது தன் இளையகுமாரன்தனக்குச்செய்ததையறிந்து,

௨௫ கானான் சபிக்கப்பட்டவனாகி, தன் சகோதரருக்கு அடியாரின்அடியானாயிருக்கக்கடவானென்றான்.

௨௬ பின்னையும் அவன் சொன்னதாவது: சேமுடைய பராபரனாகிய கர்த்தர் ஸ்தோத்திரிக்கப்பட்டவர்; கானானோவெனில், அவனுக்கு ஊழியக்காரனாயிருக்கக்கடவன்.

௨௭ யாப்பேத்தைப் பராபரன் பரிபாலனம்பண்ணக்கடவார்; அவன் சேமுடைய கூடாரங்களில் குடியிருப்பானாக; கானானோவெனில், அவனுக்கு ஊழியக்காரனாயிருக்கக்கடவானென்றான்.

௨௮ ¶ சலப்பிரளயத்துக்குப் பிற்பாடு நோவா முந்நூற்றைம்பதுவருஷம் உயிரோடிருந்தான்.

௨௯ ஆகையால், நோவாவின் நாள்களெல்லாம் தொளாயிரத்தைம்பது வருஷமாயிருந்தது; பிற்பாடு மரித்தான்.

## ௰. அதிகாரம்.

நோவாவுடைய குமாரராகிய *சேம், காம், யாப்பேத்தென்றவர்களின் சந்ததிகளாவது: அவர்களுக்குச் சலப்பிரளயத்துக்குப்பிற்பாடு பிறந்த குமாரர் ஆறென்றால், *௫. ௩௨.

௨ ¶ *யாப்பேத்துடைய குமாரர், கோமேர், மாகோக், மாதாய், யாவான், தூபால், மேசேக், தீராஸ். * ௧ நாளா. ௧. ௫.

௩ கோமேருடைய குமாரர், அஸ்கேனாஸ், ரிப்பாத், தொகர்மா.

௪ யாவானுடைய குமாரர், எலீசா, தர்சீஸ், கித்தீம், தோதானீம்.

௫ இவர்களால் சாதிகளுடைய தேசத்தீவுகள் அவனவன் பாஷையின்படியேயும், அவர்களுடைய சாதிகளிலுள்ள அவர்களுடைய வமிசங்களின்படியேயும், அவரவர் தேசங்களாய்ப் பிரிந்தது.

௬ ¶ காமுடைய குமாரர், கூஷ், மிஸ்ராயிம், பூத், கானான்.

௭ கூஷுடைய குமாரர், சேபா, காவிலா, சப்தா, ராமா, சப்தேகா; ராமாவினுடைய குமாரர், சேபா, தேதான்.

௮ கூஷ் நிம்ரோத்தைப்பெற்றான்; இவன் பூமியிலே பலவானாயிருக்கத்துவக்கினான்.

Digitized by Google

௯ இவன் கர்த்தருக்குமுன்பாகப் பலத்த வேட்டைக்காரனாயிருந்தான்; ஆகையால், நிம்ரோத்தைப்போலக் கர்த்தருக்குமுன்பாகப் பலத்த வேட்டைக்காரனாயிருக்கிறானென்று சொல்லப்படும்.

௰ சிநேயார் தேசத்திலுள்ள பாபேலும், ஏரேகும், அக்காதும், கல்நேயும், அவனுடைய இராச்சியத்தின்துவக்கமாயிருந்தது.

௰௧ இந்தத் தேசத்திலிருந்து அசூர் புறப்பட்டுப்போய், நினிவேயையும், ரெகோபோத் பட்டணத்தையும், காலாகையும்,

௰௨ நினிவேக்கும் காலாகுக்கும் நடுவாக ரேசேனையும் கட்டினான்; இது பெரிய பட்டணம்.

௰௩ மிஸ்ராயீம், லூதிமையும், அனாமீமையும், லேகாபீமையும், நபத்தூகீமையும்,

௰௪ பத்துருசீமையும், பெலிஸ்தரின் சந்ததி உண்டான கஸ்லுகீமையும், கப்தோரீமையும் பெற்றான்.

௰௫ *கானான் சீதோனென்ற தன் தலைச்சனையும், கேத்தையும்,

௰௬ எபூசியையும், எமோரியையும், கிர்காசியையும்,

௰௭ இவ்வியையும், அற்கியையும், சீனியையும்,

௰௮ அர்வாதியையும், செமாரியையும், காமாத்தியையும் பெற்றான்; பிற்பாடு கானானரின் வமிசங்கள் சிதறிப்போயின.

௰௯ கானானரின் எல்லை சீதோனிலிருந்து கேரார்வழியாய்க் காசாமட்டுக்கும் போய், சோதோம், கொமரா, அதாமா, செபோயீம் வழியாய் லாசாமட்டுக்கும் போயிற்று.

௨௰ இவர்களே தங்கள் தேசங்களிலும், தங்கள் சாதிகளிலுமுள்ள தங்கள் வமிசங்களின்படியேயும், தங்கள் பாஷைகளின்படியேயும், காமுடைய பிள்ளைகளானவர்கள்.

௨௧ ¶ சேமுக்கும் பிள்ளைகள் பிறந்தார்கள்; அவன் ஏபேருடைய புத்திரருக்கெல்லாம் தகப்பனும், யாபேத்தென்கிற மூத்தவனுக்குத் தம்பியுமாயிருந்தான்.

௨௨ சேமுடைய குமாரர், ஏலாம், அசூர், அற்பக்சாத், லூத், ஆராம்.

௨௩ ஆராமுடைய குமாரர், ஊத்ஸ், கூல், கேத்தேர், மாஸ்.

௨௪ *அற்பக்சாத் சாலாகைப்பெற்றான்; சாலாக் ஏபேரைப்பெற்றான். * ௰௧. ௰௨.

௨௫ *ஏபேருக்கு இரண்டுகுமாரர் பிறந்தார்கள்; ஒருவன்பேர் பேலேக், ஏனெனில், அவன் நாள்களில் பூமி பிரிவுண்டது; அவனுடைய சகோதரன்பேர் யொக்கெத்தான். *௰௧. ௰௬.

௨௬ யொக்கெத்தான் அல்மோதாதையும், சாலேப்பையும், அசர்மாவெத்தையும், யாராகையும்,

௨௭ அதோராமையும், ஊசாலையும், திக்லாவையும்,

௨௮ ஓபாலையும், அபிமாவேலையும், சேபாவையும்,

௨௯ ஒப்பீரையும், காவிலாவையும், யோபாபையும்பெற்றான்; இவர்கள் அனைவரும் யொக்கெத்தானுடைய குமாரர்.

௩௰ அவர்களுடைய குடியிருப்பு மேசாதுவக்கி, கிழக்குமலையாகிய சேப்பாருக்குப்போகிற வழிமட்டுமிருந்தது.

௩௧ இவர்களே தங்கள் தேசங்களிலும் தங்கள் சாதிகளிலுமுள்ள தங்கள் வமிசங்களின்படியேயும் தங்கள் பாஷைகளின்படியேயும் சேமுடைய குமாரரானவர்கள்.

௩௨ இதுகளே தங்கள் சாதிகளிலுள்ள தங்களுடைய சந்ததிகளின்படியே நோவாவுடைய குமாரரின் வமிசங்கள்; சலப்பிரளயத்துக்குப்பிற்பாடு இவர்களால் பூமியிலே சாதிகள் பிரிந்தன.

## ௰௧. அதிகாரம்.

அக்காலத்திலே பூமியெங்கும் ஒரே பாஷையும், ஒரேவித வார்த்தைகளுமிருந்தன.

௨ அப்போது சம்பவித்ததேதென்றால், அவர்கள் கிழக்கேயிருந்து பயணம்பண்ணுகையில், சீனேயார் தேசத்திலே பள்ளத்



Google

தாக்கைக்கண்டு,அங்கேகுடியிருந்து,*௰.௰.

௩ ¶ ஒருவரோடொருவர், நாம் செங்கல் அறுத்து, அவைகளை நற்கோடாய்ச் சுடுவோம் வாருங்களென்றார்கள்; பிற்பாடு செங்கல் அவர்களுக்குக் கல்லாகவும், பிசின் அவர்களுக்குச் சாந்தாகவுமிருந்தது.

௪ அவர்கள் நாம் பூமியின்மீதெங்கும் சிதறுண்டுபோகாதபடிக்கு, நமக்கு நாம் ஒரு பட்டணத்தையும், *வானத்தளவை எட்டுகிற சிகரமுள்ள ஒரு கோபுரத்தையும் கட்டி, நமக்குப் பேர் உண்டாக்குவோம் வாருங்களென்று சொல்லிக்கொண்டார்கள்.
*௫ மோ. ௧. ௨௮.

௫ ஆனால் மனுப்புத்திரர் கட்டுகிற பட்டணத்தையும் கோபுரத்தையும் பார்க்கிறதற்காகக் *கர்த்தர் இறங்கினார். *௰௮. ௨௧.

௬ அப்போது கர்த்தர் சொன்னதாவது: இதோ சனம் ஒரே கூட்டமானது; அவர்கள் அனைவருக்கும் ஒரே பாஷையுமிருக்கிறது; இதை அவர்கள் செய்யத்தொடங்கினார்கள்; இப்போதும் தாங்கள் செய்ய நினைத்ததெல்லாம் தங்களுக்குத் தடுக்கப்படுவதில்லை என்றிருக்கிறார்கள்.

௭ நாம் இறங்கி, ஒருவர் பாஷையை மற்றொருவர் அறியாதபடிக்கு, அங்கே அவர்கள் பாஷையைத் தாறுமாறாக்குவோமாகவென்றார்.

௮ அப்படியே கர்த்தர் அவர்களை அவ்விடத்திலிருந்து பூமியின்மீதெங்கும் சிதறிப்போகப்பண்ணினார்; அப்போது பட்டணத்தைக் கட்டி ஓய்ந்தார்கள்.

௯ ஆனதுகொண்டு பூமி அனைத்தின் பாஷையைக் கர்த்தர் அங்கே தாறுமாறாக்கினபடியினாலும், கர்த்தர் அவர்களை அவ்விடத்திலிருந்து பூமியின்மீதெங்கும் சிதறிப்போகப்பண்ணினபடியினாலும், அதின்பேர் பாபேலென்னப்பட்டது.

௰ ¶ *சேமுடைய சந்ததியாவது: சேம் நூறுவயதாயிருந்து, அற்பக்சாத்தைச் சலப்பிரளயம்போன இரண்டு வருஷத்துக்குப் பிற்பாடு பெற்றான். *௰. ௨௨.

௰௧ சேம் அற்பக்சாத்தைப் பெற்றபிற்பாடு, ஐந்நூறுவருஷம் உயிரோடிருந்து குமாரரையும் குமாரத்திகளையும் பெற்றான்.

௰௨ அற்பக்சாத் முப்பத்தைந்து வயதாயிருந்து, சாலாகைப்பெற்றான்.

௰௩ சாலாகைப் பெற்றபிற்பாடு, அற்பக்சாத் நானூற்றுமூன்றுவருஷம் உயிரோடிருந்து, குமாரரையும் குமாரத்திகளையும் பெற்றான்.

௰௪ சாலாக் முப்பது வயதாயிருந்து, ஏபேரைப்பெற்றான்.

௰௫ ஏபேரைப் பெற்றபிற்பாடு, சாலா நானூற்றுமூன்று வருஷம் உயிரோடிருந்து, குமாரரையும் குமாரத்திகளையும் பெற்றான்.

௰௬ ஏபேர் முப்பத்துநாலு வயதாயிருந்து, பேலேகைப்பெற்றான்.

௰௭ பேலேகைப் பெற்றபிற்பாடு, ஏபேர் நானூற்றுமுப்பது வருஷம் உயிரோடிருந்து, குமாரரையும் குமாரத்திகளையும் பெற்றான்.

௰௮ பேலேக் முப்பதுவயதாயிருந்து, ரேகூவைப்பெற்றான்.

௰௯ ரேகூவைப்பெற்றபிற்பாடு பேலேக் இருநூற்றொன்பது வருஷம் உயிரோடிருந்து, குமாரரையும் குமாரத்திகளையும் பெற்றான்.

௨௰ ரேகூ முப்பத்திரண்டுவயதாயிருந்து, சேருகைப்பெற்றான்.

௨௧ சேருகைப் பெற்றபிற்பாடு, ரேகூ இருநூற்றேழுவருஷம் உயிரோடிருந்து, குமாரரையும் குமாரத்திகளையும் பெற்றான்.

௨௨ சேருக் முப்பதுவயதாயிருந்து, நாகோரைப் பெற்றான்.

௨௩ நாகோரைப் பெற்றபிற்பாடு, சேருக இருநூறுவருஷம் உயிரோடிருந்து, குமாரரையும் குமாரத்திகளையும் பெற்றான்.

௨௪ நாகோர் இருபத்தொன்பது வயதாயிருந்து, தேராகைப்பெற்றான்.

௨௫ தேராகைப் பெற்றபிற்பாடு நாகோர் நூற்றுப்பத்தொன்பதுவருஷம் உயிரோடி

Digitized by Google

ருந்து, குமாரரையும், குமாரத்திகளையும் பெற்றான்.

௨௬ தேராக் எழுபது வயதாயிருந்து, ஆபிராமையும், நாகோரையும், ஆரானையும் பெற்றான்.

௨௭ ¶ தேராகுடைய சந்ததியாவது: தேராக் ஆபிராமையும், நாகோரையும், ஆரானையும் பெற்றான்; ஆரான் லோத்தைப்பெற்றான்.

௨௮ ஆரானோவெனில், தன் சென்ம பூமியாகிய ஊர் என்ற கல்தேயர் தேசத்துப் பட்டணத்திலே தன் தகப்பனாகிய தேராகுக்கு முன்னே மரித்தான்.

௨௯ ஆபிராமும் நாகோரும் தங்களுக்குப் பெண்கொண்டார்கள்; ஆபிராமுடைய பெண்சாதியின்பேர் சாராய்; நாகோருடைய பெண்சாதியின்பேர் மில்காள்; இவள் ஆரானின் குமாரத்தி; இவளுடைய தகப்பன் மில்காளுக்கும், இல்காளுக்கும் தகப்பனானவன்.

௩௰ ஆனால், சாராய் புத்திரசந்தானமில்லாமல் மலடியாயிருந்தாள்.

௩௧ ¶ தேராக் தன் குமாரனாகிய ஆபிராமையும், ஆரானின் குமாரன் தன் பேரனாகிய லோத்தையும், தன் குமாரன் ஆபிராமுடைய பெண்சாதியாகிய தன் மருமகள் சாராயையும் அழைத்துக்கொண்டு, அவர்களோடேகூட *ஊர் என்ற கல்தேயருடைய பட்டணத்திலிருந்து கானான்தேசத்துக்குப்போகப் புறப்பட்டான்; ஆனால், அவர்கள் காரான்மட்டுக்கும் வந்தபோது, அங்கே இருந்துவிட்டார்கள். *௰௫. ௭.

௩௨ தேராகுடைய நாள்கள் இருநூற்றைந்து வருஷமாயிருந்தது; பிற்பாடு தேராக் காரானிலே மரித்தான்.

## ௰௨. அதிகாரம்.

கர்த்தர் ஆபிராமோடே சொன்னதாவது: *நீ உன் தேசத்தையும், உன் இனத்தையும், உன் தகப்பனுடைய வீட்டையும் விட்டுப் புறப்பட்டு, நாம் உனக்குக் காண்பிக்கப்போகிற தேசத்துக்குப்போ. *அப். ௭. ௩. எபி. ௰௧. ௮.

௨ நாம் உன்னைத் திரட்சியான சாதியாக்கி, உன்னை ஆசீர்வதித்து, உன்பேரை மேன்மையாக்குவோம்; நீ ஆசீர்வாதமாகஇருப்பாய்.

௩ உன்னை ஆசீர்வதிக்கிறவர்களை ஆசீர்வதிப்போம்; உன்னைச் சபிக்கிறவனைச் சபிப்போம்; *உன்னில் பூமியின் வம்சங்களெல்லாம் ஆசீர்வதிக்கப்படுமென்றார்.
*௰௮. ௰௮: ௨௨. ௰௮: ௨௬. ௪: ௨௮. ௰௪. அப். ௩. ௨௫. கலா. ௩. ௮—௰௬.

௪ ¶ அப்போது ஆபிராம் கர்த்தர் தனக்குச் சொன்னபடியே போனான்; லோத்தும் அவனோடேகூடப் போனான்; ஆபிராம் ஆரானிலேயிருந்து புறப்படுகிறபோது எழுபத்தைந்து வயதுள்ளவனாயிருந்தான்.

௫ ஆபிராம் தன் பெண்சாதி சாராயையும், தன் சகோதரன்குமாரனாகிய லோத்தையும், தாங்கள் சம்பாதித்திருந்த தங்கள் சம்பத்தெல்லாவற்றையும், ஆரானிலே சௌதரித்துக்கொண்ட ஆத்துமாக்களையும் கூட்டிக்கொண்டபிற்பாடு கானான்தேசத்துக்குப் போகப் புறப்பட்டுக் கானான்தேசத்துக்கு வந்தார்கள்.

௬ ¶ ஆபிராம் சிகேமென்ற இடம்மட்டுக்கும், மோரேயென்ற சமனான பூமிமட்டுக்கும் தேசத்தைக் கடந்துவந்தான்; கானானியன் அப்போது தேசத்திலேயிருந்தான்.

௭ கர்த்தர் ஆபிராமுக்குத் தரிசனையாகி, *உன் வித்துக்கு இந்தத் தேசத்தைக் கொடுப்போமென்றார்; அப்போது அவன் தனக்குத் தரிசனையான கர்த்தருக்கு அங்கே ஒரு பலிபீடத்தைக் கட்டினான். *௰௩. ௰௫: ௰௫. ௰௭. ௮: ௨௬. ௩.

௮ பிற்பாடு அவன் அவ்விடம்விட்டுப் பேர்ந்து, பேத்தேலுக்குக் கிழக்கே இருக்கும் மலைக்குவந்து, பேத்தேல் தனக்கு மேற்காகவும் ஆயீ கிழக்காகவும் இருக்கக் கூடாரம்போட்டு, அங்கே கர்த்தருக்கு ஒரு பலிபீடத்தைக் கட்டி, கர்த்தருடைய நாமத்தைத் தொழுதுகொண்டான்.


Digitized by Google

௯ அதின்பிறகு ஆபிராம் புறப்பட்டு, தெற்கே பயணம்பண்ணிக்கொண்டேபோனான்.

௰ ¶ ஆனால் தேசத்திலே பஞ்சமுண்டாயிற்று; ஆகையால், ஆபிராம் எகிப்துதேசத்துக்கு அங்கே தங்கும்படிக்கு இறங்கிப்போனான்; ஏனெனில், தேசத்திலே பஞ்சம் கடினமாயிருந்தது.

௰௧ அப்போது சம்பவித்ததேதென்றால், அவன் எகிப்துக்குச் சமீபமாக வந்தபோது தன் பெண்சாதி சாறாயோடே சொன்னதாவது: இதோ, நீ பார்வைக்கு அழகுள்ள ஸ்திரி என்றறிவேன்.

௰௨ ஆனதுகொண்டு சம்பவிப்பதேதென்றால், எகிப்தியர் உன்னைக் காணும்பொழுது, இவள் அவன் பெண்சாதியென்று சொல்லி, என்னைக் கொன்று, உன்னை உயிரோடேவைப்பார்கள்.

௰௩ ஆகையால் உன் நிமித்தம் எனக்கு நலமாகும்படிக்கும், உன்னைத் தொட்டு என் ஆத்துமா உயிரோடிருக்கும்படிக்கும், *உன்னை என் சகோதரியென்று நீ சொல்லென்றான். *௨௰. ௨, ௨௬: ௭.

௰௪ ¶ ஆபிராம் எகிப்திலே வந்தபோது, சம்பவித்ததேதென்றால், எகிப்தியர் அந்த ஸ்திரியை மகா அழகுள்ளவளென்று பார்த்தார்கள்.

௰௫ பார்வோனுடைய பிரபுக்களும் அவளைக்கண்டு, அவளைப் பார்வோனுக்குமுன்பாகப் புகழ்ந்தார்கள்; அப்போது அந்த ஸ்திரி பார்வோன் வீட்டிலே வைத்துக்கொள்ளப்பட்டாள்.

௰௬ அவன் அவள் நிமித்தமாய் ஆபிராமுக்கு நன்மைசெய்தான்; இவனுக்கு ஆடுமாடுகளும், கழுதைகளும், வேலைக்காரரும், வேலைக்காரிகளும், கோளிகைக் கழுதைகளும், ஒட்டகங்களும் உண்டாயிற்று.

௰௭ ஆனால் * ஆபிராமுடைய பெண்சாதியாகிய சாறாயின் நிமித்தம் கர்த்தர் பார்வோனையும் அவன் வீட்டாரையும் மகா வாதைகளாலே வாதித்தார். *சங். ௱௫. ௰௪.

௰௮ அப்போது பார்வோன் ஆபிராமை அழைத்துச் சொன்னதாவது: இதை எனக்கு ஏன் செய்தாய்? இவள் உன் பெண்சாதியென்று நீ எனக்கு அறிவிக்காதேபோனதென்ன?

௰௯ இவள் உன் சகோதரியென்று நீ சொல்லுவானேன்? அவளை நான் எனக்குப்பெண்சாதியாகப் படைக்கவேணுமென்றிருப்பேனே; இப்போதோவெனில், இதோ உன் பெண்சாதியிருக்கிறாள்; அவளை அழைத்துக்கொண்டு போவென்றுசொல்லி,

௨௰ பார்வோன் அவனுக்காகச் சில மனிதரைக் கட்டளைபண்ணினான்; அவர்கள் அவனையும், அவன் பெண்சாதியையும், அவனுக்குண்டானதெல்லாவற்றையும் வழிவிட்டனுப்பினார்கள்.

## ௰௩. அதிகாரம்.

அப்படியே ஆபிராமும், அவன் பெண்சாதியும், அவனுக்குண்டான யாவும், அவனோடேகூட லோத்தும், எகிப்திலிருந்து தெற்குப்புறத்திலே ஏறிவந்தார்கள்.

௨ ஆபிராமோவெனில், மிருகஜீவன்களும் வெள்ளியும் பொன்னுமான ஆஸ்தியிலே மகா தனவானாயிருந்தான்.

௩ அவன் தன் பயணங்களில் தெற்கேயிருந்து பெத்தேல்மட்டாகவும், *பெத்தேலுக்கும் ஆயீக்கும் நடுவாகத் தனக்கு முதல் கூடாரமிருந்ததும் தான் முதல் ஒரு பீடத்தை உண்டாக்கினதுமான ஸ்தலமட்டாகவும் போனான். *௰௨. ௮.

௪ அங்கே ஆபிராம் கர்த்தருடைய நாமத்தைத் தொழுதுகொண்டான்.

௫ ஆபிராமோடேகூடவந்த லோத்துக்கும், ஆடுமாடுகளும் கூடாரங்களுமிருந்தன.

௬ அவர்கள் ஒருமிக்கக் குடியிருக்க அந்தப் பூமி அவர்களைத் தாங்கமாட்டாதேபோயிற்று. ஏனெனில், (ஒருமிக்க) அவர்களுடைய ஆஸ்தி மிகுதியாயிருந்தது; ஆகையால், அவர்கள் கூடக் குடியிருக்கக் கூடாதிருந்தது.

Digitized by Google

எ ¶ ஆபிராமுடைய மந்தையின் மேய்ப்பருக்கும், லோத்துடைய மந்தையின் மேய்ப்பருக்கும் வாக்குவாதமுண்டாயிருந்தது; கானானியரும், பெரிசியரும் அப்போது தேசத்திலே குடியிருந்தார்கள்.

அ ஆகையால், ஆபிராம் லோத்தோடே சொன்னதாவது: எனக்கும் உனக்கும், என்னுடைய மேய்ப்பருக்கும், உன்னுடைய மேய்ப்பருக்கும், வாக்குவாதம் இருக்கவேண்டாம்; ஏனெனில், நாம் சகோதரரானவர்கள்.

கூ இந்தச் சீமையெல்லாம் உனக்குமுன்பாக இருக்கின்றதல்லவோ? என்னைவிட்டுப் பிரிந்துபோகலாம்; நீ இடதுபுறத்திலே சாய்ந்துபோனால், நான் வலதுபுறத்திலே சாய்ந்துபோவேன்; நீ வலதுபுறத்திலே சாய்ந்துபோனால், நான் இடதுபுறத்திலே சாய்ந்துபோவேனென்றான்.

௰ ¶ அப்போது லோத் தன் கண்களை ஏறெடுத்து, யோர்தான் நதிக்கருகான சமனான பூமியையெல்லாம் அது எங்கும் நீர்ப்பாய்ச்சலானதென்று பார்த்தான்; ஏனெனில், கர்த்தர் சோதோமையும், கொமோராவையும் அழிக்காததற்குமுன்னே, அது கர்த்தருடைய தோட்டத்தைப்போலவும், சோவார்மட்டுக்கும் எகிப்துதேசத்தைப் போலவுமிருந்தது.

௰க அப்போது லோத் யோர்தானுக்கருகான சமனான பூமியையெல்லாம் தெரிந்துகொண்டு, கிழக்கே பயணம்போனான்; இப்படிச் சகோதரர் ஒருத்தரையொருத்தர் விட்டுப் பிரிந்தார்கள்.

௰உ ஆபிராம் கானான்தேசத்தில் குடியிருந்தான்; லோத்தோவெனில், அந்தச் சமனான பூமியின் பட்டணங்களிலே குடியிருந்து, சோதோம்மட்டுக்கும் போய்க் கூடாரம்போட்டான்.

௰௩ ஆனால் *சோதோமின் மனிதர் கர்த்தருக்குமுன்பாக மிகவும் பொல்லாதவர்களும் பாவிகளுமாயிருந்தார்கள். * ௰அ. உ௰. எசே. ௰௬. ௪௯.

௰௪ ¶ லோத் ஆபிராமைவிட்டுப் பிரிந்த பிற்பாடு கர்த்தர் ஆபிராமுடனே சொன்னதாவது: நீ உன் கண்களை ஏறெடுத்து, நீ இருக்கிற இடத்திலிருந்து வடக்கும், தெற்கும், கிழக்கும், மேற்கும் நோக்கிப்பார்.

௰௫ ஏனெனில், நீ பார்க்கிற பூமியையெல்லாம் *நாம் உனக்கும், உன் வித்துக்கும், என்றைக்கும் இருக்கும்படி கொடுத்து, *௰உ. எ: ௰௪. எ: ௰௫. எ.

௰௬ உன் வித்தைப் * பூமியின் தூளைப்போலாக்குவோம்; ஒருவன் பூமியின் தூளை எண்ணக்கூடுமானால், உன் வித்தும் எண்ணப்படும். *௰௫. ௫.

௰எ நீ எழுந்து தேசத்தின் நீளத்திலும் அகலத்திலும் நடந்து திரி; ஏனெனில், உனக்கு அதைக் கொடுப்போமென்றார்.

௰அ ¶ அப்போது ஆபிராம் கூடாரத்தைப் பெயர்த்துப்போய், எபிரோனிலிருக்கும் *மம்ரேயினுடைய சமனான பூமியில் வந்து குடியிருந்து, அங்கே கர்த்தருக்குப் பலிபீடத்தைக் கட்டினான்.

* ௰௪. ௰௩: ௰அ. க.

## ௰௪. அதிகாரம்.

சீனேயாரின் இராசாவாகிய அம்ராப்பேலும், ஏலாசாரின் இராசாவாகிய ஆரியோகும், ஏலாமின் இராசாவாகிய கெதொர்லகோமேரும், சாதிகளின் இராசாவாகிய திதேயாலும் இருந்த நாள்களில் சம்பவித்ததென்றால்,

உ அவர்கள் சோதோமின் இராசாவாகிய பேராவோடும், கொமோராவின் இராசாவாகிய பிர்சாவோடும், ஆத்மாவின் இராசாவாகிய சீனேயாவோடும், செபோயீமின் இராசாவாகிய செமேபரோடும், சோவார் என்னப்படுகிற பேலாவின் இராசாவோடும் யுத்தம்பண்ணினார்கள்.

௩ இவர்களெல்லாரும் இப்பொழுது உப்புக்கடல் இருக்கிற சித்தீமின் பள்ளத்தாக்கிலே கூடினார்கள்.

௪ பன்னிரண்டுவருஷம் கெதொர்லகோ

Digitized by Google

மேரைச் சேவித்து, பதின்மூன்றும் வருஷத்திலே கலகம்பண்ணினார்கள்.

௫ ஆனபடியால் பதினாலாம்வருஷத்திலே கெதொர்லகோமேரும் அவனோடேகூட இருந்த இராசாக்களும் வந்து, அஸ்தேரோத் கர்னாயீமிலே இருந்த ரெப்பாவரையும், காமிலே இருந்த சூசியரையும், சாவே கீரியத்தாயீமிலே இருந்த ஏமியரையும்,

௬ சேயீர்மலைகளில் இருந்த ஓரியரையும், வனாந்தரத்துக்கருகான பாரானின் சமனான பூமிமட்டும் முறியடித்து,

௭ திரும்பிக் காதேஸ் என்னப்பட்ட ஏன்மிஸ்ப் பாத்துக்குவந்து, ஆமலேக்கியருடைய நாடனைத்தையும், ஆத்சாத்சோன்தாமாரில் குடியிருந்த ஏமோரியரையுங்கூடப் பாழ்க்கடித்தார்கள்.

௮ அப்போது சோதோமின் இராசாவும், கொமோராவின் இராசாவும், ஆத்மாவின் இராசாவும், செபோயீமின் இராசாவும், சோவாரென்னப்படுகிற பேலாவின் இராசாவும் புறப்பட்டுச் சித்தீமின் பள்ளத்தாக்கிலே,

௯ ஏலாமின் இராசாவாகிய கெதொர்லகோமேரோடும், சாதியாரின் இராசாவாகிய திதேயாலோடும், சீனேயாரின் இராசாவாகிய அம்ராப்பேலோடும், ஏலாசாரின் இராசாவாகிய ஆரியோகோடும் யுத்தம் பண்ணுகிறதற்கு ஆயத்தப்பட்டார்கள்; அந்த ஐந்து இராசாக்களோடே இந்த நாலு இராசாக்கள் யுத்தம்பண்ணினார்கள்.

௰ ஆனால் சித்தீமின் பள்ளத்தாக்குப் பிசின் எடுக்கிற கேணி கேணிகளாயிருந்தது; சோதோமின் இராசாவும், கொமோராவின் இராசாவும் முறிந்தோடி, அங்கே விழுந்தார்கள்; மீந்தவர்கள் பர்வதங்களுக்கு ஓடிப்போனார்கள்.

௰௧ ¶ அப்பொழுது சோதோமிலும் கொமோராவிலுமுள்ள எல்லா ஆஸ்தியையும், அவர்களுடைய எல்லா வஸ்துக்களையும் எடுத்துக்கொண்டு போய்விட்டார்கள்.

௰௨ ¶ ஆபிராமுடைய சகோதரன் குமாரனாகிய லோத்தையும், அவன் ஆஸ்தியையும் கொண்டுபோனார்கள்; ஏனென்றால், அவன் சோதோமிலே குடியிருந்தான்.

௰௩ ஆனால் தப்பிப்போன ஒருவன் வந்து, எபிரேயனாகிய ஆபிராமுக்கு அதை அறிவித்தான்; ஆபிராமோடே உடம்படிக்கையான மனிதராகிய எஸ்கோலுக்கும் ஆநேருக்கும் சகோதரனாகிய *மம்ரேயென்ற எமோரியனுடைய சமனான பூமியிலே அவன் அப்பொழுது குடியிருந்தான். *௰௩. ௰௮.

௰௪ ¶ தன் சகோதரன் சிறையாகக் கொண்டுபோகப்பட்டதை ஆபிராம் கேட்டபோது, அவன் தன் வீட்டிலே பிறந்த முந்நூற்றுப் பதினெட்டுக் கைபடிந்த ஆள்களுக்கு ஆயுதந்தரிப்பித்து, தாண் என்ற ஊர்மட்டாக அவர்களைத் தொடர்ந்து,

௰௫ இராத்திரியிலே அவனும் அவன் வேலைக்காரரும் பிரிந்து, பவிஞ்சுகளாய் அவர்கள்மேல் விழுந்து, அவர்களை முறியடித்துத் தமஸ்குவுக்கு இடதுபுறமான ஓபாமட்டுக்கும் அவர்களைத் துரத்தி,

௰௬ எல்லா ஆஸ்தியையும் திருப்பிக்கொண்டுவந்தான்; தன் சகோதரனாகிய லோத்தையும் அவனுடைய ஆஸ்தியையும், இதுவுமல்லாமல் ஸ்திரிகளையும் சனத்தையுங்கூடத் திருப்பிக்கொண்டுவந்தான்.

௰௭ ¶ அவன் கெதொர்லகோமேரையும் அவனோடேகூட இருந்த இராசாக்களையும் முறியடித்துத் திரும்பி வந்தபிற்பாடு, சோதோமின் இராசா புறப்பட்டு, இராசாவின் பள்ளத்தாக்கென்னப்படுகிற சாவே பள்ளத்தாக்குமட்டும் அவனுக்கெதிர்கொண்டு வந்தான்.

௰௮ ஆனால் சாலேமின் இராசாவாகிய *மெல்கிசேதேக்கு அப்பமும் திராட்சப்பழ இரசமும் வெளியே கொண்டுவந்தான்; இவன் உன்னதமான பராபரனுடைய ஆசாரியனாயிருந்து, *சங். ௱௰. ௪. எபி. ௭. ௧. ழ.

Digitized by Google

௰௯ அவனை ஆசீர்வதித்து, வானத்துக்

கும் பூமிக்கும் எசமானாகிய உன்னதமான பராபரனாலே ஆபிராம் ஆசீர்வதிக்கப்பட்டவனென்றும்,

௨௰ உன் சத்துருக்களை உன் கையில் ஒப்புக்கொடுத்த உன்னதமான பராபரன் ஸ்தோத்திரிக்கப்பட்டவரென்றும் சொன்னான்; இவனுக்கு ஆபிராம் எல்லாவற்றிலும் பத்திலொன்றைக் கொடுத்தான்.

௨௧ ¶ சோதோமின் இராசா ஆபிராமுடனே: ஆத்துமாக்களை எனக்குத் தா; ஆஸ்தியை நீ எடுத்துக்கொள்ளென்றான்.

௨௨ ஆனால் ஆபிராம் சோதோமின் இராசாவோடே சொன்னதாவது: நான் ஆபிராமை ஐசுவரியவானாக்கினேனென்று நீர் சொல்லாதபடிக்கு நான் ஒரு சரட்டையாகிலும் பாதரட்சையின் வாரையாகிலும் உமக்கு உண்டானதிலே எல்லாம் யாதொன்றையாகிலும் எடுத்துக்கொள்ளேனென்று,

௨௩ வானத்துக்கும் பூமிக்கும் எசமானாகிய உன்னத பராபரனான கர்த்தருக்கு நேராக என் கையை ஏறெடுக்கிறேன்.

௨௪ வாலிபர் சாப்பிட்டதும் என்னோடேகூடவந்த ஆநேர், எஸ்கோல், மம்ரே என்ற புருஷருடைய பங்குமாத்திரம் வரவேண்டும்; இவர்கள் தங்கள் பங்கை எடுக்கட்டுமென்றான்.

## ௰௫. அதிகாரம்.

இந்தக் காரியங்கள் நடந்த பிற்பாடு ஆபிராமுக்குத் தரிசனத்திலே கர்த்தருடைய வார்த்தை உண்டாகி, அவர் சொன்னதாவது: ஆபிராமே! *பயப்படாதே, நாம் உனக்குக் †கேடயமும், உன்னுடைய மகா பெரிய பலனுமாயிருக்கிறோமென்றார். *ஏசா. ௪௧. ௰. †சங். ௩. ௪.

௨ அப்பொழுது ஆபிராம், கர்த்தராகிய ஆண்டவரே! அடியேனுக்கு என்ன தருவீர்? நான் பிள்ளையில்லாதே போகிறேனே, தமஸ்கு ஊரானாகிய இந்த எலியேசேர் என் வீட்டு விசாரிப்புக்குக் கர்த்தனாயிருப்பானேயென்றான்.

௩ பின்னையும் ஆபிராம், இதோ தேவரீர் எனக்கு வித்தைத் தந்ததில்லை, இதோ என் வீட்டிலே பிறந்தபிள்ளை எனக்குச் சுதந்தரவாளியாய் இருப்பானென்றான்.

௪ அப்பொழுது இதோ கர்த்தருடைய வார்த்தை அவனுக்குண்டாகி, இவன் உனக்குச் சுதந்தரவாளியாகாமல், உன் கர்ப்பப்பிறப்பாயிருப்பவனே உனக்குச் சுதந்தரவாளியாவானென்றுசொல்லி,

௫ அவனை வெளியே புறப்படப்பண்ணி, நீ வானத்தை அண்ணாந்துபார்; *நட்சத்திரங்களை எண்ண உனக்குக் கூடுமானால் அவைகளை எண்ணென்றுசொல்லி, பிற்பாடு அவனோடே, உன் வித்து இவ்வண்ணமாய் இருக்குமென்றார். *௰௩. ௰௬. உரோ. ௪. ௰௮. எபி. ௰௧. ௰௩.

௬ *அவன் கர்த்தர்பேரிலே விசுவாசித்தான்; இதை அவர் அவனுக்கு நீதியாக எண்ணினார். *உரோ. ௪. ௩: ௯. ௨௨. கலா. ௩. ௬. யாக். ௨. ௨௩.

௭ பின்னையும் அவனுடனே, இந்தத் தேசத்தைச் சுதந்தரித்துக்கொள்வதற்கு உனக்குக் கொடுக்க, உன்னை ஊர் என்ற கல்தேயருடைய பட்டணத்திலிருந்து அழைத்துவந்த கர்த்தர் நாமே என்றார்.

௮ அப்பொழுது அவன், கர்த்தராகிய ஆண்டவரே! நான் அதைச் சுதந்தரித்துக்கொள்ளுவேனென்கிறதை எதினாலே அறிவேனென்றான்.

௯ அவர் அவனுடனே, மூன்றுவயதுக் கிடாரியையும், மூன்றுவயது வெள்ளாட்டையும், மூன்றுவயது ஆட்டுக்கடாவையும், ஒரு காட்டுப்புறாவையும், ஒரு புறாக்குஞ்சையும் நமக்குக் கொண்டுவாவென்றார்.

௰ அவன் அவருக்கு இவைகளையெல்லாம் கொண்டுவந்து, அவைகளை நடுவாகத் துண்டித்து, துண்டங்களை ஒன்றுக்கொன்று எதிராக வைத்தான்; பட்சிகளையோவெனில், அவன் துண்டித்ததில்லை.

௰௧ அந்த உடல்களின்மேல், உருஞ்சு

Digitized by Google

கிற பட்சிகள் இறங்கிற்று; ஆனால், ஆபிராம் அவைகளைத் துரத்தினான்.

௰௨ சூரியன் அஸ்தமிக்கும்போதோவெனில், ஆபிராமின்மேல் கனநித்திரை இறங்கிற்று; இதோ, திகிலும் மகா இருளும் அவனைப் பிடித்தது.

௰௩ அப்பொழுது அவர் ஆபிராமோடே சொன்னதாவது: உன் வித்தார் தங்களுடையதல்லாத தேசத்திலே, *நானூறு வருஷம் பரதேசிகளாயிருந்து, அத்தேசத்தாரைச் சேவிப்பார்களென்றும், அவர்கள் இவர்களை உபத்திரவப்படுத்துவார்களென்றும், நீ அறியவே அறியவேண்டும். *௨ மோ. ௰௨. ௪௰. அப். ௭. ௬.

௰௪ ஆனால் இவர்கள் சேவிக்கும் சாதியையும் நாம் நியாயம்தீர்ப்போம்; பிற்பாடு *வெகு ஆஸ்தியுடனே புறப்பட்டு வருவார்கள். *௨ மோ. ௩. ௨௧, ௨௨: ௰௧. ௨, ௩: ௰௨. ௩௫, ௩௬.

௰௫ நீயோவென்றால், சமாதானத்தோடே *உன் பிதாக்களண்டையிலே சேருவாய், நல்ல நரைவயதிலே அடக்கம்பண்ணப்படுவாய். *௨௫. ௭, ௮.

௰௬ நாலாந்தலைமுறையாரோ இவ்விடத்துக்குத் திரும்ப வருவார்கள்; ஏனெனில், எமோரியருடைய அக்கிரமம் இதுவரைக்கும் நிறைவேறினதில்லையென்றார்.

௰௭ சூரியன் அஸ்தமித்துக் கன இருளான பிற்பாடு, இதோ புகைகிற சூளையும், அந்தத் துண்டங்களின் நடுவே கடந்துபோகிற அக்கினிச்சுவாலையும் உண்டாயின.

௰௮ அந்நாளிலே கர்த்தர் ஆபிராமோடே உடம்படிக்கைபண்ணிச் சொன்னதாவது: எகிப்தின் நதிதுவக்கி ஐபிருத்தே நதியென்ற பெரிய நதிமட்டுக்கும் இருக்கிறதும்,

௰௯ கேனியனும், கெனீசியனும், கத்மோனியனும்,

௨௰ ஏத்தியனும், பெரிசியனும், ரெப்பாவியனும்,

௨௧ எமோரியனும், கானானியனும், கிர்காசியனும், எபூசியனுமென்றவர்கள் இருக்கிறதுமான இந்தத் தேசத்தை *உன் வித்துக்குக் கொடுத்தோமென்றார். *௰௨. ௭: ௰௭. ௮.

## ௰௬. அதிகாரம்.

ஆபிராமுடைய பெண்சாதியாகிய சாராய் அவனுக்குப் பிள்ளை பெறாதிருந்தாள்; ஆனால், ஆகாரென்று பேர்கொண்ட எகிப்துதேசத்தாளாகிய ஒரு அடிமைப்பெண் அவளுக்கிருந்தாள்.

௨ சாராய் ஆபிராமுடனே, இதோ நான் பிள்ளைபெறாதபடிக்குக் கர்த்தர் என் கர்ப்பத்தை அடைத்தார்; என் அடிமைப்பெண்ணோடே சேரும், ஒருவேளை அவளால் என் வீடு கட்டப்படுமென்றாள்; ஆபிராம் சாராயின் சொல்கேட்டான்.

௩ ஆபிராம் கானான்தேசத்தில் பத்துவருஷம் குடியிருந்தபின்பு, ஆபிராமின் பெண்சாதியாகிய சாராய் எகிப்துதேசத்தாளாயிருக்கிற தன் அடிமைப்பெண்ணாகிய ஆகாரை அழைத்து, அவளைத் தன் புருஷனாகிய ஆபிராமுக்குப் பெண்சாதியாகக் கொடுத்தாள்.

௪ ¶ அவன் ஆகாரோடே சேர்ந்தபோது, அவள் கர்ப்பந்தரித்தாள்; தான் கர்ப்பந்தரித்ததை அவள் கண்டபோதோவெனில், அவள் நாச்சியார் அவள் பார்வைக்கு அற்பமாய் எண்ணப்பட்டாள்.

௫ அப்போது சாராய் ஆபிராமுடனே, நான் அநுபவிக்கிற அநியாயம் உம்முடைய மேல் சுமரும்; நான் என் அடிமைப்பெண்ணை உம்முடைய மடியிலே கொடுத்தேன்; தான் கர்ப்பந்தரித்ததை அவள் கண்டபோதோவெனில், நான் அவள் பார்வைக்குக் கொஞ்ச எண்ணிக்கையானேன்; கர்த்தர் எனக்கும் உமக்கும் நடுவாக நியாயந்தீர்ப்பாராகவென்றாள்.

௬ அப்போது ஆபிராம் சாராயுடனே, இதோ, உன் அடிமைப்பெண் உன் கையில் அகப்பட்டிருக்கிறாள்; உன் பார்வைக்கு நலமானபடி அவளுக்குச் செய்யென்றான்;

Digitized by Google

அப்பொழுது சாராய் அவளைத் தண்டிக்கையில், இவள் அவளைவிட்டோடிப்போனாள்.

௭ ஆனால் கர்த்தருடைய தூதர் அவளை வனாந்தரத்திலே சூருக்குப்போகிற வழியருகேயிருக்கிற நீரூற்றாகிய கிணற்றண்டையிலே கண்டுபிடித்து,

௮ சாராயின் அடிமைப்பெண்ணாகிய ஆகாரே! எங்கேயிருந்துவருகிறாய், எங்கே போகிறாயென்றார்; அவள், நான் என் நாச்சியாராகிய சாராயைவிட்டு ஓடிப்போகிறேனென்றாள்.

௯ அப்பொழுது கர்த்தருடைய தூதர் அவளுடனே, நீ உன் நாச்சியாரண்டைக்குத் திரும்பிப்போய், அவள் கையின்கீழ் அடங்கியிருவென்றார்.

௰ பின்னையும் கர்த்தருடைய தூதர் அவளோடே, உன் வித்தை மிகவும் பெருகப்பண்ணுவோம்; திரட்சியினாலே அது எண்ணத் தொலையாததாயிருக்குமென்றார்.

௰௧ அப்புறம் கர்த்தருடைய தூதர் அவளோடே சொன்னதாவது: இதோ கர்ப்பவதியாயிருக்கிறாய்; நீ ஒரு குமாரனைப் பெறுவாய்; கர்த்தர் உன் அங்கலாய்ப்பைக் கேட்டபடியினாலே, அவனுக்கு இஸ்மவேலென்று பேரிடுவாயாக.

௰௨ இவன் துஷ்ட மனிதனாயிருப்பான்; இவன் கை எல்லாருக்கும் விரோதமாகவும், எல்லாருடைய கை இவனுக்கு விரோதமாகவுமிருக்கும்; தன் சகோதரர் எல்லாருக்கும் எதிரே குடியிருப்பானென்றார்.

௰௩ அப்பொழுது அவள், தன்னோடே பேசின கர்த்தரைத் தேவரீர் பார்க்கிற பராபரனென்ற நாமமாக அழைத்தாள்; ஏனெனில், என்னைப் பார்த்தவரைப் பிற்பாடு நான் அவரை இவ்விடத்திலே கண்டுமிருக்கவில்லையோ என்றாள்.

௰௪ ஆகையால், அந்தக் கிணறு என்னைப் பார்க்கிற சீவனுள்ளவரின் கிணறென்னப்பட்டது; இதோ, காதேசுக்கும் பேரேதுக்கும் நடுவே அது இருக்கின்றது.

௰௫ ஆகார் ஆபிராமுக்கு ஒரு குமாரனைப் பெற்றாள்; அப்பொழுது ஆபிராம் ஆகார் பெற்ற தன் குமாரனுக்கு இஸ்மவேலென்று பேரிட்டான்.

௰௬ ஆகார் ஆபிராமுக்கு இஸ்மவேலைப் பெறுகிறபொழுது, ஆபிராம் எண்பத்தாறு வயதாயிருந்தான்.

## ௰௭. அதிகாரம்.

ஆபிராம் தொண்ணூற்றொன்பது வயதானபோது கர்த்தர் ஆபிராமுக்குத் தரிசனையாகி, அவனோடே சொன்னதாவது: நாம் சர்வத்துக்கும் வல்ல பராபரன்; *நீ நம்முடைய முகத்துக்குமுன்பாக நடந்துகொண்டு உத்தமனாயிரு. *௨௪. ௪௰.

௨ நாம் நமக்கும் உனக்கும் நடுவாக *நம்முடைய உடம்படிக்கையை ஏற்படுத்தி, உன்னை மிகுதியும் மிகுதியாய்ப் பெருகப்பண்ணுவோமென்றார். *௰௫. ௰௮.

௩ அப்பொழுது ஆபிராம் முகங்குப்புற விழுந்தான்; பராபரன் அவனோடே பேசிச் சொன்னதாவது:

௪ இதோ நாம் உன்னோடேபண்ணுகிற நம்முடைய உடம்படிக்கையாவது: *நீ திரள் சாதிகளுக்குத் தகப்பனாவாய். *உரோ. ௪. ௰௭.

௫ இனி உன்பேர் ஆபிராமென்னப்படாததாக; நாம் உன்னைத் திரள் சாதிகளுக்குத் தகப்பனாக வைத்தபடியினாலே, உன்பேர் ஆபிரகாமென்றிருக்கக்கடவது.

௬ உன்னை மிகுதியும் மிகுதியாய்ப் பலுகப்பண்ணி, உன்னைச் சாதிகளாக்குவோம்; உன் சந்ததியில் இராசாக்கள் பிறப்பார்கள்.

௭ நாம் உனக்கும், உனக்குப்பிற்பாடு உன்வித்துக்கும், பராபரனாயிருக்கத்தக்கதாக நாம் நமக்கும் உனக்கும், உனக்குப் பிற்பாடு தலைமுறை தலைமுறையாக இருக்கப்போகிற உன் வித்துக்கும் நடுவே நம்முடைய உடம்படிக்கையை நித்திய உடம்படிக்கையாகத் திடப்படுத்துவோம்.

௮ உனக்கும் உனக்குப்பிற்பாடு உன்வித்

Digitized by Google

துக்கும், நீ பரதேசியாய்த் தங்கிவருகிற கானான்தேசத்தையெல்லாம் நித்திய உம்பிளிக்கையாகக் கொடுத்து, அவர்களுக்குப் பராபரனாயிருப்போமென்றார்.

௯ ¶ பின்னையும் பராபரன் ஆபிரகாமோடே சொன்னதாவது: இப்பொழுது நீயும், உனக்குப் பிற்பாடு தலைமுறை தலைமுறையாக இருக்கப்போகிற உன் வித்தாரும், நம்முடைய உடம்படிக்கையைக் கைக்கொள்வீர்களாக.

௰ நமக்கும் உங்களுக்கும், உனக்குப் பிற்பாடு உன் வித்துக்கும் நடுவே உண்டாகிறதும், நீங்கள் கைக்கொள்ளவேண்டியதுமான நம்முடைய உடம்படிக்கையாவது: உங்களில் ஆணாய்ப்பிறந்ததெல்லாம் சுன்னத்துப் பண்ணப்படவேண்டியது.

௰௧ உங்கள் நுனித்தோலின் மாம்சத்தைச் சுன்னத்துப்பண்ணக் கடவீர்கள்; அது நமக்கும் உங்களுக்குமிருக்கிற *உடம்படிக்கையின் அடையாளமாயிருக்கும்.
*அப். ௭. ௰௧. உரோ. ௪. ௰௧.

௰௨ உங்களில் தலைமுறை தலைமுறையாக ஆணாய்ப் பிறக்கிறவைகளெல்லாம் எட்டுநாள் பிள்ளையாய்ச் சுன்னத்துப்பண்ணப்படவேண்டியது; வீட்டுப்பிள்ளையும், உன்னுடைய வித்தல்லாத எந்த அந்நியனிடத்திலும் பணத்தினாலே கொள்ளப்பட்ட பிள்ளையும் அப்படித்தானே.

௰௩ உன் வீட்டுப்பிள்ளையும், உன் பணத்தினாலே கொள்ளப்பட்டவனும், அவசியமாய்ச் சுன்னத்துப் பண்ணப்படவேண்டும்; இப்படி நம்முடைய உடம்படிக்கை உங்கள் மாம்சத்திலே நித்திய உடம்படிக்கையாக இருக்கக்கடவது.

௰௪ நுனித்தோலின் மாம்சம் சுன்னத்துப்பண்ணப்படாதிருக்கிற நுனித்தோலுள்ள ஆண்பிள்ளையிருந்தால், அந்த ஆத்துமா நம்முடைய உடம்படிக்கையை முறித்தபடியினாலே, தன் சனத்திலிராதபடிக்கு அறுப்புண்டுபோவானென்றார்.

௰௫ ¶ பின்னையும் பராபரன் ஆபிரகாமோடே சொன்னதாவது: உன் பெண்சாதி சாராயினுடைய பேரைச் சாராயென்றழையாயாக; சாராளென்பது அவளுடைய பேராயிருக்கும்.

௰௬ நாம் அவளை ஆசீர்வதித்து, அவளாலே உனக்கு ஒரு குமாரனையும் தந்து, அவள் சாதிகளாய்ப் பலுகவும், அவளாலே சாதிகளின் இராசாக்கள் உண்டாகவும், அவளை ஆசீர்வதிப்போமென்றார்.

௰௭ அப்பொழுது ஆபிரகாம் முகங்குப்புற விழுந்து நகைத்து, நூறுவயதானவனுக்குப் பிள்ளைபிறக்குமோ, தொண்ணூறுவயதான சாராள் பெறுவாளோவென்று, தன்னிருதயத்திலே சொல்லிக்கொண்டு,

௰௮ இஸ்மவேல் உமக்கு முன்பாகப் பிழைப்பானாகவென்று, ஆபிரகாம் பராபரனை விண்ணப்பம்பண்ணினான்.

௰௯ அப்போது பராபரன் சொன்னதாவது: *உன் பெண்சாதியாகிய சாராள் உனக்கு ஒரு குமாரனைப்பெறுவாள்; அவனுக்கு இசாக்கென்று பேரிடுவாயாக; அவனோடே நாம் நம்முடைய உடம்படிக்கையை அவனுக்குப்பிற்பாடு அவன் வித்துக்கு என்றென்றைக்கும் நிற்கிற உடம்படிக்கையாக ஏற்படுத்துவோம். *௰௮. ௰: ௨௧. ௬.

௨௰ இஸ்மவேலுக்காகவும் உன் விண்ணப்பத்தைக்கேட்டோம்; இதோ, நாம் அவனை ஆசீர்வதித்து, அவனை மிகுதியும் மிகுதியுமாகப் பலுகவும் பெருகவும் பண்ணுவோம்; *பன்னிரண்டு பிரபுக்களைப் பெறுவான்; அவனைப் பெரிய சாதியாக்குவோம்.
*௨௫. ௰௬.

௨௰௧ ஆனால் நம்முடைய உடம்படிக்கையை நாம் மறுவருஷத்தில் இக்காலத்திலே சாராள் உனக்குப் பெறப்போகிற இசாக்குடனே ஏற்படுத்துவோமென்றார்.

௨௰௨ பராபரன் அவனோடே பேசி முடித்தபிற்பாடு, அவர் ஆபிரகாமைவிட்டேறினார்.

௨௰௩ ¶ அப்பொழுது, ஆபிரகாம் தன் குமாரனாகிய இஸ்மவேலையும், தன் வீட்டிலே

Google

பிறந்த யாவரையும், தான் பணத்தினாலே கொண்ட யாவரையும், ஆபிரகாமாகிய தன் வீட்டுமனிதரிலுள்ள ஆண்பிள்ளைகளையெல்லாம் சேர்த்து, பராபரன் தன்னோடே சொன்னபடி, அவர்கள் நுனித்தோலின் மாம்சத்தை அந்நாளிலேதானே சுன்னத்துப் பண்ணினான்.

௨௪ ஆபிரகாமுடைய நுனித்தோலின் மாம்சம் சுன்னத்தடைகிறபொழுது, அவன் தொண்ணூற்றொன்பது வயதாயிருந்தான்.

௨௫ அவனுடைய குமாரன் இஸ்மவேலோவெனில், அவனுடைய நுனித்தோலின் மாம்சம் சுன்னத்துப்பண்ணப்படுகிறபொழுது, பதின்மூன்றுவயதாயிருந்தான்.

௨௬ அந்நாளிலேதானே ஆபிரகாமும், அவன் குமாரன் இஸ்மவேலும் சுன்னத்தடைந்தார்கள்.

௨௭ வீட்டில் பிறந்தவர்களும் அந்நியரிடத்தில் பணத்துக்குக் கொள்ளப்பட்டவர்களுமாகிய அவன் வீட்டு மனிதரெல்லாரும் அவனோடேகூடச் சுன்னத்தடைந்தார்கள்.

## ௰௮. அதிகாரம்.

பிற்பாடு கர்த்தர் அவனுக்கு மம்ரேயின் சமனான பூமியிலே தரிசனமானார்; அவன் பகலின் உஷ்ணவேளையில் கூடாரவாசலிலே உளுக்கார்ந்திருந்து,

௨ தன் கண்களை ஏறெடுத்துப் பார்க்கும்பொழுது, இதோ மூன்று புருஷர் அவனுக்கு எதிராக நின்றார்கள்; அவர்களைக் காண்கையில், அவன் கூடாரவாசலிலிருந்து அவர்களுக்கு எதிர்கொண்டோடித் தரைமட்டுங்குனித்து,

௩ ஆண்டவரே! உம்முடைய கண்களில் எனக்குக் கிருபைகிடைத்ததானால், *நீர் உமதடியானைவிட்டு விலகிப் போகாதிருப்பீராக. * எபி. ௰௩. ௨.

௪ கொஞ்சம் தண்ணீர் கொண்டுவரட்டும், உங்கள் கால்களைக் கழுவி மரத்தின் கீழே சாய்ந்துகொண்டிருங்கள்.

௫ நீங்கள் உங்கள் இருதயத்தைத் திடப்படுத்த ஒரு துணுக்கை அப்பங்கொண்டுவருவேன், பிற்பாடு அப்புறம் நடப்பீர்கள்; ஏனெனில், இதற்காக உங்கள் அடியானண்டைக்குக் கடந்து வந்தீர்களென்றான்; அதற்கு நீ சொன்னபடியே செய்யென்றார்கள்.

௬ அப்பொழுது ஆபிரகாம் தீவரமாய்க் கூடாரத்தில் சாராளண்டைக்குப்போய், நீ சீக்கிரமாய் மூன்றுபடி மெல்லிய மாவெடுத்துப் பிசைந்து, அப்பங்களைச் சுடுவென்றான்.

௭ மாட்டுமந்தைக்கும் ஆபிரகாம் ஓடி, இளசாயிருக்கிற நல்ல கன்றுக்குட்டியைப் பிடித்துப் பணிவிடைக்காரன் கையிலே கொடுத்து, அதைச் சமைக்கத் தீவரித்து,

௮ வெண்ணெயையும் பாலையும் தான் சமைப்பித்த கன்றுக்குட்டியையும் எடுத்து வந்து, அவர்கள் முன்பாக வைத்தான்; அவனோவென்றால், அவர்களண்டை மரத்தின்கீழே நின்றுகொண்டிருந்தான்; அவர்கள் புசித்து,

௯ ¶ அவனுடனே, உன் பெண்சாதி சாராள் எங்கே என்றார்கள்; அதோ, கூடாரத்திலிருக்கிறாளென்றான்.

௰ அப்பொழுது அவர் ஒரு பிராண உற்பத்திகாலத் திட்டத்திலே உன்னண்டைக்குத் திரும்ப வருவோம்; அப்பொழுது இதோ, *உன் பெண்சாதியாகிய சாராளுக்கு ஒரு குமாரன் இருப்பானென்றார்; சாராள் அவருக்குப் பின்புறமான கூடாரவாசலிலிருந்து இதைக்கேட்டாள். *௰௭. ௰௯—௨௧.

௰௧ ஆபிரகாமும் சாராளுமோவெனில், முதிர்ந்தவர்களும் வயது சென்றவர்களுமாயிருந்தார்கள்; ஸ்திரிகளுக்குள்ள வழிபாடு சாராளுக்கு நின்றுபோயிற்று.

௰௨ ஆகையால், சாராள் *தன் உள்ளத்திலே நகைத்து, நான் கிழவியும் †என் எசமானன் முதிர்ந்தவயதுள்ளவருமானபின்பு, எனக்கின்பம் உண்டாயிருக்குமோ என்றாள். * ௰௭. ௰௭. † ௧ பேது. ௩. ௬.

Digitized by Google

௰௩ அப்பொழுது கர்த்தர் ஆபிரகாமோடே சொன்னதாவது: சாறாள் நகைத்து, நான் கிழவியாயிருந்தும் பிள்ளைபெறுவது மெய்யோவென்பானேன்?

௰௪ * கர்த்தரால் ஆகாத அதிசயமுண்டோ? ஒருபிராண உற்பத்திக்காலத்திட்டத்திலே உன்னண்டைக்குத் திரும்ப வருவோம்; அப்பொழுது சாறாளுக்கு ஒரு குமாரன் இருப்பானென்றார். * மத். ௰௯. ௨௬.

௰௫ சாறாளோவெனில், நான் நகைத்ததில்லையென்று மறுதலித்தாள்; ஏனெனில், பயந்தாள்; ஆனால் அவர் இல்லை, நீ நகைத்தாயென்றார்.

௰௬ பிற்பாடு அந்தப் புருஷர் எழுந்திருந்து, அவ்விடம்விட்டுச் சோதோமைநோக்கிப் போனார்கள்; ஆனால், ஆபிரகாம் அவர்களை வழிவிட்டனுப்ப அவர்களோடே கூடப்போனான்.

௰௭ அப்பொழுது கர்த்தர் சொன்னதாவது: ஆபிரகாம் பெரியவைகளான பெலத்த சாதியாய்ப்போகவும், அவனில் * பூமியின் சாதிகளெல்லாம் ஆசீர்வதிக்கப்படுபவைகளாயிருக்கவும், * ௰௨. ௩.

௰௮ நாம் செய்யப்போகிறதை நாம் ஆபிரகாமுக்கு மறைப்போமோ?

௰௯ ஏனெனில், கர்த்தர் ஆபிரகாமுக்குச் சொன்னதை அவன்மேல் வரப்பண்ணத்தக்கதாக, அவன் தன்பிள்ளைகளுக் கும் தனக்குப்பிற்பாடு இருக்கும் தன் வீட்டாருக்கும், நீங்கள் நீதியும், நியாயமும் செய்யும்படிக்கு, கர்த்தருடைய வழியைக் காத்து நடவுங்களென்று கற்பிப்பவனென்று அவனை அறிவோமென்று சொல்லி,

௨௰ கர்த்தர் அப்புறம் சொன்னதாவது: *சோதோம் கொமோரா ஊர்களின் கூக்குரல் பெரிதானபடியினாலும், அவைகளின் பாவம் மகா கனமானபடியினாலும், * ௰௩. ௰௩.

௨௧ நாம் இப்பொழுது இறங்கிப்போய், நம்மண்டைக்கு வந்தெட்டின அதினுடைய கூப்பிடுதலின்படியே அவர்கள் செய்து நிறைவேற்றினாரோ இல்லையோவென்று பார்த்து அறிவோமென்றார்.

௨௨ அப்பொழுது அந்தப் புருஷர் அவ்விடம்விட்டுச் சோதோமைநோக்கிப் போனார்கள்; ஆனால் ஆபிரகாம் இன்னம் கர்த்தருக்கு முன்பாக நின்றுகொண்டிருந்தான்.

௨௩ ¶ ஆபிரகாம் சேர்ந்து வந்து சொன்னதாவது: ஆகாதவனோடே நீதிமானையும் அழிப்பீரோ?

௨௪ பட்டணத்துக்குள்ளே ஐம்பது நீதிமான்கள் இருப்பார்களாக்கும், அதற்குள்ளிருக்கும் ஐம்பது நீதிமான்களின்நிமித்தம் ஸ்தலத்திற்கு மன்னியாமல் அதை அழிப்பீரோ?

௨௫ இப்படிக்கொத்த செயல் உமக்குத் தூரமாயிருப்பதாக; நீதிமானும் பொல்லாதவனும் சரியாக, பொல்லாதவனோடே நீதிமானையும் கொல்வது உமக்குத் தூரமாயிருப்பதாக; * பூமிக்கெல்லாம் நியாயாதிபதியானவர் நீதி செய்யாதிருப்பாரோ என்றான். * அப். ௰௭. ௩௧.

௨௬ அதற்குக் கர்த்தர் சோதோம் பட்டணத்திற்குள் ஐம்பது நீதிமான்களைக் கண்டோமாகில், அவர்களின் நிமித்தம் ஸ்தலத்திற்கெல்லாம் மன்னிப்போமென்றார்.

௨௭ அப்பொழுது ஆபிரகாம் பிரதியுத்தரமாக, இதோ, அடியேன் தூளும் சாம்பலுமாயிருந்தும் ஆண்டவரோடே பேசத்துணிந்தேன்.

௨௮ ஐம்பது நீதிமான்களுக்கு ஒருவேளை ஐந்துபேர் குறைந்தால், அந்த ஐந்துபேர்நிமித்தம் பட்டணத்தையெல்லாம் அழிப்பீரோ என்றான்; அதற்கவர்: நாம் நாற்பத்தைந்து நீதிமான்களை அங்கே கண்டால், அதை அழிப்பதில்லையென்றார்.

௨௯ அவன் இன்னம் அவரோடே பேசத்தொடர்ந்து, ஒருவேளை நாற்பது நீதிமான்கள் அங்கே காணப்படுவார்களென்றான்; அதற்கவர் நாற்பது நீதிமான்களின் நிமித்தம் அப்படிச் செய்யாதிருப்போமென்றார்.

Digitized by Google

௩௰ அப்பொழுது அவன், நான் அப்புறம் பேச ஆண்டவருக்குக் கோபம்வராமல் வேண்டுகிறேன்; ஒருவேளை முப்பது நீதிமான்கள் அங்கே காணப்படுவார்களென்றான்; அதற்கவர், நாம் முப்பது நீதிமான்களை அங்கே கண்டால், அப்படிச் செய்யாதிருப்போமென்றார்.

௩௧ அப்பொழுது அவன்: இதோ, ஆண்டவரோடே பேசத்துணிந்தேன்; ஒருவேளை இருபது நீதிமான்கள் அங்கே காணப்படுவார்களென்றான்; அதற்கவர், நாம் இருபது நீதிமான்களினிமித்தம் அதை அழிக்காதிருப்போமென்றார்.

௩௨ அப்பொழுது அவன், நான் இன்னம் இந்த ஒருவிசைமாத்திரம் பேச ஆண்டவருக்குக் கோபம்வராமல் வேண்டுகிறேன்; ஒருவேளை பத்து நீதிமான்கள் அங்கே காணப்படுவார்களென்றான்; அதற்கவர்: பத்து நீதிமான்களினிமித்தம் அதை அழிக்காதிருப்போமென்றார்.

௩௩ கர்த்தர் ஆபிரகாமோடே பேசி முடித்தபிற்பாடு புறப்பட்டுப்போனார்; ஆபிரகாம் தன்னிடத்திற்குத் திரும்பினான்.

## ௰௯. அதிகாரம்.

அந்த இரண்டு தூதர் சாயங்காலத்திலே சோதோமுக்கு வந்தார்கள்; லோத் சோதோமின் வாசலிலே உளுக்கார்ந்திருந்தான்; அப்பொழுது லோத் அவர்களைக் கண்டு, எதிர்கொண்டெழுந்திருந்து, தரைமட்டும் முகங்குனிந்து,

௨ என்னுண்டவர்களே! *இதோ, உங்கள் அடியக்காரரின் வீட்டுமுகமாய் நீங்கள் திரும்பி, இராத்தங்கி, உங்கள் கால்களைக் கழுவி, காலமே எழுந்திருந்து உங்கள் வழிப்பயணம் போங்களென்றான்; அதற்கவர்கள், அல்ல, வீதியிலே இராத்தங்குவோமென்றார்கள். * எபிரே. ௰௩. ௨.

௩ அவனோவெனில், அவர்களை மிகவும் வருந்திக்கொண்டான்; அப்பொழுது அவனண்டைக்குத் திரும்பி, அவன் வீட்டுக்குவந்தார்கள்; அவன் அவர்களுக்கு விருந்துபண்ணிப் புளிப்பில்லா அப்பங்களைச் சுட்டான்; அவர்கள் புசித்தார்கள்.

௪ ஆனால் அவர்கள் சயனித்துக்கொள்ளுகிறதற்கு முன் சோதோமிலே வாலிபர் முதல் கிழவர்மட்டுமுள்ள ஊர் மனிதராகிய சனங்கள் அனைவரும் கடைக்கோடிகளிலுமிருந்துவந்து, *வீட்டைச் சூழ்ந்துகொண்டு, *நியா. ௰௯. ௨௨.

௫ லோத்தைக்கூப்பிட்டு, இந்த இராத்திரியிலே உன்னண்டைக்குவந்த மனிதரெங்கே? நாங்கள் அவர்களை அறியும்படிக்கு அவர்களை எங்களண்டைக்கு வெளியே கொண்டுவாவென்று அவனோடேசொன்னார்கள்.

௬ லோத்தோவெனில், அவர்களண்டைக்கு வாசற்படியிலே புறப்பட்டுப்போய், தனக்குப்பின்னாலே கதவைப்பூட்டி,

௭ என் சகோதரரே! *பொல்லாப்புச் செய்யாதிருங்கள். வாக். ௰௯. ௨௩.

௮ இதோ புருஷனை அறியாத இரண்டு குமாரத்திகள் எனக்குண்டே, அவர்களையாகிலும் உங்களண்டைக்கு வெளியேகொண்டுவருவேன்; உங்கள் பார்வைக்குச் சம்மதியானபடி அவர்களுக்குச் செய்யுங்கள்; இந்தப் புருஷருக்குமாத்திரம் ஒன்றும் செய்யாதிருங்கள்; ஏனெனில், இதற்காக என் இறப்பின் நிழலிலே வந்தார்களென்றான்.

௯ ஆனால் அவர்கள் அப்பாலே ஒத்திப் போவென்றும், பரதேசியாய்வந்த இவனொருவன் நியாயம்பேசுவானென்றும், இப்பொழுது அவர்களைப்பார்க்கிலும் உனக்குப் பொல்லாப்புச் செய்வோமென்றும் சொல்லி, லோத்தென்ற புருஷனை மிகவும் நெருக்கிக் கதவையுடைக்கக் கிட்டினார்கள்.

௰ அப்பொழுது அந்தப் புருஷர் தங்கள் கைகளை வெளியே நீட்டி, லோத்தைத் தங்களண்டைக்கு வீட்டுக்குள் இழுத்துக்கொண்டு, கதவைப்பூட்டி,

௰௧ வாசலுக்கு முன்னிருந்த சிறியோரும், பெரியோருமாகிய மனிதருக்குக் குருட்டாட்டம் பிடிக்கப்பண்ணினார்கள்; அப்பொழுது அவர்கள் வாசலைத்தேடி, இளைத்துப்போனார்கள்.

௰௨ ¶ அப்பொழுது அந்தப் புருஷர் லோத்தோடே சொன்னதாவது: இன்னம் இவ்விடத்தில் உனக்கு யாரிருக்கிறார்கள்? மருமகனாவது, உன் குமாரராவது, உன் குமாரத்திகளாவது, பட்டணத்தில் உனக்கிருக்கிற எவர்களானாலும்சரி; அவர்களை இந்த ஸ்தலத்திலிருந்து வெளியே அழைத்துப்போ.

௰௩ ஏனெனில், நாங்கள் இந்த ஸ்தலத்தை அழிக்கப்போகிறோம்; *அதேனென்றால், அவர்கள் கூக்குரல் கர்த்தருடைய முகத்திற்குமுன்பாகப் பெரிதாயிருக்கின்றது; அதை அழிக்கக் கர்த்தர் எங்களை அனுப்பினார் என்றார்கள். *௰௪. ௨௰.

௰௪ அப்பொழுது லோத் புறப்பட்டு, தன் குமாரத்திகளை விவாகம் பண்ணப்போகிற தன் மருமக்களோடே பேசி, நீங்கள் எழுந்து இந்தஸ்தலத்தைவிட்டுப் புறப்படுங்கள்; ஏனெனில், கர்த்தர் இந்தப் பட்டணத்தை அழிப்பாரென்றான்; ஆனால் அவனுடைய மருமக்களின் பார்வைக்கு அவன் பரியாசம்பண்ணுகிறதாகக் கண்டது.

௰௫ ¶ கிழக்கு வெளுக்கும்பொழுது அந்தத் தூதர் லோத்தைத் தீவரித்து, நீ பட்டணத்தின் அக்கிரமத்திலே அழியாதபடிக்கு எழுந்து, உன் பெண்சாதியையும், இங்கேயிருக்கிற உன் இரண்டு குமாரத்திகளையும் அழைத்துப்போவென்றார்கள்.

௰௬ அவன் தாமதித்துக்கொண்டிருக்கிறபொழுது, அந்தப் புருஷர் கர்த்தர் அவன்மேல் வைத்த இரக்கத்தினாலே அவன் கையையும், அவன் பெண்சாதியின் கையையும், அவன் இரண்டு குமாரத்திகளின் கையையும் பிடித்து, அவனைப்பட்டணத்திற்கு வெளியே கொண்டுபோய்விட்டார்கள்.

௰௭ ¶ அப்பொழுது சம்பவித்ததேதென்றால், இவர்கள் அவர்களை வெளியே கொண்டுவந்தபிற்பாடு அவர் சொன்னதாவது: உன் சீவன் தப்ப ஓடிப்போ: பின்னிட்டுப்பாராதே; இந்தச் சமனான பூமியெங்கும் நில்லாதே; நீ அழியாதபடிக்குப் பர்வதத்திற்கு ஓடிப்போவென்றார்.

௰௮ ஆனால், லோத் அவர்களோடே சொன்னதாவது: அப்படியல்ல ஆண்டவரே!

௰௯ இதோ உம்முடைய கண்களில் உமதடியானுக்குக் கிருபைகிடைத்ததே, என் பிராணனைக் காக்கத் தேவரீர் எனக்குச் செய்த கிருபையைப் பெரிதாயிருக்கப் பண்ணினீர்; ஆனால் நான் பர்வதத்திற்கு ஓடிப்போகமாட்டேன்; தீங்கு என்னைத் தொடர்ந்து பிடித்தால் மரிப்பேனே.

௨௰ அதோ அந்த ஊர், நான் அதற்கோடிப்போகக் கிட்டியிருக்கின்றதே, அது சின்னதுமாயிருக்கின்றது; என் பிராணன் பிழைக்க நான் அங்கே ஓடிப்போகட்டுமே, அது சின்னதல்லவோ என்றான்.

௨௧ அப்பொழுது அவர் அவனுடனே சொன்னதாவது: இதோ, நீ சொன்ன ஊரை நாம் கவிழ்த்துப்போடாதபடிக்கு, இந்தக் காரியத்திலும் உன் முகத்தைப் பார்த்தோம்.

௨௨ தீவரமாய் அங்கே ஓடித் தப்பித்துக்கொள்; ஏனெனில், நீ அங்கே வந்து சேருமட்டும் நாம் ஒன்றும்செய்யக்கூடாதென்றார்; ஆகையால், அந்த ஊர் சோவார் என்னப்பட்டது.

௨௩ லோத் சோவாருக்குள் வந்தபொழுது, பூமியின்மேல் சூரியன் உதித்தது.

௨௪ அப்பொழுது கர்த்தர் *சோதோமின்மேலும், கொமோராவின்மேலும், கர்த்தராலே வானத்திலிருந்து கெந்தகத்தையும், அக்கினியையும் வருஷிக்கப்பண்ணி, *௫ மோ. ௨௯. ௨௩. ஏசா. ௰௩. ௰௯. எரே. ௫௰. ௪௰. ஓசே. ௰௧. ௮. ஆமோ. ௪. ௰௧. லூக். ௰௭. ௨௯. ௨ பே. ௨. ௬. யூதா. ௭. வ௪.



Digitized by Google

உரு அந்தப் பட்டணங்களையும், அந்தச் சமனான பூமிஅனைத்தையும், அந்தப் பட்டணங்களின் எல்லாக் குடிகளையும், பூமியின் பயிரையும் கவிழ்த்துப்போட்டார்.

உசு ஆனால், * அவன் பெண்சாதி பின்னிட்டுப்பார்த்து, உப்புத்தூணானாள்.

* லூக். யஎ. கூஉ.

உஎ ஆபிரகாமோவெனில், காலமே எழுந்திருந்து, தான் கர்த்தருக்கு முன்பாக நின்ற இடத்திற்குப் போய்,

உஅ சோதோம் கொமோரூபட்டணங்களின் திக்கையும், சமனான பூமியினுடைய எல்லாத் திக்கையும் நோக்கிப்பார்த்தான்; அப்பொழுது இதோ, நிலத்துப்புகை சூளையின் புகையைப்போல எழும்பிற்று.

உகூ ¶ அப்படியே பராபரன் அந்தச் சமனான பூமியின் பட்டணங்களை அழிக்கிறபொழுது, பராபரன் ஆபிரகாமை நினைத்து, லோத் குடியிருந்த பட்டணங்களைத் தாம் கவிழ்த்துப்போடுகையில், லோத்தை அந்தக் கவிழ்த்தலின் நடுவிலிருந்து தப்பவிட்டனுப்பினார்.

கூய ¶ பிற்பாடு லோத் சோவாரைவிட்டுப் போய், அவனும், அவனோடேகூட அவன் இரண்டு குமாரத்திகளும், பர்வதத்திலே குடியேறினார்கள்; ஏனெனில், சோவாரிலே குடியிருக்கப் பயந்தான்; அங்கே அவனும், அவன் இரண்டு குமாரத்திகளும், ஒரு கெபியிலே குடியிருந்தார்கள்.

கூக அப்பொழுது, மூத்தவள் இளையவளோடே சொன்னதாவது: நம்முடைய தகப்பன் முதிர்வயதானார்; பூமியெங்கும் நடக்கிற முறைமையின்படியே நம்மோடே சேரப் பூமியிலே ஒரு புருஷனுமில்லையே.

கூஉ வா, நம்முடைய தகப்பனுக்கு வித்தைப் பிறப்பிக்கும்படிக்கு அவருக்கு மதுவைப் பானம்பண்ணக் கொடுத்து, அவரோடே சயனிப்போமென்றாள்.

கூகூ அப்படியே அன்று இராத்திரியிலே, தங்கள் தகப்பனுக்கு மதுவைப் பானம் பண்ணக்கொடுத்தார்கள்; மூத்தவள் போய், தன் தகப்பனோடே சயனித்தாள்; ஆனால், அவன் சயனித்துக்கொண்டதையும் எழுந்திருந்ததையும் உணராதிருந்தான்.

கூச மறுநாளிலே சம்பவித்ததேதென்றால், மூத்தவள் இளையவளோடே, இதோ, நேற்று என் தகப்பனோடே சயனித்தேன், நம்முடைய தகப்பனுக்கு வித்தைப் பிறப்பிக்கும்படிக்கு அவருக்கு இன்று இராத்திரிக்கும் மதுவைப் பானம்பண்ணக் கொடுப்போம்; அப்பொழுது நீ போய் அவரோடே சயனியென்றாள்.

கூரு அப்படியே அன்று இராத்திரியிலும் தங்கள் தகப்பனுக்கு மதுவைப் பானம் பண்ணக்கொடுத்தார்கள்; அப்பொழுது இளையவள் எழுந்துபோய், அவனோடே சயனித்தாள்; ஆனால், அவன் சயனித்துக் கொண்டதையும் எழுந்திருந்ததையும் உணராதிருந்தான்.

கூசு இந்த அடைவாய், லோத்தின் குமாரத்திகள் இருவரும் தங்கள் தகப்பனாலே, கர்ப்பந்தரித்தார்கள்.

கூஎ மூத்தவள் ஒரு குமாரனைப்பெற்று, அவனுக்கு மோவாப் என்று பேரிட்டாள்; அவனே இந்நாள்வரைக்கும் இருக்கிறமோவாபியருக்குத் தகப்பன்.

கூஅ இளையவளும் ஒரு குமாரனைப்பெற்று, அவனுக்குப் பேன்அம்மியென்று பேரிட்டாள்; அவன் இந்நாள்வரைக்கும் இருக்கிற அம்மோன்புத்திரருக்குத் தகப்பன்.

## உய. அதிகாரம்.

ஆபிரகாம் அவ்விடத்தை விட்டுத் தென்தேசத்திற்குப் பயணம்பண்ணி, காதேசுக்கும் சூருக்கும் நடுவாகக் குடியேறி, கேராரிலே தங்கி,

உ *தன் பெண்சாதியாகிய சாராளைத் தன் சகோதரியென்றான்; அப்பொழுது கேராரின் இராசாவாகிய அபிமேலேக் ஆளனுப்பிச் சாராளை எடுத்துக்கொண்டான்.

*யஉ. யகூ: உகூ. எ.

Digitized by Google

கூ ஆனால், இராத்திரியில் சொப்பனத்

திலே பராபரன் அபிமேலேக் அண்டைக்கு வந்து அவனுடனே, இதோ நீ எடுத்துக்கொண்ட ஸ்திரியின்நிமித்தம் நீ சாவுக்குள்ளானவன்; ஏனெனில், அவள் புருஷன்கீழ்ப் பெண்சாதியாயிருக்கிறாளென்றார்.

௪ அபிமேலேக்கோவெனில், அவளைச் சேராதிருந்தான்; ஆகையால், அவன் சொன்னதாவது: ஆண்டவரே! நீதியுள்ள சாதியையும் கொல்லுவீரோ?

௫ இவள் தன் சகோதரியென்று அவன் என்னோடே சொன்னதில்லையோ? இவள் தன் சகோதரனென்று அவள்தானும் சொன்னாளே; என் இருதயத்தின் உத்தமத்தோடும் என் கைகளின் குற்றமில்லாமையோடும் இதைச் செய்தேனே என்றான்.

௬ அப்பொழுது பராபரன் சொப்பனத்திலே அவனோடே சொன்னதாவது: உன் இருதயத்தின் உத்தமத்தோடே நீ இதைச் செய்தாயென்று நாம் அறிந்துமிருக்கிறோம்; நீ நமக்கு விரோதமாகப் பாவஞ்செய்யாதபடிக்கு நாம் உன்னைத் தடுத்தும் இருந்தோம்; ஆகையால், உன்னை அவளைத் தொடவொட்டாதிருந்தோம்.

௭ இப்பொழுதும் ஸ்திரியைப் புருஷனுக்குத் திரும்பக் கொடு; ஏனெனில், *அவன் தீர்க்கதரிசி, நீ பிழைக்கும்படிக்கு அவன் உனக்காக வேண்டுதல்செய்வான்; திரும்பக் கொடாயேயாகில், நீயும் உனக்கிருக்கிற அனைவரும் சாவவே சாவீர்களென்றறியென்றார். *சங். ௱௫. ௰௪, ௰௫.

௮ அபிமேலேக் அதிகாலமே எழுந்திருந்து, தன் ஊழியக்காரரை எல்லாம் அழைப்பித்து, இந்த எல்லா வார்த்தைகளையும் அவர்கள் கேட்கச்சொன்னான்; அந்த மனிதர் மிகவும் பயந்தார்கள்.

௯ அப்பொழுது அபிமேலேக் ஆபிரகாமை அழைப்பித்து, அவனுடனே: நீ எங்களுக்கு என்னசெய்தாய்? நீ என்மேலும் என் இராச்சியத்தின்மேலும் கன பாவத்தைச்சுமரப்பண்ணுகிறதற்கு உனக்கென்ன குற்றஞ்செய்தேன்? செய்யத்தகாத காரியங்களை என்னிடத்திலே செய்தாயென்றான்.

௰ பின்னையும் அபிமேலேக் ஆபிரகாமோடே, நீ இந்தக் காரியத்தைச் செய்வதற்காக என்ன கண்டாயென்றான்.

௰௧ ஆபிரகாம் சொன்னதாவது: இவ்விடத்தில் தெய்வபயமே இல்லையென்றும், என் பெண்சாதியின்நிமித்தம் என்னைக் கொல்லுவார்களென்றும் நினைத்தேன்.

௰௨ அவள் என் சகோதரி என்கிறதும் நிசந்தான்; அவள் என் தகப்பனுக்குக் குமாரத்தி; ஆனால் என் தாயாருக்குக் குமாரத்தியல்ல, அவள் எனக்குப் பெண்சாதியானாள்.

௰௩ பராபரன் என்னைத் தகப்பன் வீட்டிலிருந்து சிதறப்பண்ணினபொழுது, சம்பவித்ததேதென்றால், நாம் எந்த ஸ்தலத்திலேவந்தாலும், இவன் என் சகோதரனென்று சொல்வது நீ எனக்குச் செய்யவேண்டிய தயையென்று அவளோடே சொல்லியிருக்கிறேனென்றான்.

௰௪ அப்பொழுது அபிமேலேக் ஆடுமாடுகளையும், வேலைக்காரரையும், வேலைக்காரிகளையும் ஆபிரகாமுக்குக் கொடுத்து, அவன் பெண்சாதியாகிய சாராளை அவனுக்குத் திரும்பக் கொடுத்து,

௰௫ இதோ, என் தேசம் உனக்குமுன்பாக இருக்கின்றது; உன் பார்வைக்குச் சம்மதியான இடத்திலே குடியிருவென்று அபிமேலேக் சொல்லி,

௰௬ ¶ சாராளுடனே, உன் சகோதரனுக்கு ஆயிரம் வெள்ளிக்காசைக் கொடுத்தேன்; இதோ, உன்னோடிருக்கிற எல்லார் முன்பாகவும் மற்ற அனைவர்முன்பாகவும் இது உனக்குக் கண்களின் முக்காட்டுக்காவதாகவென்றான்; இப்படிப் புத்திசொல்லப்பட்டான்.

௰௭ ஆபிரகாம் பராபரனை வேண்டிக்கொண்டான்; அப்பொழுது பராபரன் அபிமேலேக்கையும், அவன் பெண்சாதியையும், அவன் வேலைக்காரிகளையும், பிள்ளைபெறும்படியாகக் குணமாக்கினார்.

Digitized by Google

௰அ ஏனெனில், ஆபிரகாமுடைய பெண்சாதியாகிய சாறாளின்நிமித்தம் கர்த்தர் அபிமேலேக்குடைய வீட்டுக் கர்ப்பங்களை யெல்லாம் அடைக்கவேஅடைத்திருந்தார்.

## உக. அதிகாரம்.

கர்த்தரோவென்றால், *தாம் சொல்லியிருந்தபடியே சாறாளை நோக்கிப்பார்த்தார்; கர்த்தர் தாம் உரைத்தபடியே சாறாளுக்குச் செய்தார். *௰எ. ௰௯: ௰அ. ௰.

உ * சாறாள் கர்ப்பந்தரித்து, ஆபிரகாமுக்கு அவன் முதிர்வயதிலே, பரரபரன் அவனுக்குச் சொல்லியிருந்த காலத்திட்டத்திலே, ஒரு குமாரனைப்பெற்றாள். *எபி. ௰க. ௰க, ௰உ.

ங அப்பொழுது ஆபிரகாம் தனக்குப் பிறந்தவனும் சாறாள் தனக்குப் பெற்றவனுமான தன் குமாரனுக்கு *இசாக்கென்று பேரிட்டான். *௰எ. ௰௯.

ச எட்டுநாள் குழந்தையான தன் குமாரன் இசாக்கை ஆபிரகாம் பராபரன் தனக்குக் கற்பித்திருந்தபடியே, சுன்னத்துப் பண்ணினான்.

ரு ஆபிரகாமுக்கு அவன் குமாரனாகிய இசாக்குப் பிறந்தபொழுது, அவன் நூறு வயதாயிருந்தான்.

௬ சாறாள் சொன்னதாவது: பராபரன் எனக்கொரு நகைப்பை உண்டாக்கினார்; இதைக்கேட்கிற யாவரும் என்னோடேகூட நகைப்பார்கள்.

எ சாறாள் பிள்ளைகளுக்கு முலைகொடுப்பாளென்று ஆபிரகாமுக்கு எவன்சொல்லுவான்; ஏனென்றால், அவர் முதிர்வயதிலே அவருக்கு ஒரு குமாரனைப் பெற்றேனே என்றாள்.

அ ¶ பிள்ளை வளர்ந்து முலைமறந்தது; இசாக் முலைமறந்தநாளிலே, ஆபிரகாம் பெரிய விருந்துபண்ணினான்.

௯ பிற்பாடு சாறாள்: எகிப்துதேசத்தாளாகிய ஆகார் ஆபிரகாமுக்குப்பெற்ற குமாரன் ஆகடியம் பண்ணுகிறவனென்று கண்டு,

௰ ஆபிரகாமுடனே, *இந்த அடிமைப் பெண்ணையும், அவள் மகனையும் புறம்பே தள்ளும்; ஏனெனில் இந்த அடிமைப் பெண்ணின் மகன் என் குமாரனாகிய இசாக்கோடே சுதந்தரவாளனாயிருப்பதில்லை என்றாள். *கலா. ச. ௩௰.

௰க தன் குமாரனைக்குறித்துச் சொல்லப்பட்ட இந்த வார்த்தை ஆபிரகாமின் பார்வைக்கு மிகவும் ஆகாததாயிருந்தது.

௰உ ஆனால், பராபரன் ஆபிரகாமோடே சொன்னதாவது: அந்தப் பிள்ளையையும் உன் அடிமைப் பெண்ணையுங்குறித்துச் சொல்லப்பட்டது உன் பார்வைக்கு ஆகாததாயிருக்கவேண்டாம்; சாறாள் உன்னோடே சொன்னதெல்லாவற்றிலும், அவள் சொல்லைக்கேள்; ஏனெனில், *இசாக்கினிடத்தில் உன் வித்து விளங்கும். *௰எ. உக. உரோ. ௯. எ.

௰ங அடிமைப்பெண்ணின் குமாரனையும், அவன் உன் வித்தானபடியினாலே, ஒரு சாதியாக்குவோமென்றார்.

௰ச ஆபிரகாம் அதிகாலமே எழுந்திருந்து, அப்பத்தையும் ஒரு துருத்தி தண்ணீரையுமெடுத்து, ஆகாருக்குத் தோளின்மேல் தூக்கிவிட்டு, பிள்ளையையும் கொடுத்து, அவளை அனுப்பிவிட்டான்; அவள் புறப்பட்டுப்போய், பேயெர்சேபாவின் வனாந்தரத்திலே வழிதப்பித்திரிந்தாள்.

௰ரு துருத்தியிலிருந்த தண்ணீர் போனபிற்பாடு, அவள் பிள்ளையை ஒரு செடியின் கீழே விட்டுப்போய்,

௰௬ எதிராக வில்லெய்யும் தூரத்திலே உளுக்காந்தாள்; ஏனெனில், பிள்ளை சாகிறதை நான் பார்க்கமாட்டேனென்றாள்; அவள் எதிரே உளுக்காந்து, தன் சத்தமெடுத்தழுதாள்.

௰எ ஆனால், பராபரன் பிள்ளையின் சத்தத்தைக் கேட்டார்; பராபரனுடைய தூதனானவர் வானத்திலிருந்து ஆகாரைக் கூப்பிட்டு, அவளுடனே: ஆகாரே! உனக்கென்னவேண்டும்? பயப்படாதே, பராபரன்

Digitized by Google

பிள்ளையிருக்கிற இடத்திலே, அவனுடைய சத்தத்தைக் கேட்டார்.

௰௮ நீ எழுந்திருந்து பிள்ளையை எடுத்து, அவனை உன் கையினால் பிடித்துக்கொண்டுபோ; ஏனெனில், அவனைப் பெரியசாதியாக்குவோமென்றார்.

௰௯ பராபரன் அவள் கண்களைத் திறந்தார்; அப்பொழுது அவள் ஒரு தண்ணீர்த் துரவைக் கண்டுபோய், துருத்தியைத் தண்ணீரினால் நிரப்பிப் பிள்ளைக்குக் குடிக்கக் கொடுத்தாள்.

௨௰ பராபரன் பிள்ளையோடேகூட இருந்தார்; அவன் வளர்ந்து, வனாந்தரத்தில் குடியிருந்து, வில்வித்தையிலே வல்லவனாயிருந்தான்.

௨௧ அவன் பாரானென்ற வனாந்தரத்திலே குடியிருந்தான்; அவனுடைய தாய் எகிப்துதேசத்தாளாகிய ஒரு பெண்ணை அவனுக்கு விவாகம் பண்ணுவித்தாள்.

௨௨ ¶ அக்காலத்தில் சம்பவித்ததேதென்றால், அபிமேலேக்கும் அவன் சேனாபதியாகிய பீகோலும் ஆபிரகாமோடே சொன்னதாவது: நீ செய்கிறதெல்லாவற்றிலும் பராபரன் உன்னோடேகூட இருக்கிறார்.

௨௩ இப்பொழுதும் நீ என்னையாகிலும், என் குமாரனையாகிலும், என் பேரனையென்கிலும் கபடுசெய்யாமல், நான் உனக்குச் செய்த தயவின்படியே நீ எனக்கும், நீ தங்கியிருக்கிற இந்தத் தேசத்திற்கும் செய்வதென்று பராயரன்பேரிலே எனக்கு இங்கே ஆணையிடுவென்றான்.

௨௪ அப்பொழுது ஆபிரகாம்: நான் ஆணையிடுகிறேனென்றான்.

௨௫ ஆனால் அபிமேலேக்குடைய வேலைக்காரர் பறித்துக்கொண்ட தண்ணீர்த்துரவின் நிமித்தம் ஆபிரகாம் அபிமேலேக்கைக் கடிந்துகொண்டான்.

௨௬ அதற்கு அபிமேலேக், யார் இந்தக் காரியத்தைச் செய்தாரென்று அறியேன்; நீ எனக்கு அறிவித்ததுமில்லை; இன்று நான் அதைக் கேட்டதேயொழிய இதற்கு முன் அதை நான் கேட்டதுமில்லை என்றான்.

௨௭ அப்பொழுது ஆபிரகாம் ஆடுமாடுகளைக் கொண்டுவந்து, அபிமேலேக்குக்குக் கொடுத்தான்; அவர்களிருவரும் உடம்படிக்கை பண்ணிக்கொண்டார்கள்.

௨௮ ஆபிரகாம் ஏழு பெண் ஆட்டுக்குட்டிகளைத் தனியே நிறுத்தினான்.

௨௯ அப்பொழுது அபிமேலேக் ஆபிரகாமோடே, நீ தனியே நிறுத்தின இந்த ஏழு பெண் ஆட்டுக்குட்டிகள் எதற்கென்றான்.

௩௰ அதற்கவன், நான் இந்தத் துரவை எடுத்ததற்கு எனக்குச் சாட்சியாக நீர் இந்த ஏழு பெண்குட்டிகளை என் கையில் வாங்கிக்கொள்ளவேண்டுமென்றான்.

௩௧ அவர்களிருவரும் அவ்விடத்தில் ஆணையிட்டுக்கொண்டபடியினாலே, அந்த இடம் பேயேர்சேபாவென்னப்பட்டது.

௩௨ அவர்கள் பேயேர்சேபாவிலே உடம்படிக்கை பண்ணிக்கொண்ட பிற்பாடு, அபிமேலேக்கும், அவன் சேனாபதியாகிய பீகோலும் எழுந்திருந்து, பெலிஸ்தருடைய தேசத்திற்குத் திரும்பினார்கள்.

௩௩ ¶ ஆபிரகாம் பேயேர்சேபாவிலே ஒரு தோப்பை நாட்டி, என்றுமுள்ள பராபரனாகிய கர்த்தருடைய நாமத்தை அவ்விடத்திலே தொழுதுகொண்டான்.

௩௪ ஆபிரகாம் அநேகநாள் பெலிஸ்தருடைய தேசத்தில் தங்கினான்.

## உஉ. அதிகாரம்.

இந்த நடபடிகளுக்குப் பிற்பாடு சம்பவித்ததேதெனில், பராபரன் ஆபிரகாமைச் சோதித்து அவனுடனே, ஆபிரகாமே! என்றார்; அதற்கவன் இதோ அடியேனென்றான்.

௨ அப்பொழுது அவர் சொன்னதாவது: *நீ சிநேகிக்கிறவனும், உனக்கு ஒரே பேறானவனுமாகிய உன்னுடைய குமாரன் இசாக்கை நீ இப்பொழுது அழைத்துக்கொண்டு மோரியதேசத்திற்குப்போய், அங்கே அவனை நாம் உனக்குச் சொல்லப்போகிற

Digitized by Google

மலைகளில் ஒன்றின்மேல் தகனபலியாகப் பலியிடுவென்றார். *எபி. ௰க. ௰எ.

ஈ அப்பொழுது, ஆபிரகாம் அதிகாலமே எழுந்திருந்து, தன் கழுதையின்மேல் விரி கட்டி, தன் வேலைக்காரரில் இரண்டுபேரையும் தன் குமாரன் இசாக்கையும் கூட்டிக்கொண்டு, தகனபலிக்குக் கட்டைகளைப் பிளந்து புறப்பட்டுப் பராபரன் தனக்குச் சொன்ன ஸ்தலத்திற்கு நடந்து போனான்.

ச மூன்றும் நாளிலே ஆபிரகாம் தன் கண்களை ஏறெடுத்து, தூரத்திலே அந்த ஸ்தலத்தைக் கண்டான்.

ரு அப்பொழுது ஆபிரகாம் தன் வேலைக்காரரோடே, நீங்கள் இங்கே கழுதையை நிறுத்தி, உனுக்காந்திருங்கள்; நானும் பிள்ளையாண்டானும் அவ்விடம்மட்டும் போய், பணிந்துகொண்டு, உங்களண்டைக்குத் திரும்பி வருவோமென்றான்.

சு ஆபிரகாம் தகனபலிக் கட்டைகளை எடுத்து, தன் குமாரனாகிய இசாக்கின் மேல் வைத்து, தன் கையிலே நெருப்பையும் கத்தியையும் எடுத்துக்கொண்டு, இருவரும் ஏகமாய்ப் போனார்கள்.

எ அப்பொழுது இசாக் தன் தகப்பனாகிய ஆபிரகாமோடே, என் தகப்பனே என்று சொன்னான்; அதற்கவன், என் மகனே, இதோ நானென்றான். அப்பொழுது அவன், இதோ நெருப்பும் கட்டையுமிருக்கின்றது; ஆனால் தகனபலிக்கு ஆட்டுக்குட்டி எங்கே என்றான்.

அ அப்பொழுது ஆபிரகாம், என் மகனே, பராபரன் தமக்குத் தகனபலிக்கான ஆட்டுக்குட்டியைப்பார்த்துக்கொள்ளுவாரென்றான்; அப்புறம் இருவரும் ஏகமாய்ப் போய்,

கூ ¶ பராபரன் அவனுக்குச் சொல்லியிருந்த ஸ்தலத்திற்கு வந்தார்கள்; அப்பொழுது ஆபிரகாம் அங்கே ஒரு பீடத்தைக் கட்டி, கட்டைகளை அடுக்கி, தன் குமாரனாகிய இசாக்கைக் கட்டி, அவனை அந்தப் பீடத்திலே கட்டைகளின்மீதில் கிடத்தினான்.

௰ பிற்பாடு ஆபிரகாம் தன் கையை நீட்டி, தன் குமாரனைக் குரல்வளை அறுக்கும்படிக்கு, கத்தியை எடுத்துக்கொண்டான்.

௰க அப்பொழுது கர்த்தருடைய தூதர் வானத்திலிருந்து அவனைக் கூப்பிட்டு, ஆபிரகாமே, ஆபிரகாமே, என்றார்; அவன், இதோ அடியேன் என்றான்.

௰உ அப்பொழுது அவர் பிள்ளையாண்டான்மேல் உன் கையைப்போடாதே; அவனுக்கு ஒன்றும் செய்யாதே; ஏனெனில், நீ பராபரனுக்குப் பயந்திருந்து, நமக்காக உனக்கொரேபேருன உன்னுடைய குமாரனைப் பாராதேபோனுயென்று இப்பொழுது அறிந்திருக்கிறோமென்றார்.

௰ஈ ஆபிரகாம் தன் கண்களை ஏறெடுத்துப் பார்க்கிறபொழுது, இதோ பின்னாகப் புதரிலே தன் கொம்புகளால் சிக்கிக்கொண்டிருந்த ஒரு ஆட்டுக்கடாவைக் கண்டான்; அப்பொழுது ஆபிரகாம் போய், கடாவைப் பிடித்து, அதைத் தன் குமாரனுக்குப் பதிலாகத் தகனபலியிட்டான்.

௰ச ஆபிரகாம் அந்த ஸ்தலத்திற்குக் கர்த்தர் பார்த்துக்கொள்ளுவாரென்று பேரிட்டான்; அதினாலே இந்நாள்வரைக்கும் கர்த்தருடைய பர்வதத்திலே பார்த்துக்கொள்ளப்படுமென்று சொல்லப்படும்.

௰ரு கர்த்தருடைய தூதர் இரண்டாம் விசை வானத்திலிருந்து ஆபிரகாமைக் கூப்பிட்டுச் சொன்னதாவது:

௰சு நீ நம்முடைய சொல்லைக் கேட்டு இந்தக் காரியத்தைச் செய்து, நமக்காக உனக்கொரேபேருன உன்னுடைய குமாரனைப் பாராதே போனபடியினாலே,

௰எ நாம் உன்னை ஆசீர்வதிக்கவே ஆசீர்வதித்து, *உன் வித்தை வானத்து நட்சத்திரங்களைப்போலவும், கடற்கரையிலிருக்கிற மணலைப்போலவும் பெருகவே பெருகப் பண்ணுவோமென்றும், உன் வித்தார் தங்கள் சத்துருக்களின் வாசல்களைச் சுதந்த



Digitized by Google

ரித்துக்கொள்ளுவார்களென்றும், *௰௩. ௰௯: ௰௮. ௫.

௰௮ *உன் வித்தினாலே பூமியினுடைய எல்லாச் சாதிகளும் ஆசீர்வதிக்கப்படுமென்றும், †நம்முடைய பேரிலே ஆணையிட்டோமென்று கர்த்தர் சொல்லுகிறார் என்றார். *௰௨. ௩: ௰௮. ௰௮. †எபி. ௬. ௰௩, ௰௪.

௰௯ ஆபிரகாம் தன் வேலைக்காரரண்டைக்குத் திரும்பிவந்தான்; அப்பொழுது எழுந்து புறப்பட்டு, ஏகமாய்ப் பேயெர்சேபாவுக்குப் போனார்கள்; ஏனென்றால், ஆபிரகாம் பேயெர்சேபாவிலே குடியிருந்தான்.

௨௰ ¶ இந்த நடபடிகளுக்குப் பிற்பாடு, ஆபிரகாமுக்கு அறிவிக்கப்பட்டதாவது: இதோ, மில்க்காளும் உன் சகோதரனாகிய நாகோருக்குப் பிள்ளைகளைப்பெற்றாள்.

௨௧ யாரையென்றால், அவனுடைய முதற்பேறான ஊத்சையும், இவன் தம்பியாகிய பூசையும், ஆராமுக்குத் தகப்பனாகிய கேமுவேலையும்,

௨௨ கேசேதையும், ஆசோவையும், பில்தாசையும், இத்லாப்பையும், பேத்துவேலையும் பெற்றாள்; பேத்துவேலோவெனில் ரெபேக்காளைப் பெற்றானென்று அவனுக்கு அறிவிக்கப்பட்டது.

௨௩ அந்த எட்டுப்பேரை மில்க்காள் ஆபிரகாமுடைய சகோதரனாகிய நாகோருக்குப் பெற்றாள்.

௨௪ ரேயுமாளென்று பேர்கொண்ட அவனுடைய வைப்பாட்டியும், தேபாகையும், காகாமையும், தாகாசையும், மாகாவையும் பெற்றாள்.

## ௨௩. அதிகாரம்.

சாறாள் உயிரோடிருந்தகாலம் நூற்றிருபத்தேழுவருஷம், இதுவே சாறாளுடைய வயது.

௨ பிற்பாடு சாறாள் கானான்தேசத்திலேயிருக்கிற எபிரோன் ஊராகிய கீரியாத் அர்பாவிலே மரித்தாள்; அப்பொழுது ஆபிரகாம் சாறாளுக்காகப் புலம்பவும், அழவும் வந்தான்.

௩ ¶ பிற்பாடு ஆபிரகாம் தன் சவத்தை விட்டெழுந்து, ஏத்தின் புத்திரரோடேபேசி,

௪ நான் உங்களிடத்தில் பரதேசியும் அந்நியனுமாயிருக்கிறேன்; எனக்குமுன்பாகக் கிடக்கிற என் சவத்தை நான் அடக்கம்பண்ணுவதற்கு, எனக்கு உங்களிடத்தில் பிரேதம் அடக்கம்பண்ணும் நிலத்தைச் சொந்தமாகத் தாருங்களென்றான்.

௫ ¶ அப்பொழுது ஏத்தின்புத்திரர் ஆபிரகாமுக்குப் பிரதியுத்தாரமாகச் சொன்னதாவது:

௬ எங்கள் ஆண்டவனே, நாங்கள் சொல்லுகிறதைக் கேளும்; எங்கள் நடுவிலே நீர் தெய்வப் பிரபுவாயிருக்கிறீர்; எங்கள் கல்லறைகளில் தெரிந்துகொள்ளப்பட்டதிலே உம்முடைய சவத்தை அடக்கம்பண்ணும்; நீர் உம்முடைய சவத்தை அடக்கம்பண்ண எங்களில் ஒருவனும் தன் கல்லறையை உமக்குத் தடைசெய்வதில்லையென்றார்கள்.

௭ ¶ அப்பொழுது ஆபிரகாம் எழுந்திருந்து ஏத்தின் புத்திரராகிய தேசத்தாரை வணங்கி,

௮ அவர்களோடே சம்பாஷித்துச் சொன்னதாவது: எனக்கு முன்பாகக்கிடக்கிற என் சவத்தை நான் அடக்கம்பண்ண உங்களுக்குச் சம்மதியானால், நீங்கள் என் வார்த்தையைக் கேட்டு, சோகாருடைய குமாரனாகிய எப்பெரோனுடனே,

௯ அவர் தமது நிலத்தின் கடைசியிலே தமக்கிருக்கிற மக்பேலா என்னப்பட்ட கெபியை எனக்குத்தர எனக்காக மனுக்கேளுங்கள்; உங்களிடத்தில் எனக்குப் பிரேதம் அடக்கம்பண்ணும் சொந்த நிலம் இருக்கும்படிக்கு, அவர் அதை அது பெறும் விலைக்குத் தருவாராகவென்றான்.

௰ ¶ ஆனால் எப்பெரோன் ஏத்தின் புத்திரர் நடுவிலே உளுக்கார்ந்திருந்தான்; அப்பொழுது ஏத்தியனாகிய எப்பெரோன் தன் ஊர்வாசலுக்குள் பிரவேசிக்கிற ஏத்தின் புத்திரர் அனைவருங்கேட்க ஆபிரகாமுக்குப் பிரதியுத்தாரமாக,

Digitized by Google

௰க அல்ல என்னாண்டவனே, என் வார்த்தையைக்கேளும்; நிலத்தை உமக்குத் தருகிறேன்; அதிலிருக்கும் கெபியையும் உமக்குத் தருகிறேன்; என் சனப்புத்திரருடைய கண்களுக்குமுன்பாக அதை உமக்குத் தருகிறேன்; உம்முடைய சவத்தை அடக்கம் பண்ணுமென்றான்.

௰உ ¶ அப்பொழுது ஆபிரகாம் தேசத்தாரை வணங்கி,

௰ங தேசத்துச் சனம்கேட்க எப்பெரோனுடனே சொன்னதாவது: கொடுக்க நீர் மனதானால் என் வார்த்தையைக் கேளும்; நிலத்தின் விலைக்கிரயத்தைத் தருகிறேன்: என் கையில் அதை வாங்கிக்கொள்ளும், அப்பொழுது அவ்விடத்தில் என் சவத்தை அடக்கம்பண்ணுவேனென்றான்.

௰ச ¶ அப்பொழுது எப்பெரோன் ஆபிரகாமுக்குப் பிரதியுத்தாரமாக:

௰ரு என்னாண்டவனே, நான் சொல்லுகிறதைக்கேளும்; இந்த நிலம் நானூறு வெள்ளிக்காசுபெறும்; எனக்கும் உமக்கும் அது எவ்வளவுகாரியம்; நீர் உம்முடைய சவத்தை அடக்கம்பண்ணுமென்றான்.

௰சா ¶ அப்பொழுது ஆபிரகாம் எப்பெரோனின் சொல்லைக் கேட்டு, எப்பெரோன் எத்துடைய புத்திரரின் காதுகளில் கேட்கச் சொன்னதாகிய வர்த்தகரிடத்தில் செல்லும்படியான நானூறு வெள்ளிக்காசை அவனுக்கு நிறுத்துக்கொடுத்தான்.

௰எ இந்தப் பிரகாரமாக *மம்ரேக்கெதிரே மக்பேலாவிலிருந்த எப்பெரோனுடைய நிலமாகிய அந்தப் பூமியும், அதிலுள்ள கெபியும் நிலத்தினுடைய எல்லைகளெல்லாம் சுற்றியிருந்த எல்லா மரங்களும், *சகூ. உகூ, ரு௰: ௰ங.

௰அ அவனுடைய ஊர்வாசலுக்குள்பிரவேசிக்கிற எத்தின் புத்திரர் எல்லாரும் அறிய ஆபிரகாமுக்குச் சொந்தமாக ஏற்பட்டது.

௰கூ ¶ அதற்குப்பிற்பாடு ஆபிரகாம் தன் பெண்சாதியாகிய சாராளைக் கானான்தேசத்தில் எப்பெரோன் ஊர்ப்பூமியான மம்ரேக்கெதிரேகிடக்கிற மக்பேலா என்ற நிலத்தின் கெபியிலே அடக்கம்பண்ணினான்.

உ௰ இப்படியே எத்தின் புத்திரர்கையில் கொள்ளப்பட்ட அந்த நிலமும், அதிலுள்ள கெபியும், ஆபிரகாமுக்குப் பிரேதங்களை அடக்கம்பண்ணும் சொந்தநிலமாக ஏற்பட்டது.

## உச. அதிகாரம்.

ஆபிரகாம் வயதுசென்ற கிழவனானான்; கர்த்தர் ஆபிரகாமை எல்லாவற்றிலும் ஆசீர்வதித்துக்கொண்டிருந்தார்.

உ அப்பொழுது ஆபிரகாம் தன் வீட்டிலே வயதில் மூத்தவனும், தனக்குண்டானதையெல்லாம் ஆளுகிறவனுமாகிய தன் ஊழியக்காரனோடே சொன்னதாவது:

ங *நான் குடியிருக்கிற கானானியருடைய குமாரத்திகளில் நீ என் குமாரனுக்குப் பெண்ணைக்கொள்ளாமல், *உஅ. க.

ச நீ என் சீமைக்கும், என் இனத்தண்டைக்கும்போய், என்குமாரனாகிய ஈசாக்குக்குப் பெண்ணைக் கொள்வதற்கு நான் உன்னை வானத்திற்குப் பராபரனும், பூமிக்குப் பராபரனுமாகிய கர்த்தர்பேரிலே ஆணையிடும்படிக்கு, *உன் கையை என்னிடுப்பின்கீழே போடென்றான். *சஎ. உகூ.

ரு ¶ அப்பொழுது அந்த ஊழியக்காரன் அவனுடனே, ஒருவேளை அந்தப் பெண் என்பிறகே இந்தத் தேசத்திற்கு வர மனதில்லாதிருப்பாள்; அப்பொழுது உம்முடைய குமாரனை நீர் விட்டுவந்த தேசத்திற்குத்தானே மறுபடியும் அழைத்துப் போவேனோ என்றான்.

சா ஆனால், ஆபிரகாம் அவனோடே சொன்னதாவது: நீ என் குமாரனை மறுபடியும் அங்கே அழைத்துப்போகாதபடிக்கு எச்சரிக்கையாயிரு.

எ *என்னை என் தகப்பனுடைய வீட்டிலும் என் இனத்தாரிருக்கிற தேசத்திலுமிருந்து அழைத்துவந்தவரும், †உன் வித்

Digitized by Google

துக்கு இந்தத் தேசத்தைக் கொடுப்போமென்று எனக்குச் சொன்னவரும், எனக்கு ஆணையிட்டவருமான வானத்தினுடைய பராபரனாகிய கர்த்தர், நீ அங்கேயிருந்து என் குமாரனுக்கு ஒரு பெண்ணைக் கொண்டுவரும்படிக்குத் தம்முடைய தூதனை உனக்குமுன்பாக அனுப்புவார். *௰௨. ௧. † ௰௨. ௭: ௰௩. ௰௫—௰௮.

௮ பெண் உன்னைப் பின்செல்ல மனதில்லாதிருந்தாளேயாகில், அப்பொழுது நீ இந்த என்னுடைய ஆணைக்கு நீங்கலானவன்; அங்கேமாத்திரம் என் குமாரனை மறுபடியும் அழைத்துப்போகாயாகவென்றான்.

௯ அப்பொழுது அந்த ஊழியக்காரன் தன் கையைத் தன் எசமானனாகிய ஆபிரகாமுடைய இடுப்பின்கீழே போட்டு, இந்தக் காரியத்திற்காக அவனுக்கு ஆணையிட்டான்.

௰ ¶ பிற்பாடு ஊழியக்காரன் தன் எசமானனுடைய ஒட்டகங்களில் பத்து ஒட்டகங்களைக் கூட்டிக்கொண்டு போனான்; அவன் எசமானனுடைய சகலவித உச்சிதங்களும் அவன்கையிலிருந்தன; அவன் எழுந்து புறப்பட்டுப்போய், மேசொப்பொத்தாமியாவிலே நாகோருடைய ஊருக்குவந்து,

௰௧ ஊருக்குப் புறம்பே ஒரு தண்ணீர்த் துரவண்டையில் தண்ணீர் மொள்ளுகிற ஸ்திரிகள் புறப்படுகிற சாயங்கால வேளையிலே ஒட்டகங்களை மடக்கிச் சொன்னதாவது:

௰௨ ¶ என் எசமானனாகிய ஆபிரகாமுடைய பராபரனாயிருக்கிற கர்த்தாவே, தேவரீர் இன்றைக்கு எனக்குக் காரியம் நேரிடப்பண்ணி, என் எசமானனாகிய ஆபிரகாமுக்குக் கிருபைசெய்யும்.

௰௩ இதோ நான் தண்ணீர்த் துரவண்டையில் நிற்கிறேன்; ஊராரின் குமாரத்திகள் தண்ணீர் மொள்ளப் புறப்பட்டுவருவார்களே.

௰௪ நான் குடிக்க உன் பாளையைச் சாயென்று நான் சொல்லும்பொழுது, குடி உன் ஒட்டகங்களுக்கும் குடிக்க வார்ப்பேனென்று சொல்லும் பெண்பிள்ளையே நீர் உம்முடைய ஊழியக்காரனாகிய ஈசாக்குக்கு நியமித்தவளாயிருக்கவும், என் எசமானனுக்குக் கிருபை செய்தீரென்று நான் இதினாலே அறியவும் கடவதென்றான்.

௰௫ ¶ அவன் இன்னம் பேசி முடியவில்லை; அப்பொழுது சம்பவித்ததேதென்றால், இதோ, ஆபிரகாமுடைய சகோதரனாகிய நாகோரின் பெண்சாதி மில்க்காளுடைய குமாரனாயிருக்கிற பேத்துவேலுக்குப் பிறந்த *ரெபேக்காள் தன் பாளையைத் தன் தோளின்மேல் வைத்துக்கொண்டு புறப்பட்டுவந்தாள். *௨௨. ௨௩.

௰௬ அந்தப் பெண்பிள்ளை மகா ரூபவதியும், புருஷனை அறியாத கன்னியாஸ்திரியுமாயிருந்தாள்; அவள் துரவுக்கிறங்கிப்போய், தன் பாளையை நிரப்பிக்கொண்டேறிவந்தாள்.

௰௭ அப்பொழுது ஊழியக்காரன் அவளுக்கு எதிர்கொண்டோடி, உன் பாளையிலே நான் கொஞ்சம் தண்ணீர் குடிக்கட்டுமென்றான்.

௰௮ அதற்கவள், குடியும் என்னாண்டவனே! என்று தீவிரமாய்த் தன் பாளையைத் தன் கையிலிறக்கிக்கொண்டு, அவனுக்குக் குடிக்கக் கொடுத்தாள்.

௰௯ கொடுத்துத் தீர்ந்தபின்பு, உம்முடைய ஒட்டகங்களுக்கும் அவைகள் குடித்துத் தீருமட்டும் மொண்டுவார்ப்பேனென்று சொல்லி,

௨௰ தீவிரமாய்த் தன் பாளையைத் தண்ணீரைத் தொட்டியிலே ஊற்றி, இன்னம் மொண்டுவரத் துரவண்டையில் ஓடி, அவனுடைய ஒட்டகங்களுக்கெல்லாம் மொண்டுவார்த்தாள்.

௨௧ அந்தப் புருஷன் அவள்மேல் ஆச்சரியப்பட்டு, கர்த்தர் தன் பயணத்தை வாய்க்கப்பண்ணினாரோ, இல்லையோவென்றறிய மவுனமாயிருந்தான்.

Digitized by Google

உஉ ¶ ஒட்டகங்கள் குடித்துத் தீர்ந்தபிற்பாடோவென்றால், அந்தப் புருஷன் அரைச் சேக்கல் எடைப்பொன்னான நெற்றிப் பட்டத்தையும், அவள் கைகளுக்குப் பத்துச் சேக்கல் எடைப்பொன்னான இரண்டு சரிகளையும் எடுத்துக்கொடுத்து,

உங நீ யாருடைய குமாரத்தியென்று எனக்கு அறிவி; உன் தகப்பன் வீட்டில் இராத்தங்க எங்களுக்கிடமுண்டோ என்றான்.

உச அவள் அவனுடனே, நான் நாகோருக்கு மில்க்காள் பெற்ற குமாரனாகிய பேத்துவேலின் மகளென்றுசொல்லி,

உரு அவனுடனே: எங்களிடத்தில் வைக்கோலும், தீனியும் நிரம்ப இருக்கிறது; இராத்தங்க இடமுமிருக்கின்றதென்றாள்.

உகா அப்பொழுது அந்தப் புருஷன் தலைகுனிந்து, கர்த்தரைப் பணிந்துகொண்டு,

உஎ என் எசமானாகிய ஆபிரகாமின் பராபரனாயிருக்கிற கர்த்தர் ஸ்தோத்திரிக்கப்பட்டவர்; அவர் தம்முடைய கிருபையையும் தம்முடைய உண்மையையும், என் எசமானைவிட்டு விலகப்பண்ணினதில்லை; நான் வழிப்பயணம் வருகையில், கர்த்தர் என்னை என் எசமானுடைய சகோதரர் வீட்டுக்கு அழைத்துக்கொண்டு வந்தாரென்றான்.

உஅ ¶ பெண்பிள்ளை ஓடி, தன் தாயின்வீட்டிலே இந்த நடபடியை அறிவித்தாள்.

உகூ ரெபேக்காளுக்கு ஒரு சகோதரனிருந்தான், அவன் பெயர் லாபான்; இந்த லாபான் வெளியே துரவருகே இருக்கிற அந்தப் புருஷனண்டைக்கு ஓடினான்.

ஙய அதேனெனில், இவன் அந்த நெற்றிப்பட்டத்தையும், தன் சகோதரியின் கைகளிலிருக்கிற சரிகளையும் கண்டபடியினாலும், இன்ன இன்னபடி அந்தப் புருஷன் என்னோடே சொன்னானென்று தன் சகோதரி ரெபேக்காள் சொல்லுகிற வார்த்தைகளைக் கேட்டபடியினாலும், அந்தப் புருஷனண்டைக்குவந்தான்; இதோ, அவன் துரவருகே ஒட்டகங்களண்டையிலே நின்றிருந்தான்.

ஙக அப்பொழுது இவன், கர்த்தரால் ஆசீர்வதிக்கப்பட்டவனே, உள்ளேவா; நீ வெளியே நிற்பானேன்? நான் வீட்டையும் ஒட்டகங்களுக்கு இடத்தையும் ஆயத்தம்பண்ணினேனென்றான்.

ஙஉ அப்பொழுது அந்தப் புருஷன் வீட்டுக்கு வந்தான்; இவனோவென்றால், ஒட்டகங்களைக் கட்டவிழ்த்து, ஒட்டகங்களுக்கு வைக்கோலும் தீனியும்போட்டு, அவன் கால்களையும், அவனோடேகூட இருந்த மனிதர் கால்களையும் கழுவுகிறதற்குத் தண்ணீர்கொடுத்தான்.

ஙங பிற்பாடு அவனுக்குமுன்பாகச் சாப்பாடு வைக்கப்பட்டது; ஆனால், அவன் நான் என் வார்த்தைகளைச் சொல்லாததற்குமுன்னே சாப்பிடேனென்றான்; அதற்கு இவன் சொல்லென்றான்.

ஙச ¶ அப்பொழுது அவன் சொன்னதாவது: நான் ஆபிரகாமுடைய ஊழியக்காரன்.

ஙரு கர்த்தர் என் எசமானை மிகவும் ஆசீர்வதித்தார்; இவர் பெரியவரானார்; அவர் இவருக்கு ஆடுமாடுகளையும், வெள்ளியையும், பொன்னையும், வேலைக்காரரையும், வேலைக்காரிகளையும், ஒட்டகங்களையும், கழுதைகளையும் கட்டளையிட்டார்.

ஙகா என் எசமானன் பெண்சாதியாகிய சாராள் முதிர்வயதானபிற்பாடு என் எசமானுக்கு ஒரு குமாரனைப்பெற்றாள்; இவனுக்கவர் தமக்குண்டானதையெல்லாம் கொடுத்து,

ஙஎ நான் குடியிருக்கிற கானான்தேசத்தாருடைய குமாரத்திகளில் நீ என் குமாரனுக்குப் பெண்ணைக் கொள்ளாமல்,

ஙஅ நீ என் தகப்பன் வீட்டுக்கும் என் இனத்தண்டைக்கும் போய், என் குமாரனுக்குப் பெண்ணைக் கொள்வாயாகவென்று என் எசமானன் என்னை ஆணையிட்டார்.

ஙகூ அப்பொழுது நான் என் எசமானனோடே, ஒருவேளை அந்தப் பெண் என் பிறகே வாராதேபோவாளென்றேன்.

Digitized by Google

சம ஆனால், அவர் எனக்குச் சொன்னதாவது: நான் பயந்து நடக்கிற கர்த்தரானவர் உன்னோடே தம்முடைய தூதனை அனுப்பி, நீ என் இனத்திலும், என் தகப்பன் வீட்டிலும், என் குமாரனுக்குப் பெண்ணைக்கொள்வதற்காக உன் பயணத்தை வாய்க்கப்பண்ணுவார்.

சக நீ என் இனத்தண்டைக்குப் போனால், அப்பொழுது என் ஆணைக்கு நீங்கலாயிருப்பாய்; அவர்கள் உனக்குக் கொடாதே போனார்களாகில், என்னாணைக்கு நீங்கலாயிருப்பாயென்றார்.

சஉ அப்படியே இன்று நான் அந்தத் துரவண்டையிலே வந்து சொன்னதாவது: என் எசமானாகிய ஆபிரகாமின் பராபரனாகிய கர்த்தரே, இப்பொழுதும் நான் பயணம் பண்ணுகிற என் வழியைத் தேவரீர் வாய்க்கப்பண்ணினீரானால்;

சஙு இதோ நான் தண்ணீர்த் துரவண்டையிலே நிற்கிறேன்; தண்ணீர்மொள்ளப் புறப்பட்டு வரப்போகிறவளும், நான் அவளுடனே, உன் பானையிலிருக்கிற தண்ணீரில் கொஞ்சம் எனக்குக் குடிக்கத் தாவென்று சொல்ல,

சச அவள் என்னுடனே, நீயும்குடி, உன் ஒட்டகங்களுக்கும் மொண்டு வார்ப்பேனென்று சொல்பவளுமான கன்னியாஸ்திரியே கர்த்தர் என் எசமானனுடைய குமாரனுக்கு நியமித்த ஸ்திரியாகவேண்டுமென்றேன்.

சடு இன்னம் இதை நான் என் இருதயத்திலே சொல்லி முடிக்கவில்லை; அப்பொழுது இதோ, ரெபேக்காள் தன் பானையைத் தன் தோளின்மேல் வைத்துக்கொண்டவளாய்ப் புறப்பட்டு வந்து, துரவுக்கிறங்கிப் போய் மொண்டாள்; அப்பொழுது அவளோடே, எனக்குக் குடிக்கத் தாவென்றேன்.

சசூ அவள் தீவிரமாய்த் தன்மேலிருந்த பானையை இறக்கி, குடியும் உம்முடைய ஒட்டகங்களுக்கும் வார்ப்பேனென்றாள்; அப்படியே நான் குடித்தேன்; அவள் ஒட்டகங்களுக்கும் வார்த்தாள்.

சஎ அப்பொழுது நீ யாருடைய குமாரத்தியென்று அவளைக் கேட்டேன்; அதற்கவள், நான் மில்க்காள் நாகோருக்குப் பெற்ற குமாரனான பேத்துவேலின் மகளென்றாள்; அப்பொழுது நான் அவள் நெற்றியிலே நெற்றிப்பட்டத்தையும் அவள் கைகளில் சரிகைகளையும் அணிந்து,

சஅ தலை குனிந்து, கர்த்தரைப் பணிந்துகொண்டு, நான் என் எசமானனுடைய சகோதரன் குமாரத்தியை அவர் குமாரனுக்குக் கொள்ள என்னை உண்மையான வழியிலே அழைத்துவந்த என் எசமானாகிய ஆபிரகாமின் பராபரனாயிருக்கிற கர்த்தரை ஸ்தோத்திரித்தேன்.

சகூ இப்பொழுதும் நீங்கள் என் எசமானனுக்குத் தயையும் உண்மையும் செய்கிறவர்களானால், எனக்கு அறிவியுங்கள்; அல்லவென்றால், நான் வலதுபுறத்தையாகிலும் இடதுபுறத்தையென்கிலும் நோக்கிப் போகும்படிக்கு, அதையும் எனக்கு அறிவியுங்களென்றான்.

ருய ¶ அப்பொழுது லாபானும் பேத்துவேலும் பிரதியுத்தாரமாக, இந்தக் காரியம் கர்த்தராலே வந்தது; உனக்கு நாங்கள் இனப்பமானாலும் நலமானாலும் சொல்லக்கூடாது.

ருக இதோ, ரெபேக்காள் உன் முன்பாக இருக்கிறாள்; கர்த்தர் சொன்னபடியே அவள் உன் எசமானனுடைய குமாரனுக்குப் பெண்சாதியாகும்படிக்கு, அவளை அழைத்துக்கொண்டு போவென்றார்கள்.

ருஉ அப்பொழுது சம்பவித்ததேதென்றால், ஆபிரகாமின் ஊழியக்காரன் அவர்கள் வார்த்தைகளைக் கேட்டபொழுது, தரைமட்டும் குனிந்து கர்த்தரைப் பணிந்துகொண்டான்.

ருஙு பிற்பாடு அந்த ஊழியக்காரன் வெள்ளியுடைமைகளையும் பொன்னுடைமைகளையும் வஸ்திரங்களையும் எடுத்து, ரெபேக்

Digitized by Google

களுக்குக் கொடுத்து, அவள் சகோதரனுக்கும் தாய்க்கும் உச்சிதங்களைக் கொடுத்தான்.

௫௪ பிற்பாடு அவனும் அவனோடிருந்த மனிதரும் புசித்துக்குடித்து இராத்தங்கினார்கள்; காலமே எழுந்திருந்த பின்பு அவன் என் எசமானனண்டைக்கு என்னை அனுப்புங்களென்றான்.

௫௫ அப்பொழுது அவள் சகோதரனும் அவளுடைய தாயும், பெண் பத்துநாளாகிலும் எங்களோடே இருந்து, பிற்பாடு போகட்டுமென்றார்கள்.

௫௬ அவனோவெனில் அவர்களோடே, கர்த்தர் என் பயணத்தை வாய்க்கப்பண்ணியிருக்க என்னைத் தடுக்காதிருங்கள்; நான் என் எசமானனண்டைக்குப் போக என்னை அனுப்புங்களென்றான்.

௫௭ அப்பொழுது அவர்கள் பெண்ணை அழைத்து, அவள் வாய்ப்பிறப்பைக் கேட்போமென்றுசொல்லி,

௫௮ ரெபேக்காளை அழைத்து, அவளுடனே, நீ இந்தப் புருஷனோடேகூடப் போவாயோவென்றார்கள்; அவள் போவேனென்றாள்.

௫௯ அப்படியே அவர்கள் தங்கள் சகோதரியாகிய ரெபேக்காளையும், அவள் தாதியையும், ஆபிரகாமின் ஊழியக்காரனையும், அவன் மனிதரையும் அனுப்புவித்து,

௬௰ ரெபேக்காளை ஆசீர்வதித்து அவளுடனே, எங்கள் சகோதரியே, நீ ஆயிரம் பதினாயிரங்களாகவும் உன் வித்துத் தன் பகைஞருடைய வாசல்களைச் சுதந்தரித்துக்கொள்ளவுங்கடவது என்றார்கள்.

௬௧ ¶ அப்பொழுது ரெபேக்காளும் அவள் வேலைக்காரிகளும் எழுந்து ஒட்டகங்கள் மீதிலேறி, அந்த மனிதனைப் பின்சென்றார்கள்; ஊழியக்காரன் ரெபேக்காளை அழைத்துக்கொண்டு போனான்.

௬௨ இசாக்கோவெனில், *என்னைப் பார்க்கிற ஜீவனுள்ளவருடைய கிணறென்னப்பட்ட கிணற்றின் வழியாய்ப் புறப்பட்டு வந்தான்; ஏனெனில் தென்தேசத்தில் குடியிருந்தான். * ௧௬. ௧௪, ௧௪.

௬௩ இசாக்குச் சாயங்கால வேளையிலே செபத்தியானம்பண்ண வெளியே போயிருந்து, தன் கண்களை ஏறெடுக்கையில், இதோ ஒட்டகங்கள் நடந்துவரக்கண்டான்.

௬௪ ரெபேக்காள் தன் கண்களை ஏறெடுத்து இசாக்கைக் காண்கிறபொழுது, ஒட்டகத்தை விட்டிறங்கி,

௬௫ ஊழியக்காரனோடே, இங்கே வெளியிலே நமக்கெதிரே நடந்துவருகிற அந்தப் புருஷன் யாரென்றாள்; அவர் என் எசமானனென்று ஊழியக்காரன் சொன்னான்; அப்பொழுது அவள் முக்காடிட்டுக்கொண்டாள்.

௬௬ ஊழியக்காரன் தான் செய்த சகல காரியங்களையும் இசாக்குக்கு விவரித்தான்.

௬௭ அப்பொழுது இசாக்கு இவளைத் தன் தாய் சாராளுடைய கூடாரத்திலே அழைத்துப்போய், பிற்பாடு ரெபேக்காளை விவாகம்பண்ணினான்; அவள் அவனுக்குப் பெண்சாதியானாள்; அவன் அவளைச் சிநேகித்தான்; இப்படி இசாக்குத் தன் தாய்க்குப் பிற்பாடு ஆறுதல் அடைந்தான்.

## ௨௫. அதிகாரம்.

ஆபிரகாம் மறுபடியும் ஒரு பெண்சாதியை விவாகம்பண்ணினான்; அவள் பேர் கேத்தூராள்.

௨ இவள் அவனுக்குச் சிம்ரானையும், யக்க்ஷானையும், மெதானையும், மீதேயானையும், இஸ்பாக்கையும், சூவாகையும் பெற்றாள்.

௩ யக்க்ஷானோவெனில், சேபாவையும், தேதானையும் பெற்றான்; தேதானுடைய குமாரர், அசூரிம், லெத்தூரிம், லெயூமிம் என்பவர்கள்.

௪ மீதேயானுடைய குமாரர், ஏப்பா, ஏப்பேர், ஆனோக், ஆபிதா, எல்தா என்பவர்கள்; இவர்களெல்லாரும் கேத்தூராளின் பிள்ளைகள்.

Digitized by Google

பிள்ளையிருக்கிற இடத்திலே, அவனுடைய சத்தத்தைக் கேட்டார்.

௰௮ நீ எழுந்திருந்து பிள்ளையை எடுத்து, அவனை உன் கையினால் பிடித்துக்கொண்டுபோ; ஏனெனில், அவனைப் பெரியசாதியாக்குவோமென்றார்.

௰௯ பராபரன் அவள் கண்களைத் திறந்தார்; அப்பொழுது அவள் ஒரு தண்ணீர்த் துரவைக் கண்டுபோய், துருத்தியைத் தண்ணீரினால் நிரப்பிப் பிள்ளைக்குக் குடிக்கக் கொடுத்தாள்.

௨௰ பராபரன் பிள்ளையோடேகூட இருந்தார்; அவன் வளர்ந்து, வனாந்தரத்தில் குடியிருந்து, வில்வித்தையிலே வல்லவனாயிருந்தான்.

௨௧ அவன் பாரானென்ற வனாந்தரத்திலே குடியிருந்தான்; அவனுடைய தாய் எகிப்துதேசத்தாளாகிய ஒரு பெண்ணை அவனுக்கு விவாகம் பண்ணுவித்தாள்.

௨௨ ¶ அக்காலத்தில் சம்பவித்ததேதென்றால், அபிமேலேக்கும் அவன் சேனாபதியாகிய பீகோலும் ஆபிரகாமோடே சொன்னதாவது: நீ செய்கிறதெல்லாவற்றிலும் பராபரன் உன்னோடேகூட இருக்கிறார்.

௨௩ இப்பொழுதும் நீ என்னையாகிலும், என் குமாரனையாகிலும், என் பேரனையென்கிலும் கபடுசெய்யாமல், நான் உனக்குச் செய்த தயவின்படியே நீ எனக்கும், நீ தங்கியிருக்கிற இந்தத் தேசத்திற்கும் செய்வதென்று பராயரன்பேரிலே எனக்கு இங்கே ஆணையிடுவென்றான்.

௨௪ அப்பொழுது ஆபிரகாம்: நான் ஆணையிடுகிறேனென்றான்.

௨௫ ஆனால் அபிமேலேக்குடைய வேலைக்காரர் பறித்துக்கொண்ட தண்ணீர்த்துரவின் நிமித்தம் ஆபிரகாம் அபிமேலேக்கைக் கடிந்துகொண்டான்.

௨௬ அதற்கு அபிமேலேக், யார் இந்தக் காரியத்தைச் செய்தாரென்று அறியேன்; நீ எனக்கு அறிவித்ததுமில்லை; இன்று நான் அதைக் கேட்டதேயொழிய இதற்கு முன் அதை நான் கேட்டதுமில்லை என்றான்.

௨௭ அப்பொழுது ஆபிரகாம் ஆடுமாடுகளைக் கொண்டுவந்து, அபிமேலேக்குக்குக் கொடுத்தான்; அவர்களிருவரும் உடம்படிக்கை பண்ணிக்கொண்டார்கள்.

௨௮ ஆபிரகாம் ஏழு பெண் ஆட்டுக்குட்டிகளைத் தனியே நிறுத்தினான்.

௨௯ அப்பொழுது அபிமேலேக் ஆபிரகாமோடே, நீ தனியே நிறுத்தின இந்த ஏழு பெண் ஆட்டுக்குட்டிகள் எதற்கென்றான்.

௩௰ அதற்கவன், நான் இந்தத் துரவை எடுத்ததற்கு எனக்குச் சாட்சியாக நீர் இந்த ஏழு பெண்குட்டிகளை என் கையில் வாங்கிக்கொள்ளவேண்டுமென்றான்.

௩௧ அவர்களிருவரும் அவ்விடத்தில் ஆணையிட்டுக்கொண்டபடியினாலே, அந்த இடம் பேயேர்சேபாவென்னப்பட்டது.

௩௨ அவர்கள் பேயேர்சேபாவிலே உடம்படிக்கை பண்ணிக்கொண்ட பிற்பாடு, அபிமேலேக்கும், அவன் சேனாபதியாகிய பீகோலும் எழுந்திருந்து, பெலிஸ்தருடைய தேசத்திற்குத் திரும்பினார்கள்.

௩௩ ¶ ஆபிரகாம் பேயேர்சேபாவிலே ஒரு தோப்பை நாட்டி, என்றுமுள்ள பராபரனாகிய கர்த்தருடைய நாமத்தை அவ்விடத்திலே தொழுதுகொண்டான்.

௩௪ ஆபிரகாம் அநேகநாள் பெலிஸ்தருடைய தேசத்தில் தங்கினான்.

## ௨௨. அதிகாரம்.

இந்த நடபடிகளுக்குப் பிற்பாடு சம்பவித்ததேதெனில், பராபரன் ஆபிரகாமைச் சோதித்து அவனுடனே, ஆபிரகாமே! என்றார்; அதற்கவன் இதோ அடியேனென்றான்.

௨ அப்பொழுது அவர் சொன்னதாவது: *நீ சிநேகிக்கிறவனும், உனக்கு ஒரே பேறுனவனுமாகிய உன்னுடைய குமாரன் ஈசாக்கை நீ இப்பொழுது அழைத்துக்கொண்டு மோரியதேசத்திற்குப்போய், அங்கே அவனை நாம் உனக்குச் சொல்லப்போகிற

Digitized by Google

மலைகளில் ஒன்றின்மேல் தகனபலியாகப் பலியிடுவென்றார். *எபி. ௰௧. ௰௭.

௩ அப்பொழுது, ஆபிரகாம் அதிகாலமே எழுந்திருந்து, தன் கழுதையின்மேல் விரி கட்டி, தன் வேலைக்காரரில் இரண்டுபேரையும் தன் குமாரன் இசாக்கையும் கூட்டிக்கொண்டு, தகனபலிக்குக் கட்டைகளைப் பிளந்து புறப்பட்டுப் பராபரன் தனக்குச் சொன்ன ஸ்தலத்திற்கு நடந்துபோனான்.

௪ மூன்றாம் நாளிலே ஆபிரகாம் தன் கண்களை ஏறெடுத்து, தூரத்திலே அந்த ஸ்தலத்தைக் கண்டான்.

௫ அப்பொழுது ஆபிரகாம் தன் வேலைக்காரரோடே, நீங்கள் இங்கே கழுதையை நிறுத்தி, உளுக்காந்திருங்கள்; நானும் பிள்ளையாண்டானும் அவ்விடம்மட்டும் போய், பணிந்துகொண்டு, உங்களண்டைக்குத் திரும்பி வருவோமென்றான்.

௬ ஆபிரகாம் தகனபலிக் கட்டைகளை எடுத்து, தன் குமாரனாகிய இசாக்கின் மேல் வைத்து, தன் கையிலே நெருப்பையும் கத்தியையும் எடுத்துக்கொண்டு, இருவரும் ஏகமாய்ப் போனார்கள்.

௭ அப்பொழுது இசாக் தன் தகப்பனாகிய ஆபிரகாமோடே, என் தகப்பனே என்று சொன்னான்; அதற்கவன், என் மகனே, இதோ நானென்றான். அப்பொழுது அவன், இதோ நெருப்பும் கட்டையுமிருக்கின்றது; ஆனால் தகனபலிக்கு ஆட்டுக்குட்டி எங்கே என்றான்.

௮ அப்பொழுது ஆபிரகாம், என் மகனே, பராபரன் தமக்குத் தகனபலிக்கான ஆட்டுக்குட்டியைப்பார்த்துக்கொள்ளுவாரென்றான்; அப்புறம் இருவரும் ஏகமாய்ப் போய்,

௯ ¶ பராபரன் அவனுக்குச் சொல்லியிருந்த ஸ்தலத்திற்கு வந்தார்கள்; அப்பொழுது ஆபிரகாம் அங்கே ஒரு பீடத்தைக் கட்டி, கட்டைகளை அடுக்கி, தன் குமாரனாகிய இசாக்கைக் கட்டி, அவனை அந்தப் பீடத்திலே கட்டைகளின்மீதில் கிடத்தினான்.

௰ பிற்பாடு ஆபிரகாம் தன் கையை நீட்டி, தன் குமாரனைக் குரல்வளை அறுக்கும்படிக்கு, கத்தியை எடுத்துக்கொண்டான்.

௰௧ அப்பொழுது கர்த்தருடைய தூதர் வானத்திலிருந்து அவனைக் கூப்பிட்டு, ஆபிரகாமே, ஆபிரகாமே, என்றார்; அவன், இதோ அடியேன் என்றான்.

௰௨ அப்பொழுது அவர் பிள்ளையாண்டான்மேல் உன் கையைப்போடாதே; அவனுக்கு ஒன்றும் செய்யாதே; ஏனெனில், நீ பராபரனுக்குப் பயந்திருந்து, நமக்காக உனக்கொரேபேறான உன்னுடைய குமாரனைப் பாராதேபோனாயென்று இப்பொழுது அறிந்திருக்கிறோமென்றார்.

௰௩ ஆபிரகாம் தன் கண்களை ஏறெடுத்துப் பார்க்கிறபொழுது, இதோ பின்னாகப் புதரிலே தன் கொம்புகளால் சிக்கிக்கொண்டிருந்த ஒரு ஆட்டுக்கடாவைக் கண்டான்; அப்பொழுது ஆபிரகாம் போய், கடாவைப் பிடித்து, அதைத் தன் குமாரனுக்குப் பதிலாகத் தகனபலியிட்டான்.

௰௪ ஆபிரகாம் அந்த ஸ்தலத்திற்குக் கர்த்தர் பார்த்துக்கொள்ளுவாரென்று பேரிட்டான்; அதினாலே இந்நாள்வரைக்கும் கர்த்தருடைய பர்வதத்திலே பார்த்துக்கொள்ளப்படுமென்று சொல்லப்படும்.

௰௫ கர்த்தருடைய தூதர் இரண்டாம் விசை வானத்திலிருந்து ஆபிரகாமைக் கூப்பிட்டுச் சொன்னதாவது:

௰௬ நீ நம்முடைய சொல்லைக் கேட்டு இந்தக் காரியத்தைச் செய்து, நமக்காக உனக்கொரேபேறான உன்னுடைய குமாரனைப் பாராதே போனபடியினாலே,

௰௭ நாம் உன்னை ஆசீர்வதிக்கவே ஆசீர்வதித்து, *உன் வித்தை வானத்து நட்சத்திரங்களைப்போலவும், கடற்கரையிலிருக்கிற மணலைப்போலவும் பெருகவே பெருகப்பண்ணுவோமென்றும், உன் வித்தார் தங்கள் சத்துருக்களின் வாசல்களைச் சுதந்த

Digitized by Google

ரித்துக்கொள்ளுவார்களென்றும், *௰௩. ௰௬: ௰௫. ௫.

௰௮ *உன் வித்தினாலே பூமியினுடைய எல்லாச் சாதிகளும் ஆசீர்வதிக்கப்படுமென்றும், †நம்முடைய பேரிலே ஆணையிட்டோமென்று கர்த்தர் சொல்லுகிறார் என்றார். *௰௨. ௩: ௰௮. ௰௮. †எபி. ௬. ௰௩, ௰௪.

௰௯ ஆபிரகாம் தன் வேலைக்காரரண்டைக்குத் திரும்பிவந்தான்; அப்பொழுது எழுந்து புறப்பட்டு, ஏகமாய்ப் பேயெர்சேபாவுக்குப் போனார்கள்; ஏனென்றால், ஆபிரகாம் பேயெர்சேபாவிலே குடியிருந்தான்.

௨௰ ¶ இந்த நடபடிகளுக்குப் பிற்பாடு, ஆபிரகாமுக்கு அறிவிக்கப்பட்டதாவது: இதோ, மில்க்காளும் உன் சகோதரனாகிய நாகோருக்குப் பிள்ளைகளைப் பெற்றாள்.

௨௧ யாரையென்றால், அவனுடைய முதற்பேறான ஊத்சையும், இவன் தம்பியாகிய பூசையும், ஆராமுக்குத் தகப்பனாகிய கேமுவேலையும்,

௨௨ கேசேதையும், ஆசோவையும், பில்தாசையும், இத்லாப்பையும், பேத்துவேலையும் பெற்றாள்; பேத்துவேலோவெனில் ரெபேக்காளைப் பெற்றானென்று அவனுக்கு அறிவிக்கப்பட்டது.

௨௩ அந்த எட்டுப்பேரை மில்க்காள் ஆபிரகாமுடைய சகோதரனாகிய நாகோருக்குப் பெற்றாள்.

௨௪ ரேயுமாளென்று பேர்கொண்ட அவனுடைய வைப்பாட்டியும், தேபாகையும், காகாமையும், தாகாசையும், மாகாவையும் பெற்றாள்.

## ௨௩. அதிகாரம்.

சாராள் உயிரோடிருந்தகாலம் நூற்றிருபத்தேழுவருஷம், இதுவே சாராளுடைய வயது.

௨ பிற்பாடு சாராள் கானான்தேசத்திலேயிருக்கிற எபிரோன் ஊராகிய கீரியாத் அர்பாவிலே மரித்தாள்; அப்பொழுது ஆபிரகாம் சாராளுக்காகப் புலம்பவும், அழவும் வந்தான்.

௩ ¶ பிற்பாடு ஆபிரகாம் தன் சவத்தை விட்டெழுந்து, ஏத்தின் புத்திரரோடே பேசி,

௪ நான் உங்களிடத்தில் பரதேசியும் அந்நியனுமாயிருக்கிறேன்; எனக்குமுன்பாகக் கிடக்கிற என் சவத்தை நான் அடக்கம் பண்ணுவதற்கு, எனக்கு உங்களிடத்தில் பிரேதம் அடக்கம்பண்ணும் நிலத்தைச் சொந்தமாகத் தாருங்களென்றான்.

௫ ¶ அப்பொழுது ஏத்தின்புத்திரர் ஆபிரகாமுக்குப் பிரதியுத்தாரமாகச் சொன்னதாவது:

௬ எங்கள் ஆண்டவனே, நாங்கள் சொல்லுகிறதைக் கேளும்; எங்கள் நடுவிலே நீர் தெய்வப் பிரபுவாயிருக்கிறீர்; எங்கள் கல்லறைகளில் தெரிந்துகொள்ளப்பட்டதிலே உம்முடைய சவத்தை அடக்கம்பண்ணும்; நீர் உம்முடைய சவத்தை அடக்கம் பண்ண எங்களில் ஒருவனும் தன் கல்லறையை உமக்குத் தடைசெய்வதில்லையென்றார்கள்.

௭ ¶ அப்பொழுது ஆபிரகாம் எழுந்திருந்து ஏத்தின் புத்திரராகிய தேசத்தாரை வணங்கி,

௮ அவர்களோடே சம்பாஷித்துச் சொன்னதாவது: எனக்கு முன்பாகக்கிடக்கிற என் சவத்தை நான் அடக்கம்பண்ண உங்களுக்குச் சம்மதியானால், நீங்கள் என் வார்த்தையைக் கேட்டு, சோகாருடைய குமாரனாகிய எப்பெரோனுடனே,

௯ அவர் தமது நிலத்தின் கடைசியிலே தமக்கிருக்கிற மக்பேலா என்னப்பட்ட கெபியை எனக்குத்தர எனக்காக மனுக்கேளுங்கள்; உங்களிடத்தில் எனக்குப் பிரேதம் அடக்கம்பண்ணும் சொந்த நிலம் இருக்கும்படிக்கு, அவர் அதை அது பெறும் விலைக்குத் தருவாராகவென்றான்.

௰ ¶ ஆனால் எப்பெரோன் ஏத்தின் புத்திரர் நடுவிலே உட்கார்ந்திருந்தான்; அப்பொழுது ஏத்தியனாகிய எப்பெரோன் தன் ஊர்வாசலுக்குள் பிரவேசிக்கிற ஏத்தின் புத்திரர் அனைவருங்கேட்க ஆபிரகாமுக்குப் பிரதியுத்தாரமாக,

Digitized by Google

௰௧ அல்ல என்னாண்டவனே, என் வார்த்தையைக்கேளும்; நிலத்தை உமக்குத் தருகிறேன்; அதிலிருக்கும் கெபியையும் உமக்குத் தருகிறேன்; என் சனப் புத்திரருடைய கண்களுக்குமுன்பாக அதை உமக்குத் தருகிறேன்; உம்முடைய சவத்தை அடக்கம் பண்ணுமென்றான்.

௰௨ ¶ அப்பொழுது ஆபிரகாம் தேசத்தாரை வணங்கி,

௰௩ தேசத்துச் சனம்கேட்க எப்பெரோனுடனே சொன்னதாவது: கொடுக்க நீர் மனதானால் என் வார்த்தையைக் கேளும்; நிலத்தின் விலைக்கிரயத்தைத் தருகிறேன்: என் கையில் அதை வாங்கிக்கொள்ளும், அப்பொழுது அவ்விடத்தில் என் சவத்தை அடக்கம்பண்ணுவேனென்றான்.

௰௪ ¶ அப்பொழுது எப்பெரோன் ஆபிரகாமுக்குப் பிரதியுத்தாரமாக:

௰௫ என்னாண்டவனே, நான் சொல்லுகிறதைக்கேளும்; இந்த நிலம் நானூறு வெள்ளிக்காசுபெறும்; எனக்கும் உமக்கும் அது எவ்வளவுகாரியம்; நீர் உம்முடைய சவத்தை அடக்கம்பண்ணுமென்றான்.

௰௬ ¶ அப்பொழுது ஆபிரகாம் எப்பெரோனின் சொல்லைக் கேட்டு, எப்பெரோன் ஏத்துடைய புத்திரரின் காதுகளில் கேட்கச் சொன்னதாகிய வர்த்தகரிடத்தில் செல்லும்படியான நானூறு வெள்ளிக்காசை அவனுக்கு நிறுத்துக்கொடுத்தான்.

௰௭ இந்தப் பிரகாரமாக *மம்ரேக்கெதிரே மக்பேலாவிலிருந்த எப்பெரோனுடைய நிலமாகிய அந்தப் பூமியும், அதிலுள்ள கெபியும் நிலத்திலுடைய எல்லைகளெல்லாம் சுற்றியிருந்த எல்லா மரங்களும், *௪௯. ௨௯, ௩௰: ௫௰. ௰௩.

௰௮ அவனுடைய ஊர்வாசலுக்குள்பிரவேசிக்கிற ஏத்தின் புத்திரர் எல்லாரும் அறிய ஆபிரகாமுக்குச் சொந்தமாக ஏற்பட்டது.

௰௯ ¶ அதற்குப்பிற்பாடு ஆபிரகாம் தன் பெண்சாதியாகிய சாராளைக் கானான்தேசத்தில் எப்பெரோன் ஊர்ப்பூமியான மம்ரேக்கெதிரேகிடக்கிற மக்பேலா என்ற நிலத்தின் கெபியிலே அடக்கம்பண்ணினான்.

௨௰ இப்படியே ஏத்தின் புத்திரர்கையில் கொள்ளப்பட்ட அந்த நிலமும், அதிலுள்ள கெபியும், ஆபிரகாமுக்குப் பிரேதங்களை அடக்கம்பண்ணும் சொந்தநிலமாக ஏற்பட்டது.

## ௨௪. அதிகாரம்.

ஆபிரகாம் வயதுசென்ற கிழவனானான்; கர்த்தர் ஆபிரகாமை எல்லாவற்றிலும் ஆசீர்வதித்துக்கொண்டிருந்தார்.

௨ அப்பொழுது ஆபிரகாம் தன் வீட்டிலே வயதில் மூத்தவனும், தனக்குண்டான தையெல்லாம் ஆளுகிறவனுமாகிய தன் ஊழியக்காரனோடே சொன்னதாவது:

௩ *நான் குடியிருக்கிற கானானியருடைய குமாரத்திகளில் நீ என் குமாரனுக்குப் பெண்ணைக்கொள்ளாமல், *௨௮. ௧.

௪ நீ என் சீமைக்கும், என் இனத்தண்டைக்கும்போய், என் குமாரனாகிய ஈசாக்குக்குப் பெண்ணைக் கொள்வதற்கு நான் உன்னை வானத்திற்குப் பராபரனும், பூமிக்குப் பராபரனுமாகிய கர்த்தர்பேரிலே ஆணையிடும்படிக்கு, *உன் கையை என்னிடுப்பின்கீழே போடென்றான். *௪௭. ௨௯.

௫ ¶ அப்பொழுது அந்த ஊழியக்காரன் அவனுடனே, ஒருவேளை அந்தப் பெண் என்பிறகே இந்தத் தேசத்திற்கு வரமனதில்லாதிருப்பாள்; அப்பொழுது உம்முடைய குமாரனை நீர் விட்டுவந்த தேசத்திற்குத்தானே மறுபடியும் அழைத்துப் போவேனோ என்றான்.

௬ ஆனால், ஆபிரகாம் அவனோடே சொன்னதாவது: நீ என் குமாரனை மறுபடியும் அங்கே அழைத்துப்போகாதபடிக்கு எச்சரிக்கையாயிரு.

௭ *என்னை என் தகப்பனுடைய வீட்டிலும் என் இனத்தாரிருக்கிற தேசத்திலுமிருந்து அழைத்துவந்தவரும், †உன் வித்

Digitized by Google

துக்கு இந்தத் தேசத்தைக் கொடுப்போமென்று எனக்குச் சொன்னவரும், எனக்கு ஆணையிட்டவருமான வானத்தினுடைய பராபரனாகிய கர்த்தர், நீ அங்கேயிருந்து என் குமாரனுக்கு ஒரு பெண்ணைக் கொண்டுவரும்படிக்குத் தம்முடைய தூதனை உனக்குமுன்பாக அனுப்புவார். *௰உ. க. † ௰உ. எ: ௰ரு. ௰௮—௰ச.

அ பெண் உன்னைப் பின்செல்ல மனதில்லாதிருந்தாளேயாகில், அப்பொழுது நீ இந்த என்னுடைய ஆணைக்கு நீங்கலானவன்; அங்கேமாத்திரம் என் குமாரனை மறுபடியும் அழைத்துப்போகாயாகவென்றான்.

கூ அப்பொழுது அந்த ஊழியக்காரன் தன் கையைத் தன் எசமானனாகிய ஆபிரகாமுடைய இடுப்பின்கீழே போட்டு, இந்தக் காரியத்திற்காக அவனுக்கு ஆணையிட்டான்.

௰ ¶ பிற்பாடு ஊழியக்காரன் தன் எசமானனுடைய ஒட்டகங்களில் பத்து ஒட்டகங்களைக் கூட்டிக்கொண்டு போனான்; அவன் எசமானனுடைய சகலவித உச்சிதங்களும் அவன்கையிலிருந்தன; அவன் எழுந்து புறப்பட்டுப்போய், மேசோப்பொத்தாமியாவிலே நாகோருடைய ஊருக்குவந்து,

௰க ஊருக்குப் புறம்பே ஒரு தண்ணீர்த் துரவண்டையில் தண்ணீர் மொள்ளுகிற ஸ்திரிகள் புறப்படுகிற சாயங்கால வேளையிலே ஒட்டகங்களை மடக்கிச் சொன்னதாவது:

௰உ ¶ என் எசமானனாகிய ஆபிரகாமுடைய பராபரனாயிருக்கிற கர்த்தாவே, தேவரீர் இன்றைக்கு எனக்குக் காரியம் நேரிடப்பண்ணி, என் எசமானனாகிய ஆபிரகாமுக்குக் கிருபைசெய்யும்.

௰௩ இதோ நான் தண்ணீர்த் துரவண்டையில் நிற்கிறேன்; ஊராரின் குமாரத்திகள் தண்ணீர் மொள்ளப் புறப்பட்டுவருவார்களே.

௰ச நான் குடிக்க உன் பானையைச் சாயென்று நான் சொல்லும்பொழுது, குடி உன் ஒட்டகங்களுக்கும் குடிக்க வார்ப்பேனென்று சொல்லும் பெண்பிள்ளையே நீர் உம்முடைய ஊழியக்காரனாகிய ஈசாக்குக்கு நியமித்தவளாயிருக்கவும், என் எசமானனுக்குக் கிருபை செய்தீரென்று நான் இதினாலே அறியவும் கடவதென்றான்.

௰ரு ¶ அவன் இன்னம் பேசி முடியவில்லை; அப்பொழுது சம்பவித்ததேதென்றால், இதோ, ஆபிரகாமுடைய சகோதரனாகிய நாகோரின் பெண்சாதி மில்க்காளுடைய குமாரனாயிருக்கிற பேத்துவேலுக்குப் பிறந்த *ரெபெக்காள் தன் பானையைத் தன் தோளின்மேல் வைத்துக்கொண்டு புறப்பட்டுவந்தாள். *உஉ. உ௩.

௰௬ அந்தப் பெண்பிள்ளை மகா ரூபவதியும், புருஷனை அறியாத கன்னியாஸ்திரியுமாயிருந்தாள்; அவள் துரவுக்கிறங்கிப்போய், தன் பானையை நிரப்பிக்கொண்டேறி வந்தாள்.

௰எ அப்பொழுது ஊழியக்காரன் அவளுக்கு எதிர்கொண்டோடி, உன் பானையிலே நான் கொஞ்சம் தண்ணீர் குடிக்கட்டுமென்றான்.

௰அ அதற்கவள், குடியும் என்னாண்டவனே! என்று தீவிரமாய்த் தன் பானையைத் தன் கையிலிறக்கிக்கொண்டு, அவனுக்குக் குடிக்கக் கொடுத்தாள்.

௰கூ கொடுத்துத் தீர்ந்தபின்பு, உம்முடைய ஒட்டகங்களுக்கும் அவைகள் குடித்துத் தீருமட்டும் மொண்டுவார்ப்பேனென்று சொல்லி,

உ௰ தீவிரமாய்த் தன் பானையைத் தண்ணீர்த் தொட்டியிலே ஊற்றி, இன்னம் மொண்டுவரத் துரவண்டையில் ஓடி, அவனுடைய ஒட்டகங்களுக்கெல்லாம் மொண்டுவார்த்தாள்.

உக அந்தப் புருஷன் அவள்மேல் ஆச்சரியப்பட்டு, கர்த்தர் தன் பயணத்தை வாய்க்கப்பண்ணினாரோ, இல்லையோவென்றறிய மவுனமாயிருந்தான்.

Digitized by Google

௨௨ ¶ ஒட்டகங்கள் குடித்துத்தீர்ந்தபிற்பாடோவென்றால், அந்தப் புருஷன் அரைச்சேக்கல் எடைப்பொன்னான நெற்றிப் பட்டத்தையும், அவள் கைகளுக்குப் பத்துச் சேக்கல் எடைப்பொன்னான இரண்டு சரிகைகளையும் எடுத்துக்கொடுத்து,

௨௩ நீ யாருடைய குமாரத்தியென்று எனக்கு அறிவி; உன் தகப்பன் வீட்டில் இராத்தங்க எங்களுக்கிடமுண்டோ என்றான்.

௨௪ அவள் அவனுடனே, நான் நாகோருக்கு மில்க்காள் பெற்ற குமாரனாகிய பெத்துவேலின் மகளென்றுசொல்லி,

௨௫ அவனுடனே: எங்களிடத்தில் வைக்கோலும், தீனியும் நிரம்ப இருக்கிறது; இராத்தங்க இடமுமிருக்கின்றதென்றாள்.

௨௬ அப்பொழுது அந்தப் புருஷன் தலைகுனிந்து, கர்த்தரைப் பணிந்துகொண்டு,

௨௭ என் எசமானாகிய ஆபிரகாமின் பராபரனாயிருக்கிற கர்த்தர் ஸ்தோத்திரிக்கப்பட்டவர்; அவர் தம்முடைய கிருபையையும் தம்முடைய உண்மையையும், என் எசமானைவிட்டு விலகப்பண்ணினதில்லை; நான் வழிப்பயணம் வருகையில், கர்த்தர் என்னை என் எசமானுடைய சகோதரர் வீட்டுக்கு அழைத்துக்கொண்டு வந்தாரென்றான்.

௨௮ ¶ பெண்பிள்ளை ஓடி, தன் தாயின்வீட்டிலே இந்த நடபடிகளை அறிவித்தாள்.

௨௯ ரெபெக்காளுக்கு ஒரு சகோதரனிருந்தான், அவன் பெயர் லாபான்; இந்த லாபான் வெளியே துரவருகே இருக்கிற அந்தப் புருஷனண்டைக்கு ஓடினான்.

௩௰ அதேனெனில், இவன் அந்த நெற்றிப் பட்டத்தையும், தன் சகோதரியின் கைகளிலிருக்கிற சரிகைகளையும் கண்டபடியினாலும், இன்ன இன்னபடி அந்தப் புருஷன் என்னோடே சொன்னானென்று தன் சகோதரி ரெபெக்காள் சொல்லுகிற வார்த்தைகளைக் கேட்டபடியினாலும், அந்தப் புருஷனண்டைக்குவந்தான்; இதோ, அவன் துரவருகே ஒட்டகங்களண்டையிலே நின்றிருந்தான்.

௩௧ அப்பொழுது இவன், கர்த்தரால் ஆசீர்வதிக்கப்பட்டவனே, உள்ளேவா; நீ வெளியே நிற்பானேன்? நான் வீட்டையும் ஒட்டகங்களுக்கு இடத்தையும் ஆயத்தம்பண்ணினேனென்றான்.

௩௨ அப்பொழுது அந்தப் புருஷன் வீட்டுக்கு வந்தான்; இவனோவென்றால், ஒட்டகங்களைக் கட்டவிழ்த்து, ஒட்டகங்களுக்கு வைக்கோலும் தீனியும்போட்டு, அவன் கால்களையும், அவனோடேகூட இருந்த மனிதர் கால்களையும் கழுவுகிறதற்குத் தண்ணீர்கொடுத்தான்.

௩௩ பிற்பாடு அவனுக்குமுன்பாகச் சாப்பாடு வைக்கப்பட்டது; ஆனால், அவன் நான் என் வார்த்தைகளைச் சொல்லாததற்குமுன்னே சாப்பிடேனென்றான்; அதற்கு இவன் சொல்லென்றான்.

௩௪ ¶ அப்பொழுது அவன் சொன்னதாவது: நான் ஆபிரகாமுடைய ஊழியக்காரன்.

௩௫ கர்த்தர் என் எசமானை மிகவும் ஆசீர்வதித்தார்; இவர் பெரியவரானார்; அவர் இவருக்கு ஆடுமாடுகளையும், வெள்ளியையும், பொன்னையும், வேலைக்காரரையும், வேலைக்காரிகளையும், ஒட்டகங்களையும், கழுதைகளையும் கட்டளையிட்டார்.

௩௬ என் எசமானன் பெண்சாதியாகிய சாராள் முதிர்வயதானபிற்பாடு என் எசமானனுக்கு ஒரு குமாரனைப்பெற்றாள்; இவனுக்கவர் தமக்குண்டானதையெல்லாம் கொடுத்து,

௩௭ நான் குடியிருக்கிற கானான்தேசத்தாருடைய குமாரத்திகளில் நீ என் குமாரனுக்குப் பெண்ணைக் கொள்ளாமல்,

௩௮ நீ என் தகப்பன் வீட்டுக்கும் என் இனத்தண்டைக்கும் போய், என் குமாரனுக்குப் பெண்ணைக் கொள்வாயாகவென்று என் எசமான் என்னை ஆணையிட்டார்.

௩௯ அப்பொழுது நான் என் எசமானனோடே, ஒருவேளை அந்தப் பெண் என் பிறகே வாராதேபோவாளென்றேன்.



Digitized by Google

சரு ஆனால், அவர் எனக்குச் சொன்னதாவது: நான் பயந்து நடக்கிற கர்த்தரானவர் உன்னோடே தம்முடைய தூதனை அனுப்பி, நீ என் இனத்திலும், என் தகப்பன் வீட்டிலும், என் குமாரனுக்குப் பெண்ணைக்கொள்வதற்காக உன் பயணத்தை வாய்க்கப்பண்ணுவார்.

சக நீ என் இனத்தண்டைக்குப் போனால், அப்பொழுது என் ஆணைக்கு நீங்கலாயிருப்பாய்; அவர்கள் உனக்குக் கொடாதே போனார்களாகில், என்னாணைக்கு நீங்கலாயிருப்பாயென்றார்.

சஉ அப்படியே இன்று நான் அந்தத் துரவண்டையிலே வந்து சொன்னதாவது: என் எசமானாகிய ஆபிரகாமின் பராபரனாகிய கர்த்தரே, இப்பொழுதும் நான் பயணம் பண்ணுகிற என் வழியைத் தேவரீர் வாய்க்கப்பண்ணினீரானால்;

சந இதோ நான் தண்ணீர்த் துரவண்டையிலே நிற்கிறேன்; தண்ணீர்மொள்ளப் புறப்பட்டு வரப்போகிறவளும், நான் அவளுடனே, உன் பானையிலிருக்கிற தண்ணீரில் கொஞ்சம் எனக்குக் குடிக்கத் தாவென்று சொல்ல,

சச அவள் என்னுடனே, நீயும்குடி, உன் ஒட்டகங்களுக்கும் மொண்டு வார்ப்பேனென்று சொல்பவளுமான கன்னியாஸ்திரியே கர்த்தர் என் எசமானனுடைய குமாரனுக்கு நியமித்த ஸ்திரியாகவேண்டுமென்றேன்.

சரு இன்னம் இதை நான் என் இருதயத்திலே சொல்லி முடிக்கவில்லை; அப்பொழுது இதோ, ரெபேக்காள் தன் பானையைத் தன் தோளின்மேல் வைத்துக்கொண்டவளாய்ப் புறப்பட்டு வந்து, துரவுக்கிறங்கிப் போய் மொண்டாள்; அப்பொழுது அவளோடே, எனக்குக் குடிக்கத் தாவென்றேன்.

சசு அவள் தீவிரமாய்த் தன்மேலிருந்த பானையை இறக்கி, குடியும் உம்முடைய ஒட்டகங்களுக்கும் வார்ப்பேனென்றாள்; அப்படியே நான் குடித்தேன்; அவள் ஒட்டகங்களுக்கும் வார்த்தாள்.

சஎ அப்பொழுது நீ யாருடைய குமாரத்தியென்று அவளைக் கேட்டேன்; அதற்கவள், நான் மில்க்காள் நாகோருக்குப் பெற்ற குமாரனான பேத்துவேலின் மகளென்றாள்; அப்பொழுது நான் அவள் நெற்றியிலே நெற்றிப்பட்டத்தையும் அவள் கைகளில் சரிகளையும் அணிந்து,

சஅ தலை குனிந்து, கர்த்தரைப் பணிந்துகொண்டு, நான் என் எசமானனுடைய சகோதரன் குமாரத்தியை அவர் குமாரனுக்குக் கொள்ள என்னை உண்மையான வழியிலே அழைத்துவந்த என் எசமானனாகிய ஆபிரகாமின் பராபரனாயிருக்கிற கர்த்தரை ஸ்தோத்திரித்தேன்.

சகூ இப்பொழுதும் நீங்கள் என் எசமானனுக்குத் தயையும் உண்மையும் செய்கிறவர்களானால், எனக்கு அறிவியுங்கள்; அல்லவென்றால், நான் வலதுபுறத்தையாகிலும் இடதுபுறத்தையென்கிலும் நோக்கிப் போகும்படிக்கு, அதையும் எனக்கு அறிவியுங்களென்றான்.

ருய ¶ அப்பொழுது லாபானும் பேத்துவேலும் பிரதியுத்தாரமாக, இந்தக் காரியம் கர்த்தராலே வந்தது; உனக்கு நாங்கள் இனப்பமானாலும் நலமானாலும் சொல்லக்கூடாது.

ருக இதோ, ரெபேக்காள் உன் முன்பாக இருக்கிறாள்; கர்த்தர் சொன்னபடியே அவள் உன் எசமானனுடைய குமாரனுக்குப் பெண்சாதியாகும்படிக்கு, அவளை அழைத்துக்கொண்டு போவென்றார்கள்.

ருஉ அப்பொழுது சம்பவித்ததேதென்றால், ஆபிரகாமின் ஊழியக்காரன் அவர்கள் வார்த்தைகளைக் கேட்டபொழுது, தரைமட்டும் குனிந்து கர்த்தரைப் பணிந்துகொண்டான்.

ருந பிற்பாடு அந்த ஊழியக்காரன் வெள்ளியுடைமைகளையும் பொன்னுடைமைகளையும் வஸ்திரங்களையும் எடுத்து, ரெபேக்



Digitized by Google

காளுக்குக் கொடுத்து, அவள் சகோதரனுக்கும் தாய்க்கும் உச்சிதங்களைக் கொடுத்தான்.

ருச பிற்பாடு அவனும் அவனோடிருந்த மனிதரும் புசித்துக்குடித்து இராத்தங்கினார்கள்; காலமே எழுந்திருந்த பின்பு அவன் என் எசமானனண்டைக்கு என்னை அனுப்புங்களென்றான்.

ருரு அப்பொழுது அவள் சகோதரனும் அவளுடைய தாயும், பெண் பத்துநாளாகிலும் எங்களோடே இருந்து, பிற்பாடு போகட்டுமென்றார்கள்.

ருசு அவனோவெனில் அவர்களோடே, கர்த்தர் என் பயணத்தை வாய்க்கப்பண்ணியிருக்க என்னைத் தடுக்காதிருங்கள்; நான் என் எசமானனண்டைக்குப் போக என்னை அனுப்புங்களென்றான்.

ருஎ அப்பொழுது அவர்கள் பெண்ணை அழைத்து, அவள் வாய்ப்பிறப்பைக் கேட்போமென்றுசொல்லி,

ருஅ ரெபேக்காளை அழைத்து, அவளுடனே, நீ இந்தப் புருஷனோடேகூடப் போவாயோவென்றார்கள்; அவள் போவேனென்றாள்.

ருகூ அப்படியே அவர்கள் தங்கள் சகோதரியாகிய ரெபேக்காளையும், அவள் தாதியையும், ஆபிரகாமின் ஊழியக்காரனையும், அவன் மனிதரையும் அனுப்புவித்து,

சுய ரெபேக்காளை ஆசீர்வதித்து அவளுடனே, எங்கள் சகோதரியே, நீ ஆயிரம் பதினாயிரங்களாகவும் உன் வித்துத் தன் பகைஞருடைய வாசல்களைச் சுதந்தரித்துக்கொள்ளவும்கடவது என்றார்கள்.

சுக ¶ அப்பொழுது ரெபேக்காளும் அவள் வேலைக்காரிகளும் எழுந்து ஒட்டகங்கள் மீதிலேறி, அந்த மனிதனைப் பின்சென்றார்கள்; ஊழியக்காரன் ரெபேக்காளை அழைத்துக்கொண்டு போனான்.

சுஉ இசாக்கோவெனில், *என்னைப் பார்க்கிற சீவனுள்ளவருடைய கிணறென்னப்பட்ட கிணற்றின் வழியாய்ப் புறப்பட்டு வந்தான்; ஏனெனில் தென்தேசத்தில் குடியிருந்தான். * யசு. யரு, யச.

சுரு இசாக்குச் சாயங்கால வேளையிலே செபத்தியானம்பண்ண வெளியே போயிருந்து, தன் கண்களை ஏறெடுக்கையில், இதோ ஒட்டகங்கள் நடந்துவரக்கண்டான்.

சுச ரெபேக்காள் தன் கண்களை ஏறெடுத்து இசாக்கைக் காண்கிறபொழுது, ஒட்டகத்தை விட்டிறங்கி,

சுரு ஊழியக்காரனோடே, இங்கே வெளியிலே நமக்கெதிரே நடந்துவருகிற அந்தப் புருஷன் யாரென்றாள்; அவர் என் எசமானனென்று ஊழியக்காரன் சொன்னான்; அப்பொழுது அவள் முக்காடிட்டுக்கொண்டாள்.

சுசு ஊழியக்காரன் தான் செய்த சகல காரியங்களையும் இசாக்குக்கு விவரித்தான்.

சுஎ அப்பொழுது இசாக்கு இவளைத் தன் தாய் சாராளுடைய கூடாரத்திலே அழைத்துப்போய், பிற்பாடு ரெபேக்காளை விவாகம்பண்ணினான்; அவள் அவனுக்குப் பெண்சாதியானாள்; அவன் அவளைச் சிநேகித்தான்; இப்படி இசாக்குத் தன் தாய்க்குப் பிற்பாடு ஆறுதல் அடைந்தான்.

## உரு. அதிகாரம்.

ஆபிரகாம் மறுபடியும் ஒரு பெண்சாதியை விவாகம்பண்ணினான்; அவள் பேர் கேத்தூராள்.

உ இவள் அவனுக்குச் சிம்ரானையும், யக்க்ஷானையும், மெதானையும், மீதேயானையும், இஷ்பாக்கையும், சூவாகையும் பெற்றாள்.

ரு யக்க்ஷானோவெனில், சேபாவையும், தேதானையும் பெற்றான்; தேதானுடைய குமாரர், அசூரிம், லெத்தூரிம், லெயூமிம் என்பவர்கள்.

ச மீதேயானுடைய குமாரர், ஏப்பா, ஏப்பேர், ஆனோக், ஆபிதா, எல்தா என்பவர்கள்; இவர்களெல்லாரும் கேத்தூராளின் பிள்ளைகள்.

௫ ¶ ஆபிரகாம் *தனக்குண்டானவை எல்லாவற்றையும் இசாக்குக்குக் கொடுத்தான். *உ௪. ௩௬.

௬ ஆனால் ஆபிரகாமுக்கிருந்த வைப்பாட்டிகளின் பிள்ளைகளுக்கு ஆபிரகாம் இவுகளைக் கொடுத்து, தான் இன்னம் உயிரோடிருக்கையில் அவர்களைத் தன் குமாரனாகிய இசாக்கைவிட்டு, கிழக்கே போகக் கீழ்த்தேசத்திற்கு அனுப்பிவிட்டான்.

௭ ¶ ஆபிரகாம் உயிரோடிருந்த ஆயுசுநாள் நூற்றெழுபத்தைந்து வருஷம்.

௮ பிற்பாடு ஆபிரகாம் நல்ல நரைவயதிலும் முதிர்ந்த பூரண ஆயுசிலும் சீவித்து மரித்து, தன் சனத்தாரோடே சேர்க்கப்பட்டான்.

௯ அப்பொழுது அவனை அவன் குமாரராகிய இசாக்கும், இஸ்மவேலும் *மம்ரேக்கெதிரே ஏத்தியனான சோகாரின் குமாரனாகிய எப்பெரோனின் நிலத்திலுள்ள மக்பேலா என்னப்பட்ட கெபியிலே அடக்கம்பண்ணினார்கள். *உ௩. ௨௰.

௰ அது ஆபிரகாம் ஏத்தின் புத்திரர்கையிலே கொண்ட நிலம்தான்; அங்கே ஆபிரகாமும் அவன் பெண்சாதியாகிய சாராளும் அடக்கம்பண்ணப்பட்டார்கள்.

௰௧ ¶ ஆபிரகாம் மரித்தபிற்பாடு சம்பவித்ததேதென்றால், பராபரன் அவன் குமாரனாகிய இசாக்கை ஆசீர்வதித்தார்; என்னைப் பார்க்கிற சீவனுள்ளவருடைய கிணறென்னப்பட்ட கிணற்றண்டையிலே இசாக்குக் குடியிருந்தான்.

௰௨ ¶ சாராளுடைய அடிமைப்பெண்ணாகிய எகிப்துதேசத்தாளான ஆகார், ஆபிரகாமுக்குப் பெற்ற குமாரனாகிய இஸ்மவேலின் சந்ததியும் பலபல சந்ததிகளாய்ப் போன இஸ்மவேல் புத்திரர் அழைக்கப்பட்ட நாமங்களுமாவது:

௰௩ இஸ்மவேலுடைய முதல்பேறான குமாரன் நேபயோத், மற்றவர்கள் கேதார், அத்பேயேல், மிப்சாம்,

௰௪ மிஷ்மா, தூமா, மாசா.

௰௫ ஆதாத், தேமா, எத்தூர், நாப்பீஸ், கெத்மா.

௰௬ தங்கள் கிராமங்களிலும் அரண்மனைகளிலும் குடியிருந்து, தங்கள் சனத்தாருக்குப் *பன்னிரண்டு பிரபுக்களான இஸ்மவேலின் குமாரர் இவர்கள்தான்; அவர்களுடைய நாமங்களும் இவைகள்தானே. *௰௭. ௨௰.

௰௭ இஸ்மவேலின் வயது நூற்றுமுப்பத்தேழுவருஷமாயிருந்து, பிற்பாடு சீவித்து மரித்து தன் சனத்தாரோடே சேர்க்கப்பட்டான்.

௰௮ ஆபிலா துவக்கி எகிப்துக்கெதிராக அசூருக்குப் போகிற வழியிலிருக்கும் சூர் மட்டும் குடியிருந்தார்கள்; இது அவன் சகோதரரெல்லாருக்கும் எதிராய் அவன் பங்கிலே விழுந்த பூமி.

௰௯ ¶ ஆபிரகாமின் குமாரனாகிய இசாக்குடைய சந்ததியாவது: ஆபிரகாம் இசாக்கைப்பெற்றான்.

௨௰ இசாக்கு, பதான்அராம் என்ற சூரியாவின் தேசத்தானாகிய பேத்துவேலுக்குக் குமாரத்தியும் சூரிய தேசத்தானாகிய லாபானுக்குச் சகோதரியுமான ரெபேக்காளை விவாகம்பண்ணுகிறபொழுது நாற்பதுவயதாயிருந்தான்.

௨௧ இசாக்கு மலடியாயிருந்த தன் பெண்சாதிக்காகக் கர்த்தரை வேண்டிக்கொண்டான்; கர்த்தர் அவன் வேண்டுதலைக் கேட்டருளினார்; அவன் பெண்சாதி ரெபேக்காள் கர்ப்பம்தரித்தாள்.

௨௨ ஆனால் அவள் கர்ப்பத்திலே பிள்ளைகள் ஒன்றுக்கொன்று மோதிக்கொண்டிருந்தன; அப்பொழுது அவள் இப்படியானால் இந்தக் கர்ப்பத்தோடே நான் இருப்பானேனென்று சொல்லி, கர்த்தரைக் கேட்கப்போனாள்.

௨௩ அப்பொழுது கர்த்தர் அவளுடனே: இரண்டுசாதிகள் உன் கர்ப்பத்தில் உண்டாய், இரண்டுசனசதளங்கள் உன் குடல்களிலிருந்து பிரியும்; *அவைகளில் ஒரு சனச



Digitized by Google

தனம் மற்றச் சனசதனத்தைப்பார்க்கிலும் பலத்துப்போம், பெரியவன் சிறியவனைச் சேவிப்பானென்றார். *உரோ. கூ. ய, யக.

உச பெற அவளுக்கு நாள்கள் நிறைவேறினபொழுது, இதோ இரட்டைப்பிள்ளைகள் அவள் கர்ப்பத்திலிருந்தன.

உரு முந்தினவன் சிவந்தவனும் முழுதும் ரோமமான உடையின் சாயலுமாயிருந்து வெளிப்பட்டான்; அவனுக்கு ஏசாவென்று பெயரிட்டார்கள்.

உசு அதற்குப்பிறகு அவன் சகோதரன் ஏசாவின் குதிகாலைத் தன் கையினாலே பிடித்துக்கொண்டு வெளிப்பட்டான்; அவனுக்கு யாக்கோபென்று பேரிட்டார்கள்; அவள் இவர்களைப் பெறுகிறபொழுது இசாக்கு அறுபது வயதாயிருந்தான்.

உஎ ¶ இந்தப் பிள்ளைகள் பெரியவர்களானபொழுது, ஏசா வேட்டையை அறிந்த வெளிச்சஞ்சார மனிதனும், யாக்கோபோ வெளில் கூடாரங்களில் தங்கித்திரிகிற நற்குண மனிதனுமாயிருந்தான்.

உஅ இசாக்கு ஏசாவின்மேல் பட்சமாயிருந்தான்; ஏனெனில் வேட்டையாடினது அவன் வாய்க்கு ருசிகரமாயிருந்தது; ஆனால் ரெபேக்காள் யாக்கோபின்மேல் பட்சமாயிருந்தாள்.

உகூ ஏசா வெளியிலிருந்து வருகிற ஒரு காலிலே இளைப்பாய் வருகிறபொழுது யாக்கோபு கூழைச் சமைத்திருந்தான்.

நய அப்பொழுது ஏசா யாக்கோபோடே: சிவப்பாயிருக்கிறதே, அந்தச் சிவப்பானதிலே நான் ருசிபார்க்கட்டும்; ஏனெனில் இளைப்பாயிருக்கிறேனென்றான்; இதைத் தொட்டு அவன்பேர் ஏதோமென்னப்பட்டது.

நக அப்பொழுது யாக்கோபு, உன்னுடைய முதற்பிறப்புச் சுதந்தரத்தை இன்று எனக்கு வில்லென்றான்.

நஉ அதற்கு ஏசா, இதோ நான் சாகப்போகிறேனே, இந்த முதற்பிறப்புச் சுதந்தரம் எனக்கேதுக்கென்றான்.

நந அப்பொழுது யாக்கோபு இன்று எனக்காணையிடுவென்றான்; *அவன் இவனுக்காணையிட்டு, தன் முதற்பிறப்புச் சுதந்தரத்தை யாக்கோபுக்கு விற்றான். *எபி. யஉ. யசு.

நச அப்பொழுது யாக்கோபு ஏசாவுக்கு அப்பமும் பயற்றங்கூழும் கொடுத்தான்; அவன் புசித்துக் குடித்து எழுந்திருந்து போனான்; இப்படி ஏசா முதற்பிறப்புச் சுதந்தரத்தை அசட்டைபண்ணினான்.

## உசு. அதிகாரம்.

ஆபிரகாமின் நாள்களில் வந்த முந்தின பஞ்சம்தவிரப் பின்னொரு பஞ்சம் தேசத்திலுண்டாயிற்று; அப்பொழுது இசாக்குக் கேராருக்குப் பெலிஸ்தருடைய இராசாவாகிய அபிமெலேக் அண்டைக்குப் போனான்.

உ ¶ கர்த்தர் அவனுக்குத் தரிசனையாகிச் சொன்னதாவது: நீ எகிப்துக்கிறங்கிப் போகாமல் நாம் உனக்குச் சொல்லுகிற சீமையிலே குடியிரு.

ந இந்தச் சீமையிலே தங்கியிரு; நான் உன்னோடேகூட இருந்து உன்னை ஆசீர்வதிப்போம்; ஏனெனில், நாம் உனக்கும் உன் வித்துக்கும் இந்தத் தேசங்களை எல்லாம் கொடுத்து, *உன் தகப்பனாகிய ஆபிரகாமுக்கு நாம் இட்ட ஆணையைத் திட்டப்படுத்துவோம். *உஉ. யசு, யஅ.

ச ஆபிரகாம் நம்முடைய சத்தத்திற்குக் கீழ்ப்படிந்து, நம்முடைய திட்டத்தையும், நம்முடைய கற்பனைகளையும், நம்முடைய கட்டளைகளையும், நம்முடைய நியாயப்பிரமாணங்களையும் கைக்கொண்டபடியினாலே,

ரு நாம் உன் வித்தை வானத்தின் நட்சத்திரங்களைப்போலப் பெருகப்பண்ணி, உன் வித்துக்கு இந்தத் தேசங்களையெல்லாம் கொடுப்போம்; உன் வித்தினாலே பூமியினுடைய சாதிகளெல்லாம் ஆசீர்வதிக்கப்படுமென்றார்.

௬ ¶ அப்படியே ஈசாக்குக் கேராரிலே குடியிருந்தான்.

எ அவ்விடத்து மனிதர் அவன் பெண்சாதியின் செய்தியை விசாரிக்கும்பொழுது, அவன் *இவள் என் சகோதரியென்பான்; ஏனெனில் ரெபேக்காள் பார்வைக்கழகியானபடியால், அவ்விடத்து மனிதர் அவள் நிமித்தமாய்த் தன்னைக் கொல்லுவார்களென்று, அவளைத் தன் பெண்சாதியென்று சொல்லப் பயந்தான். *௰௨. ௰௩.

அ ஆனால் அவன் அங்கே நெடுநாளிருக்கும்பொழுது சம்பவித்ததேதெனில், பெலிஸ்தரின் இராசாவாகிய அபிமேலேக் பலகணிவழியாய்ப் பார்த்து, இதோ ஈசாக்குத் தன் பெண்சாதியாகிய ரெபேக்காளோடே சரசம்பண்ணுகிறதைக் கண்டான்.

௯ அப்பொழுது அபிமேலேக் ஈசாக்கை அழைத்து, இதோ அவள் உன் பெண்சாதியாமே, பின்னை ஏன் அவளை உன் சகோதரியென்று சொன்னாய் என்றான்; அப்பொழுது ஈசாக்கு அவனுடனே, அவள் நிமித்தம் நான் சாவாதபடிக்கு, இப்படிச் சொன்னேனென்றான்.

௰ ஆனால் அபிமேலேக் இப்படி எங்களுக்கேன் செய்தாய்? சனத்திலொருவன் உன் பெண்சாதியோடே சயனிக்கவும், இப்படியே நீ எங்கள்மேல் குற்றம் வரப்பண்ணவும், அது மோசமாயிருந்ததே என்றான்.

௰௧ பிற்பாடு அபிமேலேக் எல்லாச் சனத்திற்கும், இந்தப் புருஷனையாகிலும் அவன் பெண்சாதியையென்கிலும் தொடுகிறவன் கொலையுண்ணவே கொலையுண்பானென்று கட்டளையிட்டான்.

௰௨ ¶ ஈசாக்கு அந்தத் தேசத்திலே விதை விதைத்து, அந்த வருஷத்திலே நூறத்தனை பலனடைந்தான்; ஏனெனில் கர்த்தர் அவனை ஆசீர்வதித்தார்.

௰௩ அப்படியே அந்தப் புருஷன் பெருகினான்; அவன் மிகுதியும் பலத்தவனாகுமட்டும் வரவரப் பெருகினான்.

௰௪ அவனுக்கு ஆட்டுமந்தையும், மாட்டுமந்தையும், வெகு பணிவிடைச்சனமுமிருந்தன; ஆகையால் பெலிஸ்தர் அவன்பேரில் பொறாமையாகி,

௰௫ அவன் தகப்பனுடைய வேலைக்காரர் அவன் தகப்பனாகிய ஆபிரகாமின் நாள்களில் வெட்டின *துரவுகளையெல்லாம் தூற்று மண்ணினால் நிரப்பிப்போட்டார்கள். *௨௧. ௩௰.

௰௬ அபிமேலேக் ஈசாக்குடனே, எங்களைவிட்டுப்போ, ஏனெனில் எங்களைப் பார்க்கிலும் மிகவும் பலத்தவனானாயென்றான்.

௰எ ¶ அப்பொழுது ஈசாக்கு அவ்விடம் விட்டுப் புறப்பட்டு, கேராரின் பள்ளத்தாக்கிலே கூடாரம்போட்டு, அங்கே குடியிருந்து,

௰அ தன் தகப்பனாகிய ஆபிரகாமின் நாள்களில் வெட்டினவைகளும் ஆபிரகாம் மரித்தபிற்பாடு பெலிஸ்தர் தூற்றுப்போட்டவைகளுமான துரவுகளை மறுபடியும் எடுத்து, தன் தகப்பன் அவைகளுக்கு இட்டிருந்த பெயர்களின்படியே அவைகளுக்குப் பெயரிட்டான்.

௰௯ ஈசாக்குடைய வேலைக்காரர் பள்ளத்தாக்கிலே வெட்டி, அங்கே சுரக்கிற நீரூற்றைக் கண்டுபிடித்தார்கள்.

௨௰ ஆனால் கேராரூர் மேய்ப்பர் இந்தத் தண்ணீர் தங்களுடையதென்று ஈசாக்குடைய மேய்ப்பருடனே சண்டைபண்ணினார்கள்; அவர்கள் தன்னோடே சண்டைபண்ணினபடியினாலே, அந்தத் துரவுக்கு ஏசேக்கென்று பேரிட்டான்.

௨௧ வேறொரு துரவை வெட்டினார்கள்; அதைக்குறித்தும் சண்டைபண்ணினார்கள்; ஆகையால் அதற்குச் சித்னாவென்று பெயரிட்டான்.

௨௨ ¶ அவ்விடத்தைவிட்டுப்பேர்ந்துபோய், வேறொரு துரவைவெட்டினான்; அதைக்குறித்து அவர்கள் சண்டைபண்ணாதிருந்தார்கள்; அப்பொழுது அவன் நாம் தேசத்

Digitized by Google

தில் பலுகும்படிக்கு, இப்பொழுது கர்த்தர் நமக்கிடமுண்டாக்கினாரென்று சொல்லி, அதற்கு ரேகொபோத்தென்று பேரிட்டான்.

௨௩ ¶ அங்கேயிருந்து பேர்சேபாவுக்குப் போய் ஏறினான்.

௨௪ அன்று இராத்திரியிலே கர்த்தர் அவனுக்குத் தரிசனையாகி, நாம் உன் தகப்பனாகிய *ஆபிரகாமுடைய பராபரன், பயப்படாதே, ஏனெனில் நாம் உன்னோடேகூட இருந்து, நம்முடைய ஊழியக்காரனாகிய ஆபிரகாமின்நிமித்தம் உன்னை ஆசீர்வதித்து, உன் வித்தைப் பெருகப்பண்ணுவோமென்றார்.

௨௫ அங்கே அவன் ஒரு பலிபீடத்தைக் கட்டி, கர்த்தருடைய நாமத்தைத் தொழுதுகொண்டு, அங்கே தன் கூடாரத்தைப் போட்டான்; அங்கே இசாக்கின் வேலைக்காரர் ஒரு துரவை வெட்டினார்கள்.

௨௬ ¶ ஆனால் *அபிமெலேக்கும், அவன் சிநேகிதனாகிய அகூசாத்தும் அவன் சேனாபதி பீகோலும், கேராரிலிருந்து அவனண்டைக்கு வந்தார்கள். *௨௧. ௨௨.

௨௭ அப்பொழுது இசாக்கு அவர்களுடனே, ஏன் என்னண்டைக்கு வருகிறீர்கள்? நீங்கள் என்னைப் பகைத்து, என்னை உங்களிடத்தில் இராதபடிக்கு, அனுப்பிவிட்டீர்களே என்றான்.

௨௮ அதற்கவர்கள் சொன்னதாவது: கர்த்தர் உம்மோடேகூட இருக்கிறாரென்கிறதைக் காணவே கண்டோம்; ஆகையால் எங்களுக்கும் உமக்கும் ஒரு ஆணை ஏற்பாடு உண்டாகக்கடவதென்று சொல்லிக்கொண்டோம்.

௨௯ இப்பொழுதும் நாங்கள் உம்மைத் தொடாமல் நன்மையையே உமக்குச் செய்து, உம்மைச் சமாதானத்தோடே அனுப்புவித்ததுபோல நீர் எங்களுக்கும் தீங்கு செய்யாதபடிக்கு உம்மோடே உடம்படிக்கை பண்ணிக்கொள்ளுவோம்; நீர் இப்பொழுது கர்த்தரால் ஆசீர்வதிக்கப்பட்டவராமே என்றார்கள்.

௩௦ அவர்களுக்கு விருந்துபண்ணினான்; அவர்கள் புசித்துக் குடித்தார்கள்.

௩௧ அதிகாலமே எழுந்திருந்து ஒருவருக்கொருவர் ஆணையிட்டார்கள்; பிற்பாடு இசாக்கு அவர்களை அனுப்புவித்தான்; அவர்கள் சமாதானத்தோடே அவனைவிட்டுப் போனார்கள்.

௩௨ அந்நாளில்தானே இசாக்கின் வேலைக்காரர் வந்து, தாங்கள் வெட்டின துரவின் செய்தியை அவனுக்கு அறிவித்து, தண்ணீரைக் கண்டுபிடித்தோமென்றார்கள்.

௩௩ அப்பொழுது அதற்குச் சேபாவென்று பேரிட்டான்; ஆகையால் அந்த ஊரின் பெயர் இந்நாள்வரைக்கும் பேர்சேபாவென்னப்படும்.

௩௪ ¶ ஏசா நாற்பது வயதானபொழுது, ஏத்தியனான பேயெரியின் குமாரத்தியாகிய ஏகூதித்தையும், ஏத்தியனான ஏலொனின் குமாரத்தியாகிய பஸ்மாத்தையும் விவாகம் பண்ணினான்.

௩௫ இவர்கள் இசாக்குக்கும் ரெபேக்காளுக்கும் மனநோவாயிருந்தார்கள்.

## ௨௭. அதிகாரம்.

ஈசாக்கு முதிர்வயதாகிறதினால் அவன் கண்கள் இருளடைந்து பார்வையற்றுப் போனபொழுது சம்பவித்ததேதென்றால், அவன் தன் மூத்தகுமாரனாகிய ஏசாவை அழைத்து, அவனோடே என் மகனே என்றான்; இவன் அவனுடனே, இதோ இருக்கிறேனென்றான்.

௨ அப்பொழுது அவன் சொன்னதாவது: இதோ முதிர்வயதானேன், என் மரணநாளை அறியேன்.

௩ இப்பொழுது நீ உன் ஆயுதங்களாகிய உன் அம்பறாத்தூணியையும் உன்வில்லையும் எடுத்துக்கொண்டு வெளியேபோய் எனக்காக வேட்டையாடிக்கொண்டுவந்து,

௪ எனக்குப் பிரியமாயிருக்கிற ருசியுள்ள ஒரு பதார்த்தத்தைப்பண்ணி, நான் புசிக்கவும் மரிக்காததற்குமுன்னே என் ஆத்து

மா உன்னை ஆசீர்வதிக்கவும், என்னண்டைக்குக் கொண்டுவாவென்றான்.

௫ ஆனால் ஈசாக்குத் தன் குமாரனாகிய ஏசாவோடே பேசுகையில், ரெபேக்காள் கேட்டுக்கொண்டிருந்தாள்; ஏசா வேட்டையாடிக் கொண்டுவர வெளியே போனான்.

௬ ¶ அப்பொழுது ரெபேக்காள் தன் குமாரனாகிய யாக்கோபோடே சொன்னதாவது: இதோ உன் தகப்பன் உன் சகோதரனாகிய ஏசாவோடே,

௭ நான் புசித்து என் மரணத்திற்கு முன்னே, உன்னைக் கர்த்தருக்குமுன்பாய் ஆசீர்வதிப்பதற்கு நீ எனக்காக வேட்டையாடிக் கொண்டுவந்து, ருசியுள்ள ஒரு பதார்த்தத்தை எனக்குப் பண்ணென்று சொல்லக் கேட்டேன்.

௮ இப்பொழுதும் என் மகனே, நான் உனக்குக் கற்பிக்கிற பிரகாரமாக என் சொல் கேட்டுச்செய்.

௯ நீ ஆட்டுமந்தைக்குப்போய், இரண்டு நல்ல வெள்ளாட்டுக் குட்டிகளை எனக்கு அங்கேயிருந்து கொண்டுவா; நான் அவைகளை உன் தகப்பனுக்குப் பிரியமானபடி ருசியுள்ள பதார்த்தமாக்குவேன்.

௰ உன் தகப்பன் தம்முடைய மரணத்திற்கு முன்னே உன்னை ஆசீர்வதிக்கும்படிக்கு, நீ அதை அவரண்டைக்கு அவர் புசிக்கத்தக்கதாகக் கொண்டுபோவாயாகவென்றாள்.

௰௧ ¶ ஆனால் யாக்கோபு தன் தாயாகிய ரெபேக்காளோடே சொன்னதாவது: இதோ என் சகோதரனாகிய ஏசா *ரோமமுள்ள மனுஷன்; நானோவெனில் ரோமமில்லாதவன். *௨௫. ௨௫.

௰௨ ஒருவேளை என் தகப்பன் என்னைத் தடவிப்பார்ப்பார்; அப்பொழுது நான் அவருக்கு எத்தனாய்க் காணப்பட்டு, என்மேல் ஆசீர்வாதத்தை அல்ல, சாபத்தை வரப்பண்ணிக்கொள்ளுவேனே என்றான்.

௰௩ ஆனால் அவன் தாய் அவனுடனே, என் மகனே உனக்கு வரும் சாபம் என்மேல் இருக்கக்கடவது; என் சொல்லைமாத்திரம் நீ கேட்டுப்போய் எனக்குக் கொண்டுவாவென்றாள்.

௰௪ அவன் போய்ப்பிடித்து, தன் தாயண்டைக்குக் கொண்டுவந்தான்; அப்பொழுது அவனுடைய தாய் அவன் தகப்பனுக்குப் பிரியமானபடி ருசியுள்ள ஒரு பதார்த்தத்தைப் பண்ணினாள்.

௰௫ ¶ பிற்பாடு ரெபேக்காள் வீட்டிலே தன்னிடமாயிருந்த தன் மூத்தகுமாரனாகிய ஏசாவின் நல்ல வஸ்திரங்களை எடுத்து, தன் இளையகுமாரனாகிய யாக்கோபுக்கு உடுத்து,

௰௬ வெள்ளாட்டுக் குட்டிகளின் தோல்களை அவன் கைகளின்மேலும், ரோமமில்லாத அவன் கழுத்திலும் தரித்து,

௰௭ தான் பண்ணின ருசியுள்ள பதார்த்தத்தையும் அப்பத்தையும் தன் குமாரனாகிய யாக்கோபின் கையிலே கொடுத்தான்.

௰௮ ¶ அவன் தன் தகப்பனண்டையிலே வந்து, என் தகப்பனே என்றான்; அதற்கவன், இதோ இருக்கிறேன் என் மகனே, நீ யாரென்றான்.

௰௯ அப்பொழுது யாக்கோபு தன் தகப்பனுடனே, நான் உமக்கு முதல் பிறந்தவனாகிய ஏசா; நீர் என்னோடே சொன்னபடியே செய்தேன்; இப்பொழுதும் உம்முடைய ஆத்துமா என்னை ஆசீர்வதிக்கும்படிக்கு, நீர் எழுந்து, உட்கார்ந்து, நான் வேட்டையாடினதிலே புசியுமென்றான்.

௨௰ அப்பொழுது ஈசாக்குத் தன் குமாரனுடனே, என் மகனே, இது உனக்கு இத்தனைச் சீக்கிரமாய் அகப்பட்டதெப்படி என்றான்; இவன் உம்முடைய பராபரனாகிய கர்த்தர் எனக்கு நேரிடப்பண்ணினாரென்றான்.

௨௧ அப்பொழுது ஈசாக்கு யாக்கோபுடனே, என் மகனே, நீ என் குமாரனாகிய ஏசாதானோ, அல்லவோ என்று நான் உன்னைத் தடவிப்பார்க்கக் கிட்டிவாவென்றான்.

Digitized by Google

உஉ யாக்கோபு தன் தகப்பனாகிய இசாக் கண்டையிலே கிட்டிப்போனான்; அவன் இவனைத் தடவிச் சத்தம் யாக்கோபின் சத்தம், கைகளோ ஏசாவின் கைகளென்று சொல்லி,

உ௩ இவன் கைகள் இவன் சகோதரனாகிய ஏசாவின் கைகளைப்போல ரோமமானபடியினாலே, இவனை அறியாதேபோய், இவனை ஆசீர்வதித்து,

உ௪ நீ என் குமாரனாகிய ஏசாதானோ என்றான்; இவன் நான்தானென்றான்.

உ௫ அப்பொழுது அவன் என் குமாரனாகிய நீ வேட்டையாடினதிலே நான் புசித்து என் ஆத்துமா உன்னை ஆசீர்வதிக்கும்படிக்கு, என் கிட்டக் கொண்டுவாவென்றான்; அவன் கிட்டக் கொண்டுவந்தான்; அப்பொழுது அவன் புசித்தான்; பிற்பாடு திராட்சப்பழ இரசம் அவனுக்குக் கொண்டுவந்தான், அவன் குடித்தான்.

உ௬ அப்பொழுது இவன் தகப்பனாகிய இசாக்கு இவனோடே, என் மகனே, நீ கிட்டிவந்து என்னை முத்தம்செய்யென்றான்.

உஎ இவன் கிட்டிவந்து அவனை முத்தம் செய்தான்; அப்பொழுது அவன் இவன் வஸ்திரங்களின் வாசனையை முகந்து, இவனை ஆசீர்வதித்துச் சொன்னதாவது: இதோ என் குமாரனுடைய வாசனை கர்த்தர் ஆசீர்வதித்த வயல்வெளியின் வாசனையைப்போலிருக்கின்றது.

உ௮ *பராபரன் உனக்கு வானத்துப் பனியிலும் பூமியின் புஷ்டியிலும் கொடுத்துத் திரள்தானியத்தையும் திராட்சப்பழ இரசத்தையும் கட்டளையிடுவாராக. *எபி. ௰௧. உ௰.

உ௯ சனசதளங்கள் உன்னைச் சேவிக்கவும் சாதிகள் உன்னை வணங்கவும்கடவது; *உன் சகோதரருக்கு எசமானனாயிரு; உன் தாயின்பிள்ளைகள் உன்னை வணங்கக்கடவர்கள்; உன்னைச் †சபிக்கிறவர்கள் சபிக்கப்பட்டவர்களும், உன்னை ஆசீர்வதிக்கிறவர்கள் ஆசீர்வதிக்கப்பட்டவர்களுமாய்இருப்பார்களாக என்றான். *உ௫. உ௩. †௰உ. ௩. ௪ மோ. உ௪. ௯.

௩௰ ¶ இசாக்கு யாக்கோபை ஆசீர்வதித்துத் தீர்ந்தபொழுது சம்பவித்ததேதென்றால், யாக்கோபு தன் தகப்பனாகிய இசாக்கின் முகத்தைவிட்டுப் புறப்பட்டவுடனே, அவன் சகோதரனாகிய ஏசா வேட்டையாடிக்கொண்டுவந்தான்.

௩௧ இவனும் ருசியுள்ள பதார்த்தத்தைப் பண்ணி, தன் தகப்பனண்டைக்குக் கொண்டுவந்து, தன் தகப்பனுடனே, உம்முடைய ஆத்துமா என்னை ஆசீர்வதிக்கும்படிக்கு, என் தகப்பனார் எழுந்திருந்து, தம்முடைய குமாரன் வேட்டையாடினதிலே புசிப்பாராகவென்றான்.

௩உ அப்பொழுது அவன் தகப்பனாகிய இசாக்கு அவனுடனே, நீ யார் என்றான்; அதற்கவன், நான் உமக்கு முதல்பிறந்த குமாரனாகிய ஏசாவென்றான்.

௩௩ அப்பொழுது இசாக்கு மகா அதிர்வாய் அதிர்ந்து சொன்னதாவது: வேட்டையாடி எனக்குக் கொண்டுவந்தானே, அவன் யார்? நீ வாரரததற்கு முன்னே நான் அவை எல்லாவற்றிலும் புசித்து அவனை ஆசீர்வதித்தேனே, அவன் ஆசிர்வதிக்கப்பட்டவனுமாய் இருப்பானென்றான்.

௩௪ ஏசா தன் தகப்பனுடைய வார்த்தைகளைக் கேட்டபொழுது, *மகா உரத்த கசப்பான சத்தமாய் அலறி, தன் தகப்பனோடே, என் தகப்பனே, என்னையும் ஆசீர்வதியுமென்றான். *எபி. ௰உ. ௰எ.

௩௫ அதற்கவன், உன் சகோதரன் தந்திரமாய் வந்து உன்னுடைய ஆசீர்வாதத்தை எடுத்துக்கொண்டானென்றான்.

௩௬ அப்பொழுது இவன், அவன் பெயர் யாக்கோபு என்னப்படுகிறது சரி அல்லவோ? அதேனென்றால் இத்தோடே இரண்டுமுறை என்னைக் கீழ்ப்படுத்தினான்; என் *முதற்பிறப்புச் சுதந்தரத்தை எடுத்துக்கொண்டான்; இதோ என் ஆசீர்வாதத்தையும் இப்பொழுது எடுத்துக்கொண்

Digitized by Google

டானென்று சொல்லி, நீர் எனக்கு ஆசீர்வாதத்தை வைத்துவைத்ததில்லையோ என்றான். *௨௫. ௩௩.

௩௭ இசாக்கு ஏசாவுக்குப் பிரதியுத்தாரமாக, இதோ நான் அவனை உனக்கு எசமானாக வைத்தேன்; அவன் சகோதரரையெல்லாம் அவனுக்கு ஊழியக்காரராகக் கொடுத்து, அவனைத் தானியத்தினாலும் திராட்சப்பழ இரசத்தினாலும் ஆதரித்தேனே, இப்பொழுது உனக்கு நான் என்ன செய்யலாம் என் மகனே என்றான்.

௩௮ ஏசா தன் தகப்பனோடே, என் தகப்பனே, இந்த ஒரே ஆசீர்வாதம்தான் உமக்கிருக்கிறதோ? என்னையும் ஆசீர்வதியும் என் தகப்பனே என்று ஏசா சொல்லி, தன் சத்தத்தை உயர்த்தி அழுதான்.

௩௯ அப்பொழுது அவன் தகப்பனாகிய இசாக்கு அவனுக்குப் பிரதியுத்தாரமாகச் சொன்னதாவது: இதோ உன் குடியிருப்புப் பூமியின் புஷ்டியோடும் உயர வானத்திலிருந்திறங்கும் பனியோடுமிருக்கும்.

௪௰ உன் பட்டயத்தினாலே நீ பிழைத்து உன் சகோதரனைச் சேவிப்பாய்; *நீ மேற்கொள்ளும்காலம் வரும்பொழுதோவெனில், நீ உன் கழுத்திலிருக்கிற அவனுடைய நுகத்தடியை உதறிப்போடுவதுண்டென்றான். *௨ இரா. ௮. ௨௰.

௪௧ ¶ ஏசாவோவெனில் யாக்கோபைத் தன் தகப்பன் அவனை ஆசீர்வதித்த ஆசீர்வாதத்தின் நிமித்தம் பகைத்து, என் தகப்பனுக்காகத் துக்கிக்கும் நாள்கள் சமீபிக்கும்; அப்பொழுது என் சகோதரனாகிய யாக்கோபைக் கொன்றுபோடுவேனென்று ஏசா தன் இருதயத்திலே சொல்லிக்கொண்டான்.

௪௨ ஆனால் ரெபேக்காளுக்கு அவனுடைய மூத்தகுமாரனாகிய ஏசாவின் வார்த்தைகள் அறிவிக்கப்பட்டன; அப்பொழுது அவள் தன் இளையகுமாரனாகிய யாக்கோபை அழைத்தனுப்பி, அவனோடே சொன்னதாவது: இதோ உன் சகோதரனாகிய ஏசா உன்னைக் கொன்றுபோட நினைக்கிறதினாலே தன்னைத் தேற்றிக்கொள்ளுகிறான்.

௪௩ இப்பொழுதும் என் மகனே, நீ என் சொற்படிகேட்டு, எழுந்து புறப்பட்டு, ஆரானிலிருக்கிற என் சகோதரனாகிய லாபானண்டைக்கோடிப்போய்,

௪௪ உன் சகோதரனுடைய உக்கிரம் ஆறுமமட்டும் சிலநாள் அவனண்டையிலே,

௪௫ உன் சகோதரனுடைய கோபம் உன்னைவிட்டு நீங்கும்மட்டாகவும், நீ தனக்குச் செய்ததை அவன் மறக்கும்மட்டாகவும் இரு; பிற்பாடு அவ்விடத்திலிருந்து உன்னை அழைத்தனுப்புவேன்; நான் ஒரே நாளிலே உங்கள் இருவரையும் ஏன் இழந்துபோகவேண்டும் என்றாள்.

௪௬ பிற்பாடு ரெபேக்காள் இசாக்குடனே, *ஏத்தின் குமாரத்திகளைத்தொட்டு, என் சீவன் எனக்கு அரோசிக்கிறது; இத்தத் தேசத்துக் குமாரத்திகளாகிய ஏத்தின் குமாரத்திகளில் யாக்கோபு இவர்களுக்கொத்த பெண்ணைக்கொண்டால், எனக்குச்சீவன் ஏதுக்கென்றாள். *௨௬. ௩௪, ௩௫.

## ௨௮. அதிகாரம்.

அப்பொழுது இசாக்கு யாக்கோபை அழைத்து, அவனை ஆசீர்வதித்து, அவனுக்குக் கற்பித்துச் சொன்னதாவது: *நீ கானான் குமாரத்திகளில் பெண்ணைக்கொள்ளாமல், *௨௪. ௩.

௨ எழுந்து புறப்பட்டு, பதான்அராமிலிருக்கிற உன் தாயின் தகப்பனாகிய பெத்துவேலுடைய வீட்டுக்குப் போய், அவ்விடத்தில் உன் தாயின் சகோதரனாகிய லாபானின் குமாரத்திகளிலே பெண்ணைக்கொள்.

௩ ஆனால் சர்வத்திற்கும் வல்ல பராபரன் உன்னை ஆசீர்வதித்து, நீ சனசதளங்களான கூட்டமாகும்படிக்கு உன்னைப் பலுகவும், பெருகவும் பண்ணி,

௪ பராபரன் ஆபிரகாமுக்குக் கொடுத்ததும் நீ பரதேசியாய்த் தங்குகிறதுமான தேசத்தை நீ சுதந்தரித்துக்கொள்ள *ஆபிர

Digitized by Google

காமுடைய ஆசீர்வாதத்தை உனக்கும், உன்னோடேகூட உன் வித்துக்கும் கொடுக்கக்கடவரென்றுசொல்லி, *௰௨. ௩.

௫ இசாக்கு யாக்கோபை அனுப்புவித்தான்; அப்பொழுது இவன் பதான்அராமிலிருக்கும் சூரியனாகிய பேத்துவேலுடைய குமாரனும் தனக்கும் ஏசாவுக்கும் தாயாகிய ரெபேக்காளின் சகோதரனுமான லாபானண்டைக்குப் போகப் புறப்பட்டான்.

௬ ¶ இசாக்கு யாக்கோபை ஆசீர்வதித்து, அவனைப் பதான்அராமுக்கு அங்கே ஒரு பெண்ணைக்கொள்ள அனுப்பினதையும், அவனை ஆசீர்வதிக்கையில் நீ கானான் குமாரத்திகளில் பெண்ணைக்கொள்ளாயாகவென்று அவனுக்குக் கற்பித்ததையும்,

௭ யாக்கோபு தன் தகப்பனுக்கும் தன் தாய்க்கும் கீழ்ப்படிந்து பதான்அராமுக்குப் புறப்பட்டுப்போனதையும், ஏசா கண்டான்.

௮ கானான் குமாரத்திகள் தன் தகப்பனாகிய இசாக்கின் பார்வைக்குப் பொல்லாதவர்களென்றதை ஏசா கண்டபடியினாலே,

௯ ஏசா இஸ்மவேலண்டைக்குப்போய், தனக்கிருக்கிற பெண்சாதிகள்தவிர, ஆபிரகாமுடைய குமாரனாகிய இஸ்மவேலின் குமாரத்தியும் நேபாயோத்தின் சகோதரியுமாகிய மகலாத்தை விவாகம்பண்ணினான்.

௰ ¶ யாக்கோபு பேர்சேபாவைவிட்டுப் புறப்பட்டு, ஆரானுக்குப்போகப் பயணம்பண்ணி,

௰௧ ஓரிடத்திலே வந்து சூரியன் அஸ்தமித்தபடியினாலே, அங்கே இராத்தங்கி, அவ்விடத்துக் கற்களில் ஒன்றை எடுத்து, தன் தலைமாட்டிலே போட்டு, அவ்விடத்திலே படுத்துக்கொண்டு,

௰௨ கண்ட சொப்பனமாவது: இதோ ஒரு ஏணி பூமியிலே வைக்கப்பட்டிருந்தது; அதின் தலைப்புறம் வானத்தை எட்டியிருந்தது; இதோ அதிலே *பராபரனுடைய தூதர் ஏறுகிறவர்களும் இறங்குகிறவர்களுமாயிருந்தார்கள். *யோவா. ௧. ௫௧.

௰௩ இதோ அதின்மீதில் கர்த்தர் நின்றுகொண்டிருந்து சொன்னதாவது: நாம் உன் தகப்பனாகிய ஆபிரகாமின் பராபரனும் இசாக்கின் பராபரனுமாகிய கர்த்தர்; நீ படுத்திருக்கிற பூமியை உனக்கும், உன் வித்துக்கும் தருவோம்.

௰௪ உன் வித்துப் *பூமியின் தூளைப் போலிருக்கும்; நீ மேற்கேயும், கிழக்கேயும், வடக்கேயும், தெற்கேயும், பரம்பிப் போவாய்; †உன்னிலும், உன் வித்திலும் பூமியின் வம்சங்களெல்லாம் ஆசீர்வதிக்கப்படும். *௰௩. ௰௬. †௰௨. ௩.

௰௫ இதோ நாம் உன்னோடேகூட இருந்து, நீ போகிற இடத்திலெல்லாம் உன்னைக் காத்து, இந்தத் தேசத்திற்கு உன்னைத் திரும்பி வரப்பண்ணுவோம்; ஏனெனில் நாம் உனக்குச் சொன்னதை நாம் செய்யும் அளவும் உன்னைக் கைவிடோமென்றார்.

௰௬ ¶ யாக்கோபு நித்திரை தெளிந்து விழித்தபொழுது, மெய்யாகவே கர்த்தர் இந்த ஸ்தலத்தில் இருக்கிறார், இதை நான் அறியாதிருந்தேனென்றான்.

௰௭ அவன் பயந்து, இந்த ஸ்தலம் எத்தனை பயப்படத்தக்கதாயிருக்கின்றது; இது பராபரனுடைய வீடொழிய வேறொன்றல்ல, இது வானத்தின் வாசலென்று சொல்லி,

௰௮ யாக்கோபு அதிகாலமே எழுந்திருந்து, தன் தலைமாட்டிலே போட்டுக்கொண்டிருந்த கல்லை எடுத்துக்கொண்டு அதைத் தூணாக நிறுத்தி, அதின்மீதில் எண்ணெயை வார்த்து,

௰௯ அந்த ஸ்தலத்திற்குப் பேத்தேலென்று பெயரிட்டான்; அவ்வூருக்கு முந்தின பெயரோவென்றால், லூஸ் என்பது.

௨௰ யாக்கோபு ஒரு பொருத்தனையைப் பண்ணிச் சொன்னதாவது: பராபரன் என்னோடேகூட இருந்து, நான் நடக்கிற இந்த வழியிலே என்னைக் காப்பாற்றிப் புசிக்க அப்பமும், உடுக்க வஸ்திரமும் எனக்குக் கொடுத்து,

Digitized by Google

உக என்னை என் தகப்பன் வீட்டுக்குச் சமாதானத்தோடே திரும்பி வரப்பண்ணி, இப்படியே கர்த்தர் எனக்குப் பராபரனாயிருந்தாராகில்,

உஉ நான் தூணாக நிறுத்தின இந்தக் கல் பராபரனுடைய வீடாகும்; தேவரீர் எனக்குக் கொடுப்பதெல்லாவற்றிலும் பத்திலொன்றை உமக்குச் செலுத்துவேனென்றான்.

## உகூ. அதிகாரம்.

பிற்பாடு யாக்கோபு கால் எட்டி நடந்து, கிழக்குத் திசையாரின் தேசத்தில் வந்தான்.

உ அப்பொழுது இதோ வயல்வெளியிலே ஒரு கிணற்றையும் அங்கே அதின் அருகே மடக்கியிருக்கிற மூன்று ஆட்டுமந்தைகளையும் கண்டான்; ஏனெனில் அந்தக் கிணற்றிலே மந்தைகளுக்குத் தண்ணீர் மொண்டு காட்டுவார்கள்; கிணற்றினுடைய வாயின்மேலோவென்றால், ஒரு பெரிய கல் வைக்கப்பட்டிருந்தது.

ங அவ்விடத்தில் மந்தைகளெல்லாம் சேர்ந்ததற்குப் பிற்பாடு அவர்கள் கிணற்று வாயின்மேலிருக்கும் கல்லைப்புரட்டி, ஆடுகளுக்குத் தண்ணீர் காட்டி, மறுபடியும் கல்லை அந்தத் தானத்தில் கிணற்றுவாயின் மேலே வைப்பார்கள்.

ச யாக்கோபு அவர்களுடனே, என் சகோதரரே, நீங்கள் எவ்விடத்தாரென்றான்; அவர்கள் நாங்கள் ஆரானூர் மனிதர்களென்றார்கள்.

ரு அப்பொழுது அவர்களோடே, நாகோரின் குமாரனாகிய லாபானை அறிவீர்களோ என்றான்; அறிவோமென்றார்கள்.

சு அப்பொழுது அவர்களை, அவன் சுகமாயிருக்கிறானோ என்று கேட்டான்; அவர்கள், சுகமாயிருக்கிறானென்றும், அதோ அவன் குமாரத்தியாகிய ராகேல் ஆடுகளை ஓட்டி வருகிறாளென்றும் சொன்னார்கள்.

எ அப்பொழுது அவன், இதோ, இன்னம் வெகு பொழுதிருக்கின்றது; இது மந்தை சேர்க்கிற வேளை அல்லவே, ஆடுகளுக்குத் தண்ணீர் காட்டிப்போய் மேயுங்களென்றான்.

அ அதற்கவர்கள் எல்லா மந்தைகளும் சேருமட்டும் எங்களுக்குக் கூடாது; கிணற்று வாயின்மேலிருக்கும் கல்லைப் புரட்டுவார்கள்; அதற்குப்பிறகு மந்தைக்குத் தண்ணீர்காட்டுகிறோமென்றார்கள்.

கூ ¶ அவன் இவர்களோடே இன்னம் பேசிக்கொண்டிருக்கையில், ராகேல் தன் தகப்பனுடைய ஆடுகளோடே வந்தாள்; ஏனெனில் அவைகளை மேய்க்கிறவளாயிருந்தாள்.

ய *சம்பவித்ததேதென்றால், யாக்கோபு தன் தாயின் சகோதரனான லாபானுடைய குமாரத்தியாகிய ராகேலையும் தன் தாயின் சகோதரனாகிய லாபானின் ஆடுகளையும் கண்டபொழுது, யாக்கோபு சேர்ந்துபோய், கிணற்றுவாயின்மேலிருந்த கல்லைப் புரட்டி, தன் தாயின் சகோதரனாகிய லாபானின் ஆடுகளுக்குத் தண்ணீர் காட்டினான்.

*உ மோ. உ. யஎ.

யக பிற்பாடு யாக்கோபு ராகேலை முத்தம் செய்து, சத்தமிட்டழுது,

யஉ தான் அவள் தகப்பனுடைய மருமகனென்றும், தான் ரெபேக்காளின் குமாரனென்றும், யாக்கோபு ராகேலுக்கு அறிவித்தான்; அப்பொழுது அவள் ஓடி, தன் தகப்பனுக்கு அறிவித்தாள்.

யங அப்பொழுது சம்பவித்ததேதென்றால், லாபான் தன் சகோதரியின் குமாரனாகிய யாக்கோபுடைய செய்தியைக் கேட்டபொழுது, அவன் இவனுக்கெதிர்கொண்டோடி, இவனைக் கட்டிக்கொண்டு முத்தம் செய்து, தன் வீட்டுக்கு அழைத்துப்போனான்; அப்பொழுது இவன் லாபானுக்கு இந்தக் காரியங்களை எல்லாம் விவரித்தான்.

யச அப்பொழுது லாபான் இவனுடனே, நீ என்னெலும்பும் என் மாம்சமுமாமே என்றான்; அவனண்டையிலே இவன் ஒரு மாதக்காலம் இருந்தபிற்பாடு,

Digitized by Google

௰௫ ¶ லாபான் யாக்கோபுடனே, நீ என் மருமகனானதினாலே, இலவசமாய் எனக்கு வேலைசெய்யவேண்டுமோ? உனக்குக் கூலி என்னவென்று எனக்குச் சொல்லென்றான்.

௰௬ லாபானுக்கோவெனில், இரண்டு குமாரத்திகள் இருந்தார்கள்; மூத்தவள்பேர் லேயாள், இளையவள்பேர் ராகேல்.

௰௭ ஆனால் லேயாளுடைய கண்கள் கூச்சப் பார்வையாயிருந்தன; ராகேலோவெனில், அந்தமுள்ள ரூபமும் அழகான பார்வையுமாயிருந்தாள்.

௰௮ யாக்கோபு ராகேல்பேரில் பிரியப்பட்டு, உம்முடைய இளையகுமாரத்தியாகிய ராகேலுக்காக உமக்கு ஏழுவருஷம் வேலைசெய்வேனென்றான்.

௰௯ அதற்கு லாபான், நான் அவளை அந்நிய புருஷனுக்குக் கொடுக்கிறதைப் பார்க்கிலும், அவளை உனக்குக் கொடுக்கிறது தாவிலை, என்னோடே தரித்திருவென்றான்.

௨௰ அப்படியே யாக்கோபு ராகேலுக்காக ஏழுவருஷம் வேலைசெய்தான்; அவைகள் அவனுக்கு இவள்பேரிலிருந்த பிரியத்தினாலே கொஞ்சநாளாகக் கண்டது.

௨௧ ¶ பிற்பாடு யாக்கோபு லாபானோடே, என் பெண்சாதியை எனக்குத் தாரும்; ஏனெனில், நான் அவளிடத்தில் பிரவேசிக்க என் நாள்கள் நிறைவேறினவென்றான்.

௨௨ அப்பொழுது லாபான் அந்தத்தலத்து மனிதரை எல்லாம்கூட்டி விருந்துபண்ணினான்.

௨௩ ஆனால் இராத்திரியிலே சம்பவித்ததேதெனில், இவன் தன் குமாரத்தியாகிய லேயாளை அவனண்டைக்கு அழைத்துப் போய் விட்டான்; இவளிடத்தில் அவன் உட்பிரவேசித்தான்.

௨௪ தன் குமாரத்தியாகிய லேயாளுக்கு லாபான் தன் வேலைக்காரியாகிய சில்பாளை வேலைக்காரியாகக் கொடுத்தான்.

௨௫ சம்பவித்ததேதென்றால், காலமே இதோ அவள் லேயாள்தானே; அப்பொழுது அவன் லாபானோடே, ஏன் இதை எனக்குச்செய்தீர்? ராகேலுக்காக அல்லவோ உம்மிடத்திலே வேலைசெய்தேன்; பின்னையேன் என்னை வஞ்சகம்பண்ணினீர் என்றான்.

௨௬ லாபான் சொன்னதாவது: இளையவளை மூத்தவளுக்கு முன்னே கொடுக்கிறது எங்கள் தலத்து நடபடியல்ல.

௨௭ இவளுடைய வாரத்தை நிறைவேற்று; அப்பொழுது நீ இன்னம் வேறு ஏழுவருஷம் என்னிடத்தில் செய்யும் வேலைக்காக அவளையும் உனக்குக் கொடுப்பேனென்றான்.

௨௮ ¶ யாக்கோபு இப்படிச்செய்து, இவளுடைய வாரத்தை நிறைவேற்றினான்; அப்பொழுது தன் குமாரத்தியாகிய ராகேலையும் அவனுக்குப் பெண்சாதியாகக் கொடுத்தான்.

௨௯ தன் குமாரத்தியாகிய ராகேலுக்கு லாபான் தன் வேலைக்காரியாகிய பில்காளை வேலைக்காரியாகக் கொடுத்தான்.

௩௰ அவன் ராகேலிடத்திலும் பிரவேசித்து லேயாளைப்பார்க்கிலும் ராகேலைச் சிநேகித்து, இன்னம் வேறே ஏழுவருஷம் அவனிடத்திலே வேலைசெய்தான்.

௩௧ ¶ லேயாள் பகைக்கப்பட்டவளென்று கர்த்தர் கண்டபொழுது, அவளுடைய கர்ப்பத்தைத் திறந்தார்; ராகேலோவெனில் மலடியாயிருந்தாள்.

௩௨ லேயாள் கர்ப்பம்தரித்து ஒரு குமாரனைப்பெற்று அவனுக்கு ரூபனென்று பெயரிட்டாள்; ஏனெனில் கர்த்தர் என் சிறுமையைப்பார்த்தார்; ஆகையால் இப்பொழுது என் புருஷன் என்னைச் சிநேகிப்பாரென்றாள்.

௩௩ அப்புறம் அவள் கர்ப்பம்தரித்து ஒரு குமாரனைப் பெற்று, நான் பகைக்கப்பட்டவளென்று கர்த்தர் கேட்டருளி, இவனையும் எனக்குக் கொடுத்தாரென்று சொல்லி, அவனுக்குச் சிமியோனென்று பெயரிட்டாள்.



Digitized by Google

௩௪ அப்புறம் அவள் கர்ப்பம்தரித்து, ஒரு குமாரனைப்பெற்று, இப்பொழுது இந்தமுறை என் புருஷன் என்னோடே சேர்வார்; ஏனெனில் அவருக்கு மூன்று குமாரரைப் பெற்றேனென்று சொல்லி, அவனுக்கு லேவியென்று பெயரிட்டாள்.

௩௫ அப்புறம் அவள் கர்ப்பம்தரித்து ஒரு குமாரனைப்பெற்று, இப்பொழுது கர்த்தரைத் துதிப்பேனென்று சொல்லி, அவனுக்கு யூதாவென்று பெயரிட்டாள்; பிற்பாடு அவள் பெறுகிறது நின்றது.

## ௩௰. அதிகாரம்.

ராகேல் தான் யாக்கோபுக்குப் பிள்ளைகளைப் பெறாததைக் கண்டாள்; ஆனது கொண்டு ராகேல் தன் சகோதரியின்பேரிலே பொறாமையாகி, யாக்கோபுடனே, எனக்குப் பிள்ளைகளைக் கொடும்; இல்லாவிட்டால் நான் மரித்தவளாவேனே என்றாள்.

௨ அப்பொழுது யாக்கோபுக்கு ராகேலின்மேல் கோபம்மூண்டு, உனக்குக் கர்ப்பக்கனியைக் கட்டளையிடாத பராபரனுக்கு நான் நிகரோ என்றான்.

௩ அப்பொழுது அவள், இதோ என் வேலைக்காரியாகிய பில்க்காளிருக்கிறாள்; அவள் என் மடிக்குப் பிள்ளைகளைப் பெறவும், *அவளாலாகிலும் என் வீடு கட்டப்படவும், அவளிடத்தில் பிரவேசியுமென்று சொல்லி, *௧ மோ. ௰௬. ௨.

௪ அவனுக்குத் தன் வேலைக்காரியாகிய பில்க்காளைப் பெண்சாதியாகக் கொடுத்தான்; அப்படியே யாக்கோபு அவளிடத்தில் பிரவேசித்தான்.

௫ ¶ பில்க்காள் கர்ப்பம்தரித்து யாக்கோபுக்கு ஒரு குமாரனைப்பெற்றாள்.

௬ அப்பொழுது ராகேல், பராபரன் என் வழக்கைத்தீர்த்து என் சத்தத்தையும்கேட்டு, எனக்கு ஒரு குமாரனைக்கொடுத்தாரென்று சொல்லி, அவனுக்குத் தாணென்று பெயரிட்டாள்.

௭ மறுபடியும் ராகேலின் வேலைக்காரியாகிய பில்க்காள் கர்ப்பம்தரித்து யாக்கோபுக்கு இரண்டாம் குமாரனைப் பெற்றாள்.

௮ அப்பொழுது ராகேல், நான் தேவ போராட்டமாய் என் சகோதரியோடே போராடிமேற்கொண்டேனென்றுசொல்லி, அவனுக்கு நப்தலியென்று பெயரிட்டாள்.

௯ ¶ லேயாள் தான் பெறுகிறது நின்றதென்று கண்டு, தன் வேலைக்காரியாகிய சில்ப்பாளை அழைத்து, அவளை யாக்கோபுக்குப் பெண்சாதியாகக் கொடுத்தாள்.

௰ லேயாளின் வேலைக்காரியாகிய சில்ப்பாள் யாக்கோபுக்கு ஒரு குமாரனைப்பெற்றாள்.

௰௧ அப்பொழுது லேயாள், ஏராளமாகிறதென்றுசொல்லி, அவனுக்குக் காத்தென்று பெயரிட்டாள்.

௰௨ பிற்பாடு லேயாளின் வேலைக்காரியாகிய சில்ப்பாள் யாக்கோபுக்கு இரண்டாம் குமாரனைப் பெற்றாள்.

௰௩ அப்பொழுது லேயாள், என் பாக்கியத்திற்காயிற்று; ஏனெனில் குமாரத்திகள் என்னைப் பாக்கியவதி என்பார்களென்று சொல்லி, அவனுக்கு ஆசேர் என்று பெயரிட்டாள்.

௰௪ ¶ கோதுமை அறுப்பு நாள்களிலே ரூபன் புறப்பட்டு வெளியிலே தூதாயிகளைக் கண்டுபிடித்து, அவைகளைத் தன் தாயாகிய லேயாளண்டைக்குக் கொண்டுவந்தான்; அப்பொழுது ராகேல் லேயாளுடனே, உன் குமாரனுடைய தூதாயிகளில் எனக்குக் கொஞ்சம் தாவென்றாள்.

௰௫ அப்பொழுது அவள் இவளுடனே, நீ என் புருஷனை எடுத்துக்கொண்டது கொஞ்சக்காரியமோ, என் குமாரனுடைய தூதாயிகளையும் எடுத்துக்கொள்வாயோ என்றாள்; அப்பொழுது ராகேல், உன் குமாரனுடைய தூதாயிகளுக்கீடாக இன்று இரவிற்கு அவர் உன்னோடே சயனம்பண்ணட்டுமென்றாள்.

௰௬ யாக்கோபு சாயங்காலத்திலே வெ

Digitized by Google

வியிலிருந்து வருகையில் லேயாள் புறப்பட்டு அவனுக்கு எதிர்கொண்டுபோய், என்னிடத்தில் வருவீராக; ஏனெனில் என் குமாரனுடைய தூதாயிகளாலே உம்மைச் சம்பாதித்தேனென்றாள்; ஆகையால் அன்று இராத்திரியில் அவளோடே சயனித்தான்.

௰எ ¶ பராபரன் லேயாளைக் கேட்டருளினார்; அவள் கர்ப்பம்தரித்து யாக்கோபுக்கு ஐந்தாம் குமாரனைப் பெற்றாள்.

௰அ அப்பொழுது லேயாள், நான் என் வேலைக்காரியை என் புருஷனுக்குக் கொடுத்த பலனைப் பராபரன் எனக்குத் தந்தாரென்றுசொல்லி, அவனுக்கு இசக்காரென்று பெயரிட்டாள்.

௰௯ அப்புறம் லேயாள் கர்ப்பம்தரித்து யாக்கோபுக்கு ஆரும் குமாரனைப்பெற்றாள்.

௨௰ அப்பொழுது லேயாள், பராபரன் எனக்கு நல்ல இவைத்தந்தார்; இந்தமுறை என் புருஷன் என்னுடனே வாசமாவார்; ஏனெனில் அவருக்கு ஆறு குமாரரைப் பெற்றேனென்று சொல்லி, அவனுக்குச் சேபுலோனென்று பெயரிட்டாள்.

௨௧ பிற்பாடு அவள் ஒரு குமாரத்தியைப்பெற்று, அவளுக்குத் தீனாளென்று பெயரிட்டாள்.

௨௨ ¶ ஆனால் பராபரன் ராகேலை நினைத்தார்; அவளைப் பராபரன் கேட்டருளி, அவள் கர்ப்பத்தைத் திறந்தார்.

௨௩ அவள் கர்ப்பம்தரித்து ஒரு குமாரனைப்பெற்று, *பராபரன் என் நிந்தையை நீக்கிவிட்டாரென்றும், *லூக். க. உ௫.

௨௪ கர்த்தர் எனக்கு இன்னம் ஒரு குமாரனைக் கொடுப்பாராகவென்றும் சொல்லி, அவனுக்கு யோசேப்பென்று பெயரிட்டாள்.

௨௫ ¶ அப்பால் சம்பவித்ததேதெனில், ராகேல் யோசேப்பைப் பெற்றபிற்பாடு, யாக்கோபு லாபானோடே சொன்னதாவது: நான் என் தானத்திற்கும் என் தேசத்திற்கும் போக என்னை அனுப்புவியும்.

௨௬ நான் உமக்கு ஊழியம்செய்து சம்பாதித்த என் பெண்சாதிகளையும் என் பிள்ளைகளையும் எனக்குத் தாரும்; நான் போவேன்; ஏனெனில் நான் உம்மிடத்தில் சேவித்த சேவகத்தை நீர் அறிந்திருக்கிறீரென்றான்.

௨எ ¶ அப்பொழுது லாபான் அவனோடே சொன்னதாவது: உன் கண்களில் எனக்குத் தயவுகிடைத்ததேயானால் இரு; உன் நிமித்தம் கர்த்தர் என்னை ஆசீர்வதித்தாரென்கிறது எனக்குத் தெரியவந்தது.

௨அ உன் சம்பளம் இன்னதென்று எனக்குக் குறித்துச் சொல், நான் தருவேனென்றான்.

௨௯ ¶ அப்பொழுது அவன் இவனோடே சொன்னதாவது: நான் உம்மை எப்படிச் சேவித்தேனென்றும், உம்முடைய மந்தை என்கிட்ட எப்படி இருந்ததென்றும் அறிந்திருக்கிறீர்.

௩௰ ஏனெனில் எனக்குமுன் உமக்கிருந்தது கொஞ்சம், அது திரளாயிற்று; கர்த்தர் உம்மை என் கால்வருத்தத்தினால் ஆசீர்வதித்தார்; இப்பொழுதும் நான் என் வீட்டுக்குச் சம்பாதித்துக்கொள்வது எப்பொழுதென்றான்.

௩௧ அப்பொழுது இவன், நான் உனக்கென்ன கொடுக்கவேண்டும் என்றான். யாக்கோபு சொன்னதாவது: நீர் எனக்கு ஒன்றும் கொடுக்கவேண்டாம்; நான் சொல்வதை நீர் எனக்குச் செய்தால், உம்முடைய மந்தையைத் திரும்ப மேய்த்துக் காப்பேன்.

௩௨ நான் இன்றைக்கு உம்முடைய மந்தையையெல்லாம் கடந்துவந்து, அதிலே இருக்கிற ஆடுகளில் புள்ளியுள்ளதும், மறுப்பற்றினதுமானயாவையும், கறுப்பானயாவையும், வெள்ளாடுகளில் மறுப்பற்றினதும், புள்ளியுள்ளதுமான யாவையும் பிரித்துப்போடுவேன்; அப்படிக்கொத்தவை இனி என்னுடைய சம்பளமாயிருப்பது.

Digitized by Google

௩௩ அப்படியே இனிமேல் என் சம்பளக்காரியம் உமக்கு முன்பாகத் திரத்தக்கதாக நீர் வரும்பொழுது, என்னுடைய நீதி எனக்குப் பேசும்; வெள்ளாடுகளில் புள்ளியில்லாததும், மறுப்பற்றியிராததும், ஆடுகளில் கறுப்பில்லாததுமானவை எவையாகிலும் என்னிடத்திலே இருந்தால், அவை திருடினவைகளாயிருக்குமென்றான்.

௩௪ ¶ அப்பொழுது லாபான், இதோ உன் வார்த்தையின்படியானால் வாசியென்று சொல்லி,

௩௫ அந்நாளிலே கலப்பு நிறமுள்ளதும் மறுப்பற்றினதுமான கடாக்களையும், புள்ளியுள்ளதும் மறுப்பற்றினதுமான எல்லா வெள்ளாடுகளையும், ஆடுகளில் வெண்மைபற்றினவைகளெல்லாவற்றையும், கறுப்பானவைகளெல்லாவற்றையும், பிரித்துக்கொண்டு, தன் குமாரர்கையில் ஒப்புவித்து,

௩௬ தனக்கும் யாக்கோபுக்கும் மூன்றுநாள் பயணதூரம் வைத்தான்; லாபானுடைய மற்ற ஆடுகளை யாக்கோபு மேய்த்தான்.

௩௭ ¶ அப்பொழுது யாக்கோபு பச்சையாயிருக்கிற புன்னைமரமும், அவேலான் கொட்டைச்செடியும், கல்தாணியக் கொட்டை மரமுமான கொப்புகளை வாங்கிக்கொண்டு, கரணை கரணையாய் வெண்மைகாணப் பட்டையை உரித்து,

௩௮ தான் உரித்த கொப்புகளை ஆடுகள் குடிக்கவருகிற கால்வாய்களிலும் தண்ணீர்த்தொட்டிகளிலும், ஆடுகளுக்கு எதிராகப் போட்டுவைத்தான்; ஏனென்றால் அவைகள் குடிக்கவருகையில் பொலியும்.

௩௯ ஆடுகள் கொப்புகளுக்கு முன்பாகப் பொலிந்தபடியினாலே, ஆடுகள் கலப்பு நிறமுள்ளதும் புள்ளியுள்ளதும் மறுப்பற்றினதுமான குட்டிகளைப்போட்டன.

௪௰ அந்த ஆட்டுக்குட்டிகளை யாக்கோபு பிரித்து, ஆடுகளை லாபானுடைய மந்தையிலிருக்கும் கலப்பு நிறமானவைகளுக்கும் கறுப்பானவைகள் எல்லாவற்றிற்கும் எதிராக நிறுத்தி, தனக்குத் தனிப்புற மந்தைகளை வைத்துக்கொண்டு, இவைகளை லாபானின் மந்தையோடே வைக்காதிருந்தான்.

௪௧ சம்பவித்ததேதென்றால், காலத்திலே பொலிகிற ஆடுகள் பொலியும்பொழுதெல்லாம் யாக்கோபு அந்தக் கொப்புகளைக் கால்வாய்களில் ஆடுகளின் கண்களுக்கு முன்பாக அவைகள் கொப்புகளுக்கெதிரே பொலியும்படிக்குப் போட்டுவைப்பான்.

௪௨ ஆடுகள் காலம் பிந்திப் பொலியும்பொழுதோவெனில், அவைகளைப் போடாதேபோனான்; ஆகையால் காலம் பிந்திப் பிறந்தவைகள் லாபானையும், காலத்திலே பிறந்தவைகளோவெனில், யாக்கோபையும் சேர்ந்தது.

௪௩ இந்தப்பிரகாரமாக இந்தப் புருஷன் மிகுதியும் பெருகினான்; அவனுக்குத் திரளாடுகளும், வேலைக்காரிகளும், வேலைக்காரரும், ஒட்டகங்களும், கழுதைகளும் உண்டாயின.

## ௩௧. அதிகாரம்.

எங்கள் தகப்பனுக்குண்டானவைகளை எல்லாம் யாக்கோபு எடுத்துக்கொண்டானென்றும், எங்கள் தகப்பனுக்குண்டானதினாலே இந்த ஆஸ்தியை எல்லாம் சம்பாதித்தானென்றும், லாபானின் குமாரர் சொன்ன வார்த்தைகளை அவன் கேட்டான்.

௨ லாபானின் முகத்தை யாக்கோபு பார்த்தபொழுது, இதோ அது நேற்றும் முந்தநேற்றும் இருந்ததுபோலத் தனக்கிருந்ததில்லை என்று கண்டான்.

௩ ¶ கர்த்தரோவென்றால் யாக்கோபுடனே, உன் பிதாக்களின் தேசத்திற்கும் உன் இனத்தண்டைக்கும் திரும்பிப்போ; *உன்னோடேகூட இருப்போம் என்றார்.

*௧ மோ. ௨௮. ௧௫.

௪ அப்பொழுது யாக்கோபு ராகேலையும் லேயாளையும் வெளியிலே தன் மந்தையண்டைக்கழைத்தனுப்பி,

Digitized by Google

௫ இவர்களோடே சொன்னதாவது: உங்கள் தகப்பனுடைய முகம் நேற்றும் முந்தநேற்றும் இருந்ததுபோல எனக்கிருக்கவில்லை என்று நான் காண்கிறேன்; ஆனால் என் தகப்பனுடைய பராபரன் என்னோடே கூட இருந்தார்.

௬ உங்கள் தகப்பனுக்கு என் முழுப்பலத்தினாலும் ஊழியம்செய்தேனென்று நீங்கள் அறிவீர்கள்.

௭ உங்கள் தகப்பனோவெனில், என்னை எத்தி என் சம்பளத்தைப் பத்துமுறை மாற்றினான்; ஆனால் எனக்குத் தீங்குசெய்யப் பராபரன் அவனுக்கு இடம்கொடுத்ததில்லை.

௮ புள்ளியுள்ளவைகள் உன் சம்பளமாயிருக்குமென்று அவன் சொன்னபொழுது, மந்தையெல்லாம் புள்ளியுள்ள குட்டிகளைப் போட்டது; கலப்புநிறமானவைகள் உன் சம்பளமாயிருக்குமென்று அவன் சொன்னபொழுதோவெனில்,மந்தையெல்லாம் கலப்புநிறக் குட்டிகளைப் போட்டது.

௯ இந்தப்பிரகாரமாகப் பராபரன் உங்கள் தகப்பனுடைய மந்தையைப் பறித்து எனக்குக் கொடுத்தார்.

௰ ஆடுகள் பொலியுங்காலத்திலே சம்பவித்ததேதென்றால், நான் சொப்பனத்தில் என் கண்களை ஏறெடுக்கும்பொழுது, இதோ ஆடுகளின்மேல் ஏறுகிற கடாக்கள் கலப்புநிறமானவைகளும் புள்ளியுள்ளவைகளும் பொட்டுள்ளவைகளுமாயிருந்ததென்று கண்டேன்.

௰௧ பராபரனுடைய தூதனானவர் சொப்பனத்தில் என்னுடனே, யாக்கோபே என்றார்; இதோ இருக்கிறேனென்றேன்.

௰௨ அப்பொழுது அவர் சொன்னதாவது: உன் கண்களை ஏறெடுத்துப்பார்; ஆடுகளின்மேல் ஏறுகிற கடாக்களெல்லாம் கலப்புநிறமானவைகளும், புள்ளியுள்ளவைகளும், பொட்டுள்ளவைகளுமாயிருக்கின்றன; ஏனெனில் லாபான் உனக்குச் செய்கின்றவைகளையெல்லாம் கண்டோம்.

௰௩ *நீ தூணை அபிஷேகம்பண்ணி, எனக்கு ஒரு பொருத்தனையைப் பண்ணின பேத்தேலிலே உனக்குத் தரிசனையான பராபரன் நாம்தானே; இப்பொழுதும் நீ எழுந்து இந்தத் தேசத்தைவிட்டுப் புறப்பட்டு, உன் இனத்தின் தேசத்திற்குத் திரும்பிப் போ என்று சொன்னாரென்றான்.

*க மோ. உஅ. ௰௮. ௨.

௰௪ ¶ அப்பொழுது ராகேலும் லேயாளும் அவனுக்குப் பிரதியுத்தாரமாகச் சொன்னதாவது: எங்கள் தகப்பன் வீட்டிலே எங்களுக்கு இனிப் பங்கும் சுதந்தரமும் உண்டோ?

௰௫ அவரால் நாங்கள் அந்நியராய் எண்ணப்பட்டதில்லையோ? ஏனெனில் அவர் எங்களை விற்று, எங்கள் பணத்தைத் தின்னவே தின்றார்.

௰௬ ஆகையால் பராபரன் எங்கள் தகப்பனிடத்தில் பறித்த ஐசுவரியமெல்லாம் எங்களுடையதும் எங்கள் பிள்ளைகளுடையதும்தானே; இப்பொழுதும் பராபரன் உம்மோடே சொன்னவை எல்லாவற்றையும் செய்யும் என்றார்கள்.

௰௭ ¶ அப்பொழுது யாக்கோபு எழுந்து, தன் பிள்ளைகளையும் தன் பெண்சாதிகளையும் ஒட்டகங்கள்மேல் ஏற்றிக்கொண்டு,

௰௮ தன் மிருகஜீவன்கள் அனைத்தையும் தான் பதான்அராமிலே தேடிச் சம்பாதித்த தன்னுடைய மந்தை ஆஸ்தி எல்லாவற்றையும் கூட்டிக்கொண்டு, கானான்தேசத்திலே தன் தகப்பனாகிய ஈசாக்கண்டைக்குப் போகப் புறப்பட்டான்.

௰௯ லாபானோவெனில், தன் ஆடுகளை மயிர் கத்திரிக்கப் போயிருந்தான்; அந்தச் சமயத்திலே ராகேல் தன் தகப்பனுடைய விக்கிரகங்களைத் திருடிக்கொண்டாள்.

௨௰ அப்படியே யாக்கோபு, தான் ஓடிப்போகிறதைச் சூரியனாகிய லாபானுக்கு அறிவியாததினால், அவன் மனதைக் கள்ளவு செய்து,

௨௧ தனக்குண்டானவைகளை எல்லாம்

Digitized by Google

கூட்டிக்கொண்டு ஓடிப்போனான்; அவன் எழுந்து ஆற்றைக்கடந்து, கிலெயாத் பர்வதத்திற்கு நேராய்த் தன் முகத்தைத் திருப்பிப்போனான்.

௨௨ ¶ ஆனால் யாக்கோபு ஓடிப்போனது மூன்றாம் நாளிலே லாபானுக்கு அறிவிக்கப்பட்டது.

௨௩ அப்பொழுது அவன் தன் சகோதரரைக் கூட்டிக்கொண்டு, ஏழுநாள் பயணம் அவனைப் பின்தொடர்ந்து, கிலெயாத் பர்வதத்திலே அவனைக் கிட்டிச்சேர்ந்தான்.

௨௪ ஆனால் பராபரன் இராத்திரியிலே சூரியனாகிய லாபானண்டைக்குச் சொப்பனத்திலே வந்து, அவனோடே, நீ யாக்கோபோடே நலம்தப்பித் தீங்காய்ப் பேசாதபடிக்கு எச்சரிக்கையாயிருவென்றார்.

௨௫ லாபான் யாக்கோபைக் கிட்டிச்சேர்ந்தான்; யாக்கோபு பர்வதத்திலே தன் கூடாரத்தைப் போட்டிருந்தான்; லாபானும் தன் சகோதரரோடேகூடக் கிலெயாத் பர்வதத்திலே கூடாரம்போட்டான்.

௨௬ ¶ அப்பொழுது லாபான் யாக்கோபோடே சொன்னதாவது: நீ என் மனதைக் களவுசெய்து, என் குமாரத்திகளைப் பட்டயத்தினால் சிறைபிடித்தவர்களைப்போலக் கொண்டுபோனது என்ன செய்கை?

௨௭ நீ ஓடிப்போவதை மறைத்து, எனக்கு அதை அறிவியாமல் திருட்டளவாய் என்னைவிட்டுப் போனதென்ன? நான் உன்னைச் சந்தோஷத்தோடும், சங்கீதங்களோடும், மேளத்தோடும், சுரமண்டலத்தோடும், அனுப்புவேனே.

௨௮ என் பிள்ளைகளையும், என் குமாரத்திகளையும் நான் முத்தம்செய்ய நீ இடங்கொடாதேபோனதென்ன? இப்பொழுதும் நீ இப்படிச் செய்ததை மதியில்லாமல் செய்தாய்.

௨௯ உங்களுக்குப் பொல்லாப்புச்செய்ய என் கையிலே வல்லமை இருக்கும்; ஆனால், நீ யாக்கோபோடே நலம்தப்பித் தீங்காய்ப் பேசாதபடிக்கு எச்சரிக்கையாயிருவென்று உங்கள் தகப்பனுடைய பராபரன் இராத்திரி என்னோடே சொன்னார்.

௩௦ இப்பொழுதும் உன் தகப்பனுடைய வீட்டின்மேலுள்ள வாஞ்சையினாலே நீ புறப்பட்டுப் போகிறபொழுது, என் தேவர்களை ஏன் திருடிக்கொண்டாய் என்றான்.

௩௧ ¶ யாக்கோபு லாபானுக்குப் பிரதியுத்தாரமாகச் சொன்னதாவது: உம்முடைய குமாரத்திகளை என்னிடத்திலிருந்து பறித்துக்கொள்வீரோ என்று நான் பயப்பட்டதினாலே இப்படி வந்துவிட்டேன்.

௩௨ ஆனால் யாரிடத்தில் உம்முடைய தேவர்களைக் கண்டுபிடிப்பீரோ, அவன் உயிரோடிருக்கவேண்டாம்; என் வசத்திலே உம்முடையதாயிருக்கிறதேதென்று நீர் நம்முடைய சகோதரருக்கு முன்பாகப் பார்த்தறிந்து, அதை எடுத்துக்கொள்ளுமென்றான்; ஏனெனில் ராகேல் அவைகளைத் திருடினதை யாக்கோபு அறியாதிருந்தான்.

௩௩ அப்பொழுது லாபான் யாக்கோபின் கூடாரத்திலும் லேயாளின் கூடாரத்திலும் இரண்டு வேலைக்காரிகளின் கூடாரத்திலும் பிரவேசித்து, அவைகளைக் கண்டுபிடியாமல், லேயாளின் கூடாரத்திலிருந்து புறப்பட்டு ராகேலின் கூடாரத்திலே வந்தான்.

௩௪ ராகேலோவெனில் சுரூபங்களை எடுத்து,ஒட்டகக்கல்லணையில்போட்டு,அவைகள்மேல் உளுக்கார்ந்திருந்தாள்; லாபான் கூடாரமெங்கும் தடவிப்பார்த்து, அவைகளைக் கண்டுபிடியாதே போனான்.

௩௫ அவள் தன் தகப்பனோடே, நான் உமக்கு முன்பாக எழுந்திருக்கக்கூடாதது, என் ஆண்டவனுடைய கண்களுக்குத் தாங்கலாயிருக்கவேண்டாம்; ஏனெனில் ஸ்திரிகளுக்குள்ள வழிபாடு எனக்கு வந்திருக்கின்றது என்றாள்; அப்படியே அவன் சோதித்தும் அந்தச் சுரூபங்களைக் கண்டுபிடியாதே போனான்.

௩௬ ¶ அப்பொழுது யாக்கோபுக்குக் கோபமூண்டு லாபானோடே வாக்குவா

Digitized by Google

தம்பண்ணி, லாபானுக்குப் பிரதியுத்தார மாகச்சொன்னதாவது: நீர் என்னை எரிபந்தமாய்ப் பின்தொடருகிறதற்கு என்னுடைய மீறுதலென்ன? என் பாவமென்ன?

௩௭ என் தட்டுமுட்டுகளையெல்லாம் தடவிப்பார்த்தீரே; உம்முடைய வீட்டுத் தட்டுமுட்டுகளிலெல்லாம் எதைக் கண்டுபிடித்தீர்; என் சகோதரருக்கும் உம்முடைய சகோதரருக்கும்முன்பாக இங்கே வையும்; அவர்கள் எங்கள் இருவருக்கும் நடுவருக்கக்கடவர்கள்.

௩௮ இந்த இருபதுவருஷம் உம்மிடத்திலே நான் இருந்தேன்; உம்முடைய ஆடுகளும் வெள்ளாடுகளும் சினை அழிந்ததில்லை; உம்முடைய மந்தையின் கடாக்களை நான் தின்றதில்லை.

௩௯ பீறுண்டதை நான் உம்மண்டைக்குக் கொண்டுவாராமல், அதற்கு நான் உத்தரவாதம் பண்ணினேன்; பகலில் களவு போனதையும், இரவில் களவுபோனதையும், என் கையில் கேட்டீர்.

௪௦ பகலிலே வெயிலும், இரவிலே குளிரும், என்னைப் பட்சித்தன; என் நித்திரை என் கண்களைவிட்டு விலகிற்று; இப்படியிருந்தேன்.

௪௧ இந்த இருபதுவருஷம் உம்முடைய வீட்டிலே இருந்தேன்; பதினாலுவருஷம் உம்முடைய இரண்டு குமாரத்திகளுக்காகவும் ஆறுவருஷம் உம்முடைய மந்தைக்காகவும் உம்மைச் சேவித்தேன்; பத்துமுறை என் சம்பளத்தை மாற்றினீர்.

௪௨ என் பிதாவின் பராபரனாகிய ஆபிரகாமின் பராபரனும், இசாக்கின் பயமும் எனக்கிராதேபோனால், நீர் இப்பொழுது வெறுமையே என்னை அனுப்பிவிடுவீர்; பராபரனோவென்றால், என் சிறுமையையும், என் கைகளின் வருத்தத்தையும் பார்த்து, இராத்திரி உம்மைக் கடிந்துகொண்டாரென்றான்.

௪௩ ¶ அப்பொழுது லாபான் யாக்கோபுக்குப் பிரதியுத்தாரமாகச் சொன்னதாவது: குமாரத்திகள் என் குமாரத்திகளும், பிள்ளைகள் என் பிள்ளைகளும், மந்தை என் மந்தையும்தானே; நீ காண்கிறவை எல்லாம் என்னுடையவைகள்; இந்த என்னுடைய குமாரத்திகளுக்கும் அல்லது அவர்கள் பெற்ற பிள்ளைகளுக்கும்இன்றுஎன்னசெய்குவேன்?

௪௪ இப்பொழுதும் வா; நானும் நீயும் ஒரு உடம்படிக்கையைப் பண்ணிக்கொள்ளுவோம்; அது எனக்கும் உனக்கும் நடுவான சாட்சியாயிருப்பதாக என்றான்.

௪௫ ¶ அப்பொழுது யாக்கோபு ஒரு கல்லை எடுத்து, அதைத் தூணாக நிறுத்தினான்.

௪௬ பிற்பாடு யாக்கோபு தன் சகோதரரோடே கற்களைச் சேருங்களென்றான்; அப்பொழுது, கற்களை எடுத்துக்கொண்டுவந்து, ஒரு குவியலுண்டாக்கி, அந்தக் குவியலின்மேல் அசனம்பண்ணினார்கள்.

௪௭ அதற்கு லாபான் எகார்சகதூத்தா என்று பெயரிட்டான்; யாக்கோபோவெனில் அதற்குக் காலெயேத் என்று பெயரிட்டான்.

௪௮ ¶ இந்தக் குவியல் இன்று எனக்கும் உனக்கும் நடுவான சாட்சி என்று லாபான் சொன்னபடியினாலே, அதின்பெயர், காலெயேத் என்னப்பட்டது.

௪௯ மிஸ்பாவென்றும் சொல்லப்பட்டது; ஏனெனில் அவன் சொன்னதாவது: நாம் ஒருவரை ஒருவர் விட்டு மறைந்தபிற்பாடு நீ என் குமாரத்திகளை உபத்திரவப்படுத்தி, என் குமாரத்திகளைத்தவிர வேறு ஸ்திரிகளை விவாகம்பண்ணினாயானால், கர்த்தர் எனக்கும் உனக்கும் நடுவராய்க் கண்காணிக்கக்கடவர்.

௫௦ நம்முடனே ஒருவருமில்லை; பார், பராபரனே எனக்கும் உனக்கும் நடுவான சாட்சி என்றான்.

௫௧ பின்னையும் லாபான் யாக்கோபோடே சொன்னதாவது: இதோ இந்தக் குவியல், இதோ எனக்கும் உனக்கும் நடுவாக நான் போட்ட தூண்.

௫௨ தீங்குசெய்ய நான் இந்தக் குவியலை

Digitized by Google

கடந்து உன்னண்டைக்கு வாராமலும், நீ இந்தக் குவியலையும் இந்தத் தூணையும்கடந்து என்னண்டைக்கு வாராமலும் இருக்கிறதற்கு, இந்தக் குவியலும் சாட்சி, இந்தத் தூணும் சாட்சி.

௫௩ ஆபிரகாமின் பராபரனும் நாகோரின் பராபரனும் அவர்கள் பிதாக்களின் பராபரனுமானவர் நமக்குள்ளே நடுவராயிருக்கக்கடவரென்றான்; அப்பொழுது யாக்கோபு தன் தகப்பனாகிய இசாக்குடைய பயத்தின்மேல் ஆணையிட்டான்.

௫௪ ¶ பிற்பாடு யாக்கோபு பர்வதத்தின்மேல் பலியிட்டு, தன் சகோதரரை அப்பம் புசிக்க அழைத்தான்; அப்படியே அப்பம் புசித்து, பர்வதத்திலே இராத்தங்கினார்கள்.

௫௫ லாபான் அதிகாலமே எழுந்திருந்து, தன் பிள்ளைகளையும் தன் குமாரத்திகளையும் முத்தஞ்செய்து, அவர்களை ஆசீர்வதித்தான்; பிற்பாடு லாபான் புறப்பட்டுத் தன்னிடத்திற்குத் திரும்பிப்போனான்.

## ௩௨. அதிகாரம்.

யாக்கோபு தன் வழியே போகப்புறப்பட்டான்; அப்பொழுது *பராபரனுடைய தூதர் அவனைச் சந்தித்தார்கள். *சங். ௩௪. ௮.

௨ *யாக்கோபு அவர்களைக் காண்கிறபொழுது, இது பராபரனுடைய இராணுவமென்று சொல்லி, அந்தத் தலத்திற்கு மக்னாயீமென்று பெயரிட்டான். *௨ இரா. ௬. ௰௬, ௰௭.

௩ ¶ பிற்பாடு யாக்கோபு தனக்குமுன்னாக ஏதோம் சீமையாகிய சேயீர் தேசத்திலிருக்கிற தன் சகோதரனாகிய ஏசாவண்டைக்குத் தூதரை அனுப்பி,

௪ அவர்களுக்குக் கற்பித்ததாவது: நீங்கள் என் ஆண்டவனாகிய ஏசாவோடே சொல்லவேண்டியதேதெனில், நான் லாபானிடத்திலே இற்றைவரைக்கும் தங்கித் தரித்திருந்தேன்.

௫ எனக்கு எருதுகளும், கழுதைகளும், ஆடுகளும், வேலைக்காரரும், வேலைக்காரிகளும் உண்டு; உம்முடைய கண்களில் எனக்குத் தயவுகிடைக்கத்தக்கதாக என் ஆண்டவனுக்கு இதை அறிவிக்க மனிதரை அனுப்பினேனென்று உம்முடைய ஊழியக்காரனாகிய யாக்கோபு சொல்லச் சொன்னானென்பதுதான் என்றான்.

௬ ¶ அந்தத் தூதர்கள் யாக்கோபண்டைக்குத் திரும்ப வந்து, நாங்கள் உம்முடைய சகோதரனாகிய ஏசாவண்டைக்குப் போய் வந்தோம்; அவனும் நானூறுபேரோடே உமக்கெதிராக வருகிறான் என்றார்கள்.

௭ ¶ அப்பொழுது யாக்கோபு மிகவும் பயந்து, மன இடுக்கம் அடைந்து, தன்னண்டையிலிருந்த சனத்தையும், ஆடுமாடுகளையும், ஒட்டகங்களையும் இரண்டு பாளயமாகப் பிரித்து,

௮ ஏசா ஒரு பாளயத்தின்மேல் வந்து அதை முறிய அடித்தால், மறுபாளயம்தப்ப இடம் உண்டு என்றான்.

௯ ¶ பிற்பாடு யாக்கோபு சொன்னதாவது: *என் தகப்பனாகிய ஆபிரகாமின் பராபரனும், என் தகப்பனாகிய இசாக்கின் பராபரனுமானவரே, உன் தேசத்திற்கும், உன் இனத்தண்டைக்கும் திரும்பிப்போ; உனக்கு நன்மை செய்வோம் என்று என்னோடே சொல்லியிருக்கிற கர்த்தாவே, *க மோ. ௩௧. ௩.

௰ *தேவரீர் உம்முடைய அடியானுக்குச் செய்துவந்த எல்லாக் கிருபைகளுக்கும், எல்லா உண்மைக்கும் நான் எம்மாத்திரம்? ஏனெனில் நான் என் கோலும் கையுமாய் இந்த யோர்தானைக் கடந்துபோனேன்; இப்பொழுதோவெனில், இரண்டு பாளயங்களுக்கு உடையவனானேன்.
*௨ சாமு. ௭. ௰௮.

௰௧ என் சகோதரனாகிய ஏசாவின் கைக்கு என்னைத் தப்புவியும்; அதேனெனில் அவன் வந்து என்னைத் தாயும் பிள்ளைகளுமாய் மடக்கடிப்பானோவென்று அவனுக்கு நான் பயந்திருக்கிறேன்.

௰௨ நீரோவெனில் *நாம் உனக்கு நன்மை

Digitized by Google

செய்யவே செய்து, உன் வித்தை ஏராளத்தினாலே எண்ணத்தொலையாத கடற்கரைமணலைப்போலாக்குவோமென்று சொன்னீரே என்றான். *க மோ. ௨௮. ௰௩, ௰௪.

௰௩ ¶ அவன் அன்று இராத்திரி அங்கே தங்கி, தன் கைக்கு உதவினவைகளிலே தன் சகோதரனாகிய ஏசாவுக்கு வெகுமானமாக,

௰௪ இருநூறு வெள்ளாடுகளையும், இருபது வெள்ளாட்டுக் கடாக்களையும், இருநூறு ஆடுகளையும், இருபது ஆட்டுக்கடாக்களையும்,

௰௫ பால்கொடுக்கிற முப்பது ஒட்டகங்களையும், அவைகளின் குட்டிகளையும், நாற்பது கிடாரிகளையும், பத்துக் காளை எருதுகளையும், இருபது கோளிகைக் கழுதைகளையும், பத்துக் கழுதைக்குட்டிகளையும் பிரித்தெடுத்து,

௰௬ வேலைக்காரர்கையில் ஒவ்வொரு மந்தைகளைத் தனித் தனியாக ஒப்புவித்து, தன் வேலைக்காரரோடே நீங்கள் எனக்கு முன்னாய்த் தாண்டிப்போய், மந்தை மந்தைக்கும் இடம்விடுங்களென்று சொல்லி,

௰௭ முந்தினவனுக்குக் கற்பித்ததாவது: என் சகோதரனாகிய ஏசா உனக்கு எதிர்ப்பட்டு நீ யாருடைய மனிதன்? நீ எங்கே போகிறாய்? உனக்கு முன்னாகப் போகிற இவைகள் யாருடையவைகளென்று உன்னைக் கேட்டால்,

௰௮ அப்பொழுது நீ இது உம்முடைய அடியக்காரனாகிய யாக்கோபுடையது; இது என் ஆண்டவனாகிய ஏசாவுக்கு அனுப்பப்படும் வெகுமானம்; இதோ அவனும் எங்கள் பிறகாலே வருகிறானென்று சொல் என்றான்.

௰௯ இரண்டாம் மூன்றும் வேலைக்காரனுக்கும் மந்தைகளின் பிறகாலே போகிற அனைவருக்கும் அவன் கற்பித்ததாவது: நீங்கள் ஏசாவைக் காணும்பொழுது, இந்தப்பிரகாரமாக அவனோடே சொல்லி,

௨௰ இதோ உன் அடியக்காரனாகிய யாக்கோபு எங்கள் பிறகாலே வருகிறானென்கிறதையும் சொல்லுங்களென்று கற்பித்தான்; ஏனெனில் எனக்குமுன்னாகப்போகிற வெகுமானத்தினாலே அவன் முகத்தைக் குளிரப்பண்ணுவேன்; பிற்பாடு அவன் முகத்தைப் பார்ப்பேன்; அப்பொழுது என்பேரில் தயவு வைப்பானாக்கும் என்றான்.

௨௧ ¶ அப்படியே வெகுமானம் அவனுக்குமுன்னாகப் போயிற்று; அவனோவெனில் அன்று இராத்திரிப் பாளயத்திலே தங்கி,

௨௨ இராத்திரியிலே எழுந்திருந்து, தன் இரண்டு பெண்சாதிகளையும் தன் இரண்டு வேலைக்காரிகளையும் தன்னுடைய பதினொரு குமாரரையும் அழைத்துக்கொண்டு, யாப்போக்கென்ற ஆற்றின் துறையைக் கடந்தான்.

௨௩ அவர்களை அழைத்துக்கொண்டு, ஆற்றைக் கடக்கப்பண்ணி, தனக்குண்டானவைகளையும் அக்கரைப்படுத்தினான்.

௨௪ ¶ ஆனால் யாக்கோபு பிந்தித் தனித்திருந்தான்; அப்பொழுது ஒரு புருஷன் பொழுதுவிடியும்மட்டும் அவனோடே போராடி,

௨௫ அவனை மேற்கொள்ளக் கூடாதென்று கண்டு, அவனுடைய கில் இடுப்புச்சந்து தொட்டார்; அதினால் யாக்கோபின் தொடை அவரோடே போராடுகையில் சுளுக்கிற்று.

௨௬ அவர் நாம் போகட்டும்; ஏனெனில் பொழுது விடிகிறது என்றார்; ஆனால் இவன், *நீர் என்னை ஆசீர்வதித்தாலொழிய உம்மைப் போகவொட்டேனென்றான். *ஓசே. ௰௨. ௪.

௨௭ அவர் இவனுடனே, உன் பேரென்னவென்றார்; யாக்கோபென்றான்.

௨௮ அப்பொழுது அவர், *உன் பேர் இனி யாக்கோபு என்னப்படாமல் இஸ்ரவேலென்னப்படும்; ஏனெனில் பராபரனோடும் மனிதரோடும் போராடி மேற்கொண்டாயென்றார். *க மோ. ௩௫. ௰.

௨௯ அப்பொழுது யாக்கோபு, உம்மு

Digitized by Google

டைய நாமத்தை எனக்கறிவியுமென்று கேட்டான்; அதற்கவர், நீ நம்முடைய நாமத்தைக் கேட்கிறதென்னவென்று சொல்லி, அங்கே அவனை ஆசீர்வதித்தார்.

௩௰ அப்பொழுது யாக்கோபு, பராபரனை முகமுகமாய்க் கண்டேன்; என்னாத்துமாவும் தப்புவிக்கப்பட்டதென்று சொல்லி, அந்த ஸ்தலத்திற்குப் பெனீயேலென்று பேரிட்டான்.

௩௰௧ ¶ அவன் பெனீயேலைக் கடந்துபோகையில், சூரியன் அவனுக்கு உதயமாயிற்று; அவனோவெனில் இடுப்புச் சுளுக்கினாலே நொண்டி நடந்தான்.

௩௰௨ அவர் யாக்கோபுடைய தொடைக்கிலின் ஒட்டுநரம்பைத் தொட்டபடியினாலே, இஸ்ரவேல் புத்திரர் இந்நாள்வரைக்கும் தொடையின் கிலிலிருக்கிற ஒட்டுநரம்பைப் புசியாதே போகிறார்கள்.

## ௩௩. அதிகாரம்.

பிற்பாடு யாக்கோபு தன் கண்களை ஏறெடுத்து, இதோ, *ஏசாவையும், அவனோடேகூட நானூறு மனிதரையும் வரக்கண்டு, பிள்ளைகளை லேயாளண்டையிலும், ராகேலண்டையிலும், இரண்டு வேலைக்காரிகளண்டையிலும் வெவ்வேறே பிரித்து வைத்து, *க மோ. ௩௨. ௬.

௨ வேலைக்காரிகளையும், அவர்கள் பிள்ளைகளையும் முன்னாகவும், லேயாளையும் அவள் பிள்ளைகளையும் பிறகாலேயும், ராகேலையும் யோசேப்பையும் பின்னாகவும் நிறுத்தி,

௩ தான் அவர்களுக்கு முன்னாக நடந்துபோய், தன் சகோதரன் கிட்டச் சேரும் அளவும் ஏழுவிசை தரைமட்டும் குனிந்து வணங்கினான்.

௪ அப்பொழுது ஏசா அவனுக்கு எதிர்கொண்டோடி, அவனைக் கட்டிக்கொண்டு, அவன் கழுத்திறுகப்பூண்டு, அவனை முத்தம்செய்தான்; இருவரும் அழுதார்கள்.

௫ அவன் தன் கண்களை ஏறெடுத்து, பெண்சாதிகளையும் பிள்ளைகளையும்கண்டு, உன்னோடிருக்கிற இவர்கள் யார் என்றான்? அதற்கிவன், பராபரன் உம்முடைய ஊழியக்காரனுக்கு அருளின பிள்ளைகளென்றான்.

௬ அப்பொழுது வேலைக்காரிகளும், அவர்கள் பிள்ளைகளும் சேரவந்து வணங்கினார்கள்.

௭ லேயாளும் அவள் பிள்ளைகளும் சேரவந்து வணங்கினார்கள்; பிற்பாடு யோசேப்பும் ராகேலும் சேர்ந்துவந்து வணங்கினார்கள்.

௮ அப்பொழுது அவன், நான் சந்தித்த அந்த உன்னுடைய தண்டெல்லாம் எதற்கென்றான்; அதற்கிவன், என் ஆண்டவனுடைய கண்களில் எனக்குத் தயவுகிடைக்கிறதற்கு என்றான்.

௯ ஆனால் ஏசா, எனக்கு நிரம்ப இருக்கின்றது என் சகோதரனே, உன்னுடையது உனக்கிருக்கட்டும் என்றான்.

௰ யாக்கோபோவெனில் சொன்னதாவது: அப்படி அல்ல, உம்முடைய கண்களில் எனக்குத் தயவுகிடைத்ததேயாகில், என் காணிக்கையை என் கையிலே வாங்கிக்கொள்ளும்; ஏனென்றால் நீர் என்னைப் பிரியமாய்ப் பார்க்கையில், நான் உம்முடைய முகத்தைப் பராபரனுடைய முகத்தைக் காண்கிறதுபோலக் கண்டேன்.

௰௧ உமக்குக் கொண்டுபோகப்பட்ட *என்னுடைய ஆசீர்வாதத்தை வாங்கிக்கொள்ளும்; ஏனெனில் பராபரன் எனக்குத் தந்தருளினார்; வேண்டியவைகளெல்லாம் எனக்கிருக்கின்றன என்று சொல்லி, அவனை வருந்திக்கொண்டான்; அப்பொழுது அவன் அதை வாங்கிக்கொண்டு,
*க சாமு. ௨௫. ௨௭: ௩௰. ௨௬.

௰௨ நாம் பயணம் புறப்பட்டுப்போவோம் வா, உனக்குமுன்னாக நடப்பேனென்றான்.

௰௩ அப்பொழுது இவன் அவனோடே சொன்னதாவது: பிள்ளைகள் இளம்பிள்ளைகளென்றும், பால்கொடுக்கிற ஆடுமாடுகள் என்னோடிருக்கின்றதென்றும், என் ஆண்

Digitized by Google

டவன் அறிவார்; அவைகளை ஒரேநாளில் துரிதமாய் ஓட்டினால் மந்தை எல்லாம் செத்துப்போம்.

௰௪ என் ஆண்டவன் தன் ஊழியக்காரனுக்கு முன்னாகப்போவாராக; நானோவெனில், சேயீரிலே என் ஆண்டவனண்டைக்கு வரும்மட்டும் எனக்குமுன் நடக்கிற மந்தைகளின் கால்நடைக்கும் பிள்ளைகளின் கால்நடைக்கும் தக்க மெதுவாய் அவைகளை நடத்திக்கொண்டு வருவேனென்றான்.

௰௫ அப்பொழுது ஏசா என்னோடிருக்கிற சனத்தில் சிலரை நான் உன்னிடத்தில் நிறுத்தட்டுமே என்றான்; அதற்கிவன், அதேதுக்கு, என் ஆண்டவனுடைய கண்களில் எனக்குத் தயவுமாத்திரம் கிடைக்கட்டுமென்றான்.

௰௬ ¶ அப்படியே ஏசா அந்நாளிலே திரும்ப தன் வழியே சேயீருக்குப்போனான்.

௰௭ யாக்கோபோவென்றால், சுக்கோத்திற்குப் பயணம்பண்ணி, தனக்கு வீடுகட்டி, தன் மிருகஜீவன்களுக்குக் கொட்டாரங்களைப் போட்டான்; அதினாலே அந்த ஸ்தலத்திற்குச் சுக்கோத்தென்று பேர்தரித்தான்.

௰௮ ¶ யாக்கோபு பதான்அராமிலிருந்து வந்தபிற்பாடு கானான் தேசத்திலிருக்கிற சிகேமின் ஊருக்குச் சுகமாய் வந்து, ஊருக்கெதிரே பாளயம் இறங்கி,

௰௯ தன் கூடாரத்தை நாட்டும் வயல்வெளியின் நிலத்தைச் சிகேமின் தகப்பனாகிய ஏமோர் புத்திரர்கையிலே நூறுவெள்ளிக்காசுக்குக் கொண்டு,

௨௰ அங்கே ஒரு பலிபீடத்தைக் கட்டி, பராபரன் இஸ்ரவேலின் பராபரனென்று அதற்குப் பேரிட்டான்.

## ௩௰௪. அதிகாரம்.

லேயாள் யாக்கோபுக்குப் பெற்ற அவளுடைய குமாரத்தியாகிய தீனாள் தேசத்துக் குமாரத்திகளைப் பார்க்கப் புறப்பட்டாள்.

௨ அவளை ஏவியனான ஏமோரின் குமாரனும் தேசத்தின் பிரபுவுமாகிய சிகேமென்றவன் கண்டு, அவளை அழைத்துப்போய், அவளோடே சயனித்து, அவளைக் கற்பழித்தான்.

௩ அவன் ஆத்துமா யாக்கோபின் குமாரத்தியாகிய தீனாள்மேலே பிடிப்பாயிருந்தது; அவன் அந்தப் பெண்ணைச் சிநேகித்து, அந்தப் பெண்ணின் மனதுக்கு நட்பாய்ப் பேசினான்.

௪ சிகேம் தன் தகப்பனாகிய ஏமோருடனே, இந்தப் பெண்ணை எனக்குக் கொள்ளுமென்று சொன்னான்.

௫ தன் குமாரத்தியாகிய தீனாளை அவன் தீட்டுப்படுத்தினதை யாக்கோபு கேட்டபொழுது, அவன் குமாரர் அவனுடைய மந்தை அண்டையில் வெளியிலே இருந்தார்கள்; அவர்கள் வரும்மட்டும் யாக்கோபு மவுனமாயிருந்தான்.

௬ ¶ ஆனால் சிகேமின் தகப்பனாகிய ஏமோர் யாக்கோபோடே பேச அவனண்டைக்குப் புறப்பட்டுவந்தான்.

௭ யாக்கோபின் குமாரர் செய்தியை கேட்டபொழுது, வெளியிலிருந்து வந்தார்கள்; அவன் யாக்கோபின் குமாரத்தியோடே சயனித்ததென்கிற செய்யப்படாதமதி கெட்டகாரியத்தை இஸ்ரவேலிலே செய்ததினாலே, அந்த மனிதருக்கு மனம்நொந்து அவர்களுக்கு மிகவும் கோபமூண்டது.

௮ ஏமோர் அவர்களோடே பேசிச்சொன்னதாவது: என் குமாரனாகிய சிகேமின் ஆத்துமா உங்கள் குமாரத்தியின்மேல் வாஞ்சையாயிருக்கின்றது; அவளை அவனுக்குப் பெண்சாதியாகக் கொடுங்கள்.

௯ நீங்கள் எங்களோடே சம்பந்தம்கலந்து, உங்கள் குமாரத்திகளை எங்களுக்குக் கொடுத்து, எங்கள் குமாரத்திகளை உங்களுக்குக் கொண்டு,

௰ எங்களோடே குடியிருங்கள்; தேசம் உங்கள் முன்பாகக் கிடக்கிறது; அதிலே குடியிருந்து, வியாபாரம்பண்ணி, ஆஸ்தி

Digitized by Google

சம்பாதித்து, அதைக் கையாண்டுகொண்டிருங்களென்றான்.

௰௧ சீகேம் அவள் தகப்பனோடும் அவள் சகோதரரோடும் சொன்னதாவது: உங்கள் கண்களில் எனக்குத் தயவுகிடைக்கட்டும்; நீங்கள் எனக்குச் சொல்வதைத் தருவேன்.

௰௨ என்மேல் பரியத்தையும் காணிக்கையையும் திரளாய்ச் சுமத்துங்கள்; நீங்கள் எனக்குச் சொல்லும்படி தருவேன்; அந்தப் பெண்ணைமாத்திரம் எனக்குப் பெண்சாதியாகக் கொடுங்களென்றான்.

௰௩ ¶ அப்பொழுது யாக்கோபின் குமாரர் இவன் தங்கள் சகோதரியாகிய தீனாளைத் தீட்டுப்படுத்தினபடியால், சீகேமுக்கும் அவன் தகப்பனாகிய ஏமோருக்கும் சர்ப்பனையாய் மறுமொழி கொடுத்து, அவர்களோடே சொன்னதாவது:

௰௪ எங்கள் சகோதரியைச் சுன்னத்தில்லாத புருஷனுக்குக் கொடுக்குங்காரியத்தை நாங்கள் செய்யக்கூடாது; ஏனென்றால் அது எங்களுக்கு நிந்தையாயிருக்கும்.

௰௫ நீங்கள் உங்களிலிருக்கும் ஆண் அனைத்தையும் சுன்னத்துப்பண்ணுகிறதினாலே எங்களைப்போலானீர்களேயாகில், நாங்கள் உங்களுக்குச் சம்மதித்து,

௰௬ உங்களுக்கு எங்கள் குமாரத்திகளைக் கொடுத்து, உங்கள் குமாரத்திகளை எங்களுக்குக் கொண்டு, உங்களோடே குடியிருந்து ஏகசனமாவோம்.

௰௭ சுன்னத்துப்பண்ணிக்கொள்ள எங்கள் சொல்கேளாதே போனீர்களேயானால், நாங்கள் எங்கள் குமாரத்தியை அழைத்துக்கொண்டு போவோமென்றார்கள்.

௰௮ ¶ அவர்கள் வார்த்தைகள் ஏமோருக்கும், ஏமோரின் குமாரனாகிய சீகேமுக்கும், நன்றாய்க் கண்டன.

௰௯ அப்படிச்செய்ய அந்த வாலிபன் தாமதம்பண்ணினதில்லை; ஏனெனில் யாக்கோபுடைய குமாரத்தியின்மேல் பிரியம் வைத்தான்; அவன் தன் தகப்பன்வீட்டார் அனைவரிலும் கனமாய் எண்ணப்பட்டவனுமாயிருந்தான்.

௨௰ ஏமோரும் அவன் குமாரன் சீகேமும் தங்கள் பட்டணத்தின் ஒலிமுகவாசலில் வந்து, தங்கள் பட்டண மனிதரோடே பேசிச் சொன்னதாவது:

௨௧ இந்த மனிதர் நம்மோடே சமாதானமாயிருக்கிறார்கள்; ஆகையால் அவர்கள் தேசத்திலே குடியிருந்து அதிலே வியாபாரம்பண்ணட்டும்; இதோ அவர்களுக்கு முன்பாகத் தேசம் இருபுறமும் விஸ்தாரமாய்க் கிடக்கிறது; அவர்கள் குமாரத்திகளை நாம் நமக்குப் பெண்சாதிகளாகக்கொண்டு, நம்முடைய குமாரத்திகளை அவர்களுக்குக் கொடுப்போமே.

௨௨ இந்த மனிதர் சுன்னத்துப்பண்ணப்பட்டவர்களாயிருக்கிறதுபோல, நாம் நம்மிலுள்ள ஆண் அனைத்தையும் சுன்னத்துமாத்திரம்பண்ணினோமாகில், அவர்கள் நம்மோடே ஏகசனமாகக் குடியிருப்பதற்குச் சம்மதிப்பார்கள்.

௨௩ அவர்கள் மந்தைகளும் அவர்கள் ஆஸ்தியும் அவர்கள் மிருகஜீவன்களுமெல்லாம் நம்மைச் சேர்வதில்லையோ? அவர்களுக்குச் சம்மதியாகமாத்திரம் செய்தோமானால், நம்முடனே குடியிருப்பார்களென்றார்கள்.

௨௪ அப்பொழுது ஏமோரின் பட்டணத்துவாசலால் புறப்படுகிறவர்களாகிய அனைவரும் அவன் சொல்லையும் அவன் குமாரனாகிய சீகேமின் சொல்லையும் கேட்டு, அவன் பட்டணத்து வாசலால் புறப்படுகிறவர்களாகிய ஆண்சாதியாரெல்லாரும் சுன்னத்தடைந்தார்கள்.

௨௫ ¶ மூன்றாம்நாளில் அவர்களுக்கு நோவெடுத்துக்கொண்டபொழுது சம்பவித்ததேதென்றால், யாக்கோபின் குமாரரும் தீனாளின் சகோதரருமாகிய *சிமெயோனும் லேவியுமென்ற இரண்டுபேர் அவனவன் தன் தன் பட்டயத்தை எடுத்துக்கொண்டு பயமில்லாமல் பட்டணத்தின்மேல் வந்து, ஆண் அனைத்தையும் கொன்று,

* ௧ மோ. ௪௯. ௫,௬.



Google

௨௬ ஏமோரையும் அவன் குமாரன் சிகேமையும் பட்டயக்கருக்காலே கொன்றுபோட்டு, தீனாளைச் சிகேமின் வீட்டிலிருந்து அழைத்துப் புறப்பட்டுப்போனார்கள்.

௨௭ யாக்கோபின் குமாரர் வெட்டுண்டவர்கள்மேல் வந்து, அவர்கள் தங்கள் சகோதரியைத் தீட்டுப்படுத்தினதற்காகப் பட்டணத்தைக் கொள்ளையிட்டு,

௨௮ அவர்களுடைய ஆடுமாடுகளையும் கழுதைகளையும் ஊரிலும் ஊர் வெளியிலும் இருந்தவைகள் எல்லாவற்றையும் எடுத்து,

௨௯ அவர்களுடைய எல்லாத் தட்டுமுட்டுகளையும் அவர்களுடைய எல்லாக் குழந்தைகளையும் பெண்சாதிகளையும் வீட்டிலிருந்த எல்லாவற்றையும் பிடித்துக்கொண்டு கொள்ளையாடினார்கள்.

௩௰ அப்பொழுது யாக்கோபு சிமெயோனோடும் லேவியோடும் சொன்னதாவது: நீங்கள் தேசத்திற்குடியிருக்கிற கானானியரிடத்திலும் பெரிசியரிடத்திலும் என் வாசனையைக் கெடுத்ததினாலே என்னைக் கலங்கப்பண்ணினீர்கள்; நான் கொஞ்சச் சனமாயிருக்கிறேன்; அவர்கள் எனக்கு விரோதமாகக் கூட்டங்கூடி, நானும் என் வீடும் அழிய என்னை வெட்டுவார்களே என்றான்.

௩௧ அதற்கவர்கள், எங்கள் சகோதரியை அவர்கள் ஒரு வேசியைப்போல நடத்தலாமோ என்றார்கள்.

## ௩௫. அதிகாரம்.

பராபரனோவென்றால் யாக்கோபுடனே, நீ எழுந்து பேத்தேலுக்குப் போயேறி, அங்கே குடியிருந்து, நீ உன் சகோதரனாகிய ஏசாவின் முகத்திற்கு விலகி ஓடிப்போகிறபொழுது, *உனக்குத் தரிசனையான பராபரனுக்கு அங்கே ஒரு பலிபீடத்தை உண்டாக்கு என்றார். *க மோ. ௨௭. ௪௨—௪௫.

௨ அப்பொழுது யாக்கோபு தன் வீட்டாரோடும் தன்னோடேகூட இருந்த அனைவரோடும் சொன்னதாவது: உங்கள் நடுவிலிருக்கிற அந்நிய தேவர்களை விலக்கிப்போட்டு, உங்களைச் சுத்தம்பண்ணிக்கொண்டு, உங்கள் வஸ்திரங்களை மாற்றுங்கள்.

௩ நாம் எழுந்து பேத்தேலுக்குப் போயேறுவோம்; என் அவதிநாளிலே எனக்கு உத்தரவு அருளிச்செய்து, நான் நடந்தவழியிலே என்னோடேகூட இருந்த பராபரனுக்கு அங்கே ஒரு பலிபீடத்தை உண்டாக்குவேனென்றான்.

௪ அப்பொழுது அவர்கள தங்கள் கையிலிருந்த எல்லா அந்நியதேவர்களையும், தங்கள் காதுகளிலிருந்த கடுக்கன்களையும், யாக்கோபுக்குக் கொடுத்தார்கள்; யாக்கோபு அவைகளைச் சிகேம் ஊர் அருகே இருந்த ஒரு கர்வாலியுமரத்தின்கீழே புதைத்தான்.

௫ பிற்பாடு பயணம் புறப்பட்டார்கள்; அவர்களைச் சுற்றிலும் இருந்த பட்டணங்களின்மேலே பராபரனாலே பயங்கரம் உண்டாகையால், யாக்கோபின் குமாரரைப் பின்தொடராதிருந்தார்கள்.

௬ ¶ யாக்கோபும் அவனோடேகூட இருந்த எல்லாச்சனமும், கானான் தேசத்திலிருக்கும் லூசுக்குவந்தார்கள்; அதுவே பேத்தேல்.

௭ அங்கே அவன் ஒரு பலிபீடத்தைக் கட்டி, தான் தன் சகோதரனுடைய முகத்திற்கு விலகி ஓடிப்போகிறபொழுது, அங்கே பராபரன் தனக்கு வெளிப்பட்டபடியினாலே அந்த ஸ்தலத்திற்கு ஏல்பேத்தேலென்று பேரிட்டான்.

௮ ¶ ரெபேக்காளின் தாதியாகிய தேப்போராள் மரித்து, பேத்தேலின் பள்ளத்தாக்கில் வெளியிலே ஒரு கர்வாலியுமரத்தின்கீழே அடக்கம்பண்ணப்பட்டாள்; அது புலம்பலின் கர்வாலியுமரமென்றழைக்கப்பட்டது.

௯ ¶ யாக்கோபு பதான்அராமிலிருந்து வந்தபிற்பாடு பராபரன் அவனுக்குப் பின்னையும் தரிசனையாகி, அவனை ஆசீர்வதித்து,

௰ அவனுடனே உன்பேர் யாக்கோபென்

Digitized by Google

பது, இனி உன்பேர் யாக்கோபு என்னப்படாமல், இஸ்ரவேலென்ற பேர் உனக்கிருக்குமென்றுசொல்லி, அவனுக்கு இஸ்ரவேலென்று பேரிட்டார்.

௰௧ பின்னையும் பராபரன் அவனோடே சொன்னதாவது: நாம் சர்வத்திற்கும்வல்ல பராபரனாயிருக்கிறோம்; நீ பலுகிப்பெருகு; சாதியும் சாதிகளின் கூட்டமும் உன்னாலுண்டாகும்; இராசாக்களும் உன் இடுப்பின் பிறப்பாயிருப்பார்கள்.

௰௨ நாம் ஆபிரகாமுக்கும் இசாக்குக்கும் கொடுத்த தேசத்தை உனக்குத் தருவோம்; உனக்குப்பிற்பாடு உன் வித்துக்கும் இந்தத் தேசத்தைத் தருவோமென்று சொல்லி,

௰௩ பராபரன் அவனோடே பேசின ஸ்தலத்திலிருந்து அவனை விட்டேறிப்போனார்.

௰௪ அப்பொழுது யாக்கோபு அவர் தன்னோடே பேசின ஸ்தலத்திலே கல்லானதாகிய ஒரு தூணை நிறுத்தி, அதின்மேல் பானபலியை ஊற்றி, அதின்மேல் எண்ணெயை வார்த்தான்.

௰௫ பராபரன் தன்னோடே பேசின அந்த ஸ்தலத்திற்கு யாக்கோபு பேத்தேலென்ற பெயரைத் தான் தரித்தான்.

௰௬ ¶ பேத்தேலிலிருந்து பயணம்புறப்பட்டார்கள்; எப்பருத்தாவுக்கு வர இன்னம் கொஞ்சம்தூரமிருக்கிறபொழுது, ராகேல் பிள்ளைபெற்றாள்; பெறுகையில் அவளுக்குக் கடுவருத்தமாயிற்று.

௰௭ அப்பொழுது சம்பவித்ததாவது: பெறுகிறதிலே அவளுக்குக் கடுவருத்தமாயிருக்கையில், மருத்துவச்சி அவளுடனே, பயப்படாதே, ஏனென்றால் இந்தப் புத்திரனும் உனக்கிருப்பானென்றாள்.

௰௮ சம்பவித்ததேதென்றால், மரணம் அடைய அவள் ஆத்துமா புறப்படுகையில், அவள் அவனுக்குப் பெனோனி என்று பேரிட்டாள்; அவன் தகப்பனோவெனில், அவனைப் பென்யமீனென்றழைத்தான்.

௰௯ ராகேல் மரித்து, பெத்லகேமென்னப்படுகிற எப்பருத்தா ஊர்வழியிலே அடக்கம்பண்ணப்பட்டாள்.

௨௰ அவள் கல்லறையின்மேல் யாக்கோபு ஒரு தூணை நிறுத்தினான்; அதுவே இந்நாள்வரைக்கும் இருக்கிற ராகேலுடைய கல்லறையின் தூண்.

௨௧ ¶ இஸ்ரவேல் பயணம்பண்ணி, ஏதேரென்ற கோபுரத்திற்கு அப்புறத்தே தன் கூடாரத்தைப் போட்டான்.

௨௨ இஸ்ரவேல் அந்தச் சீமையில் குடியிருக்கிறபொழுது சம்பவித்ததேதென்றால், *ரூபன் போய், தன் தகப்பனுடைய வைப்பாட்டியாகிய பில்க்காளோடே சயனித்தான்; அது இஸ்ரவேலுக்குக் கேள்வியாயிற்று; யாக்கோபின் குமாரரோவென்றால் பன்னிரண்டுபேராயிருந்தார்கள். *க மோ. ௪௯. ௪.

௨௩ ¶ யாக்கோபுக்கு முதல் புத்திரனான ரூபனும், சிமெயோனும், லேவியும், யூதாவும், இசகாரும், செபுலோனும், லேயாளின் குமாரரானவர்கள்.

௨௪ ராகேலின் குமாரர் யோசேப்பும், பென்யமீனுமென்றவர்கள்.

௨௫ ராகேலுடைய வேலைக்காரியாகிய பில்க்காளின் குமாரர் தாணும், நப்தலியும் என்றவர்கள்.

௨௬ லேயாளின் வேலைக்காரியாகிய சில்ப்பாளின் குமாரர் காதும், ஆசேரும் என்றவர்கள்; இவர்கள் யாக்கோபுக்குப் பதான் அராமிலே பிறந்த குமாரர்.

௨௭ ¶ யாக்கோபு அர்பாவின் ஊராகிய மம்ரேக்குத் தன் தகப்பனாகிய இசாக்கண்டையிலேவந்தான்; அது ஆபிரகாமும் இசாக்கும் தங்கியிருந்த எபிரோனென்கிற ஊர்தானே.

௨௮ இசாக்கின் நாள்கள் நூற்றெண்பது வருஷமாயிருந்தன.

௨௯ பிற்பாடு இசாக்கு முதிர்ந்த பூரண ஆயுசிலே சீவித்து மரித்து, தன் சனத்தாரோடே சேர்க்கப்பட்டான்; அவனை அவன் குமாரராகிய ஏசாவும் யாக்கோபும் அடக்கம்பண்ணினார்கள்.

Digitized by Google

## ௩௬ அதிகாரம்.

இது ஏதோமியரின் தகப்பனாகிய ஏசாவின் சந்ததி.

௨ ஏசா கானான் குமாரத்திகளில் ஏத்தியனான ஏலோனின் குமாரத்தியாகிய ஆதாளையும், ஏவியனாகிய சிபெயோனின் பேத்தியும் ஆனாகின் குமாரத்தியுமாகிய அகோலிபாமாளையும்,

௩ இஸ்மவேலின் குமாரத்தியும் நெபாயோத்தின் சகோதரியுமாகிய பஸ்மாத்தையும், விவாகம்பண்ணினான்.

௪ ஆதாள் ஏசாவுக்கு ஏலிப்பாசைப் பெற்றாள்; பஸ்மாத் ரேகுவேலைப் பெற்றாள்.

௫ அகோலிபாமாள் எயூஷையும், யாலாமையும், கோராகையும் பெற்றாள்; இவர்கள் ஏசாவுக்குக் கானான்தேசத்திலே பிறந்த குமாரர்.

௬ ¶ ஏசா தன் பெண்சாதிகளையும் தன் குமாரரையும் தன் குமாரத்திகளையும் தன் வீட்டிலுள்ள எல்லா ஆத்துமாக்களையும் தன் ஆடுமாடுகளையும் தன்னுடைய எல்லா மிருகஜீவன்களையும் தான் கானான் தேசத்திலே சம்பாதித்த தன்னுடைய எல்லா ஆஸ்தியையும் சேர்த்துக்கொண்டு, தன் சகோதரனாகிய யாக்கோபைவிட்டு வேறே தேசத்திற்குப் போனான்.

௭ ஏனெனில் அவர்கள் ஒருமிக்கக் குடியிருக்கக் கூடாதபடிக்கு, அவர்களுடைய சம்பத்து மிச்சமாயிருந்தது; அவர்கள் தங்கியிருந்த பூமி அவர்களுடைய மந்தைகளின் முகாந்தரத்தினாலே அவர்களைத் தாங்கமாட்டாதே போயிற்று.

௮ ஆகையால் ஏசா சேயீர் பர்வதத்திலே குடியேறினான்; ஏசாவே ஏதோமென்றவன்.

௯ ¶ சேயீர் பர்வதத்திலிருக்கிற ஏதோமியருடைய தகப்பனாகிய ஏசாவின் சந்ததிகளும்,

௰ ஏசாவின் குமாரருடைய நாமங்களுமாவன: ஏசாவின் பெண்சாதியாகிய ஆதாளுடைய குமாரன்பேர் ஏலிப்பாஸ்; ஏசாவின் பெண்சாதியாகிய பஸ்மாத்துடைய குமாரன்பேர் ரேகுவேல்.

௧௧ ஏலிப்பாசுடைய குமாரர்; தேமான், ஓமார், செப்போ, காத்தாம், கேனாஸ்.

௧௨ திம்னாள் ஏசாவின் குமாரனாகிய ஏலிப்பாசுக்கு வைப்பாட்டியாயிருந்து, ஏலிப்பாசுக்கு அம்லேக்கைப் பெற்றாள்; இவர்களே ஏசாவின் பெண்சாதியாகிய ஆதாளுடைய குமாரர்.

௧௩ ரேகுவேலுடைய குமாரர்; நாகாத், சேராக், சம்மா, மீசா, இவர்களே ஏசாவின் பெண்சாதியாகிய பஸ்மாத்துடைய குமாரர்.

௧௪ சிபெயோனின் பேத்தியும் ஆனாகின் குமாரத்தியுமான அகோலிபாமாளென்ற ஏசாவுடைய பெண்சாதியின் குமாரர் யாரென்றால், அவள் ஏசாவுக்கு எயூஷையும், யாலாமையும், கோராகையும் பெற்றாள்.

௧௫ ¶ ஏசாவின் குமாரரிலிருந்த பிரபுக்கள்; ஏசாவுக்கு முதல்குமாரனாகிய ஏலிப்பாசுடைய குமாரரில் தேமான்பிரபுவும், ஓமார்பிரபுவும், செப்போபிரபுவும், கேனாஸ் பிரபுவும்,

௧௬ கோராக்பிரபுவும், காத்தாம்பிரபுவும், அம்லேக்பிரபுவும் இருந்தார்கள்; இவர்கள் ஏதோம்தேசத்தில் ஏலிப்பாசின் சந்ததியும் ஆதாளின் குமாரருமாயிருந்த பிரபுக்கள்.

௧௭ ¶ ஏசாவின் குமாரனாகிய ரேகுவேலின் குமாரரோவெனில், நாகாத்பிரபு, சேராக்பிரபு, சம்மாபிரபு, மீசாபிரபு, இவர்கள் ஏதோம்தேசத்தில் ரேகுவேலின் சந்ததியும் ஏசாவின் பெண்சாதியாகிய பஸ்மாத்தின் குமாரருமாயிருந்த பிரபுக்கள்.

௧௮ ¶ ஏசாவின் பெண்சாதியாகிய அகோலிபாமாளின் குமாரரோவென்றால், எயூஸ் பிரபு, யாலாம்பிரபு, கோராக்பிரபு; இவர்கள் ஆனாகின் குமாரத்தியும் ஏசாவுடைய பெண்சாதியுமாகிய அகோலிபாமாளின் சந்ததியாயிருந்த பிரபுக்கள்.

௧௯ இவர்களே ஏதோமென்ற ஏசாவின்

Digitized by Google

குமாரர்; இவர்களே அவர்களிலிருந்த பிரபுக்கள்.

௨௰ ¶ அந்தத் தேசத்தில் குடிகளாகிய ஓரியனான சேயீரின் குமாரர், லோத்தான், சோபால், சிபெயோன், ஆனாக்,

௨௧ திஷோன், எத்சேர், திஷான்; இவர்கள் ஏதோம்தேசத்தில் சேயீரின் புத்திரராகிய ஓரியருடைய சந்ததியாயிருந்த பிரபுக்கள்.

௨௨ லோத்தானுடைய குமாரர், ஓரி, ஏமாம்; லோத்தானின் சகோதரி திம்னாள்.

௨௩ சோபாலுடைய குமாரர், அல்வான், மனாகாத், ஏபால், சேப்போ, ஓனாமென்றவர்கள்.

௨௪ சிபெயோனுடைய குமாரர், ஆயா, ஆனா என்றவர்கள்; வனாந்தரத்திலே தன் தகப்பனாகிய சிபெயோனின் கழுதைகளை மேய்க்கையில், கோவேறு கழுதைகள் பிறக்கும் விதத்தைக் கண்டுபிடித்த ஆனா இவன் தான்.

௨௫ ஆனாவின் பிள்ளைகள் திஷோனும், அகோலிபாமாளுமென்றவர்கள்; இவள் ஆனாவின் குமாரத்தி.

௨௬ திஷோனுடைய குமாரர், எம்தான், எஸ்பான், இத்தரான், கோரான் என்றவர்கள்.

௨௭ எத்சேருடைய குமாரர், பில்கான், சாவான், ஆக்கான் என்றவர்கள்.

௨௮ திஷானுடைய குமாரர், ஊத்ஸ், ஆரான் என்றவர்கள்.

௨௯ ஓரியரின் சந்ததிப் பிரபுக்கள், லோத்தான்பிரபு, சோபால்பிரபு, சிபெயோன்பிரபு, ஆனாபிரபு,

௩௰ திஷோன்பிரபு, எத்சோபிரபு, திஷான்பிரபு, இவர்களே சேயீர் தேசத்திலே தங்கள் தங்கள் இடங்களிலிருந்த ஓரியர் சந்ததியான பிரபுக்கள்.

௩௧ ¶ இஸ்ரவேல் புத்திரரை ஒரு இராசா ஆளாததற்குமுன்னே ஏதோம்தேசத்திலே ஆண்ட இராசாக்கள்.

௩௨ ஏதோமிலே பேயோருடைய குமாரனாகிய பேலா இராசாவாயிருந்தான்; அவனுடைய பட்டணத்தின் பேர் தின்காபா.

௩௩ பேலா மரித்தபொழுது, போத்ஸரு பட்டணத்தானாகிய சேராகுடைய குமாரனான யோவாப் அவன் பட்டத்திற்கு வந்தான்.

௩௪ யோவாப் மரித்தபொழுது, தேமானிய தேசத்தானாகிய ஊஷாம் அவன் பட்டத்திற்கு வந்தான்.

௩௫ ஊஷாம் மரித்தபொழுது, அவன் பட்டத்திற்கு மோவாபின் நாட்டிலே மீதியானியரை முறியடித்த பேதாதின் குமாரனாகிய ஆதாத் வந்தான்; அவனுடைய பட்டணத்தின் பேர் ஆவீத்.

௩௬ ஆதாத் மரித்தபொழுது, மஸ்ரேக்காவூரானாகிய சம்லா அவன் பட்டத்திற்கு வந்தான்.

௩௭ சம்லா மரித்தபொழுது, நதிக்கருகான ரேகோபோத்தூரானாகிய சவுல் அவன் பட்டத்திற்கு வந்தான்.

௩௮ சவுல் மரித்தபொழுது, அக்போருடைய குமாரனாகிய பாகால் ஆனான் அவன் பட்டத்திற்கு வந்தான்.

௩௯ அக்போருடைய குமாரனாகிய பாகால் ஆனான் மரித்தபொழுது, அவன் பட்டத்திற்கு ஆதார் வந்தான்; அவனுடைய பட்டணத்தின் பேர் பாகு; அவன் பெண்சாதியின்பெயர் மெகேதாபெயேல், அவள் மத்ரேத்துடைய குமாரத்தியும் மேசகாவின் பேத்தியுமாயிருந்தாள்.

௪௰ பலபல வம்சத்தாரும் தலத்தாரும் நாமத்தாருமாகிய ஏசாவின் சந்ததி பிரபுக்களுடைய நாமங்களாவன: திம்னாபிரபு, அல்வாபிரபு, ஏத்தேத்பிரபு,

௪௧ அகோலிபாமாபிரபு, ஏலாபிரபு, பினோன்பிரபு,

௪௨ கேனாஸ்பிரபு, தேமான்பிரபு, மிப்சார்பிரபு,

௪௩ மக்தியேல்பிரபு, ஈராம்பிரபு, இவர்களே தங்கள் கைவசமானதேசத்திலே பலபல இடங்களிலே குடியிருந்த ஏதோம் சந்ததி பிரபுக்கள்; இந்த ஏதோமியருடைய தகப்பன் ஏசாதானே.

Digitized by Google

## ௩௭. அதிகாரம்.

யாக்கோபு தன் தகப்பன் தங்கின கானான்தேசமான சீமையிலே குடியிருந்தான்.

௨ யாக்கோபுடைய சந்ததியின் நடபடியாவது: யோசேப்பு பதினேழு வயதிலே தன் சகோதரரோடே ஆடுகளை மேய்த்துக் கொண்டிருந்தான்; அந்த இளைஞன் பில்க்காள் சில்பாளென்ற தன் தகப்பனுடைய பெண்சாதிகளின் குமாரரோடே இருந்து, இவர்கள் துர்க்கீர்த்தியை அவர்கள் தகப்பனண்டைக்கு வந்து சொல்லுவான்.

௩ யோசேப்பு தனக்கு முதிர்வயதிலே பிறந்தபடியினாலே இஸ்ரவேல் தன்னுடைய எல்லாக் குமாரரைப் பார்க்கிலும் அவனைச் சிநேகித்து, பலவருணமான அங்கியை அவனுக்குச் செய்வித்தான்.

௪ தங்கள் தகப்பன் அவனை அவனுடைய எல்லாச் சகோதரரைப்பார்க்கிலும் சிநேகிக்கிறதை அவன் சகோதரர் கண்டபொழுதோவெனில், அவர்கள் அவனோடே பட்சமாய்ப் பேசமாட்டாதபடியாய், அவனைப் பகைத்தார்கள்.

௫ ¶ இதுவும்அல்லாமல் யோசேப்பு ஒரு சொப்பனத்தைக் கண்டு, தன்சகோதரருக்கு அறிவித்தான்; அதினிமித்தம் அவனை இன்னம் அதிகமாய்ப் பகைத்தார்கள்.

௬ அவன் இவர்களோடே சொன்னதேதெனில், நான் கண்ட சொப்பனத்தைக் கேளுங்கள்.

௭ இதோ நாம் நடு வயல்வெளியிலே அறுத்த அரிகளைக் கட்டிக்கொண்டிருந்தோம்; அப்பொழுது இதோ என்னுடைய அரிக்கட்டு நிமிர்ந்தும் நின்றும் இருந்தது; ஆனால் இதோ உங்கள் அரிக்கட்டுகள் அதைச் சுற்றி என்னுடைய அரிக்கட்டை வணங்கிக்கொண்டனவென்றான்.

௮ அப்பொழுது அவன் சகோதரர் அவனோடே, நீ எங்கள்மேல் துரைத்தனம்பண்ணவே பண்ணுவாயோ, நீ எங்களை ஆளவே ஆளுவாயோ என்று சொல்லி, அவனை அவன் சொப்பனங்களின் நிமித்தமும், அவன் வார்த்தைகளின் நிமித்தமும், இன்னம் அதிகமாய்ப் பகைத்தார்கள்.

௯ ¶ அவன் வேறொரு சொப்பனத்தைக் கண்டு, அதைத் தன் சகோதரருக்கு விவரித்துச் சொன்னதாவது: இதோ இன்னம் ஒரு சொப்பனத்தைக் கண்டேன்; இதோ சூரியனும் சந்திரனும் பதினொரு நட்சத்திரங்களும் என்னை வணங்கிக்கொண்டனவென்றான்.

௰ இதை அவன் தன் தகப்பனுக்கும் தன் சகோதரருக்கும் விவரித்தபொழுது, அவன் தகப்பன் அவனை அதட்டி அவனோடே, நீ கண்ட இந்தச் சொப்பனமேது, தரைமட்டும் குனிந்து உன்னை வணங்க நானும் உன் தாயாரும் உன் சகோதரரும் வரவே வருவோமோ என்றான்.

௰௧ அவன் சகோதரர் அவன்மேல் பொறாமை ஆனார்கள்; அவன் தகப்பனோவெனில், இந்த வர்த்தமானத்தை மனதிலே வைத்துக்கொண்டான்.

௰௨ ¶ அவன் சகோதரர் சீகேமிலே தங்கள் தகப்பனுடைய ஆடுகளை மேய்க்கப் போனார்கள்.

௰௩ இஸ்ரவேல் யோசேப்போடே, உன் சகோதரர் சீகேமிலே ஆடுகளை மேய்க்கிறார்கள்அல்லவோ? அங்கேபோ, உன்னைஅவர்களண்டைக்கு அனுப்புவேன், வா என்றான்; இவன் இதோ நான் போகிறேனென்றான்.

௰௪ அப்பொழுது அவன், நீ போய், உன் சகோதரர் எப்படி இருக்கிறார்களென்றும் ஆடுகள் எப்படி இருக்கின்றனவென்றும் பார்த்து, எனக்கு மறுசெய்தி கொண்டுவா என்று அவனுக்குச் சொல்லி, எபிரோன் பள்ளத்தாக்கிலே இருந்து அவனை அனுப்பினான்; அப்படியே சீகேமுக்குப்போனான்.

௰௫ ¶ அப்பொழுது இதோ, ஒரு மனிதன் அவனை வெளியிலே வழிதப்பி நடக்கக்கண்டு, என்ன தேடுகிறாயென்று அவனைக் கேட்டான்.

Digitized by Google

௧௬ அதற்கு அவன், என் சகோதரரைத் தேடுகிறேன், அவர்கள் எங்கே ஆடுமேய்க்கிறார்களென்று எனக்கு அறிவியுமென்றான்.

௧௭ அந்த மனிதன் அவர்கள் இங்கேயிருந்து புறப்பட்டுப்போனார்கள்; ஏனென்றால் தோத்தானுக்குப் போவோமென்று அவர்கள் சொல்லக் கேட்டேனென்றான்; அப்பொழுது யோசேப்பு தன் சகோதரரைப் பின்தொடர்ந்துபோய், அவர்களைத் தோத்தானிலே கண்டுபிடித்தான்.

௧௮ அவர்கள் அவனைத் தூரத்திலே கண்டபொழுது, அவன் தங்கள் அருகில் சேராததற்கு முன்னே அவனுக்கு விரோதமாய் அவனைக் கொலைசெய்யச் சதியோசனை பண்ணி,

௧௯ ஒருவரோடொருவர், இதோ சொப்பனக்காரன் அங்கே வருகிறான்.

௨௰ இப்பொழுதும் நாம் அவனைக் கொன்று, குழிகளில் ஒன்றிலே அவனைப் போட்டு, ஒரு துஷ்டமிருகம் அவனைப் பட்சித்ததென்றுசொல்லி, அவன் சொப்பனங்கள் என்னவாமென்று பார்ப்போம் வாருங்களென்றார்கள்.

௨௧ ஆனால் ரூபன் இதைக்கேட்டு, அவன் சீவனைக் கொல்லாதிருப்போமாகவென்று சொல்லி, அவனை அவர்கள் கைக்குத் தப்புவித்து,

௨௨ நீங்கள் இரத்தம் சிந்தவேண்டாம்; நீங்கள் அவன்மேல் கைபோடாமல், அவனை வனாந்தரத்தில் இருக்கிற அந்தக் குழியிலே போடுங்களென்று, ரூபன் அவனை அவர்கள் கைக்குத் தப்புவிக்கும்படிக்கும் அவனை அவன் தகப்பனண்டைக்குத் திரும்பக் கொண்டுபோகும்படிக்கும் அவர்களோடே சொன்னான்.

௨௩ ¶ சம்பவித்ததேதென்றால் யோசேப்பு தன் சகோதரரண்டைக்கு வந்தபொழுது, அவர்கள் யோசேப்பு உடுத்துக்கொண்டிருந்த பலவருண அங்கியாகிய அவன் அங்கியைக் கழற்றி,

௨௪ அவனை எடுத்து, அந்தக் குழியிலே போட்டார்கள்; அது தண்ணீரில்லாத வெறுங்குழியாய் இருந்தது.

௨௫ பிற்பாடு அவர்கள் அப்பம்சாப்பிட உட்கார்ந்தார்கள்; அவர்கள் தங்கள் கண்களை ஏறெடுக்கும் பொழுதோவெனில், இதோ கீலேயாத்திலிருந்து வருகிற இஸ்மவேலருடைய கூட்டத்தை வரக்கண்டார்கள்; அவர்களுடைய ஒட்டகங்கள் சம்பாரங்களையும் பிசின்தயிலத்தையும் வெள்ளைப் போளத்தையும் எகிப்திற்குக்கொண்டுபோகச் சுமந்துநடந்தன.

௨௬ அப்பொழுது யூதா தன் சகோதரரோடே சொன்னதாவது: நாம் நம்முடைய சகோதரனைக் கொன்று, அவன் இரத்தத்தை மறைப்பதினாலே ஆதாயம் என்ன?

௨௭ அவனை இஸ்மவேலருக்கு விற்போம் வாருங்கள்; நமது கை அவன்மேல் இராதிருப்பதாக; ஏனெனில் அவன் நம்முடைய சகோதரனும், நம்முடைய மாம்சமுமாய் இருக்கிறானென்றான்; அவன் சகோதரர் அவன் சொல்லைக் கேட்டார்கள்.

௨௮ ஆனால் வர்த்தகரான மீதியானியர் கடந்துபோகிறபொழுது, அவர்கள் யோசேப்பை அந்தக் குழியிலிருந்து தூக்கியெடுத்து, யோசேப்பை இஸ்மவேலர் கையில் இருபது வெள்ளிக்காசுக்கு விற்றார்கள்; இவர்கள் யோசேப்பை எகிப்திற்குக் கொண்டுபோனார்கள்.

௨௯ ரூபன் திரும்ப அந்தக் குழி அண்டைக்கு வந்து, இதோ யோசேப்பு குழியில் இல்லையென்று கண்டு, தன் வஸ்திரங்களைக் கிழித்து,

௩௰ தன் சகோதரரண்டைக்குத் திரும்பி வந்து, இளைஞன் இல்லையே, நான் எங்கே போகப்போகிறேன் என்றான்.

௩௧ ¶ அவர்கள் யோசேப்பின் அங்கியை எடுத்துக்கொண்டு, ஒரு வெள்ளாட்டுக்கடாவை அடித்து, அந்த அங்கியை இரத்தத்திலே கறைப்படுத்தி,

௩௨ பலவருணமான அந்த அங்கியைத் தங்கள் தகப்பன் அண்டைக்குக் கொண்டு



Digitized by Google

போகச்சொல்லி, இதை நாங்கள் கண்டுபி
டித்தோம், இது உம்முடைய குமாரன்
அங்கியோ அல்லவோ என்று பாரும்
என்றுசொல்லி அனுப்பினார்கள்.

௩௩ அவன் அதை அறிந்து, இது என்
குமாரனுடைய அங்கி, ஒரு துஷ்டமிருகம்
அவனைப்பட்சித்தது; யோசேப்பு பீறுண்
ணவே பீறுண்டானென்றான்.

௩௪ யாக்கோபு தன் வஸ்திரங்களைக் கிழித்
துக்கொண்டு, தன் அரையில் இரட்டுக்கட்
டிக்கொண்டு, அநேகநாள் தன் குமாரனுக்
காகத் துக்கித்துக்கொண்டிருந்தான்.

௩௫ அவனுடைய எல்லாக்குமாரரும் அவ
னுடைய எல்லாக்குமாரத்திகளும் அவ
னுக்கு ஆறுதல் சொல்ல வந்துநின்றார்கள்;
ஆனால் அவன் ஆறுதலுக்கு இடம் கொடா
மல், நான் துக்கத்தோடே என் குமார
னண்டையில் குழியில் இறங்குவேனென்று
சொல்லி, அவனுடைய தகப்பன் அவனுக்
காக அழுதுகொண்டிருந்தான்.

௩௬ மீதியானியரோவென்றால், அவனை
எகிப்திலே பார்வோனின் பிரதானியாகிய
போத்திபாரென்ற தலையாரிகளின் அதிப
திக்கு விற்றார்கள்.

## ௩௮. அதிகாரம்.

அக்காலத்திலே சம்பவித்ததேதென்றா
ல், யூதா தன் சகோதரரைவிட்டு இறங்கிப்
போய், அதொல்லாம் ஊரானாகிய ஒரு ம
னிதனைச் சேர்ந்தான்; அவன்பேர் இரா.

௨ அங்கே யூதா, சூவாவென்று பேருள்ள
ஒரு கானானிய மனிதன் குமாரத்தியைக்
கண்டு, அவளை விவாகம்பண்ணி, அவளி
டத்தில் பிரவேசித்தான்.

௩ அவள் கர்ப்பம்தரித்து ஒரு குமாரனைப்
பெற்றான்; அவனுக்கு ஏரென்று பேரிட்
டான்.

௪ அவள் மறுபடியும் கர்ப்பம்தரித்து ஒரு
குமாரனைப்பெற்று,அவனுக்கு ஓனானென்று
பேரிட்டாள்.

௫ அவள் திரும்பக் கர்ப்பம்தரித்து ஒரு
குமாரனைப்பெற்று, அவனுக்குச் சேலா
வென்று பேரிட்டாள்; அவள் இவனைப்
பெறுகிறபொழுது அவன் கேசிபிலே இருந்
தான்.

௬ ¶ யூதா தனக்கு முதல்பிறந்தவனாகிய
ஏருக்கு, தாமாரென்று பேருள்ள ஒரு பெ
ண்ணைக்கொண்டான்.

௭ ஆனால் யூதாவுக்கு முதல்பிறந்த ஏரென்
றவன் கர்த்தரின் கண்களுக்குமுன்பாகப்
பொல்லாதவனானதினாலே, கர்த்தர் அவ
னைக் கொன்றுபோட்டார்.

௮ அப்பொழுது யூதா ஓனானுடனே, நீ
உன் தமையன் பெண்சாதியினிடத்தில் பிர
வேசித்து, அவளை மைத்துனச்சுதந்தரமாய்
படைத்து, உன் தமையனுக்கு வித்தை
உண்டாக்கென்றான்.

௯ ஆனால் அந்த வித்துத் தன்னுடைய
தாயிராதென்று ஓனான் அறிந்தபடியினாலே,
அவன் தன் தமையன் பெண்சாதியினிட
த்தில் பிரவேசிக்கும்பொழுது, தன் தமைய
னுக்கு வித்தைக் கொடாதபடிக்கு அதைத்
தரையிலே விழவிட்டுக் கெடுத்தான்.

௰ அவன் செய்தது கர்த்தரின் கண்களுக்
குமுன்பாகப் பொல்லாததானதினாலே, அ
வனையும் அவர் கொன்றுபோட்டார்.

௰௧ அப்பொழுது யூதா தன் மருமகளா
கிய தாமாருடனே, என் குமாரனாகிய சே
லா பெரியவனாகும்மட்டும் உன் தகப்பன்
வீட்டிலே கைம்பெண்சாதியாய்த் தங்கியி
ரு என்றான்; ஏனெனில் இவனும் தன்
சகோதரரைப்போலச் சாவானோ என்று
அஞ்சிக்கையாயிருந்தான்; அப்படியே தா
மார் போய்த் தன் தகப்பன்வீட்டிலே தங்
கியிருந்தாள்.

௰௨ ¶ அநேகநாள் சென்றபிற்பாடு சூவா
வின் குமாரத்தியாகிய யூதாவின்பெண்சாதி
மரித்தாள்; யூதா துக்கம் ஆறினபிற்பாடு,
திம்னாவுக்குத் தன் ஆடுகளை மயிர்கத்திரிக்
கிறவர்களண்டையில் போயேறினான்; அவ
னும் அதொல்லாம் ஊரானாகிய இரா என்ற
அவன் சிநேகிதனும் கூடத்தானே.

Digitized by Google

௰௩ அப்பொழுது தாமாருக்கு, இதோ உன் மாமனார் தம்முடைய ஆடுகளை மயிர் கத்திரிக்கத் திம்னாவுக்குப் போயேறுகிறாரென்று அறிவிக்கப்பட்டது.

௰௪ அப்பொழுது அவள், சேலா பெரியவனாயிருந்தும் தான் அவனுக்குப் பெண்சாதியாகக் கொடுக்கப்படவில்லையென்று கண்டபடியினாலே, தன் கைம்பெண் இருப்பின் வஸ்திரங்களைத் தன்னைவிட்டு விலக்கி, முக்காடுபோட்டு மூடிக்கொண்டு, திம்னாவுக்குப் போகிற வழியிலிருக்கிற நீரூற்றுகளுக்குமுன்பாக உட்கார்ந்தாள்.

௰௫ யூதா அவளைக் கண்டு அவள் ஒரு வேசியென்று நினைத்தான்; ஏனெனில் தன் முகத்தை மூடியிருந்தாள்.

௰௬ அவன் வழியிலே அவளிடமாய்த் திரும்பி, அவள் தன் மருமகளென்றறியாமல், நான் உன்னிடத்தில் பிரவேசிக்கட்டும் என்றான்; அப்பொழுது அவள், நீர் என்னிடத்தில் பிரவேசிக்கும்படிக்கு எனக்கென்ன தருவீரென்றாள்.

௰௭ அதற்கவன், நான் மந்தையிலிருந்து ஒரு வெள்ளாட்டுக்குட்டியை அனுப்புவேன் என்றான்; இதற்கவள், நீர் அதை அனுப்புமட்டும் ஒரு அடைமானம் கொடுத்தால் ஆமென்றாள்.

௰௮ அப்பொழுது அவன், நான் உனக்குக் கொடுக்கவேண்டிய அடைமானம் என்னவென்று கேட்டான்; அப்பொழுது அவள், உம்முடைய மோதிரமும் உம்முடைய கைச்சிலையும் உம்முடைய கையிலிருக்கிற உம்முடைய கோலுமே என்றாள்; அவன் இவைகளை அவளுக்குக் கொடுத்து, அவளிடத்தில் பிரவேசித்தான்; அவள் அவனால் கர்ப்பந்தரித்து,

௰௯ பிற்பாடு எழுந்திருந்துபோய், தன் முக்காட்டைத் தன்னைவிட்டு விலக்கி, தன் கைம்பெண் இருப்பின் வஸ்திரங்களை உடுத்துக்கொண்டாள்.

௨௰ அந்த அடைமானத்தை ஸ்திரியின் கையிலே வாங்கிவர யூதா அதொல்லாமூரானாகிய தன் சிநேகிதன் கையிலே வெள்ளாட்டுக்குட்டியை அனுப்பினான்; இவன் அவளைக் காணாமல்,

௨௧ அவ்விடத்து மனிதரை வழியண்டை நீரூற்றுகளருகே இருந்த சோரஸ்திரி எங்கே என்று கேட்டான்; அதற்கவர்கள், இங்கே சோரஸ்திரி இருந்ததில்லை என்றார்கள்.

௨௨ அவன் யூதாவண்டைக்குத் திரும்பி வந்து, அவளைக் காணேன், அங்கே சோரஸ்திரி இருந்ததில்லை என்று அவ்விடத்து மனிதரும் சொல்லுகிறார்கள் என்றான்.

௨௩ அப்பொழுது யூதா, நாங்கள் அவகீர்த்திப்படாதபடிக்கு அவள் அதைக் கொண்டுபோகட்டும், இதோ இந்த ஆட்டுக்குட்டியை அனுப்பினேனே, நீயோவென்றால் அவளைக் காணாதேபோனாயென்றான்.

௨௪ ஏறக்குறைய மூன்றுமாதம் சென்றபின்பு சம்பவித்ததேதெனில், உன் மருமகளாகிய தாமார் வேசித்தனம்பண்ணினாள்; இதோ வேசித்தனத்தில் கர்ப்பிணியுமானாள் என்று யூதாவுக்கு அறிவிக்கப்பட்டது; அப்பொழுது யூதா அவள் சுட்டெரிக்கப்பட அவளை வெளியே கொண்டுவாருங்கள் என்றான்.

௨௫ அவள் வெளியே கொண்டுவரப்பட்டபொழுது, அவள் தன் மாமனாரண்டைக்கு ஆள் அனுப்பி, இவைகள் எவருடையவைகளோ அவராலே நான் கர்ப்பிணியாயிருக்கிறேன்; இந்த மோதிரமும் இந்தக் கைச்சிலையும் இந்தக் கோலும் யாருடையவைகளென்று பாருமென்று சொல்லி அனுப்பினாள்.

௨௬ அப்பொழுது யூதா அவைகளை அறிந்து, என்னிலும் நீதியுள்ளவளாய் இருக்கிறாள்; ஏனென்றால் அவளை என் குமாரனாகிய சேலாவுக்குக் கொடாதேபோனேன் என்றான்; அப்புறம் அவன் அவளை அறிந்ததில்லை.

௨௭ ¶ அவளுக்குப் பேறுகாலம் வந்தபொழுது, இதோ இரட்டைப்பிள்ளைகள் அவள் கர்ப்பத்திலிருந்தன.

௨௮ அவள் பெறுகிறபொழுது ஒன்று கை



Digitized by Google

யை நீட்டிற்று; அப்பொழுது மருத்துவச்சி அதின் கையைப்பிடித்து, அதில் சிவப்புநூலைக்கட்டி, இது முந்த வெளிப்படுகிறதென்றாள்.

௨௯ ஆனால் அது தன் கையைத் திரும்ப வாங்கிக்கொண்டபொழுது, இதோ அதின் சகோதரன் வெளிப்பட்டான்; அப்பொழுது அவள் நீ பீறிப்புறப்பட்டதென்ன? உன்மேல் இந்தப் பீறுதல் இருக்கிறதென்றாள், அதினாலே அவனுக்குப் *பேரேஸ் என்று பேரிடப்பட்டது. *மத். க. ௩.

௩௰ பிற்பாடு கையில் சிவப்புநூல் கட்டியிருந்த, அவன் தம்பி வெளிப்பட்டான்; அவனுக்குச் சேராவென்று பேரிடப்பட்டது.

## ௩௯. அதிகாரம்.

யோசேப்பு *எகிப்திலே கொண்டுபோகப்பட்டான்; பார்வோனின் பிரதானியும் தலையாரிகளின் அதிபதியுமாகிய போத்திபாரென்ற எகிப்திய மனிதன் அவனை அவ்விடத்திற்குக் கொண்டுவந்த இஸ்மவேலரின் கையிலே கொண்டான். *க மோ. ௩௭. ௩௬.

௨ ஆனால் கர்த்தர் யோசேப்போடேகூட இருந்தார்; அவன் காரிய சமர்த்தனான மனிதனாய், எகிப்தியனாகிய தன் எசமானனுடைய வீட்டிலே இருந்தான்.

௩ கர்த்தர் அவனோடே இருக்கிறாரென்றும், அவன் செய்கிறவைகளை எல்லாம் கர்த்தர் வாய்க்கப்பண்ணுகிறாரென்றும், அவன் எசமானன் கண்டான்.

௪ ஆகையால் யோசேப்புக்கு அவன் கண்களில் தயவுகிடைத்தது; அவனுக்கு இவன் ஊழியக்காரனானான்; அவன் இவனைத் தன் வீட்டுக்கு விசாரிப்புக்காரனாக்கி, தனக்கு உண்டானவை எல்லாவற்றையும் அவன் கையில் ஒப்புவித்தான்.

௫ சம்பவித்ததேதெனில், அவன் இவனைத் தன் வீட்டுக்கும் தனக்குண்டானவைகள் எல்லாவற்றிற்கும் விசாரிப்புக்காரனாக்கினதுமுதல்கொண்டு, கர்த்தர் யோசேப்பின்நிமித்தம் எகிப்தியன் வீட்டை ஆசீர்வதித்தார்; வீட்டிலும் வெளியிலும் அவனுக்குண்டானவைகளிலெல்லாம் கர்த்தருடைய ஆசீர்வாதம் இருந்தது.

௬ ஆகையால் அவன் தனக்குண்டானவைகளை எல்லாம் யோசேப்பின் கையிலே ஒப்புவித்துவிட்டு, தான் புசிக்கிற போசனம் தவிர இவனிடத்திலிருந்த மற்றொன்றுக்கும் கவலைப்படாதிருந்தான்; யோசேப்போவெனில், அழகான ரூபமும் பார்வைக்குச் சவுந்தரியமுமாய் இருந்தான்.

௭ ¶ இந்த வர்த்தமானங்களுக்குப் பிற்பாடு சம்பவித்ததேதெனில், அவனுடைய எசமானனின் பெண்சாதி யோசேப்பின் மேலே கண்ணோட்டமாகி, என்னோடே சயனி என்றாள்.

௮ ஆனால் அவன் அவள் சொல்லைக்கேளாமல், தன் எசமானனின் பெண்சாதியோடே சொன்னதாவது: இதோ வீட்டிலே என்னோடிருக்கிறவைகளில் ஒன்றுக்காகிலும் என் ஆண்டவன் கவலைப்படாமல், தமக்குண்டானவைகளை எல்லாம் என் கையில் ஒப்புவித்தார்.

௯ இந்தவீட்டிலே என்னிலும் பெரியவன் இல்லை; உன்னைத்தவிர வேறொன்றையும் அவர் எனக்கு விலக்கிவைத்ததில்லை; ஏனெனில் நீ அவருடைய பெண்சாதி; இப்பொழுதும் நான் இத்தனைபெரிய இந்தப் பொல்லாப்பைப்பண்ணி, பராபரனுக்கு விரோதமாய்ப் பாவம்செய்வது எப்படி என்றான்.

௰ அவள் நித்தம் நித்தம் யோசேப்போடே அப்படிக்கொத்த பேச்சைச் சொல்லுவாள்; ஆனால் அவன் அவளுக்குச் சமீபமாய்ப் படுத்துக்கொள்ளவும் அவளோடிருக்கவும் அவளுக்குச் செவிகொடாதே போகிறபொழுது,

௰௧ ஒருநாள் சம்பவித்ததேதெனில், அவன் தன் வேலையைச் செய்கிறதற்கு வீட்டுக்குள்வந்தான்; வீட்டுமனிதரில் ஒருவரும் அப்பொழுது அங்கே வீட்டிலே இல்லை.

Digitized by Google

௰௨ அப்பொழுது அவள் அவனை அவன் வஸ்திரத்தைப் பற்றிப்பிடித்து, என்னோடே சயனி என்றாள்; அவனோவென்றால் தன் வஸ்திரத்தை அவள் கையிலே விட்டோடி வெளியே புறப்பட்டுப்போனான்.

௰௩ அவன் தன் வஸ்திரத்தைத் தன் கையிலே விட்டு வெளியே ஓடிப்போனதை அவள் கண்டபொழுது,

௰௪ அவள் தன் வீட்டு மனிதரைக் கூப்பிட்டு அவர்களுக்குச் சொன்னதாவது: பாருங்கள், எபிரேய மனிதனை நம்மைச் சரசம்பண்ணும்படிக்கு நமக்குக் கொண்டுவந்தார், அவன் என்னோடே சயனிக்கிறதற்காக என்னண்டை வந்தான்; ஆனால் மகா சத்தமாய்க் கூப்பிட்டேன்.

௰௫ நான் என் சத்தத்தை உயர்த்திக் கூப்பிடுகிறதை அவன் கேட்டபொழுது, அவன் தன் வஸ்திரத்தை என்னண்டையில் விட்டோடி வெளியே புறப்பட்டுப்போனான் என்று சொல்லி,

௰௬ அவனுடைய எசமானன் வீட்டிற்கு வரும்மட்டும் அவன் வஸ்திரத்தைத் தன் கிட்டவைத்து,

௰௭ அவனோடே அந்த வார்த்தைகளுக்குச் சரியாகப்பேசி, நீர் எங்களுக்குக் கொண்டுவந்த அந்த எபிரேய வேலைக்காரன் என்னைச் சரசம்பண்ண என்னண்டை வந்தான்.

௰௮ அப்பொழுது சம்பவித்ததேதெனில், நான் என்சத்தத்தை உயர்த்திக் கூப்பிடுகிறபொழுது, அவன் தன் வஸ்திரத்தை என்னண்டைவிட்டு வெளியே ஓடிப்போனான் என்றாள்.

௰௯ உம்முடைய வேலைக்காரன் எனக்கு இப்படிச் செய்தானென்று தன் பெண்சாதி தன்னோடே சொன்ன வார்த்தைகளை அவனுடைய எசமானன் கேட்டபொழுதோவெனில், அவனுக்குக் கோபம் மூண்டது.

௨௰ அப்பொழுது யோசேப்பின் எசமானன் அவனைப் பிடித்து, இராசாவின் கட்டளையால் கட்டுண்டவர்கள் கிடக்கிற காவல்வீட்டிலே அவனை ஒப்புவித்தான்; அங்கே அந்தக் காவல்வீட்டில் அவன் இருந்தான்.

௨௧ ஆனால் கர்த்தர் யோசேப்போடே கூட இருந்து, அவன்மேலே கிருபைவைத்து, அவனுக்குக் காவல்வீட்டுத் தலைவன் கண்களில் தயவுகிடைக்கப்பண்ணினார்.

௨௨ காவல்வீட்டுத் தலைவன் காவல்வீட்டிலே கட்டுண்டிருந்த யாவரையும் யோசேப்பின் கையிலே ஒப்புவித்தான்; அங்கே செய்யவேண்டியவைகளை எல்லாம் அவன் செய்தான்.

௨௩ அவன் கையிலிருந்த ஒன்றையும் காவல்வீட்டுத்தலைவன் கண்ணோக்கினதில்லை; ஏனெனில் கர்த்தர் அவனோடேகூட இருந்தார்; அவன் எதைச்செய்தானோ அதைக் கர்த்தர் வாய்க்கப்பண்ணினார்.

## ௪௰ அதிகாரம்.

இந்த நடபடிகளுக்குப் பிற்பாடு சம்பவித்ததேதெனில், எகிப்தின் இராசாவுக்குப் பானம்கொடுக்கிறவனும் அப்பம் சுடுகிறவனும் எகிப்தின் இராசாவாகிய தங்கள் ஆண்டவனுக்குக் குற்றம்செய்தார்கள்.

௨ அப்பொழுது பார்வோன் தன்னுடைய இரண்டு பிரதானிகளாகிற பானம்கொடுக்கிறவர்களின் தலைவன்மேலும் அப்பம் சுடுகிறவர்களின் தலைவன்மேலும் கடுங்கோபமாகி,

௩ அவர்களை யோசேப்புக்கட்டுண்டிருந்த காவல் வீடாகிய தலையாரிகளின் தலைவன் வீட்டிலே காவல்பண்ணுவித்தான்.

௪ அப்பொழுது தலையாரிகளின்தலைவன் அவர்களை விசாரிக்கும் வேலைக்கு யோசேப்பை வைத்தான்; இவன் அவர்களுக்கு ஊழியம்செய்தான்; அவர்கள் அநேகம் நாள் காவலில் இருந்தார்கள்.

௫ ஆனால் எகிப்தின் இராசாவுக்குப் பானம்கொடுத்தவனும் அப்பம் சுட்டவனுமாகியகாவல்வீட்டில் கட்டுண்டிருந்த அவ்விரண்டுபேரும் ஒரே இராத்திரியில் அவனும் இவனும் தங்களுக்கு வெவ்வேறே அர்த்

Digitized by Google

தமுள்ள சொப்பனங்களைக் கண்டார்கள்.

௬ காலமே யோசேப்பு அவர்களண்டை வந்து அவர்களைப் பார்க்கும்பொழுது, இதோ, கலங்கி இருந்தார்கள்.

௭ அப்பொழுது தன் எசமானனின் வீட்டில் தன்னோடே காவல்பண்ணப்பட்டிருந்த பார்வோனின் பிரதானிகளை அவன், உங்கள் முகங்கள் இன்று துக்கமாயிருக்கிறது ஏதென்று கேட்டான்.

௮ அவர்கள் அவனுடனே, சொப்பனம் கண்டோம், அதை வியார்த்திபண்ணுகிறவன் இல்லை என்றார்கள்; அப்பொழுது யோசேப்பு அவர்களுடனே, வியார்த்திபண்ணுதல் பராபரனுடையதல்லவோ? எனக்கதை விவரியுங்கள் என்றான்.

௯ அப்பொழுது பானம்கொடுக்கிறவர்களின் தலைவன் யோசேப்புக்குத் தன் சொப்பனத்தை விவரித்து அவனுக்குச் சொன்னதாவது: என் சொப்பனத்தில் இதோ, ஒரு திராட்சச்செடி எனக்கு முன்பாக இருந்தது.

௰ அந்தத் திராட்சச்செடியிலே மூன்று கொடிகள் இருந்தது; அது துளிர்க்கிறதாயிருந்தது; அதின் பூக்கள் புறப்பட்டன; அதின் குலைகள் பழங்களாகப் பழுத்தது.

௰௧ பார்வோனின் பாத்திரம் என் கையில் இருந்தது; நான் அந்தப் பழங்களை வாங்கி, அவைகளைப் பார்வோனின் பாத்திரத்தில் பிழிந்து, அந்தப் பாத்திரத்தைப் பார்வோனின் கையிலே கொடுத்தேன் என்றான்.

௰௨ அப்பொழுது யோசேப்பு அவனுக்குச் சொன்னதாவது: அதின் அர்த்தமென்னவெனில், அந்த மூன்று கொடிகள் மூன்றுநாளாய் இருக்கின்றன.

௰௩ இன்னம் மூன்று நாளுக்குள்ளே பார்வோன் உம்முடைய தலையை உயர்த்தி, உம்மைத் திரும்ப உமது நிலையிலே நிறுத்துவார்; அப்பொழுது நீர் அவருக்குப் பானம்கொடுத்த முந்தின வழக்கத்தின்படியே, பார்வோனின் பாத்திரத்தை அவர் கையிலே கொடுப்பீர்.

௰௪ ஆனால் நீர் சுகவாழ்வாய் இருக்கிறபொழுது, என்னை நினைத்து, என்மேலே தயவுவைத்து, பார்வோனுக்கு என் செய்தியை நினைப்பூட்டி, என்னை இந்த வீட்டிலிருந்து வெளிப்படப்பண்ணும்.

௰௫ ஏனெனில் எபிரேயதேசத்திலிருந்து திருட்டளவாய் விலைப்பட்டுவந்தேன்; என்னை இந்தக் கிடங்கிலே வைக்கிறதற்கு இவ்விடத்திலே நான் ஒன்றும் செய்ததுமில்லை என்றான்.

௰௬ ¶ நன்றாய் அர்த்தம் சொன்னானென்று அப்பம் சுடுகிறவர்களின் தலைவன் கண்டு, யோசேப்போடேசொன்னதாவது: நானும் என் சொப்பனத்தில் கண்டதேதென்றால், இதோ வெண்மையான மூன்று கூடை என் தலையின்மேல் இருந்தன.

௰௭ மேல்கூடையிலே அப்பம்சுடுகிறவனுடைய வேலையான பார்வோனுடைய சகலவித போசனத்திலும் சில இருந்தன; அவைகளைப் பறவைகள் வந்து என் தலையின்மேல் இருந்த கூடையிலெடுத்துப்பட்சித்தன என்றான்.

௰௮ அப்பொழுது யோசேப்புப் பிரதியுத்தாரமாகச் சொன்னதாவது: அதின் அர்த்தம் ஏதெனில், அந்த மூன்று கூடைகள் மூன்றுநாளாய் இருக்கின்றன.

௰௯ இன்னம் மூன்று நாளுக்குள்ளே பார்வோன் உம்முடைய மேலிருக்கிற உம்முடைய தலையை உயர்த்தி, உம்மை மரத்திலே தூக்கிப்போடுவிப்பார்; அப்பொழுது பறவைகள் உம்முடைய மாம்சத்தைத் தின்னுமென்றான்.

௨௰ ¶ பார்வோன் சென்மநாளாகிய மூன்றாம் நாளில் சம்பவித்ததேதெனில், அவன் தன் ஊழியக்காரருக்கு எல்லாம் ஒரு விருந்துபண்ணி, பானம்கொடுக்கிறவர்களுடைய தலைவன் தலையையும் அப்பம்சுடுகிறவர்களுடைய தலைவன் தலையையும் தம்முடைய ஊழியக்காரரின் நடுவே உயர்த்தி,

௨௰௧ பானம் கொடுக்கிறவர்களின் தலைவனைப் பானம்கொடுக்கிற தன் உத்தியோ

Digitized by Google

கத்திற்குத் திரும்பவரப்பண்ணினான்; அப்படியே அவன் பார்வோன்கையிலே பாத்திரத்தைக் கொடுத்தான்.

௨௨ அப்பம் சுடுகிறவர்களின் தலைவனையோவென்றால், தூக்கிப்போடுவித்தான்; யோசேப்பு அவர்களுக்கு அர்த்தம் சொன்னதற்குச் சரியாகத்தானே.

௨௩ ஆனால் பானம்கொடுக்கிறவர்களின் தலைவன் யோசேப்பை நினையாமல் அவனை மறந்தான்.

## ௪௧. அதிகாரம்.

இரண்டுவருஷம் சென்றபிற்பாடு சம்பவித்ததேதென்றால், பார்வோன் ஒரு சொப்பனத்தைக் கண்டான்; அதேதெனில் இதோ, நதியண்டையிலே நின்றான்.

௨ அப்பொழுது இதோ நேர்த்தியான ரூபமும் மாம்சக் கொழுப்புமான ஏழு பசுக்கள் நதியிலிருந்து ஏறிப் புல்மேய்ந்தன.

௩ ஆனால் இதோ, அவைகளின்பிறகே அவலட்சணரூபமும் மாம்சச்சீவனுமான வேறே ஏழு பசுக்கள் நதியிலிருந்து ஏறி, நதி ஓரத்திலே அந்தப் பசுக்களண்டையிலேநின்றன.

௪ அவலட்சண ரூபமும் மாம்சச்சீவனுமான இந்தப் பசுக்கள், நேர்த்தியான ரூபமும் கொழுப்புமான அந்த ஏழுபசுக்களைப் பட்சித்தன; அப்பொழுது பார்வோனுக்கு நித்திரை தெளிந்தது.

௫ பிறகு அவன் நித்திரைபோய் இரண்டாம்விசை கண்ட சொப்பனமாவது: இதோ, கனமான ஏழு நல்ல கதிர்கள் ஒரே முதலிலிருந்து ஓங்கிவளர்ந்தன.

௬ ஆனால் இதோ, அவைகளுக்குப்பிற்பாடு சாவியானவைகளும்கொண்டல்காற்றினால் தீய்ந்தவைகளுமான ஏழு கதிர்கள் முளைத்தன.

௭ சாவியான இந்தக் கதிர்கள் கனமும் நிறைபலனுமான அந்த ஏழுகதிர்களை விழுங்கின; அப்பொழுது பார்வோன் விழித்துக்கொண்டான்; இதோ அது சொப்பனமாயிருந்தது.

௮ ¶ சம்பவித்ததேதெனில், காலமே அவனுடைய ஆவி கலங்கியிருந்தது; அப்பொழுது அவன் எகிப்திலுடைய சகல சாஸ்திரிகளையும் சகல ஞானிகளையும் அழைத்தனுப்பி, அவர்களுக்குத் தன் சொப்பனங்களைப் பார்வோன் விவரித்தான்; ஆனால் பார்வோனுக்கு அவைகளின் அர்த்தத்தைச் சொல்லத்தக்கவன் ஒருவனும் இல்லை.

௯ அப்பொழுது பானம்கொடுக்கிறவர்களின் தலைவன் பார்வோனுடனே பேசிச் சொன்னதாவது: இன்று நான் என் பாவங்களை நினைக்கிறேன்.

௰ பார்வோன் தம்முடைய ஊழியக்காரர்மேல் கடுங்கோபம் அடைந்து, என்னையும் அப்பம்சுடுகிறவர்களின் தலைவனையும் தலையாரிகளின் தலைவன் வீட்டிலே காவலிலே வைத்தாரே.

௰௧ அப்பொழுது நானும் அவனும் ஒரே இராத்திரியிலே எங்களுக்கு வெவ்வேறே அர்த்தமாகிய சொப்பனங்களைக் கண்டோம்.

௰௨ அப்பொழுது தலையாரிகளின் தலைவனுக்கு வேலைக்காரனாகிய எபிரேய பிள்ளையாண்டான் ஒருவன் அங்கே எங்களோடே இருந்தான்; அவனுக்கு அவைகளை விவரித்தோம்; அப்பொழுது எங்கள் சொப்பனங்களுக்கிருந்த வெவ்வேறே அர்த்தங்களின்படியே, எங்களுக்கு அவன் எங்கள் சொப்பனங்களின் வியார்த்தியைச் சொன்னான்.

௰௩ அவன் எங்களுக்கு எப்படி வியார்த்தி சொன்னானோ, அப்படியே வந்து சம்பவித்தது; என்னைத் திரும்ப என் நிலையிலே நிறுத்தி, அவனைத் தூக்கிப்போடுவித்தாரென்றான்.

௰௪ ¶ அப்பொழுது பார்வோன் யோசேப்பை அழைத்தனுப்பினான்; அவனைத் தீவிரமாய்க் கிடங்கிலிருந்து புறப்படப்பண்ணினார்கள்; அவன் சவரம்பண்ணிக்கொண்டு, தன் வஸ்திரங்களை மாற்றிப் பார்வோனண்டைக்கு வந்தான்.

௰௫ அப்பொழுது பார்வோன் யோசேப்



Digitized by Google

னோடே சொன்னதாவது: ஒரு சொப்பனத்தைக் கண்டேன்; அதின் அர்த்தத்தைச் சொல்லுகிற ஒருவரும் இல்லை; நீயோவென்றால் ஒரு சொப்பனத்தைக் கேட்டால், அதின் அர்த்தத்தைச் சொல்லலாமென்று நான் உன்னைக்குறித்துக் கேள்விப்பட்டேன் என்றான்.

௰௬ அப்பொழுது யோசேப்பு பார்வோனுக்குப் பிரதியுத்தாரமாக: *நான் அல்ல, பராபரன்தானே பார்வோனுக்குச் சமாதானமுள்ள உத்தரவு அருளிச்செய்வாரென்றான். *க மோ. சம. அ. தானி. உ. ௩௰.

௰௭ பார்வோன் யோசேப்போடே சொன்னதாவது: என் சொப்பனத்திலே இதோ நான் நதியோரத்திலே நின்றேன்.

௰௮ அப்பொழுது இதோ, மாம்சக்கொழுப்பும் நேத்தியான ரூபமுமான ஏழு பசுக்கள் நதியிலிருந்தேறிப் புல்மேய்ந்தன.

௰௯ ஆனால் இதோ அவைகளின் பிறகாலே நரம்பலும் மகா அவலட்சண ரூபமும் மாம்சச் சிவனுமான வேறே ஏழுபசுக்கள் ஏறிவந்தன; இவைகளைப்போல அவலட்சணமான பசுக்களை எகிப்துதேசமெங்கும் நான் கண்டதில்லை.

௨௰ சிவனும் அவலட்சணமுமான இந்தப் பசுக்கள் கொழுப்பான அந்த முந்தின ஏழு பசுக்களைப் பட்சித்துப்போட்டன.

௨௧ அவைகள் இவைகளின் வயிற்றிற்குள் போகியும் இவைகளின் வயிற்றிற்குள் போயிற்றென்று தெரியப்படவில்லை; முன்னிருந்ததுபோல இவைகளின் ரூபம் அவலட்சணமாயிருந்தது; அப்பொழுது எனக்கு நித்திரை தெளிந்தது.

௨௨ பின்னையும் என் சொப்பனத்திலே நான் கண்டதாவது: இதோ, நிறைந்திருக்கிற ஏழு நல்ல கதிர்கள் ஒரே முதனிலிருந்து ஓங்கிவளர்ந்தன.

௨௩ ஆனால் அவைகளுக்குப்பிற்பாடு, இதோ, சாவியானவைகளும் கொண்டல் காற்றினால் தீய்ந்து பதரானவைகளுமான ஏழு கதிர்கள் முளைத்தன.

௨௪ சாவியான இந்தக் கதிர்கள் நல்லவைகளான அந்த ஏழு கதிர்களை விழுங்கின என்பதுதானே; இதைச் சாஸ்திரிகளுக்குச் சொன்னேன்; ஆனால் இதின் அர்த்தத்தை எனக்கு விடுவிக்கிறவன் இல்லை என்றான்.

௨௫ ¶ அப்பொழுது யோசேப்பு பார்வோனோடே சொன்னதாவது: பார்வோனின் சொப்பனம் ஒன்றுதான்; தாம் செய்யப்போகிறதைப் பராபரன் பார்வோனுக்கு அறிவித்தார்.

௨௬ அந்த ஏழு நல்ல பசுக்கள் ஏழு வருஷமாய் இருக்கின்றன; அந்த ஏழு நல்ல கதிர்களும் ஏழு வருஷம்தான்; இவை ஒரே சொப்பனமாய் இருக்கின்றன.

௨௭ அவைகளின் பிறகாலே ஏறிவந்த சீவனும் அவலட்சணமுமான ஏழு பசுக்கள் ஏழு வருஷமாய் இருக்கின்றன; கொண்டல் காற்றினால்தீய்ந்து சாவியான ஏழு கதிர்களும் அப்படித்தான்; இவைகள் பஞ்சமுள்ள ஏழு வருஷங்களாயிருக்கும்.

௨௮ பராபரன் செய்யப்போகிறதைப் பார்வோனுக்குக் காண்பித்தாரென்று பார்வோனுக்குச் சொன்னேனே, அது இந்த வர்த்தமானம்தான்.

௨௯ இதோ எகிப்து தேசமெங்கும் மகா பரிபூரணம் உண்டாயிருக்கிற ஏழு வருஷங்கள் வருகின்றன.

௩௰ ஆனால் அவைகளுக்குப்பிற்பாடு பஞ்சமுள்ள ஏழு வருஷங்கள் எழும்பும்; அப்பொழுது எகிப்துதேசத்தில் அந்தப் பரிபூரணமெல்லாம் மறக்கப்பட்டிருக்கும்; அந்தப் பஞ்சம் தேசத்தை மாளப்பண்ணும்.

௩௧ தேசத்திலிருந்த பரிபூரணம் பிற்பாடு வருகிற அந்தப் பஞ்சத்தினாலே தெரியப்படாதிருக்கும்; ஏனெனில் மகா கனமானதாயிருக்கும்.

௩௨ பார்வோனுக்கு இந்தச் சொப்பனம் இரட்டித்து வந்ததற்கு அர்த்தம் என்னவென்றால், இந்தக் காரியம் பராபரனால் நிச்சயமாய் நிருணிக்கப்பட்டது; அந்தச்

Digitized by Google

செய்யப் பராபரன் தீவிரிக்கிருரென்பது தானே.

௩௩ இப்பொழுதும் பார்வோன் உணர்வும் ஞானமுமுள்ள ஒரு மனிதனைப்பார்த்து, அவனை எகிப்துதேசத்தின்மேல் அதிகாரியாக வைக்கக்கடவர்.

௩௪ இப்படிப் பார்வோன் செய்து, தேசத்தின்மேல் மணியக்காரரை வைத்து, பரிபூரணமுள்ள ஏழு வருஷங்களில் எகிப்து தேசத்தின் பலனிலே ஐந்தில் ஒருபங்கை வாங்குவாராக.

௩௫ அவர்கள் வருகிற இந்த நல்ல வருஷங்களின் ஆகாரத்தை எல்லாம் சேர்த்து, பட்டணங்களில் ஆகாரம் உண்டாயிருக்கும்படிக்கு, பார்வோனுடைய கையின் கீழ்த் தானிய அம்பாரங்களை வைத்துவைப்பார்களாக.

௩௬ தேசம் பஞ்சத்தினுல் சங்காரமாகாதபடிக்கு, அந்த ஆகாரம் எகிப்துதேசத்தில் வரும் பஞ்சமுள்ள ஏழு வருஷங்களுக்காகத் தேசத்திற்கு ஒரு வைப்பாயிருக்கக் கடவதென்றுன்.

௩௭ ¶ இந்த வார்த்தை பார்வோன் கண்களுக்கும் அவனுடைய எல்லா ஊழியக்காரரின் கண்களுக்கும் நன்ருயிருந்தது.

௩௮ அப்பொழுது பார்வோன் தன் ஊழியக்காரரோடே, பராபரனுடைய ஆவியுள்ள இந்த மனிதனைப்போல ஒருவன் அகப்படுவானே என்றுன்.

௩௯ பிற்பாடு பார்வோன் யோசேப்போடே சொன்னதாவது: பராபரன் இவை எல்லாம் உனக்கு அறிவித்திருக்கிறபடியால், உன்னைப்போல உணர்வும் ஞானமுமுள்ளவன் இல்லை.

௪0 நீ என் வீட்டு விசாரிப்புக்காரனுய் இருப்பாய்; உன் வாக்கின்படியே என் சனமெல்லாம் வணங்கிச் செய்யக்கடவது; இராசா சனத்திற்குமாத்திரம் உன்னிலும் பெரியவனுய் இருப்பேனென்றுன்.

௪௧ பின்னையும் பார்வோன் யோசேப்புடனே, பார், உன்னை எகிப்துதேசத்தின்மேலெல்லாம் அதிகாரியாக்கினேன் என்று சொல்லி,

௪௨ பார்வோன் தன் கையில் போட்டிருந்த தன்னுடைய மோதிரத்தைக் கழற்றி, அதை யோசேப்பின் கையிலே போட்டு, மெல்லிய புடவையான வஸ்திரங்களை அவனுக்குத் தரிப்பித்து, பொன்சரப்பணியை அவன் கழுத்திலே போட்டு,

௪௩ தனக்கிருந்த இரண்டாம் இரதத்தின் மேல் அவனை ஏறப்பண்ணி, முழங்கால் படியிடுங்களென்று அவனுக்குமுன்பாகக் கூறுவித்து, அவனை எகிப்துதேசத்தின்மேலெல்லாம் அதிகாரியாக்கினுன்.

௪௪ பார்வோன் யோசேப்புடனே, நான் பார்வோன்; ஆனுல் உன்னை அல்லாமல் எகிப்துதேசமெங்கும் ஒருவரும் தன் கையையும் தன் காலையும் எடுப்பதில்லை என்றுன்.

௪௫ பார்வோன் யோசேப்புக்கு, இரகசியங்களை வெளிப்படுத்துகிறவனென்ற பெயரைத்தரித்து, அவனுக்கு ஓன்பட்டணத்து ஆசாரியனுகிய போத்திபேராவின் குமாரத்தியாகிய அஸ்நாத்தைப் பெண்சாதியாகக் கொடுத்தான்; யோசேப்பு எகிப்துதேசத்தைச் சுற்றிவரப் புறப்பட்டான்.

௪௬ ¶ யோசேப்பு எகிப்தின் இராசாவாகிய பார்வோனுக்குமுன்பாக நிற்கிறபொழுது, முப்பது வயதாயிருந்தான்; யோசேப்பு பார்வோனைவிட்டுப் புறப்பட்டு, எகிப்துதேசத்தை எல்லாம் கடந்தான்.

௪௭ பரிபூரணமுள்ள ஏழு வருஷங்களில் தேசம் மிகுதியாய்ப் பலன்தந்தது.

௪௮ எகிப்துதேசத்தில் வந்த அந்த ஏழு வருஷங்களின் ஆகாரத்தை எல்லாம் அவன் சேர்த்து, அந்த ஆகாரத்தைப் பட்டணங்களில் கட்டிவைத்தான்; ஒவ்வொரு பட்டணத்திற்குள்ளே அதினதின் சுற்றுப்புறத்து ஆகாரத்தையே கட்டிவைத்தான்.

௪௯ அப்படியே யோசேப்பு தானியத்தைக் கடற்கரை மணலைப்போல மிகவும் திரட்சியாக எண்ணி ஓயும்மட்டும் குவித்து



Digitized by Google

வைத்தான்; ஏனெனில் எண்ணிக்கைக்கு அடங்காததாயிருந்தது.

௫௰ ¶ பஞ்சமுள்ளவருஷங்கள்வராததற்கு முன்னே யோசேப்புக்கு இரண்டு குமாரர்கள் பிறந்தார்கள்; அவர்களை ஓன் பட்டணத்து ஆசாரியனாகிய போத்திபேராவின் குமாரத்தியாகிய அஸ்நாத் அவனுக்குப் பெற்றாள்.

௫௧ யோசேப்பு முந்திப் பிறந்தவனுக்கு மனாசே என்று பேரிட்டான்; ஏனெனில் என்னுடைய எல்லா வருத்தத்தையும் என் தகப்பனுடைய வீடனைத்தையும் பராபரன் என்னை மறக்கப்பண்ணினாரென்றான்.

௫௨ இரண்டாம் குமாரனுக்கு எப்பிராயீம் என்று பேரிட்டான்; ஏனெனில் நான் சிறுமைப்பட்டிருந்த தேசத்திலே பராபரன் என்னைப் பலுகப்பண்ணினாரென்றான்.

௫௩ ¶ எகிப்துதேசத்தில் வந்த பரிபூரணமுள்ள ஏழு வருஷங்களும் முடிந்தபொழுது,

௫௪ பஞ்சமுள்ள ஏழுவருஷங்கள் யோசேப்பு சொன்னபடியே வரத்துவக்கின; அப்பொழுது எல்லாத் தேசங்களிலும் பஞ்சம் உண்டாயிற்று; ஆனால் எகிப்துதேசமெங்கும் ஆகாரமிருந்தது.

௫௫ எகிப்துதேசமெங்கும் பஞ்சம் உண்டாகும்போது, சனம் அப்பத்திற்காகப் பார்வோனைநோக்கிக் கூப்பிட்டது; அப்பொழுது பார்வோன் எல்லா எகிப்தியருக்கும் நீங்கள் யோசேப்பண்டைக்குப்போய், அவன் உங்களுக்குச் சொல்லும்படியே செய்யுங்களென்றான்.

௫௬ பஞ்சம் தேசமெங்கும் உண்டாகும்போது, யோசேப்பு களஞ்சியங்களை எல்லாம் திறந்து, எகிப்தியருக்கு விற்றான்; ஏனெனில் பஞ்சம் எகிப்துதேசத்தில் கனமானதாயிற்று.

௫௭ சகல தேசங்களின் மனிதரும் யோசேப்பினிடத்திலே கொள்ள எகிப்திற்கு வந்தார்கள்; ஏனெனில் பூமியெங்கும் பஞ்சம் மிகுதியாயிருந்தது.

## ௪௨. அதிகாரம்.

௧ எகிப்திலே தானியம் உண்டென்று யாக்கோபு அறிந்தபொழுது, யாக்கோபு தன் குமாரருக்கு, நீங்கள் ஒருவரை ஒருவர் பார்க்கிறதென்ன?

௨ இதோ எகிப்திலே தானியம்உண்டென்றுகேட்டேன்; நாம் சாகாமல் உயிரோடிருக்கும்படிக்கு அங்கே இறங்கிப்போய், நமக்காகத் தானியம் கொள்ளுங்களென்றான்.

௩ அப்பொழுது யோசேப்பின் சகோதரரில் பத்துப்பேர் எகிப்திலே தானியம் கொள்ள இறங்கிப்போனார்கள்.

௪ ஆனால் யோசேப்பின் தம்பியாகிய பென்யமீனை யாக்கோபு அவன் சகோதரரோடேகூட அனுப்பாதே இருந்தான்; ஏனென்றால் அவனுக்கு ஒருவேளை ஒரு சேதம் வருமோவென்று சொன்னான்.

௫ அப்படியே கொள்ளுகிறதற்காக வருகிறவர்களோடேகூட இஸ்ரவேலின் குமாரரும் வந்தார்கள்; ஏனெனில் கானான்தேசத்திலே பஞ்சம் உண்டாயிருந்தது.

௬ யோசேப்போவென்றால், தேசத்தின்மேல் அதிகாரியாயிருந்து, அவனே தேசத்தின் சனத்திற்கெல்லாம் விற்றான்; யோசேப்பின் சகோதரர் வந்து, முகங்குப்புறத் தரையிலே விழுந்து அவனை வணங்கினார்கள்.

௭ யோசேப்பு தன் சகோதரரைப் பார்க்கிறபொழுது அவர்களை அறிந்தான்; ஆனால் அறியாதவன்போல அவர்களுக்குக் காண்பித்து, அவர்களோடே கடினமாய்ப் பேசி, அவர்களுடனே, எங்கேயிருந்து வந்தீர்களென்றான்; அப்பொழுது அவர்கள் ஆகாரங்கொள்ள கானான்தேசத்திலிருந்து வந்தோமென்றார்கள்.

௮ யோசேப்பு தன் சகோதரரை அறிந்தான்; அவர்களோவெனில் அவனை அறியாதிருந்தார்கள்.

௯ யோசேப்பு அவர்களைக்குறித்துத் தான் கண்டிருந்த *சொப்பனங்களை நினைத்து, அவர்களோடே, நீங்கள் வேவுகாரர், தேசம்

Digitized by Google

எங்கே திறந்துகிடக்கிறதென்று பார்க்கவந்தீர்களென்றான். *௧ மோ. ௩௭. ௬—௯.

௰ அவர்களோவென்றால் அவனோடேசொன்னதாவது: அல்ல எங்களாண்டவனே, ஆகாரம்கொள்ள உம்முடைய அடியார் வந்தார்கள்.

௰௧ நாங்கள் எல்லாரும் ஒருவருடைய பிள்ளைகள்; நாங்கள் உண்மையுள்ளவர்கள்; உம்முடைய அடியார் வேவுகாரரல்ல என்றார்கள்.

௰௨ அவனோவெனில் அவர்களோடே, இப்படியல்ல, தேசம் எங்கே திறந்துகிடக்கிறதென்று பார்க்கவே வந்தீர்களென்றான்.

௰௩ அப்பொழுது அவர்கள் சொன்னதாவது: உம்முடைய அடியார் கானான்தேசத்திலிருக்கிற ஒருவருக்குக் குமாரராகிய பன்னிரண்டு சகோதரர்; ஆனால் இதோ, இளையவன் இந்நாளில் எங்கள் தகப்பனண்டையிலிருக்கிறான்; ஒருவனோவென்றால் காணாமல்போனான் என்றார்கள்.

௰௪ யோசேப்பு அவர்களோடே சொன்னதாவது: நீங்கள் வேவுகாரரென்று நான் உங்களோடே சொன்னபடியே இருக்கும்.

௰௫ உங்கள் இளைய சகோதரன் இங்கே வந்தாலொழிய நீங்கள் இங்கேயிருந்து புறப்படுவதில்லை என்று பார்வோனின் சீவனைக்கொண்டு சொல்லுகிறேன்; இதினால் சோதிக்கப்படுவீர்கள்.

௰௬ உங்கள் சகோதரனை அழைத்துவர உங்களில் ஒருவனை அனுப்புங்கள்; நீங்களோவென்றால் கட்டுண்டிருப்பீர்கள்; உங்களில் நிசமுண்டோவென்று உங்கள் வார்த்தைகள் சோதிக்கப்படும்; இல்லாவிட்டால் நீங்கள் வேவுகாரரென்று பார்வோனின் சீவனைக்கொண்டு சொல்லுகிறேனென்றுசொல்லி,

௰௭ அவர்களை ஏகமாய் மூன்றுநாள் காவலிலே போடுவித்தான்.

௰௮ மூன்றாம்நாளிலே யோசேப்பு அவர்களோடே சொன்னதாவது: நீங்கள் உயிரோடே இருக்கும்படிக்கு ஒன்று செய்யுங்கள்; நான்பராபரனுக்குப்பயப்படுகிறவன்.

௰௯ நீங்கள் நிசமுள்ள மனிதரானால், உங்கள் சகோதரனாகிய ஒருவன்நீங்கள் காவல்பண்ணப்பட்டவீட்டில் கட்டுண்டிருக்கட்டும்; நீங்களோவென்றால் புறப்பட்டு, உங்கள் வீட்டாரின் பசிக்காகத் தானியம்கொண்டுபோய்,

௨௰ உங்கள் இளைய சகோதரனை என்னண்டைக்கு அழைத்துவாருங்கள்; அப்பொழுது நீங்கள் சாவாதபடிக்கு, உங்கள் வார்த்தைகள் மெய்ப்பட்டிருக்குமென்றான்; அவர்கள் அப்படிச் செய்யப்போய்,

௨௧ ஒருவரோடொருவர் சொன்னதாவது: நாம் நம்முடைய சகோதரனுக்குச் செய்த குற்றமே நம்முடையமேல் சுமருகிறது; அவன் நம்மை இரக்கம் கேட்கும்போது, அவன் ஆத்துமத்திற்கு இருந்த இடுக்கத்தை நாம் கண்டும், அவனுக்குச் செவிகொடாதேபோனோமே; ஆகையால் இந்த இடுக்கம் நம்முடையமேல் வருகிறதென்றார்கள்.

௨௨ அப்பொழுது ரூபன் அவர்களுக்குப் பிரதியுத்தாரமாக, *இளைஞனுக்கு விரோதமாகப் பாவம்செய்யாதிருங்களென்று நான் உங்களோடே சொன்னதில்லையோ? நீங்களோ கேளாதேபோனீர்கள்; இப்பொழுது இதோ அவன் இரத்தப்பழி கேட்கப்படுகிறதென்றான். *௧ மோ. ௩௭. ௨௧, ௨௨.

௨௩ ஆனால் யோசேப்பு இதைக் கேட்டானென்று அவர்கள் அறியாதேபோனார்கள்; ஏனெனில் துபாசித்தனம் பண்ணுகிறவன் அவர்களுக்குள்ளே இருந்தான்.

௨௪ அவன் அவர்களைவிட்டு அப்பாலேபோய் அழுது, திரும்ப அவர்களண்டைவந்து, அவர்களோடே பேசி, அவர்களுக்குள்ளே சிமெயோனைப் பிடித்து, அவனை அவர்கள் கண்களுக்குமுன்பாகக் கட்டுவித்தான்.

௨௫ ¶ பிறகு அவர்களுடைய சாக்குகளைத் தானியத்தால் நிரப்பவும், அவர்களுடைய பணத்தைத் திரும்ப அவனவன் சாக்கிலே போடவும், அவர்களுக்கு வழிக்கு ஆகாரம்

Digitized by Google

கொடுக்கவும் யோசேப்பு கற்பித்தான்; அப்படியே அவர்களுக்குச் செய்யப்பட்டது.

௨௬ அவர்கள் தங்கள் தானியத்தைத் தங்கள் கழுதைகள்மேல் ஏற்றிக்கொண்டு, அவ்விடம் விட்டுப் புறப்பட்டுப்போனார்கள்.

௨௭ தங்குகிற இடத்திலே அவர்களில் ஒருவன் தன் கழுதைக்குக் கவளம்கொடுக்கத் தன் சாக்கைத் திறக்கிறபொழுது, இதோ தன் சாக்கின் வாயிலே தன் பணம் இருக்கிறதை அவன் கண்டு,

௨௮ தன் சகோதரரோடே, என் பணம் எனக்குத் திரும்ப வந்தது; இதோ என் சாக்கிலே இருக்கிறதென்றான்; அப்பொழுது அவர்கள் திடனற்றுப்போய், ஒருவரை ஒருவர் கலக்கமாய்ப் பார்த்து, பராபரன் நமக்கு இதைச் செய்தது ஏதென்றார்கள்.

௨௯ ¶ அவர்கள் கானான்தேசத்திலே தங்கள் தகப்பனாகிய யாக்கோபண்டையிலே வந்து சேர்ந்தபொழுது, தங்களுக்குச் சம்பவித்தவைகளை எல்லாம் அவனுக்கு அறிவித்துச் சொன்னதாவது:

௩௰ தேசத்தின் அதிகாரியாயிருக்கிறவன் எங்களோடே கடினமாய்ப்பேசி, எங்களைத் தேசத்தை வேவுபார்க்கிறவர்களாக எண்ணினான்.

௩௧ நாங்களோவெனில், அவனோடே சொன்னதாவது: நாங்கள் வேவுகாரராயிராமல் நிசமுள்ள மனிதராயிருக்கிறோம்.

௩௨ எங்கள் தகப்பனுக்குப் பிறந்த நாங்கள், பன்னிரண்டு சகோதரர்; ஒருவன் காணாமல்போனான்; இளையவனோவென்றால், இந்நாளில் கானான்தேசத்தில் எங்கள் தகப்பனண்டையிலே இருக்கிறான் என்றோம்.

௩௩ அப்பொழுது தேசத்தின் அதிகாரியாயிருக்கிறவன் எங்களோடே சொன்னதாவது: நீங்கள் நிசமுள்ளவர்களாயிருக்கிறதை எதினாலே அறிவேனென்றால், உங்கள் சகோதரனாகிய ஒருவனை நீங்கள் என்னிடத்திலே வைத்து, உங்கள் வீட்டாரின் பசிக்காகத் தானியம் வாங்கிக்கொண்டு போய்,

௩௪ உங்கள் இளையசகோதரனை என்னண்டைக்கு அழைத்துவாருங்கள்; அதினாலே நான், நீங்கள் வேவுகாரராயிராமல், நிசமுள்ளவர்கள்தான் என்று அறிந்துகொண்டு, உங்கள் சகோதரனை உங்களுக்குக் கொடுத்துவிடுவேன், நீங்கள் தேசத்திலே தொழிலும் பண்ணலாமென்றான் என்று சொன்னார்கள்.

௩௫ சம்பவித்ததேதென்றால், அவர்கள் தங்கள் சாக்குகளில் இருக்கிறதைக் கொட்டுகையில், இதோ, அவனவன் சாக்கிலே அவனவன் பணமுடிப்பு இருந்தது; தங்கள் பணங்களின் முடிப்புகளை அவர்களும் அவர்கள் தகப்பனும் கண்டு பயந்தார்கள்.

௩௬ அவர்கள் தகப்பனாகிய யாக்கோபு அவர்களுடனே, என்னைப் பிள்ளைகள் அற்றவனாக்குகிறீர்கள்; யோசேப்பு இல்லாதேபோனான்; சிமெயோனும் இல்லாதேபோனான்; பென்யமீனையும் அழைத்துக்கொண்டுபோகிறீர்கள்; என்மேலே இவை எல்லாம் வருகிறதென்றான்.

௩௭ அப்பொழுது ரூபன் தன் தகப்பனோடே, அவனை நான் உம்மண்டைக்கு அழைத்து வராதேபோனால், என் இரண்டு குமாரனைக் கொன்றுபோடுவீராக; என் கையிலே அவனை ஒப்புவியும், நான் அவனை உம்மண்டைக்குத் திரும்ப அழைத்து வருவேன் என்றான்.

௩௮ அவனோவென்றால் என் மகன் உங்களோடேகூட இறங்கிப் போவதில்லை; ஏனெனில் அவன் தமையன் மரணமடைந்தான்; இவன் ஒருவன் மீதியானவன்; நீங்கள் போகும் வழியிலே இவனுக்கு ஒரு சேதம் வந்தால், நீங்கள் என் நரையைச் சஞ்சலத்தோடே குழியில் இறங்கப்பண்ணுவீர்கள் என்றான்.

## ௪௩. அதிகாரம்.

பஞ்சமோவென்றால் தேசத்திலே மிகுதியாயிருந்தது.

Digitized by Google

௨ ஆகையால் அவர்கள் எகிப்திலிருந்து கொண்டுவந்த தானியம் சாப்பிட்டுத் தீர்ந்

தபொழுது, அவர்கள் தகப்பன் அவர்களுடனே, நீங்கள் திரும்பப்போய்க் கொஞ்சம் ஆகாரம் நமக்குக் கொள்ளுங்கள் என்றான்.

௩ அப்பொழுது யூதா அவனோடே சொன்னதாவது: உங்கள் சகோதரன் உங்களோடேகூட வராவிட்டால், நீங்கள் என் முகத்தைப் பார்ப்பதில்லை என்கிறதை அந்த மனிதன் எங்களுக்குத் திடச்சாட்சியாய்ச் சொல்லிக் கற்பித்தான்.

௪ நீர் எங்கள் சகோதரனை எங்களோடேகூட அனுப்புகிறதுண்டானால், நாங்கள் இறங்கிப்போய், உமக்கு ஆகாரம்கொள்ளுவோம்.

௫ அனுப்பாமல் போனீரேயானால், நாங்கள் இறங்கிப்போவதில்லை; ஏனெனில் உங்கள் சகோதரன் உங்களோடேகூட வராவிட்டால், நீங்கள் என் முகத்தைப் பார்ப்பதில்லையென்று அந்த மனிதன் எங்களோடே சொன்னானே என்றான்.

௬ அப்பொழுது இஸ்ரவேல், உங்களுக்கு இன்னம் ஒரு சகோதரன் இருக்கிறதை நீங்கள் அந்த மனிதனுக்கு அறிவித்ததினாலே எனக்கேன் பொல்லாப்பு உண்டுபண்ணினீர்கள் என்றான்.

௭ அதற்கவர்கள் சொன்னதாவது: உங்கள் தகப்பன் இன்னம் உயிரோடிருக்கிறானா என்றும், உங்களுக்கு இன்னம் ஒரு சகோதரன் உண்டோ என்றும், அந்த மனிதன் எங்கள் செய்தியையும் எங்கள் வம்சத்தின் செய்தியையும் கேட்கவே கேட்டான்; அந்தக் கேள்விகளுக்குத்தக்கதாக அவனுக்கு அறிவித்தோம்; உங்கள் சகோதரனை உங்களோடேகூட இங்கே அழைத்துவாருங்கள் என்று அவன் சொல்லுவான் என்கிறதை அறிந்தோமோ என்றார்கள்.

௮ பின்னையும் யூதா தன் தகப்பனாகிய இஸ்ரவேலோடே சொன்னதாவது: நாங்களும் நீரும் எங்கள் குழந்தைகளும் சாவாமல் உயிரோடிருக்கும்படிக்கு, நாங்கள் எழுந்திருந்து போகத்தக்க விதமாகப் பிள்ளையாண்டானை என்னோடேகூட அனுப்பும்.

௯ அவனுக்காக நான் பிணையாயிருப்பேன்; என் கையில் அவனைக் கேட்பீராக; நான் அவனை உம்மண்டைக்குக் கொண்டுவந்து அவனை உமக்குமுன்பாக நிறுத்தாதேபோனால், சகல நாளும் உமக்கு நேரஸ்தனாயிருப்பேன்.

௰ ஏனெனில் நாங்கள் தாமதிக்காதிருந்தோமானால், இப்பொழுது இரண்டுவிசை திரும்பிவந்திருப்போமே என்றான்.

௰௧ அப்பொழுது அவர்கள் தகப்பனாகிய இஸ்ரவேல் அவர்களோடே சொன்னதாவது: இப்படி வேண்டியதேயானால், ஒன்று செய்யுங்கள்; இந்தத் தேசத்தின் உச்சிதங்களாகிய கொஞ்சம் பிசின் தயிலத்தையும், கொஞ்சம் தேனையும், சம்பாரங்களையும், வெள்ளைப் போளத்தையும், தேரபிந்து கொட்டைகளையும், வாதுமைக்கொட்டைகளையும் உங்கள் சாக்குகளில்போட்டு, அந்த மனிதனுக்குக் காணிக்கையாகக் கொண்டுபோங்கள்.

௰௨ இரட்டிப்பாய்ப் பணத்தை உங்கள் கைகளிலும் வைத்து, உங்கள் சாக்குகளின் வாயிலே திரும்பிவந்த பணத்தை மறுபடியும் உங்கள் கைகளிலே கொண்டுபோங்கள்; அது பிசகாயிருந்ததாக்கும்.

௰௩ உங்கள் சகோதரனையும் கூட்டிக்கொண்டு, எழுந்து, அந்த மனிதனண்டைக்குத் திரும்பிப்போங்கள்.

௰௪ ஆனால் அந்த மனிதன் உங்களுடைய மற்றச் சகோதரனையும் பென்யமீனையும் உங்களோடேகூட அனுப்பிவிடும்படிக்கு, சர்வத்திற்கும் வல்ல பராபரன் அவன் முன்பாக உங்களுக்கு இரக்கம்கிடைக்கப் பண்ணுவாராக; நானோவெனில் பிள்ளை அற்றுப்போனவனைப்போல இருப்பேன் என்றான்.

௰௫ ¶ அப்பொழுது அவர்கள் அந்தக் காணிக்கையையும், தங்கள் கைகளில் இரட்டிப்பான பணத்தையும் எடுத்து, பென்யமீனைக் கூட்டிக்கொண்டு, பயணம் புறப்

Digitized by Google

பட்டு எகிப்திற்கு இறங்கிப்போய், யோசேப்புக்கு முன்பாக வந்து நின்றார்கள்.

௰௬ அப்பொழுது பென்யமீன் அவர்களோடேகூட இருக்கிறதை யோசேப்பு கண்டு, தன் வீட்டு விசாரிப்புக்காரனோடே, நீ இந்த மனிதரை வீட்டிற்கு அழைத்துப்போய், சாப்பாட்டுக்கு வேண்டியவைகளை அடித்து ஆயத்தம்பண்ணு; ஏனெனில் மத்தியானத்திலே இந்த மனிதர் என்னோடே சாப்பிடுவார்கள் என்றான்.

௰௭ அவன் யோசேப்பு தனக்குச் சொன்னபடியே செய்து, அந்த மனிதரை யோசேப்பின் வீட்டிற்கு அழைத்துப்போனான்.

௰௮ அப்பொழுது அவர்கள், தாங்கள் யோசேப்பின் வீட்டிற்கு அழைத்துப்போகப்படுகிறதைக் கண்டு பயந்து, முந்தினமுறை நம்முடைய சாக்குகளில் திரும்பிவந்த பணத்தினிமித்தம் நம்முடைய பேரில் குற்றம்சாற்றி நம்முடைய மேல்விழுந்து, நம்மைச்சிறைகளாக்கி, நம்முடைய கழுதைகளை எடுத்துக்கொள்வதற்காக நாம்கொண்டுபோகப்படுகிறோம் என்றுசொல்லி,

௰௯ யோசேப்பின் வீட்டு விசாரிப்புக்காரனண்டையிலே சேர்ந்து, வீட்டு வாசற்படியிலே அவனோடே பேசிச் சொன்னதாவது:

௨௰ எங்களாண்டவனே, ஆகாரம்கொள்ள முந்த இறங்கிவந்திருந்து போனோமே.

௨௧ அப்பொழுது சம்பவித்ததேதெனில், நாங்கள் தங்கும் இடத்தில் வந்து எங்கள் சாக்குகளைத் திறந்தபொழுது, இதோ, நாங்கள் எங்கள் பணத்தை நிறுத்துக்கொடுத்த நிறையாய் அவனவன் பணம் அவனவன் சாக்கின் வாயில் இருந்தது; அதை எங்கள் கையிலே திரும்பக் கொண்டுவந்தோம்.

௨௨ ஆகாரம்கொள்ள வேறே பணத்தையும் எங்கள் கையிலே எடுத்துக்கொண்டு வந்தோம்; எங்கள் பணத்தை யார் எங்கள் சாக்குகளில் வைத்தான் என்கிறதை அறியோம் என்றார்கள்.

௨௩ அவனோவென்றால் உங்களுக்குச் சமாதானம், நீங்கள் பயப்படவேண்டாம், உங்கள் பராபரனும் உங்கள் தகப்பனுடைய பராபரனுமானவர் உங்கள் சாக்குகளில் உங்களுக்குப் பொக்கிஷங்களைக் கட்டளையிட்டார்; உங்கள் பணம் எனக்கு வந்து சேர்ந்ததென்று சொல்லி, சிமெயோனை வெளியே அவர்களண்டையில் அழைத்துவந்துவிட்டு,

௨௪ ¶ அவர்களை யோசேப்பின் வீட்டிற்குள் அழைத்துக்கொண்டுபோய், தங்கள் கால்களைக் கழுவ அவர்களுக்குத் தண்ணீர்கொடுத்து, அவர்கள் கழுதைகளுக்கு இரை போட்டான்.

௨௫ மத்தியானத்திலே யோசேப்பு வருமளவும் அவர்கள் காணிக்கையை ஆயத்தமாய் வைத்தார்கள்; ஏனெனில் தாங்கள் அங்கே அப்பம் சாப்பிடப்போகிறதைக் கேட்டிருந்தார்கள்.

௨௬ யோசேப்பு வீட்டிற்கு வந்தபொழுது, அவர்கள் தங்கள் கையிலிருந்த காணிக்கையை அவனுக்கு வீட்டிற்குள் கொண்டுபோய், *தரைமட்டும்குனிந்து, அவனை வணங்கினார்கள். *௧ மோ. ௩௭. ௭.

௨௭ அப்பொழுது அவன், சுகமாயிருக்கிறீர்களோ என்று கேட்டு, நீங்கள் சொன்ன முதிர்வயதான உங்கள் தகப்பன் சுகமாயிருக்கிறானோ? அவன் இன்னம் உயிரோடிருக்கிறானோ என்று விசாரித்தான்.

௨௮ அவர்கள், எங்கள் தகப்பனாகிய உம்முடைய ஊழியக்காரன் சுகமாயிருக்கிறான், இன்னம் உயிரோடிருக்கிறானென்று சொல்லி, குனிந்து வணங்கினார்கள்.

௨௯ அவன் தன் கண்களை ஏறெடுத்து, தன் தாயின் குமாரனாகிய தன்னோடேகூடப் பிறந்த பென்யமீனைக் கண்டு, இவன் நீங்கள் என்னோடே சொன்ன உங்கள் இளைய சகோதரனோ என்று கேட்டு, என் மகனே, பராபரன் உன்மேலே கிருபைவைக்கக்கடவரென்றான்.

௩௰ ஆனால் தன் சகோதரனுக்காக யோசேப்பின் உள்ளம் பொங்கினபடியினாலே, அவன் அழுகிறதற்கு இடம்தேடித் தீவிரித்

Digitized by Google

து, அறையிலே போய், அங்கே அழுதான்.

௩௧ பிறகு அவன் தன் முகத்தைக் கழுவிப் புறப்பட்டு, தன்னை அடக்கிக்கொண்டு போசனம் வையுங்கள் என்றான்.

௩௨ அப்பொழுது அவனுக்குத் தனிப்படவும், அவர்களுக்குத் தனிப்படவும், அவனோடே சாப்பிடுகிற எகிப்தியருக்குத் தனிப்படவும் வைத்தார்கள்; ஏனெனில் எகிப்தியர் எபிரேயரோடே அப்பம் சாப்பிடமாட்டார்கள்; அதேனென்றால் அது எகிப்தியருக்கு அருவருப்பாயிருக்கும்.

௩௩ அவர்கள் அவனுக்குமுன்பாக மூத்தவன் தன் மூத்தவயதின்படியேயும் இளையவன் தன் இளையவயதின்படியேயும் உளுக்காரவைக்கப்பட்டார்கள்; அதற்காக அவர்கள், ஒருவருக்கொருவர் ஆச்சரியப்பட்டார்கள்.

௩௪ அவன் தன் முன்னே இருக்கிறதில் அவர்களுக்குப் பங்கிட்டுஅனுப்பினான்; ஆனால் அவர்கள் எல்லாருடைய பங்குகளைப்பார்க்கிலும், பென்யமீனுடைய பங்கு ஐந்தத்தனை அதிகமாயிற்று; அவர்கள் குடித்து, அவனோடே சந்தோஷமாயிருந்தார்கள்.

## ௪௪. அதிகாரம்.

பிற்பாடு அவன் தன் வீட்டு விசாரிப்புக்காரனுக்குக் கற்பித்ததாவது: நீ இந்த மனிதருடைய சாக்குகளை,அவர்கள் ஏற்றிக்கொண்டு போகத்தக்க பாரமாய் ஆகாரத்தினாலே நிரப்பி, அவனவன் பணத்தை அவனவனுடைய சாக்கின் வாயிலே போட்டு,

௨ இளையவனுடைய சாக்கின் வாயிலே வெள்ளிப்பாத்திரமாகிய என்னுடைய பாத்திரத்தையும், அவனுடைய தானியத்தின் பணத்தையும் போடு என்று கற்பித்தான்; அவன் யோசேப்புச் சொன்ன வார்த்தையின்படியே செய்தான்.

௩ ¶ காலமே வெளிச்சமாகிறபொழுது, அந்த மனிதர் தங்கள் கழுதைகளோடும் கூட அனுப்பிவிடப்பட்டார்கள்.

௪ அவர்கள் பட்டணத்தைவிட்டுப் புறப்பட்டுத் தூரமாய்ப் போகாததற்குமுன்னே, யோசேப்பு தன் வீட்டுவிசாரிப்புக்காரனோடே சொன்னதாவது: நீ எழுந்து அந்த மனிதரைப் பின்தொடர்ந்து, அவர்களைக் கிட்டிப்பிடிக்கும்பொழுது அவர்களோடே சொல்லவேண்டியது ஏதெனில் நீங்கள் நன்மைக்குத் தீமையைச் சரிக்கட்டினதென்ன?

௫ அது என் எசமானன் குடிக்கிறபாத்திரம் அல்லவோ? அது போன வகை அவருக்கு ஞானதிருஷ்டியால் தெரியாதோ? நீங்கள் செய்தது பொல்லாத காரியமாயிருக்கிறதென்று சொல்லென்றான்.

௬ அவன் அவர்களைத் தொடர்ந்து பிடித்து, இந்த வார்த்தைகளை அவர்களோடே சொன்னான்.

௭ அப்பொழுது அவர்கள் அவனோடே சொன்னதாவது: எங்கள் ஆண்டவன் இப்படிக்கொத்த வார்த்தைகளைச் சொல்லுவானேன்? இப்படிக்கொத்த காரியத்தை உம்முடைய அடியார் ஒருக்காலும் செய்வதில்லை.

௮ இதோ, எங்கள் சாக்குகளின் வாயிலே நாங்கள் கண்ட பணத்தைக் கானான்தேசத்திலிருந்து திரும்ப உம்மண்டைக்குக் கொண்டுவந்தோமே? நாங்கள் உம்முடைய எசமானனின் வீட்டிலிருந்து வெள்ளியையாகிலும் பொன்னையாகிலும் திருடிக்கொண்டு போவது எப்படி?

௯ உம்முடைய அடியாரில் எவனிடத்திலே அது கண்டுபிடிக்கப்படுமோ, அவன் சாவக்கடவன்; நாங்களும் எங்கள் ஆண்டவனுக்குஅடிமைகளாவோம்என்றார்கள்.

௧௦ அதற்கு அவன், இப்பொழுதும் நீங்கள் சொன்ன வார்த்தைகளின்படியே ஆகக்கடவது; எவனிடத்தில் அது கண்டுபிடிக்கப்படுமோ, அவன் எனக்கு அடிமையாவான்; நீங்களோவென்றால் குற்றமற்றிருப்பீர்கள் என்றான்.

௧௧ அவர்கள் தீவிரித்து அவனவன் தன் சாக்கைத் தரையிலே இறக்கிப்போட்டு,



Digitized by Google

ஒவ்வொருவராய்த் தங்கள் சாக்குகளைத் திறந்துவைத்தார்கள்.

௰௨ அவன் மூத்தவனைத் துவக்கி இளையவன்மட்டும் சோதிக்கிறபொழுது, பாத்திரம் பென்யமீனுடைய சாக்கிலே கண்டுபிடிக்கப்பட்டது.

௰௩ அப்பொழுது அவர்கள் தங்கள் வஸ்திரங்களைக் கிழித்துக்கொண்டு, அவனவன் தன் தன் கழுதையின்மேலே சுமையை ஏற்றி, பட்டணத்திற்குத் திரும்பினார்கள்.

௰௪ யூதாவும் அவன் சகோதரரும் யோசேப்பின் வீட்டிலே வந்தார்கள்; ஏனெனில் அவன் அதுவரையில் அங்கே இருந்தான்; அவனுக்குமுன்பாகத் தரையிலே விழுந்தார்கள்.

௰௫ யோசேப்பு அவர்களுடனே, நீங்கள் செய்த இந்தக் கிரியை ஏது? என்னைப்போலொத்த மனிதனுக்குக் காரியம் ஞானதிருஷ்டியினால் தெரியுமென்று, அறியாதே போனீர்களோ என்றான்.

௰௬ அப்பொழுது யூதா, என் ஆண்டவனுக்கு நாங்கள் என்ன சொல்லப்போகிறோம்? என்ன பேசுவோம்? எதினால் எங்களை நீதிமான்களாக்குவோம்? பராபரன் உம்முடைய அடியாரின் அக்கிரமத்தைக் கண்டுபிடித்தார்; இதோ நாங்கள் என் ஆண்டவனுக்கு அடிமைகள்; நாங்களும் பாத்திரம் கண்டுபிடிக்கப்பட்ட அவனும் தானே என்றான்.

௰௭ அவனோவென்றால் இப்படிக்கொத்த செய்கை எனக்குத் தூரமாயிருப்பதாக; எவன் வசத்தில் பாத்திரம் கண்டுபிடிக்கப்பட்டதோ, அவனே எனக்கு அடிமையாய் இருப்பான்; நீங்களோவெனில் சமாதானத்தோடே உங்கள் தகப்பனண்டைக்குப் போயேறுங்கள் என்றான்.

௰௮ அப்பொழுது யூதா அவனண்டையிலே சேர்ந்து சொன்னதாவது: ஆ, என் ஆண்டவனே, உம்முடைய அடியான் என் ஆண்டவனுடைய செவிகளுக்குமுன்பாக ஒரு வார்த்தை பேசட்டும்; உம்முடைய கோபம் எரியாதிருப்பதாக; ஏனெனில் நீர் பார்வோனைப்போல இருக்கிறீர்.

௰௯ உங்களுக்குத் தகப்பனானாலும் சகோதரனானாலும் உண்டோ என்று என் ஆண்டவன் உம்முடைய அடியாரைக் கேட்டீர்.

௨௰ அப்பொழுது என் ஆண்டவனுடனே, எங்களுக்கு முதிர்வயதுள்ள தகப்பனும் அவருக்கு முதிர்வயதிலே பிறந்த இளைய சகோதரனும் உண்டு; இவனுடைய தமையன் செத்துப்போனான்; இவன் ஒருவன் தன் தாயாருக்கு மீதியானவன்; இவனுடைய தகப்பன் இவன்மேலே பட்சமாயிருக்கிறாரென்றோம்.

௨௧ அப்பொழுது நீர் உம்முடைய அடியாரோடே, அவனை என்னண்டைக்கு அழைத்துவாருங்கள்; என் கண்ணை அவன் மேலே வைப்பேன் என்றீர்.

௨௨ நாங்களோவென்றால் என் ஆண்டவனோடே, அந்த இளைஞன் தன் தகப்பனை விடக்கூடாது; தன் தகப்பனை விட்டால் அவர் செத்துப்போவாரென்றோம்.

௨௩ நீரோவெனில் உம்முடைய அடியாருடனே, உங்கள் இளைய சகோதரன் உங்களோடேகூட இறங்கிவாராதேபோனால், நீங்கள் என் முகத்தை இனிப் பார்ப்பதில்லை என்று சொன்னீர்.

௨௪ நாங்கள் உம்முடைய அடியானாகிய என் தகப்பனண்டைக்கு வந்தேறினபொழுது சம்பவித்ததேதென்றால், என் ஆண்டவனுடைய வார்த்தைகளை அவருக்கு அறிவித்தோம்.

௨௫ நீங்கள் திரும்பப் போய், கொஞ்சம் ஆகாரம் நமக்குக் கொள்ளுங்களென்று எங்கள் தகப்பனார் சொன்னார்.

௨௬ அதற்கு நாங்கள் சொன்னதேதெனில், நாங்கள் இறங்கிப்போகக்கூடாது; எங்கள் இளைய சகோதரன் எங்களோடு இருந்தானேயானால் இறங்கிப்போவோம்; ஏனென்றால் எங்கள் இளைய சகோதரன் எங்களோடே இராவிட்டால், நாங்கள் அந்



Digitized by Google

தப் புருஷனுடைய முகத்தைப் பார்க்கக் கூடாதென்றோம்.

௨௭ அப்பொழுது உம்முடைய அடியானாகிய என் தகப்பன் எங்களோடே சொன்னதாவது: என் பெண்சாதி எனக்கு இரண்டு பிள்ளைகளைப் பெற்றாள் என்கிறதையும்,

௨௮ அவர்களில் ஒருவன் என்னிடத்திலிருந்து புறப்பட்டுப் போனான், அவன் பீறுண்ணவே பீறுண்டானென்று முன் சொல்லி, இதுவரைக்கும் அவனைக் காணாதிருக்கிறேன் என்கிறதையும் நீங்கள் அறிவீர்கள்.

௨௯ நீங்கள் இவனையும் என் முன்பாக இராதபடிக்கு அழைத்துப்போகும்போது, ஒரு சேதம் அவனுக்கு வந்தால், என் நரையை நிர்ப்பந்தத்தோடே குழியில் இறங்கப்பண்ணுவீர்கள் என்றான்.

௩௰ இப்பொழுதும் இளைஞன் எங்களோடிராமல், நான் என் தகப்பனாகிய உம்முடைய அடியானண்டையிலே போனால், அப்பொழுது அவருடைய ஆத்துமா இவனாத்துமாவோடே ஒட்டிக்கொண்டிருக்கிறபடியினாலே சம்பவிப்பது ஏதெனில்,

௩௧ அவர் இளைஞன் இல்லை என்று காணும்பொழுது, செத்துப்போவார்; அப்படியே உம்முடைய அடியாரும் உம்முடைய ஊழியக்காரனாகிய எங்கள் தகப்பனுடைய நரையைச் சஞ்சலத்தோடே குழியில் இறங்கப்பண்ணுவோமே.

௩௨ ஏனெனில் நான் அவனை உம்மண்டைக்கு அழைத்துவாராதேபோனால், நான் சகலநாளும் என் தகப்பனுக்கு நேரந்தனாய் இருப்பேனென்று உம்முடைய அடியானாகிய நான் என் தகப்பனிடத்திலே இந்த இளைஞனுக்காகப் பிணைப்பட்டேன்.

௩௩ இப்பொழுதும் இளைஞன் தன் சகோதரரோடே கூடப்போய் ஏறும்படிக்கு, உம்முடைய அடியானாகிய நான் இளைஞனுக்குப் பதிலாக இங்கே என் ஆண்டவனுக்கு அடிமையாய் இருக்கட்டும்.

௩௪ ஏனெனில் இளைஞன் என்னோடே இல்லாவிட்டால் எப்படி என் தகப்பனண்டைக்குப் போயேறுவேன்? என் தகப்பனைப் பிடிக்கும் தீங்கை அப்பொழுது காண்பேனே என்றான்.

## ௪௫. அதிகாரம்.

அப்பொழுது யோசேப்பு தன்னண்டையில் நிற்கிற எல்லார்முன்பாகவும் தன்னை அடக்கிக்கொண்டிருக்கக்கூடாமல், யாவரையும் என்னைவிட்டு வெளியே போகப்பண்ணுங்களென்று கூப்பிட்டான்; யோசேப்பு தன் சகோதரருக்குத் தன்னை அறியப்படுத்துகையில் ஒருவரும் அவனண்டையிலே நின்றதில்லை.

௨ அவன் சத்தமிட்டு அழுதான்; அதை எகிப்தியர் கேட்டார்கள்; பார்வோனின் வீட்டாரும் கேட்டார்கள்.

௩ யோசேப்பு தன் சகோதரரோடே நான் யோசேப்பு; என் தகப்பன் இன்னம் உயிரோடிருக்கிறாரோ என்றான்; ஆனால் அவன் சகோதரர் அவனுக்குமுன்பாகக் கலங்கினதினாலே, அவனுக்குப் பிரதியுத்தாரம் சொல்ல அவர்களுக்குக் கூடாதேபோயிற்று.

௪ அப்பொழுது யோசேப்பு தன் சகோதரரோடே, என்னண்டையிலே கிட்டிவாருங்கள் என்றான்; அவர்கள் கிட்டிப்போனார்கள்; அப்பொழுது அவன் சொன்னதாவது: நீங்கள் எகிப்திற்குப் போகிறவர்களுக்கு விற்ற உங்கள் சகோதரனாகிய யோசேப்பு நானே.

௫ இப்பொழுதும் நீங்கள் என்னை இவ்விடத்திற்கு விற்றுப்போட்டதினாலே, நீங்கள் சஞ்சலப்படவும் அது உங்கள் பார்வைக்குப் பொல்லாப்பாயிருக்கவும் வேண்டாம்; ஏனெனில் உங்கள் ஜீவனுக்காகப் பராபரன் என்னை உங்களுக்குமுன்னாக அனுப்பினார்.

௬ ஏனென்றால் இந்த இரண்டுவருஷம் தேசத்திற்குள்ளே பஞ்சம் உண்டாயிருந்தது; உழவும் அறுப்பும் இல்லாத அஞ்சு வருஷங்களும் இன்னம் வரும்.

Digitized by Google

௭ ஆனால், உங்களைத் தேசத்தில் மீதியாக வைப்பதற்கும் உங்களைப் பெரிய இரட்சிப்பினாலே உயிரோடே காப்பதற்குமாக, பராபரன் என்னை உங்களுக்குமுன்னாக அனுப்பினார்.

௮ இப்பொழுதும் நீங்களல்ல, பராபரன் என்னை இங்கே அனுப்பி, என்னைப் பார்வோனுக்குத் தகப்பனாகவும், அவர் வீட்டிற்கெல்லாம் துரையாகவும், எகிப்துதேசத்தை எல்லாம் ஆளுகிறவனாகவும் வைத்தார்.

௯ நீங்கள் தீவிரத்தோடே என் தகப்பனண்டைக்குப் போயேறி, அவரோடே சொல்லவேண்டியதேதெனில், உம்முடைய குமாரனாகிய யோசேப்புச் சொல்லி அனுப்புகிறதாவது: பராபரன் என்னை எகிப்திற்கெல்லாம் துரையாக வைத்தார்; என்னண்டைக்கு இறங்கிவாரும், தாமதிக்கவேண்டாம்.

௰ நீர் கோசேன் தேசத்திலே வாசம்பண்ணி, எனக்குச் சமீபத்திலே இருப்பீர்; நீரும் உம்முடைய பிள்ளைகளும் உம்முடைய பிள்ளைகளின் பிள்ளைகளும் உம்முடைய ஆடுகளும் உம்முடைய மாடுகளும் உமக்குண்டான யாவும் கூடத்தானே.

௧௧ நீரும் உம்முடைய வீட்டாரும் உமக்கிருக்கிற யாவும் தாழ்வுபடாதபடிக்கு, அங்கே உம்மைப் பராமரிப்பேன்; ஏனெனில் பஞ்சம் இன்னம் ஐந்து வருஷம்மட்டும் இருக்குமென்கிறான் என்று சொல்லுங்கள்.

௧௨ இதோ என்னுடைய வாய் உங்களோடே பேசுகிறது என்கிறதை உங்கள் கண்களும் என் தம்பியாகிய பென்யமீனின் கண்களும் காண்கிறதே.

௧௩ எகிப்திலே எனக்கு இருக்கிற என்னுடைய எல்லா மகிமையையும் நீங்கள் கண்டவை எல்லாவற்றையும் என் தகப்பனுக்கு அறிவித்து, தீவிரமாய் என் தகப்பனை இவ்விடத்திற்கு இறங்கிவரப்பண்ணுங்கள் என்றுசொல்லி,

௧௪ தன் தம்பியாகிய பென்யமீனுடைய கழுத்திறுக்கக் கட்டிக்கொண்டு அழுதான்; பென்யமீனும் அவன் கழுத்தைக் கட்டிக்கொண்டு அழுதான்.

௧௫ தன்னுடைய எல்லாச் சகோதரரையும் முத்தம்செய்து அவர்கள் முன்பாக அழுதான்; அதற்குப் பிற்பாடு அவன் சகோதரர் அவனோடே பேசினார்கள்.

௧௬ ¶ யோசேப்பின் சகோதரர் வந்தார்களென்று பார்வோன் வீட்டிலே செய்தி கேட்கப்பட்டபொழுது, அது பார்வோன் பார்வைக்கும் அவன் ஊழியக்காரரின் பார்வைக்கும் நன்றாய் இருந்தது.

௧௭ அப்பொழுது பார்வோன் யோசேப்போடே சொன்னது: நீ உன் சகோதரரோடே சொல்லவேண்டியதாவது: நீங்கள் செய்யவேண்டியதேதெனில், உங்கள் மிருகசீவன்களின்மேல் பொதியேற்றிப் புறப்பட்டு, கானான்தேசத்திற்குப்போய்,

௧௮ உங்கள் தகப்பனையும் உங்கள் வீட்டாரையும் கூட்டிக்கொண்டு என்னண்டைக்கு வாருங்கள், நான் உங்களுக்கு எகிப்துதேசத்தின் நன்மையைக் கொடுப்பேன்; தேசத்தின் கொழுப்பைச் சாப்பிடுவீர்கள்.

௧௯ நீங்கள் செய்யவேண்டியது ஏதெனில், நீங்கள் உங்கள் குழந்தைகளுக்காகவும் உங்கள் பெண்சாதிகளுக்காகவும் வண்டில்களை எகிப்துதேசத்திலிருந்து கொண்டுபோய், உங்கள் தகப்பனையும் ஏற்றி வாருங்கள்.

௨௰ உங்கள் கண் உங்களுடைய தட்டுமுட்டுகளைப் பார்க்கவேண்டாம்; ஏனெனில் எகிப்துதேசமெங்கும் நன்மையாயிருக்கிறது உங்களுடையதாய் இருக்குமென்று அவர்களோடே சொல்ல நீ கட்டளைபெற்றாய் என்றான்.

௨௧ இப்படியே இஸ்ரவேலின் குமாரர் செய்தார்கள்; யோசேப்பு அவர்களுக்குப் பார்வோனுடையகட்டளையின்படியே வண்டில்களைக்கொடுத்து, வழிக்கு ஆகாரத்தையும் அவர்களுக்குக் கொடுத்தான்.

Digitized by Google

உஉ அவர்களில் ஒவ்வொருவனுக்கு அவன் மாற்று வஸ்திரங்களையும் கொடுத்து, பென்யமீனுக்கோ முந்நூறு வெள்ளிக்காசையும் ஐந்து மாற்று வஸ்திரங்களையும் கொடுத்து,

உரு அப்படியே தன் தகப்பனுக்கு எகிப்தின் உச்சிதங்களைச் சுமந்துபோகிற பத்துக் கழுதைகளையும், தன் தகப்பனுக்காக வழிக்குத் தானியமும் அப்பமும் தின்பண்டங்களும் சுமந்துபோகிற பத்துக் கோளிகைக் கழுதைகளையும் அனுப்பினான்.

உச அப்படியே அவன் தன் சகோதரரை அனுப்பிவிட்டு, இவர்கள்போகிறபொழுது, வழியிலே சண்டைபண்ணீர்களாக என்று அவர்களோடே சொன்னான்.

உடு ¶ அவர்கள் எகிப்திலிருந்து போயேறி, கானான்தேசத்திலே தங்கள் தகப்பனாகிய யாக்கோபண்டைக்கு வந்து,

உசு யோசேப்பு இன்னம் உயிரோடிருக்கிறான் என்றும், அவன் எகிப்துதேசத்தை எல்லாம் ஆளுகிறான் என்றும் அவனுக்கு அறிவித்தார்கள்; ஆனால் அவன் இருதயம் தளம்பிற்று; ஏனெனில் அவர்களை நம்பாதிருந்தான்.

உஎ அவர்களோவென்றால் யோசேப்புத் தங்களுடனே பேசின எல்லா வார்த்தைகளையும் அவனுக்குச் சொல்லுகிறபொழுதும், தன்னை ஏற்றிக்கொண்டுபோக யோசேப்பு அனுப்பின வண்டில்களை அவன் காண்கிறபொழுதும், அவர்களுடைய தகப்பனாகிய யாக்கோபின் ஆவி திடப்பட்டது.

உஅ அப்பொழுது இஸ்ரவேல், என் குமாரனாகிய யோசேப்பு இன்னம் உயிரோடிருக்கிறபொழுதும், நான் மரணம் அடையாததற்கு முன்னேபோய் அவனைப் பார்ப்பேன் என்றான்.

## சசு. அதிகாரம்.

இஸ்ரவேல் தனக்குண்டானவைகளை எல்லாம் கூட்டிக்கொண்டு பயணம் புறப்பட்டுப் பேர்சேபாவுக்குவந்து, தன் தகப்பனாகிய இசாக்குடைய பராபரனுக்குப் பலிகளை இட்டான்.

உ இராத்தரிசனைகளில் பராபரன் இஸ்ரவேலோடே பேசி, யாக்கோபே யாக்கோபே, என்றார்; அவன் இதோ அடியேனென்றான்.

ந அப்பொழுது அவர் சொன்னதாவது: நாம் உன் தகப்பனுடைய தேவனாகிய பராபரன்; எகிப்திற்கு இறங்கிப்போகப் பயப்படாயாக; ஏனெனில் அங்கே உன்னைப் பெரியசாதி ஆக்குவோம்.

ச நாம் உன்னோடேகூட எகிப்திற்கு இறங்கிப்போவோம்; நாம் உன்னைத் திரும்பி வந்து ஏறவும் பண்ணுவோமென்றும், யோசேப்பு தன் கையால் உன் கண்களை மூடுவானென்றும் சொன்னார்.

டு அதற்குப் பிற்பாடு யாக்கோபு பேர்சேபாவிலிருந்து பயணம்புறப்பட்டுப் போனான்; இஸ்ரவேலின் குமாரர் தங்கள் தகப்பனாகிய யாக்கோபையும் தங்கள் குழந்தைகளையும் தங்கள் பெண்சாதிகளையும், பார்வோன் அவனை ஏற்றிவர அனுப்பின வண்டில்களின்மேல் ஏற்றிக்கொண்டுபோனார்கள்.

சு அவர்கள், தங்கள் ஆடுமாடுகளையும் தாங்கள் கானான்தேசத்தில் சம்பாதித்த தங்கள் ஆஸ்தியையும் கூட்டிக்கொண்டு எகிப்திற்கு வந்தார்கள், யாக்கோபும் அவன் வித்தார் அனைவரும் அவனோடு கூடத்தானே.

எ தன் குமாரரையும் தன் குமாரரின் குமாரரையும் தன் குமாரத்திகளையும் தன் குமாரரின் குமாரத்திகளையும் தன் வித்தார் அனைவரையும் அவன் தன்னோடேகூட எகிப்திற்கு அழைத்துக்கொண்டு வந்தான்.

அ எகிப்திலே வந்த இஸ்ரவேல் புத்திரரின் நாமங்கள்; யாக்கோபும் அவன் குமாரரும்; யாக்கோபுடைய முதல் பேறானவன் ரூபன்.

கு ரூபனுடைய குமாரர்; ஆனோக், பல்

Digitized by Google

ஹு, எத்ஸரோன், கர்மீ என்றவர்கள்.

௰ சிமெயோனுடைய குமாரர்; எமுவேல், யாமீன், ஓகாத், யாகீன், சோகார், கானான் தேசத்தாளின் குமாரனாகிய சவுல் என்றவன்.

௰௧ லேவியின் குமாரர்; கேர்சோன், கேகாத், மெராரி என்றவர்கள்.

௰௨ யூதாவின் குமாரர்; ஏர், ஓனான், சேலா, பேரேஸ், சேரா என்றவர்கள்; ஏரும் ஓனானுமோவென்றால் கானான்தேசத்திலே செத்துப்போனார்கள்; பேரேசுடைய குமாரர்; எத்ஸரோன், அமூல் என்றவர்கள்.

௰௩ இசஷாருடைய குமாரர்; தேலா, பூவா, யோபு, சிம்ரோன் என்றவர்கள்.

௰௪ செபுலோனுடைய குமாரர்; சேரேத், ஏலோன், யாலேயேல் என்றவர்கள்.

௰௫ இவர்கள் லேயாளின் குமாரர்; இவர்களையும் யாக்கோபுடைய குமாரத்தியாகிய தீனாளையும் அவள் அவனுக்குப் பதான்அராமிலே பெற்றாள்; அவன் குமாரரும் அவன் குமாரத்திகளுமாகிய எல்லா ஆத்துமாக்களும் முப்பத்துமூன்று.

௰௬ காத்துடைய குமாரர்; சிப்பியோன், அகி, சூனி, எத்ஸ்போன், ஏரி, அரோதி, அரேலி என்றவர்கள்.

௰௭ ஆசேருடைய குமாரர்; இம்னா, இஸ்வா, இஸ்வி, பேரியா என்றவர்கள்; இவர்களுடைய சகோதரி சேராக்கு என்றவள். பேரியாவின் குமாரர்; ஏபேர், மல்க்கியேல் என்றவர்கள்.

௰௮ இவர்கள் லாபான் தன் குமாரத்தியாகிய லேயாளுக்குக் கொடுத்த சில்பாளுடைய பிள்ளைகள்; அவள் யாக்கோபுக்கு இந்தப் பதினாறு ஆத்துமாக்களைப் பெற்றாள்.

௰௯ யாக்கோபின் பெண்சாதியாகிய ராகேலுடைய குமாரர்; யோசேப்பும் பென்யமீனும்தானே.

௨௰ யோசேப்புக்கு எகிப்துதேசத்திலே மனாசேயும் எப்பிராயீமும் பிறந்தார்கள்; அவர்களை ஓன் பட்டணத்து ஆசாரியனாகிய போத்திப்பேராவின் குமாரத்தியாகிய அஸ்நாத் அவனுக்குப் பெற்றாள்.

௨௧ பென்யமீனுடைய குமாரர்; பேலா, பேகேர், அஸ்பேல், கேரா, நாமான், ஏகி, ரோஸ், மூப்பிம், உப்பிம், ஆர்து என்பவர்கள்.

௨௨ ராகேல் யாக்கோபுக்குப் பெற்ற குமாரராகிய இவர்கள் எல்லாரும் பதினாலு ஆத்துமாவே.

௨௩ தாணுடைய குமாரன்; ஊசிம் என்றவன்.

௨௪ நப்தலியின் குமாரர்; யாத்சேயேல், கூனி, எத்சேர், சில்லேம் என்றவர்கள்.

௨௫ இவர்கள் லாபான் தன் குமாரத்தியாகிய ராகேலுக்குக் கொடுத்த பில்க்காள் யாக்கோபுக்குப் பெற்றவர்கள்; இவர்கள் எல்லாரும் ஏழு ஆத்துமாக்கள்.

௨௬ ¶ யாக்கோபுடைய குமாரரின் பெண்சாதிகளைத் தவிர, அவனுடைய கர்ப்பப்பிறப்பாய் இருந்து அவனோடேகூட எகிப்திலே வந்த ஆத்துமாக்கள் எல்லாம் அறுபத்தாறு ஆத்துமாக்கள்.

௨௭ யோசேப்புக்கு எகிப்திலே பிறந்த குமாரர் இரண்டு ஆத்துமாக்கள்; எகிப்திலே வந்த யாக்கோபின் வீட்டாராகிய ஆத்துமாக்கள் எல்லாம் எழுபது.

௨௮ ¶ கோசேனுக்குப்போகிற வழியைத் தனக்குக் காட்டுவிக்க, அவன் தனக்குமுன்னாக யோசேப்பண்டைக்கு யூதாவை அனுப்பினான்; அப்படியே கோசேன்தேசத்திலே வந்தார்கள்.

௨௯ யோசேப்பு தன் இரதத்தை ஆயத்தம்பண்ணி ஏறி, கோசேனுக்குத் தன் தகப்பனாகிய இஸ்ரவேலுக்கு எதிர்கொண்டு போய், அவனுக்குத் தன்னைக் காண்பித்து, அவனுடைய கழுத்தைக் கட்டிக்கொண்டு, அதிக நேரமாய் அவன் கழுத்தைவிடாமல் அழுதான்.

௩௰ அப்பொழுது இஸ்ரவேல் யோசேப்புடனே, நீ இன்னும் உயிரோடிருக்கிறாய் என்று நான் உன் முகத்தைக் கண்டபடியி

Digitized by Google

னாலே இனி மரணம் எனக்கு எப்போதாகிலும் வரட்டும் என்றான்.

௩௧ பிற்பாடு யோசேப்பு தன் சகோதரரோடும் தன் தகப்பனுடைய வீட்டாரோடும் சொன்னதாவது: நான் போயேறிக் கானான்தேசத்திலிருந்த என்னுடைய சகோதரரும், என் தகப்பன்வீட்டாரும் என்னண்டைக்கு வந்தார்களென்று பார்வோனுக்கு அறிவித்து,

௩௨ இந்த மனிதர் ஆடுகளைமேய்க்கிறவர்கள்; ஏனெனில் மிருகஜீவன்களையுடையவர்களாய் இருக்கிறார்கள்; அவர்கள் தங்கள் ஆடுகளையும் தங்கள் மாடுகளையும் தங்களுக்குண்டானவை எல்லாவற்றையும் கொண்டுவந்தார்களென்று அவரோடே சொல்லுவேன்.

௩௩ ஆகையால் பார்வோன் உங்களை அழைத்து, உங்கள் தொழில் என்னவென்று கேட்கிறதுண்டானால்,

௩௪ அப்பொழுது நீங்கள் கோசேன்தேசத்திலே குடியிருக்கும்படிக்குச் சொல்லவேண்டியதாவது: எங்கள் பிதாக்களைப்போல உம்முடைய அடியாராகிய நாங்களும் எங்கள் சிறுவயது துவக்கி இதுவரைக்கும் மிருகஜீவன்களை உடையவர்களாய் இருந்தோமென்று சொல்லுங்கள்; ஏனெனில் *மந்தைமேய்க்கிறவர்கள் எல்லாரும் எகிப்தியருக்கு அருவருப்பாய்இருக்கிறார்கள் என்றான். *க மோ. ௪௩. ௩௨.

## ௪௭. அதிகாரம்.

• யோசேப்பு வந்து பார்வோனுக்கு அறிவித்து, என் தகப்பனும் என் சகோதரரும், தங்கள் ஆடுகளோடும், தங்கள் மாடுகளோடும், தங்களுக்குண்டானவை எல்லாவற்றோடும்கூடக் கானான்தேசத்திலிருந்து வந்தார்கள்; இதோ கோசேன்தேசத்திலே இருக்கிறார்கள் என்றுசொல்லி,

௨ தன் சகோதரரில் ஒருபங்காகிய ஐந்து பேரை அழைத்துக்கொண்டு, அவர்களைப் பார்வோனுக்குமுன்பாக நிறுத்தினான்.

௩ அப்பொழுது பார்வோன் அவன் சகோதரரோடே உங்கள் தொழில் என்னவென்றான்; அவர்கள் பார்வோனோடே, உம்முடைய அடியாராகிய நாங்களும் எங்கள் பிதாக்களும் மந்தைமேய்க்கிறவர்கள் என்றுசொல்லி,

௪ பின்னையும் பார்வோனோடே, தேசத்திலே தங்கவந்தோம்; ஏனெனில் உம்முடைய அடியாருக்கு இருக்கிற மந்தைக்கு மேய்ச்சலில்லை, அதேனென்றால் பஞ்சம் கானான்தேசத்திலே கடினமாய் இருக்கிறது; இப்பொழுதும் உம்முடைய அடியார் கோசேன்தேசத்திலே குடியிருக்கட்டும் என்றார்கள்.

௫ அப்பொழுது பார்வோன் யோசேப்போடே சொன்னதாவது: உன் தகப்பனும் உன் சகோதரரும் உன்னண்டைக்கு வந்தார்கள்.

௬ எகிப்துதேசம் உனக்குமுன்பாகக் கிடக்கிறது; தேசத்தில் நலமான இடத்திலே உன் தகப்பனையும் உன் சகோதரரையும் குடியேற்று; அவர்கள் கோசேன்தேசத்திலே குடியிருக்கட்டும்; அவர்களுக்குள்ளே திறமையான மனிதருண்டென்று அறிந்திருந்தாயானால் அவர்களை எனக்கிருக்கிற ஆடுமாடுகளை விசாரிக்கிற தலைவராக வையென்றான்.

௭ யோசேப்பு தன் தகப்பனாகிய யாக்கோபையும் அழைத்துக்கொண்டு வந்து, அவனைப் பார்வோனுக்குமுன்பாக நிறுத்தினான்; யாக்கோபு பார்வோனை ஆசீர்வதித்தான்.

௮ பார்வோன் யாக்கோபோடே, உன்னுடைய ஆயுசின் நாள்கள் எத்தனை என்றான்.

௯ யாக்கோபு பார்வோனோடே, நான் பரதேசம்பண்ணின நாள்கள் நூற்றுமுப்பது வருஷங்கள்; என் ஆயுசின் நாள்கள் பரதேசிகளான என் பிதாக்களுடைய ஆயுசின் நாள்களுக்கு வாராமல் கொஞ்சமும் பொல்லாப்புமாய் இருந்தன என்றான்.

௰ பிற்பாடு யாக்கோபு பார்வோனை ஆசீ

Digitized by Google

வதித்து, பார்வோனிடத்திலிருந்து புறப்பட்டான்.

௰௧ யோசேப்பு தன் தகப்பனையும் தன் சகோதரரையும் குடியேற்றி, பார்வோன் கட்டளை இட்டபடி, அவர்களுக்கு எகிப்துதேசத்தின் நாட்டிலே நல்ல நாடாகிய ராமேசேஸ் சீமையிலே காணி கொடுத்தான்.

௰௨ ¶ யோசேப்பு தன் தகப்பனையும் தன் சகோதரரையும் தன் தகப்பனுடைய வீட்டார் அனைவரையும் பிள்ளைகளின் இலக்கத்திற்குத்தக்கதாய் ஆகாரம்கொடுத்துப் பராமரித்துவந்தான்.

௰௩ தேசமெங்கும் அப்பம் இல்லாதே போயிற்று; ஏனெனில் பஞ்சம் மிகவும் கடினமாய் இருந்தது; பஞ்சத்தினாலே, எகிப்துதேசமும் கானான்தேசமும் இளைத்துப்போயின.

௰௪ அப்பொழுது அவர்கள் கொள்ளும் தானியத்திற்கு இடாக யோசேப்பு எகிப்துதேசத்திலும் கானான்தேசத்திலும் உண்டான திரவியத்தை எல்லாம் சேர்த்தான்; அந்தத் திரவியத்தை யோசேப்பு பார்வோன் வீட்டிலே கொண்டுவந்துவைத்தான்.

௰௫ எகிப்துதேசத்திலும் கானான்தேசத்திலும் திரவியம் செலவழிந்து போனபொழுதோவெனில், எகிப்தியர் எல்லாரும் யோசேப்பண்டைக்கு வந்து, எங்களுக்கு அப்பம்தாரும்; திரவியம் இல்லாதேபோனதினாலே, நாங்கள் உமக்கு முன்பாகச் சாவானேன் என்றார்கள்.

௰௬ அப்பொழுது யோசேப்பு திரவியம் இல்லாதேபோயிற்றானால், உங்கள் மிருகசீவன்களைக் கொடுங்கள்; உங்கள் மிருகசீவன்களுக்கு இடாக உங்களுக்குத் தருகிறேன் என்றான்.

௰௭ அப்பொழுது தங்கள் மிருகசீவன்களை யோசேப்பண்டைக்குக் கொண்டுவந்தார்கள்; யோசேப்பு குதிரைகளையும் ஆடுகளையும் மாடுகளையும் கழுதைகளையும் வாங்கிக்கொண்டு, அவர்களுக்கு அப்பம்கொடுத்து, அந்த வருஷத்திலே அவர்களுடைய எல்லா மிருகசீவன்களுக்கும் இடாக அவர்கள் பிழைப்பை நடப்பித்துக்கொண்டுவந்தான்.

௰௮ ¶ அந்த வருஷம் முடிந்தபொழுது, அவர்கள் மறுவருஷத்திலே அவனண்டைக்கு வந்து அவனோடே சொன்னதாவது: திரவியமும் செலவழிந்துபோயிற்று; மிருகசீவன்களின் ஆஸ்தியும் எங்கள் ஆண்டவனைச் சேர்ந்தது; எங்கள் சரீரமும் எங்கள் நிலமுமே ஒழிய, எங்கள் ஆண்டவனுக்குமுன்பாக ஒன்றும் மீதியானதில்லை என்கிறதை எங்கள் ஆண்டவனுக்கு மறைக்கமாட்டோம்.

௰௯ நாங்களும் எங்கள் நிலமும் உம்முடையகண்களுக்குமுன்பாக மடிவானேன்? நீர் எங்களையும் எங்கள் நிலத்தையும் கொண்டு, அப்பம்தாரும்; நாங்கள் எங்கள் நிலத்தோடும்கூடப் பார்வோனுக்கு அடிமைப்பட்டிருப்போம்; நாங்கள் சாவாமல் உயிரோடிருக்கும்படிக்கும் நிலம் பாழாய்ப் போகாதபடிக்கும் விதையைத் தாரும் என்றார்கள்.

௨௰ அப்படியே யோசேப்பு எகிப்தின் நிலத்தை எல்லாம் பார்வோனுக்குக் கொண்டான்; ஏனெனில் எகிப்தியர் அவரவர், பஞ்சம் தங்கள்மேல் பலத்துக்கொண்டபடியினாலே, தங்கள் வயல்களை விற்றார்கள்; ஆனதுகொண்டு நிலம் பார்வோனைச் சேர்ந்தது.

௨௧ ஆனால் சனத்தை அவன் எகிப்தினுடைய எல்லையின் இந்த முனைதுவக்கி அந்த முனைமட்டும் இருந்த பட்டணங்களில் குடிமாறிப்போகப் பண்ணினான்.

௨௨ ஆசாரியன் நிலத்தைமாத்திரம் கொள்ளாதே போனான்; ஏனெனில் அது பார்வோனாலே ஆசாரியருக்குப் படித்திட்டமாகக் கட்டளைபண்ணப்பட்டது; பார்வோன் தங்களுக்குக் கட்டளைபண்ணின தங்கள் படியைச் சாப்பிட்டார்கள்; ஆகையால்

Digitized by Google

அவர்கள் தங்கள் நிலத்தை விற்றதில்லை.

௨௩ யோசேப்பு சனத்தோடே சொன்னதாவது: இதோ, இன்று உங்களையும் உங்கள் நிலத்தையும் பார்வோனுக்குக் கொண்டேன்; இதோ உங்களுக்குத் தரப்படுகிற விதை, அதினால் நிலத்தை விதையுங்கள்.

௨௪ பலனானபொழுது நடப்பதேதென்றால், பார்வோனுக்கு ஐந்தில் ஒரு பங்கைக் கொடுப்பீர்கள்; நாலுபங்கோவென்றால், வயலுக்கு விதையும் உங்களுக்கும் உங்கள் வீட்டாருக்கும் உங்கள் குழந்தைகளுக்கும் ஆகாரம் உண்டாக உங்களுடையவைகளாய் இருக்கும் என்றான்.

௨௫ அப்பொழுது அவர்கள் எங்களை உயிரோடேகாத்தீர்; எங்கள் ஆண்டவனுடைய கண்களில் எங்களுக்குத் தயவே கிடைக்கட்டும், நாங்கள் பார்வோனுக்குஅடிமையாயிருப்போம் என்றார்கள்.

௨௬ அப்படியே ஐந்தில் ஒன்று பார்வோனுக்குச் சேரும்வாரம் என்பதை,யோசேப்பு எகிப்து நிலத்தின்மேலே இந்நாள்மட்டும் செல்லும் கட்டளையாக்கினான்; ஆசாரியரின் நிலம்மாத்திரம் பார்வோனைச் சேராமல் நீங்கலாயிற்று.

௨௭ ¶ இஸ்ரவேல் எகிப்துதேசத்திலிருக்கும் கோசேன் சீமையிலே குடியிருந்தான்; அதில் காணியாட்சிக்காரராகி, மிகவும் பலுகிப் பெருகினார்கள்.

௨௮ யாக்கோபு எகிப்துதேசத்திலே பதினேழுவருஷம் உயிரோடிருந்தான்; ஆகையால் யாக்கோபுடைய ஆயுசின் நாள்கள் நூற்றுநாற்பத்தேழு வருஷங்களாயின.

௨௯ மரணமடைய இஸ்ரவேலின் காலம் சமீபித்தபொழுது, அவன் தன் குமாரனாகிய யோசேப்பை வரவழைத்து, அவனுக்குச் சொன்னதாவது: உன் கண்களில் எனக்குத் தயவுகிடைத்ததானால், என்னை எகிப்திலே அடக்கம்பண்ணாயாக என்ற தயவையும் உண்மையையும் நீ எனக்குச் செய்வதற்காக உன் கையை என் இடுப்பின்கீழேபோடு.

௩௰ நான் என் பிதாக்களோடே படுத்துக்கொள்ளுவேன்; ஆகையால் நீ என்னை எகிப்திலிருந்து எடுத்துக்கொண்டுபோய், அவர்கள் அடக்கம்பண்ணப்பட்ட நிலத்திலே என்னை அடக்கம்பண்ணுவாயாக என்றான்; அதற்கு அவன், உம்முடைய சொற்படி நான் செய்வேன் என்றான்.

௩௧ அப்பொழுது அவன், எனக்கு ஆணையிடு என்றான்; அவனுக்கு ஆணையிட்டான்; அப்பொழுது இஸ்ரவேல் கட்டிலின் தலைமாட்டிலே சாய்ந்து பணிந்துகொண்டான்.

## ௪௮. அதிகாரம்.

இதற்குப்பிற்பாடு சம்பவித்ததேதென்றால், இதோ, உம்முடைய தகப்பனார் வியாதியாயிருக்கிறார் என்று யோசேப்புக்குச் சொல்லப்பட்டது; அப்பொழுது அவன் தன் இரண்டு குமாரராகிய மனாசேயையும் எப்பிராயீமையும் தன்னோடேகூட அழைத்துக்கொண்டு போனான்.

௨ இதோ, உம்முடைய குமாரனாகிய யோசேப்பு உம்மண்டைக்கு வருகிறானென்று யாக்கோபுக்கு அறிவிக்கப்பட்டது; அப்பொழுது இஸ்ரவேல் தன்னைத் திடனாக்கி, கட்டிலின்மேல் உட்கார்ந்தான்.

௩ யாக்கோபு யோசேப்போடே சொன்னதாவது: சர்வத்திற்கும் வல்ல பராபரன் கானான்தேசத்திலிருக்கிற லூசிலே எனக்குத் தரிசனையாகி, என்னை ஆசீர்வதித்து,

௪ *இதோ நாம் உன்னைப் பலுகவும் உன்னைப் பெருகவும்பண்ணி, உன்னைச் சனசதளங்களான கூட்டமாக்கி, உனக்குப் பிற்பாடு இருக்கும் உன் வித்திற்கு இந்தத் தேசத்தை நித்தியகாணியாட்சியாகக் கொடுப்போமென்று என்னோடே சொன்னார்.

*௧ மோ. ௩௫. ௰௧, ௰௨.

௫ ¶ இப்பொழுதும் நான் உன்னண்டைக்கு எகிப்திலே வாராததற்குமுன்னே உனக்கு எகிப்துதேசத்தில் பிறந்த உன் இரண்டு குமாரர் என்னுடையவர்கள்; ரூபன் சிமெயோன் என்றவர்களைப்போல எப்பிராயீமும்

Digitized by Google

மனாசேயும் என்னுடையவர்களாய் இருப்பார்கள்.

௬ இவர்களுக்குப் பிறகு நீ பெறுகிற சந்தானமோவெனில், உன்னுடையதாயிருக்கும்; இவர்கள் தங்கள் சகோதரருடைய சுதந்தரத்தில் அவர்களுக்கொத்த பேராய் அழைக்கப்படுவார்கள்.

௭ நான் பதானிலிருந்து வருகையில், ராகேல் கானான்தேசத்தின் வழியிலே எப்பிருத்தாவுக்கு வர இன்னம் கொஞ்சம்தூரமிருக்கிறபொழுது, எனக்குமுன்பாக மரணமடைந்தாள்; அவளை அங்கே பெத்லகேம் என்னப்படுகிற எப்பிருத்தா ஊரின் வழியிலே அடக்கம்பண்ணினேன் என்றான்.

௮ பிற்பாடு இஸ்ரவேல் யோசேப்பின் குமாரரைக்கண்டு இவர்கள் யாரென்றான்.

௯ யோசேப்புத் தன் தகப்பனோடே, இவர்களே பராபரன் இவ்விடத்தில் எனக்குக் கொடுத்த என்னுடைய குமாரர் என்றான்; அப்பொழுது இவன், நான் அவர்களை ஆசீர்வதிக்கும்படிக்கு அவர்களை என்கிட்டக் கொண்டுவா என்றான்.

௰ இஸ்ரவேலின் கண்களோவென்றால் பெரியவயதினால் இருண்டுபோயிற்று; பார்க்கக்கூடாதிருந்தான்; அவர்களை அவனண்டையிலே சேரப்பண்ணினான்; அப்பொழுது அவன் அவர்களை முத்தம்செய்து அணைத்துக்கொண்டான்.

௰௧ பிறகு இஸ்ரவேல் யோசேப்போடே உன் முகத்தைப் பார்ப்பேன் என்று நினையாதே போனேன்; ஆனால் இதோ, பராபரன் என்னை உன் வித்தையும் காணப்பண்ணினார் என்றான்.

௰௨ அப்பொழுது யோசேப்பு அவன் முழங்கால்களுக்குள்ளிருக்கிற அவர்களைப் பின்னிடப்பண்ணி, அவன் முகத்திற்கு முன்பாகத் தரைமட்டும் குனிந்து வணங்கினான்.

௰௩ பிற்பாடு யோசேப்பு இருவரையும் கொண்டுவந்து, எப்பிராயீமைத் தன் வலதுகையினாலே இஸ்ரவேலின் இடதுகைக்கு நேராகவும் மனாசேயைத் தன் இடதுகையினாலே இஸ்ரவேலின் வலதுகைக்கு நேராகவும் அவனண்டையிலே சேரப்பண்ணினான்.

௰௪ ஆனால் இஸ்ரவேல் தன் வலதுகையை நீட்டி, இளையவனாகிய எப்பிராயீமுடைய தலையின்மேலும் மனாசே மூத்தவனாயிருந்தாலும், தன் இடதுகையை மனாசேயினுடைய தலையின்மேலும் வைத்தான்; அவன் அறிந்து அப்படித் தன் கைகளை வைத்து,

௰௫ யோசேப்பை ஆசீர்வதித்துச் சொன்னதாவது: பராபரனுக்குமுன்பாக என் பிதாக்களாகிய ஆபிரகாமும் இசாக்கும் நடந்துகொண்டார்களே, நான் உண்டான நாள்துவக்கி இந்நாள்வரைக்கும் என்னை ஆதரித்துவந்த அந்தப் பராபரனும்,

௰௬ என்னை எல்லாத் தீமைக்கும் நீங்கலாக்கி மீட்ட தூதனுமானவர் இந்த இளைஞரை ஆசீர்வதிக்கக்கடவர்; என் பேரும் ஆபிரகாம் இசாக்கென்ற என் பிதாக்களின் பேரும் அவர்களுக்குத் தரிக்கப்படக்கடவது; தேசத்தின் நடுவிலே ஏராளமான திரட்சியாய்ப் பலுகக்கடவர்களென்றான்.

௰௭ தன் தகப்பன் தன் வலதுகையை எப்பிராயீமுடைய தலையின்மேல் வைத்ததை யோசேப்பு காண்கிறபொழுதோவெனில், அவனுக்கு ஆகாததாய்க் கண்டது; ஆகையால் எப்பிராயீமுடைய தலையின்மேல் இருந்த தன் தகப்பனுடைய கையை யோசேப்பு மனாசேயினுடைய தலையின்மேல் வைக்கும்படிக்கு எடுத்து,

௰௮ தன் தகப்பனோடே அப்படியல்ல, என் தகப்பனே, ஏனெனில் இவன் மூத்தவன்; இவன் தலையின்மேல் உம்முடைய வலதுகையை வையுமென்றான்.

௰௯ அவன் தகப்பனோவெனில், தட்டுதல்பண்ணி, அறிவேன், என் மகனே, அறிவேன்; இவனும் சனசதளமாவான்; இவனும் பெருகிப்போவான்; ஆகிலும் இவனுடைய தம்பி இவனைப்பார்க்கிலும் பெரு

Digitized by Google

கிப்போவான்; அவன் வித்துச் சனசதளங்களால் நிறைந்த திரட்சியாமென்றான்.

உ௰ அப்படியே அவன் அந்நாளிலே அவர்களை ஆசீர்வதித்து, பராபரன் உன்னை எப்பிருயீமைப்போலவும் மனாசேயைப்போலவும் இருக்கப்பண்ணுவாராக என்று இஸ்ரவேலர் உன்னைத்தொட்டு வாழ்த்துவார்கள் என்று சொல்லி, எப்பிருயீமை மனாசேக்குமுன்னே வைத்தான்.

உக ¶ பிற்பாடு இஸ்ரவேல் யோசேப்போடே சொன்னதாவது: இதோ நான் மரணம் அடைகிறேன்; ஆனால் பராபரன் உங்களோடிருந்து, உங்கள் பிதாக்களின் தேசத்திற்கு உங்களைத் திரும்பிவரப்பண்ணுவார் என்றும்,

உஉ நான் என் பட்டயத்தாலும் என் வில்லினாலும், எமோரியர் கையிலே வாங்கின *ஒரு நிலத்தை உன் சகோதரரைப்பார்க்க உனக்கு அதிகமான பங்காகக் கொடுத்தேன் என்றும் சொன்னான். *யோவா. ச. ௫.

## சகூ. அதிகாரம்.

பிற்பாடு யாக்கோபு தன் குமாரரை அழைப்பித்துச் சொன்னதாவது: கூடி வாருங்கள்; முடிவுநாள்களில் உங்களுக்கு வந்து சம்பவிப்பதை உங்களுக்கு அறிவிப்பேன்.

உ ¶ யாக்கோபின் குமாரரே, கூடிவந்து கேளுங்கள்; உங்கள் தகப்பனாகிய இஸ்ரவேலைக் கேளுங்கள்.

ந ¶ ரூபனே, நீ என்னுடைய தலைச்சனும் என் சத்துவமும் என் முந்தின பலமுமானவன்; நீ மேன்மையில் பிரதானமும் வல்லமையில் பிரதானமுமானவன்.

ச தண்ணீரைப்போலப் பாய்ந்தவனே, நீ பிரதானமாய் இருப்பதில்லை; ஏனெனில் *உன் தகப்பனுடைய மஞ்சத்தின்மேலே ஏறினாய்; அதை அப்பொழுது தீட்டுப்படுத்தினாய்; என் படுக்கையின்மேல் அவன் ஏறினான். *க மோ. நரு. உஉ.

௫ சிமெயோனும் லேவியும் ஏக சகோதரராயிருக்கிறார்கள்; அவர்களுடைய பட்டயங்கள் கொடுமையின் ஆயுதங்கள்.

கூ என் ஆத்துமா அவர்கள் இரகசிய ஆலோசனையில் வாராதிருப்பதாக; என் மகிமை அவர்கள் கூட்டத்தோடே ஒன்றிப் போகாதிருப்பதாக; ஏனெனில் அவர்கள் தங்கள் கோபத்திலே *ஒரு புருஷனைக் கொன்றுபோட்டு, தங்கள் ஆங்காரத்திலே பலவான்களை அதம்பண்ணினார்கள். *க மோ. நசு. உ௫.

எ வலிதான அவர்களுடைய கோபமும் கடினமான அவர்களுடைய மூர்க்கமும் சபிக்கப்படக்கடவது; அவர்களை யாக்கோபிலே *பிரியவும் இஸ்ரவேலிலே சிதறவும் பண்ணுவேன். *யோசு. ௰கூ. க.

அ ¶ யூதாவே, நீயே பிரதானமானவன்; உன்னை உன் சகோதரர் புகழுவார்கள்; உன்னுடைய கை உன் சத்துருக்களுடைய பிடரியின்மேல் இருக்கும்; உனக்கு முன்பாக உன் தகப்பனுடைய புத்திரர் வணங்குவார்கள்.

கூ யூதா சிங்கக்குட்டியானவன்; என் மகனே, நீ இரை எடுத்து உயர்ந்தாய்; சிங்கத்தைப்போலவும் கிழச்சிங்கத்தைப்போலவும் மடங்கிப் படுத்துக்கொள்ளுகிறான்; அவனை எழுப்பப்போகிறவன் யார்?

௰ *சமாதான கர்த்தர் வரும்மட்டும்செங்கோல் யூதாவிலிருந்தும், நியாயம்கற்பிக்கிறவன் அவன் பாதங்களிலிருந்தும், அற்றுப் போவதில்லை; அவரைச் சனசதளங்கள் சேரும். *சங். எஉ. எ. எசா. கூ. சு, எ. எபே. உ. ௰எ.

௰க தம்முடைய கழுதை மறியைத் திராட்சச்செடியோடும் தம்முடைய கோளிகைக் கழுதையின் குட்டியை நற்குல திராட்சச் செடியோடும் கட்டிப்போடுவார்; தம்முடைய உடுப்பைத் திராட்சப்பழ இரசத்திலும் தமது சால்வையைத் திராட்சப்பழங்களின் இரசத்திலும் வெளுப்பார்.

௰உ அவருடைய கண்கள் திராட்சப்பழ இரசத்திலும் சிவப்பும், அவருடைய பல்லுகள் பாலிலும் வெண்மையுமாய் இருக்கும்.



Digitized by Google

௰௩ ¶ செபுலோன் *கடல்துறை அருகே குடியிருப்பான்; அவன் கப்பல்துறை அருகே இருப்பான்; அவன் எல்லை சீதோனுக்கு எதிராக இருக்கும். *யோசு. ௧௯. ௰, ௰௧.

௰௪ ¶ இசக்கார் பொதியின் நடுவே படுத்துக்கொண்டிருக்கிற பலத்த எலும்புள்ள கழுதை.

௰௫ அவன் இளைப்பாறுதலை நல்லதென்றும் சீமையை வசதியானதென்றும் கண்டு, சுமக்கிறதற்குத் தன் தோளைச் சாய்த்து, பகுதி கட்டுகிறவனானான்.

௰௬ ¶ தாண் இஸ்ரவேல் கோத்திரங்களில் ஒன்றைப்போல தன் சனத்தை நியாயம் விசாரிப்பான்.

௰௭ தாண் குதிரையின் குதிகால்களை, அதில் ஏறி இருக்கிறவன் மல்லாக்க விழக்கடிக்கிற வழி அருகான சர்ப்பமும், பாதை அருகான விரியனுமாய் இருப்பான்.

௰௮ ¶ கர்த்தாவே, *உம்முடைய இரட்சிப்புக்குக் காத்துக்கொண்டிருக்கிறேன். *சங். ௱௰௯. ௱௬௬.

௰௯ ¶ காத்தென்றவன்மேல் இராணுவக் கூட்டம் பாய்ந்துவிழும்; அவனோவென்றால் கடைசியிலே அதின்மேல் பாய்ந்து விழுவான்.

௨௰ ¶ ஆசேருடைய அப்பம் புஷ்டியாய் இருக்கும்; இராசாக்களுக்கான ருசிவர்க்கங்களை இடுவான்.

௨௧ ¶ நப்தலி நீங்கலாய் விடப்பட்ட பெண்மான்; வடிப்பமான வசனங்களைத் தருகிறான்.

௨௨ ¶ யோசேப்பு கனிதருகிற செடி; அவன் நீரூற்றண்டையிலே கனிதருகிற செடி; அதின் கொடிகள் சுவரின்மேல் படரும்.

௨௩ அம்பை எய்கிறவர்கள் அவனை மனமடிவாக்கி எய்து, அவனை விரோதித்தார்கள்.

௨௪ ஆனால் அவனுடைய வில் கெட்டியாய் நின்றது; அவன் கைகளின் புயங்கள் யாக்கோபுடைய வல்லவரின் கரங்களாலே பலத்தன; இதைத்தொட்டு மேய்ப்பனும் இஸ்ரவேலின் அஸ்திபாரக்கல்லும் ஆனான்.

௨௫ உன் தகப்பனுடைய பராபரனாலே அப்படி ஆயிற்று; அவர் உனக்குத் துணையாய் இருப்பார்; சர்வத்திற்கும் வல்லவராலே அப்படி ஆயிற்று; அவர் உயர வானத்திலிருந்து உண்டாகிய ஆசீர்வாதங்களாலும், கீழே கிடக்கிற பாதாளத்தின் ஆசீர்வாதங்களாலும், முலைகளுக்கும் கர்ப்பங்களுக்கும் உண்டாகிற ஆசீர்வாதங்களாலும், உன்னை ஆசீர்வதிப்பார்.

௨௬ உன் தகப்பனுடைய ஆசீர்வாதங்கள் என் பிதாக்களுடைய ஆசீர்வாதங்களுக்கு மேல்வட்டமாய் இருந்து, நித்திய மேடுகளின் முடிவுமட்டும் போகின்றன; அவைகள் யோசேப்புடைய சிரசின்மேலும், தன் சகோதரரில் விசேஷித்தவனுடைய உச்சந்தலையின்மேலும் வருவதாக.

௨௭ ¶ பென்யமீன் பீறிப்போடுகிற ஓநாய், காலமே எடுத்து அதைப் பட்சிப்பான்; சாயங்காலத்திலே கொள்ளையிட்டதைப் பங்கிடுவான்.

௨௮ ¶ இஸ்ரவேலின் கோத்திரங்களாகிய இவைகள் எல்லாம் பன்னிரண்டு; அவர்கள் தகப்பன் அவர்களை ஆசீர்வதிக்கையில், அவர்களுக்குச் சொன்னது இதுதான்; அவர்களில் அவ்வவனை அவனவனுக்கு அடுத்த ஆசீர்வாதத்தினாலே ஆசீர்வதித்தான்.

௨௯ பிற்பாடு அவன் அவர்களுக்குக் கற்பித்துச் சொன்னதாவது: நான் என் சனத்தோடே சேர்க்கப்படுகிறேன்; ஏத்தியனான எப்பெரோனின் நிலத்திலுள்ள கெபியிலே என்னை என் பிதாக்களண்டையிலே அடக்கம்பண்ணுங்கள்.

௩௰ கானான்தேசத்திலே மம்ரேக்கெதிராக இருக்கிறதும், ஆபிரகாம் நிலத்தோடேகூட ஏத்தியனாகிய எப்பெரோனின் கையிலே பிரேதங்களை அடக்கம்பண்ணும் சொந்த நிலமாகக் கொண்டதுமான மக்பேலா என்னப்பட்ட நிலத்தின் கெபியிலேதானே.

௩௧ அங்கே ஆபிரகாமையும் அவர் பெண்சாதியாகிய சாராளையும் அடக்கம்பண்ணி

Digitized by Google

தப் புருஷனுடைய முகத்தைப் பார்க்கக் கூடாதென்றோம்.

உ௲ அப்பொழுது உம்முடைய அடியானாகிய என் தகப்பன் எங்களோடே சொன்னதாவது: என் பெண்சாதி எனக்கு இரண்டு பிள்ளைகளைப் பெற்றாள் என்கிறதையும்,

உ௮ அவர்களில் ஒருவன் என்னிடத்தில் இருந்து புறப்பட்டுப் போனான், அவன் பீறுண்ணவே பீறுண்டானென்று முன் சொல்லி, இதுவரைக்கும் அவனைக் காணாதிருக்கிறேன் என்கிறதையும் நீங்கள் அறிவீர்கள்.

உகூ நீங்கள் இவனையும் என் முன்பாக இராதபடிக்கு அழைத்துப்போகும்போது, ஒரு சேதம் அவனுக்கு வந்தால், என் நரையை நிர்ப்பந்தத்தோடே குழியில் இறங்கப்பண்ணுவீர்கள் என்றான்.

௩௰ இப்பொழுதும் இளையவன் எங்களோடிராமல், நான் என் தகப்பனாகிய உம்முடைய அடியானண்டையிலே போனால், அப்பொழுது அவருடைய ஆத்துமா இவனாத்துமாவோடே ஒட்டிக்கொண்டிருக்கிறபடியினாலே சம்பவிப்பது ஏதெனில்,

௩க அவர் இளையவன் இல்லை என்று காணும்பொழுது, செத்துப்போவார்; அப்படியே உம்முடைய அடியாரும் உம்முடைய ஊழியக்காரனாகிய எங்கள் தகப்பனுடைய நரையைச் சஞ்சலத்தோடே குழியில் இறங்கப்பண்ணுவோமே.

௩உ ஏனெனில் நான் அவனை உம்மண்டைக்கு அழைத்துவாராதேபோனால், நான் சகலநாளும் என் தகப்பனுக்கு நேரஸ்தனாய் இருப்பேனென்று உம்முடைய அடியானாகிய நான் என் தகப்பனிடத்திலே இந்த இளையவனுக்காகப் பிணைப்பட்டேன்.

௩௩ இப்பொழுதும் இளையவன் தன் சகோதரரோடே கூடப்போய் ஏறும்படிக்கு, உம்முடைய அடியானாகிய நான் இளையவனுக்குப் பதிலாக இங்கே என் ஆண்டவனுக்கு அடிமையாய் இருக்கட்டும்.

௩௪ ஏனெனில் இளையவன் என்னோடே இல்லாவிட்டால் எப்படி என் தகப்பனண்டைக்குப் போயேறுவேன்? என் தகப்பனைப் பிடிக்கும் தீங்கை அப்பொழுது காண்பேனே என்றான்.

## சுரு. அதிகாரம்.

அப்பொழுது யோசேப்பு தன்னண்டையில் நிற்கிற எல்லார்முன்பாகவும் தன்னை அடக்கிக்கொண்டிருக்கக்கூடாமல், யாவரையும் என்னைவிட்டு வெளியே போகப்பண்ணுங்களென்று கூப்பிட்டான்; யோசேப்பு தன் சகோதரருக்குத் தன்னை அறியப்படுத்துகையில் ஒருவரும் அவனண்டையிலே நின்றதில்லை.

உ அவன் சத்தமிட்டு அழுதான்; அதை எகிப்தியர் கேட்டார்கள்; பார்வோனின் வீட்டாரும் கேட்டார்கள்.

௩ யோசேப்பு தன் சகோதரரோடே நான் யோசேப்பு; என் தகப்பன் இன்னம் உயிரோடிருக்கிறாரோ என்றான்; ஆனால் அவன் சகோதரர் அவனுக்குமுன்பாகக் கலங்கினதினாலே, அவனுக்குப் பிரதியுத்தாரம் சொல்ல அவர்களுக்குக் கூடாதேபோயிற்று.

௪ அப்பொழுது யோசேப்பு தன் சகோதரரோடே, என்னண்டையிலே கிட்டிவாருங்கள் என்றான்; அவர்கள் கிட்டிப்போனார்கள்; அப்பொழுது அவன் சொன்னதாவது: நீங்கள் எகிப்திற்குப் போகிறவர்களுக்கு விற்ற உங்கள் சகோதரனாகிய யோசேப்பு நானே.

ரு இப்பொழுதும் நீங்கள் என்னை இவ்விடத்திற்கு விற்றுப்போட்டதினாலே, நீங்கள் சஞ்சலப்படவும் அது உங்கள் பார்வைக்குப் பொல்லப்பாயிருக்கவும் வேண்டாம்; ஏனெனில் உங்கள் சீவனுக்காகப் பராபரன் என்னை உங்களுக்குமுன்னாக அனுப்பினார்.

சு ஏனென்றால் இந்த இரண்டுவருஷம் தேசத்திற்குள்ளே பஞ்சம் உண்டாயிருந்தது; உழவும் அறுப்பும் இல்லாத ஐந்து வருஷங்களும் இன்னம் வரும்.

Digitized by Google

எ ஆனால், உங்களைத் தேசத்தில் மீதியாக வைப்பதற்கும் உங்களைப் பெரிய இரட்சிப்பினாலே உயிரோடே காப்பதற்குமாக, பராபரன் என்னை உங்களுக்குமுன்னாக அனுப்பினார்.

அ இப்பொழுதும் நீங்களல்ல, பராபரன் என்னை இங்கே அனுப்பி, என்னைப் பார்வோனுக்குத் தகப்பனாகவும், அவர் வீட்டிற்கெல்லாம் துரையாகவும், எகிப்துதேசத்தை எல்லாம் ஆளுகிறவனாகவும் வைத்தார்.

கூ நீங்கள் தீவிரத்தோடே என் தகப்பனண்டைக்குப் போயேறி, அவரோடே சொல்லவேண்டியதேதெனில், உம்முடைய குமாரனாகிய யோசேப்புச் சொல்லி அனுப்புகிறதாவது: பராபரன் என்னை எகிப்திற்கெல்லாம் துரையாக வைத்தார்; என்னண்டைக்கு இறங்கிவாரும், தாமதிக்க வேண்டாம்.

ω நீர் கோசேன் தேசத்திலே வாசம்பண்ணி, எனக்குச் சமீபத்திலே இருப்பீர்; நீரும் உம்முடைய பிள்ளைகளும் உம்முடைய பிள்ளைகளின் பிள்ளைகளும் உம்முடைய ஆடுகளும் உம்முடைய மாடுகளும் உமக்குண்டான யாவும் கூடத்தானே.

ωக நீரும் உம்முடைய வீட்டாரும் உமக்கிருக்கிற யாவும் தாழ்வுபடாதபடிக்கு, அங்கே உம்மைப் பராமரிப்பேன்; ஏனெனில் பஞ்சம் இன்னம் ஐந்து வருஷம்மட்டும் இருக்குமென்கிறான் என்று சொல்லுங்கள்.

ωஉ இதோ என்னுடைய வாய் உங்களோடே பேசுகிறது என்கிறதை உங்கள் கண்களும் என் தம்பியாகிய பென்யமீனின் கண்களும் காண்கிறதே.

ωங எகிப்திலே எனக்கு இருக்கிற என்னுடைய எல்லா மகிமையையும் நீங்கள் கண்டவை எல்லாவற்றையும் என் தகப்பனுக்கு அறிவித்து, தீவிரமாய் என் தகப்பனை இவ்விடத்திற்கு இறங்கிவரப்பண்ணுங்கள் என்றுசொல்லி,

ωச தன் தம்பியாகிய பென்யமீனுடைய கழுத்திறுக்கக் கட்டிக்கொண்டு அழுதான்; பென்யமீனும் அவன் கழுத்தைக் கட்டிக்கொண்டு அழுதான்.

ωரு தன்னுடைய எல்லாச் சகோதரரையும் முத்தம்செய்து அவர்கள் முன்பாக அழுதான்; அதற்குப் பிற்பாடு அவன் சகோதரர் அவனோடே பேசினார்கள்.

ωசு ¶ யோசேப்பின் சகோதரர் வந்தார்களென்று பார்வோன் வீட்டிலே செய்தி கேட்கப்பட்டபொழுது, அது பார்வோன் பார்வைக்கும் அவன் ஊழியக்காரரின் பார்வைக்கும் நன்றாய் இருந்தது.

ωஎ அப்பொழுது பார்வோன் யோசேப்போடே சொன்னது: நீ உன் சகோதரரோடே சொல்லவேண்டியதாவது: நீங்கள் செய்யவேண்டியதேதெனில், உங்கள் மிருகஜீவன்களின்மேல் பொதியேற்றிப் புறப்பட்டு, கானான்தேசத்திற்குப்போய்,

ωஅ உங்கள் தகப்பனையும் உங்கள் வீட்டாரையும் கூட்டிக்கொண்டு என்னண்டைக்கு வாருங்கள், நான் உங்களுக்கு எகிப்துதேசத்தின் நன்மையைக் கொடுப்பேன்; தேசத்தின் கொழுப்பைச் சாப்பிடுவீர்கள்.

ωகூ நீங்கள் செய்யவேண்டியது ஏதெனில், நீங்கள் உங்கள் குழந்தைகளுக்காகவும் உங்கள் பெண்சாதிகளுக்காகவும் வண்டில்களை எகிப்துதேசத்திலிருந்து கொண்டுபோய், உங்கள் தகப்பனையும் ஏற்றி வாருங்கள்.

உο உங்கள் கண் உங்களுடைய தட்டுமுட்டுகளைப் பார்க்கவேண்டாம்; ஏனெனில் எகிப்துதேசமெங்கும் நன்மையாயிருக்கிறது உங்களுடையதாய் இருக்குமென்று அவர்களோடே சொல்ல நீ கட்டளைபெற்றாய் என்றான்.

உக இப்படியே இஸ்ரவேலின் குமாரர் செய்தார்கள்; யோசேப்பு அவர்களுக்குப் பார்வோனுடையகட்டளையின்படியே வண்டில்களைக்கொடுத்து, வழிக்கு ஆகாரத்தையும் அவர்களுக்குக் கொடுத்தான்.

Digitized by Google

உஉ அவர்களில் ஒவ்வொருவனுக்கு அவன் மாற்று வஸ்திரங்களையும் கொடுத்து, பென்யமீனுக்கோ முந்நூறு வெள்ளிக்காசையும் ஐந்து மாற்று வஸ்திரங்களையும் கொடுத்து,

உங அப்படியே தன் தகப்பனுக்கு எகிப்தின் உச்சிதங்களைச் சுமந்துபோகிற பத்துக் கழுதைகளையும், தன் தகப்பனுக்காக வழிக்குத் தானியமும் அப்பமும் தின்பண்டங்களும் சுமந்துபோகிற பத்துக் கோளிகைக் கழுதைகளையும் அனுப்பினான்.

உச அப்படியே அவன் தன் சகோதரரை அனுப்பிவிட்டு, இவர்கள்போகிறபொழுது, வழியிலே சண்டைபண்ணீர்களாக என்று அவர்களோடே சொன்னான்.

உரு ¶ அவர்கள் எகிப்திலிருந்து போயேறி, கானான்தேசத்திலே தங்கள் தகப்பனாகிய யாக்கோபண்டைக்கு வந்து,

உசு யோசேப்பு இன்னம் உயிரோடிருக்கிறான் என்றும், அவன் எகிப்துதேசத்தை எல்லாம் ஆளுகிறான் என்றும் அவனுக்கு அறிவித்தார்கள்; ஆனால் அவன் இருதயம் தளம்பிற்று; ஏனெனில் அவர்களை நம்பாதிருந்தான்.

உஎ அவர்களோவென்றால் யோசேப்புத் தங்களுடனே பேசின எல்லா வார்த்தைகளையும் அவனுக்குச் சொல்லுகிறபொழுதும், தன்னை ஏற்றிக்கொண்டுபோக யோசேப்பு அனுப்பின வண்டில்களை அவன் காண்கிறபொழுதும், அவர்களுடைய தகப்பனாகிய யாக்கோபின் ஆவி திடப்பட்டது.

உஅ அப்பொழுது இஸ்ரவேல், என் குமாரனாகிய யோசேப்பு இன்னம் உயிரோடிருக்கிறபொழுதும், நான் மரணம் அடையாததற்கு முன்னேபோய் அவனைப் பார்ப்பேன் என்றான்.

## சகூ. அதிகாரம்.

இஸ்ரவேல் தனக்குண்டானவைகளை எல்லாம் கூட்டிக்கொண்டு பயணம் புறப்பட்டுப் பேர்சேபாவுக்குவந்து, தன் தகப்பனாகிய இசாக்குடைய பராபரனுக்குப் பலிகளை இட்டான்.

உ இராத்தரிசனைகளில் பராபரன் இஸ்ரவேலோடே பேசி, யாக்கோபே யாக்கோபே, என்றார்; அவன் இதோ அடியேனென்றான்.

ந அப்பொழுது அவர் சொன்னதாவது: நாம் உன் தகப்பனுடைய தேவனாகிய பராபரன்; எகிப்திற்கு இறங்கிப்போகப் பயப்படாயாக; ஏனெனில் அங்கே உன்னைப் பெரியசாதி ஆக்குவோம்.

ச நாம் உன்னோடேகூட எகிப்திற்கு இறங்கிப்போவோம்; நாம் உன்னைத் திரும்பி வந்து ஏறவும் பண்ணுவோமென்றும், யோசேப்பு தன் கையால் உன் கண்களை மூடுவானென்றும் சொன்னார்.

ரு அதற்குப் பிற்பாடு யாக்கோபு பேர்சேபாவிலிருந்து பயணம்புறப்பட்டுப் போனான்; இஸ்ரவேலின் குமாரர் தங்கள் தகப்பனாகிய யாக்கோபையும் தங்கள் குழந்தைகளையும் தங்கள் பெண்சாதிகளையும், பார்வோன் அவனை ஏற்றிவர அனுப்பின வண்டில்களின்மேல் ஏற்றிக்கொண்டுபோனார்கள்.

சு அவர்கள், தங்கள் ஆடுமாடுகளையும் தாங்கள் கானான்தேசத்தில் சம்பாதித்த தங்கள் ஆஸ்தியையும் கூட்டிக்கொண்டு எகிப்திற்கு வந்தார்கள், யாக்கோபும் அவன் வித்தார் அனைவரும் அவனோடு கூடத்தானே.

எ தன் குமாரரையும் தன் குமாரரின் குமாரரையும் தன் குமாரத்திகளையும் தன் குமாரரின் குமாரத்திகளையும் தன் வித்தார் அனைவரையும் அவன் தன்னோடேகூட எகிப்திற்கு அழைத்துக்கொண்டு வந்தான்.

அ எகிப்திலே வந்த இஸ்ரவேல் புத்திரரின் நாமங்கள்; யாக்கோபும் அவன் குமாரரும்; யாக்கோபுடைய முதல் பேறானவன் ரூபன்.

கூ ரூபனுடைய குமாரர்; ஆனோக், பல்

Digitized by Google

னூ, எத்ஸரோன், கற்மீ என்றவர்கள்.

௰ சிமெயோனுடைய குமாரர்; எமுவேல், யாமீன், ஓகாத், யாகீன், சோகார், கானான் தேசத்தாளின் குமாரனாகிய சவுல் என்றவன்.

௰௧ லேவியின் குமாரர்; கேர்சோன், கேகாத், மெராரி என்றவர்கள்.

௰௨ யூதாவின் குமாரர்; ஏர், ஓனான், சேலா, பேரேஸ், சேரா என்றவர்கள்; ஏரும் ஓனானும் கானான்தேசத்திலே செத்துப்போனார்கள்; பேரேசுடைய குமாரர்; எத்ஸரோன், அமூல் என்றவர்கள்.

௰௩ இசக்காருடைய குமாரர்; தோலா, பூவா, யோப், சிம்ரோன் என்றவர்கள்.

௰௪ செபுலோனுடைய குமாரர்; சேரேத், ஏலோன், யாலேயேல் என்றவர்கள்.

௰௫ இவர்கள் லேயாளின் குமாரர்; இவர்களையும் யாக்கோபுடைய குமாரத்தியாகிய தீனாளையும் அவள் அவனுக்குப் பதான்அராமிலே பெற்றாள்; அவன் குமாரரும் அவன் குமாரத்திகளுமாகிய எல்லா ஆத்துமாக்களும் முப்பத்துமூன்று.

௰௬ காத்துடைய குமாரர்; சிப்பியோன், அகி, சூனி, எத்ஸ்போன், ஏரி, அரோதி, அரேலி என்றவர்கள்.

௰௭ ஆசேருடைய குமாரர்; இம்னா, இஸ்வா, இஸ்வி, பெரீயா என்றவர்கள்; இவர்களுடைய சகோதரி சேராக்கு என்றவள். பெரீயாவின் குமாரர்; ஏபேர், மல்கியேல் என்றவர்கள்.

௰௮ இவர்கள் லாபான் தன் குமாரத்தியாகிய லேயாளுக்குக் கொடுத்த சில்பாளுடைய பிள்ளைகள்; அவள் யாக்கோபுக்கு இந்தப் பதினாறு ஆத்துமாக்களைப் பெற்றாள்.

௰௯ யாக்கோபின் பெண்சாதியாகிய ராகேலுடைய குமாரர்; யோசேப்பும் பென்யமீனும்தானே.

௨௰ யோசேப்புக்கு எகிப்துதேசத்திலே மனாசேயும் எப்பிராயீமும் பிறந்தார்கள்; அவர்களை ஓன் பட்டணத்து ஆசாரியனாகிய போத்திப்பேராவின் குமாரத்தியாகிய அஸ்நாத் அவனுக்குப் பெற்றாள்.

௨௧ பென்யமீனுடைய குமாரர்; பேலா, பேகேர், அஸ்பெல், கேரா, நாமான், ஏகி, ரோஸ், மூப்பிம், உப்பிம், ஆர்து என்பவர்கள்.

௨௨ ராகேல் யாக்கோபுக்குப் பெற்ற குமாரராகிய இவர்கள் எல்லாரும் பதினாலு ஆத்துமாவே.

௨௩ தாணுடைய குமாரன்; ஊசிம் என்றவன்.

௨௪ நப்தலியின் குமாரர்; யாத்சேயேல்; கூனி, எத்சேர், சில்லேம் என்றவர்கள்.

௨௫ இவர்கள் லாபான் தன் குமாரத்தியாகிய ராகேலுக்குக் கொடுத்த பில்காள் யாக்கோபுக்குப் பெற்றவர்கள்; இவர்கள் எல்லாரும் ஏழு ஆத்துமாக்கள்.

௨௬ ¶ யாக்கோபுடைய குமாரரின் பெண்சாதிகளைத் தவிர, அவனுடைய கர்ப்பப்பிறப்பாய் இருந்து அவனோடேகூட எகிப்திலே வந்த ஆத்துமாக்கள் எல்லாம் அறுபத்தாறு ஆத்துமாக்கள்.

௨௭ யோசேப்புக்கு எகிப்திலே பிறந்த குமாரர் இரண்டு ஆத்துமாக்கள்; எகிப்திலே வந்த யாக்கோபின் வீட்டாராகிய ஆத்துமாக்கள் எல்லாம் எழுபது.

௨௮ ¶ கோசேனுக்குப்போகிற வழியைத் தனக்குக் காட்டுவிக்க, அவன் தனக்குமுன்னாக யோசேப்பண்டைக்கு யூதாவை அனுப்பினான்; அப்படியே கோசேன்தேசத்திலே வந்தார்கள்.

௨௯ யோசேப்பு தன் இரதத்தை ஆயத்தம்பண்ணி ஏறி, கோசேனுக்குத் தன் தகப்பனாகிய இஸ்ரவேலுக்குஎதிர்கொண்டுபோய், அவனுக்குத் தன்னைக் காண்பித்து, அவனுடைய கழுத்திறுகக் கட்டிக்கொண்டு, அதிக நேரமாய் அவன் கழுத்தைவிடாமல் அழுதான்.

௩௰ அப்பொழுது இஸ்ரவேல் யோசேப்புடனே, நீ இன்னம் உயிரோடிருக்கிறாய் என்று நான் உன் முகத்தைக் கண்டபடியி

Digitized by Google

னாலே இனி மரணம் எனக்கு எப்போதாகிலும் வரட்டும் என்றான்.

௩௧ பிற்பாடு யோசேப்பு தன் சகோதரரோடும் தன் தகப்பனுடைய வீட்டாரோடும் சொன்னதாவது: நான் போயேறிக் கானான்தேசத்திலிருந்த என்னுடைய சகோதரரும், என் தகப்பன்வீட்டாரும் என்னண்டைக்கு வந்தார்களென்று பார்வோனுக்கு அறிவித்து,

௩௨ இந்த மனிதர் ஆடுகளைமேய்க்கிறவர்கள்; ஏனெனில் மிருகசீவன்களையுடையவர்களாய் இருக்கிறார்கள்; அவர்கள் தங்கள் ஆடுகளையும் தங்கள் மாடுகளையும் தங்களுக்குண்டானவை எல்லாவற்றையும் கொண்டுவந்தார்களென்று அவரோடே சொல்லுவேன்.

௩௩ ஆகையால் பார்வோன் உங்களை அழைத்து, உங்கள் தொழில் என்னவென்று கேட்கிறதுண்டானால்,

௩௪ அப்பொழுது நீங்கள் கோசேன்தேசத்திலே குடியிருக்கும்படிக்குச் சொல்லவேண்டியதாவது: எங்கள் பிதாக்களைப்போல உம்முடைய அடியாராகிய நாங்களும் எங்கள் சிறுவயது துவக்கி இதுவரைக்கும் மிருகசீவன்களை உடையவர்களாய் இருந்தோமென்று சொல்லுங்கள்; ஏனெனில் *மந்தைமேய்க்கிறவர்கள் எல்லாரும் எகிப்தியருக்கு அருவருப்பாய்இருக்கிறார்கள் என்றான். *௧ மோ. ௪௩. ௩௨.

## ௪௭. அதிகாரம்.

௧ யோசேப்பு வந்து பார்வோனுக்கு அறிவித்து, என் தகப்பனும் என் சகோதரரும், தங்கள் ஆடுகளோடும், தங்கள் மாடுகளோடும், தங்களுக்குண்டானவை எல்லாவற்றோடுங்கூடக் கானான்தேசத்திலிருந்து வந்தார்கள்; இதோ கோசேன்தேசத்திலே இருக்கிறார்கள் என்றுசொல்லி,

௨ தன் சகோதரரில் ஒருபங்காகிய ஐந்துபேரை அழைத்துக்கொண்டு, அவர்களைப் பார்வோனுக்குமுன்பாக நிறுத்தினான்.

௩ அப்பொழுது பார்வோன் அவன் சகோதரரோடே உங்கள் தொழில் என்னவென்றான்; அவர்கள் பார்வோனோடே, உம்முடைய அடியாராகிய நாங்களும் எங்கள் பிதாக்களும் மந்தைமேய்க்கிறவர்கள் என்றுசொல்லி,

௪ பின்னையும் பார்வோனோடே, தேசத்திலே தங்கவந்தோம்; ஏனெனில் உம்முடைய அடியாருக்கு இருக்கிற மந்தைக்கு மேய்ச்சலில்லை, அதேனென்றால் பஞ்சம் கானான்தேசத்திலே கடினமாய் இருக்கிறது; இப்பொழுதும் உம்முடைய அடியார் கோசேன்தேசத்திலே குடியிருக்கட்டும் என்றார்கள்.

௫ அப்பொழுது பார்வோன் யோசேப்போடே சொன்னதாவது: உன் தகப்பனும் உன் சகோதரரும் உன்னண்டைக்கு வந்தார்கள்.

௬ எகிப்துதேசம் உனக்குமுன்பாகக் கிடக்கிறது; தேசத்தில் நலமான இடத்திலே உன் தகப்பனையும் உன் சகோதரரையும் குடியேற்று; அவர்கள் கோசேன்தேசத்திலே குடியிருக்கட்டும்; அவர்களுக்குள்ளே திறமையான மனிதருண்டென்று அறிந்திருந்தாயானால் அவர்களை எனக்கிருக்கிற ஆடுமாடுகளை விசாரிக்கிற தலைவராக வையென்றான்.

௭ யோசேப்பு தன் தகப்பனாகிய யாக்கோபையும் அழைத்துக்கொண்டு வந்து, அவனைப் பார்வோனுக்குமுன்பாக நிறுத்தினான்; யாக்கோபு பார்வோனை ஆசீர்வதித்தான்.

௮ பார்வோன் யாக்கோபோடே, உன்னுடைய ஆயுசின் நாள்கள் எத்தனை என்றான்.

௯ யாக்கோபு பார்வோனோடே, நான் பரதேசம்பண்ணின நாள்கள் நூற்றுமுப்பது வருஷங்கள்; என் ஆயுசின் நாள்கள் பரதேசிகளான என் பிதாக்களுடைய ஆயுசின் நாள்களுக்கு வாராமல் கொஞ்சமும் பொல்லாப்புமாய் இருந்தன என்றான்.

Digitized by Google

௰ பிற்பாடு யாக்கோபு பார்வோனை ஆசீர்

வதித்து, பார்வோனிடத்திலிருந்து புறப்பட்டான்.

௰௧ யோசேப்பு தன் தகப்பனையும் தன் சகோதரரையும் குடியேற்றி, பார்வோன் கட்டளையிட்டபடி, அவர்களுக்கு எகிப்துதேசத்தின் நாட்டிலே நல்ல நாடாகிய ரமேசேஸ் சீமையிலே காணி கொடுத்தான்.

௰௨ ¶ யோசேப்பு தன் தகப்பனையும் தன் சகோதரரையும் தன் தகப்பனுடைய வீட்டார் அனைவரையும் பிள்ளைகளின் இலக்கத்திற்குத்தக்கதாய் ஆகாரம்கொடுத்துப் பராமரித்துவந்தான்.

௰௩ தேசமெங்கும் அப்பம் இல்லாதே போயிற்று; ஏனெனில் பஞ்சம் மிகவும் கடினமாய் இருந்தது; பஞ்சத்தினாலே, எகிப்துதேசமும் கானான்தேசமும் இளைத்துப்போயின.

௰௪ அப்பொழுது அவர்கள் கொள்ளும் தானியத்திற்கு இடாக யோசேப்பு எகிப்துதேசத்திலும் கானான்தேசத்திலும் உண்டான திரவியத்தை எல்லாம் சேர்த்தான்; அந்தத் திரவியத்தை யோசேப்பு பார்வோன் வீட்டிலே கொண்டுவந்துவைத்தான்.

௰௫ எகிப்துதேசத்திலும் கானான்தேசத்திலும் திரவியம் செலவழிந்து போனபொழுதோவெனில், எகிப்தியர் எல்லாரும் யோசேப்பண்டைக்கு வந்து, எங்களுக்கு அப்பம்தாரும்; திரவியம் இல்லாதேபோனதினாலே, நாங்கள் உமக்கு முன்பாகச் சாவானேன் என்றார்கள்.

௰௬ அப்பொழுது யோசேப்பு திரவியம் இல்லாதேபோயிற்றானால், உங்கள் மிருகசீவன்களைக் கொடுங்கள்; உங்கள் மிருகசீவன்களுக்கு இடாக உங்களுக்குத் தருகிறேன் என்றான்.

௰௭ அப்பொழுது தங்கள் மிருகசீவன்களை யோசேப்பண்டைக்குக் கொண்டுவந்தார்கள்; யோசேப்பு குதிரைகளையும் ஆடுகளையும் மாடுகளையும் கழுதைகளையும் வாங்கிக்கொண்டு, அவர்களுக்கு அப்பம்கொடுத்து, அந்த வருஷத்திலே அவர்களுடைய எல்லா மிருகசீவன்களுக்கும் இடாக அவர்கள் பிழைப்பை நடப்பித்துக்கொண்டுவந்தான்.

௰௮ ¶ அந்த வருஷம் முடிந்தபொழுது, அவர்கள் மறுவருஷத்திலே அவனண்டைக்கு வந்து அவனோடே சொன்னதாவது: திரவியமும் செலவழிந்துபோயிற்று; மிருகசீவன்களின் ஆஸ்தியும் எங்கள் ஆண்டவனைச் சேர்ந்தது; எங்கள் சரீரமும் எங்கள் நிலமுமே ஒழிய, எங்கள் ஆண்டவனுக்குமுன்பாக ஒன்றும் மீதியானதில்லை என்கிறதை எங்கள் ஆண்டவனுக்கு மறைக்கமாட்டோம்.

௰௯ நாங்களும் எங்கள் நிலமும் உம்முடையகண்களுக்குமுன்பாக மடிவானேன்? நீர் எங்களையும் எங்கள் நிலத்தையும் கொண்டு, அப்பம்தாரும்; நாங்கள் எங்கள் நிலத்தோடும்கூடப் பார்வோனுக்கு அடிமைப்பட்டிருப்போம்; நாங்கள் சாவாமல் உயிரோடிருக்கும்படிக்கும் நிலம் பாழாய்ப் போகாதபடிக்கும் விதையைத் தாரும் என்றார்கள்.

௨௰ அப்படியே யோசேப்பு எகிப்தின் நிலத்தை எல்லாம் பார்வோனுக்குக் கொண்டான்; ஏனெனில் எகிப்தியர் அவரவர், பஞ்சம் தங்கள்மேல் பலத்துக்கொண்டபடியினாலே, தங்கள் வயல்களை விற்றார்கள்; ஆனதுகொண்டு நிலம் பார்வோனைச் சேர்ந்தது.

௨௧ ஆனால் சனத்தை அவன் எகிப்தினுடைய எல்லையின் இந்த முனைதுவக்கி அந்த முனைமட்டும் இருந்த பட்டணங்களில் குடிமாறிப்போகப் பண்ணினான்.

௨௨ ஆசாரியன் நிலத்தைமாத்திரம் கொள்ளாதே போனான்; ஏனெனில் அது பார்வோனாலே ஆசாரியருக்குப் படித்திட்டமாகக் கட்டளைபண்ணப்பட்டது; பார்வோன் தங்களுக்குக் கட்டளைபண்ணின தங்கள் படியைச் சாப்பிட்டார்கள்; ஆகையால்

Digitized by Google

அவர்கள் தங்கள் நிலத்தை விற்றதில்லை.

௨௩ யோசேப்பு சனத்தோடே சொன்னதாவது: இதோ, இன்று உங்களையும் உங்கள் நிலத்தையும் பார்வோனுக்குக் கொண்டேன்; இதோ உங்களுக்குத் தரப்படுகிற விதை, அதினால் நிலத்தை விதையுங்கள்.

௨௪ பலனானபொழுது நடப்பதேதென்றால், பார்வோனுக்கு ஐந்தில் ஒரு பங்கைக் கொடுப்பீர்கள்; நாலுபங்கோவென்றால், வயலுக்கு விதையும் உங்களுக்கும் உங்கள் வீட்டாருக்கும் உங்கள் குழந்தைகளுக்கும் ஆகாரம் உண்டாக உங்களுடையவைகளாய் இருக்கும் என்றான்.

௨௫ அப்பொழுது அவர்கள் எங்களை உயிரோடேகாத்தீர்; எங்கள் ஆண்டவனுடைய கண்களில் எங்களுக்குத் தயவே கிடைக்கட்டும், நாங்கள் பார்வோனுக்குஅடிமையாயிருப்போம் என்றார்கள்.

௨௬ அப்படியே ஐந்தில் ஒன்று பார்வோனுக்குச் சேரும்வாரம் என்பதை,யோசேப்பு எகிப்து நிலத்தின்மேலே இந்நாள்மட்டும் செல்லும் கட்டளையாக்கினான்; ஆசாரியரின் நிலம்மாத்திரம் பார்வோனைச் சேராமல் நீங்கலாயிற்று.

௨௭ ¶ இஸ்ரவேல் எகிப்துதேசத்திலிருக்கும் கோசேன் சீமையிலே குடியிருந்தான்; அதில் காணியாட்சிக்காரராகி, மிகவும் பலுகிப் பெருகினார்கள்.

௨௮ யாக்கோபு எகிப்துதேசத்திலே பதினேழுவருஷம் உயிரோடிருந்தான்; ஆகையால் யாக்கோபுடைய ஆயுசின் நாள்கள் நூற்றுநாற்பத்தேழு வருஷங்களாயின.

௨௯ மரணமடைய இஸ்ரவேலின் காலம் சமீபித்தபொழுது, அவன் தன் குமாரனாகிய யோசேப்பை வரவழைத்து, அவனுக்குச் சொன்னதாவது: உன் கண்களில் எனக்குத் தயவுகிடைத்ததானால், என்னை எகிப்திலே அடக்கம்பண்ணாயாக என்ற தயவையும் உண்மையையும் நீ எனக்குச் செய்வதற்காக உன் கையை என் இடுப்பின்கீழேபோடு.

௩௰ நான் என் பிதாக்களோடே படுத்துக்கொள்ளுவேன்; ஆகையால் நீ என்னை எகிப்திலிருந்து எடுத்துக்கொண்டுபோய், அவர்கள் அடக்கம்பண்ணப்பட்ட நிலத்திலே என்னை அடக்கம்பண்ணுவாயாக என்றான்; அதற்கு அவன், உம்முடைய சொற்படி நான் செய்வேன் என்றான்.

௩௧ அப்பொழுது அவன், எனக்குஆணையிடு என்றான்; அவனுக்கு ஆணையிட்டான்; அப்பொழுது இஸ்ரவேல் கட்டிலின் தலைமாட்டிலே சாய்ந்து பணிந்துகொண்டான்.

## ௪௮. அதிகாரம்.

இதற்குப்பிற்பாடு சம்பவித்ததேதென்றால், இதோ, உம்முடைய தகப்பனார் வியாதியாயிருக்கிறார் என்று யோசேப்புக்குச் சொல்லப்பட்டது; அப்பொழுது அவன் தன் இரண்டு குமாரராகிய மனாசேயையும் எப்பிராயீமையும் தன்னோடேகூட அழைத்துக்கொண்டு போனான்.

௨ இதோ, உம்முடைய குமாரனாகிய யோசேப்பு உம்மண்டைக்கு வருகிறானென்று யாக்கோபுக்கு அறிவிக்கப்பட்டது; அப்பொழுது இஸ்ரவேல் தன்னைத் திடனாக்கி, கட்டிலின்மேல் உட்கார்ந்தான்.

௩ யாக்கோபு யோசேப்போடே சொன்னதாவது: சர்வத்திற்கும்வல்ல பராபரன் கானான்தேசத்திலிருக்கிற லூசிலே எனக்குத் தரிசனையாகி, என்னை ஆசீர்வதித்து,

௪ *இதோ நாம் உன்னைப் பலுகவும் உன்னைப் பெருகவும்பண்ணி, உன்னைச் சனசதளங்களான கூட்டமாக்கி, உனக்குப் பிற்பாடு இருக்கும் உன் வித்திற்கு இந்தத் தேசத்தை நித்தியகாணியாட்சியாகக் கொடுப்போமென்று என்னோடே சொன்னார்.

*௧ மோ. ௩௫. ௰௧, ௰௨.

௫ ¶ இப்பொழுதும் நான் உன்னண்டைக்கு எகிப்திலே வாராததற்குமுன்னே உனக்கு எகிப்துதேசத்தில் பிறந்த உன் இரண்டு குமாரர் என்னுடையவர்கள்; ரூபன் சிமியோன்என்றவர்களைப்போல எப்பிராயீமும்

Digitized by Google

மனாசேயும் என்னுடையவர்களாய் இருப்பார்கள்.

௬ இவர்களுக்குப் பிறகு நீ பெறுகிற சந்தானமோவெனில், உன்னுடையதாயிருக்கும்; இவர்கள் தங்கள் சகோதரருடைய சுதந்தரத்தில் அவர்களுக்கொத்த பேராய் அழைக்கப்படுவார்கள்.

௭ நான் பதானிலிருந்து வருகையில், ராகேல் கானான்தேசத்தின் வழியிலே எப்பிராத்தாவுக்கு வர இன்னம் கொஞ்சம்தூரமிருக்கிறபொழுது, எனக்குமுன்பாக மரணம் அடைந்தாள்; அவளை அங்கே பெத்லகேம் என்னப்படுகிற எப்பிராத்தா ஊரின் வழியிலே அடக்கம்பண்ணினேன் என்றான்.

௮ ¶ பிற்பாடு இஸ்ரவேல் யோசேப்பின் குமாரரைக்கண்டு இவர்கள் யாரென்றான்.

௯ யோசேப்புத் தன் தகப்பனோடே, இவர்களே பராபரன் இவ்விடத்தில் எனக்குக் கொடுத்த என்னுடைய குமாரர் என்றான்; அப்பொழுது இவன், நான் அவர்களை ஆசீர்வதிக்கும்படிக்கு அவர்களை என்கிட்டக் கொண்டுவா என்றான்.

௰ இஸ்ரவேலின் கண்களோவென்றால் பெரியவயதினால் இருண்டுபோயிற்று; பார்க்கக்கூடாதிருந்தான்; அவர்களை அவனண்டையிலே சேரப்பண்ணினான்; அப்பொழுது அவன் அவர்களை முத்தம்செய்து அணைத்துக்கொண்டான்.

௰௧ பிறகு இஸ்ரவேல் யோசேப்போடே உன் முகத்தைப் பார்ப்பேன் என்று நினையாதே போனேன்; ஆனால் இதோ, பராபரன் என்னை உன் வித்தையும் காணப்பண்ணினார் என்றான்.

௰௨ அப்பொழுது யோசேப்பு அவன் முழங்கால்களுக்குள்ளிருக்கிற அவர்களைப் பின்னிடப்பண்ணி, அவன் முகத்திற்கு முன்பாகத் தரைமட்டும் குனிந்து வணங்கினான்.

௰௩ பிற்பாடு யோசேப்பு இருவரையும் கொண்டுவந்து, எப்பிராயீமைத் தன் வலதுகையினாலே இஸ்ரவேலின் இடதுகைக்கு நேராகவும் மனாசேயைத் தன் இடதுகையினாலே இஸ்ரவேலின் வலதுகைக்கு நேராகவும் அவனண்டையிலே சேரப்பண்ணினான்.

௰௪ ஆனால் இஸ்ரவேல் தன் வலதுகையை நீட்டி, இளையவனாகிய எப்பிராயீமுடைய தலையின்மேலும் மனாசே மூத்தவனாயிருந்தாலும், தன் இடதுகையை மனாசேயினுடைய தலையின்மேலும் வைத்தான்; அவன் அறிந்து அப்படித் தன் கைகளை வைத்து,

௰௫ ¶ யோசேப்பை ஆசீர்வதித்துச் சொன்னதாவது: பராபரனுக்குமுன்பாக என் பிதாக்களாகிய ஆபிரகாமும் இசாக்கும் நடந்துகொண்டார்களே, நான் உண்டான நான்துவக்கி இந்நாள்வரைக்கும் என்னை ஆதரித்துவந்த அந்தப் பராபரனும்,

௰௬ என்னை எல்லாத் தீமைக்கும் நீங்கலாக்கி மீட்ட தூதனுமானவர் இந்த இளைஞரை ஆசீர்வதிக்கக்கடவர்; என் பேரும் ஆபிரகாம் இசாக்கென்ற என் பிதாக்களின் பேரும் அவர்களுக்குத் தரிக்கப்படக்கடவது; தேசத்தின் நடுவிலே ஏராளமான திரட்சியாய்ப் பலுகக்கடவர்களென்றான்.

௰௭ தன் தகப்பன் தன் வலதுகையை எப்பிராயீமுடைய தலையின்மேல் வைத்ததை யோசேப்பு காண்கிறபொழுதோவெனில், அவனுக்கு ஆகாததாய்க் கண்டது; ஆகையால் எப்பிராயீமுடைய தலையின்மேல் இருந்த தன் தகப்பனுடைய கையை யோசேப்பு மனாசேயினுடைய தலையின்மேல் வைக்கும்படிக்கு எடுத்து,

௰௮ தன் தகப்பனோடே அப்படியல்ல, என் தகப்பனே, ஏனெனில் இவன் மூத்தவன்; இவன் தலையின்மேல் உம்முடைய வலதுகையை வையுமென்றான்.

௰௯ அவன் தகப்பனோவெனில், தட்டுதல்பண்ணி, அறிவேன், என் மகனே, அறிவேன்; இவனும் சனசதனமாவான்; இவனும் பெருகிப்போவான்; ஆகிலும் இவனுடைய தம்பி இவனைப்பார்க்கிலும் பெரு

Google

து, அறையிலே போய், அங்கே அழுதான்.

௩௧ பிறகு அவன் தன் முகத்தைக் கழுவிப் புறப்பட்டு, தன்னை அடக்கிக்கொண்டு போசனம் வையுங்கள் என்றான்.

௩௨ அப்பொழுது அவனுக்குத் தனிப்படவும், அவர்களுக்குத் தனிப்படவும், அவனோடே சாப்பிடுகிற எகிப்தியருக்குத் தனிப்படவும் வைத்தார்கள்; ஏனெனில் எகிப்தியர் எபிரேயரோடே அப்பம் சாப்பிடமாட்டார்கள்; அதேனென்றால் அது எகிப்தியருக்கு அருவருப்பாயிருக்கும்.

௩௩ அவர்கள் அவனுக்குமுன்பாக மூத்தவன் தன் மூத்தவயதின்படியேயும் இளையவன் தன் இளையவயதின்படியேயும் உளுக்காரவைக்கப்பட்டார்கள்; அதற்காக அவர்கள், ஒருவருக்கொருவர் ஆச்சரியப்பட்டார்கள்.

௩௪ அவன் தன் முன்னே இருக்கிறதில் அவர்களுக்குப் பங்கிட்டுஅனுப்பினான்; ஆனால் அவர்கள் எல்லாருடைய பங்குகளைப்பார்க்கிலும், பென்யமீனுடைய பங்கு ஐந்தத்தனை அதிகமாயிற்று; அவர்கள் குடித்து, அவனோடே சந்தோஷமாயிருந்தார்கள்.

## ௪௪. அதிகாரம்.

பிற்பாடு அவன் தன் வீட்டு விசாரிப்புக்காரனுக்குக் கற்பித்ததாவது: நீ இந்த மனிதருடைய சாக்குகளை,அவர்கள் ஏற்றிக்கொண்டு போகத்தக்க பாரமாய் ஆகாரத்தினாலே நிரப்பி, அவனவன் பணத்தை அவனவனுடைய சாக்கின் வாயிலே போட்டு,

௨ இளையவனுடைய சாக்கின் வாயிலே வெள்ளிப்பாத்திரமாகிய என்னுடைய பாத்திரத்தையும், அவனுடைய தானியத்தின் பணத்தையும் போடு என்று கற்பித்தான்; அவன் யோசேப்புச் சொன்ன வார்த்தையின்படியே செய்தான்.

௩ ¶ காலமே வெளிச்சமாகிறபொழுது, அந்த மனிதர் தங்கள் கழுதைகளோடும் கூட அனுப்பிவிடப்பட்டார்கள்.

௪ அவர்கள் பட்டணத்தைவிட்டுப் புறப்பட்டுத் தூரமாய்ப் போகாததற்குமுன்னே, யோசேப்பு தன் வீட்டுவிசாரிப்புக்காரனோடே சொன்னதாவது: நீ எழுந்து அந்த மனிதரைப் பின்தொடர்ந்து, அவர்களைக் கிட்டிப்பிடிக்கும்பொழுது அவர்களோடே சொல்லவேண்டியது ஏதெனில் நீங்கள் நன்மைக்குத் தீமையைச் சரிக்கட்டினதென்ன?

௫ அது என் எசமானன் குடிக்கிறபாத்திரம் அல்லவோ? அது போன வகை அவருக்கு ஞானதிருஷ்டியால் தெரியாதோ? நீங்கள் செய்தது பொல்லாத காரியமாயிருக்கிறதென்று சொல்லென்றான்.

௬ அவன் அவர்களைத் தொடர்ந்து பிடித்து, இந்த வார்த்தைகளை அவர்களோடே சொன்னான்.

௭ அப்பொழுது அவர்கள் அவனோடே சொன்னதாவது: எங்கள் ஆண்டவன் இப்படிக்கொத்த வார்த்தைகளைச் சொல்லுவானேன்? இப்படிக்கொத்த காரியத்தை உம்முடைய அடியார் ஒருக்காலும் செய்வதில்லை.

௮ இதோ, எங்கள் சாக்குகளின் வாயிலே நாங்கள் கண்ட பணத்தைக் கானான்தேசத்திலிருந்து திரும்ப உம்மண்டைக்குக் கொண்டுவந்தோமே? நாங்கள் உம்முடைய எசமானனின் வீட்டிலிருந்து வெள்ளியையாகிலும் பொன்னையாகிலும் திருடிக்கொண்டு போவது எப்படி?

௯ உம்முடைய அடியாரில் எவனிடத்திலே அது கண்டுபிடிக்கப்படுமோ, அவன் சாவக்கடவன்; நாங்களும் எங்கள் ஆண்டவனுக்குஅடிமைகளாவோம்என்றார்கள்.

௰ அதற்கு அவன், இப்பொழுதும் நீங்கள் சொன்ன வார்த்தைகளின்படியே ஆகக்கடவது; எவனிடத்தில் அது கண்டுபிடிக்கப்படுமோ, அவன் எனக்கு அடிமையாவான்; நீங்களோவென்றால் குற்றமற்றிருப்பீர்கள் என்றான்.

௧௧ அவர்கள் தீவிரித்து அவனவன் தன்தன் சாக்கைத் தரையிலே இறக்கிப்போட்டு,

Digitized by Google

ஒவ்வொருவராய்த் தங்கள் சாக்குகளைத் திறந்துவைத்தார்கள்.

௧௨ அவன் மூத்தவனைத் துவக்கி இளையவன்மட்டும் சோதிக்கிறபொழுது, பாத்திரம் பென்யமீனுடைய சாக்கிலே கண்டுபிடிக்கப்பட்டது.

௧௩ அப்பொழுது அவர்கள் தங்கள் வஸ்திரங்களைக் கிழித்துக்கொண்டு, அவனவன் தன் தன் கழுதையின்மேலே சுமையை ஏற்றி, பட்டணத்திற்குத் திரும்பினார்கள்.

௧௪ யூதாவும் அவன் சகோதரரும் யோசேப்பின் வீட்டிலே வந்தார்கள்; ஏனெனில் அவன் அதுவரையில் அங்கே இருந்தான்; அவனுக்குமுன்பாகத் தரையிலே விழுந்தார்கள்.

௧௫ யோசேப்பு அவர்களுடனே, நீங்கள் செய்த இந்தக் கிரியை ஏது? என்னைப்போலொத்த மனிதனுக்குக் காரியம் ஞானதிருஷ்டியினால் தெரியுமென்று, அறியாதே போனீர்களோ என்றான்.

௧௬ அப்பொழுது யூதா, என் ஆண்டவனுக்கு நாங்கள் என்ன சொல்லப்போகிறோம்? என்ன பேசுவோம்? எதினால் எங்களை நீதிமான்களாக்குவோம்? பராபரன் உம்முடைய அடியாரின் அக்கிரமத்தைக் கண்டுபிடித்தார்; இதோ நாங்கள் என் ஆண்டவனுக்கு அடிமைகள்; நாங்களும் பாத்திரம் கண்டுபிடிக்கப்பட்ட அவனும் தானே என்றான்.

௧௭ அவனோவென்றால் இப்படிக்கொத்த செய்கை எனக்குத் தூரமாயிருப்பதாக; எவன் வசத்தில் பாத்திரம் கண்டுபிடிக்கப்பட்டதோ, அவனே எனக்கு அடிமையாய் இருப்பான்; நீங்களோவெனில் சமாதானத்தோடே உங்கள் தகப்பனண்டைக்குப் போயேறுங்கள் என்றான்.

௧௮ அப்பொழுது யூதா அவனண்டையிலே சேர்ந்து சொன்னதாவது: ஆ, என் ஆண்டவனே, உம்முடைய அடியான் என் ஆண்டவனுடைய செவிகளுக்குமுன்பாக ஒரு வார்த்தை பேசட்டும்; உம்முடைய கோபம் எரியாதிருப்பதாக; ஏனெனில் நீர் பார்வோனைப்போல இருக்கிறீர்.

௧௯ உங்களுக்குத் தகப்பனானாலும் சகோதரனானாலும் உண்டோ என்று என் ஆண்டவன் உம்முடைய அடியாரைக் கேட்டீர்.

௨௰ அப்பொழுது என் ஆண்டவனுடனே, எங்களுக்கு முதிர்வயதுள்ள தகப்பனும் அவருக்கு முதிர்வயதிலே பிறந்த இளைய சகோதரனும் உண்டு; இவனுடைய தமையன் செத்துப்போனான்; இவன் ஒருவன் தன் தாயாருக்கு மீதியானவன்; இவனுடைய தகப்பன் இவன்மேலே பட்சமாயிருக்கிறாரென்றோம்.

௨௧ அப்பொழுது நீர் உம்முடைய அடியாரோடே, அவனை என்னண்டைக்கு அழைத்துவாருங்கள்; என் கண்ணை அவன்மேலே வைப்பேன் என்றீர்.

௨௨ நாங்களோவென்றால் என் ஆண்டவனோடே, அந்த இளைஞன் தன் தகப்பனை விடக்கூடாது; தன் தகப்பனை விட்டால் அவர் செத்துப்போவாரென்றோம்.

௨௩ நீரோவெனில் உம்முடைய அடியாருடனே, உங்கள் இளைய சகோதரன் உங்களோடேகூட இறங்கிவாராதேபோனால், நீங்கள் என் முகத்தை இனிப் பார்ப்பதில்லை என்று சொன்னீர்.

௨௪ நாங்கள் உம்முடைய அடியானாகிய என் தகப்பனண்டைக்கு வந்தேறினபொழுது சம்பவித்ததேதென்றால், என் ஆண்டவனுடைய வார்த்தைகளை அவருக்கு அறிவித்தோம்.

௨௫ நீங்கள் திரும்பப் போய், கொஞ்சம் ஆகாரம் நமக்குக் கொள்ளுங்களென்று எங்கள் தகப்பனார் சொன்னார்.

௨௬ அதற்கு நாங்கள் சொன்னதேதெனில், நாங்கள் இறங்கிப்போகக்கூடாது; எங்கள் இளைய சகோதரன் எங்களோடு இருந்தானேயானால் இறங்கிப்போவோம்; ஏனென்றால் எங்கள் இளைய சகோதரன் எங்களோடே இராவிட்டால், நாங்கள் அந்



Digitized by Google

தப் புருஷனுடைய முகத்தைப் பார்க்கக் கூடாதென்றோம்.

௨௭ அப்பொழுது உம்முடைய அடியானாகிய என் தகப்பன் எங்களோடே சொன்னதாவது: என் பெண்சாதி எனக்கு இரண்டு பிள்ளைகளைப் பெற்றாள் என்கிறதையும்,

௨௮ அவர்களில் ஒருவன் என்னிடத்திலிருந்து புறப்பட்டுப் போனான், அவன் பீறுண்ணவே பீறுண்டானென்று முன் சொல்லி, இதுவரைக்கும் அவனைக் காணாதிருக்கிறேன் என்கிறதையும் நீங்கள் அறிவீர்கள்.

௨௯ நீங்கள் இவனையும் என் முன்பாக இராதபடிக்கு அழைத்துப்போகும்போது, ஒரு சேதம் அவனுக்கு வந்தால், என் நரையை நிர்ப்பந்தத்தோடே குழியில் இறங்கப்பண்ணுவீர்கள் என்றான்.

௩௰ இப்பொழுதும் இளைஞன் எங்களோடிராமல், நான் என் தகப்பனாகிய உம்முடைய அடியானண்டையிலே போனால், அப்பொழுது அவருடைய ஆத்துமா இவனாத்துமாவோடே ஒட்டிக்கொண்டிருக்கிறபடியினாலே சம்பவிப்பது ஏதெனில்,

௩௧ அவர் இளைஞன் இல்லை என்று காணும்பொழுது, செத்துப்போவார்; அப்படியே உம்முடைய அடியாரும் உம்முடைய ஊழியக்காரனாகிய எங்கள் தகப்பனுடைய நரையைச் சஞ்சலத்தோடே குழியில்இறங்கப்பண்ணுவோமே.

௩௨ ஏனெனில் நான் அவனை உம்மண்டைக்கு அழைத்துவாராதேபோனால், நான் சகலநாளும் என் தகப்பனுக்கு நேரஸ்தனாய் இருப்பேனென்று உம்முடைய அடியானாகிய நான் என் தகப்பனிடத்திலே இந்த இளைஞனுக்காகப் பிணைப்பட்டேன்.

௩௩ இப்பொழுதும் இளைஞன் தன் சகோதரரோடே கூடப்போய் ஏறும்படிக்கு, உம்முடைய அடியானாகிய நான் இளைஞனுக்குப் பதிலாக இங்கே என் ஆண்டவனுக்கு அடிமையாய் இருக்கட்டும்.

௩௪ ஏனெனில் இளைஞன் என்னோடே இல்லாவிட்டால் எப்படி என் தகப்பனண்டைக்குப் போயேறுவேன்? என் தகப்பனைப் பிடிக்கும் தீங்கை அப்பொழுது காண்பேனே என்றான்.

## ௪௫. அதிகாரம்.

அப்பொழுது யோசேப்பு தன்னண்டையில் நிற்கிற எல்லார்முன்பாகவும் தன்னை அடக்கிக்கொண்டிருக்கக்கூடாமல், யாவரையும் என்னைவிட்டு வெளியே போகப்பண்ணுங்களென்று கூப்பிட்டான்; யோசேப்பு தன் சகோதரருக்குத் தன்னை அறியப்படுத்துகையில் ஒருவரும் அவனண்டையிலே நின்றதில்லை.

௨ அவன் சத்தமிட்டு அழுதான்; அதை எகிப்தியர் கேட்டார்கள்; பார்வோனின் வீட்டாரும் கேட்டார்கள்.

௩ யோசேப்பு தன் சகோதரரோடே நான் யோசேப்பு; என் தகப்பன் இன்னம் உயிரோடிருக்கிறாரோ என்றான்; ஆனால் அவன் சகோதரர் அவனுக்குமுன்பாகக் கலங்கினதினாலே, அவனுக்குப் பிரதியுத்தாரம் சொல்ல அவர்களுக்குக் கூடாதேபோயிற்று.

௪ அப்பொழுது யோசேப்பு தன் சகோதரரோடே, என்னண்டையிலே கிட்டிவாருங்கள் என்றான்; அவர்கள் கிட்டிப்போனார்கள்; அப்பொழுது அவன் சொன்னதாவது: நீங்கள் எகிப்திற்குப் போகிறவர்களுக்கு விற்ற உங்கள் சகோதரனாகிய யோசேப்பு நானே.

௫ இப்பொழுதும் நீங்கள் என்னை இவ்விடத்திற்கு விற்றுப்போட்டதினாலே, நீங்கள் சஞ்சலப்படவும் அது உங்கள் பார்வைக்குப் பொல்லப்பாயிருக்கவும் வேண்டாம்; ஏனெனில் உங்கள் சீவனுக்காகப் பராபரன் என்னை உங்களுக்குமுன்னாக அனுப்பினார்.

௬ ஏனென்றால் இந்த இரண்டுவருஷம் தேசத்திற்குள்ளே பஞ்சம் உண்டாயிருந்தது; உழவும் அறுப்பும் இல்லாத ஐந்து வருஷங்களும் இன்னம் வரும்.

Digitized by Google

எ ஆனால், உங்களைத் தேசத்தில் மீதியாக வைப்பதற்கும் உங்களைப் பெரிய இரட்சிப்பினாலே உயிரோடே காப்பதற்குமாக, பராபரன் என்னை உங்களுக்குமுன்னாக அனுப்பினார்.

அ இப்பொழுதும் நீங்களல்ல, பராபரன் என்னை இங்கே அனுப்பி, என்னைப் பார்வோனுக்குத் தகப்பனாகவும், அவர் வீட்டிற்கெல்லாம் துரையாகவும், எகிப்துதேசத்தை எல்லாம் ஆளுகிறவனாகவும் வைத்தார்.

கூ நீங்கள் தீவிரத்தோடே என் தகப்பனண்டைக்குப் போயேறி, அவரோடே சொல்லவேண்டியதேதெனில், உம்முடைய குமாரனாகிய யோசேப்புச் சொல்லி அனுப்புகிறதாவது: பராபரன் என்னை எகிப்திற்கெல்லாம் துரையாக வைத்தார்; என்னண்டைக்கு இறங்கிவாரும், தாமதிக்க வேண்டாம்.

ம நீர் கோசேன் தேசத்திலே வாசம்பண்ணி, எனக்குச் சமீபத்திலே இருப்பீர்; நீரும் உம்முடைய பிள்ளைகளும் உம்முடைய பிள்ளைகளின் பிள்ளைகளும் உம்முடைய ஆடுகளும் உம்முடைய மாடுகளும் உமக்குண்டான யாவும் கூடத்தானே.

மக நீரும் உம்முடைய வீட்டாரும் உமக்கிருக்கிற யாவும் தாழ்வுபடாதபடிக்கு, அங்கே உம்மைப் பராமரிப்பேன்; ஏனெனில் பஞ்சம் இன்னம் ஐந்து வருஷம்மட்டும் இருக்குமென்கிறான் என்று சொல்லுங்கள்.

மஉ இதோ என்னுடைய வாய் உங்களோடே பேசுகிறது என்கிறதை உங்கள் கண்களும் என் தம்பியாகிய பென்யமீனின் கண்களும் காண்கிறதே.

மங எகிப்திலே எனக்கு இருக்கிற என்னுடைய எல்லா மகிமையையும் நீங்கள் கண்டவை எல்லாவற்றையும் என் தகப்பனுக்கு அறிவித்து, தீவிரமாய் என் தகப்பனை இவ்விடத்திற்கு இறங்கிவரப்பண்ணுங்கள் என்றுசொல்லி,

மச தன் தம்பியாகிய பென்யமீனுடைய கழுத்திறுக்கக் கட்டிக்கொண்டு அழுதான்; பென்யமீனும் அவன் கழுத்தைக் கட்டிக்கொண்டு அழுதான்.

மரு தன்னுடைய எல்லாச் சகோதரரையும் முத்தம்செய்து அவர்கள் முன்பாக அழுதான்; அதற்குப் பிற்பாடு அவன் சகோதரர் அவனோடே பேசினார்கள்.

மகூ ¶ யோசேப்பின் சகோதரர் வந்தார்களென்று பார்வோன் வீட்டிலே செய்தி கேட்கப்பட்டபொழுது, அது பார்வோன் பார்வைக்கும் அவன் ஊழியக்காரரின் பார்வைக்கும் நன்றாய் இருந்தது.

மஎ அப்பொழுது பார்வோன் யோசேப்போடே சொன்னது: நீ உன் சகோதரரோடே சொல்லவேண்டியதாவது: நீங்கள் செய்யவேண்டியதேதெனில், உங்கள் மிருகசீவன்களின்மேல் பொதியேற்றிப் புறப்பட்டு, கானான்தேசத்திற்குப்போய்,

மஅ உங்கள் தகப்பனையும் உங்கள் வீட்டாரையும் கூட்டிக்கொண்டு என்னண்டைக்கு வாருங்கள், நான் உங்களுக்கு எகிப்துதேசத்தின் நன்மையைக் கொடுப்பேன்; தேசத்தின் கொழுப்பைச் சாப்பிடுவீர்கள்.

மகூ நீங்கள் செய்யவேண்டியது ஏதெனில், நீங்கள் உங்கள் குழந்தைகளுக்காகவும் உங்கள் பெண்சாதிகளுக்காகவும் வண்டில்களை எகிப்துதேசத்திலிருந்து கொண்டுபோய், உங்கள் தகப்பனையும் ஏற்றி வாருங்கள்.

உம உங்கள் கண் உங்களுடைய தட்டுமுட்டுகளைப் பார்க்கவேண்டாம்; ஏனெனில் எகிப்துதேசமெங்கும் நன்மையாயிருக்கிறது உங்களுடையதாய் இருக்குமென்று அவர்களோடே சொல்ல நீ கட்டளைபெற்றாய் என்றான்.

உக இப்படியே இஸ்ரவேலின் குமாரர் செய்தார்கள்; யோசேப்பு அவர்களுக்குப் பார்வோனுடையகட்டளையின்படியே வண்டில்களைக்கொடுத்து, வழிக்கு ஆகாரத்தையும் அவர்களுக்குக் கொடுத்தான்.

Digitized by Google

உஉ அவர்களில் ஒவ்வொருவனுக்கு அவன் மாற்று வஸ்திரங்களையும் கொடுத்து, பென்யமீனுக்கோ முந்நூறு வெள்ளிக்காசையும் ஐந்து மாற்று வஸ்திரங்களையும் கொடுத்து,

உங அப்படியே தன் தகப்பனுக்கு எகிப்தின் உச்சிதங்களைச் சுமந்துபோகிற பத்துக் கழுதைகளையும், தன் தகப்பனுக்காக வழிக்குத் தானியமும் அப்பமும் தின்பண்டங்களும் சுமந்துபோகிற பத்துக் கோளிகைக் கழுதைகளையும் அனுப்பினான்.

உச அப்படியே அவன் தன் சகோதரரை அனுப்பிவிட்டு, இவர்கள்போகிறபொழுது, வழியிலே சண்டைபண்ணீர்களாக என்று அவர்களோடே சொன்னான்.

உரு ¶ அவர்கள் எகிப்திலிருந்து போயேறி, கானான்தேசத்திலே தங்கள் தகப்பனாகிய யாக்கோபண்டைக்கு வந்து,

உசு யோசேப்பு இன்னம் உயிரோடிருக்கிறான் என்றும், அவன் எகிப்துதேசத்தை எல்லாம் ஆளுகிறான் என்றும் அவனுக்கு அறிவித்தார்கள்; ஆனால் அவன் இருதயம் தளம்பிற்று; ஏனெனில் அவர்களை நம்பாதிருந்தான்.

உஎ அவர்களோவென்றால் யோசேப்புத் தங்களுடனே பேசின எல்லா வார்த்தைகளையும் அவனுக்குச் சொல்லுகிறபொழுதும், தன்னை ஏற்றிக்கொண்டுபோக யோசேப்பு அனுப்பின வண்டில்களை அவன் காண்கிறபொழுதும், அவர்களுடைய தகப்பனாகிய யாக்கோபின் ஆவி திடப்பட்டது.

உஅ அப்பொழுது இஸ்ரவேல், என் குமாரனாகிய யோசேப்பு இன்னம் உயிரோடிருக்கிறபொழுதும், நான் மரணம் அடையாததற்கு முன்னேபோய் அவனைப் பார்ப்பேன் என்றான்.

## சகூ. அதிகாரம்.

இஸ்ரவேல் தனக்குண்டானவைகளை எல்லாம் கூட்டிக்கொண்டு பயணம் புறப்பட்டுப் பேர்சேபாவுக்குவந்து, தன் தகப்பனாகிய இசாக்குடைய பராபரனுக்குப் பலிகளை இட்டான்.

உ இராத்தரிசனைகளில் பராபரன் இஸ்ரவேலோடே பேசி, யாக்கோபே யாக்கோபே, என்றார்; அவன் இதோ அடியேனென்றான்.

௩ அப்பொழுது அவர் சொன்னதாவது: நாம் உன் தகப்பனுடைய தேவனாகிய பராபரன்; எகிப்திற்கு இறங்கிப்போகப் பயப்படாயாக; ஏனெனில் அங்கே உன்னைப் பெரியசாதி ஆக்குவோம்.

ச நாம் உன்னோடேகூட எகிப்திற்கு இறங்கிப்போவோம்; நாம் உன்னைத் திரும்பி வந்து ஏறவும் பண்ணுவோமென்றும், யோசேப்பு தன் கையால் உன் கண்களை மூடுவானென்றும் சொன்னார்.

ரு அதற்குப் பிற்பாடு யாக்கோபு பேர்சேபாவிலிருந்து பயணம்புறப்பட்டுப் போனான்; இஸ்ரவேலின் குமாரர் தங்கள் தகப்பனாகிய யாக்கோபையும் தங்கள் குழந்தைகளையும் தங்கள் பெண்சாதிகளையும், பார்வோன் அவனை ஏற்றிவர அனுப்பின வண்டில்களின்மேல் ஏற்றிக்கொண்டுபோனார்கள்.

௬ அவர்கள், தங்கள் ஆடுமாடுகளையும் தாங்கள் கானான்தேசத்தில் சம்பாதித்த தங்கள் ஆஸ்தியையும் கூட்டிக்கொண்டு எகிப்திற்கு வந்தார்கள், யாக்கோபும் அவன் வித்தார் அனைவரும் அவனோடு கூடத்தானே.

எ தன் குமாரரையும் தன் குமாரரின் குமாரரையும் தன் குமாரத்திகளையும் தன் குமாரரின் குமாரத்திகளையும் தன் வித்தார் அனைவரையும் அவன் தன்னோடேகூட எகிப்திற்கு அழைத்துக்கொண்டு வந்தான்.

அ எகிப்திலே வந்த இஸ்ரவேல் புத்திரரின் நாமங்கள்; யாக்கோபும் அவன் குமாரரும்; யாக்கோபுடைய முதல் பேறானவன் ரூபன்.

௯ ரூபனுடைய குமாரர்; ஆனோக், பல்



Digitized by Google

லூ, எத்ஸரோன், கர்மீ என்றவர்கள்.

௰ சிமெயோனுடைய குமாரர்; எமுவேல், யாமின், ஓகாத், யாகீன், சோகார், கானான் தேசத்தாளின் குமாரனாகிய சவுல் என்றவன்.

௰௧ லேவியின் குமாரர்; கேர்சோன், கேகாத், மெராரி என்றவர்கள்.

௰௨ யூதாவின் குமாரர்; ஏர், ஓனான், சேலா, பேரேஸ், சேரா என்றவர்கள்; ஏரும் ஓனானுமோவென்றால் கானான்தேசத்திலே செத்துப்போனார்கள்; பேரேசுடைய குமாரர்; எத்ஸரோன், அமூல் என்றவர்கள்.

௰௩ இசக்காருடைய குமாரர்; தோலா, பூவா, யோப், சிம்ரோன் என்றவர்கள்.

௰௪ செபுலோனுடைய குமாரர்; சேரேத், ஏலோன், யாலேயேல் என்றவர்கள்.

௰௫ இவர்கள் லேயாளின் குமாரர்; இவர்களையும் யாக்கோபுடைய குமாரத்தியாகிய தீனாளையும் அவள் அவனுக்குப் பதான்அராமிலே பெற்றாள்; அவன் குமாரரும் அவன் குமாரத்திகளுமாகிய எல்லா ஆத்துமாக்களும் முப்பத்துமூன்று.

௰௬ காத்துடைய குமாரர்; சிப்பியோன், அகி, சூனி, எத்ஸ்போன், ஏரி, அரோதி, அரேலி என்றவர்கள்.

௰௭ ஆசேருடைய குமாரர்; இம்னா, இஸ்வா, இஸ்வி, பேரியா என்றவர்கள்; இவர்களுடைய சகோதரி சேராக்கு என்றவள். பேரியாவின் குமாரர்; ஏபேர், மல்க்கியேல் என்றவர்கள்.

௰௮ இவர்கள் லாபான் தன் குமாரத்தியாகிய லேயாளுக்குக் கொடுத்த சில்ப்பாளுடைய பிள்ளைகள்; அவள் யாக்கோபுக்கு இந்தப் பதினாறு ஆத்துமாக்களைப் பெற்றாள்.

௰௯ யாக்கோபின் பெண்சாதியாகிய ராகேலுடைய குமாரர்; யோசேப்பும் பென்யமீனும்தானே.

௨௰ யோசேப்புக்கு எகிப்துதேசத்திலே மனாசேயும் எப்பிராயீமும் பிறந்தார்கள்; அவர்களை ஓன் பட்டணத்து ஆசாரியனாகிய போத்திப்பேராவின் குமாரத்தியாகிய அஸ்னாத் அவனுக்குப் பெற்றாள்.

௨௧ பென்யமீனுடைய குமாரர்; பேலா, பேகேர், அஸ்பேல், கேரா, நாமான், ஏகி, ரோஸ், மூப்பிம், உப்பிம், ஆர்து என்பவர்கள்.

௨௨ ராகேல் யாக்கோபுக்குப் பெற்ற குமாரராகிய இவர்கள் எல்லாரும் பதினாலு ஆத்துமாவே.

௨௩ தாணுடைய குமாரன்; ஊசிம் என்றவன்.

௨௪ நப்தலியின் குமாரர்; யாத்சேயேல், கூனி, எத்சேர், சில்லேம் என்றவர்கள்.

௨௫ இவர்கள் லாபான் தன் குமாரத்தியாகிய ராகேலுக்குக் கொடுத்த பில்க்காள் யாக்கோபுக்குப் பெற்றவர்கள்; இவர்கள் எல்லாரும் ஏழு ஆத்துமாக்கள்.

௨௬ ¶ யாக்கோபுடைய குமாரரின் பெண்சாதிகளைத் தவிர, அவனுடைய கர்ப்பப்பிறப்பாய் இருந்து அவனோடேகூட எகிப்திலே வந்த ஆத்துமாக்கள் எல்லாம் அறுபத்தாறு ஆத்துமாக்கள்.

௨௭ யோசேப்புக்கு எகிப்திலே பிறந்த குமாரர் இரண்டு ஆத்துமாக்கள்; எகிப்திலே வந்த யாக்கோபின் வீட்டாராகிய ஆத்துமாக்கள் எல்லாம் எழுபது.

௨௮ ¶ கோசேனுக்குப்போகிற வழியைத் தனக்குக் காட்டுவிக்க, அவன் தனக்குமுன்னாக யோசேப்பண்டைக்கு யூதாவை அனுப்பினான்; அப்படியே கோசேன்தேசத்திலே வந்தார்கள்.

௨௯ யோசேப்பு தன் இரதத்தை ஆயத்தம்பண்ணி ஏறி, கோசேனுக்குத் தன் தகப்பனாகிய இஸ்ரவேலுக்கு எதிர்கொண்டு போய், அவனுக்குத் தன்னைக் காண்பித்து, அவனுடைய கழுத்திறுகக் கட்டிக்கொண்டு, அதிக நேரமாய் அவன் கழுத்தைவிடாமல் அழுதான்.

௩௰ அப்பொழுது இஸ்ரவேல் யோசேப்புடனே, நீ இன்னும் உயிரோடிருக்கிறாய் என்று நான் உன் முகத்தைக் கண்டபடியி

Digitized by Google

னாலே இனி மரணம் எனக்கு எப்போதாகி லும் வரட்டும் என்றான்.

ஙக பிற்பாடு யோசேப்பு தன் சகோதர ரோடும் தன் தகப்பனுடைய வீட்டாரோ டும் சொன்னதாவது: நான் போயேறிக் கானான்தேசத்திலிருந்த என்னுடைய சகோ தரரும், என் தகப்பன்வீட்டாரும் என் னண்டைக்கு வந்தார்களென்று பார்வோ னுக்கு அறிவித்து,

ஙஉ இந்த மனிதர் ஆடுகளைமேய்க்கிறவர் கள்; ஏனெனில் மிருகஜீவன்களையுடைய வர்களாய் இருக்கிறார்கள்; அவர்கள் தங் கள் ஆடுகளையும் தங்கள் மாடுகளையும் தங் களுக்குண்டானவை எல்லாவற்றையும் கொண்டுவந்தார்களென்று அவரோடே சொல்லுவேன்.

ஙங ஆகையால் பார்வோன் உங்களை அ ழைத்து, உங்கள் தொழில் என்னவென்று கேட்கிறதுண்டானால்,

ஙச அப்பொழுது நீங்கள் கோசேன்தே சத்திலே குடியிருக்கும்படிக்குச் சொல்ல வேண்டியதாவது: எங்கள் பிதாக்களைப் போல உம்முடைய அடியாராகிய நாங்க ளும் எங்கள் சிறுவயது துவக்கி இதுவரை க்கும் மிருகஜீவன்களை உடையவர்களாய் இருந்தோமென்று சொல்லுங்கள்; ஏனெ னில் *மந்தைமேய்க்கிறவர்கள் எல்லா ரும் எகிப்தியருக்கு அருவருப்பாயிருக் கிறார்கள் என்றான். *க மோ. சங. ஙஉ.

## சஎ. அதிகாரம்.

௧ யோசேப்பு வந்து பார்வோனுக்கு அறி வித்து, என் தகப்பனும் என் சகோதரரும், தங்கள் ஆடுகளோடும், தங்கள் மாடுக ளோடும், தங்களுக்குண்டானவை எல்லா வற்றோடுங்கூடக் கானான்தேசத்திலிருந்து வந்தார்கள்; இதோ கோசேன்தேசத்திலே இருக்கிறார்கள் என்றுசொல்லி,

௨ தன் சகோதரரில் ஒருபங்காகிய ஐந்து பேரை அழைத்துக்கொண்டு, அவர்களைப் பார்வோனுக்குமுன்பாக நிறுத்தினான்.

௩ அப்பொழுது பார்வோன் அவன் சகோ தரரோடே உங்கள் தொழில் என்னவென் றான்; அவர்கள் பார்வோனோடே, உம்மு டைய அடியாராகிய நாங்களும் எங்கள் பிதாக்களும் மந்தைமேய்க்கிறவர்கள் என் றுசொல்லி,

௪ பின்னையும் பார்வோனோடே, தேசத்தி லே தங்கவந்தோம்; ஏனெனில் உம்மு டைய அடியாருக்கு இருக்கிற மந்தைக்கு மேய்ச்சலில்லை, அதேனென்றால் பஞ்சம் கானான்தேசத்திலே கடினமாய் இருக்கி றது; இப்பொழுதும் உம்முடைய அடி யார் கோசேன்தேசத்திலே குடியிருக்கட் டும் என்றார்கள்.

௫ அப்பொழுது பார்வோன் யோசேப் போடே சொன்னதாவது: உன் தகப்பனும் உன் சகோதரரும் உன்னண்டைக்கு வந் தார்கள்.

௬ எகிப்துதேசம் உனக்குமுன்பாகக் கி டக்கிறது; தேசத்தில் நலமான இடத்தி லே உன் தகப்பனையும் உன் சகோதரரை யும் குடியேற்று; அவர்கள் கோசேன்தே சத்திலே குடியிருக்கட்டும்; அவர்களுக் குள்ளே திறமையான மனிதருண்டென்று அறிந்திருந்தாயானால் அவர்களை எனக்கி ருக்கிற ஆடுமாடுகளை விசாரிக்கிற தலைவ ராக வையென்றான்.

௭ யோசேப்பு தன் தகப்பனாகிய யாக் கோபையும் அழைத்துக்கொண்டு வந்து, அவனைப் பார்வோனுக்குமுன்பாக நிறுத் தினான்; யாக்கோபு பார்வோனை ஆசீர்வதித் தான்.

௮ பார்வோன் யாக்கோபோடே, உன்னு டைய ஆயுசின் நாள்கள் எத்தனை என்றான்.

௯ யாக்கோபு பார்வோனோடே, நான் பர தேசம்பண்ணின நாள்கள் நூற்றுமுப்பது வருஷங்கள்; என் ஆயுசின் நாள்கள் பர தேசிகளான என் பிதாக்களுடைய ஆயு சின் நாள்களுக்கு வாராமல் கொஞ்சமும் பொல்லாப்புமாய் இருந்தன என்றான்.

௰ பிற்பாடு யாக்கோபு பார்வோனை ஆசீர்



Digitized by Google

வதித்து, பார்வோனிடத்திலிருந்து புறப்பட்டான்.

௰௧ யோசேப்பு தன் தகப்பனையும் தன் சகோதரரையும் குடியேற்றி, பார்வோன் கட்டளை இட்டபடி, அவர்களுக்கு எகிப்துதேசத்தின் நாட்டிலே நல்ல நாடாகிய ராமேசேஸ் சீமையிலே காணி கொடுத்தான்.

௰௨ ¶ யோசேப்பு தன் தகப்பனையும் தன் சகோதரரையும் தன் தகப்பனுடைய வீட்டார் அனைவரையும் பிள்ளைகளின் இலக்கத்திற்குத்தக்கதாய் ஆகாரம்கொடுத்துப் பராமரித்துவந்தான்.

௰௩ தேசமெங்கும் அப்பம் இல்லாதே போயிற்று; ஏனெனில் பஞ்சம் மிகவும் கடினமாய் இருந்தது; பஞ்சத்தினாலே, எகிப்துதேசமும் கானான்தேசமும் இளைத்துப்போயின.

௰௪ அப்பொழுது அவர்கள் கொள்ளும் தானியத்திற்கு இடாக யோசேப்பு எகிப்துதேசத்திலும் கானான்தேசத்திலும் உண்டான திரவியத்தை எல்லாம் சேர்த்தான்; அந்தத் திரவியத்தை யோசேப்பு பார்வோன் வீட்டிலே கொண்டுவந்துவைத்தான்.

௰௫ எகிப்துதேசத்திலும் கானான்தேசத்திலும் திரவியம் செலவழிந்து போனபொழுதோவெனில், எகிப்தியர் எல்லாரும் யோசேப்பண்டைக்கு வந்து, எங்களுக்கு அப்பம்தாரும்; திரவியம் இல்லாதேபோனதினாலே, நாங்கள் உமக்கு முன்பாகச் சாவானேன் என்றார்கள்.

௰௬ அப்பொழுது யோசேப்பு திரவியம் இல்லாதேபோயிற்றானால், உங்கள் மிருகசீவன்களைக் கொடுங்கள்; உங்கள் மிருகசீவன்களுக்கு இடாக உங்களுக்குத் தருகிறேன் என்றான்.

௰௭ அப்பொழுது தங்கள் மிருகசீவன்களை யோசேப்பண்டைக்குக் கொண்டுவந்தார்கள்; யோசேப்பு குதிரைகளையும் ஆடுகளையும் மாடுகளையும் கழுதைகளையும் வாங்கிக்கொண்டு, அவர்களுக்கு அப்பம்கொடுத்து, அந்த வருஷத்திலே அவர்களுடைய எல்லா மிருகசீவன்களுக்கும் இடாக அவர்கள் பிழைப்பை நடப்பித்துக்கொண்டுவந்தான்.

௰௮ ¶ அந்த வருஷம் முடிந்தபொழுது, அவர்கள் மறுவருஷத்திலே அவனண்டைக்கு வந்து அவனோடே சொன்னதாவது: திரவியமும் செலவழிந்துபோயிற்று; மிருகசீவன்களின் ஆஸ்தியும் எங்கள் ஆண்டவனைச் சேர்ந்தது; எங்கள் சரீரமும் எங்கள் நிலமுமே ஒழிய, எங்கள் ஆண்டவனுக்குமுன்பாக ஒன்றும் மீதியானதில்லை என்கிறதை எங்கள் ஆண்டவனுக்கு மறைக்கமாட்டோம்.

௰௯ நாங்களும் எங்கள் நிலமும் உம்முடையகண்களுக்குமுன்பாக மடிவானேன்? நீர் எங்களையும் எங்கள் நிலத்தையும் கொண்டு, அப்பம்தாரும்; நாங்கள் எங்கள் நிலத்தோடும்கூடப் பார்வோனுக்கு அடிமைப்பட்டிருப்போம்; நாங்கள் சாவாமல் உயிரோடிருக்கும்படிக்கும் நிலம் பாழாய்ப் போகாதபடிக்கும் விதையைத் தாரும் என்றார்கள்.

௨௰ அப்படியே யோசேப்பு எகிப்தின் நிலத்தை எல்லாம் பார்வோனுக்குக் கொண்டான்; ஏனெனில் எகிப்தியர் அவரவர், பஞ்சம் தங்கள்மேல் பலத்துக்கொண்டபடியினாலே, தங்கள் வயல்களை விற்றார்கள்; ஆனதுகொண்டு நிலம் பார்வோனைச் சேர்ந்தது.

௨௰௧ ஆனால் சனத்தை அவன் எகிப்தினுடைய எல்லையின் இந்த முனைதுவக்கி அந்த முனைமட்டும் இருந்த பட்டணங்களில் குடிமாறிப்போகப் பண்ணினான்.

௨௰௨ ஆசாரியன் நிலத்தைமாத்திரம் கொள்ளாதே போனான்; ஏனெனில் அது பார்வோனாலே ஆசாரியருக்குப் படித்திட்டமாகக் கட்டளைபண்ணப்பட்டது; பார்வோன் தங்களுக்குக் கட்டளைபண்ணின தங்கள் படியைச் சாப்பிட்டார்கள்; ஆகையால்

Digitized by Google

அவர்கள் தங்கள் நிலத்தை விற்றதில்லை.

உஙு யோசேப்பு சனத்தோடே சொன்னதாவது: இதோ, இன்று உங்களையும் உங்கள் நிலத்தையும் பார்வோனுக்குக் கொண்டேன்; இதோ உங்களுக்குத் தரப்படுகிற விதை, அதினால் நிலத்தை விதையுங்கள்.

உச பலனானபொழுது நடப்பதேதென்றால், பார்வோனுக்கு ஐந்தில் ஒரு பங்கைக் கொடுப்பீர்கள்; நாலுபங்கோவென்றால், வயலுக்கு விதையும் உங்களுக்கும் உங்கள் வீட்டாருக்கும் உங்கள் குழந்தைகளுக்கும் ஆகாரம் உண்டாக உங்களுடையவைகளாய் இருக்கும் என்றான்.

உடு அப்பொழுது அவர்கள் எங்களை உயிரோடேகாத்தீர்; எங்கள் ஆண்டவனுடைய கண்களில் எங்களுக்குத் தயவே கிடைக்கட்டும், நாங்கள் பார்வோனுக்குஅடிமையாயிருப்போம் என்றார்கள்.

உசு அப்படியே ஐந்தில் ஒன்று பார்வோனுக்குச் சேரும்வாரம் என்பதை,யோசேப்பு எகிப்து நிலத்தின்மேலே இந்நாள்மட்டும் செல்லும் கட்டளையாக்கினான்; ஆசாரியரின் நிலம்மாத்திரம் பார்வோனைச் சேராமல் நீங்கலாயிற்று.

உஎ ¶ இஸ்ரவேல் எகிப்துதேசத்திலிருக்கும் கோசேன் சீமையிலே குடியிருந்தான்; அதில் காணியாட்சிக்காரராகி, மிகவும் பலுகிப் பெருகினார்கள்.

உஅ யாக்கோபு எகிப்துதேசத்திலே பதினேழுவருஷம் உயிரோடிருந்தான்; ஆகையால் யாக்கோபுடைய ஆயுசின் நாள்கள் நூற்றுநாற்பத்தேழு வருஷங்களாயின.

உகூ மரணமடைய இஸ்ரவேலின் காலம் சமீபித்தபொழுது, அவன் தன் குமாரனாகிய யோசேப்பை வரவழைத்து, அவனுக்குச் சொன்னதாவது: உன் கண்களில் எனக்குத் தயவுகிடைத்ததானால், என்னை எகிப்திலே அடக்கம்பண்ணுயாக என்ற தயவையும் உண்மையையும் நீ எனக்குச் செய்வதற்காக உன் கையை என் இடுப்பின்கீழேபோடு.

௩௰ நான் என் பிதாக்களோடே படுத்துக்கொள்ளுவேன்; ஆகையால் நீ என்னை எகிப்திலிருந்து எடுத்துக்கொண்டுபோய், அவர்கள் அடக்கம்பண்ணப்பட்ட நிலத்திலே என்னை அடக்கம்பண்ணுவாயாக என்றான்; அதற்கு அவன், உம்முடைய சொற்படி நான் செய்வேன் என்றான்.

௩க அப்பொழுது அவன், எனக்கு ஆணையிடு என்றான்; அவனுக்கு ஆணையிட்டான்; அப்பொழுது இஸ்ரவேல் கட்டிலின் தலைமாட்டிலே சாய்ந்து பணிந்துகொண்டான்.

## சஅ. அதிகாரம்.

இதற்குப்பிற்பாடு சம்பவித்ததேதென்றால், இதோ, உம்முடைய தகப்பனார் வியாதியாயிருக்கிறார் என்று யோசேப்புக்குச் சொல்லப்பட்டது; அப்பொழுது அவன் தன் இரண்டு குமாரராகிய மனாசேயையும் எப்பிராயீமையும் தன்னோடேகூட அழைத்துக்கொண்டு போனான்.

உ இதோ, உம்முடைய குமாரனாகிய யோசேப்பு உம்மண்டைக்கு வருகிறானென்று யாக்கோபுக்கு அறிவிக்கப்பட்டது; அப்பொழுது இஸ்ரவேல் தன்னைத் திடனாக்கி, கட்டிலின்மேல் உளுக்கார்ந்தான்.

௩ யாக்கோபு யோசேப்போடே சொன்னதாவது: சர்வத்திற்கும் வல்ல பராபரன் கானான்தேசத்திலிருக்கிற லூசிலே எனக்குத் தரிசனையாகி, என்னை ஆசீர்வதித்து,

ச *இதோ நாம் உன்னைப் பலுகவும் உன்னைப் பெருகவும்பண்ணி, உன்னைச் சனசதளங்களான கூட்டமாக்கி, உனக்குப் பிற்பாடு இருக்கும் உன் வித்திற்கு இந்தத் தேசத்தை நித்தியகாணியாட்சியாகக் கொடுப்போமென்று என்னோடே சொன்னார்.

*க மோ. ௩௫. ௰க, ௰உ.

டு ¶ இப்பொழுதும் நான் உன்னண்டைக்கு எகிப்திலே வாராததற்குமுன்னே உனக்கு எகிப்துதேசத்தில் பிறந்த உன் இரண்டு குமாரர் என்னுடையவர்கள்; ரூபன் சிமெயோன் என்றவர்களைப்போல எப்பிராயீமும்

Digitized by Google

மனாசேயும் என்னுடையவர்களாய் இருப்பார்கள்.

௬ இவர்களுக்குப் பிறகு நீ பெறுகிற சந்தானமோவெனில், உன்னுடையதாயிருக்கும்; இவர்கள் தங்கள் சகோதரருடைய சுதந்தரத்தில் அவர்களுக்கொத்த பேராய் அழைக்கப்படுவார்கள்.

௭ நான் பதானிலிருந்து வருகையில், ராகேல் கானான்தேசத்தின் வழியிலே எப்பிருத்தாவுக்கு வர இன்னம் கொஞ்சம்தூரமிருக்கிறபொழுது, எனக்குமுன்பாக மரணமடைந்தாள்; அவளை அங்கே பெத்லகேம் என்னப்படுகிற எப்பிருத்தா ஊரின் வழியிலே அடக்கம்பண்ணினேன் என்றான்.

௮ பிற்பாடு இஸ்ரவேல் யோசேப்பின் குமாரரைக்கண்டு இவர்கள் யாரென்றான்.

௯ யோசேப்புத் தன் தகப்பனோடே, இவர்களே பராபரன் இவ்விடத்தில் எனக்குக் கொடுத்த என்னுடைய குமாரர் என்றான்; அப்பொழுது இவன், நான் அவர்களை ஆசீர்வதிக்கும்படிக்கு அவர்களை என்கிட்டக் கொண்டுவா என்றான்.

௰ இஸ்ரவேலின் கண்களோவென்றால் பெரியவயதினால் இருண்டுபோயிற்று; பார்க்கக்கூடாதிருந்தான்; அவர்களை அவனண்டையிலே சேரப்பண்ணினான்; அப்பொழுது அவன் அவர்களை முத்தம்செய்து அணைத்துக்கொண்டான்.

௰௧ பிறகு இஸ்ரவேல் யோசேப்போடே உன் முகத்தைப் பார்ப்பேன் என்று நினையாதே போனேன்; ஆனால் இதோ, பராபரன் என்னை உன் வித்தையும் காணப்பண்ணினார் என்றான்.

௰௨ அப்பொழுது யோசேப்பு அவன் முழங்கால்களுக்குள்ளிருக்கிற அவர்களைப் பின்னிடப்பண்ணி, அவன் முகத்திற்கு முன்பாகத் தரைமட்டும் குனிந்து வணங்கினான்.

௰௩ பிற்பாடு யோசேப்பு இருவரையும் கொண்டுவந்து, எப்பிருயீமைத் தன் வலதுகையினாலே இஸ்ரவேலின் இடதுகைக்கு நேராகவும் மனாசேயைத் தன் இடதுகையினாலே இஸ்ரவேலின் வலதுகைக்கு நேராகவும் அவனண்டையிலே சேரப்பண்ணினான்.

௰௪ ஆனால் இஸ்ரவேல் தன் வலதுகையை நீட்டி, இளையவனாகிய எப்பிருயீமுடைய தலையின்மேலும் மனாசே மூத்தவனாயிருந்தாலும், தன் இடதுகையை மனாசேயினுடைய தலையின்மேலும் வைத்தான்; அவன் அறிந்து அப்படித் தன் கைகளை வைத்து,

௰௫ யோசேப்பை ஆசீர்வதித்துச் சொன்னதாவது: பராபரனுக்குமுன்பாக என் பிதாக்களாகிய ஆபிரகாமும் இசாக்கும் நடந்துகொண்டார்களே, நான் உண்டான நான்துவக்கி இந்நாள்வரைக்கும் என்னை ஆதரித்துவந்த அந்தப் பராபரனும்,

௰௬ என்னை எல்லாத் தீமைக்கும் நீங்கலாக்கி மீட்ட தூதனுமானவர் இந்த இளைஞரை ஆசீர்வதிக்கக்கடவர்; என் பேரும் ஆபிரகாம் இசாக்கென்ற என் பிதாக்களின் பேரும் அவர்களுக்குத் தரிக்கப்படக்கடவது; தேசத்தின் நடுவிலே ஏராளமான திரட்சியாய்ப் பலுகக்கடவர்களென்றான்.

௰௭ தன் தகப்பன் தன் வலதுகையை எப்பிருயீமுடைய தலையின்மேல் வைத்ததை யோசேப்பு காண்கிறபொழுதோவெனில், அவனுக்கு ஆகாததாய்க் கண்டது; ஆகையால் எப்பிருயீமுடைய தலையின்மேல் இருந்த தன் தகப்பனுடைய கையை யோசேப்பு மனாசேயினுடைய தலையின்மேல் வைக்கும்படிக்கு எடுத்து,

௰௮ தன் தகப்பனோடே அப்படியல்ல, என் தகப்பனே, ஏனெனில் இவன் மூத்தவன்; இவன் தலையின்மேல் உம்முடைய வலதுகையை வையுமென்றான்.

௰௯ அவன் தகப்பனோவெனில், தட்டுதல்பண்ணி, அறிவேன், என் மகனே, அறிவேன்; இவனும் சனசதளமாவான்; இவனும் பெருகிப்போவான்; ஆனாலும் இவனுடைய தம்பி இவனைப்பார்க்கிலும் பெரு

Digitized by Google

கிப்போவான்; அவன் வித்துச் சனசதளங்களால் நிறைந்த திரட்சியாமென்றான்.

உ௰ அப்படியே அவன் அந்நாளிலே அவர்களை ஆசீர்வதித்து, பராபரன் உன்னை எப்பிராயீமைப்போலவும் மனாசேயைப் போலவும் இருக்கப்பண்ணுவாராக என்று இஸ்ரவேலர் உன்னைத்தொட்டு வாழ்த்துவார்கள் என்று சொல்லி, எப்பிராயீமை மனாசேக்குமுன்னே வைத்தான்.

உக ¶ பிற்பாடு இஸ்ரவேல் யோசேப்போடே சொன்னதாவது: இதோ நான் மரணம் அடைகிறேன்; ஆனால் பராபரன் உங்களோடிருந்து, உங்கள் பிதாக்களின் தேசத்திற்கு உங்களைத் திரும்பிவரப்பண்ணுவார் என்றும்,

உஉ நான் என் பட்டயத்தாலும் என் வில்லினாலும், எமோரியர் கையிலே வாங்கின *ஒரு நிலத்தை உன் சகோதரரைப்பார்க்க உனக்கு அதிகமான பங்காகக் கொடுத்தேன் என்றும் சொன்னான். *யோவா. ச. ரு.

## சகூ. அதிகாரம்.

பிற்பாடு யாக்கோபு தன் குமாரரை அழைப்பித்துச் சொன்னதாவது: கூடி வாருங்கள்; முடிவுநாள்களில் உங்களுக்கு வந்து சம்பவிப்பதை உங்களுக்கு அறிவிப்பேன்.

உ ¶ யாக்கோபின் குமாரரே, கூடிவந்து கேளுங்கள்; உங்கள் தகப்பனாகிய இஸ்ரவேலைக் கேளுங்கள்.

ஈ ¶ ரூபனே, நீ என்னுடைய தலைச்சனும் என் சத்துவமும் என் முந்தின பலமுமானவன்; நீ மேன்மையில் பிரதானமும் வல்லமையில் பிரதானமுமானவன்.

ச தண்ணீரைப்போலப் பாய்ந்தவனே, நீ பிரதானமாய் இருப்பதில்லை; ஏனெனில் *உன் தகப்பனுடைய மஞ்சத்தின்மேலே ஏறினாய்; அதை அப்பொழுது தீட்டுப்படுத்தினாய்; என் படுக்கையின்மேல் அவன் ஏறினான். *க மோ. கூடு. உஉ.

ரு சிமெயோனும் லேவியும் ஏக சகோதரராயிருக்கிறார்கள்; அவர்களுடைய பட்டயங்கள் கொடுமையின் ஆயுதங்கள்.

சூ என் ஆத்துமா அவர்கள் இரகசிய ஆலோசனையில் வாராதிருப்பதாக; என் மகிமை அவர்கள் கூட்டத்தோடே ஒன்றிப் போகாதிருப்பதாக; ஏனெனில் அவர்கள் தங்கள் கோபத்திலே *ஒரு புருஷனைக் கொன்றுபோட்டு, தங்கள் ஆங்காரத்திலே பலவான்களை அதம்பண்ணினார்கள். *க மோ. கூச. உடு.

எ வலிதான அவர்களுடைய கோபமும் கடினமான அவர்களுடைய மூர்க்கமும் சபிக்கப்படக்கடவது; அவர்களை யாக்கோபிலே *பிரியவும் இஸ்ரவேலிலே சிதறவும் பண்ணுவேன். *யோசு. ௰கூ. க.

அ ¶ யூதாவே, நீயே பிரதானமானவன்; உன்னை உன் சகோதரர் புகழுவார்கள்; உன்னுடைய கை உன் சத்துருக்களுடைய பிடரியின்மேல் இருக்கும்; உனக்கு முன்பாக உன் தகப்பனுடைய புத்திரர் வணங்குவார்கள்.

கூ யூதா சிங்கக்குட்டியானவன்; என் மகனே, நீ இரை எடுத்து உயர்ந்தாய்; சிங்கத்தைப்போலவும் கிழச்சிங்கத்தைப்போலவும் மடங்கிப் படுத்துக்கொள்ளுகிறான்; அவனை எழுப்பப்போகிறவன் யார்?

௰ *சமாதான கர்த்தர் வரும்மட்டும்செங்கோல் யூதாவிலிருந்தும், நியாயம்கற்பிக்கிறவன் அவன் பாதங்களிலிருந்தும், நீங்கிப் போவதில்லை; அவரைச் சனசதளங்கள் சேரும். *சங். எஉ. எ. ஏசா. கூ. சு, எ. எபே. உ. ௰எ.

௰க தம்முடைய கழுதை மறியைத் திராட்சச்செடியோடும் தம்முடைய கோளிகைக் கழுதையின் குட்டியை நற்குல திராட்சச் செடியோடும் கட்டிப்போடுவார்; தம்முடைய உடுப்பைத் திராட்சப்பழ இரசத்திலும் தமது சால்வையைத் திராட்சப்பழங்களின் இரசத்திலும் வெளுப்பார்.

௰உ அவருடைய கண்கள் திராட்சப்பழ இரசத்திலும் சிவப்பும், அவருடைய பல்லுகள் பாலிலும் வெண்மையுமாய் இருக்கும்.

Digitized by Google

௰௩ ¶ செபுலோன் *கடல்துறை அருகே குடியிருப்பான்; அவன் கப்பல்துறை அருகே இருப்பான்; அவன் எல்லை சீதோனுக்கு எதிராக இருக்கும். *யோசு. ௰௯. ௰, ௰௧.

௰௪ ¶ இசக்கார் பொதியின் நடுவே படுத்துக்கொண்டிருக்கிற பலத்த எலும்புள்ள கழுதை.

௰௫ அவன் இளைப்பாறுதலை நல்லதென்றும் சீமையை வசதியானதென்றும் கண்டு, சுமக்கிறதற்குத் தன் தோளைச் சாய்த்து, பகுதி கட்டுகிறவனானான்.

௰௬ ¶ தாண் இஸ்ரவேல் கோத்திரங்களில் ஒன்றைப்போல தன் சனத்தை நியாயம் விசாரிப்பான்.

௰௭ தாண் குதிரையின் குதிகால்களை, அதில் ஏறி இருக்கிறவன் மல்லாக்க விழக்கடிக்கிற வழி அருகான சர்ப்பமும், பாதை அருகான விரியனுமாய் இருப்பான்.

௰௮ ¶ கர்த்தாவே, *உம்முடைய இரட்சிப்புக்குக் காத்துக்கொண்டிருக்கிறேன். *சங். ௱௰௯. ௱௬௬.

௰௯ ¶ காத்தென்றவன்மேல் இராணுவக் கூட்டம் பாய்ந்துவிழும்; அவனோவென்றால் கடைசியிலே அதின்மேல் பாய்ந்து விழுவான்.

௨௰ ¶ ஆசேருடைய அப்பம் புஷ்டியாய் இருக்கும்; இராசாக்களுக்கான ருசிவர்க்கங்களை இடுவான்.

௨௧ ¶ நப்தலி நீங்கலாய் விடப்பட்ட பெண்மான்; வடிப்பமான வசனங்களைத் தருகிறான்.

௨௨ ¶ யோசேப்பு கனிதருகிற செடி; அவன் நீரூற்றண்டையிலே கனிதருகிற செடி; அதின் கொடிகள் சுவரின்மேல் படரும்.

௨௩ அம்பை எய்கிறவர்கள் அவனை மனமடிவாக்கி எய்து, அவனை விரோதித்தார்கள்.

௨௪ ஆனால் அவனுடைய வில் கெட்டியாய் நின்றது; அவன் கைகளின் புயங்கள் யாக்கோபுடைய வல்லவரின் கரங்களாலே பலத்தன; இதைத்தொட்டு மேய்ப்பனும் இஸ்ரவேலின் அஸ்திபாரக்கல்லும் ஆனான்.

௨௫ உன் தகப்பனுடைய பராபரனாலே அப்படி ஆயிற்று; அவர் உனக்குத் துணையாய் இருப்பார்; சர்வத்திற்கும் வல்லவராலே அப்படி ஆயிற்று; அவர் உயர வானத்திலிருந்து உண்டாகிய ஆசீர்வாதங்களாலும், கீழே கிடக்கிற பாதாளத்தின் ஆசீர்வாதங்களாலும், முலைகளுக்கும் கர்ப்பங்களுக்கும் உண்டாகிற ஆசீர்வாதங்களாலும், உன்னை ஆசீர்வதிப்பார்.

௨௬ உன் தகப்பனுடைய ஆசீர்வாதங்கள் என் பிதாக்களுடைய ஆசீர்வாதங்களுக்கு மேல்வட்டமாய் இருந்து, நித்திய மேடுகளின் முடிவுமட்டும் போகின்றன; அவைகள் யோசேப்புடைய சிரசின்மேலும், தன் சகோதரரில் விசேஷித்தவனுடைய உச்சந்தலையின்மேலும் வருவதாக.

௨௭ ¶ பென்யமீன் பீறிப்போடுகிற ஓனாய், காலமே எடுத்து அதைப் பட்சிப்பான்; சாயங்காலத்திலே கொள்ளையிட்டதைப் பங்கிடுவான்.

௨௮ ¶ இஸ்ரவேலின் கோத்திரங்களாகிய இவைகள் எல்லாம் பன்னிரண்டு; அவர்கள் தகப்பன் அவர்களை ஆசீர்வதிக்கையில், அவர்களுக்குச் சொன்னது இதுதான்; அவர்களில் அவ்னவனை அவனவனுக்கு அடுத்த ஆசீர்வாதத்தினாலே ஆசீர்வதித்தான்.

௨௯ பிற்பாடு அவன் அவர்களுக்குக் கற்பித்துச் சொன்னதாவது: நான் என் சனத்தோடே சேர்க்கப்படுகிறேன்; ஏத்தியனான எப்பெரோனின் நிலத்திலுள்ள கெபியிலே என்னை என் பிதாக்களண்டையிலே அடக்கம்பண்ணுங்கள்.

௩௰ கானான்தேசத்திலே மம்ரேக்கெதிராக இருக்கிறதும், ஆபிரகாம் நிலத்தோடேகூட ஏத்தியனாகிய எப்பெரோனின் கையிலே பிரேதங்களை அடக்கம்பண்ணும் சொந்த நிலமாகக் கொண்டதுமான மக்பேலா என்னப்பட்ட நிலத்தின் கெபியிலேதானே.

௩௧ அங்கே ஆபிரகாமையும் அவர் பெண்சாதியாகிய சாராளையும் அடக்கம்பண்ணி

Google

னார்கள்; அங்கே இசாக்கையும் அவர் பெண்சாதியாகிய ரெபேக்காளையும் அடக்கம்பண்ணினார்கள்; அங்கே லேயாளையும் அடக்கம்பண்ணினேன்.

௩௨ அந்த நிலமும் அதில் இருக்கிற கெபியும் ஏத் புத்திரரின் கையிலே கொள்ளப்பட்டது என்றான்.

௩௩ யாக்கோபு தன் குமாரருக்குக் கற்பனை தந்து முடித்தபிற்பாடு, அவன் தன் கால்களைக் கட்டிலின்மேல் சேர்த்துக்கொண்டு, சீவித்துப்போய்த் தன் சனத்தாரோடே சேர்க்கப்பட்டான்.

## ருய. அதிகாரம்.

அப்பொழுது *யோசேப்பு தன் தகப்பனுடைய முகத்தின்மேல் விழுந்து, அவன்மேல் அழுது, அவனை முத்தம்செய்தான். *க மோ. சசு. ச.

௨ பிற்பாடு தன் தகப்பனுக்குக் கந்தவர்க்கங்களை இட யோசேப்பு வயித்தியராகிய தன்னுடைய ஊழியக்காரருக்குக் கற்பித்தான்; அப்படியே வயித்தியர் இஸ்ரவேலுக்குக் கந்தவர்க்கங்களை இட்டார்கள்.

௩ அது ஆகிற நாற்பதுநாளும் நிறைவேறிற்று; ஏனெனில் கந்தவர்க்கங்களை இடும் வேலை இத்தனைநாளில் நிறைவேறும்; எகிப்தியர் அவனுக்கு எழுபதுநாள் துக்கம்கொண்டாடினார்கள்.

௪ அவனுக்குத் துக்கம் கொண்டாடின நாள் முடிந்தபொழுது, யோசேப்பு பார்வோனின் வீட்டாரோடே பேசிச் சொன்னதாவது: உங்கள் கண்களில் எனக்குத் தயவுகிடைத்ததானால், நீங்கள் பார்வோனுடைய காதுகளுக்குமுன்பாகப் பேசி,

௫ இதோ நான் சாகிறேன்; நான் கானான் தேசத்திலே எனக்கு வெட்டியிருக்கிற என் பிரேதக்குழியிலேதானே என்னை அடக்கம் பண்ணுவாயாக என்று *என் தகப்பன் என்னை ஆணை இடுவித்துக்கொண்டார்; இப்பொழுதும் நான் போயேறி என் தகப்பனை அடக்கம்பண்ணி வரவேண்டும் என்று வேண்டிக்கொள்ளுகிறேன் என்று சொல்லுங்கள் என்றான். *க மோ. சஎ. உகூ.

௬ ¶ அதற்குப் பார்வோன் உன் தகப்பன் உன்னை ஆணை இடுவித்தபடியே, நீ போயேறி அவரை அடக்கம்பண்ணென்றான்.

௭ அப்படியே யோசேப்பு தன் தகப்பனை அடக்கம்பண்ணப் போயேறினான்; பார்வோனுடைய வீட்டின் மூப்பராகிய அவனுடைய சகல ஊழியக்காரரும் எகிப்து தேசத்தினுடைய சகல மூப்பரும்,

௮ யோசேப்புடைய எல்லா வீட்டாரும் அவன் சகோதரரும் அவன் தகப்பன் வீட்டாரும் அவனோடேகூடப் போயேறினார்கள்; தங்கள் குழந்தைகளையும் தங்கள் ஆடுமாடுகளையும் மாத்திரம் கோசேன்தேசத்திலே விட்டுப்போனார்கள்.

௯ அவனோடே இரதங்களும் குதிரைக்காரரும் போயேறினார்கள்; மிகவும் பலத்த தண்டாய் இருந்தது.

௰ அவர்கள் யோர்தானுக்கு அக்கரையில் இருக்கிற முள்காட்டின் சமனான வெளியிலே வந்தபொழுது, அவ்விடத்திலே மகா பலத்த பெரிய புலம்பலாய் புலம்பினார்கள்; அங்கே தன் தகப்பனுக்கு ஏழுநாள் துக்கம் கொண்டாடினான்.

௰௧ தேசத்தின் குடிகளாகிய கானானியர் முள்காட்டின் சமனான வெளியிலே கொண்டாடப்படுகிற துக்கத்தைக் காண்கையில், இது எகிப்தியரின் கன துக்கிப்பென்றார்கள்; ஆனதுகொண்டு யோர்தானுக்கு அப்பால் இருக்கிற அந்த ஸ்தலத்திற்கு எகிப்தியரின் துக்கிப்பென்று பேர் உண்டாயிற்று.

௰௨ அவன் குமாரர் அவன் தங்களுக்குக் கற்பித்திருந்தபடியே அவனுக்குச் செய்து,

௰௩ அவனைக்கானான்தேசத்திலேகொண்டுபோய், மம்ரேக்கெதிராயிருக்கிறதும், *ஆபிரகாம் நிலத்தோடேகூட ஏத்தியனாகிய எப்பேரோன் கையிலே பிரேதங்களை அடக்கம் பண்ணும் சொந்த நிலமாகக்கொண்டதுமான மக்பேலா என்னப்பட்ட நிலத்தின்



Digitized by Google

கெபியிலே அவனை அடக்கம்பண்ணினார்கள். * ௧ மோ. ௨௩. ௰௬.

௰௪ ¶ யோசேப்பு தன் தகப்பனை அடக்கம்பண்ணினபிற்பாடு; அவனும் அவன் சகோதரரும், அவனுடைய தகப்பனை அடக்கம்பண்ணுவதற்கு அவனோடேகூட எறிவந்தவர்கள் எல்லாரும் எகிப்திற்குத் திரும்பினார்கள்.

௰௫ ஆனால் தங்கள் தகப்பன் மரணமடைந்ததை யோசேப்பின் சகோதரர் கண்டு, ஒருவேளை யோசேப்பு நம்மைப் பகைத்து, நாம் தனக்குச் செய்த எல்லாப் பொல்லாப்பையும் நமக்குச் சரிக்குச்சரிக்கட்டுவானென்று சொல்லி,

௰௬ உம்முடைய தகப்பனார் மரணம் அடையாததற்குமுன்னே, ஆ, உன் சகோதரரின் துரோகத்தையும் அவர்கள் உனக்குப் பொல்லாப்புச் செய்த அவர்கள் பாவத்தையும் மன்னி என்றதாய் யோசேப்புக்குச் சொல்லுங்களென்று கற்பித்தார் என்றும்,

௰௭ இப்பொழுதும் உம்முடைய தகப்பனுடைய பராபரனின் ஊழியக்காரர் செய்த துரோகத்தை மன்னியுமென்றும் யோசேப்புக்குச் சொல்லி அனுப்பினார்கள்; அப்படி அவர்கள் யோசேப்புக்குச் சொல்லி அனுப்புகிறபொழுது, அவன் அழுதான்.

௰௮ பிற்பாடு அவன் சகோதரரும் போய், அவனுக்குமுன்பாகத் தாழவிழுந்து, இதோ உமக்கு நாங்கள் அடிமைகள் என்றார்கள்.

௰௯ அப்பொழுது யோசேப்பு அவர்களோடே சொன்னதாவது: பயப்படாதிருங்கள்; ஏனெனில் நான் பராபரனுடைய ஸ்தலத்தில் இருக்கிறவனோ?

௨௰ * நீங்களோ எனக்கு விரோதமாகப் பொல்லாத நினைவாய் இருந்தீர்கள்; பராபரனோவென்றால், திரளான சனத்தை உயிரோடே காக்க இந்நாள்வரைக்கும் இருக்கிறபடிச் செய்யும்படிக்கு, அதை நன்மையாக நினைத்தார். * ௧ மோ. ௪௫. ௫.

௨௧ இப்பொழுதும் பயப்படாதிருங்கள்; நான் உங்களையும் உங்கள் குழந்தைகளையும் பராமரிப்பேன் என்று சொல்லி, அவர்களைச் சலிப்பாற்றி, அவர்களோடே பட்சமாய்ப் பேசினான்.

௨௨ ¶ அப்படியே யோசேப்பும் அவன் தகப்பன் வீட்டாரும் எகிப்திலே குடியிருந்தார்கள்; யோசேப்பு நூற்றுப்பத்துவருஷம் உயிரோடிருந்தான்.

௨௩ யோசேப்பு எப்பிராயீமுக்குப் பிறந்த மூன்றாம் தலைமுறைப் பிள்ளைகளைக் கண்டான், மனாசேயின் குமாரனாகிய மாகீரின் பிள்ளைகளும் யோசேப்புடைய மடியின்மேல் இருக்கப் பிறந்தது.

௨௪ ¶ யோசேப்பு தன் சகோதரரோடே நான் சாகிறேன்; ஆனால் *பராபரன் உங்களை விசாரிக்கவே விசாரித்து, உங்களை இந்தத் தேசத்திலிருந்து தாம் ஆபிரகாமுக்கும் ஈசாக்குக்கும் யாக்கோபுக்கும் ஆணைஇட்ட தேசத்திலே போய் ஏறப்பண்ணுவார் என்றான். *எபி. ௰௧. ௨௨.

௨௫ பராபரன் உங்களை விசாரிக்கவே விசாரிக்கும்பொழுது, *என் எலும்புகளை இவ்விடத்திலிருந்து கொண்டுபோவீர்களாக என்று யோசேப்பு இஸ்ரவேல் புத்திரரை ஆணைஇடுவித்துக்கொண்டான். *௨ மோ. ௰௩. ௰௯. யோசு. ௨௪. ௩௨.

௨௬ பிற்பாடு யோசேப்பு நூற்றுப்பத்து வயதுள்ளவனாய் மரித்தான்; அப்பொழுது அவனுக்குக் கந்தவர்க்கங்களை இட்டு, அவனை எகிப்துதேசத்தில் ஒரு பெட்டியிலே வைத்துவைத்தார்கள்.

Digitized by Google

# மோசே எழுதின

## இரண்டாம் ஆகமம்.

### ௧. அதிகாரம்.

எகிப்திலே வந்த இஸ்ரவேலுடைய குமாரரின் நாமங்கள்; யாக்கோபுடனே அவரவர் தங்கள் வீட்டாரோடுங்கூட வந்தார்கள்.

௨ ரூபன், சிமெயோன், லேவி, யூதா,

௩ இசக்கார், செபுலோன், பென்யமீன்,

௪ தாண், நப்தலி, காத், ஆசேர் என்பவர்கள்.

௫ *யாக்கோபின் கர்ப்பப்பிறப்பாகிய எல்லா ஆத்துமாக்களும், எழுபது ஆத்துமாக்கள்; யோசேப்போவென்றால், எகிப்தில் இருந்தான். *௧ மோ. ௪௬. ௨௭.

௬ யோசேப்பும் அவனுடைய எல்லாச் சகோதரரும் அந்த எல்லாத் தலைமுறையாரும் மரித்தபிற்பாடோவெனில்,

௭ இஸ்ரவேல் புத்திரர் மிகுதியும் பலுகி ஏராளமாகிப் பெருகிப் பலத்துப்போனார்கள், தேசம் அவர்களால் நிறைந்தது.

௮ ¶ யோசேப்பை அறியாத புதிய இராசாவும் எகிப்திலே எழும்பினான்.

௯ அவன் தன் சனத்தோடே சொன்னதாவது: இதோ, இஸ்ரவேல் புத்திரராகிய சனம் நம்மிலும் பெரியதும் பலத்ததுமாய் இருக்கின்றது.

௧0 அது பெருகாதபடிக்கும், ஒரு யுத்தம் உண்டானால் அதுவும் நம்முடைய பகைஞரோடேகூட நமக்கு விரோதமாய் யுத்தம் பண்ணித் தேசத்தைவிட்டுப் புறப்பட்டுப் போகாதபடிக்கும், நாம் அவர்கள்நிமித்தம் புத்தியுள்ளவர்களாய் இருப்போமாக என்றான்.

௧௧ அப்படியே அவர்களைத் தங்கள் சுமைகளால் ஒடுக்கும்படிக்கு, அவர்கள் மேல் பகுதிக்காரரான தலைவரை வைத்தார்கள்; ஏனெனில் படைமுஸ்திப்புகளை வைக்கும் பட்டணங்களாகிய பீத்தோமும், ராமசேசும், பார்வோனுக்குக் கட்டப்பட்டது.

௧௨ ஆனால் எத்தனைக்குச் சனத்தை ஒடுக்கினார்களோ, அத்தனைக்கும் அது பெருகிப் பரம்பிற்று; ஆகையினாலே இஸ்ரவேல் புத்திரரைப் பார்த்து வித‌னப்பட்டார்கள்.

௧௩ எகிப்தியர் இஸ்ரவேல் புத்திரரைக் கொரேமாய் வேலைகொண்டு,

௧௪ களிமண்ணிலும் செங்கல்லிலும் செய்யும் கடினமான வேலையினாலும், வயலில் செய்யும் எல்லாவித வேலையினாலும், அவர்களைக் கொரேமாய்ப் பணிசெய்விக்கப் பண்ணும் தங்களுடைய மற்ற எல்லா வேலையினாலும், அவர்களுக்குச் சீவனைக் கசப்பாக்கினார்கள்.

௧௫ ¶ இதுவுமல்லாமல், எகிப்தின் இராசா எபிரேய மருத்துவச்சிகளோடே பேசினான்; அவர்களில் ஒருத்தியின் பேர் சிப்பிராள்; மற்றவள் பேர் பூவாள்.

௧௬ அவர்களோடே அவன் சொன்னதாவது: பெற ஆசனங்களில் உங்களுக்காகத எபிரேய பெண்சாதிகளுக்கு நீங்கள் மருத்துவம் பார்க்கையில், அது ஆண்பிள்ளையானால் அதைக் கொல்லுங்கள்; அது பெண்பிள்ளையானால் உயிரோடு இருக்கட்டும் என்றான்.

௧௭ ஆனால் மருத்துவச்சிகள் பராபரனுக்குப் பயந்து, எகிப்தின் இராசா தங்களுக்

Digitized by Google

குச் சொன்னபடி செய்யாமல், பிள்ளைகளை உயிரோடே காப்பாற்றினார்கள்.

௰அ ஆகையால் எகிப்தின் இராசா மருத்துவச்சிகளை அழைப்பித்து, அவர்களோடே நீங்கள் பிள்ளைகளை உயிரோடே காப்பாற்றுகிற இக்தக் காரியத்தை ஏன் செய்கிறீர்கள் என்றான்.

௰௯ அப்பொழுது மருத்துவச்சிகள் பார்வோனோடே, எபிரேய பெண்சாதிகள் எகிப்திய பெண்சாதிகளைப்போல இருக்கிறதில்லை; அவர்கள் நல்ல பலமுள்ளவர்கள்; மருத்துவச்சி அவர்களண்டைக்கு வாராததற்குமுன்னே அவர்கள் பெற்றுத் தீர்ந்தது என்றார்கள்.

உ௰ இதினிமித்தம் பராபரன் மருத்துவச்சிகளுக்கு நன்மைசெய்தார்; சனம் பெருகி மிகுதியும் பலத்துப்போயிற்று.

உக சம்பவித்தது ஏதென்றால், மருத்துவச்சிகள் பராபரனுக்குப் பயந்தபடியினாலே, அவர் இவர்களுக்கு வீடுகளை உண்டாக்கினார்.

உஉ அப்பொழுது பார்வோன் பிறக்கிற ஆண்பிள்ளையை எல்லாம் ஆற்றிலே போட்டுவிட்டு, பெண்பிள்ளையை எல்லாம் உயிரோடே வையுங்கள் என்று தன்னுடைய எல்லாச் சனத்திற்கும் கற்பித்தான்.

## உ. அதிகாரம்.

ஆனால் *இலேவி வீட்டாரில் ஒரு மனிதன் போய் இலேவியின் குமாரத்தி ஒருத்தியை விவாகம்பண்ணினான். *உ மோ. ௬. உ௰.

உ அந்தப் பெண்சாதி கர்ப்பம்தரித்து, ஒரு ஆண்பிள்ளையைப் பெற்று, அது அழகுள்ளதென்று கண்டு, *அதை மூன்றுமாதம் ஒளித்தாள். *எபி. ௰க. உ௩.

௩ அதை அவள் அப்புறம் ஒளிக்கக்கூடாதபொழுதோவெனில், அவள் நாணல் பெட்டியை வாங்கிக்கொண்டு, அதைப் பிசினும் கீலும்பூசி, அதிலே பிள்ளையை வளர்த்தி, ஆற்றோரமாய் நாணலிலே வைத்தாள்.

௪ அதற்கு என்ன சம்பவிக்குமென்று அறிய அதின் தமக்கை தூரத்திலே நின்றுகொண்டிருந்தாள்.

௫ ¶ அப்பொழுது பார்வோனின் குமாரத்தி ஆற்றிலே குளிக்க இறங்கி வந்தாள்; அவளுடைய பணிவிடைக்காரிகள் ஆற்றங்கரையிலே நடந்தார்கள்; அவள் நாணல் நடுவிலே இருக்கிற பெட்டியைக் கண்டு, அதைக் கொண்டுவரத் தன் வேலைக்காரியை அனுப்பினாள்.

௬ அதைத் திறந்து அந்தப் பிள்ளையைக் கண்டாள்; இதோ, பிள்ளை அழுதது; அப்பொழுது அவள் அதின்மேல் இரக்கமாகி, இது எபிரேயரின் பிள்ளைகளில் ஒன்று என்றாள்.

௭ அப்பொழுது அதின் தமக்கை பார்வோனின் குமாரத்தியோடே, உமக்கு இந்தப் பிள்ளையை வளர்க்கும்படிக்கு எபிரேய பெண்சாதிகளில் முலைகொடுக்கிற ஒருத்தியை உமக்கு அழைத்துவர நான் போகட்டுமோ என்றாள்.

அ அப்பொழுது பார்வோனின் குமாரத்தி அவளோடே போவென்றாள்; அந்தப் பெண்பிள்ளை போய்ப் பிள்ளையின் தாயை அழைத்துவந்தாள்.

௯ அவளோடே பார்வோனின் குமாரத்தி, நீ இந்தப் பிள்ளையை எடுத்துக்கொண்டுபோய், அதை எனக்கு வளர்த்திடு, நான் உனக்குக் கூலியைக் கொடுப்பேன் என்றாள்; அப்படியே அந்தப் பெண்சாதி பிள்ளையை எடுத்துக்கொண்டுபோய் அதை வளர்த்தாள்.

௰ பிள்ளை பெரியதானபொழுது, அவள் அதைப் பார்வோனின் குமாரத்தியண்டையில் கொண்டுபோனாள்; அவளுக்கு அது குமாரனாயிற்று; அவள் அதற்கு மோசே என்று பேரிட்டாள்; ஏனென்றால் அதைத் தண்ணீரினின்று தூக்கினேன் என்றாள்.

௰க ¶ *மோசே பெரியவனாய்ப்போன அந்நாள்களில் சம்பவித்ததேதென்றால், அவன் தன் சகோதரரண்டையிலே புறப்

Digitized by Google

பட்டுப் போய், அவர்கள் பாரமான வேலைகளைப்பார்த்து, தன் சகோதரரில் எபிரேய மனிதனாகிய ஒருவனை அடித்துக்கொண்டிருக்கிற எகிப்திய மனிதனைக் கண்டு,

*எபி. ௰௧. ௨௪, ௨௫.

௰௨ இந்தப்பக்கமும் அந்தப்பக்கமும் திரும்பிப்பார்த்து ஒருவரும் இல்லை என்று கண்டபொழுது, எகிப்தியனை வெட்டி, அவனை மணலிலே அடக்கிப்போட்டான்.

௰௩ மறுநாளிலும் வெளியே போனான்; இதோ எபிரேய மனிதர் இரண்டுபேர் சண்டைபண்ணினார்கள்; அப்பொழுது அநியாயம்செய்கிறவனோடே, நீ உனக்கடுத்தவனை அடிக்கிறது என்னவென்றான்.

௰௪ அதற்கவன் உன்னை எங்கள்மேல் துரைத்தனக்காரனும் நியாயாதிபதியுமாக வைத்தவர் யார்? நீ எகிப்தியனைக் கொன்றுபோட்டதுபோல, என்னையும் கொன்றுபோட இதைச் சொல்லுகிறாயோ என்றான்; அப்பொழுது மோசே பயந்து, அந்தக்காரியம் வெளியானது நிச்சயம் என்றான்.

௰௫ பார்வோன் அந்தக் காரியத்தைக் கேட்டு, மோசேயைக் கொலைசெய்யத் தேடினான்; ஆனால் மோசே பார்வோனுக்கு விலகி ஓடிப்போய், மீதியான் தேசத்திலே தங்கி, ஒரு துரவண்டையிலே உட்கார்ந்தான்.

௰௬ ¶ மீதியானில் இருக்கிற ஆசாரியனுக்கு ஏழு குமாரத்திகள் இருந்தார்கள்; அவர்கள் தங்கள் தகப்பனுடைய ஆடுகளுக்குத் தண்ணீர்காட்டும்படிக்கு அங்கே வந்து மொண்டு, தொட்டிகளை நிரப்பினார்கள்.

௰௭ ஆனால் மேய்ப்பர் வந்து அவர்களைத் துரத்தினார்கள்; அப்பொழுது மோசே எழுந்திருந்து அவர்களைக் காப்பாற்றி, *அவர்களுடைய ஆடுகளுக்குத் தண்ணீர் காட்டினான். *௧ மோ. ௨௯. ௰.

௰௮ அவர்கள் தங்கள் தகப்பனாகிய ரேகுவேலண்டையிலே வந்தபொழுது, அவன் நீங்கள் இன்று இத்தனை சீக்கிரமாய் வந்ததென்ன என்றான்.

௰௯ அதற்கு அவர்கள், எகிப்திய மனிதன் ஒருவன் மேய்ப்பரின் கைகளுக்கு எங்களைத்தப்புவித்து, எங்களுக்கு மொண்டும்கொடுத்து, ஆடுகளுக்குத் தண்ணீரும் காட்டினான் என்றார்கள்.

௨௰ அப்பொழுது அவன் தன் குமாரத்திகளோடே, அவன் எங்கே இருக்கிறான்? அந்த மனிதனை நீங்கள் விட்டுவந்ததென்ன? அவன் அப்பம் சாப்பிடுகிறதற்கு அவனை அழைத்துவாருங்களென்றான்.

௨௧ மோசே அந்த மனிதனிடத்திலே தங்கித்தரிக்கச் சம்மதப்பட்டான்; அவன் மோசேக்குத் தன் குமாரத்தியாகிய சிப்போராளைக் கொடுத்தான்.

௨௨ இவள் ஒரு குமாரனைப் பெற்றாள்; அவனுக்குக் கேர்சோனென்று பேரிட்டான்; ஏனெனில் அந்நியதேசத்திலே பரதேசியாய் இருக்கிறேன் என்றான்.

௨௩ ¶ சம்பவித்ததேதெனில், அநேக நாள்வட்டத்திலே எகிப்தின் இராசா செத்துப்போனான்; இஸ்ரவேல் புத்திரரோவென்றால் அடிமைத்தனத்திலிருந்து தவித்துக் கூப்பிட்டுக்கொண்டிருந்தார்கள்; அவர்கள் அடிமைத்தனத்திலிருந்து கூப்பிடுகிற சத்தம் பராபரனண்டைக்கு ஏறிற்று.

௨௪ பராபரன் அவர்கள் தவிப்பைக் கேட்டு தாம் ஆபிரகாமோடும் இசாக்கோடும் யாக்கோபோடும்பண்ணின உடம்படிக்கையைப் பராபரன் நினைவுகூர்ந்தார்.

௨௫ பராபரன் இஸ்ரவேல் புத்திரரை நோக்கிப்பார்த்தார், பராபரன் அவர்களை அறிந்தார்.

## ௩. அதிகாரம்.

மோசேயோவென்றால், மீதியானில் ஆசாரியனாயிருக்கிற தன் மாமனாகிய எத்திரோவின் ஆடுகளை மேய்த்துக்கொண்டிருந்தான்; அவன் ஆடுகளை வனாந்தரத்தின் பின்புறத்திலே ஓட்டி, பராபரனுடைய பர்வதமாகிய ஓரேப்மட்டும் வந்தான்.

Digitized by Google

௨ அங்கே கர்த்தருடைய தூதனானவர் ஒரு முள்செடியின் நடுவிலிருந்து உண்டாகிற அக்கினிச்சுவாலையிலே அவனுக்குத் தரிசனையானார்; இதோ முள்செடி அக்கினியாய் எரிந்தாலும் முள்செடி வெந்துபோகாதிருக்கிறதென்று கண்டான்.

௩ அப்பொழுது மோசே, நான் சேரப்போய், அந்த முள்செடி வெந்துபோகாதிருக்கிறதேதென்கிற அந்தப் பெரிய தரிசனையைப் பார்ப்பேனாகவென்றான்.

௪ ஆனால் பார்க்கிறதற்காக அவன் சேர வருகிறதைக் கர்த்தர் கண்டு, பராபரன் முள்செடியின் நடுவிலிருந்து அவனுக்கு நேராகக் கூப்பிட்டு, மோசேயே, மோசேயே, என்றார்; அவன் இதோ, அடியேன் என்றான்.

௫ அப்பொழுது அவர், இங்கே கிட்டிச் சேராயாக; உன் கால்களிலிருக்கிற உன் பாதரட்சைகளைக் கழற்று; ஏனெனில் நீ நிற்கிற ஸ்தலம் பரிசுத்த பூமியாயிருக்கிறதென்று சொல்லி,

௬ பின்னையும் *நாம் ஆபிரகாமுடைய பராபரனும் இசாக்குடைய பராபரனும் யாக்கோபுடைய பராபரனுமாகிய உன் பிதாக்களுடைய பராபரனென்றார்; அப்பொழுது மோசே தன் முகத்தை மூடிக்கொண்டான்; ஏனென்றால் பராபரனை நோக்கிப்பார்க்கப் பயந்தான். *மாற். ௰௨. ௨௬, ௨௭.

௭ ¶ கர்த்தர் சொன்னதாவது: நாம் எகிப்திலிருக்கிற நமது சனத்தின் உபத்திரவத்தைப் பார்க்கவே பார்த்து, தங்கள் ஆளோட்டிகளின்நிமித்தம் அவர்கள் கூப்பிடுகிற கூப்பிடுதலைக் கேட்டோம்; ஏனென்றால் அவர்கள் வேதனைகளை அறிந்தோம்.

௮ ஆகையால் அவர்களை எகிப்தியரின் கைக்கு நீங்கலாக்கிவிடவும், அவர்களை அந்தத் தேசத்திலிருந்து கானானியரும், ஏத்தியரும், எமோரியரும், பெரிசியரும், ஏவியரும், எபூசியரும் இருக்கிறஇடமாகிய பாலும் தேனும் ஓடுகிற நலமும் விசாலமுமான தேசத்திற்கு ஏறிவரப்பண்ணவும் இறங்கினோம்.

௯ இப்பொழுதும் இதோ இஸ்ரவேல் புத்திரரின் கூப்பிடுதல் நம்மண்டைக்கு வந்தது; எகிப்தியர் அவர்களை ஒடுக்குகிற ஒடுக்குதலையும் பார்த்தோம்.

௰ இப்பொழுதும் நீ இஸ்ரவேல் புத்திரராகிய நமது சனத்தை எகிப்திலிருந்து வெளியே அழைத்துவரும்படிக்கு உன்னைப் பார்வோனண்டைக்கு அனுப்புவோம் வாவென்றார்.

௰௧ ¶ அப்பொழுது மோசே பராபரனோடே, பார்வோனண்டைக்குப் போகிறதற்கும், இஸ்ரவேல் புத்திரரை எகிப்திலிருந்து வெளியே அழைத்துவருகிறதற்கும், நான் எம்மாத்திரமென்றான்.

௰௨ அதற்கவர், நாம் உன்னுடனே இருப்போம்; நீ சனத்தை எகிப்திலிருந்து வெளியே அழைத்துவந்தபொழுது, இந்தப் பர்வதத்திலே பராபரனுக்கு ஆராதனைசெய்வீர்களென்பது, நாம் உன்னை அனுப்பினதற்கு அடையாளமாய் இருக்குமென்றார்.

௰௩ ¶ அப்பொழுது மோசே பராபரனோடே சொன்னதாவது: இதோ நான் இஸ்ரவேல் புத்திரரண்டைக்கு வந்து, உங்கள் பிதாக்களுடைய பராபரன் என்னை உங்களண்டைக்கு அனுப்பினாரென்று அவர்களுக்குச் சொல்லும்பொழுது, அவர்கள், அவருடைய நாமம் என்னவென்று என்னைக் கேட்டால், அவர்களோடே என்ன சொல்லுவேன் என்றான்.

௰௪ ¶ அப்பொழுது பராபரன், இருக்கிறவராக இருப்போமென்று மோசேயுடனே சொல்லி, இருப்போம் என்பவர் என்னை உங்களண்டைக்கு அனுப்பினார் என்று இஸ்ரவேல் புத்திரரோடே சொல்வாயாக என்றார்.

௰௫ அப்புறம் பராபரன் மோசேயோடே சொன்னதாவது: நீ இஸ்ரவேல் புத்திரருடனே, ஆபிரகாமுடைய பராபரனும் இசாக்குடைய பராபரனும் யாக்கோபுடைய பராபரனுமாயிருக்கிற உங்கள் பிதாக்களுடைய பராபரனாகிய கர்த்தர் என்னை உங்களண்

Digitized by Google

டைக்கு அனுப்பினார் என்பாயாக, இது என்றைக்கும் நம்முடைய நாமமும், இது தலைமுறை தலைமுறையாக நம்முடைய பேர்ப் பிரஸ்தாபமுமாயிருக்கும்.

௰௬ நீ போய், இஸ்ரவேலின் மூப்பரைக் கூட்டி, அவர்களோடே சொல்லவேண்டியதாவது: ஆபிரகாம், இசாக்கு, யாக்கோபு என்றவர்களுடைய பராபரனாயிருக்கிற உங்கள் பிதாக்களுடைய பராபரனாகிய கர்த்தர் எனக்குத் தரிசனையாகி, உங்களையும் எகிப்திலே உங்களுக்குச் செய்யப்பட்டதையும் விசாரிக்கவே விசாரித்தோமென்றும்,

௰௭ நாம் உங்களை எகிப்தின் சிறுமையிலிருந்து ஏறிவரப்பண்ணி, பாலும் தேனும் ஓடுகிற தேசமாகிய, கானானியர், ஏத்தியர், எமோரியர், பெரிசியர், ஏவியர், எபூசியருடைய தேசத்திற்குக் கொண்டுபோவோமென்றும் சொன்னோமென்றார் என்று சொல்லு.

௰௮ அவர்கள் உன் சத்தத்திற்குக் கேள்வி கொடுப்பார்கள்; அப்பொழுது நீயும் இஸ்ரவேலின் மூப்பரும் எகிப்தின் இராசாவண்டைக்குப் போய், அவனோடே, எபிரேயருடைய பராபரனாகிய கர்த்தர் எங்களைச் சந்தித்தார்; இப்பொழுதும் நாங்கள் மூன்று நாள்பயணம் வனாந்தரத்திலே போய், எங்கள் பராபரனாகிய கர்த்தருக்குப் பலியிடட்டும் என்பீர்களாக.

௰௯ ஆனால் எகிப்தின் இராசா வல்லமையான கையைக் கண்டாலும், உங்களைப் போகவிடானென்று நாம் அறிவோம்.

௨௰ ஆகையால் நாம் நம்முடைய கையை நீட்டி, எகிப்தின் நடுவிலே நாம் செய்யும் நம்முடைய சகலவித அதிசயங்களாலும் அதை அடிப்போம்; அதற்குப்பிறகு உங்களை அனுப்பிவிடுவான்.

௨௧ அப்பொழுது நாம் இந்தச் சனத்திற்குள் எகிப்தியரின் கண்களுக்குமுன்பாகத் தயவுகிடைக்கப்பண்ணுவதினால் சம்பவிப்பதேதெனில், நீங்கள் போகிறபொழுது வெறுமையாய்ப் போகப்போகிறதில்லை.

௨௨ ஒவ்வொரு ஸ்திரி, தன்தன் அயலகத்தாள் கையிலும் தன்தன் வீட்டுக்காரிகள் கையிலும் வெள்ளி உடைமைகளையும் பொன் உடைமைகளையும் வஸ்திரங்களையும் கேட்டு வாங்குவாள்; அவைகளை உங்கள் குமாரர்மேலும் உங்கள் குமாரத்திகள்மேலும் வைத்து, * எகிப்தியரைக் கொள்ளையிட்டுப் போவீர்களென்றார். * உ மோ. ௰௧. உ: ௰௨. ௩௫, ௩௬.

## ௪. அதிகாரம்.

அப்பொழுது மோசே பிரதியுத்தாரமாக, ஆனால் இதோ அவர்கள் என்னை நம்பாமலும் என் சத்தத்திற்குக் கேள்விகொடாமலும் போவார்கள்; ஏனெனில் கர்த்தர் உனக்குத் தரிசனையானதில்லையென்று சொல்லுவார்கள் என்றான்.

௨ அப்பொழுது கர்த்தர் அவனுடனே, உன் கையிலிருக்கிறது என்னவென்றார்; ஒரு கோலென்றான்.

௩ அதைத் தரையிலே போடென்றார்; அவன் அதைத் தரையிலே போட்டபொழுது, அது சர்ப்பமாயிற்று; அதற்கு மோசே விலகி ஓடினான்.

௪ அப்பொழுது கர்த்தர் மோசேயோடே உன் கையை நீட்டி அதின் வாலைப்பிடி என்றார்; அவன் தன் கையை நீட்டி அதைப் பிடிக்கிறபொழுது, அது அவன் கையிலே கோலாயிற்று.

௫ இது ஆபிரகாமுடைய பராபரனும் இசாக்குடைய பராபரனும் யாக்கோபுடைய பராபரனுமாயிருக்கிற தங்கள் பிதாக்களுடைய பராபரனாகிய கர்த்தர், உனக்குத் தரிசனையானதை அவர்கள் நம்புகிறதற்கான அடையாளமென்றார்.

௬ ¶ பின்னையும் கர்த்தர் அவனுக்கு உன் கையை உன் மடியிலே போடென்றார்; அவன் தன் கையைத் தன் மடியிலே போட்டு, அதை வெளியே வாங்குகிறபொழுது, இதோ அவன் கை உறைந்த மழையைப் போல வெண்குஷ்டம் பிடித்திருந்தது.

Digitized by Google

௭ பிறகு அவர் உன் கையைத் திரும்ப உன் மடியிலே போடென்றார், அவன் தன் கையைத் திரும்பத் தன் மடியிலே போட்டு, தன் மடியிலிருந்து அதை வெளியே வாங்குகிறபொழுது, இதோ அது திரும்ப அவனுடைய மற்றச் சதையைப்போல ஆயிற்று.

௮ அப்பொழுது அவர் சொன்னதாவது: அவர்கள் முந்தின அடையாளத்தைக் கண்டு, உன்னை விசுவாசியாமலும் உனக்குக் கேள்விகொடாமலும்போனால், பிந்தின அடையாளத்தைக் கண்டு விசுவாசிப்பார்கள்.

௯ அவர்கள் இவ்விரண்டு அடையாளங்களையும் விசுவாசியாமலும் உன் சத்தத்திற்குக் கேள்விகொடாமலும் போனார்களேயாகில், அப்பொழுது நீ நதியின் தண்ணீரை மொண்டு, பூமியில் ஊற்றுவாயாக; அப்பொழுது நீ நதியிலே மொண்ட தண்ணீர் பூமியிலே இரத்தமாமென்றார்.

௰ ¶ மோசேயோவென்றால் கர்த்தரோடே சொன்னதாவது: ஆ, ஆண்டவரே, முன்னும் எப்பொழுதும், தேவரீர் உம்முடைய அடியானோடே பேசினது முதற்கொண்டும் நான் பேச்சுக்காரன் அல்ல, ஏனெனில் நான் திக்குவாயனும் திக்குநாவுக்காரனுமானவன் என்றான்.

௧௧ ¶ அப்பொழுது கர்த்தர் அவனோடே சொன்னதாவது: மனிதனுக்கு வாயைக் கொடுத்தவர் யார்? அல்லவென்று ஊமையனையும் அல்லது செவிடனையும் அல்லது பார்வையுள்ளவனையும் அல்லது குருடனையும் உண்டாக்கினவர் யார்? கர்த்தராகிய நாமல்லவோ?

௧௨ இப்பொழுதும் நீ போ; நாம் உன் வாயோடே இருந்து, *நீ பேசவேண்டியதை உனக்குப் போதிப்போமென்றார். *மத். ௰. ௧௯, ௨௰.

௧௩ ¶ அவனோவென்றால், ஆ, ஆண்டவரே, நீர் அனுப்பச் சித்தமாயிருக்கிற யாரையாகிலும் அனுப்புமென்றான்.

௧௪ ¶ அப்பொழுது கர்த்தர் மோசேயின்மேல் கோபம்மூண்டவராகிச் சொன்னதாவது: லேவியனாகிய ஆரோன் உன் சகோதரன் அல்லவோ? அவன் நன்றாய்ப் பேசுகிறவனென்று அறிவோம்; இதோ அவன் உன்னைச் சந்திக்கப் புறப்பட்டு வந்து உன்னைக் கண்டு, தன் இருதயத்திலே மகிழ்ச்சியாயிருப்பான்.

௧௫ * நீ அவனோடே பேசி, வார்த்தைகளை அவன் வாயில்போடுவாயாக; நாமோவென்றால் உன் வாயோடும் அவன் வாயோடுமிருந்து, நீங்கள் செய்யவேண்டியதை உங்களுக்குப் போதிப்போம். *௨ மோ. ௭. ௨.

௧௬ அவன் உனக்குப் பதிலாகச் சனத்தோடே பேசுவான்; இப்படியே அவன் உனக்கு வாயாக இருப்பான்; நீ அவனுக்குத் தேவனாக இருப்பாய்.

௧௭ நீ அடையாளங்களைச்செய்யும் இந்தக் கோலை உன்கையில்பிடித்துக்கொண்டு போ என்றார்.

௧௮ ¶ மோசே போய்த் திரும்ப, தன் மாமனாகிய எத்திரோஅண்டைக்கு வந்து, நான் புறப்பட்டு எகிப்திலிருக்கிற என் சகோதரரண்டைக்குத் திரும்பிப்போய், அவர்கள் இன்னம் உயிரோடே இருக்கிறார்களோ என்று பார்க்கட்டுமே என்று அவனோடே சொன்னான்; அப்பொழுது எத்திரோ மோசேக்குச் சமாதானமாய்ப் போ என்றான்.

௧௯ பின்னையும் கர்த்தர் மீதியானிலே மோசேயோடே, எகிப்திற்குத் திரும்பிப்போ; ஏனெனில் உன் பிராணனை வாங்கத் தேடின மனிதர் எல்லாரும் செத்துப்போனார்கள் என்றார்.

௨௰ அப்பொழுது மோசே தன் பெண்சாதியையும் தன் பிள்ளைகளையும் கூட்டிக்கொண்டு, அவர்களைக் கழுதையின்மேல் ஏற்றி, எகிப்துதேசத்திற்குத் திரும்பினான்; மோசே பராபரனுடைய கோலைத் தன் கையிலே பிடித்துக்கொண்டு போனான்.

Digitized by Google

௨௧ கர்த்தர் மோசேயோடே சொன்னதாவது: நீ எகிப்திலே திரும்பி வந்து சேர்ந்த

பொழுது, நாம் உன் கையிலே கொடுத்த எல்லா அற்புதங்களையும் பார்வோனுக்கு முன்பாகச் செய்யப் பார்; நாமோவெனில் அவன் இருதயத்தைச் சனத்தைவிடாதபடிக்குக் கெட்டிப்படுத்துவோம்.

௨௨ அப்பொழுது நீ பார்வோனோடே சொல்லவேண்டியதாவது: கர்த்தர் உரைக்கிறதேதெனில் இஸ்ரவேல் நம்முடைய முதல் பேறான குமாரன்.

௨௩ நம்முடைய குமாரனை நமக்கு ஆராதனைசெய்யும்படிக்கு விடுவென்று நாம் உன்னோடே சொல்லியும், நீ அவனை விடமாட்டோம் என்றாய்; இதோ நாம் உன் முதல் பேறான உன் குமாரனைக் கொன்றுபோடுகிறோமென்று உரைத்தாரென்று சொல்லுவாயாக என்றார்.

௨௪ ¶ வழியில் தங்குமிடத்திலே சம்பவித்ததேதென்றால் கர்த்தர் அவனுக்கு எதிர்ப்பட்டு, அவனைக் கொல்லவேண்டுமென்று இருந்தார்.

௨௫ அப்பொழுது சிப்போராள், *கருக்கான கல்லை எடுத்து, தன் பிள்ளையின் நுனித்தோலை அறுத்து, அதை அவன் கால்களுக்குமுன்பாகப் போட்டு, நீர் எனக்கு இரத்தப்பழிக்கான மாப்பிள்ளையாமே என்றாள்.

*யோசு. ௫. ௨.

௨௬ அப்பொழுது அவனைவிட்டு விலகினார்; அவள் சுன்னத்துகளினிமித்தம் அப்பொழுது அவனை இரத்தப்பழிக்கான மாப்பிள்ளை என்றாள்.

௨௭ ¶ கர்த்தர் ஆரோனுடனே, நீ வனாந்தரத்திலே மோசேக்கு எதிர்கொண்டு போவென்றார்; அவன் போய்ப் பராபரனுடைய பர்வதத்திலே அவனைச் சந்தித்து, அவனை முத்தம்செய்தான்.

௨௮ அப்பொழுது மோசே தன்னை அனுப்பின கர்த்தருடைய எல்லா வார்த்தைகளையும் அவர் தனக்குக் கற்பித்த எல்லா அடையாளங்களையும் ஆரோனுக்கு அறிவித்தான்.

௨௯ ¶ மோசேயும் ஆரோனும் போய் இஸ்ரவேல் புத்திரரின் மூப்பரை எல்லாம் கூட்டினார்கள்.

௩௰ ஆரோனேவென்றால் கர்த்தர் மோசேயோடே பேசின எல்லா வார்த்தைகளையும் சொல்லி, சனத்தின் கண்களுக்குமுன்பாக அந்த அடையாளங்களைச் செய்தான்.

௩௧ சனம் விசுவாசித்தது; கர்த்தர் இஸ்ரவேல் புத்திரரை விசாரித்தாரென்றும் தங்கள் சிறுமையைப் பார்த்தார் என்றும் அவர்கள் கேட்டபொழுது, குனிந்து பணிந்துகொண்டார்கள்.

## ௫. அதிகாரம்.

பிற்பாடு மோசேயும் ஆரோனும் உள்பிரவேசித்துப் பார்வோனோடே, நமக்கு வனாந்தரத்திலே பண்டிகை ஆசரிக்கும்படிக்கு, நம்முடைய சனத்தைப் போகவிடுமென்று இஸ்ரவேலின் பராபரனாகிய கர்த்தர் சொல்லுகிறாரென்றார்கள்.

௨ பார்வோனோவென்றால் நான் இஸ்ரவேலைப் போகவிடக் கர்த்தரின் சத்தத்தைக் கேட்கிறதற்கு அவர் யார்? நான் கர்த்தரை அறியேன்; நான் இஸ்ரவேலை விடுவதுமில்லை என்றான்.

௩ அப்பொழுது அவர்கள் எபிரேயருடைய பராபரன் எங்களைச் சந்தித்தார்; அவர் பெருவாரிக் காய்ச்சலோடும் அல்லவென்று பட்டயத்தோடும் எங்களுக்கு நேரிடாதபடிக்கு நாங்கள் மூன்று நாள் பயணம் வனாந்தரத்திலே போய், எங்கள் பராபரனாகிய கர்த்தருக்குப் பலியிடட்டுமே என்றார்கள்.

௪ ஆனால் எகிப்தின் இராசா அவர்களுடனே, மோசே ஆரோனென்றவர்களே, நீங்கள் சனத்தைத் தங்கள் வேலைகளைவிட்டுக் கலையப்பண்ணுகிறதென்ன? உங்கள் சுமைகளைச் சுமக்கப் போங்களென்றான்.

௫ பின்னையும் பார்வோன் இதோ, தேசத்தின் சனம் அப்போதே திரட்சியாயிருக்க, அவர்களை நீங்கள் தங்கள் சுமைகளைவிட்டு ஓயப்பண்ணுவீர்களோ என்று சொல்லி,

Digitized by Google

௬ ¶ அந்நாளிலே பார்வோன் சனத்தின் விசாரிப்புக்காரருக்கும் அதின் தலைவருக்கும் கற்பித்துச் சொன்னதாவது:

௭ நீங்கள் இனிச் சனத்திற்கு நேற்றைப்போலவும், முந்துநேற்றைப்போலவும், செங்கல் வேலைக்கு வைக்கோல் கொடுக்க வேண்டாம்; அவர்கள்தாமே போய்த் தங்களுக்கு வைக்கோல் சேர்க்கக்கடவர்கள்.

௮ ஆனால் அவர்கள் நேற்றும் முந்துநேற்றும் செய்த செங்கல்களுடைய இலக்கத்தின் திட்டத்தைத் தானே அவர்கள்மேலே சுமத்துவீர்களாக; அதிலே நீங்கள் ஒன்றும் குறைக்கவேண்டாம்; ஏனெனில் அவர்கள் சும்மா இருக்கிறார்கள்; ஆகையால் போவோம் எங்கள் பராபரனுக்குப் பலியிடுவோம் என்று கூப்பிடுகிறார்கள்.

௯ அந்த மனிதர்கள் பொய் வார்த்தைகளைக் கவனிக்காமல் தங்கள் பணிவிடை வேலைகளில் முயற்சியாயிருக்கும்படிக்கு, அது அவர்கள்மேல் அதிகரிக்கப்படக்கடவதென்றான்.

௰ ¶ அப்பொழுது சனத்தின் ஆளோட்டிகளும் அதின் தலைவரும் புறப்பட்டுச் சனத்தோடே சொன்னதாவது: நாம் உங்களுக்கு வைக்கோல் கொடுப்பதில்லை என்றும்,

௰௧ நீங்களே போய் உங்களுக்கு அகப்படுகிற இடங்களில் வைக்கோலைச் சம்பாதியுங்கள்; உங்கள் பணிவிடை வேலையிலோவென்றால், ஒன்றும் குறைக்கப்படுவதில்லை என்றும் பார்வோன் சொன்னார் என்றார்கள்.

௰௨ அப்பொழுது வைக்கோலுக்குப் பதிலாகத் தாளடிகளைச் சேர்க்கும்படிக்குச் சனம் எகிப்துதேசமெங்கும் சிதறிப்போயிற்று.

௰௩ ஆளோட்டிகளோவென்றால் துரிதம்பண்ணி, வைக்கோலிருந்த நாளில் செய்ததற்குச் சரியாக உங்கள் பங்கிடுவேலைகளை ஒவ்வொருநாளிலே முடித்துத் தீருங்கள் என்றார்கள்.

௰௪ பிற்பாடு நீங்கள் முந்தியதுபோல, செங்கல்லில் உங்கள் திட்டத்தை நேற்றும் இன்றும் முடிக்காதே போனதென்ன என்று பார்வோனுடைய ஆளோட்டிகள் இஸ்ரவேல் புத்திரர்மேலே வைத்த இவர்களுடைய தலைவர்களைக் கேட்டு அடித்தார்கள்.

௰௫ ¶ ஆகையால் இஸ்ரவேல் புத்திரரின் தலைவர் உள்பிரவேசித்துப் பார்வோனை நோக்கிக் கூப்பிட்டு, உமதடியாருக்கு நீர் இப்படிச் செய்வானேன்?

௰௬ உமதடியாருக்கு வைக்கோல் கொடுக்கப்படாவிட்டாலும், செங்கல்லை அறுத்துத் தீருங்களென்று எங்களுக்குச் சொல்லுகிறார்கள்; இதோ உம்முடைய சனத்தின் மேலே குற்றம் இருக்கும்போது, உமதடியார் அடிக்கப்படுகிறார்கள் என்றார்கள்.

௰௭ அதற்கவன் சொன்னதாவது: நீங்கள் சும்மா இருக்கிறீர்கள்; சும்மாதான் இருக்கிறீர்கள்; ஆகையினாலே போவோம் கர்த்தருக்குப் பலியிடுவோம் என்கிறீர்கள்.

௰௮ இப்பொழுதும் போங்கள், பணிவிடைசெய்யுங்கள்; உங்களுக்கு வைக்கோல் கொடுக்கப்படுவதில்லை; செங்கல்லுகளுடைய இலக்கத்தின் திட்டத்தையோவெனில் நீங்கள் ஒப்புவிக்கவேண்டுமென்றான்.

௰௯ நீங்கள் ஒவ்வொருநாளிலே அறுத்துத் தீரவேண்டிய செங்கல்லுகளிலே ஒன்றும் குறைக்காதிருங்கள் என்னப்பட்டதினாலே, தங்களுக்கு வந்த இக்கட்டை இஸ்ரவேல் புத்திரரின் தலைவர் கண்டு,

௨௰ ¶ பார்வோனைவிட்டுப் புறப்படுகையில், தங்களுக்கு எதிரே நிற்கிற மோசேக்கும் ஆரோனுக்கும் எதிர்ப்பட்டு,

௨௰௧ அவர்களுடனே, நீங்கள் பார்வோனின் கண்களுக்குமுன்பாகவும் அவருடைய ஊழியக்காரரின் கண்களுக்கு முன்பாகவும் எங்கள் வாசனையை நாறப்பண்ணி, எங்களைக் கொல்ல அவர்கள் கையிலே பட்டயத்தைக் கொடுத்ததினிமித்தம் கர்த்

Digitized by Google

தர் உங்களை நோக்கிப்பார்த்து, நியாயம் தீர்க்கக்கடவர் என்றார்கள்.

௨௨ ¶ அப்பொழுது மோசே கர்த்தரண்டைக்குத் திரும்பி, ஆண்டவரே, இந்தச் சனத்திற்கு ஏன் தீங்குவரப்பண்ணினீர்? நீர் என்னை அனுப்பினதேது?

௨௩ நான் உம்முடைய நாமத்திலே பேசப் பார்வோனண்டையில் உட்பிரவேசித்தது முதல்கொண்டுதானே இந்தச் சனத்தை உபத்திரவப்படுத்தினான்; நீரோவெனில் உம்முடைய சனத்தை விடுவித்ததே இல்லை என்றான்.

## ௬. அதிகாரம்.

அப்பொழுது கர்த்தர் மோசேயுடனே, நாம் பார்வோனுக்குச் செய்வதை இப்பொழுது காண்பாய், அதேதென்றால் பலத்த கையைக் கண்டு அவர்களைப் போகவிட்டு, பலத்த கையைக் கண்டு அவர்களைத் தன் தேசத்திலிருந்து துரத்திவிடுவானென்றார்.

௨ ¶ பின்னையும் பராபரன் மோசேயுடனே பேசி அவனோடே சொன்னதாவது: நாம் கர்த்தர்.

௩ நாம் சர்வத்திற்கும் வல்ல பராபரனாய், ஆபிரகாமுக்கும் இசாக்குக்கும் யாக்கோபுக்கும் தரிசனையானோம்; ஆனால் கர்த்தரென்ற நம்முடைய நாமத்தினாலே நாம் அவர்களுக்கு அறியப்பட்டதில்லை.

௪ அவர்கள் பரதேசிகளாய்த் தங்கின தேசமாகிற கானான்தேசத்தை அவர்களுக்குக் கொடுக்க, நாம் அவர்களோடே நம்முடைய உடம்படிக்கையையும் ஏற்படுத்தி,

௫ எகிப்தியர் அடிமைகொள்ளுகிற இஸ்ரவேல் புத்திரரின் தவிப்பையும் நாம் கேட்டு, நமது உடம்படிக்கையை நினைத்தோம்.

௬ ஆகையால் இஸ்ரவேல் புத்திரருக்கு நீ சொல்லவேண்டியதேதெனில் நாம் கர்த்தர், நாம் உங்களை எகிப்தியருடைய சுமைகளின் கீழிருந்து புறப்படப்பண்ணி, உங்களை அவர்கள் அடிமைத்தனத்திற்கு நீங்கலாக்கி விடுவித்து, உங்களை நீட்டப்பட்ட புயத்தினாலும் மகா நியாயத்தீர்ப்புகளினாலும் மீட்டு,

௭ உங்களை நமக்குச் சனமாகச் சேர்த்துக்கொண்டு, உங்களுக்குப் பராபரனாயிருப்போம்; நாம் உங்களை எகிப்தியருடைய சுமைகளின் கீழிருந்து புறப்படப்பண்ணுகிற உங்கள் பராபரனாகிய கர்த்தரென்று அறிவீர்கள்.

௮ நாம் ஆபிரகாமுக்கும் இசாக்குக்கும் யாக்கோபுக்கும் கொடுப்போமென்று நம்முடைய கரத்தை ஏறெடுத்த தேசத்திலே உங்களைக் கொண்டுபோய், அதை உங்களுக்குச் சுதந்தரமாகக் கொடுப்போம்; நாம் கர்த்தரென்று அவர்களுக்குச் சொல்லென்றார்.

௯ இந்தப்பிரகாரமாக மோசே இஸ்ரவேல் புத்திரரோடே பேசினான்; ஆனால் அவர்கள் ஆவியின் இடுக்கணினாலும் கடினவேலையினாலும் மோசேயைக் கேளாதேபோனார்கள்.

௰ ¶ பிற்பாடு கர்த்தர் மோசேயுடனே பேசி,

௰௧ நீ உட்பிரவேசித்து, எகிப்தின் இராசாவாகிய பார்வோன் இஸ்ரவேல் புத்திரரைத் தன் தேசத்திலிருந்து போகவிட அவனோடே பேசு என்றார்.

௰௨ ஆனால் மோசே கர்த்தருக்கு முன்பாகப் பேசி, இதோ இஸ்ரவேல் புத்திரர் என்னைக் கேட்கவில்லை; பார்வோன் என்னை எப்படிக் கேட்பான்? நான் சுன்னத்தில்லாத உதடுகளுமுள்ளவன் என்றார்.

௰௩ கர்த்தரோவென்றால் மோசேயோடும் ஆரோனோடும் பேசி, இஸ்ரவேல் புத்திரரை எகிப்துதேசத்திலிருந்து அழைத்துக்கொண்டு போகும்படிக்கு, அவர்களை இஸ்ரவேல் புத்திரரண்டைக்கும் எகிப்தின் இராசாவாகிய பார்வோனண்டைக்கும் அனுப்பிக் கட்டளைகளைக் கொடுத்துவந்தார்.

௰௪ ¶ அவர்களுடைய பிதாக்களின் வீட்டாரில் தலைவராவது, இஸ்ரவேலுக்கு முதல் பிறந்தவனான ரூபனின் குமாரர், அனோக்,

Digitized by Google

பல்லூ, எத்ஸரோன, கர்மீ; இவர்கள் ரூபனுடைய வம்சங்களின் தலைவர்.

௰௫ சிமெயோனின் குமாரர்; ஏமுவேல், யாமீன், ஓகாத், யாகின், சோகார், கானானித்தியின் குமாரனாகிய சவுல்; இவர்கள் சிமெயோனுடைய வம்சங்களின் தலைவர்.

௰௬ தங்கள் சந்ததிகளாய்ப் பிரிந்த இலேவியினுடைய குமாரரின் நாமங்கள், கெர்சோன், கோகாத், மேராரி, என்றவைகள்; இலேவி உயிரோடிருந்த வருஷங்களோவென்றால், நூற்று முப்பத்தேழு வருஷங்கள்.

௰௭ தங்கள் வம்சங்களாய்ப் பிரிந்த கெர்சோனின் குமாரர்; லிப்னீயும், சிமேயீயும் தானே.

௰௮ கோகாத்தின் குமாரர்; அம்ராம், இத்சேயார், எப்ரோன், ஊசியேல் என்றவர்கள்; கோகாத் உயிரோடே இருந்த வருஷங்களோவென்றால், நூற்று முப்பத்துமூன்று வருஷங்கள்.

௰௯ மேராரியின் குமாரர்; மகேலியும், மூசியும்தானே; இவர்கள் தங்கள் சந்ததிகளாய்ப் பிரிந்த இலேவியனுடைய வம்சங்களின் தலைவர்.

௨௰ அம்ராம் தன்னுடைய அத்தையாகிய யோகெபேத்தை விவாகம்பண்ணினான்; இவள் அவனுக்கு ஆரோனையும் மோசேயையும் பெற்றாள்; அம்ராம் உயிரோடிருந்த வருஷங்களோவென்றால், நூற்று முப்பத்தேழு வருஷங்கள்.

௨௧ இத்சேயாரின் குமாரர்; கோராக், நெப்பேக், சித்ரி, என்றவர்கள்.

௨௨ ஊசியேலின் குமாரர்; மீசவேல், எல்சாபான், சித்திரி, என்றவர்கள்.

௨௩ ஆரோன் அம்மினதாபின் குமாரத்தியும் நகேசோனின் சகோதரியுமாகிய எலிசபாளை விவாகம்பண்ணினான்; இவள் அவனுக்கு நாதாபையும், அபியூவையும், எலெயாசாரையும், இத்தாமாரையும் பெற்றாள்.

௨௪ கோராகின் குமாரர்; ஆசீர், எல்க்கானா, அபியாசாப், என்றவர்கள்; இவர்கள் கோராகியரின் வம்சங்களின் தலைவர்.

௨௫ ஆரோனின் குமாரனாகிய எலெயாசார் பூத்தியேலுடைய குமாரத்திகளில் ஒருத்தியை விவாகம்பண்ணினான்; இவள் அவனுக்குப் பீனெகாஸைப் பெற்றாள், இவர்கள் தங்கள் வம்சங்களாய்ப் பிரிந்த இலேவியருடைய பிதாக்களாகிய தலைவர்.

௨௬ நீங்கள் இஸ்ரவேல் புத்திரரை அவர்கள் சேனைகளின்படியே எகிப்துதேசத்திலிருந்து அழைத்துக்கொண்டு போங்களென்று கர்த்தர் சொன்ன ஆரோனும் மோசேயும் இவர்கள்தான்.

௨௭ இஸ்ரவேல் புத்திரரை எகிப்திலிருந்து அழைத்துக்கொண்டு போகும்படிக்கு எகிப்தின் இராசாவாகிய பார்வோனோடே பேசின மோசேயும் ஆரோனும் இவர்கள்தானே.

௨௮ ¶ கர்த்தர் எகிப்துதேசத்திலே மோசேயோடே பேசின நாளிலே சம்பவித்ததென்றால்,

௨௯ கர்த்தர் மோசேயுடனே, நாம் கர்த்தர்; நாம் உன்னோடே சொல்லுகிறவைகளையெல்லாம் நீ எகிப்தின் இராசாவாகிய பார்வோனோடே சொல்லென்று சொன்னபொழுது,

௩௰ மோசே கர்த்தருக்கு முன்பாக, இதோ, நான் சுன்னத்தில்லாத உதடுகளுள்ளவன்; பார்வோன் என்னை எப்படிக் கேட்பானென்றான்.

## எ. அதிகாரம்.

பராபரன் மோசேயோடே சொன்னதாவது: பார், உன்னை நாம் பார்வோனுக்குத் தேவனாக்கினோம்; உன் சகோதரனாகிய ஆரோனோவென்றால், உன் தீர்க்கதரிசியாயிருப்பான்.

௨ நாம் உனக்குக் கற்பிப்பதை எல்லாம் நீ சொல்லும்போது *உன் சகோதரனாகிய ஆரோன் பார்வோனோடே, இஸ்ரவேல் புத்திரரைத் தன் தேசத்திலிருந்து போகவிடும்

Digitized by Google

படிக்குப் பேசக்கடவன். உ மோ. ச. ௰௬.

௩ நானோவெனில் பார்வோனின் இருதயத்தைக் கடினப்படுத்தி, எகிப்துதேசத்தில் நம்முடைய அடையாளங்களையும் நம்முடைய அற்புதங்களையும் மிகுதியாய் நடக்கப்பண்ணுவோம்.

௪ பார்வோன் உங்களைக் கேளாதே போவான், ஆகையால் நாம் நம்முடைய கையை எகிப்திற்கு விரோதமாக நீட்டி, இஸ்ரவேல் புத்திரரென்ற நமது சனமாகிய நம்முடைய சேனைகளைப் பெரிய நியாயத்தீர்ப்புகளால் எகிப்துதேசத்திலிருந்து அழைத்துக்கொண்டு போவோம்.

௫ அப்படியே நாம் நம்முடைய கையை எகிப்தின்மேல் நீட்டி, இஸ்ரவேல் புத்திரரை அவர்கள் நடுவிலிருந்து அழைத்துக்கொண்டு போகையில், நாம் கர்த்தரென்றதை எகிப்தியர் அறிவார்கள் என்றார்.

௬ மோசேயும் ஆரோனும் கர்த்தர் தங்களுக்குக் கற்பித்தபடியே செய்தார்கள்.

௭ அவர்கள்பார்வோனோடேபேசுகிறபொழுது, மோசேக்கு எண்பதுவயதும் ஆரோனுக்கு எண்பத்துமூன்று வயதும் இருந்தது.

௮ ¶ கர்த்தர் மோசேயோடும் ஆரோனோடும் சொன்னதாவது:

௯ உங்களுக்காக ஒரு அற்புதம் காட்டுங்களென்று பார்வோன் உங்களோடே சொன்னால், அப்பொழுது நீ ஆரோனுடனே, உன் கோலை எடுத்து அதைப் பார்வோனுக்கு முன்பாகப் போடென்பாயாக, அப்பொழுது அது சர்ப்பமாகுமென்றார்.

௰ மோசேயும் ஆரோனும் பார்வோனண்டையில் பிரவேசித்து, கர்த்தர் தங்களுக்குக்கற்பித்தபடியே செய்தார்கள்; ஆரோன் தன் கோலைப் பார்வோனுக்கும், அவன் ஊழியக்காரருக்கும் முன்பாகப்போட்டான்; அப்பொழுது அது சர்ப்பமாயிற்று.

௰௧ அப்பொழுது பார்வோனும் ஞானிகளையும் சூனியக்காரரையும் அழைப்பித்தான், *எகிப்தின் சாஸ்திரிகளாகிய இவர்களும் தங்கள் சூனியங்களினால் அப்படிச் செய்தது, உ மோ. அ. எ, ௰௭, ௰௮. உ தீமோ. ௩. அ, ௯.

௰௨ அவனவன் தன்தன் கோலைப் போட்டார்கள், அப்பொழுது அவைகள் சர்ப்பங்களாயின; ஆரோனுடைய கோலோவென்றால், இவர்களுடைய கோல்களை விழுங்கிவிட்டது.

௰௩ ஆனால் கர்த்தர் சொல்லியிருந்தபடி பார்வோனின் இருதயம் உரம்கொண்டது, அவர்களைக் கேளாதே போனான்.

௰௪ ¶ அப்பொழுது கர்த்தர் மோசேயோடே சொன்னதாவது: பார்வோனின் இருதயம் அழுத்தமாயிருக்கிறது; சனத்தை விடமாட்டோமென்கிறான்.

௰௫ காலமே பார்வோனண்டைக்குப் போ; இதோ தண்ணீரண்டையிலே புறப்பட்டு வருவான்; நீ அவனுக்கு எதிராக நதியின் கரையிலே நின்று, சர்ப்பமாய் மாறி இருந்த கோலை உன் கையிலே பிடித்துக்கொண்டு,

௰௬ அவனோடே சொல்லவேண்டியது: எபிரேயருடைய பராபரனாகிய கர்த்தர் என்னை உம்மண்டைக்கு அனுப்பி, நமது சனத்தை வனாந்தரத்திலே நமக்கு ஆராதனைசெய்யும்படிக்குப் போகவிடு என்று சொல்லச்சொல்லியும், இதோ இதுவரைக்கும் கேளாதே போனீர்.

௰௭ இதோ என் கையிலிருக்கிற கோலினாலே நான் நதியிலிருக்கிற தண்ணீரின்மேல் அடிப்பேன்; அப்பொழுது அது இரத்தமாய் மாறி,

௰௮ நதியிலிருக்கிற மீன்கள் செத்து, நதி நாறிப்போம்; அப்பொழுது நதியிலிருக்கிற தண்ணீரைக் குடிக்க எகிப்தியருக்குக் குமட்டல் எடுக்கும்; நாம் கர்த்தர் என்பதை அதினால் அறிவாயென்று கர்த்தர் சொல்லுகிறாரென்று சொல்லென்றார்.

௰௯ ¶ பிறகு கர்த்தர் மோசேயோடே சொன்னதாவது: நீ ஆரோனோடே சொல்லவேண்டியதேதெனில், உன் கோலை எடுத்

Digitized by Google

துக்கொண்டு, உன் கையை எகிப்தியரின் தண்ணீர்களாகிய அவர்கள் நதிகளின்மேலும் அவர்கள் ஆறுகளின்மேலும் அவர்கள் குளங்களின்மேலும் தண்ணீர் சேர்ந்து நிற்கிற அவர்களுடைய எல்லா இடங்களின்மேலும் அவைகள் இரத்தமாகும்படிக்கு நீட்டு; அப்பொழுது எகிப்துதேசமெங்கும் மரப்பாத்திரங்களிலும் கல்பாத்திரங்களிலும் இரத்தம் உண்டாயிருக்குமென்று சொல்லென்றார்.

௨௰ மோசேயும் ஆரோனும் கர்த்தர் கற்பித்தபடி செய்தார்கள்; இவன் பார்வோனுடைய கண்களுக்கும் அவன் ஊழியக்காரரின் கண்களுக்கும் முன்பாகக் கோலை ஓங்கி, நதியில் இருக்கிற தண்ணீரை அடித்தான்; அப்பொழுது நதியில் இருக்கிற தண்ணீரெல்லாம் இரத்தமாய் மாறிப்போயிற்று.

௨௧ நதியில் இருந்த மீன்கள் செத்து, நதி நாறிப்போயிற்று; நதியிலிருக்கிற தண்ணீரைக்குடிக்க எகிப்தியருக்குக் கூடாதே போயிற்று; எகிப்துதேசமெங்கும் இரத்தம் இருந்தது.

௨௨ எகிப்தின் சாஸ்திரிகளும் தங்கள் சூனியங்களினால் அப்படிச் செய்தார்கள்; ஆனதுகொண்டு கர்த்தர் சொல்லியிருந்தபடி பார்வோனின் இருதயம் உரம்கொண்டது; அவர்களைக் கேளாதேபோனான்.

௨௩ பார்வோன் திரும்பிக்கொண்டு தன் வீட்டிற்குள் பிரவேசித்து, தன் மனதை அதின்மேலும் வைக்காதேபோனான்.

௨௪ தண்ணீர் குடிக்க எகிப்தியரெல்லாரும் நதியைச்சுற்றி ஊற்றுவெட்டினார்கள்; ஏனெனில் நதியின் தண்ணீரைக் குடிக்க அவர்களுக்குக் கூடாதிருந்தது.

௨௫ கர்த்தர் நதியை அடித்து ஏழுநாள் நிறைவேறிற்று.

## ௮. அதிகாரம்.

கர்த்தர் மோசேயோடே சொன்னதாவது: நீ பார்வோனண்டையிலே உள்பிரவேசித்து அவனோடே சொல்லவேண்டியது: கர்த்தர் உரைக்கிறதேதெனில், நமது சனத்தை நமக்கு ஆராதனை செய்யும்படிக்கு விடு.

௨ நீ அதை விடமாட்டேன் என்றாயானால், இதோ நாம் உன் எல்லையை எல்லாம் தவளைகளாலே வாதிப்போம்.

௩ நதி தவளைகளைத் திரளாய்ப் பிறப்பிக்கும்; அவைகள் ஏறி, உன் வீட்டிலும் உன் படுக்கை அறையிலும் உன் மஞ்சத்தின்மேலும் உன் ஊழியக்காரர் வீடுகளிலும் உன் சனத்திற்குள்ளும் அப்பம்சுடுகிற உன் அடுப்புகளிலும் மாப்பிசைகிற உன் தொட்டிகளிலும் வரும்.

௪ அந்தத் தவளைகள் உன்மேலும், உன் சனத்தின்மேலும், உன்னுடைய எல்லா ஊழியக்காரர்மேலும் ஏறுமென்கிறார் என்று சொல்லென்றார்.

௫ ¶ பிற்பாடு கர்த்தர் மோசேயோடே சொன்னதாவது: நீ ஆரோனோடே சொல்லவேண்டியதேதெனில், நீ உன் கோலோடே உன்னுடைய கையை நதிகளின்மேலும் ஆறுகளின்மேலும் குளங்களின்மேலும் நீட்டி, எகிப்து தேசத்தின்மேலே தவளைகளை ஏறிவரப்பண்ணென்று சொல்லென்றார்.

௬ அப்படியே ஆரோன் தன் கையை எகிப்தினுடைய தண்ணீர்களின்மேல் நீட்டினான்; அப்பொழுது தவளைகள் ஏறிவந்து, எகிப்துதேசத்தை மூடின.

௭ சாஸ்திரிகளும் தங்கள் சூனியங்களினால் அப்படிச் செய்து, எகிப்துதேசத்தின்மேலே தவளைகளை ஏறிவரப்பண்ணினார்கள்.

௮ ¶ ஆனால் பார்வோன் மோசேயையும் ஆரோனையும் அழைப்பித்து, கர்த்தர் அந்தத் தவளைகளை என்னையும் என் சனத்தையும் விட்டகற்ற அவரை வேண்டிக்கொள்ளுங்கள், கர்த்தருக்குப் பலியிடும்படிக்குச் சனத்தை விடுவேனென்றான்.

௯ அப்பொழுது மோசே பார்வோனுக்குத் தவளைகள் நதியிலேமாத்திரம் இருப்

Digitized by Google

பதற்கு, அவைகளை உம்மிடத்திலும் உம்முடைய வீட்டிலும் இராதபடிக்கு அழிக்க, நான் உமக்காகவும் உம்முடைய ஊழியக்காரருக்காகவும் உம்முடைய சனத்திற்காகவும் எப்பொழுது விண்ணப்பம்பண்ண வேண்டும் என்பதை எனக்குக் குறிக்கும் மேன்மை உமக்கே இருக்கட்டும் என்றான்.

௰ அவன் நாளை என்றான்; அப்பொழுது இவன் சொன்னதாவது: எங்கள் பராபரனாகிய கர்த்தருக்கு ஒப்பானவர் இல்லை என்பதை நீர் அறியும்படிக்கு உம்முடைய வார்த்தையின்படி ஆகக்கடவது.

௰௧ தவளைகள் உம்மையும் உம்முடைய வீட்டையும் உம்முடைய ஊழியக்காரரையும் உம்முடைய சனத்தையும்விட்டகன்று நதியிலேமாத்திரம் இருக்குமென்றான்.

௰௨ மோசேயும் ஆரோனும் பார்வோனை விட்டுப் புறப்பட்டார்கள்; பிற்பாடு மோசே பார்வோனுக்கு வரப்பண்ணின தவளைகள் நிமித்தம் கர்த்தரை நோக்கிக் கூப்பிட்டான்.

௰௩ கர்த்தர் மோசேயின் சொல்படி செய்தார்; வீடுகளிலும் முற்றங்களிலும் வயல்களிலும் இருந்த தவளைகள் செத்துப்போயிற்று.

௰௪ அவைகளைக் குவியல் குவியலாகச் சேர்த்துப்போட்டார்கள்; அதினால் பூமி நாற்றம் எடுத்தது.

௰௫ இலகுவுண்டாயிற்றென்று பார்வோன் கண்டபொழுதோவெனில், அவன் கர்த்தர் சொல்லியிருந்தபடி தன் இருதயத்தைக் கடினப்படுத்தி அவர்களைக் கேளாதே போனான்.

௰௬ அப்பொழுது கர்த்தர் மோசேயோடே சொன்னதாவது: நீ ஆரோனுடனே உன் கோலை நீட்டி, பூமியின் தூளை அடி; அப்பொழுது அது எகிப்துதேசமெங்கும் பேன்களாய்ப் போமென்று சொல்லென்றார்.

௰௭ இப்படிச் செய்தார்கள்; ஆரோன் தன் கோலோடே தன் கையை நீட்டி, பூமியின் தூளை அடித்தான், அப்பொழுது ஏராளமான பேன்கள் மனிதரிலும் மிருகசீவன்களிலும் உண்டாயின; எகிப்துதேசமெங்கும் பூமியின் தூளெல்லாம் பேன்களாய்ப் போயின.

௰௮ சாஸ்திரிகளும் தங்கள் ஞானியங்களாலே பேன்களைப் பிறப்பிக்கும்படிக்கு அப்படிச் செய்தார்கள்; *ஆனால் அவர்களுக்குக் கூடாதேபோயிற்று; ஏராளமான பேன்கள் மனிதரிலும் மிருகசீவன்களிலும் இருந்தன. *௨ மோ. ௭. ௰௧, ௰௨, ௨௨: ௮. ௭. ௯, ௰௧.

௰௯ அப்பொழுது சாஸ்திரிகள் பார்வோனோடே, இது பராபரனுடைய விரல் என்றார்கள்; ஆனால் கர்த்தர் சொல்லியிருந்தபடி பார்வோனுடைய இருதயம் உரம்கொண்டது; அவர்களைக் கேளாதே போனான்.

௨௰ அப்பொழுது கர்த்தர் மோசேயோடே சொன்னதாவது: நீ நாளை அதிகாலமே எழுந்திருந்துபோய், பார்வோனுக்கு முன்பாக நில், இதோ தண்ணீரண்டையிலே புறப்பட்டு வருவான்; அவனோடே நீ சொல்லவேண்டியதாவது: கர்த்தர் உரைக்கிறதேதெனில், நம்முடைய சனத்தை நமக்கு ஆராதனைசெய்யும்படிக்கு விடு.

௨௧ நீ நம்முடைய சனத்தை விடாயேயாகில் இதோ நாம் உன்மேலும் உன் ஊழியக்காரர்மேலும் உன் சனத்தின்மேலும் உன் வீடுகளின்மேலும் பலவித வண்டுகளை அனுப்புவோம்; எகிப்தியர் வீடுகளும் அவர்கள் இருக்கிற தேசமும் அந்த வண்டுகளாலே நிரம்பிப்போம்.

௨௨ பூமியின் நடுவில் நாமே கர்த்தர் என்பதை நீ அறியத்தக்கதாக, நாம் நம்முடைய சனமிருக்கிற கோசேன் சீமையை அக்நாளிலே அங்கே வண்டுச்சாதிகள் வாராதபடிக்கு விசேஷித்ததாக்கி,

௨௩ நம்முடைய சனத்திற்கும் உன் சனத்திற்கும் வித்தியாசம்பண்ணும் இரட்சிப்பைக் காண்பிப்போம்; நாளை இந்த அடை

பிறக்கிற முதல்பேற்றை எல்லாம் நமக்குப் பரிசுத்தமாக்கு, அது நம்முடையதென்றார். *௨ மோ. ௨௨. ௨௯, ௩௰: ௩௪. ௰௯.

௩ ¶ அப்பொழுது மோசே சனத்தோடே சொன்னதாவது: நீங்கள் அடிமைத்தன வீடாகிய எகிப்திலிருந்து புறப்பட்ட இந்த நாளை நீங்கள் நினையுங்கள்; ஏனெனில் கர்த்தர் பலத்த கையினாலே உங்களை அவ்விடத்திலிருந்து புறப்படப்பண்ணினார்; ஆனது கொண்டு புளித்த அப்பம் புசிக்கப்படவேண்டாம்.

௪ *ஆபிப்மாதத்தினுடைய இந்த நாளிலே நீங்கள் புறப்பட்டீர்கள். *௨ மோ. ௨௩. ௰௫.

௫ ஆகையால் கர்த்தர் உனக்குக் கொடுப்போமென்று உன் பிதாக்களுக்கு ஆணையிட்டதும் பாலும் தேனும் ஓடுகிறதுமான தேசமாகிய கானானியர், ஏத்தியர், எமோரியர், ஏவியர், எபூசியர் என்றவர்களுடைய தேசத்திலே உன்னை வரப்பண்ணினபொழுது, நீ இந்த மாதத்திலே இந்த ஆராதனையைச் செய்வாயாக.

௬ ஏழுநாள் புளிப்பில்லாத அப்பங்களைப் புசிக்கக்கடவாய்; ஏழாம் நாளிலோவெனில், கர்த்தருக்குப் பண்டிகை ஆசரிக்கப்படுவதாக.

௭ அந்த ஏழுநாளும் புளிப்பில்லாத அப்பங்கள் புசிக்கப்படக்கடவது; உன்னிடத்திலே புளித்த அப்பமும் காணப்படவேண்டாம்; உன் எல்லைகளிலெல்லாம் உன்னிடத்திலே புளித்தமாவும் காணப்படவேண்டாம்.

௮ அந்நாளிலே உன் குமாரனுக்கு, நான் எகிப்திலிருந்து புறப்படுகையில் கர்த்தர் எனக்குச் செய்ததற்காக இப்படிச் செய்கிறேனென்று அறிவிப்பாயாக.

௯ கர்த்தரின் நியாயப்பிரமாணம் உன் வாயிலிருக்கும்படிக்கு, *இது உனக்கு உன் கையில் அடையாளமாகவும் உன் கண்களின் நடுவே நினைப்பூட்டுதலாகவும் இருக்கக்கடவது; ஏனெனில் பலத்த கையினாலே கர்த்தர் உன்னை எகிப்திலிருந்து புறப்படப்பண்ணினார். *௫ மோ. ௬. ௮.

௰ ஆகையால் வருஷத்திற்கு வருஷம் இந்தக் கட்டளையை குறித்த காலத்திலே கைக்கொண்டு வருவாயாக.

௰௧ ¶ பின்னையும் செய்யப்படவேண்டியதேதெனில், கர்த்தர் உனக்கும் உன் பிதாக்களுக்கும் ஆணையிட்டபடியே, உன்னைக் கானானியரின் தேசத்திலே வரப்பண்ணி, அதை உனக்குக் கொடுத்தபொழுது,

௰௨ கர்ப்பம்திறந்து பிறக்கிறவை அனைத்தையும் உனக்கிருக்கும் மிருகசீவன்களின் தலையீற்றனைத்தையும் கர்த்தருக்கு ஒப்புக்கொடுப்பாயாக; அவைகளிலிருக்கிற ஆண்கள் கர்த்தருடையவைகள்.

௰௩ ஆனால் கழுதையின் தலையீற்றையெல்லாம் ஒரு ஆட்டுக்குட்டியினால் மீட்டுக்கொள்வாயாக; மீட்காயேயாகில், அதின் தலையை வெட்டிப்போடு; உன் பிள்ளைகளில் முதல்பேறான சகல நரசீவனைப்போலவென்றால் மீட்டுக்கொள்வாயாக.

௰௪ ¶ இதென்னவென்று நாளை உன் குமாரன் உன்னைக் கேட்கிறதுண்டானால், நீ அவனோடே சொல்லவேண்டியதாவது: கர்த்தர் எங்களைப் பலத்த கையினாலே அடிமை வீடாகிய எகிப்திலிருந்து புறப்படப்பண்ணினார்.

௰௫ அதேதெனில் எங்களை விடாதபடிக்கு, பார்வோன் கடினமனதாயிருக்கிறபொழுது, கர்த்தர் எகிப்துதேசத்தில், மனிதரின் தலைச்சன் பிள்ளைகள்துவக்கி, மிருகசீவன்களின் தலையீற்றுகள்மட்டும், உண்டாயிருந்த முதல்பேறுகளை எல்லாம் கொன்றுபோட்டார்; ஆனபடியினாலே கர்ப்பம்திறந்து பிறக்கிற ஆணையெல்லாம் நான் கர்த்தருக்குப் பலியிட்டு, என் பிள்ளைகளின் முதல்பேறானவர்களை எல்லாம் மீட்டுக்கொள்ளுகிறேன்.

௰௬ ஆகையால் கர்த்தர் எங்களைப் பலத்த கையினாலே எகிப்திலிருந்து புறப்படப்பண்ணினதற்கு, இது உன் கையில் அடையாளமாகவும் உன் கண்களின் நடுவே நி

Digitized by Google

ணைப்பூட்டுதலாகவும் இருக்கக்கடவதென்று சொல்லுவாயாக என்றான்.

௰எ ¶ பார்வோன் சனத்தை விட்டபிற்பாடு சம்பவித்ததேதெனில், சமீபமான பெலிஸ்தரின் தேசவழியாய்ப் பராபரன் அவர்களை அழைத்துக்கொண்டு போகவில்லை; ஏனென்றால் சனம் யுத்தத்தைக் காணும்பொழுது, மனஸ்தாபப்பட்டு எகிப்திற்கு திரும்புமென்றார்.

௰அ ஆகையால் பராபரன் நாணல் சமுத்திரத்தின் வனாந்தர வழியாய்ச் சனத்தைச் சுற்றிப்போகப்பண்ணினார்; இஸ்ரவேல் புத்திரரோவெனில் எகிப்துதேசத்திலிருந்து அணியணியாய் வந்து ஏறினார்கள்.

௰௯ மோசே தன்னோடேகூட யோசேப்பின் எலும்புகளை எடுத்துக்கொண்டு வந்தான்; *ஏனெனில் பராபரன் உங்களை விசாரிக்கவே விசாரிப்பார்; அப்பொழுது உங்களோடேகூட என் எலும்புகளை இவ்விடத்திலிருந்து போய் ஏறப்பண்ணுங்களென்று அவன் இஸ்ரவேல் புத்திரரைக் கெட்டியாய் ஆணையிடுவித்துக்கொண்டிருந்தான். *௧ மோ. ௫௰. ௨௫. யோசு. ௨௪. ௩௨.

௨௰ ¶ அவர்கள் சுக்கோத்திலிருந்து பயணம் புறப்பட்டு, வனாந்தரத்தின் எல்லையான ஏத்தாமிலே பாளயம் இறங்கினார்கள்.

௨௧ கர்த்தரோவெனில் அவர்களை வழிநடத்தும்படிக்கு பகலிலே மேகத்தூணிலும், அவர்களுக்கு வெளிச்சம் காட்டும்படிக்கும் அவர்கள் இரவும் பகலும் போக்கூடும்படிக்கும் இராத்திரியிலே அக்கினித்தூணிலும், அவர்களுக்குமுன்பாக நடந்தார்.

௨௨ பகலிலே மேகத்தூணும் இரவிலே அக்கினித்தூணும் சனத்திற்குமுன்பாக இருந்து விலகிப்போனதில்லை.

## ௰௪. அதிகாரம்.

கர்த்தர் மோசேயுடனே பேசிச் சொன்னதாவது:

௨ திரும்பிக்கொண்டு மிக்தோலுக்கும் சமுத்திரத்துக்கும் நடுவே பாகால்செப்போனுக்கு முன்பாக இருக்கிற இரோத் பள்ளத்தாக்கின் முன்னடியிலே பாளயம் இறங்கவேண்டுமென்று இஸ்ரவேல் புத்திரரோடே சொல்லு; அதற்கெதிராகச் சமுத்திரக்கரையிலே பாளயம் இறங்குவீர்களாக.

௩ அப்பொழுது அவர்கள், தேசத்திலே திகைத்துத் திரிகிறார்கள், வனாந்தரம் அவர்களை அடைத்துப்போட்டதென்று பார்வோன் இஸ்ரவேல் புத்திரரைக்குறித்துச் சொல்லுவான்.

௪ ஆகையால் பார்வோன் அவர்களைப் பின்தொடரும்படிக்கு, நாம் அவனிருதயத்தை உரம்கொள்ளப்பண்ணி, நாம் கர்த்தர் என்பதை எகிப்தியர் அறிகிறதற்காக, பார்வோனாலும் அவனுடைய எல்லா இராணுவத்தாலும் மகிமைப்படுவோமென்றார்; அவர்கள் அப்படிச்செய்தார்கள்.

௫ ¶ சனம் ஓடிப்போயிற்றென்று எகிப்தின் இராசாவுக்கு அறிவிக்கப்பட்டபொழுது, சனத்திற்கு விரோதமாகப் பார்வோனும் அவன் ஊழியக்காரரும் வேறுமனதாகி, நாம் இஸ்ரவேலரை நமக்கு வேலைசெய்யாதபடிக்கு இப்படி விட்டது என்னசெய்கையாய் இருக்கிறதென்றார்கள்.

௬ அவன் தன் இரதங்களைப் பூட்டி, தன் சனத்தைக் கூட்டிக்கொண்டு,

௭ தெரிந்துகொள்ளப்பட்ட அறுநூறு இரதங்களையும் எகிப்திலுடைய எல்லா இரதங்களையும் அவைகள் எல்லாவற்றின்மேலும் அதிகாரிகளான ஆதிக்கக்காரரையும் கூட்டிக்கொண்டு போனான்.

௮ கர்த்தர் எகிப்தின் இராசாவாகிய பார்வோனின் இருதயத்தை உரமாக்கினபடியினாலே, அவன் இஸ்ரவேல் புத்திரரைப் பின்தொடர்ந்தான்; இஸ்ரவேல் புத்திரரோவெனில் உயர்ந்த கையினாலே புறப்பட்டிருந்தார்கள்.

௯ எகிப்தியர் அவர்களைப் பின்தொடர்ந்து, பார்வோனின் எல்லாக் குதிரைகளும் இரதங்களும் அவனுடைய குதிரைக்காரரும்

Digitized by Google

அவனுடைய இராணுவமுமாய், சமுத்திரத்தண்டையிலே பாகால் சேப்போனுக்கு முன்பாக இருக்கிற இரோத் பள்ளத்தாக்கின் முன்னடியிலே பாளயம் இறங்கியிருக்கிற அவர்களைக் கிட்டினார்கள்.

௰ ¶ பார்வோன் சமீபித்துவருகிறபொழுது, இஸ்ரவேல் புத்திரர் தங்கள் கண்களை ஏறெடுத்தார்கள்; இதோ, எகிப்தியர் தங்கள் பிறகாலே வருகிறதை அவர்கள் கண்டு மிகவும் பயந்தார்கள்; அப்பொழுது இஸ்ரவேல் புத்திரர் கர்த்தரைநோக்கிக் கூப்பிட்டு,

௰௧ மோசேயுடனே, எகிப்திலே பிரேதக்குழிகள் இல்லாததினாலேயோ எங்களை வனாந்தரத்திலே சாகும்படிக்கு அழைத்துவந்தீர்? நீர் எங்களை எகிப்திலிருந்து புறப்படப்பண்ணினதினாலே, எங்களுக்கு இப்படிச் செய்ததென்னவென்றும்,

௰௨ நாங்கள் எகிப்திலே இருக்கும்பொழுது, எங்களை எகிப்தியருக்கு வேலைசெய்ய விட்டுவிடும், ஏனெனில் நாங்கள் வனாந்தரத்திலே சாகிறதைப்பார்க்கிலும் எகிப்தியருக்கு வேலைசெய்கிறது எங்களுக்குத் தாவிளையென்று உம்மோடே சொன்ன வார்த்தை இதுதானல்லவோவென்றும் சொன்னார்கள்.

௰௩ ¶ அதற்கு மோசே சனத்தோடே சொன்னதாவது: பயப்படாதிருங்கள்; நீங்கள் நின்றுகொண்டு கர்த்தர் இன்று உங்களுக்குச் செய்யும் அவருடைய இரட்சிப்பைப் பாருங்கள்; ஏனெனில் நீங்கள் இன்று காண்கிற எகிப்தியரை இனி என்றென்றைக்கும் திரும்பக் காண்பதில்லை.

௰௪ கர்த்தர் உங்களுக்காக யுத்தம்பண்ணுவார்; நீங்கள் சும்மா இருப்பீர்களென்றான்.

௰௫ ¶ அப்பொழுது கர்த்தர் மோசேயோடே சொன்னதாவது: நீ நம்மைநோக்கிக் கூப்பிடுகிறதென்ன? பயணம் புறப்பட வேண்டுமென்று இஸ்ரவேல் புத்திரரோடே சொல்லு.

௰௬ நீயோவென்றால் உன் கோலை ஓங்கி, உன் கையைச் சமுத்திரத்தின்மேல் நீட்டி, அதைப் பிளந்துபோடு; அப்பொழுது இஸ்ரவேல் புத்திரர் சமுத்திரத்தின் நடுவாக வெட்டாந்தரையிலே நடந்துபோவார்கள்.

௰௭ நாமோவெனில் இதோ, எகிப்தியர் உங்கள் பிறகாலே வரும்படிக்கு அவர்களிருதயத்தை உரமாக்கி, பார்வோனாலும் அவனுடைய எல்லா இராணுவத்தாலும் அவன் இரதங்களாலும் அவன் குதிரைக்காரராலும் மகிமைப்படுவோம்.

௰௮ இப்படி நாம் பார்வோனாலும் அவன் இரதங்களாலும் அவன் குதிரைக்காரராலும் மகிமைப்படுகிறபொழுது, நாம் கர்த்தர் என்பதை எகிப்தியர் அறிவார்களென்றார்.

௰௯ ¶ அப்பொழுது இஸ்ரவேலரின் சேனைக்கு முன்னாக நடக்கிற பராபரனுடைய தூதனானவர் தாண்டி வந்து, அவர்கள் பிறகாலே நடந்தார்; அவர்களுக்கு முன்பாக இருந்த மேகத்தூண் தாண்டிவந்து, அவர்கள் பிறகாலே நின்று,

௨௰ எகிப்தியரின் சேனைக்கும் இஸ்ரவேலரின் சேனைக்கும் நடுவாக வந்து, இராமுழுவதும் அது இதைச் சேராதபடியாய் அதற்கு மேகமும் அந்தகாரமுமாய் இருந்து, இதற்கோவென்றால் இரவை வெளிச்சமாக்கிற்று.

௨௧ ¶ மோசே தன் கையைச் சமுத்திரத்தின்மேலே நீட்டினான்; அப்பொழுது கர்த்தர் சமுத்திரத்தை இராமுழுவதும் பலத்த கீழ்க்காற்றினாலே விலக்கி, அதை வறண்டுபோகப்பண்ணினார்; அப்படியே தண்ணீர்கள் பிளந்து பிரிந்துபோயின.

௨௨ இஸ்ரவேல் புத்திரர் சமுத்திரத்தின் நடுவாக வெட்டாந்தரையிலே பிரவேசித்துப் போனார்கள்; அவர்களுடைய வலதுபுறமாகவும் அவர்களுடைய இடதுபுறமாகவும் தண்ணீர்கள் அவர்களுக்கு மதிலாக இருந்தன.

௨௩ ¶ அப்பொழுது எகிப்தியர் பின்தொடர்ந்து, பார்வோனுடைய எல்லாக் குதிரை

Digitized by Google

களும் அவனுடைய இரதங்களும் அவனுடைய குதிரைக்காரரும் அவர்கள் பிறகாலே சமுத்திரத்தின் நடுவே பிரவேசித்தார்கள்.

௨௪ கிழக்கு வெளுத்துவரும் சாமத்திலே சம்பவித்ததேதென்றால், கர்த்தர் அக்கினியும் மேகமுமான தூணிலிருந்து எகிப்தியரின் சேனையை நோக்கிப்பார்த்து, அவர்கள் சேனையைக் கலங்கடித்து,

௨௫ உருளைகள் அவர்கள் இரதங்களிலிருந்து கழலவும், அவர்கள் வருத்தமாய் நடக்கவும்பண்ணினார்; அப்பொழுது எகிப்தியர், இஸ்ரவேலரைவிட்டு ஓடிப்போவோமாக; ஏனெனில் கர்த்தர் அவர்களுக்காக எகிப்தியருக்கு விரோதமாய் யுத்தம்பண்ணுகிறாரென்றார்கள்.

௨௬ கர்த்தரோவெனில் மோசேயுடனே: தண்ணீர்கள் எகிப்தியர்மேலும் அவர்களுடைய இரதங்களின்மேலும் அவர்களுடைய குதிரைக்காரர்மேலும் திரும்பும்படிக்கு, உன் கையைச் சமுத்திரத்தின்மேலே நீட்டென்றார்.

௨௭ அப்படியே மோசே தன் கையைச் சமுத்திரத்தின்மேலே நீட்டினான்; அப்பொழுது விடியற்காலத்திற்குமுன்னே சமுத்திரம் தன் பலத்தோடே திரும்பி வந்தது; எகிப்தியர் அதற்கெதிராக ஓடும்போது, கர்த்தர் அவர்களைக் கடலின் நடுவிலே விழத்தள்ளினார்.

௨௮ தண்ணீர்கள் திரும்பி வந்து, இரதங்களையும் குதிரைக்காரரையும் அவர்கள் பிறகாலே சமுத்திரத்திற்குள் பிரவேசித்திருந்த பார்வோனின் இராணுவமனைத்தையும் மூடிப்போட்டன; அவர்களில் ஒருவனாகிலும் மீதியானதில்லை.

௨௯ இஸ்ரவேல் புத்திரரோவென்றால், சமுத்திரத்தின் நடுவாக வெட்டாந்தரையிலே நடந்துபோனார்கள்; தண்ணீர்கள் அவர்களுக்கு அவர்கள் வலதுபுறத்திலும் அவர்கள் இடதுபுறத்திலும் மதிலாக இருந்தன.

௩௰ ¶ இப்படிக் கர்த்தர் அந்நாளிலே இஸ்ரவேலரை எகிப்தியரின் கைக்குத் தப்புவித்து இரட்சித்தார்; இஸ்ரவேலர் எகிப்தியரைக் கடல்கரையிலே செத்துக்கிடக்கக் கண்டார்கள்.

௩௧ கர்த்தர் எகிப்தியரில் செய்த அவருடைய பெரிய கைக்கிரியையை இஸ்ரவேல் கண்டது; ஆகையால் சனம் கர்த்தருக்குப் பயந்து, கர்த்தர்பேரிலும் அவருடைய ஊழியக்காரனாகிய மோசேயின்பேரிலும் விசுவாசித்தது.

## ௰௫. அதிகாரம்.

அப்பொழுது மோசேயும் இஸ்ரவேல் புத்திரரும் கர்த்தரைப் பாடின பாட்டாவது: கர்த்தரைப் பாடுவேன்; ஏனென்றால் உயரவே உயர்ந்தார்; குதிரையையும் அதில் ஏறினவனையும் கடலிலே தள்ளினார்.

௨ ¶ *என் பலமும் என் கீதமும் கர்த்தர்; அவர் எனக்கு இரட்சிப்பானவர்; அவரே என் பராபரன், ஆகையால் அவருக்கு வாசஸ்தலத்தை ஆயத்தம்பண்ணுவேன்; அவரே என் தகப்பனுடைய பராபரன்; ஆகையால் அவரை உயர்த்துவேன். *சங். ௱௰௮. ௰௪.

௩ கர்த்தரே யுத்தம்பண்ண வல்லவர்; கர்த்தரென்பது அவருடைய நாமம்.

௪ பார்வோனின் இரதங்களையும் அவன் இராணுவத்தையும் சமுத்திரத்திலே தள்ளிவிட்டார்; தெரிந்துகொள்ளப்பட்ட அவன் ஆதிக்கக்காரர் நாணல்சமுத்திரத்தில் அமிழ்ந்துபோனார்கள்.

௫ ஆழங்கள் அவர்களை மூடின; கல்லைப்போலப் பள்ளங்களில் இறங்கினார்கள்.

௬ கர்த்தாவே, உம்முடைய வலதுகரம் பலத்தினால் மகிமையாயிருக்கின்றது; கர்த்தாவே, உம்முடைய வலதுகரம் பகைஞனை நொறுக்கிவிட்டது.

௭ உமக்கு விரோதமாய் எழும்பினவர்களை உமது முக்கியத்தின் மகத்துவத்தினாலே நிர்மூலமாக்கினீர்; உம்முடைய உக்கிரத்தை அனுப்பினீர்; அது அவர்களைத் தாளடி

Digitized by Google

யைப்போலப் பட்சித்தது.

௮ உமது நாசியின் சுவாசத்தினாலே தண்ணீர்கள் குவிந்தன; நீரோட்டங்கள் குவியலாக நின்றன; ஆழங்கள் நடுக்கடலிலே கெட்டியாயின.

௯ பின் தொடருவேன், பிடிப்பேன், கொள்ளையாடிப் பங்கிடுவேன், என் ஆத்துமா அவர்களால் நிரப்பப்படும், என் பட்டயத்தை உருவுவேன், என் கை அவர்களைச் சிதறடிக்குமென்று பகைஞன் சொன்னான்.

௰ உம்முடைய காற்றினாலே ஊதினீர், கடல் அவர்களை மூடிற்று; இயத்தைப்போல மிகுந்த தண்ணீர்களில் அமிழ்ந்துபோனார்கள்.

௰௧ கர்த்தாவே, தேவர்களில் உமக்கொப்பானவனார்? பரிசுத்தத்தில் மகத்துவமுள்ளவரும் துதிகளில் பயப்படத்தக்கவரும் அற்புதங்களைச் செய்கிறவருமாகிய உமக்கொப்பானவனார்? *

௰௨ உம்முடைய வலதுகையை நீர் நீட்டினீர், பூமி அவர்களை விழுங்கிவிட்டது.

௰௩ நீர் மீட்டுக்கொண்ட இந்தச் சனத்தை உம்முடைய கிருபையினாலே அழைத்துவந்தீர்; உம்முடைய பரிசுத்த வாசஸ்தலத்திற்கு நேராக அதை உம்முடைய பலத்தினாலே வழிநடத்தினீர்.

௰௪ சனசதனங்கள் அதைக் கேட்டுத் தத்தளிக்கும்; பெலிஸ்தேயாவின் குடிகளை வேதனை பிடிக்கும்.

௰௫ அப்பொழுது ஏதோமின் பிரபுக்கள் கலங்குவார்கள்; மோவாபில் வல்லமையுள்ளவர்களை நடுக்கம்பிடிக்கும்; கானானின் குடிகளெல்லாம் கரைந்துபோவார்கள்.

௰௬ பயங்கரமும் திகிலும் அவர்கள்மேலிறங்கும்; கர்த்தாவே, உமது சனம் கடக்கும்மட்டும், நீர் மீட்ட இந்தச் சனமே கடந்துபோகும்மட்டும், அவர்கள் உம்முடைய புயத்தின் மகத்துவத்தினாலே கல்லைப்போல மவுனமாயிருப்பார்கள்.

௰௭ நீர் அவர்களை உட்பிரவேசிக்கப்பண்ணி, அவர்களைக் கர்த்தராகிய தேவரீர் வாசம்பண்ணுகிறதற்குப் படைத்த தானமாகிய உம்முடைய சுதந்தரத்தின் பர்வதத்திலும், ஆண்டவராகிய தேவரீருடைய கரம் ஸ்தாபித்த பரிசுத்த ஸ்தலத்திலும் நாட்டுவீர்.

௰௮ *கர்த்தர் சதாகாலங்களாகிய என்றென்றைக்கும் இராசரிகம்பண்ணுவார்.

*சங். ௯௩. ௧.

௰௯ ¶ ஏனென்றால் பார்வோனின் குதிரை அவன் இரதங்களோடும் அவன் குதிரைக்காரரோடும் சமுத்திரத்துக்குள் பிரவேசித்தது; அப்பொழுது கர்த்தர் சமுத்திரத்தின் தண்ணீர்களை அவர்கள்மேலே திரும்பப்பண்ணினார்; இஸ்ரவேல் புத்திரரோவென்றால் சமுத்திரத்தின் நடுவே வெட்டாந்தரையிலே நடந்துவந்தார்களென்று பாடினார்கள்.

௨௰ ¶ ஆரோனின் சகோதரியாகிய மீரியாமென்ற தீர்க்கதரிசியும் தன் கையிலே உடுக்கை எடுத்துக்கொண்டாள்; சகல ஸ்திரிகளும் உடுக்கைகளையும் தேவாத்தியங்களையும் எடுத்து, அவள் பிறகாலே புறப்பட்டார்கள்.

௨௰௧ ¶ மீரியாம் அவர்களுக்கு மறுமொழியாக, கர்த்தரைப் பாடுங்கள்; ஏனென்றால் உயரவே உயர்ந்தார்; குதிரையையும் அதிலேறினவனையும் கடலிலே தள்ளினாரென்பது முதலானவைகளைப் பாடினாள்.

௨௰௨ ¶ பிற்பாடு மோசே இஸ்ரவேலை நாணல் சமுத்திரத்தைவிட்டுப் பயணம்புறப்படப்பண்ணினான்; அவர்கள் சூர்வனாந்தரத்திற்குப் புறப்பட்டுப்போய், மூன்று நாள் வனாந்தரத்திலே தண்ணீர் கிடையாமல் நடந்து,

௨௰௩ மாராவிலே வந்தார்கள்; ஆனால் மாராவின் தண்ணீரைக் குடிக்க அவர்களுக்குக் கூடாதிருந்தது; ஏனெனில் அது கசப்பாயிருந்தது; ஆனதுகொண்டு அவ்விடத்திற்கு மாராவென்று பேரிடப்பட்டது.

௨௰௪ அப்பொழுது சனம் மோசேக்கு விரோதமாய் முறுமுறுத்து, எதைக் குடிப்போமென்றார்கள்.

Digitized by Google

௨௫ அவன் மோசே கர்த்தரைநோக்கிக் கூப்பிட்டான்; அப்பொழுது கர்த்தர் மோசேக்கு ஒரு மரத்தைக் காண்பித்தார்; அதை அவன் தண்ணீரிலே போட்டபொழுது, தண்ணீர் தித்திப்பாயிற்று; அவர் அங்கே அவர்களுக்குப் பிரமாணமும் நியாயமும் கட்டளையிட்டு, அங்கே அவர்களைச் சோதித்துச் சொன்னதாவது:

௨௬ நீ உன் பராபரனாகிய கர்த்தரின் சத்தத்தைக் கேட்கவே கேட்டு, அவர் கண்களுக்குச் .செம்மையானதைச் செய்து, அவர் கற்பனைகளுக்குச் செவிகொடுத்து, அவருடைய எல்லாக் கட்டளைகளையும் கைக்கொண்டால், நாம் எகிப்தியரின்மேல் இறக்கப்பண்ணின வியாதிகளில் ஒன்றையும் உன்மேலே இறங்கப்பண்ணேனும்; ஏனெனில் நாம் உன் பரிகாரியாகிய கர்த்தரென்றார்.

௨௭ ¶ பிற்பாடு ஏலிமுக்கு வந்தார்கள்; அங்கே பன்னிரண்டு நீரூற்றுகளும் எழுபது பேரீச்சமரங்களும் இருந்தன; அங்கே தண்ணீர்களண்டையிலே பாளயமிறங்கினார்கள்.

## ௰௬. அதிகாரம்.

இஸ்ரவேல் புத்திரர் ஏலிமைவிட்டுப் பயணம் புறப்பட்டார்கள்; அவர்கள் எகிப்து தேசத்திலிருந்து புறப்பட்ட இரண்டாம் மாதம் பதினைந்தாம் தேதியிலே, அவர்களுடைய சபையெல்லாம் ஏலிமுக்கும் சீனாய்க்கும் நடுவே இருக்கிற சின்வனாந்தரத்திலே வந்தது.

௨ அங்கே வனாந்தரத்திலே இஸ்ரவேல் புத்திரரின் சபையெல்லாம் மோசேக்கும் ஆரோனுக்கும் விரோதமாக முறுமுறுத்து,

௩ அவர்களோடே சொன்னதாவது: *நாங்கள் இறைச்சிப் பானைகளண்டையிலே உட்கார்ந்து அப்பத்தைத் திர்ப்தியாகச் சாப்பிட்ட எகிப்துதேசத்திலே, கர்த்தரின் கையினாலே செத்துப்போனோமானால் தாவிலை; ஏனெனில் இந்தக் கூட்டத்தை எல்லாம் பட்டணியினாலே கொன்றுபோட எங்களைப் புறப்படப்பண்ணி, இந்த வனாந்தரத்திலே அழைத்துவந்தீர்களென்றார்கள். *௪ மோ. ௰௧. ௪.

௪ ¶ அப்பொழுது கர்த்தர் மோசேயோடே சொன்னதாவது: இதோ, நாம் உங்களுக்கு வானத்திலிருந்து அப்பம் வருஷிக்கப்பண்ணுவோம், சனம் நமது நியாயப்பிரமாணத்திலே நடக்குமோ இல்லையோ என்று நாம் சோதிக்கும்படிக்கு, அது புறப்பட்டு அன்றன்றுள்ள படியை ஒவ்வொருநாளிலே சேர்க்கக்கடவது.

௫ ஆறாம் நாளிலோவென்றால், அவர்கள் கொண்டுவருகிறதைச் சேகரம்பண்ணக்கடவார்கள்; அவர்கள் தினம்தினம் சேர்க்கிறதைப்பார்க்கிலும் அப்பொழுது இரண்டத்தனை உண்டாயிருக்குமென்றார்.

௬ ¶ அப்பொழுது மோசேயும் ஆரோனும் இஸ்ரவேல் புத்திரரெல்லாரோடும் சொன்னதாவது: கர்த்தர் உங்களை எகிப்துதேசத்திலிருந்து புறப்படப்பண்ணினவரென்பதைச் சாயங்காலத்திலே அறிவீர்கள்.

௭ விடியற்காலத்திலே கர்த்தருடைய மகிமையையும் காண்பீர்கள்; ஏனெனில் கர்த்தருக்கு விரோதமான உங்கள் முறுமுறுப்புகளை அவர் கேட்டார்; நீங்கள் எங்களுக்கு விரோதமாய் முறுமுறுக்கிறதற்கு நாங்கள் எம்மாத்திரம் என்றார்கள்.

௮ பின்னையும் மோசே சொன்னதாவது: கர்த்தர் உங்களுக்குச் சாயங்காலத்திலே நீங்கள் புசிக்கிறதற்கு இறைச்சியையும், விடியற்காலத்திலே நீங்கள் திர்ப்திஅடையும்படிக்கு அப்பத்தையும் கொடுக்கையில் அதைக் காண்பீர்கள்; ஏனெனில் கர்த்தருக்கு விரோதமாக நீங்கள் முறுமுறுத்த உங்கள் முறுமுறுப்புகளை அவர் கேட்டார்; நாங்கள் எம்மாத்திரம்? உங்கள் முறுமுறுப்புகள் எங்களுக்கல்ல, கர்த்தருக்கே விரோதமாயிருக்கிறதென்றான்.

௯ பிற்பாடு மோசே ஆரோனுடனே, கர்த்தருக்குமுன்பாகச் சேருங்கள்; ஏனெனில்

Digitized by Google

உங்கள் முறுமுறுப்புகளைக் கேட்டாரென்று இஸ்ரவேல் புத்திரரின் சபைக்கெல்லாம் சொல்லென்றான்.

௧௦ ¶ ஆரோன் இஸ்ரவேல் புத்திரரின் சபைக்கெல்லாம் இதைச் சொல்லுகிறபொழுது, அவர்கள் வனாந்தர திசையாகத் திரும்பிப் பார்த்தார்கள்; அப்பொழுது இதோ, கர்த்தருடைய மகிமை மேகத்திலே காணப்பட்டது.

௧௧ கர்த்தர் மோசேயோடே பேசிச் சொன்னதாவது:

௧௨ இஸ்ரவேல் புத்திரரின் முறுமுறுப்புகளைக் கேட்டோம்; நீ அவர்களுடனே பேசி, நீங்கள் சாயங்காலத்திலே இறைச்சியைப் புசித்து, விடியற்காலத்திலே அப்பத்தால் திர்ப்தியாகி, நாம் உங்கள் பராபரனாகிய கர்த்தரென்பதை அறிவீர்களென்று சொல்லென்றார்.

௧௩ ¶ சாயங்காலத்தில் சம்பவித்ததேதென்றால், *காடைகள் வந்தேறிப் பாளயத்தை மூடின; விடியற்காலத்திலோவென்றால், பாளயத்தைச் சுற்றிப் பனிவிழுந்திருந்தது. *௪ மோ. ௧௧. ௩௧.

௧௪ விழுந்திருந்த பனி எடுபட்டபிற்பாடு, இதோ, வனாந்தரத்தின்மீதெங்கும் உருட்சியான பொடித்துணிக்கைகள் இருந்தன; அவைகள் தரையின்மேல் உறைந்த பனியத்தனை பொடியாய்க் கிடந்தன.

௧௫ இஸ்ரவேல் புத்திரர் அதைக் கண்டு, ஒருவருக்கொருவர் அது மன்னாவென்றார்கள்; ஏனெனில் அது இன்னதென்று அறியாதிருந்தார்கள்; அப்பொழுது மோசே அவர்களோடே சொன்னதாவது: இது கர்த்தர் உங்களுக்குப் புசிக்கக்கொடுத்த அப்பம்.

௧௬ கர்த்தர் கற்பித்த காரியம் ஏதென்றால், அவனவன் புசிக்கத்தகும்மட்டும் அதிலெடுத்துச் சேர்க்கக்கடவீர்கள்; உங்கள் ஆத்துமாக்களுடைய இலக்கத்தின்படியே, அவனவன் தன்தன் கூடாரத்தில் இருக்கிறவர்களுக்காக ஒவ்வொரு தலைக்கு ஒவ்வொரு நாழிவிழுக்காடு எடுத்துக் கொள்ளக்கடவீர்களென்றான்.

௧௭ இஸ்ரவேல் புத்திரர் அப்படிச் செய்து, சிலர் அநேகமும் சிலர் கொஞ்சமுமாய்ச் சேர்த்தார்கள்.

௧௮ பிறகு நாழியினால் அளந்தார்கள்; *அநேகமாய்ச்சேர்த்தவனுக்கு அதிகமானதுமில்லை; கொஞ்சமாய்ச் சேர்த்தவனுக்கு குறைச்சலானதுமில்லை; அவரவர் தாங்கள் புசிக்கத்தகும்மட்டும் எடுத்துக்கொண்டார்கள். *௨ கொரி. ௮. ௧௫.

௧௯ மோசே அவர்களுடனே, ஒருவனும் அதில் விடியற்காலம்மட்டும் ஒன்றும்வைக்கவேண்டாமென்றான்.

௨௦ ஆனால் மோசேயின் சொல்கேளாமல் சிலர் அதில் விடியற்காலம்மட்டும் கொஞ்சம் மீதியாய் வைத்தார்கள்; அது பூச்சி பிடித்து நாற்றம் எடுத்தது; அவர்கள்பேரிலே மோசே கடுங்கோபம் அடைந்தான்.

௨௧ அதைக் காலமே அவனவன் புசிக்கத்தகும்மட்டும் சேர்த்தார்கள்; ஏனெனில் வெயில் ஏறுகிறபொழுது உருகிப்போம்.

௨௨ ¶ ஆறும் நாளிலே சம்பவித்ததேதென்றால், அவர்கள் இரண்டத்தனை அப்பம் ஒவ்வொருவனுக்கு இரண்டு இரண்டு நாழியாகச் சேர்த்தார்கள்; அப்பொழுது சபையின் தலைவரெல்லாரும் வந்து, அதை மோசேக்கு அறிவித்தார்கள்.

௨௩ அவன் இவர்களோடே சொன்னதாவது: கர்த்தர் சொன்னது இதுதானே; நாளைக் கர்த்தருடைய பரிசுத்த ஓய்வுநாளாகிய ஓய்ந்திருக்குதல்; நீங்கள் சுடப்போகிறதைச் சுட்டு, சமைக்கப்போகிறதைச் சமைத்து, மீதியாயிருக்கிறதையெல்லாம் நாளைமட்டும் உங்களுக்காக வைத்துவையுங்களென்றான்.

௨௪ மோசே கற்பித்தபடியே அதை மறுநாள்மட்டும் வைத்தார்கள்; அப்பொழுது அது நாறினதுமில்லை; அதிலே பூச்சி பிடித்திருந்ததுமில்லை.

௨௫ அப்பொழுது மோசே சொன்னதாவ



Digitized by Google

௨௫ அதை இன்றைக்குப் புசியுங்கள்; ஏனெனில் இன்று கர்த்தரின் ஓய்வுநாள்; இன்று நீங்கள் அதை வெளியிலே கண்டுபிடிப்பதில்லை.

௨௬ ஆறுநாளும் அதைச் சேர்ப்பீர்களாக; ஏழாம் நாள் ஓய்வுநாளாயிருக்கின்றது; அதிலே அது உண்டாயிராதென்றான்.

௨௭ ஏழாம் நாளிலே சம்பவித்ததேதெனில்; சனத்திலே சிலர் அதைச் சேர்க்கப் புறப்பட்டார்கள்; ஆனால் கண்டுபிடியாதே போனார்கள்.

௨௮ அப்பொழுது கர்த்தர் மோசேயோடே சொன்னதாவது: நம்முடைய கற்பனைகளையும் நம்முடைய நியாயப்பிரமாணங்களையும் கைக்கொள்ள எந்தமட்டும் மனதில்லாதே போகிறீர்கள்.

௨௯ பாருங்கள், கர்த்தர் உங்களுக்கு ஓய்வுநாளைக் கொடுத்தபடியினாலே அவர் உங்களுக்கு ஆறாம் நாளிலே இரண்டுநாளுடைய அப்பத்தைக் கொடுக்கிறாரே; ஏழாம் நாளில் ஒருவனும் தன் தானத்திலிருந்து புறப்படாமல், நீங்கள் அவனவன் தன் தன் தானத்தில் இருங்களென்றார்.

௩௰ அப்படியே சனம் ஏழாம் நாளிலே ஓய்ந்திருந்தது.

௩௧ இஸ்ரவேல் வீட்டார் அதற்கு மன்னாவென்று பெயரிட்டார்கள்; *அது கொத்துமல்லி அம்மாத்திரமும் வெண்மையுமாயிருந்தது; அதின் ருசி தேனிட்ட நச்சாயத்திற்கொப்பாயிருந்தது. *௪ மோ. ௰௧. ௭.

௩௨ ¶ மோசே சொன்னதாவது: கர்த்தர் கற்பித்த காரியமேதெனில், நாம் உங்களை எகிப்துதேசத்திலிருந்து புறப்படப்பண்ணினபொழுது, உங்களுக்கு வனாந்தரத்திலே புசிக்கக்கொடுத்த அப்பத்தை உங்கள் தலைமுறைகள் பார்க்கும்படிக்கு, அவர்களுக்காகக் காத்துவைப்பதற்கு அதிலே ஒருநாழி நிரம்ப எடுத்துவை என்பதுதான் என்றான்.

௩௩ பின்னையும் மோசே ஆரோனுடனே, *நீ ஒரு பாத்திரத்தை வாங்கி, அதிலே ஒருநாழி மன்னாவைப் போட்டு, அதை உங்கள் தலைமுறைகளுக்காகக் காப்பதற்குக் கர்த்தருக்குமுன்பாக வை என்றான். *எபி. ௯. ௪.

௩௪ கர்த்தர் மோசேக்குக் கற்பித்தபடியே அது காக்கப்படும்படிக்கு, ஆரோன் அதைச் சாட்சிக்குமுன்பாக வைத்தான்.

௩௫ *இஸ்ரவேல் புத்திரர் குடியிருப்பான தேசத்திற்குவரும்மட்டும் நாற்பது வருஷம் மன்னாவைப் புசித்தார்கள்; அவர்கள் கானான்தேசத்தின் எல்லையில் வரும்மட்டாகத்தானே மன்னாவைப் புசித்தார்கள். *யோசு. ௫. ௰௨.

௩௬ ஒருநாழியோவென்றால், மரக்காலிலே பத்தில் ஒரு பங்காயிருக்கின்றது.

## ௰௭. அதிகாரம்.

பிற்பாடு இஸ்ரவேல் புத்திரரின் சபையெல்லாம் சீன்வனாந்தரத்திலிருந்து பயணம் புறப்பட்டு, கர்த்தருடைய கட்டளையின்படியே பண்ணும் தங்கள் பயணங்களில் இரவீதிமிலே வந்து பாளயமிறங்கினார்கள்; அங்கே சனம் குடிக்கத் தண்ணீர் இல்லாதிருந்தது.

௨ அப்பொழுது சனம் மோசேயோடே வாதுபண்ணி, நாங்கள் குடிக்கிறதற்கு எங்களுக்குத் தண்ணீர் தாருங்களென்றார்கள்; மோசேயோவென்றால் அவர்களுடனே, என்னோடே ஏன் வாதுபண்ணுகிறீர்கள்? கர்த்தரை ஏன் பரிட்சைபார்க்கிறீர்களென்றான்.

௩ ஆனால் சனம் அவ்விடத்திலே தண்ணீர்த் தவனமாயிருந்தபடியினாலே, சனம் மோசேக்கு விரோதமாக முறுமுறுத்து, நீர் எங்களையும் எங்கள் பிள்ளைகளையும் எங்கள் ஆடுமாடுகளையும் தண்ணீர்த் தவனத்தினாலே கொன்றுபோட எங்களை எகிப்திலிருந்து வந்து ஏறப்பண்ணினதேதென்றார்கள்.

௪ ¶ மோசே கர்த்தரை நோக்கிக் கூப்பிட்டு, இந்தச் சனத்திற்கென்னசெய்வேன்? *அவர்கள் என்னைக் கல்லெறியச் சற்றுத் தப்புமென்றான். *௪ மோ. ௰௪. ௰.

Digitized by Google

௫ அப்பொழுது கர்த்தர் மோசேயோடே சொன்னதாவது: நீ சனத்திற்குமுன்பாக நடந்து, இஸ்ரவேல் மூப்பரில் சிலரை உன்னோடே கூட்டி, நீ ஆற்றை அடித்த உன் கோலை உன் கையிலே பிடித்துக்கொண்டுபோ.

௬ இதோ, நாம் அங்கே ஓரேபிலே உனக்குமுன்பாகக் கல்மலையின்மேல் நிற்போம்; அங்கே கல்மலையை அடிப்பாயாக; அப்பொழுது சனம் குடிக்க, அதிலிருந்து தண்ணீர் புறப்படுமென்றார்; இப்படியே மோசே இஸ்ரவேலருடைய மூப்பரின் கண்களுக்குமுன்பாகச் செய்தான்.

௭ இஸ்ரவேல் புத்திரருடைய வாதின்நிமித்தமும், கர்த்தர் எங்கள் நடுவில் இருக்கிறாரோ இல்லையோ என்று, அவர்கள் கர்த்தரைப் பரிட்சைபார்த்ததின்நிமித்தமும், அவன் அந்த ஸ்தலத்திற்கு *மாசா என்றும் மெரிபாவென்றும் பெயரிட்டான். *சங். ௯௫. ௮, ௯.

௮ ¶ ஆமலேக்கியர் வந்து இரவீதிமிலே இஸ்ரவேலரோடே யுத்தம்பண்ணினார்கள்.

௯ அப்பொழுது மோசே யோசுவாவுடனே, நீ நமக்கு மனிதரைத் தெரிந்துகொண்டு புறப்பட்டு, ஆமலேக்குக்கு விரோதமாக யுத்தம்பண்ணு; நாளைக்கு நான் மேட்டினுடைய சிகரத்தின்மேலே பராபரனுடைய கோலை என் கையில் பிடித்துக்கொண்டு நிற்பேன் என்றான்.

௰ மோசே தனக்குச் சொன்னபடியே யோசுவா ஆமலேக்குக்கு விரோதமாக யுத்தம்பண்ணும்படிக்குச் செய்தான்; ஆனால் மோசேயும், ஆரோனும், ஊரும் மேட்டினுடைய சிகரத்தின்மேல் ஏறினார்கள்.

௰௧ அப்பொழுது சம்பவித்ததேதென்றால், மோசே தன் கையை ஏறெடுத்திருக்கையில் இஸ்ரவேல் மேல்கொண்டது; ஆனால் அவன் தன் கையைத் தாழவிடுகையில், ஆமலேக் மேல்கொண்டது.

௰௨ மோசேயின் கைகளோவென்றால்பாரமாயின; ஆகையால் ஒரு கல்லைக் கொண்டுவந்து அவன் கீழே வைத்தார்கள்; அதின்மேல் உட்கார்ந்தான்; ஆரோனும் ஊருமோவெனில் ஒருவன் இந்தப்பக்கமும் ஒருவன் அந்தப்பக்கமுமாயிருந்து, அவன் கைகளைத் தாங்கினார்கள்; இந்த அடைவாய் அவன் கைகள் சூரியன் அஸ்தமிக்குமட்டும் ஒரு நேராயிருந்தன.

௰௩ அப்படியே யோசுவா ஆமலேக்கையும் அவன் சனத்தையும் பட்டயத்தின்கருக்கினாலே முறிய அடித்தான்.

௰௪ *பிற்பாடு கர்த்தர் மோசேயுடனே, நீ இதை நினைவுகூருதலுக்காக ஒரு புத்தகத்தில் எழுதி, யோசுவாவின் செவிகளுக்கு ஒப்புவி; ஏனெனில் ஆமலேக்கை வானத்தின்கீழிராதபடிக்கு நாசம்பண்ணவே பண்ணுவோமென்றார். *௫ மோ. ௨௫. ௰௭, ௰௯. ௧ சாமு. ௰௫. ௨௩.

௰௫ மோசே ஒரு பீடத்தைக்கட்டி, அதற்குக் கர்த்தர் என்னுடைய கொடியென்று பேரிட்டு,

௰௬ ஆமலேக்கின் கை கர்த்தருடைய ஆசனத்திற்கு விரோதமானபடியினாலே, கர்த்தரின் யுத்தம் தலைமுறை தலைமுறையாக அவனுக்கு விரோதமாக இருக்குமென்றான்.

## ௰௮. அதிகாரம்.

பராபரன் மோசேக்கும் தமது சனமாகிய இஸ்ரவேலுக்கும் செய்ததெல்லாவற்றையும் கர்த்தர் இஸ்ரவேலை எகிப்திலிருந்து புறப்படப்பண்ணினதையும் *மீதியானில் ஆசாரியனாயிருக்கிற மோசேயின் மாமனாகிய எத்திரோ கேட்டபொழுது, *௨ மோ. ௩. ௧.

௨ அவன் *மோசே திரும்பத் தன்னண்டைக்கனுப்பி இருந்த அவன் பெண்சாதியாகிய சிப்போராளையும், *௨ மோ. ௪. ௨௫.

௩ அவனுடைய இரண்டு குமாரரையும் கூட்டிக்கொண்டுபயணப்பட்டான்; *ஒருவன் பேர் கேர்சோன்; ஏனென்றால் அந்நியதேசத்திலே பரதேசியானேனென்றான். *௨ மோ. ௨. ௨௨.



Digitized by Google

௪ மற்றவன் பேர் எலியேசர்; ஏனென்றால் என் பிதாவின் பராபரன் துணையாயிருந்து, என்னைப் பார்வோனின் பட்டயத்திற்குத் தப்புவித்தாரென்றான்.

௫ மோசேயின் மாமனாகிய எத்திரோ அவன் குமாரரோடும் அவன் பெண்சாதியோடுங்கூட மோசே பாளயம் போட்டிருந்த பராபரனுடைய பர்வதம் இருக்கும் வனாந்தரத்திலே அவனண்டையில் வந்து,

௬ எத்திரோ என்ற உன் மாமனாகிய நானும் உன் பெண்சாதியும் அவளோடேகூட அவளுடைய இரண்டு குமாரரும் உன்னண்டைக்கு வந்தோமென்று மோசேக்குச் சொல்லி அனுப்பினான்.

௭ அப்பொழுது மோசே தன் மாமனுக்கு எதிர்கொண்டு போய், அவனை வணங்கி முத்தஞ்செய்தான்; ஒருவரை ஒருவர் சுகமுண்டோவென்று கேட்டு, கூடாரத்திலே வந்தார்கள்.

௮ பிற்பாடு மோசே தன் மாமனுக்குக் கர்த்தர் இஸ்ரவேலுக்காகப் பார்வோனுக்கும் எகிப்தியருக்கும் செய்தவை எல்லாவற்றையும் வழியிலே தங்களுக்கு நேரிட்ட எல்லா வருத்தத்தையும் கர்த்தர் தங்களை நீங்கலாக்கி விடுவித்ததையும் விவரித்தான்.

௯ கர்த்தர் இஸ்ரவேலை எகிப்தியரின் கைக்குத் தப்புவித்து, அதற்குச் செய்த எல்லா நன்மையின்நிமித்தமும் எத்திரோ சந்தோஷப்பட்டுச் சொன்னதாவது:

௰ உங்களை எகிப்தியரின் கைக்கும் பார்வோனின் கைக்கும் தப்புவித்து, எகிப்தியருடைய கையின் கீழிருந்த சனத்தை விடுவித்த கர்த்தர் ஸ்தோத்திரிக்கப்படடவர்.

௰௧ கர்த்தர் எல்லாத் தேவர்களையும்பார்க்கப் பெரியவரென்பதை இப்பொழுது அறிவேன்; ஏனெனில் அவர்கள் இடும்புசெய்த காரியத்திலே அவர்களை மேல்கொண்டாரென்று சொல்லி,

௰௨ மோசேயின் மாமனாகிய எத்திரோ சர்வாங்கதகனத்தையும் பலிகளையும் பராபரனுக்குக் கொண்டுபோய்ச் செலுத்தினான்; பிற்பாடு ஆரோனும் இஸ்ரவேல் மூப்பரனைவரும் மோசேயின் மாமனோடேகூடப் பராபரனுக்கு முன்பாக அப்பம் புசிக்கவந்தார்கள்.

௰௩ ¶ மறுநாளிலே சம்பவித்ததேதெனில், மோசே சனத்தை நியாயம்விசாரிக்க உளுக்காந்தான்; சனம் காலமே துவக்கிச் சாயங்காலம்மட்டும் மோசேக்கு முன்பாக நின்றது.

௰௪ அவன் சனத்திற்காகச் செய்ததையெல்லாம் மோசேயின் மாமன் கண்டு, நீ சனத்திற்காகச் செய்கிற இந்தக் காரியமென்ன? நீ ஒருவனே உளுக்காந்திருக்கச் சனமெல்லாம் காலமேதுவக்கிச் சாயங்காலம்மட்டும் உனக்குமுன்பாக நிற்பானேனென்றான்.

௰௫ அப்பொழுது மோசே தன் மாமனுக்குச் சொன்னது: பராபரனைக் கேட்கச் சனம் என்னண்டைக்கு வரும்.

௰௬ ஏனெனில் அவர்களுக்கு ஒருகாரியம் இருந்தால் என்னண்டைக்கு வருகிறார்கள்; அப்பொழுது நான் அவனவனுக்கும் அவனவனுக்கடுத்தவனுக்கும் நியாயந்தீர்த்து, பராபரனுடைய சட்டங்களையும் அவருடைய நியாயப்பிரமாணங்களையும் அறிவிக்கிறேனென்றான்.

௰௭ அப்பொழுது மோசேயின் மாமன் அவனோடே சொன்னதாவது: நீ செய்கிற காரியம் நல்லதல்ல.

௰௮ நீயும் தொய்யவே தொய்ந்துபோகிறாய்; உன்னோடிருக்கிற இந்தச் சனமும் அப்படித்தான்; ஏனென்றால் அது உனக்கு மிஞ்சின பாரமானகாரியம்; நீ ஒருவனாய் அதைச் செய்யக்கூடாது.

௰௯ இப்பொழுதும் என் சொல்லைக்கேள்; உனக்கு ஒரு ஆலோசனை சொல்லுவேன்; அப்பொழுது பராபரன் உன்னோடுகூட இருப்பார்; சனத்திற்காக நீ பராபரனுக்கு முன்பாக இரு; நீ விசேஷங்களைப் பராபரனண்டைக்குக் கொண்டுபோய்,

Digitized by Google

௨௰ கட்டளைகளையும் நியாயப்பிரமாணங்களையும் அவர்களுக்கு வெளிப்படுத்தி, அவர்கள் நடக்கவேண்டிய வழியையும் அவர்கள் செய்யவேண்டிய கிரியையையும் அவர்களுக்குத் தெரியப்பண்ணுவாயாக.

௨௧ ஆனால் நீ எல்லாச்சனத்திலும் பராபரனுக்குப் பயந்தவர்களும் உண்மையுள்ளவர்களும் பொருளாசையைப் பகைக்கிறவர்களுமான திறமையுள்ள மனிதரைப் பார்த்து, அவர்களை அவர்கள்மேல் ஆயிரம்பேருக்கு அதிபதிகளாகவும், நூறுபேருக்கு அதிபதிகளாகவும், ஐம்பதுபேருக்கு அதிபதிகளாகவும், பத்துப்பேருக்கு அதிபதிகளாகவும் வை.

௨௨ அவர்கள் சகல காலத்திலும் சனத்தை நியாயம் விசாரித்து, சகல பெரியகாரியத்தையும் உன்னண்டைக்குக் கொண்டுவந்து, சகல சிறிய காரியத்தையும் தாங்கள் தானே தீர்க்கக்கடவர்கள்; இப்படி உன்மேல் இருக்கிற பாரத்தை லகுவாக்கு, அவர்கள் உன்னோடேகூடச் சுமப்பார்களாக.

௨௩ இந்தப்பிரகாரமாக நீ செய்வதும் இப்படிப் பராபரன் உனக்குக் கட்டளையிடுவதும் உண்டானால், நீ தரித்திருக்கக்கூடும்; இந்த எல்லாச் சனமும் சுகமாய்த் தங்களிடத்திற்கு வந்து சேரலாமென்றான்.

௨௪ ¶ மோசே தன் மாமன் சொல்கேட்டு, அவன் சொன்னபடி எல்லாம் செய்தான்.

௨௫ மோசே இஸ்ரவேலரிலெல்லாம் திறமையுள்ள மனிதரைத் தெரிந்துகொண்டு, அவர்களை ஆயிரம்பேருக்கு அதிபதிகளாகவும், நூறுபேருக்கு அதிபதிகளாகவும், ஐம்பதுபேருக்கு அதிபதிகளாகவும், பத்துப்பேருக்கு அதிபதிகளாகவும் சனத்தின்மேலே தலைவராக்கினான்.

௨௬ அவர்கள் சகல காலத்திலும் சனத்தை நியாயம் விசாரிப்பார்கள்; பலத்த காரியத்தை மோசே அண்டைக்குக் கொண்டுவந்து, சிறிய காரியத்தை எல்லாம் தாங்கள்தானே தீர்ப்பார்கள்.

௨௭ பிற்பாடு மோசே தன் மாமனை அனுப்பிவிட்டான்; இவன் திரும்பத் தன் தேசத்திற்குப் போய்விட்டான்.

## ௰௯. அதிகாரம்.

இஸ்ரவேல் புத்திரர் எகிப்துதேசத்திலிருந்து புறப்பட்ட மூன்றாம்மாதமாகிற அன்றுதானே சீனாய்வனாந்திரத்திலே வந்தார்கள்.

௨ அவர்கள் இரவீதிமிலிருந்து பயணம் புறப்பட்டு, சீனாய்வனாந்தரத்திலே வந்து, வனாந்தரத்திலே பாளயமிறங்கினார்கள்; அங்கே பர்வதத்திற்கெதிராக இஸ்ரவேல் பாளயம் இறங்கினபொழுது,

௩ மோசே பராபரனண்டைக்கேறினான்; கர்த்தர் பர்வதத்திலிருந்து அவனைக் கூப்பிட்டுச் சொன்னதாவது: நீ யாக்கோபு வீட்டாருக்குச் சொல்லவும் இஸ்ரவேல் புத்திரருக்கு அறிவிக்கவும் வேண்டியதேதெனில்,

௪ நாம் எகிப்தியருக்குச் செய்ததையும் *நாம் உங்களைக் கழுகுகளுடைய செட்டைகளின்மேலே சுமந்து, உங்களை நம்மண்டையில் சேர்த்ததையும் நீங்கள் கண்டீர்கள். *௫ மோ. ௩௨. ௰௧.

௫ இப்பொழுதும் நீங்கள் நமது சத்தத்தைக் கேட்கவே கேட்டு, நமது உடம்படிக்கையைக் கைக்கொண்டால், சகல சனசதளங்களிலும் *நீங்கள் நமக்குச் சொந்த சம்பத்தாயிருப்பீர்கள்; ஏனெனில் பூமியெல்லாம் நம்முடையது. *௫ மோ. ௭. ௬.

௬ நீங்கள் நமக்கு *ஆசாரிய இராசாங்கமும் பரிசுத்த சாதியுமாய் இருப்பீர்களென்பது, நீ இஸ்ரவேல் புத்திரரோடே சொல்லவேண்டிய வார்த்தைகளென்றார். *௧ பே. ௨. ௯.

௭ ¶ மோசே வந்து சனத்தின் மூப்பரை அழைப்பித்து, கர்த்தர் தனக்குக் கற்பித்த இந்த வார்த்தைகளை எல்லாம் அவர்களுக்குமுன்பாகச் சொன்னான்.

௮ அப்பொழுது சனமெல்லாம் ஏகமாய்ப் பிரதியுத்தாரம் கொடுத்து, *கர்த்தர் சொன்னவைகளை எல்லாம் செய்வோமென்றார்

Digitized by Google

கள்; மோசே சனத்தின் வார்த்தைகளை கர்த்தரண்டைக்குத் திரும்பக் கொண்டு போனான். *௨ மோ. ௨௪. ௩.

௯ ¶ அப்பொழுது கர்த்தர் மோசேயுடனே, இதோ, நாம் உன்னோடே சொல்லும் வார்த்தைகளைச் சனம் கேட்டு, உன்னையும் என்றைக்கும் விசுவாசிக்கும்படிக்கு, நாம் மேகத்தின் இருட்டிலே உன்னண்டைக்கு வருவோமென்றார்; ஏனெனில் சனத்தின் வார்த்தைகளை மோசே கர்த்தருக்கு அறிவித்திருந்தான்.

௰ பின்னையும் கர்த்தர் மோசேயோடே சொன்னதாவது: நீ சனத்தண்டைக்குப் போய், இன்றைக்கும் நாளைக்கும் அவர்களைப் பரிசுத்தமாக்கு; அவர்கள் தங்கள் வஸ்திரங்களை வெளுத்து,

௰௧ மூன்றாம் நாளைக்கு ஆயத்தப்பட்டிருக்கக்கடவர்கள்; ஏனென்றால் மூன்றாம் நாளிலே கர்த்தர் எல்லாச் சனத்தின் கண்களுக்குமுன்பாகச் சீனாய்ப்பர்வதத்தின்மேல் இறங்குவார்.

௰௨ நீ சனத்திற்குச் சுற்றிலும் எல்லை குறித்து, *பர்வதத்தில் ஏறாதபடிக்கும், அதின் அடிவாரத்தைத் தொடாதபடிக்கும், எச்சரிக்கையாய் இருங்களென்று சொல்லுவாயாக; ஏனெனில் பர்வதத்தைத் தொடுகிறவனெல்லாம் கொலையுண்ணவே கொலையுண்பான். *எபி. ௰௨. ௰௮.

௰௩ ஒரு கையாகிலும் அதைத் தொடவேண்டாம்; மிருகமானாலும் மனிதனானாலும் சரி, அதைத் தொட்டால் உயிரோடே வைக்கப்படாமல் கல்லெறியுண்ணவே எறியுண்டு, அல்லது எய்யவே எய்யுண்டு சாவவேண்டும்; எக்காளம் நெடுந்தொனியாகத் தொனிக்கையிலே அவர்கள் பர்வதத்திலே ஏறக்கடவர்களென்றார்.

௰௪ ¶ அப்படியே மோசே பர்வதத்திலிருந்து சனத்தண்டைக்கு இறங்கி, சனத்தைப் பரிசுத்தமாக்கினான்; அவர்கள் தங்கள் வஸ்திரங்களை வெளுத்தார்கள்.

௰௫ அவன் சனத்துடனே, மூன்றாம் நாளைக்கு ஆயத்தப்பட்டிருங்கள், பெண்சாதியைச் சேராதிருங்களென்றான்.

௰௬ ¶ மூன்றாம் நாளிலே விடியற்காலமாகிறபொழுது சம்பவித்ததேதெனில், இடிமுழக்கங்களும் மின்னல்களும் பர்வதத்தின்மேலே கனமேகமும் மகா பலத்த எக்காளசத்தமும் உண்டாயின; பாளயத்திலிருந்த சனமெல்லாம் நடுங்கின.

௰௭ அப்பொழுது மோசே சனத்தைப் பராபரனுக்கு எதிர்கொண்டு போக, பாளயத்திலிருந்து புறப்படப்பண்ணினான்; *அவர்கள் பர்வதத்தின் அடியிலே தாழத்தரித்து நின்றார்கள். *௫ மோ. ௪. ௰௧.

௰௮ கர்த்தர் சீனாய்ப்பர்வதத்தின்மேல் அக்கினியில் இறங்கினபடியினாலே, அவை எல்லாம் புகைக்காடாய் இருந்தன; அதின் புகை சூளையின் புகையைப்போல எழும்பிற்று; பர்வதமெல்லாம் மிகவும் அதிர்ந்தது.

௰௯ எக்காளசத்தம் வரவர மிகவும் பலமாயிற்று; மோசே பேசினான், பராபரன் அவனுக்குச் சத்தமாய் மறுமொழி கொடுத்தார்.

௨௰ கர்த்தர் சீனாய்ப்பர்வதத்தின்மீதில் இருக்கிற கொடுமுடியிலே இறங்கினபொழுது, கர்த்தர் மோசேயைப் பர்வதத்தின் கொடுமுடியிலே வரவழைத்தார்; மோசே ஏறினான்.

௨௰௧ அப்பொழுது கர்த்தர் மோசேயோடே சொன்னதாவது: சனம் கர்த்தரண்டைக்கு ஏறிப்பார்க்கிறதற்கு எல்லையைக் கடவாதபடிக்கும், அவர்களில் அநேகர் விழுந்துபோகாதபடிக்கும், நீ இறங்கி அவர்களைத் திடச்சாட்சியாக எச்சரி.

௨௰௨ கர்த்தரண்டையிலே சேருகிற ஆசாரியர்களும், கர்த்தர் தங்களுக்குள்ளே அழிக்குதல் செய்யாதபடிக்கு, தங்களைப் பரிசுத்தமாக்கக்கடவர்களென்றார்.

௨௰௩ அப்பொழுது மோசே கர்த்தருடனே, சனம் சீனாய்ப்பர்வதத்தில் ஏறமாட்டாது; ஏனெனில் பர்வதத்தை எல்லை பிரித்து,

Digitized by Google

அதைப் பரிசுத்தமாக்கென்று தேவரீர் எங்களைத் திடச்சாட்சியாய் எச்சரித்தீர் என்றான்.

௨௪ ஆனால் கர்த்தர் மோசேயுடனே, இறங்கிப் போ; நீயும் உன்னோடேகூட ஆரோனுமாய் ஏறிவரக்கடவீர்கள்; ஆசாரியர்களும் சனமுமோவென்றால், கர்த்தர் தங்களுக்குள்ளே அழிக்குதல் செய்யாதபடிக்கு, அவரண்டைக்கு ஏற எல்லையைக் கடவாதிருப்பார்களாக என்றார்.

௨௫ அப்படியே மோசே சனத்தண்டைக்கு இறங்கி, அதை அவர்களுக்குச் சொன்னான்.

## ௨௰. அதிகாரம்.

அப்பொழுது பராபரன் பேசிச் சொன்ன எல்லா வார்த்தைகளுமாவது:

௨ ¶ *உன்னை அடிமைவீடாகிய எகிப்து தேசத்திலிருந்து புறப்படப்பண்ணின உன் பராபரனாகிய கர்த்தர் நாமே. *௫ மோ. ௫. ௬. சங். ௮௧. ௰௧.

௩ நமக்குமுன்பாக உனக்கு வேறு தேவர்கள் உண்டாயிருக்கவேண்டாம்.

௪ ¶ உயர வானத்திலும் கீழே பூமியிலும் பூமியின் கீழ்த் தண்ணீரிலும் உண்டானவைகளுக்கு ஒத்திருக்கிற *ஒரு சுரூபத்தையாகிலும் யாதொரு விக்கிரகத்தை என்கிலும் நீ உனக்கு உண்டாக்கவேண்டாம். *௩ மோ. ௨௬. ௧. சங். ௯௭. ௭.

௫ நீ அவைகளை நமஸ்கரிக்கவும் அவைகளைச் சேவிக்கவும் வேண்டாம்; ஏனென்றால் உன் பராபரனாகிய கர்த்தராயிருக்கிற நாம் எரிச்சலுள்ள தேவனாயிருந்து, நம்மைப் பகைக்கிறவர்களுக்கோவென்றால் பிதாக்களுடைய அநியாயத்தைப் பிள்ளைகளிடத்திலே மூன்றும் நான்காம் தலைமுறைமட்டும் விசாரிக்கிறவராயிருக்கிறோம்.

௬ ஆனால் நம்மைச் சிநேகித்து, நம்முடைய கற்பனைகளைக் கைக்கொள்ளுகிறவர்களுக்கு, ஆயிரம் தலைமுறைமட்டும் தயவு செய்கிறவராயிருக்கிறோம்.

௭ ¶ உன் பராபரனாகிய கர்த்தருடைய நாமத்தை வீணிலே வழங்காயாக; ஏனென்றால் கர்த்தர் தம்முடைய நாமத்தை வீணிலே வழங்குகிறவனைத் தண்டியாமல் விடார்.

௮ ¶ ஓய்வுநாளைப் பரிசுத்தமாக்க நினைப்பாயாக.

௯ ஆறுநாள் நீ வேலைசெய்து உன் கிரியையை எல்லாம் நடப்பிப்பாயாக.

௰ ஆனால் ஏழாம்நாள் உன் பராபரனாகிய கர்த்தருடைய ஓய்வுநாள்; அதிலே நீயாகிலும், உன் குமாரனாகிலும், உன் குமாரத்தியாகிலும், உன் வேலைக்காரனாகிலும், உன் வேலைக்காரியாகிலும், உன் மிருகசீவனாகிலும், உன் வாசல்களிலிருக்கிற உன் பரதேசியாகிலும் யாதொரு வேலையைச் செய்ய வேண்டாம்.

௰௧ ஏனென்றால் கர்த்தர் ஆறுநாளுக்குள்ளே வானத்தையும் பூமியையும் சமுத்திரத்தையும் அவைகளிலுள்ள எல்லாவற்றையும் உண்டாக்கி,*ஏழாம் நாளிலே ஓய்ந்திருந்தார்; ஆகையால் கர்த்தர் ஓய்வுநாளை ஆசீர்வதித்து அதைப் பரிசுத்தமாக்கினார். *௧ மோ. ௨. ௨௩.

௰௨ ¶ உன் பராபரனாகிய கர்த்தர் உனக்குக் கொடுக்கிற தேசத்திலே உன் நாள்கள் நீடித்திருக்கிறதற்கு, உன் தகப்பனையும் உன் தாயையும் கனம்பண்ணுவாயாக.

௰௩ ¶ கொலைசெய்யாயாக.

௰௪ ¶ விபசாரம்பண்ணாயாக.

௰௫ ¶ களவுசெய்யாயாக.

௰௬ ¶ உனக்கடுத்தவனுக்குவிரோதமாய்ப் பொய்ச்சாட்சி சொல்லாயாக.

௰௭ ¶ உனக்கடுத்தவன் வீட்டை இச்சியாயாக; உனக்கடுத்தவனுடைய பெண்சாதியையும், அவனுடைய வேலைக்காரனையும், அவனுடைய வேலைக்காரியையும், அவனுடைய எருதையும், அவனுடைய கழுதையையும், பின்னையும் உனக்கடுத்தவனுக்குள்ள யாதொன்றையும் இச்சியாயாக என்றார்.



Digitized by Google

௰௮ ¶ சனமெல்லாம் இடிமுழக்கங்களையும் மின்னல்களையும் எக்காளச் சத்தத்தையும் பர்வதம் புகைகிறதையும் கண்டார்கள்; அதைக் காண்கையில், சனம் பின்வாங்கி, தூரத்திலே நின்று,

௰௯ மோசேயுடனே, நீர் எங்களோடே பேசும், நாங்கள் கேட்போம்; நாங்கள் சாவாதபடிக்குப் பராபரன் எங்களோடே பேசாதிருப்பாராக என்றார்கள்.

௨௰ மோசே சனத்துடனே, பயப்படாதிருங்கள்; ஏனெனில் உங்களைச் சோதிப்பதற்காகவும், நீங்கள் பாவஞ்செய்யாதபடிக்கு அவர் பயம் உங்கள் முகத்திற்கு முன்பாக இருப்பதற்காகவும், பராபரன் வந்தாரென்றான்.

௨௧ ¶ சனம் தூரத்திலே நின்றது; மோசேயோவென்றால் பராபரன் இருந்த இருளுக்குள்ளே சேர்ந்துபோனான்.

௨௨ ¶ அப்பொழுது கர்த்தர் மோசேயோடே சொன்னதாவது: நீ இஸ்ரவேல் புத்திரரோடே சொல்லவேண்டியதேதெனில், நாம் வானத்திலிருந்து உங்களோடே பேசினதை நீங்கள் கண்டீர்கள்.

௨௩ நீங்கள் நமக்குமுன்பாக வெள்ளித் தேவர்களையாகிலும் பொன்தேவர்களையாகிலும் உங்களுக்கு உண்டாக்கவே உண்டாக்கவேண்டாம்.

௨௪ நீ மண்ணான பலிபீடத்தை நமக்குண்டாக்கி, அதின்மேல் உன் தகனபலிகளையும் உன் சமாதான பலிகளையும் உன் ஆடுகளையும் உன் மாடுகளையும் பலி இடுவாயாக; நாம் எவ்விடத்திலாகிலும் நம்முடைய நாமத்தைப் பிரஸ்தாபம் பண்ணினால், அவ்விடத்தில் உன்னண்டைக்கு வந்து, உன்னை ஆசீர்வதிப்போம்.

௨௫ கல்லான பலிபீடத்தை நமக்கு உண்டாக்கப்போனாயேயாகில், அதை வெட்டின கல்லுகளாலே கட்டாயாக; ஏனென்றால் நீ உன் உளியை அதின்மேல் நடமாடப்பண்ணுகிறதினால், அதைப் பரிசுத்தக் குலைச்சல் ஆக்குவாய்.

௨௬ நமது பலிபீடத்திற்குமுன்பாக உன் நிருவாணம் காணப்படாதபடிக்கு, நீ அதற்குப் படிகளால் ஏறவும் வேண்டாம்.

## ௨௧. அதிகாரம்.

பின்னையும் நீ அவர்களுக்கு அறியப் பண்ணவேண்டிய நியாயங்களாவது:

௨ எபிரேய சாதியான அடிமையைக் கொண்டாயானால், அவன் ஆறுவருஷம் சேவித்து, ஏழாம் வருஷத்திலே இலவசமாகத் தன்னிச்சைக்காரனாய்ப் புறப்பட்டுப் போவானாக.

௩ ஒண்டிக்காரனாய் வந்திருந்தானானால், ஒண்டிக்காரனாய்ப் புறப்படுவானாக; பெண்சாதிக்குப் புருஷனாயிருந்தானானால், அவன் பெண்சாதி அவனோடேகூடப் புறப்படுவாளாக.

௪ அவன் எசமானன் அவனுக்குப் பெண்சாதியைக் கொடுத்ததும், இவள் அவனுக்கு ஆண்பிள்ளைகளையாகிலும் பெண்பிள்ளைகளையாகிலும் பெற்றதும் உண்டானால், பெண்சாதியும் அவன் பிள்ளைகளும் அவன் எசமானனைச் சேர்வார்களாக; அவனோ ஒருவனாய்ப் புறப்படுவானாக.

௫ அந்த வேலைக்காரனோவென்றால், என் எசமானனையும் என் பெண்சாதியையும், என் பிள்ளைகளையும் சிநேகிக்கிறேன்; நான் தன்னிச்சைக்காரனாய்ப் புறப்படுவதில்லை என்று சொல்லவே சொன்னால்,

௬ அவன் எசமானன் அவனைத் தேவர்களண்டைக்கு அழைத்துப்போய், அவனைக் கதவின்கிட்ட, அல்லது கதவின் நிலையின்கிட்டச் சேரப்பண்ணக்கடவன்; அங்கே அவன் எசமானன் அவன் காதைக் கம்பியினாலே குத்துவானாக; அதற்குப்பின் என்றைக்கும் அவனுக்கு வேலைசெய்யக்கடவன்.

௭ ¶ ஒருவன் தன் மகளை வேலைக்காரியாக விற்றுப்போட்டானானால், அவன் வேலைக்காரர் புறப்படுகிறதுபோலப் புறப்பட ஒண்ணாது.

௮ அவளைத் தனக்கு நியமித்தது எசமான

Digitized by Google

னின் பார்வைக்கு ஆகாதேபோனால், அவள் மீட்கப்படட்டும்; அவன் அவளைத் துரோகம்பண்ணி, அவளை அந்நியசாதியார் கையிலே விற்றுப்போட அவனுக்கு அதிகாரமில்லை.

௯ அவன் தன் குமாரனுக்கு அவளை நியமித்தானானால், குமாரத்திகளின் நியாயத்திற்குத் தக்கதாய் அவளுக்குச் செய்யக்கடவன்.

௰ அவனுக்கு வேறொருத்தியைக் கொண்டானேயாகில், அவளுடைய பிழைப்பையும் உடுப்பையும் குடிஇருப்பையும் குறைக்காமலிருப்பானாக.

௰௧ அவன் இந்த மூன்றும் அவளுக்குச் செய்யாதேபோனால், அவள் கிரயமில்லாமல் இலவசமாய்ப் புறப்படவேண்டும்.

௰௨ ¶ *ஒருவனைச் சாக அடித்தவன் கொலையுண்ணவே கொலையுண்ணக்கடவன். *௧ மோ. ௯. ௬.

௰௩ * இவன் அவனுக்குச் சதிபண்ணாமல் பராபரன் அவனை இவன் கைக்கு நேரிடப்பண்ணினாரேயாகில், இவன் ஓடிப்போயிருக்கும் அடைக்கலத்தை உனக்குக் கட்டளையிடுவோம். *௪ மோ. ௩௫. ௯.

௰௪ ஒருவன் தனக்கடுத்தவனுக்கு விரோதமாக அவனைச் சற்பனையாய்க் கொன்றுபோடும் அகங்காரத்தைப்பண்ணினானேயானால், அவன் சாவும்படிக்கு அவனை நம்முடைய பீடத்தண்டையிலும் இருந்து பிடித்துக்கொண்டு போவாயாக.

௰௫ தன் தகப்பனையாகிலும் தன் தாயையாகிலும் அடிக்கிறவன் கொலையுண்ணவே கொலையுண்ணக்கடவன்.

௰௬ ¶ எவனாகிலும் ஒருவன் ஒரு மனிதனைத் திருடி அவனை விற்றுப்போட்டால், அல்லது இவன் அவன் கையிலே கண்டுபிடிக்கப்பட்டானானால், அவன் கொலையுண்ணவே கொலையுண்ணக்கடவன்.

௰௭ ¶ *தன் தகப்பனையாகிலும் தன் தாயையாகிலும் சபிக்கிறவன் கொலையுண்ணவே கொலையுண்ணக்கடவன். *௩ மோ. ௨௰. ௯.

௰௮ மனிதர் சண்டைபண்ணி, ஒருவன் தனக்கடுத்தவனைக் கல்லினால் எறிந்து அல்லது கையினாலே அடித்ததினாலே, இவன் சாவாமல் கட்டில் கிடையாய் விழுந்து,

௰௯ திரும்ப எழுந்திருந்து, வெளியிலே தன் ஊன்றுகோலைப் பிடித்து நடமாடினால், அடித்தவன் ஆக்கினைக்கு நீங்கலாயிருப்பான்; ஆனால் அவனுக்கு வேலை மினக்கெட்ட நஷ்டத்தைக் கொடுத்து, அவனை நன்றாகக் குணமாக்குவிக்கக்கடவன்.

௨௰ ¶ ஒருவன் தன் அடிமையை, அல்லது தன் அடிமைப்பெண்ணைக் கோலினால் அடிக்கிறதினாலே, இவன் அவன் கையின்கீழ்ச் செத்துப்போனால், பழிக்குப்பழிவாங்கப்படவேண்டும்.

௨௧ ஒருநாள் அல்லது இரண்டுநாள் இருந்தானேயாகில், பழிவாங்கப்படவேண்டாம்; ஏனெனில் இவன் அவனுடைய உடைமையாய் இருந்தவன்.

௨௨ ¶ மனிதர் சண்டைபண்ணி, கர்ப்பவதியான ஒரு ஸ்திரியை அடிக்கிறதினாலே, அவளுக்கு வேறே சேதமில்லாமல் கர்ப்பம் விழுந்துபோனால், அப்பொழுது அடித்தவன் ஸ்திரியின் புருஷன் தன்மேலே சுமத்துகிறதற்குத்தக்கதாய், தருமத்தாருடைய தீர்ப்பின்படியே தண்டம் கொடுக்கவே கொடுக்கவேண்டும்.

௨௩ வேறே சேதமுண்டாயிற்றேயானால், நீ சீவனுக்குச் சீவன்,

௨௪ கண்ணுக்குக் கண், பல்லுக்குப் பல், கைக்குக் கை, காலுக்குக் கால்,

௨௫ சூட்டுக்குச் சூடு, காயத்துக்குக் காயம், தழும்புக்குத் தழும்பு, பழிகொடுக்கக்கடவாய்.

௨௬ ¶ ஒருவன் தன் அடிமையின் கண்ணிலே, அல்லது தன் அடிமைப்பெண்ணின் கண்ணிலே அடிக்கிறதினாலே அதைக் கெடுத்தால், அவன் இவன் கண்ணுக்குப்பதிலாக இவனைத் தன்னிச்சைக்காரனாக அனுப்பிவிடவேண்டும்.

Digitized by Google

உஎ அவன் தன் அடிமையின் பல்லை, அல்லது தன் அடிமைப்பெண்ணின் பல்லை விழப்பண்ணினால், அவன் இவன் பல்லுக்குப்பதிலாக இவனைத் தன்னிச்சைக்காரனாக அனுப்பிவிடவேண்டும்.

உஅ ஒரு மாடு ஒரு ஆண்சாதியை, அல்லது ஒரு பெண்சாதியை முட்டிப்போட்டதினாலே சாவுண்டானால், அந்த மாடு கல்லெறியவே கல்லெறியப்படவும் அதின் மாம்சம் புசிக்கப்படாதே போகவும்கடவது, அப்பொழுது மாட்டின் எசமானன் ஆக்கினைக்கு நீங்கலானவன்.

உகூ ஆனால் மாடு முதலே முட்டுகிறதாயிருந்து, அது அதின் எசமானனுக்கு அறிவிக்கப்பட்டும், அவன் அதைப் பத்திரம்பண்ணாததினாலே, அது ஒரு ஆண்சாதியை அல்லது ஒரு பெண்சாதியைக் கொன்றுபோட்டால், மாடும் கல்லெறியப்படவேண்டும், அதின் எசமானனும் கொலைசெய்யப்படவேண்டும்.

ஙo மீட்புக்கு அபராதம் அவன்மேலே சுமத்தப்பட்டதேயானால், அவன் தன் சீவனை மீட்கும்பொருளாக, தன்மேலே சுமத்தப்பட்டபடி எல்லாம் செலுத்தக்கடவன்.

ஙக அது ஒருவன் மகனை முட்டிப்போட்டாலும் சரி, ஒருவன் மகளை முட்டிப்போட்டாலும் சரி, இந்த நியாயத்தின்படியே அவனுக்குச் செய்யப்படக்கடவது.

ஙஉ மாடு ஒரு அடிமையை, அல்லது அடிமைப்பெண்ணை முட்டிப்போட்டிருந்தால், அவன் இவர்களுடைய எசமானனுக்கு முப்பது சேக்கலிடை வெள்ளியைக் கொடுக்கவும் மாடு கல்லெறியப்படவும் வேண்டும்.

ஙங ¶ ஒருவன் ஒரு குழியைத் திறந்து வைத்ததினாலே, அல்லது ஒரு குழியை வெட்டி அதை மூடாதே போனதினாலே, அதிலே ஒரு மாடாவது ஒரு கழுதையாவது விழுந்தால்,

ஙச குழிக்குடையவன் அதின் விலையைக் கொடுத்து பணமாய் அதின் எசமானனுக்குச் செலுத்தவும் கடவன்; செத்ததோ அவனுடையதாகவேண்டியது.

ஙரு ¶ ஒருவனுடைய மாடு அவனுக்கு அடுத்தவனுடைய மாட்டை முட்டிப்போட்டதினாலே இது செத்தால், அவர்கள் உயிரோடிருக்கிற மாட்டை விற்று, அதின் கிரயத்தைப் பங்கிட்டு, செத்ததையும் பங்கிட்டுக்கொள்ளக்கடவர்கள்.

ஙசா அல்லவென்று, அந்த மாடு முதலே முட்டுகிறமாடென்று அறியப்பட்டிருந்தும், அதின் எசமானன் அதைப் பத்திரம்பண்ணாதிருந்தானானால், அவன் மாட்டுக்கு மாட்டைக் கொடுக்கவே கடவன்; செத்ததோ அவனுடையதாகவேண்டியது.

## உஉ. அதிகாரம்.

எவனொருவன் மாட்டை அல்லது ஒரு ஆட்டைத் திருடி அதை அடித்தால், அல்லவென்று அதை விற்றுப்போட்டால், அவன் மாட்டுக்கு ஐந்துமாடுகளையும் ஆட்டுக்கு நான்கு ஆடுகளையும் திரும்பக் கொடுக்கக்கடவன்.

உ ¶ திருடன் கன்னமிடுகையில் கண்டுபிடிக்கப்பட்டு அடிக்கப்பட்டுச் செத்தால், அவனுக்காக இரத்தப்பழி சுமராது.

ங சூரியன் அவன்மீதில் உதித்திருந்ததேயானால், அவனுக்காக இரத்தப்பழி சுமரும்; திருடனோவென்றால், திரும்பச் செலுத்தவே செலுத்தக்கடவன்; அவனுக்கு இல்லாதிருந்தால், தன் களவுக்காக விலைப்படக்கடவன்.

ச அவன் திருடின மாடாகிலும், கழுதையாகிலும், ஆடாகிலும் உயிருடனே அவன் கையிலே கண்டுபிடிக்கப்பட்டால், இரட்டிப்பாகத் திரும்பச் செலுத்தக்கடவன்.

ரு ¶ வயலையாகிலும் திராட்சத்தோட்டத்தையாகிலும் பட்டிமேய, ஒருவன் தன் மிருகசீவன்களை வேறொருவன் நிலத்திலே விட்டால், அவன் தன் வயலிலே நலமானதிலும் தன் திராட்சத்தோட்டத்திலே நல

Digitized by Google

மானதிலும் எடுத்து, உத்தரவாதம்பண்ணக்கடவன்.

சு அக்கினி எழும்பி, முள்ளுக்களிலே பற்றிக்கொண்டு, கதிர்ப்போராயாகிலும் முதிர்ப்பயிராயாகிலும் நிலத்திலுள்ளதையாகிலும் சுட்டுப்போட்டால், அக்கினியைக் கொளுத்தினவன் அக்கினிச் சேதத்திற்கு உத்தரவாதம் பண்ணவேண்டும்.

எ ¶ ஒருவன் தனக்கடுத்தவன் வசத்திலே திரவியத்தையாகிலும் உடைமைகளையாகிலும் அடைக்கலமாக வைத்திருக்கும்போது அது அவன் வீட்டிலிருந்து திருடப்பட்டுப்போனால், அப்பொழுது திருடன் அகப்பட்டானேயாகில், அவன் இரட்டிப்பாகத் திரும்பச் செலுத்தவேண்டும்.

அ திருடன் அகப்படாதேபோனால், அப்பொழுது அந்த வீட்டுக்காரன் தனக்கடுத்தவனுடைய பொருளின்மேலே தன் கையைப் போட்டதில்லையோ என்பதற்காக, *தேவர்களண்டைக்குக் கொண்டுபோகக்கடவன். *உ மோ. உக. சு.

கூ ஒரு மாட்டுக்காகிலும் கழுதைக்காகிலும் ஆட்டுக்காகிலும் வஸ்திரத்திற்காகிலும் ஒருவன் தன்னுடையதென்று சொல்லுகிற காணாமல்போன யாதொரு பொருளுக்காகிலும் அடுத்த அநியாயத்தினுடைய யாதொரு விசேஷமிருந்தால், இருதிறத்தாருடைய நியாயம் தேவர்களண்டைக்கு வரக்கடவது; தேவர்கள் எவனைக் குற்றவாளியென்று தீர்க்கிறார்களோ, அவன் தனக்கடுத்தவனுக்கு இரட்டிப்பாகத் திரும்பச் செலுத்தக்கடவன்.

௰ ¶ ஒருவன் தனக்கடுத்தவன் வசத்தில் ஒரு கழுதை, மாடு, ஆடு முதலான மிருகசீவனை அடைக்கலமாக விட்டிருக்கும்போது அது செத்தால், அல்லது சேதப்பட்டால், அல்லது ஒருவரும் காணாமல் ஓட்டிக்கொண்டு போகப்பட்டால்,

௰க அப்பொழுது அவன் தன் கையைத் தனக்கடுத்தவனுடைய பொருளின்மேலே போட்டதில்லையோ என்பதற்காக, கர்த்தருடைய ஆணை இருவருக்குள்ளும் நடுவாக்கக்கடவது; ஆகில் அதின் எசமானன் அதை ஏற்றுக்கொள்ளவேண்டும்; மற்றவன் கொடுக்கத் தேவையில்லை.

௰உ அது அவன் வசத்திலிருந்து திருடப்பட்டுப் போயிற்றேயானால், அவன் அதின் எசமானனுக்கு அதற்காக உத்தரவாதம் பண்ணக்கடவன்.

௰௩ அது பீறப்பட்டதேயானால், அதற்குச் சாட்சியை ஒப்புவிப்பானாக, பீறுண்டதற்காக அவன் உத்தரவாதம் பண்ணத்தேவையில்லை.

௰௪ ¶ ஒருவன் தனக்கடுத்தவன் கையில் இரவலாக வாங்கினது அதின் எசமானனண்டையில் இராதிருக்கும்போது சேதப்பட்டால், அல்லது செத்துப்போனால், அவன் உத்தரவாதம் பண்ணக்கடவன்.

௰௫ அதின் எசமானன் அண்டையில்இருந்தானேயாகில், இவன் உத்தரவாதம் பண்ணுவதில்லை; அது கொடைக்கூலிக்கு வாங்கப்பட்டிருந்ததானால், அது அவன் கொடைக்கூலிக்கு வந்த சேதம்.

௰சு ¶ நியமிக்கப்படாத ஒரு கன்னியாஸ்திரியை ஒருவன் மோசம்போக்கி அவளோடே சயனித்தால், அவன் அவளுக்காகப் பரியம்கொடுக்கவே கொடுத்து, அவளை விவாகம்பண்ணவேண்டும்.

௰எ அவன் தகப்பன் அவளை இவனுக்குக் கொடுக்கமாட்டோம் என்றானேயாகில், இவன் கன்னியாஸ்திரிகளுக்காகக் கொடுக்கப்படுகிற பரியமுறைமையின்படியே திரவியம் நிறுத்துக்கொடுக்கவேண்டும்.

௰அ ¶ சூனியக்காரியை நீ உயிரோடே வைக்கவேண்டாம்.

௰கூ ¶ *மிருகத்தோடே புணர்ச்சிபண்ணுகிறவனெல்லாம் கொலையுண்ணவே கொலையுண்ணக்கடவன். *௩ மோ. உ௰. ௰௫.

உ௰ ¶ கர்த்தர் ஒருவருக்கே ஒழிய வேறே தேவர்களுக்குப் பலியிடுகிறவன் சங்கரிக்கப்படக்கடவன்.

உக ¶ *பரதேசியைச் சிறுமைப்படுத்தாம



Digitized by Google

னும் ஒடுக்காமலும் இருப்பாயாக; ஏனெனில் நீங்கள் எகிப்துதேசத்திலே பரதேசிகளாயிருந்தீர்கள். *௩ மோ. ௰௯. ௩௩, ௩௪.

௨௨ ஒரு கைம்பெண்சாதியையும் தாய் தகப்பனில்லாத பிள்ளையையும் ஒடுக்காமலிருப்பீர்களாக.

௨௩ அவர்களை நீ ஒடுக்கவே ஒடுக்கும்போது, அவர்கள் நம்மை நோக்கிக் கூப்பிடவே கூப்பிட்டால், அவர்கள் கூப்பிடுதலை நாம் கேட்கவே கேட்டு,

௨௪ நாம் கோபமுண்டவராகி, உங்கள் பெண்சாதிகள் கைம்பெண்சாதிகளும் உங்கள் பிள்ளைகள் தாய்தகப்பனில்லாத பிள்ளைகளுமாய்ப் போக, உங்களைப் பட்டயத்தாலே கொன்றுபோடுவோம்.

௨௫ ¶ *உன்னிடத்திலே சிறுமைப்பட்டிருக்கிற நம்முடைய சனத்தில் ஒருவனுக்கு நீ திரவியம் கடனாகக்கொடுத்தால், அவனுக்கு வட்டி சுமத்துகிறவன்போல இராபாக. *௩ மோ. ௨௫. ௩௫, ௩௬.

௨௬ *உனக்கு அடுத்தவனுடைய வஸ்திரத்தை நீ அடகாக வாங்கினால், பொழுது புகாததற்குமுன்னே அதை அவனுக்குத் திரும்பக் கொடுப்பாயாக. *௫ மோ. ௨௪. ௰௨, ௰௩.

௨௭ ஏனெனில் அவன் மூடிக்கொள்ளுகிறது அதுமாத்திரம்தானே; அதுவே அவன் தன் தோலை மூடிக்கொள்ளுகிற அவனுடைய வஸ்திரம்; வேறு எதினாலே மூடிக்கொண்டு படுத்துக்கொள்ளுவான்; ஆகையால் சம்பவிப்பதேதெனில், அவன் நம்மை நோக்கிக் கூப்பிடும்பொழுது, நாம் கேட்போம்; ஏனெனில் நாம் இரக்கமுள்ளவர்.

௨௮ ¶ தேவர்களைத் தூஷணியாமலும் உன் சனத்தில் அதிபதியானவனைச் சபிக்காமலும் இருப்பாயாக.

௨௯ ¶ உன் போர்க்களத்தின் காணிக்கையையும் உன் ஆலையின் காணிக்கையையும் செலுத்தத் தாமதிக்கவேண்டாம்; உன் குமாரரில் முதல்பேறானவனை நமக்குக் கொடுப்பாயாக.

௩௰ உன் மாடுகளிலும் உன் ஆடுகளிலும் அப்படித்தான் செய்வாயாக; குட்டி ஏழு நாள் தன் தாயோடே இருக்கட்டும், எட்டாம் நாளிலே அதை நமக்குச் செலுத்துவாயாக.

௩௧ ¶ நீங்கள் நமக்குப் பரிசுத்த மனிதராயிருக்கக்கடவீர்கள்; ஆகையால் வெளியிலே பீறுண்டுபோன மாம்சத்தைப் புசியாமல், அதை நாய்களுக்குப் போடுவீர்களாக.

## உ௩. அதிகாரம்.

அபாண்டமான விசேஷத்தை ஏற்றுக்கொள்ளாயாக; கொடுமையுள்ள சாட்சியாயிருக்க ஆகாதவனோடே கலவாயாக.

௨ பொல்லாப்புச் செய்யப்போகிற திரளினைப் பின்செல்லாமலும், நியாயத்தைப் புரட்டப்போகிற திரளினர்களின் பிறகாலே சாய்கிறதற்கான உத்தரவை வழக்கிலே சொல்லாமலும் இருப்பாயாக.

௩ தரித்திரனுடைய முகத்தையும் அவன் வியாச்சியத்திலே பாராயாக.

௪ ¶ சிதறிப்போனதாகிய *உன் சத்துருவின் மாட்டையாகிலும் அவனுடைய கழுதையையாகிலும் சந்தித்தாயானால், அதை அவனண்டையிலே திருப்பவே திருப்பிக் கொண்டு போவாயாக. *லூக். ௬. ௨௭.

௫ உன்னைப் பகைக்கிறவனுடைய கழுதையைத் தன் சுமையின்கீழ்க் கிடக்கக் கண்டாயானால், அதற்கு உதவாதிருப்பாயோ? அவனோடேகூட அதற்கு உதவவே உதவுவாயாக.

௬ ¶ உன்னிடத்திலிருக்கிற எளியவனுடைய வியாச்சியத்திலே அவனுடைய நியாயத்தைப் புரட்டாயாக.

௭ கள்ளக்காரியத்துக்குத் தூரமாயிருப்பாயாக; குற்றமில்லாதவனையும் நீதிமானையும் கொலைப்படுத்தாயாக; ஏனெனில் ஆகாதவனை நீதிமானாகத் தீரோம்.

Digitized by Google

௮ ¶ *பரிதானம் வாங்காயாக; ஏனெனில் பரிதானம் பார்வையுள்ளவர்களைக் குரு

டாக்கி, நீதிமான்களின் நியாயங்களைத் தா
றுமாறாக்குகின்றது. *௫ மோ. ௰௬. ௰௯.

௯ ¶ *பரதேசியை ஒடுக்காயாக; ஏனெ
னில் எகிப்துதேசத்திலே பரதேசிகளாயி
ருந்த நீங்கள் பரதேசியின் இருதயத்தை அ
றிவீர்கள். *௨ மோ. ௨௨. ௨௧.

௰ ¶ நீ ஆறுவருஷம் உன் தேசத்தை
விதைத்துப் பயிரிட்டு அதின் பலனைச்
சேர்த்து,

௰௧ ஏழாம் வருஷத்திலோவென்றால் அ
தை உன் சனத்தில் எளியவர்கள் புசிக்கும்
படிக்கும், மீதியானதை வெளியின் சிவன்
கள் தின்னும்படிக்கும், சும்மா வைத்து
விடுவாயாக; உன் திராட்சத்தோட்டத்திற்
கும் உன் ஒலீவத்தோப்புக்கும் அப்படியே
செய்வாயாக.

௰௨ ¶ நீ ஆறுநாள் உன் வேலையைச் செய்
து, ஏழாம் நாளிலோவெனில் உன் மாடும்
உன் கழுதையும் இளைப்பாறவும், உன் அடி
மைப்பெண்ணின் பிள்ளையும் பரதேசியும்
மூசிப்பாறவும், ஓய்ந்திருப்பாயாக.

௰௩ நாம் உங்களுக்குச் சொன்னதிலெல்
லாம் சாவதானமாய் இருங்கள்; வேறே
தேவர்களின் பேரை நினையீர்களாக; அது
உன் வாயினாலேகேட்கப்படாதிருப்பதாக.

௰௪ ¶ வருஷத்தில் மூன்றுதரம் நமக்குப்
பண்டிகை ஆசரிப்பாயாக.

௰௫ நீ புளிப்பில்லாத அப்பங்களின் பண்
டிகையைக் கைக்கொண்டு, நாம் உனக்
குக் கற்பித்தபடி ஆபிப் மாதத்தினுடைய
திட்டமான காலத்திலே ஏழுநாள் புளிப்
பில்லாத அப்பங்களைப் புசிப்பாயாக; ஏ
னெனில் அதிலே எகிப்திலிருந்து புறப்
பட்டாய்; ஆனால் வெறுங்கையாய் நமக்கு
முன்பாகக் காணப்படீர்களாக.

௰௬ நீ வயலில் விதைத்த உன் பயிர் வே
லைகளின் முதல்பலனைச் செலுத்துகிற அ
றுப்புநாளின் பண்டிகையையும், வருஷமு
டிவிலே நீ வயலில் உன் வேலைகளின் பல
னைச் சேர்த்துத் தீர்ந்தபொழுது, சேர்ப்
பின் பண்டிகையையும் ஆசரிப்பாயாக.

௰௭ *வருஷத்தில் மூன்றுதரம் உன் ஆண்
சாதியெல்லாம் கர்த்தராகிய ஆண்டவனு
டைய சந்நிதிக்கு முன்பாகக் காணப்படக்
கடவது. *௨ மோ. ௩௪. ௨௩.

௰௮ ¶ புளித்தமா இருக்கும்போது நமது
பலியின் இரத்தத்தைப் பலியிடாயாக; நம்
முடைய பண்டிகையின் கொழுப்பு விடி
யற்காலம்மட்டும் இராத்தங்கவும் வேண்
டாம்.

௰௯ உன் சிமையின் முதல்விளைச்சல்க
ளில் முந்தின கனியை உன் பராபரனாகிய
கர்த்தருடைய வீட்டிற்குக் கொண்டுவரு
வாயாக; *வெள்ளாட்டுக்குட்டியை அதினு
டைய தாயின் பாலோடேகூடச் சமைக்
காயாக. *௫ மோ. ௨௨. ௨௮.

௨௰ ¶ இதோ, உன்னை வழியிலே காக்கிற
தற்கும், நாம் ஆயத்தம்பண்ணின தானத்
திற்கு உன்னைக் கொண்டுபோகிறதற்கும்.
நாம் ஒரு தூதனை உனக்குமுன்பாக அ
னுப்புகிறோம்.

௨௧ நீ அவர் முகத்திற்கு முன்பாகச் சாவ
தானமாயிருந்து, அவர் சத்தத்தைக் கேள்;
அவரைக் கோபப்படுத்தாதே; ஏனெனில்
உங்கள் துரோகங்களை அவர் பொறுப்ப
தில்லை, அதேனென்றால் நமது நாமம் அவ
ருள்ளத்தில் இருக்கின்றது.

௨௨ நீ அவர் சத்தத்தைக் கேட்கவே கேட்
டு, நாம் சொல்லுவதை எல்லாம் செய்தா
யேயாகில், நாம் உன்னைப் பகைக்கிறவ
ர்களைப் பகைத்து, உன்னை இறுகப்பிடிக்கிற
வர்களை இறுகப்பிடிப்போம்.

௨௩ ஏனெனில் நம்முடைய தூதர் உனக்
குமுன்பாக நடந்து, உன்னை எமோரியரும்.
ஏத்தியரும், பேரீசியரும், கானானியரும்.
ஏவியரும், எபூசியரும் இருக்கிற இடத்
திலே கொண்டுபோவார்; அவர்களை நாம்
அதம்பண்ணுவோம்.

௨௪ நீ அவர்கள் தேவர்களைப் பணிந்து
கொள்ளாமலும் அவர்களைச் சேவிக்காம
லும் அவர்கள் செய்கைகளின்படி செய்
யாமலும் அவர்களை நிர்மூலம்பண்ணவே

Digitized by Google

௰௩ இப்பொழுதும் உம்முடைய கண்களில் எனக்குக் கிருபை கிடைத்ததேயானால், உம்முடைய வழியை எனக்கு அறிவியும்; உம்முடைய கண்களில் எனக்குக் கிருபை கிடைக்கும்படியாக உம்மை நான் அறியட்டும்; இந்தச் சாதி உம்முடைய சனமென்று பாருமென்றான்.

௰௪ அதற்கவர் நாம் உன்னை இளைப்பாறப் பண்ணும்படிக்கு, *நம்முடைய முகம் உனக்குமுன்பாக நடந்துபோம் என்றார்.

*யோவா. ௰௪. ௯. கொலோ. ௧. ௰௫. எபி. ௯. ௩.

௰௫ அப்பொழுது அவன் அவரோடே சொன்னதாவது: உம்முடைய முகம் நடந்துபோகாதிருந்தால் எங்களை இங்கேயிருந்து புறப்படப்பண்ணீராக.

௰௬ ஏனெனில் எனக்கும் உமது சனத்திற்கும் உம்முடைய கண்களிலே கிருபை கிடைத்ததென்பது எதினால் அறியப்படலாம்; நீர் எங்களோடே நடந்துபோகிறதினாலே அல்லவோ, அப்படியே பூமியின்மீதுள்ள எல்லாச் சனத்திலும் நானும் உம்முடைய சனமும் விசேஷித்தவர்களென்று விளங்குமென்றான்.

௰௭ ¶ அப்பொழுது கர்த்தர் மோசேயோடே, நீ சொன்ன இந்த வார்த்தையின்படியேயும் செய்வோம்; ஏனெனில் நம்முடைய கண்களில் உனக்குக் கிருபை கிடைத்தது; உன்னைப் பேர்சொல்லி அறிந்திருக்கிறோம் என்றார்.

௰௮ அப்பொழுது அவன் உம்முடைய மகிமையை எனக்குக் காண்பியுமென்றான்.

௰௯ அதற்கு அவர், நாம் நம்முடைய தயையெல்லாம் உனக்கு முன்பாகக் கடக்கப் பண்ணி, கர்த்தருடைய நாமத்தை உனக்குமுன்பாகக் கூறி, நாம் கிருபைவைத்தவன்மேல் கிருபையாயிருந்து, நாம் இரக்கம்வைத்தவன்மேல் இரக்கமாயிருப்போமென்று சொல்லி,

௨௰ பின்னையும் நம்முடைய முகத்தைப் பார்க்கமாட்டாய்; ஏனெனில் ஒரு மனிதனும் நம்மைப் பார்த்து, உயிரோடிருக்கக் கூடாதென்றார்.

௨௰௧ பின்னையும் கர்த்தர் சொன்னதாவது: இதோ, நம்மண்டையில் ஒரு இடம் இருக்கின்றது, அங்கே நீ கல்மலையில் நிற்பாயாக.

௨௰௨ அப்பொழுது சம்பவிப்பதேதெனில், நம்முடைய மகிமை கடக்கும்போது, நாம் உன்னை அந்தக் கல்மலையின் வெடிப்பிலே வைத்து, நாம் கடந்துபோகும்மட்டும் நம்முடைய கரத்தினால் உன்னை மூடுவோம்.

௨௰௩ பிற்பாடு நம்முடைய கரத்தை வாங்குவோம்; அப்பொழுது நமக்குப் பின்னாகப் பார்ப்பாய்; நம்முடைய முகமோவென்றால், பார்க்கப்படக்கூடாதென்றார்.

## ௩௰௪. அதிகாரம்.

கர்த்தர் மோசேயோடே சொன்னதாவது: முந்தினவைகளுக்கொத்த இரண்டு கற்பலகைகளை இழைத்துக்கொள், நீ உடைத்துப்போட்ட முந்தின பலகைகளிலிருந்த வார்த்தைகளை அவைகளில் எழுதுவோம்.

௨ நீ விடியற்காலத்திற்கு ஆயத்தமாயிருந்து, காலமே சீனாய்பர்வதத்தில் ஏறி, அங்கே பர்வதத்தின் கொடுமுடியிலே நமக்குக் காத்துநில்.

௩ உன்னோடேகூட ஒருவரும் ஏறவும், பர்வதமெங்கும் ஒருவரும் காணப்படவும் வேண்டாம்; இந்தப் பர்வதத்திற்கு எதிராக ஆடுமாடு மேயவும் வேண்டாமென்றார்.

௪ ¶ அப்பொழுது மோசே முந்தினவைகளுக்கொத்த இரண்டு கற்பலகைகளை இழைத்து, அதிகாலமே எழுந்திருந்து, கர்த்தர் தனக்குக் கற்பித்தபடியே இரண்டு கற்பலகைகளைத் தன் கையிலே பிடித்துக்கொண்டு, சீனாய்பர்வதத்தில் ஏறினான்.

௫ அப்பொழுது கர்த்தர் ஒரு மேகத்திலே இறங்கி, அங்கே அவனண்டையிலே நின்றுகொண்டு, கர்த்தருடைய நாமத்தைக் கூறினார்.

௬ கர்த்தர் அவனுக்கு முன்பாகக் கடந்து



Digitized by Google

போகிறபொழுது, அவர் கூறினதாவது: அவர் கர்த்தர், அவர் கர்த்தர், *அவர் மனஉருக்கமும் இரக்கமும் நீடியசாந்தமும் மகா கிருபையும் உண்மையுமுள்ள பராபரன்.
*௪ மோ. ௰௪. ௰௮, ௰௯. சங். ௮௬. ௰௫: ௱௩. ௭, ௮: ௱௪௫. ௮. யோவா. ௨. ௰௩.

௭ *அவர் ஆயிரம் தலைமுறைகளுக்குக் கிருபையைக் காக்கிறவர்; அவர் அக்கிரமத்தையும் மீறுதலையும் பாவத்தையும் மன்னிக்கிறவர்; அவர் குற்றமுள்ளவனைக் குற்றமற்று நீங்கவொட்டாமல், பிதாக்களுடைய அக்கிரமத்தைப் பிள்ளைகளிடத்திலும் பிள்ளைகளுடைய பிள்ளைகளிடத்திலும் மூன்றும் நான்காம் தலைமுறைமட்டும் விசாரிக்கிறவரென்று கூறினார். * சங். ௱௩. ௩. மீகா. ௭. ௰௮, ௰௯.

௮ மோசே தீவிரமாகத் தரைமட்டும் குனிந்து பணிந்துகொண்டு,

௯ ஆண்டவரே, உம்முடைய கண்களில் எனக்குக் கிருபை கிடைத்ததேயாகில், ஆண்டவர் எங்கள் நடுவிலே நடந்துபோவாராக; ஏனெனில் அது கடினக்கழுத்துள்ள சனம்; நீரோவெனில் எங்கள் அக்கிரமத்தையும் எங்கள் பாவத்தையும் மன்னித்து, எங்களைச் சுதந்தரித்துக்கொள்வீராக என்றான்.

௰ ¶ அப்பொழுது அவர் சொன்னதாவது: இதோ, நாம் உடம்படிக்கைபண்ணுகிறோம்; பூமி எங்கும் எந்தச் சாதிகளிடத்திலும் சிருஷ்டிக்கப்படாதிருக்கிற அதிசயங்களை உன்னுடைய எல்லாச் சனத்திற்கும் முன்பாகச் செய்வோம்; நீ தங்கியிருக்கிற சனமெல்லாம் கர்த்தருடைய செய்கையைப் பார்க்கப் போம்; ஏனெனில் நாம் உன்னோடே இருந்து செய்யப்போகிறது பயங்கரமாயிருக்கும்.

௰௧ இன்று நாம் உனக்குக் கற்பிக்கிறதையே கைக்கொள்; இதோ, எமோரியனையும், கானானியனையும், ஏத்தியனையும், பெரிசியனையும், ஏவியனையும், எபூசியனையும் உனக்குமுன்பாகத் துரத்திவிடுகிறோம்.

௰௨ நீ போய்ச் சேருகிற தேசத்தின் குடி உன் நடுவே கண்ணி ஆகாதபடிக்கு நீ அவர்களோடே உடம்படிக்கை பண்ணாதபடிக்கு எச்சரிக்கையாய் இரு.

௰௩ அவர்களுடைய பலிபீடங்களை இடித்து, அவர்கள் சிலைகளைத் தகர்த்து, அவர்கள் தோப்புகளை வெட்டிப்போடக்கடவீர்கள்.

௰௪ ஏனெனில் அந்நிய தேவனை நீ பணிந்துகொள்ளலாகாது; அதேனென்றால் கர்த்தருடைய நாமம் எரிச்சலுள்ளவரென்பது; அவர் எரிச்சலுள்ள பராபரன்.

௰௫ அந்தத் தேசத்தின் குடிகளோடே உடம்படிக்கைபண்ணுயாக; மற்றப்படி அவர்களுடைய தேவர்களின் பிறகாலே சோரம்போய், அவர்கள் தேவர்களுக்குப் பலியிடுவார்கள்; அவர்கள் உன்னை அழைக்கையில், நீ போய் அவர்கள் பலியிட்டதிலே புசித்து,

௰௬ அவர்கள் குமாரத்திகளில் உன் குமாரருக்குப் பெண்களைக் கொள்ளுவாய்; அப்படியே அவர்கள் குமாரத்திகள் தங்கள் தேவர்களின் பிறகாலே சோரம்போகையில் உன் குமாரரையும் தங்கள் தேவர்களின் பிறகாலே சோரம்போகப்பண்ணுவார்கள்.

௰௭ வார்ப்பிக்கப்பட்ட தேவர்களை உனக்குண்டாக்காயாக.

௰௮ ¶ நீ புளிப்பில்லாத அப்பங்களின் பண்டிகையைக் கைக்கொண்டு, நாம் உனக்குக் கற்பித்தபடி ஆபீப் மாதத்தின் திட்டமான காலத்திலே, ஏழுநாள் புளிப்பில்லாத அப்பங்களைப் புசிப்பாயாக; ஏனெனில் ஆபீப் மாதத்திலே எகிப்திலிருந்து புறப்பட்டாய்.

௰௯ கர்ப்பம் திறந்து பிறக்கிற யாவும் உன் ஆடுமாடுகளின் மந்தையிலே தலையீற்றான ஆண் யாவும் நம்முடையவைகள்.

௨௰ ஆனால் கழுதையின் தலையீற்றை ஒரு ஆட்டுக்குட்டியால் மீட்டுக்கொள்வாயாக; மீட்காயேயானால் அதின் தலையை வெட்டிப்போடக்கடவாய்; உன் பிள்ளைகளில்

Digitized by Google

முதல்பேறானவைகளை எல்லாம் மீட்டுக் கொள்வாயாக; வெறுங்கையாய் நமக்கு முன்பாகக் காணப்படார்களாக.

௨௧ ¶ ஆறுநாள் வேலைசெய்து, ஏழாம் நாளில் ஓய்ந்திருப்பாயாக; உழுகிற காலமானாலும் அறுக்கிற காலமானாலும் ஓய்ந்திருப்பாயாக.

௨௨ ¶ கோதுமை அறுப்பின் முதல்பலனைச் செலுத்தும் ஏழு வாரங்களின் பண்டிகையையும் வருஷமுடிவிலே சேர்ப்பின் பண்டிகையையும் ஆசரிப்பாயாக.

௨௩ ¶ வருஷத்தில் மூன்றுதரம் உன் ஆண்சாதி எல்லாம் இஸ்ரவேலின் பராபரனாயிருக்கிற கர்த்தராகிய ஆண்டவரின் சந்நிதிக்குமுன்பாகக் காணப்படக்கடவது.

௨௪ ஏனெனில் நாம் புறச்சாதிகளை உனக்குமுன்பாகத் துரத்திவிட்டு, உன் எல்லைகளை விஸ்தாரமாக்குவோம்; நீ வருஷத்தில் மூன்றுதரம் உன் பராபரனாகிய கர்த்தரின் சந்நிதிக்குமுன்பாகக் காணப்படப் போயேறுகையில், ஒருவரும் உன் தேசத்தை இச்சிப்பதில்லை.

௨௫ ¶ புளித்தமா இருக்கும்போது, நமது பலியின் இரத்தத்தைப் பலியிடாயாக; பஸ்காப்பண்டிகையின் பலி விடியற்காலம்மட்டும் இராத்தங்கவும் வேண்டாம்.

௨௬ உன் சீர்மையின் முதல் விளைச்சலில் முந்தின கனியை உன் பராபரனாகிய கர்த்தரின் வீட்டிற்குக் கொண்டுவருவாயாக; வெள்ளாட்டுக்குட்டியை அதின் தாயின் பாலோடேகூடச் சமைக்காயாக என்றார்.

௨௭ ¶ பின்னையும் கர்த்தர் மோசேயுடனே, இந்த வார்த்தைகளை எழுதிக்கொள்; ஏனெனில் இந்த வார்த்தைகளின்படியே உன்னோடும் இஸ்ரவேலோடும் உடம்படிக்கை பண்ணினேமென்றார்.

௨௮ அவன் அங்கே கர்த்தரோடே இரவும் பகலும் நாற்பதுநாள் அப்பம் புசியாமலும் தண்ணீர் குடியாமலும் இருந்தான்; அவர் பத்து வசனங்களாகிய உடம்படிக்கையின் வார்த்தைகளைப் பலகைகளில் எழுதினார்.

௨௯ ¶ மோசே சாட்சியின் இரண்டு பலகைகளைத் தன் கையிலே பிடித்து, சீனாய் பர்வதத்திலிருந்து இறங்குகிறபொழுது, அவர் தன்னோடே பேசினதினாலே தன் முகத்தின் தோல் பிரகாசிக்கின்றதென்கிறதை அவன் அறியாதிருந்தான்.

௩௦ ஆரோனும் இஸ்ரவேலின் எல்லாப் புத்திரரும் மோசேயைப் பார்க்கும்பொழுது, இதோ, அவன் முகத்தின் தோல் பிரகாசித்தது; ஆகையால் அவனண்டைக்குச் சேரப் பயந்தார்கள்.

௩௧ ஆனால் மோசே அவர்களைக் கூப்பிட்டான்; அப்பொழுது ஆரோனும் சபையிலுள்ள எல்லாப் பிரபுக்களும் அவனண்டைக்குத் திரும்பினார்கள்; மோசே அவர்களோடே பேசினான்.

௩௨ அதற்குப் பிறகு இஸ்ரவேல் புத்திரர் எல்லாரும் அவனண்டையில் சேர்ந்தார்கள்; அப்பொழுது அவன் சீனாய்பர்வதத்திலே கர்த்தர் தன்னோடே பேசினவைகளை எல்லாம் அவர்களுக்குக் கற்பித்தான்.

௩௩ மோசே அவர்களோடே பேசி * முடியும்மட்டும், தன் முகத்தின்மேல் முக்காடு போட்டிருந்தான். *உ கொரி. ௩. எ.

௩௪ ஆனால் மோசே கர்த்தரின் சந்நிதியிலே அவரோடே பேசும்படிக்கு உள்பிரவேசிக்கையில், முக்காட்டை வாங்கிப் புறப்படும்மட்டும் போடாதிருந்தான்; அவன் புறப்பட்டுவந்து, தனக்குக் கற்பிக்கப்பட்டதை இஸ்ரவேல் புத்திரரோடே சொல்லும்பொழுதோவெனில்,

௩௫ இஸ்ரவேல் புத்திரர் அவன் முகத்தை அதின் தோல் பிரகாசிக்கிறதென்று பார்த்தார்கள், ஆகையால் மோசே அவரோடே பேசும்படிக்கு உள்பிரவேசிக்கும்மட்டும், முக்காட்டைத் திரும்பத் தன் முகத்தின் மேலே போடுவான்.

## ௩௫. அதிகாரம்.

மோசே இஸ்ரவேல் புத்திரரின் சபையை எல்லாம் கூட்டி, அவர்களோடே

சொன்னதாவது: கர்த்தர் செய்யக் கற்பித்ததேதெனில்,

௨ ஆறுநாளுக்குள்ளே உன் வேலையைச் செய்வாயாக; ஏழாம் நாளோவென்றால் உங்களுக்குப் பரிசுத்தமாயிருப்பதாக; அது கர்த்தருக்கென்று ஓய்ந்திருக்கும் ஓய்வுநாள்; அதிலே வேலைசெய்கிறவனெல்லாம் கொலையுண்ணக்கடவன்.

௩ ஓய்வுநாளில் உங்கள் வாசஸ்தலங்களிலெல்லாம் நெருப்பு மூட்டாதிருப்பீர்களாகவென்று கற்பித்தாரென்றான்.

௪ ¶ பின்னையும் மோசே இஸ்ரவேல் புத்திரரின் சபையோடெல்லாம் சொன்னதாவது: கர்த்தர் கற்பித்ததேதெனில்,

௫ *உங்களுக்குண்டானதிலே கர்த்தருக்கு ஒரு காணிக்கையை எடுத்துச் செலுத்துங்கள்; மனப்பூர்வகமுள்ளவனெல்லாம் அதைக் கொண்டுவரக்கடவன்; கர்த்தருக்குச் செலுத்தும் காணிக்கை என்னவெனில், பொன்னும், வெள்ளியும், வெண்கலமும்,

*௨ மோ. ௨௫. ௨.

௬ இளநீலநூலும், இரத்தாம்பரநூலும், சிவப்புநூலும், மெல்லிய பஞ்சுநூலும், வெள்ளாட்டுமயிரும்,

௭ சிவப்புத்தீர்ந்த ஆட்டுக்கடாத் தோல்களும், தகசுகளின்தோல்களும், சீத்திம் மரங்களும்,

௮ விளக்குக்கு எண்ணெயும், அபிஷேகத் தெண்ணெய்க்குப் பரிமளவர்க்கங்களும், தூபம் காட்டுதலுக்குச் சுகந்த வர்க்கங்களும்,

௯ ஆசாரிய சால்வைக்கும் மார்ப்பதக்கத்திற்கும் கோமேதகக் கற்களும் பதித்துவைக்கும் இரத்தினங்களும்தானே.

௰ உங்களில் ஞானமான இருதயமுள்ள அனைவரும் வந்து கர்த்தர் கற்பித்தவைகளை எல்லாம் செய்வார்களாக.

௰௧ வாசஸ்தலத்தையும், அதின் கூடாரத்தையும், அதின் மூடியையும், அதின் துறட்டுகளையும், அதின் பலகைகளையும், அதின் தாழ்ப்பாள்களையும், அதின் தூண்களையும், அதின் கால்களையும்,

௰௨ பெட்டியையும், அதின் வாலைகளையும், கிருபாசனமான மூடியையும், மறைவின் திரையையும்,

௰௩ மேசையையும், அதின் வாலைகளையும், அதினுடைய எல்லா முட்டுகளையும், சமுகத்து அப்பங்களையும்,

௰௪ வெளிச்சம்காட்டும் குத்துவிளக்கையும், அதின் முட்டுகளையும், அதின் விளக்குகளையும், வெளிச்சத்திற்கு எண்ணெயையும்,

௰௫ தூபபீடத்தையும், அதின் வாலைகளையும், அபிஷேகத்தெண்ணெயையும், சுகந்தங்களின் தூபவர்க்கத்தையும், வாசஸ்தலத்தின் வாசலுக்கு மறைவையும்,

௰௬ தகனபலிபீடத்தையும், அதின் வெண்கலச் சல்லடையையும், அதின் வாலைகளையும், அதினுடைய எல்லா முட்டுகளையும், தொட்டியையும், அதின் புரிமனையையும்,

௰௭ பிரகாரத்தின் வெளியாடைகளையும், அதின் தூண்களையும், அதின் கால்களையும், பிரகாரத்து வாசலின் மறைவையும்,

௰௮ வாசஸ்தலத்தின் முளைக் கூச்சுகளையும், பிரகாரத்தின் முளைக் கூச்சுகளையும், அவைகளின் கயிறுகளையும்.

௰௯ பரிசுத்த ஸ்தலத்திலே செய்கிற ஆராதனையின் சீலைகளையும், ஆசாரிய ஊழியம் செய்கிற ஆரோனின் பரிசுத்த வஸ்திரங்களையும், அவன் குமாரரின் வஸ்திரங்களையும், அவர்கள் செய்வார்களாக என்றாரென்று சொன்னான்.

௨௰ ¶ அப்பொழுது இஸ்ரவேல் புத்திரரின் சபை எல்லாம் மோசேயைவிட்டுப் புறப்பட்டது.

௨௧ எவர்களை அவர்கள் இருதயம் எழுப்பி, அவர்கள் ஆவி பூர்வமாக்கிற்றோ, அவர்களெல்லாரும் வந்து, ஆசரிப்புக் கூடாரத்தின் வேலைக்கும் அதின் சகல ஊழியத்திற்கும் பரிசுத்த வஸ்திரங்களுக்கும் கர்த்தருக்குக் காணிக்கையைக் கொண்டுவந்தார்கள்.

௨௨ கர்த்தருக்குப் பொன்னை அசைவாட்

Digitized by Google

டும் காணிக்கையாகச் செலுத்துகிற புருஷரும் பெண்சாதிகளுமான மனப்பூர்வமுள்ள அனைவரும் வந்து, சரடுகள், கடுக்கன்கள், மோதிரங்கள், காப்புகள்முதலான சகலவித பொன்பணிகளையும் கொண்டுவந்தார்கள்.

௨௩ தங்களிடத்தில் இளநீலநூலையும், இரத்தாம்பரநூலையும், சிவப்புநூலையும், மெல்லிய பஞ்சுநூலையும், வெள்ளாட்டுமயிரையும், சிவப்புத்தீர்ந்த ஆட்டுக்கடாத் தோல்களையும், தகசுகளின் தோல்களையும் கண்டுபிடித்த யாவரும் கொண்டுவந்தார்கள்.

௨௪ வெள்ளியையும் வெண்கலத்தையும் கொடுக்கத்தக்க யாவரும் அவைகளைக் கர்த்தருக்குக் காணிக்கையாகக் கொண்டுவந்தார்கள்; வேலையிலே சகலவித கிரியைக்குமான சீத்திம் மரங்களைத் தங்களிடத்தில் கண்டுபிடித்த யாவரும் கொண்டுவந்தார்கள்.

௨௫ ஞானமான இருதயமுள்ள ஸ்திரிகளெல்லாரும் தங்கள் கைகளினாலே நூற்று, தாங்கள் நூற்ற இளநீலநூலையும், இரத்தாம்பரநூலையும், சிவப்புநூலையும், மெல்லிய பஞ்சுநூலையும் கொண்டுவந்தார்கள்.

௨௬ எந்த ஸ்திரிகளை அவர்கள் இருதயம் ஞானமாகச்செய்ய எழுப்பிற்றோ, அவர்கள் வெள்ளாட்டுமயிரை நூற்றார்கள்.

௨௭ பிரபுக்கள் ஆசாரிய சால்வைக்கும் மார்ப்பதக்கத்திற்கும் என்று கோமேதகக் கல்லுகளையும், பதித்துவைக்கும் இரத்தினங்களையும்,

௨௮ பரிமள வர்க்கங்களையும், விளக்கெண்ணெயையும், அபிஷேகத்தெண்ணெய்க்கும் சுகந்தவர்க்கங்களின் தூபங்காட்டுதலுக்கும் வேண்டியவைகளையும் கொண்டுவந்தார்கள்.

௨௯ செய்கிறதற்குக் கர்த்தர் மோசேயைக் கொண்டு கற்பித்த எல்லா வேலைக்கும் கொண்டுவர, இஸ்ரவேல் புத்திரரில் தங்கள் இருதயத்தால் மனப்பூர்வமாக்கப்பட்ட எல்லாப் புருஷரும் ஸ்திரிகளும் கர்த்தருக்குக் காணிக்கையைக் கொண்டுவந்தார்கள்.

௩௰ ¶ மோசே இஸ்ரவேல் புத்திரரோடே சொன்னதாவது: பாருங்கள், கர்த்தர் *யூதாவின் கோத்திரத்தில் ஊருடைய மகனான ஊரியின் குமாரன் பெத்சாலெயேலைப் பேர்சொல்லி அழைத்து, *௨ மோ. ௩௧. ௨.

௩௧ அவன் விநோதமான வேலைகளை யோசித்துச் செய்யவும், பொன்னிலும் வெள்ளியிலும் வெண்கலத்திலும் வேலைசெய்யவும்,

௩௨ இரத்தினங்களை முத்திரைவெட்டாக வெட்டிப் பதித்துவைக்கவும், மரத்திலே தச்சுவேலைசெய்து சகல விநோதமான வேலையைப் பண்ணவும்,

௩௩ அவனுக்கு ஞானமும் உணர்வும் அறிவும் சகலவித வேலையின் வித்தையும் உண்டாக அவனைப் பராபரன் தம்முடைய ஆவியினாலே நிரப்பினார்.

௩௪ அவன் இருதயத்திலும், தாண் கோத்திர அகிசமாகின் குமாரனாகிய அகோலியாபின் இருதயத்திலும், போதிக்கிறதற்கான வரத்தையும் கொடுத்தார்.

௩௫ சகலவித தொழிலின் சூட்சுமவேலையையும், இளநீலநூலாலும், இரத்தாம்பரநூலாலும், சிவப்புநூலாலும், மெல்லிய பஞ்சுநூலாலும் பண்ணுகிற சித்திரத்தையல் வேலையையும், நெய்கிற எல்லா வேலையையும் செய்ய, அவர்களை இருதயத்தின் ஞானத்தினாலே நிரப்பினார்; அவர்கள் சகலவித வேலையைச் செய்த விநோதமான வேலைகளை யோசித்துப் பண்ணுவார்கள் என்றார்.

## ௩௬. அதிகாரம்.

அப்பொழுது பெத்சாலெயேலும், அகோலியாபும், பரிசுத்தவேலையின் எல்லாக் கிரியையும் கர்த்தர் கற்பித்தபடி எல்லாம் செய்ய அறியும்படிக்கு, கர்த்தர் ஞானமும் உணர்வும்கொடுத்த ஞானமான இருதயமுள்ள அனைவரும், வேலைக்குட்பட்டார்கள்.

Digitized by Google

௨ ஏனென்றால் மோசே பெத்சாலெயேலையும், அகோலியாபையும், கர்த்தர் ஞானம்

கொடுத்ததினாலே அந்த வேலையைச் செய்யச் சேருகிறதற்கு, தங்கள் இருதயத்தால் எழுப்பப்பட்ட ஞானமுள்ள இருதயத்தாராகிய எல்லாரையும் வரவழைத்தான்.

௩ அவர்கள் இஸ்ரவேல் புத்திரர் பரிசுத்த வேலையின் கிரியைக்குக் கொண்டுவந்ததாகிய மோசேக்குமுன்பாக இருந்த காணிக்கையை எல்லாம் அதைச் செய்யும்படிக்கு ஒப்புவித்துக்கொண்டார்கள்; இவர்களோவென்றால் இன்னம் காலையில் மனப்பூர்வமான காணிக்கைகளை அவனண்டைக்குக் கொண்டுவந்தார்கள்.

௪ ¶ அப்பொழுது பரிசுத்தவேலையையெல்லாம் செய்கிற சகல ஞானிகளும் அவரவர் தாங்கள் செய்கிற வேலையின் காரியமாய் வந்து,

௫ மோசேயுடனே, கர்த்தர் செய்யக் கற்பித்த கிரியையின் வேலைக்கு வேண்டியதைப்பார்க்கிலும் சனம் மிச்சமாய்க் கொண்டுவருகின்றதென்றார்கள்.

௬ அப்பொழுது மோசே இனிப் புருஷரும் ஸ்திரிகளும் பரிசுத்த காணிக்கைக்கென்று வேலைசெய்யார்களாகவென்று பாளயத்திலே கூறக் கட்டளையிட்டான்; அப்படியே சனம் கொண்டுவருகிறது நிறுத்தப்பட்டது.

௭ ஏனெனில் செய்யப்போகிற எல்லா வேலைக்கும் போந்த தளவாடம் அதிகமாயிருந்தது.

௮ ¶ வேலையைச் செய்கிறவர்களில் ஞானமான இருதயமுள்ள அனைவரும் *வாசஸ்தலத்தை உண்டாக்கினார்கள்; அதற்குத் திரித்த மெல்லிய பஞ்சுநூலும், இளநீலநூலும், இரத்தாம்பரநூலும், சிவப்புநூலும், நெய்தலான விநோத வேலையாகிய கேருபீன்களுமுள்ள பத்துச் சமுக்காளங்களைப் பண்ணுவித்தான். *௨ மோ. ௨௬. ௧.

௯ ஒவ்வொரு சமுக்காளம் இருபத்தெட்டு முழ நீளமும், நான்குமுழ அகலமும், சமுக்காளங்களெல்லாம் ஒரே அளவுமாயிருந்தன.

௰ ஐந்து சமுக்காளங்களை ஒன்றோடொன்றாக இணைத்து, மற்ற ஐந்து சமுக்காளங்களையும் ஒன்றோடொன்றாக இணைத்தான்.

௰௧ இணைக்கப்பட்ட ஒரு சமுக்காளத்தின் கடைஓரத்திலே இளநீலநூலால் ஐம்பது காதுகளை உண்டுபண்ணி, அப்படியே இணைக்கப்பட்ட மற்றச் சமுக்காளத்தின் கடைஓரத்திலும் உண்டுபண்ணினான்.

௰௨ காதுகள் ஒன்றுக்கொன்று எதிராகச் சேர்ந்தவைகளாயிருந்தன.

௰௩ ஐம்பது பொன்துறடுகளையும் பண்ணி, அவைகளால் சமுக்காளங்களை ஏகவாசஸ்தலமாகப் போகும்படிக்கு, ஒன்றுக்கொன்று இணைத்துப்போட்டான்.

௰௪ ¶ வாசஸ்தலத்தின்மேல் கூடாரமாக ஆட்டுமயிரினால் நெய்த பதினொரு சமுக்காளங்களையும் பண்ணினான்.

௰௫ ஒவ்வொரு சமுக்காளம் முப்பது முழ நீளமும், நான்குமுழ அகலமும், பதினொரு சமுக்காளங்களும் ஒரே அளவுமாயிருந்தன.

௰௬ ஐந்து சமுக்காளங்களை ஒன்றாகவும் ஆறு சமுக்காளங்களை ஒன்றாகவும் இணைத்து,

௰௭ இணைக்கப்பட்ட ஒரு சமுக்காளத்தின் கடைஓரத்தில் ஐம்பது காதுகளையும், இணைக்கப்பட்ட மற்றச் சமுக்காளத்தின் ஓரத்தில் ஐம்பது காதுகளையும்,உண்டாக்கி,

௰௮ கூடாரத்தை ஒன்றாய் இணைத்துவிட ஐம்பது வெண்கலத் துறடுகளை உண்டாக்கினான்.

௰௯ ¶ சிவப்புத்தீர்ந்த ஆட்டுக்கடாத் தோல்களினாலே கூடாரத்திற்கு ஒரு மூடியையும் அதின்மேலே தகசுத்தோல்களினாலே ஒரு மூடியையும் உண்டுபண்ணினான்.

௨௰ ¶ நிமிர்ந்துநிற்கிற பலகைகளையும் வாசஸ்தலத்திற்குச் சீத்திம் மரங்களாலே செப்பனிட்டான்.

௨௰௧ ஒவ்வொரு பலகை பத்துமுழ நீளமும் ஒன்றரைமுழ அகலமுமாயிருந்தது.

௨௰௨ ஒன்றுக்கொன்று எதிரே இசைவான

Digitized by Google

ஒழுங்காயிருக்கிற இரண்டு முளைகள் ஒவ்வொரு பலகைக்கிருந்தன; இப்படி வாசஸ்தலத்தின் பலகைகளுக்கெல்லாம் செய்தான்.

௨௩ வாசஸ்தலத்திற்காகச் செப்பனிட்ட பலகைகளில் இருபதைத் தெற்கே தென்திசைக்கு எதிராக நிறுத்தி,

௨௪ அந்த இருபது பலகைகளின்கீழே நாற்பது வெள்ளிக்கால்களை, ஒவ்வொரு பலகையின்கீழ் அதின் இரண்டு முளைகளுக்கான இரண்டு கால்களாக, உண்டுபண்ணிவைத்து,

௨௫ வாசஸ்தலத்தின் வடக்கான மறுபக்கத்திலும் இருபது பலகைகளை நிறுத்தி,

௨௬ அவைகளின் நாற்பது வெள்ளிக்கால்களையும் ஒவ்வொரு பலகையின்கீழ் இரண்டுகால்களாகப் பண்ணுவித்தான்.

௨௭ வாசஸ்தலத்தின் மேல்ப்புறமாக ஆறு பலகைகளை நிறுத்தி,

௨௮ வாசஸ்தலத்தின் இரண்டு பக்கக்கோடிகளுக்கு இரண்டு பலகைகளையும் செப்பனிட்டான்.

௨௯ இவைகள் தாழத்துவக்கி இரண்டு பக்கங்களை ஏகமாய்ப் பிடித்து, உயர ஒரே சட்டமாய் இசைந்திருந்தன; இரண்டு கோடிகளிலுமிருக்கும் இரண்டையும் அப்படிச்செய்தான்.

௩௰ அப்படியே பலகைகள் எட்டும் அவைகளுடைய வெள்ளிக்கால்கள் ஒவ்வொரு பலகையின்கீழ் இரண்டிரண்டு காலாகப் பதினாறுமாயிருந்தன.

௩௧ ¶ சீத்திம் மரங்களால் வாசஸ்தலத்தின் ஒரு பக்கத்துப் பலகைகளுக்கு ஐந்து தாழ்ப்பாள்களையும்,

௩௨ வாசஸ்தலத்தின் மறுபக்கத்துப் பலகைகளுக்கு ஐந்து தாழ்ப்பாள்களையும், வாசஸ்தலத்தின் மேல்ப்புறமான பின்பக்கத்துப் பலகைகளுக்கு ஐந்து தாழ்ப்பாள்களையும் பண்ணி,

௩௩ நடுத் தாழ்ப்பாளைப். பலகைகளின் மையத்திலே ஒருமுனைதுவக்கி மறுமுனை மட்டும் பாய்ச்சப்படுகிறதாக்கினான்.

௩௪ பலகைகளைப் பொன் தகட்டால் மூடி, தாழ்ப்பாள்களின் இடங்களாகிய அவைகளின் வளையங்களைப் பொன்னினாலே பண்ணி, தாழ்ப்பாள்களைப் பொன்தகட்டால் மூடினான்.

௩௫ ¶ இளநீலநூலும், இரத்தாம்பரநூலும், சிவப்புநூலும், திரித்த மெல்லிய பஞ்சுநூலும், நெய்தலின் விநோத வேலையாகிய கேருபீன்களுமுள்ள திரையை உண்டுபண்ணி,

௩௬ அதற்குச் சீத்திம் மரமான நான்கு தூண்களைச் செப்பனிட்டு, அவைகளைப் பொன்தகட்டால் மூடி, அவைகளின் வளைவாணிகளைப் பொன்னினாலே பண்ணி, அவைகளுக்கு நான்கு வெள்ளிக்கால்களை வார்ப்பித்தான்.

௩௭ ¶ கூடாரத்தின் வாசலுக்கு இளநீலநூலும், இரத்தாம்பரநூலும், சிவப்புநூலும், திரித்த மெல்லிய பஞ்சுநூலும், சித்திரத்தையல்வேலையுமான ஒரு மறைவையும்,

௩௮ அதின் ஐந்து தூண்களையும், அவைகளின் வளைவாணிகளையும் உண்டாக்கி, அவைகளின் குமிழ்களையும், அதின் வளையங்களையும், பொன்தகட்டால் மூடினான்; அவைகளுக்கு வார்ப்பித்த ஐந்து கால்களோவெனில் வெண்கலம்.

## ௩௭. அதிகாரம்.

பெத்சாலெயேல் சீத்திம் மரங்களால் *பெட்டியை உண்டுபண்ணினான்; அதின் நீளம் இரண்டரை முழமும், அதின் அகலம் ஒன்றரை முழமும், அதின் உயரம் ஒன்றரை முழமுமானது. *௨ மோ. ௨௫. ௰.

௨ அதை உள்ளும் புறம்பும் சுத்தப் பொன்தகட்டால் மூடி, சுற்றிலும் அதற்குப் பொன்திரணையை உண்டாக்கி,

௩ அதற்கு நான்கு பொன்வளையங்களை வார்ப்பித்து, அவைகளை அதின் நான்கு கோடிகளிலே, ஒரு பக்கத்தில் இரண்டு வளையங்களும் மறுபக்கத்தில் இரண்டு வளை



Digitized by Google

யங்களும் இருக்கும்படிக்குத் தைத்து,

௪ சீத்திம் மரங்களான வாரைகளைச் செய்ப்பணிட்டு, அவைகளைப் பொன்தகட்டால் மூடி,

௫ அந்த வாரைகளால் பெட்டியைச் சுமக்கும்படிக்கு, அவைகளைப் பெட்டியின் பக்கங்களிலுள்ள வளையங்களில் பாய்ச்சினான்.

௬ ¶ சுத்தப் பொன்னினாலே *கிருபாசனமான மூடியையும் பண்ணினான்; அது இரண்டரைமுழ நீளமும் ஒன்றரைமுழ அகலமுமானது. *௨ மோ. ௨௫. ௰௭.

௭ பொன்னான இரண்டு கேருபீன்களையும் அடிக்கப்பட்ட பொன்னினாலே உண்டாக்கி, கிருபாசனமான மூடியின் இரண்டோரங்களிலே,

௮ ஒரே கேருபீன் இந்தப்புறத்தினோரத்திலும், மற்றக் கேருபீன் அந்தப்புறத்தினோரத்திலும் இருக்கும்படி பண்ணினான்; அந்தக் கேருபீன்களைக் கிருபாசனமான மூடியின் இரண்டோரங்களில் அதிலிருந்து உண்டானவைகளாக இருக்கப்பண்ணினான்.

௯ அந்தக் கேருபீன்கள் தங்கள் செட்டைகளை உயர விரித்து, தங்கள் செட்டைகளாலே கிருபாசனமான மூடியை மூடுகிறவைகளும் ஒன்றுக்கொன்று எதிர்முகங்களுமாயிருந்தன; கேருபீன்களின் முகங்கள் கிருபாசனமான மூடியை நோக்கிக்கொண்டிருந்தன.

௰ ¶ சீத்திம் மரங்களாலே *மேசையையும் பண்ணினான்; அது இரண்டுமுழ நீளமும் ஒரு முழ அகலமும் ஒன்றரை முழ உயரமுமானது. *௨ மோ. ௨௫. ௨௩.

௰௧ அதைச் சுத்தப் பொன்தகட்டால் மூடி, சுற்றிலும் அதற்குப் பொன்திரணையை உண்டாக்கி,

௰௨ சுற்றிலும் அதற்கு நான்கு விரல்கடையான சட்டத்தையும் சுற்றிலும் அதின் சட்டத்திற்கும் பொன்திரணையை உண்டுபண்ணி,

௰௩ அதற்கு நான்கு பொன்வளையங்களை வார்ப்பித்து, அவைகளை அதின் நான்கு கால்களுக்கிருக்கும் நான்கு கோடிகளிலே தைத்தான்.

௰௪ அந்த வளையங்கள் மேசையைச் சுமக்கும் வாரைகளின் இடங்களாயிருக்கும்படிக்குச் சட்டத்துக்கெதிரே இருக்கப்பண்ணினான்.

௰௫ மேசையைச் சுமக்கும் அந்த வாரைகளைச் சீத்திம் மரங்களாலே பண்ணி, அவைகளைப் பொன்தகட்டால் மூடி,

௰௬ மேசையின்மேலிருக்கும் மூட்டுகளாகிய அதின் கலங்களையும், அதின் தூபக்கிண்ணிகளையும், அதின் கரகங்களையும், மூடுகிறதற்கான அதின் தட்டுகளையும், சுத்தப் பொன்னினாலே உண்டாக்கினான்.

௰௭ ¶ *அடிக்கப்பட்ட சுத்தப் பொன்னினாலே குத்துவிளக்கையும் உண்டாக்கினான்; அதின் தண்டும் அதின் கிளைகளும் அதின் மொக்குகளும் அதின் மாதளம்பழங்களும் அதின் பூக்களும் அதிலிருந்து புறப்படுகிறவைகளாயிருந்தன. *௨ மோ. ௨௫. ௩௧.

௰௮ குத்துவிளக்கின் பக்கங்களிலிருந்து ஆறு கிளைகள், மூன்று அதின் ஒரு பக்கத்திலும் மூன்று அதின் மறு பக்கத்திலுமிருந்து புறப்பட்டன.

௰௯ ஒவ்வொரு கிளையிலே வாதுமைக்கொட்டைகளின் சாயலான மூன்று மொக்குகளும் ஒரு மாதளம்பழமும் ஒரு பூவும் இருந்தன; குத்துவிளக்கிலிருந்து புறப்படுகிற ஆறு கிளைகளிலும் அப்படியிருந்தன.

௨௰ விளக்குத்தண்டிலோவென்றால், வாதுமைக்கொட்டைகளின் சாயலான நான்கு மொக்குகளும் அதின் மாதளம்பழங்களும் அதின் பூக்களுமிருந்தன.

௨௧ அதிலிருந்து புறப்படுகிற இரண்டு கிளைகளின்கீழ் ஒரு மாதளம்பழமும் வேறே இரண்டு கிளைகளின்கீழ் ஒரு மாதளம்பழமும் குறை இரண்டு கிளைகளின்கீழ் ஒரு மாதளம்பழமும் இருந்தன; விளக்குத்தண்டிலிருந்து புறப்படுகிற ஆறு கிளைகளுக்கும் அப்படி இருந்தன.

௨௨ அவைகளின் மாதளம்பழங்களும் அ-



Digitized by Google

லைகளின் கிளைகளும் அதிலிருந்து உண்டானவைகளாக இருந்தன; எல்லாம் அடிக்கப்பட்ட சுத்தப் பொன்னாகிய ஒரு துண்டாயிருந்தது.

௨௩ அதின் ஏழு விளக்குகளையும் அதின் கத்தரிகளையும் விளக்கணைக்கிற எத்தனங்களையும் சுத்தப் பொன்னினாலே உண்டாக்கினான்.

௨௪ அதை அதினுடைய எல்லா முஸ்தீதுகளோடுங்கூட ஒரு தாலந்து சுத்தப் பொன்னினாலே உண்டுபண்ணினான்.

௨௫ ¶ சீத்திம் மரங்களினாலே *தூபபீடத்தையும் உண்டாக்கினான்; அது ஒரு முழ நீளமும் ஒரு முழ அகலமுமாகிய சதுரமும், இரண்டு முழ உயரமும், அதின் கொம்புகள் அதனோடு, ஒரு துண்டுமாய் இருந்தன. *௨ மோ. ௩௰. ௧.

௨௬ அதை எல்லாம் அதின் மேல்பலகையையும், அதின் சுற்றுப்பக்கங்களையும், அதின் கொம்புகளையும், சுத்தப் பொன்தகட்டால் மூடி, சுற்றிலும் அதற்குப் பொன்திரணையை உண்டுபண்ணி,

௨௭ அதின் திரணையின்கீழ் அதின் இரண்டு பக்கங்களிலிருக்கும் இரண்டு கோடிகளில் இவ்விரண்டு பொன்வளையங்களை அதைச்சுமக்கும் வாரைகளினிடங்களாகத் தைத்து,

௨௮ சீத்திம் மரங்களால் அந்த வாரைகளைச் செய்து, அவைகளைப் பொன்தகட்டால் மூடினான்.

௨௯ பரிசுத்த அபிஷேகத்தெண்ணெயையும் சுத்தமான சுகந்தங்களின் தூபவர்க்கத்தையும் தயிலக்காரன் வேலையாக உண்டுபண்ணினான்.

## ௩௮. அதிகாரம்.

சீத்திம் மரங்களால் *தகனபலிபீடத்தையும் உண்டாக்கினான்; அது ஐந்துமுழ நீளமும் ஐந்துமுழ அகலமுமான சதுரமும் மூன்றுமுழ உயரமுமானது. *௨ மோ. ௨௭. ௧.

௨ அதின் நான்கு கோடிகள்மேல் அதனோடு ஏகமாயிருக்கிற அதின் நான்கு கொம்புகளையும் உண்டாக்கி, அதை வெண்கலத் தகட்டால் மூடி,

௩ அந்தப் பீடத்தின் சகலமுட்டுகளாகிய செப்புச்சட்டிகளையும் சாம்பலெடுக்கும் கரண்டிகளையும் கலங்களையும் முள்துறடுகளையும் கலசங்களையும் உண்டாக்கினான்; அதின் முட்டுகளை எல்லாம் வெண்கலத்தினாலே பண்ணினான்.

௪ வலைபோலிருக்கிற ஒரு வெண்கலச் சல்லடையையும் பலிபீடத்திற்கு உண்டாக்கி, அதைத் தாழ அதின் சுற்றிற்குக் கீழ்ப்புறமாக அதின் பாதிமட்டும் வரவைத்து,

௫ வாரைகளின் இடங்களாகிய நான்கு வளையங்களை வார்ப்பித்து, வெண்கலச் சல்லடையின் நான்கு முனைகளில் வைத்து,

௬ சீத்திம் மரங்களால் வாரைகளைப் பண்ணி, அவைகளை வெண்கலத் தகட்டால் மூடி,

௭ அவைகளைப் பலிபீடத்தின் பக்கங்களிலிருக்கிற வளையங்களிலே, அதை அவைகளாலே சுமக்கும்படிக்குப் பாய்ச்சினான்; அதைப் பலகைகளினாலே குழாயாக்கினான்.

௮ ¶ *ஆசரிப்புக்கூடாரத்தின் வாசலில் கும்பு கும்பாய் வந்து காணிக்கை செலுத்துகிற ஸ்திரிகளின் கண்ணாடிகளாலே, வெண்கலத்தொட்டியையும் அதின் வெண்கலப் புரிமணையையும் உண்டாக்கினான்; †பிரகாரத்தையும் உண்டுபண்ணினான்.
*௨ மோ. ௩௰. ௰௮. †௨ மோ. ௨௭. ௯.

௯ ¶ தெற்கே தென்பக்கத்திற்கு எதிராயிருக்கிற திரித்த மெல்லிய பஞ்சுநூலால் நெய்த பிரகாரத்தின் வெளியாடைகள் நூறு முழமும்,

௰ அவைகளின் தூண்கள் இருபது; அவைகளின் இருபது கால்கள் வெண்கலமும், தூண்களின் வளைவாணிகளும் அவைகளின் வளையங்களும் வெள்ளியுமானது.

௰௧ வடபக்கத்திற்கு ஏற்றவைகளும் நூறு முழமும், அவைகளின் தூண்கள் இருபது; இவைகளின் இருபது கால்கள்

Digitized by Google

வெண்கலமும், தூண்களின் வளைவாணிகளும் வளையங்களும் வெள்ளியுமானது.

௧௨ மேல்ப்பக்கத்திற்கு எதிரான வெளியாலடைகள் ஐம்பது முழமானது; அவைகளின் தூண்கள் பத்து; இவைகளின் கால்களும் பத்து; தூண்களின் வளைவாணிகளும் வளையங்களும் வெள்ளி.

௧௩ சூரியன் உதிக்கிற கீழ்ப்பக்கத்திற்கு எதிரானவைகளும் ஐம்பது முழம்.

௧௪ அங்கே ஒருபுறத்து வெளியாலடைகள் பதினைந்து முழமானது; அவைகளின் தூண்கள் மூன்றும் இவைகளின் கால்கள் மூன்றும்தானே.

௧௫ பிரகாரவாசலின் இந்தப்பக்கத்துக்குச்சரியாக அந்தப்பக்கத்திலும் மறுபுறத்து வெளியாலடைகள் பதினைந்து முழமானது; அவைகளின் தூண்கள் மூன்றும் இவைகளின் கால்கள் மூன்றும்தானே.

௧௬ சுற்றிலும் பிரகாரத்தின் வெளியாலடைகளெல்லாம் மெல்லிய பஞ்சுநூலால் நெய்தது.

௧௭ தூண்களின் கால்கள் வெண்கலமும், தூண்களின் வளைவாணிகளும் வளையங்களும் வெள்ளியுமானது; அவைகளின் குமிழ்கள் வெள்ளித்தகட்டால் மூடப்பட்டதும், பிரகாரத்தின் தூண்களெல்லாம் வெள்ளி வளையங்கள் போடப்பட்டவைகளுமாயிருந்தன.

௧௮ *பிரகாரவாசலின் மறைவோவென்றால், இளநீலநூலும், இரத்தாம்பரநூலும், சிவப்புநூலும், திரித்த மெல்லிய பஞ்சுநூலுமாகிய சித்திரத்தையல்வேலையாயிருந்தது; அதின் நீளம் இருபது முழமும், அகலமாகிய அதின் உயர்வு பிரகாரத்தின் வெளியாலடைகளுக்குச் சரிசமானமாய் ஐந்து முழமுமானது. *உ மோ. உ௭. ௧௪.

௧௯ அவைகளின் தூண்கள் நான்கு; அவைகளின் நான்கு கால்கள் வெண்கலமும், அவைகளின் வளைவாணிகள் வெள்ளியும், அவைகளின் குமிழ்கள் மூடப்பட்ட தகடும், அவைகளின் வளையங்களும் வெள்ளியுமாயிருந்தன.

௨0 வாசஸ்தலத்திற்கும் பிரகாரத்திற்கும் சுற்றிலுமிருந்த எல்லா முளைக்கூச்சுகளும் வெண்கலம்.

௨௧ ¶ சாட்சியின் வாசஸ்தலத்திற்குச் சென்றவைகளின்கணக்கோவென்றால், அவைகள் மோசேயின் சொல்படி ஆசாரியனாகிய ஆரோனின் குமாரனான இத்தமாரின் கையிலே லேவியரின் ஊழியத்திற்கென்று எண்ணப்பட்டது.

௨௨ யூதா கோத்திரத்து ஊரின் மகனாகிய ஊரியின் குமாரன் பெத்சாலேயேல் கர்த்தர் மோசேக்குக் கற்பித்ததை எல்லாம் பண்ணினான்.

௨௩ அவனோடேகூடத் தாண்கோத்திரத்து அகிசாமாகின் குமாரனாகிய அகோலியாப் சூட்சவேலைசெய்கிற தொழிலாளியும், இளநீலநூலாலும், இரத்தாம்பரநூலாலும், சிவப்புநூலாலும், மெல்லிய பஞ்சுநூலாலும், சித்திரத்தையல் வேலைசெய்கிறவனுமாயிருந்தான்.

௨௪ ¶ பரிசுத்தஸ்தலத்தின் வேலைக்கெல்லாம் அசைவாட்டும் காணிக்கையாகக் கொடுக்கப்பட்டு, செலவான பொன்னெல்லாம் பரிசுத்தஸ்தலத்தின் சேக்கலாலே இருபத்தொன்பது தாலந்தும் எழுநூற்று முப்பது சேக்கல் நிறையுமாயிருந்தன.

௨௫ ¶ சபையில் எண்ணப்பட்டவர்களின் வெள்ளி பரிசுத்தஸ்தலத்தின் சேக்கலால் நூறுதாலந்தும், ஆயிரத்தெழுநூற்றெழுபத்தைந்து சேக்கலுமாயிருந்தது.

௨௬ அதேதெனில் எண்ணப்படுகிறவர்களின் கணக்கிலே வந்த இருபது வயது முதல்கொண்டு மேல்தரமான அறுநூற்று மூவாயிரத்தைந்நூற்றைம்பதுபேர்களில் ஒவ்வொரு தலைக்காகப் பரிசுத்தஸ்தலத்தின் சேக்கலாலே அரைச் சேக்கல் விழுக்காடு சேர்ந்தது.

௨௭ வெள்ளியில் நூறுதாலந்து பரிசுத்தஸ்தலத்தின் கால்களையும் திரையின் கால்களையும் வார்ப்பிக்கிறதற்குச் செலவாயிற்று;

Digitized by Google

காலுக்கு ஒரு தாலந்து விழுக்காடு நூறு கால்களுக்கு நூறு தாலந்துதானே.

௨௮ ஆனால் அந்த ஆயிரத்தெழுநூற்றெழுபத்தைந்து சேக்கலாலே தூண்களுக்கு வளைவாணிகளைப் பண்ணி, அவைகளின் குமிழ்களைத் தகடுகளால் மூடி, அவைகளுக்கு வளையங்களை உண்டாக்கினான்.

௨௯ ¶ அசைவாட்டும் காணிக்கையாகச் செலுத்தப்பட்ட வெண்கலமோவெனில், எழுபது தாலந்தும் இரண்டாயிரத்துநானூறு சேக்கல் நிறையுமாயிருந்தது.

௩௰ அதினாலே ஆசரிப்புக்கூடாரவாசல் மறைவின் கால்களையும் வெண்கலப் பலிபீடத்தையும் அதற்கிருக்கிற வெண்கலச் சல்லடையையும் பலிபீடத்தின் சகல முட்டுகளையும்,

௩௰௧ சுற்றிலும் இருக்கிற பிரகாரத்தின் கால்களையும் பிரகாரவாசல் மறைவின் கால்களையும் வாசஸ்தலத்தின் சகல முளைக்கூச்சுகளையும் சுற்றிலுமிருக்கிற பிரகாரத்தின் சகல முளைக்கூச்சுகளையும் உண்டுபண்ணினான்.

## ௩௰௯. அதிகாரம்.

* இளநீலநூலாலும், இரத்தாம்பரநூலாலும், சிவப்புநூலாலும், அவர்கள் பரிசுத்தஸ்தலத்தில் ஆராதனைசெய்கிறதற்கு வேண்டிய சீலைகளையும், ஆரோனுக்குப் பரிசுத்த வஸ்திரங்களையும், கர்த்தர் மோசேக்குக் கற்பித்தபடியே பண்ணினார்கள். *௨ மோ. ௨௮. ௧.

௨ ¶ ஆசாரிய சால்வையைப் பொன்னினாலும், இளநீலநூலாலும், இரத்தாம்பரநூலாலும், சிவப்புநூலாலும், திரித்த மெல்லிய பஞ்சுநூலாலும் பண்ணினான்.

௩ பொன்னை இளநீலநூலுக்கும், இரத்தாம்பரநூலுக்கும், சிவப்புநூலுக்கும், மெல்லிய பஞ்சுநூலுக்கும் நடுவே விநோதமாய் நெய்யும்படிக்கு, அதின் தகடுகளை வளர்த்தினார்கள், அவைகளை நூல்களாக அறுத்தான்.

௪ இரண்டு தோளின்மேலும் அதை அதின் இரண்டு முனைகளாலே சேர்த்தார்கள்; அங்கே இணைக்கப்பட்டிருந்தது.

௫ அதின்மேல் அதனோடே ஏகத்துண்டாயிருக்கிற விநோதமான கச்சை, அந்த வேலையாகப் பொன்னினாலும், இளநீலநூலாலும், இரத்தாம்பரநூலாலும், சிவப்புநூலாலும், திரித்த மெல்லிய பஞ்சுநூலாலும் கர்த்தர் மோசேக்குக் கற்பித்தபடி பண்ணப்பட்டது.

௬ ¶ முத்திரைகள் வெட்டப்படுகிற வேலையாக இஸ்ரவேல் புத்திரரின் நாமங்களைக் கோமேதகக் கல்லுகளில் வெட்டி, சுற்றிலுமிருக்கிற பொன்னில் இவைகளைப் பதித்தவைகள் ஆக்கினார்கள்.

௭ கர்த்தர் மோசேக்குக் கற்பித்தபடியே அவைகளை இஸ்ரவேல் புத்திரருக்கான நினைப்புக் கற்களாக ஆசாரிய சால்வையினுடைய தோள்களின்மேலே வைத்தான்.

௮ ¶ ஆசாரிய சால்வையின்வேலைக்கொத்த விநோதவேலையாக மார்ப்பதக்கத்தையும், பொன்னினாலும், இளநீலநூலாலும், இரத்தாம்பரநூலாலும், சிவப்புநூலாலும், திரித்த மெல்லிய பஞ்சுநூலாலும் பண்ணினான்.

௯ அந்த மார்ப்பதக்கத்தைச் சதுரமும் இரட்டையும் ஒருசாண் நீளமும் ஒருசாண் அகலமுமாக்கி,

௰ அதிலே இரத்தினக் கற்களை நான்கு பத்தி நிறையப் பதித்தார்கள்; முதலாம் பத்திகெம்பும், புஷ்பராகமும், மரகதமும்.

௰௧ இரண்டாம் பத்தி சிவப்புக்கல்லும், நீலக்கல்லும், வயிரமும்,

௰௨ மூன்றாம் பத்தி பதமராகமும், வயிடூரியமும், அமெதீஸ்தும்,

௰௩ நான்காம் பத்தி தர்சீஸ் இரத்தினமும், கோமேதகமும், யஸ்பியுமானது; அவைகள் தங்களிடங்களிலே சுற்றும் பொன்னில் பதிக்கப்பட்டிருந்தன.

௰௪ இந்தக் கற்கள் இஸ்ரவேல் புத்திரர் நாமங்களின்படியே பன்னிரண்டும் அவர்களுடைய நாமங்களுள்ளவைகளுமாயிருந்தன; பன்னிரண்டு கோத்திரங்களில் ஒவ்வொன்றின் நாமம் ஒவ்வொன்றில் முத்திரை வெட்டாய் வெட்டி இருந்தது.

Digitized by Google

௰௫ மார்ப்பதக்கத்திற்கென்றுசரிபளவுகளும் முடிச்சுக்குத்திகள் வேலையுமான சரப்பளிகளையும் சுத்தப் பொன்னினாலே பண்ணி,

௰௬ இரண்டு பொன் வளையங்களையும் இரண்டு பொன் மோதிரங்களையும் பண்ணி, இந்த இரண்டு மோதிரங்களை மார்ப்பதக்கத்தின் இரண்டு முனைகளில் வைத்து,

௰௭ பொன்னான அந்த இரண்டு முடிச்சுக்குத்திகளை மார்ப்பதக்கத்தின் முனைகளிலிருக்கிற இரண்டு மோதிரங்களில் மாட்டி,

௰௮ இரண்டு முடிச்சுக்குத்திகளின் இரண்டு தனிகளை ஆசாரிய சால்வையினுடைய தோள்களின்மேல் அதின் முன்புறத்திலிருக்கிற அந்த இரண்டு வளையங்களில் மாட்டிவிட்டார்கள்.

௰௯ பின்னையும் இரண்டு பொன்மோதிரங்களைப்பண்ணி, அவைகளை ஆசாரிய சால்வையின் கீழ்ப்புறத்திற்கு எதிரான மார்ப்பதக்கத்தின் மற்ற இரண்டு முனைகளில் அதின் ஓரத்திற்குள்ளாக வைத்து,

௨௰ வேறே இரண்டு பொன்வளையங்களையும் பண்ணி, அவைகளை ஆசாரிய சால்வையினுடைய முன்புறத்தின் இரண்டு கீழ்ப்பக்கங்களில் அதின் இணைப்புக்கு எதிராகவும், ஆசாரிய சால்வையின் விநோதமான கச்சைக்கு மேலாகவும் வைத்து,

௨௧ மார்ப்பதக்கம் ஆசாரிய சால்வையின் விநோதமான கச்சைக்கு மேலாக இருக்கும்படிக்கும், ஆசாரிய சால்வையிலிருந்து விட்டுப்போகாதபடிக்கும், அதை அதின் மோதிரங்களால் ஆசாரிய சால்வையின் மோதிரங்களோடே இளநீலமான கயிற்றினாலே பராபரன் மோசேக்குக் கற்பித்தபடியே கட்டினார்கள்.

௨௨ ஆசாரிய சால்வையின் கீழிருக்கும் அங்கியையோவென்றால், முழுவதும் இளநீலநூலால் நெய்தான்.

௨௩ அங்கியின் நடுவில் மார்க்கவசத்தின் வாய்க்கொப்பான அதின் வாயும் அது கிழியாதபடிக்குச் சுற்றிலும் அதற்கான ஓரமுமிருந்தன.

௨௪ அங்கியின்கீழ் ஓரங்களிலே தொங்கத் திரித்த இளநீலநூலும், இரத்தாம்பரநூலும், சிவப்புநூலுமான வேலையாக மாதளம் பழங்களைப் பண்ணி,

௨௫ சுத்தப் பொன்னினாலே மணிகளையும் பண்ணி, அந்த மணிகளை அங்கியின் ஓரங்களில் சுற்றிலும் மாதளம்பழங்களின் நடுவே தொங்கவைத்தார்கள்.

௨௬ ஆராதனைசெய்ய அங்கியின் ஓரங்களிலே சுற்றிலும் ஒரு மணியும் ஒரு மாதளம் பழமுமாகக் கர்த்தர் மோசேக்குக் கற்பித்தபடியே தொங்கி இருக்கத்தானே.

௨௭ ¶ ஆரோனுக்கும் அவன் குமாரருக்கும் மெல்லிய பஞ்சுநூல் நெய்தலாக உள் சட்டைகளையும்,

௨௮ பாகையையும், அலங்காரமான குல்லாக்களையும், திரித்த மெல்லியநூல் நெய்தலாகச் சணல்நூல் சல்லடங்களையும்,

௨௯ திரித்த மெல்லிய பஞ்சுநூலாலும், இளநீலநூலாலும், இரத்தாம்பரநூலாலும், சிவப்புநூலாலும், சித்திரத்தையல் வேலையாக நடுக்கட்டையும், கர்த்தர் மோசேக்குக் கற்பித்தபடியே பண்ணினார்கள்.

௩௰ ¶ *சுத்தப் பொன்னினாலே பரிசுத்த கிரீடமென்ற பட்டத்தையும் பண்ணி, அதிலே கர்த்தருக்குப் பரிசுத்தம் என்பதை முத்திரை வெட்டாக வெட்டி, *௨ மோ. ௨௯. ௩௬, ௩௮.

௩௧ அதைப் பாகையில் உயரக்கட்டும்படிக்கு, இளநீலமான கயிற்றினாலே கர்த்தர் மோசேக்குக் கற்பித்தபடியே கோத்தார்கள்.

௩௨ இப்படியே ஆசரிப்பின் கூடாரமென்ற வாசஸ்தலத்தின் வேலையெல்லாம் முடிந்தது; கர்த்தர் மோசேக்குக் கற்பித்தபடியெல்லாம் இஸ்ரவேல் புத்திரர் செய்திருந்தார்கள்.

௩௩ ¶ பிற்பாடு வாசஸ்தலத்தை மோசேயண்டைக்குக் கொண்டுவந்தார்கள்; கூடாரத்தையும், அதினுடைய எல்லா முட்டுகளையும், அதின் துறடுகளையும், அதின் பல

Digitized by Google

கைகளையும், அதின் தாழ்ப்பாள்களையும், அதின் தூண்களையும், அதின் கால்களையும்,

௩௪ சிவப்புத்தீர்ந்த ஆட்டுக்கடாத் தோல்களின் மூடியையும், தகசுத்தோல்களின் மூடியையும், மறைவின் திரையையும்,

௩௫ சாட்சியின் பெட்டியையும், அதின் வாரைகளையும், கிருபாசனமான மூடியையும்,

௩௬ மேசையையும், அதின் எல்லா முட்டுகளையும், சமுகத்தப்பங்களையும்,

௩௭ சுத்தமான குத்துவிளக்கையும், வரிசையாய் ஆயத்தப்பட்ட அதின் விளக்குகளையும், அதின் எல்லா முட்டுகளையும், வெளிச்சத்திற்கு எண்ணெயையும்,

௩௮ பொன்பீடத்தையும், அபிஷேகத்தெண்ணெயையும், சுகந்தங்களின் தூபவர்க்கத்தையும், வாசஸ்தலத்தின் வாசல் மறைவையும்,

௩௯ வெண்கலப் பலிபீடத்தையும், அதற்கிருக்கிற வெண்கலச் சல்லடையையும், அதின் வாரைகளையும், அதின் எல்லா முட்டுகளையும், தொட்டியையும், அதின் புரிமணையையும்,

௪௰ பிரகாரத்தின் வெளியாடைகளையும், அதின் தூண்களையும், அதின் கால்களையும், பிரகாரத்து வாசல் மறைவையும், அதின் கயிறுகளையும், அதின் முளைக்கூச்சுகளையும், ஆசரிப்புக் கூடாரமான வாசஸ்தலத்தின் வேலைக்கடுத்த எல்லா முட்டுகளையும்,

௪௧ பரிசுத்த ஸ்தலத்திலே செய்யும் ஆராதனைக்கடுத்த சீலைகளையும், ஆசாரிய ஊழியம் செய்கிற ஆரோனின் பரிசுத்த வஸ்திரங்களையும், அவன் குமாரரின் வஸ்திரங்களையும் தானே.

௪௨ கர்த்தர் மோசேக்குக் கற்பித்தபடி எல்லாம் இஸ்ரவேல் புத்திரர் சகல வேலையையும் செய்திருந்தார்கள்.

௪௩ மோசே எல்லாக் கிரியையையும் பார்த்தான்; இதோ கர்த்தர் கற்பித்தபடியே அதைச் செய்திருந்தார்கள். ஆகையால் மோசே அவர்களை ஆசிர்வதித்தான்.

## ௪௰. அதிகாரம்.

கர்த்தர் மோசேயோடே பேசிச் சொன்னதாவது:

௨ நீ முதலாம் மாதம் முதல் தேதியிலே ஆசரிப்புக் கூடாரத்தின் வாசஸ்தலத்தை எடுப்பித்து,

௩ அதிலே சாட்சியின் பெட்டியை வைத்து, பெட்டியைத் திரையினால் மறைத்து.

௪ மேசையைக் கொண்டுவந்து, அதின் முஸ்திதை அடுக்கிவைத்து, குத்துவிளக்கைக் கொண்டுவந்து, அதின் விளக்குகளை ஏற்தி,

௫ பொன்தூபபீடத்தைச் சாட்சியின் பெட்டிக்கு முன்பாக வைத்து, வாசஸ்தலத்தின் வாசல் மறைவைத் தூக்கிவைக்கக்கடவாய்.

௬ பிற்பாடு நீ தகனபலிபீடத்தை ஆசரிப்புக்கூடாரமானவாசஸ்தலத்தின் வாசலுக்கு முன்பாக வைத்து,

௭ தொட்டியை ஆசரிப்புக் கூடாரத்திற்கும் பலிபீடத்திற்கும் நடுவே வைத்து, அதிலே தண்ணீர் வார்த்து,

௮ சுற்றிலும் பிரகாரத்தை நிறுத்தி, பிரகார வாசல் மறைவைத் தூக்கிவைத்து,

௯ அபிஷேகத்தெண்ணெயை எடுத்து. வாசஸ்தலத்தையும் அதிலுள்ள யாவையும் அபிஷேகம்பண்ணி, அதை அதின் முட்டுகளோடெல்லாம் பரிசுத்தமாக்கக்கடவாய்; அப்பொழுது பரிசுத்தமாய் இருக்கும்.

௰ தகனபலிபீடத்தையும் அதின் எல்லா முட்டுகளையும் அபிஷேகம்பண்ணி, அதைப்பரிசுத்தமாக்கக்கடவாய்; அப்பொழுது பரிசுத்தத்திற்குப் பரிசுத்தமான பலிபீடமாய் இருக்கும்.

௰௧ தொட்டியையும் அதின் புரிமணையையும் அபிஷேகம்பண்ணி, பரிசுத்தமாக்கக்கடவாய்.

௰௨ பிற்பாடு நீ ஆரோனையும் அவன் குமாரரையும் ஆசரிப்புக்கூடாரத்தின் வாசலுக்குச் சேரப்பண்ணி, அவர்களைத் தண்ணீரினால் கழுவி,



Google

௰௩ ஆரோனுக்குப் பரிசுத்த வஸ்திரங்களை உடுத்து, நமக்கு ஆசாரிய ஊழியம் செய்யும்படிக்கு அவனை அபிஷேகம்பண்ணி, பரிசுத்தமாக்கி,

௰௪ அவன் குமாரரையும் சேரப்பண்ணி, அவர்களுக்குச் சட்டைகளை உடுத்து,

௰௫ அவர்கள் நமக்கு ஆசாரிய ஊழியம் செய்யும்படிக்கு அவர்களை, அவர்கள் தகப்பனை அபிஷேகம்பண்ணினபடி, அபிஷேகம் பண்ணக்கடவாய்; அவர்களுடைய அபிஷேகம் அவர்களுக்கு அவர்களுடைய தலைமுறைகளில் நித்திய ஆசாரியபட்டத்திற்கென்று உண்டாயிருப்பதாக என்றார்.

௰௬ ¶ கர்த்தர் தனக்குக் கற்பித்தபடி எல்லாம் மோசே செய்தான்.

௰௭ சம்பவித்ததேதென்றால், இரண்டாம் வருஷம் முதலாம் மாதம் முதல்தேதியிலே வாசஸ்தலம் எடுப்பிக்கப்பட்டது.

௰௮ அதேதென்றால் மோசே கூடாரத்தை எடுப்பித்தான்; அவன் அதின் கால்களை வைத்து, அதின் பலகைகளை நிறுத்தி, அதின் தாழ்ப்பாள்களைப் பாய்ச்சி, அதின் தூண்களை நிறுத்தி,

௰௯ கூடாரத்தை வாசஸ்தலத்தின்மேல் விரித்து, கூடாரத்தின் மூடியை உயர அதின் மீதில் கர்த்தர் தனக்குக் கற்பித்தபடி போட்டான்.

௨௰ ¶ அவன் சாட்சியை எடுத்து, அதைப் பெட்டியிலே வைத்து, வாரைகளைப் பெட்டியிலே பாய்ச்சி, கிருபாசனமான மூடியை உயரப் பெட்டியின்மீதில் வைத்து,

௨௧ பெட்டியை வாசஸ்தலத்திலே கொண்டுவந்து, மறைவின் திரையைத் தூக்கிவைத்து, சாட்சியின் பெட்டியைக் கர்த்தர் தனக்குக் கற்பித்தபடி மறைத்தான்.

௨௨ ¶ பிற்பாடு அவன் மேசையை ஆசரிப்பின் கூடாரத்திலே வாசஸ்தலத்தின் வடபுறமாய்த் திரைக்குப் புறம்பாக வைத்து,

௨௩ கர்த்தர் தனக்குக் கற்பித்தபடியே அதின்மேல் கர்த்தருக்கு முன்பாக அப்பத்தை வரிசையாக அடுக்கிவைத்தான்.

௨௪ ¶ பிற்பாடு அவன் குத்துவிளக்கை ஆசரிப்பின் கூடாரத்தில் மேசைக்கு எதிராக வாசஸ்தலத்தின் தென்புறத்திலே வைத்து,

௨௫ கர்த்தர் தனக்குக் கற்பித்தபடியே விளக்குகளைக் கர்த்தருக்கு முன்பாக ஏற்றினான்.

௨௬ ¶ பிற்பாடு அவன் பொன்பீடத்தை ஆசரிப்பின் கூடாரத்தில் திரைக்கு முன்பாக வைத்து,

௨௭ கர்த்தர் தனக்குக் கற்பித்தபடியே அதின்மேல் சுகந்தவர்க்கத்தினாலே தூபம் காட்டினான்.

௨௮ ¶ பிற்பாடு அவன் வாசஸ்தலத்தின் வாசல் மறைவைத் தூக்கிவைத்து,

௨௯ தகனபலிபீடத்தை ஆசரிப்புக்கூடாரமான வாசஸ்தலத்தின் வாசலுக்கு முன்பாகவைத்து, அதின்மேலே சர்வாங்கதகனபலியையும், காணிக்கையையும் கர்த்தர் தனக்குக் கற்பித்தபடியே செலுத்தினான்.

௩௰ ¶ அவன் தொட்டியை ஆசரிப்புக் கூடாரத்திற்கும் பலிபீடத்திற்கும் நடுவே வைத்து, கழுவுகிறதற்கு அதிலே தண்ணீர் வார்த்தான்.

௩௧ அவ்விடத்திலே மோசேயும் ஆரோனும் அவன் குமாரரும் தங்கள் கைகளையும் தங்கள் கால்களையும் கழுவினார்கள்.

௩௨ அவர்கள் ஆசரிப்பின் கூடாரத்திற்கு உள்பிரவேசிக்கிறபொழுதும், பலிபீடத்தண்டையில் சேருகிறபொழுதும், அவர்கள் கர்த்தர் மோசேக்குக் கற்பித்தபடியே கழுவிக்கொள்ளவேண்டியது.

௩௩ ¶ பிற்பாடு அவன் வாசஸ்தலத்தையும் பலிபீடத்தையும் சுற்றிலும் பிரகாரத்தை நிறுத்தி, பிரகாரத்தின் வாசல் மறைவைத் தூக்கிவைத்தான்; இப்படியே மோசே கிரியையை முடித்தான்.

௩௪ ¶ அப்பொழுது *ஒரு மேகம் ஆசரிப்பின் கூடாரத்தை மூடி, கர்த்தருடைய மகிமை வாசஸ்தலத்தை நிரப்பிற்று.

*௪ மோ. ௯. ௰௫. ௧ இரா. ௮. ௰.

Digitized by Google

௩௫ ஆசரிப்பின் கூடாரத்திற்குள் பிரவேசிக்க மோசேக்குக் கூடாதிருந்தது; ஏனெனில் மேகம் அதின்மேலே தங்கி, கர்த்தருடைய மகிமை வாசஸ்தலத்தை நிரப்பிற்று.

௩௬ மேகம் வாசஸ்தலத்திலிருந்து எழும்புகிறபொழுதுதானே, இஸ்ரவேல் புத்திரர் தங்கள் பயணங்களுக்கெல்லாம் புறப்படுவார்கள்.

௩௭ மேகம் எழும்பாதிருந்ததேயானால், அவர்கள் அது எழும்பும் நாள்மட்டும் பயணம்பண்ணாதிருப்பார்கள்.

௩௮ அதேதெனில் இஸ்ரவேல் வீட்டாருடைய எல்லாப் பயணங்களிலும் அவர்கள் எல்லாருடைய கண்களுக்கு முன்பாகப் பகலில் வாசஸ்தலத்தின்மேலே கர்த்தருடைய மேகம் இருந்தது, இரவிலோவென்றால், அக்கினி அதில் இருந்தது.

# மோசே எழுதின

## மூன்றாம் ஆகமம்.

### ௧. அதிகாரம்.

கர்த்தர் ஆசரிப்பின் கூடாரத்திலிருந்து மோசேயைக் கூப்பிட்டு அவனோடே பேசிச் சொன்னதாவது:

௨ நீ இஸ்ரவேல் புத்திரரோடே பேசி, அவர்களுக்குச் சொல்லவேண்டியதேதென்றால், உங்களில் ஒரு மனிதன் கர்த்தருக்குப் பலியைச் செலுத்தப்போனால், மாட்டுமந்தையிலும் ஆட்டுமந்தையிலுமுள்ள மிருகங்களில் எடுத்து, உங்கள் காணிக்கைகளைச் செலுத்துவீர்களாக.

௩ ¶ அவன் செலுத்துவது மாட்டுமந்தையில் எடுக்கிற சர்வாங்கதகனபலியானால், அவன் பழுதற்ற காளையைச் செலுத்துவானாக; கர்த்தரின் சந்நிதியிலே தன்மேலே பிரியம்வர, அவன் அதை *ஆசரிப்புக் கூடாரத்தின் வாசலுக்குக் கொண்டுவந்து,

*௨ மோ. ௰௨. ௰௩, ௰௪.

௪ அது தன் பாவநிவிர்த்திக்கென்று அங்கிகரிக்கப்படும்படிக்குத் தன் கையை அதினுடைய தலையின்மேல் வைத்து,

௫ கர்த்தருக்கு முன்பாகக் காளையின் குரல்வளையை அறுக்கக்கடவன்; அப்பொழுது ஆரோனின் குமாரராகிய ஆசாரியர்கள் அதின் இரத்தத்தைக் கொண்டுவந்து, அதை ஆசரிப்புக் கூடாரத்தின் வாசலிலிருக்கிற பலிபீடத்தின்மேலே சுற்றிலும் தெளிக்கக்கடவர்கள்.

௬ பிற்பாடு அவன் தகனபலியைத் தோலுரித்து, அதை அதின் சந்துசந்தாகத் துண்டித்துப்போடுவானாக.

௭ அப்பொழுது ஆசாரியனாகிய ஆரோனின் குமாரர் பலிபீடத்தின்மேலே அக்கினியைப் போட்டு, அக்கினியின்மேலே கட்டைகளை அடுக்கி,

௮ பிற்பாடு அவன் குமாரராகிய அந்த ஆசாரியர்கள் துண்டங்களையும் தலையையும் கொழுப்பையும் பலிபீடத்தின்மேல் அக்கினியின்மேலிருக்கிற கட்டைகளின்மீதில் அடுக்கிவைக்கக்கடவர்கள்.

௯ அதின் குடல்களையும் அதின் தொடைகளையும் அவன் தண்ணீரினால் கழுவுவானாக; அவைகளை எல்லாம் ஆசாரியன் பலிபீடத்தின்மேலே சர்வாங்கதகனபலியாகக் கொளுத்திவிடக்கடவன்; அது கர்த்தருக்கு ஆற்றுகிற வாசனையாகும் தகனம்.

௰ ¶ அவன் ஆட்டுமந்தையிலுள்ள ஆடுக

Digitized by Google

விலாகிலும் வெள்ளாடுகளிலாகிலும் எடுத்து, சர்வாங்கதகனபலியைச் செலுத்தப் போனானேயாகில், அவன் பழுதற்ற கடாவைக் கொண்டுவந்து,

௰௧ கர்த்தருக்கு முன்பாகப் பலிபீடத்தின் வடபுறத்திலே அதின் குரல்வளையை அறுக்கக்கடவன்; அப்பொழுது ஆரோனின் குமாரராகிய ஆசாரியர்கள் அதின் இரத்தத்தைப் பலிபீடத்தின்மேலே சுற்றிலும் தெளிக்கக்கடவர்கள்.

௰௨ பிற்பாடு அவன் அதை அதின் சந்து சந்தாகத் துண்டித்து, அதின் தலையையும் அதின் கொழுப்பையும் கூடவைப்பானாக; அவைகளை ஆசாரியன் பலிபீடத்தின்மேலே அக்கினியின்மேல் இருக்கிற கட்டைகளின்மீதில் அடுக்கிவைக்கக்கடவன்.

௰௩ குடல்களையும் தொடைகளையும் அவன் தண்ணீரினாலே கழுவுவானாக; அவைகளை எல்லாம் ஆசாரியன் கொண்டுவந்து, பலிபீடத்தின்மேலே கொளுத்திவிடக்கடவன், அது சர்வாங்கதகனபலி; அது கர்த்தருக்கு ஆற்றுகிற வாசனையாகும் தகனம்.

௰௪ ¶ அவன் பறவைகளில் எடுத்து, கர்த்தருக்குச் சர்வாங்கதகனபலியைச் செலுத்தப் போனானேயாகில், காட்டுப்புறாக்களிலாகிலும் புறாக்குஞ்சுகளிலாகிலும் எடுத்துச் செலுத்தக்கடவன்.

௰௫ அதை ஆசாரியன் பலிபீடத்தண்டையில் கொண்டுவந்து, அதின் தலையைக் கிள்ளிப் பிடுங்கி, பலிபீடத்திலே கொளுத்திவிட்டு, அதின் இரத்தத்தைப் பலிபீடத்தின் சுவரிலே விழவிட்டு,

௰௬ அதின் இரைப்பையை அதின் இறகுகளோடும்கூட வாங்கி, அதைப் பலிபீடத்தண்டையிலே கிழக்கே சாம்பலிருக்கிற இடத்திலே போட்டு,

௰௭ பிற்பாடு அதை அதின் செட்டைகளுக்குள்ளே இரண்டாக்காமல் பிளப்பானாக; பிற்பாடு ஆசாரியன் அதைப் பலிபீடத்தின்மேலே அக்கினியின்மேலிருக்கிற கட்டைகளின்மீதில் கொளுத்திப்போடக்கடவன்; அது சர்வாங்கதகனபலி; அது கர்த்தருக்கு ஆற்றுகிற வாசனையாகும் தகனம்.

## உ. அதிகாரம்.

ஒரு ஆத்துமா கர்த்தருக்குக் காணிக்கையான படைப்பைச் செலுத்துவதுண்டானால், அவன் படைப்பு மெல்லியமாவாயிருப்பதாக; அவன் அதின்மேல் எண்ணெய் வார்த்து, அதின்மீதில் குங்குலிகம்போட்டு,

உ அதை ஆரோனின் குமாரரான ஆசாரியர்களண்டைக்குக் கொண்டுவருவானாக; அப்பொழுது ஆசாரியன் அந்த மாவிலும் எண்ணெயிலும் ஒரு கைப்பிடி நிறைய எல்லாக் குங்குலிகத்தோடும்கூட எடுத்து, நினைப்புக்கான அதைப் பலிபீடத்தின்மேலே கொளுத்தக்கடவன்; அது கர்த்தருக்கு ஆற்றுகிற வாசனையாகும் தகனம்.

௩ காணிக்கையில் மீதியானதோவென்றால், ஆரோனையும் அவன் குமாரரையும் சேரக்கடவது; கர்த்தருடைய தகனங்களில் அது பரிசுத்தத்திற்குப் பரிசுத்தம்.

௪ ¶ அடுப்பிலே சுட்ட காணிக்கையான படைப்பைச் செலுத்தப் போனானேயாகில், அது எண்ணெயிலே பிசைந்த மெல்லிய மாவின் புளிப்பில்லாத அதிரசங்களும் எண்ணெய் பூசப்பட்ட புளிப்பில்லாத அடைகளுமாய் இருப்பதாக.

௫ ¶ நீ படைப்பது தட்டின்மேல் சுட்ட காணிக்கையேயானால், அது எண்ணெயிலே பிசைந்த புளிப்பில்லாத மெல்லிய மாவினுடையதாய் இருப்பதாக.

௬ அதைத் துண்டுகளாகப் பிட்டு, அதின்மேல் எண்ணெய் வார்ப்பாயாக; அது ஒரு காணிக்கை.

௭ ¶ நீ படைப்பது சட்டியிலே செய்யப்படுகிற காணிக்கையேயானால், அது எண்ணெயிலே மெல்லிய மாவினாலே செய்யப்படுவதாக.

௮ இப்படிச் செய்யப்பட்ட காணிக்கையைக் கர்த்தருக்குச் செலுத்துவாயாக;



Digitized by Google

அது ஆசாரியனண்டையில் சேர்ந்தபொழுது, அவன் அதைப் பலிபீடத்திற்குக் கொண்டுபோய்,

௯ நினைப்புக்கான பங்கைக் காணிக்கையிலிருந்து ஏறெடுத்து, பலிபீடத்தின்மேலே கொளுத்தக்கடவன்; அது கர்த்தருக்கு ஆற்றுகிற வாசனையாகும் தகனம்.

௰ காணிக்கையில் மீதியானதோவென்றால், ஆரோனையும் அவன் குமாரரையும் சேரக்கடவது; கர்த்தருடைய தகனங்களில் அது பரிசுத்தத்திற்குப் பரிசுத்தம்.

௰௧ ¶ கர்த்தருக்குச் செலுத்தும் ஒரு காணிக்கையும் உப்பினதாகச் செய்யப்படாதிருப்பதாக; ஏனெனில் புளித்த மாவுள்ளதொன்றையும் தேனுள்ளதொன்றையும் கர்த்தருக்குத் தகனமாகக் கொளுத்தீர்களாக.

௰௨ முதல் கனிகளின் படைப்பாக, அவைகளை நீங்கள் கர்த்தருக்குச் செலுத்தலாம்; ஆனால் பலிபீடத்தின்மேல் அவைகள் ஆற்றுகிற வாசனையாக ஏற்றப்படவேண்டாம்.

௰௩ ¶ உன் காணிக்கையாகிற எந்தப் படைப்பும், *உப்பினால் சாரம் ஏற்றப்படுவதாக; உன் காணிக்கையிலே உன் பராபரனுடைய உடம்படிக்கையின் உப்பைக் குறைய ஒட்டாமல், நீ படைப்பதிலே எல்லாம் உப்பைச் செலுத்தக்கடவாய்.
*மாற். ௯. ௪௯. கொலோ. ௪. ௬.

௰௪ நீ முதல் பலன்களின் காணிக்கையைக் கர்த்தருக்குச் செலுத்துகிறதுண்டானால், பச்சையான நிறைந்த கதிர்களை நெருப்பிலே சுட்டு உதிர்த்து, இப்படியே உன் முந்தினபலன்களின் காணிக்கையைக் கொண்டுவந்து,

௰௫ அதின்மேல் எண்ணெய் வார்த்து, அதின்மீதில் குங்குலிகம் போடுவாயாக; அது ஒரு காணிக்கை.

௰௬ பிற்பாடு ஆசாரியன் உதிர்க்கப்பட்டதிலும் எண்ணெயிலும் நினைப்புக்கான பங்கை, அதினுடைய எல்லாக் குங்குலிகத்தோடுங்கூட எடுத்துக் கொளுத்தக்கடவன்; அது கர்த்தருக்கான தகனம்.

## ௩. அதிகாரம்.

அவன் செலுத்துவது சமாதான பலியானால், அப்பொழுது அதை மாட்டுமந்தையில் எடுத்துச் செலுத்தப் போனானேயாகில், அவன் அது ஆண் ஆனாலும் சரி, பெண் ஆனாலும் சரி, பழுதற்றிருக்கிறதைக் கர்த்தருக்குமுன்பாகக் கொண்டுவந்து,

௨ அதினுடைய தலையின்மேலே தன் கையை வைத்து, ஆசரிப்புக்கூடாரத்தின் வாசலுக்குமுன்பாக அதின் குரல்வளையை அறுப்பானாக; அப்பொழுது ஆரோனின் குமாரராகிய ஆசாரியர் அதின் இரத்தத்தைப் பலிபீடத்தின்மேலே சுற்றிலும் தெளிக்கக்கடவர்கள்.

௩ பிற்பாடு சமாதானபலியிலே குடல்களை மூடிய கொழுப்பையும், குடல்களின்மேல் இருக்கிற எல்லாக் கொழுப்பையும்,

௪ இரண்டு குண்டிக்காய்களையும், அவைகளின்மேலே சிறு குடல்களினிடத்தில் இருக்கும் கொழுப்பையும், குண்டிக்காய்களோடேகூடக் கல்லீரலின்மேல் இருக்கிற சவ்வையும் பிடுங்கி, கர்த்தருக்குத் தகனமாகச் செலுத்துவானாக.

௫ அதை ஆரோனின் குமாரர் பலிபீடத்திலே, அக்கினியின்மேலுள்ள கட்டைகளின்மேலே போட்டிருக்கும் சர்வாங்கதகனபலியின்மீதில் போட்டு, கொளுத்தக்கடவர்கள்; அது கர்த்தருக்கு ஆற்றுகிற வாசனையாகும் தகனம்.

௬ ¶ அவன் ஆட்டுமந்தையில் எடுத்து, கர்த்தருக்குச் சமாதானபலியைச் செலுத்தப் போனானேயாகில், அப்பொழுது அது ஆண்ஆனாலும் பெண்ஆனாலும் சரி, பழுதற்றிருக்கிறதைச் செலுத்துவானாக.

௭ ஆட்டைச் செலுத்தவேண்டுமென்றால், அவன் அதைக் கர்த்தருக்கு முன்பாகக் கொண்டுவந்து,

௮ அதினுடைய தலையின்மேலே தன் கையை வைத்து, ஆசரிப்பின் கூடாரத்திற்கு முன்பாக அதின் குரல்வளையை அறுப்பா

Digitized by Google

னாக; அப்பொழுது ஆரோனின் குமாரர் அதின் இரத்தத்தைப் பலிபீடத்தின்மேலே சுற்றிலும் தெளிக்கக்கடவர்கள்.

௯ பிற்பாடு அவன் சமாதான பலியிலே அதின் கொழுப்பையும், நடு எலும்பிலே பிடுங்கின முழு வாலையும், குடல்களை மூடிய கொழுப்பையும், அவைகளின்மேல் இருக்கிற எல்லாக் கொழுப்பையும்,

௰ இரண்டு குண்டிக்காய்களையும், அவைகளின்மேலே சிறு குடல்களினிடத்தில் இருக்கிற கொழுப்பையும், குண்டிக்காய்களோடேகூடக் கல்லீரலின்மேல் இருக்கிற சவ்வையும் பிடுங்கி, கர்த்தருக்குத் தகனமாகச் செலுத்துவானாக.

௰௧ அதை ஆசாரியன் பலிபீடத்தின்மேலே கொளுத்தக்கடவன்; அது கர்த்தருக்கான தகன ஆகாரம்.

௰௨ ¶ அவன் செலுத்துவது வெள்ளாடாயிருந்ததேயானால், அவன் அதைக் கர்த்தருக்குமுன்பாகக் கொண்டுவந்து,

௰௩ அதினுடைய தலையின்மேல் தன் கையை வைத்து, ஆசரிப்பின் கூடாரத்திற்கு முன்பாக அதின் குரல்வளையை அறுப்பானாக; அப்பொழுது ஆரோனின் குமாரர் அதின் இரத்தத்தைப் பலிபீடத்தின்மேலே சுற்றிலும் தெளிக்கக்கடவர்கள்.

௰௪ அதிலே அவன் குடல்களை மூடிய கொழுப்பையும், அவைகள்மேலிருக்கிற எல்லாக் கொழுப்பையும்,

௰௫ இரண்டு குண்டிக்காய்களையும், அவைகளின்மேலே சிறு குடல்களினிடத்தில் இருக்கிற கொழுப்பையும், குண்டிக்காய்களோடேகூடக் கல்லீரலின்மேல் இருக்கிற சவ்வையும் பிடுங்கி, கர்த்தருக்குத் தகனமாகச் செலுத்துவானாக.

௰௬ அவைகளை ஆசாரியன் பலிபீடத்தின்மேலே கொளுத்தக்கடவன்; அது ஆற்றுகிற வாசனையாகும் தகன ஆகாரம்; எல்லாக் கொழுப்பும் கர்த்தருடையது.

௰௭ *கொழுப்பும் இரத்தமும் என்னப்பட்டதொன்றையும் நீங்கள் புசிக்கவேண்டாமென்பது, உங்கள் வாசஸ்தலங்கள் எங்குமுள்ள உங்கள் தலைமுறைகளுக்கு நித்தியகட்டளையாயிருப்பதென்று சொல்லென்றார். *௩ மோ. ௭. ௨௩, ௨௭: ௰௭. ௰, ௰௪.

## ௪. அதிகாரம்.

பின்னையும் கர்த்தர் மோசேயோடே பேசிச் சொன்னதாவது:

௨ நீ இஸ்ரவேல் புத்திரரோடே பேசிச் சொல்லவேண்டியதேதெனில், ஒரு ஆத்துமா கர்த்தருடைய சகல கற்பனைகளிலும் யாதொன்றைத் தப்பிதத்தினாலே மீறி, செய்யத்தகாததைச் செய்து, பாவம்பண்ணினால், அறியவேண்டியதாவது:

௩ அபிஷேகம்பண்ணப்பட்ட ஆசாரியன் சனத்தைக் குற்றத்திற்குள்ளாக்கிப் பாவம் செய்தால், அவன் செய்த பாவத்தினிமித்தம், கர்த்தருக்குப் பாவம்போக்கும் பலியாக மாடுகளிலே பழுதற்ற ஒரு காளை எருதைச் செலுத்தி,

௪ அதை ஆசரிப்புக்கூடாரத்தின் வாசலிலே கர்த்தருக்கு முன்பாகக் கொண்டுவந்து, அதினுடைய தலையின்மேலே தன் கையை வைத்து, கர்த்தருக்கு முன்பாக அதின் குரல்வளையை அறுப்பானாக.

௫ அப்பொழுது அபிஷேகம் பண்ணப்பட்ட ஆசாரியன் காளை எருதின் இரத்தத்திலே கொஞ்சம் எடுத்து, அதை ஆசரிப்பின் கூடாரத்திலே கொண்டுவந்து,

௬ தன் விரலை இரத்தத்திலே தோய்த்து, ஏழுதரம் கர்த்தருக்கு முன்பாகப் பரிசுத்தஸ்தலத்தின் திரைக்கு எதிரே தெளிக்கக்கடவன்.

௭ பிற்பாடு ஆசாரியன் அந்த இரத்தத்திலே கொஞ்சம் ஆசரிப்பின் கூடாரத்திலே கர்த்தருக்குமுன்பாக இருக்கிற சுகந்தவர்க்கங்களினுடைய தூபபீடத்துக் கொம்புகளின்மேலே பூசி, காளை எருதினுடைய இரத்தத்தை எல்லாம் ஆசரிப்புக்கூடார வாசலுக்கு முன்பாக இருக்கிற தகனபலிபீடத்தின் அடியிலே ஊற்றிவிட்டு,

Digitized by Google

௮ பாவம்போக்கும் பலியான காளை எருதின் சகல கொழுப்பாகிய குடல்களை மூடிய கொழுப்பையும், அவைகள்மேலிருக்கிற எல்லாக் கொழுப்பையும்,

௯ இரண்டு குண்டிக்காய்களையும், அவைகளின்மேலே சிறு குடல்களினிடத்தில் இருக்கிற கொழுப்பையும், குண்டிக்காய்களோடேகூடக் கல்லீரலின்மேலிருக்கிற சவ்வையும் பிடுங்கி,

௰ சமாதானபலியான மாட்டிலிருந்து எடுக்கிறதுபோல, அதிலிருந்து எடுத்தவைகளைத் தகனபலிபீடத்தின்மேலே கொளுத்தக்கடவன்.

௰௧ ஆனால் காளை எருதின் தோலையும், அதின் எல்லா மாம்சத்தையும், அதனோடேகூட அதின் தலையையும், தொடைகளையும் அதின் குடல்களையும், அதின் சாணியையும்,

௰௨ காளை எருது முழுவதையும், அவன் பாளயத்திற்குப் புறம்பே சாம்பலைக் கொட்டுகிற சுத்தமான இடத்திலே கொண்டுபோய், கட்டைகளின்மேலே போட்டு, அக்கினியாலே சுட்டெரிக்கக்கடவன்; கொட்டி இருக்கிற சாம்பலின்மேலேதானே அதைச் சுட்டெரிக்கக்கடவன்.

௰௩ ¶ ஆனால் இஸ்ரவேலின் சபை எல்லாம் தப்பிநடந்து, காரியம் தங்கள் கண்களுக்கு மறைவாயிருக்கிறதினாலே, கர்த்தருடைய சகல கற்பனைகளிலும் யாதொன்றை மீறி, செய்யத்தகாததைச் செய்து குற்றவாளிகளாகப் போனால்,

௰௪ அப்பொழுது அவர்கள் செய்த பாவம் அறியப்பட்டதாகில், சபை மாடுகளில் ஒரு காளை எருதைப் பாவம்போக்கும் பலியாகச் செலுத்தி, அதை ஆசரிப்புக்கூடாரத்திற்கு முன்பாகக் கொண்டுவந்து,

௰௫ சபையின் மூப்பர் கர்த்தருக்கு முன்பாகத் தங்கள் கைகளை அதினுடைய தலையின்மேலே வைப்பார்களாக; பிற்பாடு கர்த்தருக்கு முன்பாகக் காளை எருதின் குரல்வளை அறுக்கப்படுவதாக.

௰௬ அப்பொழுது அபிஷேகம்பண்ணப்பட்ட ஆசாரியன் அதின் இரத்தத்திலே கொஞ்சம் ஆசரிப்பின் கூடாரத்திலே கொண்டுவந்து,

௰௭ தன் விரலை இரத்தத்திலே தோய்த்து, ஏழுதரம் கர்த்தருக்கு முன்பாகத் திரைக்கு எதிரே தெளித்து,

௰௮ ஆசரிப்பின் கூடாரத்திலே கர்த்தருக்குமுன்பாக இருக்கிற பீடத்தினுடைய கொம்புகளின்மேலே அதிலே கொஞ்சம் பூசி, இரத்தத்தை எல்லாம் ஆசரிப்புக்கூடார வாசலின்முன் இருக்கிற தகனபலிபீடத்தின் அடியிலே ஊற்றிவிட்டு,

௰௯ அதின் கொழுப்பை எல்லாம் அதிலிருந்து எடுத்து, பலிபீடத்தின்மேலே கொளுத்தி,

௨௰ பாவம்போக்கும் அந்தக் காளை எருதை எப்படிச்செய்தானோ, அப்படி இதையும் செய்து, இந்த அடைவாய் அவர்கள் பாவத்தை நிவிர்த்தி ஆக்கக்கடவன்; அப்பொழுது அவர்களுக்கு மன்னிக்கப்படும்.

௨௧ பிற்பாடு காளை எருதைப் பாளயத்திற்குப் புறம்பே கொண்டுபோய், முந்தின காளை எருதைச் சுட்டெரித்ததுபோலச் சுட்டெரிக்கக்கடவன், இது சபையின் பாவம்போக்கும் பலி.

௨௨ ¶ ஒரு பிரபு தன் பராபரனாகிய கர்த்தருடைய சகல கற்பனைகளிலும் யாதொன்றை மீறி, தப்பிதத்தினாலே செய்யத்தகாததைச் செய்து, பாவம்பண்ணி, குற்றவாளியாகப்போனால்,

௨௩ அல்லவென்று அவன் செய்த பாவம் அவனுக்குத் தெரிவிக்கப்பட்டதானால், அவன் வெள்ளாடுகளிலே பழுதற்ற ஒரு கடாவைத் தன்னுடைய பலியாகக் கொண்டுவந்து,

௨௪ தன் கையை அதினுடைய தலையின்மேலே வைத்து, சர்வாங்கதகனபலி குரல்வளை அறுக்கப்படுகிற இடத்திலே கர்த்தருக்குமுன்பாக அதின் குரல்வளையை அறுப்பானாக; அது பாவம்போக்கும் பலி.

௨௫ அப்பொழுது ஆசாரியன் அதின் இரத்

Digitized by Google

திரைக்கு வெளிப்புறமாக ஆரோன் அதை எப்பொழுதும், சாயங்காலந்துவக்கி, விடியற்காலமட்டும், கர்த்தருக்குமுன்பாக எரியவைக்கக்கடவன்; இது உங்கள் தலைமுறைகளுக்குச் செல்லும் நித்தியகட்டளை.

௪ அவன் எப்பொழுதும் கர்த்தருக்குமுன்பாகச் சுத்தமான குத்துவிளக்கின்மேலிருக்கிற விளக்குகளை எரியவைக்கக்கடவன்.

௫ ¶ மெல்லிய மாவைவாங்கி, அதைப் பன்னிரண்டு அப்பங்களாகச் சுடுவாயாக; ஒவ்வொரு அப்பம் மரக்காலிலே பத்தில் இரண்டுபங்கு மாவினாலே செய்யப்படுவதாக.

௬ அவைகளை நீ கர்த்தருக்குமுன்பாக, சுத்தமான மேசையின்மேல் இரண்டு அடுக்காக, ஒவ்வொரு அடுக்கில் அவ்வாறு இருக்கும்படிக்கு வைத்து,

௭ ஒவ்வொரு அடுக்கினிடத்திலே சுத்தமான குங்குலிகம் போடக்கடவாய்; அது அப்பத்தோடிருந்து நினைப்புக்கென்று கர்த்தருக்குத் தகனமாயிருக்கும்.

௮ அதை நித்திய உடம்படிக்கையாக இஸ்ரவேல் புத்திரர்கையிலே வாங்கி, ஓய்வு நாள்தோறும் கர்த்தருக்குமுன்பாக அடுக்கிவைக்கக்கடவன்.

௯ அது ஆரோனையும் அவன் குமாரரையும் சேரும்; அதைப் பரிசுத்தவிடத்திலே புசிக்கக்கடவர்கள்; ஏனெனில் அது பரிசுத்தத்திற்குப் பரிசுத்தம், கர்த்தருடைய தகனங்களில் அது அவனுக்கு நித்தியகட்டளை என்றார்.

௰ ¶ இஸ்ரவேல் சாதியான ஸ்திரிக்கும் எகிப்தியபுருஷனுக்கும் மகனாகிய ஒருவன், இஸ்ரவேல் புத்திரரோடேகூடப் புறப்பட்டுவந்திருந்தான்; இவனும் இஸ்ரவேலனாகிய ஒரு மனிதனும் பாளயத்திலே சண்டைபண்ணினார்கள்.

௰௧ அப்பொழுது இஸ்ரவேல் சாதியான அந்த ஸ்திரியின் மகன் நாமநிந்தை சொல்லித் தூஷணித்தான்; ஆகையால் அவனை மோசேயண்டைக்குக் கொண்டுவந்தார்கள்; அவன் தாயின்பேர் செலோமீத், அவன் தாண் கோத்திரத்தானாகிய திப்ரியின் குமாரத்தி.

௰௨ கர்த்தரின் வாக்கினாலே தங்களுக்கு உத்தரவு வரும்மட்டும், அவனைக் காவல்படுத்தினார்கள்.

௰௩ அப்பொழுது கர்த்தர் மோசேயோடே பேசிச் சொன்னதாவது:

௰௪ தூஷணித்தவனைப் பாளயத்திற்குப் புறம்பே கொண்டுபோ; கேட்டவர்கள் எல்லாரும் தங்கள் கைகளை அவன் தலையின்மேல் வைப்பார்களாக; பிற்பாடு சபையெல்லாம் அவனைக் கல் எறியக்கடவது.

௰௫ ஆனால் இஸ்ரவேல் புத்திரரோடே நீ சொல்லவேண்டியதேதெனில், எவனாகிலும் தன் பராபரனைத் தூஷணித்தால், அவன் தன் பாவத்தைச் சுமப்பான்.

௰௬ கர்த்தரின் நாமத்தை நிந்தையாகச் சொல்லுகிறவன் கொலையுண்ணவே கொலையுண்ணக்கடவன்; சபையெல்லாம் அவனைக் கல் எறியவே எறியக்கடவது; பரதேசியாகிலும் சரி, தேசத்திலே பிறந்தவனாகிலும் சரி, நாமத்தைத் தூஷணித்தானானால் கொலையுண்ணக்கடவன்.

௰௭ யாதொரு மனித சீவனை ஒருவன் கொன்றால், கொலையுண்ணவே கொலையுண்ணக்கடவன்.

௰௮ மிருகசீவனைக் கொன்றவன் சீவனுக்குச் சீவனைச் செலுத்தக்கடவன்.

௰௯ ஒருவன் தனக்கு அடுத்தவனில் ஊனம் உண்டாக்கினால், அவன் செய்தபடி அவனுக்குச் செய்யப்படக்கடவது.

௨௰ நொறுக்குதலுக்கு நொறுக்குதலும், கண்ணுக்குக் கண்ணும், பல்லுக்குப் பல்லும்தானே; அவன் மனிதனில் ஊனம் உண்டாக்கினபடியே அவனிலும் உண்டாக்கப்படக்கடவது.

௨௧ மிருகத்தைக் கொன்றவன் பதில் கொடுக்கக்கடவன்; மனிதனைக் கொன்றவனோ, கொலையுண்ணக்கடவன்.

Digitized by Google

௨௨ உங்களில் பரதேசிக்கும் தேசத்திலே பிறந்தவனுக்கும் ஏகமான நியாயம் இருக்

கக்கடவது; ஏனெனில் நாம் உங்கள் பராபரனாகிய கர்த்தரென்று சொல்லென்றார்.

௨௩ அப்படியே தூஷணித்தவனைப் பாளயத்திற்குப் புறம்பே கொண்டுபோய், அவனைக் கல் எறிவதற்காக மோசே இஸ்ரவேல் புத்திரரோடே சொன்னான்; கர்த்தர் மோசேக்குக் கற்பித்தபடியே இவர்கள் செய்தார்கள்.

## ௨௫. அதிகாரம்.

கர்த்தர் சீனாய்பர்வதத்தில் மோசேயோடே பேசிச் சொன்னதாவது:

௨ நீ இஸ்ரவேல் புத்திரரோடே பேசிச் சொல்லவேண்டியதேதெனில், நாம் உங்களுக்குக் கொடுக்கும் தேசத்திலே நீங்கள் வந்திருக்கும்பொழுது, தேசம் கர்த்தருக்கென்று ஓய்வுகளைக்கொண்டாடவேண்டும்.

௩ *ஆறுவருஷம் உன் வயலை விதைத்து, உன் திராட்சத்தோட்டத்தைக் கிளை நறுக்கி, அதின் பலனைச் சேர்ப்பாயாக. *௨ மோ. ௨௩. ௰, ௰௧.

௪ ஏழாம்வருஷத்திலோவென்றால், கர்த்தருக்கென்று ஓய்ந்திருக்கும் ஓய்வு தேசத்திற்கு இருக்கவேண்டும்; உன் வயலை விதைக்காமலும், உன் திராட்சத்தோட்டத்தைக் கிளை நறுக்காமலும்,

௫ சயமாய் உனக்கு விளைந்த பயிரானதை அறுத்துக்கொள்ளாமலும், நீ கிளை நறுக்காதே விட்ட திராட்சச்செடியின் பழங்களைச் சேர்க்காமலும் இருப்பாயாக; தேசத்திற்கு அது ஓய்ந்திருக்கும் வருஷமாய் இருக்கக்கடவது.

௬ தேசத்தின் ஓய்விலே பயிராகிறது உங்களுக்கு ஆகாரமாய் இருப்பதாக; உனக்கும், உன் வேலைக்காரனுக்கும், உன் வேலைக்காரிக்கும், உன் கூலியாளுக்கும், உன்னிடத்திலே தங்குகிற உன்னுடைய பரதேசிக்கும்,

௭ உன் மிருகசீவனுக்கும், உன் தேசத்திலிருக்கிற காட்டுச்சீவனுக்கும், அதின் பலனெல்லாம் ஆகாரமாய் இருப்பதாக.

௮ ¶ பின்னையும் ஏழு ஓய்வு வருஷங்களுள்ள ஏழேழு வருஷங்களை எண்ணுவாயாக; அந்த ஏழு ஓய்வு வருஷங்களுள்ள நாள்கள் உனக்கு நாற்பத்தொன்பது வருஷம் ஆகும்.

௯ அப்பொழுது ஏழாம்மாதம் பத்தாம் தேதியிலே தொனிக்கிற எக்காளத்தைச் சுற்றித் திரியப்பண்ணுவாயாக; பாவநிவிர்த்தியாகுதலின் நாளிலே அதை உங்கள் தேசமெங்கும் திரியப்பண்ணி,

௰ ஐம்பதாம் வருஷத்தைப் பரிசுத்தமாக்கி, தேசமெங்கும் அதின் குடிகளுக்கெல்லாம் விடுதலையைக் கூறக்கடவீர்கள்; அது உங்களுக்குச் சீர்திருந்தும் வருஷம்; அதிலே நீங்கள் அவரவர் தங்கள் காணியாட்சிக்கும் அவரவர் தங்கள் வம்சத்திற்கும் திரும்புவீர்கள்.

௰௧ அந்த ஐம்பதாம் வருஷம் உங்களுக்குச் சீர்திருந்தும் வருஷமாயிருப்பதாக; அதிலே விதைக்காமலும், சயமாய் விளைந்த பயிரானதை அறுத்துக்கொள்ளாமலும் கிளை நறுக்காதே விடப்பட்ட திராட்சச்செடியின் பழங்களைச் சேர்க்காமலும் இருப்பீர்களாக.

௰௨ ஏனெனில், அது சீர்திருந்தும் வருஷம்; அது உங்களுக்குப் பரிசுத்தமாயிருக்கவேண்டும்; அதின் பலனை வயலில் எடுத்து, புசித்துக்கொண்டு இருப்பீர்களாக.

௰௩ சீர்திருந்தும் அந்த வருஷத்தில் நீங்கள் அவரவர் தங்கள் காணியாட்சிக்குத் திரும்புவீர்கள்.

௰௪ ஆகையால் ஏதாகிலும் உங்களுக்கடுத்தவனுக்கு விற்று, அல்லவென்று அவன் கையிலே கொண்டீர்களானால், ஒருவரை ஒருவர் இடுக்கண் செய்யீர்களாக.

௰௫ சீர்திருந்தும் வருஷத்திற்குப்பிறகு சென்ற வருஷங்களின் இலக்கத்திற்குத் தக்கதாக உனக்கடுத்தவன் கையிலே கொள்ளுவாயாக; பலனுள்ள வருஷங்களின் இலக்கத்திற்குத்தக்கதாக அவன் உனக்கு விற்பானாக.



Digitized by Google

௰௬ வருஷங்கள் அநேகமானால் அதின் விலையை உயர்த்தி, கொஞ்சமானால் அதைத் தாழ்த்துவாயாக; ஏனெனில் பலனுள்ள வருஷங்களின் இலக்கத்தைப் பார்த்து, அவன் உனக்கு விற்கிறான்.

௰௭ உங்களில் ஒருவனும் தனக்கடுத்தவனை இடுக்கண் செய்யவேண்டாம்; உன் பராபரனுக்குப் பயப்படுவாயாக; ஏனெனில் நாம் உங்கள் பராபரனாகிய கர்த்தர்.

௰௮ ¶ நம்முடைய கட்டளைகளின்படி செய்து, நம்முடைய நியாயங்களைக் கைக்கொண்டு, அவைகளின்படி செய்யக்கடவீர்கள்; அப்பொழுது தேசத்திலே சுகமாய்க் குடியிருந்து,

௰௯ பூமி தன் கனியைத் தருகிறதினாலே திர்ப்தியாகச் சாப்பிட்டு, அதிலே சுகமாய்க் குடியிருப்பீர்கள்.

௨௰ ஏழாம் வருஷத்தில் எதைப் புசிப்போம்? இதோ நாங்கள் விதைக்காமலும், எங்கள் பலனைச் சேர்க்காமலும் இருக்கவேண்டுமே என்றீர்களேயானால்,

௨௧ ஆறும் வருஷம் மூன்று வருஷங்களின் பலனைத் தர, நமது ஆசிர்வாதத்தை உங்களுக்காகக் கட்டளைஇடுவோம்.

௨௨ ஆனதினாலே நீங்கள் எட்டாம் வருஷத்திலே விதைத்து, பழைய பலனிலே ஒன்பதாம் வருஷம்மட்டும் சாப்பிடுவீர்கள்; இதின் பலன் வரும்மட்டுக்கும் பழைய பலனைச் சாப்பிடுவீர்கள்.

௨௩ ¶ நீங்கள் நிலங்களை அறுதியாய் விற்கவேண்டாம்; அதேனென்றால் தேசம் நம்முடையது; நீங்கள் நமக்குமுன்பாகப் பரதேசிகளும் தங்கியிருக்கிறவர்களும்தானே.

௨௪ ஆகையால் உங்கள் காணியாட்சியான தேசமெங்கும், நிலங்களின் மீட்புக்கு இடம்கொடுக்கக்கடவீர்கள்.

௨௫ உங்கள் சகோதரன் தரித்திரப்பட்டு, தன் காணியாட்சியிலே சிலதை விற்றால், அவனைச் சேர்ந்த மீட்பன் வந்து, தன் சகோதரன் விற்றதை மீட்கக்கடவன்.

௨௬ மீட்பன் இல்லாதவனுக்கோவெனில், தன் மீட்புக்குத் தேவையான அவகாசம் அகப்பட்டால்,

௨௭ அவன் தன்னுடைய காணியாட்சிக்குத் திரும்பிவரும்படிக்கு, அதை விற்றபிறகு சென்ற வருஷங்களின் கணக்கைத் தள்ளி, மீதியானதை அதைக் கொண்டவனுக்குத் திரும்பக் கொடுப்பானாக.

௨௮ இவனுக்குத் திரும்பக் கொடுப்பதற்கான அவகாசம் அவனுக்கு அகப்படாமல் போயிற்றேயாகில், அவன் விற்றது கொண்டவன் கையிலே சீர்திருந்தும் வருஷம் மட்டும் இருந்து, சீர்திருந்தும் வருஷத்திலேவென்றால், அவன் தன் காணியாட்சிக்குத் திரும்பி வரும்படிக்கு அது நீங்கலாகக்கடவது.

௨௯ ¶ ஒருவன் மதிலுள்ள பட்டணத்தில் வாசஸ்தலமாகிய வீட்டை விற்றால், அதை விற்றபிறகு ஒரு வருஷம்மட்டும் அதின் மீட்புச் செல்லும்; அதின் மீட்புக்கு ஒரு முழுவருஷம் தவணையாய் இருப்பதாக.

௩௰ ஒரு முழுவருஷகாலம் நிறைவேறும் மட்டும் அது மீட்கப்படாதிருந்ததேயானால், அப்பொழுது மதிலுள்ள பட்டணத்திலிருக்கும் அந்த வீட்டைக் கொண்டவனுக்குஅது தலைமுறைதலைமுறையாக நிலைத்திருக்கக்கடவது; சீர்திருந்தும் வருஷத்தில் அது நீங்கலாவதும் இல்லை.

௩௧ சுற்றிலும் மதிலில்லாத கிராமங்களின் வீடுகளோவெனில், தேசத்தின் வயல்வெளிக்குச் சரியாக எண்ணப்படுவதாக; அவைகளுக்கு மீட்பிருக்கும்; சீர்திருந்தும் வருஷத்தில் நீங்கலுமாகும்.

௩௨ இலேவியரின் காணியாட்சியாகிய பட்டணங்களின் வீடுகளுக்கோவென்றால், இலேவியருக்கு என்றைக்கும் மீட்புக்கு இடமுண்டு.

௩௩ விற்றவனுடைய காணியாட்சிப் பட்டணமான ஊரின் வீடு இலேவியரில் பின்னொருவரால் மீட்கப்பட்டிருந்தாலும், சீர்திருந்தும் வருஷத்தில் நீங்கலாகவேண்டும்; ஏனெனில் இலேவியருடைய பட்ட

Digitized by Google

ணங்களின் வீடுகள் இஸ்ரவேல் புத்திரரின் நடுவிலே அவர்களுக்கு இருக்கிற காணியாட்சி.

௩௪ ஆனால் அவர்கள் பட்டணங்களுடைய பேட்டைகளின் வயல்வெளி விற்கப்படாதிருப்பதாக; ஏனெனில் அது அவர்களுக்கு நித்தியகாணியாட்சியாய் இருக்கின்றது.

௩௫ ¶ உன் சகோதரன் உன்னிடத்திலே தரித்திரப்பட்டு, கை இளைத்தவனானால், அவனைத் திடப்படுத்துவாயாக; பரதேசியையும் தங்கவந்தவனையும்போல, அவன் உன்னோடே பிழைப்பானாக.

௩௬ நீ அவன் கையில் வட்டியையும் சொச்சத்தையும் வாங்காமல், உன் சகோதரன் உன்னோடே பிழைக்கும்படிக்கு, உன் பராபரனுக்குப் பயப்படக்கடவாய்.

௩௭ அவனுக்கு உன் பணத்தை வட்டிக்கும் உன் போசனத்தைச் சொச்சத்திற்கும் கொடாயாக.

௩௮ நாம் உங்களுக்குக் கானான்தேசத்தைக் கொடுத்து, உங்களுக்குப் பராபரனாயிருக்கும்படிக்கு, உங்களை எகிப்துதேசத்திலிருந்து புறப்படப்பண்ணின உங்கள் பராபரனாகிய கர்த்தர்.

௩௯ ¶ உன் சகோதரன் உன்னிடத்திலே தரித்திரனாகி உனக்கு விலைப்பட்டுப்போனால், அவனை அடிமைவேலைகொள்ளாயாக.

௪௰ அவன் கூலிக்காரனைப்போலவும் தங்கவந்தவனைப்போலவும் உன்னோடே இருந்து, சீர்திருந்தும் வருஷம்மட்டும் உன்னிடத்திலே சேவித்து,

௪௧ அப்பொழுது தன் பிள்ளைகளோடுங்கூட உன்னைவிட்டு நீங்கலாகி, தன் வம்சத்தண்டைக்கும் தன் பிதாக்களின் காணியாட்சிக்கும் திரும்பிவருவானாக.

௪௨ ஏனெனில் அவர்கள் நாம் எகிப்துதேசத்திலிருந்து புறப்படப்பண்ணின நம்முடைய வேலைக்காரர்; அடிமை விற்கப்படுவதுபோல, அவர்கள் விற்கப்படவேண்டாம்.

௪௩ *நீ அவனைக் கொடூரமாய் ஆளாமல், உன் பராபரனுக்குப் பயப்படுவாயாக.

*எபே. ௬. ௯.

௪௪ உனக்கிருக்கும் அடிமையும் அடிமைப்பெண்ணும் உங்களைச் சுற்றிலுமிருக்கிற புறச்சாதிகளின் மனிதராயிருக்கவேண்டும்; அவைகளில் நீ அடிமையையும், அடிமைப்பெண்ணையும் கொள்ளலாம்.

௪௫ உங்களிடத்தில் பரதேசிகளாய்த் தங்குகிற அந்நியரின் புத்திரரிலும், உங்கள் தேசத்தில் உங்களிடத்திலே பிறந்திருக்கிற அவர்களுடைய வம்சத்தாரிலுங்கூட, நீங்கள் உங்களுக்கு அடிமைகளைக் கொண்டு,

௪௬ அவர்களை உங்களுக்கும் உங்களுக்குப்பிற்பாடு உங்கள் பிள்ளைகளுக்கும் சொந்தச் சுதந்தரமாக்கி, என்றைக்கும் ஆண்டுகொண்டிருக்கலாம்; ஆனால் இஸ்ரவேல் புத்திரராகிய உங்கள் சகோதரரில் ஒருவரை ஒருவர் கொடூரமாக ஆளவேண்டாம்.

௪௭ ¶ உன்னிடத்திலிருக்கிற பரதேசியும் அந்நியனும் அவகாசம்பெற்றிருக்கும்போது, அவனிடத்திலிருக்கிற உன் சகோதரன் தரித்திரப்பட்டு, அவனுக்கும் அல்லது அவன் வம்ச சந்ததிக்கும் விலைப்பட்டுப்போனால்,

௪௮ விலைப்பட்டுப்போனபிற்பாடு அவனுக்கு மீட்புண்டாவதாக; அவன் சகோதரரில் ஒருவன் அவனை மீட்கக்கடவன்.

௪௯ அவனுடைய பெரிய சிறியதகப்பனாலும், பெரிய சிறியதகப்பன் குமாரனாலும் அவன் வம்சத்தில் அவனைச் சேர்ந்த சபையாரில் ஒருவனாலும், அவனை மீட்பானாக; அல்லவென்று அவனுக்கு அவகாசம்கிடைத்தால், தன்னைத்தான் மீட்கலாம்.

௫௰ அவன் தன்னைக் கொண்டவன் கையிலே விலைப்பட்டுப்போன வருஷத்திற்கும் சீர்திருந்தும் வருஷத்திற்கும் இருக்குங் காலத்தை அவனோடே கணக்குப்பார்ப்பானாக; அவனோடே ஒரு கூலிக்காரனாய் இத்தனைநாள் இருந்ததுபோல, அவனுடைய விலைக்கிரயம் வருஷங்களின் இலக்கத்

Digitized by Google

திற்கொத்துப் பார்க்கப்படக்கடவது.

௫௧ இன்னம் அநேகம் வருஷங்கள் இருந்தால், அவன் தன் விலக்கிரயத்திலே அவைகளுக்குத்தக்கதை, தன்னை மீட்கும் பொருளாக, திரும்பக் கொடுக்கக்கடவன்.

௫௨ சீர்திருந்தும் வருஷம்மட்டும் மீதியாயிருக்கிற வருஷங்கள் கொஞ்சமேயானால், அவனோடே கணக்குப்பார்த்து, தன் வருஷங்களுக்குத்தக்கதை, தன்னை மீட்கும் பொருளாக, திரும்பக் கொடுக்கக்கடவன்.

௫௩ ஒரு கூலிக்காரனைப்போல, அவனோடே வருஷத்திற்கு வருஷம் இருப்பானாக; அவன் இவனை உன் பார்வைக்குக் கொடூரமாக ஆளவேண்டாம்.

௫௪ இவ்விதங்களாய் அவன் மீட்டுக்கொள்ளப்படாதேபோனால், அவனும் அவன் பிள்ளைகளும்கூடச் சீர்திருந்தும் வருஷத்திலே நீங்கலாவார்கள்.

௫௫ ஏனெனில் இஸ்ரவேல் புத்திரர் நமக்கு வேலைக்காரர், அவர்கள் நாம் எகிப்து தேசத்திலிருந்து புறப்படப்பண்ணின நம்முடைய வேலைக்காரராயிருக்கிறார்கள்; நாம் உங்கள் பராபரனாகிய கர்த்தர்.

## ௨௬. அதிகாரம்.

நீங்கள் உங்களுக்கு *விக்கிரகங்களையும் சுரூபங்களையும் உண்டாக்காமலும், உங்களுக்குச் சிலையை நாட்டாமலும், சித்திரம் தீர்ந்த கல்லை அதற்குமுன்பாகப் பணிய உங்கள் தேசத்தில் வைக்காமலும் இருப்பீர்களாக; ஏனெனில் நாம் உங்கள் பராபரனாகிய கர்த்தர். *௨ மோ. ௨௰. ௪.

௨ நம்முடைய ஓய்வுநாள்களைக் கைக்கொண்டு, நம்முடைய பரிசுத்தஸ்தலத்திற்கு அஞ்சி இருப்பீர்களாக; நாம் கர்த்தர்.

௩ ¶ *நீங்கள் நம்முடைய கட்டளைகளில் நடந்து, நம்முடைய கற்பனைகளைக் கைக்கொண்டு அவைகளின்படி செய்தால், *௫ மோ. ௨௮. ௧.

௪ நாம் ஏற்றகாலத்தில் உங்கள் மழைகளைத் தருவோம்; பூமி தன் பலனையும் நிலத்தின் மரங்கள் தங்கள் கனியையும் கொடுக்கும்.

௫ போரடிப்பு உங்களுக்குத் திராட்சப்பழ அறுப்புமட்டும் வரும்; திராட்சப்பழ அறுப்பு விதைப்புக்காலம்மட்டும் வரும்; நீங்கள் உங்கள் அப்பத்தைத் திர்ப்தியாகச் சாப்பிட்டு, உங்கள் தேசத்திலே சுகமாய்க் குடியிருப்பீர்கள்.

௬ தேசத்திலே சமாதானம் கட்டளை இடுவோம்; தத்தளிக்கப்பண்ணுவார் இல்லாமல் படுத்துக்கொண்டிருப்பீர்கள்; துஷ்ட மிருகங்களைத் தேசத்தில் இராதபடிக்கு ஒழியப்பண்ணுவோம்; பட்டயம் உங்கள் தேசத்தில் உலாவுவதில்லை.

௭ உங்கள் சத்துருக்களைத் துரத்துவீர்கள்; அவர்கள் உங்கள் முன்பாகப் பட்டயத்தால் விழுவார்கள்.

௮ உங்களில் ஐந்துபேர் நூறுபேரைத் துரத்துவார்கள்; உங்களில் நூறுபேர் பதினாயிரம் பேரைத் துரத்துவார்கள்; உங்கள் சத்துருக்கள் உங்களுக்குமுன்பாகப் பட்டயத்தால் விழுவார்கள்.

௯ நாம் உங்கள்மேலே நோக்கமாயிருந்து, உங்களைப் பலுகவும் பெருகவும்பண்ணி, உங்களோடிருக்கும் நம்முடைய உடம்படிக்கையைத் திடப்படுத்துவோம்.

௰ போன வருஷத்தின் பழைய தானியத்தைச் சாப்பிட்டு, புதியது வந்தினாலே பழையதை விலக்குவீர்கள்.

௰௧ நம்முடைய வாசஸ்தலத்தை உங்கள் நடுவிலே வைப்போம்; நம்முடைய ஆத்துமா உங்களை அரோசிப்பதில்லை.

௰௨ நாம் உங்கள் நடுவிலே உலாவி, உங்களுக்குப் பராபரனாயிருப்போம்; நீங்கள் நமக்குச் சனமாயிருப்பீர்கள்.

௰௩ நீங்கள் எகிப்தியருக்கு அடிமைகளாயிராதபடிக்கு, நாம் உங்களை அவர்கள் தேசத்திலிருந்து புறப்படப்பண்ணி, உங்கள் நுகத்தடிகளை உடைத்து, உங்களை நிமிர்ந்து நடக்கப்பண்ணின உங்கள் பராபரனாகிய கர்த்தர்.

Digitized by Google

௰௪ ¶ நீங்கள் நம்முடைய சொல்கேளாமலும், இந்தக் கற்பனைகளின்படி எல்லாம் செய்யாமலும்,

௰௫ நம்முடைய கட்டளைகளை வெறுக்கிறதும், உங்கள் ஆத்துமா நம்முடைய நியாயங்களை அரோசிக்கிறதும், நீங்கள் நம்முடைய கற்பனைகளின்படி எல்லாம் செய்யாதபடிக்கு, நம்முடைய உடம்படிக்கையை முறித்துப்போடுகிறதும் உண்டேயாகில்,

௰௬ நாம் உங்களுக்குச் செய்வதேதென்றால், கண்களைப் பூத்துப்போகப்பண்ணுகிறதும் ஆத்துமாவைக் கஸ்திப்படுத்துகிறதுமான திகிலையும் இளையையும் காய்ச்சலையும் உங்கள்மேலே வரப்பண்ணுவோம்; உங்கள் விதையை விருதாவாக விதைப்பீர்கள்; உங்கள் சத்துருக்கள் அதைத் தின்னுவார்கள்.

௰௭ நமது முகத்தை உங்களுக்கு விரோதமாகத் திருப்புவோம்; உங்கள் சத்துருக்களுக்குமுன்பாக முறியடிக்கப்படுவீர்கள்; உங்கள் பகைஞர் உங்களை ஆண்டுகொள்வார்கள்; உங்களைத் துரத்துவார் இல்லாமல் ஓடுவீர்கள்.

௰௮ நீங்கள் இதனோடே இன்னம் நம்முடைய சொல்கேளாதேபோனால், நாம் உங்கள் பாவங்களினிமித்தம் பின்னையும் ஏழத்தனையாக உங்களைத் தண்டித்து,

௰௯ உங்கள் வல்லமையின் பெருமையை முறித்து, உங்கள் வானத்தை இரும்பைப்போலவும், உங்கள் பூமியை வெண்கலத்தைப்போலவும் இருக்கப்பண்ணுவோம்.

௨௰ உங்கள் பலம் விருதாவிலே செலவழியும்; உங்கள் தேசம் தன் பலனையும், தேசத்தின் மரங்கள் தங்கள் கனியையும் கொடாதேபோம்.

௨௧ நீங்கள் நமது சொல்கேட்க மனதில்லாமல் நமக்கெதிர்த்து நடந்தீர்களேயானால், நாம் உங்கள் பாவங்களுக்குத்தக்கதாக இன்னம் ஏழத்தனை வாதையை உங்கள்மேலே வரப்பண்ணி,

௨௨ உங்களுக்குள்ளே வெளியின் துஷ்ட மிருகங்களை வரவிடுவோம்; அவைகள் உங்களைப் பிள்ளைகள் அற்றவர்களாக்கி, உங்கள் மிருகசீவன்களை அழித்து, உங்களைக் குறைந்துபோகப்பண்ணும்; உங்கள் வழிகள் பாழ்த்துக்கிடக்கும்.

௨௩ நீங்கள் இந்தமட்டில் நமது தண்டனையாலே குணப்படாமல், நமக்கெதிர்த்து நடந்தால்,

௨௪ நாம் உங்களுக்கெதிர்த்து நடந்து, நாம் உங்களை உங்கள் பாவங்களினிமித்தம் ஏழத்தனையாக வாதித்து,

௨௫ உடம்படிக்கையின் நீதியை விசாரிக்கிறதாகிய சரிக்குச்சரிக்கட்டும் பட்டயத்தை உங்கள்மேலே வரப்பண்ணி, நீங்கள் உங்கள் பட்டணங்களில் வந்தடைந்தபிறகு, பெருவாரிக்காய்ச்சலை உங்கள் நடுவில் அனுப்புவோம்; சத்துருவின் கையில் ஒப்புக்கொடுக்கப்படுவீர்கள்.

௨௬ நாம் அப்பமென்கிற ஆதரவுகோலை உங்களுக்கு ஒடித்திருக்கும்பொழுது, பத்து ஸ்திரிகள் ஒரே அடுப்பில் உங்கள் அப்பத்தைச் சுட்டு, அதைத் திரும்ப உங்களுக்கு நிறுத்துக்கொடுப்பார்கள்; திருப்தி அடையாமல் சாப்பிடுவீர்கள்.

௨௭ ¶ இதனுடனே நீங்கள் நம்முடைய சொல்கேளாமல், நமக்கு எதிர்த்து நடந்தால்,

௨௮ நாமும் உக்கிரத்தோடே உங்களுக்கு எதிர்த்து நடந்து, நாம் நாமே உங்களை உங்கள் பாவங்களினிமித்தம் ஏழத்தனையாகத் தண்டிப்போம்.

௨௯ உங்கள் குமாரரின் மாம்சத்தையும் உங்கள் குமாரத்திகளின் மாம்சத்தையும் புசிப்பீர்கள்.

௩௰ நாம் உங்கள் மேடைகளை அழித்து, உங்கள் விக்கிரகச்சிலைகளை நிர்த்தூளியாக்கி, உங்கள் உடல்களை உங்கள் நரகலான தேவர்களுடைய உடல்களின்மேலே போடுவிப்போம்; நம்முடைய ஆத்துமா உங்களை அரோசிக்கும்.

௩௧ நாம் உங்கள் பட்டணங்களை வனாக்

Digitized by Google

தரமும் உங்கள் பரிசுத்தஸ்தலங்களைப் பாழுமாக்கி, உங்களுடைய ஆற்றுகிற வாசனையை முகராதிருப்போம்.

௩௨ நாம் தேசத்தை அதிலே குடியிருக்கப்போகிற உங்கள் சத்துருக்கள் பிரமிக்கத்தக்கதாகப் பாழாக்கி,

௩௩ உங்களைச் சாதிகளுக்குள்ளே சிதறடித்து, உங்கள் பிறகாலே பட்டயத்தை உருவுவோம்; உங்கள் தேசம் பாழும், உங்கள் பட்டணங்கள் வனாந்தரமுமாம்.

௩௪ நீங்கள் உங்கள் சத்துருக்களின் தேசத்திலிருக்கும் அப்பொழுது, தேசமானது பாழாய்க்கிடக்கிற நாளெல்லாம் தன்னுடைய ஓய்வுகளை இரம்மியமாய் அநுபவிக்கும்; அப்பொழுது ஓய்வடைந்து, தன் ஓய்வுகளை இரம்மியமாய் அநுபவிக்கும்.

௩௫ நீங்கள் அதிலே குடியிருக்கும்பொழுது அது உங்கள் ஓய்வு வருஷங்களில் ஓய்வடையாதபடியினாலே, அது பாழாய்க்கிடக்கும் நாளெல்லாம் ஓய்வடைந்திருக்கும்.

௩௬ உங்களில் மீதியாயிருப்பவர்களின் இருதயங்களில் நாம் அவர்கள் சத்துருக்களின் தேசங்களிலே மனத்தளர்ச்சியை வரப்பண்ணுவோம்; காற்றடிக்கும் இலையின் இரைச்சல் அவர்களை ஓட்டும்; அவர்கள் பட்டயத்திற்குத்தப்பி ஓடுகிறதுபோல ஓடி, துரத்துவாரில்லாமல் விழுவார்கள்.

௩௭ துரத்துவாரில்லாமல் ஒருவர்மேல் ஒருவர், பட்டயம் பிறகாலே வருகிறதுபோல, இடறிவிழுவார்கள்; உங்கள் சத்துருக்களுக்குமுன்பாக உங்களுக்குத் தரிக்கக்கூடாததாயிருக்கும்.

௩௮ புறச்சாதிகளுக்குள் அழிவீர்கள்; உங்கள் சத்துருக்களின் தேசம் உங்களைப் பட்சிக்கும்.

௩௯ ¶ உங்களில் மீதியாய் இருப்பவர்கள் உங்கள் சத்துருக்களின் தேசங்களிலே தங்கள் அக்கிரமங்களினாலும் தங்கள் பிதாக்களின் அக்கிரமங்களினாலும்கூட வாடிப்போய்,

௪௰ தாங்கள் நமக்கு விரோதமாகத் துரோகம்பண்ணி நடப்பித்த தங்கள் அக்கிரமத்தையும், தங்கள் பிதாக்களின் அக்கிரமத்தையும்,

௪௧ தாங்கள் நமக்கு எதிர்த்து நடந்தபடியினாலே, நாமும் தங்களுக்கெதிர்த்து நடந்து, தங்களைத் தங்கள் சத்துருக்களின் தேசத்திலே கொண்டுபோய் விட்டதையும், அறிக்கை இடுவார்கள்; அப்பொழுது சுன்னத்தில்லாத அவர்கள் இருதயம் தாழ்ந்துபோய், அவர்கள் தங்கள் அக்கிரமத்தின் ஆக்கினையை நல்லதென்று ஒத்துக்கொண்டால்,

௪௨ நாம் யாக்கோபோடே பண்ணின நம்முடைய உடம்படிக்கையையும், இசாக்கோடே பண்ணின நம்முடைய உடம்படிக்கையையும், ஆபிரகாமோடே பண்ணின நம்முடைய உடம்படிக்கையையும் நினைப்போம்; தேசத்தையும் நினைப்போம்.

௪௩ ¶ அவர்கள்நிமித்தம் வெறுமையே விடப்பட்டதும், பாழாய்க் கிடக்கிறதினாலே தன் ஓய்வுகளை இரம்மியமாக அநுபவிக்கிறதுமான தேசத்தைத்தானே; அவர்களும் நம்முடைய நியாயங்களை வெறுத்தபடியினாலும், அவர்களுடைய ஆத்துமா நம்முடைய கட்டளைகளை அரோசித்தபடியினாலும், அடைந்த தங்களுடைய அக்கிரமத்தின் தண்டனையை நல்லதென்று ஒத்துக்கொள்ளுவார்கள்.

௪௪ ஆனதுகொண்டு அவர்கள் தங்கள் சத்துருக்களின் தேசத்திலிருந்தாலும், நாம் அவர்களை நிர்மூலமாக்கத்தக்கவிதமாகவும், அவர்களோடிருக்கிற நம்முடைய உடம்படிக்கையை அவத்தமாக்கத்தக்கவிதமாகவும் அவர்களைப் புறக்கணிப்பதும் இல்லை, அரோசிப்பதும் இல்லை; ஏனெனில் நாம் அவர்கள் பராபரனாகிய கர்த்தர்.

௪௫ அவர்களுடைய பராபரனாயிருக்கும்படிக்கு, நாம் புறச்சாதிகளின் கண்களுக்குமுன்பாக எகிப்துதேசத்திலிருந்து புறப்

படப்பண்ணின அவர்களுடைய முன்னோர்களோடே நாம் பண்ணின உடம்படிக்கையை அவர்களுக்காக நினைவுகூருவோம்; நாம் கர்த்தர் என்று சொல்லென்றார்.

௪௬ ¶ தமக்கும் இஸ்ரவேல் புத்திரருக்கும் நடுவே இருக்கும்படிக்கு, கர்த்தர் சீனாய் பர்வதத்திலே மோசேயைக்கொண்டு கொடுத்த கட்டளைகளும் நியாயங்களும் நியாயப்பிரமாணங்களும் இவைகள்தாமே.

## ௨௭. அதிகாரம்.

பின்னையும் கர்த்தர் மோசேயோடே பேசிச் சொன்னதாவது:

௨ நீ இஸ்ரவேல் புத்திரரோடே பேசிச் சொல்லவேண்டியதேதெனில், ஒருவன் ஒரு விசேஷித்த பொருத்தனையைப் பண்ணியிருந்தால், ஆத்துமாக்கள் உன் மதிப்பின்படிக்குக் கர்த்தருடையவர்கள்.

௩ இருபதுவயதுமுதல்கொண்டு, அறுபது வயதுக்குள்ளிருக்கிற ஆண்பிள்ளையை நீ பரிசுத்தஸ்தலத்தின் சேக்கலாகிய ஐம்பது வெள்ளிச்சேக்கலாகவும்,

௪ பெண்சாதியை முப்பது சேக்கலாகவும், மதிப்பாயாக.

௫ ஐந்துவயது முதல்கொண்டு இருபது வயதிற்குள்ளிருக்கிற ஆண்பிள்ளையை இருபது சேக்கலாகவும், பெண்பிள்ளையைப் பத்துச் சேக்கலாகவும்,

௬ ஒருமாதம் முதல்கொண்டு ஐந்து வயதிற்குள்ளிருக்கிற ஆண்பிள்ளையை ஐந்து வெள்ளிச் சேக்கலாகவும், பெண்பிள்ளையை மூன்று வெள்ளிச் சேக்கலாகவும்,

௭ அறுபது வயதும் அதிகமுமான ஆண்பிள்ளையைப் பதினைந்து சேக்கலாகவும், பெண்சாதியைப் பத்துச் சேக்கலாகவும், மதிக்கக்கடவாய்.

௮ உன் மதிப்பைச் செலுத்தக்கூடாத தரித்திரனாயிருந்தானேயாகில், அவன் ஆசாரியனுக்குமுன்பாகத் தன்னை மதிக்கும்படிக்கு வந்து நிற்கக்கடவன்; பொருத்தனைபண்ணினவனுடைய கைக்கு உதவுகிறதற்குத்தக்க விதமாக ஆசாரியன் அவனை மதிப்பானாக.

௯ ¶ கர்த்தருக்குப் பலியிடப்படத்தக்க மிருகஜீவனேயானால், அவன் கர்த்தருக்குக் கொடுக்கிற அப்படிக்கொத்ததெல்லாம் பரிசுத்தமாயிருப்பதாக.

௰ அதை மாற்றாமலிருப்பானாக; இளப்பமானதற்குப்பதிலாக நல்லதையும், நல்லதற்குப்பதிலாக இளப்பமானதையும், கொடாமலிருப்பானாக; அவன் மிருகத்திற்குப் பதிலாக மிருகத்தைக் கொடுத்தானேயாகில், அப்பொழுது அதுவும் அதற்குப் பதிலானதும் பரிசுத்தமாய் இருப்பதாக.

௰௧ அது கர்த்தருக்குப் பலியிடப்படத்தகாத தீட்டான யாதொரு மிருகமேயானால், அதை ஆசாரியனுக்குமுன்பாக நிறுத்தக்கடவன்.

௰௨ ஆசாரியன் அதை அதின் நன்மைக்கும் இளப்பத்திற்கும்தக்கதாக மதிப்பானாக; அவன் அதை மதிக்கிறபடியே இருக்கக்கடவது.

௰௩ அதை மீட்க மனதாயிருந்தானேயாகில், உன் மதிப்போடே ஐந்தில் ஒருபங்கைக் கூட்டக்கடவன்.

௰௪ ¶ ஒருவன் தன் வீட்டைக் கர்த்தருக்கென்று பரிசுத்தம்பண்ணினால், ஆசாரியன் அதை அதின் நன்மைக்கும் இளப்பத்திற்கும்தக்கதாக மதிப்பானாக, அவன் அதை மதிக்கிறபடி இருக்கக்கடவது.

௰௫ பரிசுத்தம்பண்ணினவன் தன் வீட்டை மீட்க மனதாயிருந்தானேயாகில், உன் மதிப்பான திரவியத்தோடே ஐந்தில் ஒருபங்கைக் கூட்டக்கடவன்; அப்பொழுது அவனுடையதாயிருக்கும்.

௰௬ ¶ ஒருவன் தன் காணியாட்சி வயல்வெளியிலே ஏதாகிலும் கர்த்தருக்கென்று பரிசுத்தம்பண்ணினால், உன் மதிப்பு அதின் விதைப்புக்குத்தக்கதாய் இருக்கவேண்டும்; ஒரு கலம் வாற்கோதுமை விதைக்கிற வயல் ஐம்பது வெள்ளிச் சேக்கலாக மதிக்கப்படக்கடவது.

௰௭ சீர்திருத்தும் வருஷம் முதல்கொண்

Digitized by Google

டே அவன் தன் வயலைப் பரிசுத்தம்பண்ணி னால், உன் மதிப்பின்படி இருக்கக்கடவது.

௰௮ சீர்திருந்தும் வருஷத்திற்குப்பிற்பாடு அதைப் பரிசுத்தம்பண்ணினானேயாகில், அப்பொழுது சீர்திருந்தும் வருஷம்மட்டும் இருக்கும்; குறை வருஷங்களின்படியே திரவியம் ஆசாரியனாலே கணக்குப்பார்க் கப்பட்டு, அதற்குத் தக்கது உன் மதிப்பி லே தள்ளப்படக்கடவது.

௰௯ வயலைப் பரிசுத்தம்பண்ணினவன் அ தை மீட்க மனதாயிருந்தானேயாகில், உன் மதிப்பான திரவியத்தோடே ஐந்தில் ஒரு பங்கைக் கூட்டக்கடவன்; அப்பொழுது அவனுடையதாயிருக்கும்.

உ௰ அவன் வயலை மீட்காதேபோய், அதை வேறொருவனுக்கு விற்றானேயானால், இனி மீட்கப்படக்கூடாமல்,

உக அது சீர்திருந்தும் வருஷத்தில் நீங்க லாகும்பொழுது, சாபத்திடான வயலாகக் கர்த்தருக்குப்பரிசுத்தமாயிருக்கக்கடவது; அதின் காணியாட்சி ஆசாரியனைச் சேரும்.

உஉ ஒருவன் தன் காணியாட்சி வயல் அல் லாததாகிய தான் கொண்ட ஒரு வயலைக் கர்த்தருக்கென்று பரிசுத்தம்பண்ணினானே யாகில்,

உ௩ அது சீர்திருந்தும் வருஷம்மட்டும், உன் மதிப்பின்படி பெறும் விலையை ஆசா ரியன் அவனோடே கணக்குப்பார்ப்பானாக; அந்த உன் மதிப்பை அவன் அந்நாளிலே கர்த்தருக்குப் பரிசுத்தமாயிருக்கும்படிக் கு, கொடுக்கக்கடவன்.

உச யார்கையிலே அந்த வயலைக் கொண் டானோ, அந்தக் காணியாட்சிக்காரன் வச மாய், அது சீர்திருந்தும் வருஷத்திலே தி ரும்பும்.

உரு உன் மதிப்பெல்லாம் பரிசுத்தஸ்தலச் சேக்கல் கணக்காயிருக்கக்கடவது; சேக்க லானது இருபது கேரா.

உசு ¶ தலையீற்றுகளோவென்றால், கர்த்த ருடையதானபடியினாலே தலையீற்றாகிய மி ருகஜீவனை ஒருவரும் பரிசுத்தம்பண்ண ஒண்ணாது; அது மாடானாலும், ஆடானா லும், கர்த்தருடையதாயிருக்கிறதே.

உஎ தீட்டான மிருகத்தினுடையதேயானா ல், அவன் உன் மதிப்பின்படி அதை மீட்டு, அதனுடனே ஐந்தில் ஒருபங்கைக் கூட்டக் கடவன்; மீட்கப்படாமல் போயிற்றேயா கில், உன் மதிப்பின்படி விற்கப்படக்கட வது.

உஅ ¶ ஒருவன் தனக்குண்டான நரஜீவன், மிருகஜீவன், காணியாட்சி, நிலம் முதலா னவைகளில் எதையாகிலும் சாபத்திடான தாகக் கர்த்தருக்குக் கொடுத்தானேயாகில், அது விற்கப்படவும் மீட்கப்படவும் வேண் டாம்; சாபத்திடானவைகளாகக் கொடுக் கப்பட்டவைகளெல்லாம், கர்த்தருக்குப் பரிசுத்தத்திற்குப் பரிசுத்தம்.

உ௯ நரஜீவனில் சாபத்திடாக நியமிக்கப்ப ட்டவைகளெல்லாம் மீட்கப்படாமல் கொ லையுண்ணவே கொலையுண்ணக்கடவது.

௩௰ ¶ தேசத்திலே நிலத்தின் விதைகளி லும், மரங்களின் கனியிலும், பத்தில் ஒரு பங்காகிறதெல்லாம் கர்த்தருடையது; அது கர்த்தருக்குப் பரிசுத்தம்.

௩க ஒருவன் பத்தில் ஒருபங்காகிய அதி லே சிலவற்றை மீட்க மனதாயிருந்தானே யானால், அதினுடனே ஐந்தில் ஒருபங்கைக் கூட்டக்கடவன்.

௩உ கோலின்கீழ்ப்போகிற ஆடுமாடுகளி லே பத்தில் ஒரு பங்காகிறதெல்லாம் கர்த் தருக்குப் பரிசுத்தம்.

௩௩ அது நல்லதோ இளப்பமானதோ, என்று அவன் பார்க்கவேண்டாம்; அதற் குப் பதில்கொடுக்கவும் வேண்டாம்; பதில் கொடுத்தானேயாகில், அதுவும் அதற்குப் பதிலானதும் பரிசுத்தமாயிருக்கும்; அது மீட்கப்படக்கூடாதென்று அவர்களோடே சொல்லென்றார்.

௩ச ¶ இஸ்ரவேல் புத்திரருக்குச் சொல் லும்படிக்குக் கர்த்தர் மோசேக்குச் சீனாய் பர்வதத்திலே கற்பித்த கற்பனைகள் இவை களதானே.

Digitized by Google

# மோசே எழுதின

## நான்காம் ஆகமம்.

### க. அதிகாரம்.

அவர்கள் எகிப்துதேசத்திலிருந்து புறப்பட்ட இரண்டாம்வருஷம் இரண்டாம் மாதம் முதல்தேதியிலே, கர்த்தர் சீனாய் வனாந்தரத்திலிருக்கிற ஆசரிப்புக்கூடாரத்திலே மோசேயோடே பேசிச் சொன்னதாவது:

உ நீங்கள் இஸ்ரவேல் புத்திரரின் முழுச் சபையாயிருக்கிற அவர்கள் பிதாக்களுடைய வீட்டு வம்சங்களிலுள்ள ஆண்பிள்ளைகளாகிய சகல தலைகளையும் பேர்பேராக எண்ணித் தொகை ஏற்றுங்கள்.

ங இஸ்ரவேலிலே இருபதுவயதுமுதல்கொண்டு யுத்தத்திற்குப் புறப்படத்தக்கவர்களை எல்லாம் நீயும் ஆரோனுமாய் அவர்கள் சேனைகளின்படியே இலக்கம் பார்ப்பீர்களாக.

ச ஒவ்வொரு கோத்திரத்திற்கு அவர்களுடைய பிதாக்களின் வீட்டுத்தலைவனாகிய ஒவ்வொரு மனிதன் உங்களோடிருப்பானாக.

ரு ¶ உங்களோடே நிற்கும் மனிதரின் நாமங்களாவன: ரூபன் கோத்திரத்திலே சேதேயூரின் குமாரன் எலிசூர்.

சு சிமெயோன் கோத்திரத்திலே சூரிஷதாயின் குமாரன் செலூமியேல்.

எ யூதா கோத்திரத்தில் அம்மீனதாபின் குமாரன் நாகசோன்.

அ இசஷார் கோத்திரத்திலே சூகாரின் குமாரன் நெத்தானெயேல்.

கூ செபுலோன் கோத்திரத்தில் ஏலோனின் குமாரன் எலியாப்.

௰ யோசேப்பின் குமாரராகிய எப்பிராயீம் கோத்திரத்தில் அம்மியூதின் குமாரன் எலிஷம்மா, மனாசே கோத்திரத்திலே பெதாசூரின் குமாரன் கமாலியேல்.

௰க பென்யமீன் கோத்திரத்திலே கீதெயோனின் குமாரன் அபீதான்.

௰உ தாண் கோத்திரத்தில் அம்மிஷதாயின் குமாரன் அகியேசேர்.

௰ங ஆசேர் கோத்திரத்தில் ஓகிரானின் குமாரன் பாகியேல்.

௰ச காத் கோத்திரத்திலே தேகுவேலின் குமாரன் எலியாசாப்.

௰ரு நவுதலி கோத்திரத்தில் ஏனானின் குமாரன் அகிரா.

௰சு சபையில் அழைக்கப்பட்டு, தங்கள் பிதாக்களுடைய கோத்திரங்களின் பிரபுக்களும் இஸ்ரவேலில் ஆயிரங்களுக்குத் தலைவருமாயிருப்பவர்களில் இவர்கள்தான் என்றார்.

௰எ ¶ அப்படியே மோசேயும் ஆரோனும் பேர்பேராகக் குறிக்கப்பட்ட இந்த மனிதரைக் கூட்டிக்கொண்டு,

௰அ இரண்டாம்மாதம் முதல்தேதியிலே சபையையெல்லாம் கூட்டங்கூட்டினார்கள்; அவர்கள் தங்கள் பிதாக்களுடைய வீட்டு வம்சப்பிறப்புகளின்படியே பார்க்கப்பட்டு, இருபதுவயதுமுதல்கொண்டிருந்த பேர்கள் தலைதலையாக எண்ணப்பட்டார்கள்.

௰கூ கர்த்தர் மோசேக்குக் கற்பித்தபடியே, இவன் அவர்களைச் சீனாயின் வனாந்தரத்தில் இலக்கம்பார்த்தான்.

உ௰ ¶ இஸ்ரவேலின் மூத்தவனாகிய ரூப



Digitized by Google

ளின் புத்திரருடைய பிதாக்களின் வீட்டு வம்சப்பிறப்புகளில், இருபதுவயதுமுதல் கொண்டு யுத்தத்திற்குப் புறப்படத்தக்க ஆண்பிள்ளைகளெல்லாம் தலைதலையாக எண்ணப்பட்டபொழுது,

௨௧ ரூபன் கோத்திரத்தில் இலக்கம்பார்க்கப்பட்டவர்கள், நாற்பத்தாறாயிரத்து ஐந்நூறுபேர்.

௨௨ ¶ சிமெயோன் புத்திரருடைய பிதாக்களின் வீட்டு வம்சப்பிறப்புகளில் இருபது வயதுமுதல்கொண்டு யுத்தத்திற்குப் புறப்படத்தக்க ஆண்பிள்ளைகளெல்லாம் தலைதலையாக எண்ணி இலக்கம் பார்க்கப்பட்டபொழுது,

௨௩ சிமெயோன் கோத்திரத்தில் இலக்கம் பார்க்கப்பட்டவர்கள், ஐம்பத்தொன்பதினாயிரத்து முந்நூறுபேர்.

௨௪ ¶ காத் புத்திரருடைய பிதாக்களின் வீட்டு வம்சப்பிறப்புகளில் இருபதுவயதுமுதல்கொண்டு யுத்தத்திற்குப் புறப்படத்தக்க ஆண்பிள்ளைகளெல்லாம் எண்ணப்பட்டபொழுது,

௨௫ காத் கோத்திரத்தில் இலக்கம்பார்க்கப்பட்டவர்கள், நாற்பத்தையாயிரத்து அறுநூற்று ஐம்பதுபேர்.

௨௬ ¶ யூதா புத்திரருடைய பிதாக்களின் வீட்டு வம்சப்பிறப்புகளில் இருபதுவயதுமுதல்கொண்டு யுத்தத்திற்குப் புறப்படத்தக்க ஆண்பிள்ளைகளெல்லாம் எண்ணப்பட்டபொழுது,

௨௭ யூதா கோத்திரத்தில் இலக்கம்பார்க்கப்பட்டவர்கள், எழுபத்து நாலாயிரத்து அறுநூறுபேர்.

௨௮ ¶ இசஷார் புத்திரருடைய பிதாக்களின் வீட்டு வம்சப்பிறப்புகளில் இருபதுவயதுமுதல்கொண்டு யுத்தத்திற்குப் புறப்படத்தக்க ஆண்பிள்ளைகளெல்லாம் எண்ணப்பட்டபொழுது,

௨௯ இசஷார் கோத்திரத்தில் இலக்கம் பார்க்கப்பட்டவர்கள், ஐம்பத்து நாலாயிரத்து நானூறுபேர்.

௩௰ ¶ செபுலோன் புத்திரருடைய பிதாக்களின் வீட்டு வம்சப்பிறப்புகளில் இருபது வயதுமுதல்கொண்டு யுத்தத்திற்குப் புறப்படத்தக்க ஆண்பிள்ளைகளெல்லாம் எண்ணப்பட்டபொழுது,

௩௧ செபுலோன் கோத்திரத்தில் இலக்கம் பார்க்கப்பட்டவர்கள், ஐம்பத்தேழாயிரத்து நானூறுபேர்.

௩௨ ¶ யோசேப்பின் குமாரரில் எப்பிராயீம் புத்திரருடைய பிதாக்களின் வீட்டு வம்சப்பிறப்புகளில் இருபதுவயதுமுதல் கொண்டு யுத்தத்திற்குப் புறப்படத்தக்க ஆண்பிள்ளைகளெல்லாம் எண்ணப்பட்டபொழுது,

௩௩ எப்பிராயீம் கோத்திரத்தில் இலக்கம் பார்க்கப்பட்டவர்கள், நாற்பதினாயிரத்து ஐந்நூறுபேர்.

௩௪ ¶ மனாசே புத்திரருடைய பிதாக்களின் வீட்டு வம்சப்பிறப்புகளில் இருபதுவயதுமுதல்கொண்டு யுத்தத்திற்குப் புறப்படத்தக்க ஆண்பிள்ளைகளெல்லாம் எண்ணப்பட்டபொழுது,

௩௫ மனாசே கோத்திரத்தில் இலக்கம்பார்க்கப்பட்டவர்கள், முப்பத்திராயிரத்து இருநூறுபேர்.

௩௬ ¶ பென்யமீன் புத்திரருடைய பிதாக்களின் வீட்டு வம்சப்பிறப்புகளில் இருபதுவயதுமுதல்கொண்டு யுத்தத்திற்குப் புறப்படத்தக்க ஆண்பிள்ளைகளெல்லாம் எண்ணப்பட்டபொழுது,

௩௭ பென்யமீன் கோத்திரத்தில் இலக்கம் பார்க்கப்பட்டவர்கள், முப்பத்தையாயிரத்து நானூறுபேர்.

௩௮ ¶ தாண் புத்திரருடைய பிதாக்களின் வீட்டு வம்சப்பிறப்புகளில் இருபதுவயதுமுதல்கொண்டு யுத்தத்திற்குப் புறப்படத்தக்க ஆண்பிள்ளைகளெல்லாம் எண்ணப்பட்டபொழுது,

௩௯ தாண் கோத்திரத்தில் இலக்கம்பார்க்கப்பட்டவர்கள், அறுபத்திராயிரத்து எழுநூறுபேர்.

Digitized by Google

௪௰ ¶ ஆசேர் புத்திரருடைய பிதாக்களின் வீட்டு வம்சப்பிறப்புகளில் இருபதுவயது முதல்கொண்டு யுத்தத்திற்குப் புறப்படத்தக்க ஆண்பிள்ளைகளெல்லாம் எண்ணப்பட்டபொழுது,

௪௧ ஆசேர் கோத்திரத்தில் இலக்கம்பார்க்கப்பட்டவர்கள், நாற்பத்தோராயிரத்து ஐந்நூறுபேர்.

௪௨ ¶ நவ்தலி புத்திரருடைய பிதாக்களின் வீட்டு வம்சப்பிறப்புகளில் இருபதுவயதுமுதல்கொண்டு யுத்தத்திற்குப் புறப்படத்தக்க ஆண்பிள்ளைகளெல்லாம் எண்ணப்பட்டபொழுது,

௪௩ நவ்தலி கோத்திரத்தில் இலக்கம்பார்க்கப்பட்டவர்கள், ஐம்பத்து மூவாயிரத்து நானூறுபேராயிருந்தார்கள்.

௪௪ ¶ மோசேயும் ஆரோனும் இஸ்ரவேலுடைய பிதாக்களின் வீடுகளில் ஒவ்வொன்றுக்கு ஒவ்வொரு பிரபுக்களான பன்னிரண்டுபேரும் இலக்கம்பார்த்தவர்கள் இவர்கள்தான்.

௪௫ இஸ்ரவேல் புத்திரருடைய பிதாக்களின் வீட்டாரில் இருபதுவயதுமுதல்கொண்டு, இஸ்ரவேலில் யுத்தத்திற்குப் புறப்படத்தக்கவர்களாகிய இலக்கம்பார்க்கப்பட்டபேர்களெல்லாம்,

௪௬ அறுநூற்று மூவாயிரத்து ஐந்நூற்று ஐம்பதுபேராயிருந்தார்கள்.

௪௭ ¶ ஆனால் இலேவியர் தங்கள் பிதாக்களுடைய கோத்திரத்தின்படியே, அவர்களுக்குள்ளே இலக்கம் பார்க்கப்பட்டதில்லை.

௪௮ ஏனெனில் கர்த்தர் மோசேயோடே பேசிச் சொன்னதாவது:

௪௯ இலேவி கோத்திரத்தாரைமாத்திரம் நீ இஸ்ரவேல் புத்திரருக்குள்ளே இலக்கம்பாராமலும், அவர்கள் தொகையை ஏற்றாமலும்,

௫௰ இலேவியரை நீ சாட்சியின் வாசஸ்தலத்திற்கும், அதினுடைய எல்லாப் பணிமுட்டுகளுக்கும், அதிலுள்ள எல்லாவற்றிற்கும், விசாரிப்புக்காரராக வை; அவர்கள் வாசஸ்தலத்தையும் அதின் எல்லாப் பணிமுட்டுகளையும் சுமந்து, அதினிடத்தில் ஊழியம்செய்து, வாசஸ்தலத்தைச் சுற்றிலும் பாளயம் இறங்கக்கடவர்கள்.

௫௧ வாசஸ்தலம் பயணப்படுகையில், இலேவியர் அதை இறக்கிவைத்து, அது பாளயம் இறங்குகையில், இலேவியர் அதை எடுத்து நிறுத்தக்கடவர்கள்; சேருகிற அந்நியன் கொலையுண்பானாக.

௫௨ இஸ்ரவேல் புத்திரர் அவரவர் தங்கள் பாளயத்தோடும் அவரவர் தங்கள் சேனையின் கொடியோடும் கூடாரம்போடக்கடவர்கள்.

௫௩ இஸ்ரவேல் புத்திரருடைய சபையின் மேலே கடுங்கோபம் வராதபடிக்கு, இலேவியர் வாசஸ்தலத்தின் சுற்றிலும் பாளயம் இறங்கி, இலேவியர் சாட்சியினுடைய வாசஸ்தலத்தின் காவலைக் காப்பார்களாக என்றார்.

௫௪ கர்த்தர் மோசேக்குக் கற்பித்தபடி எல்லாம் இஸ்ரவேல் புத்திரர் செய்தார்கள்.

## ௨. அதிகாரம்.

கர்த்தர் மோசேயோடும் ஆரோனோடும் பேசிச் சொன்னதாவது:

௨ இஸ்ரவேல் புத்திரர் அவரவர் தங்கள் பிதாக்களுடைய வீட்டின் அடையாளமாகிய தங்களுடைய கொடியண்டையிலே தங்கள் கூடாரங்களைப் போட்டு, ஆசரிப்புக்கூடாரத்திற்கு எதிராகச் சுற்றிலும் பாளயம் இறங்கக்கடவர்கள்.

௩ ¶ யூதாவுடைய பாளயத்துக் கொடியின் கீழிருக்கிற சேனைகள் சூரியன் உதிக்கும் கிழ்ப்புறத்திலே பாளயம் இறங்குவது; யூதாபுத்திரரின் பிரபு, அம்மினதாபின் குமாரன் நாகசோன்.

௪ இலக்கம்பார்க்கப்பட்ட அவனுடைய சேனை எழுபத்து நாலாயிரத்து அறுநூறு பேர்.

Digitized by Google

௫ அவன் கிட்டப் பாளயம் இறங்குபவர்கள் இசக்கார் கோத்திரத்தார்; இசக்கார் புத்திரரின் பிரபு, சூவாரின் குமாரன் நெத்தானெயேல்.

௬ இலக்கம்பார்க்கப்பட்ட அவனுடைய சேனை ஐம்பத்து நாலாயிரத்து நானூறுபேர்.

௭ பிற்பாடு செபுலோன் கோத்திரத்தாரும் தானே; செபுலோன் புத்திரரின் பிரபு ஏலோனின் குமாரன் எலியாப்.

௮ இலக்கம்பார்க்கப்பட்ட அவனுடைய சேனை ஐம்பத்தேழாயிரத்து நானூறுபேர்.

௯ இலக்கம்பார்க்கப்பட்ட யூதாவின் பாளயத்தார் எல்லாரும் தங்கள் சேனைகளின்படியே நூற்றெண்பத்து ஆறாயிரத்து நானூறுபேர்; இவர்கள் பயணத்திலே முதல் பாளயமாய்ப் போகக்கடவர்கள்.

௰ ¶ ரூபனுடைய பாளயத்துக் கொடியின்கீழிருக்கிற சேனைகள் தென்புறத்தில் இறங்குவது; ரூபன் புத்திரரின் பிரபு, சேதேயூரின் குமாரன் எலீசூர்.

௰௧ இலக்கம்பார்க்கப்பட்ட அவனுடைய சேனை நாற்பத்தாறாயிரத்து ஐந்நூறுபேர்.

௰௨ அவன் கிட்டப் பாளயம் இறங்குபவர்கள் சிமெயோன் கோத்திரத்தார்; சிமெயோன் புத்திரரின் பிரபு, சூரிஷதாயின் குமாரன் செலூமியேல்.

௰௩ இலக்கம்பார்க்கப்பட்ட அவனுடைய சேனை ஐம்பத்தொன்பதினாயிரத்து முந்நூறுபேர்.

௰௪ பிற்பாடு காத் கோத்திரத்தாருந்தானே; காத் புத்திரரின் பிரபு, ரேகுவேலின் குமாரன் எலியாசாப்.

௰௫ இலக்கம்பார்க்கப்பட்ட அவனுடைய சேனை நாற்பத்தையாயிரத்து அறுநூற்றைம்பதுபேர்.

௰௬ இலக்கம்பார்க்கப்பட்ட ரூபனின் பாளயத்தார் எல்லாரும் தங்கள் சேனைகளின்படியே நூற்றைம்பத்து ஓராயிரத்து நானூற்றைம்பதுபேர்; இவர்கள் பயணத்தில் இரண்டாம் பாளயமாய்ப் போகுபவர்கள்.

௰௭ ¶ பிற்பாடு ஆசரிப்புக்கூடாரம் லேவியரின் சேனையோடே பாளயங்களின் நடுவே பயணப்பட்டுப்போம்; எப்படிப் பாளயம் இறங்குகிறார்களோ, அப்படி அவரவர் தங்கள் வரிசையிலே தங்கள் கொடிகளின்படியே பயணப்படுவார்களாக.

௰௮ ¶ எப்பிராயீமுடைய பாளயத்துக் கொடியின் சேனைகள் மேல்புறத்தில் இறங்குவது; எப்பிராயீமின் புத்திரரின் பிரபு, அம்மியூதின் குமாரன் எலிஷாமா.

௰௯ இலக்கம்பார்க்கப்பட்ட அவனுடைய சேனை நாற்பதினாயிரத்து ஐந்நூறுபேர்.

௨௰ அவன் கிட்டப் பாளயம் இறங்குபவர்கள் மனாசே கோத்திரத்தார்; மனாசே கோத்திரத்தாரின் பிரபு, பெதாத்சூரின் குமாரன் கமாலியேல்.

௨௧ இலக்கம்பார்க்கப்பட்ட அவனுடைய சேனை முப்பத்திராயிரத்து இருநூறுபேர்.

௨௨ பிற்பாடு பென்யமீன் கோத்திரத்தாருந்தானே; பென்யமீன் புத்திரரின் பிரபு, கீதேயோனீயின் குமாரன் அபீதான்.

௨௩ இலக்கம்பார்க்கப்பட்ட அவனுடைய சேனை முப்பத்தையாயிரத்து நானூறுபேர்.

௨௪ இலக்கம்பார்க்கப்பட்ட எப்பிராயீமின் பாளயத்தார் எல்லாரும் தங்கள் சேனைகளின்படியே நூற்றெண்ணாயிரத்து ஒருநூறுபேர்; இவர்கள் பயணத்தில் மூன்றாம் பாளயமாய்ப் போகுபவர்கள்.

௨௫ ¶ தாணுடைய பாளயத்துக் கொடியின் சேனைகள் வடக்கே இறங்குவது; தாண் புத்திரரின் பிரபு, அம்மிஷதாயின் குமாரன் அகியேசேர்.

௨௬ இலக்கம்பார்க்கப்பட்ட அவனுடைய சேனை அறுபத்திராயிரத்து எழுநூறுபேர்.

௨௭ அவன் கிட்டப் பாளயம் இறங்குபவர்கள் ஆசேர் கோத்திரத்தார்; ஆசேர் கோத்திரத்தாரின் பிரபு, ஓகிரானின் குமாரன் பாகியேல்.

௨௮ இலக்கம்பார்க்கப்பட்ட அவனுடைய சேனை நாற்பத்தோராயிரத்து ஐந்நூறுபேர்.

Digitized by Google

௨௯ பிற்பாடு நவுதலி கோத்திரத்தாரும் தானே; நவுதலி புத்திரரின் பிரபு, ஏனானின் குமாரன் அகிரா.

௩௰ இலக்கம்பார்க்கப்பட்ட அவனுடைய சேனை ஐம்பத்து மூவாயிரத்து நானூறுபேர்.

௩௧ இலக்கம்பார்க்கப்பட்ட தாணின் பாளயத்தார் எல்லாரும் நூற்றைம்பத்தே ழாயிரத்து அறுநூறுபேர்; இவர்கள் தங் கள் கொடிகளின்படியே பின்பாளயமாய்ப் போகுபவர்களென்றார்.

௩௨ ¶ இவர்கள் இஸ்ரவேல் புத்திரருடைய பிதாக்களின் வீட்டாரில் இலக்கம்பார்க் கப்பட்டவர்கள்; பாளயங்களிலே தங்கள் தங்கள் சேனைகளின்படியே இலக்கம்பார்க் கப்பட்டவர்கள் எல்லாரும் அறுநூற்று மூ வாயிரத்து ஐந்நூற்றைம்பதுபேராயிருந்தார் கள்.

௩௩ இலேவியரோவெனில் கர்த்தர் மோ சேக்குக் கற்பித்தபடி, இஸ்ரவேல் புத்திர ருக்குள்ளே இலக்கம் பார்க்கப்பட்ட தில்லை.

௩௪ கர்த்தர் மோசேக்குக் கற்பித்தபடி எல்லாம் இஸ்ரவேல் புத்திரர் செய்து, அப் படியே தங்கள் கொடிகளின்கீழ்ப் பாள யம் இறங்கி, அப்படி அவரவர் தங்கள் பிதாக்களுடைய வீட்டு வம்சங்களின்படி யே பயணப்பட்டுப் போனார்கள்.

## ௩. அதிகாரம்.

சீனாய்ப்பர்வதத்திலே கர்த்தர் மோசேயோ டே பேசின நாளிலே, ஆரோன் மோசே எ ன்றவர்களுடைய சந்ததிகளின் நடபடியா வது:

௨ ஆரோனுடைய குமாரர் யாரென்றால், முதல்பிறந்தவனாகிய நாதாபும், அபியூவும், எலெயாசாரும், இத்தாமாரும் என்னப் பட்டவர்கள்.

௩ ஆசாரிய ஊழியம்செய்கிறதற்கு, கை கள் நிரப்பப்பட்டு அபிஷேகம்பெற்ற ஆ சாரியரான ஆரோனுடைய குமாரரின் நா மங்கள் இவைகள்தான்.

௪ ஆனால் நாதாபும், அபியூவும், சீனா யின் வனாந்தரத்தில் அந்நிய அக்கினியைக் கர்த்தருக்குமுன்பாகக் கொண்டுவருகை யில், கர்த்தருக்குமுன்பாகச் செத்தார்கள்; அவர்களுக்குப் பிள்ளைகள் இல்லை; எலெ யாசாரும் இத்தாமாருமோவெனில், தங் கள் தகப்பனாகிய ஆரோனுக்குமுன்பாக ஆசாரிய ஊழியம்செய்தார்கள்.

௫ ¶ கர்த்தர் மோசேயோடே பேசிச் சொன்னதாவது:

௬ நீ இலேவி கோத்திரத்தாரைச் சேர்த்து, ஆசாரியனாகிய ஆரோனுக்குமுன்பாக அவ னுக்குப் பணிவிடை செய்யும்படிக்கு நிறு த்து.

௭ அவர்கள் வாசஸ்தலத்தின் பணிவிடை வேலைசெய்யும்படிக்கு, ஆசரிப்புக்கூடாரத் திற்குமுன்பாக அவனுடைய காவலையும் எல்லாச்சபையின் காவலையும் காத்து,

௮ வாசஸ்தலத்தின் பணிவிடைவேலையைச் செய்யும்படிக்கு, ஆசரிப்புக்கூடாரத்தின் எல்லாத் தட்டுமுட்டுகளையும், இஸ்ரவேல் புத்திரரின் காவலையும் காக்கக்கடவர்கள்.

௯ ஆகையால் இலேவியரை ஆரோனுக் கும் அவன் குமாரருக்கும் கொடுப்பாயா க; இஸ்ரவேல் புத்திரரில் இவர்கள் அவ னுக்குக் கொடுக்கவே கொடுக்கப்பட்ட வர்கள்.

௰ ஆரோனையும் அவன் குமாரரையுமோ வெனில், தங்கள் ஆசாரிய ஊழியத்தை விசாரிப்பதற்காக வைக்கக்கடவாய்; சே ருகிற அந்நியன் கொலையுண்ணக்கடவனெ ன்றார்.

௰௧ ¶ பின்னையும் கர்த்தர் மோசேயோடே பேசிச் சொன்னதாவது:

௰௨ இதோ, இஸ்ரவேல் புத்திரரில் கர்ப் பந்திறந்து பிறக்கிற முதல்பேறான யாவுக் கும் பதிலாக, நாம் இலேவியரை இஸ்ர வேல் புத்திரரின் நடுவில் அவர்கள் நம்மு டையவர்களாயிருக்க எடுத்துக்கொண் டோம்.

௰௩ ஏனெனில் முதல்பேறனவையெல்

Digitized by Google

லாம் நம்முடையவை; நாம் எகிப்துதேசத்தில் முதல்பேறான யாவையும் சங்கரித்த நாளிலே, இஸ்ரவேலிலே மனிதன்முதல்கொண்டு மிருகம்மட்டுமுள்ள முதல்பேறுகளை எல்லாம் நமக்குப் பரிசுத்தமாக்கினதினாலே, அவைகள் நம்முடையவைகளாயிருக்கும்; நாம் கர்த்தரென்றார்.

௰௪ ¶ பின்னையும் கர்த்தர் சீனாயின் வனாந்தரத்தில் மோசேயோடே பேசிச் சொன்னதாவது:

௰௫ இலேவி புத்திரரை அவர்கள் பிதாக்களின் வீட்டு வம்சங்களின்படியே இலக்கம்பார்; அவர்களில் ஒருமாதம் முதல்கொண்டு மேல்பட்ட வயதுள்ள ஆண்பிள்ளைகளையெல்லாம் இலக்கம் பார்ப்பாயாக என்றார்.

௰௬ அப்பொழுது கர்த்தருடைய வாக்கின்படி, மோசே அவர்களைத் தனக்குக் கற்பிக்கப்பட்டபிரகாரமாக இலக்கம் பார்த்தான்.

௰௭ இலேவியின் குமாரர் தங்கள் நாமங்களின்படியே, கெர்சோன், கோகாத், மேராரி என்னப்பட்டவர்கள்.

௰௮ தங்கள் வம்சத்தார்களாய்ப் பிரிந்த கெர்சோனுடைய குமாரரின் நாமங்கள், லிப்னீயும் சிமேயியும்தானே.

௰௯ தங்கள் வம்சங்களாய்ப் பிரிந்த கோகாத்துடைய குமாரர், அம்ராம், இத்சேயார், எபிரோன், ஊசியேல்.

௨௰ தங்கள் வம்சங்களாய்ப் பிரிந்த மேராரியினுடைய குமாரர், மகெலியும், மூசியும்தானே; இவர்களே இலேவியருடைய பிதாக்களின் வீட்டு வம்சத்தார்கள்.

௨௧ ¶ கெர்சோனால் லிப்னீயர் வம்சமும் சிமேயியர் வம்சமும் இருந்தன; இவைகளே கெர்சோனியரின் வம்சங்கள்.

௨௨ அவர்களில் ஒருமாதம் முதல்கொண்டு மேல்பட்ட வயதுள்ள ஆண்பிள்ளைகளெல்லாம் எண்ணப்பட்டபொழுது, இலக்கம்பார்க்கப்பட்டவர்கள் ஏழாயிரத்து ஐந்நூறுபேராயிருந்தார்கள்.

௨௩ கெர்சோனியரின் வம்சங்கள் வாசஸ்தலத்தின் பிறகாலே மேற்கே பாளயம் இறங்குவது.

௨௪ கெர்சோனியருடைய தகப்பன் வீட்டுப்பிரபு, லாயேலின் குமாரனாகிய எலியாசாப்.

௨௫ ஆசரிப்புக்கூடாரத்திலே கெர்சோன் புத்திரரின் காவலாவது: வாசஸ்தலமும், கூடாரமும், அதின் மூடியும், ஆசரிப்புக்கூடாரவாசல் மறைவும்,

௨௬ வாசஸ்தலத்தண்டையிலும் பலிபீடத்தண்டையிலும் சுற்றிலுமிருக்கிற பிரகாரத்தின் வெளியாடைகளும், பிரகாரவாசல் மறைவும், அவைகளின் வேலைக்கெல்லாம் அடுத்த அவைகளின் கயிறுகளும்தானே.

௨௭ ¶ கோகாத்தினால் அம்ராமியரின் வம்சமும், இத்சேயாரின் வம்சமும், எபிரோனியரின் வம்சமும், ஊசியேலரின் வம்சமும் இருந்தன; இவைகளே கோகாத்தியரின் வம்சங்கள்.

௨௮ ஒருமாதம் முதல்கொண்டு மேல்பட்ட வயதுள்ள ஆண்பிள்ளைகளெல்லாம் எண்ணப்பட்டபொழுது, பரிசுத்தஸ்தலத்தின் காவலைக்காப்பவர்கள், எண்ணாயிரத்து அறுநூறுபேராயிருந்தார்கள்.

௨௯ கோகாத் புத்திரரின் வம்சங்கள் வாசஸ்தலத்தின் தென்புறமான பக்கத்திலே பாளயம் இறங்குவது.

௩௰ அவர்களின் பிரபு, ஊசியேலின் குமாரனாகிய எலிசாப்பான்.

௩௧ ¶ அவர்களுடைய காவலாவது: பெட்டியும், மேசையும், குத்துவிளக்கும், பீடங்களும், ஆராதனைசெய்யும் பரிசுத்தஸ்தலத்தின் முட்டுகளும், மறைவும், அதினுடைய எல்லா வேலையும்தானே.

௩௨ இலேவியருடைய பிரபுக்களின் பிரபு, ஆசாரியனாகிய ஆரோனின் குமாரன் எலேயாசார்தானே; அவன் பரிசுத்தஸ்தலத்தின் காவலைக் காக்கிறவர்களின் விசாரிப்புக்காரனாயிருப்பவன்.

௩௩ ¶ மேராரியினால் மகெலியரின் வம்ச

Digitized by Google

மும் மூசியரின் வம்சமும் இருந்தன; இவைகளே மேருரியின் வம்சங்கள்.

௩௪ அவர்களில் ஒருமாதம் முதல்கொண்டு மேற்பட்ட வயதுள்ள ஆண்பிள்ளைகளெல்லாம் எண்ணப்பட்டபொழுது, இலக்கம்பார்க்கப்பட்டவர்கள் ஆறுயிரத்து இருநூறுபேராயிருந்தார்கள்.

௩௫ அவர்கள் பிரபு, அபியாயெலின் குமாரனுகிய சூரியெல்; இவர்கள் வாசஸ்தலத்தின் வடபுறமான பக்கத்திலே பாளயம் இறங்குவது.

௩௬ அவர்களுடைய காவல்விசாரிப்பாவது: வாசஸ்தலத்தின் பலகைகளும், தாழ்ப்பாள்களும், தூண்களும், கால்களும், அதினுடைய எல்லா முட்டுகளும், அதினுடைய எல்லா வேலையும்,

௩௭ சுற்றுப்பிரகாரத்தின் தூண்களும், அவைகளின் கால்களும், கூச்சுகளும், கயிறுகளும்தானே.

௩௮ ¶ ஆசரிப்புக்கூடாரமாகிய வாசஸ்தலத்திற்குமுன்பாக, சூரியன் உதிக்கும் கிழ்ப்புறத்திலே மோசேயும் ஆரோனும் அவன் குமாரரும் கூடாரங்களைப் போட்டிறங்கி, இஸ்ரவேல் புத்திரரின் காவலுக்குப் பதிலாகப் பரிசுத்தஸ்தலத்தின் காவலைக் காப்பவர்கள்; சேருகிற அந்நியன் கொலையுண்பானுக.

௩௯ மோசேயும் ஆரோனும் கர்த்தருடைய வாக்கின்படியே, இலேவியரில் அவர்களுடைய வம்சங்களின்படியே இலக்கம் பார்த்த ஒருமாதம் முதல்கொண்டிருந்த ஆண்பிள்ளைகளெல்லாம் இருபத்தீராயிரம் பேராயிருந்தார்கள்.

௪௰ ¶ அதின்பிறகு கர்த்தர் மோசேயோடே சொன்னதாவது: நீ இஸ்ரவேல் புத்திரரில் ஒருமாதம் முதல்கொண்டு மேல்ப்பட்ட வயதுள்ள முதல்பேருன ஆண்பிள்ளைகளையெல்லாம் இலக்கம்பார்த்து, அவர்கள் நாமங்களின் தொகையை ஏற்றி,

௪௧ இலேவியரை இஸ்ரவேல் புத்திரரினுள்ள முதல்பேருன யாவுக்கும் பதிலாகவும், இலேவியரின் மிருகஜீவன்களை இஸ்ரவேல் புத்திரரின் மிருகஜீவன்களிலுள்ள தலையீற்றுன யாவுக்கும் பதிலாகவும், நமக்கு எடுத்துக்கொள்; நாம் கர்த்தரென்ருர்.

௪௨ அப்பொழுது மோசே கர்த்தர் தனக்குக் கற்பித்தபடியே, இஸ்ரவேல் புத்திரரினுள்ள முதல்பேருன யாவரையும் இலக்கம்பார்த்தான்.

௪௩ ஒருமாதம் முதல்கொண்டு மேல்பட்ட வயதாயிருந்து, பேர்பேராக எண்ணப்பட்ட முதல்பேருன ஆண்பிள்ளைகளெல்லாம் இருபத்தீராயிரத்து இருநூற்றெழுபத்து மூன்றுபேராயிருந்தார்கள்.

௪௪ ¶ அப்பொழுது கர்த்தர் மோசேயோடே பேசிச் சொன்னதாவது:

௪௫ நீ இலேவியரை இஸ்ரவேல் புத்திரரினுள்ள எல்லா முதல்பேற்றுக்குப் பதிலாகவும், இலேவியரின் மிருகஜீவன்களை அவர்களுடைய மிருகஜீவன்களுக்குப் பதிலாகவும் எடுத்துக்கொள்; இலேவியர் நம்முடையவர்களாயிருப்பார்கள்; நாம் கர்த்தர்.

௪௬ இஸ்ரவேல் புத்திரருடைய முதல்பேறுகளில் இலேவியரின் இலக்கத்திற்கு அதிகமாயிருந்து, மீட்கப்படவேண்டிய இருநூற்றெழுபத்து மூன்றுபேருக்கோவெனில்,

௪௭ நீ ஒவ்வொரு தலைக்கீடாக அவ்வைந்து சேக்கலைப் பரிசுத்தசேக்கல் கணக்காக வாங்குவாயாக; அந்தச் சேக்கல் இருபது கேரா.

௪௮ அவர்களுடைய இலக்கத்திற்கு அதிகமாயிருந்து, மீட்கப்பட்டவர்களுடைய அந்தத் திரவியத்தை ஆரோனுக்கும் அவன் குமாரருக்கும் கொடுப்பாயாகவென்ருர்.

௪௯ அப்படியே இலேவியராலே மீட்கப்பட்டவர்களின் இலக்கத்திற்கு அதிகமாயிருந்து, இன்னம் மீட்கப்படவேண்டியவர்களுக்கு இடாக மோசே இஸ்ரவேல் புத்திரருடையமுதல்பேருனவர்களின்கையிலே,

௫௰ ஆயிரத்து முந்நூற்று அறுபத்தைந்து சேக்கலாகிய திரவியத்தை, பரிசுத்தஸ்தலத்துச்சேக்கல் கணக்காக வாங்கி,

Digitized by Google

௫௧ அதைக் கர்த்தருடைய வாக்கின்படியே ஆரோனுக்கும் அவன் குமாரருக்கும் கர்த்தர் தனக்குக் கற்பித்தபிரகாரமாகக் கொடுத்தான்.

## ௪. அதிகாரம்.

கர்த்தர் மோசேயோடும் ஆரோனோடும் பேசிச் சொன்னதாவது:

௨ இலேவியின் புத்திரருக்குள் இருக்கிற கோகாத் புத்திரருடைய பிதாக்களின் வீட்டு வம்சங்களில்,

௩ முப்பதாம் வயதுமுதல்கொண்டு ஐம்பதாம் வயதுமட்டும் இருந்து, ஆசரிப்புக்கூடாரத்திலே வேலைசெய்யும் சேனைக்குட்படத்தக்க எல்லாரையும் எண்ணி, தொகை ஏற்று.

௪ ¶ ஆசரிப்புக்கூடாரத்திலே கோகாத் புத்திரரின் பணிவிடை பரிசுத்தத்திற்குப் பரிசுத்தமானதற்கு அடுத்தது.

௫ பாளயம் பயணப்படுகையில், ஆரோனும் அவன் குமாரரும் வந்து, மறைவான திரையை இறக்கி, சாட்சியின் பெட்டியை அதினால் மூடி,

௬ அதின்மேலே தகசுத்தோல் மூடியைப் போட்டு, அதின்மீதில் சுத்த நீலமான துப்பட்டியை விரித்து, அதின் வாரைகளைப் பாய்ச்சி,

௭ சமுகத்தப்பங்களுடைய மேசையின்மேலே இளநீலத்துப்பட்டியை விரித்து, கலங்களையும் தூபக்கிண்ணிகளையும் கரகங்களையும் மூடுகிற தட்டுகளையும் அதின்மேலே வைப்பார்களாக; எப்பொழுதும் வைக்கும் அப்பமும் அதின்மேல் இருக்கக்கடவது.

௮ அவர்கள் அவைகளின்மேலே சிவப்புத் துப்பட்டியை விரித்து, அதைத் தகசுத்தோல் மூடியினால் மூடி, அதின் வாரைகளைப் பாய்ச்சி,

௯ இளநீலத்துப்பட்டியை வாங்கி, வெளிச்சத்தின் விளக்குத்தண்டையும் அதின் விளக்குகளையும் அதின் கத்திரிகளையும் விளக்கணைக்கிற எத்தனங்களையும் அதற்கு எண்ணெய்வார்க்கிற சகல பாத்திரங்களையும் மூடி,

௰ அதையும் அதினுடைய எல்லா முட்டுகளையும் தகசுத்தோல் மூடியிலே போட்டு, அதை வாரைகளின்மேலே வைத்து,

௰௧ பொன்பீடத்தின்மேலே இளநீலத்துப்பட்டியை விரித்து, அதைத் தகசுத்தோல் மூடியினால் மூடி, அதின் வாரைகளைப் பாய்ச்சி,

௰௨ தாங்கள் பரிசுத்தஸ்தலத்தில் ஆராதனைசெய்யும் எல்லாப் பணிமுட்டுகளையும் எடுத்து, இளநீலத்துப்பட்டியிலே போட்டு, தகசுத்தோல் மூடியினால் மூடி, வாரைகளின்மேலே வைத்து,

௰௩ பலிபீடத்தைச் சாம்பல் அறவிளக்கி, அதின்மேல் இரத்தாம்பரத் துப்பட்டியை விரித்து,

௰௪ தாங்கள் அதின்மேலே ஆராதனைசெய்யும் அதினுடைய சகல பணிமுட்டுகளாகிய கலசங்களையும், முள்துறடுகளையும், சாம்பல் எடுக்கும் கரண்டிகளையும், கலங்களையும், பலிபீடத்தின் எல்லா முட்டுகளையும், அதின்மேலே வைத்து, அதின்மேலே தகசுத்தோல் மூடியை விரித்து, அதின் வாரைகளைப் பாய்ச்சக்கடவர்கள்.

௰௫ பாளயம் பயணப்படுகையில், ஆரோனும் அவன் குமாரரும் பரிசுத்தஸ்தலத்தையும் அதினுடைய எல்லா முட்டுகளையும் மூடித் தீர்ந்ததற்குப்பிற்பாடு, கோகாத் புத்திரர் எடுத்துப்போகிறதற்கு வரக்கடவர்கள்; அவர்கள் சாவாதபடிக்குப் பரிசுத்தமானதைத் தொடவேண்டாம்; ஆசரிப்புக்கூடாரத்திலே கோகாத் புத்திரரின் சுமை இதுதான்.

௰௬ ¶ ஆசாரியனாகிய ஆரோனின் குமாரன் எலெயாசார் விசாரிப்பதேதென்றால், விளக்கின் எண்ணெயும், சுகந்தங்களின் தூபவர்க்கமும், அன்றாடகக் காணிக்கையும், அபிஷேகத்தெண்ணெயும், வாசஸ்தலம் அனைத்தும், அதிலே பரிசுத்தஸ்தலத்திலும்

Digitized by Google

அதின் பண்டம்பாடிகளிலும் இருக்கிற அனைத்தும், அவன் விசாரிப்பாய் இருப்பதாக என்றார்.

௰௭ ¶ கர்த்தர் மோசேயோடும் ஆரோனோடும் பேசிச் சொன்னதாவது:

௰௮ கோகாத் வம்சத்தாரின் கோத்திரத்தை இலேவியருக்குள்ளே சங்காரமாகப் பண்ணீர்களாக.

௰௯ அவர்கள் பரிசுத்தத்திற்குப் பரிசுத்தமானதைக் கிட்டுகையில், சாவாமல் உயிரோடிருக்கும்படிக்கு, நீங்கள் அவர்களுக்காகச் செய்யவேண்டியதேதெனில்,

௨௰ பரிசுத்தமானதை மூடும்போது, அவர்கள் பார்க்கிறதற்கு உள்பிரவேசித்துச் சாவாதபடிக்கு, ஆரோனும் அவன் குமாரரும் வந்து, அவர்களில் அவனவனை அவன் வேலைக்கும் அவன் சுமைக்கும் வைக்கக்கடவர்களென்றார்.

௨௧ ¶ பின்னையும் கர்த்தர் மோசேயோடே பேசிச் சொன்னதாவது:

௨௨ கெர்சோன் புத்திரருடைய பிதாக்களின் வீட்டு வம்சங்களிலும் முப்பதாம் வயதுமுதல்கொண்டு ஐம்பதாம்வயதுமட்டும் இருந்து,

௨௩ ஆசரிப்புக்கூடாரத்திலே பணிவிடை வேலைசெய்யும் இராணுவச் சேனைகளுக்கு உள்படத்தக்க எல்லாரையும் இலக்கம் பார்த்து, தொகை ஏற்றுவாயாக.

௨௪ பணிவிடை செய்கிறதிலும் சுமக்கிறதிலும் கெர்சோன் வம்சத்தாரின் வேலை ஏதெனில்,

௨௫ அவர்கள் வாசல்தலத்திற்கும் ஆசரிப்புக்கூடாரத்திற்கும் இருக்கிற சமுக்காளங்களையும், அவைகளின் மூடியையும், உயர அவைகளின்மீதில் இருக்கிற தகசுத்தோல் மூடியையும், ஆசரிப்புக்கூடாரவாசல் மறைவையும்,

௨௬ பிரகாரத்தின் வெளி ஆடைகளையும், வாசஸ்தலத்தண்டையிலும் பலிபீடத்தண்டையிலும் சுற்றிலுமிருக்கிற பிரகாரத்தினுடைய வாசல்மறைவையும், அவைகளின் கயிறுகளையும், அவைகளின் வேலைக்கடுத்த எல்லாப் பணிமுட்டுகளையும் சுமந்து, அவைகளுக்காகச் செய்யப்படும் எல்லா வேலையையும் செய்யக்கடவர்கள்.

௨௭ கெர்சோன் புத்திரருடைய எல்லாச் சுமைக்கும் அவர்களுடைய எல்லாப் பணிவிடைக்கும் அடுத்த அவர்கள் வேலையெல்லாம் ஆரோனும் அவன் குமாரரும் சொல்லுகிறபடியே நடக்கவேண்டும்; அவர்களுடைய சுமையின் காவலையெல்லாம் அவர்களுக்கு ஒப்புவிக்கக்கடவீர்கள்.

௨௮ கெர்சோன் புத்திரரின் வம்சத்தார் ஆசரிப்புக்கூடாரத்திலே செய்யும் பணிவிடை இதுதான்; அவர்களுடைய காவல் ஆசாரியனாகிய ஆரோனின் குமாரன் இத்தாமாருடைய கையின் கீழாயிருப்பதாக.

௨௯ ¶ மெராரி புத்திரருடைய பிதாக்களின் வீட்டுவம்சங்களிலும் முப்பதாம்வயதுமுதல்கொண்டு ஐம்பதாம்வயதுமட்டும் இருந்து,

௩௰ ஆசரிப்புக்கூடாரத்திலே பணிவிடை வேலைசெய்யும் சேனைக்குள்படத்தக்கவர்களை எல்லாம் இலக்கம்பார்க்கக்கடவாய்.

௩௧ ஆசரிப்புக்கூடாரத்தில் அவர்களுடைய எல்லாப் பணிவிடைக்கும் அடுத்த சுமையின் காவலேதெனில், வாசஸ்தலத்தின் பலகைகளும், அவைகளின் தாழ்ப்பாள்களும், தூண்களும், கால்களும்,

௩௨ சுற்றிலுமிருக்கிற பிரகாரத்தின் தூண்களும், அவைகளின் கால்களும், முளைக்கூச்சுகளும், கயிறுகளும், அவைகளின் எல்லா முட்டுகளும், எல்லா வேலையுங்கூடத்தானே; அவர்கள் சுமந்து காவல்காக்கும் முட்டுகளைப் பேர்பேராக எண்ணக்கடவீர்கள்.

௩௩ ஆசாரியனாகிய ஆரோனுடைய குமாரனாகிய இத்தாமாருடைய கையின்கீழ் மெராரி புத்திரரின் வம்சத்தார் ஆசரிப்புக்கூடாரத்திலே செய்யும் பணிவிடைக்கு அடுத்த எல்லாவேலையும் இதுதான் என்றார்.

௩௪ ¶ அப்படியே மோசேயும் ஆரோனும்

Digitized by Google

சபையின் பிரபுக்களும் கோகாத் புத்திரருடைய பிதாக்களின் வீட்டு வம்சங்களில் முப்பதாம்வயதுதுவக்கி ஐம்பதாம்வயதுமட்டும் இருந்த,

௩௫ ஆசரிப்புக்கூடாரத்திலே பணிவிடைசெய்யும் சேனைக்கு உள்படத்தக்க யாவரையும் இலக்கம்பார்த்தார்கள்.

௩௬ அவர்கள் வம்சங்களில் இலக்கம்பார்க்கப்பட்டவர்கள் இரண்டாயிரத்து எழுநூற்று ஐம்பதுபேர்.

௩௭ கர்த்தர் மோசேக்குக் கற்பித்தபடியே, மோசேயும் ஆரோனும் கோகாத் வம்சத்தாரில் எல்லாரும் ஆசரிப்புக்கூடாரத்தில் வேலைசெய்கிறதற்காக இலக்கம்பார்த்தவர்கள் இவர்கள்தான்.

௩௮ ¶ கெர்சோன் புத்திரருடைய பிதாக்களின் வீட்டு வம்சங்களிலும் முப்பதாம்வயதுதுவக்கி ஐம்பதாம்வயதுமட்டும் இருந்த,

௩௯ ஆசரிப்புக்கூடாரத்திலே பணிவிடைசெய்யும் சேனைக்கு உள்படத்தக்க யாவரும் இலக்கம்பார்க்கப்பட்டார்கள்.

௪௰ அவர்களில் இலக்கம்பார்க்கப்பட்டவர்கள் அவரவர் குலத்தின்படிக்கும், பிதாக்களுடைய வம்சத்தின்படிக்கும் இரண்டாயிரத்து அறுநூற்றுமுப்பதுபேர்.

௪௧ மோசேயும் ஆரோனும் கர்த்தர் கற்பித்தபடியே கெர்சோன் புத்திரரின் வம்சத்தாரில் ஆசரிப்புக்கூடாரத்தில் வேலைசெய்ய இலக்கம்பார்த்தவர்கள் இவர்கள்தான்.

௪௨ ¶ மெராரி புத்திரருடைய பிதாக்களின் வீட்டு வம்சங்களிலும் முப்பதாம்வயதுதுவக்கி ஐம்பதாம்வயதுமட்டும் இருந்த,

௪௩ ஆசரிப்புக்கூடாரத்திலே பணிவிடைசெய்யும் சேனைக்கு உள்படத்தக்க யாவரும் இலக்கம்பார்க்கப்பட்டார்கள்.

௪௪ அவர்களில் இலக்கம்பார்க்கப்பட்டவர்கள் தங்கள் வம்சங்களின்படியே மூவாயிரத்து இருநூறுபேர்.

௪௫ கர்த்தர் மோசேக்குக் கற்பித்தபடியே, மோசேயும் ஆரோனும் மெராரி புத்திரரின் வம்சத்தாரில் இலக்கம்பார்த்தவர்கள் இவர்கள்தான்.

௪௬ ¶ இலேவியருடைய பிதாக்களின் வீட்டு வம்சங்களில் முப்பதாம்வயதுமுதல்கொண்டு ஐம்பதாம்வயதுமட்டும் இருந்த ஆசரிப்புக்கூடாரத்திலே செய்யும் பணிவிடை வேலைக்கும் சுமையின் வேலைக்கும் உள்படத்தக்கவர்களும்,

௪௭ மோசேயும் ஆரோனும் இஸ்ரவேலின் பிரபுக்களும் இலக்கம்பார்த்தவர்களுமெல்லாம்,

௪௮ எண்ணாயிரத்து ஐந்நூற்றெண்பதுபேராயிருந்தார்கள்.

௪௯ கர்த்தர் மோசேக்குக் கற்பித்த வாக்கின்படியே, அவர்கள் தங்கள் தங்கள் பணிவிடைக்கென்றும் தங்கள் தங்கள் சுமைக்கென்றும் இலக்கம்பார்க்கப்பட்டார்கள்.

## ௫. அதிகாரம்.

கர்த்தர் மோசேயோடே பேசிச் சொன்னதாவது:

௨ எல்லாக் குஷ்டரோகிகளையும் எல்லாப் பிரமியக்காரரையும் சவத்தினாலே தீட்டுப்பட்ட யாவரையும் பாளயத்திலிருந்து விலக்கிவிட, இஸ்ரவேல் புத்திரருக்குக் கற்பி.

௩ ஆண்பிள்ளைகளும் பெண்பிள்ளைகளுமான அப்படிக்கொத்தவர்களை நீங்கள் விலக்கி, நாம் தங்கள் நடுவே வாசம்பண்ணுகிற தங்கள் பாளயங்களை அவர்கள் தீட்டாக்காதபடிக்கு, அவர்களைப் பாளயத்திற்குப் புறம்பாக்கிவிடக்கடவர்கள் என்றார்.

௪ கர்த்தர் மோசேயோடே சொன்னபடியே, இஸ்ரவேல் புத்திரர் இந்தப்படியே செய்து, அவர்களைப் பாளயத்திற்குப் புறம்பாக்கிவிட்டார்கள்.

௫ ¶ கர்த்தர் மோசேயோடே பேசிச் சொன்னதாவது:

௬ நீ இஸ்ரவேல் புத்திரரோடே சொல்லவேண்டியதேதெனில், ஒரு ஆண்பிள்ளையானாலும் பெண்பிள்ளையானாலும் மனிதன் செய்யும் சகலவித பாவங்களில் ஒன்றைச்

Digitized by Google

செய்து, கர்த்தருக்கு ஏற்காத அநியாயம் பண்ணினால், அந்த ஆத்துமாவின்மேலே குற்றம்சுமந்தது.

௭ அவர்கள் செய்த தங்கள் பாவத்தை அறிக்கையிடக்கடவர்கள்; அப்படிக்கொத்தவன் குற்றம்செய்த முதலைத் திரும்பக் கொடுத்து, அதனோடே ஐந்தில் ஒருபங்கை அதிகமாய்க் கூட்டி, தான் நேரஸ்தனாகப் போனவனுக்குச் செலுத்தக்கடவன்.

௮ அதைக் கேட்டு வாங்குகிறதற்கு ஒருவரும் இல்லாதிருந்ததேயானால், அப்பொழுது அவனுக்காகப் பாவநிவிர்த்தி உண்டாக்கப்படும்; ஆட்டுக்கடாச் செலுத்தப்படுவதுமல்லாமல், கர்த்தருக்கு அந்த முதல் செலுத்தப்பட்டு, ஆசாரியனைச் சேரவேண்டும்.

௯ ¶ இஸ்ரவேல் புத்திரர் பரிசுத்தம்பண்ணுகிற சகலத்திலும் ஏறெடுத்து, ஆசாரியனண்டைக்குக் கொண்டுவருகிற எல்லாப் படைப்பும் அவனுடையவைகளாயிருக்கும்.

௰ அவனவன் பரிசுத்தம்பண்ணுகின்றவைகள் அவனுடையவைகளாயிருக்கும்; அவனவன் ஆசாரியனுக்குக் கொடுக்கிறவைகளும் அவனுடையவைகளாய் இருக்குமென்று சொல்லென்றார்.

௰௧ ¶ கர்த்தர் மோசேயோடே பேசிச் சொன்னதாவது:

௰௨ நீ இஸ்ரவேல் புத்திரரோடே பேசி, அவர்களுக்குச் சொல்லவேண்டியதேதெனில், எவன் ஒருவன் பெண்சாதி புறமுகம் பார்த்து, அவனுக்குத் துரோகம்பண்ணி,

௰௩ ஒருவன் அவளோடே அநுபோகமாகச் சயனித்திருந்தாலும், அவளுடைய புருஷன் கண்களுக்கு அது ஒளிப்பிடமானதினால் அவள் அதை மறைக்கின்றபொழுதும் அவள் தீட்டாக்கப்பட்டிருந்தும், சாட்சி இல்லாமலும் அவள் கையும் களவுமாகப் பிடிபடாமலும் இருக்கிறபொழுதும்,

௰௪ எரிச்சலின் ஆவி அவன்மேல் வந்து அவன் தீட்டாக்கப்பட்ட தன் பெண்சாதியின்மேல் வயிராக்கியமானால், அல்லவென்று எரிச்சலின் ஆவி அவன்மேல் வந்து தீட்டாக்கப்படாத தன் பெண்சாதியின்மேல் வயிராக்கியமானால்,

௰௫ அப்பொழுது அந்தப் புருஷன் தன் பெண்சாதியை ஆசாரியனண்டைக்கு அழைத்துவந்து, அவள்நிமித்தம் படைப்பாக ஒரு மரக்கால் வால்கோதுமைமாவிலே பத்தில் ஒரு பங்கைக் கொண்டுவந்து, அது எரிச்சலின் காணிக்கையும் அக்கிரமத்தை நினைக்கப்பண்ணுகிற காணிக்கையுமானபடியினாலே, அதின்மேல் எண்ணெய் வாராமலும் குங்குலிகம் போடாமலும் இருப்பானாக.

௰௬ ¶ ஆசாரியன் அவளைச் சேரப்பண்ணி. கர்த்தருக்குமுன்பாக நிறுத்தி,

௰௭ ஒரு மண்பாண்டத்திலே பரிசுத்த தண்ணீரை வார்த்து, வாசஸ்தலத்தின் தரையிலிருக்கும் தூளிலே கொஞ்சம் எடுத்து. அந்தத் தண்ணீரிலே போட்டு,

௰௮ பெண்சாதியைக் கர்த்தருக்குமுன்பாக நிறுத்தி, அவள் தலையைத் திறந்துவைத்து. எரிச்சலின் காணிக்கையாகிய நினைப்பூட்டுதலின் காணிக்கையை அவள் உள்ளங்கையிலே வைப்பானாக; ஆசாரியன் கையிலோவென்றால், சாபம் கொடுக்கிற அந்தக் கசப்பான தண்ணீர் இருக்கக்கடவது.

௰௯ அப்பொழுது ஆசாரியன் அவளை ஆணைஇடுவித்துக்கொண்டு, ஒருவனும் உன்னோடே சயனிக்காமலும், உன் புருஷனுக்கீழிருக்கிற நீ தீட்டுப்படப் புறமுகம்பாராமலும் இருந்தால், சாபம்கொடுக்கிற இந்தக் கசப்பான தண்ணீரின் தோஷத்திற்கு நீங்கலாயிரு.

௨௰ உன் புருஷன்கீழிருக்கிற நீ புறமுகம் பார்த்து, தீட்டாக உன் புருஷனல்லாத ஒருவன் உன்னோடே அநுபோகமாய்ச் சயனித்ததுண்டேயானால்,

௨௧ கர்த்தர் உன் இடுப்பைச் சூம்பவும். உன் வயிற்றை வீங்கவும்பண்ணுவதினால். உன்னை உன் சனத்தின் நடுவே சாபமா

Digitized by Google

கவும் ஆணையிடுதலாகவும் வைப்பாராக.

௨௨ உன் வயிற்றை வீங்கவும் இடுப்பைச் சூம்பவும்பண்ண, இந்தக் கசப்பான தண்ணீர் உன் குடல்களுக்கு போகவும்கடவதென்கிற சாபவார்த்தையாலே பெண்சாதியை ஆணை இடுவித்துக்கொள்வானாக; அதற்குப் பெண்சாதி, ஆமன், ஆமன் என்று சொல்லக்கடவள்.

௨௩ பிற்பாடு ஆசாரியன் இந்தச் சாபவார்த்தைகளை ஒரு சீட்டிலே எழுதி, கசப்பான தண்ணீரினாலே கழுவிப்போட்டு,

௨௪ கசப்பாகும் அந்தச் சாபத்தண்ணீர் அவளுக்குள் போகும்படிக்கு, அதை அவளுக்குக் குடிக்கக்கொடுக்கக்கடவன்.

௨௫ ¶ எப்படியெனில் முந்தி ஆசாரியன் எரிச்சலின் காணிக்கையைப் பெண்சாதியின் கையில் வாங்கி, அதைக் கர்த்தருக்கு முன்பாக அசைவாட்டி, பீடத்தின்மேலே செலுத்தி,

௨௬ நினைப்புக்கென்று அதிலே ஒரு கைப்பிடி நிறைய எடுத்து, பீடத்தின்மேலே கொளுத்தி, பிற்பாடு பெண்சாதிக்கு அந்தத் தண்ணீரைக் குடிக்கக்கொடுக்கக்கடவன்.

௨௭ குடிக்கக் கொடுத்தபிற்பாடு சம்பவிப்பதேதெனில், அவள் தீட்டாகி, தன் புருஷனுக்குத் துரோகம்பண்ணியிருந்தால், அந்தச் சாபத்தண்ணீர் கசப்புண்டாக அவளுக்குள் போனதினாலே, அவள் வயிறு வீங்கி, அவள் இடுப்புச் சூம்பும்; அப்படியே அந்தப் பெண்சாதி தன் சனத்திற்குள்ளே சாபமாக இருப்பாள்.

௨௮ பெண்சாதி தீட்டாக்கப்படாமல் சுத்தமாயிருந்தாளேயாகில், அவள் கர்ப்பம் தரிக்கத்தக்கவளாய் அதற்கு நீங்கலாயிருப்பாள்.

௨௯ ¶ புருஷன்கீழிருக்கிற பெண்சாதி புறமுகம் பார்த்துத் தீட்டானதினால் உண்டான எரிச்சலுக்கும்,

௩௰ அல்லது புருஷன்மேல் எரிச்சலின் ஆவிவருகிறதினாலே, அவன் தன் பெண்சாதியின்மேலே அடைந்த எரிச்சலுக்கும், அடுத்த நியாயப்பிரமாணம் இதுதானே; அவன் கர்த்தருக்குமுன்பாகப் பெண்சாதியை நிறுத்துவானாக; அப்பொழுது ஆசாரியன் இந்த நியாயப்பிரமாணத்தின்படியெல்லாம் அவளுக்குச் செய்யக்கடவன்.

௩௧ புருஷன் அக்கிரமத்திற்கு நீங்கலாயிருப்பான்; அப்படிக்கொத்த பெண்சாதியோவென்றால், தன் அக்கிரமத்தைச் சுமப்பாளென்று சொல்லென்றார்.

## ௬. அதிகாரம்.

கர்த்தர் மோசேயோடே பேசிச் சொன்னதாவது:

௨ நீ இஸ்ரவேல் புத்திரரோடே பேசிச் சொல்லவேண்டியதேதெனில், ஒரு ஆண்சாதியாகிலும் பெண்சாதியாகிலும் கர்த்தருக்கென்று வர்ச்சித்தவர்களாயிருக்கும்படிக்கு நசரேயர் பொருத்தனையாகிய ஒரு விசேஷித்த பொருத்தனையைப் பண்ணினால்,

௩ அப்படிக்கொத்தவன் *திராட்சப்பழ இரசத்தையும், லாகிரியுள்ள பானத்தையும், வர்ச்சித்திருக்கக்கடவன்; அவன் திராட்சப்பழ இரசத்தின் காடியையும், லாகிரியுள்ள பானத்தின் காடியையும், திராட்சப் பழங்களுடைய எந்தவிதமான சாற்றையும் குடிக்காமலும் திராட்சப் பச்சைப் பழங்களையாகிலும் வற்றலான பழங்களையாகிலும் புசிக்காமலும், *௩ மோ. ௰. ௯.

௪ தான் நசரேயனாகிய நாளெல்லாம் திராட்சக்கனியின் விதையினாலாகிலும் தோலினாலாகிலும் செய்யப்பட்ட யாதொன்றைப் புசிக்காமலும் இருக்கக்கடவன்.

௫ நசரேய பொருத்தனை அவன்மேலிருக்கும் நாளெல்லாம் *சவரகன் கத்தி அவன் தலையின்மேல் வரவேண்டாம்; அவன் கர்த்தருக்கென்று வர்ச்சித்திருக்கும் நாள் நிறைவேறும்மட்டும் பரிசுத்தமாயிருந்து, தன் தலையின் மயிர்களை வளர்க்கக்கடவன்.

*நியா. ௰௩. ௫.

௬ அவன் கர்த்தருக்கென்று வர்ச்சித்திருக்

Digitized by Google

கும் நாளெல்லாம் செத்த சவத்தண்டையிலே வரவேண்டாம்.

௭ *மரணமடைந்த தன் தகப்பனாலாகிலும், தாயினாலாகிலும், சகோதரனாலாகிலும், சகோதரியினாலாகிலும், அவன் தீட்டுப்படானாக; ஏனெனில் அவனுடைய பராபரனின் நசரேய பொருத்தனை அவன் தலையின் மேல் இருக்கின்றது. *௩. மோ. ௨௧. ௰௧.

௮ அவன் நசரேயனாகிய நாளெல்லாம் கர்த்தருக்குப் பரிசுத்தன்.

௯ அவனண்டையிலே எவன் ஒருவன் அசுப்பான சடுதியிலே செத்ததினாலே, நசரேய பொருத்தனையுள்ள அவனுடைய தலை தீட்டுப்பட்டதேயாகில், அவன் தன் சுத்திகரிப்பின் நாளாகிய ஏழாம்நாளிலே தன் தலையைச் சிரைத்துக்கொண்டு,

௰ எட்டாம்நாளிலே இரண்டு காட்டுப் புறாக்களை, அல்லது இரண்டு புறாக்குஞ்சுகளை ஆசரிப்புக்கூடாரவாசலில் ஆசாரியனண்டைக்குக் கொண்டுவரக்கடவன்.

௰௧ அப்பொழுது ஆசாரியன் ஒன்றைப் பாவம்போக்கும் பலியும், மற்றதைச் சர்வாங்கதகனபலியுமாக்கி, சவத்தினாலேபட்ட தீட்டின் நிவிர்த்தியை அவனுக்காக உண்டாக்கி, அவன் தலையை அந்நாளிலே பரிசுத்தமாக்குவானாக.

௰௨ அதின்பிறகு இவன் தன் பொருத்தனையின் நாள்களிலே, கர்த்தருக்கென்று வர்ச்சித்தவனாயிருந்து, ஒருவயது ஆட்டுக்குட்டியைக்குற்றம்போக்கும்பலியாகக்கொண்டுவரக்கடவன்; முந்தின நாள்களோவெனில், அவனுடைய நசரேய பொருத்தனை, தீட்டுப்பட்டதினால் வீணாயிற்று.

௰௩ ¶ நசரேயனுடைய நியாயப்பிரமாணமாவது: அவனுடைய பொருத்தனையின் நாள்கள் நிறைவேறின அன்றே அவன் ஆசரிப்புக்கூடாரவாசலிலே வந்து,

௰௪ சர்வாங்கதகனபலியாக ஒருவயதுள்ள பழுதற்ற ஒரு ஆட்டுக்குட்டியையும், பாவம்போக்கும்பலியாக ஒருவயதுள்ள பழுதற்ற ஒரு பெண் ஆட்டுக்குட்டியையும், சமாதானபலியாகப் பழுதற்ற ஒரு ஆட்டுக்கடாவையும்,

௰௫ ஒரு கூடையில் எண்ணெயிலே பிசைந்த புளிப்பில்லாத மெல்லியமாவின் அதிரசங்களையும், எண்ணெய் தடவப்பட்ட புளிப்பில்லாத அடைகளையும், அவைகளுக்கு அடுத்த காணிக்கையையும், ஊற்றுதல்களையும், கர்த்தருக்குத் தன் காணிக்கையாகச் செலுத்தக்கடவன்.

௰௬ அதை ஆசாரியன் கர்த்தருக்குமுன்பாகக் கொண்டுவந்து, பாவம்போக்கும் அவனுடைய பலியையும் அவனுடைய சர்வாங்கதகனபலியையும் செலுத்தி,

௰௭ ஆட்டுக்கடாவைக் கூடையிலிருக்கும் புளிப்பில்லாத அப்பங்களோடும் கூடக் கர்த்தருக்குச் சமாதானபலியாகச் செலுத்தி, அவனுடைய காணிக்கையையும் ஊற்றுதலையும் படைப்பானாக.

௰௮ அப்பொழுது நசரேயன் ஆசரிப்புக் கூடாரவாசலிலே, தன் பொருத்தனையுள்ள தலையைச் சிரைத்து, தன் பொருத்தனையுள்ள தலைமயிரை எடுத்துக்கொண்டு, சமாதானபலியின்கீழெரிகிற அக்கினியின்மேலே போடக்கடவன்.

௰௯ நசரேயன் தன் பொருத்தனையுள்ள தலையைச் சிரைத்துக்கொண்டபிற்பாடு, ஆசாரியன் ஆட்டுக்கடாவினுடைய வேவிக்கப்பட்ட ஒரு முன்னங்கால் தொடையையும் கூடையில் இருக்கிறவைகளிலே புளிப்பில்லாத ஒரு அதிரசத்தையும் புளிப்பில்லாத ஒரு அடையையும் எடுத்துக்கொண்டு, அவனுடைய உள்ளங்கைகளில் வைத்து,

௨௰ அவைகளைக் கர்த்தருக்குமுன்பாக அசைவாட்டக்கடவன்; அது அசைவாட்டப்பட்ட மார்க்கண்டத்தோடும், ஏறெடுத்துப் படைக்கப்பட்ட முன்னந்தொடையோடும், ஆசாரியனைச்சேரும் பரிசுத்தமானது; பிற்பாடு நசரேயன் திராட்சப்பழ இரசம் குடிக்கலாம்.

Digitized by Google

௨௧ இது பொருத்தனை பண்ணின நசரே

பனுக்கும், அவன் தன் கைக்கு உதவுகிறதை அல்லாமல், தன் நசரேய பொருத்தனையின் நிமித்தம் கர்த்தருக்குச் செலுத்தும் காணிக்கைக்கும் அடுத்த நியாயப்பிரமாணம்; அவன் பொருத்தனைபண்ணினதற்குச் சரியாக, தன் பொருத்தனையினுடைய நியாயப்பிரமாணத்தின்படியே செய்து தீரவேண்டுமென்று சொல்லென்றார்.

௨௨ ¶ கர்த்தர் மோசேயோடே பேசிச் சொன்னதாவது:

௨௩ நீ ஆரோனோடும் அவன் குமாரரோடும் பேசிச்சொல்லவேண்டியதேதெனில், நீங்கள் இஸ்ரவேல் புத்திரரை ஆசீர்வதிக்க, அவர்களுக்குச் சொல்லவேண்டியதாவது:

௨௪ கர்த்தர் உன்னை ஆசீர்வதித்து, உன்னைக் காக்கக்கடவர்.

௨௫ கர்த்தர் தம்முடைய முகத்தை உன்மேலே பிரகாசிக்கப்பண்ணி, உன்மேலே கிருபையாய் இருக்கக்கடவர்.

௨௬ கர்த்தர் தம்முடைய முகத்தை உன்மேல் ஏறெடுத்து, உனக்குச் சமாதானம் கட்டளையிடக்கடவரென்பதுதானே.

௨௭ இப்படி நம்முடைய நாமத்தை இஸ்ரவேல் புத்திரர்மேல் வைப்பார்களாக; நாம் அவர்களை ஆசீர்வதிப்போமென்று சொல்லென்றார்.

## ௭. அதிகாரம்.

மோசே வாசஸ்தலத்தை எடுப்பித்து, அதையும் அதின் எல்லா முட்டுகளையும் பலிபீடத்தையும் அதின் எல்லா முட்டுகளையும் அபிஷேகம்பண்ணி, பரிசுத்தமாக்கித் தீர்ந்தநாளிலே சம்பவித்ததேதெனில்,

௨ தங்கள் பிதாக்களுடைய வீட்டாரின் தலைவரும், இலக்கம் பார்க்கப்பட்டவர்களின் விசாரிப்புக்கு வைக்கப்பட்ட கோத்திரப் பிரபுக்களுமாகிய இஸ்ரவேலின் பிரபுக்கள் காணிக்கைகளைச் செலுத்தினார்கள்.

௩ தங்கள் காணிக்கையாக, ஆறு குலால் வண்டில்களையும், பன்னிரண்டு மாடுகளையும், இரண்டிரண்டு பிரபுக்களுக்கு ஒவ்வொரு வண்டிலும், ஒவ்வொரு பிரபுக்கு ஒவ்வொரு மாடுமாக, கர்த்தருக்குச் செலுத்த வாசஸ்தலத்திற்கு முன்பாகக் கொண்டுவந்தார்கள்.

௪ அப்பொழுது கர்த்தர் மோசேயோடே சொன்னதாவது:

௫ நீ அவர்கள் கையில் அவைகளை ஆசரிப்புக்கூடாரத்தின் ஊழியத்திற்காக வாங்கி, இலேவியருக்கு அவரவர் வேலைக்குத்தக்கவைகளாக, பங்கிட்டுக் கொடுவென்றார்.

௬ அப்பொழுது மோசே அந்த வண்டில்களையும் மாடுகளையும் வாங்கி, இலேவியருக்குக் கொடுத்தான்.

௭ இரண்டு வண்டில்களையும் நான்கு மாடுகளையும் கெர்சோன் புத்திரருக்கு, அவர்கள் வேலைக்குத்தக்க பங்காகக் கொடுத்து,

௮ நான்கு வண்டில்களையும் எட்டு மாடுகளையும் மெராரியின் புத்திரருக்கு, ஆசாரியனாகிய ஆரோனின் குமாரன் இத்தாமாருடைய கையின்கீழிருக்கிற அவர்களுடைய வேலைக்குத்தக்க பங்காகக் கொடுத்தான்.

௯ கோகாத்தின் புத்திரருக்கோவெனில், ஒன்றும் கொடுத்ததில்லை; ஏனெனில் தோளின்மேலே சுமக்கும் பரிசுத்தஸ்தலத்தின் வேலை அவர்கள்மேலே சுமந்திருந்தது.

௰ ¶ பலிபீடம் அபிஷேகம் பண்ணப்பட்ட நாளிலே, பிரபுக்கள் அதின் பிரதிஷ்டைக்காகவும் காணிக்கைகளைச் செலுத்தி, பலிபீடத்திற்கு முன்பாகத் தங்கள் காணிக்கையைக் கொண்டுவந்தார்கள்.

௰௧ அப்பொழுது கர்த்தர் மோசேயுடனே, ஒவ்வொருநாளிலே ஒவ்வொரு பிரபு பலிபீடத்தின் பிரதிஷ்டைக்காகத் தங்கள் காணிக்கையைச் செலுத்துவார்களாக என்றார்.

௰௨ ¶ அப்படியே முதலாம்நாளிலே தன் காணிக்கையைச் செலுத்தினவன் யூதாகோத்திரத்தானாகிய அமினதாபின் குமாரன் நாகேசோன்.

௰௩ அவன் காணிக்கை ஏதெனில், பரிசுத்தஸ்தலத்தின் சேக்கல் கணக்காக நூற்றுமுப்பது சேக்கல் நிறையான ஒரு வெள்

Digitized by Google

வித்தாலமும், எழுபது சேக்கல் நிறையான ஒரு வெள்ளிக்கலமும், இவ்விரண்டும் படைக்கும் காணிக்கையாக எண்ணெயிலே பிசைந்த மெல்லியமாவினால் நிறைந்திருந்தன.

௰௪ தூபவர்க்கத்தால் நிறைந்த பத்துச் சேக்கல் நிறையுள்ள பொன்னான ஒரு தூபக்கிண்ணியும்,

௰௫ சர்வாங்கதகனபலியாக ஒரு காளை எருதும், ஒரு ஆட்டுக்கடாவும், ஒருவயதான ஒரு ஆட்டுக்குட்டியும்,

௰௬ பாவம்போக்கும் பலியாக ஒரு வெள்ளாட்டுக்கடாவும்,

௰௭ சமாதானபலியாக இரண்டு மாடுகளும், ஐந்து ஆட்டுக்கடாக்களும், ஐந்து வெள்ளாட்டுக்கடாக்களும், ஒருவயதான ஐந்து ஆட்டுக்குட்டிகளும்தானே; இது அமீனதாபின் குமாரனாகிய நாகேசோனின் காணிக்கை.

௰௮ ¶ இரண்டாம்நாளிலே இசஷாரின் பிரபுவாகிய சூவாரின் குமாரன் நெத்தானியேல் செலுத்துதல்செய்தான்.

௰௯ அவன் தன் காணிக்கையாகச் செலுத்தினதாவது: பரிசுத்தஸ்தலத்தின் சேக்கல் கணக்காக நூற்றுமுப்பது சேக்கல் நிறையான ஒரு வெள்ளித்தாலமும், எழுபது சேக்கல் நிறையான ஒருவெள்ளிக்கலமும், இவ்விரண்டும் படைக்கும் காணிக்கையாக எண்ணெயிலே பிசைந்த மெல்லியமாவினால் நிறைந்திருந்தன.

௨௰ தூபவர்க்கத்தால் நிறைந்த பத்துச் சேக்கல் நிறையுள்ள பொன்னான ஒரு தூபக்கிண்ணியும்,

௨௧ சர்வாங்கதகனபலியாக ஒரு காளை எருதும்; ஒரு ஆட்டுக்கடாவும், ஒருவயதான ஒரு ஆட்டுக்குட்டியும்,

௨௨ பாவம்போக்கும்பலியாக ஒரு வெள்ளாட்டுக்கடாவும்,

௨௩ சமாதானபலியாக இரண்டு மாடுகளும், ஐந்து ஆட்டுக்கடாக்களும், ஐந்து வெள்ளாட்டுக்கடாக்களும், ஒருவயதான ஐந்து ஆட்டுக்குட்டிகளும்தானே; இது சூவாரின் குமாரனாகிய நெத்தானியேலின் காணிக்கை.

௨௪ ¶ மூன்றாம்நாளிலே ஏலோனின் குமாரனாகிய எலியாப்பென்ற சேபுலோனின் புத்திரரின் பிரபு செலுத்துதல்செய்தான்.

௨௫ அவன் காணிக்கை ஏதெனில், பரிசுத்தஸ்தலத்தின் சேக்கல் கணக்காக நூற்றுமுப்பது சேக்கல் நிறையான ஒரு வெள்ளித்தாலமும், எழுபது சேக்கல் நிறையான ஒரு வெள்ளிக்கலமும், இவ்விரண்டும் படைக்கும் காணிக்கையாக எண்ணெயிலே பிசைந்த மெல்லியமாவினால் நிறைந்திருந்தன.

௨௬ தூபவர்க்கத்தால் நிறைந்த பத்துச் சேக்கல் நிறையுள்ள பொன்னான ஒரு தூபக்கிண்ணியும்,

௨௭ சர்வாங்கதகனபலியாக ஒரு காளை எருதும், ஒரு ஆட்டுக்கடாவும், ஒருவயதான ஒரு ஆட்டுக்குட்டியும்,

௨௮ பாவம்போக்கும்பலியாக ஒரு வெள்ளாட்டுக்கடாவும்,

௨௯ சமாதானபலியாக இரண்டு மாடுகளும், ஐந்து ஆட்டுக்கடாக்களும், ஐந்து வெள்ளாட்டுக்கடாக்களும், ஒருவயதான ஐந்து ஆட்டுக்குட்டிகளும்தானே; இது ஏலோனின் குமாரனாகிய எலியாப்பின் காணிக்கை.

௩௰ ¶ நான்காம்நாளிலே சேதேயூரின் குமாரனாகிய எலிசூரென்ற ரூபன் புத்திரரின் பிரபு செலுத்துதல்செய்தான்.

௩௧ அவன் காணிக்கை ஏதெனில், பரிசுத்தஸ்தலத்தின் சேக்கல் கணக்காக நூற்றுமுப்பது சேக்கல் நிறையான ஒரு வெள்ளித்தாலமும், எழுபது சேக்கல் நிறையான ஒரு வெள்ளிக்கலமும், இவ்விரண்டும் படைக்கும் காணிக்கையாக எண்ணெயிலே பிசைந்த மெல்லியமாவினால் நிறைந்திருந்தன.

௩௨ தூபவர்க்கத்தால் நிறைந்த பத்துச் சேக்கல் நிறையுள்ள பொன்னான ஒரு தூபக்கிண்ணியும்,



Digitized by Google

௩௩ சர்வாங்கதகனபலியாக ஒரு காளை எருதும், ஒரு ஆட்டுக்கடாவும், ஒருவயதான ஒரு ஆட்டுக்குட்டியும்,

௩௪ பாவம்போக்கும்பலியாக ஒரு வெள்ளாட்டுக்கடாவும்,

௩௫ சமாதானபலியாக இரண்டு மாடுகளும், ஐந்து ஆட்டுக்கடாக்களும், ஐந்து வெள்ளாட்டுக்கடாக்களும், ஒருவயதான ஐந்து ஆட்டுக்குட்டிகளும்தானே; இது சேதேயூரின் குமாரனாகிய எலிசூரின் காணிக்கை.

௩௬ ¶ ஐந்தாம்நாளிலே சூரிஷதாயின் குமாரனாகிய செலூமியேலென்ற சிமெயோன் புத்திரரின் பிரபு செலுத்துதல்செய்தான்.

௩௭ அவன் காணிக்கை ஏதெனில், பரிசுத்தஸ்தலத்தின் சேக்கல் கணக்காக நூற்றுமுப்பது சேக்கல் நிறையான ஒரு வெள்ளித்தாலமும், எழுபது சேக்கல் நிறையான ஒரு வெள்ளிக்கலமும், இவ்விரண்டும் படைக்கும் காணிக்கையாக எண்ணெயிலே பிசைந்த மெல்லியமாவினால் நிறைந்திருந்தன.

௩௮ தூபவர்க்கத்தால் நிறைந்த பத்துச் சேக்கல் நிறையுள்ள பொன்னான ஒரு தூபக்கிண்ணியும்,

௩௯ சர்வாங்கதகனபலியாக ஒரு காளை எருதும், ஒரு ஆட்டுக்கடாவும், ஒருவயதான ஒரு ஆட்டுக்குட்டியும்,

௪0 பாவம்போக்கும்பலியாக ஒரு வெள்ளாட்டுக்கடாவும்,

௪௧ சமாதானபலியாக இரண்டு மாடுகளும், ஐந்து ஆட்டுக்கடாக்களும், ஐந்து வெள்ளாட்டுக்கடாக்களும், ஒரு வயதான ஐந்து ஆட்டுக்குட்டிகளும்தானே; இது சூரிஷதாயின் குமாரனாகிய செலூமியேலின் காணிக்கை.

௪௨ ¶ ஆறாம்நாளிலே தேகுவேலின் குமாரனாகிய எலியாசாபென்ற காத் புத்திரரின் பிரபு செலுத்துதல்செய்தான்.

௪௩ அவன் காணிக்கை ஏதெனில் பரிசுத்தஸ்தலத்தின் சேக்கல் கணக்காக நூற்றுமுப்பது சேக்கல் நிறையான ஒரு வெள்ளித்தாலமும், எழுபது சேக்கல் நிறையான ஒரு வெள்ளிக்கலமும், இவ்விரண்டும் படைக்கும் காணிக்கையாக எண்ணெயிலே பிசைந்த மெல்லியமாவினால் நிறைந்திருந்தன.

௪௪ தூபவர்க்கத்தால் நிறைந்த பத்துச் சேக்கல் நிறையுள்ள பொன்னான ஒரு தூபக்கிண்ணியும்,

௪௫ சர்வாங்கதகனபலியாக ஒரு காளை எருதும், ஒரு ஆட்டுக்கடாவும், ஒருவயதான ஒரு ஆட்டுக்குட்டியும்,

௪௬ பாவம்போக்கும்பலியாக ஒரு வெள்ளாட்டுக்கடாவும்,

௪௭ சமாதானபலியாக இரண்டு மாடுகளும், ஐந்து ஆட்டுக்கடாக்களும், ஐந்து வெள்ளாட்டுக்கடாக்களும், ஒருவயதான ஐந்து ஆட்டுக்குட்டிகளும்தானே; இது தேகுவேலின் குமாரனாகிய எலியாசாபின் காணிக்கை.

௪௮ ¶ ஏழாம்நாளிலே அம்மியூதின் குமாரனாகிய எலிஷம்மா என்ற எப்பிராயீம் புத்திரரின் பிரபு செலுத்துதல்செய்தான்.

௪௯ அவன் காணிக்கை ஏதெனில் பரிசுத்தஸ்தலத்தின் சேக்கல் கணக்காக நூற்றுமுப்பது சேக்கல் நிறையான ஒரு வெள்ளித்தாலமும், எழுபது சேக்கல் நிறையான ஒரு வெள்ளிக்கலமும், இவ்விரண்டும் படைக்கும் காணிக்கையாக எண்ணெயிலே பிசைந்த மெல்லியமாவினால் நிறைந்திருந்தன.

௫0 தூபவர்க்கத்தால் நிறைந்த பத்துச் சேக்கல் நிறையுள்ள பொன்னான ஒரு தூபக்கிண்ணியும்,

௫௧ சர்வாங்கதகனபலியாக ஒரு காளை எருதும், ஒரு ஆட்டுக்கடாவும், ஒரு வயதான ஒரு ஆட்டுக்குட்டியும்,

௫௨ பாவம்போக்கும்பலியாக ஒரு வெள்ளாட்டுக்கடாவும்,

௫௩ சமாதானபலியாக இரண்டு மாடுகளும், ஐந்து ஆட்டுக்கடாக்களும், ஐந்து

Digitized by Google

வெள்ளாட்டுக்கடாக்களும், ஒருவயதான ஐந்து ஆட்டுக்குட்டிகளும்தானே; இது அம்மியூதின் குமாரனாகிய எலிஷாமாவின் காணிக்கை.

௫௪ ¶ எட்டாம்நாளிலே பெதாத்சூரின் குமாரனாகிய காமாலியேல் என்ற மனாசே புத்திரரின் பிரபு செலுத்துதல்செய்தான்.

௫௫ அவன் காணிக்கை ஏதெனில், பரிசுத்தஸ்தலத்தின் சேக்கல் கணக்காக நூற்றுமுப்பது சேக்கல் நிறையான ஒரு வெள்ளித்தாலமும், எழுபது சேக்கல் நிறையான ஒரு வெள்ளிக்கலமும், இவ்விரண்டும் படைக்கும் காணிக்கையாக எண்ணெயிலே பிசைந்த மெல்லியமாவினால் நிறைந்திருந்தன.

௫௬ தூபவர்க்கத்தால் நிறைந்த பத்துச் சேக்கல் நிறையுள்ள பொன்னான ஒரு தூபக்கிண்ணியும்,

௫௭ சர்வாங்கதகனபலியாக ஒரு காளை எருதும், ஒரு ஆட்டுக்கடாவும், ஒருவயதான ஒரு ஆட்டுக்குட்டியும்,

௫௮ பாவம்போக்கும்பலியாக ஒரு வெள்ளாட்டுக்கடாவும்,

௫௯ சமாதானபலியாக இரண்டு மாடுகளும், ஐந்து ஆட்டுக்கடாக்களும், ஐந்து வெள்ளாட்டுக்கடாக்களும், ஒருவயதான ஐந்து ஆட்டுக்குட்டிகளும்தானே; இது பெதாத்சூரின் குமாரனாகிய காமாலியேலின் காணிக்கை.

௬௰ ¶ ஒன்பதாம்நாளிலே கிதெயோனின் குமாரனாகிய அபிதான் என்ற பென்யமீன் புத்திரரின் பிரபு செலுத்துதல்செய்தான்.

௬௧ அவன் காணிக்லக ஏதெனில் பரிசுத்தஸ்தலத்தின் சேக்கல் கணக்காக நூற்றுமுப்பது சேக்கல் நிறையான ஒரு வெள்ளித்தாலமும், எழுபது சேக்கல் நிறையான ஒரு வெள்ளிக்கலமும், இவ்விரண்டும் படைக்கும் காணிக்கையாத எண்ணெயிலே பிசைந்த மெல்லியமாவினால் நிறைந்திருந்தன.

௬௨ தூபவர்க்கத்தால் நிறைந்த பத்துச் சேக்கல் நிறையுள்ள பொன்னான ஒரு தூபக்கிண்ணியும்,

௬௩ சர்வாங்கதகனபலியாக ஒரு காளை எருதும், ஒரு ஆட்டுக்கடாவும், ஒருவயதான ஒரு ஆட்டுக்குட்டியும்,

௬௪ பாவம்போக்கும்பலியாக ஒரு வெள்ளாட்டுக்கடாவும்,

௬௫ சமாதானபலியாக இரண்டு மாடுகளும், ஐந்து ஆட்டுக்கடாக்களும், ஐந்து வெள்ளாட்டுக்கடாக்களும், ஒருவயதான ஐந்து ஆட்டுக்குட்டிகளும்தானே; இது கிதெயோனின் குமாரனாகிய அபிதானின் காணிக்கை.

௬௬ ¶ பத்தாம்நாளிலே அம்மிஷதாயின் குமாரனாகிய அகியேசேர் என்ற தாண் புத்திரரின் பிரபு செலுத்துதல்செய்தான்.

௬௭ அவன் காணிக்கை ஏதெனில், பரிசுத்த ஸ்தலத்தின் சேக்கல் கணக்காக நூற்றுமுப்பது சேக்கல் நிறையான ஒரு வெள்ளித்தாலமும், எழுபது சேக்கல் நிறையான ஒரு வெள்ளிக்கலமும், இவ்விரண்டும் படைக்கும் காணிக்கையாக எண்ணெயிலே பிசைந்த மெல்லியமாவினால் நிறைந்திருந்தன.

௬௮ தூபவர்க்கத்தால் நிறைந்த பத்துச் சேக்கல் நிறையுள்ள பொன்னான ஒரு தூபக்கிண்ணியும்,

௬௯ சர்வாங்கதகனபலியாக ஒரு காளை எருதும், ஒரு ஆட்டுக்கடாவும் ஒரு வயதான ஒரு ஆட்டுக்குட்டியும்,

௭௰ பாவம்போக்கும்பலியாக ஒரு வெள்ளாட்டுக்கடாவும்,

௭௧ சமாதானபலியாக இரண்டு மாடுகளும், ஐந்து ஆட்டுக்கடாக்களும், ஐந்து வெள்ளாட்டுக்கடாக்களும், ஒரு வயதான ஐந்து ஆட்டுக்குட்டிகளும்தானே; இது அம்மிஷதாயின் குமாரனாகிய அகியேசேரின் காணிக்கை.

௭௨ ¶ பதினோராம்நாளிலே ஒகிரானின் குமாரனாகிய பாகியேல் என்ற ஆசேர் புத்திரரின் பிரபு செலுத்துதல்செய்தான்.

Digitized by Google

௭௩ அவன் காணிக்கை ஏதெனில், பரிசுத்தஸ்தலத்தின் சேக்கல் கணக்காக நூற்றுமுப்பது சேக்கல் நிறையான ஒரு வெள்ளித்தாலமும், எழுபது சேக்கல் நிறையான ஒரு வெள்ளிக்கலமும், இவ்விரண்டும் படைக்கும் காணிக்கையாக எண்ணெயிலே பிசைந்த மெல்லிய மாவினால் நிறைந்திருந்தன.

௭௪ தூபவர்க்கத்தால் நிறைந்த பத்துச் சேக்கல் நிறையுள்ள பொன்னான ஒரு தூபக்கிண்ணியும்,

௭௫ சர்வாங்கதகனபலியாக ஒரு காளை எருதும், ஒரு ஆட்டுக்கடாவும், ஒரு வயதான ஒரு ஆட்டுக்குட்டியும்,

௭௬ பாவம்போக்கும்பலியாக ஒரு வெள்ளாட்டுக்கடாவும்,

௭௭ சமாதானபலியாக இரண்டு மாடுகளும், ஐந்து ஆட்டுக்கடாக்களும், ஐந்து வெள்ளாட்டுக்கடாக்களும், ஒருவயதான ஐந்து ஆட்டுக்குட்டிகளும்தானே; இது ஒகிரானின் குமாரனாகிய பாகியேலின் காணிக்கை

௭௮ ¶ பன்னிரண்டாம்நாளிலே ஏனானின் குமாரனாகிய அகிரா என்ற நவ்தலி புத்திரரின் பிரபு செலுத்துதல்செய்தான்.

௭௯ அவன் காணிக்கை ஏதெனில், பரிசுத்தஸ்தலத்தின் சேக்கல் கணக்காக நூற்றுமுப்பது சேக்கல் நிறையான ஒரு வெள்ளித்தாலமும், எழுபது சேக்கல் நிறையான ஒரு வெள்ளிக்கலமும், இவ்விரண்டும் படைக்கும் காணிக்கையாக எண்ணெயிலே பிசைந்த மெல்லியமாவினால் நிறைந்திருந்தன.

௮௦ தூபவர்க்கத்தால் நிறைந்த பத்துச் சேக்கல் நிறையுள்ள பொன்னான ஒரு தூபக்கிண்ணியும்,

௮௧ சர்வாங்கதகனபலியாக ஒரு காளை எருதும், ஒரு ஆட்டுக்கடாவும்,ஒருவயதான ஒரு ஆட்டுக்குட்டியும்,

௮௨ பாவம்போக்கும்பலியாக ஒரு வெள்ளாட்டுக்கடாவும்,

௮௩ சமாதானபலியாக இரண்டு மாடுகளும், ஐந்து ஆட்டுக்கடாக்களும், ஐந்து வெள்ளாட்டுக்கடாக்களும், ஒருவயதான ஐந்து ஆட்டுக்குட்டிகளும்தானே; இது ஏனானின் குமாரனாகிய அகிராவின் காணிக்கை.

௮௪ ¶ அப்படியே பலிபீடம் அபிஷேகம் பண்ணப்பட்டபொழுது, இஸ்ரவேலின் பிரபுக்களாலே செய்யப்பட்ட அதினுடைய பிரதிஷ்டையாவது: வெள்ளித்தாலங்கள் பன்னிரண்டு, வெள்ளிக்கலங்கள் பன்னிரண்டு, பொன்னான தூபக்கிண்ணிகள் பன்னிரண்டு.

௮௫ ஒவ்வொரு வெள்ளித்தாலம் நூற்றுமுப்பது சேக்கல் நிறையும், ஒவ்வொரு கலம் எழுபது சேக்கல் நிறையுமாக, இந்தப் பாத்திரங்களின் வெள்ளியெல்லாம் பரிசுத்தஸ்தலத்தின் சேக்கல் கணக்காய் இரண்டாயிரத்து நானூறு சேக்கல் நிறையாயிருந்தது.

௮௬ தூபவர்க்கத்தால் நிறைந்த பொன்னான பன்னிரண்டு தூபக்கிண்ணிகளில் ஒவ்வொன்று பரிசுத்தஸ்தலத்தின் சேக்கல் கணக்காய்ப் பத்துச்சேக்கல் நிறையாக, தூபக்கிண்ணிகளின் பொன்னெல்லாம் நூற்றிருபது சேக்கல் நிறையாயிருந்தன.

௮௭ சர்வாங்கதகனபலியாகச் செலுத்தப்பட்ட காளை எருதுகளெல்லாம் பன்னிரண்டு, ஆட்டுக்கடாக்கள் பன்னிரண்டு, ஒரு வயதான ஆட்டுக்குட்டிகள் பன்னிரண்டு, அவைகளுக்கடுத்த படைப்புக்காணிக்கைகளும்கூட இருந்தன; பாவம்போக்கும் பலியாகச் செலுத்தப்பட்ட வெள்ளாட்டுக்கடாக்கள் பன்னிரண்டு.

௮௮ சமாதானபலியாகச் செலுத்தப்பட்ட காளை எருதுகளெல்லாம் இருபத்துநான்கு; ஆட்டுக்கடாக்கள் அறுபது, வெள்ளாட்டுக்கடாக்கள் அறுபது, ஒருவயது ஆட்டுக்குட்டிகள் அறுபது; பலிபீடம் அபிஷேகம் பண்ணப்பட்டபிற்பாடு செய்யப்பட்ட அதின் பிரதிஷ்டை இதுதானே.

Digitized by Google

௮௯ ¶ மோசே அவரோடே பேசுகிறதற்காக ஆசரிப்புக்கூடாரத்திற்குள் பிரவேசிக்கும்பொழுது, தன்னோடே பேசுகிற சத்தத்தைச் *சாட்சியினுடைய பெட்டியின்மேலுள்ள கிருபாசனமான மூடியின்மீதில் இரண்டு கேருபீன்களின் நடுவே இருந்துண்டாகக் கேட்பான்; அங்கே இருந்து அவனோடே பேசுவார். *௨ மோ. ௨௫. ௨௨. சங். ௮௰. ௨.

## ௮. அதிகாரம்.

கர்த்தர் மோசேயோடே பேசிச் சொன்னதாவது:

௨ நீ ஆரோனோடே பேசிச் சொல்லவேண்டியதேதெனில், *நீ விளக்குகளை ஏற்றுகையில் ஏழு விளக்குகளும் விளக்குத்தண்டிற்கு நேர் ஒழுங்காய் எரியவேண்டுமென்று சொல்லென்றார். *௨ மோ. ௨௫. ௩௭.

௩ கர்த்தர் மோசேக்குக் கற்பித்தபிரகாரமாக ஆரோன் செய்து, விளக்குத்தண்டிற்கு நேர் ஒழுங்காக அதின் விளக்குகளை ஏற்றுவான்.

௪ இந்தக் குத்துவிளக்கின் வேலை, அதின் பாதம்துவக்கி அதின் பூக்கள்மட்டும், அடிக்கப்பட்ட பொன்னாயிருந்தது; கர்த்தர் மோசேக்குக் காண்பித்த மாதிரியின்படியே அவன் குத்துவிளக்கைப் பண்ணினான்.

௫ ¶ கர்த்தர் மோசேயோடே பேசிச் சொன்னதாவது:

௬ நீ இலேவியரை இஸ்ரவேல் புத்திரருடைய நடுவில் எடுத்து, அவர்களைச் சுத்திகரிப்பாயாக.

௭ அவர்களைச் சுத்திகரிக்க நீ அவர்களுக்குச் செய்யவேண்டியதேதெனில், அவர்கள்மேலே பாவம்போக்கும் தண்ணீரைத் தெளி; பிற்பாடு அவர்கள் தங்களைச் சுத்திகரிக்க, தங்கள் மாம்சத்தின்மேலெல்லாம் சவரகன் கத்தியைப் போகப்பண்ணி, தங்கள் வஸ்திரங்களை வெளுத்து,

௮ ஒரு காளை எருதையும் எண்ணெயிலே பிசைந்த மெல்லியமாவாகிய அதற்கடுத்த காணிக்கையையும் கொண்டுவரக்கடவர்கள்; பாவம்போக்கும்பலியாக வேறொரு காளை எருதையும் நீ வாங்கி,

௯ இலேவியரை ஆசரிப்புக்கூடாரத்திற்குமுன்பாகச் சேரப்பண்ணி, இஸ்ரவேல் புத்திரரின் சபையையெல்லாம் கூட்டுவாயாக.

௰ நீ இலேவியரைக் கர்த்தருக்குமுன்பாகச் சேரப்பண்ணினபொழுது, இஸ்ரவேல் புத்திரர் தங்கள் கைகளை இலேவியர்மேல் வைக்கக்கடவர்கள்.

௰௧ பிறகு இலேவியர் கர்த்தரின் பணிவிடைவேலை செய்கிறவர்களாகும்படிக்கு, ஆரோன் இஸ்ரவேல் புத்திரரில் எடுக்கப்பட்ட அவர்களைக் கர்த்தருக்குமுன்பாக அசைவாட்டப்படும் காணிக்கையாக நிறுத்தக்கடவன்.

௰௨ பிற்பாடு இலேவியர் தங்கள் கைகளைக் காளை எருதுகள் தலையின்மேல் வைப்பார்களாக; அதின்பிறகு நீ இலேவியருக்காகப் பாவநிவிர்த்தியை உண்டாக்குவதற்கு, கர்த்தருக்கு அவைகளில் ஒன்றைப் பாவம்போக்கும்பலியும் மற்றதைச் சர்வாங்கதகனபலியுமாக்கி,

௰௩ ¶ இலேவியரை ஆரோனுக்கும் அவன் குமாரனுக்கும்முன்பாக நிறுத்தி, அவர்களைக் கர்த்தருக்கு அசைவாட்டப்படும் காணிக்கையாக்கி,

௰௪ இப்படி இலேவியர் நம்முடையவர்களாயிருக்கும்படிக்கு, அவர்களை இஸ்ரவேல் புத்திரர் நடுவிலிருந்து பிரித்தெடுக்கக்கடவாய்.

௰௫ அதற்குப் பிறகு இலேவியர் ஆசரிப்புக்கூடாரத்தில் வேலைசெய்யப் பிரவேசிக்கக்கடவர்கள்; இப்படி அவர்களைச் சுத்திகரித்து, அவர்களை அசைவாட்டும் காணிக்கையாக்கக்கடவாய்.

௰௬ ஏனெனில் அவர்கள் இஸ்ரவேல் புத்திரர் நடுவிலிருந்து நமக்குக் கொடுக்கவே கொடுக்கப்பட்டார்கள்; இஸ்ரவேல் புத்திரரில் எல்லாம் கர்ப்பம்திறந்து பிறக்கிற

Digitized by Google

சகல முதல்பேற்றுக்கும் பதிலாக அவர்களை நமக்கு எடுத்துக்கொண்டோம்.

௰எ ஏனென்றால் இஸ்ரவேல் புத்திரரிலே, மனிதரிலும் மிருகஜீவன்களிலும் *முதல்பேறானதெல்லாம் நம்முடையது; நாம் எகிப்துதேசத்திலே முதல்பேறு சகலத்தையும் சங்கரித்தநாளிலே அவைகளை நமக்குப் பரிசுத்தமாக்கி, *௨ மோ. ௰௩. ௨.

௰அ பிற்பாடு *இலேவியரை இஸ்ரவேல் புத்திரரிலுள்ள முதல்பேறு சகலத்திற்கும் பதிலாக எடுத்துக்கொண்டு, *௪ மோ. ௩. ௰௨.

௰௯ இலேவியர் இஸ்ரவேல் புத்திரருடைய பணிவிடைவேலையை ஆசரிப்புக்கூடாரத்திலே செய்யும்படிக்கும், இஸ்ரவேல் புத்திரருக்காகப் பாவநிவிர்த்தியை உண்டாக்கும்படிக்கும் இஸ்ரவேல் புத்திரர்தானே பரிசுத்தஸ்தலத்திற்குச் சேருகிறதினால் இஸ்ரவேல் புத்திரரில் வாதை உண்டாகாதபடிக்கும், இலேவியரை அவர்கள் நடுவில் எடுத்து, ஆரோனுக்கும் அவன் குமாரருக்கும் கொடுக்கவே கொடுத்தோமென்றார்.

௨௰ அப்பொழுது மோசேயும் ஆரோனும் இஸ்ரவேல் புத்திரரின் சபை அனைத்தும் கர்த்தர் இலேவியரைக்குறித்து மோசேக்குக் கற்பித்தபடி எல்லாம் இலேவியருக்குச் செய்தார்கள்.

௨௧ இலேவியர் பாவம்போக்குதலைப் பண்ணிக்கொண்டு, தங்கள் வஸ்திரங்களை வெளுத்தார்கள்; பிற்பாடு ஆரோன் அவர்களைக் கர்த்தருக்குமுன்பாக அசைவாட்டும் காணிக்கையாக நிறுத்தி, அவர்களைச் சுத்திகரிக்க அவர்களுக்காகப் பாவநிவிர்த்தியை உண்டாக்கினான்.

௨௨ அதற்குப்பிறகு இலேவியர் ஆரோனுக்கும் அவன் குமாரருக்கும் முன்பாக ஆசரிப்புக்கூடாரத்திலே தங்கள் பணிவிடைவேலையைச் செய்யப் பிரவேசித்தார்கள்; கர்த்தர் இலேவியரைக்குறித்து மோசேக்குக் கற்பித்தபடியே அவர்களுக்குச் செய்தார்கள்.

௨௩ ¶ கர்த்தர் மோசேயோடே பேசிச் சொன்னதாவது:

௨௪ இலேவியருக்கான கட்டளை ஏதெனில், இருபத்தைந்துவயது முதல்கொண்டு அதற்கு மேல்த்தரமுமான அனைவரும் ஆசரிப்புக்கூடாரத்தின் வேலையைச் செய்யும் இராணுவத்திலே சேவிக்க வரவேண்டும்.

௨௫ ஆனால் ஐம்பதாம்வயதுமுதல்கொண்டு அவர்கள் இனி வேலைசெய்யாதபடிக்கு வேலைசெய்யும் இராணுவத்தை விட்டு,

௨௬ பணிவிடைவேலையைச் செய்யாமல், ஆசரிப்புக்கூடாரத்தின் காவலைக் காக்கிறதற்கே தங்கள் சகோதரரோடேகூடச் சேவிக்கக்கடவர்கள்; இப்படி இலேவியருக்கு அவர்களுடைய காவல்களின் வேலைக்காகத் திட்டம்பண்ணக்கடவாயென்றார்.

## ௯. அதிகாரம்.

அவர்கள் எகிப்துதேசத்திலிருந்து புறப்பட்ட இரண்டாம் வருஷம் முதல்மாதத்திலே கர்த்தர் சீனாய் வனாந்தரத்திலே மோசேயோடே பேசிச் சொன்னதாவது:

௨ இஸ்ரவேல் புத்திரர் *பஸ்காவை அதின் திட்டமான காலத்திலே ஆசரிக்கக்கடவர்கள். *௨ மோ. ௰௨. ௩.

௩ இந்த மாதம் பதினான்காம்தேதி அந்திநேரமானவேளை என்றதின் திட்டமான காலத்திலே அதை ஆசரிக்கக்கடவீர்கள்; அதினுடைய எல்லாக் கட்டளையின்படியேயும் நியாயத்தின்படியேயும் அதை ஆசரிக்கக்கடவீர்களென்றார்.

௪ ஆகையால் பஸ்காவை ஆசரிக்கிறதற்காக மோசே இஸ்ரவேல் புத்திரரோடே பேசினான்.

௫ அப்படியே முதலாம்மாதம் பதினான்காம்தேதி அந்திநேரமானவேளையிலே, சீனாய் வனாந்தரத்திலே பஸ்காவை ஆசரித்தார்கள்; கர்த்தர் மோசேக்குக் கற்பித்தபடி எல்லாம் இஸ்ரவேல் புத்திரர் செய்தார்கள்.

௬ ¶ ஆனால் சவத்தினாலே தீட்டுப்பட்ட

Digitized by Google

படியினாலே, அந்நாளில் பஸ்காவை ஆசரிக்கக்கூடாத மனிதர் இருந்தார்கள்; அவர்கள் அந்நாளிலே மோசேக்கும் ஆரோனுக்கும்முன்பாகச் சேர்ந்துவந்து,

௭ அவர்களோடே, நாங்கள் சவத்தினாலே தீட்டுப்பட்டவர்கள்; இஸ்ரவேல் புத்திரருக்குள்ளே திட்டமானகாலத்திலே கர்த்தருக்குக் காணிக்கையைச் செலுத்தாதபடிக்கு, நாங்கள் விலக்கப்பட்டிருப்பானேனென்றார்கள்.

௮ மோசே அவர்களுடனே, பொறுங்கள்; கர்த்தர் உங்களுக்காகக் கற்பிப்பது ஏதென்று கேட்பேனென்றான்.

௯ ¶ கர்த்தர் மோசேயோடே பேசிச் சொன்னதாவது:

௰ நீ இஸ்ரவேல் புத்திரரோடே பேசிச் சொல்லவேண்டியதேதெனில், உங்களிலாகிலும் உங்கள் சந்ததியாரிலாகிலும் எவர் ஒருவர் சவத்தினாலே தீட்டுப்பட்டு, அல்லவென்று தூரப்பயணத்தில் இருந்தாலும், கர்த்தருக்குப் பஸ்காவை ஆசரிக்கவேண்டும்.

௰௧ அவர்கள் அதை இரண்டாம்மாதம் பதினான்காம்தேதி அந்திநேரமானவேளையில் ஆசரித்து, அதைப் புளிப்பில்லாத அப்பங்களோடும் கசப்பான கீரைகளோடும் புசித்து,

௰௨ விடியற்காலம்மட்டும் அதில் ஒன்றும் மீதியாகவைக்காமலும், அதில் ஒரு எலும்பை முறிக்காமலும், பஸ்காவினுடைய கட்டளையின்படி எல்லாம் அதை ஆசரிக்கக்கடவர்கள்.

௰௩ ஆனால் ஒருவன் சுத்தமும் பயணத்தில் இராதவனுமாயிருந்தும், பஸ்காவை ஆசரிக்காதேபோனால், அந்த ஆத்துமாத் திட்டமான காலத்திலே கர்த்தரின் காணிக்கையைச் செலுத்தாதபடியினாலே தன் சனத்தாரில் இராமல், *அறுப்புண்டுபோவான்; அந்த மனிதன் தன் பாவத்தைச் சுமப்பான். *௧ மோ. ௰௭. ௰௪.

௰௪ ஒரு பரதேசி உங்களிடத்திலே தங்கி, கர்த்தருக்குப் பஸ்காவை ஆசரிக்கப்போனால், அவன் அதைப் பஸ்காவின் கட்டளையின்படியும் அதின் நியாயத்தின்படியும் ஆசரிக்கக்கடவன்; பரதேசிக்காகவும் தேசத்திலே பிறந்தவனுக்காகவும் ஏககட்டளை உங்களுக்கு இருப்பதாகவென்று சொல்லென்றார்.

௰௫ ¶ வாசஸ்தலம் எடுப்பிக்கப்பட்டநாளிலே, *மேகம் சாட்சியின்கூடாரம் இருக்கிற வாசஸ்தலத்தை மூடிற்று; சாயங்காலமானபொழுதோவெனில், வாசஸ்தலத்தின் மேல் விடியற்காலம்மட்டும் அக்கினியின் உருவிருந்தது. *௨ மோ. ௪௰. ௩௪.

௰௬ இப்படி எப்பொழுதும் இருந்தது; மேகமும் இராவில் அக்கினி உருவும் அதை மூடியிருந்தன.

௰௭ மேகம் கூடாரத்திலிருந்து எழும்புகிறதைப் பார்த்து, இஸ்ரவேல் புத்திரர் அதின் பிறகு பயணப்படுவார்கள்; மேகம் எந்தஸ்தலத்திலே தங்கித்தரிக்குமோ, அங்கே இஸ்ரவேல் புத்திரர் பாளயம் இறங்குவார்கள்.

௰௮ கர்த்தருடைய கட்டளையின்படியே இஸ்ரவேல் புத்திரர் பயணப்படுவார்கள்; கர்த்தருடைய கட்டளையின்படியேயும் பாளயம் இறங்குவார்கள்; மேகம் வாசஸ்தலத்தின்மேலே தங்கியிருக்கும் நாளெல்லாம் பாளயத்தில் இறங்கி இருப்பார்கள்,

௰௯ மேகம் வெகுநாள் வாசஸ்தலத்தின் மேலே தரித்திருக்கையில், இஸ்ரவேல் புத்திரர் பயணப்படாமல், கர்த்தரின் காவலைக் காத்திருப்பார்கள்.

௨௰ மேகம் கொஞ்சநாள் வாசஸ்தலத்தின் மேலிருக்கும்பொழுது, கர்த்தருடைய கட்டளையின்படியே பாளயம் இறங்கியிருந்து, கர்த்தருடைய கற்பனையின்படியே பயணப்படுவார்கள்.

௨௰௧ மேகம் சாயங்காலம்துவக்கி விடியற்காலம்மட்டும் இருந்து, விடியற்காலத்தில் எழும்பும்பொழுது, அந்நேரம் பயணப்படுவார்கள்; பகலிலாகிலும் இரவிலாகிலும்

Digitized by Google

மேகம் எழும்பும்பொழுது, பயணப்படு வார்கள்.

உஉ அல்லவென்று மேகம் இரண்டொரு நாள், அல்லது ஒருமாதம், அல்லது அதிக நாள், வாசஸ்தலத்தின்மேலே தங்கியிருக் கும்பொழுது, இஸ்ரவேல் புத்திரர் பயணப் படாமல், பாளயம் இறங்கி இருப்பார்கள்; அது எழும்பும்பொழுதோவெனில், பய ணப்படுவார்கள்.

உ௩ கர்த்தருடைய கட்டளையின்படியே பாளயம் இறங்குவார்கள்; கர்த்தருடைய கட்டளையின்படியே பயணப்படுவார்கள்; கர்த்தர் மோசேயைக்கொண்டு கட்டளையி டும்படியே கர்த்தருடைய காவலைக் காப் பார்கள்.

## ய. அதிகாரம்.

கர்த்தர் மோசேயோடே பேசிச் சொன் னதாவது:

உ உனக்கு இரண்டு வெள்ளிப் பூரிகைக ளை அடிக்கப்பட்ட வெள்ளியினாலே உண் டுபண்ணு; அவைகள் உனக்குச் சபையை வரவழைப்பிக்கிறதற்கும் பாளயங்களைப் பயணப்படுத்துகிறதற்கும் உதவுவதாக.

௩ அவைகளை ஊதும்பொழுது சபை எல் லாம் ஆசரிப்பின் கூடாரத்தின் வாசலில் உன்னண்டைக்குக் கூடக்கடவது.

ச ஒன்றை ஊதும்பொழுதோவெனில், இஸ்ரவேலில் ஆயிரங்களுக்குத் தலைவராகி ய பிரபுக்கள் உன்னண்டைக்குக் கூடக்க டவர்கள்.

டு நீங்கள் அவைகளைக் கெம்பீரமாக ஊ தும்பொழுதோவெனில், கிழக்கே இறங்கி யிருக்கிற பாளயங்கள் பயணப்படக்கட வது.

௬ அவைகளை நீங்கள் இரண்டாம்முறை கெம்பீரமாக ஊதும்பொழுது, தெற்கே இ றங்கியிருக்கிற பாளயங்கள் பயணப்படக் கடவது; அவர்களைப் பயணப்படுத்துகிற தற்குக் கெம்பீரமாய் ஊதக்கடவர்கள்.

எ ஆனால் சபையைக் கூட்டுகிறதற்குக் கெம்பீரமில்லாத ஊதுதலாக ஊதக்கட வீர்கள்.

அ ஆரோனின் குமாரராகிய ஆசாரியர் பூரி கைகளை ஊதக்கடவர்கள்; அவைகள் உங் கள் தலைமுறைகளில் உங்களுக்கு நித்திய கட்டளையாக இருக்கக்கடவது.

௯ நீங்கள் உங்கள் தேசத்தில் உங்களை நெ ருக்கப்படுத்துகிற சத்துருவுக்கு எதிராக யுத்தத்திற்குள் பிரவேசிக்கும்பொழுது, *பூ ரிகைகளைக் கெம்பீரமாக ஊதக்கடவீர்கள்; அப்பொழுது நீங்கள் உங்கள் பராபரனா கிய கர்த்தரின் சமுகத்திலே நினைக்கப்பட் டு, உங்கள் பகைஞருக்கு நீங்கலாய் இரட் சிக்கப்படுவீர்கள். * ச மோ. ௩௧. ௬.

ய உங்கள் மகிழ்ச்சியின்நாளிலும், உங்கள் பண்டிகைகளிலும், மாதப்பிறப்புகளிலும், உங்கள் சர்வாங்கதகனங்களும் சமாதான பலிகளும் செலுத்தப்படுகையில், பூரிகை களை ஊதுவீர்களாக; அப்பொழுது அவை கள் உங்கள் பராபரன் சமுகத்திலே உங் களை நினைக்கப்பண்ணும்; நாம் உங்கள் பராபரனாகிய கர்த்தரென்றார்.

யக ¶ இரண்டாம்வருஷம் இரண்டாம்மா தம் இருபதாம்தேதியிலே மேகம் சாட்சியி னுடைய வாசஸ்தலத்தின்மீதிலிருந்து எழு ம்பிற்று.

யஉ அப்பொழுது இஸ்ரவேல் புத்திரர் சீனாய்வனாந்தரத்திலிருந்து தங்கள் பயண வரிசைகளாய்ப் புறப்பட்டார்கள்; மேகம் பாரான் வனாந்தரத்திலே தங்கித்தரித்தது.

ய௩ இப்படியே கர்த்தர் மோசேயைக் கொண்டு கட்டளையிட்டபடியே முதல்ப யணம் பண்ணினார்கள்.

யச ¶ முதல் யூதாபுத்திரருடைய பாளயக் கொடியின்கீழிருக்கிறவர்கள் தங்கள் சே னைகளின்படியே புறப்பட்டார்கள்; அவ னுடைய சேனைக்கு அமீனதாபின் குமாரன் நாகேசோன் தலைவனாய் இருந்தான்.

யடு இசக்கார் புத்திரருடைய கோத்திரத் தின் சேனைக்குச் சூவாரின் குமாரன் நெத் தானியேல் தலைவனாய் இருந்தான்.



Digitized by Google

௰௬ செபுலோன் புத்திரருடைய கோத்திரத்தின் சேனைக்கு எலோனின் குமாரன் எலியாப் தலைவனாயிருந்தான்.

௰௭ அப்பொழுது வாசஸ்தலம் இறக்கிவைக்கப்பட்டது; அதைக் கெர்சோன் புத்திரரும் மெராரி புத்திரரும் சுமந்துகொண்டு புறப்பட்டார்கள்.

௰௮ ¶ பிற்பாடு ரூபன் புத்திரருடைய பாளயக் கொடியின்கீழிருக்கிறவர்கள் தங்கள் சேனைகளின்படியே புறப்பட்டார்கள்; அவன் சேனைக்குச் சேதேயூரின் குமாரன் எலிசூர் தலைவனாய் இருந்தான்.

௰௯ சிமெயோன் புத்திரருடைய கோத்திரத்தின் சேனைக்குச் சூரிஷதாயின் குமாரன் செலுமியேல் தலைவனாயிருந்தான்.

௨௰ காத் புத்திரருடைய கோத்திரத்தின் சேனைக்குத் தேகுவேலின் குமாரன் எலியாசாப் தலைவனாயிருந்தான்.

௨௧ அப்பொழுது கோகாத்தியர் பரிசுத்தமானதைச் சுமந்துகொண்டு புறப்பட்டார்கள்; இவர்கள் வருமட்டும் அவர்கள் வாசஸ்தலத்தை எடுத்து நிறுத்தினார்கள்.

௨௨ பிற்பாடு எப்பிராயீம் புத்திரருடைய பாளயக்கொடியின்கீழிருக்கிறவர்கள் தங்கள் சேனைகளின்படியே புறப்பட்டார்கள்; அவனுடைய சேனைக்கு அம்மியூதின் குமாரன் எலிஷாமா தலைவனாயிருந்தான்.

௨௩ மனாசே புத்திரருடைய கோத்திரத்தின் சேனைக்குப் பெதாத்சூரின் குமாரன் காமாலியேல் தலைவனாயிருந்தான்.

௨௪ பென்யமீன் புத்திரருடைய கோத்திரத்தின் சேனைக்கு கீதேயோனியின் குமாரன் அபிதான் தலைவனாயிருந்தான்.

௨௫ ¶ பிற்பாடு தாண் புத்திரருடைய பாளயக்கொடியின்கீழிருக்கிறவர்கள் சகல பாளயங்களுக்கும் கடைப்பாளயமாகத் தங்கள் சேனைகளின்படியே புறப்பட்டார்கள்; அவனுடைய சேனைக்கு அம்மிஷதாயின் குமாரன் அகியேசேர் தலைவனாயிருந்தான்.

௨௬ ஆசேர் புத்திரருடைய கோத்திரத்தின் சேனைக்கு ஒகிரானின் குமாரன் பாகியேல் தலைவனாயிருந்தான்.

௨௭ நவுதலி புத்திரருடைய கோத்திரத்தின் சேனைக்கு ஏனானின் குமாரன் அகிரா தலைவனாயிருந்தான்.

௨௮ இந்த வரிசையாய் இஸ்ரவேல் புத்திரர் தங்கள் சேனைகளின்படியே பயணம் போனார்கள்.

௨௯ ¶ மோசே தன் மாமனாகிய ரெகுவேலென்ற மீதியானனுடைய குமாரனை ஓபாபுடனே, உங்களுக்குக் கொடுக்கிறோமென்று கர்த்தர் சொன்ன ஸ்தலத்திற்கு நாங்கள் பயணம்போகிறோம்; எங்களோடேகூட வா, உனக்கு நன்மைசெய்வோம்; ஏனெனில் கர்த்தர் இஸ்ரவேலுக்கு நல்ல வாக்குத்தத்தம்பண்ணினாரென்றான்.

௩௰ ஆனால் இவன் அவனோடே நான் வராமல், என் தேசத்திற்கும் என் இனத்தண்டைக்கும் போவேனென்றான்.

௩௧ அப்பொழுது அவன் சொன்னதாவது: நீ எங்களை விடாயாக; ஏனெனில் வனாந்தரத்திலே நாங்கள் பாளயம் இறங்கும் தானங்களை நீ அறிந்திருக்கிறபடியினாலே, எங்களுக்குக் கண்களைப்போல இருப்பாய்.

௩௨ நீ எங்களோடே கூடவந்தால் அப்பொழுது கர்த்தர் எங்களுக்குச் செய்தருளும் அந்த நன்மையின்படியே உனக்கும் நன்மைசெய்வோமென்றான்.

௩௩ ¶ அவர்கள் கர்த்தருடைய பர்வதத்தைவிட்டு, மூன்றுநாள் பயணம்போனார்கள்; மூன்றுநாள் பயணத்திலும் கர்த்தருடைய உடம்படிக்கையின்பெட்டி அவர்களுக்கு இளைப்பாறும் தலத்தை விசாரித்துக் காட்டும்படிக்கு அவர்கள்முன்பாகப் போயிற்று.

௩௪ அவர்கள் பாளயத்திலிருந்து பயணம் போகிறபொழுது, கர்த்தருடைய மேகம் பகலில் அவர்கள்மேல் இருந்தது.

௩௫ ¶ பெட்டி புறப்படும்பொழுது மோசே என்றவன், கர்த்தாவே, உம்முடைய சத்துருக்கள் சிதறடிக்கப்படவும், உம்

Digitized by Google

மைப் பகைக்கிறவர்கள் உமக்குமுன்பாக ஓடிப்போகவும் எழுந்தருளும் என்பான். * சங். ௬௮. ௨.

௩௬ அது தங்குகிறபொழுது அவன், கர்த்தாவே, அநேகம் ஆயிரங்களாகிய இஸ்ரவேலரண்டைக்குத் திரும்புமென்பான்.

## ௰௧. அதிகாரம்.

ஆனால் சனம் முறையிட்டுக்கொண்டிருந்தது; அது கர்த்தருடைய செவிகளிலே பொல்லாப்பாயிருந்தது; ஏனெனில் கர்த்தர் அதைக் கேட்டபொழுது, அவருடைய கோபம் மூண்டது; அப்பொழுது கர்த்தருடைய அக்கினி அவர்களுக்குள்ளே பற்றி எரிந்து, கடைசிப் பாளயத்தில் இருந்த சிலரைப் பட்சித்தது.

௨ சனம் மோசேயைநோக்கிக் கூப்பிட்டது; மோசே கர்த்தரைநோக்கி விண்ணப்பம்பண்ணினான்; அப்பொழுது அக்கினி அவிந்துபோயிற்று.

௩ கர்த்தருடைய அக்கினி அவர்களுக்குள்ளே பற்றி எரிந்ததினாலே அவ்விடத்திற்குத் தபேராவென்று பேரிட்டான்.

௪ ¶ அவர்களுக்குள் இருந்த *பலசாதியான சனம் மகா இச்சையுள்ளதாயிற்று; அப்பொழுது இஸ்ரவேல் புத்திரரும் திரும்ப அழுது, நமக்கு இறைச்சியைப் புசிக்கக்கொடுப்பவர் யார் என்றும், *௨ மோ. ௰௨. ௩௮. ௨ மோ. ௰௬. ௩. ௧ கொரி. ௰. ௬.

௫ நாம் எகிப்திலே கிரயமில்லாமல் சாப்பிட்ட மச்சங்களையும், வெள்ளரிக்காய்களையும், கொம்மட்டிக்காய்களையும், சிறுவெண்காயங்களையும், வெண்காயங்களையும், வெள்ளை வெண்காயங்களையும் நினைக்கிறோம்.

௬ இப்பொழுதோவெனில் நம்முடைய ஆத்துமா வாடிப்போயிற்று; இந்த மன்னாவைத்தவிர நம்முடைய கண்களுக்குமுன்பாகப் பின் ஒன்றுமில்லை என்றும் சொன்னார்கள்.

௭ மன்னாவோவென்றால் கொத்தமல்லிவிதை அம்மாத்திரமும், அதின் நிறம்பெதோளாகின் நிறம்போலவும் இருந்தது.

௮ சனம் திரிந்து அதைப் பொறுக்கிக்கொண்டுவந்து, எந்திரங்களில் அரைத்து, அல்லது உரல்களில் இடித்து, பானைகளிலே சமைப்பார்கள்; அதை அப்பங்களும் ஆக்குவார்கள்; அதின் ருசி புது ஒலிவ எண்ணெயின் ருசியாயிருந்தது.

௯ இராவில் பனி பாளயத்தின்மேல் இறங்குகையில், மன்னா அதின்மேல் இறங்கிற்று.

௰ ¶ சனம் வம்சம் வம்சமாகத் தங்கள் தங்கள் கூடாரவாசலில் அழுகிறதை மோசே கேட்டான்; கர்த்தருக்குக் கோபம் மிகவும் மூண்டது; மோசேயின் பார்வைக்கும் பொல்லாப்பாயிருந்தது.

௰௧ அப்பொழுது மோசே கர்த்தரோடே சொன்னதாவது: நீர் இந்த எல்லாச் சனத்தின் பாரத்தையும் என்மேலே சுமத்தினதினாலே, உம்முடைய அடியானுக்கு உபத்திரவம் வரப்பண்ணினதென்ன? உம்முடைய கண்களில் எனக்குக் கிருபை கிடையாதே போனதென்ன?

௰௨ நாம் அவர்கள் பிதாக்களுக்கு ஆணையிட்ட தேசத்திற்கு, நீ அவர்களை ஒரு தகப்பன் முலையுண்கிற பாலகனைச் சுமக்கிறதுபோல, உன் மடியிலே சுமந்துகொண்டுபோவென்று நீர் என்னோடே சொல்லும்படிக்கு, நான் இந்தச் சனத்தையெல்லாம் கர்ப்பம்தரித்தேனோ? நான் இதைப்பெற்றேனோ?

௰௩ இந்தச் சனத்திற்கெல்லாம் கொடுக்கிறதற்கு எனக்கு இறைச்சி எங்கேயிருந்து வரும்? ஏனெனில் எங்களுக்கு இறைச்சியைச் சாப்பிடக் கொடுவென்று என்னைப் பார்த்து அழுகிறார்கள்.

௰௪ நான் ஒருவன் இந்தச் சனத்தையெல்லாம் சுமக்கக்கூடாது; ஏனென்றால் எனக்கு மிஞ்சின பாரமாயிருக்கின்றது.

௰௫ எனக்கு உம்முடைய கண்களிலே கிருபைகிடைத்ததானால், தேவரீர் இப்படி எனக்குச் செய்கிறதைப்பார்க்கிலும், என்

Digitized by Google

உபத்திரவத்தை நான் காணாதபடிக்கு என்னைக் கொல்லவே கொல்லும் என்றான்.

௰௬ ¶ அப்பொழுது கர்த்தர் மோசேயோடே சொன்னதாவது: நீ இஸ்ரவேலின் மூப்பரில் சனத்திற்கு மூப்பரும் தலைவருமாயிருக்கத்தக்கவர்கள் என்று அறிந்திருக்கிற எழுபதுபேரை நமக்குக் கூட்டி, அவர்களை ஆசரிப்புக்கூடாரத்தண்டையிலே அங்கே உன்னோடேகூட நிற்கும்படிக்குச் சேர்த்துக்கொள்.

௰௭ அப்பொழுது நாம் இறங்கி, அங்கே உன்னோடேபேசி, நீ ஒருவன் சனத்தின் பாரத்தைச் சுமக்காமல், அவர்கள் உன்னோடேகூட அதைச் சுமப்பதற்காக உன்மேலிருக்கிற ஆவியில் எடுத்து, அவர்கள்மேலே வைப்போம்.

௰௮ ஆனால் சனத்தோடே நீ சொல்லவேண்டியதேதெனில், இறைச்சி சாப்பிட நாளைக்கு உங்களைப் பரிசுத்தம்பண்ணுங்கள்; ஏனெனில், எங்களுக்கு இறைச்சி சாப்பிடக் கொடுப்பவர் யார்? எகிப்திலே எங்களுக்கு நன்றாயிருந்ததென்று கர்த்தருடைய செவிகளின்முன்பாக அழுதீர்கள்; ஆகையால் கர்த்தர் உங்களுக்கு இறைச்சி சாப்பிடக்கொடுப்பார்.

௰௯ நீங்கள் ஒருநாள் அல்ல, இரண்டு நாளும் அல்ல, ஐந்துநாளும் அல்ல, பத்துநாளும் அல்ல, இருபதுநாளும் அல்ல,

௨௰ ஒரு மாதம் முழுவதும் அது உங்கள் நாசிகளிலிருந்து புறப்பட்டு, உங்களுக்குத் தெவிட்டிப்போகும்மட்டும் சாப்பிடுவீர்கள்; ஏனென்றால் உங்கள்நடுவே இருக்கிற கர்த்தரை அசட்டைபண்ணி, நாங்கள் ஏன் எகிப்திலிருந்து புறப்பட்டோமென்று அவருக்குமுன்பாக அழுதீர்களென்று சொல்லென்றார்.

௨௧ ¶ அப்பொழுது மோசே சொன்னதாவது: நான் இருக்கிற சனம் அறுநூறாயிரம் காலாள்கள்; தேவரீரோவெனில் ஒரு முழு மாதம்மட்டும் சாப்பிட அவர்களுக்கு இறைச்சி கொடுப்போம் என்றீர்.

௨௨ *அவர்களுக்குப் போந்தது கிடைக்க ஆடுமாடுகள் அவர்களுக்காக அடிக்கப்படுமோ? அவர்களுக்குப் போந்தது கிடைக்கச் சமுத்திரத்து மச்சங்களெல்லாம் அவர்களுக்காகச் சேர்க்கப்படுமோவென்றான். *யோவா. ௬. ௭.

௨௩ ஆனால் கர்த்தர் மோசேயுடனே, *கர்த்தருடைய கை குறுகி இருக்கிறதோ? நம்முடைய வார்த்தையின்படி உனக்கு வந்துகடக்குமோ, கடவாதோவென்று இப்பொழுது பார்ப்பாய் என்றார். *ஏசா. ௫௰. ௨: ௫௯. ௧.

௨௪ ¶ மோசே புறப்பட்டு, கர்த்தருடைய வார்த்தைகளைச் சனத்திற்குச் சொல்லி, சனத்தின் மூப்பரில் எழுபதுபேரைக் கூட்டி, அவர்களைக் கூடாரத்தைச் சுற்றிலும் நிறுத்தினான்.

௨௫ அப்பொழுது கர்த்தர் மேகத்தில் இறங்கி, அவனோடே பேசி, அவன்மேலிருந்த ஆவியில் எடுத்து, மூப்பராகிய அந்த எழுபதுபேர்மேலே வைத்தார்; சம்பவித்ததேதெனில் ஆவி அவர்கள்மேலே வந்து தங்குகையில், தீர்க்கதரிசனம் சொன்னார்கள்; சொல்லிப் பிறகு ஓய்ந்தார்கள்.

௨௬ ஆனால் இரண்டுபேர் பாளயத்தில் இருந்துவிட்டார்கள்; ஒருவன்பேர் எல்தாத் மற்றவன்பேர் மேதாத்; அவர்கள் கூடப் பேர்எழுதப்பட்டிருந்தும், கூடாரத்திற்குப் போகப் புறப்படாதிருந்தார்கள்; அவர்கள்மேல் ஆவிவந்து தங்கினதினாலே, பாளயத்திலே தீர்க்கதரிசனம் சொன்னார்கள்.

௨௭ ஒரு பிள்ளையாண்டான் ஓடிவந்து, எல்தாதும் மேதாதும் பாளயத்திலே தீர்க்கதரிசனம் சொல்லுகிறார்களென்று மோசேக்கு அறிவித்தான்.

௨௮ அப்பொழுது மோசேயால் தெரிந்துகொள்ளப்பட்டவர்களில் அவன் வேலைக்காரனாகிய நூனின் குமாரன் யோசுவா பிரியுத்தாரமாக, என் ஆண்டவனாகிய மோசேயே, *அவர்களுக்குத் தடைபண்ணுமென்றான். *லூக். ௯. ௪௯.

Digitized by Google

௨௯ மோசேயோவென்றால், அவனுக்கு நீ எனக்காகப் பத்திவைராக்கியம் காண்பிக்கிறாயோ? ஆ, கர்த்தருடைய சனமெல்லாம் தீர்க்கதரிசனம் சொல்லத்தக்கதாய், கர்த்தர் தம்முடைய ஆவியை அவர்கள்மேல்இறங்கப்பண்ணினால் தாவிலேயென்றான்.

௩௰ பிற்பாடு மோசேயும் இஸ்ரவேல் மூப்பரும் பாளயத்திலே வந்து சேர்ந்தார்கள்.

௩௧ ¶ அப்பொழுது கர்த்தரிடத்திலிருந்து *காற்றுப் புறப்பட்டு, சமுத்திரத்திலிருந்து காடைகளை அடித்துக்கொண்டுவந்து, பாளயத்தின்மேலே, பாளயத்தைச் சுற்றிலும் இந்தப்பக்கம் ஒருநாள் பயணமும் அந்தப்பக்கம் ஒருநாள் பயணமும், தரையின்மேல் இரண்டுமுழ உயர்த்தியுமாய் விழுந்துகிடக்கத் தெளித்தது. *சங். ௱௩௫. ௭.

௩௨ அப்பொழுது சனம் எழும்பி, அன்று பகல்முழுவதும், இராமுழுவதும், மறுநாள் முழுவதும், காடைகளைச் சேர்த்தார்கள்; கொஞ்சமாய்ச் சேர்த்தவன் பதின்கலம் அம்மாத்திரம் சேர்த்தான்; அவைகளைப் பாளயத்தைச் சுற்றிலும் தங்களுக்காகப் பரப்பிப்போட்டார்கள்.

௩௩ *ஆனால் இறைச்சி இன்னம் அவர்கள் பல்லுகள் நடுவே இருக்கையில், கர்த்தருடைய கோபம் அவர்கள் அதைச் சாப்பிட்டுத் தீராததற்குமுன்னே, சனத்திற்குள்ளே மூண்டுகொள்ளுகையால், கர்த்தர் சனத்தை மகா பெரிய வாதையால் அடித்தார். *சங். ௭௮. ௩௰, ௩௧.

௩௪ இச்சையுள்ள சனத்தை அங்கே அடக்கம்பண்ணினதினாலே, அந்த ஸ்தலத்திற்கு இச்சையின் பிரேதக்குழிகளென்று பேரிட்டான்.

௩௫ ¶ சனம் இச்சையின் பிரேதக்குழிகளைவிட்டு, ஆத்சரோத்திற்குப் பயணம் வந்து ஆத்சரோத்திலே தரித்திருந்தது.

## ௰௨. அதிகாரம்.

மோசே கூஷ்சாதியான *பெண்சாதியை விவாகம்பண்ணினபடியினாலே, மிரியாமும் ஆரோனும் அவன் விவாகம்பண்ணின கூஷ்சாதியான பெண்சாதியின் நிமித்தம் அவனுக்கு விரோதமாகப் பேசி, *௨ மோ. ௨. ௨௧.

௨ கர்த்தர் மோசேயைக்கொண்டுமாத்திரம் பேசினாரோ, எங்களைக்கொண்டும் அவர் பேசினதில்லையோ என்றார்கள்; அதைக் கர்த்தர் கேட்டார்.

௩ ஆனால் மோசேயென்கிறவன் பூமியிலிருக்கிற சகல மனிதரைப்பார்க்கிலும் மகா சாதுத்துவமுள்ளவனாயிருந்தான்.

௪ அசுப்பிலே கர்த்தர் மோசேயோடும், ஆரோனோடும், மிரியாம் என்றவளோடும், நீங்கள் மூன்றுபேரும் ஆசரிப்புக்கூடாரத்திற்குப் புறப்பட்டுப் போங்களென்றார்; மூன்றுபேரும் போனார்கள்.

௫ கர்த்தர் மேகத்தூணில் இறங்கி, கூடாரத்தின் வாசலில் நின்று, ஆரோனையும் மிரியாமையும் கூப்பிட்டார்; அவர்கள் இருவரும் போனார்கள்.

௬ அப்பொழுது அவர் சொன்னதாவது: நம்முடைய வார்த்தைகளைக் கேளுங்கள்; உங்களுக்குள்ளே தீர்க்கதரிசி இருந்தால், கர்த்தராகிய நாம் அவனுக்குத் தரிசனையில் நம்மை வெளிப்படுத்துவோம்; சொப்பனத்தில் அவனோடே பேசுவோம்.

௭ நம்முடைய தாசனாகிய மோசே அப்படி அல்ல, *நம்முடைய வீடனைத்திலும் அவன் உண்மையுள்ளவன். *எபி. ௩. ௨.

௮ மறைபொருளாக அல்ல, *முகமுகமாகவும் திருட்டாந்தமாகவும் அவனோடே பேசுகிறோம்; அவன் கர்த்தரின் சாயலைக் காண்கிறான்; இப்பொழுதும் நீங்கள் நம்முடைய தாசனாகிய மோசேக்கு விரோதமாகப் பேசப் பயப்படாதே போனதென்ன என்றார். *௨ மோ. ௩௩. ௰௧. ௫ மோ. ௩௪. ௰.

௯ கர்த்தருடைய கோபம் அவர்கள்மேல் மூண்டது; அவர் போய்விட்டார்.

௰ மேகம் கூடாரத்தைவிட்டு அகன்றுபோயிற்று; இதோ மிரியாம் உறைந்த மழை

Digitized by Google

யின் வெண்மையாய்க் குஷ்டம் பிடித்திருந்தாள்; ஆரோன் மிரியாமைப் பார்த்தான்; இதோ அவள் குஷ்டம்பிடித்தவள்.

௰௧ அப்பொழுது ஆரோன் மோசேயோடே சொன்னதாவது: ஆ, என் ஆண்டவனே, நாங்கள் பயித்தியம் கொண்டு செய்த இந்தப் பாவத்தை எங்கள்மேலே சுமத்தாதிரும்.

௰௨ தன் தாயின் கர்ப்பத்திலிருந்து புறப்படுகையில், பாதி மாம்சம் அழுகி இருக்கிற சாவு பிள்ளையைப்போல, அவள் இராதிருப்பாளாக என்றான்.

௰௩ அப்பொழுது மோசே, ஆ, பராபரனே, அவளைக் குணமாக்குமென்று கர்த்தரை நோக்கிக் கூப்பிட்டான்.

௰௪ அப்பொழுது கர்த்தர் மோசேயுடனே, அவள் தகப்பன் அவள் முகத்திலே காறித்துப்பினதுண்டானால், அவள் ஏழுநாள் வெட்கப்படவேண்டாமோ? அவள் *ஏழுநாள் பாளயத்திற்குப் புறம்பே அடைக்கப்பட்டிருந்து, பிற்பாடு சேர்க்கப்படக்கடவளென்றார். *௩ மோ. ௰. ௩.

௰௫ அப்படியே மிரியாம் ஏழுநாள் பாளயத்திற்குப் புறம்பே அடைக்கப்பட்டிருந்தாள்; மிரியாம் சேர்க்கப்படும்மட்டும் சனம் பயணம்போகாதிருந்தது.

௰௬ பிற்பாடு சனம் ஆத்சரோத்திலிருந்து புறப்பட்டு, பாரான்வனாந்தரத்திலே பாளயம் இறங்கிற்று.

## ௰௩. அதிகாரம்.

கர்த்தர் மோசேயோடே பேசிச் சொன்னதாவது:

௨ நாம் இஸ்ரவேல் புத்திரருக்குக் கொடுக்கும் கானான்தேசத்தைச் சோதித்துப் பார்க்கிறதற்கு மனிதரை அனுப்பு; அவர்களுடைய பிதாக்களின் ஒவ்வொரு கோத்திரத்திலே ஒவ்வொரு பிரபுக்களாகிய மனிதரையே அனுப்பக்கடவீர்களென்றார்.

௩ அப்படியே மோசே கர்த்தருடைய வாக்கின்படியே அவர்களைப் பாரான்வனாந்தரத்திலிருந்து அனுப்பினான்; அந்த மனிதர் எல்லாரும் இஸ்ரவேல் புத்திரரில் தலைவரானவர்கள்.

௪ அவர்கள் நாமங்களாவன: ரூபன் கோத்திரத்திலே சக்கூரின் குமாரன் சம்முவா.

௫ சிமெயோன் கோத்திரத்திலே ஓரியின் குமாரன் சாப்பாத்.

௬ யூதா கோத்திரத்திலே எப்புன்னேயின் குமாரன் காலேப்.

௭ இசஷார் கோத்திரத்திலே யோசேப்பின் குமாரன் இகேயால்.

௮ எப்பிராயீம் கோத்திரத்திலே நூனின் குமாரன் ஓசேயா.

௯ பென்யமீன் கோத்திரத்திலே ரப்பூவின் குமாரன் பல்த்தி.

௰ செபுலோன் கோத்திரத்திலே சோதியின் குமாரன் காதியேல்.

௰௧ யோசேப்பின் கோத்திரத்திற்கடுத்த மனாசே கோத்திரத்திலே சூசின் குமாரன் காதி.

௰௨ தாண் கோத்திரத்திலே கெமல்லியின் குமாரன் அம்மியேல்.

௰௩ ஆசேர் கோத்திரத்திலே மிகவேலின் குமாரன் சேத்தூர்.

௰௪ நவ்தலி கோத்திரத்திலே ஒப்பேசியின் குமாரன் நாகேபி.

௰௫ காத் கோத்திரத்திலே மாகியின் குமாரன் கூவேல்.

௰௬ இவைகள் தேசத்தைச் சோதித்துப் பார்க்க, மோசே அனுப்பின மனிதரின் நாமங்கள்; நூனின் குமாரனாகிய ஓசேயாவுக்கோவென்றால், மோசே யோசுவாவென்று பேரிட்டான்.

௰௭ ¶ அவர்களை மோசே கானான்தேசத்தைச் சோதித்தறிய அனுப்பி, அவர்களோடே சொன்னதாவது: நீங்கள் இப்படித் தெற்காகப்போய், மலைத்தேசத்தில் ஏறி,

௰௮ தேசம் எப்படிக்கொத்தது? அதிலே குடியிருக்கிற சனம் பலத்ததோ? பலமற்றதோ? கொஞ்சமோ? அநேகமோ?

Digitized by Google

௧௯ அது குடியிருக்கிற தேசம் எப்படி இருக்கும்? அது நல்லதோ? ஆகாததோ? அது குடியிருக்கிற ஊர்கள் எப்படியிருக்கும்? அவைகள் பாளயங்களோ? கோட்டைகளோ?

௨௰ நிலம் என்னவாயிருக்கும்? அது புஷ்டியோ, இளப்பமோ? அதில் விருட்சங்கள் உண்டோ, இல்லையோ? என்று பார்த்து, மனத்திடனாயிருந்து, தேசத்தின் கனிகளிலே சிலவற்றை அறுத்துக்கொண்டு வாருங்களென்றான்; அந்நாள்களோவென்றால், திராட்சங்களுடைய முதல் கனிகளின் நாள்களாயிருந்தன.

௨௧ அவர்கள் போயேறி, சீனெய்வனாந்தரம் துவக்கி, ஆமாத்திற்குப்போகிற வழியாகிய ரேகொப்மட்டும், தேசத்தைச் சோதித்துப் பார்த்து,

௨௨ தெற்கேயும் போய், எபிரோன்மட்டும் வந்தார்கள், அங்கே ஏனாக்கின் குமாரராகிய அகீமானும் சேசாயும் தல்மாயும் இருந்தார்கள்; எபிரோனேவெனில், எகிப்தின் பட்டணமாகிய சோவான் கட்டப்பட்ட ஏழு வருஷத்திற்கு முன்னே கட்டப்பட்டது.

௨௩ ¶ பிற்பாடு எஸ்கோல் பள்ளத்தாக்குமட்டும் வந்து, அங்கே ஒரே திராட்சக்குலையுள்ள ஒரு கொடியை அறுத்தார்கள்; அதை இரண்டுபேர் ஒரு தடியிலே தூக்கிக்கொண்டு போனார்கள்; மாதளம்பழங்களிலும் அத்திப்பழங்களிலும் சிலவற்றை அறுத்துக்கொண்டு போனார்கள்.

௨௪ இஸ்ரவேல் புத்திரர் அங்கே அறுத்த திராட்சக்குலையைத்தொட்டு, அவ்விடம் எஸ்கோல்பள்ளத்தாக்கு என்னப்பட்டது.

௨௫ அவர்கள் தேசத்தைச் சோதித்துப் பார்த்து, நாற்பதாம்நாள் முடிவிலே திரும்பி,

௨௬ ¶ பாரான்வனாந்தரத்தில் இருக்கிற காதேசுக்குவந்து, மோசே ஆரோன் இஸ்ரவேல் புத்திரரின் எல்லாச் சபையினண்டையிலும் சேர்ந்து, அவர்களுக்கும் சபை அனைத்திற்கும் மறு செய்தியை அறிவித்து, அவர்களுக்குத் தேசத்தின் கனிகளைக் காண்பித்து,

௨௭ அவனுக்கு விவரித்துச் சொன்னதாவது: நீர் எங்களை அனுப்பின தேசத்திற்கு நாங்கள் போய்வந்தோம்; *அது பாலும் தேனும் ஓடுகிற தேசம்தான்; இது அதினுடைய கனி. * ௨ மோ. ௩. அ.

௨௮ ஆனால் தேசத்திலே குடியிருக்கிற சனம் பலத்ததும், பட்டணங்கள் அரணிப்பானவைகளும் மிகவும் பெரியவைகளுமாயிருக்கின்றன; அங்கே ஏனாக்கின் குமாரரையும் கண்டோம்.

௨௯ ஆமலேக்கியர் தென்புறமான தேசத்திலே குடியிருக்கிறார்கள்; ஏத்தியரும் எபூசியரும் எமோரியரும் மலைச்சீமையிலே குடியிருக்கிறார்கள்; கானானியரோவென்றால் கடலண்டையிலும் யோர்தானண்டையிலும் குடியிருக்கிறார்கள் என்றார்கள்.

௩௰ அப்பொழுது காலேப் மோசேக்கு முன்பாகச் சனத்தை அமர்த்தி, ஏறவே ஏறிப்போய், அதைச் சுதந்தரிக்கக்கடவோம்; ஏனெனில் அதை நாம் கட்டிக்கொண்டு செயிக்கவே செயிப்போமென்றான்.

௩௧ அவனோடேகூட ஏறிப்போய் வந்த மனிதரோவென்றால், நாம் அந்தச் சனத்திற்கு எதிராக ஏறிப்போகக்கூடாது; ஏனெனில் அது நம்மைப்பார்க்கிலும் பலத்திருக்கின்றதென்று சொல்லி,

௩௨ தாங்கள் சோதித்துப்பார்த்த தேசத்திற்கு இஸ்ரவேல் புத்திரருக்குள்ளே அபகீர்த்தியைப் பிறக்கப்பண்ணி, நாங்கள் சோதித்தறியும்படிக்கு, கடந்துவந்த அந்தத் தேசம் தன் குடிகளைப் பட்சிக்கிற தேசமானது; நாங்கள் அதிலே கண்ட சனமெல்லாம் உயர்ந்த மனிதர்.

௩௩ அங்கே இராட்சதர் சந்ததியான ஏனாக்கின் குமாரராகிய இராட்சதரையும் கண்டோம்; நாங்கள் எங்கள் பார்வைக்குக் கிளிகளைப்போல இருந்தோம்; அப்படியே அவர்கள் பார்வைக்கும் இருந்தோம் என்றார்கள்.

Digitized by Google

## ௰௪. அதிகாரம்.

அப்பொழுது சபையெல்லாம் எழும்பிக் கூப்பிட்டு, சனம் அன்று இராத்திரி அழுது கொண்டிருந்தது.

௨ இஸ்ரவேல் புத்திரர் எல்லாரும் மோசேக்கும் ஆரோனுக்கும் விரோதமாய் முறுமுறுத்தார்கள்; சபையெல்லாம் அவர்களோடே சொன்னதாவது: எகிப்துதேசத்திலே செத்துப்போனோமானால் தாவிலை; அல்லது இந்த வனாந்தரத்திலே நாங்கள் செத்தால் தாவிலை.

௩ நாங்கள் பட்டயத்தால் மடியும்படிக்கும், எங்கள் பெண்சாதிகளும் குழந்தைகளும் கொள்ளையாகும்படிக்கும், கர்த்தர் எங்களை அந்தத் தேசத்திற்குக் கொண்டு போகிறதென்ன? எகிப்திற்குத் திரும்புகிறது எங்களுக்கு வாசி அல்லவோ என்று,

௪ ஒருவரோடொருவர், ஒரு தலைவனை வைத்து, எகிப்திற்குத் திரும்புவோம் வாருங்களென்று சொல்லிக்கொண்டார்கள்.

௫ ¶ அப்பொழுது மோசேயும் ஆரோனும் இஸ்ரவேல் புத்திரருடைய சபைக்கூட்டம் எல்லாவற்றிற்குமுன்பாகவும் முகங்குப்புறவிழுந்தார்கள்.

௬ தேசத்தைச் சோதித்துப்பார்த்தவர்களில் நூனின் குமாரனாகிய யோசுவாவும், எப்புன்னேயின் குமாரனாகிய காலேபும், தங்கள் வஸ்திரங்களைக் கிழித்துக்கொண்டு,

௭ இஸ்ரவேல் புத்திரரின் சபையோடெல்லாம் சொன்னதாவது: நாங்கள் சோதித்துப்பார்க்கக் கடந்துவந்ததேசம் மகா நல்லதேசம்.

௮ கர்த்தர் நம்மேலே பிரியமாயிருந்தால், அவர் நம்மைப் பாலும் தேனும் ஓடும் தேசமாகிய அந்தத் தேசத்திலே கொண்டு போய் அதை நமக்குக் கொடுப்பார்.

௯ கர்த்தருக்கு விரோதமாகமாத்திரம் கலகம்பண்ணீர்களாக; *நீங்கள் அந்தத் தேசத்தின் சனத்திற்கும் பயப்படீர்களாக; ஏனெனில் நமக்கு அவர்கள் அப்பத்திற்குச் சரி; அவர்களுடைய நிழல் அவர்கள்மேலிருந்து விலகிற்று; நம்மோடோவென்றால் கர்த்தர் இருக்கிறார்; அவர்களுக்குப் பயப்படீர்களாக என்றார்கள். *௫ மோ. ௨௰. ௩.

௰ ¶ அப்பொழுது சபையெல்லாம் அவர்களைக் கல்லெறியவேண்டுமென்றது; ஆனால் *கர்த்தருடைய மகிமை ஆசரிப்புக்கூடாரத்தில் இஸ்ரவேல் புத்திரர் எல்லாருக்கும் முன்பாகக் காணப்பட்டது. *௨ மோ. ௰௬. ௰.

௰௧ ¶ கர்த்தர் மோசேயோடே சொன்னதாவது: எந்தமட்டும் இந்தச்சனம் நமக்குக் கோபம் உண்டாக்கும்? எந்தமட்டும் அது நாம் அதன் நடுவிலே செய்த சகல அடையாளங்களைக் கண்டும், நம்மை விசுவாசியாதேபோம்?

௰௨ நாம் அதைப் பெருவாரிக்காய்ச்சலால் அடித்து, சுதந்தரத்திற்குப் புறம்பாக்கிப்போட்டு, *உன்னை அதைப்பார்க்கிலும் பருத்ததும் பலத்ததுமான சாதி ஆக்குவோமென்றார். *௨ மோ. ௩௨. ௰.

௰௩ மோசே கர்த்தரோடே சொன்னதாவது: *அப்பொழுது எகிப்தர் அதைக் கேட்பார்கள்; ஏனெனில் உம்முடைய வல்லமையினாலே இந்தச் சனத்தை அவர்கள் நடுவிலிருந்து ஏறிவரப்பண்ணினீர். *௨ மோ. ௩௨. ௰.

௰௪ ஆகையால் கர்த்தராகிய தேவரீர் இந்தச் சனத்தின் நடுவே இருக்கிறதையும், கர்த்தராகிய தேவரீர் முகமுகமாய்த் தரிசனை ஆகிறதையும், உம்முடைய மேகம் இவர்கள்மேல் நிற்கிறதையும், தேவரீர் பகலில் மேகத்தூணிலும் இரவில் அக்கினித்தூணிலும் இவர்கள்முன் நடக்கிறதையும், கேட்டிருக்கிற இந்தத் தேசத்தின் குடிகளோடே அவர்கள் என்ன சொல்லுவார்கள்.

௰௫ ¶ இந்தச் சனத்தை ஒரே மனிதனைப்போலக் கொன்றீரானால், அப்பொழுது உம்முடைய கீர்த்தியைக் கேட்டிருக்கிற புறச்சாதியார்,

Digitized by Google

௰௬ கர்த்தர் அந்தச் சனத்திற்கு ஆணையிட்டிருந்த தேசத்திலே அதைக் கொண்டு

யிலே நின்றிரும்; நான் போகிறேன்; ஒரு வேளை கர்த்தர் வந்து என்னைச் சந்திப்பார்; அவர் எனக்குக் காண்பிக்கிறதை உமக்கு அறிவிப்பேனென்று சொல்லி, ஒரு மேட்டின்மேலே போனான்.

௪ பராபரன் பிலேயாமைச் சந்தித்தார்; அப்பொழுது அவருடனே, நான் ஏழு பலிபீடங்களை ஆயத்தம்பண்ணி, ஒவ்வொரு பலிபீடத்தில் ஒவ்வொரு காளை எருதையும் ஒவ்வொரு ஆட்டுக்கடாவையும் பலியிட்டேன் என்றான்.

௫ அப்பொழுது கர்த்தர் பிலேயாமின் வாயிலே வசனத்தைக் கொடுத்து, நீ பாலாக்கண்டையிலே திரும்பிப்போய், இன்னபடி சொல்லக்கடவாயென்றார்.

௬ அவனண்டைக்குத் திரும்பிப்போனான்; இதோ பாலாக் மோவாபுடைய சகல பிரபுக்களோடுங்கூடத் தன் சர்வாங்கதகனத் தண்டையில் நின்றிருந்தான்.

௭ ¶ அப்பொழுது அவன் தன் வாக்கியத்தை எடுத்துச் சொன்னதாவது: நீ வந்து எனக்காக யாக்கோபைச் சபி; நீ வந்து இஸ்ரவேலை வெறுத்துவிடு என்று மோவாபின் இராசாவாகிய பாலாக் என்னைக் கிழக்குப்பர்வதங்களிலிருக்கிற சூரியாவிலிருந்து அழைத்துவரப்பண்ணினான்.

௮ பராபரன் சபிக்காதவனை நான் சபிப்பதெப்படி? கர்த்தர் வெறுக்காதவனை நான் வெறுப்பதெப்படி?

௯ ஏனெனில் நான் கல்மலைகளின் கொடுமுடியில் இருந்து அவனைக் கண்டு, மேடுகளிலிருந்து அவனைப் பார்த்துக்கொண்டிருக்கிறேன்; இதோ அந்தச் சனம் சாதிகளோடே கலவாமல் தனியே வாசமாயிருக்கும்.

௰ யாக்கோபின் *தூளையும் இஸ்ரவேலுடைய கால்பங்கின் இலக்கத்தையும் எண்ணுபவன் யார்? என் ஆத்துமா நீதிமான்களின் மரணமாய் மரித்து, என் முடிவு அவர்கள் முடிவைப்போல இருக்கக்கடவதென்றான். * க மோ. உ௮. ௰௪.

௰௧ ¶ அப்பொழுது பாலாக் பிலேயாமுடனே, நீ எனக்கு என்னசெய்தாயிருக்கிறாய்? என் சத்துருக்களைச் சபிக்க உன்னை அழைப்பித்தேன்; ஆனால் இதோ அவர்களை ஆசீர்வதிக்கவே ஆசீர்வதித்தாயென்றான்.

௰௨ அவன் பிரதியுத்தாரமாக, கர்த்தர் என் வாயிலே கொடுத்ததையே சொல்ல, நான் கவனமாயிருக்கவேண்டாமோ என்றான்.

௰௩ ¶ அப்பொழுது பாலாக் அவனுடனே, நீ அவர்களைக் காணத்தக்க வேறொரு இடத்திற்கு என்னோடேகூட நடந்துவா; அங்கே அவர்களையெல்லாம் காணாமல் அவர்கள் கடைசிப் பாளயத்தைமாத்திரம் காண்பாய்; அங்கேயிருந்து எனக்காக அவர்களைச் சபி என்று சொல்லி,

௰௪ அவனைப் பிஸ்காவின் கொடுமுடியில் இருக்கிற சோப்பீம் வெளியிலே அழைத்துக்கொண்டுபோய், ஏழு பலிபீடங்களைக் கட்டினான்; ஒவ்வொரு பீடத்தில் ஒவ்வொரு காளை எருதையும் ஒவ்வொரு ஆட்டுக்கடாவையும் பலியிட்டான்.

௰௫ அவன் பாலாக்குடனே, இங்கே உம்முடைய சர்வாங்கதகனத்தண்டையிலே நின்றிரும்; நான் அங்கே அவரைச் சந்தித்துக்கொள்ளப் போவேனென்றான்.

௰௬ கர்த்தர் பிலேயாமைச் சந்தித்து, வசனத்தை அவன் வாயிலே கொடுத்து, நீ பாலாக்கண்டையிலே திரும்பிப்போய், இன்னபடி சொல்லக்கடவாயென்றார்.

௰௭ அவனண்டை அவன் வருகிறபொழுது, இதோ அவன் மோவாபின் பிரபுக்களோடுங்கூடத் தன்னுடைய சர்வாங்கதகனத் தண்டையிலே நின்றிருந்தான்; பாலாக் அவனுடனே, கர்த்தர் சொன்னதென்னவென்றான்.

௰௮ ¶ அப்பொழுது அவன் தன் வாக்கியத்தை எடுத்துச் சொன்னதாவது: பாலாகே, எழுந்து கேளும்; சிப்போரின் குமாரனே, எனக்குச் செவிகொடும்.

௰௯ *பராபரன் பொய்சொல்ல, ஒரு மனிதன் அல்ல; சொன்னது தமக்கு மனஸ்தாபமாயிருக்க, அவர் ஒரு மனுப்புத்திரன்

Digitized by Google

அல்ல; அவர் சொல்லியும் செய்யாதிருப்பாரோ? அவர் வசனித்தும் அதை நிறைவேற்றாதிருப்பாரோ? * ௧ சாமு. ௰௫. ௨௯.

௨௰ இதோ ஆசீர்வதிக்கக் கட்டளை பெற்றேன்; அவர் ஆசீர்வதிக்கிறார்; அதை நான் திருப்பக்கூடாது.

௨௧ யாக்கோபிலே வருத்தம் தெரிகிறதுமில்லை; இஸ்ரவேலிலே பிரயாசம் காணப்படுகிறதும் இல்லை; அவர்களுடைய பராபரனாகிய கர்த்தர் அவர்களோடிருக்கிறார்; இராசாவின் கெம்பீரம் அவர்களிடத்தில் இருக்கின்றது.

௨௨ பராபரன் அவர்களை எகிப்திலிருந்து புறப்படப்பண்ணினார்; காண்டாமிருகத்துக்கொத்த சத்துவம் அவர்களுக்கு இருக்கின்றது.

௨௩ ஏனெனில் யாக்கோபுக்கு விரோதமாகத்தக்க நிமித்தம்பார்க்குதலுமில்லை; இஸ்ரவேலுக்கு விரோதமாகத்தக்க குறிசொல்லுதலுமில்லை; பராபரன் செய்தது ஏதென்று கொஞ்சக்காலத்திலே யாக்கோபையும்இஸ்ரவேலையும்குறித்துச் சொல்லப்படும்.

௨௪ இதோ சனம் துஷ்டசிங்கத்தைப்போல எழும்பி, இளஞ்சிங்கத்தைப்போல உயரும்; அது எடுத்த இரையைப் பட்சித்து, வெட்டுண்டவர்களின் இரத்தத்தைக் குடியாதிருக்கும்மட்டும் படுத்துக்கொள்ளாதென்றான்.

௨௫ ¶ அப்பொழுது பாலாக் பிலேயாமுடனே, நீ அதைச் சபிக்கவே சபிக்கவும் வேண்டாம்; ஆசீர்வதிக்கவே ஆசீர்வதிக்கவும்வேண்டாமென்றான்.

௨௬ பிலேயாம் பாலாக்குக்குப் பிரதியுத்தாரமாக கர்த்தர் சொல்லும்படியெல்லாம் செய்வேனென்று உம்மோடே நான் சொல்லவில்லையோ என்றான்.

௨௭ ¶ அப்பொழுது பாலாக் பிலேயாமுடனே, வா, வேறொரு இடத்திற்கு உன்னை அழைத்துக்கொண்டுபோவேன்; நீ அங்கேயிருந்து எனக்காக அதைச் சபிக்க, ஒருவேளை பராபரனுடைய பார்வைக்குச் செவ்வையாயிருக்கும் என்று சொல்லி,

௨௮ அவனை வனாந்தரத்திற்கு எதிராயிருக்கிற பேயோரின் கொடுமுடிக்கு அழைத்துக்கொண்டு போனான்.

௨௯ அப்பொழுது பிலேயாம் பாலாக்குடனே, இங்கே எனக்கு ஏழு பலிபீடங்களைக் கட்டி, இங்கே எனக்கு ஏழு காளை எருதையும் ஏழு ஆட்டுக்கடாவையும் ஆயத்தமாக நிறுத்தும் என்றான்.

௩௰ பிலேயாம் சொன்னபடி பாலாக் செய்தான்; அப்பொழுது ஒவ்வொரு பீடத்தில் ஒவ்வொரு காளை எருதையும் ஒவ்வொரு ஆட்டுக்கடாவையும் பலியிட்டான்.

## ௨௪. அதிகாரம்.

இஸ்ரவேலை ஆசீர்வதிக்கிறது கர்த்தரின் பார்வைக்கு ஏற்றிருக்கும் என்றதை பிலேயாம் கண்டபொழுதோவெனில், அவன் முந்திச் செய்துவந்ததுபோல, நிமித்தங்களைச் சந்தித்துக்கொள்ளப் போகாமல், தன் முகத்தை வனாந்தரத்திற்கு நேராகத் திருப்பி,

௨ தன் கண்களை ஏறெடுத்து, இஸ்ரவேல் தன் கோத்திரங்களின்படியே தங்கியிருக்கிறதைப் பார்த்தான்; அப்பொழுது பராபரனுடைய ஆவி அவன்மேல் வந்ததினால்,

௩ அவன் தன் வாக்கியத்தை எடுத்துச் சொன்னது: பேயோரின் குமாரனாகிய பிலேயாம் சொல்லுகிறதென்ன? கண்தெளிவிக்கப்பட்ட புருஷன் சொல்லுகிறதென்ன?

௪ பராபரனுடைய வார்த்தைகளைக் கேட்டு, சர்வத்திற்கும் வல்லவரின் தரிசனத்தைக் கண்டு, தாழவிழும்பொழுது, கண்கள் திறக்கப்படுகிறவனே சொல்லுகிறதென்னவெனில்,

௫ யாக்கோபே, உன் கூடாரங்களும், இஸ்ரவேலே, உன் வாசஸ்தலங்களும், எத்தனை வடிப்பமாயிருக்கின்றன?

௬ பரவிப்போகிற ஆறுகளைப்போலவும், நதி அருகான தோட்டங்களைப்போலவும்,

Digitized by Google

கர்த்தர் நாட்டின சந்தனமரங்களைப்போலவும், தண்ணீர்கள் ஓரத்தில் இருக்கிற கேதுருக்களைப்போலவும் இருப்பார்கள்.

௭ அவர்களுடைய தொட்டிகளிலிருந்து தண்ணீர் பாயும்; அவர்கள் வித்துத் திரள் நீர்ப்பாய்ச்சலாயிருக்கும்; அவர்களுடைய இராசா ஆகாகைப்பார்க்கிலும் உயருவான்; அவர்கள் இராச்சியம் மேன்மையாயிருக்கும்.

௮ பராபரன் அவர்களை எகிப்திலிருந்து புறப்படப்பண்ணினார்; காண்டாமிருகத்துக்கொத்த சத்துவங்கள் அவர்களுக்கு இருக்கின்றது; அவர்கள் தங்கள் சத்துருக்களாகிய சாதிகளைப் பட்சித்து, அவர்கள் எலும்புகளை நொறுக்கி, அவர்களைத் தங்கள் அம்புகளாலே எய்வார்கள்.

௯ சிங்கத்திற்கும் துஷ்டசிங்கத்திற்குமே ஒப்பாய் மடங்கிப் படுத்துக்கொண்டார்கள், அவர்களை எழுப்புபவன் யார்? உங்களை ஆசீர்வதிக்கிறவன் ஆசீர்வதிக்கப்பட்டவன்; உங்களைச் சபிக்கிறவன் சபிக்கப்பட்டவனென்றான்.

௰ ¶ அப்பொழுது பாலாக் பிலேயாமின் மேல் கோபம்மூண்டவனாகிக் கையோடே கை தட்டி, பிலேயாமோடே சொன்னதாவது: என் சத்துருக்களைச் சபிக்க உன்னை அழைத்தனுப்பினேன்; நீயோவெனில் இதோ இந்த மூன்றுமுறையும் அவர்களை ஆசீர்வதிக்கவே ஆசீர்வதித்தாய்.

௰௧ இப்பொழுதும் உன்னிடத்திற்கு ஓடிப்போ; உன்னைக் கனம்பண்ணவே பண்ணுவேனென்றேன்; ஆனால் இதோ கர்த்தர் உனக்குக் கனம்வராதபடிக்குப் பண்ணினாரென்றான்.

௰௨ அப்பொழுது பிலேயாம் பாலாக்கோடே சொன்னதாவது: பாலாக் எனக்குத் தன் வீடுநிறைய வெள்ளியும் பொன்னும் கொடுத்தாலும் நான் என் மனதாய் நன்மையாகிலும் தீமையாகிலும் செய்கிறதற்குக் கர்த்தரின் கட்டளையை மீறக்கூடாது; கர்த்தர் சொல்வதையே சொல்லுவேனென்று,

௰௩ நீர் என்னண்டைக்கு அனுப்பின உம்முடைய தூதுபதிகளோடும் நான் சொல்லவில்லையோ?

௰௪ இப்பொழுதும் இதோ நான் என் சனத்தண்டைக்குப் போய்விடுகிறேன்; பிற்காலத்தில் இந்தச் சனம் உம்முடைய சனத்திற்குச் செய்வது இன்னதென்று உமக்கு யோசனையாய்ச் சொல்லுவேன் வாருமென்றான்.

௰௫ ¶ அவன் தன் வாக்கியத்தை எடுத்துச் சொன்னது: பேயோரின் குமாரன் பிலேயாம் சொல்லுகிறதென்ன? கண்தெளிவிக்கப்பட்ட புருஷன் சொல்லுகிறதென்ன?

௰௬ பராபரனுடைய வார்த்தைகளைக் கேட்டு, உன்னதமானவர் அளித்த அறிவை அறிந்து, சர்வத்திற்கும் வல்லவரின் தரிசனத்தைக் கண்டு, தாழவிழுகையில், கண்கள் திறக்கப்படுகிறவனே சொல்லுகிறதென்னவெனில்,

௰௭ அவரைக் காண்பேன்; ஆனால் இப்பொழுது அல்ல, அவரைப் பார்ப்பேன்; ஆனால் சமீபத்திலல்ல, ஒரு நட்சத்திரம் யாக்கோபிலிருந்து உதித்து, ஒரு செங்கோல் இஸ்ரவேலிலிருந்து எழும்பி, மோவாபியரின் எல்லைகளை நொறுக்கி, சேத் புத்திரரையெல்லாம் நிர்மூலமாக்கும்.

௰௮ ஏதோம் அவனுக்குச் சுதந்தரமாகி, சேயீர் தன் சத்துருக்களுக்குச் சுதந்தரமாய்ப் போம்; இஸ்ரவேல் பலம்செய்யும்.

௰௯ *ஆளுகிறவர் யாக்கோபிலிருந்து வந்து, பட்டணங்களில் மீதியானதை அழிப்பாரென்றான். *மிகா. ௫. ௧.

௨௰ ¶ அவன் அமலேக்கைப் பார்த்து, தன் வாக்கியத்தை எடுத்து, அமலேக் சாதிகளில் முந்தி எழும்பினவன், ஆனால் அவன் பின்சந்ததி முழுவதும் அழியுமென்றான்.

௨௧ ¶ அவன் கேனியனைப் பார்த்து, தன் வாக்கியத்தை எடுத்து, உன் வாசஸ்தலம் அரணிப்பானது; கல்மலையில் உன் கூட்டைக் கட்டிப்போட்டாய்.

Digitized by Google

உஉ ஆகிலும் கேனியன் அழிந்துபோவான்; அசூர் உன்னைச் சிறைபிடித்துக்கொண்டு போக, எத்தனைகாள் செல்லுமென்றான்.
உங பின்னையும் அவன் தன் வாக்கியத்தை எடுத்து, ஆ, இதைப் பராபரன் செய்யும் பொழுது, உயிரோடிருப்பவன் யார்?
உச கித்தீமின் கரைதுறையிலிருந்து கப்பல்கள் வந்து, அசூலரச் சிறுமைப்படுத்தி, ஏபெரையும் சிறுமைப்படுத்தும்; ஆனால் அவனும் அழிந்துபோவான் என்றான்.
உரு ¶ பிற்பாடு பீலேயாம் எழுந்து புறப்பட்டு, தன்னிடத்திற்குத் திரும்பினான்; பாலாக்கும் தன் வழியே போனான்.

## உரு. அதிகாரம்.

இஸ்ரவேல் சித்தீமிலே தங்கியிருந்தது; அங்கே சனம் மோவாப் குமாரத்திகளோடே வேசித்தனம்பண்ணத் துவக்கிற்று.
உ *இவர்கள் சனத்தைத் தங்கள் தேவர்களுடைய பலிகளின் விருந்துகளுக்கு அழைத்தார்கள்; சனம் போய்ப் புசித்து, அவர்கள் தேவர்களைப் பணிந்துகொண்டது.
*உ மோ. ௩௪. ௰௬.
௩ இஸ்ரவேல் பேயோர் மலை பாகாலுக்கு உடந்தையாயிற்று; ஆகையால் இஸ்ரவேலின்மேலே கர்த்தருடையகோபம்மூண்டது.
௪ கர்த்தர் மோசேயுடனே, நீ சனத்தின் தலைவரையெல்லாம் கூட்டிக்கொண்டு, கர்த்தருடைய கோபத்தின் உக்கிரம் திரும்ப இஸ்ரவேலைவிட்டு நீங்கும்படிக்கு, அப்படிக்கொத்தவர்களைக் கர்த்தருக்காகச் சூரியனுக்கு எதிரே தூக்கிவிடு என்றார்.
௫ அப்படியே மோசே இஸ்ரவேலின் நியாயாதிபதிகளோடே நீங்கள், அவரவர் பேயோர்மலை பாகாலுக்கு உடந்தையான உங்கள் மனிதரைக் கொன்றுவிடுங்கள் என்றான்.
௬ அப்பொழுது இதோ மோசேயின் கண்களுக்கும் இஸ்ரவேல் புத்திரருடைய எல்லாச் சபையின் கண்களுக்கும்முன்பாகவும், இவர்கள் ஆசரிப்புக்கூடாரத்தின் வாசலுக்குமுன்பாக அழும்போதும், இஸ்ரவேல் புத்திரரில் ஒருவன் ஒரு மீதியானிச்சியைத் தன் சகோதரரிடத்திலே அழைத்துக்கொண்டு வந்தான்.
௭ அதை ஆசாரியனாகிய ஆரோனின் குமாரனான எலெயாசாரின் மகன் பினெகாஸ் கண்டபொழுது, அவன் நடுச்சபையிலிருந்து எழுந்து, ஒரு ஈட்டியைத் தன் கையிலே பிடித்து,
௮ இஸ்ரவேல் மனிதன் வேசித்தனம்பண்ணும் மூலையிலே அவன் பின்னாலே போய், இஸ்ரவேல் மனிதனும் அந்த ஸ்திரியுமாகிய இருவரையும் ஈட்டி அவள் வயிற்றில் உருவிப்போக அதினாலே குத்திப்போட்டான்; அப்பொழுது இஸ்ரவேல் புத்திரரிலுண்டான வாதை நின்றுபோயிற்று.
௯ அந்த வாதையால் செத்தவர்கள் இருபத்து நாலாயிரம்பேராயிருந்தார்கள்.
௰ ¶ கர்த்தர் மோசேயோடே சொன்னதாவது:
௰௧ நாம் நம்முடைய எரிச்சலில் இஸ்ரவேல் புத்திரரை நிர்மூலம் ஆக்காதபடிக்கு, ஆசாரியனாகிய ஆரோனின் குமாரனான எலெயாசாரின் மகன் பினெகாஸ், அவர்கள் நடுவில் நமக்காகப் பத்திவயிராக்கியம் காண்பித்ததினாலே, இஸ்ரவேல் புத்திரர்மேல் உண்டான நம்முடைய உக்கிரத்தைத் திருப்பினான்.
௰௨ ஆகையால் இதோ நாம் அவனுக்கு நம்முடைய சமாதானத்தின் உடம்படிக்கையைக் கட்டளையிடுகிறோம்.
௰௩ அவன் தன் பராபரனுக்காகப் பத்திவயிராக்கியம் காண்பித்து, இஸ்ரவேல் புத்திரருக்காகப் பாவநிவிர்த்தி உண்டாக்கினபடியினாலே, அவனுக்கும் அவனுக்குப்பிற்பாடு அவன் வித்திற்கும் நித்திய ஆசாரிய பட்டத்தின் உடம்படிக்கை உண்டாயிருக்குமென்று சொல்லென்றார்.
௰௪ மீதியானிச்சியோடேகூடக் குத்துண்டுசெத்த இஸ்ரவேல் மனிதனுடைய பேர் சலுவின் குமாரன் சிம்றி, அவன் சிமெயோ



Digitized by Google

யியரின் தகப்பன் வீட்டில் ஒரு பிரபுவா யிருந்தவன்.

௰௫ குத்துண்ட மீதியான் சாதியான ஸ்திரியின் பேரோவெனில், சூரின் குமாரத்தி கஸ்பி; இவன் மீதியானியரின் தகப்பன் வீட்டாரான சனசதளங்களின் தலைவனாயிருந்தான்.

௰௬ ¶ கர்த்தர் மோசேயோடே பேசிச் சொன்னதாவது:

௰௭ மீதியானியரை இறுகப்பிடித்து, அவர்களை வெட்டிப்போடுங்கள்.

௰௮ ஏனென்றால் பேயோரின் சம்மதியிலும் பேயோர் காரியத்தின் நிமித்தம் உண்டான வாதையின் நாளிலே, குத்துண்ட அவர்கள் சகோதரியாகிய கஸ்பி என்ற மீதியான் பிரபுவினுடைய குமாரத்தியின் சம்மதியிலும், அவர்கள் உங்களுக்குச் செய்த தங்கள் சர்ப்பனைகளினாலே, உங்களை மோசம்போக்கி இறுகப்பிடித்தார்களென்றார்.

## உ௬. அதிகாரம்.

அந்த வாதைக்குப் பிற்பாடு சம்பவித்ததேதென்றால், கர்த்தர் மோசேயோடும் ஆசாரியனாகிய ஆரோனின் குமாரன் எலெயாசாரோடும் சொன்னதாவது:

௨ இஸ்ரவேல் புத்திரரின் சகல சபையான அவர்கள் பிதாக்களுடைய வீட்டிலே, இருபதுவயதுமுதல்கொண்டிருந்து இஸ்ரவேலிலே யுத்தத்திற்குப் புறப்படத்தக்கவர்களையெல்லாம் தொகை ஏற்றுங்களென்றார்.

௩ அப்பொழுது மோசேயும் ஆசாரியனாகிய எலெயாசாரும் எரிகோவின் கிட்டஇருக்கும் யோர்தானுக்கு இப்பாலே மோவாபின் சமனான வெளிகளிலே அவர்களோடே பேசி,

௪ கர்த்தர் மோசேக்கும் எகிப்துதேசத்திலிருந்து புறப்பட்ட இஸ்ரவேல் புத்திரருக்கும் கற்பித்திருக்கிறபடியே, இருபதுவயதுமுதல்கொண்டிருக்கிறவர்களை எண்ணுங்கள் என்றார்கள்.

௫ ¶ ரூபன் இஸ்ரவேலின் முதல்பேறானவன்; அவனுடைய குமாரர், ஆனோக்கியரின் வம்சத்தகப்பன் ஆனோக்கும், பலூவியரின் வம்சத்தகப்பன் பலூவும்,

௬ எத்சிரோனியரின் வம்சத்தகப்பன் எத்சிரோனும், கற்மியரின் வம்சத்தகப்பன் கற்மியும்தானே.

௭ இவைகளே ரூபனியரின் வம்சங்கள்; அவர்களில் இலக்கம்பார்க்கப்பட்டவர்கள், நாற்பத்துமூவாயிரத்து எழுநூற்று முப்பதுபேர்.

௮ பலூவின் பிள்ளைகளில் ஒருவன் எலியாப் என்றவன்.

௯ எலியாபின் குமாரர் நேமுவேல், தாத்தான், அபீராம், என்றவர்கள்; கர்த்தருக்கு விரோதமாகச் சண்டைபண்ணுகிற கோருகின் கூட்டாளிகளாகி, மோசேக்கும் ஆரோனுக்கும் விரோதமாகச் சண்டைபண்ணின தாத்தானும் அபீராமும் என்ற சபையில் அழைக்கப்பட்டவர்கள் இவர்கள்தான்.

௰ பூமி தன் வாயைத் திறந்து, அவர்களையும் கோருகையும் விழுங்கினதினாலும், அக்கினி இருநூற்று ஐம்பதுபேரைப் பட்சித்ததினாலும், அந்தக் கூட்டம் செத்து ஒரு அடையாளமாயிற்று.

௰௧ கோருகின் குமாரரோவெனில் சாவாதிருந்தார்கள்.

௰௨ ¶ சிமெயோனுடைய குமாரரின் வம்சங்களாவது: நேமுவேலின் சந்ததியான நேமுவேலரின் வம்சமும், யாமீனின் சந்ததியான யாமீனியரின் வம்சமும், யாகீனின் சந்ததியான யாகீனியரின் வம்சமும்,

௰௩ சேராகின் சந்ததியான சேராகியரின் வம்சமும், சவுலின் சந்ததியான சவுலியரின் வம்சமும்தானே.

௰௪ இவைகளே சிமெயோனியரின் வம்சங்கள், அவர்கள் இருபத்திராயிரத்து இருநூறுபேர்.

௰௫ ¶ காத்துடைய குமாரரின் வம்சங்களாவது: செப்போனின் சந்ததியான செப்போனியரின் வம்சமும், ஆகியின் சந்ததி



Digitized by Google

யான ஆகியரின் வம்சமும், சூனியின் சந்ததியான சூனியரின் வம்சமும்,

௧௬ ஒஸ்னியின் சந்ததியான ஒஸ்னியரின் வம்சமும், ஏரியின் சந்ததியான ஏரியின் வம்சமும்,

௧௭ ஆரோதின் சந்ததியான ஆரோதியரின் வம்சமும், அரெலியின் சந்ததியான அரெலியரின் வம்சமும்தானே.

௧௮ இவைகளே காத் புத்திரரின் வம்சங்கள்; அவைகளில் இலக்கம்பார்க்கப்பட்டவர்கள், நாற்பதினாயிரத்து ஐந்நூறுபேர்.

௧௯ ¶ யூதாவின் குமாரரான ஏரும், ஓனானும் கானான்தேசத்திலே செத்தார்கள்.

௨௰ யூதாவுடைய மற்றக் குமாரரின் வம்சங்களாவது: சேலாவின் சந்ததியான சேலாவியரின் வம்சமும், பேரேசின் சந்ததியான பேரேசியரின் வம்சமும், சேராகின் சந்ததியான சேராகியரின் வம்சமும்தானே.

௨௧ பேரேசுடைய குமாரரின் வம்சங்களாவெனில், எஸ்ரோனின் சந்ததியான எஸ்ரோனியரின் வம்சமும், ஆமூலின் சந்ததியான ஆமூலியரின் வம்சமும்தானே.

௨௨ இவைகளே யூதாவின் வம்சங்கள்; அவைகளில் இலக்கம்பார்க்கப்பட்டவர்கள், எழுபத்தாறாயிரத்து ஐந்நூறுபேர்.

௨௩ ¶ இசக்காருடைய குமாரரின் வம்சங்களாவது: தோலாவின் சந்ததியான தோலாவியரின் வம்சமும், பூவாவின் சந்ததியான பூவாவியரின் வம்சமும்,

௨௪ யாசூபின் சந்ததியான யாசூபியரின் வம்சமும், சிம்ரோனின் சந்ததியான சிம்ரோனியரின் வம்சமும்தானே.

௨௫ இவைகளே இசக்காரின் வம்சங்கள்; அவைகளில் இலக்கம்பார்க்கப்பட்டவர்கள், அறுபத்து நாலாயிரத்து முந்நூறுபேர்.

௨௬ ¶ செபுலோனுடைய குமாரரின் வம்சங்களாவது: சேரேதின் சந்ததியான சேரேதியரின் வம்சமும், ஏலோனின் சந்ததியான ஏலோனியரின் வம்சமும், யாலேயேலின் சந்ததியான யாலேயேலியரின் வம்சமும்தானே.

௨௭ இவைகளே செபுலோனியரின் வம்சங்கள்; அவைகளில் இலக்கம்பார்க்கப்பட்டவர்கள் அறுபதினாயிரத்து ஐந்நூறுபேர்.

௨௮ ¶ யோசேப்புடைய குமாரரான மனாசே, எப்பிராயீம் என்றவர்களின் வம்சங்களாவது:

௨௯ மனாசேயினுடைய குமாரரின் வம்சங்கள் ஏதெனில், மாகீரின் சந்ததியான மாகீரியரின் வம்சமும், மாகீர் பெற்ற கிலெயாதின் சந்ததியான கிலெயாதியரின் வம்சமும்,

௩௰ கிலெயாத் பெற்ற இயேசேரின் சந்ததியான இயேசேரியரின் வம்சமும், ஏலேக்கின் சந்ததியான ஏலேக்கியரின் வம்சமும்,

௩௧ அஸ்ரியேலின் சந்ததியான அஸ்ரியேலரின் வம்சமும், சேகேமின் சந்ததியான சேகேமியரின் வம்சமும்,

௩௨ செமீதாவின் சந்ததியான செமீதாவியரின் வம்சமும், ஏப்பேரின் சந்ததியான ஏப்பேரியரின் வம்சமும்தானே.

௩௩ ஏப்பேரின் குமாரனான செலாப்பெயாத்திற்கோவெனில், குமாரர் இல்லாமல், குமாரத்திகள்மாத்திரம் இருந்தார்கள்; இவர்கள் நாமங்கள், மக்லாள், நோவாள், ஓக்லாள், மில்க்காள், திற்சாள் என்பன.

௩௪ இவைகளே மனாசேயின் வம்சங்கள்; அவைகளில் இலக்கம்பார்க்கப்பட்டவர்கள் ஐம்பத்தீராயிரத்து எழுநூறுபேர்.

௩௫ ¶ எப்பிராயீமுடைய குமாரரின் வம்சங்களாவது: சூத்தெலாகின் சந்ததியான சூத்தெலாகியரின் வம்சமும், பெகேரின் சந்ததியான பெகேரியரின் வம்சமும், தாகானின் சந்ததியான தாகானியரின் வம்சமும்,

௩௬ சூத்தெலாக் பெற்ற ஏரானின் சந்ததியான ஏரானியரின் வம்சமும்தானே.

௩௭ இவைகளே எப்பிராயீம் புத்திரரின் வம்சங்கள்; அவைகளில் இலக்கம்பார்க்கப்பட்டவர்கள் முப்பத்தீராயிரத்து ஐந்நூறுபேர்; இவைகளே யோசேப் புத்திரரின் வம்சங்கள்.



Digitized by Google

௩௮ ¶ பென்யமீனுடைய குமாரரின் வம்சங்களாவது: பேலாவின் சந்ததியான பேலாவியரின் வம்சமும், அஸ்பேலின் சந்ததியான அஸ்பேலியரின் வம்சமும், அகிராமின் சந்ததியான அகிராமியரின் வம்சமும்,

௩௯ சூப்பாமின் சந்ததியான சூப்பாமியரின் வம்சமும், ஊப்பாமின் சந்ததியான ஊப்பாமியரின் வம்சமும்,

௪௰ பேலாப் பெற்ற ஆரேதின் சந்ததியான ஆரேதியரின் வம்சமும், நாமானின் சந்ததியான நமானியரின் வம்சமும்தானே.

௪௧ இவைகளே பென்யமீன் புத்திரரின் வம்சங்கள்; அவைகளில் இலக்கம்பார்க்கப்பட்டவர்கள் நாற்பத்தையாயிரத்து அறுநூறுபேர்.

௪௨ ¶ தாணுடைய குமாரரின் வம்சங்கள்; சூகாமின் சந்ததியான சூகாமியரின் வம்சம்தானே; இவைகள் தாணின் வம்சங்கள்.

௪௩ சூகாமியரின் வம்சங்களில் இலக்கம்பார்க்கப்பட்டவர்கள் எல்லாரும் அறுபத்துநாலாயிரத்து நானூறுபேர்.

௪௪ ¶ ஆசேருடைய குமாரரின் வம்சங்களாவது: இம்னாவின் சந்ததியான இம்னாவியரின் வம்சமும், இஸ்வியின் சந்ததியான இஸ்வியரின் வம்சமும், பெரீயாவின் சந்ததியான பெரீயாவியரின் வம்சமும்,

௪௫ பெரீயா பெற்ற ஏபேரின் சந்ததியான ஏபேரியரின் வம்சமும், மல்கியேலின் சந்ததியான மல்கியேலியரின் வம்சமும்தானே.

௪௬ ஆசேருடைய குமாரத்தியின்பேர் சாராள்.

௪௭ இவைகளே ஆசேர் புத்திரரின் வம்சங்கள்; அவைகளில் இலக்கம்பார்க்கப்பட்டவர்கள், ஐம்பத்து மூவாயிரத்து நானூறுபேர்.

௪௮ ¶ நப்தலியினுடைய குமாரரின் வம்சங்களாவது: யாத்சேயேலின் சந்ததியான யாத்சேயேலியரின் வம்சமும், கூனியின் சந்ததியான கூனியரின் வம்சமும்,

௪௯ எத்சேரின் சந்ததியான எத்சேரியரின் வம்சமும், சில்லேமின் சந்ததியான சில்லேமியரின் வம்சமும்தானே.

௫௰ இவைகளே நப்தலியின் வம்சங்கள்; அவைகளில் இலக்கம்பார்க்கப்பட்டவர்கள், நாற்பத்தையாயிரத்து நானூறுபேர்.

௫௧ ¶ இஸ்ரவேல் புத்திரரில் இலக்கம்பார்க்கப்பட்ட இவர்கள் அறுலட்சத்தோராயிரத்து எழுநூற்று முப்பதுபேராயிருந்தார்கள்.

௫௨ ¶ கர்த்தர் மோசேயோடே பேசிச் சொன்னதாவது:

௫௩ இவர்களுக்குத் தேசம் பேர்களின் இலக்கத்திற்குத்தக்கதாய்ச் சுதந்தரமாகப் பங்கிடப்படக்கடவது.

௫௪ அநேகருக்கு அநேகமும் கொஞ்சமானவர்களுக்குக் கொஞ்சமுமாய், சுதந்தரமாகக் கொடுப்பாயாக; அவர்களில் எண்ணப்பட்டவர்களின் இலக்கத்திற்குத்தக்கதாக அவரவர்களுக்கு அவரவர்கள் சுதந்தரம் கொடுக்கப்படக்கடவது.

௫௫ ஆகிலும் சீட்டுகளைப் போட்டு, தேசம் பங்கிடப்படக்கடவது; தங்கள் பிதாக்களுடைய கோத்திரங்களுக்கு இருக்கும் நாமங்களின்படியே சுதந்தரிக்கக்கடவர்கள்.

௫௬ அநேகமானவர்களுக்கும், கொஞ்சமானவர்களுக்கும் அவர்களுடைய சுதந்தரங்கள் சீட்டுகள் விழுகிறபடியே பங்கிடப்படுவதாகவென்றார்.

௫௭ ¶ இலக்கம்பார்க்கப்பட்ட இலேவியரின் வம்சங்களாவது: கெர்சோனின் சந்ததியான கெர்சோனியரின் வம்சமும், கோகாத்தின் சந்ததியான கோகாத்தியரின் வம்சமும், மெராரியின் சந்ததியான மெராரியரின் வம்சமும்,

௫௮ இலேவியின் மற்ற வம்சங்களாகிய லீப்னீயரின் வம்சமும், எபிரோனியரின் வம்சமும், மகேலியரின் வம்சமும், மூசியரின் வம்சமும், கொராகியரின் வம்சமும்தானே; கோகாத் அம்ராமைப் பெற்றான்.

௫௯ அம்ராமுடைய பெண்சாதியின் பேர் யோகெபேத்; அவள் இலேவிக்கு எகிப்



Digitized by Google

திலே பிறந்த குமாரத்தி; அவள் அம்ராமுக்கு ஆரோனையும், மோசேயையும் அவர்கள் சகோதரியான மிரியாமையும் பெற்றாள்.

௬௰ ஆரோனுக்கு நாதாபும், அபியூவும், எலெயாசரும், இத்தாமாரும் பிறந்தார்கள்.

௬௧ ஆனால் நாதாபும், அபியூவும் அந்நிய அக்கினியைக் கர்த்தருக்குமுன்பாகக் கொண்டுவருகிறபொழுது, செத்துப்போனார்கள்.

௬௨ அவர்களில் ஒருமாதம்முதல்கொண்டிருந்து இலக்கம்பார்க்கப்பட்ட ஆண்சாதியானவர்கள் எல்லாரும் இருபத்து மூவாயிரம்பேர்; ஏனென்றால் இஸ்ரவேல் புத்திரரின் நடுவே அவர்களுக்குச் சுதந்தரம்கொடுக்கப்படாதபடியினாலே, அவர்கள் இஸ்ரவேல் புத்திரரின் இலக்கத்திற்குள்பட்டதில்லை.

௬௩ ¶ மோசேயும் ஆசாரியனாகிய எலெயாசாரும் எரிகோவின் கிட்ட இருக்கும் யோர்தானுக்கு இப்பாலே மோவாபின் சமனான வெளிகளில் இஸ்ரவேல் புத்திரரை இலக்கம்பார்க்கிறபொழுது இருந்தவர்கள் இவர்கள்தான்.

௬௪ முதல் மோசேயும் ஆசாரியனாகிய ஆரோனும் சீனாயின் வனாந்தரத்திலே இஸ்ரவேல் புத்திரரை இலக்கம்பார்க்கும்பொழுது இருந்தவர்களிலே, இவர்கள் ஒருவருமில்லை.

௬௫ ஏனென்றால் வனாந்தரத்திலே சாவவே சாவார்களென்று கர்த்தர் அவர்களுக்குச் சொல்லியிருந்தார்; எப்பூனெயின் குமாரனாகிய காலேபையும், நூனின் குமாரனாகிய யோசுவாவையும் ஒழிய, வேறொருவரும் அவர்களில் மீதியாயிருந்ததில்லை.

## உ௭. அதிகாரம்.

யோசேப்பின் குமாரனாகிய மனாசேயின் வம்சங்களிலே, மனாசேயின் குமாரனாகிய மாகீரின் மகனான கிலெயாத்திற்குப் பிறந்த எப்பேருக்குக் குமாரனாயிருந்த *செலாப்பெயாத்தின் குமாரத்திகளாகிய மக்லாள், நோவாள், ஒக்லாள், மில்க்காள், திற்சாள் என்னப்பட்டவர்கள் சேர்ந்துவந்து,

*௪ மோ. உ௬. ௩௩.

௨ ஆசரிப்புக்கூடாரவாசலிலே மோசேக்கும், ஆசாரியனாகிய எலெயாசாருக்கும், பிரபுக்களுக்கும், சபை அனைத்திற்கும்முன்பாக நின்றுகொண்டு சொன்னதாவது:

௩ எங்கள் தகப்பன் வனாந்தரத்தில் மரணமடைந்தார்; ஆனால் அவர் கர்த்தருக்கு விரோதமாகக் கூடின கோராகின் கூட்டத்தாரில் ஒருவராயிராமல், தம்முடைய பாவத்தினாலே மரித்தார்; அவருக்குக் குமாரரில்லை.

௪ எங்கள் தகப்பனுக்குக் குமாரன் இல்லாததினாலே, அவர்பேர் அவருடைய வம்சத்தில் அற்றுப்போவானேன்? எங்கள் தகப்பனுடைய சகோதரருக்குள்ளே எங்களுக்குக் காணியாட்சியைத் தாருமென்றார்கள்.

௫ ¶ மோசே அவர்கள் நியாயத்தைக் கர்த்தருக்குமுன்பாகக் கொண்டுபோனான்.

௬ அப்பொழுது கர்த்தர் மோசேயோடே சொன்னதாவது:

௭ செலாப்பெயாத்தின் குமாரத்திகள் சொல்லுகிறது நிதானம்; அவர்கள் தகப்பனுடைய சகோதரருக்குள்ளே அவர்களுக்குச் சுதந்தரம் கொடுக்கவே கொடுக்கப்படக்கடவது; அவர்கள் தகப்பன் பின்வைத்த சுதந்தரத்தை அவர்களுக்கு வரப்பண்ணுவாயாக.

௮ இஸ்ரவேல் புத்திரருக்கும் நீ சொல்லவேண்டியதேதெனில், ஒருவன் குமாரனில்லாமல் மரித்தால், அவன் பின்வைத்த சுதந்தரத்தை அவன் குமாரத்திக்கு வரப்பண்ணக்கடவீர்கள்.

௯ அவனுக்குக் குமாரத்தி இல்லாதிருந்தால், அதை அவன் சகோதரருக்குக் கொடுக்கக்கடவீர்கள்.

௰ அவனுக்குச் சகோதரர் இல்லாதிருந்தால், அதை அவன் தகப்பனுடைய சகோதரருக்குக் கொடுக்கக்கடவீர்கள்.

௰௧ அவன் தகப்பனுக்குச் சகோதரர் இல்

Digitized by Google

லாதிருந்தால், அதை அவன் வம்சத்திலே அவனுக்குக் கிட்டின உறவின்முறையானுக்குச் சுதந்தரமாகக் கொடுக்கக்கடவீர்கள்; இது, கர்த்தர் மோசேக்குக் கற்பித்தபடியே, இஸ்ரவேல் புத்திரருக்கு நியாயப்பிரமாணமாயிருக்கக்கடவதென்று சொல்லென்றார்.

௰௨ ¶ பிற்பாடு கர்த்தர் மோசேயோடே சொன்னதாவது: *நீ இந்த அபாரீம்பர்வதத்தில் ஏறி, நாம் இஸ்ரவேல் புத்திரருக்குக் கொடுத்த தேசத்தைப்பார். *௫ மோ. ௩௨. ௪௮, ௪௯.

௰௩ நீ அதைப் பார்த்தபிறகு, நீயும் உன் சகோதரனாகிய ஆரோன் சேர்க்கப்பட்டதுபோல, உன் சனத்தாரிடத்திலே சேர்க்கப்படுவாய்.

௰௪ ஏனெனில் சபை வாக்குவாதம்பண்ணின சீன்வனாந்தரத்தில் நம்மைத் தண்ணீரின் சங்கதியிலே அவர்கள் கண்களுக்குமுன்பாகப் பரிசுத்தம் பண்ணவேண்டிய நீங்கள் *நம்முடைய கட்டளைக்கு இரண்டகம்பண்ணினீர்களென்றார்; அது சீன்வனாந்தரத்திலே காதேஸ் ஊர்க்கிட்ட உண்டான மேரிபாவின் தண்ணீர்தானே. *௪ மோ. ௨௰. ௰௨.

௰௫ ¶ அப்பொழுது மோசே கர்த்தரோடே சொன்னதாவது:

௰௬ கர்த்தருடைய சபை மேய்ப்பனில்லாத மந்தையைப்போல இராதபடிக்கு,

௰௭ அவர்களுக்குமுன்பாகப் போக்கும் வரத்துமாயிருக்கிறதற்கும் அவர்களைப் போகவும் வரவும்பண்ணுகிறதற்குமான ஒரு புருஷனை, சகல மாம்சத்தினுடைய ஆவிகளின் பராபரனாகிய கர்த்தர் அவர்கள்மேல் அதிகாரியாக வைப்பாராக என்றான்.

௰௮ ¶ அப்பொழுது கர்த்தர் மோசேயோடே சொன்னதாவது: ஆவி வாசமாயிருக்கிற புருஷனாகிய யோசுவாவென்ற நூனின் குமாரனை நீ சேர்த்துக்கொண்டு, அவன்மேலே உன் கையைவைத்து,

௰௯ அவனை ஆசாரியனாகிய எலெயாசாருக்கும் சபை அனைத்திற்கும்முன்பாக நிறுத்தி, அவர்கள் கண்களுக்குமுன்பாக அவனுக்குக் கற்பனைகொடுத்து,

௨௰ இஸ்ரவேல் புத்திரரின் சபையெல்லாம் அவனுக்குக் கீழ்ப்படியும்படிக்கு உன் மகிமையில் சிலவற்றை அவன்மேலே வை.

௨௧ அவன் ஆசாரியனாகிய எலெயாசாருக்குமுன்பாக நிற்பானாக; இவன் அவனுக்காகக் கர்த்தருக்குமுன்பாக வந்து, வெளிச்சங்களின் நியாயத்தினாலே ஆலோசனை கேட்கக்கடவன்; அவருடைய கட்டளையின்படியே, அவனும் அவனோடேகூட இஸ்ரவேலின் எல்லாப் புத்திரரும் சபை அனைத்தும் போகவும் அவருடைய கட்டளையின்படியே வரவும்வேண்டியதென்றார்.

௨௨ ¶ கர்த்தர் தனக்குக் கற்பித்தபடியே மோசே செய்து, யோசுவாவைச் சேர்த்துக்கொண்டு, அவனை ஆசாரியனாகிய எலெயாசாருக்கும் சபை அனைத்திற்கும் முன்பாக நிறுத்தி,

௨௩ அவன்மேலே தன் கைகளை வைத்து, கர்த்தர் தனக்குச் சொன்னபடியே அவனுக்குக் கற்பனைகொடுத்தான்.

## ௨௮. அதிகாரம்.

கர்த்தர் மோசேயோடே பேசிச் சொன்னதாவது:

௨ நமக்கு ஆற்றிய வாசனைக்கான நம்முடைய தகனபலிகளுக்கு அடுத்த நம்முடைய காணிக்கையையும் நம்முடைய அப்பத்தையும், அவைகளின் திட்டமான காலத்திலே நமக்குச் செலுத்தும்படிக்கு, கவனமாயிருக்கக்கடவீர்களென்று நீ இஸ்ரவேல் புத்திரருக்குக் கற்பித்து,

௩ ¶ அவர்களுக்குச் சொல்லவேண்டியதாவது: நீங்கள் கர்த்தருக்குச் செலுத்த வேண்டிய தகனபலி என்னவென்றால், நாள் ஒன்றிற்கு நித்தம் சர்வாங்கதகனபலியாக ஒருவயதுள்ள பழுதற்ற இரண்டு ஆட்டுக்குட்டிகள்தானே.

Digitized by Google

Bible. N.T. Tamil

THE

# NEW TESTAMENT

OF OUR

## LORD AND SAVIOUR JESUS CHRIST,

IN TAMIL:

WITH REFERENCES, CONTENTS OF THE CHAPTERS AND CHRONOLOGY, FROM THE ENGLISH.

உலக இரட்சகராகிய

இயேசுக்கிறிஸ்துநாதர் அருளிச்செய்த

# புதிய ஏற்பாடு.

இஃது

மூலவாக்கியம் இரேனியுசையரால்

கிரேக்க பாஷையிலிருந்து

தமிழிலே திருப்பப்பட்டும்,

சென்னபட்டணத்திலுள்ள

சத்தியவேத சங்கத்தாரால் பரிசோதித்து

இங்கிலிஷ் ஒத்துவாக்கிய பைபிளின்படி

ஏற்படுத்தப்பட்டுமிருக்கிறது.

கி. பி. ௲௮௱௫௰௯-ஜூலே

சென்னபட்டணத்தில் அமெரிக்கன் மிசியோன் அச்சுக்கூடத்தில் பதிப்பிக்கப்பட்டது.

MADRAS:

PRINTED FOR THE AMERICAN BIBLE SOCIETY,

AT THE AMERICAN MISSION PRESS.

1859.

Digitized by Google

# MATTHEW.

# மத்தேயு என்பவர்

## எழுதின சுவிசேஷம்.

### க. அதிகாரம்.

க. ஆபிரகாம் முதல் யோசேப்புவரைக்குமுள்ள கிறிஸ்துவினுடைய வம்சவரிசையின் அட்டவணை. யஅ. கன்னிமரியாள் யோசேப்புக்கு நேமிக்கப்பட்டபோது, கிறிஸ்து பரிசுத்த ஆவியினால் உற்பவித்து அவளிடத்தில் பிறந்தது. யகூ. தேவதூதன் யோசேப்பினுடைய நகாத யோசனைகளை நீக்கிக் கிறிஸ்துவின் திருநாமங்களுக்கு அர்த்தம் உரைத்தது.

[1]ஆபிரகாமின் சந்ததியாகிய [2]தாவீதின் சந்ததியாயிருக்கிற இயேசுக்கிறிஸ்துவினுடைய [3]வம்சவரிசையின் அட்டவணையாவது:

உ [4]ஆபிரகாம் ஈசாக்கைப் பெற்றான்; [5]ஈசாக்கு யாக்கோபைப் பெற்றான்; [6]யாக்கோபு யூதாவையும், அவன் சகோதரரையும் பெற்றான்.

ங [7]யூதா தாமார் என்பவளைச் சேர்ந்து, பாரேசையும் சாராவையும் பெற்றான்; [8]பாரேசு எசுரோமைப் பெற்றான்.

ச எசுரோம் ஆராமைப் பெற்றான்; ஆராம் அமினதாபைப் பெற்றான்; அமினதாபு நகசோனைப் பெற்றான்.

ரு நகசோன் சலுமோனைப் பெற்றான்; சலுமோன் ராகாப் என்பவளைச் சேர்ந்து, போவோசைப் பெற்றான்; போவோசு ரூத்தென்பவளைச் சேர்ந்து, ஓபேத்தைப் பெற்றான்; ஓபேத்து ஏசேயைப் பெற்றான்.

சு [9]ஏசே இராசனாகிய தாவீதைப் பெற்றான்; [10]இராசனாகிய தாவீது ஊரியாவுக்கு மனைவியாயிருந்தவளைச் சேர்ந்து, சொலொமோனைப் பெற்றான்.

எ [11]சொலொமோன் உரோபோவாமைப் பெற்றான்; உரோபோவாம் அபியாவைப் பெற்றான்; அபியா அசாவைப் பெற்றான்.

அ அசா யோசபாத்தைப் பெற்றான்; யோசபாத்து யோராமைப் பெற்றான்; யோராம் ஓசியாவைப் பெற்றான்.

கூ ஓசியா யோத்தாமைப் பெற்றான்; யோத்தாம் ஆகாசைப் பெற்றான்; ஆகாசு எசேக்கியாவைப் பெற்றான்.

ய [12]எசேக்கியா மனாசேயைப் பெற்றான்; மனாசே அமோனைப் பெற்றான்; அமோன் யோசியாவைப் பெற்றான்.

யக (யூதர்கள்) [13]பாபிலோன்தேசத்துக்குச் சிறைப்பட்டுப் போகும் காலத்திலே, [14] * யோசியா எகோனியா முதலான குமாரர்களைப் பெற்றான்.

யஉ அவர்கள் பாபிலோன் தேசத்துக்குச் சிறையாகக் கொண்டுபோகப்பட்ட பின்பு, [15]எகோனியா சாலாத்தியேலைப் பெற்றான்;

இ. மு. சா.

1 லூக். ங. உச.
2 சங். ககஉ. யஉ. ஏசா. யக. க. எரே. உங. ரு. மத். உஉ. சஉ. யோவா. எ. சஉ. அப். உ. ஙய: யங. உங. உரோ. க. ங.
3 க மோ. யஉ. ங: உஉ. யஅ. கலா. ங. யசு.
4 க மோ. உக. உங.
5 க மோ. உரு. உசு.
6 க மோ. உகூ. ஙரு.
7 க மோ. ஙஅ. உஎ–ஙய.
8 ரூத். ச. யஅ. ஓ க நாளா. உ. ரு, கூ. ஓ.
9 க சாமு யசு. க: யஎ. யஉ
10 உ சாமு. யஉ. உச.
11 க நாளா. ங. ய. ஓ.
12 உ இரா. உய. உங. க நாளா. ங. யசு.
13 உ இரா. உச. யச–யசு: உரு. யங. உ நாளா. ஙசு. ய, உய: எரே. உஎ. உங: ஙகு. கூ: ருஉ. யங, யரு, உஅ, உகூ, ஙய. தானி. க. க, உ.

14 க நாளா. ங. யரு. யசு. * யோசியா யோகீமைப் பெற்றான் யோகீம் எகோனியாவைப் பெற்றானென்று சில பிரதிகளிலுண்டு —15 க நாளா. ங. யஎ.

Digitized by Google

[1] சாலாத்தியேல் சொரோபாபேலைப் பெற்றான்.

௰௩ சொரோபாபேல் அபியூதைப் பெற்றான்; அபியூது எலியாக்கீமைப் பெற்றான்; எலியாக்கீம் அசோரைப் பெற்றான்.

௰௪ அசோர் சாதோக்கைப் பெற்றான்; சாதோக்கு ஆகீமைப் பெற்றான்; ஆகீம் எலியூதைப் பெற்றான்.

௰௫ எலியூது எலேயாசாரைப் பெற்றான்; எலேயாசார் மத்தானைப் பெற்றான்; மத்தான் யாக்கோபைப் பெற்றான்.

௰௬ யாக்கோபு மரியாளுடைய புருஷனாகிய யோசேப்பைப் பெற்றான்; அந்த மரியாளிடத்திலே கிறிஸ்து என்னப்பட்டிருக்கிற இயேசு பிறந்தார்.

௰௭ இவ்வண்ணமாய் உண்டான தலைமுறைகள் எல்லாம் ஆபிரகாம் முதல் தாவீதுவரைக்கும் பதினாலு தலைமுறைகளும், தாவீது முதல் பாபிலோன் தேசத்துக்கு (யூதர்கள்) சிறைபட்டுப்போன காலம்வரைக்கும் பதினாலு தலைமுறைகளும், பாபிலோன் தேசத்துக்குக் கொண்டுபோன காலமுதல் கிறிஸ்துவரைக்கும் பதினாலு தலைமுறைகளுமேயாம்.

௰௮ ¶ [2]இந்த இயேசுக்கிறிஸ்துவினுடைய உற்பத்தியின் விவரமாவது: அவருடைய தாயாகிய மரியாள் யோசேப்புக்கு (மனைவியாக) நியமிக்கப்பட்ட பின்பு, அவர்கள் கூடி வாழ்கிறதற்கு முன்னமே அவள் [3]பரிசுத்த ஆவியினாலே கருப்பவதியானாள்.

௰௯ அவளுடைய புருஷனாகிய யோசேப்பு நீதிமானாகையால், [4]அவளை அவதூறுபண்ண மனதில்லாமல் இரகசியமாய் அவளை ஒழித்துவிடும்படியாய்ச் சிந்தித்தான்.

௨௰ அவன் அப்படி நினைத்திருக்கையில், பராபரனுடைய தூதன் சொப்பனத்திலே அவனுக்குக் காணப்பட்டு, தாவீதின் சந்ததியாகிய யோசேப்பே, நீ உன் மனைவியாகிய மரியாளைச் சேர்த்துக்கொள்ள ஐயப்படவேண்டாம்; என்னத்தினாலென்றால், அவளிடத்தில் *உண்டாயிருக்கிறது [5]பரிசுத்த ஆவியினால் உண்டானது.

௨௧ அவள் [6]ஒரு குமாரனைப் பெறுவாள்; அவர் தம்முடைய சனங்களின் [7]பாவங்களை நீக்கி அவர்களை இரட்சிப்பார்; ஆகையால் அவருக்கு † இயேசு என்று பேரிடுவாயாக என்றான்.

௨௨ தீர்க்கதரிசியைக்கொண்டு கர்த்தர் சொன்னது நிறைவேறும்படிக்கு அவையெல்லாம் நடந்தன.

௨௩ அவர் சொல்லுவித்ததென்னவென்றால், [8]இதோ ஒரு கன்னி கருப்பவதியாகி ஒரு குமாரனைப் பெறுவாள்; ‡அவருக்கு இம்மானுவேல் என்று பேரிடுவார்கள் என்பதே; இம்மானுவேல் என்பதற்குப் பராபரன் நம்முடனே இருக்கிறார் என்று அர்த்தமாம்.

௨௪ யோசேப்பு நித்திரை தெளிந்து எழுந்தபொழுது, தனக்குக் கர்த்தருடைய தூதன் கட்டளையிட்டபடி தன் மனைவியைச் சேர்த்துக்கொண்டு,

௨௫ [9]அவள் முதற்பேறான குமாரனைப் பெறும்வரைக்கும் அவளை அறியாதிருந்து, (அந்தக் குமாரன் பிறந்தபின்பு) அவருக்கு [10]இயேசு என்று பேரிட்டான்.

## உ. அதிகாரம்.

௧. கிழக்கிலிருந்து சாஸ்திரிகள் நட்சத்திரத்தினால் கிறிஸ்துவினிடத்திற்கு வழி நடத்தப்பட்டது. ௰௧. அவரைப் பணிந்து காணிக்கைகளைச் செலுத்தினது. ௰௩. இயேசுவையும், அவருடைய தாயையும் கூட்டிக்கொண்டு யோசேப்பு எகிப்துக்கு ஓடிப்போனது. ௰௬. ஏரோதே குழந்தைகளைக் கொலைசெய்து, ௰௯. பின்பு தான் மரணம் அடைந்தது. உ௩. கலிலேயாவிலுள்ள நாசரேத்துக்குக் கிறிஸ்து மறுபடியும் கொண்டுவரப்பட்டது.

ஏரோது என்னும் இராசனுடைய காலத்திலே யூதேயா தேசத்திலுள்ள பெத்லேகேம் ஊரில் [11]இயேசுவானவர் பிறந்தபின்பு, [12]இ

இ. மு. ச.

1 எஸ்ரு ௩. உ: இ. உ. ௭௯கே. ௰௨. ௩. ஆகா. ௩. ௩.

2 லூக். ௧. உ௭.

3 லூக் ௧.௩௫.

4 இ மோ. உ௪. ௧.

* செனிப்பிக்கப்பட்டது, கிரேக்கு.

5 லூக். ௧. ௩௫.

6 லூக். ௧. ௩௧.

7 அப். ௪௰. உ: இ.௩௧: ௰௩.உ௩, ௩௮.

† இரட்சகன் என்ற எபிரேய மொழி.

8 ஏசா. ௭. ௰௪.

‡ அல்லது அவருடைய நாமம் இம்மானுவேலென்று சொல்லப்படும்.

9 உ மோ. ௰௩.உ. லூக். உ.௭, உ௧.

10 லூக். உ. ௨௧

11 லூக். உ.இ-௭

12 ௧ மோ ௰.௩௪: உஇ. ௩. ௩ இரா. ௪. ௩௰.

Digitized by Google

ழக்குத்திசையிலிருந்து சாஸ்திரிகள் எருசலேம் நகரத்துக்குவந்து,

உ (இக்காலத்திலே) [1]பிறந்திருக்கிற யூதருடைய இராசாவைக் குறித்துத் தோன்றிய [2]நட்சத்திரத்தைக் கிழக்கிலே நாங்கள் கண்டு, அவரைப் பணிந்துகொள்ள வந்தோம்; அவர் எங்கே என்றார்கள்.

ங ஏரோது இராசா அதைக் கேட்டபொழுது, அவனும் அவனுடனேகூட எருசலேம் நகரத்தார் அனைவரும் கலங்கினார்கள்.

ச அல்லாமலும், அவன் சனங்களில் [3]பிரதானமான ஆசாரியர் [4]வேதபாரகர் எல்லாரும் கூடிவரச் செய்து, கிறிஸ்து [5]எங்கே பிறப்பாரென்று அவர்களிடத்தில் விசாரித்தான்.

ரு அவர்கள் அவனை நோக்கி, [6]யூதாவின் ஊராகிய பெத்லேகேமிலே அவர் பிறப்பார்; என்னத்தினாலென்றால், யூதேயா தேசத்திலுள்ள பெத்லேகேம் ஊரே, என்னுடைய சனங்களாகிய [7]இஸ்ரவேலரை *ஆளும் பிரபு உன்னிடத்திலே தோன்றுவாராகையால் யூதாவிலுள்ள பிரபுக்களில் நீ சிறியதல்ல என்று,

சு தீர்க்கதரிசியினாலே எழுதப்பட்டிருக்கிறது என்றார்கள்.

எ அப்பொழுது ஏரோது அந்தச் சாஸ்திரிகளை இரகசியமாய் அழைத்து, அந்த நட்சத்திரம் காணப்பட்ட காலத்தைக்குறித்து அவர்களிடத்திலே திட்டமாய் விசாரித்துக்கொண்டு,

அ நீங்கள் போய் அந்தப் பிள்ளையைக்குறித்து நன்றாய் ஆராய்ந்து பாருங்கள்; மேலும் நீங்கள் அதைக் கண்டபின்பு, நானும்போய் அதைப் பணிந்துகொள்ளும்படிக்கு எனக்கு அறிவியுங்கள் என்று சொல்லி, அவர்களைப் பெத்லேகேம் ஊருக்கு அனுப்பிவிட்டான்.

கூ இராசா சொன்னதை அவர்கள் கேட்டுப்போனார்கள்; போகையில், கிழக்கிலே அவர்கள் கண்ட நட்சத்திரம் அந்தப் பிள்ளை இருக்கிற ஸ்தலத்துக்கு மேலே வந்து நிற்கும்வரைக்கும் அவர்களுக்கு முன்பாக நடந்தது;

ய அவர்கள் அந்த நட்சத்திரத்தைக் கண்டு, மிகுந்த ஆனந்த சந்தோஷத்தை அடைந்து,

யக பின்பு அந்த வீட்டில் பிரவேசித்து, பிள்ளையையும் அதினுடைய தாயாகிய மரியாளையும் கண்டு, வணக்கமாய் விழுந்து அதைப் பணிந்துகொண்டு, தங்கள் பொக்கிஷப்பெட்டிகளைத் திறந்து, [8]பொன்னையும் தூபவருக்கத்தையும் வெள்ளைப்போளத்தையும் அதற்குக் காணிக்கையாக †வைத்தார்கள்.

யஉ பின்பு ஏரோதினிடத்துக்குத் திரும்பிப்போகாதிருங்களென்று அவர்கள் [9]சொப்பனத்திலே தேவ உத்தரவு பெற்று, வேறுவழியாய்த் தங்கள் தேசத்திற்குப் புறப்பட்டுப்போனார்கள்.

யங அவர்கள்புறப்பட்டுப்போனபின்பு கர்த்தருடைய தூதன் சொப்பனத்திலே யோசேப்புக்குக் காணப்பட்டு, ஏரோது இந்தப் பிள்ளையைக் கொலைசெய்யத் தேடுவான்; ஆகையால் நீ எழுந்து பிள்ளையையும் அதினுடைய தாயையும் கூட்டிக்கொண்டு எகிப்து தேசத்திற்கு ஓடிப்போய், நான் உனக்குச் சொல்லும்வரைக்கும் அவ்விடத்தில் இரு என்றான்.

யச உடனே அவன் எழுந்து இராத்திரியிலே பிள்ளையையும் அதினுடைய தாயையும் கூட்டிக்கொண்டு, எகிப்துக்குப் புறப்பட்டுப்போய்,

யரு ஏரோது மரணம் அடைந்த காலம்வரைக்கும் அவ்விடத்தில் இருந்தான்; [10]எகிப்திலிருந்து என்னுடைய குமாரனை வரவழைத்தேன் என்று தீர்க்கதரிசியைக் கொண்டு கர்த்தர் திருவுளம்பற்றி

கி. மு. ச.

1 லூக். உ. யக.
2 ச மோ. உச. கஎ. ஏசா. சம். க.
3 உ நாளா. கக. யச.
4 உ நாளா. கச. யக.
5 மல்கி. உ. எ.
6 மீகா. ரு. உ. யோவா. எ. சஉ.
7 வெளி. உ. உஎ.
* அல்லது மேய்க்கப்போகிற.
8 சங் எஉ. ய. ஏசா. கய. சு.
† அல்லது செலுத்தினார்கள்.
9 மத் க. உய.
10 ஓசே. யக. க.

Digitized by Google

னது நிறைவேறும்படிக்கு அது நடந்தது.

௰௬ ¶ அப்பொழுது ஏரோது தான் சாஸ்திரிகளால் வஞ்சிக்கப்பட்டதைக் கண்டு, மிகுந்த கோபம் அடைந்து, அந்தச் சாஸ்திரிகளிடத்திலே தான் கேட்டாராய்ந்த காலத்தின்படி பெத்லேகேம் ஊரிலும் அதினுடைய எல்லைகள் யாவிலும் இரண்டு வயதுமுதற்கொண்டு அதற்குத் தாழ்ந்திருந்த வயதுள்ள ஆண்பிள்ளைகள் எல்லாரையும் கொலைசெய்ய ஆள்களை அனுப்பினான்.

௰௭ அப்பொழுது எரேமியா [1]தீர்க்கதரிசியினால் சொல்லப்பட்டது நிறைவேறிற்று; அவன் சொன்னதென்னவென்றால்,

௰௮ ராமா ஊரிலே புலம்பலும் அழுகையும் மிகுந்த துக்கிப்புமுள்ள கூக்குரல் கேட்கப்பட்டது; ராகேல் தன் பிள்ளைகளைக் குறித்து அழுதுகொண்டு, அந்தப் பிள்ளைகள் இல்லாதபடியால் ஆறுதல் அடையாதிருக்கிறாள் என்பதே.

௰௯ ¶ ஏரோது இறந்த பின்பு, சொப்பனத்திலே கர்த்தருடைய தூதன் எகிப்திலே யோசேப்புக்குக் காணப்பட்டு,

௨௰ பிள்ளையினுடைய பிராணனை வாங்கத்தேடினவர்கள் இறந்துபோனார்கள்; ஆகையால் நீ எழுந்து பிள்ளையையும் அதினுடைய தாயையும் கூட்டிக்கொண்டு, இஸ்ரவேல் தேசத்துக்குப் போ என்றான்.

௨௧ அந்தப்படியே அவன் எழுந்திருந்து, பிள்ளையையும் அதினுடைய தாயையும் கூட்டிக்கொண்டு, இஸ்ரவேல் தேசத்திற்குப் புறப்பட்டபொழுது,

௨௨ அருகேலாவு என்பவன் தன் தகப்பனாகிய ஏரோதினுடையபட்டத்துக்கு வந்து, யூதேயாவை ஆளுகிறானென்று கேள்விப்பட்டு, அங்கே போகப் பயந்தான்; அப்பொழுது சொப்பனத்திலே அவன் தேவ உத்தரவுபெற்று, [2]கலிலேயா நாட்டினுடைய திசைகளை நோக்கிப் புறப்பட்டுப் போய்,

௨௩ [3]நாசரேயன் என்று அழைக்கப்படுவார் என்கிறதாய்த் தீர்க்கதரிசியால் சொல்லப்பட்டது நிறைவேறும்படிக்கு [4]நாசரேத்தூரில் வந்து வாசம்பண்ணினான்.

## ௩. அதிகாரம்.

௧. யோவான் பிரசங்கித்தது, அவனுடைய ஊழியம், நடக்கை, ஞானஸ்நானம், ௭. அவர் பரிசேயர்களைக் கடிந்துகொண்டது. ௰௩. கிறிஸ்துவுக்கு யோர்தானில் ஞானஸ்நானம் கொடுத்தது.

அக்காலத்திலே [5]யோவான்ஸ்நானன் வந்து,

௨ [6]பரலோக இராசரீகம் சமீபமாயிருக்கின்றது; ஆகையால் மனந்திரும்புங்கள் என்று யூதேயாவின் [7]வனாந்தரத்திலே பிரசங்கம் பண்ணினான்.

௩ அவன் யாவனெனில், [8]கர்த்தருக்காக மார்க்கத்தை நன்றாகச் செய்யுங்களென்றும், அவருடைய பாதைகளைச் செவ்வைபண்ணுங்களென்றும், வனாந்தரத்திலே ஒருவன் [9]சத்தமிடுவானென்று ஏசாயா என்னும் தீர்க்கதரிசியினால் சொல்லப்பட்டவனே.

௪ அல்லாமலும் [10]அந்த யோவான் [11]ஒட்டக மயிர் உடையைத் தரித்து, தன்னுடைய அரையில் வார்க்கச்சையைக் கட்டிக்கொண்டிருந்தான்; [12]வெட்டுக்கிளிகளும் [13]காட்டுத்தேனும் அவனுக்கு ஆகாரமாயிருந்தன.

௫ [14]அக்காலத்திலே எருசலேம் நகரத்தாரும் யூதேயா தேசத்தார் அனைவரும் யோர்தான் நதிக்கடுத்த சுற்றுப்புறத்தார் யாவரும் அவனிடத்திற்குப் புறப்பட்டுப் போய்,

௬ [15]தங்கள் பாவங்களை அறிக்கையிட்டு, யோர்தான் நதியில் அவனாலே ஞானஸ்நானம் பெற்றார்கள்.

கி. பி. ௨௭.

1 எரே. ௩௧. ௰௫.
2 மத். ௪. ௰௨. லூக். ௨. ௩௯.
3 யோவா. ௧. ௪௬.
4 நியா. ௰௩. ௫. ௧ சாமு. ௧. ௰௧.
5 மாற். ௧. ௪, ௰௫. லூக். ௩. ௨, ௩. யோவா. ௧. ௨௮.
6 தானி. ௨. ௪௪. மத். ௪. ௰௭; ௰. ௭.
7 யோசு. ௰௪. ௰.
8 ஏசா. ௪௰. ௩. மாற். ௧. ௩. லூக். ௩. ௪. யோவா. ௧. ௨௩.
9 லூக். ௧. ௭௬.
10 மாற். ௧. ௬.
11 ௨ இராஜ. ௧. ௮. சக. ௰௩. ௪.
12 ௩ மோ. ௰௧. ௨௨.
13 ௧ சாமு. ௰௪. ௨௫, ௨௬.
14 மாற். ௧. ௫. லூக். ௩. ௭.
15 அப். ௰௯. ௪, ௰௮.

Digitized by Google

௭ ¶ அப்படியிருக்கையில், பரிசேயர் சதுசேயர் என்பவர்களிலும் அநேகர் தன்னாலே ஞானஸ்நானம்பெறும்படிக்கு வருகிறதை அவன் கண்டு, அவர்களை நோக்கி, [1]விரியன் பாம்புகளின் குட்டிகளே, [2]இனிவரும் கோபத்துக்கு நீங்கள் தப்பித்துக்கொள்ளும்படியாய் உங்களுக்கு வகைகாட்டினவன் *எவன்?

௮ மனந்திரும்புதலுக்குத்தக்க கனிகளைக் கொடுங்கள்.

௯ [3]ஆபிரகாம் எங்களுடைய பிதா என்று சொல்ல, உங்களுடைய உள்ளத்திலே நினைத்துக்கொள்ளாதிருங்கள்; ஆபிரகாமுக்குப் பராபரன் இந்தக் கல்லுகளில் பிள்ளைகளை உண்டுபண்ண வல்லவராயிருக்கிறார் என்று உங்களுக்குச் சொல்லுகிறேன்.

௰ இப்பொழுதே கோடரி மரங்களுடைய வேரருகே வைத்திருக்கின்றது; ஆகையால் [4]நல்ல கனிகளைக் கொடாத மரங்கள் எல்லாம் வெட்டப்பட்டு அக்கினியிலே போடப்படும்.

௰௧ நீங்கள் மனந்திரும்பும்படிக்கு, [5]நான் சலத்தினாலே உங்களுக்கு ஞானஸ்நானம் கொடுக்கிறேன்; எனக்குப் பின்வருகிறவர் என்னிலும் அதிக வல்லமையுடையவர்; அவருடைய பாதரட்சைகளைச் சுமக்கிறதற்கு நான் பாத்திரவான் அல்ல; [6]அவரே பரிசுத்த ஆவியினாலும் அக்கினியினாலும் உங்களுக்கு ஞானஸ்நானம் கொடுப்பார்.

௰௨ [7]அவருடைய கையில் தூற்றுக்கூடை இருக்கின்றது; அவர் தமது களம் முழுவதையும் விளக்கி, தம்முடைய கோதுமையைக் களஞ்சியத்தில் சேர்ப்பார்: [8]பதரை அவியாத அக்கினியினால் சுட்டுப்போடுவார் என்றான்.

௰௩ ¶ அப்பொழுது [9]இயேசுவானவர் யோவானாலே ஞானஸ்நானம் பெறுவதற்கு, கலிலேயா நாட்டைவிட்டு யோர்தான் அருகே அவனிடத்திற்குப் போனார்.

௰௪ யோவான் அவருக்குத் தடைபண்ணி, உம்மாலே நான் ஞானஸ்நானம் பெறவேண்டுவதாயிருக்க, நீர் என்னிடத்திற்கு வரலாமா என்றான்?

௰௫ அதற்கு இயேசுவானவர் அவனை நோக்கி, இவ்விதமாய்ச் சகல நீதியையும் நிறைவேற்றுகிறது நமக்கு ஏற்றதாயிருக்கின்றது; ஆகையால் இப்பொழுது சம்மதிப்பாயாக என்றார்; அப்பொழுது அவன் சம்மதித்தான்.

௰௬ [10]இயேசுவானவர் ஞானஸ்நானம் பெற்று, சலத்தைவிட்டு ஏறிவந்தவுடனே, இதோ வானம் அவருக்குத் திறக்கப்பட்டது; அல்லாமலும் பராபரனுடைய [11]ஆவி புறாவைப்போல் இறங்கி, அவர்மேல் வருகிறதைக் கண்டான்.

௰௭ [12]மேலும், இவர் எனக்கு அன்பாயிருக்கிற என்னுடைய குமாரன்; இவரில் பிரியமாயிருக்கிறேன் என்று [13]வானத்திலிருந்து சத்தம் உண்டாயிற்று.

## ௪. அதிகாரம்.

௧. கிறிஸ்து உபவாசித்துச் சோதிக்கப்பட்டது. ௰௧. தேவதூதர்கள் அவருக்குப் பணிவிடை செய்தது ௰௨. அவர் கப்பர்நாகூமிலே வாசம்பண்ணி, ௰௭. பிரசங்கிக்கத் துவக்கி, ௰௮. பேதுருவையும், அந்திரேயாவையும், ௨௧. யாக்கோபையும், யோவானையும் அழைத்து, ௨௩. எல்லா வியாதிஸ்தர்களையும் குணமாக்கினது.

௧ அப்பொழுது [14]இயேசுவானவர் பசாசானவனாலே சோதிக்கப்படுவதற்கு, [15]ஆவியினாலே வனாந்தரத்தில் கொண்டுபோகப்பட்டார்.

௨ (அங்கே) அவர் நாற்பதுநாள் இரவும் பகலும் உபவாசம்பண்ணினபின்பு, அவருக்குப் பசி உண்டாயிற்று.

௩ அப்பொழுது அந்தச் சோதிக்கிறவன் அவரிடத்திற்கு வந்து, நீ பராபரனுடைய குமாரனானால் இந்தக் கல்லுகள் அப்பங்களாகும்படி கட்டளையிடு என்றான்.

கி. பி. ௨௭.

1 மத். ௰௨. ௩௪: ௨௩. ௩௩. லூக் ௩. ௭, ௮.
2 உரோ. ௫. ௯. ௧ தெச. ௧. ௰.
* அல்லது நடக்கையைச் சீர்ப்படுத்துவதற்குத் தகுந்த.
3 யோவா. ௮. ௩௩, ௩௯. அப். ௰௩. ௨௬. உரோ. ௪. ௧: ௰௬. ௰௭.
4 மத். ௭. ௰௯. லூக். ௰௩. ௭, ௯. யோவா. ௰௫. ௬. மாற். ௧. ௮. லூக். ௩. ௰௬.
5 யோவா. ௧. ௨௬, ௩௩. அப். ௧. ௫: ௰௧ ௰௬: ௰௯. ௪.
6 ஏசா. ௪. ௪: ௪௪. ௩. மல்கி. ௩. ௨. அப். ௨. ௩, ௪. ௧ கொரி. ௰௨. ௰௩.
7 மல்கி. ௩. ௩.
8 மல்கி. ௪. ௧. மத். ௰௩. ௩௰.
9 மாற். ௧. ௯. லூக். ௩. ௨௧. மத். ௨. ௨௨.
10 மாற். ௧. ௰:
11 ஏசா. ௰௧. ௨: ௪௨. ௧. லூக். ௩. ௨௨. யோவா. ௧. ௩௨, ௩௩.
12 சங். ௨. ௭. ஏசா. ௪௨. ௧. மத். ௰௨. ௰௮: ௰௭. ௫. மாற். ௧. ௰௧. லூக். ௯. ௩௫. ௨ பே. ௧. ௰௭. கொலோ. ௧. ௰௩. ௧ பே. ௧. ௰௭.
13 யோவா. ௰௨. ௨௮.
14 மாற் ௧. ௰௨. ௰௩. லூக். ௪. ௧. ௰௩.
15 ௧ இரா. ௰௮. ௰௨. எசே. ௩. ௰௪: ௮. ௩: ௰௧. ௧, ௨௪. ௪௰. ௨: ௪௩. ௫. அப். ௮. ௩௯.

Digitized by Google

௪ அதற்கு அவர் மாறுத்தரம் சொன்னது: [1]மனிதனானவன் அப்பத்தினாலே மாத்திரமல்ல, பராபரனுடைய வாய்மலர்ந்தருளிச்செய்கிற எந்த வாக்கினாலும் பிழைப்பான் என்று எழுதியிருக்கின்றதென்றார்.

௫ அப்பொழுது பசாசானவன் அவரைப் [2]பரிசுத்த நகரத்துக்குக் கொண்டுபோய், அவரைத் தேவாலயத்து மேல் உப்பரிகையில் நிறுத்தி,

௬ உன்னைக்குறித்துத் தம்முடைய [3]தூதர்களுக்குக் கட்டளையிடுவார் என்றும், உன்னுடைய பாதம் கல்லில் இடறாதபடிக்கு அவர்கள் உன்னைக் கைகளில் ஏந்திக்கொண்டு போவார்கள் என்றும், எழுதியிருக்கின்றது; ஆகையால் நீ பராபரனுடைய குமாரனானால் தாழக் குதி என்றான்.

௭ அதற்கு இயேசுவானவர் சொன்னது: அதுவுமல்லாமல், உன்னுடைய தேவனாகிய பராபரனைப்[4]பரிட்சைபாராதிருப்பாயாக என்றும் எழுதியிருக்கின்றது என்றார்.

௮ மறுபடியும் பசாசானவன் அவரை மிகவும் உயர்ந்த மலையின் மேல் கொண்டுபோய், உலகத்திலுள்ள இராச்சியங்கள் எல்லாவற்றையும் அவைகளின் மகிமையையும் அவருக்குக் காண்பித்து,

௯ நீ விழுந்து என்னைத் தொழுதுகொண்டால், இவைகள் எல்லாவற்றையும் உனக்குத் தருவேன் என்று சொன்னான்.

௰ அப்பொழுது இயேசுவானவர் அவனை நோக்கி, உன்னுடைய தேவனாகிய [5]பராபரனைத் தொழுதுகொண்டு, அவர் ஒருவருக்கே ஆராதனைசெய்வாயாக என்று எழுதியிருக்கின்றது; ஆகையால் சாத்தானே, அப்புறம் போ என்றார்.

௰௧ அப்பொழுது பசாசானவன் அவரைவிட்டுப்போனான்; [6]உடனே தேவதூதர்கள் சேர்ந்துவந்து, அவருக்கு ஊழியம்செய்தார்கள்.

௰௨ ¶ பின்பு யோவான் காவலில் வைக்கப்பட்டான் *என்று இயேசுவானவர் கேள்விப்பட்டு, [7]கலிலேயா நாட்டுக்குப் புறப்பட்டுப் போய்,

௰௩ நாசரேத்தூரை விட்டு, சேபுலோன் நவுதலி என்னும் நாடுகளின் எல்லைகளில், கடற்கரையருகே இருக்கின்ற கப்பர்நாகூம் பட்டணத்தில் வந்து வாசம்பண்ணினார்.

௰௪ அதினாலே [8]கடற்கரையருகிலும், யோர்தான் நதி ஓரத்திலுமுள்ள அஞ்ஞானிகள் அடங்கியிருக்கிற கலிலேயா தேசமாகிய சேபுலோன் தேசத்தாரும், நவுதலி தேசத்தாருமாகிய இருளில் இருக்கின்ற சனங்கள் மிகுந்த ஒளியைக் கண்டார்கள்.

௰௫ [9]மரண நிழலுள்ள திசையில் இருக்கிறவர்களுக்கு ஒளிதோன்றிற்று என்று,

௰௬ ஏசாயா தீர்க்கதரிசியினால் சொல்லப்பட்டது நிறைவேறிற்று.

௰௭ ¶ [10]அக்காலத்திலே இயேசுவானவர், பரலோக இராச்சியம் சமீபித்ததாகையால் [11]மனந்திருப்புங்கள் என்று பிரசங்கிக்கத் தொடங்கினார்.

௰௮ ¶ ஒரு காலத்திலே [12]இயேசுவானவர் கலிலேயா நாட்டின் கடலருகே நடந்துபோகையில், மீன் பிடிக்கிறவர்களாகிய [13]பேதுரு என்னப்பட்ட சீமோனும் அவனுடைய சகோதரன் அந்திரேயாவுமாகிய இருவரும் கடலிலே வலை போட்டுக்கொண்டிருக்கிறபொழுது அவர்களைக் கண்டு,

௰௯ என் பின்னே வாருங்கள், [14]உங்களை மனிதரைப் பிடிக்கிறவர்கள் ஆக்குவேன் என்று அவர்களுடனே சொன்னார்.

கி. பி. ௨௭.

1 இ மோ. ௮. ௩
2 நெகே. ௰௧. ௧, ௰௮. ஏசா. ௪௮. ௨: ௫௨. ௧. மத். ௨௭. ௫௩. வெளி. ௰௧. ௨.
3 சங். ௯௧. ௰௧.
4 இ மோ. ௬. ௰௬.
5 இ மோ. ௬. ௰௩. ௰. ௨௰. யோசு. ௨௪. ௰௪. ௧ சாமு. ௭. ௩.
6 எபி. ௧. ௰௪.
* அல்லது ஒப்புக் கொடுக்கப்பட்டான்.
7 மாற். ௧. ௰௪. லூக். ௩. ௨௰: ௪. ௰௪, ௩௧. யோவா. ௪. ௪௩.
8 ஏசா. ௯. ௧.
9 ஏசா. ௪௨. ௭. லூக். ௨. ௩௨.
10 மாற். ௧. ௰௫.
11 மத். ௩. ௨: ௰. ௭. மாற். ௧. ௰௫.
12 மாற். ௧. ௰௬. லூக். ௫. ௨.
13 மாற். ௧. ௰௭. யோவா. ௧. ௪௨.
14 மாற். ௧. ௰௭. லூக். ௫. ௰.

Digitized by Google

உ0 [1]உடனே அவர்கள் வலைகளை விட்டு, அவரைப் பின்பற்றினார்கள்.

உ௧ [2]அவர் அவ்விடம் விட்டு அப்புறம் போகையில், செபேதேயுவினுடைய மகன் யாக்கோபும் அவனுடைய சகோதரன் யோவானுமாகிய இருவரும், தங்கள் தகப்பன் செபேதேயுவுடனே படவிலிருந்து தங்கள் வலைகளைத் தைத்துக்கொண்டிருக்கிறபொழுது, அவர்களைக் கண்டு அவர்களையும் அழைத்தார்.

உஉ உடனே அவர்கள் படவையும் தங்கள் தகப்பனையும் விட்டு, அவரைப் பின்பற்றினார்கள்.

உ௩ ¶ பின்பு இயேசுவானவர் [3]கலிலேயா நாடெங்கும் சுற்றி நடந்து, அவர்களுடைய செப ஆலயங்களில் சனங்களுக்கு உபதேசம் செய்து, பரலோக [4]இராச்சியத்தைக்குறித்துச் சுவிசேஷத்தைப் பிரசங்கித்து, சனங்களுக்குண்டாயிருந்த சகலவிதமான [5]வியாதிகளையும் சகலவிதமான நோய்களையும் (நீக்கி, அவர்களைக்) குணமாக்கினார்.

உ௪ அவருடைய கீர்த்தி சீரியா தேசத்தில் எங்கும் பிரபலமாயிற்று; பின்பு பலபல வியாதிகளையும் வேதனைகளையும் அடைந்த பிணியாளிகள் யாவரையும் பசாசு பிடித்தவர்களையும் சந்திரரோகிகளையும் திமிர்வாதக்காரரையும் அவரிடத்திற்குக் கொண்டுவந்தார்கள்; அவர்களைக் குணமாக்கினார்.

உரு [6]கலிலேயாவிலும் தெக்கப்போலியிலும் எருசலேமிலும் யூதேயாவிலும் யோர்தான் நதிக்கு அப்புறத்திலுமிருந்து மிகுந்த சனங்கள் வந்து, அவரைப் பின்சென்றார்கள்.

## ரு. அதிகாரம்.

௧. மேன்மை பர்வதத்தின்மேல் தம்முடைய பிரசங்கத்தைத் தொடங்கினது. ௩. பாக்கியவான்கள் இன்னாரென்பது. ௧௩. பூமியின் உப்பு. ௧௪. லோகத்தின் வெளிச்சம், மலையின்மேல் பட்டணம். ௧௫. விளக்கு என்பவைகளைக்குறித்தது. ௧௭. நாம் நியாயப்பிரமாணத்தை நிறைவேற்றவந்தாரென்றும், உ௧. கொலை, உ௭. விபசாரம், ௩௩. பொய்யாணை இன்னவையென்றும் அறிவித்து, ௩௮. அநியாயத்தைச் சகிக்கவும், ௪௪. சத்துருக்களையும் சிநேகிக்கவும், ௪௮. பூரண சற்குணாரிருக்கப் பிரயாசப்படவும் உபதேசித்தது.

அவர் அந்தச் சனங்களைக் கண்டு, [7]மலையின்மேல் ஏறி உளுக்கார்ந்தபொழுது, அவருடைய சீஷர்கள் அவரிடத்தில் வந்தார்கள்.

உ அப்பொழுது அவர் தமது திருவாயைத் திறந்து, அவர்களுக்கு உபதேசித்துச் சொன்னதாவது:

௩ [8]ஆவியில் எளிமையுள்ளவர்கள் பரலோக இராச்சியத்தை அடைவார்கள், ஆகையால் அவர்கள் பாக்கியவான்கள்.

௪ [9]துயரப்படுகிறவர்கள் ஆறுதல் அடைவார்கள், ஆகையால் அவர்கள் பாக்கியவான்கள்.

ரு [10]சாந்தகுணமுள்ளவர்கள் [11]பூமியைச் சுதந்தரித்துக்கொள்ளுவார்கள், ஆகையால் அவர்கள் பாக்கியவான்கள்.

௬ நீதியின்மேல் [12]பசிதாகமுள்ளவர்கள் திருத்தி அடைவார்கள், ஆகையால் அவர்கள் பாக்கியவான்கள்.

எ இரக்கமுள்ளவர்கள் [13]இரக்கத்தை அடைவார்கள், ஆகையால் அவர்கள் பாக்கியவான்கள்.

அ [14]சுத்தமான இருதயமுள்ளவர்கள் [15]பராபரனைத் தரிசிப்பார்கள், ஆகையால் அவர்கள் பாக்கியவான்கள்.

௯ சமாதானத்தை நடப்பிக்கிறவர்கள் பராபரனுடைய புத்திரர் என்னப்படுவார்கள், ஆகையால் அவர்கள் பாக்கியவான்கள்.

௰ [16]நீதியின் நிமித்தம் துன்பப்படுகிறவர்கள் பரலோக இராச்சியத்தை அடைவார்கள், ஆகையால் அவர்கள் பாக்கியவான்கள்.

௰௧ என்நிமித்தம் உங்களை [17]நிந்தித்துத் துன்பப்படுத்திப் பலவித [18]தீமையான மொழிகளை உங்கள்

கி. பி. ௩௧.

1 மாற். ௰. உ௮. லூக். ௫. ௰௧: ௱௮. உ௮.
2 மாற். ௧. ௰௯, உ0: லூக். ௫. ௰.
3 மத். ௯. ௩௫. மாற். ௧. உ௧, ௩௯. லூக். ௪. ௰௫, ௪௪.
4 மத். உ௪. ௰௪. மாற். ௧. ௰௫.
5 மாற். ௧. ௩௪.
6 மாற். ௩. அ.
7 மாற். ௩. ௰௩, உ0.
8 லூக். ௬. உ0. சங். ௫௧. ௰௭. ஏசா. ௫௭. ௰௫: உ௬. உ௧. ௭௪. ௫௰: ௩௩. உ.
9 ஏசா. ௩௧. உ, ௩. லூக். ௬. உ௧. யோவா. ௰௬. உ0. உ கொரி. ௧. ௭. வெளி. உ௧. ௪.
10 சங். ௩௭. ௰௧.
11 உரோ. ௪. ௰௩.
12 ஏசா. ௫௫. ௧: ௩௫. ௰௯.
13 சங். ௪௧. உ. மத். ௬. ௰௪. மாற். ௰௧. உ௫. உ தீமோ. ௧. ௰௬. எபி. ௬. ௰. யாக். உ. ௰௩.
14 சங். ௰௫. உ: உ௪. ௪. எபி. ௰உ. ௰௪.
15 ௧ கொரி. ௰௩. ௰உ. ௧ யோ. ௩. உ, ௩.
16 உ கொரி. ௪. ௰௭. உ தீமோ. உ. ௰உ. ௧ பே. ௩. ௰௪.
17 லூக். ௬. உஉ.
18 ௧ பே. ௪. ௰௪.

Digitized by Google

மேல் பொய்யாய்ச் சொன்னார்களானால், நீங்கள் பாக்கியவான்களாயிருப்பீர்கள்.

௰௨ [1]பரலோகத்திலே உங்களுக்கு மிகுந்த பலன் கிடைப்பதினாலே நீங்கள் சந்தோஷப்பட்டு மிகவும் களிகூருங்கள், [2]உங்களுக்கு முன் இருந்த தீர்க்கதரிசிகளையும் அப்படியே துன்பப்படுத்தினார்கள்.

௰௩ நீங்கள் பூமிக்கு உப்பாய் இருக்கிறீர்கள்; [3]உப்பானது சாரமற்றதேயானால், எதினால் சாரமாக்கப்படும்? அது வெளியே கொட்டப்படுவதற்கும் மனிதராலே மிதிக்கப்படுவதற்குமேயன்றி, வேறொன்றுக்கும் ஆகாது.

௰௪ [4]நீங்கள் உலகத்திற்கு ஒளியாயிருக்கிறீர்கள்; மலையின்மேல் இருக்கிற பட்டணம் மறைந்திருக்கமாட்டாது.

௰௫ மேலும் [5]விளக்கைக் கொளுத்தி *மரக்காலால் மூடிவையாமல், ஒரு தண்டின்மேலே வைப்பார்கள், அப்பொழுது அது வீட்டில் இருக்கிற யாவருக்கும் பிரகாசம் கொடுக்கும்.

௰௬ அப்படியே மனிதரானவர்கள் [6]உங்கள் நற்கிரியைகளைக்கண்டு, [7]பரமண்டலங்களில் இருக்கிற உங்கள் பிதாவின் மகிமை விளங்கப்பண்ணத்தக்கதாக உங்கள் ஒளி அவர்கள் முன்பாகப் பிரகாசிக்கக்கடவது.

௰௭ [8]வேதப்பிரமாணத்தையானாலும் தீர்க்கதரிசனங்களையானாலும் தள்ளிவிடுகிறதற்கு நான் வந்ததாக நினையாதிருங்கள்; அவைகளைத் தள்ளிவிடுகிறதற்கல்ல, நிறைவேற்றுகிறதற்கு வந்தேன்.

௰௮ [9]வானமும் பூமியும் ஒழிந்துபோனாலும், வேதமுழுவதும் நிறைவேறுவதன்றி, அதில் ஒரு சிறிய எழுத்தாகிலும் ஓர் எழுத்தினுடைய உறுப்பாகிலும் ஒழிந்துபோவதில்லை என்று மெய்யாய் உங்களுக்குச் சொல்லுகிறேன்.

௰௯ [10]ஆகையால் இந்தக் கற்பனைகளில் மிகவும் சிறிய கற்பனையையாகிலும் தள்ளி, அவ்வண்ணமாய் மனிதருக்கு உபதேசிக்கிறவன் எவனோ, அவன் பரலோக இராச்சியத்திலே மிகவும் சிறியவனென்று எண்ணப்படுவான்; அவைகளின்படி செய்து உபதேசிக்கிறவனே, பரலோக இராச்சியத்திலே பெரியவனென்று எண்ணப்படுவான்.

௨௰ ஆதலால் வேதபாரகர்களும் [11]பரிசேயர்களுமானவர்களுடைய நீதியிலும் உங்கள் நீதி அதிகப்பட்டிராவிட்டால், பரலோக இராச்சியத்திற்குள் பிரவேசிக்கமாட்டீர்கள் என்று உங்களுக்குச் சொல்லுகிறேன்.

௨௧ [12]கொலைசெய்யாதிருப்பாயாக என்பதும், கொலைசெய்தவன் நியாயத்தீர்ப்புக்கு ஏதுவாயிருப்பான் என்பதும் †பூர்வத்தாருக்கு உரைக்கப்பட்டதென்று கேள்விப்பட்டிருக்கிறீர்கள்.

௨௨ அல்லாமலும் நான் உங்களுக்குச் சொல்லுகிறதாவது: [13]சகோதரனை வீணாய்க் கோபித்துக்கொள்பவன் எவனோ, அவன் நியாயத்தீர்ப்புக்கு ஏதுவாயிருப்பான்; சகோதரனை வீணன் என்கிறவன் எவனோ, அவன் பெரிய சங்கத்தீர்ப்புக்கு ஏதுவாயிருப்பான்; [14]அவனை ‡மதிகேடன் என்கிறவன் எவனோ, அவன் எரிநரகத்திற்கு ஏதுவாயிருப்பான்.

௨௩ ஆகையால் நீ [15]பலிபீடத்தினிடத்தில் உன் காணிக்கையைச் செலுத்தவந்து, உன்மேல் சகோதரனுக்கு விசனம் உண்டென்று அங்கே நினைவுகொள்வாயாகில்,

௨௪ [16]அந்தப் பலிபீடத்தின்முன் உன் காணிக்கையை வைத்துவிட்டுப் போய், முன்பு சகோதரனுடனே ஒப்புரவாகிப் பின்பு வந்து உன் காணிக்கையைச் செலுத்துவாயாக.

இ. பி. ௬௧.

1 லூக். ௬. ௨௩. அப். ௫. ௪௧. உரோ. ௫. ௩. யாக். க. உ. க பே. ௪. ௰௩.
2 நெகே. ௯. ௨௬. உ நாளா. ௩௬. ௰௬. மத். ௨௩. ௩௪, ௩௭. அப். ௭. ௫௨. க தெச. ௨. ௰௫.
3 மாற். ௯. ௫௦. லூக். ௰௪. ௩௪, ௩௫.
4 யோ. ௮. ௰௨. பிலி. ௨. ௰௫.
5 மாற். ௪. ௨௧ லூக். ௮. ௰௬: ௰௧. ௩௩.
* மூலத்திலுள்ள வார்த்தை ஏறக்குறைய ஒரு உமக்குக் குறைய பெக் (Peck) என்கிற ஒரு இங்கிலீச அவரைக்குறிக்கும்
6 க பே. ௨. ௰௨.
7 யோவா. ௰௫. ௮ க கொரி. ௰௪. ௨௫.
8 உரோ ௩. ௩௧: ௰. ௪. கலா. ௩. ௨௪.
9 லூக் ௰௬. ௰௭.
10 யாக். ௨. ௰.
11 உரோ ௯ ௩௧: ௰.௩
12 உ மோ ௨௰. ௰௩ ௫ மோ ௫. ௰௭.
† அல்லது பூர்வத்தாராலே.
13 க யோ. க ௰௫.
14 யாக். ௨. ௨௰.
‡ ராக்கா என்ற எபிரேயமொழி.
15 மத் அ. ௪: ௨௩. ௰௯
16 யோபு. ௪௨. ௮ மத். ௰௮. ௰௫ க தீமோ. ௨. அ. க பே. ௩.௭.

Digitized by Google

உ௫ [1]உனக்கு எதிராளியானவன் உன்னை நியாயாதிபதிக்கு ஒப்புவியாமலும், அந்த நியாயாதிபதி உன்னை ஊழியக்காரனுக்கு ஒப்புவியாமலும் நீ சிறைச்சாலையில் வைக்கப்படாமலும் இருக்கும்படிக்கு, [2]சீக்கிரமாய் உன் எதிராளியுடனே வழியில் இருக்கும்பொழுதே அவனுடனே நல்மனம் பொருந்துவாயாக.

உ௬ (பொருந்தாவிட்டால்) நீ ஒரு காசும் குறைவின்றி முழுமையும் செலுத்துகிறவரைக்கும், அவ்விடத்தைவிட்டுத் திரும்பி வரமாட்டாய் என்று மெய்யாய் உனக்குச் சொல்லுகிறேன்.

உ௭ ¶ [3]விபசாரம் பண்ணுதிருப்பாயாக என்பது, பூர்வத்தாருக்கு உரைக்கப்பட்டதென்று கேள்விப்பட்டிருக்கிறீர்கள்.

உ௮ அல்லாமலும் நான் உங்களுக்குச் சொல்லுகிறதாவது: [4]ஒரு ஸ்திரியை இச்சிப்போடே பார்க்கிறவன் எவனோ, அவன் தன் இருதயத்தில் அவளோடே விபசாரம் செய்தாயிற்று.

உ௯ [5]ஆகையால் உன் வலது கண் உன்னைக் *கெடுக்கிறதற்கு ஏதுவானால் [6]அதைப் பிடுங்கி எறிந்துபோடு; உன் சரீரம் முழுமையும் நரகத்திலே தள்ளப்படாதபடிக்கு, உன் அவயவங்களில் ஒன்று கெட்டுப்போகிறதே உனக்கு நன்மையாயிருக்குமே.

௩௰ அன்றியும் உன் வலது கை உன்னைக் கெடுக்கிறதற்கு ஏதுவானால், அதைத் தறித்து எறிந்துபோடு; உன் சரீரம் முழுமையும் நரகத்திலே தள்ளப்படாதபடிக்கு, உன் அவயவங்களில் ஒன்று கெட்டுப்போகிறதே உனக்கு நன்மையாயிருக்குமே.

௩௧ [7]அல்லாமலும் யாவனாகிலும் தன் மனைவியைத் தள்ளிவிட்டால், தள்ளுதற் சீட்டை அவளுக்குக் கொடுக்கக்கடவனென்று சொல்லப்பட்டது.

௩௨ அப்படியிருந்தும் [8]எவனாகிலும் தன் மனைவி வேசித்தனம் இல்லாமலிருக்கையில் அவளைத் தள்ளிவிட்டால், அவன் அவளை விபசாரம் செய்யப்பண்ணுகிறவனாய் இருப்பான் என்றும், எவனாகிலும் தள்ளிவிடப்பட்டவளை விவாகம்பண்ணினால், விபசாரம் செய்கிறவனாய் இருப்பான் என்றும் நான் உங்களுக்குச் சொல்லுகிறேன்.

௩௩ ¶ [9]அன்றியும் பொய்யாணையிடாதிருப்பாயாக என்பதும், [10]உன் ஆணைகளைக் கர்த்தருக்குச் செலுத்துவாயாக என்பதும் [11]பூர்வத்தாருக்கு உரைக்கப்பட்டதென்று கேள்விப்பட்டிருக்கிறீர்கள்.

௩௪ அல்லாமலும் நான் உங்களுக்குச் சொல்லுகிறதாவது: [12]எவ்விதத்திலும் சத்தியம்பண்ணக்கூடாது; வானம் [13]தேவாசனமாய் இருக்கிறபடியால் அதின்மேல் சத்தியம்பண்ணலாகாது; பூமி பராபரனுடைய பாதபடியாய் இருக்கிறபடியால் அதின்மேல் சத்தியம்பண்ணலாகாது.

௩௫ எருசலேம் [14]பெரிய இராசனுடைய நகரமாயிருக்கிறபடியால் அதின்மேல் சத்தியம்பண்ணலாகாது.

௩௬ உன் சிரசின் ஒரே மயிரையும் நீ வெண்மையும் கறுப்பும் ஆக்கத்தக்க திராணியில்லாதபடியால் அதின்மேல் சத்தியம்பண்ணலாகாது.

௩௭ [15]உள்ளதை உள்ளதென்றும் இல்லதை இல்லதென்றும் சொல்லக்கடவீர்கள்; இவைகளுக்கு மேற்பட்டது தீமையினால் உண்டாயிருக்கின்றது.

௩௮ ¶ [16]கண்ணுக்குப் பதிலாகக் கண்ணையும், பல்லுக்குப் பதிலாகப் பல்லையும் (வாங்கவேண்டுமென்று) சொல்லப்பட்டதைக் கேள்விப்பட்டிருக்கிறீர்கள்.

௩௯ நான் உங்களுக்குச் சொல்

கி. பி. ௩௧.

1 சம். ௨௫. ௭. ரோ. ௰௨. ௰.
2 லூக். ௰௨. ௮. லூக். ௰௨. ௫௭, ௫௮.
3 ௨ மோ. ௨௰. ௰௪. ௫ மோ. ௫. ௰௮.
4 யோபு. ௩௧. ௧. வாக். ௬. ௨௫. ௨ சாமு. ௧௧. ௨.
5 மத். ௰௮. ௮, ௯. மாற். ௯. ௪௩-௪௭.
* அல்லது இடறல் செய்தால்.
6 மத். ௰௯. ௰௨. ரோ. ௮. ௰௩. ௧ கொரி. ௯. ௨௭. கொலோ. ௩. ௫.
7 ௫ மோ. ௨௪. ௧ எரே. ௩. ௧. மத். ௰௯. ௭. மாற். ௰. ௨. ௪.
8 மத். ௰௯. ௯. லூக். ௰௬. ௰௮. ரோ. ௭. ௩. ௧ கொரி. ௭. ௰, ௰௧.
9 ௨ மோ. ௨௰. ௭. ௩ மோ. ௰௯. ௰௨. ௪ மோ. ௩௰. ௨. ௫ மோ. ௫. ௰௧.
10 ௫ மோ. ௨௩. ௨௩.
11 மத். ௨௩. ௰௬.
12 மத். ௨௩. ௰௬, ௰௮, ௨௨. யாக். ௫. ௰௨.
13 ஏசா. ௬௬. ௧.
14 சங். ௪௮. ௨: ௮௭. ௩.
15 கொலோ. ௪. ௬. யாக். ௫. ௰௨.
16 ௨ மோ. ௨௧. ௨௪. ௩ மோ. ௨௪. ௨௰. ௫ மோ. ௰௯. ௨௧.

Digitized by Google

லுகிறதாவது: [1]பொல்லாதவனோடே எதிர்த்து நிற்கக்கூடாது;[2]ஒருவன் உன்னுடைய வலது கன்னத்தில் அடித்தால், மறு கன்னத்தையும் அவனுக்குத் திருப்பிக் காட்டு.

௪௰ உன்னுடனே வழக்காடி, உன்னுடைய மேலங்கியை எடுத்துக்கொள்ளவேண்டுமென்று இருக்கிறவனுக்கு உன் வஸ்திரத்தையும் விட்டுவிடு.

௪௧ [3]ஒருவன் உன்னை ஒரு காதவழி வரும்படியாகப் பலவந்தம் பண்ணினால், அவனோடே இருகாதவழிமட்டும் நடந்துபோ.

௪௨ உன்னை வேண்டிக்கொள்ளுகிறவனுக்குக் கொடு; [4]உன்னிடத்தில் கடன்வாங்க விரும்புகிறவனுக்கு முகங்கோணுதிருப்பாயாக.

௪௩ [5]நீ பிறனில் அன்புவைத்து, [6]உன் சத்துருவைப் பகைக்கக்கடவாய் என்று சொல்லப்பட்டதைக் கேள்விப்பட்டிருக்கிறீர்கள்.

௪௪ நான் உங்களுக்குச் சொல்லுகிறது: பரமண்டலங்களில் இருக்கிற [7]உங்கள் பிதா பொல்லாதவர்கள்மேலும் நல்லவர்கள்மேலும் தமது சூரியனை உதிக்கவும், நீதியுள்ளவர்கள்மேலும் அநீதியுள்ளவர்கள்மேலும் மழையைப் பெய்யவும் பண்ணுகிறார்.

௪௫ அப்படியே நீங்கள் அவருக்குப் புத்திரராயிருக்கும்படிக்கு [8]உங்கள் சத்துருக்களில் அன்புகூர்ந்து, உங்களைச் சபிக்கிறவர்களை ஆசீர்வதித்து, [9]உங்களைப் பகைக்கிறவர்களுக்கு நன்மை செய்து, உங்களை நிந்திக்கிறவர்களுக்காகவும் உங்களைத் துன்பப்படுத்துகிறவர்களுக்காகவும் செபம் பண்ணுங்கள்.

௪௬ அல்லாமலும், [10]உங்களில் அன்பு கூருகிறவர்கள்மேலேமாத்திரம் அன்பாயிருப்பீர்களானால், உங்களுக்கு என்ன பலன்வரும்? ஆயக்காரரும் அப்படியே செய்கிறார்கள் அல்லவோ?

௪௭ உங்கள் சகோதரரைமாத்திரம் வாழ்த்திக்கொள்வீர்களானால், அது பெரிய செய்கை ஆகுமா? அஞ்ஞானிகளும் அப்படிச் செய்கிறார்கள் அல்லவோ?

௪௮ ஆகையால் [11]பரமண்டலங்களில் இருக்கிற உங்கள் பிதா பூரண சற்குணராயிருக்கிறதுபோல, [12]நீங்களும் பூரணசற்குணராய் இருக்கக்கடவீர்கள்.

## ௬. அதிகாரம்.

௧. அப்பாலும் கிறிஸ்து பர்வதத்தில் பிரசங்கம்பண்ணி, தருமத்தையும், ௫. செபத்தையும், ௧௪. நம்முடைய சகோதரர்களை மன்னிப்பதையும், ௧௬. உபவாசத்தையும், ௧௯. நம்முடைய பொக்கிஷத்தைக் கட்டிவைக்கவேண்டிய இடத்தையும், ௨௪. பராபரனுக்கும் லோகப்பொருளுக்கும் ஊழியம் செய்வதையும் குறித்துச் சொல்லி, ௨௫. உலககாரியங்களுக்காகக் கவலைபுள்ளவர்களாயிராமல், ௩௩. பராபரனுடைய இராச்சியத்தைத் தேடும்படிக்கு உபதேசித்தது.

நீங்கள் மனிதர்களாலே காணப்படும்பொருட்டாய் *உங்கள் தருமத்தை அவர்களுக்கு முன்பாகச் செய்யாதபடிக்குஎச்சரிக்கையாய் இருங்கள்; செய்தால் பரமண்டலங்களில் இருக்கிற உங்கள் †பிதாவினிடத்திலே பலன்பெறுதிருப்பீர்கள்.

௨ ஆகையால் நீ [13]தருமம்செய்கிறபொழுது, மனிதர்களால் புகழப்படுவதற்கு, செப ஆலயங்களிலும் வீதிகளிலும் செய்கிற வஞ்சகரைப்போல, நீ உனக்குமுன்பாகத் ‡தாரை யூதப்பண்ணக்கூடாது; அவர்கள் தங்கள் பலனை அடைந்துதீர்ந்ததென்று மெய்யாகவே உங்களுக்குச் சொல்லுகிறேன்.

௩ நீ தருமம் செய்கிறபொழுது, உன் தருமம் அந்தரங்கமாய் இருக்கும்படிக்கு, உன் வலதுகை செய்கிறதை உன் இடதுகை அறியாதிருக்கக்கடவது.

௪ அப்பொழுது [14]அந்தரங்கமாயிருக்கிறதை நோக்குகிற உன்

கி. பி. ௬௧.

1 லேவி. ௨௰. ௨௨: ௨௪.௨௯. நீதி. ௧. ௨௯. ௨ரோ. ௰௨.௰௭, ௰௯. ௧ கொரி. ௬. ௭. ௧ தெச. ௫. ௰௫ ௧ பே. ௩. ௯.
2 ஏசா. ௫௰. ௬. புலம். ௩. ௩௰.
3 மத். ௨௭. ௩௨. மாற். ௰௫. ௨௧.
4 ௫ மோ. ௰௫. ௮, ௰ லூக். ௬. ௩௰, ௩௫.
5 ௩ மோ. ௰௯. ௰௮.
6 ௫ மோ. ௨௩. ௬. சங். ௪௧. ௰.
7 லூக். ௬. ௨௭, ௩௫. ௨ரோ. ௰௨. ௰௪, ௨௰.
8 லூக். ௨௩. ௩௪. அப். ௭. ௬௰. ௧ கொரி.௪.௰௨, ௰௩. ௧ பே. ௨. ௨௩: ௩.௯.
9 யோபு ௨௫. ௨.
10 லூக். ௬. ௩௨.
11 எபே ௫. ௧.
12 ௧ மோ. ௰௭. ௧. ௩ மோ. ௰௧.௪௪: ௰௯. ௨. லூக் ௬. ௩௬. கொலோ. ௧. ௨௮: ௪. ௰௨. யாக்.௧.௪. ௧ பே. ௧. ௰௫, ௰௬.
* அல்லது நீதியை; ௫ மோ. ௨௪. ௰௩. சங். ௱௰௨.௯ தானி. ௪.௨௭.௨ கொரி .௯. ௯, ௰.
† அல்லது பிதாவால்.
13 ௨ரோ.௰௨.௮.
‡ அல்லது தாரை ஊதாதே.
14 லூக். ௰௪. ௰௪.

பிதா தாமே வெளியரங்கமாய் உனக்குப் பலன் அளிப்பார்.

௫ ¶ அன்றியும் நீ செபம்பண்ணுகிறபொழுது, வஞ்சகரைப்போல் இருக்கக்கூடாது; அவர்கள் மனிதர்களால் காணப்படும்படிக்கு, செபஆலயங்களிலேயும் வீதிகளின் சந்திகளிலேயும் நின்றுகொண்டு செபம்பண்ண விரும்புகிறார்கள்; அவர்கள் தங்கள் பலனை அடைந்துதீர்ந்ததென்று மெய்யாகவே உங்களுக்குச் சொல்லுகிறேன்.

௬ [1]நீ செபம்பண்ணுகிறபொழுது, உன் வீட்டின் அறைக்குள் பிரவேசித்து, அதின் கதவைப் பூட்டினபின்பு, அந்தரங்கத்தில் இருக்கிற உன் பிதாவை நோக்கிச் செபம்பண்ணு; அப்பொழுது அந்தரங்கமாய் இருக்கிறதை நோக்குகிற உன் பிதா வெளியரங்கமாய் உனக்குப் பலன் அளிப்பார்.

௭ [2]அல்லாமலும் செபம்பண்ணுகிறபொழுது, நீங்கள் அஞ்ஞானிகளைப்போல வீணாய் வசனிக்கக்கூடாது; [3]அவர்கள் தாங்கள் அதிகமாய் வசனித்தால் கேட்கப்படுவோம் என்று நினைக்கிறார்கள்.

௮ அவர்களுக்கு ஒப்பாய்ச்செய்யாதிருங்கள்; நீங்கள் உங்கள் பிதாவை நோக்கி வேண்டிக்கொள்ளுமுன்னமே, அவர் உங்களுக்கு வேண்டுவது இன்னதென்று அறிந்திருக்கிறாரே.

௯ ஆகையால் நீங்கள் செபம்பண்ணவேண்டுவது எப்படியெனில், [4]பரமண்டலங்களில் இருக்கிற எங்கள் பிதாவே, உம்முடைய நாமம் பரிசுத்தமாய் வணங்கப்படுவதாக.

௰ உம்முடைய இராச்சியம் வருவதாக. [5]உம்முடைய சித்தம் பரமண்டலத்திலே செய்யப்படுகிறதுபோல, [6]பூமியிலேயும் செய்யப்படுவதாக.

௰௧ [7]இன்றைக்கு எங்களுக்கு வேண்டிய ஆகாரத்தை எங்களுக்குத் தாரும்.

௰௨ [8]எங்கள் கடனாளிகளுக்கு நாங்கள் மன்னிப்பதுபோல, தேவரீர் எங்கள் கடன்களை மன்னித்தருளும்.

௰௩ [9]நாங்கள் சோதனையில் பிரவேசியாதபடி செய்து, [10]தீமையில் நின்று எங்களை இரட்சித்துக்கொள்ளும். [11]இராச்சியமும் வல்லமையும் மகிமையும் உமக்கே என்றென்றைக்கும் உண்டாயிருக்கின்றன; ஆமென், என்பதேயாம்.

௰௪ [12]மனிதர்கள் (உங்களுக்கு) செய்த தப்பிதங்களை மன்னிப்பீர்களானால், உங்கள் பரமபிதா உங்களுக்கும் மன்னிப்பார்.

௰௫ [13]மனிதர்கள் (உங்களுக்கு) செய்த தப்பிதங்களை மன்னியாதிருப்பீர்களாகில், உங்கள் பிதா உங்கள் தப்பிதங்களையும் மன்னியாதிருப்பார்.

௰௬ ¶ [14]மேலும் நீங்கள் உபவாசம் பண்ணும்பொழுது, வஞ்சகரைப்போல முகவாடலாய் இருக்கக்கூடாது, அவர்கள் உபவாசம் பண்ணுகிறது மனிதர்களால் காணப்படும் பொருட்டாய், தங்கள் முகங்களை வாடப்பண்ணுகிறார்கள்; அவர்கள் தங்கள் பலனை அடைந்துதீர்ந்ததென்று மெய்யாகவே உங்களுக்குச் சொல்லுகிறேன்.

௰௭ நீ [15]உபவாசிக்கும்பொழுது, அந்த உபவாசம் மனிதர்களுக்குக் காணப்படாமல், அந்தரங்கத்தில் இருக்கிற உன் பிதாவுக்கே காணப்படும்படிக்கு உன் சிரசைத் தயிலத்தால் பூசி உன் முகத்தைக் கழுவக்கடவாய்.

௰௮ அப்பொழுது அந்தரங்கமாய் இருக்கிறதை நோக்குகிற உன் பிதா வெளியரங்கமாய் உனக்குப் பலன் அளிப்பார்.

௰௯ ¶ [16]பூமியிலே நீங்கள் உங்களுக்காகப் பொக்கிஷங்களைக்

கி. பி. ௩௧.

1 ௨ இரா. ௪. ௩௩.
2 பிர. ௫. ௨.
3 ௧ இரா. ௮ ௨௬, ௨௯.
4 லூக். ௰௧. ௨. ௪.
5 சங். ௱௩. ௨௰, ௨௧.
6 மத். ௨௬. ௩௯, ௪௨. அப். ௨௧ ௰௪.
7 யோபு. ௨௩. ௰௨. லூக். ௩௨. ௮.
8 மத். ௰௮. ௨௧. ௪.
9 மத். ௨௬. ௪௧. லூக். ௨௨. ௪௰, ௪௬. ௧கொரி.௰ ௰௩. ௨ பே. ௨. ௯ வெளி. ௩.௰.
10 யோவா. ௰௭. ௰௫.
11 ௧ நாளா.௨௯. ௰௧.
12 மாற். ௰௧ ௨௫, ௨௬. எபே. ௪. ௩௨. கொலோ. ௩. ௰௩.
13 மத். ௰௮. ௩௫. யாக். ௨. ௰௩.
14 ஏசா. ௫௮. ௫.
15 ரூத். ௩. ௩. தானி. ௰. ௩.
16 லூக். ௰௨. ௪. ௧ தீமோ. ௬ ௰௭. எபி. ௰௩. ௫. யாக். ௫. ௧.

Digitized by Google

னது நிறைவேறும்படிக்கு அது நடந்தது.

௰சு ¶ அப்பொழுது ஏரோது தான் சாஸ்திரிகளால் வஞ்சிக்கப்பட்டதைக் கண்டு, மிகுந்த கோபம் அடைந்து, அந்தச் சாஸ்திரிகளிடத்திலே தான் கேட்டாராய்ந்த காலத்தின்படி பெத்லேகேம் ஊரிலும் அதினுடைய எல்லைகள் யாவிலும் இரண்டு வயதுமுதற்கொண்டு அதற்குத் தாழ்ந்திருந்த வயதுள்ள ஆண்பிள்ளைகள் எல்லாரையும் கொலைசெய்ய ஆள்களை அனுப்பினான்.

௰எ அப்பொழுது எரேமியா [1]தீர்க்கதரிசியினால் சொல்லப்பட்டது நிறைவேறிற்று; அவன் சொன்னதென்னவென்றால்,

௰அ ராமா ஊரிலே புலம்பலும் அழுகையும் மிகுந்த துக்கிப்புமுள்ள கூக்குரல் கேட்கப்பட்டது; ராகேல் தன் பிள்ளைகளைக் குறித்து அழுதுகொண்டு, அந்தப் பிள்ளைகள் இல்லாதபடியால் ஆறுதல் அடையாதிருக்கிறாள் என்பதே.

௰௯ ¶ ஏரோது இறந்த பின்பு, சொப்பனத்திலே கர்த்தருடைய தூதன் எகிப்திலே யோசேப்புக்குக் காணப்பட்டு,

உ௰ பிள்ளையினுடைய பிராணனை வாங்கத்தேடினவர்கள் இறந்துபோனார்கள்; ஆகையால் நீ எழுந்து பிள்ளையையும் அதினுடைய தாயையும் கூட்டிக்கொண்டு, இஸ்ரவேல் தேசத்துக்குப் போ என்றான்.

உக அந்தப்படியே அவன் எழுந்திருந்து, பிள்ளையையும் அதினுடைய தாயையும் கூட்டிக்கொண்டு, இஸ்ரவேல் தேசத்திற்குப் புறப்பட்டபொழுது,

உஉ அருகேலாவு என்பவன் தன் தகப்பனாகிய ஏரோதினுடைய பட்டத்துக்கு வந்து, யூதேயாவை ஆளுகிறானென்று கேள்விப்பட்டு, அங்கே போகப் பயந்தான்; அப்பொழுது சொப்பனத்திலே அவன் தேவ உத்தரவுபெற்று, [2]கலிலேயா நாட்டினுடைய திசைகளை நோக்கிப் புறப்பட்டுப் போய்,

உ௩ [3]நாசரேயன் என்று அழைக்கப்படுவார் என்கிறதாய்த் தீர்க்கதரிசியால் சொல்லப்பட்டது நிறைவேறும்படிக்கு [4]நாசரேத்தூரில் வந்து வாசம்பண்ணினான்.

கி. பி. உஎ.

1 எரே. ௩௧. ௰௫.
2 மத். ௩. ௰௩. லூக். உ. ௩௯.
3 யோவா. ௧.௪௫.
4 ஏசா. ௰௧. ௧. நியா. ௰௩. ௫. ௧ சாமு. ௧. ௰௧.

## ௩. அதிகாரம்.

௧. யோவான் பிரசங்கித்தது, அவனுடைய வாழியம், நடக்கை, ஞானஸ்நானம், எ. அவர் பரிசேயர்களைக் கடிந்துகொண்டது. ௰௩. கிறிஸ்துவுக்கு யோர்தானில் ஞானஸ்நானம் கொடுத்தது.

அக்காலத்திலே [5]யோவான்ஸ்நானன் வந்து,

உ [6]பரலோக இராசரீகம் சமீபமாயிருக்கின்றது; ஆகையால் மனந்திரும்புங்கள் என்று யூதேயாவின் [7]வனாந்தரத்திலே பிரசங்கம் பண்ணினான்.

௩ அவன் யாவனெனில், [8]கர்த்தருக்காக மார்க்கத்தை நன்றாகச் செய்யுங்களென்றும், அவருடைய பாதைகளைச் செவ்வைபண்ணுங்களென்றும், வனாந்தரத்திலே ஒருவன் [9]சத்தமிடுவானென்று ஏசாயா என்னும் தீர்க்கதரிசியினால் சொல்லப்பட்டவனே.

௪ அல்லாமலும் [10]அந்த யோவான் [11]ஒட்டக மயிர் உடையைத் தரித்து, தன்னுடைய அரையில் வார்க்கச்சையைக் கட்டிக்கொண்டிருந்தான்; [12]வெட்டுக்கிளிகளும் [13]காட்டுத்தேனும் அவனுக்கு ஆகாரமாயிருந்தன.

௫ [14]அக்காலத்திலே எருசலேம் நகரத்தாரும் யூதேயா தேசத்தார் அனைவரும் யோர்தான் நதிக்கடுத்த சுற்றுப்புறத்தார் யாவரும் அவனிடத்திற்குப் புறப்பட்டுப் போய்,

௬ [15]தங்கள் பாவங்களை அறிக்கையிட்டு, யோர்தான் நதியில் அவனாலே ஞானஸ்நானம் பெற்றார்கள்.

5 மாற். ௧. ௪, ௰௪. லூக். ௩. உ, ௩. யோவா.௧.உ௮.
6 தானி. உ. ௪௪. மத். ௪.௰௭:௰.எ.
7 யோசு. ௰௪. ௰.
8 ஏசா. ௪௰. ௩. மாற். ௧.௩. லூக் ௩. ௪. யோவா. ௧.உ௩.
9 லூக் ௩. ௭௩.
10 மாற். ௧. ௬
11 உ இரா௧ அ. சகரி. ௰௩. ௪.
12 ௩ மோ. ௰௧. உஉ.
13 ௧ சாமு. ௰௪. உ௰, உ௬.
14 மாற். ௧. ௫. லூக்.௩.எ.
15 அப் ௰௯. ௪, ௰௮.

Digitized by Google

௭ ¶ அப்படியிருக்கையில், பரிசேயர் சதுசேயர் என்பவர்களிலும் அநேகர் தன்னாலே ஞானஸ்நானம்பெறும்படிக்கு வருகிறதை அவன் கண்டு, அவர்களை நோக்கி, [1]விரியன் பாம்புகளின் குட்டிகளே, [2]இனிவரும் கோபத்துக்கு நீங்கள் தப்பித்துக்கொள்ளும்படியாய் உங்களுக்கு வகைகாட்டினவன் *எவன்?

௮ மனந்திருப்புதலுக்குத்தக்க கனிகளைக் கொடுங்கள்.

௯ [3]ஆபிரகாம் எங்களுடைய பிதா என்று சொல்ல, உங்களுடைய உள்ளத்திலே நினைத்துக்கொள்ளாதிருங்கள்; ஆபிரகாமுக்குப் பராபரன் இந்தக் கல்லுகளில் பிள்ளைகளை உண்டுபண்ண வல்லவராயிருக்கிறார் என்று உங்களுக்குச் சொல்லுகிறேன்.

௰ இப்பொழுதே கோடரி மரங்களுடைய வேரருகே வைத்திருக்கின்றது; ஆகையால் [4]நல்ல கனிகளைக் கொடாத மரங்கள் எல்லாம் வெட்டப்பட்டு அக்கினியிலே போடப்படும்.

௰௧ நீங்கள் மனந்திரும்பும்படிக்கு, [5]நான் சலத்தினாலே உங்களுக்கு ஞானஸ்நானம் கொடுக்கிறேன்; எனக்குப் பின்வருகிறவர் என்னிலும் அதிக வல்லமையுடையவர்; அவருடைய பாதரட்சைகளைச் சுமக்கிறதற்கு நான் பாத்திரவான் அல்ல; [6]அவரே பரிசுத்த ஆவியினாலும் அக்கினியினாலும் உங்களுக்கு ஞானஸ்நானம் கொடுப்பார்.

௰௨ [7]அவருடைய கையில் தூற்றுக்கூடை இருக்கின்றது; அவர் தமது களம் முழுவதையும் விளக்கி, தம்முடைய கோதுமையைக் களஞ்சியத்தில் சேர்ப்பார்; [8]பதரை அவியாத அக்கினியினால் சுட்டுப்போடுவார் என்றான்.

௰௩ ¶ அப்பொழுது [9]இயேசுவானவர் யோவானாலே ஞானஸ்நானம் பெறுவதற்கு, கலிலேயா நாட்டைவிட்டு யோர்தான் அருகே அவனிடத்திற்குப் போனார்.

௰௪ யோவான் அவருக்குத் தடைபண்ணி, உம்மாலே நான் ஞானஸ்நானம் பெறவேண்டுவதாயிருக்க, நீர் என்னிடத்திற்கு வரலாமா என்றான்?

௰௫ அதற்கு இயேசுவானவர் அவனை நோக்கி, இவ்விதமாய்ச் சகல நீதியையும் நிறைவேற்றுகிறது நமக்கு ஏற்றதாயிருக்கின்றது; ஆகையால் இப்பொழுது சம்மதிப்பாயாக என்றார்; அப்பொழுது அவன் சம்மதித்தான்.

௰௬ [10]இயேசுவானவர் ஞானஸ்நானம் பெற்று, சலத்தைவிட்டு ஏறிவந்தவுடனே, இதோ வானம் அவருக்குத் திறக்கப்பட்டது; அல்லாமலும் பராபரனுடைய [11]ஆவி புறாவைப்போல் இறங்கி, அவர்மேல் வருகிறதைக் கண்டான்.

௰௭ [12]மேலும், இவர் எனக்கு அன்பாயிருக்கிற என்னுடைய குமாரன்; இவரில் பிரியமாயிருக்கிறேன் என்று [13]வானத்திலிருந்து சத்தம் உண்டாயிற்று.

## ௪. அதிகாரம்.

௧. கிறிஸ்து உபவாசித்துச் சோதிக்கப்பட்டது. ௰௧. தேவதூதர்கள் அவருக்குப் பணிவிடை செய்தது ௰௩. அவர் கப்பர்நாகூமிலே வாசம்பண்ணி, ௰௭. பிரசங்கிக்கத் துவக்கி, ௰௮. பேதுருவையும், அந்திரேயாவையும், ௨௧. யாக்கோபையும், யோவானையும் அழைத்து, ௨௩. எல்லா வியாதிஸ்தர்களையும் குணமாக்கினது.

அப்பொழுது [14]இயேசுவானவர் பசாசானவனாலே சோதிக்கப்படுவதற்கு, [15]ஆவியினாலே வனாந்தரத்தில் கொண்டுபோகப்பட்டார்.

௨ (அங்கே) அவர் நாற்பதுநாள் இரவும் பகலும் உபவாசம்பண்ணினபின்பு, அவருக்குப் பசி உண்டாயிற்று.

௩ அப்பொழுது அந்தச் சோதிக்கிறவன் அவரிடத்திற்கு வந்து, நீ பராபரனுடைய குமாரனானால் இந்தக் கல்லுகள் அப்பங்களாகும்படி கட்டளையிடு என்றான்.

கி. பி. ௨௭.

*அல்லது நடக்கையைச் சீர்ப்படுத்துவதற்குத் தகுந்த.

Digitized by Google

௪ அதற்கு அவர் மாறுத்தரம் சொன்னது: [1]மனிதனானவன் அப்பத்தினாலே மாத்திரமல்ல, பராபரனுடைய வாய்மலர்ந்தருளிச்செய்கிற எந்த வாக்கினாலும் பிழைப்பான் என்று எழுதியிருக்கின்றதென்றார்.

௫ அப்பொழுது பசாசானவன் அவரைப் [2]பரிசுத்த நகரத்துக்குக் கொண்டுபோய், அவரைத் தேவாலயத்து மேல் உப்பரிகையில் நிறுத்தி,

௬ உன்னைக்குறித்துத் தம்முடைய [3]தூதர்களுக்குக் கட்டளையிடுவார் என்றும், உன்னுடைய பாதம் கல்லில் இடறாதபடிக்கு அவர்கள் உன்னைக் கைகளில் ஏந்திக்கொண்டு போவார்கள் என்றும், எழுதியிருக்கின்றது; ஆகையால் நீ பராபரனுடைய குமாரனாகில் தாழக் குதி என்றான்.

௭ அதற்கு இயேசுவானவர் சொன்னது: அதுவுமல்லாமல், உன்னுடைய தேவனாகிய பராபரனைப்[4]பரிட்சைபாராதிருப்பாயாக என்றும் எழுதியிருக்கின்றது என்றார்.

௮ மறுபடியும் பசாசானவன் அவரை மிகவும் உயர்ந்த மலையின் மேல் கொண்டுபோய், உலகத்திலுள்ள இராச்சியங்கள் எல்லாவற்றையும் அவைகளின் மகிமையையும் அவருக்குக் காண்பித்து,

௯ நீ விழுந்து என்னைத் தொழுதுகொண்டால், இவைகள் எல்லாவற்றையும் உனக்குத்தருவேன் என்று சொன்னான்.

௰ அப்பொழுது இயேசுவானவர் அவனை நோக்கி, உன்னுடைய தேவனாகிய [5]பராபரனைத்தொழுதுகொண்டு, அவர்ஒருவருக்கே ஆராதனைசெய்வாயாக என்று எழுதியிருக்கின்றது; ஆகையால் சாத்தானே, அப்புறம் போ என்றார்.

௰௧ அப்பொழுது பசாசானவன் அவரைவிட்டுப்போனான்; [6]உடனே தேவதூதர்கள் சேர்ந்துவந்து, அவருக்கு ஊழியஞ்செய்தார்கள்.

௰௨ ¶ பின்பு யோவான் காவலில் வைக்கப்பட்டான் *என்று இயேசுவானவர் கேள்விப்பட்டு, [7]கலிலேயா நாட்டுக்குப் புறப்பட்டுப் போய்,

௰௩ நாசரேத்தூரை விட்டு, சேபுலோன் நவுதலி என்னும் நாடுகளின் எல்லைகளில், கடற்கரையருகே இருக்கின்ற கப்பர்நாகூம் பட்டணத்தில் வந்து வாசம்பண்ணினார்.

௰௪ அதினாலே [8]கடற்கரையருகிலும், யோர்தான் நதி ஓரத்திலுமுள்ள அஞ்ஞானிகள் அடங்கியிருக்கிற கலிலேயா தேசமாகிய சேபுலோன் தேசத்தாரும், நவுதலி தேசத்தாருமாகிய இருளில் இருக்கின்ற சனங்கள் மிகுந்த ஒளியைக் கண்டார்கள்.

௰௫ [9]மரண நிழலுள்ள திசையில் இருக்கிறவர்களுக்கு ஒளிதோன்றிற்று என்று,

௰௬ ஏசாயா தீர்க்கதரிசியினால் சொல்லப்பட்டதுநிறைவேறிற்று.

௰௭ ¶ [10]அக்காலத்திலே இயேசுவானவர், பரலோக இராச்சியம் சமீபித்ததாகையால் [11]மனந்திரும்புங்கள் என்று பிரசங்கிக்கத் தொடங்கினார்.

௰௮ ¶ ஒரு காலத்திலே [12]இயேசுவானவர் கலிலேயா நாட்டின் கடலருகே நடந்துபோகையில், மீன் பிடிக்கிறவர்களாகிய [13]பேதுரு என்னப்பட்ட சீமோனும் அவனுடைய சகோதரன் அந்திரேயாவுமாகிய இருவரும் கடலிலே வலை போட்டுக்கொண்டிருக்கிறபொழுது அவர்களைக் கண்டு,

௰௯ என் பின்னே வாருங்கள், [14]உங்களை மனிதரைப் பிடிக்கிறவர்கள் ஆக்குவேன் என்று அவர்களுடனே சொன்னார்.

கி. பி. ௨௭.

1 ௫ மோ. ௮. ௩
2 நெகே. ௰௧. ௧, ௰௮. ஏசா. ௪௮. ௨: ௫௨. ௧. மத். ௨௭. ௫௩. வெளி. ௰௧. ௨.
3 சங். ௯௧. ௰௧.
4 ௫ மோ. ௬. ௰௬.
5 ௫ மோ. ௬. ௰௩. ௰. ௨௰. யோசு. ௨௪. ௰௪. ௧ சாமு. ௭. ௩.
6 எபி. ௧. ௰௪.
* அல்லது ஒப்புக் கொடுக்கப்பட்டான்.
7 மாற். ௧. ௰௪. லூக். ௩. ௨௰:௪. ௰௪,௩௧. யோவா. ௪. ௪௩.
8 ஏசா. ௯. ௧.
9 ஏசா. ௪௨. ௭. லூக். ௨. ௩௨.
10 மாற். ௧. ௰௫.
11 மத். ௩. ௨:௰. ௭. மாற். ௧. ௰௫.
12 மாற். ௧. ௰௬. லூக். ௫. ௨.
13 மாற். ௧. ௰௭. யோவா. ௧. ௪௨.
14 மாற். ௧. ௰௭. லூக். ௫. ௰.

Digitized by Google

௨0 [1]உடனே அவர்கள் வலைகளை விட்டு, அவரைப் பின்பற்றினார்கள்.

௨௧ [2]அவர் அவ்விடம் விட்டு அப்புறம் போகையில், செபெதேயுவினுடைய மகன் யாக்கோபும் அவனுடைய சகோதரன் யோவானுமாகிய இருவரும், தங்கள் தகப்பன் செபெதேயுவுடனே படவிலிருந்து தங்கள் வலைகளைத் தைத்துக்கொண்டிருக்கிறபொழுது, அவர்களைக் கண்டு அவர்களையும் அழைத்தார்.

௨௨ உடனே அவர்கள் படவையும் தங்கள் தகப்பனையும் விட்டு, அவரைப் பின்பற்றினார்கள்.

௨௩ ¶ பின்பு இயேசுவானவர் [3]கலிலேயா நாடெங்கும் சுற்றி நடந்து, அவர்களுடைய செப ஆலயங்களில் சனங்களுக்கு உபதேசம் செய்து, பரலோக [4]இராச்சியத்தைக்குறித்துச் சுவிசேஷத்தைப் பிரசங்கித்து, சனங்களுக்குண்டாயிருந்த சகலவிதமான [5]வியாதிகளையும் சகலவிதமான நோய்களையும் (நீக்கி, அவர்களைக்) குணமாக்கினார்.

௨௪ அவருடைய கீர்த்தி சீரியா தேசத்தில் எங்கும் பிரபலமாயிற்று; பின்பு பலபல வியாதிகளையும் வேதனைகளையும் அடைந்த பிணியாளிகள் யாவரையும் பசாசு பிடித்தவர்களையும் சந்திரரோகிகளையும் திமிர்வாதக்காரரையும் அவரிடத்திற்குக் கொண்டுவந்தார்கள்; அவர்களைக் குணமாக்கினார்.

௨௫ [6]கலிலேயாவிலும் தெக்கப்போலியிலும் எருசலேமிலும் யூதேயாவிலும் யோர்தான் நதிக்கு அப்புறத்திலுமிருந்து மிகுந்த சனங்கள் வந்து, அவரைப் பின்சென்றார்கள்.

## ரு. அதிகாரம்.

௧. மிகுந்த பர்வதத்தின்மேல் தம்முடைய பிரசங்கத்தைத் தொடங்கினது. ௩. பாக்கியவான்கள் இன்னாரென்பது. ௧௩. பூமியின் உப்பு. ௧௪. லோகத்தின் வெளிச்சம், மலையின்மேல் பட்டணம். ௧௫. விளக்கு என்பவைகளைக்குறித்தது. ௧௭. நியாயப்பிரமாணத்தை நிறைவேற்றவந்தாரென்றும், ௨௧. கொலை, ௨௭. விபசாரம், ௩௩. பொய்யாணை இன்னவையென்றும் அறிவித்தது. ௩௮. அநியாயத்தைச் சகிக்கவும், ௪௪. சத்துருக்களையும் சிநேகிக்கவும், ௪௮. பூரண சற்குணராயிருக்கப் பிரயாசப்படவும் உபதேசித்தது.

அவர் அந்தச் சனங்களைக் கண்டு, [7]மலையின்மேல் ஏறி உளுக்காந்தபொழுது, அவருடைய சீஷர்கள் அவரிடத்தில் வந்தார்கள்.

௨ அப்பொழுது அவர் தமது திருவாயைத் திறந்து, அவர்களுக்கு உபதேசித்துச் சொன்னதாவது:

௩ [8]ஆவியில் எளிமையுள்ளவர்கள் பரலோக இராச்சியத்தை அடைவார்கள், ஆகையால் அவர்கள் பாக்கியவான்கள்.

௪ [9]துயரப்படுகிறவர்கள் ஆறுதல் அடைவார்கள், ஆகையால் அவர்கள் பாக்கியவான்கள்.

௫ [10]சாந்தகுணமுள்ளவர்கள் [11]பூமியைச் சுதந்தரித்துக்கொள்ளுவார்கள், ஆகையால் அவர்கள் பாக்கியவான்கள்.

௬ நீதியின்மேல் [12]பசிதாகமுள்ளவர்கள் திருத்தி அடைவார்கள், ஆகையால் அவர்கள் பாக்கியவான்கள்.

௭ இரக்கமுள்ளவர்கள் [13]இரக்கத்தை அடைவார்கள், ஆகையால் அவர்கள் பாக்கியவான்கள்.

௮ [14]சுத்தமான இருதயமுள்ளவர்கள் [15]பராபரனைத் தரிசிப்பார்கள், ஆகையால் அவர்கள் பாக்கியவான்கள்.

௯ சமாதானத்தை நடப்பிக்கிறவர்கள் பராபரனுடைய புத்திரர் என்னப்படுவார்கள், ஆகையால் அவர்கள் பாக்கியவான்கள்.

௰ [16]நீதியின் நிமித்தம் துன்பப்படுகிறவர்கள் பரலோக இராச்சியத்தை அடைவார்கள், ஆகையால் அவர்கள் பாக்கியவான்கள்.

௰௧ என்னிமித்தம் உங்களை [17]நிந்தித்துத் துன்பப்படுத்திப் பலவித [18]தீமையான மொழிகளை உங்கள்

கி. பி. ௩௧.

1 மாற். ௰. ௨௮. லூக். ௫. ௰௧: ௰௮. ௨௮.
2 மாற். ௧. ௰௯, ௨௰: லூக். ௫. ௰.
3 மத். ௯. ௩௫. மாற். ௧. ௨௧, ௩௯. லூக் ௪. ௰௫, ௪௪.
4 மத். ௨௪. ௰௪. மாற். ௧. ௰௫.
5 மாற். ௧. ௩௪.
6 மாற். ௩. ௭.
7 மாற். ௩. ௰௩, ௨௰.
8 லூக். ௬. ௨௰. சங். ௫௧. ௰௭. ஏசா. ௫௭. ௰௫: ௬௬. ௨. ௪௪. இச. ௰௫: ௩௩. ௨.
9 ஏசா. ௬௧. ௨,௩. லூக். ௬. ௨௧. யோவா. ௰௬. ௨௰. ௨ கொரி. ௧. ௭. வெளி. ௨௧. ௪.
10 சங். ௩௭. ௰௧.
11 உரோ. ௪. ௰௩.
12 ஏசா. ௫௫ ௧: ௬௫. ௰௩.
13 சங். ௪௧. ௨. மத். ௬. ௰௪. மாற். ௰௧. ௨௫. ௨ தீமோ. ௧. ௰௬. எபி. ௬. ௰. யாக். ௨. ௰௩.
14 சங். ௰௫. ௨: ௨௪. ௪. எபி. ௰௨. ௰௪.
15 ௧ கொரி. ௰௩. ௰௨. ௧ யோ. ௩. ௨,௩.
16 ௨ கொரி. ௪. ௰௭. ௨ தீமோ. ௨. ௰௨. ௧ பே. ௩. ௰௪.
17 லூக். ௬. ௨௨.
18 ௧ பே. ௪. ௰௪.

Digitized by Google

மேல் பொய்யாய்ச் சொன்னார்களானால், நீங்கள் பாக்கியவான்களாயிருப்பீர்கள்.

௰௨ [1]பரலோகத்திலே உங்களுக்கு மிகுந்த பலன் கிடைப்பதினாலே நீங்கள் சந்தோஷப்பட்டு மிகவும் களிகூருங்கள், [2]உங்களுக்கு முன் இருந்த தீர்க்கதரிசிகளையும் அப்படியே துன்பப்படுத்தினார்கள்.

௰௩ நீங்கள் பூமிக்கு உப்பாயிருக்கிறீர்கள்; [3]உப்பானது சாரமற்றதேயானால், எதினால் சாரமாக்கப்படும்? அது வெளியே கொட்டப்படுவதற்கும் மனிதராலே மிதிக்கப்படுவதற்குமேயன்றி, வேறொன்றுக்கும் ஆகாது.

௰௪ [4]நீங்கள் உலகத்திற்கு ஒளியாயிருக்கிறீர்கள்; மலையின்மேல் இருக்கிற பட்டணம் மறைந்திருக்கமாட்டாது.

௰௫ மேலும் [5]விளக்கைக் கொளுத்தி *மரக்காலால் மூடிவையாமல், ஒரு தண்டின்மேலே வைப்பார்கள், அப்பொழுது அது வீட்டில் இருக்கிற யாவருக்கும் பிரகாசம் கொடுக்கும்.

௰௬ அப்படியே மனிதரானவர்கள் [6]உங்கள் நற்கிரியைகளைக் கண்டு, [7]பரமண்டலங்களில் இருக்கிற உங்கள் பிதாவின் மகிமை விளங்கப்பண்ணத்தக்கதாக உங்கள் ஒளி அவர்கள் முன்பாகப் பிரகாசிக்கக்கடவது.

௰௭ [8]வேதப்பிரமாணத்தையானாலும் தீர்க்கதரிசனங்களையானாலும் தள்ளிவிடுகிறதற்கு நான் வந்ததாக நினையாதிருங்கள்; அவைகளைத் தள்ளிவிடுகிறதற்கல்ல, நிறைவேற்றுகிறதற்கு வந்தேன்.

௰௮ [9]வானமும் பூமியும் ஒழிந்துபோனாலும், வேதமுழுவதும் நிறைவேறுவதன்றி, அதில் ஒரு சிறிய எழுத்தாகிலும் ஓர் எழுத்தினுடைய உறுப்பாகிலும் ஒழிந்துபோவதில்லை என்று மெய்யாய் உங்களுக்குச் சொல்லுகிறேன்.

௰௯ [10]ஆகையால் இந்தக் கற்பனைகளில் மிகவும் சிறிய கற்பனையையாகிலும் தள்ளி, அவ்வண்ணமாய் மனிதருக்கு உபதேசிக்கிறவன் எவனோ, அவன் பரலோக இராச்சியத்திலே மிகவும் சிறியவனென்று எண்ணப்படுவான்; அவைகளின்படி செய்து உபதேசிக்கிறவனே, பரலோக இராச்சியத்திலே பெரியவனென்று எண்ணப்படுவான்.

௨௰ ஆதலால் வேதபாரகர்களும் [11]பரிசேயர்களுமானவர்களுடைய நீதியிலும் உங்கள் நீதி அதிகப்பட்டிராவிட்டால், பரலோக இராச்சியத்திற்குள் பிரவேசிக்கமாட்டீர்கள் என்று உங்களுக்குச் சொல்லுகிறேன்.

௨௧ [12]கொலைசெய்யாதிருப்பாயாக என்பதும், கொலைசெய்தவன் நியாயத்தீர்ப்புக்கு ஏதுவாயிருப்பான் என்பதும் †பூர்வத்தாருக்கு உரைக்கப்பட்டதென்று கேள்விப்பட்டிருக்கிறீர்கள்.

௨௨ அல்லாமலும் நான் உங்களுக்குச் சொல்லுகிறதாவது: [13]சகோதரனை வீணாய்க் கோபித்துக்கொள்பவன் எவனோ, அவன் நியாயத்தீர்ப்புக்கு ஏதுவாயிருப்பான்; சகோதரனை வீணன் என்கிறவன் எவனோ, அவன் பெரிய சங்கத்தீர்ப்புக்கு ஏதுவாயிருப்பான்; [14]அவனை ‡மதிகேடன் என்கிறவன் எவனோ, அவன் எரிநரகத்திற்கு ஏதுவாயிருப்பான்.

௨௩ ஆகையால் நீ [15]பலிபீடத்தினிடத்தில் உன் காணிக்கையைச் செலுத்தவந்து, உன்மேல் சகோதரனுக்கு விசனம் உண்டென்று அங்கே நினைவுகொள்வாயாகில்,

௨௪ [16]அந்தப் பலிபீடத்தின்முன் உன் காணிக்கையை வைத்துவிட்டுப் போய், முன்பு சகோதரனுடனே ஒப்புரவாகிப் பின்பு வந்து உன் காணிக்கையைச் செலுத்துவாயாக.

கி. பி. ௩௧.

1 லூக். ௬. ௨௩. அப். ௫. ௪௧. உரோ. ௫. ௩. யாக். ௧. ௨. ௧பே. ௪. ௰௩.
2 நெகே. ௯. ௨௬. ௨நாளா. ௩௬. ௰௬. மத். ௨௩. ௩௪, ௩௭. அப். ௭. ௫௨. ௧தெச. ௨. ௰௫.
3 மாற். ௯. ௫௰. லூக். ௰௪. ௩௪, ௩௫.
4 யோவா. ௮. ௰௨. பிலி. ௨. ௰௫.
5 மாற். ௪. ௨௧. லூக். ௮. ௰௬: ௰௧. ௩௩.

* மூலத்திலுள்ள வார்த்தை ஏறக்குறைய ஒரு உமுக்குக் குறைய பெக் (Peck) என்கிற ஒரு இங்கிலீசு அளவைக்குநிகர்க்கும்.

6 ௧பே. ௨. ௰௨.
7 யோவா. ௰௫. ௮. ௧கொரி. ௰௪. ௨௫.
8 உரோ. ௩. ௩௧: ௰. ௪. கலா. ௩. ௨௪.
9 லூக். ௰௬. ௰௭.
10 யாக். ௨. ௰.
11 உரோ. ௯. ௩௧: ௰. ௩.
12 ௨மோ. ௨௰. ௰௩. ௫மோ. ௫. ௰௭.

† அல்லது பூர்வத்தாராலே.

13 ௧யோ. ௩. ௰௫.
14 யாக். ௨. ௨௰.

‡ ராக்கா என்ற எபிரேயமொழி.

15 மத். ௮. ௪: ௨௩. ௰௯.
16 யோபு. ௪௨. ௮. மத். ௰௮. ௰௯. ௧தீமோ. ௨. ௮. ௧பே. ௩. ௭.

Digitized by Google

௨௫ [1]உனக்கு எதிராளியானவன் உன்னை நியாயாதிபதிக்கு ஒப்புவியாமலும், அந்த நியாயாதிபதி உன்னை ஊழியக்காரனுக்கு ஒப்புவியாமலும் நீ சிறைச்சாலையில் வைக்கப்படாமலும் இருக்கும்படிக்கு, [2]சீக்கிரமாய் உன் எதிராளியுடனே வழியில் இருக்கும்பொழுதே அவனுடனே நல்மனம் பொருந்துவாயாக.

௨௬ (பொருந்தாவிட்டால்)நீஒரு காசும் குறைவின்றி முழுமையும் செலுத்துகிறவரைக்கும், அவ்விடத்தைவிட்டுத் திரும்பி வரமாட்டாய் என்று மெய்யாய் உனக்குச் சொல்லுகிறேன்.

௨௭ ¶ [3]விபசாரம் பண்ணுதிருப்பாயாக என்பது, பூர்வத்தாருக்கு உரைக்கப்பட்டதென்றுகேள்விப்பட்டிருக்கிறீர்கள்.

௨௮ அல்லாமலும் நான் உங்களுக்குச் சொல்லுகிறதாவது: [4]ஒரு ஸ்திரியை இச்சிப்போடே பார்க்கிறவன் எவனோ, அவன் தன் இருதயத்தில் அவளோடே விபசாரம் செய்தாயிற்று.

௨௯ [5]ஆகையால் உன் வலதுகண் உன்னைக் *கெடுக்கிறதற்கு ஏதுவானால்[6] அதைப் பிடுங்கி எறிந்துபோடு; உன் சரீரம் முழுமையும் நரகத்திலே தள்ளப்படாதபடிக்கு, உன் அவயவங்களில் ஒன்று கெட்டுப்போகிறதே உனக்கு நன்மையாயிருக்குமே.

௩௰ அன்றியும் உன் வலது கை உன்னைக் கெடுக்கிறதற்கு ஏதுவானல், அதைத் தறித்து எறிந்துபோடு; உன் சரீரம் முழுமையும் நரகத்திலே தள்ளப்படாதபடிக்கு, உன் அவயவங்களில் ஒன்றுகெட்டுப்போகிறதே உனக்கு நன்மையாயிருக்குமே.

௩௧ [7]அல்லாமலும் யாவனாகிலும் தன்மனைவியைத் தள்ளிவிட்டால், தள்ளுதற் சீட்டை அவளுக்குக் கொடுக்கக்கடவனென்று சொல்லப்பட்டது.

கி. பி. ௩௧.

1 சங். ௩௨. ௭. சொ. ௨௫. ௫.

2 லூக். ௨௫. ௮. லூக். ௰௨. ௫௭, ௫௮.

3 ௨ மோ.௨. ௰௮. ௫மோ.௫.௰௮.

4 யோபு. ௩௧. ௧. லூக். ௬. ௨௫. ௧ மோ. ௩௪.௨. ௨ சாமு.௰௧.௨.

5 மத். ௰௮. ௮, ௯ மாற். ௯. ௪௩- ௪௭.

* அல்லது இடறல் செய்தால்.

6 மத். ௰௯. ௰௨. உரோ. ௮. ௰௩. ௧ கொரி. ௯. ௨௭. கொலோ. ௩.௫.

7 ௫ மோ. ௨௪. ௧ எரே. ௩. ௧. மத் ௰௯. ௩. ௯. மாற் ௰. ௨. ௯.

8 மத். ௰௯. ௯. லூக். ௰௬. ௰௮. உரோ. ௭. ௩. ௧ கொரி. ௭. ௰, ௰௧.

9 ௨ மோ. ௨௰. ௭. ௩ மோ. ௰௯. ௰௨. ௪ மோ. ௩௰. ௨. ௫ மோ. ௫. ௰௧.

10 ௫ மோ. ௨௩. ௨௩.

11 மத். ௨௩. ௰௬.

12 மத். ௨௩. ௰௬, ௰௮, ௨௨. யாக். ௫ ௰௨.

13 ஏசா. ௬௬. ௧.

14 சங் ௪௮. ௨: அஎ. ௩.

15 கொலோ. ௪. ௬. யாக். ௫.௰௨.

16 ௨ மோ. ௨௧, ௨௪. ௩ மோ. ௨௪. ௨௰. ௫ மோ. ௰௯. ௨௧.

௩௨ அப்படியிருந்தும் [8]எவனாகிலும் தன் மனைவி வேசித்தனம் இல்லாமலிருக்கையில் அவளைத் தள்ளிவிட்டால், அவன் அவளை விபசாரம் செய்யப்பண்ணுகிறவனாய் இருப்பான் என்றும், எவனாகிலும் தள்ளிவிடப்பட்டவளை விவாகம்பண்ணினால், விபசாரம் செய்கிறவனாய் இருப்பான் என்றும் நான் உங்களுக்குச் சொல்லுகிறேன்.

௩௩ ¶ [9]அன்றியும் பொய்யாணை இடாதிருப்பாயாக என்பதும், [10]உன் ஆணைகளைக் கர்த்தருக்குச் செலுத்துவாயாக என்பதும் [11]பூர்வத்தாருக்கு உரைக்கப்பட்டதென்று கேள்விப்பட்டிருக்கிறீர்கள்.

௩௪ அல்லாமலும் நான் உங்களுக்குச்சொல்லுகிறதாவது: [12]எவ்விதத்திலும் சத்தியம்பண்ணக்கூடாது; வானம் [13]தேவாசனமாய் இருக்கிறபடியால் அதின்மேல் சத்தியம்பண்ணலாகாது; பூமி பராபரனுடைய பாதபடியாய் இருக்கிறபடியால் அதின்மேல் சத்தியம்பண்ணலாகாது.

௩௫ எருசலேம் [14]பெரிய இராசனுடையநகரமாயிருக்கிறபடியால் அதின்மேல் சத்தியம்பண்ணலாகாது.

௩௬ உன் சிரசின் ஒரே மயிரையும் நீ வெண்மையும் கறுப்பும் ஆக்கத்தக்க திராணியில்லாதபடியால் அதின்மேல் சத்தியம்பண்ணலாகாது.

௩௭ [15]உள்ளதை உள்ளதென்றும் இல்லதை இல்லதென்றும் சொல்லக்கடவீர்கள்; இவைகளுக்கு மேற்பட்டது தீமையினால் உண்டாயிருக்கின்றது.

௩௮ ¶ [16]கண்ணுக்குக் பதிலாகக் கண்ணையும், பல்லுக்குப் பதிலாகப் பல்லையும் (வாங்கவேண்டுமென்று) சொல்லப்பட்டதைக் கேள்விப்பட்டிருக்கிறீர்கள்.

௩௯ நான் உங்களுக்குச் சொல்

லுகிறதாவது: [1]பொல்லாதவனோடே எதிர்த்து நிற்கக்கூடாது;[2]ஒருவன் உன்னுடைய வலது கன்னத்தில் அடித்தால், மறு கன்னத்தையும் அவனுக்குத் திருப்பிக் காட்டு.

௪௰ உன்னுடனே வழக்காடி, உன்னுடைய மேலங்கியை எடுத்துக்கொள்ளவேண்டுமென்று இருக்கிறவனுக்கு உன் வஸ்திரத்தையும் விட்டுவிடு.

௪௧ [3]ஒருவன் உன்னை ஒரு காதவழி வரும்படியாகப் பலவந்தம் பண்ணினால், அவனோடே இருகாதவழிமட்டும் நடந்துபோ.

௪௨ உன்னை வேண்டிக்கொள்ளுகிறவனுக்குக் கொடு; [4]உன்னிடத்தில் கடன்வாங்க விரும்புகிறவனுக்கு முகங்கோணாதிருப்பாயாக.

௪௩ [5]நீ பிறனில் அன்புவைத்து, [6]உன் சத்துருவைப் பகைக்கக்கடவாய் என்று சொல்லப்பட்டதைக் கேள்விப்பட்டிருக்கிறீர்கள்.

௪௪ நான் உங்களுக்குச் சொல்லுகிறது: பரமண்டலங்களில் இருக்கிற [7]உங்கள் பிதா பொல்லாதவர்கள்மேலும் நல்லவர்கள்மேலும் தமது சூரியனை உதிக்கவும், நீதியுள்ளவர்கள்மேலும் அநீதியுள்ளவர்கள்மேலும் மழையைப் பெய்யவும் பண்ணுகிறார்.

௪௫ அப்படியே நீங்கள் அவருக்குப் புத்திரராயிருக்கும்படிக்கு [8]உங்கள் சத்துருக்களில் அன்புகூர்ந்து, உங்களைச் சபிக்கிறவர்களை ஆசீர்வதித்து, [9]உங்களைப் பகைக்கிறவர்களுக்கு நன்மைசெய்து, உங்களை நிந்திக்கிறவர்களுக்காகவும் உங்களைத் துன்பப்படுத்துகிறவர்களுக்காகவும் செபம் பண்ணுங்கள்.

௪௬ அல்லாமலும், [10]உங்களில் அன்புகூருகிறவர்கள்மேலேமாத்திரம் அன்பாயிருப்பீர்களானால், உங்களுக்கு என்ன பலன்வரும்?

கி. பி. ௬௧.

1 லாக். ௨௰. ௨௨: ௨௪: ௨௯. நூக். ௬. ௨௯. உரோ. ௰௨. ௰௭, ௰௯. ௧ கொரி. ௬. ௭. ௧ தெச. ௫. ௰௫ ௧ பே. ௩. ௯.
2 ஏசா. ௫௰. ௬. புலம். ௩. ௩௰.
3 மத். ௨௭. ௩௨. மாற். ௰௫. ௨௧.
4 உபோ. ௰௫. ௮, ௰ லூக். ௬. ௩௰, ௩௫.
5 லேவி. ௰௯. ௰௮.
6 உபோ. ௨௩. ௬. சங். ௪௧. ௰.
7 லூக். ௬. ௨௭, ௩௫. உரோ. ௰௨. ௰௪, ௨௰.
8 லூக். ௨௩. ௩௪. அப். ௭. ௬௰. ௧ கொரி. ௪. ௰௨, ௰௩. ௧ பே. ௨. ௨௩: ௩. ௯.
9 யோபு ௨௫. ௨.
10 லூக். ௬. ௩௨.
11 எபே ௫. ௧.
12 ௧ மோ. ௰௭. ௧. ௩ மோ. ௰௧. ௪௪: ௰௯. ௨. லூக் ௬. ௩௬. கொலோ. ௧. ௨௮: ௪. ௰௨. யாக். ௧. ௪. ௧ பே. ௧. ௰௫, ௰௬.
* அல்லது நீதியை; ௫ மோ. ௨௪. ௰௩. சங். ௧௰௨. ௯ தானி. ௪. ௨௭. ௨ கொரி. ௯. ௯, ௰.
† அல்லது பிதாவால்.
13 உரோ. ௰௨. ௮.
‡ அல்லது தாரை ஊதாதே.
14 லூக். ௰௪. ௰௪.

ஆயக்காரரும் அப்படியே செய்கிறார்கள் அல்லவோ?

௪௭ உங்கள் சகோதரரைமாத்திரம் வாழ்த்திக்கொள்வீர்களானால், அது பெரிய செய்கை ஆகுமா? அஞ்ஞானிகளும் அப்படிச் செய்கிறார்கள் அல்லவோ?

௪௮ ஆகையால் [11]பரமண்டலங்களில் இருக்கிற உங்கள் பிதா பூரண சற்குணராயிருக்கிறதுபோல, [12]நீங்களும் பூரணசற்குணராய் இருக்கக்கடவீர்கள்.

## ௬. அதிகாரம்.

௧. அப்பாலும் கிறிஸ்து பர்வதத்தில் பிரசங்கம்பண்ணி, தருமத்தையும், ௫. செபத்தையும், ௰௪. நம்முடைய சகோதரர்களை மன்னிப்பதையும், ௰௬. உபவாசத்தையும், ௰௯. நம்முடைய பொக்கிஷத்தைக் கட்டிவைக்கவேண்டிய இடத்தையும், ௨௪. பராபரனுக்கும் லோகப்பொருளுக்கும் ஊழியம் செய்வதையும் குறித்துச் சொல்லி, ௨௫. உலககாரியங்களுக்காகக் கவலையுள்ளவர்களாயிராமல், ௩௩. பராபரனுடைய இராச்சியத்தைத் தேடும்படிக்கு உபதேசித்தது.

நீங்கள் மனிதர்களாலே காணப்படும்பொருட்டாய் *உங்கள் தருமத்தை அவர்களுக்கு முன்பாகச் செய்யாதபடிக்கு எச்சரிக்கையாய் இருங்கள்; செய்தால் பரமண்டலங்களில் இருக்கிற உங்கள் †பிதாவினிடத்திலே பலன்பெறாதிருப்பீர்கள்.

௨ ஆகையால் நீ [13]தருமம் செய்கிறபொழுது, மனிதர்களால் புகழ்ப்படுவதற்கு, செப ஆலயங்களிலும் வீதிகளிலும் செய்கிற வஞ்சகரைப்போல, நீ உனக்குமுன்பாகத் ‡தாரை யூதப்பண்ணக்கூடாது; அவர்கள் தங்கள் பலனை அடைந்துதீர்ந்ததென்று மெய்யாகவே உங்களுக்குச் சொல்லுகிறேன்.

௩ நீ தருமம் செய்கிறபொழுது, உன் தருமம் அந்தரங்கமாய் இருக்கும்படிக்கு, உன் வலதுகை செய்கிறதை உன் இடதுகை அறியாதிருக்கக்கடவது.

௪ அப்பொழுது [14]அந்தரங்கமாயிருக்கிறதை காண்கிற உன்

Digitized by Google

பிதா தாமே வெளியரங்கமாய் உனக்குப் பலன் அளிப்பார்.

௫ ¶ அன்றியும் நீ செபம்பண்ணுகிறபொழுது, வஞ்சகனைப் போல் இருக்கக்கூடாது; அவர்கள் மனிதர்களால் காணப்படும்படிக்கு, செபஆலயங்களிலேயும் வீதிகளின் சந்திகளிலேயும் நின்றுகொண்டு செபம்பண்ண விரும்புகிறார்கள்; அவர்கள் தங்கள் பலனை அடைந்துதீர்ந்ததென்று மெய்யாகவே உங்களுக்குச் சொல்லுகிறேன்.

௬ [1]நீ செபம்பண்ணுகிறபொழுது, உன் வீட்டின் அறைக்குள் பிரவேசித்து, அதின் கதவைப் பூட்டினபின்பு, அந்தரங்கத்தில் இருக்கிற உன் பிதாவை நோக்கிச் செபம்பண்ணு; அப்பொழுது அந்தரங்கமாய் இருக்கிறதை நோக்குகிற உன் பிதா வெளியரங்கமாய் உனக்குப் பலன் அளிப்பார்.

௭ [2]அல்லாமலும் செபம்பண்ணுகிறபொழுது, நீங்கள் அஞ்ஞானிகளைப்போல வீணாய் வசனிக்கக்கூடாது; [3]அவர்கள் தாங்கள் அதிகமாய் வசனித்தால் கேட்கப்படுவோம் என்று நினைக்கிறார்கள்.

௮ அவர்களுக்கு ஒப்பாய்ச்செய்யாதிருங்கள்; நீங்கள் உங்கள் பிதாவை நோக்கி வேண்டிக்கொள்ளும்முன்னமே, அவர் உங்களுக்கு வேண்டுவது இன்னதென்று அறிந்திருக்கிறாரே.

௯ ஆகையால் நீங்கள் செபம்பண்ணவேண்டுவது எப்படியெனில், [4]பரமண்டலங்களில் இருக்கிற எங்கள் பிதாவே, உம்முடைய நாமம் பரிசுத்தமாய் வணங்கப்படுவதாக.

௰ உம்முடைய இராச்சியம் வருவதாக. [5]உம்முடைய சித்தம் பரமண்டலத்திலே செய்யப்படுகிறதுபோல, [6]பூமியிலேயும் செய்யப்படுவதாக.

௰௧ [7]இன்றைக்கு எங்களுக்கு வேண்டிய ஆகாரத்தை எங்களுக்குத் தாரும்.

௰௨ [8]எங்கள் கடனாளிகளுக்கு நாங்கள் மன்னிப்பதுபோல, தேவரீர் எங்கள் கடன்களை மன்னித்தருளும்.

௰௩ [9]நாங்கள் சோதனையில் பிரவேசியாதபடி செய்து, [10]தீமையில் நின்று எங்களை இரட்சித்துக்கொள்ளும். [11]இராச்சியமும் வல்லமையும் மகிமையும் உமக்கே என்றென்றைக்கும் உண்டாயிருக்கின்றன; ஆமென், என்பதேயாம்.

௰௪ [12]மனிதர்கள் (உங்களுக்கு) செய்த தப்பிதங்களை மன்னிப்பீர்களானால், உங்கள் பரமபிதா உங்களுக்கும் மன்னிப்பார்.

௰௫ [13]மனிதர்கள் (உங்களுக்கு) செய்த தப்பிதங்களை மன்னியாதிருப்பீர்களாகில், உங்கள் பிதா உங்கள் தப்பிதங்களையும் மன்னியாதிருப்பார்.

௰௬ ¶ [14]மேலும் நீங்கள் உபவாசம் பண்ணும்பொழுது, வஞ்சகனைப்போல முகவாடலாய் இருக்கக்கூடாது, அவர்கள் உபவாசம் பண்ணுகிறது மனிதர்களால் காணப்படும் பொருட்டாய், தங்கள் முகங்களை வாடப்பண்ணுகிறார்கள்; அவர்கள் தங்கள் பலனை அடைந்துதீர்ந்ததென்று மெய்யாகவே உங்களுக்குச் சொல்லுகிறேன்.

௰௭ நீ [15]உபவாசிக்கும்பொழுது, அந்த உபவாசம் மனிதர்களுக்குக் காணப்படாமல், அந்தரங்கத்தில் இருக்கிற உன் பிதாவுக்கே காணப்படும்படிக்கு உன் சிரசைத் தயிலத்தால் பூசி உன் முகத்தைக் கழுவக்கடவாய்.

௰௮ அப்பொழுது அந்தரங்கமாய் இருக்கிறதை நோக்குகிற உன் பிதா வெளியரங்கமாய் உனக்குப் பலன் அளிப்பார்.

௰௯ ¶ [16]பூமியிலே நீங்கள் உங்களுக்காகப் பொக்கிஷங்களைக்

கி. பி. ௩௧.

1 ௨ இரா. ௪. ௩௩.
2 பிர. ௫. ௨.
3 ௧ இரா. ௮. ௨௬, ௨௯.
4 லூக். ௰௧. ௨. ௪.
5 சங். ௬௫. ௨௰, ௨௧.
6 மத். ௨௬. ௩௯, ௪௨. அப். ௨௧. ௰௪.
7 யோபு. ௨௩. ௰௨. வாக். ௩௰. ௮.
8 மத். ௰௮. ௨௧. ௲.
9 மத். ௨௬. ௪௧. லூக். ௨௨. ௪௰, ௪௬. ௧ கொரி. ௰ ௰௩. ௨ பே. ௨. ௯. வெளி. ௩. ௰.
10 யோவா. ௰௭. ௰௫.
11 ௧ நாளா. ௨௯. ௰௧.
12 மாற். ௰௧ ௨௫; ௨௬. எபே. ௪. ௩௨. கொலோ. ௩. ௰௩.
13 மத். ௰௮. ௩௫. யாக். ௨. ௰௩.
14 ஏசா. ௫௮. ௫.
15 ரூத். ௩. ௩. தானி. ௰. ௩.
16 வாக். ௨௩. ௪. ௧ தீமோ. ௬. ௰௭. எபி. ௰௩. ௫. யாக். ௫. ௧.

Digitized by Google

கூட்டிவையாதிருங்கள்; அவ்விடத்திலே பூச்சியும் துருவும் அவைகளைக் கெடுக்கும்; திருடரும் கன்னமிட்டுத் திருடுவார்கள்.

உய [1]பரலோகத்திலே உங்களுக்காகப் பொக்கிஷங்களைக் கூட்டிவையுங்கள்; அவ்விடத்திலே பூச்சியாவது துருவாவது அவைகளைக் கெடுக்கிறதுமில்லை, அங்கே திருடர் கன்னமிட்டுத் திருடுகிறதுமில்லை.

உக உங்கள் பொக்கிஷம் எங்கேயோ அங்கே உங்கள் இருதயமும் இருக்குமே.

உஉ [2]கண்ணானது சரீரத்தின் விளக்காய் இருக்கின்றது; ஆகையால் உன் கண் சொஸ்தமாயிருந்தால், உன் சரீரம் முழுவதும் வெளிச்சம் அடைந்திருக்கும்.

உரு உன் கண் வியாதியாயிருந்தால், உன் சரீரம் முழுவதும் இருளடைந்திருக்கும்; அப்படியிருக்க, உன்னிலுள்ள வெளிச்சம் இருளாயிருந்தால், இருளே மிகவும் மிகுதியாய் இருக்குமல்லவோ?

உச ¶ [3]ஒருவன் இரண்டு எசமான்களுக்கு ஊழியம்செய்யமாட்டான்; என்னத்தினாலெனில், ஒருவனை அவன் பகைத்து மற்றவனைச் சிநேகிப்பான்; அல்லது ஒருவனைப் பற்றிக்கொண்டு மற்றவனை அசட்டைபண்ணுவான்; நீங்கள் [4]பராபரனுக்கும் உலகப்பொருளுக்கும் ஊழியம் செய்யமாட்டீர்கள்.

உரு [5]ஆகையால் உங்கள் சீவனுக்காக என்னத்தைப் போசனம் செய்வோம், என்னத்தைப் பானம் பண்ணுவோம் என்றும் உங்கள் சரீரத்துக்காக என்னத்தை உடுப்போம் என்றும் கவலைப்படாதிருங்கள் என்று நான் உங்களுக்குச் சொல்லுகிறேன்; ஆகாரத்திற்குச் சீவனும், உடைக்குச் சரீரமும் அதிகமாய் இருக்கிறதல்லவோ?

உசு [6]ஆகாயத்துப் பறவைகளை நோக்கிப்பாருங்கள்; அவைகள் விதைக்கிறதும் அறுக்கிறதும் களஞ்சியங்களில் கூட்டிவைக்கிறதும் இல்லை; அவைகளுக்கும் உங்கள் பரமபிதா உணவைக் கொடுக்கிறார்; அவைகளிலும் நீங்கள் மேன்மையுள்ளவர்கள் அல்லவா?

உஎ அல்லாமலும் உங்களில் ஒருவன் கவலைப்படுகிறதினாலே தன் சரீர அளவுக்கு ஒரே முழத்தையும் கூட்டுவானா? (மாட்டானே.)

உஅ பின்னும் உடைகளுக்காக நீங்கள் கவலைப்படுகிறதென்ன? வெளியிலே லீலியென்னும் புஷ்பங்கள் வளருகிற வகையை உற்றுப்பாருங்கள்; அவைகள் வருந்துகிறதுமில்லை, நூற்கிறதுமில்லை.

உகூ அப்படியிருந்தும், மிகுந்த மகிமையுடைய சாலோமோனும் அவைகளில் ஒன்றைப்போலாகிலும் (அழகாய்) உடுக்கவில்லையென்று உங்களுக்குச் சொல்லுகிறேன்.

ஙய அப்படியிருக்க அற்ப விசுவாசிகளே, ஒருநாள் வளருகிறதுமாய் மறுநாள் அடுப்பில் போடப்படுகிறதுமாயிருக்கிற புல்லுக்குப் பராபரன் இவ்விதமாய் உடுத்துவிக்கிறதால், மிகவும் அதிகமாய் உங்களுக்கு உடுத்துவிப்பார் அல்லவோ?

ஙக ஆகையால் என்னத்தைப் போசனம் செய்வோம் என்றும், என்னத்தைப் பானம் பண்ணுவோம் என்றும், என்னத்தை உடுப்போம் என்றும், நீங்கள் கவலைப்படாதிருங்கள்; அப்படிப்பட்டவைகளையெல்லாம் அஞ்ஞானிகள் தேடுவார்கள்.

ஙஉ உங்கள் பரமபிதா இவைகள் எல்லாம் உங்களுக்கு வேண்டியவைகள் என்று அறிந்திருக்கிறாரே.

ஙங [7]முதலாவது பராபரனுடைய இராச்சியத்தையும் அவருடைய நீதியையும் தேடுங்கள்; அப்பொ

கி. பி. ஙக.

1 மத். யகூ. உக. லூக். யஉ. ஙங, ஙச: யஅ உஉ. க தீமோ. சு. யகூ. க. பே. க. ௪.

2 லூக். யக. ஙச, ஙரு.

3 லூக் யசு. யங.

4 கலா. க ய. க தீமோ. சு யஎ. யாக். ச. ச.

5 சங். ருரு. உஉ. லூக். யஉ. உஉ, உக. பிலி. ச. சு க பே. ரு. எ.

6 யோபு. ஙஅ. ச. சங். கசஎ. கூ. லூக். யஉ. உச. ஞ.

7 க இரா. ங யக சங். ஙஎ. உரு. மாற். ய. ஙய. லூக் யஉ. ஙக. க தீமோ. ச. அ.

Digitized by Google

ழுது இவைகள் எல்லாம் உங்களுக்குக்கூடக் கொடுக்கப்படும்.

௩௪ ஆகையால் நாளைக்காகக் கவலைப்படாதிருங்கள்; நாளைக்காக நாளைக்குத்தானே கவலைகள் உண்டாகும்; ஒவ்வொரு நாளைக்கு அதினதினுடைய வருத்தம் போதுமே.

## எ. அதிகாரம்.

க. கிறிஸ்து, மற்றவர்களைக் குற்றமாகத் தீர்ப்பிடுவதைக் கண்டித்து, ௬. பரிசுத்தமானவைகளை நாய்களுக்குப் போடக்கூடாதென்று சொல்லி, ௭. ஜெபம்பண்ணவும், ௰௩. இடுக்கமான வாசல்வழியாய்ப் பிரவேசிக்கவும், ௰௫. கள்ளத் தீர்க்கதரிசிகளுக்கு எச்சரிக்கையாயிருக்கவும், ௨௧. வார்த்தையைக் கேட்கிறவர்களாகமாத்திரமல்ல, அதின்படி செய்கிறவர்களாயிருக்கவும், ௨௪. (அப்படிச்செய்வது) கல்மலையின்மேல் வீடு கட்டுவதுபோல் என்றும், ௨௬. (அப்படிச்செய்யாமலிருப்பது) மணலின்மேல் வீடு கட்டுவதுபோல் என்றும் உபதேசித்து, பர்வதத்தின்மேலே பண்ணின பிரசங்கத்தை முடித்தது.

[1]நீங்கள் (மற்றவர்களை) எண்ணுவது எப்படியோ, அப்படி நீங்களும் எண்ணப்படுவீர்கள்.

௨ [2]அல்லாமலும் நீங்கள் அளக்கிற அளவின்படியே உங்களுக்கும் அளப்பார்கள்.

௩ ஆகையால் நீங்கள் (நியாயமின்றி ஒருவனையும்) குற்றவாளிகள் என்று எண்ணாதிருங்கள்; எண்ணினால் உங்களையும் அப்படியே எண்ணுவார்கள். [3]மேலும் நீ உன் கண்ணில் இருக்கிற உத்திரத்தைப் பாராமல், சகோதரனுடைய கண்ணில் இருக்கிற சிராயைப் பார்க்கிறதென்ன?

௪ உத்திரமே உன் கண்ணில் இருக்கையில், நீ சகோதரனை நோக்கி, உன் கண்ணில் இருக்கிற சிராயை நான் எடுத்துப்போடுகிறேன் இடங்கொடு என்று நீ சொல்லுவதென்ன?

௫ வஞ்சகனே, முதலாவது உன் கண்ணில் இருக்கிற உத்திரத்தை எடுத்துப்போடு; பின்பு சகோதரனுடைய கண்ணில் இருக்கிற சிராயை எடுத்துப்போட நன்றாய்ப் பார்ப்பாய்.

இ. பி. ௩௰௧.

1 லூக். ௬. ௩௭. ௨ ரோ. ௨. ௧: ௰௪. ௩, ௪, ௰. ௰௩. ௧ கொரி ௪. ௩, ௫. யாக் ௪. ௰௧. ௰௨.
2 மாற். ௪. ௨௪. லூக். ௬. ௩௮.
3 லூக். ௬. ௪௧. ௪௨.
4 யாக் ௬ எ, ௮: ௨௩. ௬ அப். ௰௩. ௪௫, ௪௬.
5 மத் ௨௩. ௨௨. மாற். ௰௩. ௨௪. லூக். ௰௩. ௬, ௰. ௧௯: ௰௮. ௩. யோவா. ௰௪. ௰௩. ௧௯: ௰௫. ௭. ௧௯: ௰௬. ௨௩, ௨௪. யாக் ௩. ௫, ௬. ௧ யோ. ௩. ௨௨: ௫. ௰௪, ௰௫.
6 யாக். ௮. ௰௭. எரே. ௨௯. ௰௨, ௰௩.
7 லூக். ௰௧. ௯, ௰௨, ௰௩.
8 ௧ யோ. ௬. ௬: ௮. ௨௧.
9 லூக். ௬ ௩௧.
10 ௩ மோ. ௰௯. ௰௮ மத். ௨௨. ௪௦ ௨ ரோ. ௰௩. ௮ ௯, ௰. கலா. ௫ ௰௪. ௧ தீமோ. ௧. ௫.

௬ ¶ [4]பரிசுத்தமானதை நீங்கள் நாய்களுக்குக் கொடுக்கக்கூடாது; அல்லாமலும் உங்கள் முத்துக்களைப் பன்றிகளுக்குப் போடக்கூடாது; அப்படிச் செய்தால், அவைகள் அந்த முத்துக்களைத் தங்கள் கால்களால் மிதித்து, பின்பு திரும்பிக்கொண்டு உங்களைப் பீறும்.

௭ ¶ [5]வேண்டிக்கொள்ளுகிற எவனும் வாங்கிக்கொள்ளுகிறான்; [6]தேடுகிறவன் கண்டடைகிறான்;

௮ தட்டுகிறவனுக்குத் திறக்கப்படும்; ஆகையால் வேண்டிக்கொள்ளுங்கள், அப்பொழுது உங்களுக்குக் கொடுக்கப்படும்; தேடுங்கள், அப்பொழுது கண்டடைவீர்கள்; தட்டுங்கள், அப்பொழுது உங்களுக்குத் திறக்கப்படும்.

௯ [7]உங்களில் எந்த மனிதனானாலும் தன்னிடத்தில் அப்பம் கேட்டுக்கொள்ளுகிற தன் மகனுக்குக் கல்லைக் கொடுப்பானா?

௰ மீனை அவன் கேட்டுக்கொண்டால், அவனுக்குப் பாம்பைக் கொடுப்பானா?

௰௧ [8]ஆதலால் பொல்லாதவர்களாகிய நீங்கள் உங்கள் பிள்ளைகளுக்கு நல்ல ஈவுகளைச் செய்யும்படி அறிந்திருக்க, பரமண்டலங்களில் இருக்கிற உங்கள் பிதா தம்மை வேண்டிக்கொள்ளுகிறவர்களுக்கு மிகவும் அதிகமாய் நன்மைகளைக் கொடாமல் இருப்பாரா?

௰௨ [9]அன்றியும் மனிதர்கள் உங்களுக்குச் செய்யும்படி நீங்கள் விரும்புகிறவைகள் எவைகளோ, அவைகளை நீங்களும் அவர்களுக்குச் செய்யுங்கள்; [10]இதுவே நியாயப்பிரமாணமும் தீர்க்கதரிசனங்களுமாம்.

௰௩ ¶ கேட்டுக்குக் கொண்டுபோகிற வாசல் விரிவாயும் வழி விசாலமாயும் இருக்கின்றன; அதின் வழியாய்ப் பிரவேசிக்கிறவர்கள் அநேகர்.

Digitized by Google

௰௪ சீவனுக்குக் கொண்டுபோகிற வாசல் *மிகவும் இடுக்கமாயும் வழி நெருக்கமாயும் இருக்கின்றது; சிலர்மாத்திரம் அதைக் கண்டடைகிறார்கள். [1]ஆதலால் நீங்கள் இடுக்கமான வாசல்வழியாய்ப் பிரவேசியுங்கள்.

௰௫ ¶ [2]மேலும் ஆட்டைப்போல உருவும், பீறுகிற [3]ஓனாய்களைப்போல மனதும் உடையவர்களாய் உங்களிடத்திற்கு வருகிற [4]கள்ளத்தீர்க்கதரிசிகளுக்கு நீங்கள் இடங்கொடாமல் எச்சரிக்கையாய் இருங்கள்.

௰௬ அவர்களுடைய கனிகளினாலே அவர்களை அறிவீர்கள்; [5]முட்செடிகளில் திராட்சப்பழங்களையும், [6]முட்பூண்டுகளில் அத்திப்பழங்களையும் பறிக்கிறார்களா?

௰௭ அப்படியே [7]நல்லமரங்கள் எல்லாம் நல்ல கனிகளைக் கொடுக்கும், கெட்டமரம் பொல்லாத கனிகளைக் கொடுக்கும்.

௰௮ நல்லமரம் பொல்லாதகனிகளையும், கெட்டமரம் நல்ல கனிகளையும் கொடுக்கமாட்டாது.

௰௯ [8]நல்ல கனிகளைக் கொடாத மரங்களெல்லாம் வெட்டப்பட்டு அக்கினியிலே போடப்படும்.

௨௰ ஆதலால் அவர்களுடைய கனிகளினாலே அவர்களை அறிவீர்கள்.

௨௧ ¶ [9]என்னைக் கர்த்தாவே கர்த்தாவே, என்று சொல்லுகிற எவனும் பரலோக இராச்சியத்தில் பிரவேசிப்பதில்லை; பரமண்டலங்களிலே இருக்கிற என் பிதாவினுடைய சித்தத்தின்படி செய்கிறவனே அதில் பிரவேசிப்பான்.

௨௨ அந்நாளிலே அநேகர் என்னை நோக்கி, ஆ கர்த்தாவே கர்த்தாவே, உமது நாமத்தினாலே [10]நாங்கள் தீர்க்கதரிசனம் உரைத்தோம் அல்லவோ? உமது நாமத்தினாலே பசாசுகளைத் துரத்தினோம் அல்லவோ? உமது நாமத்தினாலே அநேக அற்புதங்களைச் செய்தோம் அல்லவோ என்பார்கள்.

௨௩ [11]அப்பொழுது நான் அவர்களை நோக்கி, நான் ஒருக்காலும் உங்களை அறியவில்லை, [12]அக்கிரமக்காரரே, நீங்கள் என்னை விட்டுப் போங்கள் என்று அவர்களுக்கு அறிவிப்பேன்.

௨௪ ¶ [13]ஆகையால் நான் சொல்லிய வசனங்களைக் கேட்டு அவைகளின்படி செய்கிறவன் எவனோ, அவனைத் தன் வீட்டைக் கல்மலையின்மேல் கட்டின புத்தியுள்ள மனிதனுக்கு ஒப்பிடுவேன்.

௨௫ அந்த வீடு கல்மலையின்மேல் அஸ்திபாரம் போட்டிருந்தபடியால், பெருமழை சொரிந்தும், பெருவெள்ளம் வந்தும், காற்றுக்கள் அடித்து அந்த வீட்டின்மேலே மோதியும், அது விழவில்லை.

௨௬ நான் சொல்லிய வசனங்களைக் கேட்டும் அவைகளின்படி செய்யாதிருக்கிறவன் எவனோ, அவன் தன் வீட்டை மணலின்மேல் கட்டின புத்தியீனனுக்கு ஒப்பாயிருப்பான்.

௨௭ பெருமழை சொரிந்து, பெருவெள்ளம் வந்து, காற்றுக்களும் அடித்து, அந்த வீட்டின்மேல் மோதியபொழுது, அது விழுந்து முழுவதும் இடிந்துபோயிற்று என்றார்.

௨௮ பின்பு நடந்ததென்னவெனில், இயேசுவானவர் இந்த வசனங்களைச் சொல்லி முடித்தபொழுது, அவர் வேதபாரகரைப்போல் அல்ல,

௨௯ [14]அதிகாரமுடையவரைப்போலப் போதித்தபடியினாலே, சனங்கள் அவருடைய [15]உபதேசத்தைக்குறித்துப் பிரமித்தார்கள்.

ஓ. பி. ௲௬.

* அல்லது எவ்வளவாய்.

1 லூக். ௰௩. ௨௪.
2 மீகா. ௩. ௫. ௨ தீமோ. ௩. ௫.
3 அப். ௨௰. ௨௯, ௩௰.
4 உபா. ௰௩. ௩. எரே. ௨௩. ௰௬. மத். ௨௪. ௪, ௫, ௰௧, ௨௪. மாற். ௰௩. ௨௨. உரோ. ௰௬. ௧௭. எபே. ௫. ௬. கொலோ. ௨. ௮. ௨ பே. ௨. ௧: ௨. ௧ யோ. ௪. ௧.
5 லூ. ௰௬: ௰௨. ௪௪.
6 லூக். ௬. ௪௩, ௪௪.
7 எரே. ௰௧. ௰௯. மத். ௰௨. ௩௩.
8 ௩. ௰. லூக். ௩. ௯. யோவா. ௰௫. ௨, ௬.
9 ஓசே. ௮. ௨. மத். ௨௫. ௰௧, ௰௨. லூக். ௬. ௪௬: ௰௩. ௨௫. அப். ௰௯. ௰௩. உரோ. ௨. ௰௩. யாக். ௧. ௨௨.
10 ௧ கொ. ௨௩. ௧ லூக். ௰௩. ௨௬. யோவா. ௰௧. ௫௧. ௧ கொரி. ௰௩. ௨.
11 மத். ௨௫. ௰௨. லூக். ௰௩. ௨௫, ௨௭. ௨ தீமோ. ௨. ௰௯.
12 சங். ௬. ௮: ௯. ௮ மத். ௨௫. ௪௧.
13 லூக். ௬. ௪௭.
14 யோவா. ௭. ௪௬.
15 மத். ௰௩. ௫௪. மாற். ௧. ௨௨: ௬. ௨. லூக். ௪. ௩௨.

## ௮. அதிகாரம்.

௨. கிறிஸ்து குஷ்டரோகியைச் சுத்தமாக்கி, ௫. சேனைத்தலைவனுடைய வேலைக்காரனையும், ௰௪. பேதுருவினுடைய மாமியையும், ௰௬. மற்ற அநேகம்

Digitized by Google

பிணியாளிகளையும் குணமாக்கி, ௰௮. தம்மைப் பின்செல்லவேண்டிய விதத்தைக் காண்பித்து, ௨௬. கடலிலே கொந்தளிப்பை அமர்த்தி, ௨௮. பசாசுபிடித்த இரண்டுபேர்களை விட்டுப் பசாசுகளைத் துரத்தி, ௩௧. அவைகள் பன்றிகளுக்குட் போக உத்தரம் கொடுத்தது.

அவர் மலையிலிருந்து இறங்கி வந்தபொழுது, திரளான சனங்கள் அவரைப் பின்தொடர்ந்தார்கள்.

௨ [1]அப்பொழுது ஒரு குஷ்டரோகி வந்து அவருக்கு முன்பாக விழுந்து வணங்கி, ஆண்டவரே உமக்குச் சித்தமானால், என்னைச் சுத்தமாக்க உம்மால் ஆகும் என்றான்.

௩ இயேசுவானவர் தமது கையை நீட்டி அவனைத் தொட்டு, எனக்குச் சித்தம் உண்டு சுத்தமாகு என்றார்; உடனே குஷ்டரோகம் நீங்க அவன் சுத்தமானான்.

௪ அல்லாமலும் இயேசுவானவர் அவனை நோக்கி, [2]நீ இதை ஒருவனுக்கும் சொல்லாமலிருக்க நினை; அவர்களுக்குச் சாட்சியாகும்படிக்கு நீ போய் ஆசாரியனுக்கு உன்னைக் காண்பித்து, மோசே [3]கட்டளையிட்ட காணிக்கையைச் செலுத்து என்றார்.

௫ ¶ [4]இயேசுவானவர் கப்பர்நாகூம் பட்டணத்தில் பிரவேசித்தபின்பு, நூறுபேருக்குச் சேர்வைகாரன் ஒருவன் அவரிடத்தில் வந்து அவரை நோக்கி,

௬ ஆண்டவரே, என் வேலைக்காரன் திமிர்வாதமுள்ளவனாய் வீட்டிலே கிடந்து, மிகவும் உபாதிப்படுகிறான் என்று வேண்டிக்கொண்டான்.

௭ அவனுடனே இயேசுவானவர், நான் வந்து அவனைக் குணமாக்குவேன் என்றார்.

௮ அதற்கு அந்தச் சேர்வைகாரன் சொன்னது: ஆண்டவரே, [5]நீர் என் வீட்டுக்குள் பிரவேசிப்பதற்கு நான் பாத்திரன் அல்ல.

௯ அல்லாமலும் நான் அதிகாரத்துக்குக் கீழ்ப்பட்டவனாயிருந்தும், எனக்குட்பட்டிருக்கிற சேவகரில் ஒருவனை, போவென்னப் போகிறான்; மற்றொருவனை, வாவென்ன வருகிறான்; எனக்கு அடிமையானவனை, இதைச் செய்யென்னச்செய்கிறான்; ஆகையால் [6]நீர் ஒரு வார்த்தைமாத்திரம் சொன்னால், என் வேலைக்காரன் சொஸ்தம் அடைவான் என்றான்.

௰ இயேசுவானவர் அதைக் கேட்டு ஆச்சரியப்பட்டு, தமக்குப் பின்செல்லுகிறவர்களை நோக்கி, இஸ்ரவேலருக்குள்ளும் நான் இப்படிப்பட்ட விசுவாசத்தைக் காணவில்லை என்று மெய்யாகவே உங்களுக்குச் சொல்லுகிறேன்.

௰௧ பின்னும் நான் உங்களுக்குச் சொல்லுகிறதாவது: [7]அநேகம்பேர் கிழக்கிலும் மேற்கிலுமிருந்து வந்து, பரலோக இராச்சியத்திலே ஆபிரகாம் ஈசாக்கு யாக்கோபு என்பவர்களுடனேகூடப் பந்தியில் இருப்பார்கள்.

௰௨ [8]இராச்சியத்தின் பிள்ளைகள் காரிருளிலே புறம்பாகத் தள்ளப்படுவார்கள்; [9]அங்கே அழுகையும் பற்கடிப்பும் உண்டாயிருக்கும் என்று சொன்னபின்பு,

௰௩ அவர் அந்தத் தலைவனை நோக்கி, நீ போகலாம், உன் விசுவாசத்தின்படி உனக்கு ஆகக்கடவதென்றார்; அந்நாழிகையிலே அவனுடைய வேலைக்காரன் சொஸ்தம் அடைந்தான்.

௰௪ ¶ [10]இயேசுவானவர் பேதுருவின் வீட்டிலே வந்து, அவனுடைய மாமி சுரமாய்க் கிடக்கிறதைக் கண்டு,

௰௫ [11]அவள் கையைத் தொட்டார்; உடனே சுரம் அவளை விட்டு நீங்கிற்று; அவள் எழுந்திருந்து, அவர்களுக்கு ஊழியஞ்செய்தாள்.

௰௬ ¶ [12]அஸ்தமனமானபொழுது, பசாசுபிடித்திருந்த அநேகரை அவரிடத்திற்குக் கொண்டுவந்தார்கள்; [13]அவர் நமது பெலஈனங்களை ஏற்றுக்கொண்டு, நம்முடைய நோய்களைச் சுமந்தார் என்று தீர்க்

இ. பி. ௬௩.

1 மாற். க. ௪௰. லூக். ௫. ௰௨. ௲.
2 மத். ௯. ௩௰. மாற். ௫. ௪௩
3 ௩ மோ. ௰௪. ௩, ௪, ௰. லூக் ௫. ௰௪.
4 லூக். ௭. ௧.
5 லூக். ௰௫. ௰௯, ௨௧.
6 சங். ௱௭. ௨௰.
7 ௧ மோ. ௰௨. ௩. ஏசா. ௨. ௨, ௩: ௰௧. ௰. மல்கி ௧.௰௧. லூக். ௰௩. ௨௯. அப். ௰. ௪௫: ௰௧. ௰௮: ௰௪.௨௭ ௨ரோ. ௰௫. ௯. ௲. எபே.௩.௬.
8 மத். ௨௧. ௪௩.
9 ௰௩. ௪௨, ௫௰: ௨௨. ௰௩: ௨௪. ௫௧: ௨௫. ௩௰. லூக். ௰௩. ௨௮. ௨ பே. ௨. ௰௭. யூதா.௰௩.
10 மாற். ௧. ௨௯: ௩௰. ௩௧. லூக் ௪.௩௮,௩௯.
11 மாற். ௪. ௩௰, ௩௧. லூக். ௪. ௩௯. ௧ கொரி. ௯.௫.
12 மாற்.௧.௩௨.௨௲. லூக்.௪ ௪௰,௪௧.
13 ஏசா. ௫௩. ௪. ௧ பே. ௨. ௨௪

Digitized by Google

கி. பி. ௩௧.

கதரிசியாகிய ஏசாயா சொன்னது நிறைவேறும்படிக்கு,

௧௭ அவர் அந்த ஆவிகளை ஒரு வார்த்தையினாலே துரத்தி, பிணியாளிகள் எல்லாரையும் குணமாக்கினார்.

௧௮ ¶ பின்பு இயேசுவானவர் அநேக சனங்கள் தம்மைச் சூழ்ந்திருக்கக் கண்டு, அக்கரைக்குப் போகக் கட்டளையிட்டார்.

௧௯ [1]அப்பொழுது வேதபாரகன் ஒருவன் வந்து அவரை நோக்கி, போதகரே, நீர் எங்கேபோனாலும் உம்மைப் பின்பற்றுவேன் என்றான்.

௨௰ அவனுடனே இயேசுவானவர் சொன்னது: நரிகளுக்குக் குழிகளும் ஆகாயத்துப் பறவைகளுக்குக் கூடுகளும் உண்டு; மனிதனுடைய குமாரனோ, தலைசாய்க்கிறதற்கு இடம் இல்லாதவனாய் இருக்கிறான் என்றார்.

௨௧ ¶ [2]பின்னும் அவருடைய சீஷர்களில் ஒருவன் அவரைநோக்கி, ஆண்டவரே, முன்பு நான் போய் என் தகப்பனை அடக்கம்பண்ணுவதற்கு உத்தரவு தாரும் என்றான்.

௨௨ [3]அவனுடனே இயேசுவானவர் சொன்னது: மரித்தோர் தங்களிடத்தில் மரித்தவர்களை அடக்கம்பண்ணட்டும், நீ என்னைப் பின்பற்றி வா என்றார்.

௨௩ ¶ பின்பு அவர் படவில் ஏறுகிறபொழுது, சீஷர்கள் அவர் பின் சென்று ஏறினார்கள்.

௨௪ அப்பொழுது படவு [4]அலைகளினாலே மூடப்படத்தக்கதாய்க் கடலிலே பெருங்காற்று உண்டாயிற்று; அவரோ நித்திரைபண்ணினார்.

௨௫ அப்பொழுது அவருடைய சீஷர்கள் வந்து அவரை எழுப்பி, ஆண்டவரே, எங்களை இரட்சிக்கவேண்டும், கெட்டுப்போகிறோமே என்றார்கள்.

௨௬ அவர்களை அவர் நோக்கி, ஆ அற்ப விசுவாசிகளே, ஏன் பயப்படுகிறீர்கள் என்று சொல்லி [5]எழுந்து காற்றுக்களையும் கடலையும் அதட்டினார்; உடனே மிகுந்த அமைதல் உண்டாயிற்று.

௨௭ அவர்கள் மிகவும் ஆச்சரியப்பட்டு, காற்றுக்களும் கடலும் இவருக்குக் கீழ்ப்படியத்தக்கதாக இவர் எப்படிப்பட்டவரோ என்று சொன்னார்கள்.

௨௮ [6]பின்பு அவர் அக்கரையிலே கெர்கேசேனர் தேசத்திலே சேர்ந்தார்; அவ்வழியாய் மற்றொருவரும் நடவாமல் இருக்கத்தக்கதாக மிகுந்த துஷ்டராய், பசாசு பிடித்த மனிதர்கள் இரண்டுபேர் பிரேதக் கல்லறைகளிலிருந்து புறப்பட்டு அவருக்கு எதிராக வந்து,

௨௯ ஆ இயேசுவே, பராபரனுடைய குமாரனே, எங்களுக்கும் உமக்கும் என்ன? காலம் வருமுன்னமே எங்களை வேதனைப்படுத்தும்படிக்கு இங்கே வந்தீரோ என்று கூப்பிட்டார்கள்.

௩௰ அல்லாமலும் அவர்களுக்குச் சற்றேதூரமாய் அநேகம் பன்றிகள் கூட்டமாய் மேய்ந்துகொண்டிருந்தன.

௩௧ அப்பொழுது பசாசுகள், நீர் எங்களைத் துரத்துவீரானால், நாங்கள் அந்தப் பன்றிக்கூட்டத்தில் பிரவேசிக்கும்படிக்கு உத்தரவு கொடும் என்று அவரை வேண்டிக்கொண்டார்கள்.

௩௨ போங்கள் என்று அவர்களுக்குச் சொன்னார்; உடனே அவர்கள் புறப்பட்டுப் பன்றிக்கூட்டத்தில் பிரவேசித்தார்கள்; அப்பொழுது பன்றிகள் எல்லாம் உயர்ந்த மேட்டிலிருந்து கடலில் பாய்ந்து, சலத்திலே மாண்டு போயின.

௩௩ அவைகளை மேய்த்தவர்களோ ஓடிப் பட்டணத்தில் சென்று எல்லாவற்றையும், பசாசு பிடித்

1 லூக். ௯. ௫௭, ௫௮.
2 லூக். ௯. ௫௯.
3 லூக். ௯. ௬௰. ௧ இரா. ௰௯. ௨௰.
4 மாற். ௪. ௩௭. முதல். லூக். ௮. ௨௩. முதல்.
5 சங். ௬௫. ௭: ௮௯. ௯: ௱௭. ௨௯.
6 மாற். ௫. ௧. முதல். லூக். ௮. ௨௬. முதல்.

Digitized by Google

இருந்தவர்களுடைய சங்கதியையும் அறிவித்தார்கள்.

௩௪ அப்பொழுது பட்டணத்தார் எல்லாரும் இயேசுவுக்கு எதிராகப் புறப்பட்டு அவரைக் கண்டு, [1]தங்கள் எல்லைகளை விட்டுப் போகும்படிக்கு அவரை வேண்டிக்கொண்டார்கள்.

## ௯. அதிகாரம்.

௨. திமிர்வாதக்காரன் ஒருவனைச் சொஸ்தமாக்கி, ௯. ஆயத்துறையில் இருந்த மத்தேயுவை அழைத்து, ௰. ஆயக்காரரோடும் பாவிகளோடும் புசித்து, ௰௪. தம்முடைய சீஷர்கள் உபவாசம் பண்ணுவதைக்குறித்து விபரம் சொல்லி, ௨௰. பெரும்பாடுள்ள ஒரு ஸ்திரீயை ஆரோக்கியமாக்கி, ௨௫. [illegible] மகளை மரணத்தினின்று எழுப்பி, ௨௭. இரண்டு குருடருக்குப் பார்வை கொடுத்து, ௩௨. பசாசுபிடித்த ஒரு ஊமையனைக் குணமாக்கி, ௩௬. ஜனங்கள்மேல் மனதுருகினது.

[2]அப்பொழுது அவர் படவில் ஏறி, இக்கரைப்பட்டு, தமது பட்டணத்தில் வந்தார்.

௨ [3]அங்கே படுக்கையின்மேல் கிடந்த திமிர்வாதக்காரனை அவரிடத்திற்குக் கொண்டுவந்தார்கள்; [4]இயேசுவானவர் அவர்களுடைய விசுவாசத்தைக் கண்டு, திமிர்வாதக்காரனை நோக்கி, மகனே திடமாயிரு, உன் பாவங்கள் மன்னிக்கப்பட்டன என்றார்.

௩ அங்கே இருந்த வேதபாரகரில் சிலர், இவன் தேவதூஷணம் சொல்லுகிறான் என்று எண்ணிக்கொண்டார்கள்.

௪ [5]இயேசுவானவர் அவர்களுடைய நினைவுகளை அறிந்து, நீங்கள் உங்கள் இருதயங்களில் பொல்லாங்கானவைகளை நினைக்கிறதென்ன?

௫ உன் பாவங்கள் மன்னிக்கப்பட்டன என்று சொல்லுகிறதோ, எழுந்திருந்து நடவென்று சொல்லுகிறதோ, எது எளிது?

௬ மனிதனுடைய குமாரன் பூமியில் பாவங்களை மன்னிக்கிறதற்கு அதிகாரமுடையவன் என்பதை நீங்கள் அறியும்படிக்கு, அவர் திமிர்வாதக்காரனை நோக்கி, நீ எழுந்திருந்து உன் படுக்கையை எடுத்துக்கொண்டு உன் வீட்டுக்குப்போ என்றார்.

௭ உடனே அவன் எழுந்து தன் வீட்டுக்குப்போனான்.

௮ அதைக் கண்ட சனங்கள் ஆச்சரியப்பட்டு, மனிதருக்கு இப்படிப்பட்ட அதிகாரத்தைக் கொடுத்த பராபரனைப் புகழ்ந்தார்கள்.

௯ ¶ [6]இயேசுவானவர் அவ்விடம்விட்டுப் புறப்பட்டுப்போகையில், ஆயத்துறையில் உளுக்காந்திருந்த ஒரு மனிதனைக் கண்டார்; அவனுக்கு மத்தேயு என்று பேர்; அவனை அவர் நோக்கி, என்னைப் பின்பற்றிவா என்றார்; அவன் எழுந்திருந்து அவர் பின் சென்றான்.

௰ ¶ [7]பின்பு அவர் வீட்டிலே போசனபந்தி இருக்கையில், அநேகம் ஆயக்காரரும் பாவிகளும் வந்து, இயேசுவுடனேயும் அவருடைய சீஷர்களுடனேயும் கூடப் பந்தியிருந்தார்கள்.

௰௧ பரிசேயர் அதைக் கண்டு அவருடைய சீஷர்களை நோக்கி, என்னத்தினாலே உங்கள் போதகர் [8]ஆயக்காரரோடும் [9]பாவிகளோடும் போசனம்பண்ணுகிறார் என்றார்கள்.

௰௨ இயேசுவானவர் அதைக் கேட்டு அவர்களை நோக்கி, சொஸ்தமுள்ளவர்களுக்கு வயித்தியன் வேண்டுவதில்லை, வியாதியுள்ளவர்களுக்கே அவன் வேண்டும்.

௰௩ [10]மேலும், பலியிலும் இரக்கத்தை விரும்புகிறேன் என்கிற (வாக்கியத்தின் கருத்தை) நீங்கள் போய்ப் படித்துக்கொள்ளுங்கள்; [11]அந்தப்படி நான் நீதிமான்களை அல்ல, பாவிகளையே மனந்திரும்புதற்கு அழைக்கவந்தேன் என்றார்.

௰௪ ¶ [12]அந்நேரத்திலே யோவானுடைய சீஷர்கள் அவரிடத்தில் வந்து, நாங்களும் பரிசேயரும் அநேகந்தரம் உபவாசம்பண்ணி வருகிறோம்; உம்முடைய சீஷர்

கி. பி. ௩௧.

1 ௧ கொ. ௨. ௧௪. ௯ இரா. ௰௭ ௰௮. லூக். ௫ ௮ அப். ௰௬. ௩௯.
2 மத். ௪. ௰௩.
3 மாற். ௨. ௩. லூக் ௫. ௰௮.
4 மத். ௮. ௰.
5 சங். ௧௩௯. ௨. மத். ௰௨. ௨௫ மாற். ௰௨. ௰௫. லூக் ௫. ௨௨: ௬ ௮: ௯. ௪௭: ௰௧.௰௭.
6 மாற். ௨. ௰௪. லூக். ௫. ௨௭.
7 மாற். ௨. ௰௫. லூக். ௫. ௨௯.
8 மத். ௰௧. ௰௯. லூக். ௫. ௩௦.
9 லூக். ௰௫. ௨. ௧௪௦. ௨. ௰௫.
10 ஓசே. ௬ ௬. மீகா. ௬. ௬,௭. ௮. மத். ௰௨. ௭.
11 ௧ தீமோ. ௧. ௰௫.
12 மாற் ௨ ௰௮. லூக் ௫. ௩௩: ௰௮.௰௨.

Digitized by Google

களோ உபவாசம்பண்ணுமல் இருக்கிருர்கள், அதேன் என்ருர்கள்.

௰௫ இயேசுவானவர் அவர்களுக்குச் சொன்னது: [1]கலியாணத்துக்கு வந்த மனிதர்கள் மணவாளன் தங்களோடு இருக்கையில் துயரப்படுவோர்களா? மணவாளன் அவர்களைவிட்டு நீக்கப்படும் காலம் வரும்; [2]அப்பொழுது அவர்கள் உபவாசம் பண்ணுவார்கள்.

௰௬ ஒருவனும் கோடித் துண்டைப் பழைய வஸ்திரத்தின்மேல் போட்டு இணைக்கமாட்டான்; இணைத்தால் அதில் இணைத்த துண்டு அவ்வஸ்திரத்தில் எடுபட்டுப்போக அதிக பொத்தல் உண்டாகும்.

௰௭ மேலும் திராட்சப்பழங்களின் புதிய இரசத்தைப் பழைய துருத்திகளில் வார்க்கமாட்டார்கள்; வார்த்தால், துருத்திகள் கிழிந்துபோகும், இரசமும் சிந்திப்போகும், துருத்திகளும் கெட்டுப்போகும்; புதிய இரசத்தைப் புதிய துருத்திகளில் வார்த்துவைத்தால் அப்பொழுது இரண்டும் பத்திரப்பட்டிருக்கும் என்ருர்.

௰௮ ¶ [3]அவர் இவைகளை அவர்களோடே பேசுகையில், தலைவன் ஒருவன் வந்து வணக்கமாய் விழுந்து அவரை நோக்கி, இந்நேரத்திலே என் மகள் இறந்துபோனுள்; அவள் உயிரடையும்படிக்கு நீர் வந்து அவள்மேல் உமது கையை வையும், அப்பொழுது பிழைப்பாள் என்ருன்.

௰௯ இயேசுவானவர் எழுந்திருந்து, தம்முடைய சீஷர்களோடுகூட அவன் பின்னே போனுர்.

௨௰ ¶ [4]அவர் போகையில், பன்னிரண்டு வருஷமாகப் பெரும்பாடுள்ள ஒரு ஸ்திரி வந்து,

௨௧ இவருடைய வஸ்திரத்தைத் தொட்டமாத்திரமே சொஸ்தம் அடையலாம் என்று தன் உள்ளத்திலே எண்ணி, அவருக்குப் பின்னுலே போய், அவருடைய வஸ்திரத்தின் ஓரத்தைத் தொட்டாள்.

௨௨ அப்பொழுது இயேசுவானவர் திரும்பி அவளை நோக்கி, மகளே திடமாயிரு; [5]உன் விசுவாசத்திஞலே உனக்குச் சுகம் உண்டாயிற்று என்ருர்; அந்நேரமே அந்த ஸ்திரி சொஸ்தம் அடைந்தாள்.

௨௩ பின்பு [6]இயேசுவானவர் அத்தலைவனுடைய வீட்டில் சேர்ந்து, [7]தாரை ஊதுகிறவர்களையும் இரைகிற சனங்களையும் கண்டு,

௨௪ அவர்களை நோக்கி, வெளியே போங்கள், [8]இந்தப் பெண் இறந்துபோகவில்லை, நித்திரை பண்ணுகிருள் என்ருர்; அவர்கள் அவரை நோக்கி நகைத்தார்கள்.

௨௫ சனங்கள் வெளியே துரத்தப்பட்டபின்பு, அவர் உள்ளே பிரவேசித்து, அந்தப் பெண்ணின் கையைப் பிடித்தார்; உடனே அவள் எழுந்திருந்தாள்.

௨௬ அந்தச் செய்கையினுலே *அவருடைய கீர்த்தி அத்தேசத்தில் எங்கும் பிரபலமாயிற்று.

௨௭ ¶ இயேசுவானவர் அவ்விடம்விட்டுப் போகையில், [9]குருடர் இருவர் அவர் பின்னே சென்று, ஆ தாவீதின் குமாரனே, எங்களுக்கு இரங்கும் என்று கூப்பிட்டார்கள்.

௨௮ அவர் வீட்டிலே வந்த பின்பு அந்தக் குருடர் அவரிடத்திற்கு வந்தார்கள்; இயேசுவானவர் அவர்களை நோக்கி, இப்படிச்செய்ய எனக்கு வல்லமை உண்டென்று விசுவாசிக்கிறீர்களோ என்ருர்; ஆண்டவரே, விசுவாசிக்கிறோம் என்ருர்கள்.

௨௯ அப்பொழுது அவர் அவர்களுடைய கண்களைத் தொட்டு, உங்கள் விசுவாசத்தின்படி உங்களுக்கு ஆகக்கடவது என்ருர்.

௩௰ உடனே அவர்களுடைய கண்கள் திறக்கப்பட்டன; [10]பின்

கி. பி. ௩௧.

1 யோவா. ௩. ௨௯.
2 அப். ௧௩. ௨, ௩: ௰௪. ௨௩. ௧ கொரி. ௭. ௫.
3 மாற். ௫ ௨௨. ௳. லூக். ௮. ௪௧ ௳.
4 மாற் ௫. ௨௫. லூக். ௮. ௪௩
5 லூக். ௭. ௫௰: ௮. ௪௮: ௰௭. ௰௯: ௰௮. ௪௨.
6 மாற். ௫. ௩௮. லூக். ௮. ௫௧.
7 ௨ நாளா. ௩௫. ௨௫.
8 அப். ௨௰. ௰.
* அல்லது இதை க்குறித்த கீர்த்தி.
9 மத். ௰௫. ௨௨: ௨௰. ௩௰, ௩௧. மாற். ௰. ௪௭, ௪௮. லூக். ௰௮. ௩௮, ௩௯.
10 மத் ௮. ௪: ௰௨. ௰௬: ௰௭. ௯. லூக். ௫. ௰௪.

Digitized by Google

௩௰ இயேசுவானவர் அவர்களை நோக்கி, நீங்கள் இதை ஒருவனுக்கும் அறிவிக்கவேண்டாம் என்று கட்டளையிட்டார்.

௩௧ அவர்களோ புறப்பட்டு, அத்தேசத்தில் எங்கும் [1]அவருடைய கீர்த்தியைப் பிரசித்தம்பண்ணினார்கள்.

௩௨ ¶ [2]அவர்கள் புறப்பட்டுப் போகையில், பசாசு பிடித்திருந்த ஊமையனை அவரிடத்திற்குக் கொண்டுவந்தார்கள்.

௩௩ பசாசு துரத்தப்பட்ட பின்பு ஊமையன் பேசினான்; சனங்கள் ஆச்சரியப்பட்டு, இப்படியாக இஸ்ரவேலருக்குள்ளே ஒருக்காலும் காணப்பட்டதில்லை என்றார்கள்.

௩௪ [3]பரிசேயர், இவன் பசாசுகளுடைய தலைவனாலே பசாசுகளைத் துரத்துகிறான் என்றார்கள்.

௩௫ ¶ [4]பின்பு இயேசுவானவர் சகல பட்டணங்களையும் கிராமங்களையும் சுற்றி நடந்து, [5]செப ஆலயங்களிலே போதகம்பண்ணி, இராச்சியத்தைக்குறித்துச் சுவிசேஷத்தைப் பிரசங்கித்து, சனங்களுக்கு உண்டான எந்த வியாதியையும் எந்த நோயையும் நீக்கி அவர்களைக் குணமாக்கினார்.

௩௬ [6]அப்பொழுது அவர் மிகுந்த சனங்களைப் பார்த்து, மேய்ப்பனில்லாத ஆடுகளைப்போல அவர்கள் *சோர்ந்துபோய்ச் சிதறப்பட்டவர்களாய் இருந்தபடியால், [7]அவர்களைக்குறித்து மிகவும் மனதுருகித் தம்முடைய சீஷர்களை நோக்கி, [8]அறுப்பு மிகுதியாகவே இருக்கின்றது, வேலையாள்கள் சிலர்மாத்திரம் இருக்கிறார்கள்.

௩௭ [9]ஆதலால் அறுப்புக்கு எசமான் தமது அறுப்புக்கு வேலையாள்களை அனுப்பவேண்டும் என்று அவரை வேண்டிக்கொள்ளுங்கள் என்றார்.

கி. பி. ௩௧.

1 மாற். ௭. ௩௬.
2 மத். ௧௨. ௨௨. லூக். ௧௧. ௧௪.
3 மத். ௧௨. ௨௪. மாற். ௩. ௨௨. லூக். ௧௧. ௧௫.
4 மாற். ௬. ௬. லூக். ௧௩. ௨௨.
5 மத். ௪. ௨௩.
6 ௪ மோ. ௨௭. ௧௭. ௧ இரா. ௨௨. ௧௭. எசே. ௩௪. ௫. சக. ௰. ௨.
* அல்லது தொய்ந்துகிடக்கிறவர்களாக.
7 மாற். ௬. ௩௪.
8 லூக். ௰. ௨. யோவா. ௪. ௩௫.
9 ௨ தெச. ௩. ௧.
10 மாற். ௩. ௧௩. ௧௪: ௬. ௭ லூக். ௬. ௧௩—௧௬. ௯. ௧.
† மேலாகவும்.
11 யோவா. ௧. ௪௨.
12 லூக். ௬. ௧௫. அப். ௧. ௧௩.
13 யோவா. ௧௩. ௨௬.
14 மத். ௪. ௧௫.
15 ௨ இரா. ௧௭. ௨௪. யோவா. ௪. ௯, ௨௦.
16 எசா. ௫௩. ௬. எரே. ௫௦. ௬, ௧௭. எசே. ௩௪. ௫, ௬, ௧௬. ௧ பே. ௨. ௨௫.
17 மத். ௧௫. ௨௪. அப். ௧௩. ௪௬.
18 லூக். ௯. ௨.
19 மத். ௩. ௨: ௪. ௧௭. லூக். ௰. ௯.

## ௰. அதிகாரம்.

௧ கிறிஸ்து தம்முடைய பன்னிரண்டு அப்போஸ்தலர்களுக்கும் அற்புதங்களைச் செய்யத்தக்க வல்லமையை அளித்து, ௫ அவர்களுக்கு அதிகாரம் கொடுத்து அவர்களைப் படிப்பித்து, ௧௬ அவர்களுக்கு வரப்போகிற துன்பங்களுக்கடுத்த ஆறுதலைச்சொல்லி, ௪௰ அவர்களை ஏற்றுக்கொள்ளுகிறவர்களுக்கு ஆசீர்வாதத்தை வாக்குத்தத்தம்பண்ணி அவர்களை அனுப்பினது.

அப்பொழுது [10]அவர் தம்முடைய பன்னிரண்டு சீஷர்களையும் தம்மிடத்தில் அழைத்து, அசுத்தமான ஆவிகளைத் †துரத்தவும், சகல விதமான வியாதிகளையும் நோய்களையும் நீக்கவும் அவர்களுக்கு அதிகாரம் கொடுத்தார்.

௨ அந்தப் பன்னிரண்டு அப்போஸ்தலர்களின் நாமங்கள் என்னவெனில், [11]முந்தினவனாகிய பேதுரு என்னப்பட்ட சீமோன், அவனுடைய சகோதரனாகிய அந்திரேயா, செபேதேயுவின் குமாரன் யாக்கோபு, அவனுடைய சகோதரன் யோவான்,

௩ பிலிப்பு, பருத்தோலோமேயு, தோமா, ஆயக்காரனான மத்தேயு, அல்வேயின் குமாரன் யாக்கோபு, ததேயு என்னும் மறுநாமமுள்ள இலெபேயு,

௪ [12]கானானனாகிய சீமோன், இயேசுவைக் காட்டிக்கொடுத்தவனான [13]யூதாஸ்காரியோத்து என்னப்பட்டவர்களே.

௫ ¶ இயேசுவானவர் அந்தப் பன்னிருவரையும் அனுப்பி அவர்களுக்குக் கட்டளையிட்டுச்சொன்னதாவது: [14]நீங்கள் புறத்தேசத்தாரிடத்திற்குப் போகாமலும்,

௬ [15]சாமாரியருடைய பட்டணங்களில் பிரவேசியாமலும், காணாமல்போன [16]ஆடுகளாயிருக்கிற [17]இஸ்ரவேல் குடும்பத்தாரிடத்திற்குப் [18]புறப்பட்டுப் போய்,

௭ [19]பரலோக இராச்சியம் சமீபமாய் வந்ததென்று கூறி,

௮ வியாதிப்பட்டவர்களைக் குணமாக்கி, குஷ்டரோகிகளைச் சுத்தம்பண்ணி, மரித்தோரை எழு

Digitized by Google

ப்பி, பசாசுகளைத் துரத்துங்கள். [1]நீங்கள் இலவசமாய்ப் பெற்றுக் கொண்டீர்கள்; இலவசமாய்க் கொடுங்கள்.

௯ [2]நீங்கள் கச்சைகளில் பொன்னையாவது, வெள்ளியையாவது, செம்பையாவது, வழிக்காகப் பையையாவது, இரண்டு அங்கிகளையாவது, பாதரட்சைகளையாவது, தடியையாவது [3]உங்களுக்காகத் *தேடிவைக்கவேண்டாம்.

௰ [4]வேலைசெய்கிறவன் தனக்கு வேண்டிய ஆகாரத்தைப் பெறும்படிக்குப் பாத்திரவானாய் இருக்கிறானே.

௰௧ [5]அல்லாமலும் எந்தப் பட்டணத்திலும் கிராமத்திலும் நீங்கள் பிரவேசிக்கும்பொழுது, அதிலே இருக்கிற பாத்திரவான் இன்னான் என்று விசாரித்துக்கொண்டு, நீங்கள் புறப்படுமளவும் அவனிடத்தில் இருங்கள்.

௰௨ அந்த வீட்டுக்குள் பிரவேசிக்கிறபொழுது, நீங்கள் அதில் இருக்கிறவர்களை வாழ்த்திக்கொள்ளுங்கள்.

௰௩ [6]அந்தக் குடும்பத்தார் [7]பாத்திரவான்களாய் இருந்தால், நீங்கள் அவர்களுக்குச் சொன்ன சமாதானம் அவர்களைச் சேரக்கடவது; பாத்திரவான்கள் அல்லாதிருந்தால், அந்த வாழ்த்துதல் உங்களிடமாய்த் திரும்பக்கடவது.

௰௪ [8]எங்கேயாகிலும் அவர்கள் உங்களை அங்கீகரித்துக்கொள்ளாமலும் உங்கள் வசனங்களுக்குச் செவிகொடாமலும் இருந்தால், நீங்கள் அந்த வீட்டையாவது பட்டணத்தையாவது விட்டுப் புறப்படுகையில், உங்கள் [9]கால்களிலுள்ள தூளை உதறிப்போடுங்கள்.

௰௫ நியாயத்தீர்ப்பு நாளிலே சோதோம் கொமோரா தேசத்தைப் பார்க்கிலும் [10]அந்தப் பட்டணத்திற்கு அதிக தண்டனை கிடைக்கும் என்று மெய்யாகவே உங்களுக்குச் சொல்லுகிறேன்.

௰௬ [11]பாருங்கள், ஆடுகளை ஓநாய்களுக்குள்ளே (அனுப்புகிறது போல) உங்களை அனுப்புகிறேன்; [12]ஆகையால் நீங்கள் பாம்புகளைப்போல் விவேகமுள்ளவர்களாயும், [13]புறாக்களைப்போல் †கபடமில்லாதவர்களாயும் இருக்கவேண்டும்.

௰௭ அப்படியே நீங்கள் மனிதர்களிடத்தில் சாவதானமாயிருங்கள்; [14]என்னத்தினாலெனில், உங்களைப் பெரிய சங்கத்தாருக்கு ஒப்புக்கொடுத்து, தங்கள் [15]ஆலயங்களிலே உங்களை வாரினால் அடிப்பார்கள்.

௰௮ [16]என் நிமித்தம் நீங்கள் துரைகளிடத்திற்கும் இராசாக்களிடத்திற்கும். கொண்டுபோகப்பட்டு, அவர்களுக்கும் புறத்தேசத்தாருக்கும் முன்பாகச் சாட்சிகளாயிருப்பீர்கள்.

௰௯ [17]அவர்கள் உங்களை ஒப்புக்கொடுக்கும்பொழுது, நீங்கள் பேசவேண்டுவது அந்நேரத்திலே உங்களுக்கு அருளிச்செய்யப்படும்; [18]ஆகையால் எப்படி, எதைப்பேசுவோம் என்று கவலைப்படாதிருங்கள்.

௨௰ [19]பேசுகிறவர்கள் நீங்களல்ல, உங்கள் பிதாவின் ஆவியானவர் உங்களில் இருந்து பேசுகிறவர்.

௨௧ [20]அல்லாமலும் சகோதரன் தன் சகோதரனையும், தகப்பன் தன் பிள்ளையையும் மரணத்திற்கு ஒப்புக்கொடுப்பார்கள்; தாய் தகப்பன்மாரைப் பிள்ளைகள் விரோதித்து, அவர்கள் மரணம் அடையும்படிக்குச் செய்விப்பார்கள்.

௨௨ [21]என்னுடைய நாமத்தின் நிமித்தம் நீங்கள் எல்லாராலும் பகைக்கப்படுவீர்கள்; [22]ஆகிலும் முடிவுபரியந்தம் நிலைத்திருக்கிறவனே இரட்சிக்கப்படுவான்.

௨௩ [23]அல்லாமலும் மனிதனு

கி. பி. ௬௯.

1 அப். அ. ௩௫.
௨௰
2 ௧ சாமு. ௯. எ.
மாற். ௬. அ. லூக்.
௯. ௩: ௰. ௪:
௨௨. ௩௫.
3 மாற். ௬. அ
* ஏதிர்த்துக்கொள்ளவேண்டாம்.
4 லூக். ௰. எ.
௧ கொரி. ௯. எ.
௧ தீமோ. ௫.
௰அ.
5 லூக். ௰. அ.
6 லூக். ௰. ௫.
7 சங். ௩௫. ௰௯.
8 மாற். ௬. ௰௧.
லூக் ௯.௫:௰.௰.
9 லூக். ௰. ௰௧.
நெகே. ௫. ௰௩.
அப் ௰௩. ௫௧:
௰அ. ௬.
10 மத். ௰௧. ௨௨,
௨௪.
11 லூக். ௰. ௩.
12 உரோ. ௰௬.
௰௯. எபே. ௫.
௰௫.
13 ௧ கொரி. ௰௪.
௨௰. பிலி ௨.
௰௫.
† அல்லது நீங்கற்றவர்களாய்.
14 மத். ௨௪. ௯.
மாற். ௰௩. ௯.
லூக். ௰௨. ௰௧:
௨௧.௰௨.
15 அப். ௫. ௪௰.
16 அப். ௰௨. ௧:
௨௪.௰:௨௫. எ,
௨௩. ௨ தீமோ.
௪. ௰௬.
17 ௨ மோ. ௪.
௰௨ எரே.௧. எ.
18 மாற். ௰௩. ௰௧.
லூக். ௰௨. ௰௧.
௨௧. ௰௪.
19 ௨ சாமு. ௨௩.
௨. லூக். ௨௧.
௰௫.அப்.௪. அ:
௬ ௰. ௨ தீமோ.
௪.௰எ.
20 ௬௫,௯௯ வச.
மீகா எ. ௬.
லூக். ௨௧. ௰௬.
21 லூக் ௨௧.௰எ.
22 தானி. ௰௨.
௰௨, ௰௩. மத்.
௨௪. ௰௩. மாற்
௰௩. ௰௩.
23 மத். ௰௬. ௨அ.

Digitized by Google

டைய குமாரன் வரும்வரைக்கும், நீங்கள் இஸ்ரவேலருடையபட்டணங்களை எல்லாம் *கடந்துபோய் முடிக்கமாட்டீர்களென்று மெய்யாகவே உங்களுக்குச் சொல்லுகிறேன்; [1]ஆதலால் ஒரு பட்டணத்திலே உங்களைத் துன்பப்படுத்தினால், மறுபட்டணத்திற்கு ஓடிப் போங்கள்.

௨௪ [2]சீஷனானவன் போதகனிலும், அடிமைப்பட்டவன் தன் எசமானிலும் மேற்பட்டவர்கள் அல்ல.

௨௫ சீஷன் தன் போதகனைப் போலவும், அடிமைப்பட்டவன் தன் எசமானைப்போலவும் இருக்கிறது அவர்களுக்குப் போதுமே; [3]வீட்டெசமானைப் பெயேல்செபூல் என்று அவர்கள் சொல்லுவார்களானால், அவருடைய வீட்டாரை அதிகமாய் அப்படிச் சொல்வார்கள் அல்லவா? ஆதலால் அவர்களுக்குப் பயப்படாதிருப்பீர்களாக.

௨௬ [4]வெளியாக்கப்படாத மறைபொருள் இல்லை; அறியப்படாத இரகசியமும் இல்லை.

௨௭ நான் உங்களுக்கு இருளிலே சொல்லுகிறதை நீங்கள் வெளிச்சத்தில் சொல்லுங்கள்; நீங்கள் இரகசியமாய்க் கேட்கிறதை மேடைகளிலிருந்து பிரசித்தம் செய்யுங்கள்.

௨௮ [5]அல்லாமலும் ஆத்துமாவைக் கொலைசெய்யத்திராணியில்லாமல், சரீரத்தைமாத்திரம் கொலைசெய்கிறவர்களுக்கு நீங்கள் பயப்படவேண்டாம்; ஆத்துமாவையும் சரீரத்தையும் நரகத்திலே கெடுக்க வல்லவருக்குப் பயப்படுங்கள்.

௨௯ †ஒரு காசுக்கு இரண்டு அடைக்கலான் குருவிகளை விற்கிறார்கள் அல்லவோ? ஆகிலும் உங்கள் பிதாவின் உத்தரவில்லாமல் அவைகளில் ஒன்றும் தரையிலே விழாது.

௩௰ [6]அல்லாமலும் உங்கள் தலையின மயிரெல்லாம் எண்ணப்பட்டிருக்கின்றன.

௩௧ ஆதலால் பயப்படாதிருங்கள், அநேகம் அடைக்கலான் குருவிகளைப்பார்க்கிலும் நீங்கள் மேன்மையாயிருக்கிறீர்கள்.

௩௨ [7]அப்படியிருக்க, மனிதர்களுக்கு முன்பாக என்னை அறிக்கைபண்ணுகிறவன் எவனோ, அவனை [8]நானும் பரமண்டலங்களில் இருக்கிற என்பிதா முன்பாக அறிக்கைபண்ணுவேன்.

௩௩ [9]மனிதர் முன்பாக என்னை மறுதலிக்கிறவன் எவனோ, அவனை நானும் பரமண்டலங்களில் இருக்கிற என் பிதாவுக்கு முன்பாக மறுதலிப்பேன்.

௩௪ [10]பூமியின்மேல் சமாதானத்தை வரப்பண்ண வந்தேன் என்று எண்ணிக்கொள்ளாதிருங்கள்; சமாதானத்தை அல்ல, சண்டையை வரப்பண்ண வந்தேன்.

௩௫ எப்படியெனில், குமாரன் தன் தகப்பனையும், மகள் தன் தாயையும், மருமகள் [11]தன் மாமியையும் விட்டுப் பிரிந்து போகப்பண்ணவந்தேன்.

௩௬ [12]அப்படி ஒரு மனிதனுடைய குடும்பத்தாரே அவனுக்குச் சத்துருக்களாயிருப்பார்கள்.

௩௭ [13]என்னிலும் தகப்பனையாவது தாயையாவது அதிகமாய்ச் சிநேகிக்கிறவன் எனக்குப் பாத்திரன் அல்ல; என்னிலும் மகனையாவது மகளையாவது அதிகமாய்ச் சிநேகிக்கிறவன் எனக்குப் பாத்திரன் அல்ல.

௩௮ [14]அல்லாமலும் தன் சிலுவையை எடுத்துக்கொண்டு என் பின்னே செல்லாதவன் எனக்குப் பாத்திரன் அல்ல.

௩௯ [15]தன் ஜீவனைக் காக்கிறவன் அதை இழந்துபோவான்; என்னிமித்தம் தன் ஜீவனை இழக்கிறவன் அதைக் காப்பான்.

---

கி. பி. ௩௧.

* அக்கரைக்குப்போய்.

1 மத். ௨. ௰௩: ௪ ௰௨: ௰௨.௰௫. அப். அ. ௧: ௩. ௨௫: ௰௪. ௩

2 லூக். ௬. ௪௰. யோவா. ௰௩. ௰௬: ௰௫ ௨௰.

3 மத். ௰௨. ௨௪ மாற். ௩. ௨௨. லூக். ௰௧. ௰௫. யோவா. அ. ௪அ, ௫௨.

4 மாற். ௪. ௨௨. லூக். அ. ௰௭: ௰௨. ௨, ௩.

5 ஏசா. அ. ௰௨, ௰௩. லூக். ௰௨. ௪. ௫ பே. ௩. ௰௪.

† மூல பாஷையிலே இது உரோமர்களுடைய பணத்தில் பத்தில் ஒரு பங்காகிய முன்று தட்டும் ஒன்றரைக் காசுமாம்; மத். ௫அ. ௨அ.

6 ௧ சாமு. ௰௪. ௪௫. ௨ சாமு. ௰௪. ௰௧. லூக். ௨௧. ௰அ. அப். ௨௭.௩௪.

7 லூக். ௰௨. அ. உரோ. ௰. ௯,௰.

8 லூக். ௰௨. அ. வெளி. ௩. ௫.

9 மாற். அ. ௩அ. லூக். ௯. ௨௬. ௨ தீமோ. ௨. ௰௨.

10 லூக். ௰௨.௫௧. ௫௩, ௫௩.

11 மீகா. ௭. ௬.

12 சங். ௪௧ ௯: ௫௫. ௰௨, ௰௩ மீகா. ௭. ௬. யோவா.௰௩.௰அ.

13 லூக். ௰௪.௨௬.

14 மத். ௰௬. ௨௪. மாற். அ. ௩௪. லூக். ௯. ௨௩: ௰௪. ௨௭.

15 மத். ௰௬. ௨௫. லூக். ௰௭. ௩௩. யோவா. ௰௨. ௨௫.

Digitized by Google

௪௰ ¶ [1]உங்களைச் சேர்த்துக்கொள்ளுகிறவன் என்னைச் சேர்த்துக்கொள்ளுகிறான்; என்னைச் சேர்த்துக்கொள்ளுகிறவன் என்னை அனுப்பினவரைச் சேர்த்துக்கொள்ளுகிறான்.

௪௧ [2]தீர்க்கதரிசி என்கிற நாமத்தின் நிமித்தம் ஒரு தீர்க்கதரிசியை ஏற்றுக்கொள்ளுகிறவன் தீர்க்கதரிசிக்குரிய பலனை அடைவான்; நீதிமான் என்கிற நாமத்தின் நிமித்தம் நீதிமானை ஏற்றுக்கொள்ளுகிறவன் நீதிமானுக்குரிய பலனை அடைவான்.

௪௨ [3]இந்தச் சிறியவர்களில் ஒருவன் சீஷனாயிருக்கிறதின் நிமித்தம் அவனுக்கு ஒரு கலயம் தண்ணீர்மாத்திரம் தாகத்துக்குக் கொடுக்கிறவன் தன் பலனை இழந்துபோகான் என்று மெய்யாய் உங்களுக்குச் சொல்லுகிறேன் என்றார்.

## ௰௧. அதிகாரம்.

௨. யோவான் தன்னுடைய சீஷர்களைக் கிறிஸ்துவண்டைக்கு அனுப்பினது. ௭. யோவானைக் குறித்துக் கிறிஸ்து பகர்ந்த சாட்சி. ௰௬. யோவானையும் கிறிஸ்துவையுங்குறித்த சனங்களுடைய தாற்பரியம். ௨௰. கோராசின், பெத்சாயிதா, கப்பர்நாகூம் என்ற பட்டணங்களுடைய நன்றியறியாமையையும் குணப்படாமையையும் குறித்துக் கிறிஸ்து கண்டித்தது. ௨௫. சுவிசேஷத்தைப் பேதைமையுள்ளவர்களுக்கு அறிவிக்கிறதினாலே தோன்றுகிற தம்முடைய பிதாவின் ஞானத்தைப் புகழ்ந்தது. ௨௮. பாவச்சுமையை உணர்ந்தவர்கள் யாவரையும் தம்மிடத்தில் வரும்படி அழைத்தது.

இயேசுவானவர் தம்முடைய பன்னிரண்டு சீஷருக்குங் கட்டளைகொடுத்து முடித்தபின்பு, அவர்களுடைய பட்டணங்களில் உபதேசம்பண்ணிப் பிரசங்கிக்கும்படிக்கு அவ்விடம்விட்டுப் புறப்பட்டார்.

௨ ¶ [4]அத்தருணத்திலே காவலில் இருந்த யோவான் கிறிஸ்துவின் [5]கிரியைகளைக் கேள்விப்பட்டு, தன் சீஷரில் இரண்டுபேரை அழைத்து,

௩ [6]நீங்கள் போய் அவரை நோக்கி, வருகிறவர் நீர்தாமோ, அல்லது வேறொருவர் வரக்காத்திருக்கவேண்டுமோ என்று கேளுங்களென்று சொன்னான்.

௪ அவர்கள் அப்படியே வந்து கேட்டபொழுது இயேசுவானவர் அவர்களுக்கு மாறுத்தரமாகச் சொன்னதாவது: நீங்கள் கேட்டும் கண்டும்இருக்கிறவைகளை யோவானுக்குப்போய் அறிவியுங்கள்.

௫ என்னவெனில், [7]என்னாலே குருடர் பார்வை அடைகிறார்கள்; சப்பாணிகள் நடக்கிறார்கள்; குஷ்டரோகிகள் சுத்தம் அடைகிறார்கள்; செவிடர் கேட்கிறார்கள்; மரித்தோர் எழுந்திருக்கிறார்கள்; [8]எளியவர்களுக்குச் சுவிசேஷம் பிரசங்கிக்கப்படுகின்றது.

௬ அல்லாமலும் என்னைக்குறித்து [9]இலச்சை அடையாதிருக்கிறவன் பாக்கியவான் என்று சொல்லி அவர்களை அனுப்பினார்.

௭ அவர்கள் போனபின்பு இயேசுவானவர் சனங்களை நோக்கி, [10]யோவானைக்குறித்துச் சொன்னதாவது: நீங்கள் வனாந்தரத்திலே எதைப்பார்க்கப் புறப்பட்டீர்கள்; [11]காற்றினால் அடித்து அசைக்கப்படுகிற நாணலையோ?

௮ அல்லது எதைப்பார்க்கப் புறப்பட்டீர்கள்? மெல்லிய வஸ்திரங்களைத் தரித்திருக்கிற மனிதனையோ? மெல்லிய வஸ்திரங்களை உடுத்திருக்கிறவர்கள் அரசர்மாளிகைகளில் இருக்கிறார்கள்.

௯ அல்லது எதைப்பார்க்கப் புறப்பட்டீர்கள்? [12]தீர்க்கதரிசியையோ? ஆம், தீர்க்கதரிசியிலும் அதிக மேன்மையுள்ளவனையே என்று உங்களுக்குச் சொல்லுகிறேன்.

௰ [13]அதெப்படியெனில், இதோ நான் என்னுடைய தூதனை உமக்கு முன்பாக அனுப்புகிறேன்; அவன் உமக்கு முன்னே உம்முடைய மார்க்கத்தைச் செம்மைபண்ணுவான் என்று ஒருவனைக்குறித்து எழுதியிருக்கின்றதே, அவன் இவன்தான்.

கி. பி. ௬௧.

1 மத். ௰அ. ௪. லூக். ௯. ௪அ: ௰. ௰௬. யோவா. ௰௨. ௪௪: ௰௩. ௨௰. கலா. ௪. ௰௪.
2 ௧ இரா. ௰௭. ௰: ௰அ. ௪. ௨ இரா. ௪.அ.
3 மத். ௰அ. ௬, ௯. மத். ௨௫.௩௰. மாற். ௯. ௪௧. எபி ௬.௰.
4 மத்.௰௪.௩.
5 லூக். ௭. ௰அ. ௰.
6 ௧ மோ. ௪௯. ௰. ௪ மோ.௨௪. ௰௭. தானி. ௯. ௨௪. யோவா. ௧.௰௪.
7 ஏசா. ௨௯.௰அ: ௩௫ ௫,௬: ௪௨. ௭. யோவா. ௨. ௨௩: ௩. ௨: ௬. ௧௪: ௰. ௨௫, ௩அ: ௰௪. ௰௩.
8 சங். ௨௨. ௨௬. ஏசா. ௬௧. ௧. லூக். ௪. ௰அ. யாக். ௨. ௫.
9 ஏசா. அ. ௰௪, ௰௫. மத். ௰௩. ௫௭: ௨௪. ௰: ௨௬.௩௧.௨ ரோ. ௯.௩௩. ௧ கொரி. ௧ ௨௩; ௨. ௰௪. கலா. ௫. ௰௧. ௧ பே. ௨. அ.
10 லூக். ௭. ௨௪.
11 எபே. ௪. ௰௪.
12 மத். ௰௪. ௫: ௨௧. ௨௬. லூக். ௧. ௭௬: ௭.௨௬.
13 மல்கி. ௩. ௧. மாற். ௧.௨.லூக். ௧. ௭௬: ௭.௨௭.

Digitized by Google

௰௧ அல்லாமலும் ஸ்திரிகளிடத்தில் பிறந்தவர்களில் யோவான்ஸ்நானனிலும் பெரியவன் ஒருவனும் எழும்பவில்லை என்று மெய்யாய் உங்களுக்குச் சொல்லுகிறேன்; ஆகிலும் பரலோக இராச்சியத்திலே சிறியவனானவன் அவனிலும் பெரியவனாயிருக்கிறான்.

௰௨ [1]அல்லாமலும் யோவான்ஸ்நானன் தோன்றின காலம் முதற்கொண்டு இதுவரைக்கும் பரலோக இராச்சியம் *பலவந்தப்படுகின்றது; பலவந்தம்பண்ணுகிறவர்கள் அதைப் பிடித்துக்கொள்ளுகிறார்கள்.

௰௩ [2]நியாயப்பிரமாணமும் தீர்க்கதரிசிகள் யாவரும் அதை யோவான்வரைக்கும்தீர்க்கதரிசனமாய் அறிவித்தார்கள்.

௰௪ [3]நீங்கள் ஒத்துக்கொள்ள மனதிருந்தால், வருபவனாகிய எலியா இவன்தான்.

௰௫ [4]கேட்கிறதற்குக் காதுள்ளவன் கேட்கக்கடவன்.

௰௬ ¶ [5]இந்தச் சந்ததியை ஆருக்கு நிகர்சொல்லுவேன்? சந்தைகளில் உளுக்காந்து தங்கள் தோழரை நோக்கி,

௰௭ உங்களுக்காக ஊதினோம், நீங்கள் கூத்தாடவே இல்லை; உங்களுக்காகப் புலம்பினோம், நீங்கள் மார்பில் அடிக்கவே இல்லை என்று சொல்லிக் கூப்பிடுகிற பிள்ளைகளுக்கு ஒப்பாயிருக்கிறார்கள்.

௰௮ எப்படியென்றால்,யோவான் வந்து போசனபானம்பண்ணாமல் இருந்தான்; பசாசைக்கொண்டிருக்கிறான் என்றார்கள்.

௰௯ [6]மனிதனுடைய குமாரன் வந்து போசனபானம்பண்ணுகிறான்; இதோ பெருந்தீனிக்காரன் என்றும், குடிக்கிறவன் என்றும், ஆயக்காரருக்கும், பாவிகளுக்கும் சிநேகிதன் என்றும் சொல்லுகிறார்கள்; [7]ஆனாலும் ஞானமானது தன் பிள்ளைகளாலே நீதியாய் எண்ணப்படும் என்றார்.

இ. பி. ௩௧.

1 லூக். ௰௬. ௰௬.
* அல்லது பலபந்தத்தினாலே பெறப்படுகிறது.
2 மல்கி. ௪. ௪.
3 மல்கி. ௪. ௫. லூக். ௧. ௰௭. மத். ௰௭. ௰௨.
4 மத். ௰௩. ௯. லூக். ௮. ௮. வெளி. ௨. ௭, ௰௧, ௨௯: ௩. ௬, ௰௩, ௨௨.
5 லூக். ௭. ௩௧.
6 மத். ௩. ௪.
7 லூக். ௭ ௩௫.
8 லூக். ௰.௰௩. ௩.
9 யோனா. ௩. ௭, ௮.
10 மத். ௰. ௰௫: ௨௪. ௨௪.
11 ஏசா. ௰௪. ௰௩, ௰௪, ௰௫. புல. ௨. ௧.
12 மத். ௰. ௰௫.
13 லூக். ௰. ௨௧.
14 சங். ௮. ௨. ௧ கொரி. ௧. ௰௯, ௨௭: ௨. ௮. ௨ கொரி. ௩. ௰௪.
15 மத். ௰௬. ௰௭.

௨௰ ¶ [8]அப்பொழுது அவர் தமது பலத்த செய்கைகளில் அநேகங்களைக் கண்ட பட்டணத்தார் மனந்திரும்பாமல் இருந்தபடியினாலே அவர்களைக் கடிந்துகொள்ளத் தொடங்கிச் சொன்னதாவது:

௨௧ ஐயோ! கோராசின் பட்டணத்தாரே, உங்களுக்கு வேதனைவரும்; ஐயோ! பெத்சாயிதா பட்டணத்தாரே, உங்களுக்கும் வேதனைவரும்; உங்களுக்குள்ளே நடந்த பலத்த செய்கைகள் தீரு சீதோன் பட்டணத்தாருக்குள்ளே நடந்திருந்தால், அவர்கள் சீக்கிரமாய் [9]இரட்டை உடுத்திச் சாம்பலில் உளுக்காந்து மனந்திரும்பியிருப்பார்கள்.

௨௨ [10]ஆதலால் நியாயத்தீர்ப்பு நாளிலே அவர்களைப்பார்க்கிலும் நீங்களே அதிக தண்டிப்பை அடைவீர்கள் என்று உங்களுக்குச் சொல்லுகிறேன்.

௨௩ [11]வானபரியந்தம் உயர்ந்த கப்பர்நாகூம் பட்டணத்தாரே, ஐயோ! பாதாளபரியந்தம் தாழ்த்தப்படுவீர்கள்; உங்களுக்குள்ளே நடந்த பலத்த செய்கைகள் சோதோம் பட்டணத்தாருக்குள்ளே நடந்திருந்தால், அவர்களுடைய பட்டணம் இந்நாள்வரைக்கும் இருக்குமே.

௨௪ [12]ஆதலால் நியாயத்தீர்ப்புநாளிலே அவர்களுக்கு வரும் தண்டிப்பு எளிதாயிருக்கும்; நீங்களே அதிக தண்டிப்பை அடைவீர்கள் என்று உங்களுக்குச் சொல்லுகிறேன் என்றார்.

௨௫ ¶ அக்காலத்திலே [13]இயேசுவானவர் சொன்னதாவது: பிதாவே, வானத்தையும் பூமியையும் ஆளுகிறவரே, [14]நீர் இவைகளை (லோக) ஞானிகளுக்கும் கல்விமான்களுக்கும் மறைத்துக் [15]குழந்தைகளுக்கு வெளிப்படுத்தினபடியினாலே உம்மைத் துதிக்கிறேன்.

௨௬ ஆம் பிதாவே, இப்படியே



Digitized by Google

உமக்குப் பிரியமாயிருந்தது என்ருர்.

உஎ [1]அல்லாமலும் சகலமும் என் பிதாவினுலே எனக்கு ஒப்புக்கொடுக்கப்பட்டிருக்கின்றன; பிதா தவிர மற்ருெருவனும் குமாரனை அறியான்; [2]குமாரன் தவிர மற்ருெருவனும் பிதாவை அறியான்; மேலும் எவனுக்குக் குமாரன் அவரை வெளிப்படுத்தச் சித்தமாயிருக்கிருரோ, அவனும் பிதாவை அறிவான்.

உஅ வருத்தப்பட்டுப் பாரம் சுமந்துகொண்ணுகிறவர்களாகிய நீங்கள் எல்லாரும் என்னிடத்தில் வாருங்கள், நான் உங்களுக்கு ஆறுதல் செய்வேன்.

உக [3]நான் சாந்தமாயும் மனத்தாழ்மையாயும் இருக்கிறபடியினுலும், [4]நான் வைக்கிற நுகத்தடி மெதுவாயும், நான் ஏற்றுகிற சுமை இலேசாயும் இருக்கிறபடியினுலும்,

௩௰ நீங்கள் [5]என்னுடைய நுகத்தடியை ஏற்றுக்கொண்டு என்னிடத்தில் கற்றுக்கொள்ளுங்கள்; அப்பொழுது உங்கள் [6]ஆத்துமாக்களுக்கு ஆறுதல் கிடைக்கும் என்ருர்.

## ௰உ. அதிகாரம்.

*க. ஓய்வுநாளின் மீறுதலைக்குறித்துப் பரிசேயர்களுடைய குருட்டாட்டத்தை, ௩. வேதத்தினுலும், ௬. நியாயத்தினுலும், ௰௨. ஒரு அற்புதத்தினுலும் கிறிஸ்து கடிந்துகொண்டது. உஉ. அவர் பசாசு பிடித்த குருடும் ஊமையுமான ஒரு மனுஷனைக் குணமாக்கினது. ௩௧. பரிசுத்த ஆவிக்கு விரோதமாய்ச் செய்யப்படும் தூஷணம் மன்னிக்கப்படுவதில்லை என்பது. ௩௬. வீண் வார்த்தைகளுக்கும் நியாயத்தீர்ப்பு கேட்கப்படும் என்பது. ௩௮. ஒரு அடையாளத்தைக் கேட்ட அவிசுவாசிகளை அவர் கடிந்துகொண்டு, ௪௬. அவர் தம்முடைய சகோதரனும் சகோதரியும் தாயும் இன்னுரென்று காண்பித்தது.*

[7]அக்காலத்தில் ஓய்வுநாளிலே இயேசுவானவர் பயிர்வழியே போனுர்; அப்பொழுது அவருடைய சீஷர் பசியாயிருந்தபடியினுலே கதிர்களைக் கொய்து சாப்பிடத் தொடங்கினுர்கள்.

உ அதைக் கண்ட பரிசேயர் அவரை நோக்கி, இதோ, ஓய்வுநாளில் செய்யத்தகாததை உம்முடைய சீஷர்கள் செய்கிருர்கள் என்ருர்கள்.

௩ அவர்களுக்கு அவர் சொன்னதாவது: [8]தாவீதும் அவனேடிருந்தவர்களும் பசியாயிருந்தபொழுது,

௪ அவன் தேவாலயத்தில் பிரவேசித்து, [9]ஆசாரியரேயன்றித் தானும் தன்னேடிருந்தவர்களும் சாப்பிடத்தகாத [10]தேவ சமுகத்தப்பங்களைச் சாப்பிட்டான் என்று நீங்கள் வாசிக்கவில்லையா?

௫ [11]அல்லது ஆசாரியரானவர்கள் தேவாலயத்திலே ஓய்வுநாள்களில் ஓய்ந்திராமல் வேலைசெய்தும் குற்றமில்லாதிருக்கிருர்கள் என்று நீங்கள் வேதத்திலே வாசிக்கவில்லையா?

௬ [12]தேவாலயத்திலும் பெரியவர் இங்கே இருக்கிருர் என்று உங்களுக்குச் சொல்லுகிறேன்.

எ [13]மேலும் பலியிலும் இரக்கத்தை விரும்புகிறேன் என்கிற (வாக்கியத்தின் கருத்தை) நீங்கள் அறிந்தீர்களானுல் குற்றமில்லாத இவர்களை நீங்கள் குற்றப்படுத்தமாட்டீர்கள்.

அ அல்லாமலும் மனிதனுடைய குமாரனுனவர் ஓய்வுநாளுக்கு நித்தும் கர்த்தராயிருக்கிருர் என்ருர்.

௯ ¶ [14]பின்பு அவர் அவ்விடம் விட்டுப் போய் அவர்களுடைய செபஆலயத்தில் பிரவேசித்தார்.

௰ [15]அங்கே சூம்பின கையையுடைய மனிதன் ஒருவன் இருந்தான்; அப்பொழுது அவர்கள் அவர்மேல் குற்றஞ்சாற்றும்படிக்கு அவரை நோக்கி, ஓய்வுநாளில் சுகமாக்குகிறது நியாயமா என்று கேட்டார்கள்.

௰௧ [16]அவர் சொன்னது: உங்களில் எவனுனுலும் தன் ஆடு ஓய்வுநாளில் ஒரு குழியிலே விழுந்தால்

கி. பி. ௩௧.

1 உஅ. ௰அ. லூக். ௰. உஉ. யோவா. ௩. ௩௫: ௰௩. ௩: ௰எ. உ. ௧ கொரி. ௰௫. உஎ.
2 யோவா. ௧. ௰அ: ௬. ௪௬: ௰. ௰௫.
3 சகரி. ௯. ௯. பிலி. உ. எ, அ.
4 ௧ யோ. ௫. ௩.
5 யோவா. ௰௩. ௰௫. பிலி. உ. ௫. ௧ பே. உ. உ௧. ௧ யோ. உ. ௬.
6 எரே. ௬. ௰௬.
7 ௫ மோ. உ௩. உ௫. மாற். உ. உ௩. லூக். ௬. ௧.
8 ௧ சாமு. உ௧. ௬.
9 உ மோ. உ௯. ௩௨, ௩௩. ௩ மோ. அ. ௩௧: உ௪. ௯.
10 உ மோ. உ௫. ௩௰. ௩ மோ. உ௪. ௫.
11 ௪ மோ. உஅ. ௯. யோவா. எ. உஉ.
12 உ நாளா. ௬. ௰அ. மல்கி. ௩. ௧.
13 மத். ௯. ௰௩. ஓசே. ௬. ௬. மீகா. ௬. ௬, எ, அ.
14 மாற். ௩. ௧ லூக். ௬. ௬.
15 லூக். ௰௩. ௰௪: ௰௪. ௩. யோவா. ௯. ௰௬.
16 உ மோ. உ௩. ௪, ௫. ௫ மோ. உஉ. ௪.

Digitized by Google

அதைப் பிடித்துத் தூக்கிவிடுவான் அல்லவா?

௰௨ ஆட்டிலும் மனிதனானவன் மிகவும் மேன்மையாயிருக்கிறான்; ஆதலால் ஓய்வுநாளிலே நன்மை செய்கிறது நியாயந்தான் என்று சொல்லிப் பின்பு அந்த மனிதனை நோக்கி,

௰௩ உன் கையை நீட்டு என்றார்; அவன் நீட்டினான்; உடனே அது மறுகையைப்போலவே சுகமாயிற்று.

௰௪ [1]அப்பொழுது பரிசேயர் புறப்பட்டுப் போய், அவரைச் சங்கரிக்கும்படிக்கு யோசனைபண்ணிக்கொண்டார்கள்.

௰௫ ¶ [2]அதை இயேசுவானவர் அறிந்து, அவ்விடம்விட்டுப் போனார்; [3]அப்பொழுது அநேக சனங்கள் அவர் பின்னே சென்றார்கள்.

௰௬ எல்லாரையும் அவர் குணமாக்கிப் [4]பின்பு தம்மைப் பிரசித்தம்பண்ணாதபடிக்கு அவர்களுக்குக் கட்டளையிட்டார்.

௰௭ அதினாலே இதோ, [5]நான் தெரிந்துகொண்ட ஊழியக்காரன், எனக்கு அன்பானவர், [6]என் ஆத்துமாவுக்குப் பிரியமானவர்; இவரிடத்திலே என்னுடைய ஆவி இருக்கச் செய்வேன்; இவர் நியாயமானதை உலகத்தாருக்கு அறிவிப்பார்;

௰௮ சண்டைபண்ணாமலும் கூக்குரல்பண்ணாமலும் இருப்பார்; இவருடைய சத்தம் வீதிகளில் ஒருவராலும் கேட்கப்படுவதில்லை.

௰௯ நியாயமானது செயமாய் இருக்கும்படி செய்கிறவரைக்கும் இவர் நெரிந்திருக்கிற நாணலை முறியாமலும், மங்கி எரிகிற திரியை அணையாமலும் இருப்பார்.

௨௰ இவருடைய நாமத்தின்மேலே புறத்தேசத்தார் நம்பிக்கையாயிருப்பார்கள் என்று,

௨௧ ஏசாயா தீர்க்கதரிசி உரைத்த வசனம் நிறைவேறிற்று.

கி. பி. ௩௧.



1 மத். உஎ. க. மாற். ௩. சு. லூக். சு. ௰௧. யோவா. ௫. ௰அ: ௰. ௩௯: ௰௧. ௫௩.

2 மத். ௰. உ௩. மாற். ௩. எ.

3 மத். ௰௯. உ.

4 மத். அ. ௪.

5 ஏசா. சஉ. க.

6 மத். ௩. ௰எ: ௰எ. ௫.

7 மத். கூ. ௩உ. மாற். ௩. ௰௧. லூக். ௰௧. ௰௪.

8 மத். கூ. ௩௪. மாற். ௩. உஉ. லூக். ௰௧. ௰௫.

* அல்லது பெயேல் செபுப். அப்படியே உஎ-வசனத்திலும்.

9 மத். கூ. ௪. யோவா. உ. உ௫. வெளி. உ. உ௩.

10 தானி. உ. ௪௪: எ. ௰௪. லூக். ௧. ௩௩: ௰௧. உ௰: ௰எ. உ௰, உ௧.

11 ஏசா. ௪௯. உ௪. லூக். ௰௧. உ௧, உஉ.

உஉ ¶ [7]அப்போது பசாசுபிடித்த குருடும் ஊமையுமான ஒருவன் அவரிடத்தில் கொண்டுவரப்பட்டான்; குருடும் ஊமையுமானவன் பேசவும் காணவுந்தக்கதாக அவனைக் குணமாக்கினார்.

உ௩ சனங்கள் எல்லாரும் பிரமித்து, இவர் தாவீதின் குமாரன் அல்லவா என்றார்கள்.

உ௪ [8]பரிசேயர் அதைக் கேட்டு, இவன் பசாசுகளுடைய தலைவனாகிய *பெயேல்செபூலினாலே பசாசுகளைத் துரத்துகிறானே அன்றி, மற்றப்படியல்ல என்றார்கள்.

உ௫ [9]இயேசுவானவர் அவர்களுடைய சிந்தனைகளை அறிந்து அவர்களை நோக்கி, ஒரு இராச்சியத்தார் தங்களுக்குள்ளேதானே பிரிவினைபண்ணினால் அழிந்துபோவார்கள்; அல்லாமலும் ஒரு பட்டணத்தாராலும் குடும்பத்தாராலும் தங்களுக்குள்ளே பிரிவினைபண்ணினால், நிலைநிற்கமாட்டார்கள்.

உ௬ அப்படிப்போலச் சாத்தான் மற்றொரு சாத்தானைத் துரத்தினால் அவர்களுக்குள்ளேதானே பிரிவினை உண்டாகுமே; அப்படியானால் அவனுடைய இராச்சியம் எப்படி நிலைநிற்கும்?

உஎ அல்லாமலும் நான் பெயேல்செபூலினாலே பசாசுகளைத் துரத்துகிறவன் என்றால், உங்கள் பிள்ளைகள் அவைகளை யாராலே துரத்துகிறார்கள்; ஆகையால் அவர்களே உங்களுக்கு நியாயத்தீர்ப்புக் கொடுப்பார்கள்.

உஅ [10]நான் பராபரனுடைய ஆவியினாலே பசாசுகளைத் துரத்துகிறபடியால், பராபரனுடைய ஆளுகையே உங்களிடத்தில் வந்திருக்கின்றது.

உ௯ [11]அல்லது முன்பு பலவானைக் கட்டாவிட்டால் அவனுடைய வாசஸ்தலத்திலே ஒருவன் எப்படிப் பிரவேசித்து, அவனுடைய உடைமைகளைக் கொள்ளை

Digitized by Google

யிடுவான்; (பலவானைக் கட்டின பின்பல்லவா) அவனுடைய வாசஸ்தலத்தைக் கொள்ளையிடுவான்?

௩௰ என் பங்கில் இராதவன் எனக்கு விரோதமாய் இருக்கிறான்; என்னுடனே கூடச் சேர்த்துக் கொள்ளாதவன் சிதற அடிக்கிறான்.

௩௧ ¶ ஆதலால் நான் உங்களுக்குச் சொல்லுகிறதாவது: [1]எந்தப் பாவமும் தூஷணமும் மனிதர்களுக்கு மன்னிக்கப்படும்; [2]தேவ ஆவியை (நிந்திக்கும்) தூஷணம் மாத்திரம் மனிதருக்கு மன்னிக்கப்படுவதில்லை.

௩௨ [3]எவனானாலும் மனிதனுடைய குமாரனுக்கு விரோதம் பேசினால் அது அவனுக்கு மன்னிக்கப்படும்; [4]எவனாகிலும் பரிசுத்த தேவ ஆவிக்கு விரோதம் பேசினால் அது அவனுக்கு இம்மையிலும் மறுமையிலும் மன்னிக்கப்படுவதில்லை.

௩௩ [5]மேலும் ஒரு மரத்தின் தன்மையை அதின் கனிகளாலே அறியலாம்; ஆகையால் நீங்கள் ஒரு மரத்தை நல்லமரமென்று எண்ணினால், அதின் கனியையும் நல்லதென்று எண்ணுங்கள்; அல்லது நீங்கள் ஒரு மரத்தைக் கெட்டமரமென்று எண்ணினால், அதின் கனியையும் கெட்டதென்று எண்ணுங்கள்.

௩௪ [6]இருதயத்தின் நிறைவினாலே வாய்பேசும்; [7]ஆதலால் விரியன் குட்டிகளே, நீங்கள் பொல்லாதவர்களாயிருக்க நன்மையானவைகளை எப்படிப் பேசுவீர்கள்?

௩௫ நல்ல மனிதனானவன் தன் இருதயத்திலுள்ள நல்ல பொக்கிஷத்தில் நல்லவைகளை எடுத்துக் காண்பிக்கிறான்; பொல்லாத மனிதன் தன் பொல்லாத பொக்கிஷத்தில் பொல்லாதவைகளை எடுத்துக் காண்பிக்கிறான்.

௩௬ மனிதர்கள் பேசும் வீணான வார்த்தைகள் யாவையும் குறித்து நியாயத்தீர்ப்பு நாளிலே உத்தரவு கொடுப்பார்களென்று உங்களுக்குச் சொல்லுகிறேன் என்றார்.

௩௭ எப்படியும் உன் வார்த்தைகளினாலே நீதிமானென்றும், உன் வார்த்தைகளினாலே குற்றவாளியென்றும் தீர்க்கப்படுவாய்.

௩௮ ¶ [8]அப்பொழுது வேதபாரகரிலும் பரிசேயரிலும் சிலர் அவரை நோக்கி, போதகரே, உம்மாலே ஒரு அடையாளத்தைக் காண விரும்புகிறோம் என்றார்கள்.

௩௯ அதற்கு அவர் சொன்னது: [9]சோரமார்க்கமாய்ப் போகிற பொல்லாத சந்ததியாகிய இவர்கள் ஒரு அடையாளத்தைக் கேட்கிறார்கள்; யோனா தீர்க்கதரிசியின் அடையாளமேயன்றி வேறு அடையாளம் இவர்களுக்குக் கொடுக்கப்படுவதில்லை.

௪௰ என்னவென்றால், [10]யோனா என்பவன் இரவும் பகலும் மூன்று நாள் ஒரு பெரிய மீனினுடைய வயிற்றில் இருந்ததுபோல, மனிதனுடைய குமாரனும் இரவும் பகலும் மூன்றுநாள் பூமியின் இருதயத்திலே இருப்பார் என்பதே.

௪௧ [11]யோனா என்பவன் பிரசங்கம் பண்ணினபொழுது நினிவே பட்டணத்தார் மனந் திரும்பினார்கள்; [12]யோனாவிலும் அதிக மேன்மையானவர் இதோ இங்கே இருக்கிறார்; [13]ஆதலால் நியாயத்தீர்ப்பு நாளிலே நினிவே பட்டணத்தார் எழும்பி இவர்களைக் குற்றவாளிகளென்று தீர்ப்பார்கள்.

௪௨ [14]அல்லாமலும் தெற்கு இராசஸ்திரி மிகுந்த தூரமான தேசத்திலிருந்து சாலோமோனுடைய ஞானத்தைக் கேட்கவந்தாள்; சாலோமோனிலும் அதிக மேன்மையானவர் இதோ இங்கே இருக்கிறார்; ஆதலால் நியாயத்தீர்ப்பு நாளிலே அந்த இராசஸ்திரி எழும்பி

கி பி. ௩௧.

1 மாற். ௩. ௨௮. லூக். ௰௨. ௰. எபி. ௬. ௪: ௰. ௨௬, ௨௯. ௧ யோ. ௫. ௰௬.
2 மாற். ௩. ௨௯. லூக். ௰௨. ௰. எபி. ௬. ௪: ௰. ௨௬, ௨௯. அப். ௭. ௫௧.
3 மத். ௰௧. ௰௯: ௰௩. ௫௫. யோவா. ௭. ௰௨, ௫௨. ௧ தீமோ. ௧. ௰௩.
4 ௧ யோ ௫. ௰௬.
5 மத். ௭. ௰௭. லூக். ௬. ௪௩, ௪௪.
6 லூக். ௬. ௪௫.
7 மத். ௩. ௭, ௨௩, ௩௩.
8 மத். ௰௬. ௧. மாற். ௮. ௰௧. லூக். ௰௧. ௰௬. ௨௯. யோவா ௨. ௰௮. ௧ கொரி. ௧. ௨௨.
9 ஏசா. ௫௭. ௩. மத். ௰௬. ௪. மாற். ௮. ௩௮. யோவா. ௪. ௪௮.
10 யோனா ௨. ௧.
11 யோனா ௩. ௫.
12 எரே. ௩. ௰௧. எசே. ௰௬. ௫௧, ௫௨. உரோ. ௨. ௨௭.
13 லூக். ௰௧. ௩௨.
14 ௧ இரா ௰. ௧. ௨ நாளா. ௯. ௧. லூக். ௰௧. ௩௧.

Digitized by Google

இவர்களைக் குற்றவாளிகளென்று [1]தீர்ப்பான்.

௪௩ ¶ அல்லாமலும், அசுத்தமான ஆவி ஒரு மனிதனைவிட்டுப் புறப்பட்டபின்பு [2]தண்ணீர் இல்லாத இடங்களில் அலைந்து இளைப்பாறுதற்கான இடத்தைத் தேடியும் அடையாமல் இருக்கும்பொழுது,

௪௪ அது நான் விட்டுவந்த என் வீட்டுக்குத் திரும்பிப் போவேன் என்றுசொல்லி,(அங்கே)சென்று, அவ்விடத்தை வெறுமையாயும், பெருக்கிச் சோடிக்கப்பட்டதாயும் இருக்கக்கண்டு திரும்பிப் போய்,

௪௫ தன்னிலும் அதிக பொல்லாத வேறு ஏழு ஆவிகளைத் தன்னுடனே கூட்டிக்கொண்டுவந்து பிரவேசித்து, அங்கே வாசம்பண்ணும்; [3]இவ்விதமாய் அந்த மனிதனுடைய முன் நிலைமையிலும் பின்நிலைமை அதிக கேடுள்ளதாய் இருக்கின்றது, அப்படியே இந்தப் பொல்லாத சந்ததிக்கும் சம்பவிக்கும் என்றார்.

௪௬ ¶ [4]அவர் இப்படிச் சனங்களுடனே பேசுகையில், [5]அவருடைய தாயும் சகோதரரும் வந்து வெளியே நின்று, அவரோடே பேசத்தேடினார்கள்.

௪௭ அப்பொழுது ஒருவன் அவரை நோக்கி, இதோ, உம்முடைய தாயாரும் சகோதரரும் வெளியே நின்று, உம்மோடே பேசத் தேடுகிறார்கள் என்றான்.

௪௮ அப்படித் தமக்குச் சொன்னவனுக்கு அவர் மாறுத்தரமாக, என்னுடைய தாய் யாவள்? என் சகோதரர் யார்? என்றுசொல்லி,

௪௯ தம்முடைய கையைத் தம்முடைய சீஷர்மேலே நீட்டி, இதோ, இவர்கள் என் தாயும் என் சகோதரருமாய் இருக்கிறார்கள்.

௫௰ [6]எவனாகிலும் பரமண்டலங்களில் இருக்கிற என் பிதாவின் சித்தத்தின்படி செய்தால், அவனே என் சகோதரனுமாய்ச் சகோதரியுமாய்த் தாயுமாய் இருக்கிறான் என்றார்.

கி. பி. ௩௧.

1 லூக். ௰௧. ௨௪.
2 யோபு. ௧. ௭. ௧ பே. ௫. ௮.
3 எபி. ௬. ௪: ௰. ௨௬. ௨ பே. ௨. ௨௰, ௨௧, ௨௨.
4 மாற். ௩. ௩௧. லூக். ௮. ௰௯, ௨௰,௨௧.
5 மத். ௰௩. ௫௫. மாற். ௬. ௩. யோவா ௨.௰௨. ௭. ௩, ௫. அப். ௧.௰௪. ௧ கொரி. ௯. ௫. கலா. ௧. ௰௯.
6 யோவா. ௰௫. ௰௪. கலா.௫.௬: ௬. ௰௫. கொலோ. ௩. ௰௧. எபி. ௨. ௰௧.
7 மாற். ௪. ௧.
8 லூக். ௮. ௪.
9 லூக். ௫. ௩.
10 லூக். ௮. ௫.
11 ௧ மோ. ௨௬. ௰௨.
12 மத். ௰௧. ௰௫. மாற். ௪. ௯.

## ௰௩. அதிகாரம்.

௧. விதைக்கிறவனையும் விதையையும் உவமையாகக் காட்டியது. ௰௮. அதின் வியாக்கியானம். ௨௪. களைகளையும், ௩௧. கடுகுவிதையையும், ௩௩. புளித்த மாவையும், ௪௪. வயலில் ஒளிக்கப்பட்ட பொக்கிஷத்தையும், ௪௬. முத்தையும், ௪௭. கடலில் போடப்பட்ட வலையையும் உவமையாகக் காட்டியது. ௫௪. இறிந்து தம்முடைய சொந்த ஊராரால் அசட்டைபண்ணப்பட்டது.

[7]அந்நாளிலே இயேசுவானவர் வீட்டிலிருந்து புறப்பட்டுக் கடலின் அருகே உளுக்கார்ந்தார்.

௨ [8]அப்பொழுது அநேக சனங்கள் அவரிடத்தில் கூடிவந்தபடியால், [9]அவர் படவில் ஏறி உளுக்கார்ந்து, சனங்கள் எல்லாரும் கரையிலே நிற்க,

௩ அநேக விசேஷங்களை உவமைகளால் அவர்களுக்குச் சொன்னதாவது:

௪ ¶ [10]விதைக்கிறவன் ஒருவன் விதைக்கப் புறப்பட்டான்; அவன் விதைக்கையில் சில (விதை) வழி அருகே விழுந்தன; அவைகளைப் பறவைகள் வந்து பட்சித்தன.

௫ வேறுசில (விதை) மிகுந்த மண்ணில்லாத கற்பாறை இடங்களில் விழுந்து, ஆழமான மண்ணில்லாததினால் உடனே முளைத்தன.

௬ வெயில் தோன்றினபொழுது அவை தீய்ந்துபோய், வேரில்லாததினாலே உலர்ந்துபோயின.

௭ வேறுசில (விதை) முள்ளுக்களுள்ள இடத்திலே விழுந்தன, முள்ளுக்கள் வளர்ந்து அவைகளை நெருக்கிப்போட்டன.

௮ [11]வேறுசில (விதை) நல்ல நிலத்தில்விழுந்து, சில நூறாகவும், சில அறுபதாகவும், சில முப்பதாகவும் பலன்கொடுத்தன.

௯ [12]கேட்கிறதற்குக் காதுள்ளவன் கேட்கக்கடவன் என்றார்.

௰ ¶ அப்பொழுது சீஷர்கள் அவ

Digitized by Google

ரிடத்தில் வந்து, என்னத்தினாலே உவமைகளால் அவர்களோடே பேசுகிறீர் என்றார்கள்.

௰௧ [1]அதற்கு அவர் சொன்னது: பரலோக இராச்சியத்தின் இரகசியங்களை அறியும்படிக்கு உங்களுக்கு அருள் அளிக்கப்பட்டது; அவர்களுக்கு அப்படி அளிக்கப்படவில்லை.

௰௨ [2]எப்படியெனில், எவன் உள்ளவனாயிருக்கிறானோ அவனுக்குக் கொடுக்கப்படும், பரிபூரணமும் அடைவான்; எவன் உள்ளவன் அல்லாதவனாய் இருக்கிறானோ அவனிடத்தில் உள்ளதும் எடுத்துக்கொள்ளப்படும்.

௰௩ [3]அவர்கள் கண்டும் காணாமலும், கேட்டும் கேளாமலும், சிந்தித்துக்கொள்ளாமலும் இருக்கிறபடியினாலே, நான் உவமைகளால் அவர்களுடனே பேசுகிறேன்.

௰௪ [4]இந்தச் சனங்கள் கண்களினாலே காணாமலும், காதுகளினாலே கேளாமலும், இருதயத்தினாலே சிந்தித்துக்கொள்ளாமலும், திரும்பாமலும், என்னால் ஆரோக்கியம் அடையாமலும் இருக்கும்படிக்கு அவர்கள் கடினமாக்கப்பட்ட இருதயம் உடையவர்களுமாய், வருத்தத்தோடே கேட்கிற காதுள்ளவர்களுமாய், மூடிக்கொண்டிருக்கிற கண்களை உடையவர்களுமாய் இருக்கிறபடியினாலே,

௰௫ நீங்கள் உற்றுக் கேட்டாலும் சிந்தித்துக்கொள்ளாமல் இருப்பீர்கள்; உற்றுப்பார்த்தாலும் அறியாமல் இருப்பீர்களென்று, ஏசாயா சொன்ன தீர்க்கதரிசனம் அவர்களிடத்தில் நிறைவேறி வருகின்றது.

௰௬ [5]உங்கள் கண்களோ காணுகிறபடியினாலும், உங்கள் காதுகள் கேட்கிறபடியினாலும் பாக்கியமுள்ளவைகள்.

௰௭ [6]அநேகம் தீர்க்கதரிசிகளும் நீதிமான்களும், நீங்கள் காணுகிறவைகளைக் காணவும், நீங்கள் கேட்கிறவைகளைக் கேட்கவும் விரும்பியும், காணாமலும் கேளாமலும் போனார்களென்று மெய்யாகவே உங்களுக்குச் சொல்லுகிறேன்.

௰௮ ¶ [7]ஆகையால் விதைக்கிறவனுடைய உவமையைக் கேளுங்கள்.

௰௯ [8]ஒருவன் பரலோக இராச்சியத்தைக்குறித்து வசனத்தைக் கேட்டும் அதைச் சிந்தித்துக் கொள்ளாமல் இருக்கிறபொழுது பொல்லாங்கன் வந்து, அவனுடைய இருதயத்தின்மேல் விதைக்கப்பட்டதை எடுக்கிறான்; அவனே விதைவிழுந்த வழிக்கு ஒப்பானவன்.

௨௰ [9]விதை விழுந்த கற்பாறைக்கு ஒப்பானவன் அந்த வசனத்தைக் கேட்டு, உடனே அதைச் சந்தோஷத்தோடே ஏற்றுக்கொண்டு,

௨௧ பின்பு அது தனக்குள்ளே வேர்பற்றி இராமல் கொஞ்சக்காலம் மாத்திரம் அதைப் பற்றிக் கொள்ளுவான்; [10]அந்த வசனத்தினிமித்தம் உபத்திரவமும் துன்பப்படுதலும் உண்டாகிறபொழுது உடனே அவன் தவறுவான் என்பதே.

௨௨ [11]விதை விழுந்த முள்ளுள்ள இடத்துக்கு ஒப்பானவன் [12]அந்த வசனத்தைக் கேட்கிறபொழுது லவுகீக கவலைகளும், ஐசுவரியத்தின் வஞ்சனையும் அவ்வசனத்தை நெருக்கிப்போடுவதால், கனியற்றவனாவான் என்பதே.

௨௩ விதை விழுந்த நல்ல நிலத்துக்கு ஒப்பானவன் அந்த வசனத்தைக் கேட்டும், சிந்தித்தும், அதின்படி செய்தும், நூறும் அறுபதும் முப்பதுமாகப் பலனைக் கொடுத்தும் வருவானென்பதே என்றார்.

௨௪ ¶ பின்பு அவர் வேறொரு உவமையை அவர்களுக்குச் சொல்லிக்காட்டினார்; அதாவது: பர

கி. பி. ௩௧.

1 மத். ௰௧. ௨௫: ௰௬. ௰௭. மாற். ௪.௰௧. ௧ கொரி. ௨. ௰. ௧ யோ. ௨. ௨௭.
2 மத். ௨௫. ௨௯. மாற். ௪. ௨௫. லூக். ௮. ௰௮: ௰௯. ௨௬.
3 ஏசா. ௬. ௯. எசே. ௰௨. ௨. மாற். ௪. ௰௨. லூக். ௮. ௰. யோவா. ௰௨. ௪௰. அப். ௨௮. ௨௬,௨௭.ரோ ௰௧.௮. ௨கொரி. ௩. ௰௪, ௰௫.
4 எபி. ௫. ௰௧.
5 மத். ௰௬. ௰௭. லூக். ௰. ௨௩, ௨௪. யோவா. ௨௰. ௨௯.
6 எபி. ௰௧. ௰௩. ௧ பே. ௧.௰,௰௧.
7 மாற். ௪. ௰௪. லூக். ௮. ௰௧.
8 மத். ௪. ௨௩.
9 ஏசா. ௫௮. ௨. எசே. ௩௩. ௩௧, ௩௨. யோவா. ௫. ௩௫.
10 மத். ௰௧. ௬. ௨ தீமோ. ௧.௰௫.
11 எரே. ௪. ௩.
12 மத். ௰௯. ௨௩. மாற். ௰. ௨௩. லூக் ௰௮. ௨௪. ௧ தீமோ. ௬. ௯. ௨ தீமோ. ௪. ௰.

Digitized by Google

லோக இராச்சியம் ஒரு வயல் நிலத்துக்கு ஒப்பாயிருக்கின்றது; அந்த நிலத்திலே எசமானனவன் நல்ல விதையை விதைத்தான்.

௨௫ பின்பு மனிதர் நித்திரை பண்ணுகையில், அவனுடைய பகைஞன் வந்து கோதுமைக்குள்ளே களைகளை விதைத்துப் போனான்.

௨௬ பயிரானது வளர்ந்து கதிர் விட்டபொழுது அந்தக் களைகளும் காணப்பட்டன.

௨௭ வேலைக்காரர் எசமானிடத்தில் வந்து, ஆண்டவனே, நீர் உமது வயல் நிலத்திலே நல்ல விதையை விதைக்கவில்லையா? களைகள் அதிலே எப்படி உண்டாயின என்றார்கள்.

௨௮ அதற்கு அவன், பகைஞன் அப்படிச் செய்தான் என்றான்; அப்பொழுது வேலைக்காரர், நாங்கள் போய், அவைகளைப் பிடுங்கிப்போடச் சித்தமாயிருக்கிறீரோ என்று கேட்டார்கள்.

௨௯ அதற்கு அவன் சொன்னது: வேண்டாம்; களைகளைப் பிடுங்குகிறபொழுது நீங்கள் கோதுமையையும் கூட வேரோடே பிடுங்காதபடிக்கு,

௩௰ [1]அவ்விரண்டையும் அறுப்புக்காலம்வரைக்கும் வளரவிடுங்கள்; அறுப்புக்காலத்திலே அறுக்கிறவர்கள் முதலாவது களைகளைப் பிடுங்கி அவைகளைச் சுட்டெரிக்கிறதற்குக் கட்டுகளாகக் கட்டவும் கோதுமையை என் களஞ்சியத்தில் சேர்க்கவும் கட்டளையிடுவேன் என்று சொன்னான் என்றார்.

௩௧ ¶ பின்பு அவர் வேறொரு உவமையை அவர்களுக்குச் சொல்லிக்காட்டினார்; அதாவது: [2]பரலோக இராச்சியம் கடுகுவிதைக்கு ஒப்பாயிருக்கின்றது; அதை ஒரு மனிதன் எடுத்துத் தன் நிலத்திலே விதைத்தான்.

௩௨ அது எல்லா விதைகளிலும் சிறியதாயிருந்தும் வளரும்பொழுது கீரைகளிலும் பெரிதாகி, ஆகாசத்துப் பறவைகள் அதின் கிளைகளில் வந்தடையத்தக்கதான செடியாம் என்றார்.

௩௩ ¶ [3]பின்பு அவர் வேறொரு உவமையை அவர்களுக்குச் சொன்னார்; அதாவது: மூன்று *மரக்கால் மாமுழுவதும் புளிப்பாகும்வரைக்கும் ஒரு ஸ்திரி புளிப்புமாவை எடுத்து அதிலே அடக்கி வைத்தாள்; பரலோக இராச்சியம் அந்தப் புளிப்புமாவுக்கு ஒப்பாயிருக்கின்றது என்றார்.

௩௪ ¶ [4]என் வாயைத் திறந்து உவமைகளாலே பேசுவேன்; [5]உலகத்தோற்றம் முதற்கொண்டு மறைபொருளானவைகளை வெளிப்படுத்துவேன் என்று தீர்க்கதரிசியால் உரைக்கப்பட்டது நிறைவேறத்தக்கதாக,

௩௫ [6]இயேசுவானவர் இவைகளையெல்லாம் உவமைகளாகச் சனங்களுடனே பேசினார், உவமைகளினாலேயன்றி வேறுவிதமாக அவர் அவர்களுடனே பேசவில்லை.

௩௬ ¶ அப்பொழுது இயேசுவானவர் சனங்களை அனுப்பிப் பின்பு வீட்டுக்குப்போனார்; அங்கே அவருடைய சீஷர் அவரிடத்தில் வந்து, நீர் வயல்நிலத்தின் களைகளைக்குறித்துக் காட்டின உவமையை எங்களுக்கு வெளிப்படுத்தவேண்டும் என்று கேட்டார்கள்.

௩௭ அவர்களுடனே அவர் மறுமொழியாகச் சொன்னதாவது: நல்ல விதையை விதைக்கிறவன் மனிதனுடைய குமாரனே; வயல் நிலம் உலகமே.

௩௮ [7]நல்ல விதை இராச்சியத்தின் புத்திரரே; [8]களைகள் பொல்லாங்கனுடைய புத்திரரே.

௩௯ அவைகளை விதைக்கிற பகைஞன் பசாசே; [9]அறுப்பு உலகத்தின் முடிவே; அறுக்கிறவர்கள் தேவதூதர்களே.

௪௰ ஆதலால் களைகள் சேர்க்கப்

கி. பி. ௩௧.

1 மத். ௩. ௰௨.
2 ஏசா. ௨. ௨, ௩ மீகா. ௪. ௧. மாற். ௪. ௩௧. லூக் ௰௩. ௰௯.
3 லூக். ௰௩. ௨௧
* கிரேக்குப் பாஷையிலுள்ள வார்த்தை அரைப்படி குறைய ஒன்றரை மரக்கால் அளவைக் குறிக்கும்.
4 சங். ௭௮. ௨.
5 உரோ. ௰௬. ௨௫. ௧ கொரி. ௨. ௭. எபே. ௩. ௯. ௰௧. கொலோ. ௧. ௨௬.
6 மாற். ௪. ௩௩, ௩௪.
7 மத். ௨௪. ௰௪: ௨௮. ௰௯. மாற். ௰௬. ௰௫, ௨௰. லூக். ௨௪. ௪௭. உரோ. ௰. ௰௮. கொலோ. ௧. ௬.
8 ௧ மோ. ௩. ௰௫. யோவா. ௮. ௪௪. அப். ௰௩. ௰. ௧ யோ. ௩. ௮.
9 யோவே. ௩. ௰௩. வெளி. ௰௪. ௰௫.

Digitized by Google

பட்டு, அக்கினியினால் சுட்டெரிக்கப்படுகிறதுபோல, இவ்வுலகத்தின் முடிவிலே நடக்கும்.

௪௧ மனிதனுடைய குமாரன் தன்னுடைய தூதரை அனுப்புவான்; [1]அவர்கள் அவனுடைய இராச்சியத்தில் இருக்கிற சகல இடறல்களையும் அக்கிரமஞ்செய்கிறவர்களையும் சேர்த்து,

௪௨ [2]அழுதலும் பற்கடிப்பும் உண்டாயிருக்கிற [3]அக்கினிச்சூளையிலே போடுவார்கள்.

௪௩ [4]அப்பொழுது நீதிமான்கள் தங்கள் பிதாவின் இராச்சியத்திலே சூரியனைப்போலப் பிரகாசிப்பார்கள்; கேட்கிறதற்குக் காதுள்ளவன் [5]கேட்கக்கடவன்.

௪௪ ¶ [6]அல்லாமலும் பரலோக இராச்சியம் வயல்நிலத்தில் ஒளிக்கப்பட்டிருக்கிற பொக்கிஷத்துக்கு ஒப்பாயிருக்கின்றது; அதை ஒரு மனிதன் கண்டு, அதை மறைத்து, அதைக்குறித்து அடைந்த சந்தோஷத்தினாலே போய்த் தனக்குள்ள யாவையும் விற்று, அந்த [7]வயல் நிலத்தையே கொள்ளுகிறான்.

௪௫ ¶ அல்லாமலும் பரலோக இராச்சியம் நல்ல முத்துகளைத் தேடி,

௪௬ [8]ஒரு ஆணிமுத்தைக் கண்டு, போய், தனக்குள்ள யாவையும் விற்று, அதைக் கொள்ளுகிற வியாபாரி ஒருவனுக்கு ஒப்பாயிருக்கின்றது.

௪௭ ¶ [9]அல்லாமலும் பரலோக இராச்சியம் ஒரு வலைக்கு ஒப்பாயிருக்கின்றது; வலையானது கடலிலே போடப்பட்டு எல்லாச் சாதியான மீன்களையும் வாரி நிறைந்தபொழுது,

௪௮ சனங்கள் அதைக் கரையில் இழுத்து உளுக்கார்ந்து, நல்லவைகளைப் பாத்திரங்களில் சேர்த்துக்கொண்டு, ஆகாதவைகளைத் தள்ளிப்போடுகிறார்கள்.

௪௯ இவ்விதமாக உலகத்தின் முடிவிலே நடக்கும்; [10]தேவதூதர் புறப்பட்டு நீதிமான்களிலிருந்து துன்மார்க்கரைப்பிரித்து,

௫௰ [11]அழுதலும் பற்கடிப்பும் உண்டாயிருக்கிற அக்கினிச்சூளையிலே போடுவார்கள் என்று சொல்லி,

௫௧ பின்பு நீங்கள் இவைகளையெல்லாம் அறிந்துகொண்டீர்களா என்று இயேசுவானவர் சீஷர்களிடத்தில் கேட்டதற்கு, ஆண்டவரே, அறிந்துகொண்டோம் என்றார்கள்.

௫௨ [12]அவர் பின்னும் அவர்களை நோக்கி, அப்படியிருக்கையால், பரலோக இராச்சியத்தைக்குறித்துப் போதனையடைந்த வேதபாரகன் எவனோ, அவன் தன் பொக்கிஷத்தில் புதியவைகளையும் பழையவைகளையும் எடுத்துக்காண்பிக்கிற வீட்டெசமானுக்கு ஒப்பாயிருக்கிறான் என்றார்.

௫௩ ¶ இப்படி இயேசுவானவர் இந்த உவமைகளைச் சொல்லி முடித்தபின்பு,

௫௪ [13]அவர் அவ்விடம்விட்டுத் தாம் வளர்ந்த ஊரிலே வந்து, செப ஆலயத்திலே சனங்களுக்கு உபதேசம்பண்ணினார்; அவர்கள் அதைக் கேட்டுப் பிரமித்து, இப்படிப்பட்ட ஞானமும் வல்லமைகளும் இவனுக்கு எங்கேயிருந்து வந்தன?

௫௫ [14]இவன் தச்சனுடைய குமாரன் அல்லவா? [15]இவனுடைய தாய் மரியாள் என்னப்பட்டிருக்கிறாள் அல்லவா? [16]யாக்கோபு, யோசே, சீமோன், யூதா என்பவர்கள் இவனுடைய சகோதரர் அல்லவா?

௫௬ இவனுடைய சகோதரிகள் எல்லாரும் நமக்குள்ளே இருக்கிறார்கள் அல்லவா? இப்படியிருக்க, இவையெல்லாம் இவனுக்கு எங்கேயிருந்து வந்தன என்று சொல்லி,

கி. பி. ௩௧.

1 மத். ௰௮. ௭. ௨ பே. ௨. ௧.
2 மத். அ. ௰௨.
௰௦. ௨௪.
3 மத். ௩. ௰௨. வெளி.௰௯.௨௰: ௨௰. ௰.
4 தானி. ௰௨. ௩. ௧ கொரி. ௰௫. ௪௨, ௪௩, ௫௮.
5 ௧. ௨௪.
6 பிலி. ௩. ௭, அ.
7 ஏசா. ௫௫. ௧. வெளி. ௩. ௰அ.
8 நீதி. ௨. ௪: ௩. ௰௪. ௰௫: அ. ௰, ௰௯.
9 மத். ௨௨. ௰.
10 ௨௫. ௩௨.
11 ௪௨. ௨௪.
12 உன்னத. ௭. ௰௩.
13 மத். ௨. ௨௩. மாற். ௬.௧. லூக். ௪. ௰௬, ௨௩.
14 ஏசா. ௪௯. ௭. மாற். ௬.௩. லூக். ௩. ௨௩.யோவா. ௬. ௪௨.
15 மத். ௰௨. ௪௬. மாற். ௰௫. ௪௰.
16 மாற். ௬. ௩.

Digitized by Google

௫௭ [1]அவரைக்குறித்து இடறல் பட்டார்கள்; அப்பொழுது இயேசுவானவர் அவர்களை நோக்கி, [2]தீர்க்கதரிசி ஒருவன் தன் ஊரிலேயும் தன் குடும்பத்திலேயுமே அன்றி மற்ற இடங்களிலே கனஈனப் படான் என்றார்.

௫௮ [3]மேலும் அந்தச் சனங்களுடைய அவிசுவாசத்தினாலே அவர் அவ்விடத்திலே அநேக அற்புதங்களைச் செய்யவில்லை.

கி. பி. ௩௨.

1 மத். ௰௧. ௬. மாற். ௬. ௩, ௪.
2 லூக். ௪. ௨௪. யோவா. ௪. ௪௪.
3 மாற். ௬. ௫, ௬.

## ௰௪. அதிகாரம்.

௧. கிறிஸ்துவைக்குறித்து ஏரோது நினைத்த நினைவு. ௩. யோவான் சிரச்சேதம் பண்ணப்பட்ட காரணம். ௰௩. இயேசுவானவர் ஓர் வனாந்தரமான இடத்திற்குப் போய், ௰௫. அவ்விடத்தில் ஐந்து அப்பங்களினாலும், இரண்டு மீன்களினாலும், ஐயாயிரம்பேருக்குப் போசனம் கொடுத்தது. ௨௨. அவர் கடலிலே நடந்து சேஷரிடத்தில் வந்து, ௩௪. கெனேசரேத்தினிடத்தில் இறங்கித் தம்முடைய வஸ்திரத்தின் ஓரத்தைத் தொட்ட பிணியாளிகளைக் குணமாக்கினது.

அக்காலத்திலே [4]காற்பங்கு தேசாதிபதியாகிய ஏரோதே இராசா இயேசுவின் கீர்த்தியைக் கேள்விப்பட்டு,

௨ தன் ஊழியக்காரரை நோக்கி, அவன் யோவான்ஸ்நானன், அவன் மரித்தோரிலிருந்து எழுந்திருந்தவன், அதினாலே அவன் அற்புதங்களைச் *செய்து வருகிறான் என்றான்.

௩ ¶ அது எப்படியென்றால், ஏரோதே இராசா தன் தம்பியாகிய பிலிப்பினுடைய மனைவி ஏரோதியாளைக் குறித்து, நீர் [5]அவளைச் சேர்த்துக்கொள்ளக்கூடாதென்று,

௪ யோவான் அவனுடனே சொன்னபடியினாலே, [6]ஏரோதே இராசா அவனைப் பிடித்துக் கட்டிக் காவலில் வைத்தான்.

௫ அவனைக் கொலைசெய்யவும் மனதாயிருந்தான்; [7]அப்படியிருந்தும் சனங்கள் யோவானைத் தீர்க்கதரிசியென்று எண்ணினபடியினாலே அவன் அவர்களுக்குப் பயந்து (அப்படிச்செய்யவில்லை).

4 மாற். ௬, ௰௪. லூக். ௯. ௭.

* அல்லது அவனால் செய்யப்படுகிறது.

5 மாற். ௬. ௰௮. லூக். ௩. ௨௰.

6 ௩ மோ. ௰௮. ௰௬: ௨௰. ௨௧.

7 மத். ௨௧. ௨௬. லூக். ௨௰. ௬,

8 மத். ௰.௨௬:௰௨. ௰௫.மாற்.௬.௰௨. லூக். ௯, ௰. யோவா. ௬. ௧.

9 மத். ௯. ௧௧. மாற். ௬. ௰௪.

௬ பின்பு ஏரோதேயினுடைய சென்மநாள் கொண்டாடப்படுகிற காலத்திலே, ஏரோதியாளின் குமாரத்தி ஏரோதே இராசாவுக்கு மிகுந்த சந்தோஷம் உண்டாகத் தக்கதாக நடனம் பண்ணினபொழுது,

௭ அவன் அவளை நோக்கி, நீ எதைக் கேட்டாலும் தருவேன் என்று அவளுக்கு ஆணையிட்டு வார்த்தைகொடுத்தான்.

௮ உடனே அவள், தன் தாய் தனக்குப் போதித்திருந்தபடியே, நீர் யோவான்ஸ்நானனுடைய சிரசை ஒரு தாலத்தில் இங்கே எனக்குக் கொடுக்கவேண்டும் என்று கேட்டாள்.

௯ இராசா துக்கம் அடைந்தான்; அப்படியிருந்தும் தான் கொடுத்த ஆணையின் நிமித்தமும், பந்தியில் கூட இருந்தவர்களின் நிமித்தமும் அவன் அதைக் கொடுக்கக் கட்டளையிட்டான்.

௰ அந்தப்படி இராசாவினாலே அனுப்பப்பட்டவர்கள் காவல்கூடத்துக்குப் போய், யோவானைச் சிரச்சேதம்பண்ணி,

௰௧ வந்து, அவனுடைய சிரசை ஒரு தாலத்திலே வைத்து, அந்தப் பெண்ணுக்குக் கொடுத்தார்கள்; அவள் அதைத் தன் தாய்க்குக் கொண்டுபோய்க் கொடுத்தாள்.

௰௨ பின்பு அவனுடைய சீஷர்கள் வந்து அவனுடைய உடலை எடுத்து அடக்கம் பண்ணி வந்து, இயேசுவுக்கு அந்தச் சங்கதியை அறிவித்தார்கள்.

௰௩ ¶ [8]இயேசுவானவர் அதைக்கேட்டு, அவ்விடம்விட்டு, வனாந்தரமான இடத்திலே தனியே இருக்க ஒரு படவில் ஏறிப்போனார்; சனங்கள் அதைக் கேள்விப்பட்டுப் பட்டணங்களிலிருந்து கால்நடையாய் அவர் பின்சென்றார்கள்.

௰௪ ¶ [9]இயேசுவானவர் புறப்பட்டுத் திரளான சனங்களைக்



Digitized by Google

உமக்குப் பிரியமாயிருந்தது என்றார்.

௨௭ [1]அல்லாமலும் சகலமும் என் பிதாவினாலே எனக்கு ஒப்புக்கொடுக்கப்பட்டிருக்கின்றன; பிதா தவிர மற்றொருவனும் குமாரனை அறியான்; [2]குமாரன் தவிர மற்றொருவனும் பிதாவை அறியான்; மேலும் எவனுக்குக் குமாரன் அவரை வெளிப்படுத்தச் சித்தமாயிருக்கிறாரோ, அவனும் பிதாவை அறிவான்.

௨௮ வருத்தப்பட்டுப் பாரம் சுமந்துகொண்டிருக்கிறவர்களாகிய நீங்கள் எல்லாரும் என்னிடத்தில் வாருங்கள், நான் உங்களுக்கு ஆறுதல் செய்வேன்.

௨௯ [3]நான் சாந்தமாயும் மனத்தாழ்மையாயும் இருக்கிறபடியினாலும், [4]நான் வைக்கிற நுகத்தடி மெதுவாயும், நான் ஏற்றுகிற சுமை இலேசாயும் இருக்கிறபடியினாலும்,

௩௰ நீங்கள் [5]என்னுடைய நுகத்தடியை ஏற்றுக்கொண்டு என்னிடத்தில் கற்றுக்கொள்ளுங்கள்; அப்பொழுது உங்கள் [6]ஆத்துமாக்களுக்கு ஆறுதல் கிடைக்கும் என்றார்.

## ௰௨. அதிகாரம்.

௧. ஓய்வுநாளின் மீறுதலைக்குறித்துப் பரிசேயர்களுடைய குற்றச்சாட்டத்தை, ௩. வேதத்தினாலும், ௫. நியாயத்தினாலும், ௰௩. ஒரு அற்புதத்தினாலும் மறிந்து கடிந்துகொண்டது. ௨௨. அவர் பசாசு பிடித்த குருடும் ஊமையுமான ஒரு மனுஷனைக் குணமாக்கினது. ௩௧. பரிசுத்த ஆவிக்கு விரோதமாய்ச் செய்யப்படும் தூஷணம் மன்னிக்கப்படுவதில்லை என்பது. ௩௬. வீண் வார்த்தைகளுக்கும் நியாயத்தீர்ப்பு கேட்கப்படும் என்பது. ௩௮. ஒரு அடையாளத்தைக் கேட்ட அவிசுவாசிகளை அவர் கடிந்துகொண்டு, ௪௬. அவர் தம்முடைய சகோதரனும் சகோதரியும் தாயும் இன்னாரென்று காண்பித்தது.

[7]அக்காலத்தில் ஓய்வுநாளிலே இயேசுவானவர் பயிர்வழியே போனார்; அப்பொழுது அவருடைய சீஷர் பசியாயிருந்தபடியினாலே கதிர்களைக் கொய்து சாப்பிடத் தொடங்கினார்கள்.

௨ அதைக் கண்ட பரிசேயர் அவரை நோக்கி, இதோ, ஓய்வுநாளில் செய்யத்தகாததை உம்முடைய சீஷர்கள் செய்கிறார்கள் என்றார்கள்.

௩ அவர்களுக்கு அவர் சொன்னதாவது: [8]தாவீதும் அவனோடிருந்தவர்களும் பசியாயிருந்தபொழுது,

௪ அவன் தேவாலயத்தில் பிரவேசித்து, [9]ஆசாரியரேயன்றித் தானும் தன்னோடிருந்தவர்களும் சாப்பிடத்தகாத [10]தேவ சமுகத்தப்பங்களைச் சாப்பிட்டான் என்று நீங்கள் வாசிக்கவில்லையா?

௫ [11]அல்லது ஆசாரியரானவர்கள் தேவாலயத்திலே ஓய்வுநாள்களில் ஓய்ந்திராமல் வேலைசெய்தும் குற்றமில்லாதிருக்கிறார்கள் என்று நீங்கள் வேதத்திலே வாசிக்கவில்லையா?

௬ [12]தேவாலயத்திலும் பெரியவர் இங்கே இருக்கிறார் என்று உங்களுக்குச் சொல்லுகிறேன்.

௭ [13]மேலும் பலியிலும் இரக்கத்தை விரும்புகிறேன் என்கிற (வாக்கியத்தின் கருத்தை) நீங்கள் அறிந்தீர்களானால் குற்றமில்லாத இவர்களை நீங்கள் குற்றப்படுத்தமாட்டீர்கள்.

௮ அல்லாமலும் மனிதனுடைய குமாரனானவர் ஓய்வுநாளுக்கு நித்தம் கர்த்தராயிருக்கிறார் என்றார்.

௯ ¶ [14]பின்பு அவர் அவ்விடம் விட்டுப் போய் அவர்களுடைய செபஆலயத்தில் பிரவேசித்தார்.

௰ [15]அங்கே சூம்பின கையையுடைய மனிதன் ஒருவன் இருந்தான்; அப்பொழுது அவர்கள் அவர்மேல் குற்றஞ்சாற்றும்படிக்கு அவரை நோக்கி, ஓய்வுநாளில் சுகமாக்குகிறது நியாயமா என்று கேட்டார்கள்.

௰௧ [16]அவர் சொன்னது: உங்களில் எவனாலும் தன் ஆடு ஓய்வுநாளில் ஒரு குழியிலே விழுந்தால்

கி. பி. ௩௧.

1 உ௮. ௰௮. லூக். ௰. உஉ. யோவா. ௩. ௩௫: ௰௩. ௩: ௰௭. உ. ௧ கொரி. ௰௫. உ௭.
2 யோவா. ௧. ௰௮: ௬. ௪௬: ௰. ௰௫.
3 சகரி. ௯. ௯. பிலி. உ. ௭, ௮.
4 ௧ யோ. ௫. ௩.
5 யோவா. ௰௩. ௰௫. பிலி. உ. ௫. ௧ பே. உ. உ௧. ௧ யோ. உ. ௬.
6 எரே. ௬. ௰௬.
7 ௫ மோ. உ௩. உ௫. மாற். உ. உ௩. லூக். ௬. ௧.
8 ௧ சாமு. உ௧. ௬.
9 உ மோ. உ௯. ௩உ, ௩௩. ௩ மோ. ௮. ௩௧: உ௪. ௯.
10 உ மோ. உ௫. ௩௰. ௩ மோ. உ௪. ௫.
11 ௪ மோ. உ௮. ௯. யோவா. ௭. உஉ.
12 உ நாளா. ௬. ௰௮. மல்கி. ௩. ௧.
13 மத். ௯. ௰௩. ஓசே. ௬. ௬. மீகா. ௬. ௬, ௭, ௮.
14 மாற். ௩. ௧ லூக். ௬. ௬.
15 லூக். ௰௩. ௰௪: ௰௪. ௩. யோவா. ௯. ௰௬.
16 உ மோ. உ௩. ௪, ௫. ௫ மோ. உஉ. ௪.

Digitized by Google

அதைப் பிடித்துத் தூக்கிவிடுவான் அல்லவா?

௰௨ ஆட்டிலும் மனிதனானவன் மிகவும் மேன்மையாயிருக்கிறான்; ஆதலால் ஓய்வுநாளிலே நன்மை செய்கிறது நியாயந்தான் என்று சொல்லிப் பின்பு அந்த மனிதனை நோக்கி,

௰௩ உன் கையை நீட்டு என்றார்; அவன் நீட்டினான்; உடனே அது மறுகையைப்போலவே சுகமாயிற்று.

௰௪ [1]அப்பொழுது பரிசேயர் புறப்பட்டுப் போய், அவரைச் சங்கரிக்கும்படிக்கு யோசனைபண்ணிக்கொண்டார்கள்.

௰௫ ¶ [2]அதை இயேசுவானவர் அறிந்து, அவ்விடம்விட்டுப் போனார்; [3]அப்பொழுது அநேக சனங்கள் அவர் பின்னே சென்றார்கள்.

௰௬ எல்லாரையும் அவர் குணமாக்கிப் [4]பின்பு தம்மைப் பிரசித்தம்பண்ணாதபடிக்கு அவர்களுக்குக் கட்டளையிட்டார்.

௰௭ அதினாலே இதோ, [5]நான் தெரிந்துகொண்ட ஊழியக்காரன், எனக்கு அன்பானவர், [6]என் ஆத்துமாவுக்குப் பிரியமானவர்; இவரிடத்திலே என்னுடைய ஆவி இருக்கச் செய்வேன்; இவர் நியாயமானதை உலகத்தாருக்கு அறிவிப்பார்;

௰௮ சண்டைபண்ணாமலும் கூக்குரல்பண்ணாமலும் இருப்பார்; இவருடைய சத்தம் வீதிகளில் ஒருவராலும் கேட்கப்படுவதில்லை.

௰௯ நியாயமானது செயமாய் இருக்கும்படி செய்கிறவரைக்கும் இவர் நெரிந்திருக்கிற நாணலை முறியாமலும், மங்கி எரிகிற திரியை அணையாமலும் இருப்பார்.

௨௰ இவருடைய நாமத்தின்மேலே புறத்தேசத்தார் நம்பிக்கையாயிருப்பார்கள் என்று,

௨௧ ஏசாயா தீர்க்கதரிசி உரைத்த வசனம் நிறைவேறிற்று.

௨௨ ¶ [7]அப்பொழுது பசாசுபிடித்த குருடும் ஊமையுமான ஒருவன் அவரிடத்தில் கொண்டுவரப்பட்டான்; குருடும் ஊமையுமானவன் பேசவும் காணவுந்தக்கதாக அவனைக் குணமாக்கினார்.

௨௩ சனங்கள் எல்லாரும் பிரமித்து, இவர் தாவீதின் குமாரன் அல்லவா என்றார்கள்.

௨௪ [8]பரிசேயர் அதைக் கேட்டு, இவன் பசாசுகளுடைய தலைவனாகிய *பெயேல்செபூலினாலே பசாசுகளைத் துரத்துகிறானே அன்றி, மற்றப்படியல்ல என்றார்கள்.

௨௫ [9]இயேசுவானவர் அவர்களுடைய சிந்தனைகளை அறிந்து அவர்களை நோக்கி, ஒரு இராச்சியத்தார் தங்களுக்குள்ளேதானே பிரிவினைபண்ணினால் அழிந்துபோவார்கள்; அல்லாமலும் ஒரு பட்டணத்தாரானாலும் குடும்பத்தாரானாலும் தங்களுக்குள்ளே பிரிவினைபண்ணினால், நிலைநிற்கமாட்டார்கள்.

௨௬ அப்படிப்போலச் சாத்தான் மற்றொரு சாத்தானைத் துரத்தினால் அவர்களுக்குள்ளேதானே பிரிவினை உண்டாகுமே; அப்படியானால் அவனுடைய இராச்சியம் எப்படி நிலைநிற்கும்?

௨௭ அல்லாமலும் நான் பெயேல்செபூலினாலே பசாசுகளைத் துரத்துகிறவன் என்றால், உங்கள் பிள்ளைகள் அவைகளை யாராலே துரத்துகிறார்கள்; ஆகையால் அவர்களே உங்களுக்கு நியாயத்தீர்ப்புக் கொடுப்பார்கள்.

௨௮ [10]நான் பராபரனுடைய ஆவியினாலே பசாசுகளைத் துரத்துகிறபடியால், பராபரனுடைய ஆளுகையே உங்களிடத்தில் வந்திருக்கின்றது.

௨௯ [11]அல்லது முன்பு பலவானைக் கட்டாவிட்டால் அவனுடைய வாசஸ்தலத்திலே ஒருவன் எப்படிப் பிரவேசித்து, அவனுடைய உடைமைகளைக் கொள்ளை

கி. பி. ௩௧.



1 மத். ௨௭. ௧. மாற். ௩. ௬. லூக். ௬. ௰௧. யோவா. ௫. ௰௮: ௰. ௩௯: ௰௧. ௫௩.

2 மத். ௰. ௨௩. மாற். ௩. ௭.

3 மத். ௰௯. ௨.

4 மத். ௯. ௩௰.

5 ஏசா. ௪௨. ௧.

6 மத். ௩. ௰௭: ௰௭. ௫.

7 மத். ௯. ௩௨. மாற். ௩. ௰௧. லூக். ௰௧. ௰௪.

8 மத். ௯. ௩௪. மாற். ௩. ௨௨. லூக். ௰௧. ௰௫.

* அல்லது பெயேல் செபுப். அப்படியே ௨௭-வசனத்திலும்.

9 மத். ௯. ௪. யோவா. ௨. ௨௫. வெளி. ௨. ௨௩.

10 தானி. ௨. ௪௪: ௭. ௰௪. லூக். ௧. ௩௩: ௰௧. ௨௰: ௰௭. ௨௰, ௨௧.

11 ஏசா. ௪௯. ௨௪. லூக். ௰௧. ௨௧, ௨௨, ௨௩.

Digitized by Google

யிடுவான்; (பலவானைக் கட்டின பின்பல்லவா) அவனுடைய வாசஸ்தலத்தைக் கொள்ளையிடுவான்?

௩௰ என் பங்கில் இராதவன் எனக்கு விரோதமாய் இருக்கிறான்; என்னுடனே கூடச் சேர்த்துக் கொள்ளாதவன் சிதற அடிக்கிறான்.

௩௧ ¶ ஆதலால் நான் உங்களுக்குச் சொல்லுகிறதாவது: [1]எந்தப் பாவமும் தூஷணமும் மனிதர்களுக்கு மன்னிக்கப்படும்; [2]தேவ ஆவியை (நிந்திக்கும்) தூஷணம் மாத்திரம் மனிதருக்கு மன்னிக்கப்படுவதில்லை.

௩௨ [3]எவனானாலும் மனிதனுடைய குமாரனுக்கு விரோதம் பேசினால் அது அவனுக்கு மன்னிக்கப்படும்; [4]எவனாகிலும் பரிசுத்த தேவ ஆவிக்கு விரோதம் பேசினால் அது அவனுக்கு இம்மையிலும் மறுமையிலும் மன்னிக்கப்படுவதில்லை.

௩௩ [5]மேலும் ஒரு மரத்தின் தன்மையை அதின் கனிகளாலே அறியலாம்; ஆகையால் நீங்கள் ஒரு மரத்தை நல்லமரமென்று எண்ணினால், அதின் கனியையும் நல்லதென்று எண்ணுங்கள்; அல்லது நீங்கள் ஒரு மரத்தைக் கெட்டமரமென்று எண்ணினால், அதின் கனியையும் கெட்டதென்று எண்ணுங்கள்.

௩௪ [6]இருதயத்தின் நிறைவினாலே வாய்பேசும்; [7]ஆதலால் விரியன் குட்டிகளே, நீங்கள் பொல்லாதவர்களாயிருக்க நன்மையானவைகளை எப்படிப் பேசுவீர்கள்?

௩௫ நல்ல மனிதனானவன் தன் இருதயத்திலுள்ள நல்ல பொக்கிஷத்தில் நல்லவைகளை எடுத்துக் காண்பிக்கிறான்; பொல்லாத மனிதன் தன் பொல்லாத பொக்கிஷத்தில் பொல்லாதவைகளை எடுத்துக் காண்பிக்கிறான்.

௩௬ மனிதர்கள் பேசும் வீணான வார்த்தைகள் யாவையும் குறித்து நியாயத்தீர்ப்பு நாளிலே உத்தரவு கொடுப்பார்களென்று உங்களுக்குச் சொல்லுகிறேன் என்றார்.

௩௭ எப்படியும் உன் வார்த்தைகளினாலே நீதிமானென்றும், உன் வார்த்தைகளினாலே குற்றவாளியென்றும் தீர்க்கப்படுவாய்.

௩௮ ¶ [8]அப்பொழுது வேதபாரகரிலும் பரிசேயரிலும் சிலர் அவரை நோக்கி, போதகரே, உம்மாலே ஒரு அடையாளத்தைக் காண விரும்புகிறோம் என்றார்கள்.

௩௯ அதற்கு அவர் சொன்னது: [9]சோரமார்க்கமாய்ப் போகிற பொல்லாத சந்ததியாகிய இவர்கள் ஒரு அடையாளத்தைக் கேட்கிறார்கள்; யோனா தீர்க்கதரிசியின் அடையாளமேயன்றி வேறு அடையாளம் இவர்களுக்குக் கொடுக்கப்படுவதில்லை.

௪௰ என்னவென்றால், [10]யோனா என்பவன் இரவும் பகலும் மூன்று நாள் ஒரு பெரிய மீனினுடைய வயிற்றில் இருந்ததுபோல, மனிதனுடைய குமாரனும் இரவும் பகலும் மூன்றுநாள் பூமியின் இருதயத்திலே இருப்பார் என்பதே.

௪௧ [11]யோனா என்பவன் பிரசங்கம் பண்ணினபொழுது நினிவே பட்டணத்தார் மனம் திரும்பினார்கள்; [12]யோனாவிலும் அதிக மேன்மையானவர் இதோ இங்கே இருக்கிறார்; [13]ஆதலால் நியாயத்தீர்ப்பு நாளிலே நினிவே பட்டணத்தார் எழும்பி இவர்களைக் குற்றவாளிகளென்று தீர்ப்பார்கள்.

௪௨ [14]அல்லாமலும் தெற்கு இராசஸ்திரி மிகுந்த தூரமான தேசத்திலிருந்து சாலோமோனுடைய ஞானத்தைக் கேட்கவந்தாள்; சாலோமோனிலும் அதிக மேன்மையானவர் இதோ இங்கே இருக்கிறார்; ஆதலால் நியாயத்தீர்ப்பு நாளிலே அந்த இராசஸ்திரி எழும்பி

கி. பி. ௩௧.

1 மாற். ௩. ௨௮. லூக். ௰௨. ௰. எபி. ௬. ௪: ௰. ௨௬, ௨௯. ௧ யோ. ௫. ௰௬.
2 மாற். ௩. ௨௯. லூக். ௰௨. ௰. எபி. ௬. ௬: ௰. ௨௬, ௨௯. அப். ௭. ௫௧.
3 மத். ௰௩. ௫௫: ௰௧. ௰௯. யோவா. ௭. ௰௨, ௫௨. ௧ தீமோ. ௧. ௰௩.
4 ௧ யோ ௫. ௰௬.
5 மத். ௭. ௰௭. லூக். ௬. ௪௩, ௪௪.
6 லூக். ௬. ௪௫.
7 மத். ௩. ௭, ௨௩. ௩௩.
8 மத். ௰௬. ௧. மாற். ௮. ௰௧. லூக். ௰௧. ௰௬, ௨௯. யோவா ௨. ௰௮. ௧ கொரி. ௧. ௨௨.
9 ஏசா. ௫௭. ௩. மத். ௰௬. ௪. மாற். ௮. ௩௮. யோவா. ௪. ௪௮.
10 யோனா ௨. ௧.
11 யோனா ௩. ௫.
12 எரே. ௩. ௰௧. எசே. ௰௬. ௫௧, ௫௨. உரோ. ௨. ௨௭.
13 லூக். ௰௧. ௩௨.
14 ௧ இரா ௰. ௧. ௨ நாளா. ௯. ௧. லூக். ௰௧. ௩௧.

Digitized by Google

இவர்களைக் குற்றவாளிகளென்று [1]தீர்ப்பான்.

சங ¶ அல்லாமலும், அசுத்தமான ஆவி ஒரு மனிதனைவிட்டுப் புறப்பட்டபின்பு [2]தண்ணீர் இல்லாத இடங்களில் அலைந்து இளைப்பாறுதற்கான இடத்தைத் தேடியும் அடையாமல் இருக்கும்பொழுது,

சச அது நான் விட்டுவந்த என் வீட்டுக்குத் திரும்பிப் போவேன் என்றுசொல்லி,(அங்கே)சென்று, அவ்விடத்தை வெறுமையாயும், பெருக்கிச் சோடிக்கப்பட்டதாயும் இருக்கக்கண்டு திரும்பிப்போய்,

சரு தன்னிலும் அதிக பொல்லாத வேறு ஏழு ஆவிகளைத் தன்னுடனே கூட்டிக்கொண்டுவந்து பிரவேசித்து, அங்கே வாசம்பண்ணும்; [3]இவ்விதமாய் அந்த மனிதனுடைய முன் நிலைமையிலும் பின்நிலைமை அதிக கேடுள்ளதாய் இருக்கின்றது, அப்படியே இந்தப் பொல்லாத சந்ததிக்கும் சம்பவிக்கும் என்றார்.

சசு ¶ [4]அவர் இப்படிச் சனங்களுடனே பேசுகையில், [5]அவருடைய தாயும் சகோதரரும் வந்து வெளியே நின்று, அவரோடே பேசத்தேடினார்கள்.

சஎ அப்பொழுது ஒருவன் அவரை நோக்கி, இதோ, உம்முடைய தாயாரும் சகோதரரும் வெளியே நின்று, உம்மோடே பேசத்தேடுகிறார்கள் என்றான்.

சஅ அப்படித் தமக்குச் சொன்னவனுக்கு அவர் மாறுத்தரமாக, என்னுடைய தாய் யாவள்? என் சகோதரர் யார்? என்றுசொல்லி,

சகூ தம்முடைய கையைத் தம்முடைய சீஷர்மேலே நீட்டி, இதோ, இவர்கள் என் தாயும் என் சகோதரருமாய் இருக்கிறார்கள்.

ரு௦ [6]எவனானாலும் பரமண்டலங்களில் இருக்கிற என் பிதாவின் சித்தத்தின்படி செய்தால்,

கி. பி. ௩௧.

1 லூக். ௰க. உச.
2 யோபு. க. எ. க பே. ரு. அ.
3 எபி. சு. ச: ௰. உசு. உ பே. உ. உ௰, உக, உஉ.
4 மாற். ங. ௩க. லூக். அ. ௰கூ, உ௰,உக.
5 மத். ௰ங. ருரு. மாற். சு. ங. யோவா உ.௰உ. எ. ங, ரு. அப். க.௰ச. க கொரி. கூ. ரு. கலா. க. ௰கூ.
6 யோவா. ௰ரு. ௰ச. கலா.ரு.சு: கூ. ௰ரு. கொலோ. ங. ௰க எபி. உ. ௰க.
7 மாற். ச. க.
8 லூக். அ. ச.
9 லூக். ரு. ங.
10 லூக். அ. ரு.
11 க மோ. உசு. ௰உ.
12 மத். ௰க. ௰ரு. மாற். ச. கூ.

அவனே என் சகோதரனுமாய்ச் சகோதரியுமாய்த் தாயுமாய் இருக்கிறான் என்றார்.

## ௰ங. அதிகாரம்.

க. விதைக்கிறவனையும் விதையையும் உவமையாகக் காட்டியது. ௰அ. அதின் விபரக்கியானம். உச. களைகளையும், ௩க. கடுகுவிதையையும், ௩௩. புளித்த மாவையும், சச. வயலில் ஒளிக்கப்பட்ட பொக்கிஷத்தையும், சரு. முத்தையும், சஎ. கடலில் போடப்பட்ட வலையையும் உவமையாகக் காட்டியது. ருச. திரிந்து தம்முடைய சொந்த ஊரார் அசட்டைபண்ணப்பட்டது.

[7]அந்நாளிலே இயேசுவானவர் வீட்டிலிருந்து புறப்பட்டுக் கடலின் அருகே உட்காந்தார்.

உ [8]அப்பொழுது அநேக சனங்கள் அவரிடத்தில் கூடிவந்தபடியால், [9]அவர் படவில் ஏறி உட்காந்து, சனங்கள் எல்லாரும் கரையிலே நிற்க,

ங அநேக விசேஷங்களை உவமைகளால் அவர்களுக்குச் சொன்னதாவது:

ச ¶ [10]விதைக்கிறவன் ஒருவன் விதைக்கப் புறப்பட்டான்; அவன் விதைக்கையில் சில (விதை) வழி அருகே விழுந்தன; அவைகளைப் பறவைகள் வந்து பட்சித்தன.

ரு வேறுசில (விதை) மிகுந்த மண்ணில்லாத கற்பாறை இடங்களில் விழுந்து, ஆழமான மண்ணில்லாததினால் உடனே முளைத்தன.

சு வெயில் தோன்றினபொழுது அவை தீய்ந்துபோய், வேரில்லாததினாலே உலர்ந்துபோயின.

எ வேறுசில (விதை) முள்ளுக்களுள்ள இடத்திலே விழுந்தன, முள்ளுக்கள் வளர்ந்து அவைகளை நெருக்கிப்போட்டன.

அ [11]வேறுசில (விதை) நல்ல நிலத்தில்விழுந்து, சில நூறாகவும், சில அறுபதாகவும், சில முப்பதாகவும் பலன்கொடுத்தன.

கூ [12]கேட்கிறதற்குக் காதுள்ளவன் கேட்கக்கடவன் என்றார்.

௰ ¶ அப்பொழுது சீஷர்கள் அவ

Digitized by Google

ரிடத்தில் வந்து, என்னத்தினாலே உவமைகளால் அவர்களோடே பேசுகிறீர் என்றார்கள்.

௰௧ [1]அதற்கு அவர் சொன்னது: பரலோக இராச்சியத்தின் இரகசியங்களை அறியும்படிக்கு உங்களுக்கு அருள் அளிக்கப்பட்டது; அவர்களுக்கு அப்படி அளிக்கப்படவில்லை.

௰௨ [2]எப்படியெனில், எவன் உள்ளவனாயிருக்கிறானோ அவனுக்குக் கொடுக்கப்படும், பரிபூரணமும் அடைவான்; எவன் உள்ளவன் அல்லாதவனாய் இருக்கிறானோ அவனிடத்தில் உள்ளதும் எடுத்துக்கொள்ளப்படும்.

௰௩ [3]அவர்கள் கண்டும் காணாமலும், கேட்டும் கேளாமலும், சிந்தித்துக்கொள்ளாமலும் இருக்கிறபடியினாலே, நான் உவமைகளால் அவர்களுடனே பேசுகிறேன்.

௰௪ [4]இந்தச் சனங்கள் கண்களினாலே காணாமலும், காதுகளினாலே கேளாமலும், இருதயத்தினாலே சிந்தித்துக்கொள்ளாமலும், திரும்பாமலும், என்னால் ஆரோக்கியம் அடையாமலும் இருக்கும்படிக்கு அவர்கள் கடினமாக்கப்பட்ட இருதயம் உடையவர்களுமாய், வருத்தத்தோடே கேட்கிற காதுள்ளவர்களுமாய், மூடிக்கொண்டிருக்கிற கண்களை உடையவர்களுமாய் இருக்கிறபடியினாலே,

௰௫ நீங்கள் உற்றுக் கேட்டாலும் சிந்தித்துக்கொள்ளாமல் இருப்பீர்கள்; உற்றுப்பார்த்தாலும் அறியாமல் இருப்பீர்களென்று, ஏசாயா சொன்ன தீர்க்கதரிசனம் அவர்களிடத்தில் நிறைவேறி வருகின்றது.

௰௬ [5]உங்கள் கண்களோ காணுகிறபடியினாலும், உங்கள் காதுகள் கேட்கிறபடியினாலும் பாக்கியமுள்ளவைகள்.

௰௭ [6]அநேகம் தீர்க்கதரிசிகளும் நீதிமான்களும், நீங்கள் காணுகிறவைகளைக் காணவும், நீங்கள் கேட்கிறவைகளைக் கேட்கவும் விரும்பியும், காணாமலும் கேளாமலும் போனார்களென்று மெய்யாகவே உங்களுக்குச் சொல்லுகிறேன்.

௰௮ ¶ [7]ஆகையால் விதைக்கிறவனுடைய உவமையைக் கேளுங்கள்.

௰௯ [8]ஒருவன் பரலோக இராச்சியத்தைக்குறித்து வசனத்தைக் கேட்டும் அதைச் சிந்தித்துக் கொள்ளாமல் இருக்கிறபொழுது பொல்லாங்கன் வந்து, அவனுடைய இருதயத்தின்மேல் விதைக்கப்பட்டதை எடுக்கிறான்; அவனே விதைவிழுந்த வழிக்கு ஒப்பானவன்.

௨௰ [9]விதை விழுந்த கற்பாறைக்கு ஒப்பானவன் அந்த வசனத்தைக் கேட்டு, உடனே அதைச் சந்தோஷத்தோடே ஏற்றுக் கொண்டு,

௨௧ பின்பு அது தனக்குள்ளே வேர்பற்றி இராமல் கொஞ்சக்காலம் மாத்திரம் அதைப் பற்றிக் கொள்ளுவான்; [10]அந்த வசனத்தின்நிமித்தம் உபத்திரவமும் துன்பப்படுதலும் உண்டாகிறபொழுது உடனே அவன் தவறுவான் என்பதே.

௨௨ [11]விதை விழுந்த முள்ளுள்ள இடத்துக்கு ஒப்பானவன் [12]அந்த வசனத்தைக் கேட்கிறபொழுது லவுகிக கவலைகளும், ஐசுவரியத்தின் வஞ்சனையும் அவ்வசனத்தை நெருக்கிப்போடுவதால், கனியற்றவனாவான் என்பதே.

௨௩ விதை விழுந்த நல்ல நிலத்துக்கு ஒப்பானவன் அந்த வசனத்தைக் கேட்டும், சிந்தித்தும், அதின்படி செய்தும், நூறும் அறுபதும் முப்பதுமாகப் பலனைக் கொடுத்தும் வருவானென்பதே என்றார்.

௨௪ ¶ பின்பு அவர் வேறொரு உவமையை அவர்களுக்குச் சொல்லிக்காட்டினார்; அதாவது: பர

கி. பி. ௩௧.

1 மத். ௰௧. ௨௫: ௰௬. ௰௭. மாற். ௪.௰௧. ௧ கொரி. ௨. ௰. ௧ யோ. ௨. ௨௭.
2 மத். ௨௫. ௨௯. மாற். ௪. ௨௫. லூக். ௮. ௰௮: ௰௯. ௨௬.
3 ஏசா. ௬. ௯. எசே. ௰௨. ௨. மாற். ௪. ௰௨. லூக். ௮. ௰. யோவா. ௰௨. ௪௰. அப். ௨௮. ௨௬,௨௭. ரோ ௰௧.௮. ௨ கொரி. ௩. ௰௪, ௰௫.
4 எபி. ௫. ௰௧.
5 மத். ௰௬. ௰௭. லூக். ௰. ௨௩, ௨௪. யோவா. ௨௰. ௨௯.
6 எபி. ௰௧. ௰௩. ௧ பே. ௧. ௰, ௰௧.
7 மாற். ௪. ௰௪. லூக். ௮. ௰௧.
8 மத். ௪. ௨௩.
9 ஏசா. ௫௮. ௨. எசே. ௩௩. ௩௧, ௩௨. யோவா. ௫. ௩௫.
10 மத். ௰௧. ௬. ௨ தீமோ. ௧.௰௫.
11 எரே. ௪. ௩.
12 மத். ௰௯. ௨௩. மாற். ௰. ௨௩. லூக் ௰௮. ௨௪. ௧ தீமோ. ௬. ௯. ௨ தீமோ. ௪. ௰.

Digitized by Google

லோக இராச்சியம் ஒரு வயல் நிலத்துக்கு ஒப்பாயிருக்கின்றது; அந்த நிலத்திலே எசமானனவன் நல்ல விதையை விதைத்தான்.

௨௫ பின்பு மனிதர் நித்திரை பண்ணுகையில், அவனுடைய பகைஞன் வந்து கோதுமைக்குள்ளே களைகளை விதைத்துப் போனான்.

௨௬ பயிரானது வளர்ந்து கதிர் விட்டபொழுது அந்தக் களைகளும் காணப்பட்டன.

௨௭ வேலைக்காரர் எசமானிடத்தில் வந்து, ஆண்டவனே, நீர் உமது வயல் நிலத்திலே நல்ல விதையை விதைக்கவில்லையா? களைகள் அதிலே எப்படி உண்டாயின என்றார்கள்.

௨௮ அதற்கு அவன், பகைஞன் அப்படிச் செய்தான் என்றான்; அப்பொழுது வேலைக்காரர், நாங்கள் போய், அவைகளைப் பிடுங்கிப்போடச் சித்தமாயிருக்கிறீரோ என்று கேட்டார்கள்.

௨௯ அதற்கு அவன் சொன்னது: வேண்டாம்; களைகளைப் பிடுங்குகிறபொழுது நீங்கள் கோதுமையையும் கூட வேரோடே பிடுங்காதபடிக்கு,

௩௰ [1]அவ்விரண்டையும் அறுப்புக்காலம்வரைக்கும் வளரவிடுங்கள்; அறுப்புக்காலத்திலே அறுக்கிறவர்கள் முதலாவது களைகளைப் பிடுங்கி அவைகளைச் சுட்டெரிக்கிறதற்குக் கட்டுகளாகக் கட்டவும் கோதுமையை என் களஞ்சியத்தில் சேர்க்கவும் கட்டளையிடுவேன் என்று சொன்னான் என்றார்.

௩௧ ¶ பின்பு அவர் வேறொரு உவமையை அவர்களுக்குச் சொல்லிக்காட்டினார்; அதாவது: [2]பரலோக இராச்சியம் கடுகுவிதைக்கு ஒப்பாயிருக்கின்றது; அதை ஒரு மனிதன் எடுத்துத் தன் நிலத்திலே விதைத்தான்.

௩௨ அது எல்லா விதைகளிலும் சிறியதாயிருந்தும் வளரும்பொழுது கீரைகளிலும் பெரிதாகி, ஆகாசத்துப் பறவைகள் அதின் கிளைகளில் வந்தடையத்தக்கதான செடியாம் என்றார்.

௩௩ ¶ [3]பின்பு அவர் வேறொரு உவமையை அவர்களுக்குச் சொன்னார்; அதாவது: மூன்று *மரக்கால் மாமுழுவதும் புளிப்பாகும் வரைக்கும் ஒரு ஸ்திரி புளிப்புமாவை எடுத்து அதிலே அடக்கி வைத்தாள்; பரலோக இராச்சியம் அந்தப் புளிப்புமாவுக்கு ஒப்பாயிருக்கின்றது என்றார்.

௩௪ ¶ [4]என் வாயைத் திறந்து உவமைகளாலே பேசுவேன்; [5]உலகத்தோற்றம் முதற்கொண்டு மறைபொருளானவைகளை வெளிப்படுத்துவேன் என்று தீர்க்கதரிசியால் உரைக்கப்பட்டது நிறைவேறத்தக்கதாக,

௩௫ [6]இயேசுவானவர் இவைகளையெல்லாம் உவமைகளாகச் சனங்களுடனே பேசினார், உவமைகளினாலேயன்றி வேறுவிதமாக அவர் அவர்களுடனே பேசவில்லை.

௩௬ ¶ அப்பொழுது இயேசுவானவர் சனங்களை அனுப்பிப் பின்பு வீட்டுக்குப்போனார்; அங்கே அவருடைய சீஷர் அவரிடத்தில் வந்து, நீர் வயல்நிலத்தின் களைகளைக்குறித்துக் காட்டின உவமையை எங்களுக்கு வெளிப்படுத்தவேண்டும் என்று கேட்டார்கள்.

௩௭ அவர்களுடனே அவர் மறுமொழியாகச் சொன்னதாவது: நல்ல விதையை விதைக்கிறவன் மனிதனுடைய குமாரனே; வயல் நிலம் உலகமே.

௩௮ [7]நல்ல விதை இராச்சியத்தின் புத்திரரே; [8]களைகள் பொல்லாங்கனுடைய புத்திரரே.

௩௯ அவைகளை விதைக்கிற பகைஞன் பசாசே; [9]அறுப்பு உலகத்தின் முடிவே; அறுக்கிறவர்கள் தேவதூதர்களே.

௪௰ ஆதலால் களைகள் சேர்க்கப்

கி. பி. ௩௧.

1 மத். ௩. ௰௨.
2 ஏசா. ௨. ௨, ௩ மீகா. ௪. ௧. மாற். ௪. ௩௧. லூக். ௰௩. ௰௯.
3 லூக். ௰௩. ௨௧
* இரேக்குப் பாஷையிலுள்ள வார்த்தை அரைப்படி குறைய ஒன்றரை மரக்கால் அளவைக் குறிக்கும்.
4 சங். ௭௮. ௨.
5 உரோ. ௰௬. ௨௫. ௧ கொரி. ௨. ௭. எபே. ௩. ௯. கொலோ. ௧. ௨௬.
6 மாற். ௪. ௩௩, ௩௪.
7 மத். ௨௪. ௰௪: ௨௮. ௰௯. மாற். ௰௬. ௰௫, ௨௰. லூக். ௨௪. ௪௭. உரோ. ௰. ௰௮. கொலோ. ௧. ௬.
8 ௧ மோ. ௩. ௰௫. யோவா. ௮. ௪௪. அப். ௰௩. ௰. ௧ யோ. ௩. ௮.
9 யோவே. ௩. ௰௩. வெளி. ௰௪. ௰௫.

Digitized by Google

பட்டு, அக்கினியினால் சுட்டெரிக்கப்படுகிறதுபோல, இவ்வுலகத்தின் முடிவிலே நடக்கும்.

௪௧ மனிதனுடைய குமாரன் தன்னுடைய தூதரை அனுப்புவான்; [1]அவர்கள் அவனுடைய இராச்சியத்தில் இருக்கிற சகல இடறல்களையும் அக்கிரமம்செய்கிறவர்களையும் சேர்த்து,

௪௨ [2]அழுதலும் பற்கடிப்பும் உண்டாயிருக்கிற [3]அக்கினிச்சூளையிலே போடுவார்கள்.

௪௩ [4]அப்பொழுது நீதிமான்கள் தங்கள் பிதாவின் இராச்சியத்திலே சூரியனைப்போலப் பிரகாசிப்பார்கள்; கேட்கிறதற்குக் காதுள்ளவன் [5]கேட்கக்கடவன்.

௪௪ ¶ [6]அல்லாமலும் பரலோக இராச்சியம் வயல்நிலத்தில் ஒளிக்கப்பட்டிருக்கிற பொக்கிஷத்துக்கு ஒப்பாயிருக்கின்றது; அதை ஒரு மனிதன் கண்டு, அதை மறைத்து, அதைக்குறித்து அடைந்த சந்தோஷத்தினாலே போய்த் தனக்குள்ள யாவையும் விற்று, அந்த [7]வயல் நிலத்தையே கொள்ளுகிறான்.

௪௫ ¶ அல்லாமலும் பரலோக இராச்சியம் நல்ல முத்துகளைத் தேடி,

௪௬ [8]ஒரு ஆணிமுத்தைக் கண்டு, போய், தனக்குள்ள யாவையும் விற்று, அதைக் கொள்ளுகிற வியாபாரி ஒருவனுக்கு ஒப்பாயிருக்கின்றது.

௪௭ ¶ [9]அல்லாமலும் பரலோக இராச்சியம் ஒரு வலைக்கு ஒப்பாயிருக்கின்றது; வலையானது கடலிலே போடப்பட்டு எல்லாச் சாதியான மீன்களையும் வாரி நிறைந்தபொழுது,

௪௮ சனங்கள் அதைக் கரையில் இழுத்து உளுக்கார்ந்து, நல்லவைகளைப் பாத்திரங்களில் சேர்த்துக்கொண்டு, தகாதவைகளைத் தள்ளிப்போடுகிறார்கள்.

௪௯ இவ்விதமாக உலகத்தின் முடிவிலே நடக்கும்; [10]தேவதூதர் புறப்பட்டு நீதிமான்களிலிருந்து துன்மார்க்கரைப்பிரித்து,

௫௰ [11]அழுதலும் பற்கடிப்பும் உண்டாயிருக்கிற அக்கினிச்சூளையிலே போடுவார்கள் என்று சொல்லி,

௫௧ பின்பு நீங்கள் இவைகளையெல்லாம் அறிந்துகொண்டீர்களா என்று இயேசுவானவர் சீஷர்களிடத்தில் கேட்டதற்கு, ஆண்டவரே, அறிந்துகொண்டோம் என்றார்கள்.

௫௨ [12]அவர் பின்னும் அவர்களை நோக்கி, அப்படியிருக்கையால், பரலோக இராச்சியத்தைக்குறித்துப் போதனையடைந்த வேதபாரகன் எவனோ, அவன் தன் பொக்கிஷத்தில் புதியவைகளையும் பழையவைகளையும் எடுத்துக்காண்பிக்கிற வீட்டெசமானுக்கு ஒப்பாயிருக்கிறான் என்றார்.

௫௩ ¶ இப்படி இயேசுவானவர் இந்த உவமைகளைச் சொல்லி முடித்தபின்பு,

௫௪ [13]அவர் அவ்விடம்விட்டுத் தாம் வளர்ந்த ஊரிலே வந்து, செபஆலயத்திலே சனங்களுக்கு உபதேசம்பண்ணினார்; அவர்கள் அதைக் கேட்டுப் பிரமித்து, இப்படிப்பட்ட ஞானமும் வல்லமைகளும் இவனுக்கு எங்கேயிருந்து வந்தன?

௫௫ [14]இவன் தச்சனுடைய குமாரன் அல்லவா? [15]இவனுடைய தாய் மரியாள் என்னப்பட்டிருக்கிறாள் அல்லவா? [16]யாக்கோபு, யோசே, சீமோன், யூதா என்பவர்கள் இவனுடைய சகோதரர் அல்லவா?

௫௬ இவனுடைய சகோதரிகள் எல்லாரும் நமக்குள்ளே இருக்கிறார்கள் அல்லவா? இப்படியிருக்க, இவையெல்லாம் இவனுக்கு எங்கேயிருந்து வந்தன என்று சொல்லி,

கி. பி. ௩௧.

1 மத். ௰௮. ௭. ௨ பே. ௨. ௧.
2 மத். ௮. ௰௨. ௨௰. ௰௪.
3 மத். ௩. ௰௨. வெளி. ௰௯. ௨௰: ௨௰. ௰.
4 தானி. ௰௨. ௩. ௧ கொரி. ௰௫. ௪௨, ௪௩, ௪௮.
5 ௧௧. ௰௪.
6 பிலி. ௩. ௭, ௮.
7 ஏசா. ௫௫. ௧. வெளி. ௩. ௰௮.
8 வாக். ௨. ௪: ௩. ௰௪. ௰௫: ௮. ௰, ௰௧.
9 மத். ௨௨. ௰.
10 ௨௫. ௩௨.
11 ௪௨. ௰௪.
12 உன்னத. ௭. ௰௩.
13 மத். ௨. ௨௩. மாற். ௬. ௧. லூக். ௪. ௰௬, ௨௩.
14 ஏசா. ௪௯. ௭. மாற். ௬. ௩. லூக். ௩. ௨௩. யோவா. ௬. ௪௨.
15 மத். ௰௨. ௪௬. மாற். ௰௫. ௪௰.
16 மாற். ௬. ௩.

Digitized by Google

௫௭ [1]அவரைக்குறித்து இடறல் பட்டார்கள்; அப்பொழுது இயேசுவானவர் அவர்களை நோக்கி, [2]தீர்க்கதரிசி ஒருவன் தன் ஊரிலேயும் தன் குடும்பத்திலேயுமே அன்றி மற்ற இடங்களிலே கனஈனப் படான் என்றார்.

௫௮ [3]மேலும் அந்தச் சனங்களுடைய அவிசுவாசத்தினாலே அவர் அவ்விடத்திலே அநேக அற்புதங்களைச் செய்யவில்லை.

## ௰௪. அதிகாரம்.

௧. இயேசுவைக்குறித்து ஏரோது நினைத்த நினைவு. ௩. யோவான் சிரச்சேதம் பண்ணப்பட்ட காரணம். ௰௩. இயேசுவானவர் ஓர் வனாந்தரமான இடத்திற்குப் போய், ௰௫. அவ்விடத்தில் ஐந்து அப்பங்களினாலும், இரண்டு மீன்களினாலும், ஐயாயிரம்பேருக்குப் போசனம் கொடுத்தது. ௨௨. அவர் கடலிலே நடந்து சீஷரிடத்தில் வந்து, ௩௪. கெனேசரேத்தினிடத்தில் இறங்கித் தம்முடைய வஸ்திரத்தின் ஓரத்தைத் தொட்ட பிணியாளிகளைக் குணமாக்கினது.

அக்காலத்திலே [4]காற்பங்கு தேசாதிபதியாகிய ஏரோதே இராசா இயேசுவின் கீர்த்தியைக் கேள்விப்பட்டு,

௨ தன் ஊழியக்காரரை நோக்கி, அவன் யோவான்ஸ்நானன், அவன் மரித்தோரிலிருந்து எழுந்திருந்தவன், அதினாலே அவன் அற்புதங்களைச் *செய்து வருகிறான் என்றான்.

௩ ¶ அது எப்படியென்றால், ஏரோதே இராசா தன் தம்பியாகிய பிலிப்பினுடைய மனைவி ஏரோதியாளைக் குறித்து, நீர் [5]அவளைச் சேர்த்துக்கொள்ளக்கூடாதென்று,

௪ யோவான் அவனுடனே சொன்னபடியினாலே, [6]ஏரோதே இராசா அவனைப் பிடித்துக் கட்டிக் காவலில் வைத்தான்.

௫ அவனைக் கொலைசெய்யவும் மனதாயிருந்தான்; [7]அப்படியிருந்தும் சனங்கள் யோவானைத் தீர்க்கதரிசியென்று எண்ணினபடியினாலே அவன் அவர்களுக்குப் பயந்து (அப்படிச்செய்யவில்லை).

கி. பி. ௩௨.

1 மத். ௰௩. ௫௭. மாற். ௬. ௩, ௪.
2 லூக். ௪. ௨௪. யோவா. ௪. ௪௪.
3 மாற். ௬. ௫, ௬.
4 மாற். ௬, ௰௪, லூக். ௯. ௭.
* அல்லது அவனால் செய்யப்படுகிறது.
5 மாற். ௬. ௰௭. லூக். ௩. ௧௯.
6 ௩ மோ. ௰௮. ௰௬: ௨௰. ௨௧.
7 மத். ௨௧. ௨௬. லூக். ௨௰. ௬,
8 மத். ௰. ௨௩: ௰௨. ௰௫. மாற். ௬. ௩௨. லூக். ௯. ௰. யோவா. ௬. ௧.
9 மத். ௯. ௩௬. மாற். ௬. ௩௪.

௬ பின்பு ஏரோதேயினுடைய சென்மநாள் கொண்டாடப்படுகிற காலத்திலே, ஏரோதியாளின் குமாரத்தி ஏரோதே இராசாவுக்கு மிகுந்த சந்தோஷம் உண்டாகத் தக்கதாக நடனம் பண்ணினபொழுது,

௭ அவன் அவளை நோக்கி, நீ எதைக் கேட்டாலும் தருவேன் என்று அவளுக்கு ஆணையிட்டு வார்த்தைகொடுத்தான்.

௮ உடனே அவள், தன் தாய் தனக்குப் போதித்திருந்தபடியே, நீர் யோவான்ஸ்நானனுடைய சிரசை ஒரு தாலத்தில் இங்கே எனக்குக் கொடுக்கவேண்டும் என்று கேட்டாள்.

௯ இராசா துக்கம் அடைந்தான்; அப்படியிருந்தும் தான் கொடுத்த ஆணையின் நிமித்தமும், பந்தியில் கூட இருந்தவர்களின் நிமித்தமும் அவன் அதைக் கொடுக்கக் கட்டளையிட்டான்.

௰ அந்தப்படி இராசாவினாலே அனுப்பப்பட்டவர்கள் காவல் கூடத்துக்குப் போய், யோவானைச் சிரச்சேதம்பண்ணி,

௰௧ வந்து, அவனுடைய சிரசை ஒரு தாலத்திலே வைத்து, அந்தப் பெண்ணுக்குக் கொடுத்தார்கள்; அவள் அதைத் தன் தாய்க்குக் கொண்டுபோய்க் கொடுத்தாள்.

௰௨ பின்பு அவனுடைய சீஷர்கள் வந்து அவனுடைய உடலை எடுத்து அடக்கம் பண்ணி வந்து, இயேசுவுக்கு அந்தச் சங்கதியை அறிவித்தார்கள்.

௰௩ ¶ [8]இயேசுவானவர் அதைக்கேட்டு, அவ்விடம்விட்டு, வனாந்தரமான இடத்திலே தனியே இருக்க ஒரு படவில் ஏறிப்போனார்; சனங்கள் அதைக் கேள்விப்பட்டுப் பட்டணங்களிலிருந்து கால்நடையாய் அவர் பின்சென்றார்கள்.

௰௪ ¶ [9]இயேசுவானவர் புறப்பட்டுத் திரளான சனங்களைக்

Digitized by Google

கண்டு, அவர்களுக்கு இரக்கமாய் மனதுருகி, அவர்களில் வியாதிப்பட்டவர்களைக் குணமாக்கினார்.

௰௫ ¶ [1]சாயங்காலத்திலே அவருடைய சீஷர் அவரிடத்தில் வந்து, இது வனாந்தரமான இடம், அல்லாமலும் பகல் போயிற்று; ஆதலால், இந்தச் சனங்கள் கிராமங்களுக்குப் போய்த் தங்களுக்காகப் போசனபதார்த்தங்களைக் கொள்ளும்படிக்கு இவர்களை அனுப்பிவிடும் என்றார்கள்.

௰௬ அதற்கு இயேசுவானவர், இவர்கள் போகவேண்டுவதில்லை; நீங்களே இவர்களுக்குச் சாப்பாடு கொடுங்கள் என்றார்.

௰௭ அவர்கள் சொன்னது: ஐந்து அப்பமும் இரண்டு மீன்களுமே அல்லாமல் வேறொன்றும் எங்களிடத்தில் இல்லை என்றார்கள்.

௰௮ அவைகளை எனக்கு இங்கே கொண்டுவாருங்கள் என்றார்.

௰௯ பின்பு சனங்கள் புல்லின்மேல் பந்தியிருக்கும்படிக்கு அவர் கட்டளையிட்டு, அவ்வைந்து அப்பங்களையும் இரண்டு மீன்களையும் எடுத்து, [2]வானத்தை அண்ணாந்து பார்த்து, அவைகளை ஆசீர்வதித்து அப்பங்களைப்பிட்டுச் சீஷர்களுக்குக் கொடுத்தார்; சீஷர்கள் அவைகளைச் சனங்களுக்குக் கொடுத்தார்கள்.

௨௰ அவர்கள் எல்லாரும் சாப்பிட்டுத் திருத்தி அடைந்தார்கள்; அதுவுமல்லாமல் சேஷமானவைகளைப் பன்னிரண்டு கூடைநிறைய எடுத்தார்கள்.

௨௧ அப்படிச் சாப்பிட்டவர்கள் பெண்களும் பிள்ளைகளும் தவிர ஏறக்குறைய ஐயாயிரம்பேர் இருந்தார்கள்.

௨௨ ¶ உடனே இயேசுவானவர் சனங்களை அனுப்பிவிடுகையில், தம்முடைய சீஷர்கள் படவில் ஏறித் தமக்கு முன்னே அக்கரைக்குப் போகும்படிக்கு அவர்களைத் துரிதப்படுத்தினார்.

௨௩ [3]சனங்களை அனுப்பிவிட்டபின்பு அவர் தனியே செபத்தியானம் பண்ணும்படிக்கு ஒரு மலையின்மேல் ஏறினார்; [4]சாயந்தரமானபொழுது அவர்மாத்திரம் அங்கே இருந்தார்.

௨௪ அவ்வேளையிலே படவு கடலின் நடுவே சேர்ந்து, எதிர் காற்றிருந்ததினாலே அலைகளால் அலைவுபட்டது.

௨௫ அப்படி இருக்கிறபொழுது, இரவின் நாலாம் சாமத்திலே இயேசுவானவர் கடலின்மேலே நடந்து, அவர்களிடத்திற்குப் போனார்.

௨௬ [5]அவர் கடலின்மேல் நடக்கிறதைச் சீஷர் கண்டு, தத்தளித்து, ஆவேஷம் உண்டாயிருக்கிறது என்று புலம்பிப் பயத்தினாலே கூப்பிட்டார்கள்.

௨௭ உடனே இயேசுவானவர், திடன்கொள்ளுங்கள், நான்தான், பயப்படாதிருங்கள் என்று அவர்களுடனே சொன்னார்.

௨௮ பேதுரு அவருக்கு, ஆண்டவரே, நீரேயானால் சலத்தின்மேல் உம்மிடத்தில் வரும்படி எனக்குக் கட்டளையிடும் என்றான்.

௨௯ அதற்கு அவர், வா என்றார்; அப்பொழுது பேதுரு படவைவிட்டு இறங்கி, இயேசுவினிடத்திற்கு வரும்படிக்குச் சலத்தின்மேலே நடந்து,

௩௰ காற்றுப் *பலத்திருக்கிறதைக் கண்டு பயம் அடைந்து அமிழத்தொடங்கி, ஆண்டவரே, என்னை இரட்சிக்கவேண்டுமென்று கூப்பிட்டான்.

௩௧ உடனே இயேசுவானவர் கையை நீட்டி, அவனைப் பிடித்துக்கொண்டு, அற்பவிசுவாசியே, ஏன் சந்தேகப்பட்டாய் என்றார்.

௩௨ அவர்கள் படவில் ஏறினவுடனே காற்று அமைதலாயிற்று.

௩௩ [6]அப்பொழுது படவிலுள்ளவர்கள் வந்து, மெய்யாகவே நீர் பராபரனுடைய குமாரனாயிருக்கி

கி. பி. ௩௨.

1 மாற். ௬. ௩௫. லூக். ௯. ௰௨. யோவா. ௬. ௫.
2 மத். ௰௫. ௩௬.
3 மாற். ௬. ௪௬.
4 யோவா. ௬. ௰௫.
5 யோபு. ௯. ௮.
* மோதுகிறதை.
6 சங். ௨. ௭. மாற். ௧. ௧. மத். ௰௬. ௰௬: ௨௬. ௬௩. லூக். ௪. ௪௧. யோவா. ௧. ௪௯: ௬. ௬௯: ௰௧. ௨௭. அப். ௮. ௩௭. உரோ. ௧. ௪.

Digitized by Google

நீர் என்று சொல்லி, அவரை வணங்கினார்கள்.

௩௪ ¶ [1]பின்பு அவர்கள் அக்கரைக்கு ஓடி கெனேசரேத்து நாட்டில் வந்தார்கள்.

௩௫ அவ்விடத்து மனிதர் அவரை அறிந்து, அந்தத் திசைகளில் எங்கும் ஆள்களை அனுப்பிப் பிணியாளிகள் எல்லாரையும் அவரிடத்தில் அழைத்துக்கொண்டுவந்து,

௩௬ அவருடைய வஸ்திரத்தின் ஓரத்தைமாத்திரம் தொடும்படிக்கு உத்தரவுகேட்க, அதைத் [2]தொட்ட யாவரும் சொஸ்தம் அடைந்தார்கள்.

# ௧௫. அதிகாரம்.

௧ வேதபாரகரும் பரிசேயரும் தேவகற்பனைகளைத் தங்களுடைய பாரம்பரைகளினாலே மீறினதற்காக் கிறிஸ்து அவர்களைக் கடிந்துகொண்டு, ௰௧. வாய்க்குள்ளே போகிற பதார்த்தம் மனுஷனைத் தீட்டுப்படுத்தாதென்று போதித்தது. ௨௧. அவர் கானான்தேசத்தாளுடைய மகளையும், ௩௰. மற்ற அநேகம் ரூம்புகளையும் குணமாக்கி, ௩௨. ஏழு அப்பங்களினாலும், சில சிறுமீன்களினாலும், ஸ்திரீகளும் பிள்ளைகளும் தவிர நாலாயிரம் புருஷர்களுக்குப் போசனம் கொடுத்தது.

அக்காலத்திலே [3]எருசலேமிலிருந்து வந்த வேதபாரகரும் பரிசேயரும் இயேசுவினிடத்தில் வந்து,

௨ [4]உம்முடைய சீஷர் தங்கள் கைகளைக் கழுவாமல் போசனம் பண்ணுகிறார்கள்; [5]அப்படி அவர்கள் பெரியோர்களுடைய பாரம்பரை நியாயத்தை ஏன் மீறி நடக்கிறார்கள் என்றார்கள்.

௩ அதற்கு அவர் சொன்னது: உங்கள் பாரம்பரை நியாயத்தினாலே நீங்களும் பராபரனுடைய கற்பனையை ஏன் மீறி நடக்கிறீர்கள்?

௪ [6]எப்படியெனில், உன் தகப்பனையும் தாயையும் கனம்பண்ண வேண்டுமென்றும், [7]தகப்பனையாவது தாயையாவது நிந்திப்பவனை மரண ஆக்கினைக்குட்படுத்த வேண்டுமென்றும் பராபரன் கட்டளையிட்டார்.

௫ [8]அப்படியிருந்தும் நீங்கள், எவனாகிலும் தன் தகப்பனுடனே அல்லது தாயுடனே, உமக்கு என்னாலே உதவுகிறது எதுண்டோ அதைக் காணிக்கையாகக் கொடுக்கிறேன் என்று சொன்னால்,

௬ அவன் தன் தகப்பனை அல்லது தாயைக் கனம்பண்ணவேண்டுவதில்லை என்று போதித்து, இவ்விதமாய்ப் பராபரனுடைய கற்பனையை உங்கள் பாரம்பரை நியாயத்தினாலே அவமாக்கிவருகிறீர்கள்.

௭ [9]ஆ வஞ்சகரே, [10]இந்தச் சனங்கள் தங்கள் வாயினாலே என்னைச் சேர்ந்து, தங்கள் உதடுகளினாலே என்னைக் கனம்பண்ணியும் தங்கள் இருதயமோ எனக்குத் தூரமாய் விலகியிருக்கின்றது.

௮ [11]அப்படி இவர்கள் மனிதர்களுடைய கற்பனைகளாகிய போதகங்களைப் போதிக்கிறவர்களாயிருந்து எனக்கு வீணாக ஆராதனை செய்கிறார்கள் என்று,

௯ ஏசாயா என்பவன் உங்களைக் குறித்து நன்றாய்த் தீர்க்கதரிசனம் உரைத்தானென்று சொன்னார்.

௰ ¶ [12]பின்பு சனங்களைத் தம்மிடத்தில் வரவழைத்து நீங்கள்கேட்டுச் சிந்தித்துக்கொள்ளுங்கள்.

௧௧ [13]வாய்க்குள்ளே போகிற பொருள் ஒருவனையும் அசுசிப்படுத்தமாட்டாது; வாயிலிருந்து புறப்படுகிற பொருளே ஒருவனை அசுசிப்படுத்துகின்றதென்று அவர்களுடனே சொன்னார்.

௧௨ ¶ அப்பொழுது அவருடைய சீஷர் அவரிடத்தில் வந்து, பரிசேயர் இந்த வசனத்தைக் கேட்டு விதனப்பட்டார்கள் என்று அறிந்திருக்கிறீரா என்றார்கள்.

௧௩ அதற்கு அவர், [14]என் பரமபிதா நடாத நாற்றுகள் யாவும் பிடுங்கப்படும்.

௧௪ அவர்களை விட்டுவிடுங்கள், [15]குருடருக்கு வழிகாட்டுகிற குருடராயிருக்கிறார்கள்; ஒரு குருடன் மற்றொரு குருடனுக்கு வழிகாட்

கி. பி. ௩௨.

1 மாற். ௬. ௫௩.
2 மத். ௯. ௨௦. மாற். ௫. ௰. லூக். ௬. ௧௯. அப். ௧௯. ௧௨.
3 மாற். ௭. ௧.
4 மாற். ௭. ௫.
5 கொலோ. ௨. ௮.
6 ௨ மோ. ௨௦. ௧௨. ௩ மோ. ௧௯. ௩. ௫ மோ. ௫. ௧௬. எபே. ௬. ௨.
7 ௨ மோ. ௨௧. ௧௭. ௩ மோ. ௨௦. ௯. ௫ மோ. ௨௭. ௧௬. நீதி. ௨௦. ௨௦; ௩௦. ௧௭.
8 மாற். ௭. ௧௧, ௧௨.
9 மாற். ௭. ௬.
10 ஏசா. ௨௯. ௧௩. எசே. ௩௩. ௩௧.
11 ஏசா. ௨௯. ௧௩. கொலோ. ௨. ௧௮-௨௨. தீத். ௧. ௧௪.
12 மாற். ௭. ௧௪.
13 அப். ௰. ௧௫. ரோ. ௧௪. ௧௪, ௨௦. ௧ தீமோ. ௪. ௪. தீத். ௧. ௧௫.
14 யோவா. ௧௫. ௨. ௧ கொரி. ௩. ௧௨. ௧௩.
15 ஏசா. ௯. ௧௬. மல்கி. ௨. ௮. மத். ௨௩. ௧௬. லூக். ௬. ௩௯.

Digitized by Google

டினால் இருவரும் குழியிலே விழு வார்கள் என்றார்.

௧௫ [1]அப்பொழுது பேதுரு அவரை நோக்கி, இந்த உவமையை எங்களுக்கு வெளிப்படுத்தவேண்டுமென்று கேட்டான்.

௧௬ அதற்கு இயேசுவானவர், [2]நீங்களும் இன்னம் புத்தியில்லாதவர்களா?

௧௭ [3]வாய்க்குள்ளே போகிறவைகள் யாவும் வயிற்றில் பிரவேசித்துப் பின்பு ஆசனவழியாய்க் கழிந்துபோகின்றன என்பதை நீங்கள் இன்னம் சிந்தித்துக்கொள்ளவில்லையா?

௧௮ [4]வாயிலிருந்து புறப்படுகிறவைகள் இருதயத்திலிருந்து புறப்பட்டு வருகின்றன; அவைகளே மனிதனை அசுசிப்படுத்துகின்றன.

௧௯ [5]எவையெனில், பொல்லாத சிந்தனைகள், கொலைகள், விபசாரங்கள், வேசித்தனங்கள், களவுகள், பொய்ச்சாட்சிகள், தூஷணங்களாகிய இவைகள் இருதயத்திலிருந்து புறப்பட்டு வருகின்றன.

௨௦ இவைகள் மனிதனை அசுசிப்படுத்துகிறவைகள்; கைகழுவாமல் சாப்பிடுகிறது மனிதனை அசுசிப்படுத்தாது என்றார்.

௨௧ ¶ பின்பு இயேசுவானவர் அவ்விடம்விட்டுப் புறப்பட்டுத் தீருசீதோன் பட்டணங்களின் திசைகளுக்குப் போனார்.

௨௨ [6]அப்பொழுது அவ்விடங்களின் எல்லைகளிலிருந்து வந்த கானான் தேசத்தாளாகிய ஒரு ஸ்திரீ அவரைநோக்கி, ஆண்டவரே, தாவீதின் குமாரனே, என் மகள் பசாசினாலே கடினமாய் வாதிக்கப்படுகிறாள்; எனக்கு இரங்கவேண்டுமென்று சொல்லிக் கூப்பிட்டாள்.

௨௩ அவரோ அவளுக்கு மாறுத்தரமாக ஒரு வார்த்தையும் சொல்லவில்லை; அப்பொழுது அவருடைய சீஷர் வந்து அவரைநோக்கி, இவள் நம்மைப் பின்தொடர்ந்து கூப்பிடுகிறாளே; ஆதலால் இவளை அனுப்பிவிடும் என்றுவேண்டிக்கொண்டார்கள்.

௨௪ [7]அதற்கு அவர், காணாமல்போன ஆடுகளாகிய இஸ்ரவேல் குடும்பத்தாரிடத்துக்கே அன்றி, (மற்றவர்களிடத்தில்)நான் அனுப்பப்படவில்லையே என்றார்.

௨௫ அவளோ வந்து, ஆண்டவரே, எனக்குச் சகாயஞ்செய்யவேண்டுமென்று அவரை நமஸ்காரம்பண்ணினாள்.

௨௬ அவர் சொன்னது: [8]பிள்ளைகளுடைய அப்பத்தை எடுத்து நாய்களுக்குப் போடுகிறது நல்லதல்லவே என்றார்.

௨௭ அதற்கு அவள், ஆண்டவரே, மெய்தான், ஆகிலும் நாய்கள் தங்கள் எசமான்கள் போசனம் செய்கிற பலகைகளிலிருந்து விழுகிற உச்சிட்டங்களைத் தின்னுமே என்றாள்.

௨௮ அப்பொழுது இயேசுவானவர் அவளை நோக்கி, ஆ ஸ்திரியே, உன் விசுவாசம் பெரிதாயிருக்கின்றது; நீ விரும்பினபடி உனக்கு ஆகக்கடவது என்றார்; அந்நேரமே அவளுடைய மகள் சுகம் அடைந்தாள்.

௨௯ ¶ [9]பின்பு இயேசுவானவர் அவ்விடம்விட்டுப் புறப்பட்டு, [10]கலிலேயாக் கடலின் அருகேவந்து, ஒரு மலையில் ஏறி, அங்கே உளுக்காந்தார்.

௩௰ [11]அப்பொழுது சப்பாணிகள், குருடர், ஊமையர், முடவர்கள் முதலான அநேகம்பேரைக் கூட்டிக்கொண்டு வந்த மிகுந்த சனங்கள் இயேசுவினிடத்தில் வந்து, அவர்களை அவருடைய பாதத்தினிடத்தில் வைத்தார்கள்; அவர்களை அவர் குணமாக்கினார்.

௩௧ ஊமையர் பேசுகிறதையும், முடவர்கள் சொஸ்தம் அடைகிறதையும், சப்பாணிகள் நடக்கிற

கி. பி. ௩௨

1 மாற். ௭. ௰௭.
2 மத். ௰௬. ௯. மாற். ௭. ௰௮.
3 ௧ கொரி. ௬. ௰௩.
4 யாக் ௩. ௬.
5 ௧ மோ. ௬. ௫: ௮. ௨௧. யாக். ௧ ௰௪ : ௰௫. ௰௬. எரே. ௰௭. ௯. மாற். ௭. ௨௧, ௨௨.
6 மாற். ௭. ௨௪.
7 மத். ௰. ௫, ௬. அப். ௩. ௨௫. ௨௬: ௰௩. ௪௬. ௨ரோ. ௰௫. ௮.
8 மத். ௭. ௬. பிலி. ௩. ௨.
9 மாற். ௭. ௩௧.
10 மத். ௪. ௰௮.
11 ஏசா. ௩௫. ௫, ௬. மத். ௰௧. ௫. லூக். ௭. ௨௨.

Digitized by Google

தையும், குருடர் காணுகிறதையும் சனங்கள் கண்டு ஆச்சரியப்பட்டு, இஸ்ரவேலின் தேவனைத் துதித்தார்கள்.

௩௨ ¶ [1]பின்பு இயேசுவானவர் தம்முடைய சீஷரைத் தம்மிடத்தில் அழைத்து, சனங்களைக்குறித்து மனதுருக்கமாய் இருக்கிறேன்; என்னத்தினாலென்றால், இவர்கள் மூன்றுநாள் என்னிடத்திலே தங்கிப் போசனம் இல்லாமல் இருக்கிறார்கள்; இவர்கள் வழியிலே சோர்ந்துபோகும்படிக்குப் பட்டினியாய் இவர்களை அனுப்பிவிடமாட்டேன் என்றார்.

௩௩ [2]அதற்கு அவருடைய சீஷர்கள், இவ்வளவு சனங்களுக்குத் திருத்தி உண்டாகும்படிக்கு வேண்டிய அப்பங்கள் இந்த வனாந்தரத்திலே நமக்கு எப்படி அகப்படும் என்றார்கள்.

௩௪ இயேசுவானவர், உங்களிடத்தில் எவ்வளவு அப்பங்கள் உண்டு என்றார்; ஏழு அப்பங்களும் சில சிறுமீன்களும் உண்டு என்று சீஷர் சொல்ல,

௩௫ அவர் சனங்களைத் தரையிலே பந்தியிருக்கச்சொல்லி,

௩௬ பின்பு அந்த [3]ஏழு அப்பங்களையும் மீன்களையும் எடுத்து, [4]தோத்திரம்செய்து, அவைகளைப் பிட்டுத் தம்முடைய சீஷர்களுக்குக் கொடுத்தார்; சீஷர் அவைகளைச் சனங்களுக்குக் கொடுக்க,

௩௭ எல்லாரும் சாப்பிட்டுத் திருத்தி அடைந்தார்கள்; பின்பு சேஷமானவைகள் ஏழு கூடை நிறையச் சேகரித்துக்கொள்ளப்பட்டன.

௩௮ பெண்களும் பிள்ளைகளும் தவிர, போசனம்பண்ணின புருஷர் நாலாயிரம்பேர்.

௩௯ [5]அவர் சனங்களை அனுப்பிவிட்டு, படவில் ஏறி மகதலனூரின் திசைகளில் சேர்ந்தார்.

கி. பி. ௩௨.

1 மாற். அ. ௧.
2 ௨ இரா. ௪. ௪௩.
3 மத். ௰௪. ௰௯.
4 ௧ சாமு. ௯. ௰௩. லூக். ௨௨. ௰௯.
5 மாற். அ. ௰.
6 மத். ௰௨. ௩௮. மாற். அ. ௰௧. லூக். ௰௧. ௰௬: ௰௨. ௫௪-௫௬. ௧ கொரி. ௧. ௨௨.
7 மத். ௰௨. ௩௯.
8 மாற். அ. ௰௪.
9 லூக். ௰௨. ௧.

## ௰௬. அதிகாரம்.

௧. பரிசேயர் ஒரு அடையாளத்தைக் கேட்டது. ௬. இயேசு பரிசேயர் சதுசேயர் என்பவர்களுடைய புளித்த மாவுக்குச் சீஷர்கள் எச்சரிக்கையாயிருக்கப் போதித்தது. ௰௩. கிறிஸ்துவைக்குறித்துச் சனங்கள் நினைத்த நினைவு. ௰௬. பேதுரு அவரை அறிக்கைபண்ணினது. ௨௧. இயேசு தம்முடைய மரணத்தை முன்னறிவித்தது, ௨௩. அப்படிச் சம்பவிக்காதபடிக்குப் பேதுரு ஏவினதற்காக அவனைக் கடிந்துகொண்டு, ௨௪. தம்மைப் பின்பற்றுகிறவர்கள் சிலுவையைச் சுமக்கவேண்டுமென்று புத்திசொன்னது.

[6]அப்பொழுது பரிசேயரும் சதுசேயரும் அவரைச் சோதிக்கும்படிக்கு அவரிடத்தில் வந்து, வானத்திலிருந்து ஒரு அடையாளத்தைத் தங்களுக்குக் காண்பிக்கவேண்டுமென்று கேட்டார்கள்.

௨ அவர்களுக்கு அவர் சொன்னது: அஸ்தமனமாகிறபொழுது செவ்வானம் தோன்றியபடியால் வெளிவாங்கும் என்கிறீர்கள்.

௩ அல்லாமலும் உதயமாகிறபொழுது வானம் சிவப்பாயும் மந்தாரமாயும் இருக்கிறபடியால், இன்றைக்குப் பெருங்காற்றும் மழையும் உண்டாகும் என்கிறீர்கள். வஞ்சகரே, வானத்தின் தோற்றத்தை வகையறுக்க அறிந்திருக்கிறீர்கள்; காலங்களின் அடையாளங்களைக்குறித்து வகையறுக்கமாட்டீர்களா?

௪ [7]சோரமார்க்கமுள்ள பொல்லாத சந்ததியாரானவர்கள் அடையாளம் கேட்கிறார்கள்; யோனா தீர்க்கதரிசியின் அடையாளமே அன்றி, வேறொரு அடையாளமும் இவர்களுக்குக் கொடுக்கப்படுவதில்லை என்று சொல்லி, அவர்களை விட்டுப்போனார்.

௫ ¶ [8]அவருடைய சீஷர்கள் அக்கரைக்குப் போனபொழுது அப்பங்களைக் கூடக் கொண்டுபோக மறந்திருந்தார்கள்.

௬ [9]அப்பொழுது இயேசுவானவர் அவர்களை நோக்கி, நீங்கள் பரிசேயர் சதுசேயர் என்பவர்களுடைய புளிப்புள்ள மாவுக்கு

Digitized by Google

விலகி மிகவும் எச்சரிக்கையாய் இருங்கள் என்றார்.

௭ அவர்கள் நாம் அப்பங்களைக் கூடக் கொண்டுவராததைக் குறித்து (இப்படிச் சொல்லுகிறாரென்று) தங்களுக்குள்ளே யோசனைபண்ணிக்கொண்டார்கள்.

௮ இயேசுவானவர் அதை அறிந்து அவர்களை நோக்கி, அற்பவிசுவாசிகளே, நீங்கள் அப்பங்களைக்கூடக் கொண்டுவராததைக் குறித்து (நான் இப்படிச்சொன்னதாக) உங்களுக்குள்ளே யோசனை பண்ணுகிறது என்ன?

௯ [1]இன்னம் உங்களுக்குப் புத்தி இல்லையோ? ஐயாயிரம் பேருக்குள்ளே (கொடுத்த) ஐந்து அப்பங்களையும், நீங்கள் அவ்வளவு கூடைநிறையச் சேகரித்த துண்டங்களையும்,

௰ [2]நாலாயிரம் பேருக்குள்ளே (கொடுத்த) ஏழு அப்பங்களையும், நீங்கள் அவ்வளவு கூடைநிறைய எடுத்த துண்டங்களையும் நினைத்துக்கொள்ளுகிறதில்லையா?

௰௧ பரிசேயர் சதுசேயர் என்பவர்களுடைய புளிப்புள்ள மாவுக்கு விலகி எச்சரிக்கையாய் இருக்கவேண்டும் என்று நான் அப்பத்தைக்குறித்துச் சொல்லவில்லை என்று நீங்கள் சிந்தித்துக்கொள்ளாமல் இருக்கிறது எப்படியென்றார்.

௰௨ அப்பொழுது அவர்கள் பரிசேயர் சதுசேயர் என்பவர்களுடைய அப்பங்களின் புளிப்புள்ள மாவுக்கு அல்ல, அவர்களுடைய உபதேசத்துக்கே விலகி எச்சரிக்கையாய் இருக்கச்சொன்னாரென்று அறிந்தார்கள்.

௰௩ ¶ பின்பு இயேசுவானவர் பிலிப்பு கேசாரியாவின் திசைகளில் வந்தபொழுது அவர் தம்முடைய சீஷர்களை நோக்கி, [3]மனிதனுடைய குமாரனாகிய என்னைச் சனங்கள் ஆரென்று சொல்லுகிறார்கள் என்று கேட்டார்.

௰௪ [4]அதற்கு அவர்கள் சொன்னது: சிலர் உம்மை யோவான் ஸ்நானன் என்றும், சிலர் எலியா என்றும், சிலர் எரேமியா அல்லது தீர்க்கதரிசிகளில் ஒருவர் என்றும் சொல்லுகிறார்கள் என்றார்கள்.

௰௫ அதற்கு அவர், நீங்கள் என்னை ஆரென்று சொல்லுகிறீர்கள் என்று கேட்டபொழுது,

௰௬ அதற்குச் சீமோன்பேதுரு சொன்னது: [5]நீர் சீவனுள்ள பராபரனுடைய குமாரனாகிய கிறிஸ்து என்றான்.

௰௭ அவனுடனே இயேசுவானவர் சொன்னது: யோனாவின் குமாரனாகிய சீமோனே, [6]மாம்ச இரத்தம் அல்ல, பரமண்டலங்களில் இருக்கிற என் பிதா [7]இதை உனக்கு வெளிப்படுத்தினார்; ஆதலால் நீ பாக்கியமுள்ளவன்.

௰௮ மேலும் [8]நீ பேதுருவாய் இருக்கிறாய், [9]இந்தக் கல்மலையின்மேல் நான் என்னுடைய சபையைக் கட்டுவேன், [10]பாதாளத்தின் வாசல்களும் அதைச் செயிப்பதில்லை என்று உனக்குச் சொல்லுகிறேன்.

௰௯ அல்லாமலும் பரலோக இராச்சியத்தின் திறவுகோல்களை உனக்குக் கொடுப்பேன், பூமியிலே நீ கட்டுவது ஏதோ, அது பரலோகத்திலே கட்டப்பட்டிருக்கும்; [11]பூமியிலே நீ கட்டவிழ்ப்பது ஏதோ, அது பரலோகத்திலே கட்டவிழ்க்கப்பட்டிருக்கும் என்று சொல்லி,

௨௰ [12]பின்பு தாம் கிறிஸ்து என்று ஒருவருக்கும் சொல்லாதபடிக்குத் தம்முடைய சீஷர்களுக்குக் கட்டளையிட்டார்.

௨௰௧ ¶ [13]அதுமுதல் இயேசுவானவர், தாம் எருசலேமுக்குப் போய், பெரியோர்களாலும் பிரதான ஆசாரியராலும் வேதபாரகராலும் மிகுந்த பாடுபடவும், கொலைசெய்யப்படவும், மூன்றாம் நாளிலே எழுந்திருக்கவும் வேண்டு

கி. பி. ௩௨.

1 மத். ௰௪. ௰௭– ௨௰. யோவா. ௬. ௯–௰௩.
2 மத். ௰௫. ௩௪– ௩௮.
3 மாற். ௮. ௨௭. லூக். ௯. ௰௮.
4 மத். ௰௪. ௨. லூக். ௯. ௭–௯.
5 மத். ௰௪. ௩௩. மாற். ௮. ௨௯. லூக். ௯. ௨௰. யோவா. ௬. ௬௯: ௰௧. ௨௭. அப். ௮. ௩௭: ௯. ௨௰. ௧ யோ. ௪. ௰௫: ௫. ௫. எபி. ௧. ௨, ௫.
6 எபே. ௨. ௮.
7 ௧ கொரி. ௨. ௰. கலா. ௧ ௰௬.
8 யோவா. ௧. ௪௨.
9 எபே. ௨. ௨௰. வெளி. ௨௧. ௰௪.
10 யோபு. ௩௮. ௰௭. சங். ௯. ௰௩: ௭௭. ௰௮. ஏசா. ௩௮. ௰.
11 மத். ௰௮. ௰௮. யோவா. ௨௰. ௨௩.
12 மத். ௰௭. ௯. மாற். ௮. ௩௦. லூக். ௯. ௨௧.
13 மத். ௨௰. ௰௭– ௨௰. மாற். ௮. ௩௧: ௯. ௩௧: ௰. ௩௩. லூக். ௯. ௨௨: ௰௮. ௩௨, ௩௩: ௨௪. ௯, ௭.

Digitized by Google

மென்று தம்முடைய சீஷருக்குக் காண்பிக்கத் தொடங்கினார்.

௨௨ அப்பொழுது பேதுரு அவரைத் தனியே அழைத்து, ஆண்டவரே, உம்மிடத்தில் இரக்கம் உண்டாவதாக, அப்படி உமக்கு வாராதிருப்பதாக என்று அவருடனே கண்டிப்பாய்ச் சொன்னான்.

௨௩ இயேசுவானவர் திரும்பிப் பேதுருவினிடத்தில், [1]ஆ சாத்தானே, நீ என் முன் இராமல்போ, நீ பராபரனுக்குப் பிரியமானவைகளைச் சிந்தியாமல், மனிதருக்குப் பிரியமானவைகளைச் சிந்திக்கிறபடியினாலே [2]எனக்குத் துன்பமாயிருக்கிறாய் என்றுசொல்லி,

௨௪ ¶ [3]பின்பு தம்முடைய சீஷர்களைநோக்கி, என்னைப் பின்பற்றி நடக்க ஒருவன் விரும்பினால், தன்னைத்தான் வெறுத்துத் தன் சிலுவையை எடுத்துக்கொண்டு, என்னைப் பின்பற்றக்கடவன்.

௨௫ என்னத்தினாலென்றால், [4]தன் சீவனை இரட்சிக்க விரும்புகிறவன் அதை இழந்துபோவான்; என்நிமித்தம் தன் சீவனை இழந்துபோகிறவன் அதைக் கண்டடைவான்.

௨௬ அல்லாமலும் மனிதனானவன் உலக முழுமையும் சம்பாதித்துக்கொண்டாலும், தன் சீவனை நஷ்டப்படுத்தினால் அவனுக்கு என்ன லாபம் உண்டாயிருக்கும்? [5]அன்றியும், ஒரு மனிதன் தன் சீவனை மீட்கிறதற்கு என்னத்தைக் கொடுப்பான்?

௨௭ [6]அல்லாமலும், மனிதனுடைய குமாரன் தம்முடைய பிதாவின் மகிமையைப் பொருந்தி, [7]தம்முடைய தூதரோடும் கூட வருவார்; அப்பொழுது [8]அவனவனுடைய செய்கையின்படியே அவனவனுக்குப் பலன் அளிப்பார்.

௨௮ [9]இங்கே நிற்கிறவர்களில் சிலர் மனிதனுடைய குமாரன் தம்முடைய இராச்சியத்தில் வருவதைக் காண்கிறதற்கு முன்னே மரணத்தை அடைவதில்லையென்று மெய்யாய் உங்களுக்குச் சொல்லுகிறேன் என்றார்.

கி. பி. ௩௨.



1 ௨ சாமு. ௰௯. ௨௨.
2 ௨ரோ. ௮. ௭.
3 மத். ௰. ௩௮. மாற். ௮. ௩௪. லூக். ௯. ௨௩: ௰௪. ௨௭. அப். ௰௪. ௨௨. ௧ தெச. ௩. ௪. ௨ தீமோ. ௩. ௰௨.
4 லூக். ௰௭. ௩௩. யோவா. ௰௨. ௨௫.
5 சங். ௪௯. ௭, ௮.
6 மத். ௨௬. ௬௪. மாற். ௮. ௩௮. லூக். ௯. ௨௬.
7 தானி. ௭. ௰. சகரி. ௰௪. ௫. மத். ௨௫. ௩௧. யூதா. ௰௪.
8 யோபு. ௩௪. ௰௧. சங். ௬௨. ௰௨. வாக். ௨௪. ௰௨. எரே. ௰௭. ௰: ௩௨. ௰௯. ௨ரோ. ௨. ௬. ௧ கொரி. ௩. ௮. ௨ கொரி. ௫. ௰. ௧ பே. ௧. ௰௭. வெளி. ௨. ௨௩: ௨௨. ௰௨.
9 மாற். ௯. ௧. லூக். ௯. ௨௭.
10 மாற். ௯. ௨. லூக். ௯. ௨௮.
11 ௨ பே. ௧. ௰௭.
12 மத். ௩. ௰௭. மாற். ௧. ௰௧. லூக். ௩. ௨௨.
13 ஏசா. ௪௨. ௧.
14 ௫ மோ. ௰௮. ௰௫, ௰௯. அப். ௩. ௨௨, ௨௩.
15 ௨ பே. ௧. ௰௮.
16 தானி. ௮. ௰௮: ௯. ௨௧: ௰. ௰: ௰௮. ௰௯.

## ௰௭. அதிகாரம்.

௧. கிறிஸ்து மறுரூபப்பட்டது. ௰௪. அவர் சந்திரரோகியைக் குணமாக்கி, ௨௨. தம்முடைய பாடுகளை முன்னறிவித்தது, ௨௪. தீர்வையைச் செலுத்தினது.

[10]ஆறுநாளுக்குப் பின்பு இயேசுவானவர் தனித்திருக்கும்படி, பேதுருவையும் யாக்கோபையும் அவனுடைய தம்பியாகிய யோவானையும் கூட்டிக்கொண்டு, உயர்ந்த மலையின்மேல் போய்,

௨ அங்கே அவர்களுக்கு முன்பாக மறுரூபமானார்; அவருடைய முகம் சூரியனைப்போல் பிரகாசித்தது; அவருடைய வஸ்திரங்கள் ஒளியைப்போல் வெண்மையாயின.

௩ அப்பொழுது மோசே எலியா என்பவர்கள் அவரோடே பேசிக்கொள்ளுகிறவர்களாய் அவர்களுக்குக் காணப்பட்டார்கள்.

௪ அப்பொழுது பேதுரு இயேசுவைநோக்கி, ஆண்டவரே, நாம் இங்கே இருக்கிறது நல்லது; உமக்குச் சித்தமானால் இங்கே உமக்கும், மோசேயுக்கும், எலியாவுக்கும் ஒவ்வொரு குடிலாக மூன்று குடில்களை உண்டாக்குவோம் என்றான்.

௫ [11]அப்படி அவன் பேசுகையில் நடந்தது என்னவெனில், ஒளியுள்ள மேகம் அவர்கள்மேல் நிழலிட்டதுமல்லாமல், [12]இவர் எனக்கு அன்பாயிருக்கிற என்னுடைய குமாரன், [13]இவரில் பிரியமாய் இருக்கிறேன், [14]இவருக்குச் செவிகொடுங்கள் என்று அந்த மேகத்தில் இருந்து சத்தம் உண்டாயிற்று.

௬ [15]சீஷர் அதைக்கேட்டு, முகங்குப்புறவிழுந்து, மிகவும் பயந்தார்கள்.

௭ [16]அப்பொழுது இயேசுவானவர் வந்து, அவர்களைத் தொட்டு, எழுந்திருங்கள், பயப்படாதிருங்கள் என்று சொன்னார்.

Digitized by Google

௮ அவர்கள் தங்கள் கண்களை உயர்த்துகிறபொழுது இயேசுவையே அன்றி மற்றொருவரையும் காணவில்லை.

௯ பின்பு அவர்கள் மலையிலிருந்து இறங்குகிறபொழுது, [1]இயேசுவானவர் அவர்களைநோக்கி, மனிதனுடைய குமாரன் மரித்தோரிலிருந்து எழுந்திருக்கிறவரைக்கும் நீங்கள் இந்தத் தரிசனையை ஒருவருக்கும் சொல்லவேண்டாம் என்று கட்டளையிட்டார்.

௰ அப்பொழுது அவருடைய சீஷர்கள் அவரைநோக்கி, [2]அப்படியானால் முதலாவது எலியா வரவேண்டும் என்று வேதபாரகர் எப்படிச் சொல்லுகிறார்கள் என்றார்கள்.

௰௧ [3]அதற்கு இயேசுவானவர் சொன்னது: முன்பு எலியா வந்து, எல்லாவற்றையும் சீர்ப்படுத்தவேண்டும் என்பது மெய்தான்.

௰௨ [4]அல்லாமலும் எலியா வந்தாயிற்றென்று உங்களுக்குச் சொல்லுகிறேன்; [5]அவனை அவர்கள் அங்கீகரித்துக்கொள்ளாமல், அவனுக்குத் தங்கள் இஷ்டப்படி செய்தார்கள்; [6]அப்படி மனிதனுடைய குமாரனும் அவர்களால் பாடுபடுவான் என்றார்.

௰௩ [7]அப்பொழுது அவர் யோவான்ஸ்நானனைக்குறித்துத் தங்களுடனே பேசினாரென்று சீஷர் அறிந்தார்கள்.

௰௪ ¶ [8]பின்பு அவர்கள் சனக்கூட்டத்தினிடத்தில் சேர்ந்தபொழுது, ஒரு மனிதன் அவரிடத்தில் வந்து, அவர் முன்பாக முழங்கால்படியிட்டு,

௰௫ ஆண்டவரே, என் மகனுக்கு இரங்கும், அவன் சந்திரரோகியாய்க் கொடிய வேதனைப் படுகிறான்; எப்படியென்றால், அடிக்கடி தீயிலேயும் அடிக்கடி சலத்திலேயும் விழுகிறான்.

௰௬ அவனை உம்முடைய சீஷரிடத்தில் கொண்டுவந்தேன், அவர்களுக்குஅவனைக் குணமாக்கத் திராணியில்லை என்றான்.

௰௭ அதற்கு இயேசுவானவர் சொன்னது: ஆ விசுவாசமில்லாத மாறுபாடுள்ள சந்ததியாரே, எதுவரைக்கும் உங்களோடு இருப்பேன்? எதுவரைக்கும் உங்களில் பொறுமையாய் இருப்பேன்? அவனை என்னிடத்தில் கொண்டுவாருங்கள் என்றார்.

௰௮ ¶ அவனைக் கொண்டுவந்தபொழுது இயேசுவானவர் அவனிலுள்ள பசாசை அதட்டினார்; உடனே அது அவனை விட்டுப்போயிற்று; அந்தப்பிள்ளை அந்நேரமே சுகம் அடைந்தான்.

௰௯ பின்பு சீஷர்கள்மாத்திரம் இயேசுவினிடத்தில் வந்து, நாங்கள் அதைத் துரத்தும்படிக்கு, ஏன் எங்களுக்குத் திராணியில்லை என்றார்கள்.

௨௰ அதற்கு இயேசுவானவர், உங்கள் அவிசுவாசத்தினாலே (திராணியில்லை). மேலும் [9]ஒரு கடுகுவிதை அவ்வளவு விசுவாசம் மாத்திரம் உங்களுக்கு உண்டானால், நீங்கள் இந்த மலையை நோக்கி, இவ்விடம்விட்டு அப்புறம் போ என்று சொல்ல அது போம்; அல்லாமலும் உங்களால் கூடாத காரியம் ஒன்றும் இருப்பதில்லை என்று மெய்யாகவே உங்களுக்குச் சொல்லுகிறேன்.

௨௧ ஆகிலும் செபத்தினாலும் உபவாசத்தினாலுமே அன்றி, (வேறுவிதமாய்) இந்தச் சாதியைத் துரத்தப்படாது என்றார்.

௨௨ ¶ [10]அல்லாமலும் அவர்கள் கலிலேயா நாட்டிலே சஞ்சரித்திருந்த காலத்திலே இயேசுவானவர் அவர்களைநோக்கி, மனிதனுடைய குமாரன் மனிதர்களுடைய கையில் ஒப்புக்கொடுக்கப்படுவான்.

௨௩ அவர்கள் அவனைக் கொலைசெய்வார்கள்; பின்பு மூன்றாம் நாளிலே எழுந்திருப்பான் என்றார்;

கி. பி. ௩௨.

1 மத். ௰௬. ௨௰. மாற். ௮. ௩௰: ௯. ௯.
2 மல்கி. ௪. ௫. மத். ௰௧. ௰௪. மாற். ௯. ௰௧.
3 மல்கி. ௪. ௬. லூக். ௧. ௰௬. ௰௭. அப். ௩. ௨௨.
4 மத். ௰௧. ௰௪. மாற். ௯. ௰௨, ௰௩.
5 மத். ௰௪. ௩, ௰.
6 மத். ௰௬. ௨௧. ௨௨.
7 மத். ௰௧. ௰௪.
8 மாற். ௯. ௰௪. லூக். ௯. ௩௭.
9 மத். ௨௧. ௨௧. மாற். ௰௧. ௨௩. லூக். ௰௭. ௬. ௧ கொரி. ௰௨. ௯: ௰௩. ௨.
10 மத். ௰௬. ௨௧: ௨௰. ௰௭, ௰௮. மாற். ௮. ௩௧: ௯. ௩௰, ௩௧: ௰. ௩௩. லூக். ௯. ௨௨, ௪௪: ௰௮. ௩௧: ௨௪. ௬, ௭.

Digitized by Google

அவர்கள் மிகுந்த துக்கம் அடைந்தார்கள்.

௨௪ [1]அவர்கள் கப்பர்நாகூம் ஊரில் வந்தபொழுது, வரிப்பணத்தைச் சேர்க்கிறவர்கள் பேதுருவினிடத்தில் வந்து, உங்கள் போதகர் * வரிப்பணத்தைக் கொடுக்கிறதில்லையா என்றார்கள்; கொடுக்கிறார் என்றான்.

௨௫ பின்பு அவன் வீட்டிலே வந்தபொழுது அவன் (பேசுகிறதற்கு) முன்னே இயேசுவானவர் அவனை நோக்கி, சீமோனே, பூமியின் இராசாக்கள் யார் கையிலே தீர்வை அல்லது வரி வாங்குகிறார்கள்? தங்கள் பிள்ளைகள் கையிலோ, அந்நியர் கையிலோ, இது உனக்கு எப்படித் தோன்றுகின்றது என்றார்.

௨௬ அந்நியர் கையில் வாங்குகிறார்கள் என்று பேதுரு சொன்னான்; அதற்கு இயேசுவானவர், அப்படியானால் பிள்ளைகள் செலுத்தவேண்டுவதில்லையே.

௨௭ ஆனாலும் நாம் அவர்களுக்கு விசனம் வரப்பண்ணாதபடிக்கு நீ கடலிடத்துக்குப் போய், தூண்டிலைப்போட்டு, முதலாவது எழும்புகிற மீனை எடுத்து, அதின் வாயைத் திறந்துபார்; அதிலே ஒரு † வெள்ளிக்காசைக் காண்பாய், அதை எடுத்து வந்து எனக்காகவும் உனக்காகவும் அவர்களுக்குக் கொடு என்றார்.

## ௰௮. அதிகாரம்.

௧. கிறிஸ்து தம்முடைய சீஷர்கள் தாழ்மையுள்ளவர்களாயும், கெடுதிசெய்யாதவர்களாயும் இருக்கவும், ௰. இடறல்களை விலக்கிச் சிறியவர்களை அசட்டைபண்ணாமல் இருக்கவும் எச்சரித்து, ௰௫. சகோதரர் நமக்குத் தப்பிதஞ்செய்தால் அவர்களுக்கு இன்னதைச் செய்யவேண்டுமென்றும், ௨௧. இத்தனைதரம் அவர்களை மன்னிக்கவேண்டுமென்றும் போதித்து, ௨௩. ஊழியக்காரரிடத்தில் கணக்குகேட்டு, ௩௨. தன் தோழன்மேல் இரக்கத்தைப் பாராட்டாதவனுக்குத் தண்டனைசெய்த இராசாவினுடைய உவமையினாலே அதை விஸ்தரித்தது.

௧ அக்காலத்திலே சீஷர்கள் இயேசுவினிடத்திற்கு வந்து, பரலோக இராச்சியத்திலே எவன் பெரியவனாய் இருப்பான் என்றார்கள்.

௨ அப்பொழுது இயேசுவானவர் ஒரு பிள்ளையைத் தம்மிடத்தில் அழைத்து, அதை அவர்களுக்குள்ளே நிறுத்திச் சொன்னதாவது:

௩ நீங்கள் மனந்திரும்பிப் [3]பிள்ளைகளைப்போல் ஆகாவிட்டால், பரலோக இராச்சியத்தில் பிரவேசிக்கமாட்டீர்கள் என்று மெய்யாய் உங்களுக்குச் சொல்லுகிறேன்.

௪ [4]ஆகையால் இந்தப் பிள்ளையைப்போலத் தன்னைத் தாழ்த்துகிறவனே, பரலோக இராச்சியத்தில் பெரியவனாய் இருப்பான்.

௫ [5]அல்லாமலும் இப்படிப்பட்ட ஒரு பிள்ளையை என் நாமத்தினாலே ஏற்றுக்கொள்ளுகிறவன் என்னை ஏற்றுக்கொள்ளுகிறான்.

௬ [6]என்மேல் விசுவாசமாயிருக்கிற இந்தச் சிறியரில் ஒருவன் குற்றம் செய்வதற்குக் காரணமானவன் எவனோ, அவனுடைய கழுத்தில் எந்திரக்கல்லைக் கட்டி, அவனைச் சமுத்திரத்துக்குள்ளே அமிழ்த்தினால் அவனுக்கு நலமாய் இருக்கும்.

௭ ஐயோ! கெடுத்தலினிமித்தம் உலகத்திற்கு வேதனைவரும்; [7]கெடுத்தல் அவசியமாய்வரவேண்டும்; [8]ஆனாலும் ஐயோ! கெடுத்தலைச் செய்கிறவனுக்கு வேதனைவரும்.

௮ [9]ஆதலால் உன் கையாவது உன் காலாவது உன்னைக் கெடுக்கிறதற்கு ஏதுவானால், அவைகளைத் தறித்து, எறிந்துபோடு; நீ இரண்டு கையை அல்லது இரண்டு காலை உடையவனாய் நித்திய அக்கினியிலே தள்ளப்படுவதிலும், சப்பாணியாய் அல்லது ஊனனாய் (நித்திய) சீவனுள்ள இடத்தில் பிரவேசிக்கிறதே உனக்கு நன்மையாய் இருக்கும்.

௯ மேலும் உன்னுடைய கண் உன்னைக் கெடுக்கிறதற்கு ஏதுவானால், அதைப் பிடுங்கி எறிந்துபோடு; நீ இரண்டு கண்ணை உ-

கி. பி. ௩௨.

1 மார். ௯. ௩௩.

* மூலத்திலே திராக்குமா என்ற பேர்பெற்றுப் பத்து அணா விலையுள்ள நாயிருக்கும். ௨ மோ. ௩௰. ௰௩: ௩௮. ௨௬. காண்க.

† Stater, ஒன்றேகால் ரூபாய் பெறத்தக்க வெள்ளி.

2 மார். ௯. ௩௪, லூக். ௯. ௪௬: ௨௨. ௨௪.

3 சங். ௧௩௧. ௨. மத். ௰௯. ௰௪. மார். ௰. ௰௫. லூக். ௰௮. ௰௬. ௧ கொரி. ௰௪. ௨௰. ௧பே. ௨. ௨.

4 மத். ௨௰. ௨௭: ௨௩. ௰௧.

5 மத். ௰. ௪௨. லூக். ௯. ௪௮.

6 மார். ௯. ௪௨. லூக். ௰௭. ௨.

7 லூக். ௰௭. ௧. ௧ கொரி. ௰௧. ௰௯.

8 மத். ௨௬. ௨௪.

9 மத். ௫. ௨௯, ௩௰. மார் ௯. ௪௩, ௪௫.

Digitized by Google

௩ ¶ அப்பொழுது சில பரிசேயர் அவரைச் சோதிக்கும்படிக்கு அவரிடத்தில் வந்து, புருஷனானவன் தன் மனைவியை எந்த நிமித்தமானாலும் தள்ளிவிடலாமா என்று கேட்டார்கள்.

௪ அதற்கு அவர் சொன்னது: [1] ஆதியிலே சிருஷ்டிகர் மனிதனை உண்டாக்கினபொழுது, ஒரு ஆணையும் ஒரு பெண்ணையும் உண்டாக்கினார் என்கிறதையும்,

௫ [2] இதின் நிமித்தம் ஒருவன் தகப்பனையும் தாயையும் விட்டுத் தன் மனைவியுடனே இசைந்திருப்பான், [3] அவ்விருவரும் ஒரே சரீரத்தைப்போல் இருப்பார்கள் என்று அவர் சொன்னதையும் நீங்கள் வாசிக்கவில்லையோ?

௬ அப்படியிருக்கிறபடியினாலே அவர்கள் இருவராய் இராமல், ஒரே சரீரத்தைப்போல் இருக்கிறார்கள்; ஆதலால் பராபரன் இணைத்ததை மனிதர் பிரிக்கக்கூடாது என்றார்.

௭ ¶ அவர்கள் சொன்னது: அப்படியானால், [4] தள்ளுதலின் சீட்டைக் கொடுத்து, அவளைத் தள்ளிவிடும்படிக்கு மோசே என்பவர் ஏன் கட்டளையிட்டார் என்றார்கள்.

௮ அதற்கு அவர் சொன்னது: உங்கள் இருதயம் கடினமானபடியால், நீங்கள் உங்கள் மனைவிகளைத் தள்ளிவிடும்படிக்கு மோசே உங்களுக்கு இடங்கொடுத்தார்; ஆதிமுதலோ அப்படியிருந்ததில்லை.

௯ [5] ஆகையால் எவனானாலும் வேசிமார்க்கமாய் நடவாமலிருக்கிற மனைவியைத் தள்ளிவிட்டு, வேறொருத்தியை விவாகம் பண்ணினால், அவன் விபசாரம்பண்ணுகிறான்; தள்ளிவிடப்பட்டவளை விவாகம் பண்ணுகிறவனும் விபசாரம் பண்ணுகிறான் என்று உங்களுக்குச் சொல்லுகிறேன் என்றார்.

௰ ¶ அவருடைய சீஷர்கள் அவருடனே சொன்னது: [6] விவாகம் பண்ணின புருஷனுடைய காரியம் இப்படியானால், விவாகம் பண்ணுகிறது நன்மையல்ல என்றார்கள்.

௰௧ அதற்கு அவர் சொன்னதாவது: [7] திராணி பெற்றவர்களே அன்றி, மற்ற எவர்களானாலும் (நீங்கள் சொன்ன) வசனத்தின்படி செய்யமாட்டார்கள்.

௰௨ அண்ணகர்கள் உண்டு; சிலர் அப்படிப்பட்டவர்களாய்ப் பிறந்தார்கள், சிலர் மற்ற மனிதர்களாலே அண்ணகர்களாக்கப்பட்டார்கள், [8] சிலர் பரலோக இராச்சியத்துக்காகத் தங்களை அண்ணகர்களாக்கினார்கள்; அப்படிப் பற்றிக்கொள்ளத் திராணியுள்ளவன் எவனோ, அவன் அப்படிப் பற்றிக்கொள்ளக் கடவன் என்றார்.

௰௩ ¶ [9] அப்பொழுது அவர் பிள்ளைகளின்மேல் கைகளை வைத்து, அவர்களுக்காகச் செபம்பண்ணும்படிக்கு அவரிடத்தில் கொண்டுவந்தார்கள்; அவர்களைச் சீஷர் அதட்டினார்கள்.

௰௪ இயேசுவானவர் (அதைக் கண்டு) சொன்னதாவது: பிள்ளைகள் என்னிடத்திலே வருகிறதற்குத் தடைபண்ணாமல் இடங்கொடுங்கள்; [10] பரலோக இராச்சியம் அப்படிப்பட்டவர்களுடையதாய் இருக்கின்றதே என்று சொல்லி,

௰௫ அவைகள்மேல் கைகளை வைத்து, பின்பு அவ்விடம் விட்டுப் புறப்பட்டுப் போனார்.

௰௬ ¶ [11] அப்பொழுது ஒருவன் வந்து அவரை நோக்கி, நல்லபோதகரே, [12] நித்திய சீவனை அடையும்படிக்கு நான் எந்த நன்மையைச் செய்யவேண்டும் என்றான்.

௰௭ அவனுடனே அவர் சொன்னது: நீ என்னை நல்லவன் என்று ஏன் சொல்லுகிறாய்? பராபரனாகிய ஒருவரேதவிர நல்லவன் ஒருவனும் இல்லையே; நீ சீவனில்

இ. பி. ௩௩.

1 ௧ மோ. ௧. ௨௭: ௫. ௨. மல்கி. ௨. ௧௫.
2 ௧ மோ. ௨. ௨௪. மாற். ௰. ௫–௯. எபே. ௫. ௩௧.
3 ௧ கொரி. ௬. ௰௬: ௭. ௨.
4 ௫ மோ. ௨௪. ௧. மத். ௫. ௩௧
5 மத். ௫. ௩௨. மாற். ௰. ௧௧. லூக். ௰௬. ௰௮. ௧ கொரி. ௭. ௰, ௰௧.
6 லூக். ௰௪. ௰௬.
7 ௧ கொரி. ௭. ௨, ௭, ௯, ௰௭.
8 ௧ கொரி. ௭. ௩௨, ௩௪: ௯. ௫, ௰௫.
9 மாற். ௰. ௰௩. லூக். ௰௮. ௰௫.
10 மத். ௰௮. ௩.
11 மாற். ௰. ௰௭. லூக். ௰௮. ௰௮.
12 லூக். ௰. ௨௫.

Digitized by Google

பிரவேசிக்க விரும்பினால் கற்பனைகளைக் கைக்கொள் என்றார்.

௰௮ அவைகள் எவைகளென்று அவன் கேட்டான்; அதற்கு இயேசுவானவர் சொன்னது: [1]கொலை செய்யாதிருப்பாயாக; விபசாரம் பண்ணாதிருப்பாயாக; களவு செய்யாதிருப்பாயாக; பொய்ச்சாட்சி சொல்லாதிருப்பாயாக;

௰௯ [2]உன் தகப்பனையும் தாயையும் கனம்பண்ணுவாயாக; [3]உன்னைப்போலப் பிறனில் அன்புகூர்வாயாக என்பவைகளே என்றார்.

௨௰ அந்த வாலிபன் சொன்னது: இவைகளை எல்லாம் நான் சிறுவயதுமுதல் கைக்கொண்டிருக்கிறேன்; நான் இன்னம் செய்யவேண்டுவது என்னவென்றான்.

௨௧ இயேசுவானவர் சொன்னது: நீ பூரண சற்குணனாயிருக்க விரும்பினால், நீ போய் [4]உனக்கு உண்டாயிருக்கிறவைகளை விற்றுப் பரலோகத்திலே உனக்குப் பொக்கிஷம் உண்டாயிருக்கும்படிக்குத் தரித்திரருக்குக்கொடுத்து, பின்பு வந்து என்பின்னே செல்லு என்றார்.

௨௨ வாலிபன் இந்த வசனத்தைக் கேட்டு, மிகுந்த ஆஸ்திகளை உடையவனானபடியினாலே, துக்கத்தோடே போய்விட்டான்.

௨௩ ¶ அப்பொழுது இயேசுவானவர் தம்முடைய சீஷரை நோக்கி, [5]ஐசுவரியமுள்ளவன் பரலோக இராச்சியத்தில் பிரவேசிக்கிறது அரிதாயிருக்கின்றதென்று மெய்யாகவே உங்களுக்குச் சொல்லுகிறேன்.

௨௪ அல்லாமலும் ஐசுவரியவான் பராபரனுடைய இராச்சியத்தில் பிரவேசிக்கிறதைப் பார்க்கிலும், ஓர் ஒட்டகம் ஊசியின் காதிலே நுழைகிறதே எளிதாய் இருக்கின்றதென்று உங்களுக்குச் சொல்லுகிறேன் என்றார்.

௨௫ அவருடைய சீஷர்கள் அதைக் கேட்டு, மிகவும் பிரமித்து, அப்படியானால் இரட்சிக்கப்படுகிறவர்கள் ஆர் என்றார்கள்.

௨௬ இயேசுவானவர் அவர்களைப் பார்த்துச் சொன்னதாவது: மனிதரால் இது கூடாத காரியந்தான், [6]பராபரனே எந்தக்காரியத்தையும் செய்ய வல்லவர் என்றார்.

௨௭ ¶ [7]அப்பொழுது பேதுரு அவருடனே சொன்னதாவது: [8]இதோ, நாங்கள் எல்லாவற்றையும் விட்டு உம்மைப் பின்பற்றிவந்தோம், அதற்காக எங்களுக்கு என்ன பலன் வரும் என்றான்.

௨௮ இயேசுவானவர் சொன்னது: (சகலமும்) புதிதாக்கப்படும் காலத்திலே, மனிதனுடைய குமாரன் தனது மகிமையுள்ள பத்திராசனத்தில் வீற்றிருக்கும்பொழுது, என்னைப் பின்பற்றி வந்த நீங்களும் [9]இஸ்ரவேலராகிய பன்னிரண்டு கோத்திரங்களுக்கு நியாயத்தீர்ப்புக்கொடுக்கிறவர்களாகப் பன்னிரண்டு பத்திராசனங்களில் இருப்பீர்களென்று மெய்யாகவே உங்களுக்குச் சொல்லுகிறேன்.

௨௯ [10]அல்லாமலும் என் நாமத்தின் நிமித்தம் வீட்டையானாலும், சகோதரரையானாலும், சகோதரிகளையானாலும், தகப்பனையானாலும், தாயையானாலும், மனைவியையானாலும், பிள்ளைகளையானாலும், நிலங்களையானாலும் விட்டவன் எவனோ, அவன் நூறத்தனையாய்ப் பலன் அடைந்து, நித்திய சீவனையும் சுதந்தரித்துக்கொள்வான்.

௩௰ [11]ஆகிலும் முந்தினோராகிய அநேகர் பிந்தினோராய் இருப்பார்கள்; பிந்தினோராகிய (அநேகர்) முந்தினோராய் இருப்பார்கள்.

கி. பி. ௩௩.

1 உ மோ. ௨௰. ௰௩–௰௭. ௫ மோ. ௫. ௰௭–௨௧.
2 மத். ௰௫. ௪.
3 ௩ மோ. ௰௯. ௰௮. மத். ௨௨. ௩௯. உரோ. ௰௩. ௯. கலா. ௫. ௰௪. யாக். ௨. ௮.
4 மத். ௬. ௨௰. லூக். ௰௨. ௩௩: ௰௬. ௯. அப். ௨. ௪௫: ௪. ௩௪, ௩௫. ௧ தீமோ. ௬. ௰௮, ௰௯.
5 மத். ௰௩. ௨௨. மாற். ௰. ௨௪. ௧ கொரி. ௧. ௨௬. ௧ தீமோ. ௬. ௯, ௰.
6 ௧ மோ. ௰௮. ௰௪. யோபு. ௪௨. ௨. எரே. ௩௨. ௰௭. சகரி. ௮. ௬. லூக். ௧. ௩௭: ௰௮. ௨௭.
7 மாற். ௰. ௨௮. லூக். ௰௮. ௨௮.
8 ௫ மோ ௩௩. ௯. மத். ௪. ௨௰. லூக். ௫. ௰௧.
9 மத். ௨௰. ௨௧. லூக். ௨௨. ௨௮–௩௰. ௧ கொரி. ௬. ௨, ௩. வெளி. ௨. ௨௬.
10 மாற். ௰. ௨௯, ௩௰. லூக். ௰௮. ௨௯, ௩௰.
11 மத். ௨௰. ௰௬: ௨௧. ௩௧, ௩௨. மாற். ௰. ௩௧. லூக். ௰௩. ௩௰.

# ௨௰. அதிகாரம்.

௧. கிறிஸ்து திராட்சத் தோட்டத்தில் வேலைசெய்கிறவர்களின் உவமையினால் பராபரன் ஒருவனுக்கும் கடனாளியல்ல என்று காண்பித்தது, ௰௭. தம்முடைய பாடுகளை முன்னறிவித்தது, ௨௰. செபேதேயுவின் பிள்ளைகளின் தாயாருக்கு அருளிச்

*செய்த உத்தரவினால் தம்முடைய சீஷர்கள் மனத்தாழ்மையாய் இருக்கப் படிப்பித்து, ௩௰. இரண்டு குருடருக்குப் பார்வையைக் கொடுத்தது.*

இ. பி. ௩௩.

அது எப்படியெனில், பரலோக இராச்சியத்தின் (ஆளுகை) ஒரு வீட்டெசமானுடைய (நடக்கைக்கு) ஒப்பாயிருக்கின்றது; அவன் தன் திராட்சத்தோட்டத்திலே வேலைசெய்யக் கூலிக்காரரை அழைத்துக்கொண்டு வரும்படிக்கு,

௨ அதிகாலையிலே புறப்பட்டு, சில கூலிக்காரரைக் கண்டு, நாளொன்றுக்கு ஒரு *பணம் கூலி தீர்மானம்பண்ணி, அவர்களைத் தன் திராட்சத் தோட்டத்திற்கு அனுப்பிவந்தான்.

௩ மூன்றும் மணிவேளையிலேயும் அவன் புறப்பட்டு, கடைத்தெருவிலே வீணராய் நிற்கிற வேறு சிலரைக் கண்டு,

௪ நீங்களும் திராட்சத் தோட்டத்தில் போங்கள், நியாயமானபடி உங்களுக்குக் கூலி தருவேன் என்று அவர்களுக்குச் சொன்னான்; அவர்கள் போனார்கள்.

௫ ஆறும் ஒன்பதாம் மணிவேளைகளிலே அவன் திரும்பப் புறப்பட்டு அப்படிப்போலச் செய்தான்.

௬ பின்பு பதினோராம் மணிவேளையிலே அவன் புறப்பட்டு, வீணராய் நிற்கிற வேறே சிலரைக் கண்டு, பகல் முழுவதும் நீங்கள் இங்கே ஏன் வீணராய் நிற்கிறீர்கள் என்று கேட்டான்.

௭ அவர்கள் ஒருவரும் எங்களை வேலைகொள்ளவில்லை என்றார்கள்; அவன் சொன்னது: நீங்களும் திராட்சத் தோட்டத்திற்குப் போங்கள், நியாயமானபடி கூலியை வாங்கிக்கொள்வீர்கள் என்றான்.

௮ அஸ்தமனமானபொழுது, திராட்சத்தோட்டத்திற்கு எசமானானவன் தன் காரியக்காரனுடனே சொன்னது: நீ கூலிக்காரரை அழைத்து, பின்பு வந்தவர்களைத் தொடங்கி முன்பு வந்தவர்கள் வரைக்கும் கூலியைக்கொடு என்றான்.

௯ அந்தப்படி பதினோராம் மணிவேளையில் வேலைகொள்ளப்பட்டவர்கள் வந்து, ஆளுக்கு ஒவ்வொரு பணமாகப் பணத்தைவாங்கிக்கொண்டார்கள்.

௰ காலையில் வேலைக்கு வந்தவர்களும் சேர்ந்து, தங்களுக்கு அதிக கூலி வருமென்று எண்ணினார்கள்; அவர்களும் ஆளுக்கு ஒவ்வொரு பணமாகப் பணத்தை வாங்கினார்கள்.

௰௧ அதை வாங்குகிறபொழுது, அவர்கள் வீட்டெசமானை நோக்கி,

௰௨ பின்னே வந்த இவர்கள் ஒரு மணிநேரமாத்திரம் வேலைசெய்தார்கள்; இவர்களைப் பகலின்பாரத்தையும் வெயிலையும் சுமந்த எங்களுக்குச் சமனாக்கினீர் என்று மொறுமொறுத்தார்கள்.

௰௩ அவர்களில் ஒருவனுக்கு மாறுத்தரமாக அவன் சொன்னதாவது: சிநேகிதனே, நான் உனக்கு அநியாயம் செய்யவில்லை; நீ ஒரு பணம் கூலிக்காக என்னோடே சம்மதிக்கவில்லையோ?

௰௪ உன்னுடையதை நீ வாங்கிக்கொண்டு போ, நான் உனக்குக் கொடுத்ததுபோல, பின்னே வந்த இவனுக்கும் கொடுக்க மனதாயிருக்கிறேன்.

௰௫ [1]என்னுடையதை நான் என் இஷ்டப்படியே செய்யக்கூடாதா? [2]நான் தயவாயிருக்கிறபடியினாலேயோ நீ வன்கண்ணனாய் இருக்கிறாய் என்றான்.

௰௬ [3]இவ்விதமாய், பிந்தினோர் முந்தினோராய் இருப்பார்கள்; [4]முந்தினோர் பிந்தினோராய் இருப்பார்கள்; மேலும் அழைக்கப்பட்டவர்கள் அநேகர், தெரிந்துகொள்ளப்பட்டவர்களோ சிலர் மாத்திரம் இருக்கிறார்கள் என்றார்.

* உரோமருடைய பணம் அரைக்கால் ஒவன்ஸாம்; ஒரு ஒவன்ஸ் இரண்டரை ரூபாய் விழுக்காடு ஒரு பணம் ஐந்து அணா இரண்டு பைசாவாம். ௰அ. ௨அ. காண்க.

1 உரோ. ௯. ௨௧.
2 உபா. ௰௫. ௯. மாற். ௭. ௨௨. மத். ௬. ௨௩.
3 மத். ௰௯. ௩௰.
4 மத். ௨௨. ௰௪.

Digitized by Google

௰௭ ¶ [1]இயேசுவானவர் எருசலேம் பட்டணத்திற்குப் பிரயாணமாய்ப் போகிறபொழுது, வழியிலே அவர் பன்னிரண்டு சீஷரை மாத்திரம் அழைத்து அவர்களுடனே சொன்னது:

௰௮ இதோ எருசலேமுக்குப் போகிறோம், [2]அங்கே மனிதனுடைய குமாரன் பிரதான ஆசாரியருக்கும் வேதபாரகருக்கும் ஒப்புக்கொடுக்கப்படுவான்; அவர்கள் அவனை மரணத்திற்கு உள்ளாக்கும்படி தீர்ப்புக் கொடுத்து,

௰௯ [3]அவனைப் பரியாசம் பண்ணவும், வாரினால் அடிக்கவும், சிலுவைமரத்தில் அறையவும், புறத்தேசத்தாருக்கு ஒப்புக்கொடுப்பார்கள்; பின்பு மூன்றாம் நாளிலே அவன் உயிரோடே எழுந்திருப்பான் என்றார்.

௨௰ ¶ [4]அக்காலத்திலே செபெதேயுவின் குமாரருடைய தாய் தன் குமாரரோடுங்கூட அவரிடத்தில் வந்து, [5]சாஷ்டாங்கமாய் வணங்கி, ஒரு விண்ணப்பம் பண்ண விரும்பினாள்.

௨௧ அவர், உனக்கு என்ன வேண்டும் என்றார்; அவள் அவருடனே சொன்னதாவது: நீர் இராச்சிய பரிபாலனம் [6]செய்யும்பொழுது என் குமாரராகிய இவ்விரண்டுபேரில் ஒருவன் உமது வலதுபாரிசமாகவும் ஒருவன் உம்முடைய இடதுபாரிசமாகவும் இருக்கும்படி செய்யவேண்டும் என்றாள்.

௨௨ அதற்கு இயேசுவானவர் சொன்னது: நீங்கள் கேட்டது உங்களுக்குத்தானே தெரியவில்லை; [7]நான் குடிக்கும் பாத்திரத்தில் நீங்கள் குடிப்பீர்களா? [8]நான் பெற்றுக்கொள்ளும் ஸ்நானத்தை நீங்கள் பெற்றுக்கொள்வீர்களா என்றார்; அவர்கள் அப்படியே செய்வோம் என்றார்கள்.

௨௩ அப்பொழுது அவர் சொன்னது: [9]என் பாத்திரத்தில் குடிப்பீர்கள், நான் பெற்றுக்கொள்ளும் ஸ்நானத்தையும் பெற்றுக்கொள்வீர்கள், அது மெய்தான்; [10]ஆனாலும் என் பிதாவினாலே எவர்கள் குறிக்கப்பட்டிருக்கிறார்களோ அவர்களுக்கேயன்றி (மற்றொருவருக்கும்) என் வலது பாரிசத்திலேயும் என் இடது பாரிசத்திலேயும் உளுக்காந்திருக்கிற (கனத்தை) நான் கொடுக்கக்கூடாது என்றார்.

௨௪ ¶ [11]மற்றப் பத்துப்பேரும் (அந்தச் சங்கதியைக்) கேட்டு, அந்தச் சகோதரர் இருவரைக்குறித்து விசனப்பட்டார்கள்.

௨௫ அப்பொழுது இயேசுவானவர் அவர்களை அழைத்துச் சொன்னதாவது: உலகத்தாருக்குள்ளே பிரபுக்கள் குடிகளை (இறுமாப்பாய்) ஆளுகிறார்கள்; அல்லாமலும் பெரியோர்கள் அவர்கள்மேல் (கண்டிப்பான) அதிகாரத்தைச் செலுத்துகிறார்கள் என்று நீங்கள் அறிந்திருக்கிறீர்கள்.

௨௬ [12]உங்களுக்குள்ளே அப்படி இருக்கக்கூடாது; [13]உங்களில் எவனாகிலும் பெரியவனாய் இருக்கவேண்டுமென்று இருந்தால், அவன் உங்கள் ஊழியக்காரனாய் இருக்கக்கடவன்.

௨௭ [14]உங்களில் எவனாகிலும் முதலாளியாய் இருக்கவேண்டுமென்று இருந்தால், அவன் உங்கள் பணிவிடைக்காரனாய் இருக்கக்கடவன்.

௨௮ [15]மனிதனுடைய குமாரனும் ஊழியம் கொள்ளும்படிக்கு வராமல், [16]ஊழியம் செய்யும்படிக்கும், [17]அநேகரை மீட்கும்பொருளாகத் [18]தனது சீவனைத் தரும்படிக்கும் வந்தானே என்றார்.

௨௯ ¶ [19]அவர்கள் எரிகோ பட்டணத்திலிருந்துபுறப்பட்டுப்போகையில், அநேக சனங்கள் அவர்பின் சென்றார்கள்.

௩௰ அப்பொழுது [20]குருடரான இரண்டுபேர் வழி அருகே உளுக்காந்திருந்து, இயேசுவானவர் வழி

கி. பி. ௩௩.

1 மாற். ௰. ௩௨. லூக். ௰௮. ௩௧. யோவா. ௰௨. ௰௨.
2 மத். ௰௬. ௨௧.
3 மத். ௨௭. ௨. மாற். ௰௫. ௧, ௰௬. ழ. லூக். ௨௩. ௧. யோவா. ௰௮. ௨௮. ழ. அப். ௩. ௰௩.
4 மத். ௪ ௨௧.
5 மாற். ௰. ௩௫.
6 மத். ௰௬. ௨௮.
7 மத். ௨௬. ௩௯, ௪௨. மாற். ௰௪. ௩௬. லூக். ௨௨. ௪௨. யோவா. ௰௮. ௰௧.
8 லூக். ௰௨ ௫௰.
9 அப். ௰௨. ௨. ௨ரோ. ௮. ௰௭. ௨ கொரி. ௧. ௭ வெளி. ௧. ௯.
10 மத். ௨௫. ௩௪.
11 மாற். ௰. ௪௧. லூக். ௨௨. ௨௪, ௨௫.
12 ௧ பே. ௫. ௩.
13 மத். ௨௩. ௰௧. மாற். ௯. ௩௫: ௰. ௪௩.
14 மத். ௰௮. ௪.
15 பிலி. ௨. ௭.
16 லூக். ௨௨. ௨௭. யோவா. ௰௩. ௫, ௰௪.
17 மத். ௨௬. ௨௮ ௨ரோ. ௫. ௰௫, ௰௯. எபி. ௯. ௨௮.
18 ஏசா. ௫௩. ௰, ௰௧. தானி. ௯. ௨௪, ௨௬. யோவா. ௰௧. ௫௧, ௫௨. ௧ தீமோ. ௨. ௬. தீத். ௨. ௰௪. ௧ பே. ௧. ௰௯.
19 மாற். ௰. ௪௬. லூக் ௰௮. ௩௫.
20 மத். ௯. ௨௭.

Digitized by Google

யே வருகிறார் என்று கேள்விப் பட்டு: ஆண்டவரே, தாவீதின் குமாரனே, எங்களுக்கு இரங்கும் என்று கூப்பிட்டார்கள்.

௩௧ சனங்கள் (அதைக்கேட்டு) அவர்கள் பேசாமல் இருக்கும்படிக்கு அவர்களை அதட்டினார்கள்; அவர்களோ, ஆண்டவரே, தாவீதின் குமாரனே, எங்களுக்கு இரங்கும் என்று அதிகமாய்க் கூப்பிட்டார்கள்.

௩௨ அப்பொழுது இயேசுவானவர் நின்று அவர்களை அழைத்து, நான் உங்களுக்கு என்ன செய்ய வேண்டும் என்று இருக்கிறீர்கள் என்றார்.

௩௩ அவர்கள் சொன்னது: ஆண்டவரே, எங்கள் கண்களைத் திறக்க வேண்டும் என்று இருக்கிறோம் என்றார்கள்.

௩௪ இயேசுவானவர் உருக்கமாய் இரங்கி, அவர்களுடைய கண்களைத் தொட்டார், உடனே அவர்கள் பார்வை அடைந்து, அவர் பின்னே சென்றார்கள்.

## ௨௧. அதிகாரம்.

௧. இயேசுவானவர் ஒரு கழுதையின் மேல் ஏறி எருசலேமில் பிரவேசித்தது. ௰௨. தேவாலயத்தில் இருந்த வியாபாரிகளைத் துரத்தினது. ௰௮. அத்தி மரத்தைச் சபித்தது. ௨௩. தமது அதிகாரத்தைக் குறித்து ஆசாரியர் முதலானவர்களுக்கு உத்தரவு சொன்னது. ௨௮. இரண்டு குமாரரை உவமையாகக் காட்டியது. ௩௩. எசமானுடைய ஊழியக்காரரைக் கொலைசெய்த தோட்டக்காரரை உவமையாகக் காட்டியது.

[1]அவர்கள் எருசலேம் பட்டணத்திற்குச் சமீபமாய் [2]ஒலீவமலையின் அருகே இருக்கிற பெத்துபாகே ஊருக்கு வந்தபொழுது, இயேசுவானவர் இரண்டு சீஷரை நோக்கி,

௨ உங்களுக்கு எதிராயிருக்கிற அந்தக் கிராமத்திலே போங்கள், அங்கே நீங்கள் (போன) உடனே கட்டப்பட்டிருக்கிற ஒரு கழுதையையும் அதனோடேகூட ஒரு குட்டியையும் காண்பீர்கள்.

௩ அவைகளின் கட்டவிழ்த்து, எனக்காகக் கொண்டுவாருங்கள்; ஒருவன் உங்களுக்கு ஏதாகிலும் சொன்னால், ஆண்டவருக்கு இவைகள் வேண்டுமென்று சொல்லுங்கள்; உடனே அவன் அவைகளை அனுப்பிவிடுவான் என்று சொல்லி அனுப்பினார்.

௪ (சீயோன் குமாரத்தியென்னும் எருசலேம் பட்டணமே,) [3]இதோ உன் இராசா மனத்தாழ்மை உள்ளவருமாய், நுகத்தடிக்குக் கீழ்ப்பட்ட கழுதையின் குட்டியாகிய கழுதையின்மேலே ஏறியிருக்கிறவருமாய், உன்னிடத்தில் வருகிறார் என்று சீயோன் குமாரத்தியுடனே சொல்லுங்கள் என்று,

௫ தீர்க்கதரிசியினாலே சொல்லப்பட்டது நிறைவேறும்படிக்கு அவையெல்லாம் நடந்தன.

௬ [4]இயேசுவானவர் கட்டளையிட்டபடியே செய்யச் சீஷர்கள் போய்,

௭ [5]கழுதையையும் அதின் குட்டியையும் கொண்டுவந்து, பின்பு தங்கள் வஸ்திரங்களை அவைகளின்மேல் போட்டு, அவரை அவைகளின்மேல் ஏற்றிப் போனார்கள்.

௮ [6]திரளான சனங்களோ தங்கள் வஸ்திரங்களை வழியிலே விரித்தார்கள்; வேறுசிலர் மரங்களின் கிளைகளைத் தறித்து, வழியிலே தெளித்தார்கள்.

௯ மேலும் முன் நடப்பாரும் பின் நடப்பாருமாகிய சனங்கள், [7]தாவீதின் குமாரனுக்கு ஓசன்னா, * [8]பராபரனுடைய நாமத்தினாலே வருகிறவர் தோத்திரிக்கப்படத் தக்கவர், உன்னதமான வானங்களில் ஓசன்னா என்று ஆர்ப்பரித்தார்கள்.

௰ ¶ [9]அப்படி அவர் எருசலேம் பட்டணத்தில்பிரவேசிக்கையில், பட்டணத்தார் எல்லாரும் கலக்கம் அடைந்து, இவர் ஆர் என்று விசாரித்தார்கள்.

கி. பி. ௩௩.

1 மாற். ௰௧. ௧.
2 சகரி. ௰௪. ௪. லூக். ௰௯. ௨௯.
3 ஏசா. ௬௨. ௰௧. சகரி. ௯. ௯. யோவா. ௰௨. ௰௫.
4 மாற். ௰௧. ௪.
5 ௨ இரா. ௯. ௰௩.
6 ௧ மோ. ௨௪. ௬௦. யோவா. ௰௨. ௰௩.
7 சங். ௱௰௮. ௨௫.
* ஓசன்னா என்பதற்கு இப்பொழுது இரட்சண்ணியத்தைச்செய்வீராக என்பது அர்த்தமாம்.
8 சங். ௱௰௮. ௨௬. மத். ௨௩. ௩௯.
9 மாற். ௰௧. ௰௫. லூக். ௰௯. ௪௫. யோவா. ௨. ௰௩.

Digitized by Google

௰௧ சனங்கள் சொன்னது: இவர் கலிலேயா நாட்டிலுள்ள நாசரேத்தூரிலிருந்து வந்த [1]தீர்க்கதரிசியாகிய இயேசு என்றார்கள்.

௰௨ ¶ [2]இயேசுவானவர் தேவாலயத்தில் பிரவேசித்து, அதிலே விற்கிறவர்களும் கொள்ளுகிறவர்களுமாகிய யாவரையும் வெளியே துரத்தி, [3]காசுக்காரருடைய பலகைகளையும் புறாக்களை விற்கிறவர்களுடைய ஆசனங்களையும் கவிழ்த்துப்போட்டு,

௰௩ [4]என்னுடைய ஆலயம் செபத்துக்கான ஆலயம் என்னப்படும் என்று எழுதியிருக்கின்றது; [5]நீங்களோ அதைக் கள்ளர் குகையாக்கினீர்கள் என்று அவர்களுடனே சொன்னார்.

௰௪ அல்லாமலும் குருடரும் சப்பாணிகளும் தேவாலயத்தில் அவரிடத்திற்கு வந்தபொழுது அவர்களைக் குணமாக்கினார்.

௰௫ அவர் செய்த அதிசயங்களையும், தாவீதின் குமாரனுக்கு ஓசன்னா என்று தேவாலயத்தில் கூப்பிடுகிற பிள்ளைகளையும் பிரதான ஆசாரியரும் வேதபாரகரும் கண்டு, மிகுந்தவிசனம்அடைந்து,

௰௬ அவரை நோக்கி, இவர்கள் சொல்லுகிறதைக் கேட்கிறீரோ என்றார்கள்; அதற்கு இயேசுவானவர் சொன்னது: கேட்கிறேன்; [6]குழந்தைகள் பாலகருடைய வாயினால் துதியை உண்டுபண்ணினீர் என்கிறதை நீங்கள் ஒருக்காலும் வாசிக்கவில்லையோ என்று சொல்லி,

௰௭ அவர்களை விட்டுப் பட்டணத்திலிருந்து புறப்பட்டுப் [7]பெத்தானி ஊருக்குப் போய், அங்கே இராத்தங்கினார்.

௰௮ ¶ காலையிலே அவர் மறுபடியும் பட்டணத்திற்குப் போகையில், [8]அவருக்குப் பசி உண்டானபொழுது,

௰௯ [9]வழி அருகே ஒரு அத்திமரத்தை அவர் கண்டு, அதினிடத்தில்போய், அதிலே இலைகளையே அன்றிக் கனிகளைக் காணாமல் இருக்கிறபொழுது, அவர் அதை நோக்கி, இனிமேல் ஒருக்காலும் உன்னில் கனி உண்டாகாதிருக்கக்கடவது என்று சொன்னார்; [10]உடனே அத்திமரம் பட்டுப்போயிற்று.

௨௰ சீஷர்கள் அதைக் கண்டு, ஐயோ! இந்த அத்திமரம் எப்படிச் சீக்கிரமாய்ப் பட்டுப்போயிற்று என்று ஆச்சரியத்தோடே சொன்னார்கள்.

௨௧ இயேசுவானவர் அவர்களுக்குச் சொன்னது: [11]நீங்கள் சந்தேகப்படாமல் [12]விசுவாசித்தால், இந்த அத்திமரத்தில் சம்பவித்ததை நீங்கள் செய்வதும் அல்லாமல், [13]நீங்கள் இந்த மலையை நோக்கி, எழும்பிச் சமுத்திரத்திலே தள்ளப்படுவாயாக என்று சொன்னால், உடனே அப்படி ஆகுமென்று மெய்யாய் உங்களுக்குச் சொல்லுகிறேன்.

௨௨ அல்லாமலும் [14]செபத்திலே நீங்கள் எதைக் கேட்டாலும் விசுவாசித்தீர்களானால் அதைப் பெறுவீர்கள் என்றார்.

௨௩ ¶ [15]அவர் தேவாலயத்தில் வந்து உபதேசம் பண்ணுகிறபொழுது, பிரதான ஆசாரியரும் சனங்களின் மூப்பரும் அவரிடத்தில் வந்து, [16]எந்த அதிகாரத்தினாலே நீர் இவைகளைச் செய்கிறீர்? இப்படிப்பட்ட அதிகாரத்தை உமக்குக் கொடுத்தவர் ஆர் என்றார்கள்.

௨௪ அதற்கு இயேசுவானவர் சொன்னது: நானும் உங்களிடத்தில் ஒரு காரியத்தைக்கேட்பேன்; அதை நீங்கள் எனக்குச் சொன்னீர்களானால், நான் இவைகளைச் செய்கிற அதிகாரம் இன்னதென்று நானும் உங்களுக்குச் சொல்லுவேன்.

௨௫ யோவான் கொடுத்த ஞானஸ்நானம் ஆரால் உண்டாயிருந்தது? பராபரனாலோ மனிதரா

கி. பி. ௩௩.

1 மத். ௨. ௨௩. லூக். ௭. ௰௬. யோவா. ௬ ௰௪: ௭.௪௰: ௯. ௰௭.
2 மார். ௰௧. ௰௧. லூக். ௰௯. ௪௫. யோவா. ௨. ௰௩.
3 உபா. ௰௪. ௨௫.
4 ஏசா. ௫௬. ௭.
5 எரே. ௭. ௰௧. மார். ௰௧. ௰௭. லூக். ௰௯. ௪௬.
6 சங். ௮. ௨.
7 மார். ௰௧. ௰௧. யோவா. ௰௧. ௰௮.
8 மார். ௰௧. ௰௨.
9 மார். ௰௧. ௰௩.
10 மார். ௰௧. ௨௰.
11 யாக். ௧. ௬.
12 மத். ௰௭. ௨௰.
13 லூக். ௰௭. ௬.
14 மத். ௭. ௭. மார். ௰௧. ௨௪. லூக். ௰௧. ௯. யாக். ௫. ௰௬. ௧ யோ. ௩. ௨௨: ௫. ௰௪.
15 மார். ௰௧. ௨௭. லூக். ௨௰. ௧.
16 ௨ மோ. ௨. ௰௪. அப். ௪. ௭: ௭. ௨௭.



Digitized by Google

லோ, அதைச் சொல்லுங்கள் என்றார்; அவர்களோ, அது பராபரனால் உண்டாயிற்று என்றோமானால், இவர் ஏன் அவனை விசுவாசிக்கவில்லை என்பார்.

௨௬ அது மனிதரால் உண்டாயிற்று என்றோமாகில், சனங்கள் எல்லாரும் [1]யோவானைத் தீர்க்கதரிசியென்று எண்ணுகிறபடியினாலே, அவர்களுக்குப் பயப்படுகிறோம் என்று தங்களுக்குள்ளே யோசனைபண்ணி,

௨௭ பின்பு இயேசுவானவரை நோக்கி, எங்களுக்குத் தெரியாது என்றார்கள்; அப்பொழுது அவரும் அவர்களுடனே சொன்னது: நான் இவைகளைச் செய்கிற அதிகாரம் இன்னதென்று நானும் உங்களுக்குச் சொல்லமாட்டேன்.

௨௮ ¶ ஆகிலும் உங்களுக்கு எப்படித் தோன்றுகின்றது? ஒரு மனிதனுக்கு இரண்டு குமாரர் உண்டு; அவர்களில் மூத்தவனிடத்தில் அவன் வந்து, மகனே, நீ இன்றைக்கு என் திராட்சத் தோட்டத்தில் போய் வேலைசெய் என்றான்.

௨௯ அதற்கு அவன், போகமாட்டேன் என்றான்; பின்பு அவன் மனஸ்தாபப்பட்டுப் போனான்.

௩௰ தகப்பன் இளையவனிடத்திலும் வந்து அப்படித்தானே சொன்னான்; அதற்கு அவன், ஐயா உடனே போகிறேன் என்று சொல்லியும் போகவில்லை.

௩௧ இவ்விருவரில் எவன் தகப்பனுடைய சித்தத்தின்படி செய்தான் என்று அவர் கேட்டபொழுது, மூத்தவனே செய்தான் என்றார்கள்; அப்பொழுது இயேசுவானவர் அவர்களுக்குச் சொன்னதாவது: [2]ஆயக்காரரும் வேசிகளும் உங்களுக்கு முன்னே பராபரனுடைய இராச்சியத்திலே பிரவேசிக்கிறார்கள் என்று மெய்யாகவே உங்களுக்குச் சொல்லுகிறேன்.

௩௨ எப்படியென்றால் [3]யோவான் நீதிமார்க்கனாய் உங்களிடத்தில் வந்தும், நீங்கள் அவனை விசுவாசிக்கவில்லை; [4]ஆயக்காரரும் வேசிகளுமோ அவனை விசுவாசித்தார்கள்; அதை நீங்கள் கண்டும் பின்பு அவனை விசுவாசிக்கும்படிக்கு மனஸ்தாபப்படாமல் இருக்கிறீர்கள்.

௩௩ ¶ [5]வேறு உவமையைக்கேளுங்கள்; ஒரு வீட்டு எசமான் உண்டு; அவன் ஒரு திராட்சத் தோட்டத்தை உண்டாக்கி, அதைச் சுற்றி வேலி அடைத்து, அதில் ஆலையை நாட்டி, கோபுரத்தையும் கட்டி, பின்பு அதைத் தோட்டக்காரர் வசமாய் விட்டு, [6]புறத்தேசத்திற்குப் போனான்.

௩௪ [7]கனிகாலம் சமீபமானபொழுது, கனிகளை வாங்கிக்கொண்டு வரும்படிக்குத் தன் ஊழியக்காரரைத் தோட்டக்காரர் இடத்தில் அனுப்பினான்.

௩௫ [8]தோட்டக்காரரோ, அவன் ஊழியக்காரரைப் பிடித்து, ஒருவனை அடித்து, ஒருவனை வெட்டி, மற்றொருவன்மேல் கல்லெறிந்து கொன்றார்கள்.

௩௬ மறுபடியும் எசமான் முந்தினவர்களிலும் அதிகமான வேறு ஊழியக்காரரை அனுப்பினான்; அவர்களையும் அப்படியே செய்தார்கள்.

௩௭ கடைசியிலே அவன், என்னுடைய குமாரனுக்கு அஞ்சுவார்களென்று எண்ணி, தன் குமாரனை அவர்களிடத்தில் அனுப்பினான்.

௩௮ தோட்டக்காரரோ குமாரனைக் கண்டபொழுது, [9]இவன் சுதந்தரவாளி, [10]இவனைக் கொன்று இவனுடைய சுதந்தரத்தைக் கட்டிக்கொள்வோம் வாருங்கள் என்று தங்களுக்குள்ளே சொல்லிக்கொண்டு,

௩௯ [11]அவனைப் பிடித்துத் திராட்சத்தோட்டத்திற்குப் புறம்பே தள்ளிக் கொலைசெய்தார்கள்.

கி. பி. ௩௩.

1 மத். ௧௪. ௫. மாற். ௬. ௨௰. லூக். ௨௰.௬.
2 லூக். ௭. ௨௯, ௫௰.
3 மத். ௩.௨.
4 லூக். ௩. ௰௨.
5 சங். அ௰. அ. உன்னத. அ.௰௧. ஏசா. ௫. ௧. எரே. ௨. ௨௧. மாற். ௰௨. ௧. லூக். ௨௰.௯.
6 மத். ௨௫. ௰௪, ௰௫.
7 உன்னத. அ. ௰௧,௰௨.
8 ௨ நாளா. ௨௪. ௨௧: ௩௬. ௰௬. நெகே. ௯. ௨௬. மத். ௫. ௰௨: ௨௩. ௩௪, ௩௭. அப். ௭. ௫௨. ௧ தெச. ௨. ௰௫. எபி. ௰௧. ௩௬,௩௭.
9 சங். ௨. அ. எபி. ௧. ௨.
10 சங். ௨. ௨,௩. மத். ௨௬. ௩-௫: ௨௭ ௧, ௨. யோவா. ௰௧. ௫௩. அப். ௪. ௨௭,௨௮.
11 மத். ௨௬. ௫௦. மாற். ௰௪. ௪௬. லூக். ௨௨.௫௪. யோவா. ௰௮. ௰௨. அப். ௨. ௨௩.

Digitized by Google

௪௰ ஆகையால் திராட்சத்தோட்டத்திற்கு எசமான் வரும்பொழுது, அந்தத் தோட்டக்காரரை என்ன செய்வான் என்று கேட்டார்.

௪௧ அதற்கு அவர்கள் சொன்னது: [1]அவன் அந்தப் பொல்லாதவர்களைக் கடினமாய் அழித்து, [2]தகுதியான காலங்களில் தனக்குக் கனிகளைக் கொடுக்கும் வேறே தோட்டக்காரர் வசமாய்த் திராட்சத் தோட்டத்தை விடுவான் என்றார்கள்.

௪௨ இயேசுவானவர் அவர்களுக்குச் சொன்னதாவது: [3]வீடு கட்டுகிறவர்கள் ஆகாதென்று தள்ளின கல்லே மூலைக்குத் தலையான கல்லாயிற்று; அது பராபரனாலே ஆயிற்று; அது நம்முடைய கண்களுக்கு ஆச்சரியமாய் இருக்கின்றதென்று வேதத்திலே நீங்கள் ஒருக்காலும் வாசித்ததில்லையா?

௪௩ [4]அப்படியிருக்க, பராபரனுடைய இராச்சியம் உங்களில் இருந்து நீக்கப்பட்டு, அதின் கனிகளைத் தருகிற சனங்களுக்குக் கொடுக்கப்படும் என்று உங்களுக்குச் சொல்லுகிறேன்.

௪௪ அன்றியும் [5]இந்தக் கல்லின்மேல் விழுகிறவன் நொறுக்கப்படுவான்; [6]இதுவோ எவன் மேல் விழுமோ அவனை நொறுங்கடிக்கும் என்றார்.

௪௫ ¶ பிரதான ஆசாரியரும் பரிசேயரும் அவருடைய உவமைகளைக் கேட்டு, தங்களைக் குறித்துப் பேசினார் என்று அறிந்து,

௪௬ அவரைப் பிடிக்க மனதாய் இருந்தார்கள்; ஆகிலும், சனங்கள் அவரைத் [7]தீர்க்கதரிசியென்று எண்ணினபடியினாலே அவர்கள் சனங்களுக்குப் பயந்து (அப்படிச்செய்யாமல் இருந்தார்கள்.)

1 லூக். உ௰ ௰௬.
2 லூக். உக.௨௪. எபி.உ.க. அப். ௰௩. ௪௬: ௰௫. ௭:௰அ.௭:௨அ. உஅ. உரோ. கூ.௰௧.
3 சங். ௱௰அ. உஉ. ஏசா.உஅ. ௰௬. மாற்.௰உ.௰. லூக். உ௰. ௰௭. அப். ௪. ௰௧. எபே. உ. உ௰. ௧பே. உ.௬,௭.
4 மத். அ ௰உ.
5 ஏசா. அ. ௰௪, ௬௰. சகரி. ௰உ. ௩ லூக். உ௰. ௰அ. உரோ.௬. ௩௩.௧பே.உ.அ.
6 ஏசா. ௬௰. ௰உ.
7 தானி. உ. ௪௪. ௰௯.௪௪. லூக். ௭.௰௬. யோவா. ௭ ௪௰.
8 லூக். ௰௪. ௰௬. வெளி. ௰௯. ௭,௯.
9 வாக். ௬. உ.
10 தானி.௬.உக. லூக். ௰௯. உ௭.
11 மத்.௰.௰௩.அப். ௰௩.௪௬

## உஉ. அதிகாரம்.

க. இராசகுமாரனுடைய கலியாண உவமை. கூ. புறச்சாதியார்கள் அழைக்கப்பட்டது. ௰உ. கலியாண வஸ்திரம் இல்லாதிருந்தவனுக்கு உண்டான தண்டனை. ௰௫. இராயனுக்கு வரிசெலுத்தவேண்டியதென்பது. உக. இறந்து மரித்தோர் உயிர்த்தெழுதலைக்குறித்துச் சதுசேயருக்கு நியாயஞ்சொல்லி, ௩௪. பிரதான கற்பனை இன்னதென்ற நியாயசாஸ்திரிக்கு உத்தரவுகொடுத்து, ௪௧. மேசியாவைக்குறித்துப் பரிசேயரிடத்தில் விசாரித்தது.

இயேசுவானவர் மறுபடியும் உவமைகளாய் அவர்களுடனே சொன்னதாவது:

உ [8]பரலோக இராச்சியத்தின் (ஆளுகை) தன் குமாரனுக்குக் கலியாணம்செய்த இராசனுடைய (நடக்கைக்கு) ஒப்பாயிருக்கின்றது.

௩ அழைக்கப்பட்டவர்களைக் கலியாணத்திற்கு வரச்சொல்லும்படிக்கு அவன் தன் ஊழியக்காரரை அனுப்பினான்; அவர்களோ, வரமாட்டோம் என்றார்கள்.

௪ மறுபடியும் அவன் வேறே ஊழியக்காரரை நோக்கி, அழைக்கப்பட்டவர்களிடத்திற்கு நீங்கள் போய், என் விருந்தை எத்தனம் பண்ணினேன், [9]என் எருதுகளும் கொழுத்த செந்துக்களும் அடிக்கப்பட்டன, எல்லாம் எத்தனமாய் இருக்கின்றது, கலியாணத்திற்கு வாருங்கள் என்று சொல்லுங்கள் என்று அனுப்பினான்.

௫ அவர்களோ அதை எண்ணாமல், ஒருவன் தன் வயலுக்கும், ஒருவன் தன் வியாபாரத்திற்கும் போய்விட்டார்கள்.

௬ மற்றவர்களோ அவனுடைய ஊழியக்காரரைப்பிடித்து நிந்தித்துக் கொலைசெய்தார்கள்.

௭ [10]இராசா அதைக் கேட்டுக் கோபம் அடைந்து, தன் சேனைகளை அனுப்பி, (அவர்களால்) அந்தக் கொலைபாதகரை அழித்து, அவர்களுடைய பட்டணத்தையும் சுட்டெரித்தான்.

அ அப்பொழுது அவன் தன் ஊழியக்காரரைநோக்கி, கலியாணவிருந்து எத்தனமாய் இருக்கின்றது; [11]அழைக்கப்பட்டவர்களோ

Digitized by Google

அதற்குப் பாத்திரர் அல்லாதிருந்தார்கள்.

௯ ஆகையால் நீங்கள் வழிச்சந்திகளில் போய், அகப்படுகிற யாவரையும் கலியாண விருந்துக்கு அழைத்து வாருங்கள் என்றான்.

௰ அந்த ஊழியக்காரர் வழிகளில் புறப்பட்டுப்போய், அகப்பட்ட [1]பொல்லாதவர்களையும் நல்லவர்களையும் கூட்டிவந்தார்கள்; விருந்துச் சாலை பந்தியிருக்கிறவர்களால் நிறைந்தது.

௰௧ பின்பு பந்தியிருக்கிறவர்களைப் பார்க்கும்படிக்கு இராசா பிரவேசித்தபொழுது, [2]கலியாண வஸ்திரத்தைத் தரித்திராத ஒருவனை அங்கே கண்டு,

௰௨ சிநேகிதனே, நீ கலியாண வஸ்திரம் இல்லாதவனாய் இங்கே எப்படிப் பிரவேசித்தாய் என்று சொன்னபொழுது, அவன் பேசாமல் இருந்தான்.

௰௩ அப்பொழுது இராசா ஊழியக்காரரை நோக்கி, [3]இவனுடைய கால்களையும் கைகளையும் கட்டி, இவனை எடுத்துப்போய், அழுகையும் பற்கடிப்பும் உண்டாயிருக்கிற மிகுந்த இருளிலே போடுங்கள் என்று கட்டளையிட்டான்.

௰௪ அந்தப்படியே [4]அநேகர் அழைக்கப்பட்டிருக்கிறார்கள், சிலர்மாத்திரம் தெரிந்துகொள்ளப்பட்டிருக்கிறார்கள் என்றார்.

௰௫ ¶ அப்பொழுது [5]பரிசேயர் போய், வசனங்களில் அவரை அகப்படுத்தும்படிக்கு யோசனை பண்ணி,

௰௬ தங்கள் சீஷர்களையும் ஏரோதேயின் மனிதர்களையும் அவரிடத்திற்கு அனுப்பினார்கள்; (அவர்கள் வந்து) போதகரே, நீர் சத்தியமுள்ளவருமாய், பராபரனுடைய மார்க்கத்தைச் சத்தியமாய்ப் போதிக்கிறவருமாய், மனிதருடைய முகத்தைப்பாராமல் இருக்கிறபடியால், ஒருவரையும் குறித்துக் கவையில்லாதவருமாய் இருக்கிறீர் என்று அறிந்திருக்கிறோம்.

௰௭ ஆதலால் உமக்கு எப்படித் தோன்றுகின்றது? இராயனுக்கு வரிகொடுக்கிறது நியாயமாய் இருக்கின்றதோ, இல்லையோ, அதை எங்களுக்குச் சொல்லவேண்டும் என்றார்கள்.

௰௮ இயேசுவானவர் அவர்களுடைய துர்க்குணத்தை அறிந்து, வஞ்சகரே, நீங்கள் என்னை என் சோதிக்கிறீர்கள்?

௰௯ வரிக்காசை எனக்குக் காண்பியுங்கள் என்றார்; அவர்கள் ஒரு *தெனாரியபணத்தை அவருக்குக் கொடுத்தார்கள்.

உ௰ அப்பொழுது அவர் சொன்னது: இந்தச் சொரூபமும் மேல் எழுத்தும் யாருடையது என்றார்; இது இராயனுடையது என்றார்கள்.

உ௧ அவர் சொன்னது: அப்படியானால் [6]இராயனுடையதை இராயனுக்கும், பராபரனுடையதை யோ பராபரனுக்கும் செலுத்துங்கள் என்றார்.

உ௨ அவர்கள் அதைக் கேட்டு ஆச்சரியப்பட்டு, அவரை விட்டுப் போனார்கள்.

உ௩ ¶ [7]உயிரோடெழுந்திருக்கும் மறுமை இல்லை என்று சொல்லுகிற சதுசேயர் [8]அந்நாளிலே அவரிடத்தில்வந்து,

உ௪ போதகரே, [9]புருஷன் ஒருவன் பிள்ளைகள் இல்லாமல் இறந்துபோனால், அவனுடைய சகோதரன் அவனுக்குச் சந்ததி உண்டாகும்படிக்கு, அவனுடைய மனைவியை விவாகம் பண்ணவேண்டுமென்று மோசே சொன்னாரே.

உ௫ அப்படியானால் எங்களிடத்தில் சகோதரர் ஏழுபேர் இருந்தார்கள்; அவர்களில் மூத்தவன் விவாகம்பண்ணி, சந்ததி இல்லாமல் மரித்து, தன் மனைவியைத் தன் சகோதரனுக்கு விட்டான்.

கி. பி. ௩௩.

1 மத். ௰௩. ௪௭, ௪௮.
2 உ கொரி. ௫. ௩. எபே. ௪. உ௪. கொலோ. ௩. ௰, ௰உ. வெளி. ௩. ௪: ௰௬. ௰௫: ௰௯. ௮.
3 மத். ௮. ௰உ.
4 மத். உ௰. ௰௬.
5 மாற். ௰உ. ௰௩. லூக். உ௰. உ௰.
* மூன்றேமுக்கால் பணம் கிரமுள்ளது. உ௰. உ காண்க.
6 மத். ௱. உ௫ உரோ. ௰௩. ௭.
7 அப். உ௩. ௮.
8 மாற். ௰உ. ௰௮. லூக். உ௰. உ௭.
9 உ மோ. உ௫. ௫.

Digitized by Google

௨௬ இப்படி இரண்டாம் சகோதரன் முதல் *ஏழாம் சகோதரன் வரைக்கும் (அவளையே விவாகம் பண்ணிப் பிள்ளையில்லாமல் மரித்தார்கள்.)

௨௭ எல்லாருக்கும் பின்பு அந்தப் பெண்ணும் இறந்துபோனாள்.

௨௮ அப்படி அவ்வேழுபேரும் அவளை விவாகம்பண்ணினபடியால், உயிரோடெழுந்திருக்கும் காலத்திலே அவள் அவர்களில் எவனுக்கு மனைவியாயிருப்பாள் என்று கேட்டார்கள்.

௨௯ இயேசுவானவர் அவர்களுக்கு மாறுத்தரமாகச் சொன்னதாவது: [1]வேத எழுத்துக்களையும் பராபரனுடைய பலத்தையும் நீங்கள் அறியாதிருக்கிறபடியால் தப்பாய் நினைக்கிறீர்கள்.

௩௰ [2]மறுமையிலே பெண்கொள்வதும் கொடுப்பதும் இராது; அவர்கள் பரலோகத்திலே பராபரனுடைய தூதரைப்போல் இருக்கிறார்கள்.

௩௧ மரித்தோர் உயிரோடெழுந்திருக்குதலைக் குறித்தோவெனில்,

௩௨ [3]நான் ஆபிரகாமினுடைய தேவனுமாய், ஈசாக்கினுடைய தேவனுமாய், யாக்கோபினுடைய தேவனுமாய் இருக்கிறேன் என்று, பராபரனாலே உங்களுக்கு உரைக்கப்பட்டதை நீங்கள் வாசிக்கவில்லையோ? அவர் மரித்தோருடைய தேவனாயிராமல், சீவனுள்ளோருடைய தேவனாகவே இருக்கிறார் என்றார்.

௩௩ சனங்கள் அவருடைய உபதேசத்தைக் கேட்டு, அதைக்குறித்துப் [4]பிரமித்துக்கொண்டார்கள்.

௩௪ ¶ [5]அவர் சதுசேயர் பேசாமல் இருக்கும்படி செய்ததைப் பரிசேயர் கேட்டு அவரிடத்தில் கூடிவந்தார்கள்.

௩௫ [6]அவர்களில் நியாய சாஸ்திரி ஒருவன் அவரைச் சோதிக்கும்படிக்கு,

௩௬ போதகரே, வேதத்திலே எது பிரதானமான கற்பனையாய் இருக்கின்றது என்று கேட்டான்.

௩௭ இயேசுவானவர் சொன்னது: [7]உன் தேவனாகிய பராபரனில் உன் முழு இருதயத்தோடும் உன் முழு ஆத்துமாவோடும் உன் முழு மனதோடும் அன்புகூர்வாயாக,

௩௮ என்பது முதலாவது பிரதானமான கற்பனையாய் இருக்கின்றது.

௩௯ அதற்கு ஒப்பாயிருக்கிற இரண்டாம் கற்பனை என்னவென்றால், [8]பிறனிடத்தில் உன்னைப்போல அன்புகூர்வாயாக என்பதே.

௪௰ [9]இவ்விரண்டு கற்பனைகளில் நியாயப்பிரமாணம் முழுமையும் தீர்க்கதரிசனங்களும் அடங்கியிருக்கின்றன என்றார்.

௪௧ ¶ [10]மேலும் பரிசேயர் கூடியிருக்கையில், இயேசுவானவர் அவர்களை நோக்கி,

௪௨ கிறிஸ்துவைக்குறித்து உங்களுக்கு எப்படித் தோன்றுகின்றது? அவர் யாருடைய குமாரனென்று கேட்டார்; அவர் தாவீதின் குமாரன் என்றார்கள்.

௪௩ இயேசுவானவர் சொன்னது: [11]அப்படியானால் நான் உம்முடைய சத்துருக்களை உமது பாதப்படியாக்கிப் போடுகிறவரைக்கும், நீர் என்னுடைய வலதுபாரிசத்திலே உளுக்காரும் என்று பராபரன் என் கர்த்தருடனே சொன்னார் என்று,

௪௪ தாவீது (பரிசுத்த) ஆவியினாலே சொல்லி, (இவ்விதமாய்) அவரைக் கர்த்தரென்று சொல்லியிருக்கிறது எப்படி?

௪௫ தாவீது அவரைக் கர்த்தரென்று சொல்லியிருக்க, அவர் எப்படி அவனுடைய குமாரனாய் இருப்பார் என்றார்.

௪௬ [12]அதற்கு மாறுத்தரமாக ஒருவனும் ஒரு வார்த்தையையும்

கி. பி. ௩௩.

* அல்லது ஏழு பேர்மட்டும்.

1 யோவா. ௨௰. ௯.
2 க யோ. ௩. ௨.
3 ௨ மோ. ௩. ௬, ௰௬. மாற். ௰௨. ௨௬. லூக். ௨௰. ௩௭. அப். ௭. ௩௨. எபி. ௰௧. ௰௬.
4 மத். ௭. ௨௮
5 மாற். ௰௨. ௨௮.
6 லூக். ௰. ௨௫
7 ௫ மோ. ௬. ௫: ௰. ௰௨: ௩௰. ௬. லூக். ௰. ௨௭.
8 ௩ மோ ௰௯. ௰௮. மத். ௰௯. ௰௯. மாற். ௰௨. ௩௧. லூக். ௰. ௨௭. உரோ. ௰௩. ௯. கலா. ௫. ௰௪. யாக். ௨. ௮.
9 மத். ௭. ௰௨. ௧ தீமோ. ௧. ௫.
10 மாற். ௰௨. ௩௫. லூக். ௨௰. ௪௧.
11 சங். ௱௰. ௧. அப். ௨. ௩௪. ௧ கொரி. ௰௫. ௨௫. எபி. ௧. ௰௩: ௰. ௰௩.
12 லூக். ௰௪. ௬.

Digitized by Google

சொல்லத் திராணியிருந்ததில்லை; [1]அந்நாள் முதற்கொண்டு ஒருவரும் அவரிடத்தில் வினாக்களைக் கேட்கத் துணிந்ததுமில்லை.

## ௨௩. அதிகாரம்.

*௧. கிறிஸ்து வேதபாரகர், பரிசேயருடைய கெட்ட நடக்கைகளைப் பின்பற்றாமல் அவர்களின் நல்ல உபதேசங்களைக் கைக்கொள்ள வேண்டியதென்று சனங்களுக்குப் போதித்து, ௫. அவர்களுடைய பெருமையைக்குறித்துத் தம்முடைய சீஷர்கள் எச்சரிக்கையாயிருக்கக் கற்பித்தது. ௰௩. அவர்களுடைய மாயத்தையும், குருட்டாட்டத்தையும் குறித்து அவர்களுக்கு எட்டுவகை வேதனைகளைக் கூறி, ௩௪. எருசலேமின் அழிவை முன்னறிவித்தது.*

அப்பொழுது இயேசுவானவர் சனங்களுக்கும் தம்முடைய சீஷருக்கும் சொன்னதாவது:

௨ [2]வேதபாரகரும் பரிசேயரும் மோசேயினுடைய ஆசனத்தில் இருக்கிறவர்கள்.

௩ ஆகையால் நீங்கள் கைக்கொள்ளும்படிக்கு அவர்கள் உங்களுக்குச் சொல்லுகிற யாவையும் கைக்கொண்டு நடக்கக்கடவீர்கள்; அவர்களுடைய கிரியைகளின்படியோ செய்யாமல் இருங்கள்; என்னத்தினாலெனில், [3]அவர்கள் சொல்லியும் செய்யாமல் இருக்கிறார்கள்.

௪ அல்லாமலும் [4]அவர்கள் பாரமாயும், சுமப்பதற்கு அரிதாயும் இருக்கிற சுமைகளைக்கட்டி, மனிதருடைய தோள்களின்மேல் வைக்கிறார்கள்; தாங்களோ அவைகளை ஒரு விரலினாலும் அசைக்க மனமில்லாமல் இருக்கிறார்கள்.

௫ [5]தங்கள் கிரியைகள் யாவையும் அவர்கள் மனிதரால் காணப்படும்படிக்குச் செய்கிறார்கள்; [6]கற்பனைகள் எழுதியிருக்கிற நாடாக்களை அகலமாக்கி, தங்கள் வஸ்திரங்களின் தொங்கல்களை விஸ்தாரம்பண்ணி,

௬ [7]விருந்துகளில் முதலிடத்தில் இருக்கவும், செபஆலயங்களில் முதல் ஆசனங்களில் இருக்கவும்,

௭ சந்தைகளில் (மற்றவர்களால்) வாழ்த்துதல் அடையவும், இரபீ இரபீ என்று அழைக்கப்படவும் விரும்புகிறார்கள்.

௮ [8]நீங்களோ இரபீ என்று அழைக்கப்படக் கூடாது; என்னத்தினாலெனில், கிறிஸ்து என்பவர் ஒருவரே உங்களுக்குக் குருவாய் இருக்கிறார்; நீங்கள் எல்லாரும் சகோதரராய் இருக்கிறீர்கள்.

௯ மேலும் பரமண்டலத்தில் இருக்கிறவர் ஒருவரே உங்களுக்குப் பிதாவாய் இருக்கிறார்; [9]ஆகையால் நீங்கள் பூமியிலே ஒருவனையும் உங்கள் பிதா என்று அழைக்கக் கூடாது.

௰ அல்லாமலும் கிறிஸ்து என்பவர் ஒருவரே உங்கள் குருவாய் இருக்கிறார்; ஆகையால் நீங்கள் உங்களைக் குருக்களென்று அழைக்கப்படக் கூடாது.

௰௧ [10]தன்னைத்தான் உயர்த்துகிறவன் தாழ்த்தப்படுவான்; தன்னைத்தான் தாழ்த்துகிறவன் உயர்த்தப்படுவான்.

௰௨ [11]ஆதலால் உங்களில் பெரியவன் உங்கள் ஊழியக்காரனாய் இருக்கக்கடவன்.

௰௩ ¶ [12]வஞ்சகராகிய வேதபாரகரே, பரிசேயரே, ஐயோ! உங்களுக்கு வேதனைவரும்; என்னத்தினாலெனில், மனிதர் முன்பாக நீங்கள் பரலோக இராச்சியத்தைப் பூட்டிப்போடுகிறீர்கள்; நீங்களோ அதில் பிரவேசிக்கிறதில்லை; பிரவேசிக்க மனதாய் இருக்கிறவர்கள் பிரவேசியாதபடிக்கும் செய்கிறீர்கள்.

௰௪ வஞ்சகராகிய வேதபாரகரே, பரிசேயரே, ஐயோ! உங்களுக்கு வேதனைவரும்; என்னத்தினாலென்றால், [13]நீங்கள் விஸ்தாரமாய்ச் செபமந்திரங்களைச் சொல்லுகிறோம் என்று சொல்லி, கைம்பெண்களுடைய பொருள்களைப் பட்சிக்கிறீர்கள்; அதின் நிமித்தம்

கி. பி. ௩௩.

1 மாற். ௰௨. ௩௪. லூக். ௨௰. ௪௰.
2 நெகே. ௮. ௪, ௮. மல்கி. ௨. ௭. மாற். ௰௨. ௩௮. லூக். ௨௰. ௪௬.
3 உரோ. ௨. ௰௯, ௨௰, ௨௧.
4 லூக். ௰௧. ௪௬. அப். ௰௫. ௰. கலா. ௬. ௰௩.
5 மத். ௬. ௧, ௨, ௫, ௰௬.
6 ௪ மோ. ௰௫. ௩௮. ௫ மோ. ௬. ௮: ௨௨. ௰௨. வாக். ௩. ௩.
7 மாற். ௰௨. ௩௮. லூக். ௰௧. ௪௩: ௨௰. ௪௬. ௩ யோ. ௯.
8 யாக். ௩. ௧. ௨ கொரி. ௧. ௨௪. ௧ பே. ௫. ௩.
9 மல்கி. ௧. ௬.
10 யோபு. ௨௨. ௨௯. வாக். ௰௫. ௩௩: ௨௯. ௨௩. லூக். ௰௪. ௰௧: ௰௮. ௰௪. யாக். ௪. ௬. ௧ பே. ௫. ௫.
11 மத். ௨௰. ௨௬, ௨௭.
12 லூக். ௰௧. ௫௨.
13 மாற். ௰௨. ௪௰. லூக். ௨௰. ௪௭. ௨ தீமோ. ௩. ௬. தீத்து. ௧. ௰௧.

Digitized by Google

அதிக ஆக்கினை உங்களுக்குக் கிடைக்கும்.

மரு வஞ்சகராகிய வேதபாரகரே, பரிசேயரே, ஐயோ! உங்களுக்கு வேதனை வரும்; என்னத்தினாலெனில், ஒருவனை (யூத) மார்க்கத்தான் ஆக்கும்படிக்கு நீங்கள் சமுத்திரத்தையும் பூமியையும் கடந்து திரிகிறீர்கள்; அவன் அப்படிப்பட்டவனானபொழுது, நீங்கள் உங்களைப்பார்க்கிலும் அவனை இரட்டிப்பாய் நரகத்துக்குரியவனாக்குகிறீர்கள்.

மசு ¶ [1]குருடராய் வழிகாட்டுகிறவர்களே, ஐயோ! உங்களுக்கு வேதனைவரும்; [2]ஒருவன் தேவாலயத்தின்மேல் சத்தியம் பண்ணினால் அது செல்லாது; ஒருவன் தேவாலயத்திலுள்ள பொன்மேல் சத்தியம் பண்ணினானாகில் அவன் அந்தப்படியே செய்யவேண்டும் என்கிறீர்கள்.

மஎ மதிகேடரே, குருடரே, எது பெரிது? பொன்னோ பொன்னைப் பரிசுத்தமாக்குகிற [3]தேவாலயமோ?

மஅ அன்றியும் ஒருவன் பீடத்தின்மேல் சத்தியம் பண்ணினால் அது செல்லாது; ஒருவன் அதின்மேலுள்ள காணிக்கையின்மேல் சத்தியம் பண்ணினானாகில், அவன் அதின்படியே செய்யவேண்டும் என்கிறீர்கள்.

மகூ மதிகேடரே, குருடரே, எது பெரிது? [4]காணிக்கையோ காணிக்கையைப் பரிசுத்தமாக்குகிற பீடமோ?

உ0 ஆகையால் பீடத்தின்மேல் சத்தியம் பண்ணுகிறவன் அதின்மேலும் அதில் இருக்கிற எல்லாப் பொருள்களின் மேலும் சத்தியம் பண்ணுகிறான்.

உக தேவாலயத்தின்மேல் சத்தியம் பண்ணுகிறவன் அதின்மேலும் [5]அதில் வாசமாயிருக்கிறவர் மேலும் சத்தியம் பண்ணுகிறான்.

உஉ அல்லாமலும் வானத்தின் மேல் சத்தியம் பண்ணுகிறவன் [6]பராபரனுடைய பத்திராசனத்தின்மேலும் அதில் வீற்றிருக்கிறவர்மேலும் சத்தியம் பண்ணுகிறான்.

உங ¶ வஞ்சகராகிய வேதபாரகரே, பரிசேயரே, ஐயோ! உங்களுக்கு வேதனை வரும்; என்னத்தினாலெனில், [7]நீங்கள் துளசியிலும் வெந்தயத்திலும் சீரகத்திலும் பத்தில் ஒரு பாகத்தைக் கொடுத்து, [8]வேதத்தில் (சொல்லியிருக்கிற) அதிக கனமான காரியங்களாகிய நீதியையும் இரக்கத்தையும் உண்மையையும் விட்டு விட்டீர்கள்; இவைகளையே நீங்கள் நடப்பித்து அவைகளையும் விட்டு விடாமல் இருக்கவேண்டும்.

உச ஆ குருடராய் வழிகாட்டுகிறவர்களே, கொசுவில்லாதபடிக்குத்(தண்ணீரை)வடிகட்டி ஒட்டகத்தையோ விழுங்குகிறவர்களாய் இருக்கிறீர்கள்.

உரு வஞ்சகராகிய வேதபாரகரே, பரிசேயரே, ஐயோ! உங்களுக்கு வேதனை வரும்; என்னத்தினாலெனில், [9]போசனபான பாத்திரங்களின் வெளிப்புறத்தை நீங்கள் சுத்தம் செய்கிறீர்கள்; அவைகளின் உள்ளோ கொள்ளையும் அநீதியும் நிறைந்திருக்கின்றன.

உசு குருடனான பரிசேயனே, முதலாவது போசனபான பாத்திரங்களின் உள்ளத்தைச் சுத்தம் பண்ணுவாயாக; அப்பொழுது அவைகளின் வெளிப்புறமும் சுத்தமாயிருக்கும்.

உஎ ¶ வஞ்சகராகிய வேதபாரகரே, பரிசேயரே, ஐயோ! உங்களுக்கு வேதனைவரும்; என்னத்தினாலெனில், [10]நீங்கள் சாந்து பூசப்பட்ட கல்லறைகளுக்கு ஒப்பாயிருக்கிறீர்கள்; அவைகள் புறம்பே அலங்காரமாய் இருக்கின்றன; உள்ளேயோ மரித்தோருடைய எலும்புகளும் சகலவிதமான அசுத்தமும் நிறைந்திருக்கின்றன.

இ. பி. ஙக.



1 மத். கூ. உச. உச.வச.
2 மத். ரு. கக,கச.
3 உ மோ. கம். உக.
4 உ மோ. உக. கஎ.
5 க இரா. அ.கங. உ நாளா. சு.உ. சங். உக. அ: ஙகஉ.கச.
6 மத். ரு. கச. சங்.கக.ச. அப். எ.சகூ.
7 லூக்.கக.சஉ.
8 க சாமு. கரு. உஉ. ஓசே.சு. சு. மீகா.சு.அ. மத். கூ. கங: கஉ.எ.
9 மாற். எ. சு. லூக். கக. கக.
10 லூக். கக. சச. அப்.உங.ங.

Digitized by Google

உஅ அப்படிப்போல நீங்களும் புறம்பே மனிதருக்கு நீதிமான்களென்று காணப்படுகிறீர்கள்; உங்கள் உள்ளத்திலோ வஞ்சகமும் அக்கிரமமும் நிறைந்திருக்கின்றன.

உகூ [1]வஞ்சகராகிய வேதபாரகரே, பரிசேயரே, ஐயோ! உங்களுக்கு வேதனைவரும்; என்னத்தினாலெனில், நீங்கள் தீர்க்கதரிசிகளுடைய சமாதிகளைக் கட்டி, நீதிமான்களின் கல்லறைகளைச் சிங்காரித்து,

ருய எங்கள் பிதாக்களுடைய நாள்களில் இருந்தோமானால், அவர்களோடேகூட நாங்கள் தீர்க்கதரிசிகளுடைய இரத்தத்தைச் சிந்தமாட்டோம் என்கிறீர்கள்.

ருக ஆகையால் நீங்கள் தீர்க்கதரிசிகளைக் கொலை செய்தவர்களின் [2]புத்திரரென்று உங்களைக் குறித்து நீங்கள் தாமே சாட்சிகொடுக்கிறீர்கள்.

ருஉ அப்படியிருக்க, [3]நீங்கள் உங்கள் பிதாக்களின் அக்கிரம அளவை நிரப்புங்கள்.

ருரு சர்ப்பங்களே, [4]விரியன் பாம்புகளின் (குட்டிகளே) நீங்கள் நரகஆக்கினைக்கு எப்படித் தப்பிப்போவீர்கள்?

ருச ¶ ஆதலால் கேளுங்கள்; [5]நான் தீர்க்கதரிசிகளையும் ஞானிகளையும் வேதபாரகரையும் உங்களிடத்திற்கு அனுப்புகிறேன், [6]அவர்களில் சிலரை நீங்கள் கொன்று சிலுவைகளிலும் அறைந்து, [7]சிலரை உங்கள் ஆலயங்களில் வாரினால் அடித்து, ஊரூருக்கும் துன்பப்படுத்துவீர்கள்.

ருரு [8]நீதிமானாகிய ஆபேலின் இரத்தமுதல், [9]நீங்கள் தேவாலயத்துக்கும் பீடத்துக்கும் நடுவே கொலைசெய்த பரகியாவின் குமாரனான சகரியாவின் இரத்தம் வரைக்கும், [10]பூமியிலே சிந்தப்பட்ட நீதியான இரத்தமெல்லாம் உங்கள்மேல் வரும்படிக்கு (அப்படிச் செய்வீர்கள்.)

ருசு அவையெல்லாம் இந்தச் சந்ததியின்மேலே வருமென்று மெய்யாய் உங்களுக்குச் சொல்லுகிறேன்.

ருஎ ஆ [11]எருசலேம் பட்டணத்தாரே, எருசலேம் பட்டணத்தாரே, உங்களிடத்தில் அனுப்பப்பட்டவர்கள்மேல் [12]கல் எறிந்து தீர்க்கதரிசிகளைக் கொலைசெய்கிறவர்களே, [13]கோழி தன் குஞ்சுகளைச் சிறகுகளின் கீழே கூட்டிச் சேர்த்துக்கொள்ளும் விதமாய் அநேகந்தரம் [14]உங்களைக் கூட்டிச் சேர்த்துக்கொள்ளவிரும்பினேன்; நீங்களோ வரமாட்டோம் என்கிறீர்கள்.

ருஅ (ஆகையால்) உங்கள் வாசஸ்தலம் பாழாக்கப்படும்.

ருகூ [15]அல்லாமலும் பராபரனுடைய நாமத்தினாலே வருகிறவர் தோத்திரிக்கப்படக் கடவரென்று நீங்கள் சொல்லுமளவும், இதுமுதல் என்னைக் காணாதிருப்பீர்களென்று உங்களுக்குச் சொல்லுகிறேன் என்று திருவுளம்பற்றினார்.

1 லூக். ௰௧.சஎ.
2 அப். எ. ருக, ருஉ. க தெச. உ.௰ரு.
3 க மோ. ௰ரு. ௰௬. க தெச.உ. ௰௬.
4 மத். ௩.எ: ௰உ. ௩ச.
5 மத். உக. ௩ச, ௩ரு. லூக். ௰௧. சகூ.
6 அப். ரு. சய: எ. ருஅ, ருகூ: உஉ, ௰கூ, உய.
7 மத். ய. ௰எ. உ கொரி. ௰௧. உச,உரு.
8 க மோ. ச. அ. க யோ. ௩. ௰உ.
9 உ நாளா. உச. உக.
10 வெளி. ௰அ. உச.
11 லூக். ௰௩.௩ச.
12 உ நாளா.உச. உக.
13 சங். ௰எ. அ: ௬௰.௬.
14 ரு மோ. ௬உ, ௰௬,௰உ.
15 சங். ௱௰அ. உ௬. மத். உக.௯.
16 மாற். ௰௬. க. லூக். உக. ரு.
17 க இரா. ௯.எ. எரே. உ௬.௰அ. மீகா. ௩. ௰உ, லூக். ௰௯. சச.

## உச. அதிகாரம்.

க. கிறிஸ்து தேவாலயத்தின் அழிவையும், ௩. அந்த அழிவு சம்பவிக்கிறதற்கு முன் உண்டாகும் உபத்திரவங்களையும், உ௯. தாம் நியாயந்தீர்க்கும்படி வரும்போது உண்டாகும் அடையாளங்களையும் முன்னறிவித்து, ருசு. அந்த நாளும், நாழிகையும் தெரியாததினால், சஉ. எந்நேரமும் எசமானுடைய வருகையை எதிர்நோக்கிய நற்பணிவிடைக்காரர்களைப்போல எச்சரிக்கையாய்க் காத்திருக்கப் போதித்தது.

[16]இயேசுவானவர் தேவாலயத்தை விட்டுப் புறப்பட்டு வருகிறபொழுது, அவருடைய சீஷர்கள் சேர்ந்து, தேவாலயம் கட்டி இருக்கிற வகைகளை அவருக்குக் காண்பித்தார்கள்.

உ இயேசுவானவர் அவர்களுடனே சொன்னது: இவைகள் எல்லாவற்றையும் பார்க்கிறீர்களல்லவோ? [17](இவைகளில்) ஒரு கல் மற்றொரு கல்லின்மேல் இங்கே

Digitized by Google

வைக்கப்படுவதில்லை; எல்லாம் இடிக்கப்படுமென்று மெய்யாய் உங்களுக்குச் சொல்லுகிறேன் என்றார்.

௩ ¶ [1]பின்பு அவர் ஒலிவமலையின்மேல் உட்கார்ந்திருக்கையில், சீஷர்மாத்திரம் அவரிடத்தில் வந்து, [2]இவை எப்பொழுது சம்பவிக்கும்? மேலும் நீர் வருவதற்கும் உலகத்தின் முடிவுக்கும் அடையாளம் எது? இவைகளை நீர் எங்களுக்குச் சொல்லவேண்டும் என்றார்கள்.

௪ அவர்களுக்கு மாறுத்தரமாக இயேசுவானவர் சொன்னதாவது: [3]அநேகர் வந்து, என் நாமத்தை எடுத்து, தங்களைக் கிறிஸ்து என்று சொல்லி, [4]அநேகம்பேரை வஞ்சிப்பார்கள்.

௫ [5]ஆதலால் ஒருவனும் உங்களை வஞ்சியாதபடிக்குப் பாருங்கள்.

௬ அல்லாமலும், யுத்தங்களையும் யுத்தங்களின் நடக்கைகளையும் கேள்விப்படுவீர்கள், அப்பொழுது நீங்கள் கலங்காதபடிக்குப் பாருங்கள்; அவையெல்லாம் சம்பவிக்கவேண்டும், ஆனாலும் முடிவு உடனே வராது.

௭ ஆகையால் [6]ஒரு சனக்கூட்டம் மற்றொரு சனக்கூட்டத்திற்கும், ஒரு இராச்சியம் மற்றொரு இராச்சியத்திற்கும் விரோதமாய் எழும்பும்; பஞ்சங்களும், பெருவாரிக்காய்ச்சல்களும், பூமி அதிர்தல்களும் அங்கங்கே உண்டாகும்.

௮ ஆனாலும் அவையெல்லாம் உபாதிகளுக்கு ஆரம்பமாய் இருக்கும்.

௯ [7]அப்பொழுது உபத்திரவப்படும்படிக்கு உங்களை ஒப்புக்கொடுத்து, உங்களைக் கொலைசெய்வார்கள்; என்னுடைய நாமத்தின் நிமித்தம் நீங்கள் எல்லா உலகத்தாராலும் பகைக்கப்படுவீர்கள்.

௰ அக்காலத்திலே [8]அநேகர் இலச்சை அடைந்து, ஒருவனை ஒருவர் காட்டிக்கொடுத்து, ஒருவனை ஒருவர் பகைப்பார்கள்.

௰௧ [9]அநேகம் கள்ளத்தீர்க்கதரிசிகளும் எழும்பி, [10]அநேகம்பேரை வஞ்சிப்பார்கள்.

௰௨ மேலும் அக்கிரமம் மிகுதியாவதினால் அநேகருடைய அன்பு மாறிப்போம்.

௰௩ [11]ஆனாலும் முடிவுபரியந்தம் நிலைநிற்பவனே இரட்சிக்கப்படுவான்.

௰௪ அல்லாமலும் [12]உலகத்தார் எல்லாருக்கும் சாட்சியாக இராச்சியத்தின் சுவிசேஷம் [13]பூமியில் எங்கும் பிரசங்கிக்கப்படும்; அப்பொழுது முடிவு வரும்.

௰௫ ¶ அப்படியிருக்க [14]இதை வாசிக்கிறவன் சிந்தித்துக்கொள்ளக்கடவன்; [15]பாழாக்குகிற அருவருப்பைக்குறித்துத் தானியேல் தீர்க்கதரிசி சொன்னாரே, [16]அதை நீங்கள் பரிசுத்த ஸ்தலத்தில் நிற்கக் காணும்பொழுது,

௰௬ யூதேயாவிலுள்ளவர்கள் மலைகளுக்கு ஓடிப்போகக்கடவர்கள்.

௰௭ வீட்டின்மேல் இருப்பவன் தன் வீட்டிலுள்ளவைகளை எடுத்துக்கொண்டு போகும்படிக்கு இறங்காமல் (போகக்) கடவன்.

௰௮ அல்லாமலும் வயலில் இருப்பவன் தன் வஸ்திரங்களை எடுத்துக்கொண்டு போகும்படிக்கு பின்னிட்டுத் திரும்பாமல் (போகக்) கடவன்.

௰௯ [17]ஐயோ! அந்த நாள்களில் கருப்பவதிகளுக்கும் முலைகொடுக்கிறவர்களுக்கும் உபத்திரவம் இருக்கும்.

௨௰ மேலும் உலகம் உண்டானது முதற்கொண்டு இதுவரைக்கும் சம்பவியாததுமாய், இனிமேலும் சம்பவியாததுமாய் இருக்கிற [18]மிகுந்த உபத்திரவம் அக்காலத்திலே உண்டாயிருக்கும்.

௨௧ ஆதலால் நீங்கள் ஓடிப்போ

இ. பி. ௬௬.

1 மாற். ௰௩. ௧.
2 ௧ தெச. ௫. ௨.
3 எரே. ௰௪. ௰௪: ௨௩. ௨௧, ௨௫.
4 ௰௧. வசனம்.
5 எபே. ௫. ௬. கொலோ. ௨. ௮, ௰௮. ௨ தெச ௨. ௩. ௧ யோ. ௪. ௧.
6 ௨ நாளா. ௰௫. ௬. ஏசா. ௰௯. ௨. ஆகா. ௨. ௨௨. சகரி. ௰௪. ௰௩.
7 மத் ௰. ௰௭. மாற். ௰௩. ௯. லூக். ௨௧. ௰௨. யோவா. ௰௫. ௨௰: ௰௬. ௨. அப். ௪. ௨, ௩: ௭. ௫௯: ௰௨. ௧. ௧ பே. ௪. ௰௬. வெளி. ௨. ௰, ௰௩.
8 மத். ௰௧. ௬: ௰௩. ௫௭. ௨ தீமோ. ௧. ௰௫: ௪. ௰, ௰௬.
9 மத். ௭. ௰௫. அப். ௨௰. ௨௯. ௨ பே. ௨. ௧.
10 ௧ தீமோ. ௪. ௧: ௰௫. ௨௪. வச. மத். ௨௪. ௨௪.
11 மத். ௰. ௨௨. மாற். ௰௩. ௰௩. எபி. ௩. ௬, ௰௪. வெளி. ௨. ௰.
12 மத். ௪. ௨௩: ௯. ௩௫.
13 உரோ. ௰. ௰௮. கொலோ. ௧. ௬, ௨௩.
14 தானி. ௯. ௨௭, ௨௰.
15 மாற். ௰௩. ௰௪. லூக். ௨௧. ௨௰.
16 தானி. ௯. ௨௭: ௰௨. ௰௧.
17 லூக். ௨௧. ௨௩.
18 தானி ௯. ௨௬: ௰௨. ௧. யோவே. ௨. ௨.



Digitized by Google

வது மாரிகாலத்திலாவது ஓய்வுநாளிலாவது சம்பவியாதபடிக்கு வேண்டுதல் பண்ணக்கடவீர்கள்.

௨௨ அந்த நாள்கள் குறைக்கப்படாதிருந்தால் ஒருவனும் தப்பிப்போவதில்லை; [1]தெரிந்துகொள்ளப்பட்டவர்களின் நிமித்தமோ அந்த நாள்கள் குறைக்கப்படும்.

௨௩ [2]அக்காலத்திலே கள்ளக்கிறிஸ்துக்களும் கள்ளத்தீர்க்கதரிசிகளும் எழும்பி, தெரிந்துகொள்ளப்பட்டவர்களை (வஞ்சிக்க) கூடுமானால், [3]அவர்களையும் வஞ்சிக்கத்தக்கதாக மிகுந்த அதிசயங்களையும் அற்புதங்களையும் செய்வார்கள்.

௨௪ ஆதலால் அக்காலத்திலே ஒருவன் உங்களை நோக்கி, [4]இதோ கிறிஸ்து இங்கே இருக்கிறார், அதோ அங்கே இருக்கிறார் என்று சொன்னால், நீங்கள் அவனை நம்பாமல் இருப்பீர்களாக.

௨௫ அதை நான் உங்களுக்கு இப்பொழுது முன்னறிவித்தேன்.

௨௬ ஆகையால் அதோ வனாந்தரத்தில் இருக்கிறார் என்று சொன்னால் வெளியே புறப்படாதிருங்கள்.

௨௭ இதோ வீட்டின் அறைகளுக்குள் இருக்கிறாரென்றால், அதை நம்பாதிருங்கள். [5]மின்னல் கிழக்கிலிருந்து தோன்றி மேற்குவரைக்கும் (சீக்கிரமாய்) பிரகாசிக்கிறவிதமாய் மனிதனுடைய குமாரன் வருவான்.

௨௮ அல்லாமலும் [6]பிணம் எங்கேயோ அங்கே கழுகுகள் கூடி வரும்.

௨௯ ¶ அந்த நாள்களிலுள்ள [7]உபத்திரவத்திற்குப் பின்பு, உடனே [8]சூரியன் இருள் அடையும், சந்திரன் பிரகாசம் கொடாமல் இருக்கும், நட்சத்திரங்கள் வானத்திலிருந்து விழும், வானத்திலுள்ள (மற்ற) வல்லமைகளும் அசைக்கப்படும்.

இ. பி. ௩௩.

1 ஏசா. ௧௩ ௮, ௩. சகரி. ௰௪. ௨,௩.
2 ௯ ௰௩. ௨௪. ௯ மோ. ௰௩. ௧. ௨ தெச. ௨. ௩, ௰, ௰௩. வெளி. ௰௩.௰௩.
3 யோவா. ௩. ௩௭: ௰. ௨௮. ௨௩. ௨ரோ. ௮. ௨௮, ௩௰. ௨ தீமோ. ௨. ௰௩.
4 மாற். ௰௩. ௨௧. லூக். ௰௭. ௨௩: ௨௧.௮.
5 லூக். ௰௭. ௨௪.
6 யோபு.௩௯.௩௰. லூக் ௰௭.௩௭.
7 தானி. ௭. ௰௧, ௰௨.
8 ஏசா. ௰௩. ௰. எசே. ௩௨. ௭. யோவே. ௨. ௰. ஆமோ. ௫.௰௩: ௮ ௯. மாற். ௰௩. ௨௪. லூக். ௨௧. ௨௫. அப். ௨. ௨௰. வெளி. ௬. ௰௨.
9 தானி.௭.௰௩.
10 மத் ௰௬. ௨௭. மாற். ௰௩. ௨௬. வெளி.௧.௭.
11 சகரி.௰௨.௰௨.
12 மத். ௰௩. ௪௧. ௧ கொரி. ௰௫. ௫௨. ௧ தெச. ௪.௰௬.
13 லூக்.௨௧ ௨௯.
14 யாக்.௫.௯.
* அல்லது வந்திருக்கிறுரென்று.
15 மத். ௰௬.௨௮: ௨௩.௩௬. மாற். ௰௩. ௩௰. லூக். ௨௧.௩௨.
16 சங்.௱௨.௨௬. ஏசா. ௫௧. ௬. மத். ௫. ௰௮. மாற். ௰௩. ௩௧. லூக். ௨௧. ௩௩. எபி ௧.௰௧.
17 மாற். ௰௩.௩௨. சகரி.௰௪ ௭.
18 அப். ௧. ௭. ௧ தெச. ௫ ௨. ௨ பே ௩.௰.

௩௰ அப்பொழுது [9]மனிதகுமாரனுடைய அடையாளம் வானத்திலே காணப்படும்; அல்லாமலும் மனிதனுடைய குமாரன் வானத்தின்மேகங்களின்மேலே[10]மிகுந்த வல்லமையோடும் மகிமையோடும் வருகிறதைப் பூமியிலுள்ள [11]கோத்திரத்தார் எல்லாரும் கண்டு புலம்புவார்கள்.

௩௧ அல்லாமலும் [12]அவர் தூதரை வலுவாய்த் தொனிக்கும் எக்காளத்துடனே அனுப்புவார்; அவர்கள் வானத்தின் எல்லைகளுக்குள்ளே நாலுதிசைகளிலுமிருந்து அவரால் தெரிந்துகொள்ளப்பட்டவர்களைச் சேர்த்துக்கொள்வார்கள்.

௩௨ ¶ [13]அத்திமரத்தினால் ஒரு உவமையைக் கற்றுக்கொள்ளுங்கள்; அதின் கிளை தளிராகி, இலைகளைக் கொடுக்கிறபொழுது, வசந்தகாலம் சமீபமாயிருக்கின்றதென்று அறிந்திருக்கிறீர்கள்.

௩௩ அப்படிப்போல நான் சொன்னவைகள் எல்லாம் சம்பவிக்கிறதை நீங்கள் காணும்பொழுது, [14]சமீபமாகவே *இருக்கிறாரென்று அறியக்கடவீர்கள்.

௩௪ [15]இந்தச் சந்ததி ஒழிந்துபோகும்முன்னே அவையெல்லாம் சம்பவிக்கும் என்று மெய்யாய் உங்களுக்குச் சொல்லுகிறேன்.

௩௫ [16]வானமும் பூமியும் ஒழிந்துபோம்;என் வசனங்களோ ஒழியாமல் இருக்கும்.

௩௬ ¶ [17]அவை சம்பவிக்கும் நாளையும் நாழிகையையும் என் பிதா ஒருவரேதவிர [18]மற்றொருவனும் அறியமாட்டான்; பரமண்டலங்களிலுள்ள தேவதூதர்களும் அதை அறியார்கள்.

௩௭ நோவாவின் காலத்திலே நடந்ததுபோல, மனிதனுடைய குமாரன் வரும் காலத்திலேயும் நடக்கும்.

Digitized by Google

கூஅ [1]எப்படியென்ருல், சலப்பிரளயத்திற்கு முன்னுன நாள் களிலே நோவா பேழைக்குள் பிரவேசித்தநாள்வரைக்கும் சனங்கள் போசனபானம்பண்ணி,

கூகூ பெண் கொண்டு பெண் கொடுத்து (தங்களுக்கு மோசம் வருமென்று) நினையாமல் இருந்தார்கள்; அப்பொழுதே சலப்பிரளயம் வந்து, அனைவரையும் கொண்டு போயிற்று; அதுபோல மனிதனுடைய குமாரன் வரும்பொழுதும் நடக்கும்.

சாம் அக்காலத்திலே [2]இரண்டு புருஷர் வயலில் இருப்பார்கள்; அவர்களில் ஒருவன் பிடித்துக்கொள்ளப்படுவான், ஒருவன் தப்பிப் போவான்.

சக இரண்டு பெண்கள் திரிகை திரித்துக்கொண்டிருப்பார்கள்; அவர்களில் ஒருத்தி பிடித்துக்கொள்ளப்படுவாள், ஒருத்தி தப்பிப்போவாள்.

சஉ ¶ அப்படியிருக்க, [3]உங்கள் எசமான் வரும் நாழிகையை நீங்கள் அறியாதபடியினுலே விழித்திருக்கக்கடவீர்கள்.

சங [4]திருடன் வரும் சாமத்தை வீட்டெசமான் அறிந்தானுனுல், அவன் விழித்துக்கொண்டு, தன் வீடு கன்னமிடப்படாதபடிக்குச் செய்திருப்பான் என்று அறிந்திருக்கிறீர்கள்.

சச அப்படியிருக்க, [5]நீங்கள் நினையாத நாழிகையிலே மனிதனுடைய குமாரன் வருவதால், நீங்களும் எத்தனமாய் இருக்கக்கடவீர்கள்.

சரு [6]எசமான் தன் வேலைக்காரருக்குத் திட்டமாய்ப் போசனம் கொடுக்கும்படிக்கு, அவர்கள் மேல் விசாரணைக்காரனுக வைத்த உண்மையும் புத்தியுமுள்ள ஊழியக்காரன் யாவன்?

சசு [7]எசமான் வந்து, எந்த ஊழியக்காரனை அப்படிச் செய்யக் காண்பானே, அவனே பாக்கியவானுய் இருப்பான்.

சஎ தன் ஆஸ்திகள் எல்லாவற்றின்மேலும் அவனை வைப்பானென்று மெய்யாய் உங்களுக்குச் சொல்லுகிறேன்.

சஅ அந்த ஊழியக்காரனே, பொல்லாதவனுய், என் எசமான் திரும்பிவரத் தாமதமாய் இருப்பானென்று எண்ணி,

சகூ தன்னேடேகூட ஊழியம் செய்கிறவர்களை அடிக்கத் தொடங்கி, வெறியரோடே புசித்துக் குடிக்கிறவனுனுல்,

ருய அந்த ஊழியக்காரன் நினையாதிருக்கிற நாளிலேயும் அவனுக்குத் தெரியாத நேரத்திலேயும் அவனுடைய எசமான் வந்து,

ருக அவனைக் கடினமாய் அடித்து, அழுகையும் பற்கடிப்புமுள்ள இடத்திலே வஞ்சகரோடே அவனுடைய பங்கை ஏற்படுத்துவான்.

1 கமோ. க. எ: எ.க. லூக். யஎ உக. கபே.க. உ0.
2 லூக். யஎ. கச. ழ.
3 மத். உ௪. ௪௨. மாற். ௰௩ ௩௩.௩௫ லூக். உக. ௩௬.
4 லூக். ௰௨. ௩௯. க தெச. ௫. உ. உ பே. ௩. ௰. வெளி. ௩. ௩: ௰௬.௰௫.
5 மத். உ௪. ௪௪. க தெச. ௫. ௬.
6 லூக். ௰௨.௪௨. அப். உ0. உஅ. க கொரி.௪. உ. எபி.௩.௫.
7 வெளி.௰௬.௰௫.

## உரு. அதிகாரம்.

க. பத்துக் கன்னிகாஸ்திரிகளையும், ௰௪. தாலந்துகளையும்குறித்த உவமைகள். ௩௧. கடைசி நியாயத்தீர்ப்பின் விளக்கம்.

அப்பொழுது பரலோக இராச்சியத்தார், [8]தங்கள் தீவத்திகளைப் பிடித்து மணவாளனுக்கு எதிர்கொண்டுபோகப் புறப்படுகிற பத்துக் கன்னிகைகளுக்கு ஒப்பாய் இருப்பார்கள்.

உ அவர்களில் [9]ஐந்துபேர் புத்தியுள்ளவர்களாயும், ஐந்துபேர் புத்தியீனராயும் இருந்தார்கள்.

௩ புத்தியீனமுள்ளவர்கள் தங்கள் தீவத்திகளை எடுத்தபொழுது, எண்ணெயைக் கூடக் கொண்டு போகவில்லை.

௪ புத்தியுள்ளவர்களோ தீவத்திகளோடுங்கூடத் தங்கள் பாத்திரங்களில் எண்ணெயையும் கொண்டுபோனுர்கள்.

௫ மணவாளன் தாமதித்தபொழுது, [10]எல்லாரும் நித்திரை மயக்கம் அடைந்து தூங்கினுர்கள்.

8 எபே. ௫.உ௯, ௩௰. வெளி.௰௯. எ: உக.௨.
9 மத். ௰௩. ௪௭: உஉ ௰.
10 க தெச.௫.௬.

Digitized by Google

௬ அப்படியிருக்கும் காலத்திலே, [1]பாதிஇராத்திரியிலே இதோ, மணவாளன் வருகிறார், அவருக்கு எதிர்கொண்டுபோகப் புறப்படுங்களென்று கூக்குரல் உண்டாயிற்று.

௭ உடனே அந்தக் கன்னிகைகள் எல்லாரும் எழுந்திருந்து, தங்கள் [2]தீவத்திகளை விளக்கினார்கள்.

௮ (அப்பொழுது) புத்தியீனமுள்ளவர்கள் புத்தியுள்ளவர்களை நோக்கி, எங்கள் தீவத்திகள் அணைந்துபோகின்றன; ஆகையால் உங்கள் எண்ணெயில் கொஞ்சம் எங்களுக்குத் தாருங்கள் என்றார்கள்.

௯ அதற்குப் புத்தியுள்ளவர்கள் சொன்னது: நாங்கள் கொடுத்தால் எங்களுக்கும் உங்களுக்கும் குறைச்சல் உண்டாகும்; அப்படியாகாதபடிக்கு நீங்கள் கடைக்காரரிடத்தில் போய், உங்களுக்காக (எண்ணெயைக்) கொள்ளுங்கள் என்றார்கள்.

௰ அந்தப்படி அவர்கள் கொள்ளப்போகிறபொழுதுமணவாளன் வந்தார்; எத்தனமாயிருந்தவர்கள் அவரோடேகூடக் கலியாணத்திற்குப்போய், (வீட்டில்) பிரவேசித்தார்கள்.

௰௧ [3]உடனே கதவு பூட்டப்பட்டது; பின்பு மற்றக் கன்னிகைகளும் வந்து, [4]ஆண்டவரே,ஆண்டவரே, எங்களுக்குத் திறக்கவேண்டும் என்றார்கள்.

௰௨ அதற்கு அவர் சொன்னது: [5]உங்களை அறியமாட்டேன் என்று மெய்யாகவே உங்களுக்குச்சொல்லுகிறேன் என்றார்.

௰௩ அப்படியிருக்க, [6]மனிதனுடைய குமாரன் வரும் நாளையாவது நாழிகையையாவது நீங்கள் அறியாமல் இருக்கிறபடியினாலே, விழித்துக்கொண்டிருக்கக்கடவீர்கள்.

௰௪ ¶ அன்றியும் (பரலோக இராச்சியம்) [7]புறத்தேசத்திற்குப் பிரயாணமாய்ப் போக மனதுள்ள மனிதன் தன் ஊழியக்காரரை அழைத்து, [8]தன் ஆஸ்திகளை அவர்களுக்கு ஒப்புக்கொடுத்ததுபோல இருக்கும்.

௰௫ [9]அவனுடைய திராணிக்குத்தக்கதாக ஒருவனுக்கு ஐந்து *தாலந்து, †நிறைபொன்னும்,ஒருவனுக்கு இரண்டு தாலந்து நிறைபொன்னும், பின்னொருவனுக்கு ஒரு தாலந்து (நிறை பொன்னும்) கொடுத்து, பின்பு உடனே புறத்தேசத்திற்குப் போனான்.

௰௬ ஐந்து தாலந்தைப் பெற்றவன் போய், அவைகளால் வியாபாரம்பண்ணி, வேறு ஐந்து தாலந்தைச் சம்பாதித்தான்.

௰௭ அப்படிப்போல இரண்டு தாலந்தைப் பெற்றவனும் வேறு இரண்டு தாலந்தைச் சம்பாதித்தான்.

௰௮ ஒரு தாலந்தைப் பெற்றவனோ போய், நிலத்திலே ஒரு குழியைத் தோண்டி, தன் எசமானுடைய திரவியத்தை அதிலே புதைத்து வைத்தான்.

௰௯ அநேக காலமான பின்பு அந்த ஊழியக்காரருடைய எசமான் திரும்பி வந்து, அவர்களோடே கணக்குப் பார்த்தான்.

௨௰ அப்பொழுது ஐந்து தாலந்தைப் பெற்றவன் சேர்ந்து, வேறு ஐந்து தாலந்தைக் கொண்டுவந்து, ஆண்டவனே, ஐந்து தாலந்தை எனக்கு ஒப்புவித்தீரே, இதோ, அவைகளால் வேறு ஐந்து தாலந்தைச் சம்பாதித்தேன் என்றான்.

௨௰௧ அப்பொழுது எசமானானவன் அவனை நோக்கி, நல்லது உத்தமமும் உண்மையுமுள்ள ஊழியக்காரனே, கொஞ்சத்தில் உண்மையாய் இருந்தாய், [10]அநேகத்தின்மேல் உன்னை அதிகாரியாக வைப்பேன்; உன் எசமானுடைய [11]சந்தோஷத்திற்குட் பிரவேசித்து வா என்றான்.

௨௰௨ இரண்டு தாலந்தைப் பெற்

இ. பி. ௬௬.

1 மத். ௨௪. ௪௪. ௧ தெச. ௫. ௰௧.
2 லூக். ௰௨. ௩௫.
3 லூக். ௰௩. ௨௫.
4 மத். ௭. ௨௧, ௨௨.
5 சங். ௫. ௫. ஆப. ௧. ௰௩. யோவா. ௯.௩௧.
6 மத். ௨௪. ௪௨, ௪௪. மாற். ௰௩. ௩௩, ௩௫, ௩௩. லூக். ௨௧. ௩௬. ௧ கொரி. ௰௬. ௰௩. ௧ தெச. ௫. ௬. ௧ பே. ௫. ௮. வெளி. ௰௬. ௰௫.
7 லூக். ௰௯. ௰௨.
8 மத். ௨௧. ௩௩.
9 மத். ௰௮. ௨௪. உரோ. ௰௨. ௬. ௧ கொரி.௰௨.,௭, ௰௧,௨௯. ௪பே. ௪.௰௩.
* ஒரு தாலந்து (௩௮௭௫) ரூபாயாம். ௰௮. ௨௪.
† யூதர்களுக்குள்ளே வழங்கின தாலந்து நிறை பொன் ஒன்றிற்கு ஏறக்குறைய பதின்மூவாயிரத்தநூற்றெண்பது வராகன் ஒப்பாயிருக்கும்.
10 மத். ௨௪.௪௭: ௩௪. ௪௬. வ௪. லூக். ௰௨. ௪௪: ௨௨. ௨௯, ௩௰.
11 ௨ தீமோ. ௨. ௰௨. எபி. ௰௨. ௨. ௧ பே.௧.௮.

Digitized by Google

நவனும் சேர்ந்து, ஆண்டவனே, நீர் இரண்டு தாலந்தை எனக்கு ஒப்புவித்தீரே, இதோ, அவைக ளால் வேறு இரண்டு தாலந்தைச் சம்பாதித்தேன் என்றான்.

௨௩ அவனுடனே எசமான் சொன்னது: நல்லது [1]உத்தமமும் உண்மையுமுள்ள ஊழியக்கார னே, கொஞ்சத்தில் உண்மையாய் இருந்தாய்; அநேகத்தின்மேல் உ ன்னை அதிகாரியாக வைப்பேன்; உன் எசமானுடைய சந்தோஷ த்திற்குட் பிரவேசித்து வா என் றான்.

௨௪ பின்பு ஒரு தாலந்தைப் பெற்றவனும் வந்து, ஆண்டவ னே, நீர் விதையாத இடத்திலே அறுக்கிறவருமாய், தெளியாத இ டத்தில் சேர்க்கிறவருமாயிருக்கிற கடினமான மனிதனாய் இருக்கிறீர் என்று அறிந்தேன்.

௨௫ ஆகையால் நான் பயந்து போய், உமது தாலந்தை நிலத்தில் புதைத்துவைத்தேன்; இதோ, உம் முடையதைத் திரும்ப எடுத்துக் கொள்ளும் என்றான்.

௨௬ அவனுக்கு மாறுத்தரமாக எ சமான் சொன்னதாவது: பொல் லாதவனும் சோம்பனுமான ஊழி யக்காரனே, நான் விதையாத இ டத்தில் அறுக்கிறவனென்றும், தெளியாத இடத்தில் சேர்க்கிறவ னென்றும் நீ அறிந்தாயா?

௨௭ அப்படியானால் நீ என் திர வியத்தை வியாபாரிகளிடத்தில் வைக்கவேண்டியதாய் இருந்தது; அப்பொழுது நான் வந்து, என்னு டையதை வட்டியோடே கூட எடுத்துக்கொள்வேனே என்று சொல்லி,

௨௮ பின்பு [2]உள்ளவன் எவனோ அவனுக்குக் கொடுக்கப்படும், சம் பூரணமும் அவனுக்கு உண்டா கும்; உள்ளவன் அல்லாதவனி டத்தில் இருக்கிறதும் எடுத்துக் கொள்ளப்படும்.

௨௯ ஆகையால் இவனுடைய கையிலிருக்கிற தாலந்தை நீங்கள் வாங்கி, பத்துத் தாலந்தை உடை யவனுக்குக் கொடுங்கள்.

௩௰ அல்லாமலும் அபிரயோசன மான இந்த ஊழியக்காரனை [3]அ ழுகையும் பற்கடிப்புமுள்ள மிக வும் புறம்பான இருளிலே தள் ளிப்போடுங்கள் என்றான்.

௩௧ ¶ அன்றியும் [4]மனிதனுடைய குமாரன் தமது மகிமையோடே தம்முடைய சகல பரிசுத்ததூத ருடனேயுங்கூட வரும்பொழுது, அவர் தமது மகிமையுள்ள பத்திரா சனத்தின்மேல் வீற்றிருப்பார்.

௩௨ அப்பொழுது [5]உலகத்தார் எல்லாரும் அவருக்கு முன்பாகக் கூட்டப்படுவார்கள்; [6]மேய்ப்ப னானவன் ஆடுகளையும் கடாக்களை யும் பிரிக்கிறதுபோல, அவர் அ வர்களை வெவ்வேறாகப் பிரித்து,

௩௩ ஆடுகளுக்கு ஒப்பானவர்க ளைத் தமது வலதுபக்கத்திலேயும், கடாக்களுக்கு ஒப்பானவர்களைத் தமது இடது பக்கத்திலேயும் நி றுத்துவார்.

௩௪ ¶ அப்பொழுது இராசாவா னவர் தம்முடைய வலது பக்கத் திலே நிற்பவர்களை நோக்கி, [7]நான் பசியாய் இருந்தபொழுது நீங்கள் எனக்குச் சாப்பாடு கொ டுத்தீர்கள்; நான் தாகமாய் இருந் தபொழுது என் தாகத்தைத் தீர்த் தீர்கள்; [8]நான் அந்நியனாய் இருந் தபொழுது என்னைச் சேர்த்துக் கொண்டீர்கள்.

௩௫ [9]எனக்கு வஸ்திரம் இல்லா தபொழுது எனக்கு வஸ்திரம் கொடுத்தீர்கள்; நான் வியாதியாய் இருந்தபொழுது எனக்கு உதவி செய்ய வந்தீர்கள்; [10]நான் காவ லில் இருந்தபொழுது, என்னைப் பார்க்க வந்தீர்கள்.

௩௬ ஆகையால் என் பிதாவினால் ஆசீர்வதிக்கப்பட்டவர்களே, [11] உ லகம் உண்டானது முதல் உங்க ளுக்காக எத்தனம்பண்ணப்பட்டி

கி. பி. ௩௩.

1 உக. ௪௪-௪௭. 2 மத். ௧௩. ௧௨. மாற். ௪. ௨௫. லூக். ௮. ௧௮: ௰௯. ௨௬. யோ வா. ௰௫. ௨. 3 மத். ௮. ௧௨: ௨௨. ௧௩. 4 சகரி. ௰௪. ௫. மத். ௰௬. ௨௭: ௰௯. ௨௮. மாற். ௮. ௩௮. அப். ௧. ௧௧. ௧ தெச. ௪. ௰௬. ௨ தெச. ௧. ௭. யூதா. ௰௪. வெளி. ௧. ௭. 5 உரோ. ௰௪. ௰. ௨ கொரி. ௫. ௰. வெளி. ௨௰. ௰௨. 6 எசே. ௩௪. ௰௭: ௨௰, ௨௰. மத். ௰௩. ௪௯.

7 ஏசா. ௫௮. ௭. எசே. ௰௮. ௭. யாக். ௧. ௨௭.

8 எபி. ௰௩. ௨. ௩ யோ. ௫.

9 யாக். ௨. ௰௫, ௰௬.

10 ௨ தீமோ. ௧. ௰௬.

11 மத். ௨௰. ௨௩. மாற். ௰. ௪௰. ௧ கொரி. ௨. ௯. எபி. ௰௧. ௰௬.

Digitized by Google

ருக்கிற இராச்சியத்தைச் [1]சுதந்தரித்துக்கொள்ள வாருங்கள் என்பார்.

௩௭ அப்பொழுது நீதிமான்கள் அவருக்கு மாறுத்தரமாகச் சொல்வது: ஆண்டவரே, நாங்கள் உம்மைப் பசியும் தாகமும் உள்ளவரென்று எப்பொழுது கண்டு உமக்குப் போசனபானம் கொடுத்தோம்?

௩௮ நாங்கள் உம்மை அந்நியரென்றும் வஸ்திரம் இல்லாதவரென்றும் எப்பொழுது கண்டு உம்மைச் சேர்த்துக்கொண்டு, உமக்கு வஸ்திரம் கொடுத்தோம்?

௩௯ நாங்கள் உம்மை வியாதியுள்ளவரென்றும் காவலில் இருக்கிறவரென்றும் எப்பொழுது கண்டு, உம்மிடத்தில் வந்தோம் என்பார்கள்.

௪௰ அதற்கு இராசா சொல்வது: [2]மிகவும் சிறியரான என் சகோதரராகிய இவர்களில் ஒருவனுக்கு நீங்கள் எதைச் செய்தீர்களோ, அதை எனக்கே செய்தீர்கள் என்று மெய்யாய் உங்களுக்குச் சொல்லுகிறேன் என்பார்.

௪௧ ¶ பின்பு அவர் தமது இடதுபக்கத்தில் நிற்பவர்களைநோக்கி, நான் பசியாய் இருந்தபொழுது, நீங்கள் எனக்குச் சாப்பாடு கொடுக்கவில்லை; நான் தாகமாய் இருந்தபொழுது, நீங்கள் என் தாகத்தைத் தீர்க்கவில்லை.

௪௨ நான் அந்நியனாய் இருந்தபொழுது, நீங்கள் என்னைச் சேர்த்துக்கொள்ளவில்லை, எனக்கு வஸ்திரம் இல்லாதபொழுது, நீங்கள் எனக்கு வஸ்திரம் கொடுக்கவில்லை; நான் வியாதியுள்ளவனுமாய்க் காவலில்வைக்கப்பட்டவனுமாய் இருந்தபொழுது, நீங்கள் எனக்கு உதவிசெய்ய வரவில்லை.

௪௩ ஆகையால் [3]சபிக்கப்பட்டவர்களே, நீங்கள் என்னை விட்டு, [4]சாத்தானுக்காகவும் அவனுடைய தூதர்களுக்காகவும் எத்தனம்பண்ணப்பட்டிருக்கிற [5]நித்திய அக்கினிக்குப் போங்கள் என்பார்.

௪௪ அப்பொழுது அவர்களும் அவருக்கு மாறுத்தரமாகச் சொல்வது: ஆண்டவரே, உம்மைப் பசிதாகமுள்ளவர் என்றும், அந்நியர் என்றும், வஸ்திரமில்லாதவர் என்றும், வியாதியுள்ளவர் என்றும், காவலில் இருக்கிறவர் என்றும் நாங்கள் எப்பொழுது கண்டு, உமக்கு ஊழியம் செய்யாதிருந்தோம் என்பார்கள்.

௪௫ அதற்கு அவர் சொல்வது: [6]மிகவும் சிறியரான இவர்களில் ஒருவனுக்கு நீங்கள் எதைச் செய்யாதிருந்தீர்களோ, அதை எனக்கும் செய்யாதிருந்தீர்கள் என்பார்.

௪௬ அப்படியே [7]அவர்கள் நித்திய வேதனையை அடையவும், நீதிமான்களோ நித்திய சீவனை அடையவும் போவார்கள் என்றார்.

இ. பி. ௩௩.

1 உ கொரி. அ, ௯. ௧ பே. ௧.௫,௩: ௧. ௩. வெளி. உ௧.௭.
2 வாக். ௰௪. ௧௧: ௰௩.௰. மத். ௰. ௪உ, மாற். ௯. ௪௧. எபி. ௬.௰.
3 சங். ௬, அ. மத். எ. உ௩. லூக். ௰௩.உ௭.
4 உ பே. உ, ௪. யூதா.௬.
5 மத். ௰௩. ௪௨, ௪உ.
6 வாக். ௰௪. ௩௧: ௰௭, ௫. சகரி. உ.அ. அப். ௯. ௫.
7 தானி. ௰உ. உ. யோவா. ௫. உ௯. உ கொரி. உ.எ,௯.
8 மாற். ௰௪. ௧. லூக். உஉ. ௧. யோவா.௰௩.௧.
9 சங். உ. உ. யோவா. ௰௧. ௪எ. அப். ௪. உ௫.௭.

# ௨௬. அதிகாரம்.

௧. பிரதானிகள் கிறிஸ்துவைக் கொலைசெய்ய யோசனை பண்ணினது. ௬. ஒரு ஸ்திரீ அவருடைய சிரசில் எண்ணெயைப் பூசினது. ௧௪. யூதா அவரை விற்றது. ௧௭. கிறிஸ்து பஸ்காவைச் சாப்பிட்டு, ௨௬. பரிசுத்த இராப்போசனத்தை ஏற்படுத்தி, ௩௬. தோட்டத்தில் செபம்பண்ணினபின்பு, ௪௭. யூதாவினால் ஒரு முத்தத்தின் வழியாய்க் காட்டிக்கொடுக்கவும், ௫௭. காயிபாவினிடத்தில் கொண்டுபோகவும், ௬௯. பேதுருவினால் மறுதலிக்கவும் உடன்பட்டது.

இந்த வசனங்கள் யாவையும் இயேசுவானவர் சொல்லி முடித்தபின்பு, அவர் தம்முடைய சீஷருடனே சொன்னதாவது:

௨ [8]இரண்டு நாளைக்குப்பின்பு, பஸ்காப்பண்டிகை வருமென்று அறிந்திருக்கிறீர்கள்; அப்பொழுது மனிதனுடைய குமாரன் சிலுவை மரத்திலே அறையப்படுவதற்கு ஒப்புக்கொடுக்கப்படுவான் என்றார்.

௩ ¶ [9]அக்காலத்திலே பிரதான ஆசாரியரும் வேதபாரகரும், சனங்களிலுள்ள மூப்பரும், காயிபா என்னப்பட்ட பிரதான ஆசாரியனுடைய அரண்மனையில் கூடிவந்து,

Digitized by Google

௪ தந்திரமாய் இயேசுவானவரைப் பிடித்துக் கொலைசெய்யும்படிக்கு யோசனை பண்ணியிருக்கிறபொழுது,

௫ பண்டிகை நாள்களில் அப்படிச் செய்யக்கூடாது, செய்தால் சனங்களுக்குள்ளே கலகம் உண்டாகுமென்று (நிறுத்தினார்கள்.)

௬ ¶ [1]அன்றியும் இயேசுவானவர் பெத்தானியா ஊரில் குஷ்டரோகியாய் இருந்த சீமோனுடைய வீட்டில் இருக்கையில்,

௭ [2]ஒரு ஸ்திரி விலையேறப்பெற்ற தயிலமுள்ள பரணியை எடுத்துக்கொண்டு வந்து, அவர் பந்தியிருக்கிறபொழுது, அதை அவருடைய சிரசின்மேல் ஊற்றினாள்.

௮ [3]அவருடைய சீஷர் அதைக் கண்டு, விசனம் அடைந்து, இந்தக் கேடு என்னத்திற்கு?

௯ இந்தத் தயிலத்தை உயர்ந்த கிரயத்துக்கு விற்று, தரித்திரருக்குக் கொடுத்தால் (இலாபமிருக்குமே) என்றார்கள்.

௰ இயேசுவானவர் அதை அறிந்து இவர்களுக்குச் சொன்னது: நீங்கள் அந்த ஸ்திரியை ஏன் வருத்தப்படுத்துகிறீர்கள்? என்னிடத்தில் நற்கிரியையைச் செய்தாளே.

௰௧ [4]தரித்திரர் எக்காலத்திலும் உங்களுடனே இருக்கிறார்கள்; [5]நானோ எக்காலத்திலேயும் உங்களோடே இருப்பதில்லை.

௰௨ இவள் இந்தத் தயிலத்தை என் சரீரத்தின்மேல் ஊற்றினது என்னை அடக்கம்பண்ணுவதற்கு எத்தனமான செய்கையாய் இருக்கின்றது.

௰௩ உலகத்தில் எவ்விடத்திலே இந்தச் சுவிசேஷம் பிரசங்கிக்கப்படுமோ, அவ்விடத்திலே இவளை நினைப்பதற்காக இவள் செய்ததும் சொல்லப்படுமென்று மெய்யாகவே உங்களுக்குச் சொல்லுகிறேன் என்றார்.

௰௪ ¶ அப்பொழுது [6]பன்னிரண்டு சீஷரில் ஒருவனாகிய [7]யூதாஸ்காரியோத்து என்னப்பட்டவன் பிரதான ஆசாரியரிடத்திற்குப் போய்,

௰௫ நான் அவரை உங்களுக்குக் காட்டிக்கொடுப்பேன், [8]நீங்கள் எனக்கு என்ன கொடுக்கிறீர்கள் என்றான்; அவர்கள் அவனுக்கு *முப்பது வெள்ளிக்காசை ஏற்படுத்திக் கொடுத்தார்கள்.

௰௬ அதுமுதல் அவன் அவரைக் காட்டிக்கொடுக்கும்படிக்குத் தகுதியான காலத்தைத் தேடிக்கொண்டான்.

௰௭ ¶ [9]பின்பு அவர்கள் புளியாத அப்பம் சாப்பிடுகிற நாள்களில் முதல்நாளிலே, சீஷர்கள் இயேசுவினிடத்திற்கு வந்து, நீர் பஸ்காப்பண்டிகையின் இராப்போசனம் பண்ணும்படிக்கு, நாங்கள் எங்கே எத்தனம்பண்ணச் சித்தமாய் இருக்கிறீர் என்று கேட்டார்கள்.

௰௮ அதற்கு அவர் சொன்னது: நீங்கள் பட்டணத்திலே ஒருவனிடத்தில்போய், என் காலம் சமீபமாய் இருக்கின்றது, உன்னிடத்திலே என் சீஷரோடுங்கூடப் பஸ்காப்பண்டிகை கொண்டாடுவேன் என்று போதகர் சொல்லுகிறார் என்று அவனுடனே சொல்லுங்கள் என்றார்.

௰௯ இயேசுவானவர் கட்டளையிட்டபடியே சீஷர்கள் போய், பஸ்காப்போசனத்தைத் எத்தனம் பண்ணினார்கள்.

௨௰ ¶ [10]அஸ்தமனமானபொழுது, அவர் பன்னிருவரோடுங்கூடப் பந்தியிருந்தார்.

௨௧ அவர்கள் போசனம் பண்ணுகையில், அவர், உங்களில் ஒருவன் என்னைக் காட்டிக்கொடுப்பான் என்று மெய்யாய் உங்களுக்குச் சொல்லுகிறேன் என்றார்.

௨௨ அப்பொழுது அவர்கள் மிகவும் துக்கப்பட்டு அவரை நோக்

இ. பி. ௩௰௩.



1 மத். உ௬. ௰௭.

2 மாற். ௰௪. ௩. யோவா. ௰௧. ௨, உ: ௰௨. ௩.

3 யோவா. ௰௨. ௪.

4 உ மோ. ௰௫. ௰௧. யோவா ௰௨. ௮.

5 மத். ௰௮. உ௰: உ௮. உ௰. யோவா. ௰௩. ௩௩: ௰௪. ௰௯. ௰௬. ௰௨. ௰௬: ௰௭. ௰௧.

6 மாற். ௰௪. ௰. லூக். உ௨. ௩. யோவா. ௰௩. ௨, ௩௰.

7 மத். ௰. ௪.

8 சகரி. ௰௧. ௰௨. மத். உ௭. ௩.

* யூதர்களுடைய வெள்ளிக்காசு ஒன்றிற்கு ஏறக்குறைய ஒரு ரூபாய் ஒப்பாயிருக்கும்.

9 உ மோ. ௰௨. ௩, ௰௮. மாற். ௰௪. ௰௨. லூக். உ௨. ௭.

10 மாற். ௰௪. ௰௭. லூக். உ௨. ௰௪. யோவா. ௰௩. ௰௮.

Digitized by Google

கி, ஆண்டவரே, நானோ அப்படிச் செய்வேன் என்று ஒவ்வொருவர் சொல்லத்தொடங்கினார்கள்.

௨௩ அதற்கு அவர் சொன்னது: [1]என்னோடேகூடத் தாலத்திலே கை தோய்க்கிறவனே என்னைக் காட்டிக்கொடுப்பான்.

௨௪ [2]மனிதனுடைய குமாரன் தன்னைக்குறித்து எழுதியிருக்கிறவிதமாய்ப் போகிறான்; அப்படியிருந்தும், [3]ஐயோ! மனிதனுடைய குமாரன் எந்த மனிதனாலே காட்டிக்கொடுக்கப்படுவானோ, அம்மனிதனுக்கு வேதனைவரும்; அம்மனிதன் பிறவாதிருந்தானானால் அவனுக்கு நலமாயிருக்கும் என்றார்.

௨௫ (பின்னாலே) அவரைக்காட்டிக்கொடுத்த யூதாவும் அவரை நோக்கி, இரபீ, நானோ அப்படிச் செய்வேன் என்றான்; நீ சொன்னபடியே இருக்கும் என்றார்.

௨௬ ¶ [4]அன்றியும் அவர்கள் போசனம்பண்ணுகையில், [5]இயேசுவானவர் அப்பத்தை எடுத்துக்கொண்டு *ஆசீர்வதித்து, அதைப் பிட்டுச் சீஷர்களுக்குக் கொடுத்து, [6]இது என்னுடைய சரீரமாய் இருக்கிறது, நீங்கள் எடுத்துப் புசியுங்கள் என்றார்.

௨௭ பின்பு அவர் பாத்திரத்தையும் எடுத்துக்கொண்டு தோத்திரம்பண்ணி, அதை அவர்களுக்குக் கொடுத்து, [7]நீங்கள் எல்லாரும் இதில் பானம்பண்ணுங்கள்.

௨௮ [8]இது அநேகருக்குப் பாவமன்னிப்பு உண்டாகும்படிக்கு, [9]புதிய உடம்படிக்கைக்கு ஏற்றதாய்ச் சிந்தப்படுகிற [10]என் இரத்தமாய் இருக்கின்றது.

௨௯ [11]இதுமுதற்கொண்டு நான் உங்களோடேகூட என் பிதாவின் இராச்சியத்திலே நவமாய்ப் பானம்பண்ணும்நாள்வரைக்கும், [12]இந்தத் திராட்சரசத்தை நான் பானம்பண்ணுவதில்லை என்று உங்களுக்குச் சொல்லுகிறேன் என்றார்.

௩௦ ¶ [13]அவர்கள் தோத்திரப்பாட்டைப் பாடின பின்பு, ஒலிவமலைக்குப் புறப்பட்டுப் போனார்கள்.

௩௧ அப்பொழுது இயேசுவானவர் அவர்களை நோக்கி, [14]நான் மேய்ப்பனை உபத்திரவப்படுத்தும்பொழுது, ஆடுகள் சிதறிப்போம் என்று எழுதியிருக்கிறது; ஆகையால் [15]இந்த இராத்திரியிலே நீங்கள் எல்லாரும் என்னைக்குறித்துக் [16]கலக்கம் அடைந்துபோவீர்கள்.

௩௨ [17]நானோ எழுந்திருந்தபின்பு உங்களுக்கு முன்னே கலிலேயநாட்டுக்குப் போவேன் என்றார்.

௩௩ அதற்குப் பேதுரு சொன்னது: எல்லாரும் உம்மைக்குறித்துக் கலக்கம் அடைந்துபோனாலும், நான் ஒருக்காலும் கலக்கம் அடைந்து போகமாட்டேன் என்றான்.

௩௪ [18]அவனுடனே இயேசுவானவர் சொன்னது: இந்த இராத்திரியிலே சேவல் கூவுகிறதற்குமுன்னமே நீ என்னை மூன்றுதரம் மறுதலிப்பாய் என்று மெய்யாய் உனக்குச் சொல்லுகிறேன் என்றார்.

௩௫ அதற்குப் பேதுரு சொன்னது: நான் உம்மோடே மரணம் அடைய வேண்டியதாய் இருந்தாலும், உம்மை மறுதலிக்கமாட்டேன் என்றான்; மற்றச் சீஷர் எல்லாரும் அப்படியேசொன்னார்கள்.

௩௬ ¶ [19]அப்பொழுது இயேசுவானவர் அவர்களோடேகூடக் கெதசேமனே என்னும் இடத்திற்கு வந்து, சீஷரைநோக்கி, நான் அங்கே போய்ச் செபம்பண்ணுமளவும் நீங்கள் இவ்விடத்தில் உளுக்காந்திருங்கள் என்று சொல்லி,

௩௭ பேதுருவையும் [20]செபதேயுவின் குமாரர் இருவரையும் கூட்டிக்கொண்டுபோய், துக்கம் அடையவும் மிகவும் வியாகுலப்படவும் தொடங்கி,

௩௮ பின்பு அவர்களைநோக்கி, [21]என் ஆத்துமா மரணபரியந்தம்

கி. பி. ௩௩.

1 சங். ௪௧. ௯. லூக். ௨௨. ௨௧. யோவா. ௰௩. ௰௮.
2 சங். ௨௨. ௭௪. இசு. தானி. ௯. ௨௬. மாற். ௯. ௰௨. லூக். ௨௪. ௨௫, ௪௬. அப். ௰௭. ௨, ௩: ௨௬. ௨௨, ௨௩. ௧ கொரி. ௰௫. ௩, ௪.
3 யோவா. ௰௭. ௰௨.
4 மாற். ௰௪. ௨௨. லூக். ௨௨. ௰௯.
5 ௧ கொரி. ௰௧. ௨௩, ௨௪.
* இரேக்குப் பாஷையில் தோத்திரம்பண்ணி, மாற். ௬. ௪௧.
6 ௧ கொரி. ௰. ௰௬.
7 மாற். ௰௪. ௨௩.
8 மத். ௨௦. ௨௮. உரோ. ௫. ௰௫. எபி. ௯. ௨௨.
9 எரே. ௩௧. ௩௧.
10 ௨ மோ. ௨௪. ௮. ௩ மோ. ௰௭. ௰௧.
11 அப். ௰. ௪௧.
12 மாற். ௰௪. ௨௫. லூக். ௨௨. ௰௮.
13 மாற். ௰௪. ௨௬.
14 மாற். ௰௪. ௨௭. யோவா. ௰௬. ௩௨.
15 மத். ௰௧. ௬.
16 சகரி. ௰௩. ௭.
17 மத். ௨௮. ௭, ௰௦. மாற். ௰௪. ௨௮: ௰௬. ௭.
18 மாற். ௰௪. ௩௦. லூக். ௨௨. ௩௪. யோவா. ௰௩. ௩௮.
19 மாற். ௰௪. ௩௨, ௩௯. லூக். ௨௨. ௩௯. யோவா. ௰௮. ௧.
20 மத். ௪. ௨௧.
21 யோவா. ௰௨. ௨௭.

Digitized by Google

மிகுந்ததுக்கப்பட்டிருக்கின்றது; நீங்கள் இங்கே தரித்திருந்து என்னோடேகூட விழித்திருங்கள் என்று சொல்லி,

௩௯ சற்று அப்புறம்போய், [1]சாஷ்டாங்கமாய் விழுந்து, [2]என் பிதாவே, [3]இந்தப் பாத்திரம் என்னை விட்டு நீங்கக்கூடுமானால் அப்படிச் செய்யும்; [4]இல்லாவிட்டால், என்னுடைய சித்தத்தின்படி அல்ல, உம்முடைய சித்தத்தின்படியே ஆகக்கடவது என்று செபம்பண்ணினார்.

௪௰ பின்பு அவர் சீஷரிடத்தில் வந்து, அவர்களை நித்திரை பண்ணக்கண்டு, பேதுருவை நோக்கி, இப்படி நீங்கள் ஒரு மணிநேரமாகிலும் என்னோடேகூட விழித்திருக்கத் திராணி இல்லையோ?

௪௧ [5]நீங்கள் குற்றம் செய்வதற்கான காரணத்தில் பிரவேசியாதபடிக்கு, விழித்திருந்து செபம்பண்ணுங்கள்; ஆவியானது மனதுள்ளதுதான், சரீரமோ பலவீனமுள்ளது என்று சொல்லி,

௪௨ இரண்டாந்தரம் போய், என் பிதாவே, இந்தப் பாத்திரத்தில் உள்ளதை நான் பானம்பண்ணுவிட்டால், இது என்னைவிட்டு நீங்காதா? நீங்கக்கூடாதிருந்தால், உம்முடைய சித்தத்தின்படியே ஆகக்கடவது என்று செபம்பண்ணினார்.

௪௩ சீஷர்களோ மிகுந்த நித்திரைமயக்கம் உள்ளவர்களானபடியால், அவர் திரும்பி வந்தபொழுது அவர்களை மறுபடியும் நித்திரைபண்ணக்கண்டார்.

௪௪ அவர் மறுபடியும் அவர்களை விட்டுப்போய், மூன்றாந்தரம் அந்த விண்ணப்ப வார்த்தைகளைத்தானே செபம்பண்ணி, பின்பு தம்முடைய சீஷரிடத்தில் வந்து,

௪௫ நீங்கள் பின்னும் நித்திரைபண்ணி இளைப்பாறுவீர்களா? இதோ, மனிதனுடைய குமாரன் பாவிகளுடைய கைகளில் ஒப்புக்கொடுக்கப்படுகிற நேரம் சமீபித்தது.

௪௬ அதோ, என்னைக் காட்டிக்கொடுக்கிறவன் சமீபமாய் வருகிறான், எழுந்திருங்கள் போவோம் என்றார்.

௪௭ ¶ [6]அவர் பேசுகையில் பன்னிருவரில் ஒருவனாகிய யூதா வந்தான்; அவனோடுங்கூடப் பிரதான ஆசாரியரும் சனத்தின் மூப்பரும் அனுப்பின திரளான சனங்களும் கத்திகளையும் தடிகளையும் பிடித்து வந்தார்கள்.

௪௮ அவர்களுக்கு அந்தத் துரோகியானவன், எவனை நான் முத்தம்செய்வேனோ அவன்தானே இயேசு, அவனைப் பிடித்துக்கொள்ளுங்கள் என்று அடையாளமாகச் சொல்லியிருந்தான்.

௪௯ அந்தப்படி அவன் உடனே இயேசுவினிடத்தில் வந்து, இரபீ, நீர் வாழ்க என்று [7]அவரை முத்தம் செய்தான்.

௫௰ இயேசுவானவரோ அவனை நோக்கி, சிநேகிதனே, [8]என்னத்திற்காக வந்திருக்கிறாய் என்றார்; உடனே மற்றவர்கள் சேர்ந்து, இயேசுவானவர்மேல் கைகளை வைத்து அவரைப் பிடித்தார்கள்.

௫௧ அப்பொழுது [9]இயேசுவுடனே இருக்கிறவர்களில் ஒருவன் தன் கத்தியைப் பிடித்து உருவி, பிரதான ஆசாரியனுடைய வேலைக்காரனைக் காதற வெட்டினான்.

௫௨ இயேசுவானவரோ அவனுடனே சொன்னது: [10]கத்தியை (இப்படி) எடுக்கிறவர்கள் எல்லாரும் கத்தியினாலே அழிந்துபோவார்கள்; ஆகையால் உன் கத்தியைத் திரும்ப அதினிடத்திலே போடு.

௫௩ (என்னைக் காப்பாற்றும்படிக்கு) என் பிதா [11]அநேக இலட்சத்திற்கு அதிகமான தூதரை என்னிடத்தில் அனுப்பவேண்டும் என்று நான் இப்பொழுதே அவ

கி. பி. ௩௩.

1 மாற். ௧௪. ௩௫. லூக். ௨௨. ௪௨. எபி. ௫. ௭.
2 யோவா. ௧௨. ௨௭.
3 மத். ௨௰. ௨௨.
4 யோவா. ௫. ௩௰: ௬. ௩௮. பிலி. ௨. ௮.
5 மாற். ௧௩. ௩௩: ௧௪. ௩௮. லூக். ௨௨. ௪௰, ௪௬. எபே. ௬. ௧௮.
6 மாற். ௧௪. ௪௩. லூக். ௨௨. ௪௭. யோவா. ௧௮. ௩. அப். ௧. ௧௬.
7 ௨ சாமு. ௨௰. ௯.
8 சங். ௪௧. ௯: ௫௫. ௧௩.
9 யோவா. ௧௮. ௧௰.
10 ௧ மோ. ௯. ௬. வெளி. ௧௩. ௧௰.
11 ௨ இரா. ௬. ௧௭. தானி. ௭. ௧௰.



Digitized by Google

கி. பி. ௩௩.

ளை வேண்டிக்கொள்ளக் கூடாது என்று நினைக்கிறாயா?

௫௪ (நானே அப்படிச் செய்தால்) வேத எழுத்துக்கள் எப்படி நிறைவேறும்?

௫௫ [1]இப்படியே சம்பவிக்கவேண்டுமென்று சொல்லி, பின்பு சனக்கூட்டத்தை நோக்கி, நீங்கள் ஒரு கள்ளனைப் பிடிக்கும்படிக்குப் புறப்படுகிறதுபோல, கத்திகளோடும் தடிகளோடும் என்னைப் பிடிக்க வந்தீர்கள்; தினந்தோறும் நான் தேவாலயத்திலே உங்களுக்குள் இருந்து, உபதேசம்பண்ணினேன்; அப்பொழுது நீங்கள் என்னைப் பிடிக்கவில்லையே.

௫௬ [2]தீர்க்கதரிசிகளின் எழுத்துக்கள் நிறைவேறும்படிக்கு இவையெல்லாம் நடந்து வருகின்றன என்றார்; [3]அப்பொழுது சீஷர் எல்லாரும் அவரைவிட்டு ஓடிப் போனார்கள்.

௫௭ ¶ [4]இயேசுவைப் பிடித்தவர்களோ, அவரைப் பிரதான ஆசாரியனாகிய காய்பாவினிடத்திற்குக் கொண்டுபோனார்கள்; அங்கே வேதபாரகரும் மூப்பரும் கூடிவந்திருந்தார்கள்.

௫௮ அப்படியிருக்க, பேதுரு தூரத்திலே பிரதான ஆசாரியனுடைய அரண்மனைவரைக்கும் அவர் பின்சென்று, பின்பு அதில் பிரவேசித்து, சங்கதியின் முடிவைப் பார்க்கிறதற்குச் சேவகரிடத்தில் உளுக்காந்தான்.

௫௯ அத்தருணத்திலே பிரதான ஆசாரியரும் மூப்பரும் மற்றப் பெரிய சங்கத்தார் யாவரும் இயேசுவைக் கொலைசெய்யும்படிக்கு அவருக்கு விரோதமாய்ப் பொய்ச்சாட்சியைத் தேடினார்கள், அகப்படவில்லை.

௬௰ [5]அநேகம்பேர் வந்து பொய்ச்சாட்சிகளைச் சொல்லியும் ஒவ்வ இல்லை.

௬௧ [6]பின்பு இரண்டுபேர் வந்து, இவன் [7]தேவாலயத்தை இடித்துப் போடவும் மூன்று நாளைக்குள்ளே அதைக் கட்டவும் வல்லமை உள்ளவனாயிருக்கிறேன் என்று சொன்னான் என்று பொய்ச்சாட்சி சொன்னார்கள்.

௬௨ [8]அப்பொழுது பிரதான ஆசாரியன் எழுந்திருந்து அவரை நோக்கி, இவர்கள் உனக்கு விரோதமாய்ச் சாட்சி சொன்னதை நீ கேட்டாயா? இதற்கு மாறுத்தரமாக எதையாகிலும் சொல்லுகிறதில்லையா என்றான்.

௬௩ [9]இயேசுவானவரோ பேசாமல் இருந்தார்; அப்பொழுது பிரதான ஆசாரியன் அவருடனே சொன்னது: பராபரனுடைய குமாரனாகிய கிறிஸ்து நீதானோ, அதை நீ எங்களுக்குச் சொல்லவேண்டுமென்று [10]சீவனுடைய தேவன்மேல் உன்னை ஆணையிட்டுக் கேட்கிறேன் என்றான்.

௬௪ இயேசுவானவர் சொன்னது: நீர் சொன்னபடியே இருக்கின்றது; அல்லாமலும் இதுமுதற்கொண்டு [11]நீங்கள் மனிதனுடைய குமாரனைச் [12]சர்வவல்லமையுள்ளவருடைய வலதுபாரிசத்திலே வீற்றிருக்கவும், வானத்தின் மேகங்கள்மேல் வரவும் காண்பீர்களென்று உங்களுக்குச் சொல்லுகிறேன் என்றார்.

௬௫ பிரதான ஆசாரியன் அதைக் கேட்டவுடனே, [13]தன் வஸ்திரங்களைக் கிழித்துக்கொண்டு, இவன தேவதூஷணம் சொன்னான்; இனிச் சாட்சிகள் நமக்கு வேண்டுவதென்ன? இப்பொழுதே இவன் தூஷணத்தைக் கேட்டீர்களே.

௬௬ உங்களுக்கு எப்படித் தோன்றுகின்றது என்றான்; அதற்கு மற்றவர்கள் சொன்னது: [14]இவன் மரணத்திற்குப் பாத்திரனாய் இருக்கிறான் என்றார்கள்.

௬௭ [15]அப்பொழுது சிலர் அவருடைய முகத்திலே துப்பி, சிலர் அவரைக் கையினாலே குட்டி, சிலர்

1 ஏசா. ௫௩. ௭. ௨௪. வசனம். லூக். ௨௪. ௨௫, ௪௪, ௪௭.
2 புலம். ௪. ௨௰. ௫௪. ௬௪.
3 யோவா. ௰௮. ௰௫.
4 மாற். ௱௪. ௫௩. லூக். ௨௨. ௫௪. யோவா. ௰௮. ௰௨, ௰௩, ௨௪.
5 சங். ௨௭. ௰௨: ௩௫. ௰௧. மாற். ௰௪. ௫௫. அப். ௬. ௰௩.
6 உபா. ௰௯. ௰௫.
7 மத். ௨௭. ௪௰. யோவா. ௨ ௰௯.
8 மாற். ௰௪. ௬௰.
9 ஏசா. ௫௩. ௭. மத். ௨௭. ௰௨, ௰௪.
10 ௧ மோ. ௫. ௧. ௧ சாமு. ௰௪. ௨௪, ௨௬.
11 தானி. ௭. ௰௩. மத். ௰௬. ௨௭: ௨௪. ௩௰: ௨௫. ௩௧. லூக். ௨௧. ௨௭. யோவா. ௧௫. ௨௮. ௰௪. ௰. ௧ தெச. ௪ ௰௬. வெளி. ௧. ௭.
12 சங் ௱௰. ௧. அப் ௭. ௫௫.
13 ௨ இரா. ௰௮. ௩௭: ௰௯. ௧.
14 ௩ மோ. ௨௪. ௰௬. யோவா. ௰௯. ௭.
15 ஏசா. ௫௰. ௬: ௫௩. ௩. மத் ௨௭. ௩௰.

Digitized by Google

[1]அவருடைய கன்னத்தில் அறைந்து,

௬௮ கிறிஸ்துவே [2]உம்மை அடித்தவன் யாவன்? அதை ஞானதிருஷ்டியாய் எங்களுக்குச் சொல்லும் என்று இழிவாய்ச் சொன்னார்கள்.

௬௯ ¶ [3]அத்தருணத்திலே பேதுரு அரண்மனையின் பிராகாரத்திலே உளுக்கார்ந்திருந்தான்; அப்பொழுது வேலைக்காரி ஒருத்தி அவனிடத்தில் வந்து, நீயும் கலிலேயனாகிய இயேசுவுடனே இருந்தாய் என்றாள்.

௭௰ அதற்கு அவன் சொன்னது: நீ பேசுகிறது எனக்குத் தெரியாதென்று எல்லாருக்கும் முன்பாக மறுதலித்து, பின்பு மண்டபத்திற்குப் போனான்.

௭௧ அங்கே வேறொரு பெண் அவனைக் கண்டு, இவனும் நாசரேத்தூரானாகிய இயேசுவுடனே இருந்தானென்று அங்கே இருந்தவர்களுக்குச் சொன்னாள்.

௭௨ அவனோ சொன்னது: அம்மனிதனை அறியமாட்டேனென்று மறுபடியும் ஆணையோடே மறுதலித்தான்.

௭௩ சற்றுநேரத்திற்குப் பின்பு, அங்கே நின்றவர்கள் பேதுருவினிடத்தில் வந்து, [4]மெய்யாய் நீயும் அவர்களில் ஒருவன், உன் பேச்சு அதை வெளிப்படுத்துகின்றது என்றார்கள்.

௭௪ அப்பொழுது பேதுரு சொன்னது: [5]நான் அந்த மனிதனை அறியவேயில்லை என்று சபித்துக்கொண்டு சத்தியம்பண்ணினான்.

௭௫ உடனே சேவல் கூவிற்று; பேதுரு (அதைக்கேட்டு,) [6]சேவல் கூவுமுன்னே நீ என்னை மூன்றுதரம் மறுதலிப்பாய் என்று இயேசுவானவர் சொன்ன வசனத்தை நினைத்துக்கொண்டு, வெளியே போய் மிகவும் அழுதான்.

கி. பி. ௩௩.

1 லூக். ௨௨. ௬௪. யோவா. ௰௮. ௨.
2 மாற். ௰௪. ௬௫. லூக். ௨௨. ௬௪.
3 மாற். ௰௪. ௬௬. லூக். ௨௨. ௫௫. யோவா. ௰௮. ௰௬, ௰௭, ௨௫.
4 லூக். ௨௨. ௫௯.
5 மாற். ௰௪. ௭௧.
6 ௩௪. ௭௫. மாற். ௰௪. ௩௰. லூக். ௨௨. ௬௧, ௬௨. யோவா. ௰௩. ௩௮.
7 சங். ௨. ௨. மாற். ௰௫. ௧. லூக். ௨௨. ௬௬: ௨௩. ௧. யோவா. ௰௮. ௨௮.
8 மத். ௨௰. ௰௯. அப். ௩. ௰௩.
9 மத். ௨௬. ௰௪, ௰௫.
10 ௨ சாமு. ௰௭. ௨௩. அப். ௧. ௰௮.
11 அப். ௧. ௰௯.

## ௨௭. அதிகாரம்.

௧. இயேசுவைக் கட்டிப் பிலாத்துவுக்கு ஒப்புக்கொடுத்தது. ௩. யூதா நான்றுகொண்டு செத்தது. ௰௯. பிலாத்து தன் மனைவியினாலே எச்சரிக்கப்பட்டது. ௨௪. அவன் தன் கைகளைக் கழுவி, ௨௬. பாரபாசை விடுதலையாக்கினது. ௨௯. கிறிஸ்து தமக்கு முள்முடி தரித்து, ௩௪. சிலுவையில் அறையவும், ௪௰. நிந்திக்கவும், ௫௰. மரித்து அடக்கம்பண்ணவும் உடன்பட்டது. ௬௬. அவருடைய கல்லறை முத்திரித்துக் காவல் பண்ணப்பட்டது.

விடியற்காலமானபொழுது, [7]சகல பிரதான ஆசாரியரும் சனங்களின் மூப்பரும் இயேசுவைக் கொலைசெய்யும்படிக்கான வகையைக்குறித்து யோசனைபண்ணி,

௨ அவரைக் கட்டிக்கொண்டு போய், பொந்தியு [8]பிலாத்தென்னும் துரைக்கு அவரை ஒப்புக்கொடுத்தார்கள்.

௩ ¶ [9]அப்பொழுது அவரைக் காட்டிக்கொடுத்த யூதா என்பவன், அவர் மரண ஆக்கினைக்குள்ளாகத் தீர்க்கப்பட்டதைக் கண்டு, மனஸ்தாபம் அடைந்து, அந்த முப்பது வெள்ளிக்காசைப் பிரதான ஆசாரியரிடத்திற்கும் மூப்பரிடத்திற்கும் திரும்பக் கொண்டுவந்து,

௪ குற்றமில்லாதவரை நான் காட்டிக்கொடுத்ததினால், எனக்குப் பாவம் வந்ததென்றான்; அதற்கு அவர்கள் சொன்னது: அது எங்களுக்கு என்ன, நீயே பார் என்றார்கள்.

௫ அப்பொழுது அவன் அந்த வெள்ளிக்காசைத் தேவாலயத்தில் எறிந்து, [10]புறப்பட்டுப் போய், நான்றுகொண்டு செத்தான்.

௬ பிரதான ஆசாரியர் அந்தப் பணத்தை எடுத்து, இது இரத்தக் கிரயமாகையால், இதைக் காணிக்கைப் பெட்டியிலே போடக்கூடாதென்று சொல்லி,

௭ ஆலோசனைபண்ணின பின்பு, அதினாலே அந்நியரை அடக்கம்பண்ணும்படிக்கு ஒரு குயவனுடைய நிலத்தைக் கொண்டார்கள்.

௮ ஆதலால் இந்நாள்வரைக்கும் அந்த நிலம், [11]இரத்தநிலம் என்னப்பட்டிருக்கின்றது.

Google

௯ அப்பொழுது இஸ்ரவேல் சனங்களால் அவர் மதிக்கப்பட்ட* [1]கிரயமாகிய முப்பது வெள்ளிக்காசை அவர்கள் எடுத்து,

௰ பராபரன் எனக்குக் கட்டளையிட்டபடியே அதை ஒரு குயவனுடையநிலத்திற்காகக் கொடுத்தார்கள் என்று எரேமியா தீர்க்கதரிசி சொன்ன வசனம் நிறைவேறிற்று.

௰௧ ¶ இயேசுவானவர் துரைக்கு முன்பாக நின்றபொழுது, [2]அந்தத் துரை அவரை நோக்கி, நீ யூதருடைய இராசாவா என்று கேட்டான்; அதற்கு இயேசு சொன்னது: [3]நீர் சொல்லுகிறபடியே இருக்கின்றது என்றார்.

௰௨ பின்பு பிரதான ஆசாரியரும் மூப்பரும் அவர்மேல் குற்றஞ்சாற்றி வருகிறபொழுது, [4]அவர் மாறுத்தரம் ஒன்றும் சொன்னதில்லை.

௰௩ அப்பொழுது பிலாத்து அவரை நோக்கி, [5]இவர்கள் உன்னைக்குறித்துச் சொல்லுகிற குற்றங்களை நீ கேட்கிறதில்லையோ என்றான்.

௰௪ அவரோ துரைக்கு மிகுந்த ஆச்சரியம் உண்டாகத்தக்கதாக, ஒன்றுக்கும் மாறுத்தரமாக ஒரு வார்த்தையையும் சொல்லாமல் இருந்தார்.

௰௫ ¶ [6]காவல் பண்ணப்பட்டவர்களில் எவனைச் சனங்கள் கேட்கிறார்களோ, அவனைத் துரை விடுதலையாக்குகிறது பண்டிகைதோறும் வழக்கமாய் இருந்தது.

௰௬ அல்லாமலும் அக்காலத்திலே கீர்த்தி அடைந்த பாதகனாகிய பரபாசென்னப்பட்ட ஒருவன்காவலில் வைக்கப்பட்டிருந்தான்.

௰௭ ஆகையால் சனங்கள் கூடியிருக்கையில், பிலாத்து அவர்களை நோக்கி, பரபாசென்பவனும் கிறிஸ்து என்னப்பட்ட இயேசு என்பவனும் இருக்கிறார்களே, இவர்களில் எவனை நான் உங்களுக்காக விடுதலையாக்க விரும்புகிறீர்கள் என்று கேட்டான்.

௰௮ அவர்கள் அவரைப் பொறாமையினாலே ஒப்புக்கொடுத்தார்கள் என்று பிலாத்து அறிந்தபடியினாலே (அவன் அப்படியே கேட்டான்.)

௰௯ ¶ அல்லாமலும் அவன் நியாயாசனத்தில் உளுக்காந்திருக்கையில், அவனுடைய மனைவியினால் அனுப்பப்பட்ட ஒருவன் வந்து, நான் இன்றைக்குச் சொப்பனத்திலே இந்த நீதிமானைக்குறித்து மிகவும் பாடுபட்டேன்; ஆகையால் நீர் அவரைக்குறித்து ஒன்றும் செய்யாதிருப்பீராக என்று அம்மாள் அறிவிக்கச்சொன்னாள் என்றான்.

௨௰ ¶ [7]அத்தருணத்திலே பிரதான ஆசாரியரும் மூப்பரும் பரபாசைக் கேட்கும்படிக்கும் இயேசுவைக் கொலைசெய்யப்பண்ணும்படிக்கும் சனங்களை (வசனங்களினாலே) ஏவினார்கள்.

௨௧ ஆதலால் இவ்விரண்டுபேரில் எவனை நான் உங்களுக்கு விடுதலை பண்ணவேண்டும் என்று துரை சனங்களை நோக்கிக் கேட்டபொழுது, அவர்கள் பரபாசை விடுதலையாக்கவேண்டும் என்று கூப்பிட்டார்கள்.

௨௨ அதற்குப் பிலாத்து சொன்னது: அப்படியானால் கிறிஸ்து என்னப்படுகிற இயேசுவை நான் என்ன செய்யலாம் என்றான்; அவனைச் சிலுவைமரத்தில் அறையப் பண்ணவேண்டும் என்று எல்லாரும் கூப்பிட்டார்கள்.

௨௩ அதற்குத் துரை சொன்னது: ஏன், எந்தப் பொல்லாங்கைச் செய்தான் என்றான்; அப்பொழுது அவர்கள் அவனைச் சிலுவைமரத்தில் அறையப்பண்ணவேண்டும் என்று அதிகம் அதிகமாய்க் கூப்பிட்டார்கள்.

௨௪ ¶ பிலாத்து (தன்னுடைய) பிரயாசம் வீணாய் இருக்கிறதென்

---

கி. பி. ௩௩.

* அல்லது சொன்னப்பட்ட.

1 சகரி. ௧௧. ௧௨, ௧௩.

2 மாற். ௧௫. ௨. லூக். ௨௩. ௩. யோவா. ௧௮. ௩௩.

3 யோவா. ௧௮. ௩௭. ௧ தீமோ. ௬. ௧௩.

4 மத். ௨௬. ௬௩. யோவா. ௧௯. ௯.

5 மத். ௨௬. ௬௨. யோவா. ௧௯. ௰.

6 மாற். ௧௫. ௬. லூக். ௨௩. ௧௭. யோவா. ௧௮. ௩௯.

7 மாற். ௧௫. ௧௧. லூக். ௨௩. ௧௮. யோவா. ௧௮. ௪௦. அப். ௩. ௧௪.

Digitized by Google

றம், கலகம் அதிகமாகிறதென்றும் கண்டு, சனங்களுக்கு முன்பாகத் [1]தண்ணீர் அள்ளி, கைகளைக் கழுவி, இந்த நீதிமானின் இரத்தத்தைச் சிந்துகிறதற்கு நான் குற்றமில்லாதவன், நீங்களே பாருங்கள் என்றான்.

௨௫ அதற்குச் சனங்கள் எல்லாரும் சொன்னது: [2]இவனுடைய இரத்தம் எங்கள்மேலும் எங்கள் பிள்ளைகள்மேலும் இருப்பதாக என்றார்கள்.

௨௬ அப்பொழுது அவன் பரபாசை அவர்களுக்காக விடுதலையாக்கி, இயேசுவையோ [3]வாரினால் அடிப்பித்து, பின்பு சிலுவையில் அறையப்படும்படிக்கு ஒப்புக்கொடுத்தான்.

௨௭ ¶ பின்பு துரையினுடைய போர்ச்சேவகர் இயேசுவை அதிகாரச் சாலையிலே *கொண்டுபோய், போர்ச்சேவகராகிய கூட்டம் எல்லாம் அவர்மேல் கூடிவரப் பண்ணி,

௨௮ [4]அவருடைய வஸ்திரங்களைக் களைந்து, [5]சிவப்பான மேல் அங்கியை அவருக்கு உடுத்தி,

௨௯ [6]முள்ளுக்களால் ஒரு முடியைப் பின்னி, அவருடைய சிரசின்மேல் வைத்து, அவருடைய வலதுகையில் ஒரு கோலைக் கொடுத்து, பின்பு அவர்முன்பாக முழங்காற்படியிட்டு, யூதரின் இராசாவே, வாழ்க என்று அவரைப் பரியாசம்பண்ணி,

௩௰ [7]அவர்மேலே துப்பி, அந்தக் கோலை எடுத்து அவருடைய சிரசில் அடித்தார்கள்.

௩௧ அவரைப் பரியாசம்பண்ணின பின்பு, அவர்கள் அவருக்கு உடுத்தின மேல் அங்கியைக் கழற்றி, அவருடைய வஸ்திரங்களை அவருக்கு உடுத்தி, [8]அவரைச் சிலுவைமரத்தில் அறையும்படிக்குக் கொண்டுபோனார்கள்.

௩௨ ¶ [9]போகையில் [10]அவர்கள் சிரேனே ஊரானாகிய சீமோன் என்பவனைக் கண்டு, அவன் அவருடைய சிலுவைமரத்தைச் சுமக்கும்படிக்குப் பலவந்தம்பண்ணினார்கள்.

௩௩ பின்பு அவர்கள் [11]தலையோட்டிடமென்று அருத்தங்கொள்ளும் கொல்கதா என்னும் இடத்திற்கு வந்தபொழுது,

௩௪ [12]கசப்பான கீரை கலந்தகாடியை அவருக்குக் குடிக்கக்கொடுத்தார்கள்; அவர் அதை ருசிபார்த்து, குடிக்க மனதில்லாதிருந்தார்.

௩௫ [13]அவரைச் சிலுவைமரத்தில் அறைந்தபின்பு, அவர்கள் அவருடைய வஸ்திரங்களைக் குறித்துச் சீட்டுப்போட்டு, அவைகளைப் பங்கிட்டார்கள்; அதினாலே, [14]என் வஸ்திரங்களைத் தங்களுக்குள்ளே பங்கிட்டு, என் உடையின்மேல் சீட்டுப்போட்டார்கள் என்று தீர்க்கதரிசியால் உரைக்கப்பட்டது நிறைவேறிற்று.

௩௬ [15]பின்பு அவர்கள் அங்கே உளுக்காந்து, அவரைக் காத்துக் கொண்டிருந்தார்கள்.

௩௭ அல்லாமலும் அவருடைய மரண ஆக்கினையின் காரணத்தை அறிவிக்கும்படிக்கு, [16]இவன் யூதருடைய இராசாவாகிய இயேசு என்று எழுதி, அவருடைய சிரசுக்கு மேலிடத்தில் வைத்தார்கள்.

௩௮ [17]அன்றியும் அவருடைய வலதுபுறத்தில் ஒரு கள்ளனும் அவருடைய இடதுபுறத்தில் ஒரு கள்ளனுமாக இரண்டு கள்ளரும் அவருடனேகூடச் சிலுவைமரங்களில் அறையப்பட்டார்கள்.

௩௯ ¶ அப்படியிருக்க, [18]அவ்வழி நடந்துபோகிறவர்கள் தங்கள் தலைகளை அசைத்து,

௪௰ ஆ [19]தேவாலயத்தை இடித்து மூன்று நாள்களுக்குள்ளே கட்டுகிறவனே, நீதானே உன்னை இரட்சித்துக்கொள்; [20]நீ பராபரனுடைய குமாரனானால், சிலுவைமரத்திலிருந்து இறங்கிவா என்று அவரைத் தூஷணித்தார்கள்.

கி. பி. ௩௩.

1 ௫ மோ. ௨௧. ௬.
2 ௫ மோ. ௰௯. ௰. யோசு. ௨. ௰௯. ௧ இரா. ௨. ௩௨. ௨ சாமு. ௧. ௰௬. அப். ௫. ௨௮.
3 ஏசா. ௫௩. ௫. மாற். ௰௫. ௰௫. லூக். ௨௩. ௰௬, ௨௪, ௨௫. யோவா. ௰௯. ௧, ௰௬.
* அல்லது இராசாவின் வீட்டிலே.
4 மாற். ௰௫. ௰௭. யோவா. ௰௯. ௨.
5 லூக். ௨௩. ௰௧.
6 சங். ௬௯. ௰௯. ஏசா. ௫௩. ௩.
7 ஏசா. ௫௰. ௬. மத். ௨௬. ௬௭.
8 ஏசா. ௫௩. ௭.
9 ௪ மோ. ௰௫. ௩௫. ௧ இரா. ௨௧. ௰௩. அப். ௭. ௫௮. எபி. ௰௩. ௰௨.
10 மாற். ௰௫. ௨௧. லூக். ௨௩. ௨௬.
11 மாற். ௰௫. ௨௨. லூக். ௨௩. ௩௩. யோவா. ௰௯. ௰௭.
12 சங். ௬௯. ௨௧. ௪௮. வச.
13 மாற். ௰௫. ௨௪. லூக். ௨௩. ௩௪. யோவா. ௰௯. ௨௩, ௨௪.
14 சங். ௨௨. ௰௮.
15 ௩௬. வசனம்.
16 மாற். ௰௫. ௨௬. லூக். ௨௩. ௩௮. யோவா. ௰௯. ௰௯.
17 ஏசா. ௫௩. ௰௨. மாற். ௰௫. ௨௭. லூக். ௨௩. ௩௨, ௩௩. யோவா. ௰௯. ௰௮.
18 சங். ௨௨. ௭: ௰௮. ௱௯. ௨௫. மாற். ௰௫. ௨௯. லூக். ௨௩. ௩௫.
19 மத். ௨௬. ௬௧. யோவா. ௨. ௰௯.
20 மத். ௨௬. ௬௩.

Digitized by Google

சக அப்படி பிரதான ஆசாரியரும் வேதபாரகரும் மூப்பரும் சொன்னது:

சஉ இவன் மற்றவர்களை இரட்சித்தான் தன்னைத்தானே இரட்சிக்கத் திராணியில்லை; இவன் இஸ்ரவேலரின் இராசாவானால், இப்பொழுதே சிலுவையில் இருந்து இறங்கி வரட்டும், அப்பொழுது இவனை விசுவாசிப்போம்.

சங [1]இவன் தன்னைப் பராபரனுடைய குமாரன் என்று சொல்லி, பராபரன்மேல் நம்பிக்கையாய் இருந்தானே; அவர் இவன்மேல் பிரியமாய் இருந்தால், இப்பொழுது இவனை மீட்டுவிடட்டும் என்று அவரைப் பரியாசம்பண்ணினார்கள்.

சச [2]இவ்விதமாய் அவரோடே கூடச் சிலுவைமரங்களில் அறையப்பட்ட கள்ளரும் அவரை நிந்தித்தார்கள்.

சரு ¶ [3]அன்றியும் ஆறும்மணி நேரம்தொடங்கி ஒன்பதாம்மணி நேரம்வரைக்கும், அத்தேசம் எங்கும் அந்தகாரம் உண்டாயிற்று.

சசா பின்பு ஒன்பதாம்மணி நேரத்திலே [4]இயேசுவானவர், ஏலி ஏலி லாமா சபக்தானி, என்று மிகுந்த சத்தத்தோடே கூப்பிட்டார்; [5]அதற்கு என் தேவனே, என் தேவனே, ஏன் என்னைக் கைவிட்டீர் என்று அருத்தமாம்.

சஎ அவ்விடத்தில் நின்றவர்களில் சிலர் அதைக்கேட்டு, இவன் எலியாவை அழைக்கிறான் என்றார்கள்.

சஅ [6]அவர்களில் ஒருவன் உடனே ஓடிக் கடற்காளானை எடுத்து, காடியால் நிரப்பி, அதை ஒரு கம்பின்மேல் மாட்டி, அவருக்குக் குடிக்கக்கொடுத்தான்.

சகூ மற்றவர்களோ சொன்னது: பொறுத்துக்கொள், எலியா இவனை இரட்சிக்க வருவானோ, அதைப் பார்ப்போம் என்றார்கள்.

ருய ¶ [7]பின்பு இயேசுவானவர் மறுபடியும் மிகுந்த சத்தமிட்டு ஆவியை விட்டுவிட்டார்.

ருக [8]அப்பொழுது சம்பவித்ததென்னவென்றால், தேவாலயத்திலுள்ள திரைச்சீலை மேலேதொடங்கிக் கீழேமட்டும் இரண்டாகக் கிழிந்தது; பூமியும் அதிர்ந்தது; கல்மலைகளும் பிளந்தன; கல்லறைகளும் திறந்தன.

ருஉ நித்திரை அடைந்திருந்த பரிசுத்தவான்களுடைய அநேக சரீரங்கள் அவர் எழுந்திருந்தபின்பு எழுப்பப்பட்டு,

ருங கல்லறைகளைவிட்டுப் புறப்பட்டு, பரிசுத்த பட்டணத்தில் பிரவேசித்து, அநேகருக்குத் தரிசனையானார்கள்.

ருச ¶ [9]போர்ச்சேவகரின் தலைவனும், அவனோடேகூட இயேசுவைக் காத்திருந்தவர்களும், பூமி அதிர்தலையும் மற்ற நடக்கைகளையும் கண்டபொழுது, மிகுந்த பயமடைந்து, மெய்யாய் இவர் தேவகுமாரனாய் இருந்தார் என்று சொல்லிக்கொண்டார்கள்.

ருரு ¶ அல்லாமலும்இயேசுவுக்கு ஊழியம் செய்து [10]கலிலேயாவிலிருந்து அவர் பின்சென்றுவந்த ஸ்திரிகளாகிய மகுதலா ஊர் மரியாளும்,

ருசா [11]யாக்கோபுக்கும் யோசேயுக்கும் தாயாகிய மரியாளும், செபேதேயுவின் குமாருடைய தாயும்,மற்ற அப்படிப்பட்ட அநேக ஸ்திரிகளும் அங்கே தூரத்திலே பார்த்துக்கொண்டிருந்தார்கள்.

ருஎ ¶ [12]அஸ்தமனமானபொழுது, அரிமத்தியா ஊரானாகிய ஐசுவரியம் உள்ளவனுமாய் இயேசுவுக்குச் சீஷனுமாயிருந்த யோசேப்பென்பவன் பிலாத்துவினிடத்தில் போய் இயேசுவின் சரீரத்தைக் கேட்டான்.

ருஅ அதை அவனுக்குக் கொடுக்கும்படிக்குப் பிலாத்து கட்டளையிட்டான்.

ருகூ அந்தப்படி யோசேப்பு அ

கி. பி. ஙங.

1 சங். உஉ. அ.
2 மாற். கரு. கஉ. லூக். உங. கக.
3 ஆமோ. அ. கூ. மாற். கரு. கங. லூக். உங. சச.
4 எபி. ரு. எ.
5 சங். உஉ. க.
6 சங். கூகூ. உக. மாற். கரு. கசா. லூக். உங. கசா. யோவா. ககூ. உகூ.
7 மாற். கரு. கஎ. லூக். உங. சசா.
8 உ மோ. உசு. ஙங. உ நாளா. ங. கச. மாற். கரு. ஙஅ. லூக். உங. சரு.
9 கக. வசனம். மாற். கரு. ஙகூ. லூக். உங. சஎ.
10 லூக். அ. உ, ங.
11 மாற். கரு. சய.
12 மாற். கரு. சஉ. லூக். உங. ருய. யோவா. ககூ. ஙஅ.

Digitized by Google

வருடைய சரீரத்தை எடுத்து, துய்யதான மெல்லிய புடவையிலே சுற்றி,

சுல [1]தான் கல்மலையில் வெட்டுவித்திருந்த தன்னுடைய புதிய கல்லறையில் அதை வைத்து, அந்தக் கல்லறையின் வாசலில் ஒரு பெரிய கல்லைப் புரட்டிவைத்துப் போனான்.

சக அத்தருணத்திலே மகுதலா ஊராளாகிய மரியாளும் மற்ற மரியாளும் கல்லறைக்கு எதிராக உளுக்காந்திருந்தார்கள்.

சஉ ¶ எத்தன நாளுக்குப்பின்னான மறுநாளிலோ, பிரதான ஆசாரியரும் பரிசேயரும் பிலாத்துவினிடத்தில் கூடிவந்து சொன்னதாவது:

சங துரையே, அந்த எத்தன் உயிரோடிருந்தபொழுது, [2]தான் மூன்று நாளைக்குள்ளே எழுந்திருப்பேன் என்று அவன் சொன்னதை நினைத்திருக்கிறோம்.

சச ஆகையால் அவனுடைய சீஷர் இராத்திரியிலே வந்து அவனைக் களவாய்க் கொண்டுபோய், பின்பு மரித்தோரிலிருந்து எழுந்தானென்று சனங்களுக்குச் சொல்லாதபடிக்கும், முந்தின வஞ்சனையைப்பார்க்கிலும் பிந்தின வஞ்சனை கொடிதாகாதபடிக்கும், நீர் மூன்றும் நாள்வரைக்கும் கல்லறையைப் பத்திரம்பண்ணக் கட்டளையிடவேண்டும் என்றார்கள்.

சரு அதற்குப் பிலாத்து சொன்னது: காவல்பண்ணுகிற போர்ச்சேவகர்உங்களிடத்தில் உண்டே, அவர்களாலே நீங்கள் உங்கள் இஷ்டப்படி போய், கல்லறையைப் பத்திரம்பண்ணுங்கள் என்றான்.

சசு அந்தப்படி அவர்கள் போய், [3]கல்லில் முத்திரைபோட்டு, காவலுக்காகப் போர்ச்சேவகரை வைத்து, கல்லறையைப் பத்திரப்படுத்தினார்கள்.

இ. பி. ருரு.

1 ஏசா. ருங. கூ.
2 மத். ௰கூ. உக: ௰எ. உங: உ௦. ௰க: உக. கூக.
மாற். அ. நக: ௯. நக. ௰. ௩௪.
லூக். கூ. உஉ: ௰அ. நங: உச. சு, எ.
யோவா.உ.௰௯.
3 தானி. ௬. ௰எ.
4 மாற். ௰௬. க. லூக். உச. க. யோவா.உ௦. க.
5 மத். உஎ. ௫௬.
6 மாற். ௰௬. ௫. லூக். உச. ௪. யோவா. உ௦. ௰உ.
7 தானி.௰.சு.
8 மத். ௰உ. ௪௰: ௰௬. உக: ௰எ. உங: உ௦. ௰௯.
9 மத். உசு. நஉ. மாற். ௰௬. எ.

# உஅ. அதிகாரம்.

க. கிறிஸ்து உயிர்த்தெழுந்ததை ஒரு தூதன் ஸ்திரீகளுக்கு அறிவித்தது. கூ. அவர் அவர்களுக்குக் காணப்பட்டது. ௰க. அவருடைய சரீரம் கல்லறையினின்று திருடப்பட்டதென்று சொல்ல, பிரதான ஆசாரியர் போர்ச்சேவகருக்குப் பணங்கொடுத்தது. ௰௬. கிறிஸ்து தம்முடைய சீஷருக்குக் காட்சியாகி, ௰௯. அவர்கள் சகல சாதிக்கும் ஞானஸ்நானங்கொடுத்துப் போதிக்கும்படி அவர்களை அனுப்பினது.

[4]ஓய்வுநாள் முடிந்து, கிழமையின் முதலாம் நாள் பிறக்கையில், மகுதலா ஊர் மரியாளும் [5]மற்ற மரியாளும் கல்லறையைப் பார்க்கப் புறப்பட்டார்கள்.

உ அப்பொழுது பூமி மிகவும் அதிரத்தக்கதாக, [6]பராபரனுடைய தூதன் வானத்திலிருந்து இறங்கி வந்து, வாசலில் இருந்த கல்லைப் புரட்டித்தள்ளி, அதின்மேல் உளுக்காந்தான்.

ரு [7]அவனுடைய முகம் மின்னல்போலவும், அவனுடைய உடை உறைந்த மழையைப்போல வெண்மையாகவும் இருந்தது.

ச காவல்பண்ணுகிற போர்ச்சேவகர் அவனைக் கண்டு, பயத்தினால் அதிர்ந்து, செத்தவர்களைப்போல ஆனார்கள்.

ரு தூதனே அந்த ஸ்திரிகளை நோக்கி, நீங்கள் பயப்படாதிருங்கள்; சிலுவைமரத்தில் அறையப்பட்ட இயேசுவைத் தேடிவந்தீர்கள் என்று அறிந்திருக்கிறேன்.

சு [8]அவர் சொன்னபடியே எழுந்திருக்கிறார்; ஆகையால் அவர் இங்கே இல்லை; நீங்கள் வந்து, கர்த்தரை வைக்கப்பட்ட இடத்தைப் பார்த்து,

எ பின்பு சீக்கிரமாய்ப் போய், அவர் மரித்தோரிலிருந்து எழுந்திருக்கிறார், [9]உங்களுக்கு முன்னே கலிலேயாவுக்குப் போவார், அங்கே அவரைக் காண்பீர்கள் என்று அவருடைய சீஷருக்குஅறிவியுங்கள்; நான் உங்களுக்குச் சொன்னதை நினைத்துக்கொள்ளுங்கள் என்றான்.

Digitized by Google

௮ உடனே அவர்கள் பயத்தோடும் மிகுந்த சந்தோஷத்தோடும் கல்லறையை விட்டு, அவருடைய சீஷருக்கு அறிவிக்கும்படிக்கு ஓடிப்போனார்கள்.

௯ அப்படி அவர்கள் அவருடைய சீஷருக்கு அறிவிக்கப் போகையில் நடந்தது என்னவென்றால்; [1]இயேசுவானவர் தாமே அவர்களுக்கு எதிர்ப்பட்டு, நீங்கள் வாழ்க என்றார்; உடனே அவர்கள் சேர்ந்து சாஷ்டாங்கமாய் அவரை வணங்கி, அவருடைய பாதங்களைக் கட்டிக்கொண்டார்கள்.

௰ அப்பொழுது இயேசுவானவர் அவர்களுடனே சொன்னதாவது: [2]பயப்படாதிருங்கள்; என் சகோதரர் கலிலேயா நாட்டிலே என்னைக் காண்பார்கள்; ஆகையால் அவர்கள் அவ்விடத்திற்குப் போகும்படிக்கு நீங்கள் போய்ச் சொல்லுங்கள் என்றார்.

௰௧ ¶ அவர்கள் போகையில், காவல்பண்ணின சேவகரில் சிலர் பட்டணத்திலே வந்து, எல்லா நடக்கைகளையும் பிரதான ஆசாரியருக்கு அறிவித்தார்கள்.

௰௨ அப்பொழுது அவர்களும் மூப்பர்களும் கூடிவந்து யோசனை பண்ணின பின்பு, அவர்கள் அந்தப் போர்ச்சேவகருக்கு மிகுந்த பணத்தைக் கொடுத்து,

௰௩ நீங்கள் எப்படிச் சொல்லவேண்டும் என்றால், நாங்கள் நித்திரைபண்ணுகையில் அவனுடைய சீஷர்கள் அவனைக் களவாய்க் கொண்டுபோனார்கள் என்று சொல்லுங்கள்.

கி. பி. ௩௩.

1 மாற். ௰௬. ௯. யோவா. ௨௰. ௰௪.
2 யோவா. ௨௰. ௰௭. ௨கொ. ௮. ௨௯. எபி. ௨. ௰௧.
3 மத். ௨௬. ௩௨. ௭. வசனம்
4 தானி. ௭. ௰௩, ௰௪. மத். ௰௧. ௨௭: ௰௬. ௨௮. லூக். ௧. ௩௨: ௰. ௨௨. யோவா. ௩. ௩௫: ௫. ௨௨: ௰௩. ௩: ௰௭. ௨. அப். ௨. ௩௬. ௨கொ. ௰௫. ௨௭. எபே. ௧. ௰, ௨௧. பிலி. ௨. ௯, ௰. எபி. ௧. ௨: ௨. ௮. ௧பே. ௩. ௨௨. வெளி. ௰௭. ௰௪.
5 மாற். ௰௬. ௰௫.
6 ஏசா. ௫௨. ௰. லூக். ௨௪. ௪௭. அப். ௨. ௩௮, ௩௯. ௨கொ. ௰. ௰௮. கொலோ. ௧. ௨௩.
7 அப். ௨. ௪௨.

௰௪ துரை இதைக் கேள்விப்பட்டால் நாங்கள் அவரைச் சமாதானப்படுத்தி, உங்களுக்குக் கஸ்தி வராதபடிக்குச் செய்வோம் என்றார்கள்.

௰௫ ¶ போர்ச்சேவகர் அந்தப் பணத்தை எடுத்துக்கொண்டு, தாங்கள் அடைந்த போதிப்பின்படியே செய்தார்கள்; அப்படி இந்தச் சங்கதி யூதருக்குள்ளே இந்நாள்வரைக்கும் பிரசித்தமாய் இருக்கின்றது.

௰௬ ¶ [3]பதினொரு சீஷர்கள் கலிலேயா நாட்டில் இயேசுவானவர் தங்களுக்குக் குறித்திருந்த மலையின்மேல் போனார்கள்.

௰௭ அங்கே அவர்கள் அவரைக் கண்டு சாஷ்டாங்கமாய் வணங்கினார்கள்; சிலரோ சந்தேகப்பட்டார்கள்.

௰௮ அப்பொழுது இயேசுவானவர் சேர்ந்து, அவர்களுடனே திருவுளம்பற்றினதாவது: [4]பரமண்டலத்திற்கும் பூமண்டலத்திற்கும் சகல அதிகாரமும் எனக்குக் கொடுக்கப்பட்டிருக்கின்றது.

௰௯ ஆகையால் [5]நீங்கள் புறப்பட்டு, [6]உலகத்தார் எல்லாரையும் சீஷராக்கி. பிதா குமாரன் பரிசுத்தஆவியின் நாமத்தினாலே அவர்களுக்கு ஞானஸ்நானம் கொடுத்து,

௨௰ [7]நான் உங்களுக்குக் கட்டளையிட்ட யாவையும் அவர்கள் கைக்கொள்ளும்படி அவர்களுக்கு உபதேசம்பண்ணுங்கள்; கேளுங்கள், இம்மையின் முடிவுவரைக்கும் நான் எப்பொழுதும் உங்களுடனேகூட இருக்கிறேன் என்றார். ஆமென்.

Digitized by Google

# MARK.

# மாற்கு என்பவர்

## எழுதின சுவிசேஷம்.

### க. அதிகாரம்.

க. யோவான்ஸ்நானனுடைய உத்தியோகம். கூ. இயேசு ஞானஸ்நானம்பெற்று, ௧௨. சோதிக்கப்பட்டு, ௧௪. பிரசங்கம்பண்ணினது. ௧௬. அவர் பேதுருவையும் அந்திரேயாவையும், யாக்கோபையும், யோவானையும் அழைத்து. உங. பசாசுபிடித்திருந்த ஒருவனையும், உக. பேதுருவினுடைய மாமியையும், கஉ. மற்ற அநேகம் பிணியாளிகளையும் குணமாக்கி, ௪௧. ஒரு குஷ்டரோகியைச் சுத்தமாக்கினது.

[1]பராபரனுடைய குமாரனாகிய இயேசுக்கிறிஸ்துவைக்குறித்த சுவிசேஷத்தின் ஆரம்பம்.

உ இதோ, [2]நான் என்னுடைய தூதனை உமக்குமுன்பாக அனுப்புகிறேன்; அவன் உமக்குமுன்னே (போய்,) உம்முடைய மார்க்கத்தை எத்தனம்பண்ணுவான் என்றும், பராபரனுடைய மார்க்கத்தை ஆயத்தப்படுத்தி,

௩ [3]அவருடைய பாதைகளைச் செவ்வைபண்ணுங்கள் என்று வனாந்தரத்திலே ஒருவன் கூப்பிடுவான் என்றும், தீர்க்கதரிசிகள் எழுதினபடியே,

௪ [4]யோவான் என்பவன் வனாந்தரத்திலே ஞானஸ்நானம் கொடுத்து, பாவமன்னிப்பை அடையும்படிக்கு மனந்திரும்புகிறதற்கு ஏற்ற ஞானஸ்நானத்தைப் பிரசங்கம்பண்ணிக்கொண்டுவந்தான்.

௫ [5]அப்பொழுது யூதேயா தேசத்தார் அனைவரும் எருசலேம் பட்டணத்தார் எல்லாரும் புறப்பட்டு, அவனிடத்தில் போய், தங்கள் பாவங்களை அறிக்கையிட்டு, அவனாலே யோர்தான் நதியிலே ஞானஸ்நானம் பெற்றார்கள்.

௬ அந்த யோவான் [6]ஒட்டக மயிர் உடையைத் தரித்து, தன்னுடைய அரையில் வார்க்கச்சைக் கட்டிக்கொண்டவனுமாய், [7]வெட்டுக்கிளிகளையும் காட்டுத்தேனையும் புசிக்கிறவனுமாய் இருந்தான்.

௭ அக்காலத்திலே அவன் பிரசங்கம்பண்ணினதாவது: [8]என்னிலும் அதிக வல்லமையுடையவர் எனக்குப் பின் வருகிறார்; அவருடைய பாதரட்சைகளின் வாரைக் குனிந்து அவிழ்க்கிறதற்கு நான் பாத்திரவானல்ல.

௮ நான் [9]சலத்தினால் உங்களுக்கு ஞானஸ்நானம் கொடுத்தேன்; அவர் [10]பரிசுத்த ஆவியினாலே உங்களுக்கு ஞானஸ்நானம் கொடுப்பார் என்பதே.

௯ ¶ [11]அந்த நாள்களில் இயேசுவானவர் கலிலேயா நாட்டிலுள்ள நாசரேத்தூரிலிருந்து வந்து, யோர்தான் நதியிலே யோவானாலே ஞானஸ்நானம் பெற்று,

௰ [12]சலத்தினின்று ஏறினவுடனே வானம் பிரிந்ததையும் ஆவியானவர் புறாவைப்போலத் தம்மேல் இறங்கினதையும் கண்டார்.

௰க [13]அப்பொழுது, நீர் எனக்கு அன்பாயிருக்கிற என் குமாரன், உம்மில் பிரியமாய் இருக்கிறேன்

கி. பி. உசு.

1 மத். ௧௪. ௩௩. லூக். ௧. ௩௫.
2 யோவா. ௧.௩௪. மல்கி.௩.௧. மத். ௧௧. ௰. லூக். ௭. உ௭.
3 ஏசா. ௪௰. ௩. மத். ௩. ௩. லூக். ௩. ௪. யோவா. ௧. ௰௯, உ௩.
4 மத். ௩. ௧, ௨. லூக். ௩. ௩. யோவா. ௩.உ௩.
5 மத். ௩. ௫.
6 மத். ௩. ௪.
7 ௩ மோ. ௰௧. உஉ.
8 மத். ௩. ௰௧. யோவா.௧.உ௭. அப். ௰௩. உ௫.
9 அப்.௧. ௫: ௰௧. ௰௬: ௰௯. ௪.
10 ஏசா. ௪௪. ௩. யோவே. உ. உ௮. அப். உ. ௪: ௰. ௪௫: ௰௧. ௰௫,௰௬.௧கொரி. ௰உ. ௰௩.
11 மத். ௩. ௰௩. லூக். ௩. உ௧.
12 மத். ௩. ௰௬. யோவா. ௧.௩௨.
13 சங். உ. ௭. மத்.௩.௰௭. மாற். ௯. ௭.



Digitized by Google

என்று பரமண்டலங்களிலிருந்து சத்தம் உண்டாயிற்று.

௰௨ ¶ [1]அதின் பின்பு ஆவியானவர் அவரை வனாந்தரத்திற்குப் போகப்பண்ணினார்.

௰௩ அந்த வனாந்தரத்திலே அவர் நாற்பது நாள் இருந்து, சாத்தானாலே சோதிக்கப்பட்டு, காட்டு மிருகங்களுக்குள்ளே இருந்தார்; [2]பின்பு தேவதூதர்கள் அவருக்கு ஊழியம் செய்தார்கள்.

௰௪ ¶ [3]யோவான் காவலில் வைக்கப்பட்ட பின்பு, இயேசுவானவர் கலிலேயா நாட்டிலே வந்து,

௰௫ [4]காலம் நிறைவேறியிருக்கின்றது; [5]பராபரனுடைய இராச்சியம் சமீபமாய் வந்தது, நீங்கள் மனந்திருப்பிச் சுவிசேஷத்தை விசுவாசித்துக்கொள்ளுங்கள் என்று [6]பராபரனுடைய இராச்சியத்தைக்குறித்துச் சுவிசேஷத்தைப் பிரசங்கம்பண்ணினார்.

௰௬ ¶ [7]அல்லாமலும், இயேசுவானவர் கலிலேயா நாட்டின் கடல் அருகே நடக்கையில், மீன்பிடிக்கிறவர்களாகிய சீமோனும், அவனுடைய சகோதரன் அந்திரேயாவும் கடலில் வலை வீசியிருக்கிறபொழுது,

௰௭ அவர்களைக் கண்டு, எனக்குப் பின்சென்று வாருங்கள், உங்களை நான் மனிதரைப் பிடிக்கிறவர்களாக்குவேன் என்றார்.

௰௮ [8]உடனே அவர்கள் தங்கள் வலைகளை விட்டு, அவரைப் பின்பற்றினார்கள்.

௰௯ [9]அவர் அவ்விடம்விட்டுச் சற்றேதூரம் போன பின்பு, செபெதேயுவின் குமாரன் யாக்கோபும், அவனுடைய சகோதரன் யோவானும் படவிலே வலைகளை முடிந்துகொண்டு இருக்கையில், அவர்களைக்கண்டு, உடனே அவர்களையும் அழைத்தார்.

௨௰ அப்பொழுது கூலியாள்களுடனே கூடப் படவில் இருக்கிற தங்கள் தகப்பனாகிய செபெதேயுவைவிட்டு, அவருக்குப் பின்சென்றார்கள்.

௨௧ ¶ [10]பின்பு கப்பர்நாகூம் ஊரில் பிரவேசித்தார்கள்; ஓய்வுநாளிலே அவர் தாமதியாமல் செபஆலயத்திற்குப் போய், போதகம் பண்ணினார்.

௨௨ [11]அவர் வேதபாரகரைப் போல அல்ல, அதிகாரம் உடையவரைப்போலப் போதகம்பண்ணினபடியினாலே, சனங்கள் அவருடைய உபதேசத்தைக்குறித்துப் பிரமித்தார்கள்.

௨௩ [12]அவர்களுடைய செபஆலயத்திலே அசுத்த ஆவியுள்ள ஒரு மனிதன் இருந்தான்.

௨௪ [13]அவன், நாசரேத்து ஊரானாகிய இயேசுவே, எங்களுக்கும் உமக்கும் என்ன? எங்களைக் கெடுக்கவா வந்தீர்? உம்மை அறிந்திருக்கிறேன், நீரே பராபரனுடைய பரிசுத்தரென்று கூப்பிட்டான்.

௨௫ [14]இயேசுவானவர் சொன்னது: நீ பேசாமல் இவனைவிட்டுப் புறப்பட்டுப் போ என்று அவனிலுள்ள (ஆவியை) அதட்டினார்.

௨௬ [15]அப்பொழுது அந்த அசுத்த ஆவி அவனை அலைக்கழித்து, மிகுந்த சத்தமாய்க் கூப்பிட்டுப் புறப்பட்டுப் போயிற்று.

௨௭ (அதைக்கண்ட) எல்லாரும் பிரமிப்படைந்து ஒருவரை ஒருவர் பார்த்து, இவர் அதிகாரத்தோடே அசுத்த ஆவிகளுக்கும் கட்டளையிடுகிறார், உடனே அவைகள் இவருக்குக் கீழ்ப்படிகின்றன; இதென்ன, இது எப்படிப்பட்ட புதிய உபதேசம் என்று சொல்லிக்கொண்டார்கள்.

௨௮ அதுமுதல் அவருடைய கீர்த்தி கலிலேயாநாட்டின் திசைகளில் எங்கும் பிரசித்தமாயிற்று.

௨௯ [16]உடனே அவர்கள் செபஆலயத்தைவிட்டுப் புறப்பட்டு, யாக்கோபோடும் யோவானோடும் கூடச் சீமோன் அந்திரேயா என்-

கி. பி. ௬௯.

1 மத். ௪. ௧. லூக். ௪. ௧.
2 மத். ௪. ௰௧.
3 மத். ௪. ௰௨.
4 தானி. ௯. ௨௫. கலா. ௪. ௪. எபே. ௧. ௰.
5 மத். ௩. ௨: ௪. ௰௭.
6 மத். ௪. ௨௩.
7 மத். ௪. ௰௮. லூக். ௫. ௪.
8 மத். ௰௯. ௨௭. லூக். ௫. ௰௧.
9 மத். ௪. ௨௧.
10 மத். ௪. ௰௩. லூக். ௪. ௩௧.
11 மத். ௭. ௨௮.
12 லூக். ௪. ௩௩.
13 மத். ௮. ௨௯.
14 ௩௪. வசனம்.
15 மாற். ௯. ௨௰.
16 மத். ௮. ௰௪. லூக். ௪. ௩௮.

Digitized by Google

பவர்களுடைய வீட்டில் வந்தார்கள்; அங்கே சீமோனுடைய மாமி சுரமாய்க் கிடந்தாள்.

௩0 உடனே அவர்கள் அவளைக் குறித்து அவருக்குச் சொன்னார்கள்.

௩௧ அவர் போய், அவளுடைய கையைப்பிடித்து, அவளைத் தூக்கிவிட்டார்; உடனே சுரம் அவளைவிட்டு நீங்கிற்று; அவள் அவர்களுக்குப் பணிவிடைசெய்தாள்.

௩௨ ¶ [1]சூரியன் அஸ்தமிக்கும் மாலைக்காலத்திலே சகலவிதமான பிணியாளிகளையும் பசாசுபிடித்தவர்களையும் அவரிடத்தில் கொண்டுவந்தார்கள்.

௩௩ அல்லாமலும் பட்டணத்தார் எல்லாரும் (அவர் இருந்த) வீட்டுவாசலுக்கு முன்பாகக் கூடி வந்தார்கள்.

௩௪ அப்பொழுது அவர் பல வியாதிகளால் உபத்திரவப்படுகிற அநேகரைக் குணமாக்கி, அநேகம் பசாசுகளையும் துரத்தினார்; [2]தம்மை அந்தப் பசாசுகள் அறிந்தபடியால், அவைகள் *பேசுகிறதற்கு அவர் இடம்கொடுக்கவில்லை.

௩௫ ¶ [3]அதிகாலையிலே இருட்டோடே அவர் எழுந்திருந்து புறப்பட்டு, வனாந்தரமான ஓர் இடத்திற்குப் போய், அங்கே செபம் பண்ணினார்.

௩௬ சீமோனும் அவனோடிருந்தவர்களும் அவருக்குப் பின்னே போய் அவரைக் கண்டபொழுது,

௩௭ சனங்கள் எல்லாரும் உம்மைத் தேடுகிறார்கள் என்று சொன்னார்கள்.

௩௮ அவர்களுடனே அவர் சொன்னது: [4]பிரசங்கம் பண்ணும்படிக்குப் புறப்பட்டேனே, [5]ஆகையால் இங்கே சுற்றியிருக்கிற கிராமங்களுக்கும் போவோம் வாருங்கள் என்று சொல்லி,

௩௯ (புறப்பட்டு,) [6]கலிலேயா நாட்டிலெங்கும் (போய்,) சனங்களுடைய செபஆலயங்களில் பிரசங்கம்பண்ணிப் பசாசுகளைத் துரத்தினார்.

௪0 ¶ அப்படியிருக்கையில், [7]ஒரு குஷ்டரோகி அவரிடத்தில் வந்து முழங்காற்படியிட்டு, உமக்குச் சித்தமானால் என்னைச் சுத்தமாக்க உம்மால் ஆகுமென்று அவரை வேண்டிக்கொண்டான்.

௪௧ இயேசுவானவர் மனதுருகிக் கையை நீட்டி அவனைத் தொட்டு, எனக்குச் சித்தமுண்டு, சுத்தமாகு என்றார்.

௪௨ இப்படி அவர் சொல்லுகையில், உடனே குஷ்டரோகம் அவனைவிட்டு நீங்க, அவன் சுத்தமானான்.

௪௩ பின்பு அவர் அவனை நோக்கி, நீ இதை ஒருவருக்கும் சொல்லவேண்டாம்; அல்லாமலும் நீ போய், உன்னை ஆசாரியனுக்குக் காண்பித்து, உனக்கு உண்டான சுத்தத்தைக்குறித்து அவர்களுக்குச் சாட்சியாகும்படிக்கு [8]மோசே கட்டளையிட்டவைகளைப் பலியிடு என்று கண்டிப்பாய்ச்சொல்லி,

௪௪ உடனே அவனை அனுப்பிவிட்டார்.

௪௫ [9]அப்படியிருந்தும், அவன் புறப்பட்டுப் போய், இச்சங்கதியை மிகவும் பிரசங்கிக்கவும் அறிவிக்கவும் தொடங்கினான்; [10]ஆதலால் அவர் வெளியரங்கமாய்ப் பட்டணத்தில் பிரவேசிக்கமாட்டாமல், வெளியாகிய வனாந்தரமான இடங்களிலே தங்கி வந்தார்; அங்கேயும் எல்லாத் திசைகளில் இருந்தும் அவரிடத்திற்கு வந்தார்கள்.

## உ. அதிகாரம்.

க. கிறிஸ்து ஒரு திமிர்வாதக்காரனைக் குணமாக்கி, ௧௪. ஆயத்துறையில் இருந்த மத்தேயுவை அழைத்து, ௧௫. ஆயக்காரரோடும், பாவிகளோடும் சாப்பிட்டு, ௧௮. தம்முடைய சீஷர்கள் உபவாசம்பண்ணாதிருந்ததைக்குறித்தும், ௨௩. ஓய்வுநாளில் கதிர்களைக் கொய்ததைக்குறித்தும் உத்தரவு சொன்னது.

[11]சில நாளுக்குப்பின்பு அவர் மறுபடியும் கப்பர்நாகூம் ஊருக்குப்

கி. பி. ௩௧.

1 மத். அ. ௧௬. லூக். ௪. ௪0.
2 மாற். ௩. ௧௨. லூக். ௪. ௪௧. அப். ௧௬. ௧௭, ௧௮.
* அல்லது தன்னை அறிந்திருந்ததென்று சொல்லவொட்டாதிருந்தார்.
3 லூக். ௪. ௪௨.
4 ஏசா. ௬௧. ௧. யோவா. ௧௬. ௨௮: ௧௭. ௪.
5 லூக். ௪. ௪௩.
6 மத். ௪. ௨௩. லூக். ௪. ௪௪.
7 மத். அ. உ. லூக். ௫. ௧௨.
8 ௩ மோ. ௧௪. ௩, ௪, ௰. லூக். ௫. ௧௪.
9 லூக். ௫. ௧௫.
10 மாற். உ. ௧௩.
11 மத். ௯. ௧. லூக். ௫. ௧௮.

Digitized by Google

போனார்; அவர் வீட்டிலே இருக்கிறார் என்று சனங்கள் கேள்விப்பட்டபொழுது,

௨ உடனே வாசற்படிக்குவெளியிலேயும் இடமில்லாதிருக்கத்தக்கதாக அநேகர்கூடிவந்தார்கள்; அவர்களுக்கு (சுவிசேஷ) வசனத்தைப் போதித்தார்.

௩ அப்பொழுது நாலுபேர் ஒரு திமிர்வாதக்காரனைச் சுமந்துகொண்டு, அவரிடத்திற்கு வந்தார்கள்.

௪ சனங்கள் மிகுதியானபடியினாலே அவர்கள் அவருக்குச் சமீபமாய்ச்சேர இடம்பெறாமல், அவர் இருந்தவீட்டின் மேற்கூரையைப் பிரித்து வழியுண்டாக்கி, திமிர்வாதக்காரன் கிடக்கிற படுக்கையை இறக்கினார்கள்.

௫ இயேசுவானவர் அவர்களுடைய விசுவாசத்தைக் கண்டு, திமிர்வாதக்காரனை நோக்கி, மகனே, உன் பாவங்கள் மன்னிக்கப்பட்டன என்றார்.

௬ அங்கே உளுக்காந்திருந்த வேதபாரகரில் சிலர் (அதைக்கேட்டு,)

௭ இப்படித் தேவதூஷணங்களாக இவன் சொல்லுகிறதென்ன? [1]பராபரன் ஒருவருக்கேயன்றி மற்றொருவனுக்கும் பாவங்களை மன்னிக்க வல்லமை உண்டா என்று தங்கள் இருதயங்களிலே சிந்தித்துக்கொண்டார்கள்.

௮ [2]அவர்கள் அப்படித் தங்களுக்குள்ளே சிந்தித்திருக்கிறார்கள் என்று இயேசுவானவர் தம்முடைய ஆவியினாலே அறிந்து, உடனே அவர்களை நோக்கி, நீங்கள் உங்கள் இருதயங்களில் இப்படி என் சிந்திக்கிறீர்கள்?

௯ [3]இந்தத் திமிர்வாதக்காரனுடனே, உன் பாவங்கள் மன்னிக்கப்பட்டன என்று சொல்லுகிறதோ, எழுந்திருந்து உன் படுக்கையை எடுத்துக்கொண்டு நடவென்று சொல்லுகிறதோ, எது எளிது?

௰ மனிதனுடைய குமாரன் பூமியிலே பாவங்களை மன்னிக்கிறதற்கு அதிகாரம் உடையவனாய் இருக்கிறதை,

௰௧ நீங்கள் அறியும்படிக்குப் (பாருங்களென்று) திமிர்வாதக்காரனை நோக்கி, நீ எழுந்திருந்து, உன் படுக்கையை எடுத்துக்கொண்டு, உன் வீட்டிற்குப் போவென்று உனக்குக் கட்டளையிடுகிறேன் என்றார்.

௰௨ உடனே அவன் எல்லாருக்கும் முன்பாக எழுந்திருந்து, தன் படுக்கையை எடுத்துக்கொண்டு போனான்; அப்பொழுது யாவரும் பிரமித்து, நாம் ஒருக்காலும் இப்படிக் காணவில்லையே என்று சொல்லிப் பராபரனைப் புகழ்ந்தார்கள்.

௰௩ ¶ [4]பின்பு அவர் புறப்பட்டு மறுபடியும் கடலின அருகே போனபொழுது, சனங்கள் எல்லாரும் அவரிடத்தில் வந்தார்கள்; அவர்களுக்கு உபதேசம்பண்ணினார்.

௰௪ [5]அவர் கடந்துபோகையில், ஆயத்துறையில் உளுக்காந்திருக்கிற அல்பேயுவின் குமாரனாகிய லேவி என்பவனைக் கண்டு, நீ எனக்குப் பின்சென்று வா என்றார்; அவன் எழுந்து அவருக்குப் பின்சென்றான்.

௰௫ [6]அல்லாமலும் அவனுடைய வீட்டிலே அவர் போசனபந்தியிருக்கையில், அநேகம் ஆயக்காரரும் பாவிகளும் அவருக்குப் பின்சென்று வந்தபடியால், அவர்களும் இயேசுவானவருடனேயும் அவருடைய சீஷருடனேயும்கூடப் பந்தியில் இருந்தார்கள்.

௰௬ அப்படி அவர் ஆயக்காரரோடும் பாவிகளோடும் போசனம்பண்ணுகிறதை வேதபாரகரும் பரிசேயரும் கண்டு, அவருடைய சீஷரை நோக்கி, அவர் ஆயக்காரரோடும் பாவிகளோடும் போசனம் பண்ணலாமா என்றார்கள்.

இ. பி. ௬௧.

1 யோபு. ௰௪. ௪. ஏசா. ௪௩. ௨௫.
2 மத். ௯. ௪.
3 மத். ௯. ௫.
4 மத். ௯. ௯.
5 மத். ௯. ௯. லூக். ௫. ௨௭.
6 மத். ௯. ௰.

Digitized by Google

௰எ இயேசுவானவர் அதைக் கேட்டு, அவர்களை நோக்கி, [1]சொஸ்தமுள்ளவர்களுக்கு வயித்தியன் வேண்டுவதில்லை, வியாதியுள்ளவர்களுக்கே அவன் வேண்டும்; நான் நீதிமான்களை அல்ல, பாவிகளையே மனந்திருப்புதலுக்கு அழைக்க வந்தேன் என்றார்.

௰அ ¶ [2]அன்றியும் யோவானுடைய சீஷரும் பரிசேயருடைய சீஷரும் உபவாசம்பண்ணி வந்தார்கள்; அப்பொழுது சிலர் அவரிடத்தில் வந்து, யோவானுடைய சீஷரும் பரிசேயருடைய சீஷரும் உபவாசம்பண்ணுகிறார்கள், உம்முடைய சீஷர்மாத்திரம் ஏன் உபவாசம்பண்ணவில்லை என்றார்கள்.

௰௯ அதற்கு இயேசுவானவர் சொன்னது: கலியாணத்திற்குவந்த மனிதர், தங்களுடனே மணவாளன் இருக்கையில் உபவாசம் பண்ணுவார்களா? தங்களுடனே மணவாளன் இருக்கிற காலத்திலே உபவாசம்பண்ணமாட்டார்களே.

உ௰ மணவாளன் அவர்களை விட்டு நீக்கப்படும் காலம் வருகின்றது, அக்காலத்திலே அவர்கள் உபவாசம்பண்ணுவார்கள்.

உக ஒருவனும் கோடித்துண்டைப் பழைய வஸ்திரத்தில் இணைக்கமாட்டான்; இணைத்தால் அதில் இணைத்த புதிய துண்டு பழைய வஸ்திரத்தில் எடுபட்டுப் போக, அதிக பொத்தல் உண்டாகுமே.

உஉ அல்லாமலும் ஒருவனும் திராட்சரசங்களின் புதிய இரசத்தைப் பழைய துருத்திகளில் வார்த்து வைக்கமாட்டான்; வைத்தால், அந்தப் புதிய இரசம் துருத்திகளைக் கிழித்துப்போடும், இரசமும் சிந்திப்போகும், துருத்திகளும் கெட்டுப்போகும்; புதிய இரசத்தைப் புதிய துருத்திகளில் வார்த்துவைக்கவேண்டுமே என்றார்.

இ. பி. ௬௧.

1 மத். ௯. ௰௨, ௰௩: ௰ஆ. ௰௧. லூக். ௫. ௩௧, ௩௨: ௰௯.௰.௧தீமோ. ௧. ௰௫.

2 மத். ௯. ௰௪. லூக். ௫. ௩௩.

3 மத். ௰௨. ௧. லூக். ௬. ௧.

4 உபா. உ௩. உ௫.

5 ௧ சாமு. உ௧. ௬.

6 ௨ மோ. உ௯. ௩௨, ௩௩. ௩மோ. உ௪. ௯.

7 மத். ௰௨. ௮.

8 மத். ௰௨. ௯. லூக். ௬. ௬.

உ௩ ¶ [3]பின்பு ஓய்வுநாளில் அவர் பயிர்வழியே போனபொழுது, அவருடைய சீஷர் நடக்கையில், [4]கதிர்களைக் கொய்யத் தொடங்கினார்கள்.

உ௪ ஆதலால் பரிசேயர் அவரை நோக்கி, இதோ, இவர்கள் ஓய்வுநாளில் செய்யத் தகாததை ஏன் செய்கிறார்கள் என்றார்கள்.

உ௫ அவர்களுக்கு அவர் சொன்னது: அபியத்தாரென்னும் பிரதான ஆசாரியனுடைய நாள்களிலே [5]தாவீது தாழ்வுபட்டு, தானும் தன்னோடிருந்தவர்களும் பசியாய் இருந்தபொழுது,

உ௬ தேவாலயத்திற்கு உட்பிரவேசித்து, [6]ஆசாரியரேயன்றி மற்றொருவரும் புசிக்கத்தகாத தேவசமுகத்தப்பங்களைப் புசித்ததையும், தன்னோடிருந்தவர்களுக்குக் கொடுத்ததையும், நீங்கள் ஒருக்காலும் அறியவில்லையோ என்று சொல்லி,

உஎ பின்பு மனிதர் ஓய்வுநாளுக்காக உண்டாக்கப்படவில்லை, ஓய்வுநாள் மனிதருக்காக உண்டாக்கப்பட்டது.

உஅ ஆகையால் [7]மனிதனுடைய குமாரன் ஓய்வுநாளின் கர்த்தனாய் இருக்கிறான் என்றார்.

## ௩. அதிகாரம்.

க. கிறிஸ்துவானவர் சூம்பின கையுள்ளவனையும், ௰. மற்றப் பிணியாளிகளையும் குணமாக்கி, ௰௧. அசுத்த ஆவிகளை அதட்டி, ௰௪. பன்னிரண்டு அப்போஸ்தலர்களையும் தெரிந்துகொண்டு, உஉ. பெயேல்செபூலினால் பசாசுகளைத் துரத்துகிறேனென்ற அபவாதத்தை எடுத்துக்காட்டி, ௩௧. தம்முடைய சகோதரர்களும், சகோதரிகளும், தாயாரும் இன்னார் என்று காட்டினது.

[8]மறுபடியும் அவர் ஜெபஆலயத்தில் பிரவேசித்தார்; அங்கே சூம்பின கையையுடைய ஒரு மனிதன் இருந்தான்.

உ அவர் ஓய்வுநாளில் அவனைச் சொஸ்தமாக்கினால் அவர்மேல் குற்றம்சாற்றலாமென்று அவர்கள் எண்ணி, அவரை உற்றுப்பார்த்துக்கொண்டிருந்தார்கள்.

Digitized by Google

௩ ஆதலால் அவர் சூம்பினகையுள்ளவனை நோக்கி, நீ எழுந்து நடுவிலே வந்திரு* என்று சொல்லி,

௪ பின்பு அவர்களை நோக்கி, ஓய்வுநாள்களில் நன்மைசெய்கிறதோ தீமைசெய்கிறதோ, சீவனை இரட்சிக்கிறதோ சீவனை வாங்குகிறதோ, எது நியாயமாய் இருக்கின்றதென்று கேட்டார்; அவர்கள் பேசாமல் இருந்தார்கள்.

௫ அப்பொழுது அவர் அவர்களுடைய இருதயத்தின் கடினத்தினாலே †விசனப்பட்டுக் கோபத்தோடே அவர்களைச் சுற்றிப்பார்த்து, பின்பு அந்த மனிதனை நோக்கி, உன் கையை நீட்டு என்றார்; அவன் நீட்டினான்; உடனே அது மற்றக் கையைப்போல சொஸ்தமாயிற்று.

௬ [1]பின்பு பரிசேயர் புறப்பட்டுப் போய், அவரை அழிக்கும்படிக்கு [2]ஏரோதேயின் மனிதரோடுங்கூட அவருக்கு விரோதமாய் உடனே ஆலோசனைபண்ணினார்கள்.

௭ ¶ இயேசுவானவர் தம்முடைய சீஷருடனே கூட அவ்விடம்விட்டுக் கடலோரத்திற்குப் போனார்.

௮ [3]கலிலேயா நாட்டிலும், யூதேயா நாட்டிலும்,எருசலேம் நகரத்திலும்,இதுமேயா நாட்டிலும்,யோர்தான் நதியின் ஓரங்களிலுமிருந்து மிகவும் திரளாக வந்த சனங்கள் அவருக்குப் பின்சென்றார்கள்; அல்லாமலும் தீருசீதோன் என்னும் பட்டணங்களின் திசைகளிலிருந்து மிகவும் திரளாக வந்த சனங்கள் அவர் செய்த அற்புதங்களைக் கேள்விப்பட்டு,அவரிடத்தில் வந்தார்கள்.

௯ அப்பொழுது அநேகரை அவர் சொஸ்தமாக்கினபடியினாலே, உபத்திரவப்பட்டவர்கள் எவர்களோ, அவர்கள் அவரைத் தொடும்படிக்கு அவர்மேலே விழுந்தார்கள். ‡

௰ ஆதலால் தாம் சனங்களால் நெருக்கப்படாதபடிக்குஅவர் தம்முடைய சீஷரை நோக்கி, தமக்காக ஒரு படவை எத்தனம்பண்ணச் சொன்னார்.

௰௧ [4]அசுத்தமான ஆவிகளும் அவரைக் கண்டஉடனே அவருக்கு முன்பாக விழுந்து, [5]நீர் பராபரனுடைய குமாரனென்று கூப்பிட்டார்கள்.

௰௨ [6]தம்மை அவர்கள் பிரசித்தம்பண்ணாதபடிக்கு, அவர்களுக்குக் கண்டிப்பாய்க் கட்டளையிட்டார்.

௰௩ ¶ பின்பு [7]அவர் ஒரு மலையின்மேல் ஏறித் தமக்குச் சித்தமானவர்களை வரவழைத்தார், அவர்கள் அவரிடத்தில் வந்தார்கள்.

௰௪ அப்பொழுது அவர் தம்முடனேகூட இருக்கவும், (சுவிசேஷத்தை)பிரசங்கம்பண்ணும்பொருட்டாய் அனுப்பவும்,

௰௫ வியாதிகளை நீக்கிப் பசாசுகளைத் துரத்தத்தக்கதாக அதிகாரமுள்ளவர்களாகவும், பன்னிரண்டுபேரை ஏற்படுத்தினார்.

௰௬ அவர்கள் யாரெனில், [8]சீமோன், செபேதேயுவின் குமாரனாகிய யாக்கோபு,

௰௭ யாக்கோபின் சகோதரனாகிய யோவான், அந்திரேயா, பிலிப்பு, பருத்தொலோமேயு, மத்தேயு, தோமா, அல்பேயுவின் குமாரனாகிய யாக்கோபு, ததேயு, கானானாகிய சீமோன்,

௰௮ அவரைக் காட்டிக்கொடுத்த யூதாஸ்காரியோத்து என்பவர்களே.

௰௯ இவர்களில் முந்தின சீமோனுக்குப் பேதுரு என்றும், செபேதேயுவின் குமாரராகிய யாக்கோபுக்கும் யோவானுக்கும் போவநெர்கேஸ் என்றும் நாமங்களைக் கொடுத்தார்;போவநெர்கேஸ் என்பதற்கு இடிமுழக்கம் இடுகிறவர்களென்று அருத்தமாம்.

கி. பி. ௩௧.

* அல்லது நடுவே நில்.

† அல்லது அந்தகாரத்துக்காக.

1 மத். ௰௨. ௰௪.
2 மத். ௰௨. ௰௬.
3 லூக். ௬. ௱௭.

‡ அல்லது நெருக்கினார்கள்.

4 மாற். ௧. ௨௩, ௨௪. லூக். ௪. ௪௧.
5 மத். ௰௪. ௩௩. மாற். ௧. ௧.
6 மாற். ௧. ௨௫, ௩௪. மத். ௰௨. ௰௬.
7 மத். ௰. ௧. லூக். ௬. ௰௨: ௯. ௧.
8 யோவா. ௧. ௪௨.

Digitized by Google

௰௯ ¶ பின்பு வீட்டிற்குப் போனார்கள்.

௨௰ [1]அங்கே அவர்கள் போசனம்பண்ணுகிறதற்குக் காலமில்லாதபடிக்கு அநேக சனங்கள் மறுபடியும் கூடிவந்தார்கள்; அவருடைய இனத்தார்* அதைக் கேட்டு, [2]அவருக்கு மயக்கமுண்டாயிற்று என்று சொல்லி, அவரைப் பிடித்துக்கொள்ளும்படிக்கு வந்தார்கள்.

௨௨ எருசலேம் நகரத்திலிருந்து வந்த வேதபாரகர் [3]அவன் பெயேல்செபூலைக்கொண்டிருக்கிறான்; பசாசுகளுடைய தலைவனாலே பசாசுகளைத் துரத்துகிறான் என்றார்கள்.

௨௩ [4]அவர்களை அவர் அழைத்து, உவமைகளால் அவர்களுடனே சொன்னதாவது: சாத்தான் சாத்தானைத் துரத்துவதெப்படி?

௨௪ ஒரு இராச்சியத்தார் தங்களுக்குள்ளே பிரிவினை உண்டுபண்ணினால் அந்த இராச்சியம் நிலைநிற்கமாட்டாதே.

௨௫ ஒரு குடும்பத்தார் தங்களுக்குள்ளே பிரிவினை உண்டுபண்ணினால் அந்தக் குடும்பம் நிலைநிற்கமாட்டாதே.

௨௬ (அப்படிப்போல) சாத்தான் தனக்குத்தானே விரோதமாக எழும்பிப் பிரிந்தால் அவன் நிலைநிற்கமாட்டாமல் முடிவு அடைவான்.

௨௭ [5]ஒருவன் முன்பு பெலவானைக் கட்டாவிட்டால் அவனுடைய வீட்டிலே பிரவேசிக்கவும் அவனுடைய ஆஸ்திகளைக் கொள்ளையிடவும் மாட்டான்; (கட்டினால்) அவனுடைய வீட்டைக் கொள்ளையிடுவான்.

௨௮ [6]மனிதர் செய்கிற பாவங்கள் யாவும் அவர்கள் செய்கிற எந்த தூஷணங்களும் மன்னிக்கப்படும்.

௨௯ பரிசுத்த ஆவியைத் தூஷணிக்கிறவன்மாத்திரம் என்றென்றைக்கும் மன்னிப்படையாமல், நித்திய ஆக்கினைக்குப் பாத்திரனாய் இருக்கிறான் என்று மெய்யாய் உங்களுக்குச் சொல்லுகிறேன் என்றார்.

௩௰ அசுத்தமான ஆவியைக்கொண்டிருக்கிறான் என்று அவர்கள் சொன்னபடியினாலே (அவர் இப்படிச் சொன்னார்.)

௩௧ ¶ [7]அத்தருணத்திலே அவருடைய தாயாரும் சகோதரரும் வந்து வெளியே நின்று, அவரை அழைக்கும்படி ஆளனுப்பினார்கள்.

௩௨ அப்பொழுது அவரைச் சுற்றி உளுக்காந்த சனங்கள் அவரை நோக்கி, அதோ, உம்முடைய தாயாரும் உம்முடைய சகோதரரும் வெளியே நின்று உம்மைத் தேடுகிறார்கள் என்றார்கள்.

௩௩ அதற்கு அவர், என்னுடைய தாயும் என்னுடைய சகோதரரும் யார் என்று சொல்லி,

௩௪ தம்மைச் சூழ உளுக்காந்தவர்களைச் சுற்றிப் பார்த்து, என்னுடைய தாயும் என் சகோதரரும் இவர்களே.

௩௫ எப்படியெனில், பராபரனுடைய சித்தத்தின்படி செய்கிறவன் எவனோ, அவனே என் சகோதரன், என் சகோதரி, என் தாயாயிருக்கிறான் என்றார்.

## ௪. அதிகாரம்.

௧. விதைக்கிறவனைக்குறித்த உவமை. ௰௪. அதின் வியாக்கியானம். ௨௧. சமது மெய்க்ஞானத்தைக் காட்டவேண்டியது. ௨௬. மறைவாய் வளர்ந்த விதையையும், ௩௰. கடுகு விதையையும், உவமையாகக்காட்டியது. ௩௫. கிறிஸ்து கடற்கொந்தளிப்பை அமர்த்தினது.

பின்பு அவர் மறுபடியும் [8]கடலோரத்திலே போதகம்பண்ணத் தொடங்கினார்; மிகுந்த சனங்கள் கூடி அவரிடத்தில் வந்தபடியினாலே, அவர் படவில் ஏறிக் கடலில் உளுக்காந்தார்; சனங்களெல்லாரும் கடற்கரையில் இருந்தார்கள்.

௨ அப்பொழுது அவர் உவமைகளாய் அநேக காரியங்களை அவர்

கி. பி. ௩௧.

1 மாற். ௬. ௩௧.

* அல்லது சிநேகிதர்.

2 யோவா. ௭. ௫: ௰. ௨௰.

3 மத். ௯. ௩௪: ௰. ௨௫. லூக். ௰௧.௰௫. யோவா. ௭.௨௰: ௮.௪௮, ௫௨: ௰. ௨௰.

4 மத். ௰௨. ௨௫.

5 ஏசா. ௪௯.௨௪. மத். ௰௨. ௨௯.

6 மத். ௰௨. ௩௧. லூக். ௰௨. ௰. ௧ யோ. ௫. ௰௬.

7 மத். ௰௨. ௪௬. லூக். ௮. ௰௯.

8 மத். ௰௩.௧. லூக். ௮. ௪.

Digitized by Google

களுக்குப் போதித்தார்; [1]போதிக்கிறபொழுது அவர்களுடனே சொன்னதாவது: கேளுங்கள்,

௩ விதைக்கிறவன் விதைக்கப் புறப்பட்டான்.

௪ அவன் விதைக்கையில், சில விதை வழியருகே விழுந்தன; அப்பொழுது ஆகாயத்தின் பறவைகள் வந்து, அதைப் பட்சித்தன.

௫ சில விதை மிகுந்த மண்ணில்லாத கற்பாறை நிலத்தில் விழுந்தன; அதற்கு மிகுந்த மண் இல்லாததினால் உடனே முளைத்து,

௬ சூரியகாந்தி தோன்றினபொழுது தீய்ந்து, அவைகளுக்கு வேர் இல்லாமையினால் உலர்ந்துபோயின.

௭ சில விதை முள்ளுக்களுள்ள நிலத்திலே விழுந்தன; முள்ளுக்கள் எழும்பி அவை பலன் கொடாதபடிக்கு அவைகளை நெருக்கிப்போட்டன.

௮ சில விதை நல்ல நிலத்தில் விழுந்து ஓங்கி வளர்ந்து, [2]ஒன்று முப்பதும், ஒன்று அறுபதும், ஒன்று நூறுமாகப் பலன் கொடுத்தன.

௯ கேட்கிறதற்குக் காதுள்ளவன் கேட்கக்கடவன் என்று திருவுளம் பற்றினார்.

௰ ¶ பின்பு [3]அவர் தனித்திருக்கையில், பன்னிருவரோடுங்கூட அவரைச் சூழ இருந்தவர்கள் அந்த உவமையைக்குறித்து அவரிடத்தில் விசாரித்தார்கள்.

௰௧ அவர்களுடனே அவர் சொன்னது: பராபரனுடைய இராச்சியத்தின் இரகசியத்தை அறியும்படி உங்களுக்கு அருள் அளிக்கப்பட்டது.

௰௨ [4]புறம்பே இருக்கிறவர்கள் மனந்திருப்பாமலும், தங்கள் பாவமன்னிப்பை அடையாமலும் இருக்கத்தக்கதாக, [5]உற்றுப்பார்த்தும் அறியாமலும், உற்றுக்கேட்டும் சிந்தியாமலும் இருக்கும்படிக்கு, அவையெல்லாம் உவமைகளாக அவர்களுக்குச் சொல்லப்பட்டு வருகின்றன என்று சொல்லி,

௰௩ பின்பு அவர்களை நோக்கி, நீங்கள் அந்த உவமையை அறியவில்லையா? அப்படியானால், மற்ற எல்லா உவமைகளையும் எப்படி அறிவீர்கள்?

௰௪ [6]விதைக்கிறவன் வசனத்தை விதைக்கிறவனே.

௰௫ விதை விழுந்த வழிக்கு ஒப்பானவர்கள் விதைக்கப்படுகிற வசனத்தைக் கேட்டவுடனே, சாத்தான் வந்து அவர்கள் இருதயங்களின்மேல் விதைக்கப்பட்ட வசனத்தை எடுத்துப்போடுகிறான்.

௰௬ விதை விழுந்த கற்பாறை நிலத்திற்கு ஒப்பானவர்கள் அந்த வசனத்தைக் கேட்கிறபொழுது, உடனே அதைச் சந்தோஷத்தோடே ஏற்றுக்கொண்டும்,

௰௭ தங்களிலே வேர் ஊன்றியிராமல், கொஞ்சக்காலம் மாத்திரம் அதைப்பற்றிக்கொள்ளுகிறார்கள்; அவ்வசனத்தின் நிமித்தம் உபத்திரவமும் துன்பப்படுதலும் உண்டானவுடனே வழுவுகிறார்கள்.

௰௮ விதை விழுந்த முள்ளுக்களுள்ள நிலத்திற்கு ஒப்பானவர்கள் அவ்வசனத்தைக் கேட்டும்,

௰௯ அது பலனற்றதாய் இருக்கும்படிக்கு, இவ்வுலக கவலைகளும் [7]ஐசுவரியத்தின் வஞ்சனையும் மற்றக் காரியங்களின்மேல் உண்டாகிற இச்சைகளும் தோன்றி, அந்த வசனத்தை நெருக்கிப்போடுகிறதற்கு (இடங்கொடுக்கிறார்கள்.)

௨௰ விதை விழுந்த நல்ல நிலத்திற்கு ஒப்பானவர்கள் அவ்வசனத்தைக் கேட்டுப் பற்றிக்கொண்டு, ஒன்று முப்பதும், ஒன்று அறுபதும், ஒன்று நூறுமாகப் பலன் கொடுக்கிறார்கள் என்றார்.

௨௧ ¶ [8]அன்றியும் அவர்களுடனே அவர் சொன்னது: விளக்

இ. பி. ௩௧.

1 மத். ௰௩. ௩௪.
2 யோவா. ௰௫. ௫. கொலோ. ௧. ௬.
3 மத். ௰௩. ௰. லூக். ௮. ௯. ௰.
4 ௧ கொரி. ௫. ௰௨. கொலோ. ௪. ௫. ௧ தெச. ௪. ௰௨. ௧ தீமோ. ௩. ௭.
5 ஏசா. ௬. ௯. மத். ௰௩. ௰௪. லூக். ௮. ௰. யோவா. ௰௨. ௪௰. அப். ௨௮. ௨௬. உரோ. ௰௧. ௮.
6 மத். ௰௩. ௰௯.
7 ௧ தீமோ. ௬. ௯, ௰௭.
8 மத். ௫. ௰௫. லூக். ௮. ௰௬; ௰௧. ௩௩.

Digitized by Google

கை ஒரு தண்டின்மேல் வைக்கிறதற்கேயன்றி, மரக்காலின்* கீழாகிலும் கட்டிலின் கீழாகிலும் வைக்கிறதற்குக் கொண்டுவருவார்களா?

௨௨ [1]ஆதலால் வெளியரங்கமாகாத அந்தரங்கமான பொருளுமில்லை, வெளிக்குவாராத மறைபொருளுமில்லை.

௨௩ [2]கேட்கிறதற்கு ஒருவன் காதுள்ளவனாயிருந்தால் கேட்கக்கடவன் என்றார்.

௨௪ அன்றியும் அவர்களுடனே அவர் சொன்னது: நீங்கள் கேள்விப்படுகிறது இன்னதென்று சிந்தித்துக்கொள்ளுங்கள்; [3]எந்த அளவினால் நீங்கள் அளப்பீர்களோ, அதினாலே உங்களுக்கும் அளக்கப்படும்.

௨௫ அல்லாமலும் [4]எவன் உள்ளவனாயிருக்கிறானோ, அவனுக்குக் கொடுக்கப்படும்; எவன் இல்லாதவனாயிருக்கிறானோ, அவனிடத்திலே உள்ளதும் எடுத்துப்போடப்படும்; ஆகையால் கேள்விப்படுகிற உங்களுக்கு அதிகமும் கொடுக்கப்படும் என்றார்.

௨௬ ¶ [5]அன்றியும் அவர் சொன்னதாவது: பராபரனுடைய இராச்சியம் ஒரு மனிதன் தன் நிலத்திலே விதை விதைக்கிறதற்கு ஒப்பாயிருக்கின்றது.

௨௭ பின்பு இராத்திரிதோறும் நித்திரைபண்ணி, பகல்தோறும் எழுந்திருப்பான்.

௨௮ அவனுக்குத் தெரியாமல் பூமியானது முன்பு முளையையும், பின்பு கதிரையும், பின்பு கதிரிலே நிறைந்த தானியத்தையும் பலனாகத் தானாய்க் கொடுக்கின்ற தன்மையுள்ளதாய் இருக்கிறபடியால், அந்த விதை முளைத்துப் பயிராம்.

௨௯ அப்படிப் பயிர் பருவமானபொழுது,† அறுப்புக்காலமானபடியினாலே, அவன் அதை அறுக்கிறதற்கு [6]ஆள்களை அனுப்புவான் என்றார்.

இ. பி. ௩௧.

* இந்த மொழி மூல பாஷையில் ஒரு சின்ன அளவைக்குறிக்கும். மத். ௫. ௰௫.

1 மத். ௰. ௨௬. லூக். ௰௨. ௨.

2 மத். ௰௧. ௰௫. ௯. ௪௩.

3 மத். ௭. ௨. லூக். ௬. ௩௮.

4 மத். ௰௩. ௰௨: ௨௫. ௨௯. லூக். ௮. ௰௮: ௰௯. ௨௬.

5 மத் ௰௩. ௨௪.

† அல்லது விளைந்தபொழுது.

6 வெளி. ௰௪. ௰௫.

7 மத். ௰௩. ௩௧. லூக். ௰௩. ௰௮. அப். ௨. ௪௧: ௪. ௪: ௰௯. ௰௪: ௨௰.

8 மத். ௰௩. ௩௪. யோவா. ௰௬. ௰௨.

9 மத். ௮. ௰௮, ௨௩. லூக். ௮. ௨௨.

௩௰ ¶ அன்றியும் அவர் சொன்னது: [7]நாம் பராபரனுடைய இராச்சியத்தை எதற்கு ஒப்பாக்கலாம்; அதை எந்த உவமையினாலே காண்பிக்கலாம்.

௩௧ அது ஒரு கடுகு விதைக்கு ஒப்பாயிருக்கின்றது; அது நிலத்தில் விதைக்கப்படுகிறபொழுது, பூமியிலுள்ள சகல விதைகளிலும் அது சிறிதாயிருந்தும்,

௩௨ விதைக்கப்பட்டபின்பு வளர்ந்து சகல கீரைகளிலும் பெரிதாகி, ஆகாயத்துப் பறவைகள் அதின் நிழலில் வந்தடையத்தக்கதாக விஸ்தாரமான கிளைகளை விடுகின்றது என்றார்.

௩௩ ¶ கேட்டறியும்படிக்கு, சனங்களுக்குண்டான கிராணிக்குத்தக்கதாக, அவர் [8]இப்படிப்பட்ட அநேக உவமைகளினாலே அவர்களுக்கு வசனத்தைச் சொன்னார்.

௩௪ உவமைகளினாலேயன்றி அவர் அவர்களுக்கு ஒன்றும் சொல்லவில்லை; தம்முடைய சீஷருடனே அவர் தனித்திருக்கிறபொழுதுமாத்திரம் அவர்களுக்கு எல்லாவற்றையும் விவரித்துச் சொன்னார்.

௩௫ ¶ [9]அந்த நாளிலே, சாயங்காலமானபொழுது, அவர் அவர்களை நோக்கி, அக்கரைக்குப் போவோம் வாருங்கள் என்றார்.

௩௬ ஆதலால் அவர்கள் சனங்களை விட்டு அவர் படவில் இருந்தபடியே அவரைக் கொண்டுபோனார்கள்; வேறுபடவுகளும் அவரோடேகூடப் போயின.

௩௭ அப்பொழுது அவர் பின்பக்கத்திலே ஒரு தலையணையைவைத்து நித்திரை பண்ணிக்கொண்டிருக்கையில், பலத்த சுழல்காற்று உண்டானதினாலே, படவை மூடிக்கொள்ளத்தக்கதாக அலைகள் அதின்மேல் மோதின.

௩௮ உடனே அவர்கள் அவரை எழுப்பி, போதகரே, நாங்கள்

Digitized by Google

மடிந்துபோனால் உமக்குக் கவலையில்லையா என்றார்கள்.

௩௯ அவர் எழுந்து காற்றுக்குக் கட்டளையிட்டு, கடலையும் நோக்கிக் கோஷமாயிராதே அமைதலாயிரு என்றார்; உடனே காற்று நின்றுபோக மிகுந்த அமைதல் உண்டாயிற்று.

௪௦ பின்பு அவர் அவர்களை நோக்கி, இப்படி ஏன் பயப்பட்டீர்கள்? என்னத்தினாலே உங்களுக்கு விசுவாசம் இல்லை என்றார்.

௪௧ அவர்கள் மிகவும் பயந்து, காற்றும் கடலும் இவருக்குக் கீழ்ப்படிகின்றனவே, இவர் யாரோ என்று ஒருவரோடொருவர் சொல்லிக்கொண்டார்கள்.

## ௫. அதிகாரம்.

௧. இலேகியோன் என்னும் பேய்கள் பிடித்தவனைக் கிறிஸ்து விடுதலையாக்கினபோது, ௧௩. அவைகள் பன்றிகளுக்குள் பிரவேசித்தன. ௨௫. அவர் பெரும்பாடுள்ள ஸ்திரீயைக் குணமாக்கி, ௩௫. யாவீரு என்பவனுடைய மகளை மரணத்தினின்று எழுப்பினது.

[1]பின்பு அவர்கள் கடலுக்கு அக்கரையில் உள்ள கதரேனருடைய தேசத்திற்கு வந்தார்கள்.

1 மத். அ. உஅ. லூக். அ. உக.

௨ அவர் படவிலிருந்து இறங்கினவுடனே, அசுத்த ஆவியுள்ள ஒரு மனிதன் பிரேதக்கல்லறைகளிலிருந்து அவருக்கு எதிராக வந்தான்.

௩ அவனுடைய குடியிருப்பு பிரேதக்கல்லறைகளிலே இருந்தது; ஒருவனும் அவனைச் சங்கிலிகளினாலும் கட்டக்கூடாததாய் இருந்தது.

௪ அநேகந்தரம் அவன் விலங்குகளினாலும் சங்கிலிகளினாலும் கட்டப்பட்டிருந்தும், அவன் அந்தச் சங்கிலிகளை முறித்து விலங்குகளைத் தறித்துப்போட்டான்; ஒருவனும் அவனைக் கீழ்ப்படுத்தக் கூடாததாய் இருந்தது.

௫ அல்லாமலும் அவன் எப்பொழுதும் இரவும்பகலும் மலைகளிலும் கல்லறைகளிலும் தங்கி, கூக்குரலிட்டு, தன்னைத்தானே கல்லுக்களால் கீறிக்கொண்டிருந்தான்.

இ. பி. ௩௧.



௬ அவன் தூரத்திலே இயேசுவானவரைக் கண்டு ஓடிவந்தபொழுது, அவனை நோக்கி,

௭ அசுத்த ஆவியே, நீ இந்த மனிதனைவிட்டுப் போ என்று அவர் கட்டளையிட்டபடியினாலே,

௮ அவன் அவருக்குத் தாழ்ந்து வணங்கி, இயேசுவே, உன்னதமான பராபரனுடைய குமாரனே, எனக்கும் உமக்கும் என்ன? என்னை வேதனைப்படுத்தாதபடிக்கு, உமக்குப் பராபரன்மேல் ஆணையிடுகிறேன் என்று மிகுந்த சத்தமாய்க் கூப்பிட்டான்.

௯ அவர் அவனை நோக்கி, உன் பேரென்ன என்று கேட்டார்; அதற்கு அவன் அநேகராய் இருக்கிறோம், ஆகையால் என் பேர் இலேகியோன் என்று சொல்லி,

௧௦ பின்பு அத்திசையிலிருந்து தங்களை ஓட்டிவிடாதபடிக்கு அவரை மிகவும் வேண்டிக்கொண்டான்.

௧௧ அவ்விடத்திலே மலையின் அருகே மிகுந்த கூட்டமான பன்றிகள் மேய்ந்துகொண்டிருந்தன.

௧௨ அப்பொழுது பசாசுகள் எல்லாம் அவருடனே சொன்னது: நாங்கள் பன்றிகளில் பிரவேசிக்கும்படிக்கு எங்களை அனுப்புமென்று அவரை வேண்டிக்கொண்டார்கள்.

௧௩ உடனே இயேசுவானவர் அவர்களுக்கு உத்தரவு கொடுத்தார்; அப்பொழுது அசுத்த ஆவிகள் புறப்பட்டுப் பன்றிகளுக்குள்ளே பிரவேசித்தன; உடனே ஏறக்குறைய இரண்டாயிரம் பன்றிகளாகிய அந்தக் கூட்டம் உயர்ந்தமேட்டிலிருந்து கடலிலே பாய்ந்து அதில் அமிழ்ந்து மாண்டது.

Digitized by Google

கி. பி. ௩௧.

௰௪ அப்பொழுது பன்றிகளை மேய்த்தவர்கள் ஓடி, அதைப் பட்டணத்திலும் வெளிப்புறங்களிலும் அறிவித்தார்கள்; பின்பு சம்பவித்ததைப் பார்க்கும்படிக்குச் சனங்கள் புறப்பட்டு,

௰௫ இயேசுவினிடத்தில் வந்து, லேகியோனாகிய பசாசுகள் பிடித்திருந்தவன் வஸ்திரம் உடுத்திக்கொண்டு, உட்காந்து புத்தி அடைந்திருக்கிறதைக் கண்டு பயந்தார்கள்.

௰௬ பசாசுகள் பிடித்தவனுக்கும் பன்றிகளுக்கும் சம்பவித்ததைக் கண்டவர்களும் அவர்களுக்கு விவரமாய்ச் சொன்னார்கள்.

௰௭ [1]அப்பொழுது தங்கள் எல்லைகளை விட்டு அப்புறம் போகும்படிக்கு அவரை வேண்டிக்கொண்டார்கள்.

௰௮ அந்தப்படி அவர் படவில் பிரவேசிக்கிறபொழுது [2]பசாசு பிடித்திருந்தவன் அவருடனேகூடப் போகும்படிக்கு அவரை வேண்டிக்கொண்டான்.

௰௯ இயேசுவானவர் அவனுக்கு உத்தரவுகொடாமல், நீ உன் வீட்டிலே உன் இனத்தாரிடத்திற்குப் போய், கர்த்தர் உனக்கு இரங்கி, உனக்குச் செய்த மிகுந்த விசேஷங்களை அவர்களுக்கு அறிவிப்பாயாக என்றார்.

௨௰ அந்தப்படி அவன் போய்த் தனக்கு இயேசுவானவர் செய்த விசேஷங்களைத் தெக்கப்போலி என்னும் தேசத்திலே பிரசித்தம் பண்ணினான், யாவரும் ஆச்சரியப்பட்டார்கள்.

௨௧ ¶ [3]பின்பு இயேசுவானவர் மறுபடியும் படவிலேறி இக்கரைக்கு வந்து கடலோரத்திலே இருந்தபொழுது, மிகுந்த சனங்கள் கூடி அவரிடத்தில் வந்தார்கள்.

௨௨ [4]அப்பொழுது செபஆலயத்தலைவரில் ஒருவனாகிய யாவீரு என்பவனும் வந்து, அவரைக் கண்டவுடனே அவருடைய பாதத்தின் அருகே விழுந்து,

௨௩ என் குமாரத்தி மரண அவஸ்தைப்படுகிறாள், அவள் ஆரோக்கியம் அடையும்படிக்கு நீர் வந்து, அவள்மேல் கைகளை வைத்தருளும், அப்பொழுது பிழைப்பாளென்று அவரை மிகவும் வேண்டிக்கொண்டான்.

௨௪ அவர் அவனோடேகூடப் போனார்; அவரை நெருக்கத்தக்கதாக அநேக சனங்கள் அவருக்குப் பின்சென்றார்கள்.

௨௫ ¶ [5]அப்பொழுது பன்னிரண்டு வருஷமாய்ப் பெரும்பாடுள்ள ஒரு ஸ்திரியானவள்,

௨௬ அநேக பரிகாரிகளால் மிகுந்த வருத்தப்பட்டு, தனக்குண்டான யாவையும் செலவழித்தும் சற்றாகிலும் சுகம் அடையாமல், அதிக வருத்தப்படுகிறபொழுது,

௨௭ இயேசுவைக்குறித்துக் கேள்விப்பட்டு, அவருடைய வஸ்திரங்களை மாத்திரம் தொட்டால் சுகம் அடையலாமென்று எண்ணி,

௨௮ சனங்களுக்குள்ளே (சென்று,) அவருக்குப் பின்னாலே வந்து, அவருடைய வஸ்திரத்தைத் தொட்டாள்.

௨௯ உடனே அவளுடைய இரத்த ஊறல் நின்றுபோயிற்று; அந்தவேதனை நீங்கத் தான் ஆரோக்கியம் அடைந்ததை அவள் சரீரத்தில் உணர்ந்தாள்.

௩௰ உடனே இயேசுவானவர் தம்மிலிருந்து [6]வல்லமை புறப்பட்டதைத் தமக்குள் அறிந்து திரும்பி, சனங்களைப் பார்த்து, என் வஸ்திரங்களைத் தொட்டவர் யாரென்றார்.

௩௧ அதற்கு அவருடைய சீஷர்கள் சொன்னது: சனங்கள் உம்மை நெருக்குகிறதை நீர் கண்டும், என்னைத் தொட்டவர் யாரென்று எப்படிச் சொல்லுகிறீர் என்றார்கள்.

1 மத். ௮. ௩௪. அப். ௰௬. ௩௯.
2 லூக். ௮. ௩௮.
3 மத். ௯. ௧. லூக். ௮. ௪௰.
4 மத். ௯. ௰௮. லூக். ௮. ௪௧.
5 ௩ மோ. ௰௫. ௨௫. மத். ௯. ௨௰.
6 லூக். ௬. ௰௯: ௮. ௪௬.

Digitized by Google

௩௨ அவர் அப்படிச் செய்தவளைக் காணும்படிக்குச் சுற்றிலும் பார்த்தார்.

௩௩ அப்பொழுது தன்னிடத்திலே நடந்ததை அறிந்த ஸ்திரி பயந்து நடுங்கி வந்து, அவரைச் சாஷ்டாங்கமாய் வணங்கி, எல்லாவற்றையும் அவருக்கு உண்மையாய்ச் சொன்னாள்.

௩௪ அவளுடனே அவர் சொன்னது: மகளே, [1]உன் விசுவாசம் உன்னைக் குணமாக்கிற்று; நீ சமாதானத்தோடே போய், உன் வேதனை இன்றிச் சுகமாயிரு என்றார்.

௩௫ ¶ [2]அவர் பேசிக்கொண்டிருக்கையில் செபஆலயத்தலைவனுடைய வீட்டிலிருந்து சிலர் வந்து, உம்முடைய குமாரத்தி இறந்துபோனாள், இனி ஏன் போதகரை வருத்தப்படுத்துகிறீர் என்றார்கள்.

௩௬ அவர்கள் சொன்ன வார்த்தையை இயேசுவானவர் கேட்டு, உடனே ஆலயத்தலைவனை நோக்கி, நீர் பயப்படவேண்டாம், விசுவாசமாகவே இரும் என்று சொல்லி,

௩௭ பின்பு பேதுருவும் யாக்கோபின் சகோதரனாகிய யோவானுந்தவிர, வேறொருவரும் தமக்குப் பின்செல்லுகிறதற்கு இடங்கொடாமல்,

௩௮ ஆலயத்தலைவனுடைய வீட்டிலே சேர்ந்து, சந்தடியையும் அழுதுகொண்டு மிகவும் புலம்புகிறவர்களையும் கண்டு,

௩௯ உட்பிரவேசித்து, நீங்கள் சந்தடிபண்ணி அழுதுகொள்ளுகிறதென்ன? பிள்ளை இறந்துபோகாமல் [3]நித்திரைபண்ணுகிறாள் என்றார்.

௪௰ அவர்கள் அவரை நோக்கி நகைத்தார்கள்; [4]பின்பு அவர் எல்லாரையும் வெளியே போகப்பண்ணி, பிள்ளையின் தகப்பனையும் தாயையும் தம்மோடே வந்தவர்களையும் அழைத்துக்கொண்டு, பிள்ளை கிடக்கிற இடத்தில் பிரவேசித்து

௪௧ அதின் கையைப் பிடித்து தலீத்தாகூமி என்றார்; அதற்குச் சிறுபெண்ணே எழுந்திரு, உனக்குக் கட்டளையிடுகிறேன் என்று அருத்தமாம்.

௪௨ உடனே பன்னிரண்டுவயதுள்ள அந்தப் பெண் எழுந்து நடந்தாள்; (அதைக் கண்டவர்கள் மிகுந்த ஆச்சரியத்தோடே பிரமித்தார்கள்.

௪௩ [5]அப்பொழுது அவர்கள் அதை ஒருவருக்கும் அறிவியாதபடிக்கு உறுதியாகக் கட்டளையிட்டு, பின்பு அவளுக்குச் சாப்பாடு கொடுக்கும்படி சொன்னார்.

கி. பி. ௩௨.

1 மத். ௯. ௨௨. மாற். ௰. ௫௨. அப். ௰௪. ௯.
2 லூக். ௮. ௪௯.
3 யோவா. ௰௧. ௰௧.
4 அப். ௯. ௪௰.
5 மத். ௮. ௪: ௯. ௩௰: ௧௨. ௰௬: ௧௭. ௯. மாற். ௩. ௰௨. லூக். ௫. ௰௪.
6 மத். ௰௩. ௫௪. லூக். ௪. ௰௬.
7 யோவா. ௬. ௪௨.
8 மத். ௰௨. ௪௬. கலா. ௧. ௰௯.

## ௬. அதிகாரம்.

௧. கிறிஸ்து தம்முடைய ஊராராலே அசட்டைபண்ணப்பட்டது. ௭. அவர் பன்னிரண்டு சீஷர்களுக்கும் அசுத்த ஆவிகளின்மேல் அதிகாரத்தைக் கொடுத்தது. ௰௪. கிறிஸ்துவைக்குறித்த பலவிதமான தாற்பரியங்கள். ௨௭. யோவான்ஸ்நானனைத் தலைவெட்டுண்டு, ௨௯. அடக்கம்பண்ணப்பட்டது. ௩௰. அப்போஸ்தலர்கள் பிரசங்கம்பண்ணித் திரும்பி வந்தது. ௩௫. ஐந்து அப்பங்களினாலும் இரண்டு மீன்களினாலும் செய்யப்பட்ட அற்புதம். ௪௮. கிறிஸ்து கடலின்மேல் நடந்தது. ௫௬. அவரைத் தொட்ட யாவரும் சுகம் அடைந்தது.

[6]அவர் அவ்விடம்விட்டுப் புறப்பட்டு, தாம் வளர்ந்த ஊருக்குப் போனார்; அவருடைய சீஷர் அவருக்குப் பின்சென்றார்கள்.

௨ ஓய்வுநாள் வந்தபொழுது அவர் செபஆலயத்திலே உபதேசம்பண்ணத் தொடங்கினார்; அதைக்கேட்ட அநேகர் பிரமிப்படைந்து, [7]எங்கேயிருந்து இவைகள் இவனுக்குத் தெரியவந்தன? இவனுடைய கைகளினால் இப்படிப்பட்ட பலத்த அற்புதங்கள் நடக்கத்தக்கதாக, இவனுக்குக் கொடுக்கப்பட்ட ஞானம் எப்படிப்பட்டது?

௩ இவன் மரியாளுக்குக் குமாரனும், [8]யாக்கோபு, யோசே, யூதா, சீமோன் என்பவர்களுக்குச் சகோதரனுமாகிய தச்சனல்லவா? இவனுடைய சகோதரிகளும் இங்

கே நம்மிடத்தில் இருக்கிறார்கள் அல்லவா? என்று சொல்லி, [1]அவரைக் குறித்து வெறுப்படைந்தார்கள்.

௪ அவர்களுடனே இயேசுவானவர் சொன்னது: [2]ஒரு தீர்க்கதரிசி தன் ஊரிலும் தன் இனத்தாரிடத்திலும் தன் குடும்பத்திலுமேயன்றி (மற்ற இடங்களிலே) கனஈனம் அடையான் என்றார்.

௫ [3]அங்கே அவர் சில நோயாளிகள்மேல் கைகளை வைத்து அவர்களைக் குணமாக்கினதே அன்றி வேறொரு அற்புதத்தைச் செய்யமாட்டாமல்,

௬ அவர்களுடைய [4]அவிசுவாசத்தைக்குறித்து ஆச்சரியப்பட்டார்.

௭ ¶ [5]பின்பு அந்தத் திசையிலுள்ள கிராமங்களிலே திரிந்து உபதேசம்பண்ணினார்; [6]அல்லாமலும் அவர் பன்னிருவரையும் அழைத்து, அசுத்தமான ஆவிகளின்மேல் அவர்களுக்கு அதிகாரம் கொடுத்து,

௮ அவர்கள் பையையாகிலும் ஆகாரத்தையாகிலும் கச்சையில் *பணத்தையாகிலும் வழிக்காகக் கூடக் கொண்டுபோகாமல், ஒரு தடியைமாத்திரம் எடுத்துப்போகவும்,

௯ [7]பாதரட்சைகளைப் போட்டுக்கொண்டு போகவும், இரண்டு அங்கிகளைத் தரியாதிருக்கவும், அவர்களுக்குக் கட்டளையிட்டு,

௰ [8]பின்பு அவர்களுக்குச் சொன்னதாவது: எங்கேயாகிலும் நீங்கள் ஒரு வீட்டில் பிரவேசித்தது முதல், அவ்விடத்தைவிட்டுப் புறப்படுகிறவரைக்கும் அங்கேதானே தங்கியிருங்கள்.

௰௧ [9]எவர்கள் உங்களை ஏற்றுக்கொள்ளாமலும் உங்களுக்குச் செவிகொடாமலும் இருக்கிறார்களோ, [10]அவர்களுடைய இடத்தை நீங்கள் விட்டுப் புறப்பட்டு, அவர்களுக்கு விரோதமான சாட்சியாக, உங்கள் உள்ளங்கால்களில் படிந்திருக்கிற தூசியை உதறிப்போடுங்கள்; நியாயத்தீர்ப்பு நாளிலே சோதோம் கொமோரா பட்டணத்தாரிலும் அந்தப் பட்டணத்தார் அதிக தண்டிப்பை அடைவார்கள் என்று மெய்யாகவே உங்களுக்குச் சொல்லுகிறேன் என்று சொல்லி, இரண்டிரண்டு பேராக அவர்களை அனுப்பினார்.

௰௨ அவர்கள் புறப்பட்டு, மனந்திரும்புங்கள் என்று பிரசங்கித்து,

௰௩ அநேகம் பசாசுகளைத் துரத்தி, அநேகம் நோயாளிகளை [11]எண்ணெயால் பூசிக் குணமாக்கினார்கள்.

௰௪ ¶ [12]அவருடைய பேர் பிரசித்தமானபடியினாலே, இராசனாகிய ஏரோது (அவரைக்குறித்து) கேள்விப்பட்டு, யோவான்ஸ்நானன் மரித்தோரிலிருந்து எழுப்பப்பட்டிருக்கிறான்.

௰௫ [13]ஆதலால் பலத்த அற்புதங்கள் அவனாலே செய்யப்படுகின்றன என்றான்; சிலர் அவரை எலியாவென்றும், சிலர் அவரை ஒரு தீர்க்கதரிசி, அல்லது தீர்க்கதரிசிகளில் ஒருவனைப்போல இருக்கிறாரென்றும் சொன்னார்கள்.

௰௬ [14]ஏரோது அதைக் கேட்டபொழுது, அவன் நான் சிரச்சேதம்பண்ணின யோவான்தான், அவன் மரித்தோரிலிருந்து எழுப்பப்பட்டிருக்கிறான் என்றான்.

௰௭ அதெப்படியென்றால், ஏரோது தன் சகோதரனாகிய பிலிப்பினுடைய மனைவி ஏரோதியாளை விவாகம்பண்ணினபொழுது,

௰௮ யோவான் ஏரோதை நோக்கி, [15]நீர் உமது சகோதரனுடைய மனைவியைக் கொள்ளுகிறது நியாயமல்ல என்று சொன்னபடியினாலே, ஏரோது (ஆள்களை அனுப்பி) அவனைப் பிடித்துக் காவலில் கட்டிவைத்தான்.

கி. பி. ௩௨.

1 மத். ௰௩. ௬.
2 மத். ௰௩. ௫௭. யோவா. ௪. ௪௪.
3 ௧ மோ. ௰௯. ௨௨: ௩௨. ௨௫. மத். ௰௩. ௫௮. மாற். ௯. ௨௩.
4 ஏசா. ௫௯. ௰௬.
5 மத். ௯. ௩௫. லூக். ௰௩. ௨௨.
6 மத். ௰. ௧. மாற். ௩. ௰௩, ௰௪. லூக். ௯. ௧.

* இந்த மொழி ஒரு சின்னத்துட்டையாவது பொதுவாய்ப் பணத்தையாவது குறிக்கும். மத். ௰. ௯. லூக். ௯. ௩.

7 அப். ௰௨. ௮.
8 மத். ௰. ௰௧. லூக். ௯. ௪: ௰. ௭, ௮.
9 மத். ௰. ௰௪. லூக். ௰. ௰.
10 அப். ௰௩. ௫௧: ௰௮. ௬.
11 யாக். ௫. ௰௪.
12 மத். ௰௪. ௧. லூக். ௯. ௭.
13 மத். ௰௬. ௰௪. மாற். ௮. ௨௮.
14 மத். ௰௪. ௨. லூக். ௩. ௰௯.
15 ௩ மோ. ௰௮. ௰௬: ௨௰. ௨௧.

Digitized by Google

௧௯ அல்லாமலும் ஏரோதியாள் அவனுக்குக் கெடுதிநினைத்து, அவனைக் கொலைசெய்ய விரும்பினாள்.

௨௰ [1]ஏரோது யோவானை நீதியும் பரிசுத்தமும் உள்ளவனென்று அறிந்து, அவனுக்குப் பயந்து, அவனை நன்றாய்க் காத்து, அவனுடைய ஆலோசனையின்படி அநேகம் காரியங்களைச் செய்து, விருப்பத்தோடே அவனுடைய சொற்கேட்டு வந்தான்; ஆகையால் அவள் அப்படிச் செய்யக் கூடாமல் இருந்தது.

௨௧ பின்பு அதற்கேற்ற நாள் வந்தது; எப்படியென்றால், [2]ஏரோது தன் சென்மநாளிலே [3]தன்னுடைய மந்திரிகளுக்கும் சேனாபதிகளுக்கும் கலிலேயாநாட்டின் பிரபுக்களுக்கும் விருந்துபண்ணின காலத்திலே,

௨௨ ஏரோதியாளுடைய குமாரத்தி உள்ளே சென்று, ஏரோதுக்கும், பந்தியிருந்த மற்றவர்களுக்கும் பிரியம் உண்டாகத்தக்கதாக நடனம்பண்ணினபொழுது, இராசா அந்தச் சிறுபெண்ணை நோக்கி, உனக்கு வேண்டியதை என்னிடத்தில் கேள், நான் உனக்குத் தருவேன் என்று சொன்னதுமல்லாமல்,

௨௩ [4]நீ என் இராச்சியத்தில் பாதிவரைக்கும் எதைக் கேட்டாலும், அதை உனக்குத் தருவேனென்று அவளுக்கு ஆணையும் இட்டான்.

௨௪ அப்பொழுது அவள் வெளியே போய்த் தன் தாயை நோக்கி, நான் என்ன கேட்கவேண்டும் என்று சொன்னதற்கு, யோவான்ஸ்நானனுடைய தலையைக் கேள் என்றாள்.

௨௫ உடனே அவள் சீக்கிரமாக இராசாவினிடத்திற்குத் திரும்பிப் போய், நீர் இப்பொழுதுதானே ஒரு தாலத்திலே யோவான்ஸ்நானனுடைய தலையை எனக்குத் தரவேண்டும் என்று கேட்டாள்.

கி. பி. ௩௨.



1 மத். ௧௪. ௫: ௨௧. ௨௬.
2 மத். ௧௪. ௬.
3 ௧ மோ. ௪௰. ௨௰.
4 எஸ். ௫. ௩, ௬: ௭. ௨.
5 மத். ௧௪. ௩.
* அல்லது கொலைகாரனுக்கு.
6 லூக். ௯. ௰.
7 மாற். ௩. ௨௰.
8 மத். ௧௪. ௧௩.
9 மத். ௧௪. ௧௩.

௨௬ [5]அப்பொழுது இராசா மிகுந்த துக்கம் அடைந்தான்; அப்படியிருந்தும், ஆணைகளின் நிமித்தமும் பந்தியிருந்தவர்களின் நிமித்தமும் அவளுக்கு அதை மறுக்க மனதில்லாமல்,

௨௭ உடனே அவனுடைய தலையைக் கொண்டுவரும்படிக்குப் போர்ச்சேவகனாகிய காவற்காரனுக்குக் * கட்டளையிட்டு அனுப்பினான்; அந்தப்படியே அவன் போய்க் காவற்கூடத்திலே யோவானைச் சிரச்சேதம்பண்ணி,

௨௮ ஒரு தாலத்திலே அவனுடைய தலையைக் கொண்டுவந்து, அதைச் சிறுபெண்ணுக்குக் கொடுத்தான்; சிறுபெண் அதைத் தன் தாய்க்குக் கொடுத்தாள்.

௨௯ அவனுடைய சீஷர் அதைக் கேட்டு வந்து, அவன் உடலை எடுத்து, ஒரு கல்லறையிலே வைத்தார்கள்.

௩௰ ¶ [6]அத்தருணத்திலே அப்போஸ்தலர்கள் இயேசுவினிடத்தில் கூடிவந்து, தாங்கள் செய்த யாவையும் போதகம்பண்ணின யாவையும் அவருக்கு அறிவித்தார்கள்.

௩௧ பின்பு அவர்கள் போசனம்பண்ணும்படிக்கும் சமயம் இல்லாதிருக்கத்தக்கதாக [7]வருகிறவர்களும் போகிறவர்களும் மிகுதியானபடியினாலே, [8]அவர் அவர்களை நோக்கி, நீங்கள் வனாந்தரமான இடத்திலே தனித்திருந்து சற்றே இளைப்பாற வாருங்கள் என்று சொன்னார்.

௩௨ [9]அந்தப்படி அவர்கள் தனித்திருக்கும்படிக்குப் படவில் பிரவேசித்து வனாந்தரமான இடத்திற்குப் போனார்கள்.

௩௩ ¶ அவர்கள் புறப்பட்டுப் போகிறதைச் சனங்கள் கண்டு, (அவர்கள் போகிற) இடத்தை அறிந்து, சகல பட்டணங்களிலுமிருந்து கால்நடையாய் அவ்விடத்திற்கு ஓடி, அவர்களுக்கு முன்

Digitized by Google

னே அங்கே சேர்ந்து அவரிடத்தில் கூடிவந்தார்கள்.

௩௪ [1]இயேசுவானவர் கரையில் வந்து மிகுந்த சனங்களைக் கண்டபொழுது, அவர்கள் மேய்ப்பனில்லாத ஆடுகளைப்போல இருந்தபடியினாலே, அவர்கள்மேல் உருக்கமாய் இரங்கி, [2]அநேக காரியங்களை அவர்களுக்கு உபதேசித்தார்.

௩௫ [3]பின்பு பொழுது மிகவும் கழிந்துபோனபடியால், அவருடைய சீஷர் அவரிடத்தில் வந்து, இது வனாந்தரமான இடம், அல்லாமலும் மிகவும் பொழுதுபோயிற்று.

௩௬ போசனம்பண்ணுகிறதற்கு இவர்களிடத்தில் ஒன்றுமில்லை; ஆகையால் இவர்கள் சுற்றியிருக்கிற ஊர்களுக்கும் கிராமங்களுக்கும்போய், தங்களுக்காக அப்பங்களை வாங்கிக்கொள்ளும்படிக்கு, இவர்களை அனுப்பிவிடவேண்டும் என்றார்கள்.

௩௭ அதற்கு அவர், நீங்களே இவர்களுக்குப் போசனம் கொடுங்கள் என்றார்; அவர்கள் சொன்னது: இவர்களுக்குப் போசனம் கொடுக்கும்படிக்கு, [4]நாங்கள் போய் *இருநூறு தேநாரிய பணத்திற்கு அப்பங்களை வாங்கிக்கொண்டுவரலாமா என்றார்கள்.

௩௮ அதற்கு அவர், எவ்வளவு அப்பங்கள் உங்களிடத்தில் உண்டு, போய்ப் பாருங்கள் என்றார்; [5]அவர்கள் விசாரித்து (வந்து,) ஐந்து அப்பமும் இரண்டு மீனும் இருக்கின்றனவென்று சொன்னார்கள்.

௩௯ அப்பொழுது அவர்கள் கூட்டங்கூட்டமாக எல்லாச் சனங்களையும்பசுமையானபுல்லின்மேல் உட்காரப்பண்ணும்படிக்குக் கட்டளையிட்டார்.

௪௰ அப்படி நூறுபேர் ஒரு கூட்டமும், ஐம்பதுபேர் ஒரு கூட்டமுமாகச் சதுக்கம் சதுக்கமாய் உட்கார்ந்தார்கள்.

கி. பி. ௩௨.

1 மத். ௯. ௩௬: ௰௪. ௰௪.
2 லூக். ௯. ௰௧.
3 மத். ௰௪. ௰௫. லூக். ௯. ௰௨.
4 ௪மோ. ௰௧. ௰௩, ௨௨. ௨ இரா. ௪. ௪௩.
* உரோமருடைய தேநாரிய பணமொன்று எழுபைப் பேனிசக்குச்சரி. மத். ௰௮. ௨௮.
5 மத். ௰௪. ௰௭. லூக். ௯. ௰௩. யோவா. ௬. ௯. மத். ௰௫. ௩௪. மாற். ௮. ௫.
6 ௧ சாமு. ௯. ௰௩. மத். ௨௬. ௨௬.
7 மத். ௰௪. ௨௨. யோவா. ௬. ௰௭.
† ஊருக்கு நேராக.
8 மத். ௰௪. ௨௩. யோவா. ௬. ௰௬, ௰௮.
9 லூக். ௨௪. ௨௮.

௪௧ பின்பு அவர் அவ்வைந்து அப்பங்களையும் அவ்விரண்டு மீனையும் எடுத்து, [6]வானத்தை அண்ணாந்து பார்த்து அவைகளை ஆசீர்வதித்து, பின்பு அப்பங்களைப் பிட்டுச் சனங்களுக்குக் கொடுக்கும்படிக்கு அவைகளைச் சீஷர்களுக்குக் கொடுத்து, பின்பு அவ்விரண்டு மீனையும் அவர்கள் எல்லாருக்கும் பங்கிட்டார்.

௪௨ எல்லாரும் சாப்பிட்டுத் திருத்தியடைந்தார்கள்.

௪௩ அல்லாமலும் (அப்பங்களிலும்) மீன்களிலும் சேஷமானவைகளைப் பன்னிரண்டுகூடை நிறைய எடுத்தார்கள்.

௪௪ ஏறக்குறைய ஐயாயிரம்புருஷர் போசனம்பண்ணினார்கள்.

௪௫ ¶ [7]பின்பு தாம் சனங்களை அனுப்புகையில், தமக்கு முன்னாகச் சீஷர்கள் படவில் ஏறி அக்கரையில் பெதுசாயிதா என்னும் †ஊருக்குப் போகும்படிக்கு அவர்களைத் துரிதப்படுத்தினார்.

௪௬ பின்பு அவர் சனங்களை அனுப்பி, செபத்தியானம்பண்ணும்படிக்கு மலையில் ஏறினார்.

௪௭ ¶ [8]சாயந்தரமானபொழுது, படவு கடலின் நடுவிலே சேர்ந்தது; அவர்மாத்திரம் கரையிலே இருந்தார்.

௪௮ அப்பொழுது காற்று அவர்களுக்கு எதிரானபடியினாலே, அவர்கள் வருத்தத்தோடே (படவை) தள்ளினதை அவர் கண்டு, பின்பு இராத்திரியில் காலாம் சாமத்திலே புறப்பட்டுக் கடலின்மேல் நடந்துஅவர்களிடத்திற்குச் சமீபித்து, [9]அவர்களைக் கடந்துபோக மனதாயிருந்தார்.

௪௯ கடலிலே நடந்துபோகிற அவரை அவர்கள் கண்டபொழுது, அது ஆவேசம் என்று எண்ணிச் சத்தமிட்டார்கள்.

௫௰ அல்லாமலும் எல்லாரும் அவரைக்கண்டு, கலக்கம் அடைந்தார்கள்; உடனே அவர் அவர்களை

Digitized by Google

நோக்கி, திடமாயிருங்கள், நான்தான், பயப்படாதிருங்கள் என்று அவர்களுடனே சொன்னார்.

௫௧ பின்பு அவர் அவர்கள் இருக்கிற படவில் பிரவேசித்தவுடனே காற்று நின்றுபோயிற்று.

௫௨ [1]அவர்கள் கடினமான இருதயம் உடையவர்களாகையால், அந்த அப்பங்களைக்குறித்துச் சிந்தனைபண்ணாமல் இருந்தபடியினாலே [2]மிகவும் மிகுதியாய்த் தங்களுக்குள்ளே பிரமித்து ஆச்சரியப்பட்டார்கள்.

௫௩ ¶ [3]பின்பு அவர்கள் புறப்பட்டுக் கெநேசரேத்து நாட்டிலே வந்து கரைபிடித்தார்கள்.

௫௪ அவர்கள் படவைவிட்டிறங்கினவுடனே சனங்கள் அவரை அறிந்து,

௫௫ அந்தத் திசையில் எங்கும் ஓடித்திரிந்து, படுக்கைகளில் கிடக்கிற பிணியாளிகளை எடுத்து, அவர் வந்திருக்கிறாரென்று கேள்விப்பட்ட இடங்களில் கொண்டுவரத் தொடங்கினார்கள்.

௫௬ அல்லாமலும் அவர் பிரவே வேசித்த கிராமம் பட்டணம் ஊர் எவைகளோ, அவைகளின் சந்தைகளில் பிணியாளிகளை வைத்து, அவர்கள் அவருடைய [4]வஸ்திரத்தின் ஓரத்தைமாத்திரம் தொடும்படிக்கு அவரை வேண்டிக்கொண்டார்கள்; எவர்கள் அதைத் *தொட்டார்களோ அவர்கள் சொஸ்தம் அடைந்தார்கள்.

## எ. அதிகாரம்.

*௧. சீஷர்கள் கைகழுவாமல் போசனம்பண்ணினதைக்குறித்துப் பரிசேயர் குற்றம்பிடித்தது. ௮. அந்தப் பரிசேயர் முதலியவர்கள் மனுஷர்களுடைய பாரம்பரை நியாயங்களினால் பராபரனுடைய கட்டளைகளை மீறினது. ௧௪. போசனம் மனுஷனை அசுசிப்படுத்தாதென்பது. ௨௪. திறில்து சீரோப்பேனிக்கே சாதியான ஒரு ஸ்திரீயின் மகளிடத்திலிருந்த அசுத்த ஆவியை நீக்கி, ௩௧. செவிடனும் திக்குவாயனுமான ஒருவனைச் சுகப்படுத்தினது.*

[5]பரிசேயரும் மற்ற யூதர்களெல்லாரும் பெரியோர்களுடைய பாரம்பரை நியாயங்களைக் கைக்கொள்ளும்படிக்கு மணிக்கட்டு வரைக்கும் கைகழுவாமல் †போசனம்பண்ணமாட்டார்கள்.

௨ அல்லாமலும் சந்தைகளிலிருந்து (வந்தால்) ஸ்நானம்பண்ண மல் போசனம்பண்ணமாட்டார்கள்; மேலும் சலபாத்திரங்களையும், குடங்களையும், செம்புப் பானைகளையும், ‡கட்டில்களையும் ஸ்நானம்பண்ணுவித்து, மற்றும் அப்படிப்பட்ட அநேகம் சடங்குகளைப் பற்றிக்கொள்ளுவார்கள்.

௩ ஆதலால் பரிசேயரும் வேதபாரகரில் சிலரும்கூடி, எருசலேம் பட்டணத்திலிருந்து அவரிடத்தில் வந்து,

௪ அவருடைய சீஷரில் சில கைகழுவாமல் அசுத்தமான கைகளோடே §போசனம்பண்ணுகிறதைக் கண்டபொழுது, அவர்கள் அவரை நோக்கி,

௫ [6]உம்முடைய சீஷர் பெரியோருடைய பாரம்பரை நியாயத்தை மீறி நடந்து, கைகழுவாமல் போசனம்பண்ணுகிறதென்ன என்று கேட்டார்கள்.

௬ அதற்கு மாறுத்தரமாக அவ சொன்னது: நீங்கள் பராபரனுடைய கட்டளையைவிட்டு, குடங்களையும் சலபாத்திரங்களையும் ஸ்நானம்பண்ணுவித்து, மற்றும் அப்படிப்பட்ட அநேக சடங்குகளைச் செய்து, மனிதர்களுடைய பாரம்பரை நியாயங்களைக் கை கொள்ளுகிறீர்கள்.

௭ ஆகையால் [7]இந்தச் சனங்கள் உதடுகளினாலே என்னைக் கனம் பண்ணியும், இவர்களுடைய இருதயம் எனக்குத் தூரமாய் விலகி இருக்கிறதென்றும்,

௮ மனிதர்களுடைய கற்பனைகளாகிய உபதேசங்களை இவர்கள் கற்றுக்கொண்டு, வீணாய் எனக்கு ஆராதனை செய்கிறார்கள் என்றும், ஏசாயா என்பவன் மாயக்காரரா கிய உங்களைக்குறித்து நன்றாய்த்

கி. பி. ௩௨.

1 மாற். ௮. ௧௭, ௧௮.
2 மாற். ௩. ௫: ௧௧. ௧௪.
3 மத். ௧௪. ௩௪.
4 மத். ௯. ௨௧. மாற். ௫. ௨௭, ௨௮. அப். ௧௯. ௧௨.
* அல்லது அவரை.
5 மத். ௧௫. ௧.
† அல்லது எளியவர்களோடே.
‡ அல்லது பீடங்களையும்.
§ அல்லது அடிக்கடி.
6 மத். ௧௫. ௨.
7 ஏசா. ௨௯. ௧௩. மத். ௧௫. ௮.

Digitized by Google

தீர்க்கதரிசனம் சொல்லியிருக்கி றான் என்று சொல்லி,

கூ பின்பு உங்கள் பாரம்பரை நியாயங்களைக் காத்துக்கொள்ளும் படிக்கு, நீங்கள் பராபரனுடைய கட்டளையைத் தள்ளிக்கொண்டு* வருகிறது நன்றாயிருக்கிறது.

௰ என்னவென்றால், [1]உன் தகப் பனையும் உன் தாயையும் கனம் பண்ணுவாயாக [2]என்றும், தகப் பனையாவது தாயையாவது நிந்திக் கிறவனுக்கு மரண ஆக்கினையைக் கொடுக்கவேண்டும் என்றும் மோ சே சொன்னாரே.

௰௧ [3]நீங்கள், ஒருவன் தன் தகப்ப னையாவது தாயையாவது நோக்கி, உங்களுக்கு என்னாலே உதவுகிற தேதோ, அது (தேவாலயத்திற்குக் காணிக்கையாகிய) கொர்பானுவ தாக என்று சொன்னால்,

௰௨ பின்பு அவன் தன் தகப்ப னுக்கும் தன் தாய்க்கும் உதவி செய்ய வேண்டுவதில்லை என்று உத்தரவு கொடுத்து,

௰௩ இவ்விதமாய் உங்களால் உண் டாக்கப்பட்ட பாரம்பரை நியா யத்தினாலே பராபரனுடைய வச னத்தை அவமாக்குகிறீர்கள்; அது போல நீங்கள் மற்றும் அநேகம் காரியங்களையும் செய்கிறீர்கள் என்று சொல்லி,

௰௪ [4]பின்பு எல்லாச் சனங்களை யும் அழைத்து, அவர்களுடனே சொன்னது: நீங்கள் எல்லாரும் எனக்குச் செவிகொடுத்துச் சிந் தித்துக்கொள்ளுங்கள்.

௰௫ ஒரு மனிதனுக்குப் புறம் பேயிருக்கிற எந்தப்பொருளும் அ வனுக்கு உட்பிரவேசிக்கிறபொ ழுது அவனை அசுசிப்படுத்தமாட் டாது; அவன் உள்ளத்திலிருந்து புறப்படுகிற பொருள்களே அவ னை அசுசிப்படுத்துகின்றன.

௰௬ [5]கேட்கிறதற்கு ஒருவன் கா துள்ளவனானால் கேட்கக்கடவன் என்றார்.

கி. பி. கூ௨.



* அல்லது புரட்டி.

1 உ மோ. உ௰. ௰௨. இமோ. ௬. ௰கூ. மத். ௰௫. ச.
2 உ மோ. உக. ௰எ. ௩.மோ.உ௰. கூ. வாக். உ௰. உ௰.
3 மத். ௰௫. ரு:
௨௧. ௰அ.
4 மத். ௰௫. ௰.
5 மத். ௰க. ௰௫.
6 மத். ௰௫. ௰௫.
7 ௧ மோ. கூ. ௫: அ. உக. மத். ௰௫. ௰கூ.
† அல்லது பொருளாசைகள், மூர்க்கங்கள்.
8 மத். ௰௫. உக.
‡ அல்லது கிரேக்க.

௰எ ¶ [6]பின்பு அவர் சனங்களை விட்டு வீட்டில் பிரவேசித்தபொ ழுது, அவருடைய சீஷர்கள் அந்த உவமையைக் குறித்து அவரிடத் தில் வினவினார்கள்.

௰அ அவர்களுடனே அவர் சொ ன்னது: நீங்களும் புத்தியில்லாத வர்களா? புறம்பே இருக்கிற எந் தப்பொருளும் மனிதனுக்கு உட் பிரவேசிக்கிறபொழுது அவனை அசுசிப்படுத்தமாட்டாதென்று நீங்களும் அறிந்திருக்கவில்லையா?

௰கூ அது அவனுடைய இருத யத்திலே பிரவேசியாமல் வயிற் றில் பிரவேசிக்கிறதே; அதிலிருந் து எல்லாப் போசனங்களையும் கழி க்கிற ஆசனவழியாய்ப் புறப்படு கின்றன.

உ௰ மனிதனுடைய உள்ளத்தி லிருந்து புறப்படுகிறதே அவனை அசுசிப்படுத்துகின்றது.

உக அதெப்படியெனில், மனித ருடைய இருதயத்திலிருந்து,

உ௨ [7]விபசாரம், வேசித்தனம், கொலை, திருட்டு, † தகாதபொரு ளாசை, மூர்க்கம், கபடம், காம விகாரம், பொறாமை, தூஷணம், அகந்தை, மதிகேடு என்பவைக ளுக்கு ஏதுவான பொல்லாதயோ சனைகள் புறப்படுகின்றன.

உ௩ தீமையான இவைகளெல் லாம்உள்ளத்திலிருந்துபுறப்பட்டு, மனிதனை அசுசிப்படுத்துகின்றன என்று திருவுளம்பற்றினார்.

உ௪ ¶ [8]பின்பு அவர் எழுந்து அவ் விடம்விட்டுத் தீறுசீதோன் பட்ட ணங்களின் எல்லைகளுக்குப் போ னார்; அங்கே அவர் ஒரு வீட்டிலே பிரவேசித்த பின்பு, தம்மை ஒருவ ரும் அறியாமல் இருக்கும்படிக்கு மனதாயிருந்தும், அவர் மறைந்தி ருக்கிறதற்கு ஏதுவில்லை.

உ௫ எப்படியென்றால், சூர்பே னீக்கியா தேசத்தில் பிறந்த அஞ் ஞானியாகிய ‡ ஒரு ஸ்திரீயானவ ளுக்கு அசுத்த ஆவியையுடைய மகள் இருந்தாள்.

Digitized by Google

௨௬ அந்த ஸ்திரி அவனைக்குறித்துக் கேள்விப்பட்டபொழுது, அவள் வந்து வணக்கமாய் அவருடைய பாதங்களின் அருகே விழுந்து, தன்னுடைய மகளிலிருந்து பசாசைத் துரத்தவேண்டுமென்று அவனை வேண்டிக்கொண்டாள்.

௨௭ இயேசுவானவர் அவளைநோக்கி, பிள்ளைகளுடைய ஆகாரத்தை எடுத்து, நாய்களுக்குக் கொடுக்கிறது நியாயமல்ல; ஆகையால் முதலாவது பிள்ளைகளே திருத்தியடையட்டும் என்றார்.

௨௮ அதற்கு அவள் சொன்னது: ஆண்டவரே, அது சரிதான்; ஆனாலும் போசனப்பலகைகளின்கீழிருக்கிற நாய்கள் பிள்ளைகளுடைய உச்சிட்டங்களைத் தின்னுமே என்றாள்.

௨௯ அப்பொழுது அவர் சொன்னது: நீ இந்த வசனத்தைச் சொன்னபடியினாலே (சந்தோஷமாய்ப்) போ; பசாசு உன் மகளிலிருந்து புறப்பட்டுப்போயிற்று என்றார்.

௩௰ அவள் தன் வீட்டிலே போய்ச் சேர்ந்தபொழுது பசாசு புறப்பட்டுப்போனதையும், தன் மகள் கட்டிலின்மேல் படுத்திருக்கிறதையும் கண்டாள்.

௩௧ ¶ [1]பின்பு அவர் தீறுசீதோன் பட்டணங்களின் திசைகளைவிட்டுப் புறப்பட்டு, தெக்கப்போலி என்னும் தேசத்தின் திசைகளின் வழியாய் மறுபடியும் கலிலேயா காட்டின் கடலருகே வந்தார்.

௩௨ [2]அங்கே கொன்னைவாயையுடைய செவிடனை அவரிடத்தில் கொண்டுவந்து, அவர் தமது கையை அவன்மேல் வைக்கும்படிக்கு அவரை வேண்டிக்கொண்டார்கள்.

௩௩ அப்பொழுது அவர் கூட்டத்திலிருந்து அவனை ஒரு பக்கத்திலே கொண்டுபோய், தமது விரல்களை அவனுடைய காதுகளில் வைத்து [3]உமிழ்ந்து, அவனுடைய நாவைத்தொட்டு,

௩௪ [4]பின்பு வானத்தை அண்ணாந்து பார்த்து [5]மூச்சைவிட்டு, எப்பத்தா என்றார்; எப்பத்தா என்பதற்குத் திறக்கப்படுவாயாக என்று அருத்தமாம்.

௩௫ [6]உடனே அவனுடைய காதுகள் திறக்கப்பட்டன; அவன் நன்றாய்ப் பேசத்தக்கதாக அவனுடைய நாவின் கட்டும் நீக்கப்பட்டது.

௩௬ [7]பின்பு அவர்கள் அதை ஒருவருக்கும் சொல்லாதபடிக்கு அவர்களுக்குக் கட்டளையிட்டார்; அப்படியிருந்தும், தங்களுக்கு அவர் அப்படிக் கட்டளையிட்டது எவ்வளவோ, அவ்வளவாய் அதைப் பிரசித்தம்பண்ணினார்கள்.

௩௭ அல்லாமலும் அவர் சகலத்தையும் நன்றாய்ச் செய்தருளினார்; செவிடர் கேட்கவும், ஊமையர் பேசவும்பண்ணுகிறாரென்று மிகவும் மிகுதியான ஆச்சரியத்தோடே சொல்லிக்கொண்டார்கள்.

கி. பி. ௩௨.

1 மத். ௰௫. ௨௯.
2 மத். ௯. ௩௨. லூக். ௰௧. ௰௪.
3 மாற். ௮. ௨௩. யோவா. ௯. ௬.
4 மாற். ௬. ௪௧. யோவா.௰௧.௪௧; ௰௭. ௧.
5 யோவா. ௰௧. ௩௩, ௩௮.
6 ஏசா. ௩௫. ௫, ௬. மத். ௰௧. ௫.
7 மாற். ௫. ௪௩.

# ௮. அதிகாரம்.

௧. திரிந்த காலாயிரம்பேருக்கு அற்புதமாய்ச் சாப்பாடு கொடுத்தது. ௰. பரிசேயருக்கு ஒரு அடையாளமும் கொடுக்கப்படுவதில்லை என்பது. ௰௪. பரிசேயருடைய புளித்தமாவுக்கும், ஏரோதேனுடைய புளித்தமாவுக்கும் எச்சரிக்கையாயிருக்கப் போதித்தது. ௨௨. ஒரு குருடனுக்குப் பார்வையளித்தது. ௨௭. பாடுபட்டு உயிரோடு எழுந்திருக்கப்போகிறவராகிய கிறிஸ்து தாமே என்று அறிவித்தது. ௩௪. சுவிசேஷத்தின் நிமித்தமாய் வரும் துன்பங்களைப் பொறுமையோடே சகிக்கவேண்டுமென்று போதித்தது.

[8]அந்த நாள்களிலே சனங்கள் மிகுந்த கூட்டமாய்ப் போசனம்பண்ணுகிறதற்கு ஒன்றும் இல்லாதிருந்தபொழுது, இயேசுவானவர் தம்முடைய சீஷர்களை அழைத்து,

௨ இந்தச் சனங்கள் என்னிடத்தில் வந்து மூன்றுநாளாயிற்று; இப்பொழுது போசனம்பண்ணுகிறதற்கு இவர்களுக்கு ஒன்றுமில்லையே; ஆகையால் இவர்கள்மேல் உருக்கமாய் இரங்குகிறேன்.

8 மத். ௰௫. ௩௨.

Digitized by Google

௩ அல்லாமலும் இவர்களில் சிலர் தூரத்திலிருந்து வந்தவர்களாகையால், நான் அவர்களைப் பட்டினியாய் வீட்டிற்கு அனுப்பினால் வழியிலே சோர்ந்துபோவார்கள் என்று சொன்னபொழுது,

௪ சீஷர்கள் அவருக்கு மாறுத்தரமாக, இந்த வனாந்தரத்திலே ஒருவன் இவர்களுக்கு அப்பங்களினாலே திருத்தியாக்குவது எப்படி என்றார்கள்.

௫ அதற்கு அவர், [1]எத்தனை அப்பங்கள் உங்களிடத்தில் உண்டென்று கேட்டார்; ஏழு அப்பங்கள் உண்டென்றார்கள்.

௬ அப்பொழுது சனங்கள் தரையிலே இருக்கும்படி கட்டளையிட்டு, பின்பு அந்த ஏழு அப்பங்களையும் எடுத்துத் தோத்திரம்பண்ணி, அவைகளைப் பிட்டு, அவர்களுக்குள்ளே பரிமாறும்படிக்கு அவைகளைச் சீஷர்களிடத்தில் கொடுத்தார்; அந்தப்படி அவர்கள் சனங்களுக்குப் பரிமாறினார்கள்.

௭ அல்லாமலும் சில சிறிய மீன்கள் அவர்களிடத்தில் இருந்தன; [2]அவர் தோத்திரம் சொன்னபின்பு அவைகளையும்பரிமாறும்படிக்குக் கட்டளையிட்டார்.

௮ அப்படிச் சனங்கள் சாப்பிட்டுத் திருத்தியடைந்தார்கள்; ஏழு கூடைநிறையச் சேஷமானவைகளையும் எடுத்துக்கொண்டார்கள்.

௯ சாப்பிட்டவர்கள் ஏறக்குறைய நாலாயிரம்பேர் உண்டு.

௰ ¶ [3]பின்பு அவர்களை அனுப்பிவிட்டு, உடனே தம்முடைய சீஷருடனேகூடப் படவில் ஏறித் தலுமனுத்தாவூரின் திசைகளில் வந்தார்.

௰௧ [4]அங்கேயிருந்து பரிசேயர் அவரைப் பரிட்சைபார்க்கும்படிக்குப் புறப்பட்டு வந்து, அவருடனே தருக்கம்பண்ண ஆரம்பித்து,அவர் வானத்திலிருந்து ஒரு அடையாளத்தைக் காட்டும்படி கேட்டார்கள்.

௰௨ அப்பொழுது அவர் தமது உள்ளத்திலிருந்து பெருமூச்சைவிட்டு, இந்தத் தலைமுறையார் என்னத்தினாலே ஓர் அடையாளத்தைக் கேட்கிறார்கள்; இந்தச் சந்தியாருக்கு ஓர் அடையாளம் கொடுக்கப்படுவதில்லை என்று மெய்யாய் உங்களுக்குச் சொல்லுகிறேன் என்று சொல்லி,

௰௩ அவர்களைவிட்டு மறுபடியும் படவில் ஏறி, அக்கரைக்குப் போனார்.

௰௪ ¶ [5]சீஷர்கள் அப்பங்களைக் கூடக் கொண்டுபோக மறந்தார்கள்; படவில்(பிரவேசிக்கையில்) ஒரே அப்பம்மாத்திரம் அவர்களிடத்தில் இருந்தது.

௰௫ [6]அப்பொழுது அவர் அவர்களை நோக்கி, நீங்கள் பரிசேயருடைய புளிப்புள்ள மாவுக்கும், ஏரோதினுடைய புளிப்புள்ள மாவுக்கும் விலகி, மிகவும் எச்சரிக்கையாயிருக்கக்கடவீர்கள் என்று அவர்களுக்குக்கட்டளையிட்டார்.

௰௬ அவர்கள் (அதைக் கேட்டு,) தங்களுக்குள்ளே யோசனைபண்ணிக்கொண்டு, நம்மிடத்தில் [7]அப்பங்கள் இல்லாதபடியால் இப்படிச் சொன்னார் என்றார்கள்.

௰௭ இயேசுவானவர் அதை அறிந்து, அவர்களை நோக்கி, உங்களிடத்தில் அப்பங்கள் இல்லாததைக்குறித்து ஏன் யோசனைபண்ணுகிறீர்கள்? [8]இதுவரைக்கும் நீங்கள் அறிந்துகொள்ளாமலும் சிந்தித்துக்கொள்ளாமலுமா இருக்கிறீர்கள்; இதுவரைக்கும் உங்கள் இருதயம் கடினமாயிருக்கிறதா?

௰௮ கண்கள் இருந்தும் நீங்கள் காணாமலா இருக்கிறீர்கள்? காதிருந்தும் நீங்கள் கேளாமலா இருக்கிறீர்கள்? நீங்கள் நினைவுகூரவில்லையா?

௰௯ [9]அந்த ஐயாயிரம்பேருக்குள்ளே நான் அவ்வைந்து அப்பங்களையும் பிட்டுக் கொடுத்தபொழுது, எவ்வளவு கூடைநிறையச்

இ. பி. கூஉ.

1 மத். ௰௫. ௩௪. மாற். ௬. ௩௮.
2 மத். ௰௪. ௰௯. மாற். ௬. ௪௧.
3 மத். ௰௫. ௩௯.
4 மத். ௰௬. ௧: ௰௨. ௩௮. யோவா. ௬. ௩௦.
5 மத். ௰௬. ௫.
6 மத். ௰௬. ௬. லூக். ௰௨. ௧.
7 மத். ௰௬. ௭.
8 மாற். ௬. ௫௨.
9 மத். ௰௪. ௨௦. மாற். ௬. ௪௪. லூக். ௯. ௰௭. யோவா. ௬. ௰௩.

Digitized by Google

சேஷமானவைகளை எடுத்தீர்கள் என்று கேட்டதற்கு, பன்னிரண்டுகூடை நிறைய எடுத்தோம் என்றார்கள்.

௨௰ [1]அல்லாமலும் அந்த நாலாயிரம்பேருக்குள்ளே (நான்) அந்த ஏழு அப்பங்களையும் (கொடுத்த) பொழுது, எவ்வளவு கூடைநிறையச் சேஷமானவைகளை எடுத்துக் கொண்டீர்கள் என்று கேட்டதற்கு, ஏழு கூடைநிறைய என்றார்கள்.

௨௧ அவர் சொன்னது: அப்படியிருக்க, [2]நீங்கள் சிந்தித்துக்கொள்ளாமல் இருப்பதெப்படி என்று திருவுளம்பற்றினார்.

௨௨ ¶ பின்பு அவர் பெதுசாயிதா ஊருக்கு வந்தார்; அங்கே ஒரு குருடனை அவரிடத்திற்குக் கொண்டுவந்து, அவனைத் தொடும்படிக்கு அவரை வேண்டிக் கொண்டார்கள்.

௨௩ அப்பொழுது அவர் குருடனுடைய கையைப் பிடித்து, அவனைக் கிராமத்திற்குப் புறம்பே கொண்டுபோய், [3]அவனுடைய கண்களில் உமிழ்நீரைத் தடவித் தமது கைகளை அவன்மேல் வைத்து, உனக்கு ஏதாகிலும் தோன்றுகிறதா என்று கேட்டார்.

௨௪ அவன் அண்ணாந்து, நடந்துபோகிற மனிதரை மரங்கள் போலக் காண்கிறேன் என்றான்.

௨௫ பின்பு அவர் மறுபடியும் தம்முடைய கைகளை அவனுடைய கண்களின்மேல் வைத்து அவன் திரும்பஅண்ணாந்து பார்க்கும்படி செய்தார்; அப்பொழுது அவன் நன்றாய்க் குணமாக்கப்பட்டுச் சகலத்தையும் தெளிவாய்ப் பார்த்தான்.

௨௬ பின்பு அவர் அவனை நோக்கி, [4]நீ கிராமத்தில் பிரவேசியாமலும், அதில் ஒருவனுக்கும் இதைச் சொல்லாமலும் இருவென்று சொல்லி, அவனை வீட்டிற்கு அனுப்பிவிட்டார்.

௨௭ ¶ [5]பின்பு இயேசுவானவர் தம்முடைய சீஷர்களோடுங்கூட அவ்விடம்விட்டுப் பிலிப்பின்கேசரியாபட்டணத்தருகே இருக்கிற கிராமங்களுக்குப் போனார்; வழியிலே அவர் தம்முடைய சீஷர்களை நோக்கி, என்னைக்குறித்து மனிதர் என்ன சொல்லுகிறார்கள் என்று கேட்டார்.

௨௮ அவர்கள் சொன்னது: [6]சிலர் உம்மை ஸ்நானனாகிய யோவானென்றும், சிலர் எலியாவென்றும், சிலர் உம்மைத் தீர்க்கதரிசிகளில் ஒருவர் என்றும் சொல்லுகிறார்கள் என்றார்கள்.

௨௯ அப்பொழுது அவர், நீங்கள் என்னைக்குறித்து என்ன சொல்லுகிறீர்கள் என்றார்; அதற்குப் பேதுரு, [7]நீர் கிறிஸ்துவே என்றான்.

௩௰ [8]அப்பொழுது தம்மைக்குறித்து அப்படி ஒருவருக்கும் சொல்லாதபடிக்குக் கெட்டியாய் அவர்களுக்குக்கட்டளையிட்டார்.

௩௧ ¶ [9]அல்லாமலும் மனிதனுடைய குமாரன் மிகவும் பாடுபடவும் பெரியோர்கள் பிரதான ஆசாரியர் வேதபாரகர் என்பவர்களாலே தள்ளப்படவும், மரணமடையவும், பின்பு மூன்றுநாளுக்குள்ளே உயிரோடெழுந்திருக்கவும் வேண்டுமென்று அவர்களுக்கு அறிவிக்கத் தொடங்கினார்.

௩௨ அப்படி அவர் வெளியரங்கமாய்ப் பேசிக்கொண்டபொழுது, பேதுரு அவரைப் பக்கத்திலே அழைத்து, அவரைக் கடிந்துகொள்ளத் தொடங்கினான்.

௩௩ உடனே அவர் திரும்பி, தம்முடைய சீஷர்களை நோக்கிப் பார்த்து, பின்பு பேதுருவைநோக்கி, நீ பராபரனுக்குப் பிரியமானவைகளைச் சிந்தியாமல் மனிதருக்குப் பிரியமானவைகளைச் சிந்திக்கிறபடியினாலே, சாத்தானே நீ என்முன் இராமல் போவென்று அவனைக் கடிந்துகொண்டு,

கி. பி. ௩௨.

1 மத். ௰௫. ௩௪. ௩௭. ௮. ௪௧.
2 மாற். ௬. ௫௨. ௰௭. ௪௧.
3 மாற். ௭. ௩௩.
4 மத். ௮. ௪. மாற். ௫. ௪௩.
5 மத். ௰௬. ௰௩. லூக். ௯. ௰௮.
6 மத். ௰௪. ௨.
7 மத். ௰௬. ௰௬. யோவா. ௬. ௬௮: ௰௧. ௨௭.
8 மத். ௰௬. ௨௰.
9 மத். ௰௬. ௨௧: ௰௭. ௨௨. லூக். ௯. ௨௨.

Digitized by Google

௩௪ ¶ பின்பு தம்முடைய சீஷருடனே சனங்களை அழைத்து, எனக்குப் பின்செல்ல விரும்புகிறவன் எவனே, [1]அவன் தன்னைத் தான் வெறுத்துத் தன் சிலுவையை எடுத்துக்கொண்டு, எனக்குப் பின் செல்லக்கடவன்.

௩௫ என்னத்தினுல் என்றால், எவனாலும் [2]தன் சீவனை இரட்சிக்க விரும்பினல் அதை இழந்துபோவான்; என் நிமித்தமும் சுவிசேஷத்தின் நிமித்தமும் தன் சீவனை இழந்துபோகிறவன் எவனே, அவனே அதை இரட்சிப்பான்.

௩௬ அல்லாமலும் ஒருவன் உலகம் யாவையும் சம்பாதித்துக்கொண்டாலும், தன் சீவனை இழந்துபோனல் அவனுக்கு என்ன லாபம் உண்டாகும்?

௩௭ அல்லது ஒரு மனிதன் தன் சீவனை மீட்கும்படிக்கு என்னத்தைக் கொடுப்பான்?

௩௮ அன்றியும் [3]விபசாரமும் பாவமுமுள்ள இந்தச் சந்ததியாருக்குள்ளே எவன் என்னையும் என் வசனங்களையுங் குறித்து இலச்சை அடைவானே, [4]அவனைக்குறித்துத் தம் மனிதனுடைய குமாரன் தம்முடைய பிதாவின் மகிமையோடு பரிசுத்த தூதர்களுடனேயுங்கூட வரும்பொழுது இலச்சை அடைவான்.

## ௯. அதிகாரம்.

௧ இயேசு மறுரூபம் அடைந்தது. ௧௧. அவர் எலியாவின் வரவைக்குறித்துத் தம்முடைய சீஷர்களுக்குச் சொன்னது. ௧௪. ஊமையும், செவிடுமான ஒரு ஆவியைத் துரத்தினது. ௩௰. தம்முடைய மரணத்தையும், உயிர்த்தெழுதலையும் முன்னறிவித்தது. ௩௩. சீஷர்களுக்குத் தாழ்மையைப் படிப்பித்தது. ௩௮. அவர்களை விரோதியாதவர்களைத் தடைபண்ணாமலும், விசுவாசிகளுக்கு இடறல் உண்டாக்காமலும் இருக்கப் போதித்தது.

அல்லாமலும் [5]இங்கே நிற்கிறவர்களில் சிலர் பராபரனுடைய ஆளுகை பலத்தோடே வருகிறதைக் காணுமளவும் [6]மரணம் அடைவதில்லை என்று மெய்யாய் உங்களுக்குச்சொல்லுகிறேன் என்றார்.

௨ ¶ [7]ஆறுநாளுக்குப் பின்பு, இயேசுவானவர் பேதுருவையும் யாக்கோபையும் யோவானையும் கூட்டித் தனித்திருக்கும்படிக்கு அவர்களை உயரமான மலையில் கொண்டுபோய், அவர்களுக்கு முன்பாக மறுரூபப்பட்டார்.

௩ [8]அவருடைய வஸ்திரங்கள் பூமியிலே வண்ணான் செய்யக்கூடாத வண்ணமாயும் உறைந்த மழையைப்போலவும் மிகவும் வெண்மையாய்ப் பிரகாசித்தன.

௪ அல்லாமலும் மோசேயும் எலியாவும் அவர்களுக்குக் காணப்பட்டு, இயேசுவுடனே பேசிக்கொண்டார்கள்.

௫ அப்பொழுது பேதுரு இயேசுவை நோக்கி, இரபீ, நாம் இங்கே இருக்கிறது நல்லது; ஆகையால் உமக்காகவும் மோசேக்காகவும் எலியாவுக்காவும் ஒரொரு குடிலாக மூன்று குடில்களை உண்டுபண்ணுவோம் என்றான்.

௬ மிகுந்த பயம் அவர்களைப் பிடித்தபடியால், அவன் தான் பேசுகிற வசனங்களைத் தானே அறியாமல் அப்படிச் சொன்னான்.

௭ அப்பொழுது ஒரு மேகம் அவர்களை மூடிக்கொண்டது; அல்லாமலும், இவர் எனக்கு அன்பாயிருக்கிற என்னுடைய குமாரன், இவருக்குச் செவிகொடுங்கள் என்று அந்த மேகத்திலிருந்து ஒரு சத்தம் உண்டாயிற்று.

௮ உடனே அவர்கள் சுற்றிப் பார்த்தபொழுது, தங்கள் சேகரத்தில் இயேசுவையேயன்றி மற்றொருவனையும் காணவில்லை.

௯ ¶ பின்பு [9]அவர்கள் மலையிலிருந்து இறங்கினபொழுது, அவர் அவர்களை நோக்கி, நீங்கள் (மலையிலே) கண்டவைகளை மனிதனுடைய குமாரன் மரித்தோரிலிருந்து எழுந்திருப்பதற்கு முன்னே ஒருவருக்கும் அறிவியாமல் இருங்கள் என்று கட்டளையிட்டார்.

௸. பி. ௩௰௩.

1 மத். ௰. ௩௮: ௰௬. ௨௪. லூக். ௯. ௨௩: ௰௪. ௨௭.
2 யோவா. ௰௨. ௨௫.
3 மத். ௰. ௩௩. லூக். ௯. ௨௬: ௰௨. ௯.
4 உரோ. ௧. ௰௬. ௨ தீமோ. ௧. ௮: ௨. ௰௨.
5 மத். ௰௬. ௨௮. லூக். ௯. ௨௭.
6 மத். ௨௪. ௩௰: ௨௫. ௩௯. லூக். ௨௨. ௰௮.
7 மத். ௰௭. ௧. லூக். ௯. ௨௮.
8 தானி. ௭. ௯. மத். ௨௮. ௩.
9 மத். ௰௭. ௯.

Digitized by Google

௰ அவர்கள் அந்த வசனத்தை ஞாபகப்படுத்தி, மரித்தோரிலிருந்து எப்படி உயிரோடெழுந்திருக்கலாம் என்று தங்களுக்குள்ளே யோசனைபண்ணிக்கொண்டு,

௰௧ ¶ பின்பு அவரை நோக்கி, [1]முன்பு எலியா வரவேண்டுமென்று வேதபாரகர் சொல்லுகிறார்களே என்று வினாவினார்கள்.

௰௨ அதற்கு அவர் சொன்னது: முன்பு எலியா வந்து சகலத்தையும் சீர்ப்படுத்தவேண்டுவதுதான்; [2]அல்லாமலும் மனிதனுடைய குமாரன் மிகவும் பாடுபடவும் அசட்டைபண்ணப்படவும் வேண்டுமென்று [3]எழுதியிருக்கிறதுபோல, அவனும் பாடுபடவேண்டும்.

௰௩ [4]எலியா வந்தாயிற்றென்று உங்களுக்குச் சொல்லுகிறேன்; அவனைக்குறித்து எழுதியிருக்கிறபடி அவனை அவர்கள் தங்கள் இஷ்டப்படிக்குச் செய்தார்கள் என்றார்.

௰௪ ¶ [5]பின்பு அவர் (மற்றச்) சீஷர்களிடத்தில் வந்தபொழுது, அவர்களைச் சூழ மிகுந்த சனங்களையும் அவர்களுடனே தருக்கம் பண்ணின வேதபாரகரையும் கண்டார்.

௰௫ சனங்கள் எல்லாரும் அவரைக் கண்டவுடனே, அவர்கள் மிகவும் பிரமித்து ஓடிவந்து, அவரை வந்தனம்செய்தார்கள்.

௰௬ அப்பொழுது அவர் வேதபாரகரை நோக்கி, நீங்கள் எதைக் குறித்து இவர்களுடனே * தருக்கம்பண்ணுகிறீர்கள் என்று கேட்டார்.

௰௭ [6]அதற்குச் சனங்களில் ஒருவன் சொன்னது: போதகரே, ஊமையுள்ள ஆவியை அடைந்திருக்கிற என் மகனை உம்மிடத்தில் கொண்டுவந்தேன்.

௰௮ அந்த ஆவி எவ்விடத்திலாகிலும் அவனைப் பிடித்துக்கொள்ளுகிறபொழுது அவனைத் (தரையிலே) † மோதுகின்றது; பின்பு

1 மல்கி. ௪. ௫. மத். ௰௭. ௰.
2 லூக். ௨௩. ௰௧. பிலி. ௨. ௭.
3 சங். ௨௨. ௬. ஏசா. ௫௩. ௨-௱. தானி. ௯. ௨௬.
4 மத். ௰௧. ௰௪: ௰௭. ௰௨. லூக். ௧. ௰௭.
5 மத். ௰௭. ௰௪. லூக். ௯. ௩௭.
* அல்லது உங்களுக்குள்ளே.
6 மத். ௰௭. ௰௪. லூக். ௯. ௩௮.
† அல்லது கிழிக்கின்றது.
7 மாற். ௧. ௨௬. லூக். ௯. ௪௨.
8 மத். ௰௭. ௨௰. மாற். ௰௧. ௨௩. லூக். ௰௭. ௬. யோவா. ௰௧. ௪௰.

அவன் (வாயினாலே) நுரைதள்ள தன் பற்களைக் கடித்துக்கொண் சோர்ந்துபோகிறான்; அதைத் து த்தும்படிக்கு உம்முடைய சீ ரை வேண்டிக்கொண்டேன்; அப் படிச் செய்யும்படிக்கு அவர் ளால் கூடாமல் போயிற்று என் றான்.

௰௯ அப்பொழுது அவர் திரு எம்பற்றினது: ஆ விசுவாசமி லாத சந்ததியாரே, எதுவரைக்கு நான் உங்களோடிருப்பேன்; எ வரைக்கும் உங்களில் பொறுமை யாயிருப்பேன்; அவனை என்னி டத்தில் கொண்டுவாருங்கள் என் றார்; அவனை அவரிடத்தில் கொ ண்டுவந்தார்கள்.

௨௰ [7]அவரைக் கண்டவுடனே அந்த ஆவி அவனை அலைக்கழித் தது; மேலும் அவன் தரையிலே விழுந்து, (வாயினால்) நுரைதள் ளப் புரண்டான்.

௨௧ அப்பொழுது இயேசுவானவர் அவனுடைய தகப்பனை நோக்கி, இப்படி இவனுக்குண் டாகி எத்தனை நாளாயிற்று என்று கேட்டதற்கு அவன் சொன்னது: சிறுவயதுமுதற்கொண்டு இருக்கிறது.

௨௨ அல்லாமலும் இவனை அழிக்கும்படிக்கு அது அநேகந்தரம் நெருப்பிலேயும் சலத்திலேயும் தள்ளிற்று; அப்படியிருந்தும், நீர் ஏதாகிலும் செய்யக்கூடுமானால் எங்களுக்கு உருக்கமாயிரங்கி உதவிசெய்தருளும் என்றான்.

௨௩ இயேசுவானவர் சொன்னது: [8]நீ விசுவாசிக்கக் கூடுமானால் ஆகும்; விசுவாசிக்கிறவனுக்கு எதுவும் நடக்கும் என்று சொன்னவுடனே,

௨௪ அந்தப் பிள்ளையின் தகப்பன் அழுதுகொண்டு, ஆண்டவரே, விசுவாசிக்கிறேன், என் அவிசுவாசம் நீங்கும்படி உதவிசெய்யும் என்று கூப்பிட்டான்.

Digitized by Google

௨௫ அத்தருணத்திலே சனங்கள் ஓடிவந்து கூட்டமாகிறதை இயேசுவானவர் கண்டபொழுது, அவர் அந்த அசுத்த ஆவியுடனே சொன்னது: ஊமையும் செவிடுமான ஆவியே, நீ இவனைவிட்டுப் புறப்பட்டு, இனி இவனிடத்தில் பிரவேசியாமல் போ என்று உனக்குக் கட்டளையிடுகிறேன் என்று சொல்லி, அதை அதட்டினார்.

௨௬ அப்பொழுது அது சத்தமிட்டு, அவனை மிகவும் அலைக்கழித்துப் புறப்பட்டுப் போயிற்று; அவன் இறந்துபோனான் என்று அநேகர் சொல்லத்தக்கதாகச் செத்தவனைப் போலக் கிடந்தான்.

௨௭ இயேசுவானவர் அவனுடைய கையைப் பிடித்து, அவனை எடுத்தார், உடனே அவன் எழுந்திருந்தான்.

௨௮ ¶ [1]பின்பு அவர் வீட்டிற்கு வந்தபொழுது அவருடைய சீஷர் இரகசியமாய் அவரை நோக்கி, நாங்கள் அதைத் துரத்தும்படிக்கு எங்களுக்கு என் திராணியில்லை என்று கேட்டார்கள்.

௨௯ அவர் சொன்னது: செபத்தினாலும் உபவாசத்தினாலுமே அன்றி, மற்றொருவிதமாய் அந்தச் சாதியைத் துரத்தக்கூடாது என்றார்.

௩௰ ¶ பின்பு அவர்கள் அவ்விடம்விட்டுப் பிரயாணப்பட்டுக் கலிலேயா நாட்டின் வழியாய்ப் போகிறபொழுது, அவர் தம்முடைய சீஷர்களுக்கு உபதேசம் பண்ணவேண்டுமென்று இருந்தபடியினாலே, (தாம் போகிறதை) ஒருவரும் அறியாமல் இருக்கவேண்டும் என்று விரும்பினார்.

௩௧ பின்பு அவர் அவர்களை நோக்கி, [2]மனிதனுடைய குமாரன் மனிதர்களுடைய கையில் ஒப்புக்கொடுக்கப்படுவான்; அவர்கள் அவனைக் கொலைசெய்வார்கள்; மரித்தபின்பு அவன் மூன்றாம் நாளிலே உயிரோடெழுந்திருப்பான் என்றார்.

௩௨ அவர்கள் அந்தச் சங்கதியை அறிந்துகொள்ளவில்லை; மேலும் அவரிடத்தில் விசாரிக்கிறதற்கும் பயந்தார்கள்.

௩௩ ¶ [3]பின்பு அவர் கப்பர்நாகூம் பட்டணத்தில் சேர்ந்து, ஒரு வீட்டிலே இருந்தபொழுது, அவர் அவர்களை நோக்கி, வழியிலே நீங்கள் எதைக்குறித்து உங்களுக்குள்ளே தருக்கம்பண்ணிக்கொண்டீர்கள் என்று கேட்டார்.

௩௪ [4]அவர்கள் தங்களில் எவன் பெரியவன் என்று ஒருவரோடொருவர் வழியிலே தருக்கம் பண்ணிக்கொண்டபடியினாலே பேசாமல் இருந்தார்கள்.

௩௫ அப்பொழுது அவர் உளுக்காந்து பன்னிருவரையும் அழைத்துச் சொன்னது: ஒருவன் முதல்வனாயிருக்க விரும்பினால் அவன் எல்லாருக்கும் பிந்தினவனுமாய் எல்லாருக்கும் ஊழியக்காரனுமாய் இருக்கக்கடவன் என்று சொல்லி,

௩௬ [5]ஒரு பிள்ளையை எடுத்து அதை அவர்களுக்குள்ளே நிறுத்தி, பின்பு அதை அணைத்துக்கொண்டு,

௩௭ இப்படிப்பட்ட பிள்ளைகளில் ஒன்றை என்னுடைய நாமத்தினாலே சேர்த்துக்கொள்ளுகிறவன் எவனோ, அவன் என்னைச் சேர்த்துக்கொள்ளுகிறான்; [6]அல்லாமலும் என்னைச் சேர்த்துக்கொள்ளுகிறவன் எவனோ, அவன் என்னை (மாத்திரம்) அல்ல, என்னை அனுப்பினவரையும் சேர்த்துக்கொள்ளுகிறான் என்றார்.

௩௮ ¶ [7]அப்பொழுது யோவான் அவரை நோக்கி, போதகரே, நமக்குப் பின்செல்லாமல் இருக்கிற ஒருவன் உம்முடைய நாமத்தினாலே பசாசுகளைத் துரத்தக்கண்டோம்; அவன் நமக்குப் பின்செல்லாதபடியால் அவன் அப்படிச்

கி. பி. ௩௩.

1 மத். ௰எ. ௰௯.
2 மத். ௰எ. ௨௨. லூக். ௯. ௪௪.
3 மத். ௰௮. ௧. லூக். ௯. ௪௬: ௨௨. ௨௪.
4 மத். ௨௰. ௨௬, ௨௭. மாற். ௰. ௪௩.
5 மத். ௰௮. ௨. மாற். ௰. ௰௬.
6 மத். ௰. ௪௰. லூக். ௯. ௪௮.
7 ௪ மோ. ௰௧. ௨௮. லூக். ௯. ௪௯.

Digitized by Google

செய்யாதபடிக்குச் சொன்னோம் என்றான்.

௩௯ அதற்கு இயேசுவானவர் சொன்னது: நீங்கள் அவனுக்குத் தடைபண்ணவேண்டாம்; [1]என்னத்தினால் என்றால், என்னுடைய நாமத்தினாலே அற்புதம் செய்கிறவன் என்னைக்குறித்துச் சீக்கிரமாய்த் தீமைசொல்லமாட்டான்.

௪௰ [2]அல்லாமலும் உங்களுக்கு விரோதியல்லாதவன் உங்கள் பங்கில் இருக்கிறான்.

௪௧ [3]அன்றியும் நீங்கள் கிறிஸ்துவினுடையவர்களாய் இருக்கிறபடியினாலே, ஒருவன் என் நாமத்தினிமித்தம் ஒரு கலயம் தண்ணீர் உங்களுக்குக் கொடுத்தால், அவன் தன் பலனை இழந்துபோவதில்லை என்று மெய்யாய் உங்களுக்குச் சொல்லுகிறேன்.

௪௨ ¶ [4]அன்றியும் என்னை விசுவாசிக்கிறவர்களாகிய இந்தச் சிறியவர்களில் ஒருவன் குற்றம் செய்வதற்குக் காரணமாயிருக்கிறவன் எவனோ, அவன் தன் கழுத்திலே எந்திரக்கல் கட்டப்பட்டுச் சமுத்திரத்திலே தள்ளப்பட்டால் அவனுக்கு நன்மையாயிருக்கும்.

௪௩ [5]உன் கை உன்னைக் கெடுக்கிறதற்கு ஏதுவானால்* அதைத் தறித்துப்போடு; நீ இரண்டு கையை உடையவனாய்,

௪௪ நித்திய நரக அக்கினியிலே போவதிலும், ஊனனாய்ச் சீவனில் பிரவேசிக்கிறதே உனக்கு நலமாயிருக்கும்; [6]அந்நரகத்திற்குரியவர்களுடைய புழு சாவாமலும் அக்கினி அவியாமலும் இருக்கின்றன.

௪௫ அல்லாமலும் உன் கால் உன்னைக் கெடுக்கிறதற்கு ஏதுவானால் அதைத் தறித்துப்போடு; நீ இரண்டு காலையுடையவனாய்,

௪௬ நித்திய நரக அக்கினியிலே தள்ளப்படுகிறதிலும், சப்பாணியாய்ச் சீவனில் பிரவேசிக்கிறதே உனக்கு நலமாயிருக்கும்; அந்நரகத்திற்குரியவர்களுடைய புழு சா வாமலும் அக்கினி அவியாமலு இருக்கின்றன.

௪௭ அல்லாமலும் உன் கண் உன்னைக் †கெடுக்கிறதற்கு ஏது வானால், அதைப் பிடுங்கிப்போடு

௪௮ நீ இரண்டு கண்ணை உடை யவனாய் நரக அக்கினியிலே தள் ளப்படுகிறதிலும், ஒற்றைக் கண் ணனாய்ப் பராபரனுடைய இராச சியத்திலே பிரவேசிக்கிறதே உ னக்கு நலமாயிருக்கும்; அந்நரகத் திற்குரியவர்களுடைய புழு சா வாமலும் அக்கினி அவியாமலு இருக்கின்றன.

௪௯ [7]எல்லாப் பலிகளும் உப்பி னாலே சாரமாக்கப்படுகிறதுபோ ல, யாவனும் அக்கினியினாலே சாரமாக்கப்படுவான்.

௫௰ [8]உப்பானது நல்லது; உப் பானது சாரமற்றதேயானால், எதி னாலே அதற்குச் சாரம் உண்டாக் குவீர்கள்; [9]உங்களுக்குள்ளே உ ப்பு உண்டாயிருக்கும்படி செய் யுங்கள்; [10]அல்லாமலும் ஒருவ ரோடொருவர் சமாதானமாய் இ ருக்கக்கடவீர்கள் என்றார்.

கி. பி. ௩௩.

1 ௧ கொரி. ௰௨. ௩.
2 மத். ௰௨. ௩௰.
3 மத். ௰. ௪௨.
4 மத். ௰௮. ௬. லூக். ௰௭. ௨.
5 ௫ மோ. ௰௩. ௬-௮. மத். ௫. ௨௯: ௰௮. ௮.
* அல்லது கெடுத்தால்.
6 ஏசா. ௬௬. ௨௪.
† அல்லது கெடுத்தால்.
7 ௩ மோ. ௨. ௰௩. எசே. ௪௩. ௨௪.
8 மத். ௫. ௰௩. லூக். ௰௪. ௩௪.
9 எபே. ௪. ௨௯. கொலோ. ௪. ௬.
10 உரோ. ௰௨. ௰௮: ௰௪. ௰௯. ௨ கொரி. ௰௩. ௰௧. எபி. ௰௨. ௰௪.
11 மத். ௰௯. ௧. யோவா. ௰. ௪௰: ௰௧. ௭.

## ௰. அதிகாரம்.

௨. கிறிஸ்து விவாகப்பிரிவைக்குறித்துப் பரிசே யர்களுக்கு உத்தரவுசொல்லி, ௰௩. தம்மிடத்தில் கொண்டுவரப்பட்ட பிள்ளைகளை ஆசீர்வதித்து ௰௭. நித்திய சீவனையும் வழியைக்குறித்த ஐசுவரியவானுக்கு நியாயம்சொல்லி, ௨௩. ஐசுவரியத்தின் தீமைகளைக்குறித்துச் சீஷர்களுக்கு அறிவித்து, ௨௮. சுவிசேஷத்தின் நிமித்தம் ய தொன்றை வெறுத்துவிடுகிறவர்கள் தகுந்த பலன் அடைவார்களென்று கூறி, ௩௨. தம்முடைய ம ணத்தையும், உயிர்த்தெழுதலையும் முன்னறிவித்து ௩௫. பெருமையுள்ள இருவருடைய விண்ணப் பத்தை மறுத்து அவர்களுக்கு மனத்தாழ்மையைப் படிப்பித்து, ௪௬. குருடனாயிருந்த பர்த்திமேயுவுக் குப் பார்வை அளித்தது.

[11]பின்பு அவர் எழுந்து, யோர் தான் அருகேயுள்ள யூதேயா நாட் டின் திசைகளுக்குப் போனார்; அங்கே மறுபடியும் சனங்கள் அ வரிடத்தில் கூடிவந்தார்கள், அவ ரும் வழக்கத்தின்படி அவர்களுக் கு மறுபடியும் உபதேசம்பண்ணி னார்.

Digitized by Google

௨ ¶ [1]அல்லாமலும் பரிசேயர் அவரைச் சோதிக்கும்படிக்கு அவரிடத்தில் வந்து, புருஷனானவன் தன் மனைவியைத் தள்ளிவிடலாமா என்று கேட்டார்கள்.

௩ அவர்களை அவர்நோக்கி, மோசே என்பவர் உங்களுக்கு எப்படிக் கட்டளையிட்டார் என்றார்.

௪ அவர்கள் சொன்னது: தள்ளுதற்சீட்டை எழுதி அவளைத் தள்ளிவிடும்படிக்கு [2]மோசே உத்தரவு கொடுத்தார் என்றார்கள்.

௫ அப்பொழுது இயேசுவானவர் அவர்களுக்குச் சொன்னது: உங்களுடைய இருதயம் கடினமானபடியினாலே, மோசே உங்களுக்கு இந்தக் கட்டளையை எழுதினார்.

௬ உலகம் உண்டானது முதற்கொண்டு பராபரன் அவர்களை [3]ஆணும் பெண்ணுமாகச் செய்தார்.

௭ [4]அதின் நிமித்தம் ஒருவன் தன் தகப்பனையும் தாயையும்விட்டுத் தன் மனைவியுடனே இசைந்திருப்பான் என்றும்,

௮ அவர்கள் இருவரும் ஒரே சரீரமாய் இருப்பார்களென்றும் சொல்லியிருக்கிறபடியினாலே, அவர்கள் இருவராயிராமல் ஒரே சரீரமாயிருக்கிறார்கள்.

௯ ஆகையால் பராபரன் இணைத்ததை மனிதன் பிரியாமலிருக்கக் கடவன் என்றார்.

௰ ¶ பின்பு வீட்டிலே அவருடைய சீஷர்கள் அதைக்குறித்து மறுபடியும் அவரிடத்தில் விசாரித்தபொழுது,

௧௧ அவர் சொன்னது: [5]தன் மனைவியைத் தள்ளி வேறொருத்தியை விவாகம்பண்ணுகிறவன் எவனோ, அவன் அவளுக்கு விரோதமாய் விபசாரம்செய்கிறவன்.

௧௨ அல்லாமலும் மனைவியானவள் தன் புருஷனைத் தள்ளி வேறொருவனை விவாகம்பண்ணினால், அவள் விபசாரம்செய்கிறவள் என்றார்.

௧௩ ¶ [6]அப்பொழுது அவராலே தொடப்படும்படிக்குப் பிள்ளைகளை அவரிடத்திற்குக் கொண்டு வந்தார்கள்; சீஷர்கள் அவைகளைக் கொண்டுவந்தவர்களை அதட்டினார்கள்.

௧௪ இயேசுவானவர் அதைக் கண்டு, விசனம் அடைந்து, பிள்ளைகள் என்னிடத்தில் வருகிறதற்குத் தடைபண்ணாமல், இடங்கொடுங்கள்; [7]பராபரனுடைய இராச்சியம் அப்படிப்பட்டவைகளுக்கு உடைமையானதே.

௧௫ [8]எவனானாலும் ஒரு பிள்ளையைப்போலப் பராபரனுடைய இராச்சியத்தை ஏற்றுக்கொள்ளாமலிருந்தால், அவன் அதில் பிரவேசிப்பதில்லை என்று மெய்யாய் உங்களுக்குச் சொல்லுகிறேன் என்று சொல்லி,

௧௬ பின்பு அவைகளை அணைத்துக்கொண்டு, தம்முடைய கைகளை அவைகள்மேல் வைத்து, அவைகளை ஆசீர்வதித்தார்.

௧௭ ¶ [9]பின்பு அவர் புறப்பட்டு வழியிலே நடக்கையில், ஒருவன் அவரிடத்திற்கு ஓடிவந்து, முழங்காற்படியிட்டு, நல்ல போதகரே, நித்தியசீவனைச் சுதந்தரித்துக்கொள்ளும்படிக்கு, நான் செய்ய வேண்டியது என்னவென்று கேட்டான்.

௧௮ அவனுடனே அவர் சொன்னது: நீ என்னை நல்லவனென்று ஏன் சொல்லுகிறாய்? பராபரனாகிய ஒருவரேயன்றி, மற்றொருவனும் நல்லவன் அல்லவே.

௧௯ [10]விபசாரம்பண்ணாமல் இருப்பாயாக; கொலைசெய்யாதிருப்பாயாக; களவுசெய்யாதிருப்பாயாக; பொய்ச்சாட்சிசொல்லாதிருப்பாயாக; வஞ்சனைசெய்யாதிருப்பாயாக; உன் தகப்பனையும் தாயையும் கனம்பண்ணுவாயாக

இ. பி. ௬௬.

1 மத். ௰௯. ௩.
2 ௫ மோ. ௨௪. ௧. மத். ௫. ௩௧ ; ௰௯. ௭.
3 ௧ மோ. ௧. ௨௭: ௫. ௨.
4 ௧ மோ. ௨. ௨௪. ௧ கொரி. ௬. ௰௬. எபே. ௫. ௩௧.
5 மத். ௫. ௩௨: ௰௯. ௯. லூக். ௰௬. ௰௮. ரோ. ௭. ௩. ௧ கொரி. ௭. ௰, ௰௧.
6 மத். ௰௯. ௰௩. லூக். ௰௮. ௰௫.
7 ௧ கொரி. ௰௪. ௨௦. ௧ பே. ௨. ௨.
8 மத். ௰௮. ௩.
9 மத். ௰௯. ௰௬. லூக. ௰௮. ௰௮.
10 ௨ மோ. ௨௦. ௰௨. ரோ. ௰௩. ௯.

Digitized by Google

என்றிருக்கிற கற்பனைகளை அறிந்திருக்கிறாயே என்றார்.

௨௰ அதற்கு அவன் சொன்னது: போதகரே, அவைகளையெல்லாம் நான் என் சிறுவயதுமுதல் கைக்கொண்டுவருகிறேன் என்றான்.

௨௧ அப்பொழுது இயேசுவானவர் அவனைப் பார்த்து, அவனிடத்தில் அன்புகூர்ந்து சொன்னது: உன்னிடத்தில் பின்னும் ஒன்று குறைவாய் இருக்கிறது; [1]நீ போய் உனக்கு உண்டானவைகளை விற்று, பரமண்டலத்திலே பொக்கிஷத்தை அடைந்துகொள்ளத்தக்கதாக, அவைகளை ஏழைகளுக்குக் கொடுத்து, பின்பு வந்து சிலுவையை எடுத்துக்கொண்டு, எனக்குப் பின்செல்லுவாயாக என்றார்.

௨௨ அவன் மிகுந்த ஆஸ்திகளை உடையவனானபடியினாலே, அந்த வசனத்தைக் கேட்டு, மனம் நொந்து, துக்கத்தோடே அவரை விட்டுப்போனான்.

௨௩ ¶ [2]அப்பொழுது இயேசுவானவர் சுற்றிப்பார்த்து, தம்முடைய சீஷர்களுடனே சொன்னது: பொருள்களைப்பெற்றவர்கள் பராபரனுடைய இராச்சியத்தில் பிரவேசிக்கிறது மிகவும் அரிது என்றார்.

௨௪ அல்லாமலும் சீஷர்கள் அந்த வசனங்களைக் குறித்துத் திகைத்தபொழுது, இயேசுவானவர் அவர்களுக்குப் பின்னும் சொன்னது: பிள்ளைகளே, [3]பொருள்களின் மேல் நம்பிக்கையாயிருக்கிறவர்கள் பராபரனுடைய இராச்சியத்தில் பிரவேசிக்கிறது மிகவும் அரிதாகவே இருக்கிறது.

௨௫ ஐசுவரியமுள்ளவன் பராபரனுடைய இராச்சியத்தில் பிரவேசிக்கிறதிலும், ஒட்டகமானது ஒரு ஊசியின் காதில் நுழைகிறது எளிதாய் இருக்கிறதென்றார்.

௨௬ அவர்கள் அதிகமாய்ப் பிரமித்து, அப்படியானால் இரட்சிக்கப்படுபவர்கள் யாரென்று தங்களுக்குள்ளே சொல்லிக்கொண்டார்கள்.

௨௭ அப்பொழுது இயேசுவானவர் அவர்களைப் பார்த்து, மனிதர்களுக்கு அது கூடாத காரியந்தான்; [4]பராபரனே, எதையும் செய்யத் திராணியுள்ளவர், ஆகையால் பராபரனுக்கு அது கூடாத காரியமல்ல என்றார்.

௨௮ ¶ [5]பின்பு பேதுரு அவரை நோக்கி, இதோ நாங்கள் எல்லாவற்றையும்விட்டு உமக்குப் பின்சென்றோமே என்றான்.

௨௯ அதற்கு இயேசுவானவர் சொன்னது: என் நிமித்தமும் சுவிசேஷத்தின் நிமித்தமும் வீட்டையாவது, சகோதரர்களையாவது, சகோதரிகளையாவது, தகப்பனையாவது, தாயையாவது, மனைவியையாவது, பிள்ளைகளையாவது, நிலங்களையாவதுவிட்டு,

௩௰ [6]பின்பு இம்மையிலே துன்பங்களுடனேகூட நூறுமடங்காய் வீடுகளையும், சகோதரர்களையும், சகோதரிகளையும், தாய்களையும், பிள்ளைகளையும், நிலங்களையும், மறுமையிலே நித்தியசீவனையும், பெற்றுக்கொள்ளாமல் இருக்கிறவன் ஒருவனும் இல்லையென்றும்,

௩௧ [7]முந்தினோராகிய அநேகர் பிந்தினோராயும், பிந்தினோர் முந்தினோராயும் இருப்பார்களென்றும், மெய்யாய் உங்களுக்குச் சொல்லுகிறேன் என்றார்.

௩௨ ¶ [8]அன்றியும் அவர்கள் எருசலேம் நகரத்திற்குப் பிரயாணமாய்ப் போனபொழுது, இயேசுவானவர் அவர்களுக்கு முன்னே நடந்தார்; அவர்கள் பிரமித்துப் பயத்தோடே அவருக்குப் பின்சென்றார்கள்; [9]அப்பொழுது அவர் பன்னிருவரையும் மறுபடியும் அழைத்துத் தமக்குச் சம்பவிக்கும் காரியங்களை அவர்களுக்கு அறிவித்துச் சொன்னது:

கி. பி. ௩௩.

1 மத். ௬. ௰௯, ௨௰: ௰௯. ௨௧. லூக். ௰௨. ௩௩: ௰௬. ௯.
2 மத். ௰௯. ௨௩. லூக். ௰௮. ௨௪.
3 யோபு. ௩௧. ௨௪. சங். ௫௨. ௭: ௬௨. ௰. ௧ தீமோ. ௬. ௰௭
4 எரே. ௩௨. ௰௭. மத். ௰௯. ௨௬. லூக். ௧. ௩௭.
5 மத். ௰௯. ௨௭. லூக். ௰௮. ௨௮.
6 ௨ நாளா. ௨௫. ௯. லூக். ௰௮. ௩௰.
7 மத். ௰௯. ௩௰: ௨௰. ௰௬. லூக். ௰௩. ௩௰.
8 மத். ௨௰. ௰௭. லூக். ௰௮. ௩௧.
9 மாற். ௮. ௩௧: ௯. ௩௧. லூக் ௯. ௨௨: ௰௮. ௩௧.

Digitized by Google

௩௩ இதோ, எருசலேமுக்குப் போகிறோம், அங்கே மனிதனுடைய குமாரன் பிரதான ஆசாரியருக்கும் வேதபாரகருக்கும் ஒப்புக்கொடுக்கப்படுவான்; அவர்கள் அவனை மரண ஆக்கினைக்கு உட்படுத்தும்படிக்குத் தீர்ப்புச்செய்து, அவனைப் புறத்தேசத்தாருக்கு ஒப்புக்கொடுப்பார்கள்.

௩௪ அவர்கள் அவனை இழிவுசெய்து, அவனை வாரினால் அடித்து, அவன்மேலே துப்பி, அவனைக் கொலைசெய்வார்கள்; ஆகிலும் மூன்றாம் நாளிலே அவன் உயிரோடெழுந்திருப்பான் என்றார்.

௩௫ ¶ [1]பின்பு செபேதேயுவின் குமாரர்களாகிய யாக்கோபும் யோவானும் அவரிடத்தில் வந்து, போதகரே, நாங்கள் வேண்டிக்கொள்ளுகிறபடி நீர் எங்களுக்குச் செய்யவேண்டுமென்று விரும்புகிறோம் என்றார்கள்.

௩௬ அதற்கு அவர், நான் உங்களுக்குச் செய்ய நீங்கள் விரும்புகிறது என்னவென்றார்.

௩௭ அவர்கள் சொன்னது: நீர் மகிமையை அடைந்திருக்கும்பொழுது, எங்களில் ஒருவன் உம்முடைய வலதுபக்கத்திலேயும், ஒருவன் உம்முடைய இடதுபக்கத்திலேயும் இருக்க அனுக்கிரகம் பண்ணவேண்டும் என்று சொன்னார்கள்.

௩௮ இயேசுவானவர் சொன்னது: நீங்கள் கேட்டது உங்களுக்கே தெரியவில்லை; நான் பானம்பண்ணும் பாத்திரத்தில் பானம்பண்ணவும், நான் பெற்றுக்கொள்ளும் ஸ்நானத்தைப் பெற்றுக்கொள்ளவும் உங்களால் கூடுமோ என்று சொன்னதற்கு,

௩௯ அவர்கள் கூடும் என்றார்கள்; அப்பொழுது இயேசுவானவர் அவர்களை நோக்கி, நான் பானம்பண்ணும் பாத்திரத்தில் நீங்களும் பானம்பண்ணுவீர்கள், அல்லாமலும் நான் பெற்றுக்கொள்ளும் ஸ்நானத்தை நீங்களும் பெற்றுக்கொள்வீர்கள், அது மெய்தான்.

௪௰ ஆனாலும் குறிக்கப்பட்டவர்களுக்கேயன்றி, (மற்றொருவருக்கும்) என் வலதுபக்கத்திலும் என் இடதுபக்கத்திலும் இருப்பதற்கான (கனத்தை) நான் கொடுக்கக்கூடாதென்றார்.

௪௧ ¶ [2]மற்றப் பத்துப்பேரும் அதைக் கேள்விப்பட்டு, யாக்கோபின்மேலும் யோவான்மேலும் கோபமாயிருக்கத் தொடங்கினார்கள்.

௪௨ அப்பொழுது இயேசுவானவர் அவர்களை அழைத்துச் சொன்னது: நீங்கள் அறிந்திருக்கிறபடி, உலகத்தாருக்குள்ளே பிரபுக்கள்* என்னப்பட்டிருக்கிறவர்கள் இறுமாப்பாய் ஆளுகிறார்கள்; [3]அல்லாமலும் அவர்களுடைய பெரியோர்கள் இஷ்டப்படிக்கு அவர்கள்மேல் அதிகாரம் செலுத்துகிறார்கள்.

௪௩ [4]அப்படி உங்களுக்குள்ளே இருக்கக்கூடாது; உங்களுக்குள்ளே பெரியவனாய் இருக்கவிரும்புகிறவன், உங்கள் ஊழியக்காரனாய் இருக்கக்கடவன்.

௪௪ உங்களில் முதலாளியாயிருக்க விரும்புகிறவன், எல்லாருக்கும் அடிமையாய் இருக்கக்கடவன்.

௪௫ [5]மனிதனுடைய குமாரனும், ஊழியம் அடையும்படிக்கு வராமல், ஊழியம் செய்யும்படிக்கும் [6]அநேகரை மீட்கும்பொருளாகத் தன்னுடைய சீவனைக்கொடுக்கும்படிக்கும் வந்தானே என்றார்.

௪௬ ¶ [7]பின்பு அவர்கள் எரிகோ பட்டணத்திற்கு வந்தார்கள், அவரும் அவருடைய சீஷர்களும் மிகுந்த சனங்களும் அதைவிட்டுப் போனபொழுது, தீமேயு என்பவனுடைய மகனாகிய குருடனான பருத்திமேயு என்பவன் வழியிலே பிச்சைகேட்டுக்கொண்டிருக்கையில்,

கி. பி. ௩௩.

1 மத். ௨௰. ௨௰.

2 மத். ௨௰. ௨௪.

* அல்லது நல்லவர்கள்.

3 லூக். ௨௨. ௨௫.

4 மத். ௨௰. ௨௬, ௨௮. மாற். ௯. ௩௫. லூக். ௯. ௪௮.

5 யோவா. ௰௩. ௪. பிலி. ௨. ௭.

6 மத். ௨௰. ௨௮. ௧ தீமோ. ௨. ௬. தீத். ௨. ௰௪.

7 மத். ௨௰. ௨௯. லூக். ௰௮. ௩௫.

Digitized by Google

சஎ நாசரேத்தூராராகிய இயேசுவானவர் வருகிறாரென்று கேள்விப்பட்டு, இயேசுவே, தாவீதின் குமாரனே, என்மேல் இரக்கமாயிரும் என்று கூப்பிடத்தொடங்கினான்.

சஅ அவன் பேசாமலிருக்கும்படிக்கு அநேகர் அவனைக் கடிந்துகொண்டார்கள்; அப்படியிருந்தும் அவன், தாவீதின் குமாரனே, என்மேல் இரக்கமாயிரும் என்று அதிகமாய்க் கூப்பிட்டான்.

சகூ அப்பொழுது இயேசுவானவர் நின்று, அவனை அழைத்துவரச் சொன்னார்; அந்தப்படி சிலர் அவனை அழைத்து, திடமாயிரு எழுந்திரு, அவர் உன்னை அழைக்கிறார் என்றார்கள்.

ருய உடனே அவன் தன் வஸ்திரத்தைத் தள்ளி எழுந்து, இயேசுவானவரிடத்தில் வந்தான்.

ருக அவர் அவனை நோக்கி, நான் உனக்கு என்ன செய்யவேண்டும் என்றிருக்கிறாய் என்றார்; குருடனானவன் சொன்னது: இரபூனீ நீர் எனக்குப் பார்வை கொடுக்கவேண்டும் என்றான்.

ருஉ இயேசுவானவர் சொன்னது: [1]உன் விசுவாசம், உன்னைக் குணமாக்கிற்று,* நீ போகலாம் என்றார்; உடனே அவன் பார்வை அடைந்து, வழியிலே இயேசுவுக்குப் பின்சென்றான்.

## யக. அதிகாரம்.

க. கிறிஸ்து சிறப்பாய் எருசலேமுக்குள் பிரவேசித்தது. யஉ. கனியற்ற அத்திமரத்தைச் சபித்தது. யரு. தேவலாயத்தைச் சுத்திகரித்தது. உய. விசுவாசத்தில் உறுதிகொள்ளவும், பகைஞரை மன்னிக்கவும் சீஷர்களுக்குப் போதித்தது. உஎ. பராபரனால் அனுப்பப்பட்ட மனுஷனாகிய யோவானுடைய சாட்சியினால் அவருடைய செய்கைகளுக்கு உதாரணம் கொடுத்தது.

[2]பின்பு அவர்கள் எருசலேமுக்குச் சமீபமாய்ப் போய், ஒலீவமலை அருகே இருக்கிற பெத்பாகே பெத்தானியா ஊர்களுக்குச் சேர்ந்தபொழுது, அவர் தம்முடைய சீஷரில் இரண்டுபேரை நோக்கி,

கி. பி. ௩௩.



உ உங்களுக்கு முன்பாக இருக்கிற அந்தக் கிராமத்திற்குப் போங்கள்; நீங்கள் அதில் பிரவேசித்தவுடனே, ஒருவரும் ஏறாமல் கட்டப்பட்டிருக்கிற (கழுதையின் குட்டியைக் காண்பீர்கள்; அதின் கட்டவிழ்த்து அதைக் கொண்டு வாருங்கள்.

௩ ஒருவன், ஏன் இப்படிச் செய்கிறீர்கள் என்று உங்களுடனே சொன்னால், ஆண்டவருக்கு இது வேண்டும் என்று சொல்லுங்கள்; உடனே அவன் அதை இவ்விடத்திற்கு அனுப்பிவிடுவான் என்று அனுப்பினார்.

ச அந்தப்படி அவர்கள் போய் வெளியே தெருவில் கதவின் அருகே கட்டப்பட்டிருக்கிற (கழுதையின்) குட்டியைக்கண்டு, அதின் கட்டவிழ்க்கிறபொழுது,

ரு அங்கே நின்ற சிலர் அவர்களை நோக்கி, நீங்கள் ஏன் இதின் கட்டவிழ்க்கிறீர்கள் என்றார்கள்.

சு இயேசுவானவர் தங்களுக்குக் கட்டளையிட்டபடி சீஷர் அவர்களுக்கு உத்தரவு சொன்னார்கள்; அப்பொழுது அவர்களை விட்டுவிட்டார்கள்.

எ ஆகையால் சீஷர் அந்தக் குட்டியை இயேசுவினிடத்திற்குக் கொண்டுவந்து, தங்கள் வஸ்திரங்களை அதின்மேல் போட்டார்கள்; அவர் அதின்மேல் ஏறிப் போனார்.

அ [3]அப்பொழுது அநேகர் தங்கள் வஸ்திரங்களை வழியிலே விரித்தார்கள்; சிலர் மரங்களின் கிளைகளை முறித்து வழியிலே பரப்பினார்கள்.

கூ அல்லாமலும் முன்நடப்பாரும் பின்நடப்பாரும், [4]ஓசன்னா பராபரனுடைய நாமத்தினாலே வருகிறவர் தோத்திரம்செய்யப்படத்தக்கவர்.

ய பராபரனுடைய நாமத்தினாலே வருகிற நம்முடைய பிதாவாகிய தாவீதின் ஆளுகை வாழ்த்தி

[1] மத். கூ. உஉ. மாற். ரு. ௩ச.
* அல்லது உன்னை இரட்சித்தது.
[2] மத். உக. க. லூக். யகூ. உகூ. யோவா. யஉ. யச.
[3] மத். உக. அ.
[4] சங். ௱யஅ. உசு.

Digitized by Google

கொள்ளப்படக்கடவது; [1]உன்னதமான இடங்களிலே ஓசன்னா என்று கூப்பிட்டார்கள்.

௰௧ ¶ [2]அப்பொழுது இயேசுவானவர் எருசலேமிலேயும் தேவாலயத்திலேயும் பிரவேசித்தார்; அங்கே அவர் எல்லாவற்றையும் சுற்றிப்பார்த்து, பின்பு சாயந்தரமானபொழுது பன்னிருவருடனே புறப்பட்டுப் பெத்தானியாவுருக்குப் போனார்.

௰௨ ¶ [3]மறுநாளிலே அவர்கள் பெத்தானியா வூரைவிட்டுப் புறப்பட்டபொழுது அவருக்குப் பசி உண்டாயிற்று.

௰௩ [4]உடனே அவர் தூரத்திலே புன்னை இலையையுடைய அத்திமரத்தைக் கண்டு, அதிலே ஒரு கனியேயாகிலும் கண்டு பறித்துக்கொள்ளலாம் என்று அவ்விடத்திற்குப் புறப்பட்டு, அதின் அருகே சேர்ந்தபொழுது, அத்திமரங்கள் கனிகொடுக்கிற காலம் அல்லாதபடியால் இலைகளையே அல்லாமல் மற்றொன்றையும் அவர் காணவில்லை.

௰௪ அப்பொழுது இயேசுவானவர் அதை நோக்கி, இனி ஒருக்காலும் ஒருவனும் உன்னிடத்திலே கனியைப் புசியாதிருப்பானாக என்று சொன்னார்; அதை அவருடைய சீஷர்கள் கேட்டார்கள்.

௰௫ ¶ [5]பின்பு அவர்கள் எருசலேமுக்கு வந்தார்கள்; அங்கே இயேசுவானவர் தேவாலயத்தில் பிரவேசித்து, அதிலே விற்பாரையும் கொள்வாரையும் துரத்தி, காசுக்காரருடைய பலகைகளையும் புறாக்களை விற்கிறவர்களுடைய ஆசனங்களையும் கவிழ்த்து,

௰௬ ஒருவரும் ஒரு பாத்திரத்தைத் தேவாலயத்தின் வழியாய்க் கொண்டுபோகிறதற்கு இடங்கொடாமல் இருந்தார்.

௰௭ [6]அல்லாமலும், என்னுடைய ஆலயம் எல்லாத் தேசத்தாரும் செபம்பண்ணும்படிக்கான ஆலயம் என்னப்படும் என்று* எழுதியிருக்கிறதல்லவா? [7]நீங்கள் இதைக் கள்ளர் குகையாக்கினீர்கள் என்று அவர்களுக்குப் போதித்தார்.

௰௮ [8]வேதபாரகரும் பிரதான ஆசாரியரும் அதைக் கேட்டபொழுது, [9]சனங்கள் எல்லாரும் அவருடைய உபதேசத்தைக்குறித்து ஆச்சரியப்பட்டபடியினாலே, அவருக்குப் பயந்து, அவரை மாய்க்கும்படிக்கு வகைதேடினார்கள்.

௰௯ சாயந்தரமானபொழுது அவர் நகரத்திற்குப் புறம்பே போனார்.

௨௰ ¶ [10]மறுநாளிலே அவர்கள் திரும்பிப் புறப்பட்டபொழுது, அந்த அத்திமரம் வேரோடேபட்டுப்போனதைக் கண்டார்கள்.

௨௧ உடனே பேதுரு நினைவுகொண்டு அவரை நோக்கி, இரபீ, இதோ, நீர் சபித்த அத்திமரம் பட்டுப்போயிற்று என்றான்.

௨௨ அதற்கு மாறுத்தரமாக அவர் அவர்களுடனே சொன்னது: பராபரனில் † விசுவாசமாயிருங்கள்.

௨௩ ஏனென்றால், [11]எவனானாலும் இந்த மலையைநோக்கி, நீ எழுந்து சமுத்திரத்திலே விழுவாயாக என்று சொல்லி, தன் இருதயத்திலே ஒன்றும் சந்தேகப்படாமல், தான் சொன்னபடியே நடக்கும் என்று விசுவாசித்தால், அந்தச் சொற்படியே அவனுக்கு நடக்கும் என்று மெய்யாய் உங்களுக்குச் சொல்லுகிறேன்.

௨௪ ஆதலால் நான் (பின்னும்) உங்களுக்குச்சொல்லுகிறதாவது: செபம்பண்ணும்பொழுது [12]நீங்கள் வேண்டிக்கொள்ளும் யாவையும் பெற்றுக்கொள்ளலாம் என்று விசுவாசியுங்கள், அப்பொழுது அவைகள் உங்களுக்கு உண்டாகும்.

௨௫ அல்லாமலும் பரமண்டலத்திலிருக்கிற உங்கள் பிதா உங்கள்

கி. பி. ௩௰௩.

1 சங். ௧௪௮. ௧.
2 மத். ௨௧. ௰௨.
3 மத். ௨௧. ௰௮.
4 மத். ௨௧. ௰௯.
5 மத். ௨௧. ௰௨. லூக். ௰௯. ௪௫. யோவா. ௨. ௰௪.
6 ஏசா. ௫௬. ௭.
* அல்லது செபம்பண்ணும்படிக்கு எல்லாத் தேசத்தாருடையதென்று.
7 எரே. ௭. ௰௧.
8 மத். ௨௧. ௪௫, ௪௬. லூக். ௰௯. ௪௭.
9 மத். ௭. ௨௮, ௨௨. மாற். ௧. ௨௨. லூக். ௪. ௩௨.
10 மத். ௨௧. ௰௯.
† அல்லது பராபரனுடைய.
11 மத். ௱. ௨௰ ௨௧. ௨௧. லூக். ௱. ௬.
12 மத். ௭. ௭. லூக். ௰௧. ௯. யோவா. ௰௪. ௰௩: ௰௫. ௭: ௰௬. ௨௪. யாக். ௧. ௫, ௬.

Digitized by Google

தப்பிதங்களை மன்னிக்கும்படிக்கு நீங்கள் செபம்பண்ண எழுந்து நிற்கும்பொழுது, ஒருவன்மேல் உங்களுக்கு விசனம் உண்டானால் [1]மன்னித்துக்கொள்ளுங்கள்.

௨௬ [2]நீங்கள் மன்னியாதிருப்பீர்களானால், பரமண்டலங்களிலிருக்கிற உங்கள் பிதாவும் உங்கள் தப்பிதங்களை மன்னியாதிருப்பார் என்றார்.

௨௭ ¶ [3]அவர்கள் மறுபடியும் எருசலேமுக்கு வந்த பின்பு அவர் தேவாலயத்திலே உலாவுகையில், பிரதான ஆசாரியரும் வேதபாரகரும் மூப்பரும் அவரிடத்தில் வந்து,

௨௮ எந்த அதிகாரத்தினாலே நீர் இவைகளைச் செய்கிறீர்? இவைகளைச் செய்கிறதற்கு உமக்கு அதிகாரத்தைக் கொடுத்தவர் யார் என்றார்கள்.

௨௯ அவர்களுடனே இயேசுவானவர் சொன்னது: நானும் உங்களிடத்தில் ஒரு காரியத்தைக்* கேட்கிறேன்; அதற்கு நீங்கள் மாறுத்தரம் சொல்லுங்கள், அப்பொழுது நான் இவைகளைச் செய்கிற அதிகாரத்தையும் உங்களுக்கு அறிவிப்பேன்.

௩௰ யோவான் கொடுத்த ஸ்நானம் பராபரனாலே உண்டானதோ, மனிதர்களாலே உண்டானதோ, அதைச் சொல்லுங்கள் என்றார்.

௩௧ அப்பொழுது அவர்கள், அது பராபரனால் உண்டானதென்றால், இவர், ஏன் நீங்கள் அவனை விசுவாசிக்கவில்லை என்பார்.

௩௨ அது மனிதரால் உண்டானதென்றால், எல்லாரும் [4]யோவானைத் தீர்க்கதரிசியென்று எண்ணுகிறபடியால், அவர்களாலே நமக்கு மோசம் வரும் என்று தங்களுக்குள்ளே யோசனைபண்ணிக்கொண்டு,

௩௩ பின்பு இயேசுவானவரை நோக்கி, எங்களுக்குத் தெரியாது என்றார்கள்; அப்பொழுது இயேசுவானவர் அவர்களுடனே சொன்னது: (அப்படியானால்) நானும் இவைகளைச் செய்கிற அதிகாரத்தின் தன்மை இன்னதென்று உங்களுக்குச் சொல்லமாட்டேன் என்றார்.

கி. பி. ௩௩.

[1] மத். ௬. ௰௪. கொலோ. ௩. ௰௩.
[2] மத். ௰௮. ௩௫.
[3] மத். ௨௧. ௨௩. லூக். ௨௰. ௧.
* அல்லது கேள்வி.
[4] மத். ௩. ௫: ௰௪. ௫. மாற். ௬. ௨௰.
[5] மத். ௨௧. ௩௩. லூக். ௨௰. ௯.

## ௰௨. அதிகாரம்.

௧. பொல்லாத தோட்டக்காரர்களுக்கு விட்ட திராட்சத்தோட்டத்தின் உவமையினால், நிர்ந்தை யூதர்களுக்கும், அஞ்ஞானிகளுக்கும் அடுத்த நிலைமையை எடுத்துக் காண்பித்தது. ௰௩. இராயனுக்கு வரிகொடுப்பதைக்குறித்துப் பரிசேயருக்கும் ஏரோதேயின் மனுஷருக்கும் உத்தரவுசொன்னது. ௰௮. உயிர்த்தெழுதல் இல்லையென்ற சாதித்த சதுசேயருடைய தப்பறையைக் காண்பித்து, அதை உபதேசத்தை நிச்சயித்தது. ௨௮. பிரதான கற்பனை எதென்று கேட்ட வேதபாரனுக்கு உத்தரவு அருளிச்செய்தது. ௩௫. கிறிஸ்துவைக்குறித்து வேதபாரர் கொண்டிருந்த தாற்பரியத்தைக் கண்டித்தது. ௩௮. அவர்களுடைய பெருமையையும், மாயத்தையுங்குறித்துச் சனங்களை எச்சரித்தது. ௪௧. இரண்டு காசைத் தருமப்பெட்டியில் போட்ட ஏழை விதவையைப் புகழ்ந்தது.

[5]அல்லாமலும் அவர் உவமைகளாய் அவர்களுடனே சொன்னது: ஒரு மனிதன் ஒரு திராட்சத்தோட்டத்தை உண்டுபண்ணி, அதைச் சுற்றி வேலி அடைத்து, அதில் ஆலையை நாட்டி, ஒரு கோபுரத்தையும் கட்டி, பின்பு அதைத் தோட்டக்காரர் வசமாய்விட்டுப் புறத்தேசத்திற்குப் போனான்.

௨ தகுதியான காலத்திலே அந்தத் திராட்சத்தோட்டத்தின் கனிகளில் ஒரு பாகத்தைத் தோட்டக்காரரிடத்தில் வாங்கிக்கொள்ளும்படிக்கு, அவன் ஒரு ஊழியக்காரனை அவர்களிடத்திற்கு அனுப்பினான்.

௩ அவர்கள் அவனைப் பிடித்து அடித்து, வெறுமையாய் அனுப்பினார்கள்.

௪ மறுபடியும் அவன் வேறொரு ஊழியக்காரனை அவர்களிடத்தில் அனுப்பினான்; அவன்மேல் அவர்கள் கல்லெறிந்து, தலையில் காயப்படுத்திக் கனஈனத்தோடே அவனை அனுப்பினார்கள்.

௫ பின்பு அவன் வேறொருவனை அனுப்பினான், அவனை அவர்கள்

Digitized by Google

கொலைசெய்தார்கள்; (அப்படி அவனால் அனுப்பப்பட்ட) அநேகரில் சிலரை அடித்து, சிலரைக் கொலைசெய்தார்கள்.

௬ அவனுக்குப் பிரியமான ஒரே குமாரன் இருந்தான், ஆதலால் அவன், தன் குமாரனுக்கு அஞ்சுவார்கள் என்று எண்ணி, கடைசியிலே அவனையும் அவர்களிடத்தில் அனுப்பினான்.

௭ அந்தத் தோட்டக்காரர் (அவனைக் கண்டு,) இவன் சுதந்தரவாளி, இவனுடைய சுதந்தரம் நமது வசமாகும்படிக்கு, நாம் இவனைக் கொலைசெய்யக்கடவோம் வாருங்கள் என்று தங்களுக்குள்ளே பேசிக்கொண்டு,

௮ பின்பு அவனைப் பிடித்துக் கொலைசெய்து, திராட்சத் தோட்டத்திற்குப் புறம்பே தள்ளினார்கள்.

௯ ஆனபடியினாலே அந்தத் தோட்டத்தின் எசமான் என்னசெய்வான்? அவன் வந்து அந்தத் தோட்டக்காரரை அழித்து, தோட்டத்தை மற்றவர்களுக்கு ஒப்புக்கொடுப்பானல்லவா?

௰ [1]வீடுகட்டுகிறவர்கள் ஆகாதென்று தள்ளின கல்லே மூலைக்குத் தலையான கல்லாயிற்று.

௰௧ அது பராபரனாலே ஆயிற்று, அது நம்முடைய கண்களுக்கு ஆச்சரியமாய் இருக்கின்றதென்கிற வேதவாக்கியத்தை நீங்கள் வாசிக்கவில்லையா என்றார்.

௰௨ ¶ அப்பொழுது அவர்கள் தங்களைக்குறித்து இந்த உவமையைச் சொன்னார் என்று அறிந்தபடியால், [2]அவரைப் பிடிக்க மனதாயிருந்தார்கள்; ஆனாலும் சனங்களுக்குப் பயந்து, அவரைவிட்டுப் போனார்கள்.

௰௩ ¶ [3]பின்பு அவர்கள் வசனங்களினாலே அவரை அகப்படுத்தும்படிக்கு, சில பரிசேயரையும் ஏரோதேயின் மனிதரையும் அவரிடத்தில் அனுப்பினார்கள்.

கி. பி. ௩௩.

1 சங். ௱௧௮. ௨௨.
2 மத். ௨௧. ௪௬, ௪௫. மாற். ௰௧. ௰௮. யோவா. ௭. ௨௫, ௩௰, ௪௪.
3 மத். ௨௨. ௰௫. லூக். ௨௰. ௨௰.

* மூன்றேமுக்கால் பணத்தவளம். மத். ௰௮. ௨௮.

4 அப். ௨௩. ௮.
5 மத். ௨௨. ௨௩. லூக். ௨௰. ௨௭.
6 ௫ மோ. ௨௫. ௫.

௰௪ அவர்கள் வந்து அவரை நோக்கி, போதகரே, நீர் மனிதருடைய முகத்தைப் பாராமல், பராபரனுடைய மார்க்கத்தைச் சத்தியமாய் உபதேசிக்கிறவராய் இருக்கிறீர்; ஆகையால் நீர் சத்தியமுடையவருமாய், ஒருவரையுங்குறித்துக் கவையில்லாதவருமாய்இருக்கிறீர் என்று அறிந்திருக்கிறோம்; இராயனுக்கு வரிப்பணத்தைக்கொடுக்கிறது நியாயமோ இல்லையோ?

௰௫ நாம் கொடுக்கவேண்டுமோ, கொடாமல் இருக்கவேண்டுமோ என்றார்கள்; அவர் அவர்களுடைய மாயத்தை அறிந்து, நீங்கள் என்னை என் சோதிக்கிறீர்கள்? நான் பார்க்கும்படிக்கு, *ஒரு தெனாரியு எனக்குக் கொண்டுவாருங்கள் என்றார்.

௰௬ அவர்கள் கொண்டுவந்தார்கள்; அப்பொழுது அவர் சொன்னது: இந்தச் சொரூபமும் மேலெழுத்தும் யாருடையவைகள் என்றார்; அதற்கு அவர்கள், இராயனுடையவைகள் என்றார்கள்.

௰௭ இயேசுவானவர் சொன்னது: இராயனுடையவைகளை இராயனுக்கும், பராபரனுடையவைகளைப் பராபரனுக்கும், செலுத்துங்கள் என்று சொன்னார்; அப்பொழுது அவரைக்குறித்து ஆச்சரியப்பட்டார்கள்.

௰௮ ¶ [4]பின்பு உயிரோடெழுந்திருக்கும் மறுமை இல்லையென்று சொல்லுகிற [5]சதுசேயர் என்பவர்கள் அவரிடத்தில் வந்து,

௰௯ [6]போதகரே, ஒருவன் பிள்ளைகள் இல்லாமல் தன் மனைவியை விட்டு இறந்தால், அவனுடைய சகோதரன் அவன் மனைவியை விவாகம்பண்ணி, அவனுக்குச் சந்ததி உண்டாக்கவேண்டும் என்று நமக்கு மோசே கட்டளையிட்டிருக்கிறாரே.

௨௰ ஓரிடத்தில் எழுபேர் சகோதரர் இருந்தார்கள்; அவர்களில் மூத்தவன் ஒரு பெண்ணை விவா

Digitized by Google

கம்பண்ணி, பின்பு சந்ததியில்லாமல் இறந்துபோனான்.

௨௧ அப்பொழுது இரண்டாம் சகோதரன் அவளை விவாகம்பண்ணி, சந்ததியில்லாமல் இறந்துபோனான்; மூன்றாம் சகோதரனும் அப்படிப் போனான்.

௨௨ எழுபேரும் அவளை விவாகம்பண்ணிச் சந்ததியில்லாமல் போனார்கள்; எல்லாருக்கும் பின்பு அந்தப் பெண்ணும் இறந்துபோனாள்.

௨௩ ஆகையால் அவர்கள் உயிரோடெழுந்திருக்கும் காலத்திலே எழுபேருக்கும் மனைவியாயிருந்த அவள் அவர்களில் எவனுக்கு மனைவியாயிருப்பாள் எனறு கேட்டார்கள்.

௨௪ அவர்களுடனே இயேசுவானவர் சொன்னதாவது: நீங்கள் வேதவாக்கியங்களையும் பராபரனுடைய வல்லமையையும் அறியாமல் இருக்கிறபடியால் அல்லவா வஞ்சிக்கப்பட்டிருக்கிறீர்கள்?

௨௫ மரித்தவர்கள் உயிரோடெழுந்திருக்கும்பொழுது, பெண்கொள்வதும் கொடுப்பதும் இராது; [1]அவர்கள் பரலோகத்திலுள்ள தூதரைப்போல இருப்பார்களே.

௨௬ மரித்தோர் எழுப்பப்படுவதைக்குறித்து. [2]நான் ஆபிரகாமினுடைய தேவனுமாய், ஈசாக்கினுடைய தேவனுமாய், யாக்கோபினுடைய தேவனுமாயிருக்கிறவர் என்று செடியிலிருந்து பராபரன் மோசேயுடனே சொல்லிய வாக்கியம் மோசேயின் ஆகமத்திலே எழுதியிருக்கின்றதே; அதை நீங்கள் வாசிக்கவில்லையா?

௨௭ அவர் மரித்தவர்களுடைய தேவனாயிராமல் சீவனுள்ளோருடைய தேவனாயிருக்கிறார்; ஆகையால் நீங்கள் மிகவும் வஞ்சிக்கப்பட்டிருக்கிறீர்கள் என்றார்.

௨௮ ¶ [3]அவர்கள் அப்படிப் பேசிக்கொண்டதை வேதபாரகரில் ஒருவன் கேட்டு, அவர் அவர்களுக்கு நன்றாய் மாறுத்தரம் சொன்னாரென்று அறிந்து, அவரை நோக்கி, கற்பனைகளில் எது பிரதானமானதென்று கேட்டான்.

௨௯ அதற்கு அவர் சொன்னது: கற்பனைகளில் பிரதானமான கற்பனை என்னவென்றால், [4]இஸ்ரவேலே கேள், உன் தேவனாகிய பராபரன் ஒருவரே பராபரன்.

௩௰ உன் தேவனாகிய பராபரனிடத்தில், நீ உன் முழு இருதயத்தோடும், உன் முழு ஆத்துமாவோடும், உன் முழு மனதோடும், உன் பெலன்கள் எல்லாவற்றோடும், அன்புகூர்வாயாக என்பதே பிரதானமான கற்பனை.

௩௧ இரண்டாம் கற்பனை அதற்கு ஒப்பாயிருக்கின்றது; என்னவெனில், [5]உன்னிடத்தில் அன்புகூருகிறதுபோலப் பிறனிடத்திலும் அன்புகூர்வாயாக என்பதே; இவைகளிலும் வேறொரு பெரிதான கற்பனையில்லை என்றார்.

௩௨ வேதபாரகன் சொன்னது: நல்லது போதகரே, நீர் சத்தியத்தின்படி சொன்னீர்; ஒரே தேவன் உண்டு, [6]அவரைத்தவிர வேறொரு தேவனில்லை.

௩௩ [7]அல்லாமலும் தகனபலி முதலான பலிகளிலும், முழு இருதயத்தோடும், முழு மனதோடும் முழு ஆத்துமாவோடும், முழுப்பலத்தோடும் அவரிடத்தில் அன்புகூர்வதும், தன்மேல் அன்புகூருகிறதுபோலப் பிறனிடத்திலும் அன்புகூர்வதுமே மேன்மையாயிருக்கின்றன என்றான்.

௩௪ அவன் புத்தியோடே பேசினதை இயேசுவானவர் கண்டு, நீ பராபரனுடைய இராச்சியத்திற்குத் தூரமானவன் அல்ல என்று அவனுடனே சொன்னார்; [8]பின்பு ஒருவனும் அவரிடத்தில் வினாவத் துணியவில்லை.

௩௫ ¶ [9]இயேசுவானவர் தேவாலயத்திலே உபதேசம்பண்ணுகையில் அவர் அவர்களை நோக்கி, தா

கி. பி. ௩௩.

1 ௧ கொரி. ௰௫. ௪௨, ௪௯, ௫௨.
2 ௨ மோ. ௩. ௬.
3 மத். ௨௨. ௩௫.
4 ௫ மோ. ௬. ௪. லூக். ௰. ௨௭.
5 ௩ மோ. ௰௯. ௰௮. மத். ௨௨. ௩௯. உரோ. ௰௩. ௯. கலா. ௫. ௰௪. யாக். ௨. ௮.
6 ௫ மோ. ௪. ௩௫. ஏசா. ௪௫. ௬, ௰௪: ௪௬. ௯.
7 ௧ சாமு. ௰௫. ௨௨. ஓசே. ௬. ௬. மீகா. ௬. ௬, ௭, ௮.
8 மத். ௨௨. ௪௬.
9 மத். ௨௨. ௪௧. லூக். ௨௰. ௪௧.

Digitized by Google

மீது தானே பரிசுத்த ஆவியினாலே சொன்னது: [1]பராபரன் என் கர்த்தாவை நோக்கி, உம்முடைய சத்துருக்களை நான் உமது பாதப்படியாக்குமளவும், நீர் என்னுடைய வலதுபாரிசத்திலே உளுக்காரும் என்றார் என்பதே.

௩௬ [2]ஆகையால் கிறிஸ்து தாவீதின் குமாரனென்று வேதபாரகர் எப்படிச் சொல்லுகிறார்கள்?

௩௭ தாவீது தானே அவரைக் கர்த்தாவென்று சொல்லியிருக்க, அவர் எப்படி அவனுடைய குமாரனாயிருக்கிறார் என்று சொன்னார்; அநேக சனங்கள் அவருடைய உபதேசத்தை இன்பமாய்க் கேட்டார்கள்.

௩௮ ¶ [3]அன்றியும் அவர் உபதேசம்பண்ணுகையில் அவர்களுடனே சொன்னது: நீளமான அங்கிகளைத் தரித்திருந்து நடக்கவும், [4]சந்தைகளிலே வாழ்த்துதல் அடையவும்,

௩௯ செபஆலயங்களில் முதல் ஆசனங்களில் இருக்கவும், போசன பந்திகளில் முதலிடங்களில் இருக்கவும் விரும்பி, [5]விஸ்தாரமாய்ச் செபமந்திரங்களைச் சொல்லுகிறோம் என்று சொல்லி, [6]கைம்பெண்களுடைய ஆஸ்திகளைப் பட்சித்துவருகிற வேதபாரகருக்கு இடங்கொடாமல் எச்சரிக்கையாய் இருங்கள்.

௪௦ அவர்கள் அதிக தண்டிப்பை அடைவார்கள் என்றார்.

௪௧ ¶ [7]அல்லாமலும் இயேசுவானவர் பொக்கிஷப்பெட்டிக்கு எதிரே உளுக்காந்தபொழுது, [8]அதிலே சனங்கள்*பணத்தைப் போடுகிறதைப் பார்த்தார்; அநேக ஐசுவரியவான்கள் மிகவும் போட்டார்கள்.

௪௨ எளியவளான ஒரு கைம்பெண்ணும் வந்து, கோதிராந்தேசென்னும் இரண்டுகாசைப் †போட்டாள்.

௪௩ அப்பொழுது அவர் தம்முடைய சீஷர்களை அழைத்து, இந்தப் பொக்கிஷப் பெட்டியிலே [9]போட்டவர்கள் எல்லாரிலும் இவ்வேழைக் கைம்பெண் அதிகமாய்ப் போட்டாள் என்று மெய்யாய் உங்களுக்குச் சொல்லுகிறேன்.

௪௪ என்னத்தினாலென்றால், அவர்கள் எல்லாரும் தங்களுக்குண்டான சம்பூரணத்தில் சில போட்டார்கள், [10]இவள் தன் எளிமையில் தன் சீவனத்திற்குண்டானயாவையும் போட்டாள் என்றார்.

இ. பி. ௬௰

1 சங். ௱௰. ௧.
2 ௨ சாமு. ௨௩. ௨.
3 மாற். ௪. ௨.
4 லூக். ௰௧. ௪௩.
5 மத். ௨௩. ௧. லூக். ௨௰. ௪௬.
6 மத். ௨௩. ௰௪.
7 லூக். ௨௧. ௧.
8 ௨ இரா. ௰௨. ௯.
* செம்புப் பணம். மத். ௰. ௯.
† செம்புப் பணத்தில் எழில் ஒரு பங்குள்ள காசு.
9 ௨ கொரி. ௮. ௰௨.
10 ௧ யோ. ௩. ௪. ௧ பே. ௩. ௰௭.

## ௰௩. அதிகாரம்.

௧. கிறிஸ்து தேவாலயத்தின் அழிவையும், ௯. சவிசேஷத்தின் நிமித்தமாய் உண்டாகும் துன்பத்தையும், ௰. சவிசேஷம் சகலசாதிகளுக்கும் பிரசங்கிக்கப்படுவதையும், ௰௪. யூதர்களுக்கு உண்டாகும் உபத்திரவங்களையும், ௨௪. அவர் நியாயத்தீர்ப்புக்கு வரும் விதத்தையும், ௩௨. அந்த நேரம் ஒருவருக்கும் தெரியாதிருக்கிறபடியால் மரணத்தின் வழியாய் எவனிடத்திலும் அவர் வரும்பொழுது, அவர்கள் ஆயத்தமுள்ளவர்களாய் இருக்கும்படிக்கு எவனும் விழித்துச் செபம்பண்ணவேண்டும் என்பதையும், முன்னறிவித்தது.

[11]பின்பு அவர் தேவாலயத்தை விட்டுப் புறப்படுகிறபொழுது, அவருடைய சீஷரில் ஒருவன் அவரை நோக்கி, போதகரே, இதோ, இவைகள் எப்படிப்பட்ட கல்லுகள்? இது எப்படிக் கட்டப்பட்டிருக்கின்றது என்றான்.

௨ அவனுடனே இயேசுவானவர் சொன்னது: இந்தப் பெரியமாளிகையைப் பார்க்கிறாயா? [12]இதில் ஒரு கல்லின்மேலே மற்றொருகல் வைக்கப்படுவதில்லை, எல்லாம் இடிக்கப்படும் என்றார்.

௩ ¶ பின்பு அவர் தேவாலயத்திற்கு எதிராக ஒலீவமலையின் மேல் உளுக்காந்திருக்கையில், பேதுருவும் யாக்கோபும் யோவானும் அந்திரேயாவும் தனித்திருந்து அவரை நோக்கி,

௪ [13]இவைகள் எப்பொழுது நடக்கும்? இவைகளெல்லாம் நிறைவேறும் காலத்திலே என்ன அடையாளம் தோன்றும்? அதை

11 மத். ௨௪. ௧. லூக். ௨௧. ௫.
12 லூக். ௰௯. ௪௪.
13 மத். ௨௪. ௩. லூக். ௨௧. ௭.



Digitized by Google

எங்களுக்குச் சொல்லவேண்டும் என்று கேட்டார்கள்.

௫ அவர்களுக்கு மாறுத்தரமாக இயேசுவானவர் சொன்னது: அநேகர் தோன்றி, என்னுடைய நாமத்தை எடுத்து, நானே அவரென்று சொல்லி, அநேகரை வஞ்சனை செய்வார்கள்.

௬ ஆகையால் [1]ஒருவனும் உங்களை வஞ்சனைசெய்யாதபடிக்கு எச்சரிக்கையாயிருங்கள்.

௭ அல்லாமலும் நீங்கள் யுத்தங்களையும் யுத்தங்களுக்கேற்ற பேச்சுகளையும் கேள்விப்படும்பொழுது கலக்கம் அடையாதிருங்கள்.

௮ அப்படி நடக்கவேண்டுமே, அப்பொழுது முடிவு உடனே வாராது; ஆகையால் ஒரு சனக்கூட்டம் மற்றொரு சனக்கூட்டத்திற்கும், ஒரு இராச்சியத்தார் மற்றொரு இராச்சியத்தாருக்கும் விரோதமாய் எழும்புவார்கள்; பல இடங்களிலே பூமி அதிர்தல்களும் பஞ்சங்களும் கலகங்களும் சம்பவிக்கும்; [2]இவைகள் வேதனைகளின் *ஆரம்பமாய் இருக்கும்.

௯ ¶ [3]அப்பொழுது நீங்கள் எச்சரிக்கையாய் இருக்கக்கடவீர்கள்; என்னத்தினாலெனில் என் நிமித்தம் உங்களைப் பெரிய சங்கத்தாருக்கு ஒப்புக்கொடுப்பார்கள்; செபஆலயங்களிலே நீங்கள் அடிக்கப்பட்டுத் துரைகளுக்கும் இராசாக்களுக்கும் சாட்சியாக அவர்களுக்குமுன்பாக நிறுத்தப்படுவீர்கள்.

௰ அல்லாமலும் முன்பு சுவிசேஷமானது [4]உலகத்தார் எல்லாருக்கும் பிரசங்கம் பண்ணப்படவேண்டும்.

௰௧ [5]அப்படி ஒப்புக்கொடுக்கும்படிக்கு உங்களைக் கொண்டுபோகும்பொழுது, நீங்கள் என்ன பேசுவோம் என்று முன் கவலைப்படாமலும், சிந்தித்துக்கொள்ளாமலும் இருங்கள்; நீங்கள் அல்ல, [6]பரிசுத்த ஆவியே பேசுகிறவராகையால், அந்நேரத்திலே உங்களுக்கு அளிக்கப்படுவதையே பேசக்கடவீர்கள்.

௰௨ [7]அன்றியும் ஒருவன் தன் சகோதரனையும், தகப்பன் தன் பிள்ளையையும் மரணத்திற்கு, ஒப்புக்கொடுப்பார்கள்; பிள்ளைகளும் தங்களைப் பெற்றவர்களுக்கு விரோதமாய் எழும்பி அவர்கள் மரணம் அடையும்படி செய்விப்பார்கள்.

௰௩ [8]நீங்களும் என் நாமத்தின் நிமித்தம் யாவராலும் பகைக்கப்படுவீர்கள்; [9]எப்படியும் முடிவுவரைக்கும் நிலைநிற்பவனே இரட்சிக்கப்படுவான்.

௰௪ ¶ மேலும் பாழாக்குகிற அருவருப்பைக்குறித்து [10]தானியேல் தீர்க்கதரிசி சொன்னாரே, (அதை) வாசிக்கிறவன் சிந்தித்துக் கொள்ளக்கடவன்; [11]அது நிற்கப்படாத இடத்திலே நீங்கள் அதை நிற்கக்காணும்பொழுது [12]யூதேயாவிலுள்ளவர்கள் மலைகளுக்கு ஓடிப்போகக்கடவர்கள்.

௰௫ வீட்டின்மேல் இருப்பவன் தன் வீட்டிற்குள்ளே இறங்காமலும், அதிலிருந்து எதையாகிலும் எடுத்துக்கொண்டு போகும்படி பிரவேசியாமலும் போகக்கடவன்.

௰௬ அல்லாமலும் வயலில் இருப்பவன் தன் வஸ்திரத்தை எடுத்துப் போகும்படிக்குப் பின்னிட்டுத் திரும்பாமல் போகக்கடவன்.

௰௭ [13]ஐயோ! அந்நாள்களில் கருப்பவதிகளுக்கும் முலைகொடுக்கிறவர்களுக்கும் உபத்திரவம் இருக்கும்.

௰௮ மேலும் பராபரன் உலகத்தை உண்டாக்கினதுமுதற்கொண்டு, இதுவரைக்கும் சம்பவியாததுமாய், இனிமேலும் சம்பவியாததுமாய் இருக்கிற [14]உபத்திரவமே அந்நாள்களில் இருக்கும்.

௰௯ ஆதலால் நீங்கள் ஓடுகிறது மாரிகாலத்திலே சம்பவியாதபடிக்கு வேண்டுதல் பண்ணக்கடவீர்கள்.

கி. பி. ௩௩.

1 எரே. ௨௯. ௮. எபே. ௫. ௬. ௨ தெச. ௨. ௩.
2 மத். ௨௪. ௮.
* இந்த மொழி மூலபாஷையில் செப்பவாதனையைக் குறிக்கும்.
3 மத். ௰. ௰௭. ௰௮: ௨௪. ௯. வெளி. ௨. ௰.
4 மத். ௨௪. ௰௪.
5 மத். ௰. ௰௯. லூக். ௰௨. ௰௧: ௨௧. ௰௪.
6 அப். ௨. ௪: ௪. ௮, ௩௧.
7 மீகா. ௭. ௬. மத். ௰. ௨௧: ௨௪. ௰. லூக். ௨௧. ௰௬.
8 மத். ௨௪. ௯. லூக். ௨௧. ௰௭.
9 தானி. ௯. ௨௭. மத். ௰. ௨௨: ௨௪. ௰௩. வெளி. ௨. ௰.
10 தானி. ௯. ௨௭.
11 மத். ௨௪. ௰௫.
12 லூக். ௨௧. ௨௧.
13 லூக். ௨௧. ௨௩: ௨௩. ௨௯.
14 தானி ௯. ௨௬: ௰௨. ௧. யோவே. ௨. ௨. மத். ௨௪. ௨௧.

Digitized by Google

௨௰ அல்லாமலும் பராபரன் அந்நாள்களைக் குறையப்பண்ணாமல் இருந்தால் ஒருவரும் தப்பிப் போவதில்லை, அவர் தெரிந்துகொண்டவர்களின் நிமித்தமே அந்நாள்களைக் குறைத்தார்.

௨௧ அன்றியும் கள்ளக்கிறிஸ்துக்களும் கள்ளத்தீர்க்கதரிசிகளும் எழும்பி, தெரிந்துகொள்ளப்பட்டவர்களை (வஞ்சிக்க) கூடுமானால் அவர்களையும் வஞ்சிக்கத்தக்கதாக அதிசயங்களையும் அற்புதங்களையும் செய்வார்கள்.

௨௨ [1]ஆகையால் அக்காலத்திலே ஒருவன், இதோ இங்கே கிறிஸ்து என்றும், அதோ அங்கே கிறிஸ்து என்றும் உங்களுடனே சொன்னால், அவனை நீங்கள் நம்பவேண்டாம்.

௨௩ [2]எச்சரிக்கையாகவே இருங்கள்; இதோ, இவைகள் எல்லாவற்றையும் உங்களுக்கு முன்னறிவித்தேன்.

௨௪ ¶ [3]அன்றியும் அக்காலத்திலே அந்த உபத்திரவத்திற்குப் பின்பு சூரியன் இருள் அடையும், சந்திரன் பிரகாசம்கொடாமல் இருக்கும்.

௨௫ நட்சத்திரங்கள் வானத்திலிருந்து விழும்; அல்லாமலும் வானத்தில் பலமுள்ளவைகளெல்லாம் அசைக்கப்படும்.

௨௬ [4]அப்பொழுது மனிதனுடைய குமாரன் மிகுந்த வல்லமையோடும் மகிமையோடும் மேகங்களின்மேல் வருவார்; அவரை அவர்கள் காண்பார்கள்.

௨௭ அல்லாமலும் அவர் அப்பொழுது தம்முடைய தூதரை அனுப்பி வானத்தின் எல்லைகளாகிய நாலுதிசைகளிலுமிருந்து தாம் தெரிந்துகொண்டவர்களைச்சேர்த்துக்கொள்வார்.

௨௮ ¶ [5]அத்திமரத்தினாலே உவமையாக ஒரு விசேஷத்தைக் கற்றுக்கொள்ளுங்கள்; அதின் கிளை தளிராகி இலைகளைக் கொடுக்கிறபொழுது, வசந்தகாலம் சமீபமாய் இருக்கிறதென்று அறிகிறீர்கள்.

௨௯ அப்படிப்போல, இவைகள் சம்பவிக்கிறதை நீங்கள் காணும்பொழுது மிகவும் சமீபமாய் இருக்கிறார் என்று அறியக்கடவீர்கள்.

௩௰ இவைகள் யாவும் சம்பவிக்குமளவும், இந்தச் சந்ததி ஒழிந்து போவதில்லை என்று மெய்யாய் உங்களுக்குச் சொல்லுகிறேன்.

௩௧ [6]வானமும் பூமியும் ஒழிந்துபோம், என் வசனங்களோ ஒழியாமல் இருக்கும்.

௩௨ (அவை சம்பவிக்கும்) நாளையும் நாழிகையையும் பிதாவானவரேயன்றி, மற்றொருவனும் அறியமாட்டான்; பரமண்டலங்களிலுள்ள தூதரும் குமாரனும் அதை அறியார்கள்.

௩௩ ¶ அக்காலத்தை நீங்கள் அறியாதபடியால், [7]எச்சரிக்கையாய் விழித்துக்கொண்டு செபம்பண்ணக்கடவீர்கள்.

௩௪ [8]ஒரு மனிதன் தன் வீட்டை விட்டுப் புறத்தேசத்திற்குப் போகமனதாய், தன் ஊழியக்காரருக்கு அதிகாரம் கொடுத்து, ஒவ்வொருவருக்கு ஒவ்வொரு வேலையை நியமித்து, காவற்காரன் விழித்துக்கொண்டிருக்கும்படிக்குக் கட்டளையிடுகிறதுபோலஇருக்கின்றது.

௩௫ [9]ஆகையால் வீட்டெசமான், சாயந்தரம், பாதிராத்திரி, சேவல் கூவும் நேரம், காலை, இவைகளில் இன்னவேளையில் வருவார் என்று நீங்கள் அறியாதிருக்கிறபடியால்,

௩௬ அவர் சடுதியாய் வந்து, உங்களைத் தூங்குகிறவர்கள் என்று கண்டுபிடியாதபடிக்கு விழித்துக்கொண்டிருங்கள்.

௩௭ விழித்துக்கொண்டிருங்கள் என்று நான் உங்களுக்குச் சொன்னதுபோல, மற்ற யாவருக்கும் அப்படியே சொல்லுகிறேன் என்றார்.

கி. பி. ௩௩.

1 மத். ௨௪. ௨௩. லூக். ௰௭. ௨௩: ௨௧. அ.
2 ௨ பே. ௩. ௰௭.
3 தானி. ௭. ௯. செப். ௧. ௰௫. மத். ௨௪. ௨௯. லூக். ௨௧. ௨௫.
4 தானி. ௭. ௰௩, ௰௪. மத். ௰௬. ௨௭: ௨௪. ௩௰. மாற். ௰௪. ௬௨. அப். ௧. ௰௧. ௧ தெச. ௪. ௰௬. ௨ தெச.௧.௭,௰. வெளி. ௧. ௭.
5 மத். ௨௪. ௩௨. லூக். ௨௧.௨௯.
6 ஏசா. ௪௦. ௮.
7 மத். ௨௪. ௪௨: ௨௫. ௰௩. லூக். ௰௨. ௪௦: ௨௧. ௩௫.௨ கொ. ௰௩. ௰௩. ௧ தெச. ௫. ௬.
8 மத். ௨௪. ௪௫: ௨௫. ௰௪.
9 மத். ௨௪. ௪௨, ௪௪.

Digitized by Google

## ௰௪. அதிகாரம்.

௧. கிறிஸ்துவுக்கு விரோதமாகப் பண்ணப்பட்ட ஆலோசனை. ௩. ஒரு ஸ்திரீ தயிலத்தை அவர் சிரசின்மேல் வார்த்தது. ௰. யூதா தன் ஆண்டவனைப் பணத்துக்கு விற்றது. ௰௨. கிறிஸ்து தம்முடைய சீஷர்களில் ஒருவனால் காட்டிக்கொடுக்கப்படுவதை முன்னறிவித்தது. ௨௨. பஸ்கா ஆயத்தம்பண்ணப்பட்டுப் புசிக்கப்பட்டபின்பு இராப்போசனத்தை ஏற்படுத்தி, ௨௭. சீஷர்கள் எல்லாரும் தம்மைவிட்டு ஓடிப்போவதையும், பேதுரு தம்மை மறுதலிப்பதையுங்குறித்து முன்னறிவித்தது. ௪௩. யூதா அவரை முத்தத்தினால் காட்டிக்கொடுத்தது. ௪௬. அவர் தோட்டத்தில் பிடிக்கவும், ௫௫. அநியாயமாய்க் குற்றஞ்சாற்றவும் யூதர்களுடைய ஆலோசனை சங்கத்தாரால் ஆக்கினைக்குள்ளாகத் தீர்க்கவும், ௬௫. அவர்களால் நிந்திக்கவும், ௬௬. பேதுருவினால் மூன்றுவிசை மறுதலிக்கவும் பட்டது.

[1]இரண்டு நாளுக்குப் பின்பு, புளியாத அப்பம் சாப்பிடுகிற பஸ்காப் பண்டிகை வந்தது; பிரதான ஆசாரியரும் வேதபாரகரும் தந்திரமாய் அவரைப் பிடித்துக் கொலைசெய்யும்படிக்கு வகைதேடிக்கொண்டு இருக்கையில்,

௨ அவர்கள் சொன்னது: பண்டிகையிலே அப்படிச் செய்யக்கூடாது; செய்தால் சனங்களுக்குள்ளே கலகம் உண்டாகும் என்றார்கள்.

௩ ¶ [2]அவர் பெத்தானியா ஊரிலே குஷ்டரோகியாயிருந்த சீமோனுடைய வீட்டில் போசனபந்தி இருக்கையில், ஒருஸ்திரியானவள் மிகவும் விலையேறப்பெற்ற களங்கமில்லாத சுகந்த வருக்கத்தால் செய்த நருது* என்னும் பரிமள தயிலமுள்ள வெண்கல்பரணியை எடுத்துவந்து அதைத் திறந்து, அதிலுள்ள தயிலத்தை அவருடைய தலையின்மேல் வார்த்தாள்.

௪ அப்பொழுது சிலர் தங்களுக்குள்ளே விசனம் அடைந்து, இந்தப் பரிமளதயிலத்தை என் கெடுத்துப்போடுகிறாள்?

௫ இதை முந்நூறு †தேநாரியு வெள்ளிக்குமேலான கிரயத்திற்கு விற்று, ஏழைகளுக்குக் கொடுக்கலாமே என்றுசொல்லி அவளுக்கு விரோதமாய் முறுமுறுத்தார்கள்.

௬ அப்பொழுது இயேசுவானவர் சொன்னது: இவளை விட்டுவிடுங்கள், ஏன் இவளை வருத்தப்படுத்துகிறீர்கள்; இப்படி இவள் ஒரு நற்கிரியை என்னிடத்தில் செய்தாள்.

௭ [3]ஏழைகள் எப்பொழுதும் உங்களுடனே இருப்பார்கள்; மனதிருந்தால் நீங்கள் அவர்களுக்கு நன்மைசெய்யலாம்; நான் எப்பொழுதும் உங்களிடத்தில் இரேன்.

௮ இவள் தன்னாலானமட்டும்செய்தாள்; என் சரீரத்தை அடக்கம்பண்ண எத்தனமாக்கும்படிக்கு இவள் முந்தி இதில் சுகந்தவருக்கம் இட்டாள்.

௯ உலகம் முழுவதிலும் இந்தச் சுவிசேஷம் பிரசங்கிக்கப்படும் இடம் எங்கேயோ, அங்கே இவளை நினைத்துக்கொள்வதற்கு, இவள் இப்பொழுது செய்ததும் சொல்லப்படும் என்று மெய்யாய் உங்களுக்குச் சொல்லுகிறேன் என்றார்.

௰ ¶ [4]பின்பு பன்னிருவரில் ஒருவனாகிய யூதாஸ்காரியோத்தென்பவன், பிரதான ஆசாரியருக்கு அவரைக் காட்டிக்கொடுக்கும்படிக்கு அவர்களிடத்தில் போனான்.

௰௧ அவனுடைய வார்த்தைகளை அவர்கள் கேட்டுச் சந்தோஷப்பட்டு, அவனுக்குப் பணங்கொடுக்கும்படிக்கு வாக்குத்தத்தம் பண்ணினார்கள்; பின்பு அவன் அவரைக் காட்டிக்கொடுப்பதற்குத் தகுதியான காலத்தைப் பார்த்துக்கொண்டிருந்தான்.

௰௨ ¶ [5]புளியாத அப்பங்களைச் சாப்பிடும் நாள்களில், பஸ்காஆட்டுக்குட்டி பலியிடப்படும்‡ முதல் நாளிலே அவருடைய சீஷர்கள் அவரை நோக்கி, நீர் பஸ்காவைப் புசிக்கும்படிக்கு நாங்கள் எங்கே போய் எத்தனம்பண்ணச் சித்தமாய் இருக்கிறீர் என்று கேட்டார்கள்.

இ. பி. ௩௩.

1 மத். ௨௬. ௨. லூக். ௨௨. ௧. யோவா. ௰௧. ௫௫: ௰௩. ௧.

2 மத். ௨௬. ௬. யோவா. ௰௨. ௧, ௩. லூக். ௭. ௩௭.

* அல்லது சுத்த நருது.

† மத். ௰௮. ௨௮. காண்க.

3 ௫ மோ. ௰௫. ௰௧.

4 மத். ௨௬. ௰௪. லூக். ௨௨. ௩, ௪.

5 மத். ௨௬. ௰௭. லூக். ௨௨. ௭.

‡ அல்லது கொல்லப்படும்.

Digitized by Google

௰௩ அப்பொழுது அவர் தம்முடைய சீஷரில் இரண்டுபேரை அழைத்து, நீங்கள் பட்டணத்திற்குப் போங்கள்; அங்கே ஒரு மனிதன் தண்ணீர்க் குடத்தைச் சுமந்துகொண்டு உங்களுக்கு எதிராக வருவான்; அவனுக்குப் பின்செல்லுங்கள்.

௰௪ அல்லாமலும் அவன் பிரவேசிக்கும் வீட்டிலே நீங்களும் (பிரவேசித்து,) அதின் எசமானை நோக்கி, நான் என் சீஷர்களுடனே பஸ்காவைப் போசனம்பண்ணத்தக்கதான இடம் எங்கே என்று போதகர் கேட்கிறாரென்று சொல்லுங்கள்.

௰௫ அப்பொழுது அவன் கம்பளம் முதலானவைகள் விரித்து எத்தனமாக்கப்பட்டிருக்கிற விஸ்தாரமான மேல்வீட்டில் பெரிய அறையை உங்களுக்குக் காண்பிப்பான்; அங்கே நமக்காக எத்தனம்பண்ணுங்கள் என்றுசொல்லி அனுப்பினார்.

௰௬ அந்தப்படி அவருடைய சீஷர்கள் புறப்பட்டுப் பட்டணத்தில் வந்து, தங்களுக்கு அவர் சொன்னபடியே கண்டு, பஸ்காப் போசனத்தை எத்தனம்பண்ணினார்கள்.

௰௭ ¶ [1]சாயந்தரமானபொழுது, அவர் பன்னிருவருடனே கூட அவ்விடத்திற்குப் போனார்.

௰௮ அவர்கள் பந்தியிலிருந்து சாப்பிடுகையில், இயேசுவானவர் அவர்களை நோக்கி, என்னோடேகூடச் சாப்பிடுகிற உங்களில் ஒருவனே என்னைக் காட்டிக்கொடுப்பான் என்று மெய்யாய் உங்களுக்குச்சொல்லுகிறேன் என்றார்.

௰௯ அவர்கள் அதைக் கேட்டு, மிகுந்ததுக்கம் அடைந்து, நானோ, நானோ என்று ஒவ்வொருவராய் அவரிடத்தில் கேட்கத் தொடங்கினார்கள்.

௨௰ அவர்களுக்கு மாறுத்தரமாக அவர் சொன்னது: பன்னிருவரில் ஒருவனே என்னோடேகூடத் தாலத்திலே தோய்க்கிறவனே (அப்படிச்செய்வான்.)

௨௧ [2]மனிதனுடைய குமாரன் தன்னைக்குறித்து எழுதியிருக்கிறபடி போகிறான்; ஆனாலும் ஐயோ! மனிதனுடைய குமாரனைக் காட்டிக்கொடுப்பவன் எவனோ, அவனுக்கு வேதனை வரும்; அம்மனிதன் பிறவாமல் இருந்தானானால் அவனுக்கு நலமாயிருக்கும் என்றார்.

௨௨ [3]அல்லாமலும் அவர்கள் சாப்பிடுகிறபொழுது, இயேசுவானவர் அப்பத்தை எடுத்து ஆசீர்வாதம்செய்து, அதைப் பிட்டு அவர்களுக்குக் கொடுத்து, இதை எடுத்துப் புசியுங்கள்; இது என்னுடைய சரீரமாயிருக்கின்றது என்று சொல்லி,

௨௩ பின்பு பாத்திரத்தையும் எடுத்துத் தோத்திரம்பண்ணி, அதை அவர்களுக்குக் கொடுத்து, அவர்கள் எல்லாரும் அதில் பானம்பண்ணின பின்பு சொன்னதாவது:

௨௪ இது புதிய ஏற்பாட்டுக்கு ஏற்றதாய் அநேகருக்காகச் சிந்தப்படும் என்னுடைய இரத்தமாய் இருக்கின்றது.

௨௫ பராபரனுடைய இராச்சியத்திலே நான் திராட்ச இரசத்தை நவமாய் உங்களுடனே பானம்பண்ணும் நாள்வரைக்கும், அதை நான் மறுபடியும் பானம்பண்ணுவதில்லை என்று மெய்யாய் உங்களுக்குச்சொல்லுகிறேன் என்றார்.

௨௬ ¶ [4]அவர்கள் தோத்திரம்*பாடின பின்பு, ஒலீவமலைக்குப்போனார்கள்.

௨௭ [5]அப்பொழுது இயேசுவானவர் அவர்களை நோக்கி, [6]மேய்ப்பனானவனை *அடிப்பேன், அப்பொழுது ஆடுகள் சிதற அடிக்கப்படுமென்று எழுதியிருக்கிறபடியால், நீங்கள் எல்லாரும் இந்த இராத்திரியிலே என்னைக்குறித்து வழுவுவீர்கள்.

இ. பி. ௩௩.

1 மத். ௨௬. ௨௦.
2 மத். ௨௬. ௨௪. லூக். ௨௨. ௨௨.
3 மத். ௨௬. ௨௬. லூக். ௨௨. ௰௯. ௧ கொரி. ௰௧. ௨௩.
4 மத். ௨௬. ௩௰. * அல்லது சங்கீதம்.
5 மத். ௨௬. ௩௧.
6 சகரி. ௰௩. ௭.

Digitized by Google

௨௮ [1]ஆனாலும் நான் உயிரோடிருக்கும்படி எழுப்பப்பட்ட பின்பு, உங்களுக்குமுன்னே கலிலேயா நாட்டுக்குப் போவேன் என்றார்.

௨௯ [2]அதற்குப் பேதுரு, எல்லாரும் உம்மைக்குறித்து வழுவினாலும், நான் அப்படிச் செய்யமாட்டேன் என்றான்.

௩௰ அவனுடனே இயேசுவானவர், இந்த இராத்திரியிலே சேவல் இரண்டாந்தரம் கூவுமுன்னமே, நீ மூன்றுதரம் என்னை மறுதலிப்பாயென்று மெய்யாய் உனக்குச் சொல்லுகிறேன் என்றார்.

௩௧ அதற்கு அவன், நான் உம்மோடே சாகவேண்டியதாயிருந்தாலும் உம்மை மறுதலிக்கமாட்டேன் என்று அதிக உறுதியாய்ச் சொன்னான்; மற்றவர்கள் எல்லாரும் அப்படியே சொன்னார்கள்.

௩௨ ¶ [3]பின்பு அவர்கள் கெதசேமனே என்னுமிடத்தில் சேர்ந்தார்கள்; அங்கே அவர் தம்முடைய சீஷர்களை நோக்கி, நான் போய்ச் செபம்பண்ணுகையில் நீங்கள் இங்கே இருங்கள் என்று சொல்லி,

௩௩ பேதுருவையும் யாக்கோபையும் யோவானையும் கூட்டிக்கொண்டு போய், மிகுந்த திகிலையும் வியாகுலத்தையும் அடையத்தொடங்கி,

௩௪ [4]என் ஆத்துமா மரணவேதனைப்படுகின்றது; நீங்கள் இங்கே தங்கி விழித்திருங்கள் என்று சொல்லி,

௩௫ சற்றேதூரம் போய்த் தரையிலே விழுந்து, அந்த நேரம் தம்மைவிட்டு நீங்கக் கூடுமானால் அது நீங்கும்படிக்கு,

௩௬ [5]அப்பா பிதாவே, [6]உம்மாலே எல்லாம் ஆகும்; இந்தப் பாத்திரம் என்னைவிட்டு நீங்கும்படி செய்யும்; இல்லாவிட்டால் [7]என்னுடைய சித்தத்தின்படியல்ல, உம்முடைய சித்தத்தின்படியே ஆகக்கடவதென்று செபம்பண்ணினார்.

௩௭ பின்பு அவர் வந்து, அவர்கள் தூங்குகிறதைக் கண்டு, பேதுருவுடனே சொன்னது: சீமோனே, தூங்குகிறாயா? ஒரு மணிநேரம் நீ விழித்துக்கொள்ளக்கூடாதா?

௩௮ குற்றம்செய்வதற்கான காரணத்தில் நீங்கள் பிரவேசியாதபடிக்கு விழித்துக்கொண்டு செபம்பண்ணுங்கள்; [8]ஆவியானது மனதுள்ளதுதான், மாம்சதேகம் பெலவீனமுள்ளதென்று சொல்லி,

௩௯ மறுபடியும் அப்புறம்போய், மேற்சொல்லிய விதமாய்ச் செபம்பண்ணினார்.

௪௰ பின்பு அவர் திரும்பி, அவர்களுடைய கண்கள் கனமான தூக்கத்தை அடைந்தபடியினாலே, மறுபடியும் அவர்கள் தூங்குகிறதைக் கண்டார்; அல்லாமலும், அவர்கள் அவருக்குச் சொன்ன மாறுத்தரத்தையும் அவர்கள் தாமே அறியவில்லை.

௪௧ பின்பு அவர் மூன்றாந்தரம் அவர்களிடத்தில் வந்து, நீங்கள் பின்னும் தூங்கி இளைப்பாறுகிறீர்களா? இது போதும், [9]நேரம் வந்தது; இதோ, மனிதனுடைய குமாரன் பாவிகளுடைய கைகளில் ஒப்புக்கொடுக்கப்படுகிறான்.

௪௨ [10]அதோ, என்னைக் காட்டிக்கொடுக்கிறவன் சமீபிக்கிறான்; எழுந்திருங்கள் நாம் போவோம் வாருங்கள் என்றார்.

௪௩ ¶ [11]உடனே அவர் பேசுகையில், பன்னிருவரில் ஒருவனாகிய யூதாவும், அவனோடேகூடப் பெரிய ஆசாரியராலும் வேதபாரகராலும் மூப்பராலும் அனுப்பப்பட்டுக் கத்திகளையும் தடிகளையும் பிடித்துக்கொண்டு வருகிற மிகுந்த சனங்களும் தோன்றினார்கள்.

௪௪ அவனைக் காட்டிக்கொடுக்க வந்தவன், எவனை முத்தம் செய்வேனோ, அவனே அவன், அவ

கி. பி. ௩௩.

1 மாற். ௰௬. ௭.
2 மத். ௨௬. ௩௩, ௩௪. லூக். ௨௨. ௩௩, ௩௪. யோவா. ௰௩. ௩௭, ௩௮.
3 மத். ௨௬. ௩௬. லூக். ௨௨. ௩௯. யோவா. ௰௮. ௧.
4 யோவா. ௰௨. ௨௭.
5 உரோ. ௮. ௰௫. கலா. ௪. ௬.
6 எபி. ௫. ௭.
7 யோவா. ௫. ௩௰: ௬. ௩௮.
8 உரோ. ௭. ௨௩. கலா. ௫. ௰௭.
9 யோவா. ௰௩. ௧.
10 மத். ௨௬. ௪௬. யோவா. ௰௮. ௧, ௨.
11 மத். ௨௬. ௪௭. லூக். ௨௨. ௪௭. யோவா. ௰௮. ௩.

Digitized by Google

னை நீங்கள் பிடித்துப் பத்திரமாய்க்கொண்டுவரவேண்டுமென்று அடையாளமாக மற்றவர்களுக்குச் சொல்லியிருந்தான்.

௪௫ ஆகையால், அவன் வந்தவுடனே, அவரிடத்தில் சேர்ந்து, இரபீ, இரபீ, என்று சொல்லி, அவரை முத்தஞ்செய்தான்.

௪௬ அப்பொழுது அவர்கள் அவரைக் கைப்பிடியாகப் பிடித்தார்கள்.

௪௭ ¶ உடனே சமீபமாய் நின்றவர்களில் ஒருவன், கத்தியை எடுத்துப் பிரதான ஆசாரியனுடைய வேலைக்காரனைக் காதறவெட்டினான்.

௪௮ [1]அப்பொழுது இயேசுவானவர் அவர்களைநோக்கி, ஒரு கள்ளனைப் (பிடிக்கிறதற்குப் புறப்படுகிறது) போல நீங்கள் என்னைப் பிடிக்கும்படிக்குக் கத்திகளோடும் தடிகளோடும் புறப்பட்டு வந்தீர்கள்.

௪௯ நாள்தோறும் நான் உங்களுக்குள்ளே தேவாலயத்திலே உபதேசம்பண்ணினேன்; அப்பொழுது நீங்கள் என்னைப் பிடிக்கவில்லை? [2]ஆனாலும் வேதவாக்கியங்கள் நிறைவேறவேண்டுமென்று சொன்னார்.

௫௰ [3]உடனே (சீஷர்) எல்லாரும் அவரைவிட்டு, ஓடிப்போனார்கள்.

௫௧ ஒரு வாலிபன் ஒரு வஸ்திரத்தைமாத்திரம் தன்மேல் போர்த்துக்கொண்டு, அவருக்குப் பின்சென்றான்; அவனைச் சேவகர் பிடித்தார்கள்.

௫௨ அப்பொழுது அவன் தன் வஸ்திரத்தைவிட்டு நிருவாணமாய் அவர்களைவிட்டு ஓடிப்போனான்.

௫௩ ¶ [4]இயேசுவானவரை அவர்கள் பிரதான ஆசாரியனிடத்திற்குக் கொண்டுபோனார்கள்; அங்கே ஆசாரியரெல்லாரும் மூப்பரும் வேதபாரகரும் கூடிவந்தார்கள்.

கி. பி. ௩௩.

1 மத். ௨௬. ௩௩. லூக். ௨௨. ௩௨.
2 சங். ௨௨. ௬. ஏசா. ௫௩. ௭.௰. லூக். ௨௨. ௩௭: ௨௪. ௪௪.
3 சங். ௮௮. ௮. ௨௭. ௰௪.
4 மத். ௨௬. ௫௭. லூக். ௨௨. ௫௪. யோவா. ௰௮. ௰௩.
5 மத். ௨௬. ௫௯.
6 மாற். ௰௫. ௨௯. யோவா. ௨. ௰௯.
7 மத். ௨௬. ௬௨.
8 ஏசா. ௫௩. ௭.
9 மத். ௨௬. ௬௩.
10 மத். ௨௪. ௩௰: ௨௬. ௬௪. லூக். ௨௨. ௬௯.

௫௪ பேதுரு தூரமாக அவருக்குப் பின்சென்று, பிரதான ஆசாரியனுடைய மாளிகையின் பிரகாரத்தில் வந்து, அங்கே ஊழியக்காரருடனே நெருப்பின் அருகே உளுக்காந்து, அனல் காய்ந்துகொண்டிருந்தான்.

௫௫ [5]அத்தருணத்திலே பிரதான ஆசாரியரும் மற்றப் பெரிய சங்கத்தார் எல்லாரும் இயேசுவானவரைக் கொலைசெய்யும்பொருட்டாய் அவருக்கு விரோதமாய்ச் சாட்சிகளைத் தேடினார்கள்.

௫௬ அகப்படவில்லை; அநேகர் அவருக்கு விரோதமாய்ப் பொய்ச்சாட்சி சொல்லியும் அந்தச் சாட்சிகள் ஒவ்வவில்லை.

௫௭ [6]அப்பொழுது சிலர் எழுந்து இவன், கையினால் செய்யப்பட்ட இந்தத் தேவாலயத்தை நான் இடித்து, பின்பு மூன்று நாளுக்குள்ளே கையில்லாமல் வேறொன்றைக் கட்டுவேன் என்று சொல்லக் கேட்டோமென்று,

௫௮ அவருக்கு விரோதமாகப் பொய்ச்சாட்சி சொன்னார்கள்.

௫௯ அப்படியும் அவர்களுடைய சாட்சி ஒவ்வாமலிருந்தது.

௬௰ [7]பின்பு பிரதான ஆசாரியன் நடுவிலே எழுந்து, இயேசுவானவரை நோக்கி, நீ மாறுத்தரம் சொல்லுகிறதில்லையா? இவர்கள் உனக்கு விரோதமாய் என்னசாட்சிசொல்லுகிறார்கள் என்று கேட்டான்.

௬௧ [8]அவர் மாறுத்தரமாக ஒன்றும் பேசாமல் இருந்தார்; [9]பிரதான ஆசாரியன் மறுபடியும் அவரை நோக்கி, தோத்திரம் செய்யப்படத்தக்கவருடைய குமாரனாகிய கிறிஸ்து நீதானோ என்று கேட்டான்.

௬௨ இயேசுவானவர் சொன்னது: அவர் நான்தான், [10]அல்லாமலும் மனிதனுடைய குமாரன் சர்வவல்லமையுள்ளவருடைய வலது பாரிசத்திலே உளுக்காரவும், வானத்தின் மேகங்களின்மேல் வரவும், காண்பீர்கள் என்றார்.

Digitized by Google

௬௩ அப்பொழுது பிரதான ஆசாரியன் தன் வஸ்திரத்தைக் கிழித்து,

௬௪ வேறு சாட்சி நமக்கு வேண்டுமோ? இத்தூஷணத்தைக் கேட்டீர்களே; உங்களுக்கு எப்படித் தோன்றுகின்றது என்றான். அவர்கள் எல்லாரும் அவன் மரண ஆக்கினைக்குப் பாத்திரன் என்று தீர்மானம்பண்ணினார்கள்.

௬௫ அப்பொழுது சிலர் அவர் மேலே துப்பி, அவருடைய முகத்தை மூடிக் கையினாலே அடித்து, நீ தீர்க்கதரிசனம் சொல்லென்று அவருடனே சொல்லத் தொடங்கினார்கள். அல்லாமலும் ஊழியக்காரர் அவரைக் கன்னத்தில் அடித்தார்கள்.

௬௬ ¶ [1]அத்தருணத்திலே பேதுரு மாளிகையின் பிரகாரத்தில் கீழே இருக்கிறபொழுது, பிரதான ஆசாரியனுடைய வேலைக்காரிகளில் ஒருத்தி வந்து,

௬௭ அனல் காய்ந்துகொண்டிருக்கிற பேதுருவைக் கண்டு, அவனை உற்றுப்பார்த்து, நீயும் நாசரேத் தூராகிய இயேசுவுடனே இருந்தாயே என்றாள்.

௬௮ அதற்கு அவன் சொன்னது: (அவனை) அறியமாட்டேன்; நீ சொல்லுகிறதையும் நான் அறியேன் என்று மறுதலித்து, பின்பு வெளியிலேயுள்ள மண்டபத்திற்குப் போனான்; அப்பொழுது சேவல் கூவிற்று.

௬௯ [2]பின்பு வேலைக்காரி அவனை மறுபடியும் பார்த்து, சமீபமாய் நின்றவர்களை நோக்கி, இவன் அவர்களில் ஒருவன் என்றாள்; அவன் மறுபடியும் மறுதலித்தான்.

௭௰ சற்று நேரத்திற்குப் பின்பு [3]அங்கே நின்றவர்கள் மறுபடியும் பேதுருவை நோக்கி, நீ மெய்யாய் அவர்களில் ஒருவனாயிருக்கிறாய்; [4]நீ கலிலேயா நாட்டான்தான்; உன் பேச்சு அதைக் காண்பிக்கின்றது என்றார்கள்.

௭௧ அதற்கு அவன், நீங்கள் சொல்லுகிற மனிதனை நான் அறியமாட்டேன் என்று சொல்லிச் சபிக்கவும் ஆணையிடவும் தொடங்கினான்.

௭௨ [5]உடனே சேவல் இரண்டாந்தரம் கூவிற்று; அப்பொழுது சேவல் இரண்டாந்தரம் கூவுமுன்னமே, நீ என்னை மூன்றுதரம் மறுதலிப்பாய் என்று தன்னுடனே இயேசுவானவர் சொன்ன வசனத்தைப் பேதுரு நினைத்து, விலகிப்போய், அழுதுகொண்டான்.*

கி. பி. ௩௩.

1 மத். ௨௬. ௬௮, ௬௯. லூக். ௨௨. ௫௫. யோவா. ௧௮. ௰௬.
2 மத். ௨௬. ௭௧. லூக். ௨௨. ௫௮. யோவா. ௧௮. ௨௫.
3 மத். ௨௬. ௭௩. லூக். ௨௨. ௫௯. யோவா. ௧௮. ௨௬.
4 அப். ௨. ௭.
5 மத். ௨௬. ௭௫.

* அல்லது மிகவும் அழுதான்.

## ௰௫. அதிகாரம்.

௧. இயேசு கட்டுண்டு பிலாத்துக்குமுன்பாகக் கொண்டுபோகப்பட்டுக் குற்றம் சாற்றப்பட்டது. ௬. பிரசைகளுடைய கூக்குரலின் நிமித்தமாய்க் கொலைபாதகனுகிய பரபாசு விடுதலைபெற இயேசு சிலுவையில் அறையப்படும்படிக்கு ஒப்புவிக்கப்பட்டது. ௰௭. அவர் முள்முடி தரிப்பிக்கவும் ௰௯. துப்பவும் பரியாசம்பண்ணவும் உட்பட்டது. ௨௧. சிலுவை சமீபதில் அவர் சேர்க்கப்பட்டது. ௨௭. இரண்டு கள்ளர்களின் நடுவே தொங்கப்பட்டது. ௨௯. யூதர்களுடைய பெருமையுள்ள நிந்தைகளைச் சகித்தது. ௪௩. அவர் தேவகுமாரனென்று சேனைக்காரனால் அறிக்கையிடப்பட்டு, ௪௬. மேன்மையாய் அடக்கம்பண்ணப்பட்டது.

[6]அதிகாலையிலே பிரதான ஆசாரியரும், மூப்பரும், வேதபாரகரும், மற்றப் பெரிய சங்கத்தார் யாவரும் ஆலோசனை பண்ணிக்கொண்ட பின்பு, அவர்கள் அவரைக் கட்டிக்கொண்டுபோய்ப் பிலாத்துதுனைக்கு ஒப்புக்கொடுத்தார்கள்.

௨ [7]பிலாத்து அவரை நோக்கி, நீ யூதர்களுடைய இராசாவா என்று கேட்டான்; அதற்கு அவர், நீர் (சரியாய்ச்) சொன்னீர் என்றார்.

௩ அல்லாமலும் பிரதான ஆசாரியர் அவர்மேல் அநேகம் குற்றங்களைச் சாற்றிவருகிறபொழுது,

௪ [8]பிலாத்து மறுபடியும் அவரை நோக்கி, இதோ, இவர்கள் உனக்கு விரோதமாக மிகுந்த சாட்சிகளைச் சொல்லுகிறார்களே, அதற்கு நீ ஒன்றையும் சொல்லுகிறதில்லையா என்று கேட்டான்.

6 சங். ௨. ௨. மத். ௨௭. ௧. லூக். ௨௨. ௬௬; ௨௩. ௧. யோவா. ௧௮. ௨௮. அப். ௩. ௰௩; ௪. ௨௬.
7 மத். ௨௭. ௰௧.
8 மத். ௨௭. ௰௩.

Digitized by Google

௫ [1]இயேசுவானவர், பிலாத்து தானே ஆச்சரியப்படத்தக்கதாக, ஒன்றையும் சொல்லவில்லை.

௬ ¶ [2]பண்டிகைதோறும் அவர்கள் கேட்டுக்கொள்ளும் பாதகன் எவனோ, அவனை அவர்களுக்காக விடுதலையாக்குகிறது வழக்கமாயிருந்தது.

௭ கலகம்பண்ணிக் கலகத்திலே கொலைசெய்து, பின்பு கட்டப்பட்டவர்களில் ஒருவனாகிய பரபாசென்பவன் இருந்தான்.

௮ ஆதலால் வழக்கத்தின்படி தங்களுக்குப் பிலாத்துச் செய்யவேண்டுமென்று சனங்கள் கூப்பிட்டுக் கேட்டுக்கொள்ளத் தொடங்கினார்கள்.

௯ அப்பொழுது பிலாத்து அவர்களை நோக்கி, நான் யூதர்களுடைய இராசனை உங்களுக்காக விடுதலையாக்க விருப்பமுண்டா என்றான்.

௰ பிரதான ஆசாரியர் பொறாமையினாலே அவனை ஒப்புக்கொடுத்ததை அவன் அறிந்தபடியால் அப்படிக் கேட்டான்.

௰௧ [3]அப்பொழுது பிரதான ஆசாரியர் பரபாசைத் தங்களுக்காக விடுதலையாக்கும்படிக்குக் கேட்டுக்கொள்ளவேண்டும் என்று சனங்களை ஏவினார்கள்.

௰௨ மறுபடியும் பிலாத்து அவர்களை நோக்கி, யூதர்களுடைய இராசாவென்று நீங்கள் சொல்லுகிறவனை நான் என்ன செய்ய விரும்புகிறீர்கள் என்றான்.

௰௩ அவனைச் சிலுவைமரத்திலே அறையவேண்டும் என்று மறுபடியும் கூப்பிட்டார்கள்.

௰௪ அதற்குப் பிலாத்து சொன்னது: ஏன், இவன் என்ன தீமை செய்தான் என்றான்; அதற்கு அவர்கள், இவனைச் சிலுவைமரத்திலே அறையவேண்டும் என்று அதிகமாய்க் கூப்பிட்டார்கள்.

௰௫ [4]அப்பொழுது பிலாத்துச் சனங்களைச் சமாதானப்படுத்த மனதாய், பரபாசை விடுதலையாக்கி, இயேசுவை வாரினால் அடிப்பித்து, சிலுவைமரத்திலே அறையும்படிக்கு அவரை ஒப்புக்கொடுத்தான்.

௰௬ ¶ [5]உடனே போர்ச்சேவகர் அவரை நியாயஸ்தலமாகிய மண்டபத்திற்குள்ளே கொண்டுபோய், போர்ச்சேவகராகிய கூட்டமெல்லாம் கூடிவர அழைத்து,

௰௭ பின்பு சிவப்பான அங்கியை அவருக்கு உடுத்தி, முள்ளுக்களால் ஒரு முடியைப் பின்னி அவர்மேல் வைத்து,

௰௮ யூதருடைய இராசாவே, நீர் வாழ்க என்று அவரை வாழ்த்துதல் செய்து,

௰௯ பின்பு ஒரு கோலினாலே அவருடைய தலையில் அடித்து, அவர்மேலே துப்பி, முழங்காற்படியிட்டு அவரை வணங்கினார்கள்.

௨௰ அப்படி அவர்கள் அவரை இழிவுசெய்த பின்பு, அந்தச் சிவப்பான அங்கியை அவரிலிருந்து களைந்து, அவருடைய வஸ்திரங்களை அவருக்கு உடுத்தி, அவரைச் சிலுவைமரத்தில் அறையும்படிக்குக் கொண்டுபோனார்கள்.

௨௧ ¶ [6]வழியிலே அலேக்குசந்தர், உருப்பு என்பவர்களுடைய தகப்பனாகிய கிரேனேஊரானான சீமோன் வயல்நிலத்திலிருந்து வருகிறபொழுது, அவனைப் பலவந்தத்தினாலே (இழுத்து,) அவருடைய சிலுவைமரத்தை எடுத்துக் கொண்டு போகும்படி செய்து,

௨௨ [7]பின்பு அவரைத் தலையோட்டிடமென்று அருத்தங்கொள்ளும் கொலுகத்தா என்னும் இடத்திற்குக் கொண்டுபோய்,

௨௩ [8]கசப்புக்கலந்த திராட்ச இரசத்தைக் குடிக்க அவருக்குக் கொடுத்தார்கள்; அவர் அதை அநுபவிக்கவில்லை.

௨௪ அல்லாமலும் அவரைச் சிலுவைமரத்திலே அறைந்தபின்பு, அவர்கள் அவருடைய [9]வஸ்திரங்

கி. பி. ௩௩.

1 ஏசா. ௫௩. ௭. யோவா ௰௯. ௯.
2 மத். ௨௭. ௰௫. லூக். ௨௩. ௰௭. யோவா. ௰௮. ௩௯.
3 மத். ௨௭. ௨௰. அப். ௩. ௰௪.
4 மத். ௨௭. ௨௬. யோவா. ௰௯. ௧, ௰௬.
5 மத். ௨௭. ௨௭.
6 மத். ௨௭. ௩௨. லூக். ௨௩. ௨௬.
7 மத். ௨௭. ௩௩. லூக். ௨௩. ௩௩. யோவா. ௰௯. ௰௭.
8 மத். ௨௭. ௩௪.
9 சங். ௨௨. ௰௮. லூக். ௨௩. ௩௪. யோவா. ௰௯. ௨௩.

Digitized by Google

களைப் பங்காகவைத்து, ஒவ்வொருவன் ஒவ்வொரு பங்கை எடுத்துக்கொள்ளும்படிக்கு அவைகளைக்குறித்துச் சீட்டுப்போட்டார்கள்.

௨௫ [1]அவரைச் சிலுவைமரத்திலே அறைந்தபொழுது மூன்றாம் மணி நேரமாயிற்று.

௨௬ [2]அவருடைய மரணத்தின் காரணத்தை அறிவிக்கும்படிக்கு, இவன் யூதர்களுடைய இராசா என்று எழுதி, அதைச் (சிலுவையின்மேல்) கட்டினார்கள்.

௨௭ [3]அல்லாமலும் அவருடைய வலதுபக்கத்தில் ஒரு கள்ளனும், அவருடைய இடதுபக்கத்தில் ஒரு கள்ளனுமாக இரண்டு கள்ளரை அவருடனேகூடச் சிலுவைமரங்களில் அறைந்தார்கள்.

௨௮ அதினாலே அவர் [4]அக்கிரமக்காரரோடே எண்ணப்படுவார் என்று சொல்லிய வேதவாக்கியம் நிறைவேறிற்று.

௨௯ [5]அல்லாமலும் அவ்வழியாய் நடந்துவருகிறபேர்கள் தங்கள் தலைகளை அசைத்து, ஆ [6]தேவாலயத்தை இடித்து மூன்றுநாளுக்குள்ளே அதைக் கட்டுகிறவனே,

௩௰ உன்னை இரட்சித்துக்கொண்டு சிலுவையிலிருந்து இறங்கிவா என்று சொல்லி, அவரைத் தூஷணித்தார்கள்.

௩௧ அப்படிப்போல பிரதான ஆசாரியரும் வேதபாரகரும் ஒருவரையொருவர் நோக்கி, மற்றவர்களை இவன் இரட்சித்தான்; தன்னைத்தானே இரட்சிக்கத் திராணி இல்லை.

௩௨ நாம் கண்டு விசுவாசிக்கும்படிக்கு, கிறிஸ்துவுமாய் இஸ்ரவேலருடைய இராசாவுமாயிருக்கிறவன் இப்பொழுது சிலுவையிலிருந்து இறங்கி வரக்கடவன் என்று பரியாசமாகச் சொன்னார்கள்; [7]அவருடனேகூடச் சிலுவைமரங்களில் அறையப்பட்டபேர்களும் அவரை நிந்தித்தார்கள்.

௩௩ ¶ [8]ஆறும்மணி நேரம்முதல் ஒன்பதாம்மணி நேரம்வரைக்கும், தேசம் எங்கும் அந்தகாரம் உண்டாயிற்று.

௩௪ ஒன்பதாம்மணி நேரத்திலே இயேசுவானவர், [9]எலோயி, எலோயி, லம்மா சபக்தானி என்று மிகுந்த சத்தத்தோடு கூப்பிட்டார்? அதற்கு என் தேவனே, என் தேவனே, ஏன் நீர் என்னைக் கைவிட்டீர் என்று அருத்தமாம்.

௩௫ சமீபமாய் நின்றவர்களில் சிலர் அதைக்கேட்டு, இதோ, இவன் எலியாவை அழைக்கிறான் என்றார்கள்.

௩௬ [10]ஒருவன், பொறுத்துக்கொள்ளுங்கள், இவனை இறக்கும்படிக்கு எலியா வருவதைப் பார்ப்போம் என்று சொல்லி, [11]ஒரு கடற்காளானைக் காடியிலே தோய்த்து, அதை ஒரு கம்பின்மேல் பூட்டி, சுவைக்கும்படி அவருக்குக் கொடுத்தான்.

௩௭ ¶ [12]பின்பு இயேசுவானவர் மிகுந்த சத்தமிட்டுச் சீவனைவிட்டார்.

௩௮ [13]உடனே தேவாலயத்திலுள்ள திரைச்சீலை மேலே தொடங்கிக் கீழ்வரைக்கும் இரண்டாகக் கிழிந்தது.

௩௯ [14]அல்லாமலும் அவருக்கு எதிரே நின்ற சேனைத்தலைவன் அவர் அப்படிப்பட்ட சத்தத்தோடே சீவனை விட்டதைக் கண்டு, மெய்யாய் இந்த மனிதன் தேவகுமாரனாயிருந்தான் என்றான்.

௪௰ [15]ஸ்திரிகளும் தூரத்திலிருந்து பார்த்தார்கள்; [16]அவர்களில் கலிலேயாநாட்டிலே அவருக்குப் பின்சென்று ஊழியம்செய்துவந்த [17]மகதலேனாளாகிய மரியாளும், சின்ன யாக்கோபுக்கும் யோசேயுக்கும் தாயாகிய மரியாளும், சலோமே என்பவளும்,

௪௧ அவருடனேகூட எருசலேமுக்கு வந்த மற்ற அநேக ஸ்திரிகளும் இருந்தார்கள்.

இ. பி. ௩௩.

1 மத். ௨௭. ௩௫. லூக். ௨௩. ௩௩. யோவா. ௧௯. ௧௮.
2 மத். ௨௭. ௩௭. யோவா. ௧௯. ௧௯.
3 மத். ௨௭. ௩௮.
4 ஏசா. ௫௩. ௧௨. லூக். ௨௨. ௩௭.
5 சங். ௨௨. ௭.
6 மாற். ௧௪. ௫௮. யோவா. ௨. ௧௯.
7 மத். ௨௭. ௪௪. லூக். ௨௩. ௩௯.
8 மத். ௨௭. ௪௫. லூக். ௨௩. ௪௪.
9 சங். ௨௨. ௧. மத். ௨௭. ௪௬.
10 மத். ௨௭. ௪௮. யோவா. ௧௯. ௨௯.
11 சங். ௬௯. ௨௧.
12 மத். ௨௭. ௫௦. லூக். ௨௩. ௪௬. யோவா. ௧௯. ௩௦.
13 மத். ௨௭. ௫௧. லூக். ௨௩. ௪௫.
14 மத். ௨௭. ௫௪. லூக். ௨௩. ௪௭.
15 சங். ௩௮. ௧௧.
16 மத். ௨௭. ௫௫. லூக். ௨௩. ௪௯.
17 லூக். ௮. ௨, ௩.

Digitized by Google

௪௨ ¶ [1]ஓய்வுநாளுக்கு முந்தின நாள் எத்தன நாளானபடியினாலே, சாயந்தரமானபொழுது,

௪௩ [2]அரிமத்தியா ஊரானுமாய், கனம்பொருந்திய ஆலோசனைக்காரனுமாய், பராபரனுடைய இராச்சியத்தின் ஆளுகை வரக் காத்துக்கொண்டிருக்கிறவனுமாயிருந்த யோசேப்பு என்பவன், தயிரியங்கொண்டு பிலாத்துவினிடத்திற்குப் போய் இயேசுவினுடைய சரீரத்தைக் கேட்டுக்கொண்டான்.

௪௪ அவர் அப்படிச் சீக்கிரமாய் மரணம் அடைந்ததைக்குறித்துப் பிலாத்து ஆச்சரியப்பட்டுச் சேனைத்தலைவனை அழைப்பித்து, அவர் இறந்துபோய் எவ்வளவு காலமாயிற்று என்று விசாரித்து,

௪௫ சேனைத்தலைவனாலே அறிந்துகொண்டபின்பு, அந்தச் சரீரத்தை யோசேப்புக்கு ஒப்புக்கொடுத்தான்.

௪௬ அவன் போய் [3]புடவைவாங்கிக்கொண்டுவந்து, சரீரத்தை இறக்கிப் புடவையிலே சுற்றி, கல்மலையிலே வெட்டப்பட்ட கல்லறையிலே அதை வைத்து, அந்தக் கல்லறையின் திறப்பிலே ஒரு கல்லைப் புரட்டிவைத்தான்.

௪௭ அவரை வைக்கப்பட்ட இடத்தை மகுதல ஊராளாகிய மரியாளும் யோசேயின் தாயாகிய மரியாளும் பார்த்தார்கள்.

## ௰௬. அதிகாரம்.

௧. ஒரு தேவதூதன் கிறிஸ்துவினுடைய உயிர்த்தெழுதலை மூன்று ஸ்திரீகளுக்கு அறிவித்தது. ௯. கிறிஸ்து தாமே மகதலேனாளாகிய மரியாளுக்கும், ௰௨. கிராமத்துக்கு நடந்துபோகிற இரண்டுபேருக்கும், ௰௪. பின்பு அப்போஸ்தலர்களுக்கும் தரிசனமானது. ௰௫. அப்போஸ்தலர்களை உலகமெங்கும் பிரசங்கிக்கும்படி அனுப்பினது. ௰௯. அவர் பரமண்டலத்துக்கு ஏறினது.

[4]ஓய்வுநாளானபின்பு மகுதல ஊராளாகிய மரியாளும், யாக்கோபின் தாயாகிய மரியாளும், சாலோமே என்பவளும் அவருக்கு அபிஷேகம்பண்ணும்படிக்குச் [5]சுகந்த வருக்கங்களை வாங்கிக்கொண்டு,

௨ [6]ஓய்வுநாளுக்குப்பின் முதல் நாளின் அதிகாலையிலே சூரியன் உதயமாகிறபொழுது, கல்லறைக்குப் போனார்கள்.

௩ (போகையில்) அவர்கள் அந்தக் கல்லறையின் திறப்பிலே இருக்கிற கல்லை நமக்காக யாவன் தள்ளிப்போடுவான் என்று சொல்லி,

௪ பின்பு அண்ணாந்து பார்க்கிறபொழுது, அந்தக் கல் மிகவும் பெரிதாயிருந்தும், அது தள்ளப்பட்டதென்று கண்டார்கள்.

௫ [7]கல்லறையிலே அவர்கள் பிரவேசித்தபொழுது, வலதுபக்கத்திலே வெண்மையான அங்கியைத் தரித்து உளுக்காந்திருக்கிற ஒரு வாலிபனைக் கண்டு மிகவும் பயந்தார்கள்.

௬ [8]அவன் அவர்களுடனே சொன்னது: பயப்படாதிருங்கள், சிலுவையிலே அறையப்பட்ட நசரேனாகிய இயேசுவை நீங்கள் தேடுகிறீர்கள், அவர் எழுந்தார், அவர் இங்கே இல்லை. இதோ, அவர் வைக்கப்பட்ட இடம்.

௭ ஆகையால் நீங்கள் அவருடைய சீஷர்களிடத்திற்கும் பேதுருவினிடத்திற்கும் போய், [9]உங்களுடனே அவர் சொன்னபடி உங்களுக்குமுன்பாகக் கலிலேயா நாட்டுக்குப் போவார் அங்கே அவரைக் காண்பீர்கள் என்று அவர்களுக்குச் சொல்லுங்கள் என்றான்.

௮ உடனே அவர்கள் புறப்பட்டு, திகிலோடும் பிரமிப்போடும் கல்லறையைவிட்டு ஓடிப்போனார்கள்; [10]அவர்கள் பயப்பட்டபடியினாலே ஒருவருக்கும் ஒன்றையும் சொல்லவில்லை.

௯ ¶ ஓய்வுநாளுக்குப் பின்பு, முதல் நாளின் அதிகாலையில் அவர் எழுந்திருந்தபின்பு, [11]முதலாவது மகுதல ஊராளாகிய மரியாளுக்குக் காணப்பட்டார்.

கி. பி. ௩௩.

1 மத். ௨௭. ௫௭. லூக். ௨௩. ௫௰. யோவா. ௰௯. ௩௮.
2 லூக். ௨. ௨௫, ௩௮.
3 மத். ௨௭. ௫௯, ௬௰. லூக். ௨௩. ௫௩. யோவா. ௰௯. ௪௰.
4 மத். ௨௮. ௧. லூக். ௨௪. ௧. யோவா. ௨௰. ௧.
5 லூக். ௨௩. ௫௬.
6 லூக். ௨௪. ௧. யோவா. ௨௰. ௧.
7 லூக். ௨௪. ௩. யோவா. ௨௰. ௰௧, ௰௨.
8 மத். ௨௮. ௫, ௭.
9 மத். ௨௬. ௩௨. மாற். ௰௪. ௨௮.
10 மத். ௨௮. ௮. லூக். ௨௪. ௯.
11 லூக். ௮. ௨.

Digitized by Google

௰ [1]அவராலே ஏழுபேய்களினின்று நீக்கப்பட்டவள் அவளே; [2]அவள் புறப்பட்டுப்போய் அவருடனேஇருந்தவர்களுமாய் புலம்பி அழுதுகொள்ளுகிறவர்களுமாயிருந்த (சீஷர்களுக்கு) அறிவித்தாள்.

௰௧ [3]அவர் உயிரடைந்து அவளாலே காணப்பட்டார் என்று அவர்கள் கேள்விப்பட்டும் அதை நம்பவில்லை.

௰௨ ¶ [4]அதின்பின்பு அவர்களில் இரண்டுபேர் ஒரு ஊருக்குப்புறப்பட்டுப் போகையில், அவர்களுக்கும் அவர் மறுரூபத்தோடே காணப்பட்டார்.

௰௩ அவர்களும் திரும்பி அதை மற்றவர்களுக்கு அறிவித்தார்கள்; அவர்களையும் இவர்கள் நம்பவில்லை.

௰௪ ¶ [5]பின்பு அவர் போசனபந்தியில் இருந்த பதினொருவருக்கும் *காணப்பட்டு, தாம் உயிரோடு எழுந்து வந்ததைக் கண்டபேர்களுடைய(வார்த்தையை)அவர்கள் நம்பாமல் இருந்தபடியால், அவர்களுடைய அவிசுவாசத்துக்காகவும், இருதயத்திலுள்ள கடினத்திற்காகவும் அவர்களைக் கடிந்துகொண்டார்.

௰௫ ¶ [6]அல்லாமலும், அவர் அவர்களை நோக்கி, நீங்கள் உலகத்தில் எங்கும்போய், சிருட்டிக்கப்பட்டிருக்கிற யாவருக்கும் சுவிசேஷத்தைப் பிரசங்கம்பண்ணுங்கள்.

௰௬ [7]விசுவாசமுள்ளவனாகி ஞானஸ்நானம்பெற்றவன் இரட்சிக்கப்படுவான்; [8]விசுவாசியாதவன் ஆக்கினைக்குள்ளாக்கப்படுவான்.

௰௭ [9]அன்றியும், விசுவாசமுள்ளவர்களால் எப்படிப்பட்ட அதிசயங்கள் நடக்குமென்றால், என் நாமத்தினாலே அவர்கள் பேய்களைத் துரத்தி, [10]புதிய பாஷைகளைப் பேசிக்கொண்டு,

௰௮ [11]பாம்புகளையும் பிடித்துக்கொள்வார்கள்; அல்லாமலும் மரணத்திற்கு ஏதுவானதை அவர்கள் குடித்தால், அது அவர்களைச் சேதப்படுத்தாமல் இருக்கும்; [12]அல்லாமலும், பிணியாளிகளின்மேல் அவர்கள் கைகளை வைக்கும்பொழுது, அவர்கள் சொஸ்தம் அடைவார்கள் என்றார்.

௰௯ ¶ [13]கர்த்தர் அவர்களுடனே பேசிக்கொண்ட பின்பு, [14]அவர் பரமண்டலத்துக்கு ஏற்றப்பட்டு [15]பராபரனுடைய வலதுபாரிசத்திலே வீற்றிருக்கிறார்.

௨௰ அவர்கள் புறப்பட்டு எங்கும் பிரசங்கம்பண்ணிக்கொண்டு வந்தார்கள்; அப்பொழுது கர்த்தர் அவர்களுடனேகூடக் கிரியைசெய்து [16]அதிசயங்களை நடக்கப்பண்ணினதினாலே, [17](அவர்களுடைய) உபதேசத்தை உறுதியாக்கினார்.—ஆமன்.

கி. பி. ௩௩.

1 யோவா. ௨௰. ௰௪.
2 லூக். ௨௪. ௰ யோவா. ௨௰. ௰௮.
3 லூக். ௨௪. ௰௧
4 லூக். ௨௪. ௰௩.
5 லூக். ௨௪. ௩௬. யோவா. ௨௰ ௰௯. ௧ கொரி. ௰௫. ௫.
* அல்லது எல்லாருக்கும்.
6 மத். ௨௮ ௰௯. யோவா. ௰௫. ௰௬.
7 யோவா. ௩. ௨௧.
8 யோவா. ௩. ௰௮, ௩௬. அப். ௨. ௩௮: ௰௬. ௩௰,௩௨. ௨ரோ. ௰. ௯. ௧ பே. ௩. ௨௧.
9 யோவா. ௰௨. ௪௮.
10 லூக். ௰ ௰௭. அப். ௫.௰௬: ௮. ௭: ௰௬. ௰௮: ௰௯. ௰௨
11 அப். ௨. ௪: ௰. ௪௬: ௰௯. ௬. ௧ கொரி. ௰௨. ௰, ௨௮.
12 லூக் ௰. ௰௯. அப். ௨௮. ௫.
13 அப். ௫. ௰௫. ௰௬: ௯. ௰௭: ௨௮. ௮ யாக். ௫. ௰௪, ௰௫.
14 அப். ௧. ௨, ௧
15 லூக். ௨௪. ௫௧.
16 சங். ௱௰. ௧. அப். ௭. ௫௫.

17 அப். ௫. ௰௨: ௰௪. ௩. ௧ கொரி. ௨. ௪, ௫. எபி. ௨. ௪.

Digitized by Google

# LUKE.

# லூக்கா என்பவர்

## எழுதின சுவிசேஷம்.

### ௧. அதிகாரம்.

௧. லூக்காவின் முகவுரை. ௫. யோவான்ஸ்நானனும், ௨௬. கிறிஸ்துவும் உற்பத்தியானது. ௩௯. எலிச பேத்தும் மரியாளும் கிறிஸ்துவைக்குறித்துத் தீர்க்க தரிசனம் உரைத்தது. ௫௭. யோவானுடைய செனனமும், சுன்னத்தும் சொல்லப்பட்டது. ௬௭. சகரியா கிறிஸ்துவைக்குறித்தும், யோவானைக் குறித்தும் தீர்க்கதரிசனம் சொன்னது.

[1]மிகுந்த கனம்பொருந்திய தேயோப்பிலுவே, [2]எங்களுக்குள்ளே நிறைவேறின சங்கதிகளை ஆதிமுதல் கண்ணினாலே கண்டு, (சுவிசேஷ)வசனத்தைப் போதித்திருக்கிறவர்கள் [3]எங்களுக்கு ஒப்புக்கொடுத்ததின்படியே,

௨ அவைகளைக்குறித்துச் சரித்திரத்தை எழுதும்படிக்கு அநேகர் துணிந்தார்கள்.

௩ ஆகையால் [4]ஆதிமுதல் எல்லாவற்றையும் நன்றாய் ஆராய்ந்து பார்த்த நானும், [5]உமக்கு உபதேசிக்கப்பட்ட பொருள்களின் நிச்சயத்தை நீர் அறியும்படிக்கு,

௪ [6]அவைகளை ஒழுங்காய் உமக்கு எழுதவேண்டும் என்று எனக்கு நன்றாய்த் தோன்றிற்று:. (அவையாவன.)

௫ ¶ [7]யூதேயா தேசத்தின் இராசாவாகிய ஏரோதேயின் நாள்களிலே [8]அபியா என்னும் ஆசாரிய வகுப்பில் சகரியா என்னப்பட்ட ஆசாரியன் இருந்தான்; ஆரோனின் குடும்பத்தில் பிறந்த எலிசபேத்து என்னப்பட்டவள் அவனுக்கு மனைவியாயிருந்தான்.

இ. பி. சு.

1 அப். ௧. ௧.
2 மாற். ௧. ௧. யோவா. ௰௫. ௨௭.
3 எபி. ௨. ௩. ௧ பே. ௫. ௧. ௨ பே. ௧. ௰௬. ௧ யோ. ௧. ௧.
4 அப். ௰௫. ௰௯, ௨௫, ௨௮. ௧ கொரி. ௭. ௪௰.
5 யோவா. ௨௰. ௩௧.
6 அப். ௰௧. ௪.
7 மத். ௨. ௧.
8 ௧ நாளா. ௨௪. ௰, ௰௯. நெகே. ௰௨. ௪, ௰௭
9 ௧ மோ. ௭. ௧: ௰௭. ௧. ௧ இரா. ௯. ௪. ௨ இரா. ௨௰. ௩. யோபு. ௧. ௧. அப். ௨௩. ௧: ௨௪. ௰௬. பிலி ௩. ௬.
10 ௧ நாளா. ௨௪. ௰௯. ௨ நாளா. ௨௰௪: ௧௧. ௨.
11 ௨ மோ. ௩௰. ௭, ௮. ௧ சாமு. ௨. ௨௮. நாளா. ௨௩. ௰௩. ௨ நாளா. ௨௯. ௰௧.
12 ௩ மோ. ௰௬. ௰௭. வெளி. ௮. ௩, ௪.
13 ௨ மோ. ௩௰. ௧.
14 நியா. ௬. ௨௨: ௰௩. ௨௨. தானி. ௰. ௮. ௨௯. வச. லூக். ௨. ௯. அப். ௰. ௪. வெளி. ௧. ௰௭.

௬ [9]அவ்விருவரும் பராபரனுக்குமுன்பாக நீதியுள்ளவர்களாய்க் கர்த்தர் இட்ட சகல கற்பனைகளின்படியேயும் நியாயங்களின்படியேயும் குற்றமில்லாமல் நடந்து வந்தார்கள்.

௭ எலிசபேத்து மலடியாயிருந்ததுமல்லாமல், அவ்விருவரும் வயதுசென்றவர்களானபடியினாலே அவர்களுக்குப் பிள்ளை இல்லை.

௮ ¶ [10]அப்படியிருக்கும் காலத்தில், அவன் தன் ஆசாரியவகுப்பின் முறைப்படி பராபரனுக்குமுன்பாக ஆசாரிய ஊழியம் செய்துவருகிறபொழுது,

௯ ஆசாரியருடைய வழக்கத்தின்படி [11]அவன் தூபம் கொடுக்கிறதற்குச் சீட்டைப் பெற்றுத் தேவாலயத்தில் பிரவேசித்தான்.

௰ [12]தூபம்கொடுக்கிற வேளையிலே கூட்டமான சனங்கள் எல்லாரும் புறம்பே செபம்பண்ணிக் கொண்டிருந்தார்கள்.

௰௧ [13]அப்பொழுது பராபரனுடைய தூதன் ஒருவன் தூபபீடத்தின் வலதுபக்கத்திலே நின்று அவனுக்குக் காணப்பட்டான்.

௰௨ [14]சகரியா அவனைக்கண்டு கலங்கிப் பயமடைந்தான்.

௰௩ தூதன் அவனை நோக்கி, சகரியாவே, நீ பயப்படவேண்டாம்; உன் விண்ணப்பம் கேட்கப்பட்டது; உன் மனைவியாகிய

Digitized by Google

எலிசபேத்து ஒரு குமாரனைப் பெறுவாள்; [1]அவனுக்கு யோவான் என்று பேரிடுவாயாக.

௰௪ அவனால் உனக்குச் சந்தோஷமும் களிப்பும் உண்டாகும்; அவனுடைய பிறப்பைக்குறித்து [2]அநேகர் சந்தோஷப்படுவார்கள்.

௰௫ என்னத்தினாலெனில், [3]அவன் பராபரனுக்கு முன்பாகப் பெரியவனாய்த்திராட்சஇரசத்தையும் மதுபானத்தையும் குடியாமல் [4]தன் தாயின் வயிற்றிலே பரிசுத்த ஆவியினாலே நிரப்பப்பட்டிருப்பான்.

௰௬ அல்லாமலும் [5]அவன் இஸ்ரவேல் சந்ததியாரில் அநேகரை அவர்களுடைய தேவனாகிய பராபரனிடத்திற்குத் திருப்புவான்.

௰௭ [6]பிதாக்களுடைய இருதயங்களைப் பிள்ளைகளிடத்திற்கும், கீழ்ப்படியாதவர்களை நீதிமான்களுடைய புத்திக்கும்* திருப்பி, செம்மையான சனங்களைப் பராபரனுக்காக எத்தனம்பண்ணும்படிக்கு, அவன் எலியாவின் ஆவியையும் பலத்தையும் உடையவனாய் அவருக்குமுன்னே நடப்பான் என்றான்.

௰௮ அப்பொழுது சகரியா தேவதூதனை நோக்கி, [7]நான் அதை எதினாலே அறிவேன்? நான் கிழவனாயிருக்கிறேன்; என் மனைவியும் வயதுசென்றவளாயிருக்கிறாளே என்றான்.

௰௯ அவனுக்குத் தூதன் மாறுத்தரமாகச் சொன்னது: நான் தேவனுடைய சன்னிதானத்திலே நிற்கின்ற [8]காபிரியேல் என்பவன்; உன்னுடனே பேசி, இவைகளை உனக்குச் சுவிசேஷமாக அறிவிக்கும்படிக்கு அனுப்பப்பட்டு வந்தேன்.

௨௰ என் வார்த்தைகள் தகுதியான காலத்திலே நிறைவேறும்; அவைகளை நீ விசுவாசியாதபடியினாலே இந்தக் காரியங்கள் சம்பவிக்கும் நாள்வரைக்கும் நீ பேசத் திராணியில்லாமல் [9]ஊமையனாயிருப்பான் என்றான்.

௨௧ சகரியாவை (காணக்) காத்திருந்த சனங்கள் அவன் தேவாலயத்திலே தாமதித்ததினாலே ஆச்சரியப்பட்டார்கள்.

௨௨ அவன் வெளியே வந்தபொழுது அவர்களோடே பேசத் திராணியில்லாமல் இருந்தான்; அதினாலே தேவாலயத்தில் ஒரு தரிசனையைக் கண்டிருப்பான் என்று அறிந்தார்கள்; அவனும் அவர்களுக்குச் சமிக்கை காட்டி ஊமையனாக இருந்தான்.

௨௩ ¶ பின்பு அவன் தன் ஊழியத்தின் [10]நாள்கள் நிறைவேறின பொழுது தன் வீட்டுக்குப் போனான்.

௨௪ அந்த நாள்களுக்குப் பின்பு அவனுடைய மனைவியாகிய எலிசபேத்து கருப்பந்தரித்து,

௨௫ [11]சனங்களுக்குள்ளே எனக்கு உண்டாய் இருந்த நிந்தையை நீக்கும்படிக்குப் பராபரன் இந்த நாள்களில் என்னை நோக்கி இப்படி எனக்குச் செய்தார் என்று சொல்லி, ஐந்துமாதம்வரையும் ஒளித்துக்கொண்டாள்.

௨௬ ஆறும் மாதத்திலே காபிரியேல் என்னும் தூதன் கலிலேயா நாட்டிலுள்ள நாசரேத்தென்னும் பட்டணத்திலே,

௨௭ தாவீதின் குடும்பத்தானாகிய யோசேப்பென்னும் நாமமுள்ள புருஷனுக்கு [12]நியமிக்கப்பட்டிருந்த கன்னியாகிய மரியாள் என்பவள் இடத்திற்குப் பராபரனால் அனுப்பப்பட்டு,

௨௮ அவன் இருக்கிற வீட்டுக்குள் பிரவேசித்து, [13]கிருபைபெற்றவளே,† [14]நீ வாழ்க, பராபரன் உன்னுடனே இருக்கிறார்; பெண்களுக்குள்ளே நீ ஆசீர்வதிக்கப்பட்டவள் என்றான்.

௨௯ அவள் அவனைக் கண்டு, [15]அவனுடைய வார்த்தையைக் கேட்டுக் கலங்கி, இந்த வாழ்த்து

1 கம். கக. வச.
2 ஷெ. வச.
3 ச மோ. ௬. ௩. நியா.௰௩.௪.லூக். ௭. ௩௩.
4 எரே. ௧. ௫. கலா. ௧. ௰௫.
5 மல்கி. ௪.௫,௬.
6 மல்கி. ௪. ௫. மத். ௰௧. ௰௪. மாற். ௯. ௰௨.
* அல்லது புத்தியினால்.
7 ஆதி.௰௭.௰௭.
8 தானி. ௮ ௰௬: ௯. ௨௧, ௨௨, ௨௩. மத்.௰௮.௰. எபி. ௧. ௰௪.
9 எசே. ௩. ௨௬: ௨௪. ௨௭.
10 ௧இரா.௯.௫. ௧நாளா.௯.௨௫.
11 ஆதி.௩௰.௨௩. ஏசா.௪.௧: இசா. ௧, ௪.
12 மத். ௧. ௰௮. லூக். ௨. ௪, ௫.
13 தானி.௯.௨௩: ௰. ௰௯.
† அல்லது தயவு பெற்றவளே. கம். வசனம்.
14 நியா. ௬. ௰௨.
15 ௰௨. வச.

Digitized by Google

தல் எப்படிப்பட்டதோ என்று சிந்தித்தாள்.

௩௰ தூதன் அவளுடனே சொன்னது: மரியாளே, நீ தேவனிடத்தில் கிருபை பெற்றபடியினாலே, நீ பயப்படவேண்டாம்.

௩௧ [1]நீ கருப்பந்தரித்து ஒரு குமாரனைப் பெறுவாய்; அவருக்கு [2]இயேசு என்று பேரிடுவாயாக.

௩௨ அவர் பெரியவராய் [3]உன்னதமானவருடைய குமாரன் என்னப்படுவார்; [4]அல்லாமலும் தேவனாகிய பராபரன் அவருக்கு அவருடைய பிதாவாகிய தாவீதின் இராசாசனத்தைக் கொடுப்பார்.

௩௩ [5]அவர் யாக்கோபினுடைய குடும்பத்திற்கு என்றென்றைக்கும் இராசனாயிருப்பார்; அவருடைய ஆளுகைக்கு முடிவுவாராது என்றான்.

௩௪ அதற்கு மரியாள் தூதனை நோக்கி, இது எப்படியாகும்? ஒரு புருஷனையும் அறியேனே என்றாள்.

௩௫ தூதன் அவளுக்கு மாறுத்தரமாகச் சொன்னது: [6]பரிசுத்த ஆவி உன்மேல் வரும்? உன்னதமானவருடைய பலம் உன்மேல் நிழலிடும்; ஆகையால் உன்னிடத்தில் பிறக்கும் பரிசுத்தமானது [7]தேவனுடைய குமாரன் என்னப்படும்.

௩௬ அல்லாமலும் பராபரனால் கூடாத காரியம் ஒன்றும் இல்லாதபடியினாலே,

௩௭ [8]உனக்கு இனமாயிருக்கிற எலிசபேத்தும் தனது முதுமையான வயதிலே ஒரு புத்திரனைக் கருப்பந்தரித்தாள்; மலடியென்னப்பட்ட அவளுக்கு இது ஆறும் மாதமே என்றான்.

௩௮ அதற்கு மரியாள், இதோ, நான் ஆண்டவருக்கு அடிமையாயிருக்கிறேன், உம்முடைய வார்த்தையின்படி எனக்கு ஆகக்கடவது என்றாள்; அப்பொழுது தேவதூதன் அவளைவிட்டுப் போனான்.

கி. பி. ௧.

1 எசா. எ. ௰௪. மத். ௧. ௨௧.
2 லூக். ௨. ௨௧.
3 மாற். ௫. ௭.
4 ௨ சாமு. எ ௰௧, ௰௨. எசா. ௬. ௭: ௯. ௬. சங். ௱௩௨. ௰௧. எரே. ௨௩. ௫. வெளி. ௩. ௭.
5 தானி: ௨. ௪௪: ௭. ௰௪, ௨௭. ஒபதி. ௨௧. மீகா. ௪. ௭. யோவா. ௰௨. ௩௪. எபி ௧. ௮.
6 மத். ௧. ௨௰.
7 மத். ௰௪. ௩௩: ௨௬. ௬௩, ௬௪. மாற் ௧. ௧. யோவா. ௧. ௩௪: ௨௰. ௩௧. அப். ௮. ௩௭. ௨ரோ. ௧. ௪.
8 ௧ மோ. ௰௮. ௰௪. எரே. ௩௨. ௰௭. சகரி. ௮. ௬. மத். ௰௯. ௨௬. மாற். ௰. ௨௭. லூக். ௰௮. ௨௭. ௨ரோ. ௪. ௨௧.
9 யோசு. ௨௧. ௬, ௰, ௰௧.
10 ௨௮. ௩௧. நியா. ௫. ௨௪.
* அல்லது அதை விசுவாசித்த.
11 ௧ சாமு. ௨. ௧. சங். ௩௪. ௨, ௩: ௩௫. ௯. ஆப. ௩. ௰௮.
12 ௧ சாமு. ௧ ௰௧. சங். ௱௩௮. ௬.
13 சங். எ௧. ௰௯: ௱௨௬. ௨, ௩.
14 மல்கி. ௩. ௰௨. லூக். ௰௧. ௨௭.
15 சங். ௱௰௧. ௯.
16 ௧ மோ ௰௭. ௭. ௨ மோ. ௨௰. ௬. சங். ௱௩. ௰௭, ௰௮.

௩௯ ¶ அந்த நாள்களில் மரியாள் எழுந்து மலைத்தேசத்திலே [9]யூதாவிலுள்ள பட்டணத்திற்குத் தீவரமாய்ப்போய்,

௪௰ சகரியாவின் வீட்டில் பிரவேசித்து எலிசபேத்தை வாழ்த்துதல் செய்தாள்.

௪௧ எலிசபேத்து மரியாளுடைய வாழ்த்துதலைக் கேட்டபொழுது அவளுடைய வயிற்றில் இருந்த பிள்ளை துள்ளிற்று; அல்லாமலும் எலிசபேத்து பரிசுத்த ஆவியினாலே நிரப்பப்பட்டு,

௪௨ மிகுந்த சத்தத்துடனே சொன்னதாவது: [10]பெண்களுக்குள்ளே நீ ஆசீர்வதிக்கப்பட்டவள்; உன் கருப்பத்தின் கனியும் ஆசீர்வதிக்கப்பட்டது.

௪௩ என் ஆண்டவருடைய தாயார் என்னிடத்திற்கு வருகிறது எனக்கு எதினாலே கிடைத்தது?

௪௪ நீ வாழ்த்துதல் சொல்லிய சத்தம் என் காதுகளில் விழுந்தவுடனே என் வயிற்றில் பிள்ளை களிப்பாய்த் துள்ளிற்று.

௪௫ விசுவாசித்தவளுக்குப் *பராபரனாலே சொல்லப்பட்டவைகள் நிறைவேறுவதால் அவள் பாக்கியமுள்ளவளே என்றாள்.

௪௬ ¶ அப்பொழுது மரியாள் சொன்னதாவது:

௪௭ [11]என் ஆத்துமா பராபரனைப் புகழுகின்றது; என் ஆவி என் இரட்சகராகிய தேவனில் களிகூருகின்றது.

௪௮ [12]என்னத்தினாலெனில், அவர் தம்முடைய அடிமையின் தாழ்மையை நோக்கிப் பார்த்தார்; [13]வல்லமையுடையவர் எனக்குப் பெரியகாரியங்களைச் செய்தபடியினாலே,

௪௯ இதுமுதல் [14]வம்சத்தார் எல்லாரும் என்னைப் பாக்கியவதி என்பார்கள்; [15]அவருடைய நாமம் பரிசுத்தமுள்ளது.

௫௰ [16]அவருடைய இரக்கம் தலைமுறை தலைமுறையாக அவருக்

Digitized by Google

குப் பயப்படுகிறவர்களிடத்தில் உண்டாயிருக்கும்.

௫௧ [1]அவர் தம்முடைய கையினாலே பலத்த காரியங்களைச் செய்தார்; தங்கள் இருதயத்தின் சிந்தனையில் [2]இறுமாப்பாயிருக்கிறவர்களை அவர் சிதறப்பண்ணி,

௫௨ [3]பலவான்களைப் பத்திராசனங்களிலிருந்து தள்ளித் தாழ்மையுள்ளவர்களை உயர்த்தி,

௫௩ [4]பசியுள்ளவர்களை நன்மைகளினாலே நிரப்பிச் சம்பூரணமுள்ளவர்களை வெறுமையாய் அனுப்பினார்.

௫௪ அவர் நம்முடைய பிதாக்களோடே சொன்னபடியே, [5]ஆபிரகாமுக்கும் அவனுடைய சந்திக்கும் என்றென்றைக்கும் இரக்கம்செய்ய நினைத்து,

௫௫ [6]தம்முடைய தாசராகிய இஸ்ரவேலை ஆதரித்தார் என்றாள்.

௫௬ ¶ பின்பு மரியாள் ஏறக்குறைய மூன்றுமாதம் அவளுடனே இருந்து தன் வீட்டுக்குத் திரும்பினாள்.

௫௭ எலிசபேத்துக்குப் பேறுகாலம் உண்டானபொழுது, அவள் ஒரு குமாரனைப் பெற்றாள்.

௫௮ பராபரன் தமது இரக்கத்தை அவளிடத்தில் பெரிதாக்கினார் என்று அவளுடைய அயலகத்தாரும் பந்துசனங்களும் கேள்விப்பட்டு, [7]அவளுடனே கூடச் சந்தோஷப்பட்டார்கள்.

௫௯ பின்பு எட்டாம்நாளிலே [8]அவர்கள் பிள்ளைக்கு விருத்தசேதனம்பண்ணும்படிக்கு வந்து, அதின் தகப்பனுடைய நாமத்தின்படி அதற்குச் சகரியா என்று பேரிட்டார்கள்.

௬௰ அப்பொழுது அதின் தாய் சொன்னது: அப்படியல்ல, [9]அதற்கு யோவான் என்று பேரிடவேண்டும் என்றாள்.

௬௧ அவர்கள் அவளை நோக்கி, உன் உறவிலே இந்தப்பேராக அழைக்கப்பட்டவர்கள் ஒருவரும் இல்லையே என்று சொல்லி,

௬௨ அதினுடைய தகப்பனை நோக்கி, இதற்கு என்ன பேரிட மனதாய் இருக்கிறீர் என்று சமிக்கையினாலே கேட்டார்கள்.

௬௩ அவன் எழுதுகிறதற்குப் பலகையைக் கேட்டு வாங்கி, [10]இதின் பேர் யோவான் என்று எழுதினான்; எல்லாரும் ஆச்சரியப்பட்டார்கள்.

௬௪ [11]அல்லாமலும் அந்நிமிஷத்திலே அவனுடைய வாயும் நாவும் திறக்கப்பட, அவன் பராபரனைத் தோத்திரம்செய்து பேசினான்.

௬௫ (அதினாலே) அவர்களைச் சுற்றி வாசமாயிருந்த எல்லாருக்கும் பயம் வந்தது; [12]அன்றியும் யூதேயாவின் மலைத்தேசம் எங்கும் அந்தச் சங்கதிகளெல்லாம் *சொல்லிக்கொள்ளப்பட்டன.

௬௬ (அவைகளைக்) [13]கேள்விப்பட்டவர்கள் எல்லாரும் (அவைகளைத்) தங்கள் மனதிலே வைத்துக்கொண்டு, அந்தப் பிள்ளை எப்படிப்பட்டதாயிருக்குமோ என்றார்கள்; [14]கர்த்தருடைய கை அந்தப் பிள்ளையினிடத்தில்இருந்தது.

௬௭ ¶ அன்றியும் அவனுடைய தகப்பனாகிய சகரியா [15]பரிசுத்த ஆவியினாலே நிரப்பப்பட்டு, தீர்க்கதரிசனமாய்ப் பகர்ந்ததாவது:

௬௮ [16]நாம் நம்முடைய சத்துருக்களின் கைகளுக்குத் தப்புவிக்கப்பட்டவர்களாக,

௬௯ [17]நம்முடைய வாழ்நாள் எல்லாம் பயமில்லாமல் தேவபத்தியாயும் நீதியாயும் தமக்கு முன்பாக ஊழியம்செய்வதற்கு அனுக்கிரகம் செய்யும்பொருட்டாய்,

௭௰ தாம் [18]நம்முடைய பிதாவாகிய ஆபிரகாமுக்கு இட்ட ஆணையாகிய தம்முடைய பரிசுத்த உடம்படிக்கையை நினைத்து,

௭௧ [19]நம்முடைய பிதாக்கள் மேல் இரக்கமாகி,

கி. பி. சு.

1 சங். ௯௮ ௧: ௱௮ ௰௫. ஏசா. ௪௰. ௰: ௫௧. ௯: ௫௨. ௰.
2 சங். ௩௩. ௰. ௧ பே. ௫. ௫.
3 ௧ சாமு ௨. ௭ ௮. யோபு. ௫. ௰௨. சங். ௱௰௩. ௭.
4 ௧ சாமு. ௨. ௫. சங். ௩௪. ௰.
5 ௧ மோ. ௰௭. ௰௯. சங். ௱௩௨. ௰௧. உரோ. ௰௧. ௨௭. கலா. ௩. ௰௯.
6 சங். ௯௮. ௩. எரே ௩௩. ௩, ௨௰.
7 ௰௪. வச.
8 ௧ மோ. ௰௭. ௰௨. ௩ மோ. ௰௨. ௩.
9 ௰௩. வச.
10 ௰௩. வச.
11 ௨௰. வச.
12 ௩௯. வச.
* அல்லது பேச் செல்லாம்.
13 லூக். ௨. ௰௯, ௫௧.
14 ௧ மோ. ௩௯. ௨ சங். ௮௰. ௰௭: அப். ௨௩. அப். ௰௧. ௨௩.
15 யோவே. ௨. ௨௮.
16 உரோ. ௩. ௰௮, ௨௨. எபி. ௯. ௰௪.
17 எரே. ௩௨. ௩௯, சங். எபே. ௪. ௨௪. ௨ தெச. ௨. ௰௩. ௨ தீமோ ௧. ௯. தீத்து. ௨. ௰௨. ௧ பே. ௧. ௰௫. ௨ பே ௧. ௪.
18 ௧ மோ. ௰௨. ௩: ௰௭. ௪: ௨௨. ௰௬, ௰௭. எபி. ௬. ௰௩, ௰௭.
19 ௧ மோ. ௨௩ ௪௨. சங். ௯௮. ௩: ௱௫. ௮, ௯: ௱௬. ௪௫. ஏசே. ௰௬. ௬௩. ௫௪. வச.

Digitized by Google

௭௨ [1]தாம் உலகத்தின் தோற்றம் முதற்கொண்டிருந்த தமது பரிசுத்த தீர்க்கதரிசிகளால் அருளிச்செய்தபடியே,

௭௧ நம்முடைய சத்துருக்களில் நின்றும், நம்மைப் பகைக்கிற யாவருடைய கைகளில் நின்றும்,

௭௪ [2]நம்மை இரட்சிக்கிற பலத்த இரட்சகரைத் தம்முடைய தாசனாகிய தாவீதின் குடும்பத்திலே தோன்றப்பண்ணி,

௭௫ (இவ்விதமாய்) [3]தம்முடைய சனங்களைச் சந்தித்து மீட்டுக்கொண்ட இஸ்ரவேலருடைய தேவனாகிய [4]பராபரனுக்குத் தோத்திரம் உண்டாவதாக.

௭௬ பாலகனே, நீ மரணநிழலாகிய இருளிலே அகப்பட்டிருக்கிறவர்களுக்கு [5]ஒளியுண்டுபண்ணும்படியாயும், நம்முடைய கால்களைச் சமாதானமுள்ள மார்க்கத்திலே நடத்தும்படியாயும்,

௭௭ உன்னதத்திலிருந்து சூரிய உதயம்* நமக்குத் தோன்றப்பண்ணின நம்முடைய தேவனுடைய மிகுந்த இரக்கங்களினாலே,†

௭௮ [6]அவருடைய சனங்களுக்குப் பாவமன்னிப்பாகிய‡ இரட்சண்ணியத்தைத் தெரியப்படுத்தி,

௭௯ [7]இவ்விதமாய் அவருக்காக மார்க்கத்தைச் செம்மையாக்கும்பொருட்டாக அவருக்கு முன்னே நடப்பாய், ஆகையால் நீ எல்லாரிலும் மேலானவருடைய தீர்க்கதரிசி என்னப்படுவாய் என்றான்.

௮௰ ¶ [8]பின்பு அந்தப் பிள்ளை வளர்ந்து ஆவியிலே பலங்கொண்டு, இஸ்ரவேலருக்குத் தன்னைக் காண்பிக்கும் நாள்வரைக்கும் [9]வனாந்தரங்களில் இருந்தான்.

## ௨. அதிகாரம்.

௧. அகுஸ்து இராயன் உரோம இராச்சியத்தைக் குடிமதிப்புச் செய்தது. ௭. கிறிஸ்து பிறந்தது. ௮. அதை ஒரு தூதன் மேய்ப்பர்களுக்கு அறிவித்தது, ௰௨. அதற்காக அநேகம் தூதர் ஸ்தோத்திரம் பாடினது. ௨௧. கிறிஸ்து சுன்னத்துப் பண்ணப்பட்டது. ௨௨. மரியாள் சுத்திகரிக்கப்பட்டது. ௨௫. சிமேயோனும், அன்னாளும் கிறிஸ்துவைக்குறித்துத் தீர்க்கதரிசனம் உரைத்தது. ௪௰. இயேசு ஞானத்தில் வளர்ந்து, ௪௬. தேவாலயத்தில் சாஸ்திரிகளோடே சம்பாஷித்தது. ௫௧. தாய் தகப்பனுக்குக் கீழ்ப்படிந்திருந்தது.

அந்நாள்களில் குடிகள் எல்லாருக்கும் உண்டாகிய பேர் § முதலானவைகளையும் எழுதவேண்டும் என்று அகுஸ்து இராயனுடைய கட்டளை வந்தது.

௨ [10]சீரியா நாட்டிலே கிரேனி என்பவன் துரையானபொழுது, முதலாவது இந்தக் குடிமதிப்பு உண்டாயிற்று.

௩ அந்தப்படி எல்லாரும் எழுதப்படும்படிக்கு, தங்கள் தங்கள் ஊர்களுக்குப் போனார்கள்.

௪ அப்பொழுது யோசேப்பும் [11]தாவீதின்குடும்பத்தானுமாய் வம்சத்தானுமாய் இருந்தபடியினாலே, [12]தனக்கு நியமிக்கப்பட்ட கருப்பவதியாகிய மனைவி மரியாளுடனே கூட எழுதப்படும்படிக்குக் கலிலேயா நாட்டிலுள்ள நாசரேத் தூரைவிட்டு,

௫ [13]யூதேயா நாட்டிலுள்ள பெத்லெகேம் என்னப்பட்ட தாவீதின் ஊருக்குப் போனான்.

௬ ¶ அவ்விடத்திலே அவர்கள் இருக்கும் காலத்தில், அவள் பிள்ளைபெறுகிறதற்குக் காலம் சம்பவித்தது.

௭ அப்பொழுது அவள் [14]தன் முதற்பேறான குமாரனைப்பெற்று; அவரைப் புடவைகளில் சுற்றிச் சத்திரத்திலே (வேறு) இடம் இல்லாதபடியினாலே அவரைப் பசுத்தொட்டியிலே வைத்தாள்.

௮ ¶ அன்றியும் அந்தத் திசையிலே மேய்ப்பர் வெளியிலே தங்கி, ‖இராத்திரியிலே தங்கள் ஆட்டுக்கூட்டத்தைக் காத்துக்கொண்டிருந்தார்கள்.

௯ அப்பொழுது பராபரனுடைய தூதன் அவர்களிடத்தில் வந்து நிற்க, பராபரனுடைய மகிமை அவர்களைச் சுற்றிப் பிரகாசித்தது; [15]அவர்கள் மிகவும் பயந்தார்கள்.

இ. பி. கு.

1 எரே. ௨௩. ௫, ௬: ௩௰. ௰. தானி. ௯. ௨௪. அப். ௩. ௨௧. உரோ. ௧. ௨.

2 சங் ௱௩௨. ௰எ.

3 உபா. ௩. ௰௬: ௪.௩௧. சங்.௱௰௬. ௬. லூக். ௭. ௰௬.

4 ௧ இரா. ௧. ௪௮. சங். ௪௧. ௰௩: ௭௨. ௰௮: ௱௬. ௪௮.

5 ஏசா. ௯. ௨: ௪௨. ௭: ௬௯. ௬. மத். ௪. ௰௬. அப். ௨௬. ௰௮.

* அல்லது பகற்றுவக்கம்.

† இரக்கக் குடர்களினாலே.

6 மாற். ௧. ௪. லூக். ௩. ௩.

‡ அல்லது மன்னிப்பினால்.

7 ஏசா. ௪௰. ௩. மல்கி. ௩. ௧: ௪. ௫. மத். ௰௧. ௰. ௰எ. ௩௪.

8 லூக். ௨. ௪௰.

9 மத். ௩. ௧: ௰௧. ௭.

§ அல்லது திறை.

10 அப். ௫. ௩௭.

11 ௧ சாமு. ௰௬. ௧, ௪. யோவா. ௭. ௪௨.

12 மத். ௧. ௰௮. லூக். ௧. ௨௭.

13 மத். ௨. ௰எ. லூக். ௧. ௨௭.

14 மத். ௧. ௨௫.

‖ அல்லது இராக்காவல்.

5 லூக். ௧. ௰௨.



Digitized by Google

௰ உடனே தேவதூதன் அவர்களை நோக்கி, பயப்படாதிருங்கள், [1]எல்லாச் சனங்களுக்கும் உண்டாகும் மிகுந்த சந்தோஷத்தை உங்களுக்குச் சுவிசேஷமாக அறிவிக்கிறேன்.

௰௧ என்னவென்றால் [2]இன்று [3]கர்த்தராகிய கிறிஸ்து என்னும் இரட்சகர் [4]தாவீதின் ஊரிலே உங்களுக்காகப் பிறந்தார்.

௰௨ பிள்ளையைப் புடவைகளில் சுற்றிப் பசுத்தொட்டியிலே வைத்திருக்கக் காண்பீர்கள்; அதுவே உங்களுக்கு அடையாளமென்றான்.

௰௩ அப்பொழுது சடுதியாய்ப் [5]பரமண்டலத்திலுள்ள மிகுந்த சேனைகள் அந்தத் தூதனுடனே கூட இருந்தன.

௰௪ [6]உன்னதங்களில் இருக்கிற பராபரனுக்குப் புகழ்ச்சியும், [7]பூமியிலே சமாதானமும், [8]மனிதர்மேல் பிரியமும் உண்டாவதாக என்று பராபரனைத் துதித்தார்கள்.

௰௫ பின்பு தேவதூதர்கள் அவர்களைவிட்டுப் பரமண்டலத்திற்குப் போனபொழுது, மேய்ப்பர்* ஒருவரை ஒருவர் நோக்கி, நாம் பெத்லெகேம் ஊருக்குப் போய், கர்த்தரால் நமக்கு அறிவிக்கப்பட்டு நடந்த இந்தச் சங்கதியைப் பார்ப்போம் வாருங்கள் என்று சொல்லிக்கொண்டு,

௰௬ தீவிரமாய்ப்போய்,மரியாளையும் யோசேப்பையும் பசுத்தொட்டியிலே கிடக்கிற பிள்ளையையும் கண்டார்கள்.

௰௭ பின்பு அவர்கள் அந்தப் பிள்ளையைக்குறித்துத் தங்களுக்குச் சொல்லப்பட்ட வார்த்தையைப் பிரசித்தம்பண்ணினார்கள்.

௰௮ மேய்ப்பரால் சொல்லப்பட்டவைகளைக் கேட்ட யாவரும் அவைகளைக்குறித்து ஆச்சரியப்பட்டார்கள்.

௰௯ [9]மரியாள் அவ்வார்த்தைகளை எல்லாம் தன் இருதயத்திலே காத்துச் சிந்தித்துக்கொண்டாள்.

௨௰ மேய்ப்பரும் தங்களுடனே சொல்லப்பட்டதின்படியேகேட்டுக் கண்ட யாவுக்காகவும் பராபரனைப் புகழ்ந்து துதித்துக்கொண்டு திரும்பினார்கள்.

௨௧ ¶ [10]பிள்ளைக்கு விருத்தசேதனம் செய்கிறதற்குரிய எட்டாம் நாளிலே அது கருப்பமாகிறதற்கு முன்னே தேவதூதனாலே சொல்லப்பட்ட [11]இயேசு என்னும் நாமம் அதற்குக் கொடுக்கப்பட்டது.

௨௨ அல்லாமலும் [12]மோசேயின் நியாயப்பிரமாணத்தின்படியே அவர்களைச் சுத்திகரிப்பதற்கான நாள்கள் நிறைவேறினபொழுது,

௨௩ [13]முதற்பேறான எந்த ஆண்பிள்ளையும் பராபரனுக்குப் பிரதிஷ்டையாக்கப்பட வேண்டும் என்று [14]பராபரன் அருளிச்செய்த நியாயப்பிரமாணத்தில் எழுதியிருக்கிறபடி,

௨௪ அவர்கள் அதைப் பராபரனுக்கு ஒப்புக்கொடுக்கும்படிக்கும் பராபரனுடைய நியாயப்பிரமாணத்தில் சொல்லியிருக்கிறபடி ஒருசோடு காட்டுப்புறாவை அல்லது இரண்டு புறாக்குஞ்சுகளைப் பலியிடும்படிக்கும் பிள்ளையை எருசலேம் பட்டணத்திற்குக் கொண்டுபோனார்கள்.

௨௫ அப்பொழுது சிமேயோன் என்று பேர்கொண்ட மனிதன் எருசலேமில் இருந்தான்; அவன் நீதியும் தேவபத்தியும் உள்ளவனுமாய் [15]இஸ்ரவேலருக்கு ஆறுதல் செய்கிறவர் வரக் காத்திருக்கிறவனுமாய் இருந்தான்; அவனில் பரிசுத்தஆவியானவர் இருந்தார்.

௨௬ அல்லாமலும் பராபரனுடைய கிறிஸ்துவைக்காணும்முன்னே, [16]நீ மரணம் அடைவதில்லை என்று பரிசுத்தஆவியினாலே அவனுக்கு உத்தரவு உண்டாயிருந்தது.

௨௭ [17]அவன் அந்த ஆவியினாலே ஏவப்பட்டுத் தேவாலயத்திலே வந்திருந்தான்; அப்பொழுது இயேசு என்னும் பிள்ளையை நியாயப்பிர

கி. பி. கு.

1 ௧ மோ. ௰௨. ௩. மத். ௨௮. ௰௯. மாற். ௧.௰௫: ௧௧. ௧௨. லூக். ௨௪. ௪௭. கொலோ. ௧. ௨௩.
2 மத். ௧. ௰௧: ௰௬. ௰௬. லூக். ௧.௪௩. அப். ௨. ௩௬: ௰. ௩௬. பிலி. ௨. ௰௧.
3 மத். ௧. ௨௧.
4 ஏசா. ௯. ௬.
5 ௧ மோ. ௨௮. ௰௨: ௩௨. ௧, ௨. சங். ௩௧. ௨௰, ௨௧: ௪௮. ௨. தானி. ௭.௰.எபி. ௧. ௰௪. வெளி. ௫. ௰௧.
6 லூக். ௰௯. ௩௮. எபே. ௧. ௬: ௩. ௰, ௨௧. வெளி. ௫. ௰௩.
7 ஏசா.௫௭.௰௯. லூக். ௧. ௭௯. ரோ. ௫. ௧. எபே. ௨. ௰௭. கொலோ. ௧. ௨௰.
8 யோவா. ௩. ௰௬. எபே. ௨. ௫, ௮. ௨ தெச. ௨. ௰௬. ௧ யோ. ௪. ௯, ௰.
*அல்லது மேய்ப்பராகியமனுஷர்.
9 ௧ மோ. ௩௭. ௰௧. லூக். ௧. ௬௬. ௫௧.
10 ௧ மோ. ௰௭. ௰௨. ௩ மோ. ௰௨. ௩. லூக். ௧. ௫௯.
11 மத். ௧. ௨௧, ௨௫. லூக். ௧.௩௧.
12 ௩ மோ. ௰௨. ௨, ௩, ௪, ௬.
13 ௨ மோ. ௰௩. ௨: ௨௨. ௨௯: ௩௪.௰௯. ௪ மோ. ௩. ௰௩: ௮. ௰௭: ௰௮. ௰௫
14 ௩மோ.௰௨.௨, ௬, ௮.
15 ஏசா. ௪௰. ௧. மாற். ௰௫. ௪௩. ௩௮. ௨௫.
16 சங். ௮௯.௪௮. எபி. ௰௧. ௫.
17 மத். ௪. ௧.

Digitized by Google

மான முறைமையின்படிசெய்யத் தாய்தகப்பன்மார் அவனை உள்ளே கொண்டுவருகையில்,

௨௮ அவன் அவனைத் தன் கைகளில் ஏந்திக்கொண்டு, பராபரனைத் தோத்திரித்துச் சொன்னது:

௨௯ [1]ஆண்டவரே, புறத்தேசத்தார்களுக்கு அறிவைக் கொடுப்பதற்கும் உம்முடைய சனங்களாகிய இஸ்ரவேலருக்கு மகிமை உண்டாக்குவதற்குமான ஒளியாய்,

௩௰ உம்மாலே எல்லாச் சனங்களுக்குமுன்பாகவும்,

௩௧ எத்தனமாக்கப்பட்ட இரட்சகனை நான் [2]என் கண்களாலே கண்டபடியினாலே,

௩௨ [3]தேவரீர் உம்முடைய வார்த்தையின்படி இப்பொழுது அடியேனைச் சமாதானத்தோடே அனுப்பிவிடுகிறீர் என்றான்.

௩௩ ¶ அப்படி அவனைக்குறித்துச் சொல்லப்பட்டவைகளை அவருடைய தாயும் யோசேப்பும் கேட்டு ஆச்சரியப்பட்டார்கள்.

௩௪ பின்னும் சிமேயோன் அவர்களை ஆசீர்வதித்து, அவருடைய தாயாகிய மரியாளுடனே சொன்னது: இதோ, அநேகருடைய இருதயசிந்தனைகள் வெளியரங்கமாகும்படிக்கு,

௩௫ இஸ்ரவேலரில் [4]அநேகர் விழுதற்கும் எழுந்திருக்குதற்கும் [5]விரோதமாய்ப் பேசப்படும் அடையாளமாயிருப்பதற்கும் இவர் நியமிக்கப்பட்டிருக்கிறார்; [6]உன் ஆத்துமாவையே ஒரு கத்தி உருவிப்போம் என்றான்.

௩௬ ¶ அல்லாமலும் ஆசேருடைய கோத்திரத்திலே பானுவேலின் குமாரத்தியும் தீர்க்கதரிசியுமாகிய அன்னாள் என்பவள் இருந்தாள், அவள் கன்னியாய்ப் பின்பு ஏழு வருஷம் புருஷனோடே வாழ்ந்திருந்த வயது சென்றவளாயிருந்தாள்.

௩௭ ஏறக்குறைய எண்பத்துநாலு வயதுள்ள அந்தக் கைம்பெண் தேவாலயத்தைவிட்டு நீங்காமல் [7]இரவும் பகலும் செபம்பண்ணி உபவாசித்து ஆராதனைசெய்து கொண்டுவந்தாள்.

௩௮ அவளும் அவ்வேளையிலே போய் நின்று, பராபரனைத் துதித்து, [8]எருசலேமிலே* மீட்புண்டாகக் காத்திருந்த யாவருடனேயும் அவரைக்குறித்துப் பேசினாள்.

௩௯ பராபரனுடைய நியாயப்பிரமாணத்தின்படி சகலத்தையும் அவர்கள் செய்து முடித்த பின்பு கலிலேயாதேசத்திலுள்ள தங்கள் ஊராகிய நாசரேத்தூருக்குத் திரும்பினார்கள்.

௪௰ ¶ [9]பிள்ளையானது வளர்ந்து ஆவியிலே பலன்கொண்டு ஞானத்தால் நிறையப்பட்டுத் தேவதயவுள்ளவரானார்.

௪௧ [10]அவருடைய தாய்தகப்பன்மார் பஸ்காவின் பண்டிகைக்கு வருஷந்தோறும் எருசலேம் பட்டணத்திற்குப் போவார்கள்.

௪௨ அந்தப்படிக்கு அவர் பன்னிரண்டு வயதுள்ளவரானபொழுது அவ்ர்கள் பண்டிகைமுறைமையின்படி எருசலேமுக்குப் போய்,

௪௩ வேண்டிய நாள் அங்கே இருந்து பின்பு திரும்பிவருகிறபொழுது, பிள்ளையாகிய இயேசு தம்முடைய தாய்க்கும் யோசேப்புக்கும் தெரியாமல் எருசலேமிலே தானே இருந்தார்.

௪௪ அவர்கள் அவர் பிரயாணக்காரருடைய கூட்டத்தில் இருப்பாரென்று எண்ணி, ஒருநாள் பிரயாணமாய் நடந்துபோய், இனத்தாருக்குள்ளும் அறிமுகமானவர்களுக்குள்ளும் அவரைத் தேடி,

௪௫ அவரைக் காணாமலிருக்கிறபொழுது எருசலேமுக்குத் திரும்பி, அவரைத் தேடி,

௪௬ மூன்று நாளைக்குப் பின்பு தேவாலயத்திலே அவர் போதகருக்குள்ளே உளுக்காந்திருக்கவும். அவர்களுக்குச் செவிகொடுக்க

இ. பி. கு.

1 ஏசா. ௯. ௨: ௪௨. ௬: ௪௯. ௬: ௬௰. ௧-௩. மத். ௪.௰௬. அப். ௰௩. ௪௭: ௨௮. ௨௮.

2 ஏசா. ௫௨. ௰. லூக். ௩. ௬.

3 ஆ மோ. ௪௬. ௩௰. பிலி. ௧. ௨௩.

4 ஏசா. ௮. ௰௪. ஓசே. ௰௪. ௯. மத். ௨௧. ௪௪. ௨ரோ. ௯. ௩௨, ௩௩. ௧ கொரி. ௧. ௨௩. ௨௪. ௨ கொரி. ௨. ௰௬. ௧ பே. ௨. ௭, ௮.

5 அப். ௨௮. ௨௨.

6 சங். ௪௨. ௰. யோவா. ௰௯. ௨௫.

7 அப். ௨௬. ௭. ௧ தீமோ. ௫ ௫.

8 மாற். ௰௫. ௪௩. ௨௪. ௨௪. லூக். ௨௪. ௨௧.

* அல்லது இஸ்ரவேலிலே.

9 ௫௨. வச. லூக். ௧. ௮௰.

10 உ மோ. ௨௩. ௰௫, ௰௭: ௩௪. ௨௩. ௫ மோ. ௰௬. ௧, ௰௬.

Digitized by Google

வும், அவர்களை வினாவவும் கண்டார்கள்.

௪௭ [1]அவருடைய வசனங்களைக் கேட்ட யாவரும் அவருடைய புத்தியையும் மாறுத்தரங்களையுங் குறித்துப் பிரமித்தார்கள்.

௪௮ (தாய்தகப்பன்மார்) அவரைக் கண்டு அதிசயப்பட்டார்கள்; அல்லாமலும் அவருடைய தாய் அவரைநோக்கி, மகனே, என்னத்தினாலே நீ எங்களுக்கு இப்படிச்செய்தாய்? இதோ, உன் தகப்பனும் நானும் விசாரத்தோடே உன்னைத் தேடினோமே என்றாள்; அதற்கு அவர்,

௪௯ நீங்கள் என்னை ஏன் தேடினீர்கள்? [2]நான் என் தகப்பனுக்கு ஏற்றவைகளிலே இருக்கவேண்டியதென்று அறியீர்களா என்றார்.

௫௰ [3]அவர்கள் தங்களுக்கு அவர் சொன்ன வார்த்தையின் (கருத்தை) உணர்ந்துகொள்ளவில்லை.

௫௧ பின்பு அவர் அவர்களுடனேகூடப் போய், நாசரேத்தூரில் சேர்ந்து, அவர்களுக்குக் கீழடங்கினார்; நடந்த சங்கதிகளையெல்லாம் [4]அவருடைய தாய் தன் இருதயத்தில் காத்துக்கொண்டாள்.

௫௨ இயேசுவானவர் [5]ஞானத்தையும், * வயதையும், பராபரனிடத்திலும் மனிதரிடத்திலும் தயையையும் அதிகம் அதிகமாய் அடைந்துகொண்டார்.

## ௩. அதிகாரம்.

௧. யோவானுடைய பிரசங்கத்தையும், ஞானஸ்நானத்தையுங்குறித்தது. ௰௫. அவன் கிறிஸ்துவைக்குறித்துக் கொடுத்த சாட்சி. ௨௰. ஏரோதே யோவானைக் காவலில் வைத்தது. ௨௧. கிறிஸ்து ஞானஸ்நானம்பெற்றபோது பரமண்டலத்திலிருந்து சாட்சி வெளிப்பட்டது. ௨௩. கிறிஸ்துவின் ஆயுசின் பிரமாணமும், யோசேப்பைத்தொடங்கி மேற்போகின்ற அவருடைய வம்சவரிசையின் அட்டவணையும்.

திபேரியு இராயன் இராச்சியபரிபாலனம்பண்ணின பதினைந்தாம் வருஷத்திலே, பொந்தியுபிலாத்து என்பவன் யூதேயாநாட்டுக்குத் துரையாயும், ஏரோது என்பவன் காற்பங்காகியகலிலேயா நாட்டுக்கு அதிபதியாயும், அவனுடைய சகோதரனாகிய பிலிப்பு என்பவன் காற்பங்காகிய இத்துரேயா நாட்டுக்கும் திராகோனித்தி நாட்டுக்கும் அதிபதியாயும், இலிசான் என்பவன் காற்பங்காகிய அபிலேனே நாட்டுக்கு அதிபதியாயும்,

௨ [6]அன்னா, காய்பா என்பவர்கள் பிரதான ஆசாரியராயும் இருந்த காலத்திலே, வனாந்தரத்தில் சகரியாவின் குமாரனாகிய யோவானுக்குத் தேவவசனம் உண்டாயிற்று.

௩ ¶ ஆனபடியால் [7]அவன் யோர்தான் நதிக்கு அருகான தேசம் எங்கும் நடந்து, [8]பாவமன்னிப்புக்காக மனம்திருப்பும்படிக்கு ஏற்ற ஞானஸ்நானத்தைக்குறித்துப் பிரசங்கித்தான்.

௪ [9]பராபரனுக்காக மார்க்கத்தை நன்றாகச்செய்து, அவருக்காகப் பாதைகளைச் செம்மைபண்ணுங்கள் என்றும்,

௫ பள்ளங்களெல்லாம் நிரப்பப்படும், சகல மலைகளும் குன்றுகளும் தாழ்த்தப்படும், கோணலான பாதைகள் செம்மையாகும், முரட்டுவழிகள் சமனாகும் என்றும், [10]மனிதர் எல்லாரும் பராபரனுடைய இரட்சிப்பைக் காண்பார்கள் என்றும்,

௬ வனாந்தரத்திலே கூப்பிடுகிறவனுடைய சத்தம் உண்டென்று ஏசாயா தீர்க்கதரிசியினுடைய புஸ்தகத்தில் எழுதியிருக்கிற பிரகாரமாகப் பிரசங்கித்தான்.

௭ ஆதலால் அவன், தன்னாலே ஞானஸ்நானம் பெறும்படிக்குப் புறப்பட்டுவந்த சனங்களை நோக்கி, [11]விரியன்பாம்புகளின் குட்டிகளே இனிவரும் கோபத்திற்கு நீங்கள் தப்பித்துக்கொள்ளும்படியாய் உங்களுக்கு வகைகாட்டினவன் எவன்?

௮ (தப்ப விரும்பினால்) மனம்திருப்புகிறதற்கு ஏற்ற †கனிகளைக் கொடுங்கள், ஆபிரகாம் எங்களுக்

கி. பி. ௨௯.

1 மத். ௭. ௨௯. மாற். ௧. ௨௨. லூக். ௪. ௨௨, ௩௨. யோவா. ௭. ௰௫, ௪௬.
2 யோவா. ௨. ௰௬.
3 லூக். ௯. ௪௫: ௰௮. ௩௪.
4 ௰௯. ௨௯. தானி. ௭. ௨௮.
5 ௧ சாமு. ௨. ௨௬. ௪௰. ௨௪.
* அல்லது வளர்த்தியையும்.
6 யோவா. ௰௧. ௪௯, ௫௰: ௰௮. ௰௩. அப். ௪. ௧.
7 மத். ௩. ௧. மாற். ௧. ௪.
8 லூக். ௧. ௭௭.
9 ஏசா. ௪௰. ௩. மத். ௩. ௩. மாற். ௧. ௩. யோவா. ௧. ௨௩.
10 சங். ௯௮. ௨. ஏசா. ௫௨. ௰. லூக். ௨. ௰.
11 மத். ௩. ௭.
† அல்லது தகுதியான.

Digitized by Google

குத் தகப்பன் என்று உங்கள் உள்ளத்தில் சொல்லத் தொடங்காதிருங்கள்; ஆபிரகாமுக்குப் பராபரன் இந்தக் கற்களால் பிள்ளைகளை உண்டுபண்ண வல்லவராய் இருக்கிறார் என்று உங்களுக்குச் சொல்லுகிறேன்.

௯ அல்லாமலும் இப்பொழுதே கோடரியானது மரங்களின் வேர் அருகில் வைத்திருக்கின்றது; [1]ஆகையால் நல்ல கனிகொடாதமரங்கள் எல்லாம் வெட்டப்பட்டு அக்கினியிலே போடப்படும் என்றான்.

௰ ¶ அப்பொழுது சனங்கள் அவனைநோக்கி, [2]அப்படியானால் நாங்கள் என்ன செய்யவேண்டும் என்று கேட்டார்கள்.

௰௧ அவர்களுக்கு மாறுத்தரமாக அவன் சொன்னது: [3]இரண்டு சட்டைகளை உடையவன் சட்டையில்லாதவனுக்குக் கொடுக்கக்கடவன்; ஆகாரமுடையவனும் அப்படியே செய்யக்கடவன் என்றான்.

௰௨ பின்பு [4]ஆயக்காரரும் ஞானஸ்நானம் பெறும்படிக்கு அவனிடத்தில் சேர்ந்து, போதகரே, நாங்கள் என்ன செய்யவேண்டும் என்றார்கள்.

௰௩ அவர்களுடனே அவன் சொன்னது: [5]உங்களுக்குக் கட்டளையிடப்பட்டதற்கு மேலாக ஒன்றையும் பலவந்தமாய்க் கேட்டுக்கொள்ளாதிருங்கள் என்றான்.

௰௪ போர்ச்சேவகரும் அவனை நோக்கி, நாங்கள் என்னசெய்யவேண்டும் என்று கேட்டார்கள்; அவர்களுடனே அவன் சொன்னது: நீங்கள் ஒருவனுக்கும் இடுக்கண் [6]செய்யாமலும்,* ஒருவனைக் குறித்தும் பொய்ச்சாட்சி சொல்லாமலும், உங்கள் சம்பளமே† போதுமென்று எண்ணிக்கொண்டிருக்கக்கடவீர்கள் என்றான்.

௰௫ ¶ அப்பொழுது சனங்கள் காத்திருந்து,‡ யோவான் கிறிஸ்துவாய் இருக்கிறானோ என்று எல்லாரும் தங்கள் இருதயங்களில் அவனைக்குறித்துச் சிந்தனைகொண்டு§ இருக்கிறபொழுது,

௰௬ யோவான் எல்லாருடனேயும் சொன்னது: [7]நான் சலத்தினாலே உங்களுக்கு ஞானஸ்நானம் கொடுக்கிறேன்; என்னிலும் அதிக பலத்தவர் வருகிறார், அவருடைய பாத இரட்சைகளின் வாரை அவிழ்க்கிறதற்கு நான் பாத்திரன் அல்ல; அவர் பரிசுத்தஆவியினாலும் அக்கினியினாலும் உங்களுக்கு ஞானஸ்நானம் கொடுப்பார்.

௰௭ தூற்றும் சுளகு அவருடைய கையில் இருக்கின்றது; அவர் தம்முடைய களத்தை நன்றாய் விளக்கி, [8]கோதுமையைத் தம்முடைய களஞ்சியத்திலே சேர்த்து, பதரை அவியாத அக்கினியினால் சுட்டெரிப்பார் என்று சொன்னதுமன்றி,

௰௮ மற்றும் அநேகம் புத்திகளைச் சொல்லிச் சனங்களுக்குச் சுவிசேஷத்தை அறிவித்தான்.

௰௯ ¶ [9]அப்படியிருக்கும் காலத்திலே காற்பங்கு தேசாதிபதியாகிய ஏரோது என்பவன் தன் சகோதரனான பிலிப்பினுடைய மனைவியாகிய ஏரோதியாளின் நிமித்தமாகவும், மற்றப் பொல்லாங்குகளைச் செய்ததின் நிமித்தமாகவும் யோவானால் கடிந்துகொள்ளப்பட்டபொழுது,

௨௰ தான் செய்துவந்த பொல்லாங்குகள்யாவையுமன்றி யோவானையும் காவலில் அடைத்தான்.

௨௧ ¶ சனங்கள் எல்லாரும் ஞானஸ்நானம் பெற்றுக்கொண்டகாலத்தில் [10]இயேசுவானவரும் ஞானஸ்நானம் பெற்றார்; அப்பொழுது அவர் செபம்பண்ணுகையில் வானம் திறக்கப்பட்டதுமல்லாமல்,

௨௨ கண்ணுக்குத் தோன்றிய உருவாய் ஒரு புறாவைப்போலப் பரிசுத்த ஆவியானவர் அவர்மேல்

கி. பி. ௨௬.

1 மத். ௭. ௰௯.
2 அப். ௨. ௩௭.
3 லூக். ௰௧. ௪௧. ௨ கொரி. ௮. ௰௪. யாக். ௨. ௰௫,௰௬. ௧ யோ. ௩. ௰௭: ௪. ௨௰.
4 மத். ௨௧. ௩௨. லூக். ௭. ௨௯.
5 லூக். ௰௯. ௮.
6 ௨ மோ. ௨௩. ௧. ௩ மோ. ௰௯. ௰௧.
* அல்லது பயஞ் செய்யாமலும்.
† அல்லது வரவு.
‡ அல்லது சந்தேகங்கொண்டு.
§ அல்லது நியாயமுத்தரித்து.
7 மத். ௩. ௰௧.
8 மீகா. ௪. ௰௨. மத். ௰௩. ௩௰.
9 மத். ௰௪. ௩. மாற். ௬. ௰௭.
10 மத். ௩. ௰௩. யோவா. ௧. ௩௨.

Digitized by Google

இறங்கினார்; அன்றியும், நீர் எனக்கு அன்பான குமாரனாயிருக்கிறீர், உம்மில் பிரியமாய் இருக்கிறேன் என்று வானத்திலிருந்து சத்தம் உண்டாயிற்று.

௨௩ ¶ இப்படி [1]இயேசுவானவர் ஏறக்குறைய முப்பது வயதுள்ளவராய் வெளிப்படத் தொடங்கினார்.

௨௪ [2]சனங்கள் அவரை யோசேப்பின் குமாரனென்று எண்ணினார்கள்.

௨௫ அந்த யோசேப்பு ஏலியின் குமாரன்; ஏலி, மாத்தாத்தின் குமாரன்; மாத்தாத்து, இலேவியின் குமாரன்; இலேவி, மெல்கியின் குமாரன்; மெல்கி, இயன்னாவின் குமாரன்; இயன்னா, யோசேப்பின் குமாரன்; யோசேப்பு, மத்தத்தியாவின் குமாரன்; மத்தத்தியா, ஆமோசின் குமாரன்; ஆமோசு, நாகூமின் குமாரன்; நாகூம், எஸ்லீயின் குமாரன்; எஸ்லீ, நங்காயின் குமாரன்.

௨௬ நங்காய், மாகாத்தின் குமாரன்; மகாத்து, மத்தத்தியாவின் குமாரன்; மத்தத்தியா, சேமேயின் குமாரன்; சேமேய், யோசேப்பின் குமாரன்; யோசேப்பு, யூதாவின் குமாரன்; யூதா, யோவன்னாவின் குமாரன்.

௨௭ யோவன்னா, இரேசாவின் குமாரன்; இரேசா, சோரோபாபேலின் குமாரன்; சோரோபாபேல், சலாத்தியேலின் குமாரன்; சலாத்தியேல், நேரியின் குமாரன்.

௨௮ நேரி, மேலுகியின் குமாரன்; மேலுகி, அத்தியின் குமாரன்; அத்தி, கோசாமின் குமாரன்; கோசாம், எல்மோதாமின் குமாரன்; எல்மோதாம், ஏரின் குமாரன்; ஏர், யோசேயின் குமாரன்.

௨௯ யோசே, எலியேசரின் குமாரன்; எலியேசர், யோரீமின் குமாரன்; யோரீம், மாத்தாத்தின் குமாரன்; மாத்தாத்து, இலேவியின் குமாரன்.

கி. பி. ௨௬.

1 ௪ மோ. ௪. ௩, ௩௫, ௩௯, ௪௩, ௪௭.
2 மத். ௰௩. ௫௫. யோவா. ௬. ௪௨.
3 சகரி. ௰௨. ௰௨.
4 ௨ சாமு. ௫. ௰௪. ௧ நாளா. ௩. ௫.
5 ரூத். ௪. ௰௮. ௧ நாளா. ௨. ௰.
6 ௧ மோ. ௰௧. ௨௪, ௨௬.
7 ௧ மோ. ௰௧. ௰௨.
8 ௧ மோ. ௫. ௬. ௯: ௰௧. ௰. ௯.

௩௰ இலேவி, சிமையோனின் குமாரன்; சிமையோன், யூதாவின் குமாரன்; யூதா, யோசேப்பின் குமாரன்; யோசேப்பு, யோனானுடைய குமாரன்; யோனான், எலியாக்கீமின் குமாரன்.

௩௧ எலியாக்கீம், மேலேயாவின் குமாரன்; மேலேயா, மயினானுடைய குமாரன்; மயினான், மாத்தாத்தாவின் குமாரன்; மாத்தாத்தா, [3]நாத்தானுடைய குமாரன்; நாத்தான், [4]தாவீதின் குமாரன்.

௩௨ தாவீது, [5]இயேசாயின் குமாரன்; இயேசாய், ஓபேதின் குமாரன்; ஓபேது, போவோசின் குமாரன்; போவோசு, சல்மோனுடைய குமாரன்; சல்மோன், நகாசோனின் குமாரன்.

௩௩ நகாசோன், அமினதாபின் குமாரன்; அமினதாப், ஆராமின் குமாரன், ஆராம், எஸ்ரோமின் குமாரன்; எஸ்ரோம், பாரேசின் குமாரன்; பாரேசு, யூதாவின் குமாரன்; யூதா, யாக்கோபின் குமாரன்.

௩௪ யாக்கோபு, ஈசாக்கின் குமாரன்; ஈசாக்கு, ஆபிரகாமின் குமாரன்; ஆபிரகாம், [6]தேராவின் குமாரன்; தேரா, நாகோரின் குமாரன்.

௩௫ நாகோர், சேரூக்கின் குமாரன்; சேரூக்கு, இராகுவின் குமாரன்; இராகு, பலேக்கின் குமாரன்; பலேக்கு, ஏபேரின் குமாரன்; ஏபேர், சாலாமின் குமாரன்.

௩௬ சாலாம், [7]கேனானின் குமாரன்; கேனான், அருப்பகசாத்தின் குமாரன்; அருப்பகசாத்து, [8]சேமின் குமாரன்; சேம், நோவாவின் குமாரன்; நோவா, இலாமேக்கின் குமாரன்.

௩௭ இலாமேகு, மெத்தூசலாவின் குமாரன்; மெத்தூசலா, ஏனோக்கின் குமாரன்; ஏனோக்கு, யாரேத்தின் குமாரன்; யாரேத்து, மகலலேயேலின் குமாரன்; மகலலே

Digitized by Google

யேல், காயினானின் குமாரன்; காயினான், ஏனோசின் குமாரன்.

௩௮ ஏனோசு, சேத்தின் குமாரன்; சேத்து, ஆதாமின் குமாரன்; [1]ஆதாம், பராபரனால் உண்டானவன்.

## ௪. அதிகாரம்.

௧. யேசு சோதிக்கப்பட்டு உபவாசம்பண்ணினது. ௯௩. அவர் பசாசை ஜெயித்தது. ௧௪. அவர் பிரசங்கிக்கத் தொடங்கினது. ௧௫. நாசரேத்தூரார் அவருடைய கிருபையுள்ளவார்த்தைகளைக்குறித்து ஆச்சரியப்பட்டது. ௩௩. பசாசு பிடித்தவனையும், ௩௮. பேதுருவின் மாமியையும், ௪௦. பின்னும் பலவித வியாதிக்காரரையும் சொஸ்தப்படுத்தினது. ௪௨. பாசகள் அவரை இன்னுமொன்று சொனதற்காகக் கடிந்துகொள்ளப்பட்டது. ௪௩. அவர் பட்டணங்கள்தோறும் பிரசங்கித்தது.

[1]இயேசுவானவர் பரிசுத்தஆவியினாலே நிறைந்தவராய், யோர்தானைவிட்டுத் திரும்பி, [3]ஆவியினாலே வனாந்தரத்தில் கொண்டுபோகப்பட்டார்.

௨ அங்கே நாற்பதுநாள் பசாசினாலே சோதிக்கப்பட்டு [4]அந்நாள்களிலே ஒன்றும் புசியாமல் இருந்தார்.

௩ அவைகள் முடிந்த பின்பு, அவருக்குப் பசி உண்டாயிற்று; அப்பொழுது பசாசானவன் அவரை நோக்கி, நீ தேவனுடைய குமாரனானால், இந்தக் கல்லை அப்பமாகும்படி சொல் என்றான்.

௪ அதற்கு இயேசுவானவர், [5]மனிதன் அப்பத்தினாலே மாத்திரம் அல்ல, பராபரனுடைய வார்த்தை எதுவோ, அதினாலே பிழைப்பான் என்று எழுதி இருக்கின்றது என்றார்.

௫ பின்பு பசாசானவன் அவரை உயர்ந்த மலையின்மேல் கொண்டுபோய், ஒரு நிமிஷத்திலே உலகத்தின் இராச்சியங்களையெல்லாம் அவருக்குக் காண்பித்து,

௬ இவை எல்லாவற்றின்மேலும் அதிகாரமும் இவைகளின் மகிமையும் எனக்கு ஒப்புக்கொடுக்கப்பட்டிருக்கிறபடியால், நான் இவைகளை உனக்குத் தருவேன்; [6]என் இஷ்டப்படிக்கே நான் இவைகளை எவனுக்கும் கொடுக்கிறேன்;

௭ ஆகையால் நீ என்னைத் தொழுதுகொண்டால்,* எல்லாம் உன்னுடையதாயிருக்கும் என்று அவருடனே சொன்னான்.

௮ இயேசுவானவர் அவனுக்குச் சொன்னது: சாத்தானே, [7]நீ எனக்குப் பின்னாகப் போ, உன் தேவனாகிய பராபரனைத் தொழுதுகொண்டு, அவர் ஒருவருக்கே ஆராதனைசெய்வாயாக என்று எழுதியிருக்கின்றதே என்றார்.

௯ [8]அன்றியும் அவன் அவரை எருசலேம் பட்டணத்திற்குக் கொண்டுபோய், அவரைத் தேவாலயத்தின் உப்பரிகையின்மேல் நிறுத்தி, உன்னைக் காப்பாற்றும்படிக்கு உன்னைக்குறித்துத் தம்முடைய தூதர்களுக்குக் கட்டளையிடுவார் என்றும்,

௰ [9]உன் கால் கல்லில் இடறாதபடிக்கு அவர்கள் தங்கள் கைகளில் உன்னை ஏந்திக்கொண்டு போவார்கள் என்றும் எழுதியிருக்கின்றது.

௰௧ ஆகையால் நீ தேவனுடைய குமாரனானால், இங்கேயிருந்து தாழக்குதி என்று அவருடனே சொன்னான்.

௰௨ அதற்குமாறுத்தரமாக [10]இயேசுவானவர் சொன்னது: உன்னுடைய தேவனாகிய பராபரனைப் பரிட்சை பாராதிருப்பாயாக என்று சொல்லியிருக்கின்றது என்றார்.

௰௩ பசாசானவன் (அவரைச்) சோதித்தவைகளையெல்லாம் முடித்தபொழுது, [11]சிலகாலம் அவரைவிட்டுப் போனான்.

௰௪ ¶ [12]பின்பு இயேசுவானவர் [13]ஆவியினுடைய பலத்தினாலே [14]கலிலேயா நாட்டுக்குத் திரும்பினார்; அதைச் சூழ்ந்திருக்கிற தேசமெங்கும் அவருடைய கீர்த்தி பரவிற்று.

இ. பி. ௨௬.

1 ௧ மோ. ௫. ௧, ௨.
2 மத். ௪. ௧. மாற். ௧. ௱௨.
3 ௰௪. ௰௪. லூக். ௨. ௨௭.
4 ௨ மோ. ௩௪. ௨௮. ௧ இரா. ௰௯. ௮.
5 ௫ மோ. ௮. ௩.
6 யோவா. ௰௨. ௩௧: ௰௪. ௩௰. வெளி. ௰௩. ௨, ௭.
* அல்லது எனக்குமுன் விழுந்தால்.
7 ௫ மோ. ௬. ௰௩: ௰. ௨௰.
8 மத். ௪. ௫.
9 சங். ௯௧. ௰௧.
10 ௫ மோ. ௬. ௰௬.
11 யோவா. ௰௪. ௩௰. எபி. ௪. ௰௫.
12 மத். ௪. ௰௨. யோவா. ௪. ௪௩.
13 ௧. ௰௪.
14 அப். ௰. ௩௭.

Digitized by Google

௰௫ அல்லாமலும் அவர்களுடைய செபஆலயங்களில் அவர் உபதேசம்பண்ணி, எல்லாராலும் புகழ்ச்சி அடைந்தார்.

௰௬ ¶ அவர் தாம் வளர்ந்த [1]நாசரேத்தூருக்குப் போய்,தமக்கு வழக்கமானபடி ஓய்வுநாளிலே [2]செபஆலயத்தில் பிரவேசித்து வாசிக்க எழுந்து நிற்கிறபொழுது,

௰௭ ஏசாயா தீர்க்கதரிசியின் புத்தகத்தை அவருக்குக் கொடுத்தார்கள்; அந்தப் புத்தகத்தை அவர் விரித்தபொழுது,

௰௮ [3]பராபரனுடைய ஆவி என்னில் இருக்கின்றது; தரித்திரருக்கு நான் சுவிசேஷத்தை அறிவிக்கும்படி எனக்கு அபிஷேகம்பண்ணினர்; நருக்குண்டவர்களைக் குணமாக்கும்படிக்கும், சிறைப்பட்டவர்களுக்கு விடுதலையையும், குருடருக்குப் பார்க்குதலையும் பிரசங்கிக்கும்படிக்கும், நொறுங்குண்டவர்களை விடுதலையாக்கி,

௰௯ பராபரனாலே அங்கிகரிக்கப்படுவதற்கான வருஷத்தைப் பிரசங்கிக்கும்படிக்கும் என்னை அனுப்பினர் என்று எழுதியிருந்த இடத்தைக் கண்டு,

௨௰ புத்தகத்தைச் சுருட்டி ஊழியக்காரனிடத்தில் கொடுத்து உளுக்காந்தார்; செபஆலயத்திலுள்ள எல்லாருடைய கண்களும் அவர்மேலே நோக்கமாயிருந்தன.

௨௧ அப்பொழுது அவர் அவர்களுடனே பேசத்தொடங்கி, நீங்கள் கேட்ட வேதவாக்கியம் இன்றைத்தினமே நிறைவேறிற்று என்றார்.

௨௨ எல்லாரும் அவருக்கு நல்லசாட்சி கொடுத்து, அவர் திருவாய்மலர்ந்து அருளிச்செய்த கிருபையுள்ள வசனங்களைக்குறித்து [4]ஆச்சரியப்பட்டு, பின்பு [5]இவன் யோசேப்பினுடைய குமாரனல்லவோ என்றார்கள்.

௨௩ அவர்களுடனே அவர் சொன்னது: வயித்தியனே, உன்னைத் தானே குணமாக்கு என்கிற வழக்கச்சொல்லையும், நாங்கள் கேள்விப்பட்டபடி [6]கப்பர்நாகூம் ஊரில்(உன்னாலே)செய்யப்பட்டது எதுவோ [7]அதை உன் ஊராகிய இவ்விடத்திலேயும் செய் என்பதையும் நீங்கள் என்னுடனே சொல்லுவீர்கள் என்பதற்குச் சந்தேகமில்லை.

௨௪ அப்படியிருக்க, [8]தீர்க்கதரிசியானவன் தன் ஊரிலே அங்கிகரிக்கப்பட்டவன் அல்லவென்று மெய்யாகவே உங்களுக்குச் சொல்லுகிறேன்.

௨௫ அன்றியும் எலியாவின் காலத்திலே மூன்று வருஷமும் ஆறு மாதமும் வானம் அடைக்கப்பட்டு தேசமெங்கும் மிகுந்த பஞ்சம் உண்டாயிருந்தபொழுது, இஸ்ரவேலருக்குள்ளே [9]அநேகம் கைம்பெண்கள் இருந்தும்,

௨௬ சீதோன் நாட்டிலுள்ள சரேப்பத்தா ஊரில் இருந்த ஒரு கைம்பெண்ணிடத்திற்கே அன்றி,மற்றொருத்தியினிடத்துக்கும் எலியா என்பவர் அனுப்பப்படவில்லை.

௨௭ அல்லாமலும் [10]எலிசா என்னும் தீர்க்கதரிசியின் காலத்திலே, இஸ்ரவேலருக்குள்ளே அநேகம் குஷ்டரோகிகள் இருந்தும், சிரிய தேசத்தானாகிய நாகமானே அன்றி, அவர்களில் வேறொருவனும் சுத்தமாக்கப்படவில்லையென்று சத்தியத்தின்படியே உங்களுக்குச் சொல்லுகிறேன் என்றார்.

௨௮ ¶ செபஆலயத்தில் இருந்த எல்லாரும் இவைகளைக் கேட்டபொழுது,

௨௯ கோபத்தால் நிரப்பப்பட்டு எழுந்து, அவரை ஊருக்குப்புறம்பே தள்ளி, தங்கள் ஊருக்கு அடுத்த செங்குத்தான மலையின் சிகரத்திலிருந்து *அவரைத் தாழத்தள்ளும்படிக்கு அவ்விடத்திற்குக் கொண்டுபோனார்கள்.

௩௰ [11]அவர் அவர்கள் மத்தியில் நின்று கடந்துபோனார்.

கி. பி. ௨௬.

1 மத். ௨. ௨௩: ௰௩. ௫௪. மாற். ௬. ௧.
2 அப். ௰௩. ௰௪: ௰௭. ௨.
3 ஏசா.௬௧.௧.
4 சங். ௪௫. ௨. மத். ௰௩. ௫௪. மாற். ௬. ௨. லூக்.௨.௪௭.
5 யோவா. ௬. ௪௨.
6 மத். ௪. ௰௩: ௰௧. ௨௩.
7 மத். ௰௩. ௫௪. மாற். ௬. ௧.
8 மத். ௰௩. ௫௭. மாற். ௬. ௪. யோவா. ௪.௪௪.
9 ௧ இரா. ௰௭. ௯: ௰௮. ௧. யாக். ௫. ௰௭.
10 ௨இரா.௫.௰௪.
11 யோவா. ௮. ௫௯: ௰. ௩௯.

* அல்லது நுனியிலிருந்து.

Digitized by Google

௩௧ ¶ [1]பின்பு அவர் கலிலேயா தேசத்திலுள்ள கப்பர்நகூம் பட்டணத்திற்குப் போய், ஓய்வுநாள்களில் சனங்களுக்கு உபதேசம் பண்ணினார்.

௩௨ [2]அவருடைய வசனம் அதிகாரமுள்ளதாய் இருந்தபடியினாலே, அவர்கள் அவருடைய உபதேசத்தைக்குறித்துப் பிரமித்தார்கள்.

௩௩ ¶ [3]அல்லாமலும் செபஆலயத்திலே அசுத்தமான ஆவியுள்ள ஒரு மனிதன் இருந்தான்.

௩௪ அவன் (அவரைக் கண்டு) ஐயோ! நாசரேத்தூரானாகிய இயேசுவே, எங்களுக்கும் உமக்கும் என்ன? எங்களைக் கெடுக்கவா வந்தீர்; [4]உம்மைஅறிந்திருக்கிறேன்;* [5]நீர் பராபரனுடைய பரிசுத்தரே என்று மிகுந்த சத்தத்துடனே கூப்பிட்டான்.

௩௫ அதற்கு இயேசுவானவர் நீ பேசாமல் இவனை விட்டுப் போ என்று அதை அதட்டினார்; அப்பொழுது பசாசு அவனைச் சனங்களுக்குள்ளே தள்ளி, அவனுக்கு ஒரு சேதமும் செய்யாமல் அவனை விட்டுப்போயிற்று.

௩௬ எல்லாரும் பிரமிப்படைந்து, இவர் அதிகாரத்தோடும் வல்லமையோடும் அசுத்த ஆவிகளுக்குக் கட்டளையிட அவைகளும் புறப்படுகின்றனவே; இது என்ன வசனம் என்று ஒருவரோடொருவர் சொல்லிக்கொண்டார்கள்.

௩௭ அவருடைய கீர்த்தி அத்தேசத்திலுள்ள இடங்கள் யாவிலும் பிரசித்தமாயிற்று.

௩௮ ¶ [6]பின்பு அவர் செபஆலயத்தைவிட்டுச் சீமோன் என்பவனுடைய வீட்டுக்குப்போனார்; சீமோனுடைய மாமி மிகுந்த சுரமாய்க் கிடந்தாள்; அவளுக்காக அவரை வேண்டிக்கொண்டார்கள்.

௩௯ அப்பொழுது அவர் அவளிடத்தில் குனிந்து நின்று சுரத்தை அதட்டினார்; அது அவளைவிட்டு நீங்கிற்று; உடனே அவள் எழுந்திருந்து அவர்களுக்குப் பணிவிடைசெய்தாள்.

௪௦ ¶ பின்பு [7]சூரியன் அஸ்தமித்தபொழுது, அநேக சனங்கள் தங்களிடத்தில் இருந்த பலவியாதிகள் உள்ளவர்களை அவரிடத்திற்குக் கொண்டுபோனார்கள்; அவர்கள் எல்லார்மேலும் அவர் தம்முடைய கைகளை வைத்து அவர்களைக் குணமாக்கினார்.

௪௧ அநேகரிடத்திலிருந்து [8]பசாசுகளும் புறப்பட்டன; [9]அவைகள், நீர் பராபரனுடைய குமாரனாகிய கிறிஸ்து என்று கூப்பிட்டன; அவர் தம்மைக் கிறிஸ்து என்று அவைகள் அறிந்தபடியினாலே, அவைகள் பேசுகிறதற்கு †இடங்கொடாமல் அதட்டினார்.

௪௨ ¶ [10]உதயமானபொழுது அவர் புறப்பட்டு வனாந்தரமான இடத்திற்குப் போனார்; சனங்கள் அவரைத் தேடி அவரிடத்தில் போய்த் தங்களைவிட்டுப் போகாதபடிக்கு அவரை நிறுத்திக்கொண்டார்கள்.

௪௩ அதற்கு அவர் அவர்களை நோக்கி, நான் மற்ற ஊர்களுக்கும் பராபரனுடைய இராச்சியத்தைச் சுவிசேஷமாய் அறிவிக்கவேண்டும், அதற்காகவே அனுப்பப்பட்டேன் என்றார்.

௪௪ [11]அந்தப்படி அவர் கலிலேயா தேசத்திலுள்ள செபஆலயங்களில் பிரசங்கம்பண்ணிக்கொண்டு வந்தார்.

இ. பி. ௨௯.

1 மத். ௪. ௰௩. மாற். ௧. ௨௧.
2 மத். ௭. ௨௮. ௨௯. தீத். ௨. ௰௫.
3 மாற். ௧. ௨௩.
4 ௫௯. ௮௪.
* அல்லது அக்கிறபோம்.
5 சங். ௰௬. ௰. தானி. ௯. ௨௪. லூக். ௧. ௩௫.
6 மத். ௮. ௰௪. மாற். ௧. ௨௯.
7 மத். ௮. ௰௬. மாற். ௧. ௩௨.
8 மாற். ௧. ௩௪: ௩. ௰௧.
9 மாற். ௧. ௨௫. ௩௪: ௩. ௰௧. ௰௨.
† அல்லது தம்மை அவைகள் கிறிஸ்து என்று அறிந்ததைச் சொல்ல.
10 மாற். ௧. ௩௫.
11 மாற். ௧. ௩௯.

## ௫. அதிகாரம்.

௧. கிறிஸ்து பேதுருவின் படவிலிருந்து சனங்களைப் போதித்தது. ௪. மீன்கள் அதிசயமாய்ப் பிடிக்கப்பட்டதால் அவனும் அவன் தோழரும் மனிதரைப் பிடிக்கிறவர்களாகுவதைக் காண்பித்தது. ௰௨. குஷ்டரோகியைச் சுத்தஞ்செய்தது. ௰௬. வனாந்தரத்தில் செபம்பண்ணினது. ௰௮. திமிர்வாதக்காரனைக் குணமாக்கினது. ௨௭. ஆயக்காரனான மத்தேயுவை அழைத்தது. ௨௯. ஆத்தும வைத்தியனாயிருந்த கிறிஸ்து பாவிகளோடே புசித்தது ௩௪. தாம் பரமண்டலத்துக்கு ஏறினபிற்பாடு அப்போஸ்தலர்கள் உபவாசிக்கவேண்டியதையும் துன்பங்களையும் முன்னறிவித்தது. ௩௬. பலவீன விசுவா

Digitized by Google

*சிலேப் பழைய துருத்திகளுக்கும் பழைய வஸ்திரங்களுக்கும் ஒப்பாக்கினது.*

கி. பி. ௩௧.

[1]ஒருகாலத்திலே சனங்கள் பராபரனுடைய வசனத்தைக் கேட்கும்படிக்கு அவரை நெருக்கி இருக்கிறபொழுது, அவர் கெநேசரேத்து என்னப்பட்ட சிறிய கடலின் அருகே நின்று,

௨ கடற்கரையில் இரண்டு படவுகளிலிருந்து மீன்பிடிக்கிறவர்கள் இறங்கி வலைகளை அலைசிக்கொண்டிருக்க, அவ்விரண்டு படவுகளையும் கண்டு,

௩ அவைகளில் ஒன்றாகிய சீமோனுடைய படவில் ஏறி, அதைக் கரையிலிருந்து சற்றே தள்ளும்படிக்கு அவனை வேண்டிக்கொண்டு அதிலே உளுக்காந்து, அங்கேயிருந்து சனங்களுக்கு உபதேசம் பண்ணினார்.

௪ ¶ அவர் உபதேசித்து முடித்த பின்பு சீமோனை நோக்கி, [2]நீ ஆழத்திலே தள்ளிக்கொண்டுபோய், மீன் பிடிக்கும்படிக்கு உங்கள் வலைகளைத் தாழவிடுங்கள் என்றார்.

௫ சீமோன் அவருக்கு மாறுத்தரமாகச் சொன்னது: ஐயரே, இராமுழுவதும் நாங்கள் பிரயாசப்பட்டும் ஒன்றும் அகப்படவில்லை; அப்படியிருந்தும், உம்முடைய சொல்லின்படி வலையைத் தாழவிடுகிறேன் என்றான்.

௬ அந்தப்படி அவர்கள் செய்தபொழுது, அவர்களுடைய வலை கிழிந்துபோகத்தக்கதாக, மிகுந்த மீன்களைச் சேர்த்துக்கொண்டார்கள்.

௭ அப்பொழுது மற்றப் படவில் இருந்த பங்காளிகள் வந்து தங்களுக்கு உதவிசெய்யும்படிக்கு அவர்களுக்குச் சமிக்கை காட்டினார்கள்; அவர்கள்போய் இரண்டு படவுகளையும் அமிழ்த்தத்தக்க பாரமாக நிரப்பினார்கள்.

௮ சீமோன்பேதுரு அதைக்கண்டு, இயேசுவினுடைய முழங்கால்களின் அருகே விழுந்து, [3]ஆண்டவரே, நான் பாவியாய் இருக்கிறபடியினாலே நீர் என்னைவிட்டுப் போகவேண்டும் என்றான்.

௯ அவர்கள் அவ்வளவு மீன்களைப் பிடித்ததின் நிமித்தம், அவனுக்கும் அவனோடிருந்த யாவருக்கும் திகில் உண்டானபடியினாலே அப்படிச் சொன்னான்.

௰ சீமோனுடைய தோழராகிய செபேதேயுவின் குமாரராகிய யாக்கோபுக்கும்யோவானுக்கும் அந்தப்படியே உண்டாயிற்று; அப்பொழுது இயேசுவானவர் சீமோனை நோக்கி, நீ பயப்படவேண்டாம்; [4]இதுமுதல் நீ மனிதரைப் பிடிக்கிறவனாய் இருப்பாய் என்றார்.

௰௧ பின்பு அவர்கள் படவுகளைக் கரையோரத்திலேகொண்டுபோய் [5]நிறுத்தி, எல்லாவற்றையும்விட்டு அவருக்குப் பின்சென்றார்கள்.

௰௨ ¶ [6]மேலும் அவர் ஒரு ஊரில் இருக்கையில், குஷ்டரோகம் நிறைந்த ஒரு மனிதன் இயேசுவானவரைக் கண்டு வணக்கமாய் விழுந்து, ஆண்டவரே, உமக்குச் சித்தமுண்டானால் என்னைச் சுத்தமாக்க உம்மால் ஆகுமென்று அவரை வேண்டிக்கொண்டான்.

௰௩ அவர் தமது கையை நீட்டி அவனைத்தொட்டு, எனக்குச் சித்தமுண்டு, சுத்தமாகு என்றார்; உடனே குஷ்டரோகம் அவனைவிட்டு நீங்கிற்று.

௰௪ [7]பின்பு அவர் அவனைநோக்கி, நீ இதை ஒருவருக்கும் சொல்லாமல் போய், உன்னை ஆசாரியனுக்குக் காண்பித்து, சனங்களுக்குச் சாட்சியாக [8]மோசே நியமித்தபடியே நீ சுத்தமானதைக் குறித்துப் பலிசெலுத்து என்று கட்டளையிட்டார்.

௰௫ அப்படியிருந்தும் அவருடைய கீர்த்தி அதிகமாகப் பரவிற்று; [9]அநேகசனங்கள் அவருடைய உபதேசத்தைக் கேட்கும்படிக்கும், அவராலே தங்கள் வியாதிக

1 மத். ௪. ௰௮. மாற். ௧. ௰௯.
2 யோவா. ௨௧. ௬.
3 ௨ சாமு. ௬. ௯. ௧ இரா. ௰௭. ௰௮.
4 மத். ௪. ௰௯. மாற். ௧. ௰௭.
5 மத். ௪. ௨௰: ௰௯. ௨௭. மாற். ௧. ௰௮. லூக். ௰௮. ௨௮.
6 மத். ௮. ௨. மாற். ௧. ௪௰.
7 மத். ௮. ௪.
8 ௩ மோ. ௰௪. ௪, ௰, ௨௧, ௨௨.
9 மத். ௪. ௨௫. மாற். ௩. ௮. யோவா. ௬. ௨.

Digitized by Google

கி. பி. ௩௧.

வில் நின்று சுகம்அடைந்துகொள்ளும்படிக்கும் கூடிவந்தார்கள்.

௧௬ [1]அவர் வனாந்தரத்திலே தனித்துப்போய்ச் செபம்பண்ணிக்கொண்டிருந்தார்.

௧௭ ¶ அன்றியும் ஒரு நாளிலே அவர் உபதேசித்துக்கொண்டிருக்கிறபொழுது, கலிலேயாநாட்டிலும் யூதேயாநாட்டிலும் உள்ள சகல கிராமங்களிலிருந்தும், எருசலேம் பட்டணத்திலிருந்தும் வந்த பரிசேயரும்நியாயசாஸ்திரிகளும் உளுக்கார்ந்திருந்தார்கள்; பிணியாளிகளைக் குணமாக்கத்தக்கதாகக் கர்த்தருடைய பலம் உண்டாயிற்று.

௧௮ ¶ [2]அப்பொழுது சில மனிதர் திமிர்வாதக்காரன் ஒருவனைப் படுக்கையோடே எடுத்துக்கொண்டு, உள்ளே போகவும் அவர் முன்பாக வைக்கவும் வகைதேடி,

௧௯ மிகுந்த கூட்டம் இருந்தபடியினாலே அவனை உள்ளே கொண்டுபோகிறதற்கு இடம் காணாமல், வீட்டின்மேல் ஏறித் தட்டோடுகளின் வழியாய்ப் படுக்கையுடனே கூட நடுவிலே இயேசுவுக்குமுன்பாக அவனை இறக்கினார்கள்.

௨௦ அவர்களுடைய விசுவாசத்தை அவர் கண்டு, மனிதனே, உன் பாவங்கள் உனக்கு மன்னிக்கப்பட்டன என்று அவனுடனே சொன்னார்.

௨௧ [3]அப்பொழுது வேதபாரகரும் பரிசேயரும் யோசனைபண்ணிச் சொன்னது: தேவதூஷணங்களைச் சொல்லுகிற இவன் யாவன்? [4]பராபரன் ஒருவரே தவிரப் பாவங்களை மன்னிக்கத் திராணியுள்ளவர் யார் என்றார்கள்.

௨௨ இயேசுவானவர் அவர்களுடைய யோசனைகளை அறிந்து அவர்களைநோக்கி, நீங்கள் உங்கள் இருதயங்களில் சிந்திக்கிறது என்ன?

௨௩ உன் பாவங்கள் மன்னிக்கப்பட்டன என்று சொல்லுகிறதோ, எழுந்து நட என்று சொல்லுகிறதோ, எது எளிது?

௨௪ பூமியிலே பாவங்களை மன்னிக்கிறதற்கு மனிதனுடைய குமாரன் அதிகாரம் உடையவன் என்று நீங்கள் அறியும்படிக்குப் (பாருங்களென்று) சொல்லி, திமிர்வாதக்காரனைநோக்கி, நீ எழுந்து உன் படுக்கையை எடுத்துக்கொண்டு உன் வீட்டுக்குப் போ என்று உனக்குச் சொல்லுகிறேன் என்றார்.

௨௫ உடனே அவன் அவர்களுக்குமுன்பாக எழுந்திருந்து, தன் படுக்கையை எடுத்துக்கொண்டு, பராபரனைப் புகழ்ந்து, தன் வீட்டுக்குப் போனான்.

௨௬ ஆதலால் எல்லாரும் பிரமிப்படைந்து பராபரனைப் புகழ்ந்தார்கள்; அல்லாமலும் அவர்கள் பயத்தால் நிறையப்பட்டு, அதிசயமானவைகளை இன்று கண்டோம் என்றார்கள்.

௨௭ ¶ [5]அதின்பின்பு அவர் புறப்பட்டு, ஆயத்துறையில் உளுக்கார்ந்திருந்த இலேவி என்னும் ஆயக்காரனைக் கண்டு, நீ எனக்குப் பின்சென்றுவா என்றார்.

௨௮ அந்தப்படி அவன் எல்லாவற்றையும்விட்டு, எழுந்திருந்து, அவருக்குப் பின்சென்றான்.

௨௯ அல்லாமலும் [6]அந்த இலேவி என்பவன் தன் வீட்டிலே அவருக்குப் பெரிய விருந்து பண்ணினான்; [7]அநேக ஆயக்காரரும் மற்றப்பேர்களும் அவர்களுடனேபந்தியிருந்தார்கள்.

௩௦ உடனே அவ்விடத்து வேதபாரகரும் பரிசேயரும் அவருடைய சீஷருக்கு விரோதமாக மொறுமொறுத்து, என்னத்தினாலே நீங்கள் ஆயக்காரரோடும் பாவிகளோடும் போசனபானம் பண்ணுகிறீர்கள் என்றார்கள்.

௩௧ இயேசுவானவர் அவர்களுக்கு மாறுத்தரமாகச் சொன்னது: சொஸ்தமுள்ளவர்களுக்கு வயித்

1 மத். ௧௪. ௨௩. மாற். ௬. ௪௬.
2 மத். ௯. ௨. மாற். ௨. ௩.
3 மத். ௯. ௩. மாற். ௨. ௬, ௭.
4 சங். ௩௨. ௫. ஏசா. ௪௩. ௨௫.
5 மத். ௯. ௯. மாற். ௨. ௧௪, ௧௫.
6 மத். ௯. ௧௦. மாற். ௨. ௧௫.
7 லூக். ௧௫. ௧.

Digitized by Google

தியன் வேண்டுவதில்லை, வியாதியுள்ளவர்களுக்கே அவன் வேண்டும்.

௩௨ மேலும் [1]நீதிமான்களை அல்ல, பாவிகளையே மனந்திரும்பும்படிக்கு அழைக்கவந்தேன் என்றார்.

௩௩ ¶ பின்பு அவர்கள் அவரை நோக்கி, [2]யோவானுடைய சீஷரும் பரிசேயருடைய சீஷரும் அநேகந்தரம் உபவாசம்பண்ணிச் செபங்களைச் சொல்லிக்கொண்டு வருகிறார்களே, உம்முடைய சீஷர் போசனபானம்பண்ணலாமா என்றார்கள்.

௩௪ அதற்கு அவர் சொன்னது: மணவாளன் கலியாணத்திற்கு வந்த மனிதரோடு இருக்கும் காலத்திலே, நீங்கள் அவர்களை உபவாசம் பண்ணும்படி செய்யக்கூடுமா?

௩௫ மணவாளன் அவர்களைவிட்டு நீக்கப்படும் நாள்கள் வரும், அப்பொழுது அவர்கள் உபவாசிப்பார்கள் என்று சொல்லி,

௩௬ ¶ [3]பின்னும் உவமையாய்ச் சொன்னது: ஒருவனும் புதியவஸ்திரத்துண்டைப் பழைய வஸ்திரத்தோடே இணைக்கமாட்டான்; இணைத்தால் புதியதானது (பழையதைக்) கிழிக்கும்; அல்லாமலும் புதிய வஸ்திரத்துண்டு பழையதற்கு ஒவ்வமாட்டாது.

௩௭ அன்றியும் ஒருவனும் புதிய திராட்ச இரசத்தைப் பழைய துருத்திகளில் வார்த்துவைக்கமாட்டான்; வைத்தால் புதிய இரசம் துருத்திகளைக் கிழித்துப்போடும்; அப்பொழுது அது சிந்திப்போம், துருத்திகளும் கெட்டுப்போம்.

௩௮ புதிய இரசத்தைப் புதிய துருத்திகளில் வார்த்துவைத்தால் இரண்டும் காத்துக்கொள்ளப்படும்.

௩௯ அல்லாமலும் பழைய இரசத்தைப் பானம்பண்ணுகிறவன் உடனே புதிய இரசத்தை விரும்பமாட்டான்; பழைய இரசம் அதிக நல்லதென்று சொல்வானே என்றார்.

கி. பி. ௩௧.

1 மத். ௯. ௰௩. ௧ தீமோ. ௧.௰௫.
2 மத். ௯. ௰௪. மாற். ௨. ௰௮.
3 மத். ௯. ௰௬,௰௭. மாற். ௨. ௨௧, ௨௨.
4 மத். ௰௨. ௧. மாற். ௨. ௨௩.
5 உ பா. ௨௩. ௨௫.
6 ௧ சாமு. ௨௧. ௬.
7 ௩ மோ. ௨௪. ௯.
8 மத். ௰௨. ௯. மாற். ௩. ௧. லூக். ௰௩. ௰௪: ௰௪. ௩. யோவா. ௯. ௰௬.

## ௬. அதிகாரம்.

௧. ஓய்வுநாளை ஆசரிப்பதைக்குறித்துப் பரிசேயருடைய குருட்டாட்டத்தைக் கிறிஸ்து வேதத்தினாலும், புத்தியினாலும், அற்புதத்தினாலும் கண்டித்தது. ௰௩. பன்னிரண்டு அப்போஸ்தலர்களைத் தெரிந்து ஏற்படுத்தினது. ௰௭. பிணியாளிகளைக் குணமாக்கினது. ௨௰. ஆசீர்வாதங்களையும் சாபங்களையும் காட்டி, ௨௭. பகைஞரைச் சிநேகிக்கவேண்டிய விதத்தையும், ௪௧. அஸ்திவாரம் இல்லாத வீடு விழுந்துபோவதுபோலச் சோதனையின் காலத்தில் நாம் விழாமலிருக்க வசனத்தைக் கேட்பதோடே நற்கிரியைகளான ஊன்றும்படியும் கலந்திருக்கவேண்டும் என்பதையும் ஜனங்களுக்குமுன்பாகச் சீஷர்களுக்குப் போதித்தது.

(புளியாத அப்பங்களைச் சாப்பிடுகிற நாள்களில்) [4]இரண்டாம் நாளுக்குப் பின்வந்த முதலாம் ஓய்வுநாளிலே அவர் பயிர்வழியே நடந்து போகிறபொழுது, அவருடைய சீஷர் கதிர்களைக் கொய்து, கைகளினாலே கசக்கித் தின்றார்கள்.

௨ அவர்களுடனே பரிசேயரில் சிலர், [5]ஓய்வுநாள்களில் செய்யத்தகாததை நீங்கள் செய்யவேண்டுவதென்ன என்றார்கள்.

௩ அவர்களுக்கு மாறுத்தரமாக இயேசுவானவர் சொன்னது: [6]தாவீதும் அவனோடு இருந்தவர்களும் பசியாயிருந்தபொழுது, அவன் தேவாலயத்தில் பிரவேசித்து,

௪ [7]ஆசாரியர்மாத்திரமேயன்றி மற்றொருவரும் புசிக்கத்தகாத தேவசமுகத்தப்பங்களை எடுத்துப் புசித்து, பின்பு தன்னோடு இருந்தவர்களுக்கும் கொடுத்தான் என்று நீங்கள் வாசிக்கவில்லையா என்று சொல்லி,

௫ பின்பு மனிதனுடைய குமாரன் ஓய்வுநாளைக்குறித்தும் ஆண்டவராய் இருக்கிறார் என்று அவர்களுடனே சொன்னார்.

௬ ¶ [8]மற்றொரு ஓய்வுநாளிலே அவர் செபஆலயத்தில் பிரவேசித்து உபதேசித்தார்; அங்கே சூம்பின வலதுகையையுடைய ஒரு மனிதன் இருந்தான்.

Digitized by Google

௭ அப்பொழுது வேதபாரகரும் பரிசேயரும் அவரிடத்தில் குற்றங் காணும்படிக்கு ஓய்வுநாளிலும் குணமாக்குவாரா என்று எண்ணி, அவரை நோக்கிக் காத்திருந்தார்கள்.

௮ அவர்களுடைய யோசனைகளை அவர் அறிந்து, சூம்பின கையையுடையவனை நோக்கி, நீ எழுந்து நடுவே நில் என்றார்; அந்தப்படி அவன் எழுந்து நின்றான்.

௯ அப்பொழுது இயேசுவானவர் அவர்களை நோக்கி, நான் உங்களிடத்தில் ஒன்று கேட்கிறேன்; ஓய்வுநாள்களில் நன்மைசெய்கிறதோ தீமைசெய்கிறதோ, சீவனைக் காக்கிறதோ அழிக்கிறதோ, எது நியாயம் என்று சொல்லி,

௰ அவர்கள் எல்லாரையும் சுற்றிப்பார்த்து அந்த மனிதனை நோக்கி, உன் கையை நீட்டு என்றார்; அவன் அப்படிச் செய்தான்; உடனே அவனுடைய கை மறுகையைப்போலச் சொஸ்தமாயிற்று.

௰௧ பின்பு அவர்கள் மதியில்லாமையால் நிறையப்பட்டு, இந்த இயேசுவை என்ன செய்யலாம் என்று ஒருவரோடொருவர் பேசிக்கொண்டார்கள்.

௰௨ ¶ அன்றியும் [1]அந்நாள்களில் அவர் செபம்பண்ணும்படிக்கு மலைக்குப் போய், இராத்திரி முழுவதும் பராபரனை நோக்கிச் செபம்பண்ணிக்கொண்டு,

௰௩ பின்பு உதயமாகிறபொழுது தம்முடைய சீஷரைவரவழைத்து,

௰௪ [2]அவர்களில் பேதுரு என்று தாம் பேரிட்ட [3]சீமோனையும், அவனுடைய சகோதரனாகிய அந்திரேயாவையும் யாக்கோபையும், யோவானையும், பிலிப்பையும், பர்த்தொலொமேயுவையும்,

௰௫ மத்தேயுவையும், தோமாவையும், அல்பேயுவினுடைய குமாரனாகிய யாக்கோபையும், வைராக்கியன் என்னப்பட்ட சீமோனையும்,

கி. பி. ௩௧.

1 மத். ௰௪. ௨௩.
2 மத். ௰. ௧.
3 யோவா. ௧. ௪௨.
4 யூதா. ௧.
5 மத். ௪. ௨௫. மாற். ௩. ௮.
6 மாற். ௫. ௩௦. லூக். ௮. ௪௬.
7 மத். ௰௪. ௩௬.
8 மத். ௫. ௩: ௰௧. ௫. யாக். ௨. ௫.
9 ஏசா. ௫௫. ௧: ௬௫. ௰௩. மத். ௫. ௬.
10 ஏசா. ௬௧. ௩. மத். ௫. ௪.
11 மத். ௫. ௰௧. ௧ பே. ௨. ௰௯: ௩. ௰௪: ௪. ௰௪.
12 யோவா. ௰௬. ௨.

௰௬ [4]யாக்கோபின் சகோதரனாகிய யூதாவையும், பின்பு தம்மைக் காட்டிக்கொடுத்த ஸ்காரியோத்தூராகிய யூதாவையும், இப்படிப் பன்னிரண்டுபேரையும் தெரிந்துகொண்டு அவர்களை அப்போஸ்தலர் என்று பேர்சொல்லி,

௰௭ பின்பு அவர்களுடனேகூட இறங்கி, சமனான ஒரு இடத்திலே நின்றார்; அங்கே அவருடைய சீஷரில் அநேகம்பேரும் [5]அவருடைய உபதேசத்தைக் கேட்டு, தங்கள் வியாதிகளில் நின்று குணமாக்கப்படும்படிக்கு யூதேயா நாட்டின் திசைகள் யாவற்றிலும், எருசலேம் நகரத்திலும், தீருசீதோன் பட்டணங்களுள்ள கடலோரத்திலுமிருந்து அநேக சனங்களும் வந்திருந்தார்கள்.

௰௮ அசுத்தமான ஆவிகளால் வாதிக்கப்பட்டவர்களும் கூடிவந்திருந்து ஆரோக்கியம் அடைந்தார்கள்.

௰௯ [6]வல்லமை அவரிலிருந்து புறப்பட்டு எல்லாரையும் குணமாக்கினபடியினாலே சனங்கள் எல்லாரும் [7]அவரைத் தொடப்பார்த்தார்கள்.

௨௰ ¶ அப்பொழுது அவர் தம்முடைய சீஷர்களை நோக்கிப்பார்த்துச் சொன்னதாவது: [8]தரித்திரராகிய நீங்கள் பராபரனுடைய இராச்சியத்தை உடையவர்கள், ஆகையால் நீங்கள் பாக்கியவான்கள்.

௨௧ [9]இப்பொழுது பசியாயிருக்கிற நீங்கள் (இனி)திருத்தி அடைவீர்கள், ஆகையால் நீங்கள் பாக்கியவான்கள்; இப்பொழுது [10]அழுகிற நீங்கள் (இனி) நகைப்பீர்கள், ஆகையால் நீங்கள் பாக்கியவான்கள்.

௨௨ [11]மனிதனுடைய குமாரன் நிமித்தமாகச் சனங்கள் உங்களைப் பகைத்து, உங்களை விலக்கி [12]நிந்தைப்படுத்தி, உங்கள் நாமத்தைப் பொல்லாததென்று தள்ளிப்போ

Digitized by Google

டும்பொழுது,நீங்கள் பாக்கியராய் இருப்பீர்கள்.

௨௩ பரமண்டலத்திலே உங்கள் பலன் மிகுதியாய் இருப்பதால், [1]அக்காலத்திலே நீங்கள் சந்தோஷப்பட்டுக் களிகூருங்கள்; அவர்களுடைய பிதாக்கள் தீர்க்கதரிசிகளுக்கும் [2]அப்படியே செய்தார்கள்.

௨௪ [3]ஐசுவரியவான்களாகிய நீங்கள் [4]உங்கள் நன்மைகளை அடைந்து தீர்ந்தபடியால், ஐயோ! [5]உங்களுக்கு வேதனை வரும்.

௨௫ [6]திருத்தியுள்ளவர்களாகிய நீங்கள் பசியை அடைவீர்கள், ஆகையால் ஐயோ! உங்களுக்கு வேதனை வரும்; [7]இப்பொழுது நகைக்கிற நீங்கள் (இனி) துக்கப்படுவீர்கள், ஆகையால் ஐயோ! உங்களுக்கு வேதனை வரும்.

௨௬ [8]எல்லா மனிதர்களும் உங்களைக்குறித்துப் புகழ்ச்சியாய்ப் பேசும்பொழுது, ஐயோ! உங்களுக்கு வேதனை வரும், அவர்களுடைய பிதாக்கள் கள்ளத்தீர்க்கதரிசிகளுக்கும் அப்படியே செய்தார்கள்.

௨௭ ¶ [9]அன்றியும் (எனக்குச்) செவிகொடுக்கிற உங்களுக்கு நான் கட்டளையிடுகிறதாவது:உங்கள் சத்துருக்களில்அன்புகூர்ந்து, உங்களைப் பகைக்கிறவர்களுக்கு நன்மைசெய்து,

௨௮ [10]உங்களைச் சபிக்கிறவர்களை ஆசீர்வதித்து, உங்களை வருத்தப்படுத்துகிறவர்களுக்காகச் செபம்பண்ணுங்கள்.

௨௯ [11]உன் கன்னத்தில் அறைகிறவனுக்கு மறு கன்னத்தையும் கொடு; [12]உன் வஸ்திரத்தை எடுத்துக்கொள்ளுகிறவனுக்கு உன் அங்கியையும் எடுத்துக்கொள்ளத் தடைபண்ணாதிருப்பாயாக.

௩௰ [13]உன்னை வேண்டிக்கொள்ளுகிற யாவனுக்கும் கொடுப்பாயாக; உன்னுடையதை ஒருவன் எடுத்துக்கொண்டால், அவனிடத்தில் அதைத் திரும்பக் கேளாதிருப்பாயாக.

௩௧ [14]சனங்கள் உங்களுக்குச் செய்யும்படி நீங்கள் விரும்புகிறது எப்படியோ, அப்படியே நீங்களும் அவர்களுக்குச் செய்யக்கடவீர்கள்.

௩௨ [15]உங்களைச் சிநேகிக்கிறவர்களை (மாத்திரம்) நீங்கள் சிநேகித்தால், உங்களுக்கு என்ன பலன் வரும்? பாவிகளும் தங்களைச் சிநேகிக்கிறவர்களைச் சிநேகிக்கிறார்களே.

௩௩ உங்களுக்கு நன்மை செய்கிறவர்களுக்கு (மாத்திரம்) நீங்கள் நன்மை செய்தால், உங்களுக்கு என்ன பலன் வரும்?

௩௪ [16]பாவிகளும் அப்படிச் செய்கிறார்களே, திரும்பக் கொடுப்பார்கள் என்று நீங்கள் நம்பி அப்படிச் செய்பவர்களுக்கு (மாத்திரம்) கடன் கொடுத்தால், உங்களுக்கு என்ன பலன் வரும்?பாவிகளும் சரியாய்த் திரும்ப அடைந்துகொள்ளும்படியாய், (மற்றப்) பாவிகளுக்குக் கடன்கொடுக்கிறார்களே.

௩௫ [17]ஆகையால் உங்கள் சத்துருக்களைச் சிநேகித்து நன்மை செய்து, கைம்மாறு எண்ணாமல் [18]கடன்கொடுங்கள்; அப்பொழுது உங்கள் பலன் மிகுதியாய் இருக்கும்; அல்லாமலும் நன்றி அறியாதவர்கள்மேலும் பொல்லாதவர்கள்மேலும் தயவாயிருக்கிற[19]உன்னதமானவருக்குப் பிள்ளைகளாய் இருப்பீர்கள்.

௩௬ [20]ஆகையால் உங்கள் பிதா இரக்கமுள்ளவராய் இருக்கிறது போல, நீங்களும் இரக்கமுள்ளவர்களாய் இருங்கள்.

௩௭ [21]மற்றவர்களைக்குற்றவாளிகளென்று எண்ணிக்கொள்ளாதிருங்கள்; அப்பொழுது நீங்களும் குற்றவாளிகளென்று எண்ணிக்கொள்ளப்படாதிருப்பீர்கள்; மற்றவர்களை ஆக்கினைக்குள்ளாக்கும்

கி. பி. ௩௰௧.



1 மத். ௫. ௧௨. அப். ௫. ௪௧. கொலோ. ௧. ௨௪. யாக். ௧. ௨.
2 அப். ௭. ௫௧.
3 லூக். ௧௨. ௨௧.
4 ஆமோ. ௬. ௧. யாக். ௫. ௧.
5 மத். ௬. ௨, ௫, ௧௬. லூக். ௧௬. ௨௫.
6 ஏசா. ௬௫. ௧௩.
7 யாக். ௪. ௯.
8 யோவா. ௧௫. ௧௯. ௧ யோ. ௪. ௫.
9 ௨ மோ. ௨௩. ௪. வாக். ௨௫. ௨௧. மத். ௫. ௪௫. ௬௫. வச. ௨௭. ரோ. ௧௨. ௨௦.
10 லூக். ௨௩. ௩௪. அப். ௭. ௬௦.
11 மத். ௫. ௩௯.
12 ௧ கொரி. ௬. ௭.
13 ௫ மோ. ௧௫. ௭, ௮. வாக். ௨௧. ௨௬. மத். ௫. ௪௨.
14 மத். ௭. ௧௨.
15 மத். ௫. ௪௬.
16 மத். ௫. ௪௨.
17 ௨௭. வச.
18 சங். ௩௭. ௨௬. ௩௫. வச.
19 மத். ௫. ௪௫.
20 மத். ௫. ௪௮.
21 மத். ௭. ௧.

Digitized by Google

படி தீராதிருங்கள்; அப்பொழுது நீங்களும் ஆக்கினைக்குள்ளாகும்படி தீர்க்கப்படாதிருப்பீர்கள்; விடுதலைபண்ணுங்கள், அப்பொழுது நீங்களும் விடுதலையாக்கப்படுவீர்கள்.

௩௮ [1]கொடுங்கள், அப்பொழுது உங்களுக்கும் கொடுக்கப்படும்; அமுக்கிக் குலுக்கிச் சரிந்துவிழும்படி நன்றாய் அளந்து, உங்கள் [2]மடியிலே போடுவார்கள்; [3]நீங்கள் அளக்கிற அளவு எதுவோ, அதினாலே உங்களுக்குத் திரும்ப அளக்கப்படுமே என்றார்.

௩௯ ¶ பின்னும் அவர் உவமையாய் அவர்களுடனே சொன்னதாவது: [4]குருடனுக்குக் குருடன் வழிகாட்டலாமா? இருவரும் பள்ளத்தில் விழுவார்கள் அல்லவா?

௪௦ [5]சீஷன் தன் போதகருக்கு மேற்பட்டவன் அல்ல; நிறைவாய்க் கற்றுக்கொண்டவனே தன் போதகனைப்போல இருப்பான்.*

௪௧ ¶ [6]நீ உன்னுடைய கண்ணிலுள்ள உத்திரத்தை உணராமல், உன் சகோதரனுடைய கண்ணிலுள்ள சிராயைப் பார்க்கிறதென்ன?

௪௨ அல்லது நீ உன் கண்ணிலுள்ள உத்திரத்தைக் காணமல் இருக்க நீ உன் சகோதரனை நோக்கி, சகோதரனே நான் உன் கண்ணிலுள்ள சிராயை எடுத்துப்போடுகிறேன் இடங்கொடு என்று எப்படிச்சொல்லலாம்? வஞ்சகனே, [7]முன்பு நீ உன் கண்ணிலிருக்கிற உத்திரத்தை எடுத்துப்போடு, பின்பு உன் சகோதரனுடைய கண்ணிலுள்ள சிராயை எடுத்துப்போடும் வகையைத் தெளிவாக அறிவாய்.

௪௩ [8]கெட்டகனி கொடுக்கிற மரம் நல்லமரம் அல்ல, நல்லகனி கொடுக்கிற மரம் கெட்ட மரம் அல்ல.

௪௪ [9]முட்செடிகளில் அத்திப் பழங்களைப் பறிக்கிறதுமில்லை; நெரிஞ்சிச்செடியிலே திராட்சத்தைப் † பறிக்கிறதுமில்லை, ஆகையால் எந்த மரமும் அதினதினுடைய கனியால் அறியப்படும்.

௪௫ [10]நல்லமனிதன் தன் இருதயத்திலுள்ள நற்பொக்கிஷத்தில் நலமானதையே எடுத்துக் காண்பிப்பான்; பொல்லாத மனிதனும் தன் இருதயத்திலுள்ள பொல்லாத பொக்கிஷத்தில் பொல்லாததையே எடுத்துக் காண்பிப்பான், [11]இருதயத்தின் பரிபூரணத்தினால் அவனுடைய வாய் பேசுமே.

௪௬ ¶ [12]அன்றியும் நான் கட்டளையிடுகிறவைகளை நீங்கள் செய்யாமலிருக்க, என்னை ஆண்டவரே, ஆண்டவரே என்று என்னத்துக்கு அழைக்கிறீர்கள்?

௪௭ [13]என்னிடத்தில் வந்து என் வசனங்களைக் கேட்டு, அவைகளின்படி செய்கிறவனை உங்களுக்குக் காண்பிப்பேன்.

௪௮ அவன் எவனுக்கு ஒப்பாய் இருக்கிறான் என்றால், ஆழமாய்த் தோண்டிப் பாறையின்மேல் அஸ்திபாரம் போட்டு வீடுகட்டின மனிதனுக்கே ஒப்பாய் இருக்கிறான்; பெருவெள்ளம் உண்டானபொழுது நீரோட்டம் அந்த வீட்டில் மோதியும், அது கல்மலையின் மேல் அஸ்திபாரம் போட்டிருந்தபடியால் அதை அசைக்கக்கூடாமல் போயிற்று.

௪௯ (என் வசனத்தைக்) கேட்டும் அதின்படி செய்யாதவன், அஸ்திபாரமில்லாமல் பூமியின்மேல் வீடுகட்டினவனுக்கு ஒப்பாய் இருக்கிறான்? வெள்ளம் அதில் மோதினவுடனே அது விழுந்து மிகவும் இடிந்துபோயிற்று என்றார்.

கி. பி. ௩௧.



1 யாக். ௰௧. ௰௩.
2 சங். ௭௯. ௰௨.
3 மத். ௭. ௨. மாற். ௪. ௨௪.
பாக். ௨. ௰௧.
4 மத். ௰௫. ௰௪.
5 மத். ௰. ௨௪. யோவா. ௰௩. ௰௬: ௰௫. ௨௰.
* அல்லது தன் போதகனைப் போல நிறைவாயிருப்பான்.
6 மத். ௭. ௩.
7 யாக். ௰அ. ௰௭.
8 மத். ௭.௰௬,௰௭.
9 மத். ௰௨. ௩௩.
† நெரிஞ்சில் ஒரு நிராட்சக்குலை.
10 மத். ௰௨. ௩௫.
11 மத். ௰௨. ௩௪.
12 மல்கி. ௧. ௬. மத். ௭. ௨௧: ௨௫. ௰௧. லூக். ௰௩. ௨௫.
13 மத். ௭. ௨௪.

## ௭. அதிகாரம்.

௧. இறக்கும் ஒரு அஞ்ஞானியாயிருந்த சேவகக்காரனிடத்தில் பூதரின் விசுவாசத்திலும், அதிக விசுவாசத்தைக் கண்டது. ௰. அவனுடைய வேலைக்காரனைக் குணமாக்கினது. ௰௧ நாயீனூர் விதவையின் மகனை உயிரோடு எழுப்பினது. ௰௯. யோவான் அனுப்பின தூதர்களுக்குத் தம்முடைய அற்புதங்களை ஒரு குறிப்பாகக் காட்டி, உத்தரவு

Digitized by Google

*அருளிச்செய்தது. ௨௪. யோவானைக்குறித்துத் தம்முடைய தாற்பரியத்தைச் சனங்களுக்கு அறிவித்தது. ௩௦. யோவானுடைய செய்கைகளினாலாவது, தம்முடைய செய்கைகளினாலாவது குணப்படாத யூதர்களைக் கடிந்துகொண்டு, ௩௬. மகதலேனாளாகிய மரியாளுக்குச்செய்த கிருபையினால் விசுவாசித்துக் குணப்படுகிற பாவிகளுக்குப் பாவங்களை மன்னிக்கிற பாவிகளுடைய சிநேகிதரென்று தம்மைத் திருஷ்டாந்தப்படுத்தினது.*

சனங்கள் கேட்கத்தக்கதாக அவர் தம்முடைய வாக்கியங்கள் யாவையும் சொல்லி முடித்தபின்பு [1]கப்பர்நாகூம் ஊருக்குப் போனார்.

௨ அங்கே நூறு போர்ச்சேவகருக்குத் தலைவனாகிய ஒருவனுக்குப் பிரியமான வேலைக்காரன் வியாதியினாலே மரணத்திற்கு ஏதுவாய் இருந்தான்.

௩ அந்தத் தலைவன் இயேசுவைக் குறித்துக் கேள்விப்பட்டபொழுது, அவர் வந்து தன் வேலைக்காரனைக் குணமாக்கவேண்டும் என்று அவரை வேண்டிக்கொள்ளும்படிக்கு, யூதருடைய மூப்பரை அவரிடத்தில் அனுப்பினான்.

௪ அவர்கள் இயேசுவினிடத்தில் போய், அவரை மிகவும் வேண்டிக்கொண்டு பின்பு சொன்னது: அவன் நம்முடைய தேசத்தாரில் அன்பாயிருந்து, எங்களுக்காக ஒரு செபஆலயத்தையும் கட்டினான்.

௫ ஆகையால் உம்முடைய தயவுக்கு அவன் பாத்திரனாயிருக்கிறான் என்றார்கள்.

௬ ¶ இயேசுவானவர் அவர்களுடனே கூடச் சென்றார்; வீட்டுக்குச் சமீபமாய்ப் போனபொழுது அந்தத் தலைவன் சிநேகிதரை நோக்கி, (நீங்கள் அவரிடத்தில் போய்) ஆண்டவரே, நீர் என் வீட்டு வாசலுக்குள் பிரவேசிக்கிறதற்கு நான் பாத்திரன் அல்ல.

௭ அதினாலே நான்தானே உம்மிடத்தில் வருகிறதற்கும் என்னை அபாத்திரன் என்று எண்ணினேன்; ஆகையால் நீர் வருத்தப்படாதிரும்.

இ. பி. ௩௰௧.

1 மத். அ. ௮.

* அல்லது இந்த மனிதனை.

† அல்லது சவப் பெட்டியை.

2 லூக். அ. ௭௪. யோவா. ௰௧. ௪௩. அப். ௯. ௪0. உரோ. ௪. ௰௭.

௮ அல்லாமலும் நான் அதிகாரத்திற்குக் கீழ்ப்பட்டவனாயிருந்தும், எனக்குக் கீழிருக்கிற சேவகரில் ஒருவனை* போவென்னப் போகிறான்; மற்றொருவனை வாவென்ன வருகிறான்; என் வேலைக்காரனை நோக்கி, இதைச் செய்யென்னச் செய்கிறான்; ஆகையால் நீர் ஒருவார்த்தைமாத்திரம் சொன்னால், என் வேலைக்காரன் சொஸ்தம் அடைவான் என்று சொல்லுங்கள் என்று அனுப்பினான்.

௯ இயேசுவானவர் அதைக் கேட்டு அவனைக்குறித்து ஆச்சரியப்பட்டு திரும்பிக்கொண்டு, தமக்குப் பின்செல்லுகிற சனங்களை நோக்கி, இப்படிப்பட்ட விசுவாசத்தை நான் இஸ்ரவேலருக்குள்ளும் காணவில்லையென்று உங்களுக்குச் சொல்லுகிறேன் என்றார்.

௰ அனுப்பப்பட்டவர்கள் திரும்ப வீட்டிற்கு வருகிறபொழுது வியாதியாயிருந்த வேலைக்காரன் ஆரோக்கியம் அடைந்திருக்கிறதைக் கண்டார்கள்.

௰௧ மறுநாளிலே அவர் நாயீன் என்னும் ஊருக்குப் போனார்; அவருடைய சீஷர் அநேகரும் மற்றும் அநேக சனங்களும் அவருடனே கூடப்போனார்கள்.

௰௨ அவர் ஊரின் வாசலுக்குச் சமீபமானபொழுது, ஒரு கைம்பெண்ணினுடைய ஒரேகுமாரன் இறந்துபோய் வெளியே கொண்டுவரப்பட்டான்; ஊராரில் அநேக சனங்களும் அவளுடனேகூட வந்தார்கள்.

௰௩ கர்த்தர் அவளைப்பார்த்து அவள்மேல் உருக்கமாய் இரங்கி, நீ அழவேண்டாம் என்று சொல்லிக்கிட்டப்போகையில் பாடையைச்† சுமக்கிறவர்கள் நின்றார்கள்.

௰௪ உடனே அவர் அதைத் தொட்டு, வாலிபனே, [2]எழுந்திரு என்று உனக்குச் சொல்லுகிறேன் என்றார்.

Digitized by Google

௰ரு அப்பொழுது மரித்தவன் எழுந்து உளுக்காந்து பேசத்தொடங்கினான்; அவனை அவர் தாய்க்கு ஒப்புக்கொடுத்தார்.

௰௬ [1]எல்லாரும் பயம் அடைந்து, [2]மகா தீர்க்கதரிசி நமக்குள்ளேதோன்றியிருக்கிறார் என்றும், [3]பராபரன் தம்முடைய சனங்களைச் சந்தித்துப் பார்த்தார் என்றும் சொல்லிப் பராபரனைப் புகழ்ந்தார்கள்.

௰எ அல்லாமலும் இந்தச் சங்கதி யூதேயாநாடு முழுவதிலும் சுற்றியிருக்கிற தேசங்கள் யாவற்றிலும் பிரசித்தமாயிற்று.

௰அ ¶ இவை எல்லாவற்றையும் [4]யோவானுடைய சிஷர் அவனுக்கு அறிவித்தார்கள்.

௰௯ அப்பொழுது யோவான் தன் சிஷரில் இரண்டுபேரை அழைத்து, நீங்கள் இயேசுவினிடத்தில் போய், வருவார் என்று சொல்லப்பட்டவர் நீரா, அல்லது வேறொருவர் வரக்காத்திருக்கவேண்டுமோ என்று கேளுங்கள் என்று சொல்லி அனுப்பினான்.

௨௰ அந்தப்படி அவர்கள் அவரிடத்தில் போய், வருவார் என்று சொல்லப்பட்டவர் நீரா, அல்லது வேறொருவர் வரக்காத்திருக்கவேண்டுமோ என்று கேட்கும்படிக்கு யோவான்ஸ்நானன் எங்களை உம்மிடத்திற்கு அனுப்பினான் என்றார்கள்.

௨௧ அவ்வேளையிலே அவர் வியாதிகளையும் வேதனைகளையும் பொல்லாத ஆவிகளையுமுடைய அநேகம்பேரைக் குணமாக்கி, குருடர் அநேகருக்குப் பார்வையை அருளினார்.

௨௨ அப்பொழுது [5]இயேசுவானவர் அவர்களுக்குச் சொன்னது: [6]குருடர் பார்வையை அடைகிறார்கள்; சப்பாணிகள் நடக்கிறார்கள்; குஷ்டரோகிகள் சுத்தமாகிறார்கள்; செவிடர் கேட்கிறார்கள்; மரித்தோர் எழுப்பப்படுகிறார்கள்; [7]தரித்திரருக்குச் சுவிசேஷம் அறிவிக்கப்பட்டு வருகின்றது; இப்படி நீங்கள் பார்க்கிறவைகளையும் கேட்கிறவைகளையும்யோவானுக்குப் போய் அறிவியுங்கள்.

௨௩ அல்லாமலும் என்னாலே இலச்சையடையாமல் இருக்கிறவன் பாக்கியவான் என்றார்.

௨௪ ¶ [8]யோவானுடைய தூதர்கள் போனபின்பு, அவர் யோவானைக்குறித்துச் சனங்களுடனே சொன்னது: காற்றினால் அசைக்கப்படுகிற நாணலையா நோக்கிப் பார்க்கும்படிக்கு வனாந்தரத்திற்குப் போனீர்கள்?

௨௫ அல்லது மெல்லிய வஸ்திரங்களைத் தரித்திருக்கிற மனிதனையா பார்க்கும்படிக்குப் புறப்பட்டீர்கள்? மகிமையான உடுப்போடும் செல்வத்தோடும் இருக்கிறவர்கள் அரசருடைய அரமனைகளில் இருக்கிறார்களே.

௨௬ அல்லது ஒரு தீர்க்கதரிசியையா பார்க்கும்படிக்குப் புறப்பட்டீர்கள்? ஒரு தீர்க்கதரிசியிலும் அதிகமானவனையே (பார்த்தீர்களென்று) உங்களுக்குச் சொல்லுகிறேன்.

௨எ [9]இதோ நான் என்னுடைய தூதனை உமக்குமுன்பாக அனுப்புகிறேன்; அவன் உமக்குமுன் நடந்து, உமக்காக மார்க்கத்தைத் திருத்துவான் என்று ஒருவனைக் குறித்து எழுதியிருக்கின்றதே, அவன் இவன்தான்.

௨அ ஆகையால் நான் உங்களுக்குச் சொல்லுகிறதாவது: ஸ்திரிகளிடத்தில் பிறந்தவர்களில் யோவான்ஸ்நானனிலும் பெரிய தீர்க்கதரிசி ஒருவனும் இல்லை; ஆனாலும் பராபரனுடைய இராச்சியத்திலே சிறியவனானவன் அவனிலும் பெரியவனாயிருக்கிறான்.

௨௯ ¶ அன்றியும் (யோவானுடைய உபதேசத்தைக்) கேட்ட சகல சனங்களும் ஆயக்காரரும் அவனாலே [10]ஞானஸ்நானத்தைப்

கி. பி. ௩௧.

1 லூக். ௧. ௬௫.
2 லூக். ௨௪. ௰௯. யோவா. ௪. ௰௯: ௬. ௰௪: ௯. ௰எ.
3 லூக். ௧. ௬அ.
4 மத். ௰௧. ௨.
5 மத். ௰௧. ௪.
6 ஏசா. ௩௫. ௫.
7 லூக். ௪. ௰அ.
8 மத். ௰௧. எ.
9 மல்கி. ௩. ௧.
10 மத். ௩. ௫. லூக். ௩. ௰௨.



Digitized by Google

கி. பி. ௩௧.

பெற்று, பராபரன் நீதிபரர் என்று அறிக்கையிட்டார்கள்.

௩௰ பரிசேயரும் நியாயசாஸ்திரிகளுமானவர்கள்மாத்திரம் அவனாலே ஞானஸ்நானத்தைப் பெறாமல், தங்களைக்குறித்துப்* பராபரனுடைய [1]ஆலோசனையைத் தள்ளினார்கள்.†

௩௧ ¶ அப்படியிருக்க, [2]இந்தத் தலைமுறையின் மனிதரை நான் யாருக்கு நிகர் சொல்லுவேன்? இவர்கள் யாருக்கு ஒப்பாயிருக்கிறார்கள்?

௩௨ சந்தையில் உளுக்காந்து ஒருவரை ஒருவர் நோக்கி, உங்களுக்காக ஊதினோம் நீங்கள் கூத்தாடவில்லை; உங்களுக்காகப் புலம்பினோம்நீங்கள் அழவில்லை என்று எதிர் கூப்பிடுகிற பிள்ளைகளுக்கு ஒப்பாயிருக்கிறார்கள்.

௩௩ [3]எப்படியெனில், யோவான் ஸ்நானன் வந்து, அப்பம் புசியாமலும் திராட்சஇரசம் குடியாமலும் இருந்தான்; அதினாலே அவன் பேய்கொண்டவன் என்கிறீர்கள்.

௩௪ மனிதனுடைய குமாரன் வந்து போசனபானம்பண்ணுகிறான்; அதினாலே இதோ, போசனப்பிரியன் மதுபானப்பிரியன், ஆயக்காரருக்கும் பாவிகளுக்கும் சிநேகிதன் என்கிறீர்கள்.

௩௫ [4]ஆனாலும் ஞானமானது தன் பிள்ளைகள் எல்லாராலும் நீதியாக்கப்படுகின்றது என்றார்.

௩௬ ¶ [5]பரிசேயரில் ஒருவன் தன்னுடனே போசனம்பண்ணும்படிக்கு, அவரை வேண்டிக்கொண்டான்; அந்தப்படி அவர் பரிசேயனுடைய வீட்டுக்குப் போய்ப் பந்தியிருந்தார்.

௩௭ ¶ அப்பொழுது பட்டணத்திலுள்ள பாவியாகிய ஒரு ஸ்திரி அவர் பரிசேயனுடைய வீட்டிலே பந்தியிருக்கிறதை அறிந்து, ஒரு பரணியில் பரிமளதயிலம் கொண்டுவந்து,

* அல்லது தங்களுக்குள்ளே.
1 அப். ௨௰. ௨௭.
† அல்லது அழித்தார்கள்.
2 மத். ௰௧.௰௬.
3 மத். ௩. ௪. மாற். ௧. ௬. லூக். ௧. ௰௫.
4 மத். ௰௧. ௰௯.
5 மத். ௨௬. ௬. மாற். ௰௪. ௩. யோவா. ௰௧. ௨.
6 லூக். ௰௫. ௨.
‡ மத். ௰௮. ௨௮.

௩௮ அவருடைய பாதங்களின் அருகே பின்னாக நின்று அழுது கொண்டு, அவருடைய பாதங்க ளைக் கண்ணீரினாலே நனைத்துத் தன் தலையின் மயிராலே துடைத் து, அவருடைய பாதங்களை முத் தம் செய்து, பரிமளதயிலத்தைப் பூசினாள்.

௩௯ அவரை அழைத்த பரிசே யன் அதைக் கண்டபொழுது, [6]இ வர் தீர்க்கதரிசியானால் தம்மைத் தொடுகிற ஸ்திரி இன்னாள் என் றும், இப்படிப்பட்டவள் என்றும் அறிந்திருப்பார்; இவள் பாவியா யிருக்கிறாளே என்று தனக்குள் ளே எண்ணிக்கொண்டான்.

௪௰ ¶ இயேசுவானவர் அவனை நோக்கி, சீமோனே, உனக்கு ஒரு வார்த்தை சொல்ல விரும்புகி றேன் என்றார்; போதகரே, சொல் லும் என்றான்.

௪௧ (இயேசுவானவர் சொன் னது:)கடன்காரன் ஒருவனுக்குக் கடனாளிகள் இரண்டுபேர் இருந் தார்கள்; அவர்களில் ஒருவன் ஐந் நூறு ‡ வெள்ளிக்காசும், மற்றொ ருவன் ஐம்பது வெள்ளிக்காசும் கொடுக்கவேண்டியிருந்தது.

௪௨ அவர்கள் கொடுக்கிறதற்குத் திராணி இல்லாதவர்களானபொ ழுது, இருவருக்கும் கடனை மன் னித்தான்; ஆகையால் அவர்களில் எவன் அவனிடத்தில் அதிக அன் பாயிருப்பான் அதைச் சொல் என்றார்.

௪௩ சீமோன் மாறுத்தரமாகச்சொ ன்னது: அதிகமான மன்னிப் பைப் பெற்றவன் எவனோ, அவ னே என்று நினைக்கிறேன் என் றான்; அப்பொழுது அவர் நிதான மாய்த் தீர்த்தாய் என்று சொல்லி,

௪௪ பின்பு ஸ்திரியினிடத்திலே திரும்பிச் சீமோனுடனே சொன் னது: இந்த ஸ்திரியைப் பார்க்கி றாயா? நான் உனது வீட்டில் வந் தபொழுது, நீ என் கால்களுக்கா கத் தண்ணீரைத் தரவில்லை; இவள்

Digitized by Google

கண்ணீரினாலே என் கால்களை நனைத்து, தன் தலையின் மயிராலே துடைத்தாள்.

௪௫ நீ என்னை முத்தஞ்செய்யவில்லை; இவள் இங்கே பிரவேசித்ததுமுதல் என் பாதங்களை ஓயாமல் முத்தஞ்செய்தாள்.

௪௬ [1]நீ என் தலையில் எண்ணெயைப் பூசவில்லை; இவள் பரிமள தயிலத்தை என் பாதங்களில் பூசினாள்.

௪௭ [2]ஆனதால் இவள் செய்த அநேக பாவங்கள் மன்னிக்கப்பட்டபடியினாலே, மிகவும் அன்பாயிருக்கிறாள் என்று உனக்குச் சொல்லுகிறேன்; அல்லாமலும் கொஞ்சம் மன்னிக்கப்பெற்றவன் எவனோ, அவன் கொஞ்சம் அன்பாயிருக்கிறான் என்று சொல்லி,

௪௮ [3]பின்பு அவளை நோக்கி, உன் பாவங்கள் மன்னிக்கப்பட்டன என்றார்.

௪௯ அப்பொழுது பந்தியில்இருந்தவர்கள், [4]பாவங்களை மன்னிக்கிற இவன் யாவன் என்று சொல்லிக்கொண்டார்கள்.

௫௦ [5]அவர் (பின்னும்) ஸ்திரியை நோக்கி, உன் விசுவாசம் உன்னை இரட்சித்தது, சமாதானத்தோடே போ என்றார்.

1 சங். உ௩. ௫.
2 ௧ தீமோ. ௧. ௧௪.
3 மத். ௯. ௨. மாற். ௨. ௫.
4 மத். ௯. ௩. மாற். ௨. ௭.
5 மத். ௯. ௨௨. மாற். ௫. ௩௪: ௰. ௫௨. லூக். ௮. ௪௮: ௰௮. ௪௨.

## ௮. அதிகாரம்.

௧. ஸ்திரீகள் கிறிஸ்துவுக்குத் தங்கள் ஆஸ்திகளாலே உதவிசெய்தது. ௪. கிறிஸ்து அப்போஸ்தலர்களோடே பலவிடங்களிலும் பிரசங்கம்பண்ணின பின்பு விதைக்கிறவன் உவமையையும், ௰௬. விளக்கின் உவமையையும் எடுத்துக்காட்டி, ௨௧. தம்முடைய தாயும், சகோதரரும் இன்னாரென்று அறிவித்து, ௨௨. காற்றை அதட்டி, ௨௬. ஒருவனைப் பிடித்திருந்த பசாசுகளைப் பன்றிகளின் கூட்டத்திலே துரத்தினது. ௪௩. அவர் சுத்ரேனால் விலக்கப்பட்டது. ௪௩. பெரும்பாடுள்ள ஒரு ஸ்திரியைக் குணமாக்கினது. ௪௯. யாவீரு என்பவனுடைய மகளை உயிரோடே எழுப்பினது.

பின்பு அவர் பிரயாணமாய்ப் பட்டணங்கள்தோறும் ஊர்கள்தோறும் திரிந்து, பராபரனுடைய இராச்சியத்தைச் சுவிசேஷமாய்ப் பிரசங்கம்பண்ணினார்.

௨ [6]பன்னிருவரும், பொல்லாத ஆவிகளில் நின்றும் வியாதிகளில் நின்றும் குணமாக்கப்பட்ட சில ஸ்திரிகளும் அவருடனே கூடப்போனார்கள்.

௩ [7]ஏழு பசாசுகளில் நின்றும் நீக்கப்பட்ட மகதலேனாள் என்னப்பட்ட மரியாளும், ஏரோதேயின் காரியக்காரனாகிய கூசாவின் மனைவியாகிய யோவன்னாளும், சூசன்னாளும், தங்கள் ஆஸ்திகளால் அவருக்கு ஊழியஞ்செய்துகொண்டுவருகிற மற்ற அநேக ஸ்திரிகளும் அவருடனே இருந்தார்கள்.

௪ ¶ [8]பட்டணங்களிலிருந்து மிகுந்த சனங்கள் வந்து அவரிடத்தில் கூடியிருக்கிறபொழுது, அவர் உவமையாய்ச் சொன்னது:

௫ விதைக்கிறவன் தன் விதையை விதைக்கப் புறப்பட்டான்; அவன் விதைக்கையில், சில விதை வழியருகே விழுந்து பின்பு மிதிக்கப்பட்டது; ஆகாசத்தின் பறவைகளும் வந்து அதைப் பட்சித்தன.

௬ சில விதை கற்பாறையின் மேல் விழுந்தது; அது முளைத்தபின் ஈரமில்லாததினாலே உலர்ந்துபோயிற்று.

௭ சில விதை முட்செடிகளுள்ள இடத்திலே விழுந்தது, முட்செடிகள் கூட வளர்ந்து, அதை நெருக்கிப்போட்டன.

௮ சில விதை நல்ல நிலத்தில் விழுந்து முளைத்து நூறுமடங்காய்ப் பலன் தந்ததென்று சொல்லி, பின்பு கேட்கிறதற்குக் காதுள்ளவன் கேட்கக்கடவன் என்று கூப்பிட்டார்.

௯ ¶ [9]அப்பொழுது அவருடைய சீஷர் அவரை நோக்கி, இந்த உவமையின் கருத்து என்னவென்று கேட்டார்கள்.

௰ அவர் சொன்னது: பராபரனுடைய இராச்சியத்தின் இரகசியங்களை அறியும்படிக்கு, நீங்கள் அருள் பெற்றவர்கள்; மற்றவர்கள் [10]கண்டும் காணாமலும், கேட்டும்

6 மத். ௨௭. ௫௫,
௫௬.
7 மாற். ௰௬. ௯.
8 மத். ௰௩. ௨. மாற். ௪. ௧.
9 மத். ௰௩. ௰. மாற். ௪. ௰.
10 ஏசா. ௬. ௯. மாற். ௪. ௰௨.

Digitized by Google

உணராமலும் இருக்கத்தக்கதாக (அவைகள்) உவமைகளாய் அவர்களுக்குச் சொல்லப்படுகின்றன.

௰௧ [1]அந்த உவமையின் கருத்தாவது: விதையானது பராபரனுடைய வசனமே.

௰௨ (விதை விழுந்த) வழியானது, (அந்த வசனத்தைக்) கேட்கிறபொழுது விசுவாசியாமலும் இரட்சிக்கப்படாமலும் இருக்கும்படிக்குத் தங்கள் இருதயத்திலிருந்து அவ்வசனம் பசாசினாலே எடுக்கப்படுகிறவர்களேயாம்.

௰௩ (விதை விழுந்த) கற்பாறையானது, (அவ்வசனத்தைக்) கேட்கிறபொழுது, சந்தோஷத்தோடே ஏற்றுக்கொண்டு பின்பு அது தங்களுக்குள்ளே வேர்கொள்ளும்படிசெய்யாமல் சிலகாலம் (மாத்திரம்) விசுவாசித்துச் சோதனைகாலத்திலே வழுவிப்போகிறவர்களேயாம்.

௰௪ (விதை விழுந்த) முட்செடிகளுள்ள நிலமானது தேவவசனத்தைக் கேட்கிறவர்களாயிருந்தும், நிறைந்த பலனைக் கொடாதபடிக்குக் கவலைகளும் ஐசுவரியமும் சீவனத்தின் செல்வமும் உள்ளவர்களாய் நடந்து, அவைகளினாலே அதை நெருக்கிப்போடுகிறவர்களேயாம்.

௰௫ (விதை விழுந்த) நல்லநிலமானது, அவ்வசனத்தைக் கேட்டு, நன்றும் உண்மையுமான இருதயத்திலே அதைக் காத்துக்கொண்டு, இடைவிடாமல் பலன்கொடுக்கிறவர்களேயாம்.

௰௬ ¶ [2]ஒருவனும் விளக்கைக் கொளுத்தி, அதை ஒரு பாத்திரத்தினாலே மூடவும் கட்டிலின்கீழே வைக்கவும் மாட்டான்; உள்ளே வருகிறவர்கள் வெளிச்சம்காணும்படிக்கு அதைத் தண்டின்மேலே வைப்பான்.

௰௭ [3]அந்தப்படி வெளியரங்கமாகாத அந்தரங்கமும் இல்லை; அறியப்பட்டு வெளிக்கு வாராத மறைபொருளும் இல்லை.

௰௮ ஆதலால் நீங்கள் கேட்கிற விதத்தைக்குறித்து எச்சரிக்கையாயிருங்கள்; என்னத்தினாலெனில், [4]உள்ளவனுக்குக் கொடுக்கப்படும்; இல்லாதவன் தனக்கு உண்டென்று நினைக்கிற* பொருளும் அவனிடத்திலிருந்து எடுத்துக்கொள்ளப்படும் என்றார்.

௰௯ ¶ [5]அப்பொழுது அவருடைய தாயும் சகோதரரும் அவரிடத்திற்குப்போகையில், சனக்கூட்டத்தின்நிமித்தம் அவர்கள் அவரைச் சேருகிறதற்கு இடமில்லை.

௨௰ அப்பொழுது சிலர் அவரை நோக்கி, உம்முடைய தாயும் சகோதரரும் உம்மைப்பார்க்கவேண்டும் என்று வெளியே நிற்கிறார்கள் என்று அறிவித்தார்கள்.

௨௧ அவர்களுக்கு மாறுத்தரமாக அவர் சொன்னது: பராபரனுடைய வசனத்தைக் கேட்டு அதின்படி செய்கிறவர்களே, என் தாயுமாய் என் சகோதரருமாய் இருக்கிறார்கள் என்றார்.

௨௨ ¶ [6]ஒருநாளிலே அவர் தம்முடைய சீஷரோடுங்கூட ஒரு படவில் ஏறி அவர்களை நோக்கி, கடலின் அக்கரைக்குப் போகக்கடவோம் என்றார்; அந்தப்படி கரையைவிட்டுப் போனார்கள்.

௨௩ அவர்கள் படவை நடத்துகையில், அவர் நித்திரைபண்ணினார்; அப்பொழுது படவு சலத்தினாலே நிரப்பப்படவும், அவர்களுக்கு மோசம் வரவும்தக்கதாகக் கடலில் சுழல்காற்று உண்டாயிற்று.

௨௪ உடனே அவர்கள் சேர்ந்து, ஆண்டவரே, ஆண்டவரே, நாம் கெட்டுப்போகிறோமே என்று (கூப்பிட்டு) அவரை எழுப்பினார்கள்; அப்பொழுது அவர் எழுந்து, காற்றையும் சலத்தின் உக்கிரத்தையும் அதட்டினார்; உடனே

கி. பி. ௩௰௨.

1 மத். ௰௩. ௰௮. மாற். ௪. ௰௪.
2 மத். ௫. ௰௫. மாற். ௪. ௨௧. லூக். ௰௧. ௩௩.
3 மத். ௰. ௨௬. லூக். ௰௨. ௨.
4 மத். ௰௩. ௰௨; ௨௫. ௨௯. லூக். ௰௯. ௨௬.
* அல்லது காணப்படுகிற.
5 மத். ௰௨. ௪௬. மாற். ௩. ௩௧.
6 மத். ௮. ௨௩. மாற். ௪. ௩௫.

Digitized by Google

அவைகள் நின்றுபோக அமைதல் உண்டாயிற்று.

௨௫ பின்பு அவர் அவர்களை நோக்கி, உங்கள் விசுவாசம் எங்கே என்றார்; அவர்கள் பயந்து ஆச்சரியப்பட்டு, இவர் எப்படிப்பட்டவரோ, காற்றுகளுக்கும் சலத்திற்கும் கட்டளை இடுகிறாரே, அவைகளும் இவருக்குக் கீழ்ப்படிகின்றனவே என்று ஒருவரோடொருவர் சொல்லிக்கொண்டார்கள்.

௨௬ ¶ [1]பின்பு கலிலேயா நாட்டுக்கு எதிரான கதரேனர் தேசத்திலே சேர்ந்தார்கள்.

௨௭ அவர் அக்கரையில் இறங்கினபொழுது, அநேக நாளாய்ப் பசாசுகள் பிடித்தவனுமாய், வஸ்திரம் தரியாதவனுமாய், வீட்டிலே தங்காமல் பிரேதக் கல்லறைகளிலே தங்கினவனுமாயிருந்த அப்பட்டணத்து மனிதன் ஒருவன் அவருக்கு எதிராக வந்தான்; அநேகந்தரம் அந்த அசுத்த ஆவி அவனை அலக்கழித்துவந்தது.

௨௮ அல்லாமலும் அவன் சங்கிலிகளாலும் விலங்குகளாலும் கட்டப்பட்டுக் காவல்பண்ணப்பட்டிருந்தும், அவன் விலங்குகளைத் தறித்துப்போட்டு, பசாசினால் வனாந்தரங்களுக்குத் துரத்தப்பட்டான்; ஆதலால் இயேசுவானவர் அந்த ஆவி அவனைவிட்டுப் போகும்படிக்குக் கட்டளையிட்டார்.

௨௯ ஆனபடியினாலே அவன் இயேசுவானவரைக் கண்டபொழுது, கூக்குரலிட்டு அவருக்கு முன்பாக விழுந்து, இயேசுவே, உன்னதமான பராபரனுடைய குமாரனே, எனக்கும் உமக்கும் என்ன? என்னை வேதனைப்படுத்தாதபடிக்கு உம்மை வேண்டிக்கொள்ளுகிறேன் என்றான்.

௩௰ அப்பொழுது இயேசுவானவர் அவனை நோக்கி, உன் பேர் என்னவென்று கேட்டார், அதற்கு அவன் இலேகியோன்* என்று சொன்னான்; அநேகம் பசாசுகள் அவனுக்குள் புகுந்தபடியால் அந்தப்பேர் அவனுக்கு உண்டாயிற்று.

௩௧ அல்லாமலும் [2]தங்களைப் பாதாளத்திற்குப் போகும்படி கட்டளையிடாதபடிக்கு, அவைகள் அவரை வேண்டிக்கொண்டன.

௩௨ ¶ அப்பொழுது அவ்விடத்திலே அநேகம் பன்றிகள் கூட்டமாய் மலையிலே மேய்ந்துகொண்டிருந்தன; அவைகள் அந்தப் பன்றிகளுக்குள் பிரவேசிக்கும்படி, உத்தரவு கொடுக்கவேண்டும் என்று அவரை வேண்டிக்கொண்டன; அப்படியே அவைகளுக்கு உத்தரவு கொடுத்தார்.

௩௩ உடனே பசாசுகள் அந்த மனிதனைவிட்டு நீங்கிப் பன்றிகளுக்குள் புகுந்தன; அப்பொழுது அந்தப் பன்றிக்கூட்டம் உயர்ந்த மேட்டிலிருந்து கடலிலே பாய்ந்து அமிழ்ந்துபோயிற்று.

௩௪ அவைகளை மேய்த்தவர்கள் அதைக் கண்டு ஓடிப்போய், பட்டணத்திலும் வெளிப்புறங்களிலும் அறிவித்தார்கள்.

௩௫ அப்படி நடந்ததைச் சனங்கள் பார்க்கும்படிக்குப் புறப்பட்டு இயேசுவினிடத்தில் போய், பசாசுகள் விட்டுப்போன மனிதன் இயேசுவினுடைய பாதங்கள் அருகே வஸ்திரம் தரித்தவனாய் உளுக்காந்து, புத்தி அடைந்திருக்கிறதைக் கண்டு, பயப்பட்டார்கள்.

௩௬ பசாசுகள் பிடித்திருந்தவன் இரட்சிக்கப்பட்ட வகையைக் கண்டவர்களும் அதை அவர்களுக்கு அறிவித்தார்கள்.

௩௭ ¶ [3]அப்பொழுது கதரேனருடைய சுற்றுத் தேசத்தின் திரளான சனங்கள் எல்லாரும் மிகுந்த பயம் அடைந்தவர்களானபடியினாலே, [4]தங்களை விட்டுப்போகும்படிக்கு அவரை வேண்டிக்கொண்டார்கள்; அந்தப்படி அவர் படவில் ஏறித் திரும்பினார்.

கி. பி. ௩௨.



1 மத். அ. ௨௮. மாற். ரு. ௧.

* இலேகியோன் என்பதற்கு ஏறக்குறைய ஆறாயிரம்பேரென்று அருத்தமாம்.

2 வெளி. ௨௰. ௩.

3 மத். அ. ௩௪.

4 அப். ௧௬. ௩௯.

Digitized by Google

ஙஅ [1]பசாசுகள் விட்டுப்போன மனிதன் அவருடனே கூடப்போயிருக்கும்படிக்கு, அவரிடத்தில் உத்தரவு கேட்டுக்கொண்டான்.

ஙகூ இயேசுவானவர் அவனைநோக்கி, நீ உன் வீட்டிற்குத் திரும்பிப்போய், பராபரன் உனக்குச் செய்த விசேஷங்களை அறிவிப்பாயாக என்று சொல்லி அனுப்பிவிட்டார்; அந்தப்படி அவன் போய், தனக்கு இயேசுவானவர் செய்த விசேஷங்களைப் பட்டணத்தில் எங்கும் பிரசித்தம்பண்ணினான்.

சய ¶ பின்பு இயேசுவானவர் திரும்பி வந்தபொழுது, அவர் வரக் காத்துக்கொண்டிருந்த சனங்கள் எல்லாரும் அவரை உபசாரம் செய்தார்கள்.

சக [2]அப்பொழுது செபஆலயத் தலைவனான யாவீரு என்பவன் வந்து, இயேசுவின் பாதங்களிடத்தில் விழுந்து, தனக்குண்டான பன்னிரண்டு வயதுள்ள ஒரே குமாரத்தி மரணத்துக்கு ஏதுவாயிருந்தபடியினாலே,

சஉ தன் வீட்டிலே வரும்படிக்கு அவரை வேண்டிக்கொண்டான்; அவர் அவனுடனே கூடப் போகையில், சனங்கள் அவரை நெருக்கினார்கள்.

சங ¶ [3]அப்பொழுது பன்னிரண்டு வருஷம் பெரும்பாடுபட்டு, தன் பொருள்கள் யாவையும் பரிகாரிகளுக்குச் செலவழித்து, ஒருவராலும் சுகம் அடையாத ஒரு ஸ்திரி, (அவருக்கு) பின்னாலே சேர்ந்து,

சச அவருடைய வஸ்திரத்தின் ஓரத்தைத் தொட்டாள்; உடனே அவளுடைய இரத்தஊறல் நின்று போயிற்று.

சரு அப்பொழுது இயேசுவானவர், என்னைத் தொட்டவர் யார் என்றார்; நாங்கள் அறியோம் என்று எல்லாரும் சொன்னபொழுது, பேதுருவும் அவனோடிருந்தவர்களும் அவரை நோக்கி, ஐயரே, ச னங்கள் உம்மை நெருக்கி உரசி கொண்டிருக்கிறார்களே; அப்படி யிருக்க, என்னைத் தொட்டவர் ய ரென்று எப்படிக் கேட்கிறீர் என் றார்கள்.

சசா [4]இயேசுவானவர் சொ னது: என்னிலிருந்து பலம் புற பட்டதை அறிந்திருக்கிறேன்; கையால் ஒருவர் என்னைத் தொட் டது உண்டென்றார்.

சஎ அப்பொழுது ஸ்திரியா வள் மறைந்திருக்கக்கூடாதென் று கண்டு, நடுங்கி வந்து, அவ முன்பாக வணக்கமாய் விழுந்து, தான் அவரைத் தொட்ட காரண தையும், உடனே குணம் அடை ததையும் எல்லாச் சனங்களுக்கும் முன்பாக அவருக்கு அறிவித்தாள்.

சஅ அவர் அவளுடனே சொன்னது: மகளே சந்தோஷமாயிரு, உன் விசுவாசம் உன்னை இரட் சித்தது, சமாதானத்தோடே போ என்றார்.

சகூ ¶ [5]அவர் அப்படிப் பேசிக் கொள்ளுகையில், செபஆலயத் லைவனுடைய வீட்டிலிருந்து ஒருவன் வந்து அவனை நோக்கி, உம்முடைய குமாரத்தி இறந்து போனாள்; போதகரை (இனி) வ ருத்தப்படுத்தாதிரும் என்றான்.

ருய இயேசுவானவர் அதைக் கேட்டு, யாவீரு என்பவனை நோக்கி, நீர் பயப்படாமல் விசுவாசமாயிரும், அப்பொழுது இரட்சிக்கப்படுவாள் என்றார்.

ருக பின்பு அவர் வீட்டிலே சேர்ந்தபொழுது, பேதுருவையும் யாக்கோபையும் யோவானையும் பெண்ணினுடைய தகப்பனையும் தாயையும் தவிர, மற்றொருவரும் உள்ளே பிரவேசிக்கிறதற்குஇடம் கொடாமல்,

ருஉ எல்லாரும் அவளைக்குறித்து அழுது துக்கங்கொண்டாகிறதை (கண்டு) நீங்கள் அழவேண்டாம்; அவள் இறந்துபோகவில்

கி. பி. ஙஉ.

1 மாற். ரு. கஅ.
2 மத். கூ. கஅ. மாற். ரு. உஉ.
3 மத். கூ. உய.
4 மாற். ரு. ஙய. லூக். ச. கக.
5 மாற். ரு. ஙரு.

Digitized by Google

லை, [1]சித்திரைபண்ணுகிறுள் என்றூர்.

௫௩ அவள் இறந்துபோனுள் என்று அவர்கள் அறிந்து, அவரைக்குறித்து நகைத்தார்கள்.

௫௪ பின்பு அவர் எல்லாரையும் வெளியே போகப்பண்ணி, அவளுடைய கையைப் பிடித்து, [2]பிள்ளையே, எழுந்திரு என்று கூப்பிட்டார்.

௫௫ உடனே அவளுடைய ஆவி திரும்பி வந்தபடியால் அவள் எழுந்திருந்தாள்; அவளுக்குச் சாப்பாடு கொடுக்கும்படிக்குக் கட்டளையிட்டார்.

௫௬ அவளுடைய தாய் தகப்பன்மார் பிரமித்தார்கள்; [3]அப்பொழுது நடந்ததை ஒருவருக்கும் சொல்லாதபடிக்கு அவர்களுக்குக் கட்டளையிட்டார்.

## ௯. அதிகாரம்.

௧. கிறிஸ்து தம்முடைய அப்போஸ்தலர்களை அற்புதங்கள் செய்யவும், பிரசங்கிக்கவும் அனுப்பினது. ௭. அவரை ஏரோதே காண விரும்பினது. ௰. அவர் ஐயாயிரம்பேரைப் போஷித்தது. ௰௮. உலகத்தார் தம்மைக்குறித்து எவ்விதமாய் நினைக்கிறார்களென்று கேட்டு, ௨௨. தம்முடைய பாடுகளை முன்னறிவித்து, ௨௩. தம்முடைய பொறுமையை மனிதர்க்கு காண்பித்தது. ௨௮. அவர் மறுரூபப்பட்டது. ௩௭. சந்திரரோகியைக் குணமாக்கினது. ௪௪. தம்முடைய பாடுகளை மறுபடியும் சீஷருக்கு முன்னறிவித்தது. ௪௬. தாழ்மையாய் நடந்து, ௫௧. குரோதம்கொள்ளாமல் யாவரோடும் சாந்தமாயிருக்க அவர்களைப் படிப்பித்தது. ௫௭. தங்கள் சயஇஷ்டப்படி ஒப்புவாராகிலும்; அநேகர் கிறிஸ்துவைப் பின்செல்லுவார்கள் என்பது.

[4]பின்பு அவர் தம்முடைய பன்னிரண்டு சீஷரைக் கூடி வரவழைத்து, எந்தப் பசாசுகளையும் வியாதிகளையும் நீக்குவதற்கு வல்லமையையும் அதிகாரத்தையும் அவர்களுக்குக் கொடுத்து,

௨ [5]பராபரனுடைய இராச்சியத்தைக்குறித்துப் பிரசங்கிக்கும்படிக்கும், பிணியாளிகளைச் சொஸ்தமாக்கும்படிக்கும், அவர்களை அனுப்ப,

௩ [6]அவர்களுடனே சொன்னது: வழிக்குத் தடிகளையாவது, பையையாவது, அப்பத்தையாவது, காசையாவது, எடுத்துக்கொள்ளாதிருங்கள்; இரண்டு அங்கிகளையும் கொண்டுபோகவேண்டாம்.

௪ [7]நீங்கள் பிரவேசிக்கும் வீடு எதுவோ, அதிலே நீங்கள் புறப்படுகிறவரைக்கும் தங்குங்கள்.

௫ [8]உங்களை ஏற்றுக்கொள்ளாதவர்கள் எவர்களோ, அவர்களுடைய பட்டணத்தைவிட்டுப் புறப்படுகிறபொழுது, அவர்களுக்கு விரோதமான சாட்சிக்காக [9]உங்கள் கால்களின் தூளை உதறிப்போடுங்கள் என்று சொல்லி அனுப்பினார்.

௬ [10]அந்தப்படி அவர்கள் புறப்பட்டுக் கிராமங்கள்தோறும் போய்த்திரிந்து சுவிசேஷத்தைப் பிரசங்கித்து, (பிணியாளிகளை) குணமாக்கினார்கள்.

௭ ¶ [11]அக்காலத்திலே காற்பங்கு தேசாதிபதியாகிய ஏரோதே அவராலே செய்யப்பட்ட யாவையும் கேள்விப்பட்டு, சிலர் யோவான் மரித்தோரிலிருந்து எழுந்தான் என்றும்,

௮ சிலர் எலியா தோன்றினார் என்றும், சிலர் பழைய தீர்க்கதரிசிகளில் ஒருவன் உயிர் அடைந்து எழுந்தான் என்றும் சொன்னபடியினாலே கலக்கம் அடைந்து,

௯ யோவானை நான் சிரச்சேதம் பண்ணினேன்; இப்படிப்பட்டவைகளைச் செய்ய நான் கேள்விப்படுகிற இவன் யாவன் என்று ஏரோதே சொல்லி, அவரைப்[12]பார்க்க விரும்பினான்.

௰ ¶ [13]அப்போஸ்தலர்கள் திரும்பிவந்து, தாங்கள் செய்த யாவையும் அவருக்கு விவரித்துச் சொன்னார்கள்; [14]அப்பொழுது அவர் அவர்களைக் கூட்டிக்கொண்டு தனித்திருக்கும்படிக்குப் பெத்சாயிதா என்னும் பட்டணத்தைச் சேர்ந்த வனாந்தரத்திற்குப் போனார்.

௧௧ சனங்கள் அதை அறிந்து, அவருக்குப்பின் போனார்கள்; அவர்களை அவர் அங்கிகரித்துக்கொ

கி. பி. ௩௨.

1 யோவா. ௰௧. ௰௩, ௰௪.
2 லூக். ௭. ௰௪. யோவா.௰௧.௪௩.
3 மத். ௮. ௪: ௯. ௩௰. மாற். ௫:௪௩.
4 மத். ௰. ௧. மாற். ௩. ௰௩: ௬. ௭.
5 மத். ௰. ௭, ௮. மாற். ௬. ௰௨. லூக். ௰. ௧, ௯.
6 மத். ௰. ௯. மாற். ௬. ௮. லூக். ௰. ௪: ௨௨. ௩௫.
7 மத். ௰. ௰௧. மாற். ௬. ௰.
8 மத். ௰. ௰௪.
9 அப். ௰௩. ௫௧.
10 மாற். ௬. ௰௨.
11 மத். ௰௪. ௧. மாற். ௬. ௰௪.
12 லூக். ௨௩. ௮.
13 மாற். ௬. ௩௰.
14 மத். ௰௪. ௰௩.

Digitized by Google

ண்டு, பராபரனுடைய இராச்சியத்தைக்குறித்து அவர்களுடனே பேசி, சொஸ்தம் அடையவேண்டும் என்றிருந்தவர்களைச் சொஸ்தமாக்கினார்.

௰௨ ¶ [1]சாயந்தரத்திலே பன்னிருவரும் சேர்ந்து அவரை நோக்கி, இங்கே வனாந்தரமான இடத்திலே இருக்கிறோம்; ஆகையால் சனங்கள் சுற்றியிருக்கிற பட்டணங்களுக்கும் ஊர்களுக்கும் போய் விடாய்தீர்ந்து போசனம் சம்பாதித்துக்கொள்ளும்படிக்கு அவர்களை அனுப்பிவிடவேண்டும் என்றார்கள்.

௰௩ அதற்கு அவர், நீங்களே அவர்களுக்குச் சாப்பாடு கொடுங்கள் என்றார்; ஏறக்குறைய ஐயாயிரம் புருஷர் இருந்தபடியினாலே,

௰௪ அவர்கள் சொன்னது: ஐந்து அப்பமும் இரண்டு மீனும்மாத்திரம் எங்களிடத்தில் உண்டு; ஆகையால் நாங்கள் போய், இந்தச் சனங்கள் எல்லாருக்காகவும் போசனத்திற்கு ஏற்றவைகளை வாங்கிக்கொள்ளாவிட்டால், (திருத்தி) உண்டாகமாட்டாதே) என்றார்கள்.

௰௫ அவர் தம்முடைய சீஷருடனே சொன்னது: இவர்கள் ஐம்பது ஐம்பதாகப் பந்தியில் உளுக்காரும்படி செய்யுங்கள் என்றார்; அவர்கள் அப்படியே செய்தார்கள்; எல்லாரும் உளுக்காந்தார்கள்.

௰௬ அப்பொழுது அவர் அவ்வைந்து அப்பங்களையும் இரண்டு மீன்களையும் எடுத்து, வானத்தை அண்ணாந்து பார்த்து, அவைகளை ஆசீர்வதித்துப்பிட்டு, சனங்களின் முன் வைக்கும்படிக்குச் சீஷருக்குக் கொடுத்தார்.

௰௭ எல்லாரும் புசித்துத் திருத்தி அடைந்தார்கள்; அல்லாமலும் பன்னிரண்டு கூடை நிறையச் சேஷமானவைகளும் எடுத்துக்கொள்ளப்பட்டன.

௰௮ ¶ [2]பின்பு ஒருநாள் அவர் தம்முடைய சீஷர்கூட இருக்கத் தனித்துச் செபம்பண்ணினபொழுது, அவர் அவர்களை நோக்கி என்னைக்குறித்துச் சனங்கள் என்ன சொல்லுகிறார்கள் என்றுகேட்டார்.

௰௯ அவர்கள் மாறுத்தரமாகச் சொன்னது: [3]சிலர் உம்மை யோவான்ஸ்நானன் என்றும், சிலர் எலியா என்றும், சிலர் பழைய தீர்க்கதரிசிகளில் ஒருவன் உயிர் அடைந்து எழுந்தான் என்றும் சொல்லுகிறார்கள் என்றார்கள்.

௨௰ அவர் சொன்னது: நீங்கள் என்னைக்குறித்து என்ன சொல்லுகிறீர்கள் என்றார்; அதற்குப் பேதுரு, [4]நீர் பராபரனுடைய கிறிஸ்து என்றான்.

௨௧ [5]அப்பொழுது அவர்கள் அதை ஒருவருக்கும் சொல்லாதபடிக்கு, அவர்களுக்குக் கெட்டியாய்க் கட்டளையிட்டார்.

௨௨ அன்றியும் அவர் சொன்னது: [6]மனிதனுடைய குமாரன் அநேகம் பாடுபடவும், மூப்பராலும் பிரதான ஆசாரியராலும் வேதபாரகராலும் தள்ளப்படவும், கொல்லப்படவும், பின்பு மூன்றாம்நாளிலே உயிரோடெழுந்திருக்கவும் வேண்டும் என்றார்.

௨௩ ¶ [7]அல்லாமலும் அவர் எல்லாருடனேயும் சொன்னது: ஒருவன் எனக்குப் பின்செல்ல மனதாயிருந்தால், அவன் தன்னைத்தான் வெறுத்து, தன் சிலுவைமரத்தைத் தினந்தோறும் எடுத்துக்கொண்டு, என்னைப் பின்பற்றக்கடவன்.

௨௪ என்னத்தினாலெனில், தன் சீவனை இரட்சித்துக்கொள்ள விரும்புகிறவன், அதை இழந்துபோவான்; என்நிமித்தம் தன் சீவனை இழந்துபோகிறவன் அதை இரட்சித்துக்கொள்வான்.

௨௫ [8]அன்றியும் மனிதனானவன் உலகம் யாவையும் சம்பாதித்துக்கொண்டு தன்னைத்தான் அழித்தால், அல்லது சேதப்படுத்தினால்,

கி. பி. ௩௨.

1 மத். ௰௪. ௰௫. மாற். ௬. ௩௫. யோவா. ௬. ௫, ௰.
2 மத். ௰௬. ௰௩. மாற். ௮. ௨௭.
3 மத். ௰௪. ௨. ௭. ௮. ௨௪.
4 மத். ௰௬. ௰௬. யோவா. ௬. ௬௯.
5 மத். ௰௬. ௨௰.
6 மத். ௰௬. ௨௧: ௰௭. ௨௨.
7 மத். ௰. ௩௮: ௰௬. ௨௪. மாற். ௮. ௩௪. லூக். ௰௪. ௨௭.
8 மத். ௰௬. ௨௬. மாற். ௮. ௩௬.

Digitized by Google

அவனுக்கு என்ன லாபம் உண்டாயிருக்கும்?

உ௬ [1]அன்றியும் என்னைக்குறித்தும் என் வசனங்களைக்குறித்தும் வெட்கப்படுகிறவன் எவனோ அவனைக்குறித்து மனிதனுடைய குமாரன், தம்முடைய மகிமையோடும் பிதாவானவருடைய மகிமையோடும் பரிசுத்த தூதருடைய மகிமையோடும் வரும்பொழுது, வெட்கம் அடைவான்.

உ௭ [2]இங்கே நிற்கிறவர்களில் சிலர் பராபரனுடைய ஆளுகையைக் காணும்அளவும், மரணத்தை அடைவதில்லையென்று மெய்யாய் உங்களுக்குச் சொல்லுகிறேன் என்றார்.

உ௮ ¶ [3]இந்த வசனங்களை * அவர்சொல்லி ஏறக்குறைய எட்டு நாளானபொழுது, அவர் பேதுருவையும் யோவானையும் யாக்கோபையும்கூட்டிக்கொண்டு, செபம் பண்ணும்படிக்கு ஒரு மலையில் ஏறினார்.

உ௯ அவர் செபம்பண்ணுகையில், அவருடைய முகரூபம் மாறிற்று; அல்லாமலும் அவருடைய வஸ்திரம் வெண்மையாகிப் பிரகாசங்கொடுத்தது.

௩0 அன்றியும் மோசே எலியா இவ்விரண்டுபேரும் மகிமையோடே காணப்பட்டு, அவருடனே பேசி,

௩௧ அவர் எருசலேமிலே நிறைவேற்றும் மரணத்தைக்குறித்துச் சம்பாஷணை பண்ணிக்கொண்டார்கள்.

௩௨ பேதுருவும் அவனோடிருந்தவர்களும் கனமான நித்திரை அடைந்து[4]விழித்துக்கொண்டபொழுது,அவருடைய மகிமையையும் அவரிடத்தில் நின்ற அவ்விரண்டு பேரையும் கண்டார்கள்.

௩௩ அன்றியும் அவ்விருவரும் அவரைவிட்டுப் பிரிந்துபோகையில்,பேதுருஇயேசுவை நோக்கி, ஐயரே, நாம் இங்கே இருக்கிறது நல்லது, நாங்கள் உமக்கும் மோசேயுக்கும்எலியாவுக்கும்ஒரொரு குடிலாக மூன்று குடில்களை உண்டாக்குவோம் என்று தகுதியான யோசனை பண்ணாமல் சொன்னான்.

௩௪ அப்படி அவன் சொல்லுகிறபொழுது, ஒரு மேகம் வந்து அவர்கள்மேலே நிழலிட்டது; அவ்விருவரும் மேகத்திற்குள் பிரவேசிக்கையில் சீஷர் பயந்தார்கள்.

௩௫ அப்பொழுது, இவர் (எனக்கு) [5]அன்பாயிருக்கிற என்னுடையகுமாரன், [6]இவருக்குச் செவிகொடுங்கள் என்று மேகத்திலிருந்து சத்தம் உண்டாயிற்று.

௩௬ அந்தச் சத்தம் உண்டாகுகையில் இயேசுவானவர்மாத்திரம் இருந்தார்; [7]பின்பு அவர்கள் கண்டவைகளில் ஒன்றையும் அக்காலத்திலே ஒருவருக்கும் அறிவியாமல் மவுனமாய் இருந்தார்கள்.

௩௭ ¶ [8]மறுநாளிலே அவர்கள் மலையிலிருந்து இறங்கினபொழுது, அநேக சனங்கள் அவருக்கு எதிர்கொண்டு வந்தார்கள்.

௩௮ அல்லாமலும் அவர்களில் ஒருவன் கூப்பிட்டுச்சொன்னது: போதகரே, நீர் என் மகனை நோக்கிப் பார்க்கும்படிக்கு உம்மை வேண்டிக்கொள்ளுகிறேன்; அவன் எனக்கு ஒரே பிள்ளையானவன்.

௩௯ ஒரு ஆவி அவனைப் பிடிக்கிறது, உடனே அலறுகிறான்; அவனை நுரைதள்ள அலைக்கழித்து அவனைக் கசக்கினபின்பும், அவனைவிட்டு நீங்குகிறது அரிதாய் இருக்கின்றது.

௪0 அதைத் துரத்தும்படிக்கு உம்முடைய சீஷரை வேண்டிக்கொண்டேன்; அவர்களுக்கு அப்படிச் செய்யத் திராணியில்லை என்றான்.

௪௧ இயேசுவானவர் மாறுத்தரமாகச் சொன்னது: விசுவாசமில்லாதமாறுபாடான சந்ததியே, எதுவரைக்கும் உங்களிடத்திலிருந்து

கி. பி. ௩௨.

1 மத். ௰. ௩௩. மாற். அ. ௩அ. உதிமோ. உ. ௰உ.
2 மத். ௰௬. உ அ. மாற். ௯. ௧.
3 மத். ௰௭. ௧. மாற். ௯. உ.
* அல்லது வாசிபங்களை.
4 தானி. அ. ௰அ: ௰. ௯.
5 மத். ௩. ௰௭.
6 அப். ௩. உ உ.
7 மத். ௰௭. ௯.
8 மத். ௰௭. ௰௪. மாற். ௯. ௰௪,௰௭.

உங்களில் பொறுமையாயிருப்பேன் என்று சொல்லிப் பின்பு உன் மகனை இங்கே கொண்டுவா என்றார்.

சஉ அவன் வருகிறபொழுது, பசாசு அவனை நொறுக்கி அலக்கழித்தது; இயேசுவானவர் அந்த அசுத்த ஆவியை அதட்டிப் பிள்ளையைக் குணமாக்கி, அவனைத் தகப்பனுக்கு ஒப்புக்கொடுத்தார்.

சங (அதைக் கண்ட) எல்லாரும் பராபரனுடைய மகத்துவத்தைக் குறித்துப் பிரமித்தார்கள்; இயேசுவானவர்செய்த எல்லாவற்றையுங் குறித்து யாவரும் ஆச்சரியப்படுகிறபொழுது, அவர் தம்முடைய சீஷரை நோக்கிச் சொன்னது:

சச [1]மனிதனுடைய குமாரன் மனிதர் கைகளில் ஒப்புக்கொடுக்கப்படுவான்; இந்த வசனங்களை நீங்கள் நன்றாய்க் கேட்டுக் காத்துக்கொள்ளக்கடவீர்கள் என்றார்.

சரு [2]அவர்கள் அந்த வசனங்களின் கருத்தை அறியாமல் இருந்தார்கள்; அது அவர்களுக்குத் தோன்றாதபடிக்கு மறைபொருளாயிருந்தது; அல்லாமலும் அவர்கள் அந்த வசனங்களைக்குறித்து அவரிடத்தில் விசாரித்துக்கொள்ளுகிறதற்குப் பயப்பட்டார்கள்.

சசு ¶ [3]ஒருநாள் அவர்கள் தங்களில் எவன் பெரியவனாயிருப்பான் என்று யோசனை பண்ணிக்கொண்டார்கள்.

சஎ அவர்களுடைய இருதயத்தின் யோசனையை இயேசுவானவர் அறிந்து ஒரு பிள்ளையை எடுத்து, அதைத் தமக்கு அருகே நிறுத்தி,

சஅ [4]இந்தச் சிறுபிள்ளையை என் நாமத்தினிமித்தம் ஏற்றுக்கொள்ளுகிறவன் என்னை ஏற்றுக்கொள்ளுகிறான்; என்னை ஏற்றுக்கொள்ளுகிறவன் என்னை அனுப்பினவரை ஏற்றுக்கொள்ளுகிறான்; [5]ஆதலால் உங்கள் எல்லாரிலும் சிறியவனாயிருக்கிறவனே பெரியவனாய் இருப்பான் என்றார்.

கி. பி. கஉ.

1 மத். ௰எ. உஉ.
2 மாற். கூ. கஉ. லூக். உ. ருய. ௰அ.கச.
3 மத். ௰அ. க. மாற். கூ. கச.
4 மத். ௰ச௦. ௰அ. இ. மாற்.கூ.கஎ. யோவா. ௰உ. சச: ௰க. உ௦.
5 மத். உக. ௰௬. ௰௨.
6 மாற். கூ. கஅ. ௪ மோ.௰க.உஅ.
7 மத். ௰உ. க௦. லூக்.௰க.உக.
8 மாற். ௰க. ௰க. அப்.க.உ.
9 யோவா. ச. ௪,கூ.
10 உ இரா. க. ௰, ௰உ.
11 யோவா. க. ௰எ: ௰உ. சஎ.
12 மத்.அ.௰௯.

சகூ ¶ [6]அப்பொழுது யோவான் (அவரை நோக்கி,) ஐயரே, உம்முடைய நாமத்தினாலே பசாசுகளைத் துரத்துகிற ஒருவனை நாங்கள் கண்டு, அவன் எங்களுடனேகூட (உமக்குப்) பின்செல்லாதபடியினாலே அவனுக்குத் தடைபண்ணினோம் என்றான்.

ருய அதற்கு இயேசுவானவர் சொன்னது: நமக்கு [7]விரோதமாயிராதவன் நம்முடைய பங்கில் இருக்கிறான்; ஆகையால் நீங்கள் அவனுக்குத் தடைபண்ணவேண்டாம் என்றார்.

ருக ¶ [8]அவர் எடுக்கப்படும்படிக்குக் காலம் சமீபமானபொழுது, அவர் எருசலேமுக்குப் போகக் கண்ணோட்டமாகித் தமக்குமுன் பாகத் தூதர்களை அனுப்பினார்.

ருஉ அவர்கள்போய் அவருக்காக இடம் யத்தனம்பண்ணும்படிக்கு, சமாரியருடைய ஒரு கிராமத்திலே பிரவேசித்தார்கள்.

ருங [9]அவர் எருசலேம் நகரத்திற்குப் போகிறவரானபடியினாலே, அவ்வூரார் அவரை ஏற்றுக்கொள்ளவில்லை.

ருச அவருடைய சீஷராகிய யாக்கோபும் யோவானும் அதைக் கண்டு, ஆண்டவரே, [10]எலியாவானவர் செய்ததுபோல, நாங்கள் இவர்களை அழிக்கும்படிக்கு வானத்திலிருந்து அக்கினி வரும்படி சொல்லச் சித்தமாயிருக்கிறீரா என்றார்கள்.

ருரு அப்பொழுது அவர் திரும்பி அவர்களை அதட்டி, நீங்கள் இன்ன ஆவியை உடையவர்கள் என்று அறியீர்கள்.

ருசு [11]மனிதனுடைய குமாரன் மனிதருடைய சிவனை அழிக்கும்படிக்கல்ல, இரட்சிக்கும்படிக்கு வந்தானே என்றார்.

ருஎ ¶ [12]பின்பு வேறொரு கிராமத்திற்குப் போனார்கள்; அவர்கள் வழியிலே போகையில், ஒருவன் அவரை நோக்கி, ஆண்டவரே,

Digitized by Google

நீர் போகும் இடம் எங்கேயோ அங்கே உமக்குப் பின்செல்லுவேன் என்றான்.

௫௮ அவனுடனே இயேசுவானவர் சொன்னது: நரிகளுக்குக் குழிகளும், ஆகாயத்தின் பறவைகளுக்குக் கூடுகளும் உண்டு; மனிதனுடைய குமாரனோ, தன் தலையைச் சாய்க்கிறதற்கு இடம் இல்லாதவனாயிருக்கிறான் என்றார்.

௫௯ [1]வேறொருவனை அவர் நோக்கி, எனக்குப் பின்சென்றுவா என்றார்; (அதற்கு) அவன் சொன்னது: ஆண்டவரே, முன்பு நான் போய், என் தகப்பனை அடக்கம் பண்ணும்படிக்கு உத்தரவு கொடுக்கவேண்டும் என்றான்.

௬௰ அதற்கு இயேசுவானவர் சொன்னது: மரித்தோர் தங்களிடத்தில் மரித்தவர்களை அடக்கம் பண்ணட்டும், நீ புறப்பட்டுப் பராபரனுடைய ஆளுகையைப் பிரசித்தம்பண் என்றார்.

௬௧ பின்பு வேறொருவன் வந்து, [1]உமக்குப் பின்செல்லுவேன், அதற்கு முன்பு நான் போய் என் வீட்டில் இருக்கிறவர்களிடத்தில் அனுப்பிக்கொண்டு வரும்படி உத்தரவு கொடும் என்றான்.

௬௨ அவனுடனே இயேசுவானவர் சொன்னது; கலப்பையைப் பிடித்துக்கொண்டு பின்னாகப் பார்க்கிற எவனும், பராபரனுடைய இராச்சியத்திற்குத் தகுதியானவன் அல்ல என்றார்.

## ௰. அதிகாரம்.

௧. பின்பு எழுபது பேர்களை அற்புதங்கள் செய்யவும், பிரசங்கிக்கவும் அனுப்பினது. ௧௭. அவர்கள் தாழ்மையாயிருக்கவேண்டியது என்றும், இன்னதினால் சந்தோஷப்படவேண்டியது என்றும் புத்திசொன்னது. ௨௧. தம்முடைய பிதாவின் கிருபைக்காக அவரை ஸ்தோத்திரம்பண்ணி, ௨௩. தம்முடைய சபையின் மேன்மையைப் பாராட்டினது. ௨௫. நித்தியஜீவனை அடையும் வழியையும், உன் இரக்கத்தை விரும்புகிறவன் உபகரித்தவன் என்கிறதையும் படிப்பித்து, ௩௮. மார்த்தாளைக் கடிந்துகொண்டு, அவளுடைய சகோதரி மரியாளைப் புகழ்ந்தது.

பின்பு கர்த்தர் வேறு எழுபதுபேரை நியமித்து, தாம் போகச் சித்தமான பட்டணம் ஊர்கள் யாவுக்கும் அவர்களை [3]இருவர் இருவராகத் தமக்கு முன்னே அனுப்புகையில் அவர்களுடனே சொன்னதாவது: [4]அறுப்பு மிகுதியாகவே இருக்கின்றது.

௨ வேலையாள்கள் சிலர்மாத்திரம் இருக்கிறார்கள்; ஆகையால் அறுப்புக்கு எசமான் அறுக்கிறதற்கு (அதிக) வேலையாள்களை அனுப்பும்படிக்கு [5]அவரை வேண்டிக்கொள்ளுங்கள்.

௩ நீங்கள் புறப்படுங்கள், [6]ஆடுகளைக் கோனாய்களுக்குள்ளே அனுப்புகிறதுபோல உங்களை அனுப்புகிறேன்.

௪ [7]பணப்பையையாவது, சாமான்பையையாவது, பாத இரட்சைகளையாவது கூட எடுத்துக்கொண்டு போகாமலும் [8]வழியில் ஒருவனையும் வினவுதல் செய்யாமலும் இருங்கள்.

௫ [9]ஒரு வீட்டில் பிரவேசிக்கிறபொழுது, இந்த வீட்டாருக்குச் சமாதான சவுக்கியம் உண்டாவதாக என்று முதலாவது சொல்லுங்கள்.

௬ அவ்விடத்திலே சமாதானசவுக்கியத்திற்குப் பாத்திரன் ஒருவன் இருந்தால், நீங்கள் வாழ்த்திய சமாதானசவுக்கியம் அவனிடத்திலே தங்கும்; அப்படிப்பட்டவன் இல்லாதிருந்தால், அது உங்களிடமாய்த் திரும்பும்.

௭ [10]அந்த வீட்டிலே நீங்கள் இருந்து, [11]வேலையாள் தன் கூலிக்குப் பாத்திரனானபடியினாலே, [12]அவர்களுக்கு உண்டாயிருக்கிறவைகளைப் போசனபானம்பண்ணுங்கள்; வீடுகள்தோறும் போகாதிருங்கள்.

௮ ஒரு பட்டணத்தில் நீங்கள் சேர்ந்தபொழுது, அங்கே அவர்கள் உங்களைச் சேர்த்துக்கொண்டால், உங்கள் முன் வைக்கிறவைகளைப் புசித்து,

கி. பி. ௩௨.

1 மத். அ. ௨௧.
2 க இரா. ௰௯. ௨௰.
3 மத். ௰. க. மாற். ௬. ௭.
4 மத். ௯. ௩௭, ௩௮. யோவா. ௪. ௩௫.
5 ௨ தெச. ௩. ௧.
6 மத். ௰. ௰௬.
7 மத். ௰. ௯, ௰. மாற். ௬. அ. லூக். ௯. ௩.
8 ௨ இரா. ௪. ௨௯.
9 மத். ௰. ௰௨.
10 மத். ௰. ௰௧.
11 மத். ௰. ௰. ௧ கொரி. ௯. ௪. ௧ தீமோ. ௫. ௰௮.
12 ௧ கொரி. ௰. ௨௭.

௯ [1]அவ்விடத்திலுள்ள பிணியாளிகளைக் குணமாக்கி, [2]பராபரனுடைய இராச்சியம் உங்களுக்குச் சமீபமாய் வந்ததென்று அவர்களுக்கு அறிவியுங்கள்.

௰ ஒரு பட்டணத்திலே நீங்கள் பிரவேசித்தபொழுது, அங்கே அவர்கள் உங்களைச் சேர்த்துக்கொள்ளாதிருந்தால், அதின் வீதிகளில் நீங்கள் புறப்பட்டு,

௰௧ [3]எங்களில் ஒட்டின உங்கள் பட்டணத்தின் புழுதியையும் உங்களுக்கு எதிராகத் துடைத்துப்போடுகிறோம்; ஆகிலும் பராபரனுடைய ஆளுகை உங்களுக்குச் சமீபமாய் வந்ததென்கிறதை அறியக்கடவீர்கள் என்று சொல்லுங்கள்.

௰௨ [4]அந்நாளிலே சோதோம் பட்டணத்தாரிலும் அப்படிப்பட்ட பட்டணத்தார் அதிக தண்டிப்பை அடைவார்கள் என்று உங்களுக்குச் சொல்லுகிறேன்.

௰௩ [5]ஐயோ! கோராசின் பட்டணத்தாரே, ஐயோ! பெத்சாயிதா பட்டணத்தாரே, உங்களுக்கு வேதனை வரும்; [6]உங்களுக்குள்ளே நடந்த பலத்த செய்கைகள் தீருசீதோன் என்னும் பட்டணங்களில் நடந்தனவானால், அவர்கள் சீக்கிரமாய்த் (துக்கத்தினாலே) இரட்டை உடுத்திச் சாம்பலிலும் உளுக்காந்து மனந்திருப்பி இருப்பார்கள்.

௰௪ ஆகையால் நியாயத்தீர்ப்பு நாளிலே தீருசீதோன் பட்டணத்தாருக்கு வரும் தண்டிப்பு எளிதாய் இருக்கும்; நீங்கள் அதிக தண்டிப்பை அடைவீர்கள்.

௰௫ [7]வானபரியந்தம் உயர்ந்த [8]கப்பர்நாகூம் பட்டணத்தாரே, [9]நீங்களும் பாதாளபரியந்தம் தாழ்த்தப்படுவீர்கள் என்று சொல்லி,

௰௬ பின்பு மறுபடியும் சீஷரை நோக்கி, [10]உங்களுக்குச் செவிகொடுக்கிறவன் எனக்குச் செவிகொடுக்கிறான், உங்களைத் தள்ளுகிறவன் [11]என்னைத் தள்ளுகிறான்; [12]என்னைத் தள்ளுகிறவன் என்னை அனுப்பினவரைத் தள்ளுகிறான் என்று சொல்லி அனுப்பினார்.

௰௭ ¶ பின்பு [13]அந்த எழுபதுபேரும் சந்தோஷத்துடனே திரும்பி வந்து, ஆண்டவரே, பசாசுகளும் உம்முடைய நாமத்தினாலே எங்களுக்குக் கீழ்ப்பட்டிருக்கின்றன என்றார்கள்.

௰௮ அப்பொழுது அவர் அவர்களை நோக்கி, [14]சாத்தான் வானத்திலிருந்து மின்னலைப்போல விழுகிறதைக் கண்டேன்.

௰௯ இதோ, [15]பாம்புகள்மேலும், தேள்கள்மேலும், சத்துருவின் வல்லமை எல்லாவற்றின்மேலும் மிதிக்கத்தக்கதாக அதிகாரத்தை உங்களுக்குக் கொடுக்கிறேன், ஒன்றும் உங்களைச் சேதப்படுத்தமாட்டாது.

௨௰ ஆகிலும் ஆவிகள் உங்களுக்குக் கீழ்ப்பட்டிருக்கிறதினாலே நீங்கள் சந்தோஷப்படாமல் [16]உங்கள் நாமங்கள் பரமண்டலங்களில் எழுதியிருக்கிறதினாலே சந்தோஷப்படுங்கள் என்றார்.

௨௧ ¶ [17]அந்நேரத்திலே இயேசுவானவர் ஆவியிலே களிகூர்ந்து சொன்னதாவது: பிதாவே, வானத்தையும் பூமியையும் ஆளுகிறவரே, நீர் இவைகளை (உலக) ஞானிகளுக்கும் கல்விமான்களுக்கும் மறைத்துப் பாலகருக்கு வெளிப்படுத்தினபடியினாலே உம்மைத் துதிசெய்கிறேன்; ஆ பிதாவே, அப்படியே உமக்குப் பிரியமாயிருந்ததென்று சொல்லி,*

௨௨ [18]பின்பு சகலமும் என் பிதாவினால் எனக்கு ஒப்புக்கொடுக்கப்பட்டிருக்கின்றன; [19]பிதா தவிர ஒருவனும் குமாரனை அறியான்; குமாரன் தவிர ஒருவனும் பிதாவை அறியான்; குமாரன் எவனுக்கு அவரை வெளிப்படுத்தச் சித்தமாயிருக்கிறாரோ, அவனும் அவரை அறிவான் என்று சொல்லி,

கி. பி. ௩௰.

1 லூக். ௯. ௨.
2 மத். ௩. ௨: ௪. ௰௭: ௰. ௭. ௰௧. ௨௪.
3 மத். ௰. ௰௪. லூக். ௯. ௫. அப். ௰௩. ௫௧: ௰௮. ௬.
4 மத். ௰ ௰௫. மாற். ௬. ௰௧.
5 மத். ௰௧. ௨௧.
6 எசே. ௩. ௬.
7 ௧ மோ. ௰௧. ௪. ௫ மோ. ௧. ௨௮. ஏசா. ௰௪. ௰௩. எரே. ௫௧. ௫௩.
8 மத். ௰௧. ௨௩.
9 எசே. ௨௬. ௨௰: ௩௨. ௰௮.
10 மத். ௰. ௪௰. மாற். ௯. ௩௭. யோவா. ௰௩. ௨௰.
11 ௧ தெச. ௪. ௮.
12 யோவா. ௫. ௨௩.
13 ௧. ௨௪.
14 யோவா. ௰௨. ௩௧: ௰௬. ௰௧. வெளி. ௯. ௧: ௰௨. ௮, ௯.
15 மாற். ௰௬. ௰௮. அப். ௨௮. ௫.
16 ௨ மோ. ௩௨. ௩௨. சங். ௬௯. ௨௮. ஏசா. ௪. ௩. தானி. ௰௨. ௧. பிலி. ௪. ௩. எபி. ௰௨. ௨௩. வெளி. ௰௩. ௮: ௨௰. ௰௨: ௨௧. ௨௭.
17 மத். ௰௧. ௨௫.

* தம்முடைய சீஷர்களை நோக்கிச் சொன்னதாவது: என்ற வார்த்தைகள் பூர்வத்திலிருந்த சில பிரதிகளில் இந்த வசனத்தோடு சேர்க்கப்பட்டிருக்கின்றன.

18 மத். ௨௮. ௰௮. யோவா. ௩. ௩௫: ௫. ௨௭: ௰௭. ௨.
19 யோவா. ௧. ௰௮: ௬. ௪௪, ௪௬.

Digitized by Google

௨௩ ¶ பின்பு சீஷனைமாத்திரம் நோக்கி, [1]நீங்கள் இவைகளைப் பார்க்கிறவர்களானபடியினாலே, நீங்கள் பாக்கியமுள்ளவர்கள்.

௨௪ [2]அநேக தீர்க்கதரிசிகளும் இராசாக்களும் நீங்கள் பார்க்கிறவைகளைக் காணவும் நீங்கள் கேட்கிறவைகளைக் கேட்கவும் விரும்பியும், காணாமலும் கேளாமலும் போனார்கள் என்று உங்களுக்குச் சொல்லுகிறேன் என்றார்.

௨௫ ¶ அப்பொழுது நியாயசாஸ்திரி ஒருவன் எழுந்திருந்து அவரைச் சோதிக்கும்படிக்குப் போதகரே, [3]நித்தியசீவனைச் சுதந்தரித்துக்கொள்ளும்படிக்கு நான் என்னசெய்யவேண்டும் என்று கேட்டான்.

௨௬ அதற்கு அவர், வேதப்பிரமாணத்திலே என்ன எழுதியிருக்கின்றது? என்னத்தை அறிகிறீர் என்றார்.

௨௭ அவன் பிரதியுத்தரமாகச் சொன்னது: [4]உன் முழு இருதயத்தினாலும், உன் முழு ஆத்துமாவினாலும், உன் முழுப் பலத்தினாலும், [5]உன் முழுச் சிந்தையினாலும் உன் தேவனாகிய பராபரனிடத்தில் அன்புகூரவும் [6]நீ உன்னிடத்தில் அன்புகூருகிறதுபோல, பிறனிடத்தில் அன்புகூரவும் வேண்டுமென்று எழுதியிருக்கின்றது என்றான்.

௨௮ அவர் சொன்னது: நீர் சரியாய்ச் சொன்னீர்; நீர் அப்படிச் செய்தால் சீவனை அடைவீர் என்றார்.

௨௯ அப்பொழுது [7]அவன் தன்னை நீதிமான் என்று காண்பிக்கமனதாய் இயேசுவை நோக்கி, எனக்கு அடுத்த பிறன் யாவன் என்றான்.

௩௰ ¶ அதற்கு இயேசுவானவர் சொன்னது: ஒரு மனிதன் எருசலேம் நகரத்திலிருந்து எரிகோபட்டணத்துக்குப் போகையில் கள்ளர் கையில் அகப்பட்டான்; அவர்கள் அவனுடைய வஸ்திரங்களைக் கழற்றி, அவனைக் காயப்படுத்தி, அரை உயிராக விட்டுப் போனார்கள்.

௩௧ [8]அப்பொழுது தற்செயலாய் ஒரு ஆசாரியன் அந்த வழியே சென்று, அவனைக் கண்டு, பக்கமாய் விலகிப்போனான்.

௩௨ அப்படிப்போல ஒரு லேவியனும் அவ்விடத்தில் சேர்ந்து, அவனைக் கண்டு, பக்கமாய் விலகிப்போனான்.

௩௩ [9]பின்பு சமாரியன் ஒருவன் பிரயாணமாய்ப் போய், அவனிடத்தில் சேர்ந்து, அவனைக் கண்டு,

௩௪ உருக்கமாயிரங்கி, அணுகி, அவனுடைய காயங்களில் எண்ணெயும் திராட்ச இரசமும் வார்த்துக் காயங்களைக் கட்டி, அவனைத் தன் மிருகத்தின்மேல் ஏற்றி ஒரு மண்டபத்திற்குக் கொண்டுபோய்ப் பராமரித்துக்கொண்டு,

௩௫ மறுநாளிலே புறப்படுகிறபொழுது இரண்டு *வெள்ளிக்காசை எடுத்து மண்டபத்தான் கையிலே கொடுத்து, நீ இவனை விசாரித்துக்கொள்; அதிகமாய் இவனுக்காக எதையாகிலும் செலவழித்தால் அதை நான் திரும்ப வரும்பொழுது உனக்குக் கொடுப்பேன் என்றான்.

௩௬ அப்படியிருக்க, கள்ளர்கையில் அகப்பட்டவனுக்கு அந்த மூன்றுபேரில் எவன் அடுத்த பிறனாயிருந்தான்? உமக்கு எப்படித் தோன்றுகின்றது என்றார்.

௩௭ அவனிடத்தில் இரக்கம் செய்தவனே என்றான்; அப்பொழுது இயேசுவானவர் நீரும் போய் அந்தப்படியே செய்யும் என்றார்.

௩௮ ¶ பின்பு அவர்கள் பிரயாணமாய்ப் போகையில் அவர் ஒரு கிராமத்தில் பிரவேசித்தார்; அங்கே [10]மார்த்தாள் என்று பேர்கொண்ட ஒரு ஸ்திரி அவரைத் தன் வீட்டிலே உபசாரஞ்செய்தாள்.

கி. பி. ௩௨.

1 மத். ௧௩. ௰௬.
2 ௧பே. ௧. ௰.
3 மத். ௰௯. ௰௬: ௨௨. ௩௫.
4 உபா. ௬. ௫.
5 உபா. ௰. ௰௨.
6 லேவி. ௰௯. ௰௮. ரோ. ௰௩. ௯. கலா. ௫. ௰௪. யாக். ௨. ௮.
7 லூக். ௰௬. ௰௫.
8 சங். ௩௮. ௰௧.
9 யோவா. ௪. ௯.
* மத். ௨௦ ௨.
10 யோவா. ௰௧. ௧: ௰௨. ௨, ௩.

Digitized by Google

௩௯ [1]அவளுக்குச் [2]சகோதரியான மரியாள் இயேசுவின் பாதங்கள் அருகே உளுக்காந்துகொண்டிருந்து, அவருடைய வசனத்திற்குச் செவிகொடுத்தாள்.

௪௰ மார்த்தாள் மிகவும் ஊழியம் செய்யக் கவலையுள்ளவளாய் அவரிடத்தில் சேர்ந்து நின்று, ஆண்டவரே, நான்மாத்திரம் ஊழியம் செய்யும்படிக்கு என் சகோதரி என்னை விட்டிருக்கிறது உமக்குக் கவையில்லையா? அவள் எனக்கு உதவிசெய்யும்படி சொல்லும் என்றாள்.

௪௧ இயேசுவானவர் அவளுக்கு மாறுத்தரமாகச் சொன்னது: மார்த்தாளே, மார்த்தாளே, நீ அநேக காரியங்களுக்காகக் கவலைப்பட்டுக் கலக்கமாயிருக்கிறாய்.

௪௨ [3]ஒன்றுமாத்திரம் வேண்டும்; மரியாளே நல்லபங்கைத் தெரிந்துகொண்டிருக்கிறாள்; அது அவளிடத்திலிருந்து எடுக்கப்படுவதில்லை என்றார்.

## ௰௧. அதிகாரம்.

௧. பராபரன் நல்ல ஈவுகளைக் கொடுப்பாரென்று ஊக்கமாய்ச் செபம்பண்ணப் படிப்பித்து, ஊமையான ஒரு பசாசைத் துரத்தித் தூஷணமுள்ள பரிசேயரைக் கண்டித்து, ௨௮. ஆசீர்வதிக்கப்பட்டவர்கள் இன்னாரென்று காண்பித்து, ௨௯. சனங்களுக்குப் பிரசங்கித்து, பரிசேயர், வேதபாரகர், நியாயசாஸ்திரிகள் என்பவர்களுடைய மாயமான வேஷத்தைக் கண்டித்தது.

ஒருநாள் அவர் ஒரு இடத்திலிருந்து செபம்பண்ணி முடித்த பின்பு அவருடைய சீஷரில் ஒருவன் அவரை நோக்கி, ஆண்டவரே, யோவான் தன் சீஷருக்குச் செபம்பண்ண வகையைப் போதித்ததுபோல, நீரும் எங்களுக்குப் போதிக்கவேண்டும் என்றான்.

௨ அதற்கு அவர் சொன்னது: நீங்கள் செபம்பண்ணும்பொழுது [4]பரமண்டலங்களில் இருக்கிற எங்கள் பிதாவே, உம்முடைய நாமம் பரிசுத்தமாய் வணங்கப்படுவதாக; உம்முடைய இராசரீகம் வருவதாக; உம்முடைய சித்தம் பரமண்டலத்திலே செய்யப்படுகிறதுபோலப் பூமியிலேயும் செய்யப்படுவதாக.

௩ தினந்தோறும் * எங்களுக்கு வேண்டிய ஆகாரத்தைத் தாரும்.

௪ எங்களுக்குக் குற்றஞ்செய்த யாவருக்கும் நாங்கள் மன்னிக்கிறபடியினாலே, தேவரீரும் எங்கள் பாவங்களை மன்னித்தருளும்; நாங்கள் சோதனைக்குள் பிரவேசியாதபடி செய்து, பொல்லாங்கில் நின்று எங்களை இரட்சித்துக்கொள்ளும் என்று சொல்லுங்கள் என்றார்.

௫ ¶ அன்றியும் அவர் அவர்களுடனே சொன்னதாவது: உங்களில் ஒருவன் பாதி இராத்திரியிலே தனக்குச் சிநேகிதனானவனிடத்திற்குப் போய், சிநேகிதனே, என் சிநேகிதன் பிரயாணமாய் என்னிடத்திலே வந்திருக்கிறான்.

௬ அவன் போசனம் பண்ணச் செய்யும்படிக்கு என்னிடத்தில் ஒன்றுமில்லை; ஆகையால் நீ எனக்கு மூன்று அப்பங்களைக் கடன் கொடுக்கவேண்டும் என்று கேட்கும்பொழுது,

௭ வீட்டினுள் இருக்கிறவன், எனக்குத் தொந்தரவுசெய்யாதிரு; இப்பொழுது கதவு பூட்டியாயிற்று, என் பிள்ளைகள் என்னுடனே கூடப் படுத்துக்கொண்டிருக்கிறார்கள்; நான் எழுந்து உனக்குக் கொடுக்கக்கூடாதென்று மாறுத்தரமாகச் சொல்லி,

௮ [5]தனக்கு அவன் சிநேகிதனாயிருக்கிறதினாலே அவனுக்குக் கொடாதிருந்தும், பின்பு தன்னை அவன் அதிக வருத்தம்செய்கிறபடியினாலே எழுந்திருந்து அவனுக்கு வேண்டியபடிக்குக் கொடுப்பான் என்று உங்களுக்குச் சொல்லுகிறேன் என்றார்.

௯ [6]அந்தப்படி நான் உங்களுக்குச் சொல்லுகிறதாவது: வேண்டிக்கொள்ளுங்கள், அப்பொழுது உங்களுக்குக் கொடுக்கப்படும்;

கி. பி. ௩௩.

1 ௧ கொரி. ௭. ௩௨-௩௫.
2 லூக். ௮. ௩௫. அப். ௨௨. ௩.
3 சங். ௨௭. ௪.
4 மத். ௬. ௯.
* அல்லது அன்றன்று.
† அல்லது தன் வழியை விட்டு.
5 லூக். ௧௮. ௧-௭.
6 மத். ௭. ௭: ௨௧. ௨௨. மாற். ௧௧. ௨௪. யோவா. ௰௫. ௭. யாக். ௧. ௫. ௧ யோ. ௩. ௨௨.

Digitized by Google

தேடிக்கொள்ளுங்கள், அப்பொழுது கண்டடைவீர்கள்; தட்டுங்கள், அப்பொழுது உங்களுக்குத் திறக்கப்படும்.

௰ என்னத்தினாலெனில், வேண்டிக்கொள்ளுகிற எவனும் வாங்கிக்கொள்ளுகிறான்; தேடிக்கொள்ளுகிறவன் கண்டடைகிறான்; தட்டுகிறவனுக்குத் திறக்கப்படும்.

௰௧ ¶ [1]அன்றியும் உங்களில் தகப்பனானவனிடத்தில் குமாரன் அப்பம் கேட்கிறபொழுது, அவனுக்குக் கல்லைக்கொடுப்பானா? மீனைக் கேட்டால், மீனை அல்ல பாம்பைக் கொடுப்பானா?

௰௨ முட்டையைக் கேட்டால், அவனுக்குத் தேளைக் கொடுப்பானா?*

௰௩ ஆதலால் பொல்லாதவர்களாகிய நீங்கள், உங்கள் பிள்ளைகளுக்கு நல்ல ஈவுகளைச் செய்யும்படி அறிந்திருக்க, பரம பிதாவானவர் தம்மை வேண்டிக்கொள்ளுகிறவர்களுக்கு மிகவும் அதிகமாய்ப் பரிசுத்த ஆவியைக் கொடாமல் இருப்பாரா என்றார்.

௰௪ [2]ஒருநாள் ஊமையாகச்செய்கிற பசாசைத் துரத்தினார், பசாசு போனபின்பு ஊமையன் பேசினான்; அதைக்குறித்துச் சனங்கள் ஆச்சரியப்பட்டார்கள்.

௰௫ அவர்களில் சிலர் சொன்னது: [3]இவன் பசாசுகளின் தலைவனாகிய பெயேல்செபூலினாலே† பசாசுகளைத் துரத்துகிறான் என்றார்கள்.

௰௬ வேறுசிலர் அவரைச் சோதிக்கும்படிக்கு [4]வானத்திலிருந்து ஓர் அடையாளம் உண்டாகும்படி அவரிடத்திலே கேட்டுக்கொண்டார்கள்.

௰௭ [5]அவர்களுடைய சிந்தனைகளை அவர் அறிந்து அவர்களுடனே சொன்னதாவது: [6]ஒரு இராச்சியத்தார் தங்களுக்குள்ளே பிரிவினை உண்டுபண்ணினால், அவர்கள் அழிந்துபோவார்கள்; ஒரு குடும்பத்தார் தங்களுக்குள்ளே பிரிவினை உண்டுபண்ணினால், மடிந்துபோவார்கள்.

௰௮ அப்படிக்குச் சாத்தானும் தனக்குத்தானே விரோதமாகப் பிரிவு உண்டுபண்ணினால், அவனுடைய இராச்சியம் எப்படி நிற்கும்? இப்படியிருக்க நீங்கள் என்னைப் பெயேல்செபூலினாலே பசாசுகளைத் துரத்துகிறவன் என்கிறீர்கள்.

௰௯ நான் பெயேல்செபூலைக் கொண்டு பசாசுகளைத் துரத்துகிறவனானால், உங்கள் பிள்ளைகள் யாரைக்கொண்டு அவைகளைத் துரத்துகிறார்கள்? ஆகையால் அவர்கள் உங்களுக்கு நியாயத்தீர்ப்புக் கொடுக்கிறவர்களாய் இருப்பார்கள்.

௨௰ [7]நான் பராபரனுடைய வல்லமையினாலே பசாசுகளைத் துரத்துகிறபடியால், பராபரனுடைய இராச்சியம் உங்களுக்குள்ளே சடுதியாய் வந்திருக்கின்றதே.

௨௰௧ [8]ஆயுதம்தரித்த பலவான் தன் அரண்மனையின் வாசலைக் காக்கிறபொழுது, அவனுடைய பொருள் பத்திரப்பட்டிருக்கும்.

௨௰௨ [9]அவனிலும் அதிக பலவான் வந்து அவனைச் செயித்தால், அவன் நம்பியிருந்த சகல ஆயுதவர்க்கத்தையும் பறித்துக்கொண்டு, அவனுடைய உடைமைகளைப் பங்கிட்டுக்கொள்வான்.

௨௰௩ என்னுடனே [10]இராதவன் எனக்கு விரோதமாயிருக்கிறான்; என்னைப்போலச் சேர்த்துக்கொள்ளாதிருக்கிறவன் சிதற அடிக்கிறான்.

௨௰௪ ¶ [11]அசுத்த ஆவி ஒரு மனிதனைவிட்டுப் புறப்படுகிறபொழுது, அது தண்ணீரில்லாத இடங்களில் இளைப்பாறும் இடத்தைத் தேடித் திரிந்து அடையாமல் இருக்கும் காலத்தில், அது தான் விட்டுவந்த வீட்டிற்குத் திரும்பவேண்டும் என்று சொல்லி,

இ. பி. ௩௩.



1 மத். ௭. ௯.
* அல்லது செலுத்துவாரோ.
2 மத். ௯. ௩௨: ௰௨. ௨௨.
3 மத். ௯. ௩௪: ௰௨. ௨௪.
† அல்லது பெயேல் செபூலினாலே; அப்படியே ௰௮. ௰௯. வசனங்களிலும்.
4 மத். ௰௨. ௩௮: ௰௬. ௧.
5 யோவா. ௨. ௨௫.
6 மத். ௰௨. ௨௫. மாற். ௩. ௨௪.
7 ௨ மோ. ௮. ௰௯.
8 மத். ௰௨. ௨௯. மாற். ௩. ௨௭.
9 ஏசா. ௫௩. ௰௨. கொலோ. ௨. ௰௫.
10 மத். ௰௨. ௩௰.
11 மத். ௰௨. ௪௩.

Digitized by Google

௨௫ அந்தப்படி வருகிறபொழுது, அது பெருக்கிச் சிங்காரிக்கப்பட்டிருக்கக்கண்டு,

௨௬ பின்பு போய், தன்னிலும் அதிக பொல்லாத வேறே ஏழு ஆவிகளைக் கூட்டிக்கொண்டு வந்து உட்பிரவேசித்து, அங்கே குடியிருக்கும்; [1]அப்பொழுது அம்மனிதனுடைய முன்னிலைமையிலும் பின்னிலைமை அதிக கேடுள்ளதாயிருக்கும் என்றார்.

௨௭ ¶ இவைகளை அவர் சொல்லுகையில், கூட்டத்திலிருந்த ஒரு ஸ்திரியானவள் அவரை நோக்கி, [2]உம்மைச் சுமந்த வயிறும் நீர் பாலுண்ட முலைகளும் பாக்கியமுள்ளவைகள் என்று சத்தமாய்க் கூப்பிட்டாள்.

௨௮ அவர் சொன்னது: அதனிலும் அதிகமாய்ப் [3]பராபரனுடைய வாக்கைக்கேட்டு, அதைக் காத்துக்கொள்ளுகிறவர்களே பாக்கியவான்கள் என்றார்.

௨௯ ¶ அன்றியும் சனங்கள் திரளாய்க் கூடிவந்திருக்கிறபொழுது அவர் சொன்னதாவது: [4]இந்தச் சந்ததியார்கள் பொல்லாதவர்களாயிருக்கிறார்கள், ஓர் அடையாளத்தைத் தேடுகிறார்கள், ஆனாலும் யோனா தீர்க்கதரிசியின் அடையாளமேயன்றி, வேறடையாளம் இவர்களுக்குக் கொடுக்கப்படுவதில்லை.

௩௰ [5]ஆதலால் யோனாவானவன் நினிவே பட்டணத்தாருக்கு அடையாளமாயிருந்ததுபோல, மனிதனுடைய குமாரனும் இந்தச் சந்ததிக்கு இருப்பார்.

௩௧ [6]தெற்கு இராசஸ்திரி சாலோமோனுடைய ஞானத்தைக் கேட்கும்படிக்குப் பூமியின் எல்லைகளிலிருந்து வந்தாள்; சாலோமோனிலும் இந்தச் சந்ததியிலே தோன்றினவன் அதிகமாயிருக்கிறான்; (ஆனாலும் இவர்கள் கேட்கமாட்டார்கள்;) ஆதலால் அந்த இராசஸ்திரி நியாயத்தீர்ப்புநாளிலே இவர்களுடனே கூட எழும்பி, இவர்களை ஆக்கினைக்குள்ளாகத் தீர்ப்பாள்.

௩௨ [7]நினிவே பட்டணத்தார் யோனாவின் பிரசங்கத்தைக் கேட்டு மனந்திருப்பினார்கள்; யோனாவிலும் இந்தச் சந்ததியிலே தோன்றினவன் அதிகமாய் இருக்கிறான்; ஆகையால் நினிவே பட்டணத்தார் நியாயத்தீர்ப்புநாளிலே இவர்களுடனேகூட எழும்பி, இவர்களை ஆக்கினைக்குள்ளாகத்தீர்ப்பார்கள்.

௩௩ [8]அன்றியும் ஒருவனும் விளக்கைக்கொளுத்தி, அதை அந்தரங்கத்திலாவது *மரக்காலின் கீழாவது வைக்கமாட்டான்; உள்ளே வருகிறவர்கள் வெளிச்சம் காணும்படிக்கு அதை ஒரு தண்டின்மேலே வைப்பான்.

௩௪ [9]கண்ணானது சரீரத்தின் விளக்காயிருக்கின்றது; அப்படியிருக்க, உன் கண் சொஸ்தமுள்ளதாயிருந்தால் உன் சரீரம் முழுவதும் வெளிச்சம் அடைந்திருக்கும்; அது கெட்டதானால் உன் சரீரம் இருள் அடைந்திருக்கும்.

௩௫ ஆகையால் உன்னிலுள்ள வெளிச்சமானது இருளாயிராதபடிக்கு எச்சரிக்கையாயிரு.

௩௬ அப்படி உன் சரீரம் ஒரு புறத்திலும் இருள் அடைந்திராமல் முழுவதும்வெளிச்சமாயிருந்தால், அப்பொழுது ஒரு விளக்குத் தன் பிரகாசத்தினாலே† உன்னை வெளிச்சமாக்குகிறதுபோல, அது முழுவதும் வெளிச்சம் அடைந்திருக்கும் என்றார்.

௩௭ ¶ அவர் அப்படிப் பேசிக்கொள்ளுகையில், ஒருபரிசேயன் தன்னுடனே கூடப் பகல்போசனம் பண்ணும்படிக்கு அவரை வேண்டிக்கொண்டான்; அவர் போய்ப் பந்தியிருந்தார்.

௩௮ [10]போசனம்பண்ணுகிறதற்கு முன்னே அவர் ஸ்நானம்பண்

கி. பி. ௩௩.



1 யோவா. ௫. ௰௪. எபி. ௬. ௪: ௰. ௨௬. ௨ பே. ௨. ௨௰.
2 லூக். ௧. ௨௮, ௪௮.
3 மத். ௭. ௨௧. லூக். ௮. ௨௧. யாக். ௧. ௨௫.
4 மத். ௰௨. ௩௮, ௩௯.
5 யோனா. ௧. ௰௭: ௨. ௰.
6 ௧ இரா. ௰. ௧.
7 யோனா. ௩. ௫.
8 மத். ௫. ௰௫. மாற். ௪. ௨௧. லூக். ௮. ௰௬.
* மத். ௫. ௰௫.
9 மத். ௬. ௨௨.
† அல்லது ஒரு விளக்குத் தன்மின்னலினாலே.
10 மாற். ௭. ௩.

Digitized by Google

னமல் இருந்ததைப் பரிசேயன் கண்டு ஆச்சரியப்பட்டான்.

௩௯ அப்பொழுது கர்த்தர் அவனை நோக்கி, பரிசேயராகிய நீங்கள் போசனபான பாத்திரங்களின் [1]வெளிப்புறத்தைச் சுத்தம்பண்ணுகிறீர்கள்; [2]உங்கள் உள்ளம் கொள்ளையினாலும் துராசையினாலும் நிறைந்திருக்கின்றது.

௪௰ ஆ புத்தியீனரே, வெளிப்புறத்தை உண்டாக்கினவர் உட்புறத்தையும் உண்டாக்கவில்லையா?

௪௧ அப்படியிருக்க [3]உங்களுக்கு உண்டானவைகளைப் *பிச்சையாகக் கொடுங்கள், அப்பொழுது சகலமும் உங்களுக்குச் சுத்தமாய் இருக்கும்.

௪௨ [4]ஐயோ! பரிசேயராகிய உங்களுக்கு வேதனைவரும்; என்னத்தினாலெனில், நீங்கள் துளசியிலும் அருயிபூண்டிலும் சகலவித கீரைகளிலும் பத்தில் ஒன்றுகொடுத்து, நியாயத்தையும் தேவ அன்பையும் விட்டு விலகுகிறீர்கள்; இவைகளை நீங்கள் நடப்பித்து, அவைகளையும் விட்டுவிடாதிருக்கவேண்டும்.

௪௩ [5]ஐயோ! பரிசேயரே, உங்களுக்கு வேதனைவரும்; என்னத்தினாலெனில், செபஆலயங்களில் முதல்ஆசனத்தையும்சந்தைகளில் வாழ்த்துதல்களையும் விரும்புகிறீர்கள்.

௪௪ [6]ஐயோ! வஞ்சகராகிய வேதபாரகரே,பரிசேயரே,உங்களுக்கு வேதனைவரும்; [7]என்னத்தினாலெனில்,காணப்படாத பிரேதக்குழிகளைப்போல இருக்கிறீர்கள்; மனிதர் அவைகளை அறியாமல் அவைகள்மேலே நடக்கிறார்கள் என்று சொல்லுகிறபொழுது,

௪௫ ¶ நியாயசாஸ்திரிகளில் ஒருவன் அவரை நோக்கி, போதகரே, நீர் இப்படிச் சொல்லுகிறதினாலே எங்களையும் நிந்திக்கிறீரே என்றான்.

இ. பி. ௩௬.



1 மத். ௨௩. ௨௫.
2 தீத். ௧.௰௫.
3 ஏசா. ௫௮. ௭. தானி. ௪. ௨௭. லூக். ௰௨. ௩௩.
* அல்லது உம்மால் கூடிய அளவு.
4 மத். ௨௩. ௨௩.
5 மத். ௨௩. ௬. மாற். ௰௨. ௩௮, ௩௯.
6 மத். ௨௩. ௨௭.
7 சங். ௫. ௯.
8 மத். ௨௩.௪.
9 மத். ௨௩. ௨௯.
10 மத். ௨௩. ௩௪.
11 ௧ மோ.௪.௮.
12 ௨ நாள. ௨௪. ௨௰,௨௧.
13 மத். ௨௩. ௰௩.

௪௬ அதற்கு அவர் சொன்னது: ஐயோ! நியாயசாஸ்திரிகளாகிய உங்களுக்கும் வேதனைவரும்; என்னத்தினாலெனில், [8]மிகவும் பாரமான சுமைகளை மனிதர்கள் மேலே ஏற்றுகிறீர்கள்; நீங்களோ உங்கள் விரல்களில் ஒன்றினாலும் அந்தச் சுமைகளைத் தொடமாட்டீர்கள்.

௪௭ [9]ஐயோ! உங்களுக்கு வேதனைவரும்; என்னத்தினாலெனில், உங்கள் பிதாக்களால் கொலை செய்யப்பட்ட தீர்க்கதரிசிகளுடைய பிரேதக்குழிகளின்மேலே திண்ணையைக் கட்டுகிறீர்கள்.

௪௮ உங்கள் பிதாக்கள் அவர்களைக் கொலைசெய்தபின்பு நீங்கள், அவர்களுடைய கல்லறைகளின் மேல் வீடுகட்டுகிறபடியால், நீங்கள் உங்கள் பிதாக்களுடைய கிரியைகளுக்குச் சம்மதிக்கிறவர்கள் என்று சாட்சிகொடுக்கிறீர்கள்.

௪௯ ஆகையால் பராபரனுடைய ஞானம் சொல்லுகிறதாவது: [10]நான் தீர்க்கதரிசிகளையும் அப்போஸ்தலரையும் அவர்களிடத்தில் அனுப்புவேன்; அவர்களில் சிலரைக் கொலைசெய்து சிலரைத்துன்பப்படுத்துவார்கள்.

௫௰ உலகத்தோற்றம் முதற்கொண்டு [11]ஆபேலின் இரத்தம் தொடங்கி, பலிபீடத்துக்கும் தேவாலயத்துக்கும்நடுவே அழிக்கப்பட்ட [12]சகரியாவின் இரத்தம்வரைக்கும் சிந்தப்பட்ட சகல தீர்க்கதரிசிகளுடைய இரத்தமும் இந்தச் சந்ததியினிடத்திலே கேட்கப்படும் படிக்கு அப்படிச் செய்வார்கள்.

௫௧ இந்தச் சந்ததியினிடத்திலே அது கேட்கப்படும் என்று நிச்சயமாய் உங்களுக்குச் சொல்லுகிறேன்.

௫௨ [13]ஐயோ! நியாயசாஸ்திரிகளாகிய உங்களுக்கு வேதனைவரும்; என்னத்தினாலெனில், அறிவின் திறவுகோலை எடுத்துக்கொண்டு போனீர்கள்; நீங்களே உட்

பிரவேசிக்கவில்லை; உட்பிரவேசிக்கிறவர்களுக்குத் தடைபண்ணினீர்கள்* என்றார்.

௫௩ ¶ இவைகளை அவர் அவர்களுடனே பேசிக்கொண்டபொழுது, வேதபாரகரும் பரிசேயரும் அவரிடத்தில் குற்றங்காணும்படிக்கு,

௫௪ [1]அநேககாரியங்களைக்குறித்து அவர் பேசும்படி மிகவும் அவரை நெருக்கமாய் விஞவித் தந்திரமாய்க் காத்திருந்து, அவருடைய வாய்மொழியிலே தப்பிதம் காணப் பார்த்தார்கள்.

## ௰௨. அதிகாரம்.

க. கிறிஸ்து தம்முடைய சீஷர்கள் மாயத்துக்கு இடங்கொடாமல் இருக்கவும் பயமில்லாமல் தம்முடைய உபதேசங்களைப் பிரசங்கிக்கவும் போதித்தது. ௰௩. அவர் பெரிய களஞ்சியங்களைக் கட்டின ஒரு ஐசுவரியவானை உவமையாகக்கொண்டு பொருளாசையைக்குறித்துச் சனங்களை எச்சரித்தது. ௨௨. அதிகமாய் உலக காரியங்களில் கவலைப்படாமலிருக்கவும், ௩௧ பராபரனுடைய இராச்சியத்தைத் தேடவும், ௩௩ பிச்சைகொடுக்கவும், ௩௬. கர்த்தர் வந்து தட்டும்போது அவருடைய வரவை எதிர்பார்த்திருந்து திறக்கவும் வேண்டுமென்பது. ௪௧. கிறிஸ்துவின் ஊழியக்காரர் தங்களுக்கு ஒப்புவிக்கப்பட்டவைகளைக்காத்து ௪௯. துன்பம் வருமென்று எதிர் நோக்கவேண்டியதென்பது. ௫௭. ஒப்புரவாகுதல் இல்லாமல் மரணமடைவது பயங்கரமானதால், ௫௪ சனங்கள் இந்தக் காலத்தையே கிருபையின் காலமென்று நினைக்கவேண்டுமென்பது.

அத்தருணத்திலே [2]அநேக ஆயிரம் சனங்கள் ஒருவரை ஒருவர் மிதித்துக்கொள்ளத்தக்கதாகக் கூடி வந்திருக்கிறபொழுது, [3]அவர் தம்முடைய சீஷருடனே சொன்னதாவது: பிரதானமாய் நீங்கள் வஞ்சகமாகிய பரிசேயருடைய புளிப்புள்ள மாவுக்கு இடங்கொடாமல் எச்சரிக்கையாயிருங்கள்.

௨ [4]வெளியாகாத மறைபொருளும் அறியப்படாத அந்தரங்கமும் ஒன்றுமில்லை.

௩ அப்படியிருக்க நீங்கள் இருளில் பேசினது எதுவோ, அது வெளிச்சத்திலே கேட்கப்படும்; நீங்கள் அறைகளில் காதுக்குள் சொன்னது எதுவோ, அது வீடுகள்மேலே பிரசங்கிக்கப்படும்.

௪ ¶ [5]அல்லாமலும் என் சிநேகிதரான உங்களுக்கு நான் சொல்லுகிறதாவது: [6]சரீரத்தைக் கொலைசெய்தாலும் அதன்பின்பு அதிகம் ஒன்றும் உங்களுக்குச் செய்யத் திராணியில்லாதவர்களுக்குப் பயப்படாதிருங்கள்

௫ நீங்கள் பயப்படத்தக்கவர் இன்னார் என்று உங்களுக்குக் காண்பிக்கிறேன்; கொலைசெய்தபின்பு நரகத்திலே தள்ளுகிறதற்கு அதிகாரமுடையவராகிய(பராபரனுக்குப்) பயப்படுங்கள்; அவருக்கே பயப்படக்கடவீர்கள் என்று உங்களுக்குச் சொல்லுகிறேன்.

௬ இரண்டு காசுக்கு ஐந்து† அடைக்கலான் குருவிகளை விற்கிறார்கள் அல்லவோ? ஆனாலும் அவைகளில் ஒன்றும் பராபரனாலே மறக்கப்படுகிறதில்லை.

௭ உங்கள் தலையிலுள்ள எல்லா மயிர்களும் எண்ணப்பட்டிருக்கின்றன; ஆகையால் பயப்படாதிருங்கள்; அநேகம் அடைக்கலான் குருவிகளிலும் நீங்கள் மேன்மையாய் இருக்கிறீர்கள்.

௮ ¶ அன்றியும் நான் உங்களுக்குச் சொல்லுகிறதாவது: [7]எவனாகிலும் மனிதர்முன்பாக என்னை அறிக்கைபண்ணினால், மனிதனுடைய குமாரனும் பராபரனுடைய தூதர்கள் முன்பாக அவனை அறிக்கைபண்ணுவான்.

௯ மனிதர்முன்பாக என்னை மறுதலிக்கிறவன் பராபரனுடைய தூதர்கள் முன்பாக மறுதலிக்கப்படுவான்.

௰ [8]எவனாகிலும் மனிதனுடைய குமாரனுக்கு விரோதமாய்ப் பேசினால், அது அவனுக்கு மன்னிக்கப்படும்; பரிசுத்த ஆவியைத் தூஷணிக்கிறவனுக்கு அது மன்னிக்கப்படாது.

௰௧ [9]அன்றியும் செபஆலயங்களுக்கும் துரைத்தனங்களுக்கும் அதிகாரங்களுக்கும் முன்பாக உங்களைக் கொண்டுபோய் விடும்பொ

---

கி. பி. ௩௩.

* அல்லது மறித்தீர்.

1 மாற். ௰௨. ௰௩.
2 மத். ௰௬. ௬.
மாற். அ. ௰௫.
3 மத். ௰௬. ௰௨.
4 மத். ௰. ௨௬.
மாற். ௪. ௨௨.
லூக். அ. ௧௭.
பிரசங். ௰௨. ௰௪.
6 மத். ௰. ௨௮
ஏசா. ௫௧. ௭,௮,௰௨; ௰௬. ௭௪.
க. அ.

† மத். ௰. ௨௯.

7 மத். ௰. ௩௨.
மாற். அ. ௩௮.
௨ தீமோ. ௨. ௰௨. ௧ பேத. ௨. ௨௩.

8 மத். ௰௨. ௩௧,
௩௨. மாற். ௩. ௨௮. ௧ யோ. ௫. ௰௬.

9 மத். ௰. ௰௭.
மாற் ௰௩. ௯.
லூக். ௨௧. ௰௨.

Digitized by Google

ழுது எப்படி, என்னத்தை, எதிர் உத்தரவாகச் சொல்லுவோம் என்றும், எதைப் பேசுவோம் என்றும் கவலைப்படாதிருங்கள்.

௰௨ நீங்கள் பேசவேண்டியவைகளைப் பரிசுத்த ஆவியானவர் அந்நேரத்திலே உங்களுக்குப் போதிப்பாரே என்றார்.

௰௩ ¶ அப்பொழுது கூட்டத்தில் ஒருவன் அவரை நோக்கிப் போதகரே, என் சகோதரன் எனக்கும் தனக்கும் உண்டான சுதந்தர ஆஸ்தியைப்பங்கிட்டுக்கொள்ளும்படிக்குக் கட்டளையிடும் என்றான்.

௰௪ அதற்கு அவர் சொன்னது: மனிதனே, [1]என்னை உங்களுக்கு நியாயாதிபதியாகவும் பங்கிடுகிறவனாகவும் ஏற்படுத்தினவன் யாவன் என்று சொல்லி,

௰௫ [2]பின்பு எல்லாரையும் நோக்கி ஒருவனுக்கு எவ்வளவு ஆஸ்தி உண்டாயிருந்தாலும் அவைகளினாலே அவனுடைய சீவன் உண்டாயிராது; ஆகையால் நீங்கள் பொருளாசைக்கு இடங்கொடாமல் எச்சரிக்கையாய் இருக்கக்கடவீர்கள் என்றார்.

௰௬ ¶ அல்லாமலும் ஒரு உவமையை அவர்களுக்குச் சொன்னார்; அதாவது, ஐசுவரியமுள்ள ஒரு மனிதனுடைய காணி பூமி நன்றாய் விளைந்தது.

௰௭ அப்பொழுது அவன் தனக்குள்ளே சிந்தித்துக்கொண்டு சொன்னது: என் தானியத்தைச் சேர்த்துவைக்கிறதற்கு வேண்டிய இடம் இல்லையே.

௰௮ நான் என்ன செய்யலாம்? என் களஞ்சியங்களை நான் இடித்து அதிக பெரிதானவைகளைக் கட்டி, எனக்குண்டான தானியம் யாவையும் என் பொருளையும் அங்கே சேர்த்துவைக்கவேண்டும்.

௰௯ பின்பு நான், [3]என் ஆத்துமாவே, அநேக வருஷங்களுக்கு உனக்காக மிகுந்த பொருள்கள் வைக்கப்பட்டிருக்கின்றன; ஆகையால் இளைப்பாறிப் புசித்துக் குடித்து மகிழ்ச்சியாயிரு என்று என் ஆத்துமாவுடனே சொல்லவேண்டும் என்றான்.

௨௰ அப்பொழுது பராபரன் அவனுடனே சொன்னது: புத்தியீனனே, இந்த இராத்திரியிலே [4]உன் ஆத்துமாவை உன்னிடத்தில் கேட்டு எடுத்துக்கொள்வார்கள்;* [5]அப்பொழுது நீ சேகரித்தவைகள் யாருக்காக இருக்கும் என்றார்.

௨௧ [6]பராபரனில் ஐசுவரியவானாயிராமல், தனக்காகப் பொக்கிஷங்களைச் சேர்க்கிறவனுக்கு அப்படியே சம்பவிக்கும் என்று சொல்லி,

௨௨ ¶ பின்பு தம்முடைய சீஷரை நோக்கி, [7]அதினாலே நீங்கள் உங்கள் சீவனைக்குறித்து என்ன உண்போம் என்றும், உங்கள் சரீரத்தைக்குறித்து என்ன உடுப்போம் என்றும், கவலைப்படாதிருங்கள் என்று உங்களுக்குச் சொல்லுகிறேன்.

௨௩ ஆகாரத்திற்குச் சீவனும், உடைக்குச் சரீரமும், அதிகமாயிருக்கின்றதே.

௨௪ காகங்களை நோக்கிப் பாருங்கள்; அவைகள் விதைக்கிறதுமில்லை, அறுக்கிறதுமில்லை, அவைகளுக்குப் பண்டகசாலையும் களஞ்சியமும் இல்லை; [8]அவைகளுக்கும் பராபரன் உணவு கொடுக்கிறார்; பறவைகளிலும் நீங்கள் மிகவும் அதிக மேன்மையாய் இருக்கிறீர்கள் அல்லவா?

௨௫ அன்றியும் உங்களில் ஒருவன் கவலைப்படுகிறதினாலே, தன் சரீர அளவுக்கு ஒரே முழத்தையும் கூட்டுவானா?

௨௬ மிகவும் சிறியதானது உங்களால் ஆகாதிருக்க, மற்றவைகளுக்காக நீங்கள் என்னத்திற்குக் கவலைப்படுகிறீர்கள்?

௨௭ லீலியென்னும் புஷ்பங்கள் வளருகிற வகையைச் சிந்தித்துக் கொள்ளுங்கள்; அவைகள் வருக்

கி. பி. ௩௩.

1 யோவா. ௰௮. ௩௬.
2 ௧ தீமோ. ௬. ௭ ௮.
3 பிர. ௰௧. ௯. ௧ கொரி. ௰௫. ௩௨. யாக். ௫. ௫.
4 யோபு. ௨௭. ௮. ௨௨: ௨௭. ௮.
* அல்லது உன் ஆத்துமா உன்னிடத்தில் கேட்டு வாங்கப்படும். சங். ௩௯. ௬. யாக். ௪. ௧௪.
5 சங். ௩௯. ௬. எரே. ௰௭. ௰௧.
6 மத். ௬. ௨௦ ௨௧. ௧ தீமோ. ௬. ௰௮, ௰௯. யாக். ௨. ௫.
7 மத். ௬. ௨௫.
8 யோபு. ௩௮. ௪௧. சங். ௧௪௭. ௯.

Digitized by Google

துகிறதுமில்லை, நூற்கிறதுமில்லை; சாலோமோன் தானே மிகுந்த மகிமையுடையவனாயிருந்தும், அவைகளில் ஒன்றைப்போல (அழகாய்) உடுத்தியிருக்கவில்லை என்று உங்களுக்குச் சொல்லுகிறேன்.

௨௮ அப்படியிருக்க, அற்பவிசுவாசிகளே, இன்றைக்கு வெளியிலிருந்து நாளைக்கு அடுப்பில் போடப்படுகிற புல்லுக்குப் பராபரன் இவ்விதமாக உடுத்தினால், மிகவும் அதிகமாய் உங்களுக்கு அப்படிச் செய்வார் அல்லவா?

௨௯ ¶ ஆகையால் என்னத்தை உண்போம், என்னத்தைப் பானம் பண்ணுவோம் என்று நீங்கள் தேடாமலும், கலக்கம் அடையாமலும் இருங்கள்.*

௩௰ உலகத்தார் இப்படிப்பட்டவைகள் யாவையும் தேடுகிறார்கள்; இவைகள் உங்களுக்கு வேண்டுமென்று உங்கள் பிதாவானவர் அறிந்திருக்கிறார்.

௩௧ [1]விசேஷமாய்ப் பராபரனுடைய இராச்சியத்தைத் தேடுங்கள்; அப்பொழுது இவைகள் எல்லாம் உங்களுக்குக் கூடக் கொடுக்கப்படும்.

௩௨ சிறிய [2]ஆட்டுக்கூட்டமே, உங்கள் பிதா இராச்சியத்தை உங்களுக்குக் கொடுக்கப் பிரியமாய் இருக்கிறார்; ஆகையால் பயப்படாதிருங்கள்.

௩௩ [3]உங்களுக்கு உண்டானவைகளை விற்றுப் பிச்சைகொடுங்கள்; உங்கள் பொக்கிஷம் எங்கேயோ, அங்கே உங்கள் இருதயமும் இருக்கும்.

௩௪ ஆகையால் [4]பழமையாய்ப் போகாத பணப்பைகளையும் குறைந்துபோகாத பொக்கிஷத்தையும் பரமண்டலங்களில் உங்களுக்காக உண்டுபண்ணுங்கள்; அங்கே திருடன் சேருகிறதுமில்லை, பூச்சி கெடுக்கிறதுமில்லை.

௩௫ ¶ [5]உங்கள் அரைகள் கட்டப்பட்டவைகளாகவும் [6]உங்கள் விளக்குகள் எரிகிறவைகளாகவும்

௩௬ தங்கள் எசமான் கலியாணத்திலிருந்து திரும்பி வந்து தட்டும்பொழுது, உடனே அவருக்குத் திறக்கும்படிக்கு அவன் வரக் காத்திருக்கிற மனிதருக்கு ஒப்பாகவும் இருங்கள்.

௩௭ எசமான் வந்து விழித்திருக்கக் காணும் ஊழியக்காரரே பாக்கியர். [7]அவன் அரையில் கச்சை கட்டிக்கொண்டு அவர்களைப் பந்தியிருக்கச் செய்து, பின்பு வந்து அவர்களுக்கு ஊழியஞ்செய்வான் என்று மெய்யாகவே உங்களுக்குச் சொல்லுகிறேன்.

௩௮ அவன் இரண்டாம் சாமத்திலாவது மூன்றாம் சாமத்திலாவது வந்து அப்படியே கண்டால், அவ்வூழியக்காரர் பாக்கியவான்களாய் இருப்பார்கள்.

௩௯ [8]திருடன் இன்னவின்னேரத்தில் வருவான் என்று வீட்டெசமான் அறிந்தால், அவன் விழித்திருந்து தன் வீட்டைக் கன்னமிடும்படிக்கு இடங்கொடுக்கமாட்டான்; அது உங்களுக்குத் தெரியும்.

௪௰ [9]அந்தப்படியே நீங்களும் நினையாத நேரத்திலே மனிதனுடைய குமாரன் வருவதால் எத்தனமாயிருக்கக்கடவீர்கள் என்றார்.

௪௧ ¶ அப்பொழுது பேதுரு அவரை நோக்கி ஆண்டவரே, இந்த உவமையை நீர் எங்களுக்கு (மாத்திரம்) சொல்லுகிறீரோ, எல்லாருக்கும்சொல்லுகிறீரோஎன்றான்.

௪௨ அதற்குக் கர்த்தர் சொன்னது: [10]தகுதியான காலத்திலே படிகொடுக்கும்படிக்கு எசமான் தன்னுடைய பணிவிடைச்சனங்கள் மேல் வைக்கத்தக்க உண்மையும் புத்தியுமுள்ள விசாரணைக்காரன் யாவன்?

௪௩ எசமான் வரும்பொழுது, அப்படிச் செய்யக் காணப்படுகிற ஊழியக்காரன் பாக்கியவான்.

கி. பி. ௩௩.

* அல்லது கவலையுள்ள சந்தேகங் கொள்ளாதிருங்கள்.

1 மத். ௬. ௩௩.
2 மத். ௰௧. ௨௫, ௨௬.
3 மத். ௰௯. ௨௧. அப். ௨. ௪௫: ௪. ௩௪.
4 மத். ௬. ௨௦. லூக். ௰௬. ௯. ௧ தீமோ. ௬. ௰௯.
5 எபே. ௬. ௰௪. ௧ பே. ௧. ௰௩.
6 மத். ௨௫. ௧. ௭.
7 மத். ௨௪. ௪௬.
8 மத். ௨௪. ௪௩. ௧ தெச. ௫. ௨. ௨ பே. ௩. ௰. வெளி. ௩. ௩: ௰௬. ௰௫.
9 மத். ௨௪. ௪௪: ௨௫. ௰௩. மாற். ௰௩. ௩௩. லூக். ௨௧. ௩௪, ௩௬: ௧ தெச. ௫. ௬. ௨ பே. ௩. ௰௨.
10 மத். ௨௪. ௪௫: ௨௫. ௨௧. ௧ கொரி. ௪. ௨.

Digitized by Google

௪௪ [1]எசமான் தனக்கு உண்டான எல்லாவற்றின்மேலும் அவனை வைப்பான் என்று மெய்யாய் உங்களுக்குச் சொல்லுகிறேன்.

௪௫ [5]அந்த ஊழியக்காரன், என் எசமான் வரத் தாமதிக்கிறான் என்று தன் இருதயத்தில் எண்ணி, வேலைக்காரரையும் வேலைக்காரிகளையும் அடிக்கவும் புசித்துக் குடித்து வெறிகொள்ளவும் தொடங்கினால்,

௪௬ அந்த ஊழியக்காரன் நினையாத நாளிலும் அறியாத நேரத்திலும் அவனுடைய எசமான் வந்து, அவனைத் துண்டித்துப்போட்டு,* உண்மையில்லாதவர்களுடனே அவனுக்குள்ள பங்கை ஏற்படுத்துவான்.

௪௭ மிகுதியைப் பெற்றவன் எவனோ, அவனிடத்தில் மிகவும் விசாரிக்கப்படும்; மிகுயைப் பற்றிக்கொண்டவனிடத்தில் அதிகம் கேட்கப்படும்.

௪௮ [3]ஆதலால் தன் எசமானுடைய சித்தத்தை அறிந்தும், எத்தனமாயிராமலும் அவனுடைய சித்தத்தின்படி செய்யாமலும் இருக்கிற ஊழியக்காரன் அநேக அடிகளைப் பெற்றுக்கொள்வான்; ([4]சித்தத்தை)அறியாதவனாயிருந்து அடிகளுக்கு ஏற்றவைகளைச் செய்கிறவன் கொஞ்சஅடிகளைப் பெற்றுக்கொள்வான்.

௪௯ ¶ [5]அக்கினியைப் பூமியின்மேல் போடவந்தேன்; அது இப்பொழுதே பற்றி எரியும்படிக்கு விரும்புகிறேன்.

௫௰ [6]அதற்கு முன்னே நான் அடையவேண்டிய ஒரு ஸ்நானம் உண்டு, அது முடியுமளவும் நான் மிகவும் நெருக்கப்படுகிறேன்.†

௫௧ [7]நான் பூமிக்குச் சமாதானத்தைத் தரும்படிக்கே வந்தேன் என்றுநினைக்கிறீர்கள்? அதை அல்ல, [8]பிரிவினையைத் தரும்படிக்கு வந்தேன் என்று உங்களுக்குச் சொல்லுகிறேன்.

௫௨ [9]எப்படியெனில், இதுமுதல் ஒரே குடும்பத்திலே ஐந்துபேர் பிரிந்திருப்பார்கள்; மூன்றுபேர் இரண்டுபேருக்கும், இரண்டுபேர் மூன்றுபேருக்கும், விரோதமாய் இருப்பார்கள்.

௫௩ தகப்பன் மகனுக்கும், மகன் தகப்பனுக்கும், தாய் மகளுக்கும், மகள் தாய்க்கும், மாமி தன் மருமகளுக்கும், மருமகள் தன் மாமிக்கும் விரோதமாகப் பிரிந்துபோவார்கள் என்றார்.

௫௪ ¶ [10]பின்பு அவர் சனங்களுடனே சொன்னது: நீங்கள் ஒரு மேகம் மேற்கிலே எழும்புகிறதைக் காண்கிற உடனே பெருமழை வரும் என்று சொல்லுகிறீர்கள்; அந்தப்படியேயும் ஆகும்.

௫௫ அல்லாமலும் தென்றல் அடிக்கிறதை நீங்கள் காண்கிறபொழுது, காங்கை உண்டாகும் என்கிறீர்கள்; அந்தப்படியேயும் ஆகும்.

௫௬ ஆ வஞ்சகரே, பூமியின் உருவத்தையும்வானத்தின் உருவத்தையும் வகையறுக்க அறிந்திருக்கிறீர்கள்; இக்காலத்தைமாத்திரம் நீங்கள் வகையறுமல் இருக்கிறது எப்படி?

௫௭ ¶ அல்லாமலும் நியாயம் இன்னதென்று நீங்கள் உங்களாலே எண்ணிக்கொள்ளாமல் இருக்கிறதென்ன?

௫௮ [11]நீ உன் எதிராளியுடனே கூடத்துரையினிடத்துக்குப்போகிறபொழுது [12]அவனைவிட்டு நீங்கும்படிக்கு வழியிலே பிரயாசப்படுவாயாக; இல்லாவிட்டால் அவன் உன்னை நியாயாதிபதிக்கு முன்பாகக் கொண்டுபோவதுமல்லாமல் நியாயாதிபதி உன்னைச்சேவகனுக்கு ஒப்புக்கொடுப்பான், சேவகன் உன்னைக்காவலில் போடுவான்.

௫௯ ‡நீ ஒரு காசாகிலும் குறையாமல் செலுத்துகிறவரைக்கும் அவ்விடத்திலிருந்து விடுதலையாக்

இ. பி. ௬௩.

1 மத். ௨௪. ௪௭.
2 மத். ௨௪. ௪௮.
* அல்லது வெட்டிப்போட்டு. மத். ௨௪. ௫௧.
3 ௪ மோ. ௧௫. ௩௰. ௫ மோ. ௨௫. ௨. யோவா. ௯. ௪௧: ௧௫. ௨௨. அப். ௧௭. ௩௰. யாக். ௪. ௧௭.
4 ௩ மோ. ௫. ௧௭. ௧ தீமோ. ௧. ௧௩.
5 ௫. ௪௯.
6 மத். ௨௦. ௨௨. மாற். ௧௦. ௩௮.
† அல்லது வருத்தப்படுகிறேன்.
7 மத். ௧௦. ௩௪. ௩௫.
8 மீகா. ௭. ௬. யோவா. ௭. ௪௩: ௯. ௧௬: ௧௦. ௧௯.
9 மத். ௧௦. ௩௫.
10 மத். ௧௬. ௨.
11 நீதி. ௨௫. ௮. மத். ௫. ௨௫.
12 சங். ௩௨. ௬. ஏசா. ௫௫. ௬.
‡ மாற். ௧௨. ௪௨.

Digitized by Google

கப்படமாட்டாயென்று உனக்குச் சொல்லுகிறேன் என்றார்.

## ௰௩. அதிகாரம்.

௧. கிறிஸ்து கலிலேயர்முதலானவர்களுக்கு வந்த கேட்டை அறிவித்து, மற்றவர்கள் குணப்படவேண்டுமென்று பிரசங்கித்தது. ௬. வெட்டப்பட்ட கனி கொடாத அத்திமரத்தை உவமையாகக் காட்டினது ௰௧. கூனியாகிய ஒரு ஸ்திரியைக் குணமாக்கினது. ௰௮. கடுகுவிதையின் உவமையிலும், புளித்தமாவின் உவமையிலும், தம்மாலே தெரிந்துகொள்ளப்பட்டவர்களின்இருதயத்திலே நடக்கிறதும் திரு வசனத்தின் வல்லமையுள்ள கிரியைகளைக் காண்பித்து. ௨௪ நெருக்கமான வாசல்வழியாய்ப் பிரவேசிக்கப் போதித்து, ௩௧. ஏரோதையையும் எருசலேமையும் கடிந்துகொண்டது.

பிலாத்தென்பவன் சில கலிலேயருடைய இரத்தத்தை அவர்களுடைய பலிகளுடனே கலந்திருந்தான்; அந்தக் கலிலேயரைக்குறித்து அவ்வேளையிலே அங்கேயிருக்கிற சிலர் அவருடனே பேசிக்கொண்டார்கள்.

௨ அவர்களுக்குப் பிரதியுத்தரமாக இயேசுவானவர் சொன்னதாவது: அந்தக் கலிலேயர் அப்படிப்பட்டவைகளை அனுபவித்ததினாலே, மற்றெல்லாக் கலிலேயரிலும் (அதிக) பாவிகளாயிருந்தார்கள் என்று நினைக்கிறீர்கள்?

௩ அப்படி இல்லையென்று உங்களுக்குச் சொல்லுகிறேன்; நீங்கள் மனந்திரும்பாவிட்டால் எல்லாரும் அப்படிக் கெட்டுப்போவீர்கள்.

௪ அல்லாமலும் சீலோவாவிலே கோபுரம் விழுந்து பதினெட்டுப்பேரைக் கொன்றதே; எருசலேமில் குடியிருக்கிற மனிதர் எல்லாரிலும் அந்தப் பதினெட்டுப்பேரும் அதிக குற்றவாளிகளாய் *இருந்தார்கள் என்றுநினைக்கிறீர்கள்?

௫ அப்படி இல்லையென்று உங்களுக்குச் சொல்லுகிறேன்; நீங்கள் மனந்திரும்பாவிட்டால் எல்லாரும் அப்படிப்போலக் கெடுவீர்கள் என்றார்.

௬ ¶ அல்லாமலும் அவர் சொன்ன உவமையாவது: [1]ஒருவன் திராட்சத்தோட்டத்தில் ஒரு அத்திமரத்தை நாட்டியிருந்தான்.

௭ பின்பு அவன் வந்து அதிலே கனியைத் தேடினபொழுது ஒன்றும் காணவில்லை, உடனே அவன் தோட்டக்காரனை நோக்கி, இதோ, மூன்று வருஷமாய் இந்த அத்திமரத்திலே கனியைத்தேடி வருகிறேன் ஒன்றும் காணவில்லை; இதை வெட்டிப்போடு, நிலத்தையும் இது என்னத்திற்குக் கெடுக்கிறது என்றான்

௮ அதற்கு அவன் சொன்னது: ஐயா, நான் இதைச் சுற்றிக் கொத்தி எருப்போடுவேன்; ஒருவேளை இது கனி கொடுக்கும்; ஆகையால் இது இந்தவருஷம்வரைக்கும் இருக்கட்டும்.

௯ கனி கொடாதிருந்தால் நீர் இனிமேல் இதை வெட்டிப்போடலாம் என்று சொன்னான் என்றார்.

௰ ¶ ஓர் ஓய்வுநாளில் அவர் ஒரு செபஆலயத்தில் போதகம்பண்ணிக்கொண்டு இருந்தபொழுது

௰௧ பதினெட்டு வருஷமாய்ப் பலவீனமாகச்செய்கிற ஆவியையுடைய ஒரு ஸ்திரி அங்கே இருந்தாள், அவள் எவ்வளவும் நிமிரக்கூடாத கூனியாயிருந்தாள்.

௰௨ இயேசுவானவர் அவளைக்கண்டு தம்மிடத்தில் அழைத்து, ஸ்திரியே உன் பலவீனத்திலிருந்து விடுதலையாக்கப்பட்டாயென்று சொல்லி, [2]அவள்மேலே தமதுகைகளை வைத்தார்.

௰௩ உடனே அவள் நிமிர்ந்து, பராபரனைத் துதிசெய்தாள்.

௰௪ இயேசுவானவர் ஓய்வுநாளிலே குணமாக்கினதைச் செபஆலயத்தலைவன் கண்டு விசனமடைந்து சனங்களை நோக்கி, [3]வேலைசெய்யும்படிக்கான ஆறு நாள் உண்டு; [4]அவைகளிலே நீங்கள் வந்து குணமாக்கிக்கொள்ளுங்கள்; ஓய்வுநாளிலே அப்படிச் செய்யக்கூடாதென்றான்.

கி. பி. ௩௩.

* அல்லது கடன்காரர். மத். ௰௮. ௨௪. லூக் ௰௬. ௫.

1 ஏசா. ௫. ௨. மத். ௨௧. ௰௯.

2 மாற். ௰௬. ௰௮. அப். ௯. ௰௭.

3 யாத். ௨௰. ௯.

4 மத். ௰௨. ௰ மாற். ௩. ௨. லூக். ௬. ௭: ௰௪. ௩.

Digitized by Google

௰௫ அவனுக்கு மாறுத்தரமாகக் கர்த்தர் சொன்னது: வஞ்சகனே, [1]உங்களில் எவனானாலும் தன் எருதை அல்லது தன் கழுதையை ஓய்வுநாளிலே தொழுவிலிருந்து அவிழ்த்துக்கொண்டுபோய் அதற்குத்தண்ணீர்காட்டுகிறதில்லையா?

௰௬ அதுபோல ஆபிரகாமின் சந்ததியில் பதினெட்டு வருஷம் சாத்தானாலே கட்டப்பட்டிருக்கிற [2]இவளை ஓய்வுநாளிலே அந்தச் சங்கிலியிலிருந்து அவிழ்த்துவிட வேண்டியதில்லையா என்றார்.

௰௭ அப்படி அவர் சொன்னபொழுது, அவரை விரோதித்திருந்த அனைவரும் வெட்கப்பட்டார்கள்; அல்லாமலும் சனங்கள் யாவரும் அவர் செய்த மகிமையான செய்கைகளைக்குறித்துச் சந்தோஷப்பட்டார்கள்.

௰௮ ¶ [3]பின்பு அவர் சொன்னது: பராபரனுடைய இராச்சியம் எதற்கு ஒப்பாயிருக்கின்றது? அதை எதற்கு நிகர்சொல்வேன்?

௰௯ அது ஒரு கடுகுவிதைக்கு ஒப்பாயிருக்கின்றது; (எப்படியெனில்) ஒரு கடுகை ஒரு மனிதன் எடுத்துத் தன் தோட்டத்தில் போட்டான்; அது வளர்ந்து பெரியசெடியாயிற்று; அப்பொழுது ஆகாசத்துப் பறவைகள் அதின் கிளைகளில் கூடுகட்டின என்றார்.

௨௰ ¶ அன்றியும் அவர் சொன்னது: பராபரனுடைய இராச்சியத்தை எதற்கு நிகர்சொல்வேன்?

௨௧ அது புளிப்புள்ள மாவுக்கு ஒப்பாயிருக்கின்றது; எப்படியெனில் அதை ஒரு ஸ்திரி எடுத்து* மூன்று மரக்கால் மா முழுவதும் புளிப்படையத்தக்கதாக அதிலே அடைத்துவைத்தாள் என்றார்.

௨௨ ¶ [4]அன்றியும் அவர் எருசலேமுக்குப் பிரயாணமாய்ப் போகிறபொழுது, பட்டணங்கள்தோறும் கிராமங்கள்தோறும் போய் உபதேசம்பண்ணினார்.

௨௩ ¶ அப்பொழுது ஒருவன் அவரை நோக்கி ஆண்டவரே. சிலபேர்மாத்திரந்தான் இரட்சிக்கப்படுவார்களோ என்றான்.

௨௪ ¶ அதற்கு அவர் சொன்னது: [5]இடுக்கமான வாசலின் வழியாய்ச் (சிவனில்) பிரவேசிக்க மிகவும் பிரயாசப்படுங்கள்; [6]என்னத்தினாலெனில், அநேகர் உட்பிரவேசிக்கத் தேடினாலும் பிரவேசிக்கமாட்டார்கள் என்று உங்களுக்குச் சொல்லுகிறேன்.

௨௫ [7]வீட்டெசமான் எழுந்திருந்து கதவைப் பூட்டின பின்பு, [8]நீங்கள் வெளியே நின்று [9]கதவிலே தட்டி ஆண்டவரே, ஆண்டவரே, எங்களுக்குத் திறக்கவேண்டும் என்று கூப்பிடத்தொடங்கும் காலத்திலே [10]அவர், நான் உங்களை அறியேன் என்றும் நீங்கள் விட்டுவந்த இடத்தை அறியமாட்டேன் என்றும் உங்களுடனே சொல்லும்பொழுது

௨௬ நீங்கள் உமக்கு முன்பாகப் போசன பானம்பண்ணினோமே நீர் எங்கள் வீதிகளிலே போதகம் பண்ணினீரே என்று சொல்லுவீர்கள்.

௨௭ [11]ஆனாலும் அவர் சொல்வது: உங்களை அறியேன்; நீங்கள் விட்டுவந்த இடத்தை அறியேன்; [12]அக்கிரமக்காரராகிய நீங்கள் எல்லாரும் என்னைவிட்டுப்போங்கள் என்று சொல்லுவார் என்று உங்களுக்குச் சொல்லுகிறேன்.

௨௮ [13]நீங்கள் ஆபிரகாம் ஈசாக்கு யாக்கோபு என்பவர்களையும் சகல தீர்க்கதரிசிகளையும் பராபரனுடைய இராச்சியத்தில் உள்ளவர்கள் என்றும் உங்களைப் புறம்பே தள்ளப்பட்டவர்கள் என்றும் காணும்பொழுது, [14]உங்களுக்கு அழுகையும் பற்கடிப்பும் உண்டாயிருக்கும்.

௨௯ அன்றியும் கிழக்கிலும், மேற்கிலும், வடக்கிலும், தெற்கிலுமிருந்து சனங்கள்வந்து பராபர

ஜ. பி. ௩௯௬௩.

1 லூக். ௰௪. ௫.
2 லூக். ௰௯. ௯.
3 மத். ௰௩. ௩௧. மாற். ௪. ௩௦.
* மத். ௰௩. ௩௩.
4 மத். ௯. ௩௫. மாற். ௬. ௬.
5 மத். ௭. ௰௩.
6 யோவா. ௭. ௩௪: அ. ௨௧: ௰௩. ௩௩. உரோ. ௯. ௩௧.
7 சங். ௩௨. ௬. ஏசா. ௫௫. ௬.
8 மத். ௨௫. ௰.
9 லூக். ௬. ௪௬.
10 மத். ௭. ௨௩: ௨௫. ௰௨.
11 மத். ௭. ௨௩: ௨௫: ௪௧. ௨௫. ௪௧.
12 சங். ௬. ௮. மத். ௨௫. ௪௧.
13 மத். ௮. ௰௧.
14 மத் ௮ ௰௨: ௰௩. ௪௨: ௨௪. ௫௧.

Digitized by Google

னுடைய இராச்சியத்தில் பந்தியிருப்பார்கள்.

௩௰ [1]அப்பொழுது பிந்தினோர் முந்தினோராய் இருப்பார்கள்; முந்தினோர் பிந்தினோராவார்கள் என்றார்.

௩௧ ¶ அந்த நாளிலே சில பரிசேயர் அவரிடத்தில் போய், ஏரோதே உம்மைக் கொலைசெய்ய மனதாயிருக்கிறான்; ஆகையால் நீர் இவ்விடத்தை விட்டுப் போகவேண்டும் என்றார்கள்.

௩௨ அவர்களுடனே அவர் சொன்னது: நீங்கள் போய் இன்றைக்கும் நாளைக்கும் நான் பசாசுகளைத் துரத்தி ஆரோக்கியங்களைச் செய்து முடித்து, [2]மூன்றாம் நாளில் நிறைவடைவேன்.

௩௩ முக்கியமாக எருசலேமுக்குப் புறம்பே ஒரு தீர்க்கதரிசி மடிந்து போகிறது வழக்கமல்லாதபடியால், நான் இன்றைக்கும் நாளைக்கும் பின் வருகிற நாளிலேயும் இவ்விடங்களில் நடக்கவேண்டியதாய் இருக்கின்றதென்று அந்த நரிக்குச் சொல்லுங்கள்.

௩௪ [3]எருசலேம் பட்டணமே, எருசலேம் பட்டணமே, உன்னிடத்தில் அனுப்பப்பட்டவர்கள் மேல் கல்லெறிந்து தீர்க்கதரிசிகளைக் கொலைசெய்கிறாயே; ஒரு கோழி தன் குஞ்சுகளைத் தன் சிறகுகளின்கீழே சேர்த்துக்கொள்ளுகிற விதமாய் நான் அநேகந்தரம் உன் பிள்ளைகளைச் சேர்த்துக்கொள்ள வேண்டும் என்றிருந்தேன், நீங்கள் வரமாட்டோம் என்கிறீர்கள்.

௩௫ (ஆதலால்) [4]உங்கள் வாசஸ்தலம் உங்களுக்குப் பாழாக விடப்படும்; அல்லாமலும் [5]நீங்கள் பராபரனுடைய நாமத்தினாலே வருகிறவர் தோத்திரம் செய்யப்படத்தக்கவர் என்று சொல்லும் காலபரியந்தம் என்னைக் காணாமல் இருப்பீர்கள் என்றார்.

கி. பி. ௩௩.

1 மத். ௰௯. ௩௰: ௨௰. ௰௬. மாற். ௰. ௩௧.
2 எபி. ௨. ௯.
3 மத். ௨௩. ௩௭.
4 ௩ மோ. ௨௬. ௩௧, ௩௨. சங். ௬௯. ௨௫. ஏசா. ௧. ௭. தானி. ௯. ௨௭. மீகா ௩. ௰௨.
5 சங். ௱௰௮. ௨௬. மத். ௨௩. ௩௯. மாற். ௰௧. ௰. லூக். ௰௯. ௩௮. யோவா. ௰௨. ௰௩.
6 மத். ௰௨. ௰.
7 ௨ மோ. ௨௩. ௫. ௫ மோ. ௨௨. ௪. லூக். ௰௩. ௰௫.

## ௰௪. அதிகாரம்.

*௧. கிறிஸ்து நீர்க்கோவையுள்ள ஒருவனை ஓய்வுநாளிலே குணமாக்கினது. ௭. தாழ்மையாய் நடக்கவேண்டுமென்றும், ௰௨. எளியவர்களுக்கு விருந்துசெய்யவேண்டுமென்றும் கற்பித்தது. ௰௫. பராபரனுடைய வசனத்தை அசட்டைபண்ணுகிற லவுகீக சிந்தையுள்ள மனிதர்கள் பரமண்டலத்தில் பிரவேசிக்கக் கூடாததைப் பெரியவிருந்தின் உவமையிலே காண்பித்தது. ௨௫. சிலுவையைச் சுமந்து தம்முடைய சீஷர்களாய் இருக்கவேண்டியவர்கள் வெட்கத்துடன் பின்வாங்கிப் போய், ௩௪. சாரமற்ற உப்பைப்போல அபிரயோசனமுள்ளவர்களாய் இராதபடிக்கு முன்னடியாய் கஷ்டத்தையும் நஷ்டத்தையும் சிந்திக்கப் பார்க்க வேண்டுமென்பது.*

ஒரு ஓய்வுநாளில் அவர் பரிசேயருக்குள்ளே தலைவரானவர்களில் ஒருவனுடைய வீட்டிலே போசனம்பண்ணும்படிக்குப் போகிறபொழுது,

௨ பாண்டுவியாதியுள்ள ஒரு மனிதன் அவருக்கு முன்பாக நிற்கையில், அவர்கள் அவரை நோக்கிப் பார்த்துக்கொண்டிருந்தார்கள்.

௩ அப்பொழுது இயேசுவானவர் நியாயசாஸ்திரிகளையும் பரிசேயரையும் நோக்கி, [6]ஓய்வுநாளிலே குணமாக்குகிறது நியாயமா என்றார்.

௪ அதற்கு அவர்கள் பேசாமல் இருந்தார்கள்; அப்பொழுது அவர் அவனைப் பிடித்துக் குணமாக்கி,

௫ அனுப்பிப் பின்பு அவர்களுடனே சொன்னது: [7]உங்களில் எவனாகிலும் தன் கழுதையாவது எருதாவது ஓய்வுநாளில் ஒரு கிணற்றிலே விழுந்தால், உடனே அதைத் தூக்கிவிடானோ என்றார்.

௬ அதற்கு மாறுத்தரம் சொல்ல அவர்கள் திராணியில்லாதிருந்தார்கள்.

௭ ¶ விருந்துக்கு அழைக்கப்பட்டவர்கள் பந்தியில் முதல் இடங்களைத் தெரிந்துகொண்டதை அவர் பார்த்து, அவர்களுக்கு உவமையாய்ச் சொன்னது:

௮ நீ ஒருவனால் கலியாணத்துக்கு அழைக்கப்பட்டபொழுது, பந்தியில் முதல் இடத்தில் உட்கா

Digitized by Google

கி. பி. ௩௩.

ராதிரு? என்னத்தினாலென்றால் உன்னிலும் அதிக கனமுள்ளவன் அவனால் அழைக்கப்பட்டிருக்க,

௯ உன்னையும் அவனையும் அழைத்தவன் உன்னிடத்தில் வந்து, இவருக்கு இடங்கொடும் என்று சொல்ல, நீ வெட்கத்தோடே தாழ்ந்த இடத்தில் போயிருக்கவேண்டியதாய் இருக்கும்.

௰ ஆகையால் [1]நீ அழைக்கப்பட்டபொழுது, நீ போய்த் தாழ்ந்த இடத்தில் உளுக்காருவாயாக; அப்பொழுது உன்னை அழைத்தவன் உன்னிடத்தில் வந்து, சிநேகிதனே, மேலான இடத்தில் போயிரும் என்று சொல்ல, பந்தியில் இருக்கிறவர்களுக்குமுன்பாக உனக்குக் கனமுண்டாகும்.

௰௧ [2]அப்படிக்கு எவன் தன்னை உயர்த்துகிறானோ அவன் தாழ்த்தப்படுவான்; எவன் தன்னைத் தாழ்த்துகிறானோ அவன் உயர்த்தப்படுவான் என்றார்.

௰௨ ¶ அல்லாமலும் அவர் தம்மை விருந்துக்கு அழைத்தவனுடனே சொன்னது: நீர் பகல்விருந்தை அல்லது இராவிருந்தைப்பண்ணுகிறபொழுது, உமது சிநேகிதரையும் சகோதரரையும் மற்ற இனத்தாரையும் ஐசுவரியமுள்ள பிறரையும் அழைக்கக்கூடாது; அழைத்தால் அவர்களும் உம்மை அழைப்பார்கள்; அதினாலே உமக்குப் பதில் பலன் உண்டாகும்.

௰௩ நீர் விருந்து பண்ணும்பொழுது, [3]ஏழைகள், ஊனர், சப்பாணிகள், குருடர், இப்படிப்பட்டவர்களை அழைப்பீராக.

௰௪ அப்பொழுது அவர்கள் உமக்குப் பதில்கொடுக்கத் திராணியில்லாதபடியால் நீர் பாக்கியராயிருப்பீர்; நீதிமான்கள் உயிரோடு எழுந்திருக்கும் காலத்திலே உமக்குப் பதில் அளிக்கப்படும் என்றார்.

௰௫ ¶ அவரோடேகூடப் பந்தியிருந்தவர்களில் ஒருவன் இந்த வசனங்களைக் கேட்டபொழுது, அவன் அவரை நோக்கி, [4]பராபரனுடைய இராச்சியத்தில் போசனம்பண்ணுகிறவன் பாக்கியவான் என்றான்.

௰௬ அதற்கு அவர் சொன்னது: [5]ஒரு மனிதன் பெரிய விருந்து பண்ணி,

௰௭ அநேகரை அழைத்து, விருந்துவேளையிலே தன் ஊழியக்காரனை நோக்கி, [6]நீ அழைக்கப்பட்டவர்களிடத்திற்குப் போய், சகலமும் எத்தனமாயிற்று, ஆகையால் வாருங்களென்று சொல் என்று அனுப்பினான்.

௰௮ அப்பொழுது அவர்கள் எல்லாரும் போக்குச்சொல்லத் தொடங்கினார்கள்; ஒருவன் சொன்னது: ஒரு வயல்நிலத்தைக் கொண்டேன், நான்போய் அதைப்பார்க்க அவசியமாயிருக்கின்றது; ஆகையால் எனக்கு மன்னிக்கவேண்டும் என்று உன்னை வேண்டிக்கொள்ளுகிறேன் என்றான்.

௰௯ வேறொருவன் சொன்னது: ஐந்து ஏர்மாடு கொண்டேன், அவைகளை நான் போய்ச் சோதிக்கவேண்டும், ஆகையால் எனக்கு மன்னிக்கும்படிக்கு உன்னை வேண்டிக்கொள்ளுகிறேன் என்றான்.

௨௰ வேறொருவன் சொன்னது: பெண்ணை விவாகம்பண்ணினேன், அதினாலே நான் வரக்கூடாது என்றான்.

௨௧ பின்பு அந்த ஊழியக்காரன் வந்து, அவைகளைத் தன் எசமானுக்கு அறிவித்தான்; அப்பொழுது வீட்டெசமான் கோபமடைந்து, தன் ஊழியக்காரனை நோக்கி, நீ சீக்கிரமாய்ப் பட்டணத்தின் தெருக்களிலும் வீதிகளிலும் போய், தரித்திரரையும் ஊனரையும் சப்பாணிகளையும் குருடரையும் இங்கே அழைத்துக்கொண்டுவா என்றான்.

௨௨ அந்தப்படி ஊழியக்காரன் அழைத்து வந்து, ஆண்டவரே, நீர் கட்டளையிட்டபடி செய்தாயிற்று,

1 வாக். ௨௫. ௬, ௭.
2 யோபு. ௨௨. ௨௯. சங். ௧௮. ௨௭. வாக். ௨௯. ௨௩. மத். ௨௩. ௧௨. லூக். ௧௮. ௧௪. யாக். ௪. ௬. ௧ பே. ௫. ௫.
3 நெகே. ௮. ௰, ௰௨.
4 வெளி. ௰௯. ௯.
5 மத். ௨௨. ௨.
6 வாக். ௯. ௨, ௫.

Digitized by Google

௨௩ பின்னும் இடம் உண்டு என்றான்; அப்பொழுது எசமான் ஊழியக்காரனுடனே சொன்னது: நீ வழிகளிலேயும் வேலிகள் அருகேயும் புறப்பட்டுப்போய், என் வீடுநிறைய வரும்படிக்குச் சனங்களை வருந்திக் கூட்டிக்கொண்டுவா.

௨௪ அழைக்கப்பட்டிருந்த [1]அந்த மனிதரில் ஒருவராகிலும் என்னுடைய விருந்தை ருசி பார்ப்பதில்லை என்று உங்களுக்குச் சொல்லுகிறேன் என்று சொன்னான் என்றார்.

௨௫ ¶ பின்பு அநேக சனங்கள் அவரோடேகூடப் பிரயாணமாய்ப் போகையில், அவர் திரும்பிப் பார்த்து அவர்களுடனே சொன்னதாவது:

௨௬ [2]ஒருவன் என்னிடத்தில் வந்தும் [3]தன் தகப்பனையும், தாயையும், மனைவியையும், பிள்ளைகளையும், சகோதரரையும், சகோதரிகளையும், [4]தன் சுயசீவனையும் பகையாவிட்டால் என் சீஷனாய் இருக்கமாட்டான்.

௨௭ [5]அல்லாமலும் தன் சிலுவை மரத்தைச் சுமந்துகொண்டு எனக்குப் பின்செல்லாதவன் என் சீஷனாய் இருக்கமாட்டான்.

௨௮ [6]உங்களில் எவனாகிலும் ஒரு கோபுரத்தைக் கட்ட மனதாயிருந்தால் தான் அஸ்திபாரம் போட்டபின்பு, அதை முடியக் கட்டுகிறதற்குத் திராணியில்லாமல் இருக்கும்பொழுது,

௨௯ அதைப் பார்க்கிறவர்கள் எல்லாரும், இந்த மனிதன் கட்டத்தொடங்கி முடிக்கிறதற்குத் திராணி இல்லை என்று தன்னைப் பரியாசம்பண்ணுதைபடிக்கு,

௩௰ அவன் முன்பு உளுக்காந்து அதைக் கட்டித் தீர்க்கிறதற்குத் திராணியுண்டா இல்லையா என்று அறியும்படி, செல்லும்செலவைக் கணக்குப் பாராமல் இருப்பானா?

௩௧ அல்லது, எந்த இராசாவானாலும் மற்றொரு இராசனுடனே யுத்தம்செய்யப் போகிறதற்கு முன்பு, உளுக்காந்து தனக்கு விரோதமாய் இருபதினாயிரம் சேவகரைக் கொண்டுவருகிறவனோடே பதினாயிரம் சேவகரைக்கொண்டு எதிர்க்கக்கூடுமா கூடாதா என்று ஆலோசனைபண்ணாமல் இருப்பானா?

௩௨ கூடாதென்று அறிந்தால், அவன் தூரத்தில் இருக்கையில், தானாதிபதிகளை அனுப்பிச் சமாதானத்துக்காகக் கேட்டுக்கொள்ளும்படிக்கு (அப்படிச் செய்வான் அல்லவா?)

௩௩ அதுபோல உங்களில் எவனானாலும் தனக்கு உண்டான எல்லாவற்றையும் வெறுத்துவிடாவிட்டால் என் சீஷனாய் இருக்கமாட்டான்.

௩௪ ¶ [7]உப்பானது நல்லதுதான்; உப்பானது சாரம் அற்றுப்போனால், எதினாலே அது சாரமாக்கப்படும்?

௩௫ அது நல்ல நிலத்திலாகிலும் எருவிலாகிலும் போடப்படத்தக்கதல்ல; அதை வெளியே கொட்டிப்போடுவார்கள்; கேட்கிறதற்குக் காதுள்ளவன் கேட்கக்கடவன் என்றார்.

## ௰௫. அதிகாரம்.

௧. காணாமற்போன ஆட்டையும், ௮. காணாமற்போன பணத்தையும், ௰௧. கெட்டுப்போன குமாரனையும் உவமைகளாகச் சொன்னது.

[8]அன்றியும் சகல ஆயக்காரரும் பாவிகளும் அவருடைய வசனங்களைக் கேட்கும்படிக்கு அவரிடத்தில் சேர்ந்தார்கள்.

௨ அப்பொழுது பரிசேயரும் வேதபாரகரும் முறுமுறுத்து, இவர் [9]பாவிகளை ஏற்றுக்கொண்டு அவர்களோடே சாப்பிடுகிறார் என்றார்கள்.

௩ அவர்களுடனே அவர் சொன்ன உவமையாவது:

௪ ¶ [10]உங்களில் யாவனாகிலும் தனக்கு உடைமையான நூறுஆடு

கி. பி. ௩௩.



1 மத். ௨௧. ௪௩: ௨௨. ௮. அப். ௰௩. ௪௬.
2 உபா. ௰௩. ௬: ௩௩. ௯. மத். ௰. ௩௭.
3 ரோ. ௯. ௰௩.
4 வெளி. ௰௨. ௰௧.
5 மத். ௰௬. ௨௪. மாற். ௮. ௩௪. லூக். ௯. ௨௩. ௨ தீமோ. ௩. ௰௨.
6 நீதி. ௨௪. ௨௭.
7 மத். ௫. ௰௩. மாற். ௯. ௫௰.
8 மத். ௯. ௰.
9 அப். ௰௧. ௩. கலா. ௨. ௰௨.
10 மத். ௰௮. ௰௨.

Digitized by Google

கி. பி. ௩௰.

களில் ஒன்றை இழந்தால், தொண்ணூற்றொன்பது ஆடுகளையும் வனாந்தரத்தில் விட்டுப்போய், இழந்ததைக் கண்டுபிடிக்கும் பரியந்தம் தேடாமல் இருப்பானா?

௫ கண்டுபிடித்தபின்பு, அவன் அதைச் சந்தோஷமாய்த் தன் தோள்களின்மேல் ஏற்றிக்கொண்டு வீட்டுக்கு வந்தபொழுது,

௬ சிநேகிதரையும் அயலாரையுங் கூட வரவழைத்து, காணாமல் போன [1]என் ஆட்டைக் கண்டுபிடித்தேன்; ஆகையால் என்னோடேகூடச் சந்தோஷப்படுங்கள் என்பான் அல்லவா?

௭ அதுபோல [2]மனந்திரும்ப அவசியப்படாத தொண்ணூற்றொன்பது நீதிமான்களிலும், மனந்திரும்புகிற ஒரே பாவியைக்குறித்துப் பரமண்டலத்தில் உள்ளவர்களுக்குச் சந்தோஷம் உண்டாகும் என்று உங்களுக்குச் சொல்லுகிறேன்.

௮ ¶ அல்லது பத்துத் திராகுமா *பணத்தை உடைய பெண்ணொருத்தி ஒரு திராகுமாவை இழந்தால், விளக்கைக் கொளுத்தி வீட்டைப் பெருக்கி அதைக் கண்டுபிடிக்கும்பரியந்தம் நன்றாய்த் தேடாமல் இருப்பாளா?

௯ கண்டுபிடித்த பின்பு அவள் சிநேகிதிகளையும் அயல்வீட்டுக்காரிகளையும் கூட வரவழைத்து, நான் இழந்த திராகுமாவைக் கண்டுபிடித்தேன்; ஆகையால் என்னோடேகூடச் சந்தோஷப்படுங்கள் என்பாள் அல்லவா?

௰ அதுபோல மனந்திரும்புகிற ஒரே பாவியைக்குறித்துப் பராபரனுடைய தூதருக்குமுன்பாகச் சந்தோஷம் உண்டாயிருக்கின்றதென்று உங்களுக்குச் சொல்லுகிறேன் என்றார்.

௧௧ ¶ பின்னும் அவர் சொன்னதாவது: ஒருமனிதனுக்கு இரண்டு குமாரர் இருந்தார்கள்.

௧௨ அவர்களில் [3]இளையவன் தகப்பனை நோக்கி, தகப்பனே, ஆஸ்தியில் எனக்கு வரும் பங்கைத் தரவேண்டும் என்றான்; அந்தப்படி அவன் அவர்களுக்குப் பொருளைப் பங்கிட்டான்.

௧௩ சிலநாளுக்குப் பின்பு இளையமகன் எல்லாவற்றையும் சேர்த்துக்கொண்டு தூரதேசத்திற்குப் பிரயாணமாய்ப் போய், அங்கே கெட்ட மார்க்கமாய்ச் சீவனம் பண்ணித் தன் ஆஸ்தியை அழித்துப்போட்டான்.

௧௪ எல்லாவற்றையும் அவன் செலவழித்த பின்பு, அத்தேசத்திலே மிகுந்த பஞ்சகாலம் உண்டாயிற்று; அப்பொழுது அவனுக்குக் குறைவுவரத் தொடங்கினபடியினாலே,

௧௫ அவன் போய், அந்தத் தேசத்துக் குடிகளில் ஒருவனைச் சேர்ந்துகொண்டான்; அந்தக் குடியானவன் அவனைத் தன் வயல்களிலே பன்றிகளை மேய்க்கும்படிக்கு அனுப்பினான்.

௧௬ அப்பொழுது பன்றிகள் தின்னுகிற தவிடுகளினாலே தன் வயிற்றை நிரப்ப ஆசைப்பட்டான்; அவற்றையும் ஒருவனும் அவனுக்குக் கொடுக்கவில்லை.

௧௭ அப்படியிருக்கும் காலத்தில் அவன் புத்தியடைந்து சொன்னதாவது: ஆ என் தகப்பனிடத்திலே எத்தனை கூலிக்காரர் மிகுந்த உணவை உடையவர்களாய் இருக்கிறார்கள்; நான் இங்கே பசியினாலே கெட்டுப்போகிறேன்.

௧௮ நான் எழுந்து என் தகப்பனிடத்திற்குப்போய், தகப்பனே, தேவனுக்கும் உமக்கும் விரோதமாய்ப் பாவஞ்செய்தேன்.

௧௯ இதுமுதல் நான் உம்முடைய குமாரன் என்று அழைக்கப்படுவதற்கு அபாத்திரனாய் இருக்கிறேன்; உம்முடைய கூலிக்காரரில் ஒருவனைப்போல என்னை வைத்துக்கொள்ளும் என்று சொல்லவேண்டும் என்றெண்ணி,

[1] ௧ பே. ௨. ௰, ௨௫.

[2] லூக். ௫. ௩௨.

* அல்லது ஏழைப் பேனிஸ்கு, அல்லது ஒரு ரோமருடைய ஒரு பேனிக்குச் சரியான அரைக்கால் அவுன்சு வெள்ளி. மத். ௰௮. ௨௮.

[3] மாற். ௰௨. ௭௭.

௨௰ எழுந்து புறப்பட்டுத் தன் தகப்பனிடத்திற்குப் போனான்; [1]அப்பொழுது அவன் தூரமாய் இருக்கையில் தகப்பன் அவனைக் கண்டு, உருக்கமாய் இரங்கி ஓடி வந்து, அவனுடைய கழுத்தைக் கட்டிக்கொண்டு அவனை முத்தம் செய்தான்.

௨௧ குமாரன் அவனை நோக்கி, [2]தகப்பனே, தேவனுக்கும் உமக்கும் விரோதமாய்ப் பாவம் செய்தேன்; இதுமுதல் உம்முடைய குமாரன் என்று அழைக்கப்படுவதற்கு நான் பாத்திரன் அல்லவென்று சொன்னபொழுது,

௨௨ தகப்பன் தன் வேலைக்காரரை நோக்கி, நீங்கள் (போய்) முக்கியமான வஸ்திரத்தைக் கொண்டுவந்து இவனுக்கு உடுத்தி, இவனுடைய கைக்கு மோதிரத்தையும் கால்களுக்குப் பாத இரட்சைகளையும் கொடுத்து,

௨௩ பின்பு கொழுத்த கன்றைக் கொண்டுவந்து அடித்துச் சமையுங்கள்.

௨௪ [3]என் குமாரனாகிய இவன் மரித்தான், மறுபடியும் உயிரோடிருக்கிறான்; இவன் காணாமல் போனான், இப்பொழுது காணப்பட்டான்; ஆகையால் நாம் புசித்து மகிழ்ச்சியாய் இருக்கக்கடவோம் என்றான்; அந்தப்படி அவர்கள் சந்தோஷப்படத் தொடங்கினார்கள்.

௨௫ அவனுடைய மூத்த குமாரன் வயலில் இருந்தான்; அவன் திரும்பி வீட்டுக்குச் சமீபமாய்வந்தபொழுது, கீதவாத்தியத்தையும் நடனக்களிப்பையும் கேட்டு,

௨௬ வேலைக்காரரில் ஒருவனை அழைத்து, இதென்ன என்று விசாரித்தான்.

௨௭ வேலைக்காரன் அவனை நோக்கி, உன் சகோதரன் வந்தான்; உன் தகப்பன் அவனைச் சுகத்தோடே திரும்பப் பெற்றுக்கொண்டபடியினாலே கொழுத்த கன்றை அடிப்பித்தான் என்றான்.

௨௮ அப்பொழுது அவன் கோபம் அடைந்து, உள்ளேபோக மனதில்லாதிருந்தான்; ஆதலால் தகப்பன் வெளியே வந்து, அவனை மிகவும் வேண்டிக்கொண்டு அழைத்தான்.

௨௯ அவன் தகப்பனுக்குப் பிரதியுத்தரமாகச் சொன்னது: இவ்வளவு வருஷம் நான் உமக்கு ஊழியம்செய்து, உமது கற்பனையை ஒருக்காலும் மீறி நடக்கவில்லை; அப்படியிருந்தும் நான் என் சிநேகிதரோடே மகிழ்ச்சியாய் இருக்கும்படிக்கு ஒருக்காலும் நீர் ஒரு ஆட்டுக்குட்டியை எனக்குக் கொடுக்கவில்லையே.

௩௰ உம்முடைய பொருள்களை வேசிகளோடே பட்சித்த உமது குமாரனாகிய இவன் வந்தபொழுது, கொழுத்த கன்றை இவனுக்காக அடிப்பித்தீர் என்றான்.

௩௧ அதற்குத் தகப்பன் சொன்னது: மகனே, நீ எப்பொழுதும் என்னோடிருக்கிறாய்; அல்லாமலும் எனக்கு உண்டான யாவும் உன்னுடையவைகளாய் இருக்கின்றன.

௩௨ [4]உன் சகோதரனாகிய இவன் மரித்தான், மறுபடியும் உயிரோடிருக்கிறான்; காணாமல்போனான், (இப்பொழுது)காணப்பட்டான்; ஆனபடியினாலே நாம் மகிழ்ச்சியாகிக் களிப்படையவேண்டுமே என்று சொன்னான் என்றார்.

கி. பி. ௩௩.

1 அப். ௨. ௩௧. எபே. ௨. ௰௩, ௰௭.

2 சங். ௫௧. ௪.

3 ௩௨.௨௪. எபே. ௨. ௧: ௫. ௰௪. வெளி. ௩. ௧.

4 ௨௪. ௨௪.

## ௰௬. அதிகாரம்.

௧. அநீதியுள்ள உக்கிராணக்காரனைக்குறித்த உவமை. ௰௪. மிறிந்து பொருளாசையும் வஞ்சனையும் உள்ள பரிசேயரைக் கடிந்தது. ௰௯. ஐசுவரியவானையும் ஏழையான இலாசருவையுங்குறித்த உவமை.

அன்றியும் அவர் தம்முடைய சீஷரோடு சொன்னதாவது: ஐசுவரியமுள்ள மனிதனுக்கு ஒரு உக்கிராணக்காரன் இருந்தான்; அவன் எசமானுடைய ஆஸ்திகளை

அழிக்கிறதாக அவனுக்கு அறிவித்தார்கள்.

௨ அப்பொழுது எசமான் அவனை அழைத்து, உன்னைக்குறித்து நான் இப்படிக் கேள்விப்பட்டிருக்கிறேன்; நீ இனிமேல் உக்கிராணக்காரனாயிருக்கக் கூடாது; ஆகையால் உன் உக்கிராணக்கணக்கைக் கொடு என்றான்.

௩ அப்பொழுது உக்கிராணக்காரன் தனக்குள்ளே எண்ணிக்கொண்டதாவது: என் எசமான் உக்கிராண விசாரிப்பை என்னிலிருந்து எடுத்துக்கொள்ளுகிறபடியினாலே என்ன செய்யலாம்? (நிலம்) கொத்துகிறதற்குப் பெலன் இல்லை; இரக்க வெட்கமாயிருக்கின்றது.

௪ உக்கிராண விசாரிப்பை விட்டுத் தள்ளப்படும்பொழுது, என்னைத் தங்கள் வீடுகளில் சேர்த்துக் கொள்ளுகிறதற்கான (சிநேகிதர்கள்) உண்டாகும்படிக்குச் செய்யவேண்டிய வகை தெரியவந்தது என்று எண்ணி,

௫ ¶ தன் எசமானிடத்தில் கடன் பட்டவர்களை ஒருவன் ஒருவனாக அழைத்து, முதலாவது வந்தவனை நோக்கி, நீ என் எசமானிடத்தில் பட்டகடன் எவ்வளவு என்றான்; அதற்கு அவன், நூறுகுடம்* எண்ணெய் என்றான்.

௬ அப்பொழுது உக்கிராணக்காரன் அவனைநோக்கி, நீ உன் சீட்டை எடுத்துச் சீக்கிரமாய் உளுக்காந்து, ஐம்பது என்று எழுது என்றான்.

௭ பின்பு அவன் வேறொருவனை நோக்கி, நீ பட்டகடன் எவ்வளவு என்றான்; அதற்கு அவன், நூறு கலன்†கோதுமை என்றான்; அப்பொழுது உக்கிராணக்காரன் அவனைநோக்கி, நீ உன் சீட்டை எடுத்து எண்பது என்று எழுது என்றான்.

௮ அநீதியுள்ள உக்கிராணக்காரன் விவேகமாய்ச் செய்தபடியினாலே எசமான் அவனைப் புகழ்ந்தான்; [1]இவ்விதமாய் ஒளியின்பிள்ளைகளிலும் இப்பிரபஞ்சத்தின் பிள்ளைகள் தங்கள் சந்ததியில் அதிக விவேகமாய் இருக்கிறார்கள்.

௯ ¶ நானும் உங்களுக்குச் சொல்லுகிறதாவது: [2]நீங்கள் மாளும்பொழுது, உங்களை நித்தியமான வீடுகளில் சேர்த்துக்கொள்ளும்படிக்குக் கபடமுள்ள லவுகீகப் பொருளால்‡ உங்களுக்காகச் சிநேகிதரைச் சம்பாதியுங்கள்.

௰ [3]கொஞ்சத்திலே உண்மையுள்ளவன் அநேகத்திலேயும் உண்மையுள்ளவனாய் இருப்பான்; கொஞ்சமாய் அநீதி செய்கிறவன் அநேகமாயும் அநீதி செய்வான்.

௰௧ அப்படியிருக்க நீங்கள் கபடமுள்ள லவுகீகப் பொருளிலே§ உண்மை இல்லாமல் இருந்தால், மெய்யான பொருள்களை உங்களுக்கு யார் நம்பிக்கையோடே ஒப்புவிப்பார்கள்?

௰௨ அல்லாமலும் நீங்கள் மற்றொருவனுடையதை உண்மையில்லாமையாய் நடத்தினால், உங்களுக்குச் சொந்தமாக எதையாகிலும் யார் உங்களுக்குக் கொடுப்பார்கள்?

௰௩ [4]எந்த வேலைக்காரனானாலும் இரண்டு எசமான்களுக்கு அடிமைசெய்யமாட்டான்; ஒருவனைப் பகைத்து மற்றவனைச் சிநேகிப்பான்; அல்லது ஒருவனைப் பற்றிக்கொண்டு மற்றவனை அசட்டைபண்ணுவான்; நீங்கள் பராபரனுக்கும் லவுகீகப் பொருளுக்கும் அடிமையாய் இருக்கமாட்டீர்கள் என்றார்.

௰௪ ¶ [5]பணத்தின்மேல் ஆசையுள்ளவர்களாகிய பரிசேயரும் இந்த வசனங்கள் யாவையும் கேட்டு அவரைக்குறித்துப் பரியாசம்பண்ணினார்கள்.

௰௫ அப்பொழுது அவர் அவர்களைநோக்கி, [6]நீங்கள் மனிதர்முன்பாக உங்களை நீதிமான்கள் என்று

கி. பி. ௩௩.

* ஐந்து மரக்கால் கொள்ளத்தக்க ஓர் அளவு. எசே. ௪௫. ௰, ௰௧, ௰௪.

† இந்தக் கலம் பன்னிரண்டு மரக்கால் கலமாயிராமல் அந்தேசத்தில் வழங்கின ஏறக்குறைய ௰௧ - மரக்கால் கொள்ளத்தக்க கலமென்றறிக.

1 யோவா. ௰௨. ௩௬. எபே. ௫. ௮. ௧ தெச. ௫. ௫.

2 தானி. ௪. ௨௭. மத். ௬. ௰௯: ௰௯. ௨௰. லூக். ௰௧. ௪௧. ௧ தீமோ. ௬. ௰௭, ௰௮, ௰௯.

‡ அல்லது மம்மோன்.

3 மத். ௨௫. ௨௧. லூக். ௰௯. ௰௭.

§ அல்லது மம்மோன்.

4 மத். ௬. ௨௪.

5 மத். ௨௩. ௰௪.

6 லூக். ௰. ௨௯.

Digitized by Google

காண்பிக்கிறீர்கள்; [1]ஆனாலும் பராபரன் உங்கள் இருதயங்களை அறிந்திருக்கிறார்; [2]மனிதருக்குள்ளே மேன்மையாய் எண்ணப்பட்டிருக்கிறது பராபரனுக்கு முன்பாக அருவருப்பாய் இருக்கின்றது.

௰௬ [3]நியாயப்பிரமாணமும் தீர்க்கதரிசிகளுடைய பிரமாணங்களும் யோவான்வரைக்கும் சென்றன; அதுமுதல் பராபரனுடைய இராச்சியம் சுவிசேஷமாய் அறிவிக்கப்பட்டு வருகின்றது; யாவரும் வலுமையாய் அதற்கு உட்படுகிறார்கள்.

௰௭ [4]வானமும் பூமியும் ஒழிந்துபோகிறது எளிதாயிருந்தாலும், வேதப்பிரமாணத்தில் ஒரு எழுத்தின் உறுப்பும்கெட்டுப்போகாது.

௰௮ [5]தன் மனைவியைத் தள்ளி வேறொருத்தியை விவாகம் பண்ணுகிறவன் விபசாரம்செய்கிறான்; புருஷனாலே தள்ளப்பட்டவளை விவாகம்பண்ணுகிறவனும் விபசாரம்செய்கிறான்.

௰௯ ¶ அன்றியும் ஐசுவரியமுள்ள ஒரு மனிதன் இருந்தான்; அவன் இரத்தாம்பரமும் மெல்லிதான உடையும் தரித்து, அநுதினமும் சம்பிரமமாய் வாழ்ந்துகொண்டிருந்தான்.

௨௰ அல்லாமலும் இலாசரு என்னப்பட்ட ஒரு தரித்திரன் இருந்தான்; அவன் பருக்கள் நிறைந்த தேகமுள்ளவனாய் அந்த ஐசுவரியவானுடைய வாசலின் அருகே கிடந்து, அவனுடைய பந்தியிலிருந்து விழும் உச்சிட்டங்களாலே தன் பசியை ஆற்ற ஆசையாயிருந்தான்.

௨௧ அதுவுமல்லாமல் நாய்கள் வந்து அவனுடைய பருக்களை நக்கும்.

௨௨ பின்பு அந்தத் தரித்திரனானவன் மரித்துத் தேவதூதரால் ஆபிரகாமினுடைய மடியிலே கொண்டுபோய் விடப்பட்டான்; ஐசுவரியவானும் மரித்து அடக்கம் பண்ணப்பட்டான்.

௨௩ பின்பு அவன் நரகத்திலே வேதனைப்படுகிறபொழுது தன் கண்களை உயர்த்தித் தூரத்திலே ஆபிரகாமையும் அவனுடைய மடியிலே இலாசருவையும் கண்டு,

௨௪ தகப்பனாகிய ஆபிரகாமே இந்தச் [6]சுவாலையிலே மிகுந்த வேதனைப்படுகிறேன்; [7]ஆகையால் நீர் என்மேல் இரங்கி இலாசரு தன் விரலின் நுனியைத் தண்ணீரிலே தோய்த்து, என்னுடைய நாவைக் குளிரப்பண்ணும்படிக்கு அவனை அனுப்பவேண்டும் என்று கூப்பிட்டான்.

௨௫ அதற்கு ஆபிரகாம் சொன்னது: [8]மகனே, நீ பூமியிலே உயிரோடிருந்த காலத்திலே, உன் நன்மைகளைப் பெற்றுக்கொண்டாயே; இலாசருவும் அப்படியே தின்மைகளைப் பெற்றுக்கொண்டான், அதை நினைத்துக்கொள்; இப்பொழுது இவன் தேற்றப்படுகிறான், நீ வேதனைப்படுகிறாய்.

௨௬ அதுவுமல்லாமல் இவ்விடத்தைக் கடந்து உங்களிடத்துக்கு வரவும், அல்லது அவ்விடத்தைக் கடந்து எங்களிடத்துக்கு வரவும் மனதுள்ளவர்களுக்குக் கூடாதபடிக்கு, எங்களுக்கும் உங்களுக்கும் நடுவே பெரும்பிளப்பு உண்டாக்கப்பட்டிருக்கின்றதே என்றான்.

௨௭ அதற்கு அவன் சொன்னது: தகப்பனே, அப்படியானால் (பூமியிலே) எனக்கு ஐந்துபேர் சகோதரர் உண்டு; அவர்களும் வேதனையுள்ள இவ்விடத்துக்கு வராதபடிக்கு இவன் போய், அவர்களுக்கு (இதைக்குறித்துச்) சாட்சி கொடுக்கும்பொருட்டாய்,

௨௮ இவனை என் தகப்பனுடைய வீட்டுக்கு அனுப்பும் என்று உம்மை வேண்டிக்கொள்ளுகிறேன் என்றான்.

கி. பி. ௩௩.

1 சங். ௭. ௯.
2 ௧ சாமு. ௰௬. ௭.
3 மத். ௪. ௰௨:௰௩. ௰௨, ௰௩. லூக். ௭. ௨௯.
4 சங். ௱௨. ௨௬, ௨௭. ஏசா. ௫௰. அ: ௰௩. ௧. ௨௰. இ. ௰அ. ௧ பே. ௧. ௨௫.
5 மத். ௫. ௩௨: ௰௯. ௯. மாற். ௰. ௰௧. ௧ கொரி. ௭. ௰, ௰௧.
6 ஏசா. ௬௬. ௨௪. மாற். ௯. ௪௪.
7 சகரி. ௰௪. ௰௨.
8 யோபு. ௨௧. ௰௩. லூக். ௬. ௨௪.

Digitized by Google

௨௯ அதற்கு ஆபிரகாம் சொன்னது: [1]அவர்களுக்கு மோசேயும் தீர்க்கதரிசிகளும் உண்டே; அவர்களுக்குச் செவிகொடுக்கலாமே என்றான்.

௩௰ அவன் சொன்னது: அப்படியல்ல, தகப்பனாகிய ஆபிரகாமே, மரித்தோரிலிருந்து ஒருவன் அவர்களிடத்துக்குப்போனால் மனந்திரும்புவார்கள் என்றான்.

௩௧ அதற்கு அவன் சொன்னது: அவர்கள் மோசேயுக்கும் தீர்க்கதரிசிகளுக்கும் செவிகொடாமல் இருந்தால் [2]மரித்தோரிலிருந்து ஒருவன் எழுந்துபோனாலும் சம்மதிக்கமாட்டார்கள் என்று சொன்னான் என்றார்.

## ௰எ. அதிகாரம்.

க. பிறருக்கு இடறல்செய்யாமலிருக்கவும், ங. ஒருவரையொருவர் மன்னிக்கவும் மிகுந்த கற்பித்து, சு. விசுவாசத்தின் பலனைச் சொன்னது. எ. நாம் பராபரனுக்கு அடங்கவேண்டியதேயொழிய அவர் நமக்கு அடங்கவேண்டியதில்லையென்பது. ௧௧. இயேசு பத்துக் குஷ்டரோகிகளைக் குணமாக்கி, ௨௰. பராபரனுடைய இராச்சியத்தையும் மனுஷகுமாரனுடைய வருகையையும்குறித்துச் சொன்னது.

அன்றியும் அவர் தம்முடைய சீஷருடனே சொன்னதாவது: [3]குற்றம்செய்வதற்கான காரணங்கள் நடவாமல் இருக்கிறது கூடாத காரியந்தான்; ஆனாலும் ஐயோ! அவைகளைச் செய்கிறவனுக்கு வேதனைவரும்.

௨ அவன் இந்தச் சிறியரில் ஒருவன் குற்றம்செய்கிறதற்குக் காரணமாய் இராதபடிக்கு அவனுடைய கழுத்திலே எந்திரக்கல்லைக் கட்டிச் சமுத்திரத்திலே அமிழ்த்தினால் அவனுக்கு நலமாய் இருக்கும்.

௩ நீங்கள் சாவதானமாயிருக்கக்கடவீர்கள்; [4]பிறனொருவன் உனக்குவிரோதமாய்ப் பாவம்செய்தானால் அவனைக் கடிந்துகொள்; [5]அவன் மனஸ்தாபப்பட்டால் அவனுக்கு மன்னிப்பாயாக.

௪ அவன் ஒரு நாளிலே ஏழுதரம் உனக்கு விரோதமாய்ப் பாவம்செய்து, ஒரு நாளிலே ஏழுதரம் உன்னிடத்தில் வந்து, மனஸ்தாபப்படுகிறேன் என்று சொன்னால், அவனுக்கு மன்னிப்பாயாக என்றார்.

௫ ¶ அப்பொழுது அப்போஸ்தலர் கர்த்தரை நோக்கி, விசுவாசம் எங்களுக்குள்ளே பெருகும்படி செய்யும் என்றார்கள்.

௬ அதற்குக் கர்த்தர் சொன்னது: [6]கடுகுவிதை அவ்வளவு விசுவாசம் உங்களுக்கு உண்டாயிருந்தால், நீங்கள் இந்தக் காட்டத்திமரத்தை நோக்கி, நீ வேருடனே பிடுங்கப்பட்டுக் கடலில் நாட்டப்படுவாயாக என்று சொல்ல, அது உங்களுக்குக் கீழ்ப்படியும்.

எ ¶ அன்றியும் உங்களில் எவனாகிலும் உழுதலையாவது மேய்த்தலையாவது செய்கிற (தன்) வேலைக்காரனை வயலிலிருந்து வரக் (காணும்) பொழுது, நீ போய்ச் சாப்பிடு என்று உடனே அவனுக்குச் சொல்லுவான்?

அ நீ எனக்காக இராப்போசனத்தை எத்தனம்பண்ணிக் கச்சைக் கட்டிக்கொண்டு, நான் போசனபானம் பண்ணுமளவும் [7]எனக்கு ஊழியம்செய்; பின்பு நீ போசனபானம் பண்ணலாம் என்றல்லவா அவனுடனே சொல்லுவான்?

௯ அந்தவேலைக்காரன் தனக்குக் கட்டளையிட்டவைகளைச் செய்கிறபடியினாலே எசமான் அவனை உபசாரம்செய்வானா? அப்படிச் செய்யமாட்டான் என்று நினைக்கிறேன்.

௰ அப்படிப்போல நீங்களும், உங்களுக்குக் கட்டளையிடப்பட்ட யாவையும் செய்தபொழுதும், [8]நாங்கள் உபசாரம்பெற்றுக்கொள்ளுதற்கான ஊழியக்காரர் அல்ல, எங்களுக்குக் கட்டளையிடப்பட்டதைமாத்திரம் செய்தோமே என்று சொல்லுவீர்களாக என்றார்.

கி. பி. ௩௩.

1 ஏசா. அ. ௨௰: ௩௪.௰௧.யோவா. ௫. ௩௯, ௪௫. அப். ௰௫. ௨௧: ௰எ. ௰௧.
2 யோவா. ௰௨.௰, ௰௧.
3 மத். ௰அ.௬, எ. மாற். ௯. ௪௨. ௧கொரி.௰௧.௰௯.
4 மத். ௰அ. ௰௫, ௨௧.
5 ௩மோ. ௰௯.௰எ. யாக். ௰எ. ௰. யாக். ௫. ௰௯.
6 மத். ௰எ. ௨௰: ௨௧. ௨௧. மாற். ௯. ௨௩: ௰௧. ௨௩.
7 லூக். ௰௨. ௩எ.
8 யோபு. ௨௨. ௩: ௩௫. ௭. சங். ௰௯. ௨. மத். ௨௫. ௩௰. ௨ரோ. ௩. ௰௨: ௰௧.௩௫.௧கொரி. ௯. ௰௯, ௰எ. பிலே. ௰௧.

Digitized by Google

யக ¶ [1]அன்றியும் அவர் எருசலேமுக்குப் பிரயாணமாய்ப் போகையில், சமாரியா நாட்டின் வழியாயும் கலிலேயா நாட்டின் வழியாயும் நடந்து,

யஉ ஒரு கிராமத்தில் பிரவேசிக்கிறபொழுது, குஷ்டரோகமுள்ள பத்துப்பேர் அவருக்கு எதிராக வந்து [2]தூரத்திலே நின்று,

யங இயேசுவே, ஐயரே, எங்கள்மேல் இரங்கும் என்று கூப்பிட்டார்கள்.

யச அவர்களை அவர் கண்டு, [3]நீங்கள் போய், உங்களை ஆசாரியருக்குக் காண்பியுங்கள் என்றார்; அந்தப்படி அவர்கள் போகையில் சுத்தமானார்கள்.

யரு அப்பொழுது அவர்களில் ஒருவன் தான் ஆரோக்கியம் அடைந்ததைக் கண்டு,

யசு திரும்பி மிகுந்த சத்தத்துடனே பராபரனைத் துதித்து அவருடைய பாதத்தின் அருகே வணக்கமாய் விழுந்து, அவருக்குத் தோத்திரம் செலுத்தினான்.

யஎ அவன் சமாரியா தேசத்தான்; அப்பொழுது இயேசுவானவர் சொன்னது: பத்துப்பேரும் அல்லவோ சுத்தமானார்கள், ஒன்பதுபேர் எங்கே?

யஅ பராபரனுக்குத் துதியைச் செலுத்தும்படிக்கு இந்த அந்நியனே ஒழிய மற்றொருவனும் திரும்பி வரவில்லையா என்று சொல்லி,

யகூ அவனை நோக்கி, [4]நீ எழுந்து போ, உன் விசுவாசம் உன்னை இரட்சித்தது என்றார்.

உய ¶ பராபரனுடைய இராச்சியம் எப்பொழுது வரும் என்று பரிசேயர் அவரிடத்தில் விசாரித்தபொழுது, அவர் அவர்களுக்கு மறுமொழியாகச் சொன்னது: பராபரனுடைய இராச்சியம் வேடிக்கைப் பிரகாரமாக * வாராது.

உக [5]இதோ இங்கே என்றும், அதோ அங்கே என்றும் சொல்லமாட்டார்கள்; [6]பராபரனுடைய இராச்சியம் உங்களுக்குள் † இருக்கின்றதே என்றார்.

உஉ ¶ பின்னும் சீஷருடனே அவர் சொன்னது: [7]மனிதகுமாரனுடைய நாள்களில் ஒன்றைக் காணும்படிக்கு நீங்கள் ஆசைப்படும் காலம் வரும்; அதைக் காணாமல் இருப்பீர்கள்.

உங [8]அப்பொழுது சிலர் உங்களை நோக்கி, இதோ இங்கே இருக்கிறார் என்றும், அதோ அங்கே இருக்கிறார் என்றும் சொல்லும் காலத்தில், நீங்கள் புறப்படாமலும் பின்செல்லாமலும் இருங்கள்.

உச [9]மின்னனது வானத்தின் ஒரு பக்கத்திலிருந்து மற்றொரு பக்கம்வரைக்கும் பிரகாசிக்கிறதுபோல, மனிதனுடைய குமாரன் தன்னுடைய நாளில் இருப்பார்.

உரு [10]அதற்குமுன்பு அவர் அநேகம் பாடுகளை அனுபவித்து, இந்தச் சந்ததியினாலே தள்ளப்படவேண்டியிருக்கின்றது.

உசு [11]நோவாவின் நாள்களில் நடந்ததுபோல, மனிதகுமாரனுடைய நாள்களிலும் நடக்கும்.

உஎ நோவா பேழைக்குள் பிரவேசித்த நாள்வரைக்கும் சனங்கள் போசனபானம்பண்ணியும், பெண்கொண்டும் பெண்கொடுத்தும் வந்தார்கள்; அந்நாளிலே சலப்பிரளயம் வந்து எல்லாரையும் அழித்தது.

உஅ [12]லோத்தினுடைய நாள்களில் நடந்ததுபோலவும் நடக்கும்; சனங்கள் போசனபானம் பண்ணியும், பொருள்களைக் கொண்டும் விற்றும், செடிகளை நாட்டியும், (வீடுகளைக்) கட்டியும் வந்தார்கள்.

உகூ [13]லோத்தென்பவன் சோதோம் ஊரைவிட்டுப் புறப்பட்ட நாளிலே வானத்திலிருந்து அக்கினியும் கந்தகமும் பெய்து எல்லாரையும் அழித்தது.

கி. பி. ஙரு.

1 மத். கூ. உக, உய. யோவா. ச. ச.
2 க மோ. யங. சக.
3 க மோ. யச. உ: யச. உ. மத். அ. ச. லூக். ரு. யச.
4 மத். கூ. உஉ. மாற். ரு. கச: ய. உய. லூக். எ. ரு0: அ. சஅ: யஅ. சஉ.
* அல்லது கண்ணோக்காண.
5 உங. ச.
6 உரோ. யச. யஎ.
† அல்லது உங்கள் நடுவில். யோவா. க. உசு.
7 மத். கூ. யரு. யோவா. யசு. யஉ.
8 மத். உச. உங. மாற். யங. உக. லூக். உக. அ.
9 மத். உச. உஎ.
10 மாற். அ. கக: கூ. கக: ய. கங. லூக். கூ. உஉ.
11 க மோ. எ. மத். உச. கஎ.
12 க மோ. யகூ.
13 க மோ. யகூ. யசு, உச.

Digitized by Google

௩௰ [1]மனிதனுடைய குமாரன் வெளிப்படும் நாளில் அப்படியே இருக்கும்.

௩௧ [2]அந்த நாளிலே வீட்டின் மேல் இருப்பவன் வீட்டுக்குள் இருக்கிறதன் பண்டங்களை எடுத்துக் கொண்டு போகும்படிக்கு இறங்காமல் போகக்கடவன்; அன்றியும் வயலில் இருப்பவன் பின்னிட்டுத் திரும்பாமல் போகக்கடவன்.

௩௨ [3]லோத்தினுடைய மனைவியை நினையுங்கள்.

௩௩ [4]எவனாகிலும் தன் ஜீவனை இரட்சித்துக்கொள்ளத் தேடினால் அதை இழந்துபோவான்; எவனாகிலும் அதை இழந்தால் அதைக் காத்துக்கொள்ளுவான்.

௩௪ [5]அந்த இராத்திரியில் ஒரே படுக்கையின்மேல் கிடக்கும் இரண்டுபேரில் ஒருவன் பிடித்துக் கொள்ளப்படுவான், மற்றவன் விட்டுவிடப்படுவான்.

௩௫ மாவை அரைக்கும் இரண்டு பெண்களில் ஒருத்தி பிடித்துக் கொள்ளப்படுவாள், மற்றவள் விட்டுவிடப்படுவாள் *

௩௬ வயலில் இருக்கும் இரண்டு பேரில் ஒருவன் பிடித்துக்கொள்ளப்படுவான், மற்றவன் விட்டுவிடப்படுவான் என்று உங்களுக்குச் சொல்லுகிறேன் என்று சொன்ன பொழுது,

௩௭ அவர்கள் அவரை நோக்கி, ஆண்டவரே, [6]எங்கே என்றார்கள்; அதற்கு அவர் சொன்னது: பிணம் எங்கேயோ அங்கே கழுகுகள் சேரும் என்றார்.

## ௰௮. அதிகாரம்.

* மேலும் வேண்டிக்கொண்ட கைம்பெண்ணை உவமையாகக் காட்டி ௯. பரிசேயனையும் ஆயக்காரனையும் குறித்துச் சொன்னது ௰௫. குழந்தைகள் இறிந்தவன்னடக்குக் கொண்டுவரப்பட்டது ௰௮. இறிந்தவைப் பின்பற்ற மனமுள்ள ஒரு தலைவன் தன் ஐசுவரியத்தினாலே தடைபட்டதைக்குறித்தது. ௨௮ அவர் தமதுநிமித்தம் எல்லாவற்றையும் வெறுக்கிறவர்களுக்கு உண்டாகும் பலனைக்காட்டி. ௩௧ தாந் மரணத்தை முன்னறிவித்தது. ௩௫ ஒரு குருடனுக்குப் பார்வை அளித்தது.

[7]அன்றியும் அவர்கள் சோர்ந்து போகாமல் எப்பொழுதும் செபம் பண்ண வேண்டுவதைக்குறித்து அவர் அவர்களுக்குச் சொன்ன உவமையாவது:

௨ ஒரு பட்டணத்திலே † ஒரு நியாயாதிபதி பராபரனுக்குப் பயப்படாமலும் மனிதரை எண்ணாமலும் இருந்தான்.

௩ அல்லாமலும் அந்தப் பட்டணத்திலே ஒரு கைம்பெண் இருந்தாள்; அவள் அவனிடத்தில் போய், எனக்கு விரோதியானவனிடத்தில் பழிவாங்கவேண்டும் என்றாள்.

௪ அவன் அநேகநாள் மனதில்லாதிருந்தான்; பின்பு அவள் அவனிடத்தில் அதிகமாய்க் கேட்டபடியினாலே அவன் தனக்குள்ளே எண்ணினது; நான் பராபரனுக்குப் பயப்படாமலும் மனிதரை எண்ணாமலும் இருந்தும்,

௫ [8]இந்தக் கைம்பெண் என்னைத் தொந்தரவு பண்ணுகிறபடியால் நான் இவளுக்காகப் பழிவாங்கவேண்டும்; இல்லாவிட்டால் இவள் எப்பொழுதும் வந்து என்னை வருத்தப்படுத்துவாள் என்று எண்ணினான் என்று கர்த்தர் சொல்லி,

௬ பின்பு அநீதியுள்ள அந்த நியாயாதிபதி சொன்னதைச் சிந்தியுங்கள்.

௭ [9]அந்தப்படி பராபரன் தாம் தெரிந்துகொண்டவர்களைக் குறித்துத் தாமதித்துத் தம்மை நோக்கி இரவும்பகலும் கூப்பிடுகிற அவர்களுக்காகப் பழிவாங்காமல் இருப்பாரா?

௮ [10]சீக்கிரத்தில் அவர்களுக்காகப் பழிவாங்குவார் என்று உங்களுக்குச் சொல்லுகிறேன்; ஆகிலும் மனிதனுடைய குமாரன் வரும்பொழுது பூமியிலே விசுவாசத்தைக் காண்பாரோ என்றார்.

௯ ¶ [11]அன்றியும் தங்களை நீதி

---

ஜ. பி. ௩௩.

1 உ தெச. ௧ ௪.
2 மத். உ௪. ௱ மாற். ௰௩. ௰௫.
3 ௧ மோ. ௰௯. உ௬
4 மத். ௰ ௩௯: ௰௬. உ௫. மாற் அ ௩௫. லூக். ௬ உ௪. யோவா. ௰உ உ௫.
5 மத். உ௪. ௪௰. ௧ தெச. ௪ ௰௭.
* இந்த வசனம் கிரேக்கபாஷையில் அநேகம் பிரதிகளில் இல்லை
6 யோபு ௩௯. ௩௰ மத். உ௪. உ௮.
7 லூக். ௰௧ ௫: உ௧. ௩௬. ரோ ௰உ. ௰உ. எபே ௬ ௰௮. கொலோ. ௪. உ. ௧ தெச. ௫. ௰௭
† அல்லது ஒரு குறித்தபட்டணத்திலே.
8 லூக். ௰௧. அ.
9 வெளி. ௬. ௰.
10 எபி ௰. ௩௭. உ பே ௩ அ ௯.
11 லூக் ௰. உ௯: ௰௬. ௰௫.



Digitized by Google

மான்கள் என்று* நம்பி, மற்றவர்களை அற்பமாய் எண்ணின சிலருக்கு அவர் சொன்ன உவமையாவது:

௰ இரண்டு மனிதர் செபம்பண்ணும்படிக்குத் தேவாலயத்திற்குப் போனார்கள்; அவர்களில் ஒருவன் பரிசேயன், மற்றவன் ஆயக்காரன்.

௰௧ [1]பரிசேயனானவன் தனித்து நின்று பண்ணின செபமாவது: [2]பராபரனே, நான் பறிகாரர், அநீதர், விபசாரர், இப்படிப்பட்ட மற்ற மனிதரைப்போலவும் இந்த ஆயக்காரனைப்போலவும் இராதவனாபடியினாலே உமக்குத் தோத்திரம் செலுத்துகிறேன்.

௰௨ வாரத்துக்குள்ளே இரண்டுதரம் உபவாசிக்கிறேன்; எனக்குண்டான யாவற்றிலும் பத்திலொன்றைச் செலுத்துகிறேன் என்றான்.

௰௩ பின்பு ஆயக்காரன் தூரமாய் நின்று தன் கண்களையும் வானத்துக்கு உயர்த்தத் துணியாமல், தன் மார்பிலே அடித்துக்கொண்டு, பராபரனே, பாவியாகிய என்மேல் இரக்கமாயிரும் என்றான்.

௰௪ அவன் அல்ல, இவனே நீதிமானாக்கப்பட்டவனாய்த் தன் வீட்டுக்குத் திரும்பினான் என்று உங்களுக்குச் சொல்லுகிறேன்; [3]தன்னை உயர்த்துகிறவன் தாழ்த்தப்படுவான்; தன்னைத் தாழ்த்துகிறவனே உயர்த்தப்படுவான் என்றார்.

௰௫ [4]பின்பு குழந்தைகளை அவர் தொடும்படிக்கு அவரிடத்தில் கொண்டுவந்தார்கள்; சீஷர் அதைக்கண்டு அவர்களை அதட்டினார்கள்.

௰௬ இயேசுவானவர் அவைகளைக் கொண்டுவரும்படி கட்டளையிட்டுச் சொன்னது: பிள்ளைகள் என்னிடத்தில் வருகிறதற்குத் தடைபண்ணாமல் இடங்கொடுங்கள்; [5]பராபரனுடைய இராச்சியம் அப்படிப்பட்டவர்களை உடையதே.

௰௭ [6]எவனாகிலும் பிள்ளையைப்போலப் பராபரனுடைய இராசசியத்தை ஏற்றுக்கொள்ளாவிட்டால், அதில் பிரவேசிக்கமாட்டான் என்றார்.

௰௮ ¶ [7]அப்பொழுது தலைவனொருவன் அவரை நோக்கி, நல்ல போதகரே, நித்தியசீவனைச் சுதந்தரித்துக்கொள்ளும்படிக்கு நான் என்ன செய்யவேண்டும் என்று கேட்டான்.

௰௯ அதற்கு இயேசுவானவர் சொன்னது: நீர் என்னை நல்லவர் என்று ஏன் சொல்லுகிறீர்? பராபரன் ஒருவரே அல்லாமல் மற்றொருவனும் நல்லவன் அல்லவே.

௨௰ [8]விபசாரம்பண்ணாதிருப்பாயாக, கொலைசெய்யாதிருப்பாயாக, களவுசெய்யாதிருப்பாயாக, பொய்ச்சாட்சி சொல்லாதிருப்பாயாக, [9]உன் தகப்பனையும் உன் தாயையும் கனம்பண்ணுவாயாக என்று சொல்லுகிற கற்பனைகளை அறிந்திருக்கிறீரே என்றார்.

௨௰௧ அதற்கு அவன் அவைகளை எல்லாம் என் சிறுவயது முதல் கைக்கொண்டிருக்கிறேன் என்றான்.

௨௰௨ இயேசுவானவர் அதைக் கேட்டு அவனுடனே சொன்னது: பின்னும் ஒன்றை நீர் செய்யவேண்டியதாயிருக்கின்றது; [10]உமக்குண்டானவைகளை எல்லாம் நீர் விற்றுப் பரமண்டலத்திலே உமக்குப் பொக்கிஷம் உண்டாயிருக்கும்படிக்குத் தரித்திரருக்குப் பங்கிட்டுக் கொடுத்துப் பின்பு வந்து எனக்குப் பின்செல்லவேண்டும் என்றார்.

௨௰௩ அவன் மிகுந்த ஐசுவரியவான் ஆனபடியினாலே அந்த வசனத்தைக் கேட்டபொழுது, மிகுந்த துக்கம் அடைந்து(போனான்.)

௨௰௪ ¶ அவன் மிகுந்த துக்கம் அடைந்ததை இயேசுவானவர்

இ. பி. ௩௰.

* அல்லது நீதியுள்ளவர்களென்று.

1 சங். ௱௩௫. ௨.
2 ஏசா. ௬. ௫: வெளி. ௩. ௰௭.
3 யோபு. ௨௨. ௨௯. மத். ௨௩. ௰௨. லூக். ௰௪. ௰௧. யாக். ௪. ௬. ௧ பே. ௫. ௫.
4 மத். ௰௯. ௰௩. மாற். ௰. ௰௩.
5 ௧ கொரி. ௰௪. ௨௰. ௧ பே. ௨. ௨.
6 மாற். ௰. ௰௫.
7 மத். ௰௯. ௰௬. மாற். ௰. ௰௭.
8 உபா. ௫. ௰௭, ௨௰. ரோ. ௰௩. ௯.
9 எபே. ௬. ௨. கொலோ. ௩. ௨௰.
10 மத். ௬. ௰௯, ௨௰: ௰௯. ௨௧. ௧ தீமோ. ௬. ௰௯.

Digitized by Google

கண்டு சொன்னதாவது: [1]ஆஸ்திகளை உடையவர்கள் பராபரனுடைய இராச்சியத்தில் பிரவேசிப்பது மிகவும் அரிது.

உரு ஒட்டகமானது ஒரு ஊசியின் காதிலே நுழைவது எளிதாகும், ஐசுவரியவான் பராபரனுடைய இராச்சியத்தில் பிரவேசிக்கிறதும் எளிதாயிருக்கும் என்றார்.

உசு அதைக் கேட்டவர்கள் சொன்னது: அப்படியானால் யார் இரட்சிக்கப்படுவார்கள் என்றார்கள்.

உஎ அதற்கு அவர் சொன்னது: [2]மனிதரால் ஆகமாட்டாதவைகள் பராபரனாலே ஆகும் என்றார்.

உஅ ¶ [3]அப்பொழுது பேதுரு அவரைநோக்கி, இதோ நாங்கள் எல்லாவற்றையும்விட்டு உமக்குப் பின்சென்று வருகிறோம் என்றான்.

உகூ அதற்கு அவர் சொன்னது: [4]பராபரனுடைய இராச்சியத்தின் நிமித்தமாக வீட்டையாவது, தாய் தகப்பன்மாரையாவது, சகோதரரையாவது, மனைவியையாவது, பிள்ளைகளையாவது விட்ட யாவரும்,

ஙய [5]இம்மையிலே அதிக மடங்காயும் மறுமையிலே நித்திய சீவனையும் அடையாமல் இருப்பதில்லை என்றார்.

ஙக ¶ பின்பு [6]அவர் பன்னிருவரைச் சேர்த்துக்கொண்டு அவர்களுடனே சொன்னது: இதோ, எருசலேமுக்குப் போகிறோம்; அங்கே மனிதனுடைய குமாரனைக் குறித்துத் [7]தீர்க்கதரிசிகளால் எழுதப்பட்ட யாவும் நிறைவேறும்.

ஙஉ [8]எப்படியெனில் அவன் புறத்தேசத்தாருக்கு ஒப்புக்கொடுக்கப்பட்டு, பரியாசமும் நிந்தையும் அடைந்து துப்பப்படுவான்.

ஙங அல்லாமலும் அவனை வாரினால் அடித்துக் கொலைசெய்வார்கள்; மேலும் மூன்றாம்நாளிலே உயிரோடு எழுந்திருப்பான் என்றார்.

ஙச [9]அவர்கள் இவைகளில் ஒன்றையும் உணரவில்லை; அவைகளின் பொருள் அவர்களுக்கு மறைவாயிருந்தது; அவர் சொன்னவைகளை அறியாமல் இருந்தார்கள்.

ஙரு ¶ [10]அவர் எரிகோ ஊருக்குச் சமீபமானபொழுது, வழியருகே உளுக்காந்து பிச்சை கேட்டுக்கொண்டிருக்கிற ஒரு குருடன்,

ஙசு சனங்கள் நடக்கிறதைக் கேள்விப்பட்டு, இது என்னவென்று விசாரித்தான்.

ஙஎ நாசரேத்தூரானாகிய இயேசு நடந்துபோகிறார் என்று அவனுக்கு அறிவித்தார்கள்.

ஙஅ அப்பொழுது அவன் இயேசுவே, தாவீதின் குமாரனே, எனக்கு இரங்கும் என்று அதிகமாய்க் கூப்பிட்டான்.

ஙகூ முன் நடப்பார் அவன் பேசாமல் இருக்கும்படிக்கு அவனை அதட்டினார்கள்; அவன் தாவீதின் குமாரனே, எனக்கு இரங்கும் என்று அதிகமாய்க் கூப்பிட்டான்.

சய அப்பொழுது இயேசுவானவர் நின்று அவனைத் தம்மிடத்தில் கொண்டுவரும்படி கட்டளையிட்டார்; அவன் கிட்ட வந்தபொழுது அவர் அவனை நோக்கி,

சக நான் உனக்கு என்னசெய்ய வேண்டும் என்று இருக்கிறாய் என்றார்; அதற்கு அவன் ஆண்டவரே, நான் பார்வை அடையும்படி செய்யவேண்டும் என்றான்.

சஉ இயேசுவானவர் அவனை நோக்கி, நீ பார்வை அடைவாயாக; [11]உன் விசுவாசம் உன்னை இரட்சித்தது என்றார்.

சங உடனே அவன் பார்வை அடைந்து [12]பராபரனைப் புகழ்ந்து அவருக்குப் பின்சென்றான்; அதைக் கண்ட சனங்கள் எல்லா

இ. பி. ௬௯.

1 வாக். ௰௪. உ௫. மத். ௰௯. உ௩. மாற். ௰. உ௩.
2 எரே. ௩௨. ௰௭. சகரி. ௮. ௬. மத். ௰௯. உ௬. லூக். ௧. ௩௭.
3 மத். ௰௯. உ௭.
4 உபா. ௩௩. ௯.
5 யோபு. ௪௨. ௰.
6 மத். ௰௬. உ௧: ௰௭. உ௨: உ௰. மாற். ௰. ௩௨.
7 சங். உ௨. ௭௭. ௰௯.
8 மத். உ௭. உ. லூக். உ௩. ௧. யோவா. ௰௮. உ௮. அப். ௩. ௰௩.
9 மாற். ௯. ௩௨. லூக். உ. ௫௦: ௯. ௪௫. யோவா. ௰. ௬: ௰௨. ௰௬.
10 மத். உ௰. உ௯. மாற். ௰. ௪௬.
11 லூக். ௰௭. ௰௯.
12 லூக். ௫. உ௬. அப். ௪. உ௧: ௰௧. ௰௮.

Digitized by Google

ரும் பராபரனுக்குத் துதிசெலுத்தினார்கள்.

## ௰௯. அதிகாரம்.

௧. ஆயக்காரனான சக்கேயுவைக்குறித்துச் சொல்லியது. ௰௧. பத்து இராத்தல் வெள்ளியைப் பெற்ற ஊழியக்காரரை உவமையாகக் காட்டியது. ௨௮. இயேசு கெம்பீரமாய் எருசலேமுக்குப் பிரவேசிக்கையில், ௪௧. அதைக்குறித்து அழுது, ௪௫. தேவாலயத்தில் விற்கிறவர்களையும் கொள்ளுகிறவர்களையும் துரத்தி; ௪௭. அந்நிலே நாடோறும் உபதேசித்தது அதிகாரிகள் அவரைக் கொலைசெய்ய விரும்பிச் சனங்களுக்கு அஞ்சினதினாலே கூடாமற்போனது.

பின்பு அவர் எரிகோ ஊரில் பிரவேசித்து அப்புறம் நடந்துபோனார்.

௨ அப்பொழுது ஆயக்காரருக்குத் தலைவனுமாய் ஐசுவரியவானுமாய் இருந்த சக்கேயு என்னப்பட்ட மனிதன் இயேசுவானவரை அறியும்படிக்கு அவரைப் பார்க்க வகைதேடினான்.

௩ அவன் குட்டையனானபடியால் சனக்கூட்டத்திலே அவரைக் காணக்கூடாமல் இருந்தது.

௪ அப்பொழுது அவன் அவரைப் பார்க்கும்படிக்கு முன்னாக ஓடி, அவர் செல்லுகிற வழியிலே நிற்கின்றகாட்டத்திமரத்தின்மேல் ஏறினான்.

௫ இயேசுவானவர் அந்த இடத்தில் சென்றபொழுது, அண்ணாந்து பார்த்து அவனைக் கண்டு, சக்கேயுவே, இன்றைக்கு நான் உன் வீட்டிலே தங்கவேண்டும், ஆகையால் நீ சீக்கிரமாய் இறங்கி வா என்றார்.

௬ அந்தப்படி அவன் சீக்கிரமாய் இறங்கிச் சந்தோஷத்தோடே அவருக்கு உபசாரம்செய்தான்.

௭ அதைக் கண்ட அனைவரும் சொன்னது: [1]இவர் பாவியான மனிதனிடத்திலே தங்கும்படிக்குப் போகிறார் என்று முறுமுறுத்தார்கள்.

௮ சக்கேயு என்பவன் நின்று கர்த்தரைநோக்கி, ஆண்டவரே, என் ஆஸ்திகளில் பாதியை ஏழைகளுக்குக்கொடுக்கிறேன்; அல்லாமலும் [2]நான் ஒருவனிடத்திலே எதையாகிலும் அநியாயமாய் எடுத்திருந்தேனானால் [3]நாலுமடங்காய்ப் பதில் செலுத்துகிறேன் என்றான்.

௯ அப்பொழுது இயேசுவானவர் அவனைக்குறித்துச் சொன்னது: [4]இழந்துபோனதைத் தேடி இரட்சிக்கும்படிக்கு மனிதனுடைய குமாரன் வந்திருக்கிறபடியினாலே, [5]இன்றைக்கு இந்தக் குடும்பத்திற்கு இரட்சிப்பு உண்டாயிற்று

௰ [6]இவனும் ஆபிரகாமினுடைய சந்ததியான் அல்லவா என்றார்.

௰௧ ¶ அன்றியும் அவர்கள் இவைகளைக் கேட்டுக்கொண்டிருக்கையில் அவர் எருசலேமுக்குச் சமீபமானபடியினாலும், [7]பராபரனுடைய ஆளுகை சீக்கிரமாகக் காணப்படும் என்று அவர்கள் நினைத்தபடியினாலும் அவர் சொன்ன உவமையாவது:

௰௨ [8]உயர்குலத்தானாகிய ஒருவன் ஒரு இராச்சியத்தைப் பெற்றுக்கொண்டு பின்பு திரும்பி வரும்படிக்குத் தூரதேசத்துக்குப் போக மனதாய்,

௰௩ தன்னுடைய பத்து ஊழியக்காரரை அழைத்து, அவர்களுக்குப் பத்து இராத்தல்* திரவியம் கொடுத்து, நான் வருகிறவரைக்கும் இதினாலே தொழில் செய்யுங்கள் என்று சொல்லிப்போனான்.

௰௪ [9]அவனுடைய பட்டணத்தார் அவனைப் பகைத்து, அவன் எங்களை ஆளுகைசெய்ய எங்களுக்கு மனதில்லை என்று சொல்லும்படிக்கு, அவனுக்குப் பின்னாகத் தானாபதிகளை அனுப்பினார்கள்.

௰௫ அப்படியிருந்தும் அவன் இராச்சியத்தைப் பெற்றுக்கொண்டு திரும்பி வந்து, தான் திரவியம் கொடுக்கப்பெற்றிருந்த அந்த ஊழியக்காரர் தொழில் செய்ததினாலே ஆதாயமாக்கிக்கொண்டது இவ்வளவென்று அறியும்படிக்கு,

கி. பி. ௩௩.

1 மத். ௯. ௰௧ லூக். ௫. ௩௰.
2 லூக். ௩. ௰௪
3 ௨ சாமு. ௧௨. ௬
4 மத். ௰௮. ௰௧; மத். ௰. ௬; ௰௫. ௨௪.
5 உரோ. ௪. ௰௧
6 லூக். ௰௩. ௰௬
7 அப். ௧. ௬.
8 மத். ௨௫. ௰௪; மாற். ௰௩. ௩௪.
9 யோவா. ௧. ௰௧.

* ஒரு இராத்தல் [illegible] ரூபாயாம்.

Digitized by Google

அவர்களைத் தன்னிடத்திற்கு அழைத்துவரச்சொன்னான்.

௰௬ அந்தப்படியே முந்தினவன் சேர்ந்து, ஆண்டவனே, உம்முடைய இராத்தல் பத்து இராத்தலை ஆதாயம்பண்ணிற்று என்றான்.

௰௭ அவனுடனே எசமான் சொன்னது: நல்லது உத்தம ஊழியக்காரனே, [1]நீ கொஞ்சத்திலே உண்மையாய் இருந்தபடியினாலே பத்துப் பட்டணங்களுக்கு அதிகாரியாய் இரு என்றான்.

௰௮ பின்பு இரண்டாம் ஊழியக்காரன் சேர்ந்து, ஆண்டவனே, உம்முடைய இராத்தல் ஐந்து இராத்தலை ஆதாயம்பண்ணிற்று என்றான்.

௰௯ அவனுடனேயும் அவன் சொன்னது: நீயும் ஐந்து பட்டணங்களுக்கு அதிகாரியாயிரு என்றான்.

௨௰ பின்பு வேறொருவன் சேர்ந்து ஆண்டவனே, [2]நீர் வையாததை எடுக்கிறவருமாய் விதையாததை அறுக்கிறவருமாய் இருக்கிற கடினமுள்ள மனிதனாயிருக்கிறதை நான் அறிந்து உமக்குப் பயப்பட்டபடியினாலே,

௨௧ உம்முடைய இராத்தலை ஒரு சேலையிலே வைத்துக்கொண்டேன்; இதோ, அது இருக்கின்றது என்றான்.

௨௨ அவனுடனே அவர் சொன்னது: பொல்லாத ஊழியக்காரனே, [3]உன் வாக்கின்படி உனக்கு நியாயத்தீர்ப்புக் கொடுக்கிறேன்; [4]நான் வையாததை எடுக்கிறவனுமாய் விதையாததை அறுக்கிறவனுமாய் இருக்கிற கடினமுள்ள மனிதன் என்று அறிந்தாயே

௨௩ ஆகையால் நான் திரும்பி வருகிறபொழுது, என் திரவியத்தை வட்டியோடே பெற்றுக்கொள்ளும்படிக்கு, நீ அதை (வட்டிக்காக) காசுக்கடையிலே ஏன் கொடுக்கவில்லை என்று சொல்லி,

௨௪ சமீபமாய் நிற்கிறவர்களை நோக்கி, நீங்கள் அந்த இராத்தலை இவனிலிருந்து எடுத்துப் பத்து இராத்தல் உள்ளவனுக்குக் கொடுங்கள் என்று கட்டளையிட்டபொழுது,

௨௫ அவர்கள், ஆண்டவனே, அவனுக்குப் பத்து இராத்தல் உண்டே என்ன,

௨௬ அவன் பின்னும் சொன்னது: நான் உங்களுக்குச் சொல்லுகிறதாவது: [5]உள்ளவனுக்குக் கொடுக்கப்படும்; இல்லாதவனுக்கு உண்டாயிருக்கிறதும் அவனிலிருந்து எடுக்கப்படும்.

௨௭ அன்றியும் நான் தங்களுக்கு இராசாவாயிருக்க மனதில்லாமல் எனக்குச் சத்துருக்களான அவர்களை இங்கே கொண்டுவந்து, எனக்குமுன்பாக வெட்டிப்போடுங்கள் என்று சொன்னான் என்றார்.

௨௮ இவைகளை அவர் சொன்னபின்பு, [6]அவர் எருசலேமுக்குப் போகும்படி முன்னே நடந்தார்.

௨௯ ¶ [7]அப்படி அவர் ஒலீவமலை என்னப்பட்ட மலையின்அருகே இருக்கிற பெத்பாகே ஊருக்கும் பெத்தானியா ஊருக்கும் சமீபமானபொழுது, அவர் தம்முடைய சீஷரில் இருவரை நோக்கி,

௩௰ அதோ உங்களுக்கு எதிராக இருக்கிற கிராமத்துக்குப் போங்கள்; அதில் பிரவேசிக்கும்பொழுது, மனிதரில் ஒருவனாகிலும் ஒருக்காலும் ஏறாத கழுதைக்குட்டியைக் கட்டியிருக்கக் காண்பீர்கள்; அதை அவிழ்த்துக்கொண்டு வாருங்கள்.

௩௧ இதை ஏன் அவிழ்க்கிறீர்கள் என்று ஒருவன் உங்களிடத்தில் கேட்டால், ஆண்டவருக்கு இது வேண்டும் என்று அவனுக்குச் சொல்லுங்கள் என்றார்.

௩௨ ¶ அந்தப்படி அனுப்பப்பட்டவர்கள் போய், தங்களுக்கு அ

இ. பி. ௩௩.

1 மத் ௨௫. ௨௧. லூக் ௰௬.௰.
2 மத் ௨௫.௨௪
3 ௨ சாமு. ௧ ௰௬. யோபு ௰௫ ௬. மத் ௰௨ ௩௭.
4 மத் ௨௫.௨௬
5 மத். ௰௩. ௰௨: ௨௫ ௨௯ மாற் ௪ ௨௫. லூக். ௮.௰௮
6 மாற் ௰. ௩௨
7 மத் ௨௧ ௧ மாற். ௰௧. ௧

Digitized by Google

வர் சொன்னபிரகாரமாகக் கண்டார்கள்.

௩௩ கழுதைக்குட்டியை அவர்கள் அவிழ்க்கிறபொழுது, அதின் எசமான்கள் அவர்களை நோக்கி, குட்டியை ஏன் அவிழ்க்கிறீர்கள் என்றார்கள்.

௩௪ அதற்கு அவர்கள், ஆண்டவருக்கு இது வேண்டும் என்று சொல்லி,

௩௫ அதை இயேசுவினிடத்திற்குக் கொண்டுவந்து. [1]தங்கள் வஸ்திரங்களைக் குட்டியின்மேல் போட்டு, இயேசுவை அதின்மேல் ஏற்றினார்கள்.

௩௬ அப்படி அவர் போகையில், [2]அவர்கள் தங்கள வஸ்திரங்களை வழியிலே விரித்தார்கள்.

௩௭ அல்லாமலும் அவர் ஒலீவமலையின் அடிவாரமாய்ச் சேர்ந்து வருகிறபொழுது, சீஷரின் கூட்டத்தார் எல்லாரும் தாங்கள் கண்ட சகல அற்புதங்களையுங்குறித்துச் சந்தோஷப்பட்டு, மிகுந்த சத்தத்துடனே பராபரனைத் துதிக்கத் தொடங்கி, [3]பராபரனுடைய நாமத்தினாலே வருகிற இராசா தோத்திரிக்கப்பட்டவர்.

௩௮ [4]பரமண்டலத்தில் சமாதான சவுக்கியமும், உன்னதங்களில் புகழ்தலும் உண்டாவதாக என்றார்கள்.

௩௯ அப்பொழுது கூட்டத்திலிருந்த பரிசேயரில் சிலர் அவரை நோக்கி, போதகரே, நீர் உம்முடைய சீஷரை அதட்டவேண்டும் என்றார்கள்.

௪௰ அவர்களுக்கு மறுமொழியாக அவர் சொன்னது: இவர்கள் பேசாமல் இருந்தால் [5]கற்களே கூப்பிடும் என்று உங்களுக்குச் சொல்லுகிறேன் என்றார்.

௪௧ ¶ அன்றியும் அவர் பட்டணத்துக்குச் சமீபமானபொழுது, [6]அவர் அதைப் பார்த்து, அதைக்குறித்துக் கண்ணீர்விட்டு, நீ உனக்குக் கிடைத்த இந்த நாளிலே உன் சமாதானத்துக்கு ஏற்றவைகளைச் சிந்தித்துக்கொண்டால், நலமாயிருக்கும்.

௪௨ இப்பொழுது அவைகள் உன் கண்களுக்கு மறைவாயிருக்கின்றன.

௪௩ உன்னைச் சந்திக்கும் காலத்தை [7]நீ சிந்தித்துக்கொள்ளாமல் இருக்கிறபடியினாலே, [8]உன் சத்துருக்கள் உன்னைச் சூழ மதில்போட்டு, உன்னை வளைந்துகொண்டு,

௪௪ எங்கும் உன்னை இறுகப்பிடித்து, [9]உன்னையும் உன்னில் உள்ளவர்களையும் தரையாக்கி, [10]உன்னிடத்தில் ஒரு கல் மற்றொரு கல்லின்மேல் இராதபடிக்குச் செய்யும் நாள்கள் உனக்கு வரும் என்றார்.

௪௫ ¶ [11]பின்பு அவர் தேவாலயத்தில் பிரவேசித்து,

௪௬ அதிலே விற்கிறவர்களையும் கொள்ளுகிறவர்களையும் நோக்கி, [12]நம்முடைய ஆலயம் செபம்பண்ணுதற்கான ஆலயம் என்று எழுதியிருக்கின்றதே; [13]நீங்கள் இதைக் கள்ளர் குகையாக்கினீர்கள் என்று சொல்லி, அவர்களைப் புறம்பே துரத்தினார்

௪௭ ¶ அல்லாமலும் நாடோறும் அவர் தேவாலயத்தில் உபதேசம் பண்ணிக்கொண்டிருந்தார்; [14]அப்பொழுது பிரதான ஆசாரியரும் வேதபாரகரும் சனத்தின் மூப்பரும் அவரைக்கொலைசெய்ய வகை தேடி,

௪௮ சனங்கள் எல்லாரும் மிகுந்த சிந்தையோடே அவருக்குச் செவிகொடுத்தபடியினாலே* வகையைக் காணாமல் போனார்கள்.

## ௨௰. அதிகாரம்.

௧. ஆட்சேபித்த பரிசேயருக்குக் கிறிஸ்து தமது அதிகாரத்தை யோவானின் ஞானஸ்நானத்தைக்குறித்த கேள்வியினாலே ஸ்தாபித்தது. ௯. திராட்சத்தோட்டக்காரரை உவமையாக எடுத்துச் சொன்னது. ௰௯. இராயருக்கு வரிசெலுத்துதலைக்குறித்துச் சொன்னது. உயிர்த்தெழுதல் இல்லையென்ற சதுசேயருக்கு அதை உண்டென்று ஸ்தாபித்தது. ௪௧. கிறிஸ்து தாவீதின் குமா

---

இ. பி. ௩௩.

1 ௨ இரா. ௯. ௰௩. மத். ௨௧. ௭. மாற். ௰௧. ௭. யோவா. ௰௨. ௰௪.
2 மத். ௨௧. ௮.
3 சங். ௱௧௮. ௨௬. நூக். ௰௩. ௩௫.
4 நூக். ௨. ௰௪. எபே. ௨. ௰௪.
5 ஆப. ௨. ௰௧.
6 யோவா. ௰௧. ௩௫.
7 தானி. ௯. ௨௪. நூக். ௧. ௬௮, ௭௮. ௧ பே. ௨. ௰௨.
8 எசா. ௨௯. ௩. ௪. எரே. ௬. ௩, ௬. நூக். ௨௧. ௨௰.
9 ௧ இரா. ௯. ௭, ௮. மீகா ௩. ௰௨.
10 மத். ௨௪. ௨. மாற். ௰௩. ௨. நூக். ௨௧. ௬.
11 மத். ௨௧ ௰௨. மாற். ௰௧. ௰௧, ௰௫. யோவா. ௨. ௰௪.
12 எசா. ௫௬. ௭.
13 எரே. ௭. ௰௧.
14 மாற். ௰௧. ௰௮. யோவா. ௭. ௰௯: ௮. ௩௭.

* அல்லது அவரில் பற்றினபடியினாலே. அப். ௰௬. ௰௪.

Digitized by Google

னென்று அறிவித்ததைச் சொன்னது. சஇ. வேத பாரகரைக்குறித்துச் சீஷர்களை எச்சரித்தது.

இ. பி. ௲௯.

[1] அந்நாள்களில் ஒரு நாளிலே, அவர் தேவாலயத்தில் சனங்களுக்கு உபதேசம்பண்ணிச் சுவிசேஷத்தைப் பிரசங்கிக்கிறபொழுது, பிரதான ஆசாரியரும் வேதபாரகரும் மூப்பரும் அவருக்கு விரோதமாய் வந்துநின்று,

உ அவரை நோக்கி, [2] நீர் எந்த அதிகாரத்தினால் இவைகளைச் செய்கிறீர்? இப்படிப்பட்ட அதிகாரத்தை உமக்குக் கொடுத்தவர் இன்னார் என்று எங்களுக்குச் சொல்லும் என்றார்கள்.

௩ அதற்கு மாறுத்தரமாக அவர் சொன்னது: நானும் உங்களிடத்தில் ஒரே வினாவைக் கேட்பேன்.

௪ என்னவென்றால், யோவான் கொடுத்த ஸ்நானம் தேவனால் உண்டாயிற்றோ, மனிதரால் உண்டாயிற்றோ, அதை எனக்குச் சொல்லுங்கள் என்றார்.

௫ அப்பொழுது அவர்கள் தங்களுக்குள்ளே யோசனைபண்ணினதாவது:

௬ தேவனால் உண்டாயிற்றென்று நாம் சொன்னால், நீங்கள் அவனை ஏன் விசுவாசிக்கவில்லை என்பார்; அது மனிதரால் உண்டாயிற்றென்று நாம் சொன்னால், எல்லாச் சனங்களும் யோவானைத் [3] தீர்க்கதரிசி என்று எண்ணிக்கொள்ளுகிறபடியினாலே, நமதுமேல் கல்லெறிவார்கள் என்று யோசனைபண்ணி,

௭ பின்பு அது வந்த விதம் எங்களுக்குத் தெரியாது என்றார்கள்.

௮ அதற்கு இயேசுவானவர் சொன்னது: அப்படியானால், நான் இன்ன அதிகாரத்தினாலே இவைகளைச் செய்கிறேன் என்று நானும் உங்களுக்குச் சொல்லமாட்டேன் என்றார்.

௯ ¶ பின்பு அவர் சனங்களுடனே சொன்ன உவமையாவது: [4] ஒரு மனிதன் திராட்சத்தோட்டத்தை உண்டாக்கி, அதைத் தோட்டக்காரர் வசமாய்விட்டு, அநேக காலமாய்ப் புறத்தேசம் போயிருந்தான்.

௰ தகுதியானகாலத்திலே அந்தத் தோட்டக்காரர் திராட்சத்தோட்டத்தின் கனிகளில் ஒரு பங்கைத் தனக்குக் கொடுத்தனுப்பும்படிக்கு, அவன் ஒரு ஊழியக்காரனை அவர்களிடத்துக்கு அனுப்பினான்; அந்தத் தோட்டக்காரர் அவனை அடித்து, வெறுமையாய் அனுப்பிவிட்டார்கள்.

௰௧ பின்பு அவன் வேறொரு ஊழியக்காரனை அனுப்பினான்; அவனையும் அவர்கள் அடித்து, நிந்தைப்படுத்தி, வெறுமையாய் அனுப்பிவிட்டார்கள்.

௰௨ அதன்பின்பு அவன் மூன்றாம் ஊழியக்காரனை அனுப்பினான்; அவனையும் அவர்கள் காயப்படுத்தித் துரத்தினார்கள்.

௰௩ அப்பொழுது திராட்சத்தோட்டத்தின் எசமான் எண்ணினது: நான் என்ன செய்யலாம்? எனக்குப் பிரியமான குமாரனை அனுப்பினால், அவர்கள் கண்டு கனம்செய்வார்கள் என்று எண்ணி, அவனை அனுப்பினான்.

௰௪ தோட்டக்காரர் அவனைக் கண்டபொழுது, இவன் சுதந்தரவாளி சுதந்தரம் நம்முடையதாகும்படிக்கு, இவனைக் கொலைசெய்யவேண்டும் என்று தங்களுக்குள்ளே யோசனைபண்ணி,

௰௫ வாருங்கள் என்று சொல்லி, அவனைத் திராட்சத்தோட்டத்துக்கு வெளியே தள்ளி, கொலைசெய்தார்கள்; ஆதலால் திராட்சத்தோட்டத்தின் எசமான் அவர்களை என்ன செய்வான்?

௰௬ அவன் வந்து, அந்தத் தோட்டக்காரரை அழித்து, திராட்சத்தோட்டத்தை வேறுமனிதருக்குக் கொடுப்பான் அல்லவா என்றார்; அதை அவர்கள் கேட்டு, அப்படி ஆகாதிருப்பதாக என்றார்கள்.

1 மத். உ௧.உ௩.
2 அப். ௪.௭: ௭. உ௭.
3 மத். ௰௪. ௫: உ௧.உ௬. லூக். ௭.உ௯.
4 மத். உ௧. ௩௩. மாற். ௰௨.௧.

Digitized by Google

௰௭ ¶ அப்பொழுது அவர் அவர்களைப் பார்த்து [1]வீடுகட்டுகிறவர்கள் ஆகாதென்று தள்ளின கல்லே கோடிக்குத் தலையான கல்லாயிற்றென்றெழுதியிருக்கிற வேதவாக்கியத்தின் கருத்தென்ன?

௰௮ அந்தக் கல்லின்மேல் விழுகிறவன் எவனோ, அவன் நொறுக்கப்படுவான்; அன்றியும், [2]அது விழப்படுபவன் எவனோ, அவனை நசுக்கிப்போடும் என்றார்.

௰௯ அப்பொழுது தங்களைக்குறித்து அந்த உவமையைச் சொன்னார் என்று பிரதான ஆசாரியரும் வேதபாரகரும் அறிந்து, அந்நேரத்திலே அவர்மேல் கைகளைப்போட விரும்பினார்கள்; சனங்களுக்குப் பயப்பட்டபடியால் (நிறுத்தினார்கள்.)

௨௰ ¶ [3]பின்பு அவர்கள் அவரையே நோக்கிக்கொண்டு, ஆளுகைக்கும் நியாயாதிகாரத்துக்கும் முன்பாக அவரை ஒப்புக்கொடுக்கிறதற்கு ஏதுவாக அவருடைய வசனத்தில் குற்றம் கண்டுபிடிக்கும்படிக்கு, தங்களை நீதிமான்கள்போலக் காண்பிக்கிற வேவுகாரரை அவரிடத்தில் அனுப்பினார்கள்.

௨௧ [4]அவர்கள் வந்து அவரை நோக்கி, போதகரே, நீர் செம்மையாய்ப் பேசி உபதேசிக்கிறவர் என்றும், பட்சபாதமில்லாமல் சத்தியமாய்ப் *பராபரனுடைய மார்க்கத்தைப் போதிக்கிறவர் என்றும் அறிந்திருக்கிறோம்.

௨௨ நாம் இராயனுக்கு வரிகொடுக்கலாமோ, கொடாமல் இருக்கலாமோ, என்று அவரிடத்தில் கேட்டார்கள்.

௨௩ அவர்களுடைய தந்திரத்தை அவர் அறிந்து, அவர்களை நோக்கி நீங்கள் என்னை ஏன் சோதிக்கிறீர்கள்?

௨௪ பணத்தை †எனக்குக் காண்பியுங்கள்; அதில் இருக்கிற சொரூபமும் மேலெழுத்தும் யாருடையவைகள் என்றார்; அவை இராயனுடையவைகள் என்று மாறுத்தரம் சொன்னார்கள்.

௨௫ அவர் சொன்னது: அப்படியானால், நீங்கள் இராயனுடையதை இராயனுக்கும், பராபரனுடையதைப் பராபரனுக்கும் செலுத்துங்கள் என்றார்.

௨௬ அவர்கள் அவரைச் சனங்களுக்குமுன்பாக ஒரு வசனத்தில் அகப்படுத்தக்கூடாமல், அவருடைய மாறுத்தரத்தைக்குறித்து ஆச்சரியப்பட்டு மவுனமாய் இருந்தார்கள்.

௨௭ ¶ பின்பு [5]மறுமையாகிய உயிரோடு எழும்புதல் இல்லையென்று சொல்லுகிற [6]சதுசேயரில் சிலர் அவரிடத்தில் வந்து கேட்டதாவது:

௨௮ போதகரே, [7]பெண்ணை விவாகம்பண்ணின ஒருவன் பிள்ளையில்லாமல் இறந்துபோனால், அவனுடைய மனைவியை அவனுடைய சகோதரன் (சேர்ந்து) தன் சகோதரனுக்குச் சந்ததி உண்டாக்கவேண்டும் என்று மோசே நமக்குக் கட்டளையாக எழுதினாரே.

௨௯ அந்தப்படி (ஒரிடத்திலே) சகோதரர் ஏழுபேர் இருந்தார்கள், அவர்களில் மூத்தவன் ஒருபெண்ணை விவாகம்பண்ணிப் பிள்ளையில்லாமல் இறந்துபோனான்.

௩௰ அப்பொழுது இரண்டாம் சகோதரன் அந்தப் பெண்ணை விவாகம்பண்ணி, அவனும் பிள்ளையில்லாமல் இறந்துபோனான்.

௩௧ மூன்றும் சகோதரன் முதல் ஏழுபேர்களைக்கும் அந்தப்படியே அவளை விவாகம்பண்ணி, பிள்ளைகளைப் பெறுமல் இறந்துபோனார்கள்.

௩௨ அவர்கள் எல்லாருக்கும் பின்பு அந்தப் பெண்ணும் இறந்துபோனாள்.

௩௩ இவ்விதமாய் ஏழுபேரும் அவளை விவாகம்பண்ணினவர்க

1 சங். ௱௰௮. ௨௨. மத். ௨௧. ௪௨.
2 தானி. ௨. ௩௪, ௩௫. மத். ௨௧. ௪௪.
3 மத். ௨௨. ௰௫
4 மத். ௨௨. ௰௬. மாற் ௰௨. ௰௪.
* அல்லது தெய்வமாகவே.
† மத். ௰௮. ௨௮.
5 அப். ௨௩. ௮.
6 மத். ௨௨. ௨௩. மாற் ௰௨. ௰௮.
7 உபா. ௨௫. ௫.

Digitized by Google

ளாய் இருக்க, (மரித்தோர்) உயிரோடு எழுந்திருக்குங் காலத்தில் அவர்களில் எவனுக்கு அவள் மனைவியாய் இருப்பாள் என்றார்கள்.

௩௪ ¶ அவர்களுக்கு மாறுத்தரமாக இயேசுவானவர் சொன்னது: இம்மையில் இருக்கிறவர்கள் பெண்கொண்டும் கொடுத்தும் வருகிறார்கள்.

௩௫ மறுமையில் உள்ள பாக்கியத்தையும் மரித்தோரிலிருந்து எழுந்திருக்குதலையும் அடைவதற்குப் பாத்திரராய் எண்ணப்படுபவர்கள் பெண் கொள்வதும் கொடுப்பதும் இல்லை.

௩௬ என்னத்தினாலெனில்,[1] அவர்கள் உயிரோடு எழுந்திருக்கத்தக்கவர்களாயிருக்க, தேவதூதருக்கு ஒப்பானவர்களுமாய் [2]பராபரனுடைய பிள்ளைகளுமாய் இருப்பதால், அவர்கள் இனி மரிக்கக்கூடாதிருப்பார்களே.

௩௭ அன்றியும் மரித்தோர் எழுந்திருப்பார்கள் என்பதை [3]மோசேயும் முட்செடியைக்குறித்து எழுதின சரித்திரத்திலே காண்பித்தார். எப்படியெனில், அவர் பராபரனை ஆபிரகாமினுடைய தேவனென்றும், ஈசாக்கினுடைய தேவனென்றும், யாக்கோபினுடைய தேவனென்றும் சொல்லியிருக்கிறார்.

௩௮ பராபரன் மரித்தோருடைய தேவனாய் இராமல், சீவனுள்ளோருடைய தேவனாய் இருக்கிறார்; [4]எல்லாரும் அவருக்குப் பிழைத்திருக்கிறார்களே என்றார்.

௩௯ வேதபாரகரில் சிலர் அதைக் கேட்டு, போதகரே, நன்றாய்ச் சொன்னீர் என்றார்கள்.

௪௦ பின்பு அவர்கள் அவரிடத்தில் வேறொன்றைக் கேட்கத் துணியவில்லை.

௪௧ ¶ அப்பொழுது அவர் அவர்களை நோக்கி, [5]கிறிஸ்துவானவர் தாவீதின் குமாரனாய் இருப்பார் என்றுஎன்னத்தினாலேசொல்லுகிறார்கள்?

௪௨ [6]அல்லாமலும், பராபரன் என் கர்த்தாவை நோக்கி, நான் உம்முடைய சத்துருக்களை உமது பாதப்படியாக்கிப்போடும் அளவும்

௪௩ நீர் எனது வலதுபாரிசத்தில் உளுக்காரும் என்றார் என்று தாவீதுதானே சங்கீதபுத்தகத்தில் சொல்லியிருக்கிறாரே.

௪௪ தாவீது அவரைக் கர்த்தரென்று சொல்லியிருக்க, எப்படி அவர் அவனுடைய குமாரனாவார் என்றார்.

௪௫ ¶ [7]அப்பொழுது சனங்கள் எல்லாரும் கேட்க, அவர் தம்முடைய சீஷருடனே சொன்னதாவது:

௪௬ [8]நீளமான வஸ்திரங்களைத் தரித்து நடக்க மனதாயிருந்து, [9]சந்தைகளில் வாழ்த்துதலையும், செபஆலயங்களில் முதல் ஆசனங்களையும், விருந்துகளில் முதல் இடங்களையும் விரும்பி,

௪௭ [10]கைம்பெண்களுடைய பொருள்களைப் பட்சித்து, வஞ்சகமாய் விஸ்தாரமான செபம்பண்ணி வருகிற வேதபாரகருக்கு நீங்கள் இடம் கொடாமல் எச்சரிக்கையாயிருங்கள்; அவர்களே அதிக ஆக்கினையை அடைவார்கள் என்றார்.

இ. பி. ௩௩.

1 க கொரி. ௧௫. ௪௨, ௪௩, ௪௯. க யோ. ௩. உ.
2 உரோ. அ. உ௩.
3 உ மோ. ௩. ௬.
4 உரோ. ௬. ௰, ௰௧.
5 மத். உஉ. ௪௨. மாற். ௧௨. ௩௫.
6 சங். ௱௰. ௧. அப். உ. ௩௪.
7 மத். உ௩. க. மாற். ௧௨. ௩அ.
8 மத். உ௩. ௫.
9 லூக். ௧௧. ௪௩.
10 மத். உ௩. ௧௪.
11 மாற். ௧௨. ௪௧.

## உக. அதிகாரம்.

க. கிறிஸ்து தருமப்பெட்டியிலே இரண்டு காசைப் போட்ட ஒரு கைம்பெண்ணைப் புகழ்ந்தது, ௫. தேவாலயமும், எருசலேமும், அழிக்கப்படுவதை முன்னறிவித்து, உ௫. கடைசி நாளுக்கு முன் னுண்டாகும் அடையாளங்களைக் காட்டி, ௩௪. அவர்கள் விழித்திருக்கும்படிக்குப் புத்தி சொன்னது.

பின்பு அவர் கண்ணை உயர்த்திப் பார்க்கிறபொழுது, [11]ஐசுவரியவான்கள் தங்கள் காணிக்கைகளைத் தருமப்பெட்டியில் போடுகிறதைக் கண்டார்.

௨ அல்லாமலும் இரண்டு காசை *அதிலே போட்ட ஒரு ஏழைக் கைம்பெண்ணையும் அவர் கண்டு,

௩ [1]இந்த ஏழைக் கைம்பெண் மற்றெல்லாரிலும் அதிகம் போட்டாள் என்று மெய்யாய் உங்களுக்குச் சொல்லுகிறேன்.

௪ எப்படியெனில், அவர்கள் எல்லாரும் தங்கள் பரிபூரணத்தில் எடுத்து, தேவ காணிக்கைப் பெட்டியில் போட்டார்கள், இவள் தன் குறைவிலே தன் சீவனத்துக்கு உண்டான யாவையும் போட்டாள் என்றார்.

௫ ¶ பின்பு [2]சிலர் தேவாலயத்தைக்குறித்து அது அழகான கற்களாலும் காணிக்கைகளாலும் அலங்கரிக்கப்பட்டிருக்கின்றது என்று சொன்னபொழுது, அவர் சொன்னது:

௬ நீங்கள் பார்க்கிற இவைகளில் [3]ஒரு கல் மற்றொரு கல்லின் மேல் இராதபடிக்கு, எல்லாம் இடிக்கப்படும் நாள்கள் வரும் என்றார்.

௭ அப்பொழுது அவரை அவர்கள் நோக்கி, போதகரே, அவைகள் எப்பொழுது நடக்கும்? அவைகள் சம்பவிக்கும் காலத்துக்கு அடையாளம் என்னவென்று கேட்டார்கள்.

௮ அதற்கு அவர் சொன்னது: அநேகர் என் நாமத்தை எடுத்து, தங்களை அவரே என்றும், காலம்† சமீபமாய் வந்ததென்றும் சொல்லுவார்கள்; [4]நீங்கள் வஞ்சிக்கப்படாதபடிக்கு எச்சரிக்கையுள்ளவர்களாய் அவர்களுக்குப் பின் செல்லாமல் இருங்கள்.

௯ அல்லாமலும் யுத்தங்களையும் கலகங்களையும் குறித்துக் கேள்விப்படும்பொழுது திகில் அடையாதிருங்கள்; அப்படிப்பட்டவைகள் முன் நடக்கவேண்டுமே; ஆனாலும் முடிவு உடனே வாராதென்று சொல்லி, பின்பு திருவுளம் பற்றினதாவது:

இ. பி. ௩௩

* மாற். ௰௨. ௪௨.
1 ௨ கொரி. ௮. ௰௨.
2 மத். ௨௪. ௧. மாற். ௰௩. ௧.
3 லூக். ௰௯. ௪௪.
† மத். ௩. ௨: ௪. ௰௭.
4 மத். ௨௪. ௪. மாற். ௰௩. ௫. எபே ௫. ௬. ௨ தெச. ௨. ௩.
5 மத். ௨௪. ௭.
6 ௧ பே. ௨. ௰௯.
7 மாற். ௰௩. ௯. வெளி. ௨. ௰.
8 அப் ௪. ௩: ௫. ௰௮: ௰௨. ௪: ௰௬. ௨௪.
9 அப். ௨௫. ௨௩.
10 பிலி. ௧. ௨௮. ௨ தெச. ௧. ௫.
11 மத். ௰. ௰௯. மாற். ௰௩. ௰௧. லூக். ௰௨. ௰௧.
12 அப். ௬. ௰.
13 மீகா. ௭. ௬. மாற். ௰௩. ௰௨.
14 அப் ௭. ௫௯: ௰௨. ௨.
15 மத். ௰. ௨௨.
16 மத். ௰. ௩௰.

௰ [5]ஒரு சனக்கூட்டம் மற்றொரு சனக்கூட்டத்துக்கும் ஒரு இராச்சியத்தார் மற்றொரு இராச்சியத்தாருக்கும் விரோதமாக எழும்புவார்கள்.

௰௧ அல்லாமலும் பல இடங்களிலே பூமி மிகவும் அதிர்தலும் பஞ்சங்களும், பெருவாரிக்காய்ச்சல்களும் உண்டாயிருக்கும்; வானத்திலிருந்து பயம் உண்டாக்குகிற காரியங்களும் பெரிய அடையாளங்களும் உண்டாகும்.

௰௨ ¶ [6]அவைகள் எல்லாவற்றிற்கும்முன்னே என்னுடைய நாமத்தின் நிமித்தம் [7]அவர்கள் உங்கள் மேலே தங்கள் கைகளைப்போட்டு, உங்களைத்துன்பப்படுத்தி, [8]ஜெபஆலயங்களுக்கும் சிறைச்சாலைகளுக்கும் ஒப்புக்கொடுத்து, [9]இராசாக்களுக்கும் துரைகளுக்கும் முன்பாகக் கொண்டுபோவார்கள்.

௰௩ [10]ஆனாலும் அது நீங்கள் சாட்சிகொடுக்கும்படிக்கு ஏதுவாயிருக்கும்.

௰௪ [11]ஆகையால், எப்படி மாறுத்தரவு சொல்லலாம் என்று நீங்கள் கவலைப்படாதிருக்கும்படி, உங்கள் மனதைத் திடப்படுத்துங்கள்.

௰௫ [12]நானே உங்களுக்குத் (தகுதியான) பேச்சையும் ஞானத்தையும் கொடுப்பேன்; உங்கள் எதிராளிகள் யாவரும் அதற்கு விரோதமாய்ப் பேசவும் எதிர்க்கவும் மாட்டார்கள்.

௰௬ அன்றியும் [13]பெற்றாராலும், சகோதரராலும், இனத்தாராலும், சிநேகிதராலும் காட்டிக்கொடுக்கப்படுவீர்கள்; [14]உங்களில்சிலரைக் கொலைசெய்விப்பார்கள்.

௰௭ [15]என் நாமத்தினாலே நீங்கள் சகலவிதமான மனிதராலும் பகைக்கப்படுவீர்கள்.

௰௮ [16]ஆனாலும் உங்கள் தலையின் மயிரில் ஒன்றாகிலும் அழியாது.

௰௯ பொறுமையினாலே உங்கள் ஆத்துமாக்களைக் காத்துக்கொள்ளக்கடவீர்கள்.

Digitized by Google

௨௰ ¶ [1]அன்றியும் சேனைகளால் எருசலேம் வளைக்கப்பட்டிருக்கிறதை நீங்கள் காணும்பொழுது, அதின் அழிவு சமீபமாயிற்றென்று அறியுங்கள்.

௨௧ அப்பொழுது யூதேயாநாட்டில் இருப்பவர்கள் மலைகளுக்கு ஓடிப்போகவும், எருசலேமுக்குள்ளே இருப்பவர்கள் வெளியே புறப்படவும், நாட்டுப்புறங்களில் இருப்பவர்கள் அதற்குள் பிரவேசியாமல் இருக்கவும் கடவர்கள்.

௨௨ [2]எழுதியிருக்கிற யாவும் நிறைவேறும்படியாய், அந்நாள்களே பழிவாங்குதற்கானவைகளாய் இருக்கும்.

௨௩ அந்நாள்களில், [3]ஐயோ! கருப்பவதிகளுக்கும் பாலுகொடுக்கிறவர்களுக்கும் வேதனை உண்டாயிருக்கும்; என்னத்தினாலெனில், இத்தேசத்தின்மேல் மிகுந்த இடுக்கணும், இந்தச் சனத்தின்மேல் கோபாக்கினையும் உண்டாகும்.

௨௪ கட்கங்களினாலே அற்றுவிழுவார்கள்; அல்லாமலும் புறத்தேசத்தார் யாவருக்குள்ளேயும் சிறைப்பட்டுப்போவார்கள்; அன்றியும் [4]புறத்தேசத்தாருடைய காலங்கள்நிறைவேறுகிறவரைக்கும் எருசலேம் புறத்தேசத்தாராலே மிதிக்கப்படும்.

௨௫ ¶ [5]சூரியனிலும், சந்திரனிலும், நட்சத்திரங்களிலும், அடையாளங்கள் தோன்றும்; பூமியின்மேல் உள்ள சனங்களுக்குள்ளே கலக்கமான உபத்திரவம் உண்டாகும்; சமுத்திரமும் அலைகளும் கோஷ்டமாயிருக்கும்.

௨௬ [6]வானத்தில் பலமானவைகளும் அசையும்; ஆதலால் பூலோகத்தின்மேல் வருகிற காரியங்களுக்குப்பயந்து அவைகளை நோக்கிப் பார்க்கிறதினாலே மனிதர்கள் சோர்ந்துபோவார்கள்.

௨௭ அப்பொழுது [7]மனிதனுடைய குமாரனை மிகுந்த வல்லமையோடும் மகிமையோடும் மேகத்தில் வரக்காண்பார்கள்.

௨௮ அவைகள் சம்பவிக்கத் தொடங்கும்பொழுது, [8]உங்கள் மீட்புச் சமீபமாய் வருவதால், நீங்கள் நிமிர்ந்து உங்கள் தலைகளை உயர்த்தக்கடவீர்கள் என்று சொல்லி,

௨௯ ¶ பின்பு [9]உவமையாய்ச் சொன்னதாவது: அத்திமரத்தையும் மற்றச் சகல மரங்களையும் பாருங்கள்.

௩௰ அவைகள் தளிர்க்கிறதை நீங்கள் காணும்பொழுது, வசந்தகாலம் சமீபமாயிற்று என்று அறிகிறீர்கள்.

௩௧ அந்தப்படியே நான் சொன்னவைகள் சம்பவிக்கிறதை நீங்கள் காணும்பொழுது, பராபரனுடைய ஆளுகை சமீபமாயிற்றென்று அறியக்கடவீர்கள்.

௩௨ அவையெல்லாம் சம்பவிக்கிறவரைக்கும் இந்தச் சந்ததி ஒழிந்துபோகாதென்று மெய்யாய் உங்களுக்குச் சொல்லுகிறேன்.

௩௩ [10]வானமும் பூமியும் ஒழிந்துபோம், என் வசனங்கள் ஒழிந்துபோகாது.

௩௪ ¶ அன்றியும் பூமியில் எங்கும் குடியிருக்கிற அனைவர்மேலும் அந்த நாள் ஒரு வலையைப்போல வருவதால்,

௩௫ [11]உங்கள் இருதயங்கள் பெருந்தீனியினாலும், வெறியினாலும், பிழைப்பின் கவலையினாலும் பாரம் அடையாதபடிக்கும், அந்த நாள் உங்களுக்குச் சடுதியாய் வாராதபடிக்கும் எச்சரிக்கையாய் இருக்கக்கடவீர்கள்.

௩௬ ஆகையால் [12]இனிச் சம்பவிப்பவைகள் யாவுக்கும் நீங்கள் தப்புவித்துக்கொண்டு, [13]மனிதனுடைய குமாரனுக்குமுன்பாக நிற்கப் பாத்திரவான்களென்று எண்ணப்படும்படிக்கு, [14]எக்காலமும் செபம்பண்ணி, [15]விழித்திருக்கக்கடவீர்கள் என்று திருவுளம்பற்றினார்.

கி. பி. ௩௩.

1 மத். ௨௪. ௰௫. மாற். ௰௩. ௰௪.
2 தானி. ௯. ௨௬, ௨௭. சகரி. ௰௧. ௧.
3 மத். ௨௪. ௰௯.
4 தானி. ௯. ௨௭: ௰௨. ௭. உரோ. ௰௧. ௨௫.
5 மத். ௨௪. ௨௯. மாற் ௰௩. ௨௪. ௨ பே. ௩. ௰, ௰௨.
6 மத். ௨௪. ௨௯.
7 மத். ௨௪. ௩௰. வெளி. ௧. ௭: ௰௪. ௰௪.
8 உரோ. ௮. ௰௯, ௨௩.
9 மத். ௨௪. ௩௨. மாற். ௰௩. ௨௮.
10 மத். ௨௪. ௩௫.
11 உரோ. ௰௩. ௰௩. ௧ தெச. ௫. ௬. ௧ பே. ௪. ௭.
12 ௧ தெச. ௫. ௨. ௨ பே. ௩. ௰. வெளி. ௩. ௩: ௰௬. ௰௫.
13 சங். ௧. ௫. எபே. ௬. ௰௩.
14 லூக். ௰௮. ௧.
15 மத். ௨௪. ௪௨: ௨௫. ௰௩. மாற். ௰௩. ௩௩.

Digitized by Google

௩௭ ¶ அன்றியும் [1]அவர் பகற்காலங்களில் தேவாலயத்தில் உபதேசித்துக்கொண்டு, [2]இராக்காலங்களில் வெளியே போய், ஒலிவமலை என்னப்பட்ட மலையிலே தங்கி வந்தார்.

௩௮ அவருடைய உபதேசத்தைக் கேட்கும்படிக்கு, சனங்கள் எல்லாரும் அதிகாலையிலே தேவாலயத்தில் அவரிடத்துக்கு வந்தார்கள்.

கி. பி. ௩௩.

1 யோவா. அ. ௧. ௨.
2 லூக். ௨௨. ௩௯.

## ௨௨. அதிகாரம்.

௧. யூதர்கள் கிறிஸ்துவைக் கொலைசெய்யும்படி தேடினது. ௩. அவரைக் காட்டிக்கொடுக்கும்படி சாத்தான் யூதாவை ஏவினது. ௭. அப்போஸ்தலர்கள் பஸ்காவை ஆயத்தம்பண்ணினது. ௰௯. கிறிஸ்து பரிசுத்த இராப்போசனத்தைக் கட்டளையிட்டு, ௨௧. தம்மைக் காட்டிக்கொடுப்பவனைக் குறிப்பாகச் சொல்லி, ௨௪. மற்ற அப்போஸ்தலர்கள் பெருமை அற்றிருக்கப் போதித்து, ௩௧. பேதுருவின் விசுவாசம் அவனைவிட்டு ஒழிபடாதேபோனாலும், ௩௪. அவன் தம்மை மூன்றுதரம் மறுதலிப்பான் என்று முன் அறிவித்தது. ௩௯. அவர் மலையின்மேல் செபம்பண்ணி, இரத்தவேர்வை விட்டு, ௪௭. முத்திகொடுதலினாலே காட்டிக்கொடுக்கப்பட்டு, ௫௦. மல்குவின் அறுப்புண்ட காதைச் சொஸ்தப்படுத்தி, ௫௪. பேதுருவினால் மூன்றுதரம் மறுதலிக்கவும், ௬௩. பரியாசதூஷணம் பண்ணவும்பட்டு, ௬௬. தம்மைப் பராபரனுடைய குமாரனென்று அறிக்கையிட்டது.

[3]பஸ்கா என்னப்பட்ட புளியாத அப்பப்பண்டிகை சமீபமாயிற்று.

௨ அப்பொழுது [4]பிரதான ஆசாரியரும் வேதபாரகரும் சனங்களுக்குப் பயப்பட்டபடியினாலே, அவரைக் கொலைசெய்யும்படிக்கு (இரகசியமாய்) வகைதேடினார்கள்.

௩ [5]அக்காலத்திலே பன்னிருவரில் ஒருவனாகிய ஸ்காரியோத்தென்று பேர்கொண்ட யூதாவுக்குள்ளே சாத்தான் புகுந்தான்.

௪ ¶ ஆதலால் அந்த யூதா என்பவன் பிரதான ஆசாரியரும் ஆலயத்தலைவருமானவர்களிடத்தில் போய், அவர்களுக்கு அவரைக் காட்டிக்கொடுக்கும் வகையைக் குறித்து அவர்களுடனே யோசனைபண்ணிக்கொண்டான்.

௫ அவர்கள் சந்தோஷப்பட்டு [6]அவனுக்குத் திரவியம் கொடுக்கத் தீர்மானித்தார்கள்.

௬ அதற்கு அவன் பொருந்தி, சனக்கூட்டம் இல்லாதபொழுது* அவரை அவர்களுக்குக் காட்டிக்கொடுக்கும்படிக்குத் தகுதியான காலத்தைத் தேடினான்.

௭ ¶ [7]பஸ்காவின் ஆட்டுக்குட்டியைப் பலியிடவேண்டிய புளியாத அப்பநாள் வந்தது.

௮ அப்பொழுது அவர் பேதுருவையும் யோவானையும் அழைத்து, நாம் பஸ்காவைப் புசிக்கும்படிக்கு நீங்கள் போய், நமக்காக அதை எத்தனம்பண்ணுங்கள் என்றார்.

௯ அதற்கு அவர்கள், நாங்கள் அதை எங்கே எத்தனம்பண்ண விரும்புகிறீர் என்றார்கள்.

௰ அவர் சொன்னது: நீங்கள் பட்டணத்திற்குள் பிரவேசிக்கும்பொழுது, ஒருவன் தண்ணீர்க்குடம் சுமந்துகொண்டு உங்களுக்கு எதிர்ப்படுவான்; நீங்கள் அவனுக்குப்பின்சென்று, அவன் போகும் வீட்டிலே போய்,

௰௧ அந்த வீட்டெசமானை நோக்கி, நான் என் சீஷரோடுங்கூடப் பஸ்காவைப் புசிக்கத்தக்கதான இடம் எங்கே என்று போதகர் உம்மிடத்தில் கேட்கச்சொன்னார் என்று சொல்லுங்கள்.

௰௨ அவன் கம்பளமுதலானவைகள் விரித்திருக்கிற விஸ்தாரமான மேல்வீட்டை உங்களுக்குக் காண்பிப்பான்; அங்கே எத்தனம் பண்ணுங்கள்என்று அனுப்பினார்.

௰௩ அவர்கள் போய், அவர் சொன்னபிரகாரமாகக் கண்டு, பஸ்கா போசனத்தை எத்தனம்பண்ணினார்கள்.

௰௪ ¶ தகுதியான நேரம் வந்தபொழுது, [8]அவரும் அவருடனே பன்னிரண்டு அப்போஸ்தலரும் பந்தியில் இருந்தார்கள்.

௰௫ அப்பொழுது அவர் அவர்களை நோக்கி, நான் பாடுபடுகிறதற்குமுன்னே உங்களுடனேகூட

3 மத். ௨௬. ௨. மாற். ௰௪. ௧.
4 சங். ௨. ௨. யோவா. ௰௧. ௪௭. அப். ௪. ௨௭.
5 மத். ௨௬. ௰௪. மாற். ௰௪. ௰. யோவா. ௰௩. ௨, ௨௭.
6 சகரி. ௰௧. ௰௨.
* அல்லது சந்தடியில்லாமல்.
7 மத். ௨௬. ௰௭. மாற். ௰௪. ௰௨.
8 மத். ௨௬. ௨௰. மாற். ௰௪. ௰௭.

Digitized by Google

இந்தப் பஸ்காப்போசனம் பண்ண மிகவும் ஆசையாய்* இருந்தேன்.

௰௬ என்னத்தினாலென்றால்,[1]பராபரனுடைய இராச்சியத்திலேஅது நிறைவேறும் அளவும் நான் பின்னும் இதில் புசிப்பதில்லை என்று உங்களுக்குச் சொல்லுகிறேன் என்று சொல்லி,

௰௭ பின்பு பாத்திரத்தை எடுத்துக்கொண்டு, தோத்திரம்செய்து,

௰௮ [2]பராபரனுடைய ஆளுகை வரும் அளவும், நான் மறுபடியும் திராட்ச இரசத்திலே பானம்பண்ணுவதில்லை என்று உங்களுக்குச் சொல்லுகிறேன்; ஆகையால் நீங்கள் இதை எடுத்து, உங்களுக்குள்ளே பங்கிட்டுக்கொள்ளுங்கள் என்றார்.

௰௯ ¶ அல்லாமலும் [3]அவர் அப்பத்தை எடுத்துக்கொண்டு தோத்திரம்பண்ணி, அதைப் பிட்டு அவர்களுக்குக் கொடுத்து, இது உங்களுக்காகக் கொடுக்கப்படுகிற என்னுடைய சரீரமாய் இருக்கின்றது; [4]என்னை நினைக்கிறதற்காக இப்படிச் செய்யுங்கள் என்று சொல்லி,

இராப்போசனம்பண்ணினபின்பு,

௨௰ அந்தப்படியே பாத்திரத்தையும் கொடுத்து, [5]இந்தப் பாத்திரம் உங்களுக்காகச் சிந்தப்படுகிற என் இரத்தத்தினாலே புதிய உடம்படிக்கையாய் இருக்கின்றது என்று சொல்லி,

உக ¶ பின்பு இதோ, [6]என்னைக் காட்டிக்கொடுக்கிறவனுடைய கை என்னுடனேகூடப் பந்தியில் இருக்கின்றது.

உஉ [7]தீர்மானத்தின்படியே மனிதனுடைய குமாரன் போகிறான்; அது மெய்தான். [8]ஆனாலும், ஐயோ! எந்த மனிதன் அவனைக் காட்டிக்கொடுக்கிறானோ அந்த மனிதனுக்கு வேதனைவரும் என்றார்.

உ௩ அப்பொழுது [9]அவர்கள் நம்மில் யாவன் அப்படிச் செய்வான் என்று தங்களுக்குள்ளே விசாரிக்கத் தொடங்கினார்கள்.

உச ¶ அன்றியும் அவர்கள் [10]தங்களில் எவன் பெரியவனாய் இருப்பான் என்று தங்களுக்குள்ளே வாக்குவாதம் பண்ணிக்கொண்டிருந்தபொழுது,

உரு [11]அவர் அவர்களுக்குச் சொன்னதாவது: புறத்தேசத்தாருடைய இராசாக்கள் அவர்களைப் பலவந்தமாய் ஆண்டுகொள்ளுகிறார்கள்; அல்லாமலும் அவர்கள் மேல் அதிகாரம் செலுத்துகிறவர்கள் தருமதுரைகள் என்று அழைக்கப்படுகிறார்கள்.

உ௬ [12]உங்களுக்குள்ளே அப்படி இருக்கக்கூடாது;[13]உங்களில்பெரியவன் சிறியவனைப்போலவும், தலைவன் ஊழியக்காரனைப்போலவும் இருக்கக்கடவன்.

உ௭ [14]பந்தியில் இருக்கிறவன், ஊழியம்செய்கிறவன், இவ்விருவரில் எவன் பெரியவன்? பந்தியில் இருக்கிறவன் அல்லவா? ஆனாலும் [15]நான் உங்களுக்குள்ளே ஊழியம் செய்கிறவனைப்போல இருக்கிறேன்.

உ௮ மேலும் [16]எனக்கு வந்ததுன்பகாலங்களில் என்னுடனே இருந்தவர்கள் நீங்களே.

உ௯ ஆகையால் [17]என் பிதா எனக்கு ஓர் இராச்சியத்தை ஏற்படுத்தியிருக்கிறபடியால்,

௩௰ [18]நீங்கள் என் இராச்சியத்தில் என் பந்தியிலே போசனபானம் பண்ணி, [19]இஸ்ரவேலின் பன்னிரண்டு கோத்திரத்தாருக்கு நியாயத்தீர்ப்புக் கொடுக்கிறவர்களாய் ஆசனங்களின்மேல் உளுக்காரும்படிக்கு நான் உங்களை ஏற்படுத்துகிறேன் என்றார்.

௩௧ ¶ கர்த்தர் பின்னும் சொன்னதாவது: [20]சீமோனே, சீமோனே, கோதுமையைச் சுளகினால் புடைக்கிறதுபோல, [21]உங்களைப் புடைக்கும்படிக்கு, சாத்தான் உத்தரவு கேட்டான்.

கி. பி. ௩௩.

* அல்லது மன ஆசையாய்.

1 லூக். ௧௪. ௰௫. அப். ௰. ௪௧. வெளி. ௰௯. ௯.

2 மத். உ௬. உ௯. மாற். ௰௪. உ௫.

3 மத் உ௬. உ௬. மாற். ௰௪. உஉ.

4 ௧ கொரி. ௰௧. உச.

5 ௧ கொரி. ௰. ௰௬.

6 சங் ௪௧. ௯. மத். உ௬. உ௧, உ௩. மாற். ௰௪. ௰௮. யோவா. ௰௩.உ௧,உ௬.

7 அப். ௨. உ௩: ௪. உ௮.

8 மத். உ௬ உச.

9 மத். உ௬. உஉ. யோவா. ௰௩. உஉ, உ௫.

10 மாற். ௯. ௩௪. லூக் ௯.௪௬.

11 மத். உ௰.உ௫. மாற்.௰.௪௨.

12 மத். உ௰.உ௬. ௧ பே.௫ ௩.

13 லூக்.௯. ௪௮.

14 லூக்.௰உ. ௩௭.

15 மத.உ௰. உ௮. யோவா.௰௩.௰௩, ௰௪. பிலி.௨ ௭.

16 எபி. ௪. ௰௫.

17 மத்.உ௪ ௪௭ லூக். ௰உ. ௩உ. உ. கொரி. ௧.௭. உ தீமோ. உ. ௰உ.

18 மத். ௮. ௰௧. லூக். ௰௪. ௰௫. வெளி. ௰௯. ௯.

19 சங். ௪௯. ௰௪. மத். ௰௯. உ௮. ௧ கொரி. ௬.உ. வெளி. ௩. உ௧.

20 ௧ பே ௫. ௮.

21 ஆமோ. ௯. ௯.

௩௨ [1]நானே, உன் விசுவாசம் ஒழிந்துபோகாதபடிக்கு, உனக்காக வேண்டிக்கொண்டேன்; அந்தப்படி [2]நீ இனிமேல் மனந்திரும்பினபின் உன் சகோதரரை ஸ்திரப்படுத்துவாயாக என்றார்.

௩௩ அதற்கு அவன் சொன்னது: ஆண்டவரே, உம்முடனேகூட நான் காவலிலும் சாவிலும் வர எத்தனமாய் இருக்கிறேன் என்றான்.

௩௪ அவர் சொன்னது: [3]பேதுருவே, இன்று சேவல் கூவும்முன்னே நீ என்னை அறிந்திருக்கிறதை மூன்றுதரம் மறுதலிப்பாய் என்று உனக்குச் சொல்லுகிறேன் என்றார்.

௩௫ ¶ பின்னும் அவர் அவர்களுடனே சொன்னது: [4]நான் உங்களைப் பணப்பையும், சாமான்பையும், பாத இரட்சைகளும் இல்லாமல் அனுப்பினபொழுது, ஏதாகிலும் உங்களுக்குக் குறைவாய் இருந்ததா என்றார்; ஒன்றும் குறைவாயிருக்கவில்லை என்றார்கள்.

௩௬ அவர் சொன்னது: இப்பொழுது பணப்பையையும் சாமான்பையையும் உடையவன் அவைகளை எடுத்துக்கொள்ளக்கடவன்; அல்லாமலும் கத்தியில்லாதவன் தன் வஸ்திரத்தை விற்று ஒன்றைக் கொள்ளக்கடவன்.

௩௭ என்னத்துக்கென்றால், என்னைக்குறித்து எழுதியிருக்கிறவைகள் முடிகிறபடியினாலே, [5]அக்கிரமக்காரரோடே எண்ணப்பட்டார் என்று எழுதியிருக்கிறது, என்னிடத்தில் நிறைவேறவேண்டும் என்று உங்களுக்குச் சொல்லுகிறேன் என்றார்.

௩௮ அதற்கு அவர்கள் ஆண்டவரே, இதோ, இரண்டு கத்திகள் உண்டு என்றார்கள்; (அவைகளே) போதும் என்று அவர்களுடனே சொன்னார்.

௩௯ ¶ பின்பு [6]அவர் புறப்பட்டு, வழக்கத்தின்படியே [7]ஒலீவமலைக்குப் போனார்; அவருடைய சீஷரும் அவருக்குப் பின்சென்றார்கள்.

௪௰ [8]அவ்விடத்தில் சேர்ந்தபொழுது, அவர் அவர்களை நோக்கி, நீங்கள் குற்றம்செய்வதற்கான காரணத்தில் பிரவேசியாதபடிக்கு, செபம்பண்ணுங்கள் என்று சொல்லி,

௪௧ [9]கல்லெறிதூரத்தில் அவர்களைவிட்டுப் போய்,

௪௨ முழங்கால்படியிட்டு, பிதாவே, உமக்குச் சித்தமானால், *இந்தப் பாத்திரம் என்னைவிட்டு நீங்கும்படி செய்யும்; [10]இல்லாவிட்டால், என்னுடைய சித்தத்தின்படி அல்ல, உம்முடைய சித்தத்தின்படியே ஆவதாக என்று செபம்பண்ணினார்.

௪௩ அப்பொழுது [11]வானத்திலிருந்து ஒரு தூதன் தோன்றி, அவரைப் பலப்படுத்தினான்.

௪௪ பின்னும்அவர் கொடிய வேதனைப்பட்டு, [12]அதிக உக்கிரத்தோடே செபம்பண்ணினார்; அப்பொழுது அவருடைய வேர்வை இரத்தத்துளிகளைப்போலாகித் தரையிலே விழுந்தது.

௪௫ பின்பு அவர்செபம்பண்ணி முடித்தபொழுது, எழுந்திருந்து தம்முடைய சீஷரிடத்தில்போய், அவர்கள் துக்கத்தினாலே நித்திரைபண்ணக் கண்டு,

௪௬ என்னத்திற்காகத் தூங்குகிறீர்கள்; நீங்கள் குற்றம்செய்வதற்கான காரணத்தில் பிரவேசியாதபடிக்கு, [13]எழுந்திருந்து செபம்பண்ணுங்கள் என்றார்.

௪௭ ¶ அவர் அப்படிப் பேசுகையில், [14]சனங்கள் கூட்டமாய்ச் சேர்ந்தார்கள்? அவர்களுக்குமுன்னாகப் பன்னிருவரில் ஒருவனான யூதா என்பவன் நடந்துபோய், இயேசுவை முத்தஞ்செய்யும்படிக்கு அவரிடத்தில் சேர்ந்தான்.

௪௮ அப்பொழுது இயேசுவானவர் அவனை நோக்கி, யூதாவே, நீ

கி. பி. ௩௩.

1 யோவா. ௧௭. ௯, ௧௧, ௧௫.
2 சங். ௫௧. ௧௩. யோவா. ௨௧. ௧௫,௧௬,௧௭.
3 மத். ௨௬. ௩௪. மாற். ௧௪. ௩௰. யோவா.௧௩.௩௮.
4 மத். ௰.௯.லூக். ௯. ௩:௰.௪.
5 ஏசா. ௫௩.௧௨. மாற். ௧௫. ௨௮.
6 மத். ௨௬. ௩௬. மாற். ௧௪. ௩௨. யோவா ௧௮.௧.
7 லூக. ௨௧.௩௭.
8 மத். ௬. ௧௩: ௨௬. ௪௧. மாற். ௧௪. ௩௮.
9 மத். ௨௬. ௩௯. மாற்.௧௪.௩௫.
* அல்லது நீங்கச் சித்தமானால்.
10 யோவா. ௫. ௩௰: ௬.௩௮.
11 மத்.௪.௧௧.
12 யோவா. ௧௨. ௨௭. எபி ௫.௭.
13 ௪௰. வச.
14 மத். ௨௬.௪௭. மாற். ௧௪. ௪௩. யோவா. ௧௮.௩.

Digitized by Google

மனிதனுடைய குமாரனை முத்தத்தினாலேயா காட்டிக்கொடுக்கிறாய் என்றார்.

சகூ அல்லாமலும் அவரைச் சுற்றியிருந்தவர்கள் சம்பவிப்பதை அறிந்து அவரை நோக்கி, ஆண்டவரே, கத்தியினாலே நாங்கள் வெட்டலாமா என்று சொல்ல,

ருய (உடனே) [1]அவர்களில் ஒருவன் பிரதான ஆசாரியனுடைய வேலைக்காரனை வலதுகாதறவெட்டினான்.

ருக அப்பொழுது இயேசுவானவர், இம்மட்டில் நிறுத்துங்கள் என்று சொல்லி, அவனுடைய காதைத்தொட்டு, அவனைக் குணமாக்கினார்.

ருஉ [2]பின்பு இயேசுவானவர் தமக்கு விரோதமாய் வந்த பிரதான ஆசாரியரையும், தேவாலயத்தலைவரையும், மூப்பரையும் நோக்கி, ஒரு கள்ளனைப் பிடிக்கப் புறப்படுகிறதுபோல, நீங்கள் கத்திகளோடும் தடிகளோடும் புறப்பட்டு வந்தீர்கள்.

ருங தினந்தோறும் நான் தேவாலயத்தில் உங்களுடனே இருக்கையில், நீங்கள் என்மேல் கைகளைப் போடவில்லை, [3]இதுவே உங்களுக்கு ஏற்றநேரமுமாய் இருளின் வல்லமையுமாய் இருக்கின்றது என்றார்.

ருச ¶ அப்பொழுது [4]அவர்கள் அவரைப் பிடித்து, பிரதான ஆசாரியனுடைய மாளிகைக்குக் கொண்டுபோனார்கள்; [5]பேதுருவும் தூரமாக அவருக்குப் பின்சென்றான்.

ருரு அல்லாமலும், [6]அவர்கள் மாளிகையின் பிரகாரத்தின் நடுவிலே நெருப்பை உண்டுபண்ணி, அதைச் சுற்றி, உளுக்காந்தபொழுது பேதுருவும் அவர்களுக்குள்ளே உளுக்காந்தான்.

ருசு அப்பொழுது ஒரு வேலைக்காரி அவனை நெருப்பினிடத்தில் இருக்கக் கண்டு அவனை உற்றுப் பார்த்து, இவனும் அவனோடிருந்தான் என்றாள்.

ருஎ அதற்கு அவன் ஸ்திரியே, அவனை அறியேன் என்று அவரை மறுதலித்தான்.

ருஅ [7]சற்றுநேரத்துக்குப் பின்பு, வேறொருவன் அவனைக் கண்டு, நீயும் அவர்களில் ஒருவன் என்றான், அதற்குப் பேதுரு, மனிதனே, நானல்ல என்றான்.

ருகூ [8]ஏறக்குறைய ஒருமணி நேரத்துக்குப் பின்பு வேறொருவன் அவனைப்பார்த்து, மெய்யாய் இவனும் அவனோடு இருந்தான், இவன் கலிலேயன்தானே என்று நிச்சயத்தோடே சொன்னான்.

சுய அதற்குப் பேதுரு மனிதனே, நீ பேசுகிறதை அறியேன் என்றான்; உடனே அவன் பேசுகையில் சேவல் கூவிற்று.

சுக அப்பொழுது கர்த்தர் திரும்பி, பேதுருவை நோக்கிப் பார்த்தார்; [9]உடனே பேதுரு சேவல் கூவும்முன்னே [10]நீ என்னை மூன்றுதரம் மறுதலிப்பாய் என்று தன்னோடே கர்த்தர் சொன்ன வசனத்தை நினைத்துக்கொண்டு,

சுஉ வெளியே போய், மிகுந்த மனத்துக்கத்தோடே அழுதான்.

சுங ¶ [11]இயேசுவைப் பிடித்துக் கொண்ட மனிதர் அவரை அசட்டைபண்ணி,

சுச அடித்து, அவருக்கு முக்காடிட்டு, அவருடைய முகத்தில் அறைந்து, உன்னை அடித்தவன் யாவன், அதைத் தீர்க்கதரிசனமாய்ச் சொல்லென்று சொல்லி,

சுரு மற்றும் அநேகவிதமாய் அவரைத் தூஷணித்தார்கள்.

சுசு ¶ [12]உதயமானபொழுது சனத்தின் [13]மூப்பரும், பிரதான ஆசாரியரும், வேதபாரகரும் கூடிவந்து, தங்கள் ஆலோசனைச் சங்கத்தில் அவரைக் கொண்டுவரும்படிசெய்து, அவரை நோக்கி,

சுஎ [14]நீ கிறிஸ்துவானால் அதை எங்களுக்குச் சொல் என்றார்கள்;

கி. பி. ௩௩.



1 மத். உசு ருக. மாற். கச. சஎ. யோவா. கஅ.ய.
2 மத். உசு.ருரு. மாற். கச. சஅ.
3 யோவா. கஉ. உஎ.
4 மத். உசு. ருஎ.
5 மத். உசு.ருஅ. யோவா. கஅ. கரு.
6 மத்.உசு. சுகூ. மாற்.கச சுசு. யோவா. கஅ. கஎ,கஅ.
7 மத். உசு. எக. மாற். கச. சுகூ. யோவா. கஅ. உரு.
8 மத். உசு. எங. மாற். கச. எய. யோவா. கஅ. உசு.
9 மத். உசு. எரு, எஉ. யோவா. கஅ. உஎ.
10 மத்.உசு.நச. மாற்.கச ஙய.
11 மத் உசு. சுஎ, சுஅ. மாற்.கச. சுரு.
12 மத்.உஎ.க.
13 அப். ச. உசு. அப்.உஉ.ரு.
14 மத். உசு.சுங. மாற்.கச.சுக.

Digitized by Google

அதற்கு அவர் நான் உங்களுக்குச் சொன்னாலும் என்னை நம்பமாட்டீர்கள்.

௬௮ நான் உங்களிடத்தில் விசாரித்தாலும் நீங்கள் எனக்கு மாறுத்தரவு சொல்லவும் என்னை விடுதலையாக்கவும்மாட்டீர்கள்.

௬௯ [1]இதுமுதல் மனிதனுடைய குமாரன் சருவவல்லமையுள்ள பராபரனுடைய வலதுபாரிசத்தில் உளுக்காருவான் என்றார்.

௭௰ அதற்கு அவர்கள் எல்லாரும், அந்தப்படி நீ பராபரனுடைய குமாரனா என்றார்கள்; அவர் சொன்னது: [2]நீங்கள் சொல்லுகிறபடி நானே அவரென்றார்.

௭௧ [3]அப்பொழுது அவர்கள் சொன்னது: இனி வேறு சாட்சி நமக்கு வேண்டுவதென்ன? நாம் தானே இவனுடைய வாயினாலே கேட்டோமே என்றார்கள்.

## உ௩. அதிகாரம்.

*௧. இயேசு பிலாத்துவுக்குமுன்பாகக் குற்றஞ்சாற்றப்பட்டு, ஏரோதேயினிடத்துக்கு அனுப்பப்பட்டது. ௮. ஏரோதே அவரைப் பரிகாசம்பண்ணினது. ௰௨. விரோதிகளாயிருந்த ஏரோதேயும் பிலாத்தும் சிநேகிதர்களானது. ௰௮. பாரபாசென்பவன் சனங்களுடைய கேட்டுக்கொள்ளுதலினாலே பிலாத்துவினால் விடுதலையாக்கப்பட, இயேசுவானவர் சிலுவையில் அறையும்படி ஒப்புவிக்கப்பட்டது. ௨௭. தமக்காகப் புலம்பின ஸ்திரிகளுக்கு எருசலேமின் அழிவைச் சொல்லி, ௩௪. தம்முடைய சத்துருக்களுக்காக வேண்டிக்கொண்டது. ௩௩. இரண்டு குற்றவாளிகளும் அவருடனேகூடச் சிலுவையில் அறையப்பட்டது. ௪௬. அவர் மரித்து, ௫௩. அடக்கம்பண்ணப்பட்டது.*

[4]பின்பு அவர்களுடைய கூட்டத்தார் எல்லாரும் எழுந்திருந்து, அவரைப் பிலாத்துஎன்னும் துரையினிடத்துக்குக் கொண்டுபோய்,

௨ [5]இவன் தன்னை இராசாவாகிய கிறிஸ்து என்றும், [6]சனங்கள் இராயருக்கு வரிகொடுக்கவேண்டுவது இல்லையென்றும்சொல்லி, [7]அவர்களைக் கலகப்படுத்தக் கண்டோம் என்று அவர்மேல் குற்றம் சாற்றத் தொடங்கினார்கள்.

௩ [8]அப்பொழுது பிலாத்து என்பவன் அவரை நோக்கி, நீ யூதருடைய இராசாவா என்று கேட்டான்; அதற்கு அவர் நீர் சொல்லுகிறபடியே இருக்கின்றது என்றார்.

௪ பின்பு பிலாத்து என்பவன் பிரதான ஆசாரியரையும் சனக்கூட்டத்தையும் நோக்கி, [9]இந்த மனிதனிடத்திலே ஒரு குற்றத்தையும் காணேன் என்றான்.

௫ அதற்கு அவர்கள் சொன்னது: இவன் கலிலேயா நாட்டைத் தொடங்கி, இவ்விடம்வரைக்கும் யூதேயா நாட்டில் எங்கும் உபதேசம்பண்ணி, சனங்களைக் கலகப்படுத்துகிறான் என்று அதிக உக்கிரத்தோடே சொன்னார்கள்.

௬ கலிலேயா நாடென்பதைப் பிலாத்துக் கேள்விப்பட்டபொழுது, இம்மனிதன் கலிலேயனா என்று விசாரித்தபின்பு,

௭ [10]அவர் ஏரோதே இராசாவின் அதிகாரத்துக்கு உள்ளானவர் என்று அறிந்து, அந்நாள்களில் எருசலேமிலே வந்திருந்த ஏரோதினிடத்திற்கு அவரை அனுப்பினான்.

௮ ¶ ஏரோது என்பவன் [11]இயேசுவைக்குறித்து மிகுந்த காரியங்களைக் கேள்விப்பட்டிருந்தபடியினாலே, [12]அநேகநாளாய் அவரைக் காண ஆசையாயிருந்தான்; ஆதலால் அவன் அவரைக் கண்டபொழுது, மிகவும் சந்தோஷப்பட்டு, அவர் செய்யும் அற்புதத்தைப்பார்க்கலாம் என்று எண்ணி,

௯ அநேகம் காரியங்களைக்குறித்து அவரிடத்தில் வினவினான்; அவர் அவனுக்கு மறுமொழி ஒன்றும் சொல்லவில்லை.

௰ பிரதான ஆசாரியரும் வேதபாரகரும் வந்து நின்று, உக்கிரமாய் அவர்மேல் குற்றம்சாற்றினார்கள்.

௰௧ அப்பொழுது ஏரோதென்பவனும், [13]அவனுடைய போர்ச்சேவகரும் அவரை அசட்டைபண்ணி, பிரகாசமுள்ள வஸ்திரத்தை அவருக்கு உடுத்தி, இப்படிப் பரிகாசம்பண்ணின்பின்பு,

கி. பி. ௩௩.

1 மத். ௨௬. ௬௪. மாற். ௰௪. ௬௨. எபி.௧.௩: ௮ ௧.
2 மத். ௨௬. ௬௪. மாற்.௰௪.௬௨.
3 மத். ௨௬ ௬௫. மாற்.௰௪.௬௩.
4 மத். ௨௭. ௨. மாற். ௰௫. ௧. யோவா. ௰௮. ௨௮.
5 யோவா. ௰௯. ௰௨.
6 மத். ௰௭. ௨௭: ௨௨.௨௧. மாற். ௰௨.௰௭.
7 அப்.௰௭.௭.
8 மத். ௨௭. ௰௧. ௧ தீமோ.௬.௰௩.
9 ௧ பே.௨.௨௨.
10 லூக்.௩.௧.
11 மத். ௰௪. ௧. மாற்.௬.௰௪.
12 லூக்.௯.௯.
13 ஏசா. ௫௩.௩.

Digitized by Google

௰௨ அவனைத் திரும்பப் பிலாத்துவினிடத்துக்கு அனுப்பினான்; அந்நாளிலே முன்னே ஒருவருக்கொருவர் பகைஞராய் இருந்த [1]பிலாத்து என்பவனும் ஏரோது என்பவனும் சிநேகிதரானார்கள்.

௰௩ ¶ அப்பொழுது [2]பிலாத்து என்பவன் பிரதான ஆசாரியனையும், தலைவரையும், சனங்களையும், கூடிவரச்செய்து, அவர்களை நோக்கி,

௰௪ நீங்கள்[3]இந்த மனிதன் சனங்களைக் கலகப்படுத்துகிறவன் என்று சொல்லி, இவனை என்னிடத்தில் கொண்டுவந்தீர்கள்; அந்தப்படி நான் உங்களுக்குமுன்பாக இவனைச்சோதித்தபொழுது, [4]நீங்கள் இவன்மேல் சாற்றின குற்றங்களில் ஒன்றையும் நான் இவனிடத்திலே காணவில்லை.

௰௫ பின்பு உங்களை ஏரோதினிடத்திற்கு அனுப்பினேன்; அவரும் இவனில் குற்றம் காணவில்லை.

௰௬ ஆதலால் இவன் மரணத்துக்கு ஏதுவானது ஒன்றும் செய்யாதவனாயிருக்கிறபடியால், [5]நான் இவனைத் தண்டித்து விடுதலையாக்குவேன் என்றான்.

௰௭ [6]பண்டிகைதோறும் அவன் அவர்களுக்காக ஒருவனைவிடுதலையாக்கவேண்டியிருந்தபடியால்,அப்படிச்சொன்னான்.

௰௮ திரளான சனங்கள் எல்லாரும் அதைக்கேட்டு, [7]இவனை ஆக்கினைக்கு உட்படுத்தி, பரபாசை எங்களுக்காக விடுதலையாக்கவேண்டும் என்று கூக்குரல் இட்டார்கள்.

௰௯ அந்தப் பரபாசென்பவன் நகரத்திலே நடந்த ஒரு கலகத்துக்காகவும் கொலைபாதகத்துக்காகவும் காவலில் வைக்கப்பட்டிருந்தான்.

௨௰ அப்பொழுது பிலாத்தானவன் இயேசுவை விடுதலையாக்க மனதாய், மறுபடியும் அவர்களுக்குச் சொன்னான்.

௨௧ அதற்கு அவர்கள் இவனைச் சிலுவைமரத்தில் அறையவேண்டும், இவனைச் சிலுவைமரத்தில் அறையவேண்டும் என்று கூக்குரலிட்டார்கள்.

௨௨ அவன் மூன்றாம்தரம் சொன்னது: இவன் எந்தப் பொல்லாங்கைச்செய்தான்? இவனிடத்திலே மரணத்துக்கு ஏதுவான குற்றம் ஒன்றையும் காணேமே; ஆகையால் நான் இவனைத் தண்டித்து விடுதலைபண்ணுவேன் என்றான்.

௨௩ அப்படியிருந்தும் அவனைச் சிலுவைமரத்தில் அறையும்படிக்கு, அவர்கள் மிகுந்த சத்தத்துடனே கேட்டுக்கொண்டார்கள்; அவர்களும் பிரதான ஆசாரியரும் இட்டகூக்குரல் அதிகப்பட்டது.

௨௪ [8]அப்பொழுது பிலாத்து என்பவன் அவர்களுடைய மனுவின்படி ஆகும்படிக்குத் தீர்மானம் பண்ணி,*

௨௫ கலகத்தின் நிமித்தமும் கொலைபாதகத்தின் நிமித்தமும் காவலில் வைக்கப்பட்டிருந்தவனை அவர்களுடைய விண்ணப்பத்தின்படி அவர்களுக்காக விடுதலையாக்கி, இயேசுவானவரையே அவர்களுடைய இஷ்டத்துக்கு ஒப்புக்கொடுத்தான்.

௨௬ ¶ அந்தப்படி அவர்கள் அவரைக் கொண்டுபோகிறபொழுது [9]வயலிலிருந்து வருகிற சிரேனே ஊரானாகிய சீமோன் என்பவனைப்பிடித்துச் சிலுவைமரத்தை இயேசுவின் பின் சுமந்துபோகும்படி அவன்மேலே வைத்தார்கள்.

௨௭ திரளான கூட்டமாகிய சனங்களும், அவருக்காகத் துக்கமாய்ப் புலம்பி அழுகிற ஸ்திரிகளும் அவருக்குப் பின்சென்றார்கள்.

௨௮ அப்பொழுது இயேசுவானவர் அவர்கள் முகமாய்த் திரும்பிச் சொன்னது: எருசலேமின் குமாரத்திகளே, நீங்கள் எனக்காக

கி. பி. ௩௩.

1 அப். ௪. ௨௭.
2 மத். ௨௭. ௨௩. மாற். ௰௫. ௰௪. யோவா. ௰௮. ௩௮: ௰௯.௪.
3 ௩, ௨. ௰௪.
4 ௪. ௰௪.
5 மத். ௨௭. ௨௬. யோவா. ௰௯.௧.
6 மத். ௨௭. ௰௫. மாற். ௰௫. ௬. யோவா. ௰௮. ௩௯.
7 அப்.௩.௰௪.
8 மத். ௨௭. ௨௬. மாற். ௰௫. ௰௫. யோவா. ௰௯. ௰௬.
* அல்லது சம்மதித்து. ௨ லோ. ௨௯. ௨.
9 மத். ௨௭. ௩௨. மாற். ௰௫. ௨௧. யோவா. ௰௯. ௰௭.

Digitized by Google

அழாமல், உங்களுக்காகவும் உங்கள் பிள்ளைகளுக்காகவும் அழுது கொள்ளுங்கள்.

௨௯ என்னத்தினாலெனில், [1]மலடிகளும், பிள்ளைபெறாத கருப்பங்களும், பால்கொடாத முலைகளும் பாக்கியமுள்ளவைகள் என்று சொல்லப்படும் நாள்கள் வரும்.

௩௰ அப்பொழுது இவர்கள் [2]மலைகளை நோக்கி, எங்கள்மேல் விழுங்கள் என்றும், குன்றுகளை நோக்கி, எங்களை மூடிக்கொள்ளுங்கள் என்றும் சொல்லுவார்கள்.

௩௧ [3]பசுமையான மரத்துக்கு இப்படிச் செய்தால், பட்டுப்போன மரத்துக்கு மிகவும் அதிகமாய் இப்படிச் செய்யப்படும் அல்லவா என்றார்.

௩௨ ¶ [4]குற்றவாளிகளாகிய வேறு இரண்டுபேரும் அவரோடேகூட மரணம் அடைவதற்குக் கொண்டுபோகப்பட்டார்கள்.

௩௩ [5]தலையோட்டிடம் * என்னப்பட்ட இடத்திலே அவர்கள்சேர்ந்தபொழுது, அங்கே அவரையும், அவருடைய வலதுபக்கத்திலே ஒரு குற்றவாளியையும், அவருடைய இடதுபக்கத்திலே மற்றக் குற்றவாளியையும் சிலுவைமரங்களில் அறைந்தார்கள்.

௩௪ ¶ அப்பொழுது இயேசுவானவர், பிதாவே, [6]இவர்கள் தங்கள் செய்கையின் தன்மையை அறியாதிருக்கிறார்கள்; ஆதலால் [7]இவர்களுக்கு மன்னித்தருளும் என்றார்; [8]அவருடைய வஸ்திரங்களை அவர்கள் பங்கிட்டு, (அவைகளைக்குறித்து) சீட்டுப்போட்டார்கள்.

௩௫ [9]சனங்கள் நின்று பார்த்துக்கொண்டார்கள்; [10]அவர்களுடனேகூடத் தலைவரும் அவரை இகழ்ந்து, இவன் மற்றவர்களை இரட்சித்தான்; இவன் பராபரனாலே தெரிந்துகொள்ளப்பட்ட கிறிஸ்துவானால், தன்னைத்தானே இரட்சிக்கலாமே என்றார்கள்.

கி. பி. ௩௩.



1 மத். ௨௪. ௰௯. லூக். ௨௧. ௨௩.

2 ஏசா. ௨. ௰௯. ஓசே. ௰. ௮. வெளி. ௬. ௰௬: ௯. ௬.

3 வாக். ௰௧. ௩௧. எரே. ௨௫. ௨௯. எசே. ௨௰. ௪௭: ௨௧. ௩, ௪. ௧ பே. ௪. ௰௭.

4 ஏசா. ௫௩. ௰௨. மத். ௨௭. ௩௮.

5 மத். ௨௭. ௩௩. மாற். ௰௫. ௨௨. யோவா. ௰௯. ௰௭.

* அல்லது கல்வாரிமலை.

6 அப். ௩. ௰௭.

7 மத். ௫. ௪௪. அப். ௭. ௬௰. ௧ கொரி. ௪. ௰௨.

8 மத். ௨௭. ௩௫. மாற். ௰௫. ௨௪. யோவா. ௰௯. ௨௩.

9 சங். ௨௨. ௰௭. சகரி. ௰௨. ௰.

10 மத். ௨௭. ௩௯. மாற். ௰௫. ௨௯.

11 மத். ௨௭. ௩௭. மாற். ௰௫. ௨௬. யோவா. ௰௯. ௰௯.

12 மத். ௨௭. ௪௪. மாற். ௰௫. ௩௨.

13 மத். ௨௭. ௪௫. மாற். ௰௫. ௩௩.

† அல்லது பூமியெங்கும்.

14 மத். ௨௭. ௫௧. மாற். ௰௫. ௩௮.

௩௬ போர்ச்சேவகரும் அவரை அசட்டைபண்ண அவரிடத்தில், சேர்ந்து, அவருக்குக் காடியைக் காண்பித்து,

௩௭ நீ யூதரின் இராசாவானால் உன்னை இரட்சித்துக்கொள் என்றார்கள்.

௩௮ அவருக்கு மேலாக, [11]இவன் யூதருடைய இராசா என்று கிரேக்கை, லத்தீன், எபிரேயு என்னும் பாஷைகளால் எழுதப்பட்டிருந்தது.

௩௯ ¶ [12]அல்லாமலும் தூக்கிப்போடப்பட்ட குற்றவாளிகளில் ஒருவன் அவரைத் தூஷணித்து, நீகிறிஸ்துவானால் உன்னையும் எங்களையும் இரட்சித்துக்கொள் என்றான்.

௪௰ அப்பொழுது மற்றவன் அவனுடனே சொன்னது: இந்த ஆக்கினைக்கு உள்ளாயிருக்கிற நீயும் பராபரனுக்குப் பயப்படாமலா இருக்கிறாய்? நாம் நம்முடைய நடக்கைகளுக்குத் தகுதியாக இந்த ஆக்கினையை நியாயமாய் அடைகிறோம்.

௪௧ இவர் தகாத ஒன்றையும் நடப்பிக்கவில்லை என்று அவனைக் கடிந்துகொண்டு,

௪௨ பின்பு இயேசுவுடனே சொன்னது: ஆண்டவரே, நீர் உம்முடைய இராச்சியத்தில் சேரும்பொழுது, அடியேனை நினைத்தருளும் என்றான்.

௪௩ அவனுடனே இயேசுவானவர் சொன்னது: இன்றைக்கு நீ என்னுடனேகூடப் பரதீசில் இருப்பாய் என்று மெய்யாய் உனக்குச் சொல்லுகிறேன் என்றார்.

௪௪ ¶ பின்பு [13]ஏறக்குறைய ஆறும்மணி நேரமாயிற்று; (அதுமுதல்) ஒன்பதாம்மணி நேரம்வரைக்கும், அந்தத் தேசத்தில் எங்கும்† அந்தகாரம் உண்டாகச் சூரியன் இருள் அடைந்தது.

௪௫ அல்லாமலும் [14]தேவாலயத்தில் உள்ள திரைச்சீலை நடுவிலே கிழிந்துபோயிற்று.

Digitized by Google

சக அல்லாமலும் இயேசுவானவர், பிதாவே, [1]உம்முடைய கைகளில் என் ஆவியை ஒப்புக்கொடுக்கிறேன் என்று மிகுந்த சத்தத்தோடே கூப்பிட்டு, அதின்பின்பு [2]ஜீவனைவிட்டார்.

சஎ ¶ [3]அப்படிச் சம்பவித்தவைகளைப் படைத்தலைவன் கண்டு, மெய்யாய் இந்த மனிதன் நீதிமானாய் இருந்தான் என்று பராபரனைத் துதிசெய்தான்.

சஅ அல்லாமலும் அந்தச் சங்கதியைப் பார்க்கக் கூடிவந்திருந்த சனங்கள் எல்லாரும் சம்பவித்தவைகளைப் பார்த்தபொழுது, தங்கள் மார்புகளில் அடித்துக்கொண்டு திரும்பினார்கள்.

சகூ [4]அன்றியும், அவருக்கு அறிமுகமானவர்கள் எல்லாரும், கலிலேயாவிலிருந்து அவருக்குப்பின் சென்றுவந்த ஸ்திரிகளும் தூரத்திலே நின்று, அவைகளைப் பார்த்துக்கொண்டிருந்தார்கள்.

ருo ¶ [5]பின்பு யூதருடைய பட்டணமாகிய அரிமத்தியா ஊரானுமாய், உத்தமமும் நீதியுமுள்ளவனுமாய், [6]பராபரனுடைய ஆளுகை வரக்காத்திருந்தவனுமாய்,

ருக யூதருடைய ஆலோசனைக்கும் செய்கைக்கும் சம்மதியாத ஆலோசனைக்காரனுமாய் இருந்த யோசேப்பு என்பவன் பிலாத்துவினிடத்தில் போய்,

ருஉ இயேசுவின் சரீரத்தைக் கேட்டு,

ருங [7]அதை இறக்கி, மெல்லிய புடவையிலே சுற்றி, கல்மலையில் வெட்டப்பட்டதுமாய் ஒருக்காலும் ஒருவனும் வைக்கப்படாததுமாயிருந்த ஒரு கல்லறையிலே வைத்தான்.

ருச [8]அந்த நாள் ஆயத்த நாளாயிருந்தது; ஓய்வுநாளும் ஆரம்பமாயிற்று.

ருரு ¶ [9]கலிலேயாவிலிருந்து அவருடனே கூட வந்திருந்த ஸ்திரிகள் அவனுக்குப்பின்சென்று, [10]கல்லறையையும் அவருடைய சரீரம் வைக்கப்பட்ட விதத்தையும் பார்த்து,

ருசா பின்பு திரும்பிப்போய், [11]சுகந்தவருக்கங்களையும் பரிமளதயிலங்களையும் எத்தனம்பண்ணி, [12]கற்பனைப்படியே ஓய்வுநாளில் ஓய்ந்திருந்தார்கள்.

ஜ. பி. ஙூ.

1 சங். கக. ரு. க பே. உ. உங.
2 மத். உஎ. ருo. மாற். கரு. கஎ. யோவா. கூகூ. கo.
3 மத். உஎ. ருச. மாற். கரு. கக.
4 சங். கஅ. கக. மத். உஎ. ருரு. மாற். கரு. சo. யோவா. கக. உரு.
5 மத். உஎ. ருஎ. மாற். கரு. சங. யோவா. ககூ. கஅ.
6 மாற். கரு. சங. லூக். உ. உரு, கஅ.
7 மத். உஎ. ருகூ. மாற். கரு. சசா.
8 மத். உஎ. கஉ.
9 லூக். அ. உ.
10 மாற். கரு. சஎ.
11 மாற். கசா. க.
12 உ மோ. உo. கo.
13 மத். உஅ. க. மாற். கசா. க. யோவா. உo க.
14 லூக். உங. ருசா.
15 மத். உஅ. உ. மாற். கசா. ச.
16 உக. லச. மாற். கசா. ரு.
17 யோவா. உo. கஉ. அப். க. கo.
* அல்லது உயிரோடிருக்கிறவரை.
18 மத். கசா. உக: கஎ. உங. மாற். அ. ஙக: கூ. ஙக. லூக். கூ. உஉ.

## உச. அதிகாரம்.

க. கிறிஸ்துவின் உயிர்த்தெழுதல் இரண்டு தூதர்களாலே கல்லறையினிடத்தில் வந்திருந்த ஸ்திரிகளுக்கு அறிவிக்கப்பட்டது. கூ. இந்தச் செய்தியை இவர்கள் மற்றவர்களுக்கு அறிவித்தது. கங. கிறிஸ்து எம்மாவென்னும் கிராமத்திற்குப் போகிற இரண்டு சீஷர்களுக்குத் தரிசனையாகி, ஙக. பின்பு அப்போஸ்தலர்கள் எல்லாருக்கும் காணப்பட்டு, அவர்களுடைய அவிசுவாசத்தைக் கடிந்துகொண்டு, சஎ. அவர்களுக்கு ஒரு கட்டளை கொடுத்து, சகூ. பரிசுத்த ஆவியை அனுப்புவோமென்ற வாக்குத்தத்தம்பண்ணி, ருக. பின்பு பரமண்டலத்துக்கு ஏறினது.

[13]வாரத்தின் முதல்நாள் அதிகாலையிலே, அவர்கள் தாங்கள் எத்தனம்பண்ணின [14]சுகந்தவருக்கங்களை எடுத்துக்கொண்டு, வேறுசில ஸ்திரிகளும்கூடக் கல்லறையினிடத்தில் சென்று,

உ [15]அதின்மேல் இருந்த கல் தள்ளப்பட்டிருக்கிறதைக் கண்டு,

ங [16]உட்பிரவேசித்து, கர்த்தராகிய இயேசுவின் சரீரத்தைக் காணாமல்,

ச அதைக்குறித்து மிகுந்த கலக்கம் அடைந்துகொண்டிருக்கையில், [17]பிரகாசமான வஸ்திரங்களையுடைய இரண்டுபேர் அவர்கள் அருகே நின்றார்கள்.

ரு அப்பொழுது அந்த ஸ்திரிகள் பயந்து, தலையை நோக்கிக் குனிந்துநிற்கையில், அவ்விரண்டுபேரும் அவர்களை நோக்கி, உயிரோடு இருக்கிறவரை* நீங்கள் மரித்தோரிடத்தில் என்னத்தினாலே தேடுகிறீர்கள்? அவர் இங்கே இல்லை; எழுந்துபோனார்.

சா முன்னே அவர் கலிலேயா நாட்டில் இருந்தகாலத்திலே, [18]மனிதனுடைய குமாரன் பாவிகளான மனிதர் கைகளில் ஒப்புக்கொடுக்

Digitized by Google

கப்படவும், சிலுவையில் அறையப்படவும், மூன்றாம் நாளிலே திரும்ப எழுந்திருக்கவும் வேண்டுமென்று உங்களுடனே சொன்னதை நினைத்துக்கொள்ளுங்கள் என்றார்கள்.

௮ [1]அப்பொழுது அவர்கள் அவருடைய திருவசனங்களை நினைத்து,

௯ [2]கல்லறையை விட்டுத் திரும்பி, அந்தச் சங்கதியைப் பதினொருவருக்கும் மற்ற எல்லாருக்கும் அறிவித்தார்கள்.

௰ அதை அப்போஸ்தலருடனே சொன்னவர்கள், [3]மகுதலா ஊராளாகிய மரியாளும், யோவன்னாளும், யாக்கோபின் தாய் மரியாளும், இவர்களுடனே இருந்த மற்ற ஸ்திரிகளுமே.

௰௧ [4]அவர்கள் சொன்ன வசனங்களை அப்போஸ்தலர்கள் ஒரு கட்டுக்கதையைப்போல எண்ணி, அவர்களுடைய சொல்லை நம்பவில்லை.

௰௨ [5]ஆனாலும் பேதுரு எழுந்து, கல்லறையினிடத்துக்கு ஓடி, அதற்குள்ளே பார்க்கக் குனிந்து, சேலைகளைத் தனியே வைத்திருக்கக் கண்டு, சம்பவித்திருக்கிறதைக்குறித்துத் தன்னில் ஆச்சரியப்பட்டுக்கொண்டு போனான்.

௰௩ ¶ [6]அன்றியும் அன்றைத்தினமே, அவர்களில் இரண்டுபேர் எருசலேம் நகரத்துக்கு அறுபது ஸ்தாதிவழி தூரமான எம்மாவு என்னும் ஊருக்குப் போனார்கள்.

௰௪ (போகையில்) அவர்கள் சம்பவித்திருந்த இக்காரியங்கள் யாவையுங்குறித்து ஒருவரோடொருவர் பேசிக்கொண்டார்கள்.

௰௫ அப்படி அவர்கள் பேசி விசாரித்துக்கொள்ளுகிறபொழுது, [7]இயேசுவானவர் தாமும் சமீபமாகி, அவர்களுடனேகூட நடந்தார்.

௰௬ [8]அப்படியிருந்தும், அவரை அறியாதபடிக்கு அவர்களுடைய கண்கள் மறைக்கப்பட்டிருந்தன.

கி. பி. ௩௩.

1 யோவா. ௨௰. ௨.
2 மத். ௨௮. ௮. மாற். ௰௬. ௰.
3 லூக். ௮. ௩.
4 மாற். ௰௬. ௰௧. ௨௰. வச.
5 யோவா. ௨௰. ௩, ௬.
6 மாற். ௰௬. ௰௨.
7 மத். ௰௮. ௨௰. ௩௬. வச.
8 யோவா. ௨௰. ௰௪: ௨௧. ௪.
9 யோவா. ௰௯. ௨௫.
10 அப். ௭. ௨௨.
11 மத். ௨௧. ௰௧. லூக். ௭. ௰௬. யோவா. ௪. ௨: ௬. ௰௪: ௭. ௰௪. அப். ௨. ௨௨.
12 லூக். ௨௩. ௧. அப். ௰௩. ௨௭, ௨௮.
13 லூக். ௧. ௬௮: ௨. ௩௮. அப். ௧. ௬.
14 மத். ௨௮. ௮. மாற். ௰௬. ௰: ௩௬. வச. யோவா. ௨௰. ௰௮.
15 ௰௨. வச.

௰௭ அப்பொழுது அவர் அவர்களை நோக்கி, நீங்கள் துக்கமுகமுள்ளவர்களாய் வழிநடந்து, ஒருவருக்கொருவர் சொல்லிக்கொள்ளுகிற காரியங்கள் என்னவென்றார்.

௰௮ அதற்கு அவர்களில் ஒருவனாகிய [9]கிலேயோப்பா என்பவன் சொன்னது: நீமாத்திரமோ எருசலேமில் இந்நாள்களில் சம்பவித்தவைகளை அறியாத அந்நியனாயிருக்கிறாய் என்றான்.

௰௯ அவர் எவையென்றார்; அதற்கு அவர்கள் சொன்னது: நாசரேத்தூரானாகிய இயேசுவைக்குறித்தவைகளே; [10]அவர் பராபரனுக்கும் சகல சனங்களுக்கும் முன்பாக, செய்கையிலும் வசனத்திலும் [11]வல்லமையுள்ள தீர்க்கதரிசியாய் இருந்தார்.

௨௰ அப்படியிருந்தும், [12]நம்முடைய பிரதான ஆசாரியரும் தலைவரும் அவரை மரண ஆக்கினைக்கு உட்படுத்திச் சிலுவைமரத்தில் அறைந்தார்கள்.

௨௧ [13]இஸ்ரவேலரை மீட்பவர் அவரே என்று நாங்கள் நம்பினோம்; அவைகள் சம்பவித்தது இன்று மூன்றுநாள் ஆகிறதே.

௨௨ எங்களில் சில ஸ்திரிகள் அதிகாலையிலே கல்லறையினிடத்தில் போய், அவருடைய சரீரத்தைக் காணாமல் திரும்பி வந்து,

௨௩ அவர் உயிரோடு இருக்கிறார் என்று சொன்ன தேவதூதரைத் தரிசித்தோம் என்று சொல்லி [14]எங்களைப் பிரமிக்கப்பண்ணினார்கள்.

௨௪ [15]அப்பொழுது எங்களில் சிலர் கல்லறையினிடத்தில் போய், ஸ்திரிகள் சொன்னபடியே கண்டார்கள்; அவரைக் காணவில்லை என்றார்கள்.

௨௫ அப்பொழுது அவர் அவர்களுடனே சொன்னது: தீர்க்கதரிசிகள் சொன்ன யாவையும் விசுவாசிக்கிறதற்குப் புத்தியில்லாமல், மந்த இருதயம் உள்ளவர்களே!

Digitized by Google

உசு [1]கிறிஸ்துவானவர் பாடுபடவும் தமது மகிமைக்குள் பிரவேசிக்கவும் வேண்டியதாயிருந்ததில்லையா என்று சொல்லி,

உஎ [2]மோசேயையும் [3]சகல தீர்க்கதரிசிகளையும் தொடங்கி [4]வேதவாக்கியங்கள் எல்லாவற்றிலும் தம்மைக்குறித்துச் சொல்லியிருக்கிறவைகளை அவர்களுக்கு விவரமாய்க் காண்பித்தார்.

உஅ அத்தருணத்திலே தாங்கள் போகிற ஊருக்குச் சமீபமானார்கள், [5]அப்பொழுது அவர் அப்புறம்போக மனதைக் காண்பித்தார்.

உகூ அவர்கள் சொன்னது: [6]சாயந்தரமாயிற்றே; பொழுதும் போகின்றதே; ஆகையால் நீர் எங்களிடத்திலே தங்கவேண்டும் என்று மிகவும் வேண்டிக்கொண்டார்கள்; அதன்பின்பு அவர் அவர்களிடத்திலே தங்கும்படி பிரவேசித்தார்.

௩0 அப்படி அவர்களுடனே பந்தியிருக்கையில், [7]அவர் அப்பத்தை எடுத்து, ஆசீர்வாதம்சொல்லி, அதைப் பிட்டு, அவர்களுக்குக் கொடுத்தார்.

௩க அப்பொழுது அவர்களுடைய கண்கள் திறக்கப்பட அவரை அறிந்தார்கள்.

௩உ உடனே அவர் அவர்களுக்கு விலகினார்; * அப்பொழுது அவர்கள் ஒருவரை ஒருவர் நோக்கி, வழியிலே அவர் நம்முடனே பேசி,

௩௩ வேதவாக்கியங்களை நமக்கு விளக்கமாய்க் காண்பித்தபொழுது, நமக்குள்ள இருதயம் அன்பாய்க்கொழுந்துவிட்டுவெளரவில்லையா என்று சொல்லி, அந்நேரமே எழுந்து எருசலேமுக்குத் திரும்பிப்போய், பதினொருவரும் அவர்களோடு இருந்தவர்களும் கூடியிருக்கக் கண்டு,

௩௪ கர்த்தர் மெய்யாய் எழுந்திருந்து [8]சீமோனுக்குத் தரிசனையானார் என்று அவர்கள் சொல்லக்கேட்டு,

௩ரு பின்பு வழியிலே நடந்தவைகளையும், அவர் அப்பத்தைப் பிட்கையில் தாங்கள் அவரை அறிந்துகொண்டதையும் விவரித்துச் சொன்னார்கள்.

௩௬ ¶ [9]அப்படி அவர்கள் பேசிக்கொள்ளுகையில், இயேசுவானவர் தாமே அவர்களுக்குள்ளே நின்று, உங்களுக்குச் சமாதானசவுக்கியம் உண்டாவதாக என்று அவர்களுடனே சொன்னார்.

௩எ [10]அவர்கள் அவரை ஒரு ஆவியென்று எண்ணி, கலக்கமும் பயமும் அடைந்தார்கள்.

௩அ அப்பொழுது அவர் அவர்களை நோக்கி, நீங்கள் என்னத்திற்காக கலங்குகிறீர்கள்? என்னத்திற்காக உங்கள் இருதயங்களில் சந்தேகங்கள் எழும்புகின்றன?

௩கூ [11]என் கைகளையும் கால்களையும் பாருங்கள், நான்தான் இருக்கிறேன், என்னைத் தொட்டுப்பாருங்கள்; நீங்கள் காண்கிறபடி எனக்கு மாம்சமும் எலும்புகளும் உண்டாயிருக்கிறதுபோல, ஒரு ஆவிக்கும் இல்லையே என்று சொல்லி,

௪0 கைகளையும் கால்களையும் அவர்களுக்குக் காண்பித்தார்.

௪க [12]அப்படியிருந்தும், சந்தோஷத்தினாலே அவர்கள் பின்னும் விசுவாசியாமல் பிரமிப்பாய் இருக்கிறபொழுது, [13]போசனத்துக்கு ஏதாகிலும் இங்கே உண்டா என்றார்.

௪உ அப்பொழுது அவர்கள் பொரித்த மீன் கண்டத்தையும், தேன் கூட்டுத் துணிக்கையையும் அவருக்குக் கொடுத்தார்கள்.

௪௩ [14]அவைகளை அவர் எடுத்து, அவர்களுக்குமுன்பாகப் புசித்து,

௪௪ ¶ பின்பு அவர்களுடனே சொன்னதாவது: [15]மோசேயின் பிரமாணப் புத்தகத்திலேயும், தீர்க்கதரிசனப் புத்தகங்களிலேயும்,

---

ஓ. பி. ௩௬.

1 சக.௮௪. அப். ௰௭. ௩. ௧ பே. ௧. ௰௧.
2 ௧ மோ. ௩. ௰௫: உஉ.௰௮: உக. ௬: ௬௬. ௰. ௫ மோ. ௨௩.௧. ௫ மோ.௰௮.௰௫.
3 சங். ௰௬. ௧, ௰, உஉ: ௬௩௨. ௰௩.௭௪. ௭.௧௪: ௬.௧:௬௰.௰,௰௪: ௫௰. ௯: ௫௩. ௭௪. உக. ௫: ௯௯. ௰௪, ௰௫. ௭௪. ௪௪. உக: ௯௭.உ௫ தானி. ௯. உ௪. மீகா. ௭. உ௰. மல்கி. ௩. ௯: ௪. உ. யோவா.௧.௪௫.
4 ௪௫. ௮௪.
5 ௧ மோ. ௯உ. உக: ௪௨. ௭. மாற். ௬.௪௮.
6 ௧ மோ.௰௯. ௩. அப்.௰௬.௰௫.
7 மத். ௰௪. ௰௯.
* அல்லது காணப்படாமல்.
லூக். ௪. ௯௰. யோவா.௨௰.௯௯.
8 ௧ கொரி. ௰௫. ௫.
9 மாற். ௰௬. ௰௪. யோவா. உ௰. ௰௯. ௧ கொரி. ௰௫. ௫.
10 மாற். ௬. ௪௯.
11 யோவா. உ௰. உ௰, உ௭.
12 ௧ மோ. ௪௫. உ௬.
13 யோவா. உ௧. ௫.
14 அப். ௰. ௪௧.
15 மத். ௰௬.உ௧: ௰௭.உ௨: உ௰. ௰௮. மாற். ௮. ௩௧. லூக். ௯. உ௨: ௰௮. ௩௧. ௯. ௪௪.

Digitized by Google

சங்கீதப் புத்தகத்திலேயும், என்னைக்குறித்து எழுதியிருக்கிற யாவும் நிறைவேறவேண்டும் என்று நான் உங்களோடே இருந்த காலத்திலே, உங்களுடனே சொல்லிக்கொண்ட சங்கதிகள் இவைகளே என்று சொல்லி,

சரு பின்பு [1]வேதவாக்கியங்களை அவர்கள் அறிந்துகொள்ளும்படி, அவர்களுடைய மனதுக்குப் புத்திகொடுத்து, அவர்களுடனே சொன்னதாவது:

சசு [2]இவ்விதமாய் எழுதியிருக்கின்றது; அல்லாமலும் அந்தப்படியே கிறிஸ்து பாடுபடவும், மூன்றும் நாளிலே மரித்தோரிலிருந்து எழுந்திருக்கவும்,

சஎ [3]எருசலேம் தொடங்கிச் சகலதேசத்தாருக்கும் அவருடைய நாமத்தினலே [4]மனந்திரும்புதலேயும் பாவமன்னிப்பையும் பிரசங்கிக்கவும் வேண்டியதாயிருந்தது.

சஅ [5]நீங்களே அவைகளுக்குச் சாட்சிகளாய் இருக்கிறீர்கள்.

சகூ [6]பின்பு, நான் என் பிதா வாக்குத்தத்தம்பண்ணினதை உங்களுக்கு அனுப்புவேன்; நீங்கள் உன்னதத்திலிருந்து வரும் பலனைப் பெற்றுக்கொள்ளுகிறவரைக்கும் எருசலேம் நகரத்தில் இருங்கள் என்றார்.

ருய ¶ [7]பின்பு அவர் பெத்தானியா ஊர்வரைக்கும் அவர்களை அழைத்துக்கொண்டுபோய்த் தம்முடைய கைகளை உயர்த்தி அவர்களை ஆசீர்வதித்தார்.

ருக [8]அவர்களை ஆசீர்வதிக்கையில், அவர் அவர்களைவிட்டுப் பிரிந்து, பரமண்டலத்திற்கு எடுத்துக்கொள்ளப்பட்டார்.

ருஉ அப்பொழுது [9]அவர்கள் அவரைத் தொழுதுகொண்டு, மிகுந்த சந்தோஷத்தோடே எருசலேம் நகரத்துக்குத் திரும்பி,

ருங [10]இடைவிடாமல் தேவாலயத்திலே பராபரனைத் துதித்து வாழ்த்திக்கொண்டிருந்தார்கள்.—ஆமன்.

கி. பி. ௩௩.

1 அப். ௰௧. ௰௪.
2 உக. ௨௪. ௪௬. உஉ. ௭௪. ௯௰. ௧: இக. உ. அப். ௰௭. ௩.
3 க மோ. ௰உ. ௩. சங். உஉ. உஎ. ௭௪. சக. ௧. உஉ. எரே. ௩௧. ௩௪. ஓசே. உ. உ௩. மீகா. ௪. உ. மல்கி. ௧. ௰௧.
4 தானி. ௯. உ௪. அப். ௰௩. ௩௮. ௪௬. ௧ யோ. உ. ௰உ.
5 யோவா. ௰௫. உ௭. அப். ௧. ௮. உஉ: உ. ௩உ: ௩. ௰௫.
6 ௭௪. ௪௪. ௩. யோவே. உ. உ௮. யோவா. ௰௪. ௰௬, உ௬: ௰௫. உ௬; ௰௬. ௭. அப். ௧. ௪: உ. ௧. ௸.
7 அப். ௧. ௰உ.
8 ௨-இரா. உ. ௰௧. மாற். ௰௬. ௰௯.

யோவா. உ௰. ௰௭. அப், ௧. ௯. எபே. ௪. ௮.—9 மத். உ௮. ௯, ௰௭.—10 அப். உ. ௪௬: ௫. ௪உ.

# JOHN.

# யோவான் என்பவர்

## எழுதின சுவிசேஷம்.

### ௧. அதிகாரம்.

௧. இயேசுகிறிஸ்துவினுடைய தெய்வீகத்தையும், மனுஷீகத்தையும், உத்தியோகத்தையும் காட்டினது. ௧௯. அவரைக்குறித்து யோவான் கொடுத்த சாட்சியைச் சொல்லியது. ௩௧. அந்திரேயா பேதுருமுதலான சீஷர்கள் அழைக்கப்பட்டது.

ஆதியிலே [1]வார்த்தை இருந்தது; அவ்வார்த்தை [2]பராபரனிடத்தில் இருந்தது; அல்லாமலும் அவ்வார்த்தையே [3]பராபரன்.

௨ அது ஆதியிலே [4]பராபரனிடத்தில் இருந்தது.

௩ [5]சகலமும் அதினாலே உண்டாயிற்று; அது இல்லாமல் ஒரு சிருஷ்டியும் உண்டாகவில்லை, [6]அதிலே சீவன் உண்டாயிருந்தது.

௪ [7]அந்தச் சீவன் மனிதருடைய ஒளியாய் இருந்தது.

௫ [8]அந்த ஒளி இருளிலே பிரகாசமாயிற்று; இருளானது அதைப் பற்றிக்கொள்ளவில்லை.

௬ ¶ [9]யோவான் என்னும் ஒரு மனிதன் பராபரனால் அனுப்பப்பட்டு,

௭ [10]தன்னாலே எல்லாரும் விசுவாசிக்கும்படிக்கு அந்த ஒளியைக் குறித்துச் சாட்சிகொடுக்க வந்தான்.

௮ அவன் அந்த ஒளி அல்ல, அந்த ஒளியைக்குறித்துச் சாட்சி கொடுக்கவே வந்தான்.

௯ [11]மெய்யான ஒளியானவர் உலகத்திலே தோன்றுகிற மனிதர் யாவரையும் பிரகாசிப்பிக்கிறார்.

௰ [12] அவர் உலகத்தில் இருந்தார்; அல்லாமலும் உலகம் அவராலே உண்டாயிற்று; உலகம் அவரை அறியவில்லை.

௰௧ [13] அவர் தமது சொந்தத்தில் சேர்ந்தார்; அவருக்குச் சொந்தமானவர்கள் அவரை ஏற்றுக்கொள்ளவில்லை.

௰௨ [14]அவருடைய நாமத்தின் மேல் விசுவாசமாய் அவரை ஏற்றுக்கொண்டவர்கள் எத்தனைபேர்களோ, அத்தனைபேர்களும் பராபரனுடைய பிள்ளைகளாய் இருக்கும்படி அதிகாரம்* கொடுத்திருக்கிறார்.

௰௩ [15]அவர்கள் இரத்தத்தினாலாவது, மாம்ச இச்சையினாலாவது, புருஷனுடையசித்தத்தினாலாவது பிறவாமல், பராபரனாலே பிறந்தார்கள்.

௰௪ [16]அந்த வார்த்தை [17]மனிதனாகி, [18]கிருபையினாலும் சத்தியத்தினாலும் நிறைந்தவராய் [19]நமக்குள்ளே வாசம்பண்ணினார்; [20]அவருடைய மகிமையைக் கண்டோம்,

கி. பி. ௯௰.

1 வாக். அ. ௨௨, ௨௩. ௩. கொலோ. ௧. ௰௭. ௧ யோ. ௧. ௧. வெளி. ௧. ௨: ௰௯. ௰௩.
2 வாக். அ. ௩௰. யோவா. ௰௭. ௫. ௧ யோ. ௧. ௨.
3 பிலி. ௨. ௬. ௧ யோ. ௫. ௭.
4 ௧ மோ. ௧. ௧.
5 சங். ௩௩. ௬. ௰. ஏசா. ௭ பே. ௩. ௰௩. கொலோ. ௧. ௰௬. எபி. ௧. ௨. வெளி. ௪. ௰௧.
6 யோவா. ௫. ௨௬. ௧ யோ. ௫. ௰௧.
7 யோவா. அ. ௰௨: ௯. ௫: ௰௨. ௪௬, ௪௬.
8 யோவா. ௩. ௰௯.
9 மல்கி. ௩. ௧. மத். ௩. ௧. லூக். ௩. ௨. ௩௩. வச.
10 அப். ௰௯. ௪.
11 ௪. வச. ஏசா. ௪௯. ௬. ௧ யோ. ௨. அ.
12 ௧. வச. எபி. ௧. ௨: ௰௧. ௩.
13 லூக். ௰௯. ௰௪. அப். ௩. ௨௬: ௰௩. ௪௬.
14 ஏசா. ௫௬. ௫. உரோ. அ. ௰௫. கலா. ௩. ௨௬.

௨ பே. ௧. ௪. ௧ யோ. ௩. ௧. * அல்லது ஆதீனம். —15 யோவா. ௩, ௫. யாக். ௧. ௰அ. ௧ பே. ௧. ௨௩. —16 மத். ௧. ௰௬. லூக். ௧. ௩௩, ௩௫: ௨. ௭. ௧ தீமோ. ௩. ௰௬. —17 எபி. ௨. ௰௧, ௰௪, ௰௬, ௰௭. —18 உரோ. ௫. ௫. கலா. ௪. ௪. —19 கொலோ. ௧. ௰௯: ௨, ௩, ௯. —20 ஏசா. ௪௰. ௫. மத். ௰௭. ௨. யோவா. ௨. ௰௧: ௰௧. ௪௰. ௨ பே. ௧, ௰௭.

Digitized by Google

அது பிதாவுக்கு ஒரேபேறானவருடைய மகிமையாகவே இருந்தது.

௰௫ ¶ [1]அவரைக்குறித்து யோவான் சாட்சியாக, [2]எனக்குப் பின் வருகிறவர் எனக்குமுன் இருந்தவர், ஆகையால் [3]என்னிலும் மேன்மையுள்ளவராய் இருக்கிறார் என்று நான் சொல்லியிருந்தேனே, அவர் இவரே என்று கூப்பிட்டான்.

௰௬ [4]நியாயப்பிரமாணம் மோசேயின் மூலமாய்க் கொடுக்கப்பட்டது, [5]கிருபையும் [6]சத்தியமும் இயேசுக்கிறிஸ்துமூலமாய் உண்டாயின.

௰௭ [7]ஆனபடியினாலே அவருடைய பரிபூரணத்தில் நாங்கள் எல்லாரும் மிகுந்த தயவைப் பெற்றுக்கொண்டோம்.

௰௮ [8]ஒருவனும் தேவனை ஒருக்காலும் காணவில்லை; [9]பிதாவின் மடியில் இருக்கிற ஒரே பேறான குமாரன் அவரை நமக்கு வெளிப்படுத்தினார்.

௰௯ ¶ [10]எருசலேமில் உள்ள யூதர்கள் ஆசாரியரையும் லேவியரையும் யோவானிடத்திலே அனுப்பி, நீர் யார் என்று விசாரித்த பொழுது,

௨௰ யோவான் கொடுத்த சாட்சியாவது: [11]அவன் மறுதலியாமல் அறிக்கையிட்டான்; நான் கிறிஸ்து அல்லவென்றே அறிக்கையிட்டான்.

௨௰௧ அப்பொழுது அவர்கள் அவனை நோக்கி, அப்படியானால், நீர் யார்? [12]எலியாவா என்று கேட்டார்கள்; அதற்கு அவன் நான் அவன் அல்ல என்றான்; அவர்கள் நீர் [13]தீர்க்கதரிசியானவரா* என்று கேட்டதற்கு, நான் அல்ல என்று சொன்னான்.

௨௰௨ ஆதலால் அவர்கள் பின்னும் அவனை நோக்கி, எங்களை அனுப்பினவர்களுக்கு நாங்கள் உத்தரவுகொடுக்கும்படிக்கு, நீர்தான் உம்மைக்குறித்து என்ன சொல்லுகிறீர் என்றார்கள்.

௨௰௩ அதற்கு அவன் சொன்னது: [14]ஏசாயாதீர்க்கதரிசி சொன்னபடியே; [15]நான் பராபரனுக்காக மார்க்கத்தைச் செம்மைப்படுத்துங்கள் என்று வனாந்தரத்திலே கூப்பிடுகிறவனுடைய சத்தமாய் இருக்கிறேன் என்றான்.

௨௰௪ அப்பொழுது அனுப்பப்பட்டவர்களாகிய பரிசேயர் பின்னும் அவனை நோக்கி,

௨௰௫ நீர் கிறிஸ்துவும் அல்ல, எலியாவும் அல்ல, தீர்க்கதரிசியும் அல்ல என்றால், நீர் ஞானஸ்நானத்தை எப்படிக் கொடுக்கலாம் என்றார்கள்.

௨௰௬ அதற்கு யோவான் சொன்னது: [16]நான் சலத்தினாலே ஞானஸ்நானம் கொடுக்கிறேன்; [17]நீங்கள் அறியாதிருக்கிற ஒருவர் உங்களுக்குள்ளே இருக்கிறார்.

௨௰௭ [18]அவர் எனக்குப்பின்பு வந்தும் எனக்குமுன் இருந்தார்; அவருடைய பாதரட்சையின்வாரை அவிழ்ப்பதற்கு நான் பாத்திரன் அல்ல என்றான்.

௨௰௮ [19]இவைகள் யோர்தான் ஆற்றின் அக்கரையில், யோவான் ஞானஸ்நானம்கொடுத்த பெத்தாபரா ஊரிலே நடந்தன.

௨௰௯ ¶ மறுநாளிலே யோவான் இயேசுவைத் தன்னிடத்திற்கு வரக் கண்டு, சனங்களுடனே சொன்னதாவது: [20]அவரே உலகத்தின் பாவத்தைச் சுமந்தீர்க்கிற† [21]தேவ ஆட்டுக்குட்டி.

௩௰ [22]எனக்குப்பின் ஒரு புருஷன் வருகிறார் என்றும், அவர் எனக்குமுன்இருந்தபடியால் என்னிலும் மேன்மையாயிருக்கிறார் என்றும் நான் சொன்னேனே, அவர் இவரே.

கி. பி. ௩௰.

1 ௧௨. ௰௪. யோவா. ௧,௩௨: ௫,௩௩.
2 மத். ௩. ௰௧. மாற். ௧. ௭. லூக். ௩. ௰௬: ௨௭. ௰. ௰௪. யோவா. ௧,௩௩.
3 யோவா. ௮. ௫௮.கொலோ. ௧.௰௭.
4 ௨ மோ. ௨௰. ௩.௫ ௫ மோ. ௪. ௪௪:௫.௩:௩௩.௪.
5 உரோ. ௩.௨௪: ௫.௨௧: ௬.௰௪.
6 யோவா. ௮. ௩௨: ௰௪.௬.
7 யோவா.௩.௩௪. எபே. ௧. ௩,௭, ௮. கொலோ. ௧.௰௯: ௨. ௯,௰.
8 ௨ மோ. ௩௩. ௨௰. ௫ மோ. ௪,௰௨. மத்.௰௧. ௨௭. லூக். ௰. ௨௨. யோவா. ௬.௪௬.௧தீமோ. ௧.௰௭: ௬.௰௬. ௧ யோ. ௪.௰௨, ௨௰.
9 ௰௪. ௩. யோவா. ௩.௰௬, ௰௮. ௧ யோ. ௪. ௯.
10 யோவா. ௫. ௩௩.
11 லூக். ௩. ௰௫. யோவா. ௩. ௨௮. அப். ௰௩. ௨௫.
12 மல்கி. ௪. ௫. மத். ௰௭. ௰.
13 ௫ மோ. ௰௮. ௰௫,௰௮.
* அல்லது அந்தத் தீர்க்கதரிசி.
14 ஏசா. ௪௰. ௩.
15 மத். ௩. ௩.மாற். ௧.௩. லூக்.௩.௪. யோவா.௩.௨௮.
16 மத்.௩.௰௧.
17 மல்கி.௩.௧.
18 ௰௫, ௨௭.௩௰. அப்.௰௯.௪.
19 நியா. ௭. ௨௪. யோவா. ௰. ௪௰.
20 ஏசா. ௫௩.௰௧. ௧கொரி. ௰௫.௩.

*௩௰. ௧.௪. எபி. ௧. ௩: ௨. ௰௭: ௩. ௨௮. ௧ பே. ௨. ௨௪: ௩. ௰௮. ௧ யோ. ௨. ௨: ௩. ௫: ௪.௰. வெளி. ௧ ௫.*

†அல்லது சுமக்கிற —21 ௨ மோ.௰௨.௩. ஏசா.௫௩.௭.௧௧.௰௪.அப்.௮.௩௨. ௧ பே.௧.௰௯.வெளி.௫.௬.௩.—22 ௰௫.௨௭.௩௰.

Digitized by Google

௩௧ நானும் இவரை அறியாதிருந்தேன்; இப்பொழுது இவர் இஸ்ரவேலருக்கு வெளியாக்கப்படும் பொருட்டாய், [1]நான் சலத்தினாலே ஞானஸ்நானம் கொடுக்கவந்தேன் என்றான்.

௩௨ பின்னும் [2]யோவான் சாட்சியாகச் சொன்னதாவது: புறாவைப்போல ஆவியானவர் வானத்திலிருந்து இறங்கி, அவர்மேலே தங்கினதைக் கண்டேன்; நான் அவரை அறியவில்லை.

௩௩ அப்பொழுது சலத்தினாலே ஞானஸ்நானம் கொடுக்கும்படிக்கு, என்னை அனுப்பினவர் என்னுடனே சொன்னது: நீ காணத்தக்கதாக ஆவியானவர் இறங்கித் தங்கப்படுபவர் யாரோ [3]அவரே பரிசுத்த ஆவியினாலே ஞானஸ்நானம் கொடுக்கிறவர் என்றார்

௩௪ அந்தப்படியே நான் கண்டு, இவரே பராபரனுடைய குமாரன் என்று சாட்சிகொடுத்தேன் என்றான்.

௩௫ ¶ மறுநாளிலே யோவானும், அவனுடைய சிஷரில் இரண்டுபேரும், மறுபடியும் நிற்கிறபொழுது

௩௬ இயேசுவானவர் நடந்துபோகிறதை அவன் கண்டு, [4]அவரே தேவ ஆட்டுக்குட்டி என்றான்;

௩௭ அவன் அப்படிச் சொன்னதை அவ்விரண்டு சிஷரும் கேட்டு, இயேசுவானவருக்குப் பின்சென்றார்கள்.

௩௮ ¶ அப்பொழுது இயேசுவானவர் திரும்பி அவர்கள் பின்வரக் கண்டு, அவர்களைநோக்கி, என்ன தேடுகிறீர்கள் என்றார்.

அதற்கு அவர்கள், இரபீ, நீர் எங்கே தங்குகிறீர் * என்றார்கள்; இரபீ என்பதற்குப் போதகரே என்று அர்த்தமாம்.

௩௯ அவர் சொன்னது: நீங்கள் வந்து பாருங்கள் என்றார்; அந்தப்படி அவர்கள் போய், அவர் தங்கிய இடத்தைப்பார்த்து, ஏறக்குறையப் பத்துமணிநேரம்† ஆனபடியால், அன்றைத்தினம் அவரிடத்திலே இருந்தார்கள்.

௪௰ யோவான் சொன்னதைக் கேட்டு, அவருக்குப் பின்சென்ற இரண்டுபேரில் ஒருவன் [5]சீமோன்பேதுருவினுடைய சகோதரனாகிய அந்திரேயா.

௪௧ அவன் முதலாவது தன் சகோதரனாகிய சீமோனைக்கண்டு, மேசியாவைக் கண்டோம் என்று அவனுடனே சொன்னான்; மேசியா என்பதற்குக்‡ கிறிஸ்து என்று அர்த்தமாம்.

௪௨ பின்பு அவனை இயேசுவினிடத்திற்கு அழைத்துக்கொண்டு போனான்; இயேசுவானவர் அவனைப் பார்த்து, நீ யோனாவின் மகனாகிய சீமோன், இனிக் [6]கேபா என்று அழைக்கப்படுவாய் என்றார்; கேபா என்றாலும் பேதுரு§ என்றாலும் ஒக்கும்.

௪௩ ¶ மறுநாளிலே இயேசுவானவர் கலிலேயா நாட்டுக்குப்போக மனதாய், பிலிப்பைக் கண்டு, நீ எனக்குப் பின்சென்று வா என்றார்.

௪௪ [7]பிலிப்பென்பவன் அந்திரேயா பேதுரு என்பவர்களுடைய ஊராகிய பெத்சாயிதாபட்டணத்தான்.

௪௫ [8]பிலிப்பென்பவன் நாத்தான்வேலைக் கண்டு அவனுடனே சொன்னது: [9]வேதத்திலே மோசேயும் [10]தீர்க்கதரிசிகளும் எழுதப்பட்டவரைக் கண்டோம்; [11]நாசரேத்தூரிலிருந்து வந்த யோசேப்பின் குமாரனாகிய இயேசு, அவரே என்றான்.

௪௬ அதற்கு நாத்தான்வேல் [12]நாசரேத்தூரிலிருந்தும் ஒரு நன்மை தோன்றுமா என்றான்; பிலிப்பு, நீ வந்துபார் என்றான்.

௪௭ அந்தப்படி இயேசுவானவர் நாத்தான்வேலைத் தம்மிடத்திற்கு வரக்கண்டு, அவனைக்குறித்து,

கி. பி. ௩௰.

1 மல். ௩. ௧. மத். ௩. ௧௧. லூக். ௩. ௩,௧௬,௧௭: ௩. ௩, ௪.
2 மத். ௩. ௰௬. மாற். ௧ ௰. லூக். ௩. ௨௨. யோவா. ௫. ௩௨.
3 மத். ௩. ௰௧ அப். ௧. ௫: ௨. ௪: ௰. ௪௪: ௰௧. ௧௫.
4 ௨௯. வச.
* அல்லது வசிக்கிறீர்.
† சாயங்காலம் நாலு மணிவேளையில்.
5 மத் ௪. ௰௮.
‡ அல்லது அபிஷேகம் பண்ணப்பட்டவர்
6 மத். ௰௬. ௰௮.
§ அல்லது கன்மலை.
7 யோவா. ௰௨. ௨௧.
8 யோவா. ௨௧. ௨.
9 ௧ மோ ௩ ௰௫: ௪௯. ௰ ௫ மோ. ௰௮ ௰௮ லூக். ௨௪. ௨௭.
10 ஏசா. ௪. ௨: ௭ ௰௪: ௯. ௬: ௫௩. ௨. மீகா ௫. ௨ சகரி. ௯. ௰௨: ௯. ௯. லூக் ௨௪ ௨௭
11 மத். ௨. ௨௩. லூக். ௨ ௪.
12 யோவா ௭ ௪௧, ௪௨, ௫௨.



Digitized by Google

[1]இவனே கபடமில்லாத மெய்யான இஸ்ரவேலன் என்றார்.

சஅ அதற்கு நாத்தான்வேல், நீர் என்னை எப்படி அறிந்திருக்கிறீர் என்றான்; அவனுக்கு மாறுத்தரமாக இயேசுவானவர் சொன்னது: பிலிப்பு உன்னை அழைக்கிறதற்கு முன்னே, நீ அத்திமரத்தின் கீழ் இருக்கிறபொழுது, உன்னைக்கண்டேன் என்றார்.

சகூ அதற்கு நாத்தான்வேல் இரபீ, [2]நீரே பராபரனுடைய குமாரன்; [3]நீரே, இஸ்ரவேலரின் இராசா என்றான்.

ருய அதற்கு இயேசுவானவர், அத்திமரத்தின் கீழே உன்னைக் கண்டேன் என்று நான் உன்னுடனே சொன்னதினாலே விசுவாசித்தாய்; இதிலும் பெரிதானவைகளைக் காண்பாய் என்றார்.

ருக பின்னும் அவர் அவனை நோக்கி, [4]இதுமுதல் நீங்கள் வானம் திறந்திருக்கிறதையும், தேவதூதர்கள் மனிதனுடைய குமாரனிடத்திலிருந்து ஏறுகிறதையும், அவர்மேல் இறங்குகிறதையும் காண்பீர்கள் என்று மெய்யாகவே உங்களுக்குச் சொல்லுகிறேன் என்றார்.

## உ. அதிகாரம்.

க. கிறிஸ்து தண்ணீரைப் பழரசமாக்கினது. கூஉ. கப்பர்நாகூமுக்கும் எருசலேமுக்கும் போய், கூச. தேவாலயத்திலே கொள்ளுகிறவர்களையும், விற்கிறவர்களையும் துரத்தினது. கூகூ. அவர் தம்முடைய மரணத்தையும் உயிர்த்தெழுதலையும் முன்னறிவித்தது. உக. அவர் செய்த அற்புதங்களின் நிமித்தம் விசுவாசித்த பற்பலருக்குத் தம்மை ஒப்புக்கொடாமல் இருந்தது.

மூன்றாம் நாளிலே [5]கலிலேயா நாட்டிலுள்ள கானா ஊரிலே ஒரு கலியாணம் நடந்தது; இயேசுவின் தாயும் அங்கே இருந்தாள்.

உ அல்லாமலும் இயேசுவும் அவருடைய சீஷரும் கலியாணத்திற்கு அழைக்கப்பட்டிருந்தார்கள்.

௩ அப்பொழுது திராட்சஇரசம் குறைந்திருந்தபடியால், இயேசுவினுடைய தாய் அவரை நோக்கி, அவர்களுக்குத் திராட்ச இரசம் இல்லை என்றாள்.

ச அதற்கு இயேசுவானவர், [6]ஸ்திரியே, [7]எனக்கும் உனக்கும் என்ன? [8]என்னுடைய நேரம் வரவில்லையே என்றார்.

ரு பின்பு அவருடைய தாய் பணிவிடைக்காரரை நோக்கி, அவர் உங்களுக்குச் சொல்லுகிறபடியே செய்யுங்கள் என்றாள்.

சு [9]அங்கே யூதர்கள் தங்களைச் சுத்திகரிக்கிற முறைமையின்படியே, ஒவ்வொன்று இரண்டு மூன்று பெரிய குடம் தண்ணீர் கொள்ளுகிற ஆறு கற்சாடிகள் வைக்கப்பட்டிருந்தன.

எ பின்பு இயேசுவானவர் பணிவிடைக்காரரை நோக்கி, சாடிகளிலே தண்ணீரை நிரப்புங்கள் என்றார்; அவர்கள் அவைகள் நிறைய நிரப்பினார்கள்;

அ அதன்பின்பு, நீங்கள் இப்பொழுது (இதை) மொண்டு பந்திவிசாரிப்புக்காரனிடத்தில் கொண்டுபோங்கள் என்றார்; அவர்கள் கொண்டுபோனார்கள்.

௯ அப்பொழுது [10]திராட்சஇரசமாய்ப்போன தண்ணீரைப் பந்திவிசாரிப்புக்காரன் ருசிபார்த்து, அது இரசமான வகையை அறியாமல் மணவாளனை அழைத்து,

ய எந்த மனிதனும் முன்பு நல்ல திராட்சஇரசத்தை வார்த்து, சனங்கள் திருத்தியடைந்தபின்பு, ருசி குறைந்ததை வார்ப்பான்; நீர் இதுவரைக்கும் நல்ல இரசத்தை வைத்திருந்தீர் என்றான்; தண்ணீரை மொண்டுகொண்ட பணிவிடைக்காரர் அந்த இரசம் உண்டான வகையை அறிந்தார்கள்.

யக இப்படி இயேசுவானவர் கலிலேயாநாட்டிலுள்ள கானா ஊரிலே அற்புதங்களைச் செய்யத் தொடங்கி, [11]தம்முடைய மகிமையை வெளிப்படுத்தினார்; அவரு

கி. பி. கூய.

1 சங். கஉ. உ: எக.க. யோவா. அ.கசு. உகொ. உ. உஅ, உகூ, கய: சு. சு.
2 மத். கச. கக.
3 மத். உக. ரு: உஎ. கக, சஉ. யோவா. கஅ. கஎ: கூ. க.
4 க மோ. உஅ. கஉ. மத். ச.கக. லூக்.உ. கூ,கங: உஉ.சங: உச. அப். க. க.
5 யோசு. கூ. உஅ.
6 யோவா. கூ. உக.
7 உ சாமு. கூ. க: கூ. உஉ.
8 யோவா. எ.ச.
9 மாற்.எ.ங.
10 யோவா. ச. சக.
11 யோவா.க.கச.

Digitized by Google

டைய சீஷர் அவரிடத்தில் விசுவாசம் வைத்தார்கள்.

௰௨ ¶ [1]அதன்பின்பு அவரும், அவருடைய தாயும், அவருடைய சகோதரரும், சீஷரும் கப்பர்நாகூம் ஊருக்குப் போய், சிலநாள் அங்கே தங்கினார்கள்.

௰௩ ¶ [2]பின்பு யூதருடைய பஸ்காப்பண்டிகை சமீபமாயிற்று.

௰௪ [3]அப்பொழுது இயேசுவானவர் எருசலேம் நகரத்திற்குப் போய், தேவாலயத்திலே மாடுகளையும் ஆடுகளையும் புருக்களையும் விற்கிறவர்களும், காசுக்காரரும் உளுக்காந்திருக்கிறதைக் கண்டு,

௰௫ கயிற்றால் ஒருகொறடாவை உண்பெண்ணி, அவர்கள் யாவரையும், ஆடுமாடுகளையும் தேவாலயத்திற்குப் புறம்பே துரத்தி, காசுக்காரருடைய காசுகளைக் கொட்டிப் பலகைகளைக் கவிழ்த்து,

௰௬ புருக்களை விற்கிறவர்களை நோக்கி, இவ்விடத்திலிருந்து இவைகளை எடுத்துக்கொண்டுபோங்கள்; [4]என் பிதாவின் ஆலயத்தை வியாபாரவீடாக்காதிருங்கள் என்றார்.

௰௭ அப்பொழுது உம்முடைய ஆலயத்தின் நிமித்தம் உண்டான [5]பத்திவயிராக்கியம் என்னைப் பட்சித்தது என்று எழுதியிருக்கின்றதை அவருடைய சீஷர் நினைத்துக்கொண்டார்கள்.

௰௮ ¶ பின்பு யூதர்கள் அவரை நோக்கி, [6]எந்த அற்புதத்தை எங்களுக்குக் காண்பிக்கிறீர்? இப்படியபட்டவைகளைச் செய்கிறீரே என்றார்கள்.

௰௯ அதற்கு இயேசுவானவர் சொன்னது: [7]இந்தத் தேவாலயத்தை இடித்துப்போடுங்கள், பின்பு நான் இதை மூன்று நாளுக்குள்ளே எழுப்புவேன் என்றார்.

௨௰ யூதர்கள் சொன்னது: இந்தத் தேவாலயம் நாற்பத்தாறு வருஷமாகக் கட்டப்பட்டதே; நீர் இதை மூன்று நாளுக்குள்ளே எழுப்புவீரா என்றார்கள்.

௨௧ [8]அவர் தம்முடைய சரீரமாகிய தேவாலயத்தைக்குறித்துப்பேசினார்.

௨௨ ஆதலால் [9]அவர் மரித்தோரிலிருந்து எழுந்துபோன பின்பு, அவர் சொன்னதை அவருடைய சீஷர் நினைத்து, வேதத்தையும் இயேசுவானவர் சொன்ன வசனத்தையும் அதிகமாய் விசுவாசித்தார்கள்.

௨௩ ¶ அந்தப் பஸ்காப்பண்டிகையின் காலத்திலே அவர் எருசலேம் நகரத்தில் இருக்கையில், அவர் செய்த அற்புதங்களை அநேகம்பேர் கண்டு, அவரிடத்தில் விசுவாசம் வைத்தார்கள்.

௨௪ அப்படியிருந்தும், இயேசுவானவர் அவர்கள் எல்லாரையும் அறிந்தபடியினாலே, தம்மை அவர்களுக்கு ஒப்புக்கொடுக்கவில்லை.

௨௫ [10]மனிதர் உள்ளத்தில் இருப்பதை அவர் அறிகிறவரானபடியால், மனிதரைக்குறித்து ஒருவரும் அவருக்கு அறிவைக் கொடுக்கவேண்டுவதில்லை.

௩. அதிகாரம்.

௧. திரித்துவ நீக்கோதேமுக்கு மறுபிறப்பைக்குறித்தும், ௰௪. தமது மரணத்தை விசுவாசிப்பதைக்குறித்தும், ௰௬. உலகத்தார்மேல் பராபரன் வைத்த முக்கியமான அன்பைக்குறித்தும், ௰௮. அவிசுவாசத்தின் நிமித்தமாய் உண்டாகும் ஆக்கினையைக் குறித்தும் போதித்தது. ௨௩. யோவான் சனங்களுக்கு ஞானஸ்நானங்கொடுத்து, கிறிஸ்துவைக்குறித்துச் சாட்சிபகர்ந்து, உபதேசம்பண்ணினது.

யூதருக்குள்ளே தலைவனாக நீக்கோதேமு என்னப்பட்ட பரிசேயன் ஒருவன் இருந்தான்.

௨ [11]அவன் இராத்திரிகாலத்திலே இயேசுவினிடத்தில் போய், இரபீ, [12]தன்னுடனே பராபரன் இராவிட்டால் [13]நீர் செய்கிற இப்படிப்பட்ட அற்புதங்களைப்போல ஒருவனும் செய்யமாட்டான்; ஆகையால் நீர் பராபரனாலே வந்

வி. பி. ௩௰.

1 மத். ௰௨. ௪௬.
2 உ மோ. ௰௨. ௰௪. ௫ மோ. ௰௬. ௧, ௰௬. உ௧. வ௪. யோவா. ௫: ௧. ௪: ௰௬. ௰௯.
3 மத். உ௧. ௰௨. மாற். ௰௧. ௰௫. லூக். ௰௯. ௪௫.
4 லூக். உ. ௪௯.
5 சங். ௬௯. ௯.
6 மத். ௰௨. ௩௮. யோவா. ௬. ௩௰.
7 மத். உ௬. ௬௧: உ௭. ௪௰. மாற். ௰௪: ௫௮. உ௯.
8 கொலோ. உ. ௯: எபி. அ. உ. ௧ கொரி. ௩. ௰௬: ௬. ௰௯. உ கொரி. ௬. ௰௬.
9 லூக். உ௪. அ.
10 ௧ சாமு.௰௬.௭. ௧ நாளா. உ௮. ௯. மத். ௯. ௪. மாற். உ. அ. யோவா.௬.௬௪: ௰௬.௩௰. அப்.௧. உ௪. வெளி.உ. உ௩.

11 யோவா. ௭. ௫௰: ௰௯. ௩௯.
12 அப். ௰. ௩௮.
13 யோவா. ௯. ௰௬, ௩௩. அப். உ. உ௨.

Digitized by Google

த போதகர் என்று அறிந்திருக்கிறோம் என்றான்.

௩ ¶ இயேசுவானவர் அவனை நோக்கி, [1]ஒருவன் மறுபடியும்* பிறவாவிட்டால், பராபரனுடைய இராச்சியத்தைப் பார்க்கமாட்டான் என்று மெய்யாகவே உமக்குச் சொல்லுகிறேன் என்றார்

௪ ¶ அதற்கு நிக்கொதேமு, முதுமையுள்ள ஒரு மனிதன் (மறுபடியும்) எப்படிப் பிறப்பான்? அவன் இரண்டாந்தரம் தன்னுடைய தாயின் வயிற்றில் பிரவேசித்துப் பிறக்கக்கூடுமோ என்றான

௫ ¶ இயேசுவானவர் சொன்னது: [2]ஒருவன் சலத்தினாலும் ஆவியினாலும் பிறவாவிட்டால், பராபரனுடைய இராச்சியத்தில் பிரவேசிக்கமாட்டான் என்று மெய்யாகவே உமக்குச் சொல்லுகிறேன்.

௬ மாம்சத்தினால் பிறப்பது மாம்சமாயிருக்கும்; ஆவியினால் பிறப்பது ஆவியாயிருக்கும்

௭ நீங்கள் மறுபடியும் †பிறக்கவேண்டுமென்று நான் உமக்குச் சொன்னதைக்குறித்து, நீர் அதிசயப்படவேண்டுவதில்லை

௮ [3]காற்றானது தனக்கு இஷ்டமான இடத்தில் செல்லுகின்றது; அதின் சத்தத்தைக் கேட்கிறீர்; ஆகிலும் அது வந்த இடத்தையும் அது போகும் இடத்தையும் அறியமாட்டீர்; ஆவியினாலே பிறந்தவன் எவனோ, அவனும் அப்படியே இருக்கிறான் என்றார்.

௯ ¶ அதற்கு நிக்கொதேமு, [4]இது சம்பவிப்பது எப்படி என்றான்.

௰ ¶ இயேசுவானவர் சொன்னது: நீர் இஸ்ரவேலருக்குள்ளே போதகராயிருந்தும், இவைகளை அறியாமல் இருக்கிறீரா?

௰௧ [5]மெய்யாகவே நான் உமக்குச் சொல்லுகிறதாவது: நாங்கள் அறிந்திருக்கிறதைச் சொல்லி நாங்கள் கண்டதைக்குறித்துச் சாட்சிகொடுத்துவந்தும், [6]நீங்கள் எங்கள் சாட்சியை ஏற்றுக்கொள்ளுகிறதில்லை.

௰௨ பூமிக்கு ஏற்றவைகளை நான் உங்களுக்குச் சொல்லியும், நீங்கள் விசுவாசிக்க இல்லையே; பரமகாரியங்களை நான் உங்களுக்குச் சொன்னால், எப்படி விசுவாசிப்பீர்கள்?

௰௩ [7]பரமண்டலத்திலிருந்து இறங்கியும், பரமண்டலத்திலே இருக்கிற மனித குமாரனே அன்றி ஒருவரும் பரமண்டலத்திற்கு ஏறவில்லையே.

௰௪ அல்லாமலும் [8]பாம்பானது வனாந்தரத்திலே மோசேயினாலே உயர்த்தப்பட்டதுபோல, [9]மனிதனுடைய குமாரனும் உயர்த்தப்படவேண்டும்.

௰௫ அவனை [10]விசுவாசித்துக்கொள்ளுகிறவன் எவனோ, அவன் கெட்டுப்போகாமல் நித்திய சீவனை அடையும்படிக்கு அப்படியே ஆகவேண்டும்.

௰௬ ¶ என்னத்தினாலெனில், [11]பராபரன், தம்முடைய ஒரேபேறான குமாரனைவிசுவாசிக்கிறவன் எவனோ அவன் கெட்டுப்போகாமல் நித்திய சீவனை அடையும்படிக்கு அவரையே கொடுத்து, இவ்வளவாய் உலகத்தாரிடத்தில் அன்பாயிருந்தார்.

௰௭ [12]பராபரன் உலகத்தாரை ஆக்கினைக்குட்படுத்தும்படிக்காக அல்ல, உலகத்தாரை இரட்சிக்கும்படிக்காகவே தம்முடைய குமாரனை உலகத்தில் அனுப்பினார்.

௰௮ அவரை [13]விசுவாசித்துக்கொள்ளுகிறவன் ஆக்கினைக்குள்ளாகத் தீர்க்கப்படான்; அவரை விசுவாசியாதவனே பராபரனுடைய ஒரேபேறான குமாரனுடைய நாமத்தின்மேல் விசுவாசமுள்ளவனாய் இராதபடியால், அவனுக்கு ஆக்கினைத்தீர்ப்புச் செய்தாயிற்று.

௰௯ [14]ஒளியானது உலகத்தில் வந்திருந்தும், மனிதர் தங்கள் கிரியைகள் பொல்லாதவைகளாய் இ

கி. பி. ௩௰.

1 யோவா. ௧.௰௩. கலா. ௬. ௰௫. தீத். ௩. ௫. யாக். ௧. ௰௮. ௧ பேது. ௧. ௨௩. ௧ யோ. ௩. ௯.
* அல்லது உயரத்திலிருந்து
2 மாற். ௰௬. ௰௬. அப். ௨. ௩௮.
† அல்லது உயரத்திலிருந்து
3 பிர. ௰௧. ௫. ௧ கொரி. ௨. ௰௧.
4 யோவா. ௬. ௫௨, ௬௦.
5 மத். ௰௧. ௨௭. யோவா. ௧. ௰௮: ௭. ௰௬: ௮. ௨௮: ௰௨. ௪௯: ௰௪. ௨௪.
6 ௩௨. வச.
7 வாக். ௩௦. ௪. யோவா. ௬. ௩௩, ௩௮: ௰௬. ௨௮: ௰௬. ௨௮ அப். ௨. ௩௪. ௧ கொரி. ௰௫. ௪௭. எபே. ௪. ௯, ௰.
8 எண். ௨௧. ௯.
9 யோவா. ௮. ௨௮: ௰௨. ௩௨.
10 ௩௬. வச. யோவா. ௬. ௪௭.
11 ௧ யோ. ௪. ௯.
12 லூக். ௯. ௫௬. யோவா. ௫. ௪௫: ௮. ௰௫: ௰௨. ௪௭. ௧ யோ. ௪. ௰௪.
13 யோவா. ௫. ௨௪: ௬. ௪௦: ௨௦. ௩௧.
14 யோவா. ௧. ௪. ௯, ௰௧: ௮. ௰௨.

Digitized by Google

ருக்கிறபடியால், அந்த ஒளியிலும் இருளை விரும்பிக்கொண்டு வருகிறதே ஆக்கினைத் தீர்த்தலுக்கு ஏதுவாயிருக்கின்றது.

௨௰ [1]பொல்லாங்கைச் செய்கிறவனும் ஒளியைப் பகைக்கிறதால், தன் கிரியைகள் அதட்டப்படாதபடிக்கு * ஒளியில் சேரமாட்டான்.

௨௧ சத்தியத்தைச் செய்கிறவனோ தன் கிரியைகளைப் பராபரனுடைய சித்தத்தின்படி செய்கிறபடியினாலே, அவைகள் வெளியாகும்படிக்கு ஒளியிலே சேருகிறான் என்றார்.

௨௨ ¶ அதன்பின்பு இயேசுவானவரும் அவருடைய சீஷரும் யூதேயா தேசத்திலே போனார்கள்; அங்கே அவர்களோடுங்கூடச் சஞ்சரித்து, [2]ஞானஸ்நானம் கொடுத்து வந்தார்.

௨௩ [3]அல்லாமலும் அக்காலத்திலே காவலில் வைக்கப்படாதிருந்த யோவானும், [4]சாலிமூரின் அருகே இருக்கிற அயினோன் ஊரிலே மிகுந்த சலம் உண்டாயிருந்தபடியால், அங்கே ஞானஸ்நானம் கொடுத்துவந்தான்.

௨௪ சனங்கள் [5]அவ்விடத்திற்குப் போய் ஞானஸ்நானம்பெற்றார்கள்.

௨௫ ¶ அப்பொழுது யோவானுடைய சீஷரில் சிலரும், மற்ற யூதரும் சுத்தம்பண்ணுதலைக்குறித்து வாக்குவாதம் பண்ணிக்கொண்டு,

௨௬ பின்பு யோவானிடத்தில் போய், இரபீ, உம்முடனேகூட யோர்தானின் அக்கரையிலே ஒருவர் இருந்தாரே, [6]நீரும் அவரைக் குறித்துச் சாட்சிகொடுத்தீரே, அவரும் ஞானஸ்நானம் கொடுக்கிறார்; எல்லாரும் அவரிடத்தில் போகிறார்கள் என்றார்கள்.

௨௭ ¶ அதற்கு யோவான் சொன்னது: [7]ஒரு மனிதனானவன் தனக்குப் பரமண்டலத்திலிருந்து கொடுக்கப்படாவிட்டால், தானாய் ஒன்றையும் தன்னுடையதாக்கிக் கொள்ளத்† திராணியில்லை.

௨௮ [8]நான் கிறிஸ்தல்ல, [9]அவருக்குமுன்னாக அனுப்பப்பட்டவனாய் இருக்கிறேன் என்று நான் சொன்னதைக்குறித்து நீங்களே எனக்காகச் சாட்சிகளாயிருக்கிறீர்கள்.

௨௯ [10]மணவாட்டியையுடையவனே மணவாளன்; [11]மணவாளனுடைய சிநேகிதன் நின்று அவருடைய சொல்லைக் கேட்கிறவனாய், அவருடைய சத்தத்தைக்குறித்து மிகவும்சந்தோஷப்படுகிறான்; இந்தச் சந்தோஷம் எனக்குச் சம்பூரணமாய் உண்டாயிற்று.

௩௰ அவர் பெருகவும் நான் குறையவும் வேண்டும்.

௩௧ [12]உயரத்திலிருந்து வருகிறவர் [13]எல்லாரிலும் மேலானவர்; [14]பூமியிலிருந்துண்டானவன் பூமியின் தன்மையுடையவனாய்ப் பூமியின் தன்மைப்படி பேசுகிறான்; [15]பரத்திலிருந்து வருகிறவர் எல்லாரிலும் மேலானவராயிருந்து,

௩௨ [16]தாம் கண்டு கேட்டதைச் சாட்சியாகச் சொல்லுகிறார்; அப்படியிருந்தும் அவருடைய சாட்சியை ஒருவரும் ஏற்றுக்கொள்ளவில்லை.

௩௩ அவருடைய சாட்சியை ஏற்றுக்கொள்ளுகிறவன் [17]பராபரன் சத்தியமுடையவர் என்று நிச்சயப்படுத்துகிறான்.

௩௪ [18]பராபரனாலே அனுப்பப்பட்டவர் பராபரனுடைய வசனங்களைச் சொல்லுகிறார்; [19]அல்லாமலும், பராபரன் தமது ஆவியை அளவாய் அவருக்குக் கொடுக்கவில்லை.

௩௫ [20]பிதாவானவர் குமாரனிடத்தில் அன்பாயிருந்து, சகலத்தையும் அவருக்கு ஒப்புக்கொடுத்தார்.

௩௬ [21]குமாரனிடத்தில் விசுவாசமாய் இருக்கிறவன் நித்திய சீவனை உடையவனாயிருக்கிறான்; கு

கி. பி. ௩௰.

1 யோபு. ௨௪. ௰௩.௰௭. எபே. ௫.௰௩.
* அல்லது வெளிப்படுத்த.
2 யோவா. ௪. ௨.
3 மத்.௰௪.௩.
4 ௧ சாமு. ௯. ௪.
5 மத்.௩.௫,௬.
6 யோவா. ௧. ௭. ௰௫.௨௭.௩௪.
7 ௧ கொரி ௪ ௭, எபி. ௫.௪. யாக். ௧.௰௭.
† அல்லது ஏற்றுக்கொள்ள.
8 யோவா. ௧.௨௰, ௨௭.
9 மல்கி. ௩. ௧. மாற். ௧. ௨, லூக். ௧. ௰௭.
10 மத். ௨௨. ௨. ௨ கொரி ௰௧ ௨. எபே. ௫. ௨௫.௨௭. வெளி.௨௧ ௯.
11 உன்.௫ ௧.
12 ௰௩ வச. யோவா.௮.௨௩.
13 மத் ௨௮.௰௮. யோவா. ௧.௰௫. ௨௭. ௨ரோ.௯. ௫.
14 ௧ கொரி. ௰௫. ௪௭.
15 யோவா. ௬ ௩௩. ௧ கொரி. ௰௫.௪௭. எபே ௧.௨௧. பிலி. ௨.௯.
16 ௰௧. வசனம். யோவா. ௮. ௨௬: ௰௫. ௰௫.
17 ௨ ரோ. ௩. ௪. ௧ யோ. ௫.௰.
18 யோவா ௭. ௰௬.
19 யோவா. ௧. ௰௬.
20 மத். ௰௧. ௨௭: ௨௮. ௰௮. லூக். ௰.௨௨. யோவா. ௫. ௨௰, ௨௨: ௰௩. ௩: ௰௭. ௨. எபி.௨.௮.
21 ஆப. ௨. ௪ யோவா.௧.௰௨: ௬. ௪௭: ௰௫, ௰௪.வச.௨ரோ. ௧.௰௭. ௧ யோ. ௫. ௰.

Digitized by Google

மாரனை விசுவாசியாதவன் ஜீவனைக் காண்பதில்லை; பராபரனுடைய கோபாக்கினையே அவன் மேல் நிலைநிற்கும் என்றான்.

## ௪. அதிகாரம்.

*௧. கிறிஸ்து சமாரியா நாட்டாளாகிய ஒரு ஸ்திரியினிடத்தில் சம்பாஷித்து, அவளுக்குத் தம்மை இன்னார் என்று அறிவித்தது. ௨௭. அவருடைய சீஷர்கள் அதைப்பற்றி ஆச்சரியப்பட்டது. ௩௧. பராபரனுடைய மகிமையைக்குறித்துத் தமக்கிருந்த வைராக்கியத்தை அவர்களுக்கு அறிவித்தது. ௩௯. சமாரியரில் அநேகர் அவரை விசுவாசித்தது. ௪௩. அவர் கலிலேயாவுக்குப் போய்க் கப்பர்நகூமிலே ஒரு தலைவனுடைய மகனைச் சொஸ்தமாக்கினது.*

அக்காலத்தில் யோவானிலும் [1]இயேசுவானவர் அநேகம்பேரைச் சீஷராக்கி ஞானஸ்நானம்கொடுக்கிறார் என்று பரிசேயர் கேள்விப்பட்டார்கள்.

௨ அதைக் கர்த்தர் அறிந்து, யூதேயா நாட்டைவிட்டு, மறுபடியும் கலிலேயா நாட்டுக்குப்போனார்.

௩ இயேசுவானவர் தாமே ஞானஸ்நானம்கொடுக்கவில்லை; அவருடைய சீஷர்களே கொடுத்தார்கள்.

௪ அப்பொழுது அவர் சமாரியா நாட்டின் வழியாய்ப் போகவேண்டியதாயிருந்தது.

௫ ஆதலால் [2]யாக்கோபு தன் குமாரனாகிய யோசேப்புக்குக் கொடுத்த நிலத்துக்கு அருகான சிகார் என்னப்பட்ட சமாரியாவின் ஊரிடத்தில் இயேசுவானவர் சேர்ந்து,

௬ அங்கே இருந்த யாக்கோபின் கிணற்றின் அருகே ஏறக்குறைய ஆறும்மணி நேரத்திலே பிரயாணத்தினால் இளைப்படைந்தவராய் உளுக்காந்தார்.

௭ ¶ அப்பொழுது அவருடைய சீஷர் உணவுகளைக் கொள்ளும்படி ஊருக்குள்ளே போயிருந்த காலத்திலே, சமாரியா நாட்டாளாகிய ஒரு ஸ்திரி தண்ணீர் மொண்டுகொள்ளும்படிக்குச் சேர்ந்தாள்.

கி. பி. ௩௰.



1 யோவா. ௩. ௨௨,௨௬.
2 ௧ மோ. ௩௩. ௰௯: ௪௮. ௨௨. யோசு. ௨௪. ௩௨.
3 ௨ இரா. ௰௭. ௨௪. லூக். ௯. ௫௨,௫௩. அப். ௰.௨௮.
4 ஏசா. ௰௨. ௩: ௪௪. ௩. எரே. ௨. ௰௩. சகரி. ௰௩. ௧: ௰௪. ௮.
5 யோவா. ௬. ௩௫,௫௮.
6 யோவா. ௭. ௩௮.
7 யோவா. ௬. ௩௪: ௰௭. ௨, ௩. உரோ. ௬. ௨௩. ௧ யோ. ௫. ௨௦.

அ அவளுடனே இயேசுவானவர், தாகத்துக்குத் தா என்றார்.

௯ [3]யூதர்கள் சமாரியா நாட்டாருடனே கலவாமலிருக்கிறபடியினாலே, சமாரியஸ்திரி அவரை நோக்கி, நீர் யூதனாயிருக்க, சமாரியஸ்திரியாகிய என்னிடத்திலே தாகத்துக்குத் தா என்று எப்படிக் கேட்கலாம் என்றாள்.

௰ ¶ அதற்கு இயேசுவானவர் சொன்னது: நீ பராபரனுடைய ஈவையும், தாகத்துக்குத் தா என்று உன்னுடனே சொல்லுகிறவனையும் அறிந்தாயானால், நீயே அவனிடத்தில் விண்ணப்பம்பண்ணுவாய்; [4]அவன் ஜீவதண்ணீரை உனக்குக் கொடுப்பான் என்றார்.

௰௧ ஸ்திரியானவள் சொன்னது: ஆண்டவரே, மொண்டுகொள்ளுகிறதற்கு உம்மிடத்தில் பாத்திரம் இல்லையே; கிணறும் ஆழமாயிருக்கிறதே, ஆதலால் எங்கேயிருந்து ஜீவதண்ணீர் உமக்கு உண்டாயிற்று?

௰௨ நம்முடைய தகப்பனாகிய யாக்கோபும், அவருடைய பிள்ளைகளும், அவருடைய ஜீவசெந்துக்களும் இந்தக் கிணற்றிலே குடித்தார்கள்; அவரே இதை எங்களுக்குக் கொடுத்தார்; அவரிலும் நீர் பெரியவரா என்றாள்.

௰௩ ¶ அதற்கு இயேசுவானவர் சொன்னது: இந்தத் தண்ணீரைக் குடிக்கிறவன் மறுபடியும் தாகமடைவான்.

௰௪ [5]நான் கொடுக்கிற தண்ணீரைக் குடிக்கிறவன் எவனோ, அவன் என்றென்றைக்கும் தாகமடைவதில்லை; நான் அவனுக்குக் கொடுக்கும் தண்ணீர் அவனுக்குள்ளே [6]நித்தியஜீவன்வரைக்கும் ஊறுகிற நீரூற்றாம் என்றார்.

௰௫ [7]ஸ்திரியானவள்சொன்னது: ஆண்டவரே, நான் தாகமடையாமலும், இங்கே மொண்டுகொள்ளும்படி வாராமலும் இருப்பதற்கு, நீர் அப்படிப்பட்ட தண்ணீரை

Digitized by Google

எனக்குத் தரவேண்டும் என்றான்.

௧௬ அப்பொழுது இயேசுவானவர் அவளை நோக்கி, நீ போய், உன் புருஷனை அழைத்துக்கொண்டு வா என்றார்.

௧௭ அதற்கு ஸ்திரியானவள், எனக்குப் புருஷன் இல்லை என்றாள்; இயேசுவானவர் சொன்னது: எனக்குப் புருஷன் இல்லை என்று நீ செம்மையாய்ச் சொன்னாய்.

௧௮ எப்படியெனில், ஐந்துபுருஷர் உனக்கு இருந்தார்கள்; இப்பொழுது இருக்கிறவன் உனக்குப் புருஷன் அல்ல; அதை நீ உள்ளபடி சொன்னாயென்றார்.

௧௯ அப்பொழுது ஸ்திரியானவள் அவரை நோக்கி, [1]ஆண்டவரே, நீர் தீர்க்கதரிசி என்று எனக்குத் தோன்றுகின்றது.

௨௰ நம்முடைய பிதாக்கள் [2]இந்த மலையிலே தொழுதுகொண்டார்களே, [3]நீங்கள் எருசலேமிலுள்ள தலத்திலே தொழுதுகொள்ளவேண்டும் என்கிறீர்களே என்றாள்.

௨௧ இயேசுவானவர் சொன்னது: ஸ்திரியே, [4]நீங்கள் இந்த மலையிலாவது, எருசலேமிலாவது பிதாவைத் தொழுதுகொள்ளாதிருக்குங் காலம் வருகின்றது.

௨௨ என்னை நம்பு, [5]நீங்கள் அறியாததைத் தொழுதுகொள்ளுகிறீர்கள்; [6]யூதர்களாகிய எங்களிடத்திலிருந்து இரட்சிப்புத் தோன்றுவதால், நாங்கள் அறிந்திருக்கிறதைத் தொழுதுகொள்ளுகிறோம்.

௨௩ அல்லாமலும் உண்மையாய்த் தொழுதுகொள்ளுகிறவர்கள் பிதாவை [7]ஆவியினாலும் [8]உண்மையினாலும் தொழுதுகொள்ளுங் காலம் வரும்; இப்பொழுதும் வந்திருக்கின்றது; அப்படியே தம்மைத் தொழுதுகொள்ளுகிறவர்களைப் பிதாவானவர் விரும்புகிறாரே.

௨௪ [9]பராபரன் ஆவியாய் இருக்கிறார்; அவரைத் தொழுதுகொள்ளுகிறவர்கள் ஆவியினாலும் உண்மையினாலும் அவரைத் தொழுதுகொள்ளவேண்டும் என்றார்.

௨௫ (அப்பொழுது) ஸ்திரியானவள் சொன்னது: மேசியா வருகிறார் என்று அறிந்திருக்கிறேன்; அவர் வரும்பொழுது [10]எல்லாவற்றையும் நமக்கு அறிவிப்பார் என்றாள்; மேசியா என்பதும் கிறிஸ்து என்பதும் ஒக்கும்.

௨௬ ¶ இயேசுவானவர் சொன்னது: [11]உன்னுடனே பேசுகிற நானே அவர் என்றார்.

௨௭ அத்தருணத்திலே அவருடைய சீஷர் வந்து, ஸ்திரியுடனே அவர் பேசிக்கொள்ளுகிறதைக் (கண்டு,) ஆச்சரியப்பட்டார்கள்; ஆகிலும் என்ன தேடுகிறீர் என்றாவது, என்னத்தினாலே இவளுடனே பேசுகிறீர் என்றாவது, ஒருவனும் (அவரிடத்தில் கேட்கவில்லை.)

௨௮ ஸ்திரியானவள் தன் குடத்தை வைத்து, ஊருக்குள்ளே போய், சனங்களை நோக்கி,

௨௯ [12]நான் செய்த யாவையும் எனக்கு ஒரு மனிதன் சொன்னான்; அவன் கிறிஸ்துவா, அல்லவா, என்று வந்து பாருங்கள் என்றாள்.

௩௰ அந்தப்படி அவர்கள் ஊரிலிருந்து புறப்பட்டு, அவரிடத்தில் சேர்ந்தார்கள்.

௩௧ ¶ அதற்குமுன்னே சீஷர் அவரை நோக்கிப் போதகரே, சாப்பிடும் என்று வேண்டிக்கொண்டார்கள்.

௩௨ அதற்கு அவர், நீங்கள் அறியாதிருக்கிற போசனம் என்னிடத்தில் உண்டு என்றார்.

௩௩ அப்பொழுது சீஷர் ஒருவரை ஒருவர் நோக்கி, மற்றொருவன் அவருக்குப் போசனங் கொண்டுவந்திருப்பானோ என்றார்கள்.

௩௪ பின்னும் இயேசுவானவர் அவர்களுடனே சொன்னதாவது:

கி. பி. ௩௰.

1 லூக். எ. ௧௬: உச.௧௯. யோ. ௯.௧.௰: எ. ௪௰.
2 நியா.௯.எ.
3 உ மோ. ௰௨. ௫,௧௧. ௩ இரா. ௯.௩. உ நாளா. எ.௰௨.
4 மல்கி. ௧. ௧௧. ௧ தீமோ. உ.அ.
5 உ இரா. ௰௭. ௨௯.
6 ஏசா. உ. ௩. லூக். உச. சஎ. உரோ. ௯.ச,௫.
7 பிலி. ௩.௩.
8 யோவா. ௧. ௰௪.
9 உ கொரி. ௩. ௰எ.
10 உ௯,௯௩.௩௪.
11 யோவா. ௯. ௩எ. மத். உ௬. ௬௩, ௬௪. மாற். ௰௪.௬௧,௬௨.
12 உ௯.௩௯.

Digitized by Google

[1]நான் என்னை அனுப்பினவருடைய சித்தத்தின்படி செய்து, அவருடைய கிரியையை முடிப்பதே என்னுடைய போசனமாய் இருக்கின்றது.

௩௫ அறுப்புநாள் வருகிறதற்கு நாலுமாதம் செல்லுமென்று நீங்கள் சொல்லுகிறதில்லையா? அதோ, வயல் நிலங்கள் விளைந்து, இப்பொழுதே [2]அறுப்புக்கு வெண்மையாய் இருக்கின்றன என்று உங்கள் கண்களை உயர்த்திப் பாருங்கள் என்று உங்களுக்குச் சொல்லுகிறேன்.

௩௬ விதைக்கிறவனும் அறுக்கிறவனும் கூடச் சந்தோஷப்படத்தக்கதாக,[3]அறுக்கிறவன் கூலியை வாங்கி நித்திய சீவனுக்காகப் பலனைச் சேர்த்துக்கொள்ளுகிறான்.

௩௭ இதைக்குறித்து ஒருவன் விதைக்கிறான், மற்றொருவன் அறுக்கிறான் என்கிற வழக்கச்சொல் மெய்யாய் இருக்கின்றது.

௩௮ நீங்கள் பிரயாசப்படாத பயிரை அறுக்கும்படிக்கு நான் உங்களை அனுப்பினேன்; மற்றவர்கள் வேலைசெய்தார்கள்; நீங்கள் அவர்களுடைய வேலையினால் எத்தனமானதில் பிரவேசித்தீர்கள் என்றார்.

௩௯ ¶ [4]அந்த ஸ்திரி, நான் செய்தயாவையும் எனக்குச் சொன்னார் என்று சாட்சியிட்ட வசனத்தின் நிமித்தம், அந்த ஊரிலுள்ள சமாரியரில் அநேகர் அவர்மேல் விசுவாசமானார்கள்.

௪௰ ஆதலால் சமாரியர் அவரிடத்தில் வந்து, தங்களிடத்திலே தங்கும்படிக்கு அவரை வேண்டிக்கொண்டார்கள்; அந்தப்படி அவர் இரண்டுநாள் அங்கே தங்கினார்.

௪௧ அப்பொழுது மிகவும், அதிகமான மனிதர் அவருடைய உபதேசத்தின் நிமித்தம் விசுவாசித்து,

௪௨ பின்பு ஸ்திரியை நோக்கி, உன் சொல்லினால்மாத்திரம் அல்ல, நாங்களும் அவருடைய உபதேசத்தைக் கேட்டு, [5]அவர் மெய்யாய்க் கிறிஸ்துவாகிய உலக இரட்சகர் என்று அறிந்து விசுவாசிக்கிறோம் என்றார்கள்.

௪௩ ¶ இரண்டுநாள் அங்கே தங்கி, பின்பு அவர் அவ்விடத்தைவிட்டுப் புறப்பட்டு, கலிலேயநாட்டுக்குப்போனார்.

௪௪ [6]ஆகிலும் தீர்க்கதரிசியானவன் தன் சென்ம ஊரிலே கனம் அடையான் என்று இயேசுவானவர் தாமே சொல்லியிருந்தார்.

௪௫ அவர் [7]கலிலேயாநாட்டிலே சேர்ந்தபொழுது, எருசலேமிலே பண்டிகை நாளில் அவர் செய்த யாவையும் பார்த்திருந்த [8]கலிலேயர் அவரை ஏற்றுக்கொண்டார்கள்; பின்பு இயேசுவானவர் [9]தாம் தண்ணீரைத் திராட்ச இரசமாக்கின கலிலேயாவிலுள்ள கானா ஊருக்கு மறுபடியும் போனார்.

௪௬ அப்பொழுது கப்பர்நாகூம் ஊரிலே இராசாவின் மனிதரில் *ஒருவனுடைய குமாரன் வியாதியுள்ளவனாய்க் கிடந்தான்.

௪௭ இயேசுவானவர் யூதேயாவிலிருந்து கலிலேயாவில் வந்ததை அந்த மனிதன் கேள்விப்பட்டஉடனே, அவரிடத்திற்குப்போய், தன் மகனுக்கு மரணம் சமீபித்திருந்தபடியினாலே, அவனைக் குணமாக்கும்படிக்கு வரவேண்டும் என்று அவரை வேண்டிக்கொண்டான்

௪௮ [10]இயேசுவானவர் அவனை நோக்கி, நீங்கள் அடையாளங்களையும் அற்புதங்களையும் காணாவிட்டால், விசுவாசிக்கமாட்டீர்கள் என்றார்.

௪௯ அதற்கு இராசாவின் மனிதன் சொன்னது: ஆண்டவரே, என் பிள்ளை சாகிறதற்கு முன்னே வாரும் என்றான்.

௫௰ இயேசுவானவர் சொன்னது: நீ வீட்டிற்குப் போ, உன்னுடைய குமாரன் பிழைத்திருக்

கி. பி. ௩௰.

1 யோபு. ௨௩ ௰௨. யோவா. ௬.௩௮: ௧௭.௪: ௰௯.௩௰.
2 மத். ௯. ௩௭. லூக்.௰.௨
3 தானி. ௰௨. ௩.
4 ௨௯.வச.
5 யோவா. ௧௭. அ. ௧ யோ. ௪. ௰௪
6 மத். ௰௩. ௫௭. மாற். ௬.௪ லூக். ௪.௨௪.
7 ௨ யோ. ௰௩. ௰௩.
8 யோவா. ௨. ௨௩: ௩.௨.
9 யோவா. ௨. ௧. ௰௧.
* அல்லது பிரபு; அல்லது அதிகாரி.
10 ௧ கொரி. ௧. ௨௨.

Digitized by Google

றான் என்றார்; இயேசுவானவர் சொன்ன வசனத்தை நம்பி அந்த மனிதன் போனான்.

௫௧ அவன் போகையில், அவனுடைய ஊழியக்காரர் அவனுக்கு எதிராக வந்து, உம்முடைய குமாரன் பிழைத்திருக்கிறான் என்று அறிவித்தார்கள்.

௫௨ அப்பொழுது, எத்தனை மணி நேரத்திலே அவனுக்குக் குணமுண்டாயிற்று என்று அவர்களிடத்தில் விசாரித்தான்; அவர்கள் சொன்னது: நேற்று ஏழாம் மணி நேரத்திலே சுரம் அவனை விட்டு நீங்கிற்று என்றார்கள்.

௫௩ அந்த நேரம், உன் குமாரன் பிழைத்திருக்கிறான் என்று இயேசுவானவர் தன்னுடனே சொன்ன மணிநேரமே என்று தகப்பனானவன் அறிந்தான்; பின்பு அவனும் அவன் குடும்பத்தார் அனைவரும் அவரிடத்தில் விசுவாசம் வைத்தார்கள்.

௫௪ இயேசுவானவர் யூதேயாவைவிட்டு, கலிலேயா நாட்டிற்குத் திரும்பிப்போனபொழுது, இந்த இரண்டாம் அற்புதத்தைச் செய்தார்.

## ௫. அதிகாரம்.

௧. இயேசு ஓய்வுநாளில் முப்பத்தெட்டு வருஷம் வியாதிப்பட்டிருந்தவனைக் குணமாக்கினது. ௰. அதினால் யூதர்கள் அவரைத் துன்பப்படுத்தினது. ௰௭. அவர் பிதாவின் சாட்சியிலும், ௩௨. யோவானுடைய சாட்சியிலும், ௩௬. தம்முடைய கிரியைகளின் சாட்சியிலும், ௩௯. வேத எழுத்துக்களிலும் தம்மை இன்னாரென்று அறிவித்து, அவர்களைக் கடிந்துகொண்டது.

அதின்பின்பு [1]யூதருடைய பண்டிகை உண்டானபொழுது, இயேசுவானவர் எருசலேமுக்குப் போனார்.

௨ [2]அந்த எருசலேம் நகரத்திலே, ஆட்டுவாசலின் *அருகே எபிரேயு பாஷையிலே பேதஸ்தா என்னப்பட்ட ஒரு குளம் இருக்கின்றது; அதற்கு ஐந்து மண்டபங்கள் உண்டு.

௩ அவைகளிலே குருடர், சப்பாணிகள், சூம்பின உறுப்புடையவர்கள் முதலான அநேக வியாதிக்காரர் படுத்துக்கொண்டு, சலம் அசைகிறவரைக்கும் பார்த்திருப்பார்கள்.

௪ என்னத்தினாலெனில், சிலகாலங்களிலே தேவதூதன் ஒருவன் அந்தக் குளத்தில் இறங்கிச் சலத்தைக் கலக்குகிறதும், சலம் கலக்கப்பட்டபின்பு முதலாவது அதற்குட்படுகிறவன் எவனோ, அவன் எந்த வியாதிப்பட்டவனாய் இருந்தாலும் குணம் அடைகிறதும் வழக்கமாயிருந்தது.

௫ அதின்பொருட்டாக, அங்கே முப்பத்தெட்டுவருஷம் வியாதியுள்ள ஒரு மனிதன் இருந்தான்.

௬ படுத்திருந்த அவனை இயேசுவானவர் கண்டு, அவன் அநேக நாள் வியாதியுள்ளவன் என்று அறிந்து அவனை நோக்கி, நீ சொஸ்தமடைய விரும்புகிறாயா என்றார்.

௭ வியாதிப்பட்டவன் அவருக்கு மாறுத்தரமாகச் சொன்னது: ஆண்டவனே, சலம் கலக்கப்படுகிறபொழுது, என்னைக் குளத்தில் கொண்டுபோய் விடுகிறதற்கு ஒருவருமில்லை, நான் நடந்துபோகிறதற்கு முன்னாக வேறொருவன் இறங்குவான் என்றான்.

௮ இயேசுவானவர் சொன்னது: [3]எழுந்திரு உன் படுக்கையை எடுத்துக்கொண்டு நட என்றார்.

௯ உடனே அந்த மனிதன் குணமடைந்து, தன் படுக்கையை எடுத்துக்கொண்டு நடந்துபோனான்; [4]அந்த நாள் ஓய்வுநாளாய் இருந்தது.

௰ ¶ ஆதலால் யூதர்கள் குணமாக்கப்பட்டவனை நோக்கி, ஓய்வுநாளாயிருக்கிறபடியால் நீ படுக்கையை எடுத்துப்போகிறது நியாயம் அல்ல என்றார்கள்.

௰௧ அவர்களுக்கு அவன் சொன்னது: என்னைக் குணமாக்கினவர் என்னை நோக்கி, [5]உன் படுக்

கி. பி. ௩௧.

1 ௨ மோ. ௨௩. ௨. ௩ மோ. ௨௩. ௪. யோவா. ௨. ௰௩.
2 நெகே. ௩. ௧: ௰௨. ௩௯.
* அல்லது சந்தை.
3 மத். ௯. ௬. மாற். ௨. ௰௧. லூக். ௫. ௨௪.
4 யோவா. ௯. ௰௪.
5 ௨ மோ. ௨௰. ௮. நெகே. ௰௩. ௰௯. எரே. ௰௭. ௨௧. ௨௨. மத். ௰௨. ௨. மாற். ௨. ௨௪: ௩. ௪. லூக். ௬. ௨: ௰௩. ௰௪.

Digitized by Google

கையை எடுத்துக்கொண்டு நட என்று சொன்னார் என்றான்.

௰௨ அதற்கு அவர்கள் சொன்னது: உன் படுக்கையை எடுத்துக்கொண்டு நட என்று உன்னுடனே சொன்ன மனிதன் எவன் என்று கேட்டார்கள்.

௰௩ அவ்விடத்தில் சனக்கூட்டம் இருந்தபடியினாலே,* இயேசுவானவர் விலகியிருந்தார்.

௰௪ ஆகையால் குணமாக்கப்பட்டவன் அவரை அறியவில்லை; அதற்குப்பின்பு இயேசுவானவர் தேவாலயத்திலே அவனைக்கண்டு, இதோ குணமடைந்தாய்; அதிக கேடு உனக்கு வாராதபடிக்கு, [1]இனிப் பாவஞ்செய்யாதிருப்பாயாக என்றார்.

௰௫ அப்பொழுது அந்த மனிதன் போய், தன்னைக் குணமாக்கினவர் இயேசு என்று யூதருக்கு அறிவித்தான்.

௰௬ ஓய்வுநாளிலே அவர் அப்படிச் செய்தபடியினாலே, யூதர்கள் இயேசுவைத் துன்பப்படுத்தி அவரைக் கொலைசெய்ய வகைதேடினார்கள்.

௰௭ ¶ இயேசுவானவர் அவர்களை நோக்கி, [2]என் பிதா இதுவரைக்கும் கிரியைசெய்துவருகிறார், நானும் கிரியைசெய்துவருகிறேன் என்றார்.

௰௮ அவர் ஓய்வுநாளைக் காத்துக்கொள்ளாதிருந்ததும் அல்லாமல், [3]பராபரனைத் தம்முடைய சொந்தப்பிதா என்றும் சொல்லி, தம்மையே பராபரனுக்குச் சமமாக்கினபடியினாலே, யூதர்கள் பின்னும் [4]அதிகமாய் அவரைக் கொலைசெய்ய வகைதேடினார்கள்.

௰௯ அப்பொழுது இயேசுவானவர் அவர்களை நோக்கி, மெய்யாகவே நான் உங்களுக்குச் [5]சொல்லுகிறதாவது: பிதாவானவர் செய்யக் குமாரன் காணுகிறது எதுவோ, அதையே அன்றி வேறொன்றையும் தானாய்ச் செய்யமாட்டான்; ஆதலால் அவர் செய்கிறவைகள் எவைகளோ, அவைகளைக் குமாரனும் அப்படியே செய்கிறான்.

௨௰ எப்படியென்றால், [6]பிதாவானவர் குமாரனிடத்தில் அன்புகூர்ந்து, தாம் செய்கிற யாவையும் அவனுக்குக் காண்பிக்கிறார்; நீங்கள் ஆச்சரியப்படத்தக்கதாக இவைகளிலும் அதிக பெரிதான கிரியைகளையே அவனுக்குக் காண்பிப்பார்.

௨௧ எவையெனில், பிதாவானவர் மரித்தோரை எழுப்பி உயிரோடிருக்கச் செய்கிறதுபோல, குமாரனும் [7]தன்னுடைய இஷ்டப்படியே மரித்தோரை உயிரோடிருக்கச்செய்கிறார்.

௨௨ அல்லாமலும், பிதாவைக் கனம்பண்ணுகிறதுபோல எல்லாரும் குமாரனைக் கனம்பண்ணும்படிக்கு, பிதாவானவர் ஒருவருக்கும் நியாயத்தீர்ப்புக் கொடாமல், [8]நியாயத்தீர்ப்பின் அதிகாரம் யாவையும் குமாரனுக்கு ஒப்புக்கொடுத்தார்.

௨௩ [9]குமாரனைக் கனம்பண்ணாமல் இருக்கிறவன் அவரை அனுப்பின பிதாவைக் கனம்பண்ணாமல் இருக்கிறான்.

௨௪ [10]என் வசனங்களுக்குச் செவிகொடுத்து என்னை அனுப்பினவரை விசுவாசிக்கிறவனுக்கு நித்தியசீவன் உண்டு; அவன் ஆக்கினைத்தீர்ப்புக்குள் அகப்படாமல், [11]மரணத்தைவிட்டு நீங்கி, சீவனுக்குட்பட்டிருக்கிறான் என்று மெய்யாகவே உங்களுக்குச் சொல்லுகிறேன்.

௨௫ அல்லாமலும் [12]மரித்தோர் பராபரனுடைய குமாரன் சத்தத்தைக் கேட்கும் காலம் வருகின்றது; இப்பொழுதே அது வந்திருக்கின்றது; அதைக் கேட்கிறவர்கள் பிழைப்பார்கள் என்று மெய்யாகவே உங்களுக்குச் சொல்லுகிறேன்.

கி. பி. ௩௧.

* அல்லது அங்கிருந்த சனக்கூட்டத்தை விட்டு.

1 மத். ௰௨. ௪௫. யோவா. ௮.௰௧.
2 யோவா. ௯.௪: ௰௪.௰.
3 யோவா. ௰.௩௰, ௩௩. பிலி.௨.௬.
4 யோவா.௭.௰௯.
5 ௩௰. வச. யோவா.௮.௨௮: ௯. ௪: ௰௨. ௪௯: ௰௪.௰.
6 மத். ௩. ௰௭. யோவா. ௩.௩௫. ௨ பே.௧.௰௭.
7 லூக்.௭.௰௪: ௮. ௫௪. யோவா. ௰௧.௨௫,௪௩.
8 மத். ௰௧. ௨௭: ௨௮.௰௮: ௨௭. வச. யோவா.௩. ௩௫: ௰௭. ௨. அப். ௰௭, ௩௧. ௧ பே.௪.௫.
9 ௧ யோ. ௨. ௨௩.
10 யோவா. ௩. ௰௬,௰௮: ௩.௪௰, ௪௭: ௮. ௫: ௨௰.௩௧.
11 ௧ யோ.௩.௰௪.
12 ௨௮. வச. எபே. ௨. ௧, ௫: ௫. ௰௪. கொலோ. ௨. ௰௩.

Digitized by Google

௨௬ என்னத்தினாலெனில், பிதாவானவர் தம்மில்தாமே ஜீவனை உடையவராய் இருக்கிறதுபோல, குமாரனும்தன்னில்தானேஜீவனை உடையவனாயிருக்கும்படி, வல்லமையை அவனுக்குக் கொடுத்தார்.

௨௭ அல்லாமலும் [1]அவன் மனிதனுடைய குமாரனாயிருக்கிறபடியினாலே, [2]நியாயத்தீர்ப்புச் செய்யும்படிக்கு, அதிகாரத்தையும் அவனுக்குக் கொடுத்தார்.

௨௮ இதைக்குறித்து ஆச்சரியப்படாதிருங்கள்; என்னத்தினாலெனில், பிரேதக்குழிகளிலுள்ள யாவரும் அவனுடைய சத்தத்தைக் கேட்கும் காலம்வரும்.

௨௯ அப்பொழுது [3]நன்மைசெய்தவர்கள் ஜீவனை அடையும்படிக்கும், [4]தீமைசெய்தவர்கள் ஆக்கினையை அடையும்படிக்கும் எழுந்து புறப்படுவார்கள்.

௩௰ [5]நானாய் ஒன்றும் செய்யமாட்டேன்; நான் கேட்கிறபடி நியாயந்தீர்க்கிறேன்; [6]நான் என்னுடைய சித்தத்தை அல்ல, என்னை அனுப்பின பிதாவினுடைய சித்தத்தையே தேடுகிறபடியால், என்னுடைய தீர்ப்பு நீதியாய் இருக்கும்.

௩௧ [7]நான்மாத்திரம் என்னைக்குறித்துச் சாட்சிகொடுத்தால், என் சாட்சி மெய்யென்று கொள்ளவேண்டாம்.

௩௨ [8]வேறொருவனும் என்னைக்குறித்துச் சாட்சிகொடுக்கிறான்; அவன் என்னைக்குறித்துக்கொடுக்கிற சாட்சி மெய்யென்று அறிந்திருக்கிறேன்.

௩௩ [9]நீங்கள் யோவானிடத்திற்கு மனிதரை அனுப்பினபொழுது, அவனும் மெய்யான சாட்சியைக் கொடுத்தான்.

௩௪ அப்படியிருந்தும்,நான் மனிதராலே சாட்சியைக் கொள்ளமாட்டேன்; நீங்கள் இரட்சிக்கப்படுவதற்கு இவைகளைச் சொல்லுகிறேன்.

௩௫ அவன் எரிந்து [10]பிரகாசிக்கிற விளக்காகவே இருந்தான்; [11]நீங்களும் சிலகாலம் அவனுடைய ஒளியிலே களிகூர மனதாயிருந்தீர்கள்.

௩௬ [12]யோவானுடைய சாட்சியிலும் அதிக மேன்மையான சாட்சி எனக்கு உண்டு; அது என்னவெனில், [13]நான் நிறைவேற்றும்படிக்குப் பிதா எனக்குக் கொடுத்த கிரியைகளே; நான் செய்துவருகிற இந்தக் கிரியைகள், பிதா என்னை அனுப்பினார் என்கிறதற்கு என்னைக்குறித்துச் சாட்சிகொடுக்கின்றன.

௩௭ அதுவுமல்லாமல், [14]என்னை அனுப்பின பிதாவே என்னைக்குறித்துச் சாட்சிகொடுத்தார்; [15]நீங்கள் அவருடைய சத்தத்தை ஒருக்காலும் கேட்கவில்லையா? அவருடைய தரிசனையைக் காணவில்லையா?

௩௮ அப்படியிருந்தும், அவர் அனுப்பினவரை நீங்கள் விசுவாசியாதபடிக்கு அவருடைய வசனத்தை உங்களுக்குள்ளே தரித்துக்கொள்ளாமல் இருக்கிறீர்கள்.

௩௯ வேதவாக்கியங்களினாலே நித்திய ஜீவன் உங்களுக்கு உண்டாகுமென்று எண்ணுகிறபடியால், [16]நீங்கள் அவைகளை ஆராய்ந்து பாருங்கள்; [17]அவைகளுமே என்னைக்குறித்துச் சாட்சிகொடுக்கின்றன.

௪௰ [18]அப்படியிருந்தும், ஜீவனை அடையும்படிக்கு நீங்கள் என்னிடத்தில் வர மனதில்லை.

௪௧ [19]நான் மனிதரால் புகழ்ச்சியை எடுத்துக்கொள்ளமாட்டேன்.

௪௨ நீங்கள் தேவ அன்பில்லாதவர்கள் என்று அறிந்திருக்கிறேன்.

௪௩ நான் என் பிதாவின் நாமத்தினாலே வந்திருந்தும், நீங்கள் என்னை ஏற்றுக்கொள்ளவில்லை; வேறொருவன் தன் சொந்த நாமத்தினாலே வந்தால், அவனை ஏற்றுக்கொள்வீர்கள்.

இ. பி. ௩௯

1 தானி. எ. ௰௩, ௰௪.
2 உ. உ. வச. அப். ௰. சஉ: ௰எ. ௩௧.
3 தானி. ௰உ. உ. மத். உ௫. ௩உ, ௩௩, சக.
4 எசா. உ௬. ௰௬. க தெச. ச. ௰௬. க கொரி. ௰௫. ௫உ.
5 ௰௯. வச.
6 மத். உ௬. ௩௯. யோவா. ச. ௩ச: ௬ ௩அ.
7 யோவா. அ. ௰ச. வெளி. ௩. ௰ச.
8 மத். ௩. ௰எ: ௰எ ௫. யோவா. அ. ௰அ. க யோ. ௫. ௬, எ. ௯.
9 யோவா. க. ௰௫, ௰௯, உஎ, ௩உ.
10 உ பே. க. ௰௯.
11 மத். ௰௩. உ௰: உ௧. உ௬. மாற். ௬. உ௰.
12 க யோ. ௫. ௯.
13 யோவா. ௩. உ: ௰. உ௫: ௰௫. உச.
14 மத் ௩. ௰எ: ௰எ. ௫. யோவா. ௬. உஎ: அ. ௰அ.
15 ௫ மோ. ச. ௰உ. யோவா. க. ௰அ க தீமோ. க. ௰எ. க யோ. ச. ௰௩.
16 எசா. அ உ௰: ௩ச. ௰௬. லூக். ௰௬. உ௯. சக. வச. அப். ௰எ. ௰௯.
17 ௫ மோ. ௰அ. ௰௫, ௰அ லூக். உச. உஎ. யோவா. க. ௪௫.
18 யோவா. ௩. ௰௯: ௬. ௰௯.
19 ௩ச. வச. க தெச. உ. ௬.

Digitized by Google

௪௪ [1]நீங்கள் பராபரனாலேமாத்திரம் உண்டாகும் புகழ்ச்சியைத் தேடாமல், [2]ஒருவரால் ஒருவர் புகழ்ச்சியை எடுத்துக்கொள்ளுகிறவர்களாயிருக்க, எப்படி விசுவாசிப்பீர்கள்.

௪௫ பிதாவினிடத்தில் நான் உங்கள்மேல் குற்றம்சாற்றுவேன் என்று நினையாதிருங்கள்; [3]நீங்கள் நம்பிக்கொள்ளுகிற மோசே இருக்கிறாரே, அவரே உங்கள் மேல் குற்றம்சாற்றுவார்.

௪௬ எப்படியெனில், மோசே [4]என்னைக்குறித்து எழுதினார்; ஆகையால் நீங்கள் அவரை விசுவாசித்தால், என்னையும் விசுவாசிப்பீர்கள்.

௪௭ அவர் எழுதினதை நீங்கள் விசுவாசியாமலிருந்தால், என்னுடைய வசனங்களை எப்படி விசுவாசிப்பீர்கள் என்றார்.

## ௬. அதிகாரம்.

௧. கிறிஸ்து ஐந்து அப்பங்களினாலும், இரண்டு மீன்களினாலும் ஐயாயிரம்பேரைப் புசிப்பித்தது. ௰௫. அதின்நிமித்தம் சனங்கள் அவரை இராசாவாக்கும்படி பிரயத்தனம்பண்ணினது. ௰௬. அவர் அவர்களை விட்டுப்போய்த் தம்முடைய சீஷர்களிடத்திற்குக் கடலின்மேல் நடந்தது. ௨௬. பின்பு தம்மைப் பின்தொடர்ந்தவர்களையும், மாம்சசித்தையோடே செவிகொடுத்தபேர்களையும் கடிந்துகொண்டு, ௩௨. விசுவாசிகளுக்குச் சீவ அப்பமென்று தம்மை அறிவித்தது. ௬௬. அநேக சீஷர்கள் அவரைவிட்டுப் பிரிந்தது. ௬௮. பேதுரு அவரைக்குறித்து நல்லறிக்கைபண்ணினது. ௭௰. அவர் யூதாஸைப் பசாசென்று சொன்னது.

[5]அதின்பின்பு இயேசுவானவர் கலிலேயாக் கடலென்றும், திபேரியாக் கடலென்றும், பேர்கொண்ட கடலின் அக்கரைக்குப் போனார்.

௨ வியாதிப்பட்டவர்களிடத்தில் அவர் செய்த அற்புதங்களைத் திரளான சனங்கள் கண்டபடியால், அவருக்குப் பின்சென்றார்கள்.

௩ இயேசுவானவர் மலையில் ஏறி, அங்கே தம்முடைய சீஷருடனே கூட உளுக்காந்தார்.

௪ [6]அக்காலத்திலே யூதருடைய பஸ்கா என்னும் பண்டிகை சமீபமாய் இருந்தது.

௫ [7]அப்பொழுது இயேசுவானவர் தம்முடைய கண்களை உயர்த்தி, திரளான சனங்கள் தம்மிடத்திற்கு வரக்கண்டு, பிலிப்பை நோக்கி, இவர்களுக்குச் சாப்பாடு கொடுக்கும்படிக்கு நாம் எங்கே அப்பங்களைக் கொள்ளலாம் என்றார்.

௬ (அவர்களைக்குறித்துச்) செய்யவேண்டுவதை அவர் அறிந்தும், அவனைச்சோதிக்கும்படிக்கு இப்படிச் சொன்னார்.

௭ பிலிப்பு அவருக்கு மாறுத்தரமாகச் சொன்னது: [8]இவர்களில் ஒவ்வொருவன் கொஞ்சம் கொஞ்சமாக எடுத்துக்கொண்டாலும், இருநூறு தேநாரியுபணத்து அப்பங்களும் போதாது என்றான்.

௮ அப்பொழுது அவருடைய சீஷரில் ஒருவனுமாய், சீமோன் பேதுருவின் சகோதரனுமாய் இருந்த அந்திரேயா அவரை நோக்கி,

௯ இங்கே ஒரு பையன் இருக்கிறான், அவன் கையிலே வாற்கோதுமை அப்பங்கள் ஐந்தும், மீன்கள் இரண்டும் உண்டு; [9]இவ்வளவு சனங்களுக்கும் அவைகள் எம்மாத்திரம் என்றான்.

௰ அப்பொழுது இயேசுவானவர் சனங்களை உளுக்காரப்பண்ணுங்கள் என்றார்; அவ்விடத்திலே மிகுந்த புல் இருந்தது; அதின்மேல் ஏறக்குறைய ஐயாயிரம்பேர் உளுக்காந்தார்கள்.

௰௧ பின்பு இயேசுவானவர் அந்த அப்பங்களை எடுத்துக்கொண்டு தோத்திரம்பண்ணி, சீஷருக்குக் கொடுத்தார்; சீஷர் அவைகளைப் பந்தியிருக்கிறவர்களுக்குக் கொடுத்தார்கள்; அப்படிப்போல, மீன்களிலும் அவர்கள் இஷ்டம் எவ்வளவோ, அவ்வளவு அவர்களுக்குக் கொடுத்தார்.

இ. பி. ௯௨.

1 உ கொ. உ. உக.
2 யோவா. ௰௨. ௪௯.
3 உ கொ. உ. ௰௨.
4 ௧ மோ. ௩.௰௫: ௰௨.௩: ௰௮.௰௮: ௨௨.௰௮: ௪௯. ௰. ௫ மோ. ௰௮. ௰௫, ௰௮. யோவா. ௧. ௪௫. அப். ௨௩.௨௨.
5 மத். ௰௪. ௰௩. மாற். ௬. ௩௨. லூக். ௯. ௰, ௰௨.
6 ௩ மோ. ௨௩. ௫, ௭. ௫ மோ. ௰௬.௧. யோவா. ௨.௰௩: ௧௧.௫.
7 மத். ௰௪. ௰௪. மாற். ௬. ௩௫. லூக்.௯.௰௨.
8 ௪ மோ. ௰௧. ௨௧,௨௨.
9 ௨ இரா. ௪. ௪௩.

Digitized by Google

கி. பி. ௩௨.



௰௨ அவர்கள் திருப்தி அடைந்த பின்பு, அவர் தம்முடைய சீஷரை நோக்கி, ஒன்றும் கெட்டுப்போகாதபடிக்கு, சேஷமானவைகளைச் சேகரித்துக்கொள்ளுங்கள் என்றார்.

௰௩ அந்தப்படி அவர்கள் சேகரித்து, வாற்கோதுமை அப்பங்கள் ஐந்தில் சாப்பிட்டவர்கள் சேஷப்படுத்தினவைகளால் பன்னிரண்டு கூடைகளை நிரப்பினார்கள்.

௰௪ ¶ அப்பொழுது இயேசுவானவர் செய்த அற்புதத்தைச் சனங்கள் கண்டு, மெய்யாய் இவர் உலகத்தில் வரவேண்டிய [1]தீர்க்கதரிசியானவர் என்றார்கள்.

௰௫ ஆதலால் அவர்கள் வந்து தம்மை இராசாவாக்கும்படிக்குப் பிடித்துக்கொண்டுபோக மனதாயிருக்கிறதை இயேசுவானவர் அறிந்து, மறுபடியும் விலகித் தனியே மலையின்மேல் ஏறினார்.

௰௬ ¶[2]சாயங்காலமானபொழுது, அவருடைய சீஷர் கடற்கரையில் இறங்கிப் படவில் ஏறி, கடலின் அக்கரையான கப்பர்நாகூம் ஊருக்குப் போகப் புறப்பட்டார்கள்; அப்பொழுது இருட்டாயிருந்தது; இயேசுவானவரும் அவர்களிடத்தில் சேரவில்லை.

௰௭ அல்லாமலும் பெருங்காற்று அடித்தபடியினாலே கடல் எழும்பிற்று.

௰௮ அப்படி அவர்கள் ஏறக்குறைய இருபத்தைந்து அல்லது முப்பது ஸ்தாதிவழிதூரத்தில் துடுப்பு வலித்துக்கொண்டிருக்கிறபொழுது,

௰௯ இயேசுவானவர் கடலின் மேலே நடந்து, படவுக்குச் சமீபமாய் வருகிறதைக் கண்டு பயந்தார்கள்.

௨௰ அவர் அவர்களுடனே சொன்னது: நான்தான், பயப்படாதிருங்கள் என்றார்.

௨௰௧ அப்பொழுது அவரைப் படவில் ஏற்றிக்கொள்ள விரும்பினார்கள்; உடனே படவு அவர்கள் போகிற கரையைப் பிடித்தது.

௨௰௨ ¶ மறுநாளிலே கடலின் அக்கரையிலே நின்ற சனங்கள், அவருடைய சீஷர் ஏறின அந்த ஒரே படவுதவிர அங்கே வேறொரு படவு இல்லையென்றும், இயேசுவானவர் தம்முடைய சீஷருடனேகூடப் படவில் ஏறாமலிருக்க அவருடைய சீஷர்மாத்திரம் போனார்கள் என்றும் அறிந்தார்கள்.

௨௰௩ கர்த்தர் தோத்திரம்செய்த பின்பு, அவர்கள் அப்பம் சாப்பிட்ட இடத்திற்குச் சமீபமாய்த் திபேரியாவிலிருந்து வேறே படவுகளும் வந்தன.

௨௰௪ அப்பொழுது இயேசுவானவரும் அங்கே இல்லை, அவருடைய சீஷரும் இல்லை என்று சனங்கள் கண்டு, உடனே படவுகளில் ஏறி, இயேசுவைத் தேடி, கப்பர்நாகூம் ஊருக்குப் போனார்கள்.

௨௰௫ கடலின் அக்கரையிலே அவர்கள் அவரைக் கண்டபொழுது, இரபீ, நீர் எப்பொழுது இங்கே வந்தீர் என்றார்கள்.

௨௰௬ ¶ இயேசுவானவர் அவர்களை நோக்கி, நீங்கள் அற்புதங்களைக் கண்டதினால் அல்ல, அந்த அப்பத்தைப் புசித்துத் திருப்தி அடைந்ததினாலே என்னைத் தேடுகிறீர்கள் என்று மெய்யாகவே உங்களுக்குச் சொல்லுகிறேன்.

௨௰௭ ¶ அழிந்துபோகிற போசனத்திற்காக அல்ல, [3]நித்தியசீவன் உள்ளவரைக்கும் நிலைநிற்கிறபோசனத்திற்காகவே பிரயாசப்படுங்கள்;* அதை மனிதனுடைய குமாரன் உங்களுக்குக் கொடுப்பான்; [4]பராபரன் என்னும் பிதா அதற்காக அவனை முத்திரைப்படுத்தினாரே என்றார்.

௨௰௮ அதற்கு அவர்கள் சொன்னது: பராபரனுக்கு ஏற்ற கிரியைகளை நடத்தும்படிக்கு நாங்கள் என்னசெய்யலாம் என்றார்கள்.

1 ௧ மோ. ௪௯.௰. ௫ மோ. ௰௮. ௰௫, ௰௮. மத். ௰௧. ௩. யோவா. ௧.௨௧: ௪.௰௯, ௨௫: ௭.௪௰.

2 மத். ௰௪. ௨௩, மாற். ௬.௪௭.

3 ௫௪. வசனம். யோவா. ௪.௰௪.

* அல்லது வேலைசெய்யுங்கள்.

4 மத். ௩.௰௭: ௰௭. ௫. மாற். ௧.௰௧: ௯.௭. லூக். ௩. ௨௨: ௯. ௩௫. யோவா. ௧.௩௩: ௫.௩௭: ௮.௰௮. அப். ௨. ௨௨. ௨ பே. ௧.௰௭.

Digitized by Google

உகூ இயேசுவானவர் சொன்னது: [1]பராபரன் அனுப்பினவரை நீங்கள் விசுவாசிக்கிறதே அவருக்கு ஏற்ற கிரியையாய் இருக்கின்றது என்றார்.

ஙய அதற்கு அவர்கள் சொன்னது: அப்படியானால் உம்மை விசுவாசிக்கும்படிக்கு, நாங்கள் காணத்தக்கதாக [2]என்ன அற்புதத்தைச் செய்கிறீர்? என்னத்தை நடப்பிக்கிறீர்?

ஙக [3]வானத்திலிருந்து அப்பத்தை அவர்களுக்குப் புசிக்கக்கொடுத்தார் என்று எழுதியிருக்கிறபடி, [4]நம்முடைய பிதாக்கள் வனாந்தரத்திலே மன்னாவைப் புசித்தார்களே என்றார்கள்.

ஙஉ ¶ அதற்கு இயேசுவானவர் சொன்னது: வானத்திலிருந்து அப்பத்தைமோசே உங்களுக்குக்கொடுக்கவில்லை; என் பிதாவானவரே வானத்திலிருந்து மெய்யான அப்பத்தை உங்களுக்குக் கொடுக்கிறார் என்று மெய்யாகவே உங்களுக்குச் சொல்லுகிறேன்.

ஙங வானத்திலிருந்து இறங்கி வந்து உலகத்திற்குச் ஜீவனைக் கொடுக்கிறவரே பராபரன் அருளிச்செய்கிற அப்பமாய் இருக்கிறார் என்றார்.

ஙச அப்பொழுது அவர்கள் சொன்னது: [5]ஆண்டவரே, அந்த அப்பத்தை எங்களுக்கு எப்பொழுதும் தாரும் என்றார்கள்.

ஙரு இயேசுவானவர் சொன்னது: [6]ஜீவ அப்பம் நானே; [7]என்னிடத்தில் வருகிறவன் ஒருக்காலும் பசியை அடையான்; என்னிடத்தில் விசுவாசமாயிருக்கிறவன் ஒருக்காலும் தாகம் அடையான்.

ஙசா [8]நான் உங்களுக்குச் சொன்னபடி, நீங்கள் என்னைக் கண்டும் விசுவாசியாமல் இருக்கிறீர்கள்.

ஙஎ [9]பிதாவானவர் எனக்குக் கொடுக்கிற யாவரும் என்னிடத்தில் வருகிறார்கள்.

ஙஅ [10]என்னிடத்தில் வருகிறவ

கி. பி. ஙஉ.

1 க யோ. ங. உங
2 மத். ௰உ. ஙஅ: ௰௧. க. மாற். அ. ௰௧. க கொரி. க. ௰உ.
3 சங். எஅ. உச, உரு.
4 உ மோ. ௰௬. ௰ரு. ச மோ. ௰௧. எ. நெகே. கூ. ௰ரு. க கொரி. ௰. ங.
5 யோவா. ச. ௰ரு.
6 சஅ, ௫எ. ௰௪.
7 யோவா. ச. ௰ச: எ. ஙஎ.
8 உக, ஙச. ௰ச.
9 சரு. ௰ச.
10 மத். உச. உச. யோவா. ௰. உஅ. உங. உ தீமோ உ. ௰௧. க யோ. உ ௰௧.
11 மத். உக. ஙக. யோவா. ௫. ௰௰.
12 யோவா. ச. ஙச.
13 யோவா. ௰. உஅ: ௰எ. ௰உ: ௰அ கூ.
14 உஎ, சஎ, ௫ச. ௰ச. யோவா. ங. ௰ரு, ௰௬: ச. ௰ச.
15 மத். ௰ங. ருரு. மாற் ச. ங. லூக். ச. உஉ.
16 உன். க. ச. ஙச. ௰ச.
17 ஏசா. ௫ச. ௰ங. எரே. ஙக. ஙச. மீகா. ச. உ. எபி. அ. ௰: ௰. ௰௬.
18 ஙஎ. ௰ச.

னை நான் தள்ளமாட்டேன்; என்னத்தினாலெனில் [11]என் சித்தத்தின்படி அல்ல, [12]என்னை அனுப்பினவருடைய சித்தத்தின்படியே செய்யும்பொருட்டாய் நான் வானத்திலிருந்து இறங்கிவந்தேன்.

ஙகூ [13]அவர் எனக்குக் கொடுத்தவர்களில் ஒருவனையும் நான் இழந்துபோகாமல் கடைசிநாளிலே அவர்களை எழுப்பும்படிக்கு, என்னை அனுப்பின பிதாவின் சித்தமாய் இருக்கின்றது.

சய [14]குமாரனைக் கண்டு, அவரிடத்தில் விசுவாசமாயிருக்கிறவன் எவனோ, அவன் நித்திய ஜீவனை அடையும்படிக்கும், கடைசிநாளிலே நான் அவனை எழுப்பும்படிக்கும் என்னை அனுப்பினவருடையசித்தமாகவே இருக்கின்றது என்றார்.

சக ¶ நான் வானத்திலிருந்து வந்தஅப்பமாயிருக்கிறேன் என்று அவர்சொன்னபடியினாலே, யூதர்கள் அவரைக்குறித்து மொறுமொறுத்து,

சஉ [15]இவர் யோசேப்பினுடைய குமாரனாகிய இயேசு அல்லவா? இவருடையதகப்பனையும்தாயையும் அறிந்திருக்கிறோமே, அப்படியிருக்க, நான் வானத்திலிருந்து இறங்கிவந்தேன் என்று எப்படிச் சொல்லுகிறார் என்றார்கள்.

சங அதற்கு மாறுத்தரமாக இயேசுவானவர் சொன்னது: உங்களுக்குள்ளே மொறுமொறுக்கவேண்டாம்.

சச [16]என்னை அனுப்பின பிதா ஒருவனை இழுத்துக்கொள்ளாவிட்டால், அவன் என்னிடத்தில் வரமாட்டான்; கடைசிநாளில் நானே அவனை எழுப்புவேன்.

சரு [17]எல்லாரும் பராபரனாலே போதிக்கப்பட்டிருப்பார்கள் என்று தீர்க்கதரிசன புத்தகத்தில் எழுதியிருக்கின்றதே; [18]ஆகையால் பராபரனிடத்தில் கேட்டுக் கற்றுக்

சொல்லுகிறவன் எவனோ, அவன் என்னிடத்தில் வருகிறான்.

௪௬ [1]பராபரனை ஒருவன் கண்டான் என்று நான் சொல்லவில்லை; [2]பராபரனிலிருந்து வந்தவன் மாத்திரமே பிதாவைக் கண்டான்.

௪௭ [3]என்னிடத்தில் விசுவாசமாயிருக்கிறவனுக்கு நித்தியசீவன் உண்டென்று மெய்யாகவே உங்களுக்குச் சொல்லுகிறேன்.

௪௮ [4]சீவ அப்பம் நானே; [5]உங்கள் பிதாக்கள் வனாந்தரத்திலே மன்னாவைப்புசித்துப் பின்பு மரித்தார்கள்.

௪௯ [6]வானத்திலிருந்து வந்தஇந்த அப்பத்தைப் புசிக்கிறவன் மரியாமல் இருப்பான்.

௫௰ [7]வானத்திலிருந்திறங்கின சீவனுள்ள அப்பம் நானே; இந்த அப்பத்தைப் புசிக்கிறவன் என்றென்றைக்கும் பிழைப்பான்; [8]நான் கொடுக்கும் அப்பம் உலகத்தார் சீவனை அடைவதற்கு நான் கொடுக்கும் என் மாம்சமே என்றார்.

௫௧ ¶ அப்பொழுது யூதர்கள், இவர் [9]தம்முடைய மாம்சத்தை எப்படி நமக்குப் புசிக்கக்கொடுப்பார் என்று [10]தங்களுக்குள்ளே வாக்குவாதம்பண்ணினார்கள்.

௫௨ ஆதலால் இயேசுவானவர் அவர்களை நோக்கி, [11]நீங்கள் மனிதகுமாரனுடைய மாம்சத்தைப் புசியாமலும் அவருடைய இரத்தத்தைப் பானம்பண்ணாமலும் இருந்தால், உங்களுக்குள்ளே சீவன் இருக்கமாட்டாதென்று மெய்யாகவே உங்களுக்குச் சொல்லுகிறேன்.

௫௩ என் மாம்சம் மெய்யான போசனமாயும், என் இரத்தம் மெய்யான பானமாயும் இருக்கின்றன.

௫௪ [12]ஆகையால் என் மாம்சத்தைப் புசித்து, என் இரத்தத்தைப் பானம்பண்ணுகிறவனுக்கு நித்திய சீவன் உண்டு; கடைசிநாளில் நானே அவனை எழுப்புவேன்.

௫௫ [13]என் மாம்சத்தைப்புசித்து என் இரத்தத்தைப் பானம்பண்ணுகிறவன் எனக்குள்ளே தங்குகிறான்; நானும் அவனுக்குள்ளே தங்குகிறேன்.

௫௬ என்னை அனுப்பின சீவனுள்ள பிதாவினாலே நான் பிழைத்திருக்கிறதுபோல என்னைப் புசிக்கிறவனும் என்னாலே பிழைப்பான்.

௫௭ [14]இதுவே வானத்திலிருந்து இறங்கின அப்பம்; இது உங்கள் பிதாக்கள் புசித்த மன்னாவைப் போல அல்ல, அவர்கள் மரித்தார்களே; இந்த அப்பத்தைப் புசிக்கிறவன் என்றென்றைக்கும் பிழைப்பான் என்றார்.

௫௮ கப்பர்நாகூம் ஊரிலுள்ள செபஆலயத்திலே அவர் உபதேசிக்கையில், இவைகளைத் திருவுளம்பற்றினார்.

௫௯ ¶ [15]அவருடைய சீஷரில் அநேகர் அவைகளைக் கேட்டபொழுது, இது கடினமான உபதேசம், யார் இதைக்கேட்பார்கள் என்றார்கள்.

௬௰ சீஷர் அதைக்குறித்து மொறுமொறுக்கிறார்கள் என்று இயேசுவானவர் தமது உள்ளத்திலே அறிந்து, அவர்களுடனே சொன்னதாவது: இதுவா உங்களுக்கு இலச்சை உண்டாக்குகின்றது?

௬௧ [16]மனிதனுடைய குமாரன் தான் முன்னிருந்த இடத்திற்கு ஏறிப்போகிறதை நீங்கள் காண்பீர்களானால், (எப்படியிருக்கும்?)

௬௨ [17]ஆவியே உயிர் உண்டாக்குகிறது; மாம்சம் ஒன்றுக்கும் உதவாது; நான் உங்களுக்குச் சொல்லுகிற வசனங்களே ஆவியாயும் சீவனாயும் இருக்கின்றன என்று சொல்லி,

௬௩ [18]பின்பு இயேசுவானவர் விசுவாசம் இல்லாதவர்கள் இன்னார் என்றும் தம்மைக் காட்டிக்கொ

கி. பி. ௩௰௨.

1 யோவா ௧. ௰௮: ௫.௪௭.
2 மத். ௰௧. ௨௭. லூக். ௰. ௨௨. யோவா ௭.௰௯: ௮.௨௯: ௮.௰௯.
3 யோவா. ௩.௰௬, ௰௮,௩௬,௫௰.௨௪.
4 ௩௩,௩௫.௫௪.
5 ௩௧.௫௪.
6 ௫௰. ௫௭. ௫௮.
7 யோவா. ௩.௰௩.
8 எபி. ௰ ௫, ௰.
9 யோவா. ௩. ௯.
10 யோவா. ௭. ௪௩: ௯. ௰௬: ௰. ௰௯.
11 மத். ௨௬.௨௬, ௨௮.
12 ௨௭, ௩௯,௪௰ ௫௪.யோவா.௪. ௰௪.
13 ௧யோ. ௩. ௨௪: ௪. ௰௩, ௰௬.
14 ௪௮,௪௯,௫௰.
15 ௬௰. ௫௪.மத். ௰௧.௬.
16 யோவா. ௩. ௰௩. மாற். ௰௬. ௰௯. அப். ௧. ௯. எபே. ௪.௮.
17 ௨ கொரி. ௩. ௬.
18 யோவா. ௨. ௨௪, ௨௫: ௰௩. ௰௧.

Digitized by Google

டுப்பவன் இன்னான் என்றும் ஆதிமுதல் அறிந்துவந்தபடியால், அவர் பின்னும் சொன்னது: [1]உங்களில் சிலர் விசுவாசிக்கிறவர்கள் அல்ல.

௬௪ அதினாலே [2]ஒருவன் என் பிதாவினாலே அருள்கொள்ளாவிட்டால், என்னிடத்தில் வரமாட்டான் என்று (முன்னே) உங்களுக்குச் சொன்னேன் என்றார்.

௬௫ [3]அதுமுதற்கொண்டு அவருடைய சீஷரில் அநேகர் அப்புறம் அவருடனேகூட நடவாமல் பின்வாங்கிப்போனார்கள்.

௬௬ அப்பொழுது இயேசுவானவர் பன்னிருவரையும் நோக்கி, போகும்படிக்கு உங்களுக்கு மனதில்லையா என்றார்.

௬௭ அதற்குச் சீமோன்பேதுரு சொன்னது: ஆண்டவரே, யாரிடத்துக்குப் போவோம்? [4]உம்மிடத்தில் நித்தியசீவனுள்ள வசனங்கள் இருக்கின்றனவே.

௬௮ அல்லாமலும் [5]நீரே சீவனுள்ள பராபரனுடைய குமாரனாகிய கிறிஸ்து என்று நாங்கள் விசுவாசித்து அறிந்துகொண்டோம் என்றான்.

௬௯ இயேசுவானவர் சொன்னது: [6]பன்னிருவராகிய உங்களை நான் தெரிந்துகொள்ளவில்லையா? [7]உங்களுக்குள்ளும் ஒருவன் பசாசாய் இருக்கிறான் என்றார்.

௭௦ பன்னிருவரில் ஒருவனாகிய சீமோனின் குமாரன் யூதாஸ்காரியோத்து என்பவன் தம்மைக் காட்டிக்கொடுக்கிறதற்கு ஏதுவாயிருந்தபடியினாலே, அவனைக்குறித்து இப்படிச் சொன்னார்.

## ௭. அதிகாரம்.

௧. இயேசு தம்முடைய இனத்தாருடைய வீண் பெருமையைக் கடிந்துகொண்டது. ௰. அவர் கலிலேயாவிலிருந்து கூடாரப்பண்டிகைக்குப் போய், ௧௪. தேவாலயத்தில் பிரசங்கம்பண்ணினது. ௪௰. சனங்கள் பலவிதமாக அவரைக்குறித்துப் பேசினது. ௪௫. சேவகர் அவரைப் பிடியாததினாலே பரிசேயர் அவர்களையும் அவருக்கு இசைந்து பேசின நிக்கோதேமுவையும் கடிந்துகொண்டது.

அதின்பின்பு [8]இயேசுவானவர் யூதர்கள் தம்மைக் கொலைசெய்ய தேடினபடியினாலே யூதேயா நாட்டிலே சஞ்சரிக்க மனதில்லாமல், கலிலேயா நாட்டிலே சஞ்சரித்து வந்தார்.

௨ ¶ பின்பு [9]யூதருடைய கூடாரப்பண்டிகை சமீபமாயிற்று.

௩ [10]அப்பொழுது அவருடைய சகோதரர் அவரை விசுவாசியாதபடியினாலே,

௪ அவரை நோக்கி, [11]நீர் செய்கிற கிரியைகளை உம்முடைய சீஷரும் பார்க்கும்படிக்கு, நீர் இவ்விடம்விட்டு யூதேயா நாட்டுக்குப் போகவேண்டும்.

௫ பிரபலமாயிருக்க விரும்புகிறவனும் ஒருகாரியத்தையாகிலும் அந்தரங்கத்திலே செய்யமாட்டானே; நீர் இப்படிப்பட்டவைகளைச் செய்கிறபடியால், உம்மை உலகத்திற்கு வெளிப்படுத்தலாமே என்றார்கள்.

௬ அவர்களுடனே இயேசுவானவர் சொன்னது: [12]என்னுடைய நேரம் இப்பொழுது வரவில்லை, உங்கள் நேரம் எப்பொழுதும் எத்தனமாய் இருக்கின்றது.

௭ [13]உலகத்தார் உங்களைப் பகைக்கமாட்டார்கள்; [14]அவர்களுடைய கிரியைகள் பொல்லாதவைகள் என்று நான் சாட்சிகொடுக்கிறபடியினாலே என்னைப் பகைக்கிறார்கள்.

௮ நீங்கள் இந்தப் பண்டிகைக்குப்போங்கள், [15]என்னுடைய நேரம் நிறைவேறாதபடியால், நான் இப்பொழுது போகமாட்டேன் என்றார்.

௯ இவைகளை அவர்களுடனே சொல்லி, பின்னும் கலிலேயா நாட்டில் இருந்தார்.

௰ அவருடைய சகோதரர் போனபின்பு அவரும் வெளியரங்க

இ. பி. கூஉ.

1 கக. வச.
2 சச, சஇ. வச.
3 கல். வச.
4 அப். இ. உல்.
5 மத். மக. மக. மாற். அ. உக. லூக். க. உல். யோவா. க.சக: மக.உஎ.
6 லூக். க. மக.
7 யோவா. மக. உஎ.
8 யோவா. இ. மக, மஅ.
9 ௩ லேவ. உக. கச.
10 மாற்.க.உக.
11 மத். ௰. சக. மாற். க. கக. அப். க.மச.
12 யோவா.உ.ச: அ. உல். அ, கல். வச.
13 யோவா. மஇ. மக.
14 யோவா.க.மக.
15 யோவா. அ. உல். க. வச.

Digitized by Google

மாக அல்ல, அந்தரங்கமாகப் பண்டிகைக்குப் போனார்.

௰௧ ¶ [1]பண்டிகை காலத்திலே யூதர்கள் அவரைத் தேடி, அவர் எங்கே இருக்கிறார் என்றார்கள்.

௰௨ [2]அல்லாமலும் சனங்களுக்குள்ளே அவரைக்குறித்து மிகுந்த பேச்சு உண்டாயிற்று; [3]சிலர், அவர் நல்லவர் என்றும், சிலர், அப்படி அல்ல, அவன் சனங்களை வஞ்சிக்கிறவன் என்றும் சொல்லிக்கொண்டார்கள்.

௰௩ [4]அவர்கள் யூதருக்குப் பயப்படுகிறவர்களானபடியினாலே, ஒருவனாகிலும் அவரைக்குறித்துத் தாராளமாய்ப் பேசவில்லை.

௰௪ ¶ ஏறக்குறையப் பாதிபண்டிகை தீர்ந்தபொழுது, இயேசுவானவர் தேவாலயத்திற்குப் போய் உபதேசம்பண்ணினார்.

௰௫ [5]அப்பொழுது யூதர்கள் ஆச்சரியப்பட்டு, கல்லாதவராகிய இவர் வேதவாக்கியங்களை* எப்படி அறிந்தார் என்றார்கள்.

௰௬ அவர்களுடனே இயேசுவானவர் சொன்னது: [6]நான் பண்ணுகிற உபதேசம் என்னுடையதல்ல, என்னை அனுப்பினவருடையதாய் இருக்கின்றது.

௰௭ [7]இந்த உபதேசம் பராபரனால் உண்டாயிருக்கிறது என்பதும், அல்லது நான் என்னாலே பேசுகிறேன் என்பதும், அவருடைய சித்தத்தின்படி செய்ய மனதுள்ளவன் எவனோ அவனுக்கே தெரியும்.

௰௮ [8]தன்னாலே பேசுகிறவன் தனக்கே புகழ்ச்சிவரத் தேடுகிறவன்; தன்னை அனுப்பினவருக்குப் புகழ்ச்சிவரத் தேடுகிறவன் சத்தியமுள்ளவன்; அவனிடத்திலே கபடம் இராது.

௰௯ [9]மோசேயானவர் நியாயப்பிரமாணத்தை உங்களுக்குக் கொடுக்கவில்லையா? அப்படியிருந்தும், உங்களில் ஒருவனும் அந்த நியாயப்பிரமாணத்தின்படி செய்கிறதில்லை, [10]என்னத்திற்காக நீங்கள் என்னைக் கொலைசெய்யத் தேடுகிறீர்கள் என்றார்.

௨௰ அதற்குச் சனங்கள் சொன்னது: [11]நீ பசாசையுடையவன்; எவன் உன்னைக் கொலைசெய்யத் தேடுகிறான் என்றார்கள்.

௨௧ இயேசுவானவர் சொன்னது: ஒரு கிரியையைச் செய்தேன்; அதைக்குறித்து நீங்கள் எல்லாரும் அதிசயப்படுகிறீர்கள்.

௨௨ [12]விருத்தசேதனம் மோசேயினாலே அல்ல, பிதாக்களால் உண்டாயிற்று; (பின்பு) மோசே உங்களுக்கு விருத்தசேதனத்தை ஏற்படுத்தினார்; [13]அந்த விருத்தசேதனத்தை நீங்கள் மனிதரில் ஓய்வு நாளிலேயும் பண்ணுகிறீர்கள்.

௨௩ மோசேயின் நியாயப்பிரமாணத்தைத் தள்ளாதபடிக்கு†, ஒரு மனிதன் விருத்தசேதனத்தை ஓய்வுநாளிலே பெறலாம் என்றால், [14]நான் ஒரு மனிதன் முழுவதையும் ஓய்வுநாளிலே சுகமாக்கினதினாலே, நீங்கள் என்மேல் எரிச்சலாயிருக்கலாமா?

௨௪ [15]புறம்பே தோன்றுகிறபடி தீர்மானம்பண்ணாமல், நீதியின்படியே தீர்மானம்பண்ணுங்கள் என்றார்.

௨௫ ¶ அப்பொழுது எருசலேம் நகரத்தாரில் சிலர் சொன்னது: இவனையல்லவா கொலைசெய்யத் தேடுகிறார்கள்?

௨௬ இதோ, இவன் தாராளமாய்ப் பேசுகிறான்; அவர்கள் இவனுடனே ஒன்றும் சொல்லவில்லையே; [16]இவன் மெய்யான கிறிஸ்துவாய் இருக்கிறான் என்று ஆண்டவர்கள் உண்மையாய் அறிந்தார்களா?

௨௭ [17]நாம் இவன் வந்த இடத்தை அறிந்திருக்கிறோம்; கிறிஸ்து வரும்பொழுது, அவர் வந்த இடத்தை ஒருவரும் அறியமாட்டார்களே என்றார்கள்.

கி. பி. ௩௨.

1 யோவா. ௰௧. ௫௬.
2 யோவா. ௯. ௰௬: ௰. ௰௯.
3 மத். ௨௧. ௪௬. லூக். ௭. ௰௬. யோவா. ௬. ௰௪. ௪௦. ௪௩.
4 யோவா. ௯. ௨௨: ௰௨. ௪௨, ௰௯: ௩௮. ௨௰.
5 மத். ௰௩. ௫௪. மாற். ௬. ௨. லூக். ௪. ௨௨. அப். ௨. ௭.
* அல்லது கல்வியை.
6 யோவா. ௩. ௰௧: ௮. ௨௮: ௰௨. ௪௯: ௰௪. ௰, ௨௪.
7 யோவா. ௮. ௪௩.
8 யோவா. ௫. ௪௧: ௮. ௫௦.
9 ௨ மோ. ௨௪. ௩. ௫ மோ. ௩௩. ௪. யோவா. ௧. ௰௭. அப் ௭. ௩௮.
10 மத். ௰௨. ௰௪. மாற். ௩. ௬. யோவா. ௫. ௰௬, ௰௮: ௰. ௩௧, ௩௯: ௰௧. ௫௩.
11 யோவா. ௮. ௪௮, ௫௨: ௰. ௨௰.
12 ௩ மோ. ௰௨. ௩.
13 ௧ மோ. ௰௭. ௰.
† அல்லது தள்ளாமல்.
14 யோவா. ௫. ௮, ௯, ௰௬.
15 ௫ மோ. ௧. ௰௬. நீதி. ௨௪. ௨௩. யோவா. ௮. ௰௫. யாக். ௨. ௧.
16 ௪௮. ௪௪.
17 மத். ௰௩. ௫௫. மாற். ௬. ௩. லூக். ௪. ௨௨.

Digitized by Google

௨௮ ¶ அப்பொழுது தேவாலயத்தில் உபதேசிக்கிற இயேசுவானவர் கூப்பிட்டதாவது: [1]என்னை அறிந்திருக்கிறீர்களா? நான் புறப்பட்டு வந்த இடத்தையும் அறிந்திருக்கிறீர்களா? [2]நான் என் சுயமாய் வரவில்லை; [3]என்னை அனுப்பினவர் சத்தியமுள்ளவர், [4]அவரை நீங்கள் அறியாதிருக்கிறீர்கள்.

௨௯ நான் அவரால் வந்திருக்கிறபடியினாலும், அவர் என்னை அனுப்பினபடியினாலும் [5]நானே அவரை அறிந்திருக்கிறேன் என்றார்.

௩௰ [6]அப்பொழுது அவரைப் பிடிக்க வகை தேடினார்கள்; [7]அவருடைய நேரம் அக்காலத்திலே வாராதபடியால், ஒருவனும் அவர் மேலே கைகளைப் போடவில்லை.

௩௧ [8]அக்காலத்தில் சனங்களில் அநேகர் அவரிடத்தில் விசுவாசமுள்ளவர்களாகி, கிறிஸ்து வரும்பொழுது இவர் செய்கிற அற்புதங்களிலும் அதிகமானவைகளை அவர் செய்வாரா என்றார்கள்.

௩௨ ¶ சனங்கள் அவரைக்குறித்து இப்படிப் பேசிக்கொண்டிருக்கிறதைப் பரிசேயர் கேட்டபொழுது, அவர்களும் பிரதான ஆசாரியரும் அவரைப் பிடித்துக்கொண்டு வரும்படிக்குச் சேவகரை அனுப்பினார்கள்.

௩௩ ஆதலால் இயேசுவானவர் சொன்னது: [9]நான் இனிச் சிலகாலம்மாத்திரம் உங்களுடனேகூட இருந்து, பின்பு என்னை அனுப்பினவரிடத்திற்குப் போவேன்.

௩௪ [10]நீங்கள் என்னைத் தேடிக் காணாமல்போவீர்கள்; அல்லாமலும் நான் இருக்கும் இடத்திற்கு நீங்கள் வரமாட்டீர்கள் என்றார்.

௩௫ அப்பொழுது யூதர்கள் தங்களுக்குள்ளே பேசிக்கொண்டது: இவரை நாம் காணாதபடிக்கு, இவர் எங்கே போவார்? [11]கிரேக்கருக்குள்ளே * சிதறியிருக்கிறவர்களிடத்தில் போவாரா? கிரேக்கருக்கு உபதேசம்பண்ணுவாரா?

௩௬ என்னைத் தேடிக் காணாமல் போவீர்கள் என்றும், நான் இருக்கும் இடத்திற்கு நீங்கள் வரமாட்டீர்கள் என்றும் அவர் சொன்ன வசனம் எப்படியிருக்கிறது என்றார்கள்.

௩௭ ¶ [12]பின்பு பண்டிகையின் கடைசியும் பெரிதுமான நாளிலே இயேசுவானவர் நின்று கூப்பிட்டதாவது: [13]ஒருவன் தாகமாயிருந்தால், என்னிடத்தில் வந்து, பானம்பண்ணக்கடவன்.

௩௮ [14]வேதவாக்கியம் சொன்னபடி என்னிடத்தில் விசுவாசமாயிருப்பவன் எவனோ, [15]அவன் உள்ளத்திலிருந்து சீவதண்ணீருள்ள நதிகள் ஓடும் என்றார்.

௩௯ [16]இப்படி அவர் தம்மிடத்தில் விசுவாசமாகிறவர்கள் அடையும் ஆவியைக்குறித்துச் சொன்னார்; இயேசுவானவர் அப்பொழுது [17]மகிமையாக்கப்படாதபடியினாலே, அந்தப் பரிசுத்த ஆவி அக்காலத்திலே தோன்றவில்லை.

௪௰ சனங்களில் அநேகர் அந்த வசனத்தைக் கேட்டபொழுது, [18]இவர் மெய்யாய்த் தீர்க்கதரிசியானவர் என்றார்கள்.

௪௧ [19]வேறு சிலர் இவர் கிறிஸ்து என்றார்கள்; வேறு சிலர் சொன்னது: [20]கிறிஸ்து கலிலேயா நாட்டிலிருந்தா வருவார்?

௪௨ [21]தாவீதின் சந்ததியிலும், தாவீது இருந்த [22]பெத்லேகேம் ஊரிலுமிருந்து கிறிஸ்து வருவார் என்று வேதத்திலே சொல்லியிருக்கவில்லையா என்றார்கள்.

௪௩ [23]இவ்விதமாய் அவரைக்குறித்துச் சனங்களுக்குள்ளே பிரிவினை உண்டாயிற்று.

௪௪ [24]அல்லாமலும் அவர்களில் சிலர் அவரைப் பிடிக்க மனதுள்ளவர்களாய் இருந்தார்கள்; ஆகிலும் ஒருவரும் அவர்மேல் கைகளைப் போடவில்லை.

இ. பி. ௩௨.

1 யோவா. அ. ௰௪.
2 யோவா. ஙூ. ௪௨: அ.௪௨.
3 யோவா. ஙூ. ௩௩: அ. ௨௬. உரோ. ௩. ௪.
4 யோவா. ௧. ௰அ: அ. ௫௫.
5 மத். ௰௧. ௨௭. யோவா. ௰. ௰௫.
6 மாற். ௰௧. ௰அ. லூக். ௰௯. ௪௭: ௨௰. ௰௯. ௰௯. ௩௪. யோவா. அ.௩௭.
7 ௪௪. ௩௪. யோவா. அ. ௨௰.
8 மத். ௰௨. ௨௩. யோவா. ௩. ௨: அ.௩௰.
9 யோவா. ௰௩. ௩௩: ௰௬. ௰௬.
10 ஓசே. ௫. ௬. யோவா. அ. ௨௧: ௰௩. ௩௩.
11 ஏசா. ௰௧.௰௨. யாக். ௧. ௧. ௧ பே. ௧. ௧.
* அல்லது அஞ்ஞானிகளிடத்தில்.
12 ௩ மோ. ௨௩. ௩௬.
13 ஏசா. ௫௫. ௧. யோவா. ௬.௩௫. வெளி. ௨௨. ௰௭.
14 ௫ மோ. ௰௮. ௰௫.
15 யாக். ௰அ. ௪. ஏசா. ௰௨. ௩: ௪௪. ௩. யோவா. ௪.௰௪.
16 ஏசா. ௪௪. ௩. யோவே. ௨. ௨௮. யோவா. ௰௬. ௭. அப். ௨. ௧௭, ௩௩, ௩௮.
17 யோவா. ௰௨. ௰௬: ௰௬.௭.
18 ௫ மோ. ௰௮. ௰௫,௰௮. யோவா. ௬. ௰௪: ௧. ௨௧.
19 யோவா. ௪. ௪௨: ௬. ௬௯.
20 ௰௨. ௫௨.
21 சங். ௱௩௨.௰௧. எரே. ௨௩. ௫. மீகா ௫.௨. மத். ௨. ௫. லூக். ௨. ௪.

22 ௧ சாமு. ௰௬. ௧, ௪.—23 ௰௨. ௫௪. யோவா. ௯. ௰௬: ௰. ௰௯.—24 ௩௰. ௪௪.

Digitized by Google

௪௫ ¶ பின்பு அந்தச் சேவகர் பிரதான ஆசாரியரிடத்திற்கும், பரிசேயரிடத்திற்கும் திரும்பிப் போனார்கள்; அவர்களை நோக்கி என்னத்தினாலே நீங்கள் அவனைக் கொண்டுவரவில்லை என்றார்கள்.

௪௬ சேவகர் மாறுத்தரமாகச் சொன்னது: [1]அந்த மனிதன் பேசுகிறதுபோல ஒருக்காலும் ஒருவரும் பேசவில்லை என்றார்கள்.

௪௭ அதற்குப் பரிசேயர் சொன்னது: நீங்களும் வஞ்சிக்கப்பட்டீர்களா?

௪௮ [2]பெரியோர்களிலாவது, பரிசேயரிலாவது, ஒருவனாகிலும் அவன்மேல் விசுவாசமாய் இருக்கிறது உண்டோ?

௪௯ வேதத்தை அறியாத சனங்கள்மாத்திரம் சபிக்கப்பட்டவர்கள் என்றார்கள்.

௫௰ அவர்களில் ஒருவனுமாய், முன்னே [3]இராத்திரியில் அவரிடத்தில் *போனவனுமாய் இருந்த நிக்கோதேமு என்பவன் அப்பொழுது அவர்களை நோக்கி,

௫௧ [4]நாம் ஒரு மனிதனைச் சோதித்து, அவனுடைய செய்கைகளை அறிகிறதற்குமுன்னே அவனை ஆக்கினைக்கு உட்படுத்தலாமென்று நம்முடைய நியாயசாஸ்திரம் சொல்லுகிறதா என்றான்.

௫௨ அதற்கு அவர்கள் சொன்னது: நீரும் கலிலேயனா? நீர் ஆராய்ந்து பார்த்தால், தீர்க்கதரிசிகள் கலிலேயா நாட்டிலிருந்து [5]தோன்றவில்லை என்று அறிவீர் என்றார்கள்.

௫௩ பின்பு எல்லாரும் தங்கள் வீடுகளுக்குப் போனார்கள்.

## ௮. அதிகாரம்.

௧. விபசாரஸ்திரீயைக் கிறிஸ்து விடுதலையாக்கினது. ௰௨. தாம் உலகத்தின் வெளிச்சமென்று பிரசங்கித்துத் தம்முடைய உபதேசங்களுக்கு அடுத்த விபரங்களை மெய்ப்பித்து, ௩௩. ஆபிரகாமைக்குறித்துப் பெருமைபாராட்டின யூதர்களைக் கடிந்துகொண்டு, ௫௯. அவர்களைவிட்டு மறைந்தது.

இயேசுவானவர் ஒலிவமலைக்குப் போனார்.

கி. பி. ௩௨.



௨ மறுநாள் காலையிலே தேவாலயத்திற்குத் திரும்பினார்; சனங்கள் எல்லாரும் அவரிடத்தில் சேர்ந்தார்கள்; அவர் உளுக்காந்து அவர்களுக்கு உபதேசம்பண்ணினார்.

௩ அப்பொழுது விபசாரத்திலே கண்டுபிடிக்கப்பட்ட ஒரு பெண்ணை வேதபாரகரும் பரிசேயரும் அவரிடத்தில் கொண்டுவந்து, அவளை நடுவே நிறுத்தி,

௪ அவரை நோக்கி, போதகரே, இந்தப் பெண் விபசாரம்பண்ணுகிறபொழுதே பிடிக்கப்பட்டாள்.

௫ [6]இப்படிப்பட்டவர்களைக் கற்களால் கொலைசெய்யவேண்டுமென்று மோசேயானவர் நியாயசாஸ்திரத்திலே நமக்குக் கட்டளையிட்டிருக்கிறாரே, நீர் எப்படிச்சொல்லுகிறீர் என்றார்கள்.

௬ அவர்மேல் குற்றம்சாற்றுவதற்குக் காரணம் பெறும்படிக்கு, அவர்கள் இப்படிச் சொல்லி அவரைச் சோதித்தார்கள்; இயேசுவானவர் குனிந்து விரலினாலே தரையில் எழுதினார்.

௭ அவர்கள் பின்னும் அவரிடத்தில் கேட்டுக்கொண்டிருந்தபொழுது, அவர் நிமிர்ந்து அவர்களை நோக்கி, [7]உங்களில் பாவமில்லாதவன் எவனோ, அவன் முதல் கல்லை இவள்மேல் எறிந்துபோடவேண்டும் என்று சொல்லி,

௮ மறுபடியும் குனிந்து தரையில் எழுதினார்.

௯ அவர்கள் அதைக் கேட்டு, தங்கள் மனதினாலே கடிந்துகொள்ளப்பட்டவர்களாய் இயேசுவானவர் தனித்திருக்க, அந்தப்பெண் நடுவிலே நிற்க, அவர்களை விட்டுப் [8]பெரியோர்முதல் சிறியோர்வரைக்கும் ஒருவன் ஒருவனாக எல்லாரும் புறப்பட்டுப்போனார்கள்.

௰ இயேசுவானவர் நிமிர்ந்து (பார்க்கையில்,) அந்தப் பெண்ணைத்தவிர மற்றொருவரையும் காணாதபொழுது, அவர் அவளை நோக்கி, ஸ்திரியே உன்மேல் குற்றம்

1 மத். ௭. ௨௯.
2 யோவா. ௰௨. ௪௨. அப். ௬. ௭. ௧ கொரி. ௧. ௨௰, ௨௬: ௨. ௮.
3 யோவா. ௩. ௨.
* அல்லது இயேசுவண்டைக்கு.
4 ௫ மோ. ௧. ௰௭: ௰௭. ௮. ௯. ௰௫.
5 ஏசா. ௯. ௧, ௨. மத். ௪. ௰௫. யோவா. ௧. ௪௬. ௪௧. ௫௨.
6 ௩ மோ. ௨௰. ௰. ௫ மோ. ௨௨. ௨௨.
7 ௫ மோ. ௰௭. ௭. ரோ. ௨. ௧.
8 ரோ. ௨. ௨௨.

Digitized by Google

சாற்றினவர்கள் எங்கே? ஒருவனு கிலும் உன்னை ஆக்கினைக்குள்ளாகத் தீர்க்க இல்லையா என்றார்.

௰௧ அவள் சொன்னது: ஆண்டவரே, ஒருவரும் அப்படிச்செய்ய இல்லை என்றாள்; இயேசுவானவர் சொன்னது: [1]நானும் உன்னை ஆக்கினைக்குள்ளாகத் தீர்க்கமாட்டேன்; நீ போய், [2]இனிப் பாவம் செய்யாதிருப்பாயாக என்றார்.

௰௨ ¶ மறுபடியும் இயேசுவானவர் சனங்களை நோக்கி, [3]நான் உலகத்தின் ஒளியாய் இருக்கிறேன்; எனக்குப் பின்செல்லுகிறவன் இருளிலே நடவாமல், சீவனுகிய ஒளியை அடைந்திருப்பான் என்றார்.

௰௩ அப்பொழுது பரிசேயர் அவரை நோக்கி, [4]நீரே உம்மைக்குறித்துச் சாட்சிகொடுக்கிறீர், உம்முடையசாட்சியை மெய்யென்று ஒத்துக்கொள்ளக்கூடாது என்றார்கள்.

௰௪ அதற்கு இயேசுவானவர் சொன்னது: நான் வந்த இடத்தையும், நான் போகும் இடத்தையும் அறிந்திருக்கிறபடியினுலே, என்னைக்குறித்து நானே சாட்சிகொடுத்தாலும், என்னுடைய சாட்சியை மெய்யென்று ஒத்துக்கொள்ளவேண்டும்; [5]நீங்கள், நான் வந்த இடத்தையும் நான் போகும் இடத்தையும் அறியாமலிருக்கிறீர்கள்.

௰௫ [6]நீங்கள் மாம்சத்திற்கு ஏற்றபடி தீர்மானம்பண்ணுகிறீர்கள்; [7]நான் ஒருவனைக்குறித்தும் தீர்மானம்பண்ணுகிறதில்லை.

௰௬ நான் தீர்மானம்பண்ணினுல், நான்மாத்திரம் அல்ல, [8]நானும் என்னை அனுப்பின பிதாவும் கூட இருக்கிறபடியினுலே என்னுடைய தீர்மானம் சத்தியத்தின்படியே இருக்கும்.

௰௭ [9]இரண்டுபேருடைய சாட்சியை மெய்யென்று ஒத்துக்கொள்ளவேண்டுமென்று உங்கள் நியாயசாஸ்திரத்திலேயும் எழுதியிருக்கின்றதே.

௰௮ அந்தப்படி நான் என்னைக்குறித்துச் சாட்சிகொடுக்கிறவனுய் இருக்கிறேன்; [10]என்னை அனுப்பின பிதாவும் என்னைக்குறித்துச் சாட்சிகொடுக்கிறார் என்றார்.

௰௯ அப்பொழுது அவர்கள் உம்முடைய பிதா எங்கே என்றார்கள், இயேசுவானவர் சொன்னது: [11]நீங்கள் என்னையும் என் பிதாவையும் அறியாமலிருக்கிறீர்கள்; [12]என்னை அறிந்தீர்களானுல் என் பிதாவையும் அறிந்திருப்பீர்கள் என்றார்.

௨௰ ¶ தேவாலயத்திலே இயேசுவானவர் உபதேசம்பண்ணித் [13]தருமப் பெட்டியின் அருகே இருந்தபொழுது, இந்த வசனங்களைச் சொன்னுர்; [14]அப்படியிருந்தும், அவருடைய நேரம் வராதபடியால், [15]ஒருவம் அவரைப் பிடிக்க இல்லை.

௨௧ ¶ பின்பு இயேசுவானவர் அவர்களை நோக்கி, நான் போவேன், [16]நீங்கள் என்னைத் தேடுவீர்கள்; [17]ஆகிலும் உங்கள் பாவத்தினுலே சாவீர்கள்; நான் போகும் இடத்திற்கு நீங்கள் வரமாட்டீர்கள் என்றார்.

௨௨ அப்பொழுது யூதர்கள் (ஒருவரை ஒருவர்) நோக்கி, நான் போகும் இடத்திற்கு நீங்கள் வரமாட்டீர்கள் என்கிருனே, தன்னைத் தான் கொலைசெய்வானு என்று பேசிக்கொண்டார்கள்.

௨௩ அவர் பின்னும் அவர்களுடனே சொன்னது: [18]நீங்கள் கீழேயிருந்து தோன்றினவர்கள்; நான் உயரத்திலிருந்து தோன்றினவன்; நீங்கள் [19]இவ்வுலகத்திற்கு உரியவர்கள்; நான் இவ்வுலகத்திற்கு உரியவன் அல்ல.

௨௪ ஆகையால் [20]நீங்கள் உங்கள் பாவங்களிலே சாவீர்கள் என்று உங்களுக்குச் சொன்னேன்; [21]பின்னும், அவரே நானென்று

கி. பி. ௩௨.

1 லூக். ௯. ௫௬: ௰௨. ௰௪. யோவா. ௩. ௰௭.
2 யோவா. ௫. ௰௪.
3 யோவா. ௧. ௪, ௯: ௩. ௰௯: ௯. ௫: ௰௨. ௩௫, ௩௬, ௪௬.
4 யோவா. ௫. ௩௧.
5 யோவா. ௭. ௨௮: ௯. ௨௯.
6 யோவா. ௭. ௨௪.
7 யோவா. ௩. ௰௭: ௰௨. ௪௭: ௰௮. ௩௬.
8 ௨௯. வச. யோவா. ௰௬. ௩௨.
9 உபா. ௰௭. ௬: ௰௯. ௰௫. மத். ௰௮. ௰௬. ௨ கொரி. ௰௩. ௧. எபி. ௰. ௨௮.
10 யோவா. ௫. ௩௭.
11 ௫௫. வச. யோவா. ௰௬. ௩.
12 யோவா. ௰௪. ௭.
13 மாற். ௰௨. ௪௧.
14 யோவா. ௭. ௩௰.
15 யோவா. ௭. ௮.
16 யோவா. ௭. ௩௪: ௰௩. ௩௩.
17 ௨௪. வச.
18 யோவா. ௩. ௩௧.
19 யோவா. ௰௫. ௰௯: ௰௭. ௰௬. ௧ யோவா. ௪. ௫.
20 ௨௧. வச.
21 மாற். ௰௩. ௰௩.

Digitized by Google

நீங்கள் விசுவாசியாவிட்டால், உங்கள் பாவங்களினாலே சாவீர்கள் என்றார்.

௨௫ அதற்கு அவர்கள், நீர் யார் என்றார்கள்; இயேசுவானவர் சொன்னது: ஆதிமுதல் உங்களுக்குச் சொல்லிவந்தேனே அவனே நான்.

௨௬ நான் உங்களைக்குறித்துப் பேசி நியாயம் சொல்லுகிறதற்கு அநேககாரியங்கள் உண்டு; [1]என்னை அனுப்பினவர் சத்தியமுள்ளவர்; நான் [2]அவரிடத்தில் கேள்விப்பட்டவைகளையே உலகத்தாருக்கு அறிவிக்கிறேன் என்றார்.

௨௭ அவர் பிதாவைக்குறித்துச் சொன்னார் என்று அவர்கள் அறியாதிருந்தார்கள்.

௨௮ ¶ ஆதலால் இயேசுவானவர் பின்னும் அவர்களுடனே சொன்னது: [3]நீங்கள் மனிதனுடைய குமாரனை ஏற்றியிருக்கும்பொழுது [4]என்னையே அவர் என்றும், [5]என்னாலே நான் ஒன்றும் செய்யாமல் [6]என் பிதா எனக்குப் போதிக்கிறபடியே இவைகளைச் சொன்னேன் என்றும் அறிவீர்கள்.

௨௯ [7]என்னை அனுப்பினவர் என்னுடனே இருக்கிறார்; [8]பிதாவுக்குப் பிரியமானவைகளை நான் எப்பொழுதும் செய்கிறபடியால், [9]அவர் என்னைத் தனியே இருக்கவிடஇல்லை என்றார்.

௩௰ ¶ இவைகளை அவர் சொல்லுகையில், [10]அநேகம்பேர் அவரிடத்தில் விசுவாசமானார்கள்.

௩௧ ஆதலால் இயேசுவானவர் தம்மை விசுவாசித்த யூதரை நோக்கி, நீங்கள் என்னுடைய உபதேசத்திலே நிலைத்திருந்தால், மெய்யாய் என் சீஷராய் இருப்பீர்கள்.

௩௨ அல்லாமலும் சத்தியத்தை அறிவீர்கள்; [11]சத்தியமானது உங்களை விடுதலையாக்கும் என்றார்.

௩௩ ¶ அதற்குச் (சிலர்) சொன்னது: [12]நாங்கள் ஆபிரகாமின் சந்ததியாராய் இருக்கிறோமே அல்லாமல், நாங்கள் ஒருக்காலும் ஒருவனுக்கு அடிமைகளாய் இருக்கவில்லையே, ஆதலால் நீங்கள் விடுதலையாவீர்கள் என்று நீர் எப்படிச் சொல்லுகிறீர் என்றார்கள்.

௩௪ ¶ இயேசுவானவர் சொன்னது: [13]பாவத்தைச் செய்கிறவன் எவனோ, அவன் பாவத்திற்கு அடிமையாய் இருக்கிறான் என்று மெய்யாகவே உங்களுக்குச் சொல்லுகிறேன்.

௩௫ [14]அடிமையானவன் என்றைக்கும் வீட்டிலே தங்கான்; குமாரனே என்றைக்கும் அதிலே தங்குவான்.

௩௬ ஆகையால் [15]குமாரனானவர் உங்களை விடுதலையாக்கினால், மெய்யாய் விடுதலையாயிருப்பீர்கள்.

௩௭ நீங்கள் ஆபிரகாமின் சந்ததியார் என்று அறிந்திருக்கிறேன்; அப்படியிருந்தும், என் உபதேசம் உங்களில் தரியாமலிருக்கிறபடியால், [16]என்னைக் கொலைசெய்யத் தேடுகிறீர்கள்.

௩௮ [17]நான் என் பிதாவினிடத்திலே கண்டதைப் பேசுகிறேன், அப்படியே நீங்களும் உங்கள் பிதாவினிடத்திலே கண்டதைச் செய்கிறீர்கள் என்றார்.

௩௯ அதற்கு அவர்கள், [18]ஆபிரகாமே எங்கள் தகப்பனாயிருக்கிறார் என்றார்கள்; இயேசுவானவர் சொன்னது: [19]நீங்கள் ஆபிரகாமின் பிள்ளைகளானால், ஆபிரகாமின் கிரியைகளுக்கு ஒப்பாய்ச் செய்வீர்களே.

௪௰ [20]நீங்கள் பராபரனிடத்தில் கேள்விப்பட்ட சத்தியத்தை உங்களுக்குச் சொன்ன மனிதனாகிய [21]என்னைக் கொலைசெய்யத் தேடுகிறீர்கள்; ஆபிரகாம் இப்படிச் செய்யவில்லையே.

௪௧ நீங்கள் உங்கள் பிதாவின் கிரியைகளுக்கு ஒப்பாய்ச் செய்கிறீர்கள் என்றார்; அதற்கு அவர்கள் சொன்னது: நாங்கள் வேசிமார்க்கத்தினாலே பிறந்தவர்கள் அல்ல, [22]ஒரே பிதா எங்களுக்கு

கி. பி. ௩௰௨.

1 யோவா. ௭. ௨௮.
2 யோவா. ௩. ௩௨: ௰௫. ௰௫.
3 யோவா. ௩. ௰௪: ௰௨. ௩௨.
4 உரோ. ௧. ௪.
5 யோவா. ௫. ௰௯, ௩௰.
6 யோவா. ௩. ௰௧.
7 யோவா. ௰௪. ௰, ௰௧.
8 ஏசா. ௪௪.
9 யோவா. ௪. ௩௪: ௫. ௩௰: ௩. ௩௮.
10 யோவா. ௭. ௩௧: ௰. ௪௨: ௰௧. ௪௫.
11 உரோ. ௬. ௰௪: ௰௮. ௨௨: ௮. ௨. யாக். ௧. ௨௫: ௨. ௰௨.
12 ௩ மோ. ௨௫. ௪௨. மத். ௩. ௯. ௩௩. வச.
13 உரோ. ௬. ௰௬, ௨௰. ௨ பே. ௨. ௰௯.
14 கலா. ௪. ௩௰.
15 உரோ. ௮. ௨. கலா. ௫. ௧.
16 யோவா. ௭. ௰௯. ௪௰. வச.
17 யோவா. ௩. ௩௨: ௫. ௰௯, ௩௰: ௰௪. ௰, ௨௪.
18 மத். ௩. ௯. ௩௩. வச.
19 உரோ. ௨. ௨௮: ௯. ௭. கலா. ௩. ௭, ௨௯.
20 ௨௬. வச.
21 ௩௭. வச.
22 ஏசா. ௬௩. ௰௬: ௬௪. ௮. மல்கி. ௧. ௬.

Digitized by Google

உண்டு, பராபரனே அவர் என்றார்கள்.

சஉ ¶ இயேசுவானவர் சொன்னது: [1]பராபரனிலிருந்தே புறப்பட்டு வந்தேன்; [2]நான் என்னாலே வர இல்லை; அவரே என்னை அனுப்பினார்; ஆகையால் [3]பராபரன் உங்கள் பிதாவாய் இருந்தால், நீங்கள் என்னிடத்தில் அன்புகூருவீர்கள்.

சங [4]என்னத்தினாலே என்னுடைய பேச்சை அறியாமல் இருக்கிறீர்கள்? என்னுடைய உபதேசத்தைக் கேட்க மனதில்லாதபடியினால் அல்லவோ (அப்படி இருக்கிறீர்கள்?)

சச [5]பசாசானவனே உங்கள் பிதா; (ஆகையால்) உங்கள் பிதாவின் இச்சைகளின்படி செய்ய விரும்புகிறீர்கள்; ஆதிமுதற்கொண்டு அவன் மனித கொலைகாரனாய் இருக்கிறான்; அல்லாமலும் [6]சத்தியத்தில் அவன் நிலைநில்லாதபடியால் சத்தியம் அவனிடத்தில் இல்லை; அவன் பொய்யனுமாய்ப் பொய்யின் தகப்பனுமாய் இருக்கிறபடியால், பொய்பேசுகிறபொழுது தன் சொந்தத்தில் எடுத்துப் பேசுகிறான்.

சரு நான் சத்தியத்தை உங்களுக்குச்சொல்லுகிறபடியினாலே, நீங்கள் என்னை விசுவாசிக்கிறதில்லை.

சசு என்னிடத்தில் பாவம் உண்டென்று உங்களில் எவன் நிச்சயமாய்ச் சொல்வான்? ஆகையால் நான் சத்தியத்தைச் சொல்லுகிறவனாய் இருக்க, நீங்கள் என்னை என்னத்தினாலே விசுவாசிக்கிறதில்லை?

சஎ [7]பராபரனால் உண்டானவன் பராபரனுடைய வசனங்களுக்குச்செவிகொடுக்கிறான்; நீங்கள் பராபரனால் உண்டாயிராதபடியால், செவிகொடாமல் இருக்கிறீர்கள் என்றார்.

சஅ அப்பொழுது யூதர்கள் அவரை நோக்கி, நாங்கள் உன்னைச் சமாரியன் என்றும், [8]பேயை உடையவன் என்றும் நியாயமாய்ச் சொல்லுகிறோம் அல்லவா என்றார்கள்.

சகூ ¶ இயேசுவானவர் சொன்னது: நான் பேயை உடையவன் அல்ல, நான் என் பிதாவைக் கனம்பண்ணுகிறேன்; நீங்கள் என்னைக் கனஈனம்பண்ணுகிறீர்கள்.

ருO [9]அன்றியும் நான் எனக்குக் கனம்வரத் தேடுகிறதில்லை; அதைத்தேடி நியாயம் தீர்க்கிறவர் ஒருவர் இருக்கிறார்.

ருக மெய்யாகவே நான் உங்களுக்குச் சொல்லுகிறதாவது: [10]ஒருவன் என்னுடைய வசனத்தைக் கைக்கொண்டால், அவன் ஒருக்காலும் மரணத்தை அடைவதில்லை என்று சொன்னபொழுது,

ருஉ யூதர்கள் அவரை நோக்கி, நீ பேயை உடையவன் என்று இப்பொழுது அறிந்திருக்கிறோம்; [11]ஆபிரகாமும் தீர்க்கதரிசிகளும் மரித்தார்கள்; நீ சொல்லுகிறது; ஒருவன் என் வசனத்தைக் கைக்கொண்டால், அவன் ஒருக்காலும் மரணத்தைருசிபார்க்கமாட்டான் என்கிறாய்.

ருங எங்கள் பிதாவாகிய ஆபிரகாமிலும் நீ பெரியவனா? அவர் மரித்தார்; தீர்க்கதரிசிகளும் மரித்தார்கள்; நீ உன்னை எப்படிப்பட்டவனாக்குகிறாய் என்றார்கள்.

ருச ¶ இயேசுவானவர் சொன்னது: [12]நானே என்னைக் கனம்பண்ணினால், அந்தக் கனம் வீணாயிருக்கும்; [13]என் பிதாவே என்னைக் கனம்பண்ணுகிறார்; அவரை நீங்கள் உங்கள் தேவனென்று சொல்லுகிறீர்கள்.

ருரு அப்படியிருந்தும், [14]நீங்கள் அவரை அறிய இல்லை; நான் அவரை அறிந்திருக்கிறேன்; அவரை அறியமாட்டேன் என்று சொன்னேனாகில், நான் உங்களைப்

கி. பி. கூஉ.

1 க யோ. இ. க.
2 யோவா. ௭௧. உஎ: ௭௭. அ, உஇ.
3 யோவா. இ. சக: எ. உஅ, உக.
4 யோவா. எ. ௭௭.
5 மத். ௭௧. கஅ. க யோ. க. அ.
6 யூதா. க.
7 யோவா. ௭. உக, உஎ. க யோ ச. க.
8 யோவா. எ. உ௭: ௭. உ௭. இஉ. ௭௪.
9 யோவா. இ. சக: எ. ௭அ.
10 யோவா. இ. உச: ௭௧. உக.
11 சகா. க. இ. எபி.௭௧.௭௧.
12 யோவா. இ. ௭௧.
13 யோவா. இ. சக: ௭௧. ௭ச: ௭எ. க. அப். க. ௭௧.
14 யோவா. எ. உஅ,உக.

Digitized by Google

போலப் பொய்யனாயிருப்பேன்; அவரை நான் அறிந்து அவருடைய வசனத்தைக் கைக்கொண்டுவருகிறேன்.

௫௬ [1]உங்கள் பிதாவாகிய ஆபிரகாம் என்னுடைய நாளைக் காணக் களிப்பாய் ஆசைப்பட்டு, [2]அதைக்கண்டு சந்தோஷப்பட்டான் என்றார்.

௫௭ அப்பொழுது யூதர்கள் அவரை நோக்கி, உனக்கு ஐம்பது வயதில்லையே; நீ ஆபிரகாமைக் கண்டாயா என்றார்கள்.

௫௮ ¶ இயேசுவானவர் சொன்னது: [3]ஆபிரகாம் பிறந்த காலத்திற்கு முன்னும் நானே இருக்கிறேன் என்று மெய்யாகவே உங்களுக்குச் சொல்லுகிறேன் என்றார்.

௫௯ [4]அப்பொழுது அவர்மேலே எறியும்படிக்குக் கற்களை எடுத்துக்கொண்டார்கள்; [5]இயேசுவானவர் மறைந்து, அவர்கள் நடுவே நடந்து, தேவாலயத்தைவிட்டு அப்புறம்போனார்.

## ௯. அதிகாரம்.

௧. இயேசுவினாலே ஒரு பிறவிக்குருடன் பார்வை அடைந்த பரிசேயரிடத்தில் கொண்டுவரப்பட்டு, ௰௩. அதின் நிமித்தம் அவர்கள் கோபமடைந்து அவனைப் புறம்பே தள்ளினது. ௩௫. அவன் இயேசுவினால் அங்கிகரிக்கப்பட்டு அவரைக் குறித்த நல்லறிக்கையிட்டது. ௩௯. கிறிஸ்துவினால் பிரகாசிக்கிறவர்கள் இன்னார் என்றது.

அவர் அப்புறம் போகையில் பிறவிக்குருடனாகிய ஒரு மனிதனைக் கண்டார்.

௨ அப்பொழுது அவருடைய சீஷர் அவரை நோக்கி இரபீ, [6]இவன் குருடனாய்ப் பிறக்கும்படிக்கு இவனோ, இவனைப் பெற்றவர்களோ, யார் பாவம்செய்தார்கள் என்று கேட்டார்கள்.

௩ அதற்கு இயேசுவானவர் சொன்னது: இவனும் பாவம்செய்ய இல்லை, இவனைப்பெற்றவர்களும் பாவம்செய்ய இல்லை, [7]பராபரனுடைய கிரியைகள் இவனிடத்தில் வெளிப்படும்பொருட்டாக (இப்படிப் பிறந்தான்.)

கி. பி. ௩௨.

1 லூக். ௰. ௨௪.
2 எபி. ௰௧. ௰௩.
3 உ மோ. ௩. ௰௪. ஏசா. ௪௩. ௰௩. யோவா. ௰௭. ௫, உ௪. கொலோ. ௧. ௰௭. வெளி. ௧. ௮.
4 யோவா. ௰. ௩௧, ௩௯: ௰௧. ௮.
5 லூக். ௪. ௩௰.
6 ௩௪. ௨௪.
7 யோவா. ௰௧. ௪.
8 யோவா. ௪. ௩௪: ௫. ௰௯, ௩௬. ௰௧. ௯: ௰௨. ௩௫: ௰௭. ௪.
9 யோவா. ௧. ௫, ௯: ௩. ௰௯: ௮. ௰௨: ௰௨. ௩௫, ௪௬.
10 மாற். ௭. ௩௩: ௮. ௨௩.
* அல்லது கண்களைச் சேற்றினால் தடவி.
11 நெகே. ௩. ௰௫.
12 உ இரா. ௫. ௰௪.
13 ௬, ௭. ௱௪.

௪ [8]பகற்காலம் இருக்...
வும் நான் என்னை அனு...
ருடைய கிரியைகளைச்...
வேண்டும்; ஒருவனும் ...
ளைச் செய்யக்கூடாதப...
ராத்திரி வருகின்றது.

௫ நான் உலகத்தில் ...
யில், [9]உலகத்தின் ஒளியா...
கிறேன் என்றார்.

௬ இப்படி அவர் சொல்...
[10]தரையிலே துப்பி, உமிழ்...
சேறு உண்டாக்கி, அ...
றைக் குருடனுடைய க...
மேல் பூசி,*

௭ பின்பு நீ [11]சிலோவா...
தில் போய்க் கழுவு ...
சிலோவா என்பதற்கு அ...
பட்டவன் என்று அர்த்த...
தப்படி அவன் போய்க்...
பார்வை அடைந்து, திரு...
தான்.

௮ ¶ அப்பொழுது அ...
ரும், முன்னே அவன் ...
காரனாயிருந்ததைக் கண்...
ளும் அவனைப் பார்த்து, (...
உளுக்காந்து பிச்சைகேட்...
ண்டிருந்தவன் இவன் ...
என்றார்கள்.

௯ வேறு சிலர், அவன்...
தான் என்றார்கள்; வே...
இவன் அவனுடைய சாய...
ருக்கிறான் என்றார்கள்; ...
சொன்னது: நானே அ...
றான்.

௰ அப்பொழுது அவர்...
னை நோக்கி, உன் கண்...
படித் திறக்கப்பட்டன...
கள்.

௰௧ அவன் சொன்னது: [1]...
என்பவர் சேறு உண்டா...
தை) என் கண்களின்மே...
நீ சிலோவாக் குளத்திற்கு...
ய்க் கழுவு என்றார்; அ...
நான் போய்க் கழுவினே...
பார்வை அடைந்தேன் எ...

௰௨ அவர்கள் சொன்ன...
மனிதன் எங்கே என்...

Digitized by Google

அவன் எனக்குத் தெரியாது என்றான்.

௰௩ ¶ அப்பொழுது முன்னே குருடனாய் இருந்தவனைப் பரிசேயரிடத்திற்குக் கொண்டுபோனார்கள்.

௰௪ இயேசுவானவர் சேறு உண்டாக்கி, அவனுடைய கண்களைத் திறந்த நாள் ஓய்வுநாளாய் இருந்தது.

௰௫ ஆதலால் பரிசேயரும் அவனை நோக்கி, நீ எப்படிப் பார்வை அடைந்தாய் என்று கேட்டார்கள்; அதற்கு அவன் சொன்னது: அவர் சேற்றை என் கண்களின் மேல் வைத்தார்; பின்பு நான் கழுவினேன், இப்பொழுது காண்கிறேன் என்றான்.

௰௬ அப்பொழுது பரிசேயரில் சிலர் சொன்னது: அம்மனிதன் ஓய்வுநாளைக் கைக்கொள்ளாதிருக்கிறபடியினாலே, அவன் பராபரனால் வந்தவன் அல்ல என்றார்கள்; வேறு சிலர் சொன்னது: [1]பாவியாய் இருக்கிற ஒருவன் இப்படிப்பட்ட அற்புதங்களைச் செய்வது எப்படி என்றார்கள்; [2]ஆகையால் அவர்களுக்குள்ளே பிரிவினை உண்டாயிற்று.

௰௭ மறுபடியும் அவர்கள் குருடனாயிருந்தவனை நோக்கி, உன் கண்களைத் திறந்த அவனைக்குறித்து நீ என்ன சொல்லுகிறாய் என்றார்கள்; அவன் சொன்னது: [3]அவர் தீர்க்கதரிசியாயிருக்கிறார் என்றான்.

௰௮ அப்பொழுது அவன் குருடனாயிருந்து, பின்பு பார்வை அடைந்தான் என்கிறதை யூதர்கள் நம்பாமல், பார்வையடைந்தவனுடைய தாய்தகப்பன்மாரை அழைப்பித்து,

௰௯ அவர்களை நோக்கி, உங்கள் குமாரன் குருடனாய்ப் பிறந்தான் என்று நீங்கள் சொல்லுகிறீர்களே, அவன் இவனோ? இப்பொழுது இவனுக்கு எப்படிப் பார்வை உண்டாயிற்று என்று கேட்டார்கள்.

௨௰ அதற்கு அவனுடைய தாய்தகப்பன்மார் சொன்னது: இவன் எங்கள் குமாரனென்றும், குருடனாய்ப் பிறந்தான் என்றும், அறிந்திருக்கிறோம்.

௨௧ இப்பொழுது இவன் பார்வை அடைந்த வகை எங்களுக்குத் தெரியாது; அவனுடைய கண்களைத் திறந்தவனையும் அறியமாட்டோம்; இவன் பெரியவனாய் இருக்கிறானே; இவனிடத்திலே கேளுங்கள்; தன்னைக்குறித்து இவனே பேசுவான் என்றார்கள்.

௨௨ [4]அக்காலத்திற்கு முன்னே, இயேசுவைக் கிறிஸ்தென்று சொல்பவன் எவனோ அவனைச் செப ஆலயத்திற்குப் புறம்பாக்கவேண்டுமென்று யூதர்கள் தீர்மானம்பண்ணியிருந்தபடியால், [5]குருடனாயிருந்தவனுடைய தாய்தகப்பன்மார் அவர்களுக்குப் பயந்து,

௨௩ இவன் பெரியவனாய் இருக்கிறானே, இவனிடத்தில் கேளுங்கள் என்று சொன்னார்கள்.

௨௪ ¶ ஆதலால் அவர்கள் குருடனாயிருந்தவனை இரண்டாம்தரம் அழைத்து, [6]நீ பராபரனைக் கனம்செய்வாயாக; [7]அம்மனிதன் பாவியாயிருக்கிறான் என்று நாங்கள் அறிந்திருக்கிறோமே என்றார்கள்.

௨௫ அதற்கு அவன் சொன்னது: அவர் பாவியோ அல்லவோ அது எனக்குத் தெரியாது; நான் குருடனாயிருந்தேன்; இப்பொழுது காண்கிறேன், இது ஒன்றையே அறிந்திருக்கிறேன் என்றான்.

௨௬ அப்பொழுது அவர்கள் மறுபடியும் அவனைநோக்கி, உனக்கு என்ன செய்தான்? உன் கண்களை எப்படித் திறந்தான் என்றார்கள்.

௨௭ அவன் சொன்னது: முன்னே அதை உங்களுக்குச் சொன்னேன்; நீங்கள் செவிகொடுக்க இல்லை; அதை மறுபடியும் கேட்க

கி. பி. ௩௨.

1 சங். ௫௪. யோவா. ௩. ௨.
2 யோவா. ௭. ௰௨, ௪௩: ௰.௰௯.
3 யோவா. ௪. ௰௯: ௬. ௰௪.
4 யோவா. ௭. ௰௩: ௰௨. ௪௨: ௰௯. ௩௮. அப். ௫. ௰௩.
5 ௩௪. ௮௪. யோவா. ௰௧. ௨.
6 யோசு. ௭. ௰௯. ௧ சாமு. ௬. ௫.
7 ௰௯. ௮௪.

Digitized by Google

என்னத்தினாலே விரும்புகிறீர்கள்? நீங்களும் அவருக்குச் சீஷராக மனதுள்ளவர்களாய் இருக்கிறீர்களா என்றான்.

௨௮ அப்பொழுது அவர்கள் அவனை வைது, நீயே அவனுடைய சீஷன், நாங்கள் மோசேயினுடைய சீஷர்.

௨௯ மோசேயானவருடனே பராபரன் பேசினதை அறிந்திருக்கிறோம்; [1]அவன் வந்த இடத்தை அறியமாட்டோம் என்றார்கள்.

௩௰ அதற்கு அந்த மனிதன் சொன்னது: [2]அவர் என் கண்களைத் திறந்திருந்தும், அவர் வந்த இடத்தை நீங்கள் அறியாமலிருக்கிறது ஆச்சரியமான காரியம்.

௩௧ [3]அல்லாமலும் பாவிகளுக்குப் பராபரன் செவிகொடுக்கிறது இல்லையென்றும் அவர்மேல் பத்தியாயிருந்து, அவருடைய சித்தத்தின்படி செய்கிறவன் எவனோ, அவனுக்குச் செவிகொடுக்கிறார் என்றும் அறிந்திருக்கிறோம்.

௩௨ குருடனாய்ப் பிறந்தவனுடைய கண்களை ஒருவன் திறந்தான் என்று உலகம் உண்டான துமுதற்கொண்டு கேள்விப்படவில்லையே.

௩௩ [4]அவர் பராபரனால் வாராதவராயிருந்தால், இப்படிப்பட்டவைகளில் ஒன்றையாகிலும் செய்யத் திராணியிருக்கமாட்டாரே என்றான்.

௩௪ அப்பொழுது அவர்கள் அவனைநோக்கி, [5]முழுவதும் பாவங்களிலே பிறந்த நீயா எங்களுக்கு உபதேசம்பண்ணுகிறவன் என்று சொல்லி, அவனைப் புறம்பே* தள்ளினார்கள்.

௩௫ ¶ அவனை அவர்கள் புறம்பே தள்ளினதை இயேசுவானவர் கேள்விப்பட்டு, பின்பு அவனைக்கண்டு, [6]நீ பராபரனுடைய குமாரனிடத்தில் விசுவாசமாயிருக்கிறாயா என்றார்.

௩௬ அதற்கு அவன், ஆண்டவரே, நான் அவர்மேல் விசுவாசமாயிருக்கும்படிக்கு, அவர் இன்னார் என்று (காட்டவேண்டும் என்றான்).

௩௭ இயேசுவானவர் சொன்னது: நீ அவரைக் கண்டாய்; [7]உன்னுடனே பேசுகிறவரே அவர் என்றார்.

௩௮ உடனே அவன், ஆண்டவரே, விசுவாசிக்கிறேன் என்று சொல்லி அவரைத் தொழுதுகொண்டான்.

௩௯ பின்பு இயேசுவானவர் சொன்னது: [8]காணாதவர்கள் காணவும் காண்கிறவர்கள் குருடராகவும் தக்கதாக [9]நியாயத்தீர்ப்புக் கொடுப்பதற்கு நான் இவ்வுலகத்திலே வந்தேன் என்றார்.

௪௰ ¶ பரிசேயரில் சிலர் அவருடனேகூட இருந்து, அதைக் கேட்டபொழுது, அவர்கள் அவரை நோக்கி, [10]நாங்களும் குருடரா என்றார்கள்.

௪௧ இயேசுவானவர்சொன்னது: [11]நீங்கள் குருடராயிருந்தால், உங்களுக்குப் பாவம் உண்டாயிருக்கமாட்டாது; நீங்கள் காண்கிறோமென்று சொல்லுகிறபடியால், உங்கள் பாவம் நிற்கும்.

## ௰. அதிகாரம்.

௧. கிறிஸ்து வாசலும் நல்ல மேய்ப்பருமானவர் என்றது. ௰௯. அவரைக்குறித்த பலருடைய தாற்பரியங்களைச் சொல்லியது. ௨௪. தாம் பராபரனுடைய குமாரனாகிய கிறிஸ்து என்று தம்முடைய கிரியைகளினாலே திருஷ்டாந்தப்படுத்தி, ௩௧. யூதர்களுக்கு விலகி, ௪௰. மறுபடியும் யோர்தானைக் கடந்துபோனபோது, அவரில் அநேகர் விசுவாசித்தது.

மெய்யாகவே நான் உங்களுக்குச் சொல்லுகிறதாவது: ஆட்டுக்கிடையின் வாசல்வழியாய் அதில் பிரவேசியாமல், வேறுவழியாய் அதில் பிரவேசிக்கிறவன் திருடனுமாய்க் கொள்ளைக்காரனுமாய் இருக்கிறான்.

௨ வாசலின் வழியாய்ப் பிரவேசிக்கிறவனே ஆடுகளின் மேய்ப்பனாயிருக்கிறான்.

கி. பி. ௩௨.

1 யோவா. அ. ௰௪.
2 யோவா. க. ௰.
3 யோபு. ௨௭. ௯: ௩௫. ௰௨. சங். ௰௮. ௪௧: ௬௪. ௰௮: ௬௬. ௰௮. யாக். ௧. ௨௮: ௰௫.௨௯: ௨௮.௬. எசா.௧. ௰௫. எரே. ௰௧. ௰௧: ௰௪. ௰௨. எசே. அ. ௰௮. மீகா. ௩.௪.சகரி. எ. ௰௩.
4 ௰௩. ௩௪.
5 ௨. ௩௪.
* அல்லது சபையிலிருந்து.
6 மத். ௰௪. ௩௩: ௰௬. ௰௬. மாற். ௧. ௧. யோவா. ௰.௩௬. ௧ யோ. ௫.௰௩.
7 யோவா. ௪. ௨௬.
8 மத். ௰௩.௰௩.
9 யோவா. ௩. ௰௭: ௫. ௨௨, ௨௭: ௰௨. ௪௭.
10 உரோ.௨.௰௯.
11 யோவா. ௰௫. ௨௨,௨௪.

Digitized by Google

௩ வாசலைக் காக்கிறவன் அவனுக்குத் திறக்கிறான்; ஆடுகளும் அவனுடைய சத்தத்திற்குச் செவிகொடுக்கின்றன; அவனும் தன்னுடைய ஆடுகளைப் பேர்பேராக அழைத்து, அவைகளை வெளியே கொண்டுபோகிறான்.

௪ மேலும் அவன் தன்னுடைய ஆடுகளை வெளியிலே விட்டபின்பு, அவைகளுக்கு முன்னாக நடந்துபோகிறான்; மேலும் ஆடுகள் அவனுடைய சத்தத்தை அறிகிறபடியினாலே, அவைகள் அவனுக்குப் பின்செல்லுகின்றன.

௫ அந்நியருடைய சத்தத்தை அறியாதபடியினாலே, அவைகள் அந்நியனுக்குப் பின்செல்லாமல், அவனைவிட்டு ஓடிப்போகும் என்றார்.

௬ இந்த உவமையை இயேசுவானவர் அவர்களுடனே சொன்னபொழுது, அவர்கள் தங்களுக்கு அவர் சொன்னவைகளின் கருத்தை அறியவில்லை.

௭ ¶ ஆதலால் இயேசுவானவர் மறுபடியும் அவர்களை நோக்கி, நானே ஆடுகளின் வாசல் என்று மெய்யாகவே உங்களுக்குச் சொல்லுகிறேன்.

௮ எனக்குமுன்னே வந்தவர்கள் எல்லாரும் திருடருமாய்க் கொள்ளைக்காரருமாய் இருந்தார்கள்; ஆடுகள் அவர்களுக்குச் செவிகொடுக்கவில்லை.

௯ [1]நானே வாசல், ஒருவன் என்னாலே உட்பிரவேசித்தால் அவன் இரட்சிக்கப்படுவான்; அல்லாமலும், அவன் உள்ளும் புறம்பும் சென்று மேய்ச்சலைக் கண்டுபிடிப்பான்.

௰ திருடனானவன் திருடுகிறதற்கும் கொலைசெய்கிறதற்கும் கெடுக்கிறதற்குமே அன்றி வேறொன்றுக்கும் வாரான்; நான் அவர்களுக்குச் சீவனும் பரிபூரணமும் உண்டாகும்படிக்கு வந்தேன்.

௰௧ [2]நானே நல்ல மேய்ப்பன், நல்ல மேய்ப்பனானவன் ஆடுகளுக்காகத் தன் சீவனைக் கொடுக்கிறான்.

௰௨ மேய்ப்பன் அல்லாதவனுமாய் ஆடுகளையுடையவன் அல்லாதவனுமாயிருக்கிற கூலியாள் கோனாய் வரக்காணும்பொழுது [3]ஆடுகளைவிட்டு ஓடிப்போவான்; அப்பொழுது கோனாய் அந்த ஆடுகளைப் பிடித்துச் சிதற அடிக்கும்.

௰௩ மேலும் கூலியாளானவன் கூலிக்காக வேலைசெய்கிறவனானபடியினாலும், ஆடுகளைக் குறித்து அவனுக்குக் கவலை தோன்றாதபடியினாலும் ஓடிப்போவான்.

௰௪ [4]நானே நல்ல மேய்ப்பன், என் பிதா என்னை அறிந்திருக்கிறதுபோலவும், [5]நான் பிதாவை அறிந்திருக்கிறதுபோலவும்,

௰௫ நான் என்னுடையவைகளை அறிந்து, என்னுடையவைகளால் அறியப்பட்டு, [6]ஆடுகளுக்காக என் சீவனைக் கொடுக்கிறேன்.

௰௬ அன்றியும் இந்தக் கிடையில் உள்ளவைகள் அல்லாமல், [7]வேறு ஆடுகளும் எனக்கு உண்டு; அவைகளையும் நான் கொண்டுவரவேண்டும்; அவைகள் என் சத்தத்திற்குச் செவிகொடுக்கும்; [8]அப்பொழுது ஒரே ஆட்டுக்கூட்டமும் ஒரே மேய்ப்பனும் உண்டாயிருக்கும்.

௰௭ நான் என் சீவனைப் பின்னும் அடைந்துகொள்ளும்படிக்கு, [9]அதைக்கொடுக்கிறபடியினாலே பிதா என்னிடத்தில் அன்பாயிருக்கிறார்.

௰௮ ஒருவனும் என்னிடத்திலிருந்து அதை வாங்கமாட்டான்; [10]நான் என்னாலே அதைக் கொடுக்கிறேன்; அதைக் கொடுக்கிறதற்கும், அதை மறுபடியும் எடுத்துக்கொள்ளுகிறதற்கும் என்னிடத்தில் அதிகாரம் உண்டு; [11]இதற்கு ஏற்ற கட்டளையை என்பிதாவினாலே பெற்றுக்கொண்டேன் என்றார்.

கி. பி. ௩௰௨

1 யோவா. ௰௪. ௬. எபே. ௨. ௰௮.
2 ஏசா. ௪௰. ௰௧. எசே. ௩௪. ௰௨, ௨௩: ௩௭. ௨௪. எபி. ௰௩. ௨௰. ௧ பே. ௨. ௨௫: ௫. ௪.
3 சகரி. ௰௧. ௰௬, ௰௭.
4 மத். ௰௧. ௨௭.
5 ௨ தீமோ. ௨. ௰௯.
6 யோவா. ௰௫. ௰௩.
7 ஏசா. ௫௬. ௮.
8 எசே. ௩௭. ௨௨. எபே. ௨. ௰௪. ௧ பே. ௨. ௨௫.
9 ஏசா. ௫௩. ௭, ௰௨. எபி. ௨. ௯.
10 யோவா. ௨. ௰௯.
11 யோவா. ௬. ௩௮: ௰௫. ௰. அப். ௨. ௨௪, ௩௨.

Digitized by Google

௰௯ ¶ [1]இந்த வசனங்களைக் குறித்து யூதருக்குள்ளே மறுபடியும் பிரிவினை உண்டாயிற்று.

௨௰ அவர்களில் அநேகர் சொன்னது: [2]அவன் பசாசையுடையவன், பயித்தியக்காரனாயிருக்கிறான்; என்னத்திற்காக அவனுக்குச் செவிகொடுக்கிறீர்கள் என்றார்கள்.

௨௧ மற்றப்பேர்கள் சொன்னது: இப்படிப்பட்ட வசனங்கள் பேய்கொண்டவனுடையவைகள் அல்ல என்றும், [3]குருடரின் கண்களைப் [4]பேயானவன் திறப்பானா என்றும் சொன்னார்கள்.

௨௨ ¶ பின்பு மாரிகாலத்தில் எருசலேம் நகரத்திலே தேவாலயப் பிரதிஷ்டையின் பண்டிகையைக் கொண்டாடி வருகையில்,

௨௩ இயேசுவானவர் தேவாலயத்தில் [5]சாலோமோனுடைய மண்டபத்தில் உலாவிக்கொண்டிருக்கிறபொழுது,

௨௪ ¶ யூதர்கள் அவரை வளைந்துகொண்டு அவரை நோக்கி, எதுவரைக்கும் எங்கள் ஆத்துமாக்கள் சந்தேகமுள்ளவைகளாய் இருக்கும்படிசெய்கிறீர்*? நீர் கிறிஸ்துவானால், (இதை) எங்களுக்குத் தாராளமாய்ச் சொல்லும் என்றார்கள்.

௨௫ அதற்கு இயேசுவானவர் சொன்னது: அதை உங்களுக்குச் சொன்னேன், நீங்கள் விசுவாசிக்கவில்லை; [6]என் பிதாவின் நாமத்தினாலே நான் செய்கிற கிரியைகளே என்னைக்குறித்துச் சாட்சிகொடுக்கின்றன.

௨௬ [7]அப்படியிருந்தும் நீங்கள் என் கிடையின் ஆடுகள் அல்லாதவர்களானபடியினாலே விசுவாசியாமல் இருக்கிறீர்கள்.

௨௭ [8]நான் உங்களுக்குச் சொன்னபடியே என் ஆடுகள் என் சத்தத்திற்குச் செவிகொடுக்கின்றன; அல்லாமலும் நான் அவைகளை அறிந்திருக்கிறேன்; அவைகளும் எனக்குப் பின்செல்லுகின்றன.

௨௮ அல்லாமலும் நான் அவைகளுக்கு நித்தியசீவனைக் கொடுக்கிறேன்; [9]அவைகள் ஒருக்காலும் கெட்டுப்போகாது, ஒருவனும் அவைகளை என் கையிலிருந்து பறித்துக்கொள்ளான்.

௨௯ [10]அவைகளை எனக்குக் கொடுத்த என் பிதா எல்லாரிலும் [11]பெரியவராய் இருக்கிறார்; ஒருவனும் அவைகளை என் பிதாவின் கையிலிருந்து பறித்துக்கொள்ளான்.

௩௰ [12]நானும் பிதாவும் ஒன்றாயிருக்கிறோம் என்றார்.

௩௧ ¶ [13]அப்பொழுது யூதர்கள் அவரைக் கொலைசெய்யும்படிக்கு மறுபடியும் கற்களை எடுத்துக்கொண்டார்கள்.

௩௨ இயேசுவானவர் அவர்களை நோக்கி, நான் என் பிதாவினாலே அநேக நற்கிரியைகளை உங்களுக்குக் காண்பித்தேன்; அவைகளில் எந்தக் கிரியையின் நிமித்தம் நீங்கள் என்மேல் கல் எறிவீர்கள் என்றார்.

௩௩ யூதர்கள் சொன்னது: நற்கிரியையின்நிமித்தம் அல்ல, நீ மனிதனாயிருக்க, [14]உன்னைத் தேவனென்று சொல்லி, இவ்விதமாய்த் தேவதூஷணம் செய்கிறதின்நிமித்தமே உன்மேல் கல் எறிவோம் என்றார்கள்.

௩௪ அதற்கு இயேசுவானவர் சொன்னது: [15]தேவர்களாய் இருக்கிறீர்கள் என்று நான் சொன்னேன் என்பது உங்கள் வேதத்தில் எழுதியிருக்கவில்லையா?

௩௫ [16]பராபரனுடைய வசனத்தைப் பெற்றுக்கொண்டவர்களை அவர் தேவர்கள் என்று சொல்ல, வேதமும் தள்ளப்படக்கூடாததாயிருக்க,

௩௬ [17]பிதாவினால் பரிசுத்தமாக்கப்பட்டும் [18]உலகத்தில் அனுப்பப்பட்டும் இருக்கிற [19]நான் என்னைப் [20]பராபரனுடைய குமாரனென்று சொன்னதினாலே, தேவ

கி. பி. ௩௨.

1 யோவா. எ. ௪௩: ௬. ௰௯.
2 யோவா. எ. ௨௰: அ. ௪௮, ௫௨.
3 யோவா. ௯. ௬, எ, ௩௨, ௩௩.
4 உ மோ. ௪. ௰௧. சங். ௱௪௬. ௮: ஏசா. அ.
5 அப். ௩. ௰௧: ௫. ௰௨.
* அல்லது சந்தேகத்துக்குள் வைக்கிறீர்.
6 ௩அ. வசனம். யோவா. ௩. ௨: ௫. ௩௬.
7 யோவா. அ. ௪எ. ௧ யோ. ௪. ௬.
8 ௪, ௰௪. வ௪.
9 யோவா. ௬. ௩௭: ௰எ. ௰௯, ௰௨: ௰அ. ௯.
10 யோவா. ௰எ. ௨, ௬, ௯.
11 யோவா. ௰௪. ௨அ.
12 யோவா. ௰எ. ௰௧, ௨௨.
13 யோவா. அ. ௫௯.
14 யோவா. ௫. ௰அ.
15 சங். அ௨. ௬.
16 உ பேது. ௰௧. ௧.
17 யோவா. ௬. ௨எ.
18 யோவா. ௩. ௰எ: ௫. ௩௬, ௩எ: அ. ௪௨.
19 யோவா. ௫. ௰எ, ௰அ. ௩௰. வ௪.
20 லூக். ௧. ௩௫. யோவா. ௯. ௩௫, ௩எ.

Digitized by Google

தூஷணஞ்செய்தாய் என்று சொல்லலாமா?

௩௭ [1]நான் என் பிதாவின் கிரியைகளைச் செய்யாதிருந்தால் நீங்கள் என்னை விசுவாசிக்க வேண்டுவதில்லை.

௩௮ (அவைகளை) நான் செய்திருக்கிறபடியால் [2]நீங்கள் என்னை விசுவாசியாதிருந்தாலும், பிதா என்னிலேயும் நான் அவரிலேயும் இருக்கிறதை அறிந்து விசுவாசித்துக்கொள்ளும்படிக்கு [3]நீங்கள் அந்தக் கிரியைகளை விசுவாசிக்கவேண்டுமே என்றார்.

௩௯ ¶ [4]அப்பொழுது அவர்கள் மறுபடியும் அவரைப் பிடிக்கத் தேடினார்கள்; அவர் அவர்களுடைய கைகளில் நின்று விலகிப் புறப்பட்டு,

௪௰ யோர்தான் ஆற்றின் அக்கரையிலே, முன்னே [5]யோவான் ஞானஸ்நானம் கொடுத்த இடத்திற்குத் திரும்பிப்போய், அங்கே தங்கினார்.

௪௧ அநேகம்பேர் அவரிடத்தில் சென்று, பின்பு சொன்னது: யோவான் ஒரு அற்புதமும் செய்யாதிருந்தும், [6]இவரைக்குறித்துச் சொன்ன யாவும் மெய்யாயிருக்கின்றது என்றார்கள்.

௪௨. அவ்விடத்திலே அநேகம்பேர் அவர்மேல் [7]விசுவாசமுள்ளவர்களானார்கள்.

## ௰௧. அதிகாரம்.

௧. மரித்து நாலுநாள் அடக்கம்பண்ணப்பட்டிருந்த இலாசருவைக் கிறிஸ்து உயிரோடே எழுப்பினது. ௪௫. அநேக யூதர்கள் அவரை விசுவாசித்தது. ௪௭. கிறிஸ்துவுக்கு விரோதமாகப் பிரதான ஆசாரியர்களும் பரிசேயர்களும் ஒரு சங்கத்தை உண்டாக்கினது. ௪௯. காயிபா என்பவன் அவரைக்குறித்துத் தீர்க்கதரிசனம் உரைத்தது. ௫௪. இயேசு தம்மை மறைத்துக்கொண்டது. ௫௫. பஸ்காபண்டிகையிலே சனங்கள் அவரைத் தேடினது.

அன்றியும் [8]மரியாளும் அவளுடைய சகோதரியாகிய மார்த்தாளும் இருந்த பெத்தானியா ஊராகிய இலாசரு என்பவன் வியாதியுள்ளவனாய் இருந்தான்.

௨ [9]அந்த மரியாள் கர்த்தர்மேல் பரிமளதயிலத்தைப் பூசி, தன் மயிரால் அவருடைய பாதங்களைத் துடைத்தவளே; அவளுடைய சகோதரனாகிய இலாசரு வியாதிப்பட்டிருந்தான்.

௩ அப்பொழுது அவனுடைய சகோதரிகள், ஆண்டவரே, உமக்கு அன்பாயிருக்கிறவன் வியாதியாயிருக்கிறான் என்று சொல்லியனுப்பினார்கள்.

௪ ¶ இயேசுவானவர் அதைக் கேட்டு, அந்த வியாதி மரணத்திற்கு ஏதுவாயிராமல், [10]பராபரனுடைய குமாரன் மகிமைப்படும்படிக்கு, பராபரனுடைய மகிமை விளங்குதற்கு ஏதுவாயிருக்கும் என்றார்.

௫ இயேசுவானவர் அந்த மார்த்தாளிடத்திலும், அவளுடைய சகோதரியினிடத்திலும், இலாசருவினிடத்திலும் அன்பாயிருந்தார்.

௬ அப்படியிருந்தும், அவன் வியாதியாயிருக்கிறதை அவர் கேட்ட பின்பு, [11]அவர் தாம் இருந்த இடத்திலே பின்னும் இரண்டுநாள் தங்கினார்.

௭ அதின்பின்பு அவர் (தம்முடைய) சீஷரை நோக்கி, நாம் மறுபடியும் யூதேயா நாட்டிற்குப் போவோம் வாருங்கள் என்றார்.

௮ அதற்குச் சீஷர் சொன்னது: இரபீ, சிலநாளுக்குமுன்னே, [12]யூதர்கள் உமதுமேல் கல்லெறியமனதுள்ளவர்களாய் இருந்தார்களே; நீர் மறுபடியும் அவ்விடத்திற்குப் போகலாமா என்றார்கள்.

௯ இயேசுவானவர் சொன்னது: பகலுக்குப் பன்னிரண்டு மணிநேரம் இல்லையா? [13]பகற்காலத்திலே நடக்கிறவன் இவ்வுலகத்தின் ஒளியைக் காண்கிறபடியினாலே இடறமாட்டான்.

௰ [14]இராத்திரிகாலத்திலே நடக்கிறவன் தனக்கு ஒளியில்லாதபடியினாலே இடறுவான் என்று சொல்லி,

கி. பி. ௩௩.

1 யோவா. ௰௫. ௨௪.
2 யோவா. ௰. ௧௧: ௰௪. ௰, ௰௧.
3 யோவா. ௰௪. ௰. ௰௧: ௰௭. ௨௧.
4 யோவா. ௭. ௩௰, ௪௪: ௮. ௫௯.
5 யோவா. ௧. ௨௮.
6 யோவா. ௧. ௩௰.
7 யோவா. ௮. ௩௰: ௰௨. ௪௨.
8 லூக். ௰. ௩௮, ௩௯.
9 மத். ௨௬. ௭. மாற். ௰௪. ௩. யோவா. ௰௨. ௩.
10 யோவா. ௯. ௩: ௪௰. ௪௪.
11 யோவா. ௰. ௪௰.
12 யோவா. ௰. ௩௧.
13 யோவா. ௯. ௪.
14 யோவா. ௰௨. ௩௫.

Digitized by Google

௰௧ [1]பின்பு நமக்குச் சிநேகிதனுகிய இலாசரு நித்திரை அடைந்தான்; நான் அவனை எழுப்பப் போகிறேன் என்றார்.

௰௨ அப்பொழுது அவருடைய சீஷர் சொன்னது: ஆண்டவரே, அவன் நித்திரை அடைந்திருந்தால் குணம் அடைவான் என்றார்கள்.

௰௩ இயேசுவானவர் அவனுடைய மரணத்தைக்குறித்து அப்படிச் சொல்லியிருந்தார்; அவர்கள் அவர் நித்திரைபண்ணுதலைக்குறித்தே பேசினார் என்று நினைத்தார்கள்.

௰௪ அப்பொழுது இயேசுவானவர் அவர்களை நோக்கி, இலாசரு மரித்தான் என்று தெளிவாய்ச் சொல்லி,

௰௫ பின்பு நீங்கள் விசுவாசிக்கும்படிக்கு, நான் அங்கே இராததினாலே, உங்கள் நிமித்தம் சந்தோஷப்படுகிறேன்; இப்பொழுது அவனிடத்திற்குப் போவோம் வாருங்கள் என்றார்.

௰௬ அப்பொழுது தீதிமு என்னப்பட்ட தோமாஸ் மற்றச் சீஷரை நோக்கி, அவரோடேகூட மரிக்கும்படிக்கு நாமும் போவோம் வாருங்கள் என்றான்.

௰௭ ¶ ஆதலால் இயேசுவானவர் போனபொழுது, அவன் கல்லறையில் வைக்கப்பட்டு நாலுநாள் ஆயிற்றென்று அறிந்தார்.

௰௮ பெத்தானியாவூர் எருசலேம் நகரத்திற்குச் சமீபமாய் ஏறக்குறைய பதினைந்துஸ்தாதிவழி* தூரத்தில் இருந்தது.

௰௯ அன்றியும் யூதரில் அநேகர் மார்த்தாள் மரியாள் என்பவர்களுடைய சகோதரனைக்குறித்து அவர்களுக்கு ஆறுதல் சொல்லும்படிக்கு, அவர்களிடத்தில் போயிருந்தார்கள்.

௨௰ இயேசுவானவர் வருகிறார் என்று மார்த்தாள் கேட்டபொழுது, அவருக்கு எதிர்கொண்டு போனாள்; மரியாள் வீட்டிலே உளுக்காந்திருந்தாள்.

௨௧ பின்பு மார்த்தாள் இயேசுவினிடத்தில் (சேர்ந்து,) ஆண்டவரே, நீர் இங்கே இருந்தீரானால், என் சகோதரன் மரிக்கமாட்டான்.

௨௨ இப்பொழுது [2]நீர் பராபரனிடத்தில் கேட்டுக்கொள்வது எதுவோ, அதைப் பராபரன் உமக்குக் கொடுப்பார் என்று அறிந்திருக்கிறேன் என்றாள்.

௨௩ அதற்கு இயேசுவானவர், உன் சகோதரன் உயிரோடு எழுந்திருப்பான் என்றார்.

௨௪ மார்த்தாள் சொன்னது: [3]கடைசிநாளிலே (மரித்தோர்) உயிரோடு எழுந்திருக்கும்பொழுது அவனும் எழுந்திருப்பான் என்று அறிந்திருக்கிறேன் என்றாள்.

௨௫ அதற்கு இயேசுவானவர் சொன்னது: [4]நானே உயிரோடு எழுப்புகிறவனுமாய், [5]சீவனுமாய் இருக்கிறேன், [6]என்னிடத்தில் விசுவாசமாய் இருக்கிறவன் மரித்தாலும் பிழைப்பான்.

௨௬ அல்லாமலும் உயிரோடிருக்கையில் என்னிடத்தில் விசுவாசமாய் இருக்கிறவன் எவனோ, அவன் ஒருக்காலும் மரியாமல் இருப்பான்; இதை விசுவாசிக்கிறாயா என்றார்.

௨௭ அவள் சொன்னது: [7]ஆம் ஆண்டவரே, நீர் கிறிஸ்து, நீர் பராபரனுடைய குமாரன், நீர் உலகத்தில் வரவேண்டுபவர் என்று நான் விசுவாசிக்கிறேன் என்றாள்.

௨௮ ¶ இப்படிச் சொன்னபின்பு அவள் போய்த் தன் சகோதரி மரியாளை இரகசியமாய் அழைத்து, போதகர் வந்திருக்கிறார், உன்னை அழைக்கிறார் என்றாள்.

௨௯ அதை அவள் கேட்டவுடனே சீக்கிரமாய் எழுந்து, அவரிடத்தில் போனாள்.

௩௰ அக்காலத்திலே இயேசுவானவர் கிராமத்திற்குள் செல்லா

கி. பி. ௩௩.

1 இ லே. ௧௧. ௰௧. தானி. ௰௨. ௨. மத். ௯. ௨௪. அப். ௭. ௬௰. ௧ கொரி. ௰௫. ௰௮, ௰௯.

* அல்லது ஒன்றரை நாழிகை.

2 யோவா. ௯. ௩௧.

3 லூக். ௰௪. ௰௪. யோவா. ௫. ௨௯.

4 யோவா. ௫. ௨௧: ௬. ௩௯, ௪௰. ௬௪.

5 யோவா. ௧. ௪: ௬. ௩௫: ௰௪. ௬. கொலோ. ௩. ௪. ௧ யோ. ௧. ௧, ௨: ௫. ௰௧.

6 யோவா. ௩. ௩௬. ௧ யோ. ௫. ௰. ௰௨.

7 மத். ௰௬. ௰௬. யோவா. ௪. ௪௨: ௬. ௬௯.

Digitized by Google

மல், மார்த்தாள் தம்மைச் சந்தித்த இடத்திலே இருந்தார்.

௩௧ [1]அப்பொழுது வீட்டிலே அவளுடனே கூட இருந்து அவளுக்கு ஆறுதல் செய்கிற யூதர்கள், மரியாள் சீக்கிரமாய் எழுந்து புறப்பட்டுப்போகிறதைக் கண்டு, அவள் கல்லறையினிடத்திலே அழுதுகொள்ளும்படி போகிறாள் என்று பேசிக்கொண்டு, அவளுக்குப் பின்சென்றார்கள்.

௩௨ இயேசுவானவர் இருந்த இடத்திலே மரியாள் சேர்ந்து, அவரைக் கண்டவுடனே, அவருடைய பாதத்தின் அருகே விழுந்து, ஆண்டவரே, [2]நீர் இங்கே இருந்தீரானால் என் சகோதரன் மரிக்கமாட்டானே என்றாள்.

௩௩ அவளும் அவளுடனே கூடப் போன யூதரும் அழுகிறதை இயேசுவானவர் கண்டபொழுது, உள்ளத்திலிருந்து பெருமூச்சுவிட்டுக் கலங்கி*,

௩௪ அவனை எங்கே வைத்தீர்கள் என்றார்; ஆண்டவரே, நீர் வந்து பாரும் என்றார்கள்.

௩௫ [3]இயேசுவானவர் கண்ணீர் விட்டார்.

௩௬ யூதர்கள் அதைப்பார்த்து, இதோ, அவர் அவனிடத்தில் மிகவும் பட்சமாய் இருந்தாரே என்றார்கள்.

௩௭ அவர்களில் சிலர் சொன்னது: [4]குருடனுடைய கண்களைத் திறந்த இவர், அவனை மரியாமலிருக்கப்பண்ணவும் கூடாதா என்றார்கள்.

௩௮ அப்பொழுது இயேசுவானவர் மறுபடியும் தமக்குள்ளே பெருமூச்சுவிட்டுப் பின்பு கல்லறையினிடத்தில் சேர்ந்தார், அது ஒரு குகையாய் இருந்தது, அதின்மேலே ஒரு கல் வைக்கப்பட்டிருந்தது.

௩௯ அப்பொழுது இயேசுவானவர் கல்லை எடுத்துப்போடுங்கள் என்றார்; மரித்தவனுடைய சகோதரியாகிய மார்த்தாள் அவரை நோக்கி, ஆண்டவரே, இவன் புதைக்கப்பட்டு நான்குநாளானபடியினாலே நாறுமே என்றாள்.

௪௰ அவளை இயேசுவானவர் நோக்கி, [5]நீ விசுவாசித்தால் பராபரனுடைய மகிமையைக் காண்பாய் என்று நான் உனக்குச் சொல்லவில்லையா என்றார்.

௪௧ பின்பு சவம் வைக்கப்பட்ட குகையில் இருந்த கல்லை எடுத்துப்போட்டார்கள்; அப்பொழுது இயேசுவானவர் கண்களை உயர்த்திப் பிதாவே, நீர் எனக்குச் செவிகொடுத்தபடியினாலே உம்மைத் தோத்திரம்செய்கிறேன்.

௪௨ நீர் எப்பொழுதும் எனக்குச் செவிகொடுக்கிறதை அறிந்திருக்கிறேன்; [6]சூழநிற்கிற சனங்கள் நீர் என்னை அனுப்பினதை விசுவாசிக்கும்படிக்கு, அவர்களின் நிமித்தமேஇப்படிச் சொன்னேன் என்று சொல்லி,

௪௩ பின்பு, இலாசருவே, வெளியே வா என்று மிகுந்த சத்தத்தோடே கூப்பிட்டார்.

௪௪ [7]அப்பொழுது மரித்தவன் கால்களும் கைகளும்கட்டியிருந்த சேலைகளோடும் முகம் சுற்றப்பட்டிருந்த சேலையோடும் வெளியே வந்தான்; பின்பு இயேசுவானவர் சொன்னது: இவனுடைய கட்டவிழ்த்து இவனை விட்டுவிடுங்கள் என்றார்.

௪௫ ¶ அப்பொழுது மரியாளிடத்திற்குப் போய், [8]இயேசுவானவர் செய்தவைகளைக் கண்ட யூதரில் அநேகர் அவரிடத்தில் விசுவாசமானார்கள்.

௪௬ வேறுசிலர் பரிசேயரிடத்திற்குப் போய், இயேசுவானவர் செய்தவைகளை அவர்களுக்கு அறிவித்தார்கள்.

௪௭ ¶ [9]அப்பொழுது பிரதான ஆசாரியரும் பரிசேயரும், பெரிய ஆலோசனைச் சங்கத்தார் வந்து கூடும்படி செய்து பின்பு சொன்

கி. பி. ௩௩.

1 ௰௯. வச.
2 ௨௧. வச.
* அல்லது தம்மைக்கலக்கி.
3 லூக். ௰௯. ௪௧.
4 யோவா. ௯. ௬.
5 ௪, ௨௩. வச.
6 யோவா. ௰௨. ௩௰.
7 யோவா. ௨௰. ௭.
8 யோவா. ௨. ௨௩: ௰. ௪௨: ௰௨. ௰, ௰௮.
9 சங். ௨. ௨. மத். ௨௬. ௩. மாற். ௰௪. ௧. லூக். ௨௨. ௨.

Digitized by Google

ளதாவது: [1]அந்த மனிதன் அநேக அற்புதங்களைச் செய்து வருகிறான்.

௪௮ நாம் அவனுக்கு இடங்கொடுத்தால், எல்லாரும் அவனிடத்தில் விசுவாசமாவார்கள்; பின்பு உரோமர் வந்து, நம்முடைய ஸ்தலத்தையும் சனங்களையும் எடுத்துக்கொள்ளுவார்கள். ஆதலால், நாம் என்ன செய்வோம் என்றார்கள்.

௪௯ அப்பொழுது அவர்களில் ஒருவனுமாய் அவ்வருஷத்துப் பிரதான ஆசாரியனுமாய் இருந்த [2]காய்பா என்பவன் அவர்களை நோக்கி, நீங்கள் ஒன்றும் தெரியாதவர்கள்.

௫0 [3]சனங்கள் எல்லாரும் கெட்டுப்போகாதபடிக்கு, ஒரே மனிதன் சனங்களுக்காக மரணம் அடைவதே நமக்கு நலமாயிருக்கும் என்று நீங்கள் சிந்தியாமலும் இருக்கிறீர்கள் என்றான்.

௫௧ இப்படி அவன் தானாய்ச் சொல்லாமல் அவன் அந்த வருஷத்தில் பிரதான ஆசாரியனாயிருக்க, இயேசுவானவர் யூதசனங்களுக்காக மரணமடைவதைத் தீர்க்கதரிசனமாய்ச் சொன்னான்.

௫௨ [4]மேலும் அந்தச் சனங்களுக்காகமாத்திரம் அல்ல, [5]அங்கங்கே சிதறிப்போயிருக்கிற பராபரனுடைய பிள்ளைகளை ஒன்றாகக் கூட்டிக்கொள்ளுகிறதற்காகவும் அவர் மரணம் அடைவதையே குறித்தான்.

௫௩ ¶ ஆதலால் அந்நாள்முதல் அவர்கள் அவரைக் கொலைசெய்யும்படிக்கு ஆலோசனைபண்ணிக்கொண்டு வந்தார்கள்.

௫௪ அதினாலே [6]இயேசுவானவர் பின்னும் வெளியரங்கமாய் யூதருக்குள்ளே திரியாமல் அவ்விடத்தைவிட்டு வனாந்தரத்திற்குச் சமீபமான இடமாகிய [7]எபிராயிம் ஊருக்குப் போய், அங்கே தம்முடைய சீஷருடனேகூடச் சஞ்சரித்தார்.

௫௫ ¶ [8]அக்காலத்திலே யூதருடைய பஸ்காப்பண்டிகை சமீபமாயிருந்தது; அதற்குமுன்னே அந்நாட்டிலிருந்து அநேகர் தங்களைச் சுத்திகரிக்கும்பொருட்டாக எருசலேமுக்குப் போனார்கள்.

௫௬ [9]அங்கே அவர்கள் இயேசுவைத் தேடிக்கொண்டு தேவாலயத்திலே நிற்கையில் ஒருவரை ஒருவர் நோக்கி, உங்களுக்கு எப்படித்தோன்றுகின்றது? அவர் பண்டிகைக்கு வராமல் இருப்பாரா என்று பேசிக்கொண்டார்கள்.

௫௭ பிரதான ஆசாரியரும் பரிசேயரும் அவரைப் பிடிக்கும்படிக்கு யோசித்து, அவர் இருக்கிற இடத்தை ஒருவன் அறிந்தால் அதை அறிவிக்கவேண்டும் என்று கட்டளைகொடுத்திருந்தார்கள்.

1 யோவா. ௰௨. ௰௧. அப். ௪. ௰௬.
2 லூக். ௩. ௨. யோவா. ௰௮. ௰௪. அப். ௪. ௬.
3 யோவா. ௰௮. ௰௪.
4 ஏசா. ௪௯. ௬. ௧ யோ. ௨. ௨.
5 யோவா. ௰. ௰௬. எபே. ௨. ௰௪. ௰௭.
6 யோவா. ௪. ௧, ௩: எ. ௧.
7 ௨ நாளா. ௰௩. ௰௯.
8 யோவா. ௨. ௰௩: ௫. ௧: ௬. ௪.
9 யோவா. ௰௧. ௮.
10 யோவா. ௰௧. ௧, ௪௩.
11 மத். ௨௬. ௬. மாற். ௰௪. ௩.
12 லூக். ௭. ௩௭, ௩௮. யோவா. ௰௧. ௨.

## ௰௨. அதிகாரம்.

௧. மரியாள் இயேசுவின் பாதங்களைப் பரிமளதயிலத்தால் பூசினது. ௯. அநேக சனங்கள் இலாசருவைக் காணவந்தது. ௰. பிரதான ஆசாரியர் இலாசருவைக் கொலைசெய்ய விரும்பினது. ௰௨. அவர் எருசலேமுக்குச் சவாரியின்மேல் போனது. ௨0. கிரேக்கர் அவரைக் காணவிரும்பினது. ௨௩. அவர் தம்முடைய மரணத்தை முன் அறிவித்தது. ௩௭. யூதர்கள் அவிசுவாசிகளாயிருந்தாலும், ௪௨. யூதப் பிரபுக்களில் அநேகர் இரகசியமாய் விசுவாசித்தபடியினாலே, ௪௪. அவர்கள் தங்கள் விசுவாசத்தை வெளிப்படுத்தும்படி இயேசு புத்தி சொன்னது.

பின்பு பஸ்காப்பண்டிகை வருகிறதற்கு ஆறுநாளுக்குமுன்னே, இயேசுவானவர் தம்மாலே மரணத்திலிருந்து எழுப்பப்பட்ட [10]இலாசரு இருக்கிற பெத்தானியா ஊருக்குப் போனார்.

௨ அங்கே [11]அவருக்கு இராவிருந்துபண்ணினார்கள்; மார்த்தாள் பணிவிடைசெய்தாள்; இலாசரு தானும் அவருடனேகூடப் பந்தியிருந்தவர்களில் ஒருவனாய் இருந்தான்.

௩ ¶ அப்பொழுது மரியாள் [12]விலையேறப்பெற்ற களங்கமில்லாத நளுதென்னும் தயிலத்தில் ஒரு ராத்தலை எடுத்து, அதை இயேசுவினுடைய கால்களில் பூசி, தன் மயிரால் அவைகளைத் துடைத்தாள்;

Digitized by Google

அந்தத் தயிலத்தின் பரிமளத்தினுலே வீடு நிரப்பப்பட்டது.

௪ அப்பொழுது சீஷரில் ஒருவனுமாய் அவரைக் காட்டிக்கொடுத்தவனுமாய்ச் சீமோனுடைய குமாரனுமாய் இருந்த யூதாஸ்காரியோத்து என்பவன் சொன்னது:

௫ இந்தத் தயிலம் முந்நூறு தேனாரியு விலைக்கு விற்றுத் தரித்திரருக்குக் கொடுக்கலாமே, என்னத்தினுலே அப்படிச் செய்யவில்லை என்றான்.

௬ அவன் தரித்திரரைக்குறித்துக் கவலைப்படுகிறவனுக அப்படிச் சொல்லாமல், அவன் திருடனுய்ப் [1]பணப்பையை வைத்துக்கொண்டு, (அதிலே) போடப்பட்டவைகளைச் சுமக்கிறவனுனபடியினுலே இப்படிச் சொன்னுன்.

௭ அப்பொழுது இயேசுவானவர் சொன்னது: இவளை விட்டுவிடு, என்னை அடக்கம்பண்ணும் நாளுக்காக இவள் இதைக் காத்துக்கொண்டிருந்தாள்.

௮ [2]தரித்திரர் எப்பொழுதும் உங்களிடத்தில் இருக்கிருர்கள், நான் எப்பொழுதும் உங்களிடத்திலே இரேனே என்றுர்.

௯ ¶ பின்பு யூதரில் அநேக சனங்கள் அவர் அங்கே இருக்கிறதை அறிந்து, இயேசுவின் பொருட்டாகமாத்திரம் அல்ல, [3]அவரால் மரித்தோரிலிருந்து எழுப்பப்பட்ட இலாசருவைக் காணும் பொருட்டாகவும் அவ்விடத்திலே போனுர்கள்.

௰ [4]இலாசருவினுலே யூதர்களில் அநேகம்பேர் இயேசுவானவரிடத்தில் போய், அவர்மேல் விசுவாசம் வைத்தபடியினுலே,

௰௧ [5]பிரதான ஆசாரியர் இலாசருவையும் கொலைசெய்யும்படி தீர்மானம் பண்ணினுர்கள்.

௰௨ ¶ [6]மறுநாளிலே இயேசுவானவர் எருசலேமுக்கு வருகிருர் என்று பண்டிகைக்குப்போன சனங்கள் அநேகர் கேள்விப்பட்டு,

௰௩ குருத்தோலைகளைப் பிடித்து அவருக்கு எதிர்கொண்டு போகும்படி புறப்பட்டு, [7]ஓசன்னு, பராபரனுடைய நாமத்தினுலே வருகிற இஸ்ரவேலரின் இராசா வாழ்த்தப்படக்கடவர் என்று சத்தமிட்டார்கள்.

௰௪ [8]அல்லாமலும், குமாரத்தியாகிய சீயோனே, நீ பயப்படாதிரு; இதோ, உன் இராசா ஒரு கழுதைக்குட்டியின்மேல் ஏறி வருகிருர் என்று எழுதியிருக்கிறபடியே,

௰௫ [9]இயேசுவானவர் ஒரு கழுதையின் குட்டியைக் கண்டு, அதின்மேல் ஏறிப்போனுர்.

௰௬ [10]அவரைக்குறித்து அப்படி எழுதியிருக்கிறதை அவருடைய சீஷர் அக்காலத்திலே அறியவில்லை; [11]இயேசுவானவர் மகிமையை அடைந்தபின் [12]அவர்கள் அதையும் தாங்கள் அப்படி அவருக்குச் செய்ததையும் நினைத்துக்கொண்டார்கள்.

௰௭ ¶ அன்றியும் அவருடனே இருந்த சனங்கள் அவர் இலாசருவைக் கல்லறையிலிருந்து வெளியே வரவழைத்து அவனை உயிரோடு எழுப்பினதைக்குறித்துச் சாட்சிகொடுத்தார்கள்.

௰௮ [13]அப்படிப்பட்ட அற்புதத்தை அவர் செய்தார் என்று சனங்கள் கேள்விப்பட்டதினுலே, அவர்கள் அவருக்கு எதிர்கொண்டு போனுர்கள்.

௰௯ ஆதலால் பரிசேயர் ஒருவரை ஒருவர் நோக்கி, [14]நாம்செய்கிறதினுலே ஒரு பிரயோசனமும் இல்லையென்று அறிவோமாக; உலகமே அவனுக்குப் பின்செல்லுகின்றதே என்று சொல்லிக்கொண்டார்கள்.

௨௰ ¶ [15]அன்றியும் (பராபரனைத்) தொழுது கொள்ளும்படி பண்டிகைக்குப் போனவர்களுக்குள்ளே [16]சில கிரேக்கர் இருந்தார்கள்.

கி. பி. ௩௩.

1 யோவா. ௰௩. உ௯.
2 மத். உ௬. ௰௧. மாற். ௰௪. ௭.
3 யோவா. ௰௧. ௪௩, ௪௪.
4 யோவா. ௰௧. ௪௫. ௰௮. ௩௭.
5 லூக். ௰௯. ௩௭.
6 மத். உ௧. அ. மாற். ௰௧. அ. லூக். ௰௯. ௩௫, ௩௬.
7 சங். ௱௰௮. உ௫, உ௬.
8 சகரி. ௯. ௯.
9 மத். உ௧. ௭.
10 லூக். ௰௮. ௩௪.
11 யோவா. ௭. ௩௯.
12 யோவா. ௰௪. உ௬.
13 ௰. ௪௪.
14 யோவா. ௰௧. ௪௭, ௪௮.
15 ௧இரா. ௮. ௪௧, ௪௨. அப். ௮. உ௭.
16 அப். ௰௭. ௪.

Digitized by Google

௨௧ [1]அவர்கள் கலிலேயா நாட்டின் பெத்சாயிதா ஊரானாகிய பிலிப்பினிடத்தில் போய், ஐயா நாங்கள் இயேசுவானவரைக் காண விரும்புகிறோம் என்று அவரை வேண்டிக்கொண்டார்கள்.

௨௨ பிலிப்பு என்பவன் அதை அந்திரேயாவுக்குச் சொன்னான்; பின்பு அந்திரேயாவும் பிலிப்பும் அதை இயேசுவுக்குச் சொன்னார்கள்.

௨௩ அப்பொழுது இயேசுவானவர் அவர்களுடனே சொன்னது: [2]மனிதனுடைய குமாரன் மகிமைப்படும்படிக்குக் காலம் வந்தது.

௨௪ மெய்யாகவே நான் உங்களுக்குச் சொல்லுகிறதாவது:[3]கோதுமை மணி நிலத்திற்குள் விழுந்து செத்துப்போகாவிட்டால் தனித்திருக்கும்; அது செத்ததானால் மிகுந்த பலனைக் கொடுக்கும்.

௨௫ [4]தன் சீவனைச் சிநேகிக்கிறவன் அதை இழப்பான்; இவ்வுலகத்திலே தன் சீவனைப் பகைக்கிறவன் அதை நித்தியசீவன்வரைக்கும் காத்துக்கொள்ளுவான்.

௨௬ ஒருவன் எனக்கு ஊழியம் செய்ய விரும்பினால் எனக்குப் பின்செல்லக்கடவன்;அப்பொழுது [5]நான் இருக்கும் இடம் எங்கேயோ, அங்கே என் ஊழியக்காரனும் இருப்பான்; அல்லாமலும் எனக்கு ஊழியம்செய்கிறவனைப் பிதா கனம்பண்ணுவார்.

௨௭ ¶ [6]இப்பொழுது என் ஆத்துமா கலங்குகின்றது; நான் என்ன சொல்லுவேன்? பிதாவே, இந்த நேரத்திலிருந்து என்னை இரட்சிக்கவேண்டும்என்று(சொல்வேனா?) [7]இந்த நேரத்தின்பொருட்டாகவே வந்தேன் என்று சொல்லி,

௨௮ பின்பு, பிதாவே, உமது நாமத்தின் மகிமையைக் காண்பியும் என்றார்; [8]அப்பொழுது அதின் மகிமையைக் காண்பித்தேன், இன்னும் அதைக் காண்பிப்பேன் என்று வானத்திலிருந்து சத்தம் உண்டாயிற்று.

௨௯ அங்கே நின்ற சனங்கள் அதைக் கேட்டு, இடிமுழக்கம் உண்டாயிற்று என்றார்கள்; வேறு சிலர் சொன்னது: தேவதூதன் ஒருவன் அவருடனே பேசினான் என்றார்கள்.

௩௰ அப்பொழுது இயேசுவானவர் சொன்னது: [9]இந்தச் சத்தம் என்நிமித்தம் உண்டாகாமல், உங்கள்நிமித்தமே உண்டாயிற்று.

௩௰௧ இப்பொழுது இவ்வுலகத்திற்கு நியாயத்தீர்ப்புக் கொடுக்கப்படுகின்றது;இப்பொழுது [10]இவ்வுலகத்தின் பிரபு புறம்பாகத் தள்ளப்படுவான்.

௩௰௨ அல்லாமலும் [11]நான் பூமியிலிருந்து ஏற்றப்பட்டிருக்கும்பொழுது, [12]எல்லாரையும் என்னிடத்தில்இழுத்துக்கொள்வேன் என்று,

௩௰௩ [13]தாம் மரணமடையும் விதத்தைக் குறித்தார்.

௩௰௪ ¶ அப்பொழுது சனங்கள் அவரை நோக்கி, [14]கிறிஸ்துவானவர் என்றென்றைக்கும் இருக்கிறார் என்று நாங்கள் வேதத்தால் கேள்விப்பட்டிருக்கிறோமே,அப்படியிருக்க, மனிதனுடைய குமாரன் ஏற்றப்படவேண்டும் என்று நீர் எப்படிச் சொல்லுகிறீர்? இந்த மனிதகுமாரன் எவன் என்றார்கள்.

௩௰௫ அதற்கு இயேசுவானவர் சொன்னது: [15]சிலகாலம்மாத்திரம் ஒளியானது உங்களுடனே இருக்கும்; [16]இருள் உங்களைப் பிடியாதபடிக்கு நீங்கள் ஒளியை உடையவர்களாயிருக்கையில், (அதிலே) நடவுங்கள்;[17]இருளிலே நடக்கிறவன் தான் நடந்துபோகிற இடம் இன்னது என்று அறியான்.

௩௰௬ [18]நீங்கள் ஒளியை உடையவர்களாயிருக்க ஒளியின் பிள்ளைகள் ஆகும்படிக்கு, ஒளியானதிலே விசுவாசமாய் இருப்பீர்களாக என்று இயேசுவானவர் சொல்

இ. பி. ௩௩.

1 யோவா. ௧. ௪௪.
2 யோவா. ௰௩. ௩௨: ௰௭. ௧.
3 ௧ கொரி. ௰௫. ௩௬.
4 மத். ௰. ௩௯: ௰௬. ௨௫. மாற். ௮. ௩௫. லூக். ௯. ௨௪: ௰௭. ௩௩.
5 யோவா. ௰௪. ௩: ௰௭. ௨௪. ௧ தெச. ௪. ௰௭.
6 மத். ௨௬. ௩௮, ௩௯. லூக். ௰௨. ௫௦. யோவா. ௰௩. ௨௧.
7 லூக். ௨௨. ௫௩. யோவா. ௰௮. ௩௭.
8 மத். ௩. ௰௭.
9 யோவா. ௰௧. ௪௨.
10 மத். ௰௨. ௨௯. லூக். ௰. ௰௮. யோவா. ௰௪. ௩௰: ௰௬. ௰௧. அப். ௨௬. ௰௮. ௨ கொரி. ௪. ௪. எபே. ௨. ௨: ௬. ௰௨.
11 யோவா. ௩. ௰௪: ௮. ௨௮.
12 ௨ ரோ. ௫. ௰௮. எபி. ௨. ௯.
13 யோவா. ௰௮. ௩௨.
14 சங். ௮௯. ௩௬, ௩௭: ௱௰. ௪. ஏசா. ௯. ௭: ௫௩. ௮. எசே. ௩௭. ௨௫. தானி. ௨. ௪௪: ௭. ௰௪, ௨௭. மீகா. ௪. ௭.
15 யோவா. ௧. ௯: ௮. ௰௨: ௯. ௫.
16 எரே. ௰௩. ௰௬. எபே. ௫. ௮.
17 யோவா. ௰௧. ௰. ௧ யோ. ௨. ௰௧.
18 லூக். ௰௬. ௮. எபே. ௫. ௮. ௧ தெச. ௫. ௫. ௧ யோ. ௨. ௯, ௰௧.

விப் புறப்பட்டு, [1]அவர்களுக்கு விலகி மறைந்தார்.

௩௭ ¶ அவர் இவ்வளவு அற்புதங்களை அவர்களுக்குமுன்பாகச் செய்திருந்தும், அவர்கள் அவர்மேல் விசுவாசமாய் இருக்கவில்லை.

௩௮ அதினாலே, [2]கர்த்தாவே, எங்கள் பிரசங்கத்தை விசுவாசித்தவன் யாவன்? பராபரனுடைய புயம் யாவனுக்கு வெளிப்பட்டது என்று ஏசாயா தீர்க்கதரிசி சொன்ன வசனம் நிறைவேறிற்று.

௩௯ [3]ஏசாயா என்பவன் அவருடைய மகிமையைக் கண்டு, அவரைக்குறித்துப் பேசிக்கொண்டிருக்கிறபொழுது,

௪௰ அவன் பின்னும் சொன்னது: [4]அவர்கள் தங்கள் கண்களினாலே காணாமலும், தங்கள் இருதயத்தினால் உணராமலும், மனந்திருப்பாமலும், என்னாலே ஆரோக்கியம் அடையாமலும் இருக்கும்படிக்கு, அவர்களுடைய கண்களை அவர் குருடாக்கி, அவர்கள் இருதயத்தைக் கடினமாக்கினார் என்பதே.

௪௧ அதினாலே அவர்கள் விசுவாசிக்கக்கூடாதிருந்தார்கள்.

௪௨ [5]ஆகிலும் தலைவரில் அநேகரும் அவர்மேல் விசுவாசமாய் இருந்தார்கள்.

௪௩ [6]அப்படி இருந்தும், அவர்கள் பராபரனால் வருகிற கனத்திலும், மனிதரால் வருகிற கனத்தை அதிகமாய் விரும்பினபடியினாலே, பரிசேயராலே செபஆலயத்திற்குப் புறம்பாக்கப்படாதபடிக்கு, (அதை) அறிக்கையிடாமல் இருந்தார்கள்.

௪௪ ¶ அப்பொழுது இயேசுவானவர் [7]சத்தத்தோடே சொன்னதாவது: என்மேல் விசுவாசமாயிருக்கிறவன் என்மேல்மாத்திரம் அல்ல, என்னை அனுப்பினவர்மேலும் விசுவாசமாயிருக்கிறான்.

௪௫ [8]அல்லாமலும் என்னைக் காண்கிறவன் என்னை அனுப்பினவரைக் காண்கிறான்.

௪௬ [9]என்மேல் விசுவாசமாயிருக்கிற யாவரும் இருளில் இராதபடிக்கு, நான் உலகத்தில் ஒளியாக வந்தேன்.

௪௭ அன்றியும் நான் உலகத்தாரை ஆக்கினைக்கு உட்படுத்தும்பொருட்டு அல்ல, [10]அவர்களை இரட்சிக்கும்பொருட்டே வந்தேன்; ஆகையால் ஒருவன் என் வசனங்களைக் கேட்டும் விசுவாசித்துக்கொள்ளாமல்போனால், [11]அவனை நான் ஆக்கினைக்கு உட்படுத்தமாட்டேன்.

௪௮ [12]என்னைத் தள்ளி என் வசனங்களை ஏற்றுக்கொள்ளாதவனை ஆக்கினைக்குள்ளாகத் தீர்க்கிறது ஒன்றிருக்கின்றது; [13]நான் பண்ணின உபதேசமே கடைசிநாளிலே அவனை ஆக்கினைக்குள்ளாகத் தீர்க்கும்.

௪௯ என்னத்தினாலென்றால், [14]நானாக ஒன்றும் பேசவில்லை; என்னை அனுப்பின பிதாவே [15]நான் பேசவும் உபதேசிக்கவும் வேண்டியவைகளை எனக்குக் கட்டளையிட்டார்.

௫௰ அவருடைய கட்டளையே நித்தியசீவன் என்று அறிந்திருக்கிறேன்; ஆகையால் நான் உபதேசிக்கிறவைகளைப் பிதா எனக்குச் சொன்னபடியே உபதேசிக்கிறேன் என்றார்.

## ௰௩. அதிகாரம்.

க. சீஷர்களுடைய கால்களைக் கழுவி, ௰௪. மனத்தாழ்மையும் சிநேகமும் உள்ளவர்களாயிருக்கும்படி இயேசு புத்திசொன்னது. ௨௧. யூதா தம்மைக் காட்டிக்கொடுப்பான் என்று முன் அறிவித்து, ஒரு குறிப்பினால் அதை யோவானுக்கு வெளிப்படுத்தினது. ௩௪. சீஷர்கள் ஒருவரை ஒருவர் சிநேகிக்கும்படி புத்திசொல்லி, ௩௮. பேதுரு தம்மை மறுதலிப்பதைக்குறித்து அவனுக்கு அறிவித்தது.

[16]பஸ்காப்பண்டிகைக்கு முன்னே இயேசுவானவர் இவ்வுலகத்தைவிட்டுப் பிதாவினிடத்திற்குப் போகும்படிக்குத் [17]தம்முடைய

---

இ. பி. ௩௯.

1 யோவா. அ. ௭௯: ௧௧. ௫௯.
2 ஏசா. ௫௩. க. உரோ. ௰. ௰௬.
3 ஏசா. ௬. க.
4 ஏசா. ௬. ௯, ௰. மத். ௰௩. ௰௪.
5 யோவா. ௭. ௪௮: ௯. ௨௨.
6 யோவா. ௫. ௪௪.
7 மாற். ௯. ௭. உ பே. க. ௨௧.
8 யோவா. ௰௪. ௯.
9 ௧௰, ௧௧. ௪௪. யோவா. ௩. ௰௯. அ. ௰௨: ௯. ௫, ௬௯.
10 யோவா. ௩. ௰௭.
11 யோவா. ௫. ௪௫: அ. ௰௫, ௨௬.
12 லூக். ௰. ௰௬.
13 உ கொ. ௰அ. ௰௬. மாற். ௰௬. ௰௬.
14 யோவா. அ. ௩௮: ௰௪. ௰.
15 உ கொ. ௰அ. ௰அ.
16 மத். ௨௬. ௨.
17 யோவா. ௰௨. ௨௩: ௰௭. க, ௰௧.

Digitized by Google

காலம் வந்தது என்று அறிந்து, இவ்வுலகத்திலுள்ள தம்முடையவர்களிடத்தில் வைத்த அன்பை முடிவுபரியந்தமும் அவர்களிடத்தில் வைத்தார்.

௨ ஆகையால் அக்காலத்திலே [1]பசாசானவன் சீமோனுடைய குமாரனாகிய யூதாஸ்காரியோத்தின் இருதயத்திலே அவரைக் காட்டிக்கொடுக்கும்படிக்கான (யோசனையை) வைத்திருந்தபின்பு,

௩ அவர்கள் இராப்போசனம் பண்ணிக்கொண்டிருக்கையில், இயேசுவானவர் [2]தமக்குச் சகலத்தையும் பிதா ஒப்புக்கொடுத்ததையும், [3]தாம் பராபரனிடத்திலிருந்து வந்ததையும் பராபரனிடத்திற்குப் போகிறதையும் அறிந்து,

௪ [4]இராப்போசனத்தை விட்டு எழுந்து, மேல் அங்கியைக் களைந்து, ஒரு சேலையை எடுத்துத் தம்மைச் சுற்றிக் கட்டிக்கொண்டு,

௫ பின்பு ஒரு சட்டியிலே தண்ணீர் வார்த்துச் சீஷருடைய கால்களைக் கழுவவும், தாம் கட்டிக்கொண்டிருந்த சேலையினாலே துடைக்கவும் தொடங்கினார்.

௬ அவர் சீமோன்பேதுருவினிடத்தில் சேர்ந்தபொழுது, அவன்* அவரை நோக்கி, ஆண்டவரே, [5]நீர் என் கால்களைக் கழுவலாமா என்றான்.

௭ அதற்கு இயேசுவானவர் சொன்னது: நான் செய்கிறது இன்னதென்று நீ இப்பொழுது அறியவில்லை; [6]இனிமேல் அதை அறிவாய் என்றார்.

௮ பேதுரு பின்னும் அவரை நோக்கி, நீர் என் கால்களை ஒருக்காலும் கழுவக்கூடாது என்றான்; அதற்கு இயேசுவானவர் சொன்னது: [7]நான் உன்னைக் கழுவாவிட்டால், என்னிடத்திலே உனக்குப் பங்கில்லை என்றார்.

௯ அப்பொழுது சீமோன்பேதுரு, ஆண்டவரே, (அப்படியானால்,) என் கால்களைமாத்திரம் அல்ல, என் கைகளையும் தலையையும்கூட நீர் கழுவவேண்டும் என்றான்.

௰ இயேசுவானவர் சொன்னது: ஸ்நானம்பண்ணினவனுடைய கால்களைமாத்திரம் கழுவவேண்டும்; மற்ற யாவும் அவனிடத்தில் சுத்தமாயிருக்கும்; [8]நீங்கள் சுத்தமாயிருக்கிறீர்கள்; ஆனாலும் எல்லாரும் அல்ல என்றார்.

௰௧ [9]அவர் தம்மைக் காட்டிக்கொடுக்கிறவனை அறிந்திருந்தபடியினாலே, நீங்கள் சுத்தமாயிருக்கிறீர்கள், ஆனாலும் எல்லாரும் அல்ல என்று சொன்னார்.

௰௨ ¶ அவர்களுடைய கால்களைக் கழுவினபின்பு, அவர் தமது மேல்அங்கியைத் தரித்துக்கொண்டு திரும்ப உளுக்காந்து, அவர்களுடனே சொன்னதாவது: நான் உங்களுக்குச் செய்ததை அறிந்திருக்கிறீர்களா?

௰௩ [10]நீங்கள் என்னைப் போதகரென்றும், ஆண்டவரென்றும் அழைக்கிறீர்கள்; நான் அவர்தான்; ஆகையால், நீங்கள் சரியாய்ச் சொல்லுகிறீர்கள்.

௰௪ அப்படியிருக்க, [11]ஆண்டவரும் போதகருமாகிய நானே உங்கள் கால்களைக் கழுவினபடியால், [12]நீங்களும் ஒருவருடைய கால்களை ஒருவர் கழுவக்கடவீர்கள்.

௰௫ [13]நான் உங்களுக்குச் செய்ததுபோல, நீங்களும் செய்யும்படிக்கு உங்களுக்கு வகையைக் காண்பித்தேன்.

௰௬ [14]மெய்யாகவே நான் உங்களுக்குச் சொல்லுகிறதாவது: ஊழியக்காரனானவன் தன் எசமானிலும் அப்போஸ்தலனானவன் தன்னை அனுப்பினவரிலும் பெரியவன் அல்ல.

௰௭ [15]நீங்கள் இவைகளை அறிந்திருக்கிறபடியால், இவைகளைச் செய்வீர்களானால் பாக்கியராய் இருப்பீர்கள்.

௰௮ உங்கள் எல்லாரையுங்குறித்

இ. பி. ௩௩.

1 லூக். ௨௨. ௩. ௨௭. ௰௪.
2 மத். ௰௧. ௨௭: ௨௮. ௰௮. யோவா. ௩. ௩௫: ௰௭. ௨. அப். ௨. ௩௬. ௧ கொரி. ௰௫. ௨௭. எபி. ௨. ௮.
3 யோவா. ௮. ௪௨: ௰௬. ௨௮.
4 லூக். ௨௨. ௨௭. பிலி. ௨. ௭, ௮.
* அல்லது பேதுரு.
5 மத். ௩. ௰௪.
6 ௰௨. ௪௪.
7 யோவா. ௩. ௫. ௧ கொரி. ௬. ௰௧. எபே. ௫. ௨௬. தீத். ௩. ௫. எபி. ௰. ௨௨.
8 யோவா. ௰௫. ௩.
9 யோவா. ௬. ௬௪.
10 மத். ௨௩. ௮,௰. லூக். ௬. ௪௬. ௧ கொரி. ௮. ௬. ௰௨. ௩. பிலி. ௨. ௰௧.
11 லூக். ௨௨. ௨௭.
12 உரோ. ௰௨. ௰ கலா. ௬. ௧, ௨. ௧ பே. ௫. ௫.
13 மத். ௰௧. ௨௯. பிலி. ௨. ௫. ௧ பே. ௨. ௨௧. ௧ யோ. ௨. ௬.
14 மத். ௰. ௨௪. லூக். ௬. ௪௦. யோவா. ௰௫. ௨௦.
15 யாக். ௧. ௨௫.

Digitized by Google

து நான் பேசவில்லை; நான் தெரிந்துகொண்டவர்களை அறிந்திருக்கிறேன்; வேதவாக்கியம் நிறைவேறும்படியாக [1]என்னுடனே அப்பம் புசிக்கிறவன் எனக்கு விரோதமாய்த் தன் குதிகாலைத் தூக்கினான்.

௰௯ அது நடக்கும்பொழுது நானே அவரென்று நீங்கள் விசுவாசிக்கும்படிக்கு, [2]அது நடப்பதற்குமுன்னாகிய இப்பொழுது * அதை உங்களுக்குச் சொல்லுகிறேன்.

௨௰ என்னால் [3]அனுப்பப்படுகிறவன் எவனோ, அவனை ஏற்றுக்கொள்ளுகிறவன் என்னையும் ஏற்றுக்கொள்ளுகிறான்; என்னை ஏற்றுக்கொள்ளுகிறவன் என்னை அனுப்பினவரையும் ஏற்றுக்கொள்ளுகிறான் என்று மெய்யாகவே உங்களுக்குச் சொல்லுகிறேன் என்றார்.

௨௧ ¶ [4]இவைகளை வசனித்த பின்பு, [5]இயேசுவானவர் தமது ஆவியிலே கலக்கம் அடைந்து, [6]உங்களில் ஒருவன் என்னைக் காட்டிக்கொடுப்பான் என்று மெய்யாகவே உங்களுக்குச் சொல்லுகிறேன் என்று சாட்சியிட்டார்.

௨௨ அப்பொழுது சீஷர் யாரைக்குறித்துச் சொல்லுகிறாரோ என்று ஐயப்பட்டு, ஒருவரை ஒருவர் பார்த்துக்கொண்டார்கள்.

௨௩ அவ்வேளையிலே [7]அவருடைய சீஷரில் ஒருவன் அவருடையமடியிலே சாய்ந்திருந்தான்; அவன்மேலே இயேசுவானவரும் அன்பாயிருந்தார்.

௨௪ ஆனபடியினாலே அவர் இன்னாரைக்குறித்துச் சொன்னார் என்று விசாரிக்கும்படிக்குச் சீமோன்பேதுரு அவனுக்குச் சயிக்கைகாட்டினான்.

௨௫ அப்பொழுது அவன் இயேசுவின் மார்பிலே சாய்ந்துகொண்டு, ஆண்டவரே, அவன் யாவன் என்றான்.

கி. பி. ௩௩.

1 சங். ௪௧. ௯. மத். ௨௬. ௨௩. ௨௧. ௪௪.
2 யோவா. ௰௪. ௨௯: ௰௬. ௪.
* அல்லது இன்றுமுதல்.
3 மத். ௰. ௪௰: ௨௫. ௪௰. லூக். ௰. ௰௬.
4 மத். ௨௬. ௨௧. மாற். ௰௪. ௰௮. லூக். ௨௨. ௨௧.
5 யோவா. ௰௨. ௨௭.
6 அப். ௧. ௰௭. ௧ யோ. ௨. ௰௯.
7 யோவா. ௰௯. ௨௬: ௨௰. ௨: ௨௧. ௭, ௨௰, ௨௪.
† அல்லது வாய்நிறைபத்தக்க துண்டை.
8 லூக். ௨௨. ௩. யோவா. ௬. ௭௰.
9 யோவா. ௰௨. ௬.
10 யோவா. ௰௨. ௨௩.
11 யோவா. ௰௪. ௰௩. ௧ பே. ௪. ௰௧.
12 யோவா. ௰௭. ௧, ௪, ௫, ௬.
13 யோவா. ௰௨. ௨௩.
14 யோவா. ௭. ௩௪: ௮. ௨௧.

௨௬ இயேசுவானவர் சொன்னது: நான் இந்தத் துணிக்கையைத்† தோய்த்துக் கொடுக்கப்படுபவன் எவனோ, அவனே என்று சொல்லி, துணிக்கையைத் தோய்த்துச் சீமோன் குமாரனாகிய யூதாஸ்காரியோத்திற்குக் கொடுத்தார்; துணிக்கையை அவன் வாங்கின பின்பு,

௨௭ [8]சாத்தான் அவனுக்குள் புகுந்தான்; அப்பொழுது இயேசுவானவர் அவனை நோக்கி, நீ செய்கிறதைச் சீக்கிரமாய்ச் செய்யென்றார்.

௨௮ அவர் இப்படி அவனுடனே சொன்னதின் கருத்தைப் பந்தியில் இருந்தவர்களில் ஒருவரும் அறியவில்லை.

௨௯ சிலர் நினைத்தது; யூதா [9]பணப்பையை வைத்துக்கொண்டிருக்கிறபடியினாலே, அவன் போய்ப் பண்டிகைக்கு வேண்டிய பதார்த்தங்களைக் கொள்ளும்படிக்காவது, தரித்திரருக்கு ஏதாகிலும் கொடுக்கும்படிக்காவது, இயேசுவானவர் அவனுடனே சொல்லியிருப்பார் என்று நினைத்தார்கள்.

௩௰ அவன் அந்தத் துணிக்கையை வாங்கின உடனே, புறப்பட்டுப் போனான்; அப்பொழுது இராக்காலமாயிருந்தது.

௩௧ ¶ அவன் புறப்பட்டுப் போனபின்பு, இயேசுவானவர் சொன்னதாவது: [10]இப்பொழுது மனிதனுடைய குமாரன் மகிமைப்படுவான்; அவனாலே [11]பராபரனுடைய மகிமையும் விளங்கும்.

௩௨ [12]பராபரனுடைய மகிமை அவனாலே விளங்கும்பொழுது, பராபரன் அவனையும் மகிமைப்படுத்துவார்; [13]சீக்கிரமாய் அவனை மகிமைப்படுத்துவார்.

௩௩ பிரியமான பிள்ளைகளே, இன்னும்சிலகாலம்மாத்திரம்நான் உங்களுடனேகூட இருப்பேன்; நீங்கள் என்னைத்தேடுவீர்கள்; [14]அல்லாமலும் நான் போகும் இடத்

Digitized by Google

திற்கு நீங்கள் வரக்கூடாதென்று நான் யூதரோடே சொன்னதுபோல இப்பொழுது உங்களோடும் சொல்லுகிறேன்.

௩௪ [1]நீங்கள் ஒருவரில் ஒருவர் அன்பாயிருங்கள்; நான் உங்களிடத்தில் அன்பாயிருந்ததுபோல, நீங்களும் ஒருவரில் ஒருவர் அன்பாயிருங்கள் என்று புதிதான கற்பனையை உங்களுக்குக் கொடுக்கிறேன்.

௩௫ நீங்கள் ஒருவரில் ஒருவர் அன்பாய் இருந்தால், [2]நீங்கள் என்னுடைய சீஷர் என்று எல்லாரும் அறிவார்கள் என்றார்.

௩௬ ¶ சீமோன்பேதுரு அவரை நோக்கி, ஆண்டவரே, நீர் எங்கே போகிறீர் என்றான்; அதற்கு இயேசுவானவர் சொன்னது: நான் போகிற இடத்திற்கு நீ இப்பொழுது எனக்குப் பின்செல்லமாட்டாய்; [3]பின்பு எனக்குப் பின்செல்லுவாய் என்றார்.

௩௭ பேதுரு சொன்னது: ஆண்டவரே, நான் என்னத்தினாலே இப்பொழுது உமக்குப் பின்செல்லக்கூடாது? [4]உமக்காக என் ஜீவனைக் கொடுப்பேன் என்றான்.

௩௮ இயேசுவானவர் சொன்னது: நீ எனக்காக உன் ஜீவனைக் கொடுப்பாயா? சேவல் கூவுகிறதற்குமுன்னே நீ என்னை மூன்றுதரம் மறுதலிப்பாய் என்று மெய்யாகவே உனக்குச் சொல்லுகிறேன்.

## ௰௪. அதிகாரம்.

௧. இயேசு தம்முடைய சீஷர்களை மோட்சமடையலாமென்ற நம்பிக்கையினாலே தேற்றினது. ௬. தம்மை வழியென்றும், சத்தியமென்றும், ஜீவனென்றும், பிதாவோடே ஒருவராயிருக்கிறவரென்றும் கூறி, ௰௩. தமது நாமத்தை முன்னிட்டு அவர்கள் செய்யும் ஜெபங்கள் பலிக்குமென்கிற நிச்சயத்தைக் காட்டி, ௰௫. தம்மிடத்தில் அவர்கள் அன்பும் அடக்கமும் உடையவர்களாயிருக்கும்படி புத்திசொல்லி, ௰௬. தேற்றரவாளனாகிய பரிசுத்த ஆவியை அனுப்புவோம் என்று வாக்குத்தத்தம்பண்ணி, ௨௭. சமாதான ஆசீர்வாதத்தை அருளிச்செய்தது.

[5]உங்கள் இருதயம் கலங்காதிருப்பதாக; பராபரனில் நம்பிக்கையாயிருங்கள்; என்னிடத்திலும் நம்பிக்கையாயிருங்கள்.

௨ என் பிதாவின் வீட்டிலே அநேகம் வாசஸ்தலங்கள் உண்டு; அப்படி இல்லாதிருந்தால் நான் உங்களுக்குச் சொல்லி இருப்பேன்; [6]ஒரு ஸ்தலத்தை உங்களுக்காக எத்தனம் பண்ணப்போகிறேன்.

௩ நான் போய் உங்களுக்காக ஸ்தலத்தை எத்தனம்பண்ணின பின்பு, [7]நான் இருக்கிற இடத்திலே நீங்களும் இருக்கும்படிக்கு, [8]திரும்பிவந்து உங்களை என்னிடத்தில் சேர்த்துக்கொள்வேன்.

௪ நான் போகிற இடத்தை அறிந்திருக்கிறீர்கள்; வழியையும் அறிந்திருக்கிறீர்கள் என்று சொன்னபொழுது,

௫ ¶ தோமா என்பவன் அவரை நோக்கி, ஆண்டவரே, நீர் போகிற இடத்தை அறியமாட்டோமே, வழியை நாங்கள் எப்படி அறிவோம் என்றான்?

௬ அதற்கு இயேசுவானவர் சொன்னது: [9]நானே வழியுமாய்ச் [10]சத்தியமுமாய்ச் [11]ஜீவனுமாய் இருக்கிறேன்; [12]என்னாலே அல்லாமல் ஒருவனும் பிதாவினிடத்திற்குச் செல்லமாட்டான்.

௭ [13]நீங்கள் என்னை அறிந்தால் என் பிதாவையும் அறிந்திருப்பீர்கள்; மேலும் இப்பொழுது நீங்கள் அவரை அறிந்தும் அவரைக் கண்டும் இருக்கிறீர்கள் என்றார்.

௮ பிலிப்பு சொன்னது: ஆண்டவரே நீர் பிதாவை எங்களுக்குக் காண்பிக்கவேண்டும்; அப்பொழுது எங்களுக்குத் திர்ப்தி உண்டாயிருக்கும் என்றான்.

௯ அவனுடனே இயேசுவானவர் சொன்னது: பிலிப்பே, நான் இவ்வளவு காலம் உங்களுடனே கூட இருந்தும், நீ என்னை அறியவில்லையா? [14]என்னைக் கண்டவன் பிதாவைக் கண்டான்; அப்படி

கி. பி. ௩௩.

1 ௧ யோ. ௰௧. ௰௮. யோவா. ௰௫. ௰௨, ௰௭. எபே. ௫. ௨. ௧ தெச. ௪. ௯. யாக். ௨. ௮. ௧ பே. ௧. ௨௨. ௧ யோ. ௨. ௭, ௮: ௩. ௰௧, ௨௩: ௪. ௨௧.
2 ௧ யோ. ௨. ௫: ௪. ௨௰.
3 யோவா. ௨௧. ௰௮. ௨ பே. ௧. ௰௪.
4 மத். ௨௬. ௩௩, ௩௪, ௭௫. மாற். ௰௪. ௨௯, ௩௰, ௬௬. லூக். ௨௨. ௩௩, ௩௪.
5 உ௭. ௰௪. யோவா. ௰௬. ௨௨, ௨௩.
6 யோவா. ௰௩. ௩௩, ௩௬.
7 ௰௮, ௨௮. ௰௪. அப். ௧. ௰௩.
8 யோவா. ௰௨. ௨௬: ௰௭. ௨௪. ௧ தெச. ௪. ௰௭.
9 எபி. ௯. ௮.
10 யோவா. ௧. ௰௭: ௮. ௩௨.
11 யோவா. ௧. ௪: ௰௧. ௨௫.
12 யோவா. ௰. ௯.
13 யோவா. ௮. ௰௯.
14 யோவா. ௰௨. ௪௫. கொலோ. ௧. ௰௫. எபி. ௧. ௩.

Digitized by Google

யிருக்க, பிதாவை எங்களுக்குக் காண்பிக்கவேண்டுமென்று நீ எப்படிச் சொல்லுகிறாய்?

௰ [1]நான் பிதாவிலேயும், பிதா என்னிலேயும் இருக்கிறதை நீ விசுவாசியாமல் இருக்கலாமா? [2]நான் உங்களுடனே சொல்லுகிற வசனங்களை என்னாலே சொல்லவில்லையே; (என்) கிரியைகளையும் எனக்குள் வாசமாயிருக்கிற பிதாவானவரே செய்துவருகிறார்.

௰௧ நான் பிதாவிலேயும் பிதா என்னிலேயும் இருக்கிறதை நம்புங்கள்; (என் வசனத்தின்நிமித்தம்) நம்பாதிருந்தால், [3]என் கிரியைகளின்நிமித்தமே என்னை நம்புங்கள்.

௰௨ [4]மெய்யாகவே நான் உங்களுக்குச் சொல்லுகிறதாவது: என்னிடத்தில் விசுவாசமாய் இருக்கிறவன் நான் செய்கிற கிரியைகளைப்போலக் கிரியைகளைச் செய்வான், இவைகளிலும் அதிக பெரியவைகளையே செய்வான்; என்னத்தினாலெனில், நான் என் பிதாவினிடத்திற்குப் போகிறேன்.

௰௩ அதுவுமல்லாமல், [5]நீங்கள் என் நாமத்தினாலே கேட்டுக்கொள்வது எதுவோ, அதைப் பிதா குமாரனாலே புகழப்படும்பொருட்டு நான் செய்வேன்.

௰௪ நீங்கள் என் நாமத்தினாலே கேட்டுக்கொள்வது எதுவோ, அதை நான் செய்வேன்.

௰௫ ¶ [6]நீங்கள் என்னிடத்தில் அன்புகூர்ந்தால், என் கற்பனைகளைக் கைக்கொள்ளுங்கள்.

௰௬ மேலும் என்றென்றைக்கும் உங்களுடனேகூட இருக்கும்படிக்கான [7]சத்திய ஆவியாகிய வேறு தேற்றுகிறவரைப் பிதாவானவர் உங்களுக்குக் கொடுக்கும்படிக்கு நான் அவரை வேண்டிக்கொள்வேன்.

௰௭ [8]அந்தச் சத்திய ஆவியை [9]உலகத்தார் காணாமலும் அறியாமலும் இருக்கிறபடியால், அவர்கள் அவரை அடைந்துகொள்ளமாட்டார்கள்; [10]அவர் உங்களுடனேகூட இருந்து உங்களுக்குள்ளே இருப்பதால் நீங்கள் அவரை அறிவீர்கள்.

௰௮ [11]நான் உங்களைத் திக்கற்றவர்களாக* விடுவதில்லை.

௰௯ [12]உங்களிடத்தில் வருவேன்; சிலகாலத்திற்குப் பின்பு உலகத்தார் என்னைக் காணார்கள், [13]நீங்கள் என்னைக் காண்பீர்கள், [14]நான் பிழைக்கிறபடியால் நீங்களும் பிழைப்பீர்கள்.

௨௰ [15]நான் என் பிதாவிலேயும் நீங்கள் என்னிலேயும் நான் உங்களிலேயும் இருக்கிறதை அந்நாளிலே அறிவீர்கள்.

௨௧ [16]என் கற்பனைகளை அடைந்து அவைகளைக் கைக்கொள்ளுகிறவனே, என்னிடத்தில் அன்புகூருகிறவன்; என்னிடத்தில் அன்புகூருகிறவன்மேல் என் பிதா அன்பாயிருப்பார், நானும் அவன்மேல் அன்பாயிருந்து என்னை அவனுக்கு வெளிப்படுத்துவேன் என்று சொன்னபொழுது,

௨௨ ¶ ஸ்காரியோத்தல்லாத [17]யூதா என்பவன் அவரை நோக்கி, ஆண்டவரே, நீர் உம்மை உலகத்தாருக்கு அல்ல, எங்களுக்கு வெளிப்படுத்துகிறதற்குக் காரணம் என்ன என்றான்.

௨௩ அதற்கு இயேசுவானவர் சொன்னது: [18]ஒருவன் என்னிடத்தில் அன்புகூர்ந்தால், அவன் என் வசனத்தைக் கைக்கொள்வான், அவனிடத்தில் என் பிதா அன்பாயிருப்பார்; அல்லாமலும் [19]நாங்கள் அவனிடத்தில் வந்து அவனோடே வாசம்பண்ணுவோம்.

௨௪ என்னிடத்தில் அன்புகூராமல் இருக்கிறவன் என் வசனங்களைக் கைக்கொள்ளமாட்டான்; [20]நீங்கள் கேட்கிற வசனம் என்னுடையதல்ல, என்னை அனுப்பின பிதாவினுடையதாகவே இருக்கின்றது.

இ. பி. ௩௩.

1 ௰. ௨௪. யோவா. ௫.௩௯: ௫௭. ௨௩, ௨௩.
2 யோவா. ௭. ௰௬: எ. ௰௮: அ. ௨௮: ௰௨. ௪௯.
3 யோவா. ௭. ௩௬: ௫. ௩௮.
4 மத். ௨௩. ௨௩. மாற். ௰௬. ௫௭. லூக். ௫. ௫௭.
5 மத். எ. எ: ௨௩. ௨௨. மாற். ௰௬. ௨௪. லூக். ௰௩. ௩. யோவா. ௰௫. எ, ௰௬: ௰௬. ௨௩, ௨௪. யாக். ௩. ௫. ௧ யோ. ௩. ௨௨: ௫. ௰௪.
6 ௨௩, ௨௩. ௨௪. யோவா. ௰௫. ௰, ௰௪. ௧ யோ. ௫. ௩.
7 யோவா. ௰௫. ௨௬: ௰௬. எ. ரோ. அ. ௰௫, ௨௬.
8 யோவா. ௰௫. ௨௬: ௰௬. ௰௩. ௧ யோ. ௪. ௬.
9 ௧ கொரி. ௨. ௰௪.
10 ௧ யோ. ௨. ௨௭.
11 மத். ௨௮. ௨௰.
* அல்லதுதாயற்றவர்களாக.
12 யோவா. ௩. ௨௮.
13 யோவா. ௰௬. ௰௬.
14 ௧ கொரி. ௰௫. ௨௰.
15 ௰. ௨௪. யோவா. ௫.௩௮: ௫௭. ௨௩, ௨௩, ௨௫.
16 ௰௫, ௨௩. ௨௪. ௧ யோ. ௨. ௫: ௫. ௩.
17 லூக். ௬. ௰௬.
18 ௰௫. ௨௪.
19 ௧ யோ. ௨. ௨௪. வெளி. ௩. ௨௰.
20 ௰. ௨௪. யோவா. ௫. ௰௯, ௩௮: எ. ௰௬: அ. ௨௮: ௰௨. ௪௯.

Digitized by Google

௨௫ ¶ நான் உங்களுடனே இருக்கையில், இவைகளை உங்களுக்குச் சொன்னேன்.

௨௬ [1]பின்பு பிதாவானவர் என் நாமத்தினாலே அனுப்பும் பரிசுத்த ஆவியாகிய தேற்றுகிறவரே [2]சகலத்தையும் உங்களுக்கு உபதேசம்பண்ணி, நான் உங்களுக்குச் சொன்ன யாவையும் நீங்கள் நினைக்கும்படி செய்வார்.

௨௭ [3]சமாதானத்தை உங்களுக்குக்கொடுத்துப்போகிறேன்; என்னுடைய சமாதானத்தையே உங்களுக்குத் தருகிறேன்; உலகத்தார் கொடுக்கிறதுபோல நான் உங்களுக்குக் கொடுக்கமாட்டேன்; [4]உங்கள் இருதயம் கலங்கவும் பயப்படவும் வேண்டுவதில்லை.

௨௮ [5]நான் போய், பின்பு உங்களிடத்திற்குத் திரும்பி வருவேன் என்று நான் உங்களுடனேசொன்னதைக் கேட்டீர்களே; நீங்கள் என்னிடத்தில் அன்புகூர்ந்தீர்களானால், [6]என்னிலும் பிதா பெரியவராகையால், [7]நான் பிதாவினிடத்தில் போகிறதைக்குறித்து நீங்கள் சந்தோஷப்படுவீர்கள்.

௨௯ அது நடக்கும்பொழுது நீங்கள் விசுவாசிக்கும்படிக்கு, [8]அது நடக்கிறதற்கு முன்னாகிய இப்பொழுது அதை உங்களுக்குச் சொன்னேன்.

௩௰ ¶ இனி நான் மிகவும் உங்களுடனேபேசுவதில்லை; [9]உலகத்தின் பிரபு வருகிறானே, அவனுக்கு என்னிடத்தில் ஒன்றுமில்லை.

௩௧ நான் பிதாவினிடத்தில் அன்புகூர்ந்து, [10]அவர் எனக்குக் கட்டளையிட்டபடியே செய்கிறதை உலகத்தார் அறியும்படிக்கு, (அப்படி நடக்கும்;) எழுந்திருங்கள் இவ்விடம்விட்டுப் போகக்கடவோம்.

## ௧௫. அதிகாரம்.

௧. மெய்யான திராட்சச்செடியின் உவமையினாலே நமக்கும் நம்முடைய சீஷர்களுக்கும் இருக்கிற அன்பின் ஐக்கியத்தைக் காட்டினது. ௰அ. உலகத்தின் பகைமையும், துன்பத்தையுங்குறித்து ஆறுதல் சொன்னது. ௨௬. பரிசுத்தஆவியின் செய்கைகளையும், அப்போஸ்தலர்களுடைய செய்கைகளையுங்குறித்துச் சொன்னது.

நான் மெய்யான திராட்சச்செடி, என் பிதா திராட்சத்தோட்டக்காரன்.

௨ [11]என்னில் கனிகொடாதிருக்கிற கொடி எதுவோ, அதை அவர் எடுத்துப்போடுகிறார், கனிகொடுக்கிற கொடி அதிக கனிகளைக் கொடுக்கும்படிக்கு அதைச் சுத்தம்பண்ணுகிறார்.

௩ [12]நான் உங்களுக்குச் சொன்ன உபதேசத்தினாலே நீங்கள் இப்பொழுது சுத்தமாய் இருக்கிறீர்கள்.

௪ என்னில் [13]நிலைத்திருங்கள், நானும் உங்களில் நிலைத்திருப்பேன்; கொடியானது திராட்சச்செடியிலே நிலைத்திராவிட்டால், அது தன்னாலே கனிகொடுக்கமாட்டாததுபோல, நீங்களும் என்னில் நிலைத்திராவிட்டால் கனிகொடுக்கமாட்டீர்கள்.

௫ நானே திராட்சச்செடி, நீங்கள் கொடிகள், என்னை அன்றி* உங்களால் ஒன்றும் செய்யக்கூடாதபடியினாலே என்னிடத்தில் நிலைகொண்டும் நான் நிலைகொள்ளப்பட்டும் இருக்கிறவன் [14]மிகுந்த கனிகளைக்கொடுப்பான்.

௬ ஒருவன் என்னில் நிலைத்திராவிட்டால், [15]அவன் உலர்ந்துபோன கொடியைப்போல வெளியே போடப்படுவான்; அப்படிப்பட்டவைகளைச் சேர்த்து அக்கினியிலே போட்டுச் சுட்டெரிக்கிறார்கள்.

௭ நீங்கள் என்னிலேயும் என் வசனங்கள் உங்களிலேயும் நிலைத்திருந்தால் [16]நீங்கள் கேட்டுக்கொள்வது எதுவோ, அது உங்களுக்கு உண்டாகும்.

௮ நீங்கள் மிகுந்த கனிகளைக் கொடுத்து, [17]எனக்குச் சீஷர்களாவதினாலே [18]என் பிதா புகழப்படுவார்.

கி. பி. ௩௩.

1 ௰௪. ௨௬. லூக். ௨௪. ௪௯. யோவா. ௰௬. ௨௧: ௰௪. ௭.
2 யோவா. ௨. ௨௨: ௰௨. ௰௬: ௰௪. ௰௩. ௧ யோ. ௨. ௨௰, ௨௭.
3 பிலி. ௪. ௭. கொலோ. ௩. ௰௫.
4 ௧. ௨௭.
5 ௩, ௰அ. ௨௭.
6 ௰௨. ௨௭. யோவா. ௰௬. ௰௬: ௨௰. ௰௭.
7 யோவா. ௫. ௰அ: ௰. ௩௰. பிலி. ௨. ௬.
8 யோவா. ௰௩. ௰௯: ௰௬. ௪.
9 யோவா. ௰௨. ௩௧: ௰௬. ௰௧.
10 யோவா. ௰. ௰அ. பிலி. ௨. அ. எபி. ௫. அ.
11 மத். ௰௫. ௰௩.
12 யோவா. ௰௩. ௰: ௰௭. ௰௭. எபே. ௫. ௨௬. ௧ பே. ௧. ௨௨.
13 கொலோ. ௧. ௨௩. ௧ யோ. ௨. ௬.
* அல்லது என்னில் பிரிக்கப்பட்டு, அப். ௪. ௰௨.
14 ஓசே. ௰௪. அ. பிலி. ௧. ௰௧: ௪. ௰௩.
15 மத். ௩. ௰: ௭. ௰௯.
16 ௰௪. ௰௪. யோவா. ௰௬. ௰௩: ௰௯. ௨௨.
17 யோவா. அ. ௩௧: ௰௩. ௩௫.
18 மத். ௫. ௰௬. பிலி. ௧. ௰௧.

Digitized by Google

௯ ¶ பிதா என்னிடத்தில் அன்புகூர்ந்திருக்கிறதுபோல, நானும் உங்களிடத்தில் அன்புகூருகிறேன்; என்னுடைய அன்பிலே நிலைத்திருங்கள்.

௰ நான் என் பிதாவின் கற்பனைகளைக் கைக்கொண்டு, அவருடைய அன்பிலே நிலைத்திருக்கிறதுபோல, [1]நீங்களும் என் கற்பனைகளைக் கைக்கொண்டிருந்தால், என்னுடைய அன்பிலே நிலைத்திருப்பீர்கள்.

௰௧ ¶ உங்களிடத்தில் என்னுடைய சந்தோஷம் நிலைத்திருக்கும்படிக்கும், [2]உங்கள் சந்தோஷம் நிறைவாயிருக்கும்படிக்கும், நான் இவைகளை உங்களுக்குச் சொன்னேன்.

௰௨ [3]நான் உங்களிடத்தில் அன்புகூர்ந்திருக்கிறதுபோல, நீங்களும் ஒருவரில் ஒருவர் அன்பாய் இருக்கவேண்டுமென்று கட்டளையிடுகிறேன்.

௰௩ [4]ஒருவன் தன் சிநேகிதருக்காகத் தன் பிராணனைக் கொடுக்கும்படியான அன்புக்கு அதிகமான அன்பு ஒருவரிடத்திலும் இல்லை.

௰௪ நான் உங்களுக்குக் கட்டளையிடுகிற யாவையும் நீங்கள் செய்தால் [5]என்னுடைய சிநேகிதராய் இருப்பீர்கள்.

௰௫ ஊழியக்காரனானவன் தன் எசமான் செய்கிறதை அறியாதிருக்கிறபடியால், இனி நான் உங்களை ஊழியக்காரர் என்று சொல்லமாட்டேன்; [6]நான் என் பிதாவினிடத்தில் கேள்விப்பட்ட யாவையும் உங்களுக்கு அறிவித்தபடியினாலே, நான் உங்களைச் சிநேகிதரென்று சொல்லுகிறேன்.

௰௬ [7]நீங்கள் என்னைத் தெரிந்துகொள்ளவில்லை; [8]நீங்கள் என்னுடைய நாமத்தினாலே பிதாவானவரிடத்தில் கேட்டுக்கொள்வது எதுவோ, அதை அவர் உங்களுக்குக் கொடுக்கத்தக்கதாக நீங்கள் புறப்பட்டுக் கனிகளைக் கொடுக்கும்படிக்கும் உங்கள் கனிகள் நிலைத்திருக்கும்படிக்கும், [9]நானே உங்களைத் தெரிந்துகொண்டு ஏற்படுத்தினேன்.

௰௭ [10]நீங்கள் ஒருவரில் ஒருவர் அன்பாயிருக்கவேண்டுமென்றே உங்களுக்குக் கட்டளையிடுகிறேன்.

௰௮ ¶ [11]உலகத்தார் உங்களைப் பகைக்கும்பொழுது அவர்கள் உங்களுக்குமுன்னே என்னைப் பகைத்தார்கள் என்று நினைக்கக்கடவீர்கள்.

௰௯ [12]நீங்கள் உலகத்தாராயிருந்தால் உலகத்தார் தங்களைச் சேர்ந்தவர்களாகிய (உங்களைச்) சிநேகிப்பார்கள்; [13]நீங்கள் உலகத்தாராயிராமல் என்னாலே உலகத்திலிருந்து தெரிந்துகொள்ளப்பட்டவர்களாய் இருக்கிறபடியினாலே, உலகத்தார் உங்களைப் பகைக்கிறார்கள்.

௨௰ [14]ஊழியக்காரன் தன் எசமானுக்கு மேற்பட்டவன் அல்லவென்று நான் உங்களுக்குச் சொன்ன வசனத்தை நினைத்துக்கொள்ளுங்கள்; அவர்கள் என்னைத் துன்பப்படுத்தினதுபோல, உங்களையும் துன்பப்படுத்துவார்கள்; [15]அவர்கள் என் வசனத்தைக் கைக்கொண்டதுபோல, உங்களுடையதையும் கைக்கொள்ளுவார்கள்.

௨௧ என்னை அனுப்பினவரை அறியாதபடியினாலே [16]அவர்கள் என் நாமத்தின்நிமித்தமே இப்படிப்பட்ட யாவையும் உங்களுக்குச் செய்வார்கள்.

௨௨ [17]நான் வந்து அவர்களுக்குச் சொல்லாதிருந்தேனானால், அவர்களுக்குப் பாவம் உண்டாயிருக்கமாட்டாது; [18]இப்பொழுது அவர்கள் தங்கள் பாவத்திற்காகப் போக்குச்சொல்ல* இடமில்லை.

௨௩ [19]என்னைப் பகைக்கிறவன் என் பிதாவையும் பகைக்கிறான்.

௨௪ [20]மற்றொருவன் செய்யாத கிரியைகளை நான் அவர்களுக்

ஒ. பி. ௯௯.

1 யோவா. ௰௪. ௰௫, ௨௧, ௨௩.
2 யோவா. ௰௬. ௨௪: ௰௭. ௰௩. ௧ யோ. ௧. ௪.
3 யோவா. ௰௩. ௩௪. ௧ தெச. ௪. ௯. ௧ பே. ௪. ௮. ௧ யோ. ௩. ௰௧: ௪. ௨௧.
4 ரோ. ௫. ௰௧, ௰௫. உரோ. ௫. ௭, ௮. எபே. ௫. ௨. ௧யோ. ௩. ௰௬.
5 யோவா. ௰௪. ௰௫, ௨௩. மத். ௰௨. ௫௦.
6 ௧ யோ. ௰௮. ௰௮. யோவா. ௰௭. ௨௬. அப். ௨௦. ௨௭.
7 யோவா. ௬. ௭௦: ௰௩. ௰௮. ௧யோ. ௪. ௰, ௰௯.
8 மத். ௨௮. ௰௯. மாற். ௰௬. ௰௫. கொலோ. ௧. ௬.
9 எ. ௯௪. யோவா. ௰௪. ௰௩.
10 ௰௨. ௩௪.
11 ௧ யோ. ௩. ௧, ௰௩.
12 ௧ யோ. ௪. ௫.
13 யோவா. ௰௭. ௰௪.
14 மத். ௰. ௨௪. லூக். ௬. ௪௦. யோவா. ௰௩. ௰௬.
15 எசே. ௩. ௭.
16 மத். ௰. ௨௨: ௨௪. ௯. யோவா. ௰௬. ௩.
17 யோவா. ௯. ௪௧.
18 உரோ. ௧. ௨௦. யாக். ௪. ௰௭.
* அல்லது பாவத்தை மறைக்க.
19 ௧ யோ. ௨. ௨௩.
20 யோவா. ௩. ௨: ௭. ௩௧: ௯. ௩௨.

குள்ளே செய்யாதிருந்தேனானால், அவர்களுக்குப் பாவம் உண்டாயிருக்கமாட்டாது; அவைகளை அவர்கள் கண்டிருந்தும், என்னையும் என்பிதாவையும்பகைக்கிறார்கள்.

௨௫ [1]நிமித்தம் இல்லாமல் என்னைப் பகைத்தார்கள் என்று அவர்களுடைய வேதத்தில் எழுதியிருக்கிற வாக்கியம் நிறைவேறத்தக்கதாக (இப்படிச் செய்கிறார்கள்).

௨௬ ¶ பிதாவினிடத்திலிருந்து நான் உங்களுக்கு அனுப்பப்படுபவருமாய், பிதாவினிடத்திலிருந்து புறப்படுகிறவருமாய் இருக்கிற [2]சத்திய ஆவியாகிய தேற்றுகிறவர் வரும்பொழுது [3]அவர் என்னைக்குறித்துச் சாட்சிகொடுப்பார்.

௨௭ [4]நீங்களும் ஆதிமுதல் என்னுடனேகூட இருந்தபடியால் [5]சாட்சிகொடுப்பீர்கள்.

## ௰௬. அதிகாரம்.

*௧. கிறிஸ்து தம்முடைய சீஷர்களுக்கு வரும் துன்பத்தைக்குறித்து ஆறுதலாகப் பரிசுத்தஆவியின் வருகையையும், தாம் உயிர்த்தெழுந்து பரமண்டலத்துக்கு ஏறுவதையும் முன் அறிவித்தது. ௨௩. தம்முடைய நாமத்தில் செய்யப்படும் விண்ணப்பம் பிதாவினால் அங்கிகரிக்கப்படுமென்று நிருவகம்பற்றி, ௩௩. அவர்கள் தமக்குள் சமாதானமும் உலகத்திலே துன்பமும் அடைவார்கள் என்று சொன்னது.*

[6]நீங்கள் வழுவாதபடிக்கு இவைகளைஉங்களுடனேசொன்னேன்.

௨ [7]அவர்கள் உங்களைச் செபஆலயத்திற்குப் புறம்பாக்குவார்கள்; [8]அதுவுமல்லாமல் உங்களைக் கொலைசெய்கிறவன் எவனோ, அவன் பராபரனுக்கு ஆராதனை செய்கிறேன் என்று நினைக்கும் காலம் வரும்.

௩ [9]அவர்கள் பிதாவையும் என்னையும் அறியாதபடியினாலே இப்படிப்பட்டவைகளை உங்களுக்குச் செய்வார்கள்.

௪ அந்தக் காலம் வரும்பொழுது [10]நான் இப்பொழுது உங்களுக்குச் சொன்னதை நீங்கள் நினைக்கும்படிக்கு, இவைகளை உங்களுடனே சொன்னேன்; [11]நான்தானே உங்களுடனேகூட இருந்தபடியினாலே, நான் இவைகளை ஆரம்பத்திலே உங்களுடனே சொல்லவில்லை.

௫ [12]இப்பொழுது நான் என்னை அனுப்பினவரிடத்திற்குப் போகிறேன்; எங்கே போகிறீர் என்று உங்களில் ஒருவனும் என்னிடத்தில் கேளாமல்,

௬ நான் இவைகளை உங்களுக்குச் சொன்னதினாலே [13]துக்கம் நிறைந்த இருதயமுள்ளவர்களாய் இருக்கிறீர்கள்.

௭ ¶ நான் உங்களுக்குச் சத்தியத்தைச் சொல்லுகிறேன்; நான் போகிறது உங்களுக்குப் பிரயோசனமாயிருக்கும்;எப்படியெனில் நான் போகாதிருந்தால் [14]அந்தத் தேற்றுகிறவர் உங்களிடத்தில் வாரார்; [15]போவேனேயாகில் அவரை உங்களிடத்திற்கு அனுப்புவேன்.

௮ அவர் வந்து, பாவத்தையும் நீதியையும் நியாயத்தீர்ப்பையும் குறித்து உலகத்தாருக்கு மெய்யறிவைக் கொடுப்பார்.*

௯ [16]அவர்கள் என்னிடத்தில் விசுவாசமாய் இராதபடியினாலே பாவத்தைக்குறித்தும்,

௰ [17]நீங்கள் இனி என்னைக் காணாதபடிக்கு நான் என் பிதாவினிடத்திற்குப் போகிறபடியினாலே [18]நீதியைக்குறித்தும்,

௰௧ [19]இவ்வுலகத்தின் பிரபு நியாயத்தீர்ப்பு அடைந்தபடியினாலே [20]நியாயத்தீர்ப்பைக்குறித்துமே அறிவைக் கொடுப்பார்.

௰௨ ¶ நான் இன்னும் அநேககாரியங்களை உங்களுக்குச் சொல்லவேண்டியிருக்கிறது; [21]நீங்கள் அவைகளை இப்பொழுது சகிக்கமாட்டீர்கள்.

௰௩ [22]சத்திய ஆவியானவர் வரும்பொழுது [23]சகல சத்தியத்திலேயும் உங்களை நடத்துவார்; அவர் தம்முடைய சுயமாய்ப் பேசாமல், தாம்கேள்விப்படுபவைகள் எவைகளோ அவைகளைப் பேசி இனி

ஓ. பி. ௩௱௱.

1 சங். ௩௫. ௰௯: ௬௯. ௪.
2 லூக். ௨௪.௪௯, யோவா.௰௪.௰௭, ௨௬: ௰௬.௭,௰௩, அப். ௨. ௩௩.
3 ௧ யோ. ௫. ௬.
4 லூக். ௧. ௨. ௧ யோ. ௧.௧,௨.
5 லூக். ௨௪.௪௮. அப்.௧. ௮, ௨௧, ௨௨: ௨. ௩௨: ௩. ௰௫: ௪. ௨௰, ௩௩: ௫. ௩௨: ௰. ௩௯: ௰௩. ௩௧. ௧ பே. ௫. ௧, ௨ பே. ௧. ௰௬.
6 மத். ௰௧. ௬: ௨௪.௰:௨௬.௩௧.
7 யோவா. ௯. ௨௨, ௩௪: ௰௨. ௪௨.
8 அப். ௮. ௧: ௯. ௧:௨௬.௯,௰,௰௧.
9 யோவா. ௰௫. ௨௧. ௨ரோ. ௰, ௨.௧கொரி.௨.௮. ௧தீமோ. ௧. ௰௩.
10 யோவா. ௰௩. ௰௯: ௰௪. ௨௯.
11 மத். ௯. ௰௫.
12 ௰, ௰௬. ௩௪. யோவா. ௭.௩௩: ௰௩.௩: ௰௪.௨௮.
13 ௨௨. ௩௪. யோவா. ௰௪. ௧.
14 யோவா. ௭. ௩௯: ௰௪. ௰௬, ௨௬: ௰௫. ௨௬.
15 அப். ௨. ௩௩. எபே. ௪. ௮.
* அல்லது கடிந்துகொள்ளுவார்.
16 அப். ௨.௨௨-௩௭.
17 அப். ௨. ௩௨.
18 யோவா. ௩. ௰௪: ௫. ௩௨.
19 அப்.௨௬. ௰௮.
20 லூக். ௰. ௰௮. யோவா. ௰௨. ௩௧. எபே. ௨. ௨.கொலோ.௨. ௰௫. எபி.௨.௰௪.
21 மாற். ௪. ௩௩. ௧ கொரி. ௩. ௨. எபி. ௫. ௰௨.
22 யோவா. ௰௪. ௰௭: ௰௫. ௨௬.
23 யோவா. ௰௪. ௨௬. ௧ யோ. ௨. ௨௰, ௨௭.

Digitized by Google

வரும் காரியங்களையும் உங்களுக்கு அறிவிப்பார்.

௰௪ அவர் என்னுடையதிலே எடுத்து உங்களுக்கு அறிவிப்பதால், அவர் என்னுடைய மகிமையை விளங்கப்பண்ணுவார்.

௰௫ [1]பிதாவினுடையவைகள் யாவும் என்னுடையவைகள்; அதினாலே அவர் என்னுடையதில் எடுத்து உங்களுக்கு அறிவிப்பார் என்று சொன்னேன்.

௰௬ [2]நான் பிதாவினிடத்திற்குப் போகிறபடியினாலே, [3]சற்றுக்காலமானபின்பு நீங்கள் என்னைக் காணாமல் இருப்பீர்கள்; மறுபடியும் சற்றுக்காலமானபின்பு என்னைக் காண்பீர்கள் என்றும் அவர் சொன்னபொழுது,

௰௭ ¶ அவருடைய சீஷரில் சிலர் தங்களுக்குள்ளே பேசிக்கொண்டதாவது: சற்றுக்காலமானபின்பு என்னைக் காணாமல் இருப்பீர்கள் என்றும், மறுபடியும் சற்றுக்காலமானபின்பு என்னைக் காண்பீர்கள் என்றும், நான் பிதாவினிடத்தில் போகிறேன் என்றும் அவர் நம்முடனே சொன்னதின் கருத்தென்ன?

௰௮ சற்றுக்காலமென்று அவர் சொன்னதின் கருத்தென்ன? அவர் சொன்னது நமக்கு விளங்கவில்லையே என்றார்கள்.

௰௯ பின்னும் தம்மிடத்தில் அவர்கள் வினாவ விரும்புகிறதை இயேசுவானவர் அறிந்து அவர்களுடனே சொன்னது: சற்றுக்காலமானபின்பு என்னைக் காணாதிருப்பீர்கள்; மறுபடியும் சற்றுக்காலமானபின்பு என்னைக் காண்பீர்கள் என்று நான் சொன்னதைக் குறித்தா நீங்கள் உங்களுக்குள்ளே விசாரிக்கிறீர்கள்?

௨௰ மெய்யாகவே நான் உங்களுக்குச் சொல்லுகிறதாவது: நீங்கள் அழுது புலம்புவீர்கள், உலகத்தார் சந்தோஷப்படுவார்கள்; நீங்கள் துக்கப்படுவீர்கள், உங்கள் துக்கம் சந்தோஷமாகும்.

௨௧ [4]கருப்பஸ்திரியானவளுக்குப் பிரசவகாலம் வந்தபொழுது அவள் துக்கமடைகிறாள்; பிள்ளை பெற்றபின்பு ஒரு மனிதன் உலகத்தில் பிறந்ததினாலே வருகிற சந்தோஷத்தின்நிமித்தம் அந்த உபத்திரவத்தை நினையாள்.

௨௨ அதுபோல [5]நீங்களும் இப்பொழுது துக்கம் அடைந்திருக்கிறீர்கள்; நான் மறுபடியும் உங்களைக் காண்பேன், [6]அப்பொழுது உங்கள் இருதயம் சந்தோஷப்படும்; அல்லாமலும் உங்கள் சந்தோஷத்தை ஒருவனும் உங்களிடத்திலிருந்து எடுத்துப்போடமாட்டான்.

௨௩ அந்த நாளிலே நீங்கள் ஒன்றையும் என்னிடத்தில் கேட்கமாட்டீர்கள்; [7]மெய்யாகவே நான் உங்களுக்குச் சொல்லுகிறதாவது: நீங்கள் என் நாமத்தினாலே பிதாவினிடத்தில் கேட்டுக்கொள்வது எதுவோ, அதை அவர் உங்களுக்குக் கொடுப்பார்.

௨௪ இதுவரைக்கும் நீங்கள் என் நாமத்தினாலே ஒன்றையும் கேட்கவில்லை; கேட்டுக்கொள்ளுங்கள், [8]அப்பொழுது உங்கள் சந்தோஷம் நிறைவாய் இருக்கும்படிக்குப் பெற்றுக்கொள்வீர்கள்.

௨௫ ¶ இவைகளை நான் உவமைகளாய்* உங்களுடனே பேசினேன்; காலம் வரும், அப்பொழுது நான் பிதாவைக்குறித்து உவமைகளாய்† உங்களுடனே பேசாமல், வெளிப்படையாகவே உங்களுக்கு அறிவைக் கொடுப்பேன்.

௨௬ [9]அந்த நாளிலே நீங்கள் என் நாமத்தினாலே விண்ணப்பம் பண்ணுவீர்கள்; உங்களைக்குறித்து நான் பிதாவை நோக்கிக் கேட்டுக்கொள்ளுகிறேன் என்று உங்களுடனே சொல்லமாட்டேன்.

௨௭ [10]நீங்கள் என்னைச் சிநேகித்து, என்னைப் பராபரனிடத்திலிருந்து வந்தவன் என்று விசுவா

கி. பி. ௩௩.

1 மத். ௰௧. ௨௭. யோவா. ௩. ௩௫: ௰௩. ௩: ௰௭. ௰.
2 உ௮. வ௪. யோவா. ௰௩. ௩.
3 ௰. வ௪. யோவா. ௭. ௩௩: ௰௩. ௩௩: ௰௪. ௰௯.
4 ஏசா. ௨௬. ௰௭.
5 ௬. வ௪.
6 லூக். ௨௪. ௪௧, ௫௨. யோவா. ௰௪. ௧, ௨௭: ௨௰. ௨௰. அப். ௨. ௪௬: ௰௩. ௫௨. ௧ பே. ௧. ௮.
7 மத். ௭. ௭. யோவா. ௰௪. ௰௩: ௰௫. ௰௬.
8 யோவா. ௰௫. ௰௧.
* அல்லது பழமொழிகளாய்.
† அல்லது பழமொழிகளாய்.
9 ௨௩. வ௪.
10 யோவா. ௰௪. ௨௧, ௨௩.

Digitized by Google

சித்திருக்கிறபடியினாலே, [1]பிதாவானவர் தாமே உங்களைச் சிநேகிக்கிறாரே.

உஅ [2]நான் பிதாவினிடத்திலிருந்து புறப்பட்டு உலகத்திலே வந்தேன்; மறுபடியும் உலகத்தைவிட்டுப் பிதாவினிடத்திற்குப் போகிறேன் என்று சொன்னபொழுது,

உக ¶ அவருடைய சீஷர் அவரை நோக்கி, இப்பொழுது நீர் *உவமை இல்லாமல் வெளிப்படையாய்ப் பேசுகிறீர்.

௩௰ [3]நீர் எல்லாவற்றையும் அறிந்திருக்கிறீர் என்றும், ஒருவன் உம்மிடத்தில் வினவுகிறது உமக்கு வேண்டுவதில்லை என்றும் இப்பொழுது அறிந்திருக்கிறோம்; [4]இதினாலே நீர் பராபரனிடத்திலிருந்து வந்ததை விசுவாசிக்கிறோம் என்றார்கள்.

௩௧ அதற்கு இயேசுவானவர் சொன்னது: இப்பொழுது விசுவாசிக்கிறீர்கள்; கேளுங்கள்,

௩௨ [5]நீங்கள் என்னைத் தனியே வைத்துச் சிதறி அவரவரிடத்திற்குப்† போகும் நேரம் வரும்; [6]அது இப்பொழுது வந்திருக்கின்றது; நான் தனித்திரேன்; [7]பிதாவானவர் என்னுடனே இருக்கிறார்.

௩௩ [8]என்னாலே நீங்கள் சமாதானமுள்ளவர்களாய் இருக்கும்படிக்கு, இவைகளை உங்களுடனே சொன்னேன்.

௩௪ [9]இவ்வுலகத்தில் உங்களுக்கு உபத்திரவம் உண்டாயிருக்கும்; [10]ஆனாலும் தயிரியங்கொள்ளுங்கள்; [11]நானே உலகத்தைச் செயித்தேன் என்றார்.

## ௰எ. அதிகாரம்.

௧. கிறிஸ்து தம்முடைய பிதாவை நோக்கித் தம்மை மகிமைப்படுத்தவும், ௬. அப்போஸ்தலர்களை, ௰௧. ஒருமைப்பிலும், ௰எ. சத்தியத்திலும் காக்கவும், உ௰. அவர்களோடே மற்றெல்லா விசுவாசிகளையும் தம்முடனேகூட மோட்சத்தில் மகிமைப்படுத்தவும் வேண்டிக்கொண்டது.

இவைகளை இயேசுவானவர் சொன்னபின்பு, அவர் தம்முடைய கண்களை வானத்திற்கு நேராக உயர்த்தித் திருவுளம்பற்றினதாவது:

உ [12]பிதாவே, நேரம் வந்தது; [13]நீர் உம்முடைய குமாரனுக்குக் கொடுத்த யாவருக்கும் அவன் நித்தியசீவனைக் கொடுக்கும்பொருட்டாய், [14]மனிதர் யாவர்மேலும் அவனுக்கு அதிகாரம் கொடுத்தபடியே உம்முடைய குமாரன் உம்முடைய மகிமையை விளக்கும்படிக்கு நீர் அவனை மகிமைப்படுத்துவீராக.

௩ [15]ஒன்றான மெய்த்தேவனாகிய உம்மையும் நீர் [16]அனுப்பின இயேசுக்கிறிஸ்துவையும் [17]அறிந்துகொள்ளுகிறதே நித்தியசீவன்.

௪ [18] பூமியிலே நான் உம்முடைய மகிமையை விளக்கினேன், [19]நான் செய்யும்படிக்கு நீர் கொடுத்த கிரியையை [20]முடித்தேன்.

௫ இப்பொழுது பிதாவே, உலகம் உண்டாகிறதற்குமுன்னே [21]உம்மிடத்தில் எனக்கு உண்டாயிருந்த உம்முடைய மகிமையினாலே என்னை மகிமைப்படுத்தும்.

௬ ¶ நீர் [22]உலகத்தாரில் எடுத்து எனக்குக் கொடுத்த மனிதருக்கு [23]உம்முடைய நாமத்தை வெளிப்படுத்தினேன்; அவர்கள் உம்முடையவர்களாய் இருந்தார்கள்; அவர்களை எனக்கு ஒப்புக்கொடுத்தீர்; அவர்கள் உம்முடைய வசனத்தைக் கைக்கொண்டிருக்கிறார்கள்.

எ நீர் எனக்குக் கொடுத்த யாவும் உம்மாலே உண்டாயின என்று அவர்கள் இப்பொழுது அறிந்துகொண்டார்கள்.

அ அல்லாமலும், [24]நீர் எனக்குக் கொடுத்த வசனங்களை நான் அவர்களுக்குக் கொடுத்தேன்; [25]அவர்கள் அவைகளை ஏற்றுக்கொண்டு, என்னை உம்மிடத்திலிருந்து புறப்பட்டு வந்தவன் என்று மெய்

கி. பி. ௩௩.

1 ௩௰. வச. யோவா. ௩. ௰௬: ௰எ. அ.
2 யோவா. ௰௩. ௩.
* அல்லது பழமொழி.
3 யோவா. உ௧. ௰எ.
4 உஎ. வச. யோவா. ௰எ. அ.
5 மத். உ௬. ௩௧. மாற். ௰௪. உஎ.
† அல்லதுசொந்தத்துக்கு.
6 யோவா.உ௰.௰.
7 யோவா. அ. உ௯: ௰௪.௰,௰௬.
8 ஏசா. .௯ ௬. யோவா. ௰௪. உஎ. உரோ. ௫. ௧. எபே. உ. ௰௪. கொலோ. ௧. உ௰.
9 யோவா. ௰௫. ௰௯, உ௰, உ௧. உதீமோ. ௩.௰உ.
10 யோவா. ௰௪. ௧.
11 உரோ.அ.௩எ. ௧யோ. ௪. ௪: ௫. ௪.
12 யோவா. ௰உ. உ௩: ௰௩. ௩உ.
13 தானி. எ. ௰௪. மத். ௰௧. உஎ: உஅ. ௰அ. யோவா. ௩. ௩௫: ௫. உஎ. ௧ கொரி. ௰௫. உ௫, உஎ. பிலி. உ.௰.எபி. உ. அ.
14 ௬,௯,உ௪.வச. யோவா. ௬.௩எ.
15யோவா.௩.௩௪: ௫. ௩௬, ௩எ: ௬. உ௯, ௫எ: ௭. ௩௩: ௰௬. ௪உ.
16 ௧ கொரி. அ. ௪. ௧ தெச. ௧. ௯.
17 ஏசா. ௫௩.௰௧. எரே. ௯. உ௪.
18 யோவா. ௰௩. ௩௧: ௰௪. ௰௩.
19 யோவா.௪.௩௪: ௫. ௩௬: ௯. ௪: ௰௯. ௩௰.
20 யோவா. ௰௪. ௩௧: ௰௫. ௰.

21 யோவா. ௧.௧,உ: ௰.௩௰: ௰௪.௯. பிலி. உ.௬. கொலோ. ௧.௰௫,௰எ. எபி. ௧.௩,௰.—22 உ௬.வச. சங். உஉ.உஉ.
23 உ,௯,௰௧.வச.யோவா.௬.௩எ,௩௩:௰.உ௯:௰௫.௰௯.—24 யோவா.அ.உஅ:௰உ.௪௯:௰௪.௰.—25 உ௫.வச.யோவா.௰௬.உஎ,௩௰.

Digitized by Google

யாய் அறிந்து, நீர் என்னை அனுப்பினீர் என்று விசுவாசித்திருக்கிறார்கள்.

௯ நான் அவர்களுக்காக வேண்டிக்கொள்ளுகிறேன்; [1]உலகத்தாருக்காக அல்ல, நீர் எனக்குக் கொடுத்தவர்கள் உம்முடையவர்களானபடியால் அவர்களுக்காக வேண்டிக்கொள்ளுகிறேன்.

௰ என்னுடைய யாவும் உம்முடையவைகள் [2]உம்முடையவைகள் என்னுடையவைகளாயிருக்கின்றன; என்னுடைய மகிமை அவர்களுக்குள்ளே விளங்கியிருக்கின்றது.

௰௧ [3]நான் உலகத்தில் இனி இரேன்; அவர்கள் உலகத்திலே இருப்பார்கள், நான் உம்மிடத்திற்கு வருகிறேன்; பரிசுத்தமுள்ள பிதாவே, [4]நீர் எனக்குக் கொடுத்தவர்கள் [5]நம்மைப்போல [6]ஒன்றாயிருக்கும்படிக்கு, நீர் அவர்களை உம்முடைய நாமத்திலே காத்துக்கொள்ளும்.

௰௨ இவ்வுலகத்திலே நான் அவர்களுடனேகூட இருக்கையில், [7]அவர்களை உம்முடைய நாமத்திலே காத்துக்கொண்டேன்; நீர் எனக்குக் கொடுத்தவர்களைக் காத்துக்கொண்டு வந்தேன்; [8]வேதவாக்கியம் நிறைவேறத்தக்கதாக, [9]கேட்டின் மகன் கெட்டுப்போனானே அல்லாமல், [10]அவர்களில் ஒருவனாயினும் கெட்டுப்போகவில்லை.

௰௩ இப்பொழுது நான் உம்மிடத்திற்கு வருகிறேன்; இவர்கள் என்னில் நிறைவாய்ச் சந்தோஷப்படும்படிக்கு இவ்வுலகத்திலே இவைகளைச் சொல்லுகிறேன்.

௰௪ ¶ [11]நான் உம்முடைய வசனத்தை இவர்களுக்குக் கொடுத்தேன்; மேலும் [12]நான் இவ்வுலகத்தின் தன்மை இல்லாதவனாயிருக்கிறதுபோல, அவர்களும் இவ்வுலகத்தின் தன்மை இல்லாதவர்களாய் இருக்கிறபடியினாலே [13]உலகத்தார் அவர்களைப் பகைக்கிறார்கள்.

௰௫ நீர் அவர்களை உலகத்திலிருந்து எடுத்துக்கொள்ளும்படி அல்ல, [14]அவர்களைப் பொல்லாங்கிலிருந்து காப்பாற்றும்படி வேண்டிக்கொள்ளுகிறேன்.

௰௬ [15]நான் உலகத்தான் அல்லாதவனாயிருக்கிறதுபோல, அவர்களும் இவ்வுலகத்தார் அல்ல.

௰௭ [16]உம்முடைய சத்தியத்தினாலே அவர்களைப் பிரதிஷ்டையாக்கும், [17]உம்முடைய வசனமே சத்தியம்.

௰௮ [18]நீர் என்னை இவ்வுலகத்தில் அனுப்பினதுபோல, நானும் அவர்களை உலகத்தில் அனுப்புகிறேன்.

௰௯ [19]அல்லாமலும் அவர்களும் சத்தியமாய்ப் *பிரதிஷ்டையாக்கப்பட்டவர்களாய் இருக்கும்படிக்கு அவர்களுக்காக நான் என்னைத்தானே பிரதிஷ்டையாக்குகிறேன்.

௨௰ ¶ அல்லாமலும் நான் இவர்களுக்காகமாத்திரம் அல்ல, இவர்களுடைய போதிப்பினாலே என்னிடத்தில் விசுவாசமாகும் பேர்களுக்காகவும், [20]எல்லாரும் ஒன்றாயிருக்கும்படிக்கு வேண்டிக்கொள்ளுகிறேன்.

௨௧ ஆ பிதாவே, நீர் என்னை அனுப்பினதை உலகத்தார் விசுவாசிக்கத்தக்கதாக, [21]நீர் என்னிலேயும் நான் உம்மிலேயும் இருக்கிறதுபோல, அவர்களும் நம்மிலே ஒன்றாயிருக்கும்படிக்கே (வேண்டிக்கொள்ளுகிறேன்).

௨௨ அல்லாமலும் [22]நாம் ஒன்றாயிருக்கிறதுபோல அவர்களும் ஒன்றாயிருக்கும்படிக்கு, நீர் எனக்குக் கொடுத்த மகிமையை நான் அவர்களுக்குக் கொடுத்தேன்.

௨௩ [23]அவர்கள் ஒருமைப்பாட்டிலே நிறைந்தவர்களாயிருக்கும்படிக்கும், நீர் என்னை அனுப்பினதையும் நீர் என்னிடத்தில் அன்புகூருகிறதுபோல அவர்களிடத்தி

கி. பி. ௩௩.

1 ௧ யோ. ௫. ௰௩.
2 யோவா. ௰௬. ௰௫.
3 யோவா. ௰௩. ௧: ௰௬. ௨௮.
4 ௧ பே. ௧. ௫. யூதா. ௧.
5 ௨௧. ௨௨.
6 யோவா. ௰. ௩௰.
7 யோவா. ௬. ௩௯: ௰. ௨௮. எபி. ௨. ௰௩.
8 சங். ௱௯. ௮. அப். ௧. ௨௰.
9 யோவா. ௬. ௭௰: ௰௩. ௰௮.
10 யோவா. ௰௮. ௯. ௧ யோ. ௨. ௰௯.
11 ௮. ௨௬.
12 யோவா. ௮. ௨௩. ௰௪. ௨௬.
13 யோவா. ௰௫. ௰௮, ௰௯. ௧ யோ. ௩. ௰௩.
14 மத். ௯. ௰௩. கலா. ௧. ௪. ௨ தெச. ௩. ௩. ௧ யோ. ௫. ௰௮.
15 ௰௪. ௨௬.
16 யோவா. ௰௫. ௩. அப். ௰௫. ௯. எபே. ௫: ௨௬. ௧ பே. ௧. ௨௨.
17 ௨ சாமு. ௭. ௨௮. சங். ௱௰௯. ௱௪௨. யோவா. ௮. ௪௰.
18 யோவா. ௨௰. ௨௧.
19 ௧ கொரி. ௧. ௨, ௩௰. ௧ தெச. ௪. ௭. எபி. ௰. ௰.
* அல்லது சத்தியத்தினாலே பரிசுத்தமாக்கப்பட்டவர்களாய்.
20 ௰௧, ௨௨, ௨௩. ௨௬. யோவா. ௰. ௰௬. ரோ. ௰௨. ௫. கலா. ௩. ௨௮.
21 யோவா. ௰. ௩௮: ௰௪. ௰௧.
22 யோவா. ௰௪. ௨௰. ௧ யோ. ௧. ௩: ௩. ௨௪.
23 கொலோ. ௩. ௰௪.

Digitized by Google

னும் அன்புகூருகிறதையும் உலகத்தார் அறியும்படிக்கும், நான் அவர்களிலேயும் நீர் என்னிலேயும் இருக்கவேண்டும்.

௨௪ ¶ [1]பிதாவே, [2]உலகம் தோன்றின காலத்திற்குமுன்னே, நீர் என்னிடத்தில் அன்புகூர்ந்தபடியினாலே, எனக்குக் கொடுத்த என்னுடைய மகிமையை நீர் எனக்குக் கொடுத்தவர்கள் காணும்படிக்கு, நான் இருக்கும் இடம் எங்கேயோ, அங்கே அவர்களும் என்னோடேகூட இருக்கவேண்டும் என்று விரும்புகிறேன்.

௨௫ நீதியுள்ள பிதாவே, [3]உலகத்தார் உம்மை அறியவில்லை; [4]நான் உம்மை அறிந்திருக்கிறேன். அல்லாமலும் [5]நீர் என்னை அனுப்பினதை இவர்கள் அறிந்திருக்கிறார்கள்.

௨௬ அன்றியும் [6]நீர் என்னிடத்தில் வைத்திருக்கிற அன்பு இவர்களிலே இருக்கும்படிக்கும், நான் இவர்களிலே இருக்கும்படிக்கும், [7]உம்முடைய நாமத்தை இவர்களுக்குத் தெரியப்படுத்தினேன்; பின்னும் அப்படியே தெரியப்படுத்துவேன் என்றார்.

## ௰௮. அதிகாரம்.

௧. யூதா இயேசுவைக் காட்டிக்கொடுத்தது. ௬. சேவகர் தரையில் விழுந்தது. ௰. பேதுரு மல்குஸின் காதை வெட்டினது. ௰௨. அன்னா, காய்பா என்பவர்களுக்குமுன்பாக இயேசு கொண்டுபோகப்பட்டது. ௰௫ பேதுரு மறுதலித்தது. ௰௯ இயேசுவானவர் காய்பாவுக்குமுன்பாகச் சோதிக்கப்பட்டது. ௨௮. அவர் பிலாத்துக்குமுன்பாக குற்றஞ் சாற்றப்பட்டது. ௩௩. தாம் தம்முடைய இராசரீகத்தைக்குறித்துச் சொல்லியது ௩௯. யூதர்கள் பரபாவை விடுதலையாக்கும்படி கேட்டுக்கொண்டது.

இயேசுவானவர் இவைகளைச் சொன்னபின்பு [8]அவர் தம்முடைய சீஷருடனேகூடக் [9]கீதிரோன் என்னும் ஆற்றுக்கு அப்புறம் போனார்; அங்கே ஒரு தோட்டம் இருந்தது; அதிலே அவரும் அவருடைய சீஷரும் பிரவேசித்தார்கள்.

௨ [10]இயேசுவானவர் தம்முடைய சீஷருடனேகூட அடிக்கடி அங்கே கூடிவந்திருந்தபடியினாலே, அவரைக் காட்டிக்கொடுத்த யூதாவும் அந்த இடத்தை அறிந்தான்.

௩ [11]ஆதலால் யூதாவானவன் போர்ச்சேவகரின் கூட்டத்தையும் பிரதான ஆசாரியர் பரிசேயர் என்பவர்களால் அனுப்பப்பட்ட ஊழியக்காரரையும் கூட்டிக்கொண்டு, பந்தங்களோடும் தீவட்டிகளோடும் ஆயுதங்களோடும் அவ்விடத்திற்குப் போனான்.

௪ ¶ அப்பொழுது இயேசுவானவர் தமதுமேல் வரும் யாவையும் அறிந்து புறப்பட்டு அவர்களை நோக்கி, யாரைத் தேடுகிறீர்கள் என்றார்.

௫ அதற்கு அவர்கள் நாசரேத்தூரானாகிய இயேசுவைத் தேடுகிறோம் என்றார்கள்; இயேசுவானவர், நானே அவன் என்றார்; அவரைக் காட்டிக்கொடுத்த யூதாவும் அவர்களுடனேகூட நின்றான்.

௬ நானே அவன் என்று அவர் சொன்னபொழுது, அவர்கள் பின்னிட்டுத்தரையிலே விழுந்தார்கள்.

௭ பின்பு அவர் மறுபடியும் அவர்களை நோக்கி, யாரைத் தேடுகிறீர்கள் என்று கேட்டார்; நாசரேத்தூரானாகிய இயேசுவைத் தேடுகிறோம் என்றார்கள்.

௮ இயேசுவானவர் சொன்னது: நானே அவன் என்று உங்களுடனே சொன்னேனே, நீங்கள் என்னைத் தேடினீர்களானால் இவர்களை விட்டுவிடுங்கள் என்றார்.

௯ அதினாலே, [12]நீர் எனக்குக் கொடுத்தவர்களில் ஒருவனையாகிலும் நான் இழக்கவில்லை என்று அவர் சொல்லிய வசனம் நிறைவேறிற்று.

௰ ¶ [13]அப்பொழுது சீமோன் பேதுரு தன்னிடத்தில் இருக்கிற கத்தியை உருவிப் பிரதான ஆசாரியனுடைய வேலைக்காரனுடைய வலதுகாதற வெட்டினான், அந்த வேலைக்காரனுக்கு மல்குஸ் என்று பேர்.

கி. பி. ௩௩.

1 யோவா. ௰௨. ௨௩: ௰௩. ௧. ௬ அதி. ௫. ௰௭.
2 ௫. ௨௪.
3 யோவா. ௰௫. ௨௧: ௰௬. ௩.
4 யோவா. ௭. ௨௯: ௮. ௫௫: ௰. ௰௫.
5 அ. ௨௫. யோவா. ௰௬. ௨௭.
6 யோவா. ௰௫. ௯.
7 ௬. ௨௫. யோவா. ௰௫. ௰௫.
8 மத். ௨௬: ௩௬. மாற். ௰௪. ௩௨. லூக். ௨௨. ௩௯.
9 ௨ சாமு. ௰௫. ௨௩.
10 லூக். ௨௧: ௩௭: ௨௨. ௩௯.
11 மத். ௨௬. ௪௭. மாற். ௰௪. ௪௩. லூக். ௨௨. ௪௭. அப். ௧. ௰௬.
12 யோவா. ௰௭. ௰௨.
13 மத். ௨௬. ௫௧. மாற். ௰௪. ௪௭. லூக். ௨௨. ௫௦.

Digitized by Google

௰௧ இயேசுவானவர் பேதுருவை நோக்கி, கத்தியை உறையிலே போடு, [1]பிதா எனக்குக் கொடுத்த பாத்திரத்தில் நான் பானம்பண்ணாமல் இருப்பேனா என்றார்.

௰௨ ¶ பின்பு போர்ச்சேவகரும், ஆயிரம் சேனைக்குத் தலைவனும், யூதர்களுடைய ஊழியக்காரரும் இயேசுவைப் பிடித்து, அவரைக் கட்டி,

௰௩ [2]முதலாவது அன்னா என்பவனிடத்தில்[3]கொண்டுபோனார்கள்; அந்த அன்னா அவ்வருஷத்துப் பிரதான ஆசாரியனாகிய காய்பா என்பவனுக்கு மாமனாயிருந்தான்.*

௰௪ [4]ஒரே மனிதன் சனங்களுக்குப் பதிலாக மடிந்துபோனால், நலமாயிருக்கும் என்று யூதருக்கு ஆலோசனை சொன்னவன் அந்தக் காய்பாவே.

௰௫ ¶ [5]சீமோன்பேதுருவும் வேறொரு சீஷனும் இயேசுவுக்குப் பின்சென்றார்கள்; அல்லாமலும் அந்தச் சீஷன் பிரதான ஆசாரியனுக்கு அறிமுகமுள்ளவனாய், இயேசுவுடனேகூடப் பிரதான ஆசாரியனுடைய மாளிகைக்குள் பிரவேசித்தான்.

௰௬ [6]பேதுரு வெளிவாசற்படியிலே நின்றான்; ஆதலால் பிரதான ஆசாரியனுக்கு அறிமுகமுள்ள அந்த மற்றச் சீஷன் வெளியே போய், வாசலைக் காக்கிறவளுடனே சொல்லி, பேதுருவை உள்ளே அழைத்துக்கொண்டான்.

௰௭ அப்பொழுது வாசலைக் காக்கிற வேலைக்காரி பேதுருவை நோக்கி, நீயும் அந்த மனிதனுடைய சீஷரில் ஒருவன் அல்லவா என்றாள்; அவன், நான் அப்படிப்பட்டவன் அல்ல என்றான்.

௰௮ குளிர்ச்சியான காலமானபடியினாலே வேலைக்காரரும் ஊழியக்காரரும் நெருப்பு உண்டாக்கி நின்று குளிர்காய்ந்தார்கள்; அவர்களுடனே பேதுருவும் நின்று குளிர்காய்ந்தான்.

௰௯ ¶ பிரதான ஆசாரியன் இயேசுவானவருடைய சீஷரையும் போதகத்தையும் குறித்து அவரிடத்தில் வினாவினான்.

௨௰ அதற்கு இயேசுவானவர் சொன்னதாவது: [7]அந்தரங்கத்திலே நான் ஒன்றும் பேசாமல் வெளியரங்கமாய் லோகத்துடனே பேசினேன்; செபஆலயத்திலேயும், யூதர்கள் எல்லாரும் கூடிவருகிற தேவாலயத்திலேயும் எப்பொழுதும் உபதேசம்பண்ணினேன்.

௨௧ என்னத்திற்கு நீர் என்னிடத்தில் விசாரிக்கிறீர்? எனக்குச் செவிகொடுத்தவர்களுக்கு நான் சொல்லியவைகளைக்குறித்து அவர்களிடத்திலே விசாரிப்பீராக; நான் பேசினவைகளை அறிந்திருக்கிறார்களே என்றார்.

௨௨ இப்படி அவர் சொன்னபொழுது, சமீபமாய் நின்ற ஊழியக்காரரில் ஒருவன் பிரதான ஆசாரியனுக்கு இப்படி மாறுத்தரவு சொல்லலாமா என்று சொல்லி,[8]இயேசுவானவரை ஒரு அடி அடித்தான்†; அவனுடனே இயேசுவானவர் சொன்னது:

௨௩ நான் தகாதவிதமாய்ச் சொன்னேனானால், தகாததாய் இருக்கிறதை ஒப்புவி, நான் தகுதியாய்ச் சொல்லியிருக்க என்னத்தினாலே என்னை அடிக்கிறாய் என்றார்.

௨௪ [9]அன்னா என்பவன் கட்டப்பட்டவரான அவரைப் பிரதான ஆசாரியனான காய்பாவினிடத்திற்கு அனுப்பியிருந்தான்.

௨௫ ¶ சீமோன்பேதுரு நின்று குளிர்காய்ந்தான்; [10]அப்பொழுது சிலர் அவனை நோக்கி, நீயும் அவனுடைய சீஷரில் ஒருவன் அல்லவா என்றார்கள்; அதற்கு அவன், நான் அல்லவென்று மறுதலித்தான்.

௨௬ பின்பு பிரதான ஆசாரியனுடைய வேலைக்காரரில் ஒருவனுமாய்ப் பேதுருவினாலே காதற வெட்டப்பட்டவனுக்கு இனத்

கி. பி. ௩௩.

1 மத். ௨௰. ௨௨: ௨௬. ௩௯, ௪௨.
2 லூக். ௩. ௨.
3 மத். ௨௬. ௫௭.
* அன்னா இயேசுவைக் கட்டப்பட்டவராக பிரதான ஆசாரியனாகிய காய்பாவண்டைக்கு அனுப்பினான்; ௨௪. வச.
4 யோவா. ௰௧. ௫௰.
5 மத். ௨௬. ௫௮. மாற். ௰௪. ௫௪. லூக். ௨௨. ௫௪.
6 மத். ௨௬. ௬௯. மாற். ௰௪. ௬௬. லூக். ௨௨. ௫௫.
7 மத். ௨௬. ௫௫. லூக். ௪. ௰௫. யோவா. ௭. ௰௪, ௨௬, ௨௮: ௮. ௨.
8 எரே. ௨௰. ௨. அப். ௨௩. ௨.
† அல்லது தடியினால் அடித்தான்.
9 மத். ௨௬. ௫௭.
10 மத். ௨௬. ௬௯, ௭௧. மாற். ௰௪. ௬௯. லூக். ௨௨. ௫௮.

Digitized by Google

னுமாய் இருந்தவன் அவனை நோக்கி, நான் உன்னை அவரோடே தோட்டத்திலே காணவில்லையா என்றான்.

௨௭ அப்பொழுது பேதுரு மறுபடியும் மறுதலித்தான்; [1]உடனே சேவல் கூவிற்று.

௨௮ ¶ விடியற்காலமானபொழுது அவர்கள் காய்பாவினிடத்திலிருந்து [2]இயேசுவானவரைப் பெரிய துரையின் நியாயஸ்தலத்திற்குக்* கொண்டுபோனார்கள்; [3]அவர்கள் அசுசிப்படாமல் பஸ்காவைப் புசிக்கும்படிக்கு, தாங்கள் அந்த நியாயஸ்தலத்திற்குள் பிரவேசிக்கவில்லை.

௨௯ ஆதலால் பிலாத்தென்னும் துரை அவர்களிடத்திற்குப் போய், இந்த மனிதன்மேல் என்ன குற்றம் சாற்றுகிறீர்கள் என்றான்.

௩௰ அவனுடனே அவர்கள் சொன்னது: இவன் பொல்லாங்கு செய்தவன் அல்லாதவனாயிருந்தால், இவனை உமக்கு ஒப்புக்கொடுக்கமாட்டோம் என்றார்கள்.

௩௧ ஆதலால் பிலாத்தென்பவன் அவர்களை நோக்கி, இவனை நீங்களே கொண்டுபோய், உங்கள் நியாயசாஸ்திரத்தின்படி இவனுக்கு நியாயத்தீர்ப்புக் கொடுங்கள் என்றான்; அதற்கு யூதர்கள் சொன்னது: ஒருவனுக்கு மரணத்தைக் கொடுக்கிறதற்கு எங்களிடத்தில் அதிகாரம் இல்லையே என்றார்கள்.

௩௨ [4]இயேசுவானவர் தமக்கு மரணம் வரும் வகையைக்குறித்துச் சொன்ன வசனம் நிறைவேறத்தக்கதாக (அப்படிப் பேசினார்கள்).

௩௩ ¶ [5]அப்பொழுது பிலாத்தானவன் மறுபடியும் நியாயஸ்தலத்திற்குள் பிரவேசித்து இயேசுவை அழைத்து, நீ யூதருடைய இராசனா என்று கேட்டான்.

௩௪ அவனுடனே இயேசுவானவர் சொன்னது: இதை நீர் உம்மாலே சொல்லுகிறீரோ? அல்லது மற்றவர்கள் என்னைக்குறித்து இதை உமக்குச் சொன்னார்களோ என்றார்.

௩௫ பிலாத்து மறுமொழியாகச் சொன்னது: நான் யூதனா? உன்னுடைய தேசத்தாரும் பிரதான ஆசாரியரும் உன்னை எனக்கு ஒப்புக்கொடுத்தார்கள், என்ன செய்தாய் என்றான்.

௩௬ [6]அதற்கு இயேசுவானவர் சொன்னது: [7]என் இராச்சியம் இவ்வுலகத்தின் தன்மையுள்ளதல்ல, என் இராச்சியம் இவ்வுலகத்தின் தன்மையுள்ளதானால், நான் யூதர் கையில் அகப்படாதபடிக்கு, என் ஊழியக்காரர் போராட்டம்செய்வார்கள்; என் இராச்சியம் இம்மையின் தன்மையுடையதல்ல என்றார்.

௩௭ அப்பொழுது பிலாத்தானவன் அவரை நோக்கி, ஆதலால் நீ இராசன் அல்லவா என்றான்; இயேசுவானவர் சொன்னது: நீர் சொல்லுகிறபடி நான் இராசன்தான்; சத்தியத்தைக்குறித்துச் சாட்சிகொடுக்கும்படிக்கு நான் பிறந்தேன், அதற்காகவே இவ்வுலகத்திற்கு வந்தேன்; [8]சத்தியத்தின் தன்மையுள்ளவன் எவனோ, அவன் எனக்குச் செவிகொடுக்கிறான் என்றார்.

௩௮ ¶ அதற்குப் பிலாத்து, சத்தியம் எது என்று சொல்லி, மறுபடியும் யூதரிடத்திற்குப்போய், அவர்களை நோக்கி, [9]நான் அவனிடத்தில் ஒரு குற்றமும் காணேன்.

௩௯ [10]பஸ்காப்பண்டிகையிலே நான் உங்களுக்காக ஒருவனை விடுதலைபண்ணுகிறது வழக்கமாயிருக்கிறதே; ஆகையால் நான் யூதருடைய இராசனை உங்களுக்காக விடுதலைபண்ண உங்களுக்கு விருப்பமுண்டா என்றான்.

௪௰ [11]அப்பொழுது அவர்களெல்லாரும் இவனை அல்ல, பரபாவை விடுதலைபண்ணவேண்டும் என்று கூப்பிட்டார்கள்; [12]பரபா என்பவன் கள்ளனாயிருந்தான்.

கி. பி. ௩௩.

1 மத். ௨௬. ௭௪. மாற். ௧௪. ௭௨. லூக். ௨௨. ௬௦. யோவா. ௰௩. ௩௮.
2 மத். ௨௭. ௨. மாற். ௧௫. ௧. லூக். ௨௩. ௧. அப். ௩. ௧௩.
* அல்லது பிலாத்தினின் வீட்டுக்கு. மத். ௨௭. ௨௭.
3 அப். ௰. ௨௮; ௧௧. ௩.
4 மத். ௨௰. ௧௯. யோவா. ௰௨. ௩௨, ௩௩.
5 மத். ௨௭. ௧௧.
6 ௧ தீமோ. ௬. ௧௩.
7 தானி. ௨. ௪௪; ௭. ௧௪. லூக். ௧௨. ௧௪. யோவா. ௬. ௧௫: அ. ௧௫.
8 யோவா. அ. ௪௭. ௧ யோ. ௩. ௰௯; ௪. ௬.
9 மத். ௨௭. ௨௪. லூக். ௨௩. ௪. யோவா. ௰௯. ௪, ௬.
10 மத். ௨௭. ௧௫. மாற். ௧௫. ௬. லூக். ௨௩. ௧௭.
11 அப். ௩.௰௪.
12 லூக்.௨௩.௰௯.

## ௰௯. அதிகாரம்.

௧. கிறிஸ்து வாரினால் அடிக்கவும், முள்முடி தரிக்கவும், கையினால் அறையவும்பட்டது. ௪. பிலாத்து அவரை விடுதலைபாக்க நினைத்தும், யூதர்களுடைய அமளியினால் சிலுவையில் அறையும்படி அவரை ஒப்புவித்தது. ௨௩. அவர்கள் அவருடைய வஸ்திரங்களுக்காகச் சீட்டுப்போட்டது. ௨௬. அவர் தம்முடைய தாயாரை யோவானிடத்தில் ஒப்புவித்து, ௩௰. மரணமடைந்தது. ௩௪. அவருடைய விலாவிலே ஈட்டியினால் குத்தப்பட்டது. ௩௮. யோசேப்பும் நிக்கொதேமும் அவரை அடக்கம்பண்ணினது.

அப்பொழுது [1]பிலாத்தென்பவன் இயேசுவைப் பிடித்து வாரினால் அடிப்பித்தான்.

௨ அல்லாமலும் போர்ச்சேவகர் முள்ளுக்களினால் ஒரு முடியைப் பின்னி அதை அவருடைய சிரசின்மேல் வைத்து, ஒரு சிவப்பான அங்கியை அவருக்குத் தரிப்பித்து,

௩ யூதருடைய இராசாவே, வாழ்க என்று சொல்லி, அவருடைய கன்னத்தில் அடித்தார்கள்.

௪ பிலாத்தானவன் மறுபடியும் வெளியேபோய் அவர்களை நோக்கி, இதோ, [2]இவனிடத்தில் ஒரு குற்றத்தையும் நான் காணாமலிருக்கிறதை நீங்கள் அறியும்படிக்கு இவனை உங்களிடத்தில் கொண்டுவருகிறேன் என்றான்.

௫ உடனே முள்முடியும் சிவப்பான அங்கியும் தரிக்கப்பட்டவராய் இயேசுவானவர் வெளியே வந்தார்; அப்பொழுது பிலாத்து அவர்களை நோக்கி, இந்த மனிதனைப் பாருங்கள் என்றான்.

௬ [3]பிரதான ஆசாரியரும் ஊழியக்காரரும் அவரைக் கண்டபொழுது, இவனைச் சிலுவைமரத்திலே அறையும், இவனைச் சிலுவைமரத்திலே அறையும் என்று கூப்பிட்டார்கள்; அதற்குப் பிலாத்து சொன்னது: இவனிடத்தில் ஒரு குற்றத்தையும் காணவில்லையே; ஆகையால் நீங்களே இவனைக் கொண்டுபோய், சிலுவைமரத்தில் அறையுங்கள் என்றான்.

௭ யூதர்கள் மறுமொழியாகச் சொன்னது: [4]எங்களுக்கு ஒரு நியாயப்பிரமாணம் உண்டு; இவன் [5]தன்னைப் பராபரனுடைய குமாரனென்று சொன்னபடியினாலே, அந்த நியாயப்பிரமாணத்தின்படியே இவன் சாகவேண்டும் என்றார்கள்.

௮ ¶ இந்த வசனத்தைப் பிலாத்து கேட்டபொழுது அதிகமாய்ப் பயந்து, மறுபடியும் நியாயஸ்தலத்திற்குள்ளே போய்,

௯ இயேசுவானவரை நோக்கி, நீ எவ்விடத்தான் என்றான்; [6]அதற்கு இயேசுவானவர் மாறுத்தரம் சொல்லவில்லை.

௰ ஆதலால் பிலாத்து அவரை நோக்கி, நீ எனக்கு மறுமொழி சொல்லுகிறதில்லையா? உன்னைச் சிலுவைமரத்தில் அறையும்படியும் எனக்கு அதிகாரம் உண்டென்றும், உன்னை விடுதலைபண்ணும்படியும் எனக்கு அதிகாரம் உண்டென்றும் நீ அறியாமலா இருக்கிறாய் என்றான்.

௰௧ இயேசுவானவர் சொன்னது: இந்த அதிகாரம் உமக்கு உயரத்திலிருந்து கொடுக்கப்படாதிருந்தானால், [7]எனக்கு விரோதமாய்ச் செய்யும் அதிகாரம் உமக்கு உண்டாயிருக்கமாட்டாது; ஆனபடியினாலே என்னை உமக்கு ஒப்புக்கொடுத்தவன் அதிக பாவமுள்ளவன் என்றார்.

௰௨ ¶ அதுமுதல் பிலாத்தானவன் அவரை விடுதலைபண்ணத் தேடினான்; யூதர்கள் அவனை நோக்கி, [8]இவனை விடுதலைபண்ணினால் நீ இராயனுக்குச் சிநேகிதன் அல்ல, [9]தன்னை இராசா என்கிறவன் எவனோ அவன் இராயனுக்கு விரோதியாய் இருக்கிறான் என்று கூப்பிட்டார்கள்.

௰௩ [10]அந்நாள் பஸ்காவுக்கு எத்தனமாக்கப்படுகிற நாளுமாய், ஏறக்குறைய ஆறும்மணி நேரமுமாயிருக்க,

௰௪ பிலாத்தானவன் இந்த வசனத்தைக் கேட்டபொழுது, அவன்

இ. பி. ௩௩.

1 மத். ௨௭. ௨௬: ௨௭. ௨௯. மாற். ௰௫. ௰௫. லூக். ௰௮. ௩௩.
2 யோவா. ௰௮. ௩௮.
3 அப். ௩. ௰௩.
4 லேவி. ௨௪. ௰௬.
5 மத். ௨௬. ௬௫. யோவா. ௫. ௰௮: ௰. ௩௩.
6 ஏசா. ௫௩. ௭. மத். ௨௭. ௰௨, ௰௪.
7 லூக். ௨௨. ௫௩. யோவா. ௭. ௩௰.
8 லூக். ௨௩. ௨.
9 அப். ௰௭. ௭.
10 மத். ௨௭. ௬௨.

Digitized by Google

இயேசுவை வெளியே அழைத்துப்போய், தளவரிசைப்படுத்தின இடமென்றும், எபிரேயுபாஷையிலே கப்பத்தா என்றும் சொல்லப்பட்ட இடத்திலே நியாயாசனத்தின்மேல் உளுக்காந்து யூதர்களை நோக்கி, உங்கள் இராசாவைப் பாருங்கள் என்றான்.

௧௫ அவர்கள், இவனை அகற்றும் அகற்றும், இவனைச் சிலுவைமரத்திலே அறையுமென்று கூப்பிட்டார்கள்; பிலாத்தானவன் சொன்னது: உங்கள் இராசாவை நான் சிலுவைமரத்திலே அறையலாமா என்றான்; அதற்குப் பிரதான ஆசாரியர், [1]இராயனே அல்லாமல் ஒரு இராசா எங்களுக்கு இல்லை என்றார்கள்.

௧௬ [2]அப்பொழுது அவரைச் சிலுவைமரத்தில் அறையும்படிக்கு அவன் அவரை அவர்களுக்கு ஒப்புக்கொடுத்தான்; அந்தப்படி அவர்கள் இயேசுவானவரைப் பிடித்துக்கொண்டு போனார்கள்.

௧௭ ¶ [3]அவர் தம்முடைய சிலுவைமரத்தைச் சுமந்துகொண்டு, எபிரேயு பாஷையிலே [4]கொல்கதா என்று சொல்லப்பட்ட தலையோட்டிடம் என்னும் இடத்திற்குப் புறப்பட்டுப்போனார்.

௧௮ அங்கே அவர்கள், நடுவிலே அவரையும் அவருடனேகூட இருபக்கங்களிலே வேறிரண்டு பேரையும் சிலுவைமரங்களில் அறைந்தார்கள்.

௧௯ ¶ அன்றியும் பிலாத்தானவன் [5]நாசரேத்தூரானாகிய இயேசு யூதருடைய இராசா என்று எபிரேயுபாஷையிலேயும் கிரேக்கைப்பாஷையிலேயும் இலத்தீன்பாஷையிலேயும் எழுதி, அதைச் சிலுவைமரத்தின்மேல் சேர்த்தான்.

௨௦ இயேசுவானவர் சிலுவையில் அறையப்பட்டிருந்த இடம் நகரத்திற்குச் சமீபமாய் இருந்தபடியினாலே, யூதர்களில் அநேகம் பேர் அந்த மேல் எழுத்தை வாசித்தார்கள்.

௨௧ அப்பொழுது யூதருடைய பிரதான ஆசாரியர் பிலாத்துவினிடத்திற்குப் போய், யூதருடைய இராசா என்று நீர் எழுதாமல் நான் யூதருடைய இராசா என்று அவன் சொன்னான் என்றே எழுதவேண்டும் என்றார்கள்.

௨௨ அதற்குப் பிலாத்து நான் எழுதினது எழுதியாயிற்று என்றான்.

௨௩ ¶ [6]போர்ச்சேவகர் இயேசுவைச் சிலுவைமரத்திலே அறைந்தபின்பு அவருடைய வஸ்திரங்களை எடுத்து, ஒவ்வொரு சேவகனுக்கு ஒவ்வொரு பங்கு வரும்படி நாலு பங்காக்கினார்கள்; அங்கியையும் எடுத்தார்கள்; அந்த அங்கி தைத்தலில்லாமல் மேலேதொடங்கி முழுவதும் நெய்யப்பட்டிருந்தபடியால்,*

௨௪ அவர்கள் இதைக் கிழியாமல் இதைப் பெற்றுக்கொள்ளுகிறவனை அறியும்படிக்குச் சீட்டுப்போடக்கடவோம் என்று தங்களுக்குள்ளே பேசிக்கொண்டார்கள்; [7]என் வஸ்திரங்களைத் தங்களுக்குள்ளே பங்கிட்டுக்கொண்டு என் உடையின்மேல் சீட்டுப்போட்டார்கள் என்கிற வேதவாக்கியம் நிறைவேறத்தக்கதாகப் போர்ச்சேவகர் அப்படிச் செய்தார்கள்.

௨௫ ¶ [8]அல்லாமலும் இயேசுவின் சிலுவைமரத்தின் அருகே அவருடைய தாயும், அவளுடைய சகோதரியாகிய கிலேயோப்பா† மரியாளும், [9]மகுதல ஊராளாகிய மரியாளும் நின்றார்கள்.

௨௬ அப்பொழுது இயேசுவானவர் தம்முடைய தாயையும், [10]அங்கே நின்ற தமக்கு அன்பான சீஷனையும் கண்டு,

௨௭ தம்முடைய தாயை நோக்கி, [11]ஸ்திரியே, இவனே உன் மகன் என்றார்; பின்பு அந்தச் சீஷனை நோக்கி, இவளே உன் தாய் என்றார்; [12]அந்நேரம்முதற்கொண்டு

இ. பி. ௩௩.

1 ௧ மோ. ௪௯. ௰.
2 மத். ௨௭. ௨௬, ௩௧. மாற். ௰௫. ௰௫. லூக். ௨௩. ௨௪.
3 மத். ௨௭. ௩௧, ௩௩. மாற். ௰௫. ௨௧,௨௨. லூக். ௨௩. ௨௬, ௩௩.
4 ௪ மோ. ௰௫. ௩௬. எபி. ௰௩. ௰௨.
5 மத். ௨௭. ௩௭. மாற். ௰௫. ௨௬. லூக். ௨௩. ௩௮.
6 மத். ௨௭. ௩௫. மாற். ௰௫. ௨௪. லூக். ௨௩. ௩௪.

* அல்லது தையலில்லாமல் செய்யப்பட்ட.

7 சங். ௨௨. ௰௮.

8 மத். ௨௭. ௫௫. மாற். ௰௫. ௪௦. லூக். ௨௩. ௪௯.

† அல்லது கிலோப்பா.

9 லூக். ௨௪. ௰௮.

10 யோவா. ௰௩. ௨௩: ௨௦. ௨: ௨௧. ௭, ௨௦, ௨௪.

11 யோவா. ௨. ௪.

12 யோவா. ௧. ௰௧: ௰௬. ௩௨.



Digitized by Google

அந்தச் சீஷன் அவளைத் தன்னிடமாய்ச் சேர்த்துக்கொண்டான்.

௨௮ ¶ இதின்பின்பு இயேசுவானவர் எல்லாம் முடிந்து தீர்ந்ததென்று அறிந்து, [1]வேதவாக்கியம் நிறைவேறத்தக்கதாகத் தாகமாயிருக்கிறேன் என்றார்.

௨௯ அங்கே காடி நிறைந்த பாத்திரம் வைக்கப்பட்டிருந்தது; [2]ஆதலால் அவர்கள் கடற்காளானைக் காடியில் தோய்த்து, ஈசோப்புத் தண்டில் மாட்டி, அவருடைய வாயினிடத்திற்கு நீட்டிக் கொடுத்தார்கள்.

௩௰ இயேசுவானவர் காடியை வாங்கினபின்பு, [3]முடிந்ததென்று சொல்லித் தலையைச் சாய்த்து, ஆவியை ஒப்புவித்தார்.

௩௧ ¶ [4]அந்த நாள் பெரிய ஓய்வு நாளுக்கு ஆயத்தநாளானபடியினாலே, [5]உடல்கள் அந்த ஓய்வுநாளிலே சிலுவைமரங்களில் இராதபடி யூதர்கள் பிலாத்துவினிடத்தில் போய் அவர்களுடைய கால் எலும்புகள் முறிக்கப்படும்படிக்கும் உடல்கள் எடுத்துப்போடப்படும்படிக்கும் அவனிடத்தில் உத்தரவு கேட்டுக்கொண்டார்கள்.

௩௨ அந்தப்படி போர்ச்சேவகர் போய், அவருடனேகூடச் சிலுவைகளில் அறையப்பட்ட முந்தினவனுடைய கால் எலும்புகளையும் மற்றவனுடைய கால் எலும்புகளையும் முறித்தார்கள்.

௩௩ அவர்கள் இயேசுவினிடத்தில் சேர்ந்தபொழுது அவர் மரித்ததைக் கண்டு, அவருடைய கால் எலும்புகளை முறிக்கவில்லை.

௩௪ போர்ச்சேவகரில் ஒருவன் ஈட்டியினால் அவருடைய விலாவில் குத்தினான்; [6]உடனே இரத்தமும் சலமும் புறப்பட்டன.

௩௫ ¶ அதைக் கண்டவன் அதைக்குறித்துச் சாட்சிகொடுக்கிறான்; அவனுடைய சாட்சி மெய்யாய் இருக்கின்றது; நீங்கள் விசுவாசிக்கும்படிக்கு, தான் சொல்லுகிறது மெய்யென்று அவன் அறிந்திருக்கிறான்.

௩௬ அவருடைய [7]எலும்புகளில் ஒன்றும் முறிக்கப்படுவதில்லை என்கிற வேதவாக்கியம் நிறைவேறத்தக்கதாக இவை நடந்தன.

௩௭ அல்லாமலும் [8]தாங்கள் குத்தினவரைப் பார்ப்பார்களென்றும் வேறு வேதவாக்கியம் சொல்லுகின்றது.

௩௮ ¶ [9]அதற்குப்பின்பு அரிமத்தியா ஊரானுமாய், இயேசுவானவருக்குச் சீஷனாயிருந்தும் [10]யூதர்களுக்குப் பயப்பட்டதினாலே அதை மறைத்தவனுமாயிருந்த யோசேப்பென்பவன் இயேசுவினுடைய சரீரத்தை எடுத்துக்கொள்ளும்படிக்குப் பிலாத்துவினிடத்தில் உத்தரவு கேட்டான்; பிலாத்து உத்தரவு கொடுத்தான். ஆகையால் அவன் போய், இயேசுவின் சரீரத்தை எடுத்துக்கொண்டான்.

௩௯ [11]ஆரம்பத்திலே ஓர் இராத்திரியில் இயேசுவினிடத்திற்குப் போயிருந்த நிக்கோதேமு என்பவனும் சேர்ந்து, வெள்ளைப்போளமும் கரியபோளமும் கலந்த ஏறக்குறைய நூறுராத்தல் பரிமளத்தைக்கொண்டுவந்தான்.

௪௰ அவர்கள் இயேசுவின் சரீரத்தை எடுத்துக்கொண்டு, [12]யூதர்கள் சவங்களில் சுகந்தவருக்கமிடுகிற வழக்கத்தின்படி, அதைச் சுகந்தவருக்கங்களுடனேகூடச் சேலைகளில் கட்டினார்கள்.

௪௧ மேலும் அவர் சிலுவையில் அறையப்பட்ட இடத்திலே ஒரு தோட்டமும், அந்தத் தோட்டத்திலே ஒருக்காலும் ஒருவரும் வைக்கப்பட்டிராத புதிய கல்லறையும் இருந்தது.

௪௨ [13]யூதருடைய ஆயத்தநாளானபடியினாலும் அந்தக் கல்லறை சமீபமானபடியினாலும் இயேசுவானவரை [14]அவ்விடத்திலே வைத்தார்கள்.

இ. பி. ௩௩.

1 சங். ௬௯. ௨௧.
2 மத். ௨௭. ௪௮.
3 யோவா. ௰௭. ௪.
4 ௪௨. வச. மாற். ௰௫. ௪௨.
5 ௫ மோ. ௨௧. ௨௩.
6 ௧ யோ. ௫. ௬, ௮.
7 ௨ மோ. ௰௨. ௪௬. ௪ மோ. ௯. ௰௨. சங். ௩௪. ௨௦.
8 சக். ௧௨. ௰௦, ௰௭. சகரி. ௰௨. ௰. வெளி. ௧. ௭.
9 மத். ௨௭. ௫௭. மாற். ௰௫. ௪௨. லூக். ௨௩. ௫௦.
10 யோவா. ௯. ௨௨: ௰௨. ௪௨.
11 யோவா. ௩. ௧, ௨: ௭. ௫௦.
12 அப். ௫. ௬.
13 ௧௩. ௪௨.
14 ஏசா. ௫௩. ௯.

Digitized by Google

## உ௰. அதிகாரம்.

க. மரியாளும், ங. பேதுருவும், யோவானும், அவர் உயிர்த்தெழுந்ததை அறியாமல் கல்லறையினிடத்திற் போனது. ௰க. இயேசு மகதலேனா மரியாளுக்கும், ௰௯. தம்முடைய சீஷர்களுக்கும் காட்சியானது. உச. தோமாவின் அவநம்பிக்கையையும் நல்லறிக்கையையும்குறித்துச் சொல்லியது. ௩௰. வேதவெழுத்துகள் இரட்சண்ணியத்துக்குப் போதுமானவைகளென்பது.

[1]பின்பு வாரத்தின் முதலாம்கிழமை காலையிலே இருட்டிருக்கையில், மகதலேனாளாகிய மரியாள் கல்லறையினிடத்திற்குப் போய், அதில் இருந்த கல்லை எடுத்துப்போட்டதைக் கண்டாள்.

உ ஆதலால் அவள் ஓடி, சீமோன் பேதுருவினிடத்திலும் [2]இயேசுவுக்கு அன்பாயிருந்த மற்றச் சீஷனிடத்திலும் போய், கல்லறையிலிருந்த கர்த்தரை எடுத்துக்கொண்டார்கள்; அவரை வைத்த இடம் எங்களுக்குத் தெரியவில்லை என்றாள்.

௩ [3]அப்பொழுது பேதுருவும், அந்த மற்றச் சீஷனும் கல்லறையினிடத்திற்குப் போகும்படி புறப்பட்டு, இருவரும் ஒருமித்து ஓடினார்கள்.

ச பேதுருவிலும் அந்த மற்றச் சீஷன் அதிக துரிதமாய் ஓடி, முந்திக்கல்லறையினிடத்தில்சேர்ந்து,

ரு குனிந்து நின்று அதற்குள்ளே பார்க்கையில், [4]சேலைகள் வைத்திருக்கக் கண்டான்.

சு அவன் உள்ளே போகவில்லை; சீமோன்பேதுரு அவனுக்குப் பின்சென்று போய், கல்லறைக்குள்ளே பிரவேசித்து,

எ [5]சேலைகள் வைத்திருக்கிறதையும், அவருடைய தலையைச் சுற்றியிருந்த சேலை மற்றச் சேலைகளுடனே வையாமல் தனியாய் ஓரிடத்திலே சுருட்டிவைத்திருக்கிறதையும் கண்டான்.

அ அப்பொழுது முந்திக் கல்லறையினிடத்திற்குப் போன மற்றச் சீஷனும் உள்ளே பிரவேசித்துக் கண்டு நம்பினான்.

கி. பி. ௩௩.

1 மத். உஅ. க. மாற். ௰சு. உ. லூக். உச. க.
2 யோவா. ௰௩. உ௩: ௰௯. உசு. உக.எ, உ௰, உச.
3 லூக். உச. ௰உ.
4 யோவா. ௰௯. ச௰.
5 யோவா. ௰க. சச.
6 சங். ௰சு. ௰. அப். உ. உஎ- ௩க: ௰௩. ௩ச, ௩ரு.
7 மாற். ௰சு. ௯.
8 மத். உஅ. ௯. மாற். ௰சு. ௯.
9 லூக். உச. ௰சு, ௩க. யோவா. உக. ச.

௯ [6]அவர் மரித்தோரிலிருந்து எழுந்திருக்கவேண்டும் என்கிற வேதவாக்கியத்தை அவர்கள் அதுவரைக்கும் அறிந்துகொள்ளாதிருந்தார்கள்.

௰ பின்பு அந்தச் சீஷர் தங்களுடைய இடத்திற்குத் திரும்பினார்கள்.

௰க ¶ [7]மரியாள் கல்லறையின் அருகான வெளியிலே அழுதுகொண்டு நின்றாள்; அப்படி அழுதுகொள்ளுகையில், அவள் கல்லறைக்குள்ளே குனிந்து பார்த்து,

௰உ இயேசுவின் சரீரம் வைக்கப்பட்டிருந்தஇடத்திலே வெண்மையான உடையுள்ளவர்களாய், தலைமாட்டிலே ஒருவனும் கால்மாட்டிலே ஒருவனுமாக இரண்டு தூதர்கள் உட்கார்ந்திருக்கிறதைக் கண்டாள்.

௰௩ அவர்கள் அவளை நோக்கி, ஸ்திரியே, என்னத்தினாலே அழுகிறாய் என்றார்கள்; அதற்கு அவள் சொன்னது: என் கர்த்தாவை எடுத்துக்கொண்டு போனார்கள்; அவரை வைத்த இடம் எனக்குத் தெரியவில்லை; (அதினாலே அழுகிறேன்) என்று சொல்லிப் பின்னாகத் திரும்புகையில், [8]இயேசுவானவர் நிற்கிறதைக் கண்டாள்.

௰ச [9]அவள் அவரை இயேசு என்று அறியவில்லை; அப்பொழுது இயேசுவானவர் அவளை நோக்கி,

௰ரு ஸ்திரியே, என்னத்தினாலே அழுகிறாய்? யாரைத் தேடுகிறாய் என்றார்; அவள் அவரைத் தோட்டக்காரனென்று எண்ணி அவருடனே சொன்னது: ஐயா, நீர் அவரை எடுத்துக்கொண்டுபோனீரானால், அவரை வைத்த இடத்தை எனக்குச் சொல்லவேண்டும், நான் போய் அவரை எடுத்துக்கொள்ளுவேன் என்றாள்.

௰சு அப்பொழுது இயேசுவானவர் மரியாளே என்று அவளுடனே சொன்னார்; உடனே அவள் திரும்பிக்கொண்டு, இரபூனி என்

று அவருடனே சொன்னாள்; இரபூனி என்பதற்குப் போதகரே என்று அர்த்தமாம்.

௰௭ இயேசுவானவர் சொன்னது: நீ என்னைத் தொடாதிரு, இன்னம் என் பிதாவினிடத்திற்கு நான் [1]எழுந்துபோகவில்லையே, இப்பொழுது நீ என் சகோதரரிடத்திற்குப் போய், [2]என் பிதாவினிடத்திற்கும் உங்கள் பிதாவினிடத்திற்கும் [3]என் தேவனிடத்திற்கும் உங்கள் தேவனிடத்திற்கும் எழுந்துபோகிறேன் என்று அவர்களுடனே சொல் என்றார்.

௰௮ [4]மகுதல ஊராளாகிய மரியாள் போய்த் தான் கர்த்தரைக் கண்டதையும், அவர் தன்னுடனே சொன்னவைகளையும் சீஷருக்கு அறிவித்தாள்.

௰௯ ¶ [5]வாரத்தின் முதல்கிழமையாகிய அன்றைத்தினம் அஸ்தமனகாலத்திலே சீஷர்கள் யூதர்களுக்குப் பயப்பட்டதினாலே கதவுகளைப் பூட்டிக் கூடியிருக்கையில், இயேசுவானவர் தோன்றி நடுவே நின்று, உங்களுக்குச் சமாதானசவுக்கியம் உண்டாவதாக என்று சொல்லி,

௨௰ தம்முடைய கைகளையும் விலாவையும் அவர்களுக்குக் காண்பித்தார்; [6]சீஷர் கர்த்தரைக் கண்டபொழுது சந்தோஷப்பட்டார்கள்.

௨௧ பின்பு இயேசுவானவர் மறுபடியும் அவர்களுடனே சொன்னது: உங்களுக்குச் சமாதானசவுக்கியம் உண்டாவதாக; [7]பிதா என்னை அனுப்பினதுபோல நானும் உங்களை அனுப்புகிறேன் என்று சொல்லி,

௨௨ அவர்கள்மேல் ஊதிப் பின்பு சொன்னதாவது: பரிசுத்தஆவியைப் பெற்றுக்கொள்ளுங்கள்.

௨௩ [8]எவர்களுடைய பாவங்களை மன்னிப்பீர்களோ அவர்களுக்கு அவைகள் மன்னிக்கப்பட்டிருக்கும்; எவர்களுடைய பாவங்களை மன்னியாமல் இருப்பீர்களோ அவர்களுக்கு அவைகள் மன்னிக்கப்படாமல் இருக்கும் என்றார்.

௨௪ ¶ அப்பொழுது இயேசுவானவர் வந்திருந்த காலத்திலே, [9]பன்னிருவரில் ஒருவனாகிய தீதிமு என்னப்பட்ட தோமா அவர்களுடனேகூட இருக்கவில்லை.

௨௫ ஆதலால் மற்றச் சீஷர் அவனை நோக்கி, நாங்கள் கர்த்தரைக் கண்டோம் என்றார்கள்; அதற்கு அவன் சொன்னது: அவருடைய கைகளில் ஆணிகள் அடித்திருந்த தழும்பை நான் கண்டு, அந்தத் தழும்பிலே என் விரலை வைத்து, அவருடைய விலாவிலே என் கையை வையாவிட்டால் விசுவாசிக்கமாட்டேன் என்றான்.

௨௬ ¶ எட்டுநாளுக்குப் பின்பு அவருடைய சீஷர் மறுபடியும் அறைக்குள்ளே இருந்தார்கள், தோமாவும் அவர்களுக்குள்ளே இருந்தான்; கதவுகள் பூட்டப்பட்டிருந்தன; அப்பொழுது இயேசுவானவர் தோன்றி நடுவே நின்று, உங்களுக்குச் சமாதானசவுக்கியம் உண்டாவதாக என்று சொல்லி,

௨௭ பின்பு தோமாவை நோக்கி, உன் விரலை இங்கே நீட்டி என் கைகளைப் பார், மேலும் [10]உன் கையை நீட்டி என் விலாவிலே வை, அவிசுவாசியாய் இராமல் விசுவாசியாய் இருப்பாயாக என்றார்.

௨௮ அதற்கு மாறுத்தரமாகத் தோமா அவரை நோக்கி, என் கர்த்தாவே, என் தேவனே என்றான்.

௨௯ இயேசுவானவர் சொன்னது: தோமாவே, நீ என்னைக் கண்டபடியினாலே விசுவாசித்தாய்; [11]காணாமலிருந்து விசுவாசிக்கிறவர்கள் பாக்கியவான்கள் என்றார்.

௩௰ ¶ அன்றியும் [12]இந்தப் புத்தகத்தில் எழுதப்படாத அநேக அற்புதங்களையும் இயேசுவானவர் தம்முடைய சீஷருக்கு முன்பாகச் செய்தார்.

௩௰௧ இவைகள் [13]இயேசுவானவர்

கி. பி. ௩௩.

1 சங். ௨௨. ௨௨. மத். ௨௮. ௰. ௨ரோ. ௮. ௨௯. எபி. ௨. ௰௧.
2 யோவா. ௰௬. ௨௮.
3 எபே. ௧. ௰௭.
4 மத். ௨௮. ௰. லூக். ௨௪. ௰.
5 மாற். ௰௬. ௰௪. லூக். ௨௪. ௩௬. ௧ கொரி. ௰௫. ௫.
6 யோவா. ௰௬. ௨௨.
7 மத். ௨௮. ௰௮. யோவா. ௰௭. ௰௮, ௰௯. ௨ தீமோ. ௨. ௨. எபி. ௩. ௧.
8 மத். ௰௬. ௰௯: ௰௮. ௰௮.
9 யோவா. ௰௧. ௰௬.
10 ௧ யோ. ௧. ௧.
11 ௨ கொரி. ௫. ௭. ௧ பே. ௧. ௮.
12 யோவா. ௨௧. ௨௫.
13 லூக். ௧. ௪.

Digitized by Google

பராபரனுடைய குமாரனாகிய கிறிஸ்து என்று நீங்கள் விசுவாசிப்பதற்கும், [1]விசுவாசித்தபின்பு அவருடைய நாமத்தினாலே ஜீவனை அடைவதற்கும் ஏதுவாக எழுதப்பட்டிருக்கின்றன.

## ௨௧. அதிகாரம்.

*௧. இயேசு மறுபடியும் சீஷர்களுக்குத் தரிசனையாகி, அவர்களுக்குப் பிடிபட்ட ஏராளமான மீன்களினால் அவரை அவர்கள் இன்னாரென்று அறிந்துகொண்டது. ௰௨. அவர் அவர்களோடே அசனம்பண்ணி, ௰௫. பேதுருவைத் தம்முடைய ஆட்டுக்குட்டிகளையும் ஆடுகளையும் மேய்க்கும்படி உறுதியாய்க் கற்பித்து, ௰௮. அவனுடைய மரணத்தின் விவரத்தை அவனுக்கு முன்னறிவித்து, ௨௨. யோவானைக்குறித்துத் தம்மைக் கேட்ட கேள்விக்கு உத்தரவு சொன்னது. ௨௫. முடிவுரை.*

அதன்பின்பு இயேசுவானவர் திபேரியாவின் கடல்கரையிலே சீஷருக்குத் தம்மை மறுபடியும் காண்பித்தார்; அங்கே காண்பித்த பிரகாரமாவது:

௨ சீமோன்பேதுருவும், திதிமு என்னப்பட்ட தோமாவும், [2]கலிலேயா நாட்டிலுள்ள கானாவூரானாகிய நாத்தான்வேலும், [3]செபெதேயுவின் குமாரரும், அவருடைய சீஷரில் வேறிரண்டுபேரும் கூடியிருக்கும் காலத்திலே, சீமோன் பேதுரு மற்றவர்களை நோக்கி, நான்மீன்பிடிக்கப்போகிறேன் என்றான்; அவர்கள், நாங்களும் உன்னுடனேகூட வருகிறோம் என்றார்கள்.

௩ உடனே அவர்கள் புறப்பட்டுப்போய்ப் படவேறினார்கள்; அந்த இராத்திரியிலே அவர்கள் ஒன்றும் பிடிக்கவில்லை.

௪ ¶ விடியற்காலமானபொழுது இயேசுவானவர் கரையிலே நின்றார்; [4]அவரை இயேசுவென்று சீஷர் அறியாமலிருந்தார்கள்.

௫ [5]அப்பொழுது இயேசுவானவர் அவர்களை நோக்கி, பிள்ளைகளே,* போசனம்பண்ணுகிறதற்கு ஏதாகிலும் உங்களிடத்தில் உண்டா என்றார்; அதற்கு அவர்கள் ஒன்றும் இல்லை என்றார்கள்.

௬ அவர் சொன்னது: [6]நீங்கள் படவுக்கு வலதுபுறமாக வலையைப் போடவேண்டும், அப்பொழுது உங்களுக்கு அகப்படும் என்றார்; அந்தப்படி அவர்கள் போட்டு, திரளான மீன்கள் அகப்பட்டதினாலே அதை இழுக்கமாட்டாதிருந்தார்கள்.

௭ ஆதலால் [7]இயேசுவுக்கு அன்பாயிருந்த சீஷன் பேதுருவை நோக்கி, அவர் கர்த்தர் என்றான்; அவர் கர்த்தரென்று சீமோன்பேதுரு கேட்டவுடனே, தான் வஸ்திரமில்லாதவனானபடியினாலே சட்டையைக் கட்டிக்கொண்டு, கடலிலே குதித்தான்.

௮ மற்றச் சீஷர் ஏறக்குறைய இருநூறுமுழம்மாத்திரம் கரைக்குத் தூரத்திலே இருந்தபடியினாலே, மீன்களுடனே வலையை இழுத்துக்கொண்டு, படவினோடே (கரையைச்) சேர்ந்தார்கள்.

௯ அவர்கள் கரையில் சேர்ந்து இறங்கினபொழுது, அக்கினிக்கரிகள் இருக்கிறதையும், அதின்மேல் மீன் வைத்திருக்கிறதையும், அப்பத்தையும் கண்டார்கள்.

௰ பின்பு இயேசுவானவர்சொன்னது: நீங்கள் இப்பொழுது பிடித்த மீன்களில் சில கொண்டுவாருங்கள் என்றார்.

௰௧ அப்பொழுது சீமோன்பேதுரு படவுக்குத் திரும்பி, நூற்றைம்பத்துமூன்று பெரிய மீன்களால் நிறைந்த வலையைக் கரையில் இழுத்தான்; இவ்வளவு இருந்தும் வலை கிழியவில்லை.

௰௨ ¶ பின்பு இயேசுவானவர் அவர்களை அழைத்து, [8]போசனம் பண்ண வாருங்கள் என்றார்; அப்பொழுது அவரைக் கர்த்தர் என்று சீஷர் அறிந்தபடியினாலே, அவர்களில் ஒருவனாயினும் நீர் யார் என்று கேட்கத் துணியவில்லை.

௰௩ அன்றியும் இயேசுவானவர் சேர்ந்து, அப்பத்தையும் மீனையும் எடுத்துஅவர்களுக்குப்பரிமாறினார்.

௰௪ இயேசுவானவர் மரித்தோரி

கி. பி. ௩௩.

1 யோவா. ௫. ௰௩. ௰௯: ௫. ௨௪. ௧ பே. ௧. ௮, ௯.
2 யோவா. ௧. ௪௫.
3 மத். ௪. ௨௧.
4 யோவா. ௨௰. ௰௪.
5 லூக். ௨௪. ௪௧.
* அல்லது ஐயன்மாரே.
6 லூக். ௫. ௪, ௬, ௭.
7 யோவா. ௰௩. ௨௩: ௨௰. ௨.
8 அப். ௰. ௪௧.

விருந்து எழுந்தபின்பு, [1]தம்முடைய சீஷருக்குக் காட்டின தரிசனைகளில் இது மூன்ருவது.

௧௫ ¶ அவர்கள் போசனம்பண்ணினபின்பு, இயேசுவானவர் சீமோன்பேதுருவை நோக்கி, யோனுவின் குமாரனுகிய சீமோனே, இவர்களிலும் நீ என்னிடத்தில் அதிகமாய் அன்புகூருகிருயா என்ருர்; அதற்கு அவன் சொன்னது: ஆண்டவரே, நான் உம்மிடத்தில் அன்பாயிருக்கிறதை நீர் அறிந்திருக்கிறீர் என்ருன். அவர் சொன்னது: [2]என் ஆட்டுக்குட்டிகளைப் போஷிப்பாயாக என்ருர்.

௧௬ பின்பு அவர் இரண்டாந்தரம் அவனை நோக்கி, யோனுவின் குமாரனுகிய சீமோனே, என்னிடத்தில் அன்புகூருகிருயா என்ருர்; அதற்கு அவன் சொன்னது: ஆண்டவரே, நான் உம்மிடத்தில் அன்புகூருகிறதை நீர் அறிந்திருக்கிறீர் என்ருன். அவர் சொன்னது: என் ஆடுகளை மேய்ப்பாயாக என்ருர்.

௧௭ பின்பு அவர் மூன்ருந்தரம் அவனை நோக்கி, யோனுவின் குமாரனுகிய சீமோனே, நீ என்னிடத்தில் அன்புகூருகிருயா என்ருர்; என்னிடத்தில் அன்புகூருகிருயா என்று அவர் மூன்ருந்தரம் தன்னுடனே சொன்னபடியினுலே பேதுரு துக்கமடைந்து, ஆண்டவரே, [3]நீர் எல்லாவற்றையும் அறிந்திருக்கிறீர், நான் உம்மிடத்தில் அன்புகூருகிறதையும் அறிந்திருக்கிறீர் என்ருன்; இயேசுவானவர் சொன்னது: என் ஆடுகளைப் போஷிப்பாயாக.

௧௮ அல்லாமலும் [4]நீ இளவயதுள்ளவனுயிருக்கையில், நீயே உன் அரையில் கச்சைகட்டிக்கொண்டு, உன் இஷ்டப்படிக்கு நடந்து திரிந்தாய், நீ முதிர்ந்த வயதுள்ளவனுயிருக்கும்பொழுது உன் கைகளை நீட்டுவாய்; மேலும் வேருெருவன் உன் அரையில் கச்சை கட்டி உனக்கு இஷ்டமில்லாத இடத்திற்குக் கொண்டுபோவான் என்று மெய்யாகவே உனக்குச் சொல்லுகிறேன் என்ருர்.

௧௯ அவன் பராபரனுக்குப் புகழுண்டாகத்தக்கதாக [5]அடையும் மரணவகையைக்குறித்து இப்படிச்சொன்னுர்; அப்படிச் சொன்னபின்பு, எனக்குப் பின்சென்றுவா என்று அவனுடனே சொன்னுர்

௨௰ ¶ அந்தப்படி பேதுரு (பின்செல்லுகையில்) திரும்பிப்பார்த்து, [6]இயேசுவுக்கு அன்பாயும் இராப்போசனம்பண்ணுகையில் அவருடைய மார்பிலே சாய்ந்து ஆண்டவரே, உம்மைக் காட்டிக் கொடுப்பவன் யாவனென்று கேட்டும் இருந்த சீஷனும் பின்செல்லுகிறதைக் கண்டு,

௨௧ இயேசுவானவரை நோக்கி, ஆண்டவரே, இவன் என்னமாய் இருப்பான் என்ருன்.

௨௨ அதற்கு இயேசுவானவர் சொன்னது: [7]நான் வருமளவும் இவன் இருக்க எனக்குச் சித்தமானுல், அதினுலே உனக்கென்ன, நீ எனக்குப் பின்செல் என்ருர்.

௨௩ அதினுலே அந்தச் சீஷன் மரிப்பதில்லை என்கிற பேச்சு சகோதரருக்குள்ளே உண்டாயிற்று; இயேசுவானவர் அவன் மரிப்பதில்லைஎன்றுசொல்லாமல், நான் வருமளவும் அவன் இருக்க எனக்குச் சித்தமானுல் அதினுலே உனக்கென்ன என்று சொன்னுர்.

௨௪ ¶ அந்தச் சீஷனே இந்தச் சங்கதிகளைக்குறித்துச்சாட்சிகொடுத்து, இவைகளை எழுதியிருக்கிறுன்; [8]அவனுடைய சாட்சிமெய்யென்று அறிந்திருக்கிறேம்; [9]அன்றியும் இயேசுவானவர் செய்த மற்ற அநேக காரியங்களும் உண்டு. [10]அவைகள் ஒவ்வொன்ருய் எழுதப்பட்டால் அதினுலே உண்டாகும் புத்தகங்கள் வைக்கிறதற்கு உலகம் போதாதென்று எண்ணுகிறேன்.—ஆமென்.

கி. பி. ௩௩.

1 யோவா. ௨௰. ௰௯, ௨௬.
2 அப். ௨௰.௨௮. எபி. ௰௩. ௨௰. ௧பே. ௨. ௨௫: ௫. ௨, ௪.
3 யோவா. ௨. ௨௪, ௨௫: ௰௬. ௩௰.
4 யோவா. ௰௩. ௩௬. அப். ௰௨. ௩, ௪.
5 ௨ பே. ௧. ௰௪.
6 யோவா. ௰௩. ௨௩, ௨௫: ௨௰. ௨.
7 மத். ௰௬. ௨௭, ௨௮: ௨௫. ௩௧. ௧கொரி. ௪. ௫: ௰௧.௨௩. வெளி. ௨. ௨௫:௩.௰௧: ௨௨.௭,௨௰.
8 யோவா. ௰௯. ௩௫. ௩ யோ. ௰௨.
9 யோவா. ௨௰. ௩௰.
10 ஆமோ. ௭. ௰.

Digitized by Google

# ACTS.

# அப்போஸ்தலருடைய

## நடபடிகள்.

### க. அதிகாரம்.

க. இயேசு பரமண்டலம் போவதை அப்போஸ்தலர் காணும்பொருட்டு ஒலிவமலை அண்டையில் அவர்களைக் கூட்டி, உலக சாட்சிகளாயிருக்கும்படி சில நாளுக்குப்பின்பு பரிசுத்தஆவியை அனுப்புவேனென்று வாக்குத்தத்தம்பண்ணி, எருசலேமிலே அவர்கள் அந்த ஆவியின் வருகைக்குக் காத்திருக்கும்படி கற்பித்தது. கூ. அவர் பரமண்டலத்துக்கு ஏறினபின்பு இரண்டு தூதர்கள் அவருடைய இரண்டாம் வருகைக்கு எதிர்பார்த்திருக்க அவர்களுக்குப் புத்திசொன்னது. யஉ. அவர்கள் எருசலேமுக்குப் போய் யூதாவுக்குப் பதிலாக மத்தியாவை அப்போஸ்தலனாகத் தெரிந்தெடுத்தது.

[1]தேயோப்பிலுவே, இயேசுவானவர் தாம் தெரிந்துகொண்ட [2]அப்போஸ்தலருக்குப் பரிசுத்தஆவியினாலே கட்டளையிட்டபின்பு,

உ [3]அவர் உயர்த்தப்பட்ட நாள்வரைக்கும் செய்தும் உபதேசித்தும் இருந்த யாவையும் குறித்து முதலாம் பிரபந்தத்தைப் பண்ணினேன்.

ங அவர் பாடுபட்டபின்பு [4]நாற்பதுநாள் அளவும் அவர்களுக்குத் தரிசனையாகி, பராபரனுடைய இராச்சியத்தைக்குறித்து அவர்களுடனே பேசிக்கொண்டு, இவ்விதமாய் அவர்களுக்கு அநேக திருட்டாந்தங்களினாலே தம்மை உயிரோடிருக்கிறவர் என்று காண்பித்தார்.

ச [5]அன்றியும் அவர் அவர்களைக் கூடிவரச் செய்து,* அவர்களை நோக்கி, [6]யோவான் சலத்தினாலே ஞானஸ்நானம் கொடுத்தான்; [7]நீங்கள் சிலநாள்களுக்குப்பின்பு பரிசுத்தஆவியினாலே ஞானஸ்நானம் பெற்றுக்கொள்வீர்கள்.

ரு [8]ஆகையால் நீங்கள் எருசலேம் நகரத்தைவிட்டுப் போகாமல் என்னிடத்தில் கேள்விப்பட்ட பிதாவின் வாக்குத்தத்தம் நிறைவேறக் காத்திருங்கள் என்று கட்டளையிட்டார்.

சா ¶ அப்பொழுது [9]கூடிவந்திருந்தவர்கள் அவரைநோக்கி, ஆண்டவரே, [10]இராச்சியபரிபாலனத்தை இஸ்ரவேலருக்கு நீர் இக்காலத்திலா திரும்பக்கொடுப்பீர் என்று கேட்டார்கள்.

எ அதற்கு அவர் சொன்னது: [11]பிதாவானவர் தம்முடைய அதிகாரத்திலே வைத்திருக்கிற காலங்களையாகிலும் வேளைகளையாகிலும் அறிகிறது உங்களுக்குத் தகாது.

அ [12]பரிசுத்தஆவி உங்களிடத்தில் வரும்பொழுது,† [13]நீங்கள் பெலனடைந்து, [14]எருசலேமிலும் யூதேயா சமாரியா தேசங்களில் எங்கும், பூமியின் எல்லைவரைக்கும் எனக்குச் சாட்சிகளாய் இருப்பீர்கள் என்றார்.

இ. பி. ஙஙு.

1 லூக். க. க.
2 மத். உஅ. யக. மாற். யசு. யஐ. யோவா. உய. உக. அப். ய. சக, சஉ.
3 மாற். யசு. யசு. லூக். ஙு. ஙக: உச. ஙசு. ங. வச. க தீமோ. ங. யசு.
4 மாற். யசு. யச. லூக். உச. கக. யோவா. உய. யசு, உக: உக. க, யச. க கொரி. யஐ. ஐ.
5 லூக். உச. சக, சகூ.
* அல்லது அவர்களோடு புசித்து.
6 மத். ங. யக. அப். யக. யசு: யகூ. ச.
7 யோவே. உ. உஅ. அப். உ. ச: யக. யஐ.
8 லூக். உச. சகூ. யோவா. யச. யசு, உசு, உஎ: யஐ. உசு: யசு. எ. அப். உ. ககூ.
9 மத். உச. க.
10 ஏசா. க. உசு. தானி. எ. உஎ. ஆமோ. கூ. யக.
11 மத். உச. கசு. மாற். யங. கஉ. க தெச. ஐ. க.

12 லூக். உச. சகூ. † பரிசுத்த ஆவியின் வல்லமை வருகிறதால்.—13 அப். உ. க, ச.—14 லூக். உச. சஅ. யோவா. யஐ. உஎ. உஉ. வச. அப். உ. கஉ.

Digitized by Google

க ¶ [1]இவைகளைச் சொன்ன பின்பு, [2]அவர் அவர்களுடைய கண்களுக்குமுன்பாக உயர்த்தப்பட்டார்; அவர்கள் அவரைக் காணாதபடிக்கு ஒரு மேகம் அவரை எடுத்துக்கொண்டுபோயிற்று.

ய அவர் போனபொழுது, அவர்கள் வானத்தை அண்ணாந்து பார்த்திருக்கையில், [3]வெண்மையான வஸ்திரமுள்ள மனிதர் இரண்டுபேர் அவர்களின் அருகே நின்று,

யக கலிலேயராகிய மனிதரே, [4]நீங்கள் என்னத்துக்காக வானத்தை அண்ணாந்துபார்த்து நிற்கிறீர்கள்? உங்களைவிட்டு வானத்துக்கு எடுத்துக்கொள்ளப்பட்ட அந்த [5]இயேசுவானவர் உங்கள் கண்களுக்குமுன்பாக வானத்துக்கு எழுந்துபோனவிதமாய்த் திரும்பிவருவார் என்றார்கள்.

யஉ ¶ [6]அப்பொழுது அவர்கள் ஒலிவ என்னப்பட்ட மலையைவிட்டு எருசலேம் நகரத்துக்குத் திரும்பினார்கள்; அந்த மலை ஒரு ஓய்வுநாள் பிரயாணதூரமாய் எருசலேமுக்குச் சமீபமாயிருக்கின்றது.

யங அவர்கள் அங்கே போனபொழுது, [7]மேல்வீட்டில் ஏறினார்கள்; [8]அங்கே பேதுருவும், யாக்கோபும், யோவானும், அந்திரேயாவும், பிலிப்பும், தோமாவும், பர்த்தொலொமேயும், மத்தேயும், அல்பேயுவின் குமாரனாகிய யாக்கோபும், [9]செலோத்தே என்னப்பட்ட சீமோனும், [10]யாக்கோபின் சகோதரனாகிய யூதாவும் தங்கியிருந்தார்கள்.

யச [11] இவர்கள் எல்லாரும், [12]இயேசுவின் தாயாகிய மரியாள் முதலான ஸ்திரிகளோடும் [13]அவருடைய சகோதரரோடும்கூட ஒருமனப்பட்டு, செபத்திலேயும் வேண்டுதலிலேயும் உறுதியாய்த் தரித்திருந்தார்கள்.

யரு ¶ அந்நாள்களில் ஒருநாள், [14]ஏறக்குறைய நூற்றிருபதுபேர் கூடிவந்திருந்தபொழுது, பேதுரு என்பவன் சீஷருக்குள்ளே எழுந்திருந்து சொன்னதாவது:

யசு சகோதரர்களே, [15] இயேசுவைப் பிடித்தவர்களுக்கு வழிகாட்டின [16] யூதாவைக்குறித்துப் பரிசுத்தஆவி தாவீதின் வாக்கினாலே முன் சொன்ன வேதவாக்கியம் நிறைவேறவேண்டியதாய் இருந்தது.

யஎ [17] அவன் நமக்குள்ளே ஒருவனாக எண்ணப்பட்டு, [18]இந்த ஊழியத்தில் பங்கைப் பெற்றவனாய் இருந்தானே.

யஅ [19]அன்றியும் அவனே அநியாயமான கூலியினாலே [20]ஒரு நிலத்தைச் சம்பாதித்துக்கொள்ளுகிறவனாயிருந்து, பின்பு தலைகீழாக விழுந்து நடுவாய் வெடிக்கப்பட்டான்; அவனுடைய குடல்களெல்லாம் சரிந்துபோயின.

யகு அதை எருசலேமிலுள்ள குடிகள் யாவரும் அறிந்திருக்கிறார்கள்; அதினாலே அந்த நிலம் அவர்களுடைய பாஷையிலே இரத்த நிலம் என்று அர்த்தம்கொள்ளுகிற அக்கெல்தாமா என்னப்பட்டிருக்கின்றது.

உய சங்கீத புத்தகத்திலே [21]எப்படி எழுதியிருக்கிறதென்றால், அவனுடைய வாசஸ்தலம் பாழாகக்கடவது, ஒருவனும் அதில் வாசம்பண்ணாதிருப்பதாக என்றும், [22]அவனுடைய கண்காணிப்பை *வேறொருவன் பெறக்கடவன் என்றும் எழுதியிருக்கின்றது.

உக ஆதலால் கர்த்தராகிய இயேசுவானவர் [23]யோவான் ஞானஸ்நானம்கொடுத்த காலம்முதற்கொண்டு [24]தாம் நம்மைவிட்டு எடுத்துக்கொள்ளப்பட்ட நாள்வரைக்கும்,

உஉ நமக்குள்ளே வருகிறவராயும் போகிறவராயும் இருந்த காலங்களிலே, நம்முடனேகூட இருந்த [25]மனிதர்களில் ஒருவன்

கி. பி. ௩௩.

1 லூக். உச. ௫௧. யோவா. ௬. ௬௨.
2 உ. ௯௪.
3 மத். உஅ. ௩. மாற். ௰௬. ௫. லூக். உச. ௪. யோவா. உ௰. ௰௨. அப். ௰. ௩, ௩௰.
4 அப். உ. எ: ௰௩. ௩௩.
5 தானி. எ. ௰௩. மத். உச. ௩௰. மாற். ௰௩. உ௬. லூக். உ௩. உஎ. யோவா. ௰௪. ௩ க தெச. க. ௰: ௪. ௰௩. உ தெச. க. ௰. வெளி. க. எ.
6 லூக். உச. ௫௨.
7 அப். ௯. ௩௭, ௩௯: ௨௰. அ
8 மத். ௰. உ, ௩, ௪.
9 லூக். ௬. ௰௫.
10 யூதா. க.
11 அப். உ. க, சசு.
12 லூக். உ௩. ௪௯: உச. ௰.
13 மத். ௰௩. ௫௫.
14 வெளி. க. ௪.
15 லூக். உஉ. ௪௭. யோவா. ௰௮. க.
16 சங். ௪௧. ௯. யோவா. ௰௩. ௰௮.
17 மத். ௰. ௪. லூக். ௬. ௰௬.
18 உ௰. வசனம். அப். ௰உ. உ௰: உ௫. ௨௪: உ௩. ௰௭.
19 மத். உஎ. ௫, எ, அ.
20 மத். உக. ௰௫. உ பே. உ. ௰௫.
21 சங். ௬௯. உ௫.
22 சங். ௧௦௯. அ. * அல்லது தொ ழிலை.
23 மாற். க. க.
24 க. ௯௪.
25 யோவா. ௰௫. உஎ. அ. ௯௪. அப். ௪. ௩௩.

Digitized by Google

அவர் உயிரோடே எழுந்திருக்கிறதைக்குறித்து நம்முடனேகூடச் சாட்சியாகவேண்டும் என்றான்.

௨௩ ¶ அப்பொழுது அவர்கள் யுஸ்து என்று மறுநாமமுள்ள [1]பருசபா என்னப்பட்ட யோசேப்பு, மத்தியா, இவ்விரண்டுபேரையும் தெரிந்தெடுத்துச் செபம்பண்ணினதாவது:

௨௪ [2]எல்லாருடைய இருதயங்களையும் அறிந்திருக்கிற கர்த்தாவே,

௨௫ யூதாவானவன் தனக்கேற்ற இடத்துக்குப் போகும்படிக்கு அப்போஸ்தல ஊழியத்தின் பங்கைவிட்டு விலகினானே, [3]அந்தப் பங்கைப் பெற்றுக்கொள்ளும்படிக்குத் தேவரீர் இவ்விரண்டுபேரில் தெரிந்துகொண்டவன் எவனோ, அவனை எங்களுக்குக் காண்பிப்பீராக என்று சொல்லி,

௨௬ பின்பு அவர்களைக்குறித்துச் சீட்டுகளைப் போட்டார்கள்; சீட்டானது மத்தியாவின் பேருக்கு விழுந்தது; அப்பொழுது அவன் பதினொரு அப்போஸ்தலருடனே (அப்போஸ்தலனாகச்) சேர்த்துக் கொள்ளப்பட்டான்.

## ௨. அதிகாரம்.

*௧. அப்போஸ்தலர்கள் பரிசுத்தஆவியினால் நிரப்பப்பட்டுப் பலபாஷைகளைப் பேசினபோது, சிலரால் புகழப்பட்டுச் சிலரால் இகழப்பட்டது. ௰௪. இகழ்ந்தவர்களைப் பேதுரு கடிந்துகொண்டு, அப்போஸ்தலர்கள் பரிசுத்தஆவியின் பெலத்தினாலே பேசினார்களென்றும், இயேசு உயிர்த்தெழுந்து பரமண்டலத்துக்கு ஏறி, பரிசுத்தஆவியை அளித்துப் பலவித அற்புதங்களைச் செய்த பராபரனாலே அங்கீகரிக்கப்பட்டவரும், அவருடைய ஆதி நிர்மானத்தின்படி சிலுவையில் அறையப்பட்டவருமான மேசியாவென்றும் எண்பித்து, ௩௭. குணப்பட்ட அநேகரை ஞானஸ்நானம்பண்ணினது. ௪௧. குணப்பட்டவர்கள் அந்நியோந்நிய ஐக்கியமாயிருந்ததையும், அப்போஸ்தலர்கள் பல அற்புதங்கள் செய்ததையும், பராபரன் திருச்சபையை நாளுக்குநாள் பெருகச்செய்ததையும் காட்டியது.*

[4]பெந்தேகோஸ்தென்னும் நாள் வந்திருக்கையில், [5]அவர்கள் எல்லாரும் அவ்விடத்திலே ஒருமனப்பட்டிருந்தார்கள்.

௨ அப்பொழுது சடுதியாய்ப் பலத்த காற்று அடிக்கிற முழக்கம்போல வானத்திலிருந்து முழக்கம் உண்டாகி, [6]அவர்கள் உளுக்காந்திருந்த வீடு முழுவதையும் நிரப்பிற்று.

௩ அல்லாமலும் அக்கினியுள்ள நாவுகள்போலப் பிரிக்கப்பட்ட நாவுகள் அவர்களுக்குக் காணப்பட்டு, அவர்கள் யாவர்மேலும் வந்திருந்தன.

௪ அவர்கள் [7]எல்லாரும் பரிசுத்தஆவியினாலேநிரப்பப்பட்டு, தங்களுக்கு ஆவியானவர் கொடுத்த திராணியின்படி, [8]வேறு பாஷைகளிலே பேசத்தொடங்கினார்கள்.

௫ ¶ (அக்காலத்திலே) வானத்தின் கீழிருக்கிற சகலவிதமான தேசத்தாரிலுமிருந்து வந்த தேவபத்தியுள்ள யூதர்கள் எருசலேமிலே வாசம்பண்ணினார்கள்.

௬ அந்தச் சத்தம் உண்டானபொழுது, *திரளான சனங்கள் கூடிவந்து, யாவரும் தங்கள் தங்கள் பாஷையிலே அவர்கள் பேசுகிறதைக் கேட்டபடியினாலே கலக்கம் அடைந்தார்கள்.†

௭ எல்லாரும் பிரமித்து ஆச்சரியப்பட்டு, ஒருவரை ஒருவர் [9]நோக்கி, பேசுகிற இவர்கள் எல்லாரும் கலிலேயர் அல்லவா?

௮ நம்முடைய சென்மபாஷைகளிலே அவர்கள் பேச நாம் யாவரும் கேட்கிறோமே, அது எப்படியாயிற்று?

௯ பருத்தரும், மேதரும், எலாமீத்தரும், மேசோப்பொத்தாமியா, யூதேயா, கப்பத்தோக்கியா, பொந்து, ஆசியா, பிரிகியா, பம்பீலியா,

௰ எகிப்து என்னும் தேசங்களிலேயும் கிரேனே பட்டணத்தைச் சுற்றியிருக்கிற லீபியாவின் திசைகளிலேயும் குடியிருப்பவர்களும், இங்கே சஞ்சரிக்கிற உரோமைப்பட்டணத்தாரும்,

௰௧ யூதரும் யூதமார்க்கத்தில் சேர்க்கப்பட்டவர்களும், கிரேத்

கி. பி. ௩௩.

1 அப். ௰௫. ௨௨.
2 ௧ சாமு. ௰௬. ௭. ௧ நாளா. ௨௮. ௯: ௨௯. ௰௭. எரே. ௰௭. ௰௰: ௰௭. ௰. அப். ௰௫. ௮. வெளி. ௨. ௨௩.
3 ௰௭. ௪௪.
4 ௩ மோ. ௨௩. ௰௫. ௫ மோ. ௰௬. ௯. அப். ௨௦. ௰௬.
5 அப். ௧. ௰௪.
6 அப். ௪. ௩௧.
7 அப். ௧. ௫.
8 மாற். ௰௬. ௰௭. அப். ௰. ௪௬: ௰௯. ௬. ௧ கொரி. ௰௨. ௰, ௨௮, ௩௦: ௰௩. ௧: ௰௪. ௨.
* அல்லது இது எங்கும் பிரசித்தமானபோது.
† அல்லது பிரமித்தார்கள்.
9 அப். ௧. ௰௧.



Digitized by Google

தைத் தீவாரும், அரபி தேசத்தாருமாகிய நம்முடைய பாஷைகளிலே அவர்கள் பராபரனுடைய மகிமைகளைப் பேசிக்கொள்ளக் கேட்கிறோமே என்றார்கள்.

௰௨ பின்னும் எல்லாரும் பிரமித்து, மிகவும் சந்தேகப்பட்டு, இதென்ன வரம் என்று ஒருவரோடொருவர் சொல்லிக்கொண்டார்கள்.

௰௩ மற்றப்பேர் மதுபானத்தினாலே நிறைந்திருக்கிறார்கள் என்று பரியாசம்பண்ணினார்கள்.

௰௪ ¶ அப்பொழுது பேதுருஎன்பவன் பதினொருவரோடும் கூடநின்று, உரத்த சத்தத்தோடே அவர்களுடனே சொன்னதாவது: யூதரும், எருசலேமில் குடியிருக்கிற மற்றவர்களுமாகிய நீங்கள் எல்லாரும் அறிந்துகொள்வீர்களாக, என் வார்த்தைகளுக்குச் செவிகொடுப்பீர்களாக.

௰௫ என்னவெனில், நீங்கள் நினைக்கிறதுபோல இவர்கள் வெறிகொண்டவர்கள் அல்ல, [1]பொழுதுவிடிந்து மூன்றாம்மணி வேளையாயிருக்கிறதே.

௰௬ தீர்க்கதரிசியாகிய யோவேலினால் உரைக்கப்பட்டபடி இதுவே நடந்துவருகின்றது.

௰௭ [2](அவரைக்கொண்டு) பராபரன் உரைத்ததாவது: [3]கடைசிநாள்களில் நான் சகல மனிதர்மேலும் என்னுடைய ஆவியை ஊற்றுவேன்; [4]அப்பொழுது உங்கள் குமாரரும் உங்கள் குமாரத்திகளும் தீர்க்கதரிசனம் சொல்லுவார்கள்; உங்கள் வாலிபர் தரிசனைகளைக் காண்பார்கள்; உங்கள் மூப்பர் சொப்பனங்களை அடைவார்கள்.

௰௮ என்னுடைய ஊழியக்காரர்மேலும், என்னுடைய ஊழியக்காரிகள்மேலும், அந்நாள்களில் என்னுடைய ஆவியை ஊற்றுவேன்; [5]அப்பொழுது தீர்க்கதரிசனம் சொல்லுவார்கள்.

௰௯ [6]அல்லாமலும் கர்த்தருடைய பெருமையும் பிரகாசமுமானநாள் வருமுன்னே, உயர்ந்த வானத்தில் அற்புதங்களையும் தாழ்ந்த பூமியில் அதிசயங்களையும் உண்டாக்குவேன்.

௨௰ இரத்தமும், அக்கினியும், புகைக்காடும் உண்டாகும்படி செய்வேன்; [7]சூரியன் இருளாகவும் சந்திரன் இரத்தமாகவும் மாற்றப்படும்.

௨௧ [8]அப்பொழுது பராபரனுடைய நாமத்தைத் தொழுது கூப்பிடுபவன் எவனோ, அவன் இரட்சிக்கப்படுவான் என்பதே.

௨௨ ¶ இஸ்ரவேலரே, நான் சொல்லும் வார்த்தைகளைக் கேளுங்கள்; நீங்களே அறிந்திருக்கிறபடி நாசரேத்தூராராகிய இயேசுவானவராலே பராபரன் உங்களுக்குள்ளே [9]பலத்தசெய்கைகளையும் அற்புதங்களையும் அதிசயங்களையும் செய்து, அவைகளினாலே அவரை உங்களுக்கு வெளிப்படுத்தினார்.

௨௩ அப்படியிருந்தும் [10]பராபரன் நியமித்திருந்த ஆலோசனையின்படியேயும், அவர் முன் அறிந்ததின்படியேயும் ஒப்புக்கொடுக்கப்பட்ட அந்த இயேசுவை நீங்கள் பிடித்து, [11]அக்கிரமக்காரருடைய கைகளினாலே சிலுவைமரத்தில் அறைந்து கொலைசெய்தீர்கள்.

௨௪ அவரைக்குறித்துத் தாவீது சொல்லுகிறதாவது: [12]நான் அசைக்கப்படாதபடிக்கு, பராபரன் என் வலதுபாரிசத்திலே இருக்கிறபடியினாலே, நான் எப்பொழுதும் அவரை எனக்குமுன்பாக வைத்துக்கொள்ளுகிறேன்.

௨௫ அதினாலே என் இருதயம் மகிழ்ச்சியாய் இருக்கின்றது, என் நாவு சந்தோஷமாய்ப் பேசுகின்றது.

௨௬ மேலும் நீர் என் ஆத்துமாவை மரித்தோர் ஸ்தலத்திலே விட

கி. பி. ௩௩.

1 ௧ தெச. ௫. ௭.
2 ஏசா. ௪௪. ௩. ஏசே. ௰௧. ௰௯: ௩௬. ௨௭. யோவே. ௨. ௨௮, ௨௯. சக. ௰௨. ௰. யோவா. ௭. ௩௮.
3 அப். ௰. ௪௫.
4 அப். ௨௧. ௯.
5 அப். ௨௧. ௪, ௯, ௧ கொரி. ௰௨. ௰, ௨௮: ௰௪. ௧.
6 யோவே. ௨. ௩௰, ௩௧.
7 மத். ௨௪. ௨௯. மாற். ௰௩. ௨௪. லூக். ௨௧. ௨௫.
8 ரோ. ௰. ௰௩.
9 யோவா. ௩. ௨: ௰௪. ௰, ௰௧. அப். ௰. ௩௮. எபி. ௨. ௪.
10 மத். ௨௬. ௨௪. லூக். ௨௨. ௨௨: ௨௪. ௪௪. அப். ௩. ௰௮: ௪. ௨௮.
11 அப். ௫. ௩௰.
12 சங். ௰௬. ௮.

Digitized by Google

வும், உம்முடைய பரிசுத்தவான் அழிவைக்காணும்படிசெய்யவும் மாட்டீர்.

௨௭ ஜீவமார்க்கங்களை எனக்குத் தெரியப்படுத்தினீர், உம்முடைய சந்நிதானத்திலே என்னைச் சந்தோஷத்தாலே நிரப்புவீர்; ஆதலால், என்னுடைய சரீரமும் நம்பிக்கையோடே படுத்துக்கொள்ளும் என்று சொல்லியிருக்கிறார்.

௨௮ ஆனபடியினாலே மரணமானது இயேசுவை அடக்கிக்கொள்ளக்கூடாதிருக்க, பராபரன் [1]அதின் உபாதிகளின் கட்டவிழ்த்து, அவரை எழுப்பினார்.

௨௯ ¶ சகோதரர்களே, [2]நமது கோத்திரத்தலைவனாகிய தாவீதைக் குறித்து நான் உங்களுடனே தயிரியமாய்ப் பேசுகிறேன்* கேட்பீர்களாக; அவர் மரணமடைந்து அடக்கம்பண்ணப்பட்டார்; அவருடைய சமாதி இந்நாள்வரைக்கும் நம்மிடத்தில் இருக்கின்றது.

௩௰ ஆதலால், [3]அவர் தீர்க்கதரிசியாயிருந்து உன் ஆசனத்தில் வீற்றிருக்கும்படிக்கு, சரீரசம்பந்தமாய் உன்னுடைய சந்ததியில் கிறிஸ்துவை எழும்பப்பண்ணுவேன் என்று பராபரன் தனக்கு ஆணைகொடுத்ததை அறிந்து,

௩௧ [4]அவர் கிறிஸ்துவினுடைய ஆத்துமா மரித்தோர் ஸ்தலத்திலே விடப்படுவதில்லை என்றும், அவருடைய சரீரம் அழிவை அடைவதில்லை என்றும் முன் அறிந்து, அவர் உயிரோடெழுந்திருப்பதைக் குறித்துப் பேசினார்.

௩௨ [5]இந்த இயேசுவையே பராபரன் எழுப்பினார்; [6]அதற்கு நாங்கள் எல்லாரும் சாட்சிகளாயிருக்கிறோம்; மேலும் தாவீது பரமண்டலத்திற்கு எழுந்துபோகவில்லை.

௩௩ அதுவுமல்லாமல், அவர் சொன்னது: உம்முடைய சத்துருக்களை நான் உமது பாதப்படியாக்கிப்போடுமளவும்,

௩௪ [7]எனது வலதுபாரிசத்திலே உளுக்காரும் என்று பராபரன் என்ஆண்டவருடனே சொன்னார் என்றான்.

௩௫ ஆதலால் [8]இயேசுவானவர் பராபரனுடைய வலதுபாரிசத்திலே உயர்த்தப்பட்டபின்பு, [9]பரிசுத்த ஆவியைக்குறித்துப் பிதாவினாலே வாக்குத்தத்தத்தைப் பெற்றபடியால், [10]நீங்கள் இப்பொழுது கண்டு கேட்கிறபடி அதை ஊற்றினார்.

௩௬ ஆனபடியினாலே நீங்கள் சிலுவைமரத்தில் அறைந்த அந்த [11]இயேசுவையே பராபரன் ஆண்டவரும் கிறிஸ்துவும் ஆக்கினாரென்று இஸ்ரவேல் குடும்பத்தார் யாவரும் நிச்சயமாய் அறியக்கடவர்கள் என்றான்.

௩௭ ¶ அதை அவர்கள் கேட்டபொழுது [12]இருதயத்தில் குத்தப்பட்டவர்களாகிப்பேதுருவையும் மற்ற அப்போஸ்தலரையும் நோக்கி, சகோதரரே, நாங்கள் என்ன செய்யவேண்டும் என்றார்கள்.

௩௮ ¶ அதற்குப் பேதுரு சொன்னதாவது: [13]உங்களுக்குப் பாவமன்னிப்பு உண்டாகும்படிக்கு நீங்கள் மனந்திரும்பி, ஒருவன் ஒருவனாய் இயேசுக்கிறிஸ்துவின்நாமத்தினாலே ஞானஸ்நானம் பெற்றுக்கொள்ளுங்கள்; அப்பொழுது பரிசுத்த ஆவியாகிய ஈவையும் பெறுவீர்கள்.

௩௯ (அதைக்குறித்து) வாக்குத்தத்தமானது [14]உங்களுக்கும் உங்கள் பிள்ளைகளுக்கும் [15]நம்முடைய தேவனாகிய பராபரன் வரவழைக்கும் தூரத்திலுள்ள யாவருக்கும் உண்டாயிற்றே என்று சொல்லி,

௪௰ மற்ற அநேக வார்த்தைகளாலும் (அதைக்குறித்துச்) சாட்சியிட்டு, தாறுமாறுள்ள இந்தச் சந்ததியைவிட்டு இரட்சிக்கப்படுவீர்களாக என்று புத்திசொன்னான்.

௪௧ ¶ அந்தப்படியே அவனுடைய வார்த்தையைச் சந்தோஷ

---

கி. பி. ௩௰௩.

1 உ௨. லச. அப். உ. ௰௫: ௭. ௰: ௰. ௭௰: ௰௨.௨௰,௩௭: ௰௭. ௨௩. உரோ. ௭. ௨௪: ௮. ௰௪. ௧ கொரி. ௩. ௰௪: ௰௫. ௰௫. உ கொரி.௪.௰௪. கலா.௧.௧.எபே. ௧. ௨௰. கொலோ. ௨. ௰௨. ௧ தெச. ௧. ௰. எபி. ௰௩. ௨௰. ௧ பே. ௧. ௨௧.
2 ௧ இரா. ௨. ௰. அப். ௰௩. ௩௬.
* அல்லது நான் பேசட்டும்.
3 உ சமு. ௭. ௰௨, ௰௩. சங். ௩௨௨. ௰௧. லூக். ௧. ௩௨, ௩௩. உரோ. ௧. ௩. உ தீமோ.௨.அ.
4 சங். ௰௬. ௰. அப். ௰௩. ௩௫.
5 உ௪. வச.
6 அப். ௧. அ.
7 சங். ௩௰. ௧.மத். ௨௨. ௪௪.
௧ கொரி. ௰௫. ௨௫. எபே. ௧. ௨௰. எபி. ௧.௰௩.
8 அப். ௫. ௩௧. பிலி. ௨. ௯. எபி. ௰. ௰௨.
9 யோவா. ௰௪. ௨௬: ௰௫.௨௬: ௰௬. ௭,௰௩. அப். ௧. ௪.
10 அப். ௰. ௪௫. எபே. ௪. அ.
11 அப். ௫. ௩௧.
12 சகரி. ௰௨. ௰. லூக். ௩.௰. அப். ௯. ௬: ௰௬. ௩௰.
13 லூக். உ௪.௪௭. அப். ௩. ௰௯.
14 யோவே. ௨. உ௮. அப். ௩. உ௫.
15 அப். ௰. ௪௫: ௰௧. ௰௫, ௰௮: ௰௪. உ௭: ௰௫. ௩,௰௪. எபே. உ. ௰௩, ௰௭.

Google

மாய் ஏற்றுக்கொண்டவர்கள் எவர்களோ, அவர்கள் ஞானஸ்நானம் பெற்றார்கள்; அந்நாளிலே ஏறக்குறைய மூவாயிரம்பேர் சேர்த்துக்கொள்ளப்பட்டார்கள்.

௪௨ [1]அவர்கள் அப்போஸ்தலருடைய உபதேசத்திலேயும், ஒருவரோடொருவர் ஐக்கப்படுதலிலேயும், அப்பம்பிட்குதலிலேயும், செபம்பண்ணுதலிலேயும் உறுதியாய்த் தரித்திருந்தார்கள்.

௪௩ ஆத்துமாக்கள் யாவுக்கும் பயபத்தி உண்டாயிற்று; அன்றியும் [2]அப்போஸ்தலர்களாலே அநேக அற்புதங்களும் அதிசயங்களும் செய்யப்பட்டன.

௪௪ எல்லா விசுவாசிகளும் ஒருமித்திருந்து, [3]சகலத்தையும் பொதுவாய் வைத்து அனுபவித்து,

௪௫ ஆஸ்திகளையும் உடைமைகளையும் விற்று, [4]அவைகளில் ஒவ்வொருவனுக்கு வேண்டுவது எவ்வளவோ, அவ்வளவு பகிர்ந்துகொடுத்தார்கள்.

௪௬ [5] தினந்தோறும் அவர்கள் ஒருமனப்பட்டு, [6]தேவாலயத்திலே தரித்திருந்து, [7] வீடுகள்தோறும்* அப்பம்பிட்டு, மகிழ்ச்சியும் கபடமில்லாமையுமுள்ள இருதயத்தோடு போசனம்பண்ணிப் பராபரனைப் புகழ்ந்துகொண்டு,

௪௭ (மற்றச்) [8]சனங்கள் எல்லாரிடத்திலும் கிருபைபெற்றிருந்தார்கள்; [9]அன்றியும் இரட்சிக்கப்படுகிற (மற்றப்) பேர்களைக் கர்த்தர் தினந்தோறும் சபையோடே சேர்த்தார்.

## ௩. அதிகாரம்.

௧. குணமாக்கப்பட்ட ஒரு சப்பாணியைப் பார்க்க வந்த சனங்களுக்குப் பேதுரு பிரசங்கித்தது. ௧௨. அவன் குணமாக்கப்பட்டது, தனக்கும் யோவானுக்கும் இருந்த வல்லமையினாலும் பரிசுத்தத்தினாலும் அல்ல, பராபரனும் அவருடைய குமாரனாகிய இயேசுவின் நாமத்தின்மேலுள்ள விசுவாசத்தினாலுமே என்று சொல்லி, ௧௩. இயேசுவைச் சிலுவையில் அறைந்ததற்காக அவர்களைக் கடிந்துகொண்டது. ௧௭. பராபரனுடைய ஆதி தீர்மானத்தின்படியும் வேத எழுத்துக்களின்படியும் நடந்ததாயினும், அந்தப் பாதகத்தை அவர்கள் அறியாமையினாலே ஏற்றுக்கொண்டதினால், ௧௯. அவர்கள் மனம்திரும்பி விசுவாசித்து, அந்த இயேசுவினாலேயே பாவமன்னிப்பும் இரட்சிப்பும் அடையும்படி புத்திசொன்னது.

அக்காலத்தில் [10]ஒருநாள் செபவேளையாகிய ஒன்பதாம்மணி நேரத்திலே பேதுருவும் யோவானும் [11]தேவாலயத்துக்குப்போனார்கள்.

௨ அப்பொழுது [12]தன் தாயின் வயிற்றிலிருந்து சப்பாணியாய்ப் பிறந்த ஒரு மனிதன் சுமந்துவரப்பட்டான்; தேவாலயத்தில் பிரவேசிப்பவர்களிடத்தில் [13]பிச்சைகேட்கும்படிக்கு, நாடோறும் அவனை அலங்காரவாசல் என்னப்பட்ட தேவாலய வாசலினிடத்திலே வைப்பார்கள்.

௩ தேவாலயத்தில் பிரவேசிக்கும்படி போகிற பேதுருவையும் யோவானையும் அவன்கண்டு, பிச்சைகேட்டான்.

௪ அப்பொழுது யோவானுடனேகூடப் பேதுரு அவனை உற்றுப்பார்த்து, எங்களை நோக்கிப்பார் என்றான்.

௫ அவன் அவர்களுடைய கையில் ஏதாகிலும் பெற்றுக்கொள்ளலாம் என்று எண்ணி, அவர்களை நோக்கிப் பார்த்தான்.

௬ அப்பொழுது பேதுரு சொன்னது: வெள்ளியும் பொன்னும் என்னிடத்தில் இல்லை, எனக்கு உண்டானதை உனக்குத் தருகிறேன்; [14]நாசரேத்தூராராகிய இயேசுக்கிறிஸ்துவின் நாமத்தினாலே நீ எழுந்து நடவென்று சொல்லி,

௭ வலதுகையினாலே அவனைப் பிடித்துத் தூக்கி எடுத்தான்; உடனே அவனுடைய கால்களும் கரடுகளும் ஸ்திரமடைந்தன.

௮ [15]அவன் குதித்து எழுந்து நின்று நடந்து, அவர்களுடனேகூடத் தேவாலயத்தில் பிரவேசித்து, நடந்து குதித்துப் பராபரனைத் துதிசெய்தான்.

௯ [16]அவன் நடக்கிறதையும் பராபரனைத் துதிக்கிறதையும் சனங்

௨. பி. ௩௩.

1 சக. ௬௪. அப். ௧. ௰௪. உகொ. ௰௨. ௰௨. எபே. ௩. ௰௮. கொலோ. ௪. ௨. எபி. ௰௨. ௨௫.
2 மாற். ௰௬. ௰௭. அப். ௪. ௩௩: ௫. ௰௨.
3 அப். ௪. ௩௨, ௩௪.
4 ஏசா. ௫௮. ௭.
5 அப். ௧. ௰௪.
6 லூக். உ௪. ௫௩. அப். ௫. ௪௨.
7 அப். ௨௰. ௭.
* அல்லது வீட்டிலே.
8 லூக். ௨. ௫௨. அப். ௪. ௩௩. உரோ. ௰௪. ௰௮.
9 அப். ௫. ௰௪: ௰௧. ௨௪.
10 சங். ௫௫. ௰௭.
11 அப். ௨. ௪௬.
12 அப். ௰௪. ௮.
13 யோவா. ௯. ௮.
14 அப். ௪. ௰.
15 ஏசா. ௩௫. ௬.
16 அப். ௪. ௰௬, ௨௧.

Digitized by Google

கள் எல்லாரும் கண்டார்கள்.

௰ அல்லாமலும் தேவாலயத்தின் [1]அலங்கார வாசலினிடத்திலே பிச்சைகேட்க உளுக்காந்திருந்தவன் இவன்தான் என்று அவர்கள் அறிந்து, அவனுக்குச் சம்பவித்ததைக்குறித்து மிகவும் பிரமித்து, அதிசயப்பட்டார்கள்.

௰௧ ¶ அன்றியும் குணமாக்கப்பட்ட சப்பாணி பேதுருவையும் யோவானையும்அடுத்துக்கொண்டிருந்தபடியால், சனங்கள் எல்லாரும் பிரமிப்புள்ளவர்களாய், [2]சாலோமோன் மண்டபம் என்னப்பட்ட மண்டபத்திலே அவர்களிடத்தில் ஓடிப்போய்க் கூடினார்கள்.

௰௨ பேதுரு அதைக்கண்டு சனங்களுடனே சொன்னதாவது: இஸ்ரவேலரே, இதைக்குறித்து நீங்கள் ஆச்சரியப்படுகிறதென்ன? அல்லது நாங்கள் எங்கள் சுயவல்லமையினாலாவது பத்தியினாலாவது இவனை நடக்கப்பண்ணினவர்களாக நீங்கள் எங்களை நோக்கிப் பார்க்கிறதென்ன?

௰௩ [3]நம்முடைய முன்னோர்களாகிய ஆபிரகாம், ஈசாக்கு, யாக்கோபு என்பவர்களுடைய தேவனாயிருக்கிறவர் தம்முடைய குமாரனாகிய [4]இயேசுவை மகிமைப்படுத்தினார்; அந்த இயேசுவைப் பிலாத்து விடுதலையாக்க எண்ணினபொழுது, [5]நீங்கள் அவனுக்கு முன்பாக அவரை ஒப்புக்கொடுத்து [6]மறுதலித்தீர்கள்.

௰௪ [7]பரிசுத்தமும் [8]நீதியுமுள்ளவரை நீங்கள் மறுதலித்து, கொலைபாதகனை மனிதனை உங்களுக்காக விடுதலையாக்கவேண்டுமென்று கேட்டீர்கள்; ஜீவனையுடைய அதிபதியையே* கொலைசெய்தீர்கள்.

௰௫ [9]அவரைப் பராபரன் மரித்தோரிலிருந்து எழுப்பினார்; [10]அதற்கு நாங்கள் சாட்சிகளாயிருக்கிறோம்.

௰௬ மேலும் [11]அவருடைய நாமத்தின்மேலுள்ள விசுவாசத்தினாலே அவருடைய நாமமே நீங்கள் பார்த்து அறிந்திருக்கிற இவனைத் திடப்படுத்திற்று; அவரைப் பற்றிக்கொண்ட விசுவாசமே உங்கள் எல்லாருக்குமுன்பாகவும் இந்தச் சர்வாங்க சுகத்தை இவனுக்குக் கொடுத்தது.

௰௭ ¶ சகோதரரே, நீங்களும் உங்கள் தலைவரும் [12]அதை அறியாமையினாலே செய்தீர்கள் என்று அறிந்திருக்கிறேன்.

௰௮ [13]பராபரன் கிறிஸ்து பாடுபடவேண்டுமென்று தம்முடைய தீர்க்கதரிசிகள் எல்லாருடைய வாக்கினாலும் [14]முன் அறிவித்தவைகளை இவ்விதமாய் நிறைவேற்றினார்.

௰௯ ¶ ஆனபடியினாலே பராபரனுடைய சந்நிதானத்திலிருந்து சவுக்கியம் உண்டாகும் காலங்கள் வரவும், முன்னே குறிக்கப்பட்ட இயேசுக்கிறிஸ்துவை அவர் உங்களிடத்தில் அனுப்பவும் தக்கதாக உங்கள் பாவங்கள் நிவிர்த்தி செய்யப்படும்படிக்கு,

௨௰ [15]நீங்கள் மனதைத் திருத்திக் குணப்படுங்கள்.

௨௧ [16]உலகம் உண்டானதுமுதல் பராபரன் தம்முடைய பரிசுத்த தீர்க்கதரிசிகள் எல்லாருடைய வாக்கினாலும் உரைத்தவைகள் எல்லாம் [17]நிறைவேறும் காலம் வரும்பரியந்தம் [18]இயேசுவானவர் பரமண்டலத்திலே இருக்கவேண்டும்.

௨௨ ¶ அந்தத் தீர்க்கதரிசிகளில் மோசேயானவர் நம்முடைய முன்னோர்களுடனே சொன்னதாவது: [19]உங்கள் தேவனாகிய பராபரன் என்னைப்போலத் தீர்க்கதரிசி ஒருவரை உங்களுக்காக உங்கள் சகோதரரிலிருந்து தோன்றப்பண்ணுவார்; அவர் உங்களுக்குச் சொல்லும் யாவற்றிற்கும் செவிகொடுப்பீர்களாக.

கி. பி. ௩௩.

1 யோவா. ௯. ௮.
2 யோவா. ௰. ௨௩. அப். ௫. ௰௨.
3 அப். ௫. ௩௰.
4 யோவா. ௭. ௩௯: ௰௨, ௰௩: ௰௭. ௧.
5 மத். ௨௭. ௨.
6 மத். ௨௭. ௨௰. மாற். ௰௫. ௰௧. லூக். ௨௩. ௰௮, ௨௰, ௨௩. யோவா. ௰௮. ௪௰: ௰௯. ௰௫. அப். ௰௩. ௨௮.
7 சங். ௰௬. ௰. மாற். ௧. ௨௪. லூக். ௧. ௩௫. அப். ௨. ௨௭: ௪. ௨௭.
8 அப். ௭. ௫௨: ௨௨. ௰௪.
* அல்லது காரணரை. எபி. ௨. ௰: ௫. ௯. ௧ யோ. ௫. ௰௧.
9 அப். ௨. ௨௪.
10 அப். ௨. ௩௨.
11 மத். ௯. ௨௨. அப். ௪. ௰: ௰௪. ௯.
12 லூக். ௨௩. ௩௪. யோவா. ௰௬. ௩. அப். ௰௩. ௨௭. ௧ கொரி. ௨. ௮. ௧ தீமோ. ௧. ௰௩.
13 லூக். ௨௪. ௪௪. அப். ௨௬. ௨௨.
14 சங். ௨௨. ஏசா. ௫௰. ௬: ௫௩. ௫. தானி. ௯. ௨௬. ௧ பே. ௧. ௰, ௰௧.
15 அப். ௨. ௩௮.
16 லூக். ௧. ௭௰.
17 அப். ௧. ௰௧.
18 மத். ௰௭. ௰௧.
19 உபா. ௰௮. ௰௫, ௰௮, ௰௯. அப். ௭. ௩௭.

Digitized by Google

௨௩ அந்தத் தீர்க்கதரிசியின் சொல் கேளாதவன் எவனோ, அவன் தன் சனத்தில் இராதபடிக்கு நிர்மூலமாக்கப்படுவான் என்று சொன்னார்.

௨௪ சாமுவேலும் அவனுக்குப் பின்வந்து பேசின தீர்க்கதரிசிகள் எல்லாரும் இந்த நாள்களை முன் அறிவித்தார்கள்.

௨௫ [1]நீங்களே அந்தத் தீர்க்கதரிசிகளுடைய சந்ததியாருமாய், பூமியிலுள்ள வம்சத்தார் எல்லாரும் [2]உன் சந்ததியினாலே ஆசீர்வதிக்கப்படுவார்கள் என்று பராபரன் ஆபிரகாமுக்குச் சொல்லி, இவ்விதமாய் நம்முடைய முன்னோர்களோடே பண்ணின உடம்படிக்கைக்கு உள்ளானவர்களுமாய் இருக்கிறீர்கள்.

௨௬ ஆதலால் முதலாவது உங்களுக்காகவே [3]பராபரன் தம்முடைய குமாரனாகிய இயேசுவை எழுப்பி, [4]உங்களில் தங்கள் பொல்லாங்குகளை விட்டுத் திரும்புகிறவர்கள் எவர்களோ, அவர்கள் எல்லாரையும் [5]அவர் ஆசீர்வதிக்கும்படிக்கு அவரை அனுப்பினார் என்றான்.

## ௪. அதிகாரம்.

௧. யூதர்களுடைய தலைவர்கள் பேதுருவின் பிரசங்கத்துக்காகத் தாங்கலடைந்து, ௪. (திருவசனத்தைக் கேட்ட அநேகமாயிரம்பேர்கள் குணப்பட்டாலும்) அவனையும் யோவானையும் காவலில் அடைத்தது. ௫. அவனைச் சோதித்தபோது அவன் சப்பாணியாயிருந்தவன் இயேசுவின் நாமத்தினால் சுகமடைந்தானென்றும், அந்த இயேசுவினாலேயே நாம் நித்திய இரட்சிப்பை அடையவேண்டுமென்றும் தயிரியமாய்ச் சொல்ல, ௰௩. அவர்கள் அவனுக்கும் யோவானுக்கும் அந்த நாமத்தில் பிரசங்கிக்கக் கூடாதென்று கற்பித்து, அவர்களைப் பயமுறுத்தினதினிமித்தம், ௨௩. சபையார் செபம்பண்ணினது. ௩௧. பராபரன் அவர்கள் கூடியிருந்த இடத்தை அசைத்ததால் அவர்கள் செபத்தைக் கேட்டாரென்று சாட்சியிட்டு, திருச்சபைக்குப் பரிசுத்தஆவியின் ஈவையும் அந்நியோந்நிய ஐக்கத்தையும் உண்டுபண்ணினது.

இப்படி அவனும் யோவானும் சனங்களுடனே பேசிக்கொண்டிருக்கையில்,

௨ அவர்கள் சனங்களுக்கு உபதேசித்ததினாலும், இயேசுவானவர் மரித்தோரிலிருந்து உயிரோடெழுந்திருக்கிறார் என்று அறிவித்ததினாலும், ஆசாரியரானவர்களும் தேவாலயத்தைக் காக்கிற சேனைத்தலைவனும், * சதுசேயரானவர்களும் [6]விசனப்பட்டு,

௩ அவர்களிடத்தில் போய் அவர்களைப் பிடித்து, சாயங்காலமானபடியினாலே மறுநாள்வரைக்கும் காவலில் வைத்தார்கள்.

௪ அப்போஸ்தலருடைய வசனத்தைக் கேட்டவர்களில் அநேகர் விசுவாசித்தார்கள்; அவர்களுடைய தொகை ஏறக்குறைய ஐயாயிரம்பேராயிருந்தது.

௫ ¶ மறுநாளிலே சனங்களுடைய தலைவரும், மூப்பரும், வேதபாரகரும்,

௬ [7]பிரதான ஆசாரியனாகிய அன்னாவும், காய்பாவும், யோவானும், அலெக்குசந்தரும், பிரதான ஆசாரிய குடும்பத்தாராகிய மற்ற யாவரும் எருசலேமிலே கூடிவந்து,

௭ அவர்களை நடுவே நிற்கப்பண்ணி, [8]நீங்கள் எந்த வல்லமையினாலே, எந்த நாமத்தினாலே இதைச் செய்தீர்கள் என்று கேட்டார்கள்.

௮ அப்பொழுது [9]பேதுரு பரிசுத்தஆவியினாலே நிறைந்து, அவர்களுடனே சொன்னதாவது: சனத்தலைவரும் இஸ்ரவேலரின் மூப்பருமானவர்களே,

௯ உபகாரத்தைப் பெற்றுக்கொண்ட வியாதிக்காரனை இவன் எதினாலே சொஸ்தம் அடைந்தான் என்று இன்றைக்கு எங்களிடத்தில் விசாரிக்கிறபடியால்,

௰ உங்களாலே சிலுவைமரத்தில் அறையப்பட்டவருமாய், [10]பராபரனாலே மரித்தோரிலிருந்து எழுப்பப்பட்டவருமாய் இருக்கிற [11]நாசரேத்தூராராகிய இயேசுக்கிறிஸ்துவின் நாமத்தினாலே இவன் உங்களுக்குமுன்பாகச் சொஸ்தமாய் நிற்கிறான் என்று நீங்களும்

கி. பி. ௩௩.

1 அப். ௨. ௩௯. ௨ரோ. ௯. ௪, அ: ௰௫. அ. கலா. ௩. ௨௬.
2 ௧ மோ. ௰௨,௩: ௰அ. ௰அ: ௨௨. ௰அ: ௨௩. ௪: ௨அ. ௰௪. கலா. ௩. அ.
3 மத். ௰. ௫: ௰௫. ௨௪. லூக். ௨௪. ௪௭. அப். ௰௩. ௩௨, ௩௩, ௪௬.
4 மத். ௧. ௨௧.
5 ௨௨. ௩௪.
* அல்லது தேவாலயத்தின் பிரதானி. லூக். ௨௨. ௪. அப். ௫. ௨௪.
6 மத். ௨௨. ௨௩. அப்.௨௩.அ.
7 லூக். ௩. ௨. யோவா. ௰௧. ௪௯: ௰அ. ௰௩.
8 ௨ மோ.௨.௰௪. மத். ௨௧. ௨௩. அப்.௭.௨௭.
9 லூக். ௰௨. ௰௧, ௰௨.
10 அப். ௨. ௨௪.
11 அப்.௩.௬,௰௬.

Digitized by Google

இஸ்ரவேல் சனங்கள் எல்லாரும் அறிந்திருப்பீர்களாக.

௰௧ [1]வீடு கட்டுகிறவர்களாகிய உங்களால் அசட்டைபண்ணப்பட்ட கல் அவரே; அவரே கோடிக்குத் தலைக்கல்லானவர்.

௰௨ [2]அல்லாமலும் அவராலேயன்றி வேறொருவராலும் இரட்சிப்புக் கிடையாது; நாம் இரட்சிப்பை அடையும்படிக்கு வானத்தின்கீழ் எங்கும் மனிதர்களுக்குள்ளே வேறொரு நாமம் கட்டளை இடப்படவும் இல்லை என்றான்.

௰௩ ¶ பேதுருவும் யோவானும் காண்பித்த தயிரியத்தை அவர்கள் பார்த்து, [3]அவர்கள் படியாதவர்கள் என்றும் தாழ்மையானவர்கள் என்றும் அறிந்தபடியினாலே ஆச்சரியப்பட்டார்கள்; அவர்கள் இயேசுவுடனேகூட இருந்தவர்கள் என்றும் அறிந்தார்கள்.

௰௪ மேலும் குணமாக்கப்பட்ட மனிதனை [4]அவர்கள் அருகே நிற்கக்கண்டபடியால், அவர்கள் எதிர்பேசுகிறதற்குஇடமிருக்கவில்லை.

௰௫ அப்பொழுது அவர்கள் சங்கத்தைவிட்டு வெளியே போகும்படி கட்டளையிட்டு, பின்பு தங்களுக்குள்ளே யோசனைபண்ணிக்கொண்டு சொன்னதாவது:

௰௬ [5]எருசலேமில் வாசம்பண்ணுகிற யாவருக்கும் தெரிந்திருக்கிற வெளியரங்கமான அற்புதம் அந்த மனிதர்களால் செய்யப்பட்டது; [6]அதை நாம் இல்லை என்று சொல்லக்கூடாது; ஆகையால் நாம் அவர்களை என்னசெய்யலாம்?

௰௭ சனங்களுக்குள்ளே அது அதிகமாய்ப் பிரசித்தமாகாதபடிக்கு, இதுமுதல் அவர்கள் அந்த நாமத்தைக்குறித்து ஒரு மனிதனோடும் பேசக்கூடாதென்று நாம் அவர்களைப் பயப்படுத்திக் கட்டளை இடவேண்டும் என்று சொல்லிக்கொண்டு,

௰௮ [7]அவர்களை அழைத்து, இயேசுவின் நாமத்தைக்குறித்து எவ்வளவும் பேசாமலும் போதியாமலும் இருக்கும்படி அவர்களுக்குக் கட்டளை இட்டார்கள்.

௰௯ ¶ அதற்கு மாறுத்தரமாகப் பேதுருவும்யோவானும்சொன்னதாவது: [8]நாங்கள் பராபரனுக்குக் கீழ்ப்படுகிறதிலும், உங்களுக்குக் கீழ்ப்படுகிறது பராபரனுக்குமுன்பாக நியாயமாயிருக்குமா? இதை நீங்கள் நிதானித்துப்பாருங்கள்.

௨௰ [9]நாங்கள் கண்டவைகளையும் கேட்டவைகளையும் [10]பேசாமல் இருக்கக்கூடாதே என்றார்கள்.

௨௧ அப்படியிருந்தும் அற்புதத்தால் சொஸ்தமாக்கப்பட்ட மனிதன் நாற்பதுவயதுக்கு அதிக வயதுள்ளவனானபடியால்,

௨௨ [11]நடந்ததைக்குறித்துச் சனங்கள் எல்லாரும் பராபரனைப் புகழ்ந்தபடியினாலே, [12]அப்போஸ்தலர்களைத் தண்டிக்கும்படிக்குச் சனங்களின்நிமித்தம் சங்கத்தார் வகை ஒன்றும் காணாமல், அவர்களைப் பின்னும் பயப்படுத்திவிட்டுவிட்டார்கள்.

௨௩ ¶ [13]அவர்கள் விடப்பட்டபின்பு தங்களைச் சேர்ந்தவர்களிடத்திற்குப் போய், தங்களுக்குப் பிரதான ஆசாரியரும் மூப்பரும் சொன்ன யாவையும் அறிவித்தார்கள்.

௨௪ அவர்கள் அதைக் கேட்டு ஒருமனப்பட்டுப் பராபரனை நோக்கிச் சொன்னதாவது: ஆண்டவரே, [14]நீர் வானத்தையும், பூமியையும், சமுத்திரத்தையும், அவைகளிலுள்ள யாவையும் உண்டாக்கின தேவனாய் இருக்கிறீர்.

௨௫ உம்முடைய தாசனாகிய தாவீதைக்கொண்டு தேவரீர் சொன்னது: உலகத்தார் என்னத்திற்குக் கலகம்பண்ணுகிறார்கள்? [15]சனக்கூட்டங்கள் என்னத்திற்கு வீணனகாரியங்களைச் சிந்திக்கிறார்கள்.

இ. பி. ௩௩.

1 சங். ௧௧௮. ௨௨. எசா. ௨௮. ௧௬. மத். ௨௧. ௪௨.
2 மத். ௧. ௨௧. அப். ௰. ௪௩. ௧ தீமோ. ௨. ௫, ௬.
3 மத். ௰௧. ௨௫. ௧ கொரி. ௧. ௨௭.
4 அப். ௩. ௰௧.
5 அப். ௩. ௯, ௰.
6 யோவா. ௰௧. ௪௭.
7 அப். ௫. ௪௦.
8 அப். ௫. ௨௯.
9 அப். ௨௨. ௰௫. ௧ யோ. ௧. ௧, ௩.
10 அப். ௧. ௮; ௨. ௩௨.
11 மத். ௨௧. ௨௬. லூக். ௨௰. ௧, ௬; ௨௨. ௨. அப். ௫. ௨௬.
12 அப். ௫. ௭, ௮.
13 அப். ௰௨. ௰௨.
14 ௨ இரா. ௰௯. ௰௫.
15 சங். ௨. ௧.

உசா பூமியிலுள்ள இராசாக்களும் காரியத்தலைவரும் பராபரனுக்கும் அவருடைய கிறிஸ்துவுக்கும் விரோதமாய் எழும்பி, ஏகமாய்க் கூடினார்கள் என்றீர்.

உஎ அதின்படி இந்த நகரத்திலே ஏரோதும் பொந்தியுபிலாத்துவும் அஞ்ஞானிகளோடும் [1]இஸ்ரவேல் சனங்களோடுங்கூடத் தேவரீருடைய கையும் ஆலோசனையும் முன்னே குறித்தவைகள் யாவையும் செய்வதற்கு,

உஅ [2]தேவரீர் அபிஷேகம்பண்ணிவைத்த உம்முடைய [3]பரிசுத்த குமாரனாகிய இயேசுவுக்கு [4]விரோதமாக மெய்யாய்க் கூடினார்கள்.

உகூ அப்படியிருக்கக் கர்த்தாவே, [5]அவர்கள் (எங்களைப்) பயப்படுத்துகிறதைத்தேவரீர்நோக்கிப் பார்த்து,

௩௰ [6](பிணியாளிகளைக்) குணமாக்குதற்கு உம்முடைய வல்லமை வெளிப்படும்படியாயும், உம்முடைய [7]பரிசுத்த குமாரனாகிய இயேசுவின் நாமத்தினாலே [8]அதிசயங்களும் அற்புதங்களும் நடக்கும்படியாயும்செய்து,உம்முடைய ஊழியக்காரர் உம்முடைய வசனத்தை மிகுந்த தயிரியத்தோடு சொல்லும்படி அவர்களுக்கு அநுக்கிரகம் செய்யும் என்றார்கள்.

௩க ¶ அவர்கள் செபம்பண்ணினபொழுது, [9]அவர்கள் கூடியிருந்த இடம் அசைந்தது; அல்லாமலும் அவர்கள் எல்லாரும் பரிசுத்தஆவியினாலே நிரப்பப்பட்டு, [10]பராபரனுடைய வசனத்தைத் தயிரியத்தோடே சொன்னார்கள்.

௩உ ¶ அன்றியும் திரளான விசுவாசிகளுக்கு [11]ஒரே இருதயமும் ஒரே ஆத்துமாவும் இருந்தன;[12]ஒருவனாகிலும் தனக்கு உள்ளவைகளில் ஒன்றையும் தன்னுடையதென்று சொல்லவில்லை; சகலமும் அவர்களுக்குப் பொதுவாயிருந்தன.

௩௩ [13]கர்த்தராகிய இயேசு உயிரோடெழுந்ததைக்குறித்து [14]அப்போஸ்தலர்கள் மிகுந்த பலத்தோடே [15]சாட்சிகொடுத்தார்கள்.

௩ச [16]மேலும் நிலங்களையும் வீடுகளையுமுடைய யாவரும் அவைகளை விற்று, விற்கப்பட்ட பொருள்களின் விலைக்கிரயத்தை [17]அப்போஸ்தலரிடத்தில் கொண்டுபோய், அவர்களுடைய பாதத்திலே வைத்தார்கள்.

௩ரு (அதில்) [18]அவனவனுக்கு வேண்டியிருந்தபடி பகிர்ந்துகொடுக்கப்பட்டது. ஆதலால் அவர்களில் ஒருவனும் குறைவுபடவில்லை; ஆனபடியினாலே மிகுந்த கிருபை அவர்கள் எல்லாருக்கும் உண்டாயிருந்தது.

௩சா இலேவியனுமாய், சிப்புருதீவில் பிறந்தவனுமாய், ஆறுதலின் மகனென்று அருத்தங்கொள்ளுகிற பருனபா என்று பேரை அப்போஸ்தலராலே பெற்றுக்கொண்டவனுமாயிருந்த யோசேப்பென்பவனும் [19]தனக்கு உண்டான நிலத்தை விற்று,

௩எ திரவியத்தைக் கொண்டுபோய்,அப்போஸ்தலருடையபாதத்திலே வைத்தான்.

கி. பி. ௩௩.

1 அப். உ. உக: க. ௰அ.
2 மத். உக. க. லூக். உஉ. உ: உக. க, அ.
3 லூக். க. கஙெ.
4 லூக். ச. ௰அ. யோவா. ௰. கக.
5 ௰க. கக. ௰ச. அப். கூ. உஎ: ௰க. சக: ௰ச. க:௰கூ. அ:உக. உக: உஅ. கக. எபே. க. ௰கூ.
6 அப். உ. சக: ஙெ. ௰உ.
7 அப். க.கூ, ௰க.
8 உஎ. ௰ச.
9 அப். உ. உ,ச: ௰க. உக.
10 உக. ௰ச.
11 அப். ஙெ. ௰உ. உரோ. ௰ஙெ. ஙெ, க. உ கொரி. ௰க. ௰க. பிலி.க. உஎ: உ. உ. க பே. க. அ.
12 அப். உ. சச.
13 அப். க. அ.
14 அப். க. உஉ.
15 அப். உ. சஎ.
16 அப். உ. சஙெ.
17 கஎ. ௰ச.அப். ஙெ. உ.
18 அப். உ. சஙெ: கூ. க.
19 கச, கஙெ. ௰ச. அப். ஙெ. க, உ.

## ரு. அதிகாரம்.

க. அனனியாவும், அவன் பெண்சாதி சப்பீராளும் செய்த பாவத்தின் நிமித்தம் பேதுருவினாலே கண்டிக்கப்பட்டு, விழுந்து செத்தது. ௰உ. சபையின் விசுவாசம் பெருகும்படி மற்ற அப்போஸ்தலர்களும் அநேக அற்புதங்களைச் செய்தது. ௰எ. அந்த அப்போஸ்தலர் மறுபடியும் காவலில் அடைக்கப்பட்டும், ௰கூ. ஒரு தேவதூதனால் விடுதலையாக்கப்பட்டு,யாவருக்கும் பிரசங்கிக்கக் கட்டளைபெற்றது. உக. அவர்கள் தேவாலயத்தில் பிரசங்கித்ததினாலே, உகூ. மரணத்துக்கு ஏதுவாயிருக்கையில் யூதர்களுக்குள்ளே பெரிய ஆலோசனைக்காரனாயிருந்த காமாலியேல் சொன்ன ஆலோசனையின்படி உயிரோடே விடப்பட்டபின்பு, சம. அடிக்கப்பட்டும் நாள்தோறும் பிரசங்கித்துப் பராபரனை மகிமைப்படுத்தினது.

அல்லாமலும் அனனியா என்னப்பட்டவனும், அவனுடைய மனைவியாகிய சப்பீராளும் (தங்கள்) காணியை விற்றார்கள்.


Digitized by Google

உ பின்பு அவன் தன் மனைவியும் அறிய அந்தக் கிரயத்திலே சில பணத்தை வஞ்சித்துவைத்து, [1]ஒரு பங்கைமாத்திரம் கொண்டுபோய், அப்போஸ்தலருடைய பாதத்திலே வைத்தான்.

ங [2]அப்பொழுது பேதுரு சொன்னது: அனனியாவே, [3]நிலத்தின் விலைக்கிரயத்திலே சில பணத்தை நீ மறைத்துவைத்து, பரிசுத்த ஆவியினிடத்தில் பொய்சொல்லும்படிக்கு,* சாத்தான் உன் இருதயத்தை நிரப்பினதென்ன?

ச அது விற்கப்படாமலிருந்தபொழுது உன்னுடையதாய்இருக்கவில்லையோ? அதை விற்றபின்பு, (அதின் கிரயம்) உன் அதிகாரத்தில் இருக்கவில்லையோ? அப்படியிருக்க, என்னத்தினாலே நீ இந்தக் காரியத்தை உன் இருதயத்திலே வைத்தாய்? நீ மனிதரிடத்தில் அல்ல, பராபரனிடத்திலேபொய் சொன்னாய் என்றான்.

ரு இந்த வார்த்தைகளை அனனியா கேட்டபொழுது, [4]அவன் விழுந்து சீவனை விட்டான்; இந்தச் சங்கதியைக்கேட்ட யாவருக்கும் மிகுந்த பயம் உண்டாயிற்று.

சு சில வாலிபர் எழுந்து, [5]அவனை ஒரு சேலையில் கட்டி, வெளியே கொண்டுபோய், அடக்கம் பண்ணினார்கள்.

எ ¶ ஏறக்குறைய மூன்றுமணி நேரத்திற்குப் பின்பு, அவனுடைய மனைவி அந்த நடக்கையை அறியாமல் உள்ளே போனாள்.

அ அவளுடனே பேதுரு (உங்கள்) நிலத்தை இவ்வளவு கிரயத்திற்கா விற்றீர்கள், அதை எனக்குச் சொல்லென்றான்; அவள் இவ்வளவுக்கே அதை விற்றோம் என்றாள்.

கூ அப்பொழுது பேதுரு சொன்னதாவது: [6]பராபரனுடைய ஆவியைச் சோதிக்கிறதற்கு நீங்கள் என்னத்தினாலே ஒருமைப்பட்டீர்கள்? உன் புருஷனை அடக்கம்பண்ணினவர்களுடைய கால்கள் உன்னையும் வெளியே கொண்டுபோகும்படிக்கு அதோ வாசற்படியிலே வந்திருக்கின்றன என்றான்.

௰ [7]உடனே அவள் அவனுடைய பாதத்தில் விழுந்து, சீவனைவிட்டாள்; வாலிபர் உள்ளே சென்று, அவள் மரித்ததைக் கண்டு, அவளை வெளியே கொண்டுபோய், அவளுடைய புருஷனிடத்தில் அடக்கம்பண்ணினார்கள்.

௰க அதினாலே [8]சபையார் எல்லாருக்கும் அதைக் கேட்ட மற்ற யாவருக்கும் மிகுந்த பயம் உண்டாயிற்று.

௰உ ¶ [9]பின்னும் அப்போஸ்தலருடைய கைகளினாலே அநேக அதிசயங்களும் அற்புதங்களும் சனங்களுக்குள்ளே செய்யப்பட்டன; [10]எல்லாரும் ஒருமனப்பட்டு, சாலோமோனுடைய மண்டபத்தில் இருந்தார்கள்.

௰ங [11]மற்றவர்களில் ஒருவரும் அவர்களுடனே சேர்ந்திருக்கத் துணியவில்லை.

௰ச அப்படியிருந்தும் திரளான புருஷரும் ஸ்திரிகளும் கர்த்தாவினிடத்தில் விசுவாசமுள்ளவர்களாகிச் சேர்த்துக்கொள்ளப்பட்டார்கள்.

௰ரு [12] அல்லாமலும் சனங்கள் அப்போஸ்தலரை மேன்மைப்படுத்தினார்கள்; அதினாலே அவர்கள் பிணியாளிகளைப் படுக்கைகளின் மேலும் கட்டில்களின்மேலும் கிடத்தி, பேதுரு நடந்துபோகையில், [13]அவனுடைய நிழலாகிலும் சிலரில் படும்படிக்கு அவர்களை வெளியே வீதிகளில்† கொண்டுபோனார்கள்.

௰சு சுற்றுக் கிராமங்களிலுமிருந்து திரளான சனங்கள் [14]பிணியாளிகளையும் அசுத்த ஆவிகளால் வாதிக்கப்பட்டவர்களையும் எருசலேமுக்குக் கொண்டுபோனார்கள்; அவர்கள் எல்லாரும் குணமாக்கப்பட்டார்கள்.

கி. பி. ௩௩.

1 அப். ச. ௩எ.
2 ச மோ. ௩௰.உ. ஐ மோ. உக. உஉ. பிர. ஐ.ச.
3 லூக். உஉ. ங.
* அல்லது வஞ்சிக்கிறதற்கு; கூ. ௰ச.
4 ௰, ௰க. ௰ச.
5 யோவா. ௰கூ. ச௰.
6 கூ. ௰ச. மத். ச. எ.
7 ஐ. ௰ச.
8 ஐ ௰ச. அப். உ. சங: ௰கூ. ௰எ.
9 அப். உ. சங: ௰ச. ங: ௰கூ. ௰க. உகொ. ௰உ.௰உ. உ கொரி. ௰உ. ௰உ. எபி. உ. ச.
10 அப். ங. ௰க: ச. ௩உ.
11 யோவா. கூ. உஉ: ௰உ. சஉ: ௰கூ. ௩அ:
12 அப். உ. சஎ: ச. உக.
13 மத். கூ. உக: ௰ச. ௩க. அப். ௰கூ. ௰உ.
† அல்லது வீதிகள்தோறும்.
14 மாற். ௰கூ. ௰எ, ௰அ. யோவா. ௰ச. ௰உ.



Digitized by Google

௰௭ ¶ [1]அப்பொழுது பிரதான ஆசாரியனும் அவனுடனேகூட இருந்த சதுசேயர் வகுப்பைச் சேர்ந்த அனைவரும் எழும்பி வைராக்கியத்தால்* நிரப்பப்பட்டு,

௰௮ [2]அப்போஸ்தலர்களைப் பிடித்து, நகரத்தின் சிறைச்சாலையிலே வைத்தார்கள்.

௰௯ இராத்திரியிலே [3]பராபரனுடைய தூதன் சிறைச்சாலையின் கதவுகளைத் திறந்து அவர்களை வெளியே கொண்டுவந்து,

௨௰ நீங்கள் போய்த் தேவாலயத்திலே நின்று இந்தச் [4]சீவவார்த்தைகள் எல்லாவற்றையும் சனங்களுக்குச் சொல்லுங்கள் என்றான்.

௨௧ அந்தப்படி அவர்கள் கேட்டு, அதிகாலையிலே தேவாலயத்திற்குப் போய்ப் போதகம்பண்ணினார்கள்; அத்தருணத்திலே [5]பிரதான ஆசாரியனும் அவனுடனேகூட இருந்தவர்களும் போய், பெரிய சங்கத்தாரையும் இஸ்ரவேல் சனங்களின் மூப்பர் எல்லாரையும் கூடிவரவழைத்து, அப்போஸ்தலரைக் கொண்டுவரும்படி சிறைச்சாலைக்கு (சேவகரை) அனுப்பினார்கள்.

௨௨ அந்தப்படி சேவகர் காவல்வீட்டிற்குப் போய், அங்கே அவர்களைக் காணாமல் திரும்பி,

௨௩ சிறைச்சாலை மிகவும் பத்திரமாய்ப் பூட்டப்பட்டிருக்கவும், காவற்காரர் கதவுகளின் முன்னே நிற்கவும் கண்டோம்; அவைகளைத் திறந்தபொழுது, உள்ளே ஒருவரையும் காணோமென்று அறிவித்தார்கள்.

௨௪ இந்தச் செய்தியை ஆசாரியனும், தேவாலயத்தைக் காக்கிற [6]சேனைத்தலைவனும், பிரதான ஆசாரியரும் கேட்டு, இதென்னமாய் இருக்கிறதென்று அவர்களைக்குறித்துச் சந்தேகப்பட்டார்கள்.

௨௫ அப்பொழுது ஒருவன் சேர்ந்து, நீங்கள் காவலில் வைத்த மனிதர் தேவாலயத்திலே நின்று, சனங்களுக்கு உபதேசம்பண்ணுகிறார்கள் என்று அறிவித்தான்.

௨௬ ¶ உடனே சேனைத்தலைவன் சேவகரோடும் கூடப்போய்ச் சனங்களாலே கல்லெறியப்படாதபடிக்கு, அவர்களுக்குப் [7]பயந்தினாலே பலவந்தம்பண்ணாமல் அப்போஸ்தலரை அழைத்துக்கொண்டான்.

௨௭ அப்படி அவர்கள் அவர்களை அழைத்துப்போய், பெரிய சங்கத்தாருக்குமுன்பாக நிறுத்தினார்கள்; அப்பொழுது பிரதான ஆசாரியன் அவர்களை நோக்கி,

௨௮ [8]நீங்கள் அந்த நாமத்தைக்குறித்து உபதேசம்பண்ணக்கூடாதென்று நாங்கள் உங்களுக்குக் கெட்டியாய்க் கட்டளையிடவில்லையோ? அப்படியிருந்தும், நீங்கள் உங்கள் உபதேசத்தினாலே எருசலேமை நிரப்பி, அந்த மனிதனுடைய [9]இரத்தப்பழி எங்கள்மேல் வரப்பண்ண [10]விரும்புகிறீர்கள் என்று சொன்னான்.

௨௯ ¶ அதற்குப் பேதுருவும் (மற்ற) அப்போஸ்தலரும் சொன்னதாவது: நாங்கள் மனிதருக்குக் கீழ்ப்படுகிறதிலும் [11]பராபரனுக்குக் கீழ்ப்படியவேண்டும்.

௩௰ [12]நீங்கள் மரத்திலே தூக்கிக் கொலைசெய்த இயேசுவை [13]நம்முடைய முன்னோர்களுடைய தேவன் எழுப்பி,

௩௧ [14]இஸ்ரவேலருக்கு மனந்திரும்புதலையும் பாவமன்னிப்பையும் கொடுக்கிறதற்கு, [15]அவரை அதிபதியாகவும் [16]இரட்சகராகவும் [17]தமது வலதுகையினாலே உயர்த்தினார்.

௩௨ இந்தச் சங்கதிகளைக்குறித்து [18]நாங்களும், பராபரன் தமக்குக் கீழ்ப்படுகிறவர்களுக்குக் கொடுத்த [19]பரிசுத்த ஆவியும், அவருடைய சாட்சிகளாயிருக்கிறோம் என்றார்கள்.

௩௩ ¶ [20]அதை அவர்கள் கேட்டு மிகுந்த மூர்க்கம் அடைந்து, அ

இ. பி. ௩௩.

1 அப். ௪. ௧, ௨, ௩.
* அல்லது பொறாமையினால்.
2 லூக். ௨௧. ௱௨.
3 அப். ௱௨. ௭: ௱௬. ௨௬.
4 யோவா. ௬. ௬௮: ௰௭. ௩. ௧ யோ. ௫. ௰௧.
5 அப். ௪. ௫, ௬.
6 லூக். ௨௨. ௪. அப். ௪. ௧.
7 மத். ௨௧. ௨௬.
8 அப். ௪. ௰௮.
9 அப். ௨. ௨௩, ௩௬: ௩. ௰௫: ௭. ௫௨.
10 மத். ௨௩. ௩௫: ௨௭. ௨௫.
11 அப். ௪. ௰௯.
12 அப். ௩. ௰௩: ௰௬. ௨௬. கலா. ௩. ௰௩. ௧ பே. ௨. ௨௪.
13 அப். ௩. ௰௩, ௨௨: ௨௨. ௰௪.
14 லூக். ௨௪. ௪௭. அப். ௩. ௨௬: ௰௩. ௩௮. எபே. ௧. ௭. கொலோ. ௧. ௰௪.
15 அப். ௩. ௰௫.
16 மத். ௧. ௨௧.
17 அப். ௨. ௩௩, ௩௬. பிலி. ௨. ௯. எபி. ௨. ௰: ௰௨. ௨.
18 அப். ௨. ௩௨: ௰. ௩௯.
19 யோவா. ௰௫. ௨௬, ௨௭.
20 அப். ௨. ௩௭: ௭. ௫௪.

வர்களைக் கொலைசெய்யும்படிக்கு யோசனைபண்ணினார்கள்.

௩௪ அப்பொழுது எல்லாச் சனங்களாலும் கனம்பெற்றுக்கொண்ட வேதசாஸ்திரியாகிய [1]கமாலியேல் என்னப்பட்ட பரிசேயனானவன் பெரிய சங்கத்தாருக்குள்ளே எழுந்திருந்து, அப்போஸ்தலரைச் சற்றுநேரம் வெளியே கொண்டுபோகச் சொல்லிச் சங்கத்தாருடனே சொன்னதாவது:

௩௫ இஸ்ரவேலரே, நீங்கள் அந்த மனிதருக்குச் செய்ய நினைக்கிறதைக்குறித்து, எச்சரிக்கையாய் இருப்பீர்களாக.

௩௬ இந்த நாள்களுக்குமுன்னே தெயுதா என்பவன் எழும்பி, தன்னைப் பெரியவன் என்று சொல்லி, ஏறக்குறைய நானூறுபேர் தன்னை அடுத்துக்கொள்ளும்படி செய்து பின்பு அழிக்கப்பட்டான்; அவனை நம்பியிருந்த* அனைவரும் கலைந்து வீணாய்ப் போய்விட்டார்கள்.

௩௭ அவனுக்குப்பின்பு குடிமதிப்புச் செய்யப்பட்ட நாள்களிலே, கலிலேயனாகிய யூதா எழும்பி, அநேக சனங்களைத் தன்வசமாக்கினான், அவனும் அழிந்துபோனான், அவனை நம்பியிருந்த அனைவரும் சிதறடிக்கப்பட்டார்கள்.

௩௮ ஆனபடியினாலே நான் உங்களுக்குச் சொல்லுகிறதென்னவென்றால், [2]இந்த மனிதர்களுடைய யோசனை, அல்லது இவர்களுடைய கிரியை மனிதரால் உண்டானதானால் அது ஒழிந்துபோம்.

௩௯ [3]அது பராபரனால் உண்டானால், அதை நீங்கள் ஒழித்துப்போடமாட்டீர்கள்; ஆதலால் [4]நீங்கள் பராபரனோடே போர்செய்கிறவர்களாய்க் காணப்படாதபடிக்கு, இவர்களுக்கு ஒன்றும்செய்யாமல் இவர்களை விடுங்கள் என்றான்.

௪௦ ¶ அவனோடே மற்றவர்கள் பொருந்தி, [5]அப்போஸ்தலரை வரவழைத்து, [6]அடித்து, இயேசுவின் நாமத்தைக்குறித்து அவர்கள் பேசாதிருக்கும்படிக்குக் கட்டளையிட்டு, அவர்களை விட்டுவிட்டார்கள்.

௪௧ அவர்கள் தாங்கள் அவருடைய நாமத்திற்காகக் கனஈனப்படுகிறதற்குப் பாத்திரர் என்று எண்ணப்பட்டபடியினாலே, [7]சந்தோஷமாய்ப் பெரிய சங்கத்தைவிட்டுப் புறப்பட்டுப்போய்,

௪௨ [8]தினந்தோறும் தேவாலயத்திலேயும் வீடுகளிலேயும் [9]ஓயாமல் உபதேசம்பண்ணி, இயேசுவைக் கிறிஸ்தென்று சுவிசேஷமாய் அறிவித்து வந்தார்கள்.

## சு. அதிகாரம்.

க. அப்போஸ்தலர்கள் ஆத்தும போசனமாகிய தேவவசனத்தைப் பரிமாறவேண்டியதாகையால், ஏழைக்களுக்குச் சரீர பாமரிப்புகளின்நிமித்தம், ௩. தெரிந்துகொள்ளப்பட்ட ஏழுபேர்கள் உதவிக்காரர்களாக ஏற்படுத்தப்பட்டது. ௫. இவ்வேழுபேர்களில் விசுவாசத்தாலும் பரிசுத்தத்தாலும் நிறைந்த ஸ்தேவான் ஒருவன், ௯. தர்க்கத்தால் ஜெயிக்கப்பட்ட எதிராளிகளாலே பிடிக்கப்பட்டு, ௧௩. பரிசுத்த ஸ்தலத்தையும், நியாயப்பிரமாணத்தையும் தூஷணித்ததாய் அநியாயமாய்க் குற்றம் சாற்றப்பட்டது.

அந்த நாள்களில் [10]சீஷர்கள் பெருகினபொழுது கிரேக்கரானவர்களில் உள்ள [11]கைம்பெண்கள் நாள்தோறும் உள்ள விசாரணையிலே நன்றாய் எண்ணிக்கொள்ளப்படாதபடியினாலே, [12]கிரேக்கரானவர்கள் எபிரேயருக்கு விரோதமாய் முறுமுறுத்தார்கள்.

௨ அப்பொழுது பன்னிருவரும் சீஷர்களாகிய திரளைக் கூடிவரவழைத்துச் சொன்னதாவது: [13]நாங்கள் பராபரனுடைய வசனம் போதிக்கிறதை விட்டு, பந்திகளைக்குறித்து விசாரிக்கிறது தகாது.

௩ ஆகையால் சகோதரரே; நீங்கள் உங்களுக்குள்ளே பரிசுத்த ஆவியும் ஞானமும் நிறைந்து, நற்

கி. பி. ௩௩.

1 அப். ௨௨. ௩.
* அல்லது அவனுக்குக் கீழ்ப்படிந்த.
2 லூக். ௨௧. ௧௦. ஏசா. அ. ௰. மத். ௧௫. ௰௩.
3 லூக். ௨௧.௧௫. ௧ கொரி. ௧. ௨௫.
4 அப். எ. ௫௧: ௯. ௫: ௨௩. ௯.
5 அப்.௪.௰அ.
6 மத்.௰.௰எ:௨௩. ௩௪.மாற். ௰௩.௯.
7 மத். ௫. ௰௨. உரோ. ௫. ௩. ௨ கொரி. ௰௨. ௰. பிலி. ௧.௨௯. எபி.௰.௩௪.யாக். ௧. ௨. ௧ பே. ௪. ௰௩, ௰௪.
8 அப். ௨. ௪௬.
9 அப். ௪. ௨௰, ௨௯.
10 அப். ௨. ௪௧: ௪.௪: ௫. ௰௪.எ. ௯௪.
11 அப். ௯. ௩௯.
12 அப். ௯. ௨௯: ௰௧. ௨௰.
13 ௨ மோ. ௰அ. ௰எ.

Digitized by Google

சாட்சி பெற்றிருக்கிற [1]எழுபேரையும் தெரிந்துகொள்ளுங்கள்; அவர்களை இந்த வேலைக்காக ஏற்படுத்துவோம்.

௪ [2]நாங்கள் செபம்பண்ணுதலிலும் (தேவ) வசனத்தைப் போதிக்கிற ஊழியத்திலும் இடைவிடாமல் தரித்திருப்போம் என்றார்கள்.

௫ இந்த யோசனை சபையார் எல்லாருக்கும் பிரியமாய் இருந்தது. ஆதலால் அவர்கள் [3]விசுவாசமும் பரிசுத்த ஆவியும் நிறைந்தவனாகிய ஸ்தேவானையும், [4]பிலிப்பையும், பிரேகோரையும், நிக்கானோரையும், தீமோனையும், பருமேனாவையும் [5]யூதமார்க்கத்தானான அந்தியோகிய பட்டணத்தானாகிய நிக்கோலாவையும் தெரிந்துகொண்டு,

௬ அவர்களை அப்போஸ்தலருக்குமுன்பாக நிறுத்தினார்கள், [6]இவர்கள் செபம்பண்ணி, [7]அவர்கள்மேலே தங்கள் கைகளை வைத்தார்கள்.

௭ ¶ பின்பு [8]பராபரனுடைய வசனம் வளர்ந்தது; சீஷருடைய இலக்கம் எருசலேமிலே மிகவும் பெருகிற்று; [9]ஆசாரியர்களில் அநேகரும் விசுவாசத்திற்குக் கீழ்ப்பட்டார்கள்.

௮ ¶ அன்றியும் ஸ்தேவானென்பவன் கிருபையினாலும் பலத்தினாலும் நிறைந்து, சனங்களுக்குள்ளே பெரிய அற்புதங்களையும் அதிசயங்களையும் செய்தான்.

௯ அப்பொழுது லிபருத்தினர் என்னப்பட்டவர்களின் செபஆலயத்தைச் சேர்ந்தவர்களிலும், கிரேனே பட்டணத்தாரிலும், அலேக்குசந்திரிய பட்டணத்தாரிலும், கிலீக்கியா தேசத்தாரிலும், ஆசியா தேசத்தாரிலும் சிலர் எழும்பி, ஸ்தேவானுடனே தருக்கம்பண்ணிக்கொண்டார்கள்.

௰ [10]அவன் பேசின ஞானத்தோடும் ஆவியோடும் எதிர்த்துநிற்க அவர்களுக்கு வல்லமையில்லை.

௰௧ அப்பொழுது அவர்கள் இரகசியமாய்ச் சில மனிதரைச் சம்பாதித்து, இவன் [11]மோசேயுக்கும் பராபரனுக்கும் விரோதமாகத் தூஷணமான வசனங்களைப் பேசக் கேட்டோம்என்று சொல்லும்படி செய்து,

௰௨ பின்பு சனங்களையும், மூப்பரையும், வேதபாரகரையும் எழுப்பி, அவன்மேல் பாய்ந்து, அவனைப் பெரிய சங்கத்தாருக்குமுன்பாக இழுத்துக்கொண்டுபோய்,

௰௩ பொய்ச்சாட்சிகளையும் ஏற்படுத்தினார்கள்; அவர்கள் சொன்னது: இவன் பரிசுத்த ஸ்தலத்திற்கும் வேத நூலுக்கும் தூஷணமான வசனங்களை ஓயாமல் பேசுகிறான்.

௰௪ நாசரேத்தூராராகிய [12]அந்த இயேசு என்பவர் இந்த ஸ்தலத்தை அழித்து, [13]மோசே நமக்குக் கொடுத்த முறைமைகளை* மாற்றுவாரென்று இவன் சொல்லக் கேட்டோம் என்றார்கள்.

௰௫ பெரிய சங்கத்தில் உளுக்காந்திருந்த யாவரும் அவன்மேல் கண்ணோட்டமானபொழுது, அவனுடைய முகம் தேவதூதன் முகம் போலிருக்கக் கண்டார்கள்.

## ௭. அதிகாரம்.

௧. ஸ்தேவான் தூஷணைச்செய்கைக்கு உத்தரவாக, ஆபிரகாம் பராபரனை விசுவாசமாய்த் தொழுதுகொண்டதையும், ௨௰. மோசே பிறவாததற்குமுன்னும், கூடாரமும் தேவாலயமும் கட்டப்படாததற்கு முன்னும் பராபரன் பிதாக்களை இப்படித் தெரிந்துகொண்டதையும், ௩௭. மோசேதானே கிறிஸ்துவைக்குறித்துச் சாட்சியிட்டதையும், ௪௪. தேவ கட்டளைப்படி உண்டாக்கப்பட்ட புறம்பான சடங்குகள் எல்லாம் கொஞ்சக்காலத்துக்குமாத்திரம் குறிக்கப்பட்டதையும் சொல்லி, ௫௧. உலகத்தில் வருவாரென்று தீர்க்கதரிசிகளால் முன்னறிவிக்கப்பட்ட நீதிபரராகிய கிறிஸ்துவைக் கொலைசெய்த துரோகத்துக்காக அவர்களைக் கடிந்துகொண்டு, ௫௪. இதின்பொருட்டு அவர்கள் அவனைக் கல்லெறிந்து கொல்லும்போது, அவன் தன் ஆத்துமாவை இயேசுவினிடத்தில் ஒப்புவித்து அவர்களுக்காக வேண்டிக்கொண்டது.

பிரதான ஆசாரியன் அவனை நோக்கி, இப்படியாக நடந்ததென்றான்.

௨ அதற்கு அவன் சொன்னதாவது: [14]சகோதரரும் பிதாக்களுமா

கி. பி. ௩௩.

1 ௭ மோ. ௧.௰௬. அப்.௧.௨௧: ௰௧. ௨. ௧ தீமோ. ௩. ௭.
2 அப். ௨.௪௨.
3 அப். ௰௧. ௨௪.
4 அப். ௮. ௫, ௨௬: ௨௧. ௮.
5 வெளி. ௨. ௬, ௰௫.
6 அப். ௧. ௨௪.
7 அப். ௮. ௰௭: ௯. ௰௭: ௰௩. ௩. ௧ தீமோ. ௪. ௰௪: ௫. ௨௨. ௨ தீமோ. ௧.௬.
8 அப். ௰௨.௨௪: ௰௯. ௨௰. கொலோ. ௧. ௬.
9 யோவா. ௰௨. ௪௨.
10 லூக். ௨௧.௰௫. அப். ௫. ௩௯. ௨ மோ. ௪.௰௨. ஏசா. ௫௪. ௰௭.
11 ௧ இரா.௨௧.௰, ௰௩. மத். ௨௬. ௫௯, ௬௰.
12 அப். ௨௫. ௮.
13 தானி.௯.௨௬.
* அல்லது சடங்குகளை.

Digitized by Google

னவர்களே, கேட்பீர்களாக; நம்முடைய பிதாவாகிய ஆபிரகாம் காரானூரிலே குடியிருக்கிறதற்கு முன்னே மெசொப்பொத்தாமியா நாட்டிலே இருந்தபொழுது, மகிமைபொருந்திய பராபரன் அவனுக்குத் தரிசனையாகி,

ங [1] நீ உன் தேசத்தையும் இனத்தாரையும்விட்டுப் புறப்பட்டு, நாம் உனக்குக் காண்பிக்கும் தேசத்திற்குப் போ என்றார்.

ச அப்பொழுது [2]அவன் கல்தேயா தேசத்தைவிட்டுப் புறப்பட்டு, காரானூரிலே வாசம்பண்ணினான். மேலும் அவனுடைய தகப்பன் மரித்தபின்பு, அவ்விடத்தைவிட்டு, நீங்கள் இப்பொழுது குடியிருக்கிற இத்தேசத்திற்கு வந்து குடியிருக்கும்படி செய்தார்.

ரு இதில் ஒரு அடி நிலத்தையாகிலும் அவனுக்குச் சுதந்தரமாகக் கொடாமல், [3] அவன் பிள்ளையில்லாதிருந்த காலத்திலே, உனக்கும் உனக்குப் பின்வரும் உன் சந்ததிக்கும் இதைக் காணியாட்சியாகத் தருவேன் என்று அவனுக்கு வாக்குத்தத்தம்பண்ணினார்.

சு அன்றியும் பராபரன் அவனுடனே சொன்னது: [4]உன்னுடைய சந்ததியார் அந்நியதேசத்திலே குடியிருப்பார்கள்; அத்தேசத்தார் அவர்களை அடிமைகளாக்கி, [5]நானூறுவருஷம் உபத்திரவப்படுத்துவார்கள்.

எ அவர்கள் அடிமைவேலைசெய்யும் அந்தத் தேசத்தாரை நான் ஆக்கினைக்குட்படுத்துவேன்; அதற்குப்பின்பு உன் சந்ததியார் புறப்பட்டு வந்து, [6]இவ்விடத்திலே எனக்கு ஆராதனை செய்வார்கள் என்று பராபரன் சொன்னார்.

அ அன்றியும், [7]விருத்தசேதனம் பண்ணுதலை அவர் அவனுக்கு ஏற்படுத்தினார்; [8]அந்தப்படியே அவன் ஈசாக்கைப் பெற்றபொழுது, எட்டாம்நாளில் அவனுக்கு விருத்தசேதனம்பண்ணினான்; [9]ஈசாக்கானவன் யாக்கோபையும், [10]யாக்கோபானவன் கோத்திரத்தலைவராகிய பன்னிரண்டுபேரையும் பெற்று, அவர்களுக்கு விருத்தசேதனம் பண்ணினார்கள்.

கூ ¶ [11]பின்பு கோத்திரத்தலைவராகிய அவர்கள் பொறாமைகொண்டு யோசேப்பை எகிப்துக்குப் (போன வியாபாரிகளுக்கு) விற்றுப்போட்டார்கள்.

ய [12]பராபரன் அவனுடைய பக்கலிலிருந்து, எல்லா உபத்திரவங்களினின்றும் அவனைத் தூக்கி எடுத்து, [13]எகிப்தின் இராசாவாகிய பார்வோனுக்குமுன்பாக அவனுக்குக் கிருபையையும் ஞானத்தையும் கொடுத்தார்; அந்த இராசா இவனை எகிப்துதேசத்திற்கும், தன் குடும்பம் எல்லாவற்றிற்கும் துரையாக வைத்தான்.

யக பின்பு [14]எகிப்து கானான்தேசங்கள் முழுவதிலும் பஞ்சமும் மிகுந்த உபத்திரவமும் உண்டாயின; நம்முடைய பிதாக்களுக்கும் ஆகாரம் கிடைக்கவில்லை.

யஉ [15]அப்பொழுது எகிப்திலே தானியம் உண்டென்று யாக்கோபு கேள்விப்பட்டு, நம்முடைய பிதாக்களை முதலாம்தரம் (அவ்விடத்திற்கு) அனுப்பினார்.

யங [16]இரண்டாம்தரம் யோசேப்பு தன் சகோதரருக்கு அறியப்பட்டான்; அல்லாமலும் யோசேப்பினுடைய வம்சம் பார்வோனுக்குத் [17]தெரியவந்தது.

யச பின்பு யோசேப்பு தன் தகப்பன் யாக்கோபும் (மற்ற) [18]இனத்தார் யாவருமாகிய எழுபத்தைந்து பேரையும் அழைக்க அனுப்பினான்.

யரு [19]அந்தப்படி யாக்கோபு எகிப்துக்குப் போனான்; [20]பின்பு அவனும் நம்முடைய பிதாக்களும் மரித்து, [21]அங்கேயிருந்து சிகேமூருக்குக் கொண்டுபோகப்பட்டு,

யசு [22]ஆபிரகாம் சிகேமின் தகப்பனாகிய எமோருடைய சந்ததியா

இ. பி. கூக.

1 ஆ மோ. யஉ. க.
2 ஆ மோ. யக. கங: யஉ. ச, ரு.
3 ஆ மோ. யஉ. எ: யங. யரு: யஎ. அ, யஅ: உசு. ங.
4 ஆ மோ. யரு. யங, யச.
5 உ மோ. யஉ. சய. கலா. ங. யஎ.
6 உ மோ. ங. யஉ.
7 ஆ மோ. யஎ. கூ-யச.
8 ஆ மோ. உக. உ-ச.
9 ஆ மோ. உரு. உசு.
10 ஆ மோ. உகூ. கக ழு: ங0. ரு. ழு: ஙரு. யஅ, உங.
11 ஆ மோ. ஙஎ. ச, யக, உஅ. சரு. சரு. ரு.
12 ஆ மோ. ஙகூ. உ, உக, உங.
13 ஆ மோ. சக. ஙஎ: சஉ. சு.
14 ஆ மோ. சக. ரு.
15 ஆ மோ. சஉ. க.
16 ஆ மோ. சரு. ச, யசு.
17 ஆ மோ. சரு. கூ, உஎ.
18 ஆ மோ. சசு. உஎ. ரு மோ. ய. உஉ.
19 ஆ மோ. சசு. ரு.
20 ஆ மோ. சகூ. ஙங. உ மோ. ச. சு.
21 உ மோ. யங. யகூ. யோசு. உச. ஙஉ.
22 ஆ மோ. உங. யசு: ஙங. யகூ.

Digitized by Google

ரிடத்தில் விலைக்கிரயமாக வாங்கியிருந்த சமாதியில் வைக்கப்பட்டார்கள்.

௰௭ ¶ [1]பின்பு ஆபிரகாமுக்குப் பராபரன் ஆணையிட்டுப் பண்ணின வாக்குத்தத்தத்தின் காலம் சமீபமானபொழுது, யோசேப்பை அறியாதவேறொரு இராசா தோன்றின காலம் அளவும்,

௰௮ [2]சனங்கள் எகிப்திலே அதிகமாய்ப் பெருகினார்கள்.

௰௯ அவன் நம்முடைய வம்சத்தாரைக்குறித்து வஞ்சனையாய் நடந்து, [3]நம்முடைய பிதாக்களின் குழந்தைகள் உயிரோடிராதபடிக்கு அவர்கள் அவைகளை வெளியே போட்டுவிடும்படி செய்து, அவர்களை உபத்திரவப்படுத்தினான்.

௨௰ ¶ [4]அக்காலத்திலே மோசே என்பவன் பிறந்து, [5]பராபரனாலே அழகுள்ளவனாய்* இருந்து, மூன்றுமாதம் தன் தகப்பனுடைய வீட்டிலே வளர்க்கப்பட்டான்.

௨௧ [6]அவனும் வெளியே போட்டுவிடப்பட்டபொழுது, பார்வோனுடைய குமாரத்தி அவனை எடுத்து, தனக்குக் குமாரனாக வளர்த்தாள்

௨௨ அதினாலே மோசே எகிப்தாருடைய கல்விகள் யாவையும் படித்துக்கொண்டு, [7]வசனங்களிலேயும் செய்கைகளிலேயும் வல்லவனானான்.

௨௩ அவன் நாற்பது வயதுள்ளவனானபொழுது, இஸ்ரவேல் சந்ததியாராகிய தன்னுடைய வம்சத்தாரைச் சந்தித்துப் பார்க்கும்படி விருப்பமுள்ளவனாகிப் போனபொழுது,

௨௪ அநியாயம் அனுபவிக்கிற ஒருவனைக் கண்டு (அவனைக்) காப்பாற்றி, எகிப்தானை வெட்டினான்.

௨௫ [8]அன்றியும்† அவன் தன் கையினாலே பராபரன் தங்களுக்கு இரட்சிப்பைத் தருவாரென்று தன் வம்சத்தார் அறிந்துகொள்வார்கள் என்று நினைத்தான்; அவர்கள் அப்படி அறிந்துகொள்ளவில்லை.

௨௬ [9]மறுநாளிலே சண்டை பண்ணிக்கொண்டிருக்கிற சிலருக்கு அவன் தன்னைக் காண்பித்துப் புருஷரே, நீங்கள் சகோதரரானவர்கள்; நீங்கள் ஒருவருக்கொருவர் அநியாயம் செய்கிறதென்ன என்று அவர்களைச் சமாதானப்படுத்தும்படி பேசினான்.

௨௭ (அவர்களில்) பிறனுக்கு அநியாயம்செய்தவன் சொன்னது: [10]எங்களுக்கு உன்னைத் தலைவனென்றும் நியாயாதிபதியென்றும் வைத்தவன் எவன்?

௨௮ நேற்று நீ அந்த எகிப்தானைக் கொலைசெய்ததுபோல, என்னையும் கொலைசெய்ய மனதாயிருக்கிறாயா என்று அவனைத் தள்ளினான்.

௨௯ [11]இந்த வார்த்தையினாலே மோசே ஓடிப்போய், மாதியான் தேசத்தில் அந்நியனாய்ச் சஞ்சரித்து, அங்கே இரண்டு குமாரரைப் பெற்றான்.

௩௰ ¶ [12] அன்றியும் நாற்பதுவருஷம் சென்றபின்பு, சீனாமலையின் வனாந்தரத்திலே பராபரனுடைய தூதனானவர் ஒரு முட்செடி எரிகிற அக்கினிச் சுவாலையில் அவனுக்குத் தரிசனையானார்.

௩௧ மோசே அதைக் கண்டு, அந்தத் தரிசனையைக்குறித்து அதிசயப்பட்டு, அதைப் பார்க்கும்படி சேர்ந்து வருகிறபொழுது, பராபரனானவர்,

௩௨ [13]நான் உன் பிதாக்களாகிய ஆபிரகாமுடைய தேவனுமாய், ஈசாக்கினுடைய தேவனுமாய் யாக்கோபினுடைய தேவனுமாய் இருக்கிற பராபரனென்று திருவுளம்பற்றின சத்தம் அவனுக்குத் தோன்றிற்று; அப்பொழுது மோசே நடுக்கமடைந்து, (அதினாலே அதைப்) பார்க்கும்படி துணியாமல் இருந்தான்.

கி. பி. ௩௩.

1 ௧ மோ. ௰௫. ௰௩. ௰௪.
2 ௨ மோ. ௧. ௭. ௮, ௯. சங். ௱௫. ௨௪, ௨௫.
3 ௨ மோ. ௧. ௨௨.
4 ௨ மோ ௨. ௨.
5 எபி. ௰௧. ௨௩.
* அல்லது மிகவும் அழகுள்ளவனாய்.
6 ௨ மோ. ௨. ௩–௰.
7 லூக். ௨௪. ௰௯.
8 ௨ மோ ௨. ௰௧, ௰௨.
† அல்லது எனென்றால்.
9 ௨ மோ. ௨. ௰௩.
10 லூக். ௰௨. ௰௪. அப். ௪. ௭.
11 ௨ மோ. ௨. ௰௫, ௨௨: ௪. ௨௰: ௰௮. ௩, ௪.
12 ௨ மோ. ௩. ௨.
13 மத். ௨௨. ௩௨. எபி. ௰௧. ௰௬.

Digitized by Google

௩௩ பின்னும் பராபரன் அவனுடனே சொன்னது: [1]நீ நிற்கிற இடம் பரிசுத்த பூமியாகையால், உன் பாதரட்சைகளைக் கழற்றிப்போடு.

௩௪ [2]எகிப்திலிருக்கிற என்னுடைய சனங்களின் உபத்திரவத்தை நான்தானே பார்த்து, அவர்களுடைய தவிப்பைக் கேட்டு, அவர்களை விடுவிக்கும்படிக்கு இறங்கினேன்; ஆகையால் நீ வா; நான் உன்னை எகிப்துக்கு அனுப்புகிறேன் என்றார்.

௩௫ ¶ உன்னைத் தலைவனென்றும் நியாயாதிபதியென்றும் வைத்தவன் எவனென்று அவர்கள் சொல்லி மறுதலித்திருந்த [3]அந்த மோசேயையே, பராபரன் முட்செடியில் அவனுக்குத் தரிசனையான தூதனாலே தலைவனாகவும் மீட்பனாகவும் அனுப்பினார்.

௩௬ [4]அவனே அவர்களை அங்கேயிருந்து அழைத்துக்கொண்டு போய், [5]எகிப்து தேசத்திலேயும் [6]சிவப்பான சமுத்திரத்திலேயும், [7]நாற்பது வருஷகாலமாய் வனாந்தரத்திலேயும், அற்புதங்களையும் திருஷ்டாந்தங்களையும் செய்தான்.

௩௭ ¶ அந்த மோசேயே இஸ்ரவேல் சந்ததியாரை நோக்கி, [8]உங்களுக்காக உங்கள் தேவனாகிய பராபரன் உங்கள் வம்சத்திலிருந்து என்னைப்போல* ஒரு தீர்க்கதரிசியை எழும்பப்பண்ணுவார்; [9]அவருக்குச் செவிகொடுப்பீர்களாக என்று சொன்னவன்.

௩௮ [10]அவனே சீனாமலையிலே தன்னுடனேபேசின தூதரோடும், [11]நம்முடைய பிதாக்களோடுங்கூட வனாந்தரத்திலே சபைக்குள்ளே இருந்து [12]நமக்குக் கொடுக்கும்படி [13]சீவவாக்கியங்களைப் பெற்றவன்.

௩௯ நம்முடைய பிதாக்கள் அவனுக்குக் கீழ்ப்பட மனதாயிராமல் அவனைத் தள்ளி, எகிப்துதேசத்திற்கு மனம்திருப்ப,

௪௰ [14]ஆரோனை நோக்கி, எகிப்துதேசத்திலிருந்து எங்களை அழைத்துக்கொண்டுவந்த அந்த மோசேயுக்குச் சம்பவித்ததை அறியோம்; ஆதலால் எங்களுக்குமுன்பாக நடக்கும் தேவர்களை நீர் எங்களுக்காக உண்டுபண்ணவேண்டும் என்று சொல்லி,

௪௧ [15]அந்நாள்களில் ஒரு கன்றுக்குட்டியைச் செய்து, அந்த விக்கிரகத்துக்குப் பலியிட்டு, தங்கள் கைகளால் செய்த கிரியைகளைக்குறித்துச் சந்தோஷப்பட்டார்கள்.

௪௨ அப்பொழுது [16]பராபரன் அவர்களைவிட்டுத் திரும்பி [17]வானத்திலுள்ள சேனையைப் பணிந்துகொள்ளும்படி அவர்களை ஒப்புக்கொடுத்துவிட்டார்; (அதைக் குறித்து) இஸ்ரவேல் குடும்பத்தாரே, [18]நீங்கள் வனாந்தரத்திலிருந்த நாற்பது வருஷம்வரையிலே காணிக்கைகளையும் பலிகளையும் எனக்குச் செலுத்தினீர்களா.

௪௩ பணிந்துகொள்ளும்படிக்கு நீங்கள் செய்த சொரூபங்களாகிய மோளோகினுடைய கூடாரத்தையும், உங்கள் தேவனாகிய இரம்பானென்னும் நட்சத்திரத்தையும் எடுத்துவந்தீர்களே, ஆதலால் நான் உங்களைப் பாபிலோனுக்கு அப்புறத்திலே குடியிருக்கும்படி போகப்பண்ணுவேன் என்று தீர்க்கதரிசிகளின் புத்தகத்திலே எழுதியிருக்கின்றதே.

௪௪ ¶ [19]மேலும் நீ பார்த்த உருவின்படியே சாட்சிப்பொருளையுடைய கூடாரத்தைச் செய்யென்று மோசேயுடனே பேசிக்கொண்டவர்,† கட்டளையிட்டபிரகாரமாக, அது வனாந்தரத்திலே நம்முடைய பிதாக்களுக்குள்ளே இருந்தது.

௪௫ மேலும் [20]யோசுவாவுடனேகூட நம்முடைய பிதாக்கள் அதைப் பெற்றுக்கொண்டு,‡ தங்

கி. பி. ௩௩.

1 உ மோ. ௩. ௫. யோசு. ௫. ௧௫.
2 உ மோ. ௩. ௭.
3 உ மோ. ௨௪. ௧௩. ௪ மோ. ௨௰. ௧௩.
4 உ மோ. ௧௨. ௪௧: ௩௩. ௩.
5 உ மோ. ௭. ௮, ௯, ௰, ௧௪. ௬௫. ௧௫. ௨௭.
6 உ மோ. ௧௪. ௨௧, ௨௭, ௨௮, ௨௯.
7 உ மோ. ௧௬. ௩, ௩௫.
8 ௫ மோ. ௧௮. ௧௫, ௧௮. அப். ௩. ௨௨.
* அல்லது எனக்குச் சமானமான.
9 மத். ௧௭. ௫.
10 ஏசா. ௬௩. ௯. கலா. ௩. ௧௯. எபி. ௨. ௨.
11 உ மோ. ௧௯. ௩, ௧௭.
12 உரோ. ௩. ௨.
13 உ மோ. ௨௧. ௩. ௫ மோ. ௫. ௨௭, ௬௩: ௩௩. ௪. யோவா. ௩. ௧௭.
14 உ மோ. ௩௨. ௧.
15 ௫ மோ. ௯. ௧௬. சங். ௧௦௬. ௧௯.
16 சங். ௮௧. ௧௨. எசே. ௨௰. ௨௫. ௩௯. உரோ. ௧. ௨௪. உ தெச. ௨. ௧௧.
17 ௫ மோ. ௪. ௧௯: ௧௭. ௩. உ இரா. ௧௭. ௧௬: ௨௧. ௩. எரே. ௧௯. ௧௩.
18 ஆமோ. ௫. ௨௫, ௨௬.
19 உ மோ. ௨௫. ௪௦. எபி. ௮. ௫.
† அல்லது பேசி.
20 யோசு. ௩. ௧௪.
‡ அல்லது பின்னுகவந்த நம்முடைய பிதாக்கள்.

களுக்கு முன்னின்று [1]பராபரன் துரத்தின அஞ்ஞானிகளுடைய தேசத்திற்குள்ளே அதைக் கொண்டுபோய், தாவீது இருந்த நாள்வரைக்கும் வைத்திருந்தார்கள்.

௪௬ [2]அவன் பராபரனிடத்தில் தயவுபெற்றபடியினாலே, [3]யாக்கோபினுடையதேவனுக்காக ஒரு வாசஸ்தலத்தைக் கட்டும்படிக்கு உத்தரவு கேட்டுக்கொண்டான்.

௪௭ (அவன் அல்ல,) [4]சாலோமோனே அவருக்காக ஆலயத்தைக் கட்டினான்.

௪௮ [5]உன்னதமானவர், வானம் எனக்கு ஆசனமாயும் பூமி என்னுடைய பாதப்படியாயும் இருக்கின்றன; எனக்காக நீங்கள் எப்படிப்பட்ட ஆலயத்தைக் கட்டுவீர்கள்? அல்லது நான் தங்கும்படிக்கு ஏற்ற ஸ்தலம் எது?

௪௯ இவை எல்லாவற்றையும் என்னுடைய கை உண்டாக்கவில்லையா என்று பராபரன் திருவுளம்பற்றினார் என்று தீர்க்கதரிசி சொன்னபடியே,

௫௰ [6]கைகளால் செய்யப்பட்ட ஆலயங்களில் வாசமாய் இருக்கமாட்டார்.

௫௧ ¶ ஆ [7]வணங்காத கழுத்துள்ளவர்களே, [8]இருதயமும் காதும் விருத்தசேதனம் பெறாதவர்களே, உங்கள் பிதாக்களைப்போல நீங்களும் பரிசுத்தஆவியை எப்பொழுதும் விரோதிக்கிறீர்கள்.

௫௨ [9]தீர்க்கதரிசிகளில் யாரை உங்கள் பிதாக்கள் துன்பப்படுத்தாமல் இருந்தார்கள்? [10]நீதிபரர் வருகையை முன்னறிவித்தவர்களையும் அவர்கள் கொலைசெய்தார்கள்; அவருக்கே நீங்கள் இப்பொழுது துரோகிகளுமாய் அவரைக் கொலைசெய்தவர்களுமாய் இருக்கிறீர்கள்.

௫௩ [11]தேவதூதரின் அணிவகுப்புகளுக்குள்ளே வேதப்பிரமாணத்தைப் பெற்றுக்கொண்டிருந்தும், அதைக் கைக்கொள்ளாமல் இருக்கிறீர்கள் என்று சொல்ல,

௫௪ ¶ [12]அவர்கள் அவைகளைக் கேட்டு, தங்கள் இருதயங்களில் அறுக்கப்பட்டவர்களாய் அவனைக் குறித்துப் பல்கடித்தார்கள்.

௫௫ [13]அவன் பரிசுத்த ஆவியினாலே நிறைந்து, வானத்தை அண்ணாந்து பார்த்துக்கொண்டு, பராபரனுடைய மகிமையையும் வலதுபாரிசத்திலே நிற்கிற இயேசுவையும் கண்டு,

௫௬ அதோ [14]வானம் திறக்கப்பட்டிருக்கிறதையும் [15]மனிதகுமாரனானவர் பராபரனுடைய வலதுபாரிசத்திலே நிற்கிறதையும் பார்க்கிறேன் என்று சொன்னபொழுது,

௫௭ அவர்கள் மிகுந்த சத்தத்துடனே கூப்பிட்டு, தங்கள் காதுகளை அடைத்துக்கொண்டு,

௫௮ ஒருமனப்பட்டு அவன்மேலே பாய்ந்து, [16]அவனைப் பட்டணத்திற்குப் புறம்பே தள்ளி, [17]அவன்மேல் கல்லெறிந்தார்கள்.

௫௯ [18]சாட்சிகளானவர்களும் தங்கள் வஸ்திரங்களைச் சவுலென்னப்பட்ட ஒரு வாலிபனுடைய பாதங்கள் அருகே வைத்து, ஸ்தேவான்மேல் கல்லெறிந்தார்கள்; [19]அவன் கர்த்தராகிய இயேசுவே, [20]என் ஆவியை ஏற்றுக்கொள்ளும் என்று தொழுதுகொண்டு,

௬௰ [21]முழங்கால்படியிட்டு, ஆண்டவரே, [22]இவர்கள்மேல் இந்தப் பாவத்தை நிறுத்தாதிரும் என்று மிகுந்த சத்தத்தோடே கூப்பிட்டுப் பின்பு நித்திரையடைந்தான்; [33]அவனைக் கொலைசெய்கிறது சவுலென்பவனுக்கு மிகவும் பிரியமாய் இருந்தது.

## ௮. அதிகாரம்.

க. எருசலேமிலுண்டான சபை துன்பப்பட்டு, ௫. உதவிக்காரனாகிய பிலிப்பின் பிரசங்கத்தினாலும், அற்புதங்களினாலும் சமாரியாவிலே சுவிசேஷம்

இ. பி. ௬௬.

1 ௨ இரா. ௧. உ௪. சங். ௪௪. ௨: ௭௮. ௫௫. அப். ௰௩. ௰௯.
2 ௧ சாமு. ௰௬.௧. ௨ சாமு. ௭. ௧. சங். ௮௯. ௰௯. அப். ௰௩. ௨௨.
3 ௧ இரா. ௮.௰௭. ௧ நாளா. ௨௨. ௭. சங். ௱௩௨. ௫, ௬.
4 ௧ இரா. ௬. ௧: ௮.௨௰.௧ நாளா. ௰௭. ௰௨, ௨ நாளா. ௩. ௧.
5 ஏசா.௬௬.௧,௨. மத். ௫.௩௪,௩௫: ௨௩. ௨௨.
6 ௧ இரா. ௮. ௨௭. ௨ நாளா. ௨. ௬: ௬. ௰௮. அப். ௰௭. ௨௪.
7 ௨ மோ. ௩௨. ௯: ௩௩. ௩, ஏசா. ௪௮. ௪.
8 ௩ மோ. ௨௬. ௪௧. ௫ மோ. ௰. ௰௬. எரே. ௪. ௪: ௯. ௨௬. எசே. ௪௪. ௯.
9 ௨ நாளா. ௩௬. ௰௬. மத். ௨௧. ௩௫: ௨௩. ௩௪. ௩௭. ௧ தெச. ௨. ௰௫.
10 அப். ௩. ௰௪.
11 ௨ மோ. ௨௰. ௧. கலா. ௩. ௰௯. எபி. ௨. ௨.
12 அப். ௫. ௩௩.
13 அப். ௬. ௫.
14 எசே. ௧. ௧. மத். ௩. ௰௬. அப். ௰. ௰௧.
15 தானி. ௭. ௰௩.
16 ௧ இரா. ௨௧. ௰௩. லூக். ௪. ௨௯. எபி. ௰௩. ௰௨.
17 ௩ மோ. ௨௪. ௰௬.
18 ௫ மோ. ௰௩. ௯, ௰௭. ௭. அப். ௮. ௧: ௨௨. ௨௰.
19 அப். ௯. ௰௪.
20 சங். ௩௧. ௫. லூக். ௨௩. ௪௬.
21 அப். ௯. ௪௰: ௨௰. ௩௬: ௨௧. ௫.

22 மத். ௫. ௪௪. லூக். ௬. ௨௮: ௨௩. ௩௪.—23 அப். ௭. ௩௯: ௨௨. ௨௰.

Digitized by Google

பட்டபோது, ஸ்தம்பனவித்தைக்காரனாயிருந்த ஒரு பெரிய எத்தனாகிய சீமோன் என்பவனும் அநேகம்பேருடனே ஞானஸ்நானம் பெற்றது. ௰௪. பேதுருவும் யோவானும் சபையை ஸ்திரப்படுத்த வந்து ஜெபத்தினாலும், சிரசின்மேல் கைகளை வைப்பதினாலும் பரிசுத்தஆவி அளிக்கப்பட்டதை, ௰௮. சீமோன் கண்டு, அந்த வரத்தை விலைக்கிரயமாய்ப் பெற்றுக்கொள்ளப் பார்த்தபோது, ௨௰. பேதுரு அவனுடைய பாபத்தையும் இச்சையையும் கடிந்துகொண்டு, அவனுக்குக் குணப்படுதலுக்கேற்ற புத்தியைச் சொல்லி, யோவானுடனே கூடக் கர்த்தருடைய வசனத்தைப் பிரசங்கித்து, எருசலேமுக்குத் திரும்பினது. ௨௬. போதிக்கவும், எத்தியோப்பிய பிரதானிக்கு ஞானஸ்நானம் கொடுக்கவும், பிலிப்பைத் தேவதூதன் அனுப்பினது.

அக்காலத்திலே எருசலேமிலுள்ள சபைக்கு மிகுந்த துன்பம் உண்டாயிற்று; அப்போஸ்தலர்தவிர [1]மற்ற யாவரும் யூதேயா சமாரியா தேசங்களில் சிதறப்பட்டார்கள்.

௨ ஸ்தேவானைத் தேவபத்தியுள்ள சிலபேர்கள் எடுத்து அடக்கம்பண்ணி, [2]அவனைக்குறித்து மிகவும் புலம்பி அழுதார்கள்.

௩ [3]சவுல் வீடுகள்தோறும் பிரவேசித்து, புருஷரையும் ஸ்திரிகளையும் வெளியே இழுத்துப்போய், காவலில் போடுவித்து, சபையைப் பாழாக்கினான்.

௪ [4]சிதறப்பட்டபேர்கள் திரிந்து தேவவசனத்தைச் சுவிசேஷமாய்ப் பிரசித்தம்பண்ணினார்கள்.

௫ ¶ அப்படியே [5]பிலிப்பென்பவன் சமாரியாநாட்டிலுள்ள ஒரு ஊருக்குப்போய், அங்கே கிறிஸ்துவைக்குறித்துப் பிரசங்கித்தான்.

௬ அப்பொழுது அநேகம்பேரிடத்தில் இருந்த [6]அசுத்த ஆவிகள் மிகுந்த சத்தத்தோடே கூப்பிட்டு அவர்களைவிட்டுப் புறப்பட்டன; அநேக திமிர்வாதக்காரரும் சப்பாணிகளும் குணமாக்கப்பட்டார்கள்.

௭ பிலிப்பு செய்த அதிசயங்களைச் சனங்கள் கேள்விப்பட்டும் கண்டும் இருக்கையில், அவனால் சொல்லப்பட்டவைகளுக்கு ஒருமனப்பட்டு எச்சரிக்கையாய் இருந்தார்கள்.

இ. பி. ௩௰௪.



1 அப். ௰௧. ௰௯.
2 ௧ கோ. ௨௪. ௨: ௫௰. ௰. ௨ சாமு. ௩. ௩௧.
3 அப். ௭. ௫௮: ௯. ௧, ௰௩, ௨௧: ௨௨. ௪: ௨௬. ௰, ௰௧. ௧ கொரி. ௰௫. ௯. கலா. ௧. ௰௩. பிலி. ௩. ௬. ௧ தீமோ. ௧. ௰௩.
4 மத். ௰. ௨௩. அப். ௰௧. ௰௯.
5 அப். ௬. ௫.
6 மாற். ௰௬. ௰௭.
7 அப். ௰௩. ௬.
8 அப். ௫. ௩௬.
9 அப். ௧. ௩.
* அல்லது அடையாளங்களையும், பெரிய அதிசயங்களையும்.
10 அப் ௰௯. ௨.
11 அப். ௰. ௪௮: ௰௯. ௫.
12 மத். ௨௮. ௰௯. அப். ௨. ௩௮.
13 அப். ௨. ௩௮.

௮ அந்த ஊரிலே மிகுந்த சந்தோஷம் உண்டாயிற்று.

௯ ¶ அன்றியும் சீமோன் என்று பெயர்கொண்ட ஒருவன் முன்னே [7]அந்த ஊரிலே ஸ்தம்பனவித்தைக்காரனாயிருந்து, [8]தன்னைப் பெரியவனென்று சொல்லி, சமாரியாநாட்டின் சனங்களைப் பிரமிக்கப்பண்ணிக்கொண்டிருந்தான்.

௰ சிறியோர் பெரியோர் யாவரும் இவன் பராபரனுடைய பெரிய சத்தியென்று அவனுக்கு எச்சரிக்கையாய் இருந்தார்கள்.

௰௧ அநேககாலம் அவன் தன்னுடைய மந்திர தந்திரங்களினாலே அவர்களைப் பிரமிக்கச்செய்தபடியால், அவர்கள் அவனுக்கு எச்சரிக்கையாய் இருந்தார்கள்.

௰௨ [9]பின்பு பராபரனுடைய இராச்சியத்திற்கும் இயேசுக்கிறிஸ்துவின் நாமத்திற்கும் ஏற்றவைகளைச் சுவிசேஷமாய் அறிவிக்கிற பிலிப்பை அவர்கள் விசுவாசித்தபொழுது, புருஷரும் ஸ்திரிகளும் ஞானஸ்நானம் பெற்றார்கள்.

௰௩ அப்பொழுது அந்தச் சீமோனும் விசுவாசித்து ஞானஸ்நானம் பெற்றுப் பிலிப்பைப் பற்றிக்கொண்டு, (அவனாலே) நடந்த அதிசயங்களையும் பலத்த செய்கைகளையும்* பிரமிப்புடனே பார்த்தான்.

௰௪ ¶ சமாரியா நாடு பராபரனுடைய வசனத்தை ஏற்றுக்கொண்டதை எருசலேமிலுள்ள அப்போஸ்தலர் கேள்விப்பட்டபொழுது, அவர்கள் பேதுருவையும் யோவானையும் அவர்களிடத்திற்கு அனுப்பினார்கள்.

௰௫ அவர்கள் போய், [10]அவர்களில் ஒருவனாகிலும் பரிசுத்தஆவியைப் பெறாமல், [11]கர்த்தராகிய இயேசுவின் நாமத்தினாலே [12]ஞானஸ்நானத்தைமாத்திரம் பெற்றவர்களானபடியினாலே,

௰௬ [13]அவர்கள் பரிசுத்தஆவியைப்பெற்றுக்கொள்ளும்படிக்கு,

Google

௰௭ [1]அவர்களைக்குறித்துச்செபம் பண்ணி, (தங்கள்) கைகளை அவர்கள்மேல் வைத்தார்கள்; உடனே பரிசுத்தஆவியைப் பெற்ருர்கள்.

௰௮ ¶ அப்போஸ்தலர் தங்கள் கைகளை (அவர்கள்மேல்) வைத்ததிஞலே பரிசுத்தஆவி கொடுக்கப்படுகிறதைச் சீமோன் கண்டபொழுது, அவர்களிடத்திற்குப் பணம் கொண்டுபோய்,

௰௯ என் கைகளை வைக்கப்படுகிறவன் எவனே, அவன் [2]பரிசுத்த ஆவியைப் பெறத்தக்கதாக, நீங்கள் எனக்கும் இந்த அதிகாரம் கொடுக்கவேண்டும் என்ருன்.

௨௰ அதற்குப் பேதுரு சொன்னதாவது: பராபரனுடைய ஈவைப் பணத்திஞலே சம்பாதித்துக்கொள்ளலாமென்று [3]நீ நினைக்கிறபடியால், உன் பணம் உன்னேடே கேட்டுக்கு உள்ளாகக்கடவது.

௨௧ உன் இருதயம் பராபரனுக்குமுன்பாகச் செம்மையாய் இராதபடியால், இந்தக் காரியத்திலே உனக்குப் பங்கும் பாகமும் இல்லை.

௨௨ [4]நீ கசப்புள்ள பிச்சும் அநீதிக்கட்டும் உடையவனுய் இருக்கிறதைப் பார்க்கிறேன்.

௨௩ ஆனபடியிஞலே, [5]உன் இருதயத்தின் சிந்திப்பு உனக்கு மன்னிக்கப்படக்கூடுமாஞல் உன் துர்க்குணத்தை விட்டு மனம்திருப்பி, பராபரனைநோக்கி வேண்டிக்கொள்வாயாக என்ருன்.

௨௪ சீமோன் சொன்னது: நீங்கள் உரைத்தவைகளில் ஒன்றும் எனக்கு வாராதபடிக்கு, [6]நீங்களே எனக்காகக் கர்த்தரை வேண்டிக்கொள்ளுங்கள் என்ருன்.

௨௫ ¶ இவ்விதமாய் அவர்கள் கர்த்தருடைய வசனத்தைச் சாட்சியாய் அறிவித்துச் சொன்னபின்பு, எருசலேமுக்குத் திரும்பி, சமாரியருடைய அநேக கிராமங்களில் சுவிசேஷத்தைப் பிரசங்கித்தார்கள்.

கி. பி. ௩௪.

1 அப். ௧. ௧: ௰௪. ௧. எபி. ௬. ௨.
2 அப். ௨. ௩௮: ௰. ௪௰: ௰௯,௰௭.
3 மத். ௰. ௮. ௨ இரா. ௫. ௰௬.
4 எபி. ௰௨. ௰௫.
5 தானி. ௪. ௨௭. ௨ தீமோ. ௨. ௨௫.
6 ௧ மோ. ௨௰. எ, ௰௭. ௨ மோ. ௮. ௮. ௪ மோ. ௨௧. எ. ௧ இரா ௰௩. ௬. யோபு. ௪௨. ௮. யாக். ௫. ௰௬.
7 செப். ௩. ௰.
8 யோவா. ௰௨. ௨௰.
9 ஏசா. ௫௩. எ, ௮.

௨௬ ¶ அன்றியும் கர்த்தருடைய தூதன் பிலிப்புடனே சொன்னது: நீ எழுந்து தெற்கே பாழாய்க்கிடக்கிற காட்சா பட்டணத்திற்கு எருசலேமிலிருந்து போகிற மார்க்கத்திற்குப் போ என்ருன்.

௨௭ அந்தப்படி அவன் எழுந்து போஞன்; [7]அப்பொழுது எத்தியோப்பியரை ஆண்ட இராசஸ்திரியாகிய கந்தாசி என்பவளுடைய மந்திரியுமாய், அவளுக்கு உண்டான பொக்கிஷம் எல்லாவற்றின்மேலும் வைக்கப்பட்ட தலைவனுமாய் இருந்த [8]ஒரு எத்தியோப்பிய மனிதன் தொழுதுகொள்ளும்படி எருசலேமுக்கு வந்திருந்து,

௨௮ ஊருக்குத் திரும்பித் தன் இரதத்தில் உளுக்காந்து, ஏசாயா தீர்க்கதரிசியின் புத்தகத்தை வாசித்துக்கொண்டு போஞன்.

௨௯ ஆவியானவர் பிலிப்புடனே சொன்னது: அந்த இரதத்திற்குச் சமீபமாய் நீ சேர்ந்து, அதனேடே கூடிப்போ என்ருர்.

௩௰ அந்தப்படி பிலிப்பு சேர ஓடி, அவன் ஏசாயா தீர்க்கதரிசியின் புத்தகத்தை வாசிக்கக் கேட்டு, நீர் வாசிக்கிறவைகளின் கருத்து உமக்குத் தெரிந்திருக்கிறதா என்ருன்.

௩௧ அவன் சொன்னது: ஒருவன் எனக்குக் காண்பியாவிட்டால் அது எனக்குத் தெரியுமா என்று சொல்லி, பிலிப்பு ஏறித் தன் பக்கத்தில் உளுக்காரும்படி அவனை வேண்டிக்கொண்டான்.

௩௨ அவன் வாசித்த வேதவாக்கியம் என்னவென்ருல், [9]அவர் ஒரு ஆட்டைப்போல அடிக்கப்படும்படி கொண்டுபோகப்பட்டார்; தன் மயிரைக் கத்திரிக்கிறவனுக்குமுன்பாகச் சத்தமிடாதிருக்கிற ஆட்டுக்குட்டியைப்போல, அவர் தமது வாயைத் திறவாதிருந்தார்.

௩௩ அவர் தாழ்மையாயிருக்கை

Digitized by Google

யில், அவருடைய நியாயம் எடுத்துப்போடப்பட்டது; அவருடைய ஜீவன் பூமியிலிருந்து எடுத்துப் போடப்பட்டபடியினாலே, அவருடைய தலைமுறையாரை யார் விவரித்துச் சொல்லுவார்கள் என்பதே.

௩௪ மந்திரியானவன் பிலிப்பை நோக்கி, தீர்க்கதரிசி தன்னைக் குறித்தோ மற்றொருவனைக்குறித்தோ, யாரைக்குறித்து இதைச் சொன்னான், அதை நீர் எனக்குச் சொல்லும்படி வேண்டிக்கொள்ளுகிறேன் என்றான்.

௩௫ அப்பொழுது பிலிப்பு உத்தரவு சொல்ல, [1]அந்த வேதவாக்கியம் தொடங்கி இயேசுவின் சுவிசேஷத்தை அவனுக்குப் பிரசங்கித்தான்.

௩௬ ¶ இவ்விதமாய் அவர்கள் வழிநடந்துபோகையில், தண்ணீருள்ள ஓரிடத்திலே சேர்ந்தபொழுது, மந்திரியானவன் சொன்னது: இதோ தண்ணீர் [2]நான் ஞானஸ்நானம் பெற்றுக்கொள்ளுகிறதற்குத் தடையென்ன என்றான்.

௩௭ அதற்குப் பிலிப்பு சொன்னது: [3]நீர் முழு இருதயத்தோடும் விசுவாசித்தால் பெற்றுக்கொள்ளலாம் என்றான்; அவன் சொன்னது: [4]இயேசுக்கிறிஸ்துவைப் பராபரனுடைய குமாரனென்று விசுவாசிக்கிறேன் என்று சொல்லி, இரதத்தை நிறுத்தச்சொன்னான்.

௩௮ பின்பு பிலிப்பும் மந்திரியும் இருவரும் இறங்கித் தண்ணீரில் பிரவேசித்தார்கள்; அங்கே அவனுக்கு ஞானஸ்நானம் கொடுத்தான்.

௩௯ அவர்கள் தண்ணீரிலிருந்து ஏறினபொழுது, [5]கர்த்தருடைய ஆவியானவர் பிலிப்பை எடுத்துக்கொண்டார்; அதுமுதல் மந்திரியானவன் அவனைக் காணாமல் சந்தோஷத்தோடே தன் வழியே போனான்.

௪௦ பிலிப்பு ஆசோத்துப் பட்டணத்திலே காணப்பட்டுப் பின்பு பிரயாணமாய்ப் போய் செசரியாப்பட்டணத்தில் சேரும்பரியந்தம் சகல பட்டணங்களிலேயும் சுவிசேஷத்தைப் பிரசங்கித்துத் திரிந்தான்.

## ௯. அதிகாரம்.

௧. சவுல் தமஸ்குவுக்குப் போகையில், ௪. பரமகாட்சியினாலே தரையில் விழுந்து, ௰. அப்போஸ்தலப்பட்டத்துக்கு அழைக்கப்பட்டு, ௰௭. அனனியாவினால் ஞானஸ்நானம்பெற்று, ௨௰. கிறிஸ்துவைத் தவிரப்பற்றோடே பிரசங்கித்தது. ௨௩. யூதரும், ௨௯. கிரேக்கரும் அவனைக் கொல்லவகைதேடியும், அவன் அவர்களுக்கு அகப்படாமற்போனது. ௩௧. சபைக்கு ஓய்விருந்தபோது பேதுரு ஐனேயாவென்ற ஒரு திமிர்வாதக்காரனைச் சொஸ்தமாக்கி, ௩௬. மரித்துப்போன தபீத்தாள் என்பவளை உயிர்ப்பித்தது.

[6]சவுல் என்பவன் பின்னும் கர்த்தருடைய சீஷரைப் பயப்படுத்திக் கொலைசெய்யும்படி சீறிப் பிரதான ஆசாரியனிடத்திற்குப் போய்,

௨ தமஸ்கு ஊரிலே புருஷரையானாலும் ஸ்திரீகளையானாலும் இந்த மார்க்கத்தார் என்று கண்டால், *அவர்களைக் கட்டி எருசலேமுக்குக் கொண்டுவரும்படிக்கு, அவ்வூரிலுள்ள செபஆலயத் தலைவருக்கு நிருபங்களைக் கொடுக்கவேண்டுமென்று கேட்டுக் கொண்டுபோனான்.

௩ அவன் பிரயாணமாய்ப் போய், [7]தமஸ்கு ஊருக்குச் சமீபமாகையில், சடுதியாய் வானத்திலிருந்து பிரகாசம் தோன்றி, அவனைச் சூழ்ந்துகொண்டது.

௪ உடனே அவன் தரையிலே விழுந்து, சவுலே, சவுலே, [8]என்னத்திற்கு நீ என்னைத் துன்பப்படுத்துகிறாய் என்று தன்னுடனே சொல்லுகிற சத்தத்தைக் கேட்டு, ஆண்டவரே, நீர் யார் என்றான்.

௫ கர்த்தரானவர் சொன்னது: நீ துன்பப்படுத்துகிற இயேசுவே நான்; [9]முள்ளில் உதைக்கிறது உனக்குக் கடினமாம் என்றார்.

௬ அவன் நடுங்கிப் பயந்து, ஆண்டவரே, [10]நான் என்ன செய்யவேண்டுமென்றிருக்கிறீர் என்றான்; அதற்குக் கர்த்தர் சொன்

கி. பி. ௩௫.

1 லூக். ௨௪. ௨௭. அப். ௰௮. ௨௮.
2 அப். ௰. ௪௭.
3 மத். ௨௮. ௰௯. மாற். ௰௬. ௰௬.
4 மத். ௰௬. ௰௬. யோவா. ௬. ௬௯: ௯. ௩௫, ௩௮: ௰௧. ௨௭. அப். ௯. ௨௰. ௧ யோ. ௪. ௰௫: ௫. ௫, ௰௩.
5 ௧ இரா. ௰௮. ௰௨. ௨ இரா. ௨. ௰௬. எசே. ௩. ௰௨, ௰௪.
6 அப். ௮. ௩. கலா. ௧. ௰௩. ௧ தீமோ. ௧. ௰௩.
* அல்லது இரேக்கபாஷையில், மார்க்கத்தாரென்று கண்டால், அப்படியே; அப். ௰௯. ௯, ௨௩.
7 அப். ௨௨. ௬: ௨௬. ௰௨. ௧ கொரி. ௰௫. ௮.
8 மத். ௨௫. ௪௰. ௪௫.
9 அப். ௫. ௩௯.
10 லூக். ௩. ௰. அப். ௨. ௩௭: ௰௬. ௩௰.

Digitized by Google

னது: நீ எழுந்து ஊரில் பிரவேசிப்பாயாக; நீ செய்யவேண்டுவது அங்கே உனக்குச் சொல்லப்படும் என்றார்.

௭ அவனுடனே கூடப் பிரயாணப்பட்டுப்போன [1]பேர்கள், சத்தத்தைக் கேட்டும் ஒருவனையும் காணாமல் பிரமிப்போடே நின்றார்கள்.

௮ பின்பு சவுல் தரையிலிருந்து எழுந்து தன் கண்களைத் திறக்கிறபொழுது, ஒருவனையும் காணாதவனாய் இருந்தான்; ஆதலால் அவர்கள் அவனைக் கைலாகுகொடுத்து, தமஸ்கு ஊருக்கு அழைத்துக்கொண்டுபோனார்கள்.

௯ அங்கே அவன் மூன்றுநாள் பார்வையில்லாமலும் புசியாமலும் பானம்பண்ணாமலும் இருந்தான்.

௰ ¶ அன்றியும் தமஸ்கு ஊரில் [2]அனனியா என்று பேருள்ள ஒரு சீஷன் இருந்தான்; அவனுக்குக் கர்த்தர் தரிசனையாகி, அனனியாவே என்றார், அவன் ஆண்டவரே, இதோ அடியேன் என்றான்.

௧௧ கர்த்தர் அவனுடனே சொன்னது: செம்மையென்னப்பட்ட தெருவிலே யூதாவின் வீட்டில் [3]தருசு ஊரானாகிய சவுல் என்பவன் இப்பொழுதே செபம்பண்ணுகிறான்.

௧௨ அல்லாமலும் பார்வை அடையும்படிக்கு, அவன் தரிசனத்திலே அனனியா என்று பேருள்ள மனிதன் உள்ளே வரவும் கையைத் தன்மேல் வைக்கவும் கண்டான்; ஆதலால் நீ எழுந்து, அங்கே போய், அவனைத் தேடுவாயாக என்றார்.

௧௩ அதற்கு அனனியா சொன்னது: ஆண்டவரே, அந்த மனிதனைக் குறித்து நான் அநேகராலே கேள்விப்பட்டிருக்கிறபடி, [4]அவன் எருசலேமிலுள்ள உம்முடைய பரிசுத்தவான்களுக்கு எத்தனை பொல்லாங்குகளைச் செய்தான்?

கி. பி. ௩௫.

1 தானி. ௰. ௭. அப். ௨௨. ௯: ௨௬. ௰௧.
2 அப். ௨௨. ௰௨.
3 அப். ௨௧. ௩௯: ௨௨. ௩.
4 ௯. ௪௩.
5 ௨௧. ௪௩. அப். ௭. ௫௯: ௨௨. ௰௯. ௧ கொரி. ௧. ௨. ௨ தீமோ. ௨. ௨௨.
6 அப். ௨௰. ௨௯: ௨௬. ௰௯. ௨ கொரி. ௰௧. ௨௩.
7 உரோ. ௧. ௫: ௰௧. ௰௩. கலா. ௨. ௭, ௮.
8 அப். ௨௫. ௨௨, ௨௩: ௨௬. ௧, ௩௨.
9 அப். ௰௩. ௨: ௨௨. ௨௧: ௨௬. ௰௭. ௨ கொரி. ௧. ௧ கொரி. ௰௫. ௰. கலா. ௧. ௰௫. எபே. ௩. ௭, ௮. ௧ தீமோ. ௨. ௭. ௨ தீமோ. ௧. ௰௧.
10 அப். ௨௨. ௰௨, ௰௩.
11 அப். ௮. ௰௭.
12 அப். ௨. ௪: ௪. ௩௧: ௮. ௰௭: ௰௭. ௰௨.
13 அப். ௨௬. ௨௰.
14 அப். ௮. ௩௭.
15 அப். ௮. ௩. ௧. ௩௪. கலா. ௧. ௰௩, ௨௩.

௧௪ இன்னேயும் [5]உம்முடைய நாமத்தைத் தொழுதுகொள்ளுகிறயாவரையும் கட்டும்படிக்கு, அவன் பிரதான ஆசாரியரால் அதிகாரம் பெற்றிருக்கிறானே என்றான்.

௧௫ அதற்குக் கர்த்தர் சொன்னது: [6]அவன் என்னுடைய நாமத்தின்நிமித்தம் இவ்வளவு பாடுபடவேண்டுமென்று அவனுக்குக் காண்பிப்பேன்.

௧௬ [7]ஆதலால் புறத்தேசத்தார்களுக்கும் [8]இராசாக்களுக்கும் இஸ்ரவேல் சனங்களுக்கும் என்னுடைய நாமத்தை அறிவிக்கும்படிக்கு, [9]அவன் எனக்கு விசேஷமாகத் தெரிந்துகொள்ளப்பட்ட ஊழியக்காரனாய் இருக்கிறான், ஆகையால் நீ போ என்றார்.

௧௭ ¶ [10]அப்பொழுது அனனியாபோய், வீட்டிற்குள் பிரவேசித்து, [11]கைகளை அவன்மேல் வைத்து, சகோதரனாகிய சவுலே, நீ வந்த வழியிலே உனக்குத் தரிசனையான இயேசுவென்னும் கர்த்தரானவர் நீ பார்வை அடைந்து [12]பரிசுத்தஆவியினாலே நிரப்பப்படும்படிக்கு என்னை அனுப்பினார் என்றான்.

௧௮ உடனே அவனுடைய கண்களிலிருந்து மீன் செதிலாம்புகளைப்போல விழுந்துபோக, அவன் பார்வை அடைந்து, எழுந்திருந்து, ஞானஸ்நானம் பெற்று,

௧௯ பின்பு போசனம்பண்ணித் திடப்பட்டான்; [13]பின்பு சவுல் என்பவன் தமஸ்கு ஊரிலுள்ள சீஷருடனே சிலநாள் இருந்தான்.

௨௰ ¶ அல்லாமலும் [14]இயேசுவானவரே பராபரனுடைய குமாரனென்று அவன் உடனே செபஆலயங்களில் பிரசங்கித்தான்.

௨௧ (அதைக்) கேட்ட யாவரும் பிரமிப்படைந்து, [15]எருசலேமில் இந்த நாமத்தைத் தொழுதுகொள்ளுகிறவர்களைப் பாழாக்கி, இங்கேயும் அப்படிப்பட்டவர்களைக் கட்டி, பிரதான ஆசாரியனிடத்

Digitized by Google

திற்குக்கொண்டுபோகும்படி வந்தவன் இவனல்லவா என்றார்கள்.

௨௨ சவுல் என்பவன் அதிகம் அதிகமாகத் திடன்கொண்டு, இவரே கிறிஸ்து என்று திருஷ்டாந்தப்படுத்தி, தமஸ்கு ஊரில் குடியிருக்கிற [1]யூதர்களைக் கலங்கப்பண்ணினான்.

௨௩ ¶ அநேகநாள் சென்றபின்பு [2]யூதர்கள் அவனைக் கொலைசெய்ய ஆலோசனைப்பண்ணினார்கள்; [3]அவர்களுடைய யோசனை சவுலுக்குத் தெரியவந்தது.

௨௪ அவனைக் கொலைசெய்யும்படிக்கு அவர்கள் இரவும்பகலும் கோட்டை வாசல்களைக் காத்துக்கொண்டிருந்தார்கள்.

௨௫ அப்பொழுது சீஷர் இராத்திரியிலே அவனை எடுத்துக்கொண்டு,[4]ஒரு கூடையில் வைத்து, மதிலின் வழியாய் இறக்கிவிட்டார்கள்.

௨௬ ¶ [5]பின்பு சவுல் எருசலேமுக்குப் போய், சீஷரைச் சேர்த்துக்கொள்ளப்பார்த்தான்; அவர்கள் எல்லாரும் அவனைச் சீஷனென்று நம்பாமல் அவனுக்குப் பயப்பட்டார்கள்.

௨௭ அப்பொழுது [6]பர்னபா என்பவன் அவனைச் சேர்த்துக்கொண்டு,அப்போஸ்தலரிடத்தில் அழைத்துக்கொண்டுபோய், வழியிலே அவன் கர்த்தாவைக் கண்டவிதத்தையும், அவர் அவனுடனே பேசினதையும், தமஸ்கு ஊரில் [7]அவன் இயேசுவின் நாமத்தினாலே தயிரியமாய்ப் பிரசங்கம் பண்ணினதையும் அவர்களுக்கு விவரித்துச் சொன்னான்.

௨௮ [8]அதின்பின்பு அவன் எருசலேமிலே அவர்களுடனேகூடப் போகிறவனுமாய் வருகிறவனுமாய் இருந்து,

௨௯ கர்த்தராகிய இயேசுவின் நாமத்தின்மேலே தயிரியமாய்ப் பிரசங்கம்பண்ணி, [9]கிரேக்கருடனேயும் பேசிக்கொண்டு தர்க்கம் பண்ணினான்; [10]அவர்கள் அவனைக் கொலைசெய்யத் தேடினார்கள்.

௩0 சகோதரர் அதை அறிந்து, அவனைச் செசரியா பட்டணத்திற்கு அழைத்துப்போய், பின்பு தருசு ஊருக்கு அனுப்பினார்கள்.

௩௧ [11]அப்படியிருக்குங்காலத்தில் யூதேயா,கலிலேயா,சமாரியாநாடுகள் எங்கும் சபைகள் சமாதானம் பெற்றிருந்து, கர்த்தருக்குப் பயப்படுகிற பயத்திலேயும், பரிசுத்த ஆவியின் போதிப்பிலேயும், வளர்க்கப்பட்டு நடந்து பெருகின.

௩௨ ¶ பேதுரு என்பவன் [12]அவர்கள் எல்லாருக்குள்ளும் சென்று வருகையில், லித்தா ஊரிலே குடியிருக்கிற பரிசுத்தவான்களிடத்திற்கும் போனான்.

௩௩ அங்கே எட்டுவருஷமாகக் கட்டிலின்மேல் கிடந்த திமிர்வாதமுள்ள ஐனேயா என்பவனைக் கண்டான்; அவனுடனே பேதுரு சொன்னது:

௩௪ ஐனேயாவே, [13]இயேசுக்கிறிஸ்து உன்னைக் குணமாக்குகிறார்; நீ எழுந்து உன் படுக்கையை நீதானே போட்டுக்கொள் என்றான்; உடனே அவன் எழுந்திருந்தான்.

௩௫ லித்தா ஊரிலும் சாரோன் திசையிலும் குடியிருந்தவர்கள் எல்லாரும் [14]அவனைக் கண்டு, [15]கர்த்தரிடத்திற்கு மனந்திரும்பினார்கள்.

௩௬ ¶ அன்றியும் யோப்பாபட்டணத்திலே தொற்காள் என்று *அருத்தங்கொள்ளுகிற தபீத்தாள் என்னப்பட்ட ஒரு சீஷி இருந்தாள்; [16]அவள் நற்கிரியைகளையும் தருமங்களையும் நிறைவாய்ச் செய்துகொண்டுவந்தவள்.

௩௭ அக்காலத்திலே அவள் வியாதிப்பட்டு மரணமடைந்தாள்; [17]அவளை அவர்கள் குளிப்பாட்டி, மேல்வீட்டில் கிடத்திவைத்தார்கள்.

இ. பி. ௯அ.

1 அப். ௰அ.௨அ.
2 அப். ௨௩. ௰௨: ௨௫. ௩. ௨ கொரி. ௰௧. ௨௬.
3 ௨ கொரி. ௰௧. ௩௨.
4 யோசு. ௨. ௰௫. சாமு. ௰௯. ௰௨.
5 அப். ௨௨. ௰௭. கலா. ௧. ௰௭, ௰௮.
6 அப். ௪. ௩௬: ௰௩. ௨.
7 ௨0, ௨௨. ௨௯.
8 கலா. ௧. ௰௮.
9 அப். ௬. ௧: ௰௧. ௨0.
10 ௨௩. ௨௯௯ம். ௨ கொரி. ௰௧. ௨௬.
11 அப். அ. ௧.
12 அப். அ. ௰௪.
13 அப் ௩. ௬, ௰௬: ௪. ௰.
14 ௧ நாளா. ௫. ௰௬.
15 அப். ௰௧. ௨௧.
* அதின் அருத்தம், பெண்மான்.
16 ௧தீமோ. ௨. ௰. தீத். ௩. அ.
17 அப். ௧. ௰௩.

Digitized by Google

கி. பி. ௪௧.



௩௮ யோப்பா பட்டணம் லித்தா ஊருக்குச் சமீபமானபடியினாலே, பேதுரு அவ்விடத்தில் இருக்கிறான் என்று சீஷர்கள் கேள்விப்பட்டு, அவன் தாமதமில்லாமல்* தங்களிடத்திற்கு வரவேண்டுமென்று வேண்டிக்கொள்ளும்படிக்கு இரண்டு மனிதரை அவ்விடத்திற்கு அனுப்பினார்கள்.

௩௯ ¶ அந்தப்படி பேதுரு எழுந்து அவர்களுடனேகூடப் போனான்; அவன் போய்ச் சேர்ந்தபொழுது, அவர்கள் அவனை மேல்வீட்டுக்கு அழைத்துக்கொண்டுபோனார்கள்; அப்பொழுது சகல கைம்பெண்களும் அவன் அருகே சேர்ந்து நின்று அழுதுகொண்டு, தொற்காள் தங்களுடனேகூட இருக்கையில் செய்த அங்கிகளையும் வஸ்திரங்களையும் காண்பித்தார்கள்.

௪௰ [1]பேதுரு எல்லாரையும் வெளியே போகப்பண்ணி, பின்பு [2]முழங்கால்படியிட்டுச் செபம்பண்ணி, பின்பு சவத்தின்புறமாய்த் திரும்பி, [3]தபீத்தாளே, எழுந்திரு என்றான்; அப்பொழுது அவள் தன் கண்களைத் திறந்து பேதுருவைப் பார்த்து உளுக்காந்தாள்.

௪௧ அவன் அவளுக்குக் கைகொடுத்து அவளை எழுந்திருக்கப்பண்ணி, பரிசுத்தவான்களையும் கைம்பெண்களையும் அழைத்து, அவளை உயிருள்ளவளாக அவர்களுக்குமுன் நிறுத்தினான்.

௪௨ அது யோப்பாபட்டணம் எங்கும் அறியப்பட்டபொழுது, [4]அநேகம்பேர் கர்த்தாவினிடத்தில் விசுவாசமுள்ளவர்களானார்கள்.

௪௩ அவன் யோப்பாபட்டணத்திலே [5]தோல் பதனிடுகிறவனாகிய சீமோன் என்பவனிடத்திலே அநேகநாள் தங்கினான்.

## ௰. அதிகாரம்.

௧. தேவபக்தனாகிய கொருநேலியு என்பவன், ௩. ஒரு தேவதூதனுடைய ஏவலினால் பேதுருவை அழைப்பித்தது. ௯. பேதுரு ஒரு தரிசனையில், ௩௪. ௨௯. அந்நியர்களை அசட்டைசெய்யலாகாதென்று கற்பிக்கப்பட்டது. ௩௪. அவன் கொருநேலியுவுக்கும், அவனை அடுத்தவர்களுக்கும் கிறிஸ்துவைப் பிரசங்கித்தபோது, ௪௪. பரிசுத்தஆவி அவர்கள்மேல் இறங்க, ௪௮. அவர்கள் ஞானஸ்நானம் பெற்றது.

அன்றியும் சேசாரியா பட்டணத்திலே இத்தாலியா தண்டென்னப்பட்ட தண்டிலே நூறு போர்ச்சேவகருக்குத் தலைவனாகிய கொருநேலியு என்பவன் இருந்தான்.

௨ அவன் [6]தன் குடும்பத்தார் யாவரோடுங்கூடத் தேவபக்தியுள்ளவனுமாய்ப் [7]பராபரனுக்குப் பயப்படுகிறவனுமாய் இருந்து, சனங்களுக்கு மிகுந்த தருமங்களைச் செய்து, எப்பொழுதும் பராபரனை நோக்கிச் செபம்பண்ணிக்கொண்டுவந்தான்.

௩ [8]பகலிலே ஏறக்குறைய ஒன்பதாம்மணி நேரத்தில் அவன் தரிசனை அடைந்து, தன்னிடத்தில் பராபரனுடைய தூதன் பிரவேசிக்கவும் கொருநேலியுவே என்று சொல்லவும் பிரத்தியட்சமாகக் கண்டு,

௪ அவனை உற்றுப்பார்த்துப் பயமுள்ளவனாகி, ஆண்டவரே, என்ன என்றான்; அப்பொழுது அவன் சொன்னதாவது; உன் செபங்களையும் உன் தருமங்களையும் பராபரன் திருவுளத்திலே எண்ணியிருக்கிறார்.

௫ ஆதலால் யோப்பாபட்டணத்திலே கடலின் அருகான வீட்டிலே வாசம்பண்ணி, தோல்பதனிடுகிறவனாய் இருக்கிற [9]சீமோன் என்பவனிடத்திலே பேதுரு என்று மறுபேர்கொண்ட சீமோன் தங்கியிருக்கிறான்.

௬ அவனை அழைத்துவரும்படிக்கு நீ மனிதரை அவ்விடத்திற்கு அனுப்புவாயாக; [10]நீ செய்யவேண்டியதை அவன் உனக்குச் சொல்லுவான் என்றான்.

௭ கொருநேலியுவுடனே பேசின தேவதூதன் போனபின்பு அ

* அல்லது விசனமில்லாமல்.

1 மத். ௯. ௨௫.
2 அப். ௭. ௬௰.
3 மாற். ௫. ௪௧, ௪௨. யோவா. ௧௧. ௪௩.
4 யோவா. ௧௧. ௪௫: ௧௨. ௧௧.
5 அப். ௰. ௬.
6 உ௨. ௪௪. அப். ௧௬. ௨:௨௨. ௧௨.
7 ௩௫. ௪௪.
8 ௩௦. ௪௪. அப். ௧௧. ௧௩.
9 அப். ௯. ௪௩.
10 அப். ௧௧. ௧௪.

Digitized by Google

வன் தன் வீட்டுமனிதரில் இரண்டு பேரையும், தன்னிடத்தில் காத்திருக்கிற போர்ச்சேவகரில் தேவபத்தியுள்ள ஒருவனையும் அழைத்து,

அ எல்லாவற்றையும் அவர்களுக்கு விவரித்துச் சொல்லி, அவர்களை யோப்பாபட்டணத்திற்கு அனுப்பினான்.

௯ ¶ மறுநாளிலே அவர்கள் பிரயாணமாய் அந்தப் பட்டணத்திற்குச் சமீபமாய்ச் சேருகையில், [1]பேதுரு ஆறும்மணி நேரத்திலே செபம்பண்ணும்படிக்கு வீட்டின்மேல் ஏறினான்.

௰ அப்பொழுது அவன் மிகுந்த பசி அடைந்து, சாப்பிட மனதாய் இருந்தான்; அதற்காக அவர்கள் எத்தனம்பண்ணுகையில்,

௰௧ அவன் ஞானதிருஷ்டி அடைந்து, (அதிலே) [2]வானம் திறந்திருக்கவும், நான்கு தொங்கல் கட்டப்பட்ட பெரிய துப்பட்டியைப்போல ஒரு கூடு தன்னிடத்திற்கு இறங்கி, தரையில் விடப்பட்டிருக்கவும்,

௰௨ அதிலே பூமியிலுள்ள சகல விதமான நாலுகால் சீவன்களும், காட்டுமிருகங்களும், ஊர்வனவைகளும், ஆகாயத்துப் பறவைகளும் இருக்கவும் கண்டான்.

௰௩ அல்லாமலும் பேதுருவே, எழுந்திரு அடித்துப் புசிப்பாயாக என்று ஒரு சத்தம் அவனுக்கு உண்டாயிற்று.

௰௪ அதற்குப் பேதுரு, ஆண்டவரே, அப்படி அல்ல, [3]எலாததாயும் அசுத்தமாயும் இருக்கிறதை நான் ஒருக்காலும் புசிக்கவில்லையே என்றான்.

௰௫ அப்பொழுது, பராபரன் சுத்தமாக்கினவைகளை [4]நீ அசுத்தமென்று எண்ணதிருப்பாயாக என்று இரண்டாந்தரம் சத்தம் அவனுக்கு உண்டாயிற்று.

௰௬ மூன்றுந்தரம் அப்படியே உண்டாயிற்று; பின்பு அந்தக்கூடு திரும்பி வானத்திற்கு எடுத்துக்கொள்ளப்பட்டது.

௰௭ ¶ அப்பொழுது பேதுரு தான் கண்ட தரிசனையின் கருத்தைக்குறித்துத் தனக்குள்ளே சந்தேகப்படுகையில், கொருநேலியுவினால் அனுப்பப்பட்ட மனிதர் சீமோனுடைய வீட்டை விசாரித்துக்கொண்டு வாசற்படியிலே நின்று,

௰௮ பேதுரு என்று பேர்கொண்ட சீமோன் இங்கே தங்கியிருக்கிறானா என்று சத்தமிட்டுக் கேட்டார்கள்.

௰௯ ¶ அப்பொழுது பேதுரு அந்தத் தரிசனையைக்குறித்துச் சிந்தனைபண்ணிக்கொண்டிருக்கையில்,

௨௰ [5]மூன்று மனிதர் உன்னைத் தேடுகிறார்கள்; அவர்களை நான் அனுப்பினேன். ஆதலால் [6]நீ எழுந்து, தாழ இறங்கி, ஒன்றுக்கும் சந்தேகப்படாமல், அவர்களுடனேகூடப் போ என்று ஆவியானவர் அவனுக்குச் சொன்னார்.

௨௧ அந்தப்படி பேதுரு கொருநேலியுவினாலே தன்னிடத்திற்கு அனுப்பப்பட்ட மனிதனிடத்திற்கு இறங்கிப்போய், நீங்கள் தேடுகிறவன் நான்தான் நீங்கள் வந்திருக்கிற காரணம் என்ன என்றான்.

௨௨ அவர்கள் சொன்னதாவது: [7]நீதிமானுமாய், பராபரனுக்குப் பயப்படுகிறவனுமாய், [8]எல்லா யூதர்களுக்குள்ளும் நல்லவன் என்று சாட்சிபெற்றிருக்கிறவனுமாய் இருக்கிற கொருநேலியு என்னும் சேனைத்தலைவன் உம்மைத் தன் வீட்டிற்கு அழைப்பித்து, உம்மால் வார்த்தைகளைக் கேட்கும்படிக்குப் பரிசுத்த தூதனாலே தேவ எத்தனமாய்க் கட்டளை பெற்றுக் கொண்டான் என்றார்கள்.

௨௩ அப்பொழுது பேதுரு அவர்களை உள்ளே அழைத்து உபசாரம்பண்ணினான்; மேலும் மறுநாளிலே அவன் அவர்களுடனேகூ

கி. பி. ௩௪.

1 அப். ௩.௧. 
2 அப். ௭. ௫௬. வெளி. ௰௯. ௰௧.
3 ௩ மோ. ௰௧. ௪; ௨௰. ௨௫. ௫ மோ. ௰௪. ௩, ௭. எசே. ௪.௰௪.
4 மத். ௰௫. ௰௧. ௨அ. வசனம். ௧ரோ. ௰௪. ௰௪, ௰௭, ௨௰. ௧கொரி.௰.௨௫. ௧தீமோ. ௪. ௪. தீத். ௧. ௰௫.
5 அப். ௰௧. ௰௨.
6 அப். ௰௫. ௭.
7 ௧, ௨, ௲. வச.
8 அப். ௨௨.௰௨.

Digitized by Google

களுக்கு முன்னின்று [1]பராபரன் துரத்தின அஞ்ஞானிகளுடைய தேசத்திற்குள்ளே அதைக் கொண்டுபோய், தாவீது இருந்த நாள்வரைக்கும் வைத்திருந்தார்கள்.

௪௬ [2]அவன் பராபரனிடத்தில் தயவுபெற்றபடியினாலே, [3]யாக்கோபினுடையதேவனுக்காக ஒரு வாசஸ்தலத்தைக் கட்டும்படிக்கு உத்தரவு கேட்டுக்கொண்டான்.

௪௭ (அவன் அல்ல,) [4]சாலோமோனே அவருக்காக ஆலயத்தைக் கட்டினான்.

௪௮ [5]உன்னதமானவர், வானம் எனக்கு ஆசனமாயும் பூமி என்னுடைய பாதப்படியாயும் இருக்கின்றன; எனக்காக நீங்கள் எப்படிப்பட்ட ஆலயத்தைக் கட்டுவீர்கள்? அல்லது நான் தங்கும்படிக்கு ஏற்ற ஸ்தலம் எது?

௪௯ இவை எல்லாவற்றையும் என்னுடைய கை உண்டாக்கவில்லையா என்று பராபரன் திருவுளம்பற்றினார் என்று தீர்க்கதரிசி சொன்னபடியே,

௫௦ [6]கைகளால் செய்யப்பட்ட ஆலயங்களில் வாசமாய் இருக்க மாட்டார்.

௫௧ ¶ ஆ [7]வணங்காத கழுத்துள்ளவர்களே, [8]இருதயமும் காதும் விருத்தசேதனம் பெறாதவர்களே, உங்கள் பிதாக்களைப்போல நீங்களும் பரிசுத்தஆவியை எப்பொழுதும் விரோதிக்கிறீர்கள்.

௫௨ [9]தீர்க்கதரிசிகளில் யாரை உங்கள் பிதாக்கள் துன்பப்படுத்தாமல் இருந்தார்கள்? [10]நீதிபரர் வருகையை முன்னறிவித்தவர்களையும் அவர்கள் கொலைசெய்தார்கள்; அவருக்கே நீங்கள் இப்பொழுது துரோகிகளுமாய் அவரைக் கொலைசெய்தவர்களுமாய் இருக்கிறீர்கள்.

௫௩ [11]தேவதூதரின் அணிவகுப்புகளுக்குள்ளேவேதப்பிரமாணத்தைப் பெற்றுக்கொண்டிருந்தும், அதைக் கைக்கொள்ளாமல் இருக்கிறீர்கள் என்று சொல்ல,

௫௪ ¶ [12] அவர்கள் அவைகளைக் கேட்டு, தங்கள் இருதயங்களில் அறுக்கப்பட்டவர்களாய் அவனைக் குறித்துப் பல்கடித்தார்கள்.

௫௫ [13]அவன் பரிசுத்த ஆவியினாலே நிறைந்து, வானத்தை அண்ணாந்து பார்த்துக்கொண்டு, பராபரனுடைய மகிமையையும் வலதுபாரிசத்திலே நிற்கிற இயேசுவையும் கண்டு,

௫௬ அதோ [14]வானம் திறக்கப்பட்டிருக்கிறதையும் [15]மனிதகுமாரனானவர் பராபரனுடைய வலதுபாரிசத்திலே நிற்கிறதையும் பார்க்கிறேன் என்று சொன்னபொழுது,

௫௭ அவர்கள் மிகுந்த சத்தத்துடனே கூப்பிட்டு, தங்கள் காதுகளை அடைத்துக்கொண்டு,

௫௮ ஒருமனப்பட்டு அவன்மேலே பாய்ந்து, [16]அவனைப் பட்டணத்திற்குப் புறம்பே தள்ளி, [17]அவன்மேல் கல்லெறிந்தார்கள்.

௫௯ [18] சாட்சிகளானவர்களும் தங்கள் வஸ்திரங்களைச் சவுலென்னப்பட்ட ஒரு வாலிபனுடைய பாதங்கள் அருகே வைத்து, ஸ்தேவான்மேல் கல்லெறிந்தார்கள்; [19]அவன் கர்த்தராகிய இயேசுவே, [20]என் ஆவியை ஏற்றுக்கொள்ளும் என்று தொழுதுகொண்டு,

௬௦ [21]முழங்கால்படியிட்டு, ஆண்டவரே, [22]இவர்கள்மேல் இந்தப் பாவத்தை நிறுத்தாதிரும் என்று மிகுந்த சத்தத்தோடே கூப்பிட்டுப் பின்பு நித்திரையடைந்தான்; [33]அவனைக் கொலைசெய்கிறது சவுலென்பவனுக்கு மிகவும் பிரியமாய் இருந்தது.

## ௮. அதிகாரம்.

க. எருசலேமிலுண்டான சபை துன்பப்பட்டு, ௫. உதவிக்காரனுகிய பிலிப்பின் பிரசங்கத்தினாலும், அற்புதங்களினாலும் சமாரியாவிலே [illegible]

இ. பி. ௬௧.

1 தெசே. ௧. ௨௭. சங். ௪௪. ௨: ௭௮. ௫௫. அப். ௰௩. ௰௯.
2 ௧ சாமு. ௰௬. ௧. ௨ சாமு. ௭. ௧. சங். ௮௯. ௰௯. அப். ௰௩. ௨௨.
3 ௧ இரா. ௮. ௰௭. ௧ நாளா. ௨௨. ௭. சங். ௱௩௨. ௪, ௫.
4 ௧ இரா. ௬. ௧: ௮. ௨௦. ௧ நாளா. ௰௭. ௰௨. ௨ நாளா. ௩. ௧.
5 ஏசா. ௬௬. ௧, ௨. மத். ௫. ௩௪, ௩௫: ௨௩. ௨௨.
6 ௧ இரா. ௮. ௨௭. ௨ நாளா. ௨. ௬: ௬. ௰௮. அப். ௰௭. ௨௪.
7 ௨ மோ. ௩௨. ௯: ௩௩. ௩, ௫. ஏசா. ௪௮. ௪.
8 ௩ மோ. ௨௬. ௪௧. ௫ மோ. ௰. ௰௬. எரே. ௪. ௪: ௬. ௰: ௯. ௨௬. எசே. ௪௪. ௯.
9 ௨ நாளா. ௩௬. ௰௬. மத். ௨௧. ௩௫: ௨௩. ௩௪. ௧ தெச. ௨. ௰௫.
10 அப். ௩. ௰௪.
11 ௨ மோ. ௨௦. ௧. கலா. ௩. ௰௯. எபி. ௨. ௨.
12 அப். ௫. ௩௩.
13 அப். ௬. ௫.
14 எசே. ௧. ௧. மத். ௩. ௰௬. அப். ௰. ௰௧.
15 தானி. ௭. ௰௩.
16 ௧ இரா. ௨௧. ௰௩. லூக். ௪. ௨௯. எபி. ௰௩. ௰௨.
17 ௩ மோ. ௨௪. ௰௬.
18 ௫ மோ. ௰௩. ௯, ௰௭. ௭. அப். ௮. ௧: ௨௨. ௨௦.
19 அப். ௯. ௰௪.
20 சங். ௩௧. ௫. லூக். ௨௩. ௪௬.
21 அப். ௯. ௪௦: ௨௦. ௩௬: ௨௧. ௫.

22 மத். ௫. ௪௪. லூக். ௬. ௨௮: ௨௩. ௩௪.—23 அப். ௭. ௫௮: ௨௨. ௨௦.

Digitized by Google

பட்டபோது, ஸ்தம்பனவித்தைக்காரனுயிருந்த ஒரு பெரிய சத்தனென்ற சீமோன் என்பவனும் அநேகம்பேருடனே ஞானஸ்நானம் பெற்றது. ௰௪. பேதுருவும் யோவானும் சபையை ஸ்திரப்படுத்தின செய்தியிலும், சிரசின்மேல் கைகளை வைப்பதிலும் பரிசுத்தஆவி அளிக்கப்பட்டதை, ௰௮. சீமோன் கண்டு, அந்த வரத்தை விலைக்கிரயமாய்ப் பெற்றுக்கொள்ளப் பார்த்தபோது, உ௰. பேதுரு அவனுடைய பாபத்தையும் இச்சையையும் கடிந்துகொண்டு, அவனுக்குக் குணப்படுதலுக்கேற்ற புத்தியைச் சொல்லி, யோவானுடனே கூடக் கர்த்தருடைய வசனத்தைப் பிரசங்கித்து, எருசலேமுக்குத் திரும்பினது. உ௬. போதிக்கவும், எத்தியோப்பிய பிரதானிக்கு ஞானஸ்நானம் கொடுக்கவும், பிலிப்பைத் தேவதூதன் அனுப்பினது.

அக்காலத்திலே எருசலேமிலுள்ள சபைக்கு மிகுந்த துன்பம் உண்டாயிற்று; அப்போஸ்தலர்தவிர [1]மற்ற யாவரும் யூதேயா சமாரியா தேசங்களில் சிதறப்பட்டார்கள்.

உ ஸ்தேவானைத் தேவபத்தியுள்ள சிலபேர்கள் எடுத்து அடக்கம்பண்ணி, [2]அவனைக்குறித்து மிகவும் புலம்பி அழுதார்கள்.

௩ [3]சவுல் வீடுகள்தோறும் பிரவேசித்து, புருஷரையும் ஸ்திரிகளையும் வெளியே இழுத்துப்போய், காவலில்போடுவித்து, சபையைப் பாழாக்கினான்.

௪ [4]சிதறப்பட்டபேர்கள் திரிந்து தேவவசனத்தைச் சுவிசேஷமாய்ப் பிரசித்தம்பண்ணினார்கள்.

௫ ¶ அப்படியே [5]பிலிப்பென்பவன் சமாரியாநாட்டிலுள்ள ஒரு ஊருக்குப்போய், அங்கே கிறிஸ்துவைக்குறித்துப் பிரசங்கித்தான்.

௬ அப்பொழுது அநேகம்பேரிடத்தில் இருந்த [6]அசுத்த ஆவிகள் மிகுந்த சத்தத்தோடே கூப்பிட்டு அவர்களைவிட்டுப் புறப்பட்டன; அநேக திமிர்வாதக்காரரும் சப்பாணிகளும் குணமாக்கப்பட்டார்கள்.

௭ பிலிப்பு செய்த அதிசயங்களைச் சனங்கள் கேள்விப்பட்டும் கண்டும் இருக்கையில், அவனால் சொல்லப்பட்டவைகளுக்கு ஒருமனப்பட்டு எச்சரிக்கையாய் இருந்தார்கள்.

௮ அந்த ஊரிலே மிகுந்த சந்தோஷம் உண்டாயிற்று.

௯ ¶ அன்றியும் சீமோன் என்று பெயர்கொண்ட ஒருவன் முன்னே [7]அந்த ஊரிலே ஸ்தம்பனவித்தைக்காரனாயிருந்து, [8]தன்னைப் பெரியவனென்று சொல்லி, சமாரியாநாட்டின் சனங்களைப் பிரமிக்கப்பண்ணிக்கொண்டிருந்தான்.

௰ சிறியோர் பெரியோர் யாவரும் இவன் பராபரனுடைய பெரிய சத்தியென்று அவனுக்கு எச்சரிக்கையாய் இருந்தார்கள்.

௰௧ அநேககாலம் அவன் தன்னுடைய மந்திர தந்திரங்களினாலே அவர்களைப் பிரமிக்கச்செய்தபடியால், அவர்கள் அவனுக்கு எச்சரிக்கையாய் இருந்தார்கள்.

௰௨ [9]பின்பு பராபரனுடைய இராச்சியத்திற்கும் இயேசுக்கிறிஸ்துவின் நாமத்திற்கும் ஏற்றவைகளைச் சுவிசேஷமாய் அறிவிக்கிற பிலிப்பை அவர்கள் விசுவாசித்தபொழுது, புருஷரும் ஸ்திரிகளும் ஞானஸ்நானம் பெற்றார்கள்.

௰௩ அப்பொழுது அந்தச் சீமோனும் விசுவாசித்து ஞானஸ்நானம் பெற்றுப் பிலிப்பைப் பற்றிக்கொண்டு, (அவனாலே) நடந்த அதிசயங்களையும் பலத்த செய்கைகளையும்* பிரமிப்புடனே பார்த்தான்.

௰௪ ¶ சமாரியா நாடு பராபரனுடைய வசனத்தை ஏற்றுக்கொண்டதை எருசலேமிலுள்ள அப்போஸ்தலர் கேள்விப்பட்டபொழுது, அவர்கள் பேதுருவையும் யோவானையும் அவர்களிடத்திற்கு அனுப்பினார்கள்.

௰௫ அவர்கள் போய், [10]அவர்களில் ஒருவனாகிலும் பரிசுத்தஆவியைப் பெறாமல், [11]கர்த்தராகிய இயேசுவின் நாமத்தினாலே [12]ஞானஸ்நானத்தைமாத்திரம் பெற்றவர்களானபடியினாலே,

௰௬ [13]அவர்கள் பரிசுத்தஆவியைப்பெற்றுக்கொள்ளும்படிக்கு,

இ. பி. கூச.

1 அப். ௰௧. ௰௯.
2 ஆதி. உ௩. உ: ௫௰. ௰. உ சாமு. ௩. ௩௧.
3 அப். ௭. ௫௮: ௯.௧, ௰௩, உ௧: உஉ. ௪: உ௯. ௰, ௰௧. ௧ கொரி. ௰௫. ௯. கலா.௧. ௰௩. பிலி. ௩. ௬. ௧ தீமோ. ௧. ௰௩.
4 மத். ௰. உ௩. அப்.௰௧.௰௯.
5 அப். ௬. ௫.
6 மாற். ௰௬. ௰௭.
7 அப்.௰௩.௬.
8 அப். ௫. ௩௬.
9 அப். ௧. ௩.
* அல்லது அடையாளங்களையும், பெரிய அதிசயங்களையும்.
10 அப் ௰௯. உ.
11 அப். ௰. ௪௮: ௰௯. ௫.
12 மத். உ௮.௰௯. அப். உ. ௩௮.
13 அப். உ. ௩௮.

௰௭ [1]அவர்களைக்குறித்துச் செபம் பண்ணி, (தங்கள்) கைகளை அவர்கள்மேல் வைத்தார்கள்; உடனே பரிசுத்தஆவியைப் பெற்றார்கள்.

௰௮ ¶ அப்போஸ்தலர் தங்கள் கைகளை (அவர்கள்மேல்) வைத்ததினாலே பரிசுத்தஆவி கொடுக்கப்படுகிறதைச் சீமோன் கண்டபொழுது, அவர்களிடத்திற்குப் பணம் கொண்டுபோய்,

௰௯ என் கைகளை வைக்கப்படுகிறவன் எவனோ, அவன் [2]பரிசுத்த ஆவியைப் பெறத்தக்கதாக, நீங்கள் எனக்கும் இந்த அதிகாரம் கொடுக்கவேண்டும் என்றான்.

௨௰ அதற்குப் பேதுரு சொன்னதாவது: பராபரனுடைய ஈவைப் பணத்தினாலே சம்பாதித்துக்கொள்ளலாமென்று [3]நீ நினைக்கிறபடியால், உன் பணம் உன்னோடே கேட்டுக்கு உள்ளாகக்கடவது.

௨௧ உன் இருதயம் பராபரனுக்குமுன்பாகச் செம்மையாய் இராதபடியால், இந்தக் காரியத்திலே உனக்குப் பங்கும் பாகமும் இல்லை.

௨௨ [4]நீ கசப்புள்ள பிச்சும் அநீதிக்கட்டும் உடையவனாய் இருக்கிறதைப் பார்க்கிறேன்.

௨௩ ஆனபடியினாலே, [5]உன் இருதயத்தின் சிந்திப்பு உனக்கு மன்னிக்கப்படக்கூடுமானால் உன் துர்க்குணத்தை விட்டு மனந்திரும்பி, பராபரனைநோக்கி வேண்டிக்கொள்வாயாக என்றான்.

௨௪ சீமோன் சொன்னது: நீங்கள் உரைத்தவைகளில் ஒன்றும் எனக்கு வாராதபடிக்கு, [6]நீங்களே எனக்காகக் கர்த்தரை வேண்டிக்கொள்ளுங்கள் என்றான்.

௨௫ ¶ இவ்விதமாய் அவர்கள் கர்த்தருடைய வசனத்தைச் சாட்சியாய் அறிவித்துச் சொன்னபின்பு, எருசலேமுக்குத் திரும்பி, சமாரியருடைய அநேக கிராமங்களில் சுவிசேஷத்தைப் பிரசங்கித்தார்கள்.

கி. பி. ௩௪.

1 அப். ௧. ௧: ௰௧. ௧. எபி. ௬. ௨.

2 அப். ௨. ௩௮: ௰. ௪௫: ௰௧,௰௭.

3 மத். ௰. ௮. ௨ இரா. ௫. ௰௬.

4 எபி. ௰௨. ௰௫.

5 தானி. ௪. ௨௭. ௨ தீமோ. ௨. ௨௫.

6 ௪ மோ. ௨௰. ௭, ௰௭. ௨ மோ. ௮. ௮. ௪ மோ. ௨௧. ௭. ௧ இரா ௰௩. ௬. யோபு. ௪௨. ௮. யாக். ௫. ௰௬.

7 செப். ௩. ௰.

8 யோவா. ௰௨. ௨௰.

9 ஏசா. ௫௩, ௭, ௮.

௨௬ ¶ அன்றியும் கர்த்தருடைய தூதன் பிலிப்புடனே சொன்னது: நீ எழுந்து தெற்கே பாழாய்க்கிடக்கிற காட்சா பட்டணத்திற்கு எருசலேமிலிருந்து போகிற மார்க்கத்திற்குப் போ என்றான்.

௨௭ அந்தப்படி அவன் எழுந்து போனான்; [7]அப்பொழுது எத்தியோப்பியரை ஆண்ட இராசஸ்திரியாகிய கந்தாகி என்பவளுடைய மந்திரியுமாய், அவளுக்கு உண்டான பொக்கிஷம் எல்லாவற்றின்மேலும் வைக்கப்பட்ட தலைவனுமாய் இருந்த [8]ஒரு எத்தியோப்பிய மனிதன் தொழுதுகொள்ளும்படி எருசலேமுக்கு வந்திருந்து,

௨௮ ஊருக்குத் திரும்பித் தன் இரதத்தில் உளுக்கார்ந்து, ஏசாயா தீர்க்கதரிசியின் புத்தகத்தை வாசித்துக்கொண்டு போனான்.

௨௯ ஆவியானவர் பிலிப்புடனே சொன்னது: அந்த இரதத்திற்குச் சமீபமாய் நீ சேர்ந்து, அதனோடே கூடிப்போ என்றார்.

௩௰ அந்தப்படி பிலிப்பு சேர ஓடி, அவன் ஏசாயா தீர்க்கதரிசியின் புத்தகத்தை வாசிக்கக் கேட்டு, நீர் வாசிக்கிறவைகளின் கருத்து உமக்குத் தெரிந்திருக்கிறதா என்றான்.

௩௧ அவன் சொன்னது: ஒருவன் எனக்குக் காண்பியாவிட்டால் அது எனக்குத் தெரியுமா என்று சொல்லி, பிலிப்பு ஏறித் தன் பக்கத்தில் உளுக்காரும்படி அவனை வேண்டிக்கொண்டான்.

௩௨ அவன் வாசித்த வேதவாக்கியம் என்னவென்றால், [9]அவர் ஒரு ஆட்டைப்போல அடிக்கப்படும்படி கொண்டுபோகப்பட்டார்; தன் மயிரைக் கத்திரிக்கிறவனுக்குமுன்பாகச் சத்தமிடாதிருக்கிற ஆட்டுக்குட்டியைப்போல, அவர் தமது வாயைத் திறவாதிருந்தார்.

௩௩ அவர் தாழ்மையாயிருக்கை

Digitized by Google

யில், அவருடைய நியாயம் எடுத்துப்போடப்பட்டது; அவருடைய ஜீவன் பூமியிலிருந்து எடுத்துப்போடப்பட்டபடியினாலே, அவருடைய தலைமுறையாரை யார் விவரித்துச் சொல்லுவார்கள் என்பதே.

௩௪ மந்திரியானவன் பிலிப்பை நோக்கி, தீர்க்கதரிசி தன்னைக் குறித்தோ மற்றொருவனைக்குறித்தோ, யாரைக்குறித்து இதைச் சொன்னான், அதை நீர் எனக்குச் சொல்லும்படி வேண்டிக்கொள்ளுகிறேன் என்றான்.

௩௫ அப்பொழுது பிலிப்பு உத்தரவு சொல்ல, [1]அந்த வேதவாக்கியம் தொடங்கி இயேசுவின் சுவிசேஷத்தை அவனுக்குப் பிரசங்கித்தான்.

௩௬ ¶ இவ்விதமாய் அவர்கள் வழிநடந்துபோகையில், தண்ணீருள்ள ஓரிடத்திலே சேர்ந்தபொழுது, மந்திரியானவன் சொன்னது: இதோ தண்ணீர் [2]நான் ஞானஸ்நானம் பெற்றுக்கொள்ளுகிறதற்குத் தடையென்ன என்றான்.

௩௭ அதற்குப் பிலிப்பு சொன்னது: [3]நீர் முழு இருதயத்தோடும் விசுவாசித்தால் பெற்றுக்கொள்ளலாம் என்றான்; அவன் சொன்னது: [4]இயேசுக்கிறிஸ்துவைப் பராபரனுடைய குமாரனென்று விசுவாசிக்கிறேன் என்று சொல்லி, இரதத்தை நிறுத்தச்சொன்னான்.

௩௮ பின்பு பிலிப்பும் மந்திரியும் இருவரும் இறங்கித் தண்ணீரில் பிரவேசித்தார்கள்; அங்கே அவனுக்கு ஞானஸ்நானம் கொடுத்தான்.

௩௯ அவர்கள் தண்ணீரிலிருந்து ஏறினபொழுது, [5]கர்த்தருடைய ஆவியானவர் பிலிப்பை எடுத்துக் கொண்டார்; அதுமுதல் மந்திரியானவன் அவனைக் காணாமல் சந்தோஷத்தோடே தன் வழியே போனான்.

௪௰ பிலிப்பு ஆசோத்துப் பட்டணத்திலே காணப்பட்டுப் பின்பு பிரயாணமாய்ப் போய் செசரியாப்பட்டணத்தில் சேருமளவும் சகல பட்டணங்களிலேயும் சுவிசேஷத்தைப் பிரசங்கித்துத் திரிந்தான்.

கி. பி. ௩௫.

1 லூக். ௨௪. ௨௭. அப். ௰௮. ௨௮.
2 அப். ௰. ௪௭.
3 மத். ௨௮. ௰௯. மாற். ௰௬. ௰௬.
4 மத். ௰௬. ௰௬. யோவா. ௬. ௬௯: ௧௧. ௨௭, ௨௮: ௰௧. ௩௭. அப். ௯. ௨௰. ௧ யோ. ௪. ௰௫: ௫. ௫, ௰௩.
5 ௧ இரா. ௰௮. ௰௨. ௨ இரா. ௨. ௰௬. எசே. ௩. ௰௨, ௰௪.
6 அப். ௮. ௩. கலா. ௧. ௰௩. ௧ தீமோ. ௧. ௰௩.
* அல்லது இரேக்கபாஷையில், மார்க்கத்தாரென்ற கண்டால், அப்படியே; அப். ௰௯. ௯, ௨௩.
7 அப். ௨௨. ௬: ௨௬. ௰௨. ௧ கொரி. ௰௫. ௮.
8 மத். ௨௫. ௪௰.
9 அப். ௫. ௩௯.
10 லூக். ௩. ௰. அப். ௨. ௩௭: ௰௬. ௩௰.

## ௯. அதிகாரம்.

௧. சவுல் தமஸ்குவுக்குப் போகையில், ௪. பரம காட்சியினாலே தரையில் விழுந்து, ௰. அப்போஸ்தலப்பட்டத்துக்கு அழைக்கப்பட்டு, ௰௮. அனனியாவினால் ஞானஸ்நானம்பெற்று, ௨௰. கிறிஸ்துவைத் தயிரியத்தோடே பிரசங்கித்தது. ௨௩. யூதரும், ௨௯. கிரேக்கரும் அவனைக் கொல்லவகைதேடியும், அவன் அவர்களுக்கு அகப்படாமற்போனது. ௩௧. சபைக்கு ஓய்விருந்தபோது பேதுரு ஐனேயாவென்ற ஒரு திமிர்வாதக்காரனைச் சொஸ்தமாக்கி, ௩௬. மரித்துப்போன தபீத்தாள் என்பவளை உயிர்ப்பித்தது.

[6]சவுல் என்பவன் பின்னும் கர்த்தருடைய சீஷரைப் பயப்படுத்திக் கொலைசெய்யும்படி சீறிப் பிரதான ஆசாரியனிடத்திற்குப் போய்,

௨ தமஸ்கு ஊரிலே புருஷரையானாலும் ஸ்திரீகளையானாலும் இந்த மார்க்கத்தார் என்று கண்டால், *அவர்களைக் கட்டி எருசலேமுக்குக் கொண்டுவரும்படிக்கு, அவ்வூரிலுள்ள செபஆலயத் தலைவருக்கு நிருபங்களைக் கொடுக்கவேண்டுமென்று கேட்டுக் கொண்டுபோனான்.

௩ அவன் பிரயாணமாய்ப் போய், [7]தமஸ்கு ஊருக்குச் சமீபமாகையில், சடுதியாய் வானத்திலிருந்து பிரகாசம் தோன்றி, அவனைச் சூழ்ந்துகொண்டது.

௪ உடனே அவன் தரையிலே விழுந்து, சவுலே, சவுலே, [8]என்னத்திற்கு நீ என்னைத் துன்பப்படுத்துகிறாய் என்று தன்னுடனே சொல்லுகிற சத்தத்தைக் கேட்டு, ஆண்டவரே, நீர் யார் என்றான்.

௫ கர்த்தரானவர் சொன்னது: நீ துன்பப்படுத்துகிற இயேசுவே நான்; [9]முள்ளில் உதைக்கிறது உனக்குக் கடினமாம் என்றார்.

௬ அவன் நடுங்கிப் பயந்து, ஆண்டவரே, [10]நான் என்ன செய்யவேண்டுமென்றிருக்கிறீர் என்றான்; அதற்குக் கர்த்தர் சொன்

Digitized by Google

னது: நீ எழுந்து ஊரில் பிரவேசிப்பாயாக; நீ செய்யவேண்டுவது அங்கே உனக்குச் சொல்லப்படும் என்றார்.

௭ அவனுடனே கூடப் பிரயாணப்பட்டுப்போன [1]பேர்கள், சத்தத்தைக் கேட்டும் ஒருவரையும் காணாமல் பிரமிப்போடே நின்றார்கள்.

௮ பின்பு சவுல் தரையிலிருந்து எழுந்து தன் கண்களைத் திறக்கிறபொழுது, ஒருவனையும் காணாதவனாய் இருந்தான்; ஆதலால் அவர்கள் அவனைக் கைலாகுகொடுத்து, தமஸ்கு ஊருக்கு அழைத்துக்கொண்டுபோனார்கள்.

௯ அங்கே அவன் மூன்றுநாள் பார்வையில்லாமலும் புசியாமலும் பானம்பண்ணாமலும் இருந்தான்.

௰ ¶ அன்றியும் தமஸ்கு ஊரில் [2]அனனீயா என்று பேருள்ள ஒரு சீஷன் இருந்தான்; அவனுக்குக் கர்த்தர் தரிசனையாகி, அனனீயாவே என்றார், அவன் ஆண்டவரே, இதோ அடியேன் என்றான்.

௰௧ கர்த்தர் அவனுடனே சொன்னது: செம்மையென்னப்பட்ட தெருவிலே யூதாவின் வீட்டில் [3]தருசு ஊரானாகிய சவுல் என்பவன் இப்பொழுதே செபம்பண்ணுகிறான்.

௰௨ அல்லாமலும் பார்வை அடையும்படிக்கு, அவன் தரிசனத்திலே அனனீயா என்று பேருள்ள மனிதன் உள்ளே வரவும் கையைத் தன்மேல் வைக்கவும் கண்டான்; ஆதலால் நீ எழுந்து, அங்கே போய், அவனைத் தேடுவாயாக என்றார்.

௰௩ அதற்கு அனனீயா சொன்னது: ஆண்டவரே, அந்த மனிதனைக் குறித்து நான் அநேகராலே கேள்விப்பட்டிருக்கிறபடி, [4]அவன் எருசலேமிலுள்ள உம்முடைய பரிசுத்தவான்களுக்கு எத்தனை பொல்லாங்குகளைச் செய்தான்?

௰௪ இங்கேயும் [5]உம்முடைய நாமத்தைத் தொழுதுகொள்ளுகிற யாவரையும் கட்டும்படிக்கு, அவன் பிரதான ஆசாரியரால் அதிகாரம் பெற்றிருக்கிறானே என்றான்.

௰௫ அதற்குக் கர்த்தர் சொன்னது: [6]அவன் என்னுடைய நாமத்தினிமித்தம் இவ்வளவு பாடுபடவேண்டுமென்று அவனுக்குக் காண்பிப்பேன்.

௰௬ [7]ஆதலால் புறத்தேசத்தார்களுக்கும் [8]இராசாக்களுக்கும் இஸ்ரவேல் சனங்களுக்கும் என்னுடைய நாமத்தை அறிவிக்கும்படிக்கு, [9]அவன் எனக்கு விசேஷமாகத் தெரிந்துகொள்ளப்பட்ட ஊழியக்காரனாய் இருக்கிறான், ஆகையால் நீ போ என்றார்.

௰௭ ¶ [10]அப்பொழுது அனனீயா போய், வீட்டிற்குள் பிரவேசித்து, [11]கைகளை அவன்மேல் வைத்து, சகோதரனாகிய சவுலே, நீ வந்த வழியிலே உனக்குத் தரிசனையான இயேசுவென்னும் கர்த்தரானவர் நீ பார்வை அடைந்து [12]பரிசுத்தஆவியினாலே நிரப்பப்படும்படிக்கு என்னை அனுப்பினார் என்றான்.

௰௮ உடனே அவனுடைய கண்களிலிருந்து மீன் சிலாம்புகளைப் போலவிழுந்துபோக, அவன் பார்வை அடைந்து, எழுந்திருந்து, ஞானஸ்நானம் பெற்று,

௰௯ பின்பு போசனம்பண்ணித் திடப்பட்டான்; [13]பின்பு சவுல் என்பவன் தமஸ்கு ஊரிலுள்ள சீஷருடனே சிலநாள் இருந்தான்.

௨௰ ¶ அல்லாமலும் [14]இயேசுவானவரே பராபரனுடைய குமாரனென்று அவன் உடனே செபஆலயங்களில் பிரசங்கித்தான்.

௨௰௧ (அதைக்) கேட்ட யாவரும் பிரமிப்படைந்து, [15]எருசலேமில் இந்த நாமத்தைத் தொழுதுகொள்ளுகிறவர்களைப் பாழாக்கி, இங்கேயும் அப்படிப்பட்டவர்களைக் கட்டி, பிரதான ஆசாரியனிடத்

இ. பி. கூடு.

1 தானி. ௰. ௭. அப். ௨௨. ௯: ௨௬. ௰௩.
2 அப். ௨௨. ௰௨.
3 அப். ௨௧. ௩௯: ௨௨. ௩.
4 ௮. ௩.
5 ௨௧. ௰௪. அப். ௭. ௫௯: ௨௨. ௰௬. ௧ கொரி. ௧. ௨. ௨ தீமோ. ௨. ௨௨.
6 அப். ௨௦. ௨௩: ௨௧. ௰௧. ௨ கொரி. ௰௧. ௨௩.
7 உரோ. ௧. ௫: ௰௧. ௰௩. கலா. ௨. ௭, ௮.
8 அப். ௨௫. ௨௨, ௨௩: ௨௬. ௧, ௩௨.
9 அப். ௰௩. ௨: ௨௨. ௨௧: ௨௬. ௰௭. உரோ. ௧. ௧. ௧ கொரி. ௰௫. ௰. கலா. ௧. ௰௫. எபே. ௩. ௭, ௮. ௧ தீமோ. ௨. ௭. ௨ தீமோ. ௧. ௰௧.
10 அப். ௨௨. ௰௨, ௰௩.
11 அப். ௮. ௰௭.
12 அப். ௨. ௪: ௪. ௩௧: ௮. ௰௭: ௰௩. ௯.
13 அப். ௨௬. ௨௦.
14 அப். ௮. ௩௭.
15 அப். ௮. ௩. கலா. ௧. ௰௩, ௨௩.

Digitized by Google

திற்குக் கொண்டுபோகும்படி வந்தவன் இவனல்லவா என்றார்கள்.

௨௨ சவுல் என்பவன் அதிகம் அதிகமாகத் திடன்கொண்டு, இவரே கிறிஸ்து என்று திருஷ்டாந்தப்படுத்தி, தமஸ்கு ஊரில் குடியிருக்கிற [1]யூதர்களைக் கலங்கப்பண்ணினான்.

௨௩ ¶ அநேகநாள் சென்றபின்பு [2]யூதர்கள் அவனைக் கொலைசெய்ய ஆலோசனைபண்ணினார்கள்; [3]அவர்களுடைய யோசனை சவுலுக்குத் தெரியவந்தது.

௨௪ அவனைக் கொலைசெய்யும்படிக்கு அவர்கள் இரவும்பகலும் கோட்டை வாசல்களைக் காத்துக்கொண்டிருந்தார்கள்.

௨௫ அப்பொழுது சீஷர் இராத்திரியிலே அவனை எடுத்துக்கொண்டு, [4]ஒரு கூடையில் வைத்து, மதிலின் வழியாய் இறக்கிவிட்டார்கள்.

௨௬ ¶ [5]பின்பு சவுல் எருசலேமுக்குப் போய், சீஷரைச் சேர்த்துக்கொள்ளப்பார்த்தான்; அவர்கள் எல்லாரும் அவனைச் சீஷனென்று நம்பாமல் அவனுக்குப் பயப்பட்டார்கள்.

௨௭ அப்பொழுது [6]பர்னபா என்பவன் அவனைச் சேர்த்துக்கொண்டு, அப்போஸ்தலரிடத்தில் அழைத்துக்கொண்டுபோய், வழியிலே அவன் கர்த்தாவைக் கண்டவிதத்தையும், அவர் அவனுடனே பேசினதையும், தமஸ்கு ஊரில் [7]அவன் இயேசுவின் நாமத்தினாலே தயிரியமாய்ப் பிரசங்கம்பண்ணினதையும் அவர்களுக்கு விவரித்துச் சொன்னான்.

௨௮ [8]அதின்பின்பு அவன் எருசலேமிலே அவர்களுடனேகூடப் போகிறவனுமாய் வருகிறவனுமாய் இருந்து,

௨௯ கர்த்தராகிய இயேசுவின் நாமத்தின்மேலே தயிரியமாய்ப் பிரசங்கம்பண்ணி, [9]கிரேக்கருடனேயும் பேசிக்கொண்டு தருக்கம்பண்ணினான்; [10]அவர்கள் அவனைக் கொலைசெய்யத் தேடினார்கள்.

௩௰ சகோதரர் அதை அறிந்து, அவனைச் செசரியா பட்டணத்திற்கு அழைத்துப்போய், பின்பு தருசு ஊருக்கு அனுப்பினார்கள்.

௩௧ [11]அப்படியிருக்குங்காலத்தில் யூதேயா, கலிலேயா, சமாரியாநாடுகள் எங்கும் சபைகள் சமாதானம் பெற்றிருந்து, கர்த்தருக்குப் பயப்படுகிற பயத்திலேயும், பரிசுத்த ஆவியின் போதிப்பிலேயும், வளர்க்கப்பட்டு நடந்து பெருகின.

௩௨ ¶ பேதுரு என்பவன் [12]அவர்கள் எல்லாருக்குள்ளும் சென்று வருகையில், லித்தா ஊரிலே குடியிருக்கிற பரிசுத்தவான்களிடத்திற்கும் போனான்.

௩௩ அங்கே எட்டுவருஷமாகக் கட்டிலின்மேல் கிடந்த திமிர்வாதமுள்ள ஐனேயா என்பவனைக் கண்டான்; அவனுடனே பேதுரு சொன்னது:

௩௪ ஐனேயாவே, [13]இயேசுக்கிறிஸ்து உன்னைக் குணமாக்குகிறார்; நீ எழுந்து உன் படுக்கையை நீதானே போட்டுக்கொள் என்றான்; உடனே அவன் எழுந்திருந்தான்.

௩௫ லித்தா ஊரிலும் சாரோன் திசையிலும் குடியிருந்தவர்கள் எல்லாரும் [14]அவனைக் கண்டு, [15]கர்த்தரிடத்திற்கு மனந்திரும்பினார்கள்.

௩௬ ¶ அன்றியும் யோப்பாபட்டணத்திலே தொற்காள் என்று *அருத்தங்கொள்ளுகிற தபீத்தாள் என்னப்பட்ட ஒரு சீஷி இருந்தாள்; [16]அவள் நற்கிரியைகளையும் தருமங்களையும் நிறைவாய்ச் செய்துகொண்டுவந்தவள்.

௩௭ அக்காலத்திலே அவள் வியாதிப்பட்டு மரணமடைந்தாள்; [17]அவளை அவர்கள் குளிப்பாட்டி, மேல்வீட்டில் கிடத்திவைத்தார்கள்.

கி. பி. ௩௮.

1 அப். ௰௮.௨௮.
2 அப். ௨௩. ௰௨: ௨௫. ௩. ௨ கொரி. ௰௧. ௨௬.
3 ௨ கொரி. ௰௧. ௩௨.
4 யோசு. ௨.௰௫. ௧சாமு.௰௯.௰௨.
5 அப். ௨௨.௰௭. கலா.௧.௰௭,௰௮.
6 அப். ௪. ௩௬: ௰௩. ௨.
7 ௨௰, ௨௨. ௨௭.
8 கலா. ௧. ௰௮.
9 அப். ௬.௧: ௰௧. ௨௰.
10 ௨௩. வசனம். ௨ கொரி. ௰௧. ௨௬.
11 அப். ௮. ௧.
12 அப். ௮. ௰௪.
13 அப் ௩.௬,௰௬: ௪. ௰.
14 ௧ நாளா. ௫. ௰௬.
15 அப். ௰௧. ௨௧.
* அதின் அருத்தம், பெண்மான்.
16 ௧தீமோ. ௨. ௰. தீத். ௩. ௮.
17 அப். ௧. ௰௩.

Digitized by Google

௩௮ யோப்பா பட்டணம் லித்தா ஊருக்குச் சமீபமானபடியினாலே, பேதுரு அவ்விடத்தில் இருக்கிறான் என்று சீஷர்கள் கேள்விப்பட்டு, அவன் தாமதமில்லாமல்* தங்களிடத்திற்கு வரவேண்டுமென்று வேண்டிக்கொள்ளும்படிக்கு இரண்டு மனிதரை அவ்விடத்திற்கு அனுப்பினார்கள்.

* அல்லது விசனமில்லாமல்.

௩௯ ¶ அந்தப்படி பேதுரு எழுந்து அவர்களுடனேகூடப் போனான்; அவன் போய்ச் சேர்ந்தபொழுது, அவர்கள் அவனை மேல்வீட்டுக்கு அழைத்துக்கொண்டு போனார்கள்; அப்பொழுது சகல கைம்பெண்களும் அவன் அருகே சேர்ந்து நின்று அழுதுகொண்டு, தொற்காள் தங்களுடனேகூட இருக்கையில் செய்த அங்கிகளையும் வஸ்திரங்களையும் காண்பித்தார்கள்.

௪௰ [1]பேதுரு எல்லாரையும் வெளியே போகப்பண்ணி, பின்பு [2]முழங்கால்படியிட்டுச் செபம்பண்ணி, பின்பு சவத்தின்புறமாய்த் திரும்பி, [3]தபீத்தாளே, எழுந்திரு என்றான்; அப்பொழுது அவள் தன் கண்களைத் திறந்து பேதுருவைப் பார்த்து உளுக்காந்தாள்.

௪௧ அவன் அவளுக்குக் கை கொடுத்து அவளை எழுந்திருக்கப்பண்ணி, பரிசுத்தவான்களையும் கைம்பெண்களையும் அழைத்து, அவளை உயிருள்ளவளாக அவர்களுக்குமுன் நிறுத்தினான்.

௪௨ அது யோப்பாபட்டணம் எங்கும் அறியப்பட்டபொழுது, [4]அநேகம்பேர் கர்த்தாவினிடத்தில் விசுவாசமுள்ளவர்களானார்கள்.

௪௩ அவன் யோப்பாபட்டணத்திலே [5]தோல் பதனிடுகிறவனாகிய சீமோன் என்பவனிடத்திலே அநேகநாள் தங்கினான்.

## ௰. அதிகாரம்.

௧. தேவபத்தனாகிய கொருநேலியு என்பவன், ௩. ஒரு தேவதூதனுடைய ஏவலினால் பேதுருவை அழைப்பித்தது. ௰௧. பேதுரு ஒரு தரிசனையில், ௰௫. ௨௰. அர்ச்சிப்பில்லை அசட்டைசெய்யாமல் போ என்று கற்பிக்கப்பட்டது. ௩௪. அவன் கொருநேலியுவுக்கும், அவனை அடுத்தவர்களுக்கும் கிறிஸ்துவைப் பிரசங்கித்தபோது, ௪௪. பரிசுத்தஆவி அவர்கள்மேல் இறங்க, ௪௮. அவர்கள் ஞானஸ்நானம் பெற்றது.

அன்றியும் சேசாரியா பட்டணத்திலே இத்தாலியா தண்டென்னப்பட்ட தண்டிலே நூறு போர்ச்சேவகருக்குத் தலைவனாகிய கொருநேலியு என்பவன் இருக்கிறான்.

௨ அவன் [6]தன் குடும்பத்தார் யாவரோடுங்கூடத் தேவபத்தியுள்ளவனுமாய்ப் [7]பராபரனுக்குப் பயப்படுகிறவனுமாய் இருந்து, சனங்களுக்கு மிகுந்த தருமங்களைச் செய்து, எப்பொழுதும் பராபரனை நோக்கிச் செபம்பண்ணிக்கொண்டுவந்தான்.

௩ [8]பகலிலே ஏறக்குறைய ஒன்பதாம்மணி நேரத்தில் அவன் தரிசனை அடைந்து, தன்னிடத்தில் பராபரனுடைய தூதன் பிரவேசிக்கவும் கொருநேலியுவே என்று சொல்லவும் பிரத்தியட்சமாகக் கண்டு,

௪ அவனை உற்றுப்பார்த்துப் பயமுள்ளவனாகி, ஆண்டவரே, என்ன என்றான்; அப்பொழுது அவன் சொன்னதாவது: உன் செபங்களையும் உன் தருமங்களையும் பராபரன் திருவுளத்திலே எண்ணியிருக்கிறார்.

௫ ஆதலால் யோப்பாபட்டணத்திலே கடலின் அருகான வீட்டிலே வாசம்பண்ணி, தோல்பதனிடுகிறவனாய் இருக்கிற [9]சீமோன் என்பவனிடத்திலே பேதுரு என்று மறுபேர்கொண்ட சீமோன் தங்கியிருக்கிறான்.

௬ அவனை அழைத்துவரும்படிக்கு நீ மனிதரை அவ்விடத்திற்கு அனுப்புவாயாக; [10]நீ செய்யவேண்டுவதை அவன் உனக்குச் சொல்லுவான் என்றான்.

௭ கொருநேலியுவுடனே பேசின தேவதூதன் போனபின்பு அ

கி. பி. ௪௧.



1 மத். ௯. ௨௫.
2 அப். ௭. ௬௰.
3 மாற். ௫. ௪௧, ௪௨. யோவா. ௰௧. ௪௩.
4 யோவா. ௰௧. ௪௫: ௰௨. ௰௧.
5 அப். ௰. ௬.
6 ௨௨. ௪௪. அப். ௮. ௨: ௨௨. ௰௨.
7 ௩௫. ௪௪.
8 ௩௰. ௪௪. அப். ௰௧. ௰௩.
9 அப். ௯. ௪௩.
10 அப். ௰௧. ௰௪.

Digitized by Google

வன் தன் வீட்டுமனிதரில் இரண்டு பேரையும், தன்னிடத்தில் காத்திருக்கிற போர்ச்சேவகரில் தேவபத்தியுள்ள ஒருவனையும் அழைத்து,

௮ எல்லாவற்றையும் அவர்களுக்கு விவரித்துச் சொல்லி, அவர்களை யோப்பாபட்டணத்திற்கு அனுப்பினான்.

௯ ¶ மறுநாளிலே அவர்கள் பிரயாணமாய் அந்தப் பட்டணத்திற்குச் சமீபமாய்ச் சேருகையில், [1]பேதுரு ஆறும்மணி நேரத்திலே செபம்பண்ணும்படிக்கு வீட்டின்மேல் ஏறினான்.

௰ அப்பொழுது அவன் மிகுந்த பசி அடைந்து, சாப்பிட மனதாய் இருந்தான்; அதற்காக அவர்கள் எத்தனம்பண்ணுகையில்,

௰௧ அவன் ஞானதிருஷ்டி அடைந்து, (அதிலே) [2]வானம் திறந்திருக்கவும், நான்கு தொங்கல் கட்டப்பட்ட பெரிய துப்பட்டியைப்போல ஒரு கூடு தன்னிடத்திற்கு இறங்கி, தரையில் விடப்பட்டிருக்கவும்,

௰௨ அதிலே பூமியிலுள்ள சகல விதமான நாலுகால் சீவன்களும், காட்டுமிருகங்களும், ஊர்வனவைகளும், ஆகாயத்துப் பறவைகளும் இருக்கவும் கண்டான்.

௰௩ அல்லாமலும் பேதுருவே, எழுந்திரு அடித்துப் புசிப்பாயாக என்று ஒரு சத்தம் அவனுக்கு உண்டாயிற்று.

௰௪ அதற்குப் பேதுரு, ஆண்டவரே, அப்படி அல்ல, [3]ஏலாததாயும் அசுத்தமாயும் இருக்கிறதை நான் ஒருக்காலும் புசிக்கவில்லையே என்றான்.

௰௫ அப்பொழுது, பராபரன் சுத்தமாக்கினவைகளை [4]நீ அசுத்தமென்று எண்ணாதிருப்பாயாக என்று இரண்டாந்தரம் சத்தம் அவனுக்கு உண்டாயிற்று.

௰௬ மூன்றாந்தரம் அப்படியே உண்டாயிற்று; பின்பு அந்தக்கூடு திரும்பி வானத்திற்கு எடுத்துக்கொள்ளப்பட்டது.

௰௭ ¶ அப்பொழுது பேதுரு தான் கண்ட தரிசனையின் கருத்தைக்குறித்துத் தனக்குள்ளே சந்தேகப்படுகையில், கொர்நேலியுவினால் அனுப்பப்பட்ட மனிதர் சீமோனுடைய வீட்டை விசாரித்துக்கொண்டு வாசற்படியிலே நின்று,

௰௮ பேதுரு என்று பேர்கொண்ட சீமோன் இங்கே தங்கியிருக்கிறானா என்று சத்தமிட்டுக் கேட்டார்கள்.

௰௯ ¶ அப்பொழுது பேதுரு அந்தத் தரிசனையைக்குறித்துச் சிந்தனைபண்ணிக்கொண்டிருக்கையில்,

௨௰ [5]மூன்று மனிதர் உன்னைத் தேடுகிறார்கள்; அவர்களை நான் அனுப்பினேன். ஆதலால் [6]நீ எழுந்து, தாழ இறங்கி, ஒன்றுக்கும் சந்தேகப்படாமல், அவர்களுடனேகூடப் போ என்று ஆவியானவர் அவனுக்குச் சொன்னார்.

௨௧ அந்தப்படி பேதுரு கொர்நேலியுவினாலே தன்னிடத்திற்கு அனுப்பப்பட்ட மனிதனிடத்திற்கு இறங்கிப்போய், நீங்கள் தேடுகிறவன் நான்தான் நீங்கள் வந்திருக்கிற காரணம் என்ன என்றான்.

௨௨ அவர்கள் சொன்னதாவது: [7]நீதிமானுமாய், பராபரனுக்குப் பயப்படுகிறவனுமாய், [8]எல்லா யூதர்களுக்குள்ளும் நல்லவன் என்று சாட்சிபெற்றிருக்கிறவனுமாய் இருக்கிற கொர்நேலியு என்னும் சேனைத்தலைவன் உம்மைத் தன் வீட்டிற்கு அழைப்பித்து, உம்மால் வார்த்தைகளைக் கேட்கும்படிக்குப் பரிசுத்த தூதனாலே தேவ எத்தனமாய்க் கட்டளை பெற்றுக் கொண்டான் என்றார்கள்.

௨௩ அப்பொழுது பேதுரு அவர்களை உள்ளே அழைத்து உபசாரம்பண்ணினான்; மேலும் மறுநாளிலே அவன் அவர்களுடனேகூ

கி. பி. ௪௧.

1 அப். ௰௧. ௫.
2 அப். ௭. ௫௬. வெளி. ௰௯. ௰௧.
3 ௩ மோ. ௰௧. ௪: ௨௰. ௨௩. ௫ மோ. ௰௪. ௩, ௭. எசே. ௪. ௰௪.
4 மத். ௰௫. ௰௧. ௨௮. வசனம். ரோமர். ௰௪. ௰௪, ௰௭, ௨௰. ௧ கொரி. ௰. ௨௫. ௧ தீமோ. ௪. ௪. தீத். ௧. ௰௫.
5 அப். ௰௧. ௰௨.
6 அப். ௰௫. ௭.
7 ௧, ௨, [illegible]. வச.
8 அப். ௨௨. ௰௨.

டப் புறப்பட்டான்; [1]யோப்பா பட்டணத்திலிருந்த சகோதரரில் சிலரும் அவனுடனேகூடப்போனார்கள்.

௨௪ மறுநாளிலே செசாரியா பட்டணத்தைச் சேர்ந்தார்கள்; கொருநேலியு தன் உறவின்முறையாரையும் தனக்கு விசேஷமான சிநேகிதரையும் வரவழைத்துக்கொண்டு, பேதுருமுதலானவர்கள் வரக் காத்திருந்தான்.

௨௫ பேதுரு உட்பிரவேசிக்கையில், கொருநேலியு அவனுக்கு எதிர்கொண்டுபோய், அவனுடைய பாதத்தின் அருகே விழுந்து தொழுதுகொண்டான்.

௨௬ பேதுரு அவனைத் தூக்கி எடுத்து, [2]எழுந்திரும், நானும் மனிதன்தானே என்று சொல்லி,

௨௭ அவனுடனே சம்பாஷணை பண்ணிப் பின்பு உள்ளே போய், அநேகர் கூடிவந்திருக்கிறதைக் கண்டு, அவர்களுடனே சொன்னதாவது:

௨௮ ¶ நீங்கள் அறிந்திருக்கிறபடி, [3]யூதனானவன் அந்நியதேசத்தானோடே கலந்து, அவனிடத்திற்குப் போகத்தகாததாய் இருக்கின்றது; அப்படியிருந்தும் [4]எந்த மனிதனையும் ஏலாதவனென்றும் அசுத்தனென்றும் நான் சொல்லாதபடிக்கு, பராபரன் எனக்குக் காண்பித்தார்.

௨௯ ஆதலால் நீங்கள் என்னை அழைப்பித்தபொழுது,நான் எதிர்பேசாமல் வந்தேன்; இப்படியிருக்க, எந்தக் காரியத்திற்காக நீங்கள் என்னை அழைப்பித்தீர்கள் என்று கேட்கிறேன் என்றான்.

௩௰ அதற்குக் கொருநேலியு சொன்னதாவது: நாலாம் நாள் இக்நேரத்திலே நான் உபவாசித்து, ஒன்பதாம்மணி நேரத்திலே என் வீட்டில் செபம்பண்ணிக்கொண்டிருந்தேன்; அப்பொழுது [5]பிரகாசமுள்ள உடையைத் தரித்திருந்த [6]ஒருவன் எனக்குமுன்பாகநின்று,

௩௧ கொருநேலியுவே, [7]பராபரன் உன் செபத்தைக் கேட்டருளி [8]உன் தருமங்களை நினைத்திருக்கிறார்.

௩௨ ஆதலால் யோப்பாபட்டணத்திலே கடலின் அருகே தோல்பதனிடுகிறவனாகிய சீமோனுடைய வீட்டிலே தங்கியிருக்கிற பேதுரு என்று மறுபேர்கொண்ட சீமோனை வரவழைக்கும்படிக்கு, அவ்விடத்திற்கு மனிதனை அனுப்பு, அவன் வந்து உனக்குச் சொல்லுவான் என்றார்.

௩௩ அந்தப்படி நான் உடனே உம்மிடத்தில் மனிதனை அனுப்பினேன்; நீர் வந்தது நலமாய் இருக்கின்றது, இப்பொழுது பராபரனாலே உமக்குக் கட்டளையிடப்பட்ட யாவையும் கேட்கும்படிக்கு, நாங்கள் எல்லாரும் இங்கே பராபரனுக்குமுன்பாக இருக்கிறோம் என்றான்.

௩௪ ¶ அப்பொழுது பேதுரு சொன்னதாவது:

௩௫ [9]பராபரன் பட்சபாதமில்லாமல் எவ்வகையான மனிதர்களிலும், [10]தமக்குப் பயந்து நீதியை நடப்பிக்கிறவன் எவனோ, அவனை அங்கிகரித்துக்கொள்ளுகிறார் என்று மெய்யாய் உணர்ந்துகொள்ளுகிறேன்.

௩௬ [11]எல்லாருக்கும் கர்த்தராயிருக்கிற இயேசுக்கிறிஸ்துவைக்கொண்டு [12]சமாதானத்தைச் சுவிசேஷமாய் அறிவித்து, இஸ்ரவேலருக்கு அனுப்பின சங்கதியைக் குறித்துக் (கேட்பீர்களாக).

௩௭ யோவான் ஞானஸ்நானத்தைப் பிரசங்கம்பண்ணினபின்பு, [13]கலிலேயா நாடு முதற்கொண்டு யூதேயாநாட்டில் எங்கும் நடந்த காரியத்தை அறிந்திருக்கிறீர்கள்.

௩௮ அதாவது: [14]நாசரேத்தூரிலே தோன்றிய இயேசுவானவருக்குப் பராபரன் பரிசுத்தஆவியையும் வல்லமையையும் அபிஷேகம் பண்ணினார்; (அந்தப்படி) [15]பரா

கி. பி. ௩௩.

1 சங். வச. அப். ௰௧. ௰௨.
2 அப். ௰௪. ௰௪, ௰௫. வெளி.௰௯. ௰: ௨௨, ௯.
3 யோவா. ௪. ௯: ௰௮. ௨௮. அப். ௰௧. ௩. கலா.௨. ௰௨, ௰௪.
4 அப்.௰௫. ௮,௯. எபே. ௩. ௬.
5 மத். ௨௮. ௩. மாற். ௰௬. ௫. லூக்.௨௪.௪.
6 அப். ௧. ௰.
7 ௪. வச. தானி. ௰. ௰௨.
8 எபி. ௬. ௰.
9 உபா. ௰. ௰௭. உபாகம.௰௬.௭. யோபு. ௩௪.௰௯. ரோ. ௨. ௰௧. கலா. ௨. ௬. எபே. ௬. ௯. ௧ பேது. ௧. ௰௭.
10 அப். ௰௫. ௯. ரோ. ௨. ௰௩, ௨௭: ௩. ௨௨, ௨௯: ௰. ௰௨, ௰௩. ௧ கொரி ௰௨. ௰௩. கலா. ௩. ௨௮. எபே. ௨. ௰௩, ௰௮: ௩. ௬.
11 மத். ௨௮. ௰௮. ரோ. ௰. ௰௨. ௧ கொரி. ௰௫. ௨௭. எபே. ௧. ௨௰, ௨௨. ௧பே. ௩. ௨௨. வெளி. ௰௭.௰௪:௰௯.௰௬.
12 ஏசா. ௫௭.௰௯. எபே. ௨. ௰௪, ௰௬, ௰௭. கொலோ. ௧. ௨௰.
13 லூக். ௪. ௰௪.
14 லூக். ௪. ௰௮. அப். ௨. ௨௨: ௪. ௨௭. எபி. ௧. ௯.
15 யோவா. ௩. ௨.

பரன் அவருடனேகூட இருந்தபடியால், அவர் நன்மைசெய்கிறவராகவும் பசாசின் வல்லமையில் அகப்பட்ட யாவரையும் குணமாக்குகிறவராகவும் சுற்றித்திரிந்தார்.

௩௮ [1]யூதருடைய நாட்டிலும் எருசலேமிலும் அவர் செய்தவைகள் எல்லாவற்றிற்கும் நாங்கள் சாட்சிகளாயிருக்கிறோம்; [2]அவரை ஒரு மரத்திலே தூக்கிக்கொலைசெய்தார்கள்.

௪௰ [3]மூன்றாம்நாளிலே பராபரன் அவரை எழுப்பி, அவர் மரித்தோரிலிருந்து எழுந்தபின்பு,

௪௧ [4]எல்லாச் சனங்களுக்கும் அல்ல, [5]அவரோடே போசனபானம்பண்ணி, பராபரனால் முன் நியமிக்கப்பட்டிருந்த சாட்சிகளாகிய எங்களுக்கே அவர் பிரசன்னமாகும்படி செய்தார்.

௪௨ மேலும் [6]அவரே உயிரோடிருக்கிறவர்களுக்கும் மரித்தோருக்கும் [7]நியாயத்தீர்ப்புக் கொடுக்கும்படிக்கு, பராபரனாலே ஏற்படுத்தப்பட்டவர் என்று [8]சனங்களுக்குச் சாட்சியாய்ப் பிரசங்கம் பண்ணும்படி எங்களுக்குக் கட்டளையிட்டார்.

௪௩ [9]அவரை விசுவாசிக்கிறவன் எவனோ, அவன் அவருடைய நாமத்தினாலேபாவமன்னிப்பைப் பெற்றுக்கொள்வானென்று [10]தீர்க்கதரிசிகள் எல்லாரும் அவரைக் குறித்துச் சாட்சிகொடுக்கிறார்கள் என்றான்.

௪௪ ¶ இந்த வார்த்தைகளைப் பேதுரு பேசுகையில், வசனத்தைக் கேட்ட யாவர்மேலும் [11]பரிசுத்த ஆவி இறங்கினார்.

௪௬ அவர்கள் (அந்நிய) பாஷைகளைப் பேசி, பராபரனைப் புகழ்ந்தார்கள்.

௪௫ [12]அதைப் பேதுருவுடனேகூட வந்திருந்த விருத்தசேதனமுடைய விசுவாசிகள் எல்லாரும் கேட்டுப் [13]பரிசுத்தஆவியென்னும் நவு அஞ்ஞானிகளுக்கும் கொடுக்கப்பட்டபடியினாலே பிரமித்தார்கள்.

௪௭ மேலும் பேதுரு சொன்னது: [14]நம்மைப்போலப் பரிசுத்த ஆவியைப் பெற்ற இவர்கள் தண்ணீரினால் ஞானஸ்நானம் பெறாதபடிக்கு, யாவனாகிலும் தடைபண்ணலாமா என்று சொல்லி, அவர்களுக்குக் [15]கர்த்தருடைய நாமத்தினாலே ஞானஸ்நானம்கொடுக்கும்படி [16]கட்டளையிட்டான்; அப்பொழுது சிலநாள் அங்கே தங்கும்படி அவனை வேண்டிக்கொண்டார்கள்.

௰. பி. ௪௧.

1 அப். ௨. ௨௨.
2 அப். ௫. ௩௰.
3 அப். ௨. ௨௪.
4 யோவா. ௰௪. ௰௯, ௨௨. அப். ௰௩. ௩௧.
5 லூக். ௨௪. ௩௰, ௪௩. யோவா. ௨௧. ௰௩.
6 உரோ. ௰௪. ௯, ௰. ௨கொரி. ௫. ௰. ௨திமோ. ௪. ௧. ௧பே. ௪. ௫.
7 யோவா. ௫. ௨௨, ௨௭. அப். ௰௭. ௩௧.
8 மத். ௨௮. ௰௯, ௨௰. அப். ௧. ௮.
9 அப். ௰௫. ௯: ௨௬. ௰௮. உரோ. ௰. ௰௧. கலா. ௩. ௨௨.
10 ஏசா. ௫௩. ௰௧. எரே. ௩௧. ௩௪. தானி. ௯. ௨௪. மீகா. ௭. ௰௮. சகரி. ௰௩. ௧. மல்கி. ௪. ௨. அப். ௨௩. ௨௨.
11 அப். ௪. ௩௧: ௮. ௰௫, ௰௭: ௰௯. ௰௬.
12 ௨௩. ௪௪.
13 அப் ௰௧. ௰௮. கலா. ௩. ௰௪.
14 அப். ௰௧. ௰௭: ௰௫. ௮, ௯. உரோ. ௰. ௰௨.
15 அப். ௨. ௩௮: ௮. ௰௬.
16 ௧கொரி. ௧. ௰௭.
17 அப். ௰. ௪௫. கலா. ௨. ௰௨.
18 அப். ௰. ௨௮.
19 கலா. ௨. ௰௨.
20 லூக். ௧. ௩.
21 அப். ௰. ௯-௪௮.

## ௰௧. அதிகாரம்.

௧. பேதுரு அந்நியர்களிடத்தில் போனதின்நிமித்தம் குற்றம்சாற்றப்பட, ௪. அவன் அதற்குச் சொன்ன உத்தரவு. ௰௮. அங்கீகரிக்கப்பட்டது. ௰௯. சுவிசேஷம் பெனிக்கே, சிப்புரு, அந்தியோகியாமுதலிய இடங்களில் பிரசங்கிக்கப்பட்டபோது சபைகளைத் திடப்படுத்தும்படி பர்னபா அனுப்பப்பட்டது ௨௬. அந்தியோகியாவிலே சீஷர்கள் முதல்முதல் கிறிஸ்தவர்களென்று அழைக்கப்பட்டது. ௨௮. யூதேயாவிலுள்ள ஏழைச் சகோதரர்களுக்குப் பஞ்சகாலத்தில் உதவிசெய்தது.

புறத்தேசத்தாரும் பராபரனுடைய வசனத்தை ஏற்றுக்கொண்டார்கள் என்று யூதாவில் இருக்கிற அப்போஸ்தலரும் மற்றச் சகோதரரும் கேள்விப்பட்டார்கள்.

௨ பின்பு பேதுரு எருசலேமுக்குத் திரும்பிப் போனபொழுது, [17]விருத்தசேதனமுடையவர்கள் அவனை நோக்கி,

௩ [18]நீர் விருத்தசேதனம் இல்லாதவர்களிடத்தில் போய், [19]அவர்களோடே புசித்தீர் என்று விசனமாய்ச் சொன்னார்கள்.

௪ [20]அதற்குப் பேதுரு வரிசையாய் அவர்களுடனே விவரமாய்ச் சொன்னதாவது:

௫ ¶ [21]நான் யோப்பா பட்டணத்திலே செபம்பண்ணிக்கொண்டிருந்தபொழுது, ஞானதிருஷ்டியினாலே நாலு தொங்கல் கட்டப்பட்ட பெரிய துப்பட்டியைப் போல, ஒரு கூடுவானத்திலிருந்து என்னிடத்தில் இறங்கிவரக் கண்டேன்.



Digitized by Google

௬ நான் உற்றுப் பார்க்கிறபொழுது அதிலே பூமியிலுள்ள நாலு காலையுடைய சீவன்களையும், காட்டுமிருகங்களையும் ஊர்வனவைகளையும், ஆகாயத்துப் பறவைகளையும் கண்டேன்.

௭ அல்லாமலும், பேதுருவே எழுந்திரு, அடித்துப் புசிப்பாயாக என்று என்னுடனே சொல்லுகிற சத்தத்தைக் கேட்டேன்.

௮ அதற்கு நான், ஆண்டவரே, அப்படியல்ல, எலாததும் அசுத்தமுமாயிருக்கிறது ஒன்றும் ஒருக்காலும் என் வாய்க்குள்ளே போகவில்லையே என்றேன்.

௯ அப்பொழுது, பராபரன் சுத்தமாக்கினவைகளை நீ அசுத்தமென்று எண்ணுதிருப்பாயாக என்று இரண்டாந்தரம் வானத்திலிருந்துசத்தம் எனக்கு உண்டாயிற்று.

௰ இப்படி மூன்றாந்தரமும் உண்டான பின்பு, எல்லாம் மறுபடியும் வானத்திற்கு எடுத்துக்கொள்ளப்பட்டது.

௰௧ உடனே சேசாரியா பட்டணத்திலிருந்து மூன்று மனிதர் என்னிடத்தில் அனுப்பப்பட்டு, நான் இருந்த வீட்டிற்கு முன்னே வந்து நின்றார்கள்.

௰௨ [1]அப்பொழுது நான் ஒன்றுக்கும் சந்தேகப்படாமல், அவர்களுடனேகூடப் போகும்படிக்கு ஆவியானவர் என்னுடனே சொன்னார்; [2]பின்பு சகோதரர்களாகிய இவ்வாறுபேரும் நானும் கூடி அந்த மனிதனுடைய வீட்டிற்குப் போனோம்.

௰௩ அப்பொழுது [3]அவன் தன் வீட்டிலே தேவதூதன் ஒருவன் நிற்கக் கண்டதையும், நீயோப்பா பட்டணத்தில் இருக்கிற பேதுரு என்று மறுபேர்கொண்ட சீமோனை அழைக்கும்படிக்கு மனிதனை அவ்விடத்திற்கு அனுப்பு.

௰௪ நீயும் உன் வீட்டார் அனைவரும் இரட்சிக்கப்படுவதற்கான வார்த்தைகளை அவன் உன்னுடனே சொல்லுவான் என்று அந்தத் தூதன்தனக்குச்சொன்னதையும், எங்களுக்கு அறிவித்தான்.

௰௫ பின்பு நான் பேசத்தொடங்கினபொழுது, [4]பரிசுத்தஆவி ஆதியிலே நம்மிடத்தில் இறங்கினது போல, அவர்களிடத்திலும் இறங்கினார்.

௰௬ [5]அப்பொழுது யோவான் சலத்தினாலே ஞானஸ்நானங்கொடுத்தான், [6]நீங்கள் பரிசுத்தஆவியினாலே ஞானஸ்நானம் பெறுவீர்கள் என்று கர்த்தர் சொன்னவார்த்தையை நினைத்துக்கொண்டேன்.

௰௭ [7]ஆனபடியினாலே கர்த்தராகிய இயேசுக்கிறிஸ்துவை விசுவாசித்துக்கொண்டிருக்கிற நமக்குப் பராபரன் அநுக்கிரகித்தது போல, அந்த ஈவை அவர்களுக்கும் அநுக்கிரகித்திருக்க, [8]பராபரனுக்குத் தடைபண்ணுகிறதற்கு நான் பலவானாயிருந்தேனோ என்றான்.

௰௮ இவைகளை அவர்கள் கேட்டபொழுது, விரோதமாய்ப் பேசாமல், புறத்தேசத்தாரும், சீவனை அடையும்படி, [9]மனந்திரும்புதலைப் பராபரன் அவர்களுக்கு அநுக்கிரகஞ்செய்தார் என்று பராபரனைப் புகழ்ந்தார்கள்.

௰௯ ¶ அன்றியும் [10]ஸ்தேவானின் நிமித்தமாக உண்டான உபத்திரவத்தினால் சிதற அடிக்கப்பட்டவர்கள் சுவிசேஷவசனத்தை யூதர்களுக்கே அன்றி மற்றொருவருக்கும் அறிவியாமல், பெனிக்கேநாடு, சீப்புருதீவு, அந்தியோகியா பட்டணம்மட்டும் திரிந்தார்கள்.

௨௰ அவர்களில் சீப்புருதீவாரும் சிரேனே பட்டணத்தாரும் அந்தியோகியா பட்டணத்தில் வந்தபொழுது, [11]கிரேக்கருடனேயும் பேசிக்கொண்டு, கர்த்தராகிய இயேசுவைச் சுவிசேஷமாய் அறிவித்தார்கள்.

௨௰௧ [12]அவர்களுடனேகூடக் கர்த்தருடைய கை இருந்ததினாலே

கி. பி. ௪௧.

1 யோவா. ௰௬. ௰௩. அப். ௰. ௰௯: ௰௫. ௪.
2 அப். ௰. ௨௰௩.
3 அப். ௰. ௩௰.
4 அப். ௨. ௪.
5 மத். ௩. ௰௧. யோவா. ௧. ௨௰௬, ௩௩. அப். ௧. ௫: ௰௯. ௪.
6 ஏசா. ௪௪. ௩. யோவே. ௨. ௨௮: ௩. ௰௮.
7 அப். ௰௫. ௮, ௯.
8 அப். ௰. ௪௭.
9 உரோ. ௰. ௰௨, ௰௩: ௰௫. ௯, ௰௬.
10 அப். ௮. ௧.
11 அப். ௬. ௧: ௯. ௨௯.
12 லூக். ௧. ௬௬. அப். ௨. ௪௭.

Digitized by Google

திரளான சனங்கள் விசுவாசித்து, [1]கர்த்தரிடத்தில் திரும்பினார்கள்.

௨௨ அவர்களைக்குறித்து எருசலேமிலுள்ள (சபையார்) கேள்விப்பட்டபொழுது அந்தியோகியா பட்டணம்வரைக்கும் போகும்படிக்கு, [2]பருனபாவை அனுப்பினார்கள்.

௨௩ அவன் (அங்கே) போய், பராபரனுடைய [3]கிருபையைக் கண்டபொழுது, சந்தோஷப்பட்டதும் அல்லாமல்,

௨௪ [4]அவன் நல்லவனுமாய், பரிசுத்தஆவியினாலும் விசுவாசத்தினாலும் நிறைந்தவனுமாயிருந்தபடியினாலே, எல்லாரும் மனஊக்கமாய் உறுதியாய்க் கர்த்தரிடத்தில் நிலைத்திருக்கும்படி அவர்களுக்குப் புத்திசொன்னான்; [5]அப்பொழுது அநேகம்பேர் கர்த்தரிடமாய்ச் சேர்க்கப்பட்டார்கள்.

௨௫ ¶ [6]பின்பு பருனபா என்பவன் சவுலைத் தேடும்படிக்குத் தருசுஊருக்குப் புறப்பட்டுப்போய் அவனைக் கண்டு, அந்தியோகியா பட்டணத்திற்கு அழைத்துக் கொண்டுபோனான்.

௨௬ அப்பொழுது அவர்கள் ஒரு வருஷகாலமாய்ச் சபையிலே* கூடியிருந்து, அநேக சனங்களுக்கு உபதேசம்பண்ணினார்கள்; சீஷர்கள் முதலாவது அந்தியோகியா பட்டணத்திலே கிறிஸ்தவர்கள் என்று அழைக்கப்பட்டார்கள்.

௨௭ ¶ அந்நாள்களில் [7]எருசலேமிலேஇருந்து சில தீர்க்கதரிசிகள் அந்தியோகியாபட்டணத்திற்குப் போனார்கள்.

௨௮ அவர்களில் ஒருவனாகிய [8]அகாப்பென்பவன் எழுந்து பூச்சக்கரம் எங்கும் மிகுந்த பஞ்சம் வருமென்று ஆவியினாலே அறிவித்தான்; அந்தப்படியே அது கிலவுதி இராயனுடைய காலத்திலே சம்பவித்தது.

௨௯ அப்பொழுது சீஷரில் அவரவர் தங்கள் தங்கள் திராணியின்படியே யூதேயா நாட்டில் குடியிருக்கிற [9]சகோதரருக்குத் தருமசகாயம்பண்ணி அனுப்பவேண்டும் என்று தீர்மானம்பண்ணினார்கள்.

௩௰ [10]அந்தப்படி அவர்கள் சில பொருள்களைச் சேர்த்துக்கொண்டு, பருனபா சவுல் என்பவர்கள் கையிலே கொடுத்து, மூப்பரிடத்திற்கு அனுப்பினார்கள்.

## ௧௨. அதிகாரம்.

௧. ஏரோதே இராசா கிறிஸ்தவர்களைத் துன்பப்படுத்தி யாக்கோபைக் கொலைசெய்து பேதுருவைக் காவலில் அடைத்தபொழுது, அவன் சபையின் செபத்தின்படி ஒரு தெய்வதூதனால் விடுதலையாக்கப்பட்டது. ௨௰. ஏரோதே பெருமை பாராட்டித் தேவனுக்குரித்த கனத்தைத் தனக்குச் சேரத்தும்படி செய்ததினிமித்தம் ஒரு தெய்வதூதனால் அடிக்கப்பட்டு நிர்ப்பந்தமரணம் அடைந்தது. ௨௪. அவன் மரணமடைந்த பின்பு பராபரனுடைய வசனம் பிரபலமானது.

அக்காலத்திலே ஏரோதே என்னும் இராசா சபையில் சிலரைத் துன்பப்படுத்தும்படிக்குத் தொடங்கினான்.†

௨ [11]யோவானுடைய சகோதரனாகிய யாக்கோபை அவன் கத்தியினாலே கொலைசெய்தான்.

௩ மேலும் அது யூதருக்குப் பிரியமாயிருக்கிறதென்று அவன் கண்டு, பேதுருவையும் பிடிக்கத் தொடர்ந்தான்; [12]அந்நாள்கள் புளிப்பில்லாத அப்பப்பண்டிகை நாள்களாயிருந்தன.

௪ [13]அவனைப் பிடித்தபின்பு பண்டிகை கழித்து அவனைச் சனங்களுக்குமுன்பாகக் கொண்டுபோகவேண்டும் என்று ஏரோதே எண்ணி, அவனைச் சிறைச்சாலையிலே வைத்து, ஒரு வகுப்பிற்கு நான்கு போர்ச்சேவகராக நான்கு வகுப்புகள் அவனைக் காக்கும்படி ஒப்புக்கொடுத்தான்.

௫ அப்படிப் பேதுரு காவலிலே காக்கப்பட்டிருக்கையில், சபையார் அவனைக்குறித்து இடைவிடாமல் பராபரனைநோக்கிச் செபம்பண்ணினார்கள்.‡

௬ ¶ அப்பொழுது ஏரோதே அவனை வெளியே கொண்டுவரும்படி

கி. பி. ௪௪.

1 அப். ௯. ௩௫.
2 அப். ௯. ௨௭.
3 அப். ௧௩. ௪௩: ௧௪. ௨௨.
4 அப். ௬. ௫.
5 உ௪. ௪௭. அப். ௫. ௧௪.
6 அப். ௯. ௩௦.
* அல்லது சபைகூடி.
7 அப். ௨. ௧௭: ௧௩. ௧: ௧௫. ௩௨: ௨௧. ௯. ௧கொரி. ௧௨. ௨௮. எபே. ௪. ௧௧.
8 அப். ௨௧. ௰.
9 உரோ. ௧௫. ௨௬. ௧ கொரி. ௧௬. ௧. ௨ கொரி. ௯. ௧.
10 அப். ௧௨. ௨௫.

† அல்லது கைகளை நீட்டினான்.
11 மத். ௪. ௨௧: ௨௰. ௨௩.

12 ௨ மோ. ௧௨. ௧௫, ௧௭: ௨௩. ௧௫.

13 யோவா. ௨௧. ௧௮.

‡ அல்லது இடைவிடாமல் ஆவலுடன் செபம் பண்ணப்பட்டது. ௨ கொரி. ௧. ௧௧. எபே. ௬. ௧௮. ௧ தெச. ௫. ௧௭.

Digitized by Google

குறித்த நாளுக்குமுன்னான இராத்திரியிலே, பேதுரு இரண்டு சங்கிலிகளினாலே கட்டப்பட்டு இரண்டு சேவகர் நடுவே நித்திரை பண்ணிக்கொண்டிருக்க, காவற்காரரும் கதவுக்கு முன்னிருந்து காவல் அறையைக் காத்துக்கொண்டிருக்க,

௭ [1]சடுதியாய் அறையிலே பிரகாசமுண்டாகத்தக்கதாக, கர்த்தருடைய தூதன் ஒருவன் தோன்றிப் பேதுருவின் விலாவிலே தட்டி, சீக்கிரமாய் எழுந்திரு என்று அவனை எழுப்பினான்; அப்பொழுது சங்கிலிகள் அவனுடைய கைகளைவிட்டு விழுந்தன.

௮ மேலும் தூதன் அவனுடனே சொன்னது: உன் அரையைக் கட்டி, உன் பாதஇரட்சைகளைத் தொடுத்துக்கொள் என்றான்; அவன் அப்படிச் செய்தான்; தூதன் பின்னும் சொன்னது: உன் வஸ்திரத்தைப் போர்த்துக்கொண்டு எனக்குப் பின்சென்றுவா என்றான்.

௯ அந்தப்படி அவன் புறப்பட்டு அவனுக்குப் பின்சென்று, [2]தூதனால் செய்யப்பட்டது மெய் யென்று அறியாமல் [3]இது ஒரு தரிசனை என்று நினைத்தான்.

௰ அவர்கள் முதலாம் காவலையும் இரண்டாம் காவலையும் கடந்து, பின்பு பட்டணத்துக்குப்போகிற இருப்புக்கதவினிடத்தில் சேர்ந்தபொழுது, [4]அவர்களுக்கு அது தானாய்த் திறக்க, அதின் வழியாய் அவர்கள் புறப்பட்டு, ஒரு வீதியிலே நடந்துபோனார்கள்; உடனே தூதன் அவனைவிட்டு நீங்கினான்.

௰௧ பேதுருவுக்குத் தெளிவுவந்தபொழுது, [5]ஏரோதேயின் கைக்கும் யூதருடைய விருப்பங்கள் யாவுக்கும் என்னை விடுதலையாக்கும்படிக்கு, கர்த்தர் தம்முடைய [6]தூதனை அனுப்பினாரென்று நான் இப்பொழுது மெய்யாய் அறிந்திருக்கிறேன் என்றான்.

௰௨ ¶ இப்படி அவன் சிந்தனைகொண்டு, மாற்கு என்று பேர்கொண்ட [7]யோவானுடைய தாயாகிய [8]மரியாள் வீட்டிற்குப் போனான்; [9]அங்கே அநேகர் கூடிச் செபம்பண்ணிக்கொண்டிருந்தார்கள்.

௰௩ பேதுரு வாசல் கதவைத்தட்டினபொழுது, உரோதாள் என்று பேர்கொண்ட ஒரு வேலைக்காரி ஒற்றுக்கேட்க* வந்து,

௰௪ பேதுருவின் சத்தத்தை அறிந்து சந்தோஷத்தினாலே வாசலைத் திறவாமல் உள்ளே ஓடிப்போய், வாசலுக்குமுன்னே பேதுரு நிற்கிறார் என்று அறிவித்தாள்.

௰௫ அவர்கள் நீ பயித்தியமாய்ச் சொல்லுகிறாய் என்றார்கள்; அவள், அப்படி அல்ல, அவரே இருக்கிறார் என்றாள்; அப்பொழுது அவர்கள் சொன்னது: [10]அவன் அவருடைய தூதன் என்றார்கள்.

௰௬ பேதுரு பின்னும் தட்டிக்கொண்டிருந்தபொழுது, அவர்கள் திறந்து, அவனைக் கண்டு பிரமித்தார்கள்.

௰௭ உடனே அவர்கள் பேசாமலிருக்கும்படி அவன் [11]கையினால் சமிக்கை காண்பித்து, கர்த்தர் தன்னைக் காவலிலிருந்து விடுதலையாக்கின வகையை அவர்களுக்கு விவரமாய்க் காட்டி, இவைகளை யாக்கோபுக்கும் மற்றச் சகோதரருக்கும் அறிவியுங்கள் என்று சொல்லிப் புறப்பட்டு வேறொரு இடத்திற்குப் பிரயாணமாய்ப் போனான்.

௰௮ ¶ பொழுது விடிந்தபின்பு பேதுருவைக்குறித்துச் சேவகருக்குள்ளே உண்டான கலக்கம் கொஞ்சம் அல்ல.

௰௯ ஏரோதே அவனைத் தேடிக் காணாமல்போனபொழுது, காவற்காரரைக் கெட்டியாய்ச் சோதித்து அவர்களைக் கொலைசெய்யும்படி கட்டளையிட்டு, பின்பு யூதேயா

கி. பி. ௪௪.
1 அப். ௫. ௧௯.
2 சங். ௱௨௬. ௧.
3 அப். ௧. ௩, ௰௭: ௰௧. ௫.
4 அப். ௰௬. ௨௬.
5 யோபு. ௫. ௰௯. சங். ௩௩. ௰௮, ௰௯: ௩௪. ௨௨: ௪௧. ௨: ௯௭. ௰. ௨ கொரி. ௧. ௰. ௨ பே. ௨. ௯.
6 சங். ௩௪. ௭. தானி. ௩. ௨௮: ௬. ௨௨. எபி. ௧. ௰௪.
7 அப். ௰௫. ௩௭.
8 அப். ௪. ௨௩.
9 ௫. ௰௨.
* அல்லது யாரென்று கேட்க.
10 ௧ மோ. ௪௮. ௰௬. மத். ௰௮. ௰.
11 அப். ௰௩. ௰௬: ௰௯. ௩௩: ௨௧. ௪௰.

Digitized by Google

சுட்டைவிட்டுச் செசாரியா பட்டணத்திற்குப் போய், அங்கே சஞ்சரித்தான்.

௨௦ ¶ அக்காலத்திலே ஏரோதே தீரியருக்கும் சிதோனருக்கும் மிகவும் பகையாயிருந்தான்;* அப்பொழுது அவர்கள் தங்கள் [1]பிழைப்புக்கு வேண்டியவைகளை இராசாவினுடைய தேசத்திலிருந்து வாங்கிக்கொள்வதினாலே அவர்கள் ஒருமனப்பட்டு அவனிடத்திற்குப் போய், இராசாவினுடைய வீட்டு விசாரணைக்காரனாகிய† பிலாஸ்தென்பவனைத் தங்கள் வசமாக்கிக்கொண்டு, சமாதானமாயிருக்கவேண்டும் என்று கேட்டுக்கொண்டார்கள்.

௨௧ அப்பொழுது குறித்த நாளிலே ஏரோதேயானவன் இராசஅங்கியைத்தரித்துக்கொண்டு சிங்காசனத்தின்மேல் உளுக்கார்ந்து, அவர்களுக்குப்பிரசங்கம்பண்ணினான்.

௨௨ அதற்குச் சனங்கள், இது ஒரு மனிதனுடைய சத்தம்அல்ல, தேவனுடைய சத்தமே என்று கூப்பிட்டார்கள்.

௨௩ [2]அவன் பராபரனுக்கே புகழ்ச்சி உண்டாவதாக என்று அறிக்கைபிடாதபடியினாலே, [3]உடனே கர்த்தருடைய தூதன் அவனை அடித்தான்; அவன் புழுக்களாலே தின்னப்பட்டு இறந்தான்.

௨௪ ¶ [4]பராபரனுடைய வசனம் வளர்ந்து பெருகிற்று.

௨௫ பின்பு பருனபாவும் சவுலும் தரும ஊழியத்தை‡ நிறைவேற்றினபொழுது [5]மாற்கு என்ற மறுபேர்கொண்டயோவானைக் [6]கூட்டிக்கொண்டு, எருசலேமை விட்டுத் திரும்பினார்கள்.

## ௧௩. அதிகாரம்.

௧. பவுலும் பருனபாவும் அந்தியோகியாவிலிருந்து பிரசங்கிக்க அனுப்பப்பட்டது. ௭. செர்கியு பவுலையும், எலிமாவென்னப்பட்ட ஸ்தம்பனவித்தைக்காரனையுங்குறித்தது. ௧௪. இயேசுவானவர் கிறிஸ்து வென்று பவுல் அந்தியோகியாவிலே பிரசங்கித்தது. ௪௨. அந்நியர்கள் விசாரித்தது. ௪௫. யூதர்கள் பொறாமைகொண்டு தூஷணித்ததினால் ௪௬. அவர்கள் அந்நியர்களிடத்திற்குப் போனது ௪௮. நித்தியசீவனுக்குக் குறிக்கப்பட்டவர்கள் விசுவாசித்தது.

[7]அந்தியோகியா பட்டணத்திலுள்ள சபையிலே, [8]பருனபா என்றும், நீகரென்னப்பட்ட சீமேயோன் என்றும், சிரேனே ஊரானாகிய [9]லூகியு என்றும், தேசத்தின் காற்பங்குக்கு அதிபதியாகிய ஏரோதேயுடனேகூட வளர்க்கப்பட்ட§ மனுவேன் என்றும், சவுல் என்றும் பெயர்களையுடைய இவர்கள் தீர்க்கதரிசிகளுமாய்ப் போதகருமாய் இருந்தார்கள்.

௨ அவர்கள் கர்த்தருக்கு ஆராதனை செய்து உபவாசித்துக்கொண்டிருக்கிறபொழுது பரிசுத்தஆவியானவர் சொன்னது: பருனபாவையும் சவுலையும் நான் [10]அழைத்த கிரியைக்காக [11]அவர்களைத் தெரிந்து எடுத்து அனுப்புங்கள் என்றார்.

௩ [12]உடனே அவர்கள் உபவாசித்துச் செபம்பண்ணி, அவர்கள்மேல் கைகளை வைத்து அனுப்பினார்கள்.

௪ ¶ ஆதலால் அவர்கள் பரிசுத்த ஆவியினால் அனுப்பப்பட்டு, சிலேக்கிய பட்டணத்திற்குப் போய், அங்கே கப்பலேறி, [13]சிப்புருதீவில் சேர்ந்தார்கள்.

௫ பின்பு அவர்கள் சாலமிஸ்பட்டணத்திற்குப் போனபொழுது, [14]யூதருடைய செபஆலயங்களில் (அவர்களுக்கு) பராபரனுடைய வசனத்தைஅறிவித்தார்கள்; [15]யோவான் என்பவனும் அவர்களுக்கு உதவிக்காரனாயிருந்தான்.

௬ அவர்கள் அந்தத் தீவெங்கும் கடந்து, பாப்போ பட்டணபரியந்தம் போனபொழுது, பரியேசு என்று பேர்கொண்ட [16]ஸ்தம்பனக்காரனுமாய், கள்ளத்தீர்க்கதரிசியுமாய்,

௭ புத்திசாலிகளாகிய செருகியு பவுல் என்னும் பிரதிதுரையினிடத்தில் தங்கினவனுமாயிருந்த

---

இ. பி. ௪௪.

* அல்லது சண்டைசெய்ய மனதாயிருந்தான்.
1 ௧ இரா. ௫. ௯, ௧௧. எசே. ௨௭. ௧௭.
† பிரேக்கு, ஸ்பவீட்டு விசாரிணை.
2 ௧ சா. ௨௫. ௩.
3 ௧ சாமு. ௨௫. ௩௮. ௨ சாமு. ௨௪. ௧௬.
4 ஏசா. ௫௫. ௧௧. அப். ௬. ௭: ௧௯. ௨௦. கொலோ. ௧. ௬.
‡ அல்லது பணிவிடை. அப். ௧௧. ௨௯, ௩௦.
5 அப். ௧௩. ௫, ௧௩: ௧௫. ௩௭.
6 ௧௫. வசனம்.
7 அப். ௧௧. ௨௭: ௧௪. ௨௬: ௧௫. ௩௫.
8 அப். ௧௧.௨௨-௨௬.
9 உரோ. ௧௬. ௨௧.
§ அல்லது ஏரோதின் வளர்ப்புச் சகோதரனுமிய.
10 மத். ௯. ௩௮. அப். ௧௪. ௨௬. உரோ. ௧. ௧௫. எபே. ௩. ௭, ௮. ௧ தீமோ. ௨. ௭. ௨ தீமோ. ௧. ௧௧. எபி. ௫. ௪.
11 ௪ மோ. அ. ௧௪. அப். ௬. ௫௫: ௨௨. ௨௧. உரோ. ௧. ௧. கலா: ௧. ௧௫: ௨. ௯.
12 அப். ௬. ௬.
13 அப். ௪. ௩௬.
14 ௪௬. வச.
15 அப். ௧௨. ௨௫: ௧௫. ௩௮.
16 அப். ௮. ௯.

Digitized by Google

ஒரு யூதனைக் கண்டார்கள்; அந்தத் துரை பருனபாவையும் சவுலையும் அழைப்பித்து, பராபரனுடைய வசனத்தைக் கேட்க ஆசையாயிருந்தபொழுது,

அ [1]ஸ்தம்பனக்காரனென்று அர்த்தங்கொள்ளுகிற எலிமா என்னப்பட்ட அவன் பிரதிதுரையை விசுவாசத்திலிருந்து விலக்கும்படிதேடி, அவர்களோடு எதிர்த்துப் பேசினான்.

௯ அப்பொழுது பவுலென்றும் சொல்லப்பட்ட சவுல் [2]பரிசுத்த ஆவியினால் நிறைந்தவனாய் அவன் மேல் கண்ணூன்றிச் சொன்னதாவது:

௰ எல்லாவிதமான கபடமும், எல்லாவிதமான பொல்லாங்கும் நிறைந்தவனே, [3]பசாசின் மகனே, சகல நீதிகளுக்கும் பகைஞனே, நீ கர்த்தருடைய செம்மையான மார்க்கங்களைப் புரட்டுகிறதில் ஓயமாட்டாயா?

௰௧ இப்பொழுதே கர்த்தருடைய கை உன்மேல் வருகின்றது; [4]சில காலம் நீ சூரியனைக் காணாமல் குருடனாயிருப்பாய் என்றான்; உடனே மந்தாரமும் இருளும் அவன் மேல் விழுந்தன; அவன் திரிந்து கைலாகு கொடுக்கிறவர்களைத் தேடினான்.

௰௨ இப்படிச் சம்பவித்ததைப் பிரதிதுரை கண்டு, கர்த்தரைக் குறித்துச் சொல்லிய உபதேசத்திற்காக அதிசயப்பட்டு விசுவாசமுள்ளவனானான்.

௰௩ ¶ பின்பு பவுலும் அவனைச் சேர்ந்தவர்களும் பாப்போபட்டணத்தைவிட்டு, பம்பீலியா நாட்டிலுள்ள பெருகே பட்டணத்திற்குப் போனார்கள்; [5]யோவான் அவர்களைவிட்டுப் பிரிந்து எருசலேமுக்குத் திரும்பினான்.

௰௪ ¶ பின்பு அவர்கள் பெருகே பட்டணத்தைவிட்டுப் புறப்பட்டுப் பிசீதிய நாட்டிலுள்ள அந்தியோகியாவுக்குப் போய், [6]ஓய்வு நாளிலே செபஆலயத்திற்குப் போய் உளுக்கார்ந்தார்கள்.

௰௫ (அங்கே) [7]நியாயப்பிரமாணமும் தீர்க்கதரிசன (ஆகமமும்) வாசிக்கப்பட்டுத் தீர்ந்தபின்பு, சகோதரர்களே, [8]நீங்கள் சனங்களுக்குப் புத்திசொல்ல விரும்பினால் சொல்வீர்களாக என்று ஆலயத்தலைவர் அவர்களுக்குச் சொல்லஆள் அனுப்பினார்கள்.

௰௬ ¶ அப்பொழுது [9]பவுல் எழுந்து கையினால் சாடைகாண்பித்துச் சொன்னதாவது: இஸ்ரவேலரே, [10]பராபரனுக்குப் பயந்து நடக்கிற சகல சனங்களே, கேட்பீர்களாக.

௰௭ இந்த இஸ்ரவேல் சந்ததியாருடைய [11]தேவன் நம்முடைய முன்னோர்களைத் தெரிந்துகொண்டு [12]எகிப்துதேசத்திலே சஞ்சரித்துவந்த அவர்களுடைய சந்ததியை மேன்மைப்படுத்தி, [13]பலத்த வல்லமையினாலே அதிலிருந்து அவர்களைப் புறப்படப்பண்ணி,

௰௮ [14]நாற்பது வருஷகாலமாய் வனாந்தரத்திலே அவர்களைப் போஷித்துக்கொண்டு,*

௰௯ [15]கானான்தேசத்திலுள்ள ஏழு வகைச் சனக்கூட்டங்களை நீக்கிவிட்டு, [16]அவர்களுடைய தேசத்தை அவர்களுக்குச் சுதந்தரமாகப் பங்கிட்டு,

உ௰ [17]பின்பு ஏறக்குறைய நானூற்றைம்பது வருஷத்திற்குள்ளே [18]சாமுவேல் தீர்க்கதரிசிவரைக்கும் அவர்களுக்காக நியாயாதிபதிகளை ஏற்படுத்தினார்.

உ௧ சாமுவேலின் காலம்முதல், [19]அவர்கள் ஒருஇராசா வேண்டுமென்று கேட்டுக்கொண்டார்கள்; அதின்படி பராபரன் அவர்களுக்குப் பென்யமீனுடைய கோத்திரத்தானாகிய கீசென்பவனுடைய குமாரனாகிய சவுலைக் கொடுத்தார்; அவன் நாற்பதுவருஷம் இருந்தான்.

உ௨ [20]பின்பு அவர் அவனை விலக்கி, இயேசே என்பவனுடைய கு

கி. பி. சுகு.

1 அப். எ. ௫௧. உ தீமோ. ௩. அ.
2 அப். ௪. அ.
3 மத். ௰௩. ௩அ. யோவா. அ. ௪௪. ௧ யோ. ௩. அ.
4 உ மோ. ௯. ௬. ௧ சாமு. ௫. ௩.
5 அப். ௰௫. ௩அ.
6 அப். ௰௬. ௰௩: ௰எ. உ: ௧அ. ௪.
7 லூக். ௪. ௰௬. உ௰. ௨௪.
8 எபி. ௰௩. உஉ.
9 அப். ௰௨. ௰௭.
10 உ௬, ௪௨, ௪௩. ௨௪. அப். ௰. ௩௫.
11 ௫ மோ. எ. ௬, எ.
12 உ மோ. ௧. ௧. சங். ௧௫. உ௩, உ௪. அப். எ. ௰எ.
13 உ மோ. ௩. ௧: ௰௩. ௰௪, ௰௬.
14 உ மோ. ௰௬. ௩௫. ௪ மோ. ௰௪. ௩௩, ௩௪. சங். ௩௫. ௩, ௰. அப். எ. ௩௬.
* ஒரேகுஞ்சைத் தாய் தன் பிள்ளைகளைக் காப்பாற்றுகிறது போல அவர்களைக் காப்பாற்றி.
௫ மோ. ௧. ௩௧.
15 ௫ மோ. எ. ௧.
16 யோசு. ௰௪. ௧, உ. சங். எஅ. ௫௫.
17 நியா. உ. ௰௬.
18 ௧ சாமு. ௩. உ௰.
19 ௧ சாமு. அ. ௫: ௰. ௧.
20 ௧ சாமு. ௰௫. உ௩, உ௮, உ௯: ௰௬. ௧. ௨சே. ௰௩. ௰௪.

Digitized by Google

மாரனாகிய [1]தாவீதை [2]எனது திருவுள்ளத்திற்கு ஏற்றவன் என்று கண்டேன், அவன் என்னுடைய சித்தத்தின்படி முழுவதும் செய்வான் என்று தாவீதைக்குறித்துச் சாட்சியிட்டு, [3]அவனையே அவர்களுக்கு இராசனாக ஏற்படுத்தினார்.

உங [4]அவனுடைய சந்ததியிலே பராபரன் [5]தமது வாக்குத்தத்தத்தின்படி, இஸ்ரவேலருக்காக [6]இயேசு என்னும் இரட்சகரைத் தோன்றப்பண்ணினார்.

உச [7]அவருடைய பிரவேசத்திற்குமுன்னே யோவான் மனந்திரும்புதற்கேற்ற ஞானஸ்நானத்தை எல்லா இஸ்ரவேலருக்கும் பிரசங்கித்தான்.

உரு ¶ மேலும் யோவான் (பணிவிடை) ஓட்டத்தை நிறைவேற்றுகிறபொழுது (சனங்களுடனே) சொன்னதாவது: [8]நீங்கள் என்னை எவனென்று எண்ணுகிறீர்கள்? நான் அவரல்ல, எனக்குப்பின் ஒருவர் வருகிறார், அவருடைய பாதரட்சையை அவிழ்க்கிறதற்கு நான் பாத்திரனல்ல என்று சொன்னான்.

உசு ஆபிரகாமின் சந்ததியாராகிய சகோதரர்களே, பராபரனுக்குப் பயப்படுகிற மற்றவர்களே, [9]இந்த இரட்சிப்பை அறிவிக்கிற உபதேசம் உங்களுக்கே அனுப்பப்பட்டிருக்கின்றது.

உஎ என்னவெனில், எருசலேமில் குடியிருக்கிறவர்களும் அவர்களுடைய தலைவரும், அவரையாவது [10]ஓய்வுநாள்தோறும் வாசிக்கப்படுகிற [11]தீர்க்கதரிசிகளின் வாக்கியங்களையாவது அறியாமல், [12]அவரை ஆக்கினைக்குள்ளாகத் தீர்த்ததினாலே அவைகளை நிறைவேற்றினார்கள்.

உஅ [13]மரணத்திற்கு ஏதுவான ஒன்றையும் (அவரிடத்தில்) காணாமலிருந்தும், [14]அவர்கள் அவரைக் கொலைசெய்யும்படிக்கு, பிலாத்துவை வேண்டிக்கொண்டார்கள்.

உகூ [15]அவரைக்குறித்து எழுதியிருக்கிற யாவையும் அவர் முடித்தபின்பு, (சிலர்) [16]அவரை மரத்திலிருந்து இறக்கி, கல்லறையிலே வைத்தார்கள்.

ஙய [17]பராபரன் அவரை மரித்தோரிலிருந்து எழுப்பினார்.

ஙக அன்றியும் அவர் தம்முடனே கூடக் [18]கலிலேயாவிலிருந்து எருசலேமுக்குப் போனவர்களுக்கு [19]அநேகநாள் தரிசனையானார்; [20]அவர்களே சனங்களுக்குமுன்பாக அவருடைய சாட்சிகளாய் இருக்கிறார்கள்.

ஙஉ [21]நீர் என்னுடைய குமாரன், இன்று நான் உம்மைச் செனிப்பித்தேன் என்று இரண்டாம் சங்கீதத்திலே எழுதியிருக்கிறபடி,

ஙங இயேசுவை எழுப்பினதினாலே பராபரன் (நம்முடைய) முன்னோர்களுக்கு உண்டான [22]வாக்குத்தத்தத்தை அவர்களுடைய பிள்ளைகளாகிய நமக்கு நிறைவேற்றினார் என்று நாங்களும் உங்களுக்குச் சுவிசேஷமாய் அறிவிக்கிறோம்.

ஙச அவர் மறுபடியும் மரியாதபடிக்கு, அவரை மரித்தோரிலிருந்து எழுப்பச் சித்தமானபடியினாலே [23]தாவீதிற்குச் (செய்த) உறுதியான தயவுகளை* உங்களுக்குக் கட்டளையிடுவேன் என்று திருவுளம்பற்றினார்.

ஙரு அன்றியும் [24]உம்முடைய பரிசுத்தவான் அழிவை அடையும்படி செய்யமாட்டீர் என்று வேறொரு சங்கீதத்திலே சொல்லியிருக்கின்றது.

ஙசு தாவீது தனது காலத்திலே பராபரனுடைய சித்தத்திற்கு ஊழியம்செய்த† பின்பு [25]நித்திரை

கி. பி. சரு.

1 சங். அக. உ௰.
2 க சாமு. ௰க. ௰ச. அப். எ. சக.
3 க சாமு. ௰க. ௰க. உ சாமு. உ. ச: ௫. க.
4 ஏசா. ௰க. க. லூக். க. கஉ, கக. அப். உ. ௩௰. உ ரோ. க. க.
5 உ சாமு. எ. ௰உ. சங். ௱கஉ. ௰க.
6 மத். க. உக. உ ரோ. ௰க. உக.
7 மத். ௩. க. லூக். க. க.
8 மத். க. ௰க. மாற். க. எ. லூக். க. ௰க. யோவா. க. உ௰, உஎ.
9 மத். ௰. க. லூக். உச. சஎ. சக. ௪ச. அப். க. உக.
10 லூக். உக. கச. அப். க. ௰எ. க கொரி. உ. அ.
11 ௰ச, ௰௫. வசனங்கள். அப். ௰௫. உக.
12 லூக். உச. உ௰, சச. அப். உக. உஉ: உஅ. உக.
13 மத். உஎ. உஉ. மாற். ௰௫. ௰க, ௰ச. லூக். உக. உக, உஉ. யோவா. ௰க. க, ௰௫.
14 அப். க. ௰க, ௰ச.
15 லூக். ௰அ. கக: உச. சச. யோவா. ௰க. உஅ, க௰, கக, கஎ.
16 மத். உஎ. ௫க. மாற். ௰௫. சக. லூக். உக. ௫க. யோவா. ௰க. கஅ.
17 மத். உஅ. க. அப். உ, உச: க. ௰க, ௰௫, உக: ௫. க௰.
18 அப். க. ௰க.
19 மத். உஅ. ௰க. அப். க. க. க கொரி. ௰௫. ௫, க, எ.
20 அப். க அ: உ. கஉ: க. ௰௫: ௫. கஉ.

21 சங். உ. எ. எபி. க. ௫: ௫. ௫. —22 க மோ. க. ௰௫: ௰உ. க: உஉ. ௰அ. அப் உக. க. உ ரோ. ச. ௰க. கலா. க. ௰க. —23 ஏசா. ௫௫. க. —* அல்லது பரிசுத்தமானவைகளை, நீதியானவைகளை. —24 சங். ௰க. ௰. அப் உ. உக. —† அல்லது தாவீது தன் காலத்தாருக்குப் பராபரனுடைய சித்தத்தின்படி பணிவிடை செய்து. உஉ. ௮ச. சங். எஅ. எஉ. —25 க இரா. உ. ௰. அப். உ. உக.

Digitized by Google

அடைந்து, தன் பிதாக்களிடத்தில் சேர்க்கப்பட்டு, அழிவை அடைந்தான்.

௩௭ பராபரனாலே எழுப்பப்பட்டவர் அழிவை அடையவில்லை.

௩௮ ¶ ஆதலால் சகோதரர்களே [1]அவர்மூலமாய் உங்களுக்குப் பாவமன்னிப்பு உண்டாகும் என்று அறிவிக்கப்படுகின்றது.

௩௯ அல்லாமலும் மோசேயின் நியாயப்பிரமாணத்தினாலே நீங்கள் விடுதலையாக்கக்கூடாத காரியம் எதுவோ, அதில் நின்று [2]விசுவாசிக்கிற யாவனும் அவராலே விடுதலையாகிறான் என்று அறிந்துகொள்வீர்களாக.

௪௰ [3]அன்றியும் தீர்க்கதரிசிகளுடைய புத்தகத்திலே, அசட்டைக்காரரே பாருங்கள், உங்கள் நாள்களில் ஒரு கிரியை செய்வேன், ஒருவன் அதை உங்களுக்கு விவரித்துச் சொன்னாலும் நீங்கள் விசுவாசியாமல் இருப்பீர்கள், அது அப்படிப்பட்ட கிரியையாகவே இருக்கும்.

௪௧ ஆதலால் பிரமிப்படைந்து அழிந்துபோங்கள் என்று சொல்லியிருக்கிறதின்படி உங்களுக்கு வராதபடிக்கு, சாவதானமாய் இருப்பீர்களாக என்றான்.

௪௨ பின்பு அவர்கள் புறப்படுகையில், மறு ஓய்வுநாளிலே* அந்த வசனங்களைத் தங்களுக்குச் சொல்லவேண்டும் என்று புறத்தேசத்தார்வேண்டிக்கொண்டார்கள்.

௪௩ மேலும் செபஆலய சபை கலைந்துபோனபின்பு யூதர்களிலும், யூதமார்க்கத்தில் பிரவேசித்துத் தேவபத்தியாயிருந்தபேர்களிலும் அநேகர் பவுலுக்கும் பருனபாவுக்கும் பின்சென்றார்கள், அவர்களுடனே அவர்கள் பேசிக்கொண்டு, [4]பராபரனுடைய கிருபையினாலே நிலைகொண்டிருக்கும்படிக்குப் [5]புத்திசொன்னார்கள்.

௪௪ ¶ மறு ஓய்வுநாளிலே கொஞ்சம்குறைய பட்டணத்தார் எல்லாரும் பராபரனுடைய வசனத்தைக் கேட்கும்படிக்குக் கூடிவந்தார்கள்.

௪௫ யூதர்கள் அவ்வளவு சனங்களைக் கண்டபொழுது, [6]பொருமையினாலே நிறையப்பட்டு, பவுல் சொன்னவைகளுக்கு விரோதமாய்ப் பேசினார்கள்; விரோதித்தும் தூஷணித்தும் வந்தார்கள்.

௪௬ அப்பொழுது பவுலும் பருனபாவும் தயிரியங்கொண்டு சொன்னதாவது: [7]முதலாவது உங்களுக்கே பராபரனுடைய வசனத்தைச் சொல்லவேண்டியதாய் இருந்தது; [8]நீங்கள் அதைத் தள்ளி உங்களை நித்தியசீவனுக்கு அபாத்திரர் என்று தீர்த்துக்கொள்ளுகிறபடியினாலே, [9]நாங்கள் புறத்தேசத்தாரிடத்திற்குப் போகிறோம்.

௪௭ நீர் பூமியின் எல்லைபரியந்தமும் இரட்சகராய் இருக்கும்படிக்கு, [10]உம்மைப் புறத்தேசத்தார்களுக்கு ஒளியென்று ஏற்படுத்தினேன் என்கிற வேதவாக்கியத்தின்படி பராபரன் எங்களுக்குக் கட்டளையிட்டருளினபடியினாலே அப்படிச் செய்கிறோம் என்றார்கள்.

௪௮ ¶ புறத்தேசத்தார்கள் அதைக் கேட்டுச் சந்தோஷம் அடைந்து, கர்த்தருடைய வசனத்தைப் புகழ்ந்து, [11]நித்தியசீவனுக்கு நியமிக்கப்பட்டவர்கள் எவர்களோ, அவர்கள் விசுவாசித்தார்கள்.

௪௯ பின்பு கர்த்தருடைய வசனம் அத்தேசமெங்கும் பிரபலமாயிற்று.

௫௰ யூதர்கள் பத்தியும் கனமும் பொருந்திய ஸ்திரிகளையும் பட்டணத்தின் முதலாளிகளையும் எழுப்பி, [12]பவுல் பருனபா என்பவர்களைத் துன்பப்படுத்தும்படி செய்து, தங்கள் எல்லைகளிலிருந்து அவர்களைத் துரத்தினார்கள்.

௫௧ [13]அப்பொழுது அவர்கள் தங்கள் கால்களில் பட்ட தூளை அவர்கள்மேல் சாட்சியாக உதறிப்

கி. பி. ௪௬.

1 எரே. ௩௧. ௩௪. தானி. ௯. ௨௪. லூக். ௨௪. ௪௭. ௧ யோ. ௨. ௰௨.
2 ஏசா. ௫௩. ௰௧. ௨ரோ. ௩. ௨௮: அ. ௩. எபி. எ. ௰௯.
3 ஏசா. ௨௯. ௰௪. ஆப. ௧. ௫.
* கிரேக்கபாஷையில் அடுத்த வாரத்தின் ஓய்வுநாளில்.
4 அப். ௰௧. ௨௩: ௰௪. ௨௨.
5 தீத். ௨. ௰௧. எபி. ௰௨. ௰௫. ௧ பே. ௫. ௰௨.
6 அப். ௰௮. ௬. ௧ பே. ௪. ௪. யூதா. ௰.
7 மத். ௰.௬. அப். ௩. ௨௬. ௨௬. ௨௪. ௨ரோ. ௧. ௰௬.
8 உபா. ௩௨.௰. ௫ உபா. ௩௨. ௨௧. ஏசா. ௫௫. ௫. மத். ௨௧. ௪௩. ௨ரோ. ௰. ௰௯.
9 அப். ௰௮. ௬: ௨௮. ௨௮.
10 ஏசா. ௪௨. ௬: ௪௯.௬. லூக். ௨. ௩௨.
11 அப். ௨. ௪௭.
12 ௨ தீமோ. ௩. ௰௧.
13 மத். ௰. ௰௪. மாற். ௬. ௰௧. லூக். ௯. ௫. அப். ௰௮.௬.

Digitized by Google

போட்டு, இக்கோனியா பட்டணத்திற்குப் போனார்கள்; [1]சீஷரானவர்கள் சந்தோஷத்தினாலும் பரிசுத்தஆவியினாலும் நிறையப்பட்டார்கள்.

## ௰சு. அதிகாரம்.

௧. பவுலும் பருனபாவும் துன்பப்பட்டு இக்கோனியாவை விட்டது. அ. இலீஸ்திராவிலே பவுல் ஒரு சப்பாணியைக் குணமாக்கினதினால் அவர்கள் தேவர்களென்று எண்ணப்பட்டது. ௰௯. பவுல் கல்லெறியப்பட்டது. உ௧. அவர்கள் பற்பல ஊர்களிலிருந்த சபைகளைச் சந்தித்துச் சீஷர்களை விசுவாசத்திலும் பொறுமையிலும் ஸ்திரப்படுத்தி, உ௬. அந்தியோகியாவுக்குத் திரும்பிவந்து பராபரன் அவர்களைக்கொண்டு செய்ததை அறிவித்தது.

இக்கோனியாப்பட்டணத்திலே அவர்கள் இருவரும் யூதருடைய செபஆலயத்திற்குப் போய்ப் பிரசங்கம் பண்ணினபொழுது, யூதரிலும் கிரேக்கரிலும் திரளான சனங்கள் விசுவாசித்தார்கள்.

௨ விசுவாசியாத யூதர்கள் சகோதரருக்கு விரோதமாகப் புறத்தேசத்தாருடைய மனதை எழுப்பி, பகை உண்டாக்கினார்கள்.

௩ அப்படியிருந்தும், அவர்கள் அங்கே நெடுங்காலம் சஞ்சரித்து, கர்த்தரைக்குறித்துத் தயிரியமாய்ப் போதகம்பண்ணினார்கள்; [2]அவர் தமது கிருபையைக் காட்டிய வசனத்திற்குச் சாட்சி உண்டாக அதிசயங்களும் அற்புதங்களும், அவர்கள் கைகளால் செய்யப்படும்படி அநுக்கிரகித்தார்.

௪ அந்தப் பட்டணத்தின் சனங்கள் பிரிந்து, சிலர் யூதரையும் [3]சிலர் அப்போஸ்தலரையும் சேர்ந்தார்கள்.

௫ அப்பொழுது [4]அவர்களை நிந்தித்து அவர்கள்மேல் கல்லெறியும்பொருட்டாக, புறத்தேசத்தாரும் யூதர்களும் அவர்களுடைய தலைவருடனேயுங்கூடக் கலகம்பண்ணுகிறதை அவர்கள் அறிந்து,

௬ [5]இலிக்கவோனியா நாட்டிலுள்ள இலீஸ்திரா ஊருக்கும் தெருபை ஊருக்கும் அவைகளைச் சூழ்ந்த புறத்திற்கும் ஓடிப்போய்,

௭ அங்கே சுவிசேஷத்தை அறிவித்துக்கொண்டு வந்தார்கள்.

௮ ¶ [6]இலீஸ்திரா ஊரிலே ஒருவன் தன் தாயின் வயிற்றிலிருந்து சப்பாணியாய்ப் பிறந்து, ஒருக்காலும் நடவாமல் பெலனில்லாத கால்களோடே உளுக்கார்ந்திருந்து,

௯ பவுல் பேசுகிறதைக் கேட்டான்; அவன்மேல் பவுல் கண்ணூன்றி, [7]இரட்சிக்கப்படும்படிக்கான விசுவாசம் அவனுக்கு உண்டென்று கண்டு,

௰ [8]நீ உன் கால்களை ஊன்றி, செம்மையாய் எழுந்து நில்லென்று மிகுந்த சத்தத்தோடே சொன்னான்; உடனே அவன் குதித்து எழுந்து நடந்தான்.

௰௧ பவுல் செய்ததைச் சனங்கள் கண்டு, [9]தேவர்கள் மனிதரூபம் எடுத்து நம்மிடத்தில் இறங்கியிருக்கிறார்கள் என்று இலிக்கவோனியா பாஷையிலே சத்தமிட்டுக் கூப்பிட்டார்கள்.

௰௨ மேலும் பருனபாவை யூப்பித்தர் தேவனென்றும் பவுல் பிரசங்கத்தை நடத்தினவனானபடியினாலே, அவனை மெருக்கூரி தேவனென்றும் அழைத்தார்கள்.

௰௩ அல்லாமலும், பட்டணத்திற்குப் புறம்பே இருந்த யூப்பித்தருடைய பூசாசாரி எருதுகளையும் பூமாலைகளையும் வாசலின் அருகே கொண்டுபோய்ச் [10]சனங்களோடேகூடப் பலியிட மனதாயிருந்தான்.

௰௪ அப்போஸ்தலராகிய பருனபாவும் பவுலும் அதைக் கேள்விப்பட்டு,(விசனத்தினாலே)[11]தங்கள் வஸ்திரங்களைக் கிழித்துக்கொண்டு,

௰௫ கூட்டத்திற்குள் ஓடி, மனிதர்களே, [12]என்னத்திற்கு இப்படிச் செய்கிறீர்கள்? [13]நாங்களும் உங்களைப்போலப் பாடுள்ள மனிதராயிருந்து,

௰௬ [14]நீங்கள் இந்த வீணை தேவர்களைவிட்டு [15]வானத்தையும்

இ. பி. சசு.

1 மத். ௯. ௰௨. யோவா.௰௬.உ௨. அப். ௨. சகூ.
2 மாற். ௰௬. உ௰. எபி. ௨. ௪.
3 அப். ௰௩. ௩.
4 ௨ தீமோ. ௩. ௰௧.
5 மத். ௰. உ௩.
6 அப். ௩. ௨.
7 மத். அ. ௰: ௯. உ௮, உ௯.
8 ஏசா. ௩௫. ௬.
9 அப். அ. ௰: உ௮. ௬.
10 தானி.௨. சசு.
11 மத். உ௬. ௬௫.
12 அப். ௰. உ௬.
13 யாக். ௫. ௰௭. வெளி. ௰௯. ௰.
14 ௧ சாமு. ௰௨. உ௧. ௧ இரா. ௰௬. ௰௩. எரே. ௰௪. உ௨. ஆமோ. ௨. ௪. ௧ கொரி. அ. ௪.
15 ௧ மோ. ௧. ௧. சங். ௩௩. ௬: ௱௪௬.௬. வெளி. ௰௪. ௭.



Digitized by Google

பூமியையும் சமுத்திரத்தையும், அவைகளிலுள்ள யாவையும் உண்டாக்கின [1]ஜீவனுள்ள தேவனிடத்திற்குத் திரும்பவேண்டும் என்று உங்களுக்குச் சுவிசேஷமாய்ச் சொல்லுகிறோம்; [2]சென்றகாலங்களில் அவர் எல்லாப் புறத்தேசத்தாரையும் தங்கள் தங்கள் வழிகளிலே நடக்கவிட்டிருந்தும்,

௰௭ அவர்களுக்கு [3]நன்மைசெய்துவந்து, வானத்திலிருந்து மழைகளையும் செழிப்புள்ள காலங்களையும் நமக்குக் கொடுத்து, ஆகாரத்தினாலும் சந்தோஷத்தினாலும் நம்முடைய இருதயங்களை நிரப்பி, [4]இவ்விதமாய் அவர் தம்மைக்குறித்துச் சாட்சிகொடாமல் இருக்கவில்லையென்று கூப்பிட்டார்கள்.

௰௮ இப்படி அவர்கள் சொல்லி, தங்களுக்குச் சனங்கள் பலியிடாதபடிக்குப் பிரயாசத்தோடே நிறுத்தினார்கள்.

௰௯ ¶ பின்பு [5]அந்தியோகியா ஊரிலும் இக்கோனி ஊரிலுமிருந்து யூதர்கள் அங்கே போய், சனங்களுக்குப் போதனைசெய்து, [6]பவுலின்மேல் கல்லெறிந்து, அவன் மரித்தான் என்று நினைத்து, அவனைப் பட்டணத்திற்கு வெளியே இழுத்தார்கள்.

௨௰ அங்கே சீஷர்கள் அவனைச் சூழ்ந்துகொள்ளுகையில், அவன் எழுந்து, ஊருக்குள் பிரவேசித்து, மறுநாளிலே பர்னபாவுடனே தெருபை ஊருக்குப் போனான்.

௨௧ ¶ அந்த ஊராருக்குச் சுவிசேஷத்தை அறிவித்து, [7]அநேகரைச் சீஷராக்கின* பின்பு, அவர்கள் இலீஸ்திரா ஊருக்கும் இக்கோனி ஊருக்கும் அந்தியோகியா ஊருக்கும் திரும்பி,

௨௨ சீஷருடைய ஆத்துமாக்களை ஸ்திரப்படுத்தி, [8]விசுவாசத்திலே நிலைத்திருக்கும்படிக்குப் புத்திசொல்லி, [9]நாம் அநேக உபத்திரவங்களின் வழியாய்ப் பராபரனுடைய இராச்சியத்தில் பிரவேசிக்கவேண்டும்என்றும்சொல்லிக்கொண்டார்கள்.

௨௩ அன்றியும் சபைகள்தோறும் அவர்களுக்காக [10]மூப்பரைத் தெரிந்து ஏற்படுத்தி உபவாசித்துச் செபம்பண்ணி, அவர்கள் விசுவாசித்துக்கொண்டிருந்த கர்த்தருக்கு அவர்களை ஒப்புவித்தார்கள்; பின்பு அவர்கள் பிசீதியா நாட்டைக் கடந்துபோய், பம்பீலியா நாட்டிலே சேர்ந்து,

௨௪ பெருகே ஊரிலே சுவிசேஷவசனத்தை அறிவித்து,

௨௫ அத்தாலியா பட்டணத்திற்குச் சென்று, அங்கே கப்பலேறி,

௨௬ தாங்கள் [11]நிறைவேற்றின கிரியைக்காகப் பராபரனுடைய கிருபைக்கு ஒப்புவிக்கப்பட்டுப் [12]புறப்பட்ட அந்தியோகியா பட்டணத்திற்குப் போனார்கள்.

௨௭ ¶ அங்கே சேர்ந்தபொழுது, அவர் சபையைக் கூடிவரப்பண்ணி, [13]தங்களால் பராபரன் செய்தவைகளையும், [14]அவர் புறத்தேசத்தாருக்கு விசுவாசத்தின் கதவைத் திறந்தார் என்பதையும் அறிவித்து, பின்பு அங்கே சீஷருடனேகூட அநேககாலம் சஞ்சரித்துக்கொண்டுவந்தார்கள்.

கி. பி. ௬௪.

1 ௧ தெச. ௧. ௯.
2 சங். அ௧. ௰௨. அப். ௰௭. ௩௰. ௧ பே. ௪. ௩.
3 ௧ மோ. உ௬. ௪. ௫ மோ. ௰௧. ௰௪: ௨அ. ௰௨. யோபு. ௫. ௰. சங். ௬௫. ௰: ௬அ. ௯: ௱௪௭. அ. எரே. ௰௪. ௨௨. மத். ௫. ௪௫.
4 அப். ௰௭. ௨௭: உரோ. ௧. ௨௰.
5 அப். ௰௩. ௪௫.
6 ௨ கொரி. ௰௧. ௨௫. ௨ தீமோ. ௩. ௰௧.
7 மத். ௨அ. ௰௯.
* அல்லது போதித்த.
8 அப். ௰௧. ௨௩: ௰௩. ௪௩.
9 மத். ௰. ௩அ: ௰௬. ௨௪. லூக். ௨௨. ௨அ, ௨௯. உரோ. அ. ௰௭. ௨ தீமோ. ௨. ௰௨, ௰௨: ௩. ௰௨.
10 தீத். ௧. ௫.
11 அப். ௰௩. ௪௰.
12 அப். ௰௩. ௧, ௩.
13 அப். ௰௫. ௪, ௰௨: ௨௧. ௰௯.
14 ௧ கொரி. ௰௬. ௯. ௨ கொரி. ௨. ௰௨. கொலோ. ௪. ௩. வெளி. ௩. அ.

# ௰௫. அதிகாரம்.

௧. சுன்னத்தைக்குறித்துப் பெரியவாக்குவாதம் உண்டானது. ௬. அப்போஸ்தலர் அதைக்குறித்து ஆலோசித்தது. ௨௨. அவர்களுடைய தீர்மானத்தை நிருபங்கள்வழியாய்ச் சபைகளுக்கு அனுப்பினது. ௩௬. பவுலும் பர்னபாவும் ஒருமித்துச் சகோதரரைச் சந்திக்க நினைத்தும் விகற்பப்பட்டுப் பிரிந்துபோனது.

அக்காலத்திலே [15]சிலர் யூதேயாவிலிருந்துபோய், [16]நீங்கள் மோசேயின் முறைமையின்படியே [17]விருத்தசேதனம்பெற்றுக்கொள்ளாவிட்டால் இரட்சிக்கப்படமாட்டீர்கள் என்று சகோதரருக்குப் போதகம்பண்ணினார்கள்.

௨ அதினாலே கலகமும், அவர்களுக்கும் பவுல் பர்னபா என்ப

15 கலா. ௨. ௰௨.
16 ௧ மோ. ௰௭. ௰. ௩ மோ. ௰௨. ௩.
17 யோவா. ௭. ௨௨. ௫. வசன. கலா. ௫. ௨. பிலி. ௩. ௨. கொலோ. ௨. அ, ௰௬.

வர்களுக்கும் மிகுந்த தருக்கமும் உண்டானபொழுது, அந்தத் தருக்ககாரியத்தைக்குறித்துப் [1]பவுலும், பருனபாவும், தங்களில் வேறே சிலரும் எருசலேமிலுள்ள அப்போஸ்தலரிடத்திற்கும் மூப்பரிடத்திற்கும் போகவேண்டும் என்று தீர்மானம் பண்ணினார்கள்.

௩ அந்தப்படி [2]அவர்கள் சபையாராலே வழிவிட்டு அனுப்பப்பட்டபின்பு பெனீக்கே சமாரியா நாடுகளின் வழியாய்ப்போய், [3]புறத்தேசத்தார் மனந்திரும்பினதை அறிவித்து, சகோதரர் எல்லாருக்கும் மிகுந்த சந்தோஷத்தை உண்டாக்கினார்கள்.

௪ எருசலேமிலே அவர்கள் சேர்ந்து, சபையினாலும் அப்போஸ்தலராலும் மூப்பராலும் ஏற்றுக்கொள்ளப்பட்டபின்பு, [4]தங்களால் பராபரன் செய்தவைகளை அறிவித்தார்கள்.

௫ அப்பொழுது பரிசேயராகிய வகுப்பிலே விசுவாசிகளான சிலர் எழுந்து* அவர்கள் [5]விருத்தசேதனத்தைப் பெற்றுக்கொண்டு மோசேயின் பிரமாணத்தைக் கைக்கொள்ளும்படிக்கு உத்தரவு அனுப்பவேண்டும் என்றார்கள்.

௬ ¶ பின்பு அப்போஸ்தலரும் மூப்பரும் அந்தக் காரியத்தை ஆராய்ந்து பார்க்கும்படிக்குக் கூடினார்கள்.

௭ மிகுந்த தருக்கம் உண்டானபொழுது, பேதுரு எழுந்து அவர்களுடனே சொன்னதாவது: [6]சகோதரரே, நீங்கள் அறிந்திருக்கிறபடி, பராபரன் அநேக நாள்களுக்குமுன்னே உங்களில் ஒருவனாகிய என்னுடைய வாயினாலே புறத்தேசத்தார்கள் சுவிசேஷத்தின் வார்த்தையைக் கேட்டு, விசுவாசிகளாகும்படி (என்னைத்) தெரிந்தெடுத்தார்.

௮ மேலும் [7]இருதயங்களை அறிந்திருக்கிற பராபரன் நமக்குக் கொடுத்ததுபோல, அவர்களுக்கும் [8]பரிசுத்தஆவியைக் கொடுத்து,

௯ (இவ்விதமாய்) அவர்களைக் குறித்துச் சாட்சியிட்டு, [9]அவர்கள் இருதயங்களை விசுவாசத்தினாலே சுத்தமாக்கி, அவர் [10]நமக்கும் அவர்களுக்கும் ஒரு வித்தியாசமும் பண்ணவில்லை.

௰ அப்படியிருக்க, நம்முடைய பிதாக்களாலும் [11]நம்மாலும் சுமக்கக்கூடாதிருந்த நுகத்தடியைச் சீஷருடைய கழுத்தின்மேல் பிணைக்கிறதினாலே நீங்கள் பராபரனைச் சோதிக்கிறதென்ன?

௰௧ அப்படி அல்ல, [12]கர்த்தராகிய இயேசுக்கிறிஸ்துவின் கிருபையினாலே அவர்கள் இரட்சிக்கப்படுகிறபிரகாரமாக, நாம் அப்படியே இரட்சிக்கப்படுவோம் என்று நம்பி இருக்கிறோமே என்றான்.

௰௨ ¶ அதன்பின்பு கூடிவந்த யாவரும் அமைந்திருந்து, பருனபாவும் பவுலும் தங்களாலே பராபரன் [13]புறத்தேசத்தார்களுக்குள்ளே செய்த அதிசயங்களையும் அற்புதங்களையும் விவரித்துச்சொல்லக் கேட்டார்கள்.

௰௩ ¶ அவர்கள் பேசி முடித்தபின்பு, [14]யாக்கோபு சொன்னதாவது: சகோதரர்களே, எனக்குச் செவிகொடுப்பீர்களாக.

௰௪ பராபரன் தமது நாமத்திற்காகப் புறத்தேசத்தார்களில் ஒரு சனக்கூட்டத்தை எடுத்துக்கொள்ளும்படிக்கு, முதலாவது அவர்களை நோக்கிப்பார்த்ததைச் [15]சீமோன் சொன்னானே.

௰௫ அதற்குத் தீர்க்கதரிசிகளுடைய வசனங்களும் ஒத்திருக்கின்றன.

௰௬ மற்ற மனிதர்களும், என்னுடைய நாமத்தைப் பெற அழைக்கப்படும் புறத்தேசத்தார் எல்லாரும் பராபரனைத் தேடிக்கொள்ளும்படிக்கு,

௰௭ [16]நான் இதற்குப்பின்பு திரும்பிவந்து, விழுந்த தாவீதின் கூடா

கி. பி. ௫௨.

1 கலா. உ. க.
2 உகொ. யகூ. உச. க கொரி. யக. க, யக.
3 அப். யச. உஎ.
4 யஉ. லச. அப். யச. உஎ: உக. யக.
* அல்லது அவர்கள் சொன்னதென்ன வென்றால் வேண்டுமென்பார்களென்பதே.
5 க. லசனம்.
6 அப். ய. உய: யக. யஉ.
7 கலா. உஅ. கூ. அப். க. உச.
8 அப். ய. சச.
9 அப். ய. யகூ, உஅ, சக. க கொரி. க. உ. க பே. க. உஉ.
10 உகொ. ய. யக.
11 மத். உக. ச. கலா. கூ. க.
12 உகொ. க. உச. எபே. உ. அ, கூ. உ. யக: க. ச, கூ.
13 அப். யச. உஎ.
14 அப். யஉ. யஎ.
15 எ. சச.
16 ஆமோ. கூ. யக, யஉ.

Digitized by Google

ரத்தை மறுபடியும் எழுப்புவேன், அதில்இடிந்துபோன இடங்களைத் திரும்பக்கட்டி, அதைத் திரும்பச் செம்மையாக நிறுத்துவேன் என்று இவைகளையெல்லாம் செய்கிற பராபரன் சொல்லுகிறார் என்று எழுதியிருக்கின்றதே.

௧௮ அநாதிகாலம்முதலாய்ப் பராபரனுடைய கிரியைகள் எல்லாம் அவருக்குத் தெரிந்திருக்கின்றன.

௧௯ [1]ஆகையால் புறத்தேசத்தார்களில் பராபரனிடத்திற்கு [2]மனம் திருப்புகிறவர்களைக் கலக்கப்படுத்தாதபடிக்கு,

௨0 அசுசிப்படுத்துகிற [3]விக்கிரக போசனங்களுக்கும், [4]வேசித்தனத்திற்கும், நெருக்குண்டு செத்தவைகளுக்கும், [5]இரத்தத்திற்கும் விலகும்படியே அவர்களுக்கு எழுதவேண்டும் என்று எண்ணுகிறேன்.

௨௧ பூர்வகாலம் முதற்கொண்டு, [6]செபஆலயங்களில் ஓய்வுநாள் தோறும் மோசேயின ஆகமங்கள் வாசிக்கப்பட்டு வருகிறபடியால், பட்டணந்தோறும் அவைகளைப் பிரசித்தம்பண்ணுகிறவர்களும் உண்டே என்றான்.

௨௨ ¶ அப்பொழுது அப்போஸ்தலரும், மூப்பரும், சபையார் எல்லாரும் தங்களில் சகோதரருக்குள்ளே கனம்பொருந்திய [7]பருசபா என்னப்பட்ட யூதாவையும் சிலாவையும் தெரிந்துகொண்டு, அவர்களைப் பவுலுடனேயும் பருனபாவுடனேயும்கூட அந்தியோகியா பட்டணத்திற்கு அனுப்பவேண்டும் என்று யோசித்து எழுதின நிருபமாவது:

௨௩ அந்தியோகியா பட்டணத்திலும், சீரியா நாட்டின் மற்ற இடங்களிலும், கிலீக்கியா நாட்டிலும் இருக்கிற புறத்தேசத்தார்களிலிருந்து உண்டான சகோதரர்களுக்கு அப்போஸ்தலரும், மூப்பரும், (மற்றச்) சகோதரருமாகிய

நாங்கள் சவுக்கியம் உண்டாகும்படி வாழ்த்துகிறோம்.

௨௪ எங்களால் [8]கட்டளைபெறுத சிலர் எங்களிடத்திலிருந்து புறப்பட்டு, நீங்கள் விருத்தசேதனம் அடையவேண்டும் என்றும், நியாயப்பிரமாணத்தைக் கைக்கொள்ளவேண்டும் என்றும் சொல்லி, இப்படிப்பட்ட வார்த்தைகளினாலே உங்களைக் கலக்கப்படுத்தி, உங்கள் ஆத்துமாக்களைத் தள்ளாடப்பண்ணி இருக்கிறார்கள் என்று நாங்கள் கேள்விப்பட்டபடியினாலே,

௨௫ நாங்கள் தெரிந்துகொண்ட சில மனிதரை நம்முடைய கர்த்தராகிய [9]இயேசுக்கிறிஸ்துவின் நாமத்திற்காகத் தங்கள் பிராணனையும்விட எத்தனமாயிருந்தவர்களுமாய்,

௨௬ எங்களுக்குப் பிரியமான வர்களுமாய் இருக்கிற பருனபாவோடும் பவுலோடும்கூட உங்களிடத்திற்கு அனுப்பவேண்டுமென்று ஒருமனப்பட்டு யோசனை பண்ணிக்கொண்டு,

௨௭ அந்தப்படியே யூதாவையும் சிலாவையும் அனுப்புகிறோம்; அவர்களும் இவைகளை வாக்கினாலே* உங்களுக்கு அறிவிப்பார்கள்.

௨௮ எவையெனில், [10]விக்கிரகங்களுக்குப் படைத்தவைகளுக்கும், [11]இரத்தத்திற்கும், நெருக்குண்டுசெத்ததற்கும்,வேசித்தனத்திற்கும் நீங்கள் விலகியிருக்கவேண்டும்; இதுவே அல்லாமல், வேறு அதிகமான பாரம் ஒன்றும் உங்கள்மேல் போடாமல் இருக்கும்படிக்கு,

௨௯ பரிசுத்தஆவியும் நாங்களும் சித்தமாயிருக்கிறோம்;மேல்சொல்லியவைகளில் நின்று நீங்கள் உங்களைக் காத்துக்கொண்டால் நன்றசெய்வீர்கள், சுகமாயிருப்பீர்களாக என்று எழுதி அவர்கள் கையில் கொடுத்து அனுப்பினார்கள்.

கி. பி. ௫௨.

1 உஅ. ௨௪.
2 ௧ தெச. ௧. ௯.
3 ௧ மோ. ௩௫. ௨. ௨ மோ. ௨௰.௩. ௨௪. ௭சே.௨௰. ௩௰,௧கொரி. அ, ௧. வெளி. உ. ௧௪,௨௰: ௯.௯.௰, ௨அ.
4 ௧ கொரி. ௬. ௯, ௰அ. கலா. ௫. ௧௯. எபே. ௫. ௩. கொலோ. ௩. ௫. ௧ தெச. ௪. ௩. ௧ பே. ௪. ௩.
5 ௧ மோ. ௯. ௪. ௩ மோ. ௩. ௧௭. ௫ மோ. ௧௨. ௧௬, ௨௩.
6 அப். ௧௩. ௰௫, ௨௭.
7 அப். ௧. ௨௩.
8 ௧, ௭. ௧௪. உ. ௪: ௫. ௰௨. தீத். ௧. ௰, ௧௧.
9 அப். ௰௩. ௰௫: ௭௨,௰௩. ௧ கொரி. ௰௫. ௩௰. உ கொரி. ௰௧. ௨௩, ௨௬.

* அல்லது வாய்மொழியாய்.

10 உ௰. ௨௪.அப். ௨௧. ௨௫. வெளி. ௨. ௰௪, ௨௰.
11 ௧மோ.௯.௪.

௩௰ ¶ அவர்கள் அனுப்பிவிடப்பட்டு அந்தியோகியா பட்டணத்திற்குப்போய், சபையைக் கூடிவரச்செய்து, அந்த நிருபத்தைக் கொடுத்தார்கள்.

௩௧ அதை அவர்கள் வாசித்தபின்பு, அதில் அடங்கிய ஆறுதலான* வசனங்களைக்குறித்துச் சந்தோஷப்பட்டார்கள்.

௩௨ பின்பு யூதாவும், சீலாவும், தாங்களும் தீர்க்கதரிசிகளானபடியினாலே, அநேக வசனங்களினாலே சகோதரருக்குப் [1]புத்திசொல்லி, அவர்களை ஸ்திரப்படுத்தி,

௩௩ சிலகாலம் அங்கேயிருந்து, பின்பு சகோதரரால் சமாதானத்துடனே [2]அப்போஸ்தலரிடத்திற்கு அனுப்பிவிடப்பட்டார்கள்.

௩௪ சீலா பின்னும் அங்கேதங்கினால், நலமாயிருக்குமென்று எண்ணியிருந்தான்.

௩௫ [3]அன்றியும் பவுலும் பருனபாவும் அந்தியோகியா ஊரிலே சஞ்சரித்து, வேறு அநேகரோடுங் கூடக் கர்த்தருடைய வசனத்தை உபதேசித்து, சுவிசேஷமாய்ப் பிரசங்கித்துக்கொண்டு வந்தார்கள்.

௩௬ ¶ சில நாளுக்குப்பின்பு, பவுல் பருனபாவை நோக்கி, கர்த்தருடைய வசனத்தை நாம் அறிவித்திருந்த [4]சகல பட்டணங்களிலுமுள்ள சகோதரர் சுகமாய் இருக்கிறார்களோ, இல்லையோ, என்று அதைப் பார்க்கும்படிக்குத் திரும்பிப் பிரயாணமாய்ப் போவோம் வா என்றான்.

௩௭ அப்பொழுது பருனபாவானவன், மாற்கு என்று அழைக்கப்பட்ட [5]யோவானைக் கூட அழைத்துக்கொள்ளும்படியோசனை சொன்னான்.

௩௮ பவுல் [6]பம்பீலியா நாட்டிலே தங்களுடனேகூடக் கிரியைக்கு வாராமல், தங்களை விட்டுப் பிரிந்துபோன அவனை அழைத்துக்கொள்ளத் தகாதென்று சொன்னான்.

௩௯ அப்பொழுது கோபம் உண்டானதினாலே அவர்கள் ஒருவரை ஒருவர் விட்டுப் பிரிந்தார்கள்; பருனபாவானவன் மாற்கைக் கூட்டிக்கொண்டு கப்பலேறி, சீப்புருதீவுக்குப் போனான்.

௪௰ பவுலானவன் சீலாவைத் தெரிந்துகொண்டு, [7]சகோதரராலே பராபரனுடைய கிருபைக்கு ஒப்புவிக்கப்பட்டு,

௪௧ புறப்பட்டுச் சீரியா நாட்டிலேயும் கிலீக்கியா நாட்டிலேயும் திரிந்து, [8]சபைகளை ஸ்திரப்படுத்தினான்.

## ௰௬. அதிகாரம்.

௧. பவுல் தீமோத்தேயுவைச் சன்னத்தப்பண்ணி, ௭. பரிசுத்தஆவியினால் மறுதேசங்களுக்குப் போகத் தரிசனையடைந்து, ௰௪. லீதியாளைக் குணமாக்கி, ௰௬. ஒரு பேயைத் துரத்தினது. ௰௯. அதின் நிமித்தம் பவுலும், சீலாவும் அடிக்கப்பட்டுக் காவலில் வைக்கப்பட்டது. ௨௬. காவற்கதவுகள் திறந்தது. ௩௩. காவற்காரன் குணப்பட்டது. ௩௭. அவர்கள் விடுதலையானது.

[9]பின்பு அவன் தெருபை ஊருக்கும் இலீஸ்திரா ஊருக்கும் போனான்; அங்கே [10]தீமோத்தேயு என்னப்பட்ட சீஷன் இருந்தான்; [11]அவனுடைய தாய் விசுவாசமுள்ள ஒரு யூதஸ்திரியானவள்; அவனுடைய தகப்பன் கிரேக்கனானவன்.

௨ [12]மேலும் அவன் இலீஸ்திராவிலும் இக்கோனியாவிலும் இருக்கிற சகோதரராலே [illegible]சி பெற்றவன்.

௩ அவனைப் பவுல் தன்னுடனே கூடப் புறப்படவேண்டும் என்று விரும்பி, அவனுடைய தகப்பன் கிரேக்கனென்று அவ்விடங்களில் இருக்கிற யூதர்கள் எல்லாரும் அறிந்தபடியால், [13]அவனுக்கு விருத்தசேதனம்பண்ணினான்.

௪ பின்பு அவர்கள் பட்டணங்களில் திரிந்து நடக்கையில், எருசலேமிலுள்ள அப்போஸ்தலராலும் மூப்பராலும் [14]தீர்மானம்பண்ணப்பட்ட சட்டங்களைக் காத்

கி. பி. ௫௰௨.

* அல்லது போதனைகளை.
1 அப். ௰௪. ௨௨: ௰௮. ௨௩.
2 ௧ கொரி. ௰௬. ௰௧. எபி. ௰௩. ௨௩.
3 அப். ௰௩. ௧.
4 அப். ௰௩. ௪, ௰௩, ௰௪, ௫௧: ௰௪. ௧, ௬, ௨௪, ௨௫.
5 அப். ௰௨. ௰௨, ௨௫: ௰௩. ௫. கொலோ. ௪. ௰. ௨ தீமோ. ௪. ௰௧. பிலே. ௨௪.
6 அப். ௰௩. ௰௩.
7 அப். ௰௪. ௨௬.
8 அப். ௰௬. ௫.
9 அப். ௰௪. ௬.
10 அப். ௰௯. ௨௨. ரோ. ௰௬. ௨௧. ௧ கொரி. ௪. ௰௭. பிலி. ௨. ௰௯. ௧ தெச. ௩. ௨. ௧ தீமோ. ௧. ௨. ௨ தீமோ. ௧. ௨.
11 ௨ தீமோ. ௧. ௫.
12 அப். ௬. ௩.
13 ௧ கொரி. ௯. ௨௰. கலா. ௨. ௩: ௫. ௨.
14 அப். ௰௫. ௨௮, ௨௯.

Digitized by Google

துக்கொள்ளும்படிக்குச் சனங்களுக்கு ஒப்புவித்தார்கள்.

௫ [1]அதினாலே சபைகள் விசுவாசத்திலே ஸ்திரப்பட்டு, நாள்தோறும் பெருகினார்கள்.

௬ ¶ பின்பு அவர்கள் பிரிகியா நாட்டிலேயும் கலாத்தியா நாட்டிலேயும் திரிந்துகொண்டு வருகிறபொழுது, ஆசியாதேசத்திலே அவர்கள் சுவிசேஷ வசனத்தைச் சொல்லாதபடிக்கு, பரிசுத்தஆவியினாலே தடைபண்ணப்பட்டு,

௭ பின்பு மீசியா நாட்டிற்குப் போய், பித்தினியா நாட்டிற்குப் போகப் பிரயத்தனம்பண்ணினார்கள்; அதற்கும் இயேசுவினுடைய ஆவியானவர் தடைபண்ணினார்.

௮ [2]அப்பொழுது அவர்கள் மீசியா நாட்டைக்கடந்து, துரோவஸ்பட்டணத்திற்குப்போனார்கள்.

௯ அங்கே இராத்திரியிலே பவுலுக்கு ஒரு தரிசனை உண்டாயிற்று; என்னவெனில், [3]மக்கேதோனியா தேசத்தான் ஒருவன் நின்று, நீ மக்கேதோனியாவில் வந்து, எங்களுக்கு உதவிசெய்வாயாக என்று அவனை வேண்டிக்கொண்டதாக இருந்தது.

௰ அந்தத் தரிசனையை அவன் கண்டபொழுது, அவர்களுக்குச் சுவிசேஷத்தை அறிவிக்கும்படிக்கு, கர்த்தர் எங்களை அழைத்தாரென்று நாங்கள் நிச்சயமாய் அறிந்து, உடனே [4]மக்கேதோனியா தேசத்திற்குப் புறப்பட்டுப் போகப் பிரயத்தனம்பண்ணி,

௰௧ ¶ கப்பலேறித் துரோவஸ் பட்டணத்தைவிட்டு, நேராய்ச் சமொத்திராக்கே தீவுக்கும்,மறுநாளிலே நேயாப்போலி பட்டணத்திற்கும் போய்,

௰௨ அங்கே இருந்து மக்கேதோனியா தேசத்தின் தலையானதுமாய்,* உரோமர் குடியேறினதுமாய் இருக்கிற [5]பிலிப்பி பட்டணத்தில் சேர்ந்து, சிலநாள் அதிலே சஞ்சரித்தோம்.

௰௩ பட்டணத்திற்கு வெளியே ஆற்றின் அருகே வழக்கமாய்ச் செபம்பண்ணுதற்கான இடத்திற்கு ஓய்வுநாளில்,† நாங்கள் போய் அங்கே உளுக்காந்து, கூடிவந்திருந்த ஸ்திரிகளுடனே பேசிக்கொண்டோம்.

௰௪ ¶ ஒரு ஸ்திரி தீயத்திரா ஊராளுமாய், இரத்தாம்பரம் விற்கிறவளுமாய், தேவபத்தியுள்ளவளுமாய், லீதியாள் என்று பேர்கொண்டவளுமாய் இருந்தாள்; அவள் பவுலினால் சொல்லப்பட்டவைகளைக் கேட்டுக்கொண்டிருக்கையில் அவைகளுக்கு அவள் எச்சரிக்கையாய் இருக்கும்படிக்கு, [6]கர்த்தர் அவளுடைய இருதயத்தைத் திறந்தார்.

௰௫ பின்பு அவளும் அவளுடைய குடும்பத்தாரும் ஞானஸ்நானம் பெற்றபொழுது, அவள் எங்களை நோக்கி, நீங்கள் என்னைக் கர்த்தாவினிடத்தில் விசுவாசமானவள் என்று எண்ணினால், என் வீட்டிலே வந்து தங்கியிருப்பீர்களாக என்று [7]எங்களை மிகவும் வேண்டிக்கொண்டு இருத்தினாள்.

௰௬ ¶ நாங்கள் செபத்திற்குப் போகையில், பீத்தோனுடைய ஆவியைக்‡ [8]கொண்டிருந்து, குறிசொல்லுகிறதினாலே தன் எசமான்களுக்கு [9]மிகுந்த ஆதாயத்தை உண்டாக்கின ஒரு வேலைக்காரி எங்களுக்கு எதிர்ப்பட்டாள்.

௰௭ அவள் பவுலுக்கும் எங்களுக்கும் பின்சென்று, இந்த மனிதர் உன்னதமான பராபரனுடைய ஊழியக்காரர், உங்களுக்கு இரட்சிப்பின் மார்க்கத்தை அறிவிக்கிறவர்கள் என்று கூப்பிட்டாள்.

௰௮ இப்படி அநேகநாள் செய்தாள்; [10]அப்பொழுது பவுல் விசனம் அடைந்து திரும்பிக்கொண்டு அந்த ஆவியுடனே சொன்னது: இவளைவிட்டுப் புறப்படும்படிக்கு, இயேசுக்கிறிஸ்துவினுடைய நாமத்தினாலே உனக்குக் கட்டளை

---

கி. பி. ௫௩.

1 அப். ௧௫. ௪௧.
2 உ கொரி. உ. ௧௨. உ தீமோ. ௪. ௰௩.
3 அப். ௰. ௩௰.
4 உ கொரி. உ. ௧௩.
* அல்லது குடியேற்றப்பட்ட ஸ்தலமானதும்.
5 பிலி. ௧. ௧.
† கிரேக்கு, தேவ ஆராதனை நாளிலே.
6 லூக். ௨௪. ௪௫.
7 ௧ மோ. ௰௯. ௩: ௩௩. ௰௧. நியா. ௰௯. ௨௧. லூக். ௨௪. ௨௯. எபி. ௰௩. ௨.
‡ அல்லது குறிசொல்ல ஏதுவாகிற ஆவியை.
8 ௧ சாமு. ௨௮. ௭.
9 அப். ௰௯. ௨௪.
10 மாற். ௧. ௨௫, ௩. ௰௨.

Google

பிடுகிறேன் என்றான்; [1]அந்நேரம் அது புறப்பட்டுப்போயிற்று.

௰௯ ¶ [2]அவளுடைய எசமான்கள் தங்கள் ஆதாயத்து நம்பிக்கை அற்றுப்போயிற்று என்று அறிந்து, [3]பவுலையும் சீலாவையும் பிடித்து, சந்தைவெளியிலுள்ள * தலைவரிடத்திற்கு [4]இழுத்து,

௨௰ பின்பு அவர்களைத் துரைகளுக்கு முன்பாகக் கொண்டுபோய், யூதர்களாகிய இந்த மனிதர் நம்முடைய பட்டணத்தைக் [5]கலக்கப்பண்ணி,

௨௧ உரோமராகிய நம்மாலே ஏற்றுக்கொள்ளவும், செய்யவும்படாத முறைமைகளை அறிவிக்கிறார்கள் என்றார்கள்.

௨௨ அப்பொழுது சனங்கள் அவர்களுக்கு விரோதமாய் எழும்பினதுமல்லாமல், துரைகள் அவர்கள் வஸ்திரங்களைக் கிழித்துப்போடவும், [6]அவர்களை அடிக்கவும் சொல்லி,

௨௩ மிகுதியாய் அவர்களை அடிப்பித்தபின்பு, சிறைச்சாலையிலே வைத்து, அவர்களைப் பத்திரமாய்க் காக்கும்படிக்குச் சிறைச்சாலைக்காரனுக்குக் கட்டளையிட்டார்கள்.

௨௪ அவன் இப்படிப்பட்ட கட்டளையைப் பெற்றபொழுது, அவர்களை உள்ளுக்குள்ளான காவல் அறையிலே போட்டு, அவர்கள் கால்களை மரத்தில் அடித்து வைத்தான்.

௨௫ ¶ அப்படியிருந்தும், பாதிராத்திரியிலே பவுலும் சீலாவும் செபம்பண்ணி, பராபரனைத்துதித்துப் பாடினார்கள்; காவலில் வைக்கப்பட்ட மற்றவர்கள் அதைக் கேட்டுக்கொண்டு இருந்தார்கள்.

௨௬ சடுதியிலே சிறைச்சாலையின் அஸ்திபாரங்கள் அசையத்தக்கதாக [7]பூமி மிகவும் அதிர்ந்தது; உடனே [8]கதவுகளெல்லாம் திறக்கப்பட்டன; எல்லாரையும் கட்டியிருந்த சங்கிலிகள் அற்றுப்போயின.

௨௭ சிறைச்சாலைக்காரன் விழித்து, சிறைச்சாலையின் கதவுகள் திறந்திருக்கிறதைக் கண்டு, அதில் வைக்கப்பட்டவர்கள் ஓடிப்போனார்கள் என்று நினைத்து, கத்தியை உருவி, தன்னைக் கொலைசெய்ய எத்தனமாயிருந்தான்.

௨௮ பவுலென்பவன், நாங்கள் எல்லாரும் இங்கே இருக்கிறோம், ஆகையால் நீ உனக்குக் கேடொன்றும் செய்யாதிருப்பாயாக என்று மிகுந்த சத்தத்தோடே கூப்பிட்டான்.

௨௯ அப்பொழுது அவன் விளக்குகளை அழைப்பித்து உள்ளே ஓடி, நடுக்கம் அடைந்தவனாய்ப் பவுலுக்கும் சீலாவுக்கும் முன்பாக விழுந்து,

௩௰ பின்பு அவர்களை வெளியே அழைத்துப்போய், ஆண்டவர்களே, [9]இரட்சிக்கப்படுகிறதற்கு நான் என்னசெய்யவேண்டும் என்றான்.

௩௧ அதற்கு அவர்கள், [10]கர்த்தராகிய இயேசுக்கிறிஸ்துவை விசுவாசித்துக்கொள்வாயாக, அப்பொழுது நீயும் உன் வீட்டாரும் இரட்சிக்கப்படுவீர்கள் என்று சொல்லி,

௩௨ அவனுக்கும் அவனுடைய வீட்டிலிருந்த யாவருக்கும் கர்த்தருடைய வசனத்தைப் போதித்தார்கள்.

௩௩ மேலும் அவ்விராத்திரியிலே அந்நேரத்திலே அவன் அவர்களைச் சேர்த்துக்கொண்டு, அடிகளாலான காயங்களைக் கழுவினான்; அன்றியும் அவனும் அவனைச் சேர்ந்த யாவரும் உடனே ஞானஸ்நானம் பெற்றார்கள்.

௩௪ பின்பு அவன் அவர்களைத் தன் வீட்டிற்குள் அழைத்துப்போய், [11]அவர்களுக்குப் போசனம்கொடுத்து, தானும் தன் வீட்டார் அனைவரும் பராபரனில் விசுவாசிகளானபடியினாலே மிகவும் மகிழ்ச்சியாயிருந்தான்.

கி. பி. ௫௩.

1 மாற். ௰௬. ௰௭.
2 அப். ௰௯. ௨௪, ௨௫.
3 ௨ கொரி. ௬. ௫.
* அல்லது நியாயஸ்தலத்திலுள்ள.
4 மத். ௰. ௰௮.
5 ௧ இரா. ௰௮. ௰௭. அப். ௰௭. ௬.
6 ௨ கொரி. ௬. ௫: ௰௧. ௨௫, ௨௯. ௧ தெச. ௨. ௨.
7 அப். ௪. ௩௧.
8 அப். ௫. ௰௯: ௰௨. ௭, ௰.
9 லூக். ௩. ௰. அப். ௨. ௩௭: ௯. ௬.
10 யோவா. ௩. ௰௬, ௩௬: ௬. ௪௭. ௧ யோ. ௫. ௰.
11 லூக். ௫. ௨௯: ௰௯. ௬.

Google

௩௫ ¶ உதயமானபொழுது துரைகள் தலையாரிகளை அழைத்து, அந்த மனிதரை விட்டுவிடும்படி சொல்லுங்கள் என்று அனுப்பினார்கள்.

௩௬ சிறைச்சாலைக்காரன் பவுலுடனே சொன்னதாவது: உங்களை விடுதலையாக்கும்படிக்குத் துரைகள் கட்டளை அனுப்பினார்கள். ஆகையால் நீங்கள் புறப்பட்டுச் சமாதானத்துடனே போவீர்களாக என்றான்.

௩௭ அதற்குப் பவுல் சொன்னது: [1]உரோமராகிய எங்களை அவர்கள் நியாயம்விசாரியாமல், வெளியரங்கமாய் அடிப்பித்து, சிறைச்சாலையிலே போட்டு, இப்பொழுது இரகசியமாய் எங்களை விடுதலையாக்குகிறார்களா? அப்படி அல்ல, அவர்களே வந்து, எங்களை வெளியே அழைத்து அனுப்பிவிடக்கடவர்கள் என்றான்.

௩௮ இந்த வசனங்களைத் தலையாரிகள் துரைகளுக்கு அறிவித்தார்கள்; உரோமராய் இருக்கிறார்கள் என்று அவர்கள் கேட்டபொழுது, பயமடைந்து வந்து, அவர்களுடனே தயவாகப் பேசிக்கொண்டு,

௩௯ பின்பு அவர்களை வெளியே அழைத்துப்போய்ப் [2]பட்டணத்தைவிட்டுப் போகும்படி கேட்டுக்கொண்டார்கள்.

௪௰ அந்தப்படி அவர்கள் சிறைச்சாலையிலிருந்து புறப்பட்டு, [3]லீதியாளிடத்திற்குப் போய், சகோதரரைக் கண்டு, அவர்களுக்கு ஆறுதல் சொல்லிப் புறப்பட்டுப்போனார்கள்.

## ௰௭. அதிகாரம்.

௧. பவுல் தெசலோனிக்கே பட்டணத்தில் பிரசங்கித்தது. ௪. அவ்விடத்தில் சிலர் அவனை விசுவாசித்ததும், சிலர் அவனைத் தூஷணித்ததும், ௰. அவன் பெரோயா பட்டணத்துக்கு அனுப்பப்பட்டு அங்கே பிரசங்கித்தது. ௰௩. தெசலோனிக்கே பட்டணத்திலும் துன்பப்படுத்தப்பட்டு, ௰௬. பின்பு அத்தேனே பட்டணத்துக்கு வந்து அவ்வூராரோடே தர்க்கித்து, அவர்கள் அறியாத தேவனை அவர்களுக்கு அறிவித்தது. ௩௪. அதனால் அநேகர் கிறிஸ்தவர்களானது.

அவர்கள் அம்பிபோலிப் பட்டணத்தையும் அப்பொலோனிய பட்டணத்தையும் கடந்து, தெசலோனிக்கா பட்டணத்திற்குப் போனார்கள்; அங்கே யூதர்களுக்காக ஒரு செபஆலயம் இருந்தது

௨ பவுல் தன் வழக்கத்தின்படி [4]அவர்களிடத்திற்குப் போய், மூன்று ஓய்வுநாள்களில் வேதவாக்கியங்களின் நியாயங்களை எடுத்து, அவர்களுடனே சம்பாஷித்துக் கொண்டு வருகையில்,

௩ [5]கிறிஸ்து பாடுபடவும், மரித்தோரிலிருந்து எழுந்திருக்கவும் வேண்டுமென்றுகாண்பித்து, நான் உங்களுக்கு அறிவிக்கிற இயேசுவே கிறிஸ்து என்று* திருஷ்டாந்தப்படுத்தினான்.

௪ [6]அவர்களில் சிலர் அதற்குச் சம்மதித்து, பவுலையும் [7]சீலாவையும்சேர்ந்துகொண்டார்கள்; தேவபத்தியுள்ள கிரேக்கரிலும் அநேகம்பேரும், கனம்பொருந்திய ஸ்திரிகளில் மிகுதியானபேரும் அப்படியே செய்தார்கள்.

௫ ¶ சம்மதியாத யூதர்கள் வைராக்கியம்கொண்டு, தெருக்களிலே திரிந்து அலைகிற சில பொல்லாத மனிதரைச் சேர்த்துக்கொண்டு கூட்டங்கூடி, பட்டணத்தைக் கலகப்படுத்தி, [8]யாசோனுடைய வீட்டிற்குமுன் போய் நின்று, அவர்களைச் சனங்களுக்குமுன்பாகக் கொண்டுபோகும்படி வகை தேடினார்கள்.

௬ அவர்களைக் காணாமலிருந்தபொழுது, அவர்கள் யாசோனையும் சில சகோதரரையும் பட்டணத்துத் தலைவரிடத்திற்கு இழுத்துக் கொண்டுபோய் [9]உலகத்தைக் கலகப்படுத்துகிறவர்கள் இங்கேயும் வந்திருக்கிறார்கள்.

௭ யாசோன் இவர்களை ஏற்றுக் கொண்டான், இவர்கள் எல்லாரும் [10]இயேசு என்னும் வேறொருவனை இராசாவென்று சொல்லி,

இ. பி. இரு.

1 அப். ௨௨. ௨௫.
2 மத். ௮. ௩௪.
3 ௰௪. ௰௪.
4 லூக். ௪. ௰௬. அப். ௧௩. ௫௰: ௰௪. ௫, ௰௪: ௰௪. ௧: ௰௯. ௰௯: ௰௯. ௮.
5 லூக். ௨௪. ௨௬, ௪௬. அப். ௰௮. ௨௮. கலா. ௩. ௧.

* அல்லது அவன் சொன்னது: நான் உங்களுக்கு அறிவிக்கிற கிறிஸ்து வென்று.

6 அப். ௨௮. ௨௪.
7 அப். ௰௫. ௨௨, ௨௭, ௪௰.
8 உரோ. ௰௬. ௨௧.
9 அப். ௰௬. ௨௰.
10 லூக். ௨௩. ௨. யோவா. ௰௯. ௰௨. ௧ பே. ௨. ௰௩.

Digitized by Google

இராயனுடைய கட்டளைக்கு விரோதமாய்ச் செய்கிறார்கள் என்று கூப்பிட்டு,

௮ இவைகளைக் கேட்டுக்கொண்ட சனங்களையும், பட்டணத்துத் தலைவரையும் கலங்கப்பண்ணினார்கள்.

௯ அப்பொழுது அவர்கள் யாசோனிடத்திலும் மற்றவர்களிடத்திலும் கையெழுத்து வாங்கிக்கொண்டு, அவர்களை விட்டுவிட்டார்கள்.

௰ ¶ [1]உடனே சகோதரர்கள் இராத்திரிகாலத்திலே, பவுலையும் சீலாவையும் பெரோயா ஊருக்கு அனுப்பிவிட்டார்கள்; அவர்கள் அங்கே சேர்ந்து, யூதர்களுடைய செபஆலயத்திற்குப் போனார்கள்.

௰௧ தெசலோனிக்கேயில் உள்ளவர்களிலும் அவர்கள் மேன்மையுள்ளவர்களாய் மிகுந்த மனப்பூர்வத்தோடே சுவிசேஷவசனத்தை ஏற்றுக்கொண்டு, [2]காரியங்கள் மெய்யாய் அப்படிப்பட்டவைகளோ அல்லவோ என்று நாள்தோறும் வேதவாக்கியங்களை ஆராய்ந்தார்கள்.

௰௨ ஆதலால் அவர்களில் அநேகம்பேரும், கனம்பொருந்திய அநேக கிரேக்க ஸ்திரிகளும், புருஷரும், விசுவாசிகளானார்கள்.

௰௩ பெரோயா ஊரிலேயும் பராபரனுடைய வசனம் பவுலினால் அறிவிக்கப்படுகின்றதென்று தெசலோனிக்கேயரான யூதர்கள் அறிந்தபொழுது, அங்கேயும்போய், சனங்களைக் கலகப்படுத்தினார்கள்.

௰௪ [3]உடனே சகோதரர்கள் பவுலைச் சமுத்திரத்தின் வழியாய்ப் போக அனுப்பினார்கள்; சீலாவும் தீமோத்தேயும் பின்னும் அங்கே தங்கினார்கள்.

௰௫ பவுலை வழிநடத்திப்போனவர்கள் அவனை அத்தேனே பட்டணத்திற்கு அழைத்துப்போய், [4]அங்கே சீலாவும் தீமோத்தேயும் அதிசீக்கிரம் தன்னிடத்தில் வர வேண்டும் என்று அவர்களுக்குச் சொல்லும்படி கற்பனைபெற்றுப் புறப்பட்டுப் போனார்கள்.

௰௬ ¶ அவர்கள் வரும்படிக்குப் பவுல் என்பவன் அத்தேனே பட்டணத்தில் காத்துக்கொண்டிருக்கையில், பட்டணம் விக்கிரகங்களால் நிறைந்திருக்கிறதைப்* பார்த்து, [5]மனதில் மிகுந்த வைராக்கியத்தை அடைந்துகொண்டு,

௰௭ பின்பு செபஆலயத்திலே யூதர்களோடும், மற்றத் தேவபத்தியுள்ள பேர்களோடும், சந்தைவெளியிலே தனக்கு எதிர்ப்பட்டவர்களோடும் நாள்தோறும் பேசிக்கொண்டான்.

௰௮ அப்பொழுது எப்பிக்கூரரும் ஸ்தோயிக்கருமான ஞானிகளில் சிலர் அவனுடனே வாக்குவாதம்பண்ணிக்கொண்டு வருங்காலத்திலே, சிலர் இந்த வாயாடி† என்ன பேசுவான் என்றார்கள்; சிலர் அவன் இயேசுவையும் மரித்தோரிலிருந்து எழுந்திருக்குதலையும் அவர்களுக்குப் பிரசங்கித்தபடியினாலே, இவன் அந்நிய தேவர்களை அறிவிக்கிறவன் என்று தோன்றுகின்றது என்றார்கள்.

௰௯ அப்பொழுது அத்தேனே பட்டணத்தார் எல்லாரும், அங்கே தங்கும்படி வருகிற அந்நியரும் புதியவைகளைக் கேட்கிறதினாலும் பேசுகிறதினாலுமே அன்றி, மற்றொருவிதமாய்த் தங்கள் காலத்தைப் போக்க விரும்பாதவர்களானபடியால்,

௨௰ அவர்கள் அவனை மாருஸ் தேவனுடைய மேடையிலுள்ள‡ நியாயஸ்தலத்திற்கு அழைத்துப்போய், நீ சொல்லுகிற புதிய உபதேசத்தை நாங்கள் அறியலாமா?

௨௰௧ நவமான காரியங்களையே எங்கள் காது கேட்கப்பண்ணுகிறாய். ஆகையால் நாங்கள் அவைகளை அறியவேண்டும் என்று இருக்கிறோம் என்றார்கள்.

கி. பி. ௫௩.

1 அப். ௯. ௨௫. ௰௪. ௩௪.
2 ஏசா. ௩௪. ௰௬. லூக். ௰௬. ௨௯. யோவா. ௫. ௩௯.
3 மத். ௰. ௨௩.
4 அப். ௰௮. ௫.
* அல்லது விக்கிரகாராதனைக்குட்பட்டிருக்கிறதை.
5 ௨ பேது. ௨. ௮.

† அல்லது நீசன்.

‡ அல்லது ஆரியோபெக்காஸ்; அத்தேனே பட்டணத்தில் இது பிரதான நியாயஸ்தலம்.

Digitized by Google

உ௨ ¶ அப்பொழுது பவுல் மாருஸ் மேடையின் நடுவிலே* நின்று சொன்னதாவது: அத்தேனரே, எல்லாவற்றிலும் தேவபத்தியே உங்களுக்கு மிகவும் உண்டாயிருக்கிறதென்று எனக்குத் தோன்றுகிறது; எப்படியென்றால் நான் திரிந்து உங்கள் தேவ ஆராதனைக்கு ஏற்றவைகளை† நோக்கிப் பார்த்தபொழுது, அறியப்படாத தேவனுக்கு என்று எழுதியிருக்கிற ஒரு பீடத்தையும் கண்டேன்.

உ௩ நீங்கள் அறியாமல் பணிவு செய்கிறவரையே நான் உங்களுக்கு அறிவிக்கிறேன்.

உ௪ [1]உலகத்தையும் அதிலுள்ள யாவையும் உண்டாக்கின தேவனானவர், [2]வானத்திற்கும் பூமிக்கும் ஆண்டவரானதால், [3]கைகளால் செய்யப்பட்ட கோவில்களில் வாசம்பண்ணுகிறதும் இல்லை.

உ௫ [4]யாதொன்று தமக்கு வேண்டுவதாக மனிதர் கைகளால் பணிவிடை கொள்ளுகிறதும் இல்லை; [5]எல்லாருக்கும் சீவனையும், சுவாசத்தையும், மற்ற யாவையும் அவர் கொடுத்திருக்கிறாரே.

உ௬ அல்லாமலும் அவரே ஒரே இரத்தத்திலிருந்து மனிதர் எல்லாரும் தோன்றப்பண்ணி, [6]நம்மில் ஒருவருக்கும் தூரமல்லாத பராபரனாகிய தம்மை அவர்கள் தடவி அடைந்துகொள்ளத்தக்கதாக,

உ௭ [7]தம்மைத் தேடும்படிக்கு, அவர்களுக்காக முன் திட்டமாக்கப்பட்ட காலங்களையும் [8]குடியிருப்பு எல்லைகளையும் குறித்து அவர்கள் பூமியில் எங்கும் குடியிருக்கும்படி செய்தார்.

உ௮ [9]அவரால் நாம் பிழைக்கிறோம், அசைகிறோம், இருக்கிறோம்; அதுபோல [10]உங்களில் சில புலவர்களும், அவருடைய வம்சத்தாராய் இருக்கிறோம் என்று சொன்னார்கள்.

உ௯ ஆதலால் நாம் பராபரனுடைய வம்சத்தாராயிருக்க, [11]தெய்வம் மனிதருடைய சித்திரவேலையினாலும் தோற்றுதலினாலும் பொன், வெள்ளி, கல் இவைகளால் செய்யப்பட்டதற்கு ஒப்பாய் இருக்கின்றதென்று நாம் நினைக்கலாகாது.

௩௰ [12]அறியாமையுள்ள காலங்களைப் பராபரன் காணாதவர்போல இருந்தார்; [13]இப்பொழுது மனந்திரும்பவேண்டும் என்று எவ்விடத்திலுமுள்ள மனிதர் யாவருக்கும் கட்டளையிடுகிறார்.

௩௧ மேலும் [14]ஒரு நாளைக் குறித்தார்; அதிலே அவர் தாம் நியமித்த ஒருவனைக்கொண்டு பூச்சக்கரத்திலுள்ள யாவருக்கும் நியாயத்தீர்ப்புக் கொடுப்பார்; [15]அவனை மரித்தோரிலிருந்து எழுப்பினதினாலே, அவர் அதின் நிச்சயத்தை‡ எல்லாருக்கும் விளங்கப்பண்ணினார் என்றான்.

௩௨ ¶ மரித்தோர் உயிரோடெழுந்திருக்குதலைக் குறித்து அவர்கள் கேட்டபொழுது சிலர் இகழ்ந்தார்கள், சிலர் பின்னொருவேளை இதைக்குறித்து உன்னிடத்தில் கேட்போம் என்றார்கள்.

௩௩ அப்பொழுது பவுல் அவர்களிலிருந்து புறப்பட்டுப் போனான்.

௩௪ சிலர் அவனைப் பற்றிக்கொண்டு, பின்பு விசுவாசிகளானார்கள்; அவர்களில் தியொனீசியென்னும் நியாயாதிபதியும், தாமரியென்று பேருள்ள ஒரு ஸ்திரியும் இவர்களுடனேகூட வேறு சிலரும் இருந்தார்கள்.

கி. பி. ௫௪.

* அல்லது ஆரியோ பெக்கருடைய நியாயஸ்தலத்தில்.

† அல்லது நீங்கள் பணிகிற தேவர்களை. உ தெச. உ. ௪.

1 அப். ௧௪. ௧௫.
2 மத். ௧௧. உ௫.
3 அப். ௭. ௪௮.
4 சங். ௫௦. ௮.
5 ௧ மோ. உ. ௭. ௪ மோ. ௧௬. உ௨. யோபு. ௧௨. ௰: உ௭. உ: ௩௩. ௪. ஏசா. ௪உ. ௫: ௫௭. ௧௬. சகரி. ௧உ. ௧.
6 அப். ௧௪. ௧௭.
7 உரோ. ௧. உ௰.
8 ௫ மோ. ௩உ. ௮.
9 கொலோ. ௧. ௧௭. எபி. ௧. ௩.
10 தீத். ௧. ௧உ.
11 ஏசா. ௪௰. ௧௮.
12 அப். ௧௪. ௧௬. உரோ. ௩. உ௫.
13 லூக். உ௪. ௪௭. தீத். உ. ௧௧, ௧௨. ௧ பே. ௧. ௧௪: ௪. ௩.
14 அப். ௰. ௪௨. உரோ. உ. ௧௬: ௧௪. ௰.
15 அப். உ. உ௪.
‡ அல்லது அதை நம்பும்படி. இடந்தை.

# ௧௮ அதிகாரம்.

௧. பவுல் தன் கைகளால் வேலைசெய்து, கொரிந்த பட்டணத்திலே அஞ்ஞானிகளுக்குப் பிரசங்கித்தது. ௯. கர்த்தர் ஒரு தரிசனையில் அவனுக்கு தயிரியம் சொன்னது. ௧௨. அவன் பிரதிவாதியின் கல்லியோனுக்குமுன்பாகக் குற்றஞ்சாற்றப்பட்டு விடுதலையானது. ௧௮. பின்பு பட்டணங்கள் தோறும் போய்ச் சீஷர்களைத் திடப்படுத்தினது. உ௪. அப்பொல்லோ ஆக்கிலாவாலும் பிரிசில்லாளாலும் போதிக்கப்பட்டு, உ௭. பிராயோசனமுண்டாகச் சிறிந்தவைகளைக் குறித்துப் பிரசங்கித்தது.

Digitized by Google

அதன்பின்பு பவுல் அத்தேனே பட்டணத்தைவிட்டுக் கொரிந்து பட்டணத்திற்குப் போய்,

௨ இராயனாகிய கிலவுதி, யூதர் எல்லாரையும் உரோமை நகரியை விட்டுப் போகும்படி கட்டளையிட்டபடியினாலே, இத்தாலி நாட்டில் நின்று நவமாய் வந்திருந்த [1]ஆக்கில்லா என்று நாமமுள்ள பொந்து தேசத்தானாகிய ஒரு யூதனையும், அவனுடைய மனைவியாகிய பிரிஸ்கில்லாளையும் அங்கே கண்டு,

௩ அவர்களிடத்தில் போய், தானும் அவர்களும் ஒரே தொழில் செய்தவர்களானபடியினாலே, [2]அவர்களிடத்திலே தங்கித் தொழில் செய்தான்; அவர்களுடைய தொழில் கூடாரம்பண்ணுதல்.

௪ அன்றியும் அவன் [3]ஓய்வுநாள்தோறும் செபஆலயத்திலே சம்பாஷணைபண்ணி, யூதருக்கும் கிரேக்கருக்கும்புத்திசொன்னான்.

௫ [4]மக்கேதோனியா நாட்டிலிருந்து சீலாவும் தீமோத்தேயும் வந்தபொழுது, [5]பவுல் தன் ஆவியிலே அதிக வைராக்கியங்கொண்டு, இயேசுவானவரே கிறிஸ்து* என்று யூதருக்குக் காண்பித்தான்.

௬ ¶ அவர்களோ [6]எதிர்பேசித்தூஷணித்தபொழுது, [7]அவன் தன் வஸ்திரங்களை உதறி, [8]உங்களுக்குக் கேடு வரும்படிக்கு நீங்களே ஏதுவாயிருக்கிறீர்கள்.

௭ [9]நான் சுத்தமாய் இருக்கிறேன், [10]இதுமுதல் நான் புறத்தேசத்தார்களிடத்தில் போகிறேன் என்று அவர்களுடனே சொல்லி, அவ்விடத்தைவிட்டுத் தேவபத்தியுள்ள யூஸ்து என்பவனுடைய வீட்டிலே போனான்; அந்த வீடு செபஆலயத்திற்கு அடுத்ததாயிருந்தது.

௮ மேலும் செப[11]ஆலயத் தலைவனாகிய கிறிஸ்பு தன் வீட்டார் அனைவரோடுங்கூடக் கர்த்தரை விசுவாசித்தான்; கொரிந்தியரில் அநேகரும் சுவிசேஷத்தைக் கேட்டு விசுவாசித்து ஞானஸ்நானம் பெற்றார்கள்.

௯ [12]பின்பு இராத்திரியிலே கர்த்தர் ஒரு தரிசனத்திலே பவுலுடனே சொன்னதாவது: இந்தப் பட்டணத்திலே அநேகம்பேர் என்னுடைய சனங்களாய் இருக்கிறார்கள்; [13]ஆகையால் நான் உன் பங்கில் இருப்பேன்; ஒருவனும் உனக்குத் தீமைசெய்யும்படிக்கு உன்மேல் கைபோடுவதில்லை.

௰ ஆனபடியினாலே நீ பயப்படாமல் பேசுவாயாக; மவுனமாய் இராதிருப்பாயாக என்றார்.

௰௧ அந்தப்படி அவன் ஒருவருஷமும் ஆறுமாதமும் அங்கே தங்கி,† பராபரனுடைய வசனத்தை அவர்களுக்குள்ளே உபதேசம்பண்ணிக்கொண்டுவந்தான்.

௰௨ ¶ பின்பு கல்லியோன் என்பவன் அகாயா நாட்டிலே பிரதிதுரையானபொழுது, யூதர்கள் ஒருமனப்பட்டுப் பவுலுக்கு விரோதமாய் எழும்பி, அவனை நியாயாசனத்திற்கு முன்பாகக் கொண்டுபோய்,

௰௩ இவன் வேதநூலுக்கு விரோதமான விதமாய் பராபரனைச் சேவிக்கும்படி, மனிதருக்குப் போதிக்கிறான் என்றார்கள்.

௰௪ அதற்குப் பவுல் தன் வாயைத் திறக்கையில், கல்லியோன் யூதருடனே சொன்னதாவது: யூதரே, [14]இது அநீதி, அல்லது மிகவும் பொல்லாங்கான காரியமானால் நான் உங்களுக்குப் பொறுமையாய்ச் செவிகொடுக்க நியாயம் உண்டாயிருக்கும்.

௰௫ இது உபதேசத்திற்கும், நாமங்களுக்கும், உங்கள் வேதநூலுக்கும் ஏற்ற தருக்கமானபடியினாலே, இப்படிப்பட்டவைகளைக் குறித்து நான் நியாயாதிபதியாயிருக்க விரும்புகிறதில்லை; ஆகை

கி. பி. ௫௪.

1 உரோ. ௧௬. ௩. ௧ கொரி. ௧௬. ௰௯. ௨ தீமோ. ௪. ௰௯.
2 அப். ௨௰. ௩௪. ௧ கொரி. ௪. ௰௨. ௧ தெச. ௨. ௯. ௨ தெச. ௩. ௮.
3 அப். ௰௭. ௨.
4 அப். ௰௭. ௰௪, ௰௫.
5 யோபு. ௩௨. ௰௮. அப். ௰௭. ௩. ௰௮. ௨௫.
* அல்லது கிறிஸ்துதான்.
6 அப். ௰௩. ௪௫. ௧ பே. ௪. ௪.
7 நெகே. ௫. ௰௩. மத். ௰. ௰௪. அப். ௰௩. ௫௧.
8 ௨ சாமு. ௧. ௰௬. எசே. ௰௮. ௰௩: ௩௩. ௪.
9 எசே. ௩. ௰௮, ௰௯: ௩௩. ௯. அப். ௨௰. ௨௬:
10 அப். ௰௩. ௪௬: ௨௮. ௨௮.
11 ௧ கொரி. ௧. ௰௪.
12 அப். ௨௩. ௰௧.
13 எரே. ௧. ௰௮, ௰௯. மத். ௨௮. ௨௰.
† அல்லது இருந்து.
14 அப். ௨௩. ௨௯: ௨௫. ௰௧, ௰௯.

யால் நீங்களே பார்ப்பீர்களாக என்று சொல்லி,

௰௬ அவர்களை நியாயாசனத்தை விட்டுப் போகப்பண்ணினான்.

௰௭ அப்பொழுது கிரேக்கர் எல்லாரும் செபஆலயத்தலைவனாகிய [1]சொஸ்தெனேயைப் பிடித்து, நியாயாசனத்திற்கு முன்பாகத் தானே அடித்தார்கள்; அதைக்குறித்துக் கல்லியோன் விசாரணைபண்ணாமல் இருந்தான்.

௰௮ ¶ பின்னும் பவுல் அநேக நாள் அங்கே தரித்திருந்தபின்பு, அவன் சகோதரருடைய உத்தரவு வாங்கிக்கொண்டு தனக்கு ஒரு பிரார்த்தனை உண்டாயிருந்தபடியால், [2]கெங்கிரேயா பட்டணத்திலே, [3]சிரச்சவரம்பண்ணி, சீரியா தேசத்திற்குப் போகும்படி கப்பலேறிப் போனான்; பிரிஸ்கில்லாளும் ஆக்கில்லாவும் அவனுடனே கூடப்போனார்கள்.

௰௯ அவன் எபேசு பட்டணத்திற்குச் சேர்ந்தபொழுது, அவர்களை அங்கே விட்டுச் செபஆலயத்திற்குள் பிரவேசித்து, யூதருடனே சம்பாஷணை பண்ணினான்.

௨௰ அவர்கள் அவனைச் சிலகாலம் தங்களுடனே இருக்கவேண்டும் என்றுகேட்டுக்கொண்டபொழுது, அவன் சம்மதியாமல்,

௨௧ [4]வருகிற பண்டிகையிலே நான் எப்படியும் எருசலேமில் இருக்கவேண்டும்; [5]பராபரனுக்குச் சித்தமானால் திரும்பி உங்களிடத்தில் வருவேன் என்று சொல்லி, அவர்களுடைய உத்தரவு வாங்கிக்கொண்டு கப்பலேறி எபேசுபட்டணத்தைவிட்டு,

௨௨ சேசாரியா பட்டணத்திற்குப் போய், பின்பு (எருசலேமுக்குப்) போய், சபையாரின் சுகத்தை விசாரித்துக்கொண்டு, பின்பு அந்தியோகியா ஊருக்குச் சென்று,

௨௩ அங்கே சிலகாலம் சஞ்சரித்துப் பின்பு புறப்பட்டு, [6]கலாத்தியா நாட்டிலேயும் பிரிகியா நாட்டிலேயும் ஊர்கள்தோறும் திரிந்து, [7]சீஷர் எல்லாரையும் ஸ்திரப்படுத்திக்கொண்டுவந்தான்.

௨௪ ¶ அக்காலத்திலே [8]அலெக்சந்திரி பட்டணத்தில் பிறந்தவனுமாய், சாதுரியவானுமாய், வேத எழுத்துக்களில் வல்லவனுமாய் இருக்கிற அப்பொல்லோஸ் என்று பேர்கொண்ட ஒரு யூதன் எபேசு பட்டணத்திற்குப் போனான்.

௨௫ அவன் கர்த்தருடைய மார்க்கத்தைக்குறித்து உபதேசம் கேட்டு, [9]யோவான் கொடுத்த ஸ்நானத்தைமாத்திரம் அறிந்தவனாயிருந்தும், கர்த்தாவுக்கு உரியவைகளை மிகுந்த [10]சாக்கிரதையுள்ள மனதோடே பேசி, திட்டமாய்ப் போதகம்பண்ணிக்கொண்டுவந்தான்.

௨௬ செபஆலயத்திலே தயிரியமாய்ப் பேசினான்; ஆக்கில்லாவும் பிரிஸ்கில்லாளும் அவன் பேசுகிறதைக் கேட்டபொழுது, அவனைச் சேர்த்துக்கொண்டு, பராபரனுடைய மார்க்கத்தை அவனுக்கு அதிக திட்டமாய்க் காண்பித்தார்கள்.

௨௭ பின்பு அவன் அகாயா நாட்டிலே போகவேண்டும் என்று இருக்கையில், சீஷர்கள் அவனை உபசாரம்செய்யும்படிக்குச் சகோதரர் அவர்களுக்கு எழுதினார்கள்.

௨௮ அவன் அங்கேசேர்ந்தபின்பு, அவன் வெளியரங்கமாய் யூதர்களுடனே பலமாய்த் தருக்கம் பண்ணிக்கொண்டு, [11]இயேசுவே கிறிஸ்து* என்று வேதவாக்கியங்களாலே தெளிவாய்க் காண்பித்தபடியால், கிருபையினாலே விசுவாசிகளாய் இருந்தவர்களுக்கு [12]மிகுந்த உதவியாய் இருந்தான்.

கி. பி. ௫௪.

1 ௧ கொரி. ௧. ௨.
2 ௪ ரோ. ௧. ௰அ. அப். ௨௧. ௨௪.
3 ௨ ரோ. ௰௫. ௧.
4 அப். ௰௯. ௨௧: ௨௰. ௰௬.
5 ௧ கொரி. ௪. ௰௯. எபி. ௬. ௩. யாக். ௪. ௰௫.
6 கலா. ௧. ௨: ௪. ௰௪.
7 அப். ௰௪. ௨௨: ௰௫. ௩௨, ௪௧.
8 ௧கொரி. ௧. ௰௨: ௩. ௫, ௬: ௪. ௬. தீத். ௩. ௰௩.
9 அப். ௰௯. ௩.
10 ௨ ரோ. ௰௨. ௰௧.
11 அப். ௯. ௨௨: ௰௭. ௩. ௨௪. * அல்லது கிறிஸ்துதான்.
12 ௧ கொரி. ௩. ௬.

# ௰௯. அதிகாரம்.

௧. பவுல் கைகளை வைத்ததால் பரிசுத்தஆவி அளிக்கப்பட்டது. ௯. அவனுடைய உபதேசங்களை யூதர்கள் தூஷணித்தும் அவைகள் அற்புதங்களால் ரூபிக்கப்பட்டது. ௰௩. யூதர்களுக்குள் இருந்த மந்திரவாதிகள், ௰௬. பசாசினால் அடிக்கப்பட்டது. ௰௯. மந்திர தந்திர புத்தகங்கள் சுட்

Digitized by Google

பெரிக்கப்பட்டது. ௨௪. தெமேத்திரியு ஆசாபத்தின்நிமித்தம் பவுலுக்கு விரோதமாய்ப் பண்ணின கலகத்தை, ௩௫. சம்பிரதி அமர்த்தினது.

[1]அப்பொல்லோஸ் என்பவன் கொரிந்து பட்டணத்தில் இருக்கையில், பவுல் மேலான தேசங்களில் திரிந்துகொண்டு எபேசுபட்டணத்திற்குப் போனபொழுது,

௨ சில சீஷரைக் கண்டு, நீங்கள் விசுவாசிகளானபொழுது பரிசுத்த ஆவியைப் பெற்றுக்கொண்டீர்களா என்றான்; [2]அதற்கு அவர்கள், பரிசுத்த ஆவி உண்டென்று நாங்கள் கேள்விப்படவும் இல்லை என்றார்கள்.

௩ அப்பொழுது அவன் சொன்னது: அப்படியானால் எப்படிப்பட்ட ஞானஸ்நானம் பெற்றீர்கள் என்றான், [3]அவர்கள் யோவான் கொடுத்த ஸ்நானத்தைப் பெற்றோம் என்றார்கள்.

௪ அப்பொழுது பவுல் சொன்னது: [4]யோவான் தனக்குப் பின் வருகிறவராகிய கிறிஸ்து இயேசுவை விசுவாசிக்க வேண்டும் என்று சனங்களுக்குச் சொல்லி, மனந்திருப்புதற்கு ஏற்ற ஞானஸ்நானத்தைக் கொடுத்தானே என்றான்.

௫ அதை அவர்கள் கேட்டபொழுது, அவர்கள் [5]கர்த்தராகிய இயேசுவினுடைய நாமத்தினாலே ஞானஸ்நானம் பெற்றார்கள்.

௬ அல்லாமலும், [6]பவுல் அவர்கள்மேலே கைகளை வைத்தபொழுது, பரிசுத்தஆவியானவர் அவர்களிடத்தில் வந்தார்; [7]அவர்கள் அந்நியபாஷைகளைப் பேசி, தீர்க்கதரிசனம் சொன்னார்கள்.

௭ அந்த மனிதர் எல்லாரும் ஏறக்குறையப் பன்னிரண்டுபேராம்.

௮ ¶ பின்பு (பவுல்) [8]செபஆலயத்திற்குப் போய், தயிரியமாய்ப் பிரசங்கம்பண்ணி, மூன்றுமாதமளவும் [9]பராபரனுடைய இராச்சியத்திற்கு உரியவைகளைப் பேசி, தெளிவாய்க் காண்பித்துக்கொண்டுவந்தான்.

௯ [10]சிலர் கடினமான மனதுள்ளவர்களுமாய் அவிசுவாசிகளுமாயிருந்து, [11]கூட்டத்திற்குமுன்பாக இந்த மார்க்கத்தை நிந்தித்தபொழுது, அவன் அவர்களைவிட்டு விலகி, சீஷரை அவர்களிலிருந்து பிரித்துக்கொண்டு, திறன்னு என்பவனுடைய பள்ளிக்கூடத்திலே நாள்தோறும் சம்பாஷித்துக்கொண்டுவந்தான்.

௰ [12]இப்படி இரண்டுவருஷம் நடந்தது; அதினாலே ஆசியாவிலே குடியிருந்த யூதர்கள் கிரேக்கர் இவர்கள் எல்லாரும் கர்த்தராகிய இயேசுவைக்குறித்துவசனத்தைக் கேள்விப்பட்டார்கள்.

௰௧ அன்றியும் [13]அதிசயமான அற்புதங்களைப் பராபரன் பவுலின் கைகளினாலே செய்துவருகையில்,

௰௨ [14]அவனுடைய சரீரத்தில் இருந்த வேர்வைச்சேலைகளையும் கச்சைகளையும் வியாதியுள்ளவர்கள்மேல் வைத்தவுடனே வியாதிகள் அவர்களைவிட்டு நீங்கிப்போயின; பொல்லாத ஆவிகளும் அவர்களிலிருந்து புறப்பட்டன.

௰௩ ¶ [15]அப்பொழுது தேசாந்தரிகளாய்த் திரிகிற மந்திரவாதிகளாகிய யூதரில் சிலர் பொல்லாத ஆவிகள் பிடித்திருந்தவர்கள்மேல் [16]கர்த்தராகிய இயேசுவின் நாமத்தைச் சொல்லத்துணிந்து, பவுல் பிரசங்கிக்கிற இயேசுவின்பேரிலே உங்களுக்கு ஆணையிடுகிறோம் என்றார்கள்.

௰௪ பிரதான ஆசாரியனாகிய இஸ்கேவா என்னும் யூதனுடைய குமாரர் ஏழுபேர்களே அப்படிச் செய்தார்கள்.

௰௫ அவர்களுக்கு உத்தரவாகப் பொல்லாத ஆவி சொன்னதாவது: இயேசுவை அறிந்திருக்கிறேன், பவுலையும் அறிவேன், நீங்கள் யார் என்று சொன்னவுடனே,

கி. பி. ௫௪.

1 ௧ கொரி. ௧. ௰௨: ௩. ௫, ௬.
2 அப். அ. ௰௬. ௧ சாமு. ௩ ௭.
3 அப். ௰அ. ௨௫.
4 மத். ௩. ௰௧. யோவா. ௧. ௰௫, ௨௭, ௩௦. அப். ௧. ௫: ௰௧. ௰௬: ௰௩. ௨௪, ௨௫.
5 அப். அ. ௰௭.
6 அப். ௬. ௬: அ. ௰௭.
7 அப். ௨. ௪: ௰. ௪௬.
8 அப். ௰௭. ௨: ௰அ. ௪.
9 அப். ௧. ௩: ௨அ. ௨௩.
10 ௨ தீமோ. ௧. ௰௫. ௨ பே. ௨. ௨. யூதா. ௰.
11 அப். ௯. ௨: ௨௨. ௪: ௨௪. ௰௪. ௨௩. ௪௪.
12 அப். ௨௰. ௩௧.
13 மாற். ௰௬. ௨௰. அப். ௰௪. ௩.
14 அப். ௫. ௰௫. ௨ இரா. ௪. ௨௯.
15 மத். ௰௨. ௨௭.
16 மாற். ௯. ௩௮. லூக். ௯. ௪௯.

Digitized by Google

௰௬ பொல்லாத ஆவியையுடைய மனிதன் அவர்கள்மேல் பாய்ந்து, அவர்களைத் தனக்குட்படுத்திச் செயிக்க, அவர்கள் நிருவாணிகளாயும் காயம்பட்டவர்களாயும் அந்த வீட்டைவிட்டு ஓடிப்போனார்கள்.

௰௭ அது எபேசிலே குடியிருக்கிற யூதர், கிரேக்கர் அனைவருக்கும் தெரியவந்தபொழுது, [1]அவர்கள் எல்லாரும் பயமடைந்தார்கள்; அல்லாமலும் கர்த்தராகிய இயேசுவின் நாமம் அவர்களுக்குள்ளே மேன்மைப்பட்டது.

௰௮ அன்றியும், விசுவாசிகளானவர்களில் அநேகர் சேர்ந்து, [2]தங்கள் செய்கைகளை வெளிப்படுத்தி அறிக்கையிட்டார்கள்.

௰௯ அன்றியும், வீண்வித்தைக்காரராய் இருந்தவர்களில் அநேகர் தங்கள் புத்தகங்களைக் கொண்டுவந்து, எல்லார்முன்பாகவும் சுட்டெரித்தார்கள்.

௨௰ அவைகளின் கிரயம் ஐம்பதினாயிரம் வெள்ளிக்காசு என்று மதிக்கப்பட்டது; [3]இவ்வளவு பலமாய்க் கர்த்தருடைய வசனம் வளர்ந்து வல்லமையைக் காண்பித்தது.

௨௧ ¶ [4]இவை நிறைவேறினபின்பு, [5]பவுல் மக்கேதோனியா அகாயா என்னும் தேசங்களின் வழியாய் எருசலேமுக்குப் போகும்படி மனதிலே யோசனைகொண்டு, நான் அங்கேயிருந்து, பின்பு [6]உரோமை நகரியையும் பார்க்கவேண்டும் என்று சொல்லிக்கொண்டு,

௨௨ [7]தனக்கு உதவிசெய்தவர்களில் இரண்டுபேராகிய தீமோத்தேயுவையும், [8]ஏரஸ்துவையும் மக்கேதோனியா நாட்டிற்கு அனுப்பி, தான் பின்னும் சிலகாலம் ஆசியாநாட்டிலே இருந்தான்.

௨௩ ¶ [9]அக்காலத்திற்குள்ளே [10]இந்த மார்க்கத்தைக்குறித்து மிகுந்த கலகம் உண்டாயிற்று.

௨௪ எப்படியென்றால், தேமேத்திரி என்று நாமமுள்ள ஒரு தட்டான் தியானாள்தேவிக்காக வெள்ளியினால் சிறு கோவில்களைச் செய்துகொண்டு, [11]தொழிலாளிகளுக்கு மிகுந்த ஆதாயம் வருவித்து வந்தான்.

௨௫ அவர்களையும், அப்படிப்பட்ட தொழிலைச் செய்கிற மற்றவர்களையும் அவன் கூடிவரச்செய்து சொன்னதாவது: மனிதர்களே, உங்களுக்குத்தெரிந்திருக்கிறபடி, பிழைப்பு இந்தத் தொழிலினாலே நமக்கு வருகின்றது.

௨௬ மேலும் நீங்கள் கண்டும் கேட்டுமிருக்கிறபடி, [12]அந்தப் பவுலென்பவன் கைகளால் செய்யப்பட்டவைகள் தேவர்களல்ல என்று சொல்லி, எபேசிலேமாத்திரம் அல்ல, கொஞ்சங்குறைய ஆசியா நாட்டில் எங்கும் அநேக சனங்களுக்குப் போதித்து, அவர்களை மாறுபாடாக்குகிறான்.

௨௭ அதினாலே நம்முடைய அலுவல் கனஈனமடைவதற்கு ஏதுவாயிருக்கிறதும் அல்லாமல், மகாதேவியாகிய தியானாளுடைய கோவில் எண்ணமற்றுப்போகிறதற்கும் ஆசியாதேசத்தார் எல்லாராலும் பூச்சக்கரத்திலுள்ள யாவராலும் சேவிக்கப்படுகிற அவளுடைய மகிமை அழிந்துபோகிறதற்கும் ஏது உண்டாயிருக்கின்றது என்றான்.

௨௮ ¶ அதை அவர்கள் கேட்டு, மிகுந்த கோபமடைந்து, எபேசியருடைய தியானாளே பெரியவள் என்று கூப்பிட்டுக்கொண்டார்கள்.

௨௯ பட்டணம் முழுவதும் கலகத்தினாலே நிரப்பப்பட்டது, மேலும் அவர்கள் பவுலுடனேகூடப் பிரயாணமாய் வந்த மக்கேதோனியராகிய [13]காயுவையும் [14]அரிஸ்தர்குவையும் இழுத்துக்கொண்டு, ஒருமனப்பட்டு, வேடிக்கைஸ்தலத்திற்குப் பாய்ந்து ஓடினார்கள்.

ஙி. பி. ௫௮.

1 லூக். ௧. ௬௫: ௭. ௰௬. அப். ௨. ௪௩: ௫. ௫, ௰௧.
2 மத். ௩. ௬.
3 அப். ௬. ௭: ௰௨. ௨௪.
4 உரோ. ௰௫. ௨௫. கலா. ௨. ௧.
5 அப். ௨௰. ௨௨.
6 அப். ௰௮. ௨௧: ௨௩. ௰௧. உரோ. ௰௫. ௨௪-௨௮.
7 அப். ௰௩. ௫.
8 உரோ. ௰௬. ௨௩. ௨ தீமோ. ௪. ௨௰.
9 ௨ கொரி. ௧. ௮.
10 அப். ௯. ௨.
11 அப். ௰௬ ௰௬, ௰௯.
12 சங். ௱௰௫. ௪. ஏசா. ௪௪. ௰-௨௰. எரே. ௰. ௩.
13 உரோ. ௰௬. ௨௩. ௧ கொரி. ௧. ௰௪.
14 அப். ௨௰. ௪: ௨௭. ௨. கொலோ. ௪. ௰. பிலே. ௨௪.

௩௰ அப்பொழுது பவுல் கூட்டத்தில் போக மனதாயிருந்தான்; சீஷர் அவனைப் போகவிடவில்லை.

௩௧ மேலும் வேடிக்கை ஸ்தலத்திற்கு அவன் போகாமலிருப்பதற்கு வேண்டிக்கொள்ளும்படிக்கு அவனுடைய சிநேகிதராகிய ஆசியா தேசத்தலைவரில் சிலர் அவனிடத்திற்கு ஆளனுப்பினார்கள்.

௩௨ அன்றியும் கூட்டம் கலக்கமுள்ளதாயிருக்க, அநேகர் தாங்கள் கூடிவந்த காரணத்தை அறியாதவர்களானபடியினாலே, சனங்கள் பலவிதமாய்க் கூக்குரலிட்டார்கள்.

௩௩ அப்பொழுது யூதர்கள் அலெக்குசந்தர் என்பவனை முன்னிற்கத் தள்ளுகையில், கூட்டத்தில் சிலர் அவனை முன்னே இழுத்தார்கள்; [1]அலெக்குசந்தர் கையினால் [2]சமிக்கைகாட்டி, சனங்களுக்கு உத்தரவுசொல்ல விரும்பினான்.

௩௪ அவனை யூதனென்று அவர்கள் அறிந்தபொழுது, எல்லாரும் எபேசியருடைய தியானாளே பெரியவள் என்று இரண்டுமணிநேரமளவும் ஏகமாய்க் கூப்பிட்டுக்கொண்டார்கள்.

௩௫ ¶ பின்பு மணியக்காரனாவன் சனங்கள் பேசாமலிருக்கும்படி செய்து சொன்னதாவது: எபேசியரே, எபேசிபட்டணம் மகா தேவியாகிய தியானாளுக்கும், வானத்திலிருந்து விழுந்த சொரூபத்திற்கும், கோவில் பரிசாரகியாய்* இருக்கிறதை அறியாதவன் உண்டா?

௩௬ அது எதிர்ப்பேசப்படாத காரியமானபடியினாலே, நீங்கள் ஒன்றும் பதறிச்செய்யாமல் அமைந்திருக்கவேண்டும்.

௩௭ இந்த மனிதர் கோவில்கொள்ளைக்காரர் அல்ல, உங்கள் தேவியைத்தூஷணித்தவர்களும் அல்ல, இப்படியிருந்தும் இவர்களை இங்கே கொண்டுவந்தீர்கள்.

௩௮ தேமேத்திரியுக்கும், அவனைச் சேர்ந்திருக்கிற தொழிற்காரருக்கும், ஒருவன்மேல் ஒரு காரியம் உண்டாயிருந்தால், நியாயம் விசாரிக்கும் நாள்களும்† துரைகளும் இருக்கிறபடியினாலே, ஒருவருக்கொருவர் விரோதமான பிராது அங்கே பண்ணக்கடவர்கள்.

௩௯ நீங்கள் வேறொரு காரியத்தை விசாரித்தால், அது நியாயசங்கத்திலே‡ தீர்க்கப்படுமே.

௪௰ இன்றைக்கு உண்டான கலகத்திற்காக நாம் உத்தரவு சொல்ல அழைக்கப்படுவதற்கு ஏது உண்டாயிருக்கின்றது; இந்தக் கலகம் பண்ணுவதற்கு நிமித்தமில்லாதபடியால், நாம் அதைக்குறித்து உத்தரவு சொல்லத் திராணியில்லாதிருப்போமே என்று சொல்லி,

௪௧ பின்பு கூட்டத்தை அனுப்பிவிட்டான்.

## ௨௰. அதிகாரம்.

௧. பவுல் மக்கேதோனியாவுக்குப் போனது. ௭. அவன் கர்த்தருடைய இராப்போசனத்தைப் பகிர்ந்து பிரசங்கித்தது. ௯. ஐத்திகு விழுந்து செத்த பின்பு, ௰. உயிரோடெழுப்பப்பட்டது. ௰௭. மிலேத்துவிலிருந்த மூப்பர்களை அழைப்பித்து, அவர்களுக்குத் தனக்குச் சம்பவிக்கப்போகிறதைச் சொல்லி, ௨௮. பாராபரனுடைய சபையை அவர்களுக்கு ஒப்புவித்து, ௨௯. கள்ளப்போதகர்களுக்கு எச்சரிக்கையாயிருக்கச் சொல்லி, ௩௨. அவர்களைப் பாராபரனுடைய கிருபைக்கு ஒப்புவித்து, ௩௬. அவர்களோடே செபம்பண்ணிப் பயணப்பட்டது.

கலகம் அமைந்தபின்பு, பவுல் சீஷரைத் தன்னிடத்தில் அழைத்து உத்தரவு வாங்கிக்கொண்டு, [3]மக்கேதோனியாவுக்குப் போகப் புறப்பட்டுப்போய், அந்தப்புறங்களில் திரிந்துகொண்டு,

௨ சீஷர்களுக்கு அநேக வார்த்தைகளினால் புத்திசொல்லிக்கொண்டு, கிரேக்கை தேசத்திலே சேர்ந்தான்.

௩ அங்கே மூன்றுமாதம் சஞ்சரித்தபின்பு, அவன் கப்பலேறிச் சீரியா நாட்டிற்குப் போக மனதாயிருந்தபொழுது, [4]யூதர்கள் அவனுக்குத் தீமைசெய்ய இரகசிய

கி. பி. ௫௬.

1 ௧ தீமோ. ௧. ௨௰. ௨ தீமோ. ௪. ௰௪.
2 அப். ௰௨. ௰௭.
* அல்லது தொண்டனைப்.
† அல்லது நியாயப் பிரமாணமும்.
‡ அல்லது முறைமைச் சங்கத்திலே.
3 ௧ கொரி. ௰௬. ௫. ௧ தீமோ. ௧. ௩.
4 அப். ௯. ௨௩: ௨௩. ௰௨: ௨௫. ௨ கொரி ௰௧. ௨௬.

Digitized by Google

மாய் யோசனைகொண்டிருந்தபடி
யால் மக்கேதோனியா நாட்டின்
வழியாய்த் திரும்பிப்போகத் தீர்
மானம்பண்ணினான்.

௪ அப்பொழுது ஆசியாதேசம்வ
ரைக்கும் அவனோடேகூடப் போ
னவர்கள் பேரோசியா ஊரானாகி
ய சொப்பத்தர், தெசலோனிக்கே
யரில் [1]அரிஸ்தருக்கு, செக்குந்து,
[2]தெருபேயனாகிய காயு, [3]தீமோத்
தேயு, [4]ஆசியாதேசத்தாராகிய தி
கிக்கு, [5]திரோப்பீமு இவர்களே.

௫ அவர்கள் முன்னாகப் போய்த்
துரோவா பட்டணத்திலே நாங்
கள் வரும்படி காத்திருந்தார்கள்.

௬ நாங்கள் [6]புளியாத அப்பப்
பண்டிகை நாள்களுக்குப் பின்பு
கப்பலேறி, பிலிப்பு பட்டணத்
தைவிட்டு ஐந்து நாளைக்குள்ளே
[7]துரோவா பட்டணத்திலே அவர்
களிடத்தில் சேர்ந்து, அங்கே ஏழு
நாள் சஞ்சரித்தோம்.

௭ ¶ [8]அப்பொழுது வாரத்து
முதல் நாளிலே [9]சீஷர் அப்பம்
பிட்கும்படிக்குக் கூடிவந்திருக்
கையில், பவுல் மறுநாளிலே புறப்
படவேண்டுமென்றிருந்து, அவர்
களுடனே பேசிக்கொண்டு பாதி
இராத்திரி அளவும் பிரசங்கத்தை
நீடித்துப் பேசினான்.

௮ [10]நாங்கள் கூடியிருந்த மெத்
தைவீட்டிலே அநேக விளக்குகள்
வைக்கப்பட்டிருந்தன.

௯ அப்பொழுது ஐத்திகு என்
று பேர்கொண்ட ஒரு வாலிபன்
சாளரவாசலில் உளுக்கார்ந்திருந்
து, பவுல் மிகுந்தகாலம் பேசிக்
கொண்டுவருகையில், கனதூக்கம்
அடைந்து, நித்திரையினால் செ
யிக்கப்பட்டுச் சாய்ந்து, மூன்றும்
மெத்தையிலிருந்து தாழவிழுந்து,
மரித்தவனாய் எடுக்கப்பட்டான்.

௰ உடனே பவுல் இறங்கிப்
போய், [11]அவன்மேலே விழுந்து
அணைத்துக்கொண்டு, பின்பு [12]உ
யிர் இவனுக்குள் இருக்கின்றதா

இ. பி. கும.

1 அப். ௰௯. ௨௯: ௨௭. ௨. கொலோ. ௪. ௰.
2 அப். ௰௯. ௨௯.
3 அப். ௰௬. ௧.
4 எபே. ௬. ௨௧. கொலோ. ௪. ௭. ௨ தீமோ. ௪. ௰௨. தீத். ௩. ௰௨.
5 அப். ௨௧. ௨௯. ௨ தீமோ. ௪. ௨௰.
6 ௨ மோ. ௰௨. ௰௪, ௰௫: ௨௩. ௰௫.
7 அப். ௰௬. ௮. ௨ கொரி. ௨. ௰௨. ௨ தீமோ. ௪. ௰௩.
8 ௧ கொரி. ௰௬. ௨. வெளி. ௧. ௰.
9 அப் ௨. ௪௨, ௪௬. ௧ கொரி. ௰. ௰௬: ௰௧. ௨௰.
10 அப். ௧. ௰௩.
11 ௧ இரா. ௰௭. ௨௧. ௨ இரா. ௪. ௩௪.
12 மத். ௯. ௨௪.
13 அப். ௨. ௧. ௧ கொரி. ௰௬. ௮.
14 அப். ௨௪. ௰௭.
15 அப். ௰௮. ௨௧: ௰௯. ௨௧: ௨௧. ௪, ௰௨.
16 அப். ௰௮. ௰௯: ௰௯. ௧, ௰.

கையால் கலக்கப்படாதிருங்கள்
என்று சொல்லி,

௰௧ பின்பு ஏறிப்போய் அப்
பம்பிட்டுப் புசித்து, மிகுந்த நே
ரம் விடியற்காலம் அளவும் பே
சிக்கொண்டு பின்பு புறப்பட்
டான்.

௰௨ அந்த வாலிபனை அவர்கள்
உயிருள்ளவனாக அழைத்துவந்து,
மிகவும் ஆறுதலடைந்தார்கள்.

௰௩ ¶ பவுல் (அசுபட்டணம்
வரைக்கும்) தான் காலால் நடக்க
விரும்பி, நாங்கள் முன்னாலே கப்
பலேறி அவ்விடத்திற்குப் போய்,
அங்கே தன்னை ஏற்றிக்கொள்ளும்
படி எங்களுக்கு உத்தரவுகொடுத்
தபடியினாலே, நாங்கள் அசுபட்
டணத்திற்குப் போயிருந்தோம்.

௰௪ பின்பு அவன் அவ்விடத்
திலே எங்களோடே சேர்ந்தபொ
ழுது, நாங்கள் அவனை ஏற்றிக்
கொண்டு, மித்திலேனுபட்டணத்
திற்குப் போய்,

௰௫ பின்பு அவ்விடத்தைவிட்டு,
மறுநாளிலே கீயுதீவுக்கு எதிராகச்
சென்று,

௰௬ பவுல் எப்படியும் [13]பெந்தே
கோஸ்துப் பண்டிகை நாளிலே
[14]எருசலேம் நகரத்தில்சேரவேண்
டும் என்று [15]தீவிரப்பட்டபடியி
னாலே அவன் ஆசியா நாட்டிலே
காலம்போக்காதபடிக்கு, எபேசு
பட்டணத்தைக் கடந்துபோக
வேண்டும் என்று தீர்மானம்பண்
ணினதால், மறுநாளிலே சாமுதீ
வை அடைந்து, துரோகில்லி
யோன் ஊர்த்துறையிலே தங்கி,
மறுநாளிலே மிலேத்து பட்டணத்
திற்குப் போனோம்.

௰௭ ¶ மிலேத்துவிலிருந்து அ
வன் எபேசுவிலுள்ள சபையின்
மூப்பரை அழைத்துவரும்படிக்கு
ஆளனுப்பினான்; அவர்கள் தன்
னிடத்தில் சேர்ந்தபொழுது,

௰௮ அவன் அவர்களுடனே
சொன்னதாவது: [16]நான் ஆசியா
நாட்டில் வந்த முதலாம் நாள்தொ

Digitized by Google

டங்கி எல்லாக் காலங்களிலும் நான் உங்களுடனேகூட இருந்த வகையை அறிந்திருக்கிறீர்கள்.

௰௯ எல்லாவிதமான மனத்தாழ்மையோடும், மிகுந்த கண்ணீரோடும், [1]யூதருடைய தீமையான யோசனைகளால் எனக்கு நேரிட்ட சோதனைகளோடும், நான் கர்த்தருக்கு ஊழியம் செய்துகொண்டு வந்தேன்.

௨௰ [2]பிரயோசனமானவைகளில் ஒன்றையும் நான் மறைத்துவைக்கவில்லை, வெளியரங்கமாயும் வீடுகள்தோறும் உங்களுக்கு அறிவித்து, உங்களுக்கு உபதேசம்பண்ணிக்கொண்டு வந்தேன்.

௨௧ [3]பராபரனிடத்திற்கு மனந்திரும்புதலையும், நம்முடைய கர்த்தராயிருக்கிற இயேசுக்கிறிஸ்துவை விசுவாசித்துக்கொள்ளுதலையுங்குறித்து, [4]நான் யூதருக்கும் கிரேக்கருக்கும் சாட்சிகொடுத்தேன்.

௨௨ இப்பொழுது நான் [5]ஆவியிலே கட்டுண்டு எருசலேமுக்குப் போகிறேன்; அங்கே எனக்கு எதிர்ப்படும் காரியங்களை நான் அறியேன்.

௨௩ கயிறுகளும் உபத்திரவங்களும் எனக்காக வைத்திருக்கின்றன* என்று [6]பரிசுத்தஆவியானவர் பட்டணந்தோறும் (எனக்கு) அறிவிக்கிறதைமாத்திரம் அறிந்திருக்கிறேன்.

௨௪ அப்படியிருந்தும் [7]அவைகளில் ஒன்றையுங்குறித்துக் கவலைப்படேன்; என் பிராணனையும் நான் அருமையென்று எண்ணேன்; [8]என் ஓட்டத்தைச் சந்தோஷத்தோடே முடிக்கவும், பராபரனுடைய கிருபையை அறிவிக்கிற சுவிசேஷத்தைப் பிரசங்கம்பண்ணும்படிக்கு [9]நான் கர்த்தராகிய இயேசுவினிடத்தில் பெற்ற [10]ஊழியத்தை முடிக்கவுமே விரும்புகிறேன்.

௨௫ அன்றியும் [11]நான் உங்களுக்குள்ளே திரிந்து, பராபரனுடைய இராச்சியத்தைக்குறித்துப் பிரசங்கம்பண்ணிக்கொண்டு வந்தேனே, அதைக் கேட்டவர்களாகிய நீங்கள் எல்லாரும் இனி என் முகத்தைப் பார்க்கமாட்டீர்கள் என்று அறிந்திருக்கிறேன்.

௨௬ அப்படியிருக்க, [12]பராபரனுடைய ஆலோசனையில் ஒன்றையும் [13]நான் மறைத்துவையாமல், யாவையும் உங்களுக்கு அறிவித்தபடியினாலே,

௨௭ உங்களில் ஒருவன் கெட்டுப்போனால், [14]அதினாலே எனக்குக் குற்றம் வருவதில்லை என்று இன்றைக்கே உங்களுக்குச் சாட்சியாகச் சொல்லுகிறேன்.

௨௮ ஆகையால் நீங்கள் உங்களைக்குறித்தும், பராபரன் தமது [15]சுய இரத்தத்தினாலே [16]சம்பாதித்துக்கொண்ட தமது சபையாகிய ஆட்டுக்கூட்டம் முழுவதையும் மேய்ப்பதற்குப் [17]பரிசுத்தஆவி உங்களைக் கண்காணிகளாக வைத்தபடியால், அதைக்குறித்தும் [18]எச்சரிக்கையாய் இருப்பீர்களாக.

௨௯ மேலும் நான் போனபின்பு, ஆட்டுக்கூட்டத்தைத் தயையோடே நடப்பியாமல், [19]கொடிதாயிருக்கிற கோனாய்கள் உங்களுக்குள்ளே பிரவேசிக்கும்.

௩௰ அதுவுமல்லாமல் [20]உங்களிலும் சிலர் எழும்பி, சீஷர்களைத் தங்களிடத்தில் இழுத்துக்கொள்ளும்படிக்கு, மாறுபாடானவைகளைப் போதிப்பார்கள் என்று அறிந்திருக்கிறேன்.

௩௧ ஆனபடியினாலே நீங்கள் விழித்துக்கொண்டு, [21]நான் மூன்று வருஷமாய் இரவும்பகலும் அவனவனுக்குக் கண்ணீரோடே புத்திசொல்லிக்கொண்டு வந்ததை நினைத்துக்கொள்வீர்களாக.

௩௨ இப்பொழுது சகோதரரே, பராபரனுக்கும் [22]அவருடைய கிருபையை அறிவிக்கிற வார்த்தைக்கும் உங்களை ஒப்புக்கொடுக்கிறேன்; [23]அவரே உங்களை எறக்

கி. பி. ௫௰.

1 க. வச.
2 உஎ. வச.
3 மாற். க. ௰௫. லூக். உச. சஎ. அப். உ. ௩அ.
4 அப். ௰அ. ௫.
5 அப். ௰௯. உக.
* அல்லது சேரி டுகின்றன.
6 அப். உக. ச,௰௧. க தெச. ௩. ௩.
7 அப். உக. ௰௩. உரோ. அ. ௩௯. உ கொரி. ச. ௰௬.
8 உ தீமோ. ச. எ.
9 கலா. க. க. தீத். க. ௩.
10 அப். க. ௰எ. உ கொரி. ச. க.
11 ௩அ. வச. உரோ. ௰௫. உ௩.
12 லூக். எ. ௩௰. யோவா. ௰௫. ௰௫. எபே. க. ௰௧.
13 உ௰. வச.
14 அப். ௰அ. ௬. உ கொரி. எ. உ.
15 எபி. ௯. ௰ச.
16 எபே. க. அ, ௰ச. கொலோ. க. ௰ச. எபி. ௯. ௰உ. க பே. க. ௰௯. வெளி. ௫. ௯.
17 க கொரி. ௰உ. உஅ.
18 க தீமோ. ச. ௰௬. க பே. ௫. உ.
19 மத். எ. ௰௫. உ பே. உ. க.
20 க தீமோ. க. உ௰. கயோ. உ. ௰௯.
21 அப். ௰௯. ௰.
22 எபி. ௰௩. ௯.
23 அப். ௯. ௩௧.

Digitized by Google

கட்டவும், [1]பரிசுத்தமாக்கப்பட்ட எல்லாரும் இருக்கிற இடத்திலே சுதந்தரத்தை உங்களுக்குக் கொடுக்கவும் வல்லமையுள்ளவராய் இருக்கிறார்.

௩௩ [2]ஒருவனுடைய வெள்ளியையாகிலும், பொன்னையாகிலும் உடுப்பையாகிலும் நான் இச்சிக்கவில்லை.

௩௪ நீங்கள் அறிந்திருக்கிறபடி நானும் என்னுடனேகூட இருந்தவர்களும் வேண்டிய பதார்த்தங்களை அடையும்படிக்கு, [3]இந்தக் கைகளே வேலைசெய்தன.

௩௫ [4]அப்படியே வேலைசெய்து பலவீனரைத் தாங்கவும், வாங்குகிறதிலும் கொடுக்கிறதே பாக்கியம் என்று கர்த்தராகிய இயேசு சொன்ன வசனங்களை நினைக்கவும் வேண்டும் என்று எல்லாவிதத்தாலும் உங்களுக்குக் காண்பித்தேன் என்று சொல்லி,

௩௬ ¶ பின்பு [5]முழங்காற்படியிட்டு, அவர்கள் எல்லாரோடுங்கூடச் செபம்பண்ணினான்.

௩௭ இனிமேல் நீங்கள் என்னுடைய முகத்தைப் பார்க்கமாட்டீர்கள் என்று [6]அவன் சொன்ன வசனத்திற்காக, அவர்கள் எல்லாரும் அதிகமாய்த் துக்கப்பட்டு,

௩௮ மிகவும் அழுதுகொண்டு, [7]பவுலின் கழுத்தைக் கட்டிக்கொண்டு, அவனை முத்தம்செய்து, பின்பு கப்பல்வரைக்கும் அவனுடனேகூடப்போய் அனுப்பிவிட்டார்கள்.

## ௨௧. அதிகாரம்.

க. பவுல் எருசலேமுக்குப் பயணமானது. ௯. பிலிப்பின் குமாரத்திகள் தீர்க்கதரிசனம் சொல்லுகிறவர்களாயிருந்தது. ௰௭. பவுல் எருசலேமுக்கு வந்து, ௨௭. யூதர்களால் பிடிக்கப்பட்டபோது, ௩௧. பிரதான சேர்வைக்காரனால் விடுதலையாகிச் சனங்களிடத்தில் பேசும்படி உத்தரவுபெற்றது.

நாங்கள் அவர்களைவிட்டுப் பிரிந்து துறைபேர்ந்தபின்பு, நேராய்ப் போய்க் கோஸ்தீவில் சென்று, மறுநாளிலே உரோது தீவில் சென்று, அதில்நின்று பத்தரா பட்டணத்திற்குப் போய்,

௨ அங்கே பேனீக்கே தேசத்திற்குப்போக எத்தனமாயிருந்த கப்பலைக் கண்டு அதில் ஏறிப்போய்,

௩ சீப்புரு தீவைக் கண்டு, அதை இடதுபுறமாக விட்டுச் சீரியா நாட்டிற்கு ஓடி, தீறு பட்டணத்திலே அவர்கள் கப்பலின் சரக்குகளை இறக்கவேண்டியபடியால் அவ்விடத்திலே சேர்ந்து,

௪ பின்பு சீஷரைக் கண்டு ஏழு நாள் அங்கே தங்கினோம்; அவர்கள் பவுலை நோக்கி, நீர் [8]எருசலேமுக்குப் போகக்கூடாதென்று ஆவியினாலே சொன்னார்கள்.

௫ நாங்கள் அந்நாள்களை முடித்தபின்பு புறப்பட்டுப்போனபொழுது, அவர்கள் எல்லாரும் மனைவிகளோடும் பிள்ளைகளோடுங்கூடப் பட்டணத்திற்குப் புறம்பே (சமுத்திரம்)வரைக்கும் எங்களை வழிநடத்தினார்கள்; கடற்கரையிலே நாங்கள் [9]முழங்காற் படியிட்டுச் செபம்பண்ணி,

௬ ஒருவரிடத்திலே ஒருவர் உத்தரவு வாங்கிக்கொண்டபின்பு, நாங்கள் கப்பலேறினோம்; [10]அவர்கள் தங்கள் வீடுகளுக்குத் திரும்பினார்கள்.

௭ ¶ நாங்கள் தீறு பட்டணத்தைவிட்டுப் பித்தோலேமாயா பட்டணத்திற்குப்போய், கப்பல் யாத்திரையை முடித்துச் சகோதரரை வாழ்த்தி, ஒருநாள் அவர்களிடத்தில் தங்கினோம்.

௮ மறுநாளிலே பவுலைச் சேர்ந்த நாங்கள் புறப்பட்டுச் சேசாரியா பட்டணத்திற்குப்போய், [11]ஏழுபேரில் ஒருவனாகிய பிலிப்பென்னும் [12]சுவிசேஷனுடைய வீட்டிற்குச் சென்று, அவனிடத்திலே தங்கினோம்.

௯ அவனுக்கு உண்டான குமாரத்திகளாகிய நான்கு கன்னிகைகளும் [13]தீர்க்கதரிசனம் சொல்லுகிறவர்களாய் இருந்தார்கள்.

இ. பி. கூய.

1 அப். உக. ௰அ. எபே. க. ௰அ. கொலோ. க. ௰உ: ௩. உச. எபி. கூ. ௰ஞ. க பே. க. ச.
2 க சாமு. ௰உ. ௩. க கொரி. கூ. ௰உ. உ கொரி. எ. உ: ௰க. கூ: ௰உ. ௰எ.
3 அப். ௰அ. ௩. க கொரி. ச. ௰உ. க தெச. உ. கூ. உ தெச. ௩. அ.
4 உரோ. ௰ஞ. க. க கொரி கூ. ௰உ. உ கொரி. ௰க. கூ. ௰உ: ௰உ. ௰௩. எபே. ச. உஅ. க தெச. ச. ௰உ: ஞ. ௰ச. உ தெச. ௩. அ.
5 அப். எ. கூ௰: உக. ஞ.
6 உஞ. ௰ச.
7 க மோ. சஞ. ௰ச: சக. உக.
8 ௰உ. ௰ச. அப். உ௰. உக.
9 அப். உ௰. கக.
10 யோவா. க. ௰க.
11 அப். க. ஞ: அ. உக, ச௰.
12 எபே. ச. ௰க. உ தீமோ. ச. ஞ.
13 யோவே. உ. உஎ. அப். உ. ௰எ.

Digitized by Google

௰ மேலும் நாங்கள் அநேகநாள் அங்கே தங்கியிருக்கையில்,[1] ஆகாபு என்று பேர்கொண்ட ஒரு தீர்க்கதரிசி யூதேயாவிலிருந்து வந்திருந்தான்.

௰க அவன் எங்களிடத்தில் வந்து, பவுலினுடைய கச்சையை எடுத்து, தன் கைகளையும் கால்களையும் கட்டிக்கொண்டு,[2] இந்தக் கச்சையை உடையவனை எருசலேமிலுள்ள யூதர்கள் இப்படிக் கட்டி, புறத்தேசத்தார்களுடைய கைகளில் ஒப்புக்கொடுப்பார்கள் என்று பரிசுத்தஆவி சொல்லுகிறார் என்றான்.

௰உ அதை நாங்கள் கேட்டபொழுது, அவன் எருசலேமுக்குப் போகாதபடிக்கு நாங்களும் அத்தலத்தாரும் வேண்டிக்கொண்டோம்.

௰ஙூ பவுல் மாறுத்தரவாகச் சொன்னதாவது: [3]நீங்கள் அழுதுகொண்டு என் இருதயம் உடைந்துபோகப்பண்ணுகிறதென்ன? எருசலேமிலே நான் கர்த்தராகிய இயேசுவின் நாமத்திற்காகக் கட்டப்படுவதற்குமாத்திரம் அல்ல, மரிப்பதற்கும் எத்தனமாய் இருக்கிறேன் என்றான்.

௰ச இப்படி அவன் சம்மதியாதபடியினாலே, [4]நாங்கள் கர்த்தருடைய சித்தம் ஆகக்கடவதென்று அமைந்திருந்தோம்.

௰ரு ¶ அந்நாள்களுக்குப்பின்பு, நாங்கள் பிரயாணச் சாமான்களைச் சேர்த்துக்கொண்டு எருசலேமுக்குப் போனோம்.

௰சு சேசாரியா பட்டணத்திலுள்ள சீஷரில் சிலரும் எங்களுடனேகூட வந்து, சீப்புருதீவானுமாய், மிகுந்த காலம் சீஷனுமாய் இருந்த மினாசோனிடத்திலே தங்கும்படிக்கு எங்களை அவனிடத்தில் அழைத்தார்கள்.

௰எ ¶ [5]நாங்கள் எருசலேமில் சேர்ந்தபொழுது, சகோதரர் எங்களைச் சந்தோஷத்தோடே ஏற்றுக்கொண்டார்கள்.

௰அ மறுநாளிலே பவுலும் நாங்களும் [6]யாக்கோபினிடத்திற்குப் போனோம்; எல்லா மூப்பர்களும் அங்கே கூடிவந்தார்கள்.

௰கூ அவர்களுக்கு அவன் வாழ்த்துதல் செய்து, [7]பின்பு தன் ஊழியத்தினாலே பராபரன் [8]புறத்தேசத்தாருக்குள்ளே செய்தவைகளை ஒவ்வொன்றாய் விவரித்துச்சொன்னான்.

௨௰ (அதை) அவர்கள் கேட்டு, கர்த்தரைத் தோத்திரம்பண்ணி, பின்பு அவனுடனே சொன்னதாவது: சகோதரனே, யூதர்களில் அநேகம் ஆயிரம்பேர் விசுவாசிகளானதைப் பார்த்திருக்கிறாய்; அவர்கள் எல்லாரும் [9]நியாயப்பிரமாணத்துக்காக வைராக்கியமுள்ளவர்களாய் இருக்கிறார்கள்.

உக நீ புறத்தேசத்தாருக்குள்ளே இருக்கிற யூதரெல்லாரும் (தங்கள்) பிள்ளைகளை விருத்தசேதனம் பண்ணவும், மற்ற முறைமைகளின்படியே நடக்கவும் வேண்டுவதில்லையென்று சொல்லி, இவ்விதமாய் அவர்கள் மோசேயைவிட்டு விலகும்படி உபதேசிக்கிறாயென்று அவர்கள் கேள்விப்பட்டிருக்கிறார்கள்.

உஉ இப்பொழுது என்ன செய்யலாம்? நீ வந்ததை அவர்கள் கேள்விப்பட்டு, மெய்யாய்க் கூட்டங்கூடுவார்கள்.

உஙூ ஆகையால் நாங்கள் உனக்குச் சொல்லுகிறபடி நீ செய்யவேண்டும்; என்னவென்றால், நான்குபேர் பிரார்த்தனை பண்ணிக்கொண்டு எங்களிடத்தில் இருக்கிறார்கள்.

உச அவர்களை நீ சேர்த்து அவர்களுடனேகூடச் சுத்திபண்ணிக்கொண்டு, [10]அவர்கள் சிரச்சவரம் பண்ணுவதற்கு வேண்டிய செலவுபண்ணுவாயாக; அப்படிச் செய்தால் எல்லாரும் தங்களுக்கு உன்னைக்குறித்து அறிவிக்கப்பட்

கி. பி. ௬௰.

1 அப். ௰௧. உ௮.
2 ௬௧. வச. அப். உ௰. உ௩.
3 அப். உ௰. உச.
4 மத். ௬.௰:உ௬. சஉ. லூக். ௰௧. உ: உஉ. சஉ.
5 அப். ௰௫. ௪.
6 அப். ௰௫. ௰௩. கலா. ௧. ௰௯: உ. ௯.
7 அப். ௧. ௰ஏ: உ௰. உச.
8 அப். ௰௫. ௪, ௰உ. உரோ. ௰௫. ௰அ, ௰௯.
9 அப். உஉ. ௩. உரோ. ௰. உ. கலா. ௧. ௰ச.
10 ச மோ. ௬. உ, ௰௩, ௰௮. அப். ௰௮. ௰௮.

Digitized by Google

டது ஒன்றுமில்லை என்றும், நீதானே நியாயப்பிரமாணத்தைக் கைக்கொண்டு நடக்கிறவன் என்றும் அறிவார்கள்.

௨௫ விசுவாசிகளான புறத்தேசத்தார் இப்படிப்பட்டவைகளைக் கைக்கொள்ளாமல் விக்கிரகங்களுக்குப் படைத்ததற்கும், இரத்தத்திற்கும், நெருக்குண்டு செத்ததற்கும், வேசித்தனத்திற்கும் மாத்திரம் விலகியிருக்கவேண்டும் என்று நாங்கள் தீர்மானம்பண்ணி, [1]அவர்களுக்கு எழுதியனுப்பினோமே என்றார்கள்.

௨௬ ¶ அப்பொழுது பவுல் அந்த மனிதரைச் சேர்த்துக்கொண்டு மறுநாளிலே அவர்களுடனேகூடச் சுத்தம்பண்ணி, பின்பு [2]தேவாலயத்தில் பிரவேசித்து, அவர்களில் ஒவ்வொருவனுக்காக வேண்டிய பலி கொடுக்கப்படுமளவும், [3]சுத்தமாக்குதற்கேற்ற நாள்களை நிறைவேற்றுவேன் என்று அறிவித்தான்.

௨௭ ¶ அதற்கு ஏற்ற ஏழுநாளும் நிறைவேறிவருகையில், [4]ஆசியா தேசத்திலிருந்து வந்த யூதர்கள் தேவாலயத்திலே அவனைக் கண்டு, கூட்டமெல்லாம் கூடிவர அழைத்து,

௨௮ [5]அவன்மேல் கைகளைப் போட்டு, ஓய் இஸ்ரவேலரே, உதவிசெய்யுங்கள்; [6]இவனே நம்முடைய சனத்திற்கும் வேதப்பிரமாணத்திற்கும் இந்த ஸ்தலத்திற்கும் விரோதமாக எங்கும் எல்லாருக்கும் போதித்து வருகிறான்; அதுவுமல்லாமல், இந்தத் தேவாலயத்திலே கிரேக்கரையும் அழைத்து வந்து, இந்தப் பரிசுத்த ஸ்தலத்தை அசுசிப்படுத்தினான் என்று கூப்பிட்டார்கள்.

௨௯ முன்பு எபேசியனாகிய [7]திரோப்பீமு என்பவனைப் பட்டணத்திலே அவனுடனேகூட இருக்கக் கண்டிருந்து, பின்பு பவுல் அவனைத் தேவாலயத்திலே அழைத்து வந்தான் என்று நினைத்தபடியினாலே அப்படிச் சொன்னார்கள்.

௩௰ அப்பொழுது [8]நகரம் முழுவதும் கலக்கப்பட்டது; மேலும் சனங்கள் கூட்டமாய் ஓடிவந்து, பவுலைப் பிடித்து, அவனைத் தேவாலயத்திற்குப் புறம்பே இழுத்தார்கள்; உடனே வாசல்கள் பூட்டப்பட்டன.

௩௧ ¶ மேலும் அவர்கள் அவனைக் கொலைசெய்ய வகைதேடுகையில், எருசலேம் முழுவதும் கலக்கம் அடைந்திருக்கிறதென்று போர்ச்சேவகரின் சேனாபதி கேள்விப்பட்டு,

௩௨ [9]உடனே போர்ச்சேவகரையும் அவர்களுடைய தலைவரையும் சேர்த்துக்கொண்டு அவர்களிடத்திற்கு ஓடினான்; சேனாபதியையும் போர்ச்சேவகரையும் அவர்கள் கண்டபொழுது, பவுலை அடிப்பதை விட்டார்கள்.

௩௩ அப்பொழுது சேனாபதி சேர்ந்து அவனைப் பிடித்து, [10]இரண்டு சங்கிலிகளினாலே கட்டும்படி சொல்லி, இவன் யாவனென்றும் என்ன செய்தானென்றும் விசாரித்தான்.

௩௪ அதற்குச் சனங்கள் பலவிதமாய்க் கூப்பிட்டார்கள்; அப்பொழுது கலக்கத்தினாலே அவன் நிச்சயத்தை அறியக்கூடாதிருந்தபடியால், அவனைக் கோட்டைக்குக் கொண்டுபோகச் சொன்னான்.

௩௫ அவன் படிகள்மேல் ஏறினபொழுது, கூட்டம் பின்சென்று, [11]அவனைக் கொலைசெய்யுமென்று கூப்பிட்டுக்கொண்டு,

௩௬ உக்கிரமாயிருந்தபடியினாலே, சேவகர் அவனைத் தூக்கி எடுத்துக்கொண்டு போனார்கள்.

௩௭ ¶ அவர்கள் பவுலைக் கோட்டைக்குள்ளே கொண்டுபோக எத்தனமாயிருக்கையில், அவன் சேனாபதியை நோக்கி, நான் உம்மு

கி. பி. ௬௰.

1 அப். ௰௫. ௨௰, ௨௮.
2 அப். ௨௪. ௰௮.
3 ௪ மோ. ௬. ௰௩.
4 அப். ௨௪. ௰௮.
5 அப். ௨௧. ௨௧.
6 அப். ௨௪. ௫, ௬.
7 அப். ௨௰. ௪.
8 அப். ௨௧. ௨௧.
9 அப். ௨௩. ௨௭; ௨௪. ௭.
10 ௰௧. வச. அப். ௨௰. ௨௩.
11 லூக். ௨௩. ௰௮. யோவா. ௰௯. ௰௫. அப். ௨௨. ௨௨.

டனே ஒரு வார்த்தை பேசலாமா என்றான்; அதற்கு அவன் சொன்னது: கிரேக்கபாஷை உனக்குத் தெரியுமா?

௩௮ இந்தக் காலத்திற்குமுன்னே கலகம் உண்டாக்கி, நாலாயிரம் கொலைபாதகரை வனாந்தரத்திலே கொண்டுபோன [1]எகிப்தியன் நீ அல்லவா என்றான்.

௩௯ பவுல் சொன்னது: [2]நான் சிலீசியா நாட்டிலுள்ள கீர்த்தி அடைந்திருக்கிற தருசு பட்டணத்தானாகிய யூதன்; நான் சனங்களுடனே பேசும்படி எனக்கு உத்தரவு கொடுக்கவேண்டும் என்று உம்மை வேண்டிக்கொள்ளுகிறேன் என்றான்.

௪௰ அவனுக்கு உத்தரவு கொடுத்தபின்பு, பவுல் படிகளின்மேலே நின்று, [3]கையினாலே சனங்களுக்குச் சமிக்கைகாட்டினான்; மிகுந்த அமைதல் உண்டானபொழுது, அவன் எபிரேய பாஷையிலே சத்தமிட்டுச் சொன்னதாவது:

## ௨௨. அதிகாரம்.

௧. பவுல் தான் குணப்பட்டு விசுவாசியானவிதத்தையும், ௰௭. அப்போஸ்தலப் பட்டத்துக்கு அழைக்கப்பட்ட விதத்தையும், வெளியரங்கமாய் அறிவித்தது. ௨௨. தான் அந்நியர்களுக்கு அனுப்பப்பட்ட அப்போஸ்தலனென்று சொன்னபோது யூதர்கள் கலகம்பண்ணினது. ௨௪. அவர்கள் அவனைச் சவுக்கால் அடிக்க நினைத்தபோது, ௨௫. தன்னை உரோமை நாட்டானென்று தப்பித்துக்கொண்டது.

[4]சகோதரர்களே, பிதாக்களே, உங்களுக்கு நான் இப்பொழுது சொல்லும் உத்தரவுக்குச் செவிகொடுப்பீர்களாக என்று சொன்னபொழுது,

௨ எபிரேய பாஷையிலே தங்களுடனே பேசுகிறதை அவர்கள் கேட்டு, அதிக அமைதலாயிருந்தார்கள்; அவன் பின்னும் சொன்னதாவது:

௩ நான் யூதன், [5]சிலீசியா நாட்டிலுள்ள தருசு பட்டணத்திலே நான் பிறந்து, பின்பு இந்த நகரத்திலே [6]கமாலியேலின் [7]பாதத்தினிடத்தில் வளர்ந்து, [8]முன்னோர்களுடைய வேதப்பிரமாணத்தின்படியே கெட்டியாய்ப் போதிக்கப்பட்டு [9]இன்றைத்தினம் நீங்கள் எல்லாரும் இருக்கிறதுபோல, [10]பராபரனைக்குறித்து வைராக்கியமுள்ளவனாயிருந்து,

௪ [11]இந்த மார்க்கத்தாரை மரணபரியந்தம் துன்பப்படுத்தி, புருஷரையும் ஸ்திரிகளையும் கட்டி, சிறைச்சாலைகளுக்கு ஒப்புக்கொடுத்துவந்தேன்.

௫ அதற்குப் பிரதான ஆசாரியரும் [12]மூப்பர்கள் யாவரும் சாட்சிகொடுப்பார்கள்; [13]அவர்கள் கையிலே நான் சகோதரருக்கு நிருபங்களை வாங்கிக்கொண்டு, தமஸ்கு ஊரில் இருக்கிறவர்களும் ஆக்கினைக்குள்ளாக்கப்படுவதற்கு அவர்களைக் கட்டி எருசலேமுக்குக் கொண்டுவரும்படி அவ்விடத்திற்குப் போனேன்.

௬ அப்படி நான் [14]பிரயாணப்பட்டுத் தமஸ்கு ஊருக்குச் சமீபமானபொழுது, மத்தியான வேளையிலே சடுதியாய் வானத்திலிருந்து மிகுந்த ஒளி உண்டாகி, என்னைச் சுற்றிப் பிரகாசித்தது.

௭ உடனே நான் தரையிலே விழுந்து, சவுலே, சவுலே, என்னத்திற்கு நீ என்னைத் துன்பப்படுத்துகிறாய் என்று என்னுடனே சொல்லுகிற சத்தத்தைக் கேட்டேன்.

௮ அதற்கு நான், ஆண்டவரே, நீர் யார் என்றேன்; அவர் என்னுடனே சொன்னது: நீ துன்பப்படுத்துகிற நாசரேத்தூரானாகிய இயேசுவே நான் என்றார்.

௯ [15]என்னுடனேகூட இருந்தவர்கள் அந்த ஒளியைக் கண்டு பயம் அடைந்தார்கள்; என்னுடனே பேசினவருடைய சத்தத்தை அவர்கள் கேட்கவில்லை.

௰ பின்னும் நான், ஆண்டவரே, நான் என்ன செய்யவேண்டும் என்றேன்; அதற்குக் கர்த்தர் சொன்னது: நீ எழுந்து தமஸ்கு ஊருக்

கி. பி. ௬௰.

1 அப். ௫. ௩௬.
2 அப். ௯. ௰௧: ௨௨. ௩.
3 அப். ௰௨. ௰௭.
4 அப். ௭. ௨.
5 அப். ௨௧. ௩௯. ௨ கொரி. ௰௧. ௨௨. பிலி. ௩. ௫.
6 அப். ௫. ௩௪.
7 ௫ மோ. ௩௩. ௩. ௨ இரா. ௪. ௩௮. லூக். ௰. ௩௯.
8 அப். ௨௬. ௫.
9 உரோ. ௰. ௨.
10 அப். ௨௬. ௯. கலா. ௧. ௰௪.
11 அப். ௮. ௩. ௨௬. ௯, ௰௧: பிலி. ௩. ௬. ௧ தீமோ. ௧. ௰௩.
12 லூக். ௨௨. ௬௬. அப். ௪. ௫.
13 அப். ௯. ௨: ௨௬. ௰, ௰௨.
14 அப். ௯. ௩: ௨௬. ௰௨, ௰௩.
15 அப். ௯. ௭. தானி. ௰. ௭.

Digitized by Google

குப் போ; நீ செய்யும்படிக்குக் கட்டளையிடப்பட்ட யாவும் அங்கே உனக்குச் சொல்லப்படும் என்றார்.

௰௧ பின்பு நான் அந்த ஒளியின் மகிமையினாலே பார்வை அற்றுப்போனபடியால், என்னோடிருந்தவர்களால் கைலாகு கொடுத்து அழைக்கப்பட்டுப் போய்த் தமஸ்குவூரில் சேர்ந்தேன்.

௰௨ அப்பொழுது வேதப்பிரமாணத்தின்படியே பத்தியுள்ளவனுமாய், [1]அங்கே குடியிருக்கிற சகல யூதராலும் [2]நல்லவன் என்று நற்சாட்சி பெற்றவனுமாயிருக்கிற [3]அனனீயா என்னும் ஒருவன் என்னிடத்தில் வந்து நின்று,

௰௩ என்னை நோக்கி, சகோதரனாகிய சவுலே, பார்வை அடைவாயாக என்றான்; அந்நேரமே நான் அவனை நோக்கிப்பார்த்தேன்.

௰௪ பின்பு அவன் சொன்னது: [4]நீ கண்டு கேட்டவைகளைக்குறித்து, [5]சகலவித மனிதருக்கும் சாட்சி கொடுக்கிறவனாயிருக்கும்படிக்கு,

௰௫ [6]நம்முடைய முன்னோர்களின் தேவன் [7]உன்னை முன்குறித்திருந்து, தம்முடைய சித்தத்தை நீ அறியவும் [8]நீதிபரனைக் [9]காணவும் [10]அவருடைய திருவாயின் சத்தத்தைக் கேட்கவும்பண்ணினார்.

௰௬ இப்பொழுது நீ தாமதிக்கிறதென்ன? நீ எழுந்து, [11]கர்த்தருடைய நாமத்தைத் தொழுதுகொண்டு ஞானஸ்நானம்பெற்று, உன் [12]பாவங்களை நீக்குவாயாக என்றான்.

௰௭ பின்பு நான் [13]எருசலேமுக்குத் திரும்பிவந்து, தேவாலயத்திலே செபம்பண்ணிக்கொண்டிருக்கையில், நான் ஞானதிருஷ்டி அடைந்து அவரைத்தரிசித்தேன்.

௰௮ [14]அவர் என்னுடனே நீ என்னைக்குறித்துச் சொல்லும் சாட்சியை இவர்கள் ஏற்றுக்கொள்ளாமலிருப்பதால் [15]நீ தாமதப்படாமல் சீக்கிரமாய் எருசலேமைவிட்டுப் போ என்றார்.

௰௯ அப்பொழுது நான் சொன்னது: ஆண்டவரே, உம்மை விசுவாசித்தவர்களை [16]நான் காவலில் வைத்து, செப ஆலயங்களிலே அவர்களை அடிப்பித்திருந்ததையும்,

௨௰ [17]உமக்குச் சாட்சியாகிய ஸ்தேவானுடைய இரத்தம் சிந்தப்பட்டபொழுது, நானும் அருகே நின்று [18]அவனைக் கொலைசெய்வதற்குச் சம்மதித்து, அவனைக் கொலைசெய்தவர்களின் வஸ்திரங்களைக் காத்துக்கொண்டதையும், இவர்கள் [19]அறிந்திருக்கிறார்களே என்றேன்.

௨௧ அவர் சொன்னது: [20]நான் உன்னைத் தூரமாய்ப் புறத்தேசத்தாரிடத்திற்கு அனுப்புவேன், ஆதலால் நீ போ என்று சொன்னார் என்றான்.

௨௨ ¶ இந்த வார்த்தைவரைக்கும் அவர்கள் அவனுக்குச் செவிகொடுத்து, [21]இப்படிப்பட்டவனைப் பூமியிலிருந்து அகற்றவேண்டும்; [22]இவன் உயிரோடிருக்கிறது நியாயமல்ல என்று மிகுந்த சத்தத்தோடே கூப்பிட்டார்கள்.

௨௩ இப்படி அவர்கள் கூக்குரலிட்டுத் தங்கள் வஸ்திரங்களைக் கழற்றிப்போட்டு, ஆகாசத்திலே புழுதி தூற்றிக்கொண்டு வருகையில்,

௨௪ சேனாதிபதி அவனைக் கோட்டைக்குள்ளே கொண்டுவரும்படி கட்டளையிட்டு, பின்பு அவர்கள் அவன்மேல் இப்படிக் கூக்குரலிட்டதற்கான காரணத்தை அறியும்படிக்கு, அவனைச் சவுக்காலே அடித்து விசாரிக்கச்சொன்னான்.

௨௫ அந்தப்படி அவர்கள் அவனை வார்களினால் அழுந்தக் கட்டுகையில் பவுல் சமீபமாய் நின்ற படைத்தலைவனை நோக்கி, [23]உரோமனுமாய் நியாயமாய் ஆக்கினைக்கு உட்படாதவனுமாய் இருக்கிற ம

கி. பி. ௬௰.

1 ௧ தீமோ. ௩. ௭.
2 அப். ௰. ௨௨.
3 அப். ௯. ௰௭.
4 அப். ௪. ௨௰: ௨௬. ௰௬.
5 அப். ௨௩. ௰௧.
6 அப். ௩. ௰௩: ௫. ௩௰.
7 அப். ௯. ௰௫: ௨௬. ௰௬.
8 அப். ௩. ௰௪: ௭. ௫௨.
9 ௧ கொரி. ௯. ௧: ௰௫ ௮.
10 ௧ கொரி. ௰௧. ௨௩. கலா. ௧. ௰௨.
11 அப். ௯. ௰௪. உரோ. ௰. ௰௩.
12 அப். ௨. ௩௮. எபி. ௰. ௨௨.
13 அப். ௯. ௨௬. ௨ கொரி. ௰௨. ௨.
14 ௰௪. ௮௪.
15 மத். ௰. ௰௪.
16 மத். ௰. ௰௭.
17 அப். ௭. ௫௮.
18 லூக். ௰௧. ௪௮. அப். ௮. ௧. உரோ. ௧. ௩௨.
19 ௪. ௮௪. அப். ௮. ௩.
20 அப். ௯. ௰௫: ௰௩. ௨, ௪௬, ௪௭: ௰௮. ௯: ௨௬. ௰௭. உரோ. ௧. ௫: ௰௧. ௰௩: ௰௫. ௰௬. கலா. ௧. ௰௫, ௰௬: ௨. ௭, ௮. எபே. ௩. ௭, ௮. ௧ தீமோ. ௨. ௭. ௨ தீமோ. ௧. ௰௧.
21 அப். ௨௧. ௩௬.
22 அப். ௨௫. ௨௪.
23 அப். ௰௬. ௩௭.

Digitized by Google

ஷிதனை நீங்கள் அடிக்கிறது நியாயமா என்றான்.

உ௬ தலைவன் அதைக் கேட்டு, சேனாதிபதியினிடத்திற்குப்போய், அந்த மனிதன் உரோமன், ஆதலால் நீர் செய்வதைக்குறித்துச் சாவதானமாய் இருக்கவேண்டும் என்று அறிவித்தான்.

உஎ அப்பொழுது சேனாதிபதி பவுலினிடத்தில் வந்து, நீ உரோமனா, எனக்குச் சொல் என்றான்; அதற்கு அவன் அப்படித்தான் என்றான்.

உஅ சேனாதிபதி சொன்னது: நான் மிகுந்த திரவியத்தினாலே இந்த மேன்மையைச் சம்பாதித்தேன் என்றான்; அதற்குப் பவுல் சொன்னது: நான் அப்படிப்பட்டவனாகப் பிறந்தேன் என்றான்.

உ௯ ஆதலால் அவனை அடித்து விசாரிக்கும்படி* எத்தனமாயிருந்தவர்கள் உடனே அவனை விட்டார்கள்; மேலும். சேனாதிபதி அவன் உரோமனென்று அறிந்து, தான் அவனைக் கட்டினதினாலே பயந்தான்.

௩௰ ¶ மறுநாளிலே பவுல் யூதரால் ஏற்படுத்தப்பட்ட குற்றம் இன்னதென்று அவன் நிச்சயத்தை அறிய மனதாய் அவனுடைய கட்டவிழ்க்கும்படி செய்து, பிரதான ஆசாரியரையும் அவர்களுடைய பெரிய சங்கத்தார் எல்லாரையும் கூடிவரும்படி கட்டளையிட்டுப் பின்பு பவுலைத் தாழக் கொண்டுபோய், அவர்களுக்கு முன் நிறுத்தினான்.

## உ௩. அதிகாரம்.

க. பவுல் ஆலோசனைச் சங்கத்துக்குமுன் தன்னை எடுத்துப் பேசும்பொழுது, உ. அனனியா அவனை அடிக்கும்படி உத்தரவுகொடுத்தது. எ. அவன்மேல் குற்றம்சாற்றினவர்களுக்குள்ளே பிரிவினை உண்டானது. ௰௧ பராபரன் அவனைத் திடப்படுத்தினது. ௰௪. யூதர்கள் அவனுக்கு மோசஞ்செய்ய நினைத்தது. உ௰. பிரதான சேர்வைக்காரனுக்கு அறிவிக்கப்பட்டது. உஎ. அவன் பவுலைப் பேலிக்குக தலைவரிடத்திற்கு அனுப்பினது.

அப்பொழுது பவுல் பெரிய சங்கத்தாரை நோக்கிச் சொன்னதாவது: சகோதரர்களே, [1]இந்நாள்வரைக்கும் என் மனது எனக்கு எவ்விதத்தாலும் நற்சாட்சிகொடுக்கத்தக்கதாக, பராபரனுக்குமுன்பாக நடந்துவந்தேன் என்று சொன்னபொழுது,

உ பிரதான ஆசாரியனாகிய அனனியா அவனுக்குச் சமீபமாய் நின்றவர்களை நோக்கி, [2]இவன் வாயிலே அடியுங்கள் என்று கட்டளையிட்டான்.

௩ அப்பொழுது பவுல் அவனுடனே சொன்னது: சாந்துபூசப்பட்ட சுவரே, பராபரன் உம்மை அடிப்பார்; நியாயப்பிரமாணத்தின்படி எனக்கு நியாயத்தீர்ப்புக் கொடுக்கும்படி உளுக்காந்திருக்கிற நீர், [3]நியாயப்பிரமாணத்திற்குத் தப்பிதமாய் என்னை அடிக்கச் சொல்லலாமா என்றான்.

௪ சமீபத்தில் நின்றவர்கள் சொன்னது: பராபரனுடைய பிரதான ஆசாரியனையா வைகிறாய் என்றார்கள்.

௫ அதற்குப் பவுல் சொன்னது: சகோதரரே, [4]இவர் பிரதான ஆசாரியனென்று நான் நினைக்கவில்லை; [5]உன் சனத்தின் தலைவனைக் குறித்துத் தீதுசொல்லாதிருப்பாயாக என்று எழுதியிருக்கின்றதே என்றான்.

௬ ¶ பின்பு அவர்களில் ஒரு பங்கு சதுசேயரென்றும் ஒருபங்கு பரிசேயரென்றும் பவுல் அறிந்து, மிகுந்த சத்தத்தோடே சங்கத்தாருக்குள்ளே கூப்பிட்டுச் சொன்னதாவது: சகோதரர்களே, [6]நான் பரிசேயனுமாய் ஒரு பரிசேயனுடைய மகனுமாய் இருக்கிறேன்; [7]நித்திய சீவனுக்கு ஏற்ற நம்பிக்கையைக்குறித்தும், மரித்தோர் உயிரோடெழுந்திருக்குதலைக்குறித்தும், நான் நியாயத்தீர்ப்பு அடையும்படி இருக்கிறேன் என்று சொன்னபொழுது,

எ [8]சதுசேயர் உயிரோடெழுந்தி

கி. பி. ௬௰.

* அல்லது வருத்தும்படி.

1 அப். உ௪. ௰௬. க கொரி. ௪. ௪. உ கொரி. க. ௰உ: ௪. உ. உ தீமோ. க. ௩. எபி. ௰௩. ௰அ.

2 க இரா. உஉ. உ௪. எரே. உ௰. உ. யோவா. ௰அ. உஉ.

3 உ மோ. ௰௯. ௩௫. ௫ மோ. உ௫. க, உ. யோவா. எ. ௫௧.

4 அப். உ௪. ௰எ.

5 உ மோ. உஉ. உஅ. பிர. ௰. உ௰. உ பே. உ. ௰. யூதா. அ.

6 அப். உ௬. ௫. பிலி. ௩. ௫.

7 அப். உ௪. ௰௫, உ௧: உ௬. ௬: உஅ. உ௰.

8 மத். உஉ. உ௩. மாற். ௰உ. ௰அ. லூக். உ௰. உஎ.

Digitized by Google

ருக்குதலும் இல்லை, அரூபியும் ஆவியும் இல்லை என்று சொல்லுகிறபடியினாலும் பரிசேயர் அவ்விரண்டும் உண்டென்று அறிக்கைபண்ணுகிறபடியினாலும்,

௯ அ பரிசேயருக்கும் சதுசேயருக்கும் வாக்குவாதம் உண்டாயிற்று; கூட்டமும் பிரிவினை அடைந்தது.

௯ மிகுந்த கூக்குரல் உண்டாயிற்று; அப்பொழுது பரிசேயரைச் சேர்ந்த வேதபாரகர் எழுந்து மிகவும் விரோதமாய்ப் பேசி, [1]இந்த மனிதனிடத்தில் ஒரு பொல்லாங்கையும் காணோம், [2]ஒரு ஆவி அல்லது ஒரு தூதன் இவனுடனே பேசினதுண்டானால் [3](அதினால் என்ன) என்றார்கள்.

௰ பின்பு மிகுந்த கலகம் உண்டானபொழுது, பவுல் அவர்களால் பீறுண்டுபோவான் என்று பெரிய சேனைத்தலைவன் பயந்து, அவனை அவர்களிலிருந்து பறித்து, கோட்டைக்குக் கொண்டு போகும்படி போர்ச்சேவகருக்குக் கட்டளையிட்டான்.

௰௧ [4]அன்று இராத்திரியிலே கர்த்தர் பவுலின் அருகே நின்று, பவுலே, திடன்கொள்; நீ என்னைக்குறித்து எருசலேமிலே சாட்சிகொடுத்ததுபோல, உரோமை நகரியிலேயும் சாட்சிகொடுப்பாய் என்றார்.

௰௨ ¶ விடியற்காலமானபொழுது [5]யூதரில் சிலர் இரகசியமாய்க் கூடி, அந்தப் பவுலை நாம் கொலைசெய்யும் அளவும் புசியாமலும் குடியாமலும் இருப்போமாக என்று சபதம்பண்ணிக்கொண்டு,* தங்களுக்குள்ளே கட்டுப்பாடு செய்தார்கள்.

௰௩ இப்படிச் சபதத்தினாலே கட்டுப்பாடுசெய்தவர்கள் நாற்பதுபேருக்கு அதிகமாயிருந்தார்கள்.

௰௪ அவர்கள் பிரதான ஆசாரியரிடத்திலும் மூப்பரிடத்திலும் போய்ச் சொன்னதாவது: நாங்கள் பவுலைக் கொலைசெய்யும் அளவும் ஒன்றையும் ருசிபார்க்கக்கூடாதென்று கொடிய சபதம்பண்ணிக்கொண்டோம்.

௰௫ ஆனபடியினாலே நீங்கள் பெரியசங்கத்தாருடனேயுங்கூட அவனுடைய காரியத்தை அதிக கெட்டியாய் விசாரிக்க மனதுள்ளவர்கள்போலச் சேனாதிபதிக்குக் காண்பித்து, அவர் நாளைக்கு அவனை உங்களிடத்தில் கொண்டு வரும்படி கேட்பீர்களாக; அப்பொழுது அவன் உங்களுக்குச் சமீபமாய் வரும்முன்னே நாங்கள் அவனைக் கொலைசெய்ய எத்தனமாயிருக்கிறோம் என்றார்கள்.

௰௬ ¶ அந்தச் சர்ப்பனையைப் பவுலினுடைய சகோதரியின் குமாரன் கேள்விப்பட்டு, உடனே கோட்டைக்குப் போய், பவுலுக்கு அறிவித்தான்.

௰௭ அப்பொழுது பவுல் படைத்தலைவரில் ஒருவனை அழைத்து, இந்த வாலிபன் சேனாதிபதிக்கு ஒரு காரியத்தை அறிவிப்பான்; ஆகையால் இவனை அவரிடத்திற்குக் கொண்டுபோகவேண்டும் என்றான்.

௰௮ அந்தப்படி அவன் அவனைச் சேர்த்து, சேனாதிபதியிடத்திற்குக் கொண்டுபோய், காவலில் வைக்கப்பட்டிருக்கிற பவுல் என்னை அழைத்து, உமக்கு ஒரு காரியத்தைச் சொல்லவேண்டுமென்று இருக்கிற இந்த வாலிபனை உம்மிடத்திற்குக் கொண்டுபோகும்படி என்னை வேண்டிக்கொண்டான் என்றான்.

௰௯ அப்பொழுது சேனாதிபதி அவனுடைய கையைப் பிடித்துத் தனிமையான இடத்தில் கொண்டுபோய், நீ எனக்கு என்ன அறிவிக்க விரும்புகிறாய் என்று கேட்டான்.

௨௰ அவன் சொன்னதாவது: [6]யூதர்கள் பவுலின் காரியத்தை அதிக கெட்டியாய் விசாரிக்க மனதுள்

மி. பி. ௬௰.



1 அப். ௨௬. ௩௧.
2 அப். ௨௨. ௭, ௧௭, ௧௮.
3 அப். ௫. ௩௯.
4 அப். ௧௮. ௯: ௨௭. ௨௩, ௨௪.
5 ௨௧, ௩௦. வச. அப். ௨௫. ௩.
* அல்லது சாபமிட்டுக்கொண்டு.
6 ௧௨. வச.

Digitized by Google

ளவர்கள்போல வந்து, நீர் நாளைக்கு அவனைப் பெரிய சங்கத்தாரிடத்திற்குக் கொண்டுவரும்படிக்கு, உம்மை வேண்டிக்கொள்ளத் தீர்மானம்பண்ணினார்கள்; அவர்களுக்குச் சம்மதியாதிருப்பீராக.

உக என்னத்தினாலெனில், அவர்களில் நாற்பதுபேருக்கு அதிகமானபேர்கள் அவனைக் கொலைசெய்யுமளவும், புசிக்கவும் குடிக்கவும் மாட்டோம் என்று சபதம்பண்ணிக்கொண்டு, அவனுக்காக ஒளித்திருந்து, இப்பொழுது உம்முடைய உத்தரவுவரக் காத்துக்கொண்டு, எத்தனமாய் இருக்கிறார்கள் என்றான்.

உஉ அப்பொழுது சேனாதிபதி சொன்னது: நீ இவைகளை எனக்கு அறிவித்ததை ஒருவருக்கும் சொல்லாதிரு என்று வாலிபனுக்குக் கட்டளையிட்டு அவனை அனுப்பி,

உ௩ ¶ பின்பு படைத்தலைவர் இருவரை அழைத்து, செசாரியாபட்டணத்திற்குப் போகும்படிக்கு, இருநூறு போர்ச்சேவகரையும், குதிரைப் போர்ச்சேவகர் எழுபதுபேரையும், இருநூறு விற்காரரையும் இராத்திரியின் மூன்றாம் மணி நேரத்திற்கு எத்தனம்பண்ணுங்கள்.

உச அல்லாமலும் பவுலை ஏற்றித் துரையாகிய பேலீக்குசினிடத்திற்குப் பத்திரமாய்க் கொண்டுபோகும்படிக்கு, வாகனங்களில் இருக்கும்படி செய்யுங்கள் என்று சொல்லி,

உரு பின்பு எழுதின நிருபத்தின் விவரமாவது:

உசு கனம்பொருந்திய துரையாகிய பேலீக்குசுக்குக் கிலவுதியு லீசியா சவுக்கியம் உண்டாக வாழ்த்துகிறேன்.

உஎ [1]இந்த மனிதன் யூதர்களால் பிடிக்கப்பட்டு அவர்களால் கொலைசெய்யப்படுவதற்கு ஏதுவாயிருந்தபொழுது, நான் போர்ச்சேவகருடனேகூடப் போய் இவனை இழுத்துக்கொண்டுவந்தபொழுது இவன் உரோமனென்று அறிந்தேன்.

உஅ [2]அவர்கள் இவன்மேல் சாற்றின குற்றத்தை நான் அறிய மனதாய் இவனை அவர்களுடைய பெரிய சங்கத்திற்குக் கொண்டுபோனேன்.

உக [3]அங்கே அவன் மரணத்திற்கு அல்லது சங்கிலிகளுக்கு ஏற்ற குற்றம் இல்லாமல் அவர்களுடைய [4]வேதத்திற்குரியதருக்கங்களைக் குறித்துக் குற்றம் சாற்றப்பட்டவன் என்று எனக்குத் தெரியவந்தது.

௩ய பின்பு [5]யூதர்கள் இந்த மனிதனுக்கு விரோதமாய் இரகசியமான யோசனைபண்ணிக்கொள்ளுகிறார்கள் என்று எனக்குத் தெரிந்தபொழுது நான் உடனே இவனை உம்மிடத்திற்கு அனுப்பி, [6]குற்றம்சாற்றுகிறவர்களும் தாங்கள் இவனுக்கு விரோதமாய்ச் சொல்லுகிற காரியங்களை உமக்குமுன்பாகப் போய்ச் சொல்லும்படி கட்டளையிட்டேன்; சுகமாயிருப்பீராக என்று எழுதி அனுப்பினான்.

௩க ¶ போர்ச்சேவகர் தங்களுக்குக் கட்டளையிடப்பட்டபடியே பவுலைச் சேர்த்துக்கொண்டு, இராத்திரியிலே அந்திப்பத்திரி ஊருக்குக் கொண்டுபோய்,

௩உ மறுநாளிலே குதிரைப் போர்ச்சேவகரைஅவனுடனேகூடப் போக அனுப்பி, தாங்களோ கோட்டைக்குத் திரும்பினார்கள்.

௩௩ அவர்கள் செசாரியா பட்டணத்தில் சேர்ந்து, நிருபத்தைத் துரைக்குக் கொடுத்து, பவுலையும் அவன்முன்பாக நிறுத்தினார்கள்.

௩ச துரை அதை வாசித்து, நீ எந்தத் தேசத்தான் என்று கேட்டு, [7]கிலீக்கிய தேசத்தான் என்று அறிந்து,

கி. பி. ௬ய.

1 அப். உக. ௩௩: உச. எ.

2 அப். உஉ. ௩ய.

3 அப். உ௩. ௩௩.

4 அப். ௧அ. ௧௫: உ௫. ௧௯.

5 உய. ௨௪.

6 அப். உச. அ: உ௫. க.

7 அப். உக. ௩௯.

Digitized by Google

௩௫ பின்பு [1]உன்மேல் குற்றம் சாற்றுகிறவர்களும் வந்திருக்கும்பொழுது, உன்னிடத்தில் விசாரிப்பேன் என்று சொல்லி, [2]ஏரோதேயின் அரமனையிலே அவனைக் காவலில் வைக்கும்படி கட்டளையிட்டான்.

## உ௪. அதிகாரம்.

*௧. பவுல் தெர்த்துல்லு என்ற வாய்ச்சாலகனால் குற்றஞ்சாற்றப்பட்டபோது, ௰. அவன் தன் நடக்கையையும் உபதேசத்தையுங்குறித்து உத்தரவுசொன்னது. உ௪. துரைக்கும் அவன் பெண்சாதிக்கும் கிறிஸ்துவைப் பிரசங்கித்தது. உ௬. துரை லஞ்சத்தை விரும்பியும் அடையாமற்போனது. உ௭. அந்தத் துரையின் உத்தியோகம் மாறிப்போனதும் பவுலைக் காவலில் வைத்துப்போனதும்.*

[3]ஐந்துநாளைக்குப் பின்பு, [4]பிரதான ஆசாரியனாகிய அனனீயா மூப்பரோடும், பேச்சில் கெட்டிக்காரனாகிய தெர்த்துல்லுவோடும் கூடப்போய், பவுலுக்கு விரோதமாய்த் துரையினுடைய சன்னிதானத்தில் பிரவேசித்தார்கள்.

௨ அவன் அழைக்கப்பட்டு வந்தபொழுது, தெர்த்துல்லு குற்றம் ஏற்படுத்தினதாவது:

௩ மிகுந்த கனம்பொருந்திய பேலிக்குசே, உம்மாலே நாங்கள் மிகுந்த சமாதான சவுக்கியத்தை அனுபவிக்கிறதையும் உம்முடைய விசாரிப்பினாலே இந்தத் தேசத்தாருக்காக மிகுந்த மகிமையுள்ள கிரியைகள் நடக்கிறதையும் நாங்கள் எப்பொழுதும் எங்கும் பெரிய உபகாரமென்று எண்ணி, அறிக்கையிடுகிறோம்.

௪ நான் அதிக வார்த்தைகளாலே உமக்கு வருத்தத்தை உண்டுபண்ணாதபடிக்கு, நாங்கள் சுருக்கமாய்ச் சொல்வதை நீர் உம்முடைய பொறுமையோடே கேட்கவேண்டிக்கொள்ளுகிறேன்.

௫ என்னவென்றால், [5]இந்த மனிதன் பெருவாரிக்காய்ச்சலைப்போல, பூச்சக்கரத்திலுள்ள சகல யூதர்களுக்குள்ளும் கலகம் எழுப்பியிருக்கிறதையும், நாசரேத்தாரென்னும் கெட்ட பிரிவுக்கு முதலாளியாய் இருக்கிறதையும்,

௬ எங்கள் [6]தேவாலயத்தை அசுசிப்படுத்தத் தேடினதையும், நாங்கள் கண்டறிந்து இவனைப் பிடித்து, [7]எங்கள் வேதநூலின்படியே இவனுக்கு நியாயத்தீர்ப்புக் கொடுக்க மனதாயிருந்தோம்.

௭ அப்பொழுது சேனாபதியாகிய [8]லீசியா என்பவர் வந்து, மிகுந்த பலவந்தமாய் இவனை எங்கள் கைகளிலிருந்து பறித்துக்கொண்டுபோய்,

௮ இவன்மேல் [9]குற்றஞ்சாற்றுகிறவர்கள் உம்மிடத்தில் வரும்படி கட்டளையிட்டார்; நீர் இவனிடத்தில் கெட்டியாய் விசாரித்தால், நாங்கள் இவன்மேல் குற்றஞ்சாற்றுகிற காரியங்கள் யாவையும் அறிந்துகொள்வீர் என்றான்.

௯ மற்ற யூதர்களும் அதற்கு இசைந்து, இப்படியே இருக்கிறதென்று சொன்னார்கள்.

௰ ¶ அப்பொழுது பவுல் பேசுகிறதற்குத் துரையினாலே சமிக்கை பெற்றபின்பு அவன் சொன்ன மாறுத்தரமாவது: அநேக வருஷம் நீர் இந்தத் தேசத்தாருக்கு நியாயாதிபதியாயிருக்கிறதை நான் அறிந்து, அதிக சந்தோஷத்தோடே எனக்காக உத்தரவு சொல்லுகிறேன்.

௰௧ நீர் அறியும்படி [10]நான் பராபரனைத்தொழுதுகொள்ளும்படிக்கு, எருசலேமுக்குப் போனதுமுதல் இதுவரைக்கும் பன்னிரண்டு நாள்மாத்திரம் ஆயிற்று.

௰௨ [11]தேவாலயத்திலே நான் ஒருவரோடும் தருக்கம்பண்ணவும், செபஆலயங்களிலாகிலும் நகரத்திலாகிலும் சனங்களுக்குள்ளே கலகம் எழுப்பவும், இவர்கள் காணவுமில்லை.

௰௩ இப்பொழுது, என்மேல்சாற்றுகிற குற்றங்களுக்குச் சாட்சிகளைக் காண்பிக்கவுமாட்டார்கள்.

௰௪ நான் உமக்கு அறிக்கையிடுகிறது என்னவென்றால், [12]இவர்

இ. பி. ௬௰.

1 அப். உ௩. ௩௰: உ௫. ௰௬.
2 மத். உ௭. உ௭.
3 அப். உ௧. உ௭.
4 அப். உ௩. உ, ௩௰, ௩௫: உ௫. உ.
5 லூக். உ௩. உ. அப். ௬. ௰௩: ௰௬. உ௰: ௰௭. ௬: உ௧. உ௮. ௧ பே. உ. ௰உ, ௰௫.
6 அப். உ௧. உ௮.
7 யோவா. ௰௮. ௩௧.
8 அப். உ௧. ௩௩.
9 அப். உ௩. ௩௰.
10 ௰௭.வச. அப். உ௧. உ௬.
11 அப். உ௫. ௮: உ௮. ௰௭.
12 ஆமோ. ௮. ௰௪. அப். ௯. உ.

Digitized by Google

கள் கெட்டபிரிவு என்றுசொல்லுகிற மார்க்கத்தின்படியே[1] நான் நியாயப்பிரமாணத்திலேயும் தீர்க்கதரிசனப் புத்தகங்களிலேயும் எழுதியிருக்கிற யாவையும் விசுவாசித்துக்கொண்டு, [2]எங்கள் முன்னோர்களுடைய தேவனுக்கு ஆராதனை செய்து,

௰௫ [3]மரித்தோராகிய நீதிமான்களும் அநீதிமான்களும் மறுபடியும் உயிரோடெழுந்திருப்பார்கள் என்று [4]இவர்களும் அடைந்திருக்கிற நம்பிக்கையைப் பராபரன்மேல் வைத்திருக்கிறேன்.

௰௬ அதினாலே [5]நான் பராபரனுக்கும் மனிதருக்கும் முன்பாக எப்பொழுதும் நற்சாட்சி கொடுக்கிற மனதுள்ளவனாயிருக்கும்படி முயற்சிப்படுகிறேன்.

௰௭ அநேக வருஷங்களுக்குப் பின்பு [6]நான் என் தேசத்தாருக்குத் தருமங்களை ஒப்புக்கொடுக்கவும், காணிக்கைகளைச் செலுத்தவும் வந்தேன்.

௰௮ கூட்டமில்லாமலும் அமளி இல்லாமலும் நான் தேவாலயத்தில் அப்படிச் செய்து சுத்தம்பண்ணிக்கொண்டிருக்கையில், [7]ஆசியாதேசத்தாரான சில யூதர்கள் என்னைக் கண்டார்கள்.

௰௯ [8]அவர்களிடத்தில் எனக்கு விரோதமான காரியம் உண்டானால், அவர்களே உமக்குமுன்பாக இங்கே வந்து, குற்றம்சாற்றவேண்டும்.

௨௰ அல்லது நான் பெரிய சங்கத்தாருக்குமுன்பாக நின்றபொழுது, என்ன குற்றத்தை என்னிடத்தில் கண்டார்கள்; அதை இவர்களும் சொல்லலாமே.

௨௧ நான் அவர்களுக்குள்ளே நின்றபொழுது, [9]மரித்தோர் உயிரோடெழுந்திருப்பார்கள் என்கிறதைக்குறித்து நான் இன்றைக்கு உங்களால் நியாயத்தீர்ப்பு அடையும்படி இருக்கிறேன் என்று நான் கூப்பிட்டேன்; இந்த ஒரே சொல்லின்நிமித்தமே அன்றி வேறொன்றின்நிமித்தமும் குற்றம்காணவில்லையே என்றான்.

௨௨ ¶ பேலிக்குசென்பவன் அதைக் கேட்டு இந்த மார்க்கத்தைக் குறித்து அதிக விவரமாய் அறிந்தபின்பு, சேனாதிபதியாகிய [10]லீசியா வரும்பொழுது, நான் உங்கள் காரியத்தைக் கெட்டியாய் விசாரித்துக்கொள்வேன் என்றுசொல்லி அவர்களை அனுப்பி,

௨௩ பின்பு பவுலைக் காத்துக் கொள்ளும்படிக்கும், அவனுக்குக் கண்டிப்புச் செய்யாதபடிக்கும் [11]அவனுடைய மனிதர்களில் ஒருவனாகிலும் அவனிடத்தில் போய், அவனுக்கு ஊழியம் செய்வதற்குத் தடைபண்ணாதபடிக்கும் தலைவனுக்குக் கட்டளையிட்டான்.

௨௪ ¶ சிலநாளுக்குப் பின்பு பேலிக்குசு யூதஸ்திரியாகிய தன் மனைவி துருசில்லாளுடனேகூட வந்து பவுலை அழைப்பித்து, கிறிஸ்துவைப்பற்றும் விசுவாசத்தைக் குறித்து அவன் சொல்லக்கேட்டான்.

௨௫ அந்தப்படி அவன் நீதியையும் இச்சை அடக்கத்தையும் பின்வரும் நியாயத்தீர்ப்பையுங்குறித்துப் பேசிக்கொள்ளுகையில், பேலிக்குசு பயமடைந்து இப்பொழுது நீ போகலாம், இனிமேல் எனக்குச் சாவகாசம் இருக்கும்பொழுது உன்னை மறுபடியும் அழைப்பிப்பேன் என்றான்.

௨௬ மேலும் [12]அவன் பவுலை விடுதலைபண்ணும்படியாய்த் தனக்கு அவன் பணம்கொடுப்பான் என்று நம்பிக்கையாயிருந்தான்; அதின்நிமித்தமே அவன் அநேகந்தரம் அவனை அழைப்பித்து அவனுடனே பேசிக்கொண்டான்.

௨௭ இரண்டுவருஷமானபொழுது பேலிக்குசுக்குப் பதிலாகப் பொர்க்கியுபெஸ்து என்னும் துரை வந்தான்; [13]அப்பொழுது பேலிக்குசு யூதர்களுக்குச் சந்தோ

கி. பி. ௬௰.

1 அப். ௨௪. ௨௨: ௨௮. ௨௨.
2 ௨ தீமோ. ௧. ௩.
3 தானி. ௰௨. ௨. யோவா. ௫. ௨௮, ௨௯.
4 அப். ௨௩. ௬: ௨௬. ௬, ௭: ௨௮. ௨௰.
5 அப். ௨௩. ௧.
6 அப். ௰௧. ௨௯, ௩௰: ௨௰. ௰௬. ரோ. ௰௫. ௨௫. ௨ கொரி. ௮. ௪. கலா. ௨. ௰.
7 அப். ௨௧. ௨௭: ௨௬. ௨௧.
8 அப். ௨௩. ௩௰: ௨௫. ௰௬.
9 அப். ௨௩. ௬: ௨௮. ௨௰.
10 ௭. வச.
11 அப். ௨௭. ௩: ௨௮. ௰௬.
12 ௨ மோ. ௨௩. ௮.
13 ௨ மோ. ௨௩. ௨. அப். ௰௨. ௩: ௨௫. ௯, ௰௪.

Digitized by Google

ஷஞ்செய்ய மனதாய், பவுலைக் காவலில் வைத்துவிட்டுப்போனான்.

## ௨௫. அதிகாரம்.

௧. யூதர்கள் பெஸ்துவுக்குமுன்பாகப் பவுல்மேல் குற்றஞ்சாற்றினது. ௮. அதற்கு அவன் உத்தரவு சொல்லி, ௰௧. இராயனுக்கு அபயமிட்டது. ௰௪. பெஸ்து இந்தக் காரியத்தை அகிரிப்பா இராசாவுக்கு அறிவித்தது, ௨௧. பவுல் விசாரிக்கப்பட்டு, ௨௫. மரணத்துக்குப் பாத்திரவானல்லவென்று பெஸ்துவினாலே தீர்ப்படைந்தது.

பெஸ்து என்பவன் துரைத்தனத்திற்கு வந்து மூன்று நாளுக்குப் பின்பு, சேசாரியா பட்டணத்திலிருந்து எருசலேமுக்குப்போனான்.

௨ [1]அப்பொழுது பிரதான ஆசாரியனும் யூதருடைய பெரியோர்களும் அவனிடத்தில் சேர்ந்து, பவுலுக்கு விரோதமாய்ப் பிராது பண்ணி,

௩ [2]அவனை வழியிலே கொலைசெய்ய இரகசியமான யோசனையுள்ளவர்களாய், நீர் கிருபைசெய்து, அவனை எருசலேமுக்கு வர அழைப்பிக்கவேண்டும் என்று வேண்டிக்கொண்டார்கள்.

௪ அதற்குப் பெஸ்து சொன்னது: பவுல் சேசாரியாவிலே காக்கப்பட்டிருக்கிறானே.

௫ நானும் சீக்கிரமாக அங்கே போவேன்; ஆதலால் உங்களில் திறமுள்ளவர்கள் கூடவந்து [3]அந்த மனிதனிடத்தில் குற்றம் உண்டானால் அதை அவன்மேல் சாற்றுவார்களாக என்றான்.

௬ ¶ பின்பு அவன் ஓர் எட்டுபத்துநாள்* அவர்களிடத்தில் சஞ்சரித்தபின்பு, சேசாரியா பட்டணத்திற்குப் போய், மறுநாளிலே நியாயாசனத்தில் உளுக்காந்து, பவுலைக் கொண்டுவரச்சொன்னான்.

௭ அவன் வந்தபொழுது எருசலேமிலிருந்து வந்த யூதர்கள் சுற்றிநின்று, [4]அநேகமான குற்றங்களைப் பவுலின்மேல் சாற்றினார்கள்; அவைகளை அவர்கள் மெய்ப்படுத்தத் திராணி இருக்கவில்லை.

௮ பின்பு பவுல் சொன்னது: [5]நான் யூதருடைய வேதனுக்காகிலும், தேவாலயத்திற்காகிலும், இராயருக்காகிலும் விரோதமாய் ஒரு குற்றமும்செய்யவில்லை என்றான்.

௯ அப்பொழுது பெஸ்து [6]யூதர்களுக்குத் தயவுசெய்ய மனதாய்ப் பவுலுடனே சொன்னது: [7]நீ எருசலேமுக்குப் போய், அங்கே என்னாலே இந்தக் காரியங்களைக்குறித்து நியாயத்தீர்ப்பு அடைய மனதிருக்கிறதா என்றான்.

௰ அதற்குப் பவுல் சொன்னது: இராயனுடைய நியாயாசனத்திற்குமுன்பாக நிற்கிறேன்; அதற்குமுன்பாக நான் நியாயத்தீர்ப்பு அடையவேண்டும்; யூதருக்கு நான் ஒரு அநியாயமும் செய்யவில்லை; அதை நீரும் நன்றாய் அறிந்திருக்கிறீர்.

௰௧ அநியாயமானதையாவது [8]மரணத்திற்குப் பாத்திரமானதையாவது நான் நடப்பித்தேனானால், நான் சாகிறதற்கு மறுக்கமாட்டேன்; இவர்கள் என்மேல் சாற்றுகிற குற்றங்கள் எல்லாம் வீணாயிருக்கிறபடியால், ஒருவரும் என்னை அவர்களுக்குச் சந்தோஷமாக ஒப்புக்கொடுக்கக்கூடாது; [9]இராயருக்கே அபயமிடுகிறேன் என்றான்.

௰௨ அப்பொழுது பெஸ்து தன் ஆலோசனைக்காரருடனே பேசிக்கொண்டு, நீ இராயருக்கு அபயமிட்டாய்; இராயரிடத்திற்கே போவாய் என்று உத்தரவுசொன்னான்.

௰௩ ¶ சிலநாள் சென்றபின்பு, இராயனாகிய அகிரிப்பாவும், பேர்னீக்கேயாளும் பெஸ்துவை வாழ்த்தும்படிக்கு, சேசாரியா பட்டணத்திற்குப் போனார்கள்.

௰௪ அங்கே அவர்கள் அநேகநாள் சஞ்சரித்திருக்கையில் பெஸ்து பவுலின் சங்கதியை இராயனுக்கு விவரித்துச் சொன்னதாவது: [10]பேலீக்குசென்பவராலே காவலில் வைத்துவிடப்பட்ட ஒரு மனிதன் இருக்கிறான்.

கி. பி. ௬௨.

1 அப். ௨௪. ௧. ௰௫. ௨௪.
2 அப். ௨௧. ௰௨, ௰௫.
3 அப். ௰௮. ௰௪. ௰௮. ௨௪.
* அல்லது சில பிரதிகளில் பத்துநாளுக்கு அதிகமாய்.
4 மாற். ௰௫. ௩. லூக். ௨௩. ௨. அப்.௨௪.௫,௰௩.
5 அப். ௬. ௰௩: ௨௪. ௰௨: ௨௮. ௰௭.
6 அப்.௨௪. ௨௭.
7 ௨௰. ௨௪.
8 ௨௫.௨௪. அப். ௰௮. ௰௪: ௨௩. ௨௯: ௨௬. ௩௧.
9 அப். ௨௬.௩௨: ௨௮. ௰௯.
10 அப்.௨௪.௨௭.

Digitized by Google

௰௫ நான் எருசலேமிலே இருந்தபொழுது [1]பிரதான ஆசாரியரும் யூதருடைய மூப்பரும் அவனுக்கு விரோதமாய்ப் பிராதுபண்ணி, அவன்மேல் ஆக்கினைத்தீர்ப்பைக் கேட்டுக்கொண்டார்கள்.

௰௬ [2]அவர்களுக்கு நான் உத்தரவு சொன்னது: குற்றஞ்சாற்றப்பட்டவன் தன்மேல் குற்றஞ்சாற்றினவர்களுக்குமுன்பாக நின்று, அவர்கள் சாற்றின குற்றத்தைக்குறித்துத் தனக்காக எதிர்உத்தரம் சொல்லும்படிக்கு அவன் இடம் அடைகிறதற்குமுன்னே, அப்படிப்பட்டவனை அவர்களுக்குத் தயவாய் அழிவுக்கு ஒப்புக்கொடுக்கிறது உரோமருக்குள்ளே வழக்கமல்ல என்றேன்.

௰௭ அந்தப்படி அவர்கள் இங்கே கூடிவந்தபொழுது, [3]நான் தாமதம் எவ்வளவும் பண்ணாமல் மறுநாளிலே நியாயாசனத்தில் உளுக்காந்து, அந்த மனிதனைக் கொண்டுவரச்சொன்னேன்.

௰௮ அப்பொழுது குற்றஞ்சாற்றினவர்கள் வந்து நின்று, நான் நினைத்திருந்த குற்றங்களில் ஒன்றையும் அவன்மேல் ஏற்படுத்தாமல்,

௰௯ [4]தங்கள் மார்க்கத்திற்கும், மரணமடைந்த இயேசு என்னும் ஒருவன் உயிரோடிருக்கிறான் என்று பவுல் சொன்னதற்கும் ஏற்ற சில தருக்கங்களை அவனுக்கு விரோதமாய்ச் சொன்னார்கள்.

௨௰ நான் இப்படிப்பட்ட தருக்கங்களைக்குறித்துச்* சந்தேகப்பட்டபடியினாலே நீ எருசலேமுக்குப் போய், அங்கே இவைகளைக் குறித்து நியாயம் விசாரிக்கப்படமனதிருக்கிறதா என்றேன்.

௨௧ அதற்குப் பவுல்தான் இராயருக்குமுன்பாக விசாரிக்கப்படுமெனவும்†வைக்கப்படவேண்டும் என்று அபயமிட்டபொழுது, நான் அவனை இராயனிடத்திற்கு அனுப்பும்வரைக்கும் காத்துவைக்கும்படி கட்டளையிட்டேன் என்றான்.

கி. பி. ௬௨.

1 உ, ௩. வச.
2 ௪, ௫. வச.
3 ௬. வச.
4 அப். ௧௭. ௩௰: ௨௩. ௨௩.
* அல்லது எப்படி விசாரிக்கிறதென்று.
† அல்லது தீர்ப்பு பண்ணப்படவும்.
5 அப். ௯. ௧௫.
6 உ, ௩, ௭. வச.
7 அப். ௨௨. ௨௨.
8 அப். ௨௩. ௯, ௨௬: ௩௧. ௩௨.
9 ௰௧, ௰௨. வச.

௨௨ [5]அப்பொழுது அகிரிப்பா பெஸ்துவுடனே சொன்னது: நானும் அந்த மனிதனுடைய வசனங்களைக் கேட்க விரும்புகிறேன் என்றான்; அதற்கு அவன் நாளைக்கு நீர் அப்படிக் கேட்கலாம் என்றான்.

௨௩ ¶ அந்தப்படி மறுநாளிலே அகிரிப்பாவும் பேர்னீக்கேயாளும் மிகுந்த ஆடம்பரத்தோடே வந்து, சேனாதிபதியுடனேயும் பட்டணத்தில் பிரதான மனிதருடனேயுங்கூட நியாயஸ்தலத்திற்குப் போனார்கள்; உடனே பெஸ்துவினுடைய கட்டளையின்படி பவுல் கொண்டுவரப்பட்டான்.

௨௪ அப்பொழுது பெஸ்து சொன்னதாவது: அகிரிப்பா இராசாவே, எங்களோடேகூட இவ்விடத்தில் இருக்கிற மனிதர்களே, நீங்கள் பார்க்கிற இந்த மனிதனைக் குறித்து [6]யூதருடைய சபையெல்லாம் எருசலேமிலேயும் இவ்விடத்திலேயும் என்னை வேண்டிக்கொண்டு, [7]இவன் இனி உயிரோடிருக்கத்தகாதென்று கூப்பிட்டார்கள்.

௨௫ நான் [8]இவன் மரணத்திற்குப் பாத்திரமானது ஒன்றையும் செய்யவில்லை என்று அறிந்து, [9]இவன்தானே இராயனுக்கு அபயமிட்டபடியினாலே, இவனை அவரிடத்தில் அனுப்பும்படி தீர்மானம்பண்ணினேன்.

௨௬ இவனைக்குறித்து ஆண்டவனுக்கு எழுதுகிறதற்கு நிச்சயப்பட்ட காரியம் எனக்குத் தெரியாது; ஆதலால் காவலில் உட்பட்ட ஒருவனைக்குறித்துக் குற்றத்தை அறிவியாமல், அவனை அனுப்புகிறது எனக்குப் புத்தியீனமான காரியமாய்த்தோன்றினபடியினாலே,

௨௭ இவனை விசாரித்துப்பார்த்த பின்பு எழுதத்தக்க விசேஷம் எனக்கு உண்டாகும்படிக்கு, இவனை உங்கள்முன்பாகவும், விசேஷமாய் அகிரிப்பா இராசாவே,

Digitized by Google

உமக்குமுன்பாகவும் கொண்டு வந்தேன் என்றான்.

## ௨௬. அதிகாரம்.

*௨. பவுல் அகிரிப்பாவுக்குமுன்பாகத் தன் சிறுவயது முதற்கொண்டு தான் நடந்த நடத்தையைக்குறித்தும், ௰௨. தான் அற்புதமாய்க் குணப்பட்டு அப்போஸ்தலப் பட்டத்துக்கு அழைக்கப்பட்டதைக் குறித்தும் திட்டமாய் அறிவித்தது. ௨௪. பெஸ்து, நீ பயித்தியக்காரனென்று சொன்னபோது, நியாயமான உத்தரவுசொன்னது. ௨௮. அகிரிப்பா கிறிஸ்தவனாகக் கொஞ்சங்குறையச் சம்மதித்தது. ௩௧. கூட்டத்தாரெல்லாரும் பவுலைக் குற்றமற்றவனென்று தீர்த்தது.*

பின்பு அகிரிப்பாவானவன் பவுலை நோக்கி, நீ உனக்காகப் பேசும்படிக்கு உத்தரவு கொடுத்தேன் என்றான்; அப்பொழுது பவுல் கையை நீட்டி, தனக்காகச் சொல்லிக்கொண்ட உத்தரமாவது:

௨ அகிரிப்பா இராசாவே, யூதர்கள் என்மேல் சாற்றுகிற சகல குற்றங்களைக்குறித்தும், நான் இன்றைக்கு உமக்குமுன்பாக மாறுத்தரம் சொல்லவேண்டுவதினாலே, என்னைப் பாக்கியவான் என்று எண்ணுகிறேன்.

௩ விசேஷமாய் நீர் யூதருடைய சகல முறைமைகளையும் தருக்கங்களையும் அறிந்தவராயிருக்கிறீரே; ஆகையால் நீர் நீடிய பொறுமையுடனே எனக்குச் செவிகொடுக்கும்படி வேண்டிக்கொள்ளுகிறேன்.

௪ நான் என் வாலிபவயது முதற்கொண்டு எருசலேமிலே என் தேசத்தாருக்குள்ளே இருந்தபடியால், என் வாலிபமுதல் நான் நடந்த நடக்கையை யூதரெல்லாரும் அறிந்திருக்கிறார்கள்.

௫ நம்முடைய மார்க்கத்திலே மிகவும் கெட்டியான [1]பரிசேயர் வகுப்பிலே நான் பரிசேயனாய்ச் சீவனம்பண்ணினதையும் ஆதிமுதல் அறிந்திருக்கிறார்கள்; அவர்களும் சாட்சிசொல்ல மனதாயிருந்தால், இப்படியே சொல்லுவார்கள்.

௬ இப்பொழுது [2]நம்முடைய பிதாக்களுக்குப் பராபரன் அருளிச்செய்த வாக்குத்தத்தத்திற்கு ஏற்ற நம்பிக்கைக்காக [3]நான் நியாயத்தீர்ப்பு அடையும்படி நிற்கிறேன்.

௭ [4]இரவும்பகலும்* இடைவிடாமல் பராபரனுக்கு ஆராதனைசெய்கிற [5]நம்முடைய பன்னிரண்டு கோத்திரத்தாரும் [6]அந்த வாக்குத்தத்தம் நிறைவேறும் என்று நம்பியிருக்கிறார்கள்; அகிரிப்பா இராசாவே, அந்த நம்பிக்கையின்நிமித்தமே யூதர்கள் என்மேல் குற்றம் சாற்றுகிறார்கள்.

௮ பராபரன் மரித்தோரை எழுப்புகிறது நம்பப்படாத காரியம் என்று நீங்கள் எண்ணுகிறது எப்படி?

௯ முன்னே [7]நானும் நாசரேத்தூரானாகிய இயேசுவின் நாமத்திற்கு விரோதமாய் அநேக காரியங்களை நடப்பிக்கவேண்டும் என்று நினைத்துக்கொண்டிருந்தேன்.

௰ [8]அப்படியே எருசலேமிலே செய்தேன்; [9]நான் பிரதான ஆசாரியராலே அதிகாரம் பெற்று, பரிசுத்தவான்களில் அநேகரைக் காவல்வீடுகளில் அடைத்தேன்; அவர்களைக் கொல்லவும் சம்மதித்தேன்.

௰௧ [10]அநேகந்தரம் நான் சகல செபஆலயங்களிலேயும் அவர்களைத் தண்டித்துத் தூஷணிக்கும்படிக்கு, அவர்களைப் பலவந்தம் செய்தேன்; நான் மிகவும் அவர்கள்மேலே மூர்க்கவெறியாயிருந்து, அந்நிய பட்டணங்கள் வரைக்கும் அவர்களைத் துன்பப்படுத்தினேன்.

௰௨ இப்படிச் செய்துவருகையில், நான் [11]பிரதான ஆசாரியரிடத்தில் பெற்ற அதிகாரத்தோடும் உத்தரவோடும் தமஸ்குவூருக்குப் போனபொழுது,

௰௩ இராசாவே, வழியிலே மத்தியானகாலத்தில் நான் சூரியனுடைய பிரகாசத்திற்கு அதிகமான ஒளி வானத்திலிருந்து என்னையும்

கி. பி. ௬௨.

1 அப். ௨௨. ௩: ௨௩. ௬: ௨௪. ௰௫,௨௨. பிலி. ௩. ௫.
2 ௧ மோ. ௩.௰௫: ௨௨. ௰௮:௪௯. ௪: ௪௯. ௰. ௫ மோ. ௰௮. ௰௫. ௨ சாமு. ௭. ௰௨. சங். ௱௩௨.௰௧. ஏசா. ௪. ௨: ௭. ௰௪: ௯. ௬: ௪௰. ௰. எரே. ௨௩. ௫: ௩௩.௰௪,௰௫,௰௬. எசே. ௩௪. ௨௩: ௩௭.௨௪. தானி. ௯. ௨௪. மீகா. ௭. ௨௰. அப்.௰௩. ௩௨. உரோ. ௰௫. ௮. தீத்.௨. ௰௩.
3 அப். ௨௩. ௬.
4 லூக். ௨. ௩௭. ௧ தீமோ. ௫. ௫. ௧ தெச. ௩. ௰.
* அல்லது பகலும் இரவும்.
5 யாக். ௧. ௧.
6 பிலி. ௩. ௰௧.
7 யோவா. ௰௬. ௨. ௧ தீமோ.௧. ௰௩.
8 அப். ௮. ௩. கலா. ௧. ௰௩.
9 அப். ௯. ௰௪, ௨௧: ௨௨. ௫.
10 அப் ௨௨.௰௯.
11 அப். ௯. ௩: ௨௨. ௬.

Digitized by Google

என்னுடனேகூடப் பிரயாணப்பட்டவர்களையும் சுற்றிப் பிரகாசிக்கக்கண்டேன்.

௰௪ உடனே நாங்கள் எல்லாரும் தரையிலே விழுந்தபொழுது, சவுலே, சவுலே, என்னத்திற்கு நீ என்னைத் துன்பப்படுத்துகிறாய்? முள்ளில் உதைக்கிறது உனக்குக் கடினமாமென்று எபிரேயு பாஷையிலே சொன்ன சத்தத்தைக் கேட்டேன்.

௰௫ அதற்கு நான், ஆண்டவரே, நீர் யாரென்றேன்; அவர் சொன்னது: நான், நீ துன்பப்படுத்துகிற இயேசு.

௰௬ இப்பொழுது நீ எழுந்து காலூன்றி நில்; நீ கண்டவைகளையும் நான் உனக்குக் காண்பிப்பவைகளையுங்குறித்து [1]நான் உன்னை ஊழியக்காரன் என்றும்சாட்சியென்றும் ஏற்படுத்தும்படிக்கு உனக்குத் தரிசனையானேன்.

௰௭ ஆதலால் நான் உன் தேசத்தாரில் நின்றும் புறத்தேசத்தாரில் நின்றும் உன்னை விடுதலையாக்கி,

௰௮ [2]அவர்கள் என்னைப் பற்றிக் கொள்ளும் விசுவாசத்தினாலே பாவமன்னிப்பையும், [3]பரிசுத்தவான்கள் இருக்கிற இடத்திலே [4]சுதந்தரத்தையும் பெற்றுக்கொள்ளும்படிக்கு [5]அவர்களுடைய கண்களைத் திறக்கவும், [6]அவர்களை இருளில்நின்று ஒளியினிடத்திற்கும், பசாசினுடைய அதிகாரத்தில்நின்று பராபரனிடத்திற்கும் திருப்பவும் [7]உன்னை அவர்களிடத்தில் அனுப்புகிறேன் என்றார்.

௰௯ அகிரிப்பா இராசாவே, அந்தப் பரம தரிசனைக்கு நான் கீழ்ப்படாதவனாயிராமல்,

௨௰ முதலாவது [8]தமஸ்கு ஊரிலேயும் பின்பு எருசலேமிலேயும் யூதேயாதேசமெங்கும் உள்ளவர்களுக்குள்ளும் மற்றத் தேசத்தாருக்குள்ளும்போய்,அவர்கள் மனதை மாற்றிப் பராபரனிடத்திற்குத் திரும்பி, [9]மனந்திரும்புதற்கு ஏற்ற கிரியைகளைச் செய்யவேண்டும் என்று அறிவித்தேன்.

௨௧ [10]இதின்நிமித்தமே யூதர்கள் தேவாலயத்திலே என்னைப் பிடித்து, பின்பு கொலைசெய்யும்படி தேடினார்கள்.

௨௨ பராபரன் எனக்கு உதவி செய்ததினாலே நான் இந்நாள்வரைக்கும் சிறியோருக்கும் பெரியோருக்கும் சாட்சிசொல்லி நிற்கிறேன்; [11]தீர்க்கதரிசிகளும் [12]மோசேயும் பின்வரும் என்று சொன்னதின்படியே,

௨௩ [13]கிறிஸ்து பாடுபட்டும், [14]மரணத்தில்நின்று உயிரோடெழுந்திருப்பவர்களில் முதன்மையானவராயும் இருந்து, [15]யூதசனங்களுக்கும் மற்றத் தேசத்தாருக்கும் ஒளியைப் பிரசித்தம்பண்ணுகிறார் என்று நான் சொல்லுகிறதே அன்றி, வேறொன்றையும் நான் சொல்லுகிறதில்லை என்றான்.

௨௪ ¶ இவ்விதமாய்ப் பவுல் தனக்காக உத்தரவு சொன்னபொழுது பெஸ்து மிகுந்த சத்தத்துடனே சொன்னது: பவுலே, [16]நீ பித்தங்கொண்டிருக்கிறாய்; அதிக கல்வி உன்னைப் பயித்தியக்காரனாக்குகின்றது என்றான்.

௨௫ அதற்கு அவன் சொன்னது: கனம்பொருந்திய பெஸ்துவே, நான் பித்தங்கொண்டிருக்க இல்லை; சத்தியமும் நற்புத்தியுமான வார்த்தைகளை வசனிக்கிறேன்.

௨௬ இந்தச் சங்கதிகளை இராசா அறிந்திருக்கிறார்; இவை ஒரு மூலையிலே நடந்த காரியங்கள் அல்ல; ஆதலால் இவைகளில் ஒன்றும் அவருக்கு மறைவாய் இருக்கமாட்டாது என்று நான் எண்ணி, தயிரியமாய் அவருடனே பேசுகிறேன்.

௨௭ அகிரிப்பா இராசாவே, தீர்க்கதரிசிகள்மேல் உமக்கு விசுவாசம் உண்டா? விசுவாசிக்கிறீர் என்று அறிந்திருக்கிறேன் என்றான்.

கி. பி. ௬௨.



1 அப். ௨௨. ௰௫.
2 லூக். ௧. ௭௭.
3 அப். ௨௰. ௩௨.
4 எபே. ௧. ௰௧. கொலோ. ௧. ௰௨.
5 ஏசா. ௩௫. ௫: ௪௨. ௭. லூக். ௧. ௭௯. யோவா. ௮. ௰௨. ௨ கொரி. ௪. ௪. எபே. ௧. ௰௮. ௧ தெச. ௫. ௫
6 ௨ கொரி. ௬. ௰௪. எபே. ௪. ௰௮: ௫. ௮. கொலோ. ௧ ௰௩. ௧ பே. ௨. ௯, ௨௫.
7 அப். ௨௨. ௨௧
8 அப். ௯. ௨௰, ௨௨, ௨௯: ௰௧. ௨௧: ௰௩. ௰௪: ௰௬. ௰௭, ௰௮, ௰௯, ௨௰, ௨௧.
9 மத். ௩. ௮.
10 அப். ௨௧. ௩௰, ௩௧.
11 லூக் ௨௪. ௨௭, ௪௪. அப். ௨௪. ௰௪: ௨௮. ௨௩. உரோ. ௩. ௨௧.
12 யோவா. ௫. ௪௬.
13 லூக். ௨௪. ௨௬, ௪௬.
14 ௧ கொரி. ௰௫. ௨௰. கொலோ. ௧. ௰௮. வெளி. ௧. ௫.
15 லூக். ௨. ௩௨.
16 ௨ இரா. ௯. ௰௧. யோவா. ௰. ௨௰. ௧ கொரி. ௧. ௨௩: ௨. ௰௪, ௰௪: ௪. ௯.

Digitized by Google

௨௮ அப்பொழுது அகிரிப்பா பவுலுடனே சொன்னது: நான் கிறிஸ்தவனாகிறதற்குக் கொஞ்சம் குறைய நீ என்னைச் சம்மதிக்கப் பண்ணுகிறாய் என்றான்.

௨௯ அதற்குப் பவுல் சொன்னது: நீர்மாத்திரம் அல்ல, இன்று என் வசனங்களைக் கேட்ட யாவரும் கொஞ்சமாய் அல்ல (முழுவதுமே) இந்தச் சங்கிலிகளைத்தவிர என்னைப்போல ஆகும்படிக்கு [1]பராபரனை வேண்டிக்கொள்ளுகிறேன் என்றான்.

௩௰ ¶ இவைகளை அவன் சொன்னபின்பு, இராசாவும் துரையும் பேர்னீக்கேயாளும் அவர்களுடனேகூட உளுக்காந்திருந்தவர்களும் எழுந்துபோகையில்,

௩௧ ஒருவரோடொருவர் பேசிக்கொண்டு, [2]இந்த மனிதன் மரணத்திற்கு அல்லது சங்கிலிகளுக்குப் பாத்திரமானது ஒன்றையும் செய்யவில்லை என்றார்கள்.

௩௨ மேலும் அகிரிப்பா பெஸ்துவுடனே சொன்னது: [3]அந்த மனிதன் இராயனுக்கு அபயமிடாதிருந்தானானால் அவனை விடுதலைபண்ணத் தகுதியாயிருக்கும் என்றான்.

## ௨௭. அதிகாரம்.

௧. பவுல் உரோமாபுரிக்குப் போகக் கப்பலேறி, ௰. யாத்திரையினால் உண்டாகும் நஷ்டத்தைச் சொல்லியும், ௰௧. கப்பற்காரர் சம்பாதது. ௰௪. கொடுங்காற்றினால் கப்பல் அங்கும் இங்கும் அலைந்து, ௨௧. சேதமாகியும், ௨௨. ௩௪. ௪௪. சனங்கள் சுகமாய்க் கரைசேர்ந்தது.

பின்பு நாங்கள் கப்பலேறி, [4]இத்தாலியா தேசத்திற்குப் போகும்படி தீர்மானம் உண்டானபொழுது, பவுலும், காவலில் வைக்கப்பட்டிருந்த வேறு சிலரும், இராயனுடைய சேனையில் இயூலியென்று பேர்கொண்ட தலைவனுக்கு ஒப்புக்கொடுக்கப்பட்டார்கள்.

௨ அந்தப்படி நாங்கள் அதிர்மீத்துப் பட்டணத்தில் கப்பலேறி, ஆசியாதேசத்துக் கரையோரத்தின்வழியாய்ப் போக நினைத்துப் புறப்பட்டோம்; மக்கேதோனியா தேசத்துத் தெசலோனிக்கே பட்டணத்தானாகிய [5]அரிஸ்தர்க்கு எங்களுடனேகூட இருந்தான்.

௩ மறுநாளிலே சீதோன் துறையில் சேர்ந்தோம்; இயூலி என்பவன் பவுலைப் [6]பட்சமாய் நடப்பித்து, அவன் தன் சிநேகிதரிடத்திலே போய், பராமரிப்பை அடையும்படிக்கு உத்தரவு கொடுத்தான்.

௪ அவ்விடத்தை நாங்கள் விட்டுப் புறப்பட்டு, காற்றுகள் எதிரானபடியினாலே சீப்புருதீவுக்கு அருகாகப் போய்,

௫ கிலீக்கியா பம்பீலியா தேசங்களின் கடலின் வழியாய்ப் போய், உலூக்கியா தேசத்து மீறுபட்டணத்தில் சேர்ந்தோம்.

௬ ¶ அங்கே இத்தாலியா தேசத்திற்குப் போக எத்தனமான அலெக்குசந்தரியா பட்டணத்துக் கப்பலைச் சேனைத்தலைவன் கண்டு, எங்களை அதிலே ஏறப்பண்ணினான்.

௭ காற்று எங்களுக்குத் தடைபண்ணினதினாலே நாங்கள் அநேகநாள் மெதுவாய்ச் சென்று, வருத்தத்தோடே கினிது பட்டணத்திற்கு எதிரே போய்; கிரேத்தை* தீவின் கீழ்ப்புறமான சாலுமோன் என்னும் இடத்திற்கு எதிராய்ப் போய்,

௮ வருத்தத்தோடே அதைக் கடந்து, நலூஸ்லீம் என்னப்பட்ட இடத்தில் சேர்ந்தோம்; இலசேய பட்டணம் அதற்குச் சமீபமாயிருந்தது.

௯ ¶ அதுவனாக்கும் மிகுந்த காலம்சென்றபடியினாலும், [7]உபவாசபண்டிகைநாளும் கழிந்துபோனதால் அதிகமாய்ப் போகிறது மோசம்வருதற்கு ஏதுவானபடியினாலும் பவுல் அவர்களைநோக்கி,

௰ புருஷரே, இந்த யாத்திரைக் கப்பலில் உள்ள சரக்குகளுக்கும்

கி. பி. ௬௨.

1 ௧ கொரி. ௭.௭.
2 அப். ௨௩. ௯, ௨௯: ௨௫. ௨௫.
3 அப். ௨௫. ௰௧.
4 அப். ௨௫. ௰௨, ௨௫.
5 அப். ௰௯. ௨௯.
6 அப். ௨௪. ௨௩: ௨௮. ௰௬.

* அல்லது கந்தி.

7 ஏழாம் மாதத்தின் பத்தாம் நாள் உபவாசநாளாயிருந்தது. ௩ மோ. ௨௩. ௨௭, ௨௯.

Digitized by Google

கப்பல்களுக்குமாத்திரம் அல்ல, நம்முடைய ஜீவனுக்குங்கூட வருத்தமும்* மிகுந்த சேதமுமாய் இருக்கும் என்று காண்கிறேன் என்று எச்சரித்தான்.

௰க சேனைத்தலைவன் பவுலினால் சொல்லப்பட்டவைகளிலும், மாலுமியையும் கப்பற்காரனையும் அதிகமாய் நம்பினான்.

௰உ அல்லாமலும் அந்தத் துறை மழைகாலத்தில் தங்குதற்குத் தகுதி அல்லாதபடியினாலே தென்மேற்கேயும் வடமேற்கேயும் நோக்குகிற பினீக்ஸ் என்னும் கிரேத்தை தீவின் துறைமுகத்திலே மழைகாலத்திற்குத் தங்குதற்கு அங்கே சேரக்கூடுமானால், சேரும்படிக்கு இவ்விடம்விட்டுப் புறப்படவேண்டுமென்று அநேகம்பேர் ஆலோசனை சொன்னார்கள்.

௰௩ ¶ மேலும் தென்றல் மெதுவாய் அடித்தபடியால், அவர்கள் தங்கள் யோசனையின்படி நிச்சயமாய் நடக்குமென்று எண்ணி அவ்விடம்விட்டுப் பேர்ந்து, கிரேத்தை தீவுக்கு அருகாய்ப் போனார்கள்.

௰௪ சில காலத்திற்குப்பின்பு, ஐரோக்கிலிதோன் என்னப்பட்ட கடுங்காற்று அதில் மோதிற்று.†

௰௫ கப்பல் அதில் அகப்பட்டுக்கொண்டு காற்றுக்கு எதிர்த்துப் போகமாட்டாதபடியினாலே, நாங்கள் காற்றின் போக்கிலே கொண்டுபோகப்பட்டோம்.

௰௬ அப்படி கலவுதை என்னப்பட்ட ஒரு சிறிய தீவைக் கடந்து ஓடுகையில், ஓடத்தை வசப்படுத்திக்கொள்ளுதற்கு மிகுந்த வருத்தம் உண்டாயிருந்தது.

௰௭ அதை அவர்கள் தூக்கி எடுத்தபின்பு, எல்லாருடைய உதவியினாலும் கப்பலைச் சுற்றிக் கட்டி, சொரிமணலிலே விழுவோம் என்று பயந்து, பாய்களை இறக்கி, இவ்விதமாய்க் கொண்டுபோகப்பட்டோம்.

௰௮ மேலும் நாங்கள் பெருங்காற்று மழையினாலே மிகவும் அடிக்கப்பட்டபடியால், மறுநாளிலே சில பாரத்தைக் கடலில் எறிந்தார்கள்.

௰௯ மூன்றாம் நாளிலே கப்பலின் [1]தளபாடங்களை எங்கள் கைகளினாலே எடுத்து எறிந்தோம்.

௨௰ அநேக நாளாய்ச் சூரியனாகிலும் நட்சத்திரங்களாகிலும் காணப்படாமல் மிகுந்த பெருங்காற்றும் மழையும் எங்களைச் சூழ்ந்திருந்தபடியினாலே, தப்பிப்போவதற்கான நம்பிக்கையெல்லாம் அற்றுப்போயிற்று.

௨௧ அப்படியிருக்கையில், மிகுந்த காலம் அவர்கள் போசனம் பண்ணாமல் இருந்தபொழுது பவுல் அவர்களுக்குள்ளே எழும்பிச் சொன்னதாவது: புருஷரே, இந்த வருத்தமும் சேதமும் வாராதபடிக்கு, நீங்கள் என் சொல்லுக்குச் செவிகொடுத்து, கிரேத்தை தீவை விட்டுப் புறப்படாமல் இருக்கவேண்டியதாயிருந்தது.

௨௨ இப்பொழுது திடச்சித்தமாயிருங்கள் என்று உங்களை வேண்டிக்கொள்ளுகிறேன்; கப்பல் சேதமே அன்றி, உங்களில் ஒருவனுக்கும் பிராணசேதம் வருவதில்லை.

௨௩ எப்படியென்றால், [2]நான் ஆதீனமாயிருந்து ஆராதனைசெய்கிற [3]பராபரனுடைய தூதன் இந்த இராத்திரியிலே என்னிடத்தில் வந்து நின்று, பவுலே, பயப்படாதிரு; நீ இராயனுக்குமுன்பாக நிற்கவேண்டும்.

௨௪ அல்லாமலும் உன்னுடனேகூட யாத்திரையாய் வருகிற யாவரையும் பராபரன் உனக்குத் தயவு பண்ணினார் என்றான்.

௨௫ ஆனபடியினாலே புருஷரே, திடச்சித்தமாயிருங்கள், [4]எனக்குச் சொல்லப்பட்ட பிரகாரமாகவே நடக்கும் என்று பராபரனை நம்புகிறேன்.

இ. பி. ௬௨.

* அல்லது நஷ்டமும்.

† அல்லது எழும்பிற்று.

1 யோனா. க. ரு.

2 தானி. ௬. ௰௬. உரோ. க. ௯. உ தீமோ க. க.

3 அப். உக. ௰௧.

4 லூக். க. ௪௫. உரோ. ௪. உ௰, உக. உ தீமோ. க. ௰உ.



Digitized by Google

உசு நாம் [1]ஒரு தீவிலே விழுகிறதுமாத்திரம் நடக்கவேண்டும் என்றான்.

உஎ ¶ பதினான்காம் இராத்திரியானபொழுது நாங்கள் ஆதிரியா கடலில் அலைந்து திரிகையில், நடுச்சாமத்திலே கப்பலாள்களுக்கு ஒரு.கரை கிட்டியிருக்கிறதாய்த் தோன்றிற்று.

உஅ உடனே அவர்கள் சலத்தின் அளவைச் சோதித்து, இருபது பாகம் என்று கண்டார்கள்; சற்று அப்புறம் போனபொழுது, மறுபடியும் சோதித்துப் பதினைந்து பாகம் என்று கண்டு,

உகூ பாறை இடங்களில் விழுவோம் என்று பயந்து, கப்பலின் பின் பக்கத்திலிருந்து நான்கு நங்கூரங்களைப் போட்டு, உதயம் எப்பொழுது உண்டாகும் என்று இருந்தார்கள்.

௩௰ அப்பொழுது கப்பல் மனிதர்கள் கப்பலைவிட்டு ஓடிப்போக வகைதேடி, தாங்கள் கப்பலின் முன்பக்கத்திலிருந்து நங்கூரங்களைப் போட மனதுள்ளவர்கள் போல, ஓடத்தைக் கடலில் இறக்குகையில்,

௩க பவுல் சேனைத்தலைவனையும் போர்ச்சேவகரையும் நோக்கி, இவர்கள் கப்பலில் இராவிட்டால் நீங்கள் தப்பிப்போகமாட்டீர்கள் என்றான்.

௩உ அப்பொழுது போர்ச்சேவகர் ஓடத்தின் கயிறுகளை அறுத்து, அதைத் தாழ விழவிட்டார்கள்.

௩௩ உதயமாகத் தொடங்கினபொழுது எல்லாரும் போசனம் பண்ணுதற்குப் பவுல் அவர்களைத் தயிரியப்படுத்திச் சொன்னதாவது: நீங்கள் ஒன்றும் சாப்பிடாமல் பட்டினியாய்க் காத்திருந்து இன்று பதினான்காம் நாளாயிற்றே.

௩௪ ஆகையால் போசனம்பண்ணும்படி உங்களுக்குப் புத்திசொல்லுகிறேன்; நீங்கள் தப்புவதற்கு அதுவே உதவியாயிருக்கும்; [2]உங்கள் தலைகளிலிருந்து ஒரு மயிரும் விழாது என்று சொல்லி,

௩௫ அப்பத்தை எடுத்துக்கொண்டு எல்லார் முன்பாகவும் [3]பராபரனைத் தோத்திரித்து அதைப் பிட்டுப் புசிக்கத்தொடங்கினான்.

௩௬ அப்பொழுது மற்றெல்லாரும் திடச்சித்தம் அடைந்து, போசனம்பண்ணினார்கள்.

௩எ கப்பலில் [4]இருநூற்று எழுபத்தாறுபேர் இருந்தோம்.

௩அ திருத்தியாகப் புசித்தபின்பு அவர்கள் கோதுமையைக் கடலில் எறிந்து, கப்பலை லெகுவாக்கினார்கள்.

௩கூ உதயமானபொழுது இன்ன பூமியென்று அறியாமல், சமமான கரையுள்ள ஒரு துறைமுகத்தைப் பார்த்து, அங்கே போகக்கூடுமானால் அவ்விடத்திற்குத்தானே கப்பலைப் போகப்பண்ணவேண்டும் என்று யோசனையாயிருந்து,

௪௰ நங்கூரங்களை அறுத்துக் கடலிலே விட்டு,* சுக்கானுடைய கயிறுகளையும் தளரவிட்டுச் சிறிய பாயைக் காற்றுக்கு விரித்துக் கரைக்கு நேராய்ப்போகையில்,

௪க [5]இருபுறமும் கடலுள்ள ஓர் இடத்திலே சென்று, கப்பல் தட்டிற்று; அதின் முன்பக்கம் அசையாமல் ஊன்றியிருந்தது; பின்பக்கம் அலைகளின் பலத்தினாலே உடைந்துபோயிற்று.

௪உ அப்பொழுது காவலில் இருந்தவர்களில் ஒருவனும் நீந்தி ஓடிப்போகாதபடிக்கு, அவர்களைக் கொலைசெய்யவேண்டும் என்று போர்ச்சேவகர் யோசனையாயிருந்தார்கள்.

௪௩ அவர்களுடைய தலைவன் பவுலைக் காப்பாற்ற மனதாய் அவர்களுடைய யோசனையைத் தடுத்து, நீந்தத்தக்கவர்கள் முந்திக் கடலில் விழுந்து கரையேறவும்,

௪௪ மற்றவர்களில் சிலர் பலகைகளின்மேலும் சிலர் கப்பல் துண்டுகள்மேலும் போய்க் கரையேற

---

கி. பி. ௬௰உ.

1 அப். உ௩. ௧.
2 ௧ இரா. ௧. ௫உ. மத். ௧௰. ௩௰. லூக். ௧உ. எ: உ௧. ௧அ.
3 ௧ சாமு. ௯. ௰௩. மத். ௰௫. ௩௬. மாற். அ. ௬. யோவா. ௬. ௰௧. ௧ தீமோ. ௪. ௩, ௪.
4 அப். உ. ௪௧: எ. ௰௪. உரோ. ௰௩. ௧. ௧ பே. ௩. உ௰.

* அல்லது நங்கூரமிழுத்துக் கடலுக்குள் போனபொழுது.

5 உ கொரி. ௰௧. உ௫.

Digitized by Google

வும் கட்டளையிட்டான்; [1]இவ்விதமாய் எல்லாரும் தப்பிக் கரைசேர்ந்தார்கள்.

## ௨௮. அதிகாரம்.

௧. கப்பல் சேதமானபின்பு பவுல் அந்நியசாதியாரால் அங்கிகரிக்கப்பட்டது. ௫. அவன் கையைச் சுற்றிக்கொண்ட விஷப்பூச்சி அவனைத் தீண்டாதிருந்தது. ௮. அவன் அந்தத் தீவில் அநேக வியாதிக்காரரைச் சொஸ்தமாக்கினது. ௰௧. உரோமாபுரிக்குப் போனது. ௰௭. தான் வந்த நோக்கத்தை யூதர்களுக்கு அறிவித்தது. ௨௪. அவன் பிரசங்கித்தபின்பு சிலர் விசுவாசித்ததும், சிலர் விசுவாசியாமற்போனதும். ௩௰. அங்கே இரண்டுவருஷகாலம் பிரசங்கித்துக்கொண்டிருந்தது.

அவர்கள் தப்பிக் கரைசேர்ந்தபின்பு, [2]அந்தத் தீவின்பேர் மெலித்தா என்று அறிந்தார்கள்.

௨ [3]அந்நியராகிய அந்தத் தீவார் எங்களுக்கு மிகுந்த அன்பைக் காண்பித்தார்கள்; அவ்வேளையில் இருந்த மழைக்காகவும் குளிர்ச்சிக்காகவும் அவர்கள் நெருப்பை உண்டுபண்ணி, எங்கள் அனைவரையும் சேர்த்துக்கொண்டார்கள்.

௩ அப்பொழுது பவுல் சில விறகுகளை வாரி அந்த நெருப்பின்மேல்போடுகையில், ஒரு விரியன் பாம்பு அனலினாலே புறப்பட்டு, அவனுடைய கையைச் சுற்றிக்கொண்டது.

௪ தீவார் அந்தப் பொல்லாத பூச்சியை அவனுடைய கையிலே தொங்கக் கண்டபொழுது, மெய்யாய் இந்த மனிதன் கொலைபாதகன், இவன் சமுத்திரத்திற்குத் தப்பிவந்தும், பழியானது இவனைப் பிழைக்கவொட்டவில்லை என்று தங்களுக்குள்ளே சொல்லிக்கொண்டார்கள்.

௫ அவன் அந்தப் பூச்சியைத் தீயிலே உதறி, [4]ஒரு தீமையும் அடையாதிருந்தான்.

௬ அவர்கள் இவன் வீக்கங்கொண்டு சடுதியாய் மரித்து விழுவானென்று காத்திருந்தார்கள்; மிகுந்த காலம் அவர்கள் அப்படிக் காத்திருந்து, சேதம் எவ்வளவும் அவனுக்கு வராததைக் கண்டபொழுது, அவர்கள் வேறு சிந்தையை அடைந்து, [5]அவனைத் தேவனென்று சொல்லிக்கொண்டார்கள்.

௭ மேலும் அவ்விடத்திற்குச் சமீபமாய் அந்தத் தீவுக்கு முதலாளியாகிய புபிலியென்று பேர்கொண்டவனுடைய காணிபூமி இருந்தது; அவன் எங்களை ஏற்றுக்கொண்டு, மூன்றுநாளும் பட்சமாய் விசாரித்துக்கொண்டான்.

௮ புபிலியினுடைய தகப்பன் சுரத்தோடும் கழிச்சலோடும் கிடந்தான்; பவுல் அவனிடத்தில் போய்ச் [6]செபம்பண்ணி, [7]அவன்மேலே தன் கைகளை வைத்து, அவனைக் குணமாக்கினான்.

௯ அப்படி நடந்தபொழுது, தீவிலே இருந்த மற்ற வியாதிக்காரரும் வந்து குணமாக்கப்பட்டார்கள்.

௰ அவர்கள் [8]எங்களை மிகவும் கனஞ்செய்து, நாங்கள் கப்பல் ஏறினபொழுது, எங்களுக்கு வேண்டியவைகளை ஏற்றினார்கள்.

௰௧ மூன்றுமாதம் சென்றபின்பு, தீவிலே மழைகாலத்திற்குத் தங்கியிருந்த மிதுனம் என்னும் அடையாளமுள்ள அலெக்சந்தரி பட்டணத்துக் கப்பலிலே நாங்கள் ஏறிப் புறப்பட்டுப்போய்,

௰௨ சீரக்கூசைப் பட்டணத்தைச் சேர்ந்து, அங்கே மூன்றுநாள் தங்கி,

௰௩ பின்பு அவ்விடம்விட்டு (சிசிலிதீவைச்) சுற்றியோடி, இரேகியு பட்டணத்தில் சேர்ந்து, ஒருநாளுக்குப்பின் தென்றல்காற்று எடுக்கையில், இரண்டாம் நாளிலே புத்தேயோலி பட்டணத்திற்குப்போய்,

௰௪ அங்கே சகோதரரைக் கண்டோம்; அவர்கள் ஏழுநாள் தங்களிடத்தில் இருக்கும்படி எங்களை வேண்டிக்கொண்டார்கள்; அந்தப்படி நாங்கள் (இருந்து,) பின்பு உரோமைபுரிக்குப் போனோம்.

இ. பி. ௬௨.

1 ௨௭. ௪௪.
2 அப். ௨௭. ௨௬.
3 உரோ. ௧. ௰௪. ௧ கொரி. ௰௪. ௰௧. கொலோ. ௩. ௰௧.
4 மாற். ௰௬. ௰௮. லூக். ௰. ௰௯.
5 அப். ௰௪. ௰௧.
6 யாக். ௫. ௰௪, ௰௫.
7 மாற். ௬. ௫: ௭. ௩௨: ௰௬. ௰௮. லூக். ௪. ௪௰. அப். ௰௯. ௰௧, ௰௨. ௧ கொரி. ௰௨. ௯, ௨௮.
8 மத். ௰௫. ௬. ௧ தீமோ. ௫. ௰௭.

Digitized by Google

௰௫ அவ்விடத்திலுள்ள சகோதரர் எங்கள் சங்கதிகளைக் கேள்விப்பட்டுப் புறப்பட்டு, (சிலர்) அப்பியுபுரமென்னும் இடம்வரைக்கும் (சிலர்) மூன்று சத்திரமென்னும் இடம்வரைக்கும் எங்களுக்கு எதிர்கொண்டு வந்தார்கள்; அவர்களைப் பவுல் கண்டு, பராபரனைத் தோத்திரம் செய்து, திடன்கொண்டான்.

௰௬ உரோமைபுரியில் நாங்கள் சேர்ந்தபொழுது, சேனைத்தலைவன் தன் காவலில் இருந்தவர்களைச் சேனாதிபதிக்கு ஒப்புக்கொடுத்தான்; [1]அப்பொழுது பவுல் தன்னைக் காத்திருக்கும்படியான சேவகனுடனேகூடத் தனித்திருக்கும்படிக்கு உத்தரவு பெற்றுக்கொண்டான்.

௰௭ மூன்று நாளுக்குப் பின்பு பவுல் யூதரில் பிரதானமானவர்களைக்கூடி வரவழைத்தான், அவர்கள் கூடி வந்திருந்தபொழுது, அவன் அவர்களுடனே சொன்னதாவது: சகோதரர்களே, (நம்முடைய) [2]சனங்களுக்காவது முன்னோர்களின் முறைமைகளுக்காவது விரோதமான ஒன்றையும் நான் செய்யாமலிருந்தும், [3]காவலில் வைக்கப்பட்டு, எருசலேமிலிருந்து உரோமர் கைகளில் ஒப்புக்கொடுக்கப்பட்டேன்.

௰௮ [4]அவர்கள் என் காரியத்தை விசாரித்தபொழுது, மரணத்திற்கு ஏதுவான குற்றம் ஒன்றையும் என்னிடத்தில் காணாதபடியினாலே, என்னை விடுதலையாக்க மனதாய் இருந்தார்கள்.

௰௯ யூதர்கள் எதிர்பேசினபொழுது, [5]நான் இராயருக்கு அபயமிடும்படிக்குப் பலவந்தப்பட்டேன்; என் தேசத்தார்மேலே யாதொரு குற்றம்சாற்ற மனதில்லாமல் அப்படிச் செய்தேன்.

௨௰ இந்தச் சங்கதியைக்குறித்து நான் உங்களைக் காணவும் உங்களுடனே பேசவும் உங்களை அழைப்பித்தேன்; [6]இஸ்ரவேலருடைய நம்பிக்கையின் நிமித்தமே [7]இந்தச் சங்கிலியால் கட்டப்பட்டிருக்கிறேன் என்றான்.

௨௧ அவனுடனே அவர்கள் சொன்னதாவது: உன்னைக்குறித்து யூதேயாவிலிருந்து காகிதங்கள் எங்களிடத்தில் வரவுமில்லை, (அங்கே இருந்து) வந்த சகோதரரில் ஒருவனும் உன்மேல் பொல்லாங்கை அறிவித்துச் சொல்லவுமில்லை.

௨௨ [8]இந்த மார்க்கவகுப்பு எங்கும் விரோதமாய்ப் பேசப்படுகின்றதென்று நாங்கள் அறிந்திருக்கிறபடியால், நீ சிந்திக்கிறவைகளை உன்னிடத்திலே கேட்க விரும்புகிறோம் என்றார்கள்.

௨௩ அதற்காக அவர்கள் அவனுக்குக் குறித்தநாளிலே, அநேகம்பேர் அவன் தங்கின இடத்திலே சேர்ந்தார்கள்; அப்பொழுது அவன் காலைதொடங்கிச் சாயங்காலம்வரைக்கும் [9]மோசேயின் வேதநூலிலும் தீர்க்கதரிசிகளின் ஆகமங்களிலுமிருந்து [10]இயேசுவுக்குரியவைகளை அவர்களுக்குப் போதித்து, பராபரனுடைய இராச்சியத்தைக்குறித்துச் சாட்சிகொடுத்து, வியாக்கியானம்பண்ணினான்.

௨௪ அவன் சொன்னவைகளைச் [11]சிலர் ஒத்துக்கொண்டார்கள்; சிலர் விசுவாசியாதிருந்தார்கள்.

௨௫ இப்படி அவர்கள் ஒருவரோடொருவர் இசைவாயிராமல் வெளியே போகையில், பவுல் அவர்களுக்குச் சொன்ன ஒரே வாக்கியமாவது:

௨௬ இந்தச் சனங்கள் [12]கண்களினாலே காணாமலும் காதுகளினாலே கேளாமலும் இருதயத்தினால் சிந்தித்துக்கொள்ளாமலும் மனம் திரும்பாமலும் என்னால் ஆரோக்கியம் அடையாமலும் இருக்கும்படிக்கு, இவர்கள் கடினமாக்கப்பட்ட இருதயமுடையவர்களுமாய் வருத்தத்தோடே கேட்கிற

கி. பி. ௬௰.

1 அப். ௨௪. ௨௩: ௨௭. ௩.
2 அப். ௨௪. ௰௨, ௰௩: ௨௫. ௮.
3 அப். ௨௧. ௩௩.
4 அப். ௨௨. ௨௪: ௨௪. ௰: ௨௫. ௮: ௨௬. ௩௧.
5 அப். ௨௫. ௰௧.
6 அப் ௨௬. ௬, ௭.
7 அப் ௨௬. ௨௯. எபே. ௩. ௧: ௪. ௧: ௬. ௨௰. ௨ தீமோ. ௧. ௰௬: ௨. ௯. பிலே. ௰. ௰௩.
8 லூக். ௨. ௩௪. அப். ௨௪. ௫, ௰௪. ௧ பே. ௨. ௰௨: ௪. ௰௪.
9 லூக். ௨௪. ௨௭. அப். ௰௭. ௩: ௰௯. ௮.
10 அப். ௨௬. ௬, ௨௨.
11 அப் ௰௪. ௪: ௰௭. ௪: ௰௯. ௯.
12 ஏசா. ௬. ௯. எரே. ௫. ௨௧. எசே. ௰௨. ௨. மத். ௰௩. ௰௪, ௰௫. மாற். ௪. ௰௨. லூக். ௮. ௰. யோவா. ௰௨. ௪௰. உரோ. ௰௧. ௮.

Google

காதுள்ளவர்களுமாய் மூடிக்கொண்டிருக்கிற கண்களையுடையவர்களுமாய் இருக்கிறபடியினாலே,

உஎ நீங்கள் உற்றுக்கேட்டாலும் சிந்தித்துக்கொள்ளாமல் இருப்பீர்கள், உற்றுப்பார்த்தாலும் அறியாமலிருப்பீர்கள் என்று இந்தச் சனங்களிடத்திற்குப் போய்ச் சொல் என்கிறதைப் பரிசுத்தஆவி ஏசாயா தீர்க்கதரிசியைக்கொண்டு நம்முடைய முன்னோர்களுடனே நன்றாய்ச் சொன்னார்.

உஅ ஆதலால் [1]பராபரனுடைய இரட்சிப்புப் புறத்தேசத்தார்களுக்கு அனுப்பப்பட்டதென்று நீங்கள் அறிந்துகொள்வீர்களாக; அவர்களே அதற்குச் செவிகொடுப்பார்கள் என்றான்.

உகூ இவைகளை அவன் சொன்னபின்பு, யூதர்கள் தங்களுக்குள்ளே மிகவும் தருக்கம்பண்ணிக்கொண்டு போய்விட்டார்கள்.

௩௰ ¶ பின்பு பவுல் தனக்காகக் கூலிக்கு வாங்கியிருந்த வீட்டிலே இரண்டு வருஷம் முழுவதும் தங்கி, தன்னிடத்தில் வந்த யாவரையும் ஏற்றுக்கொண்டு,

௩க [2]மிகுந்த தயிரியத்தோடும் தடையில்லாமலும் பராபரனுடைய இராச்சியத்தைக்குறித்துப் பிரசங்கித்து, கர்த்தராகிய இயேசுக்கிறிஸ்துவின் விசேஷங்களை உபதேசித்துக்கொண்டு வந்தான்.—ஆமன்.

கி. பி. ௬௩.

1 மத். உக. ௪௩, ௪௩. அப். ௰௩. ௪௬,௪எ:௰அ.எ: உஉ.உக: உ௬. ௰எ,௰அ. உ௦. ௩௪. ௰௬.

2 அப். ௪. ௩௧. எபே. ௬. ௰௯.

Digitized by Google

# ROMANS.

அப்போஸ்தலனாகிய பவுல்

# உரோமாபுரியருக்கு

## எழுதின நிருபம்.

### ௧. அதிகாரம்.

௧. பவுல் உரோமருக்குத் தான் அப்போஸ்தல அதிகாரம் பெற்றதையும், ௯. அவர்களிடத்திற்குச் செல்ல விரும்பினதையும் காட்டினது. ௰௬. தான் பிரசங்கிக்கும் சுவிசேஷம் இன்னதென்றும், அதினால் விளங்கும் நீதி இன்னதென்றும் காண்பித்தது. ௰௮. எல்லாவித பாவங்களைக்குறித்துப் பராபரன் கோபத்தையும், ௨௧. அஞ்ஞானிகள் செய்யும் பாவங்கள் இன்னவைகளென்பதையும் காட்டினது.

[1]மனிதத்தன்மையின்படிக்குத்தாவீதின் சந்ததியில் [2]பிறந்தவருமாய்,

௨ [3]பரிசுத்தமுள்ள ஆவிக்குரிய தன்மையின்படிக்கு மரித்தோரிலிருந்து எழுந்ததினாலே [4]பராபரனுடைய குமாரன் என்று பலமாய்க் காண்பிக்கப்பட்டவருமாய்,* தேவகுமாரனுமாய், நம்முடைய கர்த்தருமாய்,

௩ தம்மாலே அழைக்கப்பட்ட உங்களோடேகூட [5]உலகத்தார் யாவரையும் [6]தமது திருநாமத்தின் நிமித்தம் விசுவாசத்திற்குக் கீழ்ப்படியப்பண்ணும்பொருட்டு,†

௪ [7]எங்களுக்குக் கிருபையையும் அப்போஸ்தலப் பட்டத்தையும் கொடுத்தவருமாய் இருக்கிற இயேசுக்கிறிஸ்துவைக்குறித்து,

௫ [8]பராபரன் தம்முடைய தீர்க்கதரிசிகளினாலே [9]பரிசுத்த வேதவாக்கியங்களில் முன்வாக்குத்தத்தம்பண்ணியிருந்த [10]சுவிசேஷத்திற்காகப் பிரித்து எடுக்கப்பட்டும், [11]அப்போஸ்தலனாக அழைக்கப்பட்டும்,

௬ இயேசுக்கிறிஸ்துவின் ஊழியக்காரனுமாயிருக்கிற பவுல்,

௭ [12]உரோமாபுரியிலுள்ள தேவப்பிரியரும் அழைக்கப்பட்ட பரிசுத்தருமாகிய அனைவருக்கும் (எழுதுகிறதாவது:) [13]நம்முடைய பிதாவாகிய பராபரனாலும் கர்த்தராகிய இயேசுக்கிறிஸ்துவினாலும் உங்களுக்குக் கிருபையும் சமாதானமும் உண்டாவதாக.

௮ ¶ [14]உங்கள் விசுவாசத்தைக்குறித்து உலகத்தில் எங்கும் பேசிக்கொள்ளுகிறபடியினாலே, முதலாவது நான் உங்கள் எல்லாருக்காகவும் இயேசுக்கிறிஸ்து மூலமாய் [15]என்னுடைய பராபரனைத் தோத்திரஞ்செய்கிறேன்.

௯ பராபரனுடைய குமாரனுக்குரிய சுவிசேஷத்திலே [16]நான் என் (முழு) மனதோடும்‡ அவருக்கு ஊழியஞ்செய்துவருகிறேனே; [17]அவர் நான் இடைவிடாமல் உங்

இ. பி. சுய.

1 யோவா. ௧. ௰௪. கலா. ௪. ௪.
2 மத். ௧. ௯, ௰௬. லூக். ௧. ௩௨. அப். ௨. ௩௰. ௨ தீமோ. ௨. ௮.
3 எபி. ௯. ௰௪.
4 அப். ௰௩. ௩௩.
* இரேக்கு, நிச்சயமாக்கப்பட்டவருமாய்.
5 அப். ௯. ௭. உரோ. ௰௯. ௨௬.
6 அப். ௯. ௰௫.
† அல்லது கீழ்ப்படியும் பொருட்டு.
7 உரோ. ௰௨. ௩: ௰௫. ௰௫. ௧ கொரி. ௰௫. ௰. கலா. ௧. ௰௫: ௨. ௯. எபே. ௩. ௰௯.
8 உரோ. ௩. ௨௧: ௰௬. ௨௫. கலா. ௩ ௮.
9 அப். ௨௬. ௯. தீத். ௧. ௨.
10 அப். ௯. ௰௫: ௰௩. ௨. கலா. ௧. ௰௫.
11 அப். ௨௨. ௨௧. ௧ கொரி. ௧. ௧. கலா. ௧. ௧. ௧ தீமோ. ௧. ௰௧: ௨. ௭. ௨ தீமோ. ௧. ௰௧.

12 உரோ. ௯. ௨௪. ௧ கொரி. ௧. ௨. ௧ தெச. ௪. ௭.—13 ௧ கொரி. ௧. ௩. ௨ கொரி. ௧. ௨. கலா. ௧. ௩.—14 உரோ. ௰௬. ௰௯. ௧ தெச. ௧. ௮.—15 ௧ கொரி. ௧. ௪. பிலி. ௧. ௩. கொலோ. ௧. ௩, ௪. ௧ தெச. ௧. ௨. பிலே. ௪.—16 அப். ௨௭. ௨௩. ௨ தீமோ. ௧. ௩.—‡ அல்லது ஆவியிலே; யோவா. ௪. ௨௩, ௨௪. பிலி. ௩. ௩.—17 ௧ தெச. ௧. ௨.

Digitized by Google

களை கிளைத்துக்கொண்டிருக்கிறதைக்குறித்துச் [1]சாட்சியாய் இருக்கிருர்.

ய நீங்கள் ஸ்திரப்படுவதற்காகச் [2]சில ஞானவரங்களை உங்களுக்குக் கொடுக்கும்படிக்கு, நான் உங்களைக் காண மிகவும் ஆசையாயிருக்கிறபடியினுலே,

யக நான் உங்களிடத்தில் வருகிறதற்கு, [3]பராபரனுடைய சித்தம் எனக்கு நல்ல பிரயாணம் கிடைக்கப்பண்ணவேண்டும் என்று [4]எப்பொழுதும் என் செபங்களில் வேண்டிக்கொள்ளுகிறேன்.

யஉ உங்களிலும் என்னிலுமுள்ள விசுவாசத்தினுலே [5]நாம் ஒருவருக்கொருவர்* ஆறுதலாய் இருக்கும்படிக்கே, அப்படிச் செய்துவருகிறேன்.

யகூ ¶ சகோதரர்களே, [6]மற்றத் தேசத்தாருக்குள்ளே நான் பலனை அடைந்ததுபோல, உங்களுக்குள்ளும்† சில பலனை அடையும்பொருட்டாக, [7]உங்களிடத்தில் வர அடிக்கடி மனதாயிருந்தேன்; [8]ஆகிலும், இதுவரைக்கும் எனக்குத் தடை உண்டாயிற்று என்று அறிவீர்களாக.

யச [9]கிரேக்கருக்கும் அந்நிய சனங்களுக்கும், ஞானிகளுக்கும் மூடருக்கும் நான் கடனாளியாய் இருக்கிறேனே.

யரு ஆதலால் [10]முதலாவது, யூதரிலும் பின்பு கிரேக்கரிலும் எவன் கிறிஸ்துவின் சுவிசேஷத்தை விசுவாசிக்கிருனே, [11]அவனுக்கு இரட்சிப்பு உண்டாகும்படிக்கு அந்தச் சுவிசேஷம் தேவபலமுள்ளதாய் இருக்கிறபடியினுலே,

யசு [12]நான் அதைக்குறித்து வெட்கப்படாமல், என்னுடைய திராணியின்படி அதை உரோமாபுரியில் உள்ள உங்களுக்கும் பிரசங்கம்பண்ண விரும்புகிறேன்.

யஎ ¶ [13]விசுவாசத்தினுலே நீதிமானவன் பிழைப்பான் என்று எழுதியிருக்கிறபடி, [14]விசுவாசத்தினுலாகும் தேவநீதி விசுவாசத்திற்கு ஏதுவென்று அந்தச் சுவிசேஷத்தில் வெளிப்படுத்தப்பட்டிருக்கின்றது.

யஅ ¶ என்னத்தினுலெனில் [15]சத்தியத்தை அநியாயத்தினுலே அடக்கிக்கொள்ளுகிற மனிதருடைய எல்லாவித அவபத்திக்கும் அநியாயத்திற்கும் விரோதமாய்ப் பராபரனுடைய கோபம் வானத்திலிருந்து வெளிப்படுகின்றது.

யகூ அதெப்படியென்ருல் [16]பராபரனைக்குறித்து அறியப்படுவது அவர்களுக்குள்ளே‡ வெளிப்பட்டிருக்கின்றது; [17]பராபரனே அதை அவர்களுக்கு வெளிப்படுத்தினுர்.

உய எப்படியென்ருல், உலகம் உண்டானதுமுதற்கொண்டு [18]அவருடைய நித்திய வல்லமை தேவத்துவம் என்பவைகள் காணப்படாதவைகளாயிருந்தும், உண்டாக்கப்பட்டிருக்கிற வஸ்துக்களினுலே தெளிவாய் அறியப்படும்; ஆதலால் அவர்கள் போக்குச்சொல்லிக்கொள்ளுகிறதற்கு இடமில்லை.§

உக அவர்கள் பராபரனை அறிந்தும், அவரைப் பராபரன் என்று புகழாமலும் தோத்திரம்செய்யாமலும் இருந்து, [19]தங்கள் யோசனைகளினுலே வீணராஞர்கள்; புத்தியில்லாத அவர்களுடைய இருதயம் இருள் அடைந்தது.

உஉ [20]அவர்கள் தங்களை ஞானிகளென்று சொல்லிப் பயித்தியக்காரராகி,

உகூ [21]அழிவில்லாத தேவனுடைய மகிமையை அழிவுள்ள மனிதர், பறவைகள், மிருகங்கள், ஊர்வன என்றிவைகளுடைய சொரூபமாக மாற்றினுர்கள்.

கி. பி சுய.

1 உரோ. கூ. க. உ கொரி. க. உக. பிலி. க. அ. க தெச. உ. இ.
2 உரோ. மஇ. உகூ.
3 யாக். ச. மரு.
4 உரோ. மஇ. உக, கஉ. க தெச. க. ம.
5 தீத். க ச. உ பே. க. க.
* அல்லது உங்களோடு நான்.
6 பிலி. ச. மஎ.
† அல்லது உங்களிடத்திலும்.
7 உரோ. மஇ. உக.
8 அப். மகூ. எ. க தெச. உ.மஅ.
9 க கொரி. கூ. மக.
10 லூக். உ. உகூ, கக: உச. சஎ. அப். க. உக: மக. உக, சகூ. உரோ. உ. ம.
11 க கொரி. க. மஅ: மஇ. உ. சங். சம. கூ,ம. மாற். அ. கஅ. உதீமோ. க. அ.
13 ஆப. உ. ச. யோவா. க. கக. கலா. க. மக. பிலி. க.கூ. எபி. ம. கஅ.
14 உரோ.க. உக.
15 அப். மஎ. கம. எபே. இ. கூ. கொலோ. க. கூ.
16 அப். மச. மஎ.
‡ அல்லது அவர்களில்.
17 யோவா. க. கூ.
18 சங். மகூ. க.ழ. அப். மச. மஎ: மஎ. உஎ.
§ அல்லது சொல்லாதபடிக்கு அவைகள் காரணமாயிருக்கின்றன.
19 உ இரா. மஎ. மஇ. எரே. உ.

இ. எபே. ச.மஎ,மஅ.—20 எரே. ம. மச.—21 இ மோ. ச.மக. ழ. சங்.ாக.உம. ஏசா. சம. மஅ, உக. எரே. உ. மக. எசே. அ. ம. அப். மஎ. உக.

Digitized by Google

௨௪ ¶ அதற்காக [1]அவர்கள் தங்கள் இருதயங்களின் இச்சைகளினாலே [2]ஒருவரோடொருவர் தங்கள் சரீரங்களைக் கனஈனப்படுத்தத்தக்கதாக, பராபரன் [3]அவர்களை அசுத்தத்திற்கு ஒப்புக்கொடுத்தார்.

௨௫ [4]பராபரனைக்குறித்து அறிந்த சத்தியத்தை [5]அவர்கள் பொய்யாக மாற்றி, என்றென்றைக்கும் துதிக்கப்படத்தக்க சிருஷ்டிகரைப் பார்க்கிலும்* சிருஷ்டியைத் தொழுதுகொண்டு சேவித்தபடியினாலே,

௨௬ பராபரன் அவர்களை [6]இகழ்ச்சியுள்ள ஆசைகளுக்கு ஒப்புக்கொடுத்தார்; அந்தப்படி அவர்களுடைய பெண்கள் சுபாவ அநுபோகத்தைச் சுபாவத்திற்கு விரோதமான அநுபோகமாக மாற்றினார்கள்.

௨௭ அதுபோல ஆண்களும் பெண்களைச் சுபாவப்படி அநுபவியாமல், தங்கள் மோக இச்சைகளினாலே ஒருவருக்கொருவர் பொங்கி, ஆணோடே ஆண் அவலட்சணமானதை நடப்பித்து, இவ்விதமாகத் தங்கள் தப்பிதத்திற்குத் தகுதியான பலனைத் தங்களிடத்திலே பெற்றுக்கொண்டார்கள்.

௨௮ அறிவினாலே பராபரனைப் பற்றிக்கொள்ளும்படிக்கு† அவர்கள் கவலைப்படாமல் இருந்தபடியால், [7]தகாதவைகளைச் செய்யும்படி மந்தமுள்ள‡ மனதுக்குப் பராபரன் அவர்களை ஒப்புக்கொடுத்தார்.

௨௯ அவர்கள் எல்லாவித அநீதியினாலும் வேசித்தனத்தினாலும் பொல்லாங்கினாலும் பொருளாசையினாலும் தீமையினாலும் பொறாமையினாலும் கொலையினாலும் வாக்குவாதத்தினாலும் தந்திரத்தினாலும் துர்க்குணத்தினாலும் நிறைந்தவர்களுமாய்,

௩௰ புறங்கூறுகிறவர்களுமாய், நிந்திக்கிறவர்களுமாய்ப் பராபரனைப் பகைக்கிறவர்களுமாய், இறுமாப்புள்ளவர்களுமாய், அகந்தையுள்ளவர்களுமாய், வீம்புக்காரருமாய், தகாத விசித்திரங்களை உண்டுபண்ணுகிறவர்களுமாய், தாய் தகப்பன்மாருக்குக் கீழ்ப்படியாதவர்களுமாய்,

௩௧ விவேகம் இல்லாதவர்களுமாய், உடம்படிக்கையைத் தள்ளுகிறவர்களுமாய், சுபாவ அன்பில்லாதவர்களுமாய்,§ மன்னியாதவர்களுமாய், இரக்கம் இல்லாதவர்களுமாய்,

௩௨ இப்படிப்பட்டவைகளைச் செய்கிறவர்கள் [8]மரணத்திற்குப் பாத்திரராய் இருக்கிறார்கள் என்று [9]பராபரனுடைய நியாயப்பிரமாணத்தை அறிந்தும், அவைகளைத் தாங்களே செய்கிறதுமல்லாமல், [10]அவைகளைச் செய்கிற மற்றவர்களிடத்தில் சந்தோஷப்படுகிறவர்களுமாய்‖ இருக்கிறார்கள்.

கி. பி. ௬௰.

1 உ மோ. ௰அ. ௨௨.
2 க கொரி. ௬. ௰அ. உதெச. ச. ௪. உபே. ச. ௩.
3 சங். அக. ௰௨. அப். எ. ௪௨. எபே. ச. ௰அ, ௰௯. உ தெச. ௨. ௰க, ௰௨.
4 க தெச. க. ௯. உயோ. ஞ. ௨௰.
5 எசா. ௪௪. ௨௰. எரே ௰. ௰௪:௰௫. ௨௫. ஆமோ. ௨. ௪.
* அல்லது சிருட்டிகருக்குப் பதிலாக.
6 உ மோ. ௰அ. ௨௨, ௨௩. எபே. ௫. ௰௨. யூதா. ௰.
† அல்லது அறிக்கை பண்ணும் படிக்கு.
7 எபே. ௫. ௪.
‡ அல்லது கெட்ட.
§ அல்லது கொள்கை மற்றவர்களுமாய்.
8 உரோ. க. ௨௩.
9 உரோ. ௨. ௨.
10 ஓசே. எ. ௩. சங். ௫௰. ௰அ.
‖ அல்லது இணக்குகிறவர்களுமாய்.
11 உ சாமு. ௰௨. ௫-எ. மத். எ. ௧, ௨. யோவா. அ. ௯.
12 உரோ. ௪. ௨௰.

# ௨. அதிகாரம்.

க. தாங்களே பாவஞ்செய்து மற்றவர்களைக் குற்றஞ்சுமத்துகிற யூதர்களாலும், அஞ்ஞானிகளாலும், போக்கில்லாமல் பராபரனுடைய நீதியான தீர்ப்புக்கு ஏதுவானதையும், ௰௪. அஞ்ஞானிகளிலும், ௰எ. சன்னத்தடைந்த யூதர்களிலும், ௨௯. நியாயப்பிரமாணத்தைக் கைக்கொள்ளாதவர்கள் ஆக்கினைக்குத் தப்பாததையும் காட்டினது.

அப்படியிருக்க, (மற்றவர்களைக் குறித்து) தீர்ப்புச் சொல்லுகிறவனே, [11]நீ தீர்ப்புச்சொல்லுகிற காரியங்கள் எவைகளோ, அவைகளை நீயேசெய்கிறபடியால், நீ மற்றவர்களுக்குக் கொடுக்கிற தீர்ப்பினாலே உன்னைத்தானே ஆக்கினைக்கு உள்ளாக்குகிறாய்; ஆதலால் [12]நீ போக்குச் சொல்லிக்கொள்ளுகிறதற்கு இடமில்லை. மேலும் நமக்குத் தெரிந்திருக்கிறபடி,

௨ இப்படிப்பட்டவைகளைச் செய்கிறவர்களுக்குப் பராபரன் கொடுக்கிற நியாயத்தீர்ப்புச் சத்தியத்தின்படியே இருக்கின்றது.

௩ ஆனபடியினாலே இப்படிப்பட்டவைகளைச் செய்கிறவர்களுக்குத் தீர்ப்புச் சொல்லுகிற மனித

னே, நீயே அவைகளைச் செய்திருக்க, பராபரனுடைய நியாயத்தீர்ப்புக்குத் தப்பிப்போகலாமென்று நினைக்கிறாயா?

௪ அல்லது [1]பராபரனுடைய தயவு, [2]பொறுமை, [3]நீடியசாந்தம் இவைகளின் ஐசுவரியத்தை நீ அசட்டைபண்ணி, [4]அவருடைய தயவு உன் மனந்திரும்புதற்கு ஏதுவாய் இருக்கவேண்டுமென்று அறியாமல் இருக்கிறாயா?

௫ நீ உன் இருதயத்தைக் கடினப்படுத்தி, மனந்திரும்பாமல் இருக்கிறதால், பராபரனுடைய கோபாக்கினையும் [5]நீதியுள்ள தீர்ப்பும் வெளிப்படும் நாளிலே உனக்குக் கோபாக்கினை வரும்படி அதைச் சேர்த்துக்கொள்ளுகிறாய்.

௬ [6]அப்பொழுது அவர் அவனவனுடைய கிரியைகளுக்குத்தக்கதாய், அவனவனுக்குப் பதில் அளிப்பார்.

௭ இடைவிடாமல் நற்கிரியைகளைச் செய்து, மகிமையையும் கனத்தையும் அழியாமையையும் தேடுகிறவர்களுக்கு நித்தியசீவனை அளிப்பார்.

௮ சண்டைக்காரராய் இருந்து [7]சத்தியத்திற்குக் கீழ்ப்படியாமல், அநியாயத்திற்குக் கீழ்ப்படிந்தவர்களோ,

௯ உக்கிரகோபாக்கினையை அடைவார்கள்; [8]பராபரனிடத்தில் பட்சபாதமில்லை.

௰ [9]ஆதலால் முன்பு யூதரிலும் பின்பு கிரேக்கரிலும்* எந்த மனிதன் பொல்லாங்கைச் செய்கிறானோ அவனுக்கு உபாதியும் வியாகுலமும் வரும்.

௰௧ முன்பு யூதர்களிலும் பின்பு கிரேக்கரிலும்† எவன் நன்மை செய்கிறானோ [10]அவனுக்கு மகிமையும் கனமும் சமாதானசவுக்கியமும் உண்டாகும்.

௰௨ ¶ மேலும் நியாயப்பிரமாணத்தை அடையாமல் எவர்கள் பாவம்செய்கிறார்களோ, அவர்கள் நியாயப்பிரமாணத்தின்படியே நியாயத்தீர்ப்பு அடையாமல் கெட்டுப்போவார்கள், நியாயப்பிரமாணம் உள்ளவர்களாய் எவர்கள் பாவம்செய்கிறார்களோ, அவர்கள் நியாயப்பிரமாணத்தின்படி ஆக்கினைக்கு உள்ளாக்கப்படுவார்கள்.

௰௩ [11]நான் பிரசங்கிக்கிற சுவிசேஷத்தின்படியே [12]இயேசுக்கிறிஸ்துவைக்கொண்டு பராபரன் [13]மனிதருடைய அந்தரங்கங்களைக்குறித்து நியாயத்தீர்ப்புக்கொடுக்கும் நாளிலே (அப்படி நடக்கும்;) அதெப்படியென்றால்,

௰௪ [14]நியாயப்பிரமாணத்தைக் கேட்கிறவர்கள்மாத்திரம் பராபரனுக்குமுன்பாக நீதிமான்களாய் இருக்கமாட்டார்கள்; நியாயப்பிரமாணத்தின்படி செய்கிறவர்களே, நீதிமான்களாக்கப்படுவார்கள்.

௰௫ அன்றியும், நியாயப்பிரமாணம் இல்லாத சனங்கள் இயல்பாய் நியாயப்பிரமாணத்தின்படி செய்கிறபொழுது, நியாயப்பிரமாணம் இல்லாத அவர்கள் தங்களுக்குத்தாமே நியாயப்பிரமாணமாய் இருக்கிறார்கள்.

௰௬ அவர்களுடைய மனதுகூடச் சாட்சி‡ பகருகிறதினாலும், அவர்களுடைய சிந்தனைகள் ஒன்றுக்கொன்று§ குற்றம் உண்டு, அல்லது குற்றம் இல்லையென்று தீர்க்கிறதினாலும், அவர்கள் தங்கள் இருதயங்களில் நியாயப்பிரமாணத்திற்கு ஏற்ற கிரியை எழுதியிருக்கின்றதென்று காண்பிக்கிறார்களே.

௰௭ ¶ [15]கேள், நீ யூதனென்று பேர்பெற்றிருந்து, [16]நியாயப்பிரமாணத்தை ஊன்றிக்கொண்டு

கி. பி. ௬௰.

1 உரோ. ௯,௨௩. எபே. ௧.௭: ௨, ௪, ௭.
2 உரோ. ௩,௨௫.
3 உ பேர.௩௪.௯.
4 ஏசா. ௩௦. ௰௮. உ பே.௩.௯,௰௫.
5 ஒ மோ. ௩௨. ௩௪. யாக். ௫. ௩.
6 யோபு. ௩௪.௰௧. சங். ௩௨. ௰௨. வாக். உச. ௰௨. எரே. ௰௭. ௰: ௩௨. ௰௯. மத். ௰௬.௨௭.உரோ. ௰௪. ௰௨. ௧ கொரி. ௩. அ.உ கொரி.௫. ௰. வெளி. ௨. ௨௩: ௨௰. ௰௨: ௨௨. ௰௨.
7 யோபு. ௨௪. ௰௩. உரோ. ௧. ௰௮. உ தெச. ௧. ௮.
8 ௫ மோ. ௰. ௰௭. உ நாளா.௰௯.௭. யோபு. ௩௪.௰௯. அப். ௰. ௩௫ கலா. ௨. ௯. எபே. ௬. ௯. கொலோ. ௩. ௨௫. ௧ பே. ௧. ௰௭.
9 ஆமோ. ௩. ௨. லூக். ௰௨. ௪௭, ௪௮. ௧ பே. ௪. ௰௭.
* அல்லது புறச்சாதியாரிலும்.
† அல்லது புறச்சாதியாரிலும்.
10 ௧ பே. ௧. ௭.
11 உரோ. ௰௬. ௨௫. ௧ தீமோ. ௧ ௰௧. உ தீமோ. ௨. ௮.
12 யோவா. ௫. ௨௨. அப். ௰. ௪௨: ௰௭. ௩௧. உ தீமோ. ௪. ௧, ௮. ௧ பே. ௪. ௫.
13 பிரச. ௰௨. ௰௪. மத். ௨௫. ௩௧. யோவா. ௰௨. ௪௮. உரோ. ௩. ௬. ௧ கொரி. ௪. ௫. வெளி. ௨௰. ௰௨.

14 மத். ௭. ௨௧. யாக் ௧ ௨௨, ௨௩, ௨௫. ௧ யோ. ௩. ௭. ‡ அல்லது அவர்களோடே சாட்சி. § அல்லது அவ்வேளையில்.
15 மத். ௩. ௯. யோவா. அ. ௩௩. உரோ. ௯. ௬, ௭. உ கொரி. ௰௧. ௨௨. — 16 மீகா. ௩. ௰௧. உரோ. ௯. ௪.

Digitized by Google

[1]பராபரனைக்குறித்துப் பெருமை பாராட்டி,

௰அ நியாயப்பிரமாணத்தினாலே உபதேசிக்கப்பட்டவனாய் [2]அவருடைய சித்தத்தை அறிந்து, [3]வித்தியாசமானவைகளைச் சோதித்து அறிகிறாய்.*

௰௯ அல்லாமலும் [4]நியாயப்பிரமாணத்தினாலே மெய்யறிவையும் சத்தியத்தையும் காட்டிய குறிப்பிடமுள்ளவனாய் [5]நீ உன்னைக் குருடருக்கு வழிகாட்டுகிறவன் என்றும்,

௨௰ அந்தகாரத்தில் உள்ளவர்களுக்கு ஒளி கொடுக்கிறவன் என்றும், புத்தியீனருக்கு உபாத்தி என்றும், குழந்தைகளுக்குப் போதகன் என்றும் சொல்லுகிறாய்.

௨௧ இப்படிப்பட்டவனானால் [6]மற்றவனுக்குப் போதிக்கிற நீ உனக்குத்தானே போதியாமல் இருக்கலாமா? களவுசெய்யக்கூடாது என்று பிரசங்கிக்கிற நீ களவு செய்யலாமா?

௨௨ விபசாரம்பண்ணக்கூடாதென்று சொல்லுகிற நீ விபசாரம் பண்ணலாமா? விக்கிரகங்களை அருவருக்கிற நீ [7]பரிசுத்தமானதைக் கொள்ளையிடலாமா?

௨௩ [8]நியாயப்பிரமாணத்தைக்குறித்துப் பெருமைபாராட்டுகிற நீ நியாயப்பிரமாணத்தை மீறி நடந்து, பராபரனைக் கனஈனம்பண்ணலாமா?

௨௪ பராபரனுடைய நாமம் மற்றத் தேசத்தாருக்குள்ளே உங்களாலே தூஷணிக்கப்படுகின்றதென்று [9]எழுதியிருக்கிறபடி (செய்கிறாயே).

௨௫ ¶ [10]நீ வேதப்பிரமாணத்தின்படி செய்தால் விருத்தசேதனம் மெய்யாய் உனக்குப் பிரயோசனமாய் இருக்கும்; நீ வேதப்பிரமாணத்தை மீறி நடந்தாயாகில் உன் விருத்தசேதனம் விருத்தசேதனம் இல்லாமையாயிற்று.

௨௬ [11]மேலும் விருத்தசேதனம் இல்லாதவன் வேதப்பிரமாணத்துக்கு ஏற்ற நீதிகளைக் கைக்கொண்டால், அவனுடைய விருத்தசேதனம் இல்லாமை விருத்தசேதனமே என்று எண்ணப்படும் அல்லவோ?

௨௭ அல்லாமலும் விருத்தசேதனம் இல்லாமல் சுபாவப்படிக்கே இருந்து வேதப்பிரமாணத்தை நிறைவேற்றுகிறவன் [12]எழுத்தின்படியான விருத்தசேதனத்தினாலே யூதனாய் வேதப்பிரமாணத்தை மீறுகிற உன்னைக் குற்றப்படுத்துவான் அல்லவோ?

௨௮ ஆதலால் [13]புறம்பாக யூதனானவன் யூதனல்ல; புறம்பாகச் சரீரத்தில் உண்டான விருத்தசேதனம் விருத்தசேதனமல்ல.

௨௯ [14]உள்ளத்திலே யூதனானவனே யூதன்; எழுத்தின்படி அல்ல [15]ஆவியின்படி [16]இருதயத்தில் உண்டான விருத்தசேதனமே விருத்தசேதனம்; [17]இப்படிப்பட்டவனுடைய புகழ்ச்சி மனிதரால் அல்ல, பராபரனாலே உண்டாயிருக்கின்றது.

[1] சோ. ௭௰௨.௨௰: ௪௮.௨.யோவா. அ. ௪௧.
[2] உபா. ௪. அ. சங். ௱௪௭. ௰௯, ௨௰.
[3] பிலி. ௧. ௰.
* அல்லது மேன்மையானவைகளை அங்கிகரித்துக் கொள்ளுகிறாய்.
[4] உரோ. ௬. ௰௪. உதீமோ. ௧.௰௩: ௩. ௫.
[5] மத். ௰௫. ௰௪: ௨௩. ௰௬, ௰௭, ௰௯. உ௪. யோவா.௯.௩௪, ௩௰, ௪௧.
[6] சங். ௫௰. ௰௬. ௲. மத். ௨௩. ௩. ௲.
[7] மல்கி. ௩. அ.
[8] ௰எ. ௨௩.
[9] உசாமு. ௰௨. ௰௪. எசா. ௫௨. ௫. எசே. ௩௬. ௨௰, ௨௩.
[10] கலா. ௫. ௩.
[11] அப். ௰. ௩௪, ௩௫.
[12] மத். ௰௨. ௪௧, ௪௨.
[13] மத். ௩. ௯.யோவா. அ. ௩௯. உரோ. ௯. ௬,எ. கலா. ௬. ௰௫. வெளி. ௨. ௯.
[14] ௧ பே. ௩. ௪.
[15] உரோ. ௭. ௬. உ கொரி. ௩. ௬.
[16] கொலோ. ௨. ௰௧. பிலி. ௩. ௩.
[17] ௧ கொரி. ௪. ௫. உகொரி ௰. ௰அ. ௧ தெச. ௨. ௪.

## ௩. அதிகாரம்.

௧. இப்படிப்பட்டதென்று யூதருடைய மேன்மையையும், ௩. அதை அவர்கள் இழந்துபோகாததையும், ௯. சிபாயப்பிரமாணம் அவர்களைப் பாவிகளென்று தீர்மானிக்கிறதையும், ௨௰. ஒருவரும் நியாயப்பிரமாணத்தினால் நீதிமான்களாக்கப்படாமல், ௨௪. எல்லாரும் விசுவாசத்தினாலேமாத்திரம் நீதிமான்களாக்கப்படுகிறதையும், ௩௧. விசுவாசத்தினால் நியாயப்பிரமாணம் ஒழிந்துபோகாததையுங்குறித்துச் சொல்லியது.

இப்படியானால் யூதருடைய மேன்மை என்ன? அல்லது விருத்தசேதனத்தினாலே பிரயோசனம் என்ன என்று கேட்டால்,

௨ அது எவ்விதத்திலும் மிகுதியாயிருக்கின்றது; [18]பராபரனுடைய வாக்கியங்கள் அவர்களுக்கு ஒப்புவிக்கப்பட்டபடியினாலே, அவர்களுக்குப் பிரதானமாய் மேன்மை உண்டாயிருக்கின்றது.

௩ [19]சிலர் விசுவாசியாமற்போனபடியால், [20]அவர்களுடைய அவிசு

[18] உபா. ௪. ௭, அ. சங். ௱௪௭. ௰௯,௨௰. உரோ. ௨. ௰௪: ௯. ௪.
[19] உரோ. ௰. ௰௬. எபி. ௪. ௨.
[20] ௪ மோ. ௨௩. ௰௯. உரோ. ௯. ௬: ௰௧. ௨௯. உ தீமோ. ௨. ௰௩.

Digitized by Google

வாசம் பராபரனுடைய உண்மையை அவமாக்கும் அல்லவோ என்று கேட்டால், [1]அப்படியாக்க மாட்டாது.

௪ [2]தேவரீர் அப்படிக் கடிந்து பேசும்பொழுது நீதிபரராகவும், நியாயந்தீர்க்கும்பொழுது புனிதராகவும் இருப்பீரென்று எழுதியிருக்கிறபடி, [3]மனிதர் யாவரும் பொய்யராயிருந்தாலும் [4]பராபரனே சத்தியமுடையவர் என்போமாக.

௫ ¶ [5]பின்னும் நான் மனிதபிரகாரமாகப் பேசுகிறேன்; நமது அநீதி பராபரனுடைய நீதியை விளங்கப்பண்ணினால், நாம் என்ன சொல்லலாம்? பராபரன் கோபாக்கினையைச் செலுத்துகிறது அநியாயமல்லவோ என்றால்,

௬ அப்படிச் சொல்லவே கூடாது; [6]அப்படியானால் உலகத்தாருக்குப் பராபரன் எப்படி நியாயத்தீர்ப்புச் செய்வார்?

௭ ஆகிலும் பராபரனுக்குப் புகழ்ச்சி உண்டாகத்தக்கதாக அவருடைய சத்தியம் என் பொய்யினாலே அதிக மேன்மை அடைந்ததுண்டானால், நான் பாவியென்று தீர்க்கப்படுவது என்னவென்று (நீ சொல்ல,)

௮ [7]நன்மை வரும்படிக்குத் தீமை செய்யக்கடவோமென்றும் சொல்லலாம் அல்லவோ? நாங்களே அப்படிச் செய்கிறவர்களென்று நிந்திக்கப்படுகிறோம்; நாங்களே அப்படிப் போதிக்கிறவர்கள் என்று சிலர் சொல்லுகிறார்கள்; அப்படிப் போதிக்கிறவர்கள் ஆக்கினைக்கு உள்ளாக்கப்படுகிறது நியாயந்தான்.

௯ ¶ அப்படியானால், (கிரேக்கருக்கு) மேன்மையாய் இருக்கிறோமோ என்று கேட்டால், அப்படி ஒருக்காலும் இருக்கமாட்டோம்; யூதர்கள் [8]கிரேக்கர் யாவரும் பாவத்திற்குக் கீழானவர்கள் என்று முன் திருஷ்டாந்தப்படுத்தினோமே.*

௰ அந்தப்படியும் எழுதியிருக்கிறதாவது: [9]நீதிமான் ஒருவனும் இல்லை.

௰௧ மெய்யுணர்வுள்ளவன் இல்லை; பராபரனைத் தேடுகிறவன் இல்லை.

௰௨ எல்லாரும் வழிதப்பி ஏகமாய்க் கெட்டுப்போகிறார்கள்.

௰௩ நன்மைசெய்கிறவன் ஒருவனும் இல்லை; [10]அவர்கள் தொண்டை திறக்கப்பட்ட சமாதியாய் இருக்கின்றது; தங்கள் நாவுகளால் வஞ்சனை செய்கிறார்கள், [11]பாம்புகளின் விஷம் அவர்களுடைய உதடுகளின்கீழ் இருக்கின்றது.

௰௪ [12]அவர்களுடைய வாய் சபிப்பினாலும், உபாதிக்கிற பேச்சினாலும் நிறைந்திருக்கின்றது.

௰௫ [13]அவர்களுடைய கால்கள் இரத்தஞ்சிந்துகிறதற்குத் தீவிரமாய் இருக்கின்றன.

௰௬ அழிவும் இடுக்கணும் அவர்களுடைய வழிகளில் இருக்கின்றன.

௰௭ சமாதான மார்க்கத்தை அவர்கள் அறியார்கள்.

௰௮ [14]அவர்கள் கண்களுக்கு முன்பாகத் தெய்வபயம் இல்லை என்பதே.

௰௯ ¶ [15]மேலும் வாய்கள் யாவும் அடைக்கப்படும்படிக்கும், [16]உலகத்தார் எல்லோரும் பராபரனுடைய ஆக்கினைக்கு ஏதுவானவர்கள்† ஆகும்படிக்கும், [17]நியாயப்பிரமாணம் சொல்லுகிற யாவும் நியாயப்பிரமாணத்திற்கு உட்பட்டிருக்கிறவர்களுக்கே சொல்லப்பட்டிருக்கின்றன என்று அறிந்திருக்கிறோம்.

௨௰ இப்படியிருக்க, [18]நியாயப்பிரமாணத்தினாலே பாவத்தை அறிகிற அறிவு வருகிறபடியால், [19]ஒரு மனிதனும் நியாயப்பிரமாணத்திற்கு ஏற்ற கிரியைகளினாலே அவருக்குமுன்பாக நீதிமானாக்கப்படுவதில்லை.

கி. பி. ௫௰.

1 யோபு. ௪௰. அ.
2 சங். ௫௧. ௪.
3 சங். ௧௧௬. ௧௧: ௬௨. ௯.
4 யோவா. ௩.௩௩.
5 உரோ. ௬. ௰௯. கலா. ௩. ௰௫.
6 ஆதி. ௰௮. உ௫. யோபு. அ. ௩: ௩௪. ௰௭.
7 உரோ. ௫. ௨௰: ௬. ௧, ௰௫.
8 உ௩. ௩௪. கலா. ௩. ௨௨.
* கிரேக்கு, சமத்திரேம்; உரோ. ௧. ௨அ. ௨: உ. ௧. ௨.
9 சங். ௰௪. ௧-௩: ௫௩. ௧.
10 சங். ௫. ௯. எரே. ௫. ௰௬.
11 சங். ௧௪௰. ௩.
12 சங். ௰. ௭.
13 ஏசா. ௫௯. ௭, அ.
14 சங். ௩௬. ௧.
15 யோபு. ௫.௰௬. சங். ௧௦௭. ௪௨. எசே. ௰௬. ௬௩. உரோ. ௧. உ௰: உ. ௧.
16 ௧. உ௩. வச. உரோ. உ. உ.
† அல்லது பராபரனுக்கு முன்பாகக் குற்றவாளிகள்.
17 யோவா. ௰.௩௪: ௰௫. ௨௫.
18 உரோ. ௭. ௭.
19 சங். ௧௪௩. உ. அப். ௰௩. ௩௯. கலா. உ. ௰௬: ௩. ௰௧. எபே. உ. அ, ௯. தீத். ௩. ௫.

Digitized by Google

௨௧ இப்பொழுது [1]நியாயப்பிரமாணத்திற்கு ஏற்ற கிரியை இல்லாமல், பராபரனுக்குமுன்பாக நீதிமானாகும் வகை வெளிப்பட்டிருக்கின்றது; அதைக்குறித்து [2]நியாயப்பிரமாணமும் [3]தீர்க்கதரிசனங்களும் சாட்சியிடுகின்றன.

௨௨ [4]இயேசுக்கிறிஸ்துவைப் பற்றும் விசுவாசத்தினாலே பராபரன் வரப்பண்ணுகிற நீதி அதுவே; விசுவாசிக்கிற எவர்களுக்குள்ளும் எவர்கள்மேலும் அது வரும்.

௨௩ [5]வித்தியாசமே இல்லை; [6]எல்லாரும் பாவம்செய்து, பராபரனுடைய மகிமை அற்றவர்களாய் இருந்து,

௨௪ [7]கைமாறில்லாமல் [8]அவருடைய கிருபையினாலே கிறிஸ்து இயேசுவிலுள்ள மீட்பைக்கொண்டு நீதிமான்கள் ஆக்கப்படுகிறார்கள்.

௨௫ [9]பராபரன் தாம் பொறுமையாயிருந்த முற்காலத்தில் நடந்த பாவங்களை [10]மன்னித்துவிட்டதைக்* குறித்துத் தம்முடைய நீதியைக் காண்பிக்கும்பொருட்டாக, [11]இயேசுக்கிறிஸ்துவினுடைய இரத்தத்தில் விசுவாசமாய் இருக்கிறதினாலே வரும் கிருபைக்கு மூலாதாரமாக அவரையே ஏற்படுத்திவைத்தார்.†

௨௬ [12]இயேசுவினிடத்தில் விசுவாசமாய் இருக்கிறவனை நீதிமானாக்குகிறதில் அவர் நீதியுள்ளவராய் இருக்கும்படிக்கு, இக்காலத்திலே தமது நீதியைக் காண்பிக்கும்பொருட்டாகவே (அப்படிச் செய்தார்).

௨௭ ¶ ஆனபடியினாலே [13]மேன்மைபாராட்டல் எங்கே? அது நீக்கப்பட்டதே; எந்தப் பிரமாணத்தினாலே என்றால், கிரியைகளைக் குறிக்கிற பிரமாணத்தினாலே அல்ல, விசுவாசத்தைக் குறிக்கிற பிரமாணத்தினாலே அப்படி ஆயிற்று.

௨௮ ஆதலால் [14]மனிதர்கள் நியாயப்பிரமாணத்திற்கு ஏற்ற கிரியைகளினாலே அல்ல, விசுவாசத்தினாலே நீதிமான்கள் ஆக்கப்படுகிறார்கள் என்று தீர்க்கிறோம்.

௨௯ அன்றியும் பராபரன் யூதருக்குமாத்திரம் தேவனாயிருக்கிறாரோ? மற்றத் தேசத்தாருக்கும் தேவனாயிருக்கிறார் அல்லவோ? மெய்யாய் அவர் மற்றத் தேசத்தாருக்கும் தேவனாயிருக்கிறார்.

௩0 தேவன் ஒருவரே; ஆகையால் [15]அவர் விருத்தசேதனம் உள்ளவர்களையும் விருத்தசேதனம் இல்லாதவர்களையும் விசுவாசத்தினாலே நீதிமான்களாக்கச் சித்தமாய் இருக்கிறார்.

௩௧ இப்படியானால் விசுவாசம் என்கிறதினாலே நாம் நியாயப்பிரமாணத்தை அழித்துப்போடுகிறோமா? அப்படி அல்லவே, நியாயப்பிரமாணத்தை (அதினாலே) நிலையாகவே நிறுத்துகிறோம்.

* அல்லது பாராமல் விட்டதை.

† அல்லது வெளிப்படுத்தினார்.

[1] அப். ௰௩. ௩௯. உரோ. ௧. ௰௭. பிலி. ௩. ௯.௭பி. ௯௪. ௨. ௨௧.
[2] யோவா. ௫. ௪௬. அப். ௨௬. ௨௨.
[3] உரோ. ௧. ௨. ௧பே. ௧. ௰.
[4] உரோ. ௪.
[5] உரோ. ௰. ௰௨. கலா. ௩. ௨௮. கொலோ. ௩. ௰௧.
[6] ௬. வச. உரோ. ௰௧. ௩௨. கலா. ௩. ௨௨.
[7] உரோ. ௪. ௰௬. எபே. ௨. ௮. தீத். ௩. ௫, ௭.
[8] மத். ௨0. ௨௮. எபே. ௧. ௭. கொலோ. ௧. ௰௪. ௧தீமோ. ௨. ௬. எபி. ௯. ௰௨. ௧பே. ௧. ௰௮,௰௯.
[9] அப். ௰௭. ௩0. எபி. ௯. ௰௫.
[10] அப். ௰௩. ௩௮, ௩௯. ௧தீமோ. ௧. ௰௫.
[11] கொலோ. ௧ ௨0.
[12] [illegible] ௰௫. ௧யோ. ௨. ௨: ௪. ௰.
[13] உரோ. ௨. ௰௭, ௨௩: ௪. ௨. ௧கொரி. ௧. ௨௯, ௩௧. எபே. ௨. ௯.
[14] அப். ௰௩. ௩௮, ௩௯: ௨0. ௨௧, ௨௨. வச. உரோ. ௮. ௩. கலா. ௨. ௰௬.
[15] உரோ. ௰. ௰௨, ௰௩. கலா. ௩. ௮, ௨0, ௨௮.
[16] ஏசா. ௫௧. ௨. மத். ௩. ௯. யோவா. ௮. ௩௩, ௩௯. ௨ கொரி. ௰௧. ௨௨.
[17] உரோ. ௩. ௨0, ௨௭.
[18] ஆதி. ௰௫. ௬. கலா. ௩. ௬. யாக். ௨. ௨௩.
[19] உரோ. ௰௧. ௬.

## ௪. அதிகாரம்.

௧. ஆபிரகாமுடைய விசுவாசம். ௰. அவன் சுன்னத்தடைவதற்குமுன்னமே அவனுக்கு நீதியாக எண்ணப்பட்டது. ௰௩. அவனும், அவன் வித்தாரும் விசுவாசத்தினாலேயே வாக்குத்தத்தத்தைப் பெற்றது. ௰௬. விசுவாசிகள் எல்லாருக்கும் ஆபிரகாம் தகப்பனென்றது. ௨௪. நம்முடைய விசுவாசமும் நமக்கு நீதியாக எண்ணப்படுமென்றது.

அன்றியும் நம்முடைய தகப்பனாகிய [16]ஆபிரகாம் சரீர (கருமங்களினாலே) என்னத்தைப் பெற்றுக்கொண்டான்?

௨ ¶ [17]ஆபிரகாம் கிரியைகளினாலே நீதிமானாக்கப்பட்டானாகில், அவன் (தன்னை) மேன்மையாகப் பாராட்டலாம்; ஆகிலும் பராபரனுக்குமுன்பாக அப்படி ஒன்றுமில்லை.

௩ வேதவாக்கியம் எப்படிச் சொல்லுகிறதென்றால், [18]ஆபிரகாம் பராபரனை விசுவாசித்தான்; அதுவே அவனுக்கு நீதியென்று எண்ணப்பட்டதென்று சொல்லுகின்றது.

௪ அன்றியும் [19]கிரியைகளையுடை

Digitized by Google

யவனுக்கு வருகிற கூலி கிருபையென்று எண்ணப்படாமல், கடனென்று எண்ணப்படும்.

௫ கிரியைகளை உடையவனாயிராமல் [1]துன்மார்க்கனை நீதிமானாக்குகிறவர்மேல் விசுவாசமாயிருந்தால், அவனுடைய விசுவாசமே அவனுக்கு நீதியென்று எண்ணப்படும்.

௬ ¶ அந்தப்படி தாவீதும் கிரியைகள் இல்லாமல், பராபரனாலே நீதிமான் என்று எண்ணப்படுகிற மனிதனுடைய பாக்கியத்தைக் காண்பிக்க,

௭ [2]எவர்களுடைய அக்கிரமங்கள் மன்னிக்கப்பட்டனவோ எவர்களுடைய பாவங்கள் மூடப்பட்டனவோ அவர்களே பாக்கியவான்கள் என்றும்,

௮ எவனுடைய பாவத்தைப் பராபரன் எண்ணாமல் இருக்கிறாரோ அவனே பாக்கியவான் என்றும் சொல்லியிருக்கிறான்.

௯ ¶ இந்தப் பாக்கியம் விருத்தசேதனம் உள்ளவனுக்குமாத்திரமா, அன்றி, விருத்தசேதனம் இல்லாதவனுக்கு வருமோ? (இருவருக்குமே வரும்;) அது எப்படியென்றால், நாங்கள் நிச்சயித்தபடி விசுவாசமே ஆபிரகாமுக்கு நீதியென்று எண்ணப்பட்டது.

௰ ¶ எப்பொழுது அது அவனுக்கு அப்படி எண்ணப்பட்டது? அவன் விருத்தசேதனம் உள்ளவனாய் இருந்தபொழுதோ, விருத்தசேதனம் இல்லாதவனாய் இருந்தபொழுதோ (என்றால்) விருத்தசேதனம் உள்ளவனாயிருந்தபொழுது அல்ல, விருத்தசேதனம் இல்லாதவனாயிருந்தபொழுதே அப்படி எண்ணப்பட்டது.

௰௧ [3]மேலும் விருத்தசேதனம் இல்லாத காலத்திலே அவன் விசுவாசத்தினாலே அடைந்த நீதிக்கு முத்திரையாக விருத்தசேதன அடையாளத்தைப் பெற்றான்; விருத்தசேதனம் இல்லாமல் விசுவாசமுள்ளவர்களும் நீதிமான்கள் ஆக்கப்படும்பொருட்டாக, [4]அப்படிப்பட்ட விசுவாசிகளுக்கு அவன் தகப்பனாய் இருக்கும்படிக்கும்,

௰௨ விருத்தசேதனத்தை உடையவர்களாய்மாத்திரம் அல்ல, நம்முடைய முன்னோராகிய ஆபிரகாம் விருத்தசேதனம் இல்லாத காலத்திலே நடந்த விசுவாசமார்க்கத்தில் நடக்கிறவர்களாயும் இருக்கிறவர்கள் நீதிமான்கள் ஆக்கப்படும்பொருட்டாக, அப்படிப்பட்ட விருத்தசேதனம் உள்ளவர்களுக்கும் தகப்பனாயிருக்கும்படிக்கும் (அந்த அடையாளத்தைப் பெற்றான்).

௰௩ ¶ அன்றியும், [5]உலகத்தைச் சுதந்தரிப்பான் என்கிற வாக்குத்தத்தம் ஆபிரகாமுக்கும் அவனுடைய சந்ததிக்கும் நியாயப்பிரமாணத்தினால் வருகிற நீதியினால் அல்ல, விசுவாசத்தினால் வருகிற நீதியினாலே கிடைத்தது.

௰௪ ஆதலால் [6]நியாயப்பிரமாணத்தினால் வருகிற நீதியை உடையவர்கள் சுதந்தரரானால், விசுவாசம் வீணாய்ப்போம்; வாக்குத்தத்தமும் அபத்தமாய்ப்போம்.

௰௫ மேலும், [7]நியாயப்பிரமாணம் கோபாக்கினையை நடப்பிக்கின்றது; நியாயப்பிரமாணம் இல்லாவிட்டால், அக்கிரமமும் தோன்றாதே.

௰௬ ஆதலால் அந்த வாக்குத்தத்தம் சந்ததியார் எல்லாருக்கும் நிச்சயமாய் இருக்கும்பொருட்டாக, (அந்தச் சுதந்தரம்) [8]கிருபையினால் உண்டாகும்படிக்கு, அது விசுவாசத்தினாலே வருகிறது; [9]நியாயப்பிரமாணத்தை உடையவர்களாகிய சந்ததியாருக்குமாத்திரம் அல்ல, அநேகதேசத்தாருக்கு உன்னைத் தகப்பனென்று ஏற்படுத்தினேன் என்று எழுதியிருக்கிறபடி, [10]நம்மெல்லாருக்கும் தகப்பனாகிய ஆபிரகாமைப்போல, விசுவா

கி. பி. ௬௰.

1 யோசு. ௨௪. ௨.
2 சங். ௩௨. ௧, ௨.
3 ௧ மோ. ௰௭. ௰.
4 லூக். ௰௯. ௯. ௰௨, ௰௬. ௩௪. கலா. ௩. ௭.
5 ௧ மோ. ௰௭. ௪. ௰௫. கலா. ௩. ௨௯.
6 கலா. ௩. ௰௮.
7 உரோ. ௩. ௨௰: ௫. ௰௩, ௨௰: ௭. ௮, ௰, ௰௩. ௧ கொரி. ௰௫. ௫௬. ௨ கொரி. ௩. ௭, ௯. கலா. ௩. ௰, ௰௯. ௧ யோ. ௩. ௪.
8 உரோ. ௩. ௨௪.
9 கலா. ௩. ௨௨.
10 ஏசா. ௫௧. ௨. உரோ. ௯. ௮.

Digitized by Google

சத்தை உடையவர்களான சந்ததி யாருக்கும் அது நிச்சயமாயிருக்கும்.

௰எ [1]மரித்தோரை உயிர்ப்பித்து, [2]இல்லாதவைகளை இருக்கிறவைகளைப்போல அழைக்கிறவராகிய பராபரனை அவன் விசுவாசித்துக் கொண்டு அவராலே* [3](அப்படிப் பட்ட தகப்பனானான்).

௰அ ¶ [4]உன் சந்ததி இவ்வளவாயிருக்கும் என்று சொல்லப்பட்டபடியே, அவன், தான் அநேக தேசத்தாருக்குத் தகப்பனாவதை நம்புதற்குஏதுவில்லாமலிருந்தும், நம்பிக்கையோடே அதை விசுவாசித்தான்.

௰௯ அவன் விசுவாசத்திலே பலஈனமாயிருக்கவில்லை; அவன் ஏறக்குறைய நூறுவயதானபடியால், [5]தன் சரீரம் செத்துப்போனதையும் சாராள் கருப்பம் உண்டாகாமலிருந்ததையும் எண்ணாமல் இருந்தான்.

௨௰ பராபரனுடைய வாக்குத்தத்தத்தைக்குறித்து அவன் அவிசுவாசமாய்ச் சந்தேகப்படாமல்,

௨௧ பராபரன் வாக்குத்தத்தம் பண்ணினதை நிறைவேற்றவும் [6]வல்லமையுள்ளவராய் இருக்கிறார் என்று உறுதியாய் நினைத்து, பராபரனைப் புகழ்ந்து, பலத்த விசுவாசமுள்ளவனானான்.

௨௨ ஆகையால் அதுவே அவனுக்கு நீதியென்று எண்ணப்பட்டது.

௨௩ ¶ [7]அது அவனுக்கு அப்படி எண்ணப்பட்டதென்பது அவனுக்காகமாத்திரம் அல்ல, நமக்காகவும் எழுதியிருக்கின்றது.

௨௪ [8]நம்முடைய அக்கிரமங்களின்நிமித்தம் மரணத்திற்கு ஒப்புக்கொடுக்கப்பட்டும் நம்மை நீதிமான்களாக்குதற்கு,

௨௫ [9]எழுப்பப்பட்டும் இருக்கிற நம்முடைய கர்த்தராகிய இயேசுவை [10]மரித்தோரிலிருந்து உயிரோடெழுப்பினவரை விசுவாசித்துக்கொண்டால், நமக்கும் அது அப்படியே எண்ணப்படும்.

கி. பி. ௬௰.

1 உரோ. அ. ௰௧. எபே. ௨. ௧, ௫.
2 உரோ. ௯. ௨௬. ௧ கொரி. ௧. ௨௮. ௧ பே. ௨. ௰.
* அல்லது அவரைப்போல.
3 ௧ மோ. ௰எ. ௫.
4 ௧ மோ. ௰௫. ௫.
5 ௧ மோ. ௰எ. ௰எ: ௰அ. ௰௧. எபி. ௰௧. ௰௧, ௰௨.
6 சங். ௱௰௫. ௩. லூக். ௧. ௩எ, ௪௫. எபி. ௰௧ ௰௯.
7 உரோ. ௰௫. ௪. ௧ கொரி. ௰. ௯, ௰௧.
8 ஏசா. ௫௩. ௫, ௬. உரோ. ௩. ௨௫: ௫. ௬: அ. ௩௨. ௨ கொரி. ௫. ௨௧. கலா. ௧. ௪. ௧ பே. ௨. ௨௪: ௩. ௰அ. எபி. ௯. ௨அ.
9 ௧ கொரி. ௰௫. ௰எ. ௧ பே. ௧. ௨௧.
10 அப். ௨. ௨௪: ௰௩. ௩௰.
11 ஏசா. ௩௨. ௰எ. யோவா. ௰௧. ௩௩. உரோ. ௩. ௨அ, ௩௰.
12 எபே. ௨. ௰௪. கொலோ. ௧. ௨௰.
13 ௧ கொரி. ௰௫. ௧.
14 யோவா. ௰. ௯: ௰௪. ௬. எபே. ௨. ௰அ: ௩. ௰௨. எபி. ௰. ௰௯.
15 எபி. ௩. ௬.
16 யாக். ௧. ௨.
17 யாக். ௧. ௰௨.
18 மத். ௫. ௰௧, ௰௨. அப். ௫. ௪௧. ௨ கொரி. ௰௨. ௰. பிலி. ௨. ௰எ. யாக். ௧. ௩, ௰௨. ௧ பே. ௩. ௰௪.
19 ௨ கொரி. ௧. ௨௨. கலா. ௪. ௬. எபே. ௧. ௰௩, ௰௪.
20 பிலி. ௧. ௨௰.
† அல்லது குறித்த; கலா. ௪. ௪.
21 அ. வசனம். உரோ. ௪. ௨௪.
22 யோவா. ௰௫. ௰௩. ௧ பே. ௩. ௰அ. ௧ யோ. ௩. ௰௬: ௪. ௯, ௰.

# ௫. அதிகாரம்.

௧. விசுவாசத்தினால் நீதிமான்களாகிப் பராபரனிடத்தில் சமாதானம் பெற்று, ௨. நம்பிக்கையில் சந்தோஷமடைந்து, ௮. பாவிகளாயிருந்தபோதும் அவருடைய இரத்தத்தின் புண்ணியத்தினால் நாம் ஒப்புரவடைந்தால், ௯. அது மிகுந்தவிட இரட்சிக்கப்படுவோம் என்றது. ௰௨. பாவமும் மரணமும், ஆதாமினால் வந்ததுபோல, ௰எ. நீதியும், சீவனும் இயேசுக்கிறிஸ்துவினால் வந்ததென்றது. ௨௰. பாவம் பெருகியிருந்தும் கிருபை அதிகமாய்ப் பெருகுகிறதென்பது.

இவ்விதமாய் [11]நாம் விசுவாசத்தினாலே நீதிமான்களாக்கப்பட்டபடியால், நம்முடைய கர்த்தராகிய இயேசுக்கிறிஸ்துவைக்கொண்டு [12]நாம் பராபரனிடத்தில் சமாதானம் பெற்றிருக்கிறோம்.

௨ [13]மேலும் நாம் நிற்கின்ற கிருபைக்குள் பிரவேசிக்குதலையும் [14]நாம் அவரைக்கொண்டு விசுவாசத்தினாலே பெற்றும், [15]பராபரனுடைய மகிமையை அடைவோம் என்று நம்பி மேன்மை பாராட்டியும் இருக்கிறோம்.

௩ ¶ அதுவுமல்லாமல் [16]உபத்திரவம் பொறுமையையும், [17]பொறுமை நிச்சயத்தையும், நிச்சயம் நம்பிக்கையையும் உண்டாக்குகின்றன என்று நாங்கள் அறிந்திருந்து,

௪ [18]உபத்திரவங்களிலேயும் மேன்மைபாராட்டுகிறோம்.

௫ மேலும் [19]நமக்குக் கொடுக்கப்பட்ட பரிசுத்த ஆவியினாலே பராபரனுடைய அன்புநம்முடைய இருதயங்களில் ஊற்றப்பட்டிருக்கிறபடியால், [20]அந்த நம்பிக்கை நம்மை வெட்கப்படுத்தாது.

௬ ¶ அன்றியும் நாம் பெலனற்றவர்களாய் இருக்கையில், கிறிஸ்து தகுதியான† காலத்திலே [21]அக்கிரமக்காரருக்காக மரித்தார்.

௭ நீதிமானுக்காக மற்றொருவன் மரிக்கிறது அருமையாயிருக்கும்; நல்லவனுக்காக ஒருவேளை மற்றொருவன் மரிக்கத் துணிவான்.

௮ கிறிஸ்துவோ [22]நாம் பாவிகளா

Digitized by Google

யிருக்கையிலே நமக்காக மரித்ததினாலே, பராபரன் நமதுமேல் வைத்த அன்பை விளங்கப்பண்ணினார்.

௯ இப்படி நாம் [1]அவருடைய இரத்தத்தினாலே நீதிமான்களாக்கப்பட்டிருக்க (வரும் [2]கோபாக்கினையில் நின்று அவராலே மிகவும் அதிகமாய் இரட்சிக்கப்படுவோமே).

௰ நாம் [3]பராபரனுக்குப் பகைஞராயிருக்கையில், அவர் குமாரனுடைய மரணத்தினாலே [4]அவருடனே ஒப்புரவாக்கப்பட்டோமானால், ஒப்புரவாக்கப்பட்டபின் நாம் [5]அவருடைய சீவனாலே மிகவும் அதிகமாய் இரட்சிக்கப்படுவோமே.

௰௧ ¶ அதுவுமல்லாமல் இப்பொழுது ஒப்புரவாக்குதலை* நமக்குக் கிடைக்கப்பண்ணின நம்முடைய கர்த்தராகிய இயேசுக்கிறிஸ்து மூலமாய் நாம் பராபரனைக் குறித்து [6]மேன்மைபாராட்டுகிறோம்.

௰௨ ¶ என்னத்தினாலென்றால், [7]ஒரே மனிதனாலே பாவமும், பாவத்தினாலே மரணமும் [8]உலகத்திலே பிரவேசித்தபின்பு எல்லாமனிதரும் பாவிகளானபடியினாலே,† மரணம் எல்லா மனிதருக்கும் வந்ததுபோல, (கிறிஸ்துவினாலே எல்லாருக்கும் ஒப்புரவாக்குதல் உண்டாயிற்று).

௰௩ நியாயப்பிரமாணம்வருதற்கு முன்னேபாவம் உலகத்தில் இருந்தது; நியாயப்பிரமாணம் இல்லாதிருந்தால், [9]பாவம் எண்ணிக்கைப்படமாட்டாது.

௰௪ அப்படியிருந்தும், மரணமானது ஆதாம்முதல் மோசேவரைக்கும் ஆதாமின் மீறுதலுக்கு ஒப்பாய்ப் பாவம்செய்யாதவர்களையும் ஆண்டுகொண்டது; [10]அந்த ஆதாம், பின்பு வந்தவருக்கு அடையாளமானவன்.

௰௫ ஆனாலும் கிருபையுள்ள ஈவின் சங்கதி விழுதலின் சங்கதியைப்போல இருக்கிறதில்லை; ஒரே மனிதன் விழுந்ததினாலே அநேகர் மரித்திருக்க, மிகவும் அதிகமாய்ப் பராபரனுடைய கிருபையும் இயேசுக்கிறிஸ்து என்னும் ஒரே மனிதனுடைய கிருபையினால் வருகிற ஈவும் [11]அநேகர்மேலே பெருகியிருக்கின்றன.

௰௬ மேலும் அந்த ஈவு பாவம்செய்த ஒருவனால் உண்டான நியாயத்தீர்ப்பைப்போல இருக்கவில்லை; அந்தத் தீர்ப்பு ஒரே குற்றத்தின்நிமித்தம் ஆக்கினைக்கு ஏதுவாயிருந்தது; கிருபையுள்ள ஈவானது அநேக பாவங்களை நீக்கி நீதியாக்குதற்கு ஏதுவாயிருக்கின்றது.

௰௭ அல்லாமலும் ஒரே மனிதன் விழுந்தபின்பு‡ அந்த ஒரே மனிதனாலே மரணம் ஆண்டுகொண்டிருக்கக் கிருபையாகிய பரிபூரணத்தையும் நீதியாகிய ஈவின் பரிபூரணத்தையும் பெறுகிறவர்கள், இயேசுக்கிறிஸ்து என்னும் ஒரே மனிதனாலே மிகவும் அதிகமாய்ச் சீவனை அடைந்து ஆளுவார்கள்.

௰௮ ஆகையால் ஒரே மனிதனுடைய தப்பிதத்தினாலே§ எல்லா மனிதருக்கும் ஆக்கினைக்கு ஏதுவான தீர்ப்பு உண்டானதுபோல, ஒரே மனிதனுடைய நீதியினாலும்|| [12]எல்லா மனிதருக்கும் சீவனாகிய நீதிக்கு ஏதுவான தீர்ப்பு உண்டாயிற்று.

௰௯ அன்றியும் ஒரே மனிதன் கீழ்ப்படியாமலிருந்ததினாலே அநேகர்பாவிகளாக்கப்பட்டார்கள்; அதுபோல ஒரே மனிதன் கீழ்ப்படிந்ததினாலே அநேகர் நீதிமான்களாக்கப்பட்டு வருவார்கள்.

௨௰ ¶ [13]மேலும் நியாயப்பிரமாணம் தோன்றினதினாலே தப்பிதம் பெருகிற்று; அப்படிப் பாவம் பெருகியிருந்தும் [14]கிருபை அதிகமாய்ப் பெருகிற்று. ஆதலால் பாவம்மரணத்துக்கு ஏதுவாக(மனிதரை) ஆண்டுகொண்டதுபோல,

௨௧ நம்முடைய கர்த்தராகிய

கி. பி. ௬௰.

1 உரோ. ௩. ௨௫. எபே. ௨. ௰௩. எபி. ௯. ௰௪. ௧ யோ. ௧. ௭.
2 உரோ. ௧. ௰௮. ௧ தெச. ௧. ௰.
3 உரோ. ௮. ௭.
4 ௨ கொரி. ௫. ௰௮, ௰௯. எபே. ௨. ௰௬. கொலோ. ௧. ௨௰. ௨௧.
5 யோவா. ௫. ௨௬: ௰௪. ௰௯. ௨ கொரி. ௪. ௰, ௰௧.
* அல்லது பாவநிவர்த்தியை; ௰வச. ௨ கொரி. ௫. ௰௮, ௰௯.
6 உரோ. ௨. ௰௭: ௩. ௨௯, ௩௰. கலா. ௪. ௯.
7 ௧ மோ. ௩. ௬. ௧ கொரி. ௰௫. ௨௧.
8 ௧ மோ. ௨. ௰௭. உரோ. ௬. ௨௩. ௧ கொரி. ௰௫. ௨௧.
† அல்லது அவனில் பாவிகளானபடியினாலே.
9 உரோ. ௪. ௰௫. ௧ யோ. ௩. ௪.
10 ௧ கொரி. ௰௫. ௨௧, ௨௨, ௪௫.
11 ஏசா. ௫௩. ௰௧. மத். ௨௰. ௨௮: ௨௬. ௨௮.
‡ அல்லது ஒரே பாவத்தினால்.
§ அல்லது ஒரே தப்பிதத்தினால்.
|| அல்லது ஒரே நீதியினால்.
12 யோவா. ௰௨. ௩௨. எபி. ௨. ௯.
13 யோவா. ௰௫. ௨௨. உரோ. ௩. ௨௰: ௪. ௰௫: ௭. ௮. கலா. ௩. ௰௯, ௨௩.
14 லூக். ௭. ௪௭. ௧ தீமோ. ௧. ௰௪.

Digitized by Google

இயேசுக்கிறிஸ்துவினாலே கிருபையானது, நித்திய சீவனுக்கு ஏதுவான நீதியினாலே ஆண்டுகொண்டது.

## ௬. அதிகாரம்.

க. பாவத்துக்கு மரித்த நாம் பாவத்தில் நிலைநிற்கக் கூடாதென்பதற்கு ஞானஸ்நானம் அடையாள மென்பது. ௰௨. நீதியின் ஊழியத்துக்கு நம்மை ஒப்புவித்திருக்கிறதினாலும், பாவத்தின் சம்பளம் மரணமாயிருக்கிறதினாலும், பாவம் நம்மை இனி ஆளாதென்பது.

ஆகையால் நாம் என்ன சொல்லலாம்? [1]கிருபை பெருகும்படிக்கு, பாவத்திலே நிலைநிற்கக்கடவோம் என்று சொல்லலாமா?

௨ அப்படிக் கூடாதே; [2]பாவத்திற்கு மரித்த நாம் இனி அதிலே எப்படிப் பிழைப்போம்?

௩ [3]கிறிஸ்து இயேசுவுக்குள்ளாக ஞானஸ்நானம்பெற்ற* நாம் அனைவரும் [4]அவருடைய மரணத்திற்குஉள்ளாக ஞானஸ்நானம் பெற்றதை அறியாமலிருக்கிறீர்களா?

௪ மேலும் [5]பிதாவின் மகிமையினாலே [6]கிறிஸ்து மரித்தோரிலிருந்து எழுப்பப்பட்டதுபோல, நாமும் [7]புதிதான சீவனுள்ளவர்களாய் நடந்துகொள்ளும்படிக்கு மரணத்திற்குள்ளான [8]ஞானஸ்நானத்தினாலே அவருடனே கூட அடக்கம்பண்ணப்பட்டோம்.

௫ [9]ஆதலால் அவருடைய மரணத்திற்கு ஒப்பாக நாம் அவருடனே நாட்டப்பட்டவர்களாயிருக்க அவர் உயிரோடு எழுந்திருக்குதலுக்கு ஒப்பாகவும் அப்படியே இருப்போம்.

௬ மேலும் நமக்குத் தெரிந்திருக்கிறபடி நாம் இனிப் பாவத்திற்கு ஊழியஞ்செய்யாதபடிக்கு, [10]பாவமாகிய சரீரம் அழிந்துபோகும் பொருட்டாக [11] நம்முடைய பழைய மனிதத்தத்துவம் அவரோடேகூடச் சிலுவையில் அறையப்பட்டது.

௭ ஆகையால் [12]மரித்தவன் பாவத்திற்கு விலக்கப்பட்டானே.†

௮ மேலும் [13]கிறிஸ்துவுடனே கூட நாம் மரித்திருக்க,

௯ [14]மரித்தோரிலிருந்து எழுந்த கிறிஸ்து இனி மரிப்பதில்லையென்றும் மரணம் இனி அவரை ஆண்டுகொள்ளாதென்றும் நாம் அறிந்தபடியால், அவருடனேகூடப் பிழைத்தும் இருக்கலாம் என்று நம்புகிறோம்.

௰ அன்றியும் [15]அவர் பாவத்திற்காக ஒரேதரம் மரித்தார்; பின்பு [16]அவர் பிழைத்திருக்கிறது பராபரனுக்காக இருக்கிறது.

௰௧ [17]அதுபோல நீங்களும் உங்களைப் பாவத்திற்கு மரித்தவர்கள் என்றும், [18]நம்முடைய கர்த்தராகிய இயேசுக்கிறிஸ்துவைக்கொண்டு பராபரனுக்குப் பிழைத்திருக்கிறவர்கள் என்றும் எண்ணிக்கொள்வீர்களாக.

௰௨ ¶ ஆகையால் [19]சாவுக்கினமான உங்கள் சரீரத்தின் இச்சைகளுக்கு நீங்கள் கீழ்ப்படியத்தக்கதாக, பாவம் அதிலே ஆளாதிருப்பதாக.

௰௩ அன்றியும் நீங்கள் நியாயப்பிரமாணத்தின்கீழ் அல்ல, கிருபையின்கீழ் இருக்கிறபடியால், [20]பாவம் உங்களைப் பலபந்தப்படுத்தமாட்டாது.

௰௪ ஆதலால் [21]நீங்கள் உங்கள் அவயவங்களை அநீதிக்குரிய ஆயுதங்களாகப்‡ பாவத்திற்கு ஒப்புக்கொடாமல், [22]உங்களை மரித்தோரிலிருந்து பிழைக்கிறவர்கள் என்று பராபரனுக்கு ஒப்புக்கொடுத்து, உங்கள் அவயவங்களை நீதிக்குரிய ஆயுதங்களாகப் பராபரனுக்கு ஒப்புக்கொடுப்பீர்களாக.

௰௫ ¶ இதினாலே பொருளென்ன ஆயிற்று? [23]நாம் நியாயப்பிரமாணத்தின்கீழ் இராமல் கிருபையின்கீழ்இருக்கிறபடியினாலே,பாவம் செய்யலாமென்ற பொருளா? அப்படி அல்லவே.

௰௬ மரணத்திற்கு ஏதுவான பாவத்துக்காகிலும் நீதிக்கு ஏதுவான

கி. பி. ௬௰.

1 உரோ. ௩. அ. ௰௯. வச.
2 ௰௧. வசனம். உரோ. எ. ச. கலா. உ. ௰௯: க. ௰ச. கொலோ. ௩. ௩. ௧ பே. உ. உச.
3 கலா. ௩. உஎ. * அல்லது பெறுகிற.
4 ௧ கொரி. ௰ ௫. உக.
5 யோவா. உ. ௰௧: ௰௧. சம.
6 உரோ. அ. ௰௧. ௧ கொரி. ௬.௰ச. உ கொரி. ௰௩.ச.
7 கலா. ௬. ௰௫. எபே. ச. உஉ, உச. கொலோ. ௩. ௬.
8 கொலோ. உ. ௰உ.
9 பிலி. ௩. ௰, ௰௧.
10 கொலோ. உ. ௰௧.
11 கலா. உ. உ௰: ௫.உச: ௬. ௰ச. எபே. ச. உஉ. கொலோ.௩.௫, ௬.
12 ௧ பே. ச. ௧. † கிரேக்கு. பாவத்துக்கு நீங்கி நீதிமானாக்கப்பட்டான்.
13 உ தீமோ.உ.௰௧.
14 வெளி. ௧.௰அ.
15 எபி. ௬. உஎ, உஅ.
16 லூக். உ௰.௩அ.
17 உ. வச.
18 கலா. உ. ௰௬.
19 சங். ௰௬. ௰௩: ௩௰௬. ௩௩௩.
20 உரோ.எ ச,௬: அ. உ. கலா.௫. ௰அ.
21 உரோ. எ. ௫. கொலோ ௩.௫. யாக். ச. ௧. ‡ கிரேக்கு. கருவிகளாக.
22 உரோ. ௰உ ௧. ௧ பே. உ. உச: ச. உ.
23 ௧ கொரி. ௬. உக.

Digitized by Google

கீழ்ப்படிதலுக்காஞலும், [1]எதற்குக்கீழ்ப்படியும்படி உங்களை அடிமைகளாக ஒப்புக்கொடுக்கிறீர்களோ அதற்கே கீழ்ப்படிகிற அடிமைகளாய் இருக்கிறீர்கள் என்று அறியாமலிருக்கிறீர்களா?

௧௭ முன்னே நீங்கள் பாவத்திற்கு அடிமைகளாயிருந்தீர்கள்; இப்பொழுது உங்களுக்கு ஒப்புவிக்கப்பட்ட* [2]உபதேசத்தின் பிரமாணத்திற்கு நீங்கள் மனச்சந்தோஷமாய்க் கீழ்ப்படிந்திருக்கிறபடியிஞலே பராபரனுக்குத் தோத்திரம்.

௧௮ இப்படி [3]நீங்கள் பாவத்திலிருந்து விடுதலையாக்கப்பட்டபின்பு, நீதிக்கு அடிமைகளானீர்கள்.

௧௯ உங்கள் சரீரத்தின் பலஈனத்தின்நிமித்தம் மனிதர் பிரகாரமாகச் சொல்லுகிறேன்; அக்கிரமத்தை நடப்பிக்கும்படி (முன்னே) நீங்கள் உங்கள் அவயவங்களை அசுத்தத்திற்கும் அக்கிரமத்திற்கும் அடிமைகளாக ஒப்புக்கொடுத்ததுபோல, இப்பொழுது பரிசுத்தமானதை நடப்பிக்கும்படி உங்கள் அவயவங்களை நீதிக்கு அடிமைகளாக ஒப்புக்கொடுப்பீர்களாக.

௨௰ [4]பாவத்திற்கு நீங்கள் அடிமைகளாய் இருந்த காலத்திலே நீதிக்கு நீங்கினவர்களாய் இருந்தீர்கள்.†

௨௧ [5]இப்பொழுது நீங்கள் வெட்கப்படுகிற காரியங்களிஞலே அக்காலத்திலே உங்களுக்கு என்ன பிரயோசனம் உண்டாயிற்று? [6]மரணமே அவைகளின் முடிவாயிருக்கின்றது.

௨௨ [7]இப்பொழுது நீங்கள் பாவத்தில்நின்று விடுதலையாக்கப்பட்டுப் பராபரனுக்கு அடிமைகளான பின்பு, பரிசுத்தமாகுதல் உங்களுக்குப் பிரயோசனமாயிற்று; நித்தியசீவனே அதின் கடைசிப் பலனுயிருக்கின்றது.

௨௩ [8]பாவத்தினுல் வருகிற சம்பளம் மரணம்; [9]பராபரனுடைய கிருபையுள்ள ஈவோ நம்முடைய கர்த்தராகிய இயேசுக்கிறிஸ்துவிஞல் உண்டான நித்தியசீவனே.

## ள. அதிகாரம்.

௧. உயிர் நீங்கின பின்பு நியாயப்பிரமாணம் மனுஷனை ஆளாதென்பது. ௪. நாம் நியாயப்பிரமாணத்துக்கு மரித்திருந்தாலும், ள. அது பாவமாயிராமல், ௧௨. பரிசுத்தமும், நீதியும், நன்மையுமாய் இருக்கிறதென்பது. ௧௩. பவுல்தானே அதைக் கைக்கொள்ளக்கூடாததின் நிமித்தம் வீணனப்படுகிறதைச் சொல்லியது.

நியாயப்பிரமாணத்தை அறிந்திருக்கிறவர்களுடனே பேசுகிறேன்; சகோதரரே, ஒரு மனிதன் உயிரோடிருக்குமளவும்மாத்திரம் நியாயப்பிரமாணம் அவனை ஆளுகின்றது என்று அறியீர்களா?

௨ அதெப்படியென்ருல் [10]புருஷனைக்கொண்ட ஸ்திரி தன் புருஷனுடைய சீவகாலமளவும் நியாயப்பிரமாணத்தின்படியே அவனேடே சேர்க்கப்பட்டிருக்கிருள்; புருஷன் மரித்தபின்பு அவள் தன் புருஷனுடைய பிரமாணத்திற்கு நீக்கப்படுகிருள்.

௩ மேலும் [11]புருஷன் உயிரோடிருக்கையில் அவள் வேறொரு புருஷனை விவாகம்பண்ணிஞல் விபசாரியென்று அழைக்கப்படுவாள்; புருஷன் மரித்தபின்பு அவள் அந்தப் பிரமாணத்தில் நின்று விடுதலையாகி, வேறொரு புருஷனை விவாகம்பண்ணிஞலும் விபசாரியல்ல.

௪ ¶ அப்படிப்போல என் சகோதரரே, நாம் [12]பராபரனுக்குக் கனியைக் கொடுக்கும்படிக்கு, மரித்தோரிலிருந்து எழுந்த கிறிஸ்து என்னும் வேறொருவருடையவர்கள் ஆவதற்கு, நீங்களும் அவருடைய [13]சரீரத்திஞலே நியாயப்பிரமாணத்தில்நின்று நீங்க மரித்தவர்களானீர்கள்.

௫ நாம் சரீரத்தின்படி நடந்தகாலத்திலே நியாயப்பிரமாணத்திலே தோன்றிய பாவமான இச்சைகள்,‡ நாம் [14]மரணத்திற்கு ஏது

கி. பி. ௬௰.

1 மத். ௬. ௨௪. யோவா. அ. ௩௪. உ பே. உ. ௰௯.

* கிரேக்கு. நீங்கள் ஒப்புக்கொடுக்கப்பட்டிருக்கிற.

2 உ தீமோ. ௧. ௰௩.

3 யோவா. அ. ௩௨. ௧ கொரி. ள. உஉ. கலா. ஞ. ௧. ௧ பே. உ. ௰௬.

4 யோவா. அ. ௩௪.

† கிரேக்கு. நீதியைவிட்டு நீங்கினவர்கள்.

5 உரோ. ள. ௫.

6 உரோ. ௧. ௩உ.

7 யோவா. அ. ௩உ.

8 ௧ மோ. உ.௰௭. உரோ. ௫. ௰உ. யாக். ௧. ௰௫.

9 உரோ. உ. ள: ௫. ௰௭, உ௧. ௧ பே. ௧. ௪.

10 ௧ கொரி. ள. ௩௯.

11 மத். ௫. ௩உ.

12 கலா. ௫. உஉ.

13 உரோ. அ. உ. கலா. உ. ௰௯: ௫. ௰அ. எபே. உ. ௰௫. கொலோ. உ. ௰௪.

‡ அல்லது பாவவியக்கங்கள்.

14 உரோ. ௬. உ௧. கலா. ௫. ௰௯: யாக். ௧. ௰௫.



Digitized by Google

வான கனிகளைக் கொடுக்கத்தக்கதாக, நம்முடைய அவயவங்களிலே [1]பலஞ்செய்திருந்தன.

சு இப்பொழுது நாம் மரித்தவர்களாயிருக்க,* நாம் பழமையான எழுத்தின்படியல்ல, [2]புதுமையான ஆவியின்படி ஊழியஞ்செய்யத்தக்கதாக, நம்மைக் கட்டியிருந்த நியாயப்பிரமாணத்தில் நின்று விடுதலையாக்கப்பட்டிருக்கிறோம்.

எ ¶ இதனாலே பொருள் என்ன ஆயிற்று? நியாயப்பிரமாணம் பாவமாயிருக்கின்றதென்பதோ? அப்படி அல்லவே; மேலும் [3]இச்சியாதிருப்பாயாக என்று நியாயப்பிரமாணம் சொல்லாதிருந்தால், இச்சிப்பைப்†பாவமென்று நான் அறியாமல் இருப்பேன். [4]ஆதலால், பாவம் இன்னதென்று நியாயப்பிரமாணத்தினாலே அறிந்தேன்.

அ இப்படி [5]நியாயப்பிரமாணம் இல்லாவிட்டால், பாவம் செத்ததாயிருக்கும்; ஆதலால் [6]பாவமானது கட்டளையினாலே இடம்பெற்று, சகலவித இச்சைகளையும் என்னில் நடப்பித்தது.

கூ இப்படியிருக்க, முன்னே நியாயப்பிரமாணம் இல்லாதபொழுது நான் சீவனுள்ளவனாயிருந்தேன்; கட்டளை வந்தபொழுது பாவம் திரும்ப உயிர்கொண்டது; நான் மரித்தேன்.

ய இப்படிப் பாவமானது கட்டளையினாலே இடம்பெற்று என்னை வஞ்சித்து, அதினாலே என்னைக் கொலைசெய்ததினாலே,

யக [7]சீவனுக்காகக் கொடுக்கப்பட்ட கட்டளையை எனக்கு மரணத்தைக்கொடுக்கிறதென்று கண்டேன்.

யஉ [8]ஆகையால் நியாயப்பிரமாணமே பரிசுத்தமாயிருக்கின்றது, கட்டளையும் பரிசுத்தமாயும் நீதியாயும் நன்மையாயும் இருக்கின்றது.

யங இப்படியானால் நன்மையானது என் மரணத்திற்கு ஏதுவாயிற்றா என்று கேட்டால், அப்படி ஆகவே இல்லை; பாவமே எனக்கு அப்படி ஆயிற்று; பாவம் கட்டளையினாலே மிகவும் பெரிதான பாவமாகும்படிக்கு, அதுவே நலமானதினாலே எனக்கு மரணம் உண்டாக்குகிறதாகத் தோன்றிற்று.

யச மேலும் நமக்குத் தெரிந்திருக்கிறபடி நியாயப்பிரமாணம் ஆவிக்குரியதாய் இருக்கின்றது; (மனிதனாகிய) [9]நானோ பாவத்துக்குக் கீழாக விற்கப்பட்டு,

யரு மாம்சத்துக்கு உரியவனாய் இருக்கிறேன்; எப்படியெனில் நான் நடப்பிக்கிறதற்கு என் மனது சம்மதிக்கிறதில்லை.‡ [10]நான் விரும்புகிறதைச் செய்யாமல், டகைக்கிறதையே செய்கிறேன்.

யசு இப்படி என் மனது விரும்பாததை நான் செய்திருக்க நியாயப்பிரமாணம் நல்லதென்று ஒத்துக்கொள்ளுகிறேன்.

யஎ ஆதலால் நானல்ல, எனக்குள் வாசமாயிருக்கிற பாவமே அப்படி நடப்பிக்கின்றது.

யஅ அது எப்படியென்றால் நான் அறிந்திருக்கிறபடி மாம்சதேகியாகிய [11]எனக்குள்ளே நன்மை வாசமாயிருக்கிறதில்லை; நன்மை செய்வதற்கான விருப்பம் என்னுடனே இருக்கின்றது; அப்படிச் செய்கிறதை என்னிடத்தில் காணேன்.

யகூ ஆதலால் எனக்கு விருப்பமான நன்மையை நான் செய்யாமல், எனக்கு விருப்பமில்லாத தீமையை நடப்பிக்கிறேன்.

உய அந்தப்படி எனக்கு விருப்பம் இல்லாததை நான் செய்கிறவனாயிருக்க நானல்ல, எனக்குள்ளே வாசமாயிருக்கிற பாவமே அப்படிச் செய்கின்றது.

உக ஆனபடியினாலே நன்மை செய்ய விரும்புகிற என்னிடத்திலே தீமைசெய்யப்பண்ணுகிற பிரமாணத்தைக் காண்கிறேன்.

உஉ [12]என் உள்ளத்தோடே [13]பா

இ. பி. சுய.

1 உரோ. ௬. ௰௬.
* அல்லது நம்மைக் கட்டியிருந்தது செத்திருக்க; உரோ. ௬. ௨. ௪. ௰௪.
2 உரோ. ௨. ௨௯. ௨ கொரி. ௩. ௬.
3 உ மோ. ௨௰. ௰௭. ௫ மோ. ௫. ௨௧. அப். ௨௰. ௩௩. உரோ. ௰௩. ௯.
† அல்லது போசையை.
4 உரோ. ௩. ௨௰.
5 ௧ கொரி. ௰௫. ௫௬.
6 உரோ. ௪. ௰௫: ௫. ௨௰.
7 ௩ மோ. ௰௮. ௫. எசே. ௨௰. ௰௧, ௰௩, ௨௧. ௨ கொரி. ௩. ௭.
8 சங். ௰௯. ௮: ௧௰௯. ௧௨௮, ௧௩௭. ௧ தீமோ. ௧. ௮.
9 ௧ இரா. ௨௧. ௨௰, ௨௫. ௨ இரா. ௰௭. ௰௭.
‡ அல்லது அறிகிறதில்லை; சங். ௧. ௧.
10 கலா. ௫. ௰௭.
11 ௧ மோ. ௬. ௫: ௮. ௨௧.
12 ௨ கொரி. ௪. ௰௬. எபே. ௩. ௰௬. கொலோ. ௩. ௯.
13 சங் ௧. ௨.

Digitized by Google

பரனுடைய நியாயப்பிரமாணத்தின்மேல் பிரியமாயிருக்கிறேன்.

உங. [1]என் அவயவங்களிலே [2]என் மனதின் பிரமாணத்துக்கு எதிராய்ப் போராடுகிற வேறு பிரமாணத்தைக் காண்கிறேன்; அது என் அவயவங்களில் உண்டாயிருக்கிற பாவப்பிரமாணத்துக்கு என்னை அடிமையாக்கிக்கொள்ளுகிறது.

உச ஐயோ, நான் நிர்ப்பாக்கியமுள்ள மனிதன்; இந்த மரணத்திற்கு ஏதுவான சரீரத்தில் நின்று* யார் என்னை விடுதலையாக்குவார்.

உரு [3]நம்முடைய கர்த்தராகிய இயேசுக்கிறிஸ்துவினாலே (என்னை விடுதலையாக்குகிற) பராபரனையே தோத்திரம்செய்கிறேன்; ஆதலால் நானே என் மனதினாலே பராபரனுடைய நியாயப்பிரமாணத்துக்கும், மாம்சத்தினாலே பாவப்பிரமாணத்துக்கும் ஊழியம் செய்கிறேன்.

## ௮. அதிகாரம்.

க. கிறிஸ்துவைப் பற்றிக்கொண்டு தேவ ஆவியின்படி நடக்கிறவர்களுக்கு ஆக்கினை வராதென்றும், ரு. சா. மாம்சத்துக்கேற்ற சிந்தையினால்வரும் தீமை இன்னதென்றும், கூ. யச. ஆவிக்கேற்ற சிந்தையினாலும், யஎ. பராபரனுடைய புத்திரராயிருப்பதினாலும் வரும் நன்மை இன்னதென்றும், யகூ. பராபரன் நீதியாய்த் தீர்மானித்த தம்முடைய புத்திரரின் மகிமையான விடுதலைக்குச் சிருஷ்டிகளெல்லாம் எதிர்நோக்கிக்கொண்டிருக்குமென்றும், ௩அ. பராபரனுடைய அன்பினின்று உத்தமனை யாதொன்றும் நீக்கமாட்டாதென்றும் காட்டியது.

ஆனபடியினாலே [4]மாம்சத்தின்படி அல்ல, ஆவியின்படியே நடந்து, கிறிஸ்து இயேசுவுக்கு உட்பட்டிருக்கிறவர்களுக்கு ஆக்கினைத்தீர்ப்பு வராது.

உ கிறிஸ்து இயேசுவினாலே சீவனைக் கொடுக்கிற [5]ஆவியின் [6]பிரமாணம் என்னைப் பாவம் மரணம் என்றிவைகளின் [7]பிரமாணத்தில் நின்று விடுதலையாக்கிற்றே.

ங அது எப்படியெனில் [8]மாம்சத்தினாலே பலஈனமாயிருந்த நியாயப்பிரமாணம் செய்யக்கூடாததைப் [9]பராபரன் செய்ய, தம்முடைய குமாரனைப் பாவமாம்சத்தின் சாயலாகவும் பாவத்தைப் போக்கும் பலியாகவும்† அனுப்பி, மாம்சத்திலே பாவத்தை ஆக்கினைக்குள்ளாகத் தீர்த்தார்.

ச [10]மாம்சத்துக்கு ஏற்றபடி அல்ல, ஆவிக்கு ஏற்றபடி நடக்கிற நம்மாலே நியாயப்பிரமாணத்தின் நீதி நிறைவேறும்படிக்கே அப்படி ஆயிற்று.

ரு இப்படியிருக்க, [11]மாம்சத்துக்கு ஏற்றபடி நடக்கிறவர்கள் மாம்சத்துக்கு ஏற்றவைகளைச் சிந்திக்கிறார்கள்; ஆவிக்கு ஏற்றபடி நடக்கிறவர்கள் [12]ஆவிக்கு ஏற்றவைகளைச் சிந்திக்கிறார்கள்.

சா [13]மாம்சத்துக்கு ஏற்ற சிந்தை‡ மரணத்துக்குஏதுவானது;ஆவிக்கு ஏற்ற சிந்தை§ சீவனுக்கும் சமாதானத்துக்கும் ஏதுவானது.

எ எப்படியென்றால், [14]மாம்சத்துக்கு ஏற்ற சிந்தை|| பராபரனுடைய நியாயப்பிரமாணத்திற்குக் கீழ்ப்படியாமலும் [15]கீழ்ப்படியத் திராணியில்லாமலும்இருக்கிறபடியால், அது பராபரனுக்கு விரோதமான பகையாயிருக்கின்றது.

அ ஆனதால் மாம்சத்திற்கு ஏற்றபடி நடக்கிறவர்கள் பராபரனுக்குப் பிரியமாய் இருக்கமாட்டார்கள்.

கூ ¶ [16]பராபரனுடைய ஆவி உங்களில் வாசமாயிருக்கிறபடியால் நீங்கள் மாம்சத்திற்கு ஏற்றபடி அல்ல, ஆவிக்கு ஏற்றபடி நடக்கிறவர்களாய் இருக்கிறீர்கள்; [17]கிறிஸ்துவினுடைய ஆவியை உடையவன் அல்லாதவன் அவருடையவன் அல்ல.

ய மேலும் கிறிஸ்து உங்களில் இருந்தபடியால், பாவத்தின்நிமித்தம் சரீரம் அழிந்துபோனாலும் ஆவியானது நீதியின்நிமித்தம் சீவனாயிருக்கின்றது.

யக அன்றியும் இயேசுவை மரித்தோரில்நின்று எழுப்பினவரு

இ. பி. சுய.

1 உரோ. க. யக, யகூ.
2 கலா. ரு. யஎ.
* அல்லது மரணத்தின் சரீரத்தினின்று.
3 க கொரி. யரு. ருஎ.
4 ச. வச. கலா. ரு. யசு, உரு.
5 க கொரி. யரு. சரு. உ கொரி. ங. சா.
6 யோவா. அ. ஙஉ. உரோ. சு. யஅ,உஉ. கலா. உ. யகூ: ரு. க.
7 உரோ. எ.உச, உரு.
8 அப். யங. ஙகூ. உரோ. ங. உய. எபி.எ.யஅ,யகூ: ய. க, உ, ய, யச.
9 உ கொரி. ரு. உக. கலா. ங. யங.
† அல்லது பாவத்துக்காக.
10 ச வச.
11 யோவா. ங. சா. க கொரி.உ.யச.
12 கலா. ரு.உஉ, உரு.
13யசு.வச.உரோ சா. உக. கலா. சா. அ.
‡ இரேக்கு,மாம்சத்தைச் சிந்திக்கிற சிந்தை; எ. வச.
§ இரேக்கு, ஆவியைச் சிந்திக்கிற சிந்தை.
14 யாக் ச. ச.
|| இரேக்கு. மாம்சத்தைச் சிந்திக்கிற சிந்தை.
15 க கொரி. உ. யச.
16 க கொரி. ங. யசா: சா. யகூ.
17 யோவா. ங.ஙச. கலா.ச.சா பிலி. க உய. க பே. க. யக.

Digitized by Google

௨௧ இப்பொழுது [1]நியாயப்பிரமாணத்திற்கு ஏற்ற கிரியை இல்லாமல், பராபரனுக்குமுன்பாக நீதிமானாகும் வகை வெளிப்பட்டிருக்கின்றது; அதைக்குறித்து [2]நியாயப்பிரமாணமும் [3]தீர்க்கதரிசனங்களும் சாட்சியிடுகின்றன.

௨௨ [4]இயேசுக்கிறிஸ்துவைப் பற்றும் விசுவாசத்தினாலே பராபரன் வரப்பண்ணுகிற நீதி அதுவே; விசுவாசிக்கிற எவர்களுக்குள்ளும் எவர்கள்மேலும் அது வரும்.

௨௩ [5]வித்தியாசமே இல்லை; [6]எல்லாரும் பாவம்செய்து, பராபரனுடைய மகிமை அற்றவர்களாய் இருந்து,

௨௪ [7]கைமாறில்லாமல் [8]அவருடைய கிருபையினாலே கிறிஸ்து இயேசுவிலுள்ள மீட்பைக்கொண்டு நீதிமான்கள் ஆக்கப்படுகிறார்கள்.

௨௫ [9]பராபரன் தாம் பொறுமையாயிருந்த முற்காலத்தில் நடந்த பாவங்களை [10]மன்னித்துவிட்டதைக்* குறித்துத் தம்முடைய நீதியைக் காண்பிக்கும்பொருட்டாக, [11]இயேசுக்கிறிஸ்துவினுடைய இரத்தத்தில் விசுவாசமாய் இருக்கிறதினாலே வரும் கிருபைக்கு மூலாதாரமாக அவரையே ஏற்படுத்திவைத்தார்.†

௨௬ [12]இயேசுவினிடத்தில் விசுவாசமாய் இருக்கிறவனை நீதிமானாக்குகிறதில் அவர் நீதியுள்ளவராய் இருக்கும்படிக்கு, இக்காலத்திலே தமது நீதியைக் காண்பிக்கும்பொருட்டாகவே (அப்படிச் செய்தார்).

௨௭ ¶ ஆனபடியினாலே [13]மேன்மைபாராட்டல் எங்கே? அது நீக்கப்பட்டதே; எந்தப் பிரமாணத்தினாலே என்றால், கிரியைகளைக் குறிக்கிற பிரமாணத்தினாலே அல்ல, விசுவாசத்தைக் குறிக்கிற பிரமாணத்தினாலே அப்படி ஆயிற்று.

௨௮ ஆதலால் [14]மனிதர்கள் நியாயப்பிரமாணத்திற்கு ஏற்ற கிரியைகளினாலே அல்ல, விசுவாசத்தினாலே நீதிமான்கள் ஆக்கப்படுகிறார்கள் என்று தீர்க்கிறோம்.

௨௯ அன்றியும் பராபரன் யூதருக்குமாத்திரம் தேவனாயிருக்கிறாரோ? மற்றத் தேசத்தாருக்கும் தேவனாயிருக்கிறார் அல்லவோ? மெய்யாய் அவர் மற்றத் தேசத்தாருக்கும் தேவனாயிருக்கிறார்.

௩௰ தேவன் ஒருவரே; ஆகையால் [15]அவர் விருத்தசேதனம் உள்ளவர்களையும் விருத்தசேதனம் இல்லாதவர்களையும் விசுவாசத்தினாலே நீதிமான்களாக்கச் சித்தமாய் இருக்கிறார்.

௩௰௧ இப்படியானால் விசுவாசம் என்கிறதினாலே நாம் நியாயப்பிரமாணத்தை அழித்துப்போடுகிறோமா? அப்படி அல்லவே, நியாயப்பிரமாணத்தை (அதினாலே) நிலையாகவே நிறுத்துகிறோம்.

## ௪. அதிகாரம்.

௧. ஆபிரகாமுடைய விசுவாசம். ௰. அவன் சுன்னத்தடைவதற்குமுன்னமே அவனுக்கு நீதியாக எண்ணப்பட்டது. ௰௩. அவனும், அவன் வித்தாரும் விசுவாசத்தினாலேயே வாக்குத்தத்தத்தைப் பெற்றது. ௰௬. விசுவாசிகள் எல்லாருக்கும் ஆபிரகாம் தகப்பனென்றது. ௨௪. நம்முடைய விசுவாசமும் நமக்கு நீதியாக எண்ணப்படுமென்றது.

அன்றியும் நம்முடைய தகப்பனாகிய [16]ஆபிரகாம் சரீர (கருமங்களினாலே) என்னத்தைப் பெற்றுக்கொண்டான்?

௨ ¶ [17]ஆபிரகாம் கிரியைகளினாலே நீதிமானாக்கப்பட்டானாகில், அவன் (தன்னை) மேன்மையாகப் பாராட்டலாம்; ஆகிலும் பராபரனுக்குமுன்பாக அப்படி ஒன்றுமில்லை.

௩ வேதவாக்கியம் எப்படிச் சொல்லுகிறதென்றால், [18]ஆபிரகாம் பராபரனை விசுவாசித்தான்; அதுவே அவனுக்கு நீதியென்று எண்ணப்பட்டதென்று சொல்லுகின்றது.

௪ அன்றியும் [19]கிரியைகளை உடை

இ. பி. ௬௰.

1 அப். ௰௫. ௰௧. உரோ. ௧. ௰௭. பிலி. ௩. ௯. எபி. ௰௧. ௪. ௭.
2 யோவா. ௫. ௪௬. அப். ௨௬. ௨௨.
3 உரோ. ௧. ௨. ௧பே. ௧. ௰.
4 உரோ. ௪.
5 உரோ. ௰. ௰௨. கலா. ௩. ௨௮. கொலோ. ௩. ௰௧.
6 ௯. வச. உரோ. ௰௧. ௩௨. கலா. ௩. ௨௨.
7 உரோ. ௪. ௰௬. எபே. ௨. ௮. தீத். ௩. ௫, ௭.
8 மத். ௨௰. ௨௮. எபே. ௧. ௭. கொலோ. ௧. ௰௪. ௧தீமோ. ௨. ௬. எபி. ௯. ௰௨. ௧பே. ௧. ௰௮, ௰௯.
9 அப். ௰௭. ௩௰. எபி. ௯. ௰௫.
10 அப். ௰௩. ௩௮, ௩௯. ௧தீமோ. ௧. ௰௫.
* அல்லது பாராமல் விட்டதை.
11 கொலோ. ௧. ௨௰.
† அல்லது வெளிப்படுத்தினார்.
12 ௧மோ. ௰௬. ௰௫. ௧யோ. ௨. ௨: ௪. ௰.
13 உரோ. ௨. ௰௭, ௨௩: ௪. ௨. ௧கொரி. ௧. ௨௯, ௩௧. எபே. ௨. ௯.
14 அப். ௰௩. ௩௮, ௩௯: ௨௰. ௨௧, ௨௨. வச. உரோ. ௮. ௩. கலா. ௨. ௰௬.
15 உரோ. ௰. ௰௨, ௰௩. கலா. ௩. ௮, ௨௰, ௨௮.
16 ஏசா. ௫௧. ௨. மத். ௩. ௯. யோவா. ௮. ௩௩, ௩௯. ௨கொரி. ௰௧. ௨௨.
17 உரோ. ௩. ௨௰, ௨௭, ௨௮.
18 ௧மோ. ௰௫. ௬. கலா. ௩. ௬. யாக். ௨. ௨௩.
19 உரோ. ௰௧. ௬.

Digitized by Google

யவனுக்கு வருகிற கூலி கிருபை யென்று எண்ணப்படாமல், கடனென்று எண்ணப்படும்.

ரு கிரியைகளை உடையவனு யிராமல் [1]துன்மார்க்கனை நீதிமானாக்குகிறவர்மேல் விசுவாசமாயிருந்தால், அவனுடைய விசுவாசமே அவனுக்கு நீதியென்று எண்ணப்படும்.

சு ¶ அந்தப்படி தாவீதும் கிரியைகள் இல்லாமல், பராபரனாலே நீதிமான் என்று எண்ணப்படுகிற மனிதனுடைய பாக்கியத்தைக் காண்பிக்க,

எ [2]எவர்களுடைய அக்கிரமங்கள் மன்னிக்கப்பட்டனவோ எவர்களுடைய பாவங்கள் மூடப்பட்டனவோ அவர்களே பாக்கியவான்கள் என்றும்,

அ எவனுடைய பாவத்தைப் பராபரன் எண்ணாமல் இருக்கிறாரோ அவனே பாக்கியவான் என்றும் சொல்லியிருக்கிறான்.

கூ ¶ இந்தப் பாக்கியம் விருத்தசேதனம் உள்ளவனுக்குமாத்திரமா, அன்றி, விருத்தசேதனம் இல்லாதவனுக்கு வருமோ? (இருவருக்குமே வரும்;) அது எப்படியென்றால், நாங்கள் நிச்சயித்தபடி விசுவாசமே ஆபிரகாமுக்கு நீதியென்று எண்ணப்பட்டது.

௰ ¶ எப்பொழுது அது அவனுக்கு அப்படி எண்ணப்பட்டது? அவன் விருத்தசேதனம் உள்ளவனாய் இருந்தபொழுதோ, விருத்தசேதனம் இல்லாதவனாய் இருந்தபொழுதோ (என்றால்) விருத்தசேதனம் உள்ளவனாயிருந்தபொழுது அல்ல, விருத்தசேதனம் இல்லாதவனாயிருந்தபொழுதே அப்படி எண்ணப்பட்டது.

௰௧ [3]மேலும் விருத்தசேதனம் இல்லாத காலத்திலே அவன் விசுவாசத்தினாலே அடைந்த நீதிக்கு முத்திரையாக விருத்தசேதன அடையாளத்தைப் பெற்றான்; விருத்தசேதனம் இல்லாமல் விசுவாசமுள்ளவர்களும் நீதிமான்கள் ஆக்கப்படும்பொருட்டாக, [4]அப்படிப்பட்ட விசுவாசிகளுக்கு அவன் தகப்பனாய் இருக்கும்படிக்கும்,

௰௨ விருத்தசேதனத்தை உடையவர்களாய்மாத்திரம் அல்ல, நம்முடைய முன்னோராகிய ஆபிரகாம் விருத்தசேதனம் இல்லாத காலத்திலே நடந்த விசுவாசமார்க்கத்தில் நடக்கிறவர்களாயும் இருக்கிறவர்கள் நீதிமான்கள் ஆக்கப்படும்பொருட்டாக, அப்படிப்பட்ட விருத்தசேதனம் உள்ளவர்களுக்கும் தகப்பனாயிருக்கும்படிக்கும் (அந்த அடையாளத்தைப் பெற்றான்).

௰௩ ¶ அன்றியும், [5]உலகத்தைச் சுதந்தரிப்பான் என்கிற வாக்குத்தத்தம் ஆபிரகாமுக்கும் அவனுடைய சந்ததிக்கும் நியாயப்பிரமாணத்தினால் வருகிற நீதியினால் அல்ல, விசுவாசத்தினால் வருகிற நீதியினாலே கிடைத்தது.

௰௪ ஆதலால் [6]நியாயப்பிரமாணத்தினால் வருகிற நீதியை உடையவர்கள் சுதந்தரரானால், விசுவாசம் வீணாய்ப்போம்; வாக்குத்தத்தமும் அபத்தமாய்ப்போம்.

௰௫ மேலும், [7]நியாயப்பிரமாணம் கோபாக்கினையை நடப்பிக்கின்றது; நியாயப்பிரமாணம் இல்லாவிட்டால், அக்கிரமமும் தோன்றாதே.

௰௬ ஆதலால் அந்த வாக்குத்தத்தம் சந்ததியார் எல்லாருக்கும் நிச்சயமாய் இருக்கும்பொருட்டாக, (அந்தச் சுதந்தரம்) [8]கிருபையினால் உண்டாகும்படிக்கு, அது விசுவாசத்தினாலே வருகின்றது; [9]நியாயப்பிரமாணத்தை உடையவர்களாகிய சந்ததியாருக்குமாத்திரம் அல்ல, அநேகதேசத்தாருக்கு உன்னைத் தகப்பனென்று ஏற்படுத்தினேன் என்று எழுதியிருக்கிறபடி, [10]நம்மெல்லாருக்கும் தகப்பனாகிய ஆபிரகாமைப்போல, விசுவா

கி. பி. ௫௰.

1 யோசு. ௨௪. ௨.
2 சங். ௩௨. ௧, ௨.
3 ௧ மோ. ௰எ. ௰.
4 லூக். ௰௯. ௯. ௰௨, ௰௯. ௨௪. கலா. ௩. ௭.
5 ௧ மோ. ௰எ. ௪. ௩. கலா. ௩. ௨௯.
6 கலா. ௩. ௰௮.
7 உரோ. ௩. ௨௰: ௫. ௰௩, ௨௰: எ. அ, ௰, ௰௩. ௧ கொரி. ௰௫. ௫௬. ௨ கொரி. ௩. ௭, ௯ கலா. ௩. ௰, ௰௯. ௧ யோ. ௩. ௪.
8 உரோ. ௩. ௨௪.
9 கலா. ௩. ௨௨.
10 ஏசா. ௫௧. ௨. உரோ. ௯. அ.

Digitized by Google

சத்தை உடையவர்களான சந்ததி யாருக்கும் அது நிச்சயமாயிருக்கும்.

௰௭ [1]மரித்தோரை உயிர்ப்பித்து, [2]இல்லாதவைகளை இருக்கிறவைகளைப்போல அழைக்கிறவராகிய பராபரனை அவன் விசுவாசித்துக்கொண்டு அவராலே* [3](அப்படிப்பட்ட தகப்பனானன்).

௰௮ ¶ [4]உன் சந்ததி இவ்வளவாயிருக்கும் என்று சொல்லப்பட்டபடியே, அவன், தான் அநேக தேசத்தாருக்குத் தகப்பனாவதை நம்புதற்குஏதுவில்லாமலிருந்தும், நம்பிக்கையோடே அதை விசுவாசித்தான்.

௰௯ அவன் விசுவாசத்திலே பலஈனமாயிருக்கவில்லை; அவன் ஏறக்குறைய நூறுவயதானபடியால், [5]தன் சரீரம் செத்துப்போனதையும் சாராள் கருப்பம் உண்டாகாமலிருந்ததையும் எண்ணாமல் இருந்தான்.

௨௰ பராபரனுடைய வாக்குத்தத்தத்தைக்குறித்து அவன் அவிசுவாசமாய்ச் சந்தேகப்படாமல்,

௨௧ பராபரன் வாக்குத்தத்தம் பண்ணினதை நிறைவேற்றவும் [6]வல்லமையுள்ளவராய் இருக்கிறார் என்று உறுதியாய் நினைத்து, பராபரனைப் புகழ்ந்து, பலத்த விசுவாசமுள்ளவனானன்.

௨௨ ஆகையால் அதுவே அவனுக்கு நீதியென்று எண்ணப்பட்டது.

௨௩ ¶ [7]அது அவனுக்கு அப்படி எண்ணப்பட்டதென்பது அவனுக்காகமாத்திரம் அல்ல, நமக்காகவும் எழுதியிருக்கின்றது.

௨௪ [8]நம்முடைய அக்கிரமங்களின்நிமித்தம் மரணத்திற்கு ஒப்புக்கொடுக்கப்பட்டும் நம்மை நீதிமான்களாக்குதற்கு,

௨௫ [9]எழுப்பப்பட்டும் இருக்கிற நம்முடைய கர்த்தராகிய இயேசுவை [10]மரித்தோரிலிருந்து உயிரோடெழுப்பினவரை விசுவாசித்துக்கொண்டால், நமக்கும் அது அப்படியே எண்ணப்படும்.

# ௫. அதிகாரம்.

௧. விசுவாசத்தினால் நீதிமான்களைப் பராபரனிடத்தில் சமாதானம் பெற்று, ௨. நம்பிக்கையில் சந்தோஷமடைந்து, ௮. பாவிகளாயிருந்தபோதிலும் அவருடைய இரத்தத்தின் புண்ணியத்தினாலே நீதிமான்களாக்கப்பட்டு ஒப்புரவடைந்தால், ௯. அது கோபத்தினின்று இரட்சிக்கப்படுவோம் என்றது. ௧௨. பாவமும் மரணமும், ஆதாமினால் வந்ததுபோல, ௧௫. நீதியும், சீவனும் இயேசுக்கிறிஸ்துவினால் வந்ததென்றது. ௨௰. பாவம் பெருகியிருந்தும் கிருபை அதிகமாய்ப் பெருகுகிறதென்பது.

இவ்விதமாய் [11]நாம் விசுவாசத்தினாலே நீதிமான்களாக்கப்பட்டபடியால், நம்முடைய கர்த்தராகிய இயேசுக்கிறிஸ்துவைக்கொண்டு [12]நாம் பராபரனிடத்தில் சமாதானம் பெற்றிருக்கிறோம்.

௨ [13]மேலும் நாம் நிற்கின்ற கிருபைக்குள் பிரவேசிக்குதலையும் [14]நாம் அவரைக்கொண்டு விசுவாசத்தினாலே பெற்றும், [15]பராபரனுடைய மகிமையை அடைவோம் என்று நம்பி மேன்மை பாராட்டியும் இருக்கிறோம்.

௩ ¶ அதுவுமல்லாமல் [16]உபத்திரவம் பொறுமையையும், [17]பொறுமை நிச்சயத்தையும், நிச்சயம் நம்பிக்கையையும் உண்டாக்குகின்றன என்று நாங்கள் அறிந்திருந்து,

௪ [18]உபத்திரவங்களிலேயும் மேன்மைபாராட்டுகிறோம்.

௫ மேலும் [19]நமக்குக் கொடுக்கப்பட்ட பரிசுத்த ஆவியினாலே பராபரனுடைய அன்பு நம்முடைய இருதயங்களில் ஊற்றப்பட்டிருக்கிறபடியால், [20]அந்த நம்பிக்கை நம்மை வெட்கப்படுத்தாது.

௬ ¶ அன்றியும் நாம் பெலனற்றவர்களாய் இருக்கையில், கிறிஸ்து தகுதியான† காலத்திலே [21]அக்கிரமக்காரருக்காக மரித்தார்.

௭ நீதிமானுக்காக மற்றொருவன் மரிக்கிறது அருமையாயிருக்கும்; நல்லவனுக்காக ஒருவேளை மற்றொருவன் மரிக்கத் துணிவான்.

௮ கிறிஸ்துவோ [22]நாம் பாவிகளா

கி. பி. ௬௰.

1 உரோ. அ. ௰௧. எபே. ௨, ௧, ௫.
2 உரோ. ௯. ௨௬. ௧ கொரி. ௧. ௨௮. ௧ பே. ௨. ௰.
* அல்லது அவரைப்போல.
3 ௧ மோ. ௰௭. ௫.
4 ௧ மோ. ௰௫. ௫.
5 ௧ மோ. ௰௭. ௰௭: ௰௮. ௰௧. எபி. ௰௧. ௰௧, ௰௨.
6 சங். ௱௰௫. ௩. லூக். ௧. ௩௭, ௪௫. எபி. ௰௧ ௰௯.
7 உரோ. ௰௫. ௪. ௧ கொரி. ௰. ௧, ௰௧.
8 ஏசா. ௫௩. ௫, ௬. உரோ. ௩. ௨௫: ௫. ௬: அ. ௩௨. ௨ கொரி. ௫. ௨௧. கலா. ௧. ௪. ௧ பே. ௨. ௨௪: ௩. ௰௮. எபி. ௯. ௨௮.
9 ௧ கொரி. ௰௫. ௰௭. ௧ பே. ௧. ௨௧.
10 அப். ௨. ௨௪: ௰௩. ௩௰.
11 ஏசா. ௩௨. ௰௭. யோவா. ௰௬. ௩௩. உரோ. ௩. ௨௮, ௩௰.
12 எபே. ௨. ௰௪. கொலோ. ௧. ௨௰.
13 ௧ கொரி. ௰௫. ௧.
14 யோவா. ௰. ௯: ௰௪. ௬. எபே. ௨. ௰௮: ௩. ௰௨. எபி. ௰. ௰௯.
15 எபி. ௩. ௬.
16 யாக். ௧. ௨.
17 யாக். ௧. ௰௨.
18 மத். ௫. ௰௧, ௰௨. அப். ௫. ௪௧. ௨ கொரி. ௰௨. ௰. பிலி. ௨. ௰௭. யாக். ௧. ௨, ௰௨. ௧ பே. ௩. ௰௪.
19 ௨ கொரி. ௧. ௨௨. கலா. ௪. ௬. எபே. ௧. ௰௩, ௰௪.
20 பிலி. ௧. ௨௰.
† அல்லது குறித்த; கலா. ௪. ௪.
21 அ. வசனம். உரோ. ௪. ௨௪.
22 யோவா. ௰௫. ௰௩. ௧ பே. ௩. ௰௮. ௧ யோ. ௩. ௰௬: ௪. ௯, ௰.

Digitized by Google

யிருக்கையிலே நமக்காக மரித்ததினாலே, பராபரன் நமதுமேல் வைத்த அன்பை விளங்கப்பண்ணினார்.

௯ இப்படி நாம் [1]அவருடைய இரத்தத்தினாலே நீதிமான்களாக்கப்பட்டிருக்க (வரும் [2]கோபாக்கினையில் நின்று அவராலே மிகவும் அதிகமாய் இரட்சிக்கப்படுவோமே).

௰ நாம் [3]பராபரனுக்குப் பகைஞராயிருக்கையில், அவர் குமாரனுடைய மரணத்தினாலே [4]அவருடனே ஒப்புரவாக்கப்பட்டோமானால், ஒப்புரவாக்கப்பட்டபின் நாம் [5]அவருடைய சீவனாலே மிகவும் அதிகமாய் இரட்சிக்கப்படுவோமே.

௰௧ ¶ அதுவும்மல்லாமல் இப்பொழுது ஒப்புரவாக்குதலை* நமக்குக் கிடைக்கப்பண்ணின நம்முடைய கர்த்தராகிய இயேசுக்கிறிஸ்து மூலமாய் நாம் பராபரனைக் குறித்து [6]மேன்மைபாராட்டுகிறோம்.

௰௨ ¶ என்னத்தினாலென்றால், [7]ஒரே மனிதனாலே பாவமும், பாவத்தினாலே மரணமும் [8]உலகத்திலே பிரவேசித்தபின்பு எல்லாமனிதரும் பாவிகளானபடியினாலே,† மரணம் எல்லா மனிதருக்கும் வந்ததுபோல, (கிறிஸ்துவினாலே எல்லாருக்கும் ஒப்புரவாக்குதல் உண்டாயிற்று).

௰௩ நியாயப்பிரமாணம்வருதற்கு முன்னேபாவம் உலகத்தில் இருந்தது; நியாயப்பிரமாணம் இல்லாதிருந்தால், [9]பாவம் எண்ணிக்கைப் படமாட்டாது.

௰௪ அப்படியிருந்தும், மரணமானது ஆதாம்முதல் மோசேவரைக்கும் ஆதாமின் மீறுதலுக்கு ஒப்பாய்ப் பாவம்செய்யாதவர்களையும் ஆண்டுகொண்டது; [10]அந்த ஆதாம், பின்பு வந்தவருக்கு அடையாளமானவன்.

௰௫ ஆனாலும் கிருபையுள்ள ஈவின் சங்கதி விழுதலின் சங்கதியைப்போல இருக்கிறதில்லை; ஒரே மனிதன் விழுந்ததினாலே அநேகர் மரித்திருக்க, மிகவும் அதிகமாய்ப் பராபரனுடைய கிருபையும் இயேசுக்கிறிஸ்து என்னும் ஒரே மனிதனுடைய கிருபையினால் வருகிற ஈவும் [11]அநேகர்மேலே பெருகியிருக்கின்றன.

௰௬ மேலும் அந்த ஈவு பாவம்செய்த ஒருவனால் உண்டான நியாயத்தீர்ப்பைப்போல இருக்கவில்லை; அந்தத் தீர்ப்பு ஒரே குற்றத்தின்நிமித்தம் ஆக்கினைக்கு ஏதுவாயிருந்தது; கிருபையுள்ள ஈவானது அநேக பாவங்களை நீக்கி நீதியாக்குதற்கு ஏதுவாயிருக்கின்றது.

௰௭ அல்லாமலும் ஒரே மனிதன் விழுந்தபின்பு‡ அந்த ஒரே மனிதனாலே மரணம் ஆண்டுகொண்டிருக்கக் கிருபையாகிய பரிபூரணத்தையும் நீதியாகிய ஈவின் பரிபூரணத்தையும் பெறுகிறவர்கள், இயேசுக்கிறிஸ்து என்னும் ஒரே மனிதனாலே மிகவும் அதிகமாய்ச் சீவனை அடைந்து ஆளுவார்கள்.

௰௮ ஆகையால் ஒரே மனிதனுடைய தப்பிதத்தினாலே§ எல்லா மனிதருக்கும் ஆக்கினைக்கு ஏதுவான தீர்ப்பு உண்டானதுபோல, ஒரே மனிதனுடைய நீதியினாலும்‖ [12]எல்லா மனிதருக்கும் சீவனாகிய நீதிக்கு ஏதுவான தீர்ப்பு உண்டாயிற்று.

௰௯ அன்றியும் ஒரே மனிதன் கீழ்ப்படியாமலிருந்ததினாலே அநேகர்பாவிகளாக்கப்பட்டார்கள்; அதுபோல ஒரே மனிதன் கீழ்ப்படிந்ததினாலே அநேகர் நீதிமான்களாக்கப்பட்டு வருவார்கள்.

உ௰ ¶ [13]மேலும் நியாயப்பிரமாணம் தோன்றினதினாலே தப்பிதம் பெருகிற்று; அப்படிப் பாவம் பெருகியிருந்தும் [14]கிருபை அதிகமாய்ப் பெருகிற்று. ஆதலால் பாவம்மரணத்துக்கு ஏதுவாக (மனிதரை) ஆண்டுகொண்டதுபோல,

உ௧ நம்முடைய கர்த்தராகிய

கி. பி. ௫௰.

1 உரோ. ௩. உ௫. எபே. உ. ௰௩. எபி. ௯. ௰௪. ௧ யோ. ௧. எ.
2 உரோ. ௧. ௰அ. ௧ தெச. ௧. ௯.
3 உரோ. அ. ௭உ.
4 உ கொரி. ரு. ௰அ, ௰௯. எபே. உ. ௰௬. கொலோ. ௧. உ௰. உ௨.
5 யோவா. ௫. உ௯: ௰௪. ௰௯. உ கொரி. ௪. ௰, ௰௧.
* அல்லது பாவநிவர்த்தியை; ௰.வச. உகொரி. ரு. ௰அ, ௰௯.
6 உரோ. உ.௰எ: ௩. உ௯, ௩௰. கலா. ௪. ௯.
7 ௧ மோ. ௩. ௬. ௧ கொரி. ௰ரு. உ௧.
8 ௧ மோ. உ. ௰எ. உரோ. ௬. உ௩. ௧கொரி.௰ரு.உ௩.
† அல்லது அவனில் பாவிகளானபடியினாலே.
9 உரோ. ௪. ௰ரு. ௧ யோ. ௩. ௪.
10 ௧ கொரி. ௰ரு. உ௧, உ௨, ௪ரு.
11 ஏசா. ௫௩. ௰௧. மத். உ௰. உஅ: உ௬. உஅ.
‡ அல்லது ஒரே பாவத்தினால்.
§ அல்லது ஒரே தப்பிதத்தினால்.
‖ அல்லது ஒரே நீதியினால்.
12 யோவா. ௰உ. ௩உ. எபி. உ. ௯.
13 யோவா. ௰ரு. உஉ. உரோ. ௩. உ௰: ௪. ௰ரு: எ. அ. கலா. ௩.௰௯, உ௩.
14 லூக். எ. ௪எ. ௧ தீமோ. ௧.௰௪.

Digitized by Google

இயேசுக்கிறிஸ்துவினாலே கிருபையானது, நித்திய ஜீவனுக்கு ஏதுவான நீதியினாலே ஆண்டுகொண்டது.

## ௬. அதிகாரம்.

௧. பாவத்துக்கு மரித்த நாம் பாவத்தில் நிலைநிற்கக்கூடாதென்பதற்கு ஞானஸ்நானம் அடையாளமென்பது. ௰௨. நீதியின் ஊழியத்துக்கு நம்மை ஒப்புவித்திருக்கிறதினாலும், பாவத்தின சம்பளம் மரணமாயிருக்கிறதினாலும், பாவம் நம்மை இனி ஆளாதென்பது.

ஆகையால் நாம் என்ன சொல்லலாம்? [1]கிருபை பெருகும்படிக்கு, பாவத்திலே நிலைநிற்கக்கடவோம் என்று சொல்லலாமா?

௨ அப்படிக் கூடாதே; [2]பாவத்திற்கு மரித்த நாம் இனி அதிலே எப்படிப் பிழைப்போம்?

௩ [3]கிறிஸ்து இயேசுவுக்குள்ளாக ஞானஸ்நானம்பெற்ற* நாம் அனைவரும் [4]அவருடைய மரணத்திற்குஉள்ளாக ஞானஸ்நானம் பெற்றதை அறியாமலிருக்கிறீர்களா?

௪ மேலும் [5]பிதாவின் மகிமையினாலே [6]கிறிஸ்து மரித்தோரிலிருந்து எழுப்பப்பட்டதுபோல, நாமும் [7]புதிதான ஜீவனுள்ளவர்களாய் நடந்துகொள்ளும்படிக்கு மரணத்திற்குள்ளான [8]ஞானஸ்நானத்தினாலே அவருடனே கூட அடக்கம்பண்ணப்பட்டோம்.

௫ [9]ஆதலால் அவருடைய மரணத்திற்கு ஒப்பாக நாம் அவருடனே நாட்டப்பட்டவர்களாயிருக்க அவர் உயிரோடு எழுந்திருக்குதலுக்கு ஒப்பாகவும் அப்படியே இருப்போம்.

௬ மேலும் நமக்குத் தெரிந்திருக்கிறபடி நாம் இனிப் பாவத்திற்கு ஊழியம்செய்யாதபடிக்கு, [10]பாவமாகிய சரீரம் அழிந்துபோகும் பொருட்டாக [11]நம்முடைய பழைய மனிதத்தத்துவம் அவரோடேகூடச் சிலுவையில் அறையப்பட்டது.

௭ ஆகையால் [12]மரித்தவன் பாவத்திற்கு விலக்கப்பட்டானே.†

௮ மேலும் [13]கிறிஸ்துவுடனே கூட நாம் மரித்திருக்க,

௯ [14]மரித்தோரிலிருந்து எழுந்த கிறிஸ்து இனி மரிப்பதில்லையென்றும் மரணம் இனி அவரை ஆண்டுகொள்ளாதென்றும் நாம் அறிந்தபடியால், அவருடனேகூடப் பிழைத்தும் இருக்கலாம் என்று நம்புகிறோம்.

௰ அன்றியும் [15]அவர் பாவத்திற்காக ஒரேதரம் மரித்தார்; பின்பு [16]அவர் பிழைத்திருக்கிறது பராபரனுக்காக இருக்கிறது.

௰௧ [17]அதுபோல நீங்களும் உங்களைப் பாவத்திற்கு மரித்தவர்கள் என்றும், [18]நம்முடைய கர்த்தராகிய இயேசுக்கிறிஸ்துவைக்கொண்டு பராபரனுக்குப் பிழைத்திருக்கிறவர்கள் என்றும் எண்ணிக்கொள்வீர்களாக.

௰௨ ¶ ஆகையால் [19]சாவுக்கினமான உங்கள் சரீரத்தின் இச்சைகளுக்கு நீங்கள் கீழ்ப்படியத்தக்கதாக, பாவம் அதிலே ஆளாதிருப்பதாக.

௰௩ அன்றியும் நீங்கள் நியாயப்பிரமாணத்தின்கீழ் அல்ல, கிருபையின்கீழ் இருக்கிறபடியால், [20]பாவம் உங்களைப் பலபந்தப்படுத்தமாட்டாது.

௰௪ ஆதலால் [21]நீங்கள் உங்கள் அவயவங்களை அநீதிக்குரிய ஆயுதங்களாகப்‡ பாவத்திற்கு ஒப்புக்கொடாமல், [22]உங்களை மரித்தோரிலிருந்து பிழைக்கிறவர்கள் என்று பராபரனுக்கு ஒப்புக்கொடுத்து, உங்கள் அவயவங்களை நீதிக்குரிய ஆயுதங்களாகப் பராபரனுக்கு ஒப்புக்கொடுப்பீர்களாக.

௰௫ ¶ இதினாலே பொருளென்ன ஆயிற்று? [23]நாம் நியாயப்பிரமாணத்தின்கீழ் இராமல் கிருபையின்கீழ்இருக்கிறபடியினாலே, பாவம் செய்யலாமென்ற பொருளா? அப்படி அல்லவே.

௰௬ மரணத்திற்கு ஏதுவான பாவத்துக்கானாலும் நீதிக்கு ஏதுவான

கி. பி. ௬௰.

1 உரோ. ௩. அ. ௰௯. ௨௪.
2 ௰௪. வசனம். உரோ. ௭. ௪. கலா. ௨. ௰௯: ௬. ௰௪. கொலே. ௩. ௩. ௧ பே. ௨. ௨௪.
3 கலா. ௩. ௨௭.
* அல்லது பெற்றிற.
4 ௧ கொரி. ௰௫. ௨௯.
5 யோவா. ௨. ௰௧: ௰௧. ௪௰.
6 உரோ. அ. ௰௧. ௨ கொரி. ௩. ௰௪. ௨ கொரி. ௰௩. ௪.
7 கலா. ௬. ௰௫. எபே. ௪. ௨௨, ௨௪. கொலே. ௩. ௩.
8 கொலே. ௨. ௰௨.
9 பிலி. ௩. ௰, ௰௧.
10 கொலே. ௨. ௰௧.
11 கலா. ௨. ௨௰: ௫. ௨௪: ௬. ௰௪. எபே. ௪. ௨௨. கொலே. ௩. ௫, ௩.
12 ௧ பே. ௪. ௧.
† கிரேக்கு, பாவத்துக்கு நீங்கி நீதிமானாக்கப்பட்டான்.
13 ௨ தீமோ. ௨. ௰௧.
14 வெளி. ௧. ௰௮.
15 எபி. ௯. ௨௭, ௨௮.
16 லூக். ௨௰. ௩௮.
17 ௨. ௰௪.
18 கலா. ௨. ௰௯.
19 சங். ௰௯. ௰௩: ௱௰௯. ௱௩௩.
20 உரோ. ௭. ௪, ௬: அ. ௨. கலா. ௫. ௰௮.
21 உரோ. ௭. ௫. கொலே. ௩. ௫.
யாக். ௪. ௧.
‡ கிரேக்கு, சருவிகளாக.
22 உரோ. ௰௨. ௧. ௧ பே. ௨. ௨௪: ௪. ௨.
23 ௧ கொரி. ௯. ௨௧.

Digitized by Google

கீழ்ப்படிதலுக்காகிலும், [1] எதற்குக்கீழ்ப்படியும்படி உங்களை அடிமைகளாக ஒப்புக்கொடுக்கிறீர்களோ அதற்கே கீழ்ப்படிகிற அடிமைகளாய் இருக்கிறீர்கள் என்று அறியாமலிருக்கிறீர்களா?

௰௭ முன்னே நீங்கள் பாவத்திற்கு அடிமைகளாயிருந்தீர்கள்; இப்பொழுது உங்களுக்கு ஒப்புவிக்கப்பட்ட* [2]உபதேசத்தின் பிரமாணத்திற்கு நீங்கள் மனச்சந்தோஷமாய்க் கீழ்ப்படிந்திருக்கிறபடியினாலே பராபரனுக்குத் தோத்திரம்.

௰௮ இப்படி [3]நீங்கள் பாவத்திலிருந்து விடுதலையாக்கப்பட்டபின்பு, நீதிக்கு அடிமைகளானீர்கள்.

௰௯ உங்கள் சரீரத்தின் பலஈனத்தின்நிமித்தம் மனிதர் பிரகாரமாகச் சொல்லுகிறேன்; அக்கிரமத்தை நடப்பிக்கும்படி (முன்னே) நீங்கள் உங்கள் அவயவங்களை அசுத்தத்திற்கும் அக்கிரமத்திற்கும் அடிமைகளாக ஒப்புக்கொடுத்ததுபோல, இப்பொழுது பரிசுத்தமானதை நடப்பிக்கும்படி உங்கள் அவயவங்களை நீதிக்கு அடிமைகளாக ஒப்புக்கொடுப்பீர்களாக.

௨௰ [4]பாவத்திற்கு நீங்கள் அடிமைகளாய் இருந்த காலத்திலே நீதிக்கு நீங்கினவர்களாய் இருந்தீர்கள்.†

௨௰௧ [5]இப்பொழுது நீங்கள் வெட்கப்படுகிற காரியங்களினாலே அக்காலத்திலே உங்களுக்கு என்ன பிரயோசனம் உண்டாயிற்று? [6]மரணமே அவைகளின் முடிவாயிருக்கின்றது.

௨௰௨ [7]இப்பொழுது நீங்கள் பாவத்தில்நின்று விடுதலையாக்கப்பட்டுப் பராபரனுக்கு அடிமைகளான பின்பு, பரிசுத்தமாகுதல் உங்களுக்குப் பிரயோசனமாயிற்று; நித்தியசீவனே அதின் கடைசிப் பலனாயிருக்கின்றது.

௨௰௩ [8]பாவத்தினால் வருகிற சம்பளம் மரணம்; [9]பராபரனுடைய கிருபையுள்ள ஈவோ நம்முடைய கர்த்தராகிய இயேசுக்கிறிஸ்துவினால் உண்டான நித்தியசீவனே.

## ௭. அதிகாரம்.

௧. உயிர் நீங்கின பின்பு நியாயப்பிரமாணம் மனுஷனை ஆளாதென்பது. ௪. நாம் நியாயப்பிரமாணத்துக்கு மரித்திருந்தாலும், ௭. அது பாவமாயிராமல், ௰௨. பரிசுத்தமும், நீதியும், நன்மையுமாய் இருக்கிறதென்பது. ௰௬. பவுல்தானே அதைக் கைக்கொள்ளக்கூடாததின் நிமித்தம் விதனப்படுகிறதைச் சொல்லியது.

நியாயப்பிரமாணத்தை அறிந்திருக்கிறவர்களுடனே பேசுகிறேன்; சகோதரரே, ஒரு மனிதன் உயிரோடிருக்குமளவும்மாத்திரம் நியாயப்பிரமாணம் அவனை ஆளுகின்றது என்று அறியீர்களா?

௨ அதெப்படியென்றால் [10]புருஷனைக்கொண்ட ஸ்திரி தன் புருஷனுடைய சீவகாலமளவும் நியாயப்பிரமாணத்தின்படியே அவனோடே சேர்க்கப்பட்டிருக்கிறாள்; புருஷன் மரித்தபின்பு அவள் தன் புருஷனுடைய பிரமாணத்திற்கு நீக்கப்படுகிறாள்.

௩ மேலும் [11]புருஷன் உயிரோடிருக்கையில் அவள் வேறொரு புருஷனை விவாகம்பண்ணினால் விபசாரியென்று அழைக்கப்படுவாள்; புருஷன் மரித்தபின்பு அவள் அந்தப் பிரமாணத்தில் நின்று விடுதலையாகி, வேறொரு புருஷனை விவாகம்பண்ணினாலும் விபசாரியல்ல.

௪ ¶ அப்படிப்போல என் சகோதரரே, நாம் [12]பராபரனுக்குக் கனியைக் கொடுக்கும்படிக்கு, மரித்தோரிலிருந்து எழுந்த கிறிஸ்து என்னும் வேறொருவருடையவர்கள் ஆவதற்கு, நீங்களும் அவருடைய [13]சரீரத்தினாலே நியாயப்பிரமாணத்தில்நின்று நீங்க மரித்தவர்களானீர்கள்.

௫ நாம் சரீரத்தின்படி நடந்தகாலத்திலே நியாயப்பிரமாணத்திலே தோன்றிய பாவமான இச்சைகள்,‡ நாம் [14]மரணத்திற்கு ஏது

கி பி. ௬௰.

1 மத். க. உச. யோவா. அ.௩௪. உ பே. உ. ௰௯.
* இரேக்கு, நீங்கள் ஒப்புக்கொடுக்கப்பட்டிருக்கிற.
2 உ தீமோ. க. ௰௩.
3 யோவா. அ. ௩௨. க கொரி. எ. உஉ. கலா. ரு. க. க பே. உ. ௰௬.
4 யோவா. அ. ௩௪.
† இரேக்கு, நீதியைவிட்டு நீங்கினவர்கள்.
5 உரோ. எ. ரு.
6 உரோ. க. ௩உ.
7 யோவா. அ. ௩உ.
8 க மோ. உ.௰எ. உரோ. ரு. ௰உ. யாக். க. ௰ரு.
9 உரோ. உ. எ: ரு. ௰எ, உக. க பே. க. ச.
10 க கொரி. எ. ௩௯.
11 மத். ரு. ௩உ.
12 கலா. ரு.௨உ.
13 உரோ.அ. உ. கலா. உ. ௰௯: ரு. ௰அ. எபே. உ. ௰ரு. கொலோ. உ. ௰௪.
‡ அல்லது பாவவிபக்கங்கள்.
14 உரோ.க.௨க. கலா. ரு ௰௯: யாக். க. ௰ரு.



Digitized by Google

வான கனிகளைக் கொடுக்கத்தக்கதாக, நம்முடைய அவயவங்களிலே [1]பலஞ்செய்திருந்தன.

௬ இப்பொழுது நாம் மரித்தவர்களாயிருக்க,* நாம் பழமையான எழுத்தின்படியல்ல, [2]புதுமையான ஆவியின்படி ஊழியஞ்செய்யத்தக்கதாக, நம்மைக் கட்டியிருந்த நியாயப்பிரமாணத்தில் நின்று விடுதலையாக்கப்பட்டிருக்கிறோம்.

௭ ¶ இதனாலே பொருள் என்ன ஆயிற்று? நியாயப்பிரமாணம் பாவமாயிருக்கின்றதென்பதோ? அப்படி அல்லவே; மேலும் [3]இச்சியாதிருப்பாயாக என்று நியாயப்பிரமாணம் சொல்லாதிருந்தால், இச்சிப்பைப்†பாவமென்று நான் அறியாமல் இருப்பேன். [4]ஆதலால், பாவம் இன்னதென்று நியாயப்பிரமாணத்தினாலே அறிந்தேன்.

௮ இப்படி [5]நியாயப்பிரமாணம் இல்லாவிட்டால், பாவம் செத்ததாயிருக்கும்; ஆதலால் [6]பாவமானது கட்டளையினாலே இடம்பெற்று, சகலவித இச்சைகளையும் என்னில் நடப்பித்தது.

௯ இப்படியிருக்க, முன்னே நியாயப்பிரமாணம் இல்லாதபொழுது நான் சீவனுள்ளவனாயிருந்தேன்; கட்டளை வந்தபொழுது பாவம் திரும்ப உயிர்கொண்டது; நான் மரித்தேன்.

௰ இப்படிப் பாவமானது கட்டளையினாலே இடம்பெற்று என்னை வஞ்சித்து, அதினாலே என்னைக் கொலைசெய்ததினாலே,

௰௧ [7]சீவனுக்காகக் கொடுக்கப்பட்ட கட்டளையை எனக்கு மரணத்தைக்கொடுக்கிறதென்று கண்டேன்.

௰௨ [8]ஆகையால் நியாயப்பிரமாணமே பரிசுத்தமாயிருக்கின்றது, கட்டளையும் பரிசுத்தமாயும் நீதியாயும் நன்மையாயும் இருக்கின்றது.

௰௩ இப்படியானால் நன்மையானது என் மரணத்திற்கு ஏதுவாயிற்றா என்று கேட்டால், அப்படி ஆகவே இல்லை; பாவமே எனக்கு அப்படி ஆயிற்று; பாவம் கட்டளையினாலே மிகவும் பெரிதான பாவமாகும்படிக்கு, அதுவே நலமானதினாலே எனக்கு மரணம் உண்டாக்குகிறதாகத் தோன்றிற்று.

௰௪ மேலும் நமக்குத் தெரிந்திருக்கிறபடி நியாயப்பிரமாணம் ஆவிக்குரியதாய் இருக்கின்றது; (மனிதனாகிய) [9]நானோ பாவத்துக்குக் கீழாக விற்கப்பட்டு,

௰௫ மாம்சத்துக்கு உரியவனாய் இருக்கிறேன்; எப்படியெனில் நான் நடப்பிக்கிறதற்கு என் மனது சம்மதிக்கிறதில்லை.‡ [10]நான் விரும்புகிறதைச் செய்யாமல், பகைக்கிறதையே செய்கிறேன்.

௰௬ இப்படி என் மனது விரும்பாததை நான் செய்திருக்க நியாயப்பிரமாணம் நல்லதென்று ஒத்துக்கொள்ளுகிறேன்.

௰௭ ஆதலால் நானல்ல, எனக்குள் வாசமாயிருக்கிற பாவமே அப்படி நடப்பிக்கின்றது.

௰௮ அது எப்படியென்றால் நான் அறிந்திருக்கிறபடி மாம்ச தேகியாகிய [11]எனக்குள்ளே நன்மை வாசமாயிருக்கிறதில்லை; நன்மை செய்வதற்கான விருப்பம் என்னுடனே இருக்கின்றது; அப்படிச் செய்கிறதை என்னிடத்தில் காணேன்.

௰௯ ஆதலால் எனக்கு விருப்பமான நன்மையை நான் செய்யாமல், எனக்கு விருப்பமில்லாத தீமையை நடப்பிக்கிறேன்.

௨௰ அந்தப்படி எனக்கு விருப்பம் இல்லாததை நான் செய்கிறவனாயிருக்க நானல்ல, எனக்குள்ளே வாசமாயிருக்கிற பாவமே அப்படிச் செய்கின்றது.

௨௰௧ ஆனபடியினாலே நன்மை செய்ய விரும்புகிற என்னிடத்திலே தீமைசெய்யப்பண்ணுகிற பிரமாணத்தைக் காண்கிறேன்.

௨௰௨ [12]என் உள்ளத்தோடே [13]பரா

இ. பி. ௬௰.

1 உரோ. ௬. ௨௧.
* அல்லது நம்மைக் கட்டியிருந்தது செத்திருக்க; உரோ. ௬. ௨. ௪. ௰௪.
2 உரோ. ௨. ௨௯. ௨ கொரி. ௩. ௬.
3 ௨ மோ. ௨௰. ௰௭. ௫ மோ. ௫. ௨௧. அப். ௨௰. ௩௩. உரோ. ௰௩. ௯.
† அல்லது பேராசையை.
4 உரோ. ௩. ௨௰.
5 ௧ கொரி. ௰௫. ௫௬.
6 உரோ ௪. ௰௫: ௫. ௨௰.
7 ௩ மோ. ௰௮. ௫. எசே. ௨௰. ௰௧, ௰௩, ௨௧. ௨ கொரி. ௩. ௭.
8 சங். ௰௯. ௮: ௧௰௯. ௧௩௮, ௧௭௨. ௧ தீமோ. ௧. ௮.
9 ௧ இரா. ௨௧. ௨௰, ௨௫. ௨ இரா. ௰௭. ௰௭.
‡ கிரேக்கு, அறிகிறதில்லை; சங். ௧. ௧.
10 கலா. ௫. ௰௭.
11 ௧ மோ. ௬. ௫: ௮. ௨௧.
12 ௨ கொரி. ௪. ௰௬. எபே. ௩. ௰௬. கொலோ. ௩. ௯, ௰.
13 சங் ௧. ௨.

Digitized by Google

பரனுடைய நியாயப்பிரமாணத்தின்மேல் பிரியமாயிருக்கிறேன்.

௨௩ [1]என் அவயவங்களிலே [2]என் மனதின் பிரமாணத்துக்கு எதிராய்ப் போராடுகிற வேறு பிரமாணத்தைக் காண்கிறேன்; அது என் அவயவங்களில் உண்டாயிருக்கிற பாவப்பிரமாணத்துக்கு என்னை அடிமையாக்கிக்கொள்ளுகிறது.

௨௪ ஐயோ, நான் நிர்ப்பாக்கியமுள்ள மனிதன்; இந்த மரணத்திற்கு ஏதுவான சரீரத்தில் நின்று* யார் என்னை விடுதலையாக்குவார்.

௨௫ [3]நம்முடைய கர்த்தராகிய இயேசுக்கிறிஸ்துவினாலே (என்னை விடுதலையாக்குகிற) பராபரனையே தோத்திரம்செய்கிறேன்; ஆதலால் நானே என் மனதினாலே பராபரனுடைய நியாயப்பிரமாணத்துக்கும், மாம்சத்தினாலே பாவப்பிரமாணத்துக்கும் ஊழியம் செய்கிறேன்.

## ௮. அதிகாரம்.

௧. கிறிஸ்துவைப் பற்றிக்கொண்டு தேவ ஆவியின்படி நடக்கிறவர்களுக்கு ஆக்கினை வராதென்றும், ௫. ௰௩. மாம்சத்துக்கேற்ற சிந்தையினால்வரும் தீமை இன்னதென்றும், ௰. ௰௪. ஆவிக்கேற்ற சிந்தையினாலும், ௰௭. பராபரனுடைய புத்திராசிலாக்கியப்பதினாலும் வரும் நன்மை இன்னதென்றும், ௰௯. பராபரன் நீதியாய்த் தீர்மானித்த தம்முடைய புத்திரரின் மகிமையான விடுதலைக்குச் சிருஷ்டிகளெல்லாம் எதிர்நோக்கிக்கொண்டிருக்குமென்றும், ௩௮. பராபரனுடைய அன்பினின்று உத்தமரை யாதொன்றும் நீக்கமாட்டாதென்றும் காட்டியது.

ஆனபடியினாலே [4]மாம்சத்தின்படி அல்ல, ஆவியின்படியே நடந்து, கிறிஸ்து இயேசுவுக்கு உட்பட்டிருக்கிறவர்களுக்கு ஆக்கினைத்தீர்ப்பு வராது.

௨ கிறிஸ்து இயேசுவினாலே சீவனைக் கொடுக்கிற [5]ஆவியின் [6]பிரமாணம் என்னைப் பாவம் மரணம் என்றிவைகளின் [7]பிரமாணத்தில் நின்று விடுதலையாக்கிற்றே.

௩ அது எப்படியெனில் [8]மாம்சத்தினாலே பலஈனமாயிருந்த நியாயப்பிரமாணம் செய்யக்கூடாததைப் [9]பராபரன் செய்ய, தம்முடைய குமாரனைப் பாவமாம்சத்தின் சாயலாகவும் பாவத்தைப் போக்கும்பலியாகவும்† அனுப்பி, மாம்சத்திலே பாவத்தை ஆக்கினைக்குள்ளாகத் தீர்த்தார்.

௪ [10]மாம்சத்துக்கு ஏற்றபடி அல்ல, ஆவிக்கு ஏற்றபடி நடக்கிற நம்மாலே நியாயப்பிரமாணத்தின் நீதி நிறைவேறும்படிக்கே அப்படி ஆயிற்று.

௫ இப்படியிருக்க, [11]மாம்சத்துக்கு ஏற்றபடி நடக்கிறவர்கள் மாம்சத்துக்கு ஏற்றவைகளைச் சிந்திக்கிறார்கள்; ஆவிக்கு ஏற்றபடி நடக்கிறவர்கள் [12]ஆவிக்கு ஏற்றவைகளைச் சிந்திக்கிறார்கள்.

௬ [13]மாம்சத்துக்கு ஏற்ற சிந்தை‡ மரணத்துக்குஏதுவானது; ஆவிக்கு ஏற்ற சிந்தை§ சீவனுக்கும் சமாதானத்துக்கும் ஏதுவானது.

௭ எப்படியென்றால், [14]மாம்சத்துக்கு ஏற்ற சிந்தை‖ பராபரனுடைய நியாயப்பிரமாணத்திற்குக் கீழ்ப்படியாமலும் [15]கீழ்ப்படியத் திராணியில்லாமலும்இருக்கிறபடியால், அது பராபரனுக்கு விரோதமான பகையாயிருக்கின்றது.

௮ ஆனதால் மாம்சத்திற்கு ஏற்றபடி நடக்கிறவர்கள் பராபரனுக்குப் பிரியமாய் இருக்கமாட்டார்கள்.

௯ ¶ [16]பராபரனுடைய ஆவி உங்களில் வாசமாயிருக்கிறபடியால் நீங்கள் மாம்சத்திற்கு ஏற்றபடி அல்ல, ஆவிக்கு ஏற்றபடி நடக்கிறவர்களாய் இருக்கிறீர்கள்; [17]கிறிஸ்துவினுடைய ஆவியை உடையவன் அல்லாதவன் அவருடையவன் அல்ல.

௰ மேலும் கிறிஸ்து உங்களில் இருந்தபடியால், பாவத்தின்நிமித்தம் சரீரம் அழிந்துபோனாலும் ஆவியானது நீதியின்நிமித்தம் சீவனாயிருக்கின்றது.

௰௧ அன்றியும் இயேசுவை மரித்தோரில்நின்று எழுப்பினவரு

கி. பி. ௫௮.

1 உரோ. ௬. ௰௩, ௰௯.
2 கலா. ௫. ௰௭.
* அல்லது மரணத்தின் சரீரத்தினின்று.
3 ௧ கொரி. ௰௫. ௫௭.
4 ௪. வச. கலா. ௫. ௰௬, ௨௫.
5 ௧ கொரி. ௰௫. ௪௫. ௨ கொரி. ௩. ௬.
6 யோவா. ௮. ௩௬. உரோ. ௬. ௰௮, ௨௨. கலா. ௨. ௰௯: ௫. ௧.
7 உரோ. ௭. ௨௪, ௨௫.
8 அப். ௰௩. ௩௯. உரோ. ௩. ௨௰. எபி. ௭. ௰௮, ௰௯: ௰. ௧, ௨, ௰, ௰௪.
9 ௨ கொரி. ௫. ௨௧. கலா. ௩. ௰௩.
† அல்லது பாவத்துக்காக.
10 ௧. வச.
11 யோவா. ௩. ௬. ௧ கொரி. ௨. ௰௪.
12 கலா. ௫. ௨௨, ௨௫.
13 ௨௧. வச. உரோ. ௬. ௨௧. கலா. ௬. ௮.
‡ கிரேக்கு, மாம்சத்தைச் சிந்திக்கிற சிந்தை; ௭. வச.
§ கிரேக்கு, ஆவியைச் சிந்திக்கிற சிந்தை.
14 யாக். ௪. ௪.
‖ கிரேக்கு. மாம்சத்தைச் சிந்திக்கிற சிந்தை.
15 ௧ கொரி. ௨. ௰௪.
16 ௧ கொரி. ௩. ௰௬: ௬. ௰௯.
17 யோவா. ௩. ௩௪. கலா. ௪. ௬. பிலி. ௧ ௰௯. ௧ பே. ௧. ௰௧.

டைய [1]ஆவி உங்களில் வாசமாயிருக்கிறபடியால், [2]கிறிஸ்துவை மரித்தோரிலிருந்து எழுப்பினவர் உங்களில் வாசமாயிருக்கிற தம்முடைய ஆவியினாலே* மரணத்துக்குரிய உங்கள் சரீரங்களை உயிரோடிருக்கச்செய்வார்.

௰௨ ¶ [3]ஆகையால் சகோதரரே, மாம்சத்துக்கு ஏற்றபடி சீவனம் பண்ணத்தக்கதாக, நாம் மாம்சத்துக்குக் கடனாளிகளாய் இருக்கிறதில்லை.

௰௩ [4]மாம்சத்துக்கு ஏற்றபடி சீவனம்பண்ணினால் சாவீர்கள்; ஆவியினாலே சரீரத்தின் செய்கைகளை [5]அழித்துப்போட்டால் பிழைப்பீர்கள்.

௰௪ மேலும் [6]எவர்கள் பராபரனுடைய ஆவியினாலே நடத்தப்படுகிறார்களோ அவர்கள் பராபரனுடைய புத்திரராய் இருக்கிறார்கள்.

௰௫ அந்தப்படி நீங்களும் பின்னும் [7]பயப்படுகிறதற்கு அடிமையின் [8]ஆவியை அடையாமல், [9]அப்பா பிதாவே என்று கூப்பிடப்பண்ணுகிற [10]புத்திரசுவிகாரத்தின் ஆவியையே அடைந்திருக்கிறீர்கள்.

௰௬ [11]நாம் பராபரனுடைய புத்திரராய் இருக்கிறதைக் குறித்து ஆவியானவர் தாமே நம்முடைய ஆவியுடனேகூடச் சாட்சிகொடுக்கிறார்.

௰௭ மேலும் நாம் புத்திரராயிருக்க, [12]சுதந்தரராயும் இருக்கிறோம்; [13]கிறிஸ்துவுடனேகூட நாம் மகிமைப்படும்படிக்கு அவரோடேகூடப் பாடுபட்டால், அவரோடேகூடச் சுதந்தரராய்ப் பராபரனுடைய சுதந்தரராகவே இருப்போம்.

௰௮ ¶ ஆதலால் [14]இக்காலத்துப் பாடுகள் இனி நம்மிடத்தில் வெளிப்படும் மகிமைக்கு ஒப்பிடப் பாத்திரமானவைகள் அல்ல என்று எண்ணுகிறேன்.

கி. பி. ௬௰.

1 அப் ௨. ௨௪.
2 உரோ. ௬. ௪, ௫. ௧ கொரி. ௬. ௰௪. ௨ கொரி. ௪. ௰௪. எபே. ௨. ௫.
* அல்லது ஆவியின் நிமித்தமாக.
3 உரோ. ௬. ௭, ௰௪.
4 ௬. ௰௪. கலா. ௬. ௮.
5 எபே. ௪. ௨௨. கொலோ ௩. ௫.
6 கலா. ௫. ௰௮.
7 ௨ தீமோ ௧ ௭. ௧ யோ ௪. ௰௮
8 ௧ கொரி. ௨. ௰௨. எபி. ௨. ௰௫,
9 மாற். ௰௪. ௩௬.
10 ஏசா. ௫௬. ௫. கலா. ௪. ௫. ௬.
11 ௨ கொரி. ௧. ௨௨: ௫. ௫. எபே. ௧. ௰௩: ௪. ௩௰.
12 அப். ௨௬. ௰௮. கலா. ௪. ௭.
13 அப். ௰௪. ௨௨. பிலி. ௧. ௨௯. ௨ தீமோ. ௨. ௰௧. ௰௨.
14 ௨ கொரி. ௪. ௰௭. ௧ பே. ௧. ௬, ௭: ௪. ௰௩.
15 ௨௨. வசனம். ௧ மோ. ௩ ௰௯.
16 ௧ போ. ௩. ௨.
17 ௨ பே. ௩. ௰௩.
† அல்லது சகல சீவப் பிராணிகளும்; மாற். ௰௬. ௰௫. கொலோ. ௧. ௨௩.
18 எரே. ௰௨. ௪௩.
19 ௨ கொரி ௫. ௫. எபே. ௧. ௰௪.
20 லூக். ௨௧. ௨௮ எபே. ௪. ௩௰.
21 லூக். ௨௰. ௩௬
22 ௨ கொரி. ௫. ௩, ௪.
23 ௨ கொரி. ௫. ௭. எபி. ௰௧. ௧.
24 மத். ௨௰. ௨௨. யாக். ௪. ௩.
25 சகரி. ௰௨. ௰. எபே. ௬ ௰௮.
26 ௧ யோ. ௫. ௰௪.

௰௯ மேலும் தற்செயலாலே அல்ல, சிருட்டிகளும் அழிவுக்கு ஏற்ற அடிமைத்தனத்தில்நின்று விடுதலையாக்கப்பட்டு,

௨௰ பராபரனுடைய புத்திரர் மகிமையாய் அடையும் இரட்சிப்புக்கு வரும்படிக்கான நம்பிக்கையோடே [15]கீழ்ப்படுத்தினவராலே வீணுக்குக் கீழ்ப்பட்டிருக்கிறபடியால்,

௨௧ [16]சிருட்டிகளும் பராபரனுடைய புத்திரர் வெளிப்படுகிறதற்கு [17]மிகுந்த ஆசையோடே காத்துக்கொண்டிருக்கின்றன.

௨௨ ஆனபடியால் நமக்குத் தெரிந்திருக்கிறபடி சகல சிருட்டிகளும்கூட† [18]இதுவரைக்கும் தவித்து வேதனைப்படுகின்றன.

௨௩ அவைகள்மாத்திரம் அல்ல, [19]ஆவியின் முதற்பலன்களைப் பெற்ற நாமும்கூட [20]நம்முடைய சரீரம் மீட்கப்படுதலாகிய [21]புத்திரசுவிகாரம் வருவதற்குக் காத்திருந்து,

௨௪ [22]நமக்குள்ளே தவிக்கிறோம், (அதன்மேலுள்ள) நம்பிக்கையால் நாம் இரட்சிக்கப்படுகிறோம்; [23]காணப்படுகிற பொருளை நம்புகிறது நம்பிக்கையல்ல; ஒருவன் தான் காண்கிறதை நம்பவேண்டுவது என்ன?

௨௫ நாம் காணாததை நம்புகிறபடியால் அது வருவதற்குப் பொறுமையோடே காத்திருக்கிறோம்.

௨௬ ¶ அல்லாமலும் [24]நாம் தகுதியாய்ச் செபம்பண்ணவேண்டுவது இன்னதென்று அறியாமலிருக்கிறபடியால் [25](தேவ) ஆவியானவர் தாமே சொல்லக்கூடாத பெருமூச்சுகளாலே நமக்காக வேண்டுதல்பண்ணி, நம்முடைய பலவீனங்களில் (நமக்கு) உதவிசெய்கிறார்.

௨௭ ஆவியானவர் [26]பராபரனுடைய சித்தத்தின்படியே பரிசுத்தவான்களுக்காக வேண்டுதல்பண்

ணுகிறபடியால்* [1]இருதயங்களை ஆராய்ந்துபார்க்கிறவர் ஆவியின் சிந்தை இன்னதென்று அறிந்துகொள்ளுகிருர்.

உஅ ¶ அன்றியும் அவருடைய முன்யோசனையின்படி [2]அழைக்கப்பட்டவர்களாய்ப் பராபரனில் அன்புகூருகிறவர்களுக்குச் சகலமும் நன்மையாகும்படிக்கு ஏதுவாயிருக்கின்றது என்று அறிந்திருக்கிறோம்.

உகூ அது எப்படியெனில், [3]பராபரன், தம்முடைய குமாரன் அநேக சகோதரருக்குள்ளே முதற்பேருனவராய் இருக்கும்படிக்கு, [4]தாம் எவர்களை முன்னறிந்தாரோ அவர்களையும் [5]அவருடைய சாயலுக்கு ஒப்பாயிருப்பதற்கு [6]முன்குறித்தார்.

௩௰ அல்லாமலும் எவர்களை முன்குறித்தாரோ, [7]அவர்களை அழைத்தும்இருக்கிருர்; எவர்களை அழைத்தாரோ, அவர்களை [8]நீதிமான்களாக்கியும் இருக்கிருர்; எவர்களை நீதிமான்களாக்கினுரோ [9]அவர்களை மகிமைப்படுத்தியும் இருக்கிருர்.

௩க இவைகளைக்குறித்து நாம் என்ன சொல்லவேண்டும்? [10]பராபரன் நம்முடைய பங்கிலிருக்க நமக்கு விரோதமாயிருப்பவன் எவன்?

௩உ [11]அவர்தம்முடைய சொந்தக்குமாரனென்றும் பாராமல் [12]நம்மெல்லாருக்காகவும் அவரையே ஒப்புக்கொடுத்திருக்க, அவரோடேகூட மற்ற யாவையும் நமக்கு அநுக்கிரகம்பண்ணுமல் இருப்பாரா?

௩௩ பராபரனுல் தெரிந்துகொள்ளப்பட்டவர்கள்மேல் யார் குற்றம் சாற்றலாம்? [13]பராபரனே (அவர்களை) நீதிமான்களாக்குகிறவர்.

௩ச [14]யார் (அவர்களை) ஆக்கினைக்குள்ளாகத்தீர்க்கலாம்? கிறிஸ்துவே (அவர்களுக்காக) மரித்தார்; மேலும் எழுந்தவராயும் இருக்கிருர்; அதுவுமல்லாமல் [15]அவர் பராபரனுடைய வலதுபாரிசத்திலிருந்து [16]நமக்காக வேண்டுதல் செய்கிருர்.

௩ரு [17]உமதுநிமித்தம் நாம் எந்நேரமும் கொலைசெய்யப்படுகிறோம் என்றும் அடிக்கப்படும் ஆடுகளைப்போலஎண்ணப்படுகிறோம் என்றும் எழுதியிருக்கிறபடியே இருந்தும்,

௩சா நம்மைக் கிறிஸ்துவின் அன்பைவிட்டுப் பிரிப்பவன் யாவன்? உபத்திரவமோ, வியாகுலமோ, துன்பப்படுதலோ, பசியோ, நிருவாணமோ, நாசமோசமோ, கட்கமோ,

௩எ [18]இவையெல்லாவற்றையும் நாம் நம்மில் அன்புகூருகிறவராலே அதிகமாய்ச் செயங்கொள்ளுகிறோம்.

௩அ மரணமானுலும் சீவனுனலும், தேவதூதர்களானுலும் [19]அதிகாரிகளானுலும் வல்லமைகளானுலும், நிகழ்காரியங்களானுலும் வருங்காரியங்களானுலும்,

௩கூ உயர்வானுலும் தாழ்வானுலும், வேருெரு சிருஷ்டியானுலும் நம்மை நம்முடைய கர்த்தராகிய கிறிஸ்து இயேசுவினுல் விளங்கிய பராபரனுடைய அன்பை விட்டுப் பிரிக்கமாட்டாதென்று நிச்சயமாய் அறிந்திருக்கிறேன்.

கி. பி. ௬௰.

* அல்லது பண்ணுகிறபடியால்.

1 க ராஜா. உ௮. கூ. சங். எ. கூ. வாக். ௰எ. க. எரே. ௰க. உ௰: ௰எ.௰: உ௰.௰உ. அப். க. உச. க தெச. உ. ச. வெளி. உ. உக.
2 உரோ. கூ. ௰க, உக, உச.
3 கொலோ. க. ௰கூ ௰௮. எபி.க. கூ. வெளி. க.ரு.
4 உ மோ. கக. ௰உ,௰எ. சங்.க. கூ. எரே. க. ரு. மத். எ. உக. உரோ. ௰க. உ. உ தீமோ. உ. ௰கூ. க பே. க. உ.
5 யோவா. ௰எ. உஉ. உ கொரி. க. ௰௮. பிலி. க. உக. க யோ. க. உ.
6 எபே. க. ரு, ௰க.
7 உரோ. க. சா. கூ. உச. எபே. ச. ச. எபி. கூ. ௰ரு. க பே உ கூ.
8 க கொரி. சா. ௰க.
9 யோவா. ௰எ. உஉ. எபே. உ. சா.
10 ச மோ ௰ச.கூ. சங். ௱௮. சா.
11 உரோ.ரு.சா,௰.
12 உரோ.ச.உரு.

13 ஏசா. ௫௰. அ. கூ. வெளி. ௰உ. ௰. ௰க.
14 யோபு. ௩ச. உகூ.
15 மாற். ௰சா ௰கூ கொலோ. க. க எபி. க: ௩. க: ௰. உ. க பே. க. உஉ.

# ௯. அதிகாரம்.

க. பவுல் யூதர்களைக்குறித்துத் துக்கிக்கிறது. எ. ஆபிரகாமின் வித்தெல்லாம் வாக்குத்தத்தத்தின் புத்திரரல்ல என்பது. ௰அ. பராபரன் தமக்கு இஷ்டமானவர்கள்மேல் இரக்கம் வைக்கிருரென்பது. உக. குயவன் களிமண்ணினுலே தனக்கு இஷ்டமான பாண்டங்களைச் செய்கிருனென்பது. உசா. அஞ்ஞானிகள் சுதந்தரத்துக்குள்ளாகி யூதர்கள் புறம்பாக்கப்பட்டதை முன் அறிவிக்கப்பட்டதென்பது. ௩உ. யூதர்கள் விசுவாசத்தினுல் உண்டாகும் நீதியை அங்கிகாரம்பண்ணுத முகாந்தரம் இன்னதென்பது.

16 எபி. எ. உரு: கூ.உச. க யோ.உ. க.—17 சங். சச. உஉ. க கொரி ௰ரு. ௩௰, ௩க. உ கொரி. ச. ௰க.
18 க கொரி. ௰ரு. ரு௰. உ கொரி. உ. ௰ச. க யோ ச. ச: ரு. ச, ரு. வெளி. ௰உ. ௰க.
19 எபே க. உக: கூ. ௰உ. கொலோ க. ௰சா: உ ௰ரு. க பே. ௩. உஉ.

Digitized by Google

சரீரசம்பந்தமான என் வம்சத்தாராகிய என் இனத்தாருக்காக [1]நானே கிறிஸ்துவினால் சபிக்கப்பட்டவனாகவேண்டும்* என்று இருந்து,

௨ [2]அவர்களைக்குறித்து மிகுந்த துக்கமும் இடைவிடாத மனநோவும் உள்ளவனாயிருக்கிறேன்.

௩ [3]இயேசுக்கிறிஸ்துவின்மேலே ஆணைப்படிக்கு (இப்படி) மெய்யாய்ச் சொல்லுகிறேன்; பரிசுத்த ஆவியின்மேலே ஆணைப்படிக்குப் பொய்சொல்லாமல்இருக்கிறேன்; என் மனதுகூடச் சாட்சியாய் இருக்கின்றது.

௪ [4]அவர்கள் இஸ்ரவேல் சந்ததியாராய் இருக்கிறார்களே, [5]புத்திரசுவிகாரமும் [6]மகிமையும் [7]உடம்படிக்கைகளும்† [8]வேதப்பிரமாணமிடுதலும் [9]தேவ ஆராதனையும் [10]வாக்குத்தத்தங்களும் அவர்களுடையவைகளே.

௫ [11]பிதாக்கள் அவர்களுடையவர்களாய் இருக்கிறார்களே; மேலும் [12]சரீரத்தின்படிக்குக் கிறிஸ்து அவர்களில் உண்டானாரே; [13]அவர் என்றென்றைக்கும் தோத்திரிக்கப்பட்ட சர்வத்திற்கும் மேலான தேவனானவர்.—ஆமென்.

௬ ¶ [14]பராபரனுடைய வசனம் அவமாய்ப்போயிற்று என்றுசொல்லக்கூடாது; என்னத்தினாலென்றால் [15]இஸ்ரவேல் வம்சத்தார் எல்லாரும் இஸ்ரவேலர் அல்லவே.

௭ அன்றியும் [16]அவர்கள் ஆபிரகாமின் சந்ததியானாலும் எல்லாரும் புத்திரரும் அல்லவே; [17]ஈசாக்கினாலே உனக்குச் சந்ததி உண்டாகுமென்று சொல்லியிருக்கின்றதே.

௮ இதன் பொருள் என்னவென்றால், சரீரமுறைமையின்படி புத்திரரானவர்கள் பராபரனுடைய புத்திரர் அல்ல, [18]வாக்குத்தத்தத்தினாலே குறிக்கப்பட்ட புத்திரரே (அப்படிப்பட்ட) சந்ததி என்று எண்ணப்படுகிறார்கள்.

௯ அந்த வாக்குத்தத்தமான வார்த்தைகளாவன: [19]இக்காலத்திலே வருவேன்; அப்பொழுது சாராள் ஒரு குமாரனைப் பெறுவாள் என்பவைகளே.

௰ இவைமாத்திரமல்ல, நம்முடைய முன்னோராகிய ஈசாக்கென்னும் ஒருவனாலே கருப்பவதியான [20]இரேபேக்காளும், அதற்குச் சாட்சி; எப்படியென்றால்,

௰௧ அவளுடைய பிள்ளைகள் பிறவாமலும் நன்மைதீமை ஒன்றும் செய்யாமலும் இருந்தகாலத்திலே, [21]மூத்தவன்‡ இளையவனுக்கு§ ஊழியம்செய்வான் என்று அவளுடனே சொல்லப்பட்டது.

௰௨ அப்படிப்போல, [22]யாக்கோபின்மேல் அன்பாயிருந்து ஏசாவைப் பகைக்கிறேன் என்றும் எழுதியிருக்கின்றது.

௰௩ பராபரனுடைய சித்தம் தெரிந்துகொண்டபடியே இருந்து, கிரியைகளினாலே அல்ல, [23]அழைக்கிறவராலே ஆகும்படிக்கு அப்படிச் சொல்லியிருக்கின்றது.

௰௪ ¶ ஆகையால் நாம் என்ன சொல்லலாம்? [24]பராபரனிடத்திலே அநீதி உண்டென்று சொல்லலாமா? அப்படி ஒருக்காலும் சொல்லக்கூடாது; மோசேயுடனே அவர் சொன்னதாவது:

௰௫ [25]எவன்மேல் தயையாயிருக்கச் சித்தமாயிருப்பேனோ அவன்மேல் தயையாயிருப்பேன்; எவன்மேல் இரக்கமாயிருக்கச் சித்தமாயிருப்பேனோ, அவன்மேல் இரக்கமாயிருப்பேன் என்றாரே.

௰௬ ஆகையால் மனிதர் விரும்புகிறதினாலும் ஓடுகிறதினாலும் அல்ல, பராபரனுடைய தயையினாலே ஆயிருக்கின்றது.

இ. பி. ௬௰.

1 உ மோ. ௩௨. ௩௨.
* அல்லது கிறிஸ்துவிலிருந்து விலக்க.
2 உரோ. ௰. ௧.
3 உரோ. ௧. ௯. உ கொரி. ௧. ௨௩; ௰௧. ௩௧: ௰௨. ௰௯. கலா. ௧. ௨௰. பிலி. ௧. ௮. ௧ தீமோ. ௨. ௭.
4 ௫ மோ. ௭. ௬.
5 உ மோ. ௪. ௨௨. ௫ மோ. ௰௪. ௧. எரே. ௩௧. ௯
6 ௧ சாமு. ௪. ௨௧. ௧ இரா. ௮. ௰௧. சங். ௬௩. ௨: ௭௮. ௬௧.
7 அப். ௩. ௨௫. எபி. ௮. ௮,௯,௰.
† அல்லது ஏற்பாடுகளும்.
8 சங். ௧௪௭. ௰௯.
9 எபி. ௯. ௧.
10 அப். ௰௩. ௩௨. உரோ. ௪. ௨. எபே. ௨. ௰௨.
11 ௫ மோ. ௰. ௰௫. உரோ. ௰௧. ௨௮.
12 லூக். ௩. ௨௩. உரோ. ௧. ௩.
13 எரே. ௨௩. ௬. யோவா. ௧. ௧. அப். ௨௰. ௨௮. எபி. ௧. ௮. ௧ யோ. ௫. ௨௰.
14 ௪ மோ. ௨௩. ௰௯. உரோ. ௩. ௩.
15 யோவா. ௮. ௩௯. உரோ. ௨. ௨௮, ௨௯: ௪. ௰௨, ௰௬. கலா. ௬. ௰௬.
16 கலா. ௪. ௨௩.
17 ௧ மோ. ௨௧. ௰௨. எபி. ௰௧. ௰௮.
18 கலா. ௪. ௨௮.
19 ௧ மோ. ௰௮. ௰, ௰௪.
20 ௧ மோ. ௨௫. ௨௧.
21 ௧ மோ. ௨௫. ௨௩.

‡ அல்லது பெரியவன். —§ அல்லது சிறியவனுக்கு.—22 மல்கி ௧. ௨, ௩. ௫ மோ. ௨௧. ௰௫. லூக். ௰௪. ௨௬ மத். ௰. ௩௭. லூக். ௰௪. ௨௬. யோவா. ௰௨. ௨௫.—23 உரோ. ௪. ௰௭: ௮. ௨௮.—24 ௫ மோ. ௩௨. ௪. உ நாளா. ௰௯. ௭. யோபு. ௮. ௩: ௩௪. ௰. சங். ௯௨. ௰௫.—25 உ மோ. ௩௩. ௰௯.

Digitized by Google

௰௭ [1]பின்னும் வேதத்திலே பார்வோனுடனே அவர் சொன்னதாவது: [2]உன்னிடத்தில் என்னுடைய வல்லமையைக் காண்பிக்கும்பொருட்டாகவும், என்னுடைய நாமம் பூமியில் எங்கும் பிரஸ்தாபமாகும்பொருட்டாகவும் உன்னை நிலைநிற்கப்பண்ணினேன் என்ருர்.

௰௮ ஆதலால் அவர் தமது இஷ்டத்தின்படி ஒருவனுக்குத் தயையாயிருக்கிருர்; தமது இஷ்டத்தின்படி மற்றொருவனைக் கடினப்படுத்துகிருர்.

௰௯ ¶ இப்படியானல் என் அவர் குற்றம் பிடிக்கிருர்? [3]அவருடைய சித்தத்திற்கு யாவன் எதிர்நிற்பானென்று என்னுடனே சொல்வாய்.

௨௰ ஆ மனிதனே, பராபரனுக்கு எதிராய்த் தர்க்கிக்கிற* நீ யாவன்? [4]உருவாக்கப்பட்ட வஸ்து உருவாக்கினவனை நோக்கி, நீ என் என்னை இப்படி உண்டாக்கினுயென்று சொல்லுமா?

௨௧ அல்லது மிதியிட்ட களிமண்ணினலே குயவன் [5]ஒரு பாத்திரத்தைக் கனமான காரியத்திற்கும், மற்றொன்றைக் கனஈனமான காரியத்திற்கும்பண்ணும்படி, மண்ணின்மேல் [6]அதிகாரமுள்ளவன் அல்லவா?

௨௨ ஆனதால் பராபரன் தமது கோபத்தைக் காண்பிக்கவும் தமது வல்லமையைத்தெரியப்படுத்தவும் சித்தமாய், [7]அழிவுக்குத் தகுதியான† கோபாக்கினைப் [8]பாத்திரங்கள்மேலே மிகவும் நீடிய சாந்தத்தோடே பொறுமை வைத்துக்கொண்டதும் அல்லாமல்,

௨௩ [9]தாம் மகிமைக்காக எத்தனமாக்கின தயாபாத்திரங்கள்மேலே [10]தம்முடைய மகிமையின் ஐசுவரியத்தைத் தெரியப்படுத்தச் சித்தமாய், அப்படிப் பொறுத்துக்கொண்டால் (நீ எப்படித் தர்க்கிக்கலாம்?)

௨௪ அப்படிப்பட்டவர்கள் ஆகும்படி அவர் [11]யூதரில்மாத்திரம் அல்ல, புறத்தேசத்தாரிலுமிருந்து நம்மை அழைத்தார்.

௨௫ அந்தப்படி ஒசேயாவின் புத்தகத்திலே அவர் சொல்லுகிறதாவது: [12]எனக்குச் சனங்கள் அல்லாதவர்களை என்னுடைய சனங்கள் என்றும் சிநேகிக்கப்படாதிருந்தவளைச் சிநேகிக்கப்பட்டவள் என்றும் அழைப்பேன்.

௨௬ [13]நீங்கள் என்னுடைய சனங்கள் அல்லவென்று தங்களுக்குச் சொல்லப்பட்ட இடத்திலே, அவர்கள் சீவனுள்ள பராபரனுடைய பிள்ளைகள் என்று அழைக்கப்படுவார்கள் என்கிருர்.

௨௭ அல்லாமலும் ஏசாயா என்பவன் இஸ்ரவேலைக்குறித்துக் கூப்பிடுகிறதாவது: [14]இஸ்ரவேல் சந்ததியார் சமுத்திரத்தின் மணலைப்போலப்பெருக்கமாயிருந்தும் [15]மீதியான சிலர்மாத்திரம் இரட்சிக்கப்படுவார்கள்.

௨௮ நீதியோடே சீக்கிரமாய்க் கர்த்தர் காரியத்தைத்‡ தீர்த்து நிறைவேற்றுவார்; [16]சீக்கிரமாகவே அவர் காரியத்தைப் பூமியிலே தீர்த்துப்போடுவார் என்றுன்.

௨௯ அல்லாமலும் அதற்கு முன்னே ஏசாயா சொன்னது: [17]சேனைகளையுடைய பராபரன் நமக்குள்ளே ஒரு சந்ததியை மீதியாக வையாதிருந்தாராஞல் [18]நாம் சோதோமைப்போலாகிக் கொமோருவுக்கு ஒத்திருப்போம் என்றுன்.

௩௰ ¶ இவைகளின் பொருள் என்ன ஆயிற்று என்றுகேட்டால், [19]நீதியைத் தேடாமலிருந்த புறத்தேசத்தார்[20]விசுவாசத்தினலேவருகிற நீதியையே பெற்றுக்கொண்டார்கள்.

௩௧ [21]நியாயப்பிரமாணத்தினலே நீதியைத் தேடின இஸ்ரவேலரோ விசுவாசத்தினல் அல்ல,

௩௨ நியாயப்பிரமாணத்திற்கு ஏற்ற கிரியைகளினலே அதைத்தே

---

கி. பி. ௫௰.

1 கலா. ௩. ௮, ௨௨.
2 உ மோ. ௯. ௰௬.
3 உ நாளா. ௨௰. ௬. யோபு. ௯. ௰௨: ௨௩. ௰௩. தானி. ௪. ௩௫.
* அல்லது மறுமொழி கொடுக்கிற; யோபு. ௩௩. ௰௩.
4 ஏசா. ௨௯. ௰௬: ௪௫. ௯: ௬௪. ௮.
5 உ தீமோ. ௨. ௨௰.
6 வாக். ௰௬. ௪. எரே. ௰௮. ௬.
7 ௧ பே. ௨. ௮. யூதா. ௪.
† அல்லது செய்யப்பட்ட.
8 ௧ தெச. ௫. ௯.
9 உரோ. ௮. ௨௮. ௨௯. ௩௰.
10 உரோ. ௨. ௪. எபே. ௧. ௭. கொலோ. ௧. ௨௭.
11 உரோ. ௩. ௨௯.
12 ஓசே. ௨. ௨௩. ௧ பே. ௨. ௰.
13 ஓசே. ௧. ௰.
14 ஏசா. ௰. ௨௨, ௨௩.
15 உரோ. ௰௧. ௫.
‡ அல்லது கணக்கை.
16 ஏசா. ௨௮. ௨௨.
17 ஏசா. ௧. ௯. புலம். ௩. ௨௨.
18 ஏசா. ௰௩. ௰௯. எரே. ௫௰. ௪௰.
19 உரோ. ௪. ௰௧: ௰. ௨௰.
20 உரோ. ௧. ௰௭.
21 உரோ. ௰. ௨: ௰௧. ௭.

Digitized by Google

டினபடியால், நியாயப்பிரமாணத்தினலே [1]நீதியை அடையவில்லை.

௩௩ [2]இதோ, விழுதற்கான கல்லையும், இலச்சை அடைவதற்கான கல்மலையையும் சீயோனிலே வைக்கிறேன்; [3]அதினிடத்தில் விசுவாசமாயிருப்பவன் எவனே, அவன் வெட்கப்படுவதில்லை* என்று எழுதியிருக்கிறதின்படி [4]அவர்கள் விழுதற்கான அக்கல்லின்மேல் விழுந்தார்கள்.

## ௰. அதிகாரம்.

௧. நியாயப்பிரமாணத்தின் நீதிக்கும் விசுவாசத்தின் நீதிக்கும் வித்தியாசத்தையும், ௰௧. விசுவாசிக்கிறவனும் வெட்கப்படானென்றும், ௰௮. அஞ்ஞானிகளும் வேதவசனத்தை ஏற்றுக்கொண்டு விசுவாசிப்பார்கள் என்றும் சொல்லியது. ௰௯. இஸ்ரவேல் சனங்கள் இந்தச் சங்கதிகளை அறியாதவர்கள் அல்லவென்பது.

சகோதரரே, இஸ்ரவேலர் இரட்சிக்கப்படவேண்டும் என்று நான் என் இருதயத்தோடே மிகவும் விரும்பி, பராபரனை நோக்கி விண்ணப்பம்பண்ணுகிறேன்.

௨ [5]அவர்கள் பராபரனைக்குறித்து வைராக்கியமாயிருக்கிறர்கள் என்று நானும் அவர்களுக்குச் சாட்சி சொல்லுகிறேன்.

௩ அந்த வைராக்கியம் அறிவுக்கு ஏற்றதல்ல; எப்படியென்றல், [6]பராபரனல் வருகிற நீதியை அவர்கள் அறியாமல் [7]தங்கள் சுய நீதியை நிலைநிறுத்தத் தேடுகிறபடியால், அவரால் வருகிற நீதிக்குக் கீழ்ப்படியாதிருக்கிறர்கள்.

௪ விசுவாசிக்கிற எவனுக்கும் நீதி உண்டாகும்படியாகக் [8]கிறிஸ்து நியாயப்பிரமாணத்தின் முடிவாயிருக்கிறரே.

௫ ¶ மேலும் மோசே நியாயப்பிரமாணத்தினல்வருகிற நீதியைக் குறித்து [9]இவைகளைச் செய்கிற மனிதன் இவைகளால் பிழைப்பான் என்று எழுதினர்.

௬ விசுவாசத்தினல் வருகிற நீதிப்பிரமாணமோ சொல்லுகிறதாவது: கிறிஸ்துவை இறங்கிவரப் பண்ணும்படிக்கு வானத்துக்கு ஏறிப்போபவன் யாவன்?

௭ கிறிஸ்துவை மரித்தோரிலிருந்து ஏறிவரப்பண்ணும்படிக்குப் பாதாளத்தில் இறங்கிப்போபவன் யாவன் என்று [10]உன் இருதயத்திலே நினையாதிருப்பாயாக என்பதும் அல்லாமல்,

௮ அது பின்னும் சொல்லுகிறதாவது: [11]இந்தச் சங்கதி உனக்குச் சமீபமாய் உன் வாயிலும் உன் இருதயத்திலும் இருக்கின்றது என்று சொல்லுகின்றது; அந்தச் சங்கதி நாங்கள் பிரசங்கிக்கிற விசுவாசத்தின் சங்கதிதான்.

௯ என்னவென்றல் நீதிமான்களாக்கப்படுவதற்கு இருதயத்தோடே விசுவாசிக்கவும், இரட்சிக்கப்படுவதற்கு [12]வாயினலே அறிக்கையிடவும் வேண்டுவதால்,

௰ நீ உன் வாயினலே கர்த்தராகிய இயேசுவை அறிக்கையிட்டு, பராபரன் அவரை மரித்தோரிலிருந்து எழும்பப்பண்ணினர் என்று உன் இருதயத்தோடே விசுவாசித்தால் இரட்சிக்கப்படுவாய்.

௰௧ அந்தப்படி [13]அவரை விசுவாசிக்கிறவன் எவனே, அவன் வெட்கப்படுவதில்லை என்று வேதமும் சொல்லுகின்றது.

௰௨ ¶ அன்றியும் [14]எல்லாருக்கும் கர்த்தரானவர் தம்மைத் தொழுதுகொள்ளுகிற யாவருக்காகவும் [15]ஐசுவரியமுள்ளவராய் இருக்கிறபடியால் [16]யூதருக்கும் கிரேக்கருக்கும் வித்தியாசமே இல்லை.

௰௩ ஆதலால் [17]கர்த்தருடைய நாமத்தைத் தொழுதுகொள்பவன் எவனே, [18]அவன் இரட்சிக்கப்படுவான்.

௰௪ ¶ அவரை விசுவாசியாதவர்கள் எப்படி அவரைத் தொழுதுகொள்ளுவார்கள்? அவரைக்குறித்துக் கேள்விப்படாதவர்கள் எப்படி அவரை விசுவாசிப்பார்கள்? மேலும் [19]பிரசங்கிக்கிறவன் இல்லாவிட்டால் எப்படிக் கேள்விப்படுவார்கள்?

கி. பி. ௫௰.

1 கலா. ௩. ௪.
2 சங். ௧௱௰௮. ௨௨. ஏசா. ௮. ௰௪: ௨௮. ௰௬. மத். ௨௧. ௪௨. ௧ பே. ௨, ௬, ௭, ௮.
3 உரோ. ௰. ௰௧. * அல்லது கலக்கப்படுவதில்லை.
4 லூக். ௨. ௩௪. ௧ கொரி. ௧. ௨௩.
5 அப். ௨௧. ௨௰: ௨௨. ௩. கலா. ௧. ௰௪: ௪. ௰௭
6 உரோ. ௧. ௰௭: ௩. ௨௧.
7 பிலி. ௩. ௯.
8 மத். ௫ ௰௭. கலா. ௩. ௨௪.
9 ௩ மோ. ௰௮. ௫. நெகே. ௯. ௨௯. எசே. ௨௦. ௰௧, ௰௩, ௨௧. கலா. ௩. ௰௨.
10 ௫ மோ. ௩௰. ௰௨, ௰௩.
11 ௫ மோ. ௩௰. ௰௪.
12 மத். ௰. ௩௨. லூக். ௰௨. ௮. அப். ௮. ௩௭.
13 ஏசா. ௨௮. ௰௬: ௪௯. ௨௩. எரே. ௰௭. ௭. உரோ. ௯. ௩௩.
14 அப். ௰. ௩௬. உரோ. ௩. ௨௨. ௧ தீமோ. ௨. ௫.
15 எபே. ௧. ௭: ௨. ௪, ௭.
16 அப். ௰௫. ௯. உரோ. ௩. ௨௨. கலா. ௩. ௨௮.
17 அப். ௯. ௰௪.
18 யோவே. ௨. ௩௨. அப். ௨. ௨௧.
19 தீத். ௧. ௩.

Digitized by Google

௰௫ மேலும், ஆ சமாதானத்தைக் கூறி நற்காரியங்களைச் சுவிசேஷமாய் அறிவிக்கிறவர்களுடைய [1]பாதங்கள் மிகவும் அழகானவைகள் என்று எழுதியிருக்கிறபடி சிலர் அனுப்பப்படாவிட்டால், எப்படிப் பிரசங்கம்பண்ணுவார்கள்?

௰௬ ஆனாலும் [2]இந்தச் சுவிசேஷத்திற்கு எல்லாரும் கீழ்ப்படியவில்லை; அதைக்குறித்து ஏசாயா சொன்னதாவது: [3]கர்த்தாவே, நாங்கள்* பிரசங்கம்பண்ணுகிறதை† யாவன் விசுவாசித்தான் என்றான்?

௰௭ ஆதலால் விசுவாசம் கேள்வியினாலே வரும், கேள்வி பராபரனுடைய வசனத்தினாலே வருகின்றது.

௰௮ இப்படியிருக்க நான் விசாரிக்கிறதென்னவென்றால், அவர்கள் கேள்விப்படவில்லையா? [4]அவைகளின் தொனி பூமி எங்கும் சென்றது; [5]அவைகளின் வசனங்கள் பூச்சக்கரக் கடைசிவரைக்கும் புறப்பட்டன என்பதின்படி, அவர்கள் மெய்யாய்க் கேள்விப்பட்டார்களே.

௰௯ பின்னும் நான் விசாரிக்கிறது என்னவெனில், இஸ்ரவேலர் அறியவில்லையோ? (அறியாமல் இருக்கமாட்டார்கள்; என்னத்தினாலென்றால்) முதலாவது மோசே சொன்னது: [6]எனக்குச் சனங்கள் அல்லாதவர்களைக்கொண்டு நான் உங்களுக்குப் பொறாமை உண்டாக்குவேன்; [7]புத்தியீனமுள்ள சனங்களாலே உங்களுக்குக் கோபமூட்டுவேன் என்றான்.

௨௰ அல்லாமலும் ஏசாயா தயிரியமாய்ச் சொன்னது: [8]என்னைத் தேடாதவர்களாலே கண்டு அறியப்பட்டேன்; என்னை விசாரித்துக் கேளாதவர்களுக்கு வெளியரங்கமானேன் என்றான்.

௨௰௧ இஸ்ரவேலரைக்குறித்துச் சொல்லியிருக்கிறதாவது: கீழ்ப்படியாதவர்களுமாய் விரோதம் பேசுகிறவர்களுமாய் இருக்கிற சனங்களிடத்திற்கு [9]முழுநாளும் என் கைகளை நீட்டினேன் என்பதே.

## ௰௧. அதிகாரம்.

௧. பராபரன் இஸ்ரவேலரெல்லாரையும் தள்ளவில்லையென்றும், ௭. சிலர் தெரிந்துகொள்ளப்பட்டு, மற்றவர்கள் கடினப்பட்டுப் போனார்களென்றும், ௰௬. அவர்கள் குணப்படுவார்களென்ற நம்பிக்கை உண்டென்றும், ௰௮. அவர்கள்மேல் அஞ்ஞானிகள் பெருமைபாராட்டக்கூடாதென்றும், ௨௬. யூதர்களும் ரட்சிப்புக்கு வந்து எட்டுவார்களென்றும், ௩௩. பராபரனுடைய செய்கைகள் அளவறுக்கக்கூடாதென்றும் காட்டியது.

இப்படியிருக்கப் [10]பராபரன் தம்முடைய சனங்களைத் தள்ளிவிட்டாரா என்று கேட்டால், அப்படி அவர் செய்யவே இல்லை.

௨ [11]நானும் ஆபிரகாமின் சந்ததியாயும், பென்யமீன் கோத்திரத்தானாயும் இருக்கிற இஸ்ரவேலனாயிருக்கிறேனே; [12]பராபரன் தாம் முன் அறிந்துகொண்ட தம்முடைய சனங்களைத் தள்ளவே இல்லை; எலியாவைக்குறித்து‡ வேதம் சொல்லுகிறதை அறியீர்களா?

௩ அவன் பராபரனைநோக்கி, கர்த்தாவே, [13]உம்முடைய தீர்க்கதரிசிகளை அவர்கள் கொலைசெய்து, உம்முடைய பீடங்களை இடித்துப் போட்டார்கள்.

௪ நான்மாத்திரம் மீதியாயிருக்கிறேன், என் பிராணனையும் வாங்கத் தேடுகிறார்கள் என்று இஸ்ரவேலரைக்குறித்து முறையிட்டபொழுது, அவனுக்கு உண்டான தேவ உத்தரவு என்னவென்றால்,

பாகாலுக்குமுன்பாக முழங்காற்படியிடாத [14]ஏழாயிரம் பேரை எனக்காக மீதியாய் வைத்தேன் என்பதே.

௫ அந்தப்படி இக்காலத்திலேயும் [15]கிருபையால் தெரிந்துகொள்ளப்பட்ட மீதி உண்டாயிருக்கின்றது.

௬ [16]அது கிருபையினால் உண்டாயிருக்கிறபடியால், அது கிரியைகளினாலே ஆகவில்லை; அப்படி அல்லவென்றால் கிருபையானது கிருபையாயிராது; அன்றியும் அது கிரியைகளினால் உண்டாயிருக்

இ. பி. ௬௰.

1 ஏசா. ௫௨. ௭. நாகூ. ௧. ௧௫.
2 உரோ. ௩. ௩. எபி. ௪. ௨.
3 ஏசா. ௫௩. ௧. யோவா. ௰௨. ௩௮.
* கிரேக்கு, எங்களைக்கேட்டு.
† அல்லது எங்கள் கூறுதலை.
4 சங். ௰௯. ௪. மத். ௨௪. ௰௪: ௨௮. ௰௯. மாற். ௰௬. ௰௫. கொலோ. ௧. ௬, ௨௩.
5 ௧ இரா. ௰௮. ௰. மத். ௪. ௮.
6 உபா. ௩௨. ௨௧. உரோ. ௰௧. ௰௧.
7 தீத். ௩. ௩.
8 ஏசா. ௬௫. ௧. உரோ. ௯. ௩௰.
9 ஏசா. ௬௫. ௨.
10 ௧ சாமு. ௰௨. ௨௨. எரே. ௩௧. ௩௭.
11 ௨ கொரி. ௰௧. ௨௨. பிலி. ௩. ௫.
12 உரோ. ௮. ௨௯.
‡ கிரேக்கு, எலியாவின் சரித்திரத்தில்.
13 ௧ இரா. ௰௯. ௰, ௰௪.
14 ௧ இரா. ௰௯. ௰௮.
15 உரோ. ௯. ௨௭.
16 உரோ. ௪. ௪, ௫. கலா. ௫. ௪. உபா. ௯. ௪, ௫.



Digitized by Google

தால், அது கிருபையினல் இராது; அல்லவென்ருல், கிரியையானது கிரியையல்ல.

எ ¶ இதிஞலே என்ன தோன்றுகிறதெனில், [1]இஸ்ரவேலர் தேடுகிறதை அடையாமல் இருக்கிருர்கள்; தெரிந்துகொள்ளப்பட்டவர்களோ அதை அடைந்தார்கள்; மற்றவர்கள் இன்றைத்தினம்வரைக்கும் கடினமான* இருதயமுள்ளவர்களாய் இருக்கிருர்கள்.

அ [2]பராபரன் கனநித்திரையுள்ள† ஆவியையும், [3]காணுதிருக்கிற கண்களையும், கேளாதிருக்கிற காதுகளையும் அவர்களுக்குக் கொடுத்தாரென்று எழுதியிருக்கிறபிரகாரமாக அப்படி இருக்கிருர்கள்.

கூ தாவீதும் சொல்லுகிறதாவது: [4]அவர்களுடைய உணவிடம் அவர்களுக்குக் கண்ணியாயும் வலையாயும் விழுதற்கான கல்லாயும் பதில்பெறுதற்கு ஏதுவாயும் இருக்கக்கடவது.

ய [5]காணுதபடிக்கு அவர்களுடைய கண்கள் அந்தகாரப்படக்கடவது; அவர்களுடைய முதுகு எப்பொழுதும் குனியும்படி செய்யுமென்று சொல்லியிருக்கிருன்.

யக ¶ இப்படியிருக்க அழிந்துபோகும்படிக்கா இடறிஞர்கள் என்று கேட்டால், அப்படியல்ல அவர்களுக்குள்ளே எரிச்சலை எழுப்புகிறதற்காக [6]அவர்கள் விழுந்ததிஞலே புறத்தேசத்தாருக்கு இரட்சிப்புக் கிடைத்தது.

யஉ அவர்கள் விழுந்தது உலகத்திற்கு ஐசுவரியமும், அவர்கள் குறைவானது‡ புறத்தேசத்தாருக்கு ஐசுவரியமுமானதாயிருக்க அவர்கள் நிறைவாஞல் மிகவும் அதிகமாய் அப்படியாகும் அல்லவோ?

யங [7]புறத்தேசத்தாருக்காக நான் அப்போஸ்தலஞயிருக்கிறதிஞலே புறத்தேசத்தாராகிய உங்களுடனே பேசுகிறேன்.

யச அவர்களைத் தள்ளிவிடுதல் உலகத்தை ஒப்புரவாக்குதலாயிருக்க, அவர்களை அங்கிகரித்துக்கொள்ளுதல் மரித்தோரிலிருந்து சீவன் உண்டானதுபோல இருக்கும் அல்லவோ?

யரு ஆதலால் நான் எப்படியும் [8]என் இனத்தாரை எவி, அவர்களில் சிலரை இரட்சிக்கவேண்டுமென்று என் ஊழியத்தை மேன்மைபாராட்டுகிறேன்.

யசா ¶ [9]மேலும் முதல் விளைச்சல் பரிசுத்தமாயிருக்க, அம்பாரமும் அப்படியே இருக்கின்றது; வேரானது பரிசுத்தமாயிருக்க, கிளைகளும் அப்படியே இருக்கின்றன.

யஎ [10]சில கிளைகள் ஒடித்துத் தள்ளப்பட்டதுமல்லாமல் காட்டு ஒலிவமரமாகிய [11]நீ அவைகளுடைய இடத்திலே§ ஒட்டவைக்கப்பட்டு ஒலிவமரத்தின் வேருக்கும் சாரத்திற்கும் உடன்பங்காளியாயிருக்க,

யஅ [12]நீ அந்தக் கிளைகளுக்கு எதிராய்ப் பெருமைபாராட்டாதிருப்பாயாக; பாராட்டுவாயாஞல் நீ வேரைச் சுமக்காமல், வேரே உன்னைச் சுமக்கிறதென்று நினைத்துக்கொள்.

யகூ நான் ஒட்டவைக்கப்படும்படிக்கு அந்தக் கிளைகள் ஒடித்துப்போடப்பட்டன என்று நீ சொல்லுகிருய்.

உய நல்லது அவிசுவாசத்திஞலே அவைகள் ஒடித்துத் தள்ளப்பட்டன; நீ விசுவாசத்திஞலே நிற்கிருய்; [13]இறுமாப்பைக் காண்பியாதிருப்பாயாக.

உக சுபாவத்தின்படி கிளைகளானவைகளைப் பராபரன் தப்பவிடாதிருக்க, உன்னையும் தள்ளாதபடிக்குப் [14]பயந்திருப்பாயாக.

உஉ ¶ மேலும் பராபரனுடைய தயவையும் கண்டிப்பையும் பார்த்துக்கொள்; விழுந்தவர்களிடத்திலே கண்டிப்பையும் உன்னிடத்திலே தயவையுமே பார்; [15]அந்தத் தயவிலே நிலைத்திருப்பாயாக; இல்லாவிட்டால் [16]நீயும் வெட்டுண்டுபோவாய்.

கி. பி. சுய.

1 உரோ. க. கக: ம. க.
* அல்லது குருடான; உகொரி. ௩. மச.
2 எசா. உக. ம.
† அல்லது நிலேசமுள்ள.
3 ௵மோ. உக. ச. எசா. க. க. எரே. ௫. உக. எசே. யஉ. உ. மத். யக. யச. யோவா. யஉ. சய. அப். உஅ. உக, உஎ.
4 சங். கக. உஉ.
5 சங். கக. உக.
6 அப். யக. சக: யஅ. ௫: உஉ. யஅ, உக: உஅ. உச, உஅ. உரோ. ய. யக.
‡ அல்லது அழிவானது.
7 அப். க. யரு: யக. உ: உஉ. உக. உரோ. யரு. யக. கலா. க. யக: உ. உ, எ, அ, கூ. எபே. ங. அ. க தீமோ. உ எ. உ தீமோ. க. யக.
8 க கொரி. எ. யக: கூ. உஉ. க தீமோ. ச. யக. யாக். ரு. உய.
9 ங மோ. உங. ய. சமோ. ய ரு. ய அ, ரு, உய, உங.
10 எரே. யக. யக.
11 அப். உ. கங. எபே. உ. யஉ, யங.
§ அல்லது அவைகளுக்குள்.
12 க கொரி. ய. யஉ.
13 உரோ. யஉ. யக.
14 வாக். உஅ. யச. எசா. கக. உ. பிலி. உ. யஉ.
15 க கொரி. யரு. உ. எபி. ங. க, யச.
16 யோவா. யரு. உ.

Digitized by Google

௨௩ அன்றியும் [1]அவர்களும் அவிசுவாசத்திலே நிலைத்திராவிட்டால் ஒட்டவைக்கப்படுவார்கள்; அவர்களை மறுபடியும் ஒட்டவைக்கிறதற்குப் பராபரன் வல்லவராயிருக்கிறாரே.

௨௪ அன்றியும் நீ சுபாவத்தின்படி காட்டு ஒலீவாகிய மரத்திலிருந்து வெட்டப்பட்டு உன் சுபாவத்திற்கு விரோதமாய் நல்ல ஒலீவமரத்திலே ஒட்டவைக்கப்பட்டிருக்க, மிகவும் அதிகமாய்ச் சுபாவக்கிளைகளாகிய அவர்கள் தங்கள் சுய ஒலீவமரத்திலே ஒட்டவைக்கப்படுவார்கள் அல்லவா?

௨௫ ¶ ஆதலால் சகோதரரே, [2]நீங்கள் உங்கள் சுயபுத்தியிலே சாயாதபடிக்கு, ஒரு இரகசியத்தை நீங்கள் அறியவேண்டுமென்று இருக்கிறேன்; என்னவெனில், [3]புறத்தேசத்தார் நிறைவாய்ப் பிரவேசிக்குமளவும், இஸ்ரவேலரில் [4]ஒரு பங்குக்குக் கடினமான* மனது உண்டாயிருக்கும்.

௨௬ [5]பின்பு மீட்பர் சீயோனுக்கு வந்து, அக்கிரமத்தை இயாக்கோபிலிருந்து நீக்குவார் என்றும்,

௨௭ நான் அவர்களுடைய பாவங்களை நீக்கும்பொழுது [6]இதுவே நான் அவர்களுடனே பண்ணும் உடம்படிக்கையென்றும் எழுதியிருக்கிறபடியே, இஸ்ரவேலர் எல்லாரும் இரட்சிக்கப்படுவார்கள்.

௨௮ சுவிசேஷத்தைக்குறித்து அவர்கள் உங்கள்நிமித்தம் பகைஞராயிருக்கிறார்கள்.

௨௯ தெரிந்துகொள்ளுதலைக்குறித்துப் பராபரன் கிருபைகொடுத்தலும் அழைத்தலும் [7]மாறாதவைகளானபடியால், அவர்கள் பிதாக்களின்நிமித்தம் [8]அன்புகூரப்பட்டவர்களாய் இருக்கிறார்கள்.

௩௰ [9]ஆதலால் நீங்கள் முற்காலத்திலே பராபரனுக்குக் கீழ்ப்படியாதிருந்து† இப்பொழுது அவர்களுடைய அவிசுவாசத்தினாலே இரக்கம்பெற்றிருக்கிறதுபோல, அவர்களும் இப்பொழுது கீழ்ப்படியாமலிருந்து,‡ (பின்பு) உங்களுக்குண்டான இரக்கத்தினாலே(ஏவப்பட்டு) இரக்கம்பெறுவார்கள்.

௩௧ எல்லார்மேலும் இரக்கமாயிருக்கத்தக்கதாகப் [10]பராபரன் எல்லாரையும் அவிசுவாசத்திற்குள்ளே அடைத்துப்போட்டபடியால்§ அப்படியேயாம்.

௩௨ ¶ ஆ பராபரனுடைய ஞானம் அறிவு என்பவைகளின் சம்பூரணம் மிகுந்த ஆழமுள்ளதாயிருக்கின்றது.

௩௩ [11]அவருடைய நியாயத்தீர்ப்புகள் அளவறுக்கப்படாதவைகள்; அவருடைய [12]நெறிகள் ஆராய்ந்துபார்க்கப்படாதவைகளாய் இருக்கின்றன; [13]கர்த்தருடைய சிந்தையை அறிந்தவன் எவன்?

௩௪ [14]அல்லது அவருக்கு உசாவுதுணையாய் இருந்தவன் எவன்?

௩௫ [15]அல்லது தனக்குப் பதில் கொடுக்கும்படிக்கு அவருக்கு முந்தி ஒன்றைக் கொடுத்தவன் எவன்?

௩௬ [16]சகலமும் அவராலும் அவர் மூலமாயும் அவருக்காகவும் இருக்கின்றன, [17]அவருக்கே என்றென்றைக்கும் புகழ்ச்சி உண்டாகக்கடவது.—ஆமன்.

## ௰௨. அதிகாரம்.

க. பராபரனுடைய இரக்கங்கள். ௨. எனும் பெருமைபாராட்டாமல், தன் தன் நிலைமையை அறிந்து நடக்கவும், ௬. அவனைப் பிரியப்படுத்தும்படி நம்மை ஏவவும், ௯. அன்புமுதலிய நற்குணங்கள் உள்ளவர்களாயிருக்கவும், ௰௯. குரோதத்தை நீக்கவும் வேண்டுமென்பது.

அப்படியிருக்கச் சகோதரரே, [18]நீங்கள் புத்தியுள்ள ஆராதனை செய்ய, [19]உங்கள் சரீரங்களைச் சீவனுமாய், பரிசுத்தமுமாய், பராபரனுக்குப் பிரியமுமாயிருக்கிற [20]பலியாக நிறுத்தவேண்டும் என்று பராபரனுடைய இரக்கங்களின் நிமித்தம் [21]உங்களுக்குப் புத்தி சொல்லுகிறேன்.

௨ மேலும் [22]நீங்கள் இவ்வுலகத்

இ. பி. ௬௰.

1 உ கொரி. ௩. ௰௧.
2 உரோ. ௰௨. ௰௬.
3 லூக். ௨௧. ௨௪. வெளி. ௭. ௯.
4 ௭. ௯௪. உ கொரி. ௩. ௰௪.
* அல்லது குருடான.
5 ஏசா. ௫௯. ௨௰. சங். ௰௪. ௭.
6 எசா. ௨௭. ௯. எரே. ௩௧. ௩௩. எபி. அ. அ: ௰. ௰௬.
7 சமோ. ௨௩. ௰௯.
8 இ மோ. ௭. அ: ௯. இ: ௰. ௰௫.
9 எபே. ௨. ௨. கொலோ. ௩. ௭.
† அல்லது பராபரனை விசுவாசியாதிருந்து.
‡ அல்லது விசுவாசியாமல்.
10 உரோ. ௩. ௯. கலா. ௩. ௨௨.
§ அல்லது அடக்கி.
11 சங். ௩௬. ௬.
12 யோபு. ௰௧. ௭. சங். ௯௨. ௫.
13 யோபு. ௰௫. அ. எசா. ௪௰. ௰௩. எரே. ௨௩. ௰அ. ௧ கொரி. ௨. ௰௬.
14 யோபு. ௩௬. ௨௨.
15 யோபு. ௪௫. ௭: ௪௩. ௰௧.
16 ௧ கொரி. அ. ௯. கொலோ. ௧. ௰௬.
17 கலா. ௧. ௫. ௧ தீமோ. ௧. ௰௭. ௨ தீமோ. ௪. ௰அ. எபி. ௰௩. ௨௧. ௧ பே. ௫. ௰௧. ௨ பே ௩. ௰அ. யூதா. ௨௫. வெளி. ௧. ௬.
18 ௧ பே. ௨. ௫.
19 சங். ௫௰. ௰௩, ௰௭. உரோ. ௬. ௰௩, ௰௬, ௰௯. ௧ கொரி. ௬. ௰௩, ௨௰.
20 எபி. ௰. ௨௰.
21 உ கொரி. ௰. ௧.
22 ௧ பே. ௧. ௰௪. ௧ யோ. ௨. ௰௫.

Digitized by Google

திற்கு ஒப்பாய் நடவாமல், [1]பராபரனுடைய நன்மையும் பிரியமும் நிறைவுமான சித்தம் இன்னதென்று நீங்கள் பகுத்து அறியத்தக்கதாக, [2]உங்கள் மனதைப் புதிதாக்குதலினாலே மறுரூபமாய் நடந்துகொள்ளுங்கள்.

௩ ¶ அல்லாமலும் [3]எனக்குக் கொடுத்திருக்கிற கிருபையினாலே நான் இன்னும் சொல்லுகிறதாவது: உங்களில் எவனானாலும் தன்னைக்குறித்து [4]நினைக்கவேண்டியதற்கு மேலாக நினையாமல், [5]அவனவனுக்குப் பராபரன் பங்கிட்ட விசுவாசம் எவ்வளவோ, அவ்வளவின்படி புத்தியாய்*நடக்கத்தக்கதாகத் (தன்னைக்குறித்து நினைக்கவேண்டும்).

௪ அது எப்படியெனில் [6]ஒரே சரீரத்திலே நாம் அநேக அவயவங்களை உடையவர்களாயிருக்க, அவயவங்கள் யாவும் ஒரே தொழில் இல்லாதவைகளாய் இருக்கிறது போல,

௫ [7]அநேகராகிய நாமும் கிறிஸ்துவுக்குள்ளே ஒரே சரீரமாயிருக்க, ஒருவருக்கொருவர் அவயவங்களாய்,

௬ [8]நமக்குக் கொடுக்கப்பட்ட கிருபையின்படியே [9]பலவித வரங்கள் உள்ளவர்களாயிருக்கிறோம்; [10]அந்தப்படி தீர்க்கதரிசனம் சொல்லுகிற வரத்தை உடையவன் விசுவாச அளவுக்கு ஏற்றதாக அப்படிச் செய்யக்கடவன்.

௭ உதவிசெய்கிற வரத்தை உடையவன் உதவிசெய்கிறதிலே சாக்கிரதையாய்இருக்கக்கடவன்; [11]போதிக்கிறவன் போதிக்கிறதிலே சாக்கிரதையாய் இருக்கக்கடவன்.

கி. பி. ௬௰.

1 எபே. ௫. ௰, ௰௭. ௧ தெச. ௪. ௩.
2 எபே. ௧. ௰௮: ௪. ௨௩. கொலோ. ௧. ௨௧, ௨௨: ௩. ௧.
3 உரோ. ௧. ௫: ௰௫. ௰௫. ௧ கொரி. ௩. ௰: ௰௫. ௰. கலா. ௨. ௯. எபே. ௩. ௨, ௭, ௮.
4 வாக். ௨௫. ௨௭. பிர. ௭. ௰௬. உரோ. ௰௧. ௨௰.
5 ௧ கொரி. ௰௨. ௭, ௰௧. எபே. ௪. ௭.
* ஒரேக்கு, புத்திக்கு.
6 ௧ கொரி. ௰௨. ௰௨. எபே. ௪. ௰௬.
7 ௧ கொரி. ௰. ௰௭: ௰௨. ௨௰, ௨௭. எபே. ௧. ௨௩: ௪. ௨௫.
8 ௧. ௩௪.
9 ௧ கொரி. ௰௨. ௪. ௧ பே. ௪. ௰, ௰௧.
10 அப். ௰௧. ௨௭. ௧ கொரி. ௰௨. ௰, ௨௮: ௰௩. ௨: ௰௪. ௧, ௩, ௨௪, ௩௧.
11 அப். ௰௩. ௧. கலா. ௬. ௬. எபே. ௪. ௰௧. ௧ தீமோ. ௫. ௰௭.
12 அப். ௰௫. ௩௨. ௧ கொரி. ௰௪. ௩.
13 மத். ௬. ௧, ௨, ௩.
† அல்லது பகிர்ந்துகொடுக்க.
‡ அல்லது தாராளமாய்;
௨ கொரி. ௮. ௨.
14 அப். ௨௰. ௨௮. ௧ தீமோ. ௫. ௰௭. எபி. ௰௩. ௭, ௨௪. ௧ பே. ௫. ௨.
15 ௨ கொரி. ௯. ௭.

௮ [12]புத்திசொல்லுகிறவன் புத்திசொல்லுகிறதிலே சாக்கிரதையாய் இருக்கக்கடவன்; [13]தருமங்களைக் கொடுக்க† வேண்டுபவன் கபடம் இல்லாமையாய்‡ அப்படிச் செய்யக்கடவன். [14]முதலாளியானவன் சாக்கிரதையுடனே இருக்கக்கடவன்; [15]இரக்கம்செய்கிறவன் உசசாகத்துடனே அப்படிச் செய்யக்கடவன்.

௯ ¶ [16]உங்கள் அன்பு மாயமற்றதாய் இருப்பதாக; [17]பொல்லாங்கானதை அருவருத்து, நன்மையில் ஒட்டிக்கொண்டிருப்பீர்களாக.

௰ சகோதரசிநேகத்திலே§ ஒருவருக்கொருவர் [18]மிகவும் பட்சமாயிருங்கள்; [19]கனம்பண்ணுகிறதில் ஒருவருக்கொருவர் முந்திக்கொள்ளுங்கள்.

௰௧ அலுவலில் நீங்கள் அசதியாயிருக்கக்கூடாது; உங்கள் ஆவியிலே தீபவளர்ச்சியைப்போல இருந்து, கர்த்தருக்கு ஊழியம்செய்யுங்கள்.

௰௨ [20]நம்பிக்கையிலே சந்தோஷமாய் இருப்பீர்களாக; [21]உபத்திரவகாலத்திலே பொறுமையாயிருங்கள்.

௰௩ [22]செபத்தில்உறுதியாய்த் தரித்திருங்கள்; [23]வருத்தப்படுகிற பரிசுத்தவான்களுக்கு உதவிசெய்யுங்கள்; [24]அந்நியருக்கு உபசாரம்செய்கிறதை நாடுங்கள்.

௰௪ [25]உங்களைத் துன்பப்படுத்துகிறவர்களை ஆசீர்வதியுங்கள்; ஆசீர்வாதமே அன்றிச் சாபமிடாதிருப்பீர்களாக.

௰௫ [26]சந்தோஷப்படுகிறவர்களுடனே சந்தோஷப்படுங்கள்; அழுகிறவர்களுடனே அழுங்கள்.

௰௬ [27]ஒருவருக்கொருவர் ஐக்க

16 ௧ தீமோ. ௧. ௫. ௧ பே. ௧. ௨௨.—17 சங். ௩௪. ௰௪: ௩௬. ௪: ௯௭. ௰. ஆமோ. ௫. ௰௫.—§ அல்லது சகோதர சிநேகத்தோடே.—18 எபி. ௰௩. ௧. ௧ பே. ௧. ௨௨: ௨. ௰௭: ௩. ௮. ௨ பே. ௧. ௭.—19 பிலி. ௨. ௩. ௧ பே. ௫. ௫.—20 லூக். ௰. ௨௰. உரோ. ௫. ௨: ௰௫. ௰௩. பிலி. ௩. ௧: ௪. ௪. ௧ தெச. ௫. ௰௬. எபி. ௩. ௬. ௧ பே. ௪. ௰௩.—21 லூக். ௨௧. ௰௯. ௧ தீமோ. ௬. ௰௧. எபி. ௰. ௩௬: ௰௨. ௧. யாக். ௧. ௪: ௫. ௭. ௧ பே. ௨. ௰௯, ௨௰.—22 லூக். ௰௮. ௧. அப். ௨. ௪௨: ௰௨. ௫. எபே. ௬. ௰௮. கொலோ. ௪. ௨. ௧ தெச. ௫. ௰௭.—23 ௧ கொரி. ௰௬. ௧. ௨ கொரி. ௯. ௧, ௰௨. எபி. ௬. ௰: ௰௩. ௰௬. ௧ யோ. ௩. ௰௭.—24 ௧ தீமோ. ௩. ௨. தீத். ௧. ௮. எபி. ௰௩. ௨. ௧ பே. ௪. ௯.—25 மத். ௫. ௪௪. லூக். ௬. ௨௮: ௨௩. ௩௪. அப். ௭. ௬௰. ௧ கொரி. ௪. ௰௨. ௧ பே. ௨. ௨௩: ௩. ௯.—26 ௧ கொரி. ௰௨. ௨௬.—27 உரோ. ௰௫. ௫. ௧ கொரி. ௧. ௰. பிலி. ௨. ௨: ௩. ௰௬. ௧ பே. ௩. ௮.

Digitized by Google

ணான சிந்தையுள்ளவர்களாய் இருப்பீர்களாக; [1]மேன்மையானவைகளைச் சிந்தியாமல், தாழ்மையானவர்களுக்கு இணங்குங்கள்.*

௰௭ ¶ [2]உங்கள் சுயபுத்தியில் சாயாதிருப்பீர்களாக; [3]யாவனுக்கும் தீமைக்குத் தீமைசெய்யாதிருங்கள்; [4]எந்த மனிதருக்கும்முன்பாக யோக்கியமானவைகளை நடப்பியுங்கள்.

௰௮ [5]எல்லா மனிதரோடும் சமாதானமாய் இருக்கக்கூடுமானால், உங்களால் ஆனமட்டும் அப்படியே செய்யுங்கள்.

௰௯ பிரியமானவர்களே, [6]பழிவாங்குதல் எனக்கு ஏற்றது, நானே பதில் செய்வேனென்று கர்த்தர் சொல்லுகிறார் என்று எழுதியிருக்கிறபடியால், [7]நீங்கள்தாமே பழிவாங்காமல் (அவருடைய) கோபாக்கினைக்கு இடங்கொடுங்கள்.

௨௰ ஆதலால் [8]உன் சத்துருவுக்குப் பசி உண்டாயிருக்கும்பொழுது அவனுக்குப் போசனம் கொடு; அவனுக்குத் தாகம் உண்டாய் இருக்கும்பொழுது அவன் தாகத்தைத் தீர்ப்பாயாக; நீ இப்படிச்செய்தால் அவனுடைய தலையின்மேல் நெருப்புள்ள கரிகளைக் குவிப்பாய்.

௨௧ தீமையினாலே நீ செயிக்கப்படாமல், தீமையை நன்மையினாலே செயிப்பாயாக.

## ௰௩. அதிகாரம்.

க. துரைத்தனத்தாருக்குச் செலுத்தவேண்டிய கீழ்ப்படிதல் முதலான கடமைகளைக் குறித்தது. அ. அன்பு நியாயப்பிரமாணத்தை நிறைவேற்றுமென்றும், ௰௧. பெருந்தீனி குடிமுதலிய பாவச்செய்கைகள் சுவிசேஷத்துக்கு ஒவ்வாதென்றும் காட்டியது.

[9]அதிகாரம் உள்ளவர்கள் பராபரனாலே அன்றி இருக்கமாட்டார்கள்; [10]ஆதலால் எந்த மனிதனும் அதிகாரம் உடையவர்களுக்குக் கீழ்ப்படியக்கடவன்; உண்டாயிருக்கிற அதிகாரிகள் பராபரனாலே நியமிக்கப்பட்டிருக்கிறார்கள்.†

௨ [11]ஆனதால் அதிகாரம் உள்ளவர்களுக்கு எதிர்த்து நிற்கிறவன் பராபரனுடைய நியமத்துக்கு எதிர்த்துநிற்கிறான்; அப்படிஎதிர்த்து நிற்கிறவர்கள் தங்களுக்குத்தாமே ஆக்கினை வரப்பண்ணுகிறார்கள்.

௩ மேலும் துரைகளானவர்கள் நற்கிரியைகளுக்கு அல்ல துர்க்கிரியைகளுக்குப் பயங்கொடுக்கிறவர்களாய் இருக்கிறார்கள்; ஆகையால் நீ அதிகாரத்துக்காகப் பயமில்லாதிருக்கவேண்டும் என்றிருந்தால், [12]நன்மை செய்வாயாக, அதினால் உனக்குப் புகழ்ச்சி உண்டாம்.

௪ உனக்கு நன்மை உண்டாகும் பொருட்டு அவன் பராபரனுடைய ஊழியக்காரனாயிருக்கிறான்; நீ தீமைசெய்தால் பயம் கொள்வாயாக; கட்கத்தை அவன் வீணாய்ப் பிடிக்கவில்லை; பொல்லாங்கைச் செய்கிறவன்மேல் கோபாக்கினை வரப்பண்ணும்படி அவன் நீதியைச் செலுத்துகிற தேவ ஊழியக்காரனும் இருக்கிறானே.

௫ ஆகையால் [13]நீங்கள் (அவர்களுக்குக்) கீழ்ப்படியவேண்டியதாயிருக்கின்றது; கோபாக்கினையின் நிமித்தமாத்திரம் அல்ல, [14]மனச்சாட்சியின் நிமித்தமும் அப்படிஇருக்கவேண்டும்.

௬ அதினாலே நீங்கள் (அவர்களுக்கு) வரிப்பணத்தையும் கொடுக்கிறீர்களே; அவர்கள் தங்கள் உத்தியோகத்தை இடைவிடாமல் பற்றிக்கொள்ளுகிற தேவ ஊழியக்காரர்களாய் இருக்கிறார்களே.

௭ ஆனபடியினாலே [15]எவர்களுக்கும் கடமைகளைச் செலுத்துவீர்களாக; வரியைச் செலுத்தவேண்டியது எவனுக்கோ, அவனுக்கு வரியைச் செலுத்துங்கள்; தீர்வையைச் செலுத்தவேண்டியது எவனுக்கோ, அவனுக்குத் தீர்வையைச் செலுத்துங்கள்; பயப்பட

கி. பி. ௬௰.

1 சங். ௧௩௧. ௧, ௨. எரே. ௪௫. ௫.
* அல்லது தாழ்மையானவைகளில் மனரம்மியமாயிருங்கள்.
2 வாக். ௩. ௭: ௨௬. ௰௨, ௭௪. ௫. ௨௬. உரோ. ௰௧. ௨௫.
3 வாக். ௨௰. ௨௨, மத். ௫. ௩௯, ௧ தெச. ௫. ௰௫. ௧ பே. ௩. ௯.
4 உரோ. ௰௪. ௰௬. ௨ கொரி. ௮. ௨௧.
5 மாற். ௯. ௫௰. உரோ. ௰௪. ௰௯. எபி. ௰௨. ௰௪.
6 ௫ மோ. ௩௨. ௩௫. எபி. ௰. ௩௰.
7 ௩ மோ. ௰௯. ௰௮. வாக். ௨௪. ௨௯. ௰௭. ௨௪.
8 ௨ மோ. ௨௩. ௪, ௫. வாக். ௨௫. ௨௧, ௨௨. மத். ௫. ௪௪.
9 வாக். அ. ௰௫, ௰௬. தானி. ௨. ௨௧: ௪. ௩௨. யோவா. ௰௯. ௰௧.
10 தீத். ௩. ௧. ௧ பே. ௨. ௰௩.
† அல்லது கட்டளையிடப்பட்டிருக்கிறார்கள்.
11 தீத். ௩. ௧.
12 ௧ பே. ௨. ௰௪: ௩. ௰௩.
13 பிர. அ. ௨.
14 ௧ பே. ௨. ௰௯.
15 மத். ௨௨. ௨௧. மாற். ௰௨. ௰௭. லூக். ௨௰. ௨௫.

Digitized by Google

வேண்டியது எவனுக்கோ, அவனுக்குப் பயப்படுங்கள், கனத்தைச் செலுத்தவேண்டியது எவனுக்கோ, அவனுக்குக் கனத்தைச் செலுத்துங்கள்.

அ ¶ ஒருவரில் ஒருவர் அன்பாயிருக்கிறதே அன்றி, மற்றொன்றும் ஒருவனுக்கும் கடன்படாதிருப்பீர்களாக; [1]மற்றவனில் அன்புகூருகிறவன் நியாயப்பிரமாணத்தை நிறைவேற்றுகிறானே.

௯ எப்படியென்றால் [2]விபசாரம் பண்ணாதிருப்பாயாக, கொலைசெய்யாதிருப்பாயாக, களவுசெய்யாதிருப்பாயாக, பொய்ச்சாட்சிசொல்லாதிருப்பாயாக, இச்சியாதிருப்பாயாக என்று இந்தக் கற்பனைகளும் வேறு எந்தக் கற்பனையும் [3]உன்மேல் அன்புகூருகிறதுபோல, பிறன்மேலும் அன்புகூர்வாயாக என்கிற ஒரே பிரமாணத்திலே தொகையாய் அடங்கியிருக்கின்றன.

௰ அன்பானது பிறனுக்குப் பொல்லாங்கைச் செய்யாது; ஆதலால் [4]அன்பு நியாயப்பிரமாணத்தை நிறைவேற்றுகிறதாய்இருக்கின்றது.

௰௧ ¶ மேலும் [5]நித்திரையை விட்டு எழுந்திருக்கத்தக்க வேளையாயிற்று என்று நாம் காலத்தை அறிந்திருக்கிறபடியால், இப்படி எச்சரிக்கிறேன்; அன்றியும் நாம் விசுவாசிகளானபொழுது இரட்சிப்பு சமீபமாயிருந்ததிலும் இப்பொழுது அது நமக்கு அதிக சமீபமாயிருக்கின்றது.

௰௨ இரவு சென்றுபோயிற்று; பகல் சமீபமாயிற்று. [6]ஆனபடியினாலே அந்தகாரத்தின் கிரியைகளை நாம் தள்ளிப்போட்டு, [7]ஒளியின் ஆயுதங்களைத் தரித்துக்கொள்ளக்கடவோம்.

௰௩ [8]பெருண்டியாவது, வெறிகொள்ளுதலையாவது, [9]வேசித்தனத்தையாவது, காமவிகாரத்தையாவது, [10]சண்டையையாவது, பொறாமையையாவது, நடப்பியாமல் பகலிலே நடக்கிறவர்கள் போல [11]யோக்கியமாய்* நடக்கக்கடவோம்.

௰௪ [12]துர்இச்சைகளுக்கு இடமாய் உங்கள் தேகத்தைப் போஷியாமல், [13]கர்த்தராகிய இயேசுக்கிறிஸ்துவைத் தரித்துக்கொள்வீர்களாக.

## ௰௪. அதிகாரம்.

௧. சொற்பமானவைகளில் ஒருவரை ஒருவர் குற்றஞ்சாற்றவும், அசட்டைபண்ணவும் கூடாதென்றும். ௰௩. அவைகளினால் ஒருவருக்கொருவர் இடறல் உண்டாக்காதிருக்கவேண்டுமென்றும், இதி. விஷயம் காட்டியது.

[14]விசுவாசத்தில் பலஈனமுள்ளவனுடைய நினைவுகளை நீங்கள் குற்றமாய் எண்ணாமல், †அவனைச் சேர்த்துக்கொள்ளுங்கள்.

௨ [15]ஒருவன் எல்லாப் பதார்த்தங்களையும் புசிக்கலாம் என்று நம்புகிறான்; பலஈனமுள்ள மற்றொருவன் மரக்கறிகளைமாத்திரம் புசிக்கிறான்.

௩ புசிக்கிறவன் புசியாதிருக்கிறவனை அசட்டைபண்ணாதிருப்பானாக; [16]புசியாமலிருக்கிறவனும் புசிக்கிறவனைக் குற்றமுள்ளவன் என்று நினையாதிருப்பானாக; பராபரன் அவனைச் சேர்த்துக்கொண்டாரே.

௪ [17]மற்றொருவனுடைய வேலைக்காரனைக் குற்றமுள்ளவன் என்று தீர்க்கிற நீ யாவன்? அவன் நின்றாலும் விழுந்தாலும் அவனுடைய சொந்த எசமானே அவனை விசாரிப்பான்; மேலும் பராபரன் அவனை நிலைநிறுத்த வல்லவரானபடியால் அவன் நிலைநிறுத்தப்படுவான்.

௫ ¶ அன்றியும் [18]ஒருவன் ஒரு நாளை மற்ற நாளிலும் விசேஷமாக எண்ணுகிறான்; வேறொருவன் எல்லா நாள்களையும் சரியாய் எண்ணுகிறான்; (அதைக்குறித்து) அவனவன் தன் மனதிலே முழு நிச்சயத்தை‡ உடையவனாய் இருக்கக்கடவன்.

---

௯. பி. ௯ம்.

1 ௰. லச. ௧௮. ௨ ௰ச. கொலோ. ௩. ௰௪. ௧ தீமோ. ௧. ௫. யாக். ௨. ௮.
2 ௨. மோ. ௨௰. ௰௩. ௨. ௫ மோ. ௫. ௰௭. ௰௮. ௰௯. ௰௪. ௰௮.
3 ௩ மோ. ௰௯. ௰௮. மத். ௨௨. ௩௯. மாற். ௰௨. ௩௧. கலா. ௫. ௰௪. யாக். ௨. ௮.
4 மத். ௨௨. ௪௰.
5 ௧ கொரி. ௰௫. ௩௪. எபே. ௫. ௰௪. ௧ தெச. ௫. ௫, ௬.
6 எபே. ௫. ௰௧. கொலோ. ௩. ௮.
7 எபே. ௬. ௰௩. ௧ தெச. ௫. ௮.
8 லூக். ௨௧. ௩௪. ௧ பே. ௪. ௩.
9 ௧ கொரி. ௬. ௯. எபே. ௫. ௫.
10 யாக். ௩. ௰௪.
11 பிலி. ௪. ௮. ௧ தெச. ௪. ௰௨. ௧ பே. ௨. ௰௨.
* அல்லது சீராய்.
12 கலா. ௫. ௰௬. ௧ பே. ௨. ௰௧.
13 கலா. ௩. ௨௭. எபே. ௪. ௨௪. கொலோ. ௩. ௩.
14 உரோ. ௰௫. ௧, ௭. ௧ கொரி. ௮. ௯, ௰: ௯. ௨௨.
† அல்லது சம்சயமுள்ள தர்க்கமில்லாமல்.
15 ௰ச. ௰௪. ௧ கொரி. ௰. ௨௫. ௧ தீமோ. ௪. ௪. தீத். ௧. ௰௫.
16 கொலோ. ௨. ௰௬.
17 யாக். ௪. ௰௨.
18 கலா. ௪. ௰. கொலோ. ௨. ௰௬.
‡ அல்லது நம்பிக்கையை.

Google

௬ [1]ஒருநாளை விசேஷித்துக்கொள்ளுகிறவன்* கர்த்தருக்கென்று அப்படிச் செய்கிறான்; நாள்களை விசேஷித்துக்கொள்ளாமல் இருக்கிறவனும் கர்த்தருக்கென்று அப்படிச் செய்கிறான்; புசிக்கிறவன் பராபரனுக்குத் தோத்திரம் செலுத்துகிறபடியால், கர்த்தருக்கென்று புசிக்கிறான்; புசியாமல் இருக்கிறவனும் கர்த்தருக்கென்று புசியாமலிருந்து [2]பராபரனுக்குத் தோத்திரஞ்செலுத்துகிறான்.

௭ [3]நம்மில் யாவனும் தனக்காகப் பிழைக்கிறதும் இல்லை; யாவனும் தனக்காக மரிக்கிறதும் இல்லையே; நாம் பிழைக்கிறது கர்த்தருக்காகப் பிழைக்கிறோம்; மரிக்கிறது கர்த்தருக்காக மரிக்கிறோம்.

௮ ஆகையால் நாம் பிழைத்தாலும் மரித்தாலும் கர்த்தருடையவர்களாயே இருப்போம்.

௯ [4]அதற்காகக் கிறிஸ்துவும் மரித்தோர்மேலும் சீவனுள்ளோர்மேலும் [5]ஆண்டவராயிருக்கும்பொருட்டாக மரித்தும் எழுந்தும் உயிரடைந்தும் இருக்கிறார்.

௧௦ ¶ இப்படியிருக்க, நீ உன் சகோதரனைக் குற்றமுள்ளவன் என்று நினைக்கிறதென்ன? அல்லது, உன் சகோதரனை அசட்டைபண்ணுகிறதென்ன? [6]நாம் எல்லாரும் கிறிஸ்துவினுடைய நியாயாசனத்திற்குமுன்பாக நிறுத்தப்படுவோமே.

௧௧ [7]நான் சீவனுள்ளவன்; முழங்கால் யாவும் எனக்குமுன்பாக முடங்கும்; நாவுகள் யாவும் பராபரனை அறிக்கைபண்ணுமென்று பராபரன் திருவுளம்பற்றுகிறார் என்று எழுதியிருக்கிறதல்லவோ?

௧௨ [8]அந்தப்படி நம்மில் அவனவன் தன்தன்னைக்குறித்துப் பராபரனுக்குக் கணக்கு ஒப்புவிப்பான்.

௧௩ ¶ ஆதலால் நாம் இனிமேல் ஒருவரை ஒருவர் குற்றமுள்ளவர்களென்று எண்ணாதிருப்போமாக; [9]வழுவுதற்காவது விழுதற்காவது எதையாகிலும் சகோதரனுக்குமுன்பாக வைத்துப்போடாதபடிக்கே எண்ணமுள்ளவர்கள் ஆவீர்களாக.

௧௪ நான் கர்த்தராகிய இயேசுவினாலே அறிந்திருக்கிறபடி, [10]ஒரு பொருளை அசுத்தம்† என்று எண்ணிக்கொள்ளுகிறவனுக்கு அது அசுத்தமாயிருக்கிறதே அன்றி, [11]ஒரு பொருளும் தானாய் அசுத்தம்‡ இல்லை.

௧௫ அன்றியும் புசிக்கிறதினாலே உன்சகோதரனுக்கு விதனம் உண்டாக்கினால், நீ அன்பாய்§ நடக்கிறவன் அல்ல, அவனுக்காகக் கிறிஸ்து மரித்தாரே; [12]அப்படிப்பட்டவனை உன் போசனத்தினாலே கெடுத்துப்போடாதிருப்பாயாக.

௧௬ [13]உங்கள் நன்மை தூஷணிக்கப்படாதிருப்பதாக.

௧௭ [14]பராபரனுடைய இராச்சியம் புசிப்பினாலும் குடிப்பினாலும் அல்ல, நீதியினாலும் சமாதானத்தினாலும் பரிசுத்தஆவியால் வருகிற சந்தோஷத்தினாலும் பொருந்தியிருக்கின்றது.

௧௮ ¶ [15]இவைகளாலே கிறிஸ்துவுக்கு ஊழியஞ்செய்கிறவன் பராபரனுக்குப் பிரியமானவனுமாய், மனிதருக்குப் பாத்திரனுமாய் இருக்கிறான்.

௧௯ இப்படியிருக்க, [16]சமாதானத்திற்கும் [17]யாவரையும் ஐக்கப்படுத்துதற்கும் ஏற்றவைகளைத் தேடிக்கொள்ளக்கடவோம்.

௨௦ [18]போசனத்தினிமித்தம் பராபரனுடைய கிரியையை அழித்துப்போடாதிருப்பாயாக; [19]எந்தப் பதார்த்தமும் சுத்தமுள்ளதுதான்; (மற்றவன்) விழுதற்கு ஏதுவாகும்படி [20]எதையாகிலும் புசிக்கிறவனுக்கே அது தீமையாயிருக்கும்.

௨௧ உன் சகோதரன் வழுவுதற்காவது, விழுதற்காவது, பலஈனமாகுதற்காவது ஏதுவான [21]மாம்

---

௯. பி. ௬௰.

1 கலா. ௪. ௰.
* அல்லது ஆசரித்துக்கொள்ளுகிறவன்.
2 ௧ கொரி. ௰. ௩௧. ௧ தீமோ. ௪. ௩.
3 ௧ கொரி. ௬. ௰௯, ௨௰. கலா. ௨. ௨௰. ௧ தெச. ௫. ௰. ௧ பே. ௪. ௨.
4 ௨ கொரி. ௫. ௰௫.
5 அப். ௰. ௩௬.
6 மத். ௨௫. ௩௧, ௩௨. அப். ௰. ௪௨: ௰௭. ௩௧. ௨ கொரி. ௫. ௰. யூதா. ௰௪. ௰௫.
7 ஏசா. ௪௫. ௨௩. பிலி. ௨. ௰.
8 மத். ௰௨. ௩௬. கலா. ௬. ௫. ௧ பே. ௪. ௫.
9 ௧ கொரி. ௮. ௯, ௰௩: ௰. ௩௨.
10 ௧ கொரி. ௮. ௭, ௰.
† கிரேக்கு, பொது.
11 அப். ௰. ௰௫. ௨, ௨௰. ௩௪, ௧ கொரி. ௰. ௨௫. ௧ தீமோ. ௪. ௪. தீத். ௧. ௰௫.
‡ கிரேக்கு, பொது.
§ கிரேக்கு, அன்பின்.
12 ௧ கொரி. ௮. ௰௧.
13 உரோ. ௰௨. ௰௭.
14 ௧ கொரி. ௮. ௮.
15 ௨ கொரி. ௮. ௨௧.
16 சங். ௩௪. ௰௪. உரோ. ௰௨. ௰௮.
17 உரோ. ௰௫. ௨. ௧ கொரி. ௰௪. ௰௨. ௧ தெச. ௫. ௰௧.
18 ௰௫. ௩௪.
19 மத். ௰௫. ௰௧. அப். ௰ ௰௫ ௰௪. தீத். ௧. ௰௫.
20 ௧ கொரி. ௮. ௯, ௰, ௰௧, ௰௨.
21 ௧ கொரி. ௮. ௰௩.

சத்தைப் புசியாமலும், இரசத்தைப் பானம்பண்ணாமலும், மற்ற எதையாகிலும் செய்யாமலும் இருக்கிறதே நன்மையாயிருக்கின்றது.

௨௨ நீ நிச்சய அறிவுள்ளவனானால், அதைப் பராபரனுக்குமுன்பாக நீ தானாய்க் கொள்வாயாக; ஒருவன் தான் சம்மதிக்கிற பொருளினாலே தனக்குக் குற்றம் வரப்பண்ணாதிருந்தால், [1]அவன் பாக்கியவானாயிருப்பான்.

௨௩ (போசன பதார்த்தங்களுக்குள்ளே,) வித்தியாசம்பண்ணுகிறவன்* (அவைகளை) நிச்சய அறிவில்லாமல் புசித்தபடியினாலே ஆக்கினைக்கு ஏதுவாயிருப்பான்; [2]நிச்சய அறிவினாலே வாராத யாவும் பாவமாயிருக்கின்றன.

## ௧௫. அதிகாரம்.

௧. பலமுள்ளோர் பலஈனரைத் தாங்கவேண்டுமென்பது. ௨. கிறிஸ்து தம்மைப் பிரியப்படுத்தாமல் யூதர்களையும் அஞ்ஞானிகளையும் ஏற்றுக்கொண்டதுபோல, நாமும் நம்மைப் பிரியப்படுத்தாமல் ஒருவரை ஒருவர் ஏற்றுக்கொள்ளவேண்டுமென்பது. ௰௫. பவுல் நிருபத்தை எழுதினதற்காக நியாயஞ்சொல்லி, ௨௮. அவர்களை வந்து காண்பேனென்று வாக்குத்தத்தம்பண்ணி, ௩௰. அவர்கள் தனக்காக வேண்டிக்கொள்ளும்படி கேட்டுக்கொண்டது.

ஆனபடியினாலே [3]பலமுள்ளவர்களாகிய நாம் [4]பலஈனமுள்ளவர்களுடைய பலஈனங்களைப் பொறுமையோடே சகிக்கவேண்டும்; அல்லாமலும் நாம் நமக்குப் பிரியமாய் நடவாமல்,

௨ [5]அவனவன் தன்தனக்கடுத்த பிறனுடைய ஞான வளர்ப்புக்கு ஏதுவான [6]நன்மை உண்டாகும்படி அவனுக்குப் பிரியமாய் நடக்கக்கடவோம்.

௩ [7]கிறிஸ்துவானவரும் தமக்குப் பிரியமாய் நடவாமல், [8]உம்மை நிந்திக்கிறவர்களுடைய நிந்தைகள் என்மேல் விழுந்தன என்று எழுதியிருக்கிறபடி நடந்தார்.

௪ அன்றியும் வேதவாக்கியங்கள் திருட்டாந்தப்படுத்தின பொறுமையினாலும் ஆறுதலினாலும் நாம் நம்பிக்கையுள்ளவர்கள் ஆகும்பொருட்டாய், முன்பு [9]எழுதியிருக்கிறவைகள் எல்லாம் நமக்குப் போதகமாக எழுதப்பட்டிருக்கின்றன.

௫ [10]அந்தப்படி பொறுமையையும் ஆறுதலையும் கொடுக்கிற பராபரன், நம்முடைய கர்த்தராகிய இயேசுக்கிறிஸ்துவுக்குத் தேவனும் [11]பிதாவுமானவரை நீங்கள் ஐக்கமாய் ஒரே வாயினாலே துதிக்கும்படிக்கு,

௬ கிறிஸ்து இயேசுவினுடைய சித்தத்தின்படியே† ஒருவருக்கொருவர் ஒரேவிதமான சிந்தையுள்ளவர்களாய் இருப்பதற்கு அநுக்கிரகம்செய்வாராக.

௭ ¶ அப்படியே [12]பராபரனுக்குப் புகழ்ச்சி உண்டாகத்தக்கதாய்க் கிறிஸ்து நம்மைச் சேர்த்துக்கொண்டதுபோல, [13]நீங்களும் ஒருவரை ஒருவர் சேர்த்துக்கொள்ளுங்கள்.

௮ (இதைக்குறித்து) நான் பின்னும் சொல்லுகிறதாவது: [14]பிதாக்களுக்குப் பண்ணப்பட்ட வாக்குத்தத்தங்களை உறுதியாக்கும்படிக்கு, [15]பராபரனுடைய சத்தியத்தின்நிமித்தம் இயேசுக்கிறிஸ்து விருத்தசேதனம் உள்ளவர்களுக்கு ஊழியக்காரரானார்.

௯ [16]புறத்தேசத்தாரும் (அவருடைய) இரக்கத்திற்காகப் பராபரனைத் துதிக்கும்படிக்கு அப்படியானார்; ஆதலால் எழுதியிருக்கிறதாவது: [17]இதின்நிமித்தம் நான் புறத்தேசத்தாருக்குள்ளே உம்மை அறிக்கைபண்ணி, உம்முடைய நாமத்தைச் சொல்லி, சங்கீதம்பாடுவேன் என்பதே; மறுபடியும் அவன் சொல்லியிருக்கிறது.

௰ [18]புறத்தேசத்தார்களே, அவருடைய சனங்களோடேகூடச் சந்தோஷப்படுங்கள் என்பதே.

௰௧ மறுபடியும் அவன் சொன்னது: எல்லாப் புறத்தேசத்தார்களே, [19]பராபரனைத் துதியுங்கள்;

கி. பி. ௫௰.

1 ௧ யோ. ௩. ௨௧.
* அல்லது சந்தேகங்கொள்ளுகிறவன்.
2 தீத். ௧. ௧௫.
3 கலா. ௬. ௧.
4 உரோ. ௰௪. ௧.
5 ௧ கொரி. ௯. ௰௯, ௨௨: ௰. ௨௪,௩௩: ௰௩. ௫. பிலி. ௨. ௪, ௫.
6 உரோ. ௰௪. ௰௯.
7 மத். ௨௬. ௩௯. யோவா. ௫. ௩௰: ௬. ௩௮.
8 சங். ௬௯. ௯.
9 உரோ. ௪. ௨௩, ௨௪. ௧ கொரி. ௯. ௯,௰: ௰. ௰௧. ௨ தீமோ. ௩. ௰௬, ௰௭.
10 உரோ. ௰௨. ௰௬. ௧ கொரி. ௧. ௰. பிலி. ௩. ௰௬.
11 அப். ௪. ௨௪, ௩௨.
† அல்லது மாதிரியின்படியே.
12 உரோ. ௫. ௨.
13 உரோ. ௰௪. ௩, ௯.
14 உரோ. ௧. ௯. ௨ கொரி. ௧. ௨௰.
15 மத். ௰௫. ௨௪. யோவா. ௧. ௰௧. அப். ௩. ௨௫, ௨௬: ௰௩. ௪௬.
16 யோவா. ௰. ௰௬. உரோ. ௯. ௨௪.
17 சங். ௰௮. ௪௯.
18 உபா. ௩௨. ௪௩.
19 சங். ௱௧௭. ௧.

எல்லாச் சனங்களே, அவரை மிகவும் துதியுங்கள் என்றான்.

௰௨ ஏசாயாவுஞ்சொன்னது: [1]ஈசாயின் வேர் இருக்கும்; புறத்தேசத்தாரை ஆளும்படி எழும்புவாரும் இருப்பார்; அவரில் புறத்தேசத்தார்கள் நம்பிக்கையாய் இருப்பார்கள் என்றான்.

௰௩ அந்தப்படியே நீங்கள் பரிசுத்தஆவியின் பலத்தினாலே அந்த நம்பிக்கையை அதிகமாய் அடையும்படிக்கு நம்பிக்கைக்கு ஏதுவான பராபரன் [2]விசுவாசத்தினால் உண்டாகும் எல்லாவித சந்தோஷத்தினாலும் சமாதான சவுக்கியத்தினாலும் உங்களை நிரப்புவாராக.

௰௪ ¶ [3]என் சகோதரரே, நீங்கள் தாமே நற்குணத்தினால் நிறைந்தவர்களுமாய், சகல அறிவினாலும் நிறைந்தவர்களுமாய், [4]ஒருவருக்கொருவர் புத்திசொல்ல வல்லவர்களுமாயிருக்கிறீர்கள் என்று நானும் உங்களைக்குறித்து நிச்சயமாய் அறிந்திருக்கிறேன்.

௰௫ [5]அப்படியிருந்தும் சகோதரரே, பராபரன் எனக்குக் கொடுத்த கிருபையினாலே நான் உங்களுக்கு ஞாபகப்படுத்தும்படிக்கு, இவைகளை அதிக தயிரியமாய் எழுதினேன்.

௰௬ [6]புறத்தேசத்தார்கள் பரிசுத்த ஆவியினாலே பரிசுத்தமாக்கப்பட்டுப் பராபரனுக்கு மிகவும் பிரியமான பலியாகும்படிக்கு,* [7]நான் புறத்தேசத்தாருக்கு இயேசுக்கிறிஸ்துவினுடைய ஊழியக்காரனாய்ப் பராபரனுடைய சுவிசேஷத்திற்கு ஏற்ற ஆராதனைசெய்யும்பொருட்டு, (அந்தக் கிருபை எனக்கு உண்டாயிற்று).

௰௭ ஆதலால் நான் இயேசுக்கிறிஸ்துவைக்கொண்டு [8]பராபரனுக்கு உரியவைகளைக்குறித்து மேன்மைபாராட்டுதற்கு முகாந்தரம் உண்டு.

௰௮ ஆனபடியினாலே கிறிஸ்துவானவர் என்னாலே [9]நடப்பியாதவைகளில் ஒன்றையுங்குறித்துப் பேசத் துணியாமல்,

௰௯ [10]புறத்தேசத்தார் வார்த்தையிலும் செய்கையிலும் விசுவாசத்திற்குக் கீழ்ப்படியும்படிக்கு, எருசலேம் நகரத்தைத் தொடங்கி அதைச்சூழ்ந்ததிசையிலேயும் இல்லிரிக்குத் தேசம்வரைக்கும் கிறிஸ்துவினுடைய சுவிசேஷத்தை விஸ்தாரமாய்ப் பிரசங்கிக்கத்தக்கதாக [11]அற்புதங்கள் அதிசயங்கள் என்று இவைகளின் பலத்தினாலும் பரிசுத்த ஆவியினுடைய பலத்தினாலும் அவர் என்னாலே நடப்பித்தவைகளைக்குறித்துமாத்திரம் பேசத் துணிகிறேன்.

௨௰ மேலும் [12]அவரைக்குறித்து அறிவை அடையாதவர்கள் அவரைப் பார்ப்பார்கள் என்றும்,கேள்விப்படாதவர்கள் அறிந்துகொள்வார்கள் என்றும் எழுதியிருக்கிறபடியே,

௨௧ [13]நான் மற்றொருவனுடைய அஸ்திபாரத்தின்மேலே கட்டாதபடிக்கு, கிறிஸ்துவின் நாமம் சொல்லப்பட்டிராத இடங்களிலே சுவிசேஷத்தை அறிவிக்கும்படி, அதிக கருத்துள்ளவனாய் இருக்கிறேன்.

௨௨ ¶ [14]அதினாலே நான் உங்களிடத்தில் வருகிறதற்கு அநேகந்தரம்† தடை உண்டாயிற்று.

௨௩ இப்பொழுது நான் இந்தத் திசைகளிலே இருக்கிறதற்கு இடம் இல்லாதபடியினாலும், [15]உங்களிடத்துக்கு வரும்படி அநேக வருஷங்களாய் எனக்கு மிகுந்த விருப்பம் உண்டாயிருந்தபடியினாலும்,

௨௪ நான் இஸ்பானியா தேசத்திற்குப் பிரயாணமாய்ப் போகும்பொழுது, உங்களிடத்தில் வந்து உங்களைக் கண்டுபேசவும், உங்களோடு‡ இருக்கிறதினாலே முந்திச் சற்று மனச்சந்தோஷம் அடைந்தபின்பு [16]அவ்வழியே உங்களால்

கி. பி. ௬௰.

1 ஏசா. ௰௧. ௧, ௰. வெளி. ௫. ௫: ௨௨. ௰௬.
2 உரோ. ௰௨. ௰௨: ௰௪. ௰௭.
3 உ பே. ௧. ௰௨. ௧யோ. ௨. ௨௧.
4 ௧ கொரி. ௮. ௧, ௭, ௰.
5 உரோ. ௧. ௪: ௰௨. ௩. கலா. ௧. ௰௫. எபே. ௩. ௭, ௮.
6 ஏசா. ௬௬. ௨௰. பிலி. ௨. ௰௭.
* அல்லது காணிக்கை.
7 உரோ. ௰௧. ௰௩. கலா. ௨. ௭.௮, ௯. ௧ தீமோ. ௨. ௭. ௨ தீமோ. ௧. ௰௧.
8 எபி. ௫. ௧.
9 அப். ௨௧. ௰௯. கலா. ௨. ௮.
10 உரோ. ௧. ௫: ௰௬. ௨௬.
11 அப். ௰௯. ௰௧. ௨ கொரி. ௰௨. ௰௨.
12 ஏசா. ௫௨. ௰௫.
13 உ கொரி. ௰. ௰௩, ௰௫, ௰௬.
14 உரோ. ௧. ௰௩. ௧ தெச. ௨ ௰௭, ௰௮.
† அல்லது மிகுதியாய்.
15 அப். ௰௯. ௨௧. ௩௰ வச. உரோ. ௧. ௰௧.
‡ அல்லது உங்கள் இனத்தோடு; ௩௨. வச.
16 அப். ௰௫. ௩.



Digitized by Google

தால், அது கிருபையினால் இராது; அல்லவென்றால், கிரியையானது கிரியையல்ல.

௭ ¶ இதினாலே என்ன தோன்றுகிறதெனில், [1]இஸ்ரவேலர் தேடுகிறதை அடையாமல் இருக்கிறார்கள்; தெரிந்துகொள்ளப்பட்டவர்களோ அதை அடைந்தார்கள்; மற்றவர்கள் இன்றைத்தினம்வரைக்கும் கடினமான* இருதயமுள்ளவர்களாய் இருக்கிறார்கள்.

௮ [2]பராபரன் கன நித்திரையுள்ள† ஆவியையும், [3]காணாதிருக்கிற கண்களையும், கேளாதிருக்கிற காதுகளையும் அவர்களுக்குக் கொடுத்தாரென்று எழுதியிருக்கிறபிரகாரமாக அப்படி இருக்கிறார்கள்.

௯ தாவீதும் சொல்லுகிறதாவது: [4]அவர்களுடைய உணவிடம் அவர்களுக்குக் கண்ணியாயும் வலையாயும் விழுதற்கான கல்லாயும் பதில்பெறுதற்கு ஏதுவாயும் இருக்கக்கடவது.

௰ [5]காணாதபடிக்கு அவர்களுடைய கண்கள் அந்தகாரப்படக்கடவது; அவர்களுடைய முதுகு எப்பொழுதும் குனியும்படி செய்யுமென்று சொல்லியிருக்கிறான்.

௰௧ ¶ இப்படியிருக்க அழிந்துபோகும்படிக்கா இடறினார்கள் என்று கேட்டால், அப்படியல்ல அவர்களுக்குள்ளே எரிச்சலை எழுப்புகிறதற்காக [6]அவர்கள் விழுந்ததினாலே புறத்தேசத்தாருக்கு இரட்சிப்புக் கிடைத்தது.

௰௨ அவர்கள் விழுந்தது உலகத்திற்கு ஐசுவரியமும், அவர்கள் குறைவானது‡ புறத்தேசத்தாருக்கு ஐசுவரியமுமானதாயிருக்க அவர்கள் நிறைவானால் மிகவும் அதிகமாய் அப்படியாகும் அல்லவோ?

௰௩ [7]புறத்தேசத்தாருக்காக நான் அப்போஸ்தலனாயிருக்கிறதினாலே புறத்தேசத்தாராகிய உங்களுடனே பேசுகிறேன்.

௰௪ அவர்களைத் தள்ளிவிடுதல் உலகத்தை ஒப்புரவாக்குதலாயிருக்க, அவர்களை அங்கிகரித்துக்கொள்ளுதல் மரித்தோரிலிருந்து சீவன் உண்டானதுபோல இருக்கும் அல்லவோ?

௰௫ ஆதலால் நான் எப்படியும் [8]என் இனத்தாரை எவி, அவர்களில் சிலரை இரட்சிக்கவேண்டுமென்று என் ஊழியத்தை மேன்மைபாராட்டுகிறேன்.

௰௬ ¶ [9]மேலும் முதல் விளைச்சல் பரிசுத்தமாயிருக்க, அம்பாரமும் அப்படியே இருக்கின்றது; வேரானது பரிசுத்தமாயிருக்க, கிளைகளும் அப்படியே இருக்கின்றன.

௰௭ [10]சில கிளைகள் ஒடித்துத் தள்ளப்பட்டதுமல்லாமல் காட்டு ஒலீவமரமாகிய [11]நீ அவைகளுடைய இடத்திலே§ ஒட்டவைக்கப்பட்டு ஒலீவமரத்தின் வேருக்கும் சாரத்திற்கும் உடன்பங்காளியாயிருக்க,

௰௮ [12]நீ அந்தக் கிளைகளுக்கு எதிராய்ப் பெருமைபாராட்டாதிருப்பாயாக; பாராட்டுவாயானால் நீ வேரைச் சுமக்காமல், வேரே உன்னைச் சுமக்கிறதென்று நினைத்துக்கொள்.

௰௯ நான் ஒட்டவைக்கப்படுதற்கு அந்தக் கிளைகள் ஒடித்துப் போடப்பட்டன என்று நீ சொல்லுகிறாய்.

௨௰ நல்லது அவிசுவாசத்தினாலே அவைகள் ஒடித்துத் தள்ளப்பட்டன; நீ விசுவாசத்தினாலே நிற்கிறாய்; [13]இறுமாப்பைக் காண்பியாதிருப்பாயாக.

௨௧ சுபாவத்தின்படி கிளைகளானவைகளைப் பராபரன் தப்பவிடாதிருக்க, உன்னையும் தள்ளாதபடிக்குப் [14]பயந்திருப்பாயாக.

௨௨ ¶ மேலும் பராபரனுடைய தயவையும் கண்டிப்பையும் பார்த்துக்கொள்; விழுந்தவர்களிடத்திலே கண்டிப்பையும் உன்னிடத்திலே தயவையுமே பார்; [15]அந்தத் தயவிலே நிலைத்திருப்பாயாக; இல்லாவிட்டால் [16]நீயும் வெட்டுண்டுபோவாய்.

கி. பி. ௬௰.

1 உரோ. ௯. ௩௧: ௰. ௩.
* அல்லது குருடான; ௨ கொரி. ௩. ௰௪.
2 ஏசா. ௨௯. ௰.
† அல்லது நிலேசமுள்ள.
3 ௫ மோ. ௨௯. ௪. ஏசா. ௬. ௯. எரே. ௫. ௨௧. எசே. ௰௨. ௨. மத். ௰௩. ௰௪. யோவா. ௰௨. ௪௰. அப். ௨௮. ௨௬, ௨௭.
4 சங். ௬௯. ௨௨.
5 சங். ௬௯. ௨௩.
6 அப். ௰௩. ௪௬: ௰௮. ௬: ௨௨. ௰௮, ௨௧: ௨௮, ௨௮. உரோ. ௰. ௰௯.
‡ அல்லது அழிவானது.
7 அப். ௯. ௰௫: ௰௩. ௨: ௨௨. ௨௧. உரோ. ௰௫. ௰௬. கலா. ௧. ௰௬: ௨. ௨, ௭, ௮, ௯. எபே. ௩. ௮. ௧ தீமோ. ௨. ௭. ௨ தீமோ. ௧. ௰௧.
8 ௧ கொரி. ௭. ௰௬: ௯. ௨௨. ௧ தீமோ. ௪. ௰௬. யாக். ௫. ௨௰.
9 ௩ மோ. ௨௩. ௰. ௪ மோ. ௰௫. ௰௮, ௰௯, ௨௰, ௨௧.
10 எரே. ௰௧. ௰௬.
11 அப். ௨. ௩௯. எபே. ௨. ௰௨, ௰௩.
§ அல்லது அவைகளுக்குள்.
12 ௧ கொரி. ௰. ௰௨.
13 உரோ. ௰௨. ௰௬.
14 யாக். ௨௮. ௰௪. ஏசா. ௬௬. ௨. பிலி. ௨. ௰௨.
15 ௧ கொரி. ௰௫. ௨. எபி. ௩. ௬, ௰௪.
16 யோவா. ௰௫. ௨.

Digitized by Google

௨௩ அன்றியும் [1]அவர்களும் அவிசுவாசத்திலே நிலைத்திராவிட்டால் ஒட்டவைக்கப்படுவார்கள்; அவர்களை மறுபடியும் ஒட்டவைக்கிறதற்குப் பராபரன் வல்லவராயிருக்கிறாரே.

௨௪ அன்றியும் நீ சுபாவத்தின்படி காட்டு ஒலீவாகிய மரத்திலிருந்து வெட்டப்பட்டு உன் சுபாவத்திற்கு விரோதமாய் நல்ல ஒலீவமரத்திலே ஒட்டவைக்கப்பட்டிருக்க, மிகவும் அதிகமாய்ச் சுபாவக்கிளைகளாகிய அவர்கள் தங்கள் சுய ஒலீவமரத்திலே ஒட்டவைக்கப்படுவார்கள் அல்லவா?

௨௫ ¶ ஆதலால் சகோதரரே, [2]நீங்கள் உங்கள் சுயபுத்தியிலே சாயாதபடிக்கு, ஒரு இரகசியத்தை நீங்கள் அறியவேண்டுமென்று இருக்கிறேன்; என்னவெனில், [3]புறத்தேசத்தார் நிறைவாய்ப் பிரவேசிக்குமளவும், இஸ்ரவேலரில் [4]ஒருபங்குக்குக் கடினமான* மனது உண்டாயிருக்கும்.

௨௬ [5]பின்பு மீட்பர் சீயோனுக்கு வந்து, அக்கிரமத்தை இயாக்கோபிலிருந்து நீக்குவார் என்றும்,

௨௭ நான் அவர்களுடைய பாவங்களை நீக்கும்பொழுது [6]இதுவே நான் அவர்களுடனே பண்ணும் உடம்படிக்கையென்றும் எழுதியிருக்கிறபடியே, இஸ்ரவேலர் எல்லாரும் இரட்சிக்கப்படுவார்கள்.

௨௮ சுவிசேஷத்தைக்குறித்து அவர்கள் உங்கள்நிமித்தம் பகைஞராயிருக்கிறார்கள்.

௨௯ தெரிந்துகொள்ளுதலைக்குறித்துப் பராபரன் கிருபைகொடுத்தலும் அழைத்தலும் [7]மாறாதவைகளானபடியால், அவர்கள் பிதாக்களின்நிமித்தம் [8]அன்புகூரப்பட்டவர்களாய் இருக்கிறார்கள்.

௩௰ [9]ஆதலால் நீங்கள் முற்காலத்திலே பராபரனுக்குக் கீழ்ப்படியாதிருந்து† இப்பொழுது அவர்களுடைய அவிசுவாசத்தினாலே இரக்கம்பெற்றிருக்கிறதுபோல, அவர்களும் இப்பொழுது கீழ்ப்படியாமலிருந்து,‡ (பின்பு) உங்களுக்குண்டான இரக்கத்தினாலே (ஏவப்பட்டு) இரக்கம்பெறுவார்கள்.

௩௧ எல்லார்மேலும் இரக்கமாயிருக்கத்தக்கதாகப் [10]பராபரன் எல்லாரையும் அவிசுவாசத்திற்குள்ளே அடைத்துப்போட்டபடியால்§ அப்படியேயாம்.

௩௨ ¶ ஆ பராபரனுடைய ஞானம் அறிவு என்பவைகளின் சம்பூரணம் மிகுந்த ஆழமுள்ளதாயிருக்கின்றது.

௩௩ [11]அவருடைய நியாயத்தீர்ப்புகள் அளவறுக்கப்படாதவைகள்; அவருடைய [12]நெறிகள் ஆராய்ந்துபார்க்கப்படாதவைகளாய் இருக்கின்றன; [13]கர்த்தருடைய சிந்தையை அறிந்தவன் எவன்?

௩௪ [14]அல்லது அவருக்கு உசாவுதுணையாய் இருந்தவன் எவன்?

௩௫ [15]அல்லது தனக்குப் பதில்கொடுக்கும்படிக்கு அவருக்கு முந்தி ஒன்றைக் கொடுத்தவன் எவன்?

௩௬ [16]சகலமும் அவராலும் அவர்மூலமாயும் அவருக்காகவும் இருக்கின்றன, [17]அவருக்கே என்றென்றைக்கும் புகழ்ச்சி உண்டாகக்கடவது.—ஆமென்.

## ௧௨. அதிகாரம்.

௧. பராபரனுடைய இரக்கங்கள். ௩. எவனும் பெருமைபாராட்டாமல், தன் தன் நிலைமையை அறிந்து நடக்கவும், ௬. அவனைப் பிரியப்படுத்தும்படி நம்மை ஏவவும், ௯. அன்புமுதலிய நற்குணங்கள் உள்ளவர்களாயிருக்கவும், ௰௬. குரோதத்தை நீக்கவும் வேண்டுமென்பது.

அப்படியிருக்கச் சகோதரரே, [18]நீங்கள் புத்தியுள்ள ஆராதனை செய்ய, [19]உங்கள் சரீரங்களைச் சீவனுமாய், பரிசுத்தமுமாய், பராபரனுக்குப் பிரியமுமாயிருக்கிற [20]பலியாக நிறுத்தவேண்டும் என்று பராபரனுடைய இரக்கங்களின் நிமித்தம் [21]உங்களுக்குப் புத்தி சொல்லுகிறேன்.

௨ மேலும் [22]நீங்கள் இவ்வுலகத்

கி. பி. ௬௰.

1 உ கொரி. ௩. ௰௪.
2 உரோ. ௰௨. ௰௬.
3 லூக். ௨௧. ௨௪. வெளி. ௭. ௯.
4 ௭. ௨௫. உ கொரி. ௩. ௰௪.
* அல்லது குருடான.
5 எசா. ௫௯. ௨௰. சங். ௰௪. ௭.
6 எசா. ௨௭. ௯. எரே. ௩௧. ௩௩. எபி. ௮. ௮: ௰. ௰௬.
7 சமோ. ௨௩. ௰௯.
8 உபா. ௭. ௮: ௯. ௫: ௰௫.
9 எபே. ௨. ௨. கொலோ. ௩. ௭.
† அல்லது பராபரனை விசுவாசியாதிருந்து.
‡ அல்லது விசுவாசியாமல்.
10 உரோ. ௩. ௯. கலா. ௩. ௨௨.
§ அல்லது அடக்கி.
11 சங். ௩௬. ௬.
12 யோபு. ௰௧. ௭. சங். ௯௨. ௫.
13 யோபு. ௰௫. ௮. எசா. ௪௰. ௰௩. எரே. ௨௩. ௰௮. ௧ கொரி. ௨. ௰௬.
14 யோபு. ௩௬. ௨௨.
15 யோபு. ௪௫. ௭: ௪௧. ௰௧.
16 ௧ கொரி. ௮. ௬. கொலோ. ௧. ௰௬.
17 கலா. ௧. ௫. ௧ தீமோ. ௧. ௰௭. ௨ தீமோ. ௪. ௰௮. எபி. ௰௩. ௨௧. ௧ பே. ௫. ௰௧. ௨ பே. ௩. ௰௮. யூதா. ௨௫. வெளி. ௧. ௬.
18 ௧ பே. ௨. ௫.
19 சங். ௫௰. ௰௩, ௰௪. உரோ. ௬. ௰௩, ௰௬, ௰௯. ௧ கொரி. ௬. ௰௩, ௨௰.
20 எபி. ௰. ௨௰.
21 உ கொரி. ௰. ௧.
22 ௧ பே. ௧. ௰௪. ௧ யோ. ௨. ௰௫.

Digitized by Google

திற்கு ஒப்பாய் நடவாமல், [1]பராபரனுடைய நன்மையும் பிரியமும் நிறைவுமான சித்தம் இன்னதென்று நீங்கள் பகுத்து அறியத்தக்கதாக, [2]உங்கள் மனதைப் புதிதாக்குதலினாலே மறுரூபமாய் நடந்துகொள்ளுங்கள்.

௩ ¶ அல்லாமலும் [3]எனக்குக் கொடுத்திருக்கிற கிருபையினாலே நான் இன்னும் சொல்லுகிறதாவது: உங்களில் எவனானாலும் தன்னைக்குறித்து [4]நினைக்கவேண்டியதற்கு மேலாக நினையாமல், [5]அவனவனுக்குப் பராபரன் பங்கிட்ட விசுவாசம் எவ்வளவோ, அவ்வளவின்படி புத்தியாய்*நடக்கத்தக்கதாகத் (தன்னைக்குறித்து நினைக்கவேண்டும்).

௪ அது எப்படியெனில் [6]ஒரே சரீரத்திலே நாம் அநேக அவயவங்களை உடையவர்களாயிருக்க, அவயவங்கள் யாவும் ஒரே தொழில் இல்லாதவைகளாய் இருக்கிறது போல,

௫ [7]அநேகராகிய நாமும் கிறிஸ்துவுக்குள்ளே ஒரே சரீரமாயிருக்க, ஒருவருக்கொருவர் அவயவங்களாய்,

௬ [8]நமக்குக் கொடுக்கப்பட்ட கிருபையின்படியே [9]பலவித வரங்கள் உள்ளவர்களாயிருக்கிறோம்; [10]அந்தப்படி தீர்க்கதரிசனம் சொல்லுகிற வரத்தை உடையவன் விசுவாச அளவுக்கு ஏற்றதாக அப்படிச் செய்யக்கடவன்.

௭ உதவிசெய்கிற வரத்தை உடையவன் உதவிசெய்கிறதிலே சாக்கிரதையாய்இருக்கக்கடவன்; [11]போதிக்கிறவன் போதிக்கிறதிலே சாக்கிரதையாய் இருக்கக்கடவன்.

கி. பி. ௬௰.

1 எபே. ௫. ௰, ௰௭. ௧ தெச. ௪. ௩.
2 எபே. ௪. ௰௭: ௪. ௨௩. கொலோ. ௩. ௨௩, ௨௨: ௩. ௩.
3 உரோ. ௧. ௫: ௰௫ ௰௫.
௧ கொரி. ௩. ௰: ௰௫. ௯. கலா. ௨. ௩. எபே. ௩. ௨, ௭, ௮.
4 வாக். ௨௫. ௨௭. பிர. ௭. ௰௬. உரோ. ௰௩. ௨௰.
5 ௧ கொரி. ௰௨. ௭, ௰௧. எபே. ௪. ௭.
* இரேக்கு, புத்திக்கு.
6 ௧ கொரி. ௰௨. ௰௨. எபே. ௪. ௰௬.
7 ௧ கொரி. ௰. ௰௭: ௰௨. ௨௰, ௨௭. எபே. ௧. ௨௩: ௪. ௨௫.
8 ௩. வச.
9 ௧ கொரி. ௰௨. ௪. ௧ பே. ௪. ௰, ௰௧.
10 அப். ௰௧. ௨௭. ௧ கொரி. ௰௨. ௰, ௨௮: ௰௩. ௨: ௰௪. ௧, ௩, ௨௪, ௩௧.
11 அப். ௰௩. ௧. கலா. ௬. ௬. எபே. ௪. ௰௧. ௧ தீமோ. ௫. ௰௭.
12 அப். ௰௫. ௩௨. ௧ கொரி. ௰௪. ௩.
13 மத். ௬. ௧, ௨, ௩.
† அல்லது பகிர்ந்துகொடுக்க.
‡ அல்லது தாராளமாய்;
௨ கொரி. ௮. ௨.
14 அப். ௨௰. ௨௮. ௧ தீமோ. ௫. ௰௭. எபி. ௰௩. ௭, ௨௪. ௧ பே. ௫. ௨.
15 ௨ கொரி. ௯. ௭.

௮ [12]புத்திசொல்லுகிறவன் புத்திசொல்லுகிறதிலே சாக்கிரதையாய் இருக்கக்கடவன்; [13]தருமங்களைக் கொடுக்க† வேண்டியவன் கபடம் இல்லாமையாய்‡ அப்படிச் செய்யக்கடவன். [14]முதலாளியானவன் சாக்கிரதையுடனே இருக்கக்கடவன்; [15]இரக்கம்செய்கிறவன் உச்சாகத்துடனே அப்படிச் செய்யக்கடவன்.

௯ ¶ [16]உங்கள் அன்பு மாயமற்றதாய் இருப்பதாக; [17]பொல்லாங்கானதை அருவருத்து, நன்மையில் ஒட்டிக்கொண்டிருப்பீர்களாக.

௰ சகோதரசிநேகத்திலே§ ஒருவருக்கொருவர் [18]மிகவும் பட்சமாயிருங்கள்; [19]கனம்பண்ணுகிறதில் ஒருவருக்கொருவர் முந்திக்கொள்ளுங்கள்.

௰௧ அலுவலில் நீங்கள் அசதியாயிருக்கக்கூடாது; உங்கள் ஆவியிலே தீபவளர்ச்சியைப்போல இருந்து, கர்த்தருக்கு ஊழியம்செய்யுங்கள்.

௰௨ [20]நம்பிக்கையிலே சந்தோஷமாய் இருப்பீர்களாக; [21]உபத்திரவ காலத்திலே பொறுமையாயிருங்கள்.

௰௩ [22]செபத்தில்உறுதியாய்த் தரித்திருங்கள்; [23]வருத்தப்படுகிற பரிசுத்தவான்களுக்கு உதவிசெய்யுங்கள்; [24]அந்நியருக்கு உபசாரம்செய்கிறதை நாடுங்கள்.

௰௪ [25]உங்களைத் துன்பப்படுத்துகிறவர்களை ஆசீர்வதியுங்கள்; ஆசீர்வாதமே அன்றிச் சாபமிடாதிருப்பீர்களாக.

௰௫ [26]சந்தோஷப்படுகிறவர்களுடனே சந்தோஷப்படுங்கள்; அழுகிறவர்களுடனே அழுங்கள்.

௰௬ [27]ஒருவருக்கொருவர் ஐக்க

16 ௧ தீமோ. ௧. ௫. ௧ பே. ௧. ௨௨.—17 சங். ௩௪. ௰௪: ௩௬. ௪: ௩௭. ௰. ஆமோ. ௫. ௰௫.—§ அல்லது சகோதர சிநேகத்தோடே.—18 எபி. ௰௩. ௧. ௧ பே. ௧. ௨௨: ௨. ௰௭: ௩. ௮. ௨ பே. ௧. ௭.—19 பிலி. ௨. ௩. ௧ பே. ௫. ௫.—20 லூக். ௰. ௨௰. உரோ. ௫. ௨: ௰௫. ௰௩. பிலி. ௩. ௧: ௪. ௪. ௧ தெச. ௫. ௰௬. எபி. ௩. ௬. ௧ பே. ௪. ௰௩.—21 லூக். ௨௧. ௰௯. ௧ தீமோ. ௬. ௰௧. எபி. ௰. ௩௬: ௰௨. ௧. யாக். ௧. ௪: ௫. ௭. ௧ பே. ௨. ௰௯. ௨௰.—22 லூக். ௰௮. ௧. அப். ௨. ௪௨: ௰௨. ௫. எபே. ௬. ௰௮. கொலோ. ௪. ௨. ௧ தெச. ௫. ௰௭.—23 ௧ கொரி. ௰௬. ௧. ௨ கொரி. ௯. ௧, ௰௨. எபி. ௬. ௰: ௰௩. ௰௬. ௧ யோ. ௩. ௰௭.—24 ௧ தீமோ. ௩. ௨. தீத். ௧. ௮. எபி. ௰௩. ௨. ௧ பே. ௪. ௯.—25 மத். ௫. ௪௪. லூக். ௬. ௨௮: ௨௩. ௩௪. அப். ௭. ௬௰. ௧ கொரி. ௪. ௰௨. ௧ பே. ௨. ௨௩: ௩. ௯.—26 ௧ கொரி. ௰௨. ௨௬.—27 உரோ. ௰௫. ௫. ௧ கொரி. ௧. ௰. பிலி. ௨. ௨: ௩. ௰௬. ௧ பே. ௩. ௮.

Digitized by Google

ளான சிந்தையுள்ளவர்களாய் இருப்பீர்களாக; [1]மேன்மையானவைகளைச் சிந்தியாமல், தாழ்மையானவர்களுக்கு இணங்குங்கள்.*

௰௭ ¶ [2]உங்கள் சுயபுத்தியில் சாயாதிருப்பீர்களாக; [3]யாவனுக்கும் தீமைக்குத் தீமைசெய்யாதிருங்கள்; [4]எந்த மனிதருக்கும்முன்பாக யோக்கியமானவைகளை நடப்பியுங்கள்.

௰௮ [5]எல்லா மனிதரோடும் சமாதானமாய் இருக்கக்கூடுமானால், உங்களால் ஆனமட்டும் அப்படியே செய்யுங்கள்.

௰௯ பிரியமானவர்களே, [6]பழிவாங்குதல் எனக்கு ஏற்றது, நானே பதில் செய்வேனென்று கர்த்தர் சொல்லுகிறார் என்று எழுதியிருக்கிறபடியால், [7]நீங்கள்தாமே பழிவாங்காமல் (அவருடைய) கோபாக்கினைக்கு இடங்கொடுங்கள்.

௨௰ ஆதலால் [8]உன் சத்துருவுக்குப் பசி உண்டாயிருக்கும்பொழுது அவனுக்குப் போசனம் கொடு; அவனுக்குத் தாகம் உண்டாய் இருக்கும்பொழுது அவன் தாகத்தைத் தீர்ப்பாயாக; நீ இப்படிச்செய்தால் அவனுடைய தலையின்மேல் நெருப்புள்ள கரிகளைக் குவிப்பாய்.

௨௧ தீமையினாலே நீ செயிக்கப்படாமல், தீமையை நன்மையினாலே செயிப்பாயாக.

## ௰௩. அதிகாரம்.

௧. துரைத்தனத்தாருக்குச் செலுத்தவேண்டிய கீழ்ப்படிதல் முதலான கடமைகளைக் குறித்தது. ௮. அன்பு நியாயப்பிரமாணத்தை நிறைவேற்றுமென்றும், ௰௧. பெருந்திண்டி குடிமுதலிய பாவச்செய்கைகள் சுவிசேஷத்துக்கு ஒவ்வாதென்றும் காட்டியது.

[9]அதிகாரம் உள்ளவர்கள் பராபரனாலே அன்றி இருக்கமாட்டார்கள்; [10]ஆதலால் எந்த மனிதனும் அதிகாரம் உடையவர்களுக்குக் கீழ்ப்படியக்கடவன்; உண்டாயிருக்கிற அதிகாரிகள் பராபரனாலே நியமிக்கப்பட்டிருக்கிறார்கள்.†

௨ [11]ஆனதால் அதிகாரம் உள்ளவர்களுக்கு எதிர்த்து நிற்கிறவன் பராபரனுடைய நியமத்துக்கு எதிர்த்துநிற்கிறான்; அப்படிஎதிர்த்து நிற்கிறவர்கள் தங்களுக்குத்தாமே ஆக்கினை வரப்பண்ணுகிறார்கள்.

௩ மேலும் துரைகளானவர்கள் நற்கிரியைகளுக்கு அல்ல துர்க்கிரியைகளுக்குப் பயங்கொடுக்கிறவர்களாய் இருக்கிறார்கள்; ஆகையால் நீ அதிகாரத்துக்காகப் பயமில்லாதிருக்கவேண்டும் என்றிருந்தால், [12]நன்மை செய்வாயாக, அதினால் உனக்குப் புகழ்ச்சி உண்டாம்.

௪ உனக்கு நன்மை உண்டாகும்பொருட்டு அவன் பராபரனுடைய ஊழியக்காரனாயிருக்கிறான்; நீ தீமைசெய்தால் பயம் கொள்வாயாக; கட்கத்தை அவன் வீணாய்ப் பிடிக்கவில்லை; பொல்லாங்கைச் செய்கிறவன்மேல் கோபாக்கினை வரப்பண்ணும்படி அவன் நீதியைச்செலுத்துகிற தேவ ஊழியக்காரனாயும் இருக்கிறானே.

௫ ஆகையால் [13]நீங்கள் (அவர்களுக்குக்) கீழ்ப்படியவேண்டியதாயிருக்கின்றது; கோபாக்கினையின் நிமித்தமாத்திரம் அல்ல, [14]மனச்சாட்சியின் நிமித்தமும் அப்படிஇருக்கவேண்டும்.

௬ அதினாலே நீங்கள் (அவர்களுக்கு) வரிப்பணத்தையும் கொடுக்கிறீர்களே; அவர்கள் தங்கள் உத்தியோகத்தை இடைவிடாமல் பற்றிக்கொள்ளுகிற தேவ ஊழியக்காரர்களாய் இருக்கிறார்களே.

௭ ஆனபடியினாலே [15]எவர்களுக்கும் கடமைகளைச் செலுத்துவீர்களாக; வரியைச் செலுத்தவேண்டியது எவனுக்கோ, அவனுக்கு வரியைச் செலுத்துங்கள்; தீர்வையைச் செலுத்தவேண்டியது எவனுக்கோ, அவனுக்குத் தீர்வையைச் செலுத்துங்கள்; பயப்பட

---

கி. பி. ௫௰.

1 சங். ௧௩௧.௧,௨. எரே. ௪௫. ௫.
* அல்லது தாழ்மையானவைகளில் மனரம்மியமாயிருங்கள்.
2 வாக். ௩. ௭: ௨௬. ௰௨. ஏசா. ௫. ௨௧. உரோ. ௰௧. ௨௫.
3 வாக். ௨௰. ௨௨. மத். ௫. ௩௯. ௧ தெச. ௫. ௧௫. ௧ பே. ௩. ௯.
4 உரோ. ௰௪. ௰௬. ௨ கொரி. ௮. ௨௧.
5 மாற். ௯. ௫௦. உரோ. ௰௪. ௰௯. எபி. ௰௨. ௰௪.
6 உபா. ௩௨. ௩௫. எபி. ௰. ௩௦.
7 ௧ மோ. ௫௰. ௰௯. வாக். ௨௪. ௨௯. ௯. ௨௨.
8 ௨ மோ. ௨௩. ௪, ௫. வாக். ௨௫. ௨௧, ௨௨. மத். ௫. ௪௪.
9 வாக். ௮. ௰௫, ௰௬. தானி. ௨. ௨௧: ௪. ௩௨. யோவா. ௰௯. ௰௧.
10 தீத். ௩. ௧. ௧ பே. ௨. ௰௩.
† அல்லது கட்டளையிடப்பட்டிருக்கிறார்கள்.
11 தீத். ௩. ௧.
12 ௧ பே. ௨. ௰௪: ௩. ௰௩.
13 பிர. ௮. ௨.
14 ௧ பே. ௨. ௰௯.
15 மத். ௨௨. ௨௧. மாற். ௰௨. ௰௭. லூக். ௨௦. ௨௫.

Digitized by Google

வேண்டியது எவனுக்கோ, அவனுக்குப் பயப்படுங்கள், கனத்தைச் செலுத்தவேண்டியது எவனுக்கோ, அவனுக்குக் கனத்தைச் செலுத்துங்கள்.

அ ¶ ஒருவரில் ஒருவர் அன்பாயிருக்கிறதே அன்றி, மற்றொன்றும் ஒருவனுக்கும் கடன்படாதிருப்பீர்களாக; [1]மற்றவனில் அன்புகூருகிறவன் நியாயப்பிரமாணத்தை நிறைவேற்றுகிறானே.

௯ எப்படியென்றால் [2]விபசாரம் பண்ணாதிருப்பாயாக, கொலைசெய்யாதிருப்பாயாக, களவுசெய்யாதிருப்பாயாக, பொய்ச்சாட்சிசொல்லாதிருப்பாயாக, இச்சியாதிருப்பாயாக என்று இந்தக் கற்பனைகளும் வேறு எந்தக் கற்பனையும் [3]உன்மேல் அன்புகூருகிறதுபோல, பிறன்மேலும் அன்புகூர்வாயாக என்கிற ஒரே பிரமாணத்திலே தொகையாய் அடங்கியிருக்கின்றன.

௰ அன்பானது பிறனுக்குப் பொல்லாங்கைச் செய்யாது; ஆதலால் [4]அன்பு நியாயப்பிரமாணத்தை நிறைவேற்றுகிறதாய்இருக்கின்றது.

௰௧ ¶ மேலும் [5]நித்திரையை விட்டு எழுந்திருக்கத்தக்க வேளையாயிற்று என்று நாம் காலத்தை அறிந்திருக்கிறபடியால், இப்படி எச்சரிக்கிறேன்; அன்றியும் நாம் விசுவாசிகளானபொழுது இரட்சிப்பு சமீபமாயிருந்ததிலும் இப்பொழுது அது நமக்கு அதிக சமீபமாயிருக்கின்றது.

௰௨ இரவு சென்றுபோயிற்று; பகல் சமீபமாயிற்று. [6]ஆனபடியினாலே அந்தகாரத்தின் கிரியைகளை நாம் தள்ளிப்போட்டு, [7]ஒளியின் ஆயுதங்களைத் தரித்துக்கொள்ளக்கடவோம்.

௰௩ [8]பெருண்டியாவது, வெறிகொள்ளுதலையாவது, [9]வேசித்தனத்தையாவது, காமவிகாரத்தையாவது, [10]சண்டையையாவது, பொறாமையையாவது, நடப்பியாமல் பகலிலே நடக்கிறவர்கள் போல [11]யோக்கியமாய்* நடக்கக்கடவோம்.

௰௪ [12]துர்இச்சைகளுக்கு இடமாய் உங்கள் தேகத்தைப் போஷியாமல், [13]கர்த்தராகிய இயேசுக்கிறிஸ்துவைத் தரித்துக்கொள்வீர்களாக.

கி. பி. ௬௰.

1 ம. கூ. கலா. ௫ ௰௪. கொலோ. ௩. ௰௪. ௧ தீமோ. ௧. ௫. யாக். ௨. ௮.
2 ௨ மோ. ௨௰. ௰௩. ௫ மோ. ௫. ௰௭. ௰௮. ௰௯. ௨௰. ௰௯. ௰௮.
3 ௩ மோ. ௰௯. ௰௮. மத். ௨௨. ௩௯. மாற். ௰௨. ௩௧. கலா. ௫. ௰௪. யாக். ௨. ௮.
4 மத். ௨௨. ௪௰. ௨.
5 ௧ கொரி. ௰௫. ௩௪. எபே. ௫. ௰௪. ௧ தெச. ௫. ௫, ௬.
6 எபே. ௫. ௰௧. கொலோ. ௩. ௮.
7 எபே. ௬. ௰௩. ௧ தெச. ௫. ௮.
8 லூக். ௨௧. ௩௪. ௧ பே. ௪. ௩.
9 ௧ கொரி. ௬. ௯. எபே. ௫. ௫.
10 யாக். ௩. ௰௪.
11 பிலி. ௪. ௮. ௧ தெச. ௪. ௰௨. ௧ பே. ௨. ௰௨.
* அல்லது சீராய்.
12 கலா. ௫. ௰௬. ௧ பே. ௨. ௰௧.
13 கலா. ௩. ௨௭. எபே. ௪. ௨௪. கொலோ. ௩. ௰.
14 உரோ. ௰௫. ௧, ௭. ௧ கொரி. ௮. ௯; ௯. ௨௨.
† அல்லது சம்சயமுள்ள தர்க்கமில்லாமல்.
15 ௰௪. ௨௩. ௧ கொரி. ௰. ௨௫. ௧ தீமோ. ௪. ௪. தீத். ௧. ௰௫.
16 கொலோ. ௨. ௰௬.
17 யாக். ௪. ௰௨.
18 கலா. ௪. ௰. கொலோ. ௨. ௰௬.
‡ அல்லது நம்பிக்கையை.

## ௰௪. அதிகாரம்.

௧. சொற்பமானவைகளில் ஒருவனை ஒருவன் குற்றஞ்சாற்றவும், அசட்டைபண்ணவும் கூடாதென்றும், ௰௩. அவைகளினால் ஒருவருக்கொருவர் விதனம் உண்டாக்காதிருக்கவேண்டுமென்றும், ௨௰. கிருபம் காட்டியது.

[14]விசுவாசத்தில் பலஈனமுள்ளவனுடைய நினைவுகளை நீங்கள் குற்றமாய் எண்ணாமல், †அவனைச் சேர்த்துக்கொள்ளுங்கள்.

௨ [15]ஒருவன் எல்லாப் பதார்த்தங்களையும் புசிக்கலாம் என்று நம்புகிறான்; பலஈனமுள்ள மற்றொருவன் மரக்கறிகளைமாத்திரம் புசிக்கிறான்.

௩ புசிக்கிறவன் புசியாதிருக்கிறவனை அசட்டைபண்ணாதிருப்பானாக; [16]புசியாமலிருக்கிறவனும் புசிக்கிறவனைக் குற்றமுள்ளவன் என்று நினையாதிருப்பானாக; பராபரன் அவனைச் சேர்த்துக்கொண்டாரே.

௪ [17]மற்றொருவனுடைய வேலைக்காரனைக்குற்றமுள்ளவன் என்று தீர்க்கிற நீ யாவன்? அவன் நின்றாலும் விழுந்தாலும் அவனுடைய சொந்த எசமானே அவனை விசாரிப்பான்; மேலும் பராபரன் அவனை நிலைநிறுத்த வல்லவரானபடியால் அவன் நிலைநிறுத்தப்படுவான்.

௫ ¶ அன்றியும் [18]ஒருவன் ஒரு நாளை மற்ற நாளிலும் விசேஷமாக எண்ணுகிறான்; வேறொருவன் எல்லா நாள்களையும் சரியாய் எண்ணுகிறான்; (அதைக்குறித்து) அவனவன் தன் மனதிலே முழு நிச்சயத்தை‡ உடையவனாய் இருக்கக்கடவன்.

Digitized by Google

௬ [1]ஒருநாளை விசேஷித்துக்கொள்ளுகிறவன்* கர்த்தருக்கென்று அப்படிச் செய்கிறான்; நாள்களை விசேஷித்துக்கொள்ளாமல் இருக்கிறவனும் கர்த்தருக்கென்று அப்படிச் செய்கிறான்; புசிக்கிறவன் பராபரனுக்குத் தோத்திரம் செலுத்துகிறபடியால்,கர்த்தருக்கென்று புசிக்கிறான்; புசியாமல் இருக்கிறவனும் கர்த்தருக்கென்று புசியாமலிருந்து [2]பராபரனுக்குத் தோத்திரம்செலுத்துகிறான்.

௭ [3]நம்மில் யாவனும் தனக்காகப் பிழைக்கிறதும் இல்லை; யாவனும் தனக்காக மரிக்கிறதும் இல்லையே; நாம் பிழைக்கிறது கர்த்தருக்காகப் பிழைக்கிறோம்; மரிக்கிறது கர்த்தருக்காக மரிக்கிறோம்.

௮ ஆகையால் நாம் பிழைத்தாலும் மரித்தாலும் கர்த்தருடையவர்களாயே இருப்போம்.

௯ [4]அதற்காகக் கிறிஸ்துவும் மரித்தோர்மேலும் சீவனுள்ளோர்மேலும் [5]ஆண்டவராயிருக்கும்பொருட்டாக மரித்தும் எழுந்தும் உயிரடைந்தும் இருக்கிறார்.

௰ ¶ இப்படியிருக்க, நீ உன் சகோதரனைக் குற்றமுள்ளவன் என்று நினைக்கிறதென்ன? அல்லது, உன் சகோதரனை அசட்டை பண்ணுகிறதென்ன? [6]நாம் எல்லாரும் கிறிஸ்துவினுடைய நியாயாசனத்திற்குமுன்பாக நிறுத்தப்படுவோமே.

௰௧ [7]நான் சீவனுள்ளவன்; முழங்கால் யாவும் எனக்குமுன்பாக முடங்கும்; நாவுகள் யாவும் பராபரனை அறிக்கைபண்ணுமென்று பராபரன் திருவுளம்பற்றுகிறார் என்று எழுதியிருக்கிறதல்லவோ?

௰௨ [8]அந்தப்படி நம்மில் அவனவன் தன்தன்னைக்குறித்துப் பராபரனுக்குக் கணக்கு ஒப்புவிப்பான்.

௰௩ ¶ ஆதலால் நாம் இனிமேல் ஒருவரை ஒருவர் குற்றமுள்ளவர்களென்று எண்ணாதிருப்போமாக; [9]வழுவுதற்காவது விழுதற்காவது எதையாகிலும் சகோதரனுக்குமுன்பாக வைத்துப்போடாதபடிக்கே எண்ணமுள்ளவர்கள் ஆவீர்களாக.

௰௪ நான் கர்த்தராகிய இயேசுவினாலே அறிந்திருக்கிறபடி, [10]ஒரு பொருளை அசுத்தம்† என்று எண்ணிக்கொள்ளுகிறவனுக்கு அது அசுத்தமாயிருக்கிறதே அன்றி, [11]ஒரு பொருளும் தானாய் அசுத்தம்‡ இல்லை.

௰௫ அன்றியும் புசிக்கிறதினாலே உன்சகோதரனுக்கு விதனம் உண்டாக்கினால், நீ அன்பாய்§ நடக்கிறவன் அல்ல, அவனுக்காகக் கிறிஸ்து மரித்தாரே; [12]அப்படிப்பட்டவனை உன் போசனத்தினாலே கெடுத்துப்போடாதிருப்பாயாக.

௰௬ [13]உங்கள் நன்மை தூஷணிக்கப்படாதிருப்பதாக.

௰௭ [14]பராபரனுடைய இராச்சியம் புசிப்பினாலும் குடிப்பினாலும் அல்ல, நீதியினாலும் சமாதானத்தினாலும் பரிசுத்தஆவியால் வருகிற சந்தோஷத்தினாலும் பொருந்தியிருக்கின்றது.

௰௮ ¶ [15]இவைகளாலே கிறிஸ்துவுக்கு ஊழியம்செய்கிறவன் பராபரனுக்குப் பிரியமானவனுமாய், மனிதருக்குப் பாத்திரனுமாய் இருக்கிறான்.

௰௯ இப்படியிருக்க, [16]சமாதானத்திற்கும் [17]யாவரையும் ஐக்கப்படுத்துதற்கும் ஏற்றவைகளைத் தேடிக்கொள்ளக்கடவோம்.

௨௰ [18]போசனத்தின்நிமித்தம் பராபரனுடைய கிரியையை அழித்துப்போடாதிருப்பாயாக; [19]எந்தப் பதார்த்தமும் சுத்தமுள்ளதுதான்; (மற்றவன்) விழுதற்கு ஏதுவாகும்படி [20]எதையாகிலும் புசிக்கிறவனுக்கே அது தீமையாயிருக்கும்.

௨௧ உன் சகோதரன் வழுவுதற்காவது, விழுதற்காவது, பலஈனமாகுதற்காவது ஏதுவான [21]மாம்

---

௯. பி. ௬௰௰.

1 கலா. ௪. ௰.
* அல்லது ஆசரித்துக் கொள்ளுகிறவன்.
2 ௧ கொரி. ௰. ௩௧. ௧ தீமோ. ௪. ௩.
3 ௧ கொரி. ௬. ௰௯, ௨௰. கலா. ௨. ௨௰. ௧ தெச. ௫. ௰. ௧ பே. ௪. ௨.
4 ௨ கொரி. ௫. ௰௫.
5 அப். ௰. ௩௬.
6 மத். ௨௫. ௩௧, ௩௨. அப். ௰. ௪௨: ௰௭. ௩௧. ௨ கொரி. ௫. ௰. யூதா. ௰௪. ௰௫.
7 ஏசா. ௪௫. ௨௩. பிலி. ௨. ௰.
8 மத். ௰௨. ௩௬. கலா. ௬. ௫. ௧ பே. ௪. ௫.
9 ௧ கொரி. ௮. ௯, ௰௩: ௰. ௩௨.
10 ௧ கொரி. ௮. ௭, ௰.
† கிரேக்கு, பொது.
11 அப். ௰. ௰௫. ௨௰. ௯, ௧ கொரி. ௰. ௨௫. ௧ தீமோ. ௪. ௪. தீத். ௧. ௰௫.
‡ கிரேக்கு, பொது.
§ கிரேக்கு, அன்பின்.
12 ௧ கொரி. ௮. ௰௧.
13 ௨ கொரி. ௬௨. ௬௩.
14 ௧ கொரி. ௮. ௮.
15 ௨ கொரி. ௮. ௨௧.
16 சங். ௩௪. ௰௪. உரோ. ௰௨. ௰௮.
17 உரோ. ௰௫. ௨. ௧ கொரி. ௰௪. ௰௨. ௧ தெச. ௫. ௰௧.
18 ௰௫. ௩௪.
19 மத். ௰௫. ௰௧. அப். ௰ ௰௫ ௰௪. தீத். ௧. ௰௫.
20 ௧ கொரி. ௮. ௯, ௰, ௰௧, ௰௨.
21 ௧ கொரி. ௮. ௰௩.

Digitized by Google

சத்தைப் புசியாமலும், இரசத்தைப் பானம்பண்ணுமலும், மற்ற எதையாகிலும் செய்யாமலும் இருக்கிறதே நன்மையாயிருக்கின்றது.

௨௨ நீ நிச்சய அறிவுள்ளவனுனல், அதைப் பராபரனுக்குமுன்பாக நீ தானுய்க் கொள்வாயாக; ஒருவன் தான் சம்மதிக்கிற பொருளினுலே தனக்குக் குற்றம் வரப்பண்ணுதிருந்தால், [1]அவன் பாக்கியவானுயிருப்பான்.

௨௩ (போசன பதார்த்தங்களுக்குள்ளே,) வித்தியாசம்பண்ணுகிறவன்* (அவைகளை) நிச்சய அறிவில்லாமல் புசித்தபடியினுலே ஆக்கினைக்கு ஏதுவாயிருப்பான்; [2]நிச்சய அறிவினுலே வாராத யாவும் பாவமாயிருக்கின்றன.

## ௰௫. அதிகாரம்.

௧. பலமுள்ளோர் பலவீனரைத் தாங்கவேண்டுமென்பது. ௨. கிறிஸ்து தம்மைப் பிரியப்படுத்தாமல் யூதர்களையும் அஞ்ஞானிகளையும் ஏற்றுக்கொண்டதுபோல, நாமும் நம்மைப் பிரியப்படுத்தாமல் ஒருவரை ஒருவர் ஏற்றுக்கொள்ளவேண்டுமென்பது. ௰௫. பவுல் நிருபத்தை எழுதினதற்காக நியாயஞ்சொல்லி, ௨௯. அவர்களை வந்து காண்பேனென்று வாக்குத்தத்தம்பண்ணி, ௩௰. அவர்கள் தனக்காக வேண்டிக்கொள்ளும்படி கேட்டுக்கொண்டது.

ஆனபடியினுலே [3]பலமுள்ளவர்களாகிய நாம் [4]பலஈனமுள்ளவர்களுடைய பலஈனங்களைப் பொறுமையோடே சகிக்கவேண்டும்; அல்லாமலும் நாம் நமக்குப் பிரியமாய் நடவாமல்,

௨ [5]அவனவன் தன்தனக்கடுத்த பிறனுடைய ஞான வளர்ப்புக்கு ஏதுவான [6]நன்மை உண்டாகும்படி அவனுக்குப் பிரியமாய் நடக்கக்கடவோம்.

௩ [7]கிறிஸ்துவானவரும் தமக்குப் பிரியமாய் நடவாமல், [8]உம்மை நிந்திக்கிறவர்களுடைய நிந்தைகள் என்மேல் விழுந்தன என்று எழுதியிருக்கிறபடி நடந்தார்.

௪ அன்றியும் வேதவாக்கியங்கள் திருட்டாந்தப்படுத்தின பொறுமையினுலும் ஆறுதலினுலும் நாம் நம்பிக்கையுள்ளவர்கள் ஆகும்பொருட்டாய், முன்பு [9]எழுதியிருக்கிறவைகள் எல்லாம் நமக்குப் போதகமாக எழுதப்பட்டிருக்கின்றன.

௫ [10]அந்தப்படி பொறுமையையும் ஆறுதலையும் கொடுக்கிற பராபரன், நம்முடைய கர்த்தராகிய இயேசுக்கிறிஸ்துவுக்குத் தேவனும் [11]பிதாவுமானவரை நீங்கள் ஐக்கமாய் ஒரே வாயினுலே துதிக்கும்படிக்கு,

௬ கிறிஸ்து இயேசுவினுடைய சித்தத்தின்படியே† ஒருவருக்கொருவர் ஒரேவிதமான சிந்தையுள்ளவர்களாய் இருப்பதற்கு அநுக்கிரகம்செய்வாராக.

௭ ¶ அப்படியே [12]பராபரனுக்குப் புகழ்ச்சி உண்டாகத்தக்கதாய்க் கிறிஸ்து நம்மைச் சேர்த்துக்கொண்டதுபோல, [13]நீங்களும் ஒருவரை ஒருவர் சேர்த்துக்கொள்ளுங்கள்.

௮ (இதைக்குறித்து) நான் பின்னும் சொல்லுகிறதாவது: [14]பிதாக்களுக்குப் பண்ணப்பட்ட வாக்குத்தத்தங்களை உறுதியாக்கும்படிக்கு, [15]பராபரனுடைய சத்தியத்தின்நிமித்தம் இயேசுக்கிறிஸ்து விருத்தசேதனம் உள்ளவர்களுக்கு ஊழியக்காரரானுர்.

௯ [16]புறத்தேசத்தாரும் (அவருடைய) இரக்கத்திற்காகப் பராபரனைத் துதிக்கும்படிக்கு அப்படியானுர்; ஆதலால் எழுதியிருக்கிறதாவது: [17]இதின்நிமித்தம் நான் புறத்தேசத்தாருக்குள்ளே உம்மை அறிக்கைபண்ணி, உம்முடைய நாமத்தைச் சொல்லி, சங்கீதம்பாடுவேன் என்பதே; மறுபடியும் அவன் சொல்லியிருக்கிறது.

௰ [18]புறத்தேசத்தார்களே, அவருடைய சனங்களோடேகூடச் சந்தோஷப்படுங்கள் என்பதே.

௰௧ மறுபடியும் அவன் சொன்னது: எல்லாப் புறத்தேசத்தார்களே, [19]பராபரனைத் துதியுங்கள்;

கி. பி. ௫௰.

1 ௧ யோ. ௩. ௨௧.
* அல்லது சந்தேகங்கொள்ளுகிறவன்.
2 தீத். ௧. ௰௫.
3 கலா. ௬. ௧.
4 உரோ. ௰௪. ௧.
5 ௧ கொரி. ௯. ௰௯, ௨௨: ௰. ௨௪, ௩௩: ௰௩. ௫. பிலி. ௨. ௪, ௫.
6 உரோ. ௰௪. ௰௯.
7 மத். ௨௬. ௩௯. யோவா. ௫. ௩௰: ௬. ௩௮.
8 சங். ௬௯. ௯.
9 உரோ. ௪. ௨௩, ௨௪. ௧ கொரி. ௯. ௯, ௰: ௰. ௰௧. ௨ தீமோ. ௩. ௰௬, ௰௭.
10 உரோ. ௰௨. ௰௬. ௧ கொரி. ௧. ௰. பிலி. ௩. ௰௬.
11 அப். ௪. ௨௪, ௩௨.
† அல்லது மாதிரியின்படியே.
12 உரோ. ௫. ௨.
13 உரோ. ௰௪. ௩, ௯.
14 உரோ. ௩. ௩. ௨ கொரி. ௧. ௨௰.
15 மத். ௰௫. ௨௪. யோவா. ௧. ௰௧. அப். ௩. ௨௫, ௨௬: ௰௩. ௪௬.
16 யோவா. ௰. ௰௬. உரோ. ௯. ௨௪.
17 சங். ௰௮. ௪௯.
18 ௫ மோ. ௩௨. ௪௩.
19 சங். ௱௱௭. ௧.

Digitized by Google

எல்லாச் சனங்களே, அவரை மிகவும் துதியுங்கள் என்றான்.

௰௨ ஏசாயாவும்சொன்னது:[1] ஈசாயின் வேர் இருக்கும்; புறத்தேசத்தாரை ஆளும்படி எழும்புவாரும் இருப்பார்; அவரில் புறத்தேசத்தார்கள் நம்பிக்கையாய் இருப்பார்கள் என்றான்.

௰௩ அந்தப்படியே நீங்கள் பரிசுத்தஆவியின் பலத்தினாலே அந்த நம்பிக்கையை அதிகமாய் அடையும்படிக்கு நம்பிக்கைக்கு ஏதுவான பராபரன் [2]விசுவாசத்தினால் உண்டாகும் எல்லாவித சந்தோஷத்தினாலும் சமாதான சவுக்கியத்தினாலும் உங்களை நிரப்புவாராக.

௰௪ ¶ [3]என் சகோதரரே, நீங்கள் தாமே நற்குணத்தினால் நிறைந்தவர்களுமாய், சகல அறிவினாலும் நிறைந்தவர்களுமாய், [4]ஒருவருக்கொருவர் புத்திசொல்ல வல்லவர்களுமாயிருக்கிறீர்கள் என்று நானும் உங்களைக்குறித்து நிச்சயமாய் அறிந்திருக்கிறேன்.

௰௫ [5]அப்படியிருந்தும் சகோதரரே, பராபரன் எனக்குக் கொடுத்த கிருபையினாலே நான் உங்களுக்கு ஞாபகப்படுத்தும்படிக்கு, இவைகளை அதிக தயிரியமாய் எழுதினேன்.

௰௬ [6]புறத்தேசத்தார்கள் பரிசுத்த ஆவியினாலே பரிசுத்தமாக்கப்பட்டுப் பராபரனுக்கு மிகவும் பிரியமான பலியாகும்படிக்கு,* [7]நான் புறத்தேசத்தாருக்கு இயேசுக்கிறிஸ்துவினுடைய ஊழியக்காரனாய்ப் பராபரனுடைய சுவிசேஷத்திற்கு ஏற்ற ஆராதனைசெய்யும்பொருட்டு, (அந்தக் கிருபை எனக்கு உண்டாயிற்று).

௰௭ ஆதலால் நான் இயேசுக்கிறிஸ்துவைக்கொண்டு [8]பராபரனுக்கு உரியவைகளைக்குறித்து மேன்மைபாராட்டுதற்கு முகாந்தரம் உண்டு.

௰௮ ஆனபடியினாலே கிறிஸ்துவானவர் என்னாலே [9]நடப்பியாதவைகளில் ஒன்றையுங்குறித்துப் பேசத் துணியாமல்,

௰௯ [10]புறத்தேசத்தார் வார்த்தையிலும் செய்கையிலும் விசுவாசத்திற்குக் கீழ்ப்படியும்படிக்கு, எருசலேம் நகரத்தைத் தொடங்கி அதைச்சூழ்ந்ததிசையிலேயும் இல்லீரிக்குத் தேசம்வரைக்கும் கிறிஸ்துவினுடைய சுவிசேஷத்தை விஸ்தாரமாய்ப் பிரசங்கிக்கத்தக்கதாக [11]அற்புதங்கள் அதிசயங்கள் என்று இவைகளின் பலத்தினாலும் பரிசுத்த ஆவியினுடைய பலத்தினாலும் அவர் என்னாலே நடப்பித்தவைகளைக்குறித்துமாத்திரம் பேசத் துணிகிறேன்.

௨௰ மேலும் [12]அவரைக்குறித்து அறிவை அடையாதவர்கள் அவரைப் பார்ப்பார்கள் என்றும், கேள்விப்படாதவர்கள் அறிந்துகொள்வார்கள் என்றும் எழுதியிருக்கிறபடியே,

௨௧ [13]நான் மற்றொருவனுடைய அஸ்திபாரத்தின்மேலே கட்டாதபடிக்கு, கிறிஸ்துவின் நாமம் சொல்லப்பட்டிராத இடங்களிலே சுவிசேஷத்தை அறிவிக்கும்படி, அதிக கருத்துள்ளவனாய் இருக்கிறேன்.

௨௨ ¶ [14]அதினாலே நான் உங்களிடத்தில் வருகிறதற்கு அநேகந்தரம்† தடை உண்டாயிற்று.

௨௩ இப்பொழுது நான் இந்தத் திசைகளிலே இருக்கிறதற்கு இடம் இல்லாதபடியினாலும், [15]உங்களிடத்துக்கு வரும்படி அநேக வருஷங்களாய் எனக்கு மிகுந்த விருப்பம் உண்டாயிருந்தபடியினாலும்,

௨௪ நான் இஸ்பானியா தேசத்திற்குப் பிரயாணமாய்ப் போகும்பொழுது, உங்களிடத்தில் வந்து உங்களைக் கண்டுபேசவும், உங்களோடு‡ இருக்கிறதினாலே முந்திச் சற்று மனச்சந்தோஷம் அடைந்தபின்பு [16]அவ்வழியே உங்களால்

கி. பி. ௬௰.

1 ஏசா. ௰௧. ௧, ௰. வெளி. ௫. ௫: ௨௨. ௰௬.
2 உரோ. ௰௨. ௰௨: ௰௪. ௰௭.
3 ௨ பே. ௧. ௰௨. ௧ யோ. ௨. ௨௧.
4 ௧ கொரி. ௮. ௧, ௭, ௰.
5 உரோ. ௧. ௪: ௰௨. ௧. கலா. ௧. ௰௫. எபே. ௧. ௭, ௮.
6 ஏசா. ௬௬. ௨௰. பிலி. ௨. ௰௭.
* அல்லது காணிக்கை.
7 உரோ. ௰௬. ௰௬. கலா. ௨. ௭, ௮, ௯. ௧ தீமோ. ௨. ௭. ௨ தீமோ. ௧. ௰௧.
8 எபி. ௫. ௧.
9 அப். ௨௧. ௰௯. கலா. ௨. ௮.
10 உரோ. ௧. ௫: ௰௬. ௨௬.
11 அப். ௰௯. ௰௧. ௨ கொரி. ௰௨. ௰௨.
12 ஏசா. ௫௨. ௰௫.
13 ௨ கொரி. ௰. ௰௩, ௰௫, ௰௬.
14 உரோ. ௧. ௰௩. ௧ தெச. ௨. ௰௭, ௰௮.
† அல்லது மிகுதியாய்.
15 அப். ௰௯. ௨௧. ௩௰ வச. உரோ. ௧. ௰௧.
‡ அல்லது உங்கள் இனத்தோடு; ௨௪. வச.
16 அப். ௰௫. ௩.

Digitized by Google

அனுப்பிவிடப்படவும் நம்பியிருக்கிறேன்.

௨௫ இப்பொழுது [1]மக்கேதோனியா நாட்டிலும் அகாயாநாட்டிலும் உள்ள சபையார் எருசலேமில் இருக்கிற பரிசுத்தவான்களுக்குள்ளே இருக்கிற ஏழைகளுக்காகச் சில தருமங்களைச் சேர்த்துக்கொள்ளப் பிரியமானபடியினாலே,

௨௬ [2]நான் எருசலேமிலுள்ள பரிசுத்தவான்களுக்கு ஊழியம் செய்யும்படி அவ்விடத்திற்குப் பிரயாணமாய்ப்போக எத்தனமாயிருக்கிறேன்.

௨௭ அப்படிப்பட்ட பிரியமுள்ளவர்கள் ஆவதற்கு அவர்களுடைய கடனாளிகளாயும் இருக்கிறார்கள்; எப்படியென்றால், [3]புறத்தேசத்தார் அவர்களுடைய ஞான நன்மைகளில் பங்குபெற்றிருக்க, (தங்கள்) [4]சரீர நன்மைகளால் அவர்களுக்கு ஊழியம்செய்ய நியாயமாயிருக்கின்றதே.

௨௮ இந்த ஊழியத்தை நான் நிறைவேற்றி, [5]இந்தப் பலனை அவர்கள் கையிலே பத்திரப்படுத்தினபின்பு, உங்கள் ஊர்வழியாய் இஸ்பானியா தேசத்திற்குச் செல்லுவேன்.

௨௯ [6]நான் உங்களிடத்தில் வரும்பொழுது, கிறிஸ்துவினுடைய சுவிசேஷத்திலுள்ள சம்பூரணமான ஆசீர்வாதங்களோடே வருவேனென்று அறிந்திருக்கிறேன்.

௩௰ ¶ மேலும் சகோதரரே, [7]யூதேயா தேசத்தில் இருக்கிற அவிசுவாசிகளுக்கு* நான் தப்புவிக்கப்படும்படிக்கும், [8]பராபரனுடைய சித்தத்தினாலே [9]நான் சந்தோஷத்துடனே உங்களிடத்திற்கு வந்து [10]உங்களோடேகூடச் சவுக்கியப்படத்தக்கதாக,

௩௧ [11]நான் எருசலேமிலுள்ள பரிசுத்தவான்களுக்குச் செய்யப்போகிற ஊழியம் அவர்களுக்குப் பிரியமாயிருக்கும்படிக்கும்,

௩௨ [12]என்னோடேகூட நீங்கள் எனக்காகப் பராபரனை நோக்கி, போராட்டமாய்ச் செபம்பண்ணவேண்டும் என்று நம்முடைய கர்த்தராகிய இயேசுக்கிறிஸ்துவின் நிமித்தமும் [13]ஆவியானவரால் வரும் அன்பின் நிமித்தமும் உங்களை வேண்டிக்கொள்ளுகிறேன்.

௩௩ [14]சமாதானத்தை அளிக்கிற பராபரன் உங்கள் அனைவரோடுங்கூட இருக்கக்கடவர்.—ஆமென்.

## ௰௬. அதிகாரம்.

௧. பவுல் அநேகருக்குச் சகோதர வாழ்த்துதல் சொல்லவும், ௰௭. பிரிவினைகளையும், இடறல்களையும் உண்டுபண்ணுகிறவர்களைக்குறித்து எச்சரிக்கையாயிருக்கவும் காட்டி, ௨௫. அநேக விஷயங்களை அறிவித்து, பராபரனுக்குத் துதியும் தோத்திரமும் செலுத்தி நிருபத்தை முடித்தது.

பரிசுத்தவான்களுக்கு ஏற்றபடி நீங்கள் [15]கெங்கிரேயா ஊரின் சபைக்கு ஊழியக்காரியாகிய நம்முடைய சகோதரி வொய்பேயாளைக் கர்த்தரைப்பற்றி இருக்கிறவள் என்று [16]உபசாரம் செய்து,

௨ அவளுக்கு உங்கள் உதவி வேண்டிய காரியம் ஏதோ, அதிலே அவளுக்கு உதவியாய் இருக்கவேண்டுமென்று அவளை உங்களுக்கு ஒப்புவிக்கிறேன்; அவளும் அநேகருக்கும் எனக்குங்கூட ஆதரவாய் இருந்தாளே.

௩ ¶ கிறிஸ்து இயேசுவினிடத்தில் என்னுடனேகூட வேலையாள்களாகிய [17]பிரிஸ்கில்லாளையும் ஆக்கில்லாவையும் வாழ்த்துதல் செய்யுங்கள்.

௪ அவர்கள் என் பிராணனுக்காகத் தங்கள் கழுத்தையும் நீட்டினவர்கள்; அவர்களுக்கு நான்மாத்திரமல்ல, புறத்தேசத்தாரில் உண்டான சபையார் எல்லாரும் நன்றியறிதலைக் காண்பிக்கத்தக்கது.

௫ [18]அவர்களுடைய வீட்டிலே கூடிவருகிற சபையையும் வாழ்த்துங்கள், அகாயா நாட்டிலே [19]கிறிஸ்துவுக்கு முதற்பலனாகிய என

கி. பி. ௫௰.

1 ௧ கொரி. ௰௬. ௧,௨. ௨ கொரி. ௮. ௨: ௯. ௨, ௰௨.
2 அப். ௰௯. ௨௧: ௨௰. ௨௨: ௨௪. ௰௭.
3 உரோ. ௰௧ ௰௭.
4 ௧ கொரி. ௯. ௰௧. கலா. ௬ ௬.
5 பிலி. ௪. ௰௭.
6 உரோ. ௧. ௰௧.
7 ௨ தெச. ௩. ௨.
* அல்லது கீழ்ப்படியாதவர்களுக்கு.
8 அப் ௰௮. ௨௧. ௧ கொரி. ௪. ௰௯. யாக். ௪. ௰௫.
9 உரோ. ௧. ௰.
10 ௧ கொரி. ௰௬. ௰௮. ௨ கொரி. ௭ ௰௩. ௨ தீமோ. ௧. ௰௬. பிலே. ௭. ௨௰.
11 ௨ கொரி. ௮. ௪.
12 ௨ கொரி. ௧. ௰௧. கொலோ. ௪. ௰௨.
13 பிலி. ௨. ௧.
14 உரோ. ௰௬. ௨௰. ௧ கொரி. ௰௪. ௩௩. ௨ கொரி. ௰௩. ௰௧. பிலி. ௪. ௯. ௧ தெச. ௫. ௨௩. ௨ தெச. ௩. ௰௬. எபி. ௰௩. ௨௰.
15 அப். ௰௮. ௰௮.
16 பிலி. ௨. ௨௯. ௩ யோ. ௫. ௬.
17 அப். ௰௮. ௨, ௰௮. ௨௬. ௨ தீமோ. ௪. ௰௯.
18 ௧ கொரி. ௰௬. ௰௯. கொலோ. ௪. ௰௫. பிலே. ௨.
19 ௧ கொரி. ௰௬. ௰௫

Digitized by Google

குப் பிரியமான எப்பெனெத்து என்பவனை வாழ்த்துங்கள்.

௬ எங்களுக்காக மிகவும் பிரயாசப்பட்ட மரியாளை வாழ்த்துங்கள்.

௭ அப்போஸ்தலர்களால் புகழ்ச்சி அடைந்தவர்களுமாய்,[1]எனக்கு முந்திக் கிறிஸ்துவுக்கு உள்ளானவர்களுமாய், என் இனத்தாருமாய், என்னுடனே கூடக் காவலில் வைக்கப்பட்டிருக்கிறவர்களுமாய் இருக்கிற அந்திரோனிக்கையும் யூனியாவையும் வாழ்த்துங்கள்.

௮ கர்த்தாவினுலே எனக்குப் பிரியமான அம்பிலியாவை வாழ்த்துங்கள்.

௯ கிறிஸ்துவினிடத்திலே நம்முடனேகூட வேலையாளாகிய உருபானுவையும் எனக்குப் பிரியமான இஸ்தாகுவையும் வாழ்த்துங்கள்.

௰ கிறிஸ்துவினிடத்தில் உண்மையான அப்பெல்லேயை வாழ்த்துங்கள்; அரிஸ்தோபுலியினுடையவர்களை* வாழ்த்துங்கள்.

௰௧ என் இனத்தானாகிய எரோதியோனை வாழ்த்துங்கள்; கர்த்தரைப்பற்றி இருக்கிறவர்களாகிய நருக்கீசுவினுடையவர்களை† வாழ்த்துங்கள்.

௰௨ கர்த்தாவின் நிமித்தம் பிரயாசப்படுகிற திரிபேனாளையும் திரிபோசாளையும் வாழ்த்துங்கள்; கர்த்தாவின்நிமித்தம் மிகவும் பிரயாசப்பட்டு, எனக்குப் பிரியமாயிருக்கிற பெர்சிசாளை வாழ்த்துங்கள்.

௰௩ [2]கர்த்தராலே தெரிந்துகொள்ளப்பட்ட உரூப்புவையும் எனக்கும் அவனுக்கும் தாயானவளையும் வாழ்த்துங்கள்.

௰௪ அசிங்கிரித்துவையும் பிலேகோனையும் எர்மாவையும் பத்திரோபாவையும் எருமேயையும் அவர்களுடனே இருக்கிற சகோதரரையும் வாழ்த்துங்கள்.

௰௫ பிலொலோகையும் யூலியாளையும் நேரேயையும் அவனுடைய சகோதரியையும் ஒலிம்பாவையும் அவர்களோடிருக்கிற பரிசுத்தவான்கள் எல்லாரையும் வாழ்த்துங்கள்.

௰௬ [3]ஒருவரையொருவர் பரிசுத்தமாய் முத்தம்செய்து வாழ்த்துங்கள்; கிறிஸ்துவின் சபையார்கள் உங்களை வாழ்த்துகிறார்கள்.

௰௭ ¶ மேலும் சகோதரரே, நீங்கள் கற்றுக்கொண்ட உபதேசத்திற்கு விரோதமாய்ப் பிரிவினைகளையும் விழுதற்கு ஏதுவானவைகளையும் [4]உண்டாக்குகிறவர்களை [5]ஆராய்ந்து பார்க்கவேண்டுமென்று உங்களுக்குப் புத்திசொல்லுகிறேன்.

௰௮ அப்படிப்பட்டவர்கள் நம்முடைய கர்த்தராகிய இயேசுக்கிறிஸ்துவுக்கு அல்ல, [6]தங்கள் வயிற்றுக்கு ஊழியம்செய்து, [7]நயவசனிப்பினுலும் ஆசீர்வாதம்சொல்லுகிறதினுலும் பேதைமையானவர்களுடைய இருதயங்களை வஞ்சிக்கிறவர்களானபடியினுலே, நீங்கள் அவர்களைவிட்டு விலகுவீர்களாக.

௰௯ [8]நீங்கள் கீழ்ப்படிகிறவர்கள் என்பது யாவருக்கும் தெரியவந்திருக்கின்றது; ஆகையால் உங்களைக்குறித்துச் சந்தோஷப்படுகிறேன்; [9]மேலும் நீங்கள் நன்மைக்கு ஞானிகளுமாய், தீமைக்குப் பேதைகளுமாய்‡ இருக்கவேண்டும் என்று விரும்புகிறேன்.

௨௰ [10]மேலும் சமாதானசவுக்கியத்தை அளிக்கிற பராபரன் சீக்கிரமாய்ச் [11]சாத்தானை உங்கள் கால்களின்கீழே நசுக்கிப்போடும்படி§ செய்வார்; [12]நம்முடைய கர்த்தராகிய இயேசுக்கிறிஸ்துவினுடைய கிருபை உங்களுடனேகூட இருக்கக்கடவது.—ஆமன்.

௨௧ [13]என் உடன்வேலையாளாகிய தீமோத்தேயும் என் இனத்தாராகிய இலூக்கியும் [14]இயாசோனும்

கி. பி. ௬௰.

1 சலா. ௧. ௨௨.
* அல்லது குடும்பத்தாரை.
† அல்லது குடும்பத்தாரை.
2 ௨ யோ. ௨.
3 ௧ கொரி. ௰௬. ௨௰. ௨ கொரி. ௰௩. ௰௨. ௧ தெச. ௫. ௨௬. ௧ பே. ௫. ௰௪.
4 அப். ௰௫. ௧, ௫, ௨௪. ௧ தீமோ. ௬. ௩.
5 ௧ கொரி. ௫. ௬,௰௧. ௨ தெச. ௩. ௬, ௰௪. ௨ தீமோ. ௩. ௫. தீத். ௩. ௰. ௨ யோ. ௰.
6 பிலி. ௩. ௰௯. ௧ தீமோ. ௬. ௫.
7 கொலோ. ௨. ௪. ௨ தீமோ. ௩. ௬. தீத். ௧. ௰. ௨ பே. ௨. ௩.
8 ௨ரோ. ௧. ௮.
9 மத். ௰. ௰௬. ௧ கொரி. ௰௪. ௨௰.
‡ அல்லது மாசற்றவர்களாய்.
10 ௨ரோ. ௰௫. ௩௩.
11 ௧ மோ. ௩. ௰௫.
§ அல்லது மிதித்துப்போடும்படி.
12 ௨௪. வசனம். ௧ கொரி. ௰௬. ௨௩. ௨ கொரி. ௰௩. ௰௪. பிலி. ௪. ௨௩. ௧ தெச. ௫. ௨௮. ௨ தெச. ௩. ௰௮. வெளி. ௨௨. ௨௧.
13 அப். ௰௬. ௧. பிலி. ௨. ௰௯. கொலோ. ௧. ௧. ௧ தெச. ௩. ௨. ௧ தீமோ ௧. ௨. எபி. ௰௩. ௨௩.
14 அப். ௰௭. ௫.

Digitized by Google

[1]சோசிப்பத்தரும் [2]உங்களை வாழ்த்துகிறார்கள்.

௨௨ இந்த நிருபத்தை எழுதின தெர்த்தி என்னப்பட்ட நான் கர்த்தராலே உங்களை வாழ்த்துகிறேன்.

௨௩ எனக்கும் சபையார் எல்லாருக்கும் வீட்டிலே உபசாரம் செய்துவருகிற [3]காயு என்பவன் உங்களை வாழ்த்துகிறான்; பட்டணத்து நிலைமைக் கணக்கனாகிய [4]எரஸ்தும் சகோதரனாகிய குவர்த்தும் உங்களை வாழ்த்துகிறார்கள்.

௨௪ [5]நம்முடைய கர்த்தராகிய இயேசுக்கிறிஸ்துவினுடைய கிருபை உங்கள் எல்லாரோடுங்கூட இருக்கக்கடவது.—ஆமன்.

௨௫ ¶ [6]பூர்வீககாலங்களில் மறைவாயிருந்து, [7]இப்பொழுது தீர்க்கதரிசன ஆகமங்களினாலே அநாதியான பராபரனுடைய கட்டளையின்படி வெளியரங்கமாக்கப்பட்டதுமாய் [8]விசுவாசத்திற்குக் கீழ்ப்படியும்படிக்கு எல்லாத் தேசத்தாருக்கும் அறிவிக்கப்பட்டதுமாய் இருக்கிற [9]இரகசியத்தை வெளிப்படுத்துகிறதாயும்,

௨௬ இயேசுக்கிறிஸ்துவினுடைய பிரசங்கமாயுமிருக்கிற [10]என் சுவிசேஷத்தின்படியே உங்களை [11]ஸ்திரப்படுத்துதற்கு வல்லவருமாய்,

௨௭ [12]ஒருவராய் ஞானமுள்ளவருமாய் இருக்கிற பராபரனுக்கு இயேசுக்கிறிஸ்துமூலமாய் என்றென்றைக்கும் புகழ்ச்சி உண்டாவதாக.—ஆமன்.

கி. பி. ௬௰.

1 அப். ௰௯. ௨௯.
2 அப். ௨௰. ௪.
3 ௧ கொரி. ௧. ௰௪.
4 அப். ௰௯. ௨௨. ௨ தீமோ. ௪. ௨௰.
5 ௨௰. ௨௪. ௧ தெச. ௫. ௨௮.
6 ௧ கொரி. ௨. ௭. எபே. ௩. ௫, ௯. கொலோ. ௧. ௨௬.
7 எபே. ௧. ௯. ௨ தீமோ. ௧. ௰. தீத். ௧. ௨, ௩. ௧ பே. ௧. ௨௰.
8 அப். ௬. ௭. உரோ. ௧. ௫: ௰௫. ௰௮.
9 எபே. ௧. ௯: ௩. ௩, ௪, ௫. கொலோ. ௧. ௨௭.

10 உரோ. ௨. ௰௬.—11 எபே. ௩. ௨௰. ௧ தெச. ௩. ௰௩. ௨ தெச. ௨. ௰௭: ௩. ௩. யூதா. ௨௪.—12 ௧ தீமோ. ௧. ௰௭: ௬. ௰௬. யூதா. ௨௫.

Digitized by Google

# I. CORINTHIANS.

அப்போஸ்தலனாகிய பவுல்

# கொரிந்தியருக்கு எழுதின

## முதலாம் நிருபம்.

### ௧. அதிகாரம்.

**௧. பவுல் சபையாரை வாழ்த்திப் பராபரனைத் துதித்து, ௰. அவர்களை ஒருமனப்பட்டிருக்கக் கற்பித்து, ௰௨. அவர்களுடைய பிரிவினைகளைக் கடிந்துகொண்டது. ௰௮. பராபரன் ஞானிகளின் ஞானத்தை, ௨௧. சொல்லப் பிரசங்கத்தினாலே வீணாக்கி, ௨௬. ஞானிகளையும், வல்லவர்களையும், மேன்குலத்தாரையும்விட்டு, ௨௭. ௨௮. பேதைகளையும், இழிகுலத்தாரையும் தெரிந்துகொண்டது.**

[1]பராபரனுடைய சித்தத்தினாலே [2]இயேசுக்கிறிஸ்துவின் அப்போஸ்தலனாக அழைக்கப்பட்ட பவுலும்,

௨ [3]சகோதரனாகிய சொஸ்தெனேயும் கொரிந்துவிலே [4]பரிசுத்தவான்களாகும்படி அழைக்கப்பட்டவர்களாயும் [5]கிறிஸ்து இயேசுவினால் பரிசுத்தமாக்கப்பட்டவர்களாயும் இருக்கிற [6]பராபரனுடைய சபையாருக்கும் எவ்விடத்திலேயும் [7]நமக்குப் பொதுவாயிருக்கிற [8]கர்த்தராகிய இயேசுக்கிறிஸ்துவின் நாமத்தைத் [9]தொழுதுகொள்ளுகிற அனைவருக்கும்கூட எழுதுகிறதாவது:

௩ [10]நம்முடைய பிதாவாகிய பராபரனாலும் கர்த்தராகிய இயேசுக்கிறிஸ்துவினாலும் உங்களுக்குக் கிருபையும் சமாதானமும் உண்டாகக்கடவது.

௪ ¶ நீங்கள் ஒரு வரத்திலும் குறைவு இல்லாதவர்களாயிருந்து, நம்முடைய கர்த்தராகிய இயேசுக்கிறிஸ்து [11]வெளிப்படுவதற்குச்* சந்தோஷமாய்க் காத்திருக்கத்தக்கதாக,

௫ [12]கிறிஸ்துவைக்குறித்துச் சொன்ன சாட்சி உங்களுக்குள்ளே ஸ்திரப்படுத்தப்பட்டிருக்கையால்,

௬ நீங்கள் இயேசுக்கிறிஸ்துவினாலே எல்லாவற்றிலும் [13]எல்லா உபதேசத்திலேயும் எல்லா அறிவிலேயும் சம்பூரணம் உள்ளவர்களானபடியினாலே,

௭ அவர்மூலமாய் உங்களுக்குக் கொடுக்கப்பட்ட தேவகிருபைக்காக [14]நான் உங்களைக்குறித்து எப்பொழுதும் என் பராபரனைத் தோத்திரிக்கிறேன்.

௮ அவரும் நம்முடைய கர்த்தராகிய இயேசுக்கிறிஸ்துவின் நாளிலே [15]நீங்கள் குற்றம்சாற்றப்படாதவர்களாய் இருக்கும்படி, [16]முடிவுபரியந்தம் உங்களை ஸ்திரப்படுத்துவார்.

௯ தம்முடைய குமாரனுமாய் நம்முடைய கர்த்தருமாயிருக்கிற இயேசுக்கிறிஸ்துவுடனே [17]ஐக்கமாய் இருப்பதற்கு உங்களை

கி. பி. ௫௯.

1 ௨ கொரி. ௧.௧. எபே. ௧. ௧. கொலோ. ௧. ௧.
2 ௨ ரோ. ௧.௧.
3 அப். ௰௮. ௰௭.
4 ௨ ரோ. ௧. ௭. ௨ தீமோ. ௧. ௯.
5 யோவா. ௰௭. ௰௯. அப். ௰௫. ௯.
6 யூதா. ௧.
7 ௨ ரோ. ௩. ௨௨: ௰. ௰௨.
8 ௧ கொரி. ௮. ௬.
9 அப். ௯. ௰௪, ௨௧: ௨௨. ௰௬. ௨ தீமோ. ௨. ௨௨.
10 ௨ ரோ. ௧. ௭. ௨ கொரி. ௧. ௨. எபே. ௧. ௨. ௧ பே. ௧. ௨.
11 பிலி. ௩. ௨௰. தீத். ௨. ௰௩. ௨ பே. ௩. ௰௨.
* அல்லது வருகைக்கு; கொலோ. ௩. ௪.
12 ௧ கொரி. ௨. ௧. ௨ தீமோ. ௧. ௮. வெளி. ௧. ௨.
13 ௧ கொரி. ௰௨. ௮. ௨ கொரி. ௮. ௭.
14 ௨ ரோ. ௧. ௮.
15 கொலோ. ௧. ௨௨. ௧ தெச. ௩. ௰௩

16 ௧ தெச. ௩. ௰௩.—17 யோவா. ௰௭. ௨௧: ௰௭. ௨௩. ௧ யோ. ௧. ௩: ௪. ௰௩.

Digitized by Google

அழைத்த பராபரன் [1]உண்மையுள்ளவராய் இருக்கிறாரே.

௰ ¶ ஆகிலும் என் சகோதரரே, உங்களுக்குள்ளே வாக்குவாதங்கள் உண்டென்று குலோவேயாளுக்கு உரித்தானவர்களாலே எனக்கு அறிவிக்கப்பட்டது.

௰௧ ஆதலால் [2]நீங்கள் எல்லாரும் ஒரேவிதமாய்ப் பேசவும், பிரிவினைகள்* இல்லாமலும் ஏக மனதினாலும் ஏக யோசனையினாலும் ஐக்கப்பட்டிருக்கவும் வேண்டும் என்று நம்முடைய கர்த்தராகிய இயேசுக்கிறிஸ்துவின் நாமத்தினாலே உங்களுக்குப் புத்திசொல்லுகிறேன்.

௰௨ [3]உங்களில் ஒருவன் நான் பவுலைச் சேர்ந்தவன் என்றும், ஒருவன் [4]அப்பொல்லோவைச் சேர்ந்தவன் என்றும், ஒருவன் [5]கேபாவைச் சேர்ந்தவன் என்றும், ஒருவன் கிறிஸ்துவைச் சேர்ந்தவன் என்றும் சொல்லுகிறபடியால், நான் இப்படிச் சொல்லுகிறேன்.

௰௩ ¶ [6]கிறிஸ்து பிரிந்திருக்கிறாரா? உங்களுக்காகப் பவுல் சிலுவையில் அறையப்பட்டானா? அல்லது பவுலின் நாமத்தினாலே ஞானஸ்நானம் பெற்றீர்களா?

௰௪ என்னுடைய நாமத்தினாலே ஞானஸ்நானம் கொடுத்தேன் என்று ஒருவனும் சொல்லாதபடிக்கு,

௰௫ நான் [7]கிறிஸ்புக்கும் [8]காயுக்குமே அன்றி, உங்களில் வேறொருவருக்கும் ஞானஸ்நானம் கொடாததினாலே, பராபரனைத் தோத்திரம்செய்கிறேன்.

௰௬ [9]ஸ்தேவானுடைய வீட்டாருக்கும் ஞானஸ்நானம் கொடுத்தேன்; பின்னும் (உங்களில்) வேறொருவனுக்கு நான் ஞானஸ்நானம் கொடுத்தேனோ இல்லையோ என்று அறியேன்.

௰௭ ¶ சுவிசேஷத்தைப் பிரசங்கிக்கும்படிக்கே அல்லாமல், ஞானஸ்நானத்தைக் கொடுக்கும்படிக்குக் கிறிஸ்து என்னை அனுப்பவில்லையே; கிறிஸ்துவின் சிலுவை வீணாய்ப் போகாதபடிக்கு, [10]நான் அதை லவுகீக ஞான வசனங்களோடே† அல்ல, பிரசங்கிக்கும்படிக்கு அனுப்பினார்.

௰௮ அந்தச் சிலுவையைக்குறித்துச் சொல்லிய வசனம் [11]கெட்டுப்போகிறவர்களுக்குப் [12]பயித்தியமாகத் தோன்றுகின்றதே அன்றி, [13]இரட்சிக்கப்படுகிற நமக்கு [14]அது தேவபலனாய் இருக்கின்றது.

௰௯ [15]அந்தப்படி ஞானிகளுடைய ஞானத்தை நான் அழித்து, புத்திசாலிகளுடைய புத்தியை மறைந்துபோகப்பண்ணுவேன் என்று எழுதியிருக்கின்றதே.

௨௰ [16]ஞானியானவன் எங்கே? வேதபாரகன் எங்கே? இப்பிரபஞ்ச தருக்கசாஸ்திரி எங்கே? [17]இந்த உலகஞானத்தைப் பராபரன் பயித்தியமாக்கவில்லையா?

௨௰௧ எப்படியெனில் [18]பராபரனுடைய ஞானத்திற்கு ஏற்றதாய் உலகத்தார் தங்கள் சொந்த ஞானத்தினாலே பராபரனை அறியாதபடியினாலே, பயித்தியமாகத் தோன்றுகிற பிரசங்கத்தினாலே விசுவாசிகளை இரட்சிக்கவேண்டும் என்று பராபரன் பிரியமாயிருந்தார்.

௨௰௨ அந்தப்படி [19]யூதர்கள் அடையாளத்தைக் கேட்கிறார்கள்; கிரேக்கர் ஞானத்தைத் தேடுகிறார்கள்.

௨௰௩ நாங்களோ சிலுவையில் அறையப்பட்ட கிறிஸ்துவைக் கூறுகிறோம்; [20]அது யூதர்களுக்கு இடறலாயும், [21]கிரேக்கருக்குப் பயித்தியமாயும் இருக்கின்றது.

௨௰௪ ஆகிலும் யூதரிலும் கிரேக்கரிலும் எவர்கள் அழைக்கப்பட்டார்களோ, அவர்களுக்குக் கிறிஸ்து [22]தேவபலனுமாய்த் [23]தேவஞானமுமாய் இருக்கிறார்.

கி. பி. ருக.

1 ஏசா. ௪௯. ௭. க கொரி. ௰. ௰௩. க தெச. ௫. ௨௪. உ தெச. ௩. ௩. எபி. ௰. ௨௩.

2 உ ரோ. ௰௨. ௰௬: ௰௫. ௫. உ கொரி. ௰௩. ௰௧. பிலி. உ. உ: ௩. ௰௬. க பே. ௩. ௮.

* கிரேக்கு, பேதங்கள்; க கொரி. ௰௧. ௰௮.

3 க கொரி. ௩. ௪.

4 அப். ௰௮. உ௪: ௰௯. ௧. க கொரி. ௰௬. ௰௨.

5 யோவா. ௧. ௪௨.

6 உ கொரி. ௰௧. ௪. எபே. ௪. ௫.

7 அப். ௰௮. ௮.

8 உ ரோ. ௰௬. ௨௩.

9 க கொரி. ௰௬. ௰௫, ௰௭.

10 க கொரி. உ. ௧, ௪, ௰௩. உ பே. ௧. ௰௬.

† அல்லது வார்த்தைகள்.

11 உ கொரி. உ. ௰௫.

12 அப். ௰௭. ௰௮. க கொரி. உ. ௰௪.

13 க கொரி. ௰௫. உ.

14 உ ரோ. ௧. ௰௫. ௨௪. ௪௪.

15 யோபு. ௫. ௰௨, ௰௩. ஏசா. உ௯. ௰௪. எரே. ௮. ௯.

16 ஏசா. ௩௩. ௰௮

17 யோபு. ௰௨. ௰௭, உ௰, உ௪. ஏசா. ௪௪. உ௫. உ ரோ. ௧. உ௨.

18 உ ரோ. ௧. உ௰, உ௧, உ௮. மத். ௰௧. உ௫. லூக். ௰. உ௧.

19 மத். ௰௨. ௩௮: ௰௬. ௧. மாற். ௮. ௰௧. லூக். ௰௧. ௰௬. யோவா. ௪. ௪௮.

20 ஏசா. ௮. ௰௪. மத். ௰௧. ௬: ௰௩. ௫௭. லூக். உ. ௩௪. யோவா. ௬. ௬௰, ௬௬. உ ரோ. ௯. ௩௨. கல. ௫. ௰௧. க பே. உ. ௮.
21 ௰௮. ௨௪. க கொரி. உ. ௰௪.—22 உ ரோ. ௧. ௪, ௰௬. ௰௮. ௨௪.—23 கொலோ. உ. ௩.

Digitized by Google

உரு ஆனதால் தேவனைக்குறித்து அவர்கள் சொல்லுகிற பயித்தியம் மனிதருடைய ஞானத்திலும் அதிக ஞானமாயும், தேவனைக்குறித்து அவர்கள் சொல்லுகிற பெலஈனம் மனிதருடைய பெலனிலும் அதிக பெலனாயும் இருக்கின்றது.

உசு ¶ அதற்காகச் சகோதரரே, [1]உங்களை அழைத்தவிதத்தைப் பாருங்கள்; அநேக லவுகீக ஞானிகளாவது, அநேகவல்லவர்களாவது, அநேக உயர்குலத்தாராவது, இல்லையே.

உஎ அந்த ஞானிகளை வெட்கப்படுத்தும்படிக்கு, [2]பராபரன் உலகத்திலே பயித்தியரென்று எண்ணப்பட்டவர்களைத் தெரிந்துகொண்டார்; பெலவான்களைவெட்கப்படுத்தும்படிக்கு, பராபரன் உலகத்திலே பெலஈனரானவர்களைத் தெரிந்துகொண்டார்.

உஅ [3]இருக்கிறவர்களைத் தள்ளும்படிக்கு, [4]இல்லாதவர்களையும் உலகத்திலே இழிந்த குலத்தாரானவர்களையும் அற்பமாய் எண்ணப்பட்டவர்களையும் பராபரன் தெரிந்துகொண்டார்.

உகூ [5]எந்த மாம்சதேகியும் பராபரனுக்கு முன்பாகப் பெருமைபாராட்டாதபடிக்கு அப்படிச் செய்தார்.

௩0 ஆதலால் நீங்கள் அவராலே கிறிஸ்து இயேசுவுக்கு உட்பட்டிருக்கிறீர்கள்; அவரே நமக்குத் [6]தேவஞானமும் [7]நீதியும் [8]பரிசுத்தமும் [9]மீட்புமானார்.

௩க ஆனதால் எழுதியிருக்கிறபடி [10]மேன்மைபாராட்டுகிறவன் கர்த்தரைக்குறித்தே மேன்மைபாராட்டக்கடவன்.

## உ. அதிகாரம்.

க. தன் பிரசங்கபோதகம் அதரிசயமுள்ளதும், ச. லவுகீக ஞானமுள்ளதுமாய் இராமற்போனாலும், ச. கூ. அது தேவபலனுள்ளதென்றும், க. உலக ஞானத்துக்கும், கூ. லவுகீக புத்திக்கும் மிகவும் உயர்ந்ததென்றும், க௪. அதைச் சுபாவப்படிக்கான மனுஷன் அறியக்கூடாதென்றும் சொல்லியது.

க சகோதரரே, நானும் உங்களிடத்தில் வந்து [11]பராபரனுடைய சாட்சியை [12]உயர்ந்த வசனிப்போடும் அல்லது ஞானத்தோடும் உங்களுக்கு அறிவிக்கவில்லை.

உ நான் தீர்மானித்தபடி சிலுவையில் அறையப்பட்ட [13]இயேசுக்கிறிஸ்துவையே அன்றி, வேறொன்றையும் உங்களுக்கு அறிவிக்கவில்லையே.

௩ அல்லாமலும் நான் [14]பெலஈனத்தோடும் பயத்தோடும் மிகுந்த நடுக்கத்தோடும் [15]உங்களிடத்தில் இருந்தேன்.

௪ என் பேச்சும் என் பிரசங்கமும் [16]மனிதஞானத்திற்கு உரிய போதனை* வார்த்தைகளாய் இருக்கவில்லை.

௫ உங்கள் விசுவாசம் மனிதருடைய ஞானத்தில் அல்ல [17]பராபரனுடைய பெலத்திலே நிற்கத்தக்கதாக† அது [18]ஆவியையும் பெலனையும் காண்பித்தது.

௬ ¶ எப்படியும் [19]தேறினவர்களுக்குள்ளே நாங்கள் ஞானத்தையே பேசுகிறோம்; [20]அந்த ஞானம் இப்பிரபஞ்சத்தின் ஞானமல்ல, [21]அழிந்துபோகிறவர்களாகிய இப்பிரபஞ்சத்தின் பிரபுக்களுடைய ஞானமும் அல்ல.

௭ [22]லோகத்தோற்றத்திற்கு முன்னே பராபரன் நம்முடைய மகிமைக்காகக் குறித்ததுமாய், இரகசியத்திலே மறைக்கப்பட்டதுமாயிருந்த தேவ ஞானத்தையே பேசுகிறோம்.

௮ [23]அதை இப்பிரபஞ்சத்துப் பிரபுக்களில் ஒருவனும் அறிந்துகொள்ளவில்லை; [24](அறிந்துகொண்டிருந்தார்களானால்,) மகிமையின் கர்த்தரை அவர்கள் சிலுவையில் அறையமாட்டார்களே.

௯ வேதத்தில் எழுதியிருக்கிறபடி பராபரன் தம்மிடத்தில் அன்பு

கி. பி. ௫௰.

1 யோவா. ௭. ௪௮.
2 மத். ௰௧. உ௫. யாக். உ. ௫. சங். அ. உ.
3 க கொரி. உ. க.
4 உரோ. ௪. ௰௭.
5 உரோ. ௩. உ௭. எபே. உ. கூ.
6 உச. ௩௦.
7 எரே. உ௩. ௫, கூ. உரோ. ௪. உ௫. உ கொரி. ௫. உக. பிலி. ௩. கூ.
8 யோவா. ௰௭. ௰௯.
9 எபே. க. ௭.
10 எரே. கூ. உ௩, உச. உ கொரி. ௰. ௰௭.
11 க கொரி. க.௫.
12 க கொரி. க. ௰௭, ௰௯, வச. உ கொரி. ௰. ௰: ௰க. சு.
13 கலா. சு. ௰௪. பிலி. ௩. அ.
14 உ கொரி. ௪. ௭: ௰.௩, ௰: ௰௧. ௰௨. ௫. ௬. கலா. ௪. ௰௩.
15 அப். ௰அ. ௬, ௬, ௰உ.
16 க. வசனம். க கொரி.க. ௰௭. உ பே. க. ௰௬.
* அல்லது மயக்க.
17 உ கொரி. ௪. ௭: க. ௭.
† நிரேக்கு, இருக்க.
18 உரோ. ௰௫. ௰௯. க தெச. க. ௫.
19 க கொரி. ௰௪. உ௰. எபே. ௪. ௰௩. பிலி. ௩. ௰௫. எபி. ௫. ௰௪.
20 க கொரி. க. உ௰: க. ௰௯. க, ௰௬. வசனம். உ கொரி.க.௰௨. யாக். ௩. ௰௫.
21 க கொரி. க. உஅ.


Digitized by Google

கூருகிறவர்களுக்கு எத்தனம்பண்ணினவைகளை [1](மனிதர்) கண் காணவும் இல்லை; காதுகேட்கவும் இல்லை; அவைகள் மனிதருடைய இருதயத்திலே தோன்றவும் இல்லை.

௰ [2]நமக்கே பராபரன் அவைகளைத் தமது ஆவியினாலே வெளிப்படுத்தினார்; அந்த ஆவியானவர் எல்லாவற்றையும்பராபரனுடைய ஆழங்களையும் ஆராய்ந்திருக்கிறாரே.

௰௧ [3]மனிதனிலுள்ள ஆவியே அன்றி, மனிதரில் எவன் மனிதனுக்கு உரியவைகளை அறிவான், (மாட்டானே;) [4]அப்படிப்போல, பராபரனுடைய ஆவியே அல்லாமல் ஒருவனும் பராபரனுடைய ஆழங்களை அறியமாட்டான்.

௰௨ இப்படியிருக்க நாங்கள் பராபரனால் நமக்கு அருளப்பட்டவைகளை அறியும்படிக்கு உலகத்தின் ஆவியை அல்ல, [5]பராபரனிலிருந்து புறப்படுகிற ஆவியையே பெற்றோம்.

௰௩ [6]அவைகளை நாங்கள் மனிதருடைய சொந்த ஞானம் போதிக்கிற வார்த்தைகளால் அல்ல, பரிசுத்தஆவி போதிக்கிற வார்த்தைகளாலே பிரசங்கம்பண்ணி, ஆவிக்கு உரியவைகளை ஆவிக்கு உரியவைகளாலே ஒத்துப்பார்த்துக் காண்பிக்கிறோம்.

௰௪ ஆகிலும் [7]சென்மசுபாவத்தின்படியான மனிதன் பராபரனுடைய ஆவிக்கு உரியவைகளை ஏற்றுக்கொள்ளமாட்டான்; [8]அவைகள் அவனுக்குப் பயித்தியமாகத்தோன்றும்; [9]மேலும் அவைகளை ஆவிக்கேற்ற பிரகாரமாய் ஆராய்ந்து நிதானிக்கவேண்டியபடியால், அவன் அவைகளை அறியமாட்டான்.

௰௫ [10]ஆவிக்கு உரியவனே எல்லாவற்றையும் ஆராய்ந்து நிதானித்து,* மற்றொருவனாலும் ஆராய்ந்து நிதானிக்கப்படான்.†

௰௬ அவனுக்குப் போதிக்கத்தக்கதாக,‡ [11]கர்த்தருடைய சிந்தையை அறிந்தவன் யாவன்? [12]நாங்களோ கிறிஸ்துவின் சிந்தையைப் போலச் சிந்தையுள்ளவர்களாயிருக்கிறோம்.

## ௩. அதிகாரம்.

௨. குழந்தைகளுக்குப் பால் உரியதென்றும், ௩. போராட்டமும், பிரிவினையும் மாம்சசிந்தைக்கு உரியதென்றும், ௭. நடுகிறவனும் தண்ணீர் பாய்ச்சுகிறவனும் விளைவுக்குக் காரணரல்லவென்றும், ௯. தேவஊழியக்காரர் பராபரனோடே உடன்வேலைபாக்கவென்றும், ௰௧. கிறிஸ்து ஒருவரே அஸ்திபாரமென்றும், ௰௬. மனிதர்கள் தேவாலயங்களென்றும், ௰௭. அவைகளைப் பரிசுத்தமாய்க் காக்கவேண்டியதென்றும், ௰௯. இவ்வுலகஞானம் பராபரனுடைய பார்வைக்குப் பயித்தியமென்றும் சொல்லியது.

நானும் சகோதரரே, உங்களை [13]ஆவிக்கு உரியவர்கள் என்று எண்ணவும் உங்களுடனே பேசவும்கூடாமல் [14]உங்களை மாம்சத்திற்கு உரியவர்கள் என்றும் [15]கிறிஸ்துவில் குழந்தைகள் என்றும் எண்ணி உங்களுடனே பேசவேண்டியதாய் இருந்தது.

௨ உணவை நீங்கள் தாங்கத்திராணியில்லாதபடியால் அதை உங்களுக்குக் கொடாமல், [16]பாலைக் குடிக்கக்கொடுத்தேன்; இன்னமும் நீங்கள் மாம்சத்திற்கு உரியவர்களாயிருக்கிறபடியால் [17]இப்பொழுதும் அதைத் தாங்கமாட்டீர்கள்.

௩ [18]வைராக்கியமும் வாக்குவாதமும் பேதகங்களும்§ உங்களுக்குள்ளே இருக்க, நீங்கள் மாம்சத்திற்கு உரியவர்களாயும், மனிதருடைய மார்க்கமாய்‖ நடக்கிறவர்களாயும், இருக்கிறீர்கள் அல்லவோ?

௪ உங்களில் ஒருவன் [19]நான் பவுலைச் சேர்ந்தவன் என்றும் வேறொருவன் நான் அப்பொல்லோவைச் சேர்ந்தவன் என்றும் சொல்லுகிறதால், நீங்கள் மாம்சத்திற்கு உரியவர்கள் அல்லவா?

௫ ¶ பவுல் யாவன்? அப்பொல்லோ யாவன்? [20]அவர்கள் நீங்கள்

கி. பி. ௫௯.

1 ஏசா. ௬௪. ௪.
2 மத். ௰௩. ௰௧: ௰௬. ௰௭. யோவா. ௰௪. ௨௬: ௰௬. ௰௩. ௧ யோ. ௨. ௨௭.
3 யாக். ௨௰. ௨௭: ௨௭. ௰௬. எரே. ௰௭. ௯.
4 உரோ. ௰௧.௩௩, ௩௪.
5 உரோ. அ. ௰௫.
6 உ பே. ௧. ௰௬. ௧ கொரி. ௧.௰௭. ௪. ௨௪.
7 மத். ௰௬. உ௩.
8 ௧ கொரி. ௧. ௰௮, உ௩.
9 உரோ. அ. ௫, ௬, ௭.
10 யாக். ௨அ.௫. ௧ தெச.௫. உ௧. ௧ யோ.௪.௧.
* அல்லது நிர்த்து.
† அல்லது நிர்க்க.
‡ கிரேக்கு, போதிக்கும் படியாக.
11 யோபு. ௰௫. அ. ஏசா. ௪௰. ௰௩. எரே. உ௩. ௰௮. உரோ. ௰௧. ௩௪.
12 யோவா. ௰௫. ௰௫.
13 ௧ கொரி. உ. ௰௫.
14 ௧ கொரி. உ. ௰௪.
15 எபி.௫.௰௩.
16 எபி. ௫. ௰உ, ௰௩. ௧ பே. உ. ௨.
17 யோவா. ௰௬. ௰உ.
18 ௧ கொரி. ௧. ௰௧: ௰௧. ௰௮. கலா. ௫ உ௰, உ௧. யாக். ௩. ௰௬.
§ அல்லது கலகங்களும்.
‖ கிரேக்கு, மனிதனைப்போல.
19 ௧ கொரி. ௧. ௰உ.

20 ௧ கொரி. ௪.௧. உ கொரி. ௬. ௪.

Digitized by Google

விசுவாசிகளாகிறதற்கு ஏதுவாயிருந்த ஊழியக்காரர்தானே; [1]அதுவும் அவனவனுக்குக் கர்த்தர் அருள் அளித்தபடியே இருக்கிறது.

௬ [2]நான் நட்டேன், [3]அப்பொல்லோ நீர்பாய்ச்சினான், [4]பராபரனே வளர்த்தார்.

௭ அப்படியிருக்க [5]நடுகிறவனாலும் ஒன்றுமில்லை, நீர்பாய்ச்சுகிறவனாலும் ஒன்றுமில்லை; வளர்க்கிற பராபரனாலே எல்லாம் ஆகும்.

௮ ஆகையால் நடுகிறவனும் நீர்பாய்ச்சுகிறவனும் ஒன்றாயிருக்கிறார்கள்; ஆகிலும் [6]நாங்கள் பராபரனோடே கூடிய வேலையாள்களானபடியால் [7]அவனவன் தன் தன்னுடைய வேலைக்குத்தக்கதாய்ப் பலனைப் பெறுவான்.

௯ நீங்கள் பராபரனுடைய பண்ணையும்* [8]பராபரனுடைய மாளிகையுமாய் இருக்கிறீர்கள்.

௰ ¶ [9]எனக்கு அளிக்கப்பட்ட தேவகிருபையின்படியே, விவேகமுள்ள சிற்பாசாரியைப்போல [10]அஸ்திபாரத்தைப் போட்டேன்; வேறொருவன் அதின்மேலே கட்டுகிறான்; [11]எவனாலும் தான் அதின்மேலே கட்டுகிறது இன்னதென்று பார்க்கக்கடவன்.

௰௧ என்னத்தினாலெனில், [12]இயேசுக்கிறிஸ்துவே அஸ்திபாரமாகப் போடப்பட்டிருக்கிறாரே; [13]போடப்பட்ட அந்த அஸ்திபாரத்தைத்தவிர வேறே அஸ்திபாரத்தை ஒருவனும் போடக்கூடாது.

௰௨ ஒருவன் அந்த அஸ்திபாரத்தின்மேல் பொன், வெள்ளி, இரத்தினக்கற்கள், மரங்கள், புல், தாளடி, இப்படிப்பட்டவைகளைச்சேர்த்துக் கட்டினால் [14] அவனவனுடைய கிரியை வெளிப்படும்.

௰௩ [15]அக்கினியினாலே வெளியாக்கப்படுவதால்,† [16]அது தோன்றும் நாளே அதை வெளிப்படுத்தும்; அவனுடைய கிரியை இப்படிப்பட்டதென்று அக்கினியே சோதிக்கும்.

௰௪ அஸ்திபாரத்தின்மேலே கட்டின ஒருவனுடைய கிரியை நின்றால், [17]அவன் பலனைப்பெறுவான்.

௰௫ ஒருவனுடைய கிரியை வெந்துபோனால், அவனுக்கு நஷ்டம் வரும்; ஆகிலும் அவனே இரட்சிக்கப்படுவான்; [18]அதுவும் அக்கினியில் அகப்பட்டுத் தப்பினாற்போலவே இருக்கும்.

௰௬ ¶ [19]நீங்கள் பராபரனுடைய ஆலயமாய் இருக்கிறீர்கள் என்றும், பராபரனுடைய ஆவியானவர் உங்களிடத்தில் வாசமாயிருக்கிறார் என்றும் அறியாமல் இருக்கிறீர்களா? பராபரனுடைய ஆலயம் பரிசுத்தமாயிருக்கின்றது.

௰௭ ஆதலால் அவருடைய ஆலயத்தை ஒருவன் கெடுத்தால்‡ அவனைப் பராபரன் கெடுப்பார்.

௰௮ நீங்களே அந்த ஆலயம்; [20]ஒருவனும் தன்னைத்தானே வஞ்சனை செய்யாதிருப்பானாக; [21]ஞானிகளை அவர்களுடைய தந்திரத்திலே பிடிக்கிறாரென்றும்,

௰௯ [22]ஞானிகளுடைய சிந்தனைகள் வீணாயிருக்கின்றன என்று கர்த்தர் அறிந்திருக்கிறார் என்றும் எழுதியிருக்கிறபடி, [23]இவ்வுலகத்தின் ஞானம் பராபரனுக்குமுன்பாகப் பயித்தியமாய் இருக்கின்றதே.

௨௰ ஆனதால் உங்களில் ஒருவன் இவ்வுலகத்திலே தன்னை ஞானியென்று எண்ணினால், அவன் மெய்ஞ்ஞானியாகும்படிக்குப் பயித்தியக்காரனாகக்கடவன்.

௨௧ ¶ இப்படியிருக்க [24]ஒருவனும் மனிதனைக்குறித்துப் பெருமை பாராட்டக்கூடாது; [25]எல்லாம் உங்களுடையதே.

௨௨ பவுலாகிலும், அப்பொல்லோவாகிலும், கேபாவாகிலும், லோகமாகிலும், சீவனாகிலும், மர

கி. பி. ௫௯.

1 உரோ. ௰௨. ௬, ௬. ௧ பே. ௪. ௰௧.
2 அப். ௰௮. ௪, ௮, ௰௧. ௧ கொரி. ௪. ௰௫: ௯. ௧: ௰௫, ௧. ௨ கொரி. ௰. ௰௪, ௰௫.
3 அப். ௰௮. ௨௪. ௨௭: ௰௯. ௧.
4 ௧ கொரி. ௧. ௩௰: ௰௫. ௰. ௨ கொரி. ௩. ௫.
5 ௨ கொரி. ௰௨. ௰௧. கலா. ௬. ௩.
6 அப். ௰௫. ௪. ௨ கொரி ௬. ௧.
7 சங். ௬௨. ௰௨. உரோ. ௨. ௬. ௧ கொரி. ௪. ௫. கலா. ௬. ௪, ௫. வெளி. ௨. ௨௩: ௨௨. ௰௨.
* அல்லது பயிர் செய்கையும்.
8 எபே. ௨. ௨௰. கொலோ. ௨. ௭. எபி. ௩. ௩, ௪. ௧ பே. ௨. ௫.
9 உரோ. ௧. ௪: ௰௨. ௩.
10 உரோ. ௰௫. ௨௧. ௬. ௨௪. ௧ கொரி. ௪. ௰௫. வெளி. ௨௧ ௰௪.
11 ௧ பே. ௪. ௰௧.
12 எபே. ௨. ௨௰.
13 ஏசா. ௨௮. ௰௬. மத். ௰௬. ௰௮. ௨ கொரி. ௰௧. ௪. கலா. ௧ ௭.
14 ௧ கொரி. ௪. ௫.
15 லூக். ௨. ௩௫.
† கிரேக்கு, வெளியாக்கப்படுகிறதால்.
16 ௧ பே. ௧. ௭: ௪. ௰௨.
17 ௧ கொரி. ௪. ௫.
18 யூதா. ௨௩.
19 ௧ கொரி. ௬. ௰௯. ௨ கொரி. ௬. ௰௬. எபே. ௨. ௨௧, ௨௨. எபி. ௩. ௬. ௧ பே. ௨. ௫.
‡ அல்லது தீட்டாக்கினால்.
20 வாக். ௧. ௭. ஏசா. ௫. ௨௧.

21 யோபு. ௫. ௰௩.—22 சங். ௯௪ ௰௧.—23 ௧ கொரி. ௧. ௨௰: ௨. ௬.—24 ௧ கொரி. ௧. ௰௨: ௪. ௬. ௭, ௫, ௬. ௨௪.—25 ௨ கொரி. ௪. ௫, ௰௫.

Digitized by Google

ணமாகிலும், நிகழ்காரியங்களாகி லும்,வருங்காரியங்களாகிலும்எல் லாம் உங்களுடையது.

உ௩ [1]நீங்கள் கிறிஸ்துவினுடைய வர்கள், கிறிஸ்து பராபரனுடைய வர்.

## ச. அதிகாரம்.

க. போதகர்கள் இப்படி எண்ணப்படவேண்டுமெ ன்றும், எ. நமக்கு உரியவையெல்லாம் பெற்றுக் கொண்டோமென்றும், கூ. அப்போஸ்தலர்கள் லோகத்துக்கும், தூதர்களுக்கும், மனுஷருக்கும், விரோதமாகவும், ௰௩. உலகத்தின் குப்பையும் அ முக்குமாகவும் எண்ணப்பட்டவர்களாய் இருந்தா லும், ௰௫. கிறிஸ்துவுக்குள் அவர்கள் நமக்குப் பிதாக் களென்றும், ௰௬. அவர்களை நாம் பின்பற்றவேண் டியதென்றும் காட்டியது.

இப்படி இருக்கிறபடியால், யா வரும் [2]எங்களைக் கிறிஸ்துவின் ஊழியக்காரர் என்றும், [3]பராபர னுடைய இரகசியங்களின் உக்கி ராணக்காரர் என்றும், எண்ணிக் கொள்ளக்கடவர்கள்.

உ உக்கிராணக்காரரிடத்திலே உண்மையையே காணத் தேடுவார் கள்.

௩ (அதைக்குறித்து) நான் உங்க ளாலே அல்லது மற்றொரு மனித அதிகாரத்தினாலே * நியாயத்தீர்ப் பைப் பெறுவது எனக்கு மிகவும் சிறிதான காரியமாயிருக்கின்றது; என்னைக்குறித்து நானும் நியாயத் தீர்ப்புச் சொல்லுகிறதில்லை.

ச குற்றத்தை நான் என்னிடத் தில் அறியேன்; ஆகிலும் [4]அதி னாலே நான் நீதிமானாகிறதில்லை; கர்த்தரே என்னைக்குறித்துத் தீர்ப் புச் சொல்லுகிறவர்.

ரு ஆனபடியினாலே கர்த்தர்வரும ளவும் [5]நீங்கள் காலத்திற்கு முன் னே ஒன்றையுங்குறித்துத் தீர்ப்புச் சொல்லாதிருப்பீர்களாக;[6]அவரே இருளின் அந்தரங்கங்களை வெ ளியரங்கமாக்கி, இருதயங்களின் யோசனைகளையும் வெளிப்படுத்து வார்; [7]அப்பொழுது அவனவனுக் குப் பராபரனாலே புகழ்ச்சி உண் டாகும்.

கூ ¶ சகோதரரே, [8]எழுதப்பட்ட தற்கு மேலாகப் (போதகரை) என் ணிக்கொள்ளாதபடிக்கு, நீங்கள் எங்களாலே கற்கும்பொருட்டாக வும், [9]ஒருவன்நிமித்தம் மற்றொரு வனுக்கு விரோதமாய்இறுமாப்பை அடையாதிருக்கும்பொருட்டாக வும், [10]நான் உங்கள்நிமித்தம் என் னையும் அப்பொல்லோவையும் தி ருட்டாந்தங்களாக வைத்து, இ வைகளை எழுதினேன்.

எ அன்றியும், உன்னை விசேஷித் துக்கொள்ளுகிறவன் † யாவன்? [11]நீ பெற்றுக்கொள்ளாமல் உனக்கு உண்டாயிருக்கிறது யாது? நீயும் பெற்றிருக்கப் பெற்றுக்கொள்ளா தவன்போல என் பெருமைபா ராட்டுகிறாய்?

அ ¶ இப்பொழுதே [12]திருத்தி அடைந்திருக்கிறீர்கள்; இப்பொ ழுதே ஐசுவரியமுள்ளவர்களாய் இருக்கிறீர்கள்; எங்களைத் தவிர ஆண்டீர்கள்; நீங்கள் ஆண்டீர்க ளானால் நன்மையாயிருக்கும்; அப் பொழுது உங்களுடனேகூட நா ங்களும் ஆளுவோமே.

௯ அப்படியன்றிஎனக்குத்தோன் றுகிறபடி பராபரன் அப்போஸ்த லராகிய எங்களைக் கடைசியிலே‡ [13]மரணத்திற்குக் குறிக்கப்பட்ட வர்களைப்போலக் காணப்படப் பண்ணினார்; உலகத்திற்கும் தூத ருக்கும் [14]மனிதருக்கும் வேடிக் கையானோமே,§ [15]நாங்கள் [16]கிறி ஸ்துவின் நிமித்தம் பயித்தியக்கா ரர்.

௰ நீங்கள் கிறிஸ்துவில் புத்திசாலி கள்; [17]நாங்கள் பலஈனர்; நீங்கள் பலவான்கள்; நீங்கள் கனம்பொ ருந்தியவர்கள்; நாங்கள் கனமற்ற வர்கள்.

௰௧ [18]இந்நேரம்வரைக்கும் பசி யும் தாகமும் [19]நிருவாணமும் உள் ளவர்களாய் இருக்கிறோம்; [20]குட் டுண்டும் நிலையற்றும் இருக்கி றோம்.

கி. பி. ருக.

1 உரோ. ௰ச. அ க கொரி. ௰௧.௩ உ கொரி. ௰. எ. கலா. ௩. உ௯.
2 மத். உச. ௪௫. க கொரி. ௯. ௫: ௬௰எ. உகொரி. ௬.௪.கொலோ. ௧. உ௫.
3 லூக். ௰௨. ௪௨. தீத்.௧.எ. க பே. ௪. ௰.
* கிரேக்கு, நியா யநாளின் விசா ரிப்பினால்.
4 யோபு. ௯. உ. சங். ௱௩௰. ௩: ௱௪௩. உ. வாக். உ௩. உ. உரோ. ௩. உ௰: ௪. உ.
5 மத். எ. க. உரோ. உ. க, ௰௬: ௰௪. ௪, ௰, ௰௩. வெளி. உ௰. ௰௨.
6 க கொரி. ௩. ௰௩.
7 உரோ. உ.உ௯. உ கொரி. ௫. ௰.
8 உரோ. ௰௨. ௩.
9 க கொரி. க. உ௩: ௩. உ, ௩.
10 க கொரி. ௩. ௰௨: ௩. ௪.
† கிரேக்கு, வித் தியாசஞ்செய்கி றவன்.
11 யோவா. ௩. உஎ. யாக். க. ௰எ. கபே. ௪. ௰.
12 வெளி. ௩. ௰எ.
‡ அல்லது பிந்தி ன அப்போஸ்த லர்களாகிய எங் களை.
13 சங் ௪௪. உஉ உரோ. அ. ௩௬. கொரி.௰௫.௩௰, ௩௧. உ கொரி. ௪. ௰௧: ௬. ௯.
14 எபி. ௰. ௩௩.
§ கிரேக்கு, நட னசாலையானோ ம்.
15 க கொரி. உ. ௩.
16 அப் ௰எ. ௰அ: உ௬. உ௪. க கொரி. ௩.௰அ. ழு: உ. ௰௪: ௩. ௰அ உ இரா.௬. ௬, ௰௩.

17 உ கொரி. ௰௩.௯.—18 உ கொரி.௪.அ: ௰௧.உ௩-உஎ. பிலி.௪.௰உ.—19 யோபு.உஉ.௬. உரோ.அ.௩௫.—20 அப்.உ௩.உ.

Digitized by Google

௰௨ [1]எங்கள் கைகளினாலே வேலைசெய்து பிரயாசப்படுகிறோம்; [2]வையப்படுகிறபொழுது ஆசீர்வதிக்கிறோம்; துன்பப்படுகிறபொழுது சகிக்கிறோம்.

௰௩ தூஷணிக்கப்படுகிறபொழுது வேண்டிக்கொள்ளுகிறோம்; இன்றையவரைக்கும் [3]நாங்கள் உலகத்தின் குப்பைகளைப்போலவும், எல்லாரும் துடைக்கிற அழுக்கைப்போலவும் ஆனோம்.

௰௪ ¶ உங்களை வெட்கப்படுத்தும்படிக்கு, நான் இவைகளை எழுதவில்லை; [4]நீங்கள் எனக்குப் பிரியமான பிள்ளைகள் என்று உங்களுக்குப் புத்திசொல்லுகிறேன்.

௰௫ கிறிஸ்துவில் உங்களுக்குப் பதினாயிரம் உபாத்திகள் இருந்தாலும், அநேகம் தகப்பன்மார் உங்களுக்கு இல்லையே, [5]கிறிஸ்து இயேசுவில் சுவிசேஷத்தினாலே நானே உங்களைப் பெற்றேன்.

௰௬ ஆகையால் [6]என்னைப் பின்பற்றுகிறவர்களாகுங்கள்என்றுஉங்களுக்குப் புத்திசொல்லுகிறேன்.

௰௭ ¶ இதுநிமித்தமாக [7]நான் எனக்குப் பிரியமும் கர்த்தருக்குள் உண்மையுமான என்னுடைய குமாரனாகிய [8]தீமோத்தேயுவை உங்களிடத்தில் அனுப்பினேன், [9]அவன் எங்கும் [10]எந்தச் சபையிலும் நான் போதிக்கிற வகை இன்னதென்று [11]கிறிஸ்துவுக்குள்ளான என் வழிகளை உங்களுக்கு நினைவுண்டாக்குவான்.

௰௮ [12]நான்தானே உங்களிடத்திற்கு வருகிறதில்லை என்கிறதாகச் சிலர் இறுமாப்படைந்தார்கள்.

௰௯ [13]ஆகிலும் கர்த்தருக்குச் சித்தமானால் [14]நான் சீக்கிரமாய் உங்களிடத்திற்கு வந்து, [15]பராபரனுடைய இராச்சியம் வசனிப்பினாலே அல்ல பலத்தினாலே உண்டாயிருக்கிறபடியால்,

௨௰ இறுமாப்படைந்தவர்களுடைய வசனிப்பை அல்ல, பலத்தை அறிந்துகொள்வேன்.

௨௧ உங்களுக்கு என்னவேண்டும்? [16]நான் பிரம்புடனே உங்களிடத்தில் வரவேண்டுமோ? அல்லது அன்போடும் சாந்தமுள்ள ஆவியோடும் வரவேண்டுமோ?

## ரு. அதிகாரம்.

க. அவர்களுக்குள் இருந்த முறைகேடானதைக்குறித்து, ௨. அவர்கள் சந்தோஷப்படாமல் வெட்கப்படவேண்டுமென்றும், ௭. புளித்தமாவைப்பொத்த பழைய குணத்தை நீக்கவேண்டுமென்றும், ௰. துஷ்ட துரோகிகளைவிட்டு நீங்கவேண்டுமென்றும் சொல்லியது.

[17]அஞ்ஞானிகளுக்குள்ளும் சொல்லப்படாத வேசித்தனம் உங்களுக்குள்ளே உண்டென்று பொதுவாகச் சொல்லிக்கொள்ளுகிறார்கள்; என்னவெனில், [18]ஒருவன் [19]தன் தகப்பனுடைய மனைவியை வைத்துக்கொள்ளுகிறதே.

௨ மேலும் இப்படிப்பட்ட கிரியையைச் செய்தவனை உங்களிலிருந்து நீக்கத்தக்கதாகத் [20]துயரப்படவேண்டிய நீங்களும் [21]இறுமாப்புள்ளவர்களாய் இருக்கிறீர்கள்.

௩ ஆதலால் [22]நான் சரீரத்தினாலே உங்களுக்குத் தூரமாயிருந்தும், ஆவியால் உங்களோடேகூட இருக்கிறவனாய் அப்படிச் செய்தவனைக்குறித்து இப்பொழுதே கூட இருக்கிறதுபோலத் தீர்ப்புப்பண்ணினேன்.*

௪ (என்னவென்றால்,) நம்முடைய கர்த்தராகிய இயேசுக்கிறிஸ்துவின் நாமத்தினாலே நீங்களும் என்னுடைய ஆவியுங்கூட இருக்கையில்,

௫ அப்படிப்பட்டவனுடைய ஆவி கர்த்தராகிய இயேசுக்கிறிஸ்துவின் நாளிலே இரட்சிக்கப்படும்படிக்கு, [23]நம்முடைய கர்த்தராகிய இயேசுக்கிறிஸ்துவின் வல்லமையோடே அவனுடைய சரீரத்தில் அழிவுண்டாக, அவனைச்

கி. பி. ருக.

1 அப். ௰௮ ௩: ௨௰. ௩௪. ௧ தெச. ௨. ௯. ௨ தெச. ௩. ௮. ௧ தீமோ. ௪. ௰.
2 மத். ௫. ௪௪. லூக். ௬. ௨௮: ௨௩. ௩௪. அப். ௭. ௬௰. ௨ ரோ. ௰௨. ௰௪, ௨௰. ௧ பே. ௨. ௨௩: ௩. ௯.
3 புல. ௩. ௪௫.
4 ௧ தெச. ௨. ௰௧.
5 அப். ௰௮. ௰௧. ரோ. ௧௫. ௨௰. ௧ கொரி. ௩. ௬. கலா. ௪. ௰௯. பிலே. ௰. யாக். ௧. ௰௮.
6 ௧ கொரி. ௰௧. ௧. பிலி. ௩. ௰௭. ௧ தெச. ௧. ௬. ௨ தெச. ௩. ௯.
7 ௧ தீமோ. ௧. ௨. ௨ தீமோ. ௧. ௨.
8 அப். ௰௯. ௨௨. ௧ கொரி. ௰௬ ௰. பிலி. ௨. ௰௯. ௧ தெச. ௩. ௨.
9 ௧ கொரி. ௭. ௰௭.
10 ௧ கொரி. ௰௪. ௩௩.
11 ௧ கொரி. ௰௧. ௨.
12 ௧ கொரி. ௫. ௨.
13 அப். ௰௮. ௨௧. ரோ. ௰௫. ௩௨. எபி. ௬. ௩. யாக். ௪. ௰௫.
14 அப். ௰௯. ௨௧. ௧ கொரி. ௰௬. ௫. ௨ கொரி. ௧. ௰௫, ௨௩.
15 ௧ கொரி. ௨. ௪. ௧ தெச. ௧. ௫.
16 ௨ கொரி. ௰ ௨: ௰௩. ௰.
17 எபே. ௫. ௩.
18 ௩ மோ. ௰௮. ௮. ௫ மோ. ௨௨. ௩௰: ௨௭. ௨௰.
19 ௨ கொரி. ௭. ௰௨.
20 ௨ கொரி. ௭. ௭, ௰.

21 ௧ கொரி. ௪. ௰௮.—22 கொலோ. ௨. ௫.—* அல்லது நியமித்தேன்.—23 மத். ௰௬. ௰௯: ௰௮. ௰௮. யோவா. ௨௰. ௨௩. ௨ கொரி. ௨. ௰: ௰௩. ௩, ௰.

Digitized by Google

[1]சாத்தானுக்கு [2]ஒப்புக்கொடுக்க வேண்டும்.

௬ ¶ [3]நீங்கள் மேன்மைபாராட்டல் நல்லதல்ல; [4]கொஞ்சமான புளிப்புமா பிசைந்தமா அனைத்தையும் உப்பப்பண்ணுகிறதென்று அறியாமலிருக்கிறீர்களா?

௭ ஆனபடியினாலே [5]கிறிஸ்து என்னும் நம்முடைய [6]பஸ்காவும் நமக்காக அடிக்கப்பட்டு* இருக்கிறதால், நீங்கள் புளிப்பில்லாதவர்களாயிருக்கிறபடியே புதிதாய்ப் பிசைந்தமாவாகும்படிக்கு, பழைய புளிப்புமாவைப் புறம்பே கழித்துப்போடுங்கள்.

௮ அப்படிக்குப் [7]பழைய புளிப்புமாவோடே அல்ல, [8]துர்க்குணம் பொல்லாப்பு என்னும் புளிப்புமாவோடும் அல்ல, துப்புரவு உண்மை என்னும் புளிப்பில்லாமையோடே [9]பண்டிகையை† ஆசரிக்கக்கடவோம்.

௯ ¶ [10]வேசிக்கள்ளருடனே கலந்திருக்கக்கூடாதென்று நிருபத்திலே உங்களுக்கு எழுதினேன்.

௰ அப்படி நான் [11]இவ்வுலகத்தாராகிய [12]வேசிக்கள்ளர் அல்லது பொருளாசைக்காரர் அல்லது கொள்ளைக்காரர் அல்லது விக்கிரக ஆராதனைக்காரர் இவர்களைக் குறித்துப் பொதுவாய் எழுதவில்லை; அப்படியிருந்தால், [13]நீங்கள் உலகத்தைவிட்டுப் புறப்பட்டுப் போகவேண்டியதாயிருக்குமே.

௰௧ இப்பொழுதும் நான் உங்களுக்கு எழுதுகிறதென்னவென்றால், [14]சகோதரன் என்னப்பட்ட ஒருவன் வேசிக்கள்ளன், அல்லது பொருளாசைக்காரன், அல்லது விக்கிரக ஆராதனைக்காரன், அல்லது உதாசினன், அல்லது வெறியன், அல்லது கொள்ளைக்காரனானால் அவனோடே கலந்திருக்கக்கூடாது; [15]அப்படிப்பட்டவனுடனேகூடப் புசிக்கவும் கூடாது.

௰௨ [16]புறத்தில் இருக்கிறவர்களுக்கும் நியாயத்தீர்ப்புச் சொல்லுகிறது என்னுடைய காரியமா? [17]உள்ளே இருக்கிறவர்களுக்கு நீங்களும் நியாயத்தீர்ப்புச் சொல்லுகிறீர்கள் அல்லவோ?

௰௩ புறத்தில் இருக்கிறவர்களுக்குப் பராபரனே நியாயத்தீர்ப்புக் கொடுப்பார்; ஆகையால் [18]அந்தப் பொல்லாதவனை உங்களிடத்திலிருந்து எடுத்துப்போடுங்கள்.

கி. பி. ௫௯.

1 அப். ௨௬. ௰௮.
2 யோபு. ௨. ௬. சங். ௱௯. ௬. ௧ தீமோ. ௧. ௨௰.
3 ௨. ௰௪. ௧ கொரி. ௧. ௨௯: ௪. ௰௯. யாக். ௪. ௰௬.
4 ௧ கொரி. ௰௫. ௩௩. கலா. ௫. ௯. ௨ தீமோ. ௨. ௰௭.
5 ஏசா. ௫௩. ௭. யோவா. ௧. ௨௯. ௧ கொரி ௰௫. ௩. ௧ பே. ௧. ௰௯. வெளி. ௫. ௬, ௰௨.
6 யோவா. ௰௯. ௰௪.
* அல்லது பலியிடப்பட்டு.
7 ௫ மோ. ௰௬. ௩.
8 மத். ௰௬. ௬, ௰௨. மாற். ௮. ௰௫. லூக். ௰௨. ௧.
9 ௨ மோ. ௰௨. ௰௫: ௰௩. ௬.
† அல்லது திருநாளை.
10 ௨, ௭. ௨௪ ௨ கொரி. ௬. ௰௪. எபே. ௫. ௰௧. ௨ தெச. ௩. ௰௪.
11 ௧ கொரி ௧. ௨௰.
12 ௧ கொரி. ௰. ௨௭.
13 யோவா. ௰௭. ௰௫. ௧ யோ. ௫. ௰௯.
14 மத். ௰௮. ௰௭. ௨ ரோ. ௰௬. ௰௭. ௨ தெச. ௩. ௬, ௰௪. ௨ யோ. ௰.
15 கலா. ௨. ௰௨.
16 மாற். ௪. ௰௧. கொலோ. ௪. ௫: ௧ தெச. ௪. ௰௨. ௧ தீமோ. ௩ ௭.
17 ௧ கொரி. ௬. ௧, ௨, ௪.
18 ௫ மோ. ௰௩. ௫: ௰௭. ௭: ௨௧: ௨௨. ௨௧, ௨௨, ௨௪.
19 சங். ௪௯. ௰௪. தானி. ௭. ௨௨. மத். ௰௯. ௨௮. லூக். ௨௨. ௩௰. வெளி. ௨. ௨௬: ௩. ௨௧: ௨௰. ௪.
20 ௨ பே. ௨. ௪. யூதா. ௬.
21 ௧ கொரி. ௫. ௰௨.

## ௬. அதிகாரம்.

க. கொரிந்தியர், ரு. அவிசுவாசிகள்முன்பாகத் தங்கள் சகோதரரோடே வழக்காடக்கூடாதென்றும், கூ. அநீதிமானவன் மோட்சம் அடையானென்றும், ௰௩. நம்முடைய சரீரங்கள் கிறிஸ்துவின் அவயவங்களும், ௰௯. பரிசுத்தஆவியின் ஆலயங்களுமாயிருக்கிறதென்றும் அந்த ஆலயங்களை அசுசிப்படுத்தக்கூடாதென்றும் சொல்லியது.

உங்களில் ஒருவன் மற்றொருவனுக்கு விரோதமான காரியமுடையவனாய் இருக்கிறபொழுது அவன் நியாயம் பெற்றுக்கொள்ளுகிறதற்குப் பரிசுத்தவான்களிடத்தில் போகாமல், அநீதிக்காரரிடத்திலே போகத் துணிகிறதென்ன?

௨ [19]பரிசுத்தவான்கள் உலகத்திற்கு நியாயத்தீர்ப்புச் சொல்லுவார்கள் என்று அறியாமல் இருக்கிறீர்களா? உலகமும் உங்களால் நியாயந்தீர்க்கப்படுவதால், அற்ப வழக்குகளைத் தீர்க்க அபாத்திரராயிருக்கிறீர்களா?

௩ [20]தூதர்கள் நம்மால் நியாயத்தீர்ப்பைப் பெறுவார்கள் என்று அறியீர்களா? இச்சீவனுக்கு ஏற்ற வைகளை நீங்கள் தீர்த்துக்கொள்ளக்கூடாதிருக்கிறது எப்படி?

௪ [21]இச்சீவனுக்கு ஏற்ற வழக்குகள் உங்களுக்கு இருக்கும்பொழுது, நீங்கள் சபையினாலே அற்பமாய் எண்ணப்பட்டவர்களை வைக்கிறீர்கள்.

௫ உங்களுக்கு வெட்கம் உண்டாகும்படி இதைச் சொல்லுகிறேன்; இப்படிச் சகோதரனுக்கும் சகோதரனுக்கும் உண்டான வழக்கைத் தீர்க்கத்தக்க விவேகி ஒருவனாகிலும் உங்களுக்குள்ளே இல்லையோ?

Digitized by Google

௬ சகோதரனோடே சகோதரன் வழக்காடுகிறான்; அப்படி அவிசுவாசிகளுக்கு முன்பாகவே செய்கிறான்.

௭ நீங்கள் ஒருவரோடொருவர் வழக்காடுகிறதே எவ்விதத்திலும் தப்பிதமாயிருக்கின்றது; அப்படியன்றி [1]நீங்கள் அநியாயத்தையும் சேதத்தையும் அநுபவியாதிருக்கிறது என்ன?

௮ அப்படிச் செய்யாமல் [2]நீங்களே சகோதரருக்கே அநியாயம் செய்து, சேதம் உண்டாக்குகிறீர்கள்.

௯ ¶ அநியாயக்காரர் பராபரனுடைய இராச்சியத்தைச் சுதந்தரிப்பதில்லை என்று அறியாமல் இருக்கிறீர்களா? வஞ்சிக்கப்படாதிருங்கள்; [3]வேசிக்கள்ளரும் விக்கிரக ஆராதனைக்காரரும் விபசாரக்காரரும் சுயபுணர்ச்சிக்காரரும் ஆண்புணர்ச்சிக்காரரும்,

௰ திருடரும் பொருளாசைக்காரரும் வெறியரும் உதாசினரும் கொள்ளைக்காரரும் பராபரனுடைய இராச்சியத்தைச் சுதந்தரிப்பதில்லை.

௰௧ (முன்னே) [4]நீங்களும் சிலர் இப்படிப்பட்டவர்களாய் நடந்தீர்கள்; [5]இப்பொழுது கர்த்தராகிய இயேசுக்கிறிஸ்துவின் நாமத்தினாலும் நம்முடைய பராபரனுடைய ஆவியினாலும் கழுவப்பட்டும், பரிசுத்தமாக்கப்பட்டும், நீதிமான்களாக்கப்பட்டும் இருக்கிறீர்கள்.

௰௨ ¶ [6]நான் சகலத்தையும் அநுபவிக்கலாம்; ஆகிலும் எல்லாம் தகுதியாய்* இருக்கமாட்டாது; நான் சகலத்தையும் அநுபவிக்கலாம்; ஆகிலும் நான் ஒன்றினாலும் ஆளப்படமாட்டேன்.

௰௩ [7]போசனபதார்த்தங்கள் வயிற்றுக்கும் வயிறு போசனபதார்த்தங்களுக்கும் ஏற்கும்; பராபரன் இதையும் அவைகளையும் அழியப்பண்ணுவார்; சரீரம் வேசித்தனத்திற்கு அல்ல, [8]கர்த்தருக்கே ஏற்றது; [9]கர்த்தரும் சரீரத்திற்கு ஏற்றவர்.

௰௪ ஆதலால் [10]கர்த்தரைப் பராபரன் எழுப்பினதுபோல, [11]தம்முடைய வல்லமையினாலே நம்மையும் எழுப்புவார்.

௰௫ [12]உங்கள் சரீரங்கள் கிறிஸ்துவின் அவயவங்களாயிருக்கின்றன என்று அறியாமலிருக்கிறீர்களா? அப்படியிருக்க, கிறிஸ்துவினுடைய அவயவங்களை நான் எடுத்துக்கொண்டு வேசியின் அவயவங்கள் ஆக்கலாமா? அப்படி வாராதிருப்பதாக.

௰௬ அல்லது [13]இருவரும் ஒரே சரீரமாயிருப்பார்கள் என்று சொல்லியிருக்கிறபடி, வேசியோடு ஒட்டிக்கொள்ளுகிறவன் அவளுடனே ஒரே சரீரமாயிருக்கிறான் என்றும்,

௰௭ [14]கர்த்தரோடு ஒட்டிக்கொள்ளுகிறவன் (அவருடனே) ஒரே ஆவியாயிருக்கிறான் என்றும் அறியாமலிருக்கிறீர்களா?

௰௮ [15]வேசித்தனத்திற்கு விலகி ஓடுங்கள்; மனிதன் செய்யும் எந்தப் பாவமும் சரீரத்திற்குப் புறம்பே இருக்கின்றன; வேசித்தனம் செய்கிறவன் [16]தன் சுய சரீரத்திற்கு விரோதமாகப் பாவம்செய்கிறான்.

௰௯ [17]அல்லது உங்கள் சரீரமானது பராபரனாலே நீங்கள் பெற்றும், உங்களில் தங்கியும் இருக்கிற பரிசுத்த ஆவியினுடைய ஆலயமாயிருக்கின்றது என்று அறியாமலிருக்கிறீர்களா?

௨௰ அல்லாமலும் [18]மிகுந்த கிரயத்தினாலே நீங்கள் கொள்ளப்பட்டபடியினாலே, [19]நீங்கள் உங்களுடையவர்கள் அல்லவே, ஆகையால் பராபரனுக்கு உடையவர்களாகிய உங்கள் சரீரத்தினாலும் உங்கள் ஆவியினாலும் பராபரனுடைய

இ. பி. ௫௬.

1 லூக். ௨௰.௨௨. மத். ௫. ௩௯, ௪௰. லூக். ௬. ௨௯. உரோ. ௰௨. ௰௭, ௰௯. ௧ தெச. ௫. ௰௫.
2 ௧ தெச. ௪. ௬.
3 ௧ கொரி. ௰௫. ௫௰. கலா. ௫. ௨௧. எபே. ௫. ௫. ௧ தீமோ. ௧. ௯. எபி. ௰௨. ௰௪: ௰௩. ௪. வெளி. ௨௨. ௰௫.
4 ௧ கொரி. ௰௨. ௨. எபே. ௨. ௨: ௪. ௨௨: ௫. ௮. கொலோ. ௩ ௭ தீத். ௩. ௩.
5 ௧ கொரி. ௧. ௩௰. எபி. ௰. ௨௨.
6 ௧ கொரி. ௰. ௨௩.
* அல்லது பிரயோசனமாய்.
7 மத். ௰௫. ௰௭. உரோ. ௰௪. ௰௭. கொலோ. ௨. ௨௨, ௨௩.
8 ௰௫, ௰௯, ௨௰. வச. ௧ தெச. ௪. ௩, ௭.
9 எபே. ௫. ௨௩.
10 உரோ. ௮. ௰௧: ௮. ௰௩. ௨ கொரி. ௪ ௰௪.
11 எபே. ௧. ௰௯, ௨௰.
12 உரோ. ௰௨. ௫. ௧ கொரி. ௰௨. ௨௭. எபே. ௪. ௰௨, ௰௫, ௰௬: ௫. ௩௰.
13 ௧ மோ. ௨. ௨௪. மத். ௰௯. ௫. எபே. ௫. ௩௧.
14 யோவா. ௰௭. ௨௧, ௨௨, ௨௩. எபே. ௪. ௪: ௫. ௩௰.
15 உரோ. ௬.௰௨, ௰௩. எபி. ௰௩. ௪.
16 உரோ. ௧. ௨௪. ௧ தெச. ௪. ௪.
17 ௧ கொரி. ௩. ௰௬. ௨ கொரி. ௬. ௰௬.
18 அப். ௨௰.௨௮. ௧ கொரி. ௭. ௨௩. கலா. ௩. ௰௩. எபி. ௯. ௰௨. ௧ பே. ௧. ௰௮, ௰௯. ௨ பே. ௨. ௧. வெளி. ௫. ௯.—19 உரோ. ௰௪. ௭, ௮.

Digitized by Google

மகிமையைப் பிரசித்தம்பண்ணு வீர்களாக.

## எ. அதிகாரம்.

உ. விவாகம், ச. வேசித்தனத்துக்கு முறிவென்றும், ய. விவாகக்கட்டு எளிதாய் முறிக்கப்படக்கூடா தென்றும், யஅ. உய. அவனவனுக்குரிய தொழி லில் நிலைத்திருக்கவேண்டுமென்றும், உகூ. கன் னிகழியாமலிருக்கவும் முகாந்தரம் இன்னதென் றும், ஙகூ. விவாகம்செய்யவும் செய்யாமலிருக்க வும் முகாந்தரங்கள் இன்னவையென்றும் சொல் லியது.

நீங்கள் எனக்கு எழுதின காரி யங்களைக்குறித்து நான் எழுதுகிற து என்னவென்றால், [1]மனிதன் ஸ் திரியைத் தொடாமலிருந்தால் நல மாயிருக்கும்.

உ ஆகிலும் வேசித்தனங்கள் இரா தபடிக்கு, அவனவன் தன் மனை வியையும் அவளவள் தன் புருஷ னையும் கொள்வார்களாக.

ங [2]புருஷனும் தன் மனைவிக்குச் செய்யவேண்டிய கடமையைச் செய்யக்கடவன்; மனைவியும் தன் புருஷனுக்கு அப்படியே செய்யக் கடவள்.

ச மனைவியானவள் தன் சுய சரீ ரத்துக்கு அதிகாரியாயிராமல், புரு ஷனே அதற்கு அதிகாரியாயிருக் கிறான்; அப்படியே புருஷனும் தன் சுயசரீரத்திற்கு அதிகாரியா யிராமல், மனைவியே அதிகாரியா யிருக்கிறாள்.

ரு [3]ஒருவருக்கொருவர் விலகாதி ருங்கள்; உபவாசத்திற்கும் செபம் பண்ணுதற்கும் சாவகாசம் உண் டாயிருக்கும்படிக்கு, இருவரும் சிலகாலத்திற்காக விலகவேண்டும் என்று சம்மதித்தால் அப்படிச்செய் யலாம்; பின்பு உங்களுக்கு விரதத் துவம் இல்லாமையால் [4]சாத்தான் உங்களை எழுப்பாதபடிக்கு, மறு படியும் கூடியிருங்கள்.

சு [5]இதை நான் கட்டளையாக அல்ல, உத்தாரமாகச் சொல்லுகி றேன்.

எ [6]எல்லா மனிதரும் [7]என்னைப் போல இருக்க விரும்புகிறேன்; [8]ஆகிலும் பராபரனாலே அவனவ னுக்குச்சொந்தமானவரம் உண்டு; ஒருவனுக்கு ஒருவிதமாயும் மற் றொருவனுக்கு ஒருவிதமாயும் இ ருக்கிறது.

அ எப்படியும் விவாகம் இல்லாத வர்களையும் கைம்பெண்களையுங் குறித்து நான் சொல்லுகிறது என் னவென்றால், [9]அவர்கள் என்னைப் போல இருந்துவிட்டால் நலமா யிருக்கும்.

கூ ஆகிலும் அவர்கள் [10]விரத்தராய் இருக்கக்கூடாதிருந்தால், விவா கம்பண்ணக்கடவர்கள்; வேகிற தைவிட விவாகம்பண்ணுகிறது தகுதியாயிருக்குமே.

ய விவாகம்பண்ணினவர்களுக்கு [11]நானல்ல, கர்த்தர் கட்டளையிடு கிறது என்னவெனில், [12]மனைவி யானவள் தன் புருஷனைவிட்டுப் பிரியாதிருப்பாளாக.

யக பிரிந்துபோனால் அவள் விவா கம் இல்லாதிருக்கக்கடவள்; அல் லது புருஷனுடனே ஒப்புரவாகக் கடவள்; புருஷனும் தன் மனைவி யைவிட்டுப் போகாதிருப்பானாக.

யஉ ¶ மற்றவர்களுக்குக் [13]கர்த் தர் அல்ல நான் சொல்லுகிறதா வது: சகோதரன் ஒருவன் அவி சுவாசியான மனைவியை உடை யவனாயிருந்து தன்னுடனே அ வள்வாசமாயிருக்கச்சம்மதித்தால், அவளை விட்டுவிடாதிருக்கக்கட வன்.

யங மனைவி ஒருத்தியும் அவிசுவா சியான புருஷனை உடையவளா யிருந்து தன்னுடனே அவன் வாச மாயிருக்கச் சம்மதித்தால், அவனை விட்டுவிடாதிருக்கக்கடவள்.

யச என்னத்தினாலெனில் அவிசு வாசியான புருஷன் தன் மனைவி யால் பரிசுத்தமாக்கப்பட்டான்; அ விசுவாசியான மனைவியும் புருஷ னால் பரிசுத்தமாக்கப்பட்டாள்; இல்லாவிட்டால் [14]உங்கள் பிள் ளைகள் அசுத்தமாயிருக்குமே; இப் பொழுது அவைகள் பரிசுத்தமாயி ருக்கின்றனவே.

கி. பி. ருக.



1 அ, உக. வச.
2 உமோ உக. ய.
  க பே. க. எ.
3 யோவே. உ.
  யக. சகரி. எ. க.
  உ மோ. யகூ.
  யஉ. க சாமு.
  உக. ச, ரு.
4 க தெச. க. ரு.
5 யஉ, உரு. வச.
  உ கொரி. அ.
  அ: யக. யஎ.
6 அப் உக. உக.
7 க கொரி. கூ.
  ரு.
8 மத். யகூ. யஉ.
  க கொரி. யஉ.
  யக.
9 க, உக. வச.
10 க தீமோ. ரு.
  யச.
11 யஉ, உரு, சய.
  வச.
12 மல்கி. உ. யச,
  யகூ. மத். ரு.
  ஙஉ: யகூ. க,கூ.
  மாற் ய. யக,யஉ.
  லூக். யகூ. யஅ.
13 கூ. வச.
14 மல்கி உ.யரு.

Digitized by Google

௰௫ ஆகிலும் அவிசுவாசிகளானவர்கள் பிரிந்துபோனால் பிரிந்துபோகட்டும்; சகோதரனாவது சகோதரியாவது அப்படிப்பட்டவர்களால் அடிமையாக்கப்பட்டவர்கள் அல்ல, [1]சமாதானமாய்* இருக்கும்படிக்கே பராபரன் நம்மை அழைத்தார்.

௰௬ மனைவியே, [2]நீ உன் புருஷனைச் சீர்திருத்தக்கூடாதென்று எப்படி அறிந்திருக்கிறாய்? அல்லது புருஷனே, நீ உன் மனைவியைச் சீர்திருத்தக்கூடாதென்று எப்படி† அறிந்திருக்கிறாய்?

௰௭ பராபரன் அவனவனுக்குப் பகிர்ந்துகொடுத்தது எப்படியோ, கர்த்தர் அவனவனை அழைத்தது எப்படியோ, அப்படியே அவனவனும் நடக்கக்கடவன்; [3]எல்லாச் சபைகளிலேயும் இப்படியே திட்டம்பண்ணுகிறேன்.

௰௮ ¶ ஒருவன் விருத்தசேதனத்தைப் பெற்றவனாய் அழைக்கப்பட்டிருந்தால், விருத்தசேதனம் இல்லாமையைத்தேடாமலிருப்பானாக; ஒருவன் விருத்தசேதனம் இல்லாதவனாய் அழைக்கப்பட்டிருந்தால், [4]விருத்தசேதனத்தைப் பெறாமலிருப்பானாக.

௰௯ [5]விருத்தசேதனத்தினால் ஒன்றுமில்லை; விருத்தசேதனம் இல்லாமையாலும் ஒன்றுமில்லை; [6]பராபரனுடைய கற்பனைகளைக் கைக்கொள்ளுகிறதே பிரயோசனமாயிருக்கும்.

௨௰ அவனவனும் தான் அழைக்கப்பட்டபொழுது இருந்த நிலைமையிலே நிலைநிற்கக்கடவன்.

௨௰௧ அடிமையாகிய நிலைமையிலே அழைக்கப்பட்டாயானால், சுயாதீனமாயிருக்கும்படி கவலைப்படாதிருப்பாயாக; சுயாதீனமாக்கப்படக்கூடுமேயானால், அப்படி அநுசரிக்கலாம்.

௨௰௨ கர்த்தரால் அழைக்கப்பட்ட அடிமையானவன் [7]கர்த்தருக்குச் சுயாதீனனாய் ‡ இருக்கிறான்; அதுபோல அழைக்கப்பட்ட சுயாதீனன் [8]கிறிஸ்துவுக்கு அடிமையாயிருக்கிறான்.

௨௰௩ [9]மிகுந்த கிரயத்தினாலே கொள்ளப்பட்டீர்கள்; மனிதருக்கு அடிமைகளாகாமல் இருப்பீர்களாக.

௨௰௪ சகோதரரே, [10]அவனவன் அழைக்கப்பட்டபொழுது இருந்த நிலைமையிலேதானே பராபரனுக்கு முன்பாக நிலைநிற்கக்கடவன்.

௨௰௫ ¶ அன்றியும் விவாகம் இல்லாதவர்களுக்காகக் [11]கர்த்தருடைய கட்டளை எனக்கு இல்லை; அப்படியிருந்தும் [12]நான் உண்மையாயிருக்கிறதற்குக் [13]கர்த்தரால் இரக்கம் பெற்று யோசனை சொல்லுகிறேன்.

௨௰௬ ஆகையால் நான் பிரமாணிக்கிறது என்னவெனில், இப்பொழுது உண்டாயிருக்கிற இடுக்கணின்§நிமித்தம் [14]மனிதர் அப்படியே (விவாகமில்லாமல்) இருந்தால், அவர்களுக்கு நலமாயிருக்கும்.

௨௰௭ நீ ஒரு மனைவியோடே கட்டப்பட்டிருந்தால், அவிழ்க்கப்படும்படி தேடாதிருப்பாயாக; நீ ஒரு பெண்ணில்லாதவனாயிருந்தால், ஒரு பெண்ணைத் தேடாதிருப்பாயாக.

௨௰௮ நீ விவாகம்பண்ணினாலும் பாவமில்லை, ஒரு கன்னிகாஸ்திரி விவாகம்பண்ணினாலும் பாவமில்லை; ஆகிலும் அப்படிப்பட்டவர்கள் (சரீரத்திலே) உபத்திரவப்படுவார்கள்; அதற்கு நீங்கள் தப்பவேண்டும் என்கிறேன்.

௨௰௯ ¶ சகோதரரே, [15]பின்னும் நான் சொல்லுகிறது என்னவெனில், இனிவரும் காலம் சுருக்கமானபடியினாலே, மனைவிகளை உடையவர்கள் மனைவிகள் இல்லாதார்போலவும், அழுகிறவர்கள் அழாதார்போலவும்,

௩௰ சந்தோஷப்படுகிறவர்கள் சந்

கி. பி. ருக.

1 உரோ. ௰௨. ௰அ: ௰௪. ௰௯. ௧கொரி.௰௪.௩௩. எபி. ௰௨. ௰௪.
* கிரேக்கு, சமாதானத்தில்.
2 ௧ பே. ௩. ௧.
† கிரேக்கு, என்ன என்ன.
3 ௧ கொரி. ௪. ௰௭. ௨ கொரி. ௰௧. ௨௮.
4 அப். ௰௫. ௧,௫, ௰௯, ௨௪, ௨௮. கலா. ௫. ௨.
5 கலா. ௫. ௬:௬. ௰௫.
6 யோவா. ௰௫. ௰௪. ௧ யோ. ௨. ௩: ௩. ௨௪.
7 யோவா. ௮. ௩௬. உரோ. ௬. ௰௮, ௨௨. பிலே. ௰௬.
‡ கிரேக்கு, சுயாதீனமாக்கப்பட்டவனாய்.
8 ௧ கொரி. ௯. ௨௧. கலா. ௫. ௰௩. எபே. ௬.௬. ௧ பே. ௨. ௰௬.
9 ௧ கொரி. ௬. ௨௰. ௧ பே. ௧. ௰௮. ௰௯. ௬ மோ. ௨௫. ௪௨.
10 ௨௰. வ௪.
11 ௬,௰, ௪௰. வ௪. ௨ கொரி. ௮. ௰.
12 ௧ கொரி. ௪. ௨. ௧ தீமோ. ௧. ௰௨.
13 ௧ தீமோ. ௧. ௰௩.
§ அல்லது அவசியத்தின்.
14 ௬, ௮. வ௪.
15 உரோ. ௰௩. ௰௧. ௧ பே. ௪. ௭. ௨ பே. ௩. ௮,௯.

Digitized by Google

தோஷப்படாதார்போலவும், பொருளைக் கொள்ளுகிறவர்கள் பொருளைக் கொள்ளாதார்போலவும்,

௩௧ [1]இவ்வுலகத்தை அநுபவிக்கிறவர்கள் அதை அநுபவியாதார் போலவும் இருக்கவேண்டும்; [2]இவ்வுலகத்தின் வேஷம் கடந்துபோகின்றதே.

௩௨ நீங்கள் கவலையற்றவர்களாய் இருக்க விரும்புகிறேன்; [3]விவாகமில்லாதவன் கர்த்தருக்கு எப்படிப் பிரியமாயிருக்கலாம் என்று கர்த்தருக்கு உரியவைகளுக்காகக்* கவலைப்படுகிறான்.

௩௩ விவாகம்பண்ணினவன் தன் மனைவிக்கு எப்படிப் பிரியமாயிருக்கலாம் என்று உலகத்திற்கு உரியவைகளுக்காகக் கவலைப்படுகிறான்.

௩௪ அதுபோல விவாகஸ்திரிக்கும் கன்னிகாஸ்திரிக்கும் வித்தியாசம் உண்டு; [4]விவாகம் இல்லாதவள் சரீரத்திலும் ஆத்துமாவிலும் பரிசுத்தமாயிருக்கும்படிக்கு, கர்த்தருக்கு உரியவைகளுக்காகக் கவலைப்படுகிறாள்; விவாகம்பண்ணினவள் புருஷனுக்கு எப்படிப் பிரியமாயிருக்கலாம் என்று உலகத்திற்கு உரியவைகளுக்காகக் கவலைப்படுகிறாள்.

௩௫ இதை நான் உங்கள்மேல் வலையைப் போடுகிறதற்காகச் சொல்லாமல், கனம்பொருந்தியதாயிருக்கும் என்றும், தடையில்லாமல் கர்த்தரைப் பற்றிக்கொள்ளலாம் என்றும் உங்கள் சுய பிரயோசனத்திற்காகவே சொல்லுகிறேன்.

௩௬ ¶ ஆகிலும் ஒருவன் தன் கன்னிகைப் பருவவயது சென்றுபோனவளாகக் கலியாணம் இல்லாமலிருந்தால் யோக்கியம் அல்ல என்றும், விவாகம் பண்ணுவிக்கவேண்டும் என்றும் நினைத்தால், தன் மனதின்படி செய்யக்கடவன்; அது பாவமல்ல, விவாகம்பண்ணட்டும்.

௩௭ ஆகிலும் தன் கன்னிகையைக் கொடுக்க அவசியத்தைக் காணாமல், தன் இருதயத்திலே உறுதி உள்ளவனும் தன் சுய சித்தத்தின்படி செய்ய அதிகாரம் உள்ளவனும் இருந்து, அவளை அப்படியே காக்கவேண்டும் என்று தன் இருதயத்திலே தீர்மானிக்கிறவனே நன்மைசெய்கிறவன்.

௩௮ [5]ஆதலால் விவாகம்பண்ணிக் கொடுக்கிறவனும் நன்மைசெய்கிறான்; கொடாமலிருக்கிறவனும் அதிக நன்மைசெய்கிறான்.

௩௯ ¶ மனைவியானவள் [6]தன் புருஷன் உயிரோடிருக்கும் காலமளவும் கட்டப்பட்டிருக்கிறாள்; அவளுடைய புருஷன் மரித்தபின்பு, அவள் எவனையாகிலும் தன் இஷ்டப்படி விவாகம்பண்ண விடுதலையாயிருக்கிறாள், [7]கர்த்தருக்கு உட்பட்டவளாகமாத்திரம் அப்படிச் செய்யவேண்டும்.

௪௰ அவள் விடுதலையாகவே இருந்துவிட்டால், [8]என்னுடைய யோசனையின்படி அதிக பாக்கியவதியாய்இருப்பாள்; [9]என்னிடத்திலும் பராபரனுடைய ஆவி உண்டென்று எண்ணுகிறேன்.

## ௮ அதிகாரம்.

க. விக்கிரகங்களுக்குப் படைக்கப்பட்டவைகளைச் சாப்பிடக்கூடாதென்றும், ௮. ௯. நம்முடைய சுயாதீனத்தைத் தூர்வைபோக்கப் பலவீனருக்கு விதனத்தை உண்டுபண்ணக்கூடாதென்றும், ௰௩. நம்முடைய அறிவை அன்பிலே கட்டிவைக்கவேண்டுமென்றும் சொல்லியது.

[10]விக்கிரகங்களுக்குப்படைக்கப்பட்டவைகளைக்குறித்து [11]நாமெல்லாரும் அறிவுள்ளவர்கள் என்று அறிந்திருக்கிறோம்; [12]அறிவுமாத்திரம் இறுமாப்பாயிருக்கச்செய்கின்றது; அன்பே எழுப்புதற்கு ஏதுவாயிருக்கிறது.

௨ ஆகையால் [13]தன்னை அறிவுள்ளவன் என்று (இறுமாப்பாய்) எண்ணுகிற ஒருவன் தான் அறியவேண்டிய பிரகாரமாக ஒன்றும் அறிந்தவன் அல்ல.

௩ பராபரனிடத்தில் அன்பாயி

கி. பி. ௫௯.

1 க கொரி. ௯. ௰௮.
2 சங். ௩௯. ௬. யாக். ௧. ௰: ௪. ௰௪. ௧ பே. ௧. ௨௪: ௪. ௭. ௧ யோ. ௨. ௰௭.
3 ௧ தீமோ. ௫. ௫.
* இரேசுவு, கர்த்தருடையவைகளுக்காக; கச. வசனம்.
4 லூக். ௰. ௪௰. ௱.
5 எபி. ௰௩. ௪.
6 உரோ. ௭. ௨.
7 உ கொரி. ௬. ௰௪.
8 உ௫. வச.
9 க தெச. ௪. ௮
10 அப். ௰௫. ௨௰, ௨௯. க கொரி. ௰. ௰௯.
11 உரோ. ௰௪. ௰௪, ௨௨.
12 உரோ. ௰௪. ௩, ௰.
13 க கொரி. ௰௩. ௮, ௯, ௰௨. கலா. ௬, ௩. க தீமோ. ௬. ௪.

Digitized by Google

ருக்கிறவனே [1]அவரால் அறிந்து கொள்ளப்படுகிறான்.

௪ ஆனதால் விக்கிரகங்களுக்குப் படைக்கப்பட்டவைகளைப் புசிக்கிறதைக்குறித்து நாம் அறிந்திருக்கிறது என்னவெனில், [2]உலகத்திலே விக்கிரகமானது ஒன்றுமில்லை; [3]அல்லாமலும் ஒருவரே அன்றி வேறொரு தேவனும் இல்லை.

௫ வானத்திலேயும் பூமியிலேயும் [4]தேவர்கள் என்னப்பட்டவர்கள் உண்டு; இப்படி அநேக தேவர்களும் அநேக கர்த்தர்களும் உண்டாயிருந்தாலும்,

௬ [5]நமக்குப் பிதாவாகிய ஒரே தேவன் உண்டு; [6]அவரிலிருந்து சகலமும் உண்டாயிருக்கின்றன; அவரிடத்தில்* நாமும் இருக்கிறோம்; [7]இயேசுக்கிறிஸ்து என்னும் ஒரே கர்த்தாவும் நமக்குண்டு; [8]அவராலே சகலமும் உண்டாயிருக்கின்றன; அவராலே நாமும் இருக்கிறோம்.

௭ அப்படியிருந்தும் இந்த அறிவு எல்லாரிடத்திலும் இல்லை; [9]ஆனதால் சிலர் இன்றைவரைக்கும் விக்கிரகத்தையும் (ஒரு தேவனென்று) நினைத்து, விக்கிரகத்துக்குப் படைக்கப்பட்டதைப் புசிக்கிறார்கள்; [10]அதினாலே பெலஈனமாயிருக்கிற அவர்களுடைய மனது அசுசிப்படுகின்றது.

௮ ¶ [11]போசனமானது நம்மைப் பராபரனுக்கு உகந்தவர்கள் ஆக்கமாட்டாது; என்னத்தினாலெனில் புசித்தால் நாம் பெருகுவதும்† இல்லை; புசியாதிருந்தால் நாம் குறைவதும்‡ இல்லையே.

௯ ஆகிலும் இதைக்குறித்து உங்களுக்கு உண்டாயிருக்கிற அதிகாரத்தினாலே§ பெலஈனருக்குத் [12]தவறுதல் வாராதபடிக்குப் [13]பார்ப்பீர்களாக.

௰ எப்படியென்றால் அறிவுள்ள உன்னை ஒருவன் விக்கிரகக்கோவிலிலே போசனபந்தி இருக்கக் கண்டால் [14]பெலஈனனாயிருக்கிற அவனுடைய மனது விக்கிரகங்களுக்குப் படைக்கப்பட்டவைகளைப் புசிக்கிறதற்கு எழுப்பப்படும்|| அல்லவோ?

௰௧ பெலஈனனாகிய உன் சகோதரனுக்காகக் கிறிஸ்து மரித்தாரே; [15]அவன் உன்னுடைய அறிவினாலே கெட்டுப்போகலாமா?

௰௨ இப்படிச் [16]சகோதரருக்கு விரோதமாகப் பாவம்செய்து பெலஈனமான அவர்களுடைய மனதைக் காயப்படுத்துகிறதினாலே, நீங்கள் கிறிஸ்துவுக்கே விரோதமாகப் பாவம்செய்கிறீர்கள்.

௰௩ ஆனபடியினாலே [17]போசனம் என் சகோதரனுக்குக் கேடு வருதற்கு ஏதுவானால், என் சகோதரனுக்குக் கேடு வராதபடிக்கு என்றைக்கும் இறைச்சியைப் புசிக்கமாட்டேன்.

கி. பி. ௫௯.

1 உ மோ. ௧௧. ௰௨, ௰௭. நெகே. ௧. ௭. மத். ௭. ௨௧. கலா. ௪. ௯. உ தீமோ. ௨. ௰௯.
2 ஏசா. ௪௧. ௨௪. ௧ கொரி. ௰ ௰௯.
3 இ மோ. ௪. ௩௯: ௬. ௪. ஏசா. ௪௪. ௮ மாற். ௰௨. ௨௯. ௩. ௩௪. எபே. ௪. ௬. ௧ தீமோ. ௨. ௫.
4 யோவா. ௰. ௩௪.
5 மல்கி. ௨. ௰. எபே. ௪. ௬.
6 அப். ௰௭. ௨௮. உரோ. ௰௧. ௩௬.

*அல்லது அவருக்காக.

7 யோவா. ௰௩. ௰௩. அப் ௨. ௩௬. ௧ கொரி. ௰௨. ௩. எபே. ௪. ௫. பிலி ௨. ௰௧.
8 யோவா. ௧. ௩. கொலோ. ௧. ௰௬. எபி. ௧. ௨.
9 ௧ கொரி. ௰. ௨௮, ௨௯.
10 உரோ. ௰௪. ௰௪, ௨௩.
11 உரோ. ௰௪. ௰௭.

† அல்லது மேன்மையாவதும்.

‡ அல்லது தாழ்மையாவதும்.

§ அல்லது சுயாதீனத்தினாலே.

12 உரோ. ௰௪. ௰௩, ௨௰.
13 கலா. ௫. ௰௩.
14 ௧ கொரி. ௰. ௨௮, ௩௨.

|| இரேக்கு, உறுதியாகும்.

15 உரோ. ௰௪. ௰௫, ௨௰.
16 மத். ௨௫. ௪௰, ௪௫.
17 உரோ. ௰௪. ௨௧. உ கொரி. ௰௧. ௨௯.

# ௯. அதிகாரம்.

௧. பவுல் தனக்குண்டான சுயாதீனம் இன்னதென்றும், ௭. போதகர் சுவிசேஷத்தைக்கொண்டு சீவனம்பண்ணவேண்டுமென்றும், ௰௫. அவன் அந்த நியாயத்தை அநுசரிக்காமல், ௰௮ அவர்களுக்குத் தன்னைக்குறித்துச் செலவில்லாமலும், ௨௨. அற்பமானவைகளிலே தான் ஒருத்தனுக்கும் விதனமுண்டாக்காமலும் இருந்தாரென்றும், ௨௪. நம்முடைய சீவன் பந்தய ஓட்டம்போல இருக்கிறதென்றும் சொல்லியது.

[18]நான் அப்போஸ்தலன் அல்லவா? நான் சுயாதீனன் அல்லவா? [19]நான் நம்முடைய கர்த்தராகிய இயேசுக்கிறிஸ்துவைத் தரிசிக்க இல்லையா? [20]கர்த்தராலே நீங்கள் என்னுடைய கிரியைக்குத் (திருட்டாந்தங்களாய்) இருக்கிறீர்கள் அல்லவா?

௨ நான் மற்ற மனிதருக்கு அப்போஸ்தலனாய் இராவிட்டாலும், உங்களுக்கல்லவோ அப்போஸ்தலனாயிருக்கிறேன்; கர்த்தராலே

18 அப். ௯. ௰௫: ௰௩. ௨: ௨௬. ௰௭. உ கொரி ௰௨. ௰௨. கலா ௨. ௭, ௮. ௧ தீமோ. ௨. ௭. உ தீமோ. ௧. ௰௧.—19 அப். ௯. ௩, ௰௭: ௰௮. ௯: ௨௨. ௰௪, ௰௮: ௨௬. ௰௬. ௧ கொரி. ௰௫. ௮.—20 ௧ கொரி. ௩. ௬: ௪. ௰௫.

Digitized by Google

நீங்கள் என் அப்போஸ்தல ஊழியத்தின் [1]முத்திரையாய் இருக்கிறீர்களே.

௩ என்னைக்குறித்துத் தீர்ப்புச் சொல்லுகிறவர்களுக்கு நான் என்ன உத்தரவு கொடுக்கிறேனெனில்,

௪ (சபையின் செலவினாலே) [2]போசனபானம்பண்ண எங்களுக்கு அதிகாரம் இல்லையோ?

௫ மற்ற அப்போஸ்தலரும் [3]கர்த்தருடைய சகோதரரும் [4]கேபாவும் செய்கிறதுபோல, நாங்களும் மனைவியாகிய* ஒரு கிறிஸ்தவளைக் கூட்டிக்கொண்டு திரிகிறதற்கு எங்களுக்கு அதிகாரம் இல்லையோ?

௬ அல்லது கைவேலை செய்யாதிருக்கிறதற்கு எனக்கும் பருனபாவுக்கும்மாத்திரம் [5]அதிகாரம் இல்லையோ?

௭ ¶ எக்காலத்திலாகிலும் [6]தன் சொந்தப்பணத்தைச் செலவழித்து, எவன் தண்டிலே சேவகம்பண்ணுவான்? [7]எவன் திராட்சத்தோட்டம் உண்டாக்கி, அதின் கனிகளில் சில புசியாமல் இருப்பான், [8]அல்லது எவன் ஆடுகளை மேய்த்து, அதின் பாலிலே கொஞ்சம் சாப்பிடாதிருப்பான்.

௮ இவைகளை மனிதர் நடக்கையின்படிமாத்திரம் சொல்லுகிறேனோ? நியாயப்பிரமாணமும் இப்படிச் சொல்லுகிறதில்லையா?

௯ [9]போரடிக்கிற மாட்டின் வாயைக் கட்டாதிருப்பாயாக என்று மோசேயின் பிரமாணத்திலே எழுதியிருக்கின்றதே, பராபரன் மாடுகளுக்காக (மாத்திரம்) விசாரிக்கிறாரா?

௰ அது விசேஷமாய் நமக்காகச் சொல்லியிருக்கிறதில்லையா? [10]உழுகிறவன் பலனில் நம்பிக்கையோடே உழவும், போரடிக்கிறவன் தான் நம்பின பலனுக்குப் பங்குள்ளவனாவேன் என்கிற நம்பிக்கையோடே போரடிக்கவும் வேண்டியபடியால், அது நமக்காகவே எழுதியிருக்கின்றது.

௧௧ [11]நாங்கள் உங்களுக்கு ஞானநன்மைகளை விதைத்திருக்க, உங்கள் சரீரநன்மைகளை அறுத்தால் அது பெரிய காரியமாயிருக்குமா?

௧௨ வேறுபேர்கள் உங்களிடத்தில் இருந்த அதிகாரத்தை அநுசரித்துக்கொண்டிருக்க, அவர்களிலும் நாங்கள் அதிகமாய் அப்படிச் செய்யலாம் அல்லவா? [12]அப்படியிருந்தும் கிறிஸ்துவின் சுவிசேஷத்திற்கு யாதொரு தடையையும் உண்டாக்காதபடிக்கு, [13]நாங்கள் இந்த அதிகாரத்தை அநுபவித்துக்கொள்ளாமல் எல்லாவிதமான பாடும் படுகிறோம்.

௧௩ ¶ [14]கோவிலில் ஊழியம் செய்கிறவர்கள் கோவிலுக்கு உரியதில் புசிக்கிறார்கள்† என்றும், பீடத்தில் ஆராதனைசெய்கிறவர்கள் பீடத்தில் உள்ளவைகளில் பங்கை அடைகிறார்கள் என்றும் அறியாமலிருக்கிறீர்களா?

௧௪ அதுபோலக் [15]கர்த்தரும் தமது [16]சுவிசேஷத்தை அறிவிக்கிறவர்களுக்குச் சுவிசேஷத்தினாலே பிழைப்பு வரவேண்டும் என்று கட்டளையிட்டார்.

௧௫ ¶ அப்படியிருந்தும் [17]நான் இவைகளில் ஒன்றையும் அநுசரித்துக்கொள்ளவில்லை; இப்படி நான் மேன்மைபாராட்டுகிறதை ஒருவன் அவத்தமாக்குகிறதிலும் [18]சாகிறதே எனக்குப் பிரியமாயிருக்கும்; ஆதலால் அப்படி இனிமேல் அநுசரிக்கவேண்டும் என்று நான் இவைகளை எழுதினதும் இல்லை.

௧௬ சுவிசேஷத்தை நான் பிரசங்கிக்கிறதினாலே நான் மேன்மைபாராட்டக்கூடாது; அது [19]எனக்கு உண்டான கடமையாய் இருக்கின்றதே. மேலும் சுவிசேஷத்தை நான் பிரசங்கம்பண்ணாமல் இருந்தால், ஐயோ, எனக்கு வேதனைவருமே.

இ. பி. ௩௧.

1 உ கொரி. ௩. உ: ௰௨. ௰௨.
2 ௰௪. வசனம். க தெச. உ. ௯. உ தெச. ௩. ௯.
3 மத். ௰௩. ௫௫. மாற். ௬. ௩. லூக். ௬. ௰௫. கலா. க. ௰௯.
4 மத். அ. ௰௪.
* அல்லது ஸ்திரீ
5 உ தெச. ௩. அ, ௯.
6 உ கொரி. ௰௪. க தீமோ. க. ௰அ: ௬. ௰௨. உ தீமோ. உ ௩: ௪. எ.
7 உ மோ. உ௰. ௬. வாக். உஎ. ௰அ. க கொரி. ௩. ௬, எ, அ.
8 யோவா. உக. ௰௫. க பே. ௫. உ.
9 உ மோ. உ௫. ௪. க தீமோ. ௫. ௰அ.
10 உ தீமோ. உ. ௬.
11 உரோ. ௰௫. உஎ. கலா. ௬. ௬.
12 உ கொரி. ௰௧. ௰௨.
13 அப். உ௰. ௩௩. ௰௫, ௰அ. வச. உ கொரி. ௰௧. எ, ௯: ௰௨. ௰௩. க தெச. உ. ௬.
14 ௪ மோ. ௩. ௰௩, உ௩: எ. ௩. ௯. ௪ மோ. ௫. ௯, ௰: ௰அ. அ, உ௬. ௫ மோ. ௰. ௯: ௰அ. ௩.
† அல்லது ஜீவிக்கிறார்கள்.
15 மத். ௰. ௰. லூக். ௰. எ.
16 கலா. ௬. ௬ க தீமோ. ௫. ௰௭.
17 ௰௨. வச. அப். ௰அ. ௩: உ௰. ௩௪. க கொரி ௪. ௰௨. க தெச. உ. ௯. உ தெச. ௩. அ.
18 உ கொரி. ௰௧ ௰.
19 உரோ. க. ௰௪.

Digitized by Google

௰௭ அன்றியும் நான் மனப்பூர்வமாய் அப்படிச்செய்தால் [1]எனக்குப் பலன் உண்டு; மனப்பூர்வமில்லாதவனாயிருந்தாலும் [2]உக்கிராண உத்தியோகம் எனக்கு ஒப்புவிக்கப்பட்டிருக்கிறது.

௰௮ ஆனதால் எனக்கு என்ன பலன் உண்டு? [3]நான் சுவிசேஷத்தைப் பிரசங்கிக்கையில், அதில் [4]எனக்கு உண்டாயிருக்கிற அதிகாரத்தை அநுசரியாமல், கிறிஸ்துவின் சுவிசேஷத்தைச் செலவில்லாமலே ஸ்தாபிப்பேன்; அதுவே எனக்குப் பலன்.

௰௯ ¶ ஆகையால் [5]நான் எல்லாரையும்விட்டுச் சுயாதீனனாயிருந்தும் [6]நான் அதிக சனங்களை ஆதாயப்படுத்திக்கொள்ளும்படிக்கு [7]என்னைத்தானே எல்லாருக்கும் ஊழியக்காரன் ஆக்கினேன்.

௨௰ அந்தப்படி யூதரை ஆதாயப்படுத்திக்கொள்ளத்தக்கதாக [8]யூதருக்கு யூதனைப்போலவும், நியாயப்பிரமாணத்திற்குக் கீழானவர்களை ஆதாயப்படுத்திக்கொள்ளத்தக்கதாக நியாயப்பிரமாணத்திற்குக் கீழானவனைப்போலவும் ஆனேன்.

௨௧ [9]நியாயப்பிரமாணம் இல்லாதவர்களை ஆதாயப்படுத்திக்கொள்ளத்தக்கதாக [10]அவர்களுக்கு நியாயப்பிரமாணம் இல்லாதவனைப் போலவும் ஆனேன்; அப்படியிருந்தும் [11]நான் பராபரனுக்குமுன்பாக நியாயப்பிரமாணம் இல்லாதவனாய் இராமல், விசேஷமாய்க் கிறிஸ்துவின் நியாயப்பிரமாணத்திற்கு உள்ளானவனாயிருக்கிறேன்.

௨௨ மேலும் பெலஈனரை ஆதாயப்படுத்திக்கொள்ளத்தக்கதாகப் [12]பெலஈனருக்குப் பெலஈனனைப் போல ஆனேன்; [13]நான் எப்படியும் சிலரை இரட்சிக்கும்படிக்கு, [14]எல்லாருக்கும் எல்லாவிதமும் ஆனேன்.

௨௩ சுவிசேஷத்தின் பலனுக்கு நான் உடன் பங்காளனாகும்படிக்குச் சுவிசேஷத்தின் நிமித்தமே இப்படிச் செய்கிறேன்.

௨௪ ¶ ஓடுதற்கு ஏற்ற சாலையில் எல்லாரும் ஓடுவார்கள், ஆகிலும் ஒருவன்மாத்திரம் பந்தயப்பொருளைப் பெறுவான் என்று அறியாமலிருக்கிறீர்களா? நீங்கள் (பந்தயப்பொருளைப் பிடிக்கத்தக்கதாகவே [15]ஓடுங்கள்.)

௨௫ [16]மேலும் போராடுகிற யாவரும் அழிவுள்ள கிரீடத்தைப் பெறும்படிக்கு, எல்லா இச்சைகளையும் அடக்கிக்கொள்ளுவார்கள்; [17]நாம் அழிவில்லாத கிரீடத்தைப் பெறும்படிக்கு அப்படிச் செய்கிறோம்.

௨௬ ஆதலால் [18]நான் நிச்சயமில்லாமல் ஓடேன்; நான் ஆகாசத்தை அடித்துச் சிலம்பம்பண்ணேன்.

௨௭ ஆதலால் மற்றவர்களுக்குப் பிரசங்கம்பண்ணுகிற நான்தானே [19]அபாத்திரனாய்ப் போகாதபடிக்கு, [20]என் சரீரத்தை [21]ஒடுக்கிக் கீழ்ப்படுத்துகிறேன்.

## ௰. அதிகாரம்.

௧. யூதர்கள் ஆசரித்துவந்த சடங்குகள். ௬. நாம் அநுபவிக்கிற சடங்குகளுக்கு அடையாளங்கள் என்றும், ௭. அவர்கள் பட்டபாடுகள் நமக்குத் திருட்டாந்தங்கள் என்றும், ௰௪. விக்கிரகாராதனைக்கு விலகவேண்டியதென்றும், ௨௧. நாம் கர்த்தருடைய பந்தியைப் பேய்களின் பந்தியாக்கக் கூடாதென்றும், ௨௪. அற்பமான காரியங்களிலும் நம்முடைய சகோதரருடைய நன்மையை நோக்கவேண்டுமென்றும் சொல்லியது.

இப்படியிருக்கச் சகோதரரே, நீங்கள் எவைகளை நினைக்கவேண்டுமென்றிருக்கிறேன் என்றால், நம்முடைய பிதாக்கள் எல்லாரும் [22]மேகத்திற்குக் கீழாயிருந்தார்கள்; எல்லாரும் [23]சமுத்திரத்தின் வழியாய் நடந்துவந்தார்கள்.

௨ எல்லாரும் மோசேயுக்குள்ளாக மேகத்தினாலும் சமுத்திரத்தினாலும் ஞானஸ்நானம்பண்ணப்பட்டார்கள்.

கி. பி. ௫௯.

1 ௧ கொரி. ௩. ௮, ௰௪.
2 ௧ கொரி. ௪. ௧. கலா. ௨. ௭. பிலி. ௧. ௰௭. கொலோ. ௧. ௨௫.
3 ௧ கொரி. ௰. ௩௩. ௨ கொரி. ௪. ௫: ௰௧. ௭.
4 ௧ கொரி. ௭. ௩௧.
5 ௧. ௰௪. ◆
6 மத். ௰௮. ௰௫. ௧ பே. ௩. ௧.
7 கலா. ௫. ௰௩.
8 அப். ௰௬. ௩: ௰௮. ௰௮: ௨௧. ௨௩. ௲.
9 கலா. ௩. ௨.
10 ௨ ரோ. ௨. ௰௨, ௰௪.
11 ௧ கொரி. ௭. ௨௨.
12 ௨ ரோ. ௰௫. ௧. ௨ கொரி. ௰௧. ௨௯.
13 ௨ ரோ. ௰௧. ௰௪. ௧ கொரி. ௭. ௰௬.
14 ௧ கொரி. ௰. ௩௩.
15 கலா. ௨. ௨: ௫. ௭. பிலி. ௨. ௰௬: ௩. ௰௪. ௨ தீமோ. ௪. ௭. எபி. ௰௨. ௧.
16 எபே. ௬. ௰௨. ௧ தீமோ. ௬. ௰௨. ௨ தீமோ. ௨. ௫: ௪. ௭.
17 ௨ தீமோ. ௪. ௮. யாக். ௧. ௰௨. ௧ பே. ௧. ௪: ௫. ௪. வெளி. ௨. ௰: ௩. ௰௧.
18 ௨ தீமோ. ௨. ௫.
19 எரே. ௬. ௩௰. ௨ கொரி. ௰௩. ௫, ௬.
20 ௨ ரோ. ௮. ௰௩. கொலோ. ௩. ௫.
21 ௨ ரோ. ௬. ௰௮, ௰௯.
22 ௨ மோ. ௰௩. ௨௧: ௪௰. ௩௪. ௪ மோ. ௯. ௰௮: ௰௪. ௰௪. ௫ மோ. ௧. ௩௩. நெகே. ௯. ௰௨, ௰௯. சங். ௭௮. ௰௪: ௩௫. ௩௩.

23 ௨ மோ. ௰௪. ௨௨. ௪ மோ. ௩௩. ௮. யோசு. ௪. ௨௩. சங். ௭௮. ௰௩.

Digitized by Google

௩ [1]எல்லாரும் ஒரே ஞானபோசனபதார்த்தத்தைப் புசித்தார்கள்.

௪ கிறிஸ்து என்னும் ஞானக்கல்மலை அவர்களோடேகூடச்* சென்றதே; [2]அந்த ஞானக்கல்மலையின் தண்ணீரை எல்லாரும் குடித்து, இப்படியே ஞானபானம்பண்ணினார்கள்.

௫ அப்படியிருந்தும், அவர்களில் அதிகமான பேர்களிடத்தில் பராபரன் பிரியமாயிருக்கவில்லை.

௬ [3]வனாந்தரத்திலே அவர்கள் அழிக்கப்பட்டார்களே; [4]அவர்கள் இச்சித்ததுபோல நாமும் பொல்லாங்கானவைகளை இச்சியாதபடிக்கு இந்தச் சங்கதிகள் நமக்குத் திருட்டாந்தங்களாய்† இருக்கின்றன.

௭ ¶ ஆனதால் [5]சனங்கள் புசிக்கவும் குடிக்கவும் உளுக்காந்து விளையாட எழுந்திருந்தார்கள் என்று எழுதியிருக்கிறபடி, அவர்களில் சிலர் [6]விக்கிரக ஆராதனைக்காரர் ஆனதுபோல, நீங்கள் அப்படிப்பட்டவர்கள் ஆகாதிருங்கள்.

௮ அவர்களில் சிலர் [7]வேசித்தனம்பண்ணி, ஒரேநாளில் இருபத்துமூவாயிரம்பேர் விழுந்துபோனார்கள்; [8]அதுபோல நாம் வேசிமார்க்கமாய்ப் போகாதிருப்போமாக.

௯ [9]அவர்களில் சிலர் கிறிஸ்துவைப் பரிட்சைபார்த்துப் [10]பாம்புகளால் அழிக்கப்பட்டார்கள்; அதுபோல நாம் கிறிஸ்துவைப் பரிட்சைபாராதிருப்போமாக.

௰ அவர்களில் சிலர் [11]முறுமுறுத்து, [12]சங்காரக்காரனாலே [13]அழிக்கப்பட்டார்கள்; அதுபோல நீங்கள் முறுமுறாதிருப்பீர்களாக.

௧௧ திருட்டாந்தங்கள்‡ உண்டாகத்தக்கதாக [14]இவைகள் எல்லாம் அவர்களுக்குச் சம்பவித்து, உலகத்தின் கடைசிக்காலத்திலுள்ள நமக்கு [15]எச்சரிப்பு உண்டாகும்படி எழுதப்பட்டிருக்கின்றன.

௧௨ ஆனபடியினாலே (தன்னை) [16]நிற்கிறவனென்று எண்ணுகிறவன் விழாதபடிக்குப் பார்க்கக்கடவன்.

௧௩ மனிதருக்குரிய§ உபத்திரவமே அல்லாமல் வேறே உபத்திரவம் இதுவரைக்கும் உங்களைப் பிடிக்கவில்லை; [17]பராபரன் உண்மையுள்ளவராய் இருக்கிறார்; [18]ஆதலால் இனிமேலும் நீங்கள் சகிக்கிறதற்கு மேலான உபத்திரவத்தை அவர் உங்களுக்கு வரப்பண்ணாமல் [19]நீங்கள் தாங்கத்தக்கதாக உபத்திரவத்தை அல்லாமல் போக்கையும் உண்டாக்குவார்.

௧௪ ஆகையால் எனக்குப் பிரியமானவர்களே, [20]விக்கிரக ஆராதனைக்கு விலகி ஓடுவீர்களாக.

௧௫ [21]உங்களைப் புத்திமான்களென்று எண்ணிப் பேசுகிறேன்; ஆனதால் நான் சொல்லுகிறதை நீங்களே நிதானித்துப்பாருங்கள்.

௧௬ நாம் ஆசீர்வதிக்கிற [22]ஆசீர்வாதத்தின் பாத்திரம் கிறிஸ்துவினுடைய இரத்தத்துடனே ஐக்கியப்படுதற்கு ஏற்றதல்லவோ? [23]நாம் பிட்கிற அப்பம் கிறிஸ்துவினுடைய சரீரத்துடனே ஐக்கியப்படுதற்கு ஏற்றதல்லவா?

௧௭ ஒரே அப்பம் இருக்க நாம் எல்லாரும் அந்த ஒரே அப்பத்திற்குப் பங்காளிகளானபடியினாலே [24]அநேகரான நாம் ஒரே சரீரமாய் இருக்கிறோமே.

௧௮ [25]புறம்பான [26]இஸ்ரவேலைப் பாருங்கள்; [27]பலிகளைப்புசிக்கிறவர்கள் பலிபீடத்தோடே ஐக்கியமாயிருக்கிறார்கள் அல்லவோ?

௧௯ இதினாலே என்ன சொல்லுகிறேன்? [28]விக்கிரகம் ஒரு பொ

கி. பி. ௫௯.

1 உ மோ. ௰௩. ௰௫, ௰௫. செகே. ௯. ௰௫, உ௰. சங். எ௮. உ௪.
* அல்லது அவர்களுக்குப் பின்; ௫ மோ. ௯. உ௧. சங். ௰௫. ௪௧.
2 உ மோ. ௰எ. ௬. ௪ மோ. உ௰. ௰௧. சங். எ௮. ௰௫.
3 ௪ மோ. ௰௪. உ௯, ௩உ, ௩௫: உ௬. ௬௪, ௬௫. சங். ௱௬. உ௬. எபி. ௩. ௰எ. யூதா. ௫.
4 ௪ மோ. ௰௧. ௪, ௩௩, ௩௪. சங். ௱௬. ௰௪.
† கிரேக்கு, உவமைகள்.
5 உ மோ. ௩உ. ௬.
6 ௰௪. ௬௪.
7 ௪ மோ. உ௫. ௧, ௯. சங். ௱௬. உ௯.
8 க கொரி. ௬. ௰௮. வெளி. உ. ௰௪.
9 உ மோ. ௰எ. உ, எ. ௪ மோ. உ௧. ௫. ௫ மோ. ௬. ௰௬. சங். எ௮. ௰௮, ௫௬: ௯௫. ௯: ௱௬. ௰௪.
10 ௪ மோ. உ௧. ௬.
11 உ மோ. ௰௬. உ: ௰எ. உ. ௪ மோ. ௰௪. உ, உ௯: ௰௬. ௪௧.
12 உ மோ. ௰உ. உ௩, உ சாமு. உ௪. ௰௬. ௧௱௯. உ௧. ௰௫.
13 ௪ மோ. ௰௪. ௩எ: ௰௬. ௪௯.
‡ அல்லது அடையாளங்கள்.
14 க கொரி. எ. உ௯. பிலி. ௪. ௫. எபி. ௰. உ௫, ௩எ. க யோ. உ ௰௮.
15 உ ரோ ௰௫. ௪. க கொரி. ௯. ௰.



Digitized by Google

கி. பி. ௫௯.



ருன் என்று சொல்லுகிறேனோ? அல்லது விக்கிரகங்களுக்குப் படைக்கப்பட்டது ஒரு பொருள் என்று சொல்லுகிறேனோ?

௨௰ இல்லையே [1]அஞ்ஞானிகள் பலியிடுகிறவைகளைப் பராபரனுக்கு அல்ல, பேய்களுக்குப் பலியிடுகிறார்கள் என்றே சொல்லுகிறேன்; நீங்கள் பேய்களோடே ஐக்கியமாயிருக்கவேண்டும் என்று நான் விரும்புகிறதில்லை.

௨௧ நீங்கள் [2]கர்த்தருடைய பாத்திரத்திலும் [3]பேய்களுடைய பாத்திரத்திலும் பானம்பண்ணக்கூடாதே; நீங்கள் கர்த்தருடைய போசனபந்திக்கும் பேய்களுடைய போசனபந்திக்கும் பங்காளிகளாய் இருக்கக்கூடாதே.

௨௨ [4]அல்லது, நாம் கர்த்தருக்குக் கோபத்தை மூட்டலாமா? [5]அவரிலும் நாம் பெலவான்களாய் இருக்கிறோமா?

௨௩ ¶ [6]எல்லாப் பதார்த்தங்களையும் நான் அநுபவிக்கலாம்; ஆகிலும் எல்லாம் பிரயோசனமாயிருக்கிறதில்லை; எல்லாப் பதார்த்தங்களையும் நான் அநுபவிக்கலாம்; ஆகிலும் எல்லாம் எழுப்புதற்கு எதுவாயிராது.

௨௪ எவனும் [7]தனக்காகமாத்திரம் பிரயோசனத்தைத் தேடாமல், மற்றவனுக்காகவும் அப்படித் தேடக்கடவன்.

௨௫ [8]பூமியும் அதிலுள்ள நிறைவு யாவும் கர்த்தருடையது என்பதின்படி,

௨௬ உங்கள் மனது அடைந்த அறிவினாலே நீங்கள் ஒன்றையும் விசாரியாமல், [9]கடையிலே விற்கப்படுகிற எதையும் வாங்கிப் புசியுங்கள்.

௨௭ அல்லாமலும் அவிசுவாசிகளில் ஒருவன் உங்களைப் போசனபந்திக்கு அழைக்கும்பொழுது, நீங்கள் போக மனதுண்டானால் உங்கள் மனது அடைந்த அறிவினாலே ஒன்றையும் விசாரியாமல் [10]உங்கள்முன் வைக்கப்பட்ட எதையும் புசியுங்கள்.

௨௮ அப்பொழுது இது விக்கிரகங்களுக்குப் படைக்கப்பட்டது என்று ஒருவன் உங்களுக்குச் சொன்னால், [11]அப்படி அறிவித்தவன் நிமித்தமும் மனதறிவின்நிமித்தமும் புசியாதிருங்கள்; [12]பூமியும் அதிலுள்ள நிறைவு யாவும் கர்த்தருடையதே.

௨௯ உன்னுடைய மனதைக்குறித்து அல்ல, மற்றொருவனுடைய மனதைக்குறித்தே சொல்லுகிறேன்; ஆகிலும் என்னுடைய சுயாதீனம் மற்றொருவனுடைய மனதின் நிமித்தம் குற்றமாய் [13]எண்ணப்படவேண்டுவதென்ன?

௩௰ மேலும் நான் அதைத் தோத்திரிப்புடனே* அநுபவித்தால், [14]தோத்திரித்து அநுபவிக்கிறதற்காக நான் தூஷணிக்கப்படவேண்டுவதென்ன?

௩௧ அதினாலேதானே [15]நீங்கள் புசித்தாலும், பானம்பண்ணினாலும், எதைச் செய்தாலும் சகலத்தையும் பராபரனுக்குப் புகழ்ச்சி உண்டாகச் செய்யுங்கள்.

௩௨ [16]நான் எனக்கு (மாத்திரம்) பிரயோசனத்தைத் தேடாமல் அநேகரும் இரட்சிக்கப்படும்படிக்கு அவர்களுக்காகவும் பிரயோசனத்தைத் தேடிக்கொண்டு, [17]எவ்விதத்திலும் எல்லாருக்கும் பிரியமாய் நடக்கிறதுபோல,

௩௩ நீங்களும் யூதருக்கும் கிரேக்கருக்கும்† [18]பராபரனுடைய சபைக்கும் [19]விதனம் உண்டாகாதபடிக்கு, எச்சரிக்கையாய் இருப்பீர்களாக.

## ௰௧. அதிகாரம்.

*௧. சபை கூடியிருக்கும்போது, ௪. புருஷர்கள் தங்கள் தலைகளை மூடிக்கொண்டதற்காகவும், ௫. ஸ்திரீகள் தங்கள் தலைகளை மூடிக்கொள்ளாததற்காகவும், ௰௭. அவர்களுடைய கூட்டங்கள் தீமைக்கு ஏதுவாய், ௨௧. கர்த்தருடைய இராப்போசனத்தோடே தங்கள் விருந்துகளைச் சேர்த்து அதை அசுசிப்படுத்தினதற்காகவும் அவர்களைக் கடிந்துகொண்டு, ௨௩. இராப்போசன ஒழுங்கு இன்னதென்று கூறியது.*

1 ௩ மோ. ௰௭. ௭. ௫ மோ. ௩௨. ௰௭. சங். ௱௬. ௩௭. வெளி. ௯. ௨௰.
2 ௨ கொரி. ௬. ௰௫, ௰௬.
3 ௫ மோ. ௩௨. ௩௮.
4 ௫ மோ. ௩௨. ௨௧.
5 எசே. ௨௨. ௰௪.
6 ௧ கொரி. ௬. ௰௨.
7 ரோ. ௰௫. ௧, ௨. ௩௩. வச. ௧ கொரி. ௰௩. ௫. பிலி. ௨. ௪, ௨௧.
8 ௫ மோ. ௰. ௰௪. சங். ௨௪. ௧: ௫௰. ௰௨. ௨௮. வச.
9 ௧ தீமோ. ௪. ௪.
10 லூக். ௰. ௭.
11 ௧ கொரி. ௮. ௰, ௰௨.
12 ௫ மோ. ௰. ௰௪. சங். ௨௪. ௧. ௨௬. வச.
13 ரோ. ௰௪. ௰௬.
* அல்லது தயையினால்.
14 ரோ. ௰௪. ௬. ௧ தீமோ. ௪. ௩, ௪.
15 கொலோ. ௩. ௰௭. ௧ பே. ௪. ௰௧.
16 ௨௪. வச.
17 ரோ. ௰௫. ௨. ௧ கொரி. ௯. ௰௯, ௨௨.
† அல்லது புறச்சாதியாருக்கும்.
18 அப். ௨௰. ௨௮. ௧ கொரி. ௰௧. ௨௨. ௧ தீமோ. ௩. ௫.
19 ரோ. ௰௪. ௰௩. ௧ கொரி. ௮. ௰௩. ௨ கொரி. ௬. ௩.

Digitized by Google

நான் கிறிஸ்துவைப் பின்பற்றுகிறதுபோல, [1]நீங்கள் என்னைப் பின்பற்றுகிறவர்களாய் இருக்கக்கடவீர்கள்.

உ சகோதரரே, நீங்கள் எல்லாவிதத்திலும் [2]என்னை நினைத்துக்கொண்டு, நான் உங்களுக்கு [3]ஒப்புவித்த முறைமைகளின்படியே* அவைகளைக் கைக்கொண்டிருக்கிறதற்காக உங்களைப் புகழுகிறேன்.

ங இப்பொழுது நீங்கள் என்ன அறியவேண்டும் என்று இருக்கிறேன் என்றால், [4]கிறிஸ்து புருஷனானவனுக்குத் தலையாயிருக்கிறார், [5]புருஷன் மனைவிக்குத் தலையாயிருக்கிறான்; [6]பராபரன் கிறிஸ்துவுக்குத் தலையாயிருக்கிறார்.

ச எந்தப் புருஷனானாலும் செபம்பண்ணி அல்லது [7]தீர்க்கதரிசனம் சொல்லுகிறபொழுது, தன் தலையை மூடிக்கொண்டிருந்தால் தன் தலையைக் கனஈனப்படுத்துவான்.

ரு [8]ஸ்திரியானவள் செபம்பண்ணி அல்லது தீர்க்கதரிசனம் சொல்லுகிறபொழுது, தலையை மூடிக்கொள்ளாமலிருந்தால், தன் தலையைக் கனஈனப்படுத்துவாள்; [9]அவள் தலை சிரைக்கப்பட்டதுபோல இருக்குமே.

சு ஆனதால் ஸ்திரியானவள் மூடிக்கொள்ளாவிட்டால், மயிரைக் கத்தரித்துப்போடக்கடவள்; [10]அப்படி மயிர் கத்தரிக்கப்படுகிறது அல்லது சிரைக்கப்படுகிறது ஸ்திரிக்கு வெட்கமானபடியினாலே, மூடிக்கொண்டு இருக்கக்கடவள்.

எ [11]புருஷனானவன் பராபரனுடைய சாயலுமாய் மகிமையுமாயிருக்கிறபடியால், தன் தலையை மூடிக்கொள்ளவேண்டுவது இல்லை.

அ [12]மேலும் புருஷன் ஸ்திரியினாலே தோன்றினவன் அல்ல, ஸ்திரியே புருஷனால் தோன்றினவள்.

கூ [13]அல்லாமலும் புருஷன் ஸ்திரிக்காகச் சிருட்டிக்கப்பட்டவன் அல்ல, ஸ்திரியே புருஷனுக்காகச் சிருட்டிக்கப்பட்டவள்.

௰ ஆகையால் ஸ்திரியானவள் புருஷனுடைய மகிமையாயிருக்கிறதும் அல்லாமல், [14]தூதர்களின் நிமித்தம் [15]அவள் தன் தலையின்மேல் வஸ்திரத்தால் மூடிவைக்க வேண்டும்.†

௰க ஸ்திரி புருஷனால் இருக்கிறதுபோலப் புருஷனும் ஸ்திரியினாலே இருக்கிறதால்,

௰உ [16]கர்த்தருடைய முறைமையின்படி ஸ்திரி இல்லாமல் புருஷனும் இல்லை; புருஷன் இல்லாமல் ஸ்திரியும் இல்லை; [17]சகலமும் பராபரனாலே இருக்கின்றது.

௰ங ¶ ஸ்திரியானவள் பராபரனைத் தொழுது செபம்பண்ணுகையில், தன் தலையை மூடிக்கொள்ளாமலிருக்கிறது இலக்கணமாய் இருக்குமோ என்று உங்களுக்குள்ளே நீங்களே எண்ணிக்கொள்ளுங்கள்.

௰ச அல்லது புருஷன் மயிரை நீளமாய் வளர்த்தால் அது அவனுக்குக் கனஈனமாயிருக்கின்றது என்றும்,

௰ரு ஸ்திரி தனக்கு முக்காடாக‡ மயிர் கொடுக்கப்பட்டிருக்கிறபடியினாலே தன் மயிரை நீளமாய் வளர்த்தால், அது அவளுக்கு மகிமையாயிருக்கிறதென்றும் சுபாவமே உங்களுக்குப் போதிக்கிறதில்லையோ?

௰சு ஆகிலும் (இதைக்குறித்து) [18]ஒருவன் வாக்குவாதம் செய்யப் பிரியனாய் இருந்தால், எங்களுக்கும் [19]பராபரனுடைய சபைகளுக்கும் அப்படிப்பட்ட வழக்கம் இல்லையென்று அறியக்கடவன்.

௰எ பின்னும் நான் அறிவிக்கிறது என்னவெனில், நீங்கள் கூடிவருதல் அதிக நன்மைக்கு அல்ல; அதிக தீமைக்கே ஏதுவாயிருக்கின்றது; அதைக்குறித்து நான் உங்களைப் புகழக்கூடாது.

௰அ என்னவென்றால் முதலா

கி. பி. ௫௭.

1 க கொரி. ச. ௰௬. எபே. ௫. க. பிலி ௩. ௰எ. க தெச. க. ௬. உ தெச. ௩. ௯.
2 க கொரி. ச. ௰எ.
3 க கொரி. எ. ௰எ.
* அல்லது கட்டளைகளின்; உ தெச. உ. ௰௫: ௩. ௬.
4 எபே. ௫. உ௩.
5 க மோ. ௩. ௰௬. க தீமோ. உ. ௰க, ௰உ. க பே. ௩. க. ௫, ௬.
6 யோவா. ௰ச. உஅ. க கொரி. ௩. உங: ௰௫. உஎ, உஅ. பிலி. உ. எ, அ, ௯.
7 க கொரி ௰உ. ௰, உஅ: ௰ச. க. ௩௰.
8 அப். உக. ௯.
9 ௫ மோ. உக. ௰உ.
10 ச மோ. ௫. ௰அ. ௫ மோ. உஉ. ௫.
11 க மோ. க. உ௬, உஎ: ௫. க: ௯. ௬.
12 க மோ. உ. உக, உஉ.
13 க மோ. உ. ௰அ, உக, உ௩.
14 பிரச ௫. ௬.
15 க மோ. உச. ௬௫.
† அதாவது தன் புருஷனுக்கு அடங்கினவளென்பதற்குக் குறிப்பாக முக்காடிட்டவளாயிருப்பதென்பதாம்.
16 கலா. ௩. உஅ.
17 உரோ. ௰௩. ௩௬.
‡ அல்லது மூடியாக.
18 க தீமோ. ௬. ச.
19 க கொரி. எ. ௰எ: ௰ச. ௩௩.

Digitized by Google

வது, நீங்கள் சபையின் வீட்டிலே கூடிவந்திருக்கும்பொழுது, [1]உங்களில் பிரிவினைகள்* உண்டென்று கேள்விப்படுகிறேன்.

௰௯ [2]பாத்திரவான்கள் வெளியாகும்படிக்கு [3]மார்க்கபேதங்களும்† உங்களில் உண்டாயிருக்கவேண்டியதால், நான் (கேள்விப்பட்டவைகளில்) சில நம்புகிறேன்.

௨௰ ஆனதால் நீங்கள் ஏகமாய்க் கூடிவந்து சாப்பிடுங்காலத்தில், ஒருவன் பசியாயிருக்கவும் [4]ஒருவன் திருத்தி அடையவும்தக்கதாக, முன்னே அவனவன் தன் சொந்தப் போசனத்தைப்பண்ணுவான்.

௨௧ அப்படிச் செய்கிறது கர்த்தருடைய இராப்போசனம்பண்ணுதல் அல்லவே.‡

௨௨ அதென்ன? போசனபானம் பண்ணுதற்கு உங்களுக்கு வீடுகள் இல்லையா? [5]அல்லது பராபரனுடைய சபையின் வீட்டை அசட்டைபண்ணி, [6]போசனம் இல்லாதவர்களை§ வெட்கப்படுத்துகிறீர்களா? உங்களைக்குறித்து நான்என்ன சொல்லலாம்? உங்களைப் புகழலாமா? அதைக்குறித்து நான் உங்களைப் புகழக்கூடாது.

௨௩ ¶ [7]நான் உங்களுக்கு ஒப்புவித்ததைக் கர்த்தராலே அடைந்தேன்; என்னவெனில், [8]கர்த்தராகிய இயேசு தம்மைக் காட்டிக் கொடுக்கப்பட்ட அன்று இராத்திரியிலே அப்பத்தை எடுத்துக் கொண்டு தோத்திரம்பண்ணி, அதைப் பிட்டு நீங்கள் வாங்கிப் புசியுங்கள்.

௨௪ இது உங்களுக்காகப் பிட்கப்படுகிற என்னுடைய சரீரமாயிருக்கின்றது; என்னை நினைத்துக் கொள்ளும்படிக்கு|| இப்படிச் செய்யுங்கள் என்றார்.

௨௫ அந்தப்படியே அவர் இராப்போசனம் பண்ணினபின்பு, பாத்திரத்தையும் எடுத்துக்கொண்டு, இந்தப் பாத்திரம் என்னுடைய இரத்தத்தினாலே புதிய உடம்படிக்கையாய் இருக்கின்றது; நீங்கள் பானம்பண்ணும்பொழுதெல்லாம் என்னைநினைத்துக்கொள்ளும்படிக்கு இப்படிச்செய்யுங்கள் என்றார்.

௨௬ [9]ஆகையால் கர்த்தர் வருமளவும் நீங்கள் இந்த அப்பத்தைப் புசித்து, இந்தப் பாத்திரத்தில் பானம் பண்ணும்பொழுதெல்லாம் அவருடையமரணத்தைக்கூறுகிறீர்கள்.¶

௨௭ ¶ இப்படியிருக்க [10]எவனாகிலும் கர்த்தருடைய அப்பத்தையாவது பாத்திரத்தையாவது அபாத்திரமானவிதமாய்ப் போசனபானம் பண்ணினால், அவன் கர்த்தருடைய சரீரத்திற்கும் இரத்தத்திற்கும் குற்றமுள்ளவனாய் இருப்பான்.

௨௮ அந்தப்படி அபாத்திரமான விதமாய் அதைப் போசனபானம் பண்ணுகிறவன், கர்த்தருடைய சரீரத்தை விசேஷித்துக்கொள்ளாமல், தனக்கு ஆக்கினைவரும்படி** போசனபானம் பண்ணுகிறபடியினாலே,

௨௯ எவனாகிலும் [11]தன்னைத்தான் சோதித்து அறிந்து, பின்பு இந்த அப்பத்தைப் புசித்து, இந்தப் பாத்திரத்திலே பானம்பண்ணக்கடவன்.

௩௰ அந்தக் குற்றத்தினாலேதானே உங்களில் அநேகர் பலஈனருமாய் வியாதியுள்ளவர்களுமாய் இருக்கிறார்கள்; வேறு அநேகரும் இறந்துபோயிருக்கிறார்கள்.

௩௧ [12]நம்மை நாமே வகையறுத்துப்பார்த்தால், நாம் அப்படித் தண்டிக்கப்படுவதில்லை.

௩௨ நாம் தண்டிக்கப்பட்டிருக்க, [13]உலகத்தோடே நித்திய ஆக்கினைக்கு உள்ளாக்கப்படாதபடிக்கு, கர்த்தராலே தண்டிக்கப்படுகிறோம்.

௩௩ ஆகையால் என் சகோதரரே, நீங்கள் போசனம்பண்ணக் கூடிவருகிறபொழுது, ஒருவருக்காக ஒருவர் காத்திருங்கள்.

௩௪ [14]ஒருவனுக்குப் பசியிருந்தால் நீங்கள் ஆக்கினைக்கு†† ஏதுவா

---

கி. பி. ௫௯.

1 க கொரி. க. ௰. ௭௧, ௰௨: க. க.
* அல்லது பேதங்கள்.
2 லூக். உ. ௩௫. உ யோ. உ. ௰௯. உ ரோ. ௰௪. க.
3 மத். ௰அ. எ. லூக். ௰எ. க. அப். உ௰. ௩௰. க தீமோ. ச. க. உ பே. உ. க, உ.
† அல்லது வகுப்புகளும்.
4 உ பே. உ. ௰௩. யூதா. ௰௨.
‡ அல்லது அப்படியிருந்தால்நீங்கள் கர்த்தருடைய இராப்போசனம் பண்ணக்கூடாது.
5 க கொரி. ௰. ௩௨.
6 யாக். உ. ௬.
§ அல்லது தரித்திரரை.
7 க கொரி. ௰௫. ௩. கலா. க. க, ௰௧, ௰௨.
8 மத். உ௬. உ௬. மாற். ௰௪. உ௨. லூக். உ௨. ௰௯.
|| அல்லது நினைப்பூட்டுதலாக.
9 யோவா. ௰௪. ௩: உ௧. உ௨. அப். க. ௰௧. க கொரி. ச. ௫: ௰௫. உ௩. க தெச. ச. ௰௬. உ தெச. க. ௰. யூதா. ௰௪. வெளி. க. எ.
¶ அல்லது கூறுங்கள்.
10 எ யோ. ௬. ௫௰, ௬௩. யோவா. ௬. ௫௰, ௫௯, ௫௪: ௰௩. உ௭. க கொரி. ௰. உ௧.
** அல்லதுநியாயத்தீர்ப்பு; உரோ. ௰௩. உ.
11 உ கொரி. ௰௩. ௫. கலா. ௬. ச.
12 சங். ௩௨. ௫. க யோ. க. ௯.
13 சங். ௯௪. ௰௨. ௰௩. எபி. ௰௨. ௫-௰௧.
14 ௨. ௧. ௯௪.
†† அல்லது தீர்ப்புக்கு.

Digitized by Google

கக் கூடிவாராதபடிக்கு, [1]அவன் வீட்டிலே சாப்பிடக்கடவன்; மற்றக்காரியங்களை [2]நான் வரும்பொழுது [3]திட்டம்பண்ணுவேன்.

## யஉ. அதிகாரம்.

*க. தேவவரங்கள், ச. பலவிதமாயிருந்தாலும், எ. எல்லாம் பிரயோசனத்துக்கு ஏதுவானவைகள் என்றும், அ. அதற்கு அவைகள் பலவிதமாய் அளிக்கப்படுகின்றன என்றும், யஉ. சகல சரீரத்தின் அவயவங்கள் எல்லாம், யக. சரீரத்துக்கு அழகும், உஉ. பிரயோசனமும், உக. உதவியுமுள்ளவைகளாய் இருக்கிறதுபோல, உஎ. திருச்சபையாகிய கிறிஸ்துவின் சரீரமும் ஒழுங்குபட அதின் அவயவங்களாகிய நாமும் இருக்கவேண்டியதென்றும் சொல்லியது.*

மேலும் சகோதரரே, [4]ஆவியால் வருகிற வரங்களைக்குறித்து நீங்கள் அறிவீனராயிருக்க எனக்கு மனதில்லை.

உ (முன்னே) [5]நீங்கள் அஞ்ஞானிகளாய், மற்றவர்களால் நடத்தப்பட்ட பிரகாரமாகவே [6]ஊமையான விக்கிரகங்களைச் சேர்ந்திருந்தீர்கள் என்று உங்களுக்குத் தெரிந்திருக்கின்றது.

௩ ஆதலால் நான் உங்களுக்கு அறிவிக்கிறது என்னவெனில், [7]பராபரனுடைய ஆவியினாலே பேசுகிற எவனும் இயேசுவைச் சபிக்கப்பட்டவன் என்று* சொல்லமாட்டான்; [8]அன்றியும் பரிசுத்த ஆவியினாலே அல்லாமல் ஒருவனும் இயேசுவைக் கர்த்தரென்று சொல்லமாட்டான்.

ச ¶ [9]வரங்களில் வித்தியாசங்கள் உண்டு.

ரு [10]ஆவி ஒருவரே; [11]ஊழியங்களிலேயும்† வித்தியாசங்கள் உண்டு; கர்த்தர் ஒருவரே.

சு உள்ளான கிரியைகளிலேயும் வித்தியாசங்கள் உண்டு; எல்லாவற்றையும் எல்லாருக்குள்ளும் நடப்பிக்கிற[12]பராபரன் ஒருவரே.

எ [13]ஆவியின் வரங்கள் பிரயோசனம் உண்டாகும்படியே, அவனவனுக்கு அளிக்கப்பட்டிருக்கின்றன.

அ எப்படியெனில் ஒருவனுக்கு ஆவியினாலே [14]ஞானத்தைப் போதித்தல் கொடுக்கப்பட்டது; வேறொருவனுக்கு [15]அந்த ஆவியினாலேதானே கல்வியோடே போதித்தல் உண்டாயிற்று.

கூ வேறொருவனுக்கு அந்த ஆவியினாலேதானே [16]விசுவாசம் உண்டாயிற்று; வேறொருவனுக்கு அந்த ஆவியினாலேதானே [17]குணமாக்கும் வரங்கள் உண்டாயின.

ய வேறொருவனுக்குப் [18]பலத்த அற்புதங்களைச் செய்கிற பலன்களும், வேறொருவனுக்குத் [19]தீர்க்கதரிசனம் சொல்லுதலும், வேறொருவனுக்கு [20]ஆவிகளை வகையறுக்குதலும், வேறொருவனுக்கு அந்நியபாஷைகளைப் பேசுதலும், வேறொருவனுக்கு [21]அந்நியபாஷைகளை வியாக்கியானம்பண்ணுதலும் அளிக்கப்பட்டிருக்கின்றன.

யக இந்த வரங்களை எல்லாம் அந்த ஒரே ஆவியானவர் நடப்பித்து, [22]தமது சித்தத்தின்படி [23]அவனவனுக்குத்தகுதியானவைகளைப் பகிர்ந்துகொடுக்கிறார்.

யஉ ¶ அது எப்படியெனில், [24]சரீரம் ஒன்றாய் அநேகம் அவயவங்கள் உள்ளது; ஒரே சரீரத்தின் அவயவங்கள் எல்லாம் அநேகமாயிருந்தும், சரீரம் ஒன்றாயிருக்கின்றது; [25]அதுபோலக் கிறிஸ்துவும் இருக்கிறார்.

யரு [26]நாம் யூதராயிருந்தும், கிரேக்கராயிருந்தும்,‡ அடிமைகளாயிருந்தும், சுயாதீனராய் இருந்தும் எல்லாரும் [27]ஒரே சரீரமாக ஒரே ஆவியினாலே ஞானஸ்நானம்பண்ணப்பட்டு, எல்லாரும் [28]ஒரே ஆவியில் பானம்பண்ணும்படி செய்யப்பட்டோம்.

யச ¶ சரீரமும் ஒரே அவயவம் உள்ளதாயிராமல், அநேக அவயவங்கள் உள்ளதாயிருக்கின்றது.

கி. பி. ருக.

1 உஉ.வச.
2 க கொரி. ச. யக.
3 க கொரி. எ. யஎ. தீத். க. கூ.
4 க கொரி. யச. க, கஎ.
5 க கொரி. க. யக. எபே. உ. யக,யஉ. க தெச. க கூ. தீத். ௩. ௩. க பே. ச. ௩.
6 சங். ககரு. ரு.
7 மாற். கூ. ௩கூ. க யோ. ச. உ,௩.
* அல்லது சாபமென்று.
8 மத். யக. யஎ. யோவா. யரு. உக. உ கொரி. ௩. ரு.
9 உ ரோ. யஉ. ச. ழு. எபி. உ. ச. க பே. ச. ய.
10 எபே. ச. ச.
11 உ ரோ. யஉ. க,எ, அ. எபே. ச. யக.
† அல்லது பணிவிடை களிலேயும்.
12 எபே. க. உ௩.
13 உ ரோ. யஉ. க, எ,அ. க கொரி. யச. உக. எபே. ச. எ. க பே. ச. ய, யக.
14 க கொரி. உ. சு, எ.
15 க கொரி. க. ரு: யக. உ. உ கொரி. அ. எ.
16 மத். யஎ. யகூ உய. க கொரி. யக. உ. உ கொரி. ச. யக.
17 மாற். யசு. யஅ. யாக். ரு. யச.
18 உஅ. உக. வச. மாற். யசு. யஎ. கலா. ௩. ரு.
19 உ ரோ. யஉ. சு. க கொரி. யக. உ: யச. க. ழு.
20 க கொரி. யச. உகூ. க யோ. ச. க.

௰௫ காலானது நான் கையாயிராதபடியினாலே நான் சரீரத்தின் அவயவம் அல்லவென்றால், அதினாலே அது சரீரத்தின் அவயவம் அல்லாமல் போகுமா?

௰௬ காதானது நான் கண்ணாயிராதபடியினாலே நான் சரீரத்தின் அவயவம் அல்லவென்றால், அதினாலே அது சரீரத்தின் அவயவம் அல்லாமல் போகுமா?

௰௭ சரீரமுழுவதும் கண்ணானால், செவி எங்கே இருக்கும்? அது முழுவதும் செவியானால், மோத்தல் எங்கே உண்டாயிருக்கும்?

௰௮ ஆனதால் [1]பராபரன் தமது சித்தத்தின்படி [2]அவயவங்களை ஒன்றொன்றாகச் சரீரத்திலே வைத்தார்.

௰௯ அவையெல்லாம் ஒரே அவயவமாயிருந்தால், சரீரம் எப்படி இருக்கும்?

௨௰ ஆனதால் அவயவங்கள் அநேகமாயிருந்தும், சரீரம் ஒன்றே.

௨௧ அன்றியும் கண்ணானது கையுடனே நீ எனக்கு வேண்டுவதில்லை என்றும், அல்லது தலையானது கால்களுடனே நீங்கள் எனக்கு வேண்டுவதில்லை என்றும் சொல்லமாட்டாது.

௨௨ அதைத்தவிர சரீர அவயவங்களில் பலஈனமாய்க் காணப்படுகிறவைகளே மிகவும் வேண்டியவைகளாய் இருக்கின்றன.

௨௩ அல்லாமலும் சரீர அவயவங்களில் கனஈனமாய்க் காணப்படுகிறவைகளுக்கே அதிக கனத்தைக் கொடுக்கிறோம்;* இவ்விதமாய் நம்மிடத்தில் அவலட்சணமானவைகளுக்கே அதிக இலட்சணம் உண்டாயிருக்கின்றது.

௨௪ இலட்சணமானவைகளுக்கு அப்படிச் செய்யவேண்டுவதில்லை; ஆனதால் சரீரத்திலே பிரிவினை † உண்டாயிராமல், அவயவங்கள் ஒன்றுக்கொன்று ஒரேவிதமான கவலையாயிருக்கும்படிக்கு,

௨௫ பராபரன் கனத்தில் குறைவுள்ளதற்கு அதிக கனத்தைக் கொடுத்து, இப்படிச் சரீரத்தை ஏற்படுத்தினார்.

௨௬ ஆனதினாலே ஒரு அவயவம் பாடுபடும்பொழுது, மற்ற அவயவங்கள் யாவும் கூடப் பாடுபடும்; ஒரு அவயவம் மகிமை அடையும்பொழுது, மற்ற அவயவங்கள் யாவும் கூடச் சந்தோஷப்படும்.

௨௭ [3]நீங்களே கிறிஸ்துவின் சரீரமாயும் [4]தனித்தனியான அவயவங்களாயும் இருக்கிறீர்கள்.

௨௮ ¶ அவர்களில் சிலரைப் [5]பராபரன் சபையிலே முதலாவது, [6]அப்போஸ்தலராகவும், இரண்டாவது, [7]தீர்க்கதரிசிகளாகவும், மூன்றாவது, போதகராகவும், பின்பு [8]வல்லமைகளையும், [9]பின்பு குணமாக்கும் வரங்களையும், [10]உதவிசெய்தலையும், [11]ஆளுகைகளையும், அந்நிய‡ பாஷைகளையும் ஏற்படுத்தினார்.

௨௯ எல்லாரும் அப்போஸ்தலர்களாய் இருக்கிறார்களா? எல்லாரும் தீர்க்கதரிசிகளாய் இருக்கிறார்களா? எல்லாரும் போதகராய் இருக்கிறார்களா? எல்லாரும் வல்லமைகளைச் செய்கிறவர்களா?§

௩௰ எல்லாரும் குணமாக்கும் வரங்கள் உள்ளவர்களா? எல்லாரும் அந்நிய பாஷைகளைப் பேசுகிறார்களா? எல்லாரும் வியாக்கியானம் பண்ணுகிறார்களா?

௩௧ ¶ அப்படியிருக்க, [12]நீங்கள் அதிக நன்மையான வரங்களைத் தேடிக்கொள்ளுங்கள், அதற்காக மிகவும் அதிக மேன்மையான வழியையே உங்களுக்காகக் காண்பிக்கிறேன்.

## ௰௩. அதிகாரம்.

௧. மற்றெல்லாச் சிறந்த வரங்களும், ௨. ௩. அன்பில்லாவிட்டால் பயன்படாதென்று, ௪. அதைப் புகழ்ந்து, ௰௩. அது நம்பிக்கையிலும், விசுவாசத்திலும் சிறந்ததென்று காட்டியது.

நான் மனிதர் பாஷைகளையும் தூதர் பாஷைகளையும் பேசினாலும், அன்பு எனக்கு இராவிட்

ஐ. பி. ௫௰௬.

1 உரோ. ௰௨. ௬. ௧ கொரி. ௭. ௭. ௰௭. வசனம்.
2 ௨௪. வச.
* அல்லது வைக்கிறோம்.
† அல்லது பேதம்.
3 உரோ. ௰௨. ௫. எபே. ௧. ௨௩: ௪ ௰௨: ௫. ௨௩, ௩௰. கொலோ. ௧. ௨௪.
4 எபே. ௫. ௩௰.
5 எபே ௪. ௰௧.
6 எபே. ௨. ௨௰: ௩. ௫.
7 அப். ௰௩. ௧ உரோ. ௰௨. ௬.
8 ௰. வச
9 ௯. வச.
10 ௪ மோ. ௰௧. ௰௭.
11 உரோ. ௰௨. ௮. ௧ தீமோ. ௫ ௰௭. எபி. ௰௩. ௰௭, ௨௪.
‡ அல்லது பலவித; ௰. வசனம்.
§ அல்லது எல்லாருக்கும் வல்லமைகளுண்டா.
12 ௧ கொரி. ௰௪. ௧, ௩௯.



Digitized by Google

டால், சத்தமிடுகிற வெண்கலம் போலவும், ஓசையிடுகிற கைத்தாளத்தைப்போலவும் இருப்பேன்.

உ நான் [1]தீர்க்கதரிசனங்களை அடைந்தாலும், சகல இரகசியங்களையும் சகலகல்விகளையும் அறிந்தாலும், [2]மலைகளைப் பேர்க்கத்தக்கதாக மிகுந்த விசுவாசம் உள்ளவனாயிருந்தாலும், அன்பு எனக்கு இராவிட்டால் வீணனாய் இருப்பேன்.

ங மேலும் [3]எனக்கு உண்டான ஆஸ்திகள் யாவையும் ஏழைகளுக்குக் கொடுத்தாலும், சுட்டெரிக்கப்படுவதற்கு என் சரீரத்தைக் கொடுத்தாலும், அன்பு எனக்கு இராவிட்டால் எனக்குப் பிரயோசனம் வராது.

ச ¶ [4]அன்பு நீடிய சாந்தமும் தயவும் உள்ளது; அன்புக்குப் பொறாமை இல்லை; அன்பு தன்னைப் புகழாது,* இறுமாப்பாயிராது, ஆகாததைச் செய்யாது.

ரு [5]தன் பொழிவைப் பாராது, உக்கிரத்தை அடையாது, பொல்லாங்கானதைச் சிந்தியாது.

சு [6]அநியாயத்தில் சந்தோஷப்படாமல், [7]சத்தியத்தில்† சந்தோஷப்படுகின்றது; அது [8]சகலத்தையும் மூடுகின்றது.

எ சகலத்தையும் விசுவாசிக்கின்றது; சகலத்தையும் நம்புகின்றது, சகலத்தையும் சகிக்கின்றது.

அ ¶ தீர்க்கதரிசனம் சொல்லுதல் ஒழிந்துபோம்; அந்நியபாஷைகளும் ஓய்ந்துபோம்; கல்வியும் ஒழிந்துபோம்; அன்பே ஒருக்காலும் ஒழியாது.

கூ அல்லாமலும் [9]நம்முடைய அறிவு குறைவுள்ளது; நாம் தீர்க்கதரிசனம் சொல்லுதலும் குறைவுள்ளது.

௰ நிறைவானது வரும்பொழுது, குறைவானது ஒழிந்துபோம்.

௰க நான் குழந்தையாயிருந்தபொழுது, குழந்தையைப்போலப் பேசினேன்; குழந்தையைப்போலச் சிந்தித்தேன்;‡ குழந்தையைப்போல யோசித்தேன்; நான் புருஷனானபொழுது குழந்தைக்கு ஏற்றவைகளை ஒழித்துவிட்டேன்.

௰உ இப்பொழுது [10]கண்ணாடியிலே நிழலாய்ப்§ பார்க்கிறோம், [11]அப்பொழுது முகமுகமாகவே பார்ப்போம்; இப்பொழுது நான் குறைந்த அறிவுள்ளவன்; அப்பொழுது நான் அறியப்பட்டபடி அறிந்துகொள்வேன்.

௰ங ¶ ஆனதால் இப்பொழுது விசுவாசம், நம்பிக்கை, அன்பு இம்மூன்றும் நிற்கின்றன; இவைகளில் அன்பே பெரிதாயிருக்கின்றது.

கி. பி. ருக.

1 க கொரி. ௰உ. அ, க, ௰, உஅ: ௰ச. க. ழு. மத். எ. உஉ.
2 மத். ௰எ. உ௰. மாற். ௰க. உங. லூக். ௰எ. சு.
3 மத். சு. க, உ.
4 லாக். ௰. ௰உ. க பே. ச. அ.
* அல்லது தன்னை எண்ணுமலிராது.
5 க கொரி. ௰. உச. பிலி. உ. ச.
6 சங்.௰.க.உரோ. க. ஙஉ.
7 உ யோ ச.
† அல்லது சத்தியத்துடனே.
8 உரோ. ௰௫. க. கலா. சு. உ. உ தீமோ. உ. உச.
9 க கொரி.அ.உ.
‡ அல்லது எண்ணினேன்.
10 உ கொரி. க. ௰அ: ரு. எ. பிலி. ங. ௰உ.
§ கிரேக்கு,சல்லடைக்குடாக.
11 மத். ௰அ. ௰. க யோ. ங. உ.
12 க கொரி. ௰உ. ஙக.
13 ச மோ. ௰க. உரு, உக.
14 அப்.உ. ச: ௰. சக.
|| கிரேக்கு, கேட்க; அப். உஉ. க.

# ௰ச. அதிகாரம்.

க. தீர்க்கதரிசனப் பேறிப்பு, உ.க. ச. அந்நியபாஷைகளைப்பார்க்கிலும் நல்லதென்ற, க. தேவத்திய(?)ங்களைக்கொண்டு ஒப்பனைபிடப்பட்டும், ௰உ. தீர்க்கதரிசனமாவது, அந்நியபாஷையாவது பிரயோசனத்தை, உஉ. தருமிறதாயிருக்கவேண்டுமென்றும், உக. அவற்றின் பிரயோசனங்கள் இன்னவைவென்றும், உஎ. அவைகள் இப்படி நடத்தப்படவேண்டுமென்றும், ஙச. ஸ்திரீகள் சபையில் பேசக்கூடாதென்றும் சொல்லியது.

அன்பையே அதிகமாய்த் தொடருங்கள்; [12]ஆவிக்குரிய வரங்களையும் தேடுங்கள்; (அவைகளில்) [13]தீர்க்கதரிசனம் காட்டுகிற வரத்தையே விரும்புங்கள்.

உ என்னத்தினாலெனில், [14]அந்நியபாஷையில் பேசுகிறவன் மனிதருக்கு அல்ல, பராபரனுக்குத்தெரியப் பேசுகிறான்; ஆவியினாலே அவன் இரகசியங்களைப் பேசிக்கொள்ளுகிறபடியால், ஒருவனும் அவன் பேசுகிறதை அறிய|| மாட்டானே.

ங தீர்க்கதரிசனம் காட்டுகிறவனே மனிதருக்கு எழுப்புதலும் புத்தியும் ஆறுதலும் உண்டாகத் தக்கவிதமாகப் பேசுகிறான்.

ச அந்நியபாஷையில் பேசுகிறவன் தனக்குத்தானே எழுப்புதல் உண்டாக்குகிறான்; தீர்க்கதரிசனம் காட்டுகிறவனே சபைக்கு எழுப்புதல் உண்டாக்குகிறான்.

ரு நீங்கள் எல்லாரும் அந்நியபாஷைகளைப் பேசவிரும்புகிறேன்;

Digitized by Google

ஆகிலும் அந்நியபாஷைகளில் பேசுகிறவன் சபைக்கு எழுப்புதல் உண்டாகும்படிக்கு அதின் அருத்தத்தையும் சொல்லாவிட்டால், தீர்க்கதரிசனம் காட்டுகிறவன் அவனிலும் பெரியவனாயிருப்பதினாலே நீங்கள் தீர்க்கதரிசனம் காட்டுகிறவர்களாகவேண்டும் என்று அதிகமாய் விரும்புகிறேன்.

௬ ¶ அந்தப்படி சகோதரரே, நான் உங்களிடத்தில் வந்து, உங்களுக்கு இரகசியங்களை [1]வெளிப்படுத்தலுக்காவது, உயர்ந்த அறிவு உண்டாக்குதற்காவது, தீர்க்கதரிசனத்தை அறிவதற்காவது, மற்றப் போதகம் உண்டாகுதற்காவது, ஏதுவானதைச் சொன்னாலும், அந்நியபாஷைகளில் பேசினால் உங்களுக்கு என்னாலே எந்தப் பிரயோசனம் வரும்?

௭ சத்தமிடுகிற உயிரில்லாத வாத்தியங்களும் நீங்குழலானாலும் சுரமண்டலமானாலும் சட்டமான தொனிகளினாலே* வித்தியாசம் காட்டாவிட்டால், ஊதினது அல்லது கொட்டினது இன்னதென்று எப்படித் தெரியும்?

௮ அந்தப்படி எக்காளமானது சட்டமில்லாத தொனியை இட்டால், எவன் யுத்தத்திற்கு எத்தனம்பண்ணுவான்.

௯ அதுபோல நீங்களும் தெளிவான† பேச்சை நாவினாலே வசனியாவிட்டால், சொல்லப்பட்டது இன்னது என்று எப்படித் தெரியும்? ஆகாசத்தில் சொல்லுகிறவர்களாயிருப்பீர்களே.

௰ உலகத்திலே இத்தனை விதமான பாஷைகள் உண்டாயிருக்கின்றன.

௰௧ அவைகளில் ஒன்றும் கருத்தில்லாததல்ல; அது மெய்தான். ஆகிலும் நான் பாஷையின் கருத்தை அறியாமலிருந்தால், பேசுகிறவனுக்கு அந்நியனாயிருப்பேனே; பேசுகிறவன் எனக்கும் அந்நியனாயிருப்பான்.

கி. பி. ௫௯.

1 ௨௯. ௩௪.
* அல்லது இராகங்களினாலே.
† அல்லது இலகுவான.
‡ பிரேக்கு, ஆவிகளை.
2 எபே. ௫. ௧௯. கொலோ. ௩. ௧௬.
3 சங். ௪௭. ௭.
4 ௧ கொரி. ௰௧. ௨௪.

௰௨ ¶ ஆனதால் நீங்களும் ஆவிக்குரிய வரங்களை‡ நாடுகிறவர்களாயிருக்க, சபையாருக்கு எழுப்புதலுக்கு ஏற்றவைகளையே அதிகமாய்ப் பெற்றுக்கொள்ளப் பாருங்கள்.

௰௩ அந்தப்படி அந்நியபாஷையில் பேசுகிறவன் அதின் கருத்தையும் சொல்லத்தக்கதாக விண்ணப்பம்பண்ணக்கடவன்.

௰௪ என்னத்தினாலெனில், நான் அந்நியபாஷையிலே விண்ணப்பம்பண்ணினால், என் ஆவி விண்ணப்பம்பண்ணுமே அன்றி, என்னுடைய கருத்து (மற்றவர்களுக்குப்) பலன் அற்றதாயிருக்கும்.

௰௫ ஆனதால் நான் என்னசெய்யவேண்டும்? ஆவியாலே நான் விண்ணப்பம்பண்ணவேண்டும்; அதின் கருத்தும் விளங்க விண்ணப்பம் பண்ணவேண்டும்; [2]நான் ஆவியாலே பாடவேண்டும்; [3]அதின்கருத்தும் விளங்கப் பாடவேண்டும்.

௰௬ இல்லாவிட்டால் நீ [4]ஆவியினாலே தோத்திரம்செய்யும்பொழுது, கல்லாத கூட்டத்தாரிடத்தில் இருக்கிறவன் உன் பேச்சை அறியாதபடியால், உன்னுடைய தோத்திரத்துக்கு ஆமென் என்று எப்படிச் சொல்வான்?

௰௭ நீ நன்றாய்த் தோத்திரிப்பாய்; மற்றவன் எழுப்பப்படமாட்டானே.

௰௮ உங்கள் எல்லாரிலும் நான் அதிகமாய்ப் பாஷைகளைப் பேசிக்கொண்டு, என் தேவனைத் தோத்திரிக்கிறேன்.

௰௯ அப்படியிருந்தும், நான் சபையிலே அந்நியபாஷையில் பதினாயிரம் வார்த்தைகளைப் பேசுகிறதிலும், மற்றவர்களுக்குப் பிரயோசனமாய் உபதேசம் சொல்லும்படிக்கு, என் கருத்து விளங்கத்தக்கதாக ஐந்து வார்த்தைகளை மாத்திரம் பேசவே அதிகமாய் விரும்புகிறேன்.

Digitized by Google

௨௰ ¶ சகோதரரே [1]நீங்கள் புத்திக்குக் குழந்தைகளாயிராமல், [2]துர்க்குணத்திற்குக் குழந்தைகளைப்போல இருங்கள்; புத்தியிலே தேறினவர்கள்* ஆவீர்களாக.

௨௧ மறு பாஷைகளாலும் மறு உதடுகளினாலும் இந்தச் சனங்களுடனே பேசுவேன்; அப்படியும் அவர்கள் எனக்குச் செவிகொடுப்பதில்லை என்று கர்த்தர் சொல்லுகிறார் என்று [3]வேதத்தில் [4]எழுதியிருக்கிறதே.

௨௨ ஆனபடியினாலே அந்நிய பாஷைகள் விசுவாசிகளுக்கு அல்ல, அவிசுவாசிகளுக்கு அடையாளமாய் இருக்கின்றன; தீர்க்கதரிசனம் காட்டுதல் அவிசுவாசிகளுக்கு அல்ல, விசுவாசிகளுக்கு அடையாளமாய் இருக்கின்றது.

௨௩ ¶ அப்படியிருக்கச் சபையார் எல்லாரும் ஏகமாய்க் கூடிவந்து எல்லாரும் அந்நியபாஷைகளில் பேசிக்கொண்டால் கல்லாதவர்கள் அல்லது அவிசுவாசிகள் உள்ளே பிரவேசிக்கும்பொழுது [5]நீங்கள் பயித்தியம்பிடித்தவர்கள் என்பார்கள் அல்லவோ?

௨௪ எல்லாரும் தீர்க்கதரிசனம் காட்டினால், அவிசுவாசி அல்லது கல்லாதவன் ஒருவன் உள்ளே பிரவேசிக்கும்பொழுது, அவன் எல்லாராலும் கண்டிக்கப்பட்டும் எல்லாராலும் நிதானிக்கப்பட்டும் இருப்பான்.

௨௫ அவனுடைய இருதயத்தின் அந்தரங்கங்களும் வெளியரங்கமாம்; இவ்விதமாய் அவன் முகங்கீழாக விழுந்து, பராபரனைப்பணிந்துகொண்டு, [6]பராபரன் மெய்யாய் உங்களுக்குள்ளே இருக்கிறார் என்று அறிக்கையிடுவான்.

௨௬ ¶ அப்படிக்கன்றி சகோதரரே, நீங்கள் கூடியிருக்கிறபொழுது உங்களில் ஒருவன் சங்கீதம் பாடவும், [7]ஒருவன் போதகம் பண்ணவும், ஒருவன் அந்நியபாஷை பேசவும், ஒருவன் இரகசியத்தை வெளிப்படுத்தவும், ஒருவன் வியாக்கியானம்பண்ணவும் வேண்டுமென்ன? [8]அவையெல்லாம் எழுப்புதல் உண்டாகத்தக்கதாக நடக்கக்கடவது.

௨௭ அந்தப்படி ஒருவன் அந்நியபாஷையிலே பேசவேண்டுமானால், அவன் இரண்டு, அல்லது மிகுதியானால் மூன்று (வாக்கியங்களை) மாத்திரம் வெவ்வேறாகப் பேசவும், ஒருவன் வியாக்கியானம்பண்ணவும் வேண்டும்.

௨௮ வியாக்கியானம்பண்ணுகிறவன் இல்லாவிட்டால், சபையிலே பேசாமல் தனக்கும் பராபரனுக்கும் தெரியப் பேசக்கடவன்.

௨௯ தீர்க்கதரிசனம் காட்டுகிறவர்கள் இரண்டுபேர் அல்லது மூன்றுபேர் பேசலாம்; [9]மற்றவர்கள் நிதானிக்கக்கடவர்கள்.

௩௰ அப்பொழுது உளுக்காந்திருக்கிற மற்றொருவனுக்கு ஏதாகிலும் வெளிப்படுத்தப்பட்டால், [10]முந்தினவன் பேசாமலிருக்கக்கடவன்.

௩௧ எல்லாரும் கற்கிறதற்கும் எல்லாரும் ஆறுதலை அடைகிறதற்கும் நீங்கள் அனைவரும் ஒருவன் ஒருவனாகத் தீர்க்கதரிசனம் காட்டலாமே.

௩௨ தீர்க்கதரிசனம் காட்டுகிறவர்களுக்கு உண்டான [11]ஆவிக்கு உரிய வரங்கள் அதைக் காட்டுகிறவர்களுடைய அதிகாரத்திற்குள்ளே இருக்குமே.

௩௩ பராபரனும் கலகத்தில்† பிரியமானவர் அல்ல, சமாதானத்தில் பிரியமானவராய் இருக்கிறாரே; [12]பரிசுத்தவான்களுடைய எல்லாச் சபைகளிலேயும் நடக்கிறது போல,

௩௪ ¶ உங்கள் சபைகளிலேயும் [13]பெண்பிள்ளைகள் பேசாமலிருக்கக்கடவர்கள்; [14]பேசும்படிக்கு அவர்களுக்கு உத்தரவு இல்லை; அவர்கள் கீழ்ப்படியவேண்டும்.

௩௫ [15]அப்படி வேதமும் சொல்லு

---

கி. பி. ௫௯.

1 சங். ௧௩௧. ௨. மத். ௰௮. ௨௫: ௰௯. ௧௪: ௰௧. ௰௪. உரோ ௰௬. ௰௯.
2 ௧ கொரி. ௩. ௧. எபே. ௪. ௰௪. எபி. ௫. ௰௨, ௰௩. மத். ௰௮. ௩. ௧ பே. ௨. ௨.
* அல்லது பெரியவர்கள்; ௧ கொரி. ௨. ௬.
3 யோவா. ௰. ௩௪.
4 ஏசா. ௨௮. ௰௧, ௰௨.
5 அப். ௨. ௰௩.
6 ஏசா. ௪௫. ௰௪. சகரி. ௮. ௨௩.
7 ௧ வச. ௧ கொரி. ௰௨. ௮. ௯, ௰.
8 ௧ கொரி. ௰௨. ௭. ௨ கொரி. ௰௨. ௰௯. எபே. ௪. ௰௨.
9 ௧ கொரி. ௰௨. ௰.
10 ௧ தெச. ௫. ௰௯, ௨௰.
11 ௧ யோ. ௪. ௧.
† அல்லது குழப்பத்தில்.
12 ௧ கொரி. ௰௧. ௰௬.
13 ௧ தீமோ. ௨. ௰௧. ௰௨.
14 ௧ கொரி. ௰௧. ௩. எபே. ௫. ௨௨. கொலோ ௩. ௰௮ தீத். ௨. ௫. ௧ பே. ௩. ௧.
15 ௧ மோ. ௩ ௰௬.

Digitized by Google

கின்றது; அவர்கள் ஒரு காரியத்தைக் கற்றுக்கொள்ள விரும்பினால், வீட்டிலே தங்கள் புருஷரிடத்திலே விசாரிக்கக்கடவர்கள்; ஸ்திரிகள் சபையிலே பேசுகிறது அவலட்சணமாயிருக்கிறதே.

௩௬ அல்லது பராபரனுடையவசனம் உங்களிடத்தில்இருந்தா புறப்பட்டது? அல்லது அது உங்களிடத்திற்குமாத்திரமா வந்தது?

௩௭ ¶ [1]ஒருவன் தன்னைத் தீர்க்கதரிசி அல்லது ஆவியைப் பெற்றவன் என்று எண்ணினால், நான் உங்களுக்கு எழுதுகிறவைகள் கர்த்தருடைய கற்பனைகளாயிருக்கின்றன என்று அறிக்கையிடக்கடவன்.

௩௮ ஒருவன் அறியாமற்போனால், அவன் அறியாமல்போகட்டும்.

௩௯ ஆகையால் சகோதரரே, [2]தீர்க்கதரிசனம் காட்டுகிற வரத்தைத் தேடிக்கொள்வீர்களாக; அந்நிய பாஷைகளைப் பேசுகிறதற்கும் தடைபண்ணாதிருங்கள்.

௪௰ [3]சகலமும் நல்லொழுக்கமாயும் சட்டத்தின்படியேயும் நடக்கக்கடவது.

## ௰௫. அதிகாரம்.

௧. கிறிஸ்துவின் உயிர்த்தெழுதலினால், ௰௨. உயிர்த்தெழுதல் இல்லையென்றவர்களுக்கு எதிரிடையாக நம்முடைய உயிர்த்தெழுதலைத் திருஷ்டாந்தப்படுத்தி, ௨௧. அதற்கு மூலமும், ௩௫. வகையும் சொல்லி, ௫௧. உயிரோடிருக்கிறவர்கள் அடையும் ஆறுதலைக்குறித்தும் சொன்னது.

அன்றியும் சகோதரரே, [4]நான் உங்களுக்குச் சுவிசேஷத்தைப் பிரசங்கித்தேனே; நீங்களும் அதை ஏற்றுக்கொண்டு, [5]அதிலே நிலை நிற்கிறீர்களே.

௨ அல்லாமலும் [6]நீங்கள் வீணாய் விசுவாசியாமல், நான் உங்களுக்குப் பிரசங்கித்த விதமாய்* அதைக் கைக்கொண்டிருந்தால்† [7]இரட்சிப்பு உங்களுக்கு அதினாலே கிடைக்குமே; அந்தச் சுவிசேஷத்தை நான் உங்களுக்கு மறுபடியும் அறிவிக்கிறேன்.

௩ [8]நான் அடைந்ததும் உங்களுக்குப் பிரதானமாக [9]ஒப்புவித்ததும் என்னவென்றால், கிறிஸ்துவானவர் [10]வேதவாக்கியங்களின்படி நம்முடைய பாவங்களுக்காக மரித்தும்,

௪ [11]வேதவாக்கியங்களின்படி அடக்கம்பண்ணப்பட்டும் மூன்றாம்நாளில் எழுந்தும் இருக்கிறார்.

௫ [12]கேபாவுக்கும், பின்பு [13]பன்னிருவருக்கும் தரிசனையானார்.

௬ அதின்பின்பு அவர் ஐந்நூறு பேருக்கு அதிகமான சகோதரருக்கும் ஒருமிக்கத் தரிசனையானார், அவர்களில் சிலர்மாத்திரம் நித்திரை அடைந்தார்கள்; மற்ற அதிகமானவர்கள் இந்நாள்வரைக்கும் இருக்கிறார்கள்.

௭ பின்பு யாக்கோபுக்கும், [14]அதின்பின்பு அப்போஸ்தலர் எல்லாருக்கும் தரிசனையானார்.

௮ [15]எல்லாருக்கும் பின்பு எனக்கும் தரிசனையானார்; நான் பூரண கர்ப்பத்தில் பிறவாமல், அதற்கு முன்பிறந்த* பிள்ளையைப்போல அப்போஸ்தலனானவன்.

௯ [16]நான் அப்போஸ்தலர் எல்லாரிலும் சிறியவனாயிருக்கிறேன்; [17]பராபரனுடைய சபையைத் துன்பப்படுத்தினபடியினாலே, நான் அப்போஸ்தலன் என்று அழைக்கப்படுவதற்குப் பாத்திரன் அல்ல.

௰ [18]பராபரனுடைய கிருபையினாலே இருக்கிறேன்; அன்றியும் அவர் என்மேல் வைத்த கிருபை வீணாயிருக்கவில்லை; [19]மற்ற எல்லாரிலும் நான் அதிகமாய் உழைத்தேன்; [20]நானாக அல்ல, என்னுடனே இருக்கிற பராபரனுடைய கிருபையினாலே அப்படிச் செய்தேன்.

௰௧ ஆகையால் நானாவது அவர்களாவது இப்படியே பிரசங்கித்து வருகிறோம்; நீங்களும் இப்படியே விசுவாசித்து வருகிறீர்கள்.

கி. பி. ௫௯.

1 ௨ கொரி. ௰. ௭. ௧ யோ. ௪. ௧.
2 ௧ கொரி. ௰௨. ௧௧. ௧ தெச. ௫. ௨௰.
3 ௧௧. ௨௪.
4 கலா. ௧. ௰௧.
5 உரோ. ௫. ௨.
6 கலா. ௧. ௬.
* கிரேக்கு, பிரசங்கத்தினாலே.
† அல்லது உறுதியாய்ப் பிடித்தால்.
7 உரோ. ௧. ௰௬. ௧ கொரி. ௧. ௨௧.
8 கலா. ௧. ௰௨.
9 ௧ கொரி. ௰௧. ௨, ௨௩.
10 சங் ௨௨. ௰௫. ஏசா. ௫௩. ௫, ௬. தானி. ௯. ௨௬. சகரி. ௰௩. ௭. லூக். ௨௪. ௨௬ ௪௬. அப். ௩. ௧௮: ௨௬. ௨௩. ௧ பே. ௧. ௰௧; ௨. ௨௪.
11 சங். ௨. ௭: ௰௬. ௰. ஏசா. ௫௩. ௰. ஓசே. ௬. ௨. லூக். ௨௪. ௨௬, ௪௬. அப். ௨. ௨௫-௩௧: ௰௩. ௩௩, ௩௪, ௩௫: ௨௬. ௨௨, ௨௩ ௧ பே. ௧. ௰௧.
12 லூக். ௨௪. ௩௪.
13 மத். ௨௮. ௰௭. மாற். ௰௬. ௰௪. லூக். ௨௪. ௩௬. யோவா. ௨௰. ௰௯, ௨௬. அப். ௰. ௪௧.
14 லூக். ௨௪. ௫௰. அப். ௧. ௩, ௪.
15 அப். ௯. ௪, ௰௭: ௨௨. ௰௪, ௰௮. ௧ கொரி. ௯. ௧.
* அல்லது கருவழிந்த.
16 எபே. ௩. ௮.
17 அப். ௮. ௩: ௯. ௧. கலா. ௧. ௰௩. பிலி. ௩. ௬ ௧ தீமோ. ௧. ௰௩.
18 எபே ௩. ௭, ௮.
19 ௨ கொரி. ௰௧. ௨௩; ௰௨. ௰௧.
20 மத். ௰. ௨௰. உரோ. ௰௫. ௰௮, ௰௯. ௨ கொரி. ௩. ௫. கலா. ௨. ௮. எபே. ௩. ௭. பிலி. ௨. ௰௩.

Digitized by Google

௰௨ ¶ அந்தப்படி கிறிஸ்து மரித்தோரிலிருந்து எழுந்திருக்கிறார் என்று பிரசங்கித்திருக்க மரித்தோர் உயிரோடெழும்புதல் இல்லையென்று உங்களில் சிலர் எப்படிச் சொல்லலாம்?

௰௩ மரித்தோர் உயிரோடெழும்புதல் இல்லாவிட்டால் [1]கிறிஸ்துவும் எழுந்திருக்கமாட்டாரே.

௰௪ கிறிஸ்து எழும்பாமல் இருந்தால் எங்கள் பிரசங்கம் அபத்தமாயிருக்குமே, உங்கள் விசுவாசமும் அபத்தமாயிருக்குமே.

௰௫ மரித்தோர் மெய்யாய் எழும்பாவிட்டால், பராபரன் எழுப்பாத கிறிஸ்துவைப் பராபரன் எழுப்பினாரென்று [2]அவரைக்குறித்துச் சாட்சிசொன்னதினாலே நாங்கள் பராபரனுக்காகப் பொய்ச்சாட்சிகளாயும் இருப்போமே.

௰௬ அந்தப்படி மரித்தோர் எழும்பாவிட்டால், கிறிஸ்துவும் எழுந்திருக்கமாட்டாரே.

௰௭ அன்றியும் கிறிஸ்து எழும்பாமலிருந்தால், உங்கள் விசுவாசம் வீணாயிருக்குமே, நீங்கள் எப்பொழுதும் [3]உங்கள் பாவங்களோடே இருப்பீர்களே.

௰௮ கிறிஸ்துவைப்பற்றி நித்திரை அடைந்தவர்களும் கெட்டிருப்பார்களே.

௰௯ அந்தப்படி நாம் கிறிஸ்துவின்மேலே [4]இம்மைக்காகமாத்திரம் நம்பிக்கையாயிருந்தால், எல்லா மனிதர்களிலும் நாம் அதிக நிர்ப்பாக்கியம் உள்ளவர்களாய் இருப்போம்.

௨௰ ¶ அப்படி அல்ல, [5]கிறிஸ்து நித்திரை அடைந்தவர்களில் முதற்பாகமாக [6]மரித்தோரிலிருந்து எழுந்திருக்கிறார்.

௨௧ [7]அந்தப்படி ஒரு மனிதனால் மரணம் உண்டானபடியினாலே, [8]ஒரு மனிதனாலும் மரணத்தினின்றுஉயிரோடெழும்புதலும் உண்டாயிருக்கின்றது.

௨௨ ஆதாமினாலே எல்லாரும் மரிக்கிறதுபோல, கிறிஸ்துவினாலே எல்லாரும்உயிராக்கப்படுவார்கள்.

௨௩ [9]அவனவன் தன் இனவரிசையிலே அப்படி ஆவான்; முதற்பாகமானவர் கிறிஸ்து, பின்பு அவர் வரும்பொழுது அவரைச் சேர்ந்தவர்கள் எழுந்திருப்பார்கள்.

௨௪ அதன்பின்பு முடிவிருக்கும்; அப்பொழுது அவர் சகல துரைத்தனத்தையும் சகல அதிகாரத்தையும் வல்லமையையும் பரிகரித்து, [10]இராச்சியபரிபாலனத்தைப் பிதாவாகிய பராபரனுக்கு ஒப்புக்கொடுப்பார்.

௨௫ [11]இப்படி அவர் எல்லாச் சத்துருக்களையும் தமது பாதத்திற்குக் கீழாக்கிப்போடும்வரைக்கும் அவர் ஆளுகைசெய்யவேண்டும்.

௨௬ [12]அவர் பரிகரிக்கும் கடைசிச் சத்துரு மரணம்.

௨௭ [13]எல்லாவற்றையும் அவருடைய பாதத்திற்குக் கீழ்ப்படுத்தினாரே; ஆகிலும் சகலமும் அவருக்குக் கீழ்ப்படுத்தப்பட்டது என்று சொல்லும்பொழுது, சகலத்தையும் அவருக்குக் கீழ்ப்படுத்தினவர்தவிர என்பது வெளியரங்கமாய் இருக்கின்றது.

௨௮ [14]சகலமும் அவருக்குக் கீழ்ப்பட்டிருக்கும்பொழுது, பராபரனே எல்லா இடங்களிலும் எல்லாவற்றிற்கும் மேலாயிருக்கத்தக்கவிதமாகக் [15]குமாரன் தாமும் தமக்கு எல்லாவற்றையும் கீழ்ப்படுத்தினவருக்குக் கீழ்ப்பட்டிருப்பார்.

௨௯ ¶ பின்னும் மரித்தோர் எழும்பாவிட்டால், மரித்தவர்களுக்காக ஞானஸ்நானம் பெறுகிறவர்கள் என்னசெய்வார்கள்? மரித்தவர்களுக்காக ஏன் ஞானஸ்நானம்பெறுவார்கள்?

௩௰ [16]நாங்களும் ஏன் எந்நேரமும் நாசமோசத்திற்கு எதுவாவோம்?

௩௧ [17]நாடோறும் நான் மரிக்கிறேன்; [18]அதை நம்முடைய கர்த்தராகிய கிறிஸ்து இயேசுவினாலே உங்களைக்குறித்து எனக்கு உண்

கி. பி. ருக.

1 க தெச. ச. ௰ச.
2 அப். உ. உச. ௩உ: ௪. ௰, ௩௩: ௰௩. ௩௰.
3 உரோ. ௪. உ௫.
4 உ தீமோ. ௩. ௰உ.
5 அப். உ௩ உ௩ உ௩. ௰௪. கொலோ. க. ௰அ. வெளி. க. ௫.
6 க பே. க. ௩.
7 உரோ ௫. ௰உ, ௰எ.
8 யோவா. ௰௧ உ௫. உரோ. க. உ௩.
9 உ௰. ௰ச. க தெச. ௪. ௰௫, ௰௬, ௰எ.
10 தானி. எ. ௰௪, உஎ.
11 சங். ௱௰. க. அப். உ. ௩௪, ௩௫. எபே. க. உஉ. எபி. க. ௰௩: ௰. ௰௩.
12 உ தீமோ. க. ௰. வெளி. உ௰. ௰௪.
13 சங். அ. ௬. மத். உஅ. ௰அ. எபி. உ. அ. க பே. ௩. உஉ.
14 பிலி. ௩. உ௩.
15 க கொரி. ௩. உ௩: ௰௩. ௩.
16 உ கொரி. ௰௩. உ௩. கலா. ௫. ௰௩.
17 உரோ. அ. ௩௩. க கொரி. ௪. ௯. உ கொரி. ௪. ௰, ௰௩: ௰௩. உ௩.
18 க தெச. உ. ௰௯.

Google

டாயிருக்கிற மேன்மையின்* பேரிலே நிச்சயமாய்ச்சொல்லுகிறேன்.

௩௨ [1]மரித்தோர் எழும்பாவிட்டால், நான் எபேசுவிலே மனிதர் வழக்கமாய்த்† துஷ்டமிருகங்களுடனே போராடினதினாலே, எனக்கு என்ன பிரயோசனம் வரும்? நாளைக்குச் சாவோம்; ஆகையால் [2]புசிக்கவும் குடிக்கவும் கடவோம் என்று சொல்லலாமே.

௩௩ வஞ்சிக்கப்படாதிருப்பீர்களாக; [3]பொல்லாத சம்பாஷணைகள் நல்லொழுக்கங்களைக் கெடுக்கும்.

௩௪ நீங்கள் பின்னும் பாவம்செய்யாமல், [4]நியாயமானபடி தெளிவு அடையுங்கள்; (உங்களில்) [5]சிலர் பராபரனை அறியாதிருக்கிறார்களே; [6]உங்களுக்கு வெட்கம்வர இதைச் சொல்லுகிறேன்.

௩௫ ¶ [7](ஆகிலும்) மரித்தோர் எப்படி எழும்புவார்கள்? எப்படிப்பட்ட சரீரத்தோடே வருவார்கள் என்று கேட்டால்,

௩௬ ஆ புத்தியீனனே, [8]நீ விதைக்கிற தானியம் செத்தாவிட்டால், புதிதான பயிர் தோன்றமாட்டாதே.

௩௭ மேலும் நீ விதைக்கிறபொழுது இனிமேல் விளையும் உடலை விதையாமல், கோதுமை அல்லது மற்றொரு தானியத்தினுடைய வெறுமணியையே விதைக்கிறாய்.

௩௮ அதற்குப் பராபரன் தமது சித்தத்தின்படியே உடலைக் கொடுக்கிறார்; அந்தப்படி விதை வகைகள் யாவற்றிற்கும் அதற்கதற்கு ஏற்ற உடல் உண்டு.

௩௯ எல்லா மாம்சமும் ஒரேவிதமான மாம்சம் அல்ல; மனிதருடைய மாம்சமும் வேறே, மிருகங்களுடைய மாம்சமும் வேறே, மச்சங்களுடையதும் வேறே, பறவைகளுடையதும் வேறே,

௪௰ பரமண்டலத்திற்கு உரிய தேகங்களும் உண்டு; பூமிக்கு உரிய தேகங்களும் உண்டு, பரமண்டலத்திற்கு உரிய தேகங்களுடைய மகிமையும் வேறே, பூமிக்கு உரிய தேகங்களுடைய மகிமையும் வேறே.

௪௧ சூரியனுடைய மகிமையும் வேறே, சந்திரனுடைய மகிமையும் வேறே, நட்சத்திரங்களுடைய மகிமையும் வேறே, அவைகளில் ஒரு நட்சத்திரத்தினுடைய மகிமை மற்றொரு நட்சத்திரத்தின் மகிமைக்கு மேற்படுகின்றதே.

௪௨ ¶ [9]அப்படிப்போல, மரித்தோர் உயிரோடெழும்புதலும் உண்டாயிருக்கும்; அழிவுள்ள சரீரம் விதைக்கப்பட்டு, பின்பு அழிவில்லாமையாய் எழுந்திருக்கும்.

௪௩ [10]கனஈனமானசரீரம் விதைக்கப்பட்டு, பின்பு மகிமையாய் எழுந்திருக்கும்; பலஈனமுள்ள சரீரம் விதைக்கப்பட்டுப் பின்பு பலமாய் எழுந்திருக்கும்.

௪௪ சீவனுள்ள சரீரம் விதைக்கப்பட்டும், ஆவிக்குரிய சரீரம் எழுந்திருக்கும்; இரத்தமாம்சமுடைய சரீரமும் உண்டு; ஆவிக்குரிய சரீரமும் உண்டு.

௪௫ ஆனதால் வேதத்திலே எழுதியிருக்கிறபடி [11]முந்தின மனிதனாகிய ஆதாம் சீவாத்துமாவானான்; [12]பிந்தின ஆதாம் [13]உயிர்ப்பிக்கிற ஆவியானார்.

௪௬ ஆவியான சரீரம் முந்தினதாயிராமல், இரத்த மாம்சமுடைய சரீரமே முந்தினதாயிருக்கிறது.

௪௭ பின்பு ஆவியான சரீரம் உண்டாம்; [14]முந்தின மனிதன் பூமியின் [15]மண்ணானவன்; [16]இரண்டாம் மனிதன் பரமண்டலத்திற்குரிய கர்த்தர்.

௪௮ மண்ணானவன் எப்படியோ அப்படி மண்ணானவர்களும் இருப்பார்கள்; [17]பரமண்டலத்திற்குரியவர் எப்படியோ அப்படி பரமண்டலத்திற்குரியவர்களும் இருப்பார்கள்.

௪௯ [18]மேலும் மண்ணானவனுடைய சாயலை நாம் அணிந்திருக்

---

கி. பி. ௫௯.

* சில பிரதிகளில், உங்களுடைய மேன்மையின்.
1 உ கொரி. க. அ.
† மனித வழக்கமாய்ப் பேசில்.
2 பிரச. உ. உச. ஏசா. உஉ. ௰௩: இசு. ௰உ. லூக். ௰உ. ௰௯.
3 ௪ கொரி. ஏ. க.
4 உரோ. ௰௩. ௰௧. எபே. ஏ. ௰௪.
5 ௪ தெச. ச. ஏ.
6 ௪ கொரி. க. ஏ.
7 எசே. ௩௭. ௩.
8 யோவா. ௰உ. உச.
9 தானி. ௰உ. ௩. மத். ௰௩. சு௩.
10 பிலி. ௩. உ௪.
11 ஆதி. உ. எ.
12 உரோ. ஏ. ௰௪.
13 யோவா. ஏ. உக: க. ௩௪, ௩௯, ௪௦, ௪எ. பிலி. ௩. உக. கொலோ. ௩. ௪.
14 யோவா. ௩. ௩௧.
15 ஆதி. உ. எ: ௩. ௰௯.
16 யோவா. ௩. ௰௩, ௩௧.
17 பிலி. ௩. உ௰, உக.
18 ஆதி. ஏ. ௩.

Digitized by Google

கிறதுபோல, [1]பரமண்டலத்திற்குரியவருடைய சாயலையும் அணிந்துகொள்வோம்.

௫௰ ¶ சகோதரரே, [2]மாம்சமும் இரத்தமும் பராபரனுடைய இராச்சியத்தைச் சுதந்தரிக்கக்கூடாது; அழிவுள்ளது அழியாமையைச் சுதந்தரிக்கமாட்டாது; ஆனதால் இவைகளைச் சொன்னேன்.

௫௧ மேலும் நான் உங்களுக்கு இரகசியத்தை அறிவிக்கிறேன்; (என்னவெனில்,) [3]நாம் எல்லாரும் நித்திரை அடைந்துபோவதில்லை; ஆகிலும் எல்லாரும் கடைசி எக்காளம் தொனிக்கும்பொழுது ஒரு நிமிஷத்திலே [4]ஒரு இமைப்பொழுதிலே மறுரூபமாக்கப்படுவோம்.

௫௨ [5]எக்காளம் தொனிக்குமே; அப்பொழுது மரித்தோர் அழிவில்லாதவர்களாய் எழும்புவார்கள்.

௫௩ அன்றியும் அழிவுள்ளதாகிய இது அழியாமையையும், [6]சாவுக்கினமாகிய இது சாவாமையையும் தரித்துக்கொள்ளவேண்டியபடியால், நாமும் மறுரூபமாக்கப்படுவோம்.

௫௪ ¶ அந்தப்படி அழிவுள்ளதாகிய இது அழியாமையையும், சாவுக்கினமாகிய இது சாவாமையையும் தரித்துக்கொள்ளும்பொழுது, [7]மரணம் செயமாக விழுங்கப்பட்டதென்று எழுதியிருக்கிற வார்த்தை நிறைவேறும்.

௫௫ [8]ஆ மரணமே, உன் கூர்மை எங்கே? பாதாளமே,* உன் செயம் எங்கே? மரணத்தின் கூர்மை பாவம்.

௫௬ [9]பாவத்தின் பலன் நியாயப்பிரமாணம்.

௫௭ நம்முடைய கர்த்தராகிய இயேசுக்கிறிஸ்துவினாலே, [10]நமக்குச் செயம்கொடுத்திருக்கிற [11]பராபரனுக்குத் தோத்திரம் உண்டாவதாக.

௫௮ [12]ஆகையால் எனக்குப் பிரியமான சகோதரரே, [13]கர்த்தரைக் குறித்து உங்கள் வேலை வீணாயிராதென்று அறிந்து, நீங்கள் உறுதிப்பட்டவர்களாயும், அசையாதவர்களாயும், கர்த்தருடைய கிரியையிலே எப்பொழுதும் பெருகிக்கொள்ளுகிறவர்களாயும் இருப்பீர்களாக.

## ௰சு. அதிகாரம்.

க. எருசலேமிலுள்ள எளிய கிறிஸ்தவர்களுக்குத் தருமங்களைச் சேர்த்து அனுப்பவேண்டுமென்றும், ௰. தீமோத்தேயுவை அங்கிகரிக்கவேண்டுமென்றும் சொல்லி, ௰௩. சில புத்திகளையும் எழுதி, ௰௯. அநேகரை வாழ்த்தி நிருபத்தை முடித்தது.

[14]பரிசுத்தவான்களுக்காகச்சேர்க்கப்படும் தருமங்களைக்குறித்து நான் கலாத்தியதேசத்துச் சபைகளுக்குப் பண்ணின திட்டத்தின்படியே, நீங்களும் செய்வீர்களாக.

௨ நான் வரும்பொழுதே தருமம் சேர்க்குதல் உண்டாயிராதபடிக்கு, உங்களில் அவனவன் [15]வாரத்து முதல்நாள்கள்தோறும் தன்தன் வாழ்வுக்குத்தக்கதாக எதையாகிலும் எடுத்து, தன்னிடத்திலே சேர்த்துவைக்கக்கடவன்.

௩ நான் வந்திருக்கும்பொழுது, உங்களுடைய உபகாரத்தை† எருசலேமுக்குக் கொண்டுபோகும்படிக்கு நீங்கள் [16]நிருபங்களினாலே ஏற்படுத்துகிறவர்கள் எவர்களோ, அவர்களை அனுப்புவேன்.

௪ [17]நானும் போகத் தகுதியானால், அவர்கள் என்னுடனேகூட வரலாம்.

௫ ¶ [18]நான் மக்கெதோனியாநாட்டின் வழியாய்ப் போகிறேன்; அதின் வழியாய்ப் போகும்பொழுது, உங்களிடத்திற்கு வருவேன்.

௬ ஒருவேளை நான் உங்களிடத்தில் சிலகாலம் தரித்திருப்பேன்; [19]நான் எங்கேபோனாலும், நீங்கள் என்னை வழிவிட்டனுப்பும்படிக்கு, ஒருவேளை மாரிகாலம் முடியுமளவும் இருப்பேன்.

௭ ஆனதால் நான் இப்பொழுது போகிற பிரயாணத்திலே உங்க

---

கி. பி. ௫௯.

1 உரோ. அ. உகூ. உ கொரி. க. ௰அ: ச. ௰க. பிலி. க. உக. க பேர. க. உ.
2 மத். ௰கூ. ௰எ. யோவா. க. க, ௩.
3 க தெச. ச. ௰௫, ௰க, ௰எ.
4 பிலி. க. உக.
5 சகரி. கூ. ௰ச. மத். உச. ௩க. யோவா. ௫. உ௫. க தெச. ச. ௰க.
6 உ கொரி. ௫. ச.
7 ஏசா. உ௫. அ. எபி. உ. ௰ச, ௰௫. வெளி. உ௰. ௰ச.
8 ஓசே. ௰க. ௰ச.
* அல்லது பிரேதக்குழியே.
9 உரோ. ச. ௰௫: ௫ ௰க: எ. ௩, ௰க.
10 க யோ. ௫. ச, ௫.
11 உரோ. எ. உ௫.
12 உ பே. க. ௰ச.
13 க கொரி. க. அ.
14 அப். ௰க. உகூ: உச. ௰எ. உரோ. ௰௫. உக. உ கொரி. அ. ச: கூ. க, ௰உ. கலா. உ. ௰.
15 அப். உ௰. எ. வெளி. க. ௰.
† கிரேக்கு, கொடையை; உ கொரி. அ. ச, கூ, ௰கூ.
16 உ கொரி. அ. ௰கூ.
17 உ கொரி. அ. ச, ௰க.
18 அப். ௰கூ. உக. உ கொரி. க. ௰கூ.
19 அப். ௰௫. ௩: ௰எ ௰௫: உக. ௫. உரோ. ௰௫. உச. உ கொரி. க. ௰கூ.

ளைப் பார்க்கமாட்டேன்; [1]கர்த்தர் உத்தரவு கொடுத்தால், உங்களிடத்தில் சிலகாலம் தரித்திருக்கலாம் என்று நம்பியிருக்கிறேன்.

௮ இந்த எபேசுபட்டணத்திலே [2]பெரிதும்பெலனுமானகதவுஎனக்குத்திறக்கப்பட்டிருக்கிறபடியினாலும் [3]விரோதம் செய்கிறவர்களும் அநேகர் இருக்கிறபடியினாலும்,

௯ பெந்தக்கோஸ்து பண்டிகைவரைக்கும் இங்கே இருப்பேன்.

௰ ¶ [4]தீமோத்தேயு உங்களிடத்திற்கு வரும்பொழுது, அவன் உங்களிடத்தில் பயமில்லாமல் இருக்கும்படிக்கு எச்சரிக்கையாயிருங்கள்; [5]என்னைப்போல அவனும் கர்த்தருடைய கிரியையை நடப்பிக்கிறானே.

௰௧ ஆனபடியினாலே [6]ஒருவனும் அவனை அற்பமாய் எண்ணாதிருப்பானாக; அன்றியும் அவனும் அவனுடனேகூட இருக்கிற சகோதரரும் வருகிறதற்கு நான் காத்திருக்கிறபடியால், [7]நீங்கள் அவனைச் சமாதானத்தோடே என்னிடத்தில் வரும்படிக்கு வழிவிட்டனுப்புங்கள்.

௰௨ சகோதரனாகிய [8]அப்பொல்லோவும் இந்தச் சகோதரரோடுங்கூட உங்களிடத்தில் வரும்படிக்கு, அவனை மிகவும் வேண்டிக்கொண்டேன்; அப்படியிருந்தும் இப்பொழுது போக அவனுக்கு மனதே இல்லை; அவனுக்கு நற்சமயம் உண்டாயிருக்கும்பொழுது உங்களிடத்தில் வருவான்.

௰௩ ¶ [9]விழித்திருங்கள் [10]விசுவாசத்திலே நிலைத்திருங்கள்; புருஷராயிருங்கள்; [11]பெலன்கொள்ளுங்கள்.

௰௪ [12]உங்கள் காரியங்களை எல்லாம் அன்போடே செய்வீர்களாக.

௰௫ சகோதரரே, [13]ஸ்தேவானுடைய குடும்பத்தார் அகாயதேசத்திலே [14]முதற்பாகமானவர்கள்என்றும், [15]பரிசுத்தவான்களுக்குஊழியம்செய்யும்படிக்கு அவர்கள் தங்களை நியமித்தவர்கள் என்றும் அறிந்திருக்கிறீர்களே.

௰௬ இப்படிப்பட்டவர்களுக்கும் உதவிசெய்து [16]பிரயாசப்படுகிற மற்றயாவருக்கும் [17]நீங்களும்கீழ்ப்படிந்திருக்கவேண்டும்என்று உங்களுக்குப் புத்திசொல்லுகிறேன்.

௰௭ ஸ்தேவானும் பொர்த்துநாத்தும் அகாயிக்குசும் வந்துசேர்ந்ததினாலே சந்தோஷமாய் இருக்கிறேன்.

௰௮ உங்கள் ஆவிக்குச் செய்ததுபோல [18]அவர்கள் என்னுடைய ஆவிக்கும் ஆறுதல்செய்தபடியால் [19]நீங்கள் இல்லாததினால் உண்டான குறைவை நீக்கி நிறைவுண்டாக்கினார்கள்; [20]இப்படிப்பட்டவர்களைக் கனமாய் எண்ணிக்கொள்வீர்களாக.

௰௯ ¶ ஆசியதேசத்திலுள்ள சபைகள் உங்களை வாழ்த்துதல் செய்கிறார்கள்; ஆக்கில்லாவும் பிரிஸ்கில்லாளும் [21]தங்கள்வீட்டிலே கூடிய சபையோடுங்கூடக் கர்த்தரைப் பற்றிய உங்களை மிகவும் வாழ்த்துகிறார்கள்.

௨௰ சகோதரர் எல்லாரும் உங்களை வாழ்த்துகிறார்கள்; [22]நீங்கள் ஒருவரை ஒருவர் பரிசுத்தமான முத்தத்தினால் வாழ்த்துதல்செய்வீர்களாக.

௨௧ ¶ [23]பவுலாகிய நான் என் கையெழுத்தோடே வாழ்த்துதல் செய்கிறேன்.

௨௨ ஒருவன் கர்த்தராகிய இயேசுக்கிறிஸ்துவினிடத்தில் [24]அன்புகூராமற்போனால், [25]அவன் சபிக்கப்பட்டவனாய் இருப்பான்; [26]அவனுக்குத் தண்டிப்பாகக் கர்த்தர் வருவார்.

௨௩ கர்த்தராகிய [27]இயேசுக்கிறிஸ்துவினுடைய கிருபை உங்களுடனேகூட இருக்கக்கடவது.

௨௪ என்னுடைய அன்பு கிறிஸ்து இயேசுவைப் பற்றிக்கொள்ளுகிற உங்கள் எல்லாரோடுங்கூட இருக்கின்றது.—ஆமென்.

கி. பி. ௫௯.

1 அப். ௰௮. ௨௧. ௧ கொரி. ௪. ௰௯. யாக். ௪. ௰௫.
2 அப். ௰௪. ௨௭. ௨ கொரி. ௨. ௰௨. கொலோ. ௪. ௩. வெளி. ௩. ௮.
3 அப். ௰௯. ௯.
4 அப். ௰௯. ௨௨. ௧ கொரி. ௪. ௰௭.
5 ௨ ரோ. ௰௬. ௨௧. பிலி. ௨. ௰௯, ௨௨. ௧ தெச. ௩. ௨.
6 ௧ தீமோ. ௪. ௰௨.
7 அப். ௰௫. ௩௩.
8 ௧ கொரி. ௧. ௰௨: ௩. ௫.
9 மத். ௨௪. ௪௨: ௨௫. ௰௩. ௧ தெச. ௫. ௬. ௧ பே. ௫. ௮.
10 ௧ கொரி. ௰௫. ௧. பிலி. ௧. ௨௭: ௪. ௧. ௧ தெச. ௩. ௮. ௨ தெச. ௨. ௰௫.
11 எபே. ௬. ௰. கொலோ. ௧. ௰௧.
12 ௧ கொரி. ௰௪. ௧. ௧ பே. ௪. ௮.
13 ௧ கொரி. ௧. ௰௬.
14 ௨ ரோ. ௰௬. ௫.
15 ௨ கொரி. ௮. ௪: ௯. ௧. எபி. ௬. ௰.
16 எபி. ௬. ௰.
17 எபி. ௰௩. ௰௭.
18 கொலோ. ௪. ௮.
19 ௨ கொரி. ௰௧. ௯. பிலி. ௨. ௩௰. பிலே. ௰௩.
20 பிலி ௨. ௨௫. ௧ தெச. ௫. ௰௨.
21 ௨ ரோ. ௰௬. ௫, ௰௫. பிலே. ௨.
22 ௨ ரோ. ௰௬ ௰௬.
23 கொலோ. ௪. ௰௮. ௨ தெச. ௩. ௰௭.
24 எபே. ௬. ௨௪.
25 கலா ௧. ௮, ௯.
26 யூதா. ௰௪, ௰௫.
27 ௨ ரோ. ௰௬. ௨௰.



Digitized by Google

# II. CORINTHIANS.

அப்போஸ்தலனாகிய பவுல்

# கொரிந்தியருக்கு எழுதின

## இரண்டாம் நிருபம்.

### ௧. அதிகாரம்.

*௧. அப்போஸ்தலன் தன் உபத்திரவங்களிலேயெல்லாம் விசேஷமாய், ௮. ஆசியாவிலே அடைந்த துன்பத்தில் உண்டான ஆறுதலினாலே சபைக்கு ஆறுதல் சொல்லி, ௰௨. தான் சுவிசேஷத்தின் மாறாத சத்தியத்தை உத்தமமாய்ப் பிரசங்கித்ததற்குத் தன் மனச்சாட்சியையும், அவர்களுடைய மனச்சாட்சிகளையும் சாட்சியிட்டு, ௰௫. தான் கொரிந்துக்கு வராததற்கு நியாயம் சொன்னது.*

பராபரனுடைய சித்தத்தினாலே இயேசுக்கிறிஸ்துவின் [1]அப்போஸ்தலனாகிய பவுலும் சகோதரனாகிய தீமோத்தேயும் கொரிந்துபட்டணத்திலுள்ள பராபரனுடைய சபைக்கும் [2]அகாயதேசம் எங்குமுள்ள எல்லாப் பரிசுத்தவான்களுக்குங்கூட எழுதுகிறதாவது:

௨ நம்முடைய பிதாவாகிய பராபரனாலும் கர்த்தராகிய இயேசுக்கிறிஸ்துவினாலும் உங்களுக்குக் [3]கிருபையும் சமாதானமும் உண்டாகக்கடவது.

௩ ¶ நம்முடைய கர்த்தராகிய இயேசுக்கிறிஸ்துவின் பிதாவுமாய், பராபரனுமாய், மிகுந்த தயையுடைய பிதாவுமாய், சகலவிதமான ஆறுதலையும் அநுக்கிரகிக்கிற [4]தேவனுமாய் இருக்கிறவர் தோத்திரிக்கப்படக்கடவர்.

௪ அவரே எங்களுக்கு வரும் சகல உபத்திரவகாலங்களிலேயும் எங்களுக்கு ஆறுதல்செய்கிறவர்; பராபரனாலே நாங்கள் அடைகிற ஆறுதலினாலே சகலவித உபத்திரவகாலங்களிலும் அகப்படுகிற மற்றவர்களுக்கு நாங்கள் ஆறுதல்செய்யத் திராணியாய் இருக்கிறோம்.

௫ எப்படியெனில், [5]கிறிஸ்துவின்நிமித்தம் பாடுகள் எங்கள் மேலே பெருகுகிறதுபோல, கிறிஸ்துவினாலே எங்களுக்கு ஆறுதலும் பெருகுகின்றது.

௬ ஆனதால் நாங்கள் உபத்திரவப்பட்டால், [6]அது உங்கள் ஆறுதலுக்காகவும், இரட்சிப்புக்காகவும் இருக்கும்; நாங்கள் ஆறுதலடைந்தால், அதுவும் உங்கள் ஆறுதலுக்காக இருக்கும்; நாங்கள் பாடுபடுகிறதுபோல, நீங்களும் படுகிற பாடுகளைப் பொறுமையோடே சகிக்கிறதினாலே, அந்த ஆறுதல் பலனைச் செய்கின்றது.*

௭ [7]அப்படி நீங்கள் எங்களோடேகூடப் பாடுபடுகிறதுமல்லாமல் எங்களோடேகூட ஆறுதலையும் அடைகிறீர்கள் என்று நாங்கள் அறிந்து, உங்களைக்குறித்து உறுதியான நம்பிக்கையுள்ளவர்களாய் இருக்கிறோம்.

௮ ¶ ஆகையால் சகோதரரே, ஆசியாவில் எங்களுக்கு வந்த [8]உப

இ. பி. ௬௰.

1 ௧ கொரி. ௧. ௧. எபே. ௧. ௧. கொலோ. ௧. ௧. ௧ தீமோ. ௧. ௧. ௨ தீமோ. ௧. ௧.
2 பிலி. ௧. ௧. கொலோ. ௧. ௨.
3 உரோ. ௧. ௭. ௧ கொரி. ௧. ௩. கலா. ௧. ௩. பிலி. ௧. ௨. கொலோ. ௧. ௨. ௧ தெச. ௧. ௧. ௨ தெச. ௧. ௨. பிலே. ௩.
4 எபே. ௧. ௩. ௧ பே. ௧. ௩.
5 அப். ௯. ௪. ௨ கொரி. ௪. ௰. கொலோ. ௧. ௨௪.
6 ௨ கொரி. ௪. ௰௫.
* அல்லது உண்டாக்கப்பட்டிருக்கின்றது.
7 உரோ. ௮. ௰௭. ௨ தீமோ. ௨. ௰௨.
8 அப். ௰௯. ௨௩. ௧ கொரி. ௰௫. ௩௨: ௰௬. ௯.

Digitized by Google

த்திரவத்தை நீங்கள் அறியாதிருக்கவேண்டும் என்று எங்களுக்கு மனதில்லை; என்னவெனில் பிழைப்போமா என்றும் நாங்கள் மிகவும் சந்தேகப்படத்தக்கதாக, (எங்கள்) பலத்திற்கு மிஞ்சின அதிக பாரம் எங்களுக்கு உண்டாயிற்று.

௯ மேலும் மரணம் வருமென்று நாங்கள் எங்களுக்குள்ளே நிச்சயித்திருந்தோம்.* [1]அது எங்கள்மேலே அல்ல, மரித்தோரை எழுப்புகிற பராபரன்மேலே நாங்கள் நம்பிக்கையாய் இருக்கும்படிக்கு ஏதுவாயிருந்தது.

௰ [2]அப்படிப்பட்ட மரணத்தினின்று அவர் எங்களை இரட்சித்தார்; இப்பொழுதும் இரட்சிக்கிறார்; பின்னும் இரட்சிப்பார் என்று அவரை நம்பியிருக்கிறோம்.

௰௧ அதற்காக [3]நீங்களும் விண்ணப்பத்தினாலே எங்களுக்கு உதவிசெய்யும்பொழுது, அநேகர் நிமித்தம் எங்களுக்கு உண்டான [4]ஈவுக்காக அநேகராலே எங்கள் நிமித்தம் தோத்திரங்களும் செலுத்தப்படும்.

௰௨ ¶ அதற்கு ஏதுவாக எங்களுடைய புகழ்ச்சி என்னவென்றால், நாங்கள் உலகத்திலே விசேஷமாக உங்களிடத்திலே கபடமில்லாமல் [5]திவ்விய உண்மையோடும் [6]மாம்சத்திற்கு ஏற்ற ஞானத்தோடே அல்ல, பராபரனுடைய கிருபையோடும் சஞ்சரித்தோம் என்று எங்கள் மனது எங்களுக்குச் சாட்சிசொல்லுகின்றது; இதுவே எங்களுடைய புகழ்ச்சி.

௰௩ ஆனதால் (இங்கே) நீங்கள் வாசித்தும் அறிந்து ஒத்துக்கொண்டும் இருக்கிற பொருள்களையே அன்றி, வேறே பொருள்களை நாங்கள் உங்களுக்கு எழுதுகிறதில்லை; முடிவுபரியந்தமும் அப்படியே அறிந்து ஒத்துக்கொள்வீர்கள் என்று நம்பியிருக்கிறேன்.

௰௪ கர்த்தராகிய இயேசுவினுடைய நாளிலே [7]நீங்கள் எங்களுக்குப் புகழ்ச்சியாயிருப்பதுபோல, [8]நாங்களும் உங்களுக்குப் புகழ்ச்சியாயிருக்கிறதை ஒரு பாகமாய் அறிந்து ஒத்துக்கொண்டிருக்கிறீர்களே.

௰௫ ¶ இப்படிப்பட்ட நம்பிக்கையினாலே நான் [9]உங்களுக்கு மறுபடியும் உபகாரம்† உண்டாகும்படிக்கு,

௰௬ [10]முதலாவது உங்களிடத்தில் வரவும், உங்கள் ஊர்வழியாக மக்கேதோனியாநாட்டுக்குப் போகவும், [11]மக்கேதோனியாவை விட்டுத் திரும்ப உங்களிடத்தில் வரவும், உங்களால் யூதேயா நாட்டுக்கு வழிவிட்டு அனுப்பப்படவும் யோசனையாய் இருந்தேன்.

௰௭ இப்படி நான் வீணாகவா யோசித்தேன்? அல்லது என்னிடத்திலே ஆம் என்பது ஆமென்றும் அல்லவென்பது அல்லவென்றும் இருக்கத்தக்கதாக, நான் யோசிக்கிறவைகளைத் [12]தேக இச்சையின்படியா யோசிக்கிறேன்?

௰௮ ¶ அப்படியல்ல, நாங்கள் உங்களுக்குச் சொன்ன வார்த்தை‡ ஆம் என்றும், அல்ல என்றும் இருக்கவில்லை என்கிறதற்கு உண்மையுள்ள பராபரனே சாட்சியாய் இருக்கிறார்.

௰௯ [13]பராபரனுடைய வாக்குத்தத்தங்கள் எல்லாம் இயேசுக்கிறிஸ்துவினாலே ஆமென்றும் ஆமனென்றும் இருக்கிறபடியால்,

௨௰ பராபரனுடைய மகிமை பிரஸ்தாபமாகும்படிக்கு, என்னாலும் சில்வானுவினாலும் தீமோத்தேயுவினாலும் உங்களுக்குள்ளே பிரசங்கிக்கப்பட்ட [14]பராபரனுடைய குமாரனாகிய இயேசுக்கிறிஸ்துவும் ஆமென்றும் அல்லவென்றும் இராமல், [15]ஆம் என்று (எப்பொழுதும் ஒரேவிதமாய்) இருந்தாரே.

௨௰௧ எங்களையும் உங்களையும் கிறிஸ்துவுக்குள் ஸ்திரப்படுத்தி,

கி. பி. ௬௰.



* அல்லது தீர்த்திருந்தோம்.
1 எரே. ௰எ. ௫, எ.
2 ௨ பே. ௨. ௯.
3 உரோ. ௰௫. ௩௰. பிலி. ௧. ௰௯. பிலே. ௨௨.
4 ௨ கொரி. ௪. ௰௫.
5 ௨ கொரி. ௨. ௰எ: ௪. ௨.
6 ௧ கொரி. ௨. ௪, ௰௩.
7 பிலி. ௨. ௰௬: ௪. ௧. ௧ தெச. ௨. ௰௯, ௨௰.
8 ௨ கொரி. ௫. ௰௨.
9 உரோ. ௧. ௰௧.
† அல்லது கிருபை.
10 ௧ கொரி. ௪. ௰௯.
11 ௧ கொரி. ௰௬. ௫, ௬.
12 ௨ கொரி. ௰. ௨.
‡ அல்லது பிரசங்கம்.
13 உரோ. ௰௫. ௮, ௯.
14 மார். ௧. ௧. லூக். ௧. ௩௫. அப். ௯. ௨௰.
15 எபி. ௰௩. ௮.

Digitized by Google

[1]நமக்கு அபிஷேகம்பண்ணினவர் பராபரன்.

௨௨ [2]அவரும் நம்மை முத்திரைப்படுத்தி, நம்முடைய இருதயங்களில் ஆவியென்னும் [3]அச்சாரத்தைக் கொடுத்திருக்கிறார்.

௨௩ ¶ [4]நான் உங்களைத் தப்பவிடும்படிக்கே இதுவரைக்கும் கொரிந்துபட்டணத்திற்கு வாராதிருக்கிறேன்; [5]இதைக்குறித்து என் ஆத்துமாவுக்குச் சாட்சியாகப் பராபரனையே அழைக்கிறேன்.

௨௪ [6]விசுவாசத்தின் நிமித்தம் நாங்கள் உங்களைப் பலவந்தமாய் ஆளுகிறவர்களாக அல்ல, [7]நீங்கள் (இதுவரைக்கும்) விசுவாசத்திலே நிலைநிற்கிறபடியால், உங்கள் சந்தோஷத்திற்கு உதவிக்காரராகவே இப்படிச் சொல்லுகிறேன்.

## ௨. அதிகாரம்.

*௧. தான் அவர்களிடத்தில் வாராததற்கு நியாயம் சொல்லி, ௬. புறம்பாக்கப்பட்டவன் உத்தம மனஸ்தாபம் அடைந்ததினால் தான் அவனை மன்னித்துத் தேற்றக்கட்டளையிட்டு, ௰௨. தான் துரோவாவிலிருந்து மக்கேதோனியாவுக்குப் போன முகாந்தரத்தையும், ௰௪. தன் பிரசங்கத்தினால் பராபரன் எங்கும் உண்டாக்கின நற்பலனையுங்குறித்துச் சொன்னது.*

ஆனதால், [8]துக்கத்துடனே நான் உங்களிடத்திலே திரும்ப வாராதபடிக்கு எனக்குள்ளே தீர்மானம் செய்தேன்.

௨ நான் உங்களைத் துக்கப்படுத்தினால் என்னாலே துக்கம் அடைந்தவனே அல்லாமல், எவன் என்னைச் சந்தோஷப்படுத்துவான்?

௩ ஆகையால் [9]என்னுடைய சந்தோஷம் உங்கள் எல்லாருக்கும் சந்தோஷமாய் இருக்குமென்று நான் உங்கள் எல்லாரையும் நம்பிக்கொண்டு, [10]நான் வரும்பொழுது எனக்குச் சந்தோஷம் உண்டாக்கவேண்டியவர்களால் நான் துக்கம் அடையாதபடிக்கு, (முன்னே) அப்படித்தானே உங்களுக்கு எழுதினேன்.

௪ அன்றியும் மிகுந்த வியாகுலமும் மனஇடுக்கமும் அடைந்தவனாய், அதிகமான கண்ணீரோடே உங்களுக்கு எழுதினேன்; [11]நீங்கள் துக்கப்படும்படிக்கு அல்ல, உங்கள்மேலே அதிகமாயிருக்கிற என்னுடைய அன்பை நீங்கள் அறியும்படிக்கே அப்படிச் செய்தேன்.

௫ ¶ [12]துக்கம் உண்டாக்கினவன் [13]என்னை (மாத்திரமல்ல) நான் அதிக பாரம் வையாதபடிக்கு, (என்னாலே) ஒருவிதமாய் உங்கள் எல்லாரையும் துக்கப்படுத்தினான்.

௬ அப்படிப்பட்டவனுக்கு [14]அநேகரால் உண்டான இந்தத் தண்டனை* போதும்.

௭ ஆனதால் அவன் அதிக துக்கத்தினாலே விழுங்கப்படாதபடிக்கு, [15]நீங்கள் அதிக சந்தோஷமாய் அவனுக்கு மன்னித்து ஆறுதல் செய்யவேண்டும்.

௮ அந்தப்படி நீங்கள் உங்கள் அன்பை அவனுக்குக் காண்பிப்பீர்களாக என்று உங்களை வேண்டிக்கொள்ளுகிறேன்.

௯ அதற்காகவும் [16]நீங்கள் சகலத்திலேயும் கீழ்ப்படிந்திருக்கிறீர்களோ என்று உங்கள் குணத்தை அறியவும் இப்படி எழுதியிருக்கிறேன்.

௰ ஆனதால் யாருக்கு மன்னிக்கிறீர்களோ, அவனுக்கு நானும் மன்னிக்கிறேன்; மேலும் எதை நான் (இப்பொழுது) மன்னித்தேனோ, அதை நான் உங்கள் நிமித்தம் கிறிஸ்துவினுடைய சந்நிதானத்திலே† மன்னித்தேன்.

௰௧ சாத்தானுடைய யோசனைகள் எங்களுக்குத் தெரியாமல் இருக்கவில்லை; ஆனதால் நாம் அவனாலே மேற்கொள்ளப்படாதபடிக்கு அப்படிச் செய்தேன்.

௰௨ ¶ மேலும் நான் கிறிஸ்துவின் சுவிசேஷத்தைப் பிரசங்கிக்கும்படி [17]துரோவாப்பட்டணத்

கி. பி. ௫௰.

1 ௧ யோ. ௨. ௨௰, ௨௭.
2 எபே. ௧. ௰௩: ௪.௩௰. ௨தீமோ. ௨. ௰௯. வெளி. ௨. ௰௭.
3 ௨ கொரி. ௫. ௫.எபே. ௧.௰௪.
4 ௧ கொரி. ௪. ௨௧. ௨ கொரி. ௨. ௧: ௰௨. ௨௰: ௰௩. ௨, ௰.
5 ௨ரோ. ௧. ௯. ௨ கொரி. ௰௧. ௩௧. கலா. ௧. ௨௰. பிலி. ௧. ௮.
6 ௧ கொரி. ௩.௫: ௧ பே.௫.௩.
7 ௨ரோ. ௰௧. ௨௰. ௧ கொரி. ௰௫.௧.
8 ௨ கொரி. ௧. ௨௩: ௰௨. ௨௰, ௨௧: ௰௩. ௰.
9 ௨ கொரி. ௭. ௰௩: ௮. ௨௨. கலா.௫.௰.
10 ௨ கொரி.௰௨. ௨௧.
11 ௨ கொரி. ௭. ௮, ௯, ௰௨.
12 ௧ கொரி. ௫. ௧.
13 கலா. ௪. ௰௨.
14 ௧ கொரி. ௫. ௪,௫. ௧ தீமோ. ௫. ௨௰.
* அல்லது கண்டிப்பு.
15 கலா.௬.௧.
16 ௨ கொரி. ௭. ௰௫: ௰. ௬.
† அல்லது கிறிஸ்துவுக்காக.
17 அப். ௰௬. ௮: ௨௰. ௬.

Digitized by Google

திலே வந்தபொழுது, [1]கர்த்தரா லே எனக்குக் கதவு திறக்கப்பட் டிருக்கையில்,

௰௩ நான் என் சகோதரனுகிய தீத்துவைக் காணுததினுலே [2]என் ஆவிக்கு அமைதல் இருக்கவில் லே; ஆனதால் நான் அவர்களாலே அனுப்பப்பட்டு,மக்கேதோனியா நாட்டுக்குப் புறப்பட்டுப் போ னேன்.

௰௪ ¶ கிறிஸ்துவினுலே எங்களை எப்பொழுதும் வெற்றி சிறக்கப் பண்ணி, எல்லா இடங்களிலே யும் எங்களைக்கொண்டு அவரை அறிகிற அறிவின் வாசனையை வெளிப்படுத்துகிற பராபரனுக் குத் தோத்திரம் உண்டாவதாக.

௰௫ [3]இரட்சிக்கப்படுகிறவர்களு க்குள்ளேயும் [4]கெட்டுப்போகிற வர்களுக்குள்ளேயும் நாங்கள் பரா பரனுக்குக் கிறிஸ்துவின் நற்கந்த மாய் இருக்கிறோமே.

௰௬ [5]கெட்டுப்போகிறவர்களுக் குள்ளே மரணத்திற்கு ஏதுவான மரணவாசனையாகவும், இரட்சிக் கப்படுகிறவர்களுக்குள்ளே சீவ னுக்கு ஏதுவான சீவவாசனையாக வுமே இருக்கிறோம்; [6]இவைகளைப் (போதிக்கிறதற்கு) யார் தகுதியா யிருக்கிறார்கள்.

௰௭ அநேகர் செய்கிறதுபோல [7]நாங்கள் பராபரனுடைய வசனத் தைக் கலப்பாய்ப்* பேசாமல், [8]து ப்புரவாகவும் பராபரனுலே பெற் றதாகவும் பராபரனுக்கு முன்பாக வும் கிறிஸ்துவைக்குறித்துப்† பே சுகிறோம்.

## ௩. அதிகாரம்.

௧. கள்ளப்போதகர்கள் தன்பேரில் வீண்பெருமை சமத்தாதபடிக்குக் கொரிந்தியர் விசுவாசமும், நற் கிரியையுமே தன் ஊழியத்துக்குத் திருஷ்டாந்த மென்றும், ௭. பழைய உடம்படிக்கையின் ஊழி யக்காரருக்கும் புது உடம்படிக்கையின் ஊழியக் காரருக்கும் வித்தியாசத்தைக் காண்பித்து, ௰௨. இஸ்ரவேலர் மோசேயின் முகத்தைப்பார்க்கி றதும் சீவனையும், விடுதலையையும் கொடுக்கிற சுவி சேஷம் மேன்மையுள்ளதுபோலத் தன் ஊழியம் பழைய உடம்படிக்கையின் ஊழியத்தைப்பார்க் கிலும் மேன்மையுள்ளதென்றும் சொன்னது.

[9]எங்களை நாங்களே மறுபடியும் மெச்சிக்கொள்ளத் தொடங்குகி றோமா? அல்லது சிலருக்கு வே ண்டியதாயிருக்கிறதுபோல,[10]உங் களுக்கு உபசார நிருபங்களை அ னுப்பவும், அல்லது உங்களிடத் தில் உபசார நிருபங்களை வாங்க வும், எங்களுக்கு வேண்டுமோ?

௨ [11]நீங்களே எங்களுக்கு அப்ப டிப்பட்ட நிருபமாயிருக்கிறீர்கள்; அது எங்கள் இருதயங்களில் எழு தப்பட்டிருக்கிறது; மேலும் அது சகல மனிதராலும் அறிந்து வாசிக் கப்பட்டு வருகின்றது.

௩ நீங்களே [12]எங்கள் ஊழியத் தில் உண்டான கிறிஸ்துவினு டையநிருபமாகவெளியரங்கமாக் கப்பட்டவர்கள்; அது மையினு லல்ல,சீவனுள்ள பராபரனுடைய ஆவியினுலே [13]கற்பலகைகளில் அல்ல, [14]மாம்சமான இருதயங்க ளாகிய பலகைகளிலே எழுதப் பட்டிருக்கின்றது.

௪ ¶ இப்படிப்பட்ட நம்பிக்கை யை நாங்கள் பராபரனுக்குமுன் பாகக் கிறிஸ்துவின் மூலமாகக் கொண்டிருக்கிறோம்.

௫ ஒன்றை யோசிக்கிறதற்கு நா ங்கள் எங்களாலே [15]திராணியுள் ளவர்களாக அல்ல, [16]எங்களு டைய திராணி பராபரனுல் உண் டாயிருக்கின்றது.

௬ நாங்கள் [17]புது உடம்படிக்கை யின் ஊழியக்காரராயிருக்கும்படி [18]அவரே எங்களுக்குத் திராணி யைக் கொடுத்தார்; அந்த உடம்ப டிக்கை [19]எழுத்திற்குரியதல்ல, ஆ விக்குரிய உடம்படிக்கையாயிரு க்கின்றது.[20]எழுத்திற்குரியது கொ லேசெய்கின்றது; [21]ஆவிக்குரியது உயிர்ப்பிக்கின்றதே.‡

௭ [22]கற்களில் எழுத்துக்களால் பதிந்திருந்த [23]மரணத்திற்கு ஏது

கி. பி. ௫௰.

1 ௧ கொரி. ௰௬. ௯.
2 உ கொரி. ௭. ௫, ௬.
3 ௧ கொரி. ௧. ௰௮.
4 உ கொரி. ௪. ௩.
5 லூக். உ. ௩௪. யோவா. ௯. ௩௯. ௧ பே. உ. ௭, ௮.
6 ௧ கொரி. ௰௫. ௰. உ கொரி. ௩. ௫, ௬.
7 உ கொரி. ௪. உ: ௰௧. ௰௩. உ பே. உ. ௩.
* அல்லது வஞ்ச னையாய்.
8 உ கொரி ௧. ௰உ: ௪. உ.
† அல்லது கிறிஸ் துவுக்குள்ளாகி.
9 உ கொரி. ௫. ௰உ: ௰. அ, ௰௨: ௰௧. ௰௧.
10 அப். ௰௮. உ௭.
11 ௧ கொரி. ௯. உ.
12 ௧ கொரி. ௩. ௫.
13 உ மோ. உ௪. ௰௨: ௩௪. ௧.
14 சங். ௩௰. அ. எரே. ௩௧. ௩௩. எசே. ௰௧. ௰௯: ௩௬. உ௬. எபி. அ. ௰.
15 யோவா. ௰௫. ௫. உ கொரி. உ. ௰௬.
16 ௧ கொரி. ௰௫. ௰. பிலி. உ. ௰௩.
17 எரே. ௩௧. ௩௧. மத். உ௬. உ௮. எபி. அ. ௬, ௮.
18 ௧ கொரி. ௩. ௫: ௰௫. ௰. உ கொரி. ௫. ௰௮. எபே. ௩. ௭. கொலோ. ௧. உ௫, உ௯. ௧ தீமோ. ௧. ௰௨. உ தீமோ. ௧. ௰௧.
19 உரோ. உ. உ௭, உ௯: ௭. ௬.
20 உ ரோ. ௩. உ0: ௪. ௰௫, ௭. ௰௧. கலா. ௩. ௰.
21 யோவா. ௬. ௬௩. உரோ. அ. உ.

‡ அல்லது உயிரைக் கொடுக்கின்றது.—22 உ மோ. ௩௪. ௧, உ௮. இ மோ. ௫. ௧. ௨.—23 உரோ. ௭. ௰.

Digitized by Google

வான ஊழியத்தை மோசே செய்தபொழுது, அவனுடைய முகத்திலே மகிமைப்பிரகாசம் உண்டானதால், [1]இஸ்ரவேல் சந்ததியார் அவனுடைய முகத்தை நோக்கிப் பார்க்கமாட்டாமல் இருந்தார்களே; ஒழிந்துபோன மகிமையையுடைய அந்த ஊழியம் அப்படிப்பட்ட மகிமையுள்ளதாயிருக்க,

௮ ஆவிக்கேற்ற [2]உடம்படிக்கையின் ஊழியம் மிகவும் அதிகமாய் மகிமையுள்ளதாய் இருக்குமல்லவா?

௯ ஆக்கினைத்தீர்ப்பைக் கொடுத்த ஊழியம் மகிமையுள்ளதாயிருக்க, [3]நீதியைக் கொடுக்கிற ஊழியம் மிகவும் அதிகமான மகிமையாய் இருக்கும் அல்லவா?

௰ இதின்பொருட்டாக மகிமைப்பட்டிருந்த அந்த ஊழியம் இந்த ஊழியத்திற்கு உண்டாயிருக்கிற அதிக மகிமைக்குமுன்பாக மகிமைப்பட்டதல்ல.

௰௧ அன்றியும் ஒழிந்துபோனது மகிமைகொண்டிருப்பதால், நிலைநிற்பது மிகவும் அதிகமாய் மகிமையுள்ளதாயிருக்குமே.

௰௨ ¶ ஆனதால் இப்படிப்பட்ட நம்பிக்கையை உடையவர்களாய், [4]நாங்கள் மிகுந்த தயிரியத்தோடே* நடக்கிறோம்.

௰௩ அன்றியும் [5]ஒழிந்துபோகிறதின் முடிவை இஸ்ரவேல் சந்ததியார் நோக்கிப்பாராதபடிக்கு, [6]மோசே தன் முகத்தின்மேல் முக்காடு போட்டதுபோல, நாங்கள் போடுகிறதில்லை.

௰௪ [7]அவர்களுடைய புத்தி கடினமாயிருந்தது; இந்நாள்வரைக்கும் பழைய ஏற்பாட்டின் புத்தகம் வாசிக்கப்படுகையில் அந்த முக்காடு அவர்களிடத்தில் இருக்கின்றது.

௰௫ அந்தப் பழைய உடம்படிக்கை கிறிஸ்துவினாலே நீக்கப்பட்டதென்று அவர்களுக்கு வெளிப்படுத்தப்பட்டிருக்கிறதில்லை; ஆனதால் மோசேயின் ஆகமங்கள் வாசிக்கப்படும்பொழுது, இந்நாள்வரைக்கும் முக்காடு அவர்கள் இருதயத்தின்மேலே கிடக்கின்றது.

௰௬ [8]அவர்கள் கர்த்தரிடத்தில் மனந்திரும்பும்பொழுது, [9]அந்த முக்காடு எடுக்கப்படும்.

௰௭ [10]கர்த்தரே அந்த ஆவியாயிருக்கிறார்; கர்த்தருடைய ஆவி எங்கேயோ அங்கே விடுதலையும் இருக்கின்றது.

௰௮ ஆதலால் நாம் எல்லாரும் திறந்தமுகமாய்க் [11]கர்த்தருடைய மகிமையைக் [12]கண்ணாடியிலே கண்டாற்போலக் கண்டு, ஆவியாயிருக்கிற கர்த்தரால்† அந்தச் சாயலாகத்தானே மகிமையின்மேல் மகிமை அடைந்து [13]மறுரூபப்படுகிறோம்.

கி. பி. ௫௰௮.

1 உ மோ. ௩௪. ௨௯,௩௦,௩௫.
2 கலா. ௩. ௩.
3 உரோ. ௧. ௰௭: ௩. ௨௧.
4 உ கொரி. ௭. ௪. எபே. ௬. ௰௯.
* அல்லது தெளிவோடே.
5 உரோ. ௰. ௪. கலா. ௩. ௨௩.
6 உ மோ. ௩௪. ௩௩, ௩௫.
7 ஏசா. ௬. ௰. மத். ௰௩. ௰௪. ௰௫. யோவா. ௰௨. ௪௦. அப். ௨௮. ௨௬. உரோ. ௰௧. ௭. ௮. ௰. ௨௫. உ கொரி. ௪. ௪.
8 உ மோ. ௩௪. ௩௪. உரோ. ௰௧. ௨௩,௨௬.
9 ஏசா. ௨௫. ௭.
10 ௧ வச. ௧ கொரி. ௰௫. ௪௫.
11 உ கொரி. ௪. ௪,௬. ௧ தீமோ. ௧. ௰௧.
12 ௧ கொரி. ௰௩. ௰௨.
† அல்லது கர்த்தரின் ஆவியினால்.
13 உரோ. ௮. ௨௯. ௧ கொரி. ௰௫. ௪௯.
14 உ கொரி. ௩. ௬.
15 ௧ கொரி. ௭. ௨௫. ௧ தீமோ. ௧. ௰௩.
‡ கிரேக்கு, இலச்சையான; உரோ. ௧. ௰௬: ௬. ௨௧.
16 உ கொரி. ௨. ௰௭. ௧ தெச. ௨. ௩,௫.
17 உ கொரி. ௫. ௪,௭: ௬. ௰௨.
18 உ கொரி. ௫. ௰௧.
19 ௧ கொரி. ௧. ௰௮. உ கொரி. ௨. ௰௫. உ தெச. ௨. ௰.

## ௪. அதிகாரம்.

௧. தான் இளைப்படையாமல் உத்தமமும், உண்மையுமுள்ள சாக்கிரதையோடே சுவிசேஷத்தைப் பிரசங்கித்ததையும், ௭. அதினாலே தான் அடைந்த வருத்தங்களும், தன்பலங்களும் பராபரனுடைய வல்லமைக்குப் புகழாயும், ௰௫. திருச்சபைக்குப் பிரயோசனமாயும், ௰௭. தனக்குத்தானே நித்திய மகிமைக்கு ஏதுவாயும் இருந்ததென்பதையுஞ் சொல்லியது.

[14]இப்படிப்பட்ட ஊழியம் எங்களுக்கு [15]இரக்கமாய் உண்டாயிருக்கிறபடியால், நாங்கள் இளைப்படையாமல்,

௨ அவலட்சணமான‡ அந்தரங்க காரியங்களைத் தள்ளிப்போட்டு, தந்திரமாய் நடவாமலும், [16]பராபரனுடைய வசனத்தைப் புரட்டாமலும், [17]சத்தியத்தையே வெளிப்படுத்துகிறதினாலே பராபரனுக்கு முன்பாக எல்லா மனிதருடைய மனதுக்கும் எங்களை (கிறிஸ்தரென்று) [18]ஒப்புவிக்கிறோம்.

௩ ¶ அப்படியும் நாங்கள் பிரசங்கிக்கிற சுவிசேஷம் மறைபொருளாயிருந்தால், [19]தங்களைக் கெடுக்கிறவர்களுக்குள்ளேமாத்திரம் அது மறைபொருளாயிருக்கும்.

௪ அவிசுவாசிகளாகிய அவர்களுக்குப் [1]பராபரனுடைய சாயலாகிய [2]கிறிஸ்துவின் மகிமையான சுவிசேஷத்தின் ஒளி பிரகாசமாயிராதபடிக்கு [3]இவ்வுலகத்தின் தேலவன் [4]அவர்களுடைய புத்தியைக் குருடாக்கினான்.

௫ [5]நாங்கள் (எங்களைக் கர்த்தரென்று) பிரசங்கியாமல், கிறிஸ்து இயேசுவையே கர்த்தரென்றும், [6]எங்களை இயேசுவுக்காக உங்கள் ஊழியக்காரர் என்றும் பிரசங்கிக்கிறோம்.

௬ [7]இருளிலிருந்து ஒளியைப் பிரகாசிக்கச் சொன்ன பராபரன் இயேசுக்கிறிஸ்துவினிடத்தில் உள்ள தமது மகிமையை அறிகிற அறிவாகிய [8]ஒளியை (உங்களுக்கு) தோன்றப்பண்ணும்பொருட்டாக, [9]எங்கள் இருதயங்களிலே பிரகாசித்தார்.*

௭ ¶ இப்படிப்பட்ட மகிமையான வல்லமை எங்களால் அல்ல, [10]பராபரனால் உண்டாயிருக்கின்றதென்று தோன்றும்படிக்கு, [11]இந்தப் பொக்கிஷத்தை மண்பாண்டங்களில் பெற்றிருக்கிறோம்.

௮ [12]நாங்கள் ஙெருக்கத்திலேயும் நெருக்கப்பட்டும், ஒடுங்கிப் போகிறதில்லை; கலக்கமடைந்தும் திடனற்றவர்கள் † ஆகிறதில்லை.

௯ தொடரப்பட்டும் கைவிடப்படுகிறதில்லை; [13]கீழே தள்ளப்பட்டும், கெட்டுப்போகிறதில்லை.

௰ [14]இயேசுவினுடைய சீவனும் எங்கள் சரீரத்திலே வெளியரங்கமாகும்படிக்கு, கர்த்தராகிய இயேசுவின் மரணத்தை [15]எப்பொழுதும் எங்கள் சரீரத்தில் சுமந்து திரிகிறோம்.

௰௧ சாவுக்கினமான எங்கள் சரீரத்திலே இயேசுவினுடைய சீவனும்வெளியரங்கமாகும்படிக்கு, உயிரோடிருக்கிற [16]நாங்கள் எப்பொழுதும் இயேசுவின்நிமித்தமாக மரணத்திற்கு ஒப்புக்கொடுக்கப்படுகிறோம்.

௰௨ ¶ [17]இப்படி மரணமானது எங்களிடத்திலும் சீவனானது உங்களிடத்திலும் கிரியைசெய்கின்றது.

௰௩ [18]நான் விசுவாசித்திருக்கிறபடியால் பேசிக்கொள்ளுகிறேன் என்று எழுதியிருக்கிறபடி, [19]விசுவாச ஆவியை உடையவர்களாய்,

௰௪ நாங்களும் கர்த்தராகிய இயேசுவை [20]எழுப்பினவர் எங்களையும் இயேசுவைக்கொண்டு எழுப்பி, உங்களுடனேகூடத்தமக்குமுன்பாக நிறுத்துவாரென்று அறிந்து விசுவாசித்துப் பேசிக்கொள்ளுகிறோம்.

௰௫ [21]திரளான கிருபை அநேகருடைய தோத்திரத்தினாலே பராபரனுடைய மகிமை விளங்குதற்கு ஏதுவாகப் பெருகும்படிக்கு, [22]இவையெல்லாம் உங்கள் (நன்மைக்காக) நடக்கின்றன.

௰௬ ¶ ஆனபடியினாலே நாங்கள் இளைப்படைகிறதில்லை; மேலும் எங்கள் புறம்பான மனிதத்துவம் அழிகையிலும் [23]உள்ளான மனிதத்துவம் நாள்தோறும் புதிதாக்கப்படுகின்றது.

௰௭ மேலும் அதிசீக்கிரமாய் நீங்குவதுமாய் [24]இலகுவுமாயிருக்கிற நம்முடைய உபத்திரவம் மிகவும் மிகுதியான நித்திய கனமகிமையை நமக்கு உண்டாக்குகின்றது.

௰௮ [25]காணப்படுகிறவைகளை அல்ல, காணப்படாதவைகளை நோக்கியிருக்கிற நமக்கே அப்படி உண்டாக்குகின்றது; காணப்படுகிறவைகள் அநித்தியமானவைகள்; காணப்படாதவைகளே நித்தியமானவைகள்.

கி. பி. ௬௰.

1 யோவா. ௧. ௰௮: ௰௨. ௨௯: ௰௭. ௧. பிலி. ௨.௬.கொலோ. ௧. ௰௫. எபி. ௧. ௩.
2 ௨ கொரி. ௩. ௮, ௯, ௰௧, ௰௮. ௧.௰௪.
3 யோவா. ௰௨. ௩௧: ௰௪. ௩௰: ௰௬.௰௧. எபே. ௬. ௰௨.
4 ஏசா. ௬. ௰. யோவா. ௰௨. ௪௰. ௨ கொரி. ௩.௰௪.
5 ௧ கொரி. ௧. ௰௩, ௨௩: ௰. ௩௩.
6 ௧ கொரி. ௯. ௰௯. ௨ கொரி. ௧.௨௪.
7 ஆதி. ௧. ௩.
8 ௪. வச. ௧ பே. ௨. ௯.
9 ௨ பே. ௧ ௰௯.
* இரேக்கு, பிரகாசித்தவராய் இருக்கிறார்.
10 ௧ கொரி. ௨. ௫. ௨ கொரி ௰௨. ௯.
11 ௨ கொரி. ௫. ௧.
12 ௨ கொரி. ௭. ௫.
† அல்லது நம்பிக்கைபற்றவர்கள்.
13 சங். ௩௭. ௨௪.
14 உரோ. அ. ௰௭. ௨ தீமோ. ௨. ௰௧, ௰௨. ௧ பே. ௪.௰௩.
15 ௧ கொரி. ௰௫. ௩௧. ௨ கொரி. ௧. ௫, ௯. கலா. ௬.௰௭. பிலி. ௩. ௰.
16 சங். ௪௪.௨௨. உரோ. ௮. ௩௬. ௧ கொரி. ௰௫. ௩௧, ௪௯. ௨ கொரி. ௬.௯, ௯.
17 ௨ கொரி. ௰௩. ௯.
18 சங். ௱௰௬. ௰.

19 உரோ. ௧.௰௨. ௨ பே. ௧. ௧.—20 உரோ. அ. ௰௧. ௧ கொரி. ௬. ௰௪.—21 ௨ கொரி. ௧.௰௧: அ. ௰௯: ௯. ௰௧, ௰௨.—22 ௧ கொரி. ௩. ௨௧. ௨ கொரி. ௧. ௬. கொலோ. ௧. ௨௪. ௨ தீமோ. ௨. ௰.—23 உரோ. ௭. ௨௨. எபே. ௩. ௰௬. கொலோ. ௩. ௰. ௧ பே. ௩. ௪.—24 மத். ௫. ௰௨. உரோ. அ. ௰௮. ௧ பே. ௧. ௬: ௫. ௰.—25 உரோ. அ. ௨௪. ௨ கொரி ௫. ௭. எபி. ௰௧. ௧.

Digitized by Google

## ௫. அதிகாரம்.

*௧. தான் நித்திய மகிமையின் நம்பிக்கையை உடையவனாக, ௯. அந்த மகிமையையும் போதுவான கிபாயத்திரிப்பையும் அடைய நன்மனச்சாட்சியைக் காத்துக்கொண்டு, ௰௨. அதினால் மேன்மைபாராட்டும்பொருட்டல்ல, ௰௪. கிறிஸ்துவினிடத்தில் சீவனைப் பெற்ற தான் கிறிஸ்துவின் மகிமைக்குப் புதுச் சிருஷ்டியாய்ச் சீவனம்பண்ணவேண்டியதென்றும், ௰௮. எல்லாரும் கிறிஸ்துவினால் பராபரனோடு ஒப்புரவாகும்படி ஒப்புரவாக்கும் ஊழியத்தை அடைந்தானென்றும் சொல்லியது.*

அது எப்படியென்றால், [1]பூமிக்குரிய கூடாரம்போன்ற நம்முடைய வீடு இடிந்துபோகும்பொழுது, பரமண்டலங்களிலே கையால் செய்யப்படாமல், தேவனால் உண்டாக்கப்பட்ட நித்தியமான வீடாகிய வாசஸ்தலம் நமக்கு உண்டென்று அறிந்திருக்கிறோம்.

௨ [2]நாம் வீடில்லாதவர்கள் அல்ல:

௩ தரிக்கப்பட்டவர்களாய் இருக்க, பரமண்டலத்திலுள்ள நமது வாசஸ்தலத்தை நாம் தரித்துக்கொள்ள மிகவும் விரும்புகிறவர்களாய், [3]இந்த வீட்டிலே தவித்திருக்கிறோம்.

௪ இந்தக் கூடாரத்தில் இருக்கையில், நாம் பாரம்சுமந்து தவிக்கிறோம்; ஆனதால் நாங்கள் (இதைப்) போக்க விரும்பாமல் சீவனாலே மரணம் விழுங்கப்படத்தக்கதாக, (உடனே) [4]அதைத் தரித்துக்கொள்ள விரும்புகிறோம்.

௫ [5]இப்படியே இருக்கும்படி பராபரனே எங்களை எத்தனம் பண்ணி; [6]ஆவியென்னும் அச்சாரத்தையும் எங்களுக்குத் தந்தார்.

௬ ஆகையினாலே நாங்கள் இந்தத் தேகத்திலே குடியிருக்கையில், [7]தரிசித்து நடவாமல் விசுவாசித்து நடக்கிறதால்,

௭ கர்த்தாவைச் சேராத வழிப்போக்கராயிருக்கிறோம் என்று அறிந்தும், (எப்பொழுதும்) தயிரியமாய் இருக்கிறோம்.

௮ நாங்கள் தயிரியமாகவே இருந்து, [8]இந்தத் தேகத்தைவிட்டுப் போகவும் கர்த்தரிடத்தில் குடியிருக்கவும் அதிகமாய் விரும்புகிறோம்.

௯ அதின் நிமித்தமே நாங்கள் (அவரிடத்தில்) குடியிருந்தாலும், (அவரைவிட்டு) இங்கே சஞ்சரித்தாலும், அவருக்குப் பிரியமானவர்களாயிருக்க முக்கியமாய் நாடுகிறோம்.*

௰ [9]நாம் எல்லாரும் அவனவன் தான் நடப்பித்த நன்மைக்காகிலும் தீமைக்காகிலும் தக்கவைகளைச் சரீரத்திலே அடையும்படிக்கு, [10]கிறிஸ்துவின் நியாயாசனத்திற்குமுன்பாக வெளிப்படவேண்டுமே.

௰௧ ஆகையால் [11]கர்த்தருக்குப் பயப்படத்தக்கதென்று நாங்கள் அறிந்து, மனிதருக்குப் போதிக்கிறோம்; [12]இப்படிப் பராபரனுக்குமுன்பாக வெளியரங்கமாய் இருக்கிறோம்; உங்கள் மனதிலேயும் (அப்படியே) வெளியரங்கமாய் இருக்கிறோம் என்று நம்புகிறேன்.

௰௨ [13]இதினாலே நாங்கள் உங்களுக்குமுன்பாக எங்களை மறுபடியும் மெச்சிக்கொள்ளாமல், இருதயத்தால் அல்ல [14]வெளிவேஷத்தால்† மேன்மைபாராட்டுகிறவர்களுக்கு எதிரே நீங்கள் எங்களைக்குறித்து மேன்மைபாராட்டும்படிக்கு ஏது கொடுக்கிறோம்.

௰௩ (அதிலே) நாங்கள் பித்தங்கொண்டவர்கள் என்றால் [15]பராபரனுக்காகவும், தெளிந்த புத்தியுள்ளவர்கள் என்றால் உங்களுக்காகவும் அப்படி இருக்கும்.

௰௪ அதற்காகக் கிறிஸ்துவினுடைய அன்பு எங்களை நெருக்கி ஏவுகின்றது; எப்படி நிதானிக்கிறோமென்றால், [16]எல்லாருக்காகவும் ஒருவரே மரித்திருக்க எல்லாரும் மரித்தார்கள்.

௰௫ மேலும் [17]பிழைத்திருக்கிறவர்கள் இனித் தங்களுக்கென்று பிழையாமல், தங்களுக்காக மரித்

கி. பி. ௬௰.

1 யோபு. ௪. ௰௯. ௨ கொரி. ௪. ௭. ௨ பே. ௧. ௰௩, ௰௪.
2 வெளி. ௧. ௰௮: ௰௩. ௰௬.
3 ௨ ரோ. ௮. ௨௩.
4 ௧ கொரி. ௰௫. ௫௩, ௫௪.
5 ஏசா. ௨௯. ௨௩. எபே. ௨. ௰.
6 ௨ ரோ. ௮. ௨௩. ௨ கொரி. ௧. ௨௨. எபே. ௧. ௰௪: ௪. ௩௰.
7 ௨ ரோ. ௮. ௨௪, ௨௫. ௧ கொரி. ௰௩. ௰௨. ௨ கொரி. ௪. ௰௮. எபி. ௰௧. ௧.
8 பிலி. ௧. ௨௩.
* கிரேக்கு, தெண்டிக்கிறோம்.
9 ௨ ரோ. ௨. ௬. கலா. ௬. ௭. எபே. ௬. ௮. கொலோ. ௩. ௨௪, ௨௫. வெளி. ௨௨. ௰௨.
10 மத். ௨௫. ௩௧, ௩௨. ௨ ரோ. ௰௪. ௰.
11 யோபு. ௩௧. ௨௩. எபி. ௰. ௩௧. யூதா. ௨௩.
12 ௨ கொரி. ௪. ௨.
13 ௨ கொரி. ௩. ௧.
14 ௨ கொரி. ௧. ௰௪.
† கிரேக்கு, முகத்தால்.
15 ௨ கொரி. ௰௧. ௧, ௰௧, ௰௭: ௰௨. ௧, ௰௧.
16 ௨ ரோ. ௫. ௰௫.
17 ௨ ரோ. ௬. ௰௧, ௰௨: ௰௪. ௭, ௮. ௧ கொரி. ௬. ௰௯. கலா. ௨. ௨௰. ௧ தெச. ௫. ௰. ௧ பே. ௪. ௨.

Digitized by Google

து எழுந்தவருக்கென்று பிழைக்கும்படிக்கு, அவர் எல்லாருக்காகவும் மரித்தாரே என்று நிதானிக்கிறோம்.

௰௬ ஆகையால் [1]இதுமுதற்கொண்டு நாங்கள் ஒருவனையும் மாம்சத்தின்படி அறியோம்; முன்னே நாங்கள் கிறிஸ்துவையும் மாம்சத்தின்படி அறிந்தும், [2]இப்பொழுதும் இனிமேலும் அவரை அப்படியாக அறியோம்.

௰௭ [3]கிறிஸ்துவுக்குள் இருக்கிறவன் [4]புதுச் சிருஷ்டியாயிருக்கிறானே;* [5]பழையவைகள் ஒழிந்துபோயின; சகலமும் புதிதாயிற்றே.

௰௮ இவையெல்லாம் பராபரனாலே இருக்கின்றன; [6]அவர் இயேசுக் கிறிஸ்துவைக்கொண்டு நம்மைத் தம்மோடே ஒப்புரவாக்கி, ஒப்புரவாக்குதலின் ஊழியத்தை எங்களுக்குக் கொடுத்தார்.

௰௯ என்னவெனில் [7]கிறிஸ்துவினாலே பராபரன் உலகத்தாருடைய பாவங்களை அவர்கள்மேலே சுமத்தாமல் அவர்களைத்தமக்கு ஒப்புரவாக்கிக்கொண்டு, ஒப்புரவாக்குதலாகிய உபதேசத்தை எங்களிடத்தில் ஏற்படுத்தினார்.†

௨௰ ¶ ஆனபடியினாலே [8]நாங்கள் கிறிஸ்துவுக்காகத் தானாதிபதிகளாயிருக்கிறோம்; [9]பராபரனே எங்களாலே புத்திசொல்லுகிறவராயிருக்க, நாங்கள் கிறிஸ்துவுக்காக (மனிதர்களை) நோக்கி,

௨௧ பாவத்தை அறியாதவராலே நாம் பராபரனுக்குமுன்பாக [10]நீதிமான்களாக்கப்படும்படிக்கு, பராபரன் [11]அவரை நமக்காகப் பாவமாக்கினார்; ஆகையால் பராபரனோடே ஒப்புரவாகுங்கள் என்று வேண்டிக்கொள்ளுகிறோம்.

## ௬. அதிகாரம்.

*௧. தன் போதகத்தினாலும், ௩. நன்னடக்கையினாலும், ௪. சுவிசேஷத்தின் நிமித்தம் பொறுமையோடே சகிக்கும் எல்லாத் துன்பத்தினாலும், நிந்தையினாலும் தன்னைக் கிறிஸ்துவின் உத்தம ஊழியக்காரனென்று திருஷ்டாந்தப்படுத்தி, ௰. அதைக்குறித்துத் தாராளமாய்ப் பட்சமுள்ள தன் இருதயத்தை அவர்களுக்கு விரித்துக்காண்பித்ததுபோல, ௰௩. அவர்களும் பட்சத்தைப் பாராட்டும்படி விரும்பி, ௰௪. அவர்கள் சீவனுள்ள பராபரனுடைய தேவாலயங்களாயிருக்க அஞ்ஞானிகளையும், அவர்கள் தீட்டுகளையும் விலகியிருக்கச் சொல்லியது.*

மேலும் (எனக்குத்) தகுதியான காலத்திலே [12]நான் உனக்குச் செவிகொடுத்து, இரட்சண்ணிய நாளிலே உனக்கு உதவிசெய்தேன் என்று கர்த்தர் சொல்லியிருக்கிறாரே, பாருங்கள், இப்பொழுதே மிகவும் தகுதியான காலம், இப்பொழுதே இரட்சண்ணியநாள்.

௨ ஆனதால் [13]எங்களுடனே கூட வேலைசெய்கிறவர்களே, [14]நீங்கள் பராபரனுடைய கிருபையை வீணாய்ப் பெறாதபடிக்குப் [15]புத்திசொல்லுகிறேன்.

௩ நம்முடைய ஊழியத்தைக் குற்றப்படுத்தத்தக்கதாக [16]நாம் ஒருவருக்கும் முகாந்தரத்தைக் கொடாமல், [17]எல்லா விதத்திலேயும் நம்மைப் பராபரனுடைய ஊழியக்காரராக ஒப்புவிக்கக்‡ கடவோம்.

௪ உபத்திரவங்கள், இடுக்கண்கள், நெருக்கங்கள்,

௫ [18]அடிகள், காவல்கள், கலகங்கள்,§ பிரயாசங்கள், தூக்கமில்லாமை, உபவாசங்களுள்ள காலங்களில் மிகுந்த பொறுமையினாலும், கற்பினாலும், அறிவினாலும்,

௬ நீடிய சாந்தத்தினாலும், தயவினாலும், பரிசுத்த மனதினாலும், வஞ்சகமில்லாத அன்பினாலும்,

௭ [19]சத்தியமுள்ள வசனத்தினாலும் [20]திவ்விய பலத்தினாலும், [21]நீதியாகிய வலது இடதுபக்கத்து ஆயுதங்களினாலும்,

௮ கனத்தையும் கனஈனத்தையும் பெறுங்காலத்திலேயும், துர்க்கீர்த்தியையும் நற்கீர்த்தியையும் பெறுங்காலத்திலேயும், எத்தர் என்னப்பட்டாலும் நிசஸ்தராகவும்,

௯ அறியப்படாதவர்கள் என்னப்

கி. பி. ௫௰.

1 மத். ௰உ. ௪௰. யோவா. ௰௯. ௰௪. கலா. ௯. ௬. பிலி. ௩. ௭, ௮. கொலோ. ௩. ௰௧.
2 யோவா. ௬. ௬௩.
3 உரோ. ௮. ௬: ௰௬. ௭. கலா. ௬. ௰௫.
4 கலா. ௯. ௬: ௬. ௰௫.
* அல்லது இருக்கக்கடவன்.
5 எசா. ௪௩. ௰௮, ௰௯: ௬௫. ௰௭. எபே. உ. ௰௫. வெளி. உ௧. ௫.
6 உரோ. ௫. ௰. எபே. உ. ௰௬. கொலோ. ௧. உ௰. ௧ யோ உ. உ: ௪. ௰.
7 உரோ. ௩. உ௪, உ௫.
† கிரேக்கு, வைத்தார்.
8 யோபு. ௩௩. உ௩. மல்கி. உ. ௭. உ கொரி. ௩. ௬. எபே. ௬. உ௰.
9 உ கொரி. ௬. ௧.
10 உரோ. ௧. ௰௭: ௯. ௰௬: ௰. ௩.
11 ஏசா. ௫௩. ௬, ௯, ௰உ. கலா. ௩. ௰௩. ௧ பே. உ. உ௨, உ௪. ௧ யோ. ௩. ௫.
12 ஏசா. ௪௯. ௮.
13 ௧ கொரி. ௩. ௯.
14 எபி. ௰௨. ௰௫.
15 உ கொரி. ௫. உ௰.
16 உரோ. ௰௪. ௰௩. ௧ கொரி. ௯. ௰௨: ௰. ௩௨.
17 ௧ கொரி. ௪. ௧.
‡ கிரேக்கு, விளங்கப் பண்ண; உ கொரி. ௪. உ.
18 உ கொரி. ௰௧. உ௩. ரு.
§ அல்லது அலைவுகள்.
19 உ கொரி. ௪. உ: ௭. ௰௪.
20 ௧ கொரி. உ. ௪.
21 உ கொரி. ௰. ௪. எபே. ௬. ௰௩, ௰௪. உ தீமோ. ௪. ௭.



Digitized by Google

பட்டாலும் [1]நன்ருய் அறியப்பட்டவர்களாகவும், [2]மரித்தவர்கள் என்னப்பட்டாலும் உயிரோடிருக்கிறவர்களாகவும், [3]தண்டிக்கப்பட்டவர்களானுலும் கொலைசெய்யப்பட்டிராதவர்களாகவும்,

௰ துக்கப்படுகிறவர்கள் என்னப்பட்டாலும் எப்பொழுதும் சந்தோஷப்படுகிறவர்களாகவும், தரித்திரர் என்னப்பட்டாலும் அநேகரை ஐசுவரியவான்கள் ஆக்குகிறவர்களாகவும், ஒன்றுமில்லாதவர்கள் என்னப்பட்டாலும் சகலத்தையும் உடையவர்களாகவும் நம்மை ஒப்புவிக்கக்கடவோம்.

௰௧ ¶ ஆ கொரிந்தியரே, எங்கள் வாய் உங்கள் பட்சமாய்த்திறக்கப்பட்டிருக்கிறது; [4]எங்கள் இருதயம் விஸ்தாரமாக்கப்பட்டிருக்கின்றது.

௰௨ எங்கள் உள்ளம் உங்களைக் குறித்து நெருக்கப்படவில்லை; [5]உங்கள் உள்ளமே எங்களைக்குறித்து நெருக்கப்பட்டிருக்கின்றது.

௰௩ ஆதலால் மறுசடாக நீங்களும் விஸ்தாரமாகுங்கள் என்று (என்) [6]பிள்ளைகளைப்போல உங்களிடத்தில் கேட்டுக்கொள்ளுகிறேன்.

௰௪ ¶ [7]ஒரே நுகத்திலே அவிசுவாசிகளுடனே பூட்டப்படாதிருப்பீர்களாக; என்னத்தினலெனில், [8]நீதிக்கும் அக்கிரமத்துக்கும் என்ன சம்பந்தம் இருக்கிறது? இருளுக்கும் ஒளிக்கும் ஐக்கம் என்ன?

௰௫ கிறிஸ்துவுக்கும் பசாசுக்கும் இசைவுண்டா? அல்லது அவிசுவாசியுடனே விசுவாசிக்குப் பங்குண்டா?

௰௬ விக்கிரகக்கோவில்களுக்கும் பராபரனுடைய ஆலயத்திற்கும் சம்பந்தம் உண்டா? [9]நான் அவர்களுக்குள்ளே வாசம்பண்ணி அவர்களுக்குள்ளே நடந்துகொண்டு அவர்களுடைய தேவனுயிருப்பேன் என்றும், அவர்கள் என்னுடைய சனங்களாயிருப்பார்கள் என்றும் பராபரன் சொன்னபடி [10]நீங்கள் சீவனுள்ள பராபரனுடைய ஆலயமாயிருக்கிறீர்களே.

௰௭ [11]ஆனபடியினலே நீங்கள் அவர்களிடத்திலிருந்து புறப்பட்டுப் பிரிந்துபோய், அசுத்தமானதைத் தொடாதிருங்கள்.

௰௮ அப்பொழுது நான் உங்களை அங்கிகரித்துக்கொண்டு [12]உங்களுக்குப் பிதாவாயிருப்பேன்; நீங்கள் எனக்குக் குமாரருமாய்க் குமாரத்திகளுமாய் இருப்பீர்கள் என்று சர்வவல்லமையுள்ள பராபரன் சொல்லுகிருர்.

கி. பி. ௬௰.

1 உ கொரி. ச. உ: இ. ௰௧: ௰௧. ௯.
2 ௧ கொரி. ச. ௯. உ கொரி. ௧. ௯: ச. ௰, ௰௧.
3 சங். ௱௰௮. ௰௮.
4 உ கொரி. ௭. ௩.
5 உ கொரி. ௰௨. ௰௫.
6 ௧ கொரி. ச. ௰௪.
7 உ மோ. ௭. உ. ௩. ௧ கொரி. ௫. ௯: ௭. ௩௯.
8 ௧ சாமு. ௫. உ, ௩. ௧ இரா. ௰௮. உ௧. ௧ கொரி. ௰. உ௧. எபே. ௫. ௭, ௰௧.
9 உ மோ. உ௯. ச௫. ௩ மோ. உ௬. ௰௨. எரே. ௩௧. ௩௩: ௩௨. ௩௮. எசே. ௰௧. உ௰: ௩௬. உ௮: ௩௭. உ௬. ௲. சகரி. ௮. ௮: ௰௩. ௯.
10 ௧ கொரி. ௩. ௰௬: ௬ ௰௯. எபே. உ. உ௧, உ௨. எபி. ௩. ௬.
11 ஏசா. ௫௨. ௰௧. உ கொரி. ௭. ௧. வெளி. ௰௮. ச.
12 எரே. ௩௧. ௧, ௯. வெளி. உ௧. ௭.
13 உ கொரி. ௬. ௰௭, ௰௮. ௧ பேர. ௩. ௩.
14 அப். உ௰. ௩௩. உ கொரி. ௰௨. ௰௭.
15 உ கொரி. ௬. ௰௧, ௰௨.

## ௭. அதிகாரம்.

௧. பரிசுத்தமாய் நடக்கும்படிக்கும், ௨. தான் அவர்களுக்குப் பாராட்டின பட்சத்தை அவர்கள் தனக்குப் பாராட்டவும், ௩. தன்னுடைய முந்தின நிருபத்தில் அவர்களுக்குச் சொல்லிய புத்தியை ஏற்றுக்கொண்டு தேவ சித்தமாய்த் துக்கப்பட்டதைத் தீத்துவினால் கேள்விப்பட்டதனாலும், ௪. தான் முந்தி அவர்களைக்குறித்துப் பெருமைபாராட்டினதற்கு ஒத்ததாய் அவர்கள் தீத்துவின் அநுகூர்ந்து அவனுக்குக் கீழ்ப்படிந்ததனாலும் தன உபத்திரவங்களிலும் சந்தோஷப்பட்டனென்று சொல்லியது.

[13]இப்படிப்பட்ட வாக்குத்தத்தங்கள் நமக்கு உண்டாயிருக்க, பிரியமானவர்களே, சரீரத்தையும் ஆவியையும் அசுசிப்படுத்துகிற யாவற்றிற்கும் நாம் விலகி, நம்மைச் சுத்திகரித்துக்கொண்டு, தேவபயத்தோடே முழுவதும் பரிசுத்தவான்களாகும்படி நடந்துகொள்ளக்கடவோம்.

௨ ¶ எங்களை அங்கிகரித்துக்கொள்ளுங்கள்; நாங்கள் ஒருவனுக்கும் அநியாயம் செய்யவில்லை; [14]ஒருவனையும் கெடுக்கவில்லை.

௩ ஒருவனையும் வஞ்சிக்கவில்லை; உங்களைக் குற்றவாளிகளாக்கும் பொருட்டாக இப்படி நான் சொல்லுகிறதில்லை; [15]முன்னே நான் சொன்னபடி (உங்களுடனே) கூடச் சாவவும் கூடப் பிழைக்கவும் தக்கதாக, எங்கள் இருதயங்களில் இருக்கிறீர்களே.

Digitized by Google

௪ (ஆனதால்) [1]மிகுந்த தயிரியத்தோடே உங்களுடனே பேசுகிறேன்; [2]உங்களைக்குறித்து மிகவும் மேன்மைபாராட்டுகிறேன்; [3]ஆறுதலால் நிறையப்பட்டிருக்கிறேன்; எங்களுக்கு வந்திருக்கிற மிகுந்த உபத்திரவத்திலே பரிபூரண சந்தோஷப்படுகிறேன்.

௫ ¶ எப்படியென்றால், [4]நாங்கள் மக்கேதோனியா நாட்டிலே வந்தபொழுது, [5]எங்கள் சரீரத்திற்கு அமைதல் ஒன்றுமில்லாமல் எப்பக்கத்திலேயும் உபத்திரவப்பட்டோம்; [6]புறம்பே போராட்டங்களும் உள்ளே பயங்களும் இருந்தன.

௬ ஆகிலும் [7]தாழ்மையானவர்களுக்கு ஆறுதல்செய்கிற பராபரன் [8]தீத்து வந்ததினாலே எங்களுக்கு ஆறுதல் செய்தார்.

௭ அவன் வந்ததினால்மாத்திரம் அல்ல, உங்கள் வாஞ்சையையும், உங்கள் துக்கிப்பையும், எனக்காக உங்களுக்குள்ள பத்திவைராக்கியத்தையும் அவன் எங்களுக்கு அறிவித்தபொழுது, தான் உங்களாலே ஆறுதல் அடைந்ததினாலும் அதிகமாய்ச் சந்தோஷப்பட்டேன்.

௮ ஆனதால் நான் என் நிருபத்தினாலே உங்களைத் துக்கப்படுத்தியிருந்தும் மனஸ்தாபப்படமாட்டேன்; அந்த நிருபம் கொஞ்சப்பொழுதாகிலும் உங்களைத்துக்கப்படுத்திற்றென்று நான் பார்த்து, [9]மனஸ்தாபப்பட்டிருந்தும், இப்பொழுது நீங்கள் துக்கப்பட்டதினாலேஅல்ல,

௯ நீங்கள் மனம்திருப்புகிறதற்கு ஏதுவாகத் துக்கப்பட்டதினாலே சந்தோஷப்படுகிறேன்; நீங்கள் ஒன்றிலும் எங்களால் நஷ்டப்படாதபடிக்கு, தேவ எத்தனமான* துக்கம் அடைந்தீர்களே.

௰ [10]தேவ எத்தனமான துக்கம் பின்னே மனஸ்தாபம் இல்லாமல், இரட்சிப்புக்கு ஏதுவான மனம்திருப்புதலை உண்டாக்குகின்றது; [11]இலவுகீக துக்கம் மரணத்தை உண்டாக்குகின்றது.

௧௧ பாருங்கள், நீங்கள் (தேவ எத்தனமான) துக்கம் அடைந்தது, உங்களிடத்தில் எத்தனை சாக்கிரதையையும், எத்தனை நியாயம்சொல்லுதலையும், எத்தனை விசனத்தையும், எத்தனை பயத்தையும், எத்தனை வாஞ்சையையும், எத்தனை பத்திவைராக்கியத்தையும், எத்தனை தண்டனையையும் உண்டாக்கிற்று? அந்தச் சங்கதியைக்குறித்து நீங்கள் எவ்விதத்திலேயும் உங்களைச் சுத்தவான்களென்று ஒப்புவித்தீர்கள்.

௧௨ ஆகையினாலே நான் உங்களுக்கு அப்படி எழுதியிருந்தும், அநியாயத்தைச் செய்தவன்நிமித்தம் அல்ல, அநியாயம் செய்யப்பட்டவன்நிமித்தமும் அல்ல, [12]பராபரனுக்குமுன்பாக உங்களைக்குறித்து எங்களுக்கு உண்டாயிருக்கிற சாக்கிரதை உங்களிடத்தில் வெளிப்படுவதின் நிமித்தமாகவே அப்படி எழுதியிருந்தேன்.

௧௩ ¶ ஆனதால் நீங்கள் ஆறுதல் அடைந்ததினாலே நாங்களும் ஆறுதல் உள்ளவர்களாய் இருக்கிறோம்; விசேஷமாகத் தீத்துவினுடைய ஆவி உங்கள் அனைவராலும் [13]ஆறுதல் அடைந்ததினாலே அவனுக்கு வந்த சந்தோஷத்தால் அதிகமாய்ச் சந்தோஷப்பட்டோம்.

௧௪ இப்படியிருக்க, உங்களுக்குப் புகழ்ச்சியாய் நான் அவனுடனே சொன்னதைக்குறித்து நான் வெட்கப்படமாட்டேன்; நாங்கள் சகலத்தையும் உங்களுக்குச் சத்தியமாய்ச் சொன்னதுபோல, தீத்துவுடனே நான் உங்களுக்குப் புகழ்ச்சியாய்ச் சொன்னதும் சத்தியமாக விளங்கிற்றே.

௧௫ மேலும் அவன் தன்னை நீங்கள் பயத்தோடும் நடுக்கத்தோடும் ஏற்றுக்கொண்டதையும், [14]நீங்கள் எல்லாரும் கீழ்ப்படிந்ததையும் நினைத்துக்கொண்டு, தன்மனதிலே†

---

கி. பி. ௬௰.

1 ௨ கொரி. ௩. ௰௨.
2 ௧ கொரி.௧. ௪. ௨ கொரி.௧.௰௪.
3 ௨ கொரி.௧.௪. பிலி. ௨. ௰௭. கொலோ. ௧. ௨௪.
4 ௨ கொரி. ௨. ௰௩.
5 ௨ கொரி. ௪. ௮.
6 ௫ உபா. ௩௨. ௨௫.
7 ௨ கொரி.௧.௪.
8 ௨ கொரி. ௨. ௰௩.
9 ௨ கொரி. ௨. ௪.
* அல்லது தேவனுக்கேற்ற.
10 ௨ சாமு. ௰௨. ௰௩. மத். ௨௬. ௭௫.
11 வாக்.௰௭.௨௨.
12 ௨ கொரி. ௨. ௪.
13 உரோ. ௰௫. ௩௨.
14 ௨ கொரி. ௨. ௯. பிலி. ௨. ௰௨.
† இரேக்கு,செருமல்; ௨ கொரி. ௯. ௰௨.

Google

உங்கள்மேலே அதிக அன்புள்ளவனாகிறான்.

யசு ஆகையால் [1]நான் எவ்விதத்திலேயும் உங்களைக்குறித்துத் திடனாயிருக்கலாம் என்று சந்தோஷப்படுகிறேன்.

## அ. அதிகாரம்.

*க. எருசலேமில் இருந்த எளிய சகோதரர்களுக்குத் தருமம்செய்யும்படி அவர்களை மக்கேதோனியருடைய திருஷ்டாந்தத்தினாலும், எ. முன் அவர்கள் செய்த உதவியினாலும், கூ. கிறிஸ்துவினுடைய கிருபையினாலும், யச. அவர்களுக்கு உண்டாகும் ஞான நன்மைகளினாலும் அவர்களை ஏவி, யசு. அவர்களுடைய தருமத்தைச் சேகரம்பண்ணத் தீத்து முதலானவர்கள் தன்னுடைய கேட்டுக்கொள்ளுதலின்படி மனராசியாய் அவர்களிடத்தில் வந்ததற்காக அவர்களை அங்கிகரிக்கும்படி ஒப்புவித்ததைச் சொல்லியது.*

பின்னும் சகோதரரே, மக்கேதோனியா தேசத்துச் சபைகளுக்குப் பராபரன் அளித்த கிருபையை உங்களுக்கு அறிவிக்கிறோம்.

உ என்னவென்றால் அவர்கள் மிகுந்த உபத்திரவத்தினாலே சோதிக்கப்படுகையில், [2]கொடிய தரித்திரராயிருந்தும், தங்கள் பரிபூரணமான சந்தோஷத்தினாலே மிகுந்த உதாரமாய்* (தருமத்தைக்) கொடுத்தார்கள்.

ங மேலும் அவர்கள் தங்களால் ஆனமட்டும், தங்கள் பலத்திற்கு மேலாகவும் கொடுக்கும்படிக்கு, தாங்களே மனதுள்ளவர்களாய் இருந்தார்கள், அதற்கு நானே சாட்சியாய் இருக்கிறேன்.

ச மேலும் அவர்கள் தங்களுக்கு உபகாரத்தையும் [3]பரிசுத்தவான்களுக்குச் செய்யப்படும் தரும ஊழியத்தின் பங்கையும் ஏற்றுக்கொள்ளவேண்டுமென்று எங்களை மிகவும் வேண்டிக்கொண்டு,

ரு எங்கள் நம்பிக்கைக்கு மேலாகத் தங்களைத்தாமே முதலாவது கர்த்தருக்கும், பின்பு பராபரனுடைய சித்தத்தினாலே எங்களுக்கும் ஒப்புக்கொடுத்தார்கள்.

சு ஆனதால் [4]தீத்து தான் முன்னே தொடங்கினபிரகாரமாக இந்தத் தருமகாரியத்தை† உங்களிடத்திலே முடிக்கவும் வேண்டுமென்று அவனிடத்தில் கேட்டுக்கொண்டோம்.

எ ¶ அல்லாமலும் நீங்கள் விசுவாசத்திலேயும்பேச்சிலேயும் அறிவிலேயும் எல்லாவித சாக்கிரதையிலேயும் எங்கள்மேல் உள்ள உங்கள் அன்பிலேயும் மற்றும் பலவித நன்மைகளிலேயும் [5]பெருகியிருக்கிறதுபோல, [6]இந்தத் தருமகாரியத்திலேயும் பெருகவேண்டுமென்று விரும்புகிறோம்.

அ இப்படி நான் [7]கட்டளையாகச் சொல்லாமல், மற்றவர்களுடைய சாக்கிரதையின் நிமித்தமும் உங்கள் அன்பின் உண்மையைச் சோதிக்கும்பொருட்டாகவும், என்னுடைய யோசனையைமாத்திரம் சொல்லியிருக்கிறேன்.

கூ நம்முடைய கர்த்தராகிய இயேசுக்கிறிஸ்துவின் கிருபையை அறிந்திருக்கிறீர்களே; [8]அவர் ஐசுவரியமுள்ளவராயிருந்தும், நீங்கள் அவருடைய தரித்திரத்தினாலே ஐசுவரியவான்கள் ஆகும்படிக்கு, உங்கள்நிமித்தமே தரித்திரர் ஆனாரே.

ய மேலும் (இந்தத் தருமத்தைச்) செய்கிறதுமாத்திரமல்ல, [9]ஒரு வருஷத்திற்குமுன்பு (அதை) ஆரம்பம்பண்ணும்படி தோன்றின விருப்பமும்‡ உங்களுக்குப் [10]பிரயோசனமாயிருக்கும்.

யக ஆகையால் செய்கிறதையும் இப்பொழுது நிறைவேற்றுங்கள்; கொடுக்கவேண்டுமென்றும் ஆசை உண்டாயிருந்ததுபோல, உங்களுக்கு உண்டானவைகளில் எடுத்து, அதை நிறைவேற்றுதலும் உண்டாவதாக.

யஉ [11]ஒருவனுக்கு மன ஆசையாயிருந்தால், அவன் தனக்கு இல்லாததின்படி அல்ல, தனக்கு உள்ளதின்படி அங்கிகரிக்கப்படுவானே.

யங மற்றவர்களுக்குச் சந்தோஷமும் உங்களுக்கு உபத்திரவமும்

கி. பி. சுய.

1 உ தெச. க. ச. பிலே. அ. உக.
2 மாற். யஉ. சச.
* கிரேக்கு, கபடில்லாமல்; உ கொரி. கூ. யக.
3 அப். யக. உக: உச. யஎ. உரோ. யரு. உரு, உக. க கொரி. யசு. க, உ, ச. உ கொரி. க. கூ.
4 யஎ, வசனம். உ கொரி. யஉ. யஅ.
† அல்லது தயவை; ச. யசு. வச.
5 க கொரி. க. ரு: யஉ. யங.
6 உ கொரி. கூ. அ.
7 க கொரி. எ. சு.
8 மத். அ. உய. லூக். கூ. ருஅ. பிலி. உ. சு, எ.
9 உ கொரி. கூ. உ.
‡ அல்லது சாக்கிரதையும்.
10 லூக். யசு. யஎ. மத். ய. சஉ. க தீமோ. சு. யஅ, யக. எபி. யங. யசு.
11 மாற். யஉ. சங, சச. லூக். உக. ங.

Digitized by Google

உண்டாயிருக்கும் பொருட்டாக அல்ல, சமமான நிலைமை இருக்கும்பொருட்டாகவே சொல்லுகிறேன்.

௰௪ எப்படியெனில் (மற்றொருகாலத்திலே) அவர்களுடைய பரிபூரணம் உங்கள் வறுமையை நீக்கும்படிக்கு இக்காலத்திலே உங்கள் பரிபூரணம் அவர்களுடைய வறுமையை நீக்கக்கடவது.

௰௫ இவ்விதமாய் [1]மிகுதியாய்ச் சேர்த்தவனுக்கு அதிகம் இருக்கவில்லை என்றும் அற்பமாய்ச் சேர்த்தவனுக்குக் குறைவு இருக்கவில்லை என்றும் எழுதியிருக்கிறபடி, சமமான நிலைமை உண்டாயிருக்கும்.

௰௬ ¶ அன்றியும் உங்களுக்காக இப்படிச் சாக்கிரதையாயிருக்கும்படிக்குத் தீத்துவின் இருதயத்திலே அருள்கொடுத்த பராபரனுக்குத் தோத்திரம்.

௰௭ [2]நான் வேண்டிக்கொண்டதை ஏற்றுக்கொண்டதுமல்லாமல் அவன் அதிக சாக்கிரதையாயிருந்து, தன் சுயமனதினாலே உங்களிடத்திற்கு வருகிறான்.

௰௮ அவனோடேகூட [3]ஒரு சகோதரனை அனுப்பியிருக்கிறேன்; அவன் சுவிசேஷ ஊழியத்திலே எல்லாச் சபைகளினாலும் புகழ்ச்சிபெற்றிருக்கிறவன்.

௰௯ அதுமாத்திரமல்ல, [4]கர்த்தருக்கே துதியுண்டாகும்படியாகவும், உங்கள் மன ஆசை விளங்கும்படியாகவும் எங்கள் ஊழியத்தினாலே சேர்க்கப்படுகிற தருமப்பணத்தைக்* (கொண்டுபோகையில்,) எங்களுக்கு வழித்துணையாயிருக்கும்படிக்கு [5]அவனே சபைகளால் தெரிந்து ஏற்படுத்தப்பட்டவனாகவும் இருக்கிறான்.

௨௰ எங்கள் ஊழியத்தினாலே சேர்க்கப்படும் மிகுந்த தருமப்பணத்தைக்குறித்து ஒருவனும் எங்களைக் குற்றப்படுத்தாதபடிக்கு, நாங்கள் எச்சரிக்கையாயிருந்து,

௨௧ கர்த்தருக்கு முன்பாகமாத்திரம் அல்ல, மனிதருக்கு முன்பாகவும் [6]நலமானவைகளை முன்யோசித்துக்கொண்டு, (இந்தச் சகோதரன் கூடவரும்படி செய்தேன்).

௨௨ நம்முடைய சகோதரனாகிய அவன் அநேகம் காரியங்களில் சாக்கிரதையுள்ளவன் என்றும், இப்பொழுது உங்கள்மேலுள்ள† மிகுந்த நம்பிக்கையினால் மிகவும் அதிக சாக்கிரதை உள்ளவனாயிருக்கிறான் என்றும் நாங்கள் அடிக்கடி கண்டறிந்து, அவனை இவர்களோடுங்கூட அனுப்பினோம்.

௨௩ தீத்தைக்குறித்து (ஒருவன் விசாரித்தால்,) அவன் எனக்குக் கூட்டாளியுமாய் உங்களுக்காக என் உடன்வேலையாளுமாய் இருக்கிறானென்று அறியக்கடவன்; எங்கள் சகோதரனைக்குறித்து (ஒருவன் விசாரித்தால்,) அவர்கள் சபைகளால் [7]அனுப்பப்பட்டவர்களுமாய்க் கிறிஸ்துவுக்குப் புகழ்ச்சிவருதற்கு ஏதுவானவர்களுமாய் இருக்கிறார்கள் என்று அறியக்கடவன்.

௨௪ ஆனபடியினாலே உங்கள் அன்பையும், [8]நாங்கள் உங்களைக்குறித்துச் சொன்ன புகழ்ச்சியையும் அவர்களுக்கும், சபைகளுக்கும் முன்பாக வெளிப்படுத்துங்கள்.

கி. பி. ௬௰.



1 உ மோ. ௰௬. ௰௮.
2 ௬. ௰௪.
3 உ கொரி. ௰உ. ௰௮.
4 உ கொரி. ௪. ௰௫.
* அல்லது உபகாரத்தை; ௬. ௯, ௭. ௰௪. உ கொரி. கூ. ௮.
5 ௧ கொரி. ௰௬. ௩, ௪.
6 உ ரோ. ௰௨. ௰௭. பிலி. ௪. ௮. ௧ பே. உ. ௰௨.
† அல்லது நான் உங்கள்மேல் வைத்திருக்கிற.
7 பிலி. உ. உ௫.
8 உ கொரி. ௭. ௰௪: கூ. உ.
9 அப். ௰௧. உ௯. உ ரோ. ௰௫. உ௬. ௧ கொரி. ௰௬. ௧. உ கொரி. ௮. ௪. கலா. உ. ௰.
10 உ கொரி. ௮. ௰௯.

## கூ. அதிகாரம்.

௧. அவர்களுடைய தருமகுணத்தைத் தான் அறிந்திருந்தாலும் தீத்தையும், மற்றச் சகோதரர்களையும் அனுப்பினதற்கு முகாந்தரம் விளம்பி, ௬. தருமச்செயலை, ௮. நற்பலனைத் தரும் பயிர்த்தொழிலுக்கு ஒப்பாக்கி, ௰௩. அதினால் பராபரனுக்கு ஸ்தோத்திரப்பலிகள் செலுத்தப்படுமென்று சொல்லி, அவர்கள் தயாளமான ஈகையுள்ளவர்களாயிருக்கும்படி புத்திசொல்லியது.

[9]பரிசுத்தவான்களுக்குச் செய்ய வேண்டிய ஊழியத்தைக்குறித்து நான் அதிகமாய் உங்களுக்கு எழுதவேண்டுவது இல்லை.

உ உங்கள் [10]மனப்பூர்வத்தை அ

Digitized by Google

றிந்திருக்கிறேன்; அதைக்குறித்து [1]அகாயாவில் உள்ளவர்கள் ஒரு வருஷமாய்த் தருமப்பணத்தைச் சேர்க்க எத்தனமாயிருக்கிறார்கள் என்று நான் [2]மக்கேதோனியருடனே சொல்லி, உங்களைப் புகழ்ந்தும் இருந்தேனே.

௩ மேலும் உங்களில் உண்டான சாக்கிரதை அநேகரை எழுப்பியும் இருந்தது; அப்படியிருந்தும், உங்களைக்குறித்து நாங்கள் சொன்ன புகழ்ச்சி இந்தச் சங்கதியிலே வீணாய்ப் போகாமல், நான் சொன்னபடி நீங்கள் எத்தனம்பண்ணுகிறவர்களாய் இருப்பதற்கு [3]இந்தச் சகோதரரை அனுப்பினேன்.

௪ மக்கேதோனியர் என்னுடனேகூட வரும்பொழுது, உங்களை எத்தனப்படாதவர்களாகக் கண்டால், இத்தனை நிச்சயமாய்ப் புகழ்ந்ததற்காக நீங்களென்று நான் சொல்லமாட்டாமல் நாங்களே வெட்கப்படாதபடிக்கு (எத்தனமாயிருக்கவேண்டும்).

௫ ஆகையால் இந்தச் சகோதரர் முன்னாக உங்களிடத்திற்குப் போகும்படிக்கும், முன் அறிவிக்கப்பட்டிருக்கிற* உங்கள் தரும ஆசீர்வாதம்† கட்டாயமாக அல்ல, தரும ஆசீர்வாதமாகவே எத்தனமாயிருக்கப் பார்க்கும்படிக்கும் அவர்களை வேண்டிக்கொள்ளவேண்டுமென்று எண்ணி, அப்படிச் செய்தேன்.

௬ ¶ [4]பின்னும் நான் சொல்லுகிறது என்னவெனில், சிறுக விதைக்கிறவன் சிறுக அறுப்பான்; பரிபூரணமாய் விதைக்கிறவன் பரிபூரணமாய் அறுப்பான்.

௭ [5]அவனவன் விசனமாய் அல்ல, கட்டாயமாயும் அல்ல, தான் மனதிலே விரும்புகிறபடியே கொடுக்கக்கடவன்.

௮ சந்தோஷமாய்க் கொடுக்கிறவனிடத்தில் [6]பராபரன் அன்பாயிருக்கிறாரே, பராபரனும் நீங்கள் எல்லாவற்றிலேயும் எப்பொழுதும் மிகுந்த திருத்தி உடையவர்களாய்ச் சகலவித நற்கிரியைகளுக்கும் சம்பூரணமுள்ளவர்களாய் இருக்கும்படிக்கு, [7]உங்களிடத்தில் சகலவித கிருபையும் சம்பூரணமாயிருக்கச்செய்ய வல்லவராயிருக்கிறார்.

௯ [8]அவன் தெளித்தான்; ஏழைகளுக்குக் கொடுத்தான்; அவனுடைய நீதி என்றென்றைக்கும் நிற்குமென்று எழுதியிருக்கிறவிதமாயிருக்கும்.

௰ அந்தப்படி [9]விதைக்கிறவனுக்கு விதையையும் புசிக்கிறதற்கு அப்பத்தையும் அளிக்கிறவர் உங்கள் விதையையும் அதிகமாய்ப் பெருகப்பண்ணி, [10]உங்கள் நீதியின் விளைச்சல்களை வளரச்செய்வார்.

௰௧ அதினாலே நீங்கள் மிகுந்த உதாரமுள்ளவர்களாய்‡ இருக்கும்படிக்கு, எவ்விதத்திலேயும் சம்பூரணம் உள்ளவர்களாவீர்கள்; அதினாலே [11]நாங்களும் பராபரனுக்குத் தோத்திரம் செலுத்துதற்கு எழுப்பப்படுவோம்.

௰௨ இந்தத் தருமநடத்தையின் ஊழியம் பரிசுத்தவான்களுடைய குறைவுகளை [12]நீக்குகிறதற்குமாத்திரம் அல்ல, அநேகர் பராபரனைத் தோத்திரிக்கிறதற்கும் மிகுந்த பலனுள்ளதாய் இருக்கின்றதே.

௰௩ அவர்கள் இவ்வூழியத்தின் உத்தமத்தைக் கண்டு, நீங்கள் கிறிஸ்துவின் சுவிசேஷத்தைக் கீழ்ப்படிதலோடே அறிக்கைபண்ணுகிறதற்காகவும் தங்களுக்கும் மற்ற அனைவருக்கும் [13]உதாரமாய்த் தருமத்தைச் செய்கிறதற்காகவும் [14]பராபரனைத் துதித்து,

௰௪ உங்களுக்காக வேண்டுதல் செய்து, பராபரன் உங்களுக்கு [15]அளித்த மிகவும் மேன்மையான கிருபையினிமித்தம் உங்கள்மேல் வாஞ்சையாயிருக்கிறார்கள்.

௰௫ [16]பராபரன் அநுக்கிரகித்த

கி. பி. ௬௰.

1 ௨ கொரி. ௮. ௰.
2 ௨ கொரி. ௮. ௨௪.
3 ௨ கொரி. ௮. ௬, ௰௭, ௰௮, ௨௨.
* அல்லது சொல்லப்பட்டிருக்கிற.
† அல்லது தருமம்; ௧ மோ. ௩௩. ௰௧. ௧ சாமு. ௨௫. ௨௭. ௨ இரா. ௫. ௰௫.
4 வாக். ௰௧. ௨௪: ௰௯. ௰௭: ௨௨. ௯.
5 உபா. ௰௫. ௭.
6 ௨ மோ. ௨௫. ௨: ௩௫. ௫. வாக். ௰௧. ௨௫. உரோ. ௰௨. ௮. ௨ கொரி. ௮. ௰௨.
7 வாக். ௰௧. ௨௪, ௨௫: ௨௮. எபி. ௬. ௰௧.
8 சங். ௱௰௨. ௯.
9 ஏசா. ௫௫. ௰.
10 ஓசே. ௰. ௰௨. மத். ௬. ௧.
‡ அல்லது தாராளமுள்ளவர்கள்; கிரேக்கு, கபடற்றவர்கள்.
11 ௨ கொரி. ௧. ௰௧: ௪. ௰௫.
12 ௨ கொரி. ௮. ௰௪.
13 எபி. ௰௩. ௰௬.
14 மத். ௫. ௰௬.
15 ௨ கொரி. ௮. ௧.
16 யாக். ௧. ௰௭.

Digitized by Google

சொல்லமுடியாத ஈவுக்காக அவருக்குத் தோத்திரம் உண்டாவதாக.

## ௰. அதிகாரம்.

*க. தன்னை இகழ்ச்சிசெய்த கள்ள அப்போஸ்தலர்களுக்குத் தன்னுடைய அதிகாரத்தையும், அவர்களை வெல்லுகிறதற்கு ஏதுவான தன்னிடத்தில் உள்ள குணாதிசயங்களையும் இன்னதென்று கூறி, எ. நிருபங்களிலே வல்லமையுள்ளவனாய் இருக்கிறதுபோலத் தான் அவர்களிடத்தில் வரும்போது வசனத்திலும் வல்லவனாய் இருப்பேனென்று சொல்லி, ௰உ. அவர்களுடைய வீணான பெருமைபாராட்டலையும், அவர்கள் மற்றவர்களுடைய பிரயாசங்களைத் தங்களுடையவைகளாக்கிக்கொள்வதையும் கடிந்துகொண்டது.*

[1]மேலும் உங்களுக்கு முன்பாக * இருக்கும்பொழுது தாழ்மையாயும் தூரத்திலே இருக்கும்பொழுது உங்கள்மேல் தயிரியமாயும் இருக்கிற [2]பவுலாகிய நான் கிறிஸ்துவின் சாந்தத்தினாலும் தயையினாலும் உங்களுக்குப் புத்திசொல்லுகிறேன்.

உ [3]நான் கேட்டுக்கொள்ளுகிறது என்னவெனில், நான் உங்கள் முன்பாக இருக்கும்பொழுது, எங்களைச் சரீரத்தின்படி நடக்கிறவர்கள் என்று எண்ணுகிற † சிலருக்கு நான் துணிவாயிருக்க நினைக்கிறதால், அந்தத் துணிவோடே நான் தயிரியமுள்ளவனாய் இராதபடிக்குச் செய்வீர்களாக.

௩ நாங்கள் சரீரத்தோடே நடந்து திரிந்தும், சரீரத்தின்படி போராட்டம்பண்ணமாட்டோம்.

௪ [4]எங்களுடைய போர்ஆயுதங்கள் [5]மாம்சத்திற்கு ஏற்ற பலஈனமுள்ளவைகளாய் இராமல், [6]அரண்களை நிர்மூலமாக்குதற்குத் திவ்விய‡ [7]பெலனுள்ளவைகளாய் இருக்கின்றனவே.

௫ அவைகளால் நாங்கள் அகந்தையான§ சிந்தனைகளையும், பராபரனை அறிகிற அறிவுக்கு விரோதமாய் உயருகிற எல்லாவித மேட்டிமையையும் [8]நிர்மூலமாக்கி, எந்தப் புத்தியையும் கிறிஸ்துவுக்குக் கீழ்ப்படியச் சிறைப்படுத்துகிறவர்களாயிருந்து,

இ. பி. ௬௰.

1 ௰. வசனம். உ கொரி. ௰உ. ௫, எ, ௯.
* அல்லது வெளித் தோற்றத்தில்.
2 உரோ. ௰உ. க.
3 க கொரி. ௪. உக. உ கொரி. ௰௩. உ, ௰.
† அல்லது நினைக்கிற.
4 எபே. ௬. ௰௩. க தெச. ௫. ௮.
5 க தீமோ. ௧. ௰௮. உ தீமோ. உ. ௩.
6 எரே. க. ௰.
‡ அல்லது பராபரனால்.
7 அப். எ. உஉ. க கொரி. உ. ௫. உ கொரி. ௩. எ: ௰௩. ௩, ௪.
§ அல்லது மன.
8 க கொரி. க. ௰௯: ௩. ௰௯.
9 உ கொரி. உ, ௯: எ. ௰௫.
10 உ கொரி. ௰௩. உ, ௰.
11 யோவா. எ. உ௪. உ கொரி. ௫. ௰உ: ௰௧. ௰௮.
12 க கொரி. ௰௪. ௩௭. க பேர. ௪. ௧௧.
13 க கொரி. ௯. உ௧: ௩. ௬. உ கொரி. ௰௧. உ௩.
14 உ கொரி. ௰௩. ௰.
15 உ கொரி. எ. ௰௪: ௰உ. ௧.
16 க கொரி. உ. ௩, ௪. ௬. வச. உ கொரி. ௰உ. ௫, எ, ௯. கலா. ௪. ௰௩.
17 க கொரி ௧. ௰எ: உ. ௧, ௪. உ கொரி. ௰௧. ௬.
|| கிரேக்கு, இருக்குதென்கிறார்.
18 உ கொரி.௩.௧: ௫. ௰உ.
* அல்லது ஞானமற்றவர்கள்.

௬ [9]நீங்கள் நிறைவாய்க் கீழ்ப்படிந்திருக்கும்பொழுது [10]எல்லாக்கீழ்ப்படியாமைக்குந்தக்கநீதியுள்ள தண்டனையைச் செலுத்த எத்தனமாயிருக்கிறோம்.

எ ¶ [11]முகத்திற்கு முன்னிருக்கிறவைகளை (மாத்திரம்) பார்க்கிறீர்களா? [12]ஒருவன் தன்னைக் கிறிஸ்துவுக்கு உரியவன் என்று நம்பிக்கொண்டால், அவன் தான் கிறிஸ்துவுக்கு உரியவனாய் இருக்கிறதுபோல, [13]நாங்களும் கிறிஸ்துவுக்கு உரியவர்கள் என்று தன்னாலேதானே சிந்திக்கக்கடவன்.

அ அதுவுமல்லாமல் உங்களை நிர்மூலமாக்குதற்கு அல்ல, எழுப்புதற்குக்கர்த்தர் எங்களுக்குக்கொடுத்த[14]அதிகாரத்தைக்குறித்துநான் இன்னும் சற்றே அதிகமாய் மேன்மைபாராட்டினாலும் [15]நான்வெட்கப்படுவதில்லை.

௯ நான் நிருபங்களாலே உங்களைப் பயமுறுத்துகிறவனாய்த் தோன்றாதபடிக்குமாத்திரம், (அப்படி மேன்மைபாராட்டமாட்டேன்.)

௰ அவனுடைய நிருபங்கள் பாரமும் பெலனுமுள்ளவைகள்; ஆகிலும் [16]சரீரத்தின் தோற்றம் பெலஈனமுமாய் அவனுடைய [17]வசனம் அற்பமுமாயிருக்கிறது என்கிறார்களே.||

௰௧ அப்படிச் சொல்லுகிறவன் நிருபங்களின் வசனத்தினாலே தூரத்தில் இருக்கிற நாங்கள் தோன்றுகிறது எப்படியோ, அப்படி முகத்திற்குமுன்பாகவும் கிரியையிலேயும் தோன்றுவோம் என்று சிந்திக்கக்கடவன்.

௰உ ஆகிலும் தங்களைத்தாமே புகழுகிற சிலருக்கு [18]நாங்கள் எங்களைச் சரியாக்கவும் ஒப்பிடவும் துணியமாட்டோம்; அவர்கள் தங்களாலே தங்களை அளந்துகொண்டு, தங்களுக்கே தங்களை ஒப்பிட்டுக்கொண்டு, (தங்களை) அறியாதவர்களாய்* இருக்கிறார்கள்.

௰௩ நாங்கள் (எங்களுக்கு) அ

ளந்துகொடாதவைகளைக் குறித்து [1]மேன்மைபாராட்டாமல், உங்கள் இடம்வரைக்கும் எட்டத்தக்கதாக, பராபரன் எங்களுக்கு அளந்துகொடுத்த அளவின்படியே* மேன்மைபாராட்டுகிறோம்.

௰௪ [2]கிறிஸ்துவின் சுவிசேஷத்தோடே நாங்கள் உங்கள் இடம்வரைக்கும் சென்றோமே; ஆகையால் உங்களிடத்தில் வந்து எட்டாதவர்களாய் நாங்கள் அளவுக்கு மிஞ்சிப் போகிறதில்லை.

௰௫ அளவுக்கு மிஞ்சி [3]அந்நியருடைய வேலைக்கு உட்பட்டு, மேன்மைபாராட்டமாட்டோம்.

௰௬ ஆகிலும் உங்கள் விசுவாசம் வளர்ந்திருக்கும்பொழுது, உங்களுக்கு அப்புறமான இடங்களில் சுவிசேஷத்தை அறிவிக்கவும் அந்நிய எல்லைகளுக்குள்ளே† செய்யப்பட்டவைகளை (நாங்கள் செய்ததாக) மேன்மைபாராட்டாதிருக்கவும்தக்கதாக, எங்கள் அளவு உங்களாலே‡ மிகவும் பெருகுமென்று நம்பிக்கையாயிருக்கிறோம்.

௰௭ [4]மேன்மைபாராட்டுகிறவன் கர்த்தாவைக்குறித்தே மேன்மைபாராட்டக்கடவன்.

௰௮ [5]தன்னைத்தான் புகழுகிறவன் அல்ல, [6]கர்த்தராலே புகழப்படுகிறவன் எவனோ, அவன் உத்தமனாயிருப்பானே.

## ௰க. அதிகாரம்.

௧. தன்னைப்பார்க்கிலும் கள்ள அப்போஸ்தலர்களை மேன்மையாக எண்ணின கொரிந்தியர்பேரிலே தனக்கிருந்த வைராக்கியத்தினாலே தன்னைக் கட்டாயத்தினால் மேன்மைபாராட்டி, ௫. தான் பிரதான அப்போஸ்தலருக்குச் சரியானவனென்றும், ௭. கொரிந்தியருக்கு இலவசமாய்ச் சுவிசேஷத்தை அறிவித்தவனென்றும், ௰௮. கள்ளப் போதகர்களைப்பார்க்கிலும் தான் லௌகிக மேன்மைகளிலும், ௨௩. கிறிஸ்துவின் ஊழியத்திலும் பலபாடுகளிலும் குறைந்தவன் அல்லவென்றும் சொல்லியது.

௧ நீங்கள் என் [7]புத்தியீனத்திற்குச் சற்றே பொறுமையாயிருந்தால், நலமாயிருக்கும்; எனக்குப் பொறுத்தும்§ இருக்கிறீர்களே.

௨ [8]நான் உங்களைக் கற்புள்ள கன்னியாஸ்திரியாகக் கிறிஸ்து என்னும் ஒரே புருஷனுக்கு [9]ஒப்புக்கொடுக்க [10]நியமித்தபடியால் உங்களுக்காகத் [11]தேவ வைராக்கியமாய் வைராக்கியங்கொண்டிருக்கிறேன்.

௩ ஆகிலும் [12]அந்தப் பாம்பு தன்னுடைய தந்திரத்தினாலே ஏவாளை வஞ்சித்ததுபோல, [13]உங்கள் மனதும் கிறிஸ்துவின்மேலுள்ள பத்தியின் உண்மையைவிட்டு விலகக் கெடுக்கப்படுமோ என்று பயந்திருக்கிறேன்.

௪ எப்படியெனில் (உங்களிடத்தில்) வந்திருக்கிறவன் நாங்கள் பிரசங்கியாத வேறொரு இயேசுவைப் பிரசங்கித்தானானால், அல்லது, நீங்கள் பெறாத வேறொரு ஆவியையும் நீங்கள் ஏற்றுக்கொள்ளாத [14]வேறொரு சுவிசேஷத்தையும் (அவனாலே) பெற்றீர்களானால், அவனை‖ நன்றாய் ஏற்பீர்கள்.

௫ மிகவும் பெரிய அந்த அப்போஸ்தலருக்கு [15]நான் எவ்வளவாகிலும் குறைவுள்ளவன் அல்ல என்று எண்ணுகிறேன்.

௬ நான் பேச்சிலே [16]கல்லாதவனாயிருந்தாலும், [17]அறிவிலே கல்லாதவன் அல்ல, எப்பொழுதும் [18]எல்லாவிதங்களிலேயும் உங்களுக்குள்ளே (அப்படியே) வெளிப்பட்டிருக்கிறோமே.

௭ அல்லது நீங்கள் உயர்த்தப்படும்படிக்கு நான் [19]என்னைத்தானே தாழ்த்தி, பராபரனுடைய சுவிசேஷத்தை இலவசமாய் உங்களுக்கு அறிவித்ததினாலே குற்றம்செய்தேனோ?

௮ (இல்லையே,) உங்களுக்கே ஊழியம்செய்யும்படிக்கு மற்றச் சபைகள் கையிலே நான் சம்பளம் பற்றிக்கொண்டேன்.

௯ நான் உங்களிடத்திலிருந்து குறைச்சல் அநுபவித்தபொழு

கி. பி. ௬௰.

1 ௰௫. ௰௪.
* அல்லது முறைப்படியே.
2 ௧ கொரி. ௩. ௫, ௰: ௪. ௧௫: ௯. ௧.
3 உரோ. ௰௫. ௨௰.
† அல்லது ஒழுங்கின்படி.
‡ அல்லது உங்களில்.
4 எசா. ௬௫. ௰௬. எரே. ௯. ௨௪. ௧ கொரி. ௧. ௩௧.
5 வாக். ௨௭. ௨.
6 உரோ. ௨. ௨௯. ௧ கொரி. ௪. ௫.
7 ௰௬. வசனம். ௨ கொரி. ௫. ௰௩.
§ அல்லது மெய்யாய்ப் பொறுத்து.
8 ௧ மோ. ௨௯. ௰௯.
9 கொலோ. ௧. ௨௮.
10 ஓசே. ௨. ௰௯, ௨௰. ௧ கொரி. ௪. ௰௫.
11 கலா. ௪. ௰௭, ௰௮.
12 ௧ மோ. ௩. ௪. யோவா. ௮. ௪௪.
13 எபே. ௬. ௨௪. கொலோ. ௨. ௪, ௮, ௰௮. ௧ தீமோ. ௧. ௩: ௪. ௧. எபி. ௰௩. ௯. ௨ பே. ௩. ௰௭.
14 கலா. ௧. ௭, ௮.
‖ அல்லது என்னை.
15 ௧ கொரி. ௰௫. ௰. ௨ கொரி. ௰௨. ௰௧. கலா. ௨. ௬.
16 ௧ கொரி. ௧. ௰௭: ௨. ௧, ௰௩. ௨ கொரி. ௰. ௰.
17 எபே. ௩. ௪.
18 ௨ கொரி. ௪. ௨: ௫. ௰௧: ௰௨. ௰௨.
19 அப். ௰௮. ௩. ௧ கொரி. ௯. ௬, ௰௨. ௨ கொரி. ௰. ௧.

Digitized by Google

தும் [1]ஒருவரையும் நான் வருத்தப்படுத்தவில்லை; [2]மக்கேதோனியாவிலிருந்து வந்த சகோதரர் என் குறைவை நீக்கினார்களே; [3]எவ்விதத்திலேயும் உங்களுக்குப் பாரமாய் இராதபடிக்குப் பார்த்தேன்; இனிமேலும் அப்படியே பார்ப்பேன்.

௰ [4]அகாயாநாட்டின் திசைகளிலே இந்தப்புகழ்ச்சி என்னிடத்தில் நின்றுநீங்குவதில்லையென்று* என்னிலுள்ள கிறிஸ்துவினுடைய [5]உண்மையைக்கொண்டுசொல்லுகிறேன்.

௰௧ என்னத்தினாலே (அப்படிச் செய்வேன்)? [6]நான் உங்களைச் சிநேகியாதபடியினாலோ (அப்படிச் செய்வேன்)? அதினால் அல்லவென்று பராபரனே அறிந்திருக்கிறார்.

௰௨ மேலும் தங்களை மேன்மைபாராட்டுகிறதினாலே எங்களைப் போலக் காணப்படச் சமயம் தேடுகிறவர்களுக்குச் [7]சமயம் அற்றுப் போகும்பொருட்டாக நான் இப்படிச் செய்கிறேன், பின்னும் இப்படிச் செய்வேன்.

௰௩ ¶ [8]அப்படிப்பட்டவர்கள் கள்ள அப்போஸ்தலர், [9]கபடமுள்ள வேலையாட்கள், கிறிஸ்துவினுடைய அப்போஸ்தலரின் ரூபத்தை எடுத்து, நடக்கிறவர்களாய் இருக்கிறார்கள்.

௰௪ அது அதிசயமல்ல, [10]சாத்தானும் ஒளியையுடைய தூதனைப் போன்ற ரூபத்தை எடுப்பானே.

௰௫ ஆகையால் அவனுடைய ஊழியக்காரரும் [11]நீதியின் ஊழியக்காரரைப்போன்ற ரூபத்தை எடுத்தால், மிகுந்த அதிசயமாகமாட்டாது; [12]அவர்களுடைய முடிவு அவர்களுடைய கிரியைகளுக்குத் தக்கதாயிருக்கும்.

௰௬ ¶ [13]பின்னும் நான் சொல்லுகிறது என்னவெனில், ஒருவனும் என்னைப் புத்தியீனன் என்று எண்ணாதிருப்பானாக; எண்ணினால் நானும் சற்றே மேன்மைபாராட்டுகிறபொழுது, நீங்கள் என்னைப் புத்தியீனனைப்போலாகிலும் சகிக்கக்† கடவீர்கள்.

௰௭ இப்படித் [14]தயிரியமாய் மேன்மைபாராட்டுகையில், [15]நான் சொல்லுகிறது கர்த்தரால் ஆனபடியே சொல்லாமல், புத்தியீனனைப்போலச் சொல்லுகிறேன்.

௰௮ [16]அநேகர் சரீரத்தின்படி மேன்மைபாராட்டிக்கொள்ளுகையில், நானும் மேன்மைபாராட்டுவேன்.

௰௯ [17]புத்தியுள்ள நீங்கள் புத்தியில்லாதவர்களைச் சந்தோஷமாய்ச் சகித்திருக்கிறீர்களே.

௨௰ [18]ஒருவன் உங்களைச் சிறையாக்கினாலும், ஒருவன் உங்களைப் பட்சித்தாலும், ஒருவன் (உங்கள் ஆஸ்திகளைப்) பிடித்துக்கொண்டாலும், ஒருவன் உங்களுக்கு முன்பாகத் தன்னை உயர்த்தினாலும், ஒருவன் உங்களை முகத்தில் அறைந்தாலும் சகித்திருக்கிறீர்களே.

௨௧ [19]நாங்கள் பெலஈனராக எங்களுக்கு வந்த நிந்தையைக்குறித்து (இப்படிப்) பேசுகிறேன்; [20]ஒருவன் துணிகிறது எதுவோ, அதிலே நானும் துணிவாயிருக்கிறேன்; இப்படிப் புத்தியீனமாய்ப் பேசுகிறேன்.

௨௨ அவர்கள் எபிரேயரானால், [21]நானும் எபிரேயன்; அவர்கள் இஸ்ரவேலரானால், நானும் இஸ்ரவேலன்; அவர்கள் ஆபிரகாமின் சந்ததியானால் நானும் ஆபிரகாமின் சந்ததியான்.

௨௩ அவர்கள் கிறிஸ்துவின் ஊழியக்காரரானால், நான் அவர்களுக்கு மேற்பட்டவன்; (மறுபடியும்) புத்தியீனமாய்ப் பேசுகிறேன்; அவர்களிலும் [22]நான் அதிகவேலைகளைச் செய்தேன்; [23]அதிகமாய் அடிபட்டேன்; அதிகமாய்க் காவல்களில் வைக்கப்பட்டேன்;

---

கி. பி. ௬௰.

1 அப். ௨௰. ௩௩. உ கொரி. ௰௨. ௰௩. ௧ தெச. ௨.௯. உ தெச. ௩. அ, ௯.
2 பிலி. ச.௰, ௰௫, ௰௬.
3 உ கொரி. ௰௨. ௰ச, ௰௬.
4 ௧ கொரி. ௯. ௰௫.
* அல்லது இத்தப் புகழ்ச்சியை நான் அடையாதபடிக்கு, ஒருவனும் தடைசெய்யமாட்டானென்று.
5 உரோ. ௯. ௧.
6 உ கொரி. ௬. ௰௧: எ. ௩: ௰௨. ௰௫.
7 ௧ கொரி. ௯. ௰௨.
8 அப். ௰௫. உச. உரோ. ௰௬.௰அ. கலா. ௧. எ: ௨. ௰௨. பிலி. ௩. ௰௫. உ பே. உ. ௧. ௧ யோ.௪.௧. வெளி. ௨. ௨.
9 உ கொரி. ௨. ௰எ. பிலி.௩. உ. தீத். ௧. ௰, ௰௧.
10 கலா.௧.அ.
11 உகொரி.௩.௯.
12 பிலி. ௩. ௰௯.
13 ௧ வசனம். உ கொரி. ௰௨. ௬, ௰௧.
† அல்லது ஏற்றுக்கொள்ள.
14 உ கொரி. ௯. ௪.
15 ௧ கொரி.எ.௬, ௰௨.
16 பிலி. ௩. ௩, ௪.
17 ௧ கொரி. ௪.௰.
18 கலா. ௨. ௪: ௪. ௯.
19 உகொரி.௰.௰.
20 பிலி. ௩. ௪.
21 அப். ௨௨. ௩. உரோ. ௰௧. ௧. பிலி. ௩. ௫.
22 ௧ கொரி. ௰௫. ௰.
23 அப். ௯. ௰௬: ௨௰. ௨௩: ௨௧. ௰௩. உ கொரி. ௬. ௪, ௫.

அநேகந்தரம் [1]மரணத்திற்கு ஏதுவாயிருந்தேன்.

உ௪ [2]யூதர்களால் ஒன்று குறைய நாற்பது அடியாக ஐந்துதரம் பட்டேன்.

உ௫ [3]மூன்றுதரம் மிலாறுகளால் அடிபட்டேன்; [4]ஒருதரம் கல்லெறியுண்டேன்; [5]மூன்றுதரம் கப்பல் சேதமானதில் இருந்தேன்; ஓர் இராப்பகல் முழுவதும் ஆழத்திலே இருந்தேன்.

உ௬ அநேகந்தரம் பிரயாணமாய்ப் போனேன்; ஆறுகளால் வருகிற மோசங்களிலும், கள்ளரால் வருகிறமோசங்களிலும், [6]என் சொனன தேசத்தாரால் வந்த மோசங்களிலும், [7]புறத்தேசத்தாரால் வந்த மோசங்களிலும், ஊர்களில் உண்டான மோசங்களிலும், வனாந்தரத்தில் உண்டான மோசங்களிலும், சமுத்திரத்தில் உண்டான மோசங்களிலும், கள்ளச் சகோதரரால் வந்த மோசங்களிலும்,

உஎ வேலையிலும் வருத்தத்திலும் [8]அநேகந்தரம் கண்விழிப்புகளிலும் [9]பசியிலும் தாகத்திலும், அநேகந்தரம் உபவாசங்களிலும் குளிர்ச்சியிலும் நிருவாணத்திலும் இருந்தேன்.

உ௮ புறம்பே உண்டான இவைகளைத்தவிர எல்லாச் சபைகளைக் குறித்தும் இருக்கிற [10]கவலை என்னை நாள்தோறும் நெருக்குகின்றன.

உ௯ ¶ [11]பெலஈனம் அடைகிறவன் எவனோ, அவனுக்கு நானும் பெலஈனனாயிருக்கிறதில்லையோ? இடறுகிறவன் எவனோ, அவனுக்கு (உதவிசெய்ய) எரிச்சல் இல்லாமல் இருக்கிறேனோ?

௩௰ மேன்மைபாராட்டவேண்டியதால், [12]என் பெலஈனத்திற்கு உரியவைகளைச் சொல்லி, மேன்மைபாராட்டுவேன்.

௩௧ [13]என்றென்றைக்கும் தோத்திரிக்கப்பட்ட பராபரனும், [14]நம்முடைய கர்த்தராகிய இயேசுக்கிறிஸ்துவின் பிதாவுமானவர் நான் பொய்சொல்லுகிறதில்லை என்று அறிந்திருக்கிறார்.

௩உ [15]தமஸ்கு நகரிலே அரேத்தா என்னும் இராசாவினுடைய சேனைத்தலைவன் என்னைப் பிடிக்கவேண்டும் என்று தமஸ்கருடைய பட்டணத்தின் வாசல்களில் காவல்வைத்துக் காத்தான்.

௩௩ அப்பொழுது நான் கூடையிலே வைக்கப்பட்டு, பலகணியிலிருந்து மதில்வழியாய் இறக்கிவிடப்பட்டு, அவனுடையகைகளுக்குத் தப்பிப்போனேன்.

கி. பி. ௬௰.

1 ௧ கொரி. ௧௫. ௩௰, ௩௧, ௩௨. உ கொரி. ௧.௯, ௰: ௪. ௰௧: ௧.௧.
2 உ மோ. உ௫. ௩.
3 அப். ௰௬. உ௨.
4 அப். ௰௪. ௰௯.
5 அப். உஎ. ௪௧.
6 அப். ௯. உ௩: ௰௩.௰௦: ௰௪.௫: ௰எ. ௫: உ௰. ௩: உ௩. ௩௩: உ௫. ௩, ௰௩: உ௫. ௩.
7 அப். ௰௪. ௫: ௰௯. உ௩.
8 அப். உ௰. ௩௩. உ கொரி. ௬. ௫.
9 ௧ கொரி. ௪. ௰௧.
10 அப். உ௰.௰௮. உரோ. ௧. ௰௪.
11 ௧ கொரி. ௯. ௰௧: ௮. ௨௨.
12 உ கொரி.௰௨. ௫, ௯, ௰.
13 உரோ. ௯. ௫.
14 உரோ. ௧. ௯: ௯. ௧. உகொரி. ௧. உ௩. கலா. ௧. ௨௰. ௧ தெச. உ. ௫.
15 அப். ௯. உ௪, உ௫.
* ஒரேக்கு, ஏனென்றால்.
16 உரோ. ௰௬.எ. உ கொரி. ௫. ௰எ. கலா. ௧. உ௨.
17 அப். உ௨.௰எ. விஸ்ராவில்; அப். ௰௪. ௯.
18 லூக். உ௩. ௪௩.
† அல்லது தகாத.

# ௰உ. அதிகாரம்.

௧. தான் கண்ட தரிசனங்களிலுலே தன் அப்போஸ்தலப்பட்டத்தைக்குறித்து மேன்மையைப் பாராட்டாமல், ௯. தன் பலஈனங்களில் மேன்மைபாராட்ட விரும்பி, ௰௧. அப்படியே தன்னைக்குறித்து மேன்மைபாராட்டுவதற்குக் காரணமாயிருந்த அவர்கள்பேரிலேயே குற்றஞ்சாட்டி, ௰௪. மறுபடியும் அவர்களிடத்தில் வரும்போது பிதாவின் பட்சத்தோடே வாராமல், உ௰. அநேகம் குற்றங்களையும், அநேகம் தாறுமாறுகளையும் காண்பதிலே மனச்சஞ்சலத்தோடே வருவனென்றும் சொல்லியது.

இப்படியிருக்க மேன்மைபாராட்டுகிறது எனக்குத் தகாது; ஆகிலும்* கர்த்தர் கொடுத்த தரிசனைகளையும் வெளிப்படுத்துதல்களையும் சொல்லிவருகிறேன்.

உ ¶ கிறிஸ்துவைப்பற்றிய [16]ஒரு மனிதனை அறிந்திருக்கிறேன்; அவன் பதினாலு வருஷத்திற்குமுன்னே [17]மூன்றும் வானம்வரைக்கும் எடுக்கப்பட்டான். (அவ்வேளையிலே) அவன் சரீரத்தில் இருந்தானோ, அதற்குப் புறம்பே இருந்தானோ அதை அறியமாட்டேன்; அது பராபரனுக்குத் தெரியும்.

௩ இப்படிப்பட்ட மனிதன் [18]பரதீசுக்கு உயர்த்தப்பட்டு, மனிதர் பேசக்கூடாத,† வாக்குக்கு எட்டாத வார்த்தைகளைக் கேட்டான் என்று அறிந்திருக்கிறேன்.

௪ (அவ்வேளையிலே) அவன் சரீரத்தில் இருந்தானோ, அதற்குப் புறம்பே இருந்தானோ அதை அறி

Digitized by Google

யமாட்டேன்; பராபரனுக்கே தெரியும்.

௫ ¶ இப்படிப்பட்டவனைக்குறித்து மேன்மைபாராட்டுவேன்; என்னைக்குறித்து என் பலஈனங்களினாலே அன்றி, [1]வேறொன்றினாலும் மேன்மைபாராட்டமாட்டேன்.

௬ சத்தியமானதை நான் பேசுகிறேன்; ஆதலால் [2]மேன்மைபாராட்ட மனதிருந்தாலும், நான் புத்தியீனன் அல்ல; ஒருவனும் என்னிடத்தில் காண்கிறதற்கும், அல்லது என்னாலே கேட்கிறதற்கும் மேலாக என்னை எண்ணாதபடிக்கு அனலை நிறுத்துகிறேன்.

௭ ¶ அன்றியும் அதிக மேன்மையானவைகள் எனக்கு வெளிப்படுத்தப்பட்டதினாலே நான் என்னை உயர்த்தாதபடிக்கு, என் மாம்சதேகத்திலே [3]ஒரு முள் கொடுக்கப்பட்டிருக்கிறது; என்னை நான் உயர்த்தாதபடிக்கு, என்னைக் குட்டும் சாத்தானுடைய [4]தூதனே இருக்கிறான்.

௮ அது என்னைவிட்டு நீங்கும்படிக்கு [5]நான் மூன்றுதரம் கர்த்தாவை வேண்டிக்கொண்டேன்.

௯ அவர் என்னுடனே சொன்னது: எனது கிருபை உனக்குப் போதும், என்னுடைய வல்லமை (உன்) பெலஈனத்திலே நிறைவாய்த் தோன்றுகின்றதே என்றார்; ஆகையால் [6]கிறிஸ்துவின் வல்லமை என்மேல் இறங்கியிருக்கும்படிக்கு, [7]நான் மிகவும் அதிக விருப்பமாய் என் பெலஈனங்களைக் குறித்து மேன்மைபாராட்டுவேன்.

௰ அந்தப்படி, [8]நான் பெலஈனமாய் இருக்கும்பொழுது பெலனாய் இருக்கிறபடியால் கிறிஸ்துவின்நிமித்தம் எனக்கு வரும் பெலஈனங்களிலும் நிந்தைகளிலும் வறுமைகளிலும் துன்பங்களிலும் இடுக்கண்களிலும் [9]நான் பிரியமாயிருக்கிறேன்.

௰௧ ¶ மேன்மைபாராட்டினதால் [10]நான் புத்தியீனன் ஆனேன்; நீங்களே அதற்கு என்னைப் பலவந்தப்படுத்தினீர்கள். [11]நான் பிரயோசனம் இல்லாதவனாய் இருந்தாலும், மிகவும் பிரதான அப்போஸ்தலருக்கும் [12]நான் எவ்வளவாகிலும் குறைந்தவனாயிராததால், உங்களாலே நான் மெச்சிக்கொள்ளப்பட நியாயமாயிருந்ததே.

௰௨ [13]அப்போஸ்தலனுக்குரிய அடையாளங்கள் உங்களுக்குள்ளே எல்லாவிதமான பொறுமையோடும் அதிசயங்களாலும் அற்புதங்களாலும் வல்லமைகளாலும் என்னாலே நடப்பிக்கப்பட்டன அல்லவா? [14]மற்றச் சபைகளுக்கு நீங்கள் எதிலே குறைவாயிருக்கிறீர்கள்?

௰௩ நான் உங்கள்மேலே [15]சுமையை வையாதிருந்ததினாலே அன்றி வேறொன்றினாலும் இல்லையே; [16]இந்த அநியாயத்தை நீங்கள் எனக்கு மன்னிக்கவேண்டும்.

௰௪ ¶ இப்பொழுது உங்களிடத்திற்கு வர [17]மூன்றாந்தரம் எத்தனமாயிருக்கிறேன்; (அப்பொழுதும்) [18]நான் உங்களுடையதை அல்ல, உங்களையே தேடுகிறபடியால் நான் உங்கள்மேல் சுமையை வைப்பதில்லை; [19]பெற்றாருக்குப் பிள்ளைகள் அல்ல, பிள்ளைகளுக்குப் பெற்றார்களே பொக்கிஷங்களைச் சேர்த்துவைக்கவேண்டுமே.

௰௫ ஆனதால் [20]நான் உங்களுக்குக் காட்டுகிற அன்பு எவ்வளவோ, அவ்வளவு குறைவாய் உங்களால் அன்புகூரப்பட்டிருந்தும், [21]மிகவும் சந்தோஷமாய் நான் [22]உங்கள் ஆத்துமாக்களுக்காக* என்னைச் செலவுபண்ணவும் செலவுபண்ணப்படவும் விரும்புகிறேன்.

௰௬ ¶ அப்படி ஆகட்டும், [23]அவன் உங்களுக்குப் பாரமாய் இருக்கவில்லை; அதுமெய்தான், ஆகிலும் தந்திரமுள்ளவனாய் இருந்

கி. பி. ௫௰.

1 ௨ கொரி. ௰௧ ௩0.
2 ௨ கொரி. ௰. ௮: ௰௧. ௰௬.
3 எசே. ௨௮. ௨௪. கலா. ௪. ௰௩, ௰௪.
4 யோபு. ௨. ௭. லூக். ௰௩. ௧௬.
5 உ லோ.௧.௨௯, ௨௭. மத். ௨௬. ௪௪.
6 ௧ பே. ௪. ௰௪.
7 ௨ கொரி. ௰௧. ௩0.
8 ௨ கொரி. ௰௩. ௪.
9 உரோ. ௫. ௩. ௨கொரி. ௭. ௪.
10 ௨ கொரி. ௰௧. ௧, ௰௬, ௰௭.
11 ௧ கொரி.௩.௭: ௰௫. ௮, ௯. எபே. ௩. ௮.
12 ௨ கொரி. ௰௧. ௫. கலா. ௨. ௬, ௭, ௮.
13 உரோ. ௰௫. ௰௮,௰௯. ௧ கொரி. ௯. ௨, ௨கொரி. ௪.௨: ௬. ௪: ௰௧. ௬.
14 ௧கொரி. ௧. ௭.
15 ௧ கொரி. ௯. ௰௨. ௨ கொரி. ௰௧. ௯.
16 ௨ கொரி. ௰௧. ௭.
17 ௨ கொரி. ௰௩. ௧.
18 அப். ௨0. ௩௩. ௧ கொரி. ௰.௩௩.
19 ௧ கொரி. ௪. ௰௪, ௰௫.
20 ௨ கொரி. ௬. ௰௨, ௰௩.
21 ௧தெச. ௨. ௮. பிலி. ௨. ௰௭.
22 யோவா. ௰. ௰௧. ௨ கொரி. ௧.௬. கொலோ. ௧.௨௪.௨தீமோ. ௨. ௰.
* அல்லது உங்களுக்காக.
23 ௨ கொரி. ௰௧. ௯.

து, உங்களைக் கபடத்தினாலே பிடித்தான் என்கிறார்கள்.

௰எ (அது எப்படி?) [1]நான் உங்களிடத்திற்கு அனுப்பினவர்களில் யாராலே உங்களிடத்தில் பொழிவைத் தேடினேன்?

௰அ [2]தீத்து உங்களிடத்தில் போகவேண்டும் என்று நான் கேட்டுக்கொண்டு, [3]அவனுடனேகூட ஒரு சகோதரனை அனுப்பினேன்; தீத்து உங்களிடத்தில் ஒரு பொழிவையாகிலும் தேடினானோ? நாங்கள் ஒரே ஆவியோடே அல்லவா நடந்தோம்? ஒரே மார்க்கமாயல்லவோ நடந்தோம்.

௰கூ ¶ [4]உங்களுக்குமுன்பாகக் குற்றம் அடக்கும்படி பேசுகிறோம் என்றும் மறுபடியும் எண்ணுகிறீர்களா? பிரியமானவர்களே, [5]பராபரனுடைய சந்நிதானத்திலே கிறிஸ்துவைப் பற்றிக்கொண்டு, இவைகளை எல்லாம் [6]உங்களை எழுப்பும்படிக்கே பேசுகிறோம்.

உ௰ ஆகிலும் நான் வந்து உங்களை என் மனதின்படி இருக்கிறவர்களாகக் காணாமலும், [7]உங்களுக்கு நானும் உங்கள் மனதின்படி இருக்கிறவனாகக் காணப்படாமலும் இருப்பேனோ? விரோதங்கள், வைராக்கியங்கள், கோபங்கள், சண்டைகள், புறங்கூறுதல், கோள்சொல்லுதல், இறுமாப்பு, கலகங்களும், உங்களுக்குள்ளே உண்டாயிருக்குமோ?

உ௰க மறுபடியும் நான் வருகிறபொழுது, என் பராபரன் உங்களிடத்தில் என்னைத் [8]தாழ்மைப்படுத்தும்படிக்கு, [9]முன் பாவஞ்செய்தவர்களாகிய அநேகர் தாங்கள் நடப்பித்த அசுத்தத்தையும், [10]வேசித்தனத்தையும் காமவிகாரத்தையும்விட்டு மனந்திரும்பாமல் இருக்கிறதைக்குறித்து நான் துக்கப்படவேண்டியதாய் இருக்குமோ என்று இவைகளைக்குறித்துப் பயந்திருக்கிறேன்.

கி. பி. சு௰.

1 உ கொரி. எ. உ.
2 உ கொரி. அ. சு, ௰சு, உஉ.
3 உ கொரி. அ. ௰அ.
4 உ கொரி. ரு. ௰உ.
5 உரோ. கூ. க. உ கொரி. ௰க. ௧௧.
6 க கொரி. ௰. ௰௰.
7 க கொரி. ச. உக. உ கொரி, ௰. உ: ௰ங. உ, ௰.
8 உ கொரி. உ. க, ச.
9 உ கொரி. ௰ங. உ.
10 க கொரி. ரு. க
11 உ கொரி. ௰உ. ௰ச.
12 ச மோ. கரு. க௰. ரு மோ. ௰எ. சு: ௰கூ. ௰ரு. மத். ௰அ. ௰சு. யோவா. அ. ௰எ. எபி. ௰. உஅ.
13 உ கொரி. க. உங.
14 உ கொரி. ௰உ. உக.
15 உ கொரி. ௰. உ.
16 மத். ௰. உ௰. க கொரி. ரு. ச. உ கொரி. உ. ௰.
17 க கொரி. கூ. உ.
18 பிலி. உ. எ, அ. க பே. ங. ௰அ.
19 உரோ. சு. ச.
20 உ கொரி. ௰. ங, ச.
* அல்லது அவருக்குள்.
21 க கொரி. ௰க. உஅ.
22 க கொரி. கூ. உஎ.
23 உரோ. அ. ௰. கலா. ச. ௰கூ.

# ௰ங. அதிகாரம்.

க. குணப்படாத பாவிகளுக்குத் தண்டனையைக் கொண்டும், தன் அப்போஸ்தல அதிகாரத்தைக் கொண்டும் பயமுறுத்தி, ரு. அவர்கள் தங்கள் விசுவாசத்தைக்குறித்துப் பரிசோதிக்கவும், எ. தான் வருகிறதற்குள்ளே தங்கள் பாவங்களை விட்டுவிடவும் கற்பித்து, ௰க. மற்றப் பொதுவான சில புத்திகளையும் சொல்லி அவர்களை வாழ்த்தி நிருபத்தை முடித்தது.

[11]இந்த மூன்றாந்தரம் நான் உங்களிடத்திற்கு வருகிறேன்; சகல சங்கதிகளும் [12]இரண்டு மூன்று சாட்சிகளுடைய வாக்கினால் நிலைவரப்படும்.

உ நான் மறுபடியும் வரும்பொழுது, [13]தப்பவிடமாட்டேன் என்று [14]முன் பாவஞ்செய்தவர்களுக்கும் மற்ற எல்லாருக்கும் [15]முன் சொன்னேனே; இப்பொழுது தூரமாயிருந்தும், உங்களிடத்தில் இருக்கிறவனாக நான் இரண்டாந்தரமும் அப்படியே முன்னறிவித்துச் சொல்லுகிறேன்.

ங என்னாலே கிறிஸ்து பேசுகிறதைக்குறித்துத் [16]திருஷ்டாந்தத்தைக் காணத் தேடுகிறீர்களே; அவர் உங்களுக்குள்ளே பலஹீனர் அல்ல, [17]வல்லவராயிருக்கிறார்.

ச அல்லாமலும், [18]அவர் பலஹீனத்தால் சிலுவையில் அறையப்பட்டிருந்தும், [19]பராபரனுடைய வல்லமையால் பிழைத்திருக்கிறார்; அப்படி [20]நாங்களும் அவர் நிமித்தம்* பெலஹீனராயிருந்தும், அவருடனேகூடப் பராபரனுடைய வல்லமையால் உங்களுக்குள்ளே சீவனைக் காண்பிப்போம்.

ரு உங்களுக்கு விசுவாசம் உண்டோ? [21]அதைக்குறித்து உங்களைச் சோதியுங்கள்; உங்களைத்தாமே விசாரித்து அறியுங்கள்; அல்லது [22]நீங்கள் உதாரணம் இல்லாதவர்களாயிராவிட்டால், [23]இயேசுக்கிறிஸ்து உங்களிடத்தில் இருக்கிறார் என்று உங்களைத்தாமே அறிகிறதில்லையா?

சு நாங்கள் உதாரணம் இல்லா

Digitized by Google

தவர்கள் அல்லவென்பதை அறிவீர்கள் என்று நம்புகிறேன்.

எ மேலும் நீங்கள் எவ்வளவாகிலும் பொல்லாங்கைச் செய்யாதிருக்கும்படியாக, பராபரனை நோக்கி விண்ணப்பம்பண்ணுகிறேன்; [1]நாங்கள் உதாரணம் உள்ளவர்கள் என்று காணப்படும்பொருட்டு அல்ல, நீங்கள் நலமானதைச் செய்யும்பொருட்டே அப்படிச் செய்கிறேன். (அப்படி நீங்கள் செய்தால்,) நாங்கள் உதாரணம் இல்லாதவர்களாயிருக்கலாம்.

அ சத்தியத்திற்கு விரோதமாக நாங்கள் ஒன்றும் செய்யக்கூடாமல் சத்தியத்திற்கு நேராகச் செய்வோமே.

கூ ஆகையால், [2]நாங்கள் பலஈனராயிருந்தாலும் நீங்கள் பலமுள்ளவர்களானால் சந்தோஷப்படுவோம்; [3]அந்தப்படி நீங்கள் நற்சீர் பொருந்தும்படிக்கே வேண்டுதல்பண்ணுகிறோம்.

ய அதினாலே நான் உங்களிடத்தில் வந்திருக்கும்பொழுது, [4]இடிக்கிறதற்கு அல்ல, எழுப்பிக் கட்டுகிறதற்குக் கர்த்தர் எனக்குக் கொடுத்த [5]அதிகாரத்தின்படியே நான் கண்டிதம்பண்ணாதபடிக்கு, இவைகளைத் தூரமாயிருந்து [6]எழுதுகிறேன்.

யக ¶ கடைசியிலே சகோதரரே, சந்தோஷமாயிருங்கள்; நற்சீர் பொருந்துங்கள்; ஆறுதலை அடையுங்கள்; [7]ஏகசிந்தையாயிருங்கள்; சமாதானமாயிருங்கள்; அப்பொழுது அன்புக்கும் [8]சமாதானத்திற்கும் காரணராகிய பராபரன் உங்கள் பங்கில் இருப்பார்.

யஉ [9]ஒருவரை ஒருவர் பரிசுத்த முத்தத்தினால் வாழ்த்துங்கள்.

யஙு பரிசுத்தவான்கள் எல்லாரும் உங்களுக்கு வாழ்த்துதல் செய்கிறார்கள்.

யச [10]கர்த்தராகிய இயேசுக்கிறிஸ்துவினுடைய கிருபையும் பராபரனுடைய அன்பும் [11]பரிசுத்த ஆவியோடே ஐக்கமும் உங்கள் அனைவருடனேயும் இருக்கக்கடவது.—ஆமன்.

கி. பி. கூய.

1 உ கொரி. க. க.
2 க கொரி. ச. ய. உ கொரி. யக. கல: யஉ. கூ, க, ய.
3 க தெச. க. ய.
4 தீத். க. யக.
5 உ கொரி. ய அ.
6 க கொரி. ச. உக. உ கொரி. உ க:ய. உ:யஉ. உய. உக.
7 உரோ. யஉ. யக.யஅ: யகூ.கூ. க கொரி. க. ய. பிலி. உ. ட: க. யக. க பே. க. அ.
8 உரோ. யகூ. கக.
9 உரோ.யக யக. க கொரி. யக. உய. க தெச. கூ. உக. க பே. கூ. யச.
10 உரோ. யக. உச.
11 பிலி. உ. க.

Digitized by Google

# GALATIANS.

---

அப்போஸ்தலனுகிய பவுல்

# கலாத்தியருக்கு எழுதின

## நிருபம்.

### க. அதிகாரம்.

*க. கலாத்தியசபையார் தன்னையும் சுவிசேஷத்தையும் இத்தனை சீக்கிரமாய் விட்டுவிட்டதற்கு ஆச்சரியப்பட்டு, அ. தான் பிரசங்கித்த சுவிசேஷத்தைத் தவிர மற்ற விபரீதங்களைப் பிரசங்கிக்கிறவர்களைச் சபித்து, ௰க. தான் சுவிசேஷத்தை மனுஷர்களால் அல்ல, பராபரனலேயே கற்றறிந்தானென்றும், ௰௩. தான் அப்போஸ்தல ஊழியத்துக்கு அழைக்கப்பட்டதற்குமுன் இப்படிப்பட்டவனுய் இருந்தானென்றும், ௰எ. அழைக்கப்பட்டவுடனே இவற்றைச் செய்தானென்றும் காட்டியது.*

[1]மனிதரில்நின்றும் அல்ல, ஒரு மனிதனுலும் அல்ல, [2]இயேசுக்கிறிஸ்துவினுலும் [3]அவரை மரித்தோரிலிருந்து எழுப்பின பிதாவாகிய பராபரனுலும் அப்போஸ்தலனுயிருக்கிற பவுலும்,

உ [4]என்னுடனேகூட இருக்கிற எல்லாச் சகோதரரும் கலாத்திய நாட்டிலுள்ள [5]சபைகளுக்கு எழுதுகிறதாவது:

௩ [6]இப்பொழுது இருக்கிற பொல்லாத பிரபஞ்சத்தில்நின்று நம்மை நீக்கிவிடும்படிக்கு, நம்முடைய கர்த்தராகிய இயேசுக்கிறிஸ்து நம்முடைய பிதாவாகிய பராபரனுடைய சித்தத்தின்படியே [7]நம்முடைய பாவங்களுக்காகத் தம்மைத்தாமே ஒப்புக்கொடுத்தாரே; அவராலும் பிதாவாகிய பராபரனுலும்,

ச [8]உங்களுக்குக் கிருபையும் சமாதானமும் உண்டாகக்கடவது.

ரு அவருக்கு என்றென்றைக்கும் மகிமை உண்டாவதாக.—ஆமன்.

சு ¶ உங்களைக் கிறிஸ்துவின் கிருபைக்குள் [9]அழைத்தவரை நீங்கள் இவ்வளவு சீக்கிரமாய் விட்டு, வேறொரு சுவிசேஷத்திற்குத் திரும்பினதால் நான் ஆச்சரியப்படுகிறேன்.

எ (இதுவன்றி,) [10]வேறொரு சுவிசேஷமும் இல்லையே, [11]அப்படியிருந்தும் சிலர் உங்களைக் கலகப்படுத்தி, கிறிஸ்துவினுடைய சுவிசேஷத்தை மாறுபாடாக்க மனதாயிருக்கிறார்கள்.

அ [12]நாங்கள் உங்களுக்கு அறிவித்த சுவிசேஷத்தைத்தவிர, நாங்களாவது வானத்திலிருந்து வருகிற ஒரு தூதனுவது வேறொரு சுவிசேஷத்தை உங்களுக்கு அறிவித்தால், சபிக்கப்பட்டவர்களாய் இருக்கக்கடவோம்.

௯ [13]ஒருவன் நீங்கள் ஏற்றுக்கொண்ட சுவிசேஷத்தைத்தவிர, வேறொரு சுவிசேஷத்தை உங்களுக்கு அறிவித்தால், சபிக்கப்பட்டவனுகவே இருக்கக்கடவன்

கி. பி. ருஅ.

1 ௰க, ௰உ. வச.
2 அப். ௯. ௬: உஉ. ௰, ௰ரு, உக: உக. ௰௯. தீத். க. ௩.
3 அப். உ. உச.
4 பிலி. உ. உஉ: ச. உக.
5 க கொரி. ௰௬. க.
6 எசா. ௬ரு. ௰எ. யோவா. ௰ரு. ௰௯: ௰எ. ௰ச. எபி. உ. ௯: க. ஒ. க பேர். ரு. ௰௬.
7 மத். உ௰. உஅ. உரோ. ச. உரு. கலா. உ. உ௰. தீத். உ. ௰ச.
8 உரோ. க. எ. க கொரி. க. ௩. உ கொரி. க. உ. எபே. க. உ. பிலி. க. உ. கொலோ. க. உ. க தெச. க. க. உ தெச. க. உ. உ பேர். க.
9 கலா. ரு. அ.
10 உ கொரி. ௰க. ச.
11 அப். ௰ரு. க. உச. உ கொரி. உ. ௰எ: ௰௯. ௰௯. கலா. ரு. ௰, ௰உ.
12 க கொரி. ௰௬. உஉ.

13 உபா. ச. உ: ௰உ. ௩உ. வாக். ௩௰. சு. வெளி. உஉ. ௰அ.

Digitized by Google

என்று முன்சொன்னதுபோல, மறுபடியும் சொல்லுகிறேன்.

௰ இப்பொழுது [1]நான் மனிதரை [2]நாடுகிறேனா? அல்லது பராபரனை நாடுகிறேனா? அல்லது [3]மனிதருக்குப் பிரியமாயிருக்கப் பார்க்கிறேனா? நான் மனிதருக்குப் பிரியமானவனானால், நான் கிறிஸ்துவின் ஊழியக்காரனாய் இருப்பதில்லை.

௰௧ ¶ மேலும் சகோதரரே, நான் உங்களுக்கு நிச்சயிக்கிறது என்னவெனில், [4]என்னால் பிரசங்கிக்கப்பட்ட சுவிசேஷம் மனிதருடைய இச்சைக்கு ஏற்றதல்ல.

௰௨ [5]நான் அதை ஒரு மனிதனால் அடையவும் படிக்கவும் இல்லையே; [6]இயேசுக்கிறிஸ்துவே அதை எனக்கு வெளிப்படுத்தினார்.

௰௩ நான் யூதமார்க்கத்திலே இருந்தபொழுது, என்னுடைய நடக்கையைக்குறித்துக் கேள்விப்பட்டிருப்பீர்கள்; [7]பராபரனுடைய சபையை நான் மிகவும் துன்பப்படுத்தி, [8]அதைப் பாழாக்கி,

௰௪ என் தேசத்தாரில் என் வயதுள்ள,* அநேகரிலும் யூதமார்க்கத்திலே தேறினவனாய், [9]என் பிதாக்களுடைய பாரம்பரை நியாயங்களுக்காக [10]மிகுந்த பத்திவைராக்கியனாய் இருந்தேன்.

௰௫ ¶ அப்படி இருக்கும் காலத்திலே, என் தாயின் கருப்பமுதல் [11]என்னைப் பிரித்தெடுத்துத் தமது கிருபையினால் அழைத்த பராபரன்,

௰௬ [12]தம்முடைய குமாரனை நான் புறத்தேசத்தாரிடத்தில் சுவிசேஷமாய் அறிவிக்கும்பொருட்டாக, [13]அவரை எனக்குள் வெளிப்படுத்தப் பிரியசித்தமாய் இருந்தபொழுது, நான் எவ்வளவாகிலும் [14]மாம்ச இரத்தத்தோடே யோசனைபண்ணாமலும்,

௰௭ எனக்கு முன்னே அப்போஸ்தலரானவர்களிடத்திலே எருசலேமுக்குத் திரும்பாமலும், அரபிதேசத்திற்குப் புறப்பட்டுப்போய், மறுபடியும் தமஸ்கு ஊருக்குத் திரும்பிவந்தேன்.

௰௮ அதின்பின்பு மூன்று வருஷம் சென்றபொழுது பேதுருவைப் பார்த்து அறியும்படிக்கு, [15]நான் எருசலேமுக்குப் போய்,† அவனிடத்தில் பதினைந்து நாள் இருந்தேன்.

௰௯ [16]கர்த்தருடைய சகோதரனாகிய யாக்கோபைத்தவிர, [17]அப்போஸ்தலரில் வேறொருவனையும் நான் காணவில்லை.

௨௰ நான் உங்களுக்கு எழுதுகிற இவைகள் பொய்யல்ல என்று [18]பராபரனுக்கு முன்பாக உங்களுக்கு நிச்சயிக்கிறேன்.

௨௧ [19]பின்பு சீரியா, சிலிசியா தேசங்களுடைய புறங்களில் வந்தேன்.

௨௨ மேலும் [20]யூதேயாநாட்டிலே [21]கிறிஸ்துவைப்பற்றிய சபைகளுக்கு முகம் அறியாதவனாய் இருந்தேன்.

௨௩ முன்னே நம்மைத் துன்பப்படுத்தினவன்தானே அழிக்கத் தேடின சுவிசேஷத்தை இப்பொழுது அறிவிக்கிறான் என்றுமாத்திரம் அவர்கள் கேள்விப்பட்டிருந்து,

௨௪ என்னைக்குறித்துப் பராபரனைத் துதித்தார்கள்.

## ௨. அதிகாரம்.

௧. நான் எருசலேமுக்கு மறுபடியும் போனகாலமும், முகாந்தரமும் இன்னதென்றும், ௩. தீத்து சுன்னத்தடைந்ததில்லையென்றும், ௰௧. தான் பேதுருவைக் கடிந்துகொண்ட நியாயம் இன்னதென்றும், ௰௪. தானும், மற்றவர்களும் யூதர்களாயிருந்தும் விசுவாசத்தினாலொழியக் கிரியைகளினால் நீதிமான்களாகக்கூடாதென்றும், ௨௰. அப்படி நீதிமான்களானவர்கள் பாவத்திற்கு இடங்கொடுக்கிறவர்கள் அல்லவென்றும் காட்டியது.

பின்பு பதினாலுவருஷம் சென்றபொழுது, நான் தீத்தைக் கூட்டிக்கொண்டு, பர்னபாவுடனேகூட மறுபடியும் [22] எருசலேமுக்குப் போனேன்.

கி. பி. ௫௮.

1 ௧ தெச. ௨. ௪.
2 ௧ சாமு. ௨௪. ௭. மத். ௨௮. ௰௪. ௧ பேத. ௧. ௰௬.
3 ௧ தெச. ௨. ௪. யாக். ௪. ௪.
4 ௧ கொரி. ௰௫. ௧.
5 ௧ கொரி. ௰௫. ௧, ௩. ௩. ௨௪.
6 எபே. ௩. ௩.
7 அப். ௯. ௧: ௨௨. ௪: ௨௬. ௰௧. ௧ தீமோ. ௧. ௰௩.
8 அப். ௮. ௩.
* அல்லது எனக்குச்சரியான.
9 எரே. ௯. ௰௪. மத். ௰௫. ௨. மாற். ௭. ௫.
10 அப். ௨௨. ௩: ௨௬. ௯. பிலி: ௩. ௬.
11 ஏசா. ௪௯. ௧, ௫. எரே. ௧. ௫. அப். ௯. ௰௫: ௰௩. ௨: ௨௨. ௰௪, ௰௫. ௨ ரோ. ௧. ௧.
12 அப். ௯. ௰௫: ௨௨. ௨௧: ௨௬. ௰௭, ௰௮. ௨ ரோ. ௰௧. ௰௩. எபே. ௩. ௮.
13 ௨ கொரி. ௪. ௬.
14 மத். ௰௬. ௰௭. ௧ கொரி. ௰௫. ௫௦. எபே. ௬. ௰௨.
15 அப். ௯. ௨௬.
† அல்லது திரும்பி.
16 மத். ௰௩. ௫௫. மாற். ௬. ௩.
17 ௧ கொரி. ௯. ௫
18 ௨ ரோ. ௯. ௧.
19 அப். ௯. ௩௦.
20 ௧ தெச. ௨. ௰௪.
21 ௨ ரோ. ௰௬. ௭.
22 அப். ௰௫. ௨.

Digitized by Google

௨ அந்தப் பிரயாணத்தை நான் தேவ அறிவிப்பினாலே செய்து, [1]நான் ஓடுகிறதும் அல்லது ஓடினதும் வீணாகாதபடிக்கு, புறத்தேசத்தாரிடத்திலே நான் பிரசங்கிக்கிற சுவிசேஷத்தை அவர்களுக்கும் [2]விசேஷமாகப்* பெரியோர்களுக்கும் விவரித்துக் காண்பித்தேன்.

௩ அப்பொழுது என்னுடனேகூட இருந்த தீத்து கிரேக்கனாயிருந்தும், விருத்தசேதனம்பண்ணிக்கொள்ளும்படிக்குக் கட்டாயம்பண்ணப்படவில்லை.

௪ இயேசுக்கிறிஸ்துவினால் நமக்கு உண்டான [3]விடுதலையை வேவுபார்த்து, நம்மை நியாயப்பிரமாணத்திற்கு [4]அடிமைகள் ஆக்கும்பொருட்டாக, பக்கவழியாய் நுழைந்து உட்புகுந்த [5]கள்ளச் சகோதரர்நிமித்தமே அப்படி ஆயிற்று.

௫ [6]சுவிசேஷத்தின் சத்தியமும் உங்களிடத்திலே நிலைநிற்கும்படியாக, நாங்கள் ஒரு நாழிகையாகிலும் அவர்களுக்குக் கீழ்ப்படியவில்லை.

௬ அல்லாமலும் [7]பெரியோர்களென்று எண்ணப்பட்டவர்களாலும் (நான் ஒன்றையும் அடையவில்லை); முன்னே அவர்கள் எப்படிப்பட்டவர்களாய் இருந்தாலும், எனக்குக் கவையில்லை. [8]பராபரன் மனிதருடைய முகத்தை நோக்கிப்பார்க்கிறவர் அல்லவே; [9]அந்தப் பெரியோர்கள் எனக்கு அதிகம் ஒன்றும் போதியாமல்,

௭ விருத்தசேதனம் உள்ளவர்களுக்கு அப்போஸ்தலனாய் இருக்கும்படி, பேதுருவைப் [10]பலப்படுத்தினவர் புறத்தேசத்தாருக்கு அப்போஸ்தலனாய் இருக்கும்படி [11]என்னையும் பலப்படுத்தினதால்,

௮ விருத்தசேதனம் உள்ளவர்களுக்குச் சுவிசேஷத்தைப் பிரசங்கிக்கும்படி பேதுருவுக்கு ஒப்புவிக்கப்பட்டதுபோல, விருத்தசேதனம் இல்லாதவர்களுக்கு அப்படியே செய்யும்படி, [12]எனக்கு ஒப்புவிக்கப்பட்டிருக்கிறது என்று [13]அவர்கள் கண்டு,

௯ அந்தப்படி [14]எனக்கு அளிக்கப்பட்ட கிருபையை அறிந்தபொழுது, அவர்களில் [15]தூண்களென்று எண்ணப்பட்ட யாக்கோபும் கேபாவும் யோவானும் தாங்கள் விருத்தசேதனம் உள்ளவர்களுக்கும், நாங்கள் புறத்தேசத்தாருக்கும் சுவிசேஷத்தைப் பிரசங்கிக்கும்படிக்கு ஐக்கியப்படுதற்கு அடையாளமாக எனக்கும் பருனபாவுக்கும் வலதுகைகளைக் கொடுத்து,

௰ தரித்திரரை நினைத்துக்கொள்ளும்படிக்குமாத்திரம் புத்திசொன்னார்கள்; [16]நானும் அப்படியே செய்யச் சாக்கிரதையாயிருந்தேன்.

௰௧ ¶ [17]மேலும் பேதுரு அந்தியோகியா ஊருக்கு வந்தபொழுது, அவன் தப்பிதம்செய்ததினாலே நான் முகமுகமாய் அவனோடு எதிர்த்தேன்.

௰௨ எப்படியென்றால், யாக்கோபினிடத்திலிருந்து சிலர் வருகிறதற்குமுன்னே, [18]அவன் புறத்தேசத்தாருடனே சாப்பிட்டான்; அவர்கள் வந்தபொழுது விருத்தசேதனம் உள்ளவர்களுக்குப் பயந்து விலகிப் பிரிந்தான்.

௰௩ மற்ற யூதரும் அப்படியே வஞ்சகம்பண்ணினார்கள், அவர்களுடைய வஞ்சகத்தினாலே பருனபாவுங்கூட இழுக்கப்பட்டான்.

௰௪ இப்படி அவர்கள் [19]சுவிசேஷத்தின் சத்தியத்திற்குத் தக்கதாக நடவாததை நான் கண்டபொழுது, [20]எல்லாருக்கும்முன்பாக நான் பேதுருவை நோக்கிச் சொன்னதாவது: [21]யூதனாயிருக்கிற நீர் யூதர்முறைமையாக அல்ல புறத்தேசத்தார் முறைமையாக நடந்துகொண்டிருக்க, புறத்தேசத்தாரை யூதர் முறைமையாய் நடக்

கி. பி. கு.அ.

1 பிலி. ௨. ௰௬. ௧ தெச. ௩. ௫.
2 அப். ௰௫. ௰௨.
* அல்லது இரகசியமாக.
3 கலா. ௩. ௨௫: ௫. ௧, ௰௩.
4 ௨ கொரி. ௰௧. ௨௰. கலா. ௪. ௩, ௯.
5 அப். ௰௫. ௧, ௨௪. ௨ கொரி. ௰௧. ௨௬.
6 ௪. வச. கலா. ௩. ௧: ௪. ௰௬.
7 கலா. ௬. ௩.
8 அப். ௰. ௩௪. ௨ரோ. ௨. ௰௧.
9 ௨ கொரி. ௰௨. ௰௧.
10 அப். ௯. ௰௫. ௰௩. ௨: ௨௨. ௨௧: ௨௬. ௰௭. ௰௮. ௧ கொரி. ௰௫. ௰. கலா. ௧. ௰௬. கொலோ. ௧. ௨௯.
11 கலா. ௧. ௰௬.
12 ௧ தெச. ௨. ௪.
13 அப். ௰௧. ௨௩. ௨ரோ. ௧. ௫: ௰௫.௰௫. ௧தீமோ. ௨. ௭. ௨தீமோ. ௧. ௰௧.
14 ௨ரோ. ௧. ௫: ௰௨. ௩: ௰௫. ௧ கொரி. ௰௫. ௰. எபே. ௩. ௮.
15 மத். ௰௬. ௰௮. எபே. ௨. ௨௰. வெளி. ௨௧.௰௪.
16 அப். ௰௧. ௩௰: ௨௪.௰௭. ௨ரோ. ௰௫. ௨௫. ௧ கொரி.௰௬.௧. ௨ கொரி.௮ ௯.
17 அப். ௰௫.௩௫.
18 அப். ௰. ௨௮: ௰௧. ௩.
19 ௫. வச.
20 ௧ தீமோ. ௫. ௨௰.
21 அப். ௰. ௨௮: ௰௧. ௩.

Digitized by Google

கும்படி நீர் எப்படிக் கட்டாயம் பண்ணலாம்.

௰௬ ¶ [1]ஒரு மனிதனும் நியாயப்பிரமாணத்திற்கு ஏற்ற கிரியைகளினாலே நீதிமானாக்கப்படுவது இல்லையே.

௰௬ ஆதலால் [2]புறத்தேசத்தாரில் பிறந்த பாவிகளாயிராமல், [3]சுபாவப்படி யூதராயிருக்கிற நாமும், [4]இயேசுக்கிறிஸ்துவைப் பற்றும் விசுவாசத்தினாலே அன்றி, நியாயப்பிரமாணத்திற்கு ஏற்ற கிரியைகளால் மனிதன் [5]நீதிமானாகிறதில்லை என்று அறிந்து, நியாயப்பிரமாணத்திற்கு ஏற்ற கிரியைகளினால் அல்ல, கிறிஸ்துவைப் பற்றும் விசுவாசத்தினாலே நீதிமான்களாகும்படிக்கு, கிறிஸ்து இயேசுவின்மேல் விசுவாசிகளானோமே.

௰௭ அந்தப்படி கிறிஸ்துவினாலே நீதிமான்களாகப் பார்க்கையில் [6]நாமும் பாவிகளாகக் காணப்பட்டால் கிறிஸ்து பாவத்திற்கு ஊழியக்காரர் ஆவாரா? அப்படி ஆகவேமாட்டார்.

௰௮ நான் இடித்துப்போட்டவைகளை நானே மறுபடியும் கட்டினால், என்னை அக்கிரமக்காரன் என்று காண்பிப்பேன்.

௰௯ [7]பராபரனுக்காகப் பிழைக்கும்படிக்கு [8]நியாயப்பிரமாணத்தின் வழியாய் [9]நியாயப்பிரமாணத்திற்கு மரித்தேனே.

௨௰ [10]கிறிஸ்துவுடனேகூடச் சிலுவையில் அறையப்பட்டேன்; அப்படியிருந்தும் பிழைத்திருக்கிறேன்; நான்தானே அல்ல, கிறிஸ்துவே எனக்குள்ளே பிழைத்திருக்கிறார்; அந்தப்படி இப்பொழுது என் தேகத்திலுள்ள சீவன், என்னில் அன்புகூர்ந்து [11]எனக்காகத் தம்மைத்தாமே ஒப்புக்கொடுத்த [12]பராபரனுடைய குமாரனைப்பற்றும் விசுவாசத்தினாலே பிழைக்கின்றது.

௨௧ [13]நீதியானது நியாயப்பிரமாணத்தினாலே வந்தால், கிறிஸ்து மரித்தது வீணாயிருக்குமே; ஆதலால் நான் பராபரனுடைய கிருபையைத் தள்ளிவிடேன் என்றேன்.

ஓ.பி.குஅ.

1 சங். ௱௪௩. ௨. உரோ. ௩. ௨௰. கலா. ௩. ௰௧.
2 மத். ௯. ௰௩. எபே. ௨. ௩, ௰௨.
3 அப். ௰௫. ௰, ௰௧.
4 உரோ. ௧. ௰௭: ௩. ௨௨, ௨௮: ௮. ௩. கலா. ௩. ௨௪. எபி. ௭. ௰௮, ௰௯.
5 அப். ௰௩. ௩௮, ௩௯.
6 ௧ யோ. ௩. ௮, ௯.
7 உரோ. ௬. ௰௧. ௨ கொரி. ௫. ௰௫. ௧ தெச. ௫. ௰. எபி. ௯. ௰௪. ௧ பே. ௪. ௨.
8 உரோ. ௮. ௨.
9 உரோ. ௬. ௰௪: ௭. ௪, ௬.
10 உரோ. ௬. ௬. கலா. ௫. ௨௪: ௬. ௰௪.
11 கலா. ௧. ௪. எபே. ௫. ௨. தீத். ௨. ௰௪.
12 ௨ கொரி. ௫. ௰௫. ௧ தெச. ௫. ௰. ௧ பே. ௪. ௨.
13 கலா. ௩. ௨௧. எபி. ௭. ௰௧. உரோ. ௰௧. ௬. கலா. ௫. ௪.
14 கலா. ௨. ௰௪: ௫. ௭.
15 கலா. ௫. ௭.
16 அப். ௨. ௩௮: ௮. ௰௫: ௰. ௪௭: ௰௫, ௮. [illegible]. எபே. ௧. ௰௩. எபி. ௬. ௪.
17 உரோ. ௰. ௰௬, ௰௭.
18 கலா. ௪. ௯.
19 எபி. ௭. ௰௯: ௯. ௰.
20 எபி. ௰. ௩௫, ௩௩. ௨ யோ. ௮.
* அல்லது இவ்வளவு பெரிய.
21 ௨ கொரி. ௩. ௮.
22 ௧ மோ. ௰௫. ௬. உரோ. ௪. ௩, ௯, ௨௩, ௨௨. யாக். ௨. ௨௩.
† அல்லது நீதியாகக் கட்டப்பட்டது.

## ௩. அதிகாரம்.

௧. அவர்கள் விசுவாசத்தைவிட்டு நியாயப்பிரமாணத்தைப் பற்றின முகாந்தரம் ஏதென்று கேட்டு, ௬. விசுவாசிக்கிறவர்கள் நீதிமான்களாயி, ௯. ஆபிரகாமுடனே ஆசீர்வதிக்கப்படுகிறார்கள் என்று, ௰. பல திருட்டாந்தங்களினால் காட்டியது.

ஆ புத்தியீனமுள்ள கலாத்தியரே, நீங்கள் [14]சத்தியத்திற்குக் கீழ்ப்படியாமல் போகத்தக்கவிதமாக [15]யாவன் உங்களை மயக்கப்படுத்தினான்? உங்களுக்குப் பிரத்தியட்சமாய் இயேசுக்கிறிஸ்து உங்களுக்காகச் சிலுவையில் அறையப்பட்டவராய்க் குறிக்கப்பட்டிருந்தாரே.

௨ [16]ஆவியை நீங்கள் நியாயப்பிரமாணத்திற்கு ஏற்ற கிரியைகளினாலோ, [17]விசுவாசப் பிரசங்கத்தினாலோ (எதினாலே) பெற்றீர்கள்? இதைமாத்திரம் உங்களிடத்தில் அறிய விரும்புகிறேன்.

௩ [18]ஆவியினாலே ஆரம்பம்பண்ணின நீங்கள் இப்பொழுது [19]மாம்சத்தினாலே முடிவுசெய்ய இத்தனை புத்தியீனராய் இருக்கிறீர்களா?

௪ [20]இத்தனை* பாடுகளை வீணாய்ப் பட்டீர்களா? ஆ வீணாயிருக்கமாட்டாதே.

௫ அன்றியும் உங்களுக்கு [21]ஆவியை வரச்செய்கிறவனும் உங்களுக்குள்ளே அற்புதங்களை நடப்பிக்கிறவனுமானவன் அப்படி நியாயப்பிரமாணத்திற்கு ஏற்ற கிரியைகளினாலோ விசுவாசப் பிரசங்கத்தினாலோ (எதினாலே) செய்கிறான்.

௬ அப்படி [22]ஆபிரகாம் பராபரனை விசுவாசித்தான்; அதுவே அவனுக்கு நீதியென்று எண்ணப்பட்டது.†

Digitized by Google

௭ ¶ ஆகையால் [1]விசுவாசமார்க்கத்தாரே ஆபிரகாமின் பிள்ளைகளாய் இருக்கிறார்கள் என்று அறிவீர்களாக.

௮ மேலும் பராபரன் விசுவாசத்தினாலே உலகத்தாரை நீதிமான்களாக்குவார் என்று [2]வேதாகமம் முன் அறிந்து, [3]உன்னாலே எல்லா உலகத்தாரும் ஆசீர்வதிக்கப்படுவார்கள் என்று ஆபிரகாமுக்குச் சுவிசேஷமாய் முன் அறிவித்தது.

௯ அந்தப்படி விசுவாசமார்க்கத்தார் விசுவாசமுள்ள ஆபிரகாமுடனேகூட ஆசீர்வதிக்கப்படுகிறார்கள்.

௰ ¶ நியாயப்பிரமாணத்திற்கு ஏற்ற கிரியைக்காரராகிய யாவரும் நியாயப்பிரமாண புத்தகத்தில் எழுதப்பட்டவைகளை எல்லாம் செய்யத்தக்கதாக அவைகளில் நிலைத்திராதவன் எவனோ, [4]அவன் சபிக்கப்பட்டவன் என்று எழுதியிருக்கிறபடியால், சாபத்திற்குக் கீழாயிருக்கிறார்கள்.

௰௧ மேலும் [5]நியாயப்பிரமாணத்தினாலே ஒருவனும் பராபரனிடத்திலே நீதிமான் ஆகிறதில்லை என்பது வெளியரங்கமாய் இருக்கின்றது; எப்படியெனில், [6]விசுவாசத்தால் நீதிமானானவன் பிழைப்பான் என்று சொல்லியிருக்கிறதே.

௰௨ அன்றியும் [7]நியாயப்பிரமாணமானது விசுவாசத்தை ஏற்படுத்துகிறதில்லை; [8]இவைகளைச் செய்கிற மனிதன் இவைகளால் பிழைப்பான் என்று ஏற்படுத்துகின்றது.

௰௩ இப்படியிருக்க, மரத்திலே தூக்கப்பட்ட யாவனும் [9]சபிக்கப்பட்டவன் என்று எழுதியிருக்கிறபடி, [10]கிறிஸ்து நமக்காகச் சாபத்தை அடைந்து, நியாயப்பிரமாணத்தின் சாபத்திற்கு நம்மை விலக்கி இரட்சித்தார்.

௰௪ [11]ஆபிரகாமுக்கு உண்டான ஆசீர்வாதம் கிறிஸ்து இயேசுவினாலே புறத்தேசத்தாருக்கு வரும்படியாகவும், [12]வாக்குத்தத்தம் பண்ணப்பட்ட ஆவியை நாம் விசுவாசத்தினாலே பெறும்படியாகவுமே அப்படி ஆயிற்று.

௰௫ ¶ சகோதரரே, மனிதர் முறைமையாகச் சொல்லுகிறேன்; [13]மனிதர்களுக்குள்ளே உறுதிபண்ணப்பட்ட ஓர் உடம்படிக்கையை* ஒருவனும் தள்ளவும் அதினோடே எதையாகிலும் கூட்டவும்மாட்டானே.

௰௬ [14]ஆபிரகாமுக்கும் அவனுடைய சந்ததிக்கும் வாக்குத்தத்தங்கள் பண்ணப்பட்டன; அப்பொழுது சந்ததிகளுக்கென்று அநேகரைக்குறித்துச் சொல்லாமல், உன் சந்ததிக்கென்று ஒருவனைக்குறித்துச் சொல்லியிருக்கிறார்; [15]அந்தச் சந்ததி கிறிஸ்துவே.

௰௭ ஆனதால் நான் சொல்லுகிறது என்னவெனில், கிறிஸ்துவுக்கு நேராகப் பராபரனால் முன் உறுதிபண்ணப்பட்ட உடம்படிக்கை உண்டே, அப்பொழுது உண்டான வாக்குத்தத்தத்தைத் தள்ளத்தக்கதாக அந்த உடம்படிக்கையை [16]நானூற்றுமுப்பது வருஷத்திற்குப்பின் உண்டான [17]நியாயப்பிரமாணம் நீக்கமாட்டாது.

௰௮ அன்றியும் [18]சுதந்தரமானது நியாயப்பிரமாணத்தினாலே உண்டானால், [19]அவ்வாக்குத்தத்தத்தினால் உண்டாயிராதே; ஆபிரகாமுக்குப் பராபரன் அதை வாக்குத்தத்தத்தினாலே அருளிச்செய்தார்.

௰௯ அப்படியானால் நியாயப்பிரமாணம் என்னத்துக்கு என்றால், [20]அது வாக்குத்தத்தத்தைப் பெற்ற சந்ததி வருமளவும் தேவதூதரைக்கொண்டு [21]மத்தியஸ்தன் கையில் [22]கட்டளையிடப்பட்டு [23]அக்கிரமங்களின் நிமித்தமாகக் கூட்டப்பட்டிருந்தது.

கி. பி. கு அ.

1 யோவா. அ. ௩௯. உரோ. ௪. ௰௧, ௰௨, ௰௬.
2 உரோ. ௯. ௰௭. ௨௨. ௩௪.
3 ௧ மோ. ௰௨. ௩: ௰௮. ௰௮: ௨௨. ௰௮. அப். ௩. ௨௫.
4 ௫ மோ. ௨௭. ௨௬. எரே. ௰௧. ௩.
5 கலா. ௨. ௰௬.
6 ஆப. ௨. ௪. உரோ. ௧. ௰௭. எபி. ௰. ௩௮.
7 உரோ. ௪. ௪, ௫: ௰.௫,௬: ௰௬. ௬.
8 ௩ மோ. ௰௮. ௫. நெகே. ௯. ௨௯. எசே. ௨௰. ௰௧. உரோ. ௰. ௫.
9 ௫ மோ. ௨௧, ௨௩.
10 உரோ. அ. ௩. ௨ கொரி. ௫. ௨௧. கலா. ௪. ௫.
11 உரோ. ௪. ௯, ௰௬.
12 ஏசா. ௩௨. ௰௫: ௪௪. ௩. எரே. ௩௧.௩௩: ௩௨. ௪௰. எசே. ௰௧. ௰௯: ௩௬. ௨௭. யோவே. ௨. ௨௮, ௨௯. சகரி. ௰௨. ௰. யோவா. ௭. ௩௯. அப். ௨. ௩௩.
13 எபி. ௯. ௰௭.
* அல்லது ஏற்பாட்டை.
14 ௧ மோ. ௰௨. ௩, ௭: ௰௭. ௭, அ. ௩௪.
15 ௧ கொரி. ௰௨. ௰௨.
16 ௨ மோ. ௰௨. ௪௰, ௪௧.
17 உரோ. ௪. ௰௩, ௰௪. ௨௩. ௩௪.
18 உரோ. அ. ௰௭.
19 உரோ. ௪. ௰௪.
20 ௰௯. ௩௪.
21 ௨ மோ. ௨௰. ௰௯, ௨௧, ௨௨.

22 மோ. ௫. ௫, ௨௨, ௨௩, ௨௭, ௩௩. யோவா. ௧. ௰௭. அப். ௭. ௩௮. ௧ தீமோ. ௨. ௫.—22 அப். ௭. ௫௩. எபி. ௨. ௨.
23 யோவா. ௰௫. ௨௨. உரோ. ௪. ௰௫: ௫. ௨௰: ௭. அ, ௰௩. ௧ தீமோ. ௧. ௯.

Digitized by Google

உய மத்தியஸ்தன் ஒருவனுடையவன் அல்ல, [1]பராபரன் ஒருவரே இருக்கிறார்.

உக ¶ அப்படியானால் நியாயப்பிரமாணம் பராபரனுடைய வாக்குத்தத்தங்களுக்கு விரோதமாயிருக்கிறதா என்றால் அப்படி இருக்கிறதே இல்லை; எப்படியெனில், [2]உயிரைக் கொடுக்கத்தக்க நியாயப்பிரமாணம் கொடுக்கப்பட்டிருந்ததானால், நீதியானது மெய்யாய் நியாயப்பிரமாணத்தினால் உண்டாகும்.

உஉ அப்படி இராதபடியால், [3]வேதாகமம், இயேசுக்கிறிஸ்துவைப்பற்றும் விசுவாசத்தினாலே [4]வாக்குத்தத்தம்பண்ணப்பட்ட நீதி, விசுவாசம் உள்ளவர்களுக்கு அளிக்கப்படும்படிக்கு, [5]எல்லாரையும் ஏகமாய்ப் பாவத்தின்கீழ் அடைத்துப்போட்டது.

உங ஆனதால் விசுவாசம் வருதற்குமுன்னே நாங்கள் வெளிப்படுவதாயிருந்த விசுவாசத்திற்கு ஏதுவாக அடைக்கப்பட்டவர்களாய் நியாயப்பிரமாணத்தின்கீழ் காக்கப்பட்டிருந்தோம்.

உச இவ்விதமாய் [6]நாம் விசுவாசத்தினாலே நீதிமான்கள் ஆவதற்கு [7]நியாயப்பிரமாணம் நம்மைக் கிறிஸ்துவினிடத்திற்கு வழி நடத்துகிற உவாத்தியாய் இருந்ததே.

உரு ¶ விசுவாசம் வந்தபின்பு நாங்கள் பின்னும் அந்த உவாத்திக்குக் கீழானவர்கள் அல்ல.

உசு நீங்கள் எல்லாரும் கிறிஸ்து இயேசுவைப்பற்றும் விசுவாசத்தினாலே [8]பராபரனுடைய பிள்ளைகளாய் இருக்கிறீர்களே.

உஎ உங்களில் [9]கிறிஸ்துவுக்குள்ளாக ஞானஸ்நானம்பெற்றவர்கள் எத்தனைபேரோ அத்தனைபேரும் [10]கிறிஸ்துவைத் தரித்துக்கொண்டீர்களே.

உஅ இப்படி [11]நீங்களெல்லாரும் கிறிஸ்து இயேசுவினாலே ஒன்றாயிருக்கிறபடியால், [12]யூதன் என்றும், கிரேக்கன் என்றும், அடிமை என்றும் சுயாதீனன் என்றும், ஆண் என்றும், பெண் என்றும், இவ்வேற்றுமை உங்களுக்கு இல்லையே.

உகூ [13]மேலும் நீங்கள் கிறிஸ்துவைச் சேர்ந்தவர்களாயிருக்க, ஆபிரகாமின் சந்ததியாராயும் [14]வாக்குத்தத்தத்தின்படியே சுதந்தரராயும் இருக்கிறீர்கள்.

கி. பி. கு அ.

1 உரோ. க. உக, கம.
2 கலா. உ. உக.
3 அ. வச.
4 உரோ. ச. மக, மஉ, மசு.
5 உரோ. க. க, மகூ, உக: மக. கஉ.
6 அப். மக. கக. கலா. உ. மசு.
7 மத். இ. மஎ. உரோ. ம. ச. கொலோ. உ. மஎ. எபி. கூ. கூ, ம.
8 யோவா. க. மஉ. உரோ. அ. மச, மகூ, மக. கலா. ச. இ. க யோ. ந. க, உ.
9 உரோ. ஙா. ங.
10 உரோ. மங. மச.
11 யோவா. ம. மக: மஎ. உம, உக. எபே. உ. மச, மகூ, மக: ச. ச, மகூ.
12 உரோ. ம. மஉ. க கொரி. மஉ. மங. கலா. இ. க. கொலோ. ங. மக.
13 ஆதி. உக. ம, மஉ. உரோ. கூ. எ. எபி. மக. மஅ.
14 உரோ. அ, மஎ. கலா. ச. எ, உஅ. எபே. ங. ங.
* அல்லதுமூலகாரணங்களுக்கு.
15 கூ. வச. கலா. உ. ச: இ. க. கொலோ. உ. அ, உம. எபி. கூ. ம.
16 ஆதி. சகூ. ம. தானி. கூ. உச. மாற். க. மஇ. எபே. க. ம.
17 மத். உம. உஅ. கலா. ங. மங. றீத். உ. மச. எபி. கூ. மஉ. எபே. க. எ. க பே. க. மஅ, மகூ.
18 யோவா. க. மஉ. கலா. ங. உக. எபே. க. இ.

# ௪. அதிகாரம்.

க. சுதந்தரவாளி சிறுபிள்ளையாய் இருக்குங்காலமட்டும் தன் காரியக்காரருக்குக் கீழிருப்பதுபோலக் கிறிஸ்து வருமட்டும் நாமும் நியாயப்பிரமாணத்துக்குக் கீழிருந்தோமென்றும், ௫. கிறிஸ்து நம்மை நியாயப்பிரமாணத்தினின்று விடுதலையாக்கினபடியால், ௭. இனி அதற்கு நாம் அடிமைகள் அல்லவென்றும், ௰௪. கலாத்தியர் தனக்குப் பாராட்டின பட்சத்தையும் அவர்கள்மேலுள்ள தன்னுடைய பட்சத்தையும் இன்னதென்றும், ௨௨. நாம் ஆபிரகாமின் சுயாதீன மனைவியின் புத்திரரென்றும் காட்டியது.

பின்னும் நான் சொல்லுகிறது என்னவெனில், சுதந்தரவாளியானவன் எல்லாவற்றிற்கும் எசமானாயிருந்தும், அவன் குழந்தையாயிருக்கிற காலமளவும் அவனுக்கும் அடிமையானவனுக்கும் வித்தியாசம் இல்லை.

உ தகப்பன் குறித்தகாலம்வரைக்கும் அவன் உவாத்திமாருக்கும் வீட்டு விசாரணைக்காரருக்கும் கீழாயிருக்கிறான்.

ங அப்படிப்போல நாமும் குழந்தைகளாயிருந்த காலத்திலே இவ்வுலகத்தின் வழிபாடுகளுக்கு* [15]அடிமைப்பட்டவர்களாய் இருந்தோம்.

ச [16]காலம் நிறைவேறினபொழுது, பராபரன் தம்முடைய குமாரனை அனுப்ப, அவர் [17]நியாயப்பிரமாணத்தின் கீழானவர்களாகிய நம்மை மீட்டுக்கொண்டு, [18]புத்திரசுவிகாரம் நமக்கு உண்டாகும்படி செய்யும்படிக்கு,

Digitized by Google

டு ¹ஸ்திரியினிடத்தில் ²பிறந்து, ³நியாயப்பிரமாணத்திற்குக் கீழானார்.

சு மேலும், நீங்கள் புத்திரராயிருக்கிறபடியினாலே அப்பா பிதாவே என்று கூப்பிடத்தக்கதாக, பராபரன் தம்முடைய குமாரனுடைய ⁴ஆவியை உங்கள் இருதயங்களில் அனுப்பினார்.

எ ஆகையால் இனி நீ அடிமையாயிராமல் புத்திரனாய் இருக்கிறாய்; மேலும் ⁵நீ புத்திரனாயிருக்க, கிறிஸ்துவின் மூலமாய்ப் பராபரனுடைய சுதந்தரனாயும் இருக்கிறாய்.

அ ¶ ⁶நீங்கள் பராபரனை அறியாமல் இருந்தபொழுது ⁷சுபாவத்தின்படி தேவர்கள் அல்லாதவர்களுக்கு அடிமைகளாய் இருந்தீர்கள்.

கூ இப்பொழுது ⁸நீங்கள் பராபரனை அறிந்துகொண்டபின்பு அல்லது, பராபரனாலே அறிந்துகொள்ளப்பட்டபின்பு, எப்படி நீங்கள் ⁹பலஈனமும் வெறுமையுமான அவ்வழிபாடுகளுக்கு* ¹⁰மறுபடியும் †திரும்பி மறுபடியும் அவைகளுக்கு அடிமைப்பட்டிருக்க விரும்புகிறீர்கள்?

ய நாட்களையும் மாதங்களையும் மற்றக் காலங்களையும் வருஷங்களையும் ¹¹நோக்கிப் பார்க்கிறீர்களே.

யக ஆ ¹²நான் உங்களுக்காகப் பிரயாசப்பட்டது வீணாய்ப்போகுமோ என்று உங்களைக்குறித்துப் பயந்திருக்கிறேன்.

யஉ ¶ சகோதரரே, நான் உங்களைப்போல ஆனபடியால் நீங்களும் என்னைப்போல ஆகுங்கள் என்று உங்களை வேண்டிக்கொள்ளுகிறேன்; ¹³எனக்கு நீங்கள் அநியாயம் ஒன்றும் செய்யவில்லை.

யங உங்களுக்குத் தெரிந்திருக்கிறபடி, ¹⁴முதலாந்தரம் நான் உங்களுக்குச் சுவிசேஷத்தைச் ¹⁵சரீர பலஈனத்தோடே அறிவித்தேன்.

யச அப்படியிருந்தும் எனக்குச் சோதனையான அந்தச் சரீர பலஈனத்தை நீங்கள் அசட்டைபண்ணாமலும், அரோசியாமலும் பராபரனுடைய ¹⁶தூதனைப்போலவும் ¹⁷கிறிஸ்து இயேசுவைப்போலவும் என்னை ஏற்றுக்கொண்டீர்கள்.

யடு அப்பொழுது எவ்வளவு பாக்கியமுள்ளவர்களாய் இருந்தீர்கள்;‡ நீங்கள் உங்கள் கண்களைப் பிடுங்கி, எனக்குக் கொடுக்கக்கூடுமானால் அப்படியும் செய்வீர்களே என்று உங்களுக்குச் சாட்சியாயிருக்கிறேன்.

யசு ¹⁸நான் உங்களுக்குச் சத்தியத்தைச் சொன்னபடியினாலே, உங்களுக்குச் சத்துருவானேனா?

யஎ ¶ ¹⁹அவர்கள் உங்களுக்கு வைராக்கியபட்சத்தைக் காண்பிக்கிறார்கள்; ஆகிலும், நல்லமனதாய் அப்படிச் செய்கிறதில்லை; அல்லாமலும், அவர்கள் தங்களுக்கு நீங்கள் வைராக்கியபட்சத்தைக் காண்பிக்கும்பொருட்டு, (என்னிலிருந்து) உங்களை§ நீக்க விரும்புகிறார்கள்.

யஅ நன்மையைக்குறித்து வைராக்கியபட்சமாயிருக்கிறது நல்லதுதான்; அப்படியே நான் உங்களிடத்தில் இருக்கும்பொழுதுமாத்திரம் அல்ல, எப்பொழுதும் செய்யவேண்டும்.

யகூ ²⁰ஆ என் பிள்ளைகளே, கிறிஸ்து உங்களிடத்தில் வடிவுகொள்ளுமளவும் உங்களுக்காக மறுபடியும் கருப்பவேதனைப்படுகிறேன்.

உய மேலும், நான் உங்களைக்குறித்துச் சந்தேகப்படுகிறபடியால்,‖ நான் இப்பொழுதே உங்களிடத்திலிருந்து என் பேச்சை மாற்றிக்கொள்ள ஆசையாயிருக்கிறேன்.

கி. பி. டுஅ.

1 க மோ. க. யடு. ஏசா. எ. யச. மீகா. டு. க. மத். க. உக. லூக். க. கக: உ. எ.
2 யோவா. க.யச. உரோ. க. க. பிலி. உ. எ. எபி. உ. யச.
3 மத். டு. யஎ. லூக். உ. உஎ.
4 உரோ. டு. டு: அ. யடு.
5 உரோ. அ.யக, யஎ. கலா. க. உக.
6 எபே. உ. யஉ. க தெச. ச. டு.
7 உரோ. க.உடு. க கொரி. யஉ. உ. எபே. உ. யக,யஉ. கதெச. க. கூ.
8 க கொரி. அ. க: யங. யஉ. உ தீமோ. உ. யகூ.
9 உரோ. அ. க. எபி. எ. யஅ.
* அல்லது மூலகாரணங்களுக்கு; க. வசனம்.
10 கலா. க. க. கொலோ. உ. உய.
† அல்லது பின்னுக.
11 உரோ. யச. டு. கொலோ. உ. யக.
12 கலா. உ. உ: டு.உ,ச.க தெச. க. டு.
13 உ கொரி. உ. டு.
14 கலா. க. கூ.
15 க கொரி. உ. க. உ கொரி. யக. கய: யஉ. எ, கூ.
16 உ சாமு. யகூ. உஎ. மல்கி. உ. எ. சகரி. யஉ. அ.
17 மத். ய. சய. லூக். ய. யசு. யோவா. யங. உய. க தெச. உ. யங.

‡ அல்லது அப்பொழுது இருந்த உங்கள் பாக்கியம் எங்கே?—18 கலா.உ.டு,யச.—19 உரோ.ய.உ. உகொரி.யக உ.
§ அல்லது எங்களை.—20 க கொரி.ச.யடு. பிலே.ய. யாக்.க.யஅ.—‖ அல்லது கலக்கப்படுகிறேன்.

Digitized by Google

உக ¶ நியாயப்பிரமாணத்திற்குக் கீழாயிருக்க மனதுள்ள நீங்கள், நியாயப்பிரமாணத்தைக் கேட்கவில்லையா? இதை எனக்குச் சொல்லுங்கள்?

உஉ எப்படி எழுதியிருக்கிறதென்றால், ஆபிரகாமுக்கு இரண்டு குமாரர் இருந்தார்கள்; ஒருவன் [1]அடிமையானவளிடத்தில் பிறந்தவன், ஒருவன் [2]சுயாதீனமுள்ளவளிடத்தில் பிறந்தவன்.

உ௩ அடிமையானவளிடத்தில் பிறந்தவன் [3]சரீர பலத்தினாலே பிறந்தான்; சுயாதீனமுள்ளவளிடத்தில் பிறந்தவன் [4]வாக்குத்தத்தத்தினாலே பிறந்தான்.

உ௪ இவைகள் ஞான அருத்தமுள்ளவைகள்; என்னவெனில், அந்த ஸ்திரிகள் இரண்டு ஏற்பாடுகளேயாம்.* ஒன்று அடிமைத்தனத்திற்கு ஏதுவாகப் பிள்ளைபெறுகிற [5]சீனாய்பர்வதத்தின் † ஏற்பாடு, அதை ஆகார் என்பது குறிக்கின்றது.

உ௫ ஆகார் என்பது அரபிதேசத்திலுள்ள சீனாய்பர்வதத்திற்குப் பேராயிருக்கிறதே; மேலும் அந்த ஆகார் என்பவள் இப்பொழுது இருக்கிற எருசலேமுக்குச் சரியாய்‡ இருக்கிறாள்; அது தன் பிள்ளைகளோடேகூட அடிமைப்பட்டிருக்கின்றதே.

உ௬ [6]மேலான எருசலேமே சுயாதீனமான ஸ்திரியினாலே குறிக்கப்பட்டது; அவள் நம்மெல்லாருக்கும் தாயானவள்.

உ௭ அந்தப்படி எழுதியிருக்கிறதாவது: புருஷனை அடைந்தவளிலும் அவாந்தரமுள்ளவளுக்கே அதிக பிள்ளைகள் உண்டு; ஆகையால் பிள்ளைபெறாத மலடியே, [7]மகிழ்கிரு; கருப்பவேதனைப்படாதவளே, களிப்பாய் எழும்பிச் சத்தமிடு என்பதே.

உ௮ ஆனதால் சகோதரரே, நாம் ஈசாக்கைப்போல [8]வாக்குத்தத்தத்துப் பிள்ளைகளாயிருக்கிறோம்.

உ௯ அல்லாமலும், அக்காலத்திலே [9]சரீரபலத்தினாலே பிறந்தவன் ஆவியின்படி பிறந்தவனைத் துன்பப்படுத்தினதுபோல, இப்பொழுதும் [10]நடக்கின்றது.

௩௰ அதைக்குறித்து [11]வேத எழுத்து எப்படிச் சொல்லுகிறது என்றால், [12]அடிமையானவளின் மகன் சுயாதீனமுள்ளவளுடைய குமாரனோடே சுதந்தரவாளியாய் இருக்கக்கூடாது; ஆகையால் அடிமையானவளையும் [13]அவளுடைய குமாரனையும் புறம்பே தள் என்றே சொல்லுகின்றது.

௩௰க இப்படியிருக்கச் சகோதரரே, நாம் அடிமையானவளுக்கு அல்ல, [14]சுயாதீனமுள்ளவளுக்கே பிள்ளைகளாய் இருக்கிறோம்.

க. பி. ௫அ.

1 க மோ. ௰௬. ௰௫.
2 க மோ. உக. உ.
3 உரோ. க. ௭, ௮.
4 க மோ. ௰௮. ௰௪: உக. க, உ. எபி. ௰க. ௰க.
* அல்லது உடன்படிக்கைகளாம்.
5 ௫ மோ. ௩௩. உ.
† கிரேக்கு, சினோயா.
‡ அல்லது எருசலேமின் வரிசையில்.
6 ஏசா. உ. உ. எபி. ௰உ. உஉ. வெளி. ௩. உ: உக. உ, ௰.
7 ஏசா. ௫௪. க.
8 அப். ௩. உ௫. உரோ. ௯. ௮. கலா. ௩. உ௯.
9 க மோ. உக. ௯.
10 கலா. ௫. ௰க: ௬. ௰உ.
11 கலா. ௩. ௮, உஉ.
12 யோவா. ௮. ௩௫.
13 க மோ. உக. ௰, ௰உ.
14 யோவா. ௮. ௩௩. கலா. ௫. க, ௰௩.
15 அப். ௰௫. ௰. கலா. உ. ௪:௪. ௯.
16 யோவா. ௮. ௩உ. உரோ. ௬. ௰௮. க பே. உ. ௰௬.
17 அப். ௰௫. க. அப். ௰௬. ௩.
18 கலா. ௩. ௰.

# ௫. அதிகாரம்.

க. அவர்களுடைய விடுதலையைப்பற்றி நின்று, ௩. சுன்னத்தடையவேண்டியதில்லையென்றும், ௰௩. நியாயப்பிரமாணத்தின் பொருளாகிய அன்பைப் பாராட்டவேண்டுமென்றும், ௰௬. மாம்சத்தின் கிரியைகளும், உஉ. ஆவியின் கனிகளும் இன்னவைகளென்றும் காட்டி, உ௫. அவர்கள் ஆவியினாலே நடக்கும்படி புத்திசொல்லியது.

க ஆனபடியினாலே நீங்கள் மறுபடியும் [15]அடிமைத்தனத்தின் நுகத்தடிக்கு உட்படாமல் கிறிஸ்து நமக்கு உண்டாக்கின [16]சுயாதீன நிலைமையிலே நிலைகொண்டிருப்பீர்களாக.

உ ¶ பின்னும் கேளுங்கள்; பவுல் என்னும் நானே உங்களுக்குச் சொல்லுகிறதாவது: [17]நீங்கள் விருத்தசேதனத்தைப் பண்ணிக்கொண்டால், கிறிஸ்து உங்களுக்கு ஒரு பிரயோசனமும் ஆகமாட்டார்.

௩ மேலும் விருத்தசேதனத்தைப் பண்ணிக்கொள்ளுகிற எந்த மனிதனும் [18]நியாயப்பிரமாணம் முழுவதையும் நிறைவேற்றக் கடனாளியாய் இருக்கிறான் என்று மறுபடியும் சாட்சியாக அறிவிக்கிறேன்.

௪ நியாயப்பிரமாணத்தினால் நீதிமான்களாக விரும்புகிற நீங்கள்

Digitized by Google

[1]கிறிஸ்துவைவிட்டு நீங்கி, [2]அவருடைய கிருபைக்குப் புறம்பே விழுந்தீர்கள்.

ரு நாங்கள் ஆவியைக்கொண்டு விசுவாசத்தினாலே [3]நீதிவருதற்கு நம்பிக்கையோடே காத்திருக்கிறோம்.

சு [4]கிறிஸ்து இயேசுவினிடத்தில் விருத்தசேதனமும் விருத்தசேதனம் இல்லாமையும் ஒன்றுக்கும் உதவாதே; [5]அன்பினால் கிரியைசெய்கிற விசுவாசமே உதவும்.

எ [6]நீங்கள் நன்றாய் ஓடினீர்கள்; சத்தியத்திற்குக் கீழ்ப்படியாமல் போகத்தக்கதாக, [7]யாவன் உங்களுக்குத் தடைசெய்தான்.*

அ நீங்கள் அடைந்த இந்தப் போதனை [8]உங்களை அழைத்தவனாலே உண்டானதல்ல.

கூ [9]புளிப்புள்ள கொஞ்சமாகிய மா பிசைந்தமாவை எல்லாம் உப்பப்பண்ணுகிறது.

ய [10]நீங்கள் வேறொரு சிந்தையாயிருப்பதும் இல்லை என்று நான் கர்த்தராலே உங்களைக்குறித்து நம்பிக்கையானேன்; [11]உங்களைக் கலக்கப்படுத்துகிறவன் எப்படிப்பட்டவனாயிருந்தாலும், [12]ஆக்கினையைச் சுமந்துகொள்வான்.

யக [13]சகோதரரே, இதுவரைக்கும் நான் விருத்தசேதனத்தைப் பிரசங்கிக்கிறவனாயிருந்தால், [14]இதுவரைக்கும் என்னத்திற்குத் துன்பப்படுகிறேன்? சிலுவையைப் (பிரசங்கிக்கிறதினாலே) வருகிற [15]இடறல் ஒழிந்திருக்குமே.

யஉ [16]உங்களைக் கலகம்பண்ணுகிறவர்கள் தறிப்புண்டுபோனால் [17]நலமாய் இருக்கும்.

யங ¶ சகோதரரே, நீங்கள் சுயாதீனத்திற்கு அழைக்கப்பட்டீர்களே; [18]இந்தச் சுயாதீனத்தை நீங்கள் சரீரத்திற்கு ஏற்றதாக அநுசரியாமல், [19]அன்பினாலே ஒருவருக்கொருவர் ஊழியம்செய்யுங்கள்.

யச [20]பிறனிடத்தில் உன்னைப்போல அன்பாயிருப்பாயாக என்ற இந்த ஒரே வார்த்தையினாலே [21]நியாயப்பிரமாணம் முழுவதும் நிறைவேறுகின்றதே.

யரு நீங்கள் ஒருவரை ஒருவர் கடித்துப் பட்சித்துவருகிறபடியினாலே, ஒருவரால் ஒருவர் அழிக்கப்படாதபடிக்குப் பாருங்கள்.

யசு ¶ பின்னும் நான் சொல்லுகிறது என்னவென்றால், சரீரத்தின் இச்சையை நிறைவேற்றாதிருந்து† [22]ஆவியின்படி நடந்துகொள்ளுங்கள்.

யஎ [23]சரீரம் ஆவிக்கு விரோதமாகவும், ஆவி சரீரத்திற்கு விரோதமாகவும் இச்சிக்கிறதே; [24]நீங்கள் செய்யவேண்டுமென்று இருக்கிறவைகளைச் செய்யாதபடிக்கு, இவைகள் ஒன்றுக்கொன்று விரோதமாயிருக்கின்றனவே.

யஅ [25]ஆவியினால் எவப்படுவீர்களானால், நீங்கள் நியாயப்பிரமாணத்திற்குக் கீழானவர்கள் அல்ல.

யகூ [26]சரீரத்தின் கிரியைகள் வெளியரங்கமாயிருக்கின்றன; அவையாவன: விபசாரம், வேசித்தனம், அசுத்தம், காமவிகாரம்,

உய விக்கிரகாராதனை, பில்லிசூனியம், பகைகள், விரோதங்கள், வைராக்கியங்கள், கோபங்கள், சண்டைகள், பேதகங்கள், அவமார்க்கங்கள், பொறாமைகள், கொலைகள்,

உக வெறிகள், பெருந்தீனிகள் முதலானவைகளே; [27]இப்படிப்பட்டவைகளைச் செய்கிறவர்கள் பராபரனுடைய இராச்சியத்தைச் சுதந்தரிப்பதில்லை என்று முன்னே நான் சொன்னதுபோல, இப்பொழுதும் உங்களுக்குச் சொல்லுகிறேன்.

உஉ [28]ஆவியின் கனியோ, அன்

கி. பி. குஅ.

1 உரோ. க கக, கஉ. கலா. உ. உக.
2 எபி. ௰உ. ௰௫.
3 உரோ. அ. உச, உ௫. உ தீமோ. ச. அ.
4 க கொரி. எ. ௰க. கலா. க. உஅ: க. ௰௫. கொலோ. க. ௰௧.
5 க தெச. க. க. யாக். உ. ௰அ, உ௰, உஉ.
6 க கொரி. க. உச.
7 கலா. க. க.
* அல்லது பின்னேட்டினான்.
8 கலா. க. க.
9 க கொரி. ௫. சு: ௰௫. கக.
10 உ கொரி. உ. க: அ. உஉ.
11 கலா. க. எ.
12 உ கொரி. ௰. க.
13 கலா. க. ௰உ.
14 க கொரி. ௰௫. க௰. கலா. ச. உக: க. ௰எ.
15 க கொரி. க. உக.
16 அப். ௰௫. க, உ, உச.
17 யோசு. எ. உ௫. க கொரி. ௫. ௰க. கலா. க. அ, க.
18 க கொரி. அ. க. க பே. உ. ௰சு. உ பே. உ. ௰க. யூதா. ச.
19 க கொரி. க. ௰க. கலா. க. உ.
20 க மோ. ௰க. ௰அ. மத். உஉ. கக. உரோ. ௰க. அ, க.
21 மத். எ. ௰உ: உஉ. ச௰. யாக். உ. அ.
† அல்லது இருக்கும்படி.
22 உரோ. க. ௰உ: அ. க, ச, ௰உ: ௰க. ௰ச. உ௫. வச. க பே. ட. ௰க.
23 உரோ. எ. உக: அ. க, எ.

24 உரோ. எ. ௰௫, ௰க.—25 உரோ. க. ௰ச: அ. உ.—26 க கொரி. க. க. எபே. ௫. க. கொலோ. க. ௫. யாக். க. ௰ச, ௰௫. 27 க கொரி. க. க. எபே. ௫. ௫. கொலோ. க. க. வெளி. உஉ. ௰௫.—28 யோவா. ௰௫. உ. எபே. ௫. க.

Digitized by Google

பு, சந்தோஷம், சமாதானம், நீடிய சாந்தம், [1]தயவு [2]நற்குணம்,

௨௩ [3]உண்மை, பொறுமை, இச்சையடக்கம், [4]இப்படிப்பட்டவைகளைச் செய்கிறவர்களுக்கு நியாயப்பிரமாணம் விரோதமாயிருக்கிறதில்லை.

௨௪ மேலும், [5]கிறிஸ்துவின் பாரிசமானவர்கள் தங்கள் சரீரத்தை அதின் பலவித இச்சைகளோடும் கூடச்* சிலுவையில் அறைந்திருக்கிறார்கள்.

௨௫ [6]நாம் ஆவியைக்கொண்டு பிழைக்கிறபடியால் ஆவியின்படி நடக்கவும் கடவோம்.

௨௬ [7]வீண்புகழ்ச்சியை விரும்பாமலும், ஒருவருக்கொருவர் கோபமூட்டாமலும், ஒருவர்மேல் ஒருவர் பொறாமை வையாமலும் இருக்கக்கடவோம்.

## ௬ அதிகாரம்.

௧. வழுவுகிற சகோதரனை மெத்தனவாய் நடத்தவும், ௨. ஒருவர் மற்றொருவருடைய பாரத்தைச் சுமக்கவும், ௬. போதகர்களைப் பராமரிக்கவும், ௯. நன்மைசெய்வதில் இளைப்படையாமலிருக்கவும், ௰௨. சுன்னத்தைப் பிரசங்கிக்கிறவர்களுடைய நோக்கம் இன்னதென்றும், ௰௪. தான் கிறிஸ்துவின் சிலுவையிலேயேயொழிய மற்றொன்றிலும் மேன்மைபாராட்டவில்லை என்றும் சொல்லியது.

சகோதரரே, [8]ஒரு மனிதன் ஒரு தப்பிதத்தில் அகப்பட்டால்,† [9]ஆவியையுடைய நீங்களும் [10]தூண்டிவிடப்படாதபடிக்கு, உங்களைக் குறித்து எச்சரிக்கையாயிருந்து, அப்படிப்பட்டவனைச் [11]சாந்தமுள்ள மனதோடே சீர்பொருந்தப் பண்ணுங்கள்.

௨ [12]ஒருவருக்கு உண்டான பாரத்தை ஒருவர் சுமந்துகொண்டு, [13]இப்படியே கிறிஸ்துவின் நியாயப்பிரமாணத்தை நிறைவேற்றுங்கள்.

௩ [14]மேன்மையில்லாத [15]ஒருவன் தன்னை மேன்மையுள்ளவன் என்று எண்ணினால் தன்னைத்தானே வஞ்சிப்பானே.

கி. பி. ௫௮.

1 கொலோ. ௩. ௰௨. யாக். ௩. ௰௭.
2 உரோ. ௰௫. ௰௪.
3 ௧ கொரி. ௰௩. ௭.
4 ௧ தீமோ. ௧. ௯.
5 உரோ. ௬. ௬: ௰௩. ௰௪. கலா. ௨. ௨௰. ௧ பே. ௨. ௰௧.
* அல்லது ஆசை இச்சைகளோடும்.
6 உரோ. ௮. ௪, ௫. ௰௩. வச.
7 பிலி. ௨. ௩.
8 உரோ. ௰௪. ௧: ௰௫. ௧. எபி. ௰௨. ௰௩. யாக். ௫. ௰௯.
† அல்லது அகப்பட்டாலும்.
9 ௧ கொரி. ௨. ௰௫: ௩. ௧.
10 ௧ கொரி. ௭. ௫: ௰. ௰௨.
11 ௧ கொரி. ௪. ௨௧. ௨ தெச. ௩. ௰௫. ௨ தீமோ. ௨. ௨௫.
12 உரோ. ௰௫. ௧. கலா. ௫. ௰௩. ௧ தெச. ௫. ௰௪.
13 யோவா. ௰௩. ௰௪, ௰௫, ௩௪. ௰௫. ௰௨. யாக். ௨. ௮. ௧ யோ. ௪, ௨௧.
14 ௨ கொரி. ௩. ௫: ௰௨. ௰௧.
15 உரோ. ௰௨. ௩. ௧ கொரி. ௮ ௨. கலா. ௨. ௬.
16 ௧ கொரி. ௰௧. ௨௮. ௨ கொரி. ௰௩. ௫.
17 லூக். ௰௮. ௰௧.
18 உரோ. ௨. ௬. ௧ கொரி. ௩. ௮.
19 உரோ. ௰௫. ௨௭. ௧ கொரி. ௯. ௰௧, ௰௪.
20 ௧ கொரி. ௬. ௯: ௰௫. ௩௩.
21 யோபு. ௰௩. ௯.
22 லூக். ௰௬. ௨௫. உரோ. ௨. ௬. ௨ கொரி. ௯. ௬.

௪ [16]அவனவன் தன் தன் சுயகிரியையைச் சோதித்துப்பார்க்கக்கடவன்; [17]அப்பொழுது மற்றவனைப் பார்க்கையில் அல்ல, தன்னையே பார்க்கையில் புகழ்ச்சியைப் பெறுவான்.

௫ [18]அவனவன் தன் தன் சுயபாரத்தைச் சுமப்பானே.

௬ [19]மேலும், சுவிசேஷ வசனத்தைக்குறித்து உபதேசம் கேட்கிறவன் உபதேசிக்கிறவனுக்குச் சகல நன்மைகளிலும் பங்கைக் கொடுக்கக்கடவன்.

௭ [20]உங்களை வஞ்சியாதிருப்பீர்களாக; [21]பராபரன் தம்மைப் பரியாசம்பண்ணவொட்டார்; ஆனதால், [22]மனிதன் விதைக்கிறது எதுவோ, அதையே அறுப்பான்.

௮ [23]தன் தேக இச்சைகளுக்குத் தக்கதாக விதைக்கிறவன் அந்தத் தேக இச்சைகளினால் அழிவை அறுப்பான்; ஆவிக்குத்தக்கதாக விதைக்கிறவன் ஆவியினாலே நித்தியசீவனை அறுப்பான்.

௯ ஆகையால் [24]நன்மைசெய்கிறதில் இளைப்படையாமல் இருப்போமாக; [25]நாம் தளர்ந்துபோகாதிருந்தால் ஏற்றகாலத்திலே அறுப்போமே.

௰ இப்படியிருக்க, [26]நமக்குக் காலம் நேரிடுகிறபடி [27]யாவருக்கும், விசேஷமாக [28]விசுவாசிகளாகிய குடும்பத்தாருக்கு நன்மைசெய்யக்கடவோம்.

௰௧ ¶ பாருங்கள், இவ்வளவு என் கையெழுத்தோடே எழுதினேன்.

௰௨ சரீரத்தின்படி நல்லவர்களாகத் தோன்ற விரும்புகிறபேர்கள் [29]தாங்கள் கிறிஸ்துவினுடைய சிலுவையின்நிமித்தம் [30]துன்பப்படாதபடிக்குமாத்திரமே உங்களை [31]விருத்தசேதனம்பண்ணிக்கொள்ளக் கட்டாயம்பண்ணுகிறார்கள்.

௰௩ விருத்தசேதனத்தை அடைந்

23 யோபு. ௪. ௮. யாக். ௰௩. ௰௮: ௨௨. ௮. ஓசே. ௮. ௭: ௰. ௰௨. உரோ. ௮. ௰௩. யாக். ௩. ௰௮.—24 ௧ கொரி. ௰௫. ௫௮. ௨ தெச. ௩. ௰௩. 25 மத். ௨௪. ௰௩. எபி. ௩. ௬, ௰௪: ௰. ௩௬: ௰௨. ௩, ௫. வெளி. ௨. ௰.—26 யோவா. ௯. ௪: ௰௨. ௩௫.—27 ௧ தெச. ௫. ௰௫. ௧ தீமோ. ௬. ௰௮. தீத். ௩. ௮.—28 எபே. ௨. ௰௯. எபி. ௩. ௬.—29 கலா. ௫. ௰௧.—30 பிலி. ௩. ௰௮.—31 கலா. ௨. ௩, ௰௪.

Digitized by Google

திருக்கிறவர்களும் நியாயப்பிரமாணத்தைக் கைக்கொள்ளாமலிருக்கிறார்கள்; அப்படியிருந்தும், அவர்கள் உங்கள் சரீரத்தைக்குறித்து மேன்மைபாராட்டும்படிக்கு, நீங்கள் விருத்தசேதனம் பண்ணிக்கொள்ளவேண்டும் என்று இருக்கிறார்கள்.

௰௪ நான் நம்முடைய கர்த்தராகிய இயேசுக்கிறிஸ்துவின் சிலுவையைக்குறித்தே அல்லாமல் வேறொன்றைக்குறித்தும் [1]மேன்மைபாராட்டாதிருப்பேனாக; அவரால்* உலகம் எனக்குச் [2]சிலுவையில் அறையுண்டிருக்கிறது; நானும் உலகத்திற்கு அப்படியே இருக்கிறேன்.

௰௫ [3]கிறிஸ்து இயேசுவினிடத்தில் விருத்தசேதனத்தாலாவது விருத்தசேதனம் இல்லாமையாலாவது பிரயோசனம் இல்லையே; [4]புதியசிருட்டியாகிறதினாலே பிரயோசனம் வரும்.

௰௬ [5]இந்தப் பிரமாணத்தின்படியே [6]நடந்துவருகிறவர்கள் எவர்களோ, பராபரனுடைய [7]இஸ்ரவேலராகிய அவர்களுக்கும் சமாதானமும் இரக்கமும் உண்டாயிருக்கக்கடவது.

௰௭ ¶ கடைசியிலே கர்த்தராகிய இயேசுக்கிறிஸ்துவினுடைய [8]அச்சடையாளங்களை நான் என் சரீரத்திலே சுமந்துகொண்டிருக்கிறபடியால், ஒருவனும் எனக்கு அதிக வருத்தம் உண்டாக்காதிருப்பானாக.

௰௮ சகோதரரே, [9]நம்முடைய கர்த்தராகிய இயேசுக்கிறிஸ்துவின் கிருபை உங்கள் ஆவியுடனே இருக்கக்கடவது.—ஆமென்.

கி. பி. ௬௮.

1 பிலி. ௩. ௩, ௭, ௮.
* அல்லது அதினால்.
2 உரோ. ௬. ௬. கலா. ௨. ௨௰.
3 ௧ கொரி. ௭. ௰௯. கலா. ௫. ௬. கொலோ. ௩. ௰௧.
4 ௨ கொரி. ௫. ௰௭.
5 பிலி. ௩. ௰௬.
6 சங். ௧௨௫. ௫.
7 உரோ. ௨. ௨௯: ௪. ௰௨: ௯. ௬, ௭, ௮. கலா. ௩. ௭, ௯, ௨௯. பிலி. ௩. ௩.
8 ௨ கொரி. ௧. ௫: ௪. ௰: ௰௧. ௨௩. கலா. ௫. ௰௧. கொலோ. ௧. ௨௪.
9 ௨ தீமோ. ௪. ௨௨. பிலே. ௨௫.

Digitized by Google

# EPHESIANS.

அப்போஸ்தலனாகிய பவுல்

# எபேசியருக்கு எழுதின

## நிருபம்.

### க. அதிகாரம்.

**க. பவுல் எபேசிலுள்ள சபையை வாழ்த்தி, உ. அவர்களுக்காகப் பராபரனை ஸ்தோத்திரித்து, ௩. பராபரன் நம்மைத் தெரிந்துகொண்டதையும், ௪. கிருபையினால் நாம் புத்திரசுவிகாரம் அடைந்ததையும், ௭. மனுஷனுடைய இரட்சிப்புக்கு மூலகாரணமாய் இருக்கிறதென்பதையும் சொல்லி, ௯. இந்த இரகசியத்தின் மேன்மை எளிதாய்க் கண்டறியக்கூடாததினாலே, ௰௩. அவர்கள் அந்த அறிவுக்கு வந்து எட்டவும், ௰௮. கிறிஸ்துவுக்குள் அதைச் சுதந்தரித்துக்கொள்ளவும் வேண்டிக்கொண்டது.**

[1]பராபரனுடைய சித்தத்தினாலே இயேசுக்கிறிஸ்துவினுடைய அப்போஸ்தலனாகிய பவுல், எபேசுவூரிலே [2]கிறிஸ்து இயேசுவினிடத்தில் விசுவாசமும் [3]பரிசுத்தமும் உள்ளவர்களுக்கு எழுதுகிறதாவது:

உ நம்முடைய பிதாவாகிய பராபரனாலும் கர்த்தராகிய இயேசுக்கிறிஸ்துவினாலும் [4]உங்களுக்குக் கிருபையும் சமாதானமும் உண்டாகக்கடவது.

௩ ¶ நம்முடைய கர்த்தராகிய இயேசுக்கிறிஸ்துவினுடைய பிதாவுமாய்த் தேவனுமாயிருக்கிறவருக்குத் [5]தோத்திரம் உண்டாவதாக; என்னத்தினாலெனில், அவர் தமக்குமுன்பாக [6]நாம் பரிசுத்தராயும் பிழையில்லாதவர்களாயும் இருப்பதற்கு [7]லோகத்தோற்றத்திற்குமுன்னே இயேசுக்கிறிஸ்துவின்மூலமாய் [8]நம்மைத் தெரிந்துகொண்டபடியே,

௪ அவர் மூலமாய்ப் பரமஸ்தலங்களிலே* பலவித திவ்விய நன்மைகளால் நம்மை ஆசீர்வதித்தார்.

௫ அன்றியும் [9]அவர் தமக்கு அன்பாயிருக்கிறவருக்குள் [10]நமது மேல் வைத்தருளின தமது கிருபையின் மகிமைக்குப் புகழ்ச்சியாக,

௬ [11]தம்முடைய தயையுள்ள சித்தத்தின்படி இயேசுக்கிறிஸ்துமூலமாக நம்மைத் தமக்குப் [12]புத்திரசுவிகாரம் உள்ளவர்களாக அன்பினாலே [13]முன்குறித்திருக்கிறார்.

௭ அன்றியும் அவர் மிகுந்த விவேகத்தோடும் புத்தியோடும் நமக்குச் சம்பூரணமாய்த் தெரியப்படுத்தின [14]ஐசுவரியமான கிருபையின்படியே,

௮ [15]அந்த இயேசுக்கிறிஸ்து தமது திரு இரத்தத்தைச் சிந்தினதினா

கி. பி. ௬௪.

1 உ கொரி. க. க.
2 க கொரி. ௪. ௰எ. எபே. ௬. உ௧. கொலோ. க. உ.
3 உரோ. க. எ. உ கொரி. க. க.
4 கலா. க.௩. தீத். க. ௪.
5 உ கொரி. க.௩. க பே. க. ௩.
6 லூக். க. எ௫. எபே. உ. ௰:௫. உஎ. கொலோ. க.உஉ. க தெச. ௪. எ. தீத். உ. ௰உ.
7 க பே. க. உ, உ௰.
8 உரோ. அ. உ௯. உ தெச. உ.௰௩. உதீமோ. க.௯.யாக்.உ.௫. க பே.க.உ: உ. ௯.
* அல்லதுகாரியங்களிலே; எபே. க. ௰உ.
9 மத். ௩. ௰எ:௰எ. ௫. யோவா. க. க௫: ௰. ௰எ.
10 உரோ க.உ௪: ௫. ௰௫.

11 மத்.௰௧.உ௬. லூக்.௰உ.௩உ. க கொரி.க.உக. ௯.வச.—12 யோவா.க.௰உ. உரோ.அ.௰௫. உ கொரி.௬.௰அ. கலா.௪.௫. க பே.க.௩.—13 உரோ.அ.உ௯: ௰.௰௧.வச.—14 உரோ.உ.௪: ௯.உ௩: ௯.உ௬. எபே.உ.எ:௩.அ,௰௬. பிலி.௪.௰௯.
15 அப்.உ௰.உ௮. உரோ.௩.உ௪. கொலோ.க.௰௪. எபி.௯.௰உ. க பே.க.௰௮,௰௯. வெளி.௫.௯.

Digitized by Google

லே நமக்குப் பாவமன்னிப்பாகிய மீட்பு உண்டாயிருக்கின்றது.

க மேலும், [1]காலங்கள் நிறைவேறும்பொழுது, உண்டாகும் விசாரணையினாலே வானங்களிலும்* பூமியிலும் உள்ளவைகள் [2]யாவும் தலையாகிய கிறிஸ்துவுக்குக் [3]கீழாகக் கூட்டப்படவேண்டுமென்று,

ய [4]தமக்குள்ளே தீர்மானித்திருந்த சந்தோஷமான [5]சித்தத்தின் இரகசியத்தை எங்களுக்கு அறிவித்தார்.

யக மேலும், [6]தமது சித்தத்தினுடைய ஆலோசனைக்குத்தக்கதாக எல்லாவற்றையும் நடப்பிக்கிற அவருடைய தீர்மானத்தின்படியே,

யஉ [7]நாங்கள் கிறிஸ்துவின்மேல் முன்னே நம்பிக்கையாயிருந்த† வர்களாய் [8]அவருடைய மகிமைக்குப் புகழ்ச்சியாய் இருக்கும்படிக்கு, [9]முன் குறிக்கப்பட்டு, அவராலே [10]சுதந்தரத்தையும் அடைந்தோம்.

யங நீங்களும் அப்படியே (சுதந்தரராகும்படிக்கு,) உங்கள் இரட்சிப்புக்கு ஏற்ற சுவிசேஷமாகிய [11]சத்திய வசனத்தைக் கேட்டு விசுவாசித்து வாக்குத்தத்தம்பண்ணப்பட்ட பரிசுத்தஆவியோடே அவரால் [12]முத்திரைப்படுத்தப்பட்டீர்கள்.

யச [13]சம்பாதிக்கப்பட்டவர்கள் [14]அவருடைய மகிமைக்குப் புகழ்ச்சியாக [15]மீட்கப்படுமளவும் [16]அந்த ஆவியானவர் நம்முடைய சுதந்தரத்திற்கு அச்சாரமாயிருக்கிறார்.

யரு ¶ ஆனபடியினாலே கர்த்தராகிய இயேசுவின்மேலுள்ள உங்கள் விசுவாசத்தையும் எல்லாப் பரிசுத்தவான்கள்மேல் உள்ள உங்கள் அன்பையும் [17]நான் கேள்விப்பட்டபின்பு,

யசா [18]இடைவிடாமல் உங்களுக்காகத் தோத்திரம்பண்ணி, என் செபங்களில் உங்களை நினைத்து,

யஎ [19]நம்முடைய கர்த்தராகிய இயேசுக்கிறிஸ்துவின் தேவனுமாய் மகிமையின் பிதாவுமாயிருக்கிறவர் [20]அவரை அறிந்துகொள்ளுதற்கு ஏற்ற ‡ ஞானத்தையும் தெளிவையும் அளிக்கிற ஆவியை உங்களுக்குக் கொடுக்கவேண்டுமென்றும்,

யஅ தாம் நம்மை அழைத்ததினாலே [21]நாம் நம்பத்தக்க பாக்கியம் இன்னதென்றும், பரிசுத்தவான்களுக்குத் தாம் கொடுக்கும் [22]சுதந்தரத்தின் மகிமையின் பெருமை இன்னதென்றும்,

யகூ [23]தாம் கிறிஸ்துவை மரித்தோரிலிருந்து எழுப்பி, [24]எல்லாத் துரைத்தனங்களுக்கும் அதிகாரங்களுக்கும் வல்லமையுள்ளவர்களுக்கும் கர்த்தாக்களுக்கும் இம்மையிலேமாத்திரம் அல்ல, [25]மறுமையிலேயும் மற்றும் பேர்கொண்டிருக்கிற யாவற்றிற்குமேல் உயர்ந்திருக்கத்தக்கதாக,

உய [26]அவரைப் பரமண்டலங்களிலே தமது வலதுபாரிசத்திலே உளுக்காரும்படி செய்து,

உக [27]இப்படிச் சகலத்தையும் அவருடைய பாதங்களின் கீழ்ப்படுத்தி, (அவருடைய) சபைக்காக [28]அவரைச் சகலத்திற்கும் தலைவராக ஏற்படுத்தி,

உஉ இப்படி அவரிடத்தில் வெளிப்படுத்தின [29]தமது பலத்த வல்லமையின் தத்துவத்தின்படியே § விசுவாசிகளாகிய நம்மிடத்திலே தாம் காண்பிக்கும் வல்லமையின் மகா மேன்மை இன்னதென்றும் நீங்கள் அறியும்படிக்கு, [30]பிரகாசமுள்ள புத்தியாகிய கண்களைக் கொடுக்கவேண்டும் என்றும் (செபம்பண்ணுகிறேன்).

கி. பி. கூச.

1 கலா. ச. ச. எபி.க. உ: கூ.ம. க பே. க. உம.
* அல்லது வானத்திலும்.
2 பிலி. உ. கூ, ம. கொலோ. க. உம.
3 க கொரி. க. உஉ, உக: மக. க. எபே. உ. மஐ: க. மஐ.
4 எபே. க. மக உ தீமோ. க. கூ.
5 உரோ. மக. உஐ. எபே. க. ச, கூ கொலோ. க. உக.
6 ஏசா. சக. ம, மக.
7 யாக். க. மஅ.
† அல்லது விசுவாசித்த.
8 க, மச. வச. உ தெச. உ.மக.
9 ஐ. வச.
10 அப். உம. கஉ: உக.மஅ.உரோ. அ. மஎ. கொலோ. க.மஉ: க. உச. தீத். க. எ. யாக். உ. ஐ. க பே. க. ச.
11 யோவா. க. மஎ. உ கொரி. க. எ.
12 உ கொரி. க. உஉ, எபே. ச. கம.
13 அப். உம. உஅ.
14 க, மஉ. வச. க பே. உ கூ.
15 லூக். உக. உஅ. உரோ. அ. உக, எபே. ச. கம.
16 உ கொரி. க. உஉ: ஐ. ஐ.
17 கொலோ. க. ச. பிலே. ஐ.
18 உரோ. க. கூ. பிலி. க. க, ச. கொலோ. க.க. க தெச. க. உ. உ தெச. க. க.
19 யோவா. உம. மஎ.
20 கொலோ. க. கூ.

‡ அல்லது அறிக்கைபண்ணுதற்கேற்ற; கொலோ. உ. உ.—21 எபே. உ. மஉ: ச. ச.—22 மக. வச.—23 அப். உ. உச, கக. 24 உரோ அ. கஅ. கொலோ. க மக: உ. மஐ.—25 பிலி. உ. கூ, ம. கொலோ. உ. ம. எபி க. ச.—26 சங். கமக. அப். எ. ஐஐ, ஐக. கொலோ. க க. எபி. க. க: ம. மஉ.-27 சங். அ. க. மத். உஅ. மஅ. க கொரி. மஐ. உஎ. எபி. உ. அ.-28 எபே. ச. மஐ, மக. கொலோ. க. மஅ. எபி. உ. எ.-29 எபே. க. எ. கொலோ. க. உக: உ. மஉ.-§ இசேர்க்கு, வல்லமையின் பலத்தத்துவத்தின்படியே.-30 அப். உக. மஅ.

Digitized by Google

உக (அவருடைய சபை) [1]எல்லாவற்றையும் எல்லாவற்றாலும் நிரப்புகிறவருடைய [2]நிறைவான [3]சரீரமாய் இருக்கின்றது.

## உ. அதிகாரம்.

*க. சுபாவத்திலே நமக்கிருக்கும் நிலைமையையும், ஙி. கிருபையினால் நமக்கு உண்டாகும் வேற்றுமையையும் இன்னதென்று கூறி, ய. நற்கிரியைகளுக்கென்று உண்டாக்கப்பட்டு, யங. கிறிஸ்துவோடு ஐக்கமானவர்கள், யக. அஞ்ஞானிகளைப்போலும், யஉ. அந்நியரைப்போலும் நடவாமல், யக. பரிசுத்தவான்களைச் சேர்ந்தவர்கள்போலும், பராபரனுடைய குடும்பத்தார்போலும் நடக்கவேண்டுமென்பது.*

அக்கிரமங்களாலும் பாவங்களாலும் [4]செத்தவர்களாயிருந்த [5]உங்களையும் உயிர்ப்பித்தார்.

உ [6]முற்காலத்திலே இப்பிரபஞ்சத்தின் வழக்கத்தின்படியேயும், [7]கீழ்ப்படியாமையுள்ள பிள்ளைகளிடத்தில் இப்பொழுது கிரியை செய்கிற ஆகாசத்தின் [8]அதிகாரமுள்ள பிரபுவாகிய ஆவியின்படியேயும், அவைகளில் நடந்துகொண்டீர்கள்.

ங [9]அவர்களோடேகூட நாங்கள் எல்லாரும் முற்காலத்திலே [10]எங்கள் மாம்சதேக இச்சைகளின்படியே நடந்து, எங்கள் மாம்சதேகமும் சிந்தனைகளும் இச்சித்தவைகளைச்* செய்து, [11]மற்றவர்களைப்போலக் கோபாக்கினைக்கு உள்ளானவர்களாயிருந்தோம்.

ச இப்படி நாம் [12]அக்கிரமங்களினாலே செத்தவர்களாயிருக்கையில்,

ரு [13]இரக்கத்தில் ஐசுவரியமுள்ள பராபரன் தாம் நமதுமேல் வைத்த மிகுந்த அன்பினாலே [14]நம்மைக் கிறிஸ்துவுடனேகூட உயிர்ப்பித்தார்; கிருபையினாலே† இரட்சிக்கப்பட்டீர்கள்.

சு [15]கிறிஸ்து இயேசுவுக்குள்ளே அவர் நமதுமேல் வைத்த தயவினாலே தம்முடைய கிருபையின் மிகுந்த ஐசுவரியத்தை வருங்காலங்களிலே திருஷ்டாந்தமாய்க் காண்பிப்பதற்காக,

எ நம்மைக் கிறிஸ்து இயேசுவுடனேகூட எழுப்பி, [16]பரமண்டலங்களிலே இருக்கும்படி செய்தார்.

அ [17]கிருபையினாலே [18]விசுவாசத்தைக்கொண்டு இரட்சிக்கப்பட்டீர்கள்.

க அது உங்களாலும் அல்ல, [19]கிரியைகளினாலும் அல்ல, ஒருவரும் மேன்மைபாராட்டாதபடிக்கு, [20]அது பராபரனுடைய ஈவாயிருக்கின்றது.

ய நற்கிரியைகளைச் செய்வதற்கு நாம் கிறிஸ்து இயேசுவினாலே சிருஷ்டிக்கப்பட்டு, பராபரனுடைய [21]செய்கையாயிருக்கிறோமே; அவைகளை நாம் செய்து நடக்கும்படிக்கு [22]அவர் நம்மை முன்னாக எத்தனம்பண்ணி‡ இருக்கிறார்.

யக ¶ ஆனபடியினாலே முன்னே சரீரத்தின்படி புறத்தேசத்தாராயிருந்து, [23]சரீரத்திலே கையினால் செய்யப்படுகிற விருத்தசேதனம் உள்ளவர்களாலே விருத்தசேதனம் இல்லாதவர்கள் என்னப்பட்ட நீங்கள்,

யஉ [24]அக்காலத்திலே கிறிஸ்துவைச் சேராதவர்களுமாய், [25]இஸ்ரவேலருடைய காணியாட்சிக்குப் புறம்பானவர்களுமாய் [26]வாக்குத்தத்தத்தின் உடம்படிக்கைகளுக்கு அந்நியருமாய், [27]நம்பிக்கையில்லாதவர்களுமாய், [28]பராபரனை இழந்தவர்களுமாய் இவ்வுலகத்திலே இருந்தீர்கள் என்று [29]நினைத்துக்கொள்வீர்களாக.

யங [30]முன்னே தூரமாயிருந்த நீங்கள் இப்பொழுது [31]கிறிஸ்து

கி. பி. கூச.

1 க கொரி. யஉ. க. எபே. ச. ய. கொலோ. க. யக.
2 கொலோ. உ. க.
3 உரோ. யஉ. ரு. க கொரி. யஉ. யஉ,உஎ. எபே. ச,யஉ: ரு. உக, கய. கொலோ. க. யஅ,உச.
4 ரு. வச. எபே. ச. யஅ.
5 யோவா. ரு. உச. கொலோ. உ.யங.
6 க கொரி. சு. யக. எபே. ச. உஉ. கொலோ. க. உக: க. எ. க பேர. ரு.யங.
7 எபே. ரு. சு. கொலோ. க.சு.
8 எபே. சு. யஉ.
9 தீத். க. க. க பே.ச.க.
10 கலா.ரு.யசு.
* இரேக்கு, கருத்தாயிருந்தவைகளை.
11 சங். ருக. ரு. உரோ. ரு. யஉ, யச.
12 உரோ. ரு. க, அ, ய. க. வச.
13 உரோ. ய.யஉ. எபே. க. எ. எ. வச.
14 உரோ. க. ச, ரு. கொலோ. உ.யஉ,யங:க.க, க.
†அல்லது அவருடைய கிருபையினாலே; அப். யரு. யக. அ.வசனம். தீத். க.ரு.
15 தீத். க.ச.
16 எபே. க. உய.
17 ரு.வச.உரோ. க. உச. உ தீமோ க க.
18 உரோ. ச. யக.
19 உரோ. க. உய. உஎ, உஅ: ச. உ:க.யச:யக.க.

க கொரி.க உக,கய,கக. உ தீமோ.க.க. தீத்.க.ரு.—20 மத். யக யஎ.யோவா.க.சச,கரு. உரோ. ய. யச. யரு. யஎ. எபே.க.யக
ரு கலா.க.உக.—21 ரு மோ.சஉ.க. சங்.க.க. ஏசா.யக.உரு: உக.உக: சச.உச. யோவா.க.க,ரு. க கொரி.க.க. உகொரி.ரு.
ரு, யஎ. எபே. ச. உச. தீத். உ. யச.—22 எபே. க. ச.—‡ அல்லது நியமித்து.—23 உரோ. உ. உஅ, உக. கொலோ. உ. யக
24 எபே.ச.யஅ. கொலோ.க.உக.—25 எசே.யக க. யோவா.ய.யக.—26 உரோ.க.ச,அ —27 க தெச.ச.யங.—28 கலா.ச.அ.
க தெச.ச.ரு.—29 க கொரி.யஉ.உ. எபே.ரு.அ. கொலோ.க.உக: உ.யக.—30 அப்.உ.கக. யஎ.வச.—31 கலா.க.உஅ.

Digitized by Google

இயேசுவைச் சேர்ந்து, கிறிஸ்துவினுடைய இரத்தத்தினாலே சமீபமானீர்கள்.

௰௪ எப்படியெனில் [1]அவரே நம்முடைய சமாதானத்திற்குக் காரணராகி, [2]இருதிறத்தாரையும் ஒன்றாக்கி, பிரிவினையாகிய நடுச்சுவரைத் தகர்த்து,

௰௫ சடங்குச்சட்டங்களைக் குறித்து உண்டான கற்பனைகளாகிய நியாயப்பிரமாணமாகிய[3]பகையைத் தம்முடைய சரீரத்தினாலே [4]நீக்கிப்போட்டு, இப்படிச் சமாதானம்பண்ணினதால், [5]இருதிறத்தாரையும் தமக்குள்ளாக ஒரே புதிய மனிதனாகச் சிருட்டித்து,

௰௬ [6]பகைக்கு ஏதுவானதைத் தம்மாலே* அழித்ததால், சிலுவையினால் இருதிறத்தாரையும் ஒரே சரீரமாகப் பராபரனுக்கு [7]ஒப்புரவாக்கினார்.

௰௭ அல்லாமலும் அவர் வந்து, தூரமாயிருந்த உங்களுக்கும் [8]சமீபமாயிருந்த அவர்களுக்கும் [9]சமாதானத்தைச் சுவிசேஷமாக அறிவித்தார்.

௰௮ அந்தப்படியே நாம் இருதிறத்தாரும் [10]ஒரே ஆவியோடே பிதாவினிடத்தில் சேருகிற நிலைமையை [11]அவராலே பெற்றிருக்கிறோம்.

௰௯ ¶ ஆகையால் நீங்கள் இனிமேல் அந்நியருமாய், குடும்பத்தைச்சேராதவர்களுமாய் இராமல், [12]பரிசுத்தவான்களோடே கூட்டப்பட்டவர்களுமாய், [13]பராபரனுடைய குடும்பத்தைச் சேர்ந்தவர்களுமாய்,

௨௰ [14]அப்போஸ்தலர் தீர்க்கதரிசிகள் என்பவர்களுடைய [15]அஸ்திபாரத்தின்மேல் [16]கட்டப்பட்டவர்களுமாய் இருக்கிறீர்கள்; [17]அந்த அஸ்திபாரத்திற்கு இயேசுக்கிறிஸ்து தாமே மூலைக்கல்லாயிருக்கிறார்.

௨௰௧ [18]அவர்மேலே மாளிகை முழுவதும் இசைவாய் இணைக்கப்பட்டு, [19]கர்த்தருக்குப் பரிசுத்த ஆலயமாகப் பெருகுகின்றது.

௨௰௨ [20]அவர்மேலே நீங்களும் ஆவியினாலே பராபரனுடைய வாசஸ்தலமாகக் கூட்டிக் கட்டப்பட்டிருக்கிறீர்கள்.

## ௩. அதிகாரம்.

௧. புறச்சாதிகளும் இரட்சிக்கப்படவேண்டுமென்ற பரமஇரகசியம், ௭. பவுலுக்கு வெளிப்படுத்தப்பட்டு, ௯. தனக்கு அருள் கிடைத்ததென்று சொல்லி, ௰. அதை யாவருக்கும் அறிவிக்க, ௱ தான் அநுபவிக்கிற உபத்திரவங்களினிமித்தம் அவர்கள் சோர்ந்துபோகாதிருக்கவும், ௰௪. அவர்கள்மேல் கிறிஸ்து பாராட்டின மிகுந்த அன்பை அவர்கள் அறியவும், ௰௬. பவுல் வேண்டிக்கொண்டது.

இது முகாந்தரமாகப் பவுல் என்னும் நான் [21]புறத்தேசத்தாராய் இருக்கிற உங்களுக்காகக் கிறிஸ்து இயேசுவினிமித்தம் [22]காவலில் வைக்கப்பட்டவனாயிருக்கிறேன்.

௨ [23]உங்களுக்காக எனக்குக் கொடுத்திருக்கிற தேவகிருபையைக் காட்டிய [24]உத்தியோகம் இன்னதென்று கேட்டிருப்பீர்களே.

௩ என்னவெனில், புறத்தேசத்தார் சுவிசேஷத்தினாலே [25]உடன் சுதந்தரருமாய் [26]அவர்களுடனே கூட ஒரே சரீரமுமாய், கிறிஸ்துவின்மேல் அவர் பண்ணின வாக்குத்தத்தத்திற்கு [27]உடன் பங்காளிகளுமாய் இருக்கிறார்கள் என்று [28]இந்த இரகசியத்தை அவர் எனக்கு வெளிப்படுத்தி அறிவித்தார்.

௪ [29]முன்னே† நான் இதைக்குறித்துச் சுருக்கமாய் எழுதினேன்.

௫ அதை நீங்கள் வாசிக்கையில், [30]கிறிஸ்துவின் இரகசியத்

கி. பி. ௬௰௪.

1 மீகா. ௫. ௫. யோவா. ௰௬.௩௩. அப். ௰. ௩௬. உரோ. ௫. ௧. கொலோ.௧.௨௰.
2 யோவா. ௰.௰௬. கலா. ௩. ௨௮.
3 கொலோ. ௨. ௰௪.
4 கொலோ. ௨. ௰௪,௨௰.
5 ௨ கொரி. ௫. ௰௭. கலா. ௬. ௰௫ எபே. ௪. ௨௪.
6 உரோ. ௮ ௭. அ.௧.கொலோ. ௨.௰௪.
* அல்லது சிலுவையிலறைபுண்டு.
7 கொலோ. ௧. ௨௰, ௨௧, ௨௨.
8 சங். ௱௪௮.௰௪.
9 ஏசா. ௫௭. ௰௯. சகரி. ௯. ௰. அப். ௨. ௩௯: ௰. ௩௬. உரோ. ௫.௧.௰௪. ௰௪. ௨௪.
10 ௧ கொரி. ௰௨. ௰௩. எபே. ௪. ௪.
11 யோவா.௰ ௯: ௰௪. ௬. உரோ. ௫. ௨. எபே.௩. ௰௨. எபி. ௪. ௰௬:௰.௰௯, ௨௰. ௧ பே ௩.௰௮.
12 பிலி. ௩. ௨௰. எபி.௰௨. ௨௨, ௨௩.
13 கலா. ௬. ௰. எபே.௩.௰௫.
14 ௧ கொரி. ௰௨. ௨௮. எபே. ௪. ௰௧.
15 மத். ௰௬. ௰௮. கலா. ௨. ௯. வெளி. ௨௧. ௰௪.
16 ௧ கொரி.௩.௯, ௰. எபேச.௰௨. ௧ பே. ௨. ௪, ௫.
17 சங். ௱௰௮. ௨௨.ஏசா.௨௮. ௰௬. மத். ௨௧. ௪௨.
18 எபே. ௪. ௰௫, ௰௬.

19 ௧ கொரி. ௩. ௰௭: ௬. ௰௯. ௨ கொரி. ௬. ௰௬.—20 ௧ பே. ௨. ௫.—21 கலா. ௫. ௰௧. கொலோ. ௧. ௨௪. ௨ தீமோ. ௨. ௰. 22 அப். ௨௧.௩௩. ௨௮.௰௭,௨௰. எபே.௪.௧: ௬.௨௰. பிலி.௧.௭,௰௩,௰௪,௰௬. கொலோ.௪.௩,௰௮. பிலே.௧.௯. ௨ தீமோ.௧.௮: ௨.௯.—23 அப். ௯.௰௫: ௰௩.௨. உரோ.௰௨.௩. கலா.௧.௰௬. ௮. ௪௯.—24 உரோ. ௧. ௫: ௰௧.௰௩. ௧ கொரி. ௪. ௧. எபே. ௪. ௪. கொலோ. ௧. ௨௫.—25 கலா. ௩. ௨௮. ௨௯. எபே. ௨. ௰௪.—26 எபே. ௨. ௰௫, ௰௬.—27 கலா. ௩. ௰௪.—28 உரோ.௰௬.௨௫. கொலோ.௪.௨௬,௨௭.—29 எபே.௧.௯,௰.—† அல்லது சற்றுமுன்னே.—30 ௧ கொரி.௪.௧. எபே.௬.௰௯.

Digitized by Google

நைக்குறித்து எனக்கு உண்டாயிருக்கிற அறிவை அறிந்துகொள்வீர்கள்.

௫ [1]அந்த இரகசியம் இப்பொழுது அவருடைய பரிசுத்த அப்போஸ்தலருக்கும் தீர்க்கதரிசிகளுக்கும் தேவ ஆவியினாலே வெளிப்படுத்தப்பட்டிருக்கிறதுபோல, [2]முன்னிருந்த தலைமுறைகளின் மனிதர்களுக்கும் தெரியப்படுத்தப்பட்டிருக்கவில்லை.

௭ [3]இந்தச் சுவிசேஷத்திற்கு நான் [4]பராபரனுடைய பலத்த தத்துவத்தால் [5]எனக்கு அளிக்கப்பட்ட கைமாறில்லாத கிருபையினாலே [6]ஊழியக்காரனானேன்.

௮ [7]பராபரன் நம்முடைய கர்த்தராகிய கிறிஸ்து இயேசுவினால் செய்து முடித்த அநாதியான தீர்மானத்தின்படியே,

௯ அநேகவிதமான தமது ஞானம் பரமண்டலங்களில் உள்ள [8]துரைத்தனங்களுக்கும் அதிகாரங்களுக்கும் [9]சபையினாலே தெரியவரும் [10]பொருட்டாக,

௰ [11]கிறிஸ்துவினுடைய அளவற்ற ஐசுவரியத்தைப் [12]புறத்தேசத்தாரிடத்தில் சுவிசேஷமாக அறிவிக்கிறதற்கும்,

௰௧ [13] இயேசுக்கிறிஸ்துவைக்கொண்டு எல்லாவற்றையும் சிருட்டித்த பராபரனுக்குள்ளே [14]ஆதிகாலங்கள்முதல் மறைந்திருந்த [15]இரகசியத்தோடே ஐக்கப்படுதல் இன்னதென்று எல்லாருக்கும் வெளிச்சமாகக் காண்பிக்கிறதற்குமான அந்தக் கிருபையே, [16]எல்லாப் பரிசுத்தவான்களிலும் சிறியவனாகிய எனக்குக் கொடுக்கப்பட்டிருக்கின்றது.

௰௨ அந்த இயேசுக்கிறிஸ்துவினாலே [17]அவனைப்பற்றும் விசுவாசத்தால் நமக்குத் தயிரியமும் திடநம்பிக்கையோடே [18]பராபர

இ. பி. ௬௪.

1 எபே. உ. உ௰.
2 அப். ௰. உ௮. உரோ ௰௬. உ௫. ௯. வச.
3 கலா. க. ௰உ.
4 உரோ. ௰௫. ௰௮. எபே. க. ௰௯. கொலோ. க. உ௯.
5 உரோ. க. ௫.
6 உரோ. ௰௫. ௰௬. கொலோ. க. உ௬, உ௫.
7 எபே. க. ௯.
8 உரோ. ௮. ௬௮. எபே. க. உ௬. கொலோ. க ௰௬. க பே. க. உஉ.
9 க கொரி. உ. எ. க தீமோ. க ௰௬.
10 க பே. க. ௰உ.
11 எபே. க. எ. கொலோ. க. உ எ.
12 கலா. க. ௰௬: உ. ௮. க தீமோ. உ. எ. உ தீமோ. க. ௰௬.
13 சங். ௬௬. ௯.
14 உரோ. ௰௯. உ௫. ௫. வச. க கொரி. உ. எ. கொலோ. க. உ௬.
15 ௯. வச. எபே. க. ௯.
16 க கொரி. ௰௫. ௯. க தீமோ. க. ௰௬, ௰௫.
17 எபி. ச. ௰௬.
18 எபே. உ௰௮.
19 க. வச.
20 அப். ௰௪. உஉ. பிலி. க. ௰௪. க தெச. ௩. ௩.
21 உ கொரி. க. ௯.
22 எபே. க. ௰. பிலி. உ. ௯, ௰, ௰௬.
23 உரோ. எ. உஉ. உ கொரி. ச. ௰௬.
24 எபே. ௯. ௰. கொலோ. க. ௰௬
25 யோவா. ௰௪. உ௩. எபே. உ. உஉ.

னைச் சேருகிற நிலைமையும் உண்டாயிருக்கிறது.

௰௩ ஆகையால் [19]உங்கள்நிமித்தமாக நான் அநுபவிக்கிற [20]உபத்திரவங்களினால் நீங்கள் சோர்ந்துபோகாதிருக்க வேண்டிக்கொள்ளுகிறேன்.

௰௪ ¶ [21]அவைகள் உங்களுக்கு மகிமையாயிருக்கின்றனவே.

௰௫ அதற்காக நான் [22]பரமண்டலங்களிலும் பூமியிலும் உள்ள குடும்பத்தார் எல்லாருக்கும் நாமத்தைக் கொடுத்தவராகிய நம்முடைய கர்த்தராயிருக்கிற இயேசுக்கிறிஸ்துவினுடைய பிதாவைநோக்கி என் முழங்கால்களை முடக்கி,

௰௬ [23]நீங்கள் உங்கள் உள்ளத்திலே [24]அவருடைய ஆவியினாலே வல்லமையாய்ப் பலப்படுத்தப்படும்படியாகவும்,

௰௭ [25]விசுவாசத்தினாலே கிறிஸ்து உங்கள் இருதயங்களில் வாசமாயிருக்கும்படியாகவும், நீங்கள் [26]அன்பிலே வேரூன்றி, அஸ்திபாரப்பட்டவர்களாய்,

௰௮ சகல பரிசுத்தவான்களோடுங்கூடக் கிறிஸ்துவினுடைய (அன்பின்) [27]அகலமும் நீளமும் ஆழமும் உயரமும் இன்னதென்று உணர்ந்துகொண்டு,

௰௯ அறிவுக்கு மேலான அவ்வன்பை அறிந்துகொள்ளுதற்கு [28]வல்லவர்களாகும்படியாகவும், (இப்படி) பராபரனுடைய [29]மிகுந்த பரிபூரணத்தால் நிறையப்படும்படியாக, [30]அவர் தம்முடைய மகிமையின் ஐசுவரியத்தின்படியே, உங்களுக்கு அநுக்கிரகம்பண்ண வேண்டும் என்று வேண்டிக்கொள்ளுகிறேன்.

௨௰ ¶ [31]நாம் வேண்டிக்கொள்ளுகிறதற்கும் நினைக்கிறதற்கும் மிகவும் அதிகமாய் [32]நமக்குள்ளே கிரியைசெய்கிற வல்லமையின்ப

26 கொலோ. க. உ௩: உ. எ.—27 உரோ. ௰. க, ௯, ௰உ.—28 எபே. க. ௰௮.—29 யோவா. க. ௰௬. எபே. க. உ௩. கொலோ. உ. ௯, ௰.—30 உரோ. ௯. உ௩. எபே. க. எ. பிலி. ச. ௰௯. கொலோ. க. உ௭.—31 க கொரி. உ. ௯. 32 எ. வச. கொலோ. க. உ௯.

Digitized by Google

டியே செய்ய [1]வல்லமையுள்ள [2]அவருக்கு,

உக கிறிஸ்து இயேசுவைப்பற்றிய சபையினாலே எல்லாத் தலைமுறைகளிலேயும் என்றென்றைக்கும் துதியுண்டாவதாக.—ஆமன்.

## ச. அதிகாரம்.

க. ஐக்கமாயிருக்கவும், எ. திருச்சபை, யக. நிலைபெற்று, யக. கிறிஸ்துவுக்குள் ஓங்கவும் கட்டளையிட்டு, பராபரன் மனுஷர்களுக்குப் பல ஈவுகளை அளிக்கிருரென்று சொல்லி, யஅ. அஞ்ஞானிகளுடைய அசுத்தங்களை விட்டுவிலகி, உச. புதிய குணத்தைத் தரித்துக்கொண்டு, உரு. பொய்யையும், உக. கெட்ட சம்பாஷணையையும் நீக்கிவிடச் சொன்னது.

ஆனதால் [3]கர்த்தர்நிமித்தம்* காவலில்வைக்கப்பட்டிருக்கிற நான் உங்களுக்குச் சொல்லுகிற புத்தி என்னவெனில், அழைக்கப்பட்டிருக்கிற நீங்கள் அந்த அழைப்புக்குப் பாத்திரராய்,

உ [4]மிகுந்த மனத்தாழ்மை, பொறுமை, நீடிய சாந்தத்தோடும் [5]நடந்துகொண்டு, ஒருவரை ஒருவர் அன்பாய்த் தாங்கிக்கொண்டு,

ங [6]சமாதானக் கட்டினாலே ஆவியின் ஒருமையைக் காத்துக்கொள்ளச் சாக்கிரதையாய் இருப்பீர்களாக.

ச உங்களுக்கு உண்டான அழைப்பினாலே நீங்கள் [7]ஒரே நம்பிக்கைக்கு அழைக்கப்பட்டது போல,

ரு [8]ஒரே சரீரமும் [9]ஒரே ஆவியும் [10]ஒரே கர்த்தரும் [11]ஒரே விசுவாசமும் [12]ஒரே ஞானஸ்நானமும்,

சா [13]எல்லாருக்கும் ஒரே தேவனும் பிதாவும் உண்டு; அவர் எல்லாவற்றின்மேலும் [14] எல்லாவற்றின் வழியாயும் உங்கள் எல்லாருக்குள்ளும் இருக்கிறவர்.

எ ¶ இப்படியிருந்தும் கிறிஸ்துவினுடைய ஈவின் அளவுக்குத்தக்கதாக [15]நம்மில் அவனவனுக்குக் கிருபை கொடுத்திருக்கிறது.

அ ஆனதால் [16]அவர் உன்னதத்திற்கு ஏறி, [17]சிறையாக்கினவைகளைச்† சிறையாக்கிப்போட்டு, மனிதருக்கு ஈவுகளைக் கொடுத்தார் என்று அவர் சொல்லியிருக்கிறார்.

கூ [18]அவர் ஏறினதால் அதற்கு முன்னே மிகவும் தாழ்ந்த பூதலங்களில் இறங்கினார் என்று விளங்குகின்றது அல்லவா?

ய இறங்கிவந்த அவரே [19]எல்லாவற்றையும் நிரப்பத்தக்கதாக,‡ எல்லா வானங்களின்மேலும் [20]ஏறினவராயும் இருக்கிறார்.

யக மேலும், நாம் அனைவரும் பராபரனுடைய குமாரனைப்பற்றிய விசுவாசத்திலேயும் [21]அறிவிலேயும் ஒருமையுள்ளவர்களாகி,§ கிறிஸ்துவினுடைய நிறைவான வளர்த்தியின்|| அளவுக்குத்தக்கதாகத் [22]தேறினவர்களாயிருக்குமளவாக்கும்,

யஉ [23]கிறிஸ்துவினுடைய சரீரமாகிய சபையை எழுப்பிக் [24]கட்டுதற்கு ஏதுவான ஊழியத்தின் கிரியைக்குப் [25]பரிசுத்தவான்கள் நிறைவாக்கப்படும்பொருட்டாக,

யங அவரே சிலரை [26]அப்போஸ்தலராகவும் சிலரைத் தீர்க்கதரிசிகளாகவும் சிலரைச் [27]சுவிசேஷகராகவும் சிலரை [28]மேய்ப்பராகவும் [29]உபதேசிகளாகவும் ஏற்படுத்தினார்.

யச மனிதருடைய சூதும், [30]வஞ்சிக்கிறதற்கு ஏதுவான தந்திரமுமுள்ள போதகமாகிய பலவிதக் [31]காற்றினாலே, [32]நாம் இனி அடிக்கப்பட்டு அலைகிற [33]பிள்ளைகளாயிராமல்,

யரு [34]அன்போடே உண்மையுள்ளவர்களாயிருந்து,¶ [35]அவயவங்க

கி. பி. கூச.

1 உரோ. யக. உகூ. யூதா.உச.
2 உரோ. யக. கக: யக. உஎ. எபி.யக.உக.
3 எபே. க. க. பிலே.க.கூ.
* அல்லது கர்த்தருக்குள்.
4 அப். உய. யக. கலா. ரு. உஉ, உக. கொலோ. க.யஉ,யக.
5 பிலி. க. உஎ. கொலோ. க. ய. க தெச. உ.யஉ.
6 கொலோ. க. யச.
7 எபே. க. யஅ.
8 உரோ. யஉ. ரு. க கொரி. யஉ. யஉ, யக. எபே. உ.யக.
9 க கொரி. யஉ. ச,யக.
10 க கொரி. க. யக: அ.சா: யஉ. ரு. உ கொரி. யக.ச.
11 யூதா. க. யக. வச.
12 கலா. க. உஎ, உஅ. எபி.க.கூ.
13 மல்கி. உ. ய. க கொரி. அ.சா: யஉ.சா.
14 உரோ. யக. கக.
15 உரோ. யஉ.க, கூ. க கொரி. யஉ.யக.
16 சங். சுஅ.யஅ.
17 நியா. ரு. யஉ. கொலோ. உ. யரு.
† அல்லது சிறையாக்குதலை.
18 யோவா.க.யக: க.கக,கஉ.
19 அப்.உ.கக.
‡ அல்லது நிறைவேற்ற.
20 அப். க கூ,யக. க தீமோ க.யசா. எபி. ச. யச: எ. உசா: அ. க: கூ. உச.

21 கொலோ.உ.உ.—§ அல்லது ஒருமைக்குள்ளானவர்கள்.—|| அல்லது வயதின்.—22 க கொரி.யச.உய. கொலோ.க.உஅ.
23 எபே க.உக. கொலோ. க. உச.—24 க கொரி. யச. உக.—25 க கொரி. யஉ. எ.—26 க கொரி. யஉ. உஅ. எபே. உ. உய.
27 அப்.உக அ. உ தீமோ.ச.ரு.—28 அப்.உய.உஅ.—29 உரோ.யஉ.எ.—30 உரோ.யக.யஅ. உ கொரி.உ.யஎ.-31 மத்.யக ச
32 எபி.யக.கூ.—33 ஏசா.உ அ.கூ. க கொரி.யச.உய.—34 சகரி.அ.யக. உ கொரி.ச.உ. உரு.வச. க யோ.க.யஅ.—¶ அல்லது சத்தியத்தைப்பேசி.—35 கொலோ.க.யஅ.

Digitized by Google

ளாகிய எல்லாரையும் தலையாகிய கிறிஸ்துவினிடத்திலே [1]வளர்க்கிறவர்களாயிருக்கும்படிக்கு, (அப்படிச் செய்தார்).

௰௬ [2]அவராலே சரீரம் முழுவதும் உதவியாயிருக்கிற சகல கணுக்களினாலும் தகுதியாய்க் கூட்டி இணைக்கப்பட்டதாயிருக்க, அவயவந்தோறும் தன் தன் அளவுக்குத்தக்கதாய்க் கிரியைசெய்கிறபடியே, அது அன்பினாலே தன்னை எழுப்பிக் கட்டுதற்கு ஏதுவாகச் சரீரவளர்த்தியை உண்டாக்குகிறார்.

௰௭ ¶ ஆனதால், கர்த்தரைக்கொண்டு நான் உங்களுக்குச் சாட்சியாகச் சொல்லுகிறது என்னவெனில், மற்றச் சனங்கள் [3]தங்கள் வீணான மனதின்படி நடக்கிறதுபோல,

௰௮ [4]நீங்கள் இனிமேல் நடவாமல் இருப்பீர்களாக; அவர்கள் [5]அந்தகாரப்பட்ட புத்தியுள்ளவர்களாய், தங்களிலுள்ள அறியாமையினாலும் தங்கள் இருதயத்தின் [6]கடினத்தினாலும்* பராபரனுக்கு ஏற்ற சீவனுக்கு [7]அந்நியராயிருந்து,

௰௯ [8]மெய்யுணர்வு இல்லாதவர்களாய், சகலவித அசுத்தங்களையும் ஆசையோடே நடப்பிக்கும்படி, தங்களைக் காமவிகாரத்திற்கு [9]ஒப்புக்கொடுத்திருக்கிறார்கள்.

௨௰ நீங்கள் இப்படிக் கிறிஸ்துவைக் கற்றுக்கொள்ளவில்லை.

௨௧ இயேசுவினிடத்தில் சத்தியம் உண்டாயிருக்கிறபடியே [10]நீங்கள் அவரிடத்தில் கேட்டறிந்து, அவரால் உபதேசம் அடைந்தீர்கள்.

௨௨ அந்தப்படி [11]நீங்கள் முன்னே நடந்தபிரகாரமாக வஞ்சனையுள்ள இச்சைகளாலே கெடுதியான [12]பழைய மனிதத்துவத்தைக் [13]களைந்துபோட்டு,

௨௩ [14]உங்கள் மனதிலே புதிதான ஆவியுள்ளவர்களாகி,

௨௪ நீதியிலும் மெய்யான பரிசுத்தத்திலும்† பராபரனுடைய சாயலாகச் [15]சிருட்டிக்கப்பட்ட [16]நவமான மனிதனைத் தரித்துக்கொள்வீர்களாக.

௨௫ ¶ அன்றியும் [17]நாம் ஒருவருக்கொருவர் அவயவங்களாயிருக்கிறபடியினாலே, பொய்யைக் களைந்து, அவனவன் தனக்கு அடுத்த பிறனுடனே [18]மெய்யைப் பேசுங்கள்; [19]மேலும் பாவமில்லாமல் கோபங்கொள்ளுங்கள்.

௨௬ ¶ உங்கள் எரிச்சலின்மேலே சூரியன் அஸ்தமிக்கவொட்டாமலும், [20]பசாசுக்கு இடங்கொடாமலும் இருங்கள்.

௨௭ ¶ திருடனானவன் இனித் திருடாமல், [21]குறைச்சலுள்ளவனுக்குக் கொடுக்கத்தக்கதாக,‡

௨௮ தன் கைகளினால் நல்ல வேலையைச் செய்து, [22]பிரயாசப்படக்கடவன்.

௨௯ ¶ [23]கெட்டவார்த்தை ஒன்றும் உங்கள் வாயிலிருந்து புறப்படக்கூடாது; [24]மற்றவர்களை எழுப்புதற்கு ஏதுவான நல்லவார்த்தை உண்டானால், [25]அதையே கேட்கிறவர்களுக்குப் பிரயோசனம் உண்டாகும்படி§ பேசிக்கொள்ளுங்கள்.

௩௰ அன்றியும் நீங்கள் [26]மீட்கப்படும் [27]நாள்வரைக்கும் முத்திரையாகப் பெற்ற பராபரனுடைய பரிசுத்த [28]ஆவியைத் துக்கப்படுத்தாதிருப்பீர்களாக.

௩௧ ¶ [29]சகலவிதமான கசப்பும் மூர்க்கமும் கோபமும் கூக்குரலும் [30]தூஷணமும் [31]மற்றெந்தத் துர்க்குணமும் உங்களைவிட்டு நீங்கக்கடவது.

கி. பி. ௬௰௪.

1 எபே. ௧.௨௨: ௨.௨௧.
2 கொலோ. ௨. ௰௯.
3 ரோ. ௧. ௨௧.
4 எபே. ௨.௧,௨. ௧. ௨௨.௰௪. கொலோ. ௩.௭. ௧ பே.௪.௩.
5 அப். ௨௬. ௰௮.
6 ரோ. ௧. ௨௧.
*அல்லது குருட்டாட்டத்தினாலும்.
7 எபே. ௨. ௰௨. கலா. ௪. ௮. ௧ தெச. ௪. ௫.
8 ௧ தீமோ. ௪. ௨.
9 ரோ. ௧.௨௪, ௨௬. ௧ பே. ௪.௩.
10 எபே. ௧. ௰௩.
11 எபே. ௨. ௨. ௩. ௰௭. கொலோ. ௩.௭. ௧ பே. ௪.௩.
12 ரோ. ௬. ௬.
13 கொலோ. ௨. ௰௧: ௩. ௮, ௯. எபி. ௰௨. ௧. ௧ பே. ௨. ௧.
14 ரோ.௰௨.௨. கொலோ. ௩. ௰.
† அல்லது மெய்யின் பரிசுத்தத்திலும்.
15 எபே. ௨. ௰.
16 ரோ. ௬. ௪. ௨ கொரி. ௫. ௰௭. கலா. ௬. ௰௫. எபே. ௩. ௰௬. கொலோ. ௩. ௰.
17 ரோ.௰௨.௫.
18 சகரி. ௮. ௰௬. கொலோ. ௩.௯.
19 சங். ௪.௪:௩௭. ௮.
20 ௨ கொரி. ௨. ௰, ௰௧. யாக்.௪. ௭. ௧ பே.௫.௯.
21 லூக்.௩.௰௧.
‡ அல்லது பகிர்ந்துகொடுக்க.
22 அப். ௨௰.௩௫. ௧ தெச. ௪. ௰௧.

௨ தெச. ௩. ௮, ௰௧, ௰௨.—23 மத். ௰௨. ௩௬. எபே. ௫. ௪. கொலோ. ௩. ௮.—24 கொலோ. ௪. ௬. ௧ தெச. ௫. ௰௧. 25 கொலோ.௩.௰௬.—§ அல்லது பிரயோசனமாய் ஊன்றக்கட்டும்படி.—26 லூக். ௨௧. ௨௮. ரோ. ௮. ௨௩. எபே. ௧.௰௪. 27 எபே. ௧. ௰௩.—28 ஏசா. ௭. ௰௩: ௬௩. ௰. ௧ தெச. ௫. ௰௯.—29 கொலோ. ௩. ௮, ௰௯.—30 தீத். ௩. ௨. யாக்.௪.௰௧. ௧ பே.௨.௧.—31 தீத்.௩.௩.

Digitized by Google

கூஉ அதைத்தவிர, [1]நீங்கள் ஒருவருக்கொருவர் தயவாயும் மனஉருக்கமாயும் இருந்து, பராபரன் கிறிஸ்துவினாலே உங்களுக்கு மன்னித்ததுபோல, [2]ஒருவருக்கொருவர் மன்னியுங்கள்.

## ரு. அதிகாரம்.

உ. ஒருவரை ஒருவர் சிநேகித்து, ௩. விபசாரம், ச. வம்பு. எ. கெட்டவர்களின் சகவாசமுதலியவைகளை விலகி, யசு. எச்சரிக்கையாய் நடந்து, யஅ. ஆவியால் நிரப்பப்பட்டிருக்கவேண்டுமென்று சொல்லி, உஉ. பெண்சாதிகள் புருஷர்களுக்குக் கீழ்ப்படியவேண்டியதையும், உரு. கிறிஸ்துசபையில் அன்புகூர்வதுபோலப் புருஷர்கள் பெண்சாதிகளில் அன்புகூரவேண்டியதையும்சொன்னது.

இவ்விதமாய் நீங்கள் பிரியமான பிள்ளைகளைப்போல, பராபரனைப் [3]பின்பற்றுகிறவர்களாகி,

உ [4]கிறிஸ்துவானவர் நமக்காகத் தம்மைப் பராபரனுக்குச் [5]சுகந்த வாசனையான காணிக்கையாகவும் பலியாகவும் ஒப்புக்கொடுத்து, நம்மிடத்தில் அன்புகூர்ந்ததுபோல [6]நீங்களும் அன்புள்ளவர்களாய் நடந்துகொள்ளுங்கள்.

௩ ¶ அன்றியும் பரிசுத்தவான்களுக்கு ஏற்றபடியே, [7]வேசித்தனமும் மற்றெந்த அசுத்தமும் அல்லது பொருளாசையும் [8]உங்களுக்குள்ளே சொல்லப்படவும் கூடாது.

ச [9]வம்பும் புத்தியீனமான பேச்சும் பரியாசமும் அப்படியே இருக்கப்படாது; [10]அவைகள் தகாதவைகள்; தோத்திரம் செய்தலே தகும்.

ரு [11]வேசித்தனக்காரன், அல்லது அசுத்தவான் அல்லது விக்கிரக [12]ஆராதனைக்காரனாகிய பொருளாசைக்காரன் ஒருவனும் பராபரனுடைய இராச்சியமாகிய கிறிஸ்துவின் இராச்சியத்திலே [13]சுதந்தரத்தை அடைவதில்லை என்று அறிந்திருக்கிறீர்களே.

சா இப்படிப்பட்டவைகளுக்காகக் [14]கீழ்ப்படாமையுள்ள* பிள்ளைகள்மேலே [15]பராபரனுடைய கோபாக்கினை வருவதால், [16]ஒருவனும் உங்களை வீணான வார்த்தைகளால் வஞ்சியாதபடிக்கு எச்சரிக்கையாயிருந்து,

எ அவர்களுக்குப் பங்காளிகள் ஆகாதிருப்பீர்களாக.

அ [17]முற்காலத்திலே அந்தகாரமுள்ளவர்களாய் இருந்தீர்கள்; [18]இப்பொழுது கர்த்தரைக்கொண்டு ஒளியுள்ளவர்களாயிருக்கிறீர்கள்; [19]ஒளியின் பிள்ளைகளுக்கு ஏற்றதாய் நடந்துகொள்ளுங்கள்.

கூ [20]ஆவியின் கனி சகலவித நற்குணமும் நீதியும் சத்தியமுமானது.

ய [21]கர்த்தருக்குப் பிரியமானது இன்னதென்று நீங்கள் ஆராய்ந்து பார்த்து,

யக [22]பலனற்ற அந்தகாரக் கிரியைகளுக்கு [23]ஐக்கமாயிராமல், [24]அவைகளைக் கடிந்துகொள்வீர்களாக.

யஉ [25]அவர்களால் ஒளிப்பிடமாய்ச் செய்யப்படும் கிரியைகளைச் சொல்லுகிறதும் அவலட்சணமாயிருக்கிறதே.

ய௩ [26]அவைகள் எல்லாம் ஒளியினால் கடிந்துகொள்ளப்பட்டு† வெளியரங்கமாகும்; வெளியரங்கமாக்குகின்றவை எல்லாம் ஒளியாய் இருக்கின்றது.

யச ஆதலால் [27]தூங்குகிற நீ விழித்து, [28]மரித்தோரைவிட்டு எழுந்திரு; அப்பொழுது கிறிஸ்து உன்னைப் பிரகாசிப்பிப்பார் என்று சொல்லியிருக்கின்றது.‡

யரு ¶ ஆனபடியினாலே நீங்கள் ஞானம் அற்றவர்களைப்போல அல்ல, ஞானமுள்ளவர்களைப்போ

கி. பி. கூச.
1 உ கொரி. உ. ய. கொலோ. க. யஉ,யக.
2 மத். ௬. யச. மாற். யக. உரு.
3 மத். ரு. சரு, சஅ. லூக். ௬. ௩௬. எபே. ச. ௩உ.
4 கலா. க. ச: உ. உய. எபி. எ. உஎ: ௯. யச, உ௬: ய.ய, யஉ. க யோ. ௩.யக.
5 க மோ. அ. உக. ௩ மோ. ௧. ௯. உ கொரி. உ.யரு.
6 யோவா. யரு. க௩: யரு. யஉ. க தெச. ச. ௯. க யோ. ௩. யக, உ௩: ச.உக.
7 உரோ. ௬. ய௩. க கொரி. ௬.யஅ. உ கொரி. யஉ. உக. எபே. ச. யக,உய. கொலோ. ௩. ரு. க தெச.ச.௩.ழு.
8 க கொரி. ரு.க.
9 மத். யஉ. ௩ரு. எபே. ச. உ௯.
10 உரோ.௩.உஅ.
11 க கொரி. ௬. ௯. கலா. ரு. ய௯,உக.
12 கொலோ. ௩. ரு. க தீமோ. ௬.யஎ.
13 கலா. ரு.உக. வெளி உஉ.யரு.
14 எபே. உ. உ. * அல்லது அவிசுவாசமுள்ள; கொலோ. ௩. ௬.
15 உரோ. க.யஅ.
16 எரே.உ௯.அ. மத். உச. ச. கொலோ. உ. ச, அ, யஅ. உ தெச. உ. ௩.
17 ஏசா. ௯. உ. மத். ச. ய௬. அப். உ௬. யஅ. உரோ. க. உக.

எபே.உ.யக,யஉ: ச. யஅ. தீத் ௩.௩. க பே.உ.௯.—18 யோவா.அ.யஉ: யஉ. சக. உ கொரி. ௩. யஅ: ச. ௬. க தெச. ரு. ரு. க யோ.உ.௯.—19 லூக்.ய௬.அ. யோவா.யஉ.௩௬.—20 கலா.ரு.உஉ.—21 உரோ.யஉ.உ. பிலி.க.ய. க தெச.ரு.உக. க தீமோ.உ.௩.
22 உரோ.௬.உக: ய௩.யஉ. கலா.௬.அ.—23 க கொரி.ரு.௯,யக: ய.உய. உ கொரி.௬.யச. உ தெச.௩.௬,யச.—24 க யோ.௩.௭. க தீமோ. ரு.உய.—25 உரோ.க. உச,உ௬. ௩. ௭௪.—26 யோவா.௩.உய,உக. எபி. ச. யக.—† அல்லது காணப்பட்டு.
27 ஏசா.௬ய.க. உரோ.யக.யக,யஉ. க கொரி யரு.௩ச. க தெச.ரு.௬.—28 யோவா.ரு.உரு. உரோ. ௬. ச, ரு. எபே. உ. ரு. கொலோ.௩.க.—‡ அல்லது சொல்லியிருக்கிறார்.

Digitized by Google

வவே [1]எச்சரிக்கையாய் நடந்து கொள்ளப்பார்த்து,

௰௬ நாட்கள் [2]பொல்லாங்குள்ளவைகளாயிருக்கிறபடியால், [3]காலத்தை வாங்கிக்கொள்ளுங்கள்.

௰௭ ஆகையால் [4]நீங்கள் மதியற்றவர்கள் ஆகாமல், [5]கர்த்தருடைய சித்தம் இன்னதென்று [6]அறிந்திருக்கிறவர்களாகி,

௰௮ கெட்ட மார்க்கத்திற்கு ஏதுவாய்த் [7]திராட்சஇரசத்தால் வெறிகொள்ளாமல், ஆவியினாலே நிறையப்பட்டு,

௰௯ [8]சங்கீதங்களாலும் கீர்த்தனங்களாலும் ஞானப்பாட்டுகளாலும் ஒருவருக்கொருவர் புத்திசொல்லிக்கொண்டு, உங்கள் இருதயத்திலே கர்த்தரைப் பாடிக் கீர்த்தனம்பண்ணி,

௨௰ [9]நம்முடைய கர்த்தராகிய இயேசுக்கிறிஸ்துவின் நாமத்தினாலே எப்பொழுதும் எல்லாவற்றிற்காகவும் [10]பிதாவாகிய பராபரனைத் தோத்திரித்து,

௨௧ தேவபயத்தோடே [11]ஒருவருக்கொருவர் கீழ்ப்படிந்திருங்கள்.

௨௨ ¶ [12]ஸ்திரிகளே, [13]கர்த்தருக்குக் கீழ்ப்படுகிறதுபோல, நீங்கள் உங்கள் சுயபுருஷருக்குக் கீழ்ப்படுங்கள்.

௨௩ [14]கிறிஸ்து (தமது) சபையாகிய சரீரத்திற்குத் தலையாயும் [15]இரட்சகராயும் இருக்கிறதுபோல, [16]புருஷனானவனும் (தன்) மனைவிக்குத் தலையாயிருக்கிறான்.

௨௪ ஆகையால் சபையானது கிறிஸ்துவுக்குக் கீழ்ப்படுகிறதுபோல, மனைவிகளும் [17]எக்காரியத்திலேயும் தங்கள் சொந்தப் புருஷர்களுக்குக் கீழ்ப்படவேண்டும்.

௨௫ ¶ [18]புருஷர்களே, கிறிஸ்து தமது சபையில் அன்புகூர்ந்து, [19]அதற்காகத் தம்மைத்தாமே ஒப்புக்கொடுத்ததுபோல, நீங்களும் உங்கள் மனைவிகளில் அன்புகூரக் கடவீர்கள்.

௨௬ அவர் தமது சபையை மாசு திரைமுதலானவைகளில் ஒன்றும் இல்லாமல் [20]பரிசுத்தமும் பிழையற்றதுமான மகிமையுள்ளதாகத் [21]தமக்குமுன் நிறுத்திக்கொள்ளும் பொருட்டாக,

௨௭ அதைப் பரிசுத்தமாக்கி, [22]திவ்விய வசனத்தோடே கூடிய [23]தண்ணீர் முழுக்கினால் சுத்திகரிக்கும்படிக்கே அப்படிச் செய்தார்.

௨௮ அதுபோலப் புருஷர்களும் தங்கள் சொந்தச் சரீரங்களைப் போல, தங்களுடைய மனைவிகளில் அன்புகூரக் கடனாளிகளாய் இருக்கிறார்கள்; தன் மனைவியில் அன்புகூருகிறவன் தன்னிலே அன்புகூருகிறான்.

௨௯ தன் சொந்த மாம்சத்தைப் பகைத்தவன் ஒருவனும் இல்லையே; கர்த்தர் (தமது) சபையைச் செய்கிறதுபோல, அதைப் போஷித்துக் காப்பாற்றுகிறான்.

௩௰ [24]அவர் தமது சரீரத்திற்கு நாம் அவயவங்களுமாய், தமது மாம்சத்தையும் எலும்புகளையும் சேர்ந்தவர்களுமாய் இருக்கிறபடியால், (அப்படியே செய்கிறார்.)

௩௧ [25]அதினாலே மனிதன் தன் தகப்பனையும் தாயையும் விட்டு, தன் மனைவியுடனே இசைந்து, இருவரும் [26]ஒரே மாம்சமாய் இருப்பார்கள்.

௩௨ இது மிகுந்த இரகசியப் பொருள் உள்ளது; கிறிஸ்துவையும் சபையையும் குறித்தே இப்படிச் சொல்லுகிறேன்.

௩௩ அந்தப்படி [27]நீங்களும் அவனவன் தன்னில் அன்புகூருகிறதுபோல, தன்தன் மனைவியினிடத்திலும் அன்புகூரக்கடவீர்கள்; மனைவியானவள் புருஷனுக்குப் [28]பயந்திருக்கக்கடவள்.

கி. பி. ௬௪.

1 கொலோ. ௪. ௫.
2 பிர. ௰௨. ௨: ௰௨.௭. யோவா. ௰௨.௩௫. எபே. ௬. ௰௩.
3 கலா. ௬. ௰. கொலோ.௪.௫.
4 கொலோ. ௪. ௫.
5 ௧ தெச. ௪. ௩: ௫.௰௮.
6 உரோ. ௰௨.௨.
7 லூக். ௨௰. ௩: ௨௧. ௨௰, ௩௰. எசா. ௫. ௰௧. ௨௨. லூக். ௨௧. ௩௪.
8 அப். ௰௬.௨௫. ௧ கொரி. ௰௪. ௨௬. கொலோ. ௩.௰௬. யாக்.௫. ௰௩.
9 எபி. ௰௩. ௰௫. ௧ பே. ௨. ௫: ௪.௰௧.
10 சங். ௩௪. ௧. ஏசா. ௬௩. ௭. கொலோ. ௩. ௰௭. ௧ தெச.௫. ௰௮. ௨ தெச. ௧.௩.
11 பிலி. ௨. ௩. ௧ பே.௫.௫.
12 ௧ மோ.௩.௰௬. ௧ கொரி. ௰௪. ௩௪. கொலோ. ௩.௰௮. தீத்.௨. ௫. ௧ பே.௩.௧.
13 எபே. ௬. ௫.
14 எபே. ௧.௨௨: ௪. ௰௫. கொலோ.௧.௰௮.
15 எபே. ௧.௨௩.
16 ௧ கொரி.௰௧.௩.
17 கொலோ. ௩. ௨௰, ௨௨. தீத். ௨.௯.
18 கொலோ. ௩. ௰௯. ௧ பே.௩.௭.
19 அப்.௨௰.௨௮. கலா. ௧.௪: ௨. ௨௰. ௨. ௨௫.
20 எபே. ௧. ௪.
21 ௨ கொரி.௰௧. ௨. கொலோ.௧. ௨௨.
22 யோவா. ௰௫. ௩: ௰௭.௰௭.

23 யோவா.௩.௫. தீத். ௩. ௫. எபி. ௰. ௨௨. ௧ யோ. ௫ ௬.—24 ௧ மோ. ௨. ௨௩. உரோ.௰௨. ௫. ௧ கொரி. ௬.௰௫: ௰௨. ௨௭.
25 ௧ மோ.௨.௨௪. மத்.௰௯.௫. மாற்.௰.௭,௮.—26 ௧ கொரி.௬.௰௬.—27 ௨௫.௩௩. கொலோ.௩.௰௯.—28 ௧ பே.௩.௬.

Digitized by Google

## சு. அதிகாரம்.

*க. தாய்தகப்பன்மாருக்குப் பிள்ளைகள் செலுத்தவேண்டிய கடமைகளையும், ரு. பணிவிடைக்காரர் எசமான்களுக்குச் செலுத்தவேண்டிய கடமைகளையும் காண்பித்து, ய. நம்முடைய ஜீவகாலம் போராட்டகாலமென்றும், யஉ. நாம் மாம்சத்தோடும், இரத்தத்தோடும்மாத்திரமல்ல, ஆத்துமசத்துருக்களோடும் போராடுகிறோமென்றும், யங. கிறிஸ்தவன் தரித்துக்கொள்ளவேண்டிய சர்வாயுதவருக்கம் இன்னதென்றும், யஅ. அதை இவ்விதமாய்க் கையாளவேண்டுமென்றும் சொல்லி, உக. தீகிக்குவை அவர்கள் தயவுக்கு ஒப்புவித்தது.*

பிள்ளைகளே, கர்த்தருக்குள் உங்களைப் பெற்றவர்களுக்குக் [1]கீழ்ப்படுங்கள்; அதுவே நியாயமாயிருக்கிறது.

உ உனக்கு நன்மை உண்டாயிருக்கும்படிக்கும், பூமியிலே உன் வாழ்நாள் மிகுதியாயிருக்கும்படிக்கும்,

௩ [2]உன் தகப்பனையும் உன் தாயையும் கனம்பண்ணுவாயாக என்பதே வாக்குத்தத்தமுள்ள முதலாம் கற்பனையாய் இருக்கிறது.

ச ¶ [3]தகப்பன்மார்களே, நீங்களும் உங்கள் பிள்ளைகளுக்கு எரிச்சல் உண்டாக்காமல், [4]கர்த்தருக்கு ஏற்ற கண்டிப்போடும் போதகத்தோடும் அவர்களை வளர்க்கக்கடவீர்கள்.

ரு ¶ [5]வேலைக்காரரே, நீங்கள் கிறிஸ்துவுக்குச் செய்கிறதுபோல, மாம்சத்தின்படி உங்களுக்கு எசமான்களானவர்களுக்குப் [6]பயமும் நடுக்கமும் [7]கபடம் இல்லாமையும் உள்ள இருதயத்தோடே கீழ்ப்படிவீர்களாக.

சு மனிதருக்குப் பிரியமாயிருக்க விரும்புகிறவர்கள்போல, (எசமான்கள்) [8]காணும்பொழுதுமாத்திரம் ஊழியம்செய்யாமல்,

எ கிறிஸ்துவின் ஊழியக்காரர் போல, மனப்பூர்வமாய்ப் பராபரனுடைய சித்தத்தை நிறைவேற்றுகிறவர்களாய் மனிதருக்கு அல்ல, கர்த்தாவுக்கே ஊழியம்செய்கிறவர்களாய் நல்ல மனதோடே அப்படிச் செய்து,

அ [9]அடிமையானவனானாலும், சுயாதீனம் உள்ளவனானாலும், [10]அவனவன் செய்கிற நன்மையின்படியே கர்த்தரிடத்தில் பலனை அடைவான் என்று அறிவீர்களாக.

௯ ¶ [11]எசமான்களாகிய நீங்களும் அவர்களுக்கு அப்படியே செய்து, [12]உங்களுக்கும்* பரமண்டலங்களிலே எசமான் இருக்கிறார் என்றும் [13]அவரிடத்தில் பட்சபாதம் இல்லையென்றும் அறிந்து, [14]மிரட்டுதலை விட்டுவிடுவீர்களாக.†

ய ¶ கடைசியிலே என் சகோதரரே, கர்த்தரைக்கொண்டும் அவருடைய [15]மிகுந்த வல்லமையைக்கொண்டும் பலத்திருங்கள்.

யக அல்லாமலும் இரத்தத்தோடும் [16]மாம்சத்தோடும் அல்ல,‡ ஆகாச§ மண்டலத்திலுள்ள [17]துரைத்தனங்களோடும் அதிகாரங்களோடும் [18]இவ்வுலகத்தின் இருளை ஆளுகிறவர்களோடும் மற்றப் பொல்லாத ஆவிகளோடும்|| நாம் போராடுகிறவர்களாய் இருக்கிறபடியால்,

யஉ பசாசினுடைய தந்திரமான வகைபாடுகளைப் பலமாய் விரோதித்து நிற்கும்படிக்கு, [19]திவ்விய சர்வாயுதவருக்கத்தைத் தரித்துக்கொள்ளுங்கள்.

ய௩ [20]பொல்லாத காலத்திலே நீங்கள் அவைகளை விரோதித்திருக்கவும், சகலத்தையும் முடித்துப் ¶ போட்ட பின்பு நிலைநிற்கவும் திராணி இருக்கும்படிக்கு, [21]திவ்விய சர்வாயுதவருக்கத்தை எடுத்துக்கொள்ளுங்கள்.

யச என்னவெனில், [22]சத்தியம் என்னும் கச்சையை உங்கள்

இ. பி. கூச.

1 லூக். உக. உஉ. கொலோ. ௩. உ௰.
2 உ மோ. உ௰. யஉ. உ மோ. ரு. யசு: உஎ. யசு. எரே. ௩ரு. ருஅ. ஏசே. உஉ. எ. மல்கி. க. சு. மத். யரு. ச. மாற். எ. ய.
3 கொலோ. ௩. உக.
4 உ மோ. சுஅ. யகூ. ரு மோ. ச. கூ: சு. எ, உ௰: யக. யசு. சஞ். எஅ. ச. லூக். யகூ. யஅ: உஉ. கூ: உகூ. யஎ.
5 கொலோ. ௩. உஉ. உ தீமோ. சு. க. தீத். உ. கூ. உ பே உ. யஅ.
6 உ கொரி. எ. யரு. பிலி. உ. யஉ.
7 உ நாளா. உகூ. யஎ. கொலோ. ௩. உஉ.
8 கொலோ. ௩. உஉ, உ௩.
9 கலா. ௩. உஅ. கொலோ. ௩. யக.
10 உ ரோ. உ. சு. உ கொரி. ரு. ய. கொலோ. ௩. உச.
11 கொலோ. ச. க.
12 யோவா. ய௩. யக. உ கொரி. எ. உஉ.
* சில பிரதிகளில், உங்களுக்கும் என்களுக்கும்.
13 உ ரோ. உ. யக. கொலோ. ௩. உரு.
14 உ மோ. உரு. சங.
† அல்லது தணிப்பீர்களாக.
15 எபே. க. யகூ: ௩. யசு. கொலோ. க. யக.

16 மத். யசு. யஎ. உ கொரி. யரு. ரு௰.—‡ அல்லது மாம்சத்தோடும் இரத்தத்தோடும் அல்ல.—§அல்லது உயர்ந்த; எபே. க. ௩. 17 உ ரோ. அ. ௩அ. எபே. க. உக. கொலோ. உ, யரு.—18 லூக். உஉ. ருங. யோவா. யஉ. ௩க: யச. ௩௰. எபே. உ. உ. கொலோ. க. யங.—|| அல்லது ஆவிக்குரிய பொல்லாப்புகளோடும். — 19 உ ரோ. யங யஉ. உ கொரி. சு, எ. யங. ஙு. க தெச. ரு. அ.—20 எபே. ரு. யசு. ¶ அல்லது மேற்கொண்டு.—21 உ கொரி. ய ச. யங. ஙச.—22 ஏசா. யக. ரு. லூக். யஉ. ௩ரு. க பே. க. யங.

Digitized by Google

அரைகளில்சுற்றிக்கட்டி [1]நீதிஎன்னும் மார்பின் கவசத்தை உடுத்தி,

௰௫ [2]சமாதானத்தை உண்டாக்குகிற சுவிசேஷத்தை அறிவிக்க எத்தனமாயிருக்குதலைப் (பாதஇரட்சையைப்போல,) உங்கள் கால்களிலே தொடுத்து,

௰௬ பொல்லாங்கன் எய்யும் அக்கினி அம்புகளை எல்லாம் நீங்கள் அவித்துப்போடத்தக்க [3]விசுவாசம் என்னும் கேடகத்தைப் பிரதான முக்கியமாய்ப் பிடித்துக்கொண்டு நில்லுங்கள்.

௰௭ மேலும் [4]இரட்சண்ணியம் என்னும் தலையைக் காக்கும் மூடியையும் [5]தேவவசனமாகிய ஆவியின் கட்கத்தையும் நீங்கள் ஏற்றுக்கொண்டு,

௰௮ [6]ஆவியினாலே சம்பூரணமான செபமும் விண்ணப்பமும் பண்ணி, எப்பொழுதும் வேண்டிக்கொண்டு, இதற்காக மிகுந்த மனஉறுதியோடும் [7]சகல பரிசுத்தவான்களுக்காகவும் விண்ணப்பம் பண்ணுதலோடும் [8]விழித்துக்கொள்வீர்களாக.

௰௯ நான் [9]தயிரியமாய் என் வாயைத் திறந்து சுவிசேஷத்தின் இரகசியத்தை அறிவிக்கிறதற்கு [10]வசனம் எனக்குக் கொடுக்கப்படும்படியாயும்,

௨௰ சுவிசேஷத்திற்காகச் [11]சங்கிலியால் கட்டப்பட்டு,* [12]தானாதிபதியாயிருக்கிற நான் அதைச்† சொல்லவேண்டியபடி [13]தயிரியமாய்ச் சொல்லும்படியாயும், எனக்காகவும் விண்ணப்பம்பண்ணுவீர்களாக.

௨௧ ¶ அன்றியும் [14]எனக்குச் சம்பவித்தவைகளையும் என்னுடைய செய்கைகளையும் நீங்கள் அறியும்படிக்கு, அவைகளை எல்லாம் (நமக்குப்) பிரிய சகோதரனுமாய்க் கர்த்தருக்கு உண்மையுள்ள ஊழியக்காரனுமாய் இருக்கிற [15]தீகிக்கு என்பவன் உங்களுக்கு அறிவிப்பான்.

௨௨ நீங்கள் எங்கள் செய்திகளை அறியும்படியாயும் அவன் உங்கள் இருதயங்களுக்கு ஆறுதல் செய்யும்படியாயுமே [16]அவனை உங்களிடத்தில் அனுப்பினேன்.

௨௩ ¶ பிதாவாகிய பராபரனாலும் கர்த்தராகிய இயேசுக்கிறிஸ்துவினாலும் [17]சமாதானமும் விசுவாசத்தோடே அன்பும் சகோதரருக்கு உண்டாகக்கடவது.

௨௪ நம்முடைய கர்த்தராகிய இயேசுக்கிறிஸ்துவினிடத்தில் [18]உண்மையாய்‡ அன்புகூருகிற யாவரோடும் கிருபை இருப்பதாக.—ஆமன்.

கி. பி. ௬௪.

1 ஏசா. ௫௯. ௰௭. உ கொரி. ௬. ௭. க தெச. ௫ ௮.
2 ஏசா. ௫௨. ௭. உரோ. ௰. ௰௫.
3 க யோ. ௫. ௪.
4 ஏசா. ௫௯. ௰௭. க தெச. ௫. ௮.
5 எபி. ௪. ௰௨. வெளி. க. ௰௬: ௨. ௰௬: ௧௯ ௰௫.
6 லூக். ௰௮. க. உரோ. ௰௨. ௰௨. கொலோ. ௪. ௨. க தெச. ௫. ௰௭.
7 எபே. க. ௰௬. பிலி. க. ௪. க தீமோ. ௨. க.
8 மத். ௨௬. ௪௧. மாற். ௰௩. ௩௩.
9 ௨ கொரி. ௩. ௰௨.
10 அப் ௪. ௨௯. கொலோ. ௪. ௩. ௨ தெச. ௩. க.
11 அப். ௨௬. ௨௯: ௨௮. ௨௰. எபே. ௩. க. பிலி. க. ௭, ௰௩, ௰௪. ௨ தீமோ. க. ௰௬: ௨. ௯. பிலே. ௰.
* அல்லது கட்டுகளில்.
12 ௨ கொரி. ௫. ௨௰.
† அல்லது அதில்.
13 அப். ௨௮. ௩௧. பிலி. க. ௨௰. க தெச. ௨. ௨.

14 கொலோ. ௪. ௭.—15 அப். ௨௰. ௪. ௨ தீமோ. ௪. ௰௨. தீத். ௩. ௰௨.—16 கொலோ. ௪. ௮.—17 க பே. ௫. ௰௪.
18 தீத். ௨. ௭.—‡ அல்லது அழிவில்லாமையாய்.

Digitized by Google

# PHILIPPIANS.

அப்போஸ்தலனாகிய பவுல்

# பிலிப்பியருக்கு எழுதின

# நிருபம்.

## க. அதிகாரம்.

*க. பவுல் பிலிப்பியர் தந்த விசுவாசத்தின் கனிகளுக்காகவும், தன் பாடுகளில் அவர்களும் உடந்தையாயிருந்ததற்காகவும், பராபரனுக்குத் தோத்திரம் செலுத்தி, அவர்களுக்கு அன்பு பாராட்டி, கூ. அவர்கள் நாடோறும் கிருபையிலே பெருகும்படி வேண்டிக்கொண்டு, ௰உ. தனக்கு உரோமாவிலே உண்டான துன்பங்களினால் கிறிஸ்துவைப் பற்றும் விசுவாசத்துக்கு உண்டான நன்மை இதுவென்றும், உக. நான் செத்தாலும், பிழைத்தாலும் கிறிஸ்துவின் மகிமையை வெளிப்படுத்துவேனென்றும் காண்பித்து, உஎ. அவர்கள் ஒருமைப்பட்டிருக்கவும், உஅ. துன்பத்தில் உறுதியாய் நிற்கவும் புத்திசொன்னது.*

இயேசுக்கிறிஸ்துவின் ஊழியக்காரராகிய பவுலும் தீமோத்தேயும் பிலிப்புப்பட்டணத்திலே [1]கிறிஸ்து இயேசுவுக்குள்ளான பரிசுத்தவான்கள் அனைவருக்கும் கண்காணிகளுக்கும் ஊழியக்காரருக்கும் எழுதுகிறதாவது:

உ நம்முடைய பிதாவாகிய பராபரனும் கர்த்தராகிய இயேசுக்கிறிஸ்துவினாலும் உங்களுக்குக் [2]கிருபையும் சமாதானமும் உண்டாகக்கடவது.

ங ¶ [3]சுவிசேஷம் அறிவிக்கப்பட்ட நாள்முதலாக இதுவரைக்கும் நீங்கள் அதற்கு ஐக்கமானவர்கள் ஆனபடியால்,

ச நான் உங்களை நினைத்து,* உங்கள் எல்லாருக்காகவும் விண்ணப்பம்பண்ணும்பொழுதெல்லாம் [4]என் பராபரனைத் தோத்திரிக்கிறேன்.

ரு நான் உங்களுக்காகச் சந்தோஷத்தோடே விண்ணப்பம் பண்ணி,

சா உங்களிடத்தில் [5]நற்கிரியையைத் தொடங்கினவர் [6]இயேசுக்கிறிஸ்துவினுடைய நாள்பரியந்தம் அதை முடிய நடத்திவருவார்† என்று நம்பியிருக்கிறேன்.

எ [7]நான் கட்டப்பட்டுச் [8]சுவிசேஷத்திற்காக உத்தரவுசொல்லி, அதைத் திட்டப்படுத்திக்கொண்டுவருகையில், நீங்கள் அனைவரும் [9]உங்கள் இருதயத்திலே என்னைத்‡ தரித்துக்கொண்டு, என்னோடேகூடக் [10]கிருபையில்§ பங்குள்ளவர்களாய் இருக்கிறபடியினாலே உங்கள் எல்லாரையுங்குறித்து நான் இப்படி நினைக்கிறது நியாயமாய் இருக்கின்றது.

அ அந்தப்படி இயேசுக்கிறிஸ்துவினுடைய உருக்கமான அன்பைப்போல உள்ள அன்பினாலே நான் உங்கள் எல்லார்மேலும் [11]மிகவும் வாஞ்சையாய் இருக்கிறேன் என்பதைக்குறித்துப் [12]பரா

கி. பி. கூச.

1 க கொரி. க.உ.
2 உரோ. க. ௭. உ கொரி க.உ. க பே. க. உ.
3 உரோ. ௰உ. ௰க: ௰௫. உக. உ கொரி. அ,க. பிலி. ச. ௰ச. ௰௫.
* அல்லது உங்களைக்குறித்துக்கேள்விப்பட்டு.
4 உரோ. க. அ. கூ. க கொரி. க. ச. எபே. க.௰௫, ௰க. கொலோ. க.கூ. க தெச. க.உ. உ தெச. க.க.
5 யோவா. க. உகூ. க தெச. க.க.
6 ௰. வச.
† அல்லது நிறைவேற்றுவார்.
7 எபே. க. க:க உக் கொலோ. ச. க, ௰அ. உ தீமோ. க.அ.
8 ௰எ. வச.
9 உ கொரி.க.உ: எ.க.
‡ அல்லது உங்களை நான் என் இருதயத்தில்.
10 பிலி.ச.௰ச.

§ அல்லது எனக்குக் கிடைத்த கிருபையில்.—11 பிலி. உ. உக: ச. க —12 உரோ. க. கூ: க.க. கலா.க.உ௰. க தெச.உ.௫.

Digitized by Google

பரனே எனக்குச் சாட்சியாய் இருக்கிறார்.

௯ [1]மேலும், வித்தியாசமான* வைகளை வகையறுப்பதற்கு† ஏதுவாக நீங்கள் அறிவிலும் சகல வித மெய்யுணர்விலும்‡ [2]அதிகம் அதிகமான அன்புள்ளவர்களாயும்,

௰ [3]கிறிஸ்துவின் நாள்வரைக்கும் [4]உண்மையும் வழுவில்லாமையும் உள்ளவர்களாயும்,

௰௧ [5]பராபரனுக்குத் துதியும் புகழ்ச்சியும் உண்டாக, [6]இயேசுக்கிறிஸ்துவினாலே வருகிற நீதியாகிய கனியினால் நிறைந்தவர்களாயும் இருக்கும்படிக்குச் செபம் பண்ணுகிறேன்.

௰௨ ¶ அன்றியும் சகோதரரே, நான் உங்களுக்கு அறிவிக்க விரும்புகிறது என்னவெனில், எனக்குச் சம்பவித்தவைகள் சுவிசேஷம் அதிக பிரபலமாகும்படிக்கு ஏதுவாய் இருந்தன.

௰௩ எப்படியென்றால், நான் கிறிஸ்துவின்நிமித்தம்§ கட்டப்பட்டிருக்கிறது [7]இராச அரண்மனையில் எங்கும் உள்ளவர்களுக்கும்‖ மற்ற யாவருக்கும்¶ வெளியரங்கமானதும் அல்லாமல்,

௰௪ கர்த்தரைப்பற்றிய சகோதரரில் அநேகமானவர்கள் நான் கட்டப்பட்டிருந்ததினாலே திடன் கொண்டு, (திவ்விய) வசனத்தைப் பயமில்லாமல் சொல்லும்படி, அதிக துணிவுள்ளவர்கள் ஆனார்கள்.

௰௫ சிலர் பொறாமையினாலும் [8]விரோதத்தினாலும், சிலர் நல்ல மனதினாலும் கிறிஸ்துவைப் பிரசங்கித்து வருகிறார்கள்.

௰௬ இவர்கள் சுவிசேஷத்திற்காக [9]நான் நியாயம் பேசிக்கொள்ளும்படி வைக்கப்பட்டிருக்கிறதை அறிந்து, அன்பினாலே அப்படிச் செய்கிறார்கள்.

௰௭ அவர்கள் நான் கட்டப்பட்டதினால் இருக்கிற உபத்திரவத்தோடே உபத்திரவத்தைக் கூட்டலாம் என்று எண்ணி உண்மையில்லாமல், விரோதத்தினாலே கிறிஸ்துவை அறிவிக்கிறார்கள்.

௰௮ இதினால் என்ன ஆயிற்று? வஞ்சகத்தினாலாவது உண்மையினாலாவது பிரசங்கித்தாலும், கிறிஸ்துவே அறிவிக்கப்படுகிறார்; அதினாலே சந்தோஷப்படுகிறேன்; இன்னும் சந்தோஷப்படுவேன்.

௰௯ [10]நான் ஒன்றினாலும் வெட்கப்படாமல் [11]மிகுந்த தயிரியமாய் இருந்து, எப்பொழுதும்போல இப்பொழுதும் சீவனாலாகிலும் சாவினாலாகிலும் கிறிஸ்து என் சரீரத்தினாலே புகழப்படுவார் என்று நான் மிகவும் [12]ஆசைப்பட்டு நம்பிக்கொள்ளுகிறபடியே,

௨௰ அந்தப் பிரசங்கம் [13]உங்கள் வேண்டுதலினாலும் [14]இயேசுக்கிறிஸ்துவினுடைய ஆவியின் உதவியினாலும் எனக்கு இரட்சிப்பாக முடியும் என்று அறிந்திருக்கிறபடியால், (அப்படிச் சந்தோஷப்படுகிறேன்.)

௨௧ ¶ கிறிஸ்து எனக்குச் சீவனாயிருக்கிறாரே, சாவும் எனக்கு ஆதாயமாயிருக்கும்.

௨௨ ஆகிலும், தேகத்தில் பிழைக்கிறதினாலே என் கிரியைக்குப் பலன் உண்டாயிருப்பதால், நான் தெரிந்துகொள்ளவேண்டியது இன்னதென்று எனக்குத் தெரியாது.

௨௩ [15]அவ்விரண்டினாலும் நான் நெருக்கப்படுகிறேன்; [16]பிரிந்துபோய், கிறிஸ்துவினிடத்தில் இருக்கும்படி மிகவும் விரும்புகிறேன்; அது மிகவும் அதிக நன்மையாயும் இருக்குமே.

௨௪ அப்படியிருந்தும், தேகத்தில் இங்கே தரித்திருக்கிறது உங்களுக்காக அதிக அவசியமாய் இருக்கிறது.

௨௫ [17]இதை நான் நிச்சயமாய் அறிந்திருக்கிறபடியால், நான் மறுபடியும் உங்களிடத்தில் வருகிறதினால், நீங்கள் என்னைக்குறித்துக்

கி. பி. ௬௪.

1 உரோ. ௨. ௰அ: ௰௨. ௨. எபே.௫ ௰.
* அல்லது மேன்மையான.
† அல்லது அங்கீகரிப்பதற்கு.
‡ அல்லது விவேகத்தினாலும்.
2 ௧ தெச ௩.௰௨
பிலே.௯.
3 ௧ கொரி.௧.அ.
4 அப். ௨௪. ௰௬. ௧ தெச.௩. ௰௩: ௫.௨௩.
5 யோவா. ௰௫. அ. எபே. ௧. ௰௨,௰௪.
6 யோவா. ௰௫. ௪,௫. எபே ௨. ௰. கொலோ.௧. ௬.
§ அல்லது கிறிஸ்துவுக்குள்.
7 பிலி. ௪.௨௨.
‖ அல்லது சேவகருடைய ஸ்தானங்களிலும்.
¶ அல்லது மற்ற இடங்களிலும்.
8 பிலி. ௨. ௩.
9 ௭. வசு.
10 உரோ. ௫. ௫.
11 எபே. ௬. ௰௯, ௨௰.
12 உரோ.அ.௰௯.
13 ௨ கொரி. ௧. ௰௧.
14 உரோ.அ. அ.
15 ௨ கொரி. ௫. அ.
16 ௨ தீமோ.௪.௬.
17 பிலி.௨. ௨௪.

Digitized by Google

கிறிஸ்து இயேசுவினாலே மேன்மைபாராட்டிக்கொள்ளுதல்பெருகும்பொருட்டாக,

உகூ விசுவாசத்தில் நீங்கள் சம்பூரணமும் [1]சந்தோஷமும் உள்ளவர்கள் ஆகும்படிக்கு, நான் பின்னும் (உயிர்) தரித்துக்கொண்டு, உங்கள் அனைவரோடுங்கூட இருப்பேன் என்று அறிந்திருக்கிறேன்.

உஎ ¶ எப்படியும் நான் வந்து, உங்களைக் கண்டாலும், உங்களுக்குத் தூரமாய் இருந்தாலும், [2]நீங்கள் ஒரே ஆவியினாலே உறுதியாய் நின்று, [3]ஒரே ஆத்துமாவினாலே [4]சுவிசேஷத்தின் விசுவாசத்திற்காகக் கூடப் போராட்டம் பண்ணி எதிர்க்கிறவர்களால் ஒன்றிலும் மருளாதிருக்கிறீர்கள் என்று உங்களைக்குறித்து நான் கேட்கும்படிக்கு, நீங்கள் கிறிஸ்துவின் சுவிசேஷத்திற்குப் பாத்திரமாகமாத்திரம் [5]நடந்துகொள்ளக்கடவீர்கள்.

உஅ [6]அதுவே அவர்கள் கெட்டுப்போகுதற்கும் [7]நீங்கள் இரட்சிக்கப்படுதற்கும் அடையாளமாய் இருக்கின்றது; அதுவும் பராபரனுடைய செயல்.

உக அவராலே நீங்கள் கிறிஸ்துவின்மேலே [8]விசுவாசமாய் இருக்கிறதற்குமாத்திரமல்ல, முன்னே [9]என்னிடத்திலே நீங்கள் கண்டதுமாய் இப்பொழுது எனக்கு உண்டென்று கேள்விப்படுகிறதுமாய் இருக்கிற [10]போராட்டமே உங்களுக்கும் உண்டாயிருக்கிறதால்,

௩௰ [11]அவர்நிமித்தம் பாடுபடுகிறதற்கும் அருள்பெற்றீர்களே.

## உ. அதிகாரம்.

க. அவர்கள் ஏகசிந்தையுள்ளவர்களும், தாழ்மையுள்ள மனதுள்ளவர்களுமாயிருந்து, தாழ்மைப்பட்டு மேன்மையடைந்த கிறிஸ்துவைப் பின்பற்றவும், ௰உ. இந்தச் சீர்கெட்ட லோகத்தில் சுடர்களைப்போலப் பிரகாசிக்கவும், ௰௬. பராபரனுக்குச் செலுத்தப்படும்படி ஆயத்தமாயிருக்கிற அவர்களின் அப்போஸ்தலனுடைய தனக்கு ஆறுதலாயிருக்கவும், இரட்சிப்பின் பாதையிலே எச்சரிக்கையாய் நடக்கவும் புத்திசொல்லி, ௰௯. அவர்களிடத்தில் தான அனுப்புகிற தீமோத்தேயுவையும், உ௫. அனுப்பின எப்பாப்பிரோதீத்துவையும் மெச்சிக்கொண்டது.

ஆனதால், கிறிஸ்துவுக்குள் யாதொரு ஆறுதலும், அன்பினாலே சந்தோஷப்படுதலும், [12]ஆவியோடே ஐக்கமும், [13]உருக்கமான பட்சமும் இரக்கங்களும் உண்டானால்,

உ நீங்கள் ஒரேவிதமாய்ச் சிந்தனைபண்ணிக்கொண்டு, ஒரேவிதமான அன்புள்ளவர்களாய் இசைந்த ஆத்துமாக்களாய், ஒன்றையே [14]சிந்தித்துக்கொண்டு, இப்படி [15]என் சந்தோஷத்தை நிறைவேற்றுவீர்களாக.

௩ [16]ஒன்றையும் நீங்கள் வாதத்தினாலே அல்லது வீண்பெருமையினாலே செய்யாமல், [17]மனத்தாழ்மையினாலே ஒருவனை ஒருவர் தங்களிலும் மேன்மையானவர்கள் என்று எண்ணிக்கொள்வீர்களாக.

௪ [18]அவரவர் தங்களுக்கு ஆனவைகளைமாத்திரமல்ல, பிறருக்கு ஆனவைகளையும் நோக்குவீர்களாக.

௫ ¶ [19]கிறிஸ்து இயேசுவில் இருந்த சிந்தையே, உங்களிலும் இருக்கக்கடவது.

௬ அவர் [20]பராபரனுடைய சாயலாயிருந்தும், [21]பராபரனுக்கு ஒப்பாயிருக்குதலைக் கொள்ளையிடப்பட்ட உடைமை என்று எண்ணாமல்,

எ [22]தம்மைத்தாமே வெறுமையாக்கி, [23]அடிமையின் உருவம் எடுத்து, [24]மனிதர் சாயலாகப்* பிறந்ததும் அல்லாமல்,

அ அவர் மனிதரூபமாகக் காணப்பட்ட பின்பு, [25]மரணத்திற்குத் தம்மைத் தாழ்த்தி, சிலுவையின் மரணத்திற்கே கீழ்ப்பட்டவர் ஆனார்.

கி. பி. கூஅ.

1 உ கொரி. க. ௰௪: ௫. ௰உ.
2 பிலி. ௪. க.
3 க கொரி. க. ௰.
4 யூதா. க.
5 எபே. ௪. க. கொலோ. க. ௰. க தெச. உ. ௰உ: ௪ க.
6 உ தெச. க. ௫.
7 உரோ. அ. ௰௪. உ தீமோ. உ, ௰௧.
8 எபே. உ. அ.
9 அப். ௰௬. ௰௯. க தெச. உ. உ.
10 கொலோ. உ. க.
11 அப். ௫. ௪க. உரோ. ௫. ௩.
12 உ கொரி. ௰௩. ௰௪.
13 கொலோ. ௩. ௰உ.
14 உரோ. ௰உ. ௰௬: ௰௫. ௫. க கொரி. க. ௰. உ கொரி. ௰௩. ௰௧. பிலி. ௩. ௰௬: ௪. உ. க பே. ௩. அ.
15 யோவா. ௩. உ௯.
16 கலா. ௫. உ௬. பிலி. க. ௰௫, ௰௬. யாக். ௩. ௰௪.
17 உரோ. ௰உ. ௰. எபே. ௫. உக. க பே. ௫. ௫.
18 க கொரி. ௰. உ௪, ௩௩: ௰௩. ௫.
19 மத். ௰க. உ௯. யோவா. ௰௩. ௰௫. க பே. உ. உக. க யோ. உ. ௬.
20 யோவா. க. க. உ: ௰எ. ௫. உ கொரி. ௪. ௪. கொலோ. க. ௰௫. எபி. க. ௩.
21 யோவா. ௫. ௰அ: ௰. ௩௩.
22 சங். உஉ. ௬. ஏசா. ௫௩. ௩. தானி. ௯. உ௬. மாற். ௯. ௰உ. உரோ. ௰௫. ௩.
23 ஏசா. ௪உ. க: ௪௯. ௩, ௬: ௫உ. ௰௩: ௫௩. ௰௧.

ஏசே. ௩௪. உ௩, உ௪. சகரி. ௩. அ. மத். உ௰. உ அ. லூக். உஉ. உஎ.--24 யோவா. க. ௰௪. உரோ. அ. ௩: அ. ௩. கலா. ௪. ௪. எபி. உ. ௰௪, ௰௭.
* அல்லது மனித இயல்பாக.--25 மத். உ௬. ௩௯, ௪உ. யோவா. ௰. ௰அ. எபி. ௫. அ: ௰உ. உ.

Digitized by Google

௯ அதினாலே பராபரனும் [1]அவனை மிகவும் உயர்த்தி,

௰ பரமண்டலத்திலும் பூமண்டலத்திலும் கீழ்லோகத்திலும் உள்ள யாவும் [2]இயேசுவின் நாமத்தைத் தொழுது, முழங்காற்படியிடும்படிக்கும்,

௰௧ பிதாவாகிய பராபரனுக்குத் துதியுண்டாக இயேசுக்கிறிஸ்து கர்த்தர் என்று [3]நாவுகள் யாவும் அறிக்கையிடும்படிக்கும், சகல நாமங்களுக்கும் [4]மேலான நாமத்தை அவருக்குக் கொடுத்தார்.

௰௨ ¶ ஆகையினாலே எனக்குப் பிரியமானவர்களே, [5]நீங்கள் எப்பொழுதும் கீழ்ப்படிகிறபடி, நான் உங்களுக்குச் சமீபமாய் இருக்கிறபொழுதுமாத்திரமல்ல, நான் தூரமாய் இருக்கிற இப்பொழுதும், மிகவும் அதிகமாய்ப் [6]பயத்தோடும் நடுக்கத்தோடும் உங்கள் இரட்சிப்பை அடையப் பிரயாசப்படுங்கள்.

௰௩ விருப்பத்தையும் செய்கையையும் [7]பராபரன் உவப்பாய் உங்களுக்குள்ளே உண்டாக்குகிறவராய் இருக்கிறாரே.

௰௪ [8]கோணலும் வழுவுமுள்ள [9]சந்ததியாருக்குள்ளே நீங்கள் குற்றமும் கபடமும் இல்லாதவர்களாயும்,* [10]பராபரனுடைய மாசில்லாத பிள்ளைகளாயும் இருப்பதற்கு,

௰௫ சகலத்தையும் [11]மொறுமொறுப்பில்லாமலும் [12]தருக்கிப்பில்லாமலும் செய்வீர்களாக.

௰௬ [13]நான் வீணாக ஓடினதும் வீணாய்ப் பிரயாசப்பட்டதும் இல்லை என்கிற [14]மகிழ்ச்சி கிறிஸ்துவின் நாளிலே எனக்கு உண்டாயிருப்பதற்கு நீங்கள் ஜீவவசனத்தைப் பிடித்துக்கொண்டு, [15]உலகத்திலே அவர்களுக்குள்ளே சுடர்களைப்போலப் பிரகாசியுங்கள்.†

௰௭ ¶ நான் உங்கள் விசுவாசமாகிய பலியின்மேலும் [16]ஊழியத்தின்மேலும் [17]வார்க்கப்பட்டுப்‡ போனாலும், மகிழுவேன்; உங்கள் அனைவரோடுங்கூட [18]மகிழ்ச்சியாகவே இருப்பேன்.

௰௮ இந்தப்பிரகாரமாக நீங்களும் மகிழுங்கள்; என்னோடேகூடவே மகிழ்ச்சியாய் இருங்கள்.

௰௯ ¶ அன்றியும்§ நானும் உங்கள் செய்திகளை அறிந்து, மனதிலே சந்தோஷம் அடையும்படிக்கு, [19]சீக்கிரமாய்த் தீமோத்தேயுவை உங்களிடத்தில் அனுப்பலாம் என்று கர்த்தராகிய இயேசுக்கிறிஸ்துவின்மேல் நம்பிக்கையாய் இருக்கிறேன்.

௨௰ அவனையன்றி, உங்கள் காரியங்களை உத்தமமாய் விசாரிக்கிறதற்குத் [20]தகுதியான மனதுள்ள|| வேறொருவனும் என்னிடத்தில் இல்லையே.

௨௧ மற்றவர்கள் எல்லாரும் கிறிஸ்து இயேசுவுக்கு உரியவைகளை அல்ல, [21]தங்களுக்கு உரியவைகளையே தேடுகிறார்கள்.

௨௨ அவன்மாத்திரம் தகப்பனோடே பிள்ளை இருக்கிறதுபோல, [22]என்னுடனேகூடச் சுவிசேஷத்திற்கு ஊழியஞ்செய்ததினாலே, அவனுடைய உத்தம குணத்தை அறிந்திருக்கிறீர்கள்.

௨௩ ஆகையால், என் காரியங்கள் இப்படி நடக்கும் என்று நான் அறிந்தவுடனே அவனையே அனுப்ப நம்பியிருக்கிறேன்.

௨௪ [23]எப்படியும் நான்தானே சீக்கிரமாய் வருவேன் என்று கர்த்தராலே நினைத்திருக்கிறேன்.

௨௫ ¶ அன்றியும் என் சகோதரனுமாய், உடன் வேலையாளுமாய், [24]உடன் சேவகனுமாய், [25]உங்கள் தானாதிபதியுமாய், [26]என் குறைச்சல்களை நீக்க விசாரிக்கிறவனுமாயிருக்கிற [27]எப்பாப்பிரோதீத்து என்பவன்,

கி. பி. ௬௰௪.

1 யோவா. ௰௭ ௧, ௨. ௫. அப். ௨. ௩௩. எபி. ௨. ௯.
2 ஏசா. ௪௫. ௨௩. மத். ௨௮. ௰௮. உரோ. ௰௪. ௰௧. வெளி. ௫. ௰௩.
3 யோவா. ௰௩. ௰௩. அப். ௨. ௩௬. உரோ. ௰௪. ௯. ௧. கொரி. ௮. ௬: ௰௨. ௩.
4 எபே. ௧. ௨௰, ௨௧. எபி. ௧. ௪.
5 பிலி. ௧. ௫.
6 எபே. ௬. ௫.
7 ௨ கொரி. ௩. ௫. எபி. ௰௩. ௨௧.
8 1 பேதுரு. ௨. ௰௫. ௫.
9 ௧ பே. ௨. ௰௨
* அல்லது குற்றமில்லாதவர்கள்.
10 மத். ௫. ௪௫. எபே. ௫. ௧.
11 ௧ கொரி. ௰. ௰. ௧ பே. ௪. ௯.
12 உரோ. ௰௪. ௧.
13 கலா. ௨. ௨. ௧ தெச. ௩. ௫.
14 ௨ கொரி. ௧. ௰௪. ௧ தெச. ௨. ௰௯.
15 மத். ௫. ௰௪, ௰௬. எபே. ௫. ௮.
† அல்லது பிரகாசிக்கிறீர்கள்.
16 உரோ. ௰௫. ௰௬.
17 ௨ தீமோ. ௪. ௬.
‡ அல்லது ஒப்புக் கொடுக்கப்பட்டு.
18 ௨ கொரி. ௭. ௪. கொலோ. ௧. ௨௪.
§ அல்லது ஆனாலும்.
19 உரோ. ௰௬. ௨௧. ௧ தெச. ௩. ௨.
20 சங். ௫௫. ௰௩.
|| அல்லது எனக்கு அருமையான.
21 ௧ கொரி. ௰. ௨௪, ௩௩: ௰௩. ௫.

௨ தீமோ. ௩. ௨, ௪.—22 ௧ கொரி ௪. ௰௭. ௧ தீமோ. ௧. ௨. ௨ தீமோ. ௧. ௨.—23 பிலி. ௧. ௨௫. பிலே. ௨௨.—24 பிலே. ௨. 25 ௨ கொரி. ௮. ௨௩.—26 ௨ கொரி. ௰௧. ௯. பிலி. ௪. ௰௮.—27 பிலி. ௪. ௰௮.

Digitized by Google

௨௬ [1]உங்கள் எல்லார்மேலும் வாஞ்சையுள்ளவனாய், தான் வியாதிப்பட்டதை நீங்கள் கேள்விப்பட்டதினாலே மிகவும் கஸ்திப்பட்டிருக்கிறபடியால், அவனை உடனே உங்களிடத்தில் அனுப்ப வேண்டும் என்று எண்ணினேன்.

௨௭ அவன் மரணத்திற்குச் சமீபமாக வியாதிப்பட்டிருந்தான்; பராபரன் அவனுக்கு இரங்கினார்; அதினாலே அவனுக்குமாத்திரமல்ல, துக்கத்தின்மேலே துக்கம் எனக்கு உண்டாகாதபடிக்கு எனக்கும் இரங்கினார்.

௨௮ ஆகையால், நீங்கள் அவனை மறுபடியும் கண்டு, சந்தோஷப்படும்படியாகவும், என் துக்கம் குறையும்படியாகவும் அதிசீக்கிரமாய் அவனை அனுப்பினேன்.

௨௯ ஆனபடியினாலே, கர்த்தருக்குள் அவனை மிகுந்த சந்தோஷத்தோடே ஏற்றுக்கொண்டு, [2]இப்படிப்பட்டவர்களைக் கனமாய் எண்ணுவீர்களாக.*

௩௰ நீங்கள் இங்கே இல்லாததினாலே எனக்கு [3]இருக்கிற குறைச்சலை நீக்கி எனக்கு ஊழியம் செய்யும்படிக்கு, அவன் தன் பிராணனை எண்ணாமல், கிறிஸ்துவின் வேலையின் நிமித்தம் மரணத்திற்குச் சமீபமாய் இருந்தபடியினாலே அப்படிச் செய்யுங்கள்.

## ௩. அதிகாரம்.

*௧. சன்னத்துள்ள கள்ளப்போதகர்களைக்குறித்து அவர்களை எச்சரித்தது. ௪. அவர்களைப்பார்க்கிலும் தனக்கு நியாயப்பிரமாணத்தின் நீதியை நம்ப அதிக முகாந்தரமிருந்தும், ௭. கிறிஸ்துவையும், அவரால் உண்டாகும் நீதியையும் பெற்றுக்கொள்ள அதைக் குப்பையாக எண்ணி, ௰௨. தன் குற்றங்களை அறிக்கைசெய்து, ௰௫. அவர்கள் இக்காரியங்களில் தன்னைப்போலச் சிந்திக்கவும், ௰௭. தன்னைப் பின்பற்றவும், ௰௮. மாம்சசிந்தையுள்ள கிறிஸ்தவர்களைப் பின்பற்றாமலிருக்கவும் புத்திசொல்லியது.*

மேலும் என் சகோதரரே, [4]கர்த்தருக்குள் சந்தோஷப்படுங்கள்; நான் ஒரேவிதமான காரியங்களை உங்களுக்கு எழுதுகிறது எனக்கு வருத்தமல்ல, உங்களுக்கு அது நிச்சயத்தை உண்டாக்கும்.

௨ ¶ [5]அந்த நாய்களைக்குறித்து எச்சரிக்கையாய் இருங்கள், [6]அந்தப் பொல்லாத வேலையாட்களைக் குறித்து எச்சரிக்கையாய் இருங்கள்; [7]அந்தச் சேதக்காரரைக்குறித்து எச்சரிக்கையாய் இருங்கள்.

௩ சரீரத்தின்மேல், நம்பிக்கையாய் இராமல் [8]ஆவியினாலே பராபரனுக்கு ஊழியம்செய்து, [9]கிறிஸ்து இயேசுவுக்குள் மேன்மைபாராட்டுகிற நாமே [10]விருத்தசேதனக்காரர்.

௪ [11]நானும் சரீரத்தின்மேலே நம்பிக்கையாய் இருக்கத்தக்கவைகளை உடையவனாய் இருக்கிறேன்; அல்லாமலும், வேறொருவன் சரீரத்தின்மேல் நம்பிக்கையாய் இருக்க நினைத்தால், அவனிலும் நான் அதிகமாய் அப்படி இருக்கலாம்.

௫ (எப்படியெனில்) [12]நான் எட்டாம் நாளிலே விருத்தசேதனம் அடைந்தவன்; [13]இஸ்ரவேலின் வம்சத்தில் [14]பென்யமீன் கோத்திரத்தில் பிறந்தவன்; [15]எபிரேயரில் பிறந்த எபிரேயன்; நியாயப்பிரமாணத்தைக்குறித்து நான் [16]பரிசேயன்.

௬ [17]பத்திவைராக்கியத்தைக்குறித்து நான் (கிறிஸ்து) [18]சபையைத் துன்பப்படுத்தினவன்; நியாயப்பிரமாணத்தினால் வருகிற [19]நீதியைக்குறித்து நான் [20]பிழையில்லாதவன்.

௭ ஆகிலும், எனக்கு லாபமாயிருந்த [21]இவைகளை நான் கிறிஸ்துவுக்காக நஷ்டமென்று எண்ணினேன்.

௮ நிச்சயமாகவே என் கர்த்தராகிய கிறிஸ்து இயேசுவை அறிகிற அறிவின் [22]மேன்மைக்காக எல்லாவற்றையும் நஷ்டமென்று எண்ணிக்கொண்டிருக்கிறேன்; அவருக்காக நான் அவைகளை எல்லாம் நஷ்டமாகத் தள்ளினேன்.

கி. பி. ௬௪.

1 பிலி. ௧. ௮.
2 ௧ கொரி. ௰௬. ௰௮. ௧ தெச. ௫. ௰௨. ௧ தீமோ. ௫. ௰௭.
* அல்லது பேணிக்கொள்வீர்களாக.
3 ௧ கொரி. ௰௬. ௰௭. பிலி. ௪. ௰.
4 ௨ கொரி. ௰௩. ௰௧. பிலி. ௪. ௪. ௧ தெச. ௫. ௰௬.
5 ஏசா. ௫௬. ௰. கலா. ௫. ௰௫.
6 ௨ கொரி. ௰௧. ௰௩.
7 ரோ. ௨. ௨௮. கலா. ௫. ௨.
8 யோவா. ௪. ௨௩. ௨௪. ரோ. ௭. ௬.
9 கலா. ௬. ௰௪.
10 உபா. ௰. ௰௬: ௩௰. ௬. எரே. ௪. ௪. ரோ. ௨. ௨௯: ௪. ௰௧, ௰௨. கொலோ. ௨. ௰௧.
11 ௨ கொரி. ௰௧. ௰௮. ௨௧.
12 ௧ மோ. ௰௭. ௰௨.
13 ௨ கொரி. ௰௧. ௨௨.
14 ரோ. ௰௧. ௧.
15 ௨ கொரி. ௰௧. ௨௨.
16 அப். ௨௩. ௬: ௨௬. ௪, ௫.
17 அப். ௨௨. ௩. கலா. ௧. ௰௩, ௰௪.
18 அப். ௮. ௩: ௯. ௧.
19 ரோ. ௰. ௫.
20 லூக். ௧. ௬.
21 மத். ௰௩. ௪௪.
22 ஏசா. ௫௩. ௰௧. எரே. ௯. ௨௩, ௨௪. யோவா. ௰௭. ௩. ௧ கொரி. ௨. ௨. கொலோ. ௨. ௨.

Digitized by Google

கூ நான் கிறிஸ்துவை ஆதாயப்படுத்திக்கொள்ளும்படிக்கும், நியாயப்பிரமாணத்தினால் வருகிற [1]சுயநீதியை அல்ல, கிறிஸ்துவைப் பற்றும் விசுவாசத்தினாலே வருகிறதுமாய், விசுவாசமூலமாய்ப் பராபரனால் வருகிறதுமாய் இருக்கிற [2]நீதியையே உடையவனாய் இருந்து, இப்படிக் கிறிஸ்துவுக்குள் இருக்கிறவனாகக் காணப்படும்படிக்கும், சகலத்தையும் குப்பையைப்போல எண்ணியிருக்கிறேன்.

ய இப்படி நான் அவரையும் அவர் உயிரோடெழும்புதலின் பலத்தையும் அவருடைய பாடுகளோடே [3]ஐக்கத்தையும் அறிந்திருக்கிறதுமல்லாமல்,

யக எப்படியும் நானும் மரித்தோரிலிருந்து [4]உயிரோடெழுந்திருப்பதற்குத் தகுதியாகும்படிக்கு, அவருடைய மரணத்திற்கு ஒப்பான மரணத்திற்கு எதுவாய் இருக்கிறேன்.

யஉ ¶ (அதை) [5]நான் இப்பொழுதே அடைந்தவனாகை அல்லது இப்பொழுதே [6]தேறினவனாகச் சொல்லாமல் கிறிஸ்து இயேசுவினாலே நான் எதற்காகப் பிடிக்கப்பட்டேனோ, அதைப் பிடித்துக்கொள்ளும்படி பின்தொடருகிறேன்.

யங சகோதரரே, நான் (அதைப்) பிடித்துக்கொண்டேன் என்று எண்ணுகிறதில்லை; ஒன்று செய்கிறேன்; [7]பின்னானவைகளை நான் மறந்து, [8]முன்னானவைகளைச் சாக்கிரதையாய் நாடி,

யச கிறிஸ்து இயேசுவினாலே பராபரன் உயரத்திலிருந்து என்னை [9]அழைத்துவைத்த பந்தயப் பொருளுக்காகக் [10]குறித்திருக்கிற மார்க்கமாய்ப் பின்தொடருகிறேன்.

யரு ¶ ஆகையால் நம்மில் [11]தேறினவர்கள் யாவரும் இப்படியே [12]சிந்திக்கக்கடவோம்; எதையாகிலும் நீங்கள் வேறுவிதமாய்ச் சிந்திப்பீர்களானால், அதையும் பராபரன் உங்களுக்கு வெளிப்படுத்துவார்.

யசா எப்படியும் நாம் எதுவரையில் வந்திருந்தாலும், [13]இந்தப் பிரமாணத்தின்படியே [14]நடந்துகொண்டு, [15]ஒரேவிதமாய்ச் சிந்தனை பண்ணக்கடவோம்.

யஎ சகோதரரே, [16]நீங்கள் என்னோடேகூடப் பின்பற்றுகிறவர்களாகி, [17]நாங்கள் உங்களுக்கு வழிகாட்டுகிறபடி நடக்கிறவர்களை நோக்குங்கள்.

யஅ அநேகர் [18]கிறிஸ்துவின் சிலுவைக்குப் பகைஞராக நடக்கிறார்கள்; அவர்களைக்குறித்து முன்னே உங்களுக்கு அநேகந்தரம் சொன்னேன்; இப்பொழுது அழுதலோடேயும் (அப்படிச்) சொல்லுகிறேன்.

யகூ [19]அவர்களுடைய முடிவு அழிவு; [20]அவர்களுடைய தேவன் வயிறு; [21]அவர்களுடைய மகிமை அவர்கள் இலச்சையில் இருக்கிறது; [22]பூமிக்குரியவைகளைச் சிந்திக்கிறார்கள்.

உய [23]நம்முடைய இருப்பிடம் பரமண்டலங்களில் இருக்கின்றது; [24]அங்கேயிருந்து கர்த்தராகிய இயேசுக்கிறிஸ்து இரட்சகர் வரப் [25]பார்த்துக்கொண்டு இருக்கிறோம்.

உக [26]அவர் எல்லாவற்றையும் தமக்குக் கீழ்ப்படுத்தும்படிக்கு, [27]மிகுந்த பலமுடையவர்; ஆகையால், நம்முடைய அற்பமான சரீரம் மகிமையுள்ளதமது சரீரத்திற்கு ஒப்பாய் இருக்கும்படி, [28]அதை மறுரூபப்படுத்துவார்.

## ச. அதிகாரம்.

க. தனித்தும், ச. பொதுவாகவும், சில புத்திகள் சொல்லி, ய. காவலிலிருந்த தனக்கு அவர்கள் அனுப்பின உதவிக்காகவும், விசேஷமாக அவர்களிலிருந்த தேவகிருபைக்காகவும் சந்தோஷப்பட்டு,

கி. பி. கூச.

1 உரோ. ய. க, ௩.
2 உரோ. ௩. யஎ: க.உக,உஉ: கூ. கய: ய. க, கூ. கலா.உ.யசா.
3 உரோ. சு. ரு, ௩: அ. யஎ. உ கொரி. ச. ய, யக. உ தீமோ. உ. யக, யஉ. க பே. ச. யங.
4 அப். உசா. எ.
5 க தீமோ. கூ. யஉ.
6 எபி. யஉ. உங.
7 சங். சு௩. ய. லூக். கூ. சுஉ. உ கொரி. ௩. யங.
8 க கொரி. கூ. உச,உசா. எபி. சா.க.
9 எபி.க.க.
10 உ தீமோ. ச. எ,அ. எபி.யஉ. க.
11 க கொரி. உ. சா: யச.உய.
12 கலா.௩.ய.
13 கலா. சா. யசா.
14 உரோ. யஉ. யசா: யரு.ரு.
15 பிலி. உ. உ.
16 க கொரி. ச. யசா: யக. க. பிலி. ச. கூ. க தெச. க. சா.
17 க பே.ரு.௩.
18 கலா.க.எ;உ. உக: சா. யஉ பிலி.க.யரு, யசா.
19 உ கொரி. யக. யரு. உ பே.உ. க.
20 உரோ. யசா. யஅ. க தீமோ. சா. ரு. தீத்.க. யஉ.
21 ஓசே. ச. எ. உ கொரி. யக. யஉ.கலா.சா.யங.
22 உரோ.அ. ரு.
23 எபே. உ. சா, யகூ. கொலோ. க. க, ௩.
24 அப். க. யக.
25 க கொரி.க.எ. க தெச. க. ய. தீத் உ.யங.

26 க கொரி.யரு.உக,உஎ.—27 எபே.க.யகூ.—28 க கொரி.யரு.சங,சஅ,சகூ. கொலோ.௩.ச. க யோ.௩.உ.

Digitized by Google

௧௯. அவர்களுக்காகச் செய்யப்பண்ணி அவர்களை வாழ்த்தினது.

ஆனபடியினாலே எனக்கு அன்பானவர்களுமாய், [1]என்னாலே ஆசிக்கப்பட்டவர்களுமாய், [2]எனக்குச் சந்தோஷமும் கிரீடமுமாய் இருக்கிற சகோதரரே, பிரியமானவர்களே, இந்தப்படியே கர்த்தரிடத்தில் [3]நிலைகொண்டு இருப்பீர்களாக.

௨ ¶ கர்த்தராலே [4]ஒரேவிதமான சிந்தையாய் இருக்கும்படிக்கு, ஐயோதியாளுக்கும் சிந்திகேயாளுக்கும் புத்திசொல்லுகிறேன்.

௩ அல்லாமலும், என் உத்தமக் கூட்டாளியே, அவர்களுக்கு உதவியாய் இருக்கும்படிக்கு, உன்னையும் வேண்டிக்கொள்ளுகிறேன்; அவர்கள் கிலேமெந்தோடும் மற்ற என் உடன்வேலையாட்களோடும் கூடச் சுவிசேஷத்தைக்குறித்து என்னோடேகூடிப் [5]போராடினார்களே; அவர்களுடைய நாமங்கள் [6]ஜீவபுஸ்தகத்தில் இருக்கின்றன.

௪ ¶ [7]கர்த்தருக்குள் எப்பொழுதும் சந்தோஷமாய் இருங்கள்; சந்தோஷமாயிருங்கள் என்று மறுபடியும் சொல்லுகிறேன்.

௫ உங்களிலுள்ள சாந்தகுணம் எல்லாச் சனங்களுக்கும் தெரியவரக்கடவது; [8]கர்த்தர் சமீபமாய் இருக்கிறார்.

௬ [9]நீங்கள் ஒன்றையுங்குறித்துக் கவலைப்படாமல், எல்லாவற்றையுங்குறித்து உங்கள் விண்ணப்பங்களைத் தோத்திரிப்புடனேகூடிய செபத்தினாலும் வேண்டுதலினாலும் பராபரனுக்கு அறிவிப்பீர்களாக.

௭ அப்பொழுது எல்லாப் புத்திக்கும் மேலான [10]தேவசமாதானம், கிறிஸ்து இயேசுவினாலே உங்கள் இருதயங்களையும் சிந்தனைகளையும் காப்பாற்றும்.

௮ ¶ சகோதரரே, கடைசியிலே சத்தியமுள்ளவைகள் எவைகளோ, இலக்கணமுள்ளவைகள்* எவைகளோ, நீதியுள்ளவைகள் எவைகளோ, கற்புள்ளவைகள் எவைகளோ, சிநேகத்திற்கு ஏதுவானவைகள் எவைகளோ, [11]நற்கீர்த்தியுள்ளவைகள் எவைகளோ, மற்றப் புண்ணியம் எதுவோ, புகழ்ச்சியுள்ளது எதுவோ அவைகளையே சிந்தித்துக்கொள்வீர்களாக.

௯ நீங்கள் என்னிடத்தில் கற்றும், அடைந்தும், கேட்டும், [12]கண்டும் இருக்கிறவைகளைச் செய்யுங்கள்; [13]அப்பொழுது சமாதானம் பொருந்திய பராபரன் உங்கள் பக்கலிலே இருப்பார்.

௰ ¶ என்னை விசாரிக்கும்படிக்கு [14]நீங்கள் இக்காலத்திலே மறுபடியும் மலர்ந்திருக்கிற†படியினாலே, கர்த்தராலே மிகவும் சந்தோஷப்பட்டேன்; (முன்னேயும்) இப்படிச்செய்யச் சிந்தையாய் இருந்தீர்கள்; சமயம்மாத்திரம் உங்களுக்கு நேரிடவில்லை.

௰௧ என் குறைச்சலினாலே நான் இப்படிச் சொல்லவில்லை; எந்த நிலைமையில் இருந்தாலும், [15]மனச்சந்தோஷமாய் இருக்கக் கற்றுக்கொண்டேன்.

௰௨ தாழ்ந்திருக்கவும் [16]எனக்குத் தெரியும்; பெருகியிருக்கவும் எனக்குத் தெரியும்; எவ்விடத்திலேயும் எல்லாவற்றிலேயும் திருத்தியாய் இருக்கவும், பசியாய் இருக்கவும், பரிபூரணப்படவும், குறைவுபடவும் படித்தேன்.

௰௩ [17]என்னைப் பலப்படுத்துகிற கிறிஸ்துவினாலே நான் எவற்றையும் செய்யத் திராணியுண்டு.

௰௪ ¶ அப்படியிருந்தும் [18]என் உபத்திரவத்திலே என்னுடனே ஐக்கப்பட்ட நீங்கள் நன்றாய்ச் செய்தீர்கள்.

௰௫ பிலிப்பியரே, உங்களுக்கும் தெரிந்திருக்கிறபடி சுவிசேஷத்தின் ஆரம்பத்திலே நான் மக்கேதோனியா நாட்டுக்குப் புறப்பட்டபொழுது, நீங்கள்மாத்திரமே அல்லாமல், [19]வேறொரு சபை

இ. பி. ௬௩௪.

1 பிலி. ௧. அ.
2 உ கொரி. ௧. ௰௪. பிலி. உ. ௰௬. ௧ தெச. உ.௰௯,உ௰.
3 பிலி.௧.உ௭.
4 பிலி.உ.உ: ௩. ௰௬.
5 உரோ. ௰௬. ௩. பிலி.௧.உ௭.
6 உ மோ. ௩உ. ௩உ. சங்.௬௯. உ அ. தானி. ௰உ. ௧. லூக். ௰. உ௰. வெளி. ௩. ௫:௰௩.அ: உ௰. ௰உ: ௨௪. உ௭.
7 உரோ. ௰உ. ௰உ. பிலி. ௩.௧. ௧ தெச. ௫.௰௬. ௧ பே. ௪. ௰௩.
8 எபி. ௰. உ௫. யாக். ௫. அ, ௯. ௧ பே. ௪. ௭. உ பே. ௩.அ,௯.
9 சங். ௫௫.உஉ. யாக். ௰௬. ௩. மத். ௬. உ௫. லூக். ௰உ. உஉ. ௧ பே.௫.௭.
10 யோவா. ௰௪. உ௭. உரோ. ௫. ௧. கொலோ ௩. ௰௫.
* அல்லது கனிசமான.
11 ௧ தெச. ௫. உஉ.
12 பிலி. ௩. ௰௭.
13 உரோ. ௰௫. ௩௩: ௰௬. உ௰. ௧ கொரி. ௰௪. ௩௩. உ கொரி. ௰௩.௰௧. ௧ தெச. ௫. உ௩. எபி. ௰௩.உ௰.
14 உ கொரி.௰௧. ௯.
† அல்லது உயிர்ப்பிக்கப்பட்டிருக்கிற.
15 ௧ தீமோ.௬.௬, அ.
16 ௧ கொரி. ௪. ௰௧. உ கொரி. ௬ ௰: ௰௧ உ௭.
17 யோவா. ௰௫. ௫. உ கொரி. ௰உ.௯.
18 பிலி.௧.௭.
19 உ கொரி. ௰௧. அ, ௯.

Digitized by Google

யும் கொடுக்கல் வாங்கல் என்பதைக்குறித்து உதவியாய் இருக்கவில்லை.

௰௬ நான் தெசலோனிக்கை ஊரில் இருந்தபொழுதும், நீங்களே என் குறைச்சலை நீக்கும்படிக்கு, இரண்டொருதரம் அனுப்பினீர்கள்.

௰எ காணிக்கையை நான் விரும்பாமல், உங்கள் கணக்குப் பெருகவேண்டும் என்று [1]பலனை விரும்புகிறேன்.

௰அ இப்பொழுது வேண்டியவை எல்லாம் எனக்கு வந்திருக்கின்றன;* பரிபூரணம் உண்டாயிருக்கின்றது; உங்களால் அனுப்பப்பட்டவைகளாயும், பராபரனுக்குச் [2]சுகந்தவாசனையாயும், பிரியமும் [3]சந்தோஷமுமான பலியாயும் இருக்கிறவைகளை, [4]எப்பாப்பிரோதீத்துவின் கையில் வாங்கிக்கொண்டதால் நான் நிறைவாய் இருக்கிறேன்.

௰கூ அன்றியும் என் தேவனானவர் [5]தமது மகிமையுள்ள ஐசுவரியத்தின்படி, உங்கள் குறைவுகள் யாவையும் கிறிஸ்து இயேசுவினாலே நீக்கி, [6]நிறைவை அருளிச்செய்வார்.

உ௰ [7]நம்முடைய பராபரனும் பிதாவுமானவருக்கே என்றென்றைக்கும் மகிமை உண்டாகக்கடவது.—ஆமென்.

உ௰க ¶ கிறிஸ்து இயேசுவுக்குள்ளான பரிசுத்தவான்கள் யாவருக்கும் வாழ்த்துதல் சொல்லுங்கள்; [8]என்னுடனே இருக்கிற சகோதரர் உங்களுக்கு வாழ்த்துதல் சொல்லுகிறார்கள்.

உ௰உ பரிசுத்தவான்கள் அனைவரும், [9]விசேஷமாக இராசனுடைய அரண்மனையில் உள்ளவர்களும் உங்களுக்கு வாழ்த்துதல் சொல்லுகிறார்கள்.

உ௰ங [10]நம்முடைய கர்த்தராகிய இயேசுக்கிறிஸ்துவின் கிருபை உங்கள் அனைவரோடுங்கூட இருக்கக்கடவது.—ஆமென்.

கி. பி. கூச.

1 உரோ. ௰ரு. உஅ. தீத். ங. ௰ச.
* அல்லது எல்லாவற்றையும் நான் பெற்றுக்கொண்டேன்.
2 எபி. ௰ங. ௰சா.
3 உ கொரி. உ. ௰ரு.
4 பிலி. உ. உரு.
5 எபே. க.எ: ங. ௰சா.
6 சங். உங. க. உ கொரி. கூ. அ.
7 உரோ. ௰சா. உஎ. கலா. க. ரு.
8 கலா. க. உ.
9 பிலி. க. ௰ங.
10 உரோ. ௰சா. உச.

Digitized by Google

# COLOSSIANS.

அப்போஸ்தலனாகிய பவுல்

# கொலோசெயருக்கு எழுதின

## நிருபம்.

## க. அதிகாரம்.

க. அவர்களை வாழ்த்தி அவர்கள் விசுவாசத்துக்காகப் பராபரனைத் தோத்திரித்து, எ. எப்பாப்பிராவின் உபதேசத்தை ஸ்திரப்படுத்தி, கூ. அவர்கள் கிருபையில் வளரும்படி செபம்பண்ணி, ௰ரு. மெய்யான கிறிஸ்துவின் மகிமையைக்கூறி, உக. அவனை அவர்கள் ஏற்றுக்கொள்ளும்படி வித்த் தன் ஊழியத்தைக்குறித்துச் சொல்லியது.

பராபரனுடைய சித்தத்தினாலே இயேசுக்கிறிஸ்துவினுடைய[1]அப்போஸ்தலனாகிய பவுலும் சகோதரனாகிய தீமோத்தேயும்,

உ கொலோசை ஊரிலே கிறிஸ்துவுக்குள் இருக்கிற [2]பரிசுத்தவான்களுமாய், விசுவாசிகளுமாயிருக்கிற சகோதரருக்கு எழுதுகிறதாவது: நம்முடைய பிதாவாகிய பராபரனாலும் கர்த்தராகிய இயேசுக்கிறிஸ்துவினாலும் உங்களுக்குக் [3]கிருபையும் சமாதானமும் உண்டாகக்கடவது.

௩ ¶ நீங்கள் [4]இயேசுக்கிறிஸ்துவினிடத்தில் விசுவாசமாயிருக்கிறதையும் சத்தியவசனமாகிய சுவிசேஷத்தினாலே முன்பு கேட்டதுமாய்,

ச [5]பரமண்டலங்களில் உங்களுக்காக வைக்கப்பட்டதுமாய் இருக்கிற (நித்திய சுதந்தரத்தை) நம்புகிறதினாலே சகல பரிசுத்தவான்கள்மேலும் [6]அன்புகூருகிறதையும் நாங்கள் கேள்விப்பட்டு,

ரு உங்களுக்காக எப்பொழுதும் செபம்பண்ணி, நம்முடைய கர்த்தராகிய இயேசுக்கிறிஸ்துவின் பிதாவுமாய்த் தேவனுமாய் இருக்கிறவரைத் [7]தோத்திரம் செய்கிறோம்.

சு [8]இந்தச் சுவிசேஷம் உலகத்தில் எங்கும் வியாபித்து, [9]பலனைக் கொடுக்கிறதுபோல, (அது) உங்களிடத்திலும் சேர்ந்து, [10]நீங்கள் பராபரனுடைய கிருபையை உண்மையாய்க் கேட்டு அறிந்துகொண்ட நாள்முதல் உங்களுக்குள்ளும் பலனைக் கொடுக்கிறதாய் இருக்கின்றது.

எ அதை நீங்கள் எங்களுக்குப் பிரியமான உடன்வேலைக்காரனுமாய், உங்களுக்காகக் [11]கிறிஸ்துவினுடைய உண்மையான ஊழியக்காரனுமாய் இருக்கிற [12]எப்பாப்பிராவினிடத்தில் கற்றுக்கொண்டவர்களாயும் இருக்கிறீர்கள்.

அ [13]ஆவிக்கேற்ற உங்கள் அன்பை அவன் எங்களுக்கு அறிவித்தவனாயும் இருக்கிறான்.

கூ ¶ ஆகையால், அதைக் கேள்விப்பட்ட நாள்முதல் நாங்கள்

இ. பி. கூச.

1 எபே.க.க.
2 க கொரி. ச. ௰எ. எபே.க. உக.
3 கலா.௩.௩.
4 கூ. ௰ச. எபே. க.௰௫. பிலே. ரு.
5 உ தீமோ. ச. அ. க பே. க.ச.
6 எபி.சு.௰.
7 க கொரி. க.ச. எபே. க. ௰சு. பிலி.க ௩: ச.சு.
8 மத். உச. ௰ச. மாற். ௰சு. ௰ரு. உரோ. ௰. ௰அ. உசு.௰ச.
9 மாற். ச. அ. யோவா. ௰ரு. ௰சு. பிலி. க. ௰க.
10 உ கொரி. சு. க. எபே.௩.உ. தீத். உ. ௰க. க பே. ரு. ௰உ.
11 உ கொரி. ௰க. உ௩. க தீமோ. ச.சு.
12 கொலோ. ச. ௰உ. பிலே. உ௩.
13 உரோ. ௰ரு. ௩௰.

Digitized by Google

உங்களுக்காக விண்ணப்பம்பண்ணி, [1]நீங்கள் எல்லாவிதமான நற்கிரியைகளைச் செய்கிறவர்களாயும், பராபரனை அறிகிற அறிவை அதிகமதிகமாய் அடைகிறவர்களாயும்,

ய [2]சந்தோஷத்தோடே [3]பொறுமையாயும் நீடிய சாந்தமாயும் இருப்பதற்கு, அவருடைய மகிமை பொருந்திய வல்லமையினாலே எல்லாவிதமான [4]பெலத்தை உடையவர்களாயும்,

யக [5]ஒளியிலுள்ள பரிசுத்தவான்களுடைய சுதந்தரத்திற்குப் பங்காளிகள் ஆவதற்கு நம்மைத் தகுதியானவர்களாக்கி, [6] இருளினுடைய அதிகாரத்தில் நின்று விடுதலைபண்ணி, தமக்கு [7]அன்பாயிருக்கிற* குமாரனுடைய இராச்சியத்திற்கு உட்படுத்திவைத்த [8]பிதாவைத் தோத்திரம்செய்கிறவர்களாயும் இருந்து,

யஉ (இப்படிக்) [9]கர்த்தாவுக்குப் பாத்திரமாயும் [10]மிகுந்த பிரியமாயும் நடக்கும்படிக்கு,

யங [11]எல்லா ஞானத்தோடும் பரிசுத்த ஆவிக்கேற்ற விவேகத்தோடும் தமது [12]திருச்சித்தத்தை அறிகிற அறிவினாலே [13]உங்களை நிரப்பவேண்டுமென்று [14]ஓயாமல் அவரை நோக்கி வேண்டிக்கொள்ளுகிறோம்.

யச [15]அவருடைய குமாரன் தம்முடைய திரு இரத்தத்தைச் சிந்தினதினாலே, நமக்குப் பாவமன்னிப்பாகிய மீட்பு உண்டாயிருக்கின்றது.

யரு [16]அவர் அதரிசனமாயிருக்கிற பராபரனுடைய சாயலுமாய்,

யசா பரமண்டலங்களிலும் பூமியிலுமுள்ள காணப்படுகிறவைகளும் காணப்படாதவைகளுமாகிய யாவற்றையும், சிங்காசனங்களில் இருக்கிறவர்களையும், [17]கர்த்தத்துவமுடையவர்களையும், பிரபுக்களையும், அதிகாரிகளையும் [18]உண்டாக்கினபடியினாலே, [19]சிருட்டிகள் யாவுக்கும் முதன்மையுமாய் இருக்கிறார்; [20]சகலமும் அவராலும் அவருக்காகவும் சிருட்டிக்கப்பட்டிருக்கின்றன.

யஎ [21]எல்லாவற்றிற்கும் முன்னமே இருக்கிறார்; சகல வஸ்துக்களும் அவராலே நிலையாயிருக்கின்றன.

யஅ [22]அவர் தமது சபையாகிய சரீரத்திற்குத் தலையாய் இருக்கிறதுமல்லாமல், எல்லாவற்றிற்கும் † அவர் முந்தினவராய் இருக்கும்படிக்கு, ஆதியும், மரித்தோரிலிருந்து எழுந்த [23]முதற்பேறுமானவராய் இருக்கிறார்.

யகூ ¶ [24]சகல சம்பூரணமும் அவருக்குள்ளே வாசமாயிருக்கும்படிக்கும்,

உய அவர் சிலுவைமரத்திலே [25]சிந்தின தமது இரத்தத்தினாலே சமாதானம் உண்டுபண்ணினபின் ‡ பூமியிலும் பரமண்டலங்களிலுமுள்ள [26]வஸ்துக்கள் யாவையும் [27]அவராலே தம்முடனே ஒப்புரவாக்கும்படிக்கும், பிதாவானவர் பிரியமாயிருந்தார்.

உக ¶ [28]முன்னே நீங்கள் பொல்லாத கிரியைகளினாலே (உங்கள்) மனதிலே§ சத்துருக்களுமாய் [29]அந்நியருமாய் இருந்தீர்கள்.

உஉ இப்பொழுது [30]உங்களைப் பரிசுத்தவான்களாகவும் மாசற்றவர்களாகவும் குற்றம்சாற்றப்படாதவர்களாகவும் தமக்குமுன்பாக நிறுத்தும்படிக்கு, [31]அவர் தமது மாம்சதேகத்தை மரணத்திற்கு ஒப்புக்கொடுத்ததினாலே உங்களையும் ஒப்புரவாக்கினார்.

உங நீங்கள் கேட்டதாயும், [32]வானத்தின்கீழுள்ள சகலவித சனங்களுக்கும் [33]பிரசங்கம்பண்

கி. பி. சுசா.

1 யோவா. யஞ. யசு. உ கொரி. கூ. அ. பிலி. க. யக. தீத். க. க. எபி. யக. உக.
2 அப். ஞ. சக. உரோ. ஞ. க.
3 எபே. ச. உ.
4 எபே. க. யக: க.ய.
5 அப். உசு. யஅ. எபே.க.யக.
6 எபே.க.யஉ. எபி. உ. யச. க பே. உ. கூ.
7 க தெச. உ. யஉ. உ பே.க. யக.
* கிரேக்கு, தம தன்பின்; மத். க.யஎ. எபே.க. க.
8 எபே. ஞ,உய. கொலோ. க. யஞ.
9 எபே. ச. க. பிலி. க. உஎ. க தெச. உ.யஉ.
10 க தெச. ச. க.
11 எபே. க. அ.
12 உரோ.யஉ.உ. எபே. ஞ,ய,யஎ,
13 க கொரி.க.ஞ.
14 எபே க. யஞ, யக. க, ச. யச.
15 எபே. க. எ.
16 உ கொரி.ச.ச. எபி.க க.
17 உரோ.அ.கஅ. எபே. க. உக. கொலோ.உ.ய, யஞ. க பே. க. உஉ.
18 யோவா. க.க. க கொரி. அ.க. எபே. க. கூ. எபி.க.க.
19 வெளி. க. யச.
20உரோ.யக.கக. எபி.உ.ய.
21 யோவா. க. க, க: யஎ. ஞ. க கொரி. அ.க.
22 க கொரி.யக.க. எபே.க.ய,உஉ: ச.யஞ: ஞ.உக.
† அல்லது எல்லாருக்குள்ளும்.

23 அப். உக. உக. க கொரி. யஞ. உய, உக. வெளி. க. ஞ. — 24 யோவா. க. யக: க. கச. கொலோ. உ. கூ: க. யக.
25 எபே. உ. யச, யஞ, யக.—‡ அல்லது உண்டுபண்ணி.—26 எபே. க. ய.—27 உ கொரி. ஞ. யஅ.—28 தீத். க. யஞ, யக.
§ அல்லது பொல்லாத கிரியைகளில் உங்கள் மனதால்.—29 எபே. உ. க, உ, யஉ, யக: ச. யஅ.—30 லூக். க. எஞ.
எபே. க, ச: ஞ. உஎ. க தெச. ச. எ. தீத். உ. யச. யூதா. உச.—31 எபே. உ. யஞ, யக.—32 க. உச.—33 உரோ. ய. யஅ.

Digitized by Google

ணப்பட்டதாயும், [1]பவுலென்னும் என்னாலே ஊழியம்செய்யப்படுகிறதாயும் இருக்கிற சுவிசேஷத்தினாலே (தெரியவந்த இரட்சிப்பை) [2]நீங்கள் அசைவில்லாமல் நம்புகிறவர்களுமாய், விசுவாசத்தினாலே [3]ஸ்திரமும் உறுதியும் உள்ளவர்களுமாய் நிலைகொண்டு இருந்தீர்களானால், (உங்களை) அப்படியே தமக்குமுன்பாக நிறுத்துவார்.

உச ¶ இப்பொழுது நான் [4]உங்களுக்காகப் படுகிற பாடுகளினாலே [5]சந்தோஷமடைந்து, கிறிஸ்துவினுடைய [6]உபத்திரவங்களில் சேஷமான உபத்திரவங்களை [7]அவருடைய சரீரம் என்னும் சபைக்காக என் மாம்சத்திலே நிறைவேற்றுகிறேன்.

உரு [8]பராபரனுடைய நியமிப்பின்படியே நான் அந்தச்சபைக்கு ஊழியக்காரன் ஆனேன்.

உசு ஆதிகாலங்களுக்கும் தலைமுறைதலைமுறைகளுக்கும் மறைவாயிருந்து, இப்பொழுது [9]அவருடைய பரிசுத்தவான்களுக்கு வெளியாக்கப்பட்ட [10]மறைபொருளாகிய தேவவசனத்தை நிறைவாய்ப் பிரசங்கம்பண்ணும்படிக்கு* அந்த நியமிப்பு உங்களுக்காக எனக்குக் கொடுக்கப்பட்டிருக்கின்றது.

உஎ உலகத்தாரைக்குறித்து [11]இந்த மறைபொருளிலுள்ள சம்பூரணமான மகிமை இன்னதென்று அந்தப் பரிசுத்தவான்களுக்குத் [12]தெரியப்பண்ணச் சித்தமாயிருந்தார்; மகிமை உண்டாகும் என்கிற [13]நம்பிக்கைக்கு ஏதுவான கிறிஸ்து உங்களில்† இருக்கிறதே அந்தச் சம்பூரணமான மகிமை.

உஅ [14]எந்த மனிதனையும் கிறிஸ்து இயேசுவினாலே தேறினவனாக நிறுத்தும்படிக்கு அவனையே நாங்கள் அறிவித்து, எந்த மனிதனுக்கும் [15]புத்திசொல்லி, சகலவிதமான ஞானத்தோடும் உபதேசிக்கிறோம்.

உகூ அதற்காக [16]நான் எனக்குள்ளே வல்லமையாயிருக்கிற அவருடைய பெலத்தின்படி [17]போராடிப் [18]பிரயாசப்படுகிறேன்.

## உ. அதிகாரம்.

க. கிறிஸ்துவை உறுதியாய்ப் பற்றிக்கொள்ளவும், அ. உலகஞானத்துக்கும், வீணான பாரம்பரைகளுக்கும் எச்சரிக்கையாயிருக்கவும், ௰அ. தெய்வதூதர் ஆராதனையையும், உ௰. கிறிஸ்துவுக்குள் கிலைபெற்றுப்போன சடங்காசாரங்களையும் செய்யாதிருக்கவும் புத்திசொல்லியது.

ஆகையால், [19]ஞானம் அறிவு என்பவைகளாகிய பொக்கிஷங்கள் எல்லாம் அடங்கியிருக்கிற கிறிஸ்துவுக்கும்‡ பிதாவாகிய பராபரனுக்கும் உரிய மறைபொருளை,

உ [20]நீங்கள் அறிக்கை இம்மட்டுக்கான மிகவும் மிகுந்த நிச்சயமுள்ள விவேகத்தை அடைந்து, [21]அன்பினாலே இணைக்கப்பட்டவர்களாய் இருக்கத்தக்கதாக,

௩ உங்கள் இருதயங்களும், இலாவோதிக்கையா ஊரிலுள்ளவர்களுடைய இருதயங்களும், மற்றும் என்முகத்தை மாம்சத்தில் காணாதிருக்கிற எல்லாருடைய [22]இருதயங்களும் ஆறுதலை அடையும்படிக்கு, நான் உங்களுக்காகவும் அவர்களுக்காகவும் [23]பண்ணுகிற மிகுந்த பிரயாசத்தை§ நீங்கள் அறியவேண்டும் என்று விரும்புகிறேன்.

ச [24]ஒருவனும் நயவசனிப்பினாலே உங்களை வஞ்சியாதபடிக்கு இதைச் சொல்லுகிறேன்.

ரு என்னத்தினாலெனில், [25]நான் தேகத்தின்படி தூரமாயிருந்தும் என் ஆவியின்படி உங்களுடனே கூடஇருந்து, உங்கள் [26]ஒழுங்கை

கி. பி. ௬௪.

1 அப். க. ௰எ. உ கொரி. ௧.௧: ச. க: ௫.௰அ. எபே. க. எ. உ௫. வசனம். க தீமோ. உ. எ.
2 பிலி.௰௫.௧.
3 எபே க. ௰எ. கொலோ.உ.எ.
4 எபே ௩.௧, ௰௩.
5 உரோ ௫. ௩. உ கொரி. எ.ச.
6 உ கொரி. க ௫.௧. பிலி.௩.௰. உ தீமோ. ௧.அ: உ.௰.
7 எபே க. உ௩.
8 க கொரி. ௯. ௰எ. கலா. உ. எ. எபே.௩.உ. உ௩.௰ச.
9 மத். ௰௩. ௰௧. உ தீமோ. க.௰.
10 உரோ. ௰௬. உ௫. க கொரி. உ.எ. எபே.௩. ௯.
* அல்லது நிறைவேறும் படிக்கு; உரோ.௰௫. ௰௯.
11 உரோ. ௯. உ௩. எபே.௩. எ: ௧. அ.
12 உ கொரி. உ ௰ச.
13 க தீமோ. க.க.
† அல்லது உங்களுக்குள்ளே.
14 உ கொரி. ௰௪. உ. எபே. ௫. உஎ, உஉ, வச.
15 அப். உ௰. உ௰, உஎ, ௩௧.
16 எபே. க. ௰௯: ௩.எ,உ௰.
17 கொலோ. உ. க.
18 க கொரி.௰௫.௰.
19 க கொரி. க. உச: உ.௬,எ. எபே. க. அ. கொலோ. க.௯.
‡ அல்லது அடங்கிக் கிறிஸ்துவுக்கும்.
20 பிலி. க. அ. கொலோ. க.௯.

21 கொலோ.௩.௰ச.—22 உ கொரி.க.௩.—23 பிலி.க.௩௰. கொலோ.க.உ௯. க தெச.உ.உ.—§ அல்லது பயத்தை, அல்லது கவலையை —24 உரோ.௰௬.௰அ. உ கொரி.௰௧.௰௩. எபே.ச.௰ச: ௫.௬,௰அ.வச.—25 க கொரி.௫.௩. க தெச.உ.௰எ.—26 க கொரி. ௰ச.ச௰.

Digitized by Google

யும் கிறிஸ்துவின்மேலுள்ள உங்கள் [1]விசுவாசத்தின் உறுதியையும் பார்த்துச் சந்தோஷப்படுகிறேன்.

சு [2]ஆனபடியினாலே நீங்கள் கர்த்தராகிய கிறிஸ்து இயேசுவை ஏற்றுக்கொண்டு இருக்கிறபடியால்,

எ நீங்கள் போதனை அடைந்தபடி [3]அவருக்குள்ளே வேரூன்றி, அவர்மேலே கட்டப்பட்டு, விசுவாசத்தில் உறுதியைப் பெற்று, இப்படி அவருக்கு ஏற்றபடி நடந்துகொண்டு, தோத்திரம் செய்து, அந்த விசுவாசத்தை அதிகமதிகமாய் அடைவீர்களாக.

அ கிறிஸ்துவின்படியல்ல, [4]மனிதருடைய பாரம்பரை நியாயத்தின்படியேயும், [5]உலகத்திலுள்ள சிறுமையான வழிபாடுகளின் *படியேயும் ஆன வீணுமாய் வஞ்சனையுமாய் இருக்கிற கல்வியினாலே [6]ஒருவனும் உங்களைக் கொள்ளையிடாதபடிக்குப் பாருங்கள்.

கூ என்னத்தினாலெனில், தேவத்துவத்தின் நிறைவெல்லாம் மெய்யாய்க் [7]கிறிஸ்துவுக்குள்ளே வாசமாயிருக்கின்றன.

ய மேலும், சகல [8]துரைத்தனங்களுக்கும் அதிகாரங்களுக்கும் [9]தலைவராயிருக்கிற அவருக்குள் [10]நீங்கள் நிறைவுள்ளவர்களாய் இருக்கிறீர்கள்.

யக அவரோடே நீங்கள் ஞானஸ்நானத்தினாலே அடக்கம்பண்ணப்பட்டவர்கள் ஆனபொழுது, அவர் பண்ணுகிற விருத்தசேதனத்தினாலே [11]நீங்கள் பாவங்களுள்ள மாம்சதேகத்தைக் கழற்றினபடியால், [12]கையால் செய்யப்பட்டிராத விருத்தசேதனத்தை அவருக்குள்ளும் பெற்றுக்கொண்டீர்கள்.

யஉ மேலும், பராபரன் [13]அவரை மரித்தோரிலிருந்து எழுப்பின பலத்த செய்கையை [14]விசுவாசிக்கிறதினாலே [15]நீங்கள் அந்த ஞானஸ்நானத்திலே [16]அவருடனேகூட எழுந்தும் இருக்கிறீர்கள்.

யங எப்படியெனில் பாவங்களாலும் உங்கள் மாம்சத்தின் துனித்தோல் என்னும் (அஞ்ஞானமார்க்கத்தாலும்) [17]மரித்தவர்களாய் இருந்த உங்களை அவரோடேகூடவும் அவர் உயிர்ப்பித்து, பாவங்களை எல்லாம் உங்களுக்கு மன்னித்து,

யச நமக்காகச் செய்யப்பட்டதுமாய் நமக்கு விரோதமுமாய் இருந்த [18]கட்டளைகளின் கையெழுத்தைக் கொலைத்து, அதை நடுவில் இராதபடிக்கு எடுத்து, அதைச் சிலுவைமரத்தில் சேர்த்து, ஆணி அடித்துப்போட்டு,

யரு [19]துரைத்தனங்களையும் அதிகாரங்களையும் [20]கொள்ளையிட்டு, வெளியரங்கமாய்க் காண்பித்து, இவ்விதமாய்† அவைகளைச் செயித்துக் கெம்பீரம் அடைந்தார்.

யசு ¶ ஆதலால் [21]போசனத்தையும் பானத்தையும்‡ பண்டிகையையும் மாதப்பிறப்பையும் [22]ஓய்வுநாள்களையும்§ குறித்து எவனாலும் [23]உங்களைக் குற்றவாளிகள் ஆக்காதிருப்பானாக.

யஎ [24]அவைகள் பின்வந்தவைகளுக்கு நிழலாயிருக்கின்றன; அவைகளின் பொருள் கிறிஸ்துவினிடத்திலே உண்டாயிருக்கின்றது.

யஅ (மாயமான) தாழ்மையின்மேலும்,‖ தேவதூதருக்குச் செய்யும் ஆராதனையின்மேலும் விருப்பமுற்றிருக்கிற யாவனாலும் உங்கள் [25]பந்தயப்பொருளை நீங்கள் இழந்துபோகும்படி செய்யாதிருப்பானாக;¶ அப்படிப்பட்டவன் [26]தான் காணாதவைகளைத் துணிவாய் நடத்துகிறவனுமாய், தன் மாம்சசிந்தையினாலே வீணாய் இறுமாப்புக்கொண்டிருக்கிறவனுமாய்,

கி. பி. சுஅ.

1 க பே. ௫. கூ.
2 க தெச. ச. க. யூதா. க.
3 எபே. உ. உக, உஉ: க. யஎ. கொலோ. க. உக.
4 மத் யரு. உ. கலா. க. யச. உஉ. வச.
5 கலா. ச. க, கூ. உய. வச.
* அல்லது மூலகாரணங்கள்.
6 எரே. உகூ. அ. உரோ. யசு. யஎ. எபே. ௫. சு. யஅ. வச. எபி. யங. கூ.
7 யோவா. க யச. கொலோ. க. யகூ.
8 கொலோ. க. யசு.
9 எபே. க. உய, உக. க பே. க. உஉ.
10 யோவா. க. யசு.
11 உரோ. சு சு. எபே. ச. உஉ. கொலோ. க. அ, கூ.
12 ௫ மோ. ய. யசு கய. சு. எரே. ச. ச. உரோ. உ. உகூ. பிலி. க க.
13 அப். உ. உச.
14 எபே. க. யகூ: க. எ.
15 உரோ. சு. ச.
16 கொலோ. க. க.
17 எபே. உ. க, ௫, யக.
18 எபே. உ. யரு.
19 எபே. சு. யஉ.
20 க மோ. க. யரு. சங். சுஅ. யஅ. ஏசா. ருங. யஉ. மத். யஉ. உகூ. லூக். ய. யஅ: யக, உஉ. யோவா. யஉ, கக: யசு. யக. எபே. ச. அ. எபி. உ. யச.
† அல்லது தமக்குள்.

21 உரோ. யச. உ, யஎ. க கொரி. அ. அ.—‡ அல்லது போசனபானம்பண்ணுதலையும்.—22 உரோ. யச. ௫. கலா. ச. ய.—§ அல்லது பண்டிகைக்கடுத்த காரியத்தையும்.—23 உரோ. யச. க, ய,யக.—24 எபி. அ. ௫: கூ. க: ய. க.—‖ கிரேக்கு. தாழ்மையிற் பிரியமாயிருக்குதலின்மேலும்; உக. வசனம்.—25 ச. வச.—¶ அல்லது நீராளுக.—26 எசே. யங. ங. க தீமோ. க. எ.

Digitized by Google

௰௯ கணுக்களாலும் கட்டுதற்கானவைகளாலும் உதவிபெற்று இணைக்கப்பட்ட சரீரமெல்லாம் தேவ வளர்த்தியாக வளரச்செய்கிற [1]தலையைப் பற்றிக்கொள்ளாதவனுமாய் இருக்கிறான்.

உ௰ ¶ அப்படியிருக்கக் கையாளுகிறதினாலே அழிவுக்கு ஏதுவான பதார்த்தங்களில் இதைச் சாப்பிடக்கூடாது,

உக இதை ருசிபார்க்கக்கூடாது, [2]இதைத் தீண்டக்கூடாது என்று சொல்லிய [3]மனிதருடைய கற்பனைகளின்படியேயும்போதகங்களின்படியேயும் சிலர் கற்பிக்கிறார்களே.

உஉ [4]அப்படிப்பட்ட கற்பனைகள் [5]சுயசித்த ஆராதனையினாலும் தாழ்மையினாலும் சரீரத்திற்கு வேண்டிய கனம்செய்யாமல், அதை வருத்தபபடுத்துகையினாலும்* ஞானவேஷமுள்ளவைகளாய் இருக்கின்றது உள்ளதுதான்.

உ௩ ஆனாலும் கிறிஸ்துவுடனேகூட நீங்கள் [6]உலகத்திலுள்ள சிறுமையான வழிபாடுகளுக்கு† [7]மரித்தவர்களானபடியால், நீங்கள் உலகத்தின்படி பிழைக்கிறவர்கள் போல [8]அந்தக் கட்டளைகளைச் சுமந்துகொள்ளுகிறதென்ன?

## ௩. அதிகாரம்.

க. கிறிஸ்துவை இப்படித் தேடவேண்டுமென்றும், ரு. இச்சைகளை அடக்கவும், ௧௦. பழைய மனிதனைக் களைந்துவிட்டுக்கிறிஸ்துவைத் தரித்துக்கொள்ளவும், ௧௨. தருமம் தாழ்மைமுதலிய கடமைகளைச் செய்யவும் புத்திசொல்லியது.

[9]நீங்கள் கிறிஸ்துவுடனேகூட எழுப்பப்பட்டிருந்தால் [10]கிறிஸ்து பராபரனுடைய வலதுபாரிசத்தில் உளுக்காந்திருக்கிற இடத்திலுள்ள மேலானவைகளைத் தேடிக்கொள்ளுங்கள்.

உ [11]நீங்கள் மரித்தீர்களே, அல்லாமலும், [12]கிறிஸ்துவுடனேகூட உங்கள் சீவன் பராபரனிடத்தில் மறைந்திருக்கின்றதே.

௩ ஆகையால், பூமியில் உள்ளவைகளை அல்ல, மேலானவைகளையே சிந்தித்துக்கொள்ளுங்கள்.‡

௪ [13]நமக்குச் சீவனாகிய [14]கிறிஸ்து வெளிப்படும்பொழுது, அவருடனேகூட நீங்களும் [15]மகிமையோடே வெளிப்படுவீர்கள்.

ரு ¶ ஆகையால், பூமியிலே [16]வேசித்தனமும் அசுத்தமும் விரகதாபமும் [17]துர்இச்சையும் [18]விக்கிரக ஆராதனையான பொருளாசையுமாகிய [19]உங்கள் அவயவங்களை [20]அழித்துப்போடுங்கள்.

௬ [21]அவைகளின்நிமித்தம் பராபரனுடைய கோபம் [22]கீழ்ப்படியாமையுள்ள பிள்ளைகள்மேல் வருமே.

எ முற்காலத்திலே நீங்களும் அவர்களுடனேகூடச் சீவனம்பண்ணினபொழுது, [23]அவைகளைச் செய்துகொண்டுவந்தீர்கள்.

அ இப்பொழுது கோபமும் மூர்க்கமும் துர்க்குணமும் தூஷணமும், [24]நீங்கள் பேசின் வம்பு வார்த்தைகளுமாகிய அவைகளை எல்லாம் [25]விட்டுவிடுங்கள்.

௯ [26]பழைய மனிதனையும், அதினுடைய செய்கைகளையும் நீங்கள் கழற்றிப்போட்டு, [27]தன்னைச் சிருட்டித்தவருடைய [28]சாயலுக்கு ஏற்ற [29]அறிவு உண்டாகும்படிக்கு, புதிதாக்கப்பட்ட புதியமனிதனைத் தரித்துக்கொண்டவர்களாய்,

௰ [30]ஒருவருக்கொருவர் பொய் சொல்லாதிருங்கள்.

௰௧ அங்கே [31]கிரேக்கன் என்றும், யூதன் என்றும், விருத்தசேதனமுள்ளவன் என்றும், விருத்தசேதனமில்லாதவன் என்றும், புறத்தேசத்தான் என்றும், இஸ்கித்தன் என்றும், அடிமை என்றும், சுயாதீனன் என்றும் (சொல்லப்பட்ட

௨. பி. கூச.

1 எபே. ச. ௰௫, ௰௬.
2 க தீமோ. ச. ௩.
3 ஏசா. உ௯ ௰௩. மத். ௰௫. ௯ தீத். க. ௰௪.
4 க தீமோ. ச. அ.
5 ௰அ. வச.
* அல்லது அதை அசட்டைபண்ணுதலிலும்.
6 அ. வச.
† அல்லது மூல காரணங்கள்.
7 உரோ. ௬. ௩, ௫: எ. ச, ௬. கலா. உ. ௰௯. எபே. உ. ௰௫.
8 கலா. ச. ௩, ௯.
9 உரோ. ௬. ௫. எபே. உ. ௬. கொலோ. உ ௰உ.
10 உரோ. அ. ௩௪. எபே. க. உ௰.
11 உரோ. ௬. உ. கலா. உ. உ௰. கொலோ. உ. உ௰.
12 உகொரி. ௫. எ. கொலோ. க. ௫.
‡ அல்லது விரும்புங்கள்.
13 யோவா ௰௪. உ௫: ௰ச. ௬.
14 க யோ. ௩. உ.
15 க கொரி. ௰௫. ௪௩. பிலி. ௩. உக.
16 எபே. ௫. ௩.
17 க தெச. ச. ௫.
18 எபே. ௫. ௫.
19 உரோ. ௬. ௰௩.
20 உரோ. அ. ௰௩. கலா. ௫. உச.
21 உரோ. க.௰அ, எபே. ௫. ௬. வெளி. உஉ. ௰௫.
22 எபே. உ. உ.
23 உரோ. க.௰௯, உ௰: எ. ௫. க கொரி. ௬.௰௧. எபே. உ. உ, தீத். ௩. ௩.
24 எபே. ச.உ௯: ௫. ச.

25 எபே.ச.உஉ. க பே உ.க. எபி ௰உ.க. யாக்.க.உக.—26 எபே.ச.உஉ, உச.—27 எபே. உ. ௰.—28 எபே. ச.உக, உச.
29 உரோ.௰உ.உ.—30 க மோ.௰௯.௰௧. எபே.ச.உ௫.—31 உரோ.௰.௰உ. க கொரி.௰உ.௰௩.
கலா.௩.உஅ: ௫.௬. எபே.௬.அ.

Digitized by Google

வேற்றுமை) இல்லை; [1]கிறிஸ்துவே எல்லாருக்குள்ளும் எல்லாமுமாய் இருக்கிறார்.

௰௨ ¶ அப்படியிருக்க, [2]நீங்கள் பராபரனாலே தெரிந்துகொள்ளப்பட்டவர்களாயும், பரிசுத்தராயும், சிநேகிக்கப்பட்டவர்களாயும் இருக்கையால், [3]உருக்கமான இரக்கத்தையும் தயையையும் மனத்தாழ்மையையும் பொறுமையையும் நீடிய சாந்தத்தையும் [4]தரித்துக்கொண்டு,

௰௩ [5]ஒருவரை ஒருவர் தாங்கி, ஒருவன் மற்றொருவன்மேல் விதனமாயிருந்தால்,* கிறிஸ்து உங்களுக்கு மன்னித்ததுபோல, நீங்களும் ஒருவருக்கு ஒருவர் மன்னியுங்கள்.

௰௪ [6]அன்றியும் அவைகள் எல்லாவற்றின்மேலும் [7]அன்பைத் தரித்துக்கொள்ளக்கடவீர்கள்; [8]அதுவே பூரண சற்குணங்களை இணைக்கிற கச்சையாயிருக்கின்றது.

௰௫ அல்லாமலும் [9]பராபரனுடைய சமாதானம் உங்கள் இருதயங்களுக்குள்ளே ஆளுகைசெய்யக்கடவது; [10]நீங்கள் ஒரே சரீரமாய் இருக்கும்படிக்கு, [11]அந்தச் சமாதானத்திற்கு அழைக்கப்பட்டீர்களே. [12]நன்றியறிதல் உள்ளவர்களாயும் இருப்பீர்களாக.

௰௬ ¶ கிறிஸ்துவினுடைய வசனம் உங்களுக்குள்ளே பரிபூரணமாய் வாசமாயிருக்கக்கடவது; சகல ஞானத்தோடும் [13]சங்கீதங்களினாலும், கீர்த்தனங்களினாலும், மற்ற ஞானப்பாட்டுக்களினாலும், ஒருவருக்கு ஒருவர் போதித்துப் புத்திசொல்லிக்கொண்டு, [14]பராபரனை உங்கள் இருதயங்களிலே இனிதாய்ப் பாடி,

௰௭ [15]நீங்கள் வசனம்சொன்னாலும், கிருயைசெய்தாலும், எவை செய்தாலும், அவைகளை எல்லாம் கர்த்தராகிய இயேசுவின் நாமத்தினாலே செய்து, அவர் முன்னிலையாய்ப் [16]பிதாவாகிய பராபரனைத் தோத்திரியுங்கள்.

௰௮ ¶ [17]ஸ்திரிகளே, [18]கர்த்தருக்கு ஏற்கும்படி உங்கள் சொந்தப் புருஷர்களுக்குக் கீழ்ப்பட்டிருங்கள்.

௰௯ [19]புருஷர்களே, உங்கள் மனைவிகளில் அன்புகூருங்கள்; [20]அவர்களுக்குக் கசப்புக்கொடாதிருங்கள்.

௨௰ ¶ [21]பிள்ளைகளே, உங்களைப் பெற்றவர்களுக்கு [22]எவ்விதத்திலும் கீழ்ப்பட்டிருங்கள்; அதுவே பராபரனுக்குப் பிரியமாயிருக்கிறது.

௨௧ [23]பிதாக்களே, உங்கள் பிள்ளைகள் திடனற்றுப்போகாதபடி அவர்களுக்குக் கோபமூட்டாதிருங்கள்.

௨௨ ¶ [24]வேலைக்காரரே, [25]சரீரத்தின்படி உங்களுக்கு எசமான்களானவர்களுக்கு, நீங்கள் [26]எவ்விதத்திலும் கீழ்ப்படிந்து, மனிதருக்குப் பிரியமாயிருக்க விரும்புகிறவர்கள்போல எசமான்கள் காணும்பொழுதுமாத்திரம் ஊழியம் செய்கிறவர்களாய் இராமல் பராபரனுக்குப் பயந்து, கபடமில்லாத இருதயத்தோடே கீழ்ப்படியுங்கள்.

௨௩ [27]மேலும், நீங்கள் கர்த்தாவாயிருக்கிற கிறிஸ்துவுக்கு ஊழியம்செய்கிறபடியால், சுதந்தரமென்னும் பலனைப் [28]பெறுவோம் என்று அறிந்தவர்களாய்,

௨௪ [29]எவைகளைச் செய்தாலும் அவைகளைஎல்லாம்மனிதருக்காக அல்ல, கர்த்தருக்காகவே மனச்சந்தோஷமாய்ச் செய்யுங்கள்.

௨௫ அநியாயம்செய்கிறவன் தான் செய்த அநியாயத்தால் வரும் பலனை அடைவான், [30]பட்சபாதமே இல்லை.

கி. பி. ௬௰௪.

1 எபே. ௧. ௨௩.
2 ௧ தெச. ௧. ௪. ௧ பே. ௧. ௨. ௨ பே. ௧. ௰.
3 கலா. ௬. ௨௨. பிலி. ௨. ௧. எபே. ௪. ௨, ௩௨.
4 எபே. ௪. ௨௪.
5 மாற். ௰௧. ௨௬. எபே. ௪. ௨, ௩௨.
* அல்லது முறைப்பாடு பண்ணினால்.
6 ௧ பே. ௪. ௮.
7 யோவா. ௰௩. ௩௪. உரோ. ௰௩. ௮. ௧ கொரி. ௰௩. எபே. ௬. ௨. கொலோ. ௨. ௨. ௧ தெச. ௪. ௯. ௧ தீமோ. ௧. ௬. ௧ யோ. ௩. ௨௩: ௪. ௨௧.
8 எபே. ௪. ௩.
9 உரோ. ௰௪. ௰௭. பிலி ௪. ௭.
10 எபே. ௨. ௰௬, ௰௭: ௪. ௪.
11 ௧ கொரி. ௭. ௰௫.
12 கொலோ. ௨. ௭. ௰௭. வச.
13 ௧ கொரி. ௰௪. ௨௬. எபே. ௫. ௰௯.
14 கொலோ. ௪. ௬.
15 ௧ கொரி. ௰. ௩௧.
16 உரோ. ௧. ௮. எபே. ௫. ௨௰. கொலோ. ௧. ௰௨: ௨. ௭. ௧ தெச. ௫. ௰௮. எபி. ௰௩. ௰௫
17 எபே. ௫. ௨௨. தீத். ௨. ௫. ௧ பே. ௩. ௧.
18 எபே. ௫. ௩.
19 எபே. ௫. ௨௫, ௨௮, ௩௩. ௧ பே. ௩. ௭.
20 எபே. ௪. ௩௧.
21 எபே. ௬. ௧.
22 எபே. ௫. ௨௪. தீத். ௨. ௯.
23 எபே. ௬. ௪.

24 எபே. ௬ ௫-௮. ௧ தீமோ. ௬. ௧. தீத். ௨. ௯. ௧ பே. ௨. ௰௮.—25 பிலே. ௰௬.—26 ௨௰. வச.—27 ௧ கொரி ௭. ௨௨.
28 எபே. ௧. ௮.—29 எபே. ௬. ௬, ௭.—30 உரோ. ௨. ௰௧. எபே. ௬. ௯. ௧ பே. ௧. ௰௭. ௫ மோ ௰. ௰௭.

Digitized by Google

## ச. அதிகாரம்.

க. அவர்கள் செபம்பண்ணவும், ஞ. கிறிஸ்துவின் மெய்யறிவுக்கு வந்த எட்டாதவர்களைக்குறித்து ஞானமாய் நடந்துகொள்ளவும் புத்திசொல்லி, ௰. அவர்களை வாழ்த்தினது.

எசமான்களே, உங்களுக்கும் பரமண்டலங்களில் எசமான் இருக்கிறார் என்று அறிந்தவர்களாய் நீங்கள் வேலைக்காரருக்கு [1]நீதியுமாய்ச் செவ்வையுமாய் இருக்கிறதைக் கொடுங்கள்.

உ ¶ [2]தோத்திரத்தோடே விண்ணப்பம்பண்ணுதற்கு விழித்திருந்து, [3]உறுதியாய் விண்ணப்பம் பண்ணுங்கள்.

௩ அவ்வேளையிலே [4]கிறிஸ்துவின் மறைபொருளின் நிமித்தம் [5]கட்டப்பட்டிருக்கிற நான் பேசவேண்டிய பிரகாரமாக அதை வெளிப்படுத்திப் பேசும்படிக்கு,

ச [6]பராபரன் இந்த வசனத்திற்கு வாசலைத் திறக்கவேண்டும் என்று, [7]எங்களுக்காகவும் விண்ணப்பம்பண்ணுங்கள்.

ரு ¶ [8]நீங்கள் காலத்தைப் பற்றிக்கொண்டு, புறம்பானவர்களுக்குமுன்பாக [9]ஞானமாய் நடந்துகொள்வீர்களாக.

சு நீங்கள் [10]அவனவனுக்குத் தகுதியான உத்தரவுசொல்லும் வகையை அறியும்படிக்கு, உங்கள் வசனம் எப்பொழுதும் [11]இனிதாயும், [12]உப்பால் இரசம் ஏற்றுகிறதுபோலவும் இருக்கக்கடவது.

எ ¶ பிரியமான சகோதரனுமாய், உண்மையுள்ள ஊழியக்காரனுமாய், என்னுடனேகூடக் கர்த்தருக்கு வேலையாளுமாய் இருக்கிற தீகிக்கு என்பவன் [13]என் செய்திகளை எல்லாம் உங்களுக்கு அறிவிப்பான்.

அ உங்கள் செய்திகளை அறிந்து, உங்கள் இருதயங்களுக்கு ஆறுதல் செய்யும்படிக்கு,

௯ நான் [14]அவனையும், உங்களில் ஒருவனாகிய உண்மையுள்ள பிரிய சகோதரனான [15]ஒநேசிமு என்பவனையும் உங்களிடத்திற்கு அனுப்பியிருக்கிறேன்; அவர்கள் இவ்விடத்துச் செய்திகளை எல்லாம் உங்களுக்கு அறிவிப்பார்கள்.

௰ ¶ என்னோடேகூடக் காவலில் வைக்கப்பட்டிருக்கிறவனாகிய [16]அரிஸ்தருக்கு என்பவனும், பருனபாவுக்கு இனத்தானாகிய [17]மாற்கு என்பவனும் உங்களுக்கு வாழ்த்துதல் செய்கிறார்கள்; இந்த மாற்கைக்குறித்துக் கட்டளைகளை அடைந்தீர்களே, அவன் உங்களிடத்தில் வரும்பொழுது அவனை அங்கிகரித்துக்கொள்ளுங்கள்.

௰க இயுஸ்து என்னப்பட்ட இயேசுவும் உங்களுக்கு வாழ்த்துதல்செய்கிறான்; விருத்தசேதனம் உள்ளவர்களில் இவர்கள்மாத்திரம் பராபரனுடைய இராச்சியத்திலே என்னுடனேகூட ஊழியக்காரராய் எனக்கு ஆறுதல்செய்துகொண்டுவந்தார்கள்.

௰உ உங்களில் ஒருவனாயிருக்கிற கிறிஸ்துவின் ஊழியக்காரனாகிய [18]எப்பாப்பிரா என்பவன் உங்களுக்கு வாழ்த்துதல்செய்கிறான்; நீங்கள் பராபரனுடைய சித்தமானது எல்லாவற்றிலேயும் [19]நிலைநின்று தேறினவர்களுமாய் நிறைவுள்ளவர்களுமாய் * இருக்கும்படிக்கு [20]அவன் எப்பொழுதும் உங்களுக்காக விண்ணப்பங்களினால் போராடுகிறான்.†

௰௩ அப்படியே அவன் உங்களுக்காகவும், இலாவோதிக்கையா இயேராப்பொலி என்னும் ஊர்களில் உள்ளவர்களுக்காகவும் மிகுந்த சாக்கிரதையுள்ளவனாய் இருக்கிறான் என்பதற்குச் சாட்சியாய் இருக்கிறேன்.

௰ச பிரியமான வைத்தியனாகிய [21]லூக்கா என்பவனும் [22]தேமா என்பவனும் உங்களுக்கு வாழ்த்துதல்செய்கிறார்கள்.

கி. பி. சுகூ.

1 எபே. சு. க.
2 கொலோ. உ. எ: க. ௰உ.
3 லூக். ௰அ. க. உரோ.௰உ. ௰உ. எபே. சு. ௰அ. க தெச. ஞ.௰எ, ௰அ.
4 மத். ௰௩. ௰௧. க கொரி. ச. க. எபே. சு. ௰௯. கொலோ. க. உசு: உ. உ.
5 எபே. சு. உ௰. பிலி. க. எ.
6 க கொரி. ௰சு. ௯. உ கொரி. உ. ௰உ.
7 எபே. சு. ௰௯. உ தெச. ௩. க.
8 எபே. ஞ. ௰சு.
9 எபே. ஞ. ௰ஞ. க தெச. ச. ௰உ.
10 க பே. ௩. ௰ஞ.
11 பிர. ௰. ௰உ. கொலோ. ௩. ௰௩.
12 மாற். ௯. ௫௰.
13 எபே. சு. உக.
14 எபே.சு. உஉ.
15 பிலே. ௰.
16 அப்.௰௯.உ௯: உ௰.ச: உ எ. உ. பிலே. உச.
17 அப். ௰ஞ. ௩எ. உ தீமோ.ச.௰௧.
18 கொலோ. க. எ. பிலே. உ௩.
19 மத். ஞ. சஅ. க கொரி. உ.சு: ௰ச. உ௰. பிலி. ௩. ௰ஞ. எபி. ஞ. ௰ச.
* அல்லது நிரப்பப்பட்டவர்களுமாய்.
20 உரோ. ௰ஞ. ௩௰.
† அல்லது பிரயாசப்படுகிறான்.
21 உ தீமோ. ச. ௰௧.
22 உ தீமோ. ச. ௰. பிலே. உச.

Digitized by Google

௰௫ ¶ இலாவோதிக்கேயாவில் இருக்கிற சகோதரர்களுக்கும் நிம்பா என்பவனுக்கும் [1]அவன் வீட்டிலே கூடுகிற சபையாருக்கும் வாழ்த்துதலைச் சொல்லுங்கள்.

௰௬ [2]இந்த நிருபம் உங்களிடத்தில் வாசிக்கப்பட்டபின், இது இலாவோதிக்கேயா சபையிலும் வாசிக்கப்படும்படிக்கும், இலாவோதிக்கேயாவிலிருந்து வரும் நிருபத்தை நீங்களும் வாசிக்கும்படிக்கும் செய்யுங்கள்.

௰௭ [3]அர்க்கிப்புவை நோக்கி நீ கர்த்தரிடத்தில் பெற்ற ஊழியத்தை நிறைவேற்றப் [4]பார்ப்பாயாக என்று சொல்லுங்கள்.

௰௮ ¶ [5]பவுலாகிய நான் உங்களுக்கு வாழ்த்துதல் செய்து, இதை என் கையினாலே எழுதினேன்; [6]நான் கட்டப்பட்டிருக்கிறதை நினைத்துக்கொள்ளுங்கள்; [7]கிருபை உங்களுடனே இருக்கக்கடவது.—ஆமென்.

கி. பி. ௬௪.

1 ரோ. ௧௬. ௫. ௧ கொரி. ௧௬. ௧௯.

2 ௧ தெச. ௫. ௨௭.

3 பிலே. ௨.

4 ௧ தீமோ. ௪. ௬.

5 ௧ கொரி. ௧௬. ௨௧. ௨ தெச. ௩. ௧௭.

6 எபி. ௰௩. ௩.

7 எபி. ௰௩. ௨௫.

Digitized by Google

# I. THESSALONIANS.

அப்போஸ்தலனாகிய பவுல்

# தெசலோனிக்கேயருக்கு

## எழுதின முதலாம் நிருபம்.

### க. அதிகாரம்.

*க. தெசலோனிக்கேயரைப் பவுல் எப்போதும் நினைவுகூர்ந்து அவர்களுக்காகத் தோத்திரமும், செபமும் பண்ணினதையும், ரு. அவர்களுடைய விசுவாசத்தின் நிச்சயத்தையும், அவர்களுடைய குணப்படுதலின் உத்தமத்தையுங்குறித்துத் தான் அடைந்திருந்த நிச்சயத்தையும் அறிவித்தது.*

பவுலும் [1]சில்வானும் தீமோத்தேயும், பிதாவாகிய பராபரனுக்குள்ளும், கர்த்தராகிய இயேசுக்கிறிஸ்துவுக்குள்ளும் இருக்கிற தெசலோனிக்கை ஊரிலுள்ள சபைக்கு எழுதுகிறதாவது: நம்முடைய பிதாவாகிய பராபரனாலும், கர்த்தராகிய இயேசுக்கிறிஸ்துவினாலும் [2]உங்களுக்குக் கிருபையும் சமாதானமும் உண்டாகக்கடவது.

உ ¶ பராபரனாலே அன்புகூரப்படுகிற சகோதரரே, [3]எங்கள் சுவிசேஷம் வசனத்தோடேமாத்திரமல்ல, வல்லமையோடும் [4]பரிசுத்தஆவியோடும் [5]மிகுந்தநிச்சயத்தோடும் உங்களுக்குள்ளே பிரவேசித்ததினாலே,

ங நீங்கள் (அவராலே) [6]தெரிந்துகொள்ளப் * பட்டவர்கள் என்று நாங்கள் அறிந்து,

ச நம்முடைய பிதாவாகிய பராபரனுக்குமுன்பாக விசுவாசத்தினாலே நீங்கள் செய்கிற [7]கிரியையையும், அன்பினாலே பண்ணுகிற [8]பிரயாசத்தையும், நம்முடைய கர்த்தராகிய இயேசுக்கிறிஸ்துவின்மேல் உள்ள நம்பிக்கையினாலே காண்பிக்கிற பொறுமையையும், நாங்கள் [9]இடைவிடாமல் நினைத்துக்கொண்டு,

ரு எங்கள் செபங்களிலே உங்களைக்குறித்துப் பேசி, உங்கள் எல்லாருக்காகவும், எப்பொழுதும் [10]பராபரனைத் தோத்திரம்செய்கிறோம்.

சா [11]நாங்கள் உங்களுக்குள்ளே இருந்தபொழுது, உங்களுக்காக இப்படிப்பட்டவர்களாய் இருந்தோம் என்று அறிந்திருக்கிறீர்களே; அன்றியும், நீங்கள் மிகுந்த உபத்திரவத்திலே [12]பரிசுத்தஆவியின் சந்தோஷத்தோடே வசனத்தை ஏற்றுக்கொண்டு, [13]எங்களையும் கர்த்தரையும் பின்பற்றி,

எ இப்படி மக்கேதோனியா நாட்டிலும், அகாயா நாட்டிலும் உள்ள விசுவாசிகள் யாவருக்கும் மாதிரியை வைத்தீர்கள்.

அ எப்படியெனில், உங்களிடத்திலிருந்து கர்த்தருடைய [14]வசனம் மக்கேதோனியா அகாயா நாடுக

கி. பி. ருச.

1 உ கொரி. க. ௰கூ. உ தெச. க. க. க பே. ரு. ௰உ.
2 எபே. க. உ.
3 மாற். ௰சா. உ௰. க கொரி. உ. ச: ச. உ௰.
4 உ கொரி. சா. சா.
5 கொலோ. உ. உ. எபி. உ. ௯.
6 கொலோ. ங. ௰உ. உ தெச. உ. ௰ங.

* அல்லது அன்பு கூரப்படுகிற சகோதரரே, நீங்கள் பராபரனாலே தெரிந்துகொள்ள.

7 யோவா. சா. உகூ. கலா. ரு. சா. க தெச. ங. ரு. உ தெச. க. ௩, ௰௩. யாக். உ. ௰எ.
8 உ ரோ. ௰சா. சா. எபி. சா. ௰.
9 க தெச. உ. ௰ங.
10 உ ரோ. க. அ. எபே. க. ௰சா. பிலே. ச.
11 க தெச. உ. க, ரு, ௰௯. உ தெச. ங. எ.
12 அப். ரு. சக. எபி. ௰. ௩ச.

13 க கொரி. ச. ௰சா: ௰க. க. பிலி. ங. ௰எ. க தெச. உ. ௰ச. உ தெச. ங. கூ.—14 உ ரோ. ௰. ௰அ.

Digitized by Google

வில் பிரசித்தமானதுமல்லாமல், நாங்கள் அதைக்குறித்து எதையாகிலும் சொல்லவேண்டியிராதபடிக்கு, நீங்கள் பராபரனைப்பற்றின விசுவாசம் [1]எவ்விடங்களிலேயும் வெளியரங்கமாயிற்று.

௯ [2]நாங்கள் உங்களிடத்தில் அடைந்த பிரவேசம் இப்படியிருந்ததென்றும், சீவனையுடைய மெய்யான தேவனுக்குப் பணிவிடைசெய்யும்படிக்கும், [3]அவர் மரித்தோரிலிருந்து எழுப்பினவருமாய், [4]இனி வரும் கோபாக்கினையில் நின்று நம்மை இழுத்து இரட்சிக்கிறவருமாய் இருக்கிற [5]அவருடைய குமாரனாகிய இயேசுவைப் [6]பரமண்டலங்களிலிருந்து வரப்பார்த்துக்கொண்டிருக்கும்படிக்கும்,

௰ [7]நீங்கள் விக்கிரகங்களை விட்டு, பராபரனிடத்திற்கு இவ்விதமாய் மனந்திரும்பினீர்கள் என்றும் அவர்கள் தாமே அறிவிக்கிறார்களே.

## ௨. அதிகாரம்.

௧. தெசலோனிக்கேயருக்குள் சுவிசேஷம் வந்து பிரசங்கிக்கப்பட்ட விதத்தையும், அவர்கள் அதை ஏற்றுக்கொண்ட விதத்தையும், ௰௮. பரிசுத்தவானாகிய பவுல் வெகுகாலம் அவர்களிடத்திற்கு வராதிருந்ததற்கும், அவர்களை வந்து பார்க்க விருப்பமுடையவனாயிருந்ததற்கும் முகாந்தரத்தையும் சொல்லியது.

அன்றியும் சகோதரரே, [8]உங்களிடத்திலே நாங்கள் அடைந்த பிரவேசம் வீணாய் இருக்கவில்லை என்று நீங்களே அறிந்திருக்கிறீர்கள்.

௨ அல்லாமலும் உங்களுக்குத் தெரிந்திருக்கிறபடி, முன்னே [9]பிலிப்புப்பட்டணத்திலே நாங்கள் பாடுகளையும் நிந்தைகளையும் அடைந்திருந்தும், பராபரனுடைய சுவிசேஷத்தை அதிக [10]போராட்டத்தோடே [11]உங்களுக்குச் சொல்லும்படி, நம்முடைய பராபரனாலே [12]தயிரியமுள்ளவர்களாய் இருந்தோம்.

௩ [13]அன்றியும் எங்கள் போதகம் வஞ்சகத்திலும், அசுத்தத்திலுமிருந்து தோன்றவில்லை; அது கபடமுள்ளதாயிருக்கவுமில்லை.

௪ [14]சுவிசேஷத்தை எங்களுக்கு ஒப்புவிக்கத்தக்கதாக, [15]பராபரன் எங்களை உத்தமரென்று எண்ணினபடியே நாங்கள் மனிதருக்கு அல்ல, [16]எங்கள் இருதயங்களைச் சோதித்தறிகிற பராபரனுக்கே [17]பிரியமாய்ச் சொல்லுகிறோம்.

௫ ஆனதால் உங்களுக்குத் தெரிந்திருக்கிறபடி, நாங்கள் [18]ஒருக்காலும் இச்சகமான வசனங்களைச் சொல்லவும் இல்லை; பொருளாசையை மூடிக்கொண்டு நடக்கவும் இல்லை; அதற்குப் [19]பராபரனே சாட்சியாய் இருக்கிறார்.

௬ உங்களிடத்திலாவது, மற்றவர்களிடத்திலாவது [20]நாங்கள் மனிதர் மகிமையைத் தேடவும் இல்லை; [21]நாங்கள் கிறிஸ்துவின் அப்போஸ்தலராய் இருக்கிறபடியால், (உங்கள்மேல்) [22]பாரத்தை [23]ஏற்றலாமே.*

௭ அப்படியிருந்தும், தாயானவள் தன் பிள்ளைகளைக் காப்பாற்றுகிறதுபோல, [24]உங்களுக்கு லகுவுண்டாக நடந்தோம்.

௮ இப்படி நாங்கள் உங்கள்மேல் மிகவும் விருப்பமாயிருந்து, பராபரனுடைய சுவிசேஷத்தை மாத்திரமல்ல, நீங்கள் எங்களுக்குப் பிரியமானவர்களானபடியினாலே, [25]எங்கள் சீவனையும் உங்களுக்குப் பகிர்ந்துகொடுக்க [26]மனதாயிருந்தோம்.

௯ அன்றியும் சகோதரரே, நாங்கள் பட்ட பிரயாசமும், வருத்தமும் உங்களுக்கு ஞாபகமாயிருக்கும்; [27]உங்களில் ஒருவனுக்காகிலும் பாரமாயிராதபடிக்கு, [28]இரவும்பகலும் நாங்கள் வேலைசெய்

கி. பி. ௫௪.

1 ௨ரோ. ௧. ௮. ௨ தெச. ௧ ௪.
2 ௧ தெச. ௨. ௧.
3 அப். ௨. ௨௪.
4 மத். ௩. ௭. ௨ரோ. ௫. ௯. ௧ தெச. ௫. ௯.
5 ௨ரோ. ௨. ௭. பிலி. ௧. ௨௰. தீத். ௨. ௰௩. ௨ பே. ௧. ௰௨. வெளி. ௧. ௭.
6 அப். ௧. ௰௧. ௧ தெச. ௪. ௰௬. ௨ தெச. ௧. ௭.
7 ௧ கொரி. ௰௨. ௨. கலா. ௪. ௮.
8 ௧ தெச. ௧. ௫, ௯.
9 அப். ௰௬. ௨௨.
10 பிலி. ௧. ௩௰. கொலோ. ௨. ௧.
11 அப். ௰௭. ௨.
12 ௧ தெச. ௧. ௫.
13 ௨ கொரி. ௭. ௨. ௫. ௰௪. ௨ பே. ௧. ௰௬.
14 ௧ கொரி. ௯. ௰௭. கலா. ௨. ௭. தீத். ௧. ௩.
15 ௧ கொரி. ௭. ௨௫. ௧ தீமோ. ௧. ௰௧, ௰௨.
16 லூக். ௰௭. ௩. ௨ரோ. ௮. ௨௭.
17 கலா. ௧. ௰.
18 அப். ௨௰. ௩௩. ௨ கொரி. ௨. ௰௭: ௪. ௨: ௭. ௨: ௰௨. ௰௭.
19 ௨ரோ. ௧. ௯.
20 யோவா. ௫. ௪௧, ௪௪: ௰௨. ௪௩. ௧ தீமோ. ௫. ௰௭.
21 ௧ கொரி. ௯. ௧, ௨, ௫.
22 ௨ கொரி. ௰௧. ௯: ௰௨. ௰௩, ௰௪. ௨ தெச. ௩. ௮.
23 ௧ கொரி. ௯. ௪, ௯, ௰௨, ௰௮. ௨ கொரி. ௰. ௧, ௨, ௰, ௰௧: ௰௩. ௰. ௨ தெச. ௩. ௯. பிலே. ௮, ௯. ௨௪.

* அல்லது அதிகாரத்தைச் செய்யலாமே.

24 ௧ கொரி. ௨. ௩: ௯ ௨௨. ௨ கொரி. ௰௩. ௪. ௨ தீமோ. ௨. ௨௪. — 25 ௨ கொரி. ௰௨. ௰௫. — 26 ௨ரோ. ௧. ௰௩: ௰௫. ௨௩.
27 ௨ கொரி. ௰௨. ௰௩, ௰௪. — 28 அப். ௨௰. ௩௪. ௧ கொரி. ௪. ௰௨. ௨ கொரி. ௰௩. ௯. ௨ தெச. ௩. ௮.

Digitized by Google

து, பராபரனுடைய சுவிசேஷத்தை உங்களிடத்தில் பிரசங்கித்தோமே.

௰ விசுவாசிகளாகிய உங்களுடனே நாங்கள் [1]எவ்வளவு பரிசுத்தமாகவும், நீதியாகவும், பிழையில்லாமையாகவும் இருந்ததற்கு, நீங்களும் பராபரனோடேகூட [2]சாட்சிகளாய் இருக்கிறீர்கள்.

௰௧ மேலும் தம்முடைய [3]இராச்சியத்திற்கும் மகிமைக்கும் உங்களை அழைத்திருக்கிற பராபரனுக்கு [4]நீங்கள் பாத்திரமாய் நடக்கவேண்டும் என்று,

௰௨ தகப்பன் தன் பிள்ளைகளுக்குச் செய்கிறதுபோல, நாங்கள் உங்களில் யாவருக்கும் புத்தியும் ஆறுதலும் சாட்சியும் சொன்னதை அறிந்திருக்கிறீர்கள்.

௰௩ ¶ ஆகையால், நீங்கள் பராபரனுடைய வசனத்தை எங்களாலேகேள்விப்பட்டுஏற்றுக்கொண்டபொழுது [5]அதை மனிதர் வசனமென்று அல்ல, பராபரனுடைய வசனமென்றே ஏற்றுக்கொண்டதினாலே, நாங்கள் [6]இடைவிடாமல் பராபரனுக்குத் தோத்திரம் செலுத்துகிறோம்; அது மெய்யாய் அவருடைய வசனம்தான்; விசுவாசிக்கிற உங்களுக்குள்ளே அது பலனும் செய்கின்றது.

௰௪ எப்படியெனில், சகோதரரே, நீங்கள் யூதேயா நாட்டிலே கிறிஸ்து இயேசுவுக்குள்ளான பராபரனுடைய [7]சபைகளைப் பின்பற்றினவர்களாகிய, [8]அவர்கள் யூதராலே பாடுபட்டதுபோல [9]நீங்களும் உங்கள் சுய கோத்திரத்தாராலே பாடுபட்டீர்கள்.

௰௫ அந்த யூதர்கள் [10]கர்த்தராகிய இயேசுவையும், [11]தங்கள் தீர்க்கதரிசிகளையும் கொலைசெய்து, எங்களையும் துன்பப்படுத்தி,* இப்படிப் பராபரனுக்குப் பிரியமாயிராதவர்களுமாய், [12]மனிதர் யாவருக்கும் விரோதிகளுமாய் இருக்கிறார்கள்.

இ. பி. ௫௪.

1 ௨ கொரி. ௭. ௨. ௨ தெச. ௩. ௭.
2 ௧ தெச. ௧. ௬.
3 ௧ கொரி. ௧.௯. ௧ தெச.௬.௨௪. ௨ தெச.௨.௰௪. ௨ தீமோ. ௧.௯.
4 எபே. ௪. ௧. பிலி. ௧. ௨௭. கொலோ. ௧.௰. ௧ தெச. ௪. ௧.
5 மத். ௰. ௪௰. கலா. ௪. ௰௪. ௨ பே. ௩. ௨.
6 ௧ தெச. ௧. ௩.
7 கலா. ௧. ௨௨.
8 எபி. ௰.௩௩, ௩௪.
9 அப். ௰௭. ௬, ௰௩.
10 அப். ௨. ௨௩: ௩. ௰௫: ௬. ௩௰: ௭. ௬௨.
11 மத். ௬. ௰௨: ௨௩. ௩௪, ௩௭. லூக். ௰௩. ௩௩, ௩௪. அப். ௭. ௬௨.
* அல்லது வெளியே தாத்தி.
12 எஸ். ௩. ௮.
13 ௧ மோ. ௰௫. ௰௬. மத். ௨௩. ௩௨.
14 லூக். ௰௩. ௬௨. அப். ௰௩. ௬௰: ௰௪. ௬, ௰௯: ௰௭. ௬, ௰௩: ௰௮. ௰௨: ௰௯. ௯: ௨௨. ௨௩, ௨௨.
15 மத். ௨௪. ௩, ௰௪.
16 ௧ கொரி.௫.௩. கொலோ. ௨. ௫.
17 ௧ தெச. ௩. ௰.
18 ௨ரோ. ௧.௰௩: ௰௫. ௨௨.
19 ௧ கொரி. ௰௫. ௨௩. ௧ தெச.௩. ௰௩. வெளி. ௧. ௭: ௨௨. ௰௨.
20 ௨ கொரி. ௧. ௰௪. பிலி. ௨. ௰௬: ௪. ௧.
21 லூக். ௰௬. ௯௯.
† அல்லது சந்தோஷமாகிய.
22 ௬. ௰௪.
23 அப். ௰௭. ௰௫.
24 எபே. ௩. ௰௩.

௰௬ [13]அவர்கள் தங்கள் பாவங்களை எப்பொழுதும், நிறைவாக்கத்தக்கதாக, புறத்தேசத்தார் இரட்சிக்கப்படுதற்கு நாங்கள் அவர்களோடே பேசாதபடிக்குத் [14]தடைபண்ணுகிறார்கள்; [15] கோபாக்கினை அதிசீக்கிரமாய் அவர்களுக்கு வருகின்றது.

௰௭ ¶ சகோதரரே, நாங்கள் இருதயத்தினால் அல்ல, [16]முகமுகமாய் (மாத்திரம்) கொஞ்சக்காலம் உங்களைக் காணாமல் பிரிந்திருந்தபடியினாலே [17]உங்கள் முகத்தைப் பார்க்கவேண்டும் என்று, மிகுந்த ஆசையோடே அதிகமாய்ப் பிரயத்தனம்பண்ணினோம்.

௰௮ ஆனபடியினாலே உங்களிடத்தில் வருகிறதற்கு நாங்கள் இரண்டொருதரம் மனதாய் இருந்தோம்; பவுலாகிய நான் விசேஷமாக அப்படியிருந்தேன்; [18]சாத்தான்மாத்திரம் எங்களுக்குத் தடைபண்ணினான்.

௰௯ நம்முடைய கர்த்தராகிய இயேசுக்கிறிஸ்து [19]வரும்பொழுது, அவருடைய சந்நிதானத்திலே யார் [20]எங்களுக்கு நம்பிக்கையும், சந்தோஷமும், [21]புகழ்ச்சியாகிய† கிரீடமும் வருவதற்கு ஏதுவாய் இருப்பார்கள், நீங்களல்லவோ அப்படியிருப்பீர்கள்?

௨௰ நீங்கள் எங்களுக்கு மகிமையுமாய்ச் சந்தோஷமுமாய் இருக்கிறீர்களே.

## ௩. அதிகாரம்.

௧. அவர்களைப் பலப்படுத்தித் தேற்றும்படி தீமோத்தேயுவை அவர்களிடத்தில் அனுப்பினதினாலும், அவர்களுடைய நற்சீரில் தான் சந்தோஷப்பட்டதினாலும், ௬. அவர்களுக்காகச் செபம்பண்ணி அவர்களிடத்தில் சுகமாய் வந்து சேரவிரும்பினதினாலும் பவுல் தெசலோனிக்கேயர்பேரில் தனக்கிருந்த பெரிய அன்பைப் பாராட்டினது.

௧ ஆகையால், [22]நாங்கள் அதிகமாய்ப் பொறுக்கமாட்டாமல் [23]அத்தேனே பட்டணத்திலே தனித்துவிடப்பட விரும்பி,

௨ [24]இந்த உபத்திரவங்களினாலே

Digitized by Google

ஒருவரும் அசைக்கப்படாதபடிக்கு, உங்கள் விசுவாசத்தைக்குறித்து உங்களை ஸ்திரப்படுத்தும்பொருட்டாக, நம்முடைய சகோதரனுமாய், பராபரனுடைய ஊழியக்காரனுமாய், கிறிஸ்துவின் சுவிசேஷத்தில் எங்கள் உடன்வேலையாளுமாய் இருக்கிற [1]தீமோத்தேயுவை அனுப்பினோம்.

௩ நீங்களே அறிந்திருக்கிறபடி [2]இப்படிப்பட்டதைச் சகிக்கிறதற்கு நாம் வைக்கப்பட்டிருக்கிறோமே.

௪ மேலும் நமக்கு உபத்திரவம் வருமென்று நாங்கள் உங்களிடத்தில் இருந்தபொழுது, [3]உங்களுக்கு முன்னறிவித்தோமே; அப்படியும் நடந்தது; அதை நீங்கள் அறிந்திருக்கிறீர்கள்.

௫ ஆனபடியினாலே [4]நான் அதிகமாய்ப் பொறுக்கமாட்டாமல், [5]எங்கள் வேலை வீணாய்ப்போகத்தக்கதாகச் [6]சோதனைக்காரன் உங்களைச் சோதனைக்கு உட்படுத்தினது உண்டோ என்று உங்கள் விசுவாசத்தை அறியும்படிக்கு அவனை அனுப்பினேன்.

௬ ¶ சகோதரரே, இப்பொழுது [7]தீமோத்தேயு உங்களிடத்திலிருந்து எங்களிடத்தில் வந்து, நீங்கள் விசுவாசமாயும் அன்பாயும் இருந்து, எப்பொழுதும் எங்களை நன்றாய் நினைத்துக்கொண்டு,

௭ [8]நாங்கள் உங்களைக் காண மிகுந்த ஆசையாய் இருக்கிறதுபோல, நீங்களும் எங்களைக் காண ஆசையாய் இருக்கிறீர்கள் என்று எங்களுக்கு நற்செய்தியைச் சொன்னவுடனே எங்களுடைய [9]உபத்திரவம் இடுக்கண் யாவற்றிலேயும், உங்கள் விசுவாசத்தினாலே உங்களைக்குறித்து ஆறுதல் அடைந்தோம்.

௮ நீங்கள் [10]கர்த்தரிடத்தில் நிலைநிற்கிறதால் இப்பொழுது பிழைக்கிறோம்.

௯ அல்லாமலும் நாங்கள் உங்களைக்குறித்து நம்முடைய பராபரனுடைய சந்நிதானத்திலே அடைந்திருக்கிற மிகுந்த சந்தோஷத்திற்காகப் [11]பராபரனுக்கு எந்தத் தோத்திரம் செலுத்துவோம்?

௰ உங்கள் [12]முகத்தைக் கண்டு [13]உங்கள் விசுவாசத்தின் குறைவுகளை நீக்கி, நிறைவு உண்டாக்கும்பொருட்டாக, [14]இரவும்பகலும் [15]மிகவும் வேண்டுதல்செய்கிறோம்.

௰க அந்தப்படியே நம்முடைய பிதாவாகிய பராபரனும், கர்த்தராகிய இயேசுக்கிறிஸ்துவும், [16]எங்கள் வழியை உங்களிடத்திற்கு (நேராக்கக்கடவர்).*

௰உ அல்லாமலும் நாங்கள் உங்கள்மேல் வைத்திருக்கிற அன்புக்கு ஒப்பாய், [17]நீங்களும் ஒருவரிடத்தில் ஒருவரும், மற்றெந்த மனிதரிடத்திலும் அதிகமாய் நிறைந்த அன்புள்ளவர்கள் ஆகும்படி [18]கர்த்தர் செய்து,

௰௩ இவ்விதமாய் நம்முடைய கர்த்தராகிய இயேசுக்கிறிஸ்து [19]தம்முடைய பரிசுத்தவான்கள் அனைவரோடுங்கூட வரும்பொழுது, நீங்கள் நம்முடைய பிதாவாகிய பராபரனுக்குமுன்பாகப் பிழையில்லாத பரிசுத்தமுள்ளவர்களாய் இருக்கும்படி, [20]உங்கள் இருதயங்களை ஸ்திரப்படுத்தக்கடவர்.

## ௪. அதிகாரம்.

க. பரிசுத்தமும், ௬. சன்மார்க்கமுமாய் நடக்கவும், ௯. ஒருவரை ஒருவர் சிநேகிக்கவும், ௰க. அமைதலாய்த் தங்கள் சொந்த அலுவல்களைச்செய்யவும், ௰௩. மரித்தவர்களுக்காக மட்டாய்த் துக்கங்கொண்டாடவும் புத்திசொல்லி, ௰௬. உயிர்த்தெழுதலின் மேலும் கிறிஸ்து நியாயந்தீர்க்க உலகத்தில் இரண்டாம்விசை வருவதைக்குறித்தும் சில நியாயங்கள் சொல்லியது.

மேலும் சகோதரரே, [21]நீங்கள் இன்ன இன்னபிரகாரமாக நடக்கவும் [22]பராபரனுக்குப் பிரியமாய் இருக்கவும் வேண்டுமென்று எங்களால் [23]ஏற்றுக்கொண்டபடியே அதிகமதிகமாய்ப் பெருகும்படிக்

கி. பி. ௫௪.

1 உரோ. ௰௬. உக. க கொரி. ௰௬.௰. உ கொரி. ௧. ௰௯.
2 அப். ௯. ௰௬: ௰௪. உஉ: உ௰. உக: உக. ௰௧. க கொரி. ௪. ௯. உ தீமோ. ௩. ௰உ. க பே. உ. உக.
3 அப். உ௰. உ௪.
4 ௧. ௨௪.
5 கலா. உ. உ: ௪. ௰௧. பிலி. உ. ௰௬.
6 க கொரி. எ. ௫. உ கொரி. ௰௧. ௩.
7 அப். ௰அ. ௧, ௫.
8 பிலி. க. அ.
9 உ கொரி. க. ௪: எ. ௯, எ, ௰௧.
10 பிலி. ௪. ௧.
11 க தெச. க. உ.
12 க தெச. உ. ௰எ.
13 உ கொரி. ௰௩. ௯, ௰க. கொலோ. ௪. ௰உ.
14 அப். உக. எ. உ தீமோ. க. ௩.
15 உரோ. க. ௰, ௰௧: ௰௫. ௩உ.
16 மாற். க. ௩.
* அல்லது காட்டக்கடவர்.
17 க தெச. ௪. ௯: ௫. ௰௫. உ பே. க. எ.
18 க தெச. ௪. ௰,
19 சகரி. ௰௪. ௫. யூதா. ௰௪.
20 க கொரி. க. அ. பிலி. க. ௰.
21 க தெச. ௫. உக. உ தெச. உ. ௰எ. க யோ. ௩. உ௰, உக.
22 க தெச. உ. ௰உ. கொலோ. க. ௰.
23 பிலி. க. உஎ. கொலோ. உ. ௬.

Digitized by Google

குக் கர்த்தராகிய இயேசுவினாலே உங்களை வேண்டிக்கொண்டு* புத்திசொல்லுகிறோம்.†

உ கர்த்தராகிய இயேசுவினால் நாங்கள் உங்களுக்குக் கொடுத்த கட்டளைகளை அறிந்திருக்கிறீர்களே.

ங நீங்கள் [1]பரிசுத்தமுள்ளவர்கள் ஆகிறதே [2]பராபரனுடைய சித்தமாயிருக்கிறது;[3]அந்தப்படிநீங்கள் வேசிமார்க்கத்திற்கு விலகி,

ச [4]பராபரனை அறியாத[5] அஞ்ஞானிகளைப்போல [6]விரகதாபமாகிய இச்சைக்கு உள்ளாகவல்ல,

ரு பரிசுத்தத்திற்கும், கனத்திற்கும் உள்ளாகவே உங்களில் அவனவன் தன்தன் சரீரபாண்டத்தைக் [7]காத்துக்கொள்ளுதற்கு வகையை அறிந்து,

சு இந்தச் [8]செய்கையினாலே‡தன் சகோதரனை ஒடுக்காமலும், வஞ்சியாமலும்§ இருக்கவேண்டும்; முன்னேயும் நாங்கள் உங்களுக்குச் சொல்லிச் சாட்சிகொடுத்தபடி, இப்படிப்பட்ட எல்லாவற்றையுங்குறித்துக் கர்த்தர் நீதியாய்ப் [9]பழிவாங்குகிறவராய் இருக்கிறாரே.

எ பராபரன் நம்மை அசுத்தத்திற்கு அல்ல, [10]பரிசுத்தத்திற்கு அழைத்தாரே.

அ ஆனதால் [11]அசட்டைபண்ணுகிறவன்‖ மனிதனை அல்ல, [12]தமது பரிசுத்த ஆவியை எங்களுக்குக் கொடுத்த பராபரனையே அசட்டைபண்ணுகிறான்.

கூ ¶ சகோதர [13]சிநேகத்தைக்குறித்து நான் உங்களுக்கு எழுதவேண்டுவதில்லை; நீங்கள்தாமே [14]ஒருவரிடத்தில் ஒருவர் அன்பாயிருக்கும்படிக்குப் [15]பராபரனால் போதிக்கப்பட்டவர்களாய் இருக்கிறீர்களே.

ய அந்தப்படியேயும் நீங்கள் மக்கேதோனியா நாட்டில் எங்குமுள்ள [16]சகோதரர் எல்லாருக்குஞ் செய்துவருகிறீர்கள்.

யக இன்னும் சகோதரரே, [17]அதிலே நீங்கள் அதிகமாய்ப் பெருகவும், [18]புறம்பே இருக்கிறவர்களுக்கு நீங்கள் யோக்கியமாய் நடந்து,

யஉ ஒரு குறைவையும்¶ அடையாதபடிக்கு, நாங்கள் உங்களுக்குக் கட்டளையிட்டபடி அமைதலாயிருக்க மிகுதியாய் விரும்பவும், [19]உங்களுடைய சொந்த அலுவலைப் பார்த்துக்கொள்ளவும், [20]உங்கள் சொந்தக் கைகளினால் வேலைசெய்யவும் வேண்டும் என்று உங்களுக்குப் புத்திசொல்லுகிறோம்.

யங ¶ அல்லாமலும் சகோதரரே, [21]நம்பிக்கை அற்றவர்களைப்போல [22]நீங்களும் துக்கப்படாதபடிக்கு, நித்திரை அடைந்தவர்களைக்குறித்து நீங்கள் அறியாமல் இருக்கிறது எனக்கு விருப்பமில்லை.

யச என்னத்தினாலெனில், [23]இயேசுவானவர் மரித்துப் பின்பு எழுந்திருக்கிறார் என்று நாம் விசுவாசிக்கிறதுபோல, [24]இயேசுவைப்பற்றி நித்திரை அடைந்தவர்களையும் பராபரன் அவரோடேகூடப் புறப்படப்பண்ணுவார்.

யரு மேலும் [25]கர்த்தருடைய வார்த்தையின்படி நாங்கள் உங்களுக்கு அறிவிக்கிறது என்னவென்றால், கர்த்தர் வரும்பொழுது உயிரோடே மீதியாயிருக்கும் [26]நாம் நித்திரை அடைந்தவர்களுக்கு முந்திக்கொள்வதில்லை.

யசு அதெப்படியெனில், [27]கர்த்தர் தாமே ஆரவாரத்தோடும், பிரதான தூதன் இடும் சத்தத்தோடும், [28]தேவ எக்காளத்தோடும் வானத்

கி. பி. ருசு.

* அல்லது மன்றாடிக்கொண்டு.
† அல்லது வேண்டிக்கொள்ளுகிறோம்.
1 எபே. சு. உஎ.
2 உரோ. யஉ. உ. எபே. சு. யஎ.
3 க கொரி. சு. யரு, யஅ. எபே. ரு. ங. கொலோ. ங. ரு.
4 க கொரி. யரு. கச. கலா. ச. அ. எபே. உ. யஉ: ச. யஅ. உ தெச. க. அ.
5 எபே. ச. யஎ, யஅ.
6 கொலோ. ங. ரு. உரோ. க. உச, உசு.
7 உரோ. சு. யங. க கொரி. சு.யரு, யஅ.
8 க மோ.யகூ.யக, யங. க கொரி. சு. அ.
‡ அல்லது பாதொரு செய்கையினாலே.
§ அல்லது நெருக்காமலும்.
9 உ தெச. க.அ.
10 க மோ. யக. சச: யகூ. உ. க கொரி. க. உ. எபி. யஉ. யச. க பே. க. யச, யரு.
11 லூக். ய. யசு.
‖ அல்லது தள்ளுகிறவன்.
12 க கொரி. உ. ய: எ. சய. க யோ.ங. உச.
13 க தெச. ரு. க.
14 மத். உஉ. ஙகூ. யோவா.யங.ஙச: யரு. யஉ. எபே. ரு. உ. க பே. ச. அ. க யோ. ங. யக, உங: ச. உக.
15 எரே. ஙக. ஙச. யோவா. சு. சரு: யச. உசு.



Digitized by Google

திலிருந்து இறங்கிவருவார்; அப்பொழுது கிறிஸ்துவிலிருந்து [1]மரித்தவர்கள் முதலாவது எழும்புவார்கள்.

௰௭ பின்பு [2]உயிரோடே மீதியான நாமும் ஆகாயத்தில் வருகிற கர்த்தாவுக்கு நேராக அவர்களோடுங்கூட [3]மேகங்களில் எடுத்துக்கொண்டுபோகப்பட்டு, இப்படி எப்பொழுதும் [4]கர்த்தருடனேகூட இருப்போம்.

௰௮ ஆகையால் இந்த வார்த்தைகளினாலே [5]நீங்கள் ஒருவருக்கு ஒருவர் ஆறுதல்செய்யுங்கள்.*

## ௫. அதிகாரம்.

௧. கிறிஸ்து நியாயந்தீர்க்கவருவதைக்குறித்துச் சொல்லி, ௰௨. பல புத்திமதிகள் படிப்பித்து, ௨௨. நிருபத்தை முடித்தது.

இவைகள் நடக்கும் [6]காலங்களையும் நேரங்களையுங்குறித்துச் சகோதரரே, [7]நான் உங்களுக்கு எழுத வேண்டுவதில்லை.

௨ இரவிலே திருடன் வருகிற விதமாய், [8]கர்த்தருடைய நாள் வரும் என்று நீங்களே நன்றாய் அறிந்திருக்கிறீர்கள்.

௩ சமாதானமும், சவுக்கியமும் உண்டென்று அவர்கள் சொல்லும்பொழுது, [9]கர்ப்பவதியானவளுக்கு வேதனை வருகிறதுபோல, [10]அழிவு சடுதியாய் அவர்கள்மேல் வரும்; அவர்கள் தப்பிப்போவதே இல்லை.

௪ ¶ சகோதரரே, அந்த நாள் திருடனைப்போல உங்களையும் பிடித்துக்கொள்ளத்தக்கதாக, [11]நீங்கள் அந்தகாரத்தில் இருக்கிறவர்கள் அல்ல.

௫ நீங்கள் எல்லாரும் [12]ஒளியின் பிள்ளைகளுமாய், பகலின் பிள்ளைகளுமாய் இருக்கிறீர்களே; நாம் இரவுக்கும், அந்தகாரத்திற்கும் உள்ளானவர்கள் அல்ல.

௬ ஆகையால் மற்றவர்களைப்போல [13]நாம் தூங்காமல் [14]விழித்துக்கொண்டு தெளிவாய் இருக்கக்கடவோம்.

௭ [15]தூங்குகிறவர்கள் இராத்திரியில் தூங்குவார்களே; [16]வெறிகொள்ளுகிறவர்கள் இராத்திரியில் வெறிகொள்ளுவார்களே.

௮ பகல் மனிதராகிய நாம், விசுவாசம் அன்பு என்னும் [17]மார்பின் கவசத்தையும், இரட்சிப்பின் நம்பிக்கை என்னும் தலைச்சீராவையும் தரித்துக்கொண்டு தெளிவாயிருக்கக்கடவோம்.

௯ [18]பராபரன் நம்மைக் கோபாக்கினைக்கு அல்ல, [19]நம்முடைய கர்த்தராகிய இயேசுக்கிறிஸ்துமூலமாய் இரட்சிப்பை அடைந்துகொள்ளுதற்கு ஏற்படுத்தினாரே.

௰ நாம் விழித்திருப்பவர்களானாலும், நித்திரை அடைந்தவர்களானாலும் தம்முடனேகூட உயிரோடிருக்கும்படிக்கு, [20]அவர் நமக்காக மரித்தாரே.

௰௧ [21]ஆகையால், நீங்கள் செய்துவருகிறதுபோல ஒருவருக்கு ஒருவர் ஆறுதல்† சொல்லி, ஒருவரை ஒருவர் ஊன்றக்கடவீர்கள்.

௰௨ ¶ அன்றியும் சகோதரரே, உங்களுக்குள்ளே பிரயாசப்பட்டு, கர்த்தருக்குள்ளாக உங்களுக்கு முதலாளிகளாய் இருந்து, உங்களுக்குப் புத்திசொல்லுகிற பேர்களை [22]நீங்கள் அறிந்துகொண்டு,

௰௩ அவர்களுடைய கிரியையின்நிமித்தம் அவர்களை மிகவும் அன்பாய் எண்ணிக்கொள்ளும்படிக்கு உங்களை வேண்டிக்கொள்ளுகிறோம்; [23] உங்களுக்குள்ளே சமாதானமாய் இருப்பீர்களாக.

௰௪ ¶ அன்றியும் சகோதரரே, நாங்கள் உங்களுக்கு எச்சரிக்கையாகச் சொல்லுகிறது‡ என்னவென்றால், [24]ஒழுங்கில்லாதவர்களுக்குப்§ புத்திசொல்லுங்கள்; [25]திடனற்றவர்களுக்கு ஆறுதல்செய்

கி. பி. ௫௪.

1 ௧ கொரி. ௰௫. ௨௩, ௫௨.
2 ௧ கொரி. ௰௫. ௫௧.
3 அப். ௧. ௯. வெளி. ௰௧.௰௨.
4 யோவா. ௰௨. ௨௬: ௰௪. ௩: ௰௭. ௨௪.
5 ௧ தெச. ௫.௰௧.
* அல்லது புத்தி சொல்லுங்கள்.
6 மத். ௨௪. ௩, ௩௬. அப். ௧. ௭.
7 ௧ தெச. ௪. ௯.
8 மத். ௨௪. ௪௩, ௪௪: ௨௫. ௰௩. லூக். ௰௨. ௩௯, ௪௦. ௨ பே. ௩. ௰. வெளி. ௩. ௩: ௰௬. ௰௫.
9 எரே. ௰௩.௨௧. ஓசே.௰௩.௰௩.
10 சங்.௰௩.௧-௯.
11 உரோ. ௰௩. ௰௨,௰௩. ௧ யோ. ௨. ௮.
12 எபே. ௫ ௮.
13 மத். ௨௫. ௫.
14 மத்.௨௪.௪௨: ௨௫.௰௩. உரோ. ௰௩.௰௧, ௰௨, ௰௩. ௧ பே. ௫. ௮.
15 லூக். ௨௧.௩௪, ௩௬. உரோ. ௰௩. ௰௩. ௧ கொரி. ௰௫. ௩௪. எபே. ௫. ௰௪.
16 அப். ௨. ௰௫.
17 ஏசா. ௫௯. ௰௭. எபே. ௬. ௰௪, ௰௬, ௰௭.
18 உரோ. ௯. ௨௨. ௨ தெச. ௨. ௰. ௧ பே. ௨. ௮. யூதா. ௪.
19 ௨ தெச. ௨. ௰௩, ௰௪.
20 உரோ. ௰௪.௮, ௯. ௨ கொரி. ௫. ௰௫.
21 ௧ தெச ௪.௰௮.
† அல்லது புத்தி.
22 ௧ கொரி. ௰௬. ௰௮. பிலி. ௨. ௨௯. ௧ தீமோ. ௫. ௰௭. எபி. ௰௩. ௭, ௰௭.

23 மாற். ௯. ௫௦.—‡ அல்லது உம்மை மன்றாடுகிறது.—24 ௨ தெச. ௩. ௬, ௰௧, ௰௨.—§ அல்லது அடங்காத.—25 எபி. ௰௨. ௰௨.

Digitized by Google

யுங்கள். [1]பெலஈனரைத் தாங்குங்கள்; [2]எல்லாருக்கும் நீடியசாந்தமாய் இருங்கள்.

௰௫ ¶ [3]எவனும் மற்றொருவன் செய்யும் தீமைக்குத் தீமையைச் செய்யாமல், எப்பொழுதும் உங்களுக்குள்ளும் மற்ற யாவருக்குள்ளும் [4]நன்மைசெய்யப் பின்தொடரும்படி எச்சரிக்கையாய் இருப்பீர்களாக.

௰௬ ¶ [5]எப்பொழுதும் சந்தோஷமாயிருங்கள்; [6]இடைவிடாமல் செபம்பண்ணுங்கள்.

௰௭ [7]எல்லாவற்றிலேயும் தோத்திரம்செய்யுங்கள்.

௰௮ அப்படிச் செய்கிறதே கிறிஸ்து இயேசுவுக்குள் உங்களைக் குறித்துப் பராபரனுடைய சித்தமாய் இருக்கின்றது.

௰௯ ¶ [8]ஆவியை அடக்கிப்போடாதிருப்பீர்களாக.

௨௰ [9]தீர்க்கதரிசனங்களை அசட்டைபண்ணாதிருங்கள்.

௨௧ [10]யாவற்றையும் ஆராய்ந்து பார்த்து, [11]நலமானதைப் பிடித்துக்கொள்ளுங்கள்.

௨௨ [12]பொல்லாங்காய்த் தோன்றுகிற யாவற்றையும்விட்டு விலகுவீர்களாக.

௨௩ ¶ [13]சமாதானத்தின் பராபரனே [14]முழுவதும் உங்களைப் பரிசுத்தமாக்குவாராக; இப்படி உங்கள் முழு ஆவியும், ஆத்துமாவும், சரீரமும் நம்முடைய கர்த்தராகிய இயேசுக்கிறிஸ்து வருகையில் [15]பிழையில்லாதவைகளாய் இருக்கும்படி காக்கப்படக்கடவது.

௨௪ [16]உங்களை அழைக்கிறவர் உண்மையுள்ளவர்; அவரும் அப்படியே செய்வார்.

௨௫ ¶ சகோதரரே, [17]எங்களுக்காக விண்ணப்பம் பண்ணுங்கள்.

௨௬ [18]எல்லாச் சகோதரரையும் பரிசுத்த முத்தத்தோடே வாழ்த்துதல்செய்யுங்கள்.

௨௭ [19]இந்த நிருபத்தைப் பரிசுத்தமான சகோதரர் யாவரும் படித்து அறியும்படி செய்யவேண்டும் என்று கர்த்தர்மேல் ஆணையிட்டு உங்களிடத்தில் கேட்டுக்கொள்ளுகிறேன்.*

௨௮ ¶ [20]நம்முடைய கர்த்தராகிய இயேசுக்கிறிஸ்துவினுடைய கிருபை உங்களுடனே இருக்கக்கடவது.—ஆமென்.

கி. பி. ௫௪.

1 ரோ. ௰௪. ௧: ௰௫. ௧. கலா. ௬. ௧, ௨.
2 கலா. ௫. ௨௨. எபே. ௪. ௨. கொலோ. ௩. ௰௨. ௨ தீமோ. ௪. ௨.
3 லேவி. ௰௯. ௰௮. நீதி. ௨௰. ௨௨: ௨௪. ௨௯. மத். ௫. ௩௯, ௪௪. ரோ. ௰௨. ௰௭. ௧ கொரி. ௬. ௭. ௧ பே. ௩. ௯.
4 கலா. ௬. ௰. ௧ தெச. ௩. ௰௨.
5 ௨ கொரி. ௬. ௰. பிலி. ௪. ௪.
6 லூக். ௰௮. ௧: ௨௧. ௩௬. ரோ. ௰௨. ௰௨. எபே. ௬. ௰௮. கொலோ. ௪. ௨. ௧ பே. ௪. ௭.
7 எபே. ௫. ௨௰. கொலோ. ௩. ௰௭.
8 எபே. ௪. ௩௰. ௧ தீமோ. ௪. ௰௪. ௨ தீமோ. ௧. ௬. ௧ கொரி. ௰௪. ௩௰.
9 ௧ கொரி. ௰௪. ௧, ௩௯.
10 ௧ கொரி. ௨. ௰௧, ௰௫. ௧ யோ. ௪. ௧.

11 பிலி. ௪. ௮.—12 ௧ தெச. ௪. ௰௨.—13 பிலி. ௪. ௯.—14 ௧ தெச. ௩. ௰௩.—15 ௧ கொரி. ௧. ௮.—16 ௧ கொரி. ௧. ௯: ௰. ௰௩. ௨ தெச. ௩. ௩.—17 கொலோ. ௪. ௩. ௨ தெச. ௩. ௧.—18 ரோ. ௰௬. ௰௬.—19 கொலோ. ௪. ௰௬. ௨ தெச. ௩. ௰௪.—* அல்லது கர்த்தருடைய நாமத்தினாலே உங்களுக்குக் கட்டளையிடுகிறேன்.—20 ரோ. ௰௬. ௨௰, ௨௪. ௨ தெச. ௩. ௰௮.

Digitized by Google

# II. THESSALONIANS.

---

அப்போஸ்தலனாகிய பவுல்

# தெசலோனிக்கேயருக்கு

## எழுதின இரண்டாம் நிருபம்.

---

### க. அதிகாரம்.

**க. அவர்களுடைய விசுவாசத்தையும், அன்பையும் பொறுமையையுங்குறித்துப் பவுல் மெச்சிக்கொண்டு, ௰க. அவற்றினாலே துன்பத்தில் இவர்கள் ஆறுதலடையவும், பராபரன் நீதிபரரென்று உணரவும் பல நியாயங்களைச் சொன்னது.**

பவுலும் [1]சில்வானும் தீமோத்தேயும், நம்முடைய பிதாவாகிய [2]பராபரனையும் கர்த்தராகிய இயேசுக்கிறிஸ்துவையும் பற்றியிருக்கிற தெசலோனிக்கே ஊரிலுள்ள சபைக்கு எழுதுகிறதாவது:

உ [3]நம்முடைய பிதாவாகிய பராபரனாலும், கர்த்தராகிய இயேசுக்கிறிஸ்துவினாலும் உங்களுக்குக் கிருபையும் சமாதானமும் உண்டாகக்கடவது.

௩ ¶ சகோதரரே, [4]நாங்கள் எப்பொழுதும் உங்களுக்காகப் பராபரனைத் தோத்திரிக்கக் கடனாளிகளாய் இருக்கிறோம்; உங்கள் விசுவாசம் மிகவும் வளருகிறபடியினாலும், நீங்கள் எல்லாரும் ஒருவருக்கு ஒருவர் காட்டுகிற அன்பு அதிகமாகிறபடியினாலும் நாங்கள் அப்படியே செய்யத்தக்கது.

ச ஆதலால் [5]நீங்கள் சகிக்கிற சகல துன்பங்களிலேயும், உபத்திரவங்களிலேயும் [6]பொறுமையையும் விசுவாசத்தையும் காண்பிக்கிறபடியினாலே, உங்களைக்குறித்து நாங்களே [7]பராபரனுடைய சபைகளில் மேன்மைபாராட்டுகிறோம்.

ரு பராபரனுடைய இராச்சியத்தினிமித்தம் நீங்கள் (இப்படிப்) [8]பாடுபடுகிறவர்களாயிருக்க, அவ்விராச்சியத்திற்குப் பாத்திரர் என்று எண்ணப்படுவதற்கு ஏதுவாகப் பராபரன் நியாயமான தீர்ப்புச்செய்வார் என்பதற்கு [9]அவைகள் அத்தாட்சியாய்இருக்கின்றன.

சா அல்லாமலும், கர்த்தராகிய இயேசு தமது வல்லமையுள்ள தூதரோடும்,* [10]சுவாலையாய் எரிகிற அக்கினியோடும் [11]வானத்திலிருந்து வெளிப்படும்பொழுது,

எ [12]உங்களை உபத்திரவப்படுத்துகிறவர்களுக்கு உபத்திரவத்தையும், உபத்திரவப்படுகிற உங்களுக்கு [13]எங்களோடேகூட ஆறுதலையும் பதில்கொடுக்கிறது பராபரனுக்குமுன்பாக நீதியாய் இருக்கின்றது.

அ அப்பொழுது [14]பராபரனை அறியாதவர்களுக்கும், நம்முடைய கர்த்தராகிய இயேசுக்கிறிஸ்துவின் [15]சுவிசேஷத்திற்குக் கீழ்ப்படியாதவர்களுக்கும் நீதியுள்ள ஆக்கினையைச் செலுத்துவார்.†

கூ அவர்கள் கர்த்தருடைய சந்நிதானத்திலிருந்தும், [16]அவருடை

---

கி. பி. ருச.

1 உ கொரி. க. ௧௯.
2 க தெச. க. க.
3 க கொரி. க. ௩.
4 க தெச. க. உ, ௩: ௩. ௯, க. உ தெச. உ. ௧௩.
5 க தெச. உ. ௧௪.
6 க தெச. க. ௩.
7 உ கொரி. எ. ௧௪: க. உ. க தெச. உ. ௧௯, உ௰.
8 க தெச. உ. ௧௪.
9 பிலி. க. உ அ.
* கிரேக்கு, வல்லமையின் தூதரோடும்.
10 எபி. ௰. உ எ: ௰உ. உ௯.
உ பே. ௩. எ.
வெளி. உ௯. அ.
11 க தெச. ச. ௧௬. யூதா. ௧௪.
12 வெளி. ௯. ௰.
13 வெளி. ௰ச. ௧௩.
14 சங். எ௯. ௬.
க தெச. ச. ரு.
15 உ ரோ. உ. அ.
† அல்லது நீதியைச் சரிக்கட்டுவார்.
16 ஏ சாய. ௯௯. உ. ஏசா. உ. ௧௯.
உ தெச. உ. அ.

Digitized by Google

ய வல்லமையின் மகிமையில் நின்றும் நீங்கி, [1]நித்தியமான அழிவாகிய தண்டனையை அடைவார்கள்.

ய [2]அவருடைய மகிமை அவருடைய பரிசுத்தவான்களிடத்தில் விளங்கும்படியாயும், [3]அவர் விசுவாசிகள் எல்லாரிடத்திலும் ஆச்சரியப்படுத்தப்படும்படியாயும் வரும்பொழுது, (அப்படியே நடக்கும்;) நீங்கள் எங்களுடைய சாட்சியை விசுவாசித்தபடியினாலே, (உங்களிடத்திலும்) அப்படியே அந்நாளிலே (ஆச்சரியப்படுத்தப்படுவார்).

யக ¶ ஆகையால் நம்முடைய தேவனுமாய்க் கர்த்தருமாய் இருக்கிற இயேசுக்கிறிஸ்துவினுடைய கிருபையின்படியே, [4]நம்முடைய கர்த்தராகிய இயேசுக்கிறிஸ்துவின் நாமம் உங்களிடத்திலும், நீங்கள் அவரிடத்திலும் மகிமைப்படுத்தப்படும்பொருட்டாக,

யஉ நம்முடைய பராபரன் [5]உங்களைத் தமது அழைப்புக்குப் பாத்திரராகவும்,* (தமது) தயையுள்ள சித்தம் முழுவதையும் [6]விசுவாசத்தின் கிரியையையும் பலமாய் (உங்களிடத்தில்) நிறைவேற்றவும் வேண்டும் என்று எப்பொழுதும் உங்களுக்காக விண்ணப்பம் பண்ணுகிறோம்.

## உ. அதிகாரம்.

க. அவர்கள் பெற்றுக்கொண்ட சத்தியத்தை உறுதியாய்ப் பற்றியிருக்கப் போதித்து, ங. விசுவாசத்தினின்று வழுவுதலையும், அ. கர்த்தருடைய நாள் வருமுன் அந்திக்கிறிஸ்துவின் வெளிப்படுதலையும் தீர்க்கதரிசனமாக அறிவித்து, மஙு. அதின்மேல் முன்சொன்ன புத்திகளை மறுபடியும் சொல்லி அவர்களுக்காக வேண்டிக்கொண்டது.

அன்றியும் சகோதரரே, [7]நம்முடைய கர்த்தராகிய இயேசுக்கிறிஸ்து வருவதையும், [8]நாம் அவரிடத்தில் சேர்க்கப்படுவதையும் குறித்து நாங்கள் உங்களை வேண்டிக்கொள்ளுகிறது என்னவென்றால்,

உ கிறிஸ்துவினுடைய நாள் சமீபமாயிருக்கிறதாகச் சொல்லுகிற ஆவியினாலாவது, வாயினாலாவது, எங்களிடத்திலிருந்து வந்ததாகக் காட்டுகிற நிருபத்தினாலாவது, நீங்கள் சீக்கிரமாய் [9]உங்கள் மனதிலே அசைவுபடாமலும் கலங்காமலும் இருப்பீர்களாக.

கூ [10]உங்களை வஞ்சிக்கும்படி வருகிற எவனுக்கும், எவ்விதத்தினாலும் இடங்கொடாதிருங்கள்; என்னத்தினாலெனில், [11]அந்நாள் வருதற்குமுன்னே சுவிசேஷத்தைவிட்டு விலகுதல் உண்டாக வேண்டும்; அல்லாமலும் [12]கேட்டின் மகனாகிய [13]பாவமனிதனும் வெளிப்படவேண்டும்.

ச அவன் [14]தேவன் என்னப்பட்ட யாவர்க்கும், தேவ ஆராதனை அடைகிற யாவர்க்கும் [15]விரோதமாய்த் தன்னை உயர்த்தி, இப்படிப் பராபரனுடைய ஆலயத்திலே தேவன்போல உளுக்காந்து, தானே தேவன் என்று தன்னைக் காண்பிப்பான்.

ரு ¶ நான் உங்களிடத்தில் இருந்தபொழுது, இவைகளை உங்களுக்குச் சொன்னேன் என்று உங்களுக்கு ஞாபகமில்லையா?

சு அவன் தனது காலத்திலே வெளியாகும்வரைக்கும், இப்பொழுது அவனுக்குத் தடையாயிருக்கிறது† இன்னதென்றும் அறிந்திருக்கிறீர்கள்.

எ [16]அக்கிரமமுள்ள அந்த இரகசியம் இப்பொழுதே கிரியைசெய்கின்றது; இக்காலத்தில் (அதற்குத்) தடையாய் இருக்கிறவன் நீக்கப்படுவதுமாத்திரம் வேண்டும்.

அ அப்பொழுது அந்த அக்கிரமக்காரன் வெளிப்படுவான்; அவனைக் கர்த்தராகிய இயேசு தம்முடைய [17]வாயின் சுவாசத்தினாலே [18]அழித்து, தமது வருகையின் [19]பிரகாசத்தினாலே நாசம்பண்ணுவார்.

கூ அவன் எப்படித் தோன்றுவா

கி. பி. ருச.

1 பிலி. க. மக. உ பே. க. எ.
2 சங். அக. எ.
3 சங். கஅ. உஇ.
4 க பே. க ஏ: ச. மச.
5 இ. வச.
* அல்லது பாத்திரராக என்னவும்.
6 க தெச. க. க.
7 க தெச. ச. மக.
8 மத். உச. கக. மாற். மங. உஎ. க தெச. ச. மஎ.
9 மத். உச. ச. எபே. இ. கூ. க யோ. சக.
10 மத். உச. ச. எபே. இ. கூ.
11 க தீமோ. சக.
12 யோவா. மஎ. மஉ.
13 தானி. எ. உஇ. க யோ. உ.மஅ. வெளி. மங. மக. ழ.
14 கொரி. அ. இ.
15 எசா. மச. மங. எசே. உஅ. உ, க, கூ. தானி. எ. உஇ: மக. கக. வெளி. மங. கூ.
† அல்லது அவனைப் பிடித்துக்கொள்ளுகிறது.
16 க யோ. உ. மஅ: ச. க.
17 யோபு. ச. கூ. எசா. மக. ச. ஓசே. கூ. இ. வெளி. உ. மங: மக. மஇ, உம, உக.
18 தானி. எ. ம,மக.
19 உ தெச. க. அ, கூ. எபி. ம. உஎ.

Digitized by Google

னெனில், [1]சாத்தானுடைய நடத்தையின் விதமாய், பொய்யான அற்புதங்களோடும், [2]அடையாளங்களோடும், மிகுந்த வல்லமையோடும்,

௰ அநீதியினால் உண்டாகும் எல்லாவித வஞ்சகத்தோடும், [3]கெட்டுப்போகிறவர்களுக்குள்ளே தோன்றுவான்; இரட்சிக்கப்படும்படிக்கு ஏதுவான சத்தியத்தின்மேலுள்ள அன்பை அவர்கள் தரித்துக்கொள்ளாமல் இருப்பதால், அப்படி நடக்கும்.

௰௧ அதினாலே சத்தியத்தை நம்பாமல், [4]அநீதியில் பிரியமான யாவரும் ஆக்கினைக்கு உள்ளாக்கப்படும்படிக்கு,

௰௨ அவர்கள் [5]பொய்யானதை நம்புதற்கு ஏதுவாக வஞ்சகத்தை நடப்பிக்கிறதைப் பராபரன் [6]அவர்களுக்கு அனுப்புவார்.

௰௩ ¶ கர்த்தராலே அன்புகூரப்பட்ட சகோதரராகிய நீங்கள், [7]ஆவியினால் பரிசுத்தமாக்கப்படுகிறதினாலும், சத்தியத்தை விசுவாசிக்கிறதினாலும், இரட்சிப்பு அடையும்படிக்கு [8]ஆதிமுதல் பராபரன் [9]உங்களைத் தெரிந்துகொண்டபடியினாலே, [10]நாங்கள் உங்களைக்குறித்து எப்பொழுதும் பராபரனைத் தோத்திரிக்கக் கடனாளிகளாய் இருக்கிறோம்.

௰௪ நீங்கள் நம்முடைய கர்த்தராகிய இயேசுக்கிறிஸ்துவினிடத்தில் [11]மகிமையை அடையும்பொருட்டாக, எங்கள் சுவிசேஷத்தினாலே அந்த இரட்சிப்புக்கு அவர் உங்களை அழைத்தார்.

௰௫ ¶ ஆனபடியினாலே சகோதரரே, [12]நீங்கள் நிலைகொண்டு, எங்கள் வார்த்தையினாலாவது நிருபத்தினாலாவது நாங்கள் [13]உங்களுக்கு உபதேசித்த முறைமைகளைப் பற்றிக்கொள்வீர்களாக.

௰௬ [14]நம்மிடத்தில் அன்புகூர்ந்து, நித்திய ஆறுதலையும் [15]நல்ல நம்பிக்கையையும், கிருபையாய் நமக்குக் கொடுத்திருக்கிற நம்முடைய பிதாவாகிய பராபரனும், [16]நம்முடைய கர்த்தராகிய இயேசுக்கிறிஸ்துவும் உங்கள் இருதயங்களுக்கு ஆறுதல்செய்து,

௰௭ எல்லாவித நல்வசனத்திலும், நற்கிரியையிலும் உங்களை [17]ஸ்திரப்படுத்தக்கடவர்.

கி. பி. ௬௪.

1 யோவா. அ. ௪௧. எபே. உ. உ. வெளி. ௰அ. உ௧.
2 இ மோ. ௰௧. ௧. மத். உச. உச. வெளி. ௰௩. ௰௩: ௰௪. உ௧.
3 உ கொரி. உ. ௰௫: ச. ௩.
4 உரோ. ௧. ௩உ.
5 மத். உச. இ, ௰௧. ௧ தீமோ. ச. ௧.
6 உரோ. ௧. உச. ௲. ௧ இரா. உஉ. உஉ. ஏசே. ௰ச. ௯.
7 லூக். ௧. எ௫. ௧ பே. ௧. உ.
8 எபே. ௧. ச.
9 ௧ தெச. ௧. ௪.
10 உ தெச. ௧.௩.
11 யோவா. ௰எ. உஉ. ௧ தெச. உ. ௰உ. ௧ பே. ௫. ௰.
12 ௧ கொரி. ௰௩. ௰௩. பிலி. ச. ௧.
13 ௧ கொரி. ௰௧. உ. உ தெச. ௩. ௬.
14 ௧ யோ. ச. ௰. வெளி. ௧. ௫.
15 ௧ பே. ௧. ௩.
16 உ தெச. ௧.௧, உ.
17 ௧ கொரி.௧.அ. ௧ தெச. ௩. ௰௩. ௧ பே. ௫. ௰.
* அல்லது பரம்பி.
18 உரோ.௰௫.௩௧.
† நிரேக்கு, முறையற்ற.
19 எபே. ௬. ௰௯. கொலோ. ச. ௩. ௧ தெச.௫.உ௫.
20 அப்.உஅ.உச. உரோ. ௰. ௰௬.
21 ௧ கொரி.௧.௯. ௧ தெச.௫.உச.
22 யோவா. ௰எ. ௰௫. உ பே.உ. ௯.
23 உ கொரி. எ. ௰௬. கலா.௫.௰.
24 ௧ நாளா.உ௯. ௰அ.

## ௩. அதிகாரம்.

௧. தனக்காகச் செபம்பண்ணவேண்டுமென்றும், உ. அவர்கள்மேல் தனக்குள்ள நம்பிக்கை இன்னதென்றும் சொல்லி, ௩. அவர்களுக்காகப் பராபரனை வேண்டிக்கொண்டு, ௪. சில புத்திகள் சொல்லி, விசேஷமாய்ச் சோம்பலையும் கெட்ட சகவாசத்தையும் விலக்கக் கற்பித்து, ௰௬. செபத்தோடும், வாழ்த்தலோடும் நிருபத்தை முடித்தது.

சகோதரரே, கடைசியிலே உங்களிடத்திலே நடக்கிறதுபோல, கர்த்தருடைய வசனம் ஓடி* மகிமைப்படும்படிக்கும்,

௨ [18]துர்க்குணராகிய† பொல்லாதமனிதர் கையில்நின்று நாங்கள் இழுக்கப்படும்படிக்கும் [19]எங்களுக்காக விண்ணப்பம்பண்ணுவீர்களாக; [20]விசுவாசம் எல்லாரிடத்திலும் இல்லையே.

௩ [21]கர்த்தரே உண்மையுள்ளவர்; அவர் உங்களை ஸ்திரப்படுத்தி, பொல்லாங்கனுக்கு [22]விலக்கிக் காத்துக்கொள்வார்.

௪ மேலும் நாங்கள் உங்களுக்குக் கட்டளையிட்டவைகளைச் செய்கிறீர்கள் என்றும், இனிமேலும் செய்வீர்கள் என்றும், உங்களைக்குறித்துக் [23]கர்த்தரிடத்தில் நம்பிக்கையாய் இருக்கிறோம்.

௫ [24]கர்த்தர் உங்கள் இருதயங்களைப் பராபரனுடைய அன்புக்கும், கிறிஸ்துவின் பொறுமைக்கும்‡ நேராக நடத்தக்கடவர்.

௬ பின்னும் சகோதரரே, நம்முடைய கர்த்தராகிய இயேசுக்கிறிஸ்துவின் நாமத்தினாலே நாங்கள் உங்களுக்குக் கட்டளையிடுகிறது என்னவெனில், [25]நீங்கள்

‡ அல்லது கிறிஸ்துவைக் காத்திருக்கும் பொறுமைக்கும். ௧ தெச.௧.௩.—25 உ தெச.உ.௰௫.

Digitized by Google

எங்களிடத்தில் கேட்டு ஏற்றுக் கொண்ட முறைமையின்படி நடவாமல், [1]ஒழுங்கில்லாமையாய் நடக்கிற [2]எந்தச் சகோதரனையும் [3]விட்டு விலகவேண்டும்.

௭ [4]எங்களை இன்ன இன்னவிதமாய்ப் பின்பற்றவேண்டும் என்று நீங்கள் அறிந்திருக்கிறீர்களே; [5]நாங்கள் உங்களுக்குள்ளே ஒழுங்கில்லாமையாய் நடவாமல்,

௮ ஒருவனுடைய அப்பத்தையும் கைம்மாறில்லாமல் சாப்பிடாமல் உங்களில் ஒருவனுக்கும் பாரமாய் இராதபடிக்கு, இரவும்பகலும் பிரயாசத்தோடும் வருத்தத்தோடும் [6]வேலைசெய்து (சாப்பிட்டோம்).

௯ (அப்படிப் பாரத்தை வைப்பதற்கான) [7]அதிகாரம் எங்களுக்கு இல்லை என்றல்ல, [8]நீங்கள் எங்களைப் பின்பற்றும்படிக்கான திருட்டாந்தமாக எங்களை உங்களுக்குக் காண்பிக்க மனதாயிருந்தபடியினாலே அப்படிச் செய்தோம்.

௰ [9]ஒருவன் வேலைசெய்ய மனதில்லாதிருந்தால் அவன் சாப்பிடவும் கூடாது என்று நாங்கள் உங்களிடத்தில் இருந்தபொழுது உங்களுக்குக் கட்டளையிட்டோம்.

௰௧ [10]இப்பொழுது உங்களில் சிலர் வேலையொன்றும் செய்யாமல் வீண் அலுவலாய் நடந்து, [11]ஒழுங்கில்லாமையாய்த்திரிகிறார்கள் என்று கேள்விப்படுகிறோம்.

௰௨ இப்படிப்பட்டவர்கள் [12]அமைதலோடே வேலைசெய்து, தங்கள் அன்னத்தைச் சாப்பிடவேண்டும் என்று நம்முடைய கர்த்தராகிய இயேசுக்கிறிஸ்துவினாலே [13]அவர்களுக்குப் புத்தியாகக் கட்டளையிடுகிறோம்.

௰௩ சகோதரரே, [14]நீங்கள் நன்மைசெய்கிறதிலே இளைப்படையாமல்* இருப்பீர்களாக.

௰௪ மேலும் ஒருவன் இந்த நிருபத்தின்படி எங்கள் வசனத்திற்குக் கீழ்ப்படியாமற்போனால்† அவனைக் குறித்துக்கொண்டு, [15]அவன் வெட்கப்படும்படிக்கு அவனுடனே கலவாதிருப்பீர்களாக.

௰௫ அப்பொழுதும் [16]அவனைச் சத்துருவைப்போல எண்ணாமல், [17]சகோதரன் என்று எண்ணி, அவனுக்குப் புத்திசொல்லுங்கள்.

௰௬ [18]சமாதானத்தின் கர்த்தர் எப்பொழுதும் சகலவிதத்திலும் உங்களுக்குச் சமாதானத்தை அநுக்கிரகிக்கக்கடவர்; கர்த்தர் உங்கள் எல்லாரோடுங்கூட இருப்பாராக.

௰௭ ¶ [19]பவுலாகிய நான் என் கையெழுத்தோடே வாழ்த்துதலை எழுதினேன்; நிருபங்கள்தோறும் இதுவே அடையாளம்; அப்படி எழுதுகிறேன்.

௰௮ [20]நம்முடைய கர்த்தராகிய இயேசுக்கிறிஸ்துவின் கிருபை உங்கள் அனைவரோடுங்கூட இருக்கக்கடவது. — ஆமென்.

கி. பி. ௫௪.

1 ௧ தெச. ௪. ௰௧: ௫. ௰௪. ௰௧, ௰௨, ௰௪. ௨௪.
2 ௧ கொரி. ௫. ௰௧, ௰௩.
3 உரோ. ௰௬. ௰௭. ௰௪. ௨௪. ௧ தீமோ. ௬. ௫. ௨ யோ. ௰.
4 ௧ கொரி. ௪. ௰௬: ௰௧. ௧. ௧ தெச. ௧ ௬. ௭.
5 ௧ தெச. ௨. ௰.
6 அப். ௰௮. ௩: ௨௰ ௩௪. ௨ கொரி. ௰௧. ௯. ௧ தெச. ௨. ௯.
7 ௧ கொரி. ௯. ௬. ௧ தெச. ௨. ௬.
8 ௭. ௯௪.
9 ௧ மோ. ௩. ௰௯. ௧ தெச. ௪. ௰௧.
10 ௧ தெச. ௪. ௰௧. ௧ தீமோ. ௫. ௰௩. ௧ பே. ௪. ௰௫.
11 ௬. ௨௪.
12 எபே. ௪. ௨௮.
13 ௧ தெச. ௪. ௰௧.
14 கலா. ௬. ௯.
* அல்லது வாடிப்போகாமல்.
† அல்லது ஒருவன் கீழ்ப்படியாமற்போனால் நிருபத்தினாலே.
15 மத். ௰௮. ௰௭. ௧ கொரி. ௫. ௯, ௰௧. ௬. ௨௪.
16 ௩ மோ. ௰௯. ௰௭. ௧ தெச. ௫. ௰௪.

17 தீத். ௩. ௰. — 18 உரோ. ௰௫. ௩௩: ௰௬. ௨௰. ௧ கொரி. ௰௪. ௩௩. ௨ கொரி. ௰௩. ௰௧. ௧ தெச. ௫. ௨௩.
19 ௧ கொரி. ௰௬. ௨௧. கொலோ. ௪. ௰௮. — 20 உரோ. ௰௬. ௨௪.

Digitized by Google

I. TIMOTHY.

அப்போஸ்தலனாகிய பவுல்

# தீமோத்தேயுவுக்கெழுதின

## முதலாம் நிருபம்.

### க. அதிகாரம்.

க. பவுல் மக்கெதோனியாவுக்குப் போனபோது, தான் தீமோத்தேயுவுக்குக் கொடுத்த கட்டளையை நினைப்பூட்டி, ௫. நியாயப்பிரமாணத்தை அநுசரிப்பதையும், அதின் கடைசிப்பொருளையுங்குறித்தும், ௰௧. தான் அப்போஸ்தல ஊழியத்துக்கு அழைக்கப்பட்டதைக்குறித்தும், ௨௰. இமெனேயு, அலெக்சாந்தர் என்ற இரண்டு துரோகிகளைக்குறித்தும் சொல்லியது.

நம்முடைய இரட்சகராயிருக்கிற [1]பராபரனும், [2]நமது நம்பிக்கைக்குரித்தான கர்த்தராகிய இயேசுக்கிறிஸ்துவும் கொடுத்த [3]கட்டளையினாலே, இயேசுக்கிறிஸ்துவின் அப்போஸ்தலனாயிருக்கிற பவுல்,

உ [4]விசுவாசத்தினாலே உத்தம குமாரனாகிய [5]தீமோத்தேயுவுக்கு எழுதுகிறதாவது: நம்முடைய பிதாவாகிய பராபரனாலும், நம்முடைய கர்த்தராகிய கிறிஸ்து இயேசுவினாலும் [6]கிருபையும் இரக்கமும் சமாதானமும் உண்டாகக்கடவது.

௩ ¶ [7]வேற்றுமையாய்ப் போதகம்பண்ணாதபடிக்கும், விசுவாசத்தினால் வருகிற திவ்விய எழுப்புதலை அல்ல, [8]தருக்கங்களை உண்டாக்குகிற முடியாத வம்ச அட்டவணைகளையும் கட்டுக்கதைகளையும் [9]பற்றிக்கொள்ளாதபடிக்கும் நீ சிலருக்குக் கட்டளையிடும்பொருட்டாக,

௪ [10]நான் மக்கெதோனியாவுக்குப் போனபொழுது, உன்னை எபேசுபட்டணத்தில் இருக்க வேண்டிக்கொண்டதின்படி (நீ செய்வாயாக).

௫ ¶ [11]கட்டளையின் கடைசிப்பொருள் என்னவெனில், [12]சுத்தமான இருதயத்தினாலும், நல்மனச்சாட்சியினாலும், வஞ்சனை இல்லாத விசுவாசத்தினாலும் பிறக்கிற அன்பே.

௬ சிலர் அந்தப் பொருளைவிட்டு விலகி,* [13]வீணான பேச்சைப் பேசிவருகிறார்கள்.

௭ அவர்கள் தாங்கள் சொல்லுகிறது இன்னதென்றும், தாங்கள் திருட்டாந்தப்படுத்துகிறது இன்னதென்றும் [14]அறியாதிருந்தும், நியாயசாஸ்திரிகளாய் இருக்க விரும்புகிறார்கள்.

௮ நியாயப்பிரமாணத்தை ஒருவன் நியாயப்படி அநுசரித்தால் [15]அது (அவனுக்கு) நன்மையாய் இருக்கும் என்று அறிந்திருக்கிறோம்.

௫. பி. ௬௫.

1 க தீமோ. உ.௩: ச. ௰. தீத். க.௩: உ. ௰: ௩. ச. யூதா. உ௫.
2 கொலோ. க. உ௭.
3 அப். க. ௰௫. கலா. க.௧, ௰௧.
4 தீத். க. ச.
5 அப். ௰௬. க. க கொரி. ச.௰௭. பிலி. உ. ௰௯. க தெச. ௩. உ.
6 கலா. க. ௩. உ தீமோ. க.உ. க பே. ௧. உ.
7 கலா. க. ௬, எ. க தீமோ.௬.௩,௰.
8 க தீமோ. ௪.௪.
9 க தீமோ. ௪. எ: ௬. ச, உ௰. உ தீமோ. உ. ௰ச, ௰௬, உ௩. தீத்.க. ௰ச:௩.௯.
10 அப். உ௰. க,௩. பிலி. உ. உச.
11 உரோ. ௰௩.அ, ௰. கலா. ௫.௰ச.
12 உ தீமோ. உ. உஉ.
* அல்லது நோக்காமல்.
13 க தீமோ. ௬. ச, உ௰.
14 க தீமோ.௬.ச.
15 உரோ.௭. ௰உ.

Digitized by Google

௯ அன்றியும் [1]எங்களுக்குத் தெரிந்திருக்கிறபடி நியாயப்பிரமாணம் நீதிமான்களுக்கு அல்ல, அக்கிரமக்காரருக்கும், கீழ்ப்படியாதவர்களுக்கும், தேவபத்தி இல்லாதவர்களுக்கும், பாவிகளுக்கும், அசுத்தருக்கும், லவுகீக நடக்கையுடையவர்களுக்கும், தாய்தகப்பன்மாரைக் கொலைசெய்கிறவர்களுக்கும், மற்ற மனிதரைக் கொலைசெய்கிறவர்களுக்கும்,

௰ வேசிமார்க்கருக்கும், ஆண்புணர்ச்சிக்காரருக்கும், மனிதரைத் திருடுகிறவர்களுக்கும், பொய்க்காரருக்கும், பொய்யாணை இடுகிறவர்களுக்கும்,

௰௧ [2]பாக்கியமுள்ள பராபரனுடைய மகிமையான சுவிசேஷத்தின்படி இருக்கிற [3]ஆரோக்கியமான உபதேசத்திற்கு விரோதமாயிருக்கிற மற்றெந்தப் பொல்லாங்கைச் செய்கிறவர்களுக்கும் கொடுக்கப்பட்டிருக்கின்றது.

௰௨ [4]அந்தச் சுவிசேஷம் எனக்கு ஒப்புவிக்கப்பட்டது; [5]என்னைப் பலப்படுத்துகிற நம்முடைய கர்த்தராகிய இயேசுக்கிறிஸ்து என்னை [6]உண்மையுள்ளவன் என்றெண்ணி, [7]இந்த ஊழியத்திற்கு ஏற்படுத்தினபடியால், அவருக்குத் தோத்திரம்செய்கிறேன்.

௰௩ முன்னே நான் [8]தூஷணிக்கிறவனுமாய், துன்பப்படுத்துகிறவனுமாய், நிந்திக்கிறவனுமாய் இருந்தேன்; அப்படியிருந்தும், [9]நான் அறியாமல் அவிசுவாசத்தினால் அப்படிச் செய்தபடியினாலே இரக்கம் பெற்றேன்.

௰௪ ¶ மேலும் [10]நம்முடைய கர்த்தாவின் கிருபை கிறிஸ்து இயேசுவின்மேலுள்ள [11]விசுவாசத்தோடும் [12]அன்போடுங்கூட எனக்கு மிகவும் சம்பூரணமாய் உண்டாயிற்று.

௰௫ [13]பாவிகளை இரட்சிக்கும்படிக்குக் கிறிஸ்து இயேசு உலகத்தில் வந்தார் என்கிறது [14]உண்மையும், எல்லா அங்கிகரிப்புக்குப் பாத்திரமுமான வார்த்தையாயிருக்கின்றது; பாவிகளில் நான் பிரதானமானவன்.

௰௬ அப்படியிருந்தும் நித்தியசீவனை அடையும்படி இனிமேல் இயேசுக்கிறிஸ்துவினிடத்தில் விசுவாசமாய் இருப்பவர்களுக்குத் [15]திருட்டாந்தத்தைக் கொடுக்கும்பொருட்டாக, பிரதான பாவியாகிய என்னிடத்திலே எல்லா நீடிய பொறுமையைக் காண்பிக்கும்படிக்கு [16]இரக்கம்பெற்றேன்.

௰௭ [17]நித்தியமும் [18]அழிவில்லாமையும் [19]அதரிசனமுமுள்ள இராசனுமாய், [20]ஒருவராகிய ஞானமுள்ள பராபரனுமாய் இருக்கிற அவருக்குக் [21]கனமும் துதியும் என்றென்றைக்கும் உண்டாயிருப்பதாக.—ஆமென்.

௰௮ ¶ என் குமாரனாகிய தீமோத்தேயே, [22]உன்னைக்குறித்து முன்னுண்டான தீர்க்கதரிசனங்களின்படியே [23]நான் இந்தக் கட்டளையை உனக்கு ஒப்புக்கொடுக்கிறேன்.

௰௯ [24]அந்தப்படி நீ விசுவாசமும், நற்சாட்சியையுடைய மனதும் உள்ளவனாய் அவைகளாலே [25]நல்ல போராட்டம்பண்ணுவாயாக; அப்படிப்பட்ட மனதைச் சிலர் தள்ளி, விசுவாசமாகிய [26]கப்பலைச் சேதப்படுத்தினார்கள்.

௨௰ அவர்களில் [27]இமெனேயும், [28]அலெக்குசந்தரும் இருக்கிறார்கள்; [29]அவர்கள் தூஷணியாதபடிக்குக் கற்றுக்கொள்ளும்பொருட்டாய் [30]அவர்களைச் சாத்தானுக்கு ஒப்புக்கொடுத்தேன்.

## ௨. அதிகாரம்.

௧. பாவருக்காகவும் செபம்பண்ணவேண்டுமென்றும், அதற்கு முகாந்திரம் இன்னதென்றும், ௮. ஸ்திரிகள் இவ்விதமாய் நடக்கவேண்டுமென்

கி. பி. ௬௫.

1 கலா. ௩. ௰௬: ௫. ௨௩.
2 ௧ தீமோ. ௬. ௰௫.
3 ௧ தீமோ. ௬. ௩. ௨ தீமோ. ௪. ௩. தீத். ௧. ௯: ௨. ௧.
4 ௧ கொரி. ௯. ௰௭. கலா. ௨. ௭. கொலோ. ௧. ௨௫. ௧ தெச. ௨. ௪. ௧ தீமோ. ௨. ௭. ௨ தீமோ. ௧. ௰௧. தீத். ௧. ௩.
5 ௨ கொரி. ௰௨. ௯.
6 ௧ கொரி. ௭. ௨௫.
7 ௨ கொரி. ௩. ௫, ௬: ௪. ௧. கொலோ. ௧. ௨௫.
8 அப். ௮. ௩: ௯. ௧. ௧ கொரி. ௰௫. ௯. பிலி. ௩. ௬.
9 லூக். ௨௩. ௩௪. யோவா. ௯. ௩௯, ௪௧. அப். ௩. ௰௭: ௨௬. ௯.
10 ௨ ரோ. ௫. ௨௦. ௧ கொரி. ௰௫. ௰.
11 ௨ தீமோ. ௧. ௰௩.
12 லூக். ௭. ௪௭.
13 மத். ௯. ௰௩. மாற். ௨. ௰௭. லூக். ௫ ௩௨: ௰௯. ௰. ௨ ரோ. ௫. அ. ௧ யோ. ௩. ௫.
14 ௧ தீமோ. ௩. ௧: ௪. ௯. ௨ தீமோ. ௨. ௰௧. தீத். ௩. ௮.
15 அப். ௰௩. ௩௯.
16 ௨ கொரி. ௪. ௧.
17 சங். ௰. ௰௬: ௧௪௫. ௰௩. தானி. ௭. ௰௪. ௧ தீமோ. ௬. ௰௫, ௰௬.
18 ௨ ரோ. ௧. ௨௩.
19 யோவா. ௧. ௰௮. எபி. ௰௧. ௨௭. ௧ யோ. ௪. ௰௨.
20 ௨ ரோ. ௰௬. ௨௭. யூதா. ௨௫.

21 ௧ நாளா. ௨௯. ௰௧.—22 ௧ தீமோ. ௪. ௰௪.—23 ௧ தீமோ. ௧. ௰௮, ௰௪, ௨௦. ௨ தீமோ. ௨. ௨.—24 ௧ தீமோ. ௩. ௯.—25 ௧ தீமோ. ௬. ௰௨. ௨ தீமோ. ௨. ௩: ௪. ௭.—26 ௧ தீமோ. ௬. ௯.—27 ௨ தீமோ. ௨. ௰௭.—28 ௨ தீமோ. ௪. ௰௪.—29 அப். ௰௩. ௪௫.—30 ௧ கொரி. ௫. ௫.

Digitized by Google

றும், ௰௨. அவர்கள் சபையிலே போதிக்கக்கூடா தென்றும், ௰௫. அவர்கள்மேல் பராபரனுடைய கோபாக்கினை இருந்தாலும் அவர்கள் விசுவாசத்தில் நிலைநிற்பார்களானால் பிள்ளைப்பேற்றில் இரட்சிக்கப்படுவார்களென்றும் சொல்லியது.

பின்னும் நான் பிரதானமாய்ப் புத்திசொல்லுகிறது * என்னவெனில், எல்லா மனிதருக்காகவும் விண்ணப்பங்களையும், செபங்களையும், வேண்டுதலையும், தோத்திரங்களையும் பண்ணவேண்டும்.

௨ நாம் எல்லாப் பத்தியோடும் யோக்கியத்தோடும் கலகமில்லாமல் அமைதலுள்ள சீவனம்பண்ணும்படிக்கு, [1]இராசாக்களுக்காகவும் [2]அதிகாரமுள்ள† யாவருக்காகவும் அப்படியே செய்யவேண்டும்.

௩ [3]நம்முடைய இரட்சகராகிய பராபரனுக்குமுன்பாக [4]அது நன்மையாயும் பிரியமாயும் இருக்கின்றது.

௪ எல்லா மனிதரும் இரட்சிக்கப்படவும், [5]சத்தியத்தை அறிகிற அறிவுக்கு வரவும் [6]அவரே சித்தமாய் இருக்கிறார்.

௫ ஏனெனில், [7]பராபரன் ஒருவரே; பராபரனுக்கும் மனிதருக்கும் [8]மத்தியஸ்தரும் ஒருவரே.

௬ எல்லாரையும் மீட்கும்பொருளாகத் [9]தம்மை ஒப்புக்கொடுத்த மனிதனாகிய கிறிஸ்து இயேசு அவரே; (அந்த மீட்புத்) [10]தகுதியான காலங்களில் [11]சாட்சிசொல்லப்பட்டு‡ வருகின்றது.

௭ அதற்காக நான் புறத்தேசத்தாருக்கு விசுவாசத்தையும் சத்தியத்தையும் [12]விளங்கப்பண்ணுகிற போதகனாகவும், பிரசங்கியாகவும், அப்போஸ்தலனாகவும் [13]ஏற்படுத்தப்பட்டிருக்கிறேன்; [14]நான் பொய்சொல்லாமல் உண்மையே சொல்லுகிறேன்.

௮ ¶ அல்லாமலும் என்னுடைய சித்தம் என்னவென்றால், [15]எல்லா இடங்களிலேயும், புருஷர்கள் கோபமும் தருக்கமும் இல்லாமல்

கி. பி. ௬௫.

* அல்லது விரும்புகிற.
1 எஸ்ற. ௬. ௰. எரே. ௨௯. ௭.
2 உரோ. ௰௩. ௧.
† அல்லது உயர்ந்த உத்தியோகமுடைய.
3 ௧ தீமோ. ௧. ௧. ௨ தீமோ. ௧.௯.
4 உரோ. ௰௨.௨. ௧ தீமோ. ௫.௪.
5 யோவா. ௰௭. ௩. ௨ தீமோ. ௨. ௨௫.
6 எசே.௰௮. ௨௩. யோவா. ௩. ௰௬, ௰௭. தீத்.௨. ௰௧. ௨ பே. ௩. ௯.
7 உரோ. ௩. ௨௯, ௩௰: ௰. ௰௨. கலா. ௩. ௨௰.
8 எபி. ௮.௬: ௯. ௰௫.
9 மத். ௨௰. ௨௮. மாற். ௰. ௪௫. எபே. ௧.௭. தீத். ௨. ௰௪.
10 உரோ. ௫. ௬. கலா. ௪. ௪. எபே. ௧. ௯:௩. ௫. தீத். ௧. ௩.
11 ௧ கொரி.௧.௬. ௨ தெச. ௧. ௰. ௨ தீமோ. ௧.௮.
‡ அல்லது சாட்சியாக.
12 உரோ.௰௧.௰௩: ௰௫. ௰௬. கலா. ௧. ௰௬.
13 எபே. ௩.௭,௮. ௨ தீமோ.௧.௰௧.
14 உரோ. ௯. ௧.
15 மல்கி. ௧. ௰௧. யோவா.௪.௨௧.
16 சங். ௱௪௪. ௨. ஏசா. ௧. ௰௫.
17 ௧ பே. ௩. ௩.
§ அல்லது அலங்கரித்தல்.
18 ௧ பே ௩. ௪.
19 ௧ கொரி. ௰௪. ௩௪.
20 எபே ௫. ௨௪.
21 ௧ மோ. ௧. ௨௭: ௨. ௰௮, ௨௨. ௧ கொரி. ௰௧. ௮, ௯.
22 ௧ மோ. ௩. ௬. ௨ கொரி.௰௧.௩.

[16]பரிசுத்தமான கைகளை உயர்த்திச் செபம்பண்ணவேண்டும்.

௯ [17]அந்தப்படி ஸ்திரிகளும் மயிரைப் பின்னுதலாலாவது,§ பொன்னாலாவது, முத்துக்களாலாவது, விலையேறப்பெற்ற வஸ்திரத்தாலாவது, தங்களை அலங்கரியாமல் தேவபத்தியைக் காண்பிக்கிற பெண்பிள்ளைகளுக்கு ஏற்றபடியே,

௰ [18]கற்புக்குரிய வஸ்திரத்தாலும், நாணத்தாலும், தெளிவான புத்தியினாலும், நற்கிரியைகளாலும் தங்களை அலங்கரிக்கவேண்டும்.

௰௧ ¶ ஸ்திரியானவள் அமைதலோடே படித்துக்கொண்டு இப்படி எவ்விதத்திலும் கீழ்ப்படிதலைக் காண்பிக்கக்கடவள்.

௰௨ [19]உபதேசம்பண்ணும்படியாயும், [20]புருஷன்மேலே அதிகாரத்தைச் செலுத்தும்படியாயும், நான் ஸ்திரியானவளுக்கு உத்தரவு கொடுக்கிறதில்லை.

௰௩ அவள் அமைதலாய் இருக்கவேண்டும்; என்னத்தினாலெனில், முதலாவது [21]ஆதாமும், இரண்டாவது ஏவாளும், உருவாக்கப்பட்டார்கள்.

௰௪ மேலும் [22]ஆதாம் வஞ்சிக்கப்படவில்லை; ஸ்திரியானவளே வஞ்சிக்கப்பட்டு மீறுதலுக்கு உட்பட்டாள்.

௰௫ அப்படியிருந்தும், அவர்கள் தெளிவான புத்தியோடே விசுவாசத்திலும் அன்பிலும் பரிசுத்தத்திலும் நிலைகொண்டிருந்தால் பிள்ளையைப் பெறுகிறதினாலே இரட்சிக்கப்படுவார்கள்.

## ௩. அதிகாரம்.

௧. கண்காணிகளுக்கும், ஊழியக்காரர்களுக்கும், அவர்கள் பெண்சாதிகளுக்கும் இருக்கவேண்டிய இலட்சணங்களைக் காண்பித்து, ௰௪. இவைகளைக்குறித்துத் தீமோத்தேயுவுக்குப் பவுல் எழுதவேண்டிய முகாந்தரம் இன்னதென்றுசொல்லி, ௰௫. சபையைக்குறித்தும், அதில் போதிக்கப்பட்டு வழங்கிவருகிற மகிமையுள்ள சத்தியத்தைக் குறித்தும் சொல்லியது.

Digitized by Google

[1]கண்காணிப்பை விரும்புகிற வன் [2]நல்ல வேலையை விரும்புகி ருன்; [3]இது மெய்யான வார்த்தை.

உ ஆகையால் [4]கண்காணியா னவன் குற்றமில்லாதவனுமாய், [5]ஒரே மனைவியையுடைய புருஷ னுமாய், தெளிந்தபுத்தியுள்ளவனு மாய், விவேகியுமாய், நல்லொழுக் கமுள்ளவனுமாய்,* அந்நியரை உ பசாரம் செய்கிறவனுமாய், [6]போ திக்கிறதற்குத் தகுதியானவனு மாய் இருக்கவேண்டும்.

௩ [7]அவன் திராட்ச இரசத்தில் பிரியனுமாய்,† [8]அடிக்கிறவனு மாய், அவலட்சணமான ஆதாயத் தை [9]இச்சிக்கிறவனுமாய் இரா மல், [10]சாந்தனுமாய், சண்டை பண்ணுதவனுமாய், பணத்தின் மேல் பிரியம் இல்லாதவனுமாய்,

௪ தன் சொந்தக் குடும்பத்தை நன் ருய் நடத்துகிறவனுமாய், [11]தன் பிள்ளைகளை எவ்விதத்திலும் யோக் கியமாய்க் கீழ்ப்படியப்பண்ணிக் கொள்ளுகிறவனுமாய் இருக்க வேண்டும்.

௫ ஒருவன் தன் சொந்தக் குடும் பத்தை நடத்த அறியாதிருந்தால், பராபரனுடைய சபையை எப் படி விசாரிப்பான்?

௬ மேலும் அவன் இறுமாப்பை அடைந்து, பசாசு விழுந்த [12]ஆக்கி னையிலே விழாதபடிக்கு நூதன மான கிறிஸ்தவனுயிருக்கக்‡ கூ டாது.

௭ மேலும் அவன் நிந்தையி லும், [13]பசாசின் கண்ணியிலும் விழாதபடிக்கு, [14]புறம்பானவர்க ளால் நற்சாட்சியைப் பெற்றவனு யும் இருக்கவேண்டும்.

௮ ¶ அந்தப்படியே [15]உதவிக் காரரும், இருநாக்குள்ளவர்களா யும், [16]திராட்ச இரசத்தில் பிரியரா யும், அவலட்சணமான ஆதாயத் தை இச்சிக்கிறவர்களாயும் இரா மல்,

௯ [17]விசுவா சத்தின் இரகசியத்தைச் சுத்தமான மனதிலே காத்துக்கொள்ளுகிறவர் களுமாய் இருக்கவேண்டும்.

௰ அல்லாமலும் முன்பு அவர் களும் சோதிக்கப்படவேண்டும்; அப்பொழுது குற்றமில்லாதவர்க ளானால் அவர்கள் உதவிக்காரரு டைய உத்தியோகத்தைச் செய்ய லாம்.

௰௧ [18]அப்படிப்போல அவர்க ளுடைய ஸ்திரிகளும் யோக்கியரு மாய், தூஷணியாதவர்களுமாய், தெளிந்த புத்தியுள்ளவர்களுமாய், எவ்விதத்திலேயும் உண்மையுள்ள வர்களுமாய் இருக்கவேண்டும்.

௰௨ மேலும் உதவிக்காரரானவர் கள் ஒவ்வொரு மனைவிக்குப் புரு ஷருமாய், (தங்கள்) பிள்ளைகளை யும் சொந்தக் குடும்பங்களையும் நன்றாய் நடத்துகிறவர்களுமாய் இருக்கவேண்டும்.

௰௩ இப்படி [19]உதவிக்காரருடை ய உத்தியோகத்தை நன்றாய்ச் செய்கிறவர்கள்§தங்களுக்கு நல்ல பதவியையும், கிறிஸ்து இயேசு வினிடத்திலுள்ள விசுவாசத்தின் மேல் மிகுந்த தயிரியத்தையும் சம் பாதிக்கிறார்கள்.

௰௪ ¶ நான் உன்னிடத்திற்குச் சீக்கிரமாய் வருவேன் என்று நம்பி இருக்கிறேன்.

௰௫ நான் தாமதித்தால் சத்தியத் தைக் காக்கிற [20]தூணுமாய் அஸ்தி பாரமுமாய்‖ இருக்கிற ஜீவனுள்ள பராபரனுடைய சபையாகிய தே வாலயத்திலே நடக்கவேண்டிய வகையை நீ அறியும்படிக்கு இவை களை உனக்கு எழுதினேன்.

௰௬ அன்றியும் [21]பராபரன் மாம் சமுள்ளவராக வெளிப்பட்டு¶ [22]ஆவியினாலே நீதியுள்ளவர் என் று ஏற்படுத்தப்பட்டும், [23]தேவது தர்களால் காணப்பட்டும், [24]புற த்தேசத்தாருக்குள்ளே பிரசங்கிக்

கி. பி. ௬௫.

1 அப். ௨௰. ௨௮. பிலி. க. க.
2 எபே. ச. ௰௨.
3 க தீமோ. க. ௰௫.
4 தீத். க. ௬. ௯.
5 க தீமோ. ௫. ௯.
* அல்லது மரியா தை.
6 உ தீமோ. உ. உச.
7 அ. ௰ச. தீத். க. எ.
† அல்லது திரா ட்சஇரச வெறி யனைப் போலச் சண்டைக்கார னுமாய்.
8 உ தீமோ. உ. உச.
9 க பே. ௫. உ.
10 உ தீமோ. உ. உச.
11 தீத். க. ௬.
12 சங். ௰ச. ௰உ.
‡ அல்லது புதி தாய் விசுவாசிக் கிறவன்.
13 க தீமோ. ௬. ௯. உ தீமோ. உ. உ௬.
14 அப். உஉ. ௰உ. க கொரி. ௫. ௰உ. க தெச. ச. ௰உ.
15 அப். ௬. ௩.
16 ௩. ௭ச. க தீமோ. ௰௬. எசே. சச. உ௬.
17 க தீமோ. க. ௰௯.
18 தீத். உ. ௩.
19 மத். உ௫. உ௬.
§ அல்லது நடப் பிக்கிறவர்கள்.
20 எபே. உ. உ௬, உஉ. உ தீமோ. உ. உ௰.
‖ அல்லது ஆதார மும்.
21 யோவா. க. ௰ச. க யோ. க. உ.
¶ கிரேக்கு, வெ ளிப்படுத்தப்பட் டும்.
22 மத். ௩. ௰௬. யோவா. க.௩உ, ௩௩: ௰௫. உ௬: ௰௬. அ, ௯. உ ரோ. ௧. ச.



Digitized by Google

கப்பட்டும், [1]உலகத்திலே விசுவாசிக்கப்பட்டும், [2]மகிமையிலே உயர்த்தப்பட்டும் இருக்கிறார் என்று சொல்லிய மெய்த்தேவபத்திக்குரிய இந்த இரகசியம் யாவராலும் அறிக்கையிடப்பட்டபடி மேன்மையாய் இருக்கிறது.

## ௪. அதிகாரம்.

௧. முடிவுகாலத்தில் விசுவாசத்தில்நின்று வழுவுதல் இருக்குமென்று முன்னறிவித்து, ௬. தீமோத்தேயு தன் கடமைகளைக் கிரமமாய் நிறைவேற்றும்பொருட்டு அதற்கடுத்த பல புத்திகளைச் சொல்லியது.

ஆகிலும் [3]தேவ ஆவியானவர் தெளிவாய்ச்சொல்லுகிறபடி [4]பிற்காலங்களிலே பொய்யருடைய [5]வஞ்சகத்தினாலே சிலர் [6]வஞ்சிக்கிற ஆவிகளுக்கும், [7]தேமோன்களைக்குறித்துச் சொல்லுகிற உபதேசங்களுக்கும் செவிகொடுத்து அந்த விசுவாசத்தைத் தள்ளி நடப்பார்கள்.

௨ அந்தப் பொய்யர் [8]சூடுண்ட மனதுள்ளவர்களாய், [9]விவாகம் பண்ணக்கூடாதென்றும், [10]போசனபதார்த்தங்களை விலக்கவேண்டுமென்றும் கட்டளையிடுவார்கள்.

௩ பராபரன் அவைகளை, விசுவாசிகளாலும் சத்தியத்தை அறிந்தவர்களாலும் [11]தோத்திரத்தோடே [12]அநுபவிக்கும்படிக்குப் படைத்தாரே.

௪ ஆனதால் [13]பராபரன் படைத்தவை எல்லாம் நல்லவைகளாய் இருக்கின்றன; தோத்திரத்தோடே அவை ஏற்றுக்கொள்ளப்படுகையில் ஒன்றையும் தள்ளவேண்டுவதில்லை.

௫ அவை தேவவசனத்தினாலும் செபத்தினாலும் பரிசுத்தமாக்கப்படுகின்றனவே.

௬ ¶ இவைகளைச் சகோதரருக்குப் போதித்தால், நீ அறிந்து பற்றிக்கொண்டிருக்கிற நற்போதகத்திற்கும் விசுவாசத்திற்கும் உரிய வார்த்தைகளில் [14]வளர்ந்தவனாகி, இயேசுக்கிறிஸ்துவுக்கு நல்ல ஊழியக்காரனாய் இருப்பாய்.

௭ லவுகீக நடக்கைக்குரியவைகளுமாய்க் கிழவிகளுடைய பேச்சுமாயிருக்கிற கட்டுக்கதைகளை மாத்திரம் [15]தள்ளி, [16]மெய்த்தேவபத்தியை முயற்சிபண்ணிக்கொள்வாயாக.

௮ [17]சரீரத்திற்கேற்ற முயற்சிகொஞ்சப்* பிரயோசனமுள்ளதே; இந்தச் சீவனுக்கும் இதற்குப்பின் வரும் சீவனுக்கும் [18]வாக்குத்தத்தமுள்ளதாகிய [19]தேவபத்தி எவ்விதத்திலும் பிரயோசனமுள்ளதாய் இருக்கின்றதே.

௯ [20]இந்த வார்த்தை உண்மையாயும் மிகவும் அங்கிகரிக்கப்படுவதற்குப் பாத்திரமாயும் இருக்கின்றது.

௰ இதற்காக நாங்களும் எல்லா மனிதருக்கும், விசேஷமாக விசுவாசிகளுக்கும் [21]இரட்சகராகிய சீவனுள்ள பராபரன்மேல் [22]நம்பிக்கையை வைத்திருக்கிறபடியால், [23]பிரயாசப்பட்டும் நிந்திக்கப்பட்டும் இருக்கிறோம்.

௰௧ [24]இவைகளை நீ கட்டளையிட்டுப் போதிப்பாயாக.

௰௨ ¶ [25]உன் வாலிபவயதைக்குறித்து எவனாகிலும் உன்னை அசட்டை பண்ணத்தக்கதாக நீ செய்யாமல், வார்த்தையிலேயும் நடக்கையிலேயும் அன்பிலேயும் ஆவியிலேயும் விசுவாசத்திலேயும் கற்பிலேயும் உன்னை விசுவாசிகளுக்குச் [26]சட்டமாகக் காண்பிப்பாயாக.

௰௩ நான் வருமளவும் வாசிக்கிறதற்கும் புத்திசொல்லுகிறதற்கும் போதிக்கிறதற்கும் சாக்கிரதையாயிரு.

௰௪ [27]மூப்பர்கள் கூட்டம் உன்மேல் கைகளை வைத்தபொழுது

கி. பி. ௬௫.

1 கொலோ. ௧. ௬, ௨௩.
2 லூக். ௨௪. ௫௧. அப். ௧. ௯. ௧ பே. ௩. ௨௨.
3 யோவா. ௰௬. ௰௩. ௨ தெச. ௨. ௩. ௨ தீமோ. ௩. ௧. ௲. ௨ பே. ௩. ௩. ௧ யோ. ௨. ௰௮. யூதா. ௪, ௰௮.
4 ௧ பே. ௧. ௨௰.
5 மத். ௭. ௰௫. உரோ. ௰௬. ௰௮. ௨ பே. ௨. ௩.
6 ௨ தீமோ. ௩. ௰௩. ௨ பே. ௨. ௧வெளி. ௰௬. ௰௪.
7 தானி. ௰௧. ௩௭, ௩௮. வெளி. ௯. ௨௰.
8 எபே. ௪. ௰௯.
9 ௧ கொரி. ௭. ௨௮, ௩௬, ௩௮. கொலோ. ௨. ௨௰, ௨௧. எபி. ௰௩. ௪.
10 உரோ. ௰௪. ௩, ௰௭. ௧ கொரி. ௮. ௮.
11 உரோ. ௰௪. ௬. ௧ கொரி. ௰. ௩௰.
12 ௧ மோ. ௯. ௩.
13 உரோ. ௰௪. ௰௪, ௨௰. ௧ கொரி. ௰. ௨௫. தீத். ௧. ௰௫.
14 ௨ தீமோ. ௩. ௰௪, ௰௫.
15 ௧ தீமோ. ௬. ௪: ௬. ௨௰. ௨ தீமோ. ௨. ௰௬, ௨௩: ௪. ௪. தீத். ௧. ௰௪.
16 எபி. ௫. ௰௪.
17 ௧ கொரி. ௮. ௮. கொலோ. ௨. ௨௩.
* அல்லதுகொஞ்சகாலத்திற்கு.
18 சங். ௩௭. ௪. ௮௪. ௰௧: ௱௧௨. ௨, ௩: ௱௪௫. ௰௯. மத். ௬. ௩௩: ௰௯. ௨௯. மாற். ௰. ௩௰. உரோ. அ. ௨௮.



Digitized by Google

[1]தீர்க்கதரிசனத்தினாலே உனக்குக் கொடுக்கப்பட்ட வரத்திற்காக [2]அசதியாய் இராதிருப்பாயாக.

௰௫ நீ தேறுகிறது யாவருக்கும்* தோன்றும்படிக்கு இவைகளையே சிந்தித்துக்கொண்டுஇவைகளிலே சாக்கிரதையாய் இருப்பாயாக.

௰௬ [3]உனக்காகவும் உபதேசத்திற்காகவும் எச்சரிக்கையாய் இரு; இவைகளில் நிலைகொண்டிரு; அப்படிச் செய்தால் [4]உன்னையும் [5]உன்னிடத்தில் கேட்கிறவர்களையும் இரட்சித்துக்கொள்வாய்.

## ௫. அதிகாரம்.

௧. மற்றவர்களைக் கடிந்துகொள்ளவேண்டிய விதத்தைக்குறித்தும், ௩. கைம்பெண்சாதிகளைக்குறித்தும், ௰௭. மூப்பர்களைக்குறித்தும் சில பிரமாணங்களை வகுத்து, ௨௩. தீமோத்தேயுவின் சுகத்துக்கு முறைசொல்லி, ௨௪. சிலருடைய பாவங்கள் அவர்களைக் குற்றஞ்சுமத்த முந்திக்கொள்வதும், சிலருடைய பாவங்கள் அவர்களைப் பின் செல்லுகிறதும் உண்டென்று சொல்லியது.

[6]மூப்பனை நீ கடினமாய்க் கடிந்துகொள்ளாமல் தகப்பனைப்போலவும், வாலிபவயதுள்ள ஆண்பிள்ளைகளுக்குச் சகோதரனைப்போலவும்,

௨ பெரிய ஸ்திரிகளுக்குத் தாய்களைப்போலவும், வாலிபவயதுள்ள பெண்பிள்ளைகளுக்குச் சகோதரிகளைப்போலவும் மிகுந்த கற்போடே புத்திசொல்லுவாயாக.

௩ ¶ [7]மெய்யாய்க் கைம்பெண்களானவர்களைக் கனம்பண்ணு.

௪ ஒரு கைம்பெண்ணுக்குப் பிள்ளைகள் அல்லது பேரன் பேத்திகள் இருந்தால், அவர்கள் முதலாவது தங்கள் சொந்தக் குடும்பத்தைத் தேவபத்தியாய்† விசாரித்து, பின்பு தங்கள் தாய்தகப்பன்மாருக்குப் பதில்நன்மைகளைச் [8]செய்ய வழக்கம்பண்ணக்கடவர்கள்; [9]அதுவே பராபரனுக்குமுன்பாக நன்மையாயும் பிரியமுள்ளதாயும் இருக்கின்றது.

௫ [10]தனித்திருக்கிற மெய்யான கைம்பெண் பராபரனை நம்பிக்கொண்டு, [11]இரவும்பகலும் வேண்டுதல்களிலும் செபங்களிலும் [12]தரித்திருப்பாள்.

௬ [13]சிற்றின்பத்தோடே‡ வாழ்கிறவள் உயிரோடே செத்தவளாயிருக்கிறாள்.

௭ [14]அவர்கள் குற்றஞ்சாற்றப்படாதவர்களாய் இருக்கும்படிக்கு இவைகளைக் கட்டளையிடுவாயாக.

௮ தன்னைச் சேர்ந்தவர்களையும் [15]விசேஷமாகத் தன் சமுசாரத்தையும்§ விசாரியாதிருக்கிறவனே [16]விசுவாசத்தை மறுதலித்தவனும் [17]அவிசுவாசியிலும் கெட்டவனுமாயிருக்கிறான்.

௯ ¶ மேலும் எப்படிப்பட்ட கைம்பெண்ணைத் தெரிந்துகொண்டுவைக்க‖ வேண்டுமென்றால், அறுபது வருஷத்துக்குக் கீழானவயதில்லாதவள், [18]ஒரே புருஷனுக்கு மனைவியாயிருந்தவள்.

௰ பிள்ளைகளை வளர்த்தாள் என்றும், [19]அந்நியரை உபசாரம்செய்தாள் என்றும், [20]பரிசுத்தவான்களுடைய கால்களைக் கழுவினாள் என்றும், உபத்திரவப்படுகிறவர்களுக்கு உதவிசெய்தாள் என்றும், சகலவிதமான நற்கிரியைகளையும் நடப்பித்தாள் என்றும், இப்படிப்பட்ட நற்கிரியைகளைக்குறித்து நற்சாட்சிபெற்றிருக்கிறவள்: இப்படிப்பட்ட கைம்பெண்ணைத் தெரிந்துகொள்ளவேண்டும்.

௰௧ வாலிபவயதுள்ள கைம்பெண்களைத் தெரிந்துகொள்ளாதிருப்பாயாக; என்னத்தினாலெனில், அவர்கள் கிறிஸ்துவுக்கு விரோதமாய் லவுகீக ஆசைகொள்ளும்பொழுது விவாகம்பண்ண மனதாகி,

௰௨ முதலில் இருந்த உண்மையைத் தள்ளினதால் குற்றத்தில் அகப்படுவார்கள்.

௰௩ அதுவுமல்லாமல், [21]அவர்கள் சோம்பற்காரிகளாகி, வீடுகள்தோறும் திரிய வழக்கம்பண்ணுவார்

கி. பி. ௬௫.

1 ௧ தீமோ. ௧. ௰௮.
2 ௨ தீமோ. ௧. ௬.
* அல்லது யாவற்றிலும்.
3 அப். ௨௰. ௨௮.
4 எசே. ௩௩. ௯.
5 ௨ ரோ. ௰௧. ௰௪. ௧ கொரி. ௯. ௨௨. யாக். ௫. ௨௰.
6 ௧ மோ. ௰௯. ௩௨.
7 ௫, ௰௬. ௰௪.
† அல்லது தயவாய்.
8 ௧ மோ. ௪௫. ௰, ௰௧. மத். ௰௫. ௪. எபே. ௬. ௧, ௨.
9 ௧ தீமோ. ௨. ௩.
10 ௧ கொரி. ௭. ௩௨.
11 அப். ௨௬. ௭.
12 லூக். ௨. ௩௭: ௰௮. ௧.
13 யாக். ௫. ௫.
‡ அல்லது சுகபோகமாய்.
14 ௧ தீமோ. ௧. ௩: ௪. ௰௧: ௬. ௰௭.
15 ஏசா. ௫௮. ௭. கலா. ௬. ௰.
§ அல்லதுஇனத்தாரையும்.
16 ௨ தீமோ. ௩. ௫. தீத் ௧. ௰௬.
17 மத். ௰௮. ௧௭.
‖ அல்லது எடுத்துக்கொள்ள.
18 லூக். ௨. ௩௬. ௧ தீமோ. ௩. ௨.
19 அப். ௰௬. ௧௫. எபி. ௰௩. ௨. ௧ பே. ௪. ௯:
20 ௧ மோ. ௰௮. ௪: ௰௯. ௨. லூக் ௭. ௩௮, ௪௪. யோவா. ௰௩. ௫, ௰௪.
21 ௨ தெச. ௩. ௰௧.

Digitized by Google

கள்; சோம்பற்காரிகளாய்மாத்திரமல்ல, பிதற்றுகிறவர்களாயும் தகாதகாரியங்களைப் பேசுகிற வீண் அலுவல்காரிகளாயும் இருப்பார்கள்.

௰௫ இப்படிச் சிலர் இதற்குமுன்னே சாத்தானிடத்திற்குத் திரும்பினார்களே.

௰௬ [1]ஆகையால், வாலிபவயதுள்ள கைம்பெண்கள் விவாகம்பண்ணவும் பிள்ளைகளைப் பெறவும் வீட்டை விசாரிக்கவும் [2]விரோதக்காரன் தூஷணிக்கிறதற்கு* இடம் உண்டாக்காமலிருக்கவும் வேண்டுமென்று இருக்கிறேன்.

௰௭ விசுவாசியாகிய ஒருவனுக்கு அல்லது ஒருத்திக்குக் கைம்பெண்கள் இருந்தால், அவர்கள் இவர்களுக்கு உதவிசெய்யக்கடவர்கள்; சபையார் [3]மெய்யான கைம்பெண்களுக்கு உதவியாயிருக்கும்படிக்கு அந்தப் பாரம் அவர்கள்மேல் வைக்கக்கூடாது.

௰௮ ¶ [4]போரடிக்கிற மாட்டின் வாயைக்கட்டாதிருப்பாயாக என்றும், [5]வேலையாள் கூலிக்கும் பாத்திரனாயிருக்கிறான் என்றும், வேதவாக்கியம் சொல்லுகிறபடியே,

௰௯ (சபையை) [6]நன்றாய் நடத்துகிற மூப்பர்களை, விசேஷமாகத் திவ்விய வசனத்தை உபதேசிக்கிறதில் பிரயாசப்படுகிறவர்களை [7]இரட்டிப்பான கனத்திற்குப் பாத்திரராக எண்ணிக்கொள்ளவேண்டும்.

௨௰ ¶ மூப்பனுக்கு விரோதமாக ஒருவன் பிராதுபண்ணவந்தால், [8]இரண்டு மூன்று சாட்சிகள் கூட இராவிட்டால்,†

௨௰௧ நீ அதை ஏற்றுக்கொள்ளக் கூடாது; [9]மற்ற யாவருக்கும் பயம் உண்டாகும்படிக்கு, [10]பாவம்செய்தவர்களை எல்லாச் சபையாருக்கும் முன்பாகக் கடிந்துகொள்வாயாக.

௨௰௨ நீ பட்சபாதத்தோடே ஒன்றும் செய்யாமல், மனதிலே தகாத தீர்ப்பில்லாமல்‡ இவைகளைக் காத்து நடக்கும்படிக்குப் பராபரனுக்கும், கர்த்தராகிய இயேசுக்கிறிஸ்துவுக்கும் தெரிந்துகொள்ளப்பட்ட தூதருக்கும் முன்பாக [11]கெட்டியாய்க் கட்டளையிடுகிறேன்.

௨௨ ¶ [12]எவன்மேலாகிலும் உன் கைகளை நீ சீக்கிரமாய் வைக்கக்கூடாது; [13]மற்றவர்கள் செய்யும் பாவங்களுக்கு ஐக்கப்படாதிருப்பாயாக; உன்னைக் கற்புள்ளவனாகக் காத்துக்கொள்வாயாக.

௨௩ [14]உன் இரைக்குடலுக்காகவும் உனக்கு அடிக்கடி வருகிற பலஈனங்களுக்காகவும், நீ இனிமேல் தண்ணீர் பானம்பண்ணாமல், கொஞ்சம் திராட்ச இரசத்தைப் பானம்பண்.

௨௪ ¶ [15]சில மனிதருடைய பாவங்கள் தீர்ப்புச்செய்கிறதற்குமுன்னே வெளியரங்கமாயிருக்கும்; சிலருடைய (பாவங்கள்) பின்னே விளங்கும்.

௨௫ அதுபோல, சிலருடைய நற்கிரியைகளும் (உடனே) வெளியரங்கமாயிருக்கும்; அப்படி இராதவைகளும் (நெடுக) மறைந்திருக்கமாட்டாது.

௧ பி. ௫௬.

1 ௧ கொரி. ௭.௯.
2 ௧ தீமோ. ௬.௧.
தீத். ௨. ௮.
* கிரேக்கு, இகழுகிறதற்கு.
3 ௩, ௰. ௰௪.
4 ௫ மோ. ௨௫. ௪. ௧ கொரி. ௯. ௯.
5 ௩ மோ. ௰௯. ௰௩. ௫ மோ. ௨௪. ௰௪, ௰௫. மத். ௰. ௰. லூக். ௰. ௭.
6 உரோ. ௰௨. ௮. ௧ கொரி. ௯. ௰, ௰௪. கலா. ௬.௬. பிலி. ௨. ௨௯. ௧ தெச. ௫. ௰௨, ௰௩. எபி. ௰௩.௭, ௰௭.
7 அப். ௨௮. ௰.
8 ௫ மோ. ௰௯. ௰௫.
† அல்லது இருந்தாலொழிய.
9 ௫ மோ. ௰௩. ௰௧.
10 கலா. ௨. ௰௧, ௰௪. தீத். ௧. ௰௩.
‡ அல்லது வித்தியாசம்பண்ணாமல்.
11 ௧ தீமோ. ௬. ௰௩. ௨ தீமோ. ௨. ௰௪: ௪. ௧.
12 அப். ௬. ௬: ௰௩. ௩. ௧ தீமோ. ௪. ௰௪. ௨ தீமோ. ௧. ௬.
13 ௨ யோ. ௰௧.
14 சங். ௱௪. ௰௫.
15 கலா. ௫ ௰௯.

# ௬ அதிகாரம்.

*௧. வேலைக்காரருடைய கடமைகளைக்குறித்தது. ௩. அதனமானவைகளைப் போதிக்கிறவர்களோடே சேரக்கூடாதென்றது. ௬. தேவபக்தி பிரயோசனமுள்ளதும், ௰. பணஆசை எல்லாத் தீமைக்கும் வேரானதும் என்றும், ௰௧. தீமோத்தேயு இதை நீக்கி இதை அங்கிகரிக்கவேண்டுமென்றும், ௰௭. ஐசுவரியவான்களுக்கு இதைக்குறித்துப் புத்தி சொல்லவேண்டுமென்றும், ௨௰. சத்திய உபதேசத்தைக் களங்கமின்றிக் காக்கவும், அற்பமான போராட்டங்களை நீக்கவும் கற்பித்தது.*

௧ [16]பராபரனுடைய நாமமும் உபதேசமும் தூஷணிக்கப்படாதபடிக்கு [17]அடிமைத்தனத்திற்கு உட்பட்டிருக்கிற வேலைக்காரர் தங்கள் எசமான்களைச் சகலமான கனத்திற்கும் பாத்திரரென்று எண்ணிக்கொள்ளக்கடவர்கள்.

16 சா. ௫௨. ௫. உரோ. ௨. ௨௪. தீத். ௨. ௫, ௮.
17 எபே. ௬. ௫. கொலோ. ௩. ௨௨. தீத். ௨. ௯. ௧ பே. ௨. ௰௮.

Digitized by Google

௨ விசுவாசிகளாகிய நாயன்மார்களை உடையவர்களும் [1]அவர்கள் சகோதரரானதினாலே, அவர்களை அசட்டைபண்ணாமல், வேலையின் நன்மைகளைப் பெற்றுக்கொள்ளுகிற அவர்கள் விசுவாசிகளுமாய், * அன்புள்ளவர்களுமாய் இருக்கிறதினாலே அவர்களுக்கு அதிகமாய் ஊழியஞ்செய்யக்கடவர்கள்; [2]இந்தப்படியே போதித்துப் புத்திசொல்வாயாக.

௩ ¶ நம்முடைய கர்த்தராகிய இயேசுக்கிறிஸ்துவின் [3]ஆரோக்கியமான வசனங்களுக்கும் [4]மெய்த்தேவபத்திக்கு ஏற்ற உபதேசத்திற்கும் இசைவாயிராமல்,

௪ [5]வேறுவிதமாய்ப் போதிக்கிறவன் இறுமாப்புள்ளவனுமாய்,† [6]ஒன்றையும் அறியாதவனுமாய், [7]தருக்கங்களும் வாக்குவாதங்களுமாகிய நோய்கொண்டவனுமாய்‡ இருக்கிறான்; அவைகளாலே பொறாமையும், சண்டையும், தூஷணங்களும், பொல்லாத சமுசயங்களும்,

௫ கெட்ட சிந்தையுள்ளவர்களாயும் சத்தியமில்லாதவர்களாயும் [8]மெய்த்தேவபத்தி இலாபத்தை வருவிக்கிறதென்று எண்ணுகிறவர்களாயும் இருக்கிற [9]மனிதர்களாலே பிறக்கப்படும் [10]மாறுபாடான தர்க்கங்களும்§ வருகின்றன; [11]அவர்களுக்கு விலகுவாயாக.

௬ ¶ போதுமென்கிற மனதுடனேகூட [12]மெய்த்தேவபத்தியே மிகுந்த இலாபமுள்ளது.

௭ [13]உலகத்திலே நாம் ஒன்றையும் கொண்டுவந்ததும் இல்லை; இதினின்று நாம் ஒன்றையும் கொண்டுபோவதும் இல்லை என்று வெளியரங்கமாய் இருக்கின்றது.

௮ அப்படியிருக்க, [14]அன்னவஸ்திரம் நமக்கு உண்டாயிருக்கையில், அதுபோதுமென்று எண்ணிக்கொள்ளக்கடவோம்.

௯ [15]ஐசுவரியவான்களாக விரும்புகிறவர்களே, சோதனையிலேயும் [16]கண்ணியிலேயும், மனிதனை யிகவும் [17]கெடுத்து அழிக்கிறதற்கு ஏதுவாயிருக்கிற அநேக புத்தியீனமும் சேதமுமான இச்சைகளிலேயும் விழுகிறார்கள்.

௰ [18]பண இச்சை தீமை யாவற்றிற்கும் வேராயிருக்கின்றது; சிலர் அதை இச்சித்து விசுவாசமார்க்கத்தைவிட்டு வழுவி,‖ அநேக வேதனைகளாலே தங்களை உருவக் குத்தியிருக்கிறார்கள்.

௰௧ ¶ [19]பராபரனுடைய மனிதனாகிய [20]நீ இவைகளுக்கு விலகியோடி, நீதியையும் மெய்த்தேவபத்தியையும் விசுவாசத்தையும் அன்பையும் பொறுமையையும் சாந்தத்தையும் தொடர்ந்துகொள்வாயாக.

௰௨ [21]விசுவாசத்தின் நற்போராட்டம்பண், [22]நித்திய சீவனைப் பிடித்துக்கொள்; அதற்காகவே நீ அழைக்கப்பட்டிருக்கிறதுமல்லாமல் அநேக சாட்சிகளுக்குமுன்பாக நல்ல [23]அறிக்கையைப் பண்ணியும் இருக்கிறாய்.

௰௩ [24]நம்முடைய கர்த்தராகிய இயேசுக்கிறிஸ்து பிரசன்னமாகும்வரைக்கும், நீ இந்தக் கற்பனையை மாசில்லாமலும் குற்றமில்லாமலும் கைக்கொள்ளும்படிக்கு,

௰௪ [25]எல்லாவற்றையும் உயிரோடிருக்கச் செய்கிற பராபரனுடைய சந்நிதானத்திலேயும், [26]பொந்தியுபிலாத்துவின் முன்நின்று நல்ல அறிக்கையைச்¶ சாட்சியாகப் பண்ணின கிறிஸ்து இயேசுவினுடைய சந்நிதானத்திலேயும் [27]உனக்குக் கட்டளையிடுகிறேன்.

௰௫ அந்தப் பிரசன்னத்தைப்

கி. பி. ௬௫.

1 கொலோ. ௩. ௨௨.
* அல்லது உண்மையுள்ளவர்களும்.
2 ௧ தீமோ. ௪. ௰௧.
3 ௧ தீமோ. ௧. ௰. ௨ தீமோ. ௧. ௰௩: ௪. ௩. தீத். ௧. ௯.
4 தீத். ௧. ௧.
5 ௧ தீமோ. ௧. ௩.
† அல்லது புத்தியீனனும்.
6 ௧ கொரி. ௮. ௨. ௧ தீமோ. ௧. ௭.
7 ௧ தீமோ. ௧. ௪. ௨ தீமோ. ௨. ௨௩. தீத். ௩. ௯.
‡ அல்லது பிரியப்பட்டவனும்.
8 தீத். ௧. ௰௧. ௨ பே. ௨. ௩.
9 ௨ தீமோ. ௩. ௮.
10 ௧ கொரி. ௰௧. ௰௬. ௧ தீமோ. ௧. ௬.
§ அல்லது ஒருவனை ஒருவர்காயப்படுத்தும் தன்மைகளும்.
11 ௨ ரோ. ௰௬. ௰௭. ௨ தீமோ. ௩. ௫.
12 சங். ௩௭. ௰௬. வாக். ௰௫. ௰௬: ௰௬. ௮. எபி. ௰௩. ௫.
13 யோபு. ௧ ௨௧. சங். ௪௯. ௰௭. வாக். ௨௭. ௨௪. பிர. ௫. ௰௫.
14 ௧ மோ. ௨௮. ௨௦. எபி. ௰௩. ௫.
15 வாக். ௰௫. ௨௭: ௨௦. ௨௧: ௨௮. ௨௦. மத். ௰௩. ௨௨. யாக். ௫. ௧.
16 ௧ தீமோ. ௩. ௭.
17 ௧ தீமோ. ௧. ௰௯.
18 ௨ மோ. ௨௩. ௮. ௫ மோ. ௰௬. ௰௯.
‖ அல்லது நிமைக்கிழுப்புண்டு.

19 ௫ மோ. ௩௩. ௧. ௨ தீமோ. ௩. ௰௭.—20 ௨ தீமோ. ௨. ௨௨.—21 ௧ கொரி. ௯. ௨௫, ௨௬. ௧ தீமோ. ௧. ௰௮. ௨ தீமோ. ௪. ௭. 22 பிலி. ௩. ௰௨, ௰௪. ௰௬. ௰௪.—23 எபி. ௰௩. ௨௩.—24 பிலி. ௧. ௬, ௰. ௧ தெச. ௩. ௰௩: ௫. ௨௩.—25 ௫ மோ. ௩௨. ௩௯. ௧ சாமு. ௨. ௬. யோவா. ௫. ௨௧.—26 மத். ௨௭. ௰௧. யோவா. ௰௮. ௩௭. வெளி. ௧. ௫: ௩. ௰௪.—¶ அல்லது அறிக்கையிடுதலை.—27 ௧ தீமோ. ௫. ௨௧.

Digitized by Google

[1]பாக்கியமுள்ள ஒருவரேயான சுயாதிபதியுமாய், [2]இராசாக்களின் இராசனுமாய், கர்த்தாக்களின் கர்த்தாவுமாய்,

௰௬ ஒருவராய், [3]சாவாமையுள்ளவருமாய், ஒருவராலும் சேரக்கூடாத ஒளியிலே வாசமாயிருக்கிறவருமாய், [4]மனிதரில் ஒருவராலும் காணப்படாமலும் ஒருக்காலும் காணப்படக்கூடாமலும் இருக்கிறவர் தம்முடைய காலங்களில் காண்பிப்பார்; [5]அவருக்கே கனமும் வல்லமையும் என்றென்றைக்கும் உண்டாயிருப்பதாக.—ஆமன்.

௰௭ ¶ அன்றியும் இவ்வுலகத்திலே ஐசுவரியமுள்ளவர்கள் இறுமாப்பான சிந்தையுள்ளவர்களாய் இராமலும், [6]நிச்சயமில்லாத ஐசுவரியத்தின்மேல்* [7]நம்பிக்கையாயிராமலும், [8]நாம் அநுபவிக்கிறதற்குச் சகலவித நன்மைகளையும் நமக்குச் சம்பூரணமாய்க் கொடுக்கிற [9]சீவனையுடைய பராபரன்மேலே நம்பிக்கையாயிருக்கும்படியாயும்,

௰௮ நன்மைகளைச் செய்து [10]நற்கிரியைகளில் ஐசுவரியவான்களாகும்படியாயும் [11]மற்றவர்களுக்குக் கொடுக்க மனப்பூர்வமாயிருந்து [12]உதாரகுணமுள்ளவர்களாய்,†

௰௯ [13]நித்திய சீவனைப் பிடித்துக்கொள்ளும்படி வருங்காலத்திற்காகத் தங்களுக்கு நல்ல அஸ்திபாரத்தைப் [14]பொக்கிஷமாக வைக்கும்படியாயும் அவர்களுக்குக் கட்டளையிடுவாயாக.

௨௰ ¶ ஓ தீமோத்தேயுவே, [15]உனக்கு ஒப்புவிக்கப்பட்டதை நீ காத்துக்கொண்டு, லவுகீகமும் வீணுமான பேச்சுகளுக்கும், கல்வியென்று பொய்யாய்ச் [16]சொல்லப்பட்டிருக்கிற தர்க்கத்திற்கும் விலகுவாயாக.

௨௧ சிலர் அதைப் பாராட்டி [17]விசுவாசத்தைவிட்டு வழுவிப்போனார்கள்; கிருபை உன்னோடே இருக்கக்கடவது.—ஆமன்.

கி. பி. ௬௫.

1 ௧ தீமோ. ௧. ௰௭.
2 வெளி. ௰௭. ௰௪: ௰௯. ௰௬.
3 ௧ தீமோ. ௧. ௰௭.
4 ௨ மோ. ௩௩. ௨௰. யோவா. ௧. ௧௮.
5 எபே. ௩. ௨௧. பிலி. ௪. ௨௰. யூதா. ௨௫. வெளி. ௧. ௬: ௪. ௰௧: ௭. ௰௨.
6 யாக். ௨. ௫.
* இரேக்கு, ஐசுவரியத்தின் நிலையாமையில்.
7 யோபு. ௩௧. ௨௪. சங். ௫௨. ௭: ௬௨. ௰. மாற். ௰. ௨௪. லூக். ௰௨. ௨௧.
8 அப். ௰௪. ௰௭: ௰௭. ௨௫.
9 ௧ தெச. ௧. ௯. ௧ தீமோ. ௩. ௰௫: ௪. ௰.
10 லூக். ௰௨. ௨௧. ௧ தீமோ. ௫. ௰.

தீத். ௩. ௮. யாக். ௨. ௫.—11 ௨ கொ. ௮. ௨. ௮.—12 கலா. ௬. ௬. எபி. ௰௩. ௰௬.—† அல்லது தாராளகுணமுள்ளவர்களாய்.—13 ௰௨. ௪௬. 14 மத். ௬. ௨௰: ௰௯. ௨௧. லூக். ௰௨. ௩௩: ௰௬. ௯.—15 ௨ தீமோ. ௧. ௰௪. தீத். ௨. ௧. வெளி. ௩. ௩.—16 ௧ தீமோ. ௧. ௪, ௬: ௪. ௭. ௨ தீமோ. ௨. ௰௪, ௰௬, ௨௩. தீத். ௧. ௰௪: ௩. ௯.—17 ௧ தீமோ. ௧. ௬, ௰௯. ௨ தீமோ. ௨. ௰௮.

Digitized by Google

# II. TIMOTHY.

அப்போஸ்தலனுகிய பவுல்

# தீமோத்தேயுவுக்கு

## எழுதின இரண்டாம் நிருபம்.

கி. பி. சுசு.

### க. அதிகாரம்.

க. பவுல் தன் பட்சத்தைக் காட்டித் தீமோத்தேயுவுக்குள்ளும், அவன் தாய்க்குள்ளும் அவன் பாட்டிக்குள்ளும் இருந்த உத்தம விசுவாசத்தைப்பற்றி எழுதி, சு. அவனுக்குள் தங்கிய பராபரனுடைய வரத்தை முயற்சிசெய்யவும், அ. துன்பத்தில் உறுதியோடும் பொறுமையோடும் இருக்கவும், ௰ந. தன்னிடத்தில் கற்றுக்கொண்ட உபதேசத்தின் வாக்கையும் பொருளையும் காக்கவும், ௰ரு. பிகெல்லு, எர்மோகெனே முதலியவர்கள் தன்னைவிட்டுப்போனதையும், ஒனேசிப்போருவின் நன்மையையுங்குறித்துச் சொல்லியது.

கிறிஸ்து இயேசுவினுல் வருகிற சீவனைக்குறித்துச் சொல்லிய [1]வாக்குத்தத்தத்தின்படியே பராபரனுடைய சித்தத்தினுலே இயேசுக்கிறிஸ்துவின் [2]அப்போஸ்தலனுகிய பவுல்,

உ அன்புள்ள குமாரனுகிய [3]தீமோத்தேயுவுக்கு எழுதுகிறதாவது: பிதாவாகிய பராபரனுலும் நம்முடைய கர்த்தராகிய கிறிஸ்து இயேசுவினுலும் கிருபையும் இரக்கமும் சமாதானமும் உனக்கு உண்டாகக்கடவது.

ந ¶ [4]என்முன்னேர்கள் முதற்கொண்டு சுத்தமான மனதோடே பராபரனுக்கு ஆராதனைசெய்கிற நான் இரவும்பகலும் [5]இடைவிடாமல் என் செபங்களில் உன்னை நினைத்து,

ச உன் கண்ணீரை ஞாபகம்பண்ணிச் சந்தோஷத்தால் நிறையப்படும்படிக்கு [6]உன்னைக் காண வேண்டுமென்று மிகவும் விரும்பி,

ரு உன்னிலுள்ள [7]உண்மையான விசுவாசத்தை ஞாபகப்படுத்தி, [8]பராபரனுக்குத் தோத்திரம் செலுத்துகிறேன்; அப்படிப்பட்ட விசுவாசம் முற்காலத்தில் உன் பாட்டியாகிய லோவிசாளுக்குள்ளும் [9]உன் தாயாகிய ஐனீக்கேயாளுக்குள்ளும் வாசமாயிருந்தது; உனக்குள்ளும் அப்படியே வாசமாயிருக்கிறதென்று நிச்சயமாய் அறிந்திருக்கிறேன்.

சு ¶ இது நிமித்தமாக நான் உன்மேல் என் கைகளை வைத்ததினுலே உனக்கு உண்டான திவ்விய வரத்தை [10]நீ தீபவளர்ச்சியைப் போல எழுப்பும்படிக்கு உனக்கு ஞாபகப்படுத்துகிறேன்.

எ [11]பயமுள்ள ஆவியையல்ல, [12]பெலனும் அன்பும் சொஸ்தபுத்தியுமுள்ள ஆவியைப் பராபரன் நமக்குக் கொடுத்தாரே.

அ ¶ ஆகையால் [13]நம்முடைய கர்த்தரைக்குறித்துச் சொல்லவேண்டிய சாட்சிக்காகவும், [14]அவர் நிமித்தம் கட்டப்பட்டிருக்கிற எனக்காகவும் [15]நீ வெட்கப்படாமல், [16]தேவபெலனுலே சுவிசே

1 எபே. க. க. தீத். க.உ. எபி. க. ௰ரு.
2 உ கொரி. க.க.
3 க தீமோ. க. உ.
4 அப் உஉ, க: உக.க:உச.௰ச: உஎ. உக. உரோ. க. கூ. கலா. க. ௰ச.
5 க தெச. க. உ: க. ௰.
6 உ தீமோ. ச. கூ, உக.
7 க தீமோ.க.ரு: ச. கூ.
8 உ ரோ. க. அ. எபே. க. ௰க.
9 அப். ௰க. க.
10 க தெச. ரு. ௰கூ. க தீமோ. ச. ௰ச.
11 உ ரோ. அ. ௰ரு.
12 லூக். உச. சகூ. அப். க. அ.
13 க தீமோ. உ. சு. வெளி. க. உ.
14 எபே. க. க. பிலி. க. எ.
15 உ ரோ. க. ௰சு.
16 கொலோ. க. உச. உ தீமோ. ச. ரு.

Digitized by Google

ஷத்திற்காக, (என்னோடே) கூடத் தீமையை அநுபவித்துக்கொள்வாயாக.

க அவர் [1]நம்முடைய கிரியைகளின்நிமித்தமல்ல, [2]தம்முடைய முதல் யோசனையின் நிமித்தமும், [3]லோகத்தோற்றத்திற்கு முன்னே கிறிஸ்து இயேசுவின்மூலமாய் நமக்குக் கொடுத்த கிருபையின்நிமித்தமும், [4]நமக்கு இரட்சிப்பை உண்டாக்கி, (அதினாலே) [5]பரிசுத்தவான்களாக நம்மை அழைத்தார்.

ய நம்முடைய இரட்சகராகிய இயேசுக்கிறிஸ்து பிரசன்னமானதினாலே [6]அந்தக் கிருபை இப்பொழுது வெளிப்படுத்தப்பட்டிருக்கின்றது; [7]அவர் மரணத்தை நிவிர்த்திசெய்து (தமது) சுவிசேஷத்தினாலே ஜீவனையும் அழியாமையையும் தெரியப்படுத்தினார்.

யக அதைப் புறத்தேசத்தாருக்கு (அறிவிக்கும்படி) [8]பிரசங்கியாகவும் அப்போஸ்தலனாகவும் போதகனாகவும் வைக்கப்பட்டேன்.

யஉ [9]அதற்காக இந்தப் பாடுகளையும் அநுபவிக்கிறேன்; அப்படியிருந்தும், [10]இன்னாரை விசுவாசித்* திருக்கிறேனென்று அறிந்திருக்கிறதால் நான் வெட்கப்படுகிறதில்லை; மேலும், எனக்கு ஒப்புவிக்கப்பட்டதை அவர் [11]அந்த நாள்வரையில் [12]காத்துக்கொள்ள வல்லமையுள்ளவராய் இருக்கிறார் என்று நிச்சயமாயிருக்கிறேன்.

யங ¶ [13]நீ என்னிடத்தில் கேட்டறிந்த [14]ஆரோக்கியமான வசனங்களின் [15]சட்டத்தை [16]இயேசுக்கிறிஸ்துவிலுள்ள விசுவாசத்தோடும் அன்போடும் [17]பற்றிக்கொள்வாயாக.

யச [18]உனக்கு ஒப்புவிக்கப்பட்ட நன்மையை [19]நம்மிடத்தில் வாசமாயிருக்கிற பரிசுத்த ஆவியினாலே காத்துக்கொள்வாயாக; நீ அறிந்திருக்கிறபடி [20]ஆசியா நாட்டிலுள்ள யாவரும் [21]என்னைவிட்டு விலகிப்போனார்கள்.

யரு ¶ அவர்களில் புகெல்லும், எற்மோகெனேயும் இருக்கிறார்கள்.

யசு [22]ஒனேசிப்போருவின் குடும்பத்திற்குக் கர்த்தர் [23]இரக்கத்தை அளிக்கக்கடவர்; என்னத்திற்காகவென்றால், [24]அவன் அடிக்கடி என்னைச் சவுக்கியப்படுத்தினதுமல்லாமல், [25]என் சங்கிலியைக்குறித்து [26]வெட்கப்படாமல்,

யஎ நான் உரோமையில் வந்திருந்தபொழுது மிகவும் சாக்கிரதையாய் என்னைத் தேடிக் கண்டான்.

யஅ [27]அந்த நாளிலே [28]அவன் கர்த்தரிடத்தில் இரக்கம் கண்டடையும்படி கர்த்தர் அவனுக்கு அநுக்கிரகம் செய்வாராக; மேலும், எபேசி ஊரிலேயும் அவன் [29]எனக்கு மிகவும் ஊழியம்செய்தானென்று நீ நன்றாய் அறிந்திருக்கிறாய்.

* அல்லது நம்பி.

கி. பி. கூகூ

1 உரோ. க. உஅ: கூ. ௰க. தீத். க. ௯.
2 உரோ. அ. உஅ.
3 உரோ. ௰க. உ௫. எபே. க. ச: க. ௰க. தீத் க உ. கபே.க. உ0.
4 கதீமோ. க. க. தீத். க. ச.
5 கதெச. ச. எ. எபி. க. க.
6 உரோ. ௰௬. உசு. எபே. க கூ. கொலோ. க. உசு. தீத். க. க. கபே. க உ0.
7 ககொரி. ௰௫. ௫ச,௫௭. எபி. உ. ௰ச.
8 அப். கூ. ௰௫. எபே க. எ, அ. கதீமோ. உ. எ. உதீமோ.ச.௰எ.
9 எபே. க. க. உதீமோ. உ. கூ.
10 கபே. ச. ௰௬.
11 ௰அ. வசனம். உதீமோ.ச.அ.
12 கதீமோ. ௬ உ0.
13 உதீமோ. உ. உ.
14 கதீமோ.க.௰: க. க.
15 உரோ.உ.உ0: கூ. ௰எ.
16 கதீமோ.க.௰ச.
17 உதீமோ. க. ௰ச. தீத். க. கூ. எபி. ௰. உக. வெளி. உ.உ௫.
18 கதீமோ. க. உ0.
19 உரோ அ ௰க.
20 அப். ௰கூ. ௰.
21 உதீமோ.ச.௰. ௰க.
22 உதீமோ. ச. ௰க.
23 மத். ௫. எ.
24 பிலே. எ.
25 அப்.உஅ.உ0. எபே. க. உ0.

# உ. அதிகாரம்.

க. அவன் உறுதியும் ஊக்கமும் அடையவும், சத்திய வசனத்தைச் சரியாய்ப் பகுத்துவிதிக்க, வீண் அலப்பை அடக்குதற்கு உண்மையுள்ள ஊழியக்காரனின் கடமை இன்னதென்று சொல்லி, ௰௭. இமெனேயு, பிலேத்து என்பவர்களைக்குறித்தெழுதி, ௰க. கர்த்தருடைய அஸ்திவாரம் நிலையுள்ளதென்றும், உஉ. அவன் இதற்கு எச்சரிக்கையாயிருந்து இதைப் பின்தொடர்ந்து, கர்த்தருடைய ஊழியக்காரன் தன்னை இவ்விதமாய் நடத்தவேண்டுமென்றும் கற்பித்தது.

ஆனபடியினாலே [30]என் குமாரனே, நீ கிறிஸ்து இயேசுவிலுள்ள கிருபையினாலே [31]பலத்துக்கொண்டு,

உ அநேக சாட்சிகளுக்குமுன்பாக† நீ [32]என்னிடத்தில் கேட்டவைகளை [33]மற்றவர்களுக்கு உபதேசம்பண்ணத் தகுதியான [34]உண்மையுள்ள மனிதருக்கு ஒப்புவிப்பாயாக.

26 அ.௰ச.—27 உ தெச.க.௰. ௰.உ.௰ச.-28 மத் உ௫.கச-ச0.-29 எபி.க.௰.-30 கதீமோ.க.௰. உதீமோ.க.உ.-31எபே. க.௰
† அல்லது சாட்சிகளால்.—32 உதீமோ.க.௰க: க௰,௰ச.—33 கதீமோ.க.உ. தீத்.க.கூ.—34 கதீமோ.க.௰அ.

Digitized by Google

௩ அந்தப்படி நீயும் [1]இயேசுக்கிறிஸ்துவுக்கு நற்சேவகனாய்த் [2]துன்பத்தைச் சகித்துக்கொள்.

௪ [3]போர்ச்சேவகம்பண்ணுகிற எவனும் தன்னைச் சேவகம் எழுதிக்கொண்டவனுக்குப் பிரியமாயிருக்கும்படிக்கு, இச்சீவனுக்கு ஏற்ற (வேறு) தொழில்களில் சிக்கிக்கொள்ளமாட்டானே.

௫ [4]அன்றியும், போர்ச்சாலையிலே ஒருவன் போராடினாலும், நியாயமானபடி போராடாவிட்டால் கிரீடத்தைத் தரிக்கமாட்டானே.

௬ (அன்றியும்) [5]பயிர்செய்கிறவன் பலன் அடைகிறதற்கு முன்னே பிரயாசப்பட* வேண்டுமே.

௭ நான் சொல்லுகிற இவைகளைச் சிந்தித்துக்கொள்வாயாக; கர்த்தர் எல்லாவற்றிலும் உனக்குப் புத்திதரக்கடவர்.

௮ ¶ [6]என் சுவிசேஷத்தின்படியே [7]தாவீதின் சந்ததியாய் [8]மரித்தோரிலிருந்து எழுந்திருக்கிற இயேசுக்கிறிஸ்துவை நினைத்துக்கொள்ளக்கடவாய்.

௯ இந்தச் சுவிசேஷத்திற்காக நான் பாதகனைப்போலக் [9]கட்டப்பட்டுத் [10]துன்பத்தைச் சகிக்கிறேன்.

௰ [11]பராபரனுடைய வசனம் மாத்திரம் கட்டப்படமாட்டாது; இதின்நிமித்தமாகத் தெரிந்துகொள்ளப்பட்டவர்களும் [12]கிறிஸ்து இயேசுவினால் வருகிற இரட்சிப்பையும் நித்திய மகிமையையும் அடையும்படிக்குச் சகலத்தையும் [13]அவர்களுக்காகச் சகித்துக்கொண்டுவருகிறேன்; [14]இந்த வார்த்தை உண்மையுள்ளது.

௰௧ எப்படியெனில் [15]நாம் (அவரோடேகூட) மரித்தால் (அவரோடேகூடப்) பிழைத்தும் இருப்போம்.

௰௨ [16]நாம் (அவரோடேகூடப்) பொறுமையாய்ப் பாடுபட்டால் (அவரோடேகூட) இராசரீகம் பண்ணியும் இருப்போம்; [17]அவரை நாம் மறுதலித்தால் நம்மை அவரும் மறுதலிப்பார்.

௰௩ [18]நாம் விசுவாசியாமல் இருந்தாலும் அவர் உண்மையுள்ளவராயிருப்பார்; [19]அவர் தம்மைத்தாமே மறுதலிக்கமாட்டார்.

௰௪ ¶ இவைகளை நீ அவர்களுக்கு ஞாபகப்படுத்தி, எவ்வளவாகிலும் பிரயோசனம் அல்லாததுமாய்க் கேட்கிறவர்களைக் கவிழ்க்கிறதற்கு ஏதுவுமாய் இருக்கிற [20]வாக்குவாதம்பண்ணாதிருக்கும்படிக்கு, [21]கர்த்தருக்குமுன்பாக அவர்களுக்கு ஸ்திரமான சாட்சியாய் எச்சரிப்பாயாக.

௰௫ நீ வெட்கப்படாமல் சத்திய வசனத்தை நிதானமாய்ப் பகுத்துப் போதிக்கிற உத்தம ஊழியக்காரனாக உன்னைப் பராபரனுக்குமுன்பாக நிறுத்தும்படி சாக்கிரதையாய் இருப்பாயாக.

௰௬ [22]லவுகீக வீணான பேச்சுகளுக்கே தடைசெய், (அவைகளால்) அவர்கள் அதிகமாய் அவபத்தியுள்ளவர்கள் ஆகிறார்களே.

௰௭ அவர்களுடைய பேச்சுப் பிளவையைப்† போலத்தின்னும்; [23]உமனேயும், பிலேத்தும் அப்படிப்பட்டவர்கள்.

௰௮ அவர்கள் [24]சத்தியத்தை விட்டு விலகி, [25]உயிரோடெழுப்புதல் சம்பவித்தாயிற்றென்று போதித்து, சிலருடைய விசுவாசத்தைக் கவிழ்த்துப்போட்டார்கள்.

௰௯ ¶ ஆகிலும் [26]பராபரனுடைய ஸ்திரமான அஸ்திபாரம் நிலைநிற்கின்றது;‡ [27]கர்த்தர் தம்முடையவர்களை அறிவிப்பாரென்றும், கிறிஸ்துவின் நாமத்தைச் சொல்லுகிறவன் எவனோ, அவன் அநியாயத்தைவிட்டு விலகக்கடவன்

கி. பி. ௬௬.

1 ௧ தீமோ. ௧. ௰அ.
2 உ தீமோ. ௧. அ: ௪. ௫.
3 ௧ கொரி. ௯. உ௫.
4 ௧ கொரி. ௯. உ௫, உ௬.
5 ௧ கொரி. ௯. ௰.
* அல்லது பிரயாசப்பட்டுப் பயிர் செய்கிறவன் முதல் முதல் பலனையடைய.
6 உரோ. உ. ௰௬.
7 அப். உ. ௩௰: ௰௩. உ௩. உரோ. ௧. ௩, ௪.
8 ௧ கொரி. ௰௫. ௪, ௪. உ௰.
9 எபே. ௩. ௧. பிலி. ௧. ௭. கொலோ. ௪. ௩. ௰அ.
10 அப். ௯. ௰௬. உ தீமோ. ௧. ௰உ.
11 அப். உஅ. ௩௧. எபே. ௬. ௰௯, உ௰. பிலி ௧. ௰௩, ௰௪.
12 உ கொரி. ௧. ௬.
13 எபே. ௩. ௰௩. கொலோ. ௧. உ௪.
14 ௧ தீமோ. ௧. ௰௫.
15 உரோ. ௬. ௫, அ. உ கொரி. ௪. ௰.
16 உரோ. அ. ௰எ. ௧ பே. ௪. ௰௩.
17 மத். ௰. ௩௩. மாற். அ. ௩அ. லூக். ௰உ. ௯.
18 உரோ. ௩. ௩: ௯. ௬.
19 ௪ மோ. உ௩. ௰௯.
20 ௧ தீமோ ௧. ௪: ௬. ௪. தீத். ௩. ௯, ௰௬.
21 ௧ தீமோ. ௫. உ௧: ௬. ௰௩. உ தீமோ. ௪. ௧.
22 ௧ தீமோ. ௪. ௭: ௬. உ௰. தீத். ௧. ௰௪.
† அல்லது ஒடுவிப்புருதியை.

23 ௧ தீமோ. ௧. உ௰.—24 ௧ தீமோ. ௬. உ௧.—25 ௧ கொரி. ௰௫. ௰உ.—26 மத். உ௪. உ௪. உரோ. அ. ௩. ௧ பே. உ. ௰௯.
‡ அல்லது அஸ்திபாரமாயிருக்கின்றது.—27 நாகூ. ௧. எ. யோவா. ௰. ௰௪, உஎ. ௪ மோ. ௰௬. ௫.

என்றும் அதற்கு முத்திரையாயிருக்கிறது.

௨௰ [1]ஒரு பெரிய வீட்டிலே பொன் வெள்ளிப்பாத்திரங்கள் மாத்திரமல்ல, மரமும் மண்ணுமான பாத்திரங்களும் உண்டு, [2]அவைகளில் சில கனத்திற்கும் சில கனஈனத்திற்கும் ஆனவைகளாயிருக்கின்றன.

௨௧ ஆகையால் [3]ஒருவன் மேல் சொல்லியவைகளை விட்டுத் தன்னைச் சுத்திகரித்தால் அவன் கனத்திற்கு ஏற்றதாயும் பரிசுத்தமாக்கப்பட்டதாயும் எசமானுக்கு மிகுந்த பிரயோசனமாயும் எந்த நற்கிரியைக்கும் [4]எத்தனமாக்கப்பட்டதாயும் இருக்கிற பாத்திரமாயிருப்பான்.

௨௨ ¶ ஆதலால் வாலிபவயதுக்குரிய இச்சைகளுக்கு நீ விலகி ஓடி, [5]சுத்தமான இருதயத்தோடே [6]கர்த்தாவைத் தொழுதுகொள்ளுகிறவர்களுடனேகூட [7]நீதியையும் விசுவாசத்தையும், அன்பையும், சமாதானத்தையும் பின்தொடர்ந்துகொள்.

௨௩ அன்றியும் [8]புத்தியீனமும் அறிவீனமுமான தர்க்கங்கள், சண்டைகளைப் பிறப்பிக்கிறவைகள் என்று நீ அறிந்து அவைகளை அகற்றுவாயாக.

௨௪ [9]கர்த்தருடைய ஊழியக்காரன் சண்டைபண்ணாமல் எல்லாருக்கும் சாந்தமுள்ளவனும், [10]போதிக்கத் தகுதியானவனும், தீமையைப் பொறுமையாய்ச் சகிக்கிறவனும்* இருந்து,

௨௫ எதிர்பேசுகிறவர்களுக்குச் [11]சாந்தமாய்ப் புத்திசொல்லவேண்டுமே; அப்பொழுது தன்னுடைய இஷ்டப்படி செய்யப் பசாசினால் பிடிக்கப்பட்டிருக்கிற† அவர்கள் [12]சத்தியத்தை அறிக்கையிடுதற்கு ஏற்ற மனஸ்தாப குணத்தை அடைந்து,

௨௬ [13]அவனுடைய வலையில் நின்று நீங்கி,‡ தெளிந்த புத்தியுள்ளவர்களாகும்படிக்கு, [14]பராபரன் ஒருவேளை அவர்களுக்கு அநுக்கிரகம் செய்வார்.

## ௩. அதிகாரம்.

௧. பிற்காலங்களைக்குறித்தும், ௬. சத்தியவிரோதிகளைக்குறித்தும் முன்னறிவித்து, ௰. தன் மாதிரியை அவன் பின்பற்றவும், ௰௪. வேதவசனத்தைப்பற்றிக்கொள்ளவும் சொல்லியது.

[15]மேலும் கடைசி நாட்களிலே கொடிய காலங்கள் வருமென்று அறிவாயாக.

௨ எப்படியெனில், மனிதர்கள் [16]தங்களை (மாத்திரம்) சிநேகிக்கிறவர்களாயும், [17]பணத்தில் பிரியராயும், [18]வீம்புக்காரராயும், [19]அகந்தையுள்ளவர்களாயும், [20]தூஷணிக்கிறவர்களாயும், தாய்தகப்பன்மாருக்குக் கீழ்ப்படியாதவர்களாயும், நன்றியறியாதவர்களாயும், பரிசுத்தம் இல்லாதவர்களாயும்,

௩ [22]சுபாவ அன்பில்லாதவர்களாயும், [23]ஒப்புரவாக மனதில்லாதவர்களாயும், பொய்யாய்க் குற்றம் சாற்றுகிறவர்களாயும்,§ [24]இச்சையை அடக்காதவர்களாயும், குரூரராயும், நல்லோருக்குப் பகைஞராயும்,

௪ [25]துரோகிகளாயும், துணிவுக்காரராயும், இறுமாப்புள்ளவர்களாயும், [26]பராபரனிலும் செல்வத்தை விரும்புகிறவர்களாயும், தேவபத்தியின் ரூபத்தைத் தரித்து,

௫ [27]அதின் பலனை மறுதலிக்கிறவர்களாயும் இருப்பார்கள்.

௬ [28]இப்படிப்பட்டவர்களுக்கு விலகுவாயாக; இப்படிப்பட்டவர்களே பாவங்களால் நிறைந்தும், பலபல இச்சைகளால் இழுக்கப்பட்டும்,

௭ எப்பொழுதும் படித்தாலும், [29]ஒருக்காலும் சத்தியத்தை அறியாமலும் இருக்கிற புத்தியீனமுள்ள பெண்பிள்ளைகளுடைய [30]வீடுகளில் நுழைந்து, அவர்களைச் சிறையாக்குவார்கள்.

இ. பி. ௬௬௬.

1 ௧ தீமோ. ௩.௧௫.
2 ௨ரோ. ௯.௨௧.
3 ஏசா. ௫௨. ௰௧.
4 ௨ தீமோ. ௩. ௰௭. தீத். ௩. ௧.
5 ௧ தீமோ. ௧.௫: ௪. ௰௨.
6 அப். ௯. ௰௪. ௧ கொரி. ௧. ௨.
7 ௧ தீமோ. ௬.௰௧.
8 ௧ தீமோ. ௧.௪: ௪.௭: ௬.௪. ௰௧. தீத். ௩. ௯.
9 தீத். ௧. ௭.
10 ௧ தீமோ. ௩. ௨,௩. தீத். ௧.௯.
* அல்லது பொறுக்கிறவனும்.
11 கலா. ௬. ௧. ௧ தீமோ. ௬.௰௧. ௧ பே. ௩. ௰௫.
† இரேக்கு, உயிரோடே பிடிக்கப்பட்டிருக்கிற.
12 ௧ தீமோ. ௨. ௪. ௨ தீமோ. ௩. ௭. தீத். ௧. ௧.
13 ௧ தீமோ. ௩.௭.
‡ அல்லது தங்களை நீக்கி.
14 அப். ௮. ௨௨.
15 ௧ தீமோ. ௪. ௧. ௨ தீமோ. ௪. ௩. ௨ பே. ௩. ௩. ௩ யோ. ௨. ௰௮. யூதா. ௰௮.
16 பிலி. ௨. ௨௧.
17 ௨ பே. ௨. ௩.
18 யூதா. ௰௬.
19 ௧ தீமோ.௬.௪.
20 ௧ தீமோ. ௧ ௨௦. ௨ பே.௨. ௰௨. யூதா. ௰.
21 ௨ரோ. ௧. ௩௰.
22 ௨ரோ. ௧. ௩௧
23 ௨ரோ. ௧. ௩௧
§ அல்லது பின்புறணிபேசுகிறவர்களாயும்; தீத். ௨. ௩.
24 ௨ பே. ௩. ௩.
25 ௨ பே. ௨. ௰.
26 பிலி. ௩. ௰௯. ௨ பே. ௨. ௰௩. யூதா. ௪,௰௯.
27 ௧ தீமோ. ௫. அ. தீத். ௧. ௰௬.
28 ௨ தெச. ௩.௬. ௧ தீமோ. ௬.௫.
29 ௧ தீமோ.௨.௪.
30 மத். ௨௩. ௰௪. தீத். ௧. ௰௧

Digitized by Google

அ [1]இயன்னேயும் இயம்பிரேயும் மோசேயுக்கு விரோதமாய் நின்றதுபோல, இவர்களும் சத்தியத்திற்கு விரோதமாயிருக்கிறார்கள்; [2]அவர்கள் முழுவதும் கெட்ட புத்தியை உடையவர்களாயும் [3]விசுவாசத்தை வகையறுக்கத் தகுதியில்லாதவர்களாயும் இருக்கிறவர்கள்.*

க அவர்கள், அதிகமாய்ப் பெருகுவதில்லை; [4]அவ்விருவருடைய புத்தியீனமும் வெளிப்பட்டதுபோல, இவர்களுடையதும் எல்லாருக்கும் வெளியரங்கமாகுமே.

ய [5]நீயே என்னுடைய போதகத்தையும், நடக்கையையும், மனயோசனையையும், விசுவாசத்தையும், நீடிய சாந்தத்தையும், அன்பையும், பொறுமையையும்,

யக [6]அந்தியோகூர் [7]இக்கோனியூர் [8]லிஸ்திரா ஊர் இவ்விடங்களிலே எனக்கு உண்டான துன்பங்களையும் பாடுகளையும் நன்றாய் அறிந்துகொண்டிருக்கிறாய்;† இப்படிப்பட்ட துன்பங்களைச் சகித்தேன்; [9]அவைகள் எல்லாவற்றில் நின்றும் கர்த்தர் என்னை இழுத்து இரட்சித்தார்.

யஉ [10]அன்றியும், கிறிஸ்து இயேசுவைப்பற்றித் தேவபத்தியாய்ச் சீவனம்பண்ண மனதாயிருக்கிற யாவரும் துன்பப்படுவார்கள்.

யங [11]பொல்லாத மனிதரும் வஞ்சகருமானவர்கள்மாத்திரம் (மற்றவர்களை) வஞ்சித்தும் வஞ்சிக்கப்பட்டும் இருந்தும், மேன்மேலும் கேடுள்ளவர்களாவார்கள்.

யச ¶ நீ கற்றுக்கொண்டது எதுவோ, நீ நிச்சயிக்கப்பட்டது எதுவோ, [12]அதிலே நிலைநிற்பாயாக; உனக்குப் போதகம் செய்தவன் இன்னானென்று நீ அறிந்திருக்கிறதுமல்லாமல்,

யரு இயேசுக்கிறிஸ்துவைப் பற்றும் விசுவாசத்தினாலே இரட்சிப்புக்கு ஏற்ற ஞானத்தை உனக்குக் கொடுக்கத் தகுதியான [13]வேத எழுத்துக்களை நீ சிறுவயது முதற்கொண்டு அறிந்தவனென்றும் அறிந்திருக்கிறாயே.

யசு [14]வேதவாக்கியங்கள் எல்லாம் தேவ ஆவியினால் உண்டானவைகளுமாய், [15]பராபரனுடைய மனிதன் நிறைந்த ‡ தன்மையுள்ளவனும் [16]எந்த நற்கிரியையும் செய்ய மிகுந்த தகுதியுள்ளவனும் ஆகும்பொருட்டாய்,

யஎ உபதேசம்பண்ணுதற்கும், கடிந்துகொள்ளுதற்கும், செம்மையாக்குதற்கும், நீதியைப் படிப்பிக்கிறதற்கும், [17]பிரயோசனமானவைகளுமாய் இருக்கின்றன.

1 உ மோ. எ.௧௧. 2 க தீமோ.க. ௯. 3 உ ரோ.க. உ௮. உ கொரி.௰௩.௯. தீத். க. ௰௬. * அல்லது விசுவாசத்தைக் குறித்துக் கழிகெட்டவர்கள். 4 உ மோ. எ. ௰௨: அ. ௰௮: கூ. ௰௧. 5 பிலி. உ. உஉ. க தீமோ ச: கூ. 6 அப். ௰௩. ௪௯, ௫௰. 7 அப்.௰௪. உ,௯. 8 அப். ௰௪. ௰௯. † அல்லது சகரப்பாய்ப் பின்பற்றியிருக்கிறாய். 9 சங். ௩௪. ௰௯. உ கொரி. க ௰. உ தீமோ. ச. ௰எ. 10 சங். ௩௪. ௰௯. யோவா. ௰௭. ௰௪. மத். ௰௬. உச. அப். ௰௪ உஉ. க கொரி. ௰இ.௰௯.க தெச. க. ௩. 11 உ தெச. உ. ௰௧. க தீமோ. ச. க. உ தீமோ. உ. ௰௬. 12 உ தீமோ. க. ௰௩: உ. உ. 13 யோவா. ௫. ௩௯. 14 உ பே. க.உ௰, உக. 15 க தீமோ.௬.௰௧. ‡ அல்லது தீர்க்கமான. 16 உ தீமோ. உ. உக. 17 உ ரோ. ௰௫.௪. 18 அப். ௰. ௪உ. 19 க தீமோ. ௫. உக: ௬. ௰௩. உ தீமோ. உ. ௰௪. 20 க தீமோ. ச. ௰௩. 21 க தீமோ. ௫. உ௰. தீத். க. ௰௩: உ. ௰௫. 22 க தீமோ. க.௰.

## ச. அதிகாரம்.

க. தீமோத்தேயுவைச் சாக்கிரதைபோடும், சுறுசுறுப்போடும் தேவஊழியத்தைச் செய்யச்சொல்லி; சு. தன் மரணம் சமீபமாயிருக்கிறபடியால், க. அவனைத் தன்னிடத்திற்கு வரவும், மாற்கை அழைத்துக்கொண்டு, சில வஸ்துக்களைக் கொண்டுவரவும், ௰ச. கன்னானாகிய அலேக்சந்தரனைக்குறித்து எச்சரிக்கையாயிருக்கவும், ௰௬. சத்தியத்துக்காக உரோமாவிலே தான் முதல்விசை சாட்சிகொடுத்தபோது தனக்குச் சம்பவித்ததையும் சொல்லி, ௰௯. நிருபத்தை முடித்தது.

ஆனபடியினாலே பராபரனுக்கு முன்பாகவும், தாம் பிரசன்னமாகித் தமது இராச்சியத்தின் (மகிமையை) வெளிப்படுத்தும் காலத்திலே உயிரோடிருக்கிறவர்களுக்கும் மரித்தவர்களுக்கும் [18]நியாயத்தீர்ப்புக்கொடுக்கும் கர்த்தராகிய இயேசுக்கிறிஸ்துவுக்கு முன்பாகவும்,

உ [19]நான் உனக்குச் சாட்சியாய்க் கட்டளையிடுகிறது என்னவெனில், சாவகாசமாயிருந்தாலும் இல்லாதிருந்தாலும் அந்த வசனத்தை இடைவிடாமல் பிரசங்கம்பண்ணி, [20]எல்லாவிதமான நீடிய சாந்தமாயும் உபதேசத்திற்கு ஏற்ற விதமாயும் மெய்யை விளங்கச் செய்து, [21]கடிந்துகொண்டு, புத்திசொல்லுவாயாக.

ங என்னத்தினாலெனில் [22]அவர்கள் ஆரோக்கியமான உபதேசத்தைப் பொறுக்க மனதில்லாமல்,

Digitized by Google

[1]செவிக்கு இன்பமானதை விரும்பி, தங்கள் சுய இச்சைகளுக்குத் தக்கதாக,

௪ தங்களுக்குப் போதகரைக் கூட்டிவைத்துச் சத்தியத்திற்குச் செவியை விலக்கிக் [2]கட்டுக்கதைகளைச் சாரும் [3]காலம் வரும்.

௫ நீமாத்திரம் எல்லாவற்றிலேயும் தெளிந்தபுத்தியுள்ளவனாயிருந்து, [4]தீமையைச் சகித்துச் [5]சுவிசேஷனுடைய வேலையைச் செய்து உன் ஊழியத்தை நிறைவேற்றுவாயாக.*

௬ ¶ [6]நானே பானபலியாக வார்க்கப்பட எத்தனமாயிருக்கிறேன்; [7]நான் இதைவிட்டுப் போகிறதற்குக் காலம் சமீபமாயிருக்கின்றது.

௭ [8]நல்ல போராட்டத்தைப் பண்ணியிருக்கிறேன்; ஓட்டத்தை முடித்திருக்கிறேன்; விசுவாசத்தைக் காத்துக்கொண்டிருக்கிறேன்.

௮ [9]இதுமுதல் நீதியென்னும் கிரீடம் எனக்காக வைக்கப்பட்டிருக்கிறது; நீதியுள்ள நியாயாதிபதியாகிய கர்த்தர் [10]அந்நாளில் அதை எனக்குமாத்திரம் அல்ல, அவர் பிரசன்னமாகுதலை விரும்பின யாவருக்கும் தந்தருளுவார்.

௯ ¶ நீ சீக்கிரமாய் என்னிடத்தில் வரும்படி சாக்கிரதையாயிருப்பாயாக.

௰ [11]தேமா என்பவன் [12]இப்பிரபஞ்சத்தின்மேல் ஆசைவைத்து என்னைவிட்டுத் தெசலோனிக்கே ஊருக்குப் போனான்; கிரேஸ்கே என்பவன் கலாத்திநாட்டிற்கும், தீத்து என்பவன் தல்மாத்தி நாட்டிற்கும் போனார்கள்.

௰௧ [13]லூக்கா என்பவன் [14]மாத்திரம் என்னோடே இருக்கிறான்; மாற்கு என்பவன் என் ஊழியத்திலே எனக்குப் பிரயோசனமாய் இருக்கிறபடியினாலே [15]அவனைக் கூட்டிக்கொண்டுவா.

௰௨ [16]தீகிக்கு என்பவனை நான் எபேசு ஊருக்கு அனுப்பினேன்.

௰௩ துரோவாபட்டணத்திலுள்ள கற்பென்பவனிடத்திலே நான் வைத்துவந்த மேல்அங்கியையும் புஸ்தகங்களையும் விசேஷமாகத் தோற்காகிதங்களையும் நீ வருகிறபொழுது எடுத்துக்கொண்டுவா.

௰௪ ¶ கன்னானாகிய [17]அலெக்குசந்தர் எனக்கு மிகுந்த தீமைகளைச் செய்தான்; [18]அவனுடைய கிரியைகளுக்குத்தக்கதாகக் கர்த்தர் அவனுக்குப் பதில் கொடுக்கக்கடவர்.

௰௫ நம்முடைய வார்த்தைகளுக்கு† அவன் மிகவும் விரோதித்தபடியால், நீயும் அவனைக்குறித்து எச்சரிக்கையாய் இருப்பாயாக.

௰௬ ¶ நான் முதலிலே எனக்காக உத்தரவுசொல்லி நின்றபொழுது, ஒருவனும் என் பங்கில் இராமல் [19]யாவரும் என்னைவிட்டார்கள்; [20]அது அவர்களுக்குக் (குற்றமாக) எண்ணப்படாதிருப்பதாக.

௰௭ (திவ்விய வசனம்) என்னாலே சம்பூரணமாய்ப் [21]பிரசங்கிக்கப்படத்தக்கதாகவும், புறத்தேசத்தார் யாவரும் அதைக் கேட்கத்தக்கதாகவும் [22]கர்த்தர்மாத்திரம் என் பங்கிலிருந்து என்னைப் பலப்படுத்தினார்; [23]இப்படி நான் சிங்கத்தின் வாயிலிருந்து இழுக்கப்பட்டேன்.

௰௮ மேலும் மற்றெந்தப் பொல்லாத கிரியையில்நின்றும் [24]கர்த்தர் என்னை இழுத்துத் தமது பரமஇராச்சியத்தில் பிரவேசிக்கப்பண்ணி இரட்சிப்பார்; [25]அவருக்கு என்றென்றைக்கும் துதியுண்டாவதாக.—ஆமன்.

கி. பி. ௬௬.

1 ௨ தீமோ. ௧. ௧.
2 ௧ தீமோ. ௧. ௪: ௪. ௭. தீத். ௧. ௧௪.
3 ௨ தீமோ. ௩. ௧.
4 ௨ தீமோ. ௧. ௮: ௨. ௩.
5 அப். ௨௧. ௮. எபே. ௪. ௧௧.
* அல்லது நிறைவாய்த் தெரியப்படுத்துவாயாக; ௨ கொ. ௧௩. ௧௯. கொலோ. ௧. ௨௫: ௪. ௧௭.
6 பிலி. ௨. ௧௭.
7 பிலி. ௧. ௨௩. ௨ பே. ௧. ௧௪.
8 ௧ கொரி. ௯. ௨௪,௨௫. பிலி. ௩. ௧௪. ௧ தீமோ. ௬. ௧௨. எபி. ௧௨. ௧.
9 ௧ கொரி. ௯. ௨௫. யாக். ௧. ௧௨. ௧ பே. ௫. ௪. வெளி. ௨. ௧௦.
10 ௨ தீமோ. ௧. ௧௨.
11 கொலோ. ௪. ௧௪. பிலே. ௨௪.
12 ௧ யோ. ௨. ௧௫.
13 கொலோ. ௪. ௧௪. பிலே. ௨௪.
14 ௨ தீமோ. ௧. ௧௫.
15 அப். ௧௨. ௨௫: ௧௫. ௩௭. கொலோ. ௪. ௧௦.
16 அப். ௨௦. ௪. எபே. ௬. ௨௧. கொலோ. ௪. ௭. தீத். ௩. ௧௨.
17 அப். ௧௯. ௩௩. ௧ தீமோ. ௧. ௨௦.
18 ௨ சாமு. ௩. ௩௯. சங். ௨௮. ௪. வெளி. ௧௮. ௬.
† அல்லது பிரசங்கங்களுக்கு.
19 ௨ தீமோ. ௧. ௧௫.
20 அப். ௭. ௬௦.
21 அப். ௯. ௧௫: ௨௬. ௧௭, ௧௮. எபே. ௩. ௮.



Digitized by Google

௰௯ ¶ 1பிரிஸ்காளுக்கும், அக்கில்லாவுக்கும், 2ஒனேசிப்போருவின் குடும்பத்தாருக்கும் வாழ்த்துதல் செய்கிறேன்.

௨௰ 3எரஸ்து என்பவன் கொரிந்து பட்டணத்திலே தரித்திருந்தான்; 4துரோப்பீமு என்பவனை மிலேத்துப் பட்டணத்திலே வியாதிப்பட்டவனாக விட்டுவந்தேன்.

௨௧ 5மாரிகாலத்திற்குமுன்னே நீ இங்கே வந்து சேரும்படி சாக்கிரதையாயிருப்பாயாக; ஐபூலுவும், புதேஞ்சும், இலீனுவும், கலவுதியாளும், மற்றெல்லாச் சகோதரரும் உனக்கு வாழ்த்துதல் செய்கிறார்கள்.

௨௨ ¶ 6கர்த்தராகிய இயேசுக்கிறிஸ்து உன் ஆவியுடனே இருக்கக்கடவர்; கிருபை உங்களோடே இருப்பதாக.—ஆமென்.

கி. பி. ௬௬.



1 அப். ௰௮. ௨. உரோ. ௰௬. ௩.
2 ௨ தீமோ. ௧. ௰௬.
3 அப். ௰௯. ௨௨. உரோ. ௰௬. ௨௩.
4 அப். ௨௰. ௪: ௨௧. ௨௯.
5 ௯. வச.
6 கலா. ௬. ௰௮. பிலே. ௨௫.

Digitized by Google

TITUS.

அப்போஸ்தலனாகிய பவுல்

# தீத்துவுக்கு எழுதின

## நிருபம்.

### க. அதிகாரம்.

*க. தீத்து கிரேத்தாவில் வைக்கப்பட்ட முகாந்திரம் இன்னதென்றும், ௬. தேவ ஊழியக்காரருடைய இலட்சணங்கள் இன்னவைகளென்றும், ௰க. நகாத போதகர்களுடைய வாய் அடைக்கப்பட வேண்டுமென்றும், ௰௫. அவர்கள் இப்படிப்பட்டவர்களென்றும் சொல்லியது.*

[1]பொய்யுரையாத பராபரன் [2]இவ்வுலக காலங்களுக்குமுன்னே நித்திய சீவனைக்குறித்து வாக்குத்தத்தம்பண்ணி,

உ [3]ஏற்ற காலங்களிலே [4]நம்முடைய தேவனாகிய இரட்சகருடைய கட்டளையின்படி [5]எனக்கு ஒப்புவிக்கப்பட்ட பிரசங்கத்தினாலே தமது வார்த்தையை வெளிப்படுத்தினாரே.

ங [6]அந்த நித்தியசீவனைக்குறித்து நம்பிக்கை உண்டாக்கத்தக்கதாகத்* [7]தேவபத்திக்கு ஏதுவான [8]சத்தியத்தை அறிகிற அறிவும் விசுவாசமும் தேவனால் தெரிந்துகொள்ளப்பட்டவர்களுக்கு உண்டாகும்படிக்கு ஏதுவாய்ப் பராபரனுடைய ஊழியக்காரனுமாய் இயேசுக்கிறிஸ்துவின் அப்போஸ்தலனுமாய் இருக்கிற பவுல்,

ச [9]பொதுவான விசுவாசத்தினாலே [10]எனக்கு உத்தம குமாரனாகிய [11]தீத்துவுக்கு எழுதுகிறதாவது: பிதாவாகிய பராபரனாலும், நம்முடைய இரட்சகரும் கர்த்தருமாகிய இயேசுக்கிறிஸ்துவினாலும் [12]உனக்குக் கிருபையும் சமாதானமும் உண்டாவதாக.

ரு ¶ நான் உனக்குக் கட்டளையிட்டபடி நீ கிரேத்தைத் தீவிலே இதுவரைக்கும் குறைவாய் இருக்கிறவைகளைச்† [13]செம்மைப்படுத்திப் [14]பட்டணங்கள்தோறும் மூப்பரை ஏற்படுத்தும்படிக்கு உன்னை விட்டுவந்தேனே.

சு [15]குற்றமில்லாதவனுமாய், [16]ஒரே மனைவிக்குப் புருஷனுமாய்க் கெட்டமார்க்கரென்றும் குற்றமில்லாமையும், கீழ்ப்படிதலும் [17]விசுவாசமும் உள்ள பிள்ளைகளை உடையவனுமாய் ஒருவன் இருந்தால், (அவனை வைக்கலாம்.)

கண்காணியானவன் [18]பராபரனுடைய உக்கிராணக்காரனுக்கு ஏற்றதாகக் குற்றம் சாற்றப்படாதவனுமாய்,

எ தன் இஷ்டப்படி (மாத்திரம்) செய்ய மனதில்லாதவனுமாய், கடுஞ்சினமில்லாதவனுமாய், [19]பழ இரசத்தை மிகவும் விரும்பாதவனுமாய், அடிக்கிறவனாயிராதவனுமாய், [20]அவலட்சணமானவித

கி. பி. ௬௫.

1 ச மோ. உக. ௰௬. உ தீமோ. உ. ௰க.
2 உரோ. ௰௬. உ௫. உ தீமோ. க. ௯. க பே. க. உ௰.
3 உ தீமோ. க. ௰.
4 க தீமோ. க. க: உ. ங: ச. ௰.
5 க தெச. உ. ச. க தீமோ. க. ௰க.
6 உ தீமோ. க. க. தீத். ங. எ.
* அல்லது நம்பிக்கையில்.
7 க தீமோ. ங. ௰௬: ௬. ங.
8 உ தீமோ. உ. உ௫.
9 உரோ. க. ௰உ. உ கொரி. ச. ௰ங. உ பே. க. க.
10 க தீமோ. க. உ.
11 உ கொரி. உ. ௰ங: எ. ௰௬: அ ௬, ௰௬, உ௩: ௰உ. ௰அ. கலா. உ. ௩.
12 எபே. க. உ. கொலோ. க. உ. க தீமோ. க உ. உ தீமோ. க. உ.
† அல்லது செய்யாமலிருக்கிறவைகளை.

13 க கொரி. ௰௬. ௪ச. — 14 அப். ௰ச. உங. உ தீமோ. உ. உ. — 15 க தீமோ. ங. உ ழ. — 16 க தீமோ. ங. ௰உ. — 17 க தீமோ. ங. ச, ௰உ.
18 மத். உச. சரு. க கொரி. ச க, உ. — 19 க மோ. ௰. ௬. எபே. ரு. ௰அ. க தீமோ. ங. ங, அ. — 20 க தீமோ. ங. ங, அ. க பே. ரு உ.

Digitized by Google

மாய் ஆதாயத்தைத் தேடாதவனுமாய்,

௮ [1]அந்நியருக்கு உபசாரஞ்செய்கிறவனுமாய், நல்லோர்மேல்* பிரியமுள்ளவனுமாய், விவேகமும் நீதியும் பரிசுத்தமும் இச்சையடக்கமும் உள்ளவனுமாய்,

௯ [2]ஆரோக்கியமான உபதேசத்தினாலே புத்திசொல்லி எதிர்பேசுகிறவர்களுக்கு மெய்யறிவைக் கொடுக்கத் திராணியுள்ளவனாய் இருக்கும்படிக்குத் தான் போதிக்கப்பட்டதற்கேற்ற† [3]உண்மையான உபதேசத்தை [4]நன்றாய்ப் பற்றிக்கொள்ளுகிறவனுமாய் இருக்கவேண்டுமே.

௰ ¶ என்னத்திற்காகவென்றால் [5]அநேகர், விசேஷமாக விருத்தசேதனத்தையுடையவர்கள், (சத்தியத்திற்குக்) [6]கீழ்ப்படியாதவர்களுமாய் வீணானவைகளைப் பேசுகிறவர்களுமாய் [7]மனதை வஞ்சிக்கிறவர்களுமாய் இருக்கிறார்கள்.

௰௧ அவர்களுடைய வாயை அடக்கிப்போடவேண்டுமே; அவர்கள் [8]அவலட்சணமான ஆதாயத்திற்காகத் தகாதவைகளை உபதேசித்து [9]முழுக்குடும்பங்களையும் கவிழ்க்கிறார்கள்.

௰௨ [10]அவர்களில் ஒருவனாகிய தீர்க்கதரிசியானவன்தானே, கிரேத்தைத் தீவார் எப்பொழுதும் பொய்யருமாய், துஷ்டமிருகங்களுமாய், சோம்பலுள்ள தேகிகளுமாய் இருக்கிறார்கள் என்று சொன்னான்.

௰௩ அந்தச் சாட்சி மெய்தான்; அதுமுகாந்தரமாக [11]அவர்கள் விசுவாசத்திலே ஆரோக்கியம் அடையும்படிக்கும், [12]யூதருடைய கட்டுக்கதைகளுக்கும் சத்தியத்தை விட்டு விலகுகிற மனிதருடைய [13]கற்பனைகளுக்கும் செவிகொடாதிருக்கும்படிக்கும்,

௰௪ [14]நீ அவர்களைக் கண்டிப்பாய்க் கடிந்துகொள்வாயாக.

௰௫ [15]சுத்தமுள்ளவர்களுக்குச் சகலமும் சுத்தமாயிருக்கும்; [16]அழுக்கும் அவிசுவாசமும் உள்ளவர்களுக்குமாத்திரம் ஒன்றும் சுத்தமாயிருக்கமாட்டாது; அவர்களுடைய புத்தியும், மனச்சாட்சியும் அழுக்காயிருக்கிறதே.

௰௬ அவர்கள் பராபரனை அறிகிறோமென்று சொல்லியும், [17]தங்கள் கிரியைகளால் அதை மறுதலிக்கிறார்கள்; அவர்கள் அருவருக்கப்படத்தக்கவர்களாயும், கீழ்ப்படியாதவர்களாயும், [18]எந்த நற்கிரியையையும் வகையறுக்கத் தெரியாதவர்களாயும்‡ இருக்கிறார்களே.

கி. பி. ௬௫.

1 க தீமோ. ௩. ௨.
* அல்லது நல்லவைகள்மேல்.
2 க தீமோ. ௧. ௰: ௬. ௩. ௨ தீமோ. ௪. ௩. தீத். ௨. ௧.
† அல்லது தான் போதிக்கும் போது.
3 க தீமோ. ௧. ௰௯: ௪. ௬: ௬. ௩. ௨ தீமோ. ௨. ௨.
4 ௨ தெச. ௨. ௰௫. ௨ தீமோ. ௩. ௰௪.
5 அப். ௰௫. ௧.
6 க தீமோ. ௧.௬.
7 உரோ ௰௬.௰௮.
8 க தீமோ. ௬.௫.
9 மத். ௨௩. ௰௪. ௨ தீமோ. ௩. ௬.
10 அப்.௰௭. ௨௮.
11 தீத். ௨. ௨.
12 க தீமோ ௧.௪: ௪. ௭. ௨ தீமோ. ௪. ௪.
13 ஏசா. ௨௯. ௰௩. மத். ௰௫. ௯. கொலோ. ௨. ௨௨.
14 ௨ கொரி.௰௩. ௰. ௨ தீமோ. ௪. ௨.
15 லூக். ௰௧.௪௧. ௰௪, ௰௪. உரோ. ௰௪. ௰௪. ௨௰. க கொரி.௬.௰௩: ௰. ௨௫, ௨௭. க தீமோ. ௪. ௩, ௪.
16 உரோ. ௰௪. ௨௩.
17 உதீமோ. ௩.௫. யூதா. ௪.
18 உரோ.௧.௨௮. ௨ தீமோ. ௩.௮.
‡ அல்லது கெட்டவர்களாயும்.
19 க தீமோ.௧.௰: ௬.௩. ௨ தீமோ. ௧௰௩. தீத்.௧.௯.
§ அல்லது விழிப்புள்ளவர்களாயும்.
20 தீத். ௧. ௰௩
21 க தீமோ.௨.௯, ௰:௩.௰௧. ௧ பே. ௩. ௩, ௪.

## ௨. அதிகாரம்.

௧. நம்பவும் செய்யவும் வேண்டியவைகளைக்குறித்துத் தீத்துவுக்குச் சொன்னது. ௯. வேலைக்காரரும், மற்றுமிருக்கிறவர்கள் யாவரும் செய்யவேண்டிய கடமைகளைக்குறித்தது.

[19]நீயே ஆரோக்கியமான உபதேசத்திற்கு ஏற்றவைகளைப் பேசிக்கொள்வாயாக.

௨ முதிர்ந்தவயதுள்ள புருஷர்கள் தெளிந்த புத்தியுள்ளவர்களாயும், § யோக்கியராயும், விவேகிகளாயும், விசுவாசத்திலும் அன்பிலும் பொறுமையிலும் [20]ஆரோக்கியமுள்ளவர்களாயும் இருக்கும்படி (போதிப்பாயாக).

௩ அப்படிப்போல [21]முதிர்ந்த வயதுள்ள ஸ்திரிகளும் பரிசுத்தருக்கு ‖ ஏற்றவிதமாய் நடக்கிறவர்களாயும், பொய்யாய்க் குற்றஞ்சாற்றாதவர்களாயும் ¶ மிகுந்த திராட்ச இரசத்தைக் குடியாதவர்களாயும்,

௪ [22]பராபரனுடைய வசனம் தூஷணிக்கப்படாதபடிக்கு வாலிபஸ்திரிகள் [23]தங்கள் புருஷரையும் பிள்ளைகளையும் சிநேகிக்கிறவர்களுமாய்,

‖ அல்லது பரிசுத்தத்திற்கு.—¶ அல்லது பின்புறணி பேசாதவர்களாயும்; ௨ தீமோ. ௩. ௩.—22 உரோ. ௨. ௨௪. க தீமோ. ௬. ௧.—23 க தீமோ. ௫. ௰௪.

Digitized by Google

௫ விவேகிகளுமாய், கற்புள்ளவர்களுமாய், வீட்டில் தரித்திருக்கிறவர்களுமாய், நல்லவர்களுமாய், [1]தங்கள் புருஷருக்குக் கீழ்ப்படிகிறவர்களுமாய் இருக்கும்படி அவர்களுக்குப் புத்திசொல்லத்தக்க நற்போதகிகளாயும்* இருக்கும்படிக்குப் (போதிப்பாயாக).

௬ அப்படிப்போல, வாலிபவயதுள்ள ஆண்பிள்ளைகளும் விவேகமாய்† இருக்கும்படி நீ புத்திசொல்லி,

௭ நற்கிரியைகளுக்கு ஏற்ற மார்க்கத்தை நீதானே [2]எல்லாவற்றினாலும் (மற்றவர்களுக்கு) திருட்டாந்தப்படுத்துவாயாக.

௮ அந்தப்படி [3]எதிராளியானவன் உங்களைக்குறித்துப் பொல்லாங்கைச் சொல்லுதற்கு ஒன்றுமில்லாமல் [4]வெட்கப்படத்தக்கதாக நீ உபதேசத்திலே விகற்பமில்லாதவனுமாய், [5]யோக்கியமுள்ளவனுமாய், குற்றம்பிடிக்கப்படக்கூடாத [6]ஆரோக்கியமுள்ள வசனத்தைப் பேசுகிறவனுமாய் இருப்பாயாக.

௯ ¶ அன்றியும், [7]வேலைக்காரர் நம்முடைய இரட்சகராகிய பராபரனுடைய உபதேசத்தை எல்லாவற்றினாலும் அலங்கரிக்கத்தக்கதாக,

௰ தங்கள் எசமான்களுக்குக் கீழ்ப்படியவும், எதிர்பேசாமல்‡ [8]எல்லாவற்றினாலும் பிரியமாய் நடக்கவும், திருட்டுத்தனமாய் நடவாமல் சகலவிதமாயும் நல்லுண்மையைக் காண்பிக்கவும் [9]புத்தி சொல்லுவாயாக.

௰௧ ¶ என்னத்தினாலெனில், இரட்சிப்பைக் கொடுக்கிற தேவ [10]கிருபை எல்லாவிதமான மனிதருக்கும் [11]பிரசன்னமாகி,§

௰௨ நாம் அவபத்தியையும் [12]லவுகீக இச்சைகளையும் வெறுத்து நற்புத்தியும், [13]நீதியும், மெய்த்தேவ பத்தியும் உள்ளவர்களாயும்,

௰௩ [14]நாம் நம்பிக்கொள்ளுகிற பாக்கியம் வருமென்றும், நமக்கு மகா தேவனும் இரட்சகருமாகிய இயேசுக்கிறிஸ்துவின் மகிமை [15]பிரசன்னமாகும் என்றும் [16]காத்துக்கொண்டிருக்கிறவர்களாயும், இவ்வுலகத்திலே சீவனம்பண்ணும்படி நமக்குப் போதிக்கின்றது.

௰௪ அந்த இயேசுக்கிறிஸ்து நம்மைச் சகல அக்கிரமங்களினின்றும் மீட்டுக்கொண்டு, [17]தமக்குச் சொந்தமாயும், [18]நற்கிரியைகளைச் செய்ய மிகுந்த விருப்பமாயும் இருக்கிற சனங்களாகச் [19]சுத்திகரிக்கும்படிக்கு, [20]நமக்காகத் தம்மையே (மரணத்திற்கு) ஒப்புக்கொடுத்தார்.

௰௫ இவைகளை நீ மிகுந்த அதிகாரத்தோடே போதித்துப் [21]புத்தி சொல்லிக் கடிந்துகொள்வாயாக; [22]ஒருவனும் உன்னை அசட்டைபண்ணாதிருக்கக்கடவன்.

## ௩. அதிகாரம்.

க. தீத்து இன்னதைப் போதிக்கவும் இன்னதைப் போதியாதிருக்கவும், ௰. கெட்ட வேதப்புரட்டனை நீக்கவும் பவுல் கற்பித்தது. ௰௨. அவன் தன் விடத்தில் வரவேண்டிய காலத்தையும் இடத்தையும் சொல்லி, நிருபத்தை முடித்தது.

துரைத்தனங்களுக்கும் அதிகாரங்களுக்கும் [23]கீழ்ப்படிந்து அடக்கமாயிருக்கும்படிக்கும், எல்லாவிதமான நற்கிரியைகளையும் செய்ய [24]எத்தனமாயிருக்கும்படிக்கும்,

௨ [25]ஒருவனையும் தூஷணியாமலும், [26]சண்டைபண்ண விரும்பாமலும், [27]சாதுவான மனதுள்ளவர்களாய் எல்லா மனிதருக்கும் எல்லாவிதத்திலும் [28]சாந்தத்தைக் கா

கி. பி. ௬௫.

1 க கொரி. ௰௪. ௩௪. எபே. ௫. ௨௨. கொலோ. ௩. ௰௮. க தீமோ. ௨. ௰௧. க பே. ௩. ௧, ௫.
* தெளிந்த புத்தியுள்ளவர்களாயும்.
† தெளிந்த புத்தியாய்.
2 க தீமோ. ௪. ௰௨. க பே. ௫. ௩.
3 நெகே. ௫. ௯. க தீமோ. ௫. ௰௪. க பே. ௨. ௰௨, ௰௫: ௩. ௰௬.
4 உ தெச. ௩. ௰௪.
5 எபே. ௬. ௨௪.
6 க தீமோ. ௬. ௩.
7 மத். ௫. ௰௬. பிலி. ௨. ௰௫.
‡ அல்லது மறுக்காமல்.
8 எபே. ௫. ௨௪.
9 எபே. ௬. ௫. கொலோ. ௩. ௨௨. க தீமோ. ௬. ௧, ௨. க பே. ௨. ௰௮.
10 உரோ. ௫. ௰௫. தீத். ௩. ௪, ௫. க பே. ௫. ௰௨.
11 லூக். ௩. ௬. யோவா. ௧. ௯. க தீமோ. ௨. ௪.
§ அல்லது எல்லாவிதமான மனிதருக்கும் இரட்சிப்பைக்கொடுக்கிற தேவகிருபை பிரசன்னமாகி.
12 க பே. ௪. ௨. க யோ. ௨. ௰௬.
13 லூக். ௧. ௭௫. உரோ. ௩. ௰௩. எபே. ௧. ௪. கொலோ. ௧. ௨௨. க தெச. ௪. ௭.
14 அப். ௨௪. ௰௫. கொலோ. ௧. ௫, ௨௩ தீத். ௧. ௨: ௩. ௭.

15 கொலோ. ௩. ௪. உ தீமோ. ௪. ௧, ௮. எபி. ௯ ௨௮. க பே. ௧. ௭. க யோ. ௩. ௨.—16 க கொரி. ௧. ௭. பிலி. ௩. ௨௦. உ பே. ௩. ௰௨.
17 உ மோ. ௰௯. ௫: ௰௧. ௫. ௫ மோ. ௭. ௬: ௰௪. ௨: ௨௬. ௰௮. க பே. ௨. ௯.—18 எபே. ௨. ௰. தீத். ௩. ௮.—19 எபி. ௯. ௰௪.
20 கலா. ௧. ௪: ௨. ௨௦. எபே. ௫. ௨. க தீமோ. ௨. ௬.—21 உ தீமோ. ௪. ௨.—22 க தீமோ. ௪. ௰௨.—23 உரோ. ௰௩. ௧. க பே. ௨. ௰௩.
24 கொலோ. ௧. ௰. உ தீமோ. ௨. ௨௧. எபி. ௰௩. ௨௧.—25 எபே. ௪. ௩௧.—26 உ தீமோ. ௨. ௨௪, ௨௫.—27 பிலி. ௪. ௫.
28 எபே. ௪. ௨. கொலோ. ௩. ௰௨.

Digitized by Google

ண்பிக்கும்படிக்கும் அவர்களுக்கு ஞாபகப்படுத்துவாயாக.

௩ என்னத்தினாலெனில், [1]முற்காலத்திலே நாமும் புத்தியீனருமாய், கீழ்ப்படியாதவர்களுமாய், வஞ்சிக்கப்பட்டவர்களுமாய், பலவிதமான இச்சைகளுக்கும் இன்பங்களுக்கும் அடிமைகளுமாய், துர்ப்புத்தியோடும் பொறாமையோடும் சீவனம்பண்ணுகிறவர்களுமாய், அருவருக்கப்படத்தக்கவர்களுமாய், ஒருவரை ஒருவர் பகைக்கிறவர்களுமாய் இருந்தோம்.

௪ ¶ நம்முடைய இரட்சகராகிய [2]பராபரனுடைய [3]தயையும் மனிதர்மேல் உள்ள அன்பும்* பிரசன்னமானபொழுது,

௫ நாம் செய்த [4]நீதிக்கேற்ற கிரியைகளின் நிமித்தமல்ல, [5]மறுபிறப்பாகிய முழுக்கினாலும் பரிசுத்தஆவி செய்கிற புதிதாக்குதலினாலுமே அவர் தமது சுய இரக்கத்தினாலே நம்மை இரட்சித்தார்.

௬ [6]தமது கிருபையினாலே நாம் நீதிமான்களாக்கப்பட்டு நித்திய சீவனைக்குறித்து உண்டாயிருந்த [7]நம்பிக்கையின்படி [8]சுதந்தரராகும்படிக்கு,

௭ அவர் நம்முடைய இரட்சகராகிய இயேசுக்கிறிஸ்துவின்மூலமாய் அந்தப் பரிசுத்தஆவியை [9]நமக்குச் சம்பூரணமாய்† கொடுத்தருளினார்.

௮ [10]இந்த வார்த்தை உண்மையுள்ளது; பராபரனிடத்தில் விசுவாசமானவர்கள் [11]நற்கிரியைகளைச் செய்ய எச்சரிக்கையாய் இருக்கும்படிக்கு, நீ அந்தச் (சுதந்தரரைக்) குறித்துக் கெட்டியாய்ப் போதிக்கவேண்டுமென்று விரும்புகிறேன்; இவைகளே நன்மையானவைகளாயும் மனிதருக்குப் பிரயோசனமானவைகளாயும் இருக்கின்றன.

௯ [12]புத்தியீனமான தருக்கங்களும், வம்சவரிசைகளை ஆராய்தலும், வாக்குவாதங்களும், நியாயப்பிரமாணத்தைக்குறித்து உண்டாகிற சண்டைகளும், அபிரயோசனமும் [13]அபத்தமுமுள்ளவைகள்; ஆகையால் அவைகளுக்கு இடங்கொடாதிருப்பாயாக.

௰ சத்தியத்தைப் புரட்டுகிறவனாயிருக்கிற ஒருவனுக்கு [14]நீ இரண்டொருதரம் புத்திசொன்னபின்பு, (அவன்செவிகொடாவிட்டால்) [15]அவனைவிட்டு விலகுவாயாக.

௰௧ அப்படிப்பட்டவன் தாறுமாறுபட்டு, தன்னிலே [16]ஆக்கினைத்தீர்ப்புள்ளவனாய்ப் பாவம்செய்கிறவன் என்று அறிந்துகொள்வாயாக.

௰௨ நான் அர்த்தேமாவை அல்லது [17]தீகிக்குவை உன்னிடத்தில் அனுப்பும்பொழுது நீ சாக்கிரதையாய் நிக்கோப்போலி ஊருக்கு என்னிடத்தில் வருவாயாக; மாரிகாலத்திலே அங்கே தங்க யோசனையாய் இருக்கிறேன்.

௰௩ நியாயசாஸ்திரியாகிய சேனாவும் [18]அப்பொல்லோவும்பிரயாணமாய் வரும்பொழுது, அவர்களுக்குக் குறைச்சல் ஒன்றும் இராதபடிக்கு விசாரித்துச் சாக்கிரதையாய் அவர்களை அனுப்பிவிடுவாயாக.

௰௪ (கிரேத்தைத் தீவிலே) நம்மைச் சேர்ந்தவர்களும் [19]கனியற்றவர்களாயிராமல் குறைச்சல்களை நீக்குதற்கு ஏற்ற [20]நல்ல தொழில்களை நடத்திக்கொள்ளப்‡ படிக்கக்கடவர்கள்.

௰௫ என்னோடிருக்கிற யாவரும் உனக்கு வாழ்த்துதல் செய்கிறார்கள்; விசுவாசத்தைப் பற்றிக்கொண்டு நம்மைச் சிநேகிக்கிறவர்களுக்கு நான் வாழ்த்துதல் செய்கிறேன்; கிருபை உங்கள் அனைவரோடுங்கூட இருக்கக்கடவது.—ஆமென்.

கி. பி. ௬௫.

1 ௧ கொரி. ௬. ௰௧. எபே. ௨. ௧. கொலோ. ௩: ௨௧: ௬. ௭. ௧ பே. ௪. ௩.
2 ௧ தீமோ. ௨. ௩.
3 தீத். ௨. ௰௧.
* அல்லது இரக்கமும்.
4 ரோ. ௩. ௨௰: ௯. ௰௧: ௰௧. ௬. கலா. ௨. ௰௬. எபே. ௨. ௮, ௯. ௨ தீமோ. ௧. ௯.
5 யோவா. ௩. ௩, ௫. எபே. ௫. ௨௬. ௧ பே. ௩. ௨௧.
6 ரோ. ௩. ௨௪. கலா. ௨. ௰௬. தீத். ௨. ௰௧.
7 தீத். ௧. ௨.
8 ரோ. ௮. ௨௩, ௨௪.
9 எசே. ௩௬. ௨௫. யோவே. ௨. ௨௮. யோவா. ௭. ௩௮. அப். ௨. ௩௩: ௰௪. ௨௫. ரோ. ௫. ௫.
† அல்லது செல்வமாய்.
10 ௧ தீமோ. ௧. ௰௫. தீத். ௧. ௯.
11 ௩, ௰௪. வ௪. தீத். ௨. ௰௪.
12 ௧ தீமோ. ௧. ௪. ௨ தீமோ. ௨. ௨௩. தீத். ௧. ௰௪.
13 ௨ தீமோ. ௨. ௰௪.
14 ௨ கொரி. ௰௩. ௨.
15 மத். ௰௮ ௰௭. ரோ. ௰௬ ௰௭. ௨ தெச. ௩. ௬, ௰௪. ௨ தீமோ. ௩. ௫. ௨ யோ. ௰.
16 அப். ௰௩. ௪௬.
17 அப். ௨௰. ௪. ௨ தீமோ. ௪. ௰௨.
18 அப். ௰௮. ௨௪.
19 ரோ. ௰௫. ௨௮. பிலி. ௧. ௰௧: ௪. ௰௭. கொலோ. ௧. ௰. ௨ பே. ௧. ௮.
20 ௮. ௰௪.
‡ அல்லது நல்ல வேலைகளைச்செய்ய.

Digitized by Google

# PHILEMON.

அப்போஸ்தலனாகிய பவுல்

# பிலேமோனுக்கு எழுதின

## நிருபம்.

க. பிலேமோனுடைய விசுவாசத்தையும் அன்பையுங்குறித்துச் சந்தோஷப்பட்டு, ங. அவன் தன் ஊழியக்காரனாகிய ஒநேசிமுவை மன்னித்து அன்பாய் ஏற்றுக்கொள்ளும்படி அவனை வேண்டிக்கொண்டது.

கி. பி. சுச.

கிறிஸ்து இயேசுவின் நிமித்தம் [1]கட்டப்பட்டிருக்கிறவனாகிய பவுலும், சகோதரனாகிய தீமோத்தேயுவும், எங்களுக்குப் பிரியனுமாய் [2]உடன்வேலையாளுமாய் இருக்கிற பிலேமோனுக்கும், எங்களுக்குப் பிரியமான அப்பியாளுக்கும்,

உ [3]எங்களுடனேகூடப் போர்ச்சேவகனாகிய [4]அர்க்கிப்புக்கும், [5]உமது வீட்டிலே கூடிவருகிற சபைக்கும் எழுதுகிறதாவது:

ங நம்முடைய பிதாவாகிய பராபரனாலும், கர்த்தராகிய இயேசுக்கிறிஸ்துவினாலும் உங்களுக்குக் [6]கிருபையும், சமாதானமும் உண்டாகக்கடவது.

ச ¶ கர்த்தராகிய இயேசுவின்மேலும், எல்லாப் பரிசுத்தவான்கள்மேலும் உள்ள உம்முடைய [7]அன்பையும் உமது விசுவாசத்தையும் நான் கேள்விப்பட்டு,

ரு என் செபங்களில் உம்மை நினைத்துக்கொண்டு எப்பொழுதும் [8]என் பராபரனுக்குத் தோத்திரஞ்செய்து,

சா உங்களிலுள்ள சகலவித நன்மைகளையும் (மற்றவர்களும்) [9]அறிந்துகொள்ளுகிறதினாலே உமது விசுவாசத்திற்குரிய தருமகுணம் கிறிஸ்து இயேசுவுக்காகப் பெலனைக் காண்பிக்கவேண்டுமென்று வேண்டிக்கொள்ளுகிறேன்.

எ சகோதரனே, பரிசுத்தவான்களுடைய இருதயங்கள் உம்மாலே [10]சவுக்கியப்பட்டதால் உம்முடைய அன்பினாலே மிகுந்த சந்தோஷமும் ஆறுதலும் அடைந்திருக்கிறோம்.

அ ¶ ஆகையால் விருத்தாப்பியமுள்ளவனுமாய் இயேசுக்கிறிஸ்துவின்நிமித்தம் இப்பொழுது [11]கட்டப்பட்டவனுமாயிருக்கிற பவுலாகிய நான்,

கூ தகுதியான காரியத்தைக்குறித்து உமக்குக் கட்டளையிடும்படிக்குக் கிறிஸ்துவினாலே மிகுந்த [12]தயிரியமுள்ளவனாயிருந்தும், (அப்படிச்செய்யாமல்) அன்பினாலே உம்மை வேண்டிக்கொள்ளுகிறேன்.

ய என்னவென்றால், [13]நான் கட்டப்பட்டிருக்கையில் பெற்றவனையும்,

யக முன்னே உமக்குப் பிரயோசனமில்லாதவனையும், இப்பொழுது உமக்கும் எனக்கும் நல்ல

1 எபே. ங.க: ச. க. உ தீமோ.க. அ, கூ. வச.
2 பிலி. உ. உரு.
3 பிலி. உ. உரு.
4 கொலோ. ச. யஎ.
5 உரோ. யசா. ரு. க கொரி. யசா. யகூ.
6 எபே. க. உ.
7 எபே. க. யரு. கொலோ. க. ச.
8 எபே. க. யசா. க தெச. க. உ. உ தெச.க.ங.
9 பிலி. க.கூ, யக.
10 உ கொரி. எ. யங. உ தீமோ. க.யசா. உய. வச.
11 க. வச.
12 க தெச. உ. சா.
13 க கொரி. ச. யரு. கலா. ச. யகூ.

Digitized by Google

பிரயோசனமுள்ளவனாயும் இருக்கிற என் மகனாகிய [1]ஒனேசிமுக்காகவே உம்மை வேண்டிக்கொள்ளுகிறேன்; அவனைத் திரும்ப அனுப்பினேன்.

௧௨ அவனை நீர் என் உள்ளம்போல ஏற்றுக்கொள்வீராக.

௧௩ சுவிசேஷத்தினிமித்தம் கட்டப்பட்டிருக்கிற எனக்கு ஊழியஞ்செய்யும்படிக்கு உமக்குப் [2]பதிலாக அவனை என்னிடத்தில் வைத்துக்கொள்ளவேண்டும் என்று இருந்தேன்.

௧௪ ஆனாலும் [3]உம்முடைய நன்மை கட்டாயத்தினால் அல்ல, மனப்பூர்வத்தால் இருக்கத்தக்கதாக நான் உமது சம்மதியில்லாமல் ஒன்றும் செய்ய மனதில்லை.

௧௫ இனிமேல் அவன் உமக்கு அடிமையானவனாக அல்ல, அடிமையானவனுக்கு மேலாகப் [4]பிரியமான சகோதரனாகவும், என்றென்றைக்கும் உம்முடையவனாகவும் இருக்கும்படிக்கு,

௧௬ [5]அவன் கொஞ்சக்காலமாய் உம்மைவிட்டுப் பிரிக்கப்பட்டான் என்று தோன்றுகின்றது; எனக்கும் அவன் பிரியமான சகோதரன்தான்; உமக்குச் [6]சரீரத்தின்படியேயும் கர்த்தர்நிமித்தமும் மிகவும் அதிகமாய் அப்படி இருக்கிறான் அல்லவா?

௧௭ ஆதலால் [7]நீர் என்னை உமக்கு ஐக்கமானவன் என்று எண்ணினால், அவனை என்னைப்போல ஏற்றுக்கொள்ளவேண்டும்.

௧௮ அவன் உமக்கு யாதொரு அநியாயஞ்செய்ததும் அல்லது கடன்பட்டதும் உண்டானால், அதை என் கணக்கிலே எழுதுவீராக.

௧௯ பவுலாகிய நான் என் கையெழுத்துப்போட்டேன்; நானே செலுத்தித் தீர்ப்பேன், நீர் உம்மைத்தாமே எனக்குக் கடனாகச் செலுத்தவேண்டும் என்று நான் உமக்குச் சொல்லாதபடிக்கு அப்படிச் செய்கிறேன்.

௨௰ ஆ என் சகோதரனே, கர்த்தர்நிமித்தம் உம்மாலே இந்தப் பிரயோசனம் எனக்கு உண்டாகக்கடவது; [8]கர்த்தர்நிமித்தம் என் இருதயத்தை ஆறுதல் செய்வீராக.

௨௧ [9]நீர் கீழ்ப்படிவீரென்று நான் நிச்சயமாய் அறிந்து, இப்படி உமக்கு எழுதினேன்; நான் கேட்டதற்கு மேலாகவும் செய்வீரென்றும் அறிந்திருக்கிறேன்.

௨௨ அல்லாமலும் [10]உங்கள் விண்ணப்பங்களினாலே [11]உங்களுக்குத் (திரும்பக்) கொடுக்கப்படுவேன் என்று நான் நம்பியிருக்கிறபடியால், நான் இருக்கும்படிக்கு ஓரிடத்தை எனக்காக எத்தனம் பண்ணுவீராக.

௨௩ ¶ கிறிஸ்து இயேசுவினிமித்தம் என்னோடேகூடக் காவலில் வைக்கப்பட்டிருக்கிற [12]எப்பாப்பிராவும்,

௨௪ என் உடன்வேலையாட்களாகிய [13]மாற்குவும், [14]அரிஸ்தர்குவும், [15]தேமாவும், [16]லூக்காவும் உமக்கு வாழ்த்துதல்செய்கிறார்கள்.

௨௫ [17]நம்முடைய கர்த்தராகிய இயேசுக்கிறிஸ்துவின் கிருபை உங்கள் ஆவியுடனே இருக்கக்கடவது.—ஆமென்.

கி. பி. ௬௪.

1 கொலோ. ௪. ௯.
2 ௧ கொரி. ௰௬. ௰௭. பிலி. ௨. ௩௰.
3 ௨ கொரி. ௯. ௭.
4 மத். ௨௩. ௮. ௧ தீமோ. ௬. ௨.
5 ௧ மோ. ௪௫. ௫, ௮.
6 கொலோ. ௩. ௨௨.
7 ௨ கொரி. ௮. ௨௩.
8 ௭. ௨௪.
9 ௨ கொரி. ௭. ௰௬.
10 ௨ கொரி. ௧. ௰௧.
11 பிலி. ௧. ௨௫: ௨. ௨௪.
12 கொலோ. ௧. ௭: ௪. ௰௨.
13 அப். ௰௨. ௰௨, ௨௫.
14 அப். ௰௯. ௨௯: ௨௭. ௨. கொலோ. ௪. ௰.
15 கொலோ. ௪. ௰௪.
16 ௨ தீமோ. ௪. ௰௧.
17 ௨ தீமோ. ௪. ௨௨.

Digitized by Google

HEBREWS.

அப்போஸ்தலனாகிய பவுல்

# எபிரேயருக்கு எழுதின

## நிருபம்.

### க. அதிகாரம்.

க. இக்கடைசிநாள்களில் பிதாவிலிருந்து நம்மிடத்திற்கு வந்த கிறிஸ்து, ச. தன்மையிலும் செய்கையிலும் தேவதூதர்களைப்பார்க்கிலும் சிறந்தவர் என்று சொல்லியது.

பூர்வீகத்திலே பலகாலங்களிலும் [1]பலவிதமாய்ப் பராபரன் (நம்முடைய) முன்னோர்களுடனே தீர்க்கதரிசிகளின் மூலமாய்த் திருவுளம்பற்றினதும் அன்றி,

உ [2]இந்தக் கடைசிக் காலத்திலே குமாரன்மூலமாய் நம்முடனே [3]திருவுளம்பற்றினார்; [4]அவரைச் சகலத்திற்கும் சுதந்தரவாளியாக வைத்தார்; [5]அவராலே உலகங்களையும் உண்டாக்கினார்.

௩ [6]அவர் பராபரனுடைய மகிமையின் பிரகாசமாயும், அவருடைய தன்மையின் சொரூபமாயும், [7]எல்லாவற்றையும்தமது வல்லமையுள்ள வசனத்தினாலே தாங்குகிறவராயும் இருந்து, [8]பின்பு தம்மாலேதாமே நம்முடைய பாவங்களை நிவிர்த்திசெய்து, [9]உன்னதத்திலுள்ள மகத்துவருடைய வலதுபாரிசத்திலே வீற்றிருக்கிறார்.

௪ இப்படி அவர் தேவதூதரிலும் [10]அதிக விசேஷமாகச் சுதந்தரித்துக்கொண்ட நாமம் எவ்வளவோ, அவ்வளவு அதிகமாய் அவர்களிலும் மேன்மையுள்ளவராயிருக்கிறார்.

௫ ¶ எப்படியெனில் [11]நீர் என்னுடைய குமாரன் என்றும், இன்று நான் உம்மைச் செனிப்பித்தேன் என்றும், [12]அவருக்குப் பிதாவாயிருப்பேன், அவர் எனக்குக் குமாரனாயிருப்பார் என்றும் பராபரன் ஒருகாலத்திலாகிலும் தூதர்களில் ஒருவனுக்குச் சொன்னாரா?

௬ மறுபடியும் [13]தமது முதற்பேறானவரை இவ்வுலகத்தில்* பிரவேசிக்கச் செய்தபொழுது, [14]தேவதூதர் யாவரும் அவரைத் தொழுதுகொள்ளக்கடவர்கள் என்றார்.

எ அன்றியும் தேவதூதரைக்குறித்துச் † சொல்லியிருக்கிறதாவது: [15]தம்முடைய தூதர்களைக் காற்றுக்களாகவும், தம்முடைய ஊழியக்காரரை அக்கினிச்சுவாலைகளாகவும் செய்தாரென்று சொல்லியிருக்கிறது.

அ குமாரனைக்குறித்து எப்படிச் சொல்லியிருக்கிறதென்றால்; பராபரனே, [16]உமது சிங்காசனம்

கி. பி. சுச.

1 ச மோ. ம௨. க, அ.
2 இ மோ. ச. கம. கலா. ச. ச. எபே. க. ம.
3 யோவா. க. மஎ: மஇ. மஇ. எபி. உ. க.
4 சங். உ. அ. மத். உக. கஅ: உஅ. மஅ. யோவா. க. கஇ. உரோ. அ. மஎ.
5 யோவா. க. க. க கொரி. அ. க. கொலோ. க. மக.
6 யோவா. க. மச: மச. க. உ கொரி. ச. ச. கொலோ. க. மஇ.
7 யோவா. க. ச. கொலோ. க. மஎ. வெளி. ச. மக.
8 எபி. எ. உஎ: க. ம௨, மச, உக.
9 சங். சம. க. எபே. க. உம. எபி. அ. க: ம. ம௨: ம௨. உ. க பே. க. உ௨.
10 எபே. க. உக. பிலி. உ. க, ம.

11 சங்.உ.எ. அப்.மக.கக. எபி.இ.இ.—12 உசாமு.எ.மச. கநாள.உஉ.ம: உஅ.க. சங்.அக.உக,உஎ.—13 உரோ. அ.உக. கொலோ. க. மஅ. வெளி. க. இ.—* அல்லது தமது முதற்பேறானவரை இவ்வுலகத்தில் மறுபடியும்.—14 இ மோ. கஉ. சக. சங்.கஎ.எ. க பே க.உஉ.—† கிரேக்கு, தேவதூதருக்கு.—15 சங்.கசச.ச.—16 சங்.சரு.க,எ.

Digitized by Google

என்றென்றைக்கும் உள்ளதாயிருக்கும்; உம்முடைய இராச்சியத்திலுள்ள, செங்கோல் செம்மையான* செங்கோலாயிருக்கின்றது.

கூ நீதியில் அன்புகூர்ந்து அக்கிரமத்தைப் பகைத்திருக்கிறீர்; ஆதலால் பராபரனே உம்முடைய பராபரன் உம்முடைய தோழரிலும் உம்மை [1]மகிழ்ச்சி என்னும் எண்ணெயினாலே அபிஷேகம் பண்ணினார் என்றும்,

ய [2]கர்த்தாவே, ஆதியிலே நீர் பூமியை அஸ்திபாரப்படுத்தினீர்; வானங்கள் உம்முடைய கைகளின் கிரியைகளாயிருக்கின்றன.

யக [3]அவைகள் அழிந்துபோம்; நீர்மாத்திரம் நிலைநிற்பீர்; அவைகளெல்லாம் வஸ்திரம்போலப் பழமையாய்ப்போம்.

யஉ ஒரு சால்வையைப்போல அவைகளைச் சுருட்டுவீர்; அப்பொழுது மாறிப்போம்; நீர்மாத்திரம் (எப்பொழுதும்) ஒரேவிதமாய் இருப்பீர்; உம்முடைய ஆண்டுகள் முடிந்துபோவதில்லை என்றும் சொல்லியிருக்கின்றது.

யங ¶ மேலும் நான் உம்முடைய சத்துருக்களை உம்முடைய பாதப்படியாக்கிப்போடுமளவும் [4]என் வலதுபாரிசத்தில் உளுக்காரும் என்று இப்படி அவர் ஒருகாலத்திலாகிலும் தூதர்களில் ஒருவனுக்குச் சொன்னாரா?

யச [5]இரட்சிப்பைச் சுதந்தரிப்பவர்களுக்கு ஊழியம்செய்யும்படிக்கு அவர்களெல்லாரும், [6]அனுப்பப்படுகிற பணிவிடை ஆவிகளாய் இருக்கிறார்களல்லவா?

## உ. அதிகாரம்.

க. நாம் கிறிஸ்து இயேசுவுக்குக் கீழ்ப்படியவேண்டுமென்றும், ஙி. அதற்கு அவர் நம்முடைய சுபாவத்தை, யச. வேண்டியபடி ஏற்றுக்கொண்டாரென்றும் காட்டியது.

ஆகையால், நாம் கேட்டறிந்தவைகளை விட்டுவிலகாதபடிக்கு † அதிக எச்சரிக்கையாயிருக்கவேண்டும்.

உ என்னத்தினாலெனில், [7]தேவதூதரால் சொல்லப்பட்ட வசனத்திற்கு விரோதமான [8]எந்தச் செய்கைக்கும், கீழ்ப்படியாமைக்கும் நீதியான தண்டனை வரத்தக்கதாக அவர்களுடைய வசனம் உறுதிப்பட்டிருந்ததாயிருக்க,

ங முதலாவது [9]கர்த்தராலே அறிவிக்கப்பட்டுப் பின்பு [10]அவரிடத்தில் கேட்டவர்களால் நமக்கு உறுதியாக்கப்பட்டதுமாய்,

ச [11]அடையாளங்களினாலும் அற்புதங்களினாலும் பலவிதமான பலத்த செய்கையினாலும், [12]பரிசுத்தஆவியைத்தம்முடைய சித்தத்தின்படி (நமக்குப்) [13]பகிர்ந்து கொடுத்ததினாலும் ‡ [14]பராபரன் சாட்சிகொடுக்கப்பட்டதுமாய் இருக்கிற இவ்வளவு பெரிதான இரட்சிப்பைக்குறித்து நாம் கவலையில்லாமல்போனால் (தண்டனைக்கு) [15]எப்படித் தப்பிப்போவோம்?

ரு ¶ அன்றியும் [16]இனிமேல் வரும் உலகத்தைக்குறித்துப் பேசுகிறோமே, அதை அவர் தூதர்களுக்குக் கீழ்ப்படுத்தவில்லை; ஒரு இடத்திலே ஒருவன் சாட்சியாகச் சொன்னது:

சு மனிதனை நீர் நினைத்துக்கொள்ளுகிறதற்கும், அல்லது மனிதனுடைய புத்திரனை நீர் விசாரித்துக்கொள்ளுதற்கும் [17]அவன் எம்மாத்திரம்.

எ கொஞ்சக்காலமாய் § அவனைத் தேவதூதரிலும் சிறியவன் ஆக்கினீர்; பின்பு மகிமையோடும் கனத்தோடும் அவனுக்குமுடிசூட்டி, உம்முடைய கைகளின் கிரியைகளுக்கு அதிகாரியாக வைத்

---

கி. பி. சுசு.

* அல்லது நீதியின்.

1 ஏசா. கக. க. அப். ச. உஎ: ய. ஆ.

2 சங். ஈஉ. உகூ.

3 ஏசா. கச. ச: கூக. கமத். உச. கூகு. உ பே. க. எ, ய. வெளி. உக. க.

4 சங். ஈய. க. மத். உஉ. சச. மாற். யஉ. கக. லூக். உய. சஉ. எபி. ய. யஉ. க. வச.

5 உரோ. அ. யஎ. தீத். க. எ. யாக். உ. கூ. க பே. க. எ.

6 க மோ. யக. யசு: கஉ. க, உ, உச. சங். கச. எ: கூக. யக: ஈக. யய, உக. தானி. க. உஅ: எ. ய: ய. யக. மத். ய அ. ய. லூக். க. யகூ: உ. கூ, யக. அப். யஉ. எ. ழு: உஎ. உக.

† கிரேக்கு, ஒட்டைபுள்ள பாத்திரங்களைப் போல ஒழுகிப்போகாதபடிக்கு.

7 உ மோ. கக. உ. சங். சுஅ. யஎ. அப். எ. ஙிக. கலா. க. யக.

8 ச மோ. யகூ. கய, கக. உ மோ. ச. க: யஎ. உ, உ. யஉ: உஎ. உகூ.

9 மத். ச. யஎ. மாற். க. யச. எபி. க. உ.

10 லூக். க. உ.

11 அப். உ. உஉ, சங.

12 எபே. க. கூ, கூ.

13 க கொரி. யஉ. ச, எ, யக.

‡ அல்லது ஈந்ததினாலும்.

14 மாற். யசு. உய. அப். யச. ங: யசு. யக. உரோ. யகூ. ய அ, யகூ. க கொரி. உ. ச.—15 எபி. ய. உகூ. உக: யஉ. உகூ.
16 எபி. க. கூ. உ பே. க. யங.—17 யோபு. எ. யஎ. சங். அ. ச. ழு: ஈசச. ங.—§ அல்லது கொஞ்சம்.

Digitized by Google

துச் சகலத்தையும் அவனுடைய பாதங்களுக்குக் கீழ்ப்படுத்தினீர் என்றான்.

௮ இந்தப்படி அவர் [1]சகலத்தையும் அவனுக்குக் கீழ்ப்படுத்துகையில் அவனுக்குக் கீழ்ப்பட்டிராத படிக்குத் தாம் ஒரு பொருளையும் வைத்துக்கொள்ளவில்லை; [2]இப்பொழுது சகலமும் அவனுக்குக் கீழ்ப்படக் காணோம்.

௯ இயேசுவானவர்மாத்திரம் பராபரனுடைய கிருபையினாலே [3]யாவருக்காகவும் மரணத்தை அநுபவிக்கும்பொருட்டாகக்* கொஞ்சக்காலமாய்த் [4]தேவதூதரிலும் சிறியவர் ஆக்கப்பட்டுப் பின்பு மரணத்தைச் சகித்ததினாலே [5]மகிமையோடும் கனத்தோடும் முடிசூட்டப்படக் காண்கிறோம்.

௰ மேலும் [6]தமக்காகச் சகலத்தையும் உண்டாக்கினவர் அநேகம் பிள்ளைகளை மகிமையில் கொண்டுபோகையில் [7]அவர்களுக்கு இரட்சண்ணியத்தை உண்டாக்கின அதிபதியை [8]உபத்திரவங்களின் வழியாய்த் தேறினவர் ஆக்குகிறது [9]அவருக்குத் தகுதியாயிருந்தது.

௰௧ ¶ எப்படியெனில் [10]பரிசுத்தம்செய்கிறவரும் பரிசுத்தம்செய்யப்படுகிறவர்களுமாகிய யாவரும் [11]ஒருவரிலிருந்து வருகிறார்கள்; அதினாலேதானே [12]அவர்களைச் சகோதரரென்று அழைக்க வெட்கப்படாமல்,

௰௨ [13]உம்முடைய நாமத்தை என் சகோதரருக்கு அறிவித்துச் சபையாருக்குள்ளே உமக்குத் துதியாகப் பாடுவேன் என்றும், [14]நான் அவரிடத்தில் நம்பிக்கையாயிருப்பேன் என்றும்,

௰௩ இதோ, [15]நானும் [16]பராபரன் எனக்குக் கொடுத்த பிள்ளைகளும் என்றும் சொல்லியிருக்கிறார்.

௰௪ ஆனதால் பிள்ளைகள் மாம்ச இரத்ததேகமுள்ளவர்களாயிருக்க [17]அவரும் மரணத்தை வருவிக்க வல்லமையுடையவனாகிய பசாசானவனைத் (தமது) மரணத்தினாலே அழிக்கும்படிக்கும்,

௰௫ சீவகாலமளவும் [18]மரணத்திற்குப் பயந்து அடிமையாயிருந்த யாவரையும் விடுதலைபண்ணும்படிக்கும் [19]அவர்களைப்போல மாம்ச இரத்ததேகமுள்ளவரானார்.

௰௬ ஆதலால் அவர் தேவதூதரின் சுபாவத்தை எடுத்துக்கொள்ளாமல், ஆபிரகாமின் சந்ததியிலே (மனித சுபாவத்தை) எடுத்திருக்கிறார்.†

௰௭ அன்றியும் அவர் (தம்முடைய) சனங்களின் [20]பாவங்களை நிவிர்த்திசெய்வதற்கு ஏதுவாக இரக்கமுள்ளவராயும், பராபரனுக்கு உரியவைகளைக்குறித்து உண்மையான பிரதான ஆசாரியராயும் இருக்கும்படிக்கு [21]எவ்விதத்திலும் (தம்முடைய) சகோதரருக்கு ஒப்பாகவேண்டியதாய் இருந்தது.

௰௮ ஆதலால் [22]அவர் தாமே சோதிக்கப்பட்டுப் பாடு அநுபவித்ததினாலே, சோதிக்கப்படுகிறவர்களுக்குச் சகாயஞ்செய்யத் திராணியுள்ளவராய் இருக்கிறார்.

## ௩. அதிகாரம்.

௧. மோசேயிலும் கிறிஸ்து அதிக மகிமையுள்ளவராகையால், ௭. அவரை நாம் விசுவாசியாவிடில், கடின நெஞ்சுள்ள இஸ்ரவேலரைப்பார்க்கிலும் அதிக ஆக்கினைக்குப் பங்குள்ளவர்களாய் இருப்போமென்று சொல்லியது.

இப்படியிருக்கப் பரம [23]அழைப்பை அடைந்தவர்களாகிய பரிசுத்த சகோதரரே, நாம் அறிக்கைபண்ணுகிற [24]அப்போஸ்தலருமாய்ப் பிரதான ஆசாரியருமாய் இருக்கிற கிறிஸ்து இயேசுவை உற்றுப் பாருங்கள்.

கி. பி. ௬௪.

1 மத். ௨௮. ௰௮. ௧ கொரி. ௰௫. ௨௭. எபே. ௧. ௨௨. எபி ௧. ௰௩.
2 ௧ கொரி. ௰௫. ௨௫.
3 யோவா. ௧. ௰௪: ௰. ௧௧. உரோ. ௫. ௰௮: ௮. ௩௨. ௨ கொரி. ௫. ௰௫. ௧ தீமோ. ௨. ௬. ௧ யோ. ௨. ௨. வெளி. ௫. ௯.
* அல்லது அநுபவித்ததினாலே.
4 பிலி. ௨. ௭, ௮, ௯.
5 அப். ௨. ௩௩.
6 உரோ. ௰௧. ௩௬.
7 அப். ௩. ௰௫: ௫. ௩௧. எபி. ௰௨. ௨.
8 லூக். ௰௩. ௩௨. எபி. ௫. ௯.
9 லூக். ௨௪. ௪௬.
10 எபி. ௰. ௰, ௰௪.
11 அப். ௰௭. ௨௬.
12 மத். ௨௮. ௰. யோவா. ௨௰. ௰௭. உரோ. ௮. ௨௯.
13 சங். ௨௨. ௨௨, ௨௫.
14 சங். ௰௮. ௨. ஏசா. ௰௨. ௨.
15 ஏசா. ௮. ௰௮.
16 யோவா. ௰. ௨௯: ௰௭. ௬, ௯, ௰௧, ௰௨.
17 ௧ கொரி. ௰௫. ௫௪, ௫௫. கொலோ. ௨. ௰௫. ௨ தீமோ. ௧. ௰.
18 லூக். ௧. ௭௪. உரோ. ௮. ௰௫. ௨ தீமோ. ௧. ௭.
19 யோவா. ௧. ௰௪. உரோ. ௮. ௩. பிலி. ௨. ௭.
† கிரேக்கு, அவர் தேவதூதரில் எடுத்துக்கொள்ளாமல் ஆபிரகாமின் வித்தில் எடுத்திருக்கிறார்.

20 பிலி. ௨. ௭. — 21 எபி. ௪. ௰௫: ௫. ௧, ௨. — 22 எபி. ௪. ௰௫, ௰௬: ௫. ௨: ௭. ௨௫. — 23 உரோ. ௧. ௭. ௧ கொரி. ௧. ௨. எபே. ௪. ௧. பிலி. ௩. ௰௪. ௨ தெச. ௧. ௰௧. ௨ தீமோ. ௧. ௯. ௨ பே. ௧. ௰. — 24 உரோ. ௰௫. ௮. எபி. ௨. ௰௭: ௪. ௰௪: ௫. ௫: ௬. ௨௰: ௮. ௧: ௯. ௰௧: ௰. ௨௧.

Digitized by Google

உ [1]மோசே என்பவன் தேவ ஆலயமெங்கும் உண்மையாயிருந்ததுபோல, அவரும் தம்மை ஏற்படுத்தினவருக்கு* உண்மையுள்ளவராய் இருந்தார்.

௩ ¶ எந்த ஆலயமும் மனிதனாலே உண்டாக்கப்பட்டிருக்கின்றது, [2]பராபரன் சகலத்தையும் உண்டாக்கினவர்.

ச ஆகையால் ஆலயத்திலும் [3]ஆலயத்தை உண்டாக்கினவருக்கு உண்டாயிருக்கிற கனம் எவ்வளவோ, அவ்வளவாய் மோசேயிலும் இயேசுவானவர் அதிக மகிமைக்குப் பாத்திரராய் இருக்கிறார்.

ரு ¶ அந்தப்படி [4]சொல்லவேண்டியிருந்தவைகளுக்குச் சாட்சியாக [5]மோசே ஊழியக்காரனாய் [6]அவருடைய ஆலயம் எங்கும் உண்மையுள்ளவனாய் இருந்தான்.

சு ஆகிலும் [7]கிறிஸ்துவானவர் அவருடைய ஆலயத்திற்கு மேலான குமாரனாய் (உண்மையாய்) இருக்கிறார்; (நித்திய சீவன்மேலுள்ள) நம்பிக்கைக்கு ஏற்ற தயிரியத்தையும் மேன்மைபாராட்டலையும் [8]முடிவுபரியந்தம் உறுதியாய்ப் பற்றிக்கொண்டால், [9]நாமே அவருடைய ஆலயமாய் இருப்போம்.

எ ¶ ஆகையால் [10]பரிசுத்தஆவியானவர் சொல்லுகிறபடியே, [11]இன்று நீங்கள் அவருடைய சத்தத்தைக் கேட்கையில், வனாந்தரத்திலே,

அ உங்கள் முன்னோர்கள் என்னைச் சோதித்து எனக்குக் கோபம் மூட்டின நாளிலே நடந்ததுபோல,

௯ உங்கள் இருதயங்களைக் கடினப்படுத்தாதிருங்கள்; அவர்கள் நாற்பது வருஷமாய் என்னுடைய கிரியைகளைக் கண்டிருந்தும் என்னைச் சோதித்து என்னை நிதானித்தார்கள்.

ய ஆனதால் நான் அந்தச் சந்ததியை அரோசித்து, அவர்கள் எப்பொழுதும் வழிதப்பி நடக்கிற மனதுள்ளவர்களாய் என்னுடைய நெறிகளை அறியாதிருக்கிறார்கள் என்று சொல்லி,

யக இளைப்பாறுதற்கான என்னுடைய இடத்தில் அவர்கள் பிரவேசியாமல் இருக்கக்கடவர்கள் என்று† எனது கோபத்தினால் ஆணையிட்டேன் என்றார்.

யஉ அந்தப்படி சகோதரரே, சீவனையுடைய பராபரனைவிட்டு விலகுதற்கு ஏதுவான அவிசுவாசமுள்ள பொல்லாத இருதயம் உங்களில் ஒருவனிடத்திலும் இராதபடிக்கு நீங்கள் எச்சரிக்கையாயிருந்து,

ய௩ உங்களில் ஒருவனாகிலும் பாவத்தின் வஞ்சனையினாலே கடினப்பட்டுப் போகாதபடிக்கு, இன்று என்னப்படுமளவும் ஒருவருக்கொருவர் நாடோறும் புத்தி சொல்லி வருவீர்களாக.

யச நாம் நம்பிக்கையை அடைந்ததுமுதல் [12]முடிவுபரியந்தம் அதை உறுதியாய்ப் பற்றிக்கொண்டால் நாம் கிறிஸ்துவினிடத்தில் பங்குள்ளவர்களாய் இருப்போமே.

யரு இன்றைக்கு நீங்கள் அவருடைய சத்தத்தைக் கேட்கையில் கோபம் மூட்டுதலுள்ள நாளிலே நடந்ததுபோல உங்கள் இருதயங்களைக் கடினப்படுத்தாதிருங்கள் என்றுசொல்லியிருக்கிறபடியால், (அப்படியே பற்றிக்கொள்ளவேண்டும்).

யசு அதெப்படியெனில் [14]கேட்டவர்களில் சிலர் கோபமூட்டினார்கள், அப்படிச் செய்தவர்கள் மோசேயினாலே எகிப்திலிருந்து புறப்பட்ட யாவரும் அல்ல, மேலும் அவர் நாற்பதுவருஷமாய் எவர்களை அரோசித்தார்?

யஎ பாவம்செய்தவர்களை அல்லவா? [15]அவர்களுடைய சரீரங்கள் வனாந்தரத்திலே விழுந்துபோயின.

யஅ பின்னும் இளைப்பாறுதற்

1 ௪ மோ. ௰௨. ௭. ௯. ௨௪.
* இரேக்கு, உண்டாக்கினவருக்கு; ௧ சாமு. ௰௨. ௬.
2 எபே. ௨. ௰: ௩. ௯. எபி. ௧. ௨.
3 சகரி. ௬. ௰௨. மத். ௰௬. ௰௮.
4 இ மோ. ௰௮. ௰௫, ௰௮, ௰௯.
5 உ மோ. ௰௪. ௩௧. ௪ மோ. ௰௨. ௭. இ மோ. ௩. ௨௪. யோசு. ௧. ௨: அ. ௩௧.
6 உ. ௨௪.
7 எபி. ௧. ௨.
8 ௰௪. ௨௪. மத். ௰. ௨௨: ௨௪. ௰௩. உரோ. ௯. ௨. கொலோ. ௧. ௨௩. எபி. ௩. ௰௩: ௰. ௩௯.
9 ௧ கொரி. ௩. ௰௬: ௬. ௰௯. உ கொரி. ௬. ௰௬. எபே. ௨. ௨௧, ௨௨. ௧ திமோ. ௩. ௰௫. ௧ பே. ௨. ௫.
10 உ சாமு. ௨௩. ௨. அப். ௧. ௰௬.
11 ௯௫. சங்கீதம். சங். ௯௫. ௭.
† இரேக்கு, பிரவேசித்தால்.
12 ௬. ௨௪.
13 எ. ௨௪.
14 ௪ மோ. ௰௪. ௨, ௪, ௰௧: ௨௪. ௩௰. இ மோ. ௧. ௩௪, ௩௯, ௯௮.
15 ௪ மோ. ௰௪. ௨௨, ௨௯. ௩௨: ௨௬. ௬௫. சங். ௯௯. ௨௬. ௧ கொரி. ௰. ௫. யூதா. ௫.

Digitized by Google

கான என்னுடைய இடத்திலே பிரவேசியாதிருக்கக்கடவர்கள் என்று அவர் யாரைக்குறித்து [1]ஆணையிட்டார்? விசுவாசியாதவர்களைக்குறித்து அல்லவா?

௰௯ ஆனதால், அவிசுவாசத்தினாலே [2]அவர்கள் அதில் பிரவேசிக்கக்கூடாமல் போனார்கள் என்று பார்க்கிறோமே.

## ௪. அதிகாரம்.

*௧. விசுவாசத்தினால் கிறிஸ்தவர்களுக்கு இளைப்பாறுதல் உண்டென்றும், ௰௨. பராபரனுடைய வசனம் வல்லமையுள்ளதென்றும், ௰௪. பாவமில்லாமல் பலவீனங்களுக்குரிய தேவகுமாரனும், பிரதான ஆசாரியருமாகிய இயேசுவினால், ௰௬. நாம் கிருபாசனத்தண்டைக்குத் தயிரியத்தோடே சேரக்கூடுமென்றும் சொல்லியது.*

**ஆ**னபடியினாலே இளைப்பாறுதற்கான அவருடைய இடத்திலே பிரவேசிக்கும்படிக்கு ஏற்ற வாக்குத்தத்தம் பின்னும் நமக்கு உண்டாயிருக்க நம்மில் ஒருவனாகிலும் (அதை அடையாதபடி) தாமதமாயிருக்கிறவனாகத் தோன்றாதபடிக்குப் [3]பயந்திருக்கக்கடவோம்.

௨ எப்படியெனில் சுவிசேஷம் அவர்களுக்கு அறிவிக்கப்பட்டது போல, நமக்கும் அறிவிக்கப்பட்டது; அந்த வசனத்தைக் கேட்டும் அவர்களுக்குள்ளே விசுவாசம் இல்லாதபடியால்,* அந்தக் கேள்வி† அவர்களுக்குப் பிரயோசனமாய் இருக்கவில்லை.

௩ [4]விசுவாசிகளாகிய நாம் இளைப்பாறுதற்கான இடத்தில் பிரவேசிப்போம்; அதற்குத் திருட்டாந்தமாக உலகம் சிருட்டிக்கப்பட்டபொழுது தம்முடைய கிரியைகளைச் செய்து முடித்து இளைப்பாறினபின்பு அவர் சொன்னது: இளைப்பாறுதற்கான என்னுடைய இடத்திலே அவர்கள் பிரவேசிப்பதில்லை என்று [5]நான் ஆணையிட்டேன் என்று சொன்னார்.

௪ அதற்குத் திருட்டாந்தமாக ஓரிடத்திலே ஏழாம் நாளைக்குறித்துச் சொல்லியிருக்கிறது என்னவெனில், [6]பராபரன் ஏழாம்நாளிலே தம்முடைய கிரியைகளை எல்லாம் முடித்து, ஆசோதையாய் இருந்தார் என்று சொல்லியிருக்கிறது.

௫ மறுபடியும் மேற்சொல்லிய இடத்திலே அவர்கள் இளைப்பாறுதற்கான என்னுடைய இடத்தில் பிரவேசியாமலிருக்கக்கடவர்கள் என்றும் சொல்லியிருக்கிறார்.

௬ ஆகையால் பின்னும் சிலர் அதில் பிரவேசிக்கிறதற்கு ஏதுவுண்டாயிருந்தபடியினாலும், முதலாவது [7]சுவிசேஷத்தைக்‡ கேட்டவர்களும் அவிசுவாசத்தினாலே அதில் பிரவேசியாமல் போனபடியினாலும்,

௭ ¶ [8]இன்று அவருடைய சத்தத்தைக் கேட்கையில் உங்கள் இருதயங்களைக் கடினப்படுத்தாதிருங்கள் என்று அநேக காலத்திற்குப் பின்பு தாவீதின் புத்தகத்திலே சொல்லியிருக்கிறபடி, இன்றைக்கு என்பதினாலே (பராபரன்) பின்னும் ஒருநாளைக் குறித்திருக்கிறார்.

௮ யோசுவா§ என்பவன் அவர்களை இளைப்பாறச்செய்தானானால் பின்பு அவர் வேறொரு நாளைக்குறித்துப் பேசமாட்டாரே.

௯ ஆனபடியால், இளைப்பாறும்படிக்கான காலம்|| பின்னும் பராபரனுடைய சனங்களுக்கு வருகிறதாயிருக்கின்றது.

௰ அந்தப்படி பராபரன் தம்முடைய கிரியைகளை முடித்து ஓய்ந்திருந்ததுபோல, இளைப்பாறுதற்கான அவருடைய இடத்தில் பிரவேசித்தவனும் தன் கிரியைகளை முடித்து ஓய்ந்திருப்பான்.

௰௧ ஆகையால், அந்தத் திருட்டாந்தத்தின்படி [9]ஒருவனாகிலும் அவிசுவாசத்தினாலே¶ விழாதபடிக்கு, நாம் மேற்சொல்லிய இளைப்பாறுதற்கான இடத்தில் பிரவேசிக்கச் சாக்கிரதையாய் இருக்கக்கடவோம்.

கி. பி. ௬௪.

1 ௪ மோ. ௰௪. ௨௰. ௫ மோ. ௧. ௩௪, ௩௫.
2 எபி. ௪. ௬.
3 எபி. ௰௨. ௰௫.
* அல்லது விசுவாசத்தோடே கலக்கப்படாதபடியால்.
† அல்லது பிரசங்கிக்கப்பட்ட வசனம்.
4 எபி. ௩. ௰௪.
5 சங். ௯௫. ௧௧. எபி. ௩. ௧௧.
6 ௧ மோ. ௨. ௨. ௨ மோ. ௨௰. ௧௧: ௩௧. ௰௭.
7 எபி. ௩. ௰௯.
‡ அல்லது அதை.
8 சங். ௯௫. ௭. எபி. ௩. ௭.
§ அதாவது இயேசு.
|| அல்லது ஓய்வுநாளைக் கைக்கொள்ளுதல்.
9 எபி. ௩. ௰௨. ௰௭. ௰௯.
¶ அல்லது கீழ்ப்படியாமையினாலே.



Digitized by Google

௰உ [1]பராபரனுடைய வார்த்தை உயிர்ப்பிக்கிறதுமாய், பலமுள்ளதுமாய், [2]இருபுறமும் கருக்குள்ள எந்தக் கத்தியிலும் [3]கருக்கானதுமாய், ஆத்துமாவையும், ஆவியையும், (சரீர)மொழிகளையும், ஊனையும் பிரிக்கத்தக்கதாக உருவக்குத்துகிறதுமாய், இருதயத்தின் சிந்தனைகளையும் [4]யோசனைகளையும் வகையறுத்துத் தீர்க்கிறதுமாய் இருக்கிறதே; அவருக்குமுன்பாகத் தோன்றாதிருக்கிற சிருட்டி ஒன்றுமில்லை.

௰௩ [5]சகலமும் அவருடைய கண்களுக்குமுன்பாக நிருவாணமாயும், [6]வெளியரங்கமாயும் இருக்கின்றன; அவருக்கே நாம் கணக்கு ஒப்புவிக்கவேண்டும்.

௰௪ ¶ ஆகையால், [7]வானங்களின் வழியாய்ப் (பரமண்டலத்திற்குப்) போன தேவகுமாரனாகிய இயேசுவென்னும் [8]மகா பிரதான ஆசாரியர் நமக்கு இருக்கிறபடியினாலே, (அவரை) [9]அறிக்கையிடுகிறதில் உறுதியாயிருக்கக்கடவோம்.

௰௫ அவர் நம்முடைய பலஈனங்களைக்குறித்து நமக்கு இரங்கத் திராணியில்லாத [10]பிரதான ஆசாரியர் அல்லவே; [11]பாவத்தைத் தவிர [12] மற்றெந்தவிதத்திலும் நம்மைப்போலச் சோதிக்கப்பட்டாரே.

௰௬ ஆதலால் நாம் இரக்கத்தைப் பெற்றுக்கொள்ளும்படிக்கும், காலத்திற்குத் தகுதியான உதவியாகிய கிருபையை அடைந்துகொள்ளும்படிக்கும் [13]தயிரியமாய்க் கிருபாசனத்தினிடத்திலே சேரக்கடவோம்.

## ரு. அதிகாரம்.

க. நம்முடைய இரட்சகரின் ஆசாரிய பட்டத்துக்குரிய அதிகாரத்தையும் மேன்மையையும சொல்லி, ௰க. அந்த அறிவுக்கு வந்து எட்டாதிருப்பதைக்குறித்துக் கடிந்துகொண்டது.

கி. பி. ௬௪.

1 எசா. சக. உ எரே.உக. உக. உ கொரி. ௰. ச, ௧. க பே. க. உக.
2 எபே கூ. ௰எ. வெளி. க. ௰க: உ. ௰கூ.
3 லூக். ௫ ச.
4 க கொரி. ௰ச. உச, உ௫.
5 சங். கக. ௧௯, ௰ச: ௧௰. அ: எகூ. ௰௯, ௰உ.
6 யோபு. உசு. கு: கச. உக. லூக். ௰௫. ௰க.
7 எபி. எ. உசு: கூ. ௰உ, உச.
8 எபி. க. க
9 எபி. ௰. உக.
10 ஏசா. ௫க. க. எபி. உ. ௰அ.
11 உ கொரி. ௫. உக. எபி. எ. உசு. க பே. உ. உஉ. க யோ. க. ௫.
12 லூக். உஉ. உ௮.
13 எபே.உ. ௰அ: க. ௰உ. எபி. ௰. ௰கூ, உக, உஉ.
14 எபி. அ. க,ச: கூ. கூ: ௰. ௰க: ௰க ச.
15 எபி. அ க.
16 எபி. உ. ௰எ.
17 எபி. எ. உ௮
18 எபி. உ. ௰அ: ச. ௰௫.
* அல்லது வழுவிப்போனவர்களையும் சிரமமாய்த் தாங்கத்தக்கவன்.
19 க மோ. ச. க: கூ. எ: ௰க. கூ, ௰௯. ௰கூ, ௰எ, எபி.எ. உஎ:கூ. எ.
20 உ நாளா உசு. ௰அ. யோவா. க. உஎ.
21 உ மோ உ௮. க ச மோ. ௰கூ, ௫, சம். க நா ளா. உக. ௰க.

அன்றியும் மனிதரில் எடுக்கப்பட்ட பிரதான ஆசாரியன் யாவனும் [14]பாவங்களுக்காகக் காணிக்கைகளையும் பலிகளையும் செலுத்தி, [15]இப்படி மனிதருக்காகத் [16]தேவகாரியங்களை நடப்பிக்கும்படிக்கு வைக்கப்படுவான்.

உ அல்லாமலும் [17]அவன் தானும் பலஈனமுள்ளவனானபடியினாலே, அறியாதவர்களுக்கும் வழிவிப்போனவர்களுக்கும் [18]மன உருக்கமாய் இருக்கத்தக்கவனும் இருப்பான்.*

௩ [19]அந்த முகாந்தரத்தினாலே அவன் சனங்களுடைய பாவங்களுக்காகப் பலியிடுகிறதுபோலத் தன்னுடைய பாவங்களுக்காகவும் பலியிட வேண்டியதாயிருக்கிறது.

௪ ¶ மேலும் ஒருவனாயினும் [20]அந்தக் கனமான உத்தியோகத்தைத் தன்னாலே ஏற்றுக்கொள்ளாமல், [21]ஆரோன் அழைக்கப்பட்டதுபோலப் பராபரனாலே அதற்கு அழைக்கப்படுவான்.

௫ [22]அந்தப்படி கிறிஸ்துவும் பிரதான ஆசாரியராகிறதற்குத் தம்மைத்தாமே உயர்த்தவில்லை; [23]நீர் என்னுடைய குமாரன், இன்று நான் உம்மைச் செனிப்பித்தேன் என்று அவரோடே (சொன்னவரே அவரை உயர்த்தினார்).

௬ அப்படி வேறொரு இடத்திலேயும், நீர் மெல்கிசேதேக்கின் முறைமையாய் [24]என்றென்றைக்கும் ஆசாரியரானவர் என்று சொல்லியிருக்கிறது.

எ (அன்றியும்) அவர் மனிதனாகப் பூமியிலே சஞ்சரிக்கையில் [25]தம்மை மரணத்தினின்று இரட்சிக்க வல்லமையுள்ளவரை நோக்கி, [26]பலத்த சத்தத்தோடும் அழுகையோடும் [27]விண்ணப்பம்பண்ணி மிகவும் வேண்டிக்கொண்டு,

22 யோவா. அ. ௫ச — 23 சங். உ. எ. எபி. க. ௫. — 24 சங். ௰௰. ச. எபி. எ. ௰எ, உக. — 25 மத். உக. ௩௯. மாற். ௰ச. ௩௬. — 26 சங். உஉ. க. மத் உஎ. சகூ, ௫௰. மாற். ௰௫. ௩ச, ௩எ. — 27 மத். உகூ. ௩௯, சஉ, சச. மாற். ௰ச. ௩௬, ௩௯. யோவா. ௰எ. க.

Digitized by Google

[1]தமக்குண்டான பயத்தினின்று* விடுதலையாக்கப்பட்டு,

௮ [2]குமாரனாயிருந்தும் தாம் பட்டபாடுகளாலே [3]கீழ்ப்படிதலைக் கற்றுக்கொண்டு,

௯ [4]தாம் தேறினவரான பின்பு தமக்குக் கீழ்ப்படிகிற யாவரும் நித்தியமான இரட்சிப்பை அடைவதற்குக் காரணராகி,

௰ (இப்படிப்) பராபரனால் [5]மெல்கிசேதேக்கின் முறைமையின்படியான பிரதான ஆசாரியர் என்று வாழ்த்தப்பட்டார்.

௰௧ ¶ இந்தச் சங்கதியைக்குறித்து [6]நான் விஸ்தாரமாய்ப் பேசலாம்; [7]நீங்கள் தாமதமாய் அறிகிறவர்களானபடியால் அதை விவரித்துக் காண்பிக்கிறது அரிதாய் இருக்கின்றது.

௰௨ காலத்தைப் பார்க்கிறபொழுது போதகராயிருக்கவேண்டிய உங்களுக்குப் [8]பராபரனுடைய வாக்கியங்களின் முதல் நியாயங்களை மறுபடியும் உபதேசிக்கவேண்டியதாய் இருக்கின்றது; உணவை அல்ல [9]பாலைச் சாப்பிடத் தக்கவர்கள் ஆனீர்களே.

௰௩ [10]பால் உண்கிறவன் குழந்தையாய் இருக்கிறபடியினாலே, நீதிக்குரிய வசனத்தை அறிந்துகொள்ளத்திராணி† யுள்ளவன் அல்லவே.

௰௪ கெட்டியான உணவு நிறைவாய் வளர்ந்தவர்களாயும்,‡ [11]நன்மையையும் தீமையையும் வகையறுக்கிறதற்கு முயற்சியினாலே§ தகுதியாக்கப்பட்ட புத்தியுள்ளவர்களாயும் இருக்கிறவர்களுக்கே ஏற்றதாயிருக்கின்றது.

## ௬. அதிகாரம்.

௧. விசுவாசத்தைவிட்டு மருண்டுவிழாமல், ௰௧. உறுதியாயிருந்து, ௰௨. பராபரனைச் சக்கிரமத்தைப்போலும் பொறுமையையும் நோக்கியிருக்கக் கற்பித்து, ௰௩. பராபரன் தம்முடைய வாக்குத்தத்தங்களை நிறைவேற்றுவார் என்று சொல்லியது.

கி. பி. ௬௪.

1 மத். ௨௬. ௩௯. மாற். ௰௪. ௩௬. லூக். ௨௨. ௪௪. யோவா. ௰௨. ௨௭.
* அல்லது தேவ பத்தியினின்று.
2 எபி. ௧. ௨.
3 பிலி. ௨. ௮.
4 எபி. ௨. ௰: ௰௧. ௪௰.
5 ௬. வச. எபி. ௬. ௨௰.
6 யோவா. ௰௬. ௰௨. ௨ பே. ௩. ௰௬.
7 மத். ௰௩. ௰௫.
8 எபி. ௬. ௧.
9 ௧ கொரி. ௩. ௧, ௨, ௩.
10 ௧ கொரி. ௰௩. ௰௧: ௰௪. ௨௰. எபே. ௪. ௰௪. ௧ பே. ௨. ௨.
† இரேக்கு, பரிசியை.
‡ அல்லது தேறினவர்களாயும்; ௧ கொரி. ௨. ௬. எபே. ௪. ௰௩. பிலி. ௩. ௰௫.
11 ஏசா. ௭. ௰௫. ௧ கொரி. ௨. ௰௪, ௰௫.
§ அல்லது பழக்கத்தினாலே.
12 எபி. ௯. ௰௪.
13 அப். ௰௯. ௪, ௫.
14 அப். ௮. ௰௪, ௰௫, ௰௬, ௰௭: ௰௯. ௬.
15 அப். ௰௭. ௩௧, ௩௨.
16 அப். ௨௪. ௨௫. ௨ரோ. ௨. ௰௬.
17 பிலி. ௩. ௰௨, ௰௩, ௰௪. பிலி. ௫. ௰௨.
|| அல்லது முதன் மொழிகளை.
18 அப். ௰௮. ௨௧. ௧ கொரி. ௪. ௰௯.
19 எபி. ௰. ௩௨.
20 யோவா. ௪. ௰: ௬. ௩௨. எபே. ௨. ௮.
21 கலா. ௩. ௨, ௫. எபி. ௨. ௪.
22 எபி. ௨. ௫.
23 எபி. ௰. ௨௯.

ஆகையால் [12]மரணத்திற்கு ஏதுவான கிரியைகளைவிட்டு மனந்திருப்புகிறதற்கும், பராபரனை விசுவாசிக்கிறதற்கும்,

௨ [13]ஸ்நானங்களுக்கு அடுத்த உபதேசத்திற்கும், [14]கைகளை வைக்கிறதற்கும், [15]மரித்தோரிலிருந்து உயிரோடு எழும்புதற்கும் [16]நித்தியமான நியாயத்தீர்ப்புக்கும் ஏதுவான உபதேசங்களினாலே நாம் மறுபடியும் அஸ்திபாரம் போடாதபடிக்கு, [17] கிறிஸ்துவுக்குரிய முதல் நியாயங்களைச்|| சொல்லுகிற உபதேசத்தை நாம் இப்பொழுது நிறுத்தி, உயர்ந்த உபதேசங்களைக்குறித்துப் பேசிக்கொள்வோமாக.

௩ [18]பராபரனுக்குச் சித்தமானால் அப்படியே செய்வோம்.

௪ என்னத்திற்காகவெனில், [19]ஒருகாலத்திலே பிரகாசமாக்கப்பட்டும் [20]பரமஈவை ருசிபார்த்தும் [21]பரிசுத்த ஆவியைப் பெற்றும்,

௫ பராபரனுடைய நல்வார்த்தையையும் [22]இனிமேல் வரும் யுகத்தின் பெலன்களையும் ருசிபார்த்தும் இருக்கிறவர்கள் மறுதலித்து விழுந்தபின்பு,

௬ பராபரனுடைய குமாரனைத் தங்களுக்குள்ளே [23]மறுபடியும் சிலுவையில் அறைந்து அபகீர்த்தி செய்தபடியால் மனந்திருப்புகிறதற்கு ஏதுவாய் அவர்களை மறுபடியும் புதிதாக்கக் [24]கூடாத காரியமாயிருக்கின்றது.

௭ ¶ இதற்குத் திருட்டாந்தமாகப் பூமியானது தனக்கு அடிக்கடி வருகிற மழையை உட்கொண்டு தன்னிடத்தில் பயிரிடுகிறவர்களுக்கு ஏற்ற¶ பயிரை முளைப்பிக்கும்பொழுது, [25]பராபரனால் ஆசீர்வதிக்கப்படுகின்றது.

௮ [26]முட்செடிகளையும் முட்பூண்டுகளையும் முளைப்பிக்கிற நிலம் தகாததாயும், சபிக்கப்படுதற்

24 மத். ௰௨. ௩௧, ௩௨. எபி. ௰. ௨௬. ௨ பே. ௨. ௨௰, ௨௧. ௧ யோ. ௫. ௰௬.—¶ அல்லது பயிரிடுகிறவர்களால்.
25 சங். ௬௫. ௰.—26 ஏசா. ௫. ௬.

Digitized by Google

குச் சமீபமாயும் இருக்கின்றது; கடைசியிலே அது முழுவதும் காய்ந்துபோம்.

௯ ¶ பிரியமானவர்களே, நாங்கள் இப்படிச் சொல்லியும், இரட்சிப்புக்கு ஏற்ற நன்மையான யோசனைகள் உங்களுக்கு உண்டாயிருக்கின்றன என்று நம்பிக்கையாயிருக்கிறோம்.

௰ [1]பராபரனும் [2]உங்கள் கிரியையையும் [3]பரிசுத்தவான்களுக்கு நீங்கள் ஊழியம்செய்ததினாலும் செய்துவருகிறதினாலும் தமது நாமத்திற்காகக் காண்பித்த அன்புள்ள பிரயாசத்தையும் மறக்கத்தக்கதாக [4]அநியாயமுள்ளவர் அல்லவே.

௰௧ ¶ ஆகையால் நீங்கள் தாமதமாய் இராமல், [5]வாக்குத்தத்தமான ஆசீர்வாதங்களை விசுவாசத்தினாலும் நீடிய பொறுமையினாலும் சுதந்தரித்துக்கொள்ளுகிறவர்களைப் பின்பற்றுகிறவர்களாய் இருக்கும்படிக்கு,

௰௨ [6]நீங்கள் யாவரும் (எங்கள்) நம்பிக்கை பரிபூரணமுள்ளதாகும்படி முடிவுபரியந்தம் சாக்கிரதையையே [7]காண்பிக்கவேண்டுமென்று ஆசையாயிருக்கிறோம்.

௰௩ ஆபிரகாமுக்குப் பராபரன் வாக்குத்தத்தம்பண்ணினபொழுது, ஆணையிடும்படி தம்மிலும் பெரியவர் ஒருவரும் இல்லாதபடியினாலே [8]தமதுபேரிலே ஆணையிட்டு,

௰௪ நான் உன்னை மிகவும் ஆசீர்வதித்து, உன்னை மிகவும் பெருகப்பண்ணுவேன் என்றார்.

௰௫ அவனும் அந்தப்படியே பொறுமையாய்க் காத்திருந்து, வாக்குத்தத்தம் பண்ணப்பட்டதைப் பெற்றான்.

௰௬ அது எப்படியெனில், மனிதர்கள் தங்களிலும் பெரியவன் பேரில் ஆணையிடுவார்கள்; [9]உறுதிபண்ணும்படிக்கு ஏற்ற ஆணையே அவர்களுக்குள்ளே சகல வியாச்சியங்களையும் நிறைவேற்றும்.

௰௭ அந்தப்படி பராபரனும் வாக்குத்தத்தம் பண்ணப்பட்டவைகளைச் [10]சுதந்தரித்துக்கொள்ளுகிறவர்களுக்குத் தமது யோசனையின் [11]மாறாத நிச்சயத்தைக் காண்பிக்கும்படி அதிக சித்தமுள்ளவராய் ஓர் ஆணையினாலே அவைகளை ஸ்திரப்படுத்தினார்.*

௰௮ பராபரன் பொய்பேசக்கூடாததாயிருக்க, நாம் நம்பிக்கொள்ளும்படி [12]நமக்குமுன் வைக்கப்பட்டதைப் பிடிக்கிறதற்கு ஓடிவந்த நாம் மாறாத இரண்டு பொருள்களினாலே பலத்த ஆறுதலுள்ளவர்கள் ஆகும்பொருட்டாக அப்படிச் செய்தார்.

௰௯ அந்த நம்பிக்கை நம்முடைய ஆத்துமாவுக்கு நிலையும் உறுதியுமான நங்கூரம்போலாகித் [13]திரைச்சீலைக்குள் போகிறதாயிருக்கின்றது.

௨௰ [14]நமக்குமுன் ஓடினவராகிய இயேசு மெல்கிசேதேக்கின் முறைமையின்படி [15]நித்தியமான பிரதான ஆசாரியராய் நமக்காக அந்தத் திரைச்சீலைக்குள் பிரவேசித்திருக்கிறார்.

1 வாக். ௰௪. ௧௩. மத். ௰. ௪௨. ௨௫ ௪௰. யோவா. ௰௩. ௨௰.
2 ௧ தெச. ௧. ௩.
3 ரோ. ௰௫. ௨௫. ௨ கொரி. ௮. ௪: ௯. ௧, ௰௨. ௨ தீமோ. ௧. ௰௮.
4 ரோ ௩. ௪. ௨ தெச. ௧. ௬, ௭.
5 எபி. ௰. ௩௬.
6 கொலோ. ௨. ௨.
7 எபி. ௩. ௬, ௰௪.
8 ௧ மோ. ௨௨. ௰௬, ௰௭. சங். ௱௫. ௯. லூக். ௧. ௭௩.
9 ௨ மோ. ௨௨. ௰௧.
10 எபி. ௰௧. ௯.
11 ரோ. ௰௧. ௨௯.
* இரேக்கு. தம்மை மத்தியஸ்தராக்கினார்.
12 எபி. ௰௨. ௧.
13 ௩ மோ. ௰௬. ௰௫. எபி. ௯. ௭.
14 எபி. ௪. ௰௪: ௮ ௧: ௯. ௨௪.
15 எபி ௩. ௧: ௫. ௰: ௭ ௰௭.
16 ௧ மோ. ௰௪. ௰௮.

## ௭. அதிகாரம்.

௧. கிறிஸ்து இயேசு மெல்கிசேதேக்கின் முறைமைப்படிக்கு ஆசாரியராய் இருக்கிறபடியினாலே, ௰௧. ஆரோனின் முறைமைப்படிக்கு உண்டாயிருக்கிற ஆசாரியர்களைப்பார்க்கிலும் மேன்மையுள்ளவர் என்று சொல்லியது.

[16]அந்த மெல்கிசேதேக்கு என்பவன் இராசாக்களை அடித்துத் திரும்பிவந்த ஆபிரகாமுக்கு எதிர்கொண்டு அவனை ஆசீர்வதித்து அவனாலே பத்தில் ஒருபாகத்தைப் பெற்றுக்கொண்டவன்.

௨ அவன் சாலேமின் இராசா, உன்னதமான தேவனுக்குமுன்பாக ஆசாரியனாயிருந்தவன்; முதல்பேராகிய மெல்கிசேதேக்கு என்பதற்கு நீதியுள்ள இராசா என்று அருத்தமாம்; பின்பு சாலேமின்

Digitized by Google

இராசா என்பதற்குச் சமாதான முள்ள இராசா என்று அருத்தமாம்.

௩ அவன், தகப்பனும் தாயும் வம்ச அட்டவணையும்* இல்லாதவன்; அவனுடைய (உத்தியோக) நாள்களின் ஆரம்பமும் சீவனின் முடிவும் சொல்லப்பட்டிராததினாலே அவன் பராபரனுடைய குமாரனுக்கு ஒப்பாக்கப்பட்டவனாய்த் தன் முழுச் சீவகாலமளவும் ஆசாரியனாய் இருக்கிறான்.

௪ ¶ அவனுடைய மேன்மையைப் பார்ப்பீர்களாக; கோத்திரத் தலைவனாகிய ஆபிரகாமும் கொள்ளையிடப்பட்டவைகளில் பத்தில் ஒரு பாகத்தை [1]அவனுக்குக் கொடுத்தானே.

௫ [2]இலேவியின் புத்திரரில் ஆசாரியபட்டத்தை அடைகிறவர்களும், ஆபிரகாமின் சந்ததியாராகவே இருக்கிற தங்கள் சகோதரராகிய சனங்களின் கையிலே நியாயப்பிரமாணத்தின்படி பத்தில் ஒன்றை வாங்குகிறதற்குக் கட்டளைபெற்றிருக்கிறார்கள்.

௬ அது மெய்தான், ஆகிலும், அவர்களுடைய வம்சத்தில்† இராதவனாகிய (மெல்கிசேதேக்கு என்பவன்) பத்தில் ஒன்றை ஆபிரகாமின் கையிலே வாங்கி [3]வாக்குத்தத்தங்களைப் பெற்றவனையே [4]ஆசீர்வதித்தான்.

௭ சிறியவன் பெரியவனாலே ஆசீர்வதிக்கப்படுவான்.

௮ ¶ அதற்குச் சந்தேகமில்லையே; அன்றியும், இவ்விடத்திலே மரிக்கத்தக்க மனிதர் பத்தில் ஒன்றை வாங்குவார்கள்; [5]அவ்விடத்திலே பிழைத்திருக்கிறார் என்று சாட்சிபெற்றவன் வாங்கினான்.

௯ அன்றியும், மெல்கிசேதேக்கு என்பவன் ஆபிரகாமுக்கு எதிர்கொண்டுபோனபொழுது, இலேவியானவன் தன் தகப்பனுடைய அறையில் இருந்தபடியால்,

௰ பத்தில் ஒன்றை வாங்குகிற இலேவியும் ஆபிரகாமினாலே பத்தில் ஒன்றைக் கொடுத்தான் என்று சொல்லலாம்.

௰௧ ¶ அல்லாமலும் (இஸ்ரவேல்) [6]சனங்கள் இலேவிகோத்திர ஆசாரிய முறைமைக்குள்ளாய் அல்லவோ நியாயப்பிரமாணத்தைப் பெற்றார்கள்? அந்த இலேவிகோத்திர ஆசாரிய முறைமையினாலே நிறைவுள்ள ஆசீர்வாதம் மெய்யாய் வந்தால் ஆரோனுடைய முறைமையின்படி அல்ல, மெல்கிசேதேக்கினுடைய முறைமையின்படியே அழைக்கப்பட்ட வேறொரு ஆசாரியன் எழும்ப வேண்டுவதென்ன?

௰௨ ஆகையால் ஆசாரியமுறைமை மாற்றப்பட்டிருக்க, நியாயப்பிரமாணமும் மாற்றப்படவேண்டியதாயிருந்தது.

௰௩ இவைகளால் சொல்லப்பட்டிருக்கிறவர் எவரோ, அவர் வேறொரு கோத்திரத்தைச் சேர்ந்தவராயிருக்கிறாரே; அந்தக் கோத்திரத்தில் ஒருவனாயினும் பலிபீடத்திலே ஆராதனைசெய்யவும் இல்லையே.

௰௪ நம்முடைய கர்த்தரானவர் [7]யூதாவின் கோத்திரத்தில் பிறந்தார் என்பதும் நிச்சயமாயிருக்கிறதே, அந்தக் கோத்திரத்தாருக்கு மோசே என்பவன் ஆசாரியபட்டத்தைக்குறித்து ஒன்றும் சொல்லவில்லையே.

௰௫ அல்லாமலும் மெல்கிசேதேக்குக்கு ஒப்பாய் வேறொரு ஆசாரியர் எழும்புகிறார் என்பதினாலே அது மிகவும் அதிக தெளிவாயிருக்கின்றது.

௰௬ அவர் சரீரத்துக்கு ஏற்ற கட்டளையாகிய நியாயப்பிரமாணத்தின்படி அல்ல,

௰௭ மெல்கிசேதேக்கின் முறைமையாய், [8]நீர் என்றென்றைக்கும் உள்ள ஆசாரியராய் இருப்பீர் என்று சொன்ன சாட்சிக்குத்தக்கதாக நீங்காத சீவனுக்குரிய

ஆதி. பி. ௬௪.

* கிரேக்கு, சந்ததியும்.
[1] ஆதி. ௰௪. ௨௰.
[2] ௪ மோ. ௰௮. ௨௧, ௨௬.
† கிரேக்கு, சந்ததியில்.
[3] உரோ. ௪. ௰௩. கலா. ௩. ௰௬.
[4] ௧ மோ. ௰௪. ௰௯.
[5] எபி. ௫. ௬; ௬. ௨௰.
[6] கலா. ௨. ௨௧. ௰௮. ௰௬. ௩௪. எபி. ௮. ௭.
[7] ஏசா. ௰௧. ௧. மத். ௧. ௩. லூக். ௩. ௩௩. உரோ. ௧. ௩. வெளி. ௫. ௫.
[8] சங். ௱௰. ௪. எபி. ௫. ௬, ௰; ௬. ௨௰.

Digitized by Google

வல்லமையின்படியே ஆசாரியரானார்.

௰௮ ¶ ஆகையால் முன் கொடுக்கப்பட்ட கட்டளை [1]பலஈனமாயும் அபிரயோசனமாயும் இருந்தபடியால் அது நீக்கப்பட்டது.

௰௯ [2]நியாயப்பிரமாணம் ஒன்றையும் நிறைவாக்கவில்லை; [3]அதிக நன்மையான நம்பிக்கைக்கு ஏதுவானது (பின்னாலே) உண்டாக்கப்பட்டு நிறைவாக்குகிறது;* அதினாலே [4]நாம் பராபரனிடத்தில் சேருகிறோம்.

௨௰ ¶ அன்றியும் முந்தினவர்கள் ஆணையில்லாமல்† ஆசாரியரானார்கள்; பிந்தினவர் மெல்கிசேதேக்கின் முறைமையின்படி, நீர் என்றென்றைக்குமுள்ள ஆசாரியர் என்று துக்கமில்லாமல் [5]ஆணையிட்டுத் தம்முடனே சொன்ன கர்த்தராலே ஆணையோடே அப்படியானார்.

௨௧ ஆனதால் இயேசுவானவர் ஆணையின்படியே ஆசாரியராக்கப்பட்டு,

௨௨ (அவர்களுக்கு அதிகமாயிருக்க) [6]அதிக நன்மையான உடம்படிக்கைக்கு ஏற்ற பிணையாளியானார்.

௨௩ ¶ அன்றியும், அந்த ஆசாரியர் எப்பொழுதும் இருக்கக்கூடாதபடிக்கு மரிக்கிறவர்களானபடியால் அநேகராய் இருந்தார்கள்.

௨௪ அவர் என்றென்றைக்கும் இருக்கிறவரானதினாலே நீங்காத‡ ஆசாரியபட்டம் உள்ளவராயிருக்கிறார்.

௨௫ அன்றியும், தம்மாலே [7]பராபரனைச் சேருகிறவர்களுக்காக வேண்டுதல் செய்யும்படிக்கு எப்பொழுதும் உயிரோடு இருக்கிறவரானதால், அவர்களை முற்றும் § இரட்சிக்க வல்லமையுள்ளவராயும் இருக்கிறார்.

௨௬ ¶ [8]பரிசுத்தராயும், தீமை செய்யாதவராயும், அசுத்தம் இல்லாதவராயும் பாவிகளைவிட்டுப் பிரிந்தவராயும், [9]வானங்களுக்கு மேல் உயர்ந்தவராயும் இருக்கிற இப்படிப்பட்ட பிரதான ஆசாரியரே நமக்கு வேண்டும்.

௨௭ அவர் முந்தின ஆசாரியர்களைப்போல முதலாவது [10]தன்னுடைய சொந்தப் பாவங்களுக்காகவும், [11]பின்பு சனங்களுடைய பாவங்களுக்காகவும், நாடோறும் பலியிடவேண்டுவதில்லை; [12]அவர்களுக்காக அவர் ஒரேதரம் தம்மைப் பலியிட்டாரே.

௨௮ நியாயப்பிரமாணமானது பலஈனத்தையுடைய மனிதர்களை [13]ஆசாரியராக ஏற்படுத்துகின்றது; நியாயப்பிரமாணத்திற்குப் பின்பு ஆணையோடே இருந்த வசனம் [14]என்றென்றைக்கும் பூரணராகிய|| குமாரனையே ஏற்படுத்துகின்றது.

## ௮. அதிகாரம்.

௧. கிறிஸ்துவின் நித்திய ஆசாரியத்துவத்தினால் இலேவியருக்கு அடுத்த ஆரோனின் ஆசாரியத்துவம் ஒழிந்ததென்றும், ௭. பிதாக்களோடே செய்த தற்காலத்துக்குரிய உடம்படிக்கை நித்தியகாலத்துக்கு உரிய சுவிசேஷத்தின் உடம்படிக்கையினாலே நீக்கப்பட்டதென்றும் சொல்லியது.

மேற்சொல்லியவைகளில் பிரதானமானது என்னவெனில், பரமண்டலங்களிலுள்ள மகத்துவ ஆசனத்தின் [15]வலதுபாரிசத்திலே உளுக்காந்திருக்கிறவருமாய்,

௨ மனிதர்களாலே அல்ல, கர்த்தராலே வைக்கப்பட்ட [16]மெய்யான கூடாரமாகிய [17]பரிசுத்த இடத்திலே¶ ஆராதனை செய்கிறவருமாய் இருக்கிற பிரதான ஆசாரியரே நமக்கு உண்டு.

௩ ¶ [18]ஆசாரியர் யாவரும் காணிக்கைகளையும் பலிகளையும் செலுத்துதற்கு வைக்கப்பட்டிருக்கிறதால் அவரும் (பரமண்டலத்திலே) [19]சிலவற்றைப் பலியிட வேண்டுவதாயிருந்தது.

௪ பூமியிலே அவர் இருப்பாரானால் ஆசாரியராய் இருக்கமாட்

---

இ. பி. ௯௯௪.

1 உரோ. ௮. ௩. கலா. ௪. ௯.
2 அப். ௰௩. ௩௯. உரோ. ௩. ௨௰, ௨௧, ௨௮: ௮. ௩. கலா. ௨. ௰௬. எபி. ௯. ௯.
3 எபி. ௬. ௰௮: ௮. ௬.
* அல்லது நிறைவாக்குகிறதாயிருக்கின்றது; கலா. ௩. ௨௪.
4 உரோ. ௫. ௨. எபே. ௨. ௰௮: ௩. ௰௨. எபி ௪. ௰௬: ௰. ௰௯.
† அல்லது ஆணையிடாமல்.
5 சங். ௱௰. ௪.
6 எபி. ௮. ௬: ௯. ௰௫: ௰௨. ௨௪.
‡ அல்லது மாறாத.
7 உரோ. ௮. ௩௪. ௧ தீமோ. ௨. ௫. எபி ௯. ௨௪. ௧ யோ. ௨. ௧.
§ அல்லது அவர்கள் எல்லாரையும்.
8 எபி. ௪. ௰௫.
9 எபே. ௧. ௨௰: ௪. ௰. எபி. ௮. ௧.
10 ௩ மோ. ௯. ௭: ௰௬. ௬, ௰௫. எபி ௫. ௩: ௯. ௭.
11 ௩ மோ. ௰௬. ௰௫.
12 உரோ. ௬. ௰. எபி. ௯. ௰௨, ௨௮: ௰. ௰௨.
13 எபி. ௫. ௨.
14 எபி. ௨. ௰: ௫. ௯.
|| அல்லது பிரதிஷ்டை பண்ணப்பட்ட.
15 எபே. ௧. ௨௰. கொலோ. ௩. ௧. எபி. ௧. ௩: ௰. ௰௨: ௰௨. ௨.
16 எபி. ௯. ௰௧.
17 எபி. ௯. ௮, ௰௨, ௨௪.
¶ அல்லது பரிசுத்த காரியங்களில்.
18 எபி. ௫. ௧.
19 எபே. ௫. ௨. எபி. ௯. ௰௪.

Digitized by Google

டார்; அங்கே நியாயப்பிரமாணத்தின்படி காணிக்கைகளைச் செலுத்துகிறவர்கள் ஆசாரியர்களாய் இருக்கிறார்களே.*

ரு மோசே அந்தக் கூடாரத்தை உண்டுபண்ணப்போனபொழுது, [1]மலையிலே உனக்குக் காண்பிக்கப்பட்ட சாயலின்படியே நீ சகலத்தையும் செய்ய எச்சரிக்கையாயிரு என்று பராபரன் அவனுக்குக் கட்டளையிட்டபடியே, அந்த ஆசாரியர்கள் பரமண்டலத்திற்குரியவைகளுக்கு அடையாளமும் [2]நிழலாட்டமுமானவைகள் உள்ள (இடத்திலே) ஆராதனை செய்கிறார்கள்.

சு அவர் அதிக மேன்மையான வாக்குத்தத்தங்களின்மேல் ஸ்தாபிக்கப்பட்டிருக்கிற அதிக மேன்மையான உடம்படிக்கைக்கு † ஏற்ற மத்தியஸ்தராய் இருக்கிறதால், [3]அதிக விசேஷமான ஆராதனைசெய்தலைப் பெற்றுக்கொண்டிருக்கிறார்.

எ ¶ [4]அந்த முதலாம் உடம்படிக்கை பிழையில்லாததாயிருந்ததானால் இரண்டாவதற்கு இடம் தேடப்படுவதில்லையே.

அ அவர்களைக் குற்றவாளிகள் என்று சொல்லி, அவர்களுடனே திருவுளம்பற்றினதாவது: கர்த்தர் சொல்லுகிறது என்னவெனில், இஸ்ரவேல் குடும்பத்தாரோடும் யூதர் குடும்பத்தாரோடும் [5]நான் புதிய உடம்படிக்கையை ஏற்படுத்தும்படிக்கான காலம் வருகின்றது.

கூ அவர்களுடைய முன்னோர்களை எகிப்துதேசத்திலிருந்து கொண்டுவரும்படிக்கு, நான் அவர்களுடைய கையைப் பிடித்துக்கொண்ட நாளிலே, அவர்களுடனே பண்ணின உடம்படிக்கையைப்போல இது இருப்பதில்லை; அந்த உடம்படிக்கையிலே அவர்கள் நிலைநிற்கவில்லையே, நானும் அவர்களை அரோசித்தேன்.

ய அந்த நாட்களுக்குப் பின்பு நான் இஸ்ரவேல் குடும்பத்தாரோடே பண்ணும் உடம்படிக்கை என்னவென்றால், [6]என்னுடைய பிரமாணங்களை அவர்களுடைய மனதிலே வைப்பேன்;‡ அவைகளை அவர்களுடைய இருதயங்களின்மேலே§ எழுதி, [7]அவர்களுக்குத் தேவனாய் இருப்பேன்; அவர்கள் எனக்குச் சனங்களாய் இருப்பார்கள்.

யக அப்பொழுது சிறியவன்முதற்கொண்டு பெரியவன்வரைக்கும் எல்லாரும் என்னை அறிந்துகொள்வதால், கர்த்தாவை அறிந்துகொள் என்று [8]ஒருவன் தனக்கடுத்த பிறனுக்கும், வேறொருவன் தன் சகோதரனுக்கும் போதிக்க வேண்டுவதில்லை.

யஉ நான் அவர்களுடைய அநியாயங்களை (நீக்கி,) [9]அவர்களுடைய பாவங்களையும் அக்கிரமங்களையும் இனி நினையாமல் அவர்களுக்கு இரங்குவதால் அப்படி ஆகுமென்று கர்த்தர் திருவுளம்பற்றுகிறார் என்பதே.

யங [10]புதிதான உடம்படிக்கை என்று அவர் சொல்லுகையில், முதலாவதைப் பழமை ஆக்கினார்; பழமையும் குறைவுமுள்ளதே ஒழிந்துபோகிறதற்குச் சமீபமாயிருக்கின்றது.

## கூ. அதிகாரம்.

க. நியாயப்பிரமாணத்தின் நிழலான முறைமைகளையும் இரத்தப்பலிகளையும் விவரித்து, யக. அவைகள் கிறிஸ்துவினுடைய பொருளான இரத்தத்துக்கும், பலிக்குமுரிய மேன்மைக்கும், மகிமைக்கும் நிகரல்ல என்று சொல்லியது.

அன்றியும் முதலாம் உடம்படிக்கை ஆராதனைக்கு ஏற்ற நியாயங்களும்,|| [11]பூமிக்குரிய பரிசுத்த ஸ்தலமும் உள்ளதாயிருந்தது.

உ எப்படியெனில், பரிசுத்த ஸ்தலம்¶ என்னப்பட்ட [12]முதல் கூடாரம் எத்தனமாக்கப்பட்டு இருந்தது; [13]அதிலே [14]விளக்குத் தண்டும், [15]பலகையும், திவ்விய சமுகத்தப்பங்களும் இருந்தன.

கி. பி. சுஉ

* அல்லது செலுத்துகிற ஆசாரியர்கள் இருக்கிறார்களே.

1 உ மோ. உரு. சய: உக. கய: உள. அ. ந மோ. அ. ச. அப். எ. சச.

2 கொலோ. உ. யஎ. எபி. கூ. உக: ய. க.

† அல்லது ஏற்பாட்டுக்கு.

3 உ கொரி. க,கூ, அ, கூ. எபி. எ. உஉ.

4 எபி. எ. யக, யஅ.

5 எரே. கக கக, கஉ, கங,கச.

6 எபி. ய யசு.

‡ கிடைக்கு, கொடுப்பேன்.

§ அல்லது இருதயங்களில்.

7 சகரி. அ. அ.

8 ஏசா. ஙச. யங. யோவா. சு. சரு. க யோ. உ. உஎ.

9 உ ரோ. யக. உஎ எபி. ய.யஎ.

10 உ கொரி. ரு. யஎ.

|| அல்லது சடங்குகளும்.

11 உ மோ. உரு. அ.

¶ அல்லது பரிசுத்தம்.

12 உ மோ. உசு க.

13 உ மோ. உசு. கரு: சய. ச.

14 உ மோ. உரு. கக.

15 உ மோ. உரு. உக, கய. க மோ. உச. ரு, க.

Digitized by Google

௩ அல்லாமலும், [1]இரண்டாம் திரைச்சீலைக்குப் பின்னாலே மிகவும் பரிசுத்த ஸ்தலம் என்னப்பட்ட கூடாரம் இருந்தது.

௪ அதிலே பொன்னால் செய்த கலசமும், முழுவதும் பொன்தகடு பொதியப்பட்ட உடம்படிக்கையின் [2]பெட்டியும் இருந்தன; அந்தப் பெட்டியிலே மன்னா என்பதை உடைய [3]பொன்பானையும், தளிர்கொண்ட [4]ஆரோனுடைய கம்பும், [5]உடம்படிக்கையின் பலகைகளும் இருந்தன.

௫ அதற்குமேலே [9]மகிமையுள்ள கேரூபீம் வைக்கப்பட்டுக் கிருபாசனத்திற்கு நிழலிட்டிருந்தன; இவைகளைக்குறித்து நான் இப்பொழுது விவரம் சொல்லக்கூடாது.

௬ ¶ அவைகள் இவ்விதமாய் எத்தனமாக்கப்பட்டிருந்த பின்பு, ஆசாரியரானவர்கள் ஆராதனைகளை நிறைவேற்றும்படிக்கு, எக்காலத்திலேயும் [7]முதல் கூடாரத்திலே பிரவேசிப்பார்கள்.

௭ இரண்டாம் கூடாரத்திலே பிரதான ஆசாரியன்மாத்திரம் [8]வருஷத்தில் ஒரேதரம் இரத்தத்தோடே பிரவேசித்து, அந்த இரத்தத்தைத் தனக்காகவும் சனங்களுடைய தப்பிதங்களுக்காகவும் [6]செலுத்துவான்.

௮ அதினாலே முதலாம் கூடாரம் நிற்கையில் [10]பரிசுத்தமான இடங்களுக்குப் போகிற மார்க்கம் வெளியாக்கப்படவில்லை என்று [11]பரிசுத்த ஆவியானவர் குறித்திருக்கிறார்.

௯ அந்தக் கூடாரம் இந்தக்காலம்வரைக்கும் உவமையாயிருந்தது; அதிலே காணிக்கைகளும் பலிகளும் செலுத்தப்பட்டு வருகின்றன.

௰ அவைகள் செம்மையாக்குதலுள்ள காலமளவும் (இஸ்ரவேலருக்குக்) கட்டளையிடப்பட்ட [12]போசனபானங்களாலும், [13]பல ஸ்நானங்களாலும், [14]சரீரத்திற்கு ஏற்ற (மற்றச்) சடங்குகளாலும்* மாத்திரம் ஆராதனைசெய்கிறவனுடைய மனதிற்கு [15]நிறைவுண்டாக்கக்கூடாதவைகளாய் இருக்கின்றன.

௰௧ ¶ கிறிஸ்துவானவர் (உலகத்தில்) வந்து இவ்வுலகப் பொருளாய் இராமலும் கையால் செய்யப்படாமலும் [16]அதிக மேன்மையாயும் அதிக நிறைவாயும் இருக்கிற கூடாரத்தின் வழியாய் வருகிறவைகளாகிய [17]நன்மைகளைக் குறித்து [18]ஆசாரியராய்,

௰௨ [19]வெள்ளாட்டுக்கடா இளங்காளை இவைகளுடைய இரத்தத்தினாலே அல்ல, [20]தமது சொந்த இரத்தத்தினாலே [21]நமக்காக நித்திய மீட்பு உண்டாக்கி, எல்லாக் காலங்களுக்காகவும் [22]ஒரேதரம் பரிசுத்தமான தலங்களில் பிரவேசித்தார்.

௰௩ அது எப்படியெனில் [23]காளை வெள்ளாட்டுக்கடா இவைகளின் இரத்தமும் [24]கடாரியின் சாம்பலும் அசுசிப்பட்டவன்மேல் தெளிக்கப்பட்டு, அவனுடைய சரீர அசுசியை நீக்கத்தக்கதாக அவனைச் சுத்தமாக்கிக்கொண்டிருக்க,

௰௪ [25]நித்திய ஆவியினாலே [26]தம்மைப் பிழையில்லாத † பலியாகப் பராபரனுக்கு ஒப்புக்கொடுத்த [27]கிறிஸ்துவினுடைய திரு இரத்தம் மிகவும் அதிகமாய் [28]மரணத்திற்கு ஏதுவான கிரியைகளை [29]நீக்கிச் [30]சீவனையுடைய பராபரனுக்கு நாம் ஊழியம்செய்வதற்கு நம்முடைய மனதைச் சுத்தமாக்கும் அல்லவா?

கி. பி. கூ௬.

1 உ மோ. உ௫. ௯௧, ௯௯: ௩௰. ௯, ௨௪. எபி. ௯. ௰௩.
2 உ மோ. உ௫. ௰: உ௨. ௯௯: ௩௰. ௯, உ௪.
3 உ மோ. ௰௬. ௯௩, ௯௪.
4 ௪ மோ. ௰௭ ௰.
5 உ மோ. உ௫. ௰௬, உ௧: ௯௪. உ௯: ௩௰. உ௰. ௫ மோ. ௰.உ,௫. ௧ இரா. அ.௯, உ௧. உ நாளா. ௫. ௰.
6 உ மோ. உ௫. ௰அ, உ௨. ௩ மோ. ௰௬. உ. ௧ இரா அ. ௬,எ
7 ௪ மோ. உ அ. ௧. தானி. அ. ௰௧.
8 உ மோ. ௩௰. ௰. ௩ மோ. ௰௬. உ, ௰௧, ௰௨, ௰௫, ௩௪. உ௫. வச.
9 எபி. ௫. ௧: எ. உ௭.
10 யோவா. ௰௪. ௬.
11 எபி. ௰. ௰௯,௨௰.
12 ௩ மோ. ௰௧. உ கொலோ. உ. ௰௬.
13 ௪ மோ. ௰௯. எ. ஷ.
14 எபே. உ. ௰௫. கொலோ. உ. உ௰. எபி. எ. ௰௬.
* அல்லது நியாயக்கிரிகைகளாலும்.
15 கலா. ௩. உ௧. எபி. எ. ௰௯, ௰௯: ௰. ௧, ௰௪.
16 எபி. அ. உ.
17 எபி. ௰. ௧.
18 எபி. ௯. ௯.
19 எபி. ௰. ௪.
20 அப். உ௰. உ௮. எபே. ௧. எ. கொலோ. ௧. ௰௪. ௧ பே. ௧. ௰௯. வெளி. ௧. ௫: ௫. ௯.
21 தானி. ௯. உ௪.

22 உ௯,உ௮. வசனங்கள். எபி.௰.௰. சகரி.௩.௯.—23 ௩ மோ.௰௬.௰௪,௰௬.—24 ௪ மோ.௰௯.உ,௰எ.—25 உரோ.௧.௪. ௧ பே ௩.௰௮.
26 எபே.௫.உ. தீத் உ.௰௪. எபி.எ உ௭.—† அல்லது மறுவில்லாத.—27 ௧ பே.௧.௰௯. ௧ யோ.௧.௭. வெளி.௧.௫.
28 எபி.௬.௧.—29 எபி.௧.௩: ௰.உஉ.—30 லூக்.௧.எ௪. உரோ.௬.௰௩,உஉ. ௧ பே. ௪.உ.

Digitized by Google

யரு ¶ [1]இதினாலே முதல் உடம்படிக்கையின் காலத்திலே நடந்த அக்கிரமங்களை நிவிர்த்திசெய்வதற்கு ஏதுவாக [2]அவர் மரித்தபின்பு, [3]அழைக்கப்பட்டவர்கள் வாக்குத்தத்தமான நித்திய சுதந்தரத்தை அடைந்துகொள்ளும்படிக்கே [4]அவர் புதிய உடம்படிக்கையின் மத்தியஸ்தராய் இருக்கிறார்.

யசு அது எப்படியென்றால், [5]ஒரு உடம்படிக்கை (பலிகளுடைய மரணத்தினாலே) உறுதியாக்கப்படுமே.

யஎ ஏற்படுத்தப்பட்ட (பலி) உயிரோடிருக்குமளவும், உடம்படிக்கை பலனாயிருக்கமாட்டாதே; ஆகையால், ஒரு உடம்படிக்கை செய்யப்படும்பொழுது, ஏற்படுத்தப்பட்ட பலியினுடைய மரணமும் தோற்றப்பட*வேண்டும்.

யஅ ¶ [6]அந்தப்படி முதலாம் உடம்படிக்கையும் இரத்தமில்லாமல் பிரதிஷ்டையாக்கப்பட†வில்லை.

யக எப்படியெனில், மோசே என்பவன் வேதப்பிரமாணத்தின்படி சகல சனங்களுக்கும் எல்லாப் பிரமாணங்களையும் சொன்னபின்பு [7]ஆடுமாடுகளின் இரத்தத்தைத் [8]தண்ணீரோடும், சிவப்பான‡ பஞ்சியோடும், ஈசோப்பென்னும் செடியோடும்கூட எடுத்து, வேதபுத்தகத்தின்மேலும் சனங்கள் எல்லார்மேலும் தெளித்து,

உய [9]பராபரன் உங்களுடனே (செய்யக்) கட்டளையிட்ட உடம்படிக்கைக்கு ஏற்ற இரத்தம் இதுவே என்று சொன்னான்.

உக இவ்விதமாய்க் [10]கூடாரத்தின்மேலும் ஆராதனைக்கு ஏற்ற தட்டுமுட்டுகளின்மேலும் இரத்தத்தைத் தெளித்தான்.

உஉ நியாயப்பிரமாணத்தின்படி சிலகுறைய மற்றெல்லாப் பதார்த்தங்களும் இரத்தத்தினாலே சுத்தமாக்கப்பட்டு வருகின்றன; [11]இரத்தம் சிந்துதல் இல்லாமல் மன்னிப்பும் இல்லை.

உங ¶ ஆனதால் [12]பரமண்டலங்களில் உள்ளவைகளுக்கு உவமையானவைகள் இப்படிப்பட்ட (பலிகளினாலே) சுத்தமாக்கப்படவேண்டியதாய் இருக்கிறபடியால் பரமண்டலங்களில் உள்ளவைகள் தாமே அவைகளிலும் அதிக தகுதியான (பலிகளாலே) சுத்தமாக்கப்படவேண்டுமே.

உச அந்தப்படி கிறிஸ்துவானவர் [13]இப்பொழுது நமக்காகப் பராபரனுடைய சந்நிதானத்திலே தோன்றியிருக்கும்படிக்கு மெய்யானவைகளுக்குத் திருட்டாந்தங்களாகிய [14]கையால் செய்யப்பட்ட பரிசுத்தஸ்தலங்களில் அல்ல, பரமண்டலத்திலேதானே [15]பிரவேசித்திருக்கிறார்.

உரு அந்தப் பிரதான ஆசாரியன் அந்நிய இரத்தத்தை எடுத்து, [16]வருஷந்தோறும் பரிசுத்த ஸ்தலங்களிலே பிரவேசித்ததுபோல அவர் தம்மை அடிக்கடி பலியிடும்படிக்கு (அப்படிப் பிரவேசிக்கவில்லை.

உசு அதற்காகவானால் அவர் உலகம் உண்டானது முதற்கொண்டு அடிக்கடி பாடுபடவேண்டியிருக்குமே; அப்படி அல்ல, அவர் தம்மைத்தாமே பலியிடுகிறதினாலே பாவங்களை நீக்கும்பொருட்டாக (முந்தின) [17]யுகத்தின் முடிவிலே [18]ஒரேதரம் வெளிப்பட்டார்.

உஎ [19]அன்றியும் மனிதர்கள் ஒரேதரம் மரிக்கிறதும், [20]பின்பு நியாயத்தீர்ப்பு அடைகிறதும் தீர்மானிக்கப்பட்டிருக்கிறதால்,

உஅ அதுபோலக் கிறிஸ்துவும், [21]அநேகருடைய பாவங்களைச் சுமந்துகொண்டுபோகும்படிக்கு [22]ஒரேதரம் [23]பலியிடப்பட்டுத் தமக்காகக் [24]காத்துக்கொண்டிருக்கிறவர்களுக்கு இரட்சிப்பைக் கொ

கி. பி. கூச.

1 க தீமோ. உ. ௫.
2 உரோ. ௩. உ௫: ௫. ௩. க பே. ௩. ௰அ.
3 எபி. ௩. க
4 எபி. எ. உஉ: அ. க: ௰உ. உச.
5 கலா. ௩. ௰௫.
* அல்லது இருக்க.
6 உ மோ. உச. ௩. ௲.
† அல்லது சுத்தமாக்க.
7 உ மோ. உச. ௫, ௩, அ. ௩ மோ. ௰௩. ௰ச, ௰௫, ௰அ.
8 ௩ மோ. ௰ச. ச, ௩, எ, சகூ, ௫௩, ௫உ.
‡ அல்லது மிகவும் சிவப்பான.
9 உ மோ. உச. அ. மத். உ௩. உஅ.
10 உ மோ. உகூ. ௰உ, ௩௩. ௩ மோ. அ. ௰௫, ௰௩: ௰௩. ௰ச, ௰௫, ௰௩, ௰அ, ௰கூ.
11 ௩ மோ. ௰எ. ௰௩.
12 எபி. அ. ௫.
13 உரோ. அ. ௩ச. எபி எ. உ௫. க யோ. உ. ௩.
14 எபி. ௩. உ௰.
15 எபி. அ. உ.
16 எ. ௰ச.
17 க கொரி. ௰. ௰௩ கலா. ச. ச. எபே. ௩. ௰.
18 ௰உ. ௰சனம். எபி. எ. உஎ: ௰. ௰. க பே. ௩. ௰அ.
19 க மோ. ௩. ௰௩. பிரச. ௩. உ௰.
20 உ கொரி. ௫. ௰. வெளி. உ௰. ௰உ, ௰௩.
21 மத். உகூ. உஅ. உரோ. ௫ ௰௫.
22 உரோ. கூ. ௰. க பே. ௩. ௰அ.
23 க பே. உ. உச. க யோ. ௩. ௫.
24 தீத். உ. ௰௩. உ பே. ௩. ௰உ.

Digitized by Google

ஒப்பதற்கு இரண்டாந்தரம் பாவப் பலியில்லாமல் தோன்றுவார்.

## ௰. அதிகாரம்.

௧. நியாயப்பிரமாணப் பலிகளினால் பூரணசுத்தி இல்லை என்றும், ௰. ஒரேவிசை செலுத்தப்பட்ட கிறிஸ்துவின் சரீரப்பலி. ௰௪. பாவங்களைப் பூரணமாய் நிவாரணம்பண்ணுகிறதென்றும், ௰௯. அதின்மேல் உண்டாகிய விசுவாசத்தை உறுதியாய்ப் பொறுமையோடும் தோத்திரத்தோடும் பற்றிக்கொள்ளவேண்டுமென்றும் சொல்லியது.

இப்படியிருக்க, நியாயப்பிரமாணமானது வருகிறவைகளாகிய [1]நன்மைகளின் பொருளுள்ளதாயிராமல், அவைகளின் [2]நிழலை மாத்திரம் காண்பிக்கிறதாயிருக்கிறதால் வருஷந்தோறும் இடைவிடாமல் செலுத்தப்பட்டு வருகிற ஒரேவிதமான [3]பலிகளினாலே அவைகளைச் செலுத்துகிறவர்களுக்கு [4]நிறைவான (ஆசீர்வாதத்தை) ஒருக்காலும் கொடுக்கமாட்டாது.

௨ கொடுத்ததானால், ஆராதனை செய்தவர்கள் ஒருதரம் சுத்தமாக்கப்பட்டபின், இன்னும் பாவங்கள் உண்டென்று தங்கள் மனதிலே அதிகமாய் நினையாதிருப்பதால், அந்தப் பலிகளைச் செலுத்துகிறது நிறுத்தப்படும் அல்லவா?*

௩ அப்படி இராதபடியால் [5]பாவங்கள் உண்டென்று அவைகளினாலே வருஷந்தோறும் நினைவுகூர்தல் உண்டாயிருக்கிறதே.

௪ ¶ [6]அல்லாமலும் ஆடுமாடுகளுடைய இரத்தம் பாவங்களை நிவிர்த்திசெய்யமாட்டாதே.

௫ ஆனதால் அவர் உலகத்தில் பிரவேசித்திருக்கிறபொழுது, [7]பலியையும் காணிக்கையையும் நீர் விரும்புகிறதில்லை, ஒரு சரீரத்தை எனக்கு எத்தனமாக்கினீர்.†

௬ தகனபலிகளும் பாவப்பலிகளும் உமக்குப் பிரியமல்லாதபொழுது,

௭ நான் சொன்னது: பராபரனே, என்னைக்குறித்து வேதபுத்தகத்திலே எழுதியிருக்கிறபடி உம்முடைய சித்தத்தை நிறைவேற்றுகிறதற்கு இப்பொழுது வருகிறேன் என்று சொன்னேன் என்றார்.

௮ நியாயப்பிரமாணத்தின்படி செலுத்தப்பட்டு வருகிற பலிகளைக்குறித்து மேற்சொல்லியபடி பலியையும், காணிக்கையையும், தகனபலிகளையும், பாவப்பலிகளையும் விரும்பமாட்டீர்; அவைகள் உமக்குப் பிரியமானவைகள் அல்லவென்று சொன்னபின்பு,

௯ பராபரனே, உம்முடைய சித்தத்தை நிறைவேற்றுகிறதற்கு இப்பொழுது வருகிறேன் என்று சொன்னதால், இரண்டாம் (ஏற்பாட்டை) ஸ்தாபிக்கும்படிக்கு முதலானதை எடுத்துப்போட்டார்.

௰ அந்தச் சித்தத்தின்படி எல்லாக் காலங்களுக்காகவும் [8]ஒரேதரம் இயேசுக்கிறிஸ்துவினுடைய சரீரம் பலியிடப்பட்டதினாலே [9]நாம் பரிசுத்தமாக்கப்பட்டிருக்கிறோம்.

௰௧ ¶ அன்றியும், எந்த ஆசாரியனும் [10]நாடோறும் ஆராதனை செய்கிறவனாய்ப் [11]பாவங்களை ஒருக்காலும் நிவிர்த்திசெய்யமாட்டாத ஒரேவித பலிகளை அடிக்கடிச் செலுத்திவருவான்.

௰௨ அவர்மாத்திரம் என்றென்றைக்கும் பாவங்களை நீக்கும்படிக்கான [12]ஒரே பலியைச் செலுத்திப் பராபரனுடைய வலதுபாரிசத்திலே உளுக்காந்து,

௰௩ அதுமுதல் [13]தம்முடைய சத்துருக்கள் தம்முடைய பாதங்களின்படியாக்கப்படுமளவும் காத்துக்கொண்டிருக்கிறார்.

௰௪ ஆகையால் பரிசுத்தமாக்கப்பட்டவர்களை அவர் ஒரே பலியினாலே [14]என்றென்றைக்கும் நிறைவுள்ளவர்கள் ஆக்கினார்.

௰௫ ¶ இதைக்குறித்துப் பரிசுத்த ஆவியானவரும் நமக்குச் சாட்சி சொல்லுகிறார்.

இ. பி. ௬௪.



1 எபி. ௧. ௰௧.
2 கொலோ. ௨. ௰௭. எபி. ௮. ௫: ௯. ௨௩.
3 எபி. ௯. ௯.
4 ௰௪. வச.
* அல்லது நிறுத்தப்படும்.
5 ௩ மோ. ௰௬. ௨௧. எபி. ௯. ௭.
6 மீகா. ௬. ௬, ௭. எபி. ௯. ௰௩. ௰௩. வச.
7 சங். ௪௰. ௬. ௫: ௫௰. ௮. ௫.
† அல்லது தகுதியாக்கினீர்.
8 எபி. ௯. ௰௨.
9 யோவா. ௰௭. ௰௯. எபி. ௰௩. ௰௨.
10 ௪ மோ. ௨௮. ௩. எபி. ௭. ௨௭.
11 ௪. வச.
12 எபி. ௧. ௩. கொலோ. ௩. ௧.
13 சங். ௱௰. ௧. அப். ௨. ௩௫. ௧ கொரி. ௰௫. ௨௫. எபி. ௧. ௰௩.
14 ௧. வச.

Digitized by Google

௰௬ எப்படியெனில், அந்த நாட்களுக்குப்பின் நான் அவர்களுடனே [1]இந்த உடம்படிக்கைபண்ணுவேன் என்று சொன்னபின்பு கர்த்தர் திருவுளம்பற்றினது: நான் என்னுடைய பிரமாணங்களை அவர்களுடைய இருதயங்களிலே கொடுப்பேன்; அவைகளை அவர்களுடைய மனதின்மேலே எழுதுவேன்.

௰௭ அவர்களுடைய பாவங்களையும் அக்கிரமங்களையும் நான் ஒருகாலத்திலாகிலும் நினைத்துக்கொள்வதில்லை என்றார்.*

௰௮ அந்தப்படி அவைகள் மன்னிக்கப்பட்டபடியால்பாவப்பலி இனிச் செலுத்தப்படவேண்டுவதில்லையே.

௰௯ ¶ ஆகையால் சகோதரரே, பரிசுத்தமான இடங்களுக்குப் போகிற மார்க்கத்தை இயேசுவானவர் தமது [2]சரீரமாகிய திரைச்சீலையின் வழியாய்ப் [3]புதிதும் ஜீவனுமான மார்க்கமாக நமக்கு உண்டுபண்ணி† வைத்ததால்,

௨௰ அந்த [4]மார்க்கத்தில் பிரவேசிக்கிறதற்கு அவருடைய திரு இரத்தத்தினாலே நமக்குத் [5]தயிரியம்‡ உண்டாயிருக்கிறபடியினாலும்,

௨௧ [6]பராபரனுடைய ஆலயத்திலே நமக்குப் [7]பெரிய ஆசாரியர் உண்டாயிருக்கிறபடியினாலும்,

௨௨ [8]நாம் குற்றத்தைச் சாற்றுகிற மனது நீங்கத் தெளிக்கப்பெற்ற இருதயம் உள்ளவர்களாய் உண்மையுள்ள இருதயத்தோடும், [9]விசுவாசத்தினால் ஆகிற நிச்சயத்தோடும் [10]பராபரனைச் சேரக்கடவோம்.

௨௩ அல்லாமலும் [11]சுத்தமான சலத்தால் கழுவப்பட்ட சரீரமுள்ளவர்களாய், [12]நம்முடைய நம்பிக்கையை அறிக்கையிடுகிறதில் அசைவில்லாமல் உறுதியாய் இருக்கக்கடவோம்; [13]வாக்குத்தத்தம்பண்ணினவர் உண்மையுள்ளவராய் இருக்கிறாரே.

௨௪ மேலும் அன்புகூருதற்கும் நற்கிரியைகளைச் செய்கிறதற்கும் எழுப்புதல் உண்டாயிருக்கும்படிக்கு ஒருவரை ஒருவர் நோக்கிப் பார்த்து,

௨௫ [14]சபை கூடிவருதலைச் சிலர் விட்டுப்போகிறதுபோல நாம் அப்படிச்செய்யாமல், ஒருவருக்கொருவர் புத்திசொல்லக்கடவோம்; [15]அந்த நாள் சமீபமாகிறதை நீங்கள் அறிந்திருக்கிறதால், [16]அதிகமாய் அப்படியே செய்யவேண்டும்.

௨௬ ¶ [17]சத்தியத்தை அறிந்துகொண்டபின் [18]நாம் மனப்பூர்வமாய்ப் பாவம்செய்தால், வேறொரு பாவப்பலி நமக்கு மீதியாயிருப்பதில்லை.

௨௭ விரோதம்செய்கிறவர்களைப் பட்சிக்கும் அக்கினியுள்ள [19]உக்கிரமும் நியாயத்தீர்ப்பும் வருமென்று பயத்தோடே காத்திருக்குதலே நமக்கு உண்டாயிருக்கும்.

௨௮ [20]மோசேயினுடைய பிரமாணத்தைத் தள்ளினவன் எவனோ, [21]அவன் இரண்டு மூன்று பேர் சாட்சிசொன்னபின்பு இரக்கமில்லாமல் கொலைசெய்யப்பட்டானே.

௨௯ பராபரனுடைய குமாரனைக் காலினால் மிதித்துப்போட்டுத் [22]தன்னைப் பரிசுத்தம் செய்த உடம்படிக்கையின் திரு இரத்தத்தை அசுத்தமென்று எண்ணிக் [23]கிருபையின் ஆவியை அசட்டைபண்ணினவன் [24]எவ்வளவு அதிக ஆக்கினைக்குப் பாத்திரவானாயிருப்பான்.

௩௰ நீங்களே யோசனைபண்ணுங்கள்; [25]பழிவாங்குதல் எனக்கு உரியது; நானே பதில்செய்வேன்

கி. பி. ௬௪.

1 எரே. ௩௧. ௩௩, ௩௪. எபி. ௮. ௰, ௰௨.
* சில பிரதிகளில் நினைத்துக்கொள்வதில்லையென்று பின் சொன்னார்.
2 எபி. ௯. ௯.
3 யோவா. ௰. ௯: ௰௪. ௬. எபி. ௯. ௮.
† அல்லது பிரதிஷ்டைபண்ணி.
4 எபி. ௯. ௮, ௰௨.
5 ரோ. ௫. ௨. எபே. ௨. ௰௮: ௩. ௰௨.
‡ அல்லது இஷ்டம்.
6 ௧ தீமோ. ௩. ௰௫.
7 எபி. ௪. ௰௪.
8 எபி. ௯. ௰௪.
9 எபே. [illegible]. யாக். ௧. ௬. ௧ யோ. ௩. ௨௧.
10 எபி. ௪. ௰௬.
11 எசே. ௩௬. ௨௫. ௨ கொரி. ௭. ௧.
12 எபி. ௪. ௰௪.
13 ௧ கொரி. ௧. ௯: ௰. ௰௩. ௧ தெச. ௫. ௨௪. ௨ தெச. ௩. ௩. எபி. ௰௧. ௰௧.
14 அப். ௨. ௪௨. யூதா. ௰௯.
15 பிலி. ௪. ௫. ௨ பே. ௩. ௯, ௰௧, ௰௪.
16 ரோ. ௰௩. ௰௧.
17 ௨ பே. ௨. ௨௰, ௨௧.
18 ௪ மோ. ௰௫. ௩௰. எபி. ௬. ௪.
19 எசே. ௩௬. ௫. செப். ௧. ௰௮: ௩. ௮. ௨ தெச. ௧. ௮. எபி. ௰௨. ௨௯.
20 எபி. ௨. ௨.
21 ௫ மோ. ௰௭. ௨, ௬: ௰௯. ௰௫. மத். ௰௮. ௰௬. யோவா. ௮. ௰௭. ௨ கொரி. ௰௩. ௧.

22 ௧ கொரி. ௰௧. ௨௯. எபி. ௰௩. ௨௰.—23 மத். ௰௨. ௩௧, ௩௨. எபே. ௪. ௩௰.—24 எபி. ௨. ௩: ௰௨. ௨௫.
25 ௫ மோ. ௩௨. ௩௫. ரோ. ௰௨. ௰௯.

Digitized by Google

என்று சொன்ன கர்த்தனை அறிந்திருக்கிறோமே; அன்றியும் [1]கர்த்தர் தம்முடைய சனங்களுக்கு நியாயத்தீர்ப்புக் கொடுப்பார் என்றும் சொல்லியிருக்கிறதே.

௩௧ [2]ஜீவனுள்ள பராபரனுடைய கைகளில் விழுகிறது பயங்கரமாயிருக்கிறது.

௩௨ ¶ நீங்கள் [3]முந்தின நாள்களை ஞாபகப்படுத்துங்கள்; அவைகளில் [4]நீங்கள் பிரகாசமாக்கப்பட்டிருந்தபொழுது [5]பாடுகளால் மிகுந்த போராட்டத்தைச் சகித்துக்கொண்டீர்களே.

௩௩ நீங்கள் நிந்தைகளாலும் உபத்திரவங்களாலும் மற்றவர்களுக்கு [6]வேடிக்கைக்கு ஏதுவானவர்களாயும் அப்படியான [7]மற்றவர்களுக்குத் தோழராயும் இருந்தீர்கள்.

௩௪ [8]கட்டப்பட்டிருந்த என்னோடேகூட நீங்கள் பாடுபட்டீர்களே; [9]பரமண்டலங்களில் அதிகமேன்மையும், உறுதியுமான ஆஸ்தி உங்களுக்கு உண்டென்று நீங்கள்* அறிந்து உங்கள் (லவுகிக) ஆஸ்திகளை (மற்றவர்கள்) கொள்ளையிட்டதற்குச் [10]சந்தோஷமாய் இடங்கொடுத்தீர்கள்.

௩௫ ஆகையால் [11]மிகுந்த பலனுக்கு ஏதுவான உங்கள் தயிரியத்தை எறிந்துவிடாதிருப்பீர்களாக.

௩௬ ¶ நீங்கள் பராபரனுடைய சித்தத்தின்படி செய்கிறவர்களாய் [12]வாக்குத்தத்தத்தின் நன்மையைப் பெறும்படிக்குப் [13]பொறுமை உங்களுக்கு வேண்டும்.

௩௭ [14]வருகிறவர் [15]அதிககாலம் தாமதமாய் இராமல் சீக்கிரமாய் வருவார் என்றும்,

௩௮ [16]விசுவாசத்தினாலே நீதிமானானவன் பிழைப்பான், அவன் பின்வாங்கிப்போனால் அவன் மேல் என்னுடைய ஆத்துமா பிரியமாயிராதென்றும் (எழுதியிருக்கின்றது).

௩௯ [17]நாம் கெட்டுப்போகிறதற்கு ஏதுவாகப் பின்வாங்குகிறவர்களாய் இராமல் (நமது) [18]ஆத்துமாவைக் காக்கிறதற்கு ஏதுவாக விசுவாசமுள்ளவர்களாய் இருக்கிறோம்.

## ௰௧. அதிகாரம்.

க. விசுவாசம் இன்னதென்றும், ௬. விசுவாசம் இல்லாமல் பராபரனுக்குப் பிரியமாயிருக்கக்கூடாதென்றும், ௭. விசுவாசத்துக்குத் திருஷ்டாந்தங் கொடுத்திருந்த பூர்வீகத்தார்களைக்குறித்தும் சொல்லியது.

விசுவாசமானது நம்பப்படுகிறவைகளில் உறுதியும்† [19]காணப்படாதவைகளை வெளிப்படுத்துகிறதுமாய் இருக்கின்றது.

௨ அதினாலே [20]பூர்வீகத்தார் நற்சாட்சியைப் பெற்றார்கள்.

௩ ¶ [21]உலகம் பராபரனுடைய வார்த்தையால் உண்டாக்கப்பட்டதென்றும், இவ்விதமாய்க் காணப்படுகிறவைகள் தோற்றப்படாத பொருள்களால் உண்டாயினவென்றும் விசுவாசத்தினாலே அறிந்திருக்கிறோம்.

௪ ¶ விசுவாசத்தினாலே [22]ஆபேல் என்பவன் காயீனுடைய பலியிலும் அதிகமான பலியைப் பராபரனுக்குச் செலுத்தினான்; அதினாலே அவன் நீதிமான் என்று சாட்சிபெற்றான்; அவனுடைய காணிக்கைகளைக்குறித்துப் பராபரனே சாட்சிகொடுத்தார்; அவன் மரித்தும் அதினாலே [23]இப்பொழுதும் பேசுகிறான்.‡

௫ ¶ விசுவாசத்தினாலே [24]ஏனோக்கு என்பவன் மரணத்தைக் காணாதபடிக்கு எடுத்துக்கொள்ளப்பட்டான்; பராபரன் அவனை எடுத்துக்கொண்டபடியினாலே அவன் காணப்படாமற்போனான்; அவன் எடுத்துக்கொள்ளப்படுகிறதற்குமுன்னே அவன் பராபரனுக்குப் பிரியமானவன் என்று சாட்சிபெற்றுக்கொண்டிருந்தான்.

கி. பி. ௬௪.

1 உ மோ. ௩௨. ௩௫. ௩௬. ௯௦. ௪: ௩௫௯. ௰௪.
2 லூக். ௰௨. ௫.
3 கலா. ௩. ௪. ௨ யோ. ௮.
4 எபி. ௬. ௪.
5 பிலி. ௧. ௨௯, ௩௦. கொலோ. ௨. ௧.
6 ௧ கொரி. ௪. ௯.
7 பிலி. ௧. ௭: ௪. ௰௪. ௧ தெச. ௨. ௰௪.
8 பிலி. ௧. ௭. ௨ தீமோ. ௧. ௰௬.
9 மத். ௬. ௨௰: ௰௯. ௨௧. லூக். ௰௨. ௩௩. ௧ தீமோ. ௬. ௰௯.
* அல்லது உங்களில் நீங்கள்.
10 மத். ௫. ௰௨. அப். ௫. ௪௧. யாக். ௧. ௨.
11 மத். ௫. ௰௨: ௰. ௩௨.
12 கொலோ. ௩. ௨௪. எபி. ௯. ௰௫. ௧ பே. ௧. ௯.
13 லூக். ௨௧. ௰௯. கலா. ௬. ௯. எபி. ௰௨. ௧.
14 ஆப. ௨. ௩, ௪.
15 லூக். ௰௮. ௮. ௨ பே. ௩. ௯.
16 உரோ. ௧. ௰௭. கலா. ௩. ௰௧.
17 ௨ பே. ௨. ௨௦, ௨௧.
18 அப். ௰௬. ௩௦. ௩௧. ௧ தெச. ௫. ௯. ௨ தெச. ௨. ௰௪.
† அல்லது பொருளும்.
19 உரோ. ௮. ௨௪, ௨௫. ௨ கொரி. ௪. ௰௮: ௫. ௭.
20 ௩௩. ௩௯.
21 ௧ மோ. ௧. ௧. சங். ௩௩. ௬. யோவா. ௧. ௩. எபி ௧. ௨. ௨ பே. ௩. ௫.
22 ௧ மோ. ௪. ௪. ௧ யோ. ௩. ௰௨.

23 ௧ மோ. ௪. ௰. மத். ௨௩. ௩௫. எபி. ௰௨. ௨௪.—‡ அல்லது பேசப்படுகிறான்.—24 ௧ மோ. ௫. ௨௨, ௨௪.

Digitized by Google

சு பராபரனைச் சேருகிறவன், அவர் உண்டென்றும் அவர் தம்மைச் சாக்கிரதையாய்த் தேடுகிறவர்களுக்குப் பலனை அளிக்கிறவர் என்றும், விசுவாசிப்பானே; ஆகையால் விசுவாசம் இல்லாதவன் அவருக்குப் பிரியமாயிருக்கமாட்டான்.

௭ ¶ [1]நோவா என்பவனும் தற்காலத்திலே காணாதவைகளைக்குறித்துத் தேவ எத்தனமாய் எச்சரிக்கப்பட்டபொழுது, விசுவாசத்தினாலே பயந்து * தன் குடும்பத்தை இரட்சிப்பதற்குப் [2]பேழையை உண்டுபண்ணி, இதினாலே உலகம் ஆக்கினைக்கு உள்ளாயிற்று என்று தீர்ப்புக் காண்பித்து, [3]விசுவாசத்தால் வருகிற நீதிக்குச் சுதந்தரவாளியானான்.

௮ ¶ [4]ஆபிரகாமும் பின்பு சுதந்தரமாகப் பெற்றுக்கொள்ளும்படிக்கான இடத்திற்குப் புறப்பட்டுப்போக அழைக்கப்பட்டபொழுது விசுவாசத்தினாலே கீழ்ப்படிந்து, தான் போகவேண்டிய இடம் இன்னதென்று அறியாமல் புறப்பட்டுப்போனான்.

௯ தனக்கு வாக்குத்தத்தம்பண்ணப்பட்ட அந்நியதேசத்திலே அவன் அந்த வாக்குத்தத்தத்திற்கு [5]உடன் சுதந்தரராகிய ஈசாக்கோடும் யாக்கோபோடும்கூட விசுவாசத்தினாலே சஞ்சரித்துக் [6]கூடாரங்களிலே குடியிருந்தான்.

௰ [7]பராபரனாலே உண்டாக்கப்பட்டும் ஆளப்பட்டும் இருக்கிற அஸ்திபாரங்களுள்ள பட்டணத்திற்குப் போகக் [8]காத்துக்கொண்டிருந்தபடியால் அப்படியிருந்தான்.

௰௧ [9]சாராளும் வாக்குத்தத்தம் பண்ணினவர் [10]உண்மையுள்ளவரென்று எண்ணி, விசுவாசத்தினாலே கருப்பம்தரிக்கும்படி பெலன் அடைந்து, [11]வயது சென்றவளாய் இருந்தும் பிள்ளைபெற்றாள்.

கி. பி. ௬௪.

1 ௧ மோ. ௬. ௰௩, ௨௨.
* அல்லது கவனமுள்ளவனாகி.
2 ௧ பே. ௩. ௨௰.
3 ௨ ரோ. ௩. ௨௨: ௪. ௰௩. பிலி. ௩. ௯.
4 ௧ மோ. ௰௨. ௧, ௪. அப். ௭. ௨, ௩, ௪.
5 எபி. ௬. ௰௭.
6 ௧ மோ. ௰௨. ௮: ௰௩. ௩, ௰௮: ௰௮. ௧, ௯.
7 எபி. ௩. ௪. வெளி. ௨௧. ௨, ௰.
8 எபி ௰௨. ௨௨: ௰௩. ௰௪.
9 ௧ மோ. ௰௭. ௰௯: ௰௮. ௰௧, ௰௪: ௨௧. ௨.
10 ௨ ரோ. ௪. ௨௧. எபி. ௰. ௨௩.
11 லூக். ௧. ௩௬.
12 ௨ ரோ. ௪. ௰௯.
13 ௧ மோ. ௨௨. ௰௭. ௨ ரோ. ௪. ௰௮.
14 ௩௯, வச.
15 ௨௭. வச. யோவா. ௮. ௫௬.
16 ௧ மோ. ௨௩. ௪: ௪௭. ௯. ௧ நாளா. ௨௯. ௰௫. சங். ௩௯. ௰௨: ௱௰௯. ௰௯. ௧ பே. ௧. ௰௭: ௨. ௰௧.
† கிரேக்கு, விசுவாசமுள்ளவர்களாகி.
17 எபி. ௰௩. ௰௪.
18 ௨ மோ. ௩. ௬, ௰௫. மத். ௨௨. ௩௨. அப். ௭. ௩௨.
19 பிலி. ௩. ௨௰. எபி. ௰௩. ௰௪.
20 ௧ மோ. ௨௨. ௧, ௯.
21 யாக். ௨. ௨௧.
22 ௧ மோ. ௨௧. ௰௨. ௨ ரோ. ௯. ௭.
‡ அல்லது அவனைக்குறித்து.
23 ௨ ரோ. ௪. ௰௭, ௰௯, ௨௧.

௰௨ ஆனபடியால் இந்தச் சங்கதியில் [12]செத்தவனைப்போன்ற ஒருவனாலே [13]வானத்திலுள்ள பெருக்கமான நட்சத்திரங்களைப்போலவும் எண்ணிறந்த கடற்கரை மணலைப்போலவும் மிகுந்த சனங்கள் உண்டானார்கள்.

௰௩ ¶ அவர்கள் எல்லாரும் [14]வாக்குத்தத்தம் பண்ணப்பட்டவைகளை அடையாமல், [15]தூரத்திலே அவைகளைக் கண்டு வாழ்த்துதலோடே விரும்பிப் பூமியின்மேலே தாங்கள் [16]அந்நியராயும் வழிப்போக்கராயும் இருந்ததை அறிக்கைபண்ணி, விசுவாசத்தோடே † இறந்துபோனார்கள்.

௰௪ அப்படி அறிக்கைபண்ணுகிறவர்கள் [17]சென்மதேசத்தை நாடிப்போகிறோம் என்று தெரியப்படுத்துகிறார்கள்.

௰௫ அவர்கள் தாங்கள் விட்டு வந்த தேசத்தை நினைத்தார்களானால், அதற்குத் திரும்பும்படி இடமுண்டே.

௰௬ அதையல்ல, அதிலும் மேன்மையான பரமண்டலத்தில் உள்ளதையே விரும்பினார்கள்; ஆகையால் பராபரனும் [18]அவர்களுடைய தேவன் என்று அழைக்கப்படுகிறதினாலே வெட்கப்படுகிறதில்லை; [19]அவர்களுக்கு ஒரு பட்டணத்தை எத்தனம்பண்ணினாரே.

௰௭ ¶ மேலும், [20]ஆபிரகாமானவன் தான் சோதிக்கப்பட்டபொழுது, விசுவாசத்தினாலே [21]ஈசாக்கைப் பலியாக ஒப்புக்கொடுத்தான்.

௰௮ [22]ஈசாக்கினாலே உனக்குச் சந்ததி உண்டாகும் என்று அவனோடே ‡ சொல்லப்பட்டிருந்ததே.

௰௯ இப்படிப்பட்ட வாக்குத்தத்தங்களைப்பெற்றவன், [23]இவனை மரித்தோரிலிருந்து எழுந்திருக்கப்பண்ணப் பராபரன் வல்லவராய் இருக்கிறார் என்று எண்ணித் தனக்கு ஒரேபேறானவனையே பலி

Digitized by Google

யாக ஒப்புக்கொடுத்தான்; ஆன தால் உவமையாகும்படியே அவனைத் திரும்பப் பெற்றுக்கொண்டான்.

௨௰ ¶ ஈசாக்கு என்பவனும் பிற்காலத்திற்குஉரியவைகளின்மேல் உள்ள விசுவாசத்தினாலே இயாக்கோபையும் ஏசாவையும் [1]ஆசீர்வதித்தான்.

௨௧ இயாக்கோபு என்பவனும் மரணகாலத்தில் விசுவாசத்தினாலே இயோசேப்பினுடைய குமாரர் இருவரையும் [2]ஆசீர்வதித்து, தன் கோலின் முனையிலே (சாய்ந்து) [3]தொழுதுகொண்டான்.

௨௨ [4]இயோசேப்பு என்பவனும் இஸ்ரவேல் சந்ததியார் (எகிப்து தேசத்தை) விட்டுப் புறப்படுவார்கள் என்றுதன்சீவகாலத்தின்முடிவில் விசுவாசத்தினாலே அறிவித்து* தன் எலும்புகளைக்குறித்துக் கட்டளைகொடுத்தான்.

௨௩ ¶ [5]மோசே என்பவன் பிறந்தபொழுது அவனுடைய தாய் தகப்பன்மாரும் பிள்ளை அழகுள்ளது என்று கண்டு, விசுவாசத்தினாலே [6]இராசாவினுடைய கட்டளைக்குப் பயப்படாமல், அந்தப் பிள்ளையை மூன்றுமாதம் ஒளித்து வைத்தார்கள்.

௨௪ [7]மோசே என்பவனும் பெரிய வயதுள்ளவனானபொழுது பார்வோனுடைய குமாரத்தி மகனென்று அழைக்கப்படுகிறதை விசுவாசத்தினாலே வெறுத்து,

௨௫ அநித்தியமான பாவசந்தோஷங்களை அநுபவிப்பதை அல்ல, பராபரனுடைய சனங்களோடேகூடத் [8]துன்பத்தை அநுபவிப்பதையே அதிகமாய்த் தெரிந்துகொண்டான்.

௨௬ [9]இனிமேல் வரும் பலனை அவன் நோக்கிப்பார்த்து, எகிப்தினுள்ள பொக்கிஷங்களிலும் [10]கிறிஸ்துவின்நிமித்தம் வருகிற† நிந்தையை அதிக ஐசுவரியமென்று எண்ணினான்.

௨௭ [11]காணப்படாதவரைக் கண்டாற்போல உறுதியாய்ப் பற்றிக்கொண்டதால் அவன் விசுவாசத்தினாலே இராசாவினுடைய மூர்க்கத்திற்குப் பயப்படாமல் [12]எகிப்தைவிட்டுப் போனான்.

௨௮ தலைப்பிள்ளைகளைச் சங்கரிக்கிறவன் இஸ்ரவேலரைத் தொடாதபடிக்கு அவன் விசுவாசத்தினாலே [13]பஸ்காவையும் இரத்தம் பூசுதலையும் ஏற்படுத்தினான்.

௨௯ ¶ விசுவாசத்தினாலே அவர்கள் [14]சிவந்த சமுத்திரத்தை உலர்ந்த தரையைப்போலக் கடந்துபோனார்கள்; எகிப்தார் அப்படிச் செய்யத் தேடினபொழுது அமிழ்ந்துபோனார்கள்.

௩௰ ¶ (இஸ்ரவேலருடைய) விசுவாசத்தினாலே [15]இயெரிகோபட்டணத்தின் மதில்கள் (அவர்களால்) எழுநாளுக்குள்ளே சூழப்பட்டு விழுந்தன.

௩௧ ¶ [16]வேசியாயிருந்த இராகாப் என்பவள் விசுவாசத்தினாலே [17]வேவுகாரரைச் சமாதானத்தோடே ஏற்றுக்கொண்டு அவிசுவாசிகளோடே‡ அழிக்கப்படாதிருந்தாள்.

௩௨ ¶ பின்னும் யாரைக்குறித்துச் சொல்லலாம்; [18]கிதேயோனையும் [19]பாராக்கையும் [20]சமுசோனையும், [21]இயெப்பத்தாவையும், [22]தாவீதையும், [23]சாமுவேலையும் தீர்க்கதரிசிகளையுங்குறித்து நான் விவரம்சொல்லவேண்டுமானால் காலம் போதாது.

௩௩ அவர்களும் விசுவாசத்தினாலே இராச்சியங்களைச் செயித்துக்கொண்டு, நீதியை நடப்பித்து, [24]வாக்குத்தத்தம்பண்ணப்பட்டவைகளைப் பெற்றுக்கொண்டு, [25]சிங்கங்களுடைய வாய்களை அடைத்து, [26]அக்கினியின் பலத்தை அவித்து,

௩௪ [27]கட்கங்களின் கூர்மைக்குத் தப்பிப் [28]பல ஈனத்திலே பலன்கொண்டு, யுத்தகாலத்தில்

கி. பி. கூச.

1 க மோ. உஎ. உஎ, கக.
2 க மோ. சஅ. கூ, மக, உம.
3 க மோ. சஎ. கக.
4 க மோ. ரும. உச, உரு. உ மோ. மங. மகூ.
* அல்லது நினைத்து.
5 உ மோ. உ. உ. அப். எ உம.
6 உ மோ. க. மசு, உஉ.
7 உ மோ. உ. ம, மக.
8 சங். அச. ம.
9 எபி. ம. கரு
10 எபி. மங. மங.
† அல்லது கிறிஸ்துவின்.
11 மக. உச.
12 உ மோ. ம. உஅ,உக: மஉ. கஎ: மங. மஎ, மஅ.
13 உ மோ. மஉ. உக. ஙு.
14 உ மோ. மச. உஉ, உகூ.
15 யோசு. சு. உம.
16 யோசு. க. உக. யாக். உ. உரு.
17 யோசு. உ. க.
‡ அல்லது கீழ்ப்படியாதவர்களோடே
18 நியா. சு. மக.
19 நியா. ச. சு.
20 நியா. மங. உச.
21 நியா. மக. க: மஉ. எ.
22 க சாமு. மசு. க, மங: மஎ. சரு.
23 க சாமு. க. உம: மஉ. உம.
24 உ சாமு. எ. மக. ஙு.
25 நியா. மச. ரு. க. க சாமு. மஎ. கச, கரு. தானி. சு. உஉ.
26 தானி. க. உரு.
27 க சாமு. உம. க. க இரா. மகூ. க. உ இரா. சு. மசு.
28 உ இரா. உம. எ. ஙு. யோபு. சஉ. ம. சங். சு. அ.

Digitized by Google

வல்லவர்களாகி, [1]அந்நியருடைய பாளையங்களைக் கவிழ்த்துப்போனார்கள்.

௩௫ (விசுவாசத்தினாலே) [2]ஸ்திரிகளும் செத்துப்போன தங்களுக்கு உரியவர்களை உயிரோடு எழுந்திருக்கப் பெற்றார்கள்; (விசுவாசத்தினாலே) வேறுசிலர் அதிக மகிமையாய் உயிரோடே எழும்பும்படிக்கு மீட்பை அங்கிகரியாமல் [3]இழுப்புண்டு வாதிக்கப்பட்டார்கள்.

௩௬ (விசுவாசத்தினாலே) வேறுசிலர் நிந்தைகளையும் அடிகளையும், [4]சங்கிலிகளையும், காவலையும் சகித்துக்கொண்டார்கள்.

௩௭ [5]கல் எறியப்பட்டார்கள்; வாளால் அறுக்கப்பட்டார்கள்; சோதிக்கப்பட்டார்கள்; கட்கத்தினாலே வெட்டப்பட்டு மரித்தார்கள்; [6]செம்மறியாட்டுத் தோல்களையும் வெள்ளாட்டுத் தோல்களையும் போர்த்துக்கொண்டு, குறைச்சலையும் உபத்திரவத்தையும் துன்பத்தையும் சகித்துத் [7]திரிந்து,

௩௮ வனாந்தரங்களிலேயும் மலைகளிலேயும் [8]குகைகளிலேயும் பூமியின் வெடிப்புகளிலேயும் சிதறி நடந்தார்கள்; உலகம் அவர்களுக்கு அபாத்திரமாய் இருந்தது.

௩௯ ¶ அவர்கள் எல்லாரும் விசுவாசத்தைக்குறித்து [9]நற்சாட்சி பெற்றிருந்தும், வாக்குத்தத்தம்பண்ணப்பட்டதை அடையாமல் போனார்கள்.

௪௰ [10] பராபரன் நம்மைக்குறித்து அதிக நன்மையானதை ஏற்படுத்தினதால்* அவர்கள் நம்மையன்றி [11]நிறைவுள்ள ஆசீர்வாதத்தை அடையாதபடிக்கு (அப்படியே போனார்கள்).

## ௰௨. அதிகாரம்.

௧. இடைவிடாத விசுவாசமும் பொறுமையும் தேவபத்தியும் உடையவர்களாயிருக்கப் புத்திசொல்லி, ௨௨. பழைய ஏற்பாட்டைப்பார்க்கிலும் புதிய ஏற்பாடு மேன்மையுள்ளதென்றும் காட்டியது.

ஆகையால் மேகம்போல இத்தனை திரளான சாட்சிகள் நம்மைச் சூழ்ந்துகொண்டிருக்க, [12]நாம் பாரமான யாவற்றையும் நம்மைச் சுற்றிநிற்கிற பாவத்தையும் தள்ளிப்போட்டு, விசுவாசத்தை ஆரம்பமாய் நடத்துகிறவராயும்† முடிக்கிறவராயும் இருக்கிற இயேசுவை நோக்கி, நமக்கு முன்வைக்கப்பட்ட போராட்டச் சாலையிலே [13]பொறுமையோடே [14]ஓடக்கடவோம்.

௨ [15]அவர் தமக்குமுன்பாகவைத்திருந்த சந்தோஷத்திற்காக அவலட்சணப்படுதலை எண்ணாமல், சிலுவையில் (மரணத்தைச்) சகித்துப் பின்பு [16]பராபரனுடைய ஆசனத்தின் வலதுபாரிசத்தில் உளுக்காந்திருக்கிறார்.

௩ ¶ ஆனதால் உங்கள் [17]ஆத்துமாக்கள் இளைப்புள்ளவைகளாய் இருக்கும்பொழுது நீங்கள் தயிரியம் அற்றவர்களாய்ப் போகாதபடிக்குப் பாவிகளால் இப்படிப்பட்ட விரோதத்தைச் சகித்த [18]அவரையே நன்றாய்த் தியானித்துக்கொள்வீர்களாக.

௪ அந்தப் பாவத்திற்கு விரோதமாய்ப்போராட்டம்செய்கிற நீங்கள் இதுவரைக்கும் [19]இரத்தம் சிந்தப்படத்தக்கதாக எதிர்நிற்கவில்லையே.

௫ அன்றியும், [20]என் மகனே, கர்த்தருடைய தண்டனையை அற்பமாக எண்ணாமலும் அவரால் கடிந்துகொள்ளப்படுகையில் தயிரியமற்றவனாகாமலும் இருப்பாயாக என்றும்,

௬ [21]கர்த்தராலே அன்புகூரப்பட்டவன் எவனோ அவனை அவர் தண்டித்துத் தாம் சேர்த்துக்கொள்ளுகிற எந்த மகனையானாலும் அடித்துவருவாரே என்றும், பிள்ளைகளாகிய உங்களுக்குச் சொல்லிய

கி. பி. ௬௪.

1 நியா. ௰௫. அ, ௰௫. ௧ சாமு. ௰௪. ௰௩. ௩:௰௭. ௰௧, ௰௨, ௨ சாமு. அ. ௧. ௩.
2 ௧ இரா. ௰௭. ௨௨. ௨ இரா. ௪. ௩௫.
3 அப். ௨௨. ௨௫.
4 ௧ மோ. ௩௯. ௨௰. எரே, ௨௰. ௨:௩௭. ௰௫.
5 ௧ இரா. ௨௧. ௰௩. ௨ நாளா. ௨௪. ௨௧. அப் எ. ௫௮: ௰௪. ௰௩.
6 சகரி. ௰௩. ௪.
7 ௨ இரா. ௧. அ. மத். ௩. ௪.
8 ௧ இரா. ௰௮. ௪: ௰௯. ௯.
9 ௨, ௰௩. வச.
10 எபி. எ. ௨௨: அ. ௬.
* அல்லது முன் அறிந்ததால்.
11 எபி. ௫. ௯: ௰௨. ௨௩. வெளி. ௬. ௰௧.
12 கொலோ. ௩. அ. ௧ பே. ௨. ௧.
† அல்லது விசுவாசத்துக்குக்காரணராயும்.
13 ௨ரோ. ௰௨. ௰௨. எபி. ௰. ௩௬.
14 ௧ கொரி. ௯. ௨௪. பிலி. ௩. ௰௩, ௰௪.
15 லூக். ௨௪. ௨௬. பிலி. ௨. அ. ௩ ௧ பே. ௧. ௰௧.
16 சங். ௱௰. ௧. எபி. ௧. ௩, ௰௩: அ. ௧. ௧ பே. ௩. ௨௨.
17 கலா. ௬. ௯.
18 மத். ௰. ௨௪. ௨௫. யோவா. ௰௫. ௨௰
19 ௧ கொரி. ௰. ௰௩. எபி. ௰. ௩௨, ௩௩, ௩௪.
20 யோபு. ௫ ௰௭. வாக். ௩. ௰௧.

21 சங். ௯௪. ௰௨: ௱௰௯. ௭௫. வாக். ௩. ௰௨. யாக். ௧. ௰௨. வெளி. ௩. ௰௯.

Digitized by Google

ருக்கிற ஆறுதலுள்ள வசனத்தை மறந்தீர்கள்.

௭ [1]நீங்கள் (அவருடைய) தண்டிப்புக்கு உட்பட்டிருக்கிறபடியால் பராபரன் உங்களைத் (தம்முடைய) பிள்ளைகள்போல எண்ணி நடப்பிக்கிறாரே; தகப்பனால் தண்டிக்கப்படாத பிள்ளை ஒன்று உண்டா?

௮ [2]எல்லாப் (பிள்ளைகளும்) தண்டிக்கப்பட்டதுபோல நீங்களும் தண்டிக்கப்படாவிட்டால் பிள்ளைகளாயிராமல் வேசிப்பிள்ளைகளாய் இருப்பீர்களே.

௯ ¶ அன்றியும், நம்முடைய சரீரத்திற்குத் தகப்பன்மாரானவர்கள் நம்மைத் தண்டிக்கும்பொழுது நாம் அவர்களுக்கு வந்தனம் செய்திருக்க, [3]ஆவிகளுக்குப் பிதாவானவருக்கு நாம் பிழைக்கும்படி மிகவும் அதிகமாய்க் கீழ்ப்படிய வேண்டுமல்லவா?

௰ அந்தத் தகப்பன்மார்கள் தங்களுக்குத் தோன்றினபடி* கொஞ்சக்காலமாய் நம்மைத் தண்டித்தார்கள்; அவர் தம்மைப்போல நாம் [4]பரிசுத்தராகுதற்கு ஏதுவான பிரயோசனம்வரும்பொருட்டே அப்படிச் செய்கிறார்.

௰௧ தண்டனை உண்டாயிருக்கும்பொழுது அது (நமக்குச்) சந்தோஷமாக அல்ல, துக்கமாகத் தோன்றுகின்றது; பின்பு அதினாலே முயற்சிப்பட்டவர்களுக்கு அது [5]நீதியென்னும் பாக்கியபலனைக் கொடுக்கின்றது.

௰௨ ¶ ஆகையால், [6]தளர்ச்சியாயிருக்கிற (உங்கள்) கைகளையும் இளைப்புள்ள (உங்கள்) கால்களையும் செம்மைப்படுத்துவீர்களாக.

௰௩ முடமுள்ள (அவயவம்) புரண்டுபோகாமல் [7]சொஸ்தமாகும்படிக்கு உங்கள் கால்களுக்காகச் [8]சரியான† பாதைகளைச் செய்வீர்களாக.

௰௪ [9]யாவருடனேயும் சமாதானமாயிருக்கவும் பரிசுத்தராயிருக்கவும் சாக்கிரதையாய் இருப்பீர்களாக; [10]பரிசுத்தமில்லாதவன் கர்த்தரைத் தரிசிப்பதில்லையே.

௰௫ [11]ஒருவரும் பராபரனுடைய கிருபையை இழந்துபோகாத‡படிக்கும், மற்றநேகரும் அசுசிப்படத்தக்கதாக [12]கசப்புள்ளவேர் உங்களுக்குள்ளே தோன்றிக் கலக்கம் உண்டாக்காதபடிக்கும்,

௰௬ ஒருவரும் [13]வேசிமார்க்கராயும், [14]ஏசா என்பவன்போல லவுகீக நடத்தை உள்ளவர்களாயும் இராதபடிக்கும் [15]எச்சரிக்கையாய் இருப்பீர்களாக; அவன் ஒரே வேளைச் சாப்பாட்டுக்காக முதற்பேறானவனுக்கு உரிய சுதந்தரங்களை விட்டுவிட்டானே.

௰௭ பின்பு உங்களுக்குத் தெரிந்திருக்கிறபடி, [16]அவன் (தன் தகப்பனுடைய) ஆசீர்வாதத்தைப்பெற்றுக்கொள்ள விரும்பியும் தள்ளப்பட்டான்; [17]அதைக் கண்ணீரோடே மிகவும் தேடியும் (தகப்பனிடத்தில்) மாறுதலைக்§ காணாமல் போனானே.

௰௮ ¶ அன்றியும், தொடப்பட்டு அக்கினி பற்றி எரிகிற [18]மலையினிடத்திலும், மந்தாரத்தினிடத்திலும் இருளினிடத்திலும்,

௰௯ பெருங்காற்றினிடத்திலும், எக்காளத்தின் முழக்கத்தினிடத்திலும், வார்த்தைகளின் தொனியினிடத்திலும் நீங்கள் வரவேண்டியவர்கள் அல்லவே; [19]அந்தத் தொனியைக் கேட்டவர்கள் பின்னும் வசனம் தங்களுக்குத் தோன்றாதபடிக்கு வேண்டிக்கொண்டார்கள்.

௨௰ என்னத்தினாலெனில், [20]இந்த மலையை ஒரு மிருகம் தொட்டால், அதின்மேலே கல்லெறிய வேண்டும், அல்லது அதை அம்பினாலே எய்து கொலைசெய்ய வேண்டும் என்று சொல்லப்பட்ட கட்டளையை அவர்கள் சகிக்கமாட்டாதிருந்தார்கள்.

௨௰௧ அந்தத் தரிசனை [21]இவ்வளவ

கி. பி. ௬௪.

1 ௫ மோ. ௮. ௫. ௨ சாமு. ௭. ௰௪. ஸங். ௯௪. ௨௪: ௰௩. ௰௮: ௨௧. ௰௧.
2 சங். ௭௩. ௰௫. ௧ பே. ௫. ௯.
3 ௪ மோ. ௰௬. ௨௨: ௨௭. ௰௬. யோபு. ௰௨. ௰. பிர. ௰௨. ௭. ஏசா. ௫௭. ௫: ௫௭. ௰௬. சகரி. ௰௨. ௧.
* அல்லது தங்கள் சந்தோஷத்தின்படி.
4 ௩ மோ. ௰௯. ௨௫: ௰௯. ௨. ௧ பே. ௧. ௰௫, ௰௬.
5 யாக். ௩. ௰௮.
6 யோபு. ௪. ௩, ௪. ஏசா. ௩௫. ௩.
7 கலா. ௬. ௧.
8 யாக். ௪. ௨௩, ௨௭.
† அல்லது அமுத்தமான.
9 சங். ௩௪. ௰௪. உரோ. ௰௨. ௰௮: ௰௪. ௰௯. ௨ தீமோ. ௨. ௨௨.
10 மத். ௫. ௮. ௨ கொரி. ௭. ௧. எபே. ௫. ௫.
11 கலா. ௫. ௪.
‡ அல்லது விட்டுவிலகாத.
12 ௫ மோ. ௨௯. ௰௮. எபி. ௩. ௰௨.
13 எபே. ௫. ௩. கொலோ. ௩. ௫. ௧ தெச. ௪. ௩.
14 ௧ மோ. ௨௫. ௩௩.
15 ௨ கொரி. ௬. ௧.
16 ௧ மோ. ௨௭. ௩௪, ௩௮, ௩௮.
17 எபி ௬. ௬.
§ அல்லது மனம் திரும்புதலை.
18 ௨ மோ. ௰௯. ௰௨, ௰௮, ௰௯: ௨௰. ௰௮. ௫ மோ. ௪. ௰௧: ௫. ௨௨. உரோ. ௬. ௰௪: ௮. ௰௫. ௨ தீமோ ௧. ௭.
19 ௨ மோ. ௨௰. ௰௯. ௫ மோ ௫. ௫, ௨௫: ௧௮. ௰௬.
20 ௨ மோ. ௰௯. ௰௩.
21 ௨ மோ. ௰௯. ௰௬.

Digitized by Google

பயங்கரமாய் இருந்தது; அதினாலே மோசேயும், நான் மிகவும் அதிகமாய்ப் பயப்பட்டு நடுங்குகிறேன் என்றான்.

௨௨ நீங்கள் [1]மலையாகிய சீயோனிடத்திற்கும் [2]சீவனுள்ள தேவனுடைய பட்டணமாகிய பரம எருசலேமினிடத்திற்கும், [3]அநேகம் பதினாயிரமாகிய தூதர்களின் விசேஷமான சங்கத்தினிடத்திற்கும்,

௨௩ [4]பரமண்டலத்திலே பேர் எழுதியிருக்கிற* [5]முதற்பேறானவர்களின் சபையினிடத்திற்கும், [6]யாவருக்கும் தேவனாகிய நியாயாதிபதியினிடத்திற்கும், [7]நிறைந்த பாக்கியமுள்ளவர்களாகிய நீதிமான்களின் ஆவிகளினிடத்திற்கும்,

௨௪ புதிதான உடம்படிக்கைக்கு† ஏற்ற [8]மத்தியஸ்தராகிய இயேசுவினிடத்திற்கும், ஆபேலினுடைய இரத்தம் கூப்பிட்டதுபோல அல்ல, [9]அதிக நன்மையானவைகளை அறிவித்துத் தெளிக்கப்படுகிற [10]இரத்தத்தினிடத்திற்கும் சேருகிறவர்களாய் இருக்கிறீர்கள்.

௨௫ ¶ திருவுளம்பற்றுகிறவரை நீங்கள் அசட்டைபண்ணாதபடிக்குப் பாருங்கள்; என்னத்தினாலெனில், [11]பூமியிலே பேசினவனை அசட்டைபண்ணின அவர்கள் (ஆக்கினைக்குத்) தப்பாமல் இருக்க, பரமண்டலத்திலிருந்து பேசுகிறவரை நாம் விட்டு விலகினால் (ஆக்கினைக்குத்) தப்பிப்போவோமா?

௨௬ [12]அவருடைய சத்தம் முற்காலத்திலே பூமியை அசையப்பண்ணிற்று; அன்றியும், இனிமேல் [13]ஒரு காலத்திலே பூமியை மாத்திரமல்ல, வானத்தையும் அசையப்பண்ணுவேன் என்று இப்பொழுது வாக்குத்தத்தம் செய்திருக்கிறார்.

௨௭ இனிமேல் ஒரு காலத்திலே என்று சொன்ன வசனம் அசைவில்லாதவைகள் நிலையாய் இருக்கத்தக்கதாக (அற்பமாய்ச்) செய்யப்பட்டவைகளாகிய [14]அசைவுள்ளவைகள்‡ நீக்கப்படும் என்று குறிக்கின்றது.

௨௮ ஆனதால், அசைவில்லாத இராச்சியத்தை நாம் பெற்றுக்கொண்டிருக்க, [15]நம்முடைய பராபரன் (பொல்லாதவர்களைப்) பட்சிக்கும் அக்கினியாய் இருக்கிறபடியினாலே,

௨௯ நாம் வணக்கத்தோடும் மெய்த்தேவபத்தியோடும் பராபரனுக்குப் பிரியமாய் ஆராதனை செய்யத்தக்க கிருபையுள்ள ஈவைப் பற்றிக்கொள்ளக்§ கடவோம்.

கி. பி. ௬௪.

1 கலா ௪. ௨௬. வெளி. ௩. ௰௨: ௨௧. ௨, ௰.
2 பிலி. ௩. ௨௰.
3 உ மோ. ௩௩. ௨. சங். ௬௮. ௰௭. யூதா. ௰௪.
4 லூக். ௰. ௨௰. பிலி. ௪. ௩. வெளி. ௰௩. ௮.
* அல்லது சேர்க்கப்பட்டிருக்கிற.
5 ௨ மோ. ௪. ௨௨. யாக். ௧. ௰௮. வெளி. ௰௪. ௪.
6 ௧ மோ. ௰௮. ௨௫. சங். ௬௪. ௨.
7 பிலி. ௩. ௰௨. எபி. ௰௧. ௪௰.
† அல்லது ஏற்பாட்டிற்கு.
8 எபி. ௮. ௬: ௯. ௰௫.
9 ௧ மோ. ௪, ௰. எபி. ௰௧. ௪.
10 ௨ மோ. ௨௪. ௮. எபி. ௰. ௨௨. ௧ பே. ௧. ௨.
11 எபி. ௨. ௨,௩: ௩. ௰௭: ௰. ௨௮, ௨௯.
12 ௨ மோ. ௰௯. ௰௮.
13 ஆகா. ௨. ௬.
14 சங். ௱௨. ௨௬. மத். ௨௪. ௩௫. ௨ பே. ௩. ௰. வெளி. ௨௧. ௧.
‡ அல்லது அசைக்கப்படத்தக்கவைகள்.
15 ௨ மோ. ௨௪. ௰௭. ௫ மோ. ௪. ௨௪: ௯. ௩. சங். ௯௭. ௩: ௫௰. ௩. ஏசா. ௬௬. ௰௫. ௨ தெச. ௧. ௮: எபி. ௰. ௨௭.
§ அல்லது பெற.
16 ௨ ரோ. ௰௨. ௰. ௧ தெச. ௪. ௯. ௧ பே. ௧. ௨௨: ௨. ௰௭: ௩. ௮: ௪. ௮. ௨ பே. ௧. ௭. ௧ யோ. ௩. ௰௧. ௰௫: ௪. ௭. ௨௰, ௨௧. ௰௫.

## ௰௩. அதிகாரம்.

௧. சகோதரசிநேகமும், ௨. உபசாரமும் உடையவர்களாயிருக்கவும், ௫. பொருளாசையை நீக்கவும், ௭. தேவ ஊழியக்காரர்களைப் பராமரிக்கவும், ௯. அந்நிய உபதேசங்களுக்கு எச்சரிக்கையாய் நிற்கவும், ௰. கிறிஸ்துவை அறிக்கையிடவும், ௰௬. தருமஞ்செய்யவும், ௰௭. அதிகாரிகளுக்குக் கீழ்ப்படியவும், ௰௮. தனக்காகச் செபம்பண்ணவும் சொல்லி, ௨௰. கிருபத்தை முடித்தது.

[16]சகோதரசிநேகம் நிலையாய் இருக்கக்கடவது.

௨ அந்நியரை உபசாரம் செய்கிற குணத்தினாலே சிலர் (தங்களுக்குத்) தெரியாதபடிக்குத் [17]தேவதூதரை உபசரித்தால் [18]நீங்கள் அந்நியரை உபசாரம்செய்ய மறவாதிருப்பீர்களாக.

௩ [19]கட்டப்பட்டிருக்கிறவர்களோடேகூடக் கட்டப்பட்டவர்கள்போல நீங்கள் அவர்களை நினைத்துக்கொள்ளுங்கள்; உங்களையும் சரீரத்தோடிருக்கிறவர்களென்று அறிந்து பாடுபடுகிறவர்களை நினைத்துக்கொள்ளுங்கள்.

௪ விவாகம்பண்ணுதல் யாவருக்குள்ளும் கனம்பொருந்தியதாய் இருக்கக்கடவது; சமுசாரமார்க்கத்தாருடைய படுக்கை (விபசாரத்தினாலே) அசுசிப்படாதிருப்பதாக;

17 ௧ மோ. ௰௮. ௩: ௰௯. ௨.—18 மத். ௨௫. ௩௫. ௨ ரோ. ௰௨. ௰௩. ௧ தீமோ. ௩. ௨. ௧ பே. ௪. ௯.—19 மத். ௨௫. ௩௬. ௨ ரோ. ௰௨. ௰௫. ௧ கொரி. ௰௨. ௨௬. கொலோ. ௪. ௰௮. ௧ பே. ௩. ௮.

Digitized by Google

[1]வேசிமார்க்கருக்கும் விபசாரக்காரருக்கும் பராபரன் நியாயத்தீர்ப்புக் கொடுப்பாரே.

௫ [2]உங்களுக்கு உண்டானவைகள் போதும் என்கிற மனதுள்ளவர்களாய்ப் பணத்தின்மேலுள்ள ஆசையில்லாமல் நடந்துகொள்வீர்களாக; [3]நான் உன்னை ஒருக்காலும் விட்டுவிலகுவதும் இல்லை, உன்னை ஒருக்காலும் கைவிடுவதும்இல்லை என்று அவர் அருளிச்செய்தாரே.

௬ அதினாலே நான் தயிரியங்கொண்டு [4]கர்த்தர் எனக்குச் சகாயராய் இருக்கிறார்; மனிதனானவன் எனக்கு என்னசெய்வானோ என்று நான் பயப்படவேண்டுவதில்லை என்று சொல்லலாமே.

௭ ¶ [5]தேவவசனத்தை உங்களுக்குப் போதித்து உங்களை நடத்திப் போனவர்களை* நீங்கள் ஞாபகப்படுத்தி, அவர்களுடைய நடக்கையின் முடிவை நன்றாய்ப் பார்த்து, (அவர்களுடைய) [6]விசுவாசத்தைப் பின்பற்றுங்கள்.

௮ [7]இயேசுக்கிறிஸ்துவானவர்நேற்றும் இன்றைக்கும் என்றென்றைக்கும் ஒரேவிதமாய் இருக்கிறவர்.

௯ [8]பலவிதமாயும் அந்நியமாயும் இருக்கிற போதனைகளால் நீங்கள் சிதறஅடிக்கப்படாதிருப்பீர்களாக; போசனபதார்த்தங்களாலே அல்ல, (தேவ) கிருபையினாலே (உங்கள்) மனது உறுதியாகிறதே நன்மையாயிருக்கின்றது; [9]போசனபதார்த்தங்களைக்குறித்து முயற்சியாய் இருக்கிறவர்கள் அதினாலே பிரயோசனம் அடையவில்லையே.

௰ [10]நமக்குஉண்டாயிருக்கிறபலிபீடத்தில் உள்ளவைகளைக் கூடாரத்தில் ஆராதனை செய்கிறவர்கள் புசிக்கிறதற்கு அதிகாரமில்லை.

௰௧ ¶ அது எப்படித் தெரியுமெனில், பிரதான ஆசாரியன் பாவப்பலிக்காக மிருகங்களின் இரத்தத்தைப் பரிசுத்த ஸ்தலங்களில் கொண்டுவருகிறபொழுது, [11]அந்த மிருகங்களுடைய உடல்கள் பாளயத்திற்குப் புறம்பே கொண்டுபோய்ச் சுட்டெரிக்கப்படுமே.

௰௨ அந்தப்படி இயேசுவானவரும், தமது திரு இரத்தத்தினாலே சனங்களைப் பரிசுத்தம்செய்யும்படிக்குப் [12]பட்டணத்துக்குப் புறம்பே பாடுபட்டார்.

௰௩ ஆனதால் நாம் அவருடனேகூட [13]நிந்தையைச் சகிக்கிறவர்களாய் அவரோடேகூடப் பாளயத்திற்குப் புறம்பே புறப்படக்கடவோம்; [14]நிலைமையான பட்டணம் இங்கே நமக்கு இல்லையே.

௰௪ மறுலோகத்தில் உள்ளதை மிகவும் தேடுகிறோமே.

௰௫ மேலும் [15]அவருடைய திருநாமத்திற்குத் துதியை அறிக்கையிடுகிற† உதடுகளின் கனியாகிய [16]தோத்திரப்பலியை நாம் [17]அவர் மூலமாய் எப்பொழுதும் பராபரனுக்குச் செலுத்தக்கடவோம்.

௰௬ ¶ அன்றியும் [18]நன்மைசெய்தலையும், (எளியவர்களுக்குக்) கொடுத்தலையும், மறவாதிருப்பீர்களாக; [19]அப்படிப்பட்ட பலிகள்மேல் பராபரன் மிகவும் பிரியமாயிருக்கிறாரே.

௰௭ [20]உங்களை நடத்துகிறவர்கள்‡ (கர்த்தாவுக்குக்) கணக்கு ஒப்புவிக்கிறவர்களாய் உங்கள் [21]ஆத்துமாக்களுக்காக விழித்துக்கொள்ளுகிறார்களே; ஆகையால் அவர்கள் துக்கமாய் அல்ல, சந்தோஷமாய் அப்படிச் செய்யும்படிக்கு நீங்கள் அவர்களுக்குக் கீழ்ப்படிந்து அடங்குவீர்களாக; (அவர்கள் துக்கமாய் அப்படிச் செய்தால்) அது உங்களுக்குப் பிரயோசனமாய் இருக்கமாட்டாதே.

கி. பி. ௬௪.

1 ௧ கொரி. ௬. ௯. கலா. ௫. ௰௯. ௨௧. எபே. ௫. ௫. கொலோ. ௩. ௫, ௬. வெளி ௨௨. ௰௫.
2 மத். ௬. ௨௫. ௩௪. பிலி. ௪. ௰௧, ௰௨. ௧ தீமோ. ௬. ௬, ௮.
3 ௧ மோ. ௨௮. ௰௫. ௫ மோ. ௩௧. ௬, ௮. யோசு. ௧. ௫. ௧ நாளா. ௨௮. ௨௰. சங். ௩௭. ௨௫.
4 சங். ௨௭. ௧: ௫௬. ௪, ௰௧, ௰௨: ௱௮. ௬.
5 ௰௭. ௨௪.
* அல்லது உங்களுக்குக் கட்டளை கொடுக்கிறவர்களை.
6 எபி. ௬. ௰௨.
7 யோவா. ௮. ௫௮. எபி. ௧. ௰௨. வெளி. ௧. ௪.
8 எபே. ௪. ௰௪: ௫. ௬. கொலோ. ௨. ௪, ௮. ௧ யோ. ௪. ௧.
9 உரோ. ௰௪. ௰௭. கொலோ. ௨. ௰௬. ௧ தீமோ. ௪. ௩.
10 ௧ கொரி. ௯. ௰௩: ௰. ௰௮.
11 ௨ மோ. ௨௯. ௰௪. ௩ மோ. ௪. ௰௧, ௰௨, ௨௧: ௬. ௩௰: ௯. ௰௧: ௰௬. ௨௭. ௪ மோ. ௰௯. ௩.
12 யோவா. ௰௯. ௰௭, ௰௮. அப். ௭. ௫௮.
13 எபி. ௰௧. ௨௬. ௧ பே. ௪. ௰௪.
14 மீகா. ௨. ௰. பிலி. ௩. ௨௰. எபி. ௰௧. ௰, ௰௬: ௰௨. ௨௨.
15 ஓசே. ௰௪. ௨
† அல்லது துதிக்கிற.

16 ௩ மோ. ௭. ௰௨. சங். ௫௦. ௰௪, ௨௩: ௬௯. ௩௦, ௩௧: ௱௭. ௨௨: ௱௧௬. ௱௭. —17 எபே. ௫. ௨௦. ௧ பே. ௨. ௫.—18 உரோ. ௰௨. ௰௩.
19 ௨ கொரி. ௯. ௰௨. பிலி. ௪. ௰௮.—20 பிலி. ௨. ௨௯. ௧ தெச. ௫. ௰௨. ௧ தீமோ. ௫. ௰௭.
‡ அல்லது ஆளுகிறவர்கள். —21 எசே. ௩. ௰௭: ௩௩. ௨, ௭. அப். ௨௦. ௨௬, ௨௮.

Digitized by Google

௰அ நாங்கள் எவ்விதத்திலும் நன்றாய் நடக்க விரும்பிக்கொண்டு [1]நற்சாட்சிசொல்லுகிற மனது எங்களுக்கு உண்டென்று நாங்கள் நிச்சயமாயிருக்கிறபடியால் [2]எங்களுக்காகச் செபம்பண்ணுவீர்களாக.

௰௯ நான் அதிசீக்கிரமாய் உங்களுக்குத் திரும்பக் கொடுக்கப்படும்படிக்கு நீங்கள் அப்படிச் செய்யவேண்டுமென்று [3]அதிகமாய்க் கேட்டுக்கொள்ளுகிறேன்.

௨௰ ¶ அன்றியும் [4]நம்முடைய கர்த்தருமாய் [5]ஆடுகளின் பெரிய மேய்ப்பருமாய் இருக்கிற இயேசுவை நித்தியஉடம்படிக்கைக்கு* ஏற்ற [6]இரத்தத்தினாலே மரித்தோரிலிருந்து புறப்படப்பண்ணின [7]சமாதானத்திற்குக் காரணராகிய பராபரன்,

௨௧ தமது சித்தத்தின்படி நீங்கள் செய்கிறதற்கு ஏதுவாக [8]எவ்விதமான நற்கிரியைக்கும் உங்களைத் தகுதியானவர்களாக்கி,† இயேசுக்கிறிஸ்துவின்மூலமாய்த்தமது சன்னிதானத்திலே [9]பிரியமானதை உங்களுக்குள்ளே நடப்பிக்கக்கடவர்; [10]அவருக்கு என்றைக்கும் துதி உண்டாவதாக.—ஆமன்.

௨௨ ¶ சகோதரரே, [11]நான் சுருக்கமாய் உங்களுக்கு எழுதின இந்தப் புத்தியை அங்கிகரிக்கும்படிக்கு வேண்டிக்கொள்ளுகிறேன்.

௨௩ ¶ [12]சகோதரனாகிய தீமோத்தேயு [13]விடுதலையாக்கப்பட்டான் என்று அறிவீர்களாக; அவன் சீக்கிரமாய் வந்தால் அவனுடனே கூட உங்களைக் காண்பேன்.

௨௪ உங்களை நடத்துகிறவர்களுக்கும் மற்றப் பரிசுத்தவான்கள் யாவருக்கும் (என்னாலே) [14]வாழ்த்துதல்செய்யுங்கள்.

௨௫ இத்தாலி தேசத்தார் யாவரும் உங்களுக்கு வாழ்த்துதல்செய்கிறார்கள்; [15]தேவகிருபை உங்கள் அனைவரோடும் இருக்கக்கடவது. ஆமன்.

கி. பி. ௬௪.

1 அப். ௨௩. ௧: ௨௪. ௰௬. ௨ கொரி. ௧. ௰௨.
2 ௨ரோ. ௰௫. ௩௰. எபே. ௬ ௰௯. கொலோ. ௪, ௩. ௧ தெச. ௫. ௨௫. ௨தெச. ௩. ௧.
3 பிலே. ௨௨.
4 அப்.௨௨. ௨௪, ௩௨. ௨ரோ ௪. ௨௪: அ. ௰௧. ௧ கொரி. ௬. ௰௪: ௰௫. ௰௫. ௨ கொரி. ௪. ௰௪. கலா. ௧. ௧. கொலோ. ௨. ௰௨, ௧ தெச. ௧. ௰. ௧ பே.௧.௨௧.
5 ஏசா. ௪௰. ௰௧. எசே. ௩௪. ௨௩: ௩௭. ௨௪. யோ வா. ௰. ௰௧, ௰௪. ௧ பே. ௨.௨௫: ௫. ௪.
* அல்லது ஏற்பாட்டிற்கு.

6 சக. ௯.௰௧. எபி.௰.௨௯.—7 ௨ரோ.௰௫.௩௩. ௧ தெச.௫ ௨௩.—8 ௨ தெச.௨,௰௭. ௧பே. ௫.௰.—† அல்லது நற்கிரியையையும் உங்களில் செய்து.—9 பிலி. ௨.௰௩.—10 கலா.௧.௫. ௨ தீமோ.௪.௰௮. வெளி.௧.௬.
11 ௧ பே.௫.௰௨.—12 ௧ தெச.௩.௨,—13 ௧ தீமோ.௬.௰௨,—14 எ,௰ ௯௪.—15 தீத்.௩.௰௫.

Digitized by Google

JAMES.

அப்போஸ்தலனாகிய

# யாக்கோபு எழுதின

## பொதுவான நிருபம்.

### க. அதிகாரம்.

க. நாம் துன்பத்திலே சந்தோஷப்பட்டு, ரு. பொறுமை அடையப் பராபரனை வேண்டிக்கொள்ளவும், ௰௩. நம்முடைய சோதனைகளினால் உண்டாகும் குறைச்சல்களையும் பாவங்களையும் பராபரன்மேல் சுமத்தாமல், ௰௯. திருவசனத்துக்குச் செவிகொடுத்துச் சிந்தித்து அதின்படியே நடக்கப் பிரயாசப்படவும், உ௬. மாயக்காரராகாமல் தேவபத்தர்களாயிருக்கவும் கற்பித்தது.

[1]பராபரனுக்கும் கர்த்தராகிய இயேசுக்கிறிஸ்துவுக்கும் ஊழியக்காரனாகிய [2]யாக்கோபு [3]அங்கங்கே சிதறியிருக்கிற [4]பன்னிரண்டு கோத்திரங்களுக்கும் எழுதுகிறதாவது:

உ ¶ நீங்கள் வாழ்க என் சகோதரரே, [5]உங்கள் விசுவாசத்தைப் பரிட்சைபார்த்தல் பொறுமையை உண்டாக்கும் என்று அறிந்திருக்கிறபடியால்,

ங [6]தூண்டுகிற பல துன்பங்களில் நீங்கள் அகப்படும்பொழுது [7]அதை மிகுந்த சந்தோஷத்திற்கு ஏதுவாகஎண்ணிக்கொள்ளுங்கள்.

ச நீங்கள் ஒன்றிலும் குறைவுள்ளவர்களாய் இராமல் நிறைவுள்ளவர்களாயும் தேறினவர்களாயும் இருக்கத்தக்கதாக அந்தப் பொறுமை நிறைந்த கிரியையையே செய்யக்கடவது.

ரு ¶ [8]உங்களில் ஒருவன் நற்புத்தியில் குறைவுள்ளவனானால், யாவருக்கும் சம்பூரணமாய்க் கொடுக்கிறவருமாய் ஒருவரையும் அதட்டாதவருமாயிருக்கிற [9]பராபரனிடத்தில் அவன் கேட்கக்கடவன், அப்பொழுது [10]அவனுக்குக் கொடுக்கப்படும்.

சு அவன் எவ்வளவாகிலும் சந்தேகப்படாமல் [11]விசுவாசத்தோடே கேட்கக்கடவன்; சந்தேகப்படுகிறவன் காற்றினால் அடிக்கப்பட்டு அசைகிற கடலின் அலைக்கு ஒப்பாயிருப்பானே.

எ அப்படிப்பட்ட மனிதன் கர்த்தரிடத்திலே எதையாகிலும் பெற்றுக்கொள்வேன் என்று நினையாதிருப்பானாக.

அ [12]இருமனம் உள்ளவன் தன் வழிகள் யாவிலேயும் நிலையற்றவனாய் இருக்கிறான்.

கூ ¶ (அன்றியும்) தாழ்மைப்படுகிற சகோதரன் தான் உயர்த்தப்படுவதைக்குறித்து மேன்மைபாராட்டக்* கடவன்.

ய ஐசுவரியவான் தான் [13]புல்லின் பூவைப்போல ஒழிந்துபோவதால், தாழ்மைப்படுவதைக்குறித்து மேன்மைபாராட்டக்கடவன்.

கி. பி. ௬௰.

1 தீத். க. க.
2 அப். ௰உ. ௰எ: ௰ரு. ௰௩. கலா. க. ௰௯: உ. கூ. யூதா. க.
3 ரு மோ. உஅ. உ௬. யோவா. எ. ௩ரு. அப் உ. ரு: அ. க. க பே. க. க.
4 அப். உ௬. எ.
5 உரோ. ரு. ங.
6 க பே. க. சு.
7 மத். ரு. ௰உ. அப். ரு. சக. எபி. ௰. ௩௪. க பே. ச. ௰௩, ௰௪.
8 க இரா. ௩. கூ, ௰௩, ௰உ. லூக் உ. க.
9 மத். எ.எ: உக. உஉ. மாற். ௰௪. உச. லூக். ௰௩. கூ. யோவா. ௰ச. ௰௩: ௰ரு. எ: ௰௬. உங.
10 எரே. உகூ. ௰உ. க யோ. ரு. ௰ச, ௰ரு.
11 மாற். ௰௩. உச. க தீமோ. உ.அ.
12 யாக். ச. அ
* அல்லது சந்தோஷப்பட.
13 யோபு. ௰ச. உ.

சங். ௭௭.உ: ௩௰ ரு,க: ௬உ ௬௦: ௯௩.௰ரு. ௬௩௪.௪௰.க. க கொரி.எ.௩௧. யாக்.௪.௰௪. க பே.௧.உச. க பே.உ.௰௪.

௰௧ சூரியன் உதயமாகி வெய்யிலைக் கொளுத்தும்பொழுது, புல் உலர்ந்து அதின் பூ உதிர்ந்து அதின் அழகான வடிவு அழிந்துபோமே; அப்படிப்போல ஐசுவரியவானும் தன் மார்க்கங்களிலே அழிந்துபோவான்.

௰௨ ¶ [1]சோதனையைச் சகிக்கிற மனிதன் பாக்கியமுள்ளவன்; ஏனென்றால், அவன் உத்தமனுக்கப்பட்ட பின்பு [2]கர்த்தர் தம்மிடத்தில் அன்புகூருகிறவர்களுக்கு வாக்குத்தத்தம்பண்ணின [3]ஜீவகிரீடத்தைப் பெறுவான்.

௰௩ தூண்டிவிடப்படுகிற எவனும் பராபரனால் தூண்டிவிடப்படுகிறேன் என்று சொல்லாதிருப்பானாக; பராபரன் பொல்லாங்குகளால்* தூண்டிவிடப்படவும், பாவத்திற்கு ஏதுவாக ஒருவனையும் தூண்டிவிடவுமாட்டாரே.

௰௪ அவனவன் தன் தன் சுய இச்சையினாலே தூண்டி இழுக்கப்பட்டுச் சோதிக்கப்படுகிறான்.

௰௫ பின்பு [4]இச்சையானது கருப்பந்தரித்துப் பாவத்தைப் பிறப்பிக்கும்; பாவம் நிறைவேறினபொழுது [5]அது மரணத்தை உண்டாக்கும்.

௰௬ ¶ எனக்குப் பிரியமானசகோதரரே, வஞ்சிக்கப்படாதிருப்பீர்களாக.

௰௭ [6]எந்த நல்ல ஈவும் நிறைவுள்ள எந்த வரமும் உயரத்தினின்று சுடர்களின் பிதாவினாலே வருகின்றன; [7]அவருக்கு எவ்வளவாகிலும் மாறுதலும் வேற்றுமையின் நிழலும் இல்லை.

௰௮ [8]அவர் சித்தமானபடியால் [9]தம்முடைய சிருட்டிகளில் [10]நாம் முதற்பலன்களாகும்படிக்கு நம்மைச் சத்தியத்தின் வசனத்தினாலே செனிப்பித்தார்.

௰௯ ¶ ஆகையால், எனக்குப் பிரியமான சகோதரரே, [11]யாவரும் கேட்கிறதற்குத் தீவிரமாயும், [12]பேசுகிறதற்குத் தாமதமாயும்,

௨௰ பராபரனுக்கு ஏற்ற நீதியை மனிதருடைய கோபம் நடப்பிக்கமாட்டாதபடியினாலே [13]கோபிக்கிறதற்குத் தாமதமாயும் இருக்கக்கடவர்கள்.

௨௧ ஆகையால் [14]அழுக்கு யாவையும் மிகுதியான பொல்லாங்குகளையும் நீங்கள் தள்ளிவிட்டு, நடப்பட்டதாயும் [15]உங்கள் ஆத்துமாக்களை இரட்சிக்கத்தக்கதாயும் இருக்கிற வசனத்தைச் சாந்தமாய் ஏற்றுக்கொள்ளுங்கள்.

௨௨ ¶ அல்லாமலும் நீங்கள் தப்பான யோசனையினாலே உங்களை வஞ்சியாதபடிக்கு வசனத்தைக் கேட்கிறவர்களாய்மாத்திரம் அல்ல, [16]அதின்படி செய்கிறவர்களாயும் இருப்பீர்களாக.

௨௩ என்னத்தினாலெனில், [17]ஒருவன் வசனத்தைக் கேட்டும் அதின்படி செய்யாதவனானால், கண்ணாடியிலே தன் சுபாவமுகத்தைப் பார்க்கிற மனிதனுக்கு ஒப்பாயிருப்பான்.

௨௪ அவன் தன்னைத்தானே பார்த்தபின்பு புறப்பட்டுப்போனவுடனே தான் இருந்தவிதத்தை மறப்பான்.

௨௫ [18]சுயாதீனத்திற்கு ஏதுவான நிறைவுள்ள பிரமாணத்தை [19]உற்றுப்பார்த்து அதிலே நிலையாயிருக்கிறவனே (அதை) மறந்துபோகத்தக்கதாகக் கேட்கிறவனாயிராமல், அதற்கு ஏற்ற கிரியைசெய்கிறவனாயும் இருந்து, [20]தன் செய்கையில்† பாக்கியவானாயிருப்பான்.

௨௬ ¶ உங்களில் ஒருவன் [21]தன் நாவை அடக்காமல், தன் இருதயத்தை வஞ்சித்துத் தன்னைத் தேவபத்தியுள்ளவன் என்று நினைத்தால், அவனுடைய தேவபத்தி வீணானதாயிருக்கும்.

௨௭ [22]திக்கற்ற பிள்ளைகளும் கைம்பெண்களும் படுகிற உபத்

௫. பி. ௬௰.

1 யோபு. ௫. ௰௭. வாக். ௩. ௰௧, ௰௨. எபி. ௰௨. ௫. வெளி. ௩. ௰௯.
2 மத். ௰. ௨௨: ௰௯. ௨௮, ௨௯. யாக். ௨. ௫.
3 ௧ கொரி. ௯. ௨௫. ௨ தீமோ. ௪. ௮. யாக். ௨. ௫. ௧ பே. ௫. ௪. வெளி. ௨. ௰.
* அல்லது பொல்லாங்கால்.
4 யோபு. ௰௫. ௩௫. சங். ௭. ௰௪.
5 ரோ. ௬. ௨௧. ௨௩.
6 யோவா. ௩. ௨௭. ௧ கொரி. ௪. ௭.
7 ௪ மோ. ௨௩. ௰௯. ௧ சாமு. ௰௫. ௨௯. மல். ௩. ௬. ரோ. ௰௧. ௨௯.
8 யோவா. ௧. ௰௩: ௩. ௩. ௧ கொரி. ௪. ௰௫. ௧ பே. ௧. ௨௩.
9 எபே. ௧. ௰௨.
10 எரே. ௨. ௩. வெளி. ௰௪. ௪.
11 பிரச. ௫. ௧.
12 வாக். ௰. ௰௯: ௰௭. ௨௭. பிரச. ௫. ௨.
13 வாக். ௰௪. ௰௭: ௰௬. ௩௨. பிரச. ௭. ௯.
14 கொலோ. ௩. ௮. ௧ பே. ௨. ௧.
15 அப். ௰௩. ௨௬. ரோ. ௧. ௰௬. ௧ கொரி. ௰௫. ௨. எபே. ௧. ௰௩. தீத். ௨. ௰௧. எபி. ௨. ௩. ௧ பே. ௧. ௯.
16 மத். ௭. ௨௧. லூக். ௬. ௪௬: ௰௧. ௨௮. ரோ. ௨. ௰௩. ௧ யோ. ௩. ௭.
17 லூக். ௬. ௪௭. யாக். ௨. ௰௪.
18 யாக். ௨. ௰௨.
19 ௨ கொரி. ௩. ௰௮.

20 யோவா. ௰௩. ௰௭. — † அல்லது செயலில். — 21 சங். ௩௪. ௰௩: ௩௯. ௧. ௧ பே. ௩. ௰. — 22 ஏசா. ௧. ௰௭, ௰௮: ௫௮. ௬, ௭. மத். ௨௫. ௩௬.

Digitized by Google

திரவத்திலே அவர்களை விசாரிக்கிறதும், [1]உலகத்தால் அசுசிப்படாதபடிக்குத் தன்னைக் காத்துக் கொள்ளுகிறதுமே, பிதாவாகிய பராபரனுக்குமுன்பாக மாசில்லாத சுத்தமான பத்தியாய் இருக்கின்றது.

## உ. அதிகாரம்.

க. ஐசுவரியவான்களைமாத்திரம் கனம்பண்ணி ஏழைகளை இகழ்வது கிறிஸ்துமார்க்கத்துக்கு ஒவ்வாது என்றும், மஉ. யாவர்மேலும் அன்பையும் இரக்கத்தையும் பாராட்டவேண்டும் என்றும், மச. கிரியை இல்லாத விசுவாசத்தில் பெருமைபாராட்டக்கூடாதென்றும், மஎ. அது செத்த விசுவாசமும், மகூ. பேய்களுடைய விசுவாசமுமாயிருக்கிறதொழிய, உக. ஆபிரகாம், உரு. ராகாப் என்பவர்களின் விசுவாசமாய் இருக்கவில்லை என்றும் சொல்லியது.

என் சகோதரரே, [2]மகிமையுள்ள நம்முடைய கர்த்தராகிய இயேசுக்கிறிஸ்துவின்மேல் உள்ள விசுவாசம் உங்களுக்குள்ளே [3]பட்சபாதத்தோடே இராதபடிக்குப் பாருங்கள்.

உ அது எப்படியெனில், பொன்மோதிரத்தையும் பிரகாசமுள்ள வஸ்திரத்தையும் தரித்திருக்கிற ஒரு மனிதனும், கந்தையான வஸ்திரத்தைத் தரித்திருக்கிற ஒரு தரித்திரனும் உங்கள் செபஆலயத்தில்* பிரவேசிக்கும்பொழுது,

கூ பிரகாசமுள்ள வஸ்திரத்தைத் தரித்தவனை வணக்கமாய் நோக்கி, நீர் கனமாய் இவ்விடத்தில்† உளுக்காரும் என்றும், தரித்திரனை, நீ அங்கே நில், அல்லது, இங்கே என் பாதப்படியினிடத்திலே உளுக்காரு என்றும் நீங்கள் சொன்னால்,

ச உங்களுக்குள்ளே பேதகம்பண்ணித் துர்ச்சிந்தனைகளோடே நியாயாதிபதிகளாவீர்கள் அல்லவா?

ரு எனக்குப் பிரியமான சகோதரரே கேளுங்கள், [4]விசுவாசத்தில் ஐசுவரியவான்களாகவும், தம்மிடத்தில் [5]அன்புகூருகிறவர்களுக்குத் தாம் வாக்குத்தத்தம்பண்ணின இராச்சியத்தைச்‡ சுதந்தரிக்கிறவர்களாகவும், [6]இவ்வுலகத்தின் தரித்திரரைப் பராபரன் தெரிந்துகொள்ளவில்லையா?

சா [7]அப்படியிருந்தும் நீங்கள் தரித்திரனைக் கனஈனம்பண்ணிவருகிறீர்கள்; ஐசுவரியவான்கள் அல்லவோ உங்களை ஒடுக்குகிறார்கள்; [8]அவர்கள் அல்லவோ உங்களை நியாயாசனங்களுக்குமுன்பாக இழுக்கிறார்கள்.

எ அவர்கள் அல்லவோ உங்களுக்குக் கொடுக்கப்பட்ட நல்ல நாமத்தைத் தூஷணிக்கிறார்கள்.

அ [9]உன்மேல் அன்பாயிருக்கிறதுபோலப் பிறனிடத்திலேயும் அன்புகூருவாயாக என்று வேதவாக்கியம் சொல்லுகிற இராசரீகமான பிரமாணத்தை நீங்கள் நிறைவேற்றினால் நன்மைசெய்வீர்கள்; [10]பட்சபாதமாய் இருப்பீர்களானால் பாவத்தை நடப்பித்து,

கூ அக்கிரமக்காரரென்று நியாயப்பிரமாணத்தால் கண்டிக்கப்படுவீர்களே.

ய ¶ எப்படியெனில், ஒருவன் வேதநூல் முழுவதையும் கைக்கொண்டாலும், ஒரே பிரமாணத்திற்குத் தப்பிநடந்தால், [11]எல்லாப் பிரமாணங்களுக்கும் விரோதமாய்க் குற்றவாளியாயிருப்பான்.

யக என்னத்தினாலென்றால், [12]விபசாரம்பண்ணாதிருப்பாயாக என்று சொன்னவர்§ கொலைசெய்யாதிருப்பாயாக என்றும் சொன்னார்; ஆனதால், நீ விபசாரம்பண்ணாமல் இருந்தாலும் கொலைசெய்தாயானால் வேதநூலை மீறி நடந்திருப்பாயே.

யஉ ¶ [13]சுயாதீனத்திற்கு ஏதுவான வேதநூலின்படி நியாயத்தீர்ப்பு அடையப்போகிறவர்களாய்ப் பேசியும் செய்தும் இருப்பீர்களாக.

யகூ என்னத்திற்காக என்றால், இரக்கம்செய்யாதவனுக்கு இரக்கமில்லாமல் [14]நியாயத்தீர்ப்புக் கி

இ. பி. சுய.

1 உரோ. மஉ. உ. யாக். ச. ச. க பேே. இ. மஅ
2 க கொரி. உ. அ.
3 க மோ. மகூ. மஇ. இ மோ. க. மஎ: மக. மகூ. வாக். உச. உக: உஅ. உக. மத். உஉ. மகூ. கூ. வச. யூதா. மகூ.
* அல்லது கூட்டத்தில்.
† அல்லது ஒரு நல்ல இடத்தில் இங்கே.
4 லூக். மஉ. உக. க தீமோ. கூ. மஅ வெளி. உ. கூ.
5 உ மோ. உம. க. க சாமு. உ. கம. வாக். அ. மஎ. மத். இ. க. லூக். க. உம: மஉ. கஉ.
க கொரி. உ. கூ. உதீமோ. ச. அ. யாக். க. மஉ.
‡ அல்லது அந்த இராச்சியத்தை.
6 பேரவா. எ. சஅ. க கொரி. க. உக, உஅ.
7 க கொரி. மகூ. உஉ.
8 அப். மகூ. இம: மஎ.க: மஅ.மஉ. யாக். இ. க.
9 க மோ. மகூ. மஅ. மத். உஉ. கக. உரோ. மக. அ,கூ. கலா. இ. மச: க. உ.
10 க. வச.
11 இ மோ. உஎ. உக. மத். இ. மகூ. கலா. க. ம.
12 உ மோ. உம. மக, மச.
§ அல்லது சொல்லியிருந்த நியாயப்பிரமாணம்.
13 யாக் க. உஇ
14 யோபு. உஉ. கூ. ஓ. வாக். உக. மக மத். க. மஇ: மஅ. கஇ: உஇ. சக. சஉ.

Digitized by Google

டைக்கும்; நியாயத்தீர்ப்புக்குமுன்பாக [1]இரக்கம் மேன்மைபாராட்டும்.*

௰௪ ¶ என் சகோதரரே, ஒருவன் தனக்கு விசுவாசம் உண்டென்று சொல்லியும் கிரியைகள் இல்லாதவனானால், [2]அவனுக்கு என்ன பிரயோசனம் வரும்? விசுவாசம் அவனை இரட்சிக்குமா?

௰௫ [3]சகோதரன் அல்லது சகோதரி வஸ்திரம் இல்லாதவர்களாயும், நாடோறும் வேண்டிய பிழைப்பில்லாதவர்களாயும் இருக்கும்பொழுது,

௰௬ [4]உங்களில் ஒருவன் அவர்களைநோக்கி, நீங்கள்சமாதானத்தோடே போய்க் குளிர்காய்ந்து பசியாறுங்கள் என்று சொல்லிச் சரீரத்திற்கு வேண்டியவைகளை அவர்களுக்குக் கொடாவிட்டால், அதினால் என்ன பிரயோசனம் இருக்கும்?

௰௭ அப்படிப்போல விசுவாசமும் கிரியைகள்இல்லாதிருந்தால்,

௰௮ தனியே இருப்பதினாலே† செத்ததாயிருக்கும்; ஒருவன் வந்து உனக்கு விசுவாசம் உண்டு எனக்குக் கிரியைகள் உண்டு, கிரியைகளில்லாமல்‡ உன் விசுவாசத்தை எனக்குக் காண்பி; [5]நான் என் விசுவாசத்தை என் கிரியைகளினாலே காண்பிக்கிறேன் என்பான்.

௰௯ பராபரன் ஒருவர் உண்டென்று விசுவாசிக்கிறாய்; அப்படிச் செய்கிறது சரிதான்; [6]பசாசுகளும் அப்படி விசுவாசித்து நடுங்குகின்றன.

௨௰ ஆ வீணான மனிதனே, கிரியைகள் இல்லாத விசுவாசம் செத்ததென்று அறிய விரும்புகிறாயா?

௨௧ [7]நம்முடைய பிதாவாகிய ஆபிரகாம் தன் குமாரன் ஈசாக்கைப் பலிபீடத்தின்மேல் ஏற்றி வைத்தபொழுது, கிரியைகளினாலே அல்லவோ நீதிமானாக்கப்பட்டான்.

௨௨ [8]அவனுடைய விசுவாசம் அவனுடைய கிரியைகளோடேகூட முயற்சி செய்து அந்தக் கிரியைகளினாலே முடிக்கப்பட்டதையும்,

௨௩ [9]ஆபிரகாம் பராபரனை விசுவாசித்தான்; (அது) அவனுக்கு நீதியாக எண்ணப்பட்டது என்கிற வேதவாக்கியம் நிறைவேறப்பட்டதையும், [10]அவன் பராபரனுடைய சிநேகிதன் என்னப்பட்டதையும் பார்த்திருக்கிறாயே.§

௨௪ ஆனதால் ஒரு மனிதன் விசுவாசத்தினாலேமாத்திரம் அல்ல, கிரியைகளினாலேயும் நீதிமான் ஆக்கப்படுகிறானென்று அறிவீர்களாக.

௨௫ அப்படிப்போல [11]வேசியாயிருந்த இராகாப் என்பவள் தூதர்களை ஏற்றுக்கொண்டு வேறுவழியாய் அனுப்பிவிட்டபொழுது, கிரியைகளினாலே அல்லவோ நீதியுள்ளவளாக்கப்பட்டாள்.

௨௬ ஆகையால் ஆவி‖ இல்லாத சரீரம் செத்ததாயிருக்கிறதுபோலக் கிரியைகள் இல்லாத விசுவாசமும் செத்ததாய் இருக்கின்றது.

## ௩. அதிகாரம்.

௧. நாம் மற்றவர்களைக் கோமையும் அகங்காரமும் கடிந்துகொள்ளாமல், ௫. நன்மைக்கும் தீமைக்கும் கருவியாயிருக்கிற நாவை அடக்கவேண்டுமென்றும், ௰௩. மெய்ஞ்ஞானிகள் பகையும் போராட்டமும் இல்லாமல் சாந்தமும் சமாதானமுமாய் இருக்கிறார்களென்றும் சொல்லியது.

என் சகோதரரே, அதிக ஆக்கினையை¶ அடைவோம் என்று [12]நாம் அறிந்திருக்க, (உங்களில்) [13]அநேகர் போதகராகாதிருப்பீர்களாக.

௨ [14]நாம் எல்லாரும் அநேகவிதமாய்த் தவறுகிறோம்; [15]சொல்தவறாமல் இருக்கிறவனே [16]தேறினவனும் தன் சரீரம் அனைத்தையும் (ஞானக்) கடிவாளத்தினாலே அடக்கிக்கொள்ளுகிறவனும் இருக்கிறான்.

௩ குதிரைகளைப் பாருங்கள்,

கி. பி. ௬௰.

1 ௧ யோ. ௪. ௰௭, ௰௮.
* அல்லது சந்தோஷப்படும்.
2 மத். ௭. ௨௧. யாக். ௧. ௨௨.
3 யோபு. ௩௧. ௰௯ ௨௰. லூக். ௩. ௰௧.
4 ௧ யோ. ௩. ௰௮.
† கிரேக்கு, தான் மாத்திரம் இருப்பதினாலே.
‡ சில பிரதிகளில் உன் கிரியைகளினால்.
5 யாக். ௩. ௰௩.
6 மத். ௮. ௨௯. மாற். ௧. ௨௪: ௫. ௭. லூக். ௪. ௩௪. அப். ௰௯. ௰௫: ௰௬. ௰௭.
7 ௧ மோ. ௨௨. ௯, ௰௨.
8 எபி. ௰௧. ௰௭.
9 ௧ மோ. ௰௫. ௬. ரோ. ௪. ௩. கலா. ௩. ௬.
10 ௨ நாளா. ௨௰. ௭. ஏசா. ௪௧. ௮.
§ அல்லது பார்த்திருக்கிறாயா.
11 யோசு. ௨. ௧. எபி. ௰௧. ௩௧.
‖ அல்லது சுவாசம்.
¶ அல்லது நீதித்தீர்ப்பை.
12 லூக். ௬. ௩௭.
13 மத். ௨௩. ௮. ௰௪. ரோ. ௨. ௨௰, ௨௧. ௧ பே. ௫. ௩.
14 ௧ இரா. ௮. ௪௬. ௨ நாளா. ௬. ௩௬. ஙாக். ௨௰. ௯. பிர. ௭. ௨௰. ௧ யோ. ௧. ௮.
15 சங். ௩௪. ௰௩. யாக். ௧. ௨௬. ௧ பே. ௩. ௰.
16 மத். ௰௨. ௩௭.

Digitized by Google

அவைகள் நமக்குக் கீழ்ப்படியும்படிக்கு [1]வாய்களில் கலினங்களைப் போட்டு, அவைகளுடைய முழுச் சரீரத்தையும் நடத்துகிறோம்.

௪ கப்பல்களையும் பாருங்கள்; அவைகள் இவ்வளவு பெரியவைகளாய்க் கடும் காற்றுக்களால் அடிக்கப்பட்டாலும், அவைகளை நடத்துகிறவன் போகும்படி யோசிக்கும் இடம் எவ்விடமோ அவ்விடத்திற்கு மிகவும் சிறிதான சுக்கானாலே திருப்பப்படும்.

௫ அப்படிப்போல [2]நாவானதும் சிறிய அவயவமாய் இருந்தும் [3]பெருமையானவைகளைச் செய்யும்; கொஞ்ச நெருப்பைப் பாருங்கள்; அது எத்தனை பெரிய காட்டைக்* கொளுத்துகின்றது; [4]நாவே நெருப்பு.

௬ அது அநீதியினால் நிறைந்த லோகம்; அந்தப்படி நாவு நம்முடைய அவயவங்களுக்குள் இருந்து, [5]முழுச் சரீரத்தையும் கறைப்படுத்துகிறதாயும், சுபாவமுறைமையைக்† கொளுத்துகிறதாயும், நரக அக்கினியினால் கொளுத்தப்படுகிறதாயும் இருக்கின்றது.

௭ எல்லாக்‡ காட்டு மிருகங்களுக்கும், பறவைகளுக்கும், ஊர்வனவைகளுக்கும் நீரிலுள்ள செந்துக்களுக்கும் உண்டாயிருக்கிற சுபாவம் கீழ்ப்படியப்பண்ணப்படும்; அப்படி மனிதருடைய சுபாவத்தால்§ கீழ்ப்படியப்பண்ணப்பட்டது உண்டு.

௮ நாவைமாத்திரம் ஒரு மனிதனும் கீழ்ப்படுத்தமாட்டான்; அது அடங்காத பொல்லாங்குள்ளதுமாய் [6]சாவுக்கேற்ற விஷத்தால் நிறைந்ததுமாய் இருக்கிறது.

௯ பிதாவாகிய பராபரனை நாம் அதினாலே தோத்திரிக்கிறோம்; [7]பராபரனுடைய சாயலின்படி உண்டாக்கப்பட்ட மனிதரை அதினாலே சபிக்கிறோம்.

௰ ஆசீர்வதித்தலும் சபித்தலும் ஒரே வாயிலிருந்து புறப்படுகின்றன; என் சகோதரரே, இப்படி இருக்கக்கூடாது.

௰௧ நீரூற்றில் ஒரே துவாரத்திலிருந்து‖ தித்திப்பும் கசப்புமுள்ள தண்ணீர் சுரக்குமா?

௰௨ என் சகோதரரே, அத்திமரம் ஒலிவப்பழங்களையும், அல்லது திராட்சச்செடி அத்திப்பழங்களையும் கொடுக்குமா? அப்படிப்போல உவர்ப்பான நீரூற்று தித்திப்பான சலத்தைக் கொடுக்கவும் மாட்டாது.

௰௩ ¶ [8]உங்களில் ஞானியுமாய் அறிவுள்ளவனுமாய் இருக்கிறவன் எவனோ, அவன் ஞானத்திற்குரிய [9]சாந்தத்தோடே [10]தன் கிரியைகளை நல்ல நடக்கையினாலே காண்பிக்கக்கடவன்.

௰௪ உங்கள் இருதயத்திலே [11]கசப்பான வயிராக்கியத்தையும் விரோதத்தையும் வைத்துக்கொண்டால், [12]நீங்கள் மேன்மைபாராட்டாமலும் சத்தியத்திற்கு விரோதமாய்ப் பொய்யைச் சொல்லாமலும் இருப்பீர்களாக.

௰௫ [13]அப்படிச்செய்கிறது உயரத்திலிருந்து வருகிற ஞானமல்ல, அது இந்தப் பூமிக்கும் மிருகசீவனுக்கும்¶ பேய்க்கும் உரித்தானது.

௰௬ [14]வயிராக்கியமும் விரோதமும் எங்கேயோ அங்கே கலக்கமும்** சகலவிதமான துர்ச்செய்கைகளும் உண்டே.

௰௭ [15]உயரத்திலிருந்து வருகிற ஞானம் முதலாவது, கற்புள்ளதுமாய், பின்பு சமாதானமும் சாந்தமும் இணக்கமும் உள்ளதுமாய், இரக்கத்தாலும் நற்கிரியைகளாலும் நிறைந்ததுமாய், பட்சபாதம்†† இல்லாததுமாய், [16]வஞ்சனை இல்லாததுமாய் இருக்கின்றது.

௰௮ இப்படிச் சமாதானத்தை நடப்பிக்கிறவர்களாலே சமாதானத்தோடே [17]நீதியாகிய கனி விதைக்கப்படுகின்றது.

இ. பி. ௬௰.

1 சங். ௩௨. ௯
2 லூக். ௰௨. ௰௮: ௰௯. ௨.
3 சங். ௰௨. ௩: ௭௩. ௮. ௯.
* அல்லது வன்னம்
4 லூக். ௰௬. ௨௪.
5 மத். ௰௫. ௰௧, ௰௮. ௰௯, ௨௰. மாற். ௭. ௰௫, ௨௰, ௨௩.
† கிரேக்கு, உருளை.
‡ கிரேக்கு, எல்லாச் சுபாவமான.
§ அல்லது எல்லா மனிதரால்.
6 சங். ௱௪௰. ௩.
7 ௧ கொ. ௧௧. ௭: ஆதி. ௧: ௨௬.
‖ அல்லது இடத்தில்.
8 கலா. ௬. ௪.
9 யாக். ௧. ௨௧
10 யாக். ௨. ௰௮.
11 உரோ. ௰௩. ௰௩.
12 உரோ. ௨. ௰௭, ௨௩.
13 பிலி. ௩. ௰௯. யாக். ௧. ௰௭.
¶ அல்லது சுபாவத்திற்கும்; யூதா. ௰௯.
14 ௧ கொரி. ௩. ௩. கலா. ௫. ௨௰.
** கிரேக்கு, சந்தடியும்.
15 ௧ கொரி. ௨. ௬, ௭.
†† அல்லது சண்டைபிடித்தல்.
16 உரோ. ௰௨. ௯. ௧ பே. ௧. ௨௨: ௨. ௧. ௧ யோ. ௩. ௰௮.
17 லூக் ௬. ௰௮. ஓசே. ௰. ௰௨. மத் ௫. ௯. பிலி. ௧. ௰௧. எபி. ௰௨. ௰௧.

Digitized by Google

## ௪. அதிகாரம்.

௧. பொருளாசை, ௪. அகந்தம், ௫. பொருமை, ௧௧. மற்றவர்களைக் குற்றமாய்த் தீருணயிக்கிற குணமுதவியவைகளை நீக்கி, ௧௩. லவுகீக அலுவல்களில் நம்பலன் அடைவதை நம்பாமல், இச்சீவன் அநித்தியமென்று உணர்ந்து நம்மையும் நம்முடைய கவலைகளையும் பராபரனுடைய பராமரிப்புக்கு ஒப்புக்கொடுக்கச் சொல்லியது.

உங்களுக்குள்ளே யுத்தங்களும் சண்டைகளும்* எதினாலே வருகின்றன; உங்கள் அவயவங்களில் [1]போர்செய்கிற செல்வத்திற்கு ஏற்ற இச்சைகளால்† அல்லவோ வருகின்றன?

௨ நீங்கள் இச்சித்தும் உங்களுக்கு அகப்படுகிறதில்லை; நீங்கள் கொலைசெய்தும்‡ துணிவுள்ளவர்களாயிருந்தும் (இஷ்டப்படி) அடையாமற்போகிறீர்கள்; நீங்கள் சண்டையும் யுத்தமும் பண்ணியும், விண்ணப்பம்பண்ணாமல் இருக்கிறதால் உங்களுக்குச் சித்திக்கிறதில்லை.

௩ உங்கள் இச்சைகளுக்கு§ ஏற்றதாகச் செலவழிக்கும்படிக்குத் [2]துர்க்குணமாய் விண்ணப்பம் பண்ணுகிறதால் [3]நீங்கள் விண்ணப்பம்பண்ணியும் பெற்றுக்கொள்ளாமல் இருக்கிறீர்கள்.

௪ ¶ ஆ [4]விபசாரரே, விபசாரிகளே, [5]உலகத்தோடே சிநேகமாயிருக்குதல் பராபரனுக்கு விரோதமான பகையாய் இருக்கின்றதென்று நீங்கள் அறியவில்லையா? ஆகையால் [6]உலகத்திற்குச் சிநேகமாயிருக்க விரும்புகிறவன் பராபரனுக்குப் பகைஞனாயிருக்கிறான்.

௫ அல்லது வேதநூல் வீணாய்ச் சொல்லுகிறதென்றும், [7]நம்மிடத்தில் வாசமாயிருக்கிற ஆவியானவர் பொருமைக்கு ஏதுவாக|| இச்சிக்கிறார் என்றுமா நினைக்கிறீர்கள்.

௬ அவர் அதிக தயவை அநுக்கிரகம் செய்கிறாரே, ஆனபடியால் [8]அகந்தையுள்ளவர்களுக்குப் பராபரன் விரோதித்து, மனத்தாழ்மையுள்ளவர்களுக்குக் கிருபையை அளிக்கிறாரென்று சொல்லுகிறார்.

௭ ஆகையால் பராபரனுக்குக் கீழ்ப்படியுங்கள்; [9]பசாசுக்கு எதிர்த்து நில்லுங்கள்; அப்பொழுது அவன் உங்களைவிட்டு ஓடிப்போவான்.

௮ பராபரனைச் [10]சேருங்கள், அப்பொழுது அவரும் உங்களைச் சேர்வார்; ஆ பாவிகளே, [11]உங்கள் கைகளைச் சுத்தமாக்குங்கள்; [12]இருமனமுள்ளவர்களே, [13]உங்கள் இருதயங்களைப் பரிசுத்தம் செய்யுங்கள்.

௯ நீங்கள் உபத்திரவப்பட்டுத் துக்கமடைந்து அழுங்கள்; [14]உங்கள் நகைப்பு துக்கப்படுதலாகவும் உங்கள் சந்தோஷம் சஞ்சலமாகவும் மாறக்கடவது.

௰ கர்த்தருக்குமுன்பாகத் [15]தாழ்மைப்படுங்கள், அப்பொழுது உங்களை உயர்த்துவார்.

௰௧ ¶ சகோதரரே, [16]ஒருவருக்கொருவர் விரோதமாய்ப் பேசாதிருப்பீர்களாக, சகோதரனுக்கு விரோதமாய்ப்பேசித் [17]தன் சகோதரனைக் குற்றப்படுத்துகிறவன் நியாயப்பிரமாணத்திற்கு விரோதமாய்ப் பேசி நியாயப்பிரமாணத்தைக் குற்றப்படுத்துகிறான்; நியாயப்பிரமாணத்தைக் குற்றப்படுத்தினால் நீ நியாயப்பிரமாணத்தின்படி செய்கிறவனாய் இராமல் அதற்கு நியாயாதிபதியாய் இருப்பாய்.

௰௨ நியாயப்பிரமாணத்தைக்கட்டளையிடுகிறவர் ஒருவரே; [18]அவரே இரட்சிக்கவும் அழிக்கவும் வல்லமையுள்ளவர்; [19]மற்றொருவனைக் குற்றப்படுத்துகிற நீ யாவன்?

௰௩ ¶ மேலும், நாங்கள் இன்றைக்கு அல்லது நாளைக்கு இன்ன இன்ன பட்டணத்திற்குப் போய்,

கி. பி. ௬௰.

* அல்லது கடக்குறலும்; க. வசனம்.
1 உரோ. எ. உக. கலா. ௫. ௧௭. ௧ பே. உ. ௧௧.
† அல்லது இன்பங்களால்; க. வசனம்.
‡ அல்லது பொருமைப்பட்டும்.
§ அல்லது இன்பங்களுக்கு.
2 சங். ௬௬. ௧௮. ௧ பேர. ௫. ௨௨: ௫. ௧௪.
3 யோபு. உஎ. ௯: ௩௫. ௧௨. சங். ௧௮. ௪௧. வாக். ௧. உ௮. ஏசா. ௧. ௧௫. எரே. ௰௧. ௰௧. மீகா. ௩. ௪. சகரி. எ. ௧௩.
4 சங். எ௩. உஎ.
5 ௧ யோ. உ. ௧௫.
6 யோவா. ௰௫. ௰௯: ௰எ. ௰௪. கலா. ௧. ௰.
7 ௧ மோ. ௬. ௫: அ. உ௧. ௪ மோ. ௰௧. உ௯. வாக். உக. ௰.
|| அல்லது பொருமையாய்.
8 யோபு. உஉ. உ௯. சங். ௬௯. அ. ௬. வாக். ௩. ௩௪: உ௯. உ௩. மத். உ௩. ௰உ. லூக். ௧. ௫௨: ௰௪. ௰௧: ௰௮. ௰௪. ௧ பே ௫. ௫.
9 எபே. ௪. உஎ: ௬. ௰௧. ௧ பே. ௫. ௯.
10 உ. நாள. ௰௫. உ.
11 ஏசா. ௧. ௰௬.
12 யாக். ௧. அ.
13 ௧ பே ௧. உஉ. ௧ யோ. ௩. ௩.
14 மத். ௫. ௪.
15 யோபு. உஉ. உ௯. மத். உ௩. ௰உ. லூக். ௰௪: ௰௮. ௰௪. ௧ பே. ௫. ௬.
16 எபே. ௪. ௩௧. ௧ பே. உ. ௧.

17 மத். எ. ௧ லூக். ௬. ௩௭. உரோ. உ. ௧. ௧ கொரி. ௪ ௫.—18 மத். ௰. உ௮.—19 உரோ. ௰௪. ௪, ௰௩.

Digitized by Google

அங்கே ஒருவருஷம் தங்கி வியாபாரம்பண்ணி ஆதாயம் பெறுவோம் என்கிறவர்களே [1]கேளுங்கள்.

௰௪ நாளைக்கு நடப்பதை அறியாமல் இருக்கிறீர்களே; உங்கள் ஜீவன் எப்படிப்பட்டது?* கொஞ்சநேரம் தோன்றிப் பின்பு தோன்றாமல் போகிற [2]புகையைப்போல இருக்கிறதே.

௰௫ மேற்சொல்லியதற்குப் பதிலாக நீங்கள் [3]ஆண்டவருக்குச் சித்தமானால் நாங்களும் உயிரோடிருந்தால் இப்படிச் செய்வோம் என்று சொல்லவேண்டும்.

௰௬ இப்பொழுது உங்கள் வீம்பான பேச்சுகளில் மேன்மைபாராட்டுகிறீர்கள்; [4]இப்படிப்பட்ட மேன்மைபாராட்டல் யாவும் பொல்லாங்காயிருக்கிறது.

௰௭ ஆனதால் [5]ஒருவன் நன்மை செய்ய அறிந்திருந்தும் அப்படிச் செய்யாவிட்டால் அவனுக்குப் பாவம் உண்டாயிருக்கும்.

## ௫. அதிகாரம்.

க. அக்கிரமக்காரராகிய ஐசுவரியவான்கள் பராபரனுடைய கோபாக்கினைக்கு அஞ்சவும், எ. தீர்க்கதரிசிகளும் யோபும் சகித்தபடியே சாமும் துன்பங்களைப் பொறுமையோடே சகிக்கவும், ௰௨. சத்தியம் பண்ணாமல் இருக்கவும், ௰௩. தரித்திரத்தில் வேண்டிக்கொள்ளவும், செல்வத்தில் பாடவும், ௰௬. குற்றங்களை ஒருவருக்கொருவர் அறிக்கையிட்டு ஒருவருக்காக ஒருவர் செபம்பண்ணவும், ௰௯. சத்தியத்துக்கு விலகிப்போன சகோதரனைச் சீர்ப்படுத்தவும் சொல்லியது.

பின்னும் ஐசுவரியவான்களே, [6]கேளுங்கள்; உங்கள்மேல் வருகிற உபத்திரவங்களின் நிமித்தம் அலறி அழுங்கள்.

௨ உங்கள் ஐசுவரியம் அழிந்து, உங்கள் [7]வஸ்திரங்கள் பொட்டுப்பூச்சியினால் தின்னப்பட்டுப் போயின.

௩ உங்கள் பொன்னையும் வெள்ளியையும் பாசிபிடித்தது; அவைகளிலுள்ள பாசி உங்களுக்கு விரோதமாகச் சாட்சியாய் இருந்து, அக்கினியைப்போல உங்கள் சரீரங்களைத் தின்னும்; [8]கடைசிநாள்களிலே பொக்கிஷத்தைச் சேர்த்தீர்கள்.

௪ பாருங்கள், உங்கள் வயல்களை அறுத்த [9]வேலைக்காரருடைய கூலி உங்களால் அநியாயமாய் வைக்கப்பட்டுக் கூப்பிடுகின்றது; அறுத்தவர்களுடைய [10]கூக்குரலும் சேனைகளையுடைய கர்த்தாவின் செவிகளில் பட்டது.

௫ [11]பூமியிலே நீங்கள் செல்வத்தோடும் சம்பிரமத்தோடும் ஜீவனம் பண்ணினீர்கள்; கிதைப்பு நாளுக்காகச் செய்கிறதுபோல உங்களைக் கொழுப்பாக்கினீர்கள்.

௬ உங்களுக்கு விரோதமாய் நில்லாத [12]நீதிமானை நீங்கள் ஆக்கினைக்குள்ளாகத் தீர்த்துக் கொலைசெய்தீர்கள்.

௭ ¶ இப்படியிருக்கச் (சகோதரரே,) கர்த்தர் வருமளவும் நீடிய பொறுமையாய்† இருங்கள்; பாருங்கள், பூமியின் விலையேறப்பெற்ற கனியை அடையவேண்டுமென்று இருக்கிற குடியானவன் [13]முன்மாரியும் பின்மாரியும் வருமளவும் நீடிய பொறுமையாய்க் காத்திருக்கிறான்.

௮ நீங்களும் நீடிய பொறுமையாய் இருந்து, [14]கர்த்தர் வருகை சமீபமாயிருக்கிறபடியால் உங்கள் இருதயங்களை ஸ்திரப்படுத்துவீர்களாக.

௯ ¶ சகோதரரே, நீங்கள் ஆக்கினைக்குள்ளாகத் தீர்க்கப்படாதபடிக்கு ஒருவருக்கு விரோதமாய் [15]ஒருவர் பெருமூச்சு விடாதிருங்கள்;‡ [16]நியாயாதிபதி கதவுக்குமுன் நிற்கிறாரே.

௰ என் சகோதரரே, கர்த்தருடைய நாமத்தினாலே பேசின தீர்க்கதரிசிகள் துன்பப்பட்டு நீடிய பொறுமையாயிருந்தால், அவர்களை உங்களுக்கு மார்க்கத்தைக் காண்பிக்கிறவர்கள் என்று [17]ஏற்றுக்கொள்ளுங்கள்.

கி. பி. ௬௰.

1 லூக். ௨௪. ௪. மத். ௰௩. ௬௮. ௯.
* அல்லது ஏனென்றால் கொஞ்சம்.
2 யோபு. ௭. ௭. சங். ௱௨. ௩. யாக். ௧. ௰. ௧ பே. ௧. ௨௪. ௧ யோ. ௨. ௰௭.
3 அப். ௰௮. ௨௧. ௧ கொரி. ௪. ௰௯: ௰௬. ௭. எபி. ௬. ௩.
4 ௧ கொரி. ௫. ௬.
5 லூக். ௰௨. ௪௭. யோவா. ௯. ௪௧: ௰௫. ௨௨. ௨ரோ. ௧. ௨௰, ௨௧, ௩௨: ௨. ௰௭, ௰௮, ௨௩.
6 லூக். ௰௬. ௨௮. லூக். ௬. ௨௪. ௧ தீமோ. ௬. ௯.
7 யோபு. ௰௩. ௨௮. மத். ௬. ௨௰. யாக். ௨. ௨.
8 உரோ. ௨. ௫.
9 ௩ மோ. ௰௯. ௰௩. யோபு. ௨௪. ௰, ௰௧, எரே. ௨௨. ௰௩. மல்கி. ௩. ௫.
10 ௫ மோ. ௨௪. ௰௫.
11 யோபு. ௨௧ ௰௩. ஆமோ. ௬. ௧,௪. லூக். ௰௬. ௰௯, ௨௫. ௧ தீமோ. ௫. ௬.
12 யாக். ௨. ௬.
† அல்லது வருமளவும் பொறுமையாய்.
13 ௫ மோ. ௰௧. ௰௪. எரே. ௫. ௨௪. ஓசே. ௬. ௩. யோவே. ௨. ௨௩. சகரி. ௰. ௧.
14 பிலி. ௪. ௫. எபி. ௰. ௨௫,௩௭. ௧ பே. ௪. ௭.
15 யாக். ௪. ௰௧.
‡ அல்லது எரிச்சல் படாதிருங்கள்.
16 மத். ௨௪. ௩௩. ௧ கொரி. ௪. ௫.
17 மத். ௫. ௰௨. எபி. ௰௧. ௩௫. ௯.

௰௧ [1]பொறுமையாய் இருக்கிறவர்களை நாம் பாக்கியவான்கள் என்கிறோமே; [2]யோபென்பவன் காண்பித்த பொறுமையைக்குறித்துக் கேள்விப்பட்டிருப்பீர்கள்; [3]கர்த்தர் மிகுந்த உருக்கமும் இரக்கமும் உள்ளவராயிருக்கிறார் என்று [4]கர்த்தர் செய்த முடிவினாலே அறிந்திருக்கிறீர்கள்.

௰௨ ¶ பின்னும் என் சகோதரரே, எல்லாவற்றிலும் எதை நீங்கள் செய்யவேண்டுமெனில், வானத்தின்மேலாகிலும், பூமியின்மேலாகிலும், வேறொரு ஆணையினாலாகிலும் [5]சத்தியம்பண்ணாதிருப்பீர்களாக; நீங்கள் ஆக்கினைக்குள்ளாகத் தீர்க்கப்படாதபடிக்கு, உள்ளதை உள்ளதென்றும் இல்லதை இல்லதென்றும் பேசக்கடவீர்கள்.

௰௩ ¶ உங்களில் ஒருவன் துன்பப்பட்டால் செபம்பண்ணக்கடவன்; ஒருவன் மகிழ்ச்சியாயிருந்தால் [6]சங்கீதங்களைப் பாடக்கடவன்.

௰௪ உங்களில் ஒருவன் வியாதிப்பட்டால் அவன் சபையின் மூப்பரை வரவழைப்பானாக; அவர்கள் கர்த்தருடைய நாமத்தினாலே அவனிடத்தில் [7]எண்ணெயைப் பூசி அவனுக்காக விண்ணப்பம்பண்ணக்கடவர்கள்.

௰௫ அப்பொழுது கர்த்தர் பிணியாளியை எழுப்புதற்கு விசுவாசமுள்ள விண்ணப்பம் அவனை இரட்சிக்கும்; [8]அவன் பாவங்களைச் செய்தவனானால் அவை அவனுக்கு மன்னிக்கப்படும்.

௰௬ நீங்கள் சொஸ்தமடையும்படிக்கு உங்கள் அக்கிரமங்களை ஒருவருக்கொருவர் அறிக்கையிட்டு, ஒருவருக்காக ஒருவர் விண்ணப்பம்பண்ணுங்கள்; [9]நீதிமான் உண்மையாய்ப் பண்ணுகிற விண்ணப்பம் மிகவும் பெலனாயிருக்கின்றது.

௰௭ எலியா என்பவன் [10]நம்மைப்போலப் பாடுள்ள மனிதனாயிருந்தும் மழைபெய்யாதபடிக்கு [11]உறுதியாய்* விண்ணப்பம்பண்ணினான்; [12]அப்பொழுது மூன்று வருஷமும் ஆறுமாதமும் பூமியின்மேல் மழைபெய்யவில்லை.

௰௮ [13]மறுபடியும் விண்ணப்பம்பண்ணினான், அப்பொழுது பூமி தன் பலனைக் கொடுக்கத்தக்கதாக வானம் மழையைத் தந்தது.

௰௯ ¶ சகோதரரே, [14]உங்களில் ஒருவன் சத்தியத்தைவிட்டு விலகித் தப்பிப்போகும்பொழுது, மற்றொருவன் அவனைத் திருப்பினால்,

௨௰ பாவியானவன் பிரவேசிக்கும் தப்பான மார்க்கத்தில் நின்று அவனைத் திருப்புகிறவன் [15]ஒரு ஆத்துமாவை மரணத்திற்குத் தப்புவித்து [16]மிகுந்த பாவங்களை மறைப்பானென்று அறியக்கடவன்.

கி. பி. சுய.

1 சங். ௯௪. ௰௨. மத். ௫. ௰, ௰௧: ௰. ௨௨.
2 யோபு. ௧. ௨௧, ௨௨: ௨. ௰.
3 ௪ மோ. ௰௪. ௰௮. சங். ௱௩. ௮.
4 யோபு. ௪௨. ௰. ழ.
5 மத். ௫. ௩௪.ழ.
6 எபே. ௫. ௰௯. கொலோ. ௩. ௰௬.
7 மாற். ௬. ௰௩: ௰௬. ௰௮.
8 ஏசா. ௩௩. ௨௪. மத். ௯. ௨.
9 ௧ மோ. ௨௰. ௰௭. ௪ மோ. ௰௧. ௨. ௫ மோ. ௯. ௰௮, ௰௯, ௨௰. யோசு. ௰. ௰௨. ௧ சாமு. ௰௨. ௰௮. ௧ இரா. ௰௩. ௬. ௨ இரா. ௪. ௩௩: ௰௯. ௰௫, ௨௰: ௨௰, ௨, ௪. ழ. சங். ௯. ௰௭. ௩௪. ௰௫. ௱௪௫. ௰௮. லூக். ௰௫. ௨௧: ௨௮, ௧. யோவா. ௯. ௩௧. ௧ பே. ௩. ௨௨.
10 அப். ௰௪. ௰௫.
11 ௧ இரா. ௰௭. ௧.
* அல்லது தன்னுடைய விண்ணப்பத்தில்.
12 லூக். ௪. ௨௫.
13 ௧ இரா. ௰௮. ௪௨, ௪௫.
14 மத். ௰௮. ௰௫.

15 ரோ. ௰௧. ௰௪. ௧ கொரி. ௩. ௨௨. ௧ தீமோ. ௪. ௰௬.—16 லூக். ௫. ௰௨. ௧ பே. ௪. ௮.

Digitized by Google

# I. PETER.

அப்போஸ்தலனாகிய

# பேதுரு எழுதின

## பொதுவான முதலாம் நிருபம்.

### க. அதிகாரம்.

*க. திவ்விய ஆசீர்வாதங்களுக்காகப் பராபரனைத் தோத்திரித்து, ய. கிறிஸ்துவினால் உண்டான இரட்சிப்பு நூதனமான செய்தியாயிராமல் பூர்வத்திலே தீர்க்கதரிசிகளால் முன் அறிவிக்கப்பட்டதைக் காட்டி, யக. பராபரனுடைய வசனத்தினால் அவர்கள் மறுபிறப்பு அடைந்திருக்கிறபடியால் அதற்கு ஏற்றபடி பரிசுத்தராய் நடக்கப் புத்திசொல்லியது.*

[1]பிதாவாகிய பராபரன் முன் அறிந்தபடியே [2]ஆவியானவர் பரிசுத்தமாக்குதலினாலே கீழ்ப்படிதலுக்கும் [3]இயேசுக்கிறிஸ்துவினுடைய இரத்தம் தெளிக்கப்படுகிறதற்கும் [4]தெரிந்துகொள்ளப்பட்டு,

உ பொந்து, கலாத்தியா, கப்பத்தோக்கியா, ஆசியா, பித்தீனியா தேசங்களிலே [5]சிதறிவந்திருக்கிற அந்நியநாட்டாருக்கு இயேசுக்கிறிஸ்துவின் அப்போஸ்தலனாகிய பேதுரு எழுதுகிறதாவது: [6]கிருபையும் சமாதானமும் உங்களுக்குச் சம்பூரணமாய் உண்டாகக்கடவது.

ங ¶ இயேசுக்கிறிஸ்து [7]மரித்தோரிலிருந்து எழுந்திருக்கிறதினாலே அழிவும் அசுத்தமும் [8]குன்றுதலும் இல்லாத சுதந்தரத்திற்கு ஏதுவாக,

ச [9]உயிருள்ள நம்பிக்கை உண்டாகும்படிக்குத் [10]தமது மிகுந்த* இரக்கத்தினாலே நம்மைப் புதிதாய்ச் செனிப்பித்த நம்முடைய கர்த்தராகிய இயேசுக்கிறிஸ்துவின் பிதாவாகிய பராபரனுக்குத் [11]தோத்திரம் உண்டாவதாக.

ரு கடைசிக்காலத்திலே வெளிப்பட எத்தனமாக்கப்பட்டிருக்கிற இரட்சிப்புக்கு ஏதுவாக விசுவாசத்தைக்கொண்டு [12]பராபரனுடைய பலத்தினாலே காக்கப்படுகிற உங்களுக்கு† அந்தச் சுதந்தரம் [13]பரமண்டலங்களில் வைத்திருக்கின்றது.

சு இதற்காகத் (துன்பங்கள்) வேண்டியபடியால், [14]இப்பொழுது கொஞ்சக்காலமாய்ப் [15]பலவிதமான துன்பங்களினாலே துக்கப்படுகிற நீங்கள் [16]மிகவும் சந்தோஷப்படக்கடவீர்கள்.

எ அழிந்துபோகிற பொன் [17]அக்கினியினாலே சோதிக்கப்படுமே; [18]அதிலும் உங்கள் விசுவாசம் சோதிக்கப்பட்டு அதிக விலையேறப்பெற்றதாய் இயேசுக்கிறிஸ்து வெளிப்படும்பொழுது உங்களுக்குப் புகழ்ச்சியும் கனமும்

கி. பி. சுய.

1 உரோ. அ. உக: யக. உ.
2 உதெச. உ. யங.
3 எபி. ய. உஉ. யஉ. உச.
4 எபே. க. ச. க பே. உ. கூ.
5 யோவா. எ. கஙி. அப். உ. ஙி. கூ, ய. யாக். க. க.
6 உரோ. க. எ. உ பே. க. உ. யூதா. உ.
7 க கொரி. யஙி. உய. க தெச. ச. யச. க பே. ங. உக.
8 க பே. ஙி. ச.
9 யோவா. க. ங, ஙி. யாக். க. யஅ.
10 தீத். ங. ஙி.
* அல்லது ஏராளமான.
11 உ கொரி. க. ங. எபே. க. ங.
12 யோவா. ய. உஅ; உகூ: யஎ. யக, யஉ, யஙி. யூதா. க.
† அல்லது நமக்கு.
13 கொலோ. க. ஙி. உ தீமோ. ச. அ.

14 உ கொரி. ச. யஎ. க பே. ஙி. ய. — 15 யாக். க. உ. — 16 மத். ரு. யஉ. உரோ. யஉ. யஉ. உ கொரி. க. ய. க பே. ச. யங. — 17 யோபு. உங. ய. சங். கூகூ. ய. வாக். யஎ. ங. ஏசா. ச. அ ய. சகரி. யங. கூ. க கொரி. ங. யங. — 18 யாக். க. ங, யஉ. க பே. ச. யஉ.

Digitized by Google

[1]மகிமையும் உண்டாகக் காணப்படும்படிக்கு (அந்தத் துன்பங்களைச் சகிக்கிறீர்கள்).

அ [2]அவரை நீங்கள் காணமலிருந்தும், [3]அவரிடத்தில் அன்புகூருகிறீர்கள்; இப்பொழுது அவரைத் தரிசியாமல் இருந்தும், அவரிடத்தில் விசுவாசமாயிருந்து, சொல்லமுடியாததுமாய் மகிமையால் நிறைந்ததுமாயிருக்கிற சந்தோஷத்தோடே களிகூர்ந்து,

கூ [4]உங்கள் விசுவாசத்திற்கு ஏற்ற பலனாகிய ஆத்தும இரட்சிப்பை அடைகிறீர்கள்.

௰ ¶ உங்களுக்கு உண்டான இந்தக் கிருபையைக்குறித்து முன் பேசின [5]தீர்க்கதரிசிகள் தங்களிலுள்ள கிறிஸ்துவின்

௰க ஆவியானவர் [6]கிறிஸ்துவின் பாடுகளையும் அவைகளின் பின்வரும் மகிமைகளையும் முன் அறிவித்தபொழுது, எந்தக் (காலத்தை) எப்படிப்பட்ட காலத்தைக் குறித்திருக்கிறார் என்று சோதனைபண்ணி,

௰உ [7]இப்படி இந்த இரட்சிப்பைக்குறித்து மிகவும் ஆராய்ந்து பார்த்தார்கள்; [8]அவைகளை அவர்கள் தங்களைக்குறித்து அல்ல, நம்மைக்குறித்தே தெரிவித்தார்கள் என்று [9]அவர்களுக்கு வெளியாக்கப்பட்டது; [10]வானத்திலிருந்து அனுப்பப்பட்ட பரிசுத்த ஆவியைக்கொண்டு உங்களுக்குச் சுவிசேஷத்தைப் பிரசங்கித்து வந்தவர்களாலே அவைகள் இப்பொழுது உங்களுக்கு அறிவிக்கப்பட்டுவருகின்றன; [11]அவைகளுக்குள்ளே தேவதூதரும் உற்றுப்பார்க்க ஆசையாய் இருக்கிறார்கள்.

௰ங ¶ ஆகையால், [12]நீங்கள் உங்கள் மனதின் அரைகளில் கச்சை கட்டிக்கொண்டு, [13]தெளிந்தபுத்தியுள்ளவர்களாயிருந்து, [14]இயேசுக்கிறிஸ்து வெளிப்படும்பொழுது உங்களுக்குக் கொண்டுவரப்படும் கிருபையின்மேல் இடைவிடாமல்* நம்பிக்கையை வைத்து,

௰ச கீழ்ப்படிகிற பிள்ளைகளைப்போல நீங்கள் [15]முற்காலத்திலே அறியாமையினாலே கொண்ட இச்சைகளின்படி [16]இனி நடவாமல்,

௰ரு [17]உங்களை அழைத்தவர் பரிசுத்தராயிருக்கிறதுபோல நீங்களும் சகலவிதத்திலேயும் பரிசுத்தராய் நடப்பீர்களாக.

௰சா நான் பரிசுத்தன், ஆகையால் [18]நீங்களும் பரிசுத்தராயிருங்களென்று எழுதியிருக்கிறதே.

௰எ ¶ அன்றியும் [19]பட்சபாதம் இல்லாமல் அவனவனுடைய கிரியைகளின்படி நியாயத்தீர்ப்புக்கொடுக்கும் பிதாவை நீங்கள் தொழுதுகொண்டிருக்கிறதால் [20]இவ்வுலகத்திலே தங்குமளவும் பயத்துடனே [21]நடந்துகொள்ளுங்கள்.

௰அ [22]அழிவுள்ள வஸ்துக்களாகிய வெள்ளியினாலும் பொன்னினாலும் அல்ல, [23]குற்றமும் மாசும் இல்லாத ஆட்டுக்குட்டியைப்போன்ற கிறிஸ்துவின் [24]விலையேறப்பெற்ற இரத்தத்தினாலே,

௰கூ உங்கள் முன்னோர்களால் [25]பாரம்பரையாய்ப்பெற்ற வீணானடத்தையினின்று மீட்கப்பட்டீர்கள் என்று அறிந்திருக்கிறீர்களே.

உ௰ [26]அவர் லோகத்தோற்றத்திற்குமுன்னே குறிக்கப்பட்டவராய் இருந்து, தமது மூலமாய்ப் பராபரன்மேல் விசுவாசமாயிருக்கிற [27]உங்களுக்காக இந்தக் கடைசிக் காலங்களில் வெளிப்பட்டார்.

உக உங்கள் விசுவாசமும் நம்பிக்கையும் பராபரன்மேலே இருக்

கி. பி. சுய.

1 உரோ. உ. எ, ௰. க கொரி. ச. கூ. உ தெச. க. எ-௰உ.
2 யோவா. உ௰. உக. உ கொரி. கூ. எ. எபி. ௰க. க, உஎ.
3 க பே. ச. உ௰.
4 உரோ. க. உஉ.
5 க பே. க. ௰க. உ பே. க. உக.
6 சங். உஉ. க. எசா. ௫௩. க.ழு. தானி. கூ. உக. லூக். உச. உகூ, உக, சச, சக. யோவா. ௰உ. சக. அப். உக. உஉ, உக.
7 க மோ. சக. ௰. தானி. உ. சச. ஆகா. உ. எ. சகரி. க. ௰உ. மத். ௰க. ௰எ. லூக். ௰. உச. உ பே. க. ௰கூ, உ௰, உக.
8 எபி. ௰க. ௰க, கக, ச௰.
9 தானி. கூ. உச: ௰உ. கூ, ௰க.
10 அப். உ. ச.
11 உ மோ. உகூ. உ௰. தானி. அ. ௰க: ௰உ. கூ, க. எபே. க. ௰.
12 லூக். ௰உ. கூ. எபே. சு. ௰ச.
13 லூக். உக. கச. உரோ. ௰க. ௰க. க தெச. கூ. க, அ. க பே. ச. எ: கூ. அ.
14 லூக். ௰எ. க௰. க கொரி. க. எ. உ தெச. க. எ.
* கிரேக்கு, பூரணமாய்.
15 அப். ௰எ. க௰. க தெச. ச. கூ.
16 உரோ. ௰உ. உ. க பே. ச. உ.

17 லூக். க. எச, எகூ. உ கொரி. எ. க. க தெச. ச. க, ச, எ. எபி. ௰உ. ௰ச. உ பே. க ௰க.— 18 க மோ. ௰க சச: ௰கூ. உ; உ௰. எ.— 19 கூ மோ. ௰. ௰எ. அப். ௰. கச. உரோ. உ. ௰க.— 20 உ கொரி. கூ. க. எபி. ௰க. ௰க. க பே. உ ௰க.— 21 உ கொரி. எ. க. பிலி. உ. ௰உ. எபி. ௰உ. உஅ.— 22 க கொரி. க. உ௰: எ. உக.— 23 உ மோ. ௰உ. கூ. எசா. ௫௩ எ. யோவா. க. உகூ, கக. க கொரி. கூ. எ.— 24 அப். உ௰. உஅ. எபே. க. எ. எபி. கூ. ௰உ, ௰ச. வெளி. கூ. கூ.— 25 எசே. உ௰. ௰அ. க பே. ச. க. 26 உரோ. க. உகூ: ௰க. உகூ, உக. எபே. க. கூ, ௰க. கொலோ. க. உக. உ தீமோ. க. கூ, ௰. தீத். க. உ, க. வெளி ௰க. அ. 27 கலா. ச. ச. எபே. க. ௰. எபி. க. உ: கூ. உக.

Digitized by Google

கும்படிக்கு [1]அவரை மரித்தோரிலிருந்து எழுப்பி, [2]அவருக்கு மகிமையைக் கொடுத்தார்.

உஉ ¶ (ஆகையால்,) [3]நீங்கள் உண்மையான சகோதரசிநேகத்திற்கு ஏதுவாக ஆவியினாலே சத்தியத்திற்குக் கீழ்ப்படிந்து, இப்படி உங்கள் [4]ஆத்துமாக்களைச் சுத்தமாக்கிக்கொண்டிருக்கச் சுத்த இருதயங்களோடே ஊக்கமாய் ஒருவரில் ஒருவர் அன்பாய் இருப்பீர்களாக.

உங அழிவுள்ள வித்தினாலே அல்ல [5]என்றென்றைக்கும் நிற்கிற சீவனுள்ள தேவனுடைய வசனமாகிய அழிவில்லாத வித்தினாலே [6]மறுபடியும் செனிக்கப்பட்டிருக்கிறீர்களே.

உச அந்தப்படிச் (சொல்லியிருக்கிறதாவது:) [7]மாம்சதேகமெல்லாம்* புல்லைப்போலவும், மனிதருடைய மகிமையெல்லாம் புல்லின் பூவைப்போலவும் இருக்கின்றன; புல்லானது உலர்ந்துபோம்; அதின் பூவும் உதிர்ந்துபோம்.

உரு [8]கர்த்தருடைய வசனமே என்றென்றைக்கும் நிற்குமென்பதே; [9]உங்களுக்குச் சுவிசேஷமாய் அறிவிக்கப்பட்டுவருகிற வசனம் அதுவே.

## உ. அதிகாரம்.

க. சிநேகத்தைப் பிரிக்கிற குணத்தை அகற்றவும், ச. அவர்கள் கட்டப்பட்டிருக்கிற அஸ்திவாரம் கிறிஸ்து என்று அறியவும், யக. மாம்ச இச்சைகளுக்கு விலகவும், யங. நியாயாதிபதிகளுக்கு அடங்கவும், யஅ. ஊழியக்காரர் எசமான்களுக்குக் கீழ்ப்படிந்து, உய. கிறிஸ்து காட்டின மாதிரியின்படியே நன்மைசெய்வதினால் வரும் துன்பத்தைப் பொறுமையோடே சகிக்கவும் சொல்லியது.

இப்படியிருக்கக் [10]கர்த்தர் தயையுள்ளவர் என்று நீங்கள் ருசிபார்த்தபடியால் [11]சகல துர்க்குணத்தையும்,

உ சகல கபடத்தையும் வஞ்சகங்களையும் பொறாமைகளையும் சகலவிதமான பொல்லாத பேச்சுக்களையும் தள்ளிப்போட்டு,

௩ நீங்கள் இரட்சிப்புக்கு ஏதுவாக வளரும்படிக்கு [12]இப்பொழுது பிறந்த குழந்தைகளைப்போலத் (தேவ) வசனமாகிய [13]களங்கம் இல்லாத பாலின்மேலே ஆசையாயிருப்பீர்களாக.

ச ¶ [14]மனிதராலே தள்ளப்பட்டதாயும், பராபரனிடத்திலே தெரிந்துகொள்ளப்பட்டதாயும், விலையேறப்பெற்றதாயும் இருக்கிற சீவனுள்ள கல்லாகிய,

ரு [15]அவரிடத்தில் சேர்ந்தவர்களாகிய நீங்களும் சீவனுள்ள கற்களைப்போல [16]ஆவிக்கு ஏற்ற மாளிகையாகவும் [17]இயேசுக்கிறிஸ்து மூலமாய்ப் பராபரனுக்குப் பிரியமான [18]ஆவிக்கு ஏற்ற பலிகளைச் செலுத்தும்படி பரிசுத்த [19]ஆசாரியக்கூட்டமாகவும் கட்டப்படுங்கள்.†

சு அந்தப்படி வேதத்திலே சொல்லியிருக்கிறதாவது: [20]இதோ தெரிந்துகொள்ளப்பட்டதுமாய் விலையேறப்பெற்றதுமாய் இருக்கிற மூலைக்கல்லைச் சீயோனிலே வைக்கிறேன், அதின்மேல் விசுவாசமாயிருக்கிறவன் வெட்கப்பட்டுப் போவதில்லை என்பதே.

எ ஆகையால், விசுவாசிக்கிற உங்களுக்கு இந்தக் கனம்‡ உண்டாயிருக்கிறது; கீழ்ப்படியாமலிருக்கிறவர்களுக்கு வீட்டைக் கட்டுகிறவர்களால் [21]தள்ளப்பட்ட பிரதான மூலைக்கல்லாகிய இந்தக் கல்லே [22]இடறுதற்கு ஏதுவான கல்லாயும், விழுதற்கு ஏதுவான கன்மலையாயும் இருக்கிறது.

அ அவர்கள் (தேவ) வசனத்திற்குக் கீழ்ப்படியாதவர்களாயிருந்து [23]இடறுகிறார்கள்; [24]அதற்கு நியமிக்கப்பட்டவர்களாயும் இருக்கிறார்கள்.

கி. பி. சுயஎ.

1 அப். உ. உச.
2 மத். உஅ. யஅ. அப். உ. கஉ; க. யக. எபே. க. உய. பிலி. உ. கூ. எபி. உ. கூ. க பே. க. உஉ.
3 உரோ. யஉ. கூ, ய. க தெச. ச. கூ. க தீமோ. க. ௫. எபி. யங. க. க பே. உ. யஎ; க. அ; ச. அ. உ பே. க. எ. க யோ. க. க. யஅ; ச. எ, உக.
4 அப். யரு. கூ.
5 யாக். க. யஅ. க யோ. உ. கூ.
6 யோவா. க. யங; க. ௫.
7 சங். ஈக. யரு. ஏசா. சய. சு. ௫க. யஉ. யாக். க. ய.
* அல்லது எனென்றால் மாம்சதேகமெல்லாம்.
8 சங். ஈஉ. யஉ, கக. ஏசா. சய. அ. லூக். யக. ஙங.
9 யோவா. க. க, யச. க யோ. க. க, உ.
10 சங். ஙச. அ. எபி. சு. ௫.
11 எபே. ச. உஉ, உ௫, கக. கொலோ. க. அ. எபி. யஉ. க. யாக். க. உக; ௫. கூ. க பே. ச. உ.
12 மத். யஅ. க. மாற். ய. ய௫. உரோ. கூ. ச. க கொரி. யச. உய. க பே. க. உக.
13 க கொரி. க. உ. எபி. ௫. யஉ, யங.
14 சங். கஎஅ. உஉ. மத். உக. சஉ. அப். ச. யக. யக.

15 எபே. உ. உஉ, உஉ.—16 எபி. க. க.—17 பிலி. ச. யஅ. க பே. ச. யக.—18 ஓசே. யச. உ. மல். ௫. க. யக. உரோ. யஉ. க. எபி. யஉ. யரு, யசு.—19 ஏசா. சுக. சு: சுக. உக. க. வச.—† அல்லது கட்டப்பட்டிருக்கிறீர்கள்—20 ஏசா. உஅ. யசு. உரோ. கஙங.
‡ அல்லது அருமை.—21 சங். கஎஅ. உஉ. மத். உக. சஉ. அப். ச. யக.—22 ஏசா. அ. யச. லூக். உ. கச. உரோ. கூ. கங.
23 க கொரி. க. உங.—24 உ மோ. கூ. யஎ. உரோ கூ. உஉ. க தெச. ௫. கூ. யூதா. ச.

Digitized by Google

கூ நீங்கள் [1]உங்களை அந்தகாரத்தினின்று தம்முடைய ஆச்சரியமான ஒளிக்கு வரவழைத்தவருடைய புண்ணியங்களை* அறிவிக்கும்படிக்குத் [2]தெரிந்துகொள்ளப்பட்ட சந்ததியாயும், [3]இராசரீகமான ஆசாரியக்கூட்டமாயும், [4]பரிசுத்தவான்களாயும், [5]அவருக்குச் சொந்தமான† சனமாயும் இருக்கிறீர்கள்.

ய [6]முன்னே நீங்கள் பராபரனுடைய சனமாயிருக்கவில்லை; இப்பொழுது அவருடைய சனங்களாய் இருக்கிறீர்கள்; (முன்னே) நீங்கள் இரக்கம் பெறாதவர்கள்; இப்பொழுது இரக்கம் பெற்றவர்களாய் இருக்கிறீர்கள்.

யக ¶ பிரியமானவர்களே, [7]வழிப்போக்கருமாய் அந்நியநாட்டாருமாய் இருக்கிற உங்களுக்கு நான் புத்திசொல்லுகிறது என்னவெனில், [8]ஆத்துமாவுக்கு விரோதமாய்ப் போர்செய்கிற [9]மாம்ச இச்சைகளுக்கு நீங்கள் இடங்கொடாமல்,

யஉ அஞ்ஞானிகள் உங்களை அக்கிரமக்காரரென்று விரோதமாய்ப் பேசும்பொழுது,‡ உங்கள் [10]நற்கிரியைகளைக் கண்டு [11]கண்காணிப்பின் நாளிலே பராபரனுடைய மகிமை விளங்கப்பண்ணும்படிக்கு [12]நல்ல நடக்கையோடே அவர்களுக்குள்ளே நடக்கக்கடவீர்கள்.

யங ¶ அந்தப்படியே நீங்கள் கர்த்தரின் நிமித்தம் [13]மனிதருடைய கட்டளைகள் யாவற்றிற்கும் கீழ்ப்படுவீர்களாக.

யச பிரதான அதிகாரமுள்ள இராசாவுக்காவது, [14]தீமைசெய்கிறவர்களுக்கு ஆக்கினையையும் [15]நன்மைசெய்கிறவர்களுக்குப் புகழ்ச்சியையும் கொடுக்கும்படி அவனால் அனுப்பப்பட்ட துரைகளுக்காவது (அப்படிச் செய்யுங்கள்).

யரு புத்தியீனமனிதருடைய அறியாமையை [16]நீங்கள் நன்மைசெய்கிறதினாலே அடக்கிப்போடவேண்டுமென்று பராபரனுடைய சித்தமாயிருக்கிறதே.

யசா [17]சுயாதீனமுள்ளவர்களாயிருந்தும் உங்கள் சுயாதீனத்தைத் துர்க்குணத்திற்கு மூடியாகச் சேர்த்துக்கொள்ளாமல்§ [18]பராபரனுடைய அடிமைகளாய் நடப்பீர்களாக.

யஎ [19]எல்லாரையும் கனம்பண்ணுங்கள்;‖ [20]சகோதரரிடத்தில் அன்புகூருங்கள்; [21]பராபரனுக்குப் பயந்திருங்கள், இராசாவைக் கனம்செய்யுங்கள்.

யஅ ¶ வீட்டு [22]வேலைக்காரரே, மிகுந்த பயத்துடனே எசமான்களுக்குக் கீழ்ப்படிந்திருங்கள்; நல்லவர்களுக்கும் இணக்கமுள்ளவர்களுக்கும் மாத்திரம் அல்ல, செம்மையில்லாதவர்களுக்கும் (அப்படிச் செய்யவேண்டும்).

யகூ என்னத்திற்காகவெனில், ஒருவன் அநியாயமாய்ப் பாடுபட்டுப் பராபரனுக்குமுன்பாக உண்மையாயிருக்கிற மனதின்நிமித்தம் துக்கங்களைப் பொறுமையாய்ச் சகித்தால் [23]அதுவே மகிமையுள்ளது.¶

உய நீங்கள் குற்றம்செய்து அடிக்கப்படும்பொழுது அதைப் பொறுமையோடே சகித்தால், [24]அது எப்படிப்பட்ட கீர்த்தியாயிருக்கும்? நீங்கள் நன்மைசெய்து பாடுபடும்பொழுது அதைப் பொறுமையோடே சகித்தால் அதுவே பராபரனுக்குமுன்பாக மகிமையாய்** இருக்கும்.

உக [25]இதற்காக நீங்கள் அழைக்

கி. பி. சுய.

1 அப். உக. ௰அ. எபே. ௬. அ. கொலோ. க. ௰௩. க தெச. ௬. ௪, ௬.
* அல்லது துதிகளை.
2 ௬ மோ. ௪. ௰௬. க பே. க. உ.
3 உ மோ. ௰௯. ௬, ௯. வெளி. க. ௬: ௫. ௰.
4 யோவா. ௰எ. ௰௯. க கொரி ௩. ௰எ. உ தீமோ. ௩. ௯.
5 ௬ மோ. ௪. உ௰: எ. ௯: ௰௪. உ: உக. ௰அ, ௰௯. அப். உ௰. உஅ. எபே. ௩. ௰௪. தீத். உ. ௰௪.
† அல்லது அவரால் கொள்ளப்பட்ட.
6 ஓசே. ௩. ௯. ௰: உ. உ௩. உரோ. ௯. உ௬.
7 க நாளா. உ௯. ௰௬. சங். ௩௯. ௰உ; ௩௯. ௰௯. எபி. ௰௩. ௰௩. க பே. ௩. ௰எ.
8 யாக். ௪. ௩.
9 உரோ. ௰௩. ௰௪. கலா. ௬. ௰௩.
‡ அல்லது பேசுகிறதில்.
10 மத். ௬. ௰௬.
11 லூக். ௰௯ ௪௪.
12 உரோ. ௰உ. ௰எ. உ கொரி. அ. உக. பிலி. உ. ௰௬. தீத். உ. அ. க பே. ௩. ௰௯.
13 மத். உஉ. உக. உரோ. ௰௩. க. தீத். ௩. க.
14 உரோ. ௰௩. ௪.
15 உரோ. ௰௩. ௩.
16 தீத். உ. அ. ௰உ.
17 கலா. ௬. க, ௰௩.
§ இரேக்கு. மூடியாகக்கொள்ளாமல்.

18 க கொரி. எ. உஉ.—19 உரோ. ௰உ. ௰. பிலி. உ. ௩.—‖ அல்லது மதியுங்கள்.—20 எபி. ௰௩. ௩. க பே. ௩. உஉ.—21 லாக். உச. உக. மத். உஉ. உக. உரோ. ௰௩. எ.—22 எபே. ௬. ௬. கொலோ. ௩. உஉ. க தீமோ. ௬. ௩. தீத். உ. ௯.—23 மத். ௬. ௰. உரோ. ௰௩. ௬. க பே. ௩. ௰௪.—¶ அல்லது அதுவே நன்றி; லூக். ௬. ௩உ. உ௰. வசனம்.—24 க பே. ௩. ௰௪; ௪. ௰௪, ௰௬.—** அல்லது அங்கிகரிக்கப்படத்தக்கதாய்.—25 மத். ௰௬. உச. அப். ௰௪. உஉ. க தெச. ௩. ௩. உ தீமோ. ௩. ௰உ.

Digitized by Google

கப்பட்டும் இருக்கிறீர்கள்; எப்படியெனில் [1]கிறிஸ்துவும் உங்களுக்காகப்* பாடுபட்டு நீங்கள் தம்முடைய காலடிகளைத் தொடர்ந்துவரும்படி [2]உங்களுக்குமார்க்கத்தைக் காட்டிப்போனார்.

௨௨ [3]அவர் பாவம்செய்யவில்லை; அவருடைய வாயிலே வஞ்சனை காணப்படவுமில்லை.

௨௩ [4]அவர் வையப்பட்டபொழுது பதில் வையாமலும், பாடுபட்டபொழுது பயமுறுத்தாமலும், [5]நியாயமாய்த் தீர்ப்புக்கொடுக்கிறவருக்கு அதை† ஒப்புவித்தார்.

௨௪ [6]நாம் பாவங்களுக்கு விலகி நீதியுள்ளவர்களாய்ப் பிழைக்கும்படிக்கு அவர் தமது சரீரத்திலே நம்முடைய பாவங்களைத் தாங்கிக்கொண்டு [7]அவைகளைச் சிலுவை மரத்திலே‡ நிவிர்த்திசெய்தார்.

௨௫ [8]அவர் காயப்பட்டதினாலே குணமானீர்கள்; (முன்னே) [9]நீங்கள் வழுவிப்போன ஆடுகளைப்போல இருந்தீர்கள்; இப்பொழுது உங்கள் ஆத்துமாக்களுக்கு [10]மேய்ப்பரும் கண்காணியுமானவரிடத்தில் திருப்பப்பட்டு இருக்கிறீர்கள்.

## ௩. அதிகாரம்.

௧. மனைவிகளும் புருஷர்களும் ஒருவருக்கொருவர் செய்யவேண்டிய கடமைகளைக் கற்பித்தது, ௮. யாவரும் ஒருமையும் சிநேகமும் உள்ளவர்களாயிருக்கவும், ௰௪. துன்பத்தைச் சகிக்கவும் புத்திசொல்லி, ௰௯. பூர்வீகத்தார்மேல் கிறிஸ்துவின் புண்ணியபலன்கள் இன்னவென்றும் கூறியது.

அந்தப்படி [11]ஸ்திரிகளே, (புருஷர்களில்) சிலர் (தேவ) வசனத்திற்குக் கீழ்ப்படியாமல் இருக்கிறபொழுது [12]வசனமின்றி,

௨ [13]உங்கள் கற்பும் வணக்கமுமுள்ள நடக்கையை அவர்கள் பார்த்து, அப்படிப்பட்ட நடக்கையினாலே [14]சம்பாதித்துக்கொள்ளப்படும்படிக்கு உங்கள் சொந்தப் புருஷர்களுக்குக் கீழடங்குவீர்களாக.

௩ [15]நீங்கள் உங்கள் மயிரைப் பின்னிப் பொன்னாபரணங்களைத் தரித்து, முக்கியமான வஸ்திரங்களை உடுத்தி,

௪ இவ்விதமாய்ப் புறம்பே உங்களை அலங்கரியாமல் உள்ளாக மறைந்திருக்கிற இருதயமானது பராபரனுடைய திருப்பார்வையிலே மிகுந்த விலையேறப்பெற்றிருக்கிற சாந்தமும் அமைதலுமான ஆவியென்னும் அழியாமையுள்ள [16]அலங்காரத்தை அடையும்படி செய்யுங்கள்.

௫ இப்படியே பூர்வீகத்திலே பராபரன்மேல் நம்பிக்கையான பரிசுத்த ஸ்திரிகளும் தங்களை அலங்காரம்செய்து, தங்களுடைய புருஷருக்குக் கீழ்ப்படிந்தார்கள்.

௬ அந்தப்படி சாராள் ஆபிரகாமை [17]எசமானென்றழைத்து, அவனுக்குக் கீழ்ப்பட்டாள்; நீங்கள் நன்மைசெய்து, எவ்வளவான துன்பத்திற்கும் பயப்படாதவர்களாய், அவளுக்குப் பிள்ளைகள்§ ஆனீர்கள்.

௭ ¶ அன்றியும் [18]புருஷரே, [19]உங்கள் செபங்களுக்குத் தடைவராதபடிக்கு மனைவியானவள் [20]பலஈன பாத்திரமாய் இருக்கிறபடியினாலே, நீங்கள் அறிவின்படி அவளுடனேகூட வாசம்பண்ணவேண்டுவதுமல்லாமல் உங்களுடனேகூட அவளும் நித்திய சீவனாகிய கிருபையைச் சுதந்தரித்துக்கொள்ளுகிறவளானபடியினாலே அவளுக்குக் கனம்செலுத்துவீர்களாக.

௮ ¶ மேலும் [21]நீங்கள் எல்லாரும் ஒருமனப்பட்டவர்களாயும் பரிதாபமுள்ளவர்களாயும் [22]சகோதர சிநேகம் உள்ளவர்களாயும்‖

கி. பி. ௬௰.

1 ௧ பே. ௧. ௰௮.
* சிலபிரதிகளில் நமக்காக.
2 யோவா. ௰௩. ௰௫. பிலி. ௨. ௫. ௧ யோ. ௨. ௬.
3 ஏசா. ௫௩. ௯. லூக். ௨௩. ௪௧. யோவா. ௮. ௪௬. ௨ கொரி. ௫. ௨௧. எபி. ௪. ௰௫.
4 ஏசா. ௫௩. ௭. மத். ௨௭. ௩௯. யோவா. ௮. ௪௮, ௪௯. எபி. ௰௨. ௩.
5 லூக். ௨௩. ௪௬.
† அல்லது தம்மை.
6 ரோ. ௬. ௨. ௰௧: ௭. ௬.
7 ஏசா. ௫௩. ௪, ௫, ௰௧. மத். ௮. ௰௭. எபி. ௯. ௨௮.
‡ அல்லது சிலுவைமரத்துக்குத் தாங்கிக்கொண்டு.
8 ஏசா. ௫௩. ௫.
9 ஏசா. ௫௩. ௬. எசே. ௩௪. ௬.
10 எசே. ௩௪. ௨௩: ௩௭. ௨௪. யோவா. ௰. ௰௧, ௰௪, ௰௬. எபி. ௰௩. ௨௦. ௧ பே. ௫. ௪.
11 ௧ கொரி. ௰௪. ௩௪. எபே. ௫. ௨௨. கொலோ. ௩. ௰௮. தீத். ௨. ௫.
12 ௧ கொரி. ௭. ௰௬.
13 ௧ பே. ௨. ௰௨.
14 மத். ௰௮. ௰௫. ௧ கொரி. ௯. ௰௯-௨௨.
15 ௧ தீமோ. ௨. ௯. தீத். ௨. ௩-௫.
16 சங். ௪௫. ௰௩. ௨ ரோ. ௨. ௨௯: ௭. ௨௨. ௨ கொரி. ௪. ௰௬.

17 ஆதி. ௰௮. ௰௨.—§ அல்லது குமாரத்திகள்.—18 ௧ கொரி. ௭. ௩. எபே. ௫. ௨௫. கொலோ. ௩. ௰௯.—19 யோபு. ௪௨. ௮. மத். ௫. ௨௩, ௨௪: ௰௮. ௰௯.—20 ௧ கொரி. ௰௨. ௨௩. ௧ தெச. ௪. ௪.—21 ௨ ரோ. ௰௨. ௰௬: ௰௫. ௫. பிலி. ௩. ௰௬.
22 ரோ. ௰௨. ௰. எபி. ௰௩. ௧. ௧ பே. ௨. ௰௭.—‖ அல்லது சகோதரரைச் சிநேகிக்கிறவர்களாயும்.

Digitized by Google

[1]மன உருக்கமுள்ளவர்களாயும் மனத்தாழ்மையுள்ளவர்களாயும்,

௯ தீமைக்குத் தீமையையும், உதாசினத்துக்கு உதாசினத்தையும் [2]பதில்செய்யாமல் ஆசீர்வாதத்தையே பதில்செய்கிறவர்களாயும் இருப்பீர்களாக; உங்களுக்குத் தெரிந்திருக்கிறபடி [3]ஆசீர்வாதத்தைச் சுதந்தரித்துக் கொள்ளும்படிக்கு நீங்கள் இப்படியே செய்ய அழைக்கப்பட்டீர்கள்.

௰ ஆனபடியினாலே [4]ஜீவனை விரும்பிச் சவுக்கிய நாள்களைக் காணவேண்டுமென்று இருக்கிறவன் தன் [5]நாவினால் பொல்லாங்கையும், தன் உதடுகளால் கபடத்தையும் பேசாமல் இருக்கும்படி அமைந்து,

௰௧ [6]பொல்லாங்கை விட்டு விலகி நன்மை செய்து [7]சமாதானத்தைத் தேடி அதைப் பின்தொடரக்கடவன்.

௰௨ ஏனென்றால் கர்த்தர் நீதிமான்கள்மேலே கண்ணோட்டமாயிருந்து [8]அவர்களுடைய விண்ணப்பத்திற்குச் செவிகொடுக்கிறார்.

௰௩ கர்த்தருடைய முகம்பொல்லாங்கைச் செய்கிறவர்களுக்கு* விரோதமாயிருக்கின்றது; அந்தப்படி நீங்கள் நன்மையைப் பின்பற்றுகிறவர்களானால் [9]உங்களுக்குப் பொல்லாங்கைச் செய்பவன் எவன்?

௰௪ [10]நீதியினிமித்தமாக நீங்கள் பாடனுபவித்தால் பாக்கியராயிருப்பீர்கள்; ஆனதால் [11]அவர்களுடைய பயங்காத்திற்கு நீங்கள் பயப்படாமலும் கலங்காமலும் இருந்து,

௰௫ கர்த்தராகிய பராபரனை உங்கள் இருதயங்களில் பரிசுத்தமாய் வணங்கி, உங்களில் இருக்கிற நம்பிக்கையைக்குறித்து உங்களை விசாரித்துக் கேட்கிற யாவருக்கும் சாந்தத்தோடும் வணக்கத்தோடும்† [12]உத்தரவுசொல்ல எப்பொழுதும் ஆயத்தமாயிருந்து,

௰௬ கிறிஸ்துவுக்கு ஏற்ற உங்கள் நல்ல நடக்கையைத் தூஷணிக்கிறவர்கள் உங்களைப் பொல்லாங்குசெய்கிறவர்கள் என்று உங்களுக்கு விரோதமாய்ச் சொல்லுகிறதினாலே [13]வெட்கப்படும்படிக்கு [14]நல்மனச்சாட்சியைக்காத்துக் கொள்வீர்களாக.

௰௭ தீமைசெய்து பாடனுபவிக்கிறதிலும் நன்மைசெய்து பராபரனுடைய சித்தப்படி பாடனுபவிக்கிறது மேன்மையாயிருக்குமே.

௰௮ ¶ ஆகையால் நீதியுள்ளவராகிய கிறிஸ்துவும் நம்மைப் பராபரனிடத்திற்குச் சேர்த்துக்கொள்ளும்படிக்கு அநீதியுள்ளவர்களுடைய பாவங்களுக்காக [15]ஒருதரம் பாடுபட்டார்; [16]சரீரத்திலே [17]அவர் கொலைசெய்யப்பட்டார்; [18]ஆவியிலே அவர் பிழைப்பிக்கப்பட்டார்.

௰௯ அந்த ஆவியாகவே அவர் [19]காவலிலுள்ள ஆவிகளிடத்திற்குப்போய்ப் [20]பிரசங்கம்பண்ணினார்.

௨௰ அந்த ஆவிகள் பூர்வீகத்திலே நோவாவென்பவன் [21]பேழையை எத்தனமாக்கின நாள்களிலே [22]பராபரன் நீடியசாந்தத்தோடே காத்திருந்தபொழுது கீழ்ப்படியாமற்போனவைகள்; [23]அந்தப் பேழையிலே எட்டுப்பேராகிய சிலர் மாத்திரம் பிரவேசித்துச் சலத்தினாலே காக்கப்பட்டார்கள்.

௨௰௧ [24]அது ஞானஸ்நானத்திற்கு முன் அடையாளமாய் இருந்தது; [25]சரீர அழுக்கை நீக்குகிறதற்கு அல்ல; பராபரனுக்குமுன்பாக [26]நல்மனச்சாட்சி பண்ணுகிற உடம்படிக்கையைக் குறிக்கிற ஸ்நானத்திற்கே அப்படி இருந்தது; [27]இயேசுக்கிறிஸ்து உயிரோடெ

கி. பி. ௬௰.

1 எபே. ௪. ௩௨. கொலோ. ௩. ௧௨.
2 பாக். ௰௭. ௰௩: ௨௰. ௨௨. மத். ௫. ௩௯. உரோ. ௰௨. ௰௪, ௰௭. ௧ கொரி ௪.௰௨. ௧ தெச. ௫.௰௫.
3 மத் ௨௫. ௩௪
4 சங். ௩௪. ௰௨. ௰௪.
5 யாக் ௧. ௨௬. ௧ பே. ௨. ௧, ௨௨. வெளி ௰௪. ௫.
6 சங். ௩௭. ௨௭. ஏசா.௧ ௰௬,௰௭. ௩ யோ. ௰௧.
7 உரோ. ௰௨. ௰௮: ௰௪. ௰௯. எபி. ௰௨. ௰௪.
8 யோவா. ௯. ௩௧. யாக் ௫.௰௬.
* இரேகரு. செய்கிறவர்கள்மேல்.
9 பாக். ௰௬. ௭. உரோ. ௮.௨௮
10 மத். ௫. ௰,௰௧, ௰௨. ௧ பே. ௨. ௰௯: ௪. ௰௪. யாக். ௧ ௰௨.
11 ஏசா. ௮ ௰௨, ௰௩. எரே. ௧.௮. யோவா. ௰௪ ௧, ௨௭.
† அல்லது பயத் தோடும்.
12 சங். ௧௰௯.௪௬. அப். ௪. ௮. கொலோ. ௪.௬. ௨ தீமோ. ௨. ௨௫.
13 தீத். ௨. ௮. ௧ பே. ௨. ௰௨
14 எபி ௰௩. ௰௮.
15 உரோ. ௫. ௬. எபி. ௯. ௨௬, ௨௮ ௧ பே. ௨. ௨௪: ௪. ௧.
16 கொலோ. ௧ ௨௧,௨௨.
17 ௨ கொரி. ௰௩. ௪.
18 உரோ. ௧. ௪: ௮.௰௧
19 ஏசா. ௪௨. ௭: ௪௯.௯: ௬௧.௧.

மூலமாயிருக்கிறதால் அந்த ஞானஸ்நானம் இப்பொழுது நம்மையும் இரட்சிக்கின்றது.

௨௨ அவர் பரமண்டலத்திற்குப் போய்ப் [1]பராபரனுடைய வலது பாரிசத்தில் இருக்கிறார்; [2]தேவதூதர்கள் அல்லாமல் அதிகாரங்களும் வல்லமைகளும் அவருக்கே கீழ்ப்பட்டிருக்கின்றன.

## ௪. அதிகாரம்.

*க. கிறிஸ்துவினுடைய மாதிரியையும் உலகத்தின் முடிவையும் நோக்கிப் பாவத்தைவிட்டு ஓய்ந்திருக்கப் புத்தியையும், ௰௨. துன்பப்படுகிறவர்களுக்கு ஆறுதலையும் சொல்லியது.*

இப்படியிருக்கக் [3]கிறிஸ்து நமக்காகத் (தமது சரீரத்திலே பாடு பட்டபடியால் நீங்களும் அப்படிப்பட்ட சிந்தையை ஆயுதமாக அணிந்துகொள்ளக்கடவீர்கள்.

௨ [4]சரீரத்தில் பாடுபட்டவன் பாவங்களைவிட்டு ஓய்ந்திருப்பானே; (நீங்கள்) [5]சரீரத்தோடே இருக்கும் காலம்வரைக்கும் மனிதருடைய இச்சைகளின்படி அல்ல, [6]பராபரனுடைய சித்தத்தின் படியே [7]பிழைக்கிறதற்கு ஏதுவாக (அப்படிச் செய்யுங்கள்).

௩ [8]சென்ற வாழ்நாட்காலத்திலே நாம் [9]அஞ்ஞானிகளுடைய இஷ்டத்தின்படி நடந்துகொண்டது போதுமே; அப்பொழுது நாம் காமவிகாரத்தையும் துர்இச்சைகளையும் நடப்பித்துப் பழஇரசத்தை மிகவும் குடித்துப் பெருந்தீனியைச் சாப்பிட்டு வெறிகொண்டு, அருவருக்கப்படத்தக்க விக்கிரக ஆராதனையைச் செய்து வந்தோம்.

௪ (இப்பொழுது) கெட்ட நடக்கையுள்ள அந்தத் துன்மார்க்கத்திலே அவர்களோடேகூட நீங்கள் ஓடாமல் இருக்கிறதினாலே அவர்கள் ஆச்சரியப்பட்டு (உங்களைத்) [10]தூஷணிக்கிறார்கள்.

கி. பி. ௬௰.

1 சங். ௱௰. க. உரோ. அ. ௩௪. எபே. க. ௨௰. கொலோ. ௩ க. எபி க. ௩.
2 உரோ. அ. ௩௮. க கொரி. ௰௫. ௨௪. எபே. க. ௨௧.
3 க பே. ௩. ௰அ.
4 உரோ. ௬. ௨, எ. கலா. ௫. ௨௪. கொலோ. ௩. ௩, ௫.
5 உரோ. ௰௪. எ. க பே. ௨. க.
6 யோவா. க.௰௩. உரோ. ௬. ௰௩. ௨ கொரி. ௫. ௰௫. யாக். க ௰அ.
7 கலா. ௨. ௨௰. க பே. க. ௰௪.
8 எசே. ௪௪. ௬: ௪௫. ௯. அப். ௰எ. ௩௰.
9 எபே. ௨. ௨: ௪. ௰எ. க தெச. ௪. ௫. தீத். ௩. ௩. க பே. க. ௰௪.
10 அப். ௰௩ ௪௫: ௰அ. ௬. க பே. ௩. ௰௬.

௫ [11]உயிரோடிருக்கிறவர்களுக்கும் மரித்தோருக்கும் நியாயத்தீர்ப்புக்கொடுக்கஎத்தனமாயிருக்கிறவருக்கு அவர்கள் கணக்கு ஒப்புவிப்பார்கள்.

௬ இதற்காகவும் மரித்தோர் சரீரத்திலே மனிதராலே ஆக்கினைக்குள்ளாக்கப்பட்டிருந்தும் ஆவியிலே பராபரனாலே பிழைக்கும்படியாக [12]அவர்களுக்கும் சுவிசேஷம் அறிவிக்கப்பட்டது.

எ ¶ அன்றியும் [13]எல்லாவற்றிற்கும் முடிவு சமீபமாயிற்று; ஆகையால், [14]நீங்கள் விவேகமாயிருந்து விண்ணப்பம்பண்ணுதற்குத் தெளிவுள்ளவர்களாய் இருக்கக்கடவீர்கள்.

அ எல்லாவற்றிற்கும் மேலாக [15]ஒருவருக்கொருவர் மிகுந்த அன்புள்ளவர்களாய் இருங்கள்; [16]அன்பானது திரளான பாவங்களை மூடுமே.*

௯ [17]முறுமுறுப்பில்லாமல் [18]ஒருவரை ஒருவர் சேர்த்துக்கொள்ளுங்கள்.

௰ [19]அவனவன் பெற்ற வரத்தின்படியே [20]நீங்கள் பராபரனுடைய பலவித கிருபையுள்ள ஈவுகளையுடைய நல்ல [21]உக்கிராணக்காரர்போல, ஒருவருக்கொருவர் ஊழியம்செய்யுங்கள்.

௰க [22]போதிக்கிறவன் பராபரனுடைய வசனங்களின்படியே போதிக்கக்கடவன்; [23]ஊழியம் செய்கிறவன் பராபரன் கொடுக்கிற பெலத்தாலே அப்படிச்செய்யக்கடவன்; [24]சகல விதத்திலேயும் பராபரன் இயேசுக்கிறிஸ்து மூலமாய்த் துதிக்கப்படும்படியே செய்வீர்களாக; [25]அவருக்குத் துதியும் வல்லமையும் என்றென்றைக்கும் உண்டாயிருப்பதாக.—ஆமன்.

11 அப். ௰. ௪௨: ௰எ.௩௧. உரோ. ௰௪. ௰, ௰௨. ௨ கொரி. ௫௰. ௫௧, ௫௨. ௨ தீமோ. ௪. க. யாக். ௫. ௬.
12 க பே. ௩.௰௬.
13 மத். ௨௪. ௰௩, ௰௪. உரோ. ௰௩. ௰௨. பிலி. ௪. ௫. எபி. ௰. ௨௫. யாக். ௫. அ. ௨ பே. ௩. ௩, ௰௩ க யோ. ௨. ௰அ.
14 மத். ௨௬. ௪௧. லூக். ௨௧. ௩௪. கொலோ. ௪. ௨. க பே. ௫. ௰௩: ௫. அ.
15 கொலோ. ௩. ௰௪. எபி. ௰௩. க.
16 யாக். ௫. ௰௨. க கொரி. ௰௩. எ. யாக். ௫. ௨௰.

*அல்லது மூடும் -17 ௨ கொரி. ௯. எ. பிலி. ௨. ௰௪. பிலே. ௰௪.-18 உரோ. ௰௨. ௰௩. எபி. ௰௩. ௨.-19 உரோ. ௰௨. ௬. க கொரி. ௪ எ. 20 க கொரி. ௰௨. ௪. எபே ௪. ௰௧.-21 மத். ௨௪. ௪௫: ௨௫ ௰௪, ௨௧. லூக். ௰௨. ௪௨. க கொரி. ௪. க, ௨. தீத். க. எ.-22 உரோ. ௨௨. ௨௨. 23 உரோ. ௰௨. ௬, எ, அ. க கொரி. ௩. ௰.—24 எபே. ௫. ௨௰. க பே. ௨. ௫.—25 க தீமோ. ௬. ௰௬. க பே. ௫. ௰௧. வெளி. ௧. ௬.

Digitized by Google

யஉ ¶ பிரியமானவர்களே, [1]உங்களுக்குள்ளே இருக்கிற அக்கினி உங்களைச் சோதிக்கத்தக்கதாய் இருப்பதால் புதியது உங்களுக்குச் சம்பவித்ததாக அதைக்குறித்து ஆச்சரியப்படாமல்,

யங [2]கிறிஸ்துவின் பாடுகளுக்கு நீங்கள் ஐக்கமானதால் [3]சந்தோஷப்படுங்கள்; [4]அவருடைய மகிமை வெளிப்படும்பொழுது நீங்களும் களிகூர்ந்து சந்தோஷமாய் இருக்கும்படிக்கு (அப்படிச் செய்வீர்களாக).

யச [5]நீங்கள் கிறிஸ்துவின் நாமத்தினிமித்தம் நிந்திக்கப்பட்டால் பாக்கியவான்கள்; பராபரனுடைய ஆவியாகிய மகிமையுள்ள ஆவி உங்களிடத்தில் தங்கியிருக்கிறுரே; [6]அவர்களால் அவர் தூஷணிக்கப்படுகிறுர்; உங்களாலே துதிக்கப்படுகிறுர்.

யரு ஆனதால் [7]உங்களில் ஒருவனும் கொலைபாதகனுய், அல்லது திருடனுய், அல்லது பொல்லாங்குசெய்தவனுய், அல்லது அந்நியகாரியங்களில் [8]தலையிட்டுக்கொண்டவனுய்ப் பாடுபடாதிருப்பானுக.

யசு கிறிஸ்தவனுய்ப் பாடுபடுகிறவன் வெட்கமடையாமலிருந்து, பராபரனை [9]அதற்காகவே துதிசெய்யக்கடவன்.

யஎ [10]நியாயத்தீர்ப்பும் தேவாலயத்திலே ஆரம்பமாகிறதற்குக் காலம் வந்திருக்கிறதே; [11]முதலாவது நம்மிடத்திலே அது ஆரம்பமானுல், [12]பராபரனுடைய சுவிசேஷத்திற்குக் கீழ்ப்படியாதவர்களுடைய முடிவு என்னமாய் இருக்கும்?

யஅ [13]நீதிமானே இரட்சிக்கப்படுகிறது அரிதானுல், துன்மார்க்கனும் பாவியும் எங்கே நிற்பான்?

யகூ ஆகையால் பராபரனுடைய சித்தத்தின்படி பாடுபடுகிறவர்கள் நன்மைசெய்கிறவர்களாய்த் தங்கள் [14]ஆத்துமாக்களை உண்மையுள்ள சிருட்டிகராகிய அவருக்கு ஒப்புக்கொடுக்கக்கடவர்கள்.

கி. பி. சுய.

1 க கொரி. க. யக. க பே. க. எ.
2 உ கோ. அ. யஎ. உ கொரி. க. எ: ச. ய. பிலி. ங. ய. கொலோ க. உச. உ தீமோ. உ. யஉ. க பே. ஞ. க, ய. வெளி. க. கூ.
3 அப். ரு. சக. யாக். க. உ.
4 க பே க. ரு, க.
5 மத். ரு. யக. உ கொரி. யஉ. ய யாக். க. யஉ. க பே. உ. யகூ, உய: ங. யச.
6 க பே. உ. யஉ: க. யக.
7 க பே. உ. உய.
8 க தெச ச. யக. க தீமோ. ரு. யங.
9 அப். ரு. சக.
10 எசா ய. யஉ. எரே. உரு. உகூ: சகூ. யஉ. எசே. கூ. சு. மல் ங. க. ரு.
11 லூக். உங. கக.
12 லூக். ய. யஉ, யச.
13 லூக். யக. கக லூக். உக. கக.
14 சங். கக. ரு. லூக். உங. சக. உ தீமோ. க. யஉ.
15 பிலே. கூ.
16 லூக் உச சஅ. அப். க. அ, உஉ: ரு. கஉ: ய. கக.
17 உ ரோ அ. யஎ, யஅ. வெளி. க. கூ.

* அல்லது உங்களால் ஆளமட்டும்.

18 யோவா. உக. யரு. யக, யஎ.
19 க கொரி. கூ. யஎ.
20 க தீமோ ங. ங, அ. தீத். க. எ.
21 சங். கக. யஉ: எச. உ.
22 எசே. கச. ச.

ரு. அதிகாரம்.

க. மூப்பர்கள் மந்தைகளை மேய்க்கவும், ரு. இளைஞர் கீழ்ப்படியவும், அ. யாவரும் மனந்தெளிவும் விழிப்பும் விசுவாசத்தில் உறுதியுமாயிருக்கவும், கூ. கொடூர சத்துருவாகிய பசாசை எதிர்த்துநிற்கவும் சொல்லியது.

உங்களிலுள்ள மூப்பருக்கு [15]உடன் மூப்பனுமாய், [16]கிறிஸ்துவின்பாடுகளுக்குச் சாட்சிக்காரனுமாய், (இனி) வெளிப்படும் மகிமைக்குப் [17]பங்காளியுமாய் இருக்கிற நான் புத்தி சொல்லுகிறது என்னவென்றுல்,

உ உங்களிடத்திலுள்ள* பராபரனுடைய ஆட்டுக்கூட்டத்தை [18]நீங்கள் மேய்த்துக் [19]கட்டாயமாயல்ல மனப்பூர்வமாயும், [20]அவலட்சணமான ஆதாயத்திற்காகவல்ல உற்சாகமனதோடும்,

ங [21]சுதந்தரங்களை [22]இறுமாப்பாய் ஆளுகிறவர்களாகவல்ல† [23]ஆட்டுக்கூட்டத்திற்குப் பாதையைக் காட்டுகிறவர்களாகவும் கண்காணிப்புச் செய்வீர்களாக.

ச (அப்படிச் செய்தால்) [24]பிரதானமேய்ப்பர்வெளிப்படும்பொழுது [25]மகிமையுள்ள [26]வாடாத முடியைப் பெறுவீர்கள்.

ரு ¶ அல்லாமலும் வாலிபரே, மூப்பருக்குக் கீழ்ப்படியுங்கள், [27]நீங்கள் எல்லாரும் ஒருவருக்கொருவர் கீழ்ப்படிந்து மனத்தாழ்மையை அணிந்துகொள்வீர்களாக; அகந்தையுள்ளவர்களுக்குப் [28]பராபரன் எதிர்த்து நிற்கிறுர்; [29]தாழ்மையுள்ளவர்களுக்கே கிருபையை அளிக்கிறுர்.

சு ஆகையால் ஏற்றகாலத்திலே பராபரன் உங்களை உயர்த்தும்ப

மத். உய. உரு, உக. க கொரி. க. கூ: உ கொரி. க. உச.—† அல்லது ஆண்டுகொள்ளாமல்.—23 பிலி. ங. யஎ. உ தெச. ங. கூ. க தீமோ. ச. யஉ. தீத். உ. எ.—24 எபி. யங. உய.—25 க கொரி. கூ. உரு. உ தீமோ. ச. அ. யாக். க. யஉ.—26 க பே. க. ச.
27 உ ரோ. யஉ. ய. எபே ரு. உக. பிலி. உ. ங.—28 யாக் ச. சு.—29 ஏசா. ஞ. யரு: சுசு. உ.

Digitized by Google

டிக்கு [1]அவருடைய பலத்த கைக்குள் அடங்குவீர்களாக.

எ அவரே உங்களை விசாரித்துக்கொள்ளுகிறபடியால் [2]உங்கள் கவலைகளை எல்லாம் அவர்மேல் வைத்துவிடுங்கள்.

அ ¶ [3]தெளிந்த புத்தியுள்ளவர்களாய் இருங்கள்; விழித்திருங்கள். என்னத்தினாலெனில், [4]உங்கள் எதிராளியாகிய பசாசானவன் கெர்ச்சிக்கிற சிங்கம்போல எவனையும் விழுங்கவேண்டுமென்று வகைதேடித் திரிகிறான்.

௯ [5]உலகத்திலுள்ள உங்கள் சகோதரரிடத்திலே அப்படிப்பட்ட பாடுகளே நிறைவேறிவருகின்றன என்று அறிந்து, விசுவாசத்தில் உறுதியாய் [6]அவனுக்கு எதிர்த்து நில்லுங்கள்.

௰ ¶ சகலவித கிருபைக்கும் காரணருமாய், [7]கொஞ்சக்காலம் பாடுபடுகிற நம்மைக் கிறிஸ்து இயேசுவினாலே தமது நித்தியமகிமைக்கு [8]அழைத்தவருமாய் இருக்கிற பராபரன் தாமே உங்களை [9]நிறைவுள்ளவர்களாக்கி [10]ஸ்திரப்படுத்தித் திடப்படுத்தி அஸ்திபாரப்படுத்தக்கடவர்.

௰க [11]அவருக்கே துதியும் வல்லமையும் என்றென்றைக்கும் உண்டாயிருக்கக்கடவது.—ஆமென்.

௰உ ¶ (உங்களுக்குப்) புத்தி சொல்லும்படிக்கும், நீங்கள் (அடைந்து) [12]நிற்கிற கிருபை பராபரனுடைய மெய்யான கிருபைதான் என்று சாட்சிகொடுக்கும்படிக்கும் [13]நான் சுருக்கமாய் உங்களுக்கு எழுதி, எனக்குத் தோன்றுகிறபடி உண்மையாய் இருக்கிற சகோதரனாகிய [14]சில்வானுவின் கையிலே (இதைக்) கொடுத்து அனுப்பினேன்.

௰௩ உங்களுடனேகூடத் தெரிந்துகொள்ளப்பட்டிருக்கிற பாபிலோனிலுள்ள சபையும் என் குமாரனாகிய [15]மாற்குமு உங்களை வாழ்த்துகிறார்கள்.

௰௪ [16]ஒருவரை ஒருவர் அன்பின் முத்தத்தினால் வாழ்த்துதல் செய்வீர்களாக; கிறிஸ்து இயேசுவைப் பற்றியிருக்கிற உங்கள் அனைவருக்கும் [17]சமாதானம் உண்டாவதாக.—ஆமென்.

கி. பி. ௬௰.

1 யாக். ௪ ௰.
2 சங். ௩௭. ௫: ௫௫. ௨௨. மத். ௬. ௨௫. லூக். ௰௨. ௰௧, ௨௨. பிலி. ௪. ௬. எபி. ௰௩. ௫.
3 லூக். ௨௧. ௩௪, ௩௬. ௧ தெச. ௫. ௬. ௧ பே. ௪. ௭.
4 யோபு. ௧. ௭: ௨. ௨. லூக். ௨௨. ௩௧. வெளி. ௰௨. ௰௨.
5 அப் ௰௪ ௨௨. ௧ தெச. ௩. ௩. ௨ தீமோ. ௩. ௰௨. ௧ பே. ௨. ௨௧.
6 எபே. ௬. ௰௧, ௰௩. யாக். ௪. ௭.
7 ௨ கொரி. ௪. ௰௭. ௧ பே.௧.௬.
8 ௧ கொரி. ௧. ௯. ௧ தீமோ.௬.௰௨.
9 எபி. ௰௩. ௨௧. யூதா. ௨௪.
10 ௨ தெச. ௨. ௰௭: ௩. ௩.
11 ௧ பே. ௪. ௰௧. வெளி. ௧. ௬.
12 அப்.௨௰.௨௪. ௧ கொரி. ௰௫ ௧. ௨ பே. ௧. ௰௨.

13 எபி.௰௩.௨௨.—14 ௨ கொரி.௧.௰௯.—15 அப்.௰௨.௰௨,௨௫.—16 ௨ரோ.௰௬.௰௬. ௧ கொரி.௰௬.௨௰. ௨ கொரி.௰௩.௰௨. ௧ தெச.௫.௨௬.—17 எபே.௬.௨௩.

Digitized by Google

II. PETER.

அப்போஸ்தலனாகிய

# பேதுரு எழுதின

## பொதுவான இரண்டாம் நிருபம்.

### க. அதிகாரம்.

க. அவர்களைத் தங்கள் புண்ணியநடக்கைகளில் உறுதிப்படுத்தி, ௫. விசுவாசத்தினாலும் நற்கிரியைகளினாலும் தங்கள் அழைப்பை நிச்சயிக்கச்சொல்லி, ௰௨. தன் மரணம் சமீபமானபடியால் இக்காரியங்களைக்குறித்து அவர்களுக்கு நினைப்பூட்டி, ௰௬. அப்போஸ்தலர்கள் கண்ட மகத்துவக்காட்சியினாலும், பிதாவானவரும் தீர்க்கதரிசிகளும் உரைத்த சாட்சியினாலும், பராபரனுடைய மெய்யான சுதனாயிருக்கிற கிறிஸ்துவைப்பற்றும் விசுவாசத்தில் நிலைகொண்டிருக்கவும் சொல்லியது.

நம்முடைய பராபரனுமாய் இரட்சகருமாய்* இருக்கிற இயேசுக்கிறிஸ்துவின் நீதியில் எங்களைப்போல [1]அருமையான விசுவாசத்தைப் பெற்றவர்களுக்கு, இயேசுக்கிறிஸ்துவின் ஊழியக்காரனும் அப்போஸ்தலனுமாகிய சீமோன்† பேதுரு எழுதுகிறதாவது:

உ பராபரனையும் நம்முடைய கர்த்தராகிய இயேசுவையும் அறிகிற அறிவினால் [2]உங்களுக்குக் கிருபையும் சமாதானமும் சம்பூரணமாய் உண்டாகக்கடவது.

௩ ¶ மகிமையாலும்‡ புண்ணியத்தாலும் [3]நம்மை அழைத்தவரை [4]அறிகிற அறிவினாலே ஜீவனுக்கும் மெய்த்தேவபத்திக்கும் ஏற்ற யாவற்றையும் அவருடைய திவ்விய வல்லமை நமக்குக் கொடுத்தபடியினாலும்,

௪ நீங்கள் (தகாத) இச்சையால் உலகத்திலுள்ள கேட்டுக்குத் [5]தப்பித்துக்கொண்டவர்களாய், திவ்விய குணத்திற்குப் [6]பங்காளிகளாகத்தக்கதாக மிகவும் மேன்மையும் விலையேறப்பெற்றதுமான[7] வாக்குத்தத்தங்கள் அவராலே நமக்கு அளிக்கப்பட்டபடியினாலும்,

௫ நீங்கள் [8]மிகுந்த சாக்கிரதையைக்கொண்டு, உங்கள் விசுவாசத்தோடே தயிரியத்தையும், [9]தயிரியத்தோடே அறிவையும்,

௬ அறிவோடே இச்சையடக்கத்தையும், இச்சையடக்கத்தோடே பொறுமையையும், பொறுமையோடே மெய்த்தேவபத்தியையும்,

௭ மெய்த்தேவபத்தியோடே சகோதரசிநேகத்தையும், [10]சகோதரசிநேகத்தோடே அன்பையும் கூட்டிக்கொள்வீர்களாக.

௮ இவைகள் உங்களுக்கு உண்டாயிருந்து பெருகினால், நீங்கள் நம்முடைய கர்த்தராகிய இயேசுக்கிறிஸ்துவை அறிகிற அறிவிலே வீணராக§ அல்லது [11]கனியற்றவர்களாக இருக்கமாட்டீர்களே.

௯ இவைகள் இல்லாதவன் எவனோ, [12]அவன் தன் முந்தின பாவங்கள் நீக்கப்பட்டதை மறந்து, [13]குருடனாய்க் கண்மூடியிருக்கிறான்.

௰ ஆகையால் சகோதரரே, [14]நீங்கள் அழைக்கப்பட்டும் தெரிந்துகொள்ளப்பட்டும், இருக்கிறதை உறுதியாக்கும்படி அதிக சாக்கிர

கி. பி. ௬௰.

* அல்லது பராபரனுமாய் நம்முடைய இரட்சகருமாய்; தீத். உ. ௰௩.

1 உரோ. க. ௰௨. உ கொரி. ச. ௰௩. எபே. ச. ௫. தீத். க. ச.

† அல்லது சீமெயோன்; அப். ௰௫ ௰௪.

2 தானி. ச. க: ௬. உ௫. க பே. க. உ. யூதா. உ.

‡ அல்லது மகிமைக்கும்.

3 க தெச. உ ௰உ: ௪. எ. உ தெச. உ ௰௪. உ தீமோ. க. ௯. க பே. உ. ௯: ரு. ௰.

4 யோவா ௰எ. ௩.

5 உ பே. உ ௰௮. உ௰.

6 உ கொரி. ரு. ௰எ. எபே. ச. உச. எபி. ௰உ. ௰. க யோ க. உ.

7 உ கொரி. எ. க.

8 உ பே. ௩. ௰ச.

9 க பே. ரு. எ.

10 கலா. ரு. ௰. க தெச. ௩. ௰உ: ௪. ௰௯ க யோ. ச உ௩.

§ அல்லது வெறுமையாக.

11 யோவா. ௰௫ உ. தீத். ௩. ௰ச.

12 எபே. ௫. உ௬. எபி. ௯. ௰ச. க யோ. க. எ.—13 க யோ. உ. ௯. ௰௧.—14 க யோ. ௩. ௰௯.

Digitized by Google

தையாய் இருப்பீர்களாக; அப்படிச்செய்தால் நீங்கள் [1]ஒருக்காலும் வழுவுவதில்லை.

௰௧ மேலும் இப்படியே நம்முடைய கர்த்தரும் இரட்சகருமாகிய இயேசுக்கிறிஸ்துவின் நித்திய இராச்சியத்திற்குள் பிரவேசித்தல் பரிபூரணமாய் உங்களுக்கு அளிக்கப்படும்.

௰௨ ¶ ஆனபடியால் நீங்கள் இவைகளை அறிந்து, [2]இப்பொழுது உங்களுக்கு உண்டாயிருக்கிற சத்தியத்தில் உறுதிப்பட்டிருந்தும், இவைகளை [3]எப்பொழுதும் நினைக்கும்படி செய்ய நான் அசதியாய் இருக்கமாட்டேன்.

௰௩ அந்தப்படி [4]நம்முடையகர்த்தராகிய இயேசுக்கிறிஸ்துவும் எனக்குத் தெரிவித்தபடி [5]நான் என் கூடாரத்தைச் சீக்கிரமாய் விட்டுப்போகவேண்டும் என்று அறிந்து,

௰௪ இந்தக் கூடாரத்தில் இருக்குமளவும் ஞாபகப்படுத்துதலினாலே [6]உங்களை எழுப்புகிறது [7]நியாயமென்று எண்ணுகிறேன்.

௰௫ ஆகையால் நான் போனதற்குப் பின்பும், நீங்கள் இவைகளை எப்பொழுதும் நினைத்துக்கொள்ள உங்களுக்கு ஏதுவுண்டாயிருக்கும்படி பிரயத்தனம்பண்ண விரும்புகிறேன்.

௰௬ ¶ என்னவெனில், நம்முடையகர்த்தராகிய இயேசுக்கிறிஸ்துவின் வல்லமையையும், வருகையையும், உங்களுக்கு அறிவித்தபொழுது [8]நாங்கள் தந்திரமாய் யோசிக்கப்பட்ட கட்டுக்கதைகளைப் பின்பற்றவில்லை.

௰௭ [9]இவர் எனக்கு அன்பாயிருக்கிற என்னுடைய குமாரன்; இவரிடத்தில் பிரியமாய் இருக்கிறேன் என்று சொல்லுகிற சத்தம் மகா மேன்மையான மகிமைத்தலத்திலிருந்து வந்ததினாலே பிதாவாகிய பராபரனால் கனத்தையும் மகிமையையும் அவர் பெற்றபொழுது, அவருடைய மகிமையை [10]நாங்கள் கண்ணாரக்கண்டோம்.

௰௮ [11]அவரோடேகூட நாங்கள் பரிசுத்த பர்வதத்தில் இருந்தபொழுது வானத்திலிருந்து வந்த அந்தச் சத்தத்தைக் கேட்டோம்.

௰௯ ¶ தீர்க்கதரிசன வசனமும் நமக்கு அதிக உறுதியாய்* இருக்கின்றது; உங்கள் இருதயங்களில் [12]வெள்ளி உதயமாகிப் பொழுது விடியுமளவும் [13]நீங்கள் இருளுள்ள தலத்தில் பிரகாசிக்கிற விளக்கைப்போன்ற அவ்வசனத்திற்கு எச்சரிக்கையாய் இருந்தால் நன்மைசெய்வீர்கள்.

௨௰ அதைக்குறித்து நீங்கள் பிரதானமாய் அறியவேண்டியது என்னவெனில், [14]வேத எழுத்திலுள்ள எந்தத்தீர்க்கதரிசனமும் சொந்தவிவரிப்பினாலே தோன்றமாட்டாது.

௨௰௧ [15]தீர்க்கதரிசனமானது பூர்வத்திலே* மனிதருடைய சித்தத்தினாலே வரவில்லையே, [16]பராபரனுடைய பரிசுத்த மனிதர்கள் பரிசுத்தஆவியினாலே ஏவப்பட்டுப் பேசினார்களே.

கி. பி. ௬௬.

1 உ பே. ௧. ௰.
2 ௧ பே. ௫. ௰௨. உ பே. ௩. ௰௭.
3 உ ரோ. ௰௫. ௰௪, ௰௫. பிலி. ௧. ௧. உ பே. ௩. ௧. ௧ யோ. உ. உ௧. யூதா. ௫.
4 யோவா. உ௧. ௰௮, ௰௯.
5 ௫ மோ. ௬. உ௧, உஉ: ௩௩. ௪௭. உ தீமோ. ௪. ௬.
6 உ பே. ௩. ௧.
7 உ கொரி. ௫. ௧. ௪.
8 ௧ கொரி. ௧. ௰௭: உ. ௧, ௪. உ கொரி. உ. ௰௭: ௪. உ.
9 மத். ௩. ௰௭: ௰௭. ௫. மாற். ௧. ௰௧: ௯. ௭. லூக். ௩. உஉ: ௯. ௩௫.
10 மத். ௰௭. ௧, உ. மாற். ௯. உ. யோவா. ௧. ௰௪. ௧ யோ. ௧. ௧: ௪. ௰௪.
11 உ மோ. ௩. ௫. யோசு. ௫. ௰௫. மத் ௰௭. ௬.
12 வெளி. உ. உ௮: உஉ. ௰௬. உ கொரி. ௪. ௪, ௬.
13 சங். ௧௰௯. ௧௫. யோவா. ௫. ௩௯.
14 உ ரோ. ௰உ. ௬.
15 உ தீமோ. ௩. ௰௬. ௧ பே. ௧. ௰௧.
*அல்லது யாதொரு காலத்திலே.
16 உ சாமு. உ௩. உ. லூக். ௧. ௭௰. அப். ௧. ௰௬: ௩. ௰௮.
17 இ மோ. ௰௩. ௧.
18 மத். உ௪. ௰௧. அப். உ௰. ௩௰. ௧ கொரி. ௰௧. ௰௯. ௧ தீமோ. ௪. ௧. உ தீமோ. ௩. ௧. ௫. ௧ யோ. ௪. ௧ யூதா. ௰௮.
19 ௧ கொரி. ௬. உ௰. கலா. ௩. ௰௩. எபே. ௧. ௭. எபி. ௯. உ௧. ௧ பே. ௧. ௰௮. வெளி. ௫. ௯.
20 யூதா. ௪.
21 பிலி. ௩. ௰௯.

## உ. அதிகாரம்.

௧. கள்ளப்போதகர்களுடைய அக்கிரமத்தையும் அதினால் அவர்களுக்கும் அவர்களைப் பின்பற்றுகிறவர்களுக்கும் உண்டாகும் தண்டனையையுஞ் சூசித்து முன் அறிவித்து, அப்படிப்பட்டவர்களைக் கின்று, ௭. சோதோமிலிருந்து லோத்து விடுதலையானதுபோல நல்லவர்கள் விடுதலையாவார்களென்றும், ௰. மோசம்போக்குகிற அந்த அக்கிரமக்காரராகிய துஷ்டர்களை நன்றாய் அறிந்து அவர்களை விட்டுவிலக அவர்கள் இப்படிப்பட்டவர்களென்றும் சொல்லியது.

[17]கள்ளத்தீர்க்கதரிசிகளும் சனங்களுக்குள்ளே இருந்தார்கள்; அதுபோல [18]உங்களுக்குள்ளும் கள்ளப்போதகர்கள் தோன்றுவார்கள்; அவர்கள் கேட்டுக்கு ஏதுவான பொய் உபதேசங்களைத் தந்திரமாய் நுழைத்துத் [19]தங்களைக் கொண்ட ஆண்டவரை [20]மறுதலித்து, இப்படித் [21]தங்களுக்குத் தீவிரமான அழிவை வருவித்துக்கொள்வார்கள்.

Digitized by Google

௨ அவர்களின்நிமித்தம் சத்திய மார்க்கம் தூஷணிக்கப்படும்; அவர்களுடைய கெட்ட* மார்க்கங்களை அநேகர் பின்பற்றுவார்கள்.

௩ [1]பொருளாசை உள்ளவர்களாய் அவர்கள் தந்திரமான வார்த்தைகளால் [2]உங்களை வாங்கிக் கொள்ளத் தேடுவார்கள்; அவர்களுக்குப் பூர்வத்தில் (தீர்மானித்திருக்கிற) [3]ஆக்கினை தாமதமாயிராது; அவர்களுக்குத்தக்க அழிவு உறங்காது.

௪ ¶ [4]பாவஞ்செய்த [5]தூதர்களைப் பராபரன் தப்பவிடாமல் அந்தகாரச் சங்கிலிகளினாலே கட்டிப் [6]பாதாளத்திலே தள்ளி, நியாயத் தீர்ப்புப்பரியந்தம் காக்கப்படுவதற்கு ஒப்புக்கொடுத்திருக்க,

௫ பழைய உலகத்தையும் தப்பவிடாமல், [7]நீதியைப் பிரசங்கித்தவனாகிய [8]நோவாமுதலான எட்டுப்பேரைமாத்திரம் அவர் காப்பாற்றிப் பத்தியற்றவர்களுள்ள உலகத்தின்மேல் [9]சலப்பிரளயத்தை வரப்பண்ணியிருக்க,

௬ [10]சோதோம் கொமோரா என்னும் பட்டணங்களையும் சாம்பலாக்கிக் கவிழ்த்துப்போட்டு, இப்படி ஆக்கினைக்குள்ளாகத் தீர்த்து, பிற்காலத்திலே [11]அவபத்தியாய் நடப்பவர்களுக்கு அடையாளமாக வைத்திருக்க, (அவர்களை எப்படித் தப்பவிடுவார்?)

௭ அக்கிரமக்காரருடைய காமவிகார நடக்கையால் வருத்தப்பட்ட [12]நீதிமானாகிய லோத் என்பவனை மாத்திரம் இரட்சித்துவிட்டார்.

௮ [13]அந்த நீதிமான் அவர்களுக்குள்ளே குடியிருக்கையில், நாள்தோறும் அவர்களுடைய அக்கிரமக் கிரியைகளைக் கண்டு கேட்டு, நீதியுள்ள தன்னுடைய இருதயத்திலே அவைகளாலே வேதனைப்பட்டான்.

௯ கர்த்தரே [14]தேவபத்தியுள்ளவர்களைத் துன்பத்தினின்று இழுத்து இரட்சிக்கவும், அக்கிரமக்காரரை நியாயத்தீர்ப்புநாளிலே ஆக்கினைக்கு உள்ளாகும்படி காக்கவும் அறிந்திருக்கிறார்.

௰ [15]பிரதானமாக அசுத்தத்தின் இச்சையோடே மாம்சத்திற்கு ஏற்றபடி நடந்து, துரைத்தனத்தை† அசட்டைபண்ணுகிறவர்களையே அப்படிச் செய்வார்; [16]அவர்கள் துணிவுக்காரர், அகங்காரிகள், மகிமையுடையவர்களைத் தூஷணிக்க நடுங்காதவர்கள்.

௰௧ ¶ அதிக [17]பலத்தையும் வல்லமையையும் உடைய தேவதூதரும் கர்த்தருக்குமுன்பாக அவர்களுக்கு‡ விரோதமாய்த் தூஷணிப்பான தீர்ப்பைச்சொல்லமாட்டார்கள்.

௰௨ இவர்கள்மாத்திரம் பிடியுண்டு அழிக்கப்படுவதற்கு உண்டான [18]புத்தியற்ற மிருகசீவன்களைப்போலத் தங்களுக்குத் தெரியாதவைகளைத் தூஷணித்துத் தங்கள் கேட்டினாலே முழுவதும் அழிக்கப்பட்டு,

௰௩ [19]அநியாயத்திற்கு ஏற்ற பலனை அடைவார்கள்; [20]அவர்கள் பகற்காலத்திலே சம்பிரமமாயிருத்தலை இன்பமென்று எண்ணுகிறவர்கள்; [21]மாசுகளும் அவலட்சணங்களுமானவர்கள்; [22]விருந்தாக உங்களோடேகூடச் சாப்பிடுகையில் தங்கள் வஞ்சனைகளினால்சம்பிரமமாய் வாழ்கிறவர்கள்.

௰௪ விபசாரத்தால்§ நிறைந்தவைகளாயும், பாவத்தைவிட்டு ஓயாதவைகளாயும் இருக்கிற கண்களுள்ளவர்கள்; ஸ்திரமில்லாத ஆத்துமாக்களைத் தந்திரமாய்ப் பிடிக்கிறவர்கள்; பொருளாசைகளில் [23]முயற்சியான இருதயத்தை உடையவர்கள். சபிக்கப்பட்டபிள்ளைகள்.

௰௫ செம்மையான மார்க்கத்தை விட்டுத் தப்பி நடந்து, பேயோருடையகுமாரனாகிய [24]பாலாமின் வழியைப் பின்பற்றுகிறவர்கள்; அவன் அநியாயத்தின் கூலியை விரும்பினான்.

கி. பி. சுக.

* சில பிரதிகளில் காமவிகாரமுள்ள.
1 உரோ. ௰௬. ௰௮. உ கொரி. ௰௨. ௰௭, ௰௮ ௧ தீமோ. ௬.௫. தீத். ௧. ௰௧.
2 உ கொரி. உ. ௰௭. உ பே. ௩. ௰௬.
3 இ மோ. ௩௨. ௩௫. யூதா. ௪. ௰௫.
4 யோவா. ௮ ௪௪. ௧ யோ. ௩. ௮.
5 யோபு. ௪. ௰௮. யூதா. ௬.
6 லூக். ௮. ௩௧ வெளி. உ௰. உ. ௩.
7 ௧ பே. ௩. ௰௯.
8 ௧ மோ எ. ௧, எ, உ௩. எபி. ௰௧. எ. ௧ பே. ௩. உ௰.
9 உ பே. ௩. ௬.
10 ௧ மோ. ௰௯. உ௪. இ மோ. உ௯. உ௩. யூதா. எ.
11 ௪ மோ. உ௬. ௰.
12 ௧ மோ. ௰௯. ௰௬.
13 சங். ௩௰௬. ௰௩௬, ௩௯௮. எசே. ௯. ௪.
14 சங். ௩௪. ௰எ. ௰௬. ௧ கொரி. ௰. ௰௩.
15 யூதா. ௪, எ, ௮, ௰, ௰௬.
† அல்லது ஆளுகையை.
16 யூதா. ௮.
17 யூதா. ௯.
‡ சில பிரதிகளில் தங்களுக்கு.
18 எரே. ௰உ. ௩. யூதா. ௰.
19 பிலி. ௩. ௰௯.
20 உரோ. ௰௩. ௰௩.
21 யூதா. ௰உ.
22 ௧ கொரி. ௰௧. உ௰. உ௧.
§ கிரேக்கு, விபசாரியால்.
23 யூதா. ௰௬.
24 ௪ மோ. உ௨. ௭, எ, உ௧, உ௩, உ௮ யூதா. ௰௧.

Digitized by Google

௰௬ பின்பு தன்னுடைய அக்கிரமத்திற்காகக் கடிந்துகொள்ளப்பட்டான்; பேசாத மிருகமே மனிதர் பாஷையைப் பேசி அந்தத் தீர்க்கதரிசியினுடைய மதிகேட்டுக்குத் தடைசெய்தது.

௰௭ (மேலும்) [1]அவர்களே தண்ணீரில்லாத கிணறுகள்; அவர்களே சுழல்காற்றினால் அடிக்கப்படுகிற மேகங்கள்; என்றென்றைக்கும் உள்ள காரிருளே அவர்களுக்கு வைத்திருக்கின்றது.

௰௮ ¶ [2]வஞ்சகமாய் நடக்கிறவர்களை விட்டுத் தப்பினவர்களுக்கு* [3]அவர்கள் மிகவும் அகந்தையான வீண்வார்த்தைகளைப் பேசி, சரீர இச்சைகளினாலும் காமகவிகாரங்களினாலும் அவர்களைத் தந்திரமாய்ப் பிடிக்கிறார்கள்.

௰௯ [4]தாங்களே கேட்டுக்கு அடிமைகளாயிருந்தும் அவர்களுக்குச் [5]சுயாதீனத்தைவாக்குத்தத்தம்பண்ணுகிறார்கள்; எவனும் எதினாலே செயிக்கப்பட்டிருக்கிறானோ அதற்கு அடிமையாக்கப்பட்டிருக்கிறானே.

௨௰ ஆகையால் [6]கர்த்தருமாய், இரட்சகருமாய் இருக்கிற இயேசுக்கிறிஸ்துவை அறிகிற அறிவினாலே [7]உலகத்தின் அசுத்தங்களுக்குத் தப்பினவர்கள் [8]மறுபடியும் அவைகளில் சிக்கிக்கொண்டு செயிக்கப்பட்டால், அவர்களுடைய முன்னிலைமையிலும் பின்னிலைமை அதிக கேடுள்ளதாய் இருக்கும்.

௨௰௧ அப்படிப்பட்டவர்கள் நீதியின் மார்க்கத்தை அறிந்தபின் தங்களுக்கு ஒப்புவிக்கப்பட்ட பரிசுத்த கற்பனைகளை விட்டுவிலகுகிறதிலும் அதை அறிந்துகொள்ளாமல் இருக்கிறதே [9]அவர்களுக்கு நன்மையாய் இருக்கும்.

௨௰௨ அப்பொழுது [10]நாய் தான் கக்கினதை மறுபடியும் தின்னுகிறதென்றும், கழுவப்பட்ட பன்றி மறுபடியும் சேற்றிலே புரளுகிறதென்றும் சொல்லுகிற மெய்யான பழமொழியின்படி அவர்களுக்குச் சம்பவித்தது.

## ௩. அதிகாரம்.

௧ கிறிஸ்து வருகையைக்குறித்துப் பரியாசம்பண்ணுகிறவர்களுக்கு விரோதமாகக் கிறிஸ்து நியாயத்தீர்ப்புக்கு வருவாரென்று நிச்சயித்து, ௮. புத்தியுள்ளவர்கள் சீக்கிரமாய்க் குணப்படப் பராபரனுடைய பொறுமையை முன்னிட்டு எச்சரித்து, ௰. உலகம் அழிக்கப்படும் விதத்தைக்குறித்து அறிவித்து, ௰௧. அதற்குத் தகுதியான பரிசுத்தவான்களாய் இருக்கவேண்டுமென்றும் புத்திசொல்லி, ௰௫. பவுல் தன் நிருபங்களில் எழுதினபடியே பராபரனுடைய பொறுமை அவர்கள் இரட்சிப்புக்கு ஏற்றதென்று சொல்லியது.

பிரியமானவர்களே, இவ்விரண்டாம் நிருபத்தை இப்பொழுது உங்களுக்கு எழுதுகிறேன்; பரிசுத்த தீர்க்கதரிசிகளால்,

௨ முன் சொல்லப்பட்ட வார்த்தைகளையும், இரட்சகராயிருக்கிற கர்த்தருடைய அப்போஸ்தலராகிய [11]எங்களுடைய கற்பனையையும் நீங்கள் நினைக்கும்படியாக, இவைகளால் உங்கள் உண்மையான மனதிற்கு [12]ஞாபகப்படுத்தி எழுப்புகிறேன்.

௩ [13]முதலாவது நீங்கள் அறியவேண்டியது என்னவெனில் கடைசிநாள்களில் பரியாசக்காரர் தோன்றுவார்கள்; [14]அவர்கள் தங்கள் சுய இச்சைகளின்படி நடந்துகொண்டு,

௪ [15]அவர் வருவாரென்று சொல்லுகிற வாக்குத்தத்தம் எங்கே இருக்கிறது; பிதாக்கள் நித்திரை அடைந்தபின்பு சகலமும் சிருட்டிப்பின் தோற்றமுதல் இருந்தவிதமாய் இருக்கிறதே என்று சொல்லுவார்கள்.

௫ ¶ பூர்வகாலத்திலே [16]பராபரனுடைய வார்த்தையினாலே வானங்களும், [17]சலத்தினாலேயும் சலத்திற்குள்ளேயும் நிலைகொண்ட †பூமியும் இருந்தும், அப்பொழுது இருந்த உலகம் [18]அதினாலே வெள்ளங்கொண்டு அழிந்துபோயிற்றே.

௬ அதுபோல [19]இப்பொழுது இருக்கிற வானங்களும் பூமியும்

கி. பி. ௬௬.

1 யூதா. ௰௨. ௰௩.
2 அப். ௨. ௪௰. ௨ பே. க. ௪. ௨௰. ௰௪.
* சிலபிரதிகளில் கொஞ்ச நேரம் தப்பினவர்கள்.
3 யூதா. ௰௬.
4 யோவா. அ. ௩௪. உரோ. ௬. ௰௬.
5 கலா. ௫. ௰௩. க பே. ௨. ௰௬.
6 ௨ பே. க. ௨.
7 ௨ பே. க. ௪. ௰௮. ௰௪.
8 மத். ௰௨. ௪௫. லூக். ௰௧. ௨௬. எபி. ௬. ௪. ௫: ௰. ௨௬. ௨௭.
9 லூக். ௰௨. ௪௭, ௪௮. யோவா. ௯. ௪௧: ௰௫. ௨௨.
10 நீதி. ௨௬. ௰௧.
11 யூதா. ௰௭.
12 ௨ பே. க. ௰௩.
13 க தீமோ. ௪. ௧. ௨ தீமோ. ௩. க. யூதா. ௰௮.
14 ௨ பே. ௨. ௰.
15 ஏசா. ௫. ௰௯. எரே. ௰௭. ௰௫. எசே. ௰௨. ௨௨, ௨௭. மத். ௨௪. ௪௮ லூக். ௰௨. ௪௫.
16 க மோ. க. ௬, ௯. சங். ௩௩. ௬. எபி. ௰௧. ௩.
17 சங். ௨௪. ௨: ௱௩௬. ௬. கொலோ. ௧ ௰௭.
† கிரேக்கு, அடங்கியிருந்த.
18 க மோ. ௭. ௰௧, ௨௧, ௨௨, ௨௩ ௨ பே. ௨. ௫.
19 ௭. ௩௪.

Digitized by Google

அந்த வார்த்தையாலே [1]அக்கினிக்கு இரையாக வைக்கப்பட்டுத் தேவபத்தியில்லாத மனிதர்களுக்கு நியாயத்தீர்ப்பும், கேடும் உண்டாகும் நாள்வரைக்கும் காக்கப்படுகின்றன.

௭ இதை அந்தப் பரியாசக்காரர் அறிந்தும் நினையாமல் இருக்கிறார்கள்.

௮ ¶ பிரியமானவர்களே, நீங்கள் கர்த்தரிடத்தில் [2]ஒருநாள் ஆயிரம்வருஷங்களைப்போலவும், ஆயிரம்வருஷங்கள் ஒருநாளைப்போலவும் இருக்கின்றதென்று இருக்கிற இந்த ஒரேகாரியத்தை மறவாதிருப்பீர்களாக.

௯ தாமதித்திருக்கிறார் என்று சிலர் எண்ணுகிறபிரகாரமாய் [3]கர்த்தர் (தமது) வாக்குத்தத்தத்தைக்குறித்துத் தாமதமாய் இராமல், [4]ஒருவரும்கெட்டுப்போகாதபடிக்கு [5]எல்லாரும் மனந்திரும்பவேண்டுமென்று விரும்பி, [6]நமதுமேல் நீடியசாந்தமுள்ளவராயிருக்கிறார்.

௰ [7]கர்த்தருடைய நாள் இரவிலே திருடன் வருகிறவிதமாய் வரும்; [8]அப்பொழுது வானங்கள் மடமடவென்று அகன்றுபோம்; பூதங்கள் எரிந்து கரைந்துபோம், பூமியும் அதிலுள்ள கிரியைகளும் வெந்துபோம்.

௰௧ ¶ இப்படி இவையெல்லாம் கரைந்துபோகிறதாயிருக்க, [9]நீங்கள் பரிசுத்த நடக்கையிலேயும் தேவபத்தியிலேயும் எப்படிப்பட்டவர்களாய் இருக்கவேண்டும்.

௰௨ வானங்கள் [10]வெந்து கரைந்து, [11]பூதங்கள் எரிந்துஉருகிப்போகும்; [12]பராபரனுடைய நாள் வருதற்கு நீங்கள் மிகுந்த ஆசையோடே காத்திருக்கிறீர்களே.*

௰௩ அவருடைய வாக்குத்தத்தத்தின்படியே புதிய வானங்களும், [13]புதிய பூமியும் உண்டாகும் என்று காத்திருக்கிறோம்; அவைகளிலே நீதி வாசமாயிருக்கும்.

௰௪ ¶ ஆகையால் பிரியமானவர்களே, அவைகள் வரக் காத்திருக்கிற நீங்கள் அவரால் மாசும் [14]குற்றமும் இல்லாதவர்களாய்ச் சமாதானத்தோடே காணப்படும்படிக்குச் சாக்கிரதையாய் இருந்து,

௰௫ நம்முடைய [15]கர்த்தாவின் நீடியசாந்தம் இரட்சிப்புக்கு ஏதுவாயிருக்கிறதென்று எண்ணிக்கொள்வீர்களாக; நமக்குப் பிரியமான சகோதரனாகிய பவுலும் தனக்குக் கொடுக்கப்பட்ட ஞானத்தினாலே அப்படியே உங்களுக்கு எழுதியிருக்கிறான்.

௰௬ எல்லா நிருபங்களிலேயும் [16]இவைகளைக்குறித்துப் பேசியிருக்கிறான்; அவன் எழுதினவைகளில் சில (வாக்கியங்கள்) அறிகிறதற்கு அரிதாயிருக்கின்றன; படியாதவர்களும் ஸ்திரமில்லாதவர்களும் அப்படிப்பட்டவைகளையும் மற்ற வேதவாக்கியங்களையும் தங்களுக்குக் கேடுவரத்தக்கதாகப் புரட்டுகிறார்கள்.

௰௭ ¶ ஆதலால் பிரியமானவர்களே, [17]நீங்கள் இவைகளைமுன் அறிந்தபடியால்(மற்றவர்களோடே) கூட அந்த அக்கிரமக்காரருடைய வஞ்சகத்தினாலே இழுத்துக்கொள்ளப்படாமலும் ஸ்திரத்தைவிட்டு விடாமலும் இருக்கும்படிக்கு [18]எச்சரிக்கையாயிருந்து,

௰௮ நம்முடைய கர்த்தரும் இரட்சகருமாகியஇயேசுக்கிறிஸ்துவின் கிருபையையும், அவரை அறிகிற அறிவையும் [19]அதிகம் அதிகமாய் அடைந்துகொள்வீர்களாக. [20]அவருக்கு இப்பொழுதும் (இனி) என்றென்றைக்கும் மகிமை உண்டாவதாக.—ஆமென்.

கி. பி. ௬௬.

1 மத். ௨௫. ௪௧. ௨. தெச. ௧. ௮.
2 சங். ௯௰. ௪.
3 ஆபகூ. ௨. ௩. எபி. ௰. ௩௭.
4 எசே. ௰௮. ௨௩, ௩௨: ௩௩. ௰௧.
5 உரோ. ௨. ௪. ௧ தீமோ. ௨. ௪.
6 ஏசா. ௩௰. ௰௮. ௧ பே. ௩. ௨௰. ௰௫. ௩௪.
7 மத். ௨௪. ௪௩. லூக். ௰௨. ௩௯. ௧ தெச. ௫. ௨. வெளி. ௩. ௩: ௰௬. ௰௫.
8 சங். ௱௨. ௨௬. ஏசா. ௬௫. ௭. மத். ௨௪. ௩௫. மாற். ௰௩. ௩௧. உரோ. அ. ௰௨. எபி. ௧. ௰௧. வெளி. ௨௰ ௰௧ ௨௧. ௧.
9 ௧ பே. ௧. ௰௫.
10 சங். ௫௰. ௩. ஏசா. ௬௬. ௪.
11 மீகா. ௧. ௪. ௰. ௩௪.
12 ௧ கொரி. ௧. ௭. தீத். ௨. ௰௩.
* அல்லது சீக்கிரம் பண்ணுகிறீர்களே.
13 ஏசா. ௬௫. ௰௭: ௬௬. ௨௨. வெளி ௨௧. ௧, ௨௭.
14 ௧ கொரி. ௧. ௮: ௰௫. ௫௮. பிலி. ௧. ௰. ௧ தெச. ௩. ௰௩: ௫. ௨௩.
15 உரோ. ௨. ௪. ௧ பே. ௩. ௨௰. ௯. ௩௪.
16 உரோ. அ. ௰௯. ௧ கொரி. ௰௫. ௨௪. ௧ தெச. ௪. ௰௫.
17 மாற். ௰௩. ௨௩. ௨ பே. ௩. ௰௨.
18 எபே. ௪. ௰௪. ௨ பே. ௩. ௰, ௰௩: ௨. ௰௮.
19 எபே. ௪. ௰௫. ௧ பே. ௨. ௨.

20 ௨ தீமோ. ௪. ௰௮ வெளி. ௧. ௬.

Digitized by Google

# I. JOHN.

அப்போஸ்தலனுகிய

# யோவான் எழுதின

## முதலாம் நிருபம்.

### க. அதிகாரம்.

க. நம்மைப் பராபரனோடே ஐக்கப்படுத்துகிறதும், நித்திய சீவனுக்கு வழியாயிருக்கிற கிறிஸ்துவின் தன்மையைக்குறித்து விளம்பி, ரு. அந்த ஐக்கத்தையும் விசுவாச அறிக்கையையுங்குறித்துச் சாட்சியிடவும், கிறிஸ்துவின் மரணத்தினுல் நமக்குப் பாவமன்னிப்பு உண்டானதென்பதற்குச் சாட்சி கொடுக்கவும், நாம் பரிசுத்தமாய் நடக்கவேண்டுமென்று சொல்லியது.

[1]ஆதியில் இருந்ததுமாய், நாங்கள் கேட்டதுமாய், எங்கள் கண்களினுலே கண்டதுமாய், [2]நாங்கள் நோக்கிப்பார்த்ததுமாய், [3]எங்கள் கைகளாலே தொட்டதுமாய் இருக்கிற சீவனையுடைய வார்த்தையைக்குறித்து (உங்களுக்கு அறிவிக்கிறோம்).

உ [4]அந்தச் சீவன் [5]வெளிப்பட்டது; [6]பிதாவினிடத்தில் இருந்ததுமாய், நமக்கு வெளிப்பட்டதுமாய் இருக்கிற அந்த நித்திய சீவனையே நாங்கள் கண்டு, [7]அதைக்குறித்துச் சாட்சிகொடுத்து [8]அதையே உங்களுக்கு அறிவிக்கிறோம்.

௩ நீங்களும் எங்களோடேகூட ஐக்கியமுள்ளவர்களாகும்படிக்கு, நாங்கள் [9]கண்டும் கேட்டும் இருந்ததை உங்களுக்கு அறிவிக்கிறோம்; [10]நாங்களே பிதாவுடனேயும் அவருடைய குமாரனுகிய இயேசுக்கிறிஸ்துவுடனேயும் ஐக்கமுள்ளவர்களாய் இருக்கிறோம்.

ச [11]உங்களுக்குச் சந்தோஷம் நிறைந்ததாய் இருக்கும்படிக்கு, இவைகளை உங்களுக்கு எழுதுகிறோம்.

ரு ¶ மேலும் [12]அவரிடத்தில் நாங்கள் கேட்டதுமாய் உங்களுக்கு அறிவிக்கிறதுமாயிருக்கிற விசேஷம் என்னவெனில், பராபரன் எவ்வளவாகிலும் இருளில்லாமல் [13]ஒளியாயிருக்கிறுர்.

சா நாம் இருளிலே நடந்து அவரோடே ஐக்கப்பட்டவர்கள் என்று [14]சொல்லிக்கொண்டால், நாம் சத்தியத்தை நடப்பியாமல் பொய் பேசுகிறவர்களாயிருப்போம்.

எ அவர் ஒளியில் இருக்கிறது போல நாமும் ஒளியிலே நடந்தால், ஒருவரோடொருவர் ஐக்கப்பட்டிருப்போம்; அல்லாமலும், [15]அவருடைய குமாரனுகிய இயேசுக்கிறிஸ்துவின் இரத்தம் நம்முடைய பாவங்கள் எல்லாவற்றையும் நீக்கி நம்மைச் சுத்திகரிக்கும்.

அ ¶ [16]நமக்குப் பாவமில்லை என்றுேமானுல் நம்மை நாமே

கி. பி. ௬௰.

1 யோவா. க. க. க யோ. உ. ௰௩.
2 யோவா. க. ௰ச. உ பே. க. ௰௬. க யோ. ச. ௰ச.
3 லூக். உச. ௩௯. யோவா. உ௰. உஎ.
4 யோவா. க. ச. ௰௬. உரு: ௰ச. சா.
5 உரோ. ௰௬. உ௬. க தீமோ. ௩. ௰௬. க யோ. ௩. ரு.
6 யோவா. க. க, உ.
7 யோவா. உக. உச. அப். உ. ௩உ.
8 க யோ. ரு.உ௰.
9 அப். ச. உ௰.
10 யோவா. ௰எ. உக. க கொரி. க. கூ. க யோ. உ. உச.
11 யோவா. ௰ரு. ௰௬: ௰௬. உச. உ யோ. ௰உ.
12 க யோ. ௩. ௰௬.
13 யோவா. க. கூ: அ. ௰உ: கூ. ரு. ௰உ. ௩ரு, ௩௬.
14 உ கொரி. ௬. ௰ச. க யோ. உ. ச.

15 க கொரி. ௬ ௰௬. எபே க. எ. எபி. கூ ௰ச. க பே. க. ௰கூ. க யோ உ. உ. வெளி. க. ரு.—16 க இரா. அ. சசு.
உ நாளா. சா. ௩௬. யோபு. கூ. உ: ௰ரு ௰ச: உரு. ச. வாக். உ௰. கூ. பிரச. எ. உ௰. யாக். ௩. உ.

Digitized by Google

வஞ்சிக்கிறவர்களாவோம்; [1]சத்தியம் நமக்குள்ளே இராது.

௯ [2]நம்முடைய பாவங்களை நாம் அறிக்கையிட்டால், பாவங்களை நமக்கு மன்னித்து, எல்லா அநியாயமும் [3]நம்மைவிட்டு நீங்க நம்மைச் சுத்திகரிப்பதற்கு உண்மையும் நீதியும் உள்ளவராய் இருக்கிறார்.

௰ நாம் பாவம்செய்யவில்லை என்றோமானால், நாம் அவரைப் பொய்யனாக்குகிறதாக இருக்கும்; அவருடைய வார்த்தையும் நமக்குள்ளே இராது.

## ௨. அதிகாரம்.

௧. அவர்களுடைய பலஈனத்தினால் உண்டாகும் பாவங்களைக்குறித்து ஆறுதல்சொல்லி, ௩. பராபரனுடைய கற்பனைகளைக் கைக்கொண்டு, ௯. சகோதரனைச் சிநேகித்து, ௰௫. உலகத்தை நேசியாமல் இருப்பதே பராபரனை அறிகிற அறிவென்று காட்டி, ௰௮. எதிராளிகளுக்கு எச்சரிக்கையாயிருக்கவும், ௨௰. விசுவாச உறுதியும் பரிசுத்த நடக்கையுமுள்ள உத்தமர்கள் எதிரிகளின் மோசங்களுக்கு விலகியிருப்பார்கள் என்றும் சொல்லியது.

என் பிள்ளைகளே, நீங்கள் பாவம் செய்யாதபடிக்கு இவைகளை உங்களுக்கு எழுதுகிறேன்; ஒருவன் பாவம்செய்தாலும் நீதிஉள்ளவராயிருக்கிற இயேசுக்கிறிஸ்து என்னும் [4]காரியகர்த்தர் நமக்காகப் பிதாவினிடத்தில் இருக்கிறார்.

௨ [5]அவர் நம்முடைய பாவங்களை நிவிர்த்திசெய்கிற பலியானவராயிருக்கிறார்; நம்முடைய பாவங்களுக்காகமாத்திரமல்ல, [6]சர்வ லோகத்தினுடைய பாவங்களுக்காகவும் (அப்படியே இருக்கிறார்).

௩ ¶ அவருடைய கற்பனைகளை நாம் கைக்கொள்ளுகிறவர்களானால், அவரை அறிந்துகொண்டிருக்கிறோம் என்று அதினாலே அறிவோம்.

௪ அவருடைய கற்பனைகளைக் கைக்கொள்ளாமல் [7]அவரை அறிந்துகொண்டேன் என்று சொல்லுகிறவன் [8]பொய்யனாய் இருக்கிறான்; சத்தியம் அவனுக்குள்ளே இல்லை.

௫ [9]அவருடைய வசனத்தைக் கைக்கொள்ளுகிறவனிடத்திலே [10]பராபரனுடைய அன்பு மெய்யாக நிறைவேறியிருக்கின்றது; [11]நாம் அவருக்குள் இருக்கிறதை அதினாலே அறிந்திருக்கிறோம்.

௬ [12]அவரிடத்தில் நிலைத்திருக்கிறேன் என்று சொல்லுகிறவன் அவர் நடந்தபடியே [13]தானும் நடக்கவேண்டும்.

௭ ¶ பிரியமானவர்களே, [14]நான் உங்களுக்குப் புதிய கற்பனையை அல்ல, [15]ஆதிமுதல் நீங்கள் பெற்றிருக்கிற பழமையான கற்பனையையே எழுதுகிறேன்; அந்தப் பழமையான கற்பனை நீங்கள் ஆதிமுதல் கேட்டுக்கொண்ட வசனமே.

௮ அன்றியும் [16]நான் உங்களுக்குப் புதியகற்பனையையும் எழுதுகிறேன்; [17]இருள் நீங்கிப்போக [18]மெய்யான ஒளி இப்பொழுது பிரகாசிக்கிறபடியால், இது அவரைக்குறித்தும் உங்களைக்குறித்தும் மெய்யாயிருக்கின்றது.

௯ தன் சகோதரனைப் பகைத்து, [19]அந்த ஒளியிலே இருக்கிறேன் என்று சொல்லுகிறவன் இதுவரைக்குமே இருளில் இருக்கிறான்.

௰ [20]தன் சகோதரனிடத்தில் அன்புகூருகிறவன் ஒளியிலே நிலைகொண்டிருக்கிறான்; [21]இடறல்* அவனிடத்திலே இல்லை.

௰௧ தன் சகோதரனைப் பகைக்கிறவன் இருளிலேயிருந்து [22]இருளிலே நடந்து இருளானது தன் கண்களைக் குருடாக்கினபடியால், தான் நடக்கிற இடம் இன்னதென்று அறியாமல் இருக்கிறான்.

௰௨ ¶ பிள்ளைகளே, அவருடைய நாமத்தினிமித்தம் உங்கள் [23]பாவங்கள் மன்னிக்கப்படுகிறதால் உங்களுக்கு எழுதுகிறேன்.

௰௩ பிதாக்களே, [24]ஆதிமுதலாய் இருக்கிறவரை நீங்கள் அறிந்

கி. பி. ௯௰.

1 ௧ யோ. ௨. ௪.
2 சங். ௩௨. ௫. வாக். ௨௮. ௰௩.
3 சங். ௫௧. ௨. ௭. வச.
4 ௨ரோ. ௮. ௩௪. ௧ தீமோ. ௨. ௫. எபி. ௭. ௨௫: ௯. ௨௪.
5 ௨ரோ. ௩. ௨௫. ௨ கொரி. ௫. ௰௮. ௧ யோ. ௪. ௭: ௪. ௰.
6 யோவா. ௧. ௨௯: ௪. ௪௨: ௰௧. ௫௧. ௫௨. ௧ யோ. ௪. ௰௪.
7 ௧ யோ ௧. ௬: ௪. ௨௰.
8 ௧ யோ. ௧. ௮.
9 யோவா. ௰௪. ௨௧, ௨௩.
10 ௧ யோ. ௪. ௰௨.
11 ௧ யோ. ௪. ௰௩.
12 யோவா. ௰௫. ௪, ௫.
13 மத். ௰௧. ௨௯. யோவா. ௰௩. ௰௫. ௧ பே. ௨. ௨௧.
14 ௨ யோ. ௫.
15 ௧ யோ. ௩. ௰௧. ௨ யோ. ௫.
16 யோவா. ௰௩. ௩௪: ௰௫. ௰௨.
17 ௨ரோ. ௰௩. ௰௨. எபே. ௫. ௮. ௧ தெச. ௫. ௫, ௮.
18 யோவா. ௧. ௯: ௮. ௰௨: ௰௨. ௩௫.
19 ௧ கொரி. ௰௩. ௨. ௨ பே. ௧. ௯. ௧ யோ. ௩. ௰௪, ௰௫.
20 ௧ யோ. ௩. ௰௪.
21 ௨ பே ௧. ௰.
* அல்லது இடறப்பண்ணுதல்.
22 யோவா. ௰௨. ௩௫.
23 லூக். ௨௪. ௪௭. அப். ௪. ௰௨: ௰. ௪௩: ௰௩. ௩௮. ௧ யோ. ௧. ௭.
24 ௧ யோ. ௧. ௧.

Google

திருக்கிறதால் உங்களுக்கு எழுதுகிறேன்; வாலிபரே, பொல்லாங்கனை நீங்கள் செயித்ததால் உங்களுக்கு எழுதுகிறேன்; குழந்தைகளே, நீங்கள் பிதாவை அறிந்திருக்கிறதால் உங்களுக்கு எழுதுகிறேன்.

௰௪ பிதாக்களே, ஆதிமுதலாய் இருக்கிறவனை நீங்கள் அறிந்திருக்கிறதால், உங்களுக்கு எழுதினேன்; வாலிபரே, தேவவசனம் உங்களிடத்தில் தரித்திருக்க, நீங்கள் [1]பெலனுள்ளவர்களாய்ப் பொல்லாங்கனைச் செயித்ததால் உங்களுக்கு எழுதினேன்.

௰௫ ¶ [2]உலகத்திலேயும், உலகத்தில் உள்ளவைகளிலேயும் அன்புகூராதிருப்பீர்களாக; [3]உலகத்தில் அன்புகூருகிறவன் பிதாவின்மேல் அன்பில்லாதவனாய் இருக்கிறான்.

௰௬ எப்படியெனில், மாம்சத்தின் இச்சையும் [4]கண்களுடைய இச்சையும் சீவனத்தின் பெருமையுமாகிய உலகத்திலுள்ள இவையெல்லாம் பிதாவினால் உண்டாயிராமல், உலகத்தினால் உண்டாயிருக்கின்றன.

௰௭ [5]உலகமும் அதின் இச்சையும் ஒழிந்துபோகும், பராபரனுடைய சித்தத்தின்படி செய்கிறவனே என்றென்றைக்கும் நிலைநிற்பான்.

௰௮ ¶ [6]குழந்தைகளே, (இது) [7]கடைசி நேரமாய் இருக்கின்றது; [8]கிறிஸ்துவின் எதிராளி வருகிறான் என்று நீங்கள் கேள்விப்பட்டிருக்கிறபடி, [9]இப்பொழுதே கிறிஸ்துவின் எதிராளிகள் அநேகர் உண்டாயிருக்கிறார்கள்; [10]அதினாலே இது கடைசிநேரமாயிருக்கிறது என்று அறிகிறோம்.

௰௯ அவர்கள் [11]நம்மிடத்திலிருந்து புறப்பட்டார்கள்; ஆகிலும் அவர்கள் நம்மைச் சேர்ந்தவர்களல்ல, [12]நம்மைச் சேர்ந்தவர்களாய் இருந்தார்களானால் நம்முடனே தரித்திருப்பார்களே; [13]எல்லாரும் நம்மைச் சேர்ந்தவர்களல்ல என்று வெளியாகும்படிக்கே (புறப்பட்டார்கள்).

௨௰ [14]நீங்கள் பரிசுத்தராலே [15]அபிஷேகத்தைப் பெற்று, [16]சகலத்தையும் அறிந்திருக்கிறீர்கள்.

௨௧ சத்தியத்தை நீங்கள் அறியாததாகவல்ல, நீங்கள் அதையும், சத்தியத்தால் ஒரு பொய்யும் உண்டாயிராதென்பதையும் அறிந்திருக்கிறபடியால், உங்களுக்கு எழுதினேன்.

௨௨ இயேசு என்பவர் கிறிஸ்துவல்ல என்று மறுதலிக்கிறவனேயன்றி [17]வேறு யார் பொய்யன்? பிதாவையும் குமாரனையும் மறுதலிக்கிறவனே கிறிஸ்துவுக்கு எதிராளியானவன்.

௨௩ [18]குமாரனை மறுதலிக்கிறவன் பிதாவை உடையவன் அல்ல, [19]குமாரனை அறிக்கைபண்ணிக்கொள்ளுகிறவன் பிதாவையும் உடையவனாய் இருக்கிறான்.

௨௪ ¶ ஆகையால், [20]ஆதிமுதல் நீங்கள் கேள்விப்பட்டது உங்களில் நிலைத்திருக்கக்கடவது; ஆதிமுதல் நீங்கள் கேள்விப்பட்டது உங்களில் நிலைத்திருந்தால், [21]நீங்களும் குமாரனிலும் பிதாவிலும் நிலைத்திருப்பீர்கள்.

௨௫ அவர் நமக்கு வாக்குத்தத்தம்பண்ணின பொருள் [22]நித்தியசீவனே; [23]உங்களை வஞ்சிக்கத் தேடுகிறவர்களைக்குறித்து இவைகளை உங்களுக்கு எழுதினேன்.

௨௬ அப்படியிருந்தும், நீங்கள் அவராலே பெற்ற [24]அபிஷேகம் உங்களில் நிலைகொண்டு இருக்கிறதால் [25]ஒருவரும் உங்களுக்குப் போதிக்கவேண்டுவதில்லை.

௨௭ அந்த [26]அபிஷேகம் சகல காரியங்களையுங்குறித்து உங்களுக்குப் போதிக்கிறதே பொய்யில்லாமல் சத்தியமாயிருக்கின்றது; ஆகையால் அது உங்களுக்குப்

கி. பி. ௯௰.

1 எபே. ௬. ௰.
2 உரோ. ௰௨. ௨.
3 மத். ௬. ௨௪. கலா. ௧. ௰. யாக். ௪. ௪.
4 பிரச ௫. ௰௧
5 ௧ கொரி. ௭ ௩௧. யாக். ௧௰: ௪. ௰௪. ௧ பே. ௧. ௨௪.
6 யோவா. ௨௧. ௫.
7 எபி. ௧. ௨.
8 ௨ தெச. ௨. ௩. ௪. ௨ பே. ௨. ௧. ௧ யோ. ௪. ௩.
9 மத். ௨௪. ௫, ௨௪. ௨ யோ. ௭.
10 ௧ தீமோ. ௪. ௧. ௨ தீமோ ௩. ௧.
11 ௫ மோ. ௰௩. ௰௩. சங். ௪௧. ௯. அப். ௨௰. ௩௰.
12 மத். ௨௪. ௨௪. யோவா. ௬. ௩௭: ௰. ௨௮, ௨௯. ௨ தீமோ. ௨. ௰௯.
13 ௧ கொரி. ௰௧. ௰௯.
14 மாற். ௧. ௨௪. அப். ௩. ௰௪.
15 ௨ கொரி. ௧. ௨௧. எபி. ௧. ௯. ௨௭. வச.
16 யோவா. ௰௪, ௫: ௰௪. ௨௬: ௰௬. ௰௩. ௨௭. வச.
17 ௧ யோ ௪. ௩. ௨ யோ. ௭.
18 யோவா. ௰௫. ௨௩. ௨ யோ. ௯.
19 யோவா. ௰௪. ௭, ௯, ௰ ௧ யோ. ௪. ௰௫.
20 ௨ யோ. ௯.
21 யோவா. ௰௪. ௨௪. ௧ யோ. ௩. ௩.
22 யோவா ௰௭ ௩. ௧ யோ. ௫. ௨: ௫. ௰௧
23 ௧ யோ. ௩. ௭. ௨ யோ. ௭.
24 ௨௰. வச.
25 எரே. ௩௧. ௩௩, ௩௪. எபி. ௮. ௰. ௰௧.
26 யோவா. ௰௪. ௨௬: ௰௬. ௰௩. ௨௰. வச.

Digitized by Google

போதித்தபடியே அவரில்* நிலைத்திருப்பீர்களாக.

௨௮ ¶ இப்படியிருக்கப் பிள்ளைகளே, [1]அவர் வெளிப்பட்டுப் பிரசன்னமாய் வரும்பொழுது, நாம் அவரால் [2]வெட்கப்படுத்தப்படாமல் தயிரியமுள்ளவர்களாய் இருக்கும்படிக்கு அவரில் நிலைத்திருங்கள்.

௨௯ [3]அவர் நீதியுள்ளவராய் இருக்கிறார் என்பது உங்களுக்குத் தெரிந்திருக்க, [4]நீதியைச் செய்கிறவன் எவனோ அவன் அவரில் பிறந்தான் என்று அறிந்திருக்கிறீர்கள்.†

## ௩. அதிகாரம்.

௧. நாம் தமக்குப் பிள்ளைகளாகும்படி பராபரன் நம்மிடத்தில் வைத்த அன்பு இன்னதென்றும், ௩. அதினால் நாம் அவருடைய கற்பனைகளைக் கைக்கொண்டு, ௰௧. ஒருவரில் ஒருவர் அன்புகூர வேண்டுமென்றும் சொல்லியது.

[5]நாம் பராபரனுடைய பிள்ளைகள் என்று [6]அழைக்கப்படும்படி (செய்ததினாலே) பிதாவானவர் நமக்குக் காண்பித்த மிகுந்த அன்பை நோக்கிப்பாருங்கள்; [7]உலகத்தார் அவரை அறியாதபடியினாலே நம்மை அறியாமல் இருக்கிறார்கள்.

௨ பிரியமானவர்களே, [8]இப்பொழுது பராபரனுடைய பிள்ளைகளாய் இருக்கிறோம்; (இனிமேல்) இன்ன இன்னவிதமாய் இருப்போம் என்று [9]இன்னம் வெளியரங்கமாகவில்லை; (ஆகிலும்) அவர் வெளிப்படும்பொழுது, அவர் இருக்கிறதன்மையாய் நாம் (அவரைத் தரிசிப்பதால்,) [10]அவருக்கு ஒப்பாயிருப்போம் என்று அறிந்திருக்கிறோம்.

௩ ¶ மேலும் இப்படி [11]அவர்மேல் நம்பிக்கையாயிருக்கிறவன் எவனோ அவன் அவர் சுத்தமுள்ளவராய் இருக்கிறதுபோலத் தன்னையும் சுத்திகரித்துக்கொள்ளுகிறான்.

௪ பாவம்செய்கிறவன் எவனோ அவன் நியாயப்பிரமாணத்திற்கு விரோதம்செய்கிறான்; [12]பாவமானது நியாயப்பிரமாணத்திற்கு விரோதமாயே இருக்கின்றது.

௫ அன்றியும் நீங்கள் அறிந்துகொண்டபடி [13]அவர் நம்முடைய பாவங்களை நீக்கும்படிக்கு [14]வெளிப்பட்டார்; [15]அவரிடத்திலே பாவம் இல்லை.

௬ அவரிடத்தில் நிலைத்திருக்கிறவன் எவனோ அவன் பாவம் செய்கிறதில்லை; [16]பாவம்செய்கிறவன் எவனோ அவன் அவரைக் காணவும் இல்லை, அவரை அறியவும் இல்லை.

௭ ¶ பிள்ளைகளே, [17]நீங்கள் ஒருவராலும் வஞ்சிக்கப்படாதிருப்பீர்களாக; [18]நீதியைச் செய்கிறவன் அவர் நீதி உள்ளவராயிருக்கிறதுபோல நீதி உள்ளவனாயிருக்கிறான்.

௮ பசாசானவன் ஆதிமுதல் பாவம்செய்கிறான்; ஆகையால் [19]பாவம்செய்கிறவன் பசாசினால் உண்டாயிருக்கிறான்; அந்தப் [20]பசாசினுடைய கிரியைகளை அழிக்கும்படிக்குப் பராபரனுடைய குமாரன் வெளிப்பட்டார்.

௯ [21]பராபரனில் பிறந்தவன் எவனோ அவனுக்குள்ளே [22]அவருடைய வித்து தரித்திருக்கிறதால் அவன் பாவம்செய்யான்; அவன் பராபரனிடத்திலே பிறந்தபடியால் பாவம்செய்யமாட்டான்.

௰ ¶ இதினாலே பராபரனுடைய பிள்ளைகளும் பசாசின் பிள்ளைகளும் வெளியரங்கமாகிறார்கள்; [23]நீதியைச் செய்யாமலும் [24]தன் சகோதரனிடத்தில் அன்புகூராமலும் இருக்கிறவன் எவனோ அவன் பராபரனால் உண்டான

கி. பி. ௯௰.

* அல்லது அதில்.
1 க பேத. ௧. ௨.
2 க யோ. ௪. ௰எ.
3 அப். ௨௨. ௰௪.
4 க யோ. ௧. ௭, ௯.
† அல்லது அறியுங்கள்.
5 யோவா. ௧. ௰௨.
6 யோவா. ௰௭. ௰அ, ௰௧: ௰௧. ௧: ௰எ. ௨௬.
7 எசா. ௬௪. ௬. ௨ரோ. அ ௰௬. கலா. ௧. ௨௧: ௪ ௬. க யோ. ௬ ௧.
8 ௨ரோ. அ. ௰அ. ௨ கொரி. ௪. ௰எ.
9 யோபு. ௰௯. ௨௧. சங். ௰௬. ௰௧. மத். ௬.அ. க கொரி ௰௩. ௰௨. ௨ கொரி. ௬. அ.
10 ௨ரோ. அ. ௨௯. க கொரி. ௰௫.௪௯. பிலி. ௩. ௨௧. கொலோ. ௩. ௪. ௨ பே. ௧. ௪.
11 க யோ. ௪ ௰எ.
12 ௨ரோ. ௪.௰௫. க யோ. ௫. ௰எ.
13 எசா. ௫௩. ௫, ௬, ௰௧ ௧௨ எபி. ௧. ௨௬. எபி. ௧. ௩: ௯. ௨௧. க பே. ௨. ௨௪.
14 க யோ. ௧. ௨.
15 ௨ கொரி. ௫ ௨௧. எபி. ௪. ௰௫: ௭. ௨௬ க பே. ௨.௨௨.
16 க யோ.௨. ௪: ௪. அ. க யோ. ௰௧.
17 க யோ. ௨. ௨௬.
18 எசே. ௰அ. ௫—௯. ௨ரோ. ௨.௰௩. க யோ. ௨. ௨௯.
19 மத். ௰௩ ௩அ. யோவா. அ. ௪௪.



Digitized by Google

வன் அல்ல; என்னத்தினாலென்றால்,

௰௧ [1]நாம் ஒருவரில் ஒருவர் அன்புகூரவேண்டும் என்பது நீங்கள் ஆதிமுதல் [2]அறிவிக்கக்கேட்ட விசேஷமாய்* இருக்கின்றது.

௰௨ பொல்லாங்கனால் உண்டாயிருந்து, தன் சகோதரனைக் கொலைசெய்த [3]காயீனைப்போல இருக்கக்கூடாது; அவன் எதினிமித்தம் அவனைக் கொலைசெய்தான்? தன் கிரியைகள் பொல்லாதவைகளுமாய்த் தன் சகோதரனுடைய கிரியைகள் நீதியுள்ளவைகளுமாய் இருந்ததினிமித்தமே அப்படிச் செய்தான்.

௰௩ என் சகோதரரே, [4]உலகத்தார் உங்களைப் பகைத்தால் ஆச்சரியப்படாதிருப்பீர்களாக.

௰௪ நாம் சகோதரரிடத்தில் அன்புகூருகிறபடியால் [5]மரணத்தைவிட்டு நீங்கிச் சீவனுக்குட்பட்டிருக்கிறோம் என்று அறிந்திருக்கிறோம்; [6]சகோதரனிடத்தில் அன்புகூராமல் இருக்கிறவன் மரணத்திலே நிலைகொண்டிருக்கிறான்.

௰௫ [7]தன் சகோதரனைப் பகைக்கிறவன் மனித கொலைபாதகனாய் இருக்கிறான்; [8]மனித கொலைபாதகன் எவனோ அவனுக்குள்ளே நித்திய சீவன் நிலைத்திராது என்று அறிந்திருக்கிறீர்கள்.

௰௬ ¶ அவர் தம்முடைய சீவனை நமக்காக விட்டுவிட்டதினாலே [9]அன்பு இன்னதென்று அறிந்தோம்; நாமும் சகோதரருக்காக நமது சீவனை விட்டுவிடக் கடனாளிகளாய் இருக்கிறோம்.

௰௭ ஒருவன் [10]இவ்வுலக சீவனம் உடையவனாயிருந்து, தன் சகோதரனுக்குக் குறைச்சல் உண்டென்று கண்டு, தன் இருதயத்தை அவனுக்கு அடைத்துக்கொண்டால் [11]அவனுக்குள்ளே பராபரனுடைய அன்பு எப்படி நிலையாயிருக்கும்?

௰௮ என் பிள்ளைகளே, [12]வசனத்தினாலும் நாவினாலும் அல்ல, கிரியைகளினாலும் உண்மையினாலும் அன்புகூரக்கடவோம்.

௰௯ ¶ அதினாலே [13]நாம் சத்தியமுள்ளவர்கள் என்று அறிந்து, நமது இருதயத்தை அவருக்குமுன்பாக நிச்சயப்படுத்தலாம்.†

௨௰ [14]நமது இருதயமே நம்மைக் குற்றவாளிகளாகத் தீர்க்குமானால், நம்முடைய இருயத்திலும் பராபரன் பெரியவராய் இருக்கிறார் என்றும், சகலத்தையும் அறிந்திருக்கிறார் என்றும் (நினைப்போமாக).

௨௧ [15]பிரியமானவர்களே, [16]நம்முடைய இருதயம் நம்மைக் குற்றவாளிகள் என்று தீர்ப்புச்சொல்லாதிருந்தால், நாம் பராபரனிடத்தில் தயிரியம்கொள்வோம்.

௨௨ மேலும் அவருடைய கற்பனைகளை நாம் கைக்கொண்டு, [17]அவருக்குமுன்பாக பிரியமானவைகளைச்செய்கிறபடியினாலே, [18]நாம் வேண்டிக்கொள்வது எதோ, அதை அவராலே பெற்றுக்கொள்வோம்.

௨௩ நாம் [19]அவருடைய குமாரனாகிய இயேசுக்கிறிஸ்துவின் நாமத்தின்மேல் விசுவாசமாயிருந்து, [20]அவர் நமக்குக் கட்டளையிட்டபடி [21]ஒருவரில் ஒருவர் அன்பாயிருக்கவேண்டுமென்ற இதுவே பராபரனுடைய கட்டளையாய் இருக்கின்றது.

௨௪ [22]அவருடைய கட்டளைகளைக் கைக்கொள்ளுகிறவன் [23]அவரிடத்தில் நிலைத்திருக்கிறான்; அவரும் அவனிடத்தில் நிலைத்திருக்கிறார்; [24]அவர் நம்மிடத்தில் நிலைத்திருக்கிறதை அவர் நமக்குத்

கி. பி. ௯௰.

1 யோவா. ௰௩. ௩௪: ௰௫. ௰௨. ௨௩. வசனம். ௧ யோ. ௪. ௭, ௨௧. ௨ யோ. ௫.
2 ௧ யோ. ௨. ௭.
* அல்லது கட்டளையாய்.
3 ஆதி. ௪. ௪, ௮. எபி. ௰௧. ௪. யூதா. ௰௧.
4 யோவா. ௰௫. ௰௮, ௰௯: ௰௭. ௰௪. ௨ தீமோ. ௩. ௰௨.
5 ௧ யோ. ௨. ௰
6 ௧ யோ. ௨. ௯, ௰௧.
7 மத். ௫. ௨௧, ௨௨. ௧ யோ. ௪. ௨௰.
8 கலா. ௫. ௨௧. வெளி. ௨௧. ௮.
9 யோவா. ௩. ௰௬: ௰௫. ௰௩. உரோ. ௫. ௮. எபே. ௫. ௨, ௨௫. ௧ யோ. ௪. ௯, ௰.
10 உபா. ௰௫. ௭. லூக். ௩. ௰௧.
11 ௧ யோ. ௪. ௨௰.
12 எசே. ௩௩. ௩௧. உரோ. ௰௨. ௯. எபே. ௪. ௰௫. யாக். ௨. ௰௫, ௰௬. ௧ பே. ௧. ௨௨.
13 யோவா. ௰௮. ௩௭. ௧ யோ. ௧. ௮.
† இரேக்கு, சம்மதிக்கப் பண்ணுவோம்.
14 ௧ கொரி. ௪. ௪.
15 யோபு ௨௨. ௨௬.
16 எபி. ௰. ௨௨. ௧ யோ. ௨. ௨௮: ௪. ௰௭.
17 யோவா. ௮. ௨௯: ௯. ௩௧.
18 சங். ௩௪. ௰௫: ௰௪௫. ௰௯.

லூக். ௰௧. ௨௩. ௪௰. எரே. ௨௯. ௰௨. மத். ௭. ௮: ௨௧. ௨௨. மாற். ௰௧. ௨௪. யோவா. ௰௪. ௰௩: ௰௬ ௭: ௰௬. ௨௩, ௨௪. யாக். ௫. ௰௬. ௧ யோ. ௫. ௰௪.—19 யோவா. ௬. ௨௯: ௰௭. ௩ —20 ௧ யோ. ௨. ௮, ௰.—21 மத். ௨௨. ௩௯. யோவா. ௰௩. ௩௪: ௰௫ ௰௨. எபே. ௫. ௨. ௧ தெச ௪. ௯. ௧ பே. ௪. ௮. ௰௩. ௧ யோ. ௪. ௨௧.—22 யோவா. ௰௪. ௨௩: ௰௫. ௰௦. ௧ யோ. ௪. ௰௨.
23 யோவா. ௰௭. ௨௧. ௨௩.—24 உரோ. ௮. ௯. ௧ யோ. ௪. ௰௩.

Digitized by Google

தந்த ஆவியினாலே அறிந்திருக்கிறோம்.

## ச. அதிகாரம்.

க. ஆவியை உடையவர்கள் என்று சொல்லிக்கொள்ளுகிற எல்லாப் போதகர்களையும் நம்பாமல், அவர்களைச் சாதாரண சத்திய விசுவாசத்தின் ஒழுங்குக்குக் காத்திருக்கிறார்களா என்று சோதித்துப்பார்க்க எச்சரித்து, எ. சகோதரசிநேகத்தைக் கைக்கொள்ளப் புத்திகள் சொல்லியது.

[1]பிரியமானவர்களே, உலகத்திலே அநேகம் கள்ளத்தீர்க்கதரிசிகள் தோன்றினபடியால், [2]நீங்கள் எந்த ஆவியையும் நம்பாமல் அந்த ஆவிகள் பராபரனால் உண்டானவைகளோ என்று [3]சோதித்து அறியுங்கள்.

உ பராபரனால் உண்டான ஆவியை நீங்கள் எதினாலே அறியலாமென்றால், [4]இயேசுக்கிறிஸ்து மாம்சத்திலே வந்தார் என்று அறிக்கைபண்ணுகிற ஆவி எதுவோ, அது பராபரனால் உண்டாயிருக்கின்றது.

௩ [5]இயேசுக்கிறிஸ்து மாம்சத்திலே வந்தார் என்று அறிக்கைபண்ணாத ஆவி எதுவோ, அது பராபரனால் உண்டாயிருக்கிறதல்ல; அதுவே கிறிஸ்துவுக்கு எதிராளியானவனுடைய ஆவி; அது வருகிறதென்று நீங்கள் கேள்விப்பட்டீர்கள்; [6]அது இப்பொழுதே உலகத்தில் இருக்கின்றது.

ச ¶ பிள்ளைகளே, [7]நீங்கள் பராபரனால் உண்டாயிருந்து, [8]உலகத்தில் இருக்கிறவனிலும் உங்களில் இருக்கிறவர் பெரியவரானதால் அவர்களைச் செயித்தீர்கள்.

ரு அவர்கள் [9]உலகத்தாரின் தன்மையை உடையவர்கள்; ஆனபடியால் உலகத்தாரின் தன்மையாய்ப் பேசுகிறார்கள்; [10]உலகத்தாரும் அவர்களுக்குச் செவிகொடுக்கிறார்கள்.

சு நாங்கள் பராபரனுடைய தன்மையை உடையவர்கள்; [11]பராபரனை அறிந்துகொண்டவன் எங்களுக்குச் செவிகொடுக்கிறான், பராபரனுடைய தன்மை இல்லாதவன் மாத்திரம் எங்களுக்குச் செவிகொடுக்கிறதில்லை; இதினாலே [12]சத்திய ஆவியையும் வஞ்சக ஆவியையும் அறிந்திருக்கிறோம்.

எ ¶ [13]பிரியமானவர்களே, அன்பு பராபரனால் உண்டாயிருக்கிறபடியால் ஒருவரில் ஒருவர் அன்பாயிருக்கக்கடவோம்; அன்புள்ளயாவரும் பராபரனில் பிறந்து அவரை அறிந்திருக்கிறார்கள்.

அ [14]பராபரன் அன்பாகவே இருக்கிறபடியால், [15]அன்பில்லாதவன் பராபரனை அறியான்.

கூ பராபரனுடைய ஒரேபேறான குமாரனாலே [16]நாம் பிழைக்கும்படிக்கு அவரை இவ்வுலகத்திலே அனுப்பினதினாலே, [17]பராபரன் நமதுமேல் வைத்தஅன்பு வெளிப்பட்டது.

௰ [18]நாம் பராபரனிடத்தில் அன்புகூர்ந்ததினால் அல்ல, அவர் நம்மிடத்தில் அன்புகூர்ந்து, நம்முடைய பாவங்களை நீக்கும் கிருபை உண்டாகும்படி, [19]தம்முடைய குமாரனை அனுப்பினதினாலே அன்பு உண்டாயிருக்கின்றது.

௰க பிரியமானவர்களே, [20]பராபரன் இவ்விதமாய் நம்மிடத்தில் அன்புகூர்ந்தபடியால் நாமும் ஒருவரிடத்தில் ஒருவர் அன்புகூரக்கடனாளிகளாய் இருக்கிறோம்; [21]பராபரனை ஒருவரும் ஒருக்காலும் காணவில்லை.

௰உ நாம் ஒருவரிடத்தில் ஒருவர் அன்புகூர்ந்தால் பராபரன் நமக்குள்ளே நிலைத்திருப்பார்; [22]அவருடைய அன்பு நம்மிடத்தில் நிறைவுள்ளதாயும் இருக்கும்.

௰௩ அவர் தம்முடைய ஆவியில் நமக்குக் கொடுத்ததினாலே நாம் அவரிலும் [23]அவர் நம்மிலும் நிலைத்திருக்கிறதை அறிந்திருக்கிறோம்.

கி. பி. கூ௰.

1 மத். உச. ௰. உச. அப். உ௰. க௰. க தீமோ. ச.க. உபே. உ. க. க யோ. உ. ௰அ. உயோ. எ.
2 எரே. உக. அ.மத். உச. ச.
3 க கொரி. ௰ச. உகூ. க தெச. ரு. உக. வெளி. உ. உ.
4 க கொரி. ௰உ. க. க யோ. ரு.க.
5 க யோ. உ. உஉ. உ யோ. எ.
6 உ தெச.உ. எ. கயோ. உ. ௰அ, உஉ.
7 க யோ. ரு. ச.
8 யோவா. ௰உ. கக:௰ச. க௰:௰கூ. ௰க. க கொரி.உ. .௰உ. எபே. உ. உ: கூ. ௰உ.
9 யோவா. கூ.கக.
10 யோவா. ௰ரு. ௰கூ: ௰எ. ௰ச.
11 யோவா. அ. சஎ: ௰. உஎ. க கொரி. ௰ச. கஎ. உ கொரி. ௰. எ.
12 ஏசா. அ. உ௰. யோவா.௰ச.௰எ.
13 க யோ. க. ௰, ௰க, உக.
14 ௰க. ௰ச.
15 கயோ. உ.ச: க. க.
16 கயோ. ரு. ௰க.
17 யோவா. க. ௰க. உரோ. ரு. அ: அ. கஉ. க யோ. க. ௰க.
18 யோவா. ௰ரு. ௰க. உரோ. ரு. அ, ௰. தீத். க. ச.
19 க யோ. உஉ.
20 மத். ௰அ. கக. யோவா. ௰ரு. ௰உ,௰க. க யோ. க. ௰க.
21 யோவா. க ௰அ. க தீமோ. க. ௰க. உ௰. ௰ச.
22 கயோ. உ. ரு. ௰அ. ௰ச.
23 யோவா. ௰ச. உ௰. க யோ. க. உச.

Digitized by Google

௰௪ ¶ [1]பிதாவானவர், குமாரனை உலக இரட்சகராக அனுப்பினதை [2]நாங்கள் பார்த்திருந்து சாட்சியிடுகிறோம்.

௰௫ இயேசுவானவர் பராபரனுடைய குமாரனென்று [3]அறிக்கைபண்ணுகிறவன் எவனோ, அவனிடத்தில் பராபரன் நிலைத்திருக்கிறார்; பராபரனிடத்திலே அவனும் நிலைத்திருக்கிறான்.

௰௬ பராபரன் நமதுமேல் வைத்திருக்கிற அன்பை நாம் அறிந்து விசுவாசித்திருக்கிறோம்; [4]பராபரன் அன்பாகவே இருக்கிறார்; [5]அன்பிலே நிலைத்திருக்கிறவன் பராபரனிடத்தில் நிலைத்திருக்கிறான்; பராபரனும் அவனிடத்திலே நிலைத்திருக்கிறார்.

௰௭ நியாயத்தீர்ப்பின் நாளிலே [6]நமக்குத் தயிரியம் உண்டாயிருக்கத்தக்கதாக, அன்பு நம்மிடத்தில்* நிறைவுள்ளதாயிற்று; ஆனதால் [7]அவர் இருக்கிற பிரகாரமாக நாமும் இந்த உலகத்தில் இருக்கிறோமே.

௰௮ அன்பிலே பயமில்லை; நிறைந்த அன்பு பயத்தைப் புறம்பே தள்ளுகின்றது; பயமானது வேதனையுள்ளதே.

௰௯ [8]பயப்படுகிறவன் நிறைந்த அன்புள்ளவன் அல்ல, அவர் முந்தி நம்மிடத்தில் அன்புகூர்ந்தபடியால் நாமும் அவரிடத்தில் அன்புகூருகிறோம்.

௨௰ ஒருவன் தன் சகோதரனைப் பகைத்து நான் [9]பராபரனிடத்தில் அன்புகூருகிறேன் என்று சொன்னால், அவன் பொய்க்காரனாய் இருப்பான்; எப்படியெனில், அவன் தான் கண்டிருக்கிற சகோதரனிடத்தில் அன்புகூராமலிருக்க, [10]தான் காணாதிருக்கிற பராபரனிடத்திலே எப்படி அன்பாயிருப்பான்?

௨௧ அன்றியும் பராபரனிடத்தில் அன்புகூருகிறவன் தன் சகோதரனிடத்திலும் அன்புகூரவேண்டுமென்ற [11]இந்தக் கட்டளையை அவராலே பெற்றிருக்கிறோம்.

கி. பி. ௯௰.

1 யோவா. க. ௰௪.
2 யோவா. க ௰௪. க யோ. க. க, ௨.
3 உரோ. ௰. ௯. க யோ. ௫. க, ௫.
4 அ. ௮௪.
5 க யோ. க. ௨௪. ௰௨. ௮௪.
6 யாக். ௨. ௰௩. க யோ. ௨. ௨௮: ௩. ௰௯, ௨௧.
* அல்லது நமதன்பு.
7 க யோ. ௩. ௩.
8 ௰௨. ௮௪.
9 க யோ. ௨. ௪: ௩. ௰௭.
10 ௰௨. ௮௪.
11 மத். ௨௨. ௩௭, ௩௯. யோவா. ௰௩. ௩௪: ௰௫. ௰௨. க யோ. ௩. ௨௩.
12 க யோ. ௨: ௨௨, ௨௩: ௪. ௨, ௰௫.
13 யோவா. க. ௰௨.
14 யோவா. க. ௰௩.
15 யோவா. ௰௫. ௨௩.
16 யோவா. ௰௪. ௰௫, ௨௧, ௨௩: ௰௫. ௰. ௨ யோ. ௬.
17 மீகா. ௯. அ. மத். ௰௩. ௩௦.
18 யோவா. ௰௩. ௩௩. க யோ. ௩. ௯: ௪. ௪.
19 க கொரி. ௰௫. ௫௭. க யோ. ௪. ௰௫.
20 யோவா. ௰௯. ௩௪.
21 யோவா. ௰௪. ௰௭. ௰௫. ௨௬. ௰௬. ௰௩. க தீமோ. ௩. ௰௬.

# ௫. அதிகாரம்.

க. பராபரனை சிநேகிக்கிறவன் பராபரனுடைய பிள்ளைகளையும் சிநேகித்து அவருடைய கட்டளைகளைக் கைக்கொண்டு அந்தக் கட்டளைகள் விசுவாசிகளுக்குப் பாரமாயிராமல் இலேசாயிருக்கிறதென்று உணர்ந்திருப்பானென்றும், ௬ தேவசுதனாகிய இயேசுவானவர் நம்மை இரட்சிக்கவும், ௰௪ நாம் நமக்கும் மற்றவர்களுக்கும் செய்யும் வேண்டுதல்களைக் கேட்கவும் வல்லவரென்றுஞ் சொல்லியது.

[12]இயேசு என்பவரே கிறிஸ்து என்று [13]விசுவாசிக்கிறவன் எவனோ, [14]அவன் பராபரனில் பிறந்திருக்கிறான்; [15]அன்றியும் பிறப்பித்தவரிடத்தில் அன்புகூருகிற யாவரும் அவரில் பிறந்தவனிடத்திலும் அன்புகூருகிறார்கள்.

௨ நாம் பராபரனிடத்திலே அன்புகூர்ந்து, அவருடைய கற்பனைகளைக் கைக்கொண்டுவருகிறதினாலே நம்மைப் பராபரனுடைய பிள்ளைகளிடத்தில் அன்புகூருகிறவர்களென்று அறிந்துகொள்ளுகிறோம்.

௩ நாம் பராபரனுடைய கற்பனைகளைக் கைக்கொள்ளுகிறதே [16]அவரிடத்தில் அன்புகூருகிறதாம்; இப்படி [17]அவருடைய கற்பனைகள் பாரமானவைகளும் அல்ல.

௪ எப்படியெனில், [18]பராபரனில் பிறந்தவன் எவனோ, அவன் உலகத்தைச் செயிக்கிறான்; நம்முடைய விசுவாசமே உலகத்தைச்செயிக்கிற செயம்.

௫ [19]இயேசுவானவர் பராபரனுடைய குமாரனென்று விசுவாசிக்கிறவனே அன்றி, வேறு யாவன் உலகத்தைச் செயிக்கிறவன்?

௬ ¶ இயேசுக்கிறிஸ்துவாகிய அவரே [20]சலத்தினாலும் இரத்தத்தினாலும் தோன்றிவந்தவர்; சலத்தினாலேமாத்திரமல்ல, சலத்தினாலும் இரத்தத்தினாலுமே (வந்தார்); ஆவியானவர் சத்தியமாகையால் [21]ஆவியானவரே சாட்சி கொடுக்கிறவர்.

Digitized by Google

௭ ஆனதால் பரமண்டலத்திலே பிதா, [1]வார்த்தை, பரிசுத்த ஆவி என்று இம்மூவரும் சாட்சியிடுகிறார்கள்; [2]அம்மூவரும் ஒன்றாய் இருக்கிறார்கள்.

௮ பூமியிலேயும் ஆவி, சலம், இரத்தமென்று இம்மூன்றும் சாட்சியிடுகின்றன; அம்மூன்றும் ஒன்றாகப் பொருந்துகின்றன.

௯ ¶ [3]நாம் ஏற்றுக்கொள்ளுகிற மனிதருடைய சாட்சியிலும், பராபரனுடைய சாட்சி அதிகமாய் இருக்கின்றது; [4]பராபரன் தம்முடைய குமாரனைக்குறித்துக் கொடுத்த சாட்சி அதுவே.

௰ பராபரனுடைய குமாரனிடத்தில் விசுவாசமாயிருக்கிறவன் [5]அந்தச் சாட்சியைத் தனக்குள்ளே கொண்டிருக்கிறான்; பராபரனை விசுவாசியாதவன் [6]அவரைப் பொய்யன் என்கிறவனாய் இருக்கிறான்; பராபரன் தம்முடைய குமாரனைக்குறித்துக் கொடுத்த சாட்சியை விசுவாசிக்கவில்லையே.

௰௧ அந்தச் சாட்சி என்னவெனில், [7]பராபரன் நமக்கு நித்திய சீவனைக் கொடுத்திருக்கிறார்; [8]அந்தச் சீவன் அவருடைய குமாரனில் இருக்கிறதென்பதே.

௰௨ [9]குமாரனை உடையவன் அந்தச் சீவனை உடையவனாய் இருக்கிறான்; பராபரனுடைய குமாரனில்லாதவன் அந்தச் சீவன் இல்லாதவனாய் இருக்கிறான்.

௰௩ ¶ [10]பராபரனுடைய குமாரனின் நாமத்தில் விசுவாசமாயிருக்கிற நீங்கள், நித்திய சீவனை உடையவர்களென்று அறிந்து, பராபரனுடைய குமாரனின் நாமத்தின் மேலே விசுவாசமாயிருக்கும்படிக்கு [11]இவைகளை உங்களுக்கு எழுதினேன்.

௰௪ [12]நாம் எதையாகிலும் அவருடைய சித்தத்தின்படியே கேட்டால், அவர் நமக்குச் செவிகொடுப்பார் என்பதே அவரால்* நமக்கு உண்டாயிருக்கிற தயிரியம்.

௰௫ அன்றியும் நாம் எதைக் கேட்டாலும், அவர் நமக்குச் செவிகொடுப்பார் என்று நாம் அறிந்திருக்க, அவரிடத்தில் நாம் பண்ணின விண்ணப்பங்களைப் பெற்றோமென்றும் அறிந்திருக்கிறோம்.

௰௬ ¶ ஒருவன் மரணத்திற்கு ஏதுவல்லாத பாவத்தைத் தன் சகோதரன் செய்யக்கண்டால் (கர்த்தாவை நோக்கிச்) செபம்பண்ணக்கடவன்; அப்பொழுது அவர் அவனுக்கு மரணத்திற்கு ஏதுவல்லாத பாவத்தைச் செய்தவர்களுக்கு ஏற்ற [13]உயிரைக் கொடுப்பார்; [14]மரணத்திற்கு ஏதுவான பாவம் உண்டு; [15]அதைக்குறித்துச் செபம் பண்ணச் சொல்லமாட்டேன்.

௰௭ [16]அநியாயம் யாவும் பாவம் தான்; மரணத்திற்கு ஏதுவல்லாத பாவமும் உண்டு.

௰௮ ¶ நாம் அறிந்துகொண்டபடி, [17]பராபரனில் பிறந்தவன் எவனோ அவன் பாவம்செய்யமாட்டான்; பராபரனில் பிறந்தவன் [18]தன்னைக் காக்கிறான்; ஆகையால் பொல்லாங்கன் அவனைத் தொடான்.

௰௯ மேலும் நமக்குத் தெரிந்திருக்கிறபடி, நாம் பராபரனால் உண்டாயிருக்கிறோம்; [19]உலகமுழுவதும் பொல்லாங்கனுக்குள்ளே கிடக்கின்றது.

௨௰ மேலும் நமக்குத் தெரிந்திருக்கிறபடி நாம் மெய்யானவரை [20]அறிந்துகொள்வதற்குப் பராபரனுடைய குமாரன் வந்து, [21]நமக்குப் புத்தியைக் கொடுத்தார்; அந்தப்படி நாம் அவருடைய குமாரனாகிய இயேசுக்கிறிஸ்துவிலுள்ள மெய்யானவரைப் பற்றியிருக்கிறோம்; [22]அவரே மெய்யான தேவனுமாய் [23]நித்திய சீவனுமாய் இருக்கிறார்.

௨௰௧ ¶ பிள்ளைகளே, [24]நீங்கள் விக்கிரகங்களுக்கு விலகி உங்களைக் காத்துக்கொள்வீர்களாக.—ஆமென்.

கி. பி. ௯௰.

1 யோவா. ௧. ௧. வெளி. ௰௯. ௰௩.
2 யோவா. ௰. ௩௰.
3 யோவா. ௮. ௰௭, ௰௮.
4 மத். ௩. ௰௬, ௰௭: ௰௭. ௫.
5 உரோ. ௮. ௰௬. கலா. ௪. ௬.
6 யோவா. ௩. ௩௩: ௫. ௩௮.
7 ௧ யோ. ௨. ௨௫.
8 யோவா. ௧. ௪. ௧ யோ. ௪. ௯.
9 யோவா ௩. ௩௬: ௫. ௨௪.
10 ௧ யோ. ௩. ௩, ௨.
11 யோவா. ௨௰. ௩௧.
12 ௧ யோ. ௩. ௨௨.
* அல்லது அவரைக்குறித்து.
13 யோபு. ௪௨. ௮. யாக். ௫. ௰௪, ௰௫.
14 மத். ௰௨. ௩௧, ௩௨. மாற். ௩. ௨௯. லூக். ௰௨. ௰. எபி. ௬. ௪, ௬: ௰. ௨௬.
15 எரே. எ. ௰௬: ௰௪. ௰௧. யோவா. ௰௭. ௯.
16 ௧ யோ. ௩. ௪.
17 ௧ பே. ௧. ௨௩. ௧ யோ. ௩. ௯.
18 யாக். ௧. ௨௭.
19 கலா. ௧. ௪.
20 யோவா. ௰௭. ௩.
21 லூக். ௨௪. ௪௫.
22 ஏசா. ௯. ௬: ௪௪. ௬. யோவா. ௨௰. ௨௮. அப். ௨௰. ௨௮. உரோ. ௯. ௫. ௧ தீமோ. ௩. ௰௬. தீத். ௨. ௰௩. எபி. ௧. ௮.
23 ௰௧, ௰௨, ௰௩. வச.
24 ௧ கொரி. ௰. ௰௪.

# II. JOHN.

அப்போஸ்தலனாகிய

# யோவான் எழுதின

## இரண்டாம் நிருபம்.

க. கனம்பொருந்திய ஒரு அம்மாளும், அவளுடைய பிள்ளைகளும் கிறிஸ்து மார்க்கத்துக்கேற்ற அன்பிலும், விசுவாசத்திலும் நிலைநின்று, அ. தங்கள் பலனை இழந்துபோகாதிருக்கவும், ௰. கிறிஸ்து இயேசுவின் சத்திய உபதேசத்தைக்கொண்டுவாராத கள்ளப்போதகர்களை ஏற்றுக்கொள்ளாமல் இருக்கவும் அவர்களுக்குப் புத்திசொல்லியது.

நம்மிடத்திலே நிலைநிற்கிறதுமாய், என்றென்றைக்கும் நம்மோடு இருப்பதுமாய் இருக்கிற சத்தியத்தினிமித்தம் நான்மாத்திரமல்ல, [1]சத்தியத்தை அறிந்திருக்கிற மற்ற யாவரும் [2]உண்மையாய்ச் சிநேகித்திருக்கிற,

உ தெரிந்துகொள்ளப்பட்ட அம்மாளுக்கும் அவளுடைய பிள்ளைகளுக்கும் மூப்பனாகிய நான் எழுதுகிறதாவது:

ங பிதாவாகிய பராபரனாலும் பிதாவின் குமாரனாகிய கர்த்தாவாயிருக்கிற இயேசுக்கிறிஸ்துவினாலும் [3]கிருபையும், இரக்கமும், சமாதானமும், [4]சத்தியத்தோடும் அன்போடுங்கூட உங்களுக்கு உண்டாயிருக்கக்கடவது.*

ச உம்முடைய பிள்ளைகளில் சிலர் பிதாவினால் நாம் கற்பனை அடைந்தபடி [5]சத்தியத்திலே நடக்கிறவர்கள் என்று நான் கண்டு மிகவும் சந்தோஷப்பட்டேன்.

ரு இப்பொழுது அம்மாளே, [6]நான் உமக்குப் புதிய கற்பனையாகவல்ல, ஆதிமுதல் நமக்கு உண்டாயிருக்கிற கற்பனையாக எழுதி வேண்டிக்கொள்ளுகிறது என்னவெனில், [7]நாம் ஒருவரிடத்தில் ஒருவர் அன்புகூரவேண்டும்.

சு [8]நாம் அவருடைய கற்பனைகளின்படி நடக்கிறதே அன்புகூருகிறதாம்; [9]நீங்கள் ஆதிமுதல் கேட்டிருக்கிறபடி, அதிலே நடந்துகொள்ளவேண்டும் என்பதே அந்தக் கற்பனையாய் இருக்கின்றது.

எ ¶ [10]அநேக வஞ்சனைக்காரர் உலகத்திலே தோன்றியிருக்கிறார்கள்; [11]இயேசுக்கிறிஸ்துவானவர் மாம்சமானார் என்று அறிக்கைபண்ணாமல் இருக்கிறார்கள்; [12]இப்படிப்பட்டவனே வஞ்சனைக்காரனுமாய் கிறிஸ்துவுக்கு எதிராளியுமாய் இருக்கிறான்.

அ [13]நாம் நம்முடைய வேலைகளை† இழந்துபோகாமல் நிறைந்த பலனைப் பெறும்படிக்கு [14]எச்சரிக்கையாயிருங்கள்.

கூ கிறிஸ்துவின் உபதேசத்தில் நிலைநில்லாமல் [15]மீறிநடக்கிற எவனும் பராபரனை அடையாதவ

கி. பி. கய.

1 யோவா. அ. கஉ. கலா. உ. ௫, ௰௪: க. க: ௫. எ. கொலோ. க. ௫. உதெச. உ.௰க. க தீமோ. உ. ச. எபி. ௰. உக.
2 க யோ. க.௰அ. க யோ.க.க வச.
3 க தீமோ. க.உ.
4 க. வச.
* இரேக்கு, இருக்கும்.
5 க யோ. க.
6 க யோ. உ. எ, அ: க. ௰க.
7 யோவா. ௰க. கச: ௰௫. ௰உ. எபே. ௫. உ. க பே. ச. அ. க யோ. க. உக.
8 யோவா. ௰ச. ௰௫, உக: ௰௫. ௰. க யோ. உ. ௫: ௫. க.
9 க யோ. உ.உச.
10 க யோ. ச. க.
11 க யோ. ச. உ, க.
12 க யோ. உ. உஉ: ச. க.
13 மாற். ௰க. கூ.
† சில பிரதிகளில் நீங்கள் பெற்றுக் கொண்ட பலனை.

14 கலா. க. ச. எபி.௰. கஉ, க௫. — 15 க யோ. உ. உக.

Digitized by Google

ளாய் இருக்கிறான்; கிறிஸ்துவின் உபதேசத்திலே நிலைநிற்கிறவனே பிதாவையும் குமாரனையும் அடைந்திருக்கிறான்.

௰ ஒருவன் உங்களிடத்தில் வந்து இந்த உபதேசத்தைக் கொண்டுவராமல் இருந்தால், அவனை நீங்கள் உங்கள் வீட்டிலே சேர்த்துக்கொள்ளவும், [1]அவனுக்கு வாழ்த்துதல்சொல்லவும் கூடாது.

௰க அவனுக்கு வாழ்த்துதல் சொல்லுகிறவன் அவனுடைய துர்க்கிரியைகளுக்குப் பங்காளனாகிறானே.

கி. பி. கூய.

1 உ கொ. ௰௧. ௰௪. க கொரி. ௫. ௰௧: ௰௬. ௨௨. கலா. க. அ, கூ. உ தீமோ. ௩. ௫. தீத். ௩. ௰.
2 ௩ யோ. ௰௩.
3 யோவா. ௰௭. ௰௩. க யோ. க. ௪.
* அல்லது உங்களுக்கு.
† கிரேக்கு, பேசக்குப் பேச.
4 க பே. ௫. ௰௩.

௰உ ¶ [2]நான் பின்னும் அநேகம் காரியங்களை உங்களுக்கு அறிவிக்கவேண்டும்; காகிதத்தினாலும் மையினாலும் அப்படிச் செய்ய மனதில்லை; [3]நமக்குச்* சந்தோஷம் நிறைவாயிருக்கும்படிக்கு உங்களிடத்தில் வந்து, முகமுகமாய்ப்† பேசலாமென்று நம்பியிருக்கிறேன்.

௰௩ [4]தெரிந்துகொள்ளப்பட்ட உம்முடைய சகோதரியின் பிள்ளைகள் உமக்கு வாழ்த்துதல் செய்கிறார்கள்.—ஆமென்.

Digitized by Google

# III. JOHN.

அப்போஸ்தலனுகிய

# யோவான் எழுதின

## மூன்றும் நிருபம்.

க. காயுவைத் தன் தேவபத்திக்கும், ரு. உத்தம போதகர்களுக்குச் செய்யும் உபசாரத்துக்கும் புகழ்ந்து, கூ. பெருமையுள்ள தியோத்திரேப்பே என்றவனுடைய கெட்ட நடக்கையைக்குறித்து விசனப்பட்டு, ௰க. அந்த நடக்கையை ஒருவரும் பின்பற்றுமல் இருக்கச்சொல்லி, ௰உ. தேமேத்திரி என்றவனுக்கு நற்சாட்சி பகர்ந்தது.

கி. பி. கூ௰.

மூப்பனுகிய நான் [1]உண்மையாய்[*] அன்புகூருகிற பிரியமான காயுவுக்கு எழுதுகிறதாவது: பிரியமானவனே,

உ உன் ஆத்துமா வாழ்கிறதுபோல நீ சகலவிதத்திலும் வாழ்ந்து சுகமாயிருக்க வேண்டுகிறேன்.[†]

௩ சகோதரர் வந்து [2]நீ சத்தியத்தில் நடந்துகொள்ளுகிறபடி உன்னுடைய உண்மையைக்குறித்துச் சாட்சிகொடுத்தபொழுது மிகவும் சந்தோஷப்பட்டேன்.

௪ [3]என் பிள்ளைகள் சத்தியத்திலே நடக்கிறதை நான் கேள்விப்படுகிறதினுல் (வருகிற சந்தோஷத்திற்கு) மேலான சந்தோஷம் எனக்கு இல்லை.

ரு பிரியமானவனே, நீ சகோதரருக்கும் பரதேசிகளுக்கும் செய்கிற கிரியைகள் யாவையும் உண்மையாய்ச் செய்கிருய்.

சு அவர்கள் உன்னுடைய அன்பைக்குறித்துச் சபைக்குமுன்பாகச் சாட்சிசொன்னுர்கள்; அவர்களை நீ பராபரனுக்குமுன்பாகப் பாத்திரமானபடி[‡] வழிவிட்டு அனுப்பினுல் நன்மைசெய்வாய்.

எ அவருடைய நாமத்தினிமித்தம் அவர்கள் [4]அஞ்ஞானிகளிடத்தில் ஒன்றும் வாங்காமல் புறப்பட்டார்களே.

அ ஆகையால் நாம் சத்தியத்திற்கு உதவிசெய்கிறவர்களாய் இருக்கும்படிக்கு, இப்படிப்பட்டவர்களைச் சேர்த்துக்கொள்ளக் கடனுளிகளாயிருக்கிறேம்; நான் சபைக்கு எழுதினேன்.

கூ அப்படியிருந்தும், அவர்களுக்கு முதலாளியாயிருக்க விரும்புகிற தியோத்திரேப்பு எங்களை ஏற்றுக்கொள்ளுகிறதில்லை.

௰ ஆனபடியினுலே நான் வரும்பொழுது, அவன் எங்களுக்கு விரோதமாய்ப் பொல்லாத வார்த்தைகளைப் பேசிச் செய்துவருகிற கிரியைகளை நினைத்துக்கொள்ளுவேன்; அவைகளும் அவனுக்குப் போதாது; அவன்தானே சகோதரரை ஏற்றுக்கொள்ளாதிருக்கிறதுமல்லாமல், ஏற்றுக்கொள்ள மனதாயிருக்கிறவர்களையும் தடைசெய்து சபைக்குப்புறம்பே தள்ளுகிறுன்.

1 ௨ யோ. க.
* அல்லது உண்மையிலே.
† அல்லது விரும்புகிறேன்.
2 ௨ யோ. ௪.
3 க கொரி. ௪. ௰ரு. பிலே. ௰.
‡ அல்லது ஏற்றவிதமாக.
4 க கொரி. கூ. ௰உ, ௰ரு.

Digitized by Google

௰௧ பிரியமானவனே, [1]நீ பொல்லாங்கானதை அல்ல நலமானதைப் பின்பற்றுவாயாக, [2]நன்மைசெய்கிறவன் பராபரனால் உண்டாயிருக்கிறான்; பொல்லாங்கைச்செய்கிறவன் பராபரனைக் கண்டறியவில்லை.

௰௨ [3]தேமேத்திரி என்பவனுக்கு எல்லாராலும் சத்தியத்தாலும்தானே நற்சாட்சி உண்டாயிருக்கிறது; நாங்களும் சாட்சிகொடுக்கிறோம்; [4]எங்கள் சாட்சி மெய்யென்று அறிந்திருக்கிறீர்கள்.

௰௩ [5]நான் அநேகம் காரியங்களை உனக்கு எழுதவேண்டும்; அவைகளை மையினாலும் இறகினாலும் எழுத மனதில்லை.

௰௪ நான் சீக்கிரமாய் உன்னைப் பார்க்கலாமென்று நம்பியிருக்கிறேன்; அப்பொழுது முகமுகமாய்ப் * பேசுவோம்; உனக்குச் சமாதானம் உண்டாயிருக்கக்கடவது.

௰௫ (எங்களிடத்திலுள்ள) சிநேகிதர் உன்னை வாழ்த்துதல்செய்கிறார்கள்; உன்னிடத்திலுள்ள சிநேகிதர்களைப் பேர்பேராக (என்னாலே) வாழ்த்துதல்செய்வாயாக.

கி. பி. ௯௰.

1 சங். ௩௭. ௨௭. ஏசா. ௧. ௰௬, ௰௭. ௧ பே. ௩. ௰௧.
2 ௧ யோ. ௨. ௨௯: ௩. ௬, ௯.
3 ௧ தீமோ. ௩. ௭.
4 யோவா. ௨௧. ௨௪.
5 ௨ யோ. ௰௨.
* கிரேக்கு, பேச்சுக்குப் பேச்சு.

Digitized by Google

**JUDE.**

---

அப்போஸ்தலனாகிய

# யூதா எழுதின

## நிருபம்.

---

*க. விசுவாசத்தை உறுதியாய்க் கைக்கொள்ளப் புத்திசொல்லி, ச. அவர்களைக் கெடுக்கும்படி பிரவேசித்திருக்கிற கள்ளப்போதகர்களுடைய சாபத்தைத்தரும் உபதேசத்துக்கும் நடக்கைக்கும் உக்கிரமான ஆக்கினை கிடைக்குமென்றும், உ௰. உத்தமர்களோ பரிசுத்தஆவியின் ஏவுதலினாலும் பராபரனை நோக்கி வேண்டிக்கொள்ளுகிறதினாலும் ஊக்கமடைந்து கிருபையிலே வளர்ந்து தங்களைக் காத்துக்கொள்வதுமன்றி, எத்தர்கள் வைத்த கண்ணிகளில் அகப்பட்டவர்களைக் காப்பார்களென்றும் சொல்லியது.*

இயேசுக்கிறிஸ்துவினுடைய ஊழியக்காரனுமாய், [1]யாக்கோபினுடைய சகோதரனுமாய் இருக்கிற யூதா என்பவன், பிதாவாகிய பராபரனாலே பரிசுத்தமாக்கப்பட்டும் [2]இயேசுக்கிறிஸ்துவினால் காக்கப்பட்டும் [3]அழைக்கப்பட்டும் இருக்கிறவர்களுக்கு எழுதுகிறதாவது:

உ இரக்கமும், [4]சமாதானமும், அன்பும் உங்களுக்குச் சம்பூரணமாய் உண்டாகக்கடவது.

ங பிரியமானவர்களே, [5]பொதுவான இரட்சிப்பைக்குறித்து உங்களுக்கு எழுதவேண்டுமென்று நான் மிகுந்த கருத்துள்ளவனாய் இருக்கையில், முன்னே பரிசுத்தவான்களுக்கு ஒப்புக்கொடுக்கப்பட்டிருக்கிற விசுவாசத்திற்காக நீங்கள் [6]கெட்டியாய்ப் போராட்டம்பண்ணும்படிக்கு, உங்களுக்குப் புத்தியை எழுதுகிறது எனக்கு அவசியமாய்த் தோன்றிற்று.

ச என்னத்தினாலெனில், [7]நம்முடைய பராபரனின் கிருபையைக் காமவிகாரத்திற்கு ஏதுவாகப் [8]புரட்டி, ஒன்றான சுயாதிபதியான பராபரனுமாய், நம்முடைய கர்த்தருமாயிருக்கிற இயேசுக்கிறிஸ்துவை [9]மறுதலிக்கிற [10]துன்மார்க்கரான சில மனிதர்கள் பக்கவழியாய் [11]நுழைந்திருக்கிறார்கள்; அவர்கள் அடையும் ஆக்கினையைக் குறித்துப் பூர்வீகத்திலே முன்எழுதியிருக்கின்றது.

ரு அந்தப்படி நீங்கள் முன்னே அறிந்திருந்தும் நான் உங்களுக்கு ஞாபகப்படுத்த விரும்புகிறது என்னவெனில், [12]கர்த்தர் எகிப்துதேசத்திலிருந்து சனத்தை இரட்சித்தபின்பு [13]விசுவாசியாதவர்களை அழித்தார்.

சு அன்றியும் [14]தங்களுடைய ஆதி நிலைமையைக்* காவாமல், தங்களுக்கு ஏற்ற இருப்பிடத்தை விட்டுவிலகின தூதர்கள் [15]பெரிய நியாயத்தீர்ப்புநாள்வரைக்கும் நித்திய சங்கிலிகளினாலே (கட்டப்பட்டு) [16]அந்தகாரத்தில் இருக்கும்படி நியமித்தார்.

எ அப்படிப்போலச் [17]சோதோம் கொமோரா பட்டணத்தார்களும் அவைகளைச் சூழ்ந்த பட்டணத்தார்களும் இவர்களுடைய வி

கி. பி. சுகூ.

1 லூக். சு. ௰சு. அப். க. ௰ங.
2 யோவா. ௰எ. ௰க, ௰உ, ௰ரு. க பே. க. ரு.
3 உரோ. க. எ.
4 க பே. க. உ. உ பே. க. உ.
5 தீத். க. ச.
6 பிலி. க. உஎ. க தீமோ. க. ௰அ: சு. ௰உ. உ தீமோ. க. ௰க: ச. எ.
7 தீத். உ. ௰க. எபி. ௰உ. ௰ரு.
8 உ பே. உ. ௰.
9 தீத். க. ௰சு. உ பே. உ. க. க யோ. உ. உஉ.
10 உரோ. க. உக. உஉ. க பே. உ. அ.
11 கலா. உ. ச. உ பே. உ. க.
12 க கொரி. ௰. க.
13 ச மோ. ௰ச. உக, கஎ: உக. கச, சஎ. சக. உக. எபி. ங. ௰எ, ௰க.
14 யோவா. அ. சச.
* அல்லது ஆதி மேன்மையை.
15 வெளி. உ௰. ௰.
16 உ பே. உ. ச.
17 க மோ. ௰க. உச. ஐ மோ. உக. உக. உ பே. உ. க.

Digitized by Google

தமாய் வேசித்தனத்தில் அமிழ்ந்து, அந்நிய* மாம்சத்தைச் சேர்ந்துபோனதினாலே நித்திய அக்கினியை ஆக்கினையாக அடைந்து திருட்டாந்தமாக வைக்கப்பட்டிருக்கிறார்கள்.

அ ¶ அப்படிப்போல [1]இந்தச் சொப்பனக்காரர் மாம்சத்தை அசுசிப்படுத்திக்கொண்டு, கர்த்தத்துவத்தை அசட்டைபண்ணி, [2]மகத்துவங்களைத் தூஷணிக்கிறார்கள்.

கூ பிரதான தூதனாகிய [3]மிகாவேலும் மோசேயினுடைய சரீரத்தைக்குறித்துப் பசாசானவனுடனே தருக்கித்துப் பேசினபொழுது, [4]தூஷணமுள்ள தீர்ப்பை அவனுக்குச் சொல்லத் துணியாமல், [5]கர்த்தர் உன்னைக் கடிந்துகொள்வாராக என்று (மாத்திரம்) சொன்னான்.

ய [6]இவர்கள் தங்களுக்குத் தெரியாதவைகளைத் தூஷணிக்கிறார்கள்; புத்தியில்லாத மிருகங்களைப்போலச் சுபாவப்படி தங்களுக்குத் தெரிந்திருக்கிறவைகளாலே தங்களைக் கெடுக்கிறார்கள்.

யக ஐயோ, அவர்களுக்கு வேதனை உண்டாகும், அவர்கள் [7]காயீனுடைய வழியில் நடந்து, [8]பாலாம் கூலிக்காகச் செய்த வஞ்சகத்திலே விரைந்து ஓடி, [9]கோரா விரோதம் பேசினதினாலே கெட்டுப்போனார்கள்.

யஉ ¶ இவர்கள் உங்கள் [10]அன்பு விருந்துகளில் [11]மாசுகளாயிருந்து, பயமில்லாமல் விருந்துண்டு, தங்களை மேய்க்கிறார்கள்; [12]அவர்கள் காற்றுகளால் அடிக்கப்பட்டு அலைகிற [13]நீரில்லாதமேகங்களும், [14]உலர்ந்து கனியற்று இரண்டுதரம் செத்து வேரற்றுப்போன மரங்களும்,

யங [15]தங்கள் சுய இலச்சைகளை நுரைபோலக் கக்குகிற [16]உக்கிரத்தையுடைய கடலின் அலைகளும், மார்க்கம் தப்பி நடக்கிற நட்சத்திரங்களுமாய் இருக்கிறார்கள்; [17]என்றென்றைக்கும் உள்ள காரிருளே அவர்களுக்காக வைக்கப்பட்டிருக்கின்றது.

யச ¶ ஆதாம்முதற்கொண்டு ஏழாந்தலைமுறையில் உண்டாயிருந்த [18]ஏனோக்கு என்பவன் இவர்களைக்குறித்தும் முன் அறிவித்ததாவது: இதோ [19]கர்த்தர் எல்லாருக்கும் நியாயத்தீர்ப்புக் கொடுக்கும்படிக்கும், அவர்களில் தேவபத்தியில்லாத யாவரும் துன்மார்க்கமாய்ச் செய்த சகல துன்மார்க்கக் கிரியைகளின் நிமித்தமும் தமக்கு விரோதமாய்,

யரு தேவபத்தியில்லாத பாவிகள் [20]பேசின கடின வார்த்தைகள் எல்லாவற்றின் நிமித்தமும், அவர்களைக் கண்டிக்கும்படிக்கும் திரளான சேனைகளாகிய தம்முடைய பரிசுத்தவான்களோடுங்கூட வருகிறார் என்று அறிவித்தான்.

யசு இவர்கள் முறுமுறுக்கிறவர்களுமாய், முறையிட்டுத் திரிகிறவர்களுமாய், தங்கள் இச்சையின்படி நடக்கிறவர்களுமாய் இருக்கிறார்கள்; [21]இவர்கள் வாயினாலே மிகவும் இறுமாப்பானவைகளைப் பேசி, [22]பொழிவுக்காகப் பெரியோர்களைப் புகழுகிறார்கள்.

யஎ ¶ பிரியமானவர்களே, [23]நீங்கள் நம்முடைய கர்த்தராகிய இயேசுக்கிறிஸ்துவின் அப்போஸ்தலரால், முன்சொல்லப்பட்ட வார்த்தைகளை நினைத்துக்கொள்ளுங்கள்.

யஅ கடைசிக் காலத்திலே தங்கள் துன்மார்க்கமான இச்சைகளின்படி நடக்கிற [24]பரியாசக்காரர் தோன்றுவார்களென்று உங்களுக்குச் சொன்னார்களே.

யகூ இவர்களே [25]பிரிந்துபோகிறவர்களும் [26]சென்மசுபாவத்தாரும் (தேவ) ஆவி இல்லாதவர்களுமானவர்கள்.

உய ¶ பிரியமானவர்களே, [27]நீங்கள் உங்களுக்கு உண்டாயிருக்கிற மிகவும்பரிசுத்தமான விசுவாசத்

கி. பி. சுகூ.

* கிரேக்கு, வேறு.
1 உ பே. உ. ய.
2 உ மோ. உஉ. உஅ.
3 தானி. ய. யக: யஉ. க. வெளி. யஉ. எ.
4 உ பே. உ. யக.
5 சகரி. ந. உ.
6 உ பே. உ. யஉ.
7 க மோ. ச. அ. க யோ. ந. யஉ.
8 ச மோ. உஉ. எ, உக. உ பே. உ. யரு.
9 ச மோ. யசு. க. மு.
10 க கொரி. யக. உக.
11 உ பே. உ. யந.
12 எபே. ச. யச.
13 யாக். உரு. யச. உ பே. உ. யஎ.
14 மத். யரு. யந.
15 பிலி. ந. யகூ.
16 சா. ருஎ. உய.
17 உ பே. உ. யஎ.
18 க மோ. ரு. யஅ.
19 ரு மோ. நந. உ. தானி. எ. ய. சகரி. யச. ரு. மத் உரு. நக. உ தெச. க. எ. வெளி. க. எ.
20 க சாமு. உ. ந. சங். நக. யஅ: கூச. ச. மல்கி. ந. யந.
21 உ பே. உ. யஅ.
22 யாக். உஅ. உக. யாக். உ. க, கூ.
23 உ பே. ந. உ.
24 க தீமோ. ச. க. உ தீமோ. ந, க: ச. ந. உ பே. உ. ரு: ந. ந.
25 யாக். யஅ. க. எசே. யச. எ. ஓசே. ச. யச: கூ. ய. எபி. ய. உரு.
26 க கொரி. உ. யச. யாக் ந. யரு
27 கொலோ உ. எ. க தீமோ க. ச.

Digitized by Google

தின்மேலே உங்களைப் பொருந்தக் கட்டிக்கொண்டு,

௨௧ [1]பரிசுத்த ஆவியைக்கொண்டு செபம்பண்ணி, பராபரனுடைய அன்பிலே உங்களைக் காத்துக்கொண்டு, [2]நித்திய சீவனுக்கு ஏதுவாக நம்முடைய கர்த்தராகிய இயேசுக்கிறிஸ்துவினுடைய இரக்கம் வரப்பார்த்திருங்கள்.

௨௨ அல்லாமலும், வகையறுக்கிறவர்களாய் நீங்கள் சிலருக்கு இரங்கி, [3]சிலரை அக்கினியிலிருந்து இழுத்துக்கொண்டு, [4]பயத்தோடே இரட்சித்து, [5]மாம்ச இச்சைகளால் அசுசிப்பட்டிருக்கிற அங்கியையும் வெறுத்துப்போடுங்கள்.

கி. பி. ௬௬.

1 உரோ. அ. உசு. எபே. சு. ௰அ.
2 தீத். உ. ௰௩. உ பே. ௩. ௰உ.
3 ஆமோ. ச. ௰௧. சகரி. ௩. உ. ௧ கொரி. ௩. ௰௫.
4 உரோ. ௰௧. ௰௪. ௧ தீமோ. ச. ௰௬.
5 சகரி. ௩. ௪, ௫. வெளி. ௩. ௪.
6 உரோ. ௰௬. உ௫. எபே. ௩. உ௰.
7 உரோ. ௰௬. உஎ. ௧ தீமோ. ௧. ௰எ: உ. ௩.
8 கொலோ. ௧. உஉ.

௨௩ ¶ நீங்கள் வழுவாதபடிக்கு [6]உங்களைக் காத்துக்கொள்ளுகிறதற்கும், மாசில்லாமல் மகிழ்ச்சியோடே உங்களைத் தமது மகிமையுள்ள சந்நிதானத்திலே நிறுத்துகிறதற்கும் வல்லமையுள்ளவருமாய்,

௨௪ [7]நம்முடைய இரட்சகரான ஞானமுள்ள ஒருவராகிய தேவனுமாய் இருக்கிறவருக்கு இப்பொழுதும் இனிமேல் இருக்கும் எல்லாக் காலங்களிலேயும் [8]புகழ்ச்சியும் மகத்துவமும், வல்லமையும், அதிகாரமும் உண்டாயிருக்கக்கடவது — ஆமன்.

Digitized by Google

# REVELATION.

தெய்வவசன போதகராகிய

# யோவானுக்கு

## வெளிப்படுத்தின விசேஷம்.

### ௧. அதிகாரம்.

௧. ஏழு பொன்விளக்குத் தண்டுகளுக்கு ஒப்பனையாக்கப்பட்ட ஆசியாவில் இருந்த ஏழு சபைகளுக்கு யோவான் அறிவிப்பை எழுதி, ௭. கிறிஸ்துவின் வருகையைக்குறித்தும், ௰௪. அவருடைய மகிமையுள்ள வல்லமையையும், மகத்துவத்தையும் குறித்தும் சொல்லியது.

[1]சீக்கிரமாய் நடக்கவேண்டியவைகளைப் பராபரன் தம்முடைய ஊழியக்காரருக்குக் காண்பிக்கும்படிக்கு [2]இயேசுக்கிறிஸ்துவுக்குக் கொடுத்ததும் இவர் வெளிப்படுத்தினதுமான விசேஷம்; [3]அவர் தம்முடைய ஊழியக்காரனாகிய யோவானிடத்திற்குத் தம்முடைய தூதனை அனுப்பி, அவனால் அவைகளைக் குறிப்பாகக் காட்டினார்.

௨ [4]அவன் பராபரனுடைய வசனமும் இயேசுக்கிறிஸ்து சாட்சியிட்ட விசேஷமுமாகிய [5]தான் கண்ட யாவற்றையும் அறிவித்திருக்கிறான்.

௩ [6]காலம் சமீபமாயிருக்கிறது; ஆகையால் இந்தத் தீர்க்கதரிசனமான வசனங்களை வாசிக்கிறவனும் கேட்கிறவர்களும் [7]இதில் எழுதியிருக்கிறவைகளைக் கைக்கொள்ளுகிறவர்களும் பாக்கியவான்கள்.

௪ ¶ யோவான் ஆசியாவிலுள்ள சபைகள் ஏழுக்கும் எழுதுகிறதாவது: [8]இருக்கிறவரும் [9]இருந்தவரும் வருகிறவருமானவராலும், [10]அவருடைய ஆசனத்திற்குமுன்பாக இருக்கிற ஏழு ஆவிகளாலும்,

௫ [11]உண்மையுள்ள சாட்சியும் [12]மரித்தோரிலிருந்து முதல் பிறந்தவரும் [13]பூமியின் இராசாக்களுக்கு அதிபதியுமாகிய இயேசுக்கிறிஸ்துவினாலும் உங்களுக்குக் கிருபையும் சமாதானசவுக்கியமும் உண்டாகக்கடவது; [14]நம்மிடத்தில் அன்புகூர்ந்து, [15]தமது இரத்தத்தினாலே நம்முடைய பாவங்கள் அற நம்மைக் கழுவி,

௬ தம்முடைய பிதாவாகிய பராபரனுக்கு (முன்பாக) நம்மைத் தமது [16]இராச்சியத்தாராகவும் ஆசாரியராகவும் செய்திருக்கிற [17]அவருக்கு மகிமையும் வல்லமையும் என்றென்றைக்கும்உண்டாயிருக்கக்கடவது.—ஆமன்.

௭ ¶ [18]அதோ மேகங்களுடனே வருகிறார்; கண்கள் யாவும் [19]அவ

இ. பி. ௯௰௬.

1 வெளி. ௪.௧.௧. ௰௪.
2 யோவா. ௧. ௧௨: ௮. ௨௧: ௰௨. ௪௯.
3 வெளி.௨௨.௰௧.
4 ௧ கொரி. ௧. ௬. வெளி. ௬. ௯: ௰௨.௰௭. ௯.௰௪.
5 ௧ யோ. ௧. ௧.
6 ௨ரோ. ௰௧. ௰௧. யாக். ௫. ௮. ௧ பே. ௪. ௭. வெளி. ௨௨. ௰.
7 லூக். ௰௧. ௨௮. வெளி. ௨௨. ௭.
8 ௨ மோ. ௩.௰௪. ௮. ௰௪.
9 யோவா. ௧. ௧.
10 சகரி. ௩.௯: ௪. ௰. வெளி.௩.௧: ௪. ௫: ௫. ௬.
11 யோவா. ௮. ௰௪. ௧ தீமோ. ௬. ௰௩. வெளி. ௩.௰௪.
12 ௧ கொரி. ௰௫. ௨௰. கொலோ. ௧. ௰௮.
13 எபே. ௧. ௨௰. வெளி. ௰௭.௰௪: ௰௯. ௰௬.
14 யோவா. ௰௩. ௩௪: ௰௫. ௯.

கலா.௨.௨௰.—15 எபி.௯.௰௪. ௧ யோ ௧.௭.—16 ௧ பே.௨.௫,௯. வெளி.௫.௰: ௨௰.௬.—17 ௧ தீமோ.௧.௰௭. எபி. ௰௩.௨௧. ௧ பே.௪.௰௧: ௫.௰௧.—18 தானி.௭.௰௩ மத்.௨௪.௩௰: ௨௬.௬௪. அப்.௧.௰௧.—19 சகரி.௰௨.௰. யோவா.௰௯.௩௭.

Digitized by Google

ளைக் குத்தினவர்களும் (அவரைக் காண்பார்கள்); பூமியின் கோத்திரத்தார்கள் எல்லாரும் அவரைக்குறித்துத் துக்கத்தோடே புலம்புவார்கள்; மெய்யாய் அப்படி இருக்கும்.—ஆமென்.

அ [1]இருக்கிறவரும் இருந்தவரும் வருகிறவருமாகிய சர்வவல்லமையுள்ள கர்த்தர் [2]நான் அல்பாவும் ஓமேகாவும், ஆதியும் அந்தமுமாய் இருக்கிறேன் என்று திருவுளம்பற்றுகிறார்.

கூ ¶ உங்கள் சகோதரனுமாய், இயேசுக்கிறிஸ்துவின்நிமித்தம் வருகிற உபத்திரவத்திற்கும், [3]அவருடைய இராச்சியத்திற்கும், பொறுமைக்கும் உங்களுடனே பங்காளனுமாய் இருக்கிற [4]யோவானாகிய நான், [5]பராபரனுடைய வசனத்தின்நிமித்தமும் இயேசுக்கிறிஸ்துவைக்குறித்துச் சாட்சிசொன்னதின்நிமித்தமும் பத்மு என்னப்பட்ட தீவிலே இருந்தேன்.

ய (அங்கே) [6]கர்த்தருடைய நாளில் [7]ஆவிக்குள்ளானேன்.

யக அப்பொழுது நீ காண்கிறதை ஒரு புத்தகத்திலே எழுதி ஆசியாவில் இருக்கிற எபேசு, சிமிருணா, பெருகமு, தியத்தைரா, சருதை, பிலதெல்பியா, இலவோதிக்கையா இவைகளில் உள்ள சபைகள் எழுக்கும் அனுப்பு என்று எனக்குப் பின்னாலே [8]எக்காளசத்தம்போன்ற மிகுந்த சத்தத்தைக் கேட்டேன்.

யஉ ¶ அப்பொழுது என்னுடனே சத்தமிட்டுப் பேசினவரைப் பார்க்கத் திரும்பினேன்.

யங திரும்பினபொழுது [9]ஏழு பொன் விளக்குத்தண்டுகளையும் ஏழு விளக்குத்தண்டுகளின் மத்தியிலே [10]நிலை அங்கியைத் தரித்து [11]மார்பருகே பொற்கச்சை கட்டியிருந்த [12]மனிதகுமாரனுக்கு ஒப்பானவரையும் கண்டேன்.

யச அவருடைய சிரசும் [13]மயிரும் வெண்மையான பஞ்சையும் உறைந்த மழையையும்போல வெண்மையாய் இருந்தன; [14]அவருடைய கண்கள் அக்கினிச்சுவாலையைப்போல இருந்தன.

யரு [15]அவருடைய கால்கள் உலைக்களத்தில் காய்கிற பிரகாசமுள்ள செம்பைப்போல இருந்தன; [16]அவருடைய சத்தம் பெருவெள்ள இரைச்சலைப்போல இருந்தது.

யசா அல்லாமலும் [17]அவர் வலதுகையிலே ஏழு நட்சத்திரங்களை ஏந்திக்கொண்டிருந்தார்; [18]அவர் வாயிலிருந்து இருபுறமும் கருக்குள்ள கட்கம் புறப்பட்டது; [19]அவருடைய முகம் உச்சிக்காலத்திலே வல்லமையாய்ப் பிரகாசிக்கிற சூரியனைப்போல இருந்தது.

யஎ [20]இப்படி அவரைக் கண்டபொழுது செத்தவனைப்போல அவருடைய பாதங்களிடத்தில் விழுந்தேன்: அப்பொழுது [21]அவர் தமது வலதுகரத்தை என்மேல் வைத்து (என்னுடனே) சொன்னதாவது: நீ பயப்படவேண்டுவதில்லை; [22]நான் முந்தினவனும் பிந்தினவனும் [23]உயிருள்ளவனுமானவன்.

யஅ நான் மரித்தும், இதோ [24]என்றென்றைக்கும் உயிரோடிருந்து, [25]மரணத்திற்கும் மரித்தோர் ஸ்தலத்திற்கும் உரிய திறவுகோல்களை உடையவனாய் இருக்கிறேன்.

யகூ ஆகையால் [26]நீ கண்டவைகளையும், [27]இருக்கிறவைகளையும், [28]இவைகளுக்குப் பின் நடப்பவைகளையும் எழுது.

உய என்னுடைய வலதுகரத்தில் நீ கண்ட [29]நட்சத்திரங்கள் ஏழின்

கி. பி. கூசா.

1 ச. வச. வெளி. ச.அ: யக. யஎ: யக. ரு.
2 ஏசா. சக. ச: சச. க: சஅ. யஉ: யக, யஎ. வச. வெளி. உ. அ: உக. க: உஉ. யக.
3 உரோ. அ. யஎ. உ தீமோ. உ. யஉ.
4 பிலி. க. எ: ச. யச. உ தீமோ. க. அ.
5 வெளி. க. கூ. உ. வச.
6 யோவா. உய. உக. அப். உய. எ. க கொரி. யக. உ.
7 அப். ய. ய. உ கொரி. யஉ. உ. வெளி. ச. உ: யஎ. க: உக. ய.
8 வெளி. ச. க: யஅ.
9 வெளி. உ. க.
10 தானி. ய. ரு.
11 வெளி. யரு. க.
12 ஏசே. க. உக. தானி. எ. யக: ய. யக. வெளி. யச. யச.
13 தானி. எ. கூ.
14 தானி. ய. க. வெளி. உ. யஅ: யகூ. யஉ.
15 ஏசே. க. எ. தானி. ய. க. வெளி. உ. யஅ.
16 ஏசே. சக. உ. தானி. ய. க. வெளி. யச. உ: யகூ. க.
17 உய. வச. வெளி. உ. க: க. க.
18 ஏசா. சக. உ. எபே. க. யஎ. எபி. ச. யஉ. வெளி. உ. யஉ. யக: யகூ. யரு, உக.
19 அப். உக. யக. வெளி. ய. க.

20 ஏசே.க.உஅ.—21 தானி.அ.யஅ: ய.ய.—22 ஏசா.சக.ச: சச.க: சஅ.யஉ. வெளி.உ.அ: உஉ.யங. யக.வச.
23 உரோ.க.கூ.—24 வெளி.ச.கூ: ரு.யச.—25 சங்.கஅ.உய. வெளி.உய.க.—26 யஉ.வச.ழ.
27 வெளி.உ.க.ழ.—28 வெளி.ச.க.ழ.—29 யக.வச.

Digitized by Google

இரகசியத்தையும் [1]பொன்விளக்குத்தண்டுகள் ஏழின் குறிப்பையுமே எழுது; இந்த நட்சத்திரங்கள் ஏழும் சபைகள் ஏழினுடைய [2]தூதர்களாய் இருக்கின்றன; [3]நீ கண்ட விளக்குத்தண்டுகள் ஏழும் ஏழு சபைகளாய் இருக்கின்றன.

## ௨. அதிகாரம்.

௧. எபேசு, ௮. சிமிருனா, ௰௨. பெர்கமு, ௰௮. தியத்தீரா என்ற சபைகளின் ஊழியக்காரர்களாகிய தூதர்களில் புகழப்படத்தக்கதும், இகழப்படத்தக்கதும், இன்னவைகளென்று எழுதி அனுப்பும்படி உண்டான கட்டளையைச் சொல்லியது.

எபேசுபட்டணத்திலுள்ள சபையின் தூதனுக்கு எழுதவேண்டியதென்னவெனில், [4]ஏழு நட்சத்திரங்களைத் தம்முடைய வலதுகரத்தில் ஏந்திக்கொண்டு, [5]ஏழு பொன்விளக்குத்தண்டுகளின் மத்தியிலே உலாவிக்கொண்டிருக்கிறவர் சொல்லுகிறதாவது:

௨ [6]உன் கிரியைகளையும் உன் பிரயாசத்தையும், உன் பொறுமையையும், நீ பொல்லாதவர்களுக்கு இடங்கொடாமல் இருக்கிறதையும், அப்போஸ்தலர் அல்லாதவர்கள் [7]தங்களை அப்போஸ்தலர் என்று சொல்லுகிறதை [8]நீ சோதித்து அவர்களைப் பொய்யரென்று கண்டறிந்ததையும்,

௩ நீ பொறுமையைக் காத்துக்கொண்டுவருகிறதையும், எனது நாமத்தின்நிமித்தம் [9]இளைப்பை அடையாமல் பிரயாசப்பட்டதையும் அறிந்திருக்கிறேன்.

௪ ஆனாலும் நீ ஆதியில் காட்டின அன்பை விட்டபடியால், உன்மேல் விசனமாய் இருக்கிறேன்.

௫ ஆகையால், நீ இப்படிப்பட்ட நிலைமையிலிருந்து விழுந்ததை நினைத்து மனந்திருப்பி ஆதியில் செய்த கிரியைகளைச் செய்வாயாக; [10]நீ மனந்திரும்பாவிட்டால், நான் சீக்கிரமாய் உன்னிடத்தில் வந்து, உன் விளக்குத்தண்டை அதனிடத்திலிருந்து நீக்குவேன்.

௬ [11]நிக்கோலாவின் மார்க்கத்தாரின் கிரியைகளைப் பகைக்கிறாய்; இது உன்னிடத்தில் உண்டு; அவைகளை நானும் பகைக்கிறேன்.

௭ ¶ ஆவியானவர் சபைகளுக்குச் சொல்லுகிறதைக் [12]காதுள்ளவன் கேட்கக்கடவன்; செயங்கொள்ளுகிறவன் எவனோ, அவனுக்குப் பராபரனுடைய பரதீசின் மத்தியில் இருக்கிற [13]ஜீவவிருட்சத்தின் கனியைப் [14]புசிக்கக்கொடுப்பேன் என்கிறார் என்று எழுது.

௮ ¶ சிமிருனா பட்டணத்திலுள்ள சபையின் தூதனுக்கு நீ எழுதவேண்டியது என்னவெனில், மரித்து உயிரோடிருக்கிற [15]முந்தினவரும் பிந்தினவருமானவர் சொல்லுகிறதாவது:

௯ [16]உன் கிரியைகளையும், உபத்திரவத்தையும் [17]ஐசுவரியமுள்ள உனக்கிருக்கிற தரித்திரத்தையும், [18]தங்களை யூதரென்று சொல்லியும் யூதராய் இராமல், [19]சாத்தானுடைய ஆலயமாய் இருக்கிறவர்கள் செய்கிற தூஷணத்தையும் அறிந்திருக்கிறேன்.

௰ [20]உனக்கு வரும் துன்பங்களைக்குறித்து எவ்வளவாகிலும் பயப்படாதிருப்பாயாக; கேள், நீங்கள் சோதிக்கப்படும்பொருட்டாகப் பசாசானவன் உங்களில் சிலரைக் காவலில் போடுவான்; பத்துநாள் உபத்திரவப்படுவீர்கள்; [21]ஆகிலும் மரணபரியந்தம் உண்மையாயிரு; அப்பொழுது [22]ஜீவகிரீடத்தை உனக்குத் தருவேன்.

௰௧ ¶ ஆவியானவர் சபைகளுக்குச் சொல்லுகிறதைக் [23]காதுள்ளவன் கேட்கக்கடவன்; செயங்கொள்ளுகிறவன் [24]இரண்டாம் மரணத்தால் சேதப்படுவதில்லை என்கிறார் என்று எழுது.

௰௨ ¶ பெர்கமு பட்டணத்தி

கி. பி. ௯௰௬.

1 ௰௨. ௨௪.
2 மல்கி. ௨. ௭. வெளி. ௨. ௧. ௪.
3 சகரி. ௪. ௨. மத். ௫. ௰௫. பிலி. ௨. ௰௫.
4 வெளி. ௧. ௰௬, ௨௰.
5 வெளி. ௧. ௰௩.
6 சங். ௧. ௬. ௯, ௰௩, ௰௯. ௨௪. வெளி. ௩. ௧, ௮, ௰௫.
7 ௨ கொரி. ௰௧. ௰௩. ௨ பே. ௨. ௧.
8 ௧ யோ. ௪. ௧.
9 கலா. ௬. ௯. எபி. ௰௨. ௩, ௫.
10 மத். ௨௧. ௪௧, ௪௩.
11 ௰௫. ௨௪.
12 மத். ௰௧. ௰௫: ௰௩. ௯, ௪௩: ௰௩. ௰௭, ௨௯. ௨௪. வெளி. ௩. ௬, ௰௩, ௨௨: ௰௩. ௯.
13 ௧ மோ. ௨. ௯.
14 வெளி. ௨௨. ௨. ௰௪.
15 வெளி. ௧. ௮, ௰௭, ௰௮.
16 ௨. ௨௪.
17 லூக். ௰௨. ௨௧. ௧ தீமோ. ௬. ௰௮. யாக். ௨. ௫.
18 ௨ ரோ. ௨. ௰௭, ௨௮, ௨௯: ௯. ௯.
19 வெளி. ௩. ௯.
20 மத். ௰. ௨௨.
21 மத். ௨௪. ௰௩.
22 யாக். ௧. ௰௨. வெளி. ௩. ௰௧.
23 எ. ௨௪. வெளி. ௰௩. ௯.
24 வெளி. ௨௰. ௰௪: ௨௧. ௮.

Digitized by Google

லுள்ள சபையின் தூதனுக்கு நீ எழுதவேண்டியது என்னவெனில், [1]இருபுறமும் கருக்குள்ள கட்கத்தையுடையவர் சொல்லுகிறதாவது:

௰௩ [2]உன் கிரியைகளையும், [3]சாத்தானுடைய ஆசனம் இருக்கிற இடத்தில் நீ குடியிருக்கிறதையும், சாத்தான் குடியிருக்கிற உங்களிடத்திலே எனக்கு உண்மையுள்ள சாட்சியாகிய அந்திப்பா என்பவன் கொல்லப்பட்ட நாட்களிலேயும் என்னைப்பற்றும் விசுவாசத்தை மறுதலியாமல், என்னுடைய நாமத்தைப் பற்றிக்கொண்டிருக்கிறதையும் அறிந்திருக்கிறேன்.

௰௪ ஆகிலும் சில காரியங்களைக் குறித்து உன்மேல் விசனமாய் இருக்கிறேன்; [4]விக்கிரகங்களுக்குப் படைத்தவைகளைப்புசிப்பதற்கும் [5]வேசித்தனம்பண்ணுவதற்கும் ஏதுவான கேடுகளை இஸ்ரவேல் புத்திரர்முன்பாகப் போடும்படிக்கு, [6]பாலாகென்பவனுக்குப் போதனைசெய்த பாலாமுடைய போதகத்தைப் பிடித்திருக்கிறவர்கள் உன்னிடத்தில் இருக்கிறார்கள்.

௰௫ அல்லாமலும் [7]நிக்கோலாவின் மார்க்கத்தாருடைய போதகத்தைப் பற்றிக்கொள்ளுகிறவர்களும் உன்னிடத்தில் உண்டு.

௰௬ ஆகையால் நீ மனந்திரும்புவாயாக; இல்லாவிட்டால் நான் சீக்கிரமாய் உன்னிடத்தில் வந்து, [8]என் வாயின் கட்கத்தால் அவர்களோடே யுத்தம்பண்ணுவேன்.

௰௭ ¶ ஆவியானவர் சபைகளுக்குச் சொல்லுகிறதைக் [9]காதுள்ளவன் கேட்கக்கடவன்; ஜெயங்கொள்ளுகிறவனுக்கு நான் மறைவான மன்னாவைப் புசிக்கக்கொடுத்து, அவனுக்கு வெண்மையான கல்லையும், அந்தக் கல்லின்மேலே எழுதப்பட்டதுமாய், பெறுகிறவனேயன்றி வேறொருவனும் அறியாததுமாய் இருக்கிற [10]புதிய நாமத்தையும் கட்டளையிடுவேன் என்கிறார் என்று எழுது.

௰௮ ¶ தியத்தைரா பட்டணத்திலுள்ள சபையின் தூதனுக்கு நீ எழுதவேண்டியது என்னவெனில், [11]அக்கினிச் சுவாலையைப் போன்ற கண்களும் உருக்கிய செம்பைப்போன்ற கால்களுமுள்ள தேவகுமாரன் சொல்லுகிறதாவது:

௰௯ [12]உன் கிரியைகளையும், உன் அன்பையும், உன் ஊழியத்தையும், உன் விசுவாசத்தையும், உன் பொறுமையையும், நீ பின்பு செய்த கிரியைகள் முந்தின கிரியைகளிலும் அதிகமாய் இருக்கிறதையும் அறிந்திருக்கிறேன்.

௨௰ ஆகிலும் (ஒன்றைக்குறித்து) உன்மேல் விதனமாய் இருக்கிறேன்; என்னவெனில், [13]வேசித்தனம்பண்ணும்படிக்கும், விக்கிரகங்களுக்குப் படைத்தவைகளைப் புசிக்கும்படிக்கும், தன்னைத் தீர்க்கதரிசி என்று சொல்லிக்கொள்ளுகிற [14]இயேசபேலென்னும் ஸ்திரீ என்னுடைய ஊழியக்காரருக்குப் போதித்து வஞ்சிக்கிறாள்; அவளுக்கு நீ இடம் கொடுக்கிறாய்.

௨௧ [15]அவள் மனந்திரும்பும்படியாய்க் காலத்தை அவளுக்குக் கொடுத்தேன்; அவள் தன் வேசிமார்க்கத்தைவிட்டு மனந்திரும்ப விருப்பமில்லை.

௨௨ (ஆகையால்) கேள், அவளும் அவளுடனேகூட விபசாரம் செய்தவர்களும் தங்களுடைய கிரியைகளைவிட்டு மனந்திரும்பாவிட்டால், நான் அவளை ஒரு கட்டிலின்மேலும், இவர்களை மிகுந்த உபத்திரவத்திலேயும் போட்டு, அவளுடைய பிள்ளைகளைக் கொலைசெய்வேன்.

௨௩ அப்பொழுது [16]நானே உள்ளிந்திரியங்களையும் இருதயங்களையும் ஆராய்கிறவர் என்று எல்லாச் சபைகளும் அறிந்துகொள்வார்கள்; அல்லாமலும், [17]உங்களில்

கி. பி. ௯௬.

1 வெளி. ௧. ௰௬.
2 ௨. ௰௪.
3 ௩. ௰௪.
4 ௨௰. ௰௪. அப். ௰௫. ௨௯. ௧ கொரி. ௮. ௯, ௰: ௰. ௰௯, ௨௰.
5 ௧ கொரி. ௯. ௰௩. ௲.
6 ௪ மோ. ௨௪. ௰௪: ௨௫. ௧: ௩௧.௰௬. ௨ பே. ௨. ௰௫. யூதா. ௰௧.
7 ௬. ௰௪.
8 ஏசா. ௰௧. ௪. ௨ தெச. ௨. ௮ வெளி. ௧. ௰௬: ௰௯. ௰௫, ௨௧
9 ௭, ௰௧. ௰௪.
10 வெளி. ௩.௰௨: ௰௯. ௰௨.
11 வெளி. ௧. ௰௪, ௰௫.
12 ௨. வசனம்.
13 ௨ மோ ௩௪. ௰௫. அப். ௰௫. ௨௰, ௨௯. ௧ கொரி. ௰.௰௯, ௨௰. ௰௪. ௰௪.
14 ௧ இரா. ௰௬. ௩௧: ௨௧. ௨௫. ௨ இரா. ௯. ௭.
15 உரோ. ௨. ௪. வெளி. ௯. ௨௰.
16 ௧ சாமு.௰௬.௭. ௧ நாளா. ௨௮. ௯: ௨௯. ௰௭. ௨ நாளா. ௬.௩௰. சங். ௭. ௯. எரே. ௰௧. ௨௰: ௰௭.௰: ௨௰. ௰௨. யோவா. ௨. ௨௪, ௨௫. அப். ௧. ௨௪. உரோ. ௮. ௨௭.
17 சங். ௬௨. ௰௨. மத். ௰௬. ௨௭. உரோ. ௨. ௬: ௰௪. ௰௨. ௨ கொரி. ௫. ௰. கலா. ௬. ௫. வெளி. ௨௰.௰௨.

அவனவனுடைய கிரியைகளின்படியே யாவருக்கும் பதில்கொடுப்பேன்.

௨௪ இந்தப் போதகத்தைப் பற்றிக்கொள்ளாமலும், அவர்கள் சொல்லுகிறபடி சாத்தானுடைய ஆழங்களை அறிந்துகொள்ளாமலும் இருக்கிற தியத்தைராவிலுள்ள மற்றவர்களாகிய உங்களுக்கு நான் சொல்லுகிறதாவது: [1]உங்கள்மேலே வேறொரு பாரத்தையும் போடமாட்டேன்.

௨௫ [2]உங்களுக்கு உண்டானதை நான் வருமளவும் பத்திரமாய்ப் பிடித்துக்கொள்ளுங்கள்.

௨௬ செயங்கொண்டு [3]முடிவுபரியந்தம் என் கிரியைகளைக் காத்துக்கொள்ளுகிறவன் எவனோ, [4]அவனுக்கு என்னுடைய பிதாவினிடத்தில் நான் பெற்றதுபோல, சனக்கூட்டங்கள்மேல் அதிகாரத்தைக் கொடுப்பேன்.

௨௭ [5]அவன் இருப்புக்கோலால் அவர்களை நடத்திக்கொள்வான்; அவர்கள் மண்கலங்களைப்போல நொறுக்கப்படுவார்கள்.

௨௮ அல்லாமலும் [6]விடிவெள்ளி நட்சத்திரத்தை அவனுக்குக் கொடுப்பேன்.

௨௯ ஆவியானவர் சபைகளுக்குச் சொல்லுகிறதைக் [7]காதுள்ளவனே கேட்கக்கடவனென்று எழுது.

## ௩. அதிகாரம்.

௧. சருதை சபையின் தூதன் கடிந்துகொள்ளப்பட்டு, ௩. குணப்படும்படி புத்திசொல்லப்பட்டு, குணப்படாமைக்குப் பயமுறுத்தப்பட்டது. ௭. பிலதெல்பியா சபையின் தூதன், ௰. தன் சுறுசுறுப்புக்காகவும் பொறுமைக்காகவும் மெச்சிக்கொள்ளப்பட்டது. ௰௪. இலவோதிக்கையா சபையின் தூதன் அனலும் குளிரும் இல்லாதிருந்ததினால் கடிந்துகொள்ளப்பட்டு, ௰௮. சுறுசுறுப்படையும்படி ஏவப்பட்டது. ௨௰. கிறிஸ்து வாசலண்டையில் நின்று தட்டுகிறார் என்பது.

சருதை ஊரிலுள்ள சபையின் தூதனுக்கு நீ எழுதவேண்டியது என்னவெனில், பராபரனுடைய [8]ஏழு ஆவிகளையும் ஏழு நட்சத்திரங்களையும் உடையவர் சொல்லுகிறதாவது: [9]உன் கிரியைகளை அறிந்திருக்கிறேன்; நீ உயிருள்ளவன் என்றுபேர்கொண்டிருந்தும், [10]செத்தவனாய் இருக்கிறாய்.

௨ உன் கிரியைகள் பராபரனுக்கு முன்பாக நிறைந்தவைகள் அல்லவென்று கண்டிருக்கிறேன்; ஆகையால் நீ விழித்துக்கொண்டு சாகிறதற்கு ஏதுவான மற்றவர்களை ஸ்திரப்படுத்துவாயாக.

௩ மேலும் [11]நீ கேட்டுப் பெற்றுக்கொண்ட வகையை நினைத்துக் கைக்கொண்டு [12]மனந்திரும்புவாயாக; [13]நீ விழித்துக்கொள்ளாவிட்டால் திருடனைப்போல உன்மேல் வருவேன்; நான் உன்மேல் வரும் நேரத்தை அறியாதிருப்பாய்.

௪ [14]தங்கள் வஸ்திரங்களை அசுசிப்படுத்தாத [15]சிலபேர் சருதை ஊரிலே உன்னோடே உண்டு; அவர்கள் பாத்திரவான்களானபடியால் என்னுடனேகூட [16]வெண்மையான உடைகளைத் தரித்து நடப்பார்கள்.

௫ ¶ செயங்கொள்ளுகிறவன் [17]வெண்மையான வஸ்திரங்களால் உடுத்தப்படுவான்; நான் [18]சீவபுத்தகத்தில் [19]அவனுடைய நாமத்தைக் கிறுக்கிப்போடாமல், அதை என் பிதா முன்பாகவும் [20]அவருடைய தூதர் முன்பாகவும் அறிக்கைபண்ணுவேன்.

௬ ஆவியானவர் சபைகளுக்குச் சொல்லுகிறதைக் [21]காதுள்ளவன் கேட்கக்கடவன் என்று எழுது.

௭ ¶ பிலதெல்பியா ஊரிலுள்ள சபையின் தூதனுக்கு நீ எழுதவேண்டியது என்னவெனில், [22]தாவீதின் திறவுகோலை உடையவருமாய், [23]ஒருவரும் பூட்டக்கூடாதபடிக்குத் திறக்கிறவருமாய், [24]ஒருவரும் திறக்கக்கூடாதபடிக்குப் பூட்டுகிறவருமாய் இருக்கிற [25]பரி

கி. பி. ௯௬.

1 அப். ௰௫. ௨௮.
2 வெளி. ௩. ௰௧.
3 யோவா. ௬. ௨௯. ௧ யோ. ௩. ௨௪.
4 மத். ௰௯. ௨௮. லூக். ௨௨. ௨௯. ௩௦. ௧ கொரி. ௬. ௩. வெளி. ௩. ௨௧: ௨௰. ௪.
5 சங். ௨. ௮, ௯: ௪௯. ௰௪. தானி. ௭. ௨௨. வெளி. ௰௨. ௫: ௰௯. ௰௫.
6 ௨ பே. ௧. ௰௯. வெளி. ௨௨. ௰௬.
7 ௭. வச.
8 வெளி. ௧. ௪. ௰௬: ௪. ௫: ௫. ௬.
9 வெளி. ௨. ௨.
10 எபே. ௨. ௧, ௫. ௧ தீமோ. ௫. ௬.
11 ௧ தீமோ. ௬. ௨௰. ௨ தீமோ. ௧. ௰௩. ௰௪. வச.
12 ௰௯. வச.
13 மத். ௨௪. ௪௨, ௪௩: ௨௫. ௰௩. மாற். ௰௩. ௩௩. லூக். ௰௨. ௩௯. ௧ தெச. ௫. ௨, ௬. ௨ பே. ௩. ௰. வெளி. ௰௬. ௰௫.
14 யூதா. ௨௩.
15 அப். ௧. ௰௫.
16 வெளி. ௪. ௪: ௬. ௰௧: ௭. ௯, ௰௪.
17 வெளி. ௰௯. ௮.
18 பிலி. ௪. ௩. வெளி. ௰௩. ௮: ௰௭. ௮: ௨௰. ௰௨. ௨௧. ௨௭.
19 ௨ மோ. ௩௨. ௩௨. சங். ௬௯. ௨௮.
20 மத். ௰. ௩௨. லூக். ௰௨. ௮.
21 வெளி. ௨. ௭.
22 ஏசா. ௨௨. ௨௨. லூக். ௧. ௩௨. வெளி. ௧. ௰௮.
23 மத். ௰௬. ௰௯.
24 யோபு. ௰௨. ௰௪.— 25 அப். ௩. ௰௪.

Digitized by Google

சுத்தமும் [1]சத்தியமும் உள்ளவர் சொல்லுகிறதாவது:

௮ [2]உன் கிரியைகளை அறிந்திருக்கிறேன், கொஞ்சப்பெலன் (மாத்திரம்) உனக்கு இருந்தும் நீ என்னுடைய நாமத்தை மறுதலியாமல் எனது வசனத்தைக் கைக்கொண்டபடியினாலே, இதோ, உனக்குமுன்பாகத் [3]திறந்திருக்கிற வாசலைக் கொடுத்தேன்; அதை ஒருவனும் பூட்டமாட்டான்.

௯ கேள், யூதரல்லாதிருந்தும் தங்களை யூதரென்று பொய்சொல்லுகிறவர்களாகிய [4]சாத்தானுடைய ஆலயத்தாரில் (சிலரை) உனக்குத் தருகிறேன்; கேள், அவர்கள் உன் பாதங்களுக்குமுன்பாக வந்து பணிந்து, நான் உன்மேல் அன்பாய் இருக்கிறதை அறிந்துகொள்ளும்படி [5]செய்வேன்.

௰ என்னுடைய பொறுமையைக் குறித்துச் சொல்லுகிற வசனத்தை நீ கைக்கொண்டபடியினாலே நானும் [6]பூமியின்மேல் குடியிருக்கிறவர்களைச் சோதிக்கும்படிக்கு, [7]பூச்சக்கரத்தின்மேல் எங்கும் வரும் சோதனைக்காலத்திற்குத் தப்பும்படி [8]உன்னைக் காப்பாற்றுவேன்.

௰௧ [9]சீக்கிரமாய் வருகிறேன்; [10]ஒருவனும் உன் கிரீடத்தை எடுத்துக்கொள்ளாதபடிக்கு உனக்கு உள்ளதைப் [11]பத்திரமாய்ப் பற்றிக்கொள்வாயாக.

௰௨ ¶ ஜெயங்கொள்ளுகிறவனை நான் என் தேவனுடைய [12]ஆலயத்திலே ஸ்தம்பமாக்குவேன், அதில்நின்று அவன் ஒருக்காலும் நீங்கான்; மேலும் என் தேவனுடைய நாமத்தையும் என் தேவனால் வானத்திலிருந்து இறங்குகிற [13]புதிய எருசலேமாகிய என் தேவனுடைய பட்டணத்தின் நாமத்தையும், [14]எனது புதிய நாமத்தையும் [15]அவன்மேலே எழுதுவேன்.

௰௩ ஆவியானவர் சபைகளுக்குச் சொல்லுகிறதைக் [16]காதுள்ளவன் கேட்கக்கடவன் என்று எழுது.

௰௪ ¶ இலவோதிக்கேயா ஊரிலுள்ள* சபையின் தூதனுக்கு நீ எழுதவேண்டியது என்னவெனில், [17]உண்மையும் சத்தியமுமான சாட்சியுமாய், [18]பராபரனுடைய சிருட்டிகளுக்கு ஆதியுமாய் இருக்கிற [19]ஆமென் என்பவர் சொல்லுகிறதாவது:

௰௫ [20]உன் கிரியைகளை அறிந்திருக்கிறேன்; நீ குளிர்ச்சியுள்ளவனுமல்ல, அனலுள்ளவனுமல்ல, நீ குளிர்ச்சியையாவது அனலையாவது உள்ளவனானால் நலமாயிருக்கும்.

௰௬ இப்படி நீ குளிர்ச்சியும் அனலும் இல்லாமல் வெதுவெதுப்புள்ளவனானபடியினாலே உன்னை என் வாயில்நின்றும் வாந்திபண்ணுவேன்.

௰௭ நீ நிர்ப்பாக்கியமுள்ளவனும் பரதபிக்கப்படத்தக்கவனும், எளியவனும் குருடனும் நிருவாணியாயும் இருக்கிறதை அறியாமல், [21]நான் ஐசுவரியமுள்ளவன் என்றும், அதிக திரவியத்தைச் சம்பாதித்தவன் என்றும், எனக்கு ஒன்றும் வேண்டுவதில்லை என்றும் சொல்லுகிறாய்.

௰௮ ஆதலால் நான் உனக்கு ஆலோசனையாய்ச் சொல்லுகிறதாவது: நீ ஐசுவரியவானாகும்படிக்கு நெருப்பிலே புடமிடப்பட்ட பொன்னையும், உன் நிருவாணமாகிய அவலட்சணம் தோன்றாமல் இருக்கத்தக்கதாக நீ உடுத்திக்கொள்ளும்படிக்கு [22]வெண்மையான வஸ்திரங்களையும் என்னிடத்திலே வாங்கிக்கொள்ளவும், நீ பார்வை அடையும்படிக்கு உன் கண்களுக்கு மாத்திரையைப் போடவும் [23]வேண்டுமென்று சொல்லுகிறேன்.

௰௯ [24]என்னால் சிநேகிக்கப்படுகிறவர்கள் எவர்களோ, அவர்களைக் கடிந்துகொண்டு தண்டிக்கி

கி. பி. ௯௬.

1 ௧ யோ. ௫. ௨௰. ௰௪. வ௪. வெளி. ௧. ௫: ௬. ௰: ௰௬. ௰௧.
2 ௧, வ௪.
3 ௧ கொரி. ௰௬. ௯. ௨ கொரி. ௨. ௰௨.
4 வெளி. ௨. ௯.
5 ஏசா. ௪௯. ௨௩: ௬௰. ௰௪.
6 ஏசா. ௨௪. ௰௭.
7 லூக். ௨. ௧.
8 ௨ பே. ௨. ௯.
9 பிலி. ௪. ௫. வெளி. ௧. ௩: ௨௨. ௭, ௰௨, ௨௰.
10 வெளி. ௨. ௰.
11 ௧. வ௪. வெளி. ௨. ௨௫.
12 ௧ இரா. ௭. ௨௧. கலா. ௨. ௯.
13 கலா. ௪. ௨௬. எபி. ௰௨. ௨௨. வெளி. ௨௧. ௨, ௰.
14 வெளி. ௨௨. ௪.
15 வெளி. ௨. ௰௭: ௰௪. ௧: ௨௨. ௪.
16 வெளி. ௨. ௭.
* அல்லது இலவோதிக்கையா ஊராரின்.
17 வெளி. ௧. ௫: ௰௯. ௰௧: ௨௨. ௯. ௭. வ௪.
18 கொலோ. ௧. ௰௫.
19 ஏசா. ௬௫. ௰௬.
20 ௧. வ௪.
21 ஓசே. ௰௨. ௮. ௧ கொரி. ௪. ௮.
22 ௨ கொரி. ௫. ௩. வெளி. ௭. ௰௩: ௰௯. ௰௫: ௰௯. ௮.
23 ஏசா. ௫௫. ௧. மத். ௰௩. ௪௪: ௨௫. ௯.
24 யோபு. ௫. ௰௭. வாக். ௧. ௰௨. எபி. ௰௨. ௫, ௧. பாக். ௩. ௰௨.

Digitized by Google

றேன்; ஆகையால் நீ சாக்கிரதையாயிருந்து மனம் திரும்பக்கடவாய்.

௨௰ இதோ, வாசற்படியிலே நின்று தட்டுகிறேன்; [1]ஒருவன் என் சத்தத்தைக்கேட்டுக் கதவைத் திறந்தால், [2]அவனிடத்தில் நான் பிரவேசித்து அவனோடே இராப்போசனம்பண்ணுவேன்; அவனும் என்னோடே இராப்போசனம்பண்ணுவான்.

௨௧ ¶ நான் செயம்கொண்டு என் பிதாவினுடைய ஆசனத்திலே அவரோடேகூட உளுக்காந்ததுபோல செயம்கொள்ளுகிறவன் என்னுடைய ஆசனத்திலே என்னோடேகூட [3]உளுக்காரும்படி அருள்செய்வேன்.

௨௨ ஆவியானவர் சபைகளுக்குச் சொல்லுகிறதைக் [4]காதுள்ளவன் கேட்கக்கடவன் என்று எழுது என்றார்.

## ௪. அதிகாரம்.

௧. யோவான் கண்ட பரமண்டலத்திலுள்ள பராபரனுடைய ஆசனத்தையும், ௪. இருபத்துநாலு மூப்பர்களையும், ௬. சர்வாங்கமும் கண்கள் நிறைந்த நாலு சீவன்களையும், ௰. மூப்பர்கள் தங்கள் கிரீடங்களைக் கழற்றி ஆசனத்தின்மேல் உளுக்காந்திருக்கிறவரை வணங்கினதையுங்குறித்துச் சொல்லியது.

இவற்றிற்குப் பின்பு, அதோ வானத்திலே ஒரு வாசல் திறந்திருக்கக் கண்டேன்; அல்லாமலும் முன்னே நான் கேட்கும்படி எக்காளம்போல என்னுடனே [5]பேசின சத்தம் என்னுடனே சொன்னது: [6]இங்கே ஏறிவா, [7]இதற்குப் பின்பு சம்பவிக்கத்தக்கவைகளை உனக்குக் காண்பிப்பேன் என்றார்.

௨ ¶ உடனே [8]ஆவிக்குள்ளானேன்; அப்பொழுது வானத்தில் [9]ஒரு ஆசனம் வைக்கப்பட்டிருக்கவும், அந்த ஆசனத்தின்மேல் ஒருவர் உளுக்காந்திருக்கவும் கண்டேன்.

௩ (அதில்) உளுக்காந்திருந்தவர் பார்வைக்கு ரவாக்கல்லும் சிவப்புக்கல்லும்போலத் தோன்றினார்; அந்த [10]ஆசனத்தைச் சுற்றி ஒரு வானவில் இருந்தது; அது பார்வைக்கு மரகதம்போலத் தோன்றிற்று.

௪ மேலும் [11]அந்த ஆசனத்தைச் சூழ இருபத்துநான்கு ஆசனங்களும் இருந்தன; அந்த ஆசனங்களின்மேலே [12]வெண்மையான வஸ்திரங்கள் தரிப்பிக்கப்பட்ட இருபத்துநான்கு மூப்பர்கள் உளுக்காந்திருந்தார்கள்; [13]அவர்கள் தங்கள் சிரசுகளின்மேலே பொன்கிரீடங்களை உடையவர்களாய் இருந்தார்கள்.

௫ அன்றியும் அந்த ஆசனத்திலிருந்து [14]மின்னும், இடிமுழக்கங்களும், (மற்றச்) சத்தங்களும் புறப்பட்டன; மேலும் [15]பராபரனுடைய ஏழு ஆவிகளாகிய [16]ஏழு தீவட்டிகள் ஆசனத்திற்குமுன்பாக எரிகிறவைகளாய் இருந்தன.

௬ மேலும் அந்த ஆசனத்திற்கு முன்பாகப் [17]பளிங்குக் கண்ணாடியைப்போன்ற கடல் இருந்தது; அதுவுமல்லாமல் [18]அந்த ஆசனத்தின் மத்தியிலும் ஆசனத்தின் சுற்றிலும் நான்கு சீவன்கள் இருந்தன; அவைகள் முன்புறமும் [19]பின்புறமும் கண்களால் நிறைந்தவைகளாய் இருந்தன.

௭ [20]முதலாம் சீவன் சிங்கத்திற்கு ஒப்பாகவும், இரண்டாம் சீவன் கன்றுக்குட்டிக்கு ஒப்பாகவும், மூன்றும் சீவன் மனிதனைப்போன்ற முகமுள்ளதாகவும்,நான்காம் சீவன் பறக்கிற கழுகுக்கு ஒப்பாகவும் இருந்தன.

௮ அந்த நான்கு சீவன்களிலும் ஒவ்வொன்று [21]அவ்வாறு சிறகுகள் உள்ளவைகளுமாய், சுற்றிலும் [22]உள்ளேயும் கண்களால் நிறைந்தவைகளுமாய், [23]இருந்தவரும் இருக்கிறவரும் வருகிறவருமாகிய [24]சர்வவல்லமையுள்ள தேவனாயிருக்கிற பராபரன் [25]பரிசுத்தர், பரிசுத்தர், பரிசுத்தர் என்று

கி. பி. ௯௬.



1 லூக். ௰௨. ௩௭.
2 யோவா. ௰௪. ௨௩.
3 மத். ௰௯. ௨௮. லூக். ௨௨. ௩௰. ௧ கொரி. ௬. ௨. ௨ தீமோ. ௨. ௰௨. வெளி. ௨. ௨௬, ௨௭.
4 வெளி. ௨. ௭.
5 வெளி. ௧. ௰.
6 வெளி. ௰௧. ௰௨.
7 வெளி. ௧. ௰௯: ௨௨. ௬.
8 வெளி. ௧. ௰: ௰௭. ௩; ௨௧. ௰.
9 எசா. ௬. ௧. எரே. ௰௭. ௰௨. எசே. ௧. ௨௬: ௰. ௧. தானி. ௭. ௯.
10 எசே. ௧. ௨௮.
11 வெளி.௰௧.௰௬.
12 வெளி. ௩. ௪, ௫: ௬. ௰௧: ௭. ௯, ௰௩, ௰௪: ௰௯. ௰௪.
13 ௰. ௰௪.
14 வெளி. ௮. ௫: ௰௧. ௰௯.
15 வெளி. ௧. ௪: ௫. ௬.
16 ௨ மோ. ௩௭. ௨௩. ௨ நாளா. ௪. ௨௰. எசே. ௧. ௰௩. சகரி. ௪. ௨.
17 ௨ மோ. ௨௪. ௰. வெளி. ௰௫. ௨.
18 எசே. ௧. ௫.
19 ௰. ௰௪.
20 எசே. ௧. ௰௰. ௰: ௰. ௰௪.
21 எசா. ௬. ௨.
22 ௬. ௰௪.
23 வெளி. ௧. ௪.
24 வெளி. ௧. ௮.
25 எசா. ௬. ௩.

Digitized by Google

இரவும் பகலும் ஓய்வில்லாமல் சொல்லிக்கொள்ளுகிறவைகளுமாய் இருந்தன.*

௯ ¶ மேலும் ஆசனத்தின்மேல் உளுக்காந்திருந்து [1]என்றென்றைக்கும் உயிரோடிருக்கிறவருக்கு அந்தச் சீவன்கள் துதியையும் கனத்தையும் தோத்திரத்தையும் செலுத்தும்பொழுது,

௰ [2]இருபத்துநான்கு மூப்பர்களும், ஆசனத்தின்மேல் உளுக்காந்தவருக்குமுன்பாக வணக்கமாய் [3]விழுந்து, என்றென்றைக்கும் உயிரோடிருக்கிறவரைத் தொழுதுகொண்டு, [4]தங்கள் கிரீடங்களை ஆசனத்தின்முன்பாக வைத்து,

௰௧ ஆண்டவரே, தேவரீர் [5]சகலத்தையும் சிருட்டித்தீர், உம்முடைய சித்தத்தினாலே அவைகள் உண்டாயிருக்கிறவைகளும் சிருட்டிக்கப்பட்டவைகளுமாய் இருக்கின்றன; ஆகையால், மகிமையையும் கனத்தையும் வல்லமையையும் பெற்றுக்கொள்ளுகிறதற்கு [6]பாத்திரமாயிருக்கிறீர் என்று புகழுகிறார்கள்.

## ௫. அதிகாரம்.

௧. ஏழு முத்திரைகளால் முத்திரிக்கப்பட்ட புத்தகத்தைத் திறக்க அடிக்கப்பட்ட ஆட்டுக்குட்டியானவர்மாத்திரமே பாத்திரரென்றும், ௮. அதினால் மூப்பர்கள் அவரைப் புகழ்ந்து, ௯. இரத்தத்தினால் தங்களை மீட்டாரென்றும் அறிக்கைபண்ணினதைச் சொல்லியது.

அன்றியும் அந்த ஆசனத்திலே உளுக்காந்தவருடைய வலதுகையிலே, உள்ளும்புறம்பும் எழுதப்பட்டும், [7]ஏழு முத்திரைகளாலே பத்திரப்படுத்தப்பட்டும் இருந்த [8]ஒரு புத்தகத்தைக் கண்டேன்.

௨ பலமுள்ள ஒரு தூதனையும் கண்டேன்; அவன் இந்தப் புத்தகத்தைத் திறக்கிறதற்கும் இதின் முத்திரைகளை உடைக்கிறதற்கும் பாத்திரர் யாரென்று மிகுந்த சத்தத்தோடே கூப்பிட்டான்.

௩ வானத்திலாவது, பூமியின்மேலாவது, பூமியின்கீழாவது [9]ஒருவனும் அந்தப் புத்தகத்தைத் திறக்கவும் அதிலே நோக்கிப்பார்க்கவும் கூடாதிருந்தது.

௪ ஒருவனும் அந்தப் புத்தகத்தைத் திறந்து, அதில் நோக்கிப்பார்க்கிறதற்குப் பாத்திரனாகக் காணப்படாததினாலே நான் மிகவும் அழுதேன்.

௫ அப்பொழுது மூப்பர்களில் ஒருவன் என்னை நோக்கி, நீ அழவேண்டுவதில்லை; இந்தப் புத்தகத்தைத் திறந்து, [10]இதின் ஏழு முத்திரைகளையும் உடைக்கும்படிக்குத் [11]தாவீதின் வேராகிய [12]யூதா கோத்திரத்தில் தோன்றிய சிங்கம் இதோ செயங்கொண்டிருக்கிறது என்றான்.

௬ ¶ அப்பொழுது நான் பார்த்து, ஆசனத்திற்கும் நான்கு சீவன்களுக்கும் மூப்பர்களுக்கும் மத்தியிலே ஒரு ஆட்டுக்குட்டி நிற்கக்கண்டேன்; [13]அது அடிக்கப்பட்ட வண்ணமாகவும், ஏழு கொம்புகளையும் பூமி எங்கும் அனுப்பப்பட்ட பராபரனுடைய [14]ஏழாவிகளாகிய [15]ஏழு கண்களையும் உடையதாகவும் இருந்தது.

௭ மேலும் அது வந்து ஆசனத்தின்மேல் உளுக்காந்தவருடைய [16]வலதுகரத்தில் இருந்த புத்தகத்தை வாங்கிற்று.

௮ ¶ அந்தப் புத்தகத்தை அது வாங்கினபொழுது, [17]அந்த நான்கு சீவன்களும் இருபத்துநான்கு மூப்பர்களும் தங்கள் [18]சுரமண்டலங்களையும், [19]பரிசுத்தவான்களுடைய செபங்களாகிய தூபவருக்கங்களால் †நிறைந்த பொற்கலசங்களையும் பிடித்துக்கொண்டு, ஆட்டுக்குட்டிக்கு முன்பாக வணக்கமாய் விழுந்து,

௯ தேவரீர் [20]அடிக்கப்பட்டு உம்முடைய இரத்தத்தினாலே [21]சகல கோத்திரங்களிலும் பாஷைக்காரரிலும் தேசத்தாரிலும் (மற்

கி. பி. ௯௬.

* இரேக்கு, இரவும்பகலும் சொல்லிக்கொண்டு ஓயாமலிருந்தன.

1 வெளி. ௧. ௰௮: ௫. ௰௪: ௰௫. ௭.
2 வெளி. ௫. ௮, ௰௪.
3 ௯. வச.
4 ௪. வச.
5 ௧ மோ. ௧. ௧. அப். ௰௭. ௨௪. எபே. ௩. ௯. கொலோ. ௧. ௰௬. வெளி. ௰. ௬.
6 வெளி. ௫. ௰௨.
7 ஏசா. ௨௯. ௰௧. தானி. ௰௨. ௪.
8 எசே. ௨. ௯,௰.
9 ௰௧. வச.
10 ௧. வச. வெளி. ௬. ௧.
11 ஏசா. ௰௧. ௧,௰. உரோ. ௰௫. ௰௨. வெளி. ௨௨. ௰௬.
12 ௧ மோ. ௪௯. ௯, ௰. எபி. ௭. ௰௪.
13 ஏசா. ௫௩. ௭. யோவா. ௧. ௨௯, ௩௬. ௧ பே. ௧. ௰௯. வெளி. ௰௩. ௮. ௯, ௰௨. வச.
14 வெளி. ௪. ௫.
15 சகரி. ௩. ௯: ௪. ௰.
16 வெளி. ௪. ௨.
17 வெளி. ௪. ௮, ௰.
18 வெளி. ௰௪. ௨: ௰௫. ௨.
19 சங். ௱௪௧. ௨. வெளி. ௮. ௩,௪.

† அல்லது சுகந்தங்களால்.

20 ௯. வச.
21 தானி. ௩. ௪: ௬. ௨௫. வெளி. ௭. ௯: ௰௧. ௯: ௰௪. ௬.

Digitized by Google

றச்) சனக்கூட்டங்களிலும் [1]எங்களைப் பராபரனுக்காக வாங்கிக்கொண்டு,

ய [2]எங்கள் பராபரனுக்குமுன்பாக எங்களை இராசாக்களும் ஆசாரியரும் ஆக்கினீர்; நாங்கள் பூமியிலே ஆளுகைசெய்வோம்; ஆகையால் நீர் இந்தப் புத்தகத்தை வாங்கி இதின் முத்திரைகளை உடைக்கிறதற்குப் [3]பாத்திரராயிருக்கிறீர் என்று [4]புதிய பாட்டைப் பாடினார்கள்.

யக பின்னும் நான் பார்த்தபொழுது, அந்த ஆசனத்தையும் சீவன்களையும் மூப்பர்களையும் [5]சூழ்ந்திருந்த அநேகம் தூதர்களுடைய சத்தத்தைக் கேட்டேன்; [6]அவர்களுடைய இலக்கம் பதினாயிரத்திற்குப் பதினாயிரமும், ஆயிரத்திற்கு ஆயிரமுமாய் இருந்தது.

யஉ அவர்களும், அடிக்கப்பட்ட ஆட்டுக்குட்டியானவர் வல்லமையையும் ஐசுவரியத்தையும், ஞானத்தையும், பலத்தையும், கனத்தையும், மகிமையையும், தோத்திரத்தையும் பெற்றுக்கொள்ளுகிறதற்குப் [7]பாத்திரராயிருக்கிறார் என்று மிகுந்த சத்தத்தோடே சொன்னார்கள்.

யங அல்லாமலும் [8]வானத்திலும் பூமியிலும் பூமியின்கீழும் இருக்கிற சிருட்டிகள் யாவும் சமுத்திரத்தின்மேல் உள்ளவைகளும் இவற்றினுள் அடங்கிய வஸ்துக்கள் யாவும் [9]ஆசனத்தின்மேல் உளுக்காந்திருக்கிறவருக்கும் ஆட்டுக்குட்டியானவருக்கும் [10]தோத்திரமும், கனமும், மகிமையும், வல்லமையும், என்றென்றைக்கும் உண்டாவதாக என்று சொல்லக் கேட்டேன்.

யச [11]அதற்கு நான்கு சீவன்களும், ஆமன் என்று சொல்லிற்று; மறுபடியும் அந்த இருபத்துநான்கு மூப்பர்களும் (வணக்கமாய்) விழுந்து [12]என்றென்றைக்கும் உயிரோடிருக்கிறவரைத் தொழுது கொண்டார்கள்.

கி. பி. கூசு.

1 அப். உய. உஅ. உரோ. ங. உச. க கொரி. சா. உய: எ. உங. எபே. க. எ. கொலோ. க. யச. எபி. கூ. யஉ. க பே. க. யஅ, யகூ. உ பே. உ. க. க யோ. க. எ. வெளி. யச. ச.
2 உ மோ. யகூ. சா. க பே. உ. கூ. வெளி. க. சா: உய. சா: உஉ. ரு.
3 வெளி. ச. யக.
4 சங். சய. ங. வெளி. யச. ங.
5 வெளி. ச. ச, சா.
6 சங். சுஅ. யஎ. தானி. எ. ய. எபி. யஉ. உஉ.
7 வெளி. ச. யக.
8 பிலி. உ. ய. க. வச.
9 வெளி. சா. யசா: எ. ய.
10 க நாளா. உகூ. யக. உரோ. கக: ஙசா. கசா. உஎ. க தீமோ. க, யஎ. க பே. ச. யக: ரு. யக. வெளி. க. சா.
11 வெளி. யகூ. ச.
12 வெளி. ச. கூ, ய.
13 வெளி. ரு. ரு, சா, எ.
14 வெளி. ச. எ.
15 சகரி. சா. ங. வெளி. யகூ. யக.
16 சங். சரு. ச, ரு.
17 சகரி. சா. யக. வெளி. யச. யச.
18 வெளி. ச. எ.
19 சகரி. சா. உ.
20 வெளி. ச. எ.
21 சகரி. சா. உ.

## சா. அதிகாரம்.

க. முத்திரைகள் ஒவ்வொன்றாய்த் திறக்கப்பட்டபோது, உலக முடிவுமட்டும் சம்பவிக்கப்போகிற காரியங்கள் தீர்க்கதரிசனமாய்க் குறிக்கப்பட்டது.

[13]பின்பு ஆட்டுக்குட்டியானவர் முத்திரைகளில் ஒன்றைப் பேர்க்கக் கண்டேன்; அல்லாமலும் [14]நான்கு சீவன்களில் ஒன்று (என்னைநோக்கி,) நீ வந்து பார் என்று இடிமுழக்கம்போலச் சொல்லக் கேட்டேன்.

உ அப்பொழுது நான் பார்க்கையில், [15]வெண்மையான குதிரையைக் கண்டேன்; [16]அதின்மேல் இருந்தவன் வில்லைப் பிடித்திருந்தான்; [17]அவனுக்கு ஒரு கிரீடம் கொடுக்கப்பட்டது; அவன் செயமுள்ளவனாய்ச் செயிக்கும்படிக்குப் புறப்பட்டான்.

ங ¶ பின்பு அவர் இரண்டாம் முத்திரையைப் பேர்த்தபொழுது, [18]இரண்டாம் சீவனானது, நீ வந்து பார் என்று சொல்லக்கேட்டேன்.

ச [19]உடனே அக்கினி நிறமுள்ள வேறொரு குதிரை புறப்பட்டது; அதின்மேல் இருந்தவன் பூமியில் உள்ளவர்கள் ஒருவரை ஒருவர் கொலைசெய்யத்தக்கதாகச் சமாதானத்தைப் பூமியிலிருந்து எடுத்துப்போடுகிறதற்கு அதிகாரமும், ஒரு பெரிய கட்கமும் அவனுக்குக் கொடுக்கப்பட்டன.

ரு ¶ பின்பு அவர் மூன்றும் முத்திரையைப் பேர்த்தபொழுது, [20]மூன்றும் சீவனானது, நீ வந்து பார் என்று சொல்லக்கேட்டேன், உடனே நான் பார்க்கையில் [21]ஒரு கறுப்புக் குதிரையைக் கண்டேன்; அதின்மேல் இருந்தவன் ஒரு தராசைத் தன் கையில் பிடித்திருந்தான்.

சா அப்போது, உழக்குக் கோதுமைக்கு* ஒரு தேநாரிப்பணம், மூவுழக்கு வாற்கோதுமைக்கு ஒரு

* அது ஒரு ஒபின் குவாட்டையும் அதில் பன்னிரண்டில் ஒன்றையும் குறிக்கும் அளவு.

Digitized by Google

தோரிப்பணமென்றும், [1]எண்ணெயையும் பழஇரசத்தையும் சேதப்படுத்தாதிருப்பாயாக என்றும் நான்கு சீவன்களின் மத்தியிலிருந்து உண்டான சத்தத்தைக் கேட்டேன்.

௭ ¶ பின்பு அவர் நான்காம் முத்திரையைப் பேர்த்தபொழுது, [2]நான்காம் சீவனானது, நீ வந்துபார் என்று சொல்லக்கேட்டேன்.

௮ [3]உடனே நான் பார்க்கையில் மங்கின நிறமுள்ள குதிரையைக் கண்டேன்; அதின்மேல் இருந்தவனுக்கு மரணமென்றுபேர்; மரித்தோர் ஸ்தலம் அவனுடனேகூடச் சென்றது; [4]கட்கத்தினாலும், பஞ்சத்தினாலும், சாவினாலும், [5]பூமியின் துஷ்டமிருகங்களினாலும் பூமியின் கால்பங்கில் உள்ளவர்களைக் கொலைசெய்யும்படிக்கு அதிகாரம் அவனுக்குக்* கொடுக்கப்பட்டது.

௯ ¶ பின்பு அவர் ஐந்தாம் முத்திரையைப் பேர்த்தபொழுது, [6]பராபரனுடைய வசனத்தின்நிமித்தமும் [7]தாங்கள் கொடுத்த சாட்சியின்நிமித்தமும் கொல்லப்பட்டவர்களுடைய [8]ஆத்துமாக்களைப் [9]பலிபீடத்தின்கீழே கண்டேன்.

௰ அவர்கள், [10]பரிசுத்தமும் சத்தியமுமுள்ள ஆண்டவரே, [11]எதுவரைக்கும் [12]தேவரீர் நியாயத்தீர்ப்புக்கொடாமலும், பூமியின்மேல் குடியிருக்கிறவர்களிடத்தில் எங்கள் இரத்தத்தைக்குறித்துப் பழிவாங்காமலும் இருப்பீர் என்று மிகுந்த சத்தமிட்டுக் கூப்பிட்டார்கள்.

௰௧ அப்பொழுது [13]அவர்களுக்கு வெள்ளை அங்கிகள் கொடுக்கப்பட்டதுமல்லாமல், அவர்கள் தங்களைப்போலக்கொலைசெய்யப்படுபவர்களாகிய தங்கள் உடன்பணிவிடைக்காரரும் தங்களுடைய சகோதரரும் வந்து நிறையுமளவும், பின்னும் [14]கொஞ்சக்காலம் இளைப்பாறவேண்டும் என்று அவர்களுக்குச் சொல்லப்பட்டது.

௰௨ ¶ பின்பு அவர் ஆறாம் முத்திரையைப் பேர்க்கக்கண்டேன்; [15]உடனே பூமி மிகவும் அதிர்ந்தது; [16]சூரியனும் கம்பளியைப்போலக் கறுப்பாயிற்று; சந்திரன் முழுவதும் இரத்தம்போல ஆயிற்று.

௰௩ [17]வானத்தின் நட்சத்திரங்களும், பெருங்காற்றினால் அசைக்கப்பட்ட அத்திமரம் பருவமில்லாத† தன் காய்களை உதிர்க்கிறதுபோலப் பூமியிலே விழுந்தன.

௰௪ [18]வானமும் சுருட்டப்பட்ட புத்தகம் போலாகி விலகிப்போயிற்று; [19]மலைகள், தீவுகள், யாவும் தங்கள் இடங்களைவிட்டு விலக்கப்பட்டுப்போயின.

௰௫ மேலும் பூமியின் இராசாக்களும், பெரியோர்களும், சேனைத்தலைவர்களும், ஐசுவரியவான்களும், பலவான்களும், அடிமைகள் யாவரும், சுயாதீனர் யாவரும் பர்வதங்களின் குகைகளிலும் [20]கல்மலைகளுக்குள்ளும் ஒளித்துக்கொண்டு, பர்வதங்களையும் கல்மலைகளையும் நோக்கி,

௰௬ [21]அவருடைய கோபாக்கினை தோன்றுகிற பெரியநாள் வந்திருக்கின்றதே; [22]நிலைநிற்கத் திராணியுள்ளவன் யாவன்?

௰௭ ஆகையால் [23]நீங்கள் எங்கள்மேல் விழுந்து, ஆசனத்தின்மேல் உளுக்காந்திருக்கிறவருடைய முகத்திற்கும், ஆட்டுக்குட்டியின் கோபத்திற்கும் எங்களை மறைத்து அடக்குங்கள் என்று கூப்பிட்டார்கள்.

## ௭. அதிகாரம்.

௧. ஒரு தூதன் பராபரனுடைய அடியார்களின் நெற்றிகளில் முத்திரைபோட்டதையும், ௪. இஸ்ரவேல் கோத்திரங்களில் முத்திரைபோடப்பட்டவர்களின் இலக்கத்தையும், ௯. மற்றச் சாதிகளில் எண்ணில்லாத திரளான கூட்டம் ஆசனத்துக்கு முன்பாக வெண்மையான வஸ்திரம் தரித்துத் தங்கள் கைகளில் குருத்தோலைகள் பிடித்து நின்றதையும், ௧௪. அவர்கள் வஸ்திரங்கள் ஆட்டுக்...

ஓ. பி. ௲௬.

1 வெளி. ௯. ௪.
2 வெளி. ௪. ௭.
3 சகரி. ௬. ௩.
4 எசே.௰௪. ௨௧.
5 ௩ மோ. ௨௬. ௨௨.
* அல்லது அவர்களுக்கு.
6 வெளி. ௧. ௯.
7 ௨ தீமோ.௧.௮. வெளி. ௰௨.௰௭: ௰௯. ௰.
8 வெளி. ௨௰.௪.
9 வெளி. ௮. ௩.
10 வெளி.௩.௭.
11 சகரி. ௧. ௰௨.
12 வெளி. ௰௧. ௰௮: ௰௯. ௨.
13 வெளி. ௩. ௪: ௭. ௯, ௰௪.
14 எபி. ௰௧. ௪௰. வெளி. ௰௪. ௰௩.
15 வெளி. ௰௬ ௰௮.
16 யோவே. ௨. ௰, ௩௧: ௩. ௰௫. மத். ௨௪. ௨௯. அப். ௨. ௨௰.
17 வெளி. ௮. ௰: ௯. ௧.
† அல்லது பிஞ்சான.
18 சங்.௱௨. ௨௬. ஏசா. ௩௪. ௪. எபி. ௧. ௰௨, ௰௩.
19 எரே. ௩. ௨௩. ௪. ௨௪. வெளி. ௰௬. ௨௰.
20 ஏசா. ௨. ௰௯.
21 ஏசா.௰௩.௯.௧௩. செப். ௧. ௰௪. ௱. வெளி. ௰௪. ௰௪.
22 சங். ௭௬. ௭.
23 ஓசே. ௰. ௮. லூக். ௨௩. ௩௰. வெளி. ௯. ௬.

Digitized by Google

*குட்டியின் இரத்தத்தில் தோய்க்கப்பட்டதென்றதையும் சொல்லியது.*

அவற்றிற்குப் பின்பு பூமியின் நான்கு திசைகளிட்த்திலும் நான்கு தூதர்கள் நின்று, [1]ஒரு காற்றுகிலும் பூமியின்மேலாவது சமுத்திரத்தின்மேலாவது ஒரு மரத்தின்மேலாவது அடியாதபடிக்கு, [2]பூமியின் நான்கு காற்றுக்களையும் பிடித்திருக்கக்கண்டேன்.

௨ ¶ மேலும் சீவனுள்ள பராபரனுடைய முத்திரைக்கோலையுடைய வேறொரு தூதனைச் சூரியன் உதிக்கும் திசையிலிருந்து ஏறிவரக்கண்டேன்; அவன் பூமியையும் சமுத்திரத்தையும் சேதப்படுத்துகிறதற்கு அதிகாரம் பெற்ற அந்த நான்கு தூதரையும் நோக்கி,

௩ [3]நாம் நம்முடைய பராபரனுடைய ஊழியக்காரரின் நெற்றிகளில் [4]முத்திரைபோட்டுத் தீருமளவும், [5]பூமியையும் சமுத்திரத்தையும் மரங்களையும் சேதப்படுத்தாதிருங்கள் என்று மிகவும் சத்தமிட்டுக் கூப்பிட்டான்.

௪ ¶ [6]மேலும் முத்திரைபோடப்பட்டவர்களின் தொகையைக்கேட்டேன்; இஸ்ரவேல் சந்ததியாராகிய சகல கோத்திரங்களிலும் முத்திரை போடப்பட்டவர்கள் [7]௱௪௪௲-பேர்.

௫ அதற்கு வகை, யூதா கோத்திரத்தில் முத்திரைபோடப்பட்டவர்கள் ௰௨௲-பேர்; ரூபேன் கோத்திரத்தில் முத்திரைபோடப்பட்டவர்கள் ௰௨௲-பேர்; காத்கோத்திரத்தில் முத்திரைபோடப்பட்டவர்கள் ௰௨௲-பேர்.

௬ அசேர் கோத்திரத்தில் முத்திரைபோடப்பட்டவர்கள் ௰௨௲-பேர்; நவ்தலி கோத்திரத்தில் முத்திரைபோடப்பட்டவர்கள் ௰௨௲-பேர்; மனாசே கோத்திரத்தில் முத்திரைபோடப்பட்டவர்கள் ௰௨௲-பேர்.

௭ சிமெயோன் கோத்திரத்தில் முத்திரைபோடப்பட்டவர்கள் ௰௨௲-பேர்; லேவி கோத்திரத்தில் முத்திரைபோடப்பட்டவர்கள் ௰௨௲-பேர்; ஈசகார் கோத்திரத்தில் முத்திரைபோடப்பட்டவர்கள் ௰௨௲-பேர்.

௮ சேபுலோன் கோத்திரத்தில் முத்திரைபோடப்பட்டவர்கள் ௰௨௲-பேர்; யோசேப்புக் கோத்திரத்தில் முத்திரைபோடப்பட்டவர்கள் ௰௨௲-பேர்; பென்யமீன் கோத்திரத்தில் முத்திரைபோடப்பட்டவர்கள் ௰௨௲-பேர்.

௯ ¶ இவற்றிற்குப்பின்பு நான் பார்த்து, [8]சகல தேசத்தாரிலும் கோத்திரங்களிலும் (மற்றச்) சனக்கூட்டங்களிலும், பாஷைக்காரரிலுமிருந்து வந்ததுமாய், [9]ஒருவனும் எண்ணக்கூடாததுமாய் இருந்த திரளான கூட்டமாகிய [10]சனங்கள் வெள்ளை அங்கிகளைத் தரித்து, தங்கள் கைகளில் குருத்தோலைகளைப் பிடித்தவர்களாய் ஆசனத்திற்கு முன்பாகவும் ஆட்டுக்குட்டிக்கு முன்பாகவும் நிற்கக் கண்டேன்.

௰ மேலும் அவர்கள் [11]இரட்சிப்பின் (சனம்) [12]ஆசனத்தின்மேல் உளுக்காருகிற எங்கள் பராபரனுக்கும் ஆட்டுக்குட்டியானவருக்கும் செலுத்தப்படக்கடவதென்று மிகவும் சத்தமிட்டுக்கூப்பிட்டார்கள்.

௰௧ அல்லாமலும் [13]தூதர்கள் யாவரும் ஆசனத்தையும் மூப்பரையும் நான்கு சீவன்களையும் சூழநின்று, ஆசனத்திற்குமுன்பாகச் சாஷ்டாங்கமாய் விழுந்து பராபரனைத் தொழுதுகொண்டு,

௰௨ [14]ஆமன், எங்கள் பராபரனுக்குத் துதியும், மகிமையும், ஞானமும், தோத்திரமும், கனமும், வல்லமையும், பெலனும் என்றென்றைக்கும் உண்டாகக்கடவது, ஆமன் என்றார்கள்.

கி. பி. ௯௬.

1 வெளி. ௯. ௪.
2 தானி. ௭. ௨.
3 வெளி. ௨௨. ௪.
4 எசே. ௯. ௪. வெளி. ௰௪. ௧.
5 வெளி. ௯. ௩: ௯. ௪.
6 வெளி. ௯. ௰௬.
7 வெளி. ௰௪. ௧.
8 வெளி. ௫. ௯.
9 உரோ. ௰௧. ௨௫.
10 வெளி. ௩. ௫, ௰௮: ௪. ௪: ௬. ௰௧ ௰௪. வசனம்.
11 சங். ௩. ௮. எசா. ௪௩. ௰௧. எரே. ௩. ௨௩. ஓசே. ௰௩. ௪. வெளி. ௰௯. ௧.
12 வெளி. ௫. ௰௩.
13 வெளி. ௪. ௬.
14 வெளி. ௫. ௰௩, ௰௪.

Digitized by Google

யகூ ¶ அப்பொழுது மூப்பர்களில் ஒருவன் என்னைநோக்கி, [1]வெள்ளை அங்கிகளைத் தரித்திருக்கிற இவர்கள் யார்? எங்கேயிருந்து வந்தார்கள் என்று கேட்டான்?

யச அதற்கு நான் என் ஆண்டவனே, அது உமக்குத் தெரியும் என்றேன்; அப்பொழுது அவன் சொன்னதாவது: [2]இவர்கள் மிகுந்த உபத்திரவத்திலிருந்து வந்தவர்கள்; [3]இவர்கள் தங்கள் அங்கிகளை ஆட்டுக்குட்டியானவருடைய இரத்தத்திலே தோய்த்து வெளுத்தவர்கள்.

யரு ஆனபடியால் இவர்கள் பராபரனுடைய ஆசனத்திற்கு முன்பாக இருந்து, இரவும்பகலும் அவருடைய ஆலயத்திலே அவருக்குப்பணிவிடைசெய்வார்கள்; [4]ஆசனத்தின்மேல் உளுக்காந்திருக்கிறவர் இவர்களுக்குள்ளே வாசமாயிருப்பார்.

யசூ [5]இனி இவர்கள் பசியடைவதுமில்லை; தாகம் அடைவதுமில்லை; [6]வெயிலாவது மற்றெந்த உட்டணமாவது அவர்கள்மேல் படுவதுமில்லை.

யஎ ஆசனத்தின் மத்தியிலிருக்கிற ஆட்டுக்குட்டியானவரே [7]அவர்களை மேய்த்து, அவர்களைச் சீவதண்ணீருள்ள ஊற்றுகளினிடத்திற்கு நடத்துவார்; இவர்களுடைய கண்ணீர் யாவையும் [8]பராபரன் துடைப்பார் என்றான்.

## அ. அதிகாரம்.

க. ஏழாம் முத்திரை திறக்கப்பட்டபோது, உ. ஒவ்வொரு எக்காளத்தைப் பிடித்த ஏழு தூதர்கள் தோன்றி, சு. அவர்களில் நாலுபேர் எக்காளங்களை ஊதினபோது பெரிய வாதைகள் உண்டானதையும், ௩. மற்றொரு தூதன் பொற்பீடத்தின்மேலுள்ள பரிசுத்தவான்களின் செபங்களோடே சுகந்தவர்க்கங்கள் இட்டதையும் சொல்லியது.

[9]பின்பு அவர் ஏழாம் முத்திரையைப் பேர்த்தபொழுது பரமண்டலத்திலே ஏறக்குறைய அரைமணி நேரமளவும் அமைதல் உண்டாயிற்று.

௨ ¶ மேலும், [10]பராபரனுக்கு முன்பாக நின்ற ஏழுதூதர்களையும் கண்டேன்; [11]அவர்களுக்கு ஏழு எக்காளங்கள் கொடுக்கப்பட்டன.

௩ வேறொரு தூதனும் தூபம் காட்டும் பொற்கலசத்தைப் பிடித்துவந்து பலிபீடப்படியிலே நின்றான்; அல்லாமலும், [12]ஆசனத்திற்குமுன்பாக இருந்த பொற்பீடத்தின்மேலே [13]பரிசுத்தவான்கள் எல்லாருடைய செபங்களுடனேயும் கூடக் கொடுக்கும்படிக்கு, * அநேக சுகந்தவருக்கங்கள் அவனுக்குக் கொடுக்கப்பட்டன.

௪ அப்படியே பரிசுத்தவான்களுடையசெபங்களுடனேகூடச் [14]சுகந்தவருக்கங்களின் புகை தூதனுடைய கையிலிருந்து பராபரனுக்குமுன்பாக எழும்பிற்று.

௫ பின்பு அந்தத் தூதன் தூபக்கலசத்தை எடுத்துக்கொண்டு அதைப் பலிபீடத்திலுள்ள நெருப்பினால் நிரப்பி, பூமியில்† கொட்டினான்; உடனே [15]சத்தங்களும், இடிமுழக்கங்களும், மின்னல்களும், [16]பூமி அதிர்தலும் உண்டாயின.

௬ ¶ பின்பு ஏழு எக்காளங்களை உடைய ஏழு தூதர்கள் எக்காளத்தை ஊதுகிறதற்கு எத்தனம் பண்ணினார்கள்.

௭ ¶ முதலாம் தூதன் எக்காளம் ஊதினான்; [17]அப்பொழுது இரத்தம் கலந்த கல்மழையும் அக்கினியும் உண்டாகித் [18]தரையிலே கொட்டப்பட்டன; அதினாலே [19]மரங்களில் மூன்றில் ஒருபங்கு வெந்துபோயிற்று; பசும்புல் எல்லாம் எரிந்துபோயிற்று.

௮ ¶ இரண்டாம் தூதன் எக்காளம் ஊதினான்; அப்பொழுது அக்கினியால் வேகிற [20]ஒரு பெரிய பருவதம்போலானது சமுத்திரத்திலே போடப்பட்டது; அதினாலே

ஓ. பி. கூக.

1 க. வச.
2 வெளி. க. கூ: ௰ள. க.
3 ஏசா. க. ௰அ. எபி. க. ௰ச. க பேர. க. எ. வெளி. க. ௫. சகரி.௩.௩, ச,௫.
4 ஏசா. ச, ௫, க. வெளி. உக. ௩.
5 ஏசா. சக. ௰.
6 சங். ௱உக. க. வெளி. உக. ச.
7 சங். உக. க: கக. அ. யோவா. ௰. ௰க, ௰ச.
8 ஏசா. உ௫. அ. வெளி. உக. ச.
9 வெளி. கூ. க.
10 மத். ௰அ. ௰. லூக். க. ௰கூ.
11 உ நாளா.உகூ. உ௫-உஅ.
12 உ மோ. ௩௰.க. வெளி. க. கூ.
13 வெளி. ௫. அ.
* அல்லது சேர்க்கும்படிக்கு.
14 சங். ௱சக. உ. லூக். க. ௰.
† அல்லது பூமியின்மேல்.
15 வெளி. ௰கூ. ௰அ.
16 உ சமு. உஉ. அ. க இரா. ௰கூ. ௰க. அப். ச. ௩க.
17 எசே. ௩அ. உஉ.
18 வெளி. ௰கூ. உ.
19 ஏசா. உ. ௰க. வெளி. கூ. ச.
20 எரே. ௫க. உ௫. ஆமோ. எ. ச.

Digitized by Google

[1]சமுத்திரத்தின் மூன்றில் ஒரு பங்கு [2]இரத்தமாயிற்று.

௯ [3]சமுத்திரத்தில் இருந்த ஜீவனுள்ள சிருட்டிகளில் மூன்றில் ஒருபங்கு செத்துப்போயிற்று; கப்பல்களில்மூன்றத்தொருபங்கு அழிந்தது.

௰ ¶ மூன்றும் தூதன் எக்காளம் ஊதினான்; [4]அப்பொழுது ஒரு பெரிய நட்சத்திரம் தீவட்டியைப்போல எரிந்து வானத்திலிருந்து விழுந்தது; [5]அது ஆறுகளில் மூன்றத்தொருபங்கின்மேலும் நீரூற்றுகள்மேலும் விழுந்தது.

௰௧ [6]அந்த நட்சத்திரத்திற்கு எட்டி என்று பேர்; [7]இதினாலே தண்ணீரில் மூன்றத்தொருபங்கு எட்டியைப்போலக் கசப்பாயிற்று; இப்படிக் கசப்பான தண்ணீரினாலே மனிதரில் அநேகர் செத்தார்கள்.

௰௨ ¶ [8]நான்காம் தூதன் எக்காளம் ஊதினான்; அப்பொழுது சூரியனில் மூன்றத்தொருபங்கும் சந்திரனில் மூன்றத்தொருபங்கும், நட்சத்திரங்களில் மூன்றத்தொருபங்கும் சேதப்படுத்தப்பட்டன; அதினாலே அவற்றவற்றின் மூன்றில் ஒருபங்கு இருள் அடைந்தது; பகலிலும் மூன்றில் ஒருபங்கு பிரகாசமில்லாமல் இருந்தது; இரவிலும் அப்படியே ஆயிற்று.

௰௩ ¶ பின்பு [9]ஒரு தூதன் வானத்தின் மத்தியிலே பறந்துவரக்கண்டேன்; அவன் இனிமேல் எக்காளம் ஊதவேண்டிய மற்ற மூன்று தூதருடைய எக்காள சத்தங்களால் பூமியில் குடியிருக்கிறவர்களுக்கு [10]ஐயோ, ஐயோ, ஐயோ, வேதனைவரும் என்று மிகுந்த சத்தமிட்டுக் கூப்பிடக்கேட்டேன்.

## ௯. அதிகாரம்.

*௧. ஐந்தாம் தூதன் எக்காளத்தை ஊதினபோது, வானத்திலிருந்து விழுந்த நட்சத்திரமென்னும் சாத்தானுக்குப் பாதாளத்தின் திறவுகோல் கொடுக்கப்பட்டதையும், ௨. அவன் பாதாளத்தைத் திறந்தவுடனே தேள்களைப்போல வெட்டுக்கிளிகள் புறப்பட்டதையும், ௰௨. அப்போது முதலாவது வாதை கடந்துபோனதையும், ௰௩. ஆறும் எக்காளம் ஊதப்பட்டதையும், ௰௪. கட்டப்பட்டிருந்த நாலு தூதர்கள் விட்டுவிடப்பட்டதையும் சொல்லியது.*

ஐந்தாம் தூதன் எக்காளம் ஊதினான்; அப்பொழுது [11]வானத்திலிருந்து பூமியின்மேல் விழுந்த நட்சத்திரத்தைக் கண்டேன்; அதற்குப் [12]பாதாளமாகிய குழியின் திறவுகோல் கொடுக்கப்பட்டது.

௨ அது பாதாளக்குழியைத திறந்தது; [13]உடனே பெருஞ்சூளையின் புகையைப்போல, அந்தக் குழியிலிருந்து புகை எழும்பிற்று; அந்தக் குழியின் புகையினாலே சூரியனும் ஆகாயமும் அந்தகாரப்பட்டன.

௩ அல்லாமலும் அந்தப் புகையிலிருந்து [14]வெட்டுக்கிளிகள் புறப்பட்டுப் பூமியின்மேல் வந்தன; [15]அவைகளுக்குப் பூமியின் தேள்களுக்கு உண்டாயிருக்கிற அதிகாரத்திற்கு ஒப்பான அதிகாரம் கொடுக்கப்பட்டது.

௪ மேலும் அவைகள் [16]பராபரனுடைய முத்திரையை நெற்றிகளில் தரியாத மனிதரைமாத்திரமே அன்றி, [17]பூமியின் புல்லையும் பசுமையான எந்தப் பூண்டையும் எந்த மரத்தையும் [18]சேதப்படுத்தாதபடிக்கு அவைகளுக்கு உத்தரவு கொடுக்கப்பட்டது.

௫ மேலும் அவர்களைக் கொலைசெய்யும்படிக்கு அல்ல, [19]ஐந்து மாதமளவும் அவர்களை வேதனைப்படுத்தும்படிக்கே அதிகாரம் அவைகளுக்குக் கொடுக்கப்பட்டது; அவைகள் செய்யும் வேதனை தேளானது மனிதரைக் கொட்டும்பொழுது உண்டாகும் வேதனையைப்போல இருக்கிறது.

௬ அந்நாள்களில் [20]மனிதர்கள் மரணத்தைத் தேடி அதைக் காணாதிருப்பார்கள்; மரிக்க ஆசைப்படு

இ. பி. ௯.

1 வெளி. ௰௬. ௩.
2 எசே. ௰௪. ௰௯.
3 வெளி. ௰௬. ௩.
4 ஏசா. ௰௪. ௰௨. வெளி. ௯. ௧.
5 வெளி. ௰௬. ௪.
6 ரூத். ௧. ௨௰.
7 ௨ மோ. ௰௫. ௨௩. எரே. ௯. ௰௫: ௨௩. ௰௫.
8 ஏசா. ௰௩. ௰. ஆமோ. ௮. ௯.
9 வெளி. ௰௪. ௬: ௰௯. ௰௭.
10 வெளி. ௯. ௰௨: ௰௧. ௰௪.
11 லூக். ௰. ௰௮. வெளி. ௮. ௰.
12 லூக். ௮. ௩௧. வெளி. ௰௭. ௮: ௨௰. ௧. ௨, ௰௧. ௰௪.
13 யோவே. ௨. ௨, ௰.
14 ௨ மோ. ௰. ௪. நியா. ௭. ௰௨.
15 ௰. ௰௪.
16 வெளி. ௭. ௩. ௨ மோ. ௰௨. ௨௩. எசே. ௯. ௪.
17 வெளி. ௮. ௭.
18 வெளி. ௬. ௬: ௭. ௩.
19 வெளி. ௰௧. ௭. ௰. ௰௪.
20 யோபு. ௩. ௨௧. ஏசா. ௨. ௰௯. எரே. ௮. ௩. வெளி. ௬. ௰௬.

Digitized by Google

வார்கள்; மரணம் அவர்களுக்கு விலகி ஓடிப்போம்.

௭ மேலும் [1]அந்த வெட்டுக்கிளிகளின் உருவம் யுத்தத்திற்கு எத்தனமாக்கப்பட்ட குதிரைகளுக்கு ஒப்பாயிருந்தது; [2]அவைகளின் தலைகள்மேலே பொற்கிரீடங்களைப் போன்றவைகள் இருந்தன; [3]அவைகளின் முகங்கள் மனிதருடைய முகங்களைப்போல இருந்தன. அவைகளின் மயிர் ஸ்திரிகளுடைய மயிர்போல இருந்தது.

௮ [4]அவைகளின் பற்கள் சிங்கங்களின் பற்களைப்போல இருந்தன.

௯ அல்லாமலும் மார்பில் இருப்புக் கவசங்களைப்போல, கவசங்கள் அவைகளுக்கு இருந்தன; அவைகள் சிறகுகளினால் செய்த இரைச்சல் யுத்தத்திற்குச் செல்லுகிற [5]அநேகம் குதிரைகள் பூண்ட இரதங்களின் இரைச்சலைப்போல இருந்தது.

௰ மேலும் அவைகள் தேள்களின் வால்களுக்கு ஒப்பான வால்களையும், அந்த வால்களில் கொடுக்குகளையும் உடையவைகளாய் இருந்தன; இப்படி அவைகள் ஐந்துமாதமளவும் [6]மனிதரைச் சேதப்படுத்துவதற்கு அதிகாரத்தை உடையவைகளாய் இருந்தன.

௰௧ அன்றியும் [7]பாதாளத்தின் தூதன் [8]அவைகளுக்கு இராசனாயிருக்கிறான்; அவனுக்கு எபிரேயு பாஷையிலே அப்தோன் என்றும், கிரேக்கை பாஷையிலே அப்பொல்லியோன்* என்றும் பேருண்டாயிருக்கின்றன.

௰௨ ¶ [9]முதல்வேதனை போயிற்று; இதற்குப்பின்பு வேறிரண்டு வேதனைகள் அதோ வருகின்றன.

௰௩ ¶ ஆறாம் தூதன் எக்காளம் ஊதினான்; அப்பொழுது பராபரனுக்குமுன்பாக இருந்த பொற்பீடத்தின் நான்கு கொம்புகளிலுமிருந்து ஒருவன் எக்காளத்தைப் பிடித்திருந்த ஆறாம் தூதனை நோக்கி,

௰௪ [10]நீ ஐபிராத்தென்னும் பெரிய ஆற்றினிடத்திலே கட்டப்பட்டிருக்கிற நான்கு தூதரை அவிழ்த்துவிடு என்று சத்தமிட்டுச் சொல்லக்கேட்டேன்.

௰௫ உடனே அந்த நாலு தூதர்களும் அவிழ்த்துவிடப்பட்டார்கள்; அவர்கள் மனிதர்களில் மூன்றத்தொருபங்கைக் கொலைசெய்யும்படிக்கு ஒருமணி நேரத்திற்கும், ஒரு நாளுக்கும், ஒரு மாதத்திற்கும், ஒரு வருஷத்திற்கும்† எத்தனமாக்கப்பட்டு இருந்தவர்கள்.

௰௬ [11]குதிரைச் சேனைகளான [12]இராணுவங்களின் தொகை இருபது கோடியாய் இருந்தது; [13]அவைகளின் தொகையைக் கேட்டேன்.

௰௭ தரிசனையிலே குதிரைகளையும் அவைகளின்மேல் இருந்தவர்களையும் எப்படிக் கண்டேன் என்றால், அவர்கள் அக்கினி நிறமும் பதுமராக நிறமும் கந்தக நிறமுமான மார்பின் கவசங்களை உடையவர்கள்; [14]குதிரைகளுடைய தலைகள் சிங்கங்களுடைய தலைகளைப்போல இருந்தன; [15]அவைகளுடைய வாய்களிலிருந்து அக்கினியும், புகையும், கந்தகமும் புறப்பட்டன.

௰௮ அவைகளுடைய வாய்களிலிருந்து புறப்பட்ட அக்கினி, புகை, கந்தகம் என்ற இம்மூன்றினாலும் மனிதரில் மூன்றத்தொருபங்கு கொலைசெய்யப்பட்டார்கள்.

௰௯ அந்தக் குதிரைகளுடைய வல்லமை அவைகளுடைய வாயிலேயும் வால்களிலேயும் இருக்கின்றது; எப்படியெனில், அவைகளுடைய வால்கள் பாம்புகளுக்கு ஒப்பானவைகளாயும், தலைகள்

கி. பி. ௯௬.

1 யோவே. ௨. ௪.
2 நாகூ. ௩. ௰௭.
3 தானி. ௭. ௮.
4 யோவே. ௧. ௬.
5 யோவே. ௨. ௫, ௭.
6 ௫. ௰௪.
7 ௧. ௰௪.
8 எபே. ௨. ௨.
* அதாவது சங்காரன்.
9 வெளி. ௮. ௰௩.
10 வெளி. ௰௬. ௰௨.
† அல்லது மூன்றத்தொரு பங்கை ஒரு மணிநேரத்திலும் கொலைசெய்யும்படிக்கு.
11 ௭சே. ௩௮. ௪.
12 சங். ௬௮. ௰௭. தானி. ௭. ௰.
13 வெளி. ௭. ௪.
14 ௧ நாளா. ௰௨. ௮. ஏசா. ௫. ௨௮, ௨௯.
15 ஏசா. ௯. ௰௫.

Digitized by Google

உள்ளவைகளாயும் இருக்கின்றன, அவைகளாலே சேதம் செய்கின்றன.

உய அப்படியிருந்தும், அந்த வாதைகளால் கொலையுண்ணாத மற்ற மனிதர்கள் [1]தங்கள் கைகளின் கிரியைகளைவிட்டுக்குணப்படவில்லை, அவர்கள் பின்னும் [2]பேய்களையும், [3]பொன், வெள்ளி, செம்பு, கல், மரத்தால் செய்யப்பட்டவைகளாயும், காணவும் கேட்கவும் நடக்கவும்மாட்டாதவைகளாயும் இருக்கிற விக்கிரகங்களையும் தொழுதுகொண்டுவந்தார்கள்.

உக அல்லாமலும் அவர்கள் தங்கள் கொலைபாதகங்களையும், [4]தங்கள் சூனியங்களையும், தங்கள் வேசித்தனங்களையும், தங்கள் களவுகளையும் விட்டுக் குணப்படவில்லை.

## ய. அதிகாரம்.

*க. வல்லமையுள்ள ஒரு தூதன் தன் கையிலே திறக்கப்பட்ட புத்தகத்தோடே காணப்பட்டு, ௬. இனிக்காலம் இராதென்று என்றென்றைக்கும் ஜீவிக்கிறவர்மேல் ஆணையிட்டதையும், ௯. யோவான் அந்தப் புத்தகத்தை எடுத்துச் சாப்பிடும்படி கட்டளைபெற்றதையும் சொல்லியது.*

பின்பு பலமுள்ள வேறொரு தூதன் இறங்கக்கண்டேன்; மேகம் அவனைச் சூழ்ந்திருந்தது; [5]அவனுடைய சிரசின்மேல் வானவில் இருந்தது; [6]அவனுடைய முகம் சூரியனைப்போலவும், [7]அவனுடைய கால்கள் அக்கினித் தூண்களைப்போலவும் இருந்தன.

உ மேலும் விரிக்கப்பட்ட ஒரு சிறிய புத்தகத்தை அவன் தன் கையில் பிடித்துக்கொண்டு, [8]தன்னுடைய வலதுபாதத்தைச் சமுத்திரத்தின்மேலும் இடதுபாதத்தைத் தரையின்மேலும் வைத்து,

௩ சிங்கம் முழங்குகிறதுபோல மிகவும் சத்தமிட்டுக் கூப்பிட்டான்; அவன் கூப்பிட்டபொழுது, [9]ஏழு இடிகளும் தங்கள் சத்தங்களை முழக்கின.

௪ அவ்வேழு இடிகளும் தங்கள் சத்தங்களை முழக்கினபொழுது, நான் (அதை) எழுதவேண்டுமென்று இருந்தேன்; அப்பொழுது [10]ஏழு இடிமுழக்கங்கள் சொன்னவைகளை நீ எழுதாமல் முத்திரைப்படுத்து என்று வானத்திலிருந்து ஒரு சத்தம் உண்டாகக் கேட்டேன்.

௫ அன்றியும் நான் சமுத்திரத்தின்மேலும் தரையின்மேலும் நிற்கக்கண்ட தூதன் [11]தன்னுடைய கையை வானத்திற்கு நேராக உயர்த்தி, இன்னம் காலம் வர (இல்லை).

௬ பராபரன் தம்முடைய ஊழியக்காரராகிய தீர்க்கதரிசிகளுக்குச் சுவிசேஷமாய் அறிவித்தபடி ஏழாம் தூதன் எக்காளத்தை ஊதும் சத்தத்தின் [12]நாட்களிலே [13]அவருடைய இரகசியம் நிறைவேறும் என்று,

எ [14]வானத்தையும் அதிலுள்ளவைகளையும், பூமியையும், அதிலுள்ளவைகளையும், சமுத்திரத்தையும் அதிலுள்ளவைகளையும் சிருட்டித்தவராயும் என்றென்றைக்கும் பிழைக்கிறவராயும் இருக்கிறவர் மேலே ஆணையிட்டுக் (கூப்பிட்டான்).

அ ¶ பின்பு நான் [15]கேட்கும்படி, வானத்திலிருந்து சத்தமிட்டவன் மறுபடியும் என்னுடனே சொன்னது: சமுத்திரத்தின்மேலும் தரையின்மேலும் நிற்கிற தூதனுடைய கையிலிருக்கிற விரிக்கப்பட்ட சிறிய புத்தகத்தை நீபோய் வாங்கிக் கொள் என்றான்.

௯ அந்தப்படி நான் தூதனிடத்தில் போய், இந்தச் சிறிய புத்தகத்தை எனக்குக் கொடுக்க வேண்டும் என்றேன்; அப்பொழுது அவன் என்னை நோக்கி, [16]நீ இதை எடுத்து விழுங்கு; உன் வயிற்றிற்கு இது கசக்கப்பண்ணும்; ஆகிலும் உன் வாய்க்கு

கி. பி. கூகூ.

1 ஐ மோ. கக. உக.
2 ௩ மோ. ௰எ. எ. ஐ மோ. கஉ. ௰எ. சங். ௯௬. ௯எ. ௩ சொரி. ௰. உ௰.
3 சங். ௯௰௫. ௪: ௯௪௫. ௰௫. தானி. ௫. உ௩.
4 வெளி. உஉ. ௰௫.
5 எசே. ௧. உஅ.
6 மத். ௰எ. உ. வெளி. ௧. ௰௬.
7 வெளி. ௧. ௰௫.
8 மத். உஅ. ௰அ.
9 வெளி. அ. ௫.
10 தானி. அ. உ௬: ௰உ. ௪, ௯.
11 உமோ. ௬. அ. தானி. ௰உ. எ.
12 வெளி. ௰௬. ௰௫.
13 தானி. ௰உ. எ. வெளி. ௰௯. ௰எ.
14 நெகே. ௯. ௬. வெளி. ௪. ௰௬: ௰௪. எ.
15 ௪. ௰௪.
16 எரே. ௰௫. ௰௬. எசே. உ. அ: ௩. ௧, உ, ௩.

Digitized by Google

இது தேனைப்போல மதுரமாயிருக்கும் என்றான்.

௰ அப்படி நான் அந்தச் சிறிய புத்தகத்தைத் தூதனுடைய கையில்வாங்கி அதை விழுங்கினேன்; [1]என் வாய்க்கு அது தேனைப்போல மதுரமாய் இருந்தது; நான் அதை விழுங்கினபின்பு [2]என் வயிறு மிகுந்த நோய்பட்டது.

௰௧ அப்பொழுது அவன் என்னுடனே சொன்னது: நீ மறுபடியும் அநேக சனக்கூட்டங்களையும், தேசத்தாரையும், பாஷைக்காரரையும், இராசாக்களையும் குறித்துத் தீர்க்கதரிசனம் சொல்லவேண்டும் என்றான்.

## ௰௧. அதிகாரம்.

௧. இரண்டு சாட்சிகள் தீர்க்கதரிசனம் சொன்னதையும், ௬. அவர்கள் மழைபெய்யாதபடிக்கு வானத்தை அடைக்க அதிகாரம் உள்ளவர்களாயிருந்ததையும், ௭. மிருகம் அவர்களோடே எதிர்த்து, அவர்களைக் கொன்றதையும், ௮. அவர்கள் உடல்கள் அடக்கம்பண்ணப்படாமல் கிடந்து, ௰௧. மூன்றரைநாளுக்குப் பின்பு எழுந்திருந்ததையும், ௰௪. இரண்டாம் வாதை நடந்துபோனதையும், ௰௫. ஏழாம் எக்காளம் சத்திக்கப்பட்டதையும் சொல்லியது.

பின்பு [3]ஒரு தடிக்கு ஒப்பான அளவுகோலை (ஒருவன்) எனக்குக் கொடுத்துச் சொன்னதாவது: [4]நீ எழுந்து, பராபரனுடைய ஆலயத்தையும் பலிபீடத்தையும், அதிலே தொழுதுகொள்ளுகிறவர்களையும் அளந்து பார்த்துக்கொள்.

௨ [5]ஆலயத்திற்குப் புறம்பே இருக்கிற பிரகாரம் [6]புறத்தேசத்தாருக்குக் கொடுக்கப்பட்டபடியால், அதை அளவாமல் தள்ளுவாயாக;* [7]பரிசுத்தபட்டணத்தை அவர்கள் [8]நாற்பத்திரண்டு மாதமளவும் மிதிப்பார்கள்.

௩ ஆகிலும் என்னுடைய [9]இரண்டு சாட்சிகளும் இரட்டுச்சேலை உடுத்திக்கொண்டிருக்கிறவர்களாய் [10]ஆயிரத்து இருநூற்று அறுபதுநாளளவும் [11]தீர்க்கதரிசனம் சொல்லும்படிக்கு, அவர்களுக்கு அதிகாரத்தைக் கொடுப்பேன்.†

கி. பி. ௯௬.

1 எசே. ௩. ௧.
2 எசே. ௨. ௰.
3 எசே. ௪௰. ௩. சகரி. ௨. ௧. வெளி. ௨௧. ௰௫.
4 ௪ மோ. ௨௩. ௰௮.
5 எசே. ௪௰. ௰௭. ௨௰.
6 சங். ௭௯. ௧. லூக். ௨௧. ௨௪.
* அல்லது விடுவாயாக.
7 தானி. ௮. ௰.
8 வெளி. ௰௩. ௫.
9 வெளி. ௨௰. ௪.
10 வெளி. ௰௨. ௬.
11 வெளி: ௰௯. ௰.
† அல்லது நானவும் அதிகாரத்தைக் கொடுப்பேன்; அவர்கள் தீர்க்கதரிசனம் சொல்லுவார்கள்.
12 சங். ௫௨. ௮. எரே. ௰௧. ௰௬. சகரி. ௪. ௩, ௰௧, ௰௪.
13 ௨ இரா. ௧. ௰, ௰௨. எரே. ௫. ௰: ௯. ௰௪. எசே. ௪௩. ௩. ஓசே. ௬. ௫.
14 ௪ மோ. ௰௬. ௨௯.
15 ௧ இரா. ௰௭. ௧. யாக். ௫. ௰௬, ௰௭.
16 ௨ மோ. ௭. ௰௯.
17 லூக். ௰௩. ௩௨.
18 வெளி. ௯. ௨.
19 வெளி. ௰௩. ௧, ௰௧: ௰௭. ௮.
20 தானி. ௭. ௨௧; சகரி. ௰௪. ௨.
21 வெளி. ௰௪. ௮: ௰௭. ௧, ௫: ௰௮. ௰.
22 எபி. ௰௩. ௰௨. வெளி. ௰௮. ௨௪.
23 வெளி. ௰௭. ௰௫.
24 சங். ௭௯. ௨, ௩.

௪ அவர்களே பூமியின் ஆண்டவருக்குமுன்பாக நிற்கிற [12]இரண்டு ஒலிவமரங்களும், இரண்டு விளக்குத்தண்டுகளும் ஆனவர்கள்.

௫ ஒருவன் அவர்களைச் சேதப்படுத்த விரும்பினால், [13]அவர்களுடைய வாயிலிருந்து அக்கினி புறப்பட்டு, அவர்களுடைய சத்துருக்களைப் பட்சிக்கும்; [14]அவர்களைச் சேதப்படுத்தவிரும்புகிறவன் எவனோ அவன் அப்படியே சாகவேண்டும்.

௬ அவர்கள் தீர்க்கதரிசனம் சொல்லிவருகிற நாட்களிலே [15]மழைபெய்யாதபடிக்கு வானத்தை அடைக்கிறதற்கு அதிகாரம் உடையவர்கள்; மேலும் [16]அவர்கள் தண்ணீர்களை இரத்தமாக மாற்றுகிறதற்கும், எக்காலத்திலேயும் தங்கள் இஷ்டப்படி பூமியைச் சகலவித வாதைகளாலும் அடிக்கிறதற்கும் அதிகாரம் உடையவர்கள்.

௭ ¶ மேலும் [17]அவர்கள் தங்கள் சாட்சியை முடிக்கும்பொழுது, [18]பாதாளத்திலிருந்து ஏறுகிற [19]மிருகம் [20]அவர்களோடே யுத்தம்பண்ணி, அவர்களைச் செயித்து, அவர்களைக் கொலைசெய்யும்.

௮ அவர்களுடைய உடல்கள் [21]பெரிய பட்டணத்தின் பெரிய வீதியிலே கிடக்கும்; அந்தப் பட்டணம் சோதோமென்றும் எகிப்தென்றும் ஞான அருத்தமாய்ச் சொல்லப்படும்; அதிலே [22]அவர்களுடைய கர்த்தாவும் சிலுவையிலே அறையப்பட்டார்.

௯ ¶ [23]சனக்கூட்டங்களிலும், கோத்திரங்களிலும் பாஷைக்காரரிலும், புறத்தேசத்தார்களிலும் (அநேகர்) அவர்களுடைய உடல்களை மூன்றரை நாள்வரைக்கும் பார்த்துக்கொண்டு வந்ததுமல்லாமல், [24]அவைகளைக் கல்லறைகளில் வைக்கிறதற்கு இடங்கொடுக்கவும் இல்லை.

Digitized by Google

௰ [1]அவ்விரண்டு தீர்க்கதரிசிகளும் பூமியின் குடிகளுக்கு வேதனை செய்தபடியினாலே அவர்கள் (போனதற்காகப்) [2]பூமியில் குடியிருக்கிறவர்கள் சந்தோஷப்பட்டுக் களிகூர்ந்து, [3]ஒருவருக்கு ஒருவர் காணிக்கைகளை அனுப்புவார்கள்.

௰௧ ¶ [4]மூன்றரை நாளுக்குப் பின்பு பராபரனிடத்திலிருந்து [5]ஜீவ ஆவி அவர்களுக்குள் பிரவேசித்தது; அவர்கள் தங்கள் கால்களை ஊன்றி நின்றார்கள்; அப்பொழுது அவர்களைப் பார்த்தவர்களுக்கு மிகுந்த பயம் உண்டாயிற்று.

௰௨ பின்பு இங்கே ஏறிவாருங்கள் என்று வானத்திலிருந்து தங்களுக்கு உண்டான பெரிய சத்தத்தை அவர்கள் கேட்டு, [6]ஒரு மேகத்தில் ஏறி [7]வானத்திற்குப் போனார்கள்; [8]அவர்களுடைய சத்துருக்கள் அவர்களை நோக்கிப் பார்த்தார்கள்.

௰௩ [9]அந்நேரத்திலே பூமி மிகவும் அதிர்ந்தது; [10]உடனே அந்தப் பட்டணத்தில் பத்தில் ஒரு பங்கு விழுந்துபோயிற்று; மனிதர் ஏழாயிரம்பேரும்* பூமி அதிர்தலால் அழிந்தார்கள்; மீதியானவர்கள் பயமடைந்து பரமண்டலத்தின் [11]பராபரனுக்குத் துதியைச் செலுத்தினார்கள்.

௰௪ ¶ [12]இரண்டாம் வேதனை போயிற்று; இதோ மூன்றாம் வேதனை சீக்கிரமாய் வருகின்றது.

௰௫ ¶ அப்பொழுது [13]ஏழாம் தூதன் எக்காளம் ஊதினான்; [14]உடனே உலகத்தின் இராச்சியங்கள் நம்முடைய கர்த்தனையும் அவருடைய கிறிஸ்துவையும் சேர்ந்தன என்றும், [15]அவர் என்றென்றைக்கும் இராசரீகம்பண்ணுவார் என்றும், [16]மிகுந்த சத்தங்கள் பரமண்டலத்தில் உண்டாயின.

௰௬ ¶ அப்பொழுது பராபரனுக்கு முன்பாகத் தங்கள் ஆசனங்கள் மேல் உளுக்காந்த [17]அவ்விருபத்துநான்கு மூப்பர்களும் சாஷ்டாங்கமாய் விழுந்து,

௰௭ [18]இருக்கிறவரும் இருந்தவருமாகிய சர்வவல்லமையுடைய தேவனாகிய பராபரனே, தேவரீர் உமது பலத்த வல்லமையை எடுத்துக்கொண்டு [19]இராசரீகம்பண்ணுகிறீர்.

௰௮ [20]புறத்தேசத்தார் கோபமாய் இருந்தார்கள் அப்பொழுது உமது கோபம் தோன்றிற்று; [21]மரித்தோர் நியாயத்தீர்ப்பு அடைகிறதற்கும், தீர்க்கதரிசிகளாகிய உம்முடைய ஊழியக்காரருக்கும் பரிசுத்தவான்களுக்கும் உமது நாமத்தின்மேல் பயபத்தியாய் இருந்த சிறியோருக்கும் [22]பெரியோருக்கும் பலன் அளிக்கிறதற்கும், [23]பூமியைக் கெடுத்தவர்களைக்† கெடுக்கிறதற்குக் காலமும் வந்தது; ஆகையால் உம்மைத் தோத்திரம் செய்கிறோம் என்று பராபரனைத் தொழுதுகொண்டார்கள்.

௰௯ ¶ பின்பு பரமண்டலத்திலே [24]பராபரனுடைய ஆலயம் திறக்கப்பட்டது; அவருடைய ஆலயத்திலே அவருடைய உடம்படிக்கையின் பெட்டி காணப்பட்டது; மேலும் [25]மின்னல்களும், சத்தங்களும், இடிமுழக்கங்களும், பூமியதிர்தலும், [26]பெருங்கல்மழையும் உண்டாயின.

## ௰௨. அதிகாரம்.

௧. சூரியனை அணிந்த ஒரு ஸ்திரீ கெர்ப்பவேதனை அடைந்ததையும், ௪. சிவப்பான ஒரு பெரிய வலுசர்ப்பம் அவள் பிள்ளையைப் பட்சிக்க அவள் முன்பாக நின்றதையும், ௬. அவள் பிரசவித்தவுடனே வனாந்தரத்திற்கு ஓடிப்போனதையும், ௭. மிகாவேலும் அவனுடைய தூதர்களும் வல்ல சர்ப்பத்தோடே யுத்தம்பண்ணி அதை வென்றதையும், ௰௩. வல்ல சர்ப்பம் பூமியின்மேல் தள்ளப்பட்டபோது ஸ்திரீயைத் துன்பப்படுத்தினதையும் சொல்லியது.

அன்றியும் ஒரு பெரிய அடையாளம்‡ வானத்திலே காணப்பட்

கி. பி. ௯௬.

1 வெளி. ௰௧. ௰.
2 வெளி. ௰௨. ௰௨: ௰௩. ௮.
3 எஸ்த. ௯. ௰௯, ௨௨.
4 ௯. ௪௪.
5 எசே. ௩௭. ௫, ௯, ௰, ௰௪.
6 எசா. ௩௰. ௮. அப். ௧. ௯.
7 எசா. ௰௪. ௰௩. வெளி. ௰௨. ௫.
8 உ இரா. ௨. ௧, ௫, ௭.
9 வெளி. ௬. ௰...
10 வெளி. ௰௩. ௰௩.
* அல்லது மனிதரும்; வெளி. ௩. ௪.
11 யோசு. ௭. ௰௯. வெளி. ௰௪. ௭: ௰௫. ௪.
12 வெளி. ௮. ௰௩: ௯. ௰௨: ௰௫. ௧.
13 வெளி. ௰. ௭.
14 வெளி. ௰௨. ௰.
15 தானி. ௨. ௪௪: ௭. ௰௪, ௰௮, ௨௭.
16 எசா. ௨௭. ௰௩. வெளி. ௰௩. ௰௭: ௰௩. ௯.
17 வெளி. ௪. ௪: ௫. ௮: ௰௯. ௪.
18 வெளி. ௧. ௪, ௮: ௪. ௮: ௰௬. ௫.
19 வெளி ௰௯. ௬.
20 ௨, ௯. ௪௪.
21 தானி. ௭. ௯, ௰. வெளி. ௯. ௰.
22 வெளி. ௰௯. ௫.
23 வெளி. ௰௩. ௰: ௰௮. ௬.
† அல்லது அழிக்கிறவர்களை.
24 வெளி. ௰௫. ௫, ௮.
25 வெளி. ௮. ௫: ௰௬. ௰௮.
26 வெளி. ௰௬. ௨௧.
‡ அல்லது அதிசயம்.



Digitized by Google

டது; (என்னவெனில்,) ஒருஸ்திரி சூரியனை அணியப்பட்டு, தன்னுடைய பாதங்களின்கீழே சந்திரனையும் தன்னுடைய சிரசின்மேல் பன்னிரண்டு நட்சத்திரங்களுள்ள கிரீடத்தையும் உடையவளாய்,

உ [1]கருப்பத்தினாலே வருத்தமடைந்து பிள்ளைபெறும்படி வேதனைப்பட்டு அலறிக்கொண்டிருந்தாள்.

ங ¶ அன்றியும் வேறொரு அடையாளம்* வானத்திலே காணப்பட்டது; (என்னவென்றால்,) [2]ஏழு தலைகளையும், பத்துக் கொம்புகளையும், [3]தன் தலைகளின்மேல் ஏழு முடிகளையுமுடைய [4]சிவப்பான பெரிய வல்லசர்ப்பம் இருந்தது.

ச [5]அதின் வால் [6]வானத்தின் நட்சத்திரங்களில் மூன்றத்தொரு பங்கை இழுத்து, [7]அவைகளைப் பூமியின்மேல் தள்ளிற்று; அல்லாமலும் பிள்ளைபெறுகிறவளாகிய [8]அந்த ஸ்திரி பிள்ளைபெற்றவுடனே அவளுடைய பிள்ளையைப் பட்சித்துப்போடும்படிக்கு, [9]அந்த வல்லசர்ப்பம் அவளுக்கு முன்பாக நின்றது.

ரு அவள் [10]சனக்கூட்டங்கள் எல்லாவற்றையும் இருப்புக்கோலால் ஆளுகைசெய்யும்படிக்கான ஆண்பிள்ளையைப் பெற்றாள்; உடனே அவளுடைய பிள்ளை பராபரனிடத்திற்கும் அவருடைய ஆசனத்திற்கும் எடுத்துக்கொள்ளப்பட்டது.

சா [11]ஸ்திரியானவளும் வனாந்தரத்திற்கு ஓடிப்போனாள்; அங்கே [12]ஆயிரத்திருநூற்றறுபதுநாள் அளவும் அவளைப் போஷிப்பதற்காகப் பராபரனால் எத்தனமாக்கப்பட்ட இடம் அவளுக்கு உண்டாயிருக்கிறது.

எ ¶ அன்றியும் பரமண்டலத்திலே யுத்தம் உண்டாயிற்று; [13]மிகாவேலும் அவனைச் சேர்ந்த தூதரும் [14]அந்த வல்லசர்ப்பத்தோடே யுத்தம்பண்ணினார்கள்; வல்லசர்ப்பமும் அதைச் சேர்ந்த தூதரும் யுத்தம்பண்ணியும் செயம் அடையவில்லை.

அ பின்னே பரமண்டலத்திலே அவர்களுக்கு ஓரிடம் அகப்படவும் இல்லை.

கூ [15]உலகம் யாவையும் வஞ்சித்துவருகிற பசாசென்றும் சாத்தானென்றும் சொல்லப்பட்ட [16]பழைய பாம்பாகிய பெரிய வல்லசர்ப்பம் [17]தள்ளப்பட்டது; [18]அது பூமியிலே தள்ளப்பட்டது; அதினோடேகூட அதைச் சேர்ந்த தூதரும் தள்ளப்பட்டார்கள்.

௰ அப்பொழுது [19]நம்முடைய சகோதரர்மேல் குற்றம்சாற்றுகிறவன் தாழத் தள்ளப்பட்டிருக்கிறதால், [20]இப்பொழுது இரட்சிப்பும் வல்லமையும் ஆளுகையும் நம்முடைய பராபரனுக்கும், அதிகாரம் அவருடைய கிறிஸ்துவுக்கும் உண்டாயிருக்கின்றன; இரவும்பகலும் அவன் பராபரனுக்கு முன்பாக அவர்கள்மேல் குற்றம் சாற்றினான்.

௰க [21]அவர்கள் மரணபரியந்தமும் தங்கள் சீவனைச் சிநேகியாமல், [22]ஆட்டுக்குட்டியின் இரத்தத்தினாலும், தங்கள் சாட்சியின் வசனத்தினாலும் அவனைச் செயித்தார்கள்.

௰உ ஆகையால் பரமண்டலங்களே, அவைகளில் வாசமாயிருக்கிறவர்களே, [23]களிகூருங்கள்; பூமியிலும் சமுத்திரத்திலும் குடியிருக்கிறவர்களே, உங்களிடத்திலே [24]பசாசு இறங்கி, தனக்குக் கொஞ்சக்காலம் உண்டென்று அறிந்து, மிகுந்த கோபங்கொண்டிருக்கிறபடியால், [25]ஐயோ, உங்களுக்கு வேதனை உண்டாயிருக்குமென்று பரமண்டலத்திலே பெரும் சத்தத்தைக் கேட்டேன்.

௰ங ¶ அந்தப்படி வல்லசர்ப்பமானவன் தான் பூமியிலே தள்ளப்பட்டதை அறிந்து, [26]அந்த

கி. பி. கூசா.

1 ஏசா. சாசா. எ. கலா. ச. ௰கூ.
* அல்லது அதிசயம்.
2 வெளி. ௰எ. ங, ௰.
3 வெளி. ௰ங. க.
4 வெளி. ௰எ. ங.
5 வெளி. கூ. ௰, ௰கூ.
6 வெளி. ௰எ. ௰அ.
7 தானி. அ. ௰.
8 உ. வச.
9 உ யோ. ச. ௰ங.
10 சங். உ. கூ. வெளி. உ. உஎ: ௰கூ. ௰ரு.
11 ச. வச.
12 வெளி. ௰ங. ரு.
13 தானி. ௰. ௰ங, உக: ௰உ. க.
14 க. வச. வெளி. உ௰. உ.
15 வெளி. உ௰. க.
16 க யோ. ங. அ, ச. வெளி. உ௰. உ.
17 லூக். ௰. ௰அ. யோவா. ௰உ. கக.
18 வெளி. கூ. க.
19 யோபு. க. கூ: உ. ரு. சகரி. ங. க.
20 வெளி. ௰க. ௰ரு: ௰கூ. க.
21 லூக். ௰ச. உசா.
22 உ கொ. அ. கக, கச, கஎ: ௰க. உ௰.
23 சங். கூசா. ௰க. ஏசா. சகூ. ௰ங. வெளி. ௰அ. உ௰.
24 வெளி. ௰. க.
25 வெளி. அ. ௰ங: ௰க. ௰.
26 ௩. வச.

Digitized by Google

ஆண்பிள்ளையைப் பெற்ற ஸ்திரிக்குப் பின்தொடர்ந்தான்.

௧௪ [1]அந்த ஸ்திரி அந்தப் பாம்பின் முகத்திற்கு விலகி, [2]ஒரு காலமும் காலங்களும் அரைக்காலமுமாகப் போஷிக்கப்படத்தக்க [3]வனாந்தரத்திலுள்ள தன் இடத்திற்குப் [4]பறந்துபோகும்படியாய்ப் பெருங்கழுகின் இரண்டு சிறகுகளும் அவளுக்குக் கொடுக்கப்பட்டன.

௧௫ அப்பொழுது சர்ப்பமானவன் ஸ்திரியை வெள்ளங்கொண்டுபோகும்படிக்கு, [5]தன் வாயிலிருந்து ஒரு நதியத்தனை சலத்தை அவளுக்குப் பின்னாகக் கொப்பளித்தான்:

௧௬ பூமி ஸ்திரிக்கு உதவியாகத் தன் வாயைத் திறந்து, வல்ல சர்ப்பம் தன் வாயிலிருந்து கொப்பளித்த நதியை விழுங்கிற்று.

௧௭ அப்பொழுது வல்ல சர்ப்பமானவன் ஸ்திரியின்மேல் கோபமாயிருந்து, [6]பராபரனுடைய கற்பனைகளைக் கைக்கொள்ளுகிறவர்களும் [7]இயேசுக்கிறிஸ்துவைக்குறித்துச் சாட்சியை உடையவர்களுமாகிய அவளுடைய சந்ததியான மற்றவர்களுடனே [8]யுத்தம் பண்ணப்போனான்.

## ௧௩. அதிகாரம்.

௧. கடலிலிருந்து எழும்பின ஏழு தலைகளும், பத்துக் கொம்புகளும் உள்ள ஒரு மிருகத்துக்கு வல்ல சர்ப்பம் தன் அதிகாரத்தைக் கொடுத்ததையும், ௰௧. மற்றொரு மிருகம் பூமியிலிருந்து எழும்பி, ௰௪. மேற்சொல்லிய மிருகத்தின் சொரூபத்தைச் செய்வித்து, ௰௫. மனிதர்கள் அதை வணங்கி, ௰௬. அதின் முத்திரையைத் தரித்துக்கொள்ளச் செய்ததையும் சொல்லியது.

பின்பு நான் கடலோரத்தின் மணலின்மேல் நிறுத்தப்பட்டேன்; அப்பொழுது சமுத்திரத்திலிருந்து, [9]ஒரு துஷ்டமிருகம் எழும்பிவரக்கண்டேன்; [10]அதற்குப் பத்துக் கொம்புகளும் ஏழு தலைகளும் இருந்தன; அதின் கொம்புகள்மேலே பத்து முடிகளும் அதின் தலைகளின்மேலே தூஷணமான நாமங்களும்* இருந்தன.

௨ மேலும் [11]நான் கண்ட மிருகம் புலியைப்போல இருந்தது; [12]அதின் கால்கள் கரடியின் கால்களைப்போலவும், [13]அதின் வாய் சிங்கத்தின் வாயைப்போலவும் இருந்தன; மேலும் வல்ல சர்ப்பமானவன் [14]தன் வல்லமையையும், [15]தன் ஆசனத்தையும் [16]மிகுந்த அதிகாரத்தையும் அதற்குக் கொடுத்தான்.

௩ பின்பு அதின் தலைகளில் ஒன்று சாவுக்கு ஏதுவாய் [17]காயப்படுத்தப்பட்டதாகக்† கண்டேன்; பின்பு சாவுக்கு ஏதுவான காயம் சொஸ்தமாக்கப்பட்டது; [18]மேலும் பூமியிலுள்ள யாவரும் ஆச்சரியத்தோடே அந்தத் துஷ்ட மிருகத்தைப் பின்பற்றி,

௪ அம்மிருகத்திற்கு அப்படிப்பட்ட அதிகாரத்தைக் கொடுத்தபடியினாலே வல்ல சர்ப்பத்தைத் தொழுதுகொண்டார்கள்; அல்லாமலும் [19]மிருகத்திற்கு ஒப்பானவன் யாவன்? அதினுடனே யுத்தம்பண்ணத்தக்கவன் யாவன் என்று மிருகத்தையும் தொழுதுகொண்டார்கள்.

௫ மேலும் [20]பெருமையானவைகளையும் தூஷணங்களையும் பேசுதற்கான வாய் அதற்குக் கொடுக்கப்பட்டது; அல்லாமலும் [21]நாற்பத்திரண்டுமாதம் நடந்துகொள்ளுகிறதற்கு‡ அதிகாரம் அதற்கு அளிக்கப்பட்டது.

௬ அந்தப்படி அது பராபரனுடைய நாமத்தையும், [22]அவருடைய கூடாரத்தையும், பரமண்டலத்தில் வாசமாயிருக்கிறவர்களையும் தூஷணிக்கிறதற்குத் தன் வாயைத் தூஷணமாகத் திறந்தது.

௭ மேலும் [23]பரிசுத்தவான்களோடே யுத்தம்பண்ணி அவர்களைச் செயிக்கும்படிக்கு, அதற்கு (இடம்) கொடுக்கப்பட்டது; எந்தக் கோத்திரத்தின்மேலும் சனக்கூட்டத்தின்மேலும் பாஷைக்கா

கி. பி. ௯௬.

1 க. ௰௪.
2 தானி. எ. ௨௫: ௰௨. எ.
3 வெளி. ௰௭. ௩.
4 உ மோ. ௰௯. ௪.
5 ஏசா. ௫௯. ௰௯.
6 வெளி. ௰௪. ௰௨.
7 க கொரி. ௨. ௧. க யோ. ௫. ௰. வெளி. ௧. ௨, ௯: ௬. ௯: ௨௰. ௪.
8 க மோ. ௩. ௰௫. வெளி. ௰௧. எ: ௰௯. எ.
9 தானி. எ. ௨,எ.
10 வெளி. ௰௨. ௩: ௰௭. ௩, ௯, ௰௨.
* அல்லது நாமமும்; வெளி. ௰௭. ௩.
11 தானி. எ. ௬.
12 தானி. எ. ௫.
13 தானி. எ. ௪.
14 வெளி. ௰௩. ௰.
15 வெளி. ௰௨. ௪.
16 வெளி. ௰௨. ௯.
17 ௰௨, ௰௪. ௯௪.
† கிரேக்கு, கொல்லப்பட்டதாக.
18 வெளி. ௰௭. அ.
19 வெளி. ௰அ. ௰அ.
20 தானி. எ. அ, ௰௧, ௨௫: ௰௧. ௩௬.
21 வெளி. ௰௧. ௨: ௰௨. ௬.
‡ அல்லது போர் செய்கிறதற்கு.
22 யோவா. ௧. ௰௪. கொலோ. ௨. ௯.
23 தானி. எ. ௨௧. வெளி. ௰௧. எ: ௰௨. ௰௭.

Digitized by Google

ரர்மேலும் தேசத்தார்மேலும் அதற்கு [1]அதிகாரம் கொடுக்கப்பட்டது.

௮ ஆதலால் [2]உலகமுண்டானதுமுதல் (பலியாக) அடிக்கப்படும்படி (நியமிக்கப்பட்ட) ஆட்டுக்குட்டியினுடைய சீவபுத்தகத்திலே [3]பேரெழுதப்படாத பூமியின்குடிகள்யாவரும் அதை நமஸ்காரம்பண்ணுவார்கள்.

௯ [4]யாவனொருவன் காதுள்ளவனாய் இருந்தால் கேட்கக்கடவன்.

௰ [5]சிறையாகப் பிடித்துக்கொண்டுபோகிறவன் சிறையாகக் கொண்டுபோகப்படுவான்; [6]கட்கத்தினாலே கொலைசெய்கிறவன் கட்கத்தினாலே கொலைசெய்யப்படவேண்டும்; [7]இங்கே பரிசுத்தவான்களுடைய பொறுமையும் விசுவாசமும் விளங்கும்.

௰௧ ¶ அன்றியும் வேறொரு மிருகத்தைத் [8]தரையிலிருந்து எழும்பக்கண்டேன்: அது ஓர் ஆட்டுக்குட்டிக்கு ஒப்பாய் இரண்டுகொம்புகளை உடையதாய் வல்ல சர்ப்பத்தைப்போல வசனித்தது.

௰௨ அல்லாமலும் அது முந்தின மிருகத்தின் அதிகாரம் யாவையும் அதின்முன்பாக நடப்பித்து, [9]சாவுக்கு ஏதுவான காயம் ஆறச் சொஸ்தமடைந்த முந்தின மிருகத்தைப் பூமியும் அதின் குடிகளும் நமஸ்காரம்பண்ணும்படி செய்ததுமன்றி,

௰௩ மனிதருக்குமுன்பாக [10]வானத்திலிருந்து அக்கினியையும் பூமியின்மேல் இறங்கப்பண்ணத்தக்கதாகப் [11]பெரிய அடையாளங்களைச் செய்து,

௰௪ மிருகத்தின்முன்பாகச் செய்யும்படி தனக்கு அளிக்கப்பட்ட [12]அடையாளங்களினாலே [13]பூமியின் குடிகளை வஞ்சித்துக் கட்கத்தினாலே காயப்பட்டு, [14]பின்பு பிழைத்த மிருகத்திற்கு ஒரு சொரூபம்பண்ணவேண்டும் என்று பூமியின் குடிகளுக்குச் சொல்லுகின்றது.

௰௫ மேலும் அம்மிருகத்தின் சொரூபம் பேசத் தக்கதாகவும், அம்மிருகத்தின் சொரூபத்தை நமஸ்காரம்பண்ணாத [15]யாவரையும் கொலைசெய்யப்பண்ணத்தக்கதாகவும் அம்மிருகத்தின் சொரூபத்திற்கு ஆவியைக்* கொடுக்கும்படி அதற்குத் திராணி அளிக்கப்பட்டது.

௰௬ அந்தப்படி அது சிறியோர் பெரியோர், ஐசுவரியவான்கள் தரித்திரர், சுயாதீனர் அடிமைகள், இவர்கள் யாவரும் தங்கள் தங்கள் வலதுகைகளிலே, அல்லது [16]தங்கள் நெற்றிகளிலே ஒரு அடையாளத்தைப் பெறும்படிக்கும்,†

௰௭ அம்மிருகத்தின் அடையாளமாகிய அந்த [17]நாமத்தையாவது [18]அதினுடைய நாமத்தின் இலக்கத்தையாவது தரித்துக்கொள்ளுகிறவனைத்தவிர வேறொருவனும் கொள்ளவும் விற்கவும் கூடாதபடிக்கும் செய்கின்றது.

௰௮ [19]இங்கே ஞானம் விளங்கும்; [20]மிருகத்தின் இலக்கம் ஒரு மனிதனுடைய இலக்கமாய் இருக்கிறபடியால், புத்தி உடையவன் [21]அந்த இலக்கத்தைக் கணக்குப்பார்க்கக்கடவன்; அதினுடைய இலக்கம் ௬௱௬௰௬.

## ௰௪. அதிகாரம்.

௧. ஆட்டுக்குட்டியானவரும், அவருடையவர்களும் சீயோன்மலையின்மேல் நின்றதையும், ௬. ஒரு தூதன் சுவிசேஷத்தைப் பிரசங்கித்ததையும், ௮. பாபிலோன் விழுந்ததையும், ௰௪. உலகத்தின் அறப்புக்காலத்தையும், அறப்பில் அரிவாள் இடப்பட்டதையும், ௨௰. பாபாதுடைய கோபமாகிய திராட்சப்பழத்தின் கொய்யும் ஆலையையும் குறித்துச் சொல்லியது.

பின்பு நான் பார்க்கையில் [22]சீயோன் பர்வதத்தின்மேலே ஆட்டுக்குட்டியையும், [23]அதினோடேகூட அவருடைய பிதாவின் நாமம் தங்கள் நெற்றிகளில் எழுதப்பட்டிருந்த [24]நூற்றுநாற்பத்துநா

கி. பி. ௯௬.

1 வெளி. ௰௩. ௰௮: ௰௭. ௰௫.
2 வெளி. ௰௭ ௮.
3 உ மோ. ௩௨. ௩௨. தானி. ௰௨. ௧. பிலி. ௪. ௩. வெளி. ௩. ௫: ௨௰. ௰௨, ௰௫: ௨௧. ௨௭.
4 வெளி. ௨. ௭.
5 ஏசா. ௩௩. ௧.
6 ஆதி. ௯. ௬. மத். ௨௬. ௫௨.
7 வெளி. ௰௪. ௰௨.
8 வெளி. ௰௧. ௭.
9 ௩. ௧௪.
10 ௧ இரா. ௰௮. ௩௮. ௨ இரா. ௧. ௰, ௰௨.
11 ௫ மோ. ௰௩. ௧, ௨, ௩. மத். ௨௪. ௨௪. ௨ தெச. ௨. ௯. வெளி. ௰௯. ௰௪.
12 ௨ தெச. ௨. ௯, ௰.
13 வெளி. ௰௨. ௯: ௰௯. ௨௰.
14 ௨ இரா. ௨௰. ௭.
15 வெளி. ௰௬. ௨: ௰௯. ௨௰: ௨௰. ௪.
* கிரேக்கு, சுவாசத்தை.
16 வெளி. ௰௪. ௯: ௰௯. ௨௰: ௨௰. ௪.
† கிரேக்கு, இவர்கள்யாவருக்கும் அவர்கள் வலதுகைகளிலேயல்லது அவர்கள் நெற்றிகளிலே ஒரு அடையாளத்தைப்பெறும்படிக்கும்.
17 வெளி. ௰௪. ௰௧.
18 வெளி. ௰௫. ௨.
19 வெளி. ௰௭. ௯.
20 வெளி. ௨௧. ௰௭.
21 வெளி. ௰௫. ௨௰.
22 வெளி. ௫. ௬.
23 வெளி. ௭. ௩: ௰௪. ௰௪.
24 வெளி. ௭. ௪.

வாயிரம்பேரையும் நிற்கக் கண்டேன்.

௨ அல்லாமலும், [1]பெருவெள்ள இரைச்சலைப்போலவும் பெரிய இடிமுழக்கம்போலவும் ஒரு சத்தம் பரமண்டலத்திலிருந்து உண்டாகக்கேட்டேன்; மேலும் [2]நான் கேட்ட சத்தம் தங்கள் சுரமண்டலங்களை வாசிக்கிற சுரமண்டலக்காரருடைய ஓசையைப்போல இருந்தது.

௩ அவர்கள் அந்த ஆசனத்திற்குமுன்பாகவும், நான்கு ஜீவன்களுக்கும் மூப்பருக்கும்முன்பாகவும் [3]புதிய பாட்டைப் பாடினார்கள்; அந்தப் பாட்டைப் பூமியிலிருந்து மீட்டுக்கொள்ளப்பட்ட [4]அந்த நூற்றுநாற்பத்துநாலாயிரம் பேரே அல்லாமல், வேறொருவரும் கற்றுக்கொள்ளக்கூடாததாய் இருந்தது.

௪ [5]அவர்களே கற்புடையவர்களாய் ஸ்திரிகளால் தங்களை அசுசிப்படுத்தாதவர்கள்; அவர்களே [6]ஆட்டுக்குட்டி எங்கேபோனாலும் அதைப் பின்பற்றுகிறவர்கள்; அவர்களே மனிதரிலிருந்து பராபரனுக்கும் ஆட்டுக்குட்டிக்கும் [7]முதல் விளைவாக [8]மீட்டுக்கொள்ளப்பட்டவர்கள்.*

௫ [9]அவர்கள் மாசில்லாதவர்களானபடியால், [10]அவர்களுடைய வாயிலே கபடம் அகப்படவில்லை.

௬ ¶ அன்றியும் வேறொரு தூதன் பூமியின் குடிகளுக்கும் [11]சகல தேசத்தாருக்கும் கோத்திரத்தாருக்கும் பாஷைக்காரருக்கும் சனக்கூட்டத்தாருக்கும் அறிவிக்கத்தக்கதாக [12]நித்திய சுவிசேஷத்தை உடையவனாய், [13]வானத்தின் மத்தியிலே பறக்கக்கண்டேன்.

௭ அவன் மிகுந்த சத்தத்துடனே கூப்பிட்டதாவது: பராபரன் நியாயத்தீர்ப்பைக் கொடுக்கும்நேரம் வந்தபடியால், [14]அவருக்குப் பயந்து அவருடையமகிமையைப் பாராட்டுங்கள், [15]வானத்தையும் பூமியையும் சமுத்திரத்தையும் நீரூற்றுகளையும் உண்டாக்கினவரையேதொழுதுகொள்ளுங்கள்என்று கூப்பிட்டான்.

௮ ¶ வேறொரு தூதன் பின்சென்று [16]பெரிய பட்டணமாகிய பாபிலோன் விழுந்துபோயிற்று, விழுந்துபோயிற்று; [17]அவள் தன் வேசித்தனமாகிய உக்கிர இரசத்தைச் சகல தேசத்தாரும் குடிக்கப்பண்ணினாளே என்றான்.

௯ ¶ அவர்களுக்குப் பின்னே மூன்றாம் தூதன் வந்து மிகுந்த சத்தத்தோடே சொன்னதாவது: மிருகத்தையும் அதின் சொரூபத்தையும் [18]நமஸ்காரம்பண்ணி, தன் நெற்றியிலாவது தன் கையிலாவது அடையாளத்தைத் தரித்துக்கொள்ளுகிறவன் எவனோ,

௧0 அவன் [19]பராபரனுடைய கோபாக்கினையாகிய பாத்திரத்திலே [20]கலப்பில்லாமல் வார்க்கப்பட்ட அவருடைய உக்கிர [21]இரசத்தைக் குடித்துப் பரிசுத்த தூதர்களுக்கு முன்பாகவும் ஆட்டுக்குட்டிக்கு முன்பாகவும் [22]அக்கினியாலும் கந்தகத்தாலும் [23]வாதிக்கப்படுவான்.

௧௧ [24]அவர்கள் படும் வாதையின் புகை என்றென்றைக்கும் எழும்பும்; இப்படி மிருகத்தையும் அதின் சொரூபத்தையும் நமஸ்காரம்பண்ணுகிறவர்களுக்கும், அதினுடைய நாமத்தின் அடையாளத்தைத் தரித்துக்கொள்ளுகிறவனுக்கும் இரவும்பகலும் இளைப்பாறுதல் இராது.

௧௨ ¶ இங்கே பராபரனுடைய கற்பனைகளையும் இயேசுவின்மேலுள்ள விசுவாசத்தையும் [25]காத்துக்கொள்ளுகிறவர்களாகிய பரிசுத்தவான்களுடைய [26]பொறுமை விளங்கும்.

௧௩ பின்னும் [27]இதுமுதல் கர்த்தருக்குட்பட்டு மரிக்கிறவர்கள் [28]பாக்கியவான்களென்று எழுது என்று பரமண்டலத்திலிருந்து சத்

கி. பி. ௯௬

1 வெளி. ௧. ௧௫: ௧௯. ௬.
2 வெளி. ௫. ௮.
3 வெளி. ௫. ௯: ௧௫. ௩.
4 ௩. ௪௪.
5 ௨ கொரி. ௧௧. ௨.
6 வெளி. ௩. ௪: ௭. ௧௫, ௧௭: ௱. ௰௪.
7 யாக். ௧. ௰௮.
8 வெளி. ௫. ௯.
* கிரேக்கு, விலைக்குக் கொள்ளப்பட்டவர்கள்.
9 எபே. ௫. ௨௭. யூதா. ௨௪.
10 சங். ௩௨. ௨. செப். ௩. ௰௩.
11 வெளி. ௰௩. ௭.
12 எபே. ௩. ௯, ௰, தீத். ௧. ௨.
13 வெளி. அ. ௰௩.
14 வெளி. ௰௫. ௰அ: ௰௯. ௪.
15 நெகே. ௯. ௬. சங். ௩௩. ௬: ௱௨௪. ௮: ௱௪௬. ௬. அப். ௰௪. ௰௫: ௰௭. ௨௪.
16 ஏசா. ௨௧. ௯. எரே. ௫௧. ௮. வெளி. ௰௮. ௨.
17 எரே. ௫௧. ௭. வெளி. ௰௭. ௨: ௰௮. ௩: ௰௯, ௨, ௰அ, ௰௧: ௰௬. ௨.
18 வெளி. ௰௩. ௰௪, ௰௯, ௰௬.
19 வெளி. ௰௪. ௰௯.
20 வெளி. ௰௮. ௬.
21 சங். ௭௫. ௮. ஏசா. ௫௧. ௰௭. எரே. ௨௫. ௰௫.
22 வெளி. ௰௯. ௨௦.
23 வெளி. ௨௦. ௰.
24 ஏசா. ௩௪. ௰. வெளி. ௰௯. ௩.
25 வெளி. ௰௨. ௰௭.
26 வெளி. ௰௩. ௰.
27 ௧ கொரி. ௰௫. ௰௮. ௧ தெச. ௪. ௰௬.
28 பிர. ௪. ௧, ௨. வெளி. ௨௦. ௬.

Digitized by Google

தம் உண்டாகக் கேட்டேன்; மெய்யாய் அவர்கள் [1]தங்கள் பிரயாசங்களைவிட்டு ஒழிந்து இளைப்பாறுவார்கள்; அவர்களுடைய கிரியைகள் அவர்களுடனேகூடப் போகின்றன என்று, *ஆவியானவரும் திருவுளம்பற்றுகிறார்.

௰௪ ¶ பின்பு நான் பார்த்து வெண்மையான மேகத்தையும், அந்த மேகத்தின்மேலே [2]மனிதகுமாரனுக்கு ஒப்பானவனாய்த் [3]தன்னுடைய சிரசின்மேல் பொற்கிரீடத்தையும், தனது கையிலே கருக்குள்ள அரிவாளையுமுடைய ஒருவன் உளுக்காந்திருக்கிறதையும் கண்டேன்.

௰௫ அப்பொழுது வேறொரு தூதன் [4]தேவாலயத்திலிருந்து புறப்பட்டு, மேகத்தின்மேல் உளுக்காந்திருக்கிறவனை நோக்கி, [5]பூமியின் பயிர் பருவமான† படியால் அறுக்கிறதற்குக் காலம் வந்தது; ஆகையால், [6]உம்முடைய அரிவாளை நீட்டி அறுத்துப்போடும் என்று மிகுந்த சத்தத்தோடே கூப்பிட்டான்.

௰௬ உடனே மேகத்தின்மேல் உளுக்காந்தவன் தன்னுடைய அரிவாளைப் பூமியின்மேல் போட்டான், பூமி அறுக்கப்பட்டது.

௰௭ ¶ பின்பு வேறொரு தூதன் தானும் கருக்குள்ள அரிவாளைப் பிடித்து, பரமண்டலத்திலுள்ளதேவாலயத்திலிருந்து புறப்பட்டுவந்தான்.

௰௮ [7]பின்பு அக்கினியின்மேல் அதிகாரமுள்ள வேறொரு தூதனும் பலிபீடத்திலிருந்து புறப்பட்டுவந்து, கருக்குள்ள அரிவாளைப் பிடித்திருக்கிறவனைநோக்கி, பூமியின் திராட்சங்கள் பழுத்திருக்கிறபடியால் [8]கருக்குள்ள உமது அரிவாளை நீட்டி அதின் குலைகளை அறுத்துப்போடும் என்று மிகுந்த சத்தத்தோடே கூப்பிட்டான்.

௰௯ அந்தப்படி அந்தத் தூதன் தன் அரிவாளைப் பூமியிலே போட்டு, பூமியின் திராட்சங்களை அறுத்து, [9]பராபரனுடைய கோபத்தின் பெரிய திராட்சத்தொட்டியிலே போட்டான்.

௨௰ [10]பட்டணத்திற்குப் புறம்பே உள்ள [11]அந்தத் திராட்சத்தொட்டியிலே மிதிக்கப்பட்டது; அந்தத் திராட்சத்தொட்டியிலிருந்து ஆயிரத்தறுநூறு ஸ்தாதிதூரத்திற்கு [12]இரத்தம் புறப்பட்டுக் குதிரைகளின் கடிவாளங்கள்மட்டும் வந்தது.

## ௰௫. அதிகாரம்.

க. கடைசியான ஏழு வாதைகளையுடைய ஏழு தூதர்களையும், உ. மிருகத்தைச் செயித்தவர்கள் பாடின பாட்டையும், எ. பராபரனுடைய கோபத்தால் நிறைந்த ஏழு பொற்கலசங்களையுங்குறித்துச் சொல்லியது.

பின்பு வானத்திலே பெரிதும் ஆச்சரியமுமான [13]வேறொரு அடையாளமாகிய [14]ஏழு கடைசி வாதைகளையுடைய ஏழு தூதரைக் கண்டேன்; [15]அவைகளால் பராபரனுடைய கோபம் முடிகிறபடியால், (அவைகளே கடைசி வாதைகள்).

௨ ¶ அன்றியும், [16]அக்கினி கலந்த [17]பளிங்கான கடலுக்கு ஒப்பானதையும், மிருகத்திற்கும் [18]அதின் சொரூபத்திற்கும் அதின் அடையாளத்திற்கும் அதின் நாமத்தின் இலக்கத்திற்கும் உள்ளாகாமல் செயங்கொண்டவர்கள் [19]தேவ சுரமண்டலங்களைப் பிடித்துக்கொண்டு பளிங்கான கடற்கரையிலே நிற்கிறதையும் கண்டேன்.

௩ அவர்கள் பராபரனுடைய ஊழியக்காரனாகிய [20]மோசேயின் பாட்டையும் ஆட்டுக்குட்டியின் பாட்டையும் பாடுகிறார்கள்; எப்படியெனில், சருவவல்லமையுள்ள தேவனாகிய பராபரனே, [21]தேவரீருடைய கிரியைகள் பெருமையும் ஆச்சரியமுமானவைகள்; உலகத்தாரின்‡ இராசாவே, [22]தேவ

கி. பி. ௯௬.

1 உ. தெச. ௧. எ. எபி. ௪. ௯, ௰. வெளி. ௬. ௰௧.

* அல்லது பின்னும் கர்த்தருக்குட்பட்டுப் போகின்றன வென்று இதமுதல்.

2 எசே. ௧. ௨௬. தானி. எ. ௰௩. வெளி. ௧. ௰௩.

3 வெளி. ௬. ௨.

4 வெளி. ௰௪. ௰௭.

5 எரே. ௫௧. ௩௩. வெளி. ௰௪. ௰௨.

† அல்லது உலர்ந்துபோன.

6 யோவே. ௩. ௰௩. மத். ௰௩. ௩௯.

7 வெளி. ௰௬. அ.

8 யோவே. ௩. ௰௩.

9 வெளி. ௰௯. ௰௫.

10 எபி. ௰௩. ௰௨. வெளி. ௰௧. அ.

11 ஏசா. ௬௩. ௩. புல. ௧. ௰௫.

12 வெளி. ௰௯. ௰௪.

13 வெளி. ௰௨. ௧, ௩.

14 வெளி. ௰௬. ௧: ௨௧. ௯.

15 வெளி. ௰௪. ௰.

16 மத். ௩. ௰௧.

17 வெளி. ௪: ௨௧. ௰௮.

18 வெளி. ௰௩. ௰௫, ௰௬, ௰௭.

19 வெளி. ௫. அ: ௰௪. ௨.

20 உ. மோ. ௰௫. ௧. ௫ மோ. ௩௧. ௩௦. வெளி. ௰௪. ௩.

21 ௫ மோ. ௩௨. ௪. சங். ௱௪௰. ௨: ௱௧௯. ௰௪.

‡ அல்லது பரிசுத்தவான்களின்.

22 சங். ௱௪௫. ௰௭. ஓசே. ௰௪. ௯. வெளி. ௰௬. எ.

நீருடைய வழிகள் நீதியும், சத்தியமுமானவைகள்.

௪ கர்த்தாவே, [1]யார் உமக்குப் பயப்படாமலும் உமது நாமத்தைத் துதியாமலும் இருக்கலாம்; என்னத்தினாலெனில், நீர் ஒருவரே பரிசுத்தமுள்ளவர்; [2]உலகத்தார் எல்லாரும் வந்து உமக்குமுன்பாக நமஸ்காரம்செய்வார்கள்; உம்முடைய நியாயத்தீர்ப்புகள் வெளியரங்கமாயின என்றார்கள்.

௫ ¶ இவைகளுக்குப் பின்பு நான் கண்டதாவது: [3]பரமண்டலத்திலே சாட்சியையுடைய கூடாரமாகிய ஆலயம் திறக்கப்பட்டது.

௬ அந்த ஆலயத்திலிருந்து [4]ஏழு வாதைகளுடைய அவ்வேழு தூதர்கள் சுத்தமும் [5]பிரகாசமுமான புடவையைத் தரித்து, மார்புகளின் அருகே பொற்கச்சைகளைக் கட்டிக்கொண்டு புறப்பட்டார்கள்.

௭ அல்லாமலும் அந்த நான்கு சீவன்களில் ஒன்று [6]என்றென்றைக்கும் பிழைக்கிற பராபரனுடைய கோபாக்கினையால் நிறைந்த பொற்கலயங்கள் ஏழையும் [7]அவ்வேழு தூதர்களுக்கும் கொடுத்தது.

௮ அப்பொழுது தேவாலயமானது [8]பராபரனுடைய மகிமையாலும் அவருடைய வல்லமையாலும் [9]பிறந்த புகையினாலே நிரப்பப்பட்டது; (ஆதலால்,) ஏழு தூதர்களும் செய்யும் ஏழு வாதைகளும் முடியும்வரைக்கும் ஒருவரும் தேவாலயத்திற்குள் பிரவேசிக்கக்கூடாததாய் இருந்தது.

## ௰௬. அதிகாரம்.

உ. தூதர்கள் கோபக்கலயங்களை ஊற்றினபோது, கூ. உண்டான வாதைகளையும், ௰௫. திருடனைப்போல வருவார் ஆகையால் விழித்திருக்கிறவர்கள் பாக்கியவான்கள் என்பதையும் சொல்லியது.

அப்பொழுது தேவாலயத்திலிருந்து உண்டான பெரிய சத்தம் [10]அந்த ஏழு தூதருடனே, நீங்கள் போய், [11]பராபரனுடைய கோபாக்கினையுள்ள கலயங்களைப் பூமியினமேல் ஊற்றுங்கள் என்று சொல்லக்கேட்டேன்.

௨ ¶ அந்தப்படி முதலாம் (தூதன்) போய், தன் கலயத்திலுள்ளதைத் [12]தரையின்மேல் ஊற்றினான்; உடனே [13]மிருகத்தின் அடையாளத்தை உடையவர்களும் [14]அதின் சொரூபத்தைத் தொழுதுகொள்ளுகிறவர்களுமாகிய மனிதர்களில் [15]பொல்லாத கொடிய பரு உண்டாயிற்று.

௩ ¶ பின்பு இரண்டாம் தூதன் தன் கலயத்திலுள்ளதைச் [16]சமுத்திரத்திலே ஊற்றினான்; உடனே [17]அது செத்தவனுடைய இரத்தம்போலாயிற்று; [18]சமுத்திரத்திலுள்ள பிராணிகள் யாவும் செத்துப்போயின.

௪ ¶ பின்பு மூன்றும் தூதன் தன் கலயத்திலுள்ளதை [19]ஆறுகளிலும் நீரூற்றுக்களிலும் ஊற்றினான்; [20]உடனே அவைகள் இரத்தமாயின.

௫ அப்பொழுது சலங்களின் தூதனானவன், [21]இருக்கிறவரும் இருந்தவருமாகிய பரிசுத்தரே, தேவரீர் இப்படி நியாயந்தீர்த்ததால் [22]நீதியுள்ளவராய் இருக்கிறீர்.

௬ அவர்கள் [23]பரிசுத்தவான்களுடைய இரத்தத்தையும் தீர்க்கதரிசிகளுடைய இரத்தத்தையும் [24]சிந்தினபடியினாலே, [25]இரத்தத்தையே அவர்களுக்குக் குடிக்கக் கொடுத்தீர்; (அதற்குப்) பாத்திரராய் இருக்கிறார்கள் என்று சொல்லக்கேட்டேன்.

௭ வேறொருவனும், [26]சர்வவல்லமையுள்ள தேவனாகிய பராபரனே, [27]மெய்யாய் உம்முடைய நியாயத்தீர்ப்புகள் சத்தியமும் நீதியுமானவைகள் என்று பலிபீடத்திலிருந்து சொல்லக்கேட்டேன்.

௮ ¶ பின்பு நான்காம் தூதன் தன் கலயத்திலுள்ளதைச் [28]சூரி

கி. பி. ௯௬.

1 உ மோ. ௰௫. ௰௪, ௰௫, ௰௧. ஏரே. ௰. எ.
2 ஏசா. ௬௬. உ௩.
3 வெளி. ௰௧. ௰௯. ௪ மோ. ௧. ௫௰.
4 ௧. ௨௪.
5 உ மோ. உ௮, ௬. ௮. ஏசே. ௪௪. ௰௭, ௰௮. வெளி. ௧. ௰௩.
6 ௧ தெச. ௧. ௯. வெளி.௪.௯: ௰. ௯.
7 வெளி. ௪. ௯.
8 உ தெச. ௧. ௯.
9 உ மோ. ௪௰. ௩௪. ௧ இரா. ௮. ௰. உ நாளா. ௫. ௰௪. ஏசா. ௬.௪.
10 வெளி. ௰௫. ௧.
11 வெளி. ௰௪. ௰: ௰௫. ௭.
12 வெளி. ௮. ௭.
13 வெளி. ௰௩. ௰௯, ௰௭.
14 வெளி. ௰௩. ௰௪.
15 உ மோ. ௯. ௯, ௰, ௰௧.
16 வெளி. ௮. ௮.
17 உ மோ. ௭. ௰௭, உ௰.
18 வெளி. ௮. ௯.
19 வெளி. ௮. ௰.
20 உ மோ. ௭. உ௰.
21 வெளி. ௧. ௪, ௮: ௪. ௮: ௰௧. ௰௭.
22 வெளி. ௰௫. ௩.
23 வெளி. ௰௩. ௰௮: ௰௮. உ௰.
24 மத். உ௩. ௩௪, ௩௫. வெளி. ௰௩. ௰௫.
25 ஏசா. ௪௯. உ௬.
26 வெளி. ௰௫. ௩.
27 வெளி. ௰௩.௰: ௰௪. ௰: ௰௯. உ.
28 வெளி. ௮. ௰௨.

யன்மேலே ஊற்றினான்; தீயினால் மனிதரைச் சுடும்படியாய் [1]அவனுக்கு அதிகாரம் அளிக்கப்பட்டது.

௯ அந்தப்படியே மனிதர்கள் மிகுந்த உஷ்ணத்தினாலே சுடப்பட்டார்கள்;* (அப்படி இருந்தும்) [2]பராபரனுடைய மகிமையைப் பாராட்ட, அவர்கள் [3]மனந்திரும்பாமல் அந்த வாதைகளைச் செய்ய அதிகாரமுள்ள அவருடைய நாமத்தைத் [4]தூஷணித்தார்கள்.

௰ ¶ பின்பு ஐந்தாம் தூதன் தன் கலயத்திலுள்ளதை [5]மிருகத்தினுடைய ஆசனத்தின்மேல் ஊற்றினான்; உடனே [6]அதின் இராச்சியம் இருள் அடைந்தது; [7]அப்படியிருந்தும், அவர்கள் தங்கள் கிரியைகளைவிட்டு மனந்திரும்பாமல் வருத்தத்தினாலே [8]தங்கள் நாவுகளைக் கடித்துக்கொண்டு,

௰௧ [9]தங்கள் வருத்தங்களாலும் தங்கள் பருக்களாலும் பரமண்டலத்தின் பராபரனைத் [10]தூஷணித்தார்கள்.

௰௨ ¶ பின்பு ஆறாம் தூதன் தன் கலயத்திலுள்ளதை [11]ஐபிராத்தென்னும் பெரிய ஆற்றின்மேல் ஊற்றினான்; உடனே [12]சூரிய உதயத் திக்கிலிருந்துவரும் இராசாக்களுக்கு வழி எத்தனமாகும்படிக்கு, [13]அந்த ஆற்றின் தண்ணீர் வற்றிப்போயிற்று.

௰௩ அல்லாமலும் [14]வல்ல சர்ப்பத்தின் வாயிலும், மிருகத்தின் வாயிலும், [15]கள்ளத்தீர்க்கதரிசியின் வாயிலுமிருந்து தவளைகளுக்கு ஒப்பான [16]மூன்று அசுத்த ஆவிகள் புறப்படக்கண்டேன்.

௰௪ அவைகள் [17]அடையாளங்களைச் செய்கிற [18]பசாசுகளின் ஆவிகளாய் இருக்கின்றன; [19]பூமியில் எங்குமுள்ள இராசாக்களைச் சர்வவல்லமையுள்ள பராபரனுடைய பெரிதான நாளிலிருக்கும் [20]யுத்தத்திற்குக் கூட்டிக்கொள்ளும்படிக்கு, அவர்களிடத்திற்குப் புறப்பட்டுப்போகின்றன.

இ. பி. ௯௯.

1 வெளி. ௯. ௰௭, ௰௮: ௰௪. ௰௮.
* அல்லது எரித்துபோனார்கள்.
2 வெளி. ௰௧. ௰௩: ௰௪. ௭.
3 தானி. ௫. ௨௨, ௨௩. வெளி. ௯. ௨௰.
4 ௬, ௨௧. வ௪.
5 வெளி. ௰௩. ௨.
6 வெளி. ௯. ௨
7 ௯. வ௪.
8 வெளி. ௰௩. ௰.
9 ௨. வ௪.
10 ௯, ௨௩. வ௪.
11 வெளி. ௯. ௰௪.
12 எசா. ௪௧. ௨, ௨௫.
13 எரே. ௫௰. ௩௮: ௫௧. ௩௬.
14 வெளி. ௰௨. ௩, ௯.
15 வெளி. ௰௯. ௨௰: ௨௰. ௰.
16 ௧ யோ. ௪. ௧, ௨, ௩.
17 ௨ தெச. ௨. ௯. வெளி. ௰௩. ௰௩, ௰௪: ௰௯. ௨௰.
18 ௧ தீமோ. ௪. ௧. யாக். ௩. ௰௫.
19 லூக். ௨. ௧.
20 வெளி. ௰௭. ௰௪: ௰௯. ௰௮: ௨௰. ௮.
21 மத். ௨௪. ௪௩. ௧ தெச. ௫. ௨. ௨ பே. ௩. ௰. வெளி. ௩. ௩.
22 ௨ கொரி. ௫. ௩. வெளி. ௩. ௪, ௰௮.
23 வெளி. ௰௯. ௰௯.
24 வெளி. ௨௧. ௬.
25 வெளி. ௪. ௫: ௮. ௫: ௰௧. ௰௯.
26 வெளி. ௰௧. ௰௩.
27 தானி. ௰௨. ௧.
28 வெளி. ௰௪. ௮: ௰௭. ௰௮.
29 எசா. ௫௧. ௰௭. ௨௨. எரே. ௨௫. ௰௫, ௰௬. வெளி. ௰௪. ௰.
30 வெளி. ௰௮. ௫.
31 வெளி. ௬. ௰௪.
32 வெளி. ௰௧. ௰௯.
33 ௨ மோ. ௯. ௨௩, ௨௪, ௨௫.
34 ௯, ௰௧. வ௪.

௰௫ [21]கேளுங்கள், நான் திருடனைப்போல வருகிறேன், விழித்துக்கொண்டு தன் அவலட்சணத்தை அவர்கள் காணாத்தக்காக [22]நிருவாணமாய் நடவாதபடிக்கு, தன் வஸ்திரங்களைக் காக்கிறவன் பாக்கியவான்.

௰௬ எபிரேயுபாஷையிலே அருமகெத்தோன் என்னப்பட்ட இடத்திலே [23]அவர்களைக் கூட்டிக்கொண்டுபோனான்.

௰௭ ¶ ஏழாம் தூதன் கலயத்திலுள்ளதை ஆகாசத்தின்மேல் ஊற்றினான்; அப்பொழுது பரமண்டலத்துத் தேவாலயத்திலுள்ள ஆசனத்திலிருந்து, [24]ஆயிற்று என்று சொன்ன பெரியசத்தம் புறப்பட்டது.

௰௮ அல்லாமலும் [25]சத்தங்களும் இடிமுழக்கங்களும் மின்னல்களும் உண்டாயின; [26]பூமி மிகவும் அதிர்ந்தது; [27]பூமியின்மேல் மனிதர்கள் உண்டான நாள்முதற்கொண்டு தோன்றாத பெரிய அதிர்தல் உண்டாயிருந்தது.

௰௯ அப்பொழுது [28]மகா பட்டணம் மூன்று பங்காகப் பிரிக்கப்பட்டது; உலகத்தாருடைய பட்டணங்கள் விழுந்தன; பெரிய பாபிலோனுக்குப் பராபரனுடைய உக்கிரமான கோபாக்கினையாகிய இரசமுள்ள [29]பாத்திரத்தைக் கொடுக்கும்படிக்கு, [30]அது அவருக்குமுன்பாகநினைக்கப்பட்டது.

௨௰ [31]தீவு யாவும் அகன்றுபோயின; பர்வதங்கள் காணப்படாமல்போயின.

௨௧ [32]தாலந்து நிறையான பெரிய கல்மழையும் வானத்திலிருந்து மனிதர்மேல் இறங்கிற்று; அப்படியிருந்தும் [33]அந்தக் கல்மழையினால் உண்டான வாதை மிகவும் கொடிதானபடியால், [34]மனிதர்கள்

அந்த வாதையின் நிமித்தம் பராபரனைத் தூஷணித்தார்கள்.

## யஎ. அதிகாரம்.

க, உ. இரத்தாம்பரமும் சிவப்பாடையும் தரித்த ஒரு ஸ்திரீ தன் கையில் பொற்பாத்திரத்தைப் பிடித்துக்கொண்டு, ரு. எல்லா அருவருப்புகளுக்கும் தாயாகிய மகா பாபிலோன் என்ற மிருகத்தின்மேல் உளுக்கார்ந்ததையும், கூ. ஏழு தலைகளுக்கும், யஉ. பத்துக் கொம்புகளுக்கும் வியாக்கியானம் என்னவென்பதையும், அ. வேசிக்கு வரும் தண்டனையையும், யச. ஆட்டுக்குட்டியின் செயத்தையும் சொல்லியது.

பின்பு ஏழு கலயங்களையுடைய [1]அந்த ஏழு தூதரில் ஒருவன் வந்து என்னை நோக்கி, நீ வா, [2]திரளான தண்ணீர்கள்மேல் உளுக்காந்தவளோடே, [3]பூமியின் இராசாக்கள் வேசித்தனம்பண்ணினார்களே, [4]அவளுடைய வேசித்தனமாகிய இரசத்தால் பூமியின் குடிகளும் வெறியடைந்தார்களே.

உ [5]அந்த மகா வேசிக்கு வருகிற ஆக்கினையை [6]உனக்குக் காண்பிக்கிறேன் என்றுசொல்லி,

ங [7]ஆவியில் என்னை வனாந்தரத்திற்குக் கொண்டுபோனான்; அப்பொழுது [8]தூஷணமான நாமங்களால் நிறைந்த [9]ஏழு தலைகளையும் [10]பத்துக் கொம்புகளையுமுடைய [11]சிவப்புநிறமுள்ள மிருகத்தின்மேல் ஒரு ஸ்திரீ ஏறி இருக்கக் கண்டேன்.

ச [12]அந்த ஸ்திரீ இரத்தாம்பரமும் சிவப்பான ஆடையும் தரித்து, [13]பொன்னினாலும் இரத்தினத்தாலும் முத்துக்களாலும் அலங்கரிக்கப்பட்டு,* தன் வேசித்தனமாகிய அருவருப்புக்களாலும் அசுத்தத்தாலும் [14]நிறைந்த [15]பொற்பாத்திரத்தைத் தன் கையிலே பிடித்திருந்தாள்.

ரு மேலும் [16]இரகசியம் என்றும், பூமியிலுள்ள அருவருப்புகளுக்கும் வேசிகளுக்கும்† [17]தாயாகிய [18]மகா பாபிலோன் என்றும், அவளுடைய நெற்றியிலே நாமம் எழுதியிருந்தது.

சு மேலும் அந்த ஸ்திரீ [19]பரிசுத்தவான்களின் இரத்தத்தாலும் [20]இயேசுவினுடைய சாட்சிகளின் இரத்தத்தாலும் [21]வெறிகொண்டிருக்கிறதைக் கண்டேன்; அவளை நான் கண்டு மிகவும் ஆச்சரியப்பட்டேன்.

எ ¶ அப்பொழுது தூதனானவன் என்னை நோக்கி, என்னத்தினாலே ஆச்சரியப்படுகிறாய்; இந்த ஸ்திரீயின் இரகசியத்தையும் இவளைச் சுமக்கிற ஏழு தலைகளையும் பத்துக்கொம்புகளையுமுடைய மிருகத்தின் இரகசியத்தையும் உனக்குச் சொல்லுகிறேன்.

அ ¶ நீ கண்ட மிருகம் (முன்னே) இருந்தது; (இப்பொழுது) அது இல்லை; (இனிமேல்) [22]அது பாதாளத்திலிருந்து திரும்ப ஏறிவந்து [23]அழிவுக்குப்போம்; அன்றியும் லோகத்தோற்றமுதல் [24]சீவபுத்தகத்திலே பேர் எழுதப்படாத பூமியின் குடிகள், முன்னிருந்ததுமாய் (இப்பொழுது) இராததுமாய் (இனி) இருப்பதுமாயிருக்கிற [25]மிருகத்தைப் பார்த்து ஆச்சரியப்படுவார்கள், [26]ஞானமுள்ள புத்தி இங்கே விளங்கும்.

கூ ¶ [27]அந்த ஏழு தலைகளும் ஏழு மலைகளே; அவைகளின்மேல் ஸ்திரீ உளுக்காந்திருக்கிறாள்.

ய அவைகள் ஏழு இராசாக்களாயும் இருக்கின்றன; (இவர்களில் ஐந்துபேர் விழுந்தார்கள்.) ஒருவன் இருக்கிறான்; மற்றவன் இதுவரைக்கும் வரவில்லை; வரும்பொழுது அவன் கொஞ்சக்காலம் தரித்திருக்கவேண்டும்.

யக இருந்ததும், (இப்பொழுது) இராததுமாகிய மிருகமே எட்டாவதுமாய், அவ்வேழில் ஒன்றுமாய் இருந்து, [28]அழிவுக்குப்போகின்றது.

யஉ ¶ [29]அன்றியும், நீ கண்ட பத்துக்கொம்புகளும் பத்து இராசாக்களே; அவர்கள் இதுவரையிலும் இராசரீகம் பெறவில்லை,

கி. பி. கூசு.

1 வெளி. உக.கூ.
2 எரே. ருக. யங. கூ. வச.
3 வெளி. யஅ. க.
4 எரே. ருக. எ. வெளி. யச. அ: யஅ. ங.
5 நாகூ. ங. ச. வெளி. யகூ. உ.
6 வெளி. யசு. யகூ: யஅ. யசு, யஎ, யகூ.
7 வெளி. யஉ. சு, யச.
8 வெளி. யங. க.
9 க. வச.
10 யஉ. வச.
11 வெளி. யஉ. ங.
12 வெளி. யஅ. யசு, யஉ.
13 தானி. யக. ஙஅ.
* இரேக்கு, பொற்பூச்சுப் பூசப்பட்டு.
14 வெளி. யச. அ.
15 எரே. ருக. எ. வெளி. யஅ. சு.
16 உ தெச. உ. எ.
† அல்லது வேசித்தனத்துக்கும்.
17 வெளி. யஅ. கூ: யகூ. உ.
18 வெளி. யச. அ: யசு. யகூ: யஅ. உ, ய, உக.
19 வெளி. யங. எ: யசு. சு.
20 வெளி. சு. கூ, ய: யஉ. யக.
21 வெளி. யஅ. உச.
22 வெளி. யக. எ: யங. க.
23 வெளி. யங. ய. யக. வச.
24 வெளி. யங. அ.
25 வெளி. யங. ங.
26 வெளி. யங. யஅ.
27 வெளி. யங. க.
28 அ. வச.
29 தானி. எ. உய. சகரி. க. யஅ. யகூ, உக. வெளி. யங. க.

Digitized by Google

அவர்கள் மிருகத்துடனேகூட ஒருமணிநேரமளவும் இராசாக்கள் போல அதிகாரம் பெற்றுக்கொள்ளுகிறார்கள்.

௰௩ ¶ அவர்கள் ஏக யோசனையையுடையவர்கள்; மேலும் அவர்கள் தங்கள் வல்லமையையும் அதிகாரத்தையும் மிருகத்திற்குக் கொடுக்கிறார்கள்.

௰௪ [1]அவர்களே ஆட்டுக்குட்டியுடனே யுத்தம்பண்ணுவார்கள்; ஆட்டுக்குட்டி [2]கர்த்தாதி கர்த்தாவுமாய் இராசாதி இராசாவுமாய் இருக்கிறபடியால் அவர்களைச் செயிக்கும்; [3]அதினோடேகூட இருக்கிறவர்களாகிய அழைக்கப்பட்டவர்களுமாய்த் தெரிந்துகொள்ளப்பட்டவர்களுமாய் உண்மையுள்ளவர்களுமாய் இருக்கிறவர்களும் (அவர்களைச் செயிப்பார்கள்) என்றான்.

௰௫ ¶ பின்னும் அவன் என்னுடனே சொன்னதாவது: [4]அந்த வேசி உளுக்காந்திருக்கிற தண்ணீர்களைக் கண்டாயே; [5]அவைகள் சனங்களையும், கூட்டங்களையும், தேசத்தாரையும், பாஷைக்காரரையும் குறிக்கின்றன.

௰௬ அன்றியும் நீ கண்ட பத்துக் கொம்புகளும் அந்த மிருகமுமானவர்கள், [6]அந்த வேசியைப் பகைத்து, அவளைப் பாழும் [7]நிருவாணமுமாக்கி, அவளுடைய மாம்சத்தைத் தின்று, [8]அவளை நெருப்பினால் சுட்டெரித்துப்போடுவார்கள்.

௰௭ என்னத்தினாலெனில், பராபரன் [9]தமது யோசனையை அவர்கள் செய்கிறதற்கும், ஏகயோசனையாய்ச் செய்கிறதற்கும் [10]பராபரனுடைய வார்த்தைகள் நிறைவேறுமளவும் தங்கள் இராசரீகத்தை மிருகத்திற்குக் கொடுக்கிறதற்கும் அவருடைய இருதயங்களில் (யோசனையைக்) கொடுத்தார்.

௰௮ ¶ அன்றியும் நீ கண்ட ஸ்திரியானவள் [11]பூமியின் இராசாக்களின்மேல் இராசரீகத்தைச் செலுத்துகிற [12]மகா பட்டணமேயாம் என்றான்.

கி. பி. ௯௬.

1 வெளி. ௰௬. ௰௪: ௰௯. ௰௯.
2 ௧ தீமோ. ௬. ௰௫. வெளி. ௰௯. ௰௬.
3 எரே. ௫௰ சச, சஞ. வெளி. ௰௪. ௪.
4 ஏசா. ௮ ௭. ௧. ௰௪.
5 வெளி. ௰௩. ௭.
6 எரே. ௫௰. ௪௧, ௪௨. வெளி. ௰௬. ௰௨.
7 எசே. ௰௬. ௩௭, ௪௪. வெளி. ௰௮ ௰௬.
8 வெளி. ௰௮. ௮.
9 ௨ தெச. ௨. ௰௧.
10 வெளி. ௰. ௭.
11 வெளி. ௰௨. ௪.
12 வெளி. ௰௬. ௰௯.
13 வெளி. ௰௭. ௧.
14 எசே. ௪௩. ௨.
15 ஏசா. ௰௩. ௰௯: ௨௧. ௯. எரே. ௫௧. ௮. வெளி. ௰௪. ௮.
16 ஏசா. ௰௩. ௨௧: ௨௧. ௮: ௩௪. ௰௪. எரே ௫௰. ௩௯: ௫௧. ௩௭.
17 ஏசா ௰௪. ௨௩: ௩௪. ௰௧. மாற். ௫. ௨, ௩.
18 வெளி. ௰௪. ௮: ௰௭. ௨.
19 ௰௧, ௰௫. வச. ஏசா. ௪௭. ௰௫.
* அல்லது மிகுதியினால்.
20 ௧ மோ. ௰௮. ௨௰. ௨௧. எரே. ௫௧. ௯. யோனா. ௧. ௨.
21 வெளி. ௰௬. ௰௯.

# ௰௮. அதிகாரம்.

௧. பாபிலோன் விழுந்ததையும், ௪. அவளைவிட்டுப் பிரிந்துபோகப் பராபரனுடைய சனங்களுக்குக் கற்பிக்கப்பட்டதையும், ௯. அவளுக்காகப் பூமியின் இராசாக்களும், ௰௧. வியாபாரிகளும், கப்பற்காரரும் புலம்பினதையும், ௨௰. பரமும் அவளுக்குக் கிடைத்த ஆக்கினைக்காகப் பரிசுத்தவான்கள் சந்தோஷப்பட்டதையும் சொல்லியது.

[13]இவைகளுக்குப்பின்பு மிகுந்த அதிகாரமுள்ள வேறொரு தூதனை வானத்திலிருந்து இறங்கக்கண்டேன்; அவனுடைய மகிமையினாலே[14] பூமி பிரகாசமாக்கப்பட்டது.

௨ அவன் பலத்த சத்தத்தோடே கூப்பிட்டதாவது: [15]மகா பாபிலோன் விழுந்தது, விழுந்தது; [16]அது பசாசுகளின் குடியிருப்பும், சகலவித அசுத்த ஆவிகளுடைய காவலும், அசுத்தமும் அருவருப்புமுள்ள சகலவித பறவைகளுடைய [17]காவலும் ஆயிற்று.

௩ [18]அதினுடைய வேசித்தனத்தின் உக்கிரமான இரசத்தை எல்லாத் தேசத்தாரும் குடித்தும், பூமியின் இராசாக்கள் அதினோடே வேசித்தனம்பண்ணியும், [19]பூமியின் வியாபாரிகள் அதினுடைய மோகவிகாரத்தின் வலுமையினால்* ஐசுவரியவான்களாகியும் இருக்கிறபடியினாலே அப்படி ஆயிற்று என்றான்.

௪ ¶ பின்பு வேறொரு சத்தம் வானத்திலிருந்து உண்டாகக் கேட்டேன்; அதென்னவென்றால், என்னுடைய சனங்களே, [20]அவளுடைய பாவங்கள் வானபரியந்தம் தொடர்ந்தபடியினாலும், [21]அவளுடைய அநியாயங்களைப் பராபரன் நினைத்துக்கொண்டிருக்கிறபடியினாலும்,

௫ நீங்கள் அவளுடைய பாவங்களுக்கு ஐக்கமாகாமலும் அவ

Google

ளுடைய வாதைகளில் பங்கு பெறாமலும் இருக்கும்படிக்கு, அவளிடத்திலிருந்து [1]புறப்படுங்கள்.

௬ அவள் உங்களுக்குப் பதில் செய்ததுபோல, [2]நீங்களும் அவளுக்குப் பதில் செய்து, அவளுடைய கிரியைகளின்படி அவளுக்கு இரட்டிப்பாகக் கொடுத்துத் தீருங்கள்; [3]அவள் கலந்து கொடுத்த பாத்திரத்திலே [4]இரட்டிப்பாக அவளுக்குக் கலந்துகொடுங்கள்.

௭ [5]அவள் தன்னை மகிமைப்படுத்தி மோகவிகாரங்கொண்டது எவ்வளவோ அவ்வளவாய் வாதையையும் துக்கத்தையும் அவளுக்கு இடுங்கள்; [6]தான் இராசஸ்திரியாய் உளுக்காந்திருக்கிறவள் என்றும் தான் கைம்பெண் அல்லவென்றும் தான் துக்கத்தைக் காண்பதில்லை என்றும் அவள் தன் இருதயத்திலே எண்ணிக்கொள்ளுகிறபடியால்,

௮ [7]ஒரே நாளிலே அவளுக்கு வாதைகளாகிய சாவும் துக்கமும் பஞ்சமும் வரும்; [8]அவள் அக்கினியினாலே சுட்டெரிக்கப்படுவாள்; [9]அவளுக்கு நியாயத்தீர்ப்புக்கொடுக்கும் தேவனாகிய பராபரன் பலமுள்ளவராய் இருக்கிறாரே.

௯ ¶ [10]அவளுடனே வேசித்தனம்பண்ணி மோகவிகாரத்தோடே வாழ்ந்த பூமியின் இராசாக்களும், [11]அவள் வேகிறதினால் உண்டான புகையைக் காணும்பொழுது,

௰ அவளுக்கு உண்டான வாதையினாலே பயந்து தூரத்திலே நின்று, [12]ஐயையோ, மகா பட்டணமாகிய பாபிலோனே, வல்ல பட்டணமே, [13]ஒரே மணிநேரத்தில் உனக்கு ஆக்கினை வந்ததே என்று அவளைக்குறித்து [14]அழுது புலம்புவார்கள்.

௰௧ ¶ [15]பூமியின் வியாபாரிகளும் தங்கள் [16]வியாபார பதார்த்தங்களாகிய பொன்னையும், வெள்ளியையும், இரத்தினங்களையும், முத்துக்களையும், மெல்லிதான புடவையையும், இரத்தாம்பரத்தையும், பட்டையும், சிவப்பாடையையும்,

௰௨ சகலவித வாசனைக்* கட்டைகளையும், தந்தத்தினால் செய்திருக்கிற சகலவித பதார்த்தங்களையும், விலை உயர்ந்த மரத்தாலும் வெண்கலத்தாலும் இரும்பினாலும் வெண்கற்களாலும் செய்திருக்கிற சகலவித பதார்த்தங்களையும்,

௰௩ இலவங்கப்பட்டையையும், கந்தவருக்கங்களையும், தைலத்தையும், தூபவருக்கத்தையும், திராட்ச இரசத்தையும், எண்ணெயையும், மெல்லிய மாவையும் கோதுமையையும், சுமை சுமக்கிற மிருகங்களையும், ஆடுகளையும், குதிரைகளையும், இரதங்களையும், [17]மனிதருடைய ஆத்துமாக்களையும், சரீரங்களையும்,† இனிக் கொள்வார் இல்லாதபடியால் அவளைக் குறித்து அழுதுகொண்டு புலம்புவார்கள்.

௰௪ உன் ஆத்துமா இச்சித்த மாரிகாலத்தின் பலன்கள் உன்னைவிட்டு நீங்கிப்போயின; சுவைக்கு இனிமையானவைகள், சிறப்பானவைகள், இவையெல்லாம் உன்னைவிட்டுப் போயின; நீ அவைகளை இனிக் காண்பதில்லை.

௰௫ [18]இப்படிப்பட்டவைகளை வியாபாரம்பண்ணி இவளால் ஐசுவரியவான்களானவர்கள் தூரமாய் நின்று, அவளுக்கு வந்தவாதையிலே பயந்து,

௰௬ ஐயையோ, மெல்லிய புடவையும் இரத்தாம்பரமும் சிவப்பாடையும் தரித்து, பொன்னினாலும் இரத்தினத்தினாலும் முத்துக்களினாலும் [19]அலங்கரிக்கப்பட்டிருந்த மகா பட்டணமே, [20]ஒரே மணிநேரத்தில் இவ்வளவு ஐசுவரியமும் அழிந்துபோயிற்றே என்று அழுது துக்கிப்பார்கள்.

கி. பி. ௯௬.

1 ஏசா. ௪௮. ௨௰: ௫௨. ௰௧. எரே. ௫௰. ௮: ௫௧. ௬, ௪௫. ௨ கொரி. ௬. ௰௭.
2 சங். ௱௩௭. ௮. எரே. ௫௰. ௰௫, ௨௯: ௫௧. ௨௪, ௪௯. ௨ தீமோ. ௪. ௰௪. வெளி. ௰௩. ௰.
3 வெளி. ௰௪. ௰.
4 வெளி. ௰௬. ௰௯.
5 எசே. ௨௮. ௨. ௵.
6 ஏசா ௪௭. ௭, ௮. செப். ௨. ௰௫.
7 ஏசா. ௪௭. ௯. ௰. வச.
8 வெளி. ௰௭. ௰௬.
9 எரே ௫௰. ௩௪. வெளி. ௰௧. ௰௭.
10 எசே. ௨௬. ௰௬, ௰௭. வெளி. ௰௭. ௨. ௯. வச.
11 வெளி. ௰௯. ௩. ௰௮. வச.
12 ஏசா. ௨௧. ௯. வெளி ௰௪. ௮
13 ௰௭, ௰௯. வச.
14 எரே. ௫௰. ௪௬.
15 எசே. ௨௭. ௨௭, ௩௬. ௩ வச.
16 வெளி. ௰௭. ௪.
* அல்லது தயினைக்னும்.
17 எசே. ௨௭. ௰௩.
† அல்லது சிறைகளையும்.
18 ௩, ௰௧. வச.
19 வெளி. ௰௭. ௪.
20 ௰. வச.

Digitized by Google

௰௭ ¶ [1]மாலுமிகள் யாவரும், கப்பல்கள்மேல் ஏறிப்போகிற யாவரும், கப்பலாட்களும், சமுத்திரத்திலே தொழில்செய்கிற யாவரும் தூரத்திலே நின்று,

௰௮ [2]அவள் வேகிறதினால் உண்டான புகையைப் பார்த்து, [3]இந்த மகா பட்டணத்திற்கு ஒப்பாயிருந்த பட்டணம் எது என்று சத்தமிட்டு,

௰௯ [4]தங்கள் தலைகள்மேல் புழுதியைப் போட்டுக்கொண்டு, ஐயையோ, மகா பட்டணமே, சமுத்திரத்திலே கப்பல்களையுடைய அனைவரும் இதின் உச்சிதமான சம்பூரணத்தினாலே ஐசுவரியவான்களானார்கள்; [5]ஒரே மணிநேரத்தில் இது பாழாய்ப்போயிற்றே என்று அழுது துக்கித்துக் கூப்பிட்டார்கள்.

௨௰ ¶ வானமே, பரிசுத்தவான்களே, அப்போஸ்தலரே, தீர்க்கதரிசிகளே, [6]உங்களுக்காகப் பராபரன் அவளிடத்தில் நியாயாக்கினையைச்செலுத்தினபடியினாலே, [7]அவளைக்குறித்துக் களிகூருங்கள் என்றான்.

௨௧ ¶ அப்பொழுது பலமுள்ள தூதன் ஒருவன் பெரிய எந்திரக் கல்லைப்போலொத்த ஒரு கல்லை எடுத்துச் சமுத்திரத்திலே எறிந்து சொன்னதாவது: [8]இப்படியே மகா பட்டணமாகிய பாபிலோன் வேகமாய்த் தள்ளுண்டு, [9]இனிக் காணப்படாமல் போம்.

௨௨ சுரமண்டலக்காரரும், கீதவாத்தியக்காரரும், நாகசுரக்காரரும், எக்காளக்காரருமானவர்களுடைய [10]சத்தம் இனி உன்னிடத்திலே கேட்கப்படுவதுமில்லை; எந்தத் தொழிலாளியும் இனி உன்னிடத்தில் காணப்படுவதுமில்லை. எந்திரத்தின் சத்தம் இனி உன்னிடத்தில் கேட்கப்படுவதுமில்லை.

௨௩ [11]விளக்கு வெளிச்சம் இனி உன்னிடத்தில் பிரகாசிப்பதுமில்லை; [12]மணவாளனும் மணவாட்டியுமானவர்களுடைய சத்தம் இனி உன்னிடத்திலே கேட்கப்படுவதுமில்லை; [13]உன் வியாபாரிகள் பூமியில் பெரியோர்களானபடியினாலும் [14]உன் சூனியத்தால் எல்லாத் தேசத்தாரும் வஞ்சிக்கப்பட்டபடியினாலும் (அப்படியேயாம்.)

௨௪ [15]தீர்க்கதரிசிகளுடைய இரத்தமும் பரிசுத்தவான்களுடைய இரத்தமும் [16]பூமியின்மேல் கொல்லப்பட்ட அனைவருடைய இரத்தமும் அதினிடத்திலே காணப்பட்டது என்றான்.

கி. பி. ௯௬.

1 எசா. ௨௩ ௰௪. எசே. ௨௭. ௨௯.
2 எசே. ௨௭. ௩௰, ௩௧. ௯. ௰௪.
3 வெளி. ௰௩. ௪.
4 யோசு. ௭. ௬. சாமு ௪. ௰௨. யோபு. ௨. ௰௨. எசே. ௨௭. ௩௰.
5 அ. ௰௪.
6 லூக். ௰௧. ௪௯. ௫௰. வெளி. ௰௯. ௨.
7 எசா. ௪௪. ௨௩: ௪௯. ௰௩. எரே. ௫௧. ௪௮.
8 எரே. ௫௧. ௬௪.
9 வெளி. ௰௨. ௮: ௰௬. ௨௰.
10 எசா. ௨௪. ௮ எரே. ௭. ௩௪: ௰௬. ௯: ௨௫. ௰. எசே. ௨௬. ௰௩.
11 எரே. ௨௫. ௰.
12 எரே. ௭. ௩௪: ௰௬. ௯: ௨௫. ௰: ௩௩. ௰௧.
13 எசா. ௨௩. ௮.
14 ௨ இரா. ௯. ௨௨. நாகூ. ௩. ௪. வெளி. ௰௭. ௨, ௫.
15 வெளி ௰௭. ௬.
16 எரே. ௫௧. ௪௯.
17 வெளி. ௰௧. ௰௫.
18 உபா. ௩௨. ௪௩. வெளி. ௬. ௰: ௰௮. ௨௰.
19 வெளி. ௰௫. ௩: ௰௬. ௭.
20 வெளி. ௪. ௰௧: ௭. ௰, ௰௨: ௰௨. ௰.
21 எசா. ௩௪. ௰. வெளி. ௰௪. ௰௧: ௰௮. ௯, ௰௮.
22 வெளி. ௪. ௪, ௬, ௰: ௫. ௰௪.
23 ௧ நாளா. ௰௬. ௩௬. நெகே. ௫. ௰௩: ௮. ௬. வெளி. ௫. ௰௪.

## ௰௯. அதிகாரம்.

௧. பெரிய வேசி நியாயந்தீர்க்கப்பட்டதற்காகவும் பரிசுத்தவான்களின் இரத்தம் பழிவாங்கப்பட்டதற்காகவும் வானோர் பராபரனைப் புகழ்ந்ததையும், ௭. ஆட்டுக்குட்டியின் கலியாணத்தையும், ௰. தூதன் தேவவணக்கத்தைத் தன்னண்டையில் விலக்கினதையும், ௰௭. பெரிய சங்காரத்துக்குப் பட்சிகள் அழைக்கப்பட்டதையும் சொல்லியது.

இவைகளுக்குப் பின்பு, பரமண்டலத்திலே திரளான கூட்டம் இடுகிற சத்தம்போன்ற [17]ஒரு சத்தத்தைக் கேட்டேன்; என்னவென்றால்,

௨ தன் வேசித்தனத்தினாலே பூமியைக் கெடுத்த பெரிய வேசிக்கு நம்முடைய பராபரன் நியாயத்தீர்ப்புக்கொடுத்து, [18]தம்முடைய ஊழியக்காரரின் இரத்தத்திற்காக அவளிடத்தில் பழியை வாங்கினதினாலே [19]அவருடைய நியாயத்தீர்ப்புகள் சத்தியமும் நீதியுமுள்ளவைகளாகையால், [20]அல்லேலூயா, இரட்சண்ணியமும் மகிமையும் கனமும் வல்லமையும் அவருக்கு உண்டாயிருக்கின்றன என்பதே.

௩ மறுபடியும் அல்லேலூயா; [21]அவளுடைய புகை என்றென்றைக்கும் எழும்பும் என்றார்கள்.

௪ அல்லாமலும் [22]இருபத்துநான்கு மூப்பரும் நான்கு சீவன்களும் (வணக்கமாய்) விழுந்து, [23]ஆமன் அல்லேலூயா என்று சொல்லி, ஆசனத்தின்மேல் உளுக்காந்த பரா

பரனைத் தொழுதுகொண்டார்கள்.

௫ மேலும் நம்முடைய பராபரனுடைய ஊழியக்காரரே, அவருக்குப் பயப்படுகிற [1]சிறியோரும் பெரியோருமானவர்களே, நீங்கள் யாவரும் [2]அவரைத் துதியுங்கள் என்று ஒரு சத்தம் ஆசனத்திலிருந்து புறப்பட்டது.

௬ ¶ [3]அப்பொழுது திரளான சனங்களுடைய சத்தம்போலவும், பெருவெள்ள இரைச்சல்போலவும், பலத்த இடிமுழக்கம்போலவும் ஒரு சத்தம் உண்டாகக்கேட்டேன்; என்னவென்றால், [4]சர்வவல்லமையுள்ள தேவனாகிய பராபரன் இராசரீகம்பண்ணுகிறார்; ஆகையால் அல்லேலூயா.

௭ [5]ஆட்டுக்குட்டியினுடைய கலியாணம் வந்தது; அவருடைய மனைவி தன்னை எத்தனம்பண்ணினாள்; சுத்தமும் பிரகாசமுமான* மெல்லிய புடவையைத் தரித்துக்கொள்ளும்படி [6]அவளுக்கு அளிக்கப்பட்டது; ஆகையால், நாம் சந்தோஷப்பட்டுக் களிகூர்ந்து, அவருக்குத் துதியைச் செலுத்தக்கடவோம் என்பதே.

௮ மெல்லிய புடவை [7]பரிசுத்தவான்களுடைய நீதிகளே.

௯ பின்னும் அவன் என்னுடனே சொன்னது: [8]ஆட்டுக்குட்டியின் கலியாணவிருந்துக்கு அழைக்கப்பட்டவர்கள் பாக்கியவான்கள் என்று எழுதென்றான்; பின்னும் [9]இவைகள் பராபரனுடைய சத்தியமான வார்த்தைகளாய் இருக்கின்றன என்று என்னுடனே சொன்னான்.

௰ அப்பொழுது [10]அவனைத் தொழுதுகொள்ளும்படி அவனுடைய பாதங்கள் முன்பாக விழுந்தேன்; அவன் என்னுடனே சொன்னது: [11]இப்படிச் செய்யாதபடிக்குப் பார்; நான் உன்னோடும் இயேசுவின் [12]சாட்சியையுடைய உன் சகோதரரோடுங்கூட ஊழியக்காரனாய் இருக்கிறேன்; பராபரனைத் தொழுதுகொள், இயேசுவின் சாட்சி தீர்க்கதரிசனத்தின் ஆவியாய் இருக்கிறதே என்றான்.

௰௧ ¶ [13]பின்பு நான் வானம் திறந்திருக்கக் கண்டேன்; உடனே இதோ, [14]ஒரு வெண்குதிரை தோன்றிற்று; அதின்மேல் இருந்தவர் [15]உண்மையும் சத்தியமுமுள்ளவர் என்னப்பட்டிருக்கிறார்; [16]அவர் நீதியாய்த் தீர்ப்புக்கொடுத்து யுத்தம்பண்ணுகிறார்.

௰௨ [17]அவருடைய கண்கள் அக்கினிச்சுவாலையைப்போல இருந்தன; [18]அவருடைய சிரசின்மேல் அநேக முடிகளும் இருந்தன; [19]அவருக்கேயன்றி வேறொருவனுக்கும் தெரியாத ஒரு நாமம் எழுதியிருந்தது.

௰௩ [20]இரத்தத்தில் தோய்க்கப்பட்ட வஸ்திரத்தை உடுத்தியிருந்தார்; [21]அவருடைய நாமமே பராபரனுடைய வார்த்தை என்னப்பட்டது.

௰௪ [22]பரமண்டலத்திலுள்ள சேனைகள் வெண்மையும் சுத்தமுமான [23]மெல்லிய புடவையைத் தரித்துக்கொண்டவர்களாய் வெண்குதிரைகள்மேலிருந்து அவருக்குப் பின்சென்றார்கள்.

௰௫ உலகத்தாரை வெட்டும்படிக்கு, [24]அவருடைய வாயிலிருந்து கூர்மையான கட்கம் புறப்படுகின்றது; [25]இருப்புக்கோலால் அவர்களை ஆளுகைசெய்வார்; அவர் சர்வவல்லமையுள்ள பராபரனுடைய உக்கிரகோபமாகிய [26]இரசமுள்ள திராட்சத்தொட்டியில் மிதிக்கிறார்.

௰௬ [27]இராசாதி இராசாவும், கர்த்தாதி கர்த்தாவுமானவர் என்னும் நாமம் [28]அவருடைய வஸ்திரத்தின்மேலும் தொடையின்மேலும் எழுதப்பட்டிருந்தது.

௰௭ ¶ பின்பு சூரியனிடத்தில்

கி. பி. ௬௰௬.

1 வெளி. ௰௧. ௰௮: ௨௰ ௰௨.
2 சங். ௱௩௪. ௧. ௱௩௫. ௧.
3 எசே. ௧. ௨௪: ௪௩. ௨. வெளி. ௰௪. ௨.
4 வெளி. ௰௧.௰௫, ௰௭: ௰௨. ௰:௨௧. ௨௨.
5 மத். ௨௨. ௨: ௨௫. ௰. ௨கொ ரி.௰௧. ௨.எபே. ௫. ௩௨. வெளி. ௨௧. ௨, ௯.
* அல்லது வெண்மையுமான.
6 சங். ௪௫. ௰௩, ௰௪. எசே. ௰௬. ௰.வெளி. ௩.௰௮.
7 சங். ௱௩௨. ௯.
8 மத்.௨௨. ௨,௩. லூக். ௰௪. ௰௫, ௰௬.
9 வெளி. ௨௧. ௫: ௨௨. ௬.
10வெளி.௨௨.௮.
11 அப். ௰. ௨௬: ௰௪ ௰௪, ௰௫ வெளி. ௨௨.௯
12 ௧ யோ. ௫. ௰ வெளி. ௰௨.௰௭
13 வெளி. ௰௫. ௫.
14 வெளி. ௬. ௨.
15 வெளி. ௩. ௰௪.
16 ஏசா. ௰௧. ௪
17 வெளி. ௧. ௰௪ : ௨. ௰௮.
18 வெளி. ௬. ௨.
19 வெளி. ௨.௰௭ ௰௯. ௰௨.
20 ஏசா. ௬௩. ௨,௩.
21 யோவா. ௧.௧. ௧ யோ. ௫. ௭.
22வெளி.௰௪.௨௰.
23 மத். ௨௮. ௩. வெளி. ௪.௪:௭. ௯.
24 ஏசா. ௰௧. ௪. ௨ தெச. ௨. ௮. வெளி. ௧. ௰௬ ௨௧. ௰௫.
25 சங். ௨. ௯. வெளி. ௨.௨௭: ௰௨. ௫.
26 ஏசா. ௬௩. ௩. வெளி. ௰௪.௰௯, ௨௰.
27 தானி. ௨.௪௭. ௧ தீமோ.௬.௰௫. வெளி.௰௭.௰௪.
28 ௰௨. ௰௫.

Digitized by Google

ஒரு தூதன் நிற்கக்கண்டேன்; அவன் வானத்தின் மத்தியில் பறக்கிற [1]சகல பறவைகளையும் நோக்கி,

௰௮ [2]நீங்கள் இராசாக்களுடைய மாம்சத்தையும், சேனைத்தலைவருடைய மாம்சத்தையும், பலவான்களுடைய மாம்சத்தையும், குதிரைகளுடைய மாம்சத்தையும், அவைகளின்மேல் இருக்கிறவர்களுடைய மாம்சத்தையும், சுயாதீனர் அடிமைகள் சிறியோர் பெரியோர் இவர்கள் எல்லாருடைய மாம்சத்தையும் தின்னும்படிக்கு மகா பராபரனுடைய விருந்திற்குக் [3]கூடிவாருங்கள் என்று மிகுந்த சத்தத்தோடே கூப்பிட்டான்.

௰௯ ¶ பின்பு [4]அம்மிருகமும் பூமியின் இராசாக்களும், அவர்களுடைய சேனைகளும், அந்தக் குதிரையின்மேல் இருக்கிறவரோடும் அவருடையசேனையோடும் யுத்தம் பண்ணும்படிக்குக் கூடிக்கொண்டிருக்கக்கண்டேன்.

௨௰ அப்பொழுது[5] அம்மிருகமும், அதின்முன்பாகச் செய்த அடையாளங்களால் மிருகத்தின் அடையாளத்தைத் தரித்தவர்களையும், [6]அதின் சொரூபத்தைத் தொழுதுகொண்டவர்களையும் வஞ்சித்த கள்ளத்தீர்க்கதரிசியும் கூடப் பிடிக்கப்பட்டு, இருவரும் உயிரோடே [7]கந்தகம் எரிகிற அக்கினிக் கடலிலே [8]தள்ளப்பட்டார்கள்.

௨௧ [9]மற்றவர்களும் குதிரையின்மேல் இருக்கிறவருடைய வாயிலிருந்து புறப்படுகிற கட்கத்தால் கொலைசெய்யப்பட்டார்கள்;[10] பறவைகள் யாவும் [11]அவர்களுடைய மாம்சத்தினாலே திருத்தி அடைந்தன.

கி. பி. ௯௬.

1 ௨௧. ௰௪.
2 எசே. ௩௯. ௰௮. ௨௰.
3 எசே. ௩௯. ௰௭.
4 வெளி. ௰௬. ௰௪: ௰௭. ௰௩, ௰௪.
5 வெளி. ௰௬. ௰௩, ௰௪.
6 வெளி. ௰௩. ௰௨, ௰௬.
7 வெளி. ௰௪. ௰. ௨௧. ௮.
8 வெளி. ௨௰. ௰. தானி. ௭. ௰௧.
9 ௰௫. ௰௪.
10 ௰௭, ௰௮. ௰௪.
11 வெளி. ௰௭. ௰௬.
12 வெளி. ௧. ௰௮: ௯. ௧.
13 வெளி. ௰௨. ௯. ௨ பே. ௨. ௪. யூதா. ௬.
14 தானி. ௬. ௰௭.
15 வெளி. ௰௩. ௰௪, ௰௬. ௮. ௰௪.
16 தானி. ௭. ௯, ௨௨, ௨௭. மத். ௰௯. ௨௮. லூக். ௨௨. ௩௰.
17 ௧ கொரி. ௬. ௨, ௩.
18 வெளி. ௬. ௯.
19 வெளி. ௰௩. ௰௨.
20 வெளி. ௰௩ ௰௫, ௰௬.
21 உரோ. ௮. ௰௭. ௨ தீமோ. ௨. ௰௨. வெளி. ௫. ௰.

## ௨௰. அதிகாரம்.

*௧. சாத்தான் ஆயிரம் வருஷம் கட்டப்பட்டதையும், ௪. முதலாம் உயிர்த்தெழுதலையும், அதில் பங்கு பெறுகிறவர்கள் ஆசீர்வதிக்கப்பட்டவர்கள் என்பதையும், ௭. சாத்தான் மறுபடியும் விடுதலையானதையும், ௮. கோகு, மகோகின் காரியத்தையும் ௰. அக்கினியும் கந்தகமுமுள்ள கடலிலே பசாசு தள்ளப்பட்டதையும், ௰௨. பொதுவான மரித்தோர் உயிர்த்தெழுதலையுங்குறித்துச் சொல்லியது.*

அன்றியும் ஒரு தூதன் [12]பாதாளத்தின் திறவுகோலையும் பெரிய சங்கிலியையும் தன் கையிலே பிடித்துக்கொண்டு வானத்திலிருந்து இறங்கக்கண்டேன்.

௨ அவன் [13]பசாசென்றும் சாத்தானென்றும் சொல்லப்பட்ட பழைய பாம்பாகிய வல்ல சருப்பத்தைப் பிடித்து, அதை ஆயிரம் வருஷமளவும் கட்டி, பாதாளத்திலே தள்ளி அடைத்து, [14]அதின்மேல் முத்திரைபோட்டான்.

௩ அந்த [15]ஆயிரம் வருஷம் நிறைவேறும்வரைக்கும் அது உலகத்தாரை வஞ்சனைசெய்யாதபடிக்கே (அப்படிச் செய்தான்); அவற்றிற்குப் பின்பு அது கொஞ்சக்காலம் விடுதலையாகவேண்டும்.

௪ ¶ அன்றியும் [16]நான் ஆசனங்களைக் கண்டேன்; அவைகளின்மேல் உளுக்காந்தார்கள்; நியாயத்தீர்ப்புக்கொடுக்கும்படி [17]அவர்களுக்கு அளிக்கப்பட்டது; இயேசுவினுடைய சாட்சியினிமித்தமும், பராபரனுடைய வசனத்தினிமித்தமும் சிரச்சேதம் பண்ணப்பட்டவர்களுடைய [18]ஆத்துமாக்களையும் [19]மிருகத்தையாவது [20]அதின் சொரூபத்தையாவது தொழுதுகொள்ளாமலும், தங்கள் நெற்றியிலும், தங்கள் கையிலும் அதின் அடையாளத்தைத் தரித்துக்கொள்ளாமலும் இருந்தவர்களையும் (கண்டேன்); அவர்கள் உயிரடைந்து கிறிஸ்துவுடனேகூட [21]ஆயிரம் வருஷம் இராசரீகம்பண்ணினார்கள்.

௫ மரித்த மற்றவர்கள் ஆயிரம் வருஷம் நிறைவேறுமளவும் உயிரடையவில்லை; இது முதலாவது உயிரோடெழுந்திருக்குதல்.

௬ முதலாவது உயிரோடெழுந்திருக்குதலுக்குப் பங்குள்ளவன்

Digitized by Google

பாக்கியவானுமாய்ப் பரிசுத்தனுமாய் இருக்கிறான்; அவர்கள்மேல் [1]இரண்டாம் மரணம் அதிகாரத்தை உடையதல்ல; அவர்கள் பராபரனுக்கும் கிறிஸ்துவுக்கும் முன்பாக [2]ஆசாரியராயிருந்து, அவரோடே கூட [3]ஆயிரம் வருஷம் இராசரீகம்பண்ணுவார்கள்.

எ ¶ அந்த ஆயிரம் வருஷம் நிறைவேறும்பொழுது [4]சாத்தான் தன் காவலிலிருந்து விடுதலையாகி,

அ பூமியின் நான்கு திசைகளிலுமுள்ள தேசத்தாராகிய [5]கோகையும் மாகோகையும் [6]வஞ்சிக்கும்படியாகவும், [7]அவர்களை யுத்தத்திற்குக் கூட்டிக்கொள்ளும்படியாகவும் புறப்படுவான்; அவர்களுடைய இலக்கம் கடற்கரை மணல் அவ்வளவாய் இருக்கும்.

கூ [8]அவர்கள் பூமியினுடைய விசாலத்தின்மேல் ஏறிவந்து, பரிசுத்தவான்களுடைய பாளயத்தையும் பிரியமான பட்டணத்தையும் வளைந்துகொண்டார்கள்; அப்பொழுது பராபரனால் வானத்திலிருந்து அக்கினி இறங்கி, அவர்களைப் பட்சித்துவிட்டது.

ய மேலும் [9]அவர்களை வஞ்சித்த பசாசானவன் [10] மிருகமும் கள்ளத்தீர்க்கதரிசியும் இருக்கிற அக்கினியும் கந்தகமுமான கடலிலே தள்ளப்பட்டான்; (அங்கே) அவர்கள் என்றென்றைக்கும் இரவும் பகலும் [11]வாதிக்கப்படுவார்கள்.

யக ¶ பின்பு நான் பெரிய வெள்ளை ஆசனத்தையும் அதின்மேல் உளுக்காந்தவரையும் கண்டேன்; அவருடைய சமுகப்பார்வையால் [12]பூமியும் வானமும் விலகி ஓடிப்போயின; [13]அவைகளுக்கு இடம் காணப்படவில்லை.

யஉ அன்றியும் மரித்தோராகிய [14]சிறியோரையும் பெரியோரையும் ஆசனத்திற்கு முன்பாகநிற்கக்கண்டேன்; [15]அப்பொழுது புத்தகங்கள்விரிக்கப்பட்டன, [16]சீவனுக்கு ஏதுவான வேறொரு புத்தகமும் விரிக்கப்பட்டது; அப்பொழுது மரித்தோர்கள் [17]தங்கள் தங்கள் கிரியைகளுக்குத்தக்க விதமாகப் புத்தகங்களில் எழுதப்பட்டவைகளின்படியே நியாயத்தீர்ப்பு அடைந்தார்கள்.

யரு சமுத்திரம் தன்னிலுள்ள மரித்தோரைத் தந்தது; [18]மரணமும் மரித்தோர் ஸ்தலமும்* தங்களிலுள்ள மரித்தோரைத் தந்தன; [19]யாவரும் தங்கள் தங்கள் கிரியைகளின்படியே நியாயத்தீர்ப்பு அடைந்தார்கள்.

யசா [20]பின்பு மரணமும் மரித்தோர் ஸ்தலமும் அக்கினிக்கடலிலே தள்ளப்பட்டன; [21]அதுவே இரண்டாம் மரணமாம்.

யரு சீவனுக்கு ஏதுவான் புத்தகத்திலே எழுதப்பட்டவனாகக் காணப்படாதவன் [22]அக்கினிக் கடலிலே தள்ளப்பட்டான்.

கி. பி. கூசு.

1 வெளி. உ. யக: உக. அ.
2 ஏசா. சுக. கூ. க பே. உ. கூ. வெளி. க. சு: ஞ. ய.
3 ச. வச.
4 உ. வச.
5 எசே. கஅ. உ: கூகூ. க.
6 க. ய. வச.
7 வெளி. கசு. யச.
8 ஏசா. அ. அ. எசே. கஅ. கூ. யக.
9 அ. வச.
10 வெளி. யசு. உய.
11 வெளி. யச. ய, யக.
12 உபே. க. எ,ய, கக. வெளி. உக. க.
13 தானி. உ. கூரு.
14 வெளி. யகூ. ரு.
15 தானி. எ. ய.
16 சங். கூகூ. உஅ. தானி. யஉ. க. பிலி. ச. க. வெளி க. ரு: யக. அ: உக. உஎ.
17 எரே. யஎ. ய: கூ. யக. மத். யசு. உஎ. உரோ. உ. க. வெளி. உ. உக: உஉ. யஉ. யக. வச.
18 வெளி. க. அ. * அல்லது பாதாளமும்.
19 யஉ. வச.
20 க கொரி. யரு. உக, ருசு, ருஎ.
21 வெளி. உக. அ. கூ. வச.
22 வெளி. யகூ. உய.
23 வெளி. உய. யக.
24 ஏசா. சுரு. யஎ: கசு. உஉ. உ பே. க. யக.
25 ஏசா. ருஉ. க. கலா. ச. உசு. எபி. யக. ய: யஉ. உஉ: யக. யச. வெளி. க. யஉ. ய. வச.
26 ஏசா. ருச. ரு: உகொ. ய. உகொரி. யக. உ.

## உக. அதிகாரம்.

க. புதியவானத்தையும், புதியபூமியையும், ய. பரம எருசலேமையும், அதின் மகிமைப்பிரஸ்தாபத்தையும், உக. அதற்குச் சூரிய ஒளி வேண்டியிராமல் பராபரனுடைய மகிமையே அதின் ஒளியாயிருக்கிறதையும், உச. பூமியின் இராசாக்கள் தங்கள் ஐசுவரியங்களை அதற்குக் கொண்டுவந்து செலுத்தினதையுங்குறித்துச் சொல்லியது.

அன்றியும், [23]முந்தின வானமும் முந்தின பூமியும் ஒழிந்துபோயிற்றே; சமுத்திரமும் இல்லாமல் போயிற்றே; பின்பு நான் [24]புதிய வானத்தையும் புதிய பூமியையும் கண்டேன்.

உ அல்லாமலும் [25]புதிய எருசலேமாகிய பரிசுத்தபட்டணத்தைப் பராபரனால் பரமண்டலத்திலிருந்து இறங்கக் கண்டேன்; அது தன் புருஷனுக்காக அலங்காரமாக்கப்பட்ட [26]மணவாட்டியைப்போல எத்தனமாக்கப்பட்டிருந்தது.

ங மேலும் பரமண்டலத்திலிருந்து உண்டான ஒரு பெரிய சத்தத்தைக் கேட்டேன்; அது என்ன

Digitized by Google

வென்றால், பாருங்கள், [1]மனிதர்களிடத்திலே பராபரனுடைய கூடாரம் இருக்கிறது. அவர்களிடத்திலே அவர் வாசமாய் இருப்பார்; அவர்களும் அவருடைய சனங்களாய் இருப்பார்கள்; பராபரன் தாமே அவர்களோடேகூட இருந்து அவர்களுக்குத் தேவனாயிருப்பார்.

ச [2]அவர்களுடைய கண்ணீர் யாவையும் பராபரன் துடைப்பார்; முந்தினவைகள் போனபடியினாலே [3]இனி மரணமுமில்லை; [4]துக்கமுமில்லை; அலறுதலுமில்லை; வருத்தமுமில்லை என்பதே.

ரு ¶ அன்றியும் [5]ஆசனத்தின்மேல் உளுக்காந்தவர் சொன்னது: பாருங்கள், [6]நான் சகலத்தையும் புதிதாக்குகிறேன் என்றார்; பின்னும் அவர் என்னுடனே சொன்னது: [7]இந்த வசனங்கள் சத்தியமும் உண்மையுமானவைகள். ஆகையால், (அவைகளை) எழுது என்றார்.

சு பின்னும் அவர் என்னுடனே சொன்னதாவது: [8]ஆயிற்று, [9]நான் அல்பாவும் ஒமேகாவுமாகிய ஆதியும் அந்தமுமாய் இருக்கிறேன்; தாகமாயிருக்கிறவனுக்கு நான் சீவநீரூற்றில் (தண்ணீரைக்) [10]கைமாறில்லாமல் கொடுப்பேன்.

எ செயங்கொள்ளுகிறவன் இவைகளைச்* சுதந்தரித்துக்கொள்வான்; [11]நான் அவனுக்குத் தேவனாயிருப்பேன்.

அ அவன் எனக்குக் குமாரனாயிருப்பான்; [12]பயப்படுகிறவர்களும் அவிசுவாசிகளும், அருவருக்கப்படத்தக்கவர்களும், கொலைபாதகரும், வேசிமார்க்கரும், சூனியக்காரரும், விக்கிரக ஆராதனைக்காரரும், சகலவிதமான பொய்யருமானவர்கள் இரண்டாம் மரணமாகிய அக்கினியும் கந்தகமும் எரிகிற கடலிலே [13]பங்கை அடைவார்கள் என்றார்.

கூ ¶ பின்பு ஏழு கடைசி வாதைகளால் நிறைந்த ஏழு கலயங்களையுடைய அந்த [14]ஏழு தூதரில் ஒருவன் என்னிடத்தில் வந்து, ஆட்டுக்குட்டியினுடைய [15]மனையாட்டியாகிய ஸ்திரியை உனக்குக் காண்பிக்கிறேன் வாவென்று என்னுடனே சொல்லி,

ய [16]பெரிதும் உயரமுமான ஒரு பர்வதத்தின்மேல் என்னை ஆவிக்குள் கொண்டுபோய்ப் பராபரனால் பரமண்டலத்திலிருந்து இறங்கினதும், பராபரனுடைய [17]மகிமையை அடைந்திருக்கிறதுமான [18]எருசலேம் என்னும் பரிசுத்த பட்டணத்தை எனக்குக் காண்பித்தான்.

யக அதின் ஒளி அருமையான இரத்தினக்கல்லைப்போலவும் பளிங்கொளியுள்ள ரவாக்கல்லைப்போலவும் இருந்தது.

யஉ அது பெரிதும், உயரமுமான மதிலையும், [19]பன்னிரண்டு வாசல்களையும், அந்த வாசல்கள் மேலே பன்னிரண்டு தூதரையும் உடையதாய் இருந்தது; (அவைகளின்மேலே) இஸ்ரவேல் சந்ததியாராகிய பன்னிரண்டு கோத்திரத்தாருடைய நாமங்கள் எழுதப்பட்டிருந்தன.

யங கிழக்கே மூன்று [20]வாசல்களும், வடக்கே மூன்று வாசல்களும், தெற்கே மூன்று வாசல்களும், மேற்கே மூன்று வாசல்களும் உண்டாயிருந்தன.

யச அன்றியும் பட்டணத்தின் மதில் பன்னிரண்டு அஸ்திபாரங்களும் உடையதாய் இருந்தது; அவைகளில் [21]ஆட்டுக்குட்டியின் பன்னிரண்டு அப்போஸ்தலருடைய பன்னிரண்டு நாமங்களும் இருந்தன.

யரு அல்லாமலும், என்னுடனே பேசினவன் பட்டணத்தையும் அதின் வாசல்களையும், அதின் மதிலையும், அளக்கிறதற்குப் [22]பொன்கோலைப் பிடித்திருந்தான்.

இ. பி. கூகூ.

1 க ஷோ. உக: கூ, மஉ. எசே. சஎ. எ. உ கொரி. சு. மசு. வெளி. எ. மரு.
2 ஏசா. உரு. அ. வெளி. எ. மஎ.
3 க கொரி. கரு. உசு, ருச. வெளி. உம. மச.
4 ஏசா. கரு. ம. கசு. க: கரு. மசு.
5 வெளி. ச. உ, கூ: ரு. க: உம. மக.
6 ஏசா. சக. மசு. உ கொரி. ரு. மஎ.
7 வெளி. மகூ. கூ.
8 வெளி. மசு. மஎ.
9 வெளி. க. அ. உஉ. மங.
10 ஏசா. மஉ. க. ருரு. க யோவா. ச. ம, மச: எ. கஎ. வெளி. உஉ. மஎ.
* அல்லது எல்லாவற்றையும்.
11 சகரி. அ. அ. எபி. அ. ம.
12 க கொரி. சு. கூ, ம. கலா. ரு. கூக, உம, உக. எபே. ரு. ரு. க தீமோ. க. கூ. எபி. மஉ. மச. வெளி. உஉ. மரு.
13 வெளி. உம, மச, மரு.
14 வெளி. மரு. க, சு, எ.
15 வெளி. மகூ. எ. உ. வச.
16 வெளி. க. ம: மஎ. க.
17 வெளி. உஉ. ரு. உக. வச.
18 எசே. சஅ. உ. வச.
19 எசே. சஅ. கக—கச.
20 எசே. சஅ. கக—கச.
21 மத். மசு. மஅ. கலா. உ. கூ. எபே. உ. உம.
22 எசே. சம. க. சகரி. உ. க. வெளி. மக. க.

Digitized by Google

௰௬ மேலும் அந்தப்பட்டணம் சதுரமாய் இருக்கின்றது; அதின் அகலம் எவ்வளவோ அவ்வளவாய் நீளமும் இருக்கிறது; அவன் அந்தக் கோலினாலே பட்டணத்தை அளந்தான்; பன்னீராயிரம் ஸ்தாதியாய் இருந்தது; அதின் நீளமும் அகலமும் உயரமும் சமமாயிருக்கின்றன.

௰௭ தூதனுக்கு இருந்த மனித அளவின்படியே அவன் அதின் மதிலை அளந்தபொழுது, நூற்று நாற்பத்துநான்கு முழமாயிருந்தது.

௰௮ மேலும் அதின் மதில் ரவாக்கல்லால் கட்டப்பட்டிருந்தது; பட்டணம் சுத்தப்பளிங்குக்கு ஒப்பாகிய சுத்தப்பொன்னாயிருந்தது.

௰௯ அன்றியும் [1]பட்டணமதில்களின் அஸ்திபாரங்கள் சகலவித இரத்தினங்களினாலும் அலங்கரிக்கப்பட்டிருந்தன; (அவையாவன:) முதலாம் அஸ்திபாரக் கல் ரவாக்கல், இரண்டாவது நீலக்கல், மூன்றாவது வயிரம், நான்காவது மரகதம்,

௨௰ ஐந்தாவது கோமேதகம், ஆறாவது சிவப்பு, ஏழாவது அக்கிக்கல், எட்டாவது படிகப்பச்சை, ஒன்பதாவது புட்பராகம், பத்தாவது வயிடூரியம், பதினோராவது பதுமராகம், பன்னிரண்டாவது சுகந்திக்கல் இவைகளே.

௨௧ மேலும் பன்னிரண்டு வாசல்களும் பன்னிரண்டு முத்துக்களாயிருந்தன; வாசல்களில் ஒவ்வொன்று ஒவ்வொரு முத்தாயிருந்தது. மேலும் பட்டணத்தின் [2]வீதி தெளிவுள்ள கண்ணாடியைப்போலச் சுத்தப்பொன்னாயிருந்தது.

௨௨ [3]தேவாலயத்தை நான் அதிலே காணவில்லை; சர்வ வல்லமையுள்ள தேவனாகிய பராபரனும் ஆட்டுக்குட்டியுமே அதின் ஆலயம்.

௨௩ [4]பட்டணத்தைப் பிரகாசிப்பிக்கும்படிக்குச் சூரியனும் சந்திரனும் அதற்கு வேண்டுவதில்லை; பராபரனுடைய மகிமையே அதை வெளிச்சமாக்கிற்று; ஆட்டுக்குட்டியே அதின் விளக்கு.

௨௪ [5]உலகத்தார்கள் அதின் ஒளியிலே நடப்பார்கள்; பூமியின் இராசாக்கள் தங்கள் மகிமையையும் கனத்தையும் அதற்குள்ளே கொண்டுவருவார்கள்.

௨௫ அங்கே [6]இராக்காலம் இல்லாதபடியால், [7]அதின் வாசல்கள் ஒருக்காலும் பூட்டப்படாதிருக்கும்.

௨௬ [8]உலகத்தார்களுடைய மகிமையையும் கனத்தையும் அதற்குள்ளே கொண்டுவருவார்கள்.

௨௭ [9]அசுசிப்படுத்துகிறதும் அருவருப்பையும் பொய்யையும் நடப்பிக்கிறதுமாகிய ஒன்றும் அதில் பிரவேசியாது; ஆட்டுக்குட்டியின் [10]சீவபுத்தகத்தில் எழுதப்பட்டவர்கள்மாத்திரம் (அதில் பிரவேசிப்பார்கள்).

## ௨௨. அதிகாரம்.

௧. சீவதண்ணீருடைய நதியையும், ௨. சீவவிருட்சத்தையும், ௩. பராபரனுடைய பட்டணத்திற்கு வெளிச்சம் பராபரன்தாமே என்பதையும், ௮. தேவதூதன் தேவவணக்கத்தைத் தன்னளவில் விலக்கினதையும், ௰௮. பராபரனுடைய வசனத்தில் எதையாகிலும் சேர்க்கவும், கழிக்கவும் கூடாதென்றதையும் சொல்லியது.

அன்றியும், பராபரனும் ஆட்டுக்குட்டியும் இருக்கிற ஆசனத்திலிருந்து புறப்பட்டுவந்து, [11]பளிங்கைப்போல தெளிவானசீவதண்ணீருள்ள நதியை எனக்குக் காண்பித்தான்.

௨ [12]பட்டணத்தின் நடுவீதியிலும் நதியின் இருகரையிலும் பன்னிரண்டுவிதமான கனிகளைச் சுமந்து மாதந்தோறும் தன் கனியைக் கொடுக்கிற [13]சீவவிருட்சம் இருந்தது; அந்த விருட்சத்தின் இலைகள் [14]உலகத்தார்கள் ஆரோக்

கி. பி. ௯௬.

1 எசே. ௪௰. ௩.
2 வெளி. ௨௧. ௨.
3 யோவா. ௪. ௨௧.
4 ஏசா. ௨௪. ௨௩: ௬௰. ௰௯, ௨௰. வெளி. ௨௨. ௫.
5 ஏசா. ௬௰. ௩, ௫: ௬௬. ௰௨.
6 ஏசா. ௬௰. ௨௰. சகரி. ௰௪. ௭. வெளி. ௨௨. ௫.
7 ஏசா. ௬௰. ௰௧.
8 ௨௪. வசு.
9 ஏசா. ௩௫. ௮: ௫௨. ௧: ௬௰. ௨௧. யோவே. ௩. ௰௭. வெளி. ௨௨. ௰௪, ௰௫.
10 பிலி. ௪. ௩. வெளி. ௩. ௫. ௰௩. ௮: ௨௰. ௰௨.
11 எசே. ௪௭. ௧. சகரி. ௰௪. ௮.
12 எசே. ௪௭. ௰௨. வெளி. ௨௧. ௨௧.
13 ௧ மோ. ௨. ௯. வெளி. ௨. ௭.
14 வெளி. ௨௧. ௨௪.



Digitized by Google

கியம் அடைகிறதற்கு ஏதுவானவைகள்; [1]இனிமேல் சாபமில்லை.

௩ [2]பராபரனும் ஆட்டுக்குட்டியும் இருக்கிற ஆசனமே அதில் இருக்கும்.

௪ அவருடைய ஊழியக்காரர் அவருக்கு ஆராதனைசெய்து [3]அவருடைய சமுகத்தைத் தரிசிப்பார்கள்; [4]அவருடைய நாமம் அவர்களுடைய நெற்றிகளில் இருக்கும்.

௫ [5]அங்கே இரவில்லை; ஒரு விளக்கும் சூரியனுடைய ஒளியும், அவர்களுக்கு வேண்டுவதில்லை. [6]தேவனாகிய பராபரனே அவர்களுக்கு ஒளியைக் கொடுப்பார்; [7]அவர்கள் என்றென்றைக்கும் இராசரீகம்பண்ணுவார்கள்.

௬ ¶ பின்பு அவர் என்னுடனே சொன்னதாவது: [8]இந்த வசனங்கள் உண்மையும் சத்தியமுமானவைகள்; [9]சீக்கிரமாய்ச் சம்பவிக்க வேண்டியவைகளைத் தம்முடைய ஊழியக்காரருக்குக் காண்பிப்பதற்குத் தீர்க்கதரிசிகளின் ஆவிகளுடைய தேவனாகிய பராபரன் தம்முடைய தூதனை அனுப்பினார்.

௭ [10]கேளுங்கள், சீக்கிரமாய் வருகிறேன்; [11]இந்தப் புத்தகத்திலுள்ள தீர்க்கதரிசனவார்த்தைகளைக் கைக்கொள்ளுகிறவன் பாக்கியவான் என்றார்.

௮ ¶ யோவானாகிய நானே இவைகளைக் கண்டு கேட்டேன்; நான் கேட்டுக் கண்டபொழுது, இவைகளை எனக்குக் காண்பித்த [12]தூதனுடைய பாதங்களின் முன்பாகத் தொழுதுகொள்ள விழுந்தேன்.

௯ அவன் என்னை நோக்கி, [13]நீ இப்படிச் செய்யாதபடிக்குப்பார்; உன்னோடும், உன் சகோதரராகிய தீர்க்கதரிசிகளோடும் இந்தப் புத்தகத்தின் வசனங்களைக் கைக்கொள்ளுகிறவர்களோடும்கூட நானும் ஊழியக்காரனாய் இருக்கிறேன்; பராபரனைத் தொழுதுகொள் என்றான்.

௰ ¶ [14]மேலும் அவர் என்னுடனே சொன்னதாவது: [15]காலம் சமீபமானபடியினாலே இந்தப் புத்தகத்திலுள்ள தீர்க்கதரிசன வார்த்தைகளை முத்திரைபோடாதிருப்பாயாக.

௰௧ [16]அக்கிரமக்காரன் பின்னும் அக்கிரமம் செய்யட்டும்; அழுக்காயிருக்கிறவன் பின்னும் அழுக்காயிருக்கட்டும், நீதியுள்ளவனும் பின்னும் நீதிசெய்யட்டும்; பரிசுத்தமுள்ளவனும் பின்னும் பரிசுத்தமாகட்டும்.

௰௨ [17]கேளுங்கள், சீக்கிரமாய் வருகிறேன், [18]அவனவனுடைய கிரியைக்குத் தக்கதாய் அவனவனுக்குப் பதில் அளிக்கும்படிக்கு [19]என் பலன் என்னோடேகூட வருகிறது.

௰௩ [20]நான் அல்பாவும் ஓமேகாவுமாகிய ஆதியும் அந்தமுமாய் முன்னவரும் பின்னவருமாய் இருக்கிறேன்.

௰௪ [21]சீவவிருட்சத்தின்மேல் அதிகாரமுள்ளவர்களாகும்படிக்கும், [22]வாசல்களால் பட்டணத்திற்குள் பிரவேசிக்கும்படிக்கும் [23]அவருடைய கற்பனைகளின்படி செய்கிறவர்கள் பாக்கியவான்கள்.

௰௫ [24]நாய்களும், சூனியக்காரரும், வேசிமார்க்கரும், கொலைபாதகரும், விக்கிரகாராதனைக்காரரும், பொய்யை விரும்பி நடப்பிக்கிற யாவரும் [25]புறம்பே இருப்பார்கள்.

௰௬ சபைகளுக்காக இவைகளை உங்களுக்கு அறிவிக்கும்படிக்கு, [26]இயேசுவாகிய நான் என்னுடைய தூதனை அனுப்பினேன்; [27]நான் தாவீதின் வேருமாய்ச் சந்ததியுமாய் [28]பிரகாசமுள்ள விடிவெள்ளி நட்சத்திரமுமாய் இருக்கிறேன் என்றார்.

௰௭ ஆவியும் [29]மணவாட்டியும்

கி. பி. ௯௬.

1 சகரி. ௰௪. ௰௧.
2 எசே. ௪௮. ௧௨.
3 மத். ௬. ௮. ௧ கொரி. ௰௩. ௰௨. ௧ யோ. ௩. ௨.
4 வெளி. ௩. ௰௨: ௰௪. ௧.
5 வெளி. ௨௧. ௨௩, ௨௫.
6 சங். ௩௬. ௯: அ௪. ௰௧.
7 தானி. ௭. ௨௭. ௨ரோ. ௫. ௰௭. ௨ தீமோ. ௨. ௰௨. வெளி. ௩. ௨௧.
8 வெளி. ௰௯. ௯: ௨௧. ௫.
9 வெளி. ௧. ௧.
10 வெளி. ௩. ௰௧. ௰,௰௨, ௨௰. ௮௪.
11 வெளி. ௧. ௩.
12 வெளி. ௰௯. ௰.
13 வெளி. ௰௯. ௰.
14 தானி. ௮. ௨௬: ௰௨. ௪,௯. வெளி. ௰. ௪.
15 வெளி. ௧. ௩.
16 எசே. ௩. ௨௭. தானி. ௰௨. ௰. ௨ தீமோ. ௩. ௰௩.
17 எ. ௮௪.
18 ௨ரோ. ௨. ௬: ௰௪. ௰௨. வெளி. ௨௰. ௰௨.
19 ஏசா. ௪௰. ௰: ௬௨. ௰௧.
20 ஏசா. ௪௧ ௪: ௪௪. ௬: ௪௮. ௰௨. வெளி. ௧. ௮. ௰௧: ௨௧. ௬.
21 ௨. ௮௪.
22 வெளி. ௨௧. ௨௭.
23 தானி. ௰௨. ௰௨. ௧ யோ. ௩. ௨௪.
24 பிலி. ௩. ௨.
25 ௧ கொரி. ௬. ௯, ௰. கலா. ௫. ௰௯, ௨௰, ௨௧. கொலோ. ௩. ௬. வெளி. ௯. ௨௰. ௨௧: ௨௭. ௮.
26 வெளி. ௧. ௧.
27 வெளி. ௫. ௫.
28 ௪ மோ. ௨௪. ௰௭. சகரி. ௬. ௰௨. ௨ பே. ௧. ௰௯. வெளி. ௨. ௨௮.
29 வெளி. ௨௧. ௨, ௯.

Digitized by Google

வா என்கிறார்கள்; (இவைகளைக்) கேட்கிறவனும் வா என்பானாக. [1]தாகமாயிருக்கிறவன் வரக்கடவன்; விருப்பமுள்ளவன் ஜீவ தண்ணீரைக் கைமாறில்லாமல் வாங்கக்கடவன்.

௰அ மேலும் இந்தப் புத்தகத்திலுள்ள தீர்க்கதரிசன வார்த்தைகளைக் கேட்கிற யாவருக்கும் நான் அறிவிக்கிறதாவது: [2]ஒருவன் இவைகளோடே (எதையாகிலும்) கூட்டினால் [3]இந்தப் புத்தகத்தில் எழுதியிருக்கிற வாதைகளைப் பராபரன் அவன்மேலே கூட்டுவார்.

௰௯ ஒருவன் இந்தத் தீர்க்கதரிசன புத்தகத்தின் வார்த்தைகளில் (எதையாகிலும்) எடுத்துப்போட்டால், இந்தப் புத்தகத்தில் எழுதப்பட்டவைகளாகிய ஜீவவிருட்சத்திலும்* [4]பரிசுத்தபட்டணத்திலுமுள்ள பங்கைப் பராபரன் அவனிடத்திலிருந்து எடுத்துப்போடுவார்.

௨௰ ¶ இவைகளை அறிவிக்கிறவர் [5]மெய்யாய் நான் சீக்கிரமாய் வருகிறேன் என்கிறார்.—ஆமென். கர்த்தராகிய இயேசுவே வாரும்.

௨௧ [6]நம்முடைய கர்த்தராகிய இயேசுக்கிறிஸ்துவின் கிருபை உங்கள் அனைவரோடுங்கூட இருப்பதாக.—ஆமென்.

கி. பி. கூசு.



1 ஏசா. ௫௫. க. யோவா. எ.௩எ. வெளி. ௨௧. ௬.
2 உ மோ. ௪. உ: ௰உ, ௩உ. வாக். ௩௰. ௬.
3 உ மோ. ௩உ. ௩௩. சங். ௬௯. உஅ. வெளி. ௩. ௫: ௰௩. அ.
* அல்லது ஜீவ புத்தகத்திலும்.
4 வெளி. உ௧.உ.
5 ௰உ. ௨௪.
6 ரோமா. உ௧. உ௫. உ தீமோ. ௪. அ. உ பேர. ௰௩. உ௰, உ௪. உ தெச. ௩.௰அ.

முற்றிற்று.

Digitized by Google